| அத்தியாயம். | | பக்கம். |
|---|---|---|
| | உபயாஜர், யாஜர்வரலாறுகூறல் ... ... | 667-668 |
| | திருஷ்டத்யும்னன் பிறந்தது ... ... | 669 |
| | கிருஷ்ணை பிறந்தது ... ... ... | 670 |
| | திருஷ்டத்யும்னன் கிருஷ்ணையென்னும் பெயர்களுக்குக் காரணம் ... ... ... | 671 |
| 182 | பாண்டவர் எரிக்கப்பட்டனரென்று பிராமணர் துருபதனிடம் கூறல் ... ... ... | 671-672 |
| | துருபதன் துக்கித்ததும் புரோகிதர் பாண்டவர் ஜீவித்திருக்கின்றனரென்று தேற்றியதும் ... ... | 672-673 |
| | திரௌபதிஸ்வயம்வரத்துக்குக் குந்தியைப் பிராமணன் அழைத்தல் ... ... ... | 674 |
| 183 | பாண்டவர் பாஞ்சாலதேசத்துக்குப் புறப்படல் ... | 674-675 |
| 184 | வியாஸர் திரௌபதியின் விருத்தாந்தத்தைக் கூறல் ... | 676 |
| 185 | பாண்டவர் பாஞ்சால நகரத்துக்குப போகும்வழியில் பிராமணர்களோடு ஸம்பாஷித்தல் ... ... | 677-678 |
| 186 | அங்காரபர்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் விவாதம் ... | 679-681 |
| | அங்காரபர்ணன் சித்ரரதனானது ... ... | 682 |
| | சித்ரரதன் அர்ஜுனனுக்குக் குதிரைகளும் காந்தர்வாஸ்திரமும் கொடுத்தது ... ... | 683 |
| | கந்தர்வன் தான் எதிர்த்த காரணமுரைத்தல் ... | 684 |
| | கந்தர்வன் புரோகிதர் ஒருவரை அடையும்படி பாண்டவருக்குச் சொல்லல் ... ... | 685 |
| 187 | தபதியை ஸம்வரணன் மலையிற்கண்டது ... | 688 |
| | ஸம்வரணன் தபதியைக்காணமல் திகைத்துத்தேடுதல் ... | 689 |
| 188 | தபதி அரசனிடம் வருதல் ... ... ... | 689 |
| | தபதியும் அரசனும் சம்பாஷித்தல் ... ... | 690-691 |
| 189 | மூர்ச்சித்துவீழ்ந்த ஸம்வரணனை அவனமைச்சன் தெளிவித்தல் ... ... ... | 692 |
| | ஸம்வரணனுக்காக வஸிஷ்டர் ஸூர்யனைத்துதித்தல் ... | 693 |
| | வசிஷ்டர் சூர்யனிடமிருந்து தபதியைப்பெறுதல் ... | 694 |
| | தபதியை ஸம்வரணனுக்குப் பாணிக்கிரஹணஞ் செய்வித்தல் ... ... ... | 694 |
| | ஸம்வரணனுடைய நகரத்தில் அனாவிருஷ்டியும் பிறகு ஸுபிக்ஷமும் ... ... ... | 695 |
| 190 | கந்தர்வன் வசிஷ்டர்மகாத்மியத்தைச் சொல்லியது ... | 696-697 |
| 191 | வேட்டைக்குச்சென்ற விசுவாமித்திரருக்கு வஸிஷ்டர் ஆதித்யம் செய்தது ... ... ... | 698 |
| | விசுவாமித்திரர் காமதேனுவைப் பலாத்காரமாகப் பிடித்தது ... ... ... | 699 |
| | காமதேனு கோபித்து விசுவாமித்திரர்சேனையைக் கலைத்தது ... ... | 700-701 |
| | விசுவாமித்திரர் வஸிஷ்டர்மீது அஸ்த்ரம் தொடுத்தல் ... | 701 |
| | விசுவாமித்திரர் பிரம்மரிஷியானது ... ... | 702 |

அத்தியாயம். பக்கம்.

192 சக்திக்கும் கல்மாஷபாதனுக்கும் வாக்குவாதம் ... 703
கல்மாஷபாதன் சக்தியினால் ராக்ஷஸனாகச் சபிக்கப்பட்டது 704
விசுவாமித்திரர் கல்மாஷபாதன் சரீரத்தில் ராக்ஷஸனை ஏவுதல் ... ... ... 704
கல்மாஷபாதன் பிராமணரால் நரமாம்சம்பக்ஷிப்பவனாகச் சபிக்கப்படுதல் ... ... ... 705
கல்மாஷபாதன் வஸிஷ்டபுத்திரர்களைப் பக்ஷித்தது ... 706
வஸிஷ்டர் தற்கொலைசெய்துகொள்ள முயன்றும் முடியாமற்போனது ... ... ... 706
193 வஸிஷ்டர் பலவகைகளாலும் இறக்க முயற்சிசெய்தல்... 707-708
அதிருச்யந்தியின் கர்ப்பத்திலிருந்த சிசு வேதமோதியது... 708
வஸிஷ்டர் கல்மாஷபாதன்மேல ஆவேசங்கொண்ட ராக்ஷஸனை விலக்குதல் ... ... ... 709
வஸிஷ்டர் கல்மாஷபாதன்மனைவியிடம் புத்திரோத்பத்தி செய்தல் ... ... ... 710
194 பராசரர் பிறந்தது ... ... ... 711
பராசரர் தமது பிதாவின் மரணத்தைக்கேட்டு உலகத்தை அழிக்க நினைத்தது ... ... ... 712
கார்த்தவீர்யார்ஜுனனைச்சேர்ந்த க்ஷத்திரியர்கள் பார்க்கவரை அழித்தல ... ... ... 712-713
195 கண்ணிழந்தஅரசர்கள் ஔர்வரைச் சரணமடைந்து கண்பெற்றது ... ... ... 714
ஔர்வமுனிவரின்பித்ருக்கள் அவரைச்சமாதானஞ்செய்தது 714-715
196 ஔர்வமுனிவர் தம்கோபாக்னியை எங்கேவிடுகிறதென்று கேட்டல் ... ... ... 715-716
ஔர்வமுனிவர் தம்கோபாக்கினியை சமுத்திரத்திலவிட்டது 717
197 பராசரர் ராக்ஷஸயாகஞ்செய்ததைஅத்திரிமுனிவர் நிறுத்த முயன்றது ... ... ... 717
புலகர்முதலியோர் வேண்டுகோளால பராசரர் அந்தயாகத்தை நிறுத்தியது ... ... ... 719
198 குமாரக்கடவுள் பராசரரால் மூட்டப்பட்ட அக்னியை விழுங்கியது ... ... ... 719
பிராமணஸ்திரீ கல்மாஷபாதனைச் சபித்தது ... 720
பிராமணி கல்மாஷபாதனுக்கு வஸிஷ்டரால ஸந்ததியுண்டென்றது ... ... ... 721
199 கந்தர்வன் தௌம்யரைப்புரோகிதராகவரிக்கச்சொல்லியது 721
கந்தர்வனிடம் அர்ஜுனன் சாக்ஷுஷீ என்னும் அஸ்த்ரம் பெற்றது ... ... ... 722
பாண்டவர் தௌம்யரைப் புரோகிதராகப்பெற்றது ... 722

ஸ்வயம்வரபர்வம்.

200 பாண்டவர் பாஞ்சாலநகரத்தில குயவன் வீட்டிலதங்கினது 723
இருதாரமென்னும் வில்லின்வரலாறு ... ... 724
துருபதன்செய்த ஸவயம்வரப்பிரகடனம் ... 724

| அத்தியாயம். | | பக்கம். |
|---|---|---|
| | ஸ்வயம்வரமண்டபத்தின்சிறப்பு ... ... | 725 |
| | கிருஷ்ணை அலங்கரித்துக்கொண்டது ... ... | 726 |
| | ஸ்வயம்வரமண்டபத்தில் கிருஷ்ணை பிரவேசித்தது .... | 727 |
| | திருஷ்டத்யும்னன் லக்ஷ்யத்தை அடிப்பவருக்குக் கிருஷ்ணை உரியவளென்றது ... ... | 728 |
| 201 | கிருஷ்ணைக்கு ஸ்வயம்வரமண்டபத்திலுள்ள அரசர்களைச் சொல்லியது ... ... ... | 728-729 |
| 202 | கிருஷ்ணன் பலராமருக்குப் பாண்டவர்வந்திருப்பதைக் கூறியது ... ... ... | 731 |
| | கர்ணன்முதலியோர் வில்லைநாணேற்றுமல்அவமானமுற்றது | 732-733 |
| 203 | அர்ஜுனன் வில்லைவளைக்க எழுந்ததும் பிராமணர்கள் பேசிக்கொண்டதும் ... ... ... | 734-735 |
| | அர்ஜுனன் வில்வளைத்து லக்ஷ்யத்தை அறுத்தது ... | 735 |
| | அர்ஜுனனுக்குத் திரௌபதி மாலையிட்டது ... | 736 |
| 204 | அரசர்கள் கோபித்துத் துருபதனைக்கொல்லப் பிரயத்தனப்பட்டது ... ... ... | 737-738 |
| | பீமார்ஜுனர்கள் அவ்வரசரை எதிர்க்க ஸித்தமாயிருத்தல் | 738 |
| | கிருஷ்ணபலராமர் பாண்டவர்களைப்பற்றிப் பேசிக்கொண்டது ... ... ... | 739 |
| 205 | கர்ணன்முதலியோரை அர்ஜுனன்முதலியோர் தோற்கச்செய்தது ... ... ... | 740-743 |
| | மற்றஅரசர்கள்கிருஷ்ணை ஜயமடைந்தானென்செய்யப்பெற்றது | 744 |
| 206 | குந்தி கிருஷ்ணையை ஐவரும் புஜியுங்கள் என்றது ... | 745 |
| | திரௌபதியை ஐவரும் விவாகம்செய்துகொள்ள வேண்டுமென்பது ... ... .... | 746 |
| | கிருஷ்ணன்முதலியோர் குயவன்வீடுவருதல் ... | 746 |
| 207 | அர்ஜுனன்முதலியோர் கொணர்ந்தபிக்ஷையைக் குந்திசொற்படி கிருஷ்ணை பரிமாறுதல் ... ... | 748 |
| | திருஷ்டத்யும்னன் ஒளிந்து பாண்டவரையறிந்துபோதல் | 749 |
| | வைவாஹிகபர்வம். | |
| 208 | திருஷ்டத்யும்னன் அந்தவீரர்கள் பாண்டவர்கள்தாமென்றுரைத்தல் ... ... ... | 750-751 |
| | துருபதனுடையபுரோகிதர் பாண்டவரைக் குலகோத்திரம் விசாரித்தல் ... ... ... | 752 |
| | யுதிஷ்டிரர் அவருக்கு மறுமொழிகூறல் ... | 752-753 |
| 209 | பாண்டவர் துருபதன் அரண்மனை புகுந்தது ... | 753 |
| | துருபதன் அவ்வைவர்களையும் எந்த வருணத்தாரெனப் பரீக்ஷைசெய்தல் ... ... ... | 755 |
| 210 | துருபதன் யுதிஷ்டிரனை எவ்வருணத்தீர் என்று வினவுதல் | 755 |
| | யுதிஷ்டிரர் துருபதனுக்குத் தமது குலத்தைச் சொல்லுதலும் அவன் மகிழ்தலும் ... ... | 756 |
| | கிருஷ்ணையை ஐவரும் கலியாணஞ்செய்துகொள்ள வேண்டுமென்பதைத் துருபதன் ஆக்ஷேபித்தல் ... | 757 |

| அத்தியாயம். | | பக்கம். |
|---|---|---|
| 211 | வியாஸர் பலருக்கு ஒருமனைவி இருக்கும்விஷயத்தில் அபிப்பிராயபேதத்தைக்கேட்டல் ... ... | 758-759 |
| | ஜடிலை ஸப்தரிஷிகளிடமிருந்ததை யுதிஷ்டிரர் கூறுதல்... | 759 |
| | வியாஸர், கிருஷ்ணை ஐவருக்கும் மனைவி ஆகலாமென்று கூறல் ... ... ... | 760 |
| 212 | கிருஷ்ணை ஐவருக்கும் மனைவியாவதற்குக் காரணங்களை வியாஸர் உரைத்தது ... ... | 760-762 |
| | கிருஷ்ணை நாளாயனியாயிருந்து மௌத்கல்யரால் வரம் அளிக்கப்பெற்றது ... ... | 761 |
| 213 | நாளாயனி துருபதனுக்குப் பெண்ணானகாரணம் ... | 763-764 |
| | சங்கரர் நாளாயனிக்கு ஐந்துகணவரை அளித்தது ... | 764 |
| | நாளாயனி திரும்பவும் மகேசுவரரை வரங்கேட்டது ... | 765 |
| 214 | மனிதர் இறக்காமையால் இந்திரன் முதலியோர் வருந்திப் பிரம்மதேவரைச் சரணமடைதல் ... ... | 766-767 |
| | இந்திரன் நாளாயனியைக் கங்கைக்கரையிற்கண்டது ... | 767 |
| | இந்திரன் சங்கரரால் கர்வபங்கப்பட்டு அனுக்கிரகிக்கப்பட்டது ... ... ... | 767-769 |
| | ராமகிருஷ்ணர்களின் அவதாரம் ... ... | 770 |
| | ஞானக்கண்பெற்ற துருபதன் பாண்டவருடைய தேவதேகத்தைக் கண்டது ... ... ... | 770-771 |
| | பௌமாஸ்வியின் வரலாறு... ... ... | 771-772 |
| | கிருஷ்ணையின் முன்ஜன்மம்... ... ... | 772 |
| 215 | துருபதன் ஸம்மதிக்க வியாஸர் முதலில் யுதிஷ்டிரரை விவாகம் செய்துகொள்ள உரைத்தல் ... | 774 |
| | தௌமியர் யுதிஷ்டிரருக்கும் கிருஷ்ணைக்கும் பாணிக்கிரகணம் செய்வித்தல் ... ... ... | 775 |
| | பாண்டவர் வரிசைப்படி கிருஷ்ணையை விவாகம்செய்துகொண்டது ... ... ... | 775 |
| | பாண்டவர்களுக்குத் துருபதன் சீரளித்தது ... | 776 |
| 216 | கிருஷ்ணையைக் குந்தி ஆசீர்வதித்தல் ... ... | 777 |
| | கிருஷ்ணன் அனுப்பிய ஆபரணங்களை யுதிஷ்டிரர் பெற்றுக்கொண்டது ... ... ... | 778 |
| | **விதுராகமனபர்வம்.** | |
| 217 | அரசர்கள் பாண்டவர்விவாகத்தைக் கேள்வியுற்றது ... | 778 |
| | சகுனி பாண்டவர்களைக் கொல்லவேண்டுமென்று யோசனை கூறல் ... ... ... | 779-780 |
| | ஸோமதத்தன்மகன் ஸமாதானஞ் செய்யவேண்டுமென்றது | 780-782 |
| 218 | கர்ணன் தன்னபிப்பிராயத்தை வெளியிட்டது ... | 782-783 |
| | கௌரவசேனையும் துருபதன்சேனையும் எதிர்த்தது ... | 784 |
| | பாண்டவர் துரியோதனாதியரைப் போரில்வென்றது ... | 785-786 |
| | கிருஷ்ணன் சேனையோடு பாஞ்சாலநகரம்வந்தது ... | 787-788 |
| 219 | துச்சாஸனன் பாண்டவர்பெருமைக்குப் பொறாமைப்பட்டது ... ... ... | 788-789 |

| அத்தியாயம். | | பக்கம். |
|---|---|---|
| | விதுரர் திருதராஷ்டிரனை ஏமாற்றினது ... ... | 789 |
| | துரியோதனன் தந்தைமீது குறைகூறல் ... ... | 790-791 |
| 220 | துரியோதனன் பாண்டவர்களுக்கும் துருபதனுக்கும் மித்திரபேதம்செய்ய யோசித்தல் ... ... | 791 |
| 221 | கர்ணன் பாண்டவரைப் பராக்கிரமத்தினால் வெல்லலாமென்றது ... ... ... | 793-794 |
| 222 | பீஷ்மர் பாண்டவருக்குப் பாதிராஜ்யம் கொடுக்கவேண்டுமென்று உரைத்தல் ... ... ... | 795-796 |
| 223 | துரோணரும் பீஷ்மரைப்போலவே உரைத்தல் ... | 796-797 |
| | கர்ணன், துரோணர் பக்ஷபாதமுள்ளவரென்றது ... | 797-798 |
| | கர்ணனைத் துரோணர் கண்டித்தது ... ... | 799 |
| 224 | விதுரரும் பீஷ்மத்துரோணர்களுடைய அப்பிராயத்தை அங்கீகரித்தது ... ... ... | 799-801 |
| 225 | திருதராஷ்டிரன் பாண்டவரை அழைத்துவரும்படி விதுரரை அனுப்பியது ... ... ... | 802 |
| | விதுரர் துருபதனிடம் பாண்டவரை அனுப்பும்படி சொல்லியது ... ... ... | 803 |
| 226 | துருபதன் பாண்டவர்களுக்கு அஸ்தினபுரம்போக விடைதந்தது ... ... ... | 804 |
| | குந்தியும் விதுரரும் ஸம்பாஷித்தது ... ... | 805 |
| | துருபதன் பாண்டவருக்குச் சீரனுப்பியது... ... | 805-806 |
| | பாண்டவரைக் கௌரவர் எதிர்கொண்டழைத்தது ... | 806 |
| | நகரஜனங்கள் ஸந்தோஷித்தது ... ... | 806-807 |
| | **ராஜ்யலாபபர்வம்.** | |
| 227 | பாண்டவர்கள் தங்கள்வீட்டில் கிருகப்பிரவேசஞ்செய்தது | 807 |
| | திருதராஷ்டிரன் பாண்டவருக்குப் பாதிராஜ்யங்கொடுத்தது ... ... ... | 808 |
| | யுதிஷ்டிரர் பட்டாபிஷேகம்செய்விக்கப்பெற்றது ... | 809 |
| | பாண்டவர் காண்டவப்பிரஸ்தத்திற் பிரவேசித்தது ... | 810 |
| | விசுவகர்மா காண்டவபிரஸதத்தை இந்திரப்பிரஸ்தமாக்கியது ... ... ... | 811 |
| | விசுவகர்மா அந்நகர்க்கு மற்றஅங்கங்களையும் படைத்தது | 812-813 |
| | கிருஷ்ணன் விடைபெற்றுத் துவாரகைசென்றது ... | 814 |
| 228 | நாரதர் யுதிஷ்டிரருடையஸபைக்கு வந்தது ... | 815-816 |
| | நாரதரை யுதிஷ்டிரர் எதிர்கொண்டதும், அவர் ஆசீர்வதித்ததும் ... ... ... | 818 |
| | நாரதர் ஸுந்தோபஸுந்தர்கதையை உரைத்தது ... | 818 |
| 229 | ஸுந்தோபஸுந்தர்கள் பிரம்மதேவரிடம் வரம்பெற்றது | 820-821 |
| 230 | ஸுந்தோபஸுந்தர்களுடைய சேனைகள்செய்த அக்கிரமம் | 823 |
| 231 | ஸுந்தோபஸுந்தர்செய்த அக்கிரமத்தைச் சொல்லித் தேவர்கள் பிரம்மதேவரிடம் முறையிட்டது ... | 824 |
| | திலோத்தமைஸ்ருஷ்டியும் திலோத்தமையென்னும் பெயரின்காரணமும் அவள் பிரம்மதேவரால் ஏவப்பட்டதும் | 825 |

அத்தியாயம். பக்கம்.

திலோத்தமையின் அழகின் சிறப்பு ... ... 826
232 திலோத்தமை ஸுந்தோபஸுந்தர்முன் தோன்றியது ... 827
திலோத்தமையால் ஸுந்தோபஸுந்தர் ஒருவரையொருவர் கொன்றது ... ... ... 828
பிரம்மதேவர் திலோத்தமைக்கு வரமளித்தது ... 828
பாண்டவர் திரௌபதிவிஷயமாகச் செய்துகொண்ட வியவஸ்தை ... .. ... 829

அர்ஜுனவனவாஸபர்வம்.

233 பிராமணன் தன்பசு களவுபோயிற்றென்று முறையிட்டது 830
தனஞ்சயன் பசுவைமீட்டுக்கொணர்ந்து பிராமணனுக்கு அளித்தது ... ... ... 831
அர்ஜுனன் வனவாஸஞ்செய்யப் புறப்பட்டது ... 832
234 உலூபி அர்ஜுனனை ஜலத்துக்குள் இழுத்தது ... 833
அர்ஜுனன் உலூபியினால் வரிக்கப்படுதல் ... 833
அர்ஜுனனுக்கு உலூபி வரமளித்தல் ... ... 835
235 அர்ஜுனன் எங்குந்திரிந்து சித்ரவாகனனென்னும் அரசனிடம்போதல் .. ... ... 836
சித்ராங்கதையைவிரும்பிய அர்ஜுனனை அவள்தகப்பன் கன்யாசுல்கம்கேட்டது ... ... 837
236 ரிஷிகள் ஸ்நானஞ்செய்யாதுவிட்ட ஐந்து தீர்த்தங்களைப் பற்றி அர்ஜுனன் வினவுதல் ... ... 837
வர்க்கையென்னும் அப்ஸரஸ் தான் முதலியான காரணம் உரைத்தது ... ... ... 838-841
237 அர்ஜுனன் முதலைகளாயிருந்த மற்றை நான்குஅப்ஸரஸுகளையும் சாபம்நீக்கல ... ... ... 841
அர்ஜுனன் பப்ருவாஹனனைச் சித்ரவாகனனுக்குக் கொடுத்துக் கோகர்ணதேசஞ்சென்றது ... ... 841-842
238 அர்ஜுனன் ஸுபத்திரையைஅடையும் உபாயத்தைச் சிந்தித்தல் ... ... ... 842
கிருஷ்ணன் படுக்கையில் சிரித்தகாரணத்தை ஸத்யபாமை வினவுதல் ... ... ... 843
கிருஷ்ணனும் அர்ஜுனனும் ரைவதகபர்வதத்தில்ஸந்தித்தல் 844
கிருஷ்ணன் துவாரகைக்குத் திரும்புதல் ... ... 844

ஸுபத்ராஹரணபர்வம்.

239 யாதவர்களால் ரைவதகபர்வதத்தில் கிரிபூஜையென்னும் உத்ஸவம் நடத்தப்பட்டது ... ... ... 845-846

| அத்தியாயம். | | பக்கம். |
|---|---|---|
| | அர்ஜுனன் தனக்கு ஸுபத்திரையைத்தரும்படி கிருஷ்ணனை வேண்டியது ... ... ... | 846 |
| | கிருஷ்ணன் ஸுபத்திரையை அபகரிக்க உபாயங்கூறியது | 847 |
| 240 | பலராமர்முதலியோர் அர்ஜுனனைக் கண்டது ... | 848 |
| | பலராமர் அர்ஜுனனை ஸுபத்திரையின் அந்தப்புரத்தில் வைக்க நிச்சயித்தது ... ... ... | 849 |
| 241 | துவாரகையில் யாவரும் அர்ஜுனனைப் பூஜித்தல் ... | 850 |
| | அர்ஜுனன் ஸந்யாஸியாக ஸுபத்திரையின் அந்தப்புரத்தில வஸித்தது ... ... ... | 851 |
| | அர்ஜுனனிடம் ஸுபத்திரைக்குண்டாயிருந்த காதல் ... | 852 |
| | ஸுபத்திரை அர்ஜுனன்விஷயமாக யதியை விஞவியது | 853 |
| | ஸுபத்திரைக்கு அர்ஜுனன் தன்னைவெளிப்படுத்தியது | 853 |
| | ருக்மிணியும் தேவகியும் ஸுபத்திரையைத் தேற்றல ... | 854 |
| | கிருஷ்ணன் யாதவரனைவரையும் துவாரகையினின்றும் வேற்றிடம் அனுப்பியது ... ... | 855 |
| 242 | அர்ஜுனன் ஸுபத்திரையைக் காந்தர்வவிவாகத்துக்கு உடன்படுத்தியது ... ... ... | 857-858 |
| | இந்திரன்கிருஷ்ணன்முதலியோர் அர்ஜுனனுக்கும் ஸுபத்திரைக்கும் விவாகஞ்செய்வித்தல ... | 858-860 |
| 243 | ஸுபத்திரை அர்ஜுனனுக்கு ரதம்கொணர்ந்தது ... | 861 |
| | அர்ஜுனன் ஸ்வயநடத்தோடு தேரேறிச்சென்றது ... | 861 |
| 244 | விப்ருதுவின்சேனை அர்ஜுனனை எதிர்த்ததும் விப்ருது ஆசிர்வதித்ததும் ... ... ... | 863-865 |
| | உன்தீவிலிருந்தவர் அர்ஜுனன்செய்கையை அறிந்தது .. | 866 |
| | பலராமர் கோபித்துக் கிருஷ்ணனுடன்சொல்லியது ... | 866-867 |
| | ஹரணாஹரணபர்வம். | |
| 245 | கிருஷ்ணன் அர்ஜுனனை ஸமாதானப்படுத்தி அனுப்ப வேண்டும் என்றது ... ... ... | 868 |
| | ஸுபத்திரை அர்ஜுனனிடம் யாதவர்களைக்காக கொல்லாதிருக்க வேண்டியது ... ... ... | 868 |
| | அர்ஜுனன் ஸுபத்திரையுடன் இந்திரப்பிரஸ்தத்தைக் கண்டது ... ... ... | 870 |
| 246 | ஸுபத்திரை இடைச்சிவேஷத்தோடு இந்திரப்பிரஸ்தத்திற் பிரவேசித்தது ... ... ... | 871 |
| | திரௌபதியும் குந்தியும் ஸுபத்திரையை ஆசிர்வதித்தது | 871 |
| | அர்ஜுனன் இந்திரப்பிரஸ்தத்தில் எல்லாராலும்கொண்டாடப்பட்டது ... ... ... | 872 |

அத்தியாயம். பக்கம்.

247 கிருஷ்ணன் ஸுபத்திரைக்குச் சிறப்புக்களைஎடுத்துக் கொண்டு இந்திரப்பிரஸ்தம்வந்தது ... ... 873-874
பாண்டவர்களும் யாதவர்களும் ஒருவருக்கொருவர் மரியாதைசெய்ததும், கிருஷ்ணன்முதலியோர் ஸுபத்திரைக்குச் சீரளித்ததும் ... ... ... 875-876
அபிமன்யு பிறந்தது ... ... ... 877
அபிமன்யு என்னும் பெயரின்பொருள் ... ... 877
திரௌபதி ஐவருக்கும் ஐந்துபுத்திரர்களைப் பெற்றது ... 878
திரௌபதிபுத்திரர்களின் பெயர்களுக்குக் காரணங்கள்... 878-879

காண்டவதாஹபர்வம்.

248 கிருஷ்ணார்ஜுனர்கள் காண்டவவனத்தைக்கண்டது ... 881
கிருஷ்ணார்ஜுனர் எதிரில் அக்னி பிராமணவடிவத்தோடு வந்தது ... ... ... 882-883
249 அக்னி கிருஷ்ணார்ஜுனர்களை ஆகாரம்வேண்டியது ... 883-874
சுவேதகியென்னும் அரசன் யாகம்செய்தது ... 884-886
துர்வாஸஸ்என்னும் ரிஷியினால் சுவேதகிராஜன்யாகஞ்செய்விக்கப்பெற்றது ... ... ... 887
அக்னி வாட்டமுற்றது ... ... ... 888
பிரம்மதேவர் அக்னியைக் காண்டவவனத்தை உண்ணும்படி சொல்லியது ... .. ... 888
அக்னி ஏழுதடவை காண்டவவனத்தை எரிக்கத்தொடங்கியும் நிறைவேறாமற்போனது ... ... 889
250 அர்ஜுனன் அக்னியிடம் தனக்குத் தேரும் வில்லும் கிருஷ்ணனுக்கு ஆயுதமும் வேண்டல ... ... 890
251 அக்னி அர்ஜுனனுக்குத் தேர்வில்தூணிமுதலியவையும், கிருஷ்ணனுக்குச் சக்ரமும் அளித்தது ... ... 891-892
அக்னி காண்டவவனத்தைஎரித்தது ... ... 893
252 இந்திரன் மழைபெய்வித்தது ... ... 894-895
253 அச்வஸேனனென்னும்நாகம் இந்திரனால்விடுவிக்கப்பட்டது 895-896
அச்வஸேனன் கிருஷ்ணனாலும் அக்னியாலும் சாபமுற்றது 896
இந்திரனுக்கும் அர்ஜுனனுக்கும் யுத்தம் ... ... 896-898

மயதர்சனபர்வம்.

254 தேவர்கள் தோல்வியடைந்து திரும்பியது ... 900
இந்திரன் அசரீரிவாக்கைக்கேட்டுத் திரும்பிப்போனது ... 900
மயன் அர்ஜுனனைச் சரணமடைந்தது ... ... 901
காண்டவவனத்தில் எரிக்கப்படாதவர் யார்யாரென்பது ... 902

| அத்தியாயம். | | பக்கம். |
|---|---|---|
| 255 | மந்தபாலரிஷி ஸந்ததிவேண்டி சார்ங்கபக்ஷி உருவெடுத்தது ... ... ... | 903 |
| | மந்தபாலர் அக்னியைத் துதித்தது ... ... | 904 |
| 256 | ஜரிதையென்னும் பெண்சார்ங்கபக்ஷி குஞ்சுகளைக்குறித்துத் துக்கித்தது .. ... ... | 905-906 |
| | குஞ்சுகள் மறுமொழிகூறியது ... ... | 906-907 |
| 257 | சார்ங்கிக்கும் குஞ்சுகளுக்கும் ஸம்வாதம்... ... | 907-908 |
| 258 | குஞ்சுகள்நான்கும் அக்னியைத்துதித்தது ... | 909-911 |
| 259 | மந்தபாலர் லபிதையிடம் புலம்பியது ... ... | 911 |
| | லபிதைகூறிய மறுமொழி ... ... | 911-912 |
| | மந்தபாலர் தம்குஞ்சுகளிடம் வந்தது ... ... | 912 |
| | குஞ்சுகள் மந்தபாலரை ஸ்தோத்திரஞ்செய்தது ... | 912 |
| | மந்தபாலர் தம்குழந்தைகளின் ஜ்யேஷ்ட கனிஷ்ட முறையை வினவியது ... ... ... | 913 |
| | மந்தபாலரை ஜரிதை கோபித்ததும் அவர்ஆற்றியதும் ... | 913 |
| 260 | மந்தபாலர் தம்மனைவியையும் குஞ்சுகளையும் அழைத்துக்கொண்டு வேறிடம்போனது ... ... | 914 |
| | இந்திரன் கிருஷ்ணார்ஜுனர்களுக்கு வரமளித்துப்போனது | 914-915 |
| | அக்னி காண்டவவனத்தை எத்தனைநாள்எரித்தான்என்பது | 915 |
| | அக்னிகிருஷ்ணார்ஜுனர்களை ஆசீர்வதித்து விடைபெற்றுப்போனது ... ... ... | 915 |
| | கிருஷ்ணார்ஜுனர்கள் மயனுடன் புறப்பட்டுப்போதல் ... | 915 |

ஆதிபர்வம் விஷயசூசிகை முற்றிற்று.

---

ஸ்ரீ:
ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.
ஸ்ரீக்ருஷ்ணத்வைபாயநாய நம:.

# ஸ்ரீ மஹாபாரதம்.

## ஆதிபர்வம்.

### முதலாவது அத்தியாயம்.

### அநுக்கிரமணிகாபர்வம்.

நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் |
தேவீம் [2]ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் |

புருஷோத்தமர்களாகிய நரநாராயணர்களையும் ஸரஸ்வதிதேவியையும் வியாஸரையும் நமஸ்கரித்துப் பிறகு [3]ஜயத்தை ஒருவன் சொல்லக்கடவன். [4] [5]

[6] நாராயணம் ஸுரகுரும் ஜகதேகநாதம்
பக்தப்ரியம் ஸகலலோகநமஸ்க்ருதம் ச |
த்ரைகுண்யவர்ஜிதமஜம் விபுமாத்யமீசம்
வந்தே பவக்னமமராஸுரஸித்தவந்த்யம் ||

தேவர்களுக்குப்பிதாவும், ஜகத்துக்கு ஒரேநாதனும், பக்தர்களுக்குப்பிரியனும், எல்லா உலகங்களாலும் நமஸ்கரிக்கப்பட்ட

---

1 ஆதிபர்வமுதலிய பதினெட்டும் பெரிய பர்வங்கள்; அநுக்கிரமணிகா பர்வமுதலிய நூறும் மேற்கூறிய பெரியபர்வங்களுக்கு உட்பட்ட சிறிய பர்வங்கள்.

2 ஸரஸ்வதீம் சைவ என்றும் பாடம்.

3 ஜயம்—பாரதம்.

4 'நாராயணனையும், நரன் என்கிற ஆதிசேஷனையும், நரோத்தமனென்கிற வாயுபகவானையும், லக்ஷ்மியையும், ஸரஸ்வதியையும், கிரந்தகர்த்தாவாகிய வியாஸரையும் நமஸ்கரித்துப் பாபத்தைத் தீர்க்கின்றதான ஜயப்பாரதத்தைச்சொல்ல வேண்டும்' என்பது மாத்வஸம்பிரதாய உரை. (மஹாபாரததாத்பர்ய நிர்ணயம், மூன்றாம் அத்தியாயம்.)

5 'நாராயணனையும், புருஷோத்தமனான நரனையும்' என்றும் சொல்லலாம்.

6 இது மாத்வஸம்பிரதாயத்தில் மாத்திரம் அநுஸந்திக்கப்படுகிறது.

வனும், முக்குணங்களும் ஒழிந்தவனும், ஜனனமில்லாதவனும், வியாபகனும், முதல்வனும், ஈஸ்வரனும், ஸம்ஸாரத்தை நிவிர்த்திசெய்பவனும், தேவர்களாலும் அஸுரர்களாலும் ஸித்தர்களாலும் வந்தனஞ்செய்தற்குரியவனுமாகிய நாராயணனை நான் வந்தனம் செய்கிறேன்.

ஒருகாலத்தில், [1]ரோமஹர்ஷணரென்பவருடைய புத்திரரும் [2] ஸூதகுலத்தவரும் பௌராணிகருமாகிய [3]உக்கிரஸ்ரவஸ்என்பவர், [4] நைமிசாரண்யத்தில் சௌனகரென்னும் [5]குலபதியினுடைய பன்னிரண்டுவருஷங்களிற்செய்யத்தக்கதான [6]ஸத்ரமென்கிற யாகத்தில் வந்துசேர்ந்து ஸுகமாக வீற்றிருந்த கடுந்தவமுள்ள பிரமரிஷிகளிடஞ் சென்றார். அந்த ஸூதபுத்திரர் அவ்வாஸ்ரமத்தைச் சேர்ந்து அடக்கத்தினால் வணங்கினவராகி, நைமிசாரணியத்தில் வஸிப்பவர்களாகிய ரிஷிகளெல்லாரையும்பார்த்து, "இன்றைத்தினம் உங்கள் தரிசனத்தினால் பாக்கியமுள்ளவனானேன். வியாஸபகவானாற் சொல்லப்பட்ட தர்மமும் அர்த்தமும் சேர்ந்தவையான கதைக

1 புராணப்பிரஸங்கத்தால், கேட்பவர்க்கு மயிர்சிலிர்த்தல் உண்டாகும்படி செய்பவர்.

2 பிருதுசக்கரவர்த்தியின் யாகத்தில் இந்திரனுக்கு உத்தேசித்த ஹவிஸோடு பிருஹஸ்பதியின் ஹவிஸைச்சேர்த்து ஹோமஞ்செய்ய, இந்திரனுடைய ஹவிஸில் குருவினுடைய ஹவிஸ் அகப்பட்டுக் கலந்துபோனதினால் ஸூதகுலம் உண்டாயிற்றென்று வாயுபுராணமும், பிராம்மணஸ்திரீக்கும் க்ஷத்திரியனுக்கும் பிறந்தவன் ஸூதன் என்று யாஜ்ஞவல்கிய ஸ்மிருதியும் கூறுகின்றன.

3 ஸூதர் ; ஸூதகுலத்திற் பிறந்தமையால் ஸூதரென்றும் ஸூதபௌராணிகரென்று பிரசித்திபெற்ற ஸூதருக்குப் புத்திரராதலின் ஸௌதியென்றும் ஸூதபுத்திரரென்றும் இவர் வழங்கப்பெறுவர். சௌனகாதிமுனிவர்களுக்குப் பாரதத்தைச்சொன்னவர் இவரே.

4 தேவர்களால் அஸுரசேனை ஒரு நிமிஷத்திற் கொல்லப்பட்டதற்கு இடமாக இருந்தமையின், அந்த இடத்திற்கு நைமிசாரணியமென்னும் பெயர் வந்ததென்று வராஹபுராணமும், பிரமதேவர் ஆதிகாலத்திலே பிரகாசிக்கிற மனோமயமான ஒரு சக்கரத்தை ஸ்ருஷ்டித்து பூமியென்று சொல்லப்பட்ட அதன்முனை எந்த இடத்தில் தெறித்துப்போகிறதோ அந்த இடம் தவஞ்செய்வதற்கு யோக்கியமானதென்று சொல்லி அந்தச்சக்கரத்தைச்செலுத்த அதன்முனை அந்த வனத்தில் தெறித்துப்போனதினால் அதற்கு நைமிசாரணியமெனப் பெயர்வந்ததென்று வாயுபுராணமும் கூறும்.

5 ரிஷிக்கூட்டங்களில் முக்கியமானவர் ; பதினாயிரம் ரிஷிகளை அன்னபானம் முதலியவற்றால் காப்பாற்றுகிறவர்.

6 அநேகருக்குத் தானம் செய்வதும், அநேகம் பிராணிகளைத் திருப்தி பண்ணுவதும், அநேககர்த்தாக்களினால் செய்யப்படுவதும், யஜமானர்களே ரித்விக்குக்களாக இருக்கப்பெற்றதுமான யாகம்.

ளெல்லாவற்றையும் அறிந்திருக்கிறேன். பிராமணஶ்ரேஷ்டர்களே! அவற்றை உங்களுக்குச்சொல்லுகிறேன்; தபோதனர்களாகிய நீங்கள் இப்போது கேட்டருளவேண்டும்" என்றனர்.

ஸூதர் அவ்வாறு சொன்னதைக்கேட்டு, நைமிசாரணியத்தில் வஸிப்பவர்களாகிய ரிஷிகள், விசித்திரமான கதைகளைக் கேட்பதற்காக அவ்விடத்தில் அவரைச் சூழ்ந்துகொண்டார்கள். ஸூதபுத்திரர் அந்த ரிஷிகளனைவரையும் வந்தனஞ்செய்து கைகூப்பிக்கொண்டு தபஸின் அபிவிருத்தியைப்பற்றிக் குசலப்பிரஶ்னஞ்செய்து அந்தப்பெரியோர்களால் தாமும் கௌரவிக்கப்பெற்றார். அந்தத்தவத்தோர் யாவரும் உட்கார்ந்தபின் ரோமஹர்ஷணபுத்திரர் அவர்கள் காட்டிய ஆஸனத்தைப் பணிவுடன் அங்கீகரித்துக்கொண்டார். அந்தஸூதர் அதில் ஸுகமாக உட்கார்ந்து சிரமபரிகாரமுற்றதைக் கண்டு, ஒருரிஷி, பேசுவதற்கு ஸந்தர்ப்பத்தை உண்டாக்கிக்கொண்டு, "ஸூதபுத்ரரே! எங்கிருந்துவருகிறீர்? தாமரையிதழ்போன்ற கண்களையுடையவரே! இவ்வளவுகாலம் நீர் எங்கே ஸஞ்சரித்தீர்? கேட்கிற எனக்கு இதைச் சொல்லவேண்டும்" என்றுகேட்டார்.

இவ்விதம் அந்தரிஷி செம்மையாகவும் உண்மையாகவும் பிரஶ்னஞ்செய்ய, பேசுவதில் வல்லமையுடையவரான ரோமஹர்ஷணபுத்திரர், ஆத்மத்தியான நிஷ்டர்களான முனிவர்களுடைய விரிவான அந்த ஸபையில் அவர்களுடைய சரித்திரமும் அடங்கிய வாக்கியங்களைக் கூறத்தொடங்கினார்.

"கிருஷ்ணத்வைபாயனரென்னும் பெயர்பெற்ற வியாஸமஹரிஷியினாற்சொல்லப்பட்ட மஹாபாரதகதைகளைப் பரிக்ஷித்துமஹாராஜாவின் புத்திரரும் மஹாத்மாவுமான ஜனமேஜயரென்னும் ராஜரிஷி ஸர்ப்பயாகஞ்செய்தபோது அந்தராஜஶ்ரேஷ்டருக்கு வைசம்பாயனர் முழுதும் சரியாகச்சொன்னார். மிகுந்த புண்ணியங்களும் ஆச்சரியப்படத்தக்கவிஷயங்களுள்ளவையுமான அந்தக்கதைகளை நான்கேட்டிருந்து, பிறகு பலதீர்த்தங்களுக்கும், க்ஷேத்திரங்களுக்கும் யாத்திரைசெய்து, பாண்டவர்களும் கௌரவர்களும் மற்றுமுள்ள எல்லா அரசர்களும் யுத்தஞ்செய்த இடமும், பிராமணர்களால் ஆஶ்ரயிக்கப்பெற்றதுமாகிய ஸமந்தபஞ்சகமென்னும் புண்ணியக்ஷேத்திரத்திற்குப் போயிருந்தேன். அவ்விடமிருந்து உங்களைத் தரிசனஞ்செய்ய விரும்பி இங்கே வந்துசேர்ந்தேன். நீண்டவாழ்நாளுள்ளவர்களாகிய உங்களையெல்லாம் பரப்பிரம்மமாகவன்றோ யான் நினைப்பது? பெரியபாக்கியம்பெற்றவர்களும் ஸூர்யனுக்கும் அக்னிக்கும் ஸமா

ணமான தேஜஸையுடையவர்களுமாகிய நீங்கள் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு, பரிசுத்தர்களாகி, ஜபம்செய்துவிட்டு, அக்னிகளில் ஹோமத்தைமுடித்து, கவலையின்றி இந்தயாகத்தில் உட்கார்ந்திருக்கிறீர்கள். பிராமணர்களே! நான் புராணங்களிலுள்ள அறம்பொருள்களைப்பற்றிய புண்ணியகதைகளைச் சொல்லவா? மகாத்துமாக்களாகிய அரசர்கள் ரிஷிகள் இவர்களுடைய சரித்திரத்தைச் சொல்லவா? எதை நான்சொல்லட்டும்" என்று கேட்டனர்.

ரிஷிகள், "வியாஸமஹரிஷியாலே வெளியிடப்பட்டதும், தேவர்களாலும் பிரமரிஷிகளாலும் கேட்டுக் கொண்டாடப்பட்டதும், ஆச்சரியங்களாகிய பதங்களையும் பர்வங்களையும் நுண்மையான பொருள்களையும் நியாயங்களையுமுடையதும், வேதங்களின்பொருள்களையே அணிகலமாகப்பூண்டதும், கதைகளுள்ளே சிறந்ததுமாகிய அந்தப்பாரதமென்னும் பூர்வசரித்திரத்தைப்பற்றியதும், ஒழுங்காகச் சேர்க்கப்பட்ட விஷயங்களடங்கியதும், அநேகவிதமான சாஸ்திரங்களினுற் பூரிக்கப்பட்டதும், வியாஸருடைய ஆஜ்ஞைப்படி வைசம்பாயனராலே ஜனமேஜயராஜாவுடைய ஸர்ப்பயாகத்தில் ஸந்தோஷத்துடன் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டதும், நாலுவேதங்களோடும் சேர்ந்ததும், புண்ணியத்தைச்சேர்ப்பதும், பாவத்தையொழிப்பதும், ஆச்சரியமான செய்கையுள்ள வியாஸருடைய [1]ஸம்ஹிதையுமாகிய அந்தப்பரிசுத்தமான வாக்கைக் கேட்க விரும்புகிறோம்" என்றார்கள். ஸௌதியானவர் சொல்லுகிறார்:—

"மூலகாரணமான புருஷனும், ஈசானனும், அநேகர்களாலே யாகங்களில் அழைக்கப்பட்டவனும், அநேகர்களாலே ஸ்துதிக்கப்பட்டவனும், ஸத்தியனும், அழிவில்லாத ஒரு பரப்பிரம்மமும், ஸ்தூலஸூக்ஷ்ம ஸ்வரூபனும், சாச்வதனும், பிரகிருதியும் ஜீவர்களும் சேர்ந்த பிரபஞ்சரூபனும், அந்தப்பிரபஞ்சத்திற்கு மேற்பட்டவனும், மேலானவைகளையும் கீழானவைகளையும் படைத்தவனும், என்றும் புதுமையானவனும், பரதத்துவமும், மாறுதலில்லாதவனும், மங்களகரனும், மங்களரூபனும், ஸர்வவியாபியும், பிரார்த்திக்கத்தக்கவனும், பாவத்தைப் போக்குகிறவனும், பரிசுத்தனும், ஐம்புலன்களையும் ஆளுகிறவனும், ஜங்கமங்களுக்கும் ஸ்தாவரங்களுக்கும் பிதாவுமாகிய ஹரியை நமஸ்கரித்து, எல்லாஉலகங்களாலும் பூஜிக்கப்பட்ட மஹாத்துமாவும் ஆச்சரியமான செய்கைகளையுடையவருமாகிய வியாஸமஹரிஷியினுடைய பரிசுத்தமான அபிப்பிராயத்தை

1 வேதத்துக்கு ஒப்பான கிரந்தம்.

வெளியிட ஆரம்பிக்கிறேன். அளவற்ற மகிமைபொருந்திய அந்த வியாஸபகவானுக்கு நமஸ்காரம்; அவருடைய அனுக்கிரகத்தினால் இந்த நாராயணனுடைய கதையைச் சொல்லத்தொடங்குகிறேன்.

நாராயணனுடைய கதையானது எவ்வாறு பயனைத்தருமோ அவ்வாறு பிரமசரியம்முதலான நான்கு ஆச்ரம தர்மங்களைச் செய்வதும் தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானஞ்செய்வதும் பயனைக் கொடா. நாராயணனுக்கு ஒப்பு முன்னுமில்லை; இப்போதுமில்லை; இனிமேலுமில்லை; இந்த ஸத்தியவாக்கியத்தினாலே யான் எல்லா விஷயங்களையும் நிறைவேற்றுகிறேன். இந்தஇதிஹாஸத்தைப் பூலோகத்தில் அநேக கவிகள் முன்னேசொன்னார்கள்; பரந்த அறிவுள்ள மற்றும்சிலர் இப்போதும் சொல்லுகிறார்கள்; அப்படியே இனிமேலும் சிலர் சொல்லுவார்கள். மூன்று லோகங்களிலும் நிலைபெற்ற பெரிய ஞானமாகிய இதைப் பிராம்மணர்கள் விரிவாகவும் சுருக்கமாகவும் காப்பாற்றிவைத்துக்கொண்டிருக்கின்றனர். இஃது, அழகான சொற்களாலும், தேவர்களுடைய [1]வ்யவஹாரங்களாலும், மனிதர்களுடைய வ்யவஹாரங்களாலும் அலங்கரிக்கப்பட்டது; பலவகையான சந்தங்களோடு கூடியது; வித்துவான்களுக்குப் பிரியமானது; ஸத்தியவதியின் புத்திரரான வியாஸர் தம்முடைய [2]தவத்தினாலும் [3]பிரமசரியத்தினாலும் நித்தியமான வேதத்தை வகுத்தபிறகு இந்தப் புண்ணியமான [4]இதிஹாஸத்தைச் செய்தார். புண்ணியக்ஷேத்திரமாகிய இமயமலையின் அடிவாரத்தில் பரிசுத்தமான குஹாக்ருஹத்தில் தர்மாத்மாவாகிய அந்த வியாஸர் ஸ்நானஞ்செய்து தருப்பையைப் பரப்பி அதன்மேல் எழுந்தருளியிருந்து சுத்தரும் நியமமுள்ளவருமாய் மனதையடக்கி த்யானத்திலேயே நிலைபெற்றிருந்து பாரதமென்னும் இதிஹாஸத்தினுடைய அந்தவரலாற்றைத் தபோபலத்தினால் ஆராய்ந்து [5]யோகத்தில் பிரவேசித்து ஞானத்தால் எல்லாவற்றையும் பூர்ணமாகப் பார்த்தார். அவர் கண்டமுறையாவது:—

இவ்வுலகம், பிரகாசமில்லாமலும் அறிவில்லாமலும் எங்கும் இருளால் மூடப்பட்டுமிருந்தபோது, பிரஜைகளின் வித்தாகவுள்ளதும் அழிவில்லாததுமாகிய ஒருபெரியமுட்டை உண்டாயிற்று. பெரியதும் அற்புதமுமான அந்த அண்டத்தை யுகங்களுக்கு ஆதி

---

1 சரித்திரம் முதலியவை. 2 த்யானசக்தி.
3 இந்திரியஜயம். 4 பூர்வசரித்திரம்.
5 புறம்பொருளாகவுள்ளே காணக்கூடிய சக்தி.

காரணமென்று சொல்லுகின்றனர். ஸத்தியமும் தேஜோமயமும் அழியாததும் ஆச்சரியமும் நினைத்தற்கரியதும் எல்லாவற்றினும் ஒரேதன்மையாக இருப்பதும் வெளிப்படாததும் எல்லாவற்றுள்ளும் பிரவேசித்திருப்பதும், ஜடங்களும் ஜீவன்களும் தானாக இருப்பதுமாகிய பிரம்மமானது, அந்த அண்டத்தில் வேதங்களினால் அறியப்படுகிறது. அந்த அண்டத்தில், பிரஜைகளைப்படைக்கின்றவரும், சக்தியுள்ளவருமாகிய (முதல்) பிரமதேவர் பிறந்தார்.

தேவர்களுக்கெல்லாம் பிதாவாகிய பிரம்மாவும், ஸ்தாணுவும்; பிரமபுத்திரரான ஸ்வாயம்புவமனுவும், பிரசேதஸின் புத்திரராகிய தக்ஷரும், தக்ஷருடைய புத்திரர்கள் ஏழுபேர்களும், [1]இருபத்தொரு பிரஜாபதிகளும் உண்டானார்கள். எல்லா ரிஷிகளாலும் அறியப்பட்டவனும் அறிதற்கரிய ஸ்வரூபமுள்ளவனுமாகிய விராட்புருஷனும், விசுவேதேவர்களும், ஆதித்தியர்களும், வஸுக்களும், அசுவினீதேவர்களும், யக்ஷர்களும், ஸாத்தியர்களும், பிசாசர்களும், [2]குஹ்யகர்களும், பிதிர்த்தேவதைகளும் பிறந்தனர்; பிறகு, எல்லாக் குணங்களும் நிரம்பினவர்களும், வித்வான்களும், சிஷ்டர்களும், சிரேஷ்டர்களுமான அநேக மஹரிஷிகள் உண்டானார்கள்; ஜலம், மேலுலகம், பூமி, வாயு, இடைவெளி, திசைகள், வருஷங்கள், ருதுக்கள், மாஸங்கள், பக்ஷங்கள், பகலிரவுகள் இவை முறையே உண்டாயின; இன்னும் உலகத்திற்காணப்படுகின்ற ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமாகிய மற்ற எல்லாப் பொருள்களும் உண்டாயின; ஜகங்களுக்கு முடிவுவரும்போது அவையெல்லாம் மறுபடி ஸம்ஹாரஞ் செய்யப்படுகின்றன. அந்த அந்த ருதுக்களின் அநேகவிதங்களான அடையாளங்கள் ஒவ்வொரு ருதுவும் திரும்பி வரும்போது, அந்த அந்த ருதுக்களில் முன்னிருந்தவையாகக் காணப்படுவதுபோல், ஒவ்வொரு யுகத்தின் ஆரம்பத்திலும் வஸ்துக்கள் அந்த அந்த முந்தியயுகங்களிலிருந்தவைபோற் காணப்படுகின்றன. இந்த விதமாக ஆதியும் அந்தமுமில்லாததும் பஞ்சபூதங்களின் சேர்க்கையாகிய பிரபஞ்சத்திற்குக் காரணமுமான இந்தக் காலசக்கரமானது, ஆரம்பமும் முடிவுமில்லாமல் உலகத்தை சுற்றிக்கொண்டே இருக்கிறது. முப்பத்துமூன்று ஆயிரங்களும், முப்பத்துமூன்று நூறுகளும், முப்பத்துமூன்றுமான தேவர்களின் ஸ்ருஷ்டி சுருக்கமாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. திவஸ்புத்திரன், ப்ருஹத்பானு, சக்ஷுஸ், ஆத்மா,

1 மரீசிமுதலிய ஸப்தரிஷிகளும், டஷ்ஞன்குமஹ்ககளும்.

2 யக்ஷர்களில் ஒருவகையினர்.

விபாவஸு, ஸவிதா, ரிசிகன், அர்க்கன், பானு, ஆசாவஹன், ரவிஎன்னும் இவர்களெல்லோரும் சூரியனுடைய புத்திரர்கள். இவர்களுக்குப் பின்தோன்றியவர் மஹர்ஷியர் என்னப்பட்ட வைவஸ்வதமனு. தேவப்ராட் என்பவர் அந்த மனுவின்புத்திரர்; தேவப்ராட்டின்புத்திரர் ஸுப்ராட் என்பவர். சந்ததியுள்ளவர்களும் மிகுந்த கல்வியுள்ளவர்களுமாகிய தசஜ்யோதி, சதஜ்யோதி, ஸஹஸ்ரஜ்யோதி என்ற மூன்றுபேர்கள் ஸுப்ராட்டின் புத்திரர்கள். மஹாத்துமாவாகிய தசஜ்யோதிக்குப் பதினாயிரம் புத்திரர்கள் உண்டானார்கள். அதற்குப் பதின்மடங்கானவர்கள் சதஜ்யோதியின் புத்திரர்கள். அதற்குமேல் இன்னும் பதின்மடங்கானவர்கள் ஸஹஸ்ரஜ்யோதியின் புதல்வர்கள்; அவர்களிடமிருந்துதான் இந்தக் குருவம்சமும், யதுவம்சமும், பரதவம்சமும், யயாதிவம்சமும், இக்ஷ்வாகுவம்சமும், இன்னும் அநேக ராஜரிஷிவம்சங்களும், மிகவிரிவான பிராணிஸ்ருஷ்டிகளும் உண்டாயின. பிராணிகளிருக்குமிடமனைத்தும், ஜனனம் மரணம் வினைப்பயனாகிய [1]மூன்றுவகை ரஹஸ்யங்களும், வேதமும், யோகமும், ஞானமும், தர்மார்த்தகாமங்களும், அவற்றைப்பற்றிய பற்பலசாஸ்திரங்களும், உலகநடையின் ஒழுங்குமாகிய எல்லாவற்றையும் வியாஸமஹரிஷியானவர் கண்டறிந்தார்.

பாரதவம்சத்தினுடைய ராஜ்யதந்திரமும், பூரணமான அபிவிருத்தியும், சரித்திரங்களும், [2]உபாக்கியானங்களும், அநேக விதங்களான வேதார்த்தங்களுமாகிய இதிஹாஸக்ரந்தத்தினுடைய லக்ஷணமுழுவதும் இந்த அத்தியாயத்தில் ஸங்க்ரஹமாக வரிசைப்படுத்திக் கூறப்பட்டுள்ளன; பிறகு, விரிவாகச் சொல்லப்படும். இந்தப் பெரிய ஞானத்தை வியாஸமஹரிஷி, சுருக்கியும் விரித்தும் சொன்னார். ஏனென்றால், உலகத்திற் சுருக்கம் விரிவு இரண்டையும் வைத்துக்கொள்வது வித்வான்களுக்குப் பிரியமானது.

சில பிராமணர்கள் பாரதத்தை [3]'நாராயணம் நமஸ்க்ருத்ய' என்ற சுலோகம் முதலாகவும், இன்னும் சிலர் ஆஸ்தீகர்சரித்திரம் முதலாகவும், மற்றும் சிலர் உபரிசரவஸுவின் சரித்திரமாதியாகவும் ஓதுகின்றனர். அவை ஒவ்வொன்றும் ஸரியே. ஞானவான்கள் தங்களுக்குக் கிரந்தங்களிலுள்ள ஞானத்தை அநேக விதங்களாற்பிரகா

---

[1] தர்ம அர்த்த காம ரஹஸ்யங்களென்பது பழைய உரை.

[2] கிளைக்கதைகள்.

[3] மஹர்ஷியர் என்னும் வைவஸ்வதமனுவின் வரலாறுமுதலாக வென்றும் சிலர்கூறுவர்.

சப்படுத்துகின்றனர். சிலர் கிரந்தங்களை விரித்து உரைசெய்ய ஸமர்த்தர்களாயிருக்கின்றனர். மற்றும் சிலர் கிரந்தங்களை மறவாம லிருக்க வல்லவர். ஸத்தியவதியின் புத்திரரான வியாஸர் தம்முடைய தவத்தினாலும் பிரமசரியத்தினாலும் நித்தியமான வேதத்தை வகுத்து, புண்ணியமான இந்த இதிஹாஸத்தைச் செய்தார். முன்பு பராசரரின் புதல்வரும், வித்வானும், உக்கிரமான தவமுள்ளவரும், தர்மத்தில் சித்தமுள்ளவரும், சக்திமானுமாகிய கிருஷ்ணத்வைபாயனரென்னும் பிரமரிஷி தம்தாயாருடைய கட்டளையினாலும், சிறந்த புத்தியுள்ள பீஷ்மருடைய கட்டளையினாலும், விசித்திரவீரியனுடைய பாரியையிடம் மூன்று அக்கினிகளைப்போன்ற குருவம்ச புத்திரர்கள் மூவரையும் உண்டுபண்ணினர்; திருதராஷ்டிரனையும் பாண்டுவையும் விதுரரையும் உண்டுபண்ணிவிட்டு ஞானவானாகிய வியாஸர் மறுபடியும் தவத்திற்காக ஆஸ்ரமத்திற்கே சென்றார். அவர்கள் பிறந்து வளர்ந்து முடிவையடைந்தபின் வியாஸமஹரிஷி இந்த மனுஷ்ய லோகத்துக்காகப் பாரதத்தைச் சொன்னார். ஜனமேஜய ராஜாவும் ஆயிரக்கணக்கான பிராமணர்களும் பாரதத்தைச் சொல்ல வேண்டுமென்று கேட்க,ஸமீபத்தில் உட்கார்ந்திருந்த வைசம்பாயனரென்னும் சிஷ்யரைச் சொல்லும்படி வியாஸர் ஆஜ்ஞாபித்தார். அந்த யாகத்தில ஹோமகாரியங்களுக்கு இடையே, ஸபையில் உட்கார்ந்திருக்கும் ஜனமேஜயராஜர் அடிக்கடி கேட்க, வைசம்பாயனர் பாரதத்தைச் சொல்லலானார்.

"குருவம்சத்தினுடைய அபிவிருத்தியையும், காந்தாரியின் தர்ம ஒழுக்கத்தையும், விதுரருடைய புத்தியையும், குந்தியினுடைய தைரியத்தையும், [1]வாஸுதேவனுடைய மகிமையையும், பாண்டவர்களுடையஸத்தியத்தையும், திருதராஷ்டிரபுத்திரர்களுடையகெட்ட செய்கையையும், பகவானான த்வைபாயனமஹரிஷி செவ்வையாகச் சொன்னார். புண்ணிய காரியஞ்செய்தவர்களுடைய உபாக்கியானங்களோடுகூடி நூறுயிரம் சுலோகங்களாகிய இந்தப்பாரதமானது, கேட்கத்தக்கவற்றிலும் அறியத்தக்கவற்றிலும் சிறந்தது; உபாக்கியானங்களில்லாமல இருபத்துநாலாயிரம் சுலோகங்களாகிய பாரதமென்னும் கிரந்தத்தைச்செய்தார்; அவ்வளவே பாரதமென்று வித்வான்களாற் சொல்லப்படுகிறது. மறுபடியும் அவர் அந்தப்பாரதத்திலிருந்து எல்லாப்பர்வங்களின் விஷயங்களையும் சுருக்கி நூற்றைம்

---

1 கிருஷ்ணன்.

பது சுலோகங்களால் அனுக்கிரமணிகாத்தியாயமாகவும் செய்தார். அந்த உத்க்ருஷ்டமான இதிஹாஸத்தைச்செய்து, ஸமர்த்தரான த்வைபாயனர், 'இதை இங்கே எவ்வாறு சிஷ்யர்களுக்குக் கற்பிப்பேன்?' என்று சிந்தையுற்றார்.

த்வைபாயன மஹரிஷியின் அந்தச் சிந்தையையறிந்து உலகங்களுக்குப் பிதாவாகியபகவான் பிரம்மதேவர், அந்த ரிஷியை மகிழ்வித்தற்காகவும், ஜனங்களுக்கு நன்மைசெய்வதற்காகவும், நேராகவே அவருக்குக் காட்சிகொடுத்தார். வியாஸர் அவரைக்கண்டு திகைத்துக் கைகூப்பிக்கொண்டு, தலைவணங்கி நின்று, எல்லா முனிகணங்களினுலும் சூழப்பட்டவராய் அவருக்கு ஆஸனம் கொடுத்தார்; அந்த உயர்ந்த ஆஸனத்தில் வீற்றிருந்த ஹிரண்யகர்ப்பரையடுத்து, ஆஸனத்துக்கருகில் வியாஸபகவான் நின்றார். பிறகு, மேலான ஸ்தானத்திலிருப்பவராகிய ப்ரம்மாவினுல் உத்தரவுகொடுக்கப்பட்ட வியாஸர் மகிழ்வுற்றுப் புன்னகையுடன் அவருடைய ஆஸனத்துக்கருகில் இருந்தார். மிக்க தேஜஸோடுகூடிய அந்தவியாஸர் லோகஸ்ரேஷ்டரான பிரமதேவரைநோக்கி, 'பகவானே! மிகவும் சிலாக்கியமான இந்தக்காவியம் என்னுலே செய்யப்பட்டது; ப்ரம்மாவே! வேதத்தினுடைய ரஹஸ்யமும் மற்றுள்ள விஷயமும் என்னுல் இதில் நிலைநிறுத்தப்பட்டிருக்கின்றன; சீக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பமென்னும் அறுவேதாங்கங்களும் உபநிஷத்துக்களும் அடங்கிய வேதங்களைத் தெளிவாகச்செய்வதும், [1]இதிஹாஸங்கள் [2]புராணங்கள் இவற்றின்விரிவும் சுருக்கமும், சென்றதும் நடக்கிறதும் வருவதுமாகிய மூன்றுகாலங்களும், மூப்பு இறப்பு பயம் வியாதி உத்பத்தி நாசம் இவைகளின் நிச்சயமும், அநேகவிதங்களான தர்மங்களுடைய இலக்கணமும், பிரமசரியமுதலிய ஆஸ்ரமங்களின் இலக்கணமும், நாலுவருணங்கள் எல்லாப்புராணங்கள் தவம் பிரமசரியம் இவைகளின் முறையும், பூமி சந்திரன் சூரியன் [3]கிரகங்கள் [4]நட்சத்திரங்கள் [5]தாரைகள் யுகங்கள் இவைகளின் அளவும், ரிக்குக்களும், யஜுஸ்ஸுக்களும், ஸாமங்களும், அவ்வாறே வேதத்திலுள்ள ஆத்மஞானபாகமும், தர்க்கசாஸ்திரப்

1 சரித்திரத்தைப்பற்றியவை.

2 ஸ்ருஷ்டி, பிரளயம், வம்சம், மன்வந்தரம், வம்சத்திலுள்ள சரித்திரங்கள் ஆகிய இவைகள் அடங்கியவை.

3 அங்காரகன் முதலியவை

4 அசுவினிமுதலியவை உஎ. 5 மற்ற நட்சத்திரங்கள்.

பயிற்சியும், வைத்தியசாஸ்திரமும், பாசுபதமும், [1]ஞானமும், தேவ மனுஷ்யஜாதிகளும், அவ்வவற்றின் அநேக காரணங்களும், புண்ணியதீர்த்தங்கள், புண்ணியக்ஷேத்திரங்கள், நதிகள், பர்வதங்கள், வனங்கள், கடல்கள், நகரங்கள், உயர்ந்த தனுர்வேதத்திற்சொல்லப்பட்ட அஸ்திரவிதிகள், தேவர்களுடைய [2]கல்பங்கள் இவைகளும் யுத்தப்பயிற்சியும், பேசுகிறவிதங்களின் வேறுபாடுகளும், உலக நடையின் முறையும், ஸர்வவியாபியானவஸ்து எதுவோ அதுவும் இதிற் சொல்லப்பட்டுள்ளன. ஆனால், இதை எழுதுகிறவர் பூமியில் யாருமில்லை'' என்று சொன்னார்.

பிரம்மதேவர், ''நீர் ஸூக்ஷ்மமான ஞானத்தை அறிந்திருப்பதனால் உம்மைத் தவத்தினால் மேன்மைபெற்றவரும் ரிஷிச்ரேஷ்டருமான [3]வஸிஷ்டரைக்காட்டிலும் அதிக ச்ரேஷ்டராக நினைக்கிறேன். உமது வாக்கு, பிறந்ததுமுதற்பொய்யாததும், வேதத்தைச் சொல்லுவதுமாக இருப்பதை நான் அறிவேன். உம்மாலேயே பாரதம் காவியமென்று சொல்லப்பட்டது. ஆதலால், அது காவியமேயாகும். எப்படி மற்ற மூன்றுஆச்ரமங்களும் க்ருஹஸ்தாச்ரமத்துக்கு மேற்படாவோ அப்படியே எந்தக்கவிகளும் இந்தக்காவியத்திற்கு மேற்போக வல்லவராகார். நீர் ஞானமென்கிற தீபத்தினாலே ஒளிகொடாமற்போனால், உலகமானது ஜடமாகவும், குருடாகவும், செவிடாகவும், பித்துள்ளதாகவும் இருளடைந்துபோய்விடும். தம்தம் செய்கைகளினால் கட்டப்பட்டு, அஜ்ஞானஇருளால் கண்தெரியாத உலகத்துக்கு ஞானமென்னும் [4]அஞ்சனசலாகையாலே அறிவாகிய கண்கள் மலர்ச்சியுண்டாக்கப்பெற்றன. அறம் பொருள் இன்பம் வீடாகிய புருஷார்த்தங்களைச் சுருக்கமாகவும் விரிவாகவும் சொல்லி, சூரியனைப்போற் பிரகாசிக்கின்ற பாரதத்தினால் நீர் மனிதர்களுடைய இருளை அகற்றிவிட்டீர். உமது [5]புராணம் பூர்ணசந்திரனைப்போன்றது. இதனால் பிரகாசம்செய்யப்பெற்ற வேதார்த்தம் நிலவுபோலிருக்கிறது. நிலவினால் ஆம்பற்பூ சர் மலர்வதுபோல, இந்தப் புராணத்தினால் மனிதர்களின்புத்தி மலரும்படி செய்யப்பட்டது. அஜ்ஞானமென்னும் மறைவை விலக்குகிற இதிஹாஸமென்ற விளக்கினால் ஸ

---

1 தானமும் என்றும்பாடம். 2 பலயுகங்கள்.

3 வேறுபாடம்: தவத்தினாற் சிறந்ததும் ரிஷிகளின் ஸமூஹத்துக்கெல்லாம் மேற்பட்டதுமாகிய ரஹஸ்யமான ஞானரூபமாகிய பிரம்மத்தையறிந்ததினால் உம்மை அதிக ச்ரேஷ்டராக நினைக்கிறேனென்றது.

4 கண்ணுக்கு மையெழுதுங்கோல். 5 பாரதம்.

கமென்னும் வீட்டின் உட்புறமுழுவதும் செம்மையாகப் பிரகாசம் செய்யப்பட்டிருக்கிறது. பாரதமென்பது ஒருமரம். அதற்குஸங்கிரஹாத்தியாயமென்னப்பட்ட அனுக்கிரமணிகாபர்வமே விதை; பௌலோமம் ஆஸ்தீகமென்கிற பர்வங்களே வேர்கள்; ஸம்பவபர்வமே பருத்த அடிமரம்; ஸபாபர்வமே பக்ஷிகள் முதலியவை தங்குமிடம்; அரணியபர்வம் மரத்தின் சிறுகிளை; விராடபர்வமும்உத்தியோகபர்வமும் ஸாரம்; பீஷ்மபர்வம் பெருங்கிளை; துரோணபர்வம் இலைகள்; கர்ணபர்வம் வெண்மையான புஷ்பம்; சல்லியபர்வம் அதன்மணம்; ஸ்திரீபர்வமும் ஐஷீகபர்வமும் [1]நுனி; சாந்திபர்வம் பெரும்பழம்; அசுவமேதபர்வம் அமிருதத்திற்கு ஒப்பான பழரஸம்; ஆஸ்ரமவாஸபர்வம் பறவைகளுக்கு ஆதாரமான இடம்; மௌஸலபர்வம் [2]பறவைகளின் ஒலித்தொகுதி; சிஷ்டர்கள் இம்மரம்காத்த பறவைகள்; ஜனங்களுக்கு மேகம் ஜீவனாதாரமாயிருத்தலைப்போல் பாரதமென்னும் மரம் அழியாமல் கவிசிரேஷ்டரனைவர்க்கும் ஜீவனாதாரமாக இருக்கும். ரிஷியே! இந்தக்காவியத்தை எழுதுவதற்காகக் கணபதியைத் தியானஞ்செய்யும்" என்று சொன்னார். இவ்வாறு வியாஸரைப்பார்த்துச் சொல்லிவிட்டு உலகத்துக்கெல்லாம் ஸ்ருஷ்டிகர்த்தாவும் பகவானுமாகிய அந்தப் பிரமதேவர் ரிஷிகணங்களுடனும் தேவகணங்களுடனும் தம்முடைய ஸ்தானத்துக்குச் சென்றார்.

பிறகு, ஸத்தியவதியின் புத்திரராகிய வியாஸமஹரிஷி விநாயகரைத் தியானித்தார். தியானித்தவுடன் பக்தர்கள்அபீஷ்டத்தை நிறைவேற்றுபவரும் கணங்களுக்குத் தலைவருமான விக்நேஸ்வரர் வேதவியாஸர் இருந்தஇடத்திற்கு எழுந்தருளினார். குற்றமற்ற ஜனமேஜயரே! அப்போது வியாஸர் விக்நேஸ்வரருக்குப் பூஜை செய்து, வீற்றிருந்த அவரை நோக்கி, 'கணநாதரே! மனத்தில் முன்னமே அமைக்கப்பட்ட இந்தப் பாரதத்தை இப்போது நான் சொல்லுகிறேன்; நீர் இதை எழுதவேண்டும்' என்று பிரார்த்தித்தார். இதைக்கேட்டு விக்நேஸ்வரர், 'எழுதும்போது என்னுடைய எழுதுகோல் ஒரு நிமிஷமாவது நில்லாமலிருக்குமானால் அப்போதுதான் நான் எழுதுபவனாக இருப்பேன்' என்றார். அதுகேட்டு வியாஸபகவான், 'அறிந்துகொண்டே எந்தவிடத்திலும் நீர் எழுதவேண்டும்' என்று அந்த விக்நேஸ்வரரைக் கேட்டுக்கொண்டார். விநாயகர், ஸம்மதித்து எழுதத் தொடங்கினார். அப்போது மஹரிஷி

1 சிரமபரிகாரம் செய்தற்குரிய நிழலென்பது பழையவுரை.

2 காதுபோன்ற குழைகளுக்குகளினிடம் சோகஸையென்பது பழையவுரை.

யானவர் விளையாட்டாகவே கிரந்தத்தில் பொருள் விளங்காத பாக மாகிய முடிச்சை அமைத்தார். அதுவிஷயத்தில், த்வைபாயனமஹ ரிஷி, 'எண்ணாயிரத் தெண்ணூறு சுலோகங்கள் எனக்குத் தெரியும்; சுகருக்குத் தெரியும்; ஸஞ்சயனுக்குத்தெரியுமோ தெரியாவோ' என்று பிரதிஜ்ஞை செய்திருக்கிறார். மஹரிஷியே! மிகக் கடினமாக இயற்றப்பட்ட பொருள் விளங்காத அந்தச் சுலோகங்கள் சொல்லும்பொருளும் வெளிப்படையாகவிராமையால், பகுத்தறிய முடியவில்லை. ஸர்வஜ்ஞராகிய விக்நேஸ்வரர் சற்றுநேரம் அதைச் சிந்தித்துக்கொண்டிருக்குமளவில் வியாஸர் வேறு அநேக சுலோகங்களைச் செய்தார். இனிமையும் பரிசுத்தமுமான ரஸத்தோடு கூடியதும் தேவர்களாலும் சேதிக்கமுடியாததுமாகிய பாரதமென்னும் அந்த மரத்தின் புஷ்பங்கள் பழங்கள்முதலியவற்றின் உத்பத்தியைச் சொல்லுவேன். எலலாப் பர்வங்களின் விஷயங்களுமுள்ள அனுக்கிரமணிகாத்தியாயத்தைச் சொல்லுகின்றேன். த்வைபாயன மஹரிஷியானவர் இந்தப் பாரதத்தை முதலில தம்முடைய புத்திரராகிய சுகமஹரிஷிக்குக் கற்பித்தார். அந்தப் பிரபுவான வியாஸர், பின்பு தகுந்த மற்றச் சிஷ்யர்களுக்கும் சொல்லிவைத்தார். அவர் அறுபதுலக்ஷம் கிரந்தஸங்கியையுள்ள வேறோர் இதிஹாஸமாகச் செய்தார். அதில் முப்பதுலக்ஷம் கிரந்தங்கள் தேவலோகத்தில் நின்றன; பதினைந்துலக்ஷம் கிரந்தங்கள் பிதுர்லோகத்திலும், பதினான்கு லக்ஷம் கிரந்தங்கள் இராக்ஷஸர்கள் யக்ஷர்களிடத்திலும், 'வெளியிடப்பட்டு நின்றன; ஒருலக்ஷமட்டும் மனுஷ்யர்களிடம்' நின்றன.

(பாரதத்தை) நாரதர் தேவர்களுக்குச் சொன்னார். அஸிதரும் தேவலரும் பிதிருக்களுக்குச் சொன்னார்கள். கந்தர்வர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் யக்ஷர்களுக்கும் சுகர் சொன்னார். வியாஸருடைய சிஷ்யரும் தர்மத்திலேயே மனமுள்ளவரும் வேதமறிந்தவர்களெல்லாரிலும் சிறந்தவருமாகிய வைசம்பாயனரென்பவர், இந்த மனுஷ்ய லோகத்தில் வெளிப்படுத்தினார். பரிக்ஷித்தின் புத்திரரும் மஹாத்துமாவுமான ஜனமேஜயராஜாவுக்கு வைசம்பாயனரென்னும் பிரமரிஷி சொன்ன லக்ஷத்தையும் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; கேளுங்கள்.

துரியோதனன் கோபமே உருக்கொண்ட பெரியவ்ருக்ஷம்; அதற்குக் கர்ணன் அடிமரம்; சகுனி கவடு; துச்சாஸனன் நிறைந்த புஷ்பமும் கனியும்; தன்மனத்தையடக்க வல்லமையில்லாத த்ருதராஷ்டிரமஹாராஜன் வேர்.

யுதிஷ்டிரர், தர்மமே உருக்கொண்ட ஒருபெரியமரம் ; அதற்கு அர்ஜுனன் அடிமரம்; பீமஸேனன் கிளைகள்; மாத்திரியின் புத்திரர்களாகிய நகுல ஸஹதேவர்கள் செழுமையான பூவும் கனியும் ; கிருஷ்ணனும் வேதமும் பிராமணர்களும் வேர்கள்.

பாண்டு யுத்தஞ்செய்ய மிகுந்தசக்திமானயிருந்ததனால் அநேக தேசங்களை ஜயித்துக் காட்டில்வேட்டையாடிக்கொண்டு தன் ஜனங்களுடனும் ரிஷிகளுடனும்கூடிக் காட்டில்வஸித்தான். அவன் புணர்ச்சியிலிருந்த மானைக்கொன்றதனால் தடுக்கக்கூடாத ஆபத்தையடைந்தான். பாண்டவர்கள் அந்தவனத்தில் ஜனித்தனர்; அங்கேயே ஆசார விதிகளை ஒழுங்காகக் கற்பிக்கப்பெற்றனர். அவர்களின் தாயார்களாகியகுந்தியும் மாத்திரியும் தர்மத்தின் ரஹஸ்யமான தூர்வாஸரிஷியின் மந்திரத்தினல் தர்மதேவதை, வாயு, இந்திரன், அசுவினிதேவர்கள் ஆகிய இவர்களிடமிருந்துஅநுக்கிரஹம்பெற்றனர். பிறகு, பர்த்தாவினிடத்து அன்புள்ளவளாகிய குந்தி பதிவிரதாதர்மத்துக்குரிய தூர்வாஸரிஷியின் மந்திரத்தையடைந்து புத்திரர்களை இச்சித்து அந்தமந்திரத்தினல், தர்மதேவதை, வாயு, இந்திரன் இவர்களையழைத்தாள். குந்தி உபதேசித்த மந்திரத்தினல் மாத்திரி அசுவினிதேவர்களையழைத்தாள். பிறகு, பாண்டவர்யாவரும் குந்தி மாத்திரி இவர்களுடைய மந்திரங்களினற் பிறந்தனர் ; மஹரிஷிகளுடைய புண்ணியமான ஆஶ்ரமங்களிலும் பரிசுத்தமான காடுகளிலும் தாயார்களாற் காப்பாற்றப்பட்டு ரிஷிகளுடன்கூட வளர்ந்தனர். மஹாத்மாக்களாகிய அந்தப்பாண்டவர்யாவரும் ஜனித்தபிறகு சிறந்த புண்ணியக்ஷேத்திரமான சதசிருங்கமென்னும் பெரியகுன்றின்மேல் மாத்ரியோடுகூடப் புணர்ந்து, ரிஷிசாபத்தின் வலிமையினல் பாண்டு இறந்தான்.

பாலர்களும் அழகுள்ளவர்களும் ஜடைதரித்தபிரமசாரிகளுமாகிய அந்த இளைஞர்கள் ரிஷிகளால் நேராகவே த்ருதராஷ்டிரனைச்சேர்ந்தவர்களிடம் கொண்டுவந்துவிடப்பட்டனர். 'இந்தப்பாண்டவர்கள், உங்களுக்குப் புத்திரர்களும், ஸஹோதரர்களும், சிஷ்யர்களும், மித்திரர்களுமாயிருப்பவர்கள்' என்றுசொல்லிவிட்டு அந்தரிஷிகள் அங்கிருந்துமறைந்தனர். ரிஷிகளால் ஒப்பிக்கப்பெற்ற அந்தப்பாண்டவர்களைக் கண்டு அப்போது கௌரவர்களும் பட்டணத்திலுள்ள சிஷ்டர்களான நான்குவருணத்தார்களும் ஸந்தோஷத்தினல் அதிகமாக முழங்கினர். 'இவர்கள் பாண்டுவின் புத்திரர்களல்லர்' என்று சிலரும் 'பாண்டுபுத்திரர்களே' என்று வேறுசிலரும், 'இறந்து வெகுநாளான பாண்டுவுக்குப் புத்திரர்கள் எப்படியிருக்கலாகும்?' என்று

மற்றும்சிலரும் சொன்னார்கள்; 'எப்படியிருந்தாலும் நல்வரவு; நல்ல காலமாதலாற் பாண்டுவின்ஸந்ததியைப் பார்க்கிறோம்; நல்வரவைச் சொல்லுங்கள்' என்றசொற்கள் எங்கும் கேட்கப்பட்டன. அந்தச் சத்தம் ஓய்ந்தபின் மறைந்திருந்த தேவதைகளுடைய பெருமுழக்கமானது எல்லாத்திசைகளிலும் எதிரொலியை உண்டாக்கிக்கொண்டு எழும்பியது. பாண்டவர்கள் நகரப்பிரவேசம் செய்யும்போது புஷ்பவர்ஷமும் நல்ல சந்தனமழையும் பெய்தன. சங்கதுந்துபிவாத்திய சப்தங்களும் முழங்கின. அது ஓர் அற்புதமாக இருந்தது. அவர்களிடம் அன்புள்ள ஜனங்களின் ஸந்தோஷத்தினாலுண்டான பெரிய சத்தம் அவர்களின்கீர்த்தியைப் பரவச்செய்து ஆகாசத்தையளாவிக் கொண்டு கிளம்பியது.

அந்தப்பாண்டவர்கள் எல்லாவேதங்களையும் மிகுதியான சாஸ்திரங்களையும் ஓதியுணர்ந்து மதிப்பையடைந்து யாரிடத்திலும் பயமில்லாதவர்களாக அங்கே வாஸஞ்செய்தனர். தர்மராஜாவினுடைய தூய்மையினாலும், பீமஸேனனுடைய தைரியத்தினாலும், அர்ஜுனனுடைய பராக்கிரமத்தினாலும், பெரியோர்களிடத்திற் குந்திக்குள்ள பணிவினாலும், [1]நகுலஸஹதேவர்களுடைய வினயத்தினாலும் ஜனங்கள் ஸந்தோஷமடைந்தனர். அவர்களுடைய பராக்கிரமத்தின் மேன்மையாலும் எல்லா உலகங்களும் த்ருப்தியடைந்தன.

பிறகு, அர்ஜுனன் அரசர்களின்ஸபையில் யாரும்செய்யமுடியாத காரியத்தைச்செய்து, தானே பர்த்தாவைவரிக்கிற [2]கிருஷ்ணையென்னும் கன்னிகையை அடைந்தான். அதுமுதல் அவன் இவ்வுலகில் வில்லாளிகள் எல்லாராலும் கொண்டாடப்பெற்றவனாகவும் யுத்தங்களில் ஸூர்யனைப்போற் கண்ணெடுத்துப் பார்க்கவுங் கூடாதவனாகவும் ஆனான். அவ்வர்ஜுனன் எல்லா அரசர்களையும் எல்லாப் பெருஞ்சேனைக்கூட்டங்களையும் வென்று ராஜாவான யுதிஷ்டிரருடைய ராஜஸூயமென்னும் பெரு [3]வேள்வியை நடத்தினான். அன்னமும் தக்ஷிணையும் நிறைந்ததும் சிறப்புக்களெல்லாம் சேர்ந்தது மாகிய ராஜஸூயமஹாயாகமானது, கிருஷ்ணனுடைய நல்ல உபாயத்தினாலும் பீமஸேனன் அருச்சுனன் இவர்களுடைய சக்தியினாலும் பலத்தினாற் கர்வங்கொண்ட ஜராஸந்தனையும் சிசுபாலனையுங்கொன்ற பின், யுதிஷ்டிரரால் நிறைவேற்றப்பட்டது.

---

1 நகுலஸஹதேவர்களுக்குப் பெரியோர்களிடமுள்ள பணிவினாலும், பொறுமையினாலும், வினயத்தினாலும் என்பது மற்றொரு பாடம்.

2 திரௌபதி. 3 யாகம்.

ஆங்காங்கிருந்து முத்துக்களும், பொன்களும். இரத்தினங்களும், பசுக்களும், யானைகளும், குதிரைகளும், கனங்களும், அநேக விதங்களான வஸ்திரங்களும், உத்தரீயங்களும், போர்வைகளும், உயர்ந்த கம்பளங்களும், உயர்ந்த தோல்களும், இரத்தினகம்பள விரிப்புக்களுமாகிய காணிக்கைகள் துரியோதனனிடம் வந்துசேர்ந்தன. அப்போது அவ்வாறு நிரம்பியதான பாண்டவர்களுடைய அந்த ஐசுவர்யத்தைக்கண்டபின், துரியோதனனுக்குப் பொறாமையாலுண்டான கோபம் மிகவும் அதிகரித்துவிட்டது. அந்த யஜ்ஞத்தில் மயனென்னும்அஸுரசில்பி தேவஸபையைப்போன்றதொருஸபையைச் செவ்வையாக நிர்மாணஞ்செய்து பாண்டவர்களுக்குக் காணிக்கையாகக் கொடுத்ததைக்கண்டு துரியோதனன் பரிதபித்தான். அந்த ஸபையில் நாகரிகமறியாதவனைப்போல் தடுமாறி இடறிவிழுந்த துரியோதனன் கிருஷ்ணனுக்கெதிரில் பீமஸேனனால் நகைக்கப்பட்டான். அவன் பலவிதமான ஸுகங்களையும் அநேகவகைகளான இரத்தினங்களையும் அநுபவிக்கிறவனாயிருந்தும் நிறம்மாறி வெளுத்தும் இளைத்தும் போனானென்று வேண்டியவர்கள் திருதராஷ்டிரமகாராஜாவுக்குத் தெரிவித்தார்கள். பின்பு, புத்திரனிடத்து அன்புள்ள திருதராஷ்டிரன் சூதாட்டத்துக்கு அநுமதிகொடுத்தான். அதைக்கேட்டு, கிருஷ்ணனுக்கு மிகுந்தகோபமுண்டாயிற்று; மனத்தில் அதிக அன்புள்ளவராக இருக்கவில்லை; விவாதங்களில் ஸம்மதியுள்ளவராகவேயிருந்தார். விதுரரையும் பீஷ்மரையும் துரோணரையும் சரத்துவான் குமாரராகிய கிருபரையும் நிராகரித்துச் சூதுமுதலியவாகநடந்த கொடியஅநேகம் அநீதிகளை, அவற்றால்வரும் பயங்கரமான சண்டையில் க்ஷத்திரியர்கள் ஒருவரைஒருவர் தகிக்கும்படி செய்வதற்காகக் கண்ணன் தடுக்காமலிருந்தார்.

பாண்டுபுத்திரர்களுடைய ஜயமாகிய மிகப்பெரிய அப்பிரியச் செய்தியைக்கேட்டு, துரியோதனன் கர்ணன் சகுனி இவர்களுடைய அபிப்பிராயத்தையுமறிந்து, திருதராஷ்டிரமஹாராஜன் வெகுநேரம் சிந்தித்து ஸஞ்சயனைநோக்கி அடியில்வருமாறு சொல்லலானான்.

'ஓ! ஸஞ்சய! எல்லாவற்றையும் நீ கேள்; என்மீது வெறுப்புக் கொள்ளாதே; நீ நல்லகேள்வியையுடையவன்; கல்வியுள்ளவன்; கூர்மையான புத்தியுள்ளவன்; நல்ல ஞானிகளால் ஒப்புக்கொள்ளப் பட்டவன். எனக்குச் சண்டையில் எண்ணமில்லை. குலமழிந்து போவதில் நான் இஷ்டமுள்ளவனல்லேன். என் புத்திரர்களிடத்தும் பாண்டுபுத்திரர்களிடத்தும் எனக்குப்பேதமில்லை. என்புத்திரர்

கள் கோபத்தை மேற்கொண்டவர்களாய், முதுமையுற்ற என்னை வெறுக்கின்றனர். நானோ கண்ணில்லாதவன்; மனத்தளர்ச்சியினாலும் புத்திரர்களிடமுள்ள அன்பினாலும் அதைப் பொறுக்கிறேன்; புத்தியில்லாத துரியோதனனுடைய மூடத்தனத்தை அனுசரித்து நானும் மூடனாயிருக்கிறேன். ராஜஸூயயாகத்திற் பெரியசக்திமானும் பாண்டுபுத்திரனுமான யுதிஷ்டிரனுடைய ஐசுவரியத்தைக் கண்டும் ஸபையின் படிகளைப்பார்க்கையில் அந்தப்பரிஹாஸத்தையடைந்தும் ஆற்றாதவனாகவும், பாண்டவர்களைத் தானாகப்போரில் வெல்ல வல்லமையற்றவனாகவும், க்ஷத்திரியனாகவிருந்தும் நல்லராஜ்யலக்ஷ்மியையடைய உற்சாகமற்றவனாகவும், சகுனியோடுசேர்ந்து மோசமான சூதாட்டத்தை ஆலோசித்தான். ஸஞ்சய! அதனால், எதைஎதை எவ்வாறாக நான்தெரிந்துகொண்டிருக்கிறேனோ அதை அதை நீ கேள். எனது புத்தியுள்ள வசனங்களைச் சரியாகக்கேட்டு, அதன்மேல் நான் அறிவையே கண்ணாகவுடையவனென்று நீ அறிவாய்.

(ஆதிமுதல் பாண்டவர்களுக்கு ஜயக்குறிப்புக்களாகத் தெய்வஸஹாயமும் மனுஷ்யஸஹாயமும் சக்தியும் இருந்ததைப்பற்றித் திருதராட்டிரன் புலம்புதல்.)

அர்ச்சுனன் வில்லைவளைத்து ஆச்சரியமானலக்ஷ்யத்தையறுத்துத் தரையில்தள்ளினானென்றும், அரசர்கள் யாவரும்பார்க்கும்போதே திரௌபதியைக் கைப்பற்றிக்கொண்டானென்றும் எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! கிருஷ்ணனுடையதங்கையானசுப்த்திரை துவாரகையில் அருச்சுனனால் பலாத்காரமாக விவாகம்பண்ணிக்கொள்ளப்பட்டாளென்றும், யாதவவீரர்களான ராமகிருஷ்ணர்கள் இந்திரப்பிரஸ்தஞ் சென்றார்களென்றும் எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அதிகமாக மழைபெய்வித்த இந்திரனை அர்ச்சுனன் விசேஷமான பாணங்களால் தடுத்துக் காண்டவவனத்தில் அக்கினிக்குத் திருப்திசெய்வித்தானென்று எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! பாண்டவர் ஐவரும் குந்தியோடுகூட அரக்குமாளிகையிலிருந்து தப்பிப் பிழைத்தார்களென்றும், அவர்களுடைய காரியம் ஜயிப்பதில் விதுரன் ஊக்கமுள்ளவனாக இருந்தானென்றும் எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய!

ஸ்வயம்வர மண்டபத்தின் நடுவில் லக்ஷ்யத்தையடித்து அர்ஜுனன் திரௌபதியை அடைந்ததையும், சூரர்களான பாஞ்சாலராஜர்களும் பாண்டவர்களும் சேர்ந்ததையும் எப்போது கேட்டேனோ அப் போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! மகததேசத் தாருக்கெல்லாம் சிறந்தவனும் க்ஷத்திரியர்கள் நடுவில் ஜ்வலிப்பவனு மாகிய ஜராஸந்தனைப் பீமஸேனன் சென்று கைகளாலேயேஅடித்தா னென்று எப்போதுகேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர் பார்க்கவில்லை. ஸஞ்சய! திக்குவிஜயஞ்செய்தகாலத்தில் பாண்ட வர்கள் அரசர்களை யுத்தஞ்செய்து வசப்படுத்தியதையும் ராஜஸூய மென்னும் மஹாயாகத்தை முடித்ததையும் எப்போதுகேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! திரௌ பதி வீட்டுக்குவிலக்காயிருந்தபோது, நாதர்களிருந்தும் அநாதையைப் போல் துக்கப்பட்டுக்கொண்டு ஒற்றைவஸ்திரத்துடன் கண்ணீரால் குரல்தடுக்கப்பெற்று ஸபைக்குக்கொண்டுவரப்பட்டதை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ் சய! அந்த ஸபையில் வஞ்சகனும் புத்தியில்லாதவனுமாகிய துச்சா ஸனன் வஸ்திரக்குவியலைபுரிந்தும் முடிவைமட்டும் அடையவில்லை யென்பதை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! யுதிஷ்டிரன், சகுனியினால் சூதாட் டத்தில் ஜயிக்கப்பெற்று ராஜ்யம் அபகரிக்கப்பட்ட பிறகும், அள விடக்கூடாத ஸாமர்த்தியமுள்ள ஸஹோதரர்களால் அனுசரிக்கப் பட்டானென்று எப்போது கேட்டேனோ அப்போது நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! தர்மாத்மாக்களான பாண்டவர்கள் வனத்துக்குப்போனபின்னும் மூத்த ஸஹோதரனை யுதிஷ்டிரனிட த்துள்ள அன்பினால் கஷ்டப்பட்டுக்கொண்டு அங்கேசெய்த அனேக காரியங்களை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! தர்மபுத்திரன் வனத்திலிருக்கும்போது மஹாத்துமாக்களான [1]ஸ்நாதகர்களும் [2]பிக்ஷையைப்புசிக்கிறவர்க ளுமான பிராம்மணர்கள் ஆபிரக்கணக்காக அவனுடன்சென்றிருந் ததை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர் பார்க்கவில்லை. ஸஞ்சய! தேவருக்கும் தேவரான ஈச்வரர் வேட ரூபத்தோடு வந்தபோது அர்ஜுனன் யுத்தஞ்செய்து அவரை மகிழ் வித்துப் பாசுபதமென்ற உயர்ந்த அஸ்திரத்தைப் பெற்றுக்கொண்டா

1 நியமத்துடன் வேதாத்தியயனத்தை முடித்தவர்.

2 பிரமசாரிகளும் சந்நியாசிகளும்.

னென்று எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர் பார்க்கவில்லை. ஸஞ்சய! பாண்டவர்கள், சிஷ்யக்கூட்டங்களோடு கூடிய விருத்தர்களான மஹரிஷிகளுடன் சேர்ந்ததையும், அவர்களால் அடுக்கப்பட்டதையும், அவர்களோடு ஸ்நேஹமாகவிருந்ததையும் எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர் பார்க்கவில்லை. ஸஞ்சய! ஸத்தியஸந்தனை தனஞ்சயன் ஸ்வர்க்கலோகத்திலிருந்துகொண்டு இந்திரனிடத்தில் நேரில் திவ்வியாஸ்திரத்தைக் கிரமமாக நியமத்தோடு அப்பியாஸம்செய்து சிலாகிக்கப்பட்டிருந்ததை எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! பாண்டுபுத்திரனாகிய யுதிஷ்டிரன் தீர்த்தயாத்திரைக்குப்போய் ரோமசமகரிஷியுடன் சேர்ந்ததையும், பிருகதசுவரிடமிருந்து அக்ஷஹ்ருதயமென்னும் [1]த்யூதசாஸ்திரத்தை அறிந்துகொண்டதையும் எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அதற்குப்பிறகு, பிரம்மதேவர் வரங்கொடுத்ததினால் கர்வமடைந்தவர்களும் தேவர்களாலும் ஜயிக்கமுடியாதவர்களும் புலோமாவின் புத்திரர்களுமான காலகேயர்களென்னும் அஸுரர்கள் அர்ஜுனனால் ஜயிக்கப்பட்டார்களென்று எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அர்ஜுனன் அஸுரர்களை வதஞ்செய்வதற்காகப் போய்ச் சத்துருக்களையழித்து, காரியத்தை நிறைவேற்றிக்கொண்டு இந்திரலோகத்திலிருந்து திரும்பிவந்ததை எப்போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! பீமனும் மற்றப்பாண்டவர்களும் மனுஷ்யர்கள் போகக்கூடாத தேசமாகிய அந்தக் கந்தமாதனபருவதத்திற் குபேரனைச் சந்தித்தார்களென்று எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! கர்ணனுடையபுத்தியில் நம்பிக்கையுள்ள என்னுடைய புத்திரர்கள் [2]கோஷயாத்திரைக்குச் சென்றபோது, கந்தர்வர்களாற் பிடிக்கப்பட்டதையும் அர்ஜுனனால் விடுவிக்கப்பட்டதையும் எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! [3]ஸூதனே! தர்மதேவதை யக்ஷரூபத்தோடு தர்மராஜனிடம் வந்ததையும், அந்தத் தேவதை கேட்ட சில கேள்விகளுக்கு 'அவன் செம்மையாக மறு

---

1 சூதுநூல்.

2 பசுக்களைப் பார்ப்பதற்குச் செல்லுதல்.

3 தேர்ப்பாகன்.

மொழி சொன்னதையும் எப்போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! விராடனுடையராஜ்யத்தில் திரௌபதியுடன் மாறுவேஷத்தோடு வஸித்த அந்தப் பாண்டவர்களை என் புத்திரர்கள் கண்டுபிடிக்கவில்லையென்று எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அஜ்ஞாதவாஸத்தில் அக்னிக்கு ஒப்பான சக்தியுள்ள பாண்டவர்கள் அறியப்படாமலே என் புத்திரர்களிடம் யுத்தத்திற்கு வந்ததை எப்போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! கீசகர்களுக்குள் முதன்மையான ஜ்யேஷ்டகீசகன் நூறுஸகோதரர்களோடும் திரௌபதியின் நிமித்தமாகப் பீமசேனனால் யுத்தத்தில் கொல்லப்பட்டதை எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! விராடராஜ்யத்தில் வஸித்த மஹாத்துமாவாகிய தனஞ்சயன் ஒற்றைத்தேராளியாகவேயிருந்து சைனியங்களிலிருந்த சிரேஷ்டர்களைத் தோல்வியடையச் செய்தானென்று எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! மச்சதேசத்துராஜாவான விராடன் தனது அன்புள்ள பெண்ணாகிய உத்தரையை அர்ச்சுனனுக்குக் கொடுத்ததையும், அர்ச்சுனன் அவளைத் தன் புத்திரனுக்காக வாங்கிக்கொண்டதையும் எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! சூதாட்டத்தில ஜயிக்கப்பட்டுப் பொருளில்லாமல் வனவாஸம் போய்த் தன் ஜனங்களையும்விட்டுத் தப்பிப்போன யுதிஷ்டிரனுக்கு ஏழு அக்ஷௌஹிணிகள் சேர்ந்ததை எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! இந்தப் பூமியெல்லாம் யாருடைய ஓரடியென்று சொல்லுகிறார்களோ அந்த ஸ்ரீயப்பதியான கிருஷ்ணன் எல்லாவிதத்திலும் பாண்டவர்களுடைய காரியத்தில் தீக்ஷித்துக்கொண்டிருந்ததை எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! 'அந்தக் கிருஷ்ணார்ச்சுனர்கள் இருவரும் நரநாராயணர்கள்; நான் பிரமலோகத்தில் செம்மையாகப் பார்த்திருக்கிறேன்' என்று நாரதர் சொல்ல எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! லோகங்களின் நன்மைக்காக கௌரவர்களை ஸமாதானஞ்செய்யக் கருதிவந்து ஸமாதானஞ்செய்தும் காரியம் நிறைவேறாமல் கிருஷ்ணன் திரும்பியதை எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய!

கர்ணனும் துரியோதனனும் கேசவனைக் கட்டுவதற்கு நிச்சயம் செய்ததையும் கிருஷ்ணன் தனது விசுவரூபத்தைக் காட்டினதையும் எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! கிருஷ்ணன் திரும்பிப்போகும்போது தேரின் முன் தனித்துநின்று வருத்தமுற்ற குந்தியானவள் கேசவனால் தைரியப்படுத்தப்பட்டதை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அந்தப் பாண்டவர்களுக்குக் கிருஷ்ணன் மந்திரியாகவிருந்ததையும், சந்தனுபுத்திராகிய பீஷ்மரும் பரத்வாஜபுத்திராகிய துரோணாசாரியரும் அவர்களுக்கு ஆசீர்வசனம் கூறினதையும் எப்போதுகேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! கர்ணன் பீஷ்மரைநோக்கி, 'நீர் யுத்தம்செய்யும்வரையில் நான் யுத்தஞ்செய்யமாட்டேன்' என்ற வசனத்தைச்சொல்லி, சேனையைவிட்டு விலகிப்போனதை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அந்தக் கிருஷ்ணார்ச்சுனர்களும் அளவிடக்கூடாத காண்டீவமென்னும் தனுஸும் ஆகிய தாங்கக்கூடாத சக்தியுள்ள இம்மூன்றுபொருள்களும் சேர்ந்ததை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அர்ச்சுனன் மோஹத்தினால்கவரப்பட்டுத்தேரின்நடுவில்ஓய்ந்து உட்கார்ந்தபோது கிருஷ்ணன் தன்னுடைய சரீரத்தில் எல்லா உலகங்களையும் காண்பித்ததை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! சத்துருக்களை அழிப்பவராகிய பீஷ்மர் யுத்தத்தில் பதினாயிரக்கணக்கான தேராளிகளை மாய்க்கும்போது பாண்டவர்களுள் மிகுந்த கியாதிபெற்றவன் ஒருவனும் கொல்லப்படவில்லையென்று எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! தர்மநிஷ்டராகிய பீஷ்மர் யுத்தத்தில் தம்முடையமரணத்துக்குத் தாமே மார்க்கஞ்சொன்னதையும், பாண்டவர்கள் ஆனந்தத்துடன் அதைச் செய்ததையும் எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அர்ச்சுனன் சிகண்டியை முன்னே நிறுத்திக்கொண்டு யுத்தங்களில் வெல்லமுடியாத மிகுந்த சூராகிய பீஷ்மரை அடித்ததை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! [1]ஸோமகர்களைப்பெரும்பாலும் ஒழித்தபிறகு விருத்தரும் வீரருமான பீஷ்மர், பாணங்களினால் அடிக்

---

1 பாஞ்சாலர்.

கப்பட்டு, [1]சரதல்பத்தில் படுத்ததை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! [2]சாந்தனவர் சரதல்பத்தில் படுத்திருக்கையில் பருகுகிற தீர்த்தத்துக்காக ஏவப்பட்ட அர்ச்சுனன், அங்கேயே பூமியைப்பிளந்து அவருக்குத் தாக சாந்திசெய்வித்ததை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! குந்திபுத்திரர்கள் ஜயிப்பதற்கு அனுகூலமாகக் குளிர்ந்தகாற்று அடித்ததையும் [3]சுக்கிரனும்சூரியனும் நல்லஇடத்தில் சேர்ந்திருந்ததையும் நம்மைப்பார்த்துத் துஷ்டமிருகங்கள் விகாரமாகக்கத்தினதையும் எப்போதுகேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! விசித்திரமானயுத்தம்செய்பவராகிய துரோணர் யுத்தத்தில்பற்பலவகைகளான அஸ்திரங்களின்வகைகளைக் காண்பித்தும் மிகச்சிரேஷ்டர்களான பாண்டவர்களை எப்போது கொல்லவில்லையோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அர்ச்சுனனைக் கொல்ல நிச்சயத்தோடிருந்தவர்களும் நம்மைச்சேர்ந்தவர்களும் மஹாரதர்களுமாகிய [4]ஸம்சப்தகர்களை அவன் கொன்றுவிட்டதாக எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! இதரர்களால் கலைக்கமுடியாததும், ஆயுதபாணியான துரோணரால் காக்கப்பட்டதுமாகிய [5]வ்யூகத்தை, சுபத்ரையின்புத்திரனும் வீரனுமான அபிமன்யு தனியாகப்பிளந்து உட்புகுந்ததை எப்போதுகேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! மஹாரதர்களனைவரும் அர்ச்சுனனை ஜயிக்கமுடியாமற் பாலனாகிய அபிமன்யுவைச் சுற்றிக்கொண்டு கொன்று எப்போது மிகுந்தசந்தோஷத்தையடைந்தார்களோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! மூடர்களாகிய துரியோதனாதியர் அபிமன்யுவைக்கொன்ற ஸந்தோஷத்தால்கூச்சலிட்டதையும்,ஸிந்துராஜனாகிய ஜயத்ரதன்விஷயத்தில் கோபத்தால் அர்ச்சுனன் பிரதிஜ்ஞைசெய்ததையும் எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! ஸிந்துராஜனை வதம்செய்வதற்காக அர்ச்சுனன்செய்தபிரதிஜ்ஞையையும், சத்துருக்களின் நடுவிலேயே அவன் அதை ஸத்யமாகும்படி நிறைவேற்றினதையும் எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அர்ச்சுனனுடைய தேர்க்

---

1 அம்புகளாலாகிய படுக்கை. 2 பீஷ்மர்.

3 சந்திரனும் சூரியனும் நல்லஸ்தானங்களில் சேர்ந்திருந்ததையும் என்பது மற்றொருபாடம். 4 ஒருவகைக்கூட்டத்தார். 5 சேனையின்வகுப்பு.

குதிரைகள் களைத்துப்போனபோது கிருஷ்ணன் அவைகளைப் பூட்டு அவிழ்த்துத் தண்ணீர்காட்டித் திரும்பிவந்தபிறகு மறுபடியும் பூட்டி யுத்தத்திற்குப்போனதை எப்போதுகேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! தேர்க்குதிரைகள் சக்தியில் லாமலிருந்தபோது தேரின் உட்பக்கத்திலிருந்துகொண்டு அர்ச்சுனன் எல்லாப்போர்வீரர்களையும் கிட்டவராமல் தடுத்ததை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! பகைவர் தாங்கமுடியாமல் யானைச்சேனைகளினால் யுத்தம்செய்த துரோணசேனையைக் கலக்கிவிட்டு ஸாத்யகியானவன் கிருஷ்ணார்ச்சுனர்களிருந்தவிடம் சென்றதை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! வீரனாகிய பீமஸேனன் கர்ணனிடத்தில் அகப்பட்டும் அவனைக் கர்ணன் வில்லின்முனையால் குத்திப் பேச்சுக்களினால் இகழ்ந்து கொல்லாமல் விட்டுவிட்டதை எப்போதுகேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! சூரர்களாகிய துரோணரும், கிருதவர்மாவும், கிருபரும், கர்ணனும், துரோணபுத்திரரான அசுவத்தாமாவும், மத்திரராஜனாகிய சல்லியனும் ஜயத்ரதன் கொல்லப்படுவதை எப்போது பொறுத்திருந்தார்களோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! தேவேந்திரனாற் கொடுக்கப்பட்ட அருமையான சக்தியாயுதம் கடோத்கசனென்னும் பயங்கரமான ரூபமுள்ள ராக்ஷஸன்மேல் விழும்படி கிருஷ்ணனால் ஒதுக்கப்பட்டதை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! எதனால் யுத்தத்தில் [1]ஸவ்யஸாசியைக் கொல்லவேண்டுமோ அந்தக் கர்ணனுடைய சக்தியாயுதம் கர்ணன் கடோத்கசன் இருவராலும் யுத்தத்தில் வீணாக்கப்பட்டதை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! துரோணாசாரியர் இரதத்தின் தட்டிலே தனிமையாகப் பிராயோபவேசம்செய்கையில் திருஷ்டத்யும்னன் தர்மத்தைக்கடந்து கொன்றதை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! துரோணபுத்திரராகிய அசுவத்தாமாவுடன் ஜனங்களின் நடுவே மாத்ரிபுத்திரனாகிய நகுலன் எதிர்த்தேராளியாகநின்று சண்டைசெய்கையில் அவர் அவனுக்குச் சரியாகவே மண்டலங்களாகச் சஞ்சரித்ததை எப்போது கேட்டேனோ அப்போதே நான் ஜயத்தை

---

[1] அர்ச்சுனன்; இடக்கையினாலும் பாணத்தை எய்பவனென்பது பொருள்.

எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! துரோணர்கொல்லப்பட்டபிறகுதுரோ ணபுத்ரரான அசுவத்தாமா விசேஷமுள்ளநாராயணாஸ்திரத்தைப்பிர யோகித்தும் எப்போது அந்தப் பாண்டவர்களை முடிக்கவில்லேயோ அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! தங்கள் ஸஹோதரனை துச்சாஸனனுடைய ரக்தத்தைப் பீமசேனன்குடிக் கையில் எனதுபுத்திரர்களில் ஒருவனும் அந்தப்பீமனைத் தடுக்கமாட் டாமற்போனதை எப்போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத் தை எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! தேவர்களுக்கும் விளங்காததான அந்த ஸஹோதரர்சண்டையில், யுத்தங்களில் எதிர்க்கமுடியாத அள வற்ற பராக்கிரமசாலியான கர்ணன் அர்ச்சுனனால் அடிபட்டதைஎப் போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! சூரர்களும் உக்கிரர்களுமாகிய துரோணபுத்திரரையும் துச்சாஸனனேயும் கிருதவர்மாவையும் தர்மராஜாவாகிய யுதிஷ்டிர ரானவர் ஜயித்ததை எப்போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! ஸூதா! எப்போதும் யுத் தத்தில் கிருஷ்ணனுக்கு எதிர்த்தட்டாகவிருக்கிற சூரனுகிய மத் திரராஜனை சல்லியன் தர்மராஜனால் கொல்லப்பட்டதை எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! கலகத்தை வளர்க்கும் சூதாட்டத்துக்கு மூலபுருஷனும் வஞ்சகத்தையேபலமாகச்சொண்டவனும் பாபியுமானசகுனி பாண்டு புத்திரனுகிய ஸஹதேவனால் கொல்லப்பட்டதை எப்போது கேட் டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! துரியோதனன் ரதம்போய் சக்திகுறைந்து ஓடுங்கிக் களைத் துத் தனியாக மடுவுக்குட்சென்று, அகன்ஜலத்தை அசைவற நிறுத்திப் படுத்திருந்ததை எப்போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! பாண்டவர்கள் கிரு ஷ்ணனுடன்கூட மடுவிற்சென்று நின்றுகொண்டு அவமானத்தைப் பொறுக்காதவனை என்புத்திரனை அவமானஞ்செய்ததை எப்போது கேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! கதாயுத்தத்தில் மண்டலமாகப் பற்பல புதுவழிகளில் சஞ்சரிக்கும்போது கிருஷ்ணன் குறிப்பித்ததனால் மோசமாகத் துரியோதனனை பீமசேனன் வதஞ்செய்ததை எப்போதுகேட் டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லே. ஸஞ்சய! அசுவத்தாமாமுதலியவர்கள், தூங்கிக்கொண்டிருந்த பாஞ்சாலர்களை யும் திரௌபதியின் புத்திரர்களையுங்கொன்று அருவருக்கத்தக்க

தும் அபகீர்த்திக்கு இடமாகவுள்ளதுமாகிய காரியத்தைச் செய்தார்களென்று எப்போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! பீமஸேனனுற் பின்தொடரப்பட்ட அசுவத்தாமா கோபித்துப்பிரயோகித்த ஐஷீகமென்னும் உயர்ந்த அஸ்திரம் உத்தராதேவியின் கர்ப்பத்தைக் கொல்லமாட்டாமற்போனதை எப்போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! அசுவத்தாமாவின் பிரம்மசிரஸ்என்னும்அஸ்திரத்தை, அர்ச்சுனன் 'க்ஷேமம் உண்டாகட்டும்' என்று ஆசீர்வதித்து, தன் அஸ்திரத்திஞல் அடக்கினதையும், அசுவத்தாமா தம்முடைய தலையிலுள்ள முக்கியமான இரத்தினத்தைக் கொடுத்துவிட்டதையும் எப்போதுகேட்டேனே அப்போதே நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! விராடபுத்திரியான உத்தராதேவியினுடைய கர்ப்பத்தைத் துரோணபுத்திரர் பெரிய அஸ்திரங்களிஞல் அழித்தபோது, 'பிழைப்பிக்கிறேன்' என்ற கிருஷ்ணனுடைய பிரதிஜ்ஞையை எப்போதுகேட்டேனே அப்போது நான் ஜயத்தை எதிர்பார்க்கவில்லை. ஸஞ்சய! வியாஸரும் கிருஷ்ணனுமாகிய இருவரும் சேர்ந்து, அசுவத்தாமாவைச் சபித்தனர். ஸூதனே! நான் அறிந்திருந்தும் புத்திகெட்டுப்போனதிஞல் இப்போது புத்திரர்களையும் பௌத்திரர்களையும் இழந்து துக்கமடைகிறேன்; புத்திரர்களையும் பௌத்திரர்களையும் இழந்த காந்தாரியைப்பற்றியும், பதிகளையும் சகோதரர்களையும் இழந்த மருமக்கள்மார்களைப்பற்றியும் துக்கமடைகிறேன். பாண்டுபுத்திரர்கள் யாராலும் செய்யமுடியாத காரியத்தைச் செய்தனர். அவர்கள் எதிரியில்லாத ராஜ்யத்தைத் திருப்பியடைந்தனர். யுத்தத்தில் நம்மவர்களில் [1] மூவரும் பாண்டவர்களில் [2] ஏழுபேர்களுமாகப் பத்துப்பெயர் மிகுந்தனரென்று நான் கேட்டேன். ஆ! கஷ்டம்!! அந்தப்பயங்கரமான க்ஷத்திரியயுத்தத்தில் [3] இரண்டுகுறைய இருபது அக்ஷௌஹிணிகள் அடிபட்டன. ஸூதனே! இருள் மிகவும் அதிகமாக இருக்கிறது. மயக்கமானது எனக்குள் பிரவேசிப்பதுபோலத் தோற்றுகிறது. பிரஜ்ஞை வரவில்லை. என்னுடையமனம்தளருகின்றது' என்றுசொன்ஞன்.

துக்கமுள்ள திருதராஷ்டிரன் இவ்வாறு சொல்லி அதிகமாகப் புலம்பி மூர்ச்சித்து, திரும்பவும் தெளிந்து ஸஞ்சயனைப்பார்த்து,

---

1 மூவர் - அசுவத்தாமா, கிருபர், கிருதவர்மா.

2 ஏழுபேர் - கிருஷ்ணன், ஸாத்யகி, பாண்டவர் ஐவர்.

3 கஅ அக்ஷௌஹிணி.

'ஸஞ்சய! இவ்வாறு நடந்தபிறகு காலதாமஸமின்றி உயிரைவிட்டு விட விரும்புகிறேன். உயிரை வைத்துக்கொள்வதிற் சிறிதேனும் பிரயோசனத்தை நான் காணவில்லை' என்று சொன்னான். அவ்வாறு சொல்லிக்கொண்டும், தளர்ந்து புலம்பிக்கொண்டும், ஸர்ப்பத்தைப்போற் சீறிக்கொண்டும், அடிக்கடி மூர்ச்சித்துக்கொண்டுமிருந்த அந்தத் திருதராஷ்டிரமஹாராஜனுக்குப் புத்திமானாகிய கவல்கண புத்திரனான ஸஞ்சயன் சிறந்த பொருளடங்கிய அடியில்வரும் வாக்கியத்தைச் சொன்னான்.

'ஓ! அரசரே! குணங்கள்நிரம்பிய பெரிய ராஜவம்சங்களிற் பிறந்தவர்களும், மேலான அஸ்திரங்களை அறிந்தவர்களும், இந்திரனுக்கு ஒப்பான பராக்கிரமமுள்ளவர்களும், தர்மமாகப் பூமியை ஜயித்துப் பூர்ணதக்ஷிணைகளுள்ள யாகங்களைச்செய்து இந்த உலகத்திற் கீர்த்தியையடைந்து பிறகு காலஞ்சென்றவர்களும் மிக்க உத்ஸாஹத்தோடும் மிகுந்த பலத்தோடுங்கூடியவர்களுமான அரசர்களை ஞானவானாகிய வேதவியாஸரும் நாரதரும் சொல்லக்கேட்டிருக்கிறீரல்லவா? மகாரதனாகிய சைப்யன், ஜயிக்கிறவர்களிற் சிறந்த வீரனாகிய ஸ்ருஞ்சயன், ஸுஹோத்ரன், ரந்திதேவன், உசிக்கின் புத்திரனாகிய [1] கக்ஷீவான், பாஹ்லீகன், தமனன், சைத்யன், சர்யாதி, அஜிதன், [2] நளன், பகைவரை மாய்க்கிறவராகிய விசுவாமித்திரர், மகாபலசாலியான அம்பரீஷன், மருத்தன், மனு, இக்ஷ்வாகு, கயன், பரதன், தசரதபுத்திரராகிய இராமர், சசிபிந்து, பகீரதன், பெரிய பாக்கியம்பெற்ற கிருதவீரியன், [2] ஜனமேஜயன், தேவர்களாலேயே நேரே யாகம் செய்விக்கப்பட்டவனும் வனங்களும் தேசங்களுமடங்கிய பூமி முழுவதையும் தன் [3] யூபஸ்தம்பங்களினால் அடையாளஞ்செய்தவனுமாகிய புண்ணியகர்மமுள்ள யயாதி ஆகிய இந்த இருபத்து நான்கு அரசர்களும் முன்னொருகாலத்திற் புத்திரசோகத்தினால் வருந்திய ச்வைத்தியனென்பவனுக்குத் தேவரிஷியாகிய நாரதரால் கூறப்பட்டார்கள். அவர்களுக்கு முன்னேயும் அதிக பலசாலிகளும் மஹாரதர்களும் மஹாத்துமாக்களும் எல்லாக்குணங்களும்நிரம்பினவர்களுமாகிய இன்னும் அநேக அரசர்கள் இறந்தார்கள். பூரு, குரு, யது, சூரன், பெரிய தேஜஸுள்ள விஷ்வகச்வன்,

1 கக்ஷீவான், கர்மானுஷ்டானத்துக்கு உதாரணமாகச் சொல்லப்பட்டவர்; ரிக்வேதம், முதல்மண்டலம், முதல் அஷ்டகம், முதல்அத்தியாயம், முதல் ஸூக்தம். மாக்ஸ் முல்லர் பதிப்பு, பக்கம், 103 பார்க்க.

2 இவர்கள் வேறு.

3 யாகங்களிற் பசுவைக் கட்டுகிற ஸ்தம்பம்.

அணுஹன், யுவனாஸ்வன். ககுத்ஸ்தன், பராக்ரமசாலியான ரகு, விஜயன், வீதிஹோத்ரன், அங்கன், பவன், சுவேதன், பிருஹத்குரு, உசீனரன், சதரதன், கங்கன், துலிதுஹன், துருமன், தம்போத்பவன், வேனன், ஸகரன், ஸங்கிருதி, நிமி, அஜேயன், பரசு, புண்டரன், சம்பு, குற்றமற்ற தேவாவிருதன், தேவாஹ்வயன், ஸுப்ரதிமன், ஸுப்ரதீகன், பிருஹத்ரதன், சிறந்த உத்ஸாகமுடையவனும் பணிவுள்ள மனமுடையவனுமான ஸுக்கிரது, நிஷதராஜாவாகிய நளன், ஸத்தியவிரதன், சாந்தபயன், ஸுமித்திரன். சக்தியுள்ள ஸுபலன், ஜானுஜங்கன், அனரண்யன், அர்க்கன், பிரியபிருத்யன், சுசிவிரதன், பலபந்து, நிராமர்த்தன், கேதுசிருங்கன், பிருஹத்பலன், திருஷ்டகேது, பிருஹத்கேது, தீப்தகேது, நிராமயன், அவிக்ஷித், சபலன், தூர்த்தன், உறுதியான தூணிகளுள்ள கிருதபந்து, சிலாக்கியங்களான பூர்வசரித்திரங்களில கொண்டாடப்பட்ட பிரத்யங்கன், சத்துருக்களை வதைக்கிறவனாகிய சுருதி ஆகிய இவர்களும் மற்ற அரசர்களும் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் காலனுசென்றனர். பத்துக்கோடி ஸங்கியையுள்ள இன்னும் அநேக அரசர்களும் இருந்தார்களென்று கேள்விப்படுகிறோம். பிரபுவே! உமது புத்ரர்களைவிட மிகச் சிறந்தவர்களும், உயர்ந்த புத்தியுள்ளவர்களும், மிகுந்த சக்தியுள்ளவர்களுமாகிய அரசர்கள் மிகப்பெரிய ஸுகங்களை விட்டு மரணமடைந்தார்கள். எவர்களுடைய உயர்ந்தபராக்கிரமமும், கொடையும், மகிமையும், ஆஸ்திகபுத்தியும், ஸத்யமும், தூய்மையும், தயையும், உள்ளும்புறமும் ஒத்திருப்பதும் வித்வான்களாகிய கவிஸ்ரேஷ்டர்களால உலகத்திலுள்ள பூர்வசரிததிரத்திற சொல்லப்படுகின்றனவோ எலலா ஸம்பத்துக்களும் குணங்களும் நிரம்பின அவர்களும் முடிவையடைந்தார்கள். உமது புத்திரர்கள் துராத்துமாக்கள்; கோபத்தாற் கொதிப்படைந்தவர்கள்; பொருளாசையுள்ளவர்கள்; கெட்டநடை மிகுந்தவர்கள்; அவர்களைப்பற்றி நீர் துக்கப்படுதல் தகாது. நீர் சாஸ்திரங்களைக் கேட்டவர்; கலவியுள்ளவர்; சிறந்த புத்தியுள்ளவர்; ஞானவான்களால ஒப்புக்கொள்ளப்பட்டவர் ஓ! பரதவம்சதரரே! சாஸ்திரகதை அனுசரிக்கிற புத்தியுள்ளவர்கள் பிரமிப்பதில்லை. வேந்தரே! தண்டிப்பதும் காப்பதும் உமக்குத்தெரிந்தவையே; புத்திரர்களை ரக்ஷிக்கவேண்டுமானால அவர்கள்போகும்வழியே முழுதும்போவது தகாது. மேலும், அஃது அவ்வாறே நடக்கவேண்டியிருந்தது. பின்னற சோகப்படவேண்டாம். விதியை முயற்சியினால் எவன் வெல்லவல்லவன்? பிரம்மாவினால்

ஏற்படுத்தப்பட்ட மார்க்கத்தை யாரும் தாண்டுவதில்லை. பிறப்பும் இறப்பும் இன்பமும் துன்பமுமாகிய இவையனைத்துக்கும் காலமே காரணம். பிராணிகளை ஸ்ருஷ்டிப்பதும் காலமே; அழிப்பதும் காலமே; பிரஜைகளை ஸம்ஹரிக்கிற [1]காலனைக்கூட ஒழிப்பதும் காலமே; உலகத்தில் எல்லாப்பொருள்களையும் நல்லவையாகவும் கெட்டவையாகவும் மாற்றுவதும் காலம்; பிரஜைகளையெல்லாம் அழிப்பதும் காலம்; மறுபடி ஸ்ருஷ்டிசெய்வதும் காலம்; எல்லாம் தூங்கும்போதும் காலம் தூங்காமலிருக்கிறது. காலத்தைத்தாண்ட யாருக்கும்முடியாது; காலம் யாராலும் நிறுத்தப்படாமல் எல்லாப்பொருள்களிலும் ஒரேவிதமாகச் சஞ்சரிக்கின்றது; நடந்தனவும் நடப்பனவும் இப்போது நடக்கின்றனவுமாகிய பதார்த்தங்கள் எவையோ அவை காலத்தாற் செய்யப்பட்டவையென்று அறிந்து நீர் விவேகத்தை இழக்காமலிருக்கவேண்டும்' என்றான்.

கவல்கணபுத்திரனாகிய ஸஞ்சயன், புத்திரசோகத்தினால் வருந்தின த்ருதராஷ்டிரமஹாராஜாவுக்கு இவ்வாறு பலவகையாக ஸமாதானஞ்சொல்லி, அப்போது தேறச்செய்தான். ஞானவான்களிற் சிறந்த அந்தத்திருதராஷ்டிரனும் அதைக்கேட்டுத் தெய்வத்தினால் இது நேர்ந்ததென்று நினைத்துத் தைரியத்தையே அடைந்தான்.

முனிஸ்ரேஷ்டராகிய கிருஷ்ணத்வைபாயனர் உலகங்களுக்கெல்லாம் நன்மைக்காகக் கருணையினாற் பாபத்தைப்போக்கத்தக்க உபநிஷத்தென்று சொல்லப்பட்ட பகவத்கீதையை இந்தப் பாரதத்திற் சொன்னார். உலகத்தில் வித்வான்களாயுள்ள கவிஸ்ரேஷ்டர்கள் பாரதம் [2]பூர்வம்நடந்த விருத்தாந்தமேயென்று சொல்லுகிறார்கள். பாரதம் ஓதுவது புண்ணியம்; சிரத்தையுடன் ஒருசுலோகத்தின் ஓர் அடியைப் படிப்பவனுக்கும் எல்லாப்பாவங்களும் சேஷமின்றி விலகிப்போகின்றன. ஏனென்றால், இந்தப் பாரதத்தில் தேவர்களும் தேவரிஷிகளும் பரிசுத்தர்களானபிரமரிஷிகளும் நல்லகாரியங்களைச்செய்த யக்ஷர்களும் நாகர்களும்சொல்லப்படுகின்றனர். நித்தியரான பகவான் வாஸுதேவரும் இதிற்சொல்லப்படுகிறார். ஞானபலனும் கர்மபலனும்அவரே.பாவத்தைவிலக்குபவரும் புண்ணியத்தைச்சேர்ப்பவரும் அவரே. மாறுதலில்லாததும், தானேபிரகாசிப்பதும், தேசகாலவரையறைஅற்றதுமாகிய பரப்பிரம்மமும் அவரே. ஞானிகள் அவருடைய செய்கைகளை உலகத்திற்கு மேற்பட்டவைகளாகச்சொல்லுகிறார்கள். காரணமும் காரியமுமான ஜடஜீவர்கள் சேர்ந்த உலகமும் அவரிட

---

1 யமன். 2 முதலியகல்பங்களிலும் நடந்தது.

மிருந்து உண்டாகிறது. ஸந்ததியாய்வருகிற பிரமன்முதலிய பிராணிகளும், அவற்றின் தொழில்களும், பிறப்பு இறப்புக்களும், ஜன்மாந்தரமும் அவரிடமிருந்து உண்டாகின்றன. அத்யாத்மமென்று சொல்லப்பட்டவையான தேகத்திலுள்ள [1]ஐந்து பூதங்களும் கந்தம், ரஸம், ரூபம், ஸ்பரிசம், சப்தம், என்னும் அவற்றின் குணங்களும் மூலப்பிரகிருதியும் அதன் காரியங்களும் எல்லாம் அவரேயென்று சொல்லப்படுகின்றன. யதிஸ்ரேஷ்டர்களும் முக்தர்களும் கண்ணாடியில் பிரதிபிம்பத்தைப் பார்ப்பதுபோல, ஆத்துமாவிலிருக்கும் அவரைத் தியானயோகத்தின் வன்மையைக்கொண்டு பார்க்கின்றனர்.

எப்போதும் நியமமுள்ளவனாகவும் எப்போதும் தர்மத்தைவிடாதவனாகவுமிருந்து இந்தஅத்தியாயத்தைச் சிரத்தையுடன்பாராயணம் செய்கிறமனிதன் பாபத்திலிருந்து விடுபடுகிறான். பாரதத்தினுடைய முதலிலுள்ள இந்த அனுக்கிரமணிகாத்தியாயத்தை எப்போதும் நம்பிக்கையுடன் கேட்பவன் கஷ்டங்களில் அகப்படமாட்டான். அனுக்கிரமணிகாத்தியாயத்தில் ஏதேனும் ஒருபாகத்தை [2]இரண்டு ஸந்திகளிலும் பாராயணம்செய்பவன் பகலிலும் இரவிலும் செய்த பாபம் எவ்வளவு உண்டோ அவ்வளவிலிருந்தும் உடனே விடப்படுகிறான். [3]ஸத்தியமும் [4]அமிர்தமுமாகிய இந்தப்பாரதத்தின் [5]சரீரம், தயிரில் வெண்ணெய்போலவும், மனுஷ்யர்களில் பிராமணன்போலவும், வேதங்களில் [6]ஆரண்யகம்போலவும், [7]ஔஷதிகளில் அமிர்தம்போலவும், நீர்நிலைகளில் ஸமுத்திரம்போலவும், நாலுகாலுள்ளவைகளிற் பசுவைப்போலவும் இதிஹாஸங்களிற் சிறந்ததாகச் சொல்லப்படுகின்றது. எவன்ஒருவன் இந்தப்பாரதத்திலுள்ள ஒருசுலோகத்தின் அடியையாவது சிராத்தத்தில் பிராமணர்களுக்குக் கேட்பிப்பானோ அவனுடையபிதிர்க்களுக்கு [8]அன்னபானங்கள் அழிவில்லாமல் வந்துசேருகின்றன. இதிஹாஸத்தினாலும் புராணத்தினாலும் வேதத்தை விளக்கிக்கொள்ளவேண்டும். வேதமானது அற்பஞானியைக்கண்டு அவன் தன்னை மோசம்செய்வானென்று பயப்படு

---

1 பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம்.

2 காலைமாலை. 3 அழியாதது. 4 ஆனந்தம். 5 முழுப்பாகம்.

6 காட்டில் ஓதத்தக்கது.

7 திருப்பாற்கடலில் ஔஷதிகளின் ரஸம்விட்டுக்கடைந்து அமிர்தம் உண்டாக்கினதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆரண்யகமென்பதற்கு உபநிஷத்தென்பதும், ஔஷதிகளில அமிர்தம் என்பதற்குத் தான்யங்களில் யஜ்ஞசேஷமென்பதும் பழையஉரை.

8 ஸந்ததிகுன்றா என்பது கருத்து.

கின்றது. கிருஷ்ணத்வைபாயனரால் சொல்லப்பட்ட வேதமாகிய இந்தப்பாரதத்தை ஒருவித்வான் பிறருக்குச் சொல்லுவதினால் திரவியலாபம் பெறுவான்; சிசுஹத்திமுதலான பாவங்களையும் நிச்சயமாக விலக்கிவிடுவான். எவன் பரிசுத்தனாகஇருந்து இந்த அனுக்கிரமணிகாத்தியாயத்தை ஒவ்வொரு புண்ணியகாலத்திலும் படிப்பானோ அவனால் பாரதம்முழுமையும் படிக்கப்பட்டதுபோலாகும் என்பது என்கருத்து. ரிஷியினாற்சொல்லப்பட்ட இந்தப்பாரதத்தை எவன் சிரத்தையோடு நித்தியமாகக்கேட்பானோ அந்தமனிதன் தீர்க்காயுளையும், கீர்த்தியையும், ஸ்வர்க்கத்தையும் அடைவான்.

முன்பு, தேவர்களெல்லாரும்சேர்ந்து நான்குவேதங்களை ஒருதட்டிலும் பாரதத்தை ஒருதட்டிலுமாக வைத்துத் தராசில் நிறுத்தனர். உபநிஷத்துக்களடங்கிய நான்குவேதங்களைக்காட்டிலும் பாரதம் அதிகமாகவிருந்தது. அதுமுதல் இவ்வுலகத்தில் இது மஹாபாரதமென்று சொல்லப்படுகிறது. நிறுக்கப்படும்போது மகத்தாகவும் பாரம் என்று சொல்லப்பட்ட அர்த்தகௌரவமுள்ளதாகவுமிருந்ததனாலும், மஹாபாரதமென்று பெயர்பெற்றது. இந்தப்பெயர் வந்த காரணத்தை அறிகிறவன் எல்லாப் பாவங்களாலும் விடப்படுகிறான்; தவமும் பாவத்தைப் போக்குகிறது; வேதத்தில்சொல்லப்பட்டவர்ணாஸ்ரம ஆசாரங்களும் பாவத்தைப் போக்குகின்றன; சிரமத்தைப்பொறுத்துப் பொருளீட்டுவதும் பாவத்தைப் போக்குகிறது. மேற்சொன்னவையே கெட்ட எண்ணத்தோடு செய்யப்பட்டால் பாவங்களாகின்றன.

அனுக்கிரமணிகாபர்வம் முற்றிற்று.

---

## இரண்டாவது அத்தியாயம்.

## [1]பர்வஸங்கிரகபர்வம்.



(மஹாபாரதத்திலுள்ள பர்வங்களையும் அவற்றின் விஷயங்களையும் கூறுவது.)

ரிஷிகள், "ஓ! ஸூதபுத்திரரே! ஸமந்தபஞ்சகமென்று சொன்னீரே; அதன்வரலாற்றையெல்லாம் நாங்கள் செவ்வையாகக் கேட்க விரும்புகின்றோம்" என்றுகேட்க, ஸூதர் சொல்லலானார்.

"அந்தணர்களே! அழகானகதைகளை நான்சொல்லுகிறேன்; கேளுங்கள். சிறந்தஸாதுக்களே! ஸமந்தபஞ்சகமென்று பெயருள்ள இடத்தைப்பற்றியும் நீங்கள்கேட்கவேண்டும். திரேதாயுகம் துவாபரயுகம் இவ்விரண்டின்ஸந்தியில்சஸ்திரதாரிகளிற்சிறந்தவரான பரசுராமர் கோபத்தினால் தூண்டப்பட்டு, பூமிக்கு அரசர்களான க்ஷத்திரியஜாதியாரை அடிக்கடி வதஞ்செய்தார். அக்கினிக்கு ஒப்பான சக்தியுள்ள பரசுராமர் தம்முடைய பராக்கிரமத்தினால் க்ஷத்திரியர்களெல்லாரையும் அழித்து, ஸமந்தபஞ்சகம் என்னும் இடத்தில் ஐந்து ரக்தமடுக்களை உண்டாக்கினாரென்றும், கோபமிகுந்த அவர், ரக்தமே ஜலமாகநிரம்பிய அந்தமடுக்களில ரக்தத்தினாலேயே பிதிர்க்களுக்குத் தர்ப்பணம் செய்தாரென்றும் நாம் கேட்டிருக்கிறோம். பிறகு, அவர்பிதிர்க்களாகிய ரிசீகர்முதலானவர்கள் பரசுராமரிடத்திற்குவந்து, 'ஓ! ராம! ராம! பெரியபாக்கியம்பெற்றவனே! பிருகுகுலத்தோனே! ஸாமர்த்தியமுள்ளவனே! உன்னுடைய இந்தப் பிதிர்பக்தியாலும் அதிகசக்தியாலும் சந்தோஷமடைந்திருக்கிறோம்; பெரியசக்தி உள்ளவனே! உனக்கு க்ஷேமம் உண்டாகக்கடவது. வேண்டியவரத்தைக்கேள்' என்று சொன்னார்கள்.

பரசுராமர், 'பிதிர்க்களுக்கு என்னிடம் பிரீதியும் அனுக்கிரகத்தைப்பெறுவதற்கு என்னிடத்துத் தகுதியுமிருக்குமாயின், நான் கோபத்தினால் மூடப்பட்டு க்ஷத்திரியர்களை அழித்ததாகிய இந்தப் பாவத்தினின்றும் விடுபடக்கடவேன். இதுதான் நான் வேண்டுகிறவரம். என்னுடைய இந்தமடுக்களும் புண்ணியதீர்த்தங்களாகப் பூமியிற்பெயர்பெற்று இருக்கக்கடவன' என்றார். பிறகு, பிதிர்க்கள், 'அப்படியேயாகுக' என்று அவருக்குக்கூறி, 'நீ பொறுக்க

---

1 இதிற்பாரதகதை முழுவதும் சுருக்கமாகச்சொல்லப்படுதலினால், இதனை ஸங்க்ஷேபபாரதமென்பர்.

வேண்டும்' என்று அவரைத்தடுத்தார்கள். உடனே, அவர் சாந்தராயினர். ரக்தமே ஜலமாகவுடைய அந்தமடுக்களின் சமீபத்திலுள்ள தேசம் ஸமந்தபஞ்சகமென்னும் புண்ணியக்ஷேத்திரமாகச்சொல்லப் படுகின்றது. எந்தத்தேசம் எந்த அடையாளத்தோடுகூடியதாகக் காணப்படுகிறதோ அந்த அடையாளப்பெயராலேயே அந்தத்தேசம் வழங்கத்தக்கதென்று தெரிந்தவர் சொல்லுகின்றனர். கலியுகத்திற்கும் துவாபரயுகத்திற்கும் ஸந்திநேர்ந்தபோது ஸமந்தபஞ்சகத்தில் கௌரவசேனைக்கும் பாண்டவசேனைக்கும் யுத்தம் உண்டாயிற்று. மிகவும்தர்மம்நிறைந்ததும் பூமியைப்பற்றிய தோஷமில்லாததுமான அந்தத்தேசத்தில் யுத்தஞ்செய்வதற்காகப் பதினெட்டு அக்ஷௌஹிணிகள் சேர்ந்தன. பிராமணர்களே! அந்த அக்ஷௌஹிணிகள் அவ்விடம்சேர்ந்து அங்கேயே முடிவையடைந்தன. பிராமணர்களே! அந்த [1] ஸமந்தபஞ்சகமென்னும் தேசத்தின்பெயர் இவ்வாறு ஏற்பட்டது. புண்ணியக்ஷேத்திரமும் அழகியதுமாகிய அந்தத்தேசத்தை உங்களுக்குச்சொன்னேன். சிறந்ததவமுள்ளவர்களே! பிராமணசிரேஷ்டர்களே! அந்தத்தேசத்திற்கு மூன்றுலோகங்களிலும் பிரஸித்திவந்த வரலாற்றைப்பற்றியும் முழுவதும்சொன்னேன்'' என்றுகூறினர்.

ரிஷிகள், ''ஓ! ஸௌதிபுத்திரரே! அக்ஷௌஹிணிகள் என்பதாக நீர்சொன்னீரல்லவா? அதையெல்லாம் விவரமாகக் கேட்க விரும்புகின்றோம். ஓர் அக்ஷௌஹிணியின் காலாட்கள், குதிரைகள், தேர்கள், யானைகள் இவற்றின் அளவைச் சரியாக எங்களுக்குச் சொல்லும்; உமக்கு எல்லாம் தெரியுமே'' என்றுகேட்டனர்.

ஸௌதிபுத்திரர், ''ஒருதேரும், ஒருயானையும், ஐந்துகாலாட்களும், மூன்றுகுதிரைகளும் சேர்ந்தது ஒருபத்தியென்பதாகச் சேனைவிதி தெரிந்தவர்கள் சொல்லுகின்றனர்; இந்தப்பத்தி மூன்றுகொண்டதை ஒருஸேனாமுகமென்று அறிவுடையோர் கூறுகின்றனர்; மூன்றுசேனாமுகங்கள் சேர்ந்தது ஒருகுல்மமென்று உரைக்கப்படுகின்றது; மூன்று குல்மங்கள் ஒருகணமென்று பெயர்பெறும்; மூன்றுகணங்கள் ஒரு வாஹினி; மூன்றுவாஹினிகளை ஒருபிருதனையென்று தெரிந்தவர்கள் சொல்லுகின்றனர்; மூன்றுபிருதனைகள் சேர்ந்தது ஒருசமூ; மூன்று சமூக்கள் சேர்ந்தது ஓர்அநீகினி; பத்து அநீகினிகளை ஓர் அக்ஷௌஹிணியென்று அறிவுடையோர்கள் சொல்லுகிறார்கள். பிராமணோத்தமர்களே! அக்ஷௌஹிணி ஒன்றுக்கு ரதங்களின் எண் இருபத்

[1] ஐந்துபுறங்களிலும் ஐந்துமடுக்களையுடையது.

தோராயிரத்து எண்ணூற்றெழுபது என்பதாக அக்ஷௌஹிணிஸங்கியை தெரிந்தவர்கள் நிர்ணயித்திருக்கின்றனர். யானைகளின் ஸங்கியையும் இவ்வளவே. பதாதிகள் லக்ஷத்தொன்பதினாயிரத்து மூந்நூற்றைம்பது. குற்றமற்றவர்களே! குதிரைகள் அறுபத்தையாயிரத்து அறுநூற்றுப்பத்தென்று ஸங்கியை செய்திருக்கிறார்கள். தபோதனர்களே! ஸங்கியை சரியாகத்தெரிந்த ஜனங்கள், அக்ஷௌஹிணியென்று சொல்வதை நான் உங்களுக்கு விரிவாகச்சொன்னேன்.

பிராமணசிரேஷ்டர்களே! இந்தஸங்கியைப்படி கௌரவபாண்டவருடைய சேனைகள் மொத்தம் பதினெட்டு அக்ஷௌஹிணிகள் இருந்தன. ஆச்சரியமான செய்கையையுடையகாலந்தான், கௌரவர்களைக்காரணமாக்கி அந்தச்சேனைகளை அந்த இடத்திற்சேர்த்து அங்கேயே முடித்தது.

உயர்ந்த அஸ்திரங்களையறிந்த பீஷ்மர் பத்துத்தினங்கள்யுத்தஞ்செய்தார். துரோணர் ஐந்துதினங்கள் கௌரவசேனையை ரக்ஷித்தார். சத்துருஸைன்யங்களைபபீடிப்பவனாகிய கர்ணன் இரண்டுநாள் யுத்தஞ்செய்தான். சல்லியன் அரைநாள் யுத்தஞ்செய்தான்; அதற்கு மேலே கதாயுத்தம்நடந்தது. அந்தக்கதாயுத்தம்நடந்த பகல்முடிந்த பிறகு அசுவத்தாமாவும் கிருதவர்மாவும் கிருபாசாரியரும் இராத்திரியிற் கவலையற்றுத் தூங்கிக்கொண்டிருந்த பாண்டவசேனைத்தலைவரை வதஞ்செய்தனர். சௌனகரே!உமதுஸத்திரயாகத்தில் நான்சொல்லுகிறதும் ராஜாக்களினகீர்த்தியையும் சக்தியையும் தெரிவிப்பதுமாகிய உத்தமமான பாரதகதையை ஜனமேஜயருடைய ஸர்ப்பயாகத்தில் வியாஸருடைய சிஷ்யராகிய சிறந்தபுத்தியுள்ள வைசம்பாயனர் விரிவாகச்சொன்னார். அந்தப்பாரதத்திற பௌஷ்யபர்வமும் பௌலோமபர்வமும் ஆஸ்தீகபர்வமும் சொல்லப்பட்டன.

மோக்ஷத்தை அடையவிரும்புகிறவர்களால் வைராக்கியம்அங்கீகரிக்கப்படுவதுபோல் புதியபுதிய விஷயங்களும் பதங்களும் சரித்திரங்களும் அநேகதர்மவியவஸ்தைகளுமுள்ளதாகிய பாரதம் புத்திசாலிகளான மனிதர்களால் அங்கீகரிக்கப்பட்டது. அறியத்தக்கவற்றுள் ஆத்மாவைப்போலவும், விரும்பத்தக்கவற்றுள் உயிரைப்போலவும், மேலான அர்த்தமுள்ள இந்தஇதிஹாஸம் எல்லாஉபதேசங்களிலும் மிகச்சிறந்தது. ஆகாரத்தைவிட்டுத் தேகம் எப்படி நிற்பதில்லையோ அப்படியே இந்தக்கதையைவிட்டு எந்தக்கதையும் இப்பூமியில் இல்லை. சிரேயஸை விரும்புகிற வேலைக்காரர்கள் நல்லகுலத்திற்பிறந்த

பிரபுவை அடுப்பதுபோலக் [1]கவிகள் இந்தப்பாரதத்தை ஆதாரமாக அடைகிறார்கள். உலகத்தையும்வேதத்தையும்சேர்ந்த சொற்களனைத்தும் உயிரெழுத்து மெய்யெழுத்துக்களில் அடங்கியிருப்பதுபோல, உயர்ந்த ஞானமானது இந்த உத்தமமான இதிஹாஸத்தில் அடங்கி இருக்கிறது. புத்திமான்களால் ஆதரிக்கப்பட்டதும், புதிய புதிய சொற்களமைந்த பர்வங்களோடு கூடியதும், நுட்பமாகிய விஷயங்களும் நியாயங்களும் சேர்ந்ததும், வேதார்த்தங்களினால் அலங்கரிக்கப்பட்டதுமாகிய பாரதமென்னும் இதிஹாஸத்தின் பர்வஸங்கிரகத்தைக் கேளுங்கள்,

(நூறுபர்வங்களின் பெயர்கள்.)

முதலாவதாகிய ஆதிபர்வத்தில், [2]அனுக்கிரமணிகாபர்வம், பர்வஸங்கிரகபர்வம், பௌஷ்யபர்வம், பௌலோமபர்வம், ஆஸ்தீகபர்வம் இவை முறையேயுள்ளன; இவை பாரதத்தின் முதல்முகவுரை. அம்சாவதாரணபர்வமும், பிறகு ஆச்சரியமும் மயிர்க்கூச்சலுண்டாக்கத்தக்கதுமாகியஸம்பவபர்வமும், [3]ஜதுக்ருகதாஹபர்வமும், ஹிடிம்பவத பர்வமும், பிறகு பகவதபர்வமும், அதன்பிறகு சைத்ரரதபர்வமும், அதன்பிறகு பாஞ்சாலிதேவியின் ஸ்வயம்வரத்தைப்பற்றிய ஸ்வயம்வரபர்வமும், பிறகு அரசர்களைப் பராக்கிரமத்தினால் ஜயித்துத் திரௌபதியைவிவாகம்செய்துகொள்வதைப்பற்றிய வைவாஹிகபர்வமும், விதுராகமனபர்வமும், அதன்பிறகு ராஜ்யலாபபர்வமும், அர்ச்சுனவனவாஸபர்வமும், பிறகு சுபத்திராஹரணபர்வமும், சுபத்திராஹரணத்துக்குமேல் [4]ஹரணஹரணபர்வமும், பிறகு காண்டவதாஹமென்னும் பர்வமும், அந்தச்சமயத்திலே மயனென்னும் அஸுரசில்பியைக் கண்டதைக் குறித்த மயதர்சனபர்வமும் ஆகிய இவை சொல்லப்பட்டன.

ஆதிபர்வத்திற்குப் பிறகு ஸபாபர்வம் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் மந்திரபர்வமும், அதன்பிறகு ஜராஸந்தவதபர்வமும், பிறகு திக்குவிஜயபர்வமும், திக்குவிஜயத்துக்குமேல் ராஜஸூயபர்வமும், அதன்பிறகு [5]அர்க்காபிஹரணபர்வமும், பிறகு சிசுபாலவதபர்வ

---

1 பரந்த ஞானமுடையவர்கள்.

2 கதையை வரிசைப்படுத்திச் சொல்வது.

3 அரக்குமாளிகையைக் கொளுத்தியது. ஜதுக்[illegible]ர்வம் என்றும் [பெயர்.

4 பெண்ணுக்குச் சிறப்புக்களைக் கொண்டுபோவது.

5 வந்தவர்களுக்குப் பூஜையைச் சேர்த்த ".

மும், அதன்பிறகு [1] த்யூதபர்வமும், அதன்பிறகு [2] அநுத்யூதபர்வமும் சொல்லப்பட்டன.

சபாபர்வத்துக்குப்பிறகு ஆரண்யபர்வம் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் ஆரண்யகபர்வமும், கிர்மீரவதபர்வமும், அதன்பின் [3] அர்ச்சுனாபிகமனபர்வமும், அதன்பிறகு வேடவேஷம்பூண்ட சிவபிரானுக்கும் அர்ச்சுனனுக்கும் நடந்த யுத்தத்தைப்பற்றிய கைராதபர்வமும், அதன்பின் [4] இந்திரலோகாபிகமனபர்வமும், தர்மத்தையும் தயையையும் தெரிவிக்கிற நளோபாக்கியான பர்வமும், பிறகு மிகுந்த ஞானமுள்ள தர்மராஜாவினுடைய தீர்த்தயாத்திரையைப்பற்றியதாகிய தீர்த்தயாத்ராபர்வமும், ஜடாஸுரவதபர்வமும், அதன்பிறகு யக்ஷயுத்தபர்வமும், நிவாதகவசயுத்தபர்வமும், அதன்பிறகு [5] அஜகரபர்வமும், அதன்பிறகு மார்க்கண்டேய ஸமாஸ்யாபர்வமும், அதன்பிறகு திரௌபதி ஸத்யபாமா ஸம்வாதபர்வமும், அதன்பிறகு கோஷயாத்ராபர்வமும், துரியோதனன் பிராயோபவேசம் செய்ததும், கர்ணனோடு மேற்காரியத்திற்காக மந்திராலோசனை செய்ததும், அதன்பிறகு மிருகஸ்வப்னோத்பவ பர்வமும், [6] விரீஹித்ரௌணிகமென்ற சரித்திரத்தைப்பற்றிய விரீஹித்ரௌணிகபர்வமும், [7] இந்திரத்யும்னோபாக்கியானமும், திரௌபதீ ஹரணபர்வமும், ஜயத்ரதவிமோக்ஷணபர்வமும், ராமோபாக்யானமும், அதன்பிறகு ஸாவித்திரியென்னும் பதிவிரதையினுடைய ஆச்சரியமான மகிமையைப் பற்றிய பதிவிரதாமாகாத்மியபர்வமும், அதன்பிறகு, [8] குண்டலாஹரணபர்வமும், அதன்பிறகு ஆரணேயபர்வமும் ஆகிய இவைகள் சொல்லப்பட்டன.

அதன்பிறகு விராடபர்வம்: அதில் பாண்டவப்பிரவேசபர்வமும், ஸமயபாலனபர்வமும், கீசகவதபர்வமும், அதன்பிறகு கோக்கிரஹணபர்வமும், அதன்பிறகு அபிமன்யுவுக்கும் விராடபுத்திரியாகிய உத்தரைக்கும் நடந்த விவாஹத்தைப்பற்றிய வைவாஹிகபர்வமும் ஆகிய இவை சொல்லப்பட்டன.

---

1 சூதாட்டத்தைப் பற்றியது.

2 இரண்டாமுறை சூதாடியதைப் பற்றியது.

3 அர்ச்சுனன் பாசுபதாஸ்திரத்திற்காகச் செல்வது.

4 அர்ச்சுனன் இந்திரலோகத்துக்குப் போனது.

5 மலைப்பாம்பாக இருந்தது பீமஸேனனைப் பிடித்துக்கொண்ட நகுஷனைத் தர்மராஜா ஸந்தித்தது. 6 பதக்குநெல் தானஞ்செய்ததைப்பற்றியது.

7 இதை ஆரண்யபர்வத்தில் மார்க்கண்டேய ஸமாஸ்யாபர்வத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

8 கர்ணனுடைய குண்டலத்தை இந்திரன் வாங்குவது.

அதற்குமேல் வெகு ஆச்சரியமாயுள்ள உத்தியோக பர்வம்: அதில் ஸேநோத்யோகபர்வமும், அதன்பின் ஸஞ்சயயானபர்வமும், திருதராஷ்டிரன் கவலையினால் தூங்காமலிருப்பதைப்பற்றிய ப்ரஜா கரபர்வமும், ரஹஸ்யமான ஆத்மஞானம் அடங்கிய ஸநத்ஸுஜாதீய பர்வமும், அதன்பிறகு [1]யானஸந்திபர்வமும், பகவத்யானபர்வமும், மாதலியின் உபாக்கியானமும், காலவருடைய சரித்திரமும், ஸாவித்திரோபாக்கியானமும், வாமதேவோபாக்கியானமும், பிருதூபாக்கியானமும், [2]ஜாமதக்னீய உபாக்கியானமும், ஷோடச ராஜகமென்னும் உபாக்கியானமும், கிருஷ்ணஸபாப்பிரவேசமும், விதுலையென்பவள் தன் புத்திரனுக்குப் புத்திசொன்னதும், [3]ஸைந்ய நிர்யாணபர்வமும், விச்வோபாக்கியானமும், மஹாத்மாவாகிய [4]கர்ணனுக்குக் கிருஷ்ணனுடன் நடந்த விவாதமும், காரியாலோசனையில் நிச்சயத்தைச்செய்து கிருஷ்ணன் சுவேதனைச் சேனாபதியாக அபிஷேகம் செய்ததைப்பற்றிய விசித்திரமும் அநேக கதைகள் சேர்ந்ததுமாகிய ஓர் உபாக்கியானமும், அதன்பின் கௌரவசேனையும் பாண்டவசேனையும் புறப்படுவதாகிய ஸைந்ய நிர்யாணபர்வமும், அதன்பிறகு ரதஅதிரத ஸங்கியானபர்வமும், அதன்பிறகு கோபத்தை விருத்திசெய்வதாகிய [5]உலூக தூதாகமனபர்வமும், அம்போபாக்கியான பர்வமும் ஆகிய இவையுள்ளன.

அதன்பிறகு பீஷ்மபர்வம்: அதில் பீஷ்மரைச் சேனாபதியாகப் பட்டாபிஷேகம் செய்ததைப்பற்றிய ஆச்சரியமான பீஷ்மாபிஷேக பர்வமும், அதன்பிறகு ஜம்பூத்வீபநிர்மாணபர்வமும், அதன்பின் த்வீபங்களின் விஸ்தாரத்தைப்பற்றிச் சொல்லுவதாகிய பூமிபர்வமும், [7] மஹரிஷியாகிய வியாஸர் ஸஞ்சயனுக்கு ஞானக்கண்ணைக் கொடுத்ததும் பகவத்கீதாபர்வமும், அதன்பின் பீஷ்மவதபர்வமும் சொல்லப்பட்டன.

அதன்பின் துரோணபர்வம்: அதில் துரோணாபிஷேகபர்வமும், [6] ஸம்சப்தகவதபர்வமும், அபிமன்யுவதபர்வமும், பிரதிஜ்ஞாபர்வமும், ஜயத்ரதவதபர்வமும், கடோத்கசவதபர்வமும், மயிர்க்கூச்ச

---

1 ஸஞ்சயன் தூதுசென்று வந்தபிறகு திருதராஷ்டிரன் ஸபையில ஸந்தித்தது.

2 பரசுராமர்.

3 சேனையைப் புறப்படச் சித்தஞ்செய்வது.

4 இது பகவத்யானபர்வத்தைச் சேர்ந்தது.

5 உலூகதூதாகமன பர்வத்தை ஸைந்யநிர்யாணபர்வத்திற் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

6 ஒருவகைக் கூட்டத்தார். 7 இது அதிகபாடம்.

லெடுக்கத் தக்கதாகிய துரோணவதபர்வமும், நாராயணாஸ்திரமோக்ஷ பர்வமும் உள்ளன.

அதன்பின் கர்ணபர்வம் சொல்லப்பட்டது.

அதன்பின் சல்லியபர்வம்: இஃது அறியத்தக்கது; இதில் ஹ்ரதப்ரவேசபர்வமும், பிறகு கதாயுத்தபர்வமும், புண்ணிய தீர்த்தங்களேயும் வம்சங்களேயும் பற்றிய ஸாரஸ்வதோபாக்கியானமும் உள்ளன.

அதன்மேல் மிகவும்அருவருக்கத்தக்க ஸௌப்திகபர்வம் சொல்லப்படுகின்றது. இதன்மேல் வெகு கொடுமையான ஐஷீகபர்வமுள்ளது.

(அதன்பிறகு ஸ்திரீபர்வம்.) அதில் ஜலப்பிரதானிக பர்வமும், அதன்பின் ஸ்திரீவிலாபபர்வமும் உள்ளன.

அதன்பின், கௌரவர்களுடைய ப்ரேதகாரியங்களேப்பற்றிய [2] ஸ்ராத்தபர்வம், பிராமணரூபமாகவந்த சார்வாகனென்னும் ராக்ஷஸனேச் சிக்ஷித்ததாகிய சார்வாக நிக்கிரகபர்வம், புத்திமானுகிய தர்மராஜாவின் பட்டாபிஷேகத்தைப்பற்றிய அபிஷேகபர்வம், அதன்பின் கிரகவிபாகபர்வம் (இவைகள் உள்ளன.)

பிறகு சாந்திபர்வம்: அதில் ராஜதர்மானுசாஸனபர்வமும், ஆபத்தர்ம பர்வமும், அதன்பின் மோக்ஷதர்மபர்வமும் சொல்லப்பட்டுள்ளன. சுகப்ரஸ்னுபிகமனமும், நாராயணீயமென்ற பிரம்மப்பிரஸ்னுனுசாஸனமும், துர்வாஸரிஷியின் உத்பத்தியும், மாயையோடு அவர் செய்த ஸம்வாதமும் சொல்லப்பட்டுள்ளன.

அதன்பிறகு, ஆனுசாஸனிகபர்வம்; அதன்பின், ஞானவாகிய பீஷ்மர் ஸ்வர்க்கம்போனதைப்பற்றிய ஸ்வர்க்காரோஹணபர்வம் உள்ளது.

பிறகு, எல்லாப்பாபங்களேயும் போக்கத்தக்க ஆசுவமேதிகபர்வம்; அதன்பின், ஆத்மஞானத்தைப் போதிக்கும் அனுகீதாபர்வமுள்ளது.

(அதன்பின்) ஆஸ்ரமவாஸபர்வம்: [3]அதில் புத்ரதர்சனபர்வமும், அதனபிறகு, நாரதாகமனபர்வமும் உள்ளன.

அதன்பின், பயங்கரமும்வெகுகொடுமையுமான மௌஸலபர்வம்.

(அதன்பின்) மஹாப்பிரஸ்தானபர்வம்.

---

1 துரியோதனன் மடுவில் ஒளிந்தது.

2 ஸ்ராத்தபர்வமுதலிய நான்கும் சாந்திபர்வத்திலுள்ளவை.

3 இறந்துபோன புத்திரர்களைத் திருதராஷ்டிரன் பார்த்தது.

அதன்பின், [1]ஸ்வர்க்காரோஹணபர்வம்.

அதன்பிறகு, [2]கிலமென்று பெயருள்ள புராணமாகிய ஹரிவம்சம்: அதில் முதலில் ஹரிவம்சபர்வமும், பிறகு, குழந்தைப் பருவமுள்ள க்ருஷ்ணன்செய்கைகளும் அப்படியே கம்ஸனுடைய வதமும் அடங்கிய விஷ்ணுபர்வமுமுள்ளன; பவிஷ்யபர்வமென்பதும் மிக ஆச்சரியமானது; அதுவும் கிலங்களிலே சேர்ந்தது.

பூர்ணமாக இந்த நூறுபர்வங்களும் மகாத்மாவாகிய வியாஸரால் சொல்லப்பட்டன. பிறகு, ரோமஹர்ஷணரின் புத்திரராகியஸௌதியால் தலைமையாகிய பதினெட்டுப் பர்வங்களும் ஸரியாக நைமிசாரண்யத்தில் உபந்யஸிக்கப்பட்டன. பாரதகதையின் சுருக்கம் அனுக்கிரமணிகாத்யாயத்திற் சொல்லப்பட்டது. இதில் பர்வஸங்கிரகம் சொல்லப்பட்டிருக்கிறது.

(பர்வங்களின் விஷயவிவரணமும் அத்யாய ச்லோக ஸங்க்யையும்.)

பௌஷ்யபர்வம், பௌலோமபர்வம், ஆஸ்தீகபர்வம் இவைபாரதத்திற்கு ஆரம்பமானவை: அம்சாவதரணபர்வம், ஸம்பவபர்வம், ஜதுக்ருஹதாஹபர்வம், ஹிடிம்பவதபர்வம், பகவதபர்வம், சைத்ரரதபர்வம், திரௌபதீஸ்வயம்வரபர்வம், பார்த்தன் மற்றுமுள்ள ராஜாக்களை ஜயித்து விவாஹஞ்செய்ததைப்பற்றிய வைவாஹிகபர்வம், விதுராகமனபர்வம், ராஜ்யலாபபர்வம், அர்ஜுனவனவாஸபர்வம், சுபத்ராஹரணபர்வம், ஹரணாஹரணபர்வம், காண்டவதாஹபர்வம், மயதர்சனபர்வம் ஆகிய இவை ஆதிபர்வத்தில் சொல்லப்பட்டன.

(இவற்றுள்) பௌஷ்யபர்வத்தில் உதங்கமுனிவருடைய மஹிமை வர்ணிக்கப்பட்டிருக்கிறது. பௌலோமபர்வத்தில் ப்ருகுவம்சத்தின் விரிவு கூறப்பட்டது. ஆஸ்தீகபர்வத்தில் ஸர்ப்பங்களெல்லாவற்றின் உத்பத்தியும், கருடோத்பத்தியும், திருப்பாற்கடலைக்கடைந்ததும், உச்சைச்ரவம் உண்டானதும் பரீக்ஷித்தின்புத்திரனாகியஜனமேஜயமகாராஜர் ஸர்ப்பயாகஞ்செய்யும்போது மகாத்மாக்களாகிய இந்தப்பாரதவம்சராஜாக்களுடைய இதிகாசத்தை சொல்லியவரலாறும் சொல்லப்பட்டன.

ஸம்பவபர்வத்தில் அநேகராஜாக்கள், மற்றச்சூரர்கள், த்வைபாயன மகரிஷி இவர்களுடைய உத்பத்திகள் சொல்லப்பட்டன. இந்த ஸம்பவபர்வத்தில், தேவர்கள், திதியின்புத்திரர்களும் தனுவின்புத்திரர்களுமாகிய அஸுரர்கள், மிகுந்தசக்தியுள்ள யக்ஷர்கள், நாகரென்றும்

1 பாண்டவர்கள் ஸ்வர்க்கம் போனதைத் தெரிவிப்பது.

2 சிதறிப்போன விஷயங்களடங்கியது.

ஒருவகைத் தேவஜாதிகள், ஸர்ப்பங்கள், கந்தர்வர்கள், பக்ஷிகள் ஆகியஇவர்களுடைய அம்சங்கள் பூமியில்வந்ததும், இன்னும் அநேக விதங்களான தேவஜாதிகளின் உத்பத்தியும் சொல்லப்பட்ட சிறந்த தவமுள்ள கண்ணுவமகரிஷியின் ஆஸ்ரமத்தில் சகுந்தலையினிடத்துத் துஷ்யந்தனுக்குப் பரதசக்ரவர்த்தி பிறந்ததும், அவனுடையபெயரையிட்டு இக்குலத்திற்கே உலகத்திற் பாரதமென்றபெயர் வந்ததும், சந்தனுவின்வீட்டிற் கங்காதேவியினிடம் மஹாத்மாக்களாகிய வஸுக்கள்பிறந்ததும், அவர்கள் மறுபடியும் ஸ்வர்க்கம்சென்றதும், அவர்களுடைய [1]தேஜஸுகளின் அம்சங்கள்சேர்ந்ததும், பீஷ்மர் உத்பத்தியானதும், அவர் ராஜ்யத்தைவிட்டு நித்தியபிரமசரிய விரதத்தில் இருந்ததும், பிரதிஜ்ஞையை நிறைவேற்றினதும், சித்திராங்கதனைக் காப்பாற்றியதும், சித்திராங்கதன் இறந்துபோனபிறகு இளையஸஹோதரனாகிய விசித்திரவீரியனை ரக்ஷித்ததும், அவனை ராஜ்யத்தில் ஸ்தாபித்ததும், ஆணிமாண்டவ்யரிஷியின்சாபத்தினால் தர்மதேவதை மனுஷ்யலோகத்தில் விதுரராகப்பிறந்ததும், கிருஷ்ணத்வைபாயனரால் திருதராஷ்டிரனும்பாண்டுவும்ஜனித்ததும்,துர்வாஸமுனிவருடையவரதானத்தினால் பாண்டவர்கள் பிறந்ததும், பாண்டவர்கள் வாரணவதம் போவதைப்பற்றித் துரியோதனன் மந்திராலோசனைசெய்ததும், அவன் பாண்டவர்களை வஞ்சகம்செய்யப் புரோசனனை அனுப்பியதும், அந்தச்சமயத்தில் புத்திசாலியாகிய தர்மராஜாவுக்கு மிலேச்சபாஷையில் மார்க்கத்தில் விதுரர்செய்த ஹிதோபதேசமும், விதுரர்சொன்னதனால் சுரங்கமாகியவழிசெய்யப்பட்டதும், அரக்குமாளிகையில் ஐந்து பிள்ளைகளோடு தூங்கிக்கொண்டிருந்த வேடச்சியையும் புரோசனனென்னும் துரியோதனன்மந்திரியையும் எரித்ததும், பயங்கரமான வனத்திற் பாண்டவர்கள் ஹிடிம்பையைக் கண்டதும்,மஹாபலசாலியான பீமஸேனன் ஹிடிம்பனைவதஞ்செய்ததும், கடோத்கசனுடைய பிறப்பும், அளவற்ற மகிமைபொருந்திய வியாஸரிஷியைக்கண்டதும், அவருடைய ஆஜ்ஞையால் ஏகசக்ராபுரியில் ஒருபிராமணனுடைய கிருஹத்திற் பிறருக்குத்தெரியாதபடி பாண்டவர்கள் வாஸஞ்செய்ததும், பகாஸுரனைக்கொன்றதும், பட்டணத்துஜனங்கள் ஆச்சரியமடைந்ததும், திரௌபதி திருஷ்டத்யும்னன் இவர்களுடையபிறப்பும் சொல்லப்பட்டிருக்கின்றன.

பாண்டவர்கள் ஒருபிராமணனிடத்திலிருந்து திரௌபதியின் சுயம்வரத்தைக்கேள்வியுற்று வியாஸர்சொல்லினாலும் தூண்டப்பட்ட

---

1 சக்திகள்.

வர்களாகி, திரௌபதியை அடையவிரும்பி ஸ்வயம்வரம் பார்ப்பதற்கு ஆசையுடன் குதூஹலமாகப் பாஞ்சாலதேசத்தை நோக்கிச்சென்றார்களென்பதும், அப்போது, அர்ச்சுனன் கங்கைக்கரையில் அங்காரபர்ணனென்று சொல்லப்பட்ட சித்திரரதனென்னும் கந்தர்வனை ஜயித்து, பிறகு அவனோடு ஸ்நேகஞ்செய்துகொண்டு அவனிடத்திலிருந்தே உத்தமங்களாகிய தபதி உபாக்யானத்தையும் வஸிஷ்டோபாக்யானத்தையும் ஔர்வோபாக்யானத்தையும் கேட்டானென்பதும், எல்லாஸஹோதரர்களுடனுஞ்சேர்ந்து பாஞ்சாலதேசத்தை நோக்கிச்சென்றானென்பதும், பாஞ்சாலநகரத்தில் அர்ச்சுனன் லக்ஷயத்தை அறுத்து எல்லா அரசர்களுக்கும் நடுவில் திரௌபதியையடைந்தானென்பதும், அங்கேபீமஸேனனும் அர்ச்சுனனும், சண்டைக்குவந்த ராஜாக்களையும் சல்லியனையும் கர்ணனையும் பெரியயுத்தத்தில் தங்கள் பராக்கிரமத்தால் ஜயித்தனரென்பதும், அளவிடக்கூடாததும் மனுஷ்யர்களுக்கெட்டாததுமாகிய அவ்விருவருடைய அந்தப்பராக்கிரமத்தைக்கண்டு, மகாபுத்திமான்களாகிய பலராமரும் கிருஷ்ணபகவானும் அவர்களைப் பாண்டவர்களென்று ஊஹித்து அவர்களுடன் ஸந்திப்பதற்காகக் குயவன்வீட்டில் அவர்கள் தங்கினஇடத்திற்குச் சென்றனரென்பதும் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஒருத்திஐவருக்குமனைவியாயிருப்பதைப்பற்றித்துருபதன் விசாரப்படுவதும், ஆச்சரியமான பஞ்சேந்திரோபாக்கியானமும், திரௌபதியின் விவாஹம் தேவர்களால் விதிக்கப்பட்டதேயல்லது மானிடர்களுடையதன்றென்பதும், துரியோதனன் விதுரரைப் பாண்டவர்களிடம் அனுப்பினதும், விதுரர் போய்ச்சேர்ந்ததும், கிருஷ்ணனைக் கண்டதும், பாண்டவர்கள் காண்டவப்ரஸ்தத்தில் வஸித்ததும், பாதிராஜ்யம் கொடுத்ததும், நாரதருடையஆஜ்ஞையினால் திரௌபதியைப் பற்றிப் பாண்டவர்கள் வ்யவஸ்தை செய்துகொண்டதும், அந்தவிஷயத்தில் ஸுந்தோபஸுந்தர்களென்னும் அஸுரர்களின் சரித்திரமும் சொல்லப்பட்டன.

பிறகு யுதிஷ்டிரர், திரௌபதியுடன் உட்கார்ந்திருக்கும்போது வீரனை அர்ச்சுனன் ஒருபிராமணனுக்காகஉள்ளேபிரவேசித்து,ஆயுதத்தையெடுத்துக்கொண்டு பிராமணனுடைய [1]கோதனத்தை விடுவித்து வீடுசென்றபின் நியமத்தைக்காப்பாற்றுவதற்காக வனம்சென்றதும், அவன் வனவாஸத்துக்குப்போகையில் வழியில் உலூபியென்னும் நாககன்னிகையோடு சேர்ந்ததும், புண்ணியதீர்த்தங்களுக்குப்

---

1 பசுக்கூட்டம்.

போனதும், பப்ருவாகனனென்னும்குமாரன் ஜனித்ததும், அவ்விடத்திலேயே அந்த அர்ச்சுனன், ஒருபிராம்மரிஷியின் சாபத்தால் முதலே ஜன்மமடைந்த அழகான ஐந்து அப்ஸரஸுகளுக்குச் சாபவிமோசனம்செய்ததும், ப்ரபாஸதீர்த்தத்தில் கிருஷ்ணன் அர்ச்சுனனோடு சேர்ந்ததும், அர்ச்சுனன் துவாரகாநகரத்தில் தன்மீது காதல்கொண்ட ஸுபத்திரையின்மேல் தானும் காதல்கொண்டு கிருஷ்ணனுடைய அனுமதியினால் அவளையடைந்ததும், பெண்ணுக்குக்கொடுக்கும் சிறப்புக்களை எடுத்துக்கொண்டு தேவகியின்புத்திரராகிய கிருஷ்ணன் வந்திருந்தபோது ஸுபத்திரைக்கு உயர்ந்தசக்தியுள்ள அபிமன்யு பிறந்ததும், திரௌபதிக்குப் பிள்ளைகள் பிறந்ததும் சொல்லப்பட்டிருக்கின்றன.

கிருஷ்ணனும் அர்ஜுனனும் வேடிக்கையாக யமுனையினருகிற் சென்றபோது கிருஷ்ணனுக்குச் சக்கரமும் அர்ஜுனனுக்குத் தனுஸும் கிடைத்ததும், காண்டவவனத்தைத் தகனம்செய்வித்ததும், அக்கினியிலிருந்து மயனும் தக்ஷகன்புத்திரனாகிய அசுவசேனனென்னும் நாகனும் விடுபட்டதும், மந்தபால மஹரிஷிக்குச் சார்ங்கியென்னும் பக்ஷியினிடத்திற் புத்திரோத்பத்தியும் ஆகியஇவை வெகுவிரிவாகச்சொல்லப்பட்டுள்ளன. (இவைகள் அடங்கிய) இது முதன்மையான ஆதிபர்வமென்று சொல்லப்படுகின்றது.

உயர்ந்த தேஜஸுள்ள மஹாத்மாவாகிய வியாஸமஹரிஷியினால் இருநூற்றிருபத்தேழு அத்தியாயங்களும், அவற்றில் எண்ணாயிரத்தெண்ணூற்றிரண்பத்துநான்கு ச்லோகங்களும் சொல்லப்பட்டன.

இரண்டாவது, அநேகவிஷயங்களடங்கிய ஸபாபர்வம்: பாண்டவர்களுடைய ஸபாநிர்மாணமும், கிங்கரர்களென்று சொல்லப்பட்ட யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் மயன்கண்டதும், தேவர்களையறிந்த நாரதர் திக்குப்பாலகர்களுடைய ஸபைகளைப்பற்றிச்சொன்னதும், ராஜஸூயயாகத்தின் ஆரம்பமும், ஜராஸந்தவதமும், ஜராஸந்தனுடைய துர்க்கமாகிய கிரிவிரஜமென்னுமிடத்தில் சிறையில் வைக்கப்பட்டிருந்த ராஜார்களைக் கிருஷ்ணபகவான் விடுவித்ததும், பாண்டவர்களுடைய திக்குவிஜயமும் இதிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

ராஜஸூயமென்னும் மகாயாகத்திற்கு அரசர்கள் காணிக்கைகளோடு வருதலும், அப்படியே மரியாதையைப்பற்றின சண்டையிற் சிசுபாலவதமும், யஜ்ஞத்திலுள்ள அந்தச்செல்வத்தைக்கண்டு துக்கமும் கோபமுங்கொண்ட துரியோதனனை ஸபையிற் பீமஸேனன் பரிகசித்ததும், அதனால் அவனுக்குக்கோபமுண்டானதும், அதனால்

சூதாடும்படிசெய்வித்ததும், அந்தஆட்டத்தில் தர்மபுத்ரரைச் சூதில் தேர்ந்தசகுனி வென்றதும், அந்தச்சூதாட்டமென்னும் கடலில்மூழ்கிப் பெருந்துயரம் அடைந்தமருமகளாகிய திரௌபதியை மகாபுத்திமானாகிய திருதராஷ்டிரன் கப்பல்போலிருந்து அந்தஸமுத்திரத்தினின்றும் கரையேற்றினதும், அவர்கள் கரையேறினது தெரிந்துராஜாவாகியதுரியோதனன் திரும்பவும் பாண்டவர்களைச் சூதாட்டத்திற்கு அழைத்ததும், பிறகு அவன் அவர்களைஜயித்து வனவாஸத்துக்கு அனுப்பினதுமாகியஇவையெல்லாம் ஸபாபர்வமாக மகாத்துமாவாகிய வியாஸராற் சொல்லப்பட்டன. அத்தியாயக்கணக்கு எழுபத்தெட்டு. பிராமணசிரேஷ்டர்களே! இந்தப்பர்வத்தில் இரண்டாயிரத்தைந்நூற்றுப்பதினொரு சுலோகங்கள் உள்ளன.

இதற்குப்பிறகு மூன்றாவதாகிய [1]அரண்யபர்வம்: அது பெரிது. மகாத்மாக்களாகிய பாண்டவர்கள் வனவாஸம்போனபோது புத்திமானாகிய தர்மபுத்திரரை நகரத்துஜனங்கள் பின்தொடர்ந்ததும், மகாத்மாவாகிய தர்மராஜர் பிராமணர்களைக்காப்பாற்றுவதற்குரிய அன்னத்திற்காகவும் காய்கறிக்காகவும் தௌமியமுனியின் உபதேசத்தினாற் சூரியனை ஆராதனஞ்செய்ததும், சூரியனுடைய அனுக்கிரகத்தினால் அன்னம்கிடைத்ததும், ஹிதம்சொல்லுகிறவிதுரரைத் திருதராஷ்டிரன்விட்டுவிட்டதும், திருதராஷ்டிரன்விட்டபிறகு, விதுரர் பாண்டவர்களிடம்சென்றதும், மறுபடியும் திருதராஷ்டிரன் கட்டளையினால் அவர் திரும்பிச்சென்றதும்,கர்ணனுடைய தூண்டுதலினால் துர்ப்புத்தியுள்ள திருதராஷ்டிரபுத்திரனாகிய துரியோதனன் வனத்திலிருந்த பாண்டவர்களைக் கொல்ல ஆலோசித்ததும், அவனுடைய கெட்ட அபிப்பிராயத்தையறிந்து வியாஸர் விரைந்துவந்ததும், பிரயாணத்தைத்தடுத்ததும், ஸுரபியின் உபாக்கியானம்சொன்னதும், மைத்திரேயர்வந்ததும், திருதராஷ்டிரமகாராஜாவுக்குப் புத்திசொன்னதும், அவரே ராஜாவாகிய துரியோதனனுக்கு சாபங்கொடுத்ததும், பீமஸேனன் யுத்தத்தில் கிர்மீரனைக்கொன்றதும், சகுனியினால் சூதாட்டத்தில் மோசமாக அவர்கள் ஜயிக்கப்பட்டதைக்கேட்டு யாதவர்களும் பாஞ்சாலர்களுமாகிய யாவரும்வந்ததும், கோபித்துக்கொண்ட கிருஷ்ணனை அர்ஜுனன் சமாதானஞ்செய்ததும், கிருஷ்ணனிடத்தில் திரௌபதி புலம்பினதும், துக்கத்தினால் வருந்தின அவளைக் கிருஷ்ணன் தேற்றினதும், ஸௌபவதசரித்திரமும் மகரிஷியினால் இங்கே சொல்லப்பட்டுள்ளன.

---

[1] காட்டுவாஸத்தது.

சுபத்திரையைப் புத்திரனுடன் துவாரகாநகரத்திற்குக் கிருஷ்ணன் அழைத்துக்கொண்டுபோனதும், திரௌபதியின்புத்திரர்களைத் திருஷ்டத்யும்னன் அழைத்துக்கொண்டுபோனதும், பிறகு, பாண்டவர்கள் ரம்யமானத்வைதவனத்திற்பிரவேசித்ததும்,தர்மராஜாவுக்குத் திரௌபதியோடும் பீமஸேனனோடும் ஸம்வாதம்நடந்ததும், வியாஸர் பாண்டவர்களிடம் வந்ததும், பிறகு, வியாஸமகரிஷி பிரதிஜ்ஞை செய்து தர்மராஜாவுக்கு வித்தையைக்கொடுத்ததும், வியாஸர் திரும்பிச்சென்றபிறகு காம்யகவனம்போனதும், அளவற்றசக்தியுள்ள அர்ஜுனன் பாசுபதாஸ்திரத்திற்காகப் பிரிந்துபோனதும், அவன்வேடவேஷம்பூண்ட ஈசுவரனோடு யுத்தஞ்செய்ததும், திக்குப்பாலகர்களைக் கண்டதும், அவனுக்கு அஸ்திரம்கிடைத்ததும், அஸ்திரத்திற்காக அவன் இந்திரலோகம்போனதும்,அதனால் திருதராஷ்டிரனுக்குமிகப் பெரிய கவலையுண்டானதும், ஆத்மஜ்ஞானியாகிய பிருஹதச்வமகரிஷியை யுதிஷ்டிரர் கண்டதும், துயரம்தாங்காமல் அவர் புலம்பினதும்,அந்தஇடத்தில் தமயந்தியின்நியமமும் நளனுடையசரித்திரமுஞ் சேர்ந்த சிறந்த தருமமுள்ளதும் கருணைமிகுந்ததுமாகிய நளோபாக்யானமும், ப்ருஹதச்வ மஹாரிஷியிடமிருந்து தர்மராஜர் அக்ஷஹ்ருதயமென்னும் சூதாட்டத்தின் ரஹஸ்யத்தை அறிந்துகொண்டதும், சுவர்க்கத்திலிருந்து பாண்டவர்களிடம் லோமசமகரிஷி வந்ததும், வனவாஸம்செய்துகொண்டிருந்த மஹாத்மாக்களாகிய பாண்டவர்களுக்கு அர்ஜுனன் சுவர்க்கத்திலிருக்கும் சமாசாரத்தைலோமசர்சொன்னதும், அர்ஜுனனுடைய சமாசாரம் தெரிந்தபிறகு யுதிஷ்டிரர்செய்த தீர்த்தயாத்திரையின் ஆரம்பமும், நாரதமகரிஷி தீர்த்தங்களின் பரிசுத்தத்தையும் பலன்களையும் புலஸ்தியருடையதீர்த்தயாத்திரையையும் சொன்னதும், மகாத்மாக்களாகிய பாண்டவர்களின் தீர்த்தயாத்திரையும், கயனென்னும் ராஜாவினுடைய யஜ்ஞத்தின் சிறப்பும் இதிற் சொல்லப்பட்டுள்ளன.

அகஸ்தியமகரிஷி வாதாபியைப்பக்ஷித்ததும் அவர் ஸந்ததிக்காக லோபாமுத்திரையை மணஞ்செய்துகொண்டதுமாகிய அகஸ்திய உபாக்யானமும்,சிறுபிராயத்திலேயே ஜிதேந்திரியராக இருந்த ரிச்யசிருங்கருடைய சரித்திரமும், ஜமதக்னியின் புத்திரரும் மகாசக்திமானுமாகிய பரசுராமருடைய சரித்திரமும், அதில் கார்த்தவீரியார்ஜுனனையும் ஹைஹயதேசத்து மற்ற அரசர்களையும் பரசுராமர் வதஞ்செய்ததும் வர்ணிக்கப்படுகின்றன.

பிரபாஸதீர்த்தத்திற் பாண்டவர்களும் யாதவர்களும் சந்தித்த

தும், பிருகுபுத்திரராகிய ச்யவனமுனி சர்யாதிமுனிவருடைய யாகத்தில் அசுவினிதேவர்களுக்கு ஸோமபானம் செய்வித்ததையும் அசுவினிதேவர்கள் இந்தச்சியவனமுனிக்கு யௌவனம்கொடுத்ததையும் பற்றிய ஸுகன்னியின் உபாக்கியானமும், மாந்தாதாவென்னும் ராஜாவின் உபாக்கியானமும் இதிற்சொல்லப்பட்டிருக்கின்றன.

ஸோமகன் புத்ரவரம்வேண்டி ஜந்துவென்னும் தன்புத்திரனைப் பசுவாகச்செய்து யாகஞ்செய்ததனால் நூறுபுத்திரர்களை அடைந்ததைப்பற்றிய ஜந்து உபாக்கியானமும், அதன்மேல் இந்திரனும் அக்கினியும் தர்மதேவதையும் சிபிசக்ரவர்த்தியைப் பரீட்சைசெய்த சேனகயோபாக்கியமென்னும் சிறந்தஉபாக்கியானமும், மகாத்துமாவாகிய அஷ்டாவக்ரரென்னும் பிரம்மரிஷி ஜனகருடைய யாகத்தில் தார்க்கிகரிற் சிறந்தவரும் வருணபுத்திரருமாகிய வந்தியென்பவருடன்விவாதஞ்செய்து அவரைத் தம் வாதத்தன்மையினால்வென்று, வந்தியினால் ஸமுத்திரத்தில் அமிழ்த்தப்பட்டிருந்த தம் பிதாவை ஜயத்தினால திரும்பப்பெற்றுக்கொண்டுவந்ததுமாகிய அஷ்டாவக்ரோபாக்கியானமும், யவக்ரீதோபாக்கியானமும், மஹாத்மாவாகிய ரைப்யருடைய உபாக்கியானமும், பாண்டவர்கள் கந்தமாதனமலைக்கு யாத்திரைசெய்ததும், நாராயணரிஷியின் ஆஸ்ரமத்தில் வஸித்ததும், பலசாலியான பீமஸேனன் திரௌபதியினால் ஏவப்பட்டுக் கந்தமாதன பர்வதத்திற்போகும்போது வழியில் வாழைத்தோட்டத்தின் நடுவிலிருந்த மகாபலசாலியும் வாயுபுத்ரருமான ஹனுமானைக்கண்டதும், அந்தக் கந்தமாதனத்தில் செங்கழுநீர்ப்புஷ்பத்திற்காகப் பீமஸேனன் அந்தத் தடாகத்தைக் கலக்கினதும், அங்கே பீமஸேனனுக்கு மணிமான் முதலிய மிகுந்த பராக்கிரமமுள்ள ராக்ஷஸர்களோடும் யக்ஷர்களோடும் மிகப்பெரிய யுத்தம் நடந்ததும், ஜடாஸுரனென்னும் ராக்ஷஸனைப் பீமஸேனன் வதஞ்செய்ததும், பிறகு விருஷபர்வாவென்னும் ராஜரிஷியைச் சந்தித்ததும், இவர்கள் ஆர்ஷ்டிஷேணரிஷியின் ஆஸ்ரமத்திற்குச்சென்றதும், அங்கே வஸித்ததும், மகாத்துமாவாகிய பீமஸேனனைத் திரௌபதி புஷ்பத்திற்காக அனுப்பினதும், அவன் கைலாஸமேறினதும், அவன் பலத்திற்கர்வித்த மணிமான்முதலிய யக்ஷர்களோடு மிகப்பயங்கரமான யுத்தஞ்செய்ததும், பாண்டவர்கள் குபேரனைச்சந்தித்ததும், அங்கே அர்ச்சுனன் தேவாஸ்திரங்களை அடைந்து தன்சகோதரர்களோடுசேர்ந்ததும், இந்திரனுக்குக் குருதக்ஷிணையாக ஹிரண்யபுரத்திலே வஸிப்பவர்களும் பயங்கரர்களும் தனுவின்புத்திரர்களும் தேவர்களுக்குச் சத்துருக்களுமாகிய நிவாதகவசர்களோ

டும் பௌலோமர்களோடும் காலகேயர்களோடும் யுத்தஞ்செய்ததையும் அவர்களை வதஞ்செய்ததையும் தர்மராஜாவுக்குப் புத்திமானான அர்ச்சுனன் சொன்னதும், தர்மராஜாவின் முன்னிலையில் அர்ச்சுனன் அஸ்திரங்களைக்காண்பிக்க ஆரம்பித்ததும், தேவரிஷியாகிய நாரதர் அவனைத்தடுத்ததும், திரும்பவும் பாண்டவர்கள் கந்தமாதனத்தை விட்டு இறங்கினதும், அந்த மிக்க கடுமையான காட்டில் பர்வதம் போற் பெரியஉடலுள்ள பலசாலியான மலைப்பாம்பினால் பீமன் பிடிக்கப்பட்டதும், அங்கே கேள்விகளுக்கு மறுமொழிகூறி யுதிஷ்டிரர் அவனை விடுவித்ததும், திரும்பவும் மகாத்மாக்களான பாண்டவர்கள் காம்யகவனத்துக்கு வந்ததும், மறுபடி அங்கிருந்த புருஷஶ்ரேஷ்டர்களாகிய பாண்டவர்களைப்பார்ப்பதற்குக் கிருஷ்ணன்வந்ததும் இதிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

மார்க்கண்டேயஸமாஸ்யாபர்வத்தில் வேனன்புத்திரனாகியபிருது சக்கரவர்த்தியின் உபாக்கியானமும், ஸரஸ்வதிக்கும் சிறந்த மகாத்மாவாகிய தார்க்ஷ்யரென்னும் ரிஷிக்கும் நடந்த ஸம்வாதமும், அதன்பின், [1] மத்ஸ்யோபாக்கியானமும் ஆகிய இந்த உபாக்கியானங்கள் வியாஸமஹரிஷியினால் பூர்ணமாகச்சொல்லப்பட்டிருக்கின்றன. மார்க்கண்டேய ஸமாஸ்யையும் [2]புராணமென்று சொல்லப்படுகின்றது. இந்திரத்யும்னோபாக்யானமும் துந்துமாரோபாக்கியானமும் பதிவிரதோபாக்கியானமும் ஆங்கிரஸோபாக்கியானமும் திரௌபதீ ஸத்தியபாமா ஸம்வாதமும் இதிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

பாண்டவர்கள், மறுபடியும் த்வைதவனம் வந்ததும், துரியோதனனுடைய கோஷயாத்திரையும், அதில் மந்தபுத்தியுள்ள துரியோதனன் கந்தர்வர்களால் கட்டியெடுத்துக் கொண்டுபோகப்பட்டு அர்ச்சுனனால் விடுவிக்கப்பட்டதும், தர்மராஜர் மிருகங்களை ஸ்வப்னத்திற் பார்த்ததனால் திரும்பவும் காம்யகமென்ற உயர்ந்த வனத்துக்குப்போனதும், மிகவிரிவுள்ள வ்ரீஹித்ரௌணிகமென்னும் உபாக்கியானமும், துர்வாஸரின் உபாக்கியானமும் இதிற் கூறப்பட்டன.

ஆஶ்ரமத்துக்குள்ளிருந்து திரௌபதியை ஜயத்ரதன் கொண்டு போனதும், வேகத்தில் வாயுவுக்கு ஒப்பானவனும் மிகுந்தபலசாலியுமான பீமஸேனன் அவனைத்துரத்தி ஐந்துகுடுமிவைத்ததும், ராமர்

1 மத்ஸ்யாவதாரசரித்திரம்.

2 பூர்வகல்பங்களிலுமுள்ளது.

பராக்கிரமத்தினால் யுத்தத்தில்ராவணவதம் செய்ததைப்பற்றிய அதிக விரிவுள்ள ராமாயணமென்னும் உபாக்கியானமும், ஸாவித்திரிஉபாக்கியானமும் இங்கே சொல்லப்பட்டன.

இந்திரனுக்குக் கர்ணன் தன்குண்டலங்களைக் கொடுத்ததும், அதனால் ஸந்தோஷமடைந்த இந்திரன் ஒரேமுறைபிரயோகித்து ஒருவனைமட்டும் கொல்லத்தக்க சக்தியாயுதத்தைக் கர்ணனுக்குக்கொடுத்ததும், தர்மதேவதை தன்புத்திரனுக்குச்சொன்ன ஆரேணயமென்னும் உபாக்கியானமும், பாண்டவர்கள் வரம்பெற்று மேற்றிசைக்குச் சென்றதுமாகிய இவையெல்லாம் மூன்றாவதாகிய அரண்யபர்வமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அரண்யபர்வத்தில் இருநூற்றுப்பத்தொன்பது அத்தியாயங்கள் கணக்கிடப்பட்டிருக்கின்றன. இதில் சுலோக ஸங்கியை பதினோராயிரத்தறுநூற்றறுபத்துநான்கு என்று சொல்லப்பட்டது.

இதன்பின், விராடபர்வத்தின் விவரத்தைக்கேளும். பாண்டவர்கள்விராடநகரம்போய் ஸ்மசானத்திற்பெரியவன்னிமரத்தைக்கண்டு, அதில் ஆயுதங்களெல்லாவற்றையும் வைத்ததும், அவர்கள் மாறுவேஷம்பூண்டு நகரத்துக்குட்போய் வஸித்ததும், துஷ்டசித்தமுள்ள கீசகன் காமத்தினால் மதிமயங்கித் திரௌபதியின்மீது காதல்வைத்துப் பீமனாற் கொல்லப்பட்டதும், ராஜாவாகிய துரியோதனன் பாண்டவர்களைக் கண்டுபிடிப்பதற்காக எல்லாத்திசைகளிலும் ஸமர்த்தர்களான சாரர்களையனுப்பியதும், மகாத்மாக்களாகிய பாண்டவர்களுடைய வ்ருத்தாந்தம் கிடைக்காமலிருந்ததும், முதலில திரிகர்த்ததேசத்தார் விராடனுடைய பசுக்களைப்பிடிக்க, அவர்களுக்கும்விராடனுக்கும் மயிர்சிலிர்க்கத்தகுந்த மிகப்பெரிய யுத்தம் உண்டானதும், அந்தயுத்தத்திற் பிடிக்கப்பட்ட விராடன் பீமஸேனனால் விடுவிக்கப்பட்டதும், விராடனுடைய பசுக்கூட்டங்களைப் பாண்டவர்கள் விடுவித்ததும், பிறகு துரியோதனன்முதலிய கௌரவர்கள் விராடராஜ்யத்தில் கோக்ரஹணம் செய்ததும், அர்ச்சுனன் கௌரவர்யாவரையும் யுத்தத்தில்வென்று பராக்கிரமத்தினாற் பசுக்களைத் திருப்பிக்கொணர்ந்ததும், விராடன் தன்புத்திரியாகிய உத்தரையை அர்ச்சுனன்மருமகளாகப்பகைவரைக்கொல்லுகிறவனாகிய சுபத்திரையின்புத்திரனை அபிமன்யுவுக்குக் கன்னிகாதானம்செய்ததும் விரிவாகஅடங்கிய இது நான்காவதாகிய விராடபர்வமென்று சொல்லப்படுகிறது. இதில் வியாஸமகரிஷியினால் ஸம்பூர்ணமாக அறுபத்தேழு அத்தியாயங்கள் கணக்கிடப்பட்டன. சுலோகஸங்கியையைக்கேளும்; இரண்டாயிரத்

தைம்பது சுலோகங்கள் இந்தப்பருவத்தில் வியாஸமகரிஷியினாற் சொல்லப்பட்டன.

இதன்பின், ஐந்தாவதாகிய உத்தியோகபர்வம் அறியத்தக்கது. அதைக்கேளும்; [1]உபப்பிலாவியமென்னும் ஸ்தலத்தில் பாண்டவர்கள் ஜயிக்கவேண்டுமென்கிறவிருப்பத்துடன் தங்கியிருக்கையில், துரியோதனனும் அர்ச்சுனனும் வாஸுதேவரிடம் வந்தனரென்பதும் அதில், 'எங்களிருவருக்கும் இந்த யுத்தத்தில நீர் உதவிசெய்தற்குரியவர்' என்றவாக்கியத்தை அவர்கள் சொல்லியபோது, பேரறிவுள்ளராகிய கிருஷ்ணபகவான், 'புருஷஶ்ரேஷ்டர்களே! சண்டைசெய்யாமற் புத்திசொல்லிக்கொண்டுமாத்திரமிருக்கிற நான் ஒருபக்கமும், என்னுடைய ஓர் அக்ஷௌஹிணீஸேனை மற்றொருபக்கமுமாக இருத்தல்கூடும்; நான் யாருக்கு எதைக்கொடுக்கட்டும்?' என்று கேட்டனரென்பதும், புத்திகுறைந்தவனும் புத்திகெட்டவனுமாகிய துரியோதனன் சேனையை அபேக்ஷித்தனனென்பதும், தனஞ்சயன் சண்டைசெய்யாமற் புத்திசொல்லும்கிருஷ்ணனையே விரும்பினனென்பதும், மத்திரராஜனாகிய சல்லியன் பாண்டவர்களைக்குறித்து வருகையில் துரியோதனன் வழியிலேயே உபசாரங்களைச்செய்துவஞ்சித்து, வரங்கொடுக்க ஆரம்பித்த அந்தச்சல்லியனிடம் யுத்தத்தில் தனக்கு உதவிசெய்யவேண்டுமென்கிற வரத்தைக்கேட்டதும், சல்லியன் அவனுக்கு வாக்குத்தத்தஞ்செய்துவிட்டுப் பாண்டவர்களை நோக்கிச் சென்று அவர்களைச் சமாதானஞ்செய்து இந்திரன் விருத்திராசுரனை ஜயித்தசதையைச்சொன்னதும், பாண்டவர்கள் கௌரவர்களிடம் துருபதராஜாவின் புரோகிதரை அனுப்பியதும், திருதராஷ்டிரனுடைய சொல்லையும் அர்ச்சுனன் இந்திரனை ஜயித்ததைப்பற்றிப் பீஷ்மர் சொன்னகுறிப்பையும் கிரகித்துக்கொண்டு புரோகிதர் திரும்பிப் போனதும், பராக்கிரமசாலியாகிய திருதராஷ்டிரமஹாராஜா ஸமாதானத்துக்காகப் பாண்டவர்களிடம் ஸஞ்சயனைத் தூதனுப்பினதும், பாண்டவர்களுக்குக் கிருஷ்ணபகவான் முன்னிற்பதைக்கேட்டுக் கவலையினால் திருதராஷ்டிரனுக்கு நித்திரையில்லாமலிருந்ததும், அந்தக் காலத்தில் விதுரர் அற்புதமும் ஹிதமுமான வசனங்களைப் புத்திசாலியான திருதராஷ்டிரமகாராஜாவுக்குச் சொன்னதும், மனஸ்தாபங்கொண்டு துக்கத்தினால் தளர்ந்த ராஜாவுக்கு ஸனத்ஸுஜாதர் மிகச் சிறந்த ஆத்மஞானத்தைச் சொன்னதும், ஸஞ்சயன் விடியற்காலையில் ராஜஸபையில் பிரபுவான வாஸுதேவருக்கும் அர்ச்சுனனுக்குமுள்ள

---

1 விராடராஜனுக்கு உரியதோர் நகரம்.

ஒருமையை உரைத்ததும், பேரறிவாளராகிய கிருஷ்ணபகவான் தயை கூர்ந்து ஸந்தியை விரும்பினவராகி விரோதசமனஞ்செய்வதற்குத் தாமே ஹஸ்திநபுரஞ்சென்றதும், இரண்டுபக்கங்களுக்கும் ஹிதமான ஸமாதானத்தைப்பற்றிக் கேட்டுக்கொண்ட கிருஷ்ணனைத் துரியோதனன் நிராகரித்ததும், தம்போத்பவனுடைய கதையும் இங்கே சொல்லப்பட்டன.

மகாத்மாவாகிய மாதலி பெண்ணுக்கு வரன்தேடினதும், காலவமகரிஷியினுடைய சரித்திரமும், விதுலையென்பவள் தன்புத்திரனுக்குப் புத்திசொன்னதும், கர்ணன் துரியோதனன்முதலான அரசர்களுடைய கெட்ட எண்ணத்தையறிந்து கிருஷ்ணபகவான் தாம் யோகேசுவரரென்பதை விஸ்வரூபத்தாற் காட்டியதும், அவர் கர்ணனைத் தம் தேரிலேற்றிக்கொண்டு உபாயங்களினால் மித்திரபேதஞ் செய்ததும், அவன் கர்வத்தினால் அதைத்தள்ளிவிட்டதும், எதிரிகளை அடக்குகிறவராகிய கிருஷ்ணபகவான் ஹஸ்திநபுரத்திலிருந்து உபப்லாவ்யத்துக்குவந்து பாண்டவர்களுக்கு எல்லாவற்றையும் நடந்தபடி சொன்னதும், அந்தவீரர்கள் அவர்சொல்லைக்கேட்டு ஹிதத்தை ஆலோசித்துப் பிறகு யுத்தத்துக்கு வேண்டியவற்றையெல்லாம் ஆயத்தஞ்செய்ததும், பிறகு பதாதிகளும் குதிரைகளும் ரதங்களும் யானைகளும் ஹஸ்திநபுரத்திலிருந்து யுத்தத்திற்குப் புறப்பட்டதும், சைனியங்களைக் கணக்கிட்டதும், ராஜாவான துரியோதனன் பெரிய யுத்தம் நாளைத்தினம் நடப்பதாயிருக்கையிற் பாண்டவர்களிடம் உலூகனைத் தூதனை அனுப்பினதும், பீஷ்மர் இரண்டுசேனைகளிலுமுள்ள ரதர்களையும் அதிரதர்களையும் கணக்கிட்டதும், அம்போபாக்யானமும் ஆகிய இந்த அநேகவிஷயங்களடங்கியதும் ஸந்திவிக்ரஹங்கள் சேர்ந்ததுமானபாரதத்தின் ஐந்தாவது பர்வம் உத்யோகபர்வமென்று சொல்லப்பட்டது. மகரிஷியினால் நூற்றெண்பத்தாறு அத்தியாயங்கள் சொல்லப்பட்டன. முனிவர்களே! மகாத்மாவும் உத்கிருஷ்டபுத்தியுள்ளவருமாகிய வியாஸரால் ஆறாயிரத்தறுநூற்றுத்தொண்ணூற்றெட்டுச் சுலோகங்கள் இந்தப்பர்வத்தில் சொல்லப்பட்டன.

இதன்பின், அற்புதமானவிஷயம் அடங்கியபீஷ்மபர்வம். இதில் ஜம்பூத்வீபத்தின் நிர்மாணம் ஸஞ்சயனால் உரைக்கப்பட்டது. யுதிஷ்டிரருடையசேனை பெருந்துயரமடைந்ததும், பத்துதினங்கள் பயங்கரமான யுத்தம் நடந்ததும், மகாஞானியாகிய வாஸுதேவன் அர்ச்சுனனுக்குத் தத்துவஞானமில்லாமையினால் உண்டான தர்மாதர்மப்ரமத்தை, மோக்ஷஸ்வரூபத்தை யறிவிக்கின்ற நியாயங்களினாலே

நிவிர்த்திசெய்ததும், யுதிஷ்டிரருடைய நன்மையில் ஊக்கமுள்ளவரும் புலன்களுக்கெட்டாதவரும் உயர்ந்தஞானமுள்ளவருமாகிய கிருஷ்ணமூர்த்தி பீஷ்மரைப்பார்த்து உடனே தேரிலிருந்து வேகமாகத்தாண்டிப் பயமற்றவராகச் சாட்டையுங்கையுமாய்த் தாமே அவரைக்கொல்ல விரைந்து ஓடினதும், காண்டீவமென்னும் சிறந்ததனுசைவகித்தவனும் எல்லா ஆயுததாரிகளுக்குள்ளேயும் சிறந்தவனுமாகிய அர்ச்சுனன் யுத்தத்திற் கிருஷ்ணனுடைய சொல்லினுற் சாட்டையடிபட்டவன்போற் சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு கூர்மையையுடைய பாணங்களினால் அடித்துப் பீஷ்மரைத் தேரினின்றும் தள்ளினதும், பீஷ்மர் சரதல்பத்திற்படுத்தவராகஇருந்ததும் விரிவாக அடங்கிய இது பாரதத்தில் விஸ்தாரமான ஆருவது பருவமென்று சொல்லப்பட்டது. இந்தப்பீஷ்மபர்வத்தில் நூற்றுப்பதினேழ் அத்தியாயங்கள் என்றும், ஐயாயிரத்தெண்ணூற்றெண்பத்துநான்கு சுலோகங்கள் என்றும் வேதவித்வாஞகிய வியாஸமகரிஷியினுற்கணக்கிடப்பட்டன.

அதன்பின், அநேகவிஷயங்கள் அடங்கினதும்விசித்திரமுமாகிய துரோணபர்வம் சொல்லப்படுகின்றது. அதில், பீஷ்மருக்குப்பின் பராக்கிரமசாலியாகிய துரோணுசாரியர் ஸேஞதிபதியாகப் பட்டாபிஷேகம் செய்யப்பட்டதும், சிறந்த அஸ்திரங்களை அறிந்ததுரோணர் துரியோதனனை உத்ஸாஹப்படுத்தும்பொருட்டுப் புத்திமாஞகியதர்மராஜாவைப் பிடிப்பதாக வாக்குத்தத்தம் செய்ததும், ஸம்சப்தகர்கள் அர்ச்சுனனை யுத்தகளத்தினின்றும் தூரத்திற்கொண்டுபோனதும், யுத்தத்தில் இந்திரனுக்குச் சமானமாகிய பகதத்தமகாராஜன் ஸுப்ரதீகமென்னும் யானையோடுகூட அர்ச்சுனனுற் கொல்லப்பட்டதும், யௌவனத்தை அடையாத பாலனும் சூரனுமாகிய அபிமன்யு ஒருவனை ஜயத்ரதன்முதலிய மகாரதர்கள் அநேகர்சேர்ந்து கொன்றதும், அபிமன்யுவதத்தினுற் கோபங்கொண்ட அர்ச்சுனன் யுத்தத்தில் ஏழ் அக்ஷௌஹிணிகளைக்கொன்று ஜயத்ரதராஜாவையுங் கொன்றதும், சிறந்த கைகளுள்ள பீமனும் பெருந்தேராளியாகிய ஸாத்யகியும் தர்மராஜாவின் ஆஜ்ஞையினுல் அர்ச்சுனனைத்தேடுவதற்காகத் தேவர்களாலும் கலக்கமுடியாத கௌரவசேனையில் ப்ரவேசித்ததும், ஸம்சப்தகர்களில் மிஞ்சியவர்களையும் யுத்தத்தில் மிச்சமில்லாமற் செய்ததும் சொல்லப்பட்டன. அர்ச்சுனன் சேனையைவிட்டு வெளியேபோய் மகாத்மாக்களும் வீரர்களுமாகிய ஒன்பதுகோடி ஸம்சப்தகர்களை யமன்வீட்டுக்கு அனுப்பினதும், நரகளினுற்சண்டைசெய்கிற திருத

ராஷ்டிரபுத்திரர்களும், யுத்தத்தில் விசித்திரமாகச் சண்டைசெய்யும் நாராயணர்களென்று சொல்லப்பட்ட கோபாலர்களும், அலம்புஸனும், ச்ருதாயுவும், வீரனாகிய ஜலஸந்தனும், ஸௌமதத்தியும், விராடனும், மகாரதனாகிய துருபதனும், கடோத்கசன்முதலான மற்றவர்களும் கொல்லப்பட்டார்களென்பதும் துரோணபர்வத்தில் சொல்லப்பட்டன; துரோணர் யுத்தத்திற் கொல்லப்பட்டபோது, அசுவத்தாமாவும் கோபங்கொண்டவராய் உக்கிரமான நாராயணாஸ்த்ரத்தைப்பிரயோகித்ததும், ஆக்கினேயமென்பதாகிய உத்தமமான ருத்திரமாகாத்மியம் சொல்வதும், வியாஸருடைய வரவும், கிருஷ்ணார்ஜுனர்களின் மகிமையும் சொல்லப்பட்டன; இந் மஹாபாரதத்தில் சிறந்ததாகிய ஏழாவதுபர்வமென்று சொல்லப்படுகிறது. இந்தத் துரோணபர்வத்திற் சூரர்களும் புருஷச்ரேஷ்டர்களுமாகப் பெயர்பெற்ற ராஜாக்கள் பெரும்பான்மையும் மரணமடைந்தனர். இந்தத் துரோணபர்வத்தில் நூற்றெழுபது அத்தியாயங்களென்றும் எண்ணாயிரத்துத்தொள்ளாயிரத்தொன்பது சுலோகங்களென்றும் தத்வஜ்ஞானியாகிய வியாஸ மகரிஷியினால் நன்றாகநினைத்துக் கணக்கிடப்பட்டன.

இதன்மேல், மிக அற்புதமான கர்ணபர்வம் சொல்லப்பட்டது. இதில் புத்திசாலியான சல்லியனை ஸாரதியாக நியமித்ததும், புராதன சரித்திரமாயுள்ள திரிபுரஸம்ஹாரமும், யுத்தப்பிரயாணத்தில் கர்ணனுக்கும் சல்லியனுக்கும் நடந்த க்ரூரமான ஸம்வாதமும், தூஷணமடங்கிய [1]ஹம்ஸகாகீயம் என்னும் கதையும், [2]பாண்டியன், தண்டஸேனன், தண்டன் இம்மூவரையும் மகாத்மாவான அசுவத்தாமாவதஞ்செய்ததும், தர்மராஜாவாகிய யுதிஷ்டிரரும் கர்ணனும் இரண்டுதேராளிகளாகச் சண்டைசெய்தபோது வில்லாளிகள் யாவரும் பார்த்திருக்கையில் கர்ணனால் யுதிஷ்டிரருக்குப் பிராணஸந்தேஹமுண்டாக்கப்பட்டதும், யுதிஷ்டிரருக்கும் அர்ஜுனனுக்கும் பரஸ்பரம் கோபமுண்டானதும், அந்தச்சமயத்தில் கிருஷ்ணன் அர்ஜுனனை ஸமாதானப்படுத்தியதும், பீமஸேனன் பிரதிஜ்ஞைசெய்து துச்சாஸனன் மார்பைப்பிளந்து யுத்தத்தில் ரத்தத்தைக்குடித்ததும், கர்ணனும் அர்ஜுனனும் இரண்டுதேராளிகளாகச் செய்தசண்டையில் மகாரதனாகிய கர்ணனை அர்ஜுனன் கொன்றதும் சொல்லப்பட்டன. பாரதம் தெரிந்தவர்கள் இதை எட்டாவதுபர்வமென்பர். இந்தப்பர்வத்தில் அத்தியாயங்கள் அறுபத்தொன்பதென்றும், சுலோகங்கள் நாலாயிரத்துத்தொள்ளாயிரத்துமுப்பத்துநான்கென்றும் சொல்லப்பட்டன.

---

1 அன்னங்களுக்கும் காக்கைகளுக்கும் நடந்தது.

2 கர்ணபர்வத்திலுள்ள பிழைதிருத்தத்தைப்பார்த்து இங்கே திருத்திக்கொள்க.

இதன்பின், விசித்திரமானவிஷயம் அடங்கிய சல்லியபர்வம் சொல்லப்பட்டது. இதில் ஸேனையில் தலைவர்கள் எல்லாரும் இறந்த போது சல்லியன் சேனைபதியானதும், கௌரவகுமாரர்களுடைய விருத்தாந்தமும், சல்லியனுக்குஅபிஷேகம்செய்ததும், பிறகு பாகம் பாகமாகப் பிரிந்துசெய்த யுத்தங்களும், கௌரவர்களுள் முக்கிய மானவர்களுடைய நாசமும், மகாத்துமாவாகிய தர்மராஜா சல்லியனை வதஞ்செய்ததும், ஸஹதேவன் யுத்தத்திற் சகுனியை வதஞ்செய் ததும், ஸைனியம் பெரும்பாலும் அடிபட்டுக் கொஞ்சமாக மிஞ்சி யிருக்கையில் துரியோதனன் மடுவிற்புகுந்து ஜலத்தை ஸ்தம்பனஞ் செய்து அங்கேயிருந்ததும், அவனுடைய விருத்தாந்தத்தை வேடர் கள் பீமனுக்குச்சொல்ல, அதனாலே பத்திமானாகிய தர்மராஜா தூஷி த்துச்சொன்ன சொற்களினால் ரோஷங்கொண்டு திருதராஷ்டிரபுத் திரன் மடுவிலிருந்து எழுந்துவந்து பீமனோடு கதாயுத்தம் செய்த தும், யுத்தஸமயத்தில் பலராமருடைய வரவும், ஸரஸ்வதிமுதலிய தீர்த்தங்களுடைய புண்ணியத்தன்மையைச் சொன்னதும், கடுமை யான கதாயுத்தமும், யுத்தத்திற் பீமஸேனன் பயங்கரமான வேக முள்ள கதையினால் பலாத்காரமாக ராஜாவாகிய துரியோதனனுடைய தொடைகளை முறித்ததும் சொல்லப்பட்டன. ஆச்சரியமும் அநேக விஷயங்களடங்கியதுமாகிய இஃது ஒன்பதாவதுபர்வமாகக் குறிக்கப் பட்டது. இந்தப்பர்வத்தில் அநேகவிருத்தாந்தங்கள் அடங்கிய ஐம் பத்தொன்பது அத்தியாயங்கள் எண்ணப்பட்டன. இவற்றிலுள்ள சுலோகங்களின் ஸங்கியையைச்சொல்லுகிறேன்; கௌரவர்களின் கீர்த்தியைவிருத்திசெய்கிற மகரிஷியினால் மூவாயிரத்திருநூற்றிரு பதுசுலோகங்கள் செய்யப்பட்டன.

இதன்பின், கொடுமையான ஸௌப்திகபர்வம் சொல்லப்போ கிறேன். தொடைமுறிந்துபோய் ரத்தத்தினால் நனைக்கப்பட்டு யுத்த களத்தின் முன்னிடத்தில் விழுந்த அவமானத்தைத்தாங்காத துரி யோதனராஜனைப் பாண்டவர்கள் விட்டுப்போனபிறகு, சாயங்காலத் தில் கிருதவர்மா, கிருபர், அசுவத்தாமா இம்மூன்று ரதிகர்களும் வந்து கண்டனரென்பதும், அவர்களுள் உறுதியான கோபமுள்ள மகாரதராகிய அசுவத்தாமா, 'திருஷ்டத்யும்னன்முதலான பாஞ் சாலராஜர்கள் யாவரையும் பாண்டவர்களையும் அவர்களின் மந்திரி களையும் கொல்லாமற் கவசத்தைக் கழற்றேன்' என்று பிரதிஞ்ஞை செய்து அதனை ராஜாவுக்குச்சொல்ல அம்மூன்றுரதர்களும்போய், சூரியாஸ்தமனகாலத்தில் ஒரு பெரியவனத்தையடைந்தனரென்ப

தும், பிறகு அங்கே ஒருபெரிய ஆலமரத்தின்கீழே இருந்தனரென்பதும், பிறகு இராத்திரியில் ஒரு கோட்டானுற் பலகாக்கைகள் ஹிம்ஸிக்கப்பட்டதைக்கண்டு அசுவத்தாமா தமதுபிதாவினுடைய வதத்தை நினைத்துக் கோபத்தினுல் ஆவேசங்கொண்டு, பாஞ்சாலர்கள் நித்திரைசெய்யும்போது வதஞ்செய்ய நிச்சயித்தாரென்பதும், கூடாரத்தின்வாயிலிற சென்று அங்கேபார்க்கக்கூடாத பயங்கரஉருவத்தோடு ஆகாயத்தைமறைத்துநிற்கின்றராக்ஷஸனே அவர்கண்டாரென்பதும், அவ்னுல் தம்முடைய அஸ்திரங்கள் தடுக்கப்பட்டதைக்கண்டு, அசுவத்தாமா, துரிதமாக முக்கண்ணனராகிய ருத்திரனை ஆராதனஞ்செய்து கிருதவர்மாவோடும் கிருபரோடும்சேர்ந்து, இராத்திரியிற கவலையில்லாமல தூங்கிக்கொண்டிருந்த திருஷ்டத்யும்னன்முதலிய பாஞ்சாலர்களையும் திரௌபதியின் புத்திரர்களெல்லாரையும் பரிஜனங்களையும் கொன்றுரென்பதும், அந்தப்பாண்டவர்கள் ஐவரும் பெரியவில்லாளியான ஸாத்யகியும் கிருஷ்ணனுடையபலத்தை ஆச்ரயித்ததினுல்விடுபட்டனரென்பதும், மற்றவர்கள் மரணமடைந்தனரென்பதும், அசுவத்தாமா தூங்கிக்கொண்டிருந்த பாஞ்சாலர்களைக்கொன்றதைத்திருஷ்டத்யும்னனுடையஸாரதி பாண்டவர்களுக்குத்தெரிவித்தானென்பதும், திரௌபதியானவள் புத்திரசோகத்தாலும் பிதாஸஹோதரன் இவர்களுடைய வதத்தினுலும் துக்கமுற்றவளாகிச் சாப்பிடுவதில்லையென்று நிச்சயஞ்செய்துகொண்டு தன்பர்த்தாக்கள் சமீபத்தில [1]உட்கார்ந்தாளென்பதும், பயங்கரமான பராக்கிரமமுள்ள பீமன், திரௌபதியின்சொல்லைக்கேட்டு அவளுக்குப் பிரியத்தைச் செய்யக்கருதி கதாயுதத்தையெடுத்துக்கொண்டு மிககோபத்துடன் தனகுருபுத்திரராகிய அசுவத்தாமாவைத் துரத்தினனென்பதும், பீமஸேனனிடம் பயந்த அசுவத்தாமா தெய்வயினுல மதுகொடுக்கப்பட்டு கோபத்தினுல், [2] 'அபாண்டவாய' என்று சொல்லி, அஸ்திரத்தை விடுத்தாரென்பதும், கிருஷ்ணபகவான் அவருடைய அந்தச்சொல்லைத் தடுத்து, 'இப்படியாவதில்லை' என்று சொன்னுரென்பதும், அர்ச்சுனன் அந்த அஸ்திரத்தைத் தன் அஸ்திரத்தினுலே அடக்கினுனென்பதும், அப்போது பாபசித்தமுள்ள அசுவத்தாமாவினுடைய துரோகபுத்தியைக் கண்டு அவருக்கு வியாஸர்முதலியவர்களால் சாபங்கள்கொடுக்கப்பட்டனவென்பதும், மகாரதராகிய அசுவத்தாமாவினுடைய தலையிலுள்ள ரத்தினத்தைக்கவர்ந்து ஜயத்தினுல பிரகாசிக்கின்ற பாண்ட

1 'தலைவிழ்த்தாக்களை [illegible] நந்ததா ' என்பது பழையஉரை.

2 பாண்டுவச்சதகா [illegible] இலைராமதபோக தக்காக.

வர்கள் மகிழ்ச்சியுடன் திரௌபதிக்குக் கொடுத்தனரென்பதுமாகிய விஷயங்களடங்கிய இது, பத்தாவது ஸௌப்திகபர்வமென்று சொல்லப்படுகிறது. இந்தப்பர்வத்தில் மகாத்மாவும் பிரம்மநிஷ்டருமான வியாஸராற்பதினெட்டு அத்தியாயங்களும் எண்ணூற்றெழுபதுசுலோகங்களும் சொல்லப்பட்டன. சிறந்த பிரபாவத்தைத் தெரிவிக்கின்ற ஸௌப்திகம், ஐஷீகம் இவ்விரண்டுபர்வங்களும் ஒன்றுசேர்ந்தவை.

இதற்குமேல், சோகம் உண்டாவதைப்பற்றிய ஸ்திரீபர்வம்: அதில் புத்திரசோகத்தினால மிகுந்த தாபங்கொண்டவனும் அறிவே கண்ணாகவுடையவனுமான அந்தத்திருதராஷ்டிரமகாராஜன், கிருஷ்ணனாற்கொண்டுவரப்பட்ட திடமான இரும்புப்பதுமையைப் பீமஸேனனைக் கொல்லுகிற எண்ணத்துடன் முறித்துவிட்டதும், புத்திமானாகிய திருதராஷ்டிரன் வியஸனத்தினால அவ்வாறு சொதிப்புற்றபோது, விதுரர் மோக்ஷஞானத்திற்குக் காரணமாகிய நியாயங்களினால் புத்தியினாலே ஸம்ஸாரத்தை ஒழித்துவிடுவதையே ஸமாதானமாகச் சொன்னதும், வ்யஸனத்தினாலவருத்தமுற்றதிருதராஷ்டிரன் அந்தப்புரஸ்திரீகளுடன் கௌரவர்களுடைய போர்க்களத்துக்குப் போனதும், வீரபத்தினிகள் மிகுந்தவ்யஸனத்துடன் புலம்பினதும், காந்தாரிக்கும் திருதராஷ்டிரனுக்கும் கோபாவேசம் வந்ததும், அவர்கள் மூர்ச்சித்ததும், சூரர்களும் யுத்தத்தில் புறங்காட்டாதவர்களுமாகிய புத்திரர்களும் ஸஹோதரர்களும் தந்தைகளும் போரில் அடிபட்டிருந்ததைக் க்ஷத்திரியஸ்திரீகள் கண்டதும், 'புத்திரர்களும் பௌத்திரர்களும் வதம்பண்ணப்பட்டதனால் துயரமடைந்த காந்தாரிக்குக் கிருஷ்ணபகவான் கோபத்தைச் சமனம் செய்ததும், தர்மிஷ்டர்கள் எல்லாரிலும் சிறந்தவரும் சிறந்தபுத்திமானுமாகிய தர்மராஜா ராஜாக்களுடைய அந்தச் சரீரங்களைச் சாஸ்திரப்படி தகனஞ்செய்வித்ததும், ராஜாக்களுக்கு ஜலதர்ப்பணஞ்செய்ய ஆரம்பித்தபோது குந்தி தனக்கு ரஹஸ்யமாகப் பிறந்த புத்திரனான கர்ணனுக்கும் ஜலதர்ப்பணஞ் செய்யச்சொன்னதும் இந்தப் பர்வத்தில் வியாஸமகரிஷியினால் சொல்லப்பட்டன. இது பதினோராவது பர்வம். வியஸனத்துக்கும் துக்கத்துக்கும் காரணமானது; ஸாதுஜனங்களுக்கு மனத்தளர்ச்சியும் கண்ணீரும் உண்டாகும்படி செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பர்வத்தில் இருபத்தேழு அத்தியாயங்கள் சொல்லப்பட்டன; எழுநூற்றெழுபத்தைந்து சுலோகங்களென்று எண்ணப்பட்டன. இவ்வாறு பாரதகதையானது சிறந்தஞானமுள்ள வ்யாஸரால் சொல்லப்பட்டது.

இதன்பின்பு, புத்தியை விருத்தி செய்யதக்க சாந்திபர்வம்: அதில் பிதிர்க்களையும் சகோதரர்களையும் புத்திரர்களையும் உறவினர்களையும் மாதுலர்களையும் கொல்வித்து, தருமராஜாவாகிய யுதிஷ்டிரர் வெறுப்புற்றதும், பீஷ்மர் சரதல்பத்திலிருந்து சொன்னதர்மங்களும், நல்லஞானம்பெற விரும்புகின்ற அரசர்கள் அறியவேண்டியதர்மங்களும், காலத்தினாலும் நிமித்தங்களினாலும் ஏற்படும் ஆபத்தர்மங்களும் சொல்லப்பட்டன. அவற்றைச் செவ்வையாக அறிந்தபின் ஒரு புருஷன் தெளிவாக எல்லாவற்றையும் அறிந்தவனாவான்; அற்புதமான மோக்ஷதருமங்களும் மிகவிரிவாகச் சொல்லப்பட்டன. ஞானவான்களாகிய ஜனங்களுக்குப் பிரியமாயுள்ள இந்தச் சாந்திபர்வம் பன்னிரண்டாவது பர்வமாகச் சொல்லப்பட்டது. தபோதனர்களே! இதில் அத்தியாயங்கள் முந்நூற்றிருபத்தொன்பதும் சுலோகங்கள் பதினாலாயிரத்தெழுநூற்று முப்பத்திரண்டும் உள்ளன.

இதற்குமேல், உத்தமமாகிய அநுசாஸனபர்வம்: கௌரவராஜாவான யுதிஷ்டிரர் கங்காபுத்திரராகிய பீஷ்மரிடம் தர்மத்தின் நிச்சயத்தைக் கேட்டபின், கவலைநீங்கி ஸ்வஸ்தரானாரென்பதும், தருமத்தையும் அர்த்தத்தையும் பற்றிய நடைகள்யாவும், பலவகையான தானங்களின் பலன்களும், தானம் வாங்குவதற்குரிய சிறந்தபாத்திரங்களும், தானம்செய்வதற்கு முக்கியமான முறையும், ஆசாரவிதிகளும், ஸத்தியத்தின் முக்கியமான பிரயோஜனமும், பசுக்கள் பிராமணர்கள் இவர்களுடைய பெரிய மகிமையும், தேசகாலங்களுக்குத் தக்க தர்மரஹஸ்யமும் இதில் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த அநுசாஸனபர்வம் வெகு அதிகமான விஷயங்களடங்கியது; உத்தமமானது; பீஷ்மர் ஸ்வர்க்கமடைந்ததும் இதிலேயே சொல்லப்பட்டது; இது பதின்மூன்றாவதுபர்வம்; தர்மத்தினுடைய நிச்சயத்தைத் தெரிவிப்பது; இதில் நூற்றுநாற்பத்தாறு அத்தியாயங்கள் உள்ளன; சுலோகங்கள் எண்ணாயிரம் என்று கணக்கிட்டுச் சொல்லப்பட்டன.

அதன்பின், ஆசுவமேதிகம் என்னும் பதினான்காவது பர்வம். மிகச் சிறந்த[1] ஸம்வர்த்தமருத்தீயமென்னும் உபாக்கியானமும், ஸ்வர்ணநிதியைத் தர்மராஜர் அடைந்ததும், பரீக்ஷித்துடைய ஜனனமும், அசுவத்தாமா பிரயோகித்த அஸ்திரத்தின் ஜ்வாலையினால் தகிக்கப்பட்ட பரீக்ஷித்துக் கிருஷ்ணனால் திரும்பவும் பிழைத்ததும், ஸஞ்சாரத்திற்காக விடப்பட்ட குதிரையைப் பின்தொடர்கின்ற

1 ஸம்வர்த்தரிஷியையும் மருத்தராஜனையும் பற்றியது.

அர்ச்சுனன் அங்கங்கே பொறுமையுள்ள ராஜகுமாரர்களோடுயுத்தஞ் செய்ததும், தனஞ்சயன் தனக்குச் சித்திராங்கதையிடம்பிறந்தபுத்திரனை பப்ருவாகனனால் யுத்தத்தில் பிராண ஸந்தேகமடைந்ததும், [1]சுதர்சனமென்கிறசரித்திரமும், விஷ்ணுதர்மமும், அசுவமேதமென்னும் மகாயஜ்ஞத்திற் கீரிப்பிள்ளையின் கதையும்சொல்லப்பட்டன. இவ்விதமாக இந்த ஆசுவமேதிகமென்னும் பர்வம் பெரிய அத்புதமானது; இதில் அத்யாயங்கள் நூற்றுமூன்று; சுலோகங்கள் மூவாயிரத்து முந்நூற்றிருபது.

அதன்பின், ஆச்ரமவாஸமென்ற பதினைந்தாவது பர்வம் சொல்லப்பட்டது. காந்தாரியுடன் திருதராஷ்டிரராஜனும் விதுரரும்இராச்சியத்தைவிட்டுத் தபோவனம் போனதும், திருதராஷ்டிரன் புறப்பட்டதைக்கண்டு பதிவ்ரதையான குந்தியும் புத்திரராஜ்யத்தை விட்டுப் பெரியவர்களுக்குப் பணிவிடை செய்வதற்காகப்பின்சென்றதும், யுத்தத்தில்அடிபட்டுப் பரலோகம்போன வீரர்களாகிய புத்திரர்களும் பௌத்திரர்களும் மற்றஅரசர்களும் திரும்பிவந்ததை வியாஸ மஹரிஷியினுடைய அனுக்கிரகத்தினால் திருதராஷ்டிரன் பார்த்ததும், அந்தச் சிறந்த ஆச்சரியத்தைக் கண்டபிறகு துக்கத்தைவிட்டு மனைவியுடன் மேலான தவப்பயனை அடைந்ததும், விதுரர் தவஞ் செய்து நற்கதியடைந்ததும், வித்துவானும் ஜிதேந்திரியனும் கவல்கணபுத்திரனுமான ஸஞ்சயனும் மந்திரிகளுடன் நலகதியடைந்ததும், தர்மராஜராகிய யுதிஷ்டிரர் நாரதரைக்கண்டதும், நாரதரிடத்திலிருந்து யாதவர்களுக்குப் பெரிய நாசம்வருவதைக் கேட்டதும் சொல்லப்பட்டிருக்கின்றன; இந்த ஆச்ரமவாஸமென்று பெயருள்ள பெரிய ஆச்சரியமான பர்வம்; இந்தப் பர்வத்திலுள்ள அத்தியாயங்கள் நாற்பத்திரண்டு; சுலோகங்கள் ஆயிரத்தைந்நூற்றாறு.

இதன்பிறகு, கடோரமான மௌஸலபர்வமென்று அறியும் அந்தப் புருஷச்ரேஷ்டர்களான யாதவர்கள் ஆயுதங்களினால் யுத்தத்தில் அடிபட்டதும், அவர்கள் பிராம்மண சாபத்தினால அழிக்கப்பட்டு மதுபானததால மயக்கங்கொண்டு விதியினால் தூண்டப்பட்டவர்களாய்க் கடற்கரையிற சவட்டைக்கோரை உருவங்கொண்ட வச்சிராயுதங்களினால ஒருவரை ஒருவர் கொன்றதும், எல்லாரையும் அழித்தபிறகு அந்த ராமகிருஷ்ணர்கள் இருவரும், எல்லாவற்றையும் அழிப்பதும் தாண்டக்கூடாததுமாகிய காலம் தங்களுக்கும் நேர்ந்

[1] மிருகதர்சனமென்று சிலபுஸ்தகங்களிலும், மணிதர்சனமென்று சில புஸ்தகங்களிலும் பாடம்.

தனைத் தப்பித்துக்கொள்ளாமலிருந்ததும், புருஷஸ்ரேஷ்டனை அர்ஜுனன் யாதவர்களில்லாமற்போன துவாரகைக்குப்போய்ப் பார்த்து வ்யஸனத்தையும் மிகுந்த சோர்வையும் அடைந்ததும், அவன் புருஷஸ்ரேஷ்டரும் தன் மாதுலருமான வஸுதேவருக்குப் பிரேதகாரியம் செய்தபிறகு பானஞ்செய்த இடத்தில் யாதவவீரர்களுடைய பெரிய அழிவைக் கண்டதும், மகாத்துமாக்களாகிய ராமகிருஷ்ணர்களுக்கும் முக்கியமானவர்தொடங்கி வரிசையாக மற்ற யாதவர்களுக்கும் தேகஸம்ஸ்காரம் செய்ததும், பிறகு துவாரகையிலிருந்து கிழவர்களும் குழந்தைகளுமாகிய ஜனங்களை அழைத்துக்கொண்டுபோகையில், கஷ்டமான ஆபத்து நேர்ந்தபோது காண்டீவம் தோல்வியடைந்ததையும் உயர்ந்த அஸ்திரங்களெல்லாம்தோன்றாமற்போனதையும் யாதவஸ்திரீகள் கவரப்பட்டதையும் பராக்கிரமம் நிலையில்லாமற்போனதையுங் கண்டு வருத்தமடைந்து, வியாஸருபதேசத்தினால் தெளிவிக்கப்பட்டு, தர்மராஜரிடம் போய் இராச்சியத்தியாகம் செய்யும்படிசொன்னதும் இந்தப் பர்வத்திற் சொல்லப்பட்டன. இவ்வாறு மௌஸலமென்னும் பதினாறாவது பர்வம் சொல்லப்பட்டது. இதில் அத்தியாயங்கள் எட்டு; சுலோகங்கள் முந்நூற்றிருபது.

அதற்குமேல், பதினேழாவது மகாப்பிரஸ்தானிகபர்வம்: புருஷஸ்ரேஷ்டர்களான பாண்டவர்கள் இராச்சியத்தைவிட்டுத் திரௌபதிதேவியுடன் மகாப்பிரஸ்தானம் போனதும், அப்போது அவர்கள் லௌஹித்யமென்னும் செங்கடலையடைந்து அக்கினியைக் கண்டதும், அவ்விடத்தில அக்கினியினால் ஆஜ்ஞாபிக்கப்பட்ட அர்ஜுனன் மகாத்துமாவாகிய அந்த [1]அக்கினியைப் பூஜித்துத் தேவலோகத்துள்ளதும் உத்தமமுமாகிய அந்தக்காண்டீவமென்னும்வில்லைக்கொடுத்துவிட்டதும், யுதிஷ்டிரர் ஸஹோதரர்களும் திரௌபதியும் கீழே விழுந்தமைத் தெரிந்துகொண்டு அவர்கள் யாரையும் திரும்பிப்பாராமல் விட்டுச்சென்றதும் இதிற் சொல்லப்பட்டன. இது பதினேழாவதாகிய மகாப்பிரஸ்தானிகபர்வமென்று சொல்லப்பட்டது. இதில் அத்தியாயங்கள் மூன்று; சுலோகங்கள் [2]முந்நூற்றிருபது.

அதன்மேல், ஸ்வர்க்கபர்வம்: அது தேவலோகஸம்பந்தமானது. மனுஷ்யர்களுக்கு உரியதன்று; மிகவும் அற்புதமான பிரஜ்ஞையுள்ள தர்மராஜாவானவர் தயையினால் தம்முடன் வந்த நாயின்றி ஸ்வர்க்கத்தி

1 அக்கினியின் சொல்லினால், வருணன் வில்லாகிய காண்டீவத்தை ஜலத்திற் போட்டுவிட்டான் என்பது கதை.

2 நூற்றிருபத்துமூன்று சுலோகங்களென்பது பழையவுரை.

விருந்துவந்ததேவரதத்தின்மேல் ஏறவிரும்பவில்லையென்பதும், மகாத்மாவான தர்மராஜா அவ்வாறு சலிக்காமல் தர்மத்தில் நின்றதைக் கண்டு தர்மதேவதை நாயுருவத்தைவிட்டுத் தர்மராஜாவை ஸ்வர்க்கத்துக்கு அழைத்துக்கொண்டுபோனதும், அவருக்குத் தேவதூதன் ஒருவியாஜத்தை முன்னிட்டு நரகத்தையும் அதிற் பிராணிகள்படும் பெருந்துயரங்களையும் காண்பித்ததும், தம்சொல்லிற் கட்டுப்பட்டிருந்த தம் சகோதரர்கள் அந்த நரகத்திலிருந்து கூவுகின்ற அழுகுரல்களைஅந்தத் தர்மாத்துமாவானயுதிஷ்டிரர்கேட்டதும், தர்மதேவதையும் இந்திரனும் தெரிவித்தபடி தர்மபுத்திரர் ஆகாசகங்கையில் ஸ்நானஞ்செய்து மனுஷ்யதேகத்தைவிட்டுத் தம் தருமத்தினாற்கிடைத்த ஸ்வர்க்கவாஸத்தையடைந்து இந்திராதிகளான ஸமஸ்ததேவக்கூட்டங்களினாலும் பூஜிக்கப்பட்டு அவர்களுடன் ஆனந்தமாக இருந்ததும் அடங்கியது. இந்தப்பர்வம் சிறந்த ஞானமுள்ள வியாஸமகரிஷியினால் பதினெட்டாவது பர்வமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. தபோதனர்களே! இந்தப்பர்வத்தில், ஐந்து அத்தியாயங்கள் உள்ளன; சுலோகங்கள் இருநூற்றொன்பது. இப்படி இவையெல்லாம் சேர்ந்து பதினெட்டுப் பர்வங்களாகின்றன.

கிலங்களில் ஹரிவம்சமும் பவிஷ்யபர்வமும் சொல்லப்பட்டன. கிலங்களுக்குள் ஹரிவம்சத்திற் பன்னீராயிரம் சுலோகங்கள் மகரிஷியினாற் கணக்கிடப்பட்டன.

இவ்வாறு பாரதத்திலுள்ள பர்வங்களின் ஸங்கிரகமுழுதும் சொல்லப்பட்டது; பதினெட்டு அக்ஷௌஹிணிகள் சண்டைக்காகச் சேர்ந்தன. மிகவும் பயங்கரமான அந்தயுத்தம், பதினெட்டுத்தினங்கள்நடந்தது. எந்தப்பிராமணன் [1]அங்கங்களும் உபநிஷத்துக்களும் சேர்ந்த நான்குவேதங்களையும் அறிந்திருந்தும் இந்த இதிஹாஸத்தைமட்டும் அறியாமல் இருப்பானோ அவன் நல்ல வித்துவானாகமாட்டான். இது ராஜநீதிசாஸ்திரமாகவும், உயர்ந்த தர்மஸாஸ்திரமாகவும், காமசாஸ்திரமாகவும் அளவற்றஞானம் நிரம்பிய வியாஸராற் சொல்லப்பட்டது; ஆண்குயில் கூவுதலைக்கேட்டபிறகு கடுமையான காக்கைக்குரல் எப்படி வேண்டியிராதோ அப்படியே இந்த இதிஹாஸத்தைக்கேட்டபிறகு மற்றொன்றும் கேட்கப் பிரியப்படாது. உலகங்

1 வேதாங்கங்கள் ஆறு; அவையாவன:—1. உச்சரிப்பின் இலக்கணமாகிய சிக்ஷையும், 2. பதஇலக்கணமாகிய வியாகரணமும், 3. வ்ருத்த இலக்கணமாகிய சந்தஸும், 4. பதங்களின் பகுதிவிகுதியைத்தெரிவிப்பதாகிய நிருக்தமும், 5. க்ரஹசஞ்சார சாஸ்திரமாகிய ஜோதிஷமும், 6. கர்மங்களை விதிக்கிற சாஸ்த்ரமாகிய கல்பமுமாம்.

களின் [1] மூன்றுபிரிவுகளும் பஞ்சபூதங்களிலிருந்து உண்டாவது போற் கவிகளுக்குக் கற்பனைகள் இந்த உத்தமமான இதிஹாஸத்திலிருந்து உண்டாகின்றன. அந்தணரே! [2]நான்குவிதமான பிராணிகளும் ஆகாயத்தினிடம்இருப்பதுபோலப் புராணங்களெல்லாம் இந்த இதிஹாஸம்சொல்லும்விஷயங்களிலேதான் பிரவிர்த்திக்கவேண்டும். இந்திரியங்களெல்லாவற்றிற்கும் வெவ்வேறு விருத்திகளுள்ள மனம் எப்படிக்காரணமோ அப்படியே தொழில்களின் சிறப்புக்களெல்லாவற்றிக்கும் இந்த இதிஹாஸம் ஆதாரமானது. ஆகாரம்இல்லாமல் எப்படித் தேகம்நிற்பதில்லையோ அப்படியே இவ்விதிஹாஸத்திற் சேராமல் கதை பூமியிலில்லை. அபிவிருத்தியை அடையவிரும்புகின்ற வேலைக்கார்ர்களால் நல்லகுலத்திற்பிறந்தபிரபு அடுக்கப்படுவதுபோல இந்த இதிஹாஸம் எல்லாக்கவிசிரேஷ்டர்களாலும் ஆச்ரயிக்கப்படுகின்றது. யோக்கியனாகிய க்ருஹஸ்தனுக்கு மற்றமூன்று ஆச்ரமத்தவரும் எப்படிமேற்படமாட்டார்களோ அப்படியே கவிகள் இக்காவியத்திற்கு மேற்போவதில் ஸமர்த்தராகமாட்டார்கள். நீங்களெல்லாரும் விடாமுயற்சியுள்ளவர்களாகவும் தர்மத்தில் எண்ணமுள்ளவர்களாகவும் இருக்கக்கடவீர்கள். தர்மம் ஒன்றுதான் பரலோகம் போகிறவனுக்குப் பந்துவாகிறது; பொருள்களும் பெண்களும் திறமையுள்ளவர்களால் வசப்படுத்தப்பட்டிருந்தபோதிலும் ஒற்றுமையையும் நிலைமையையும் அடைவதில்லை. த்வைபாயனரிஷி திருவாய்மலர்ந்தருளியதும், அளவிடக்கூடாததும், கர்மத்தைக் கொடுப்பதும், மனத்தைச்சுத்தப்படுத்துவதும், பாபத்தைப்போக்குவதும், ச்ரேயஸைக்கொடுப்பதுமாகிய பாரதத்தை எவன்படிக்கிறானோ அவனுக்குப் [3]புண்ணியதீர்த்த ஸ்நானங்கள் செய்வதினால் என்ன பயன்? பிராமணன் இந்திரியங்கள் வழியாகப் பிரவிர்த்தித்து ஒரு பகலிற்செய்யும்பாபத்தைச் சாயங்காலம் மஹாபாரதம்படிப்பதனால் விட்டுவிடுகிறான். தேகத்தினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் இராத்திரியிற்செய்யும் பாபத்தைக் காலையில் மஹாபாரதம்படிப்பத

1 ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்பது பழையவுரை; ஸ்வர்க்கம், மத்தியம், பாதாளம் என்றும் கொள்ளலாம்.

2 1. ஜராயுஜம் - கர்ப்பாசயத்திற் பிறக்கும் மனிதப்பிராணி முதலியவை; 2. அண்டஜம் - முட்டையிலிருந்து பிறக்கும் பக்ஷி முதலியவை; 3. ஸ்வேதஜம் - உஷ்ணத்திலுண்டாகும் கொசு முதலியவை; 3. உத்பிஜ்ஜம் - பூமியைப் பிளந்து கிளம்பும் புல் முதலியவை.

3 'புஷ்கராணி' என்பது பாடம்; யாகாதிகளினால் செய்யும் பட்டாபிஷேகம் என்பது பழையவுரை. புஷ்கரமென்று ஒருபுண்ணியதீர்த்தமும் உண்டு.

ஞல் விட்டுவிடுகிறான். வேதங்களும் ஸ்மிருதியான சாஸ்திரங்களும் தெரிந்த பிராமணனுக்குப் பொன்கட்டின கொம்புகளோடுகூடிய நூறுபசுக்களைத் தானம்செய்பவனுக்கும் புண்ணியமான பாரதகதையை நித்தியம் கேட்பவனுக்கும் பலன் ஒன்றுதான். மிகச்சிறந்ததும், விசேஷமானவிஷயங்களுள்ளதும், அவசியம் அறியவேண்டியதுமாகிய அந்தப்பெரிய இதிஹாஸத்தை இந்தப் பர்வஸங்கிரகத்திஞல் முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். ஏனென்ருல், பெருங்கடல் தெப்பத்திஞல் இறங்குவதற்கு எளிதாவதுபோல, இந்த இதிஹாஸமானது பர்வஸங்கிரகத்திஞல் மனிதர்களுக்குத் தெரிந்துகொள்ள எளிதாகின்றது.

பர்வஸங்க்ரகபர்வம் முற்றிற்று.

---

## மூன்ருவது அத்தியாயம்.

## பௌஷ்யபர்வம்.



(உதங்கரிஷி ஜனமேஜயராஜாவை ஸர்ப்பயாகஞ்செய்யத் தூண்டியது.)

பரிக்ஷித்தின் புத்திரராகிய ஜனமேஜயர் ஸஹோதரர்களுடன் கூடக் குருக்ஷேத்திரத்தில் நீண்டகாலம் செய்யத்தக்க ஸத்திரமென்னும் யாகத்தைச்செய்தார். அவருக்குச் சுருதசேனன், உக்கிரஸேனன், பீமஸேனனென்ன மூன்று ஸஹோதரர்கள் இருந்தார்கள். அவர்கள் அந்த ஸத்திரயாகத்தைச் செய்துகொண்டிருக்கையில் ஸரமையின் பிள்ளையாகிய நாய் (ஸாரமேயன்) வந்தது. அது ஜனமேஜயருடைய ஸஹோதரர்களால் அடிக்கப்பட்டு அதிகமாக ஊளையிட்டுக்கொண்டு தன் தாயின் ஸமீபத்திற்குப்போயிற்று. அந்த அதிகமாக ஊளையிடுவதைப் பார்த்து, அதன் தாய், 'நீ ஏன் அழுகிருய்? யாரால் அடிக்கப்பட்டாய்?' என்று கேட்டது. இவ்வாறு கேட்கப்பட்ட அந்த நாயானது, 'ஜனமேஜயனுடைய ஸஹோதரர்களால் அடிக்கப்பட்டேன்' என்று தாய்க்கு மறுமொழிசொல்லிற்று. அதற்குத்தாய், 'நீ அடிக்கப்பட்டிருப்பதனல் நிச்சயமாக அங்கே பிழைசெய்திருக்கவேண்டும்' என்று மறுபடியும் சொல்லிற்று. நாய் தாயைநோக்கி, 'நான் சிறிதும் பிழைசெய்யவில்லை; ஹோமத்திரவியங்களைப் பார்க்கவுமில்லை; நாவினல் தீண்டவுமில்லை' என்று திரும்பவும் சொல்ல, அதைக்கேட்டு அதன் தாயாகிய ஸரமை பிள்ளையின் துக்கத்திஞல்

வருத்தங்கொண்டு ஜனமேஜயர் தம்ஸகோதரர்களுடன் தீர்க்கஸத்திரஞ்செய்துகொண்டிருந்த இடத்திற்கு வந்து கோபத்துடன் ஜனமேஜயரைப்பார்த்து, 'இந்த என் பிள்ளை சிறிதும் பிழைசெய்யவில்லை; ஹவிஸுகளைப் பார்க்கவுமில்லை; நாவினால் தீண்டவுமில்லை; எதற்காக அஃது அடிக்கப்பட்டது?' என்று கேட்டது. அவர்கள் ஒன்றும்பேசவில்லை. அந்தஸரமை, அவர்களைப்பார்த்து, 'இந்த என் பிள்ளை பிழைசெய்யாமலிருக்கையில் அதை அடித்ததனால் உங்களுக்குத்தெரியாமலே ஓர் ஆபத்து வரப்போகிறது' என்றுசொல்லிற்று.

தேவலோகத்து நாயாகிய ஸரமையினால் இவ்வாறுசொல்லப்பட்ட ஜனமேஜயர் மிக்கபரபரப்பும் துக்கமுமுள்ளவரானார். அவர் அந்த ஸத்திரயாகம்முடிந்தபிறகு ஹஸ்தினபுரம்போய், 'என்னுடைய பாபமென்னும் பேயை ஓட்டத்தகுந்தவர்யார்?' என்றுதகுந்த புரோஹிதரைத்தேடுவதில் பெருமுயற்சி செய்தார். அந்தப்பரிக்ஷித்தின்புத்திரராகிய ஜனமேஜயர் ஒருநாள் வேட்டைக்குப்போகையில் தமது தேசத்தைச்சேர்ந்த ஓரிடத்தில் ஆச்ரமத்தைப்பார்த்தார். அதில் ச்ருதச்ரவஸென்று பெயருள்ள ஒருரிஷி இருந்தார்; அவருக்குத் தவஞ்செய்துகொண்டிருப்பவராகிய ஸோமச்ரவஸ் என்னும் புத்திரர் ஒருவர் இருந்தார்; பரிக்ஷித்தின்புத்திரராகிய ஜனமேஜயமகாராஜர், அந்த ச்ருதச்ரவஸின் புத்திரரிடம்போய் அவரைத் தமக்குப் புரோஹிதராயிருக்கும்படி வேண்டினார். அந்த ஜனமேஜயர் அந்த ச்ருதச்ரவஸ் என்னும் ரிஷியை நமஸ்கரித்து, 'பகவானே! இந்த உமதுபுத்திரர் எனக்குப் புரோஹிதராகவிருக்கவேண்டும்' என்று சொன்னார். இப்படிச்சொல்லப்பட்ட அந்தச்ருதச்ரவஸ் என்னும்ரிஷி, ஜனமேஜயரைப்பார்த்து, 'ஓ! ஜனமேஜய! இந்த என் புத்திரன் பெண்நாகத்தினிடம்பிறந்தவன்; சிறந்ததபஸுள்ளவன்; வேதாத்தியயனம் பூர்ணமாகச்செய்தவன்; என்னுடையதபஸின் சக்தியும் நிரம்பினவன்; என்னுடைய ரேதஸைக்குடித்த அந்தப்பெண்நாகத்தின் கர்ப்பத்திற்பிறந்தவன்; இவன் மகாதேவராகிய பரமசிவனால் ஏவப்பட்ட பூதத்தைத்தவிர மற்ற உன்னுடைய பாபப்பேய்கள் எல்லாவற்றையும் ஓட்டுவதற்குச் சக்தியுள்ளவன். ஆனால், இவனுக்கு ரகஸ்யமானதொருவிரதமுண்டு; அதாவது இவனிடம் எந்தப்ராமணனாவது ஒருபிரயோஜனத்தை விரும்புவானானால், அவனுக்கு இவன் அதைக்கொடுத்துவிடுவான்; இப்படி உனக்கு இஷ்டமானால் அப்போது இவனை அழைத்துக்கொண்டுபோ' என்று சொன்னார். அவரால் [illegible]

யே ஆகுக' என்று அவருக்கு மறுமொழிகூறி, அந்தப்புரோஹிதரை அழைத்துக்கொண்டு திரும்பிவந்து, 'இவர் என்னால் புரோஹிதராக வரிக்கப்பட்டவர்; இவர் எதைச்சொல்லுவாரோ அதை நீங்கள் சங்கிக்காமற் செய்யவேண்டும்' என்று ஸஹோதரர்களுக்குச்சொன்னார். இவ்வாறு அவராற்சொல்லப்பட்ட அவர்ஸஹோதரர்களும் அப்படியேசெய்தனர். அவர் அவ்வாறு தம்ஸஹோதரர்களுக்குக் கட்டளையிட்டுத் தக்ஷசிலாநகரத்தை எதிர்த்துச்சென்று அந்தத்தேசத்தைத் தம் ஸ்வாதீனப்படுத்துக்கொண்டார்.

இந்தச்சமயத்தில், [1]அயோதரென்று பெயர்பெற்ற தௌம்யரென்னும் ஒருருரிஷி இருந்தார்; அவருக்கு உபமன்யு, ஆருணி, பைதன் என்று மூன்றுசிஷ்யர்கள் இருந்தார்கள். அந்தரிஷி பாஞ்சாலதேசத்தவனான ஆருணியென்னும் சிஷ்யனைநோக்கி, 'போ; கழனியின் மடையைக்கட்டு' என்றுசொல்லி அனுப்பினார். உபாத்தியாயரால் கட்டளையிடப்பட்ட அந்தப்பாஞ்சாலதேசத்தவனாகிய ஆருணி அங்கேபோய் அந்தக்கழனியின் மடையைக்கட்டுவதற்கு முடியாமல் கஷ்டமடைந்து, 'இருக்கட்டும்; இவ்வாறுசெய்வேன்' என்று ஓர் உபாயத்தைக்கண்டறிந்தான்; அவன் அந்தக்கழனியின்மடையில் படுத்துக்கொண்டான்; அவன் அவ்வாறு படுத்தபோது அந்தத்தண்ணீர் போகாமல் நின்றுவிட்டது. பிறகு, ஒருகால் உபாத்தியாயராகிய அயோததௌம்யர் மற்றுமுண்டு சிஷ்யர்களையும்நோக்கி, 'பாஞ்சாலதேசத்தவனான ஆருணி எங்கேபோனான்?' என்று கேட்டார். அவர்கள், 'பகவானே! 'போ; கழனியின் மடையைக்கட்டு' என்றுசொல்லி உம்மாலேயே அனுப்பப்பட்டான்' என்று அவருக்கு மறுமொழிகூறினர். அவர்கள் இவ்வாறு சொன்னபின், அவர் அந்தச்சிஷ்யர்களைப் பார்த்து, 'ஆனால் அவன் போனவிடத்துக்கு நாமெல்லாரும்போவோம்' என்றுசொல்லி அவனை அழைப்பதற்காக அங்கேசென்று, 'ஓ! பாஞ்சாலதேசத்து ஆருணியே! எங்கிருக்கிறாய்? குழந்தாய்! வா' என்றுகூவினார். அந்த ஆருணி உபாத்தியாயருடைய அந்தச்சொல்லைக்கேட்டு அந்தக் கழனி மடையினின்றும் உடனேயெழுந்து அந்த உபாத்தியாயரிடம்வந்துசேர்ந்து, 'நான் இங்கே இருக்கிறேன்; இந்தக்கழனிமடையில் வெளியேபோகும்ஜலம் கட்டமுடியாமலிருந்ததைக் கட்டுவதற்குப் படுத்திருந்தேன்; பகவானுடையசப்தத்

---

1 இரும்புபோன்ற தந்தங்களையுடையவர்; அயோதர் என்றும் பாடம். அயோதா - அயோதா (= இரும்பு சம்பந்தமுள்ளவர்) முதலானவை: அயோதர் என்பதே மேலவை யுக்தமான பொருளுடையது.

தைக்கேட்டுத்தான் உடனே கழனிமடையைப் பிளந்துகொண்டு உங்களிடம்வந்தேன். ஆதலால், பகவானாகிய உங்களை நமஸ்கரிக்கிறேன். நான் செய்யவேண்டியகாரியத்தை நீங்கள் கட்டளையிட வேண்டும்' என்று உபாத்தியாயரைப்பார்த்துச்சொன்னான். இவ்வாறு சொல்லப்பட்ட அந்த உபாத்தியாயர், 'நீ கழனியின்மடையை உடைத்துக்கொண்டு எழுந்ததனால் [1] உத்தாலகனென்று பெயருள்ளவனாக ஆவாய்' என்றும், 'என்சொல்லை நிறைவேற்றினதனால் நீ ச்ரேயஸை அடைவாய்; எல்லா வேதங்களும் எல்லாத்தர்மசாஸ்திரங்களும் உனக்குப் பிரகாசிக்கும்' என்றும் அனுக்கிரகித்தார். இவ்வாறு உபாத்தியாயராற்சொல்லப்பட்ட அந்த ஆருணி தனக்கு வேண்டிய இடத்திற்குச் சென்றான்.

பிறகு, அந்த ஆயோததௌம்யரென்னும் உபாத்தியாயர் தம்முடைய மற்றொருசிஷ்யனான உபமன்யுவைப்பார்த்து, 'குழந்தாய்! உபமன்யுவே! பசுக்களை மேய்' என்று அனுப்பினார். அவன் உபாத்தியாயர் சொல்லியபடி பசுக்களை ரக்ஷித்தான். அவன் பகலில் பசுக்களைக்காப்பாற்றிச் சாயங்காலத்தில் குருவின் வீடுவந்து அவர்முன் னின்று நமஸ்காரஞ்செய்துகொண்டிருந்தான். அவன் புஷ்டியாயிருப்பதைக்கண்டு, உபாத்தியாயர், 'குழந்தாய்! உபமன்யுவே! எதைக்கொண்டு நீ ஜீவனஞ்செய்கிறாய்? மிகவும் புஷ்டியாயிருக்கிறாயே' என்றுகேட்க, 'ஐயா! பிக்ஷையினால் ஜீவனஞ்செய்கிறேன்' என்று அவன் உபாத்தியாயருக்கு மறுமொழிசொன்னான். உபாத்தியாயர் திரும்பவும் அவனைப்பார்த்து, 'பிக்ஷையை எனக்குக்காண்பியாமல் உபயோகிக்கவேண்டாம்' என்று கூறினார். அவன், 'அப்படியேயாகுக' என்றுசொல்லிப் பிக்ஷையெடுத்துவந்து அந்த உபாத்தியாயருக்குக் காண்பித்தான். அந்த உபாத்தியாயர் அவனிடமிருந்து பிக்ஷைமுழுவதையும்வாங்கிக்கொள்ள அவன், ஸரியென்றுசொல்லி மறுபடியும் பசுக்களை மேய்த்துக்கொண்டிருந்தான். பகற்காலத்திலேமேய்த்து ஸாயங்காலத்தில் குருவின்வீட்டுக்குவந்து குருவின்முன்னின்று நமஸ்கரித்துக்கொண்டிருந்தான். உபாத்தியாயர் அப்படிச்செய்தும் அவன் புஷ்டியாகவேயிருத்தலைக்கண்டு, 'குழந்தாய்! உபமன்யு! உன்னுடைய பிக்ஷைமுழுதும் மிச்சமின்றி நான் எடுத்துக்கொள்ளுகிறேன்; எதனால் இப்போது ஜீவனஞ்செய்கிறாய்?' என்று அவனைக்கேட்டார்; இப்படிக்கேட்கப்பட்ட அவன், 'பகவானாகிய உங்களுக்கு முதற்பிக்ஷையைக்கொடுத்துவிட்டு இரண்

[1] ப்ரகாசவான்

டாமுறை பிக்ஷையெடுக்கிறேன்; அதனால் ஜீவனஞ்செய்கிறேன்' என்று அவருக்கு மறுமொழிசொன்னான். உபாத்தியாயர் திரும்பவும், 'இஃது ஒழுங்கான குருகுலவாஸமன்று; பிக்ஷையெடுத்து ஜீவிக்கிற மற்றவர்களுடைய ஜீவனத்துக்கு விரோதஞ்செய்கிறாய்; இவ்வாறுநடப்பதனால் நீ ஆசைக்காரனாகிறாய்' என்றுசொன்னார். அவன் ஸரியென்றுசொல்லிப்பசுக்களை ரக்ஷித்துவந்தான்; திரும்பவும் ரக்ஷித்துக்கொண்டு உபாத்தியாயர் க்ருஹம்வந்து உபாத்யாயர் முன்னின்று நமஸ்காரஞ்செய்தான். உபாத்தியாயர் அப்படிச்செய்தும் அவன் புஷ்டியாகவேயிருந்ததைக்கண்டு, மறுபடியும், 'குழந்தாய்! உபமன்யூ! நான் உன்னுடையபிக்ஷைமுழுவதையும் எடுத்துக்கொள்ளுகிறேன்; வேறுபிக்ஷையும் நீ எடுக்கிறதில்லை; நீ மிகவும் புஷ்டியாயிருக்கிறாய்; எதனால் ஜீவனஞ்செய்கிறாய்?' என்று கேட்டார். இப்படிக்கேட்கப்பட்ட அவன், உபாத்தியாயரைப்பார்த்து, 'ஐயா! இந்தப் பசுக்களின்பாலால் ஜீவனஞ்செய்கிறேன்' என்று உத்தரம் சொன்னான். அவனுக்கு உபாத்தியாயர், 'இது ஸரியன்று; பாலை உபயோகிப்பதற்கு நான் உனக்கு அனுமதிகொடுக்கவில்லை' என்று சொல்ல, அவன், 'அப்படியே ஆகட்டும்' என்றுபிரதிஜ்ஞைசெய்து பசுக்களை ரக்ஷித்து, திரும்பவும் உபாத்தியாயர் வீடுவந்து அவர்முன்னின்று நமஸ்கரித்துவந்தான்; உபாத்தியாயர் அவன் புஷ்டியாகவே இருப்பதைக்கண்டு, 'அப்பா! உபமன்யூ! நீ பிக்ஷையும் சாப்பிடுகிறதில்லை; வேறுபிக்ஷையும் எடுக்கிறதில்லை; பாலையும் குடிக்கிறதில்லை; மிகப் புஷ்டியாகவேயிருக்கிறாய்; எதனால் இப்போது ஜீவனஞ்செய்கிறாய்?' என்றுகேட்டார். இவ்வாறு கேட்கப்பட்டஅவன், 'ஐயா! இந்தக்கன்றுகள் தாய்களின்முலைகுடித்து வாய்க்குவெளியில் ஒழுக்கின நுரையைக்குடிக்கிறேன்' என்று உபாத்தியாயருக்கு உத்தரம் சொன்னான். உபாத்தியாயர், 'இந்தக்கன்றுகள் நல்லகுணமுள்ளவை; உன்னிடத்தில் தயையினால் வெகுமிகுதியான நுரையை ஒழுக்குகின்றன; ஆகையால், இவ்வாறு நடக்கின்ற நீ இந்தக்கன்றுகளின் ஆகாரத்திற்கு இடையூறுசெய்கிறாய்; நுரையைக்கூட நீ குடிக்கலாகாது' என்று அவனுக்கு மறுபடியும்சொன்னார். அவன், 'அப்படியே' என்று பிரதிஜ்ஞைசெய்து ஆகாரமில்லாமல் மறுபடியும் பசுக்களைமேய்த்தான். அவ்வாறு மறுக்கப்பட்டதனால் அவன் பிக்ஷையும் சாப்பிடவில்லை;மற்றொருபிக்ஷையுமெடுக்கவில்லை; பாலுங்குடிக்கவில்லை; நுரையும்உபயோகிக்கவில்லை. அவன் ஒருகால் பசியினால்பீடிக்கப்பட்டுக் காட்டில் எருக்கிலைகளைத்தின்கிறான், உப்பும் கைப்பும்கார

மும் முருமம் ஜீரணகாலத்தில் உஷ்ணத்தை உண்டுபண்ணுதலுமுள்ளனவாகிய அந்த எருக்கிலைகளைத் தின்றதனால் கண்கெட்டு அவன் குருடனானான். பிறகு, கண்தெரியாதவனாகவே ஸஞ்சரித்துக்கொண்டிருந்ததனால் ஒருகிணற்றில்விழுந்தான். ஸூர்யன் அஸ்தகிரியையடைந்தும் அவன் வீடுவராமலிருக்கக்கண்டு உபாத்தியாயர், 'உபமன்யு வரவில்லையே?' என்று சிஷ்யர்களைக்கேட்க, [1]அவர்கள், 'அவன் பசுக்களை ரக்ஷிப்பதற்கு வனம்போனான்' என்றுகூறினார்கள். 'நான் உபமன்யுவை எல்லாவிஷயங்களிலும்மறுத்துவிட்டேன்; அதனால், அவன் கோபித்துக்கொண்டுதான் வெகுநேரமாகியும் வராமலிருக்கிறான்; ஆதலால், அவனைத்தேடவேண்டும்' என்று உபாத்தியாயர் சொல்லி, அந்தச்சிஷ்யர்களுடன் வனம்சென்று அவனை அழைப்பதற்காக, 'அப்பா! உபமன்யுவே! எங்கேயிருக்கிறாய்! குழந்தாய்! வா' என்று சப்தம்செய்தார். அவன் உபாத்தியாயர் கூப்பிட்டசொல்லைக் கேட்டு, 'இதோ நான் இந்தக்கிணற்றில் விழுந்திருக்கிறேன்' என்று உரக்க மறுமொழிசொன்னான். உபாத்தியாயர், 'நீ இந்தக் கிணற்றில் எப்படிவிழுந்தாய்?' என்று அவனைத் திரும்பவும் கேட்டார்; அவன், 'எருக்கிலைகளை உண்டதனால் குருடனானேன்; அதனால் நடக்கும்போது கிணற்றில்விழுந்தேன்' என்று அவருக்கு மறுமொழிகூறினான். உபாத்தியாயர், 'நீ அச்வினீதேவர்களைத் துதிசெய்; அவர்கள் தேவவைத்தியர்கள்; உன்னைக் கண்ணுள்ளவனாகச் செய்வார்கள்' என்று அவனுக்கு மறுமொழிசொன்னார். உபாத்தியாயரால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த உபமன்யு அச்வினீதேவர்களை [2]மந்திரரூபங்களான வாக்கியங்களினால் துதிக்கத் தொடங்கினான்.

[3] (உபமன்யு அசுவினீதேவர்களைத் துதித்தல்.)

முன்செல்லுகிறவர்களும், முன்பிறந்தவர்களும், பலவர்ணங்களான கிரணங்களுள்ளவர்களும், தவத்தால் அழிவில்லாதவர்களும், தேவலோகத்திலுண்டானவர்களும், சிறந்த [4]சிறகுகளுள்ளவர்க

1 உத்தரதேச பாடத்திலுள்ளது.

2 அச்வினீதேவர்களைப்பற்றிய ஸ்தோத்திரங்களான, 'உபா, உ, நூசுO' என்பது முதலிய மந்திரங்களின் அர்த்தம் இந்த ஸ்லோகங்களிலிருப்பது பற்றி மந்திரரூபங்களான வாக்கியம் என்றது. (ரிக்வேதம், அ - வது அஷ்டகம், கூ - வது அத்யாயம், முதல்வர்க்கம்.)

3 இது வித்தியாப்பிரகரணமாதலின் அச்வினீதேவர்களை முன்னிட்டுப் பரப்பிரம்மத்தையே துதிக்கின்றது என்பது பழையவுரை.

4 விரைவாகச் செல்லுகிறவர்கள்.

ளும், ரஜோகுணமில்லாதவர்களும், எல்லா உலகங்களுக்குமேல்தங் கள்விமானங்களைச் செலுத்துகிறவர்களுமாகிய உங்களிருவர்களையும் வாக்கினால் துதிக்கிறேன். பொன்மயமான பறவைகள் போன்றவர் களும், ஆபத்பந்துக்களும், பொய்யாதவர்களும், பார்ப்பதற்கு அழ கானவர்களும், அழகான மூக்குள்ளவர்களும், விசேஷஜயமுள்ளவர் களும், [1]சூரியனுடைய தேஜஸினால் வெளுப்பும் கறுப்புமாகிய பகலை யும் இரவையும்நெய்கிற சிறந்த தறிகாரர்களுமான உங்களைத் துதிக்கி றேன். [2]அச்வினீதேவர்கள் கருடனைப்போன்ற பலமுள்ள ஒரு செந்நாயினுடைய பலத்தினால் பிடிக்கப்பட்ட [3]விச்சுளியென்னும் பறவையைச் சுகமாயிருக்கும்படி விடுவித்தனர். அவ்வளவு நல்ல செய்கையுள்ளவர்களை என் துன்பத்தை நிவிர்த்திசெய்ய நமஸ்கரித் தேன்; அவர்கள் சிறிதுமில்லாமலிருந்த சிவந்த சூரியகிரணங்களை உதயமாகச்செய்தார்கள். [4]முந்நூற்றறுபது கறவைப்பசுக்கள் ஒரு கன்றையீன்று அதற்குப் பால்கொடுத்து வளர்க்கின்றன; அந்தப் பசுக்கள் [5]பல கொட்டில்களும் ஒரு கறக்கிறவனும் உள்ளவையாகச் செய்யப்பட்டன; அந்த அச்வினீதேவர்கள் மேற்சொன்ன பசுக் களிடம் சிலாக்கியமான தர்மத்தைக் கறக்கின்றனர். [6]எழுநூற் றிருபது ஆரக்கால்கள் வட்டைகளிற் கோக்கப்பட்டு ஒருகுடத்திற் சேர்ந்திருக்கின்றன. அந்தச் சக்கரமானது சுற்றளவில்லாமலும் அழிவில்லாமலும் சுற்றுகின்றது; மாயையானது புருஷரூபர்களான அச்வினீதேவர்களை ஆச்ரயித்திருக்கிறது. மற்றொருசக்கரம் [8]பன் னிரண்டு ஆரக்கால்களுடனும் ஆறு [9]நாபிகளுடனும் ஒரே அச்சுட னும் [10]அமிர்தத்திற்கு ஆதாரமாக நடக்கின்றது. எல்லாத்தேவர் களும் யஜ்ஞத்தைப்பற்றி அதை ஆச்ரயித்திருக்கின்றனர். அந்த அச்வினீதேவர்கள் துன்பப்படுகின்ற என்னை விடுவிக்கக்கடவர்.

1 அச்வினீதேவர்கள் சூரியனுக்குமுன் செல்லுகிறவர்கள்.

2 கருங்குஷ்டத்தைநீக்கித் தேகத்தில் நல்லநிறம் கொடுப்பவர் என்பர்

3 இஃது ஒரு ரிக்கின் கதை. [வர்.

4 முந்நூற்றறுபது தினங்கள் ஒரு வருஷத்தைச்செய்கின்றன.

5 பலதேசங்கள் கொட்டில்கள்; சூரியனே கறக்கிறவன்; ஒளி பால்.

6 ௭௨௦ நாட்களில் சேர்ந்த இரவுபகல்கள் ௭௨௦-ம் வருஷமென்கிற ஒரு நாபியைச்சேர்ந்த ஆரக்கால்களென்று சொல்லப்பட்டன.

7 காலச்சக்கரத்திற்கு முடிவில்லையென்பது பொருள்.

8 பன்னிரண்டுமாதங்களும் ஆறுருதுக்களும் ஒரு வருஷமுமாகிய காலசக்கரமானது பிராணிகளின் உணவுக்குக் காரணமாக நடக்கின்றது என்பது பொருள்.

9 அச்சுக்கோக்கின்ற துவாரங்கள். [பொருள்.

10 'ரிதஸ்ய' என்றபாடத்திற்குக் கர்மபலத்திற்கு ஆதாரம் என்பது

அஸ்வினீதேவர்கள் அமிர்தமயமாகிய சந்திரனை வட்டமாக வியாபிக்கின்றனர்; தாஸர்களைக் காப்பாற்றுகின்றனர்; அஸ்வினீதேவர்கள் பலத்திற்குக்காரணமாகிய [1]மழையைக்கொடுக்கமலையைவிட்டுப்புறப்பட்டுப் பூமியில் ஸஞ்சரிக்கின்றவர்கள். அஸ்வினீதேவர்களே! நீங்கள் எல்லார்முன்னிலையிலும் [2]பத்துத்திசைகளையும் உண்டாக்குகின்றீர்கள்; அந்தத்திசைகள் நங்கள்தலைமேல்ஸூர்யரதத்தின்ஸஞ்சாரத்தை ஸமமாக அடைகின்றன; அந்தத்திசைகளிற்செல்லும் ஸூர்யரதத்தை ரிஷிகளும் தேவர்களும்பின்செல்லுகின்றனர்; மனிதர்கள் பூமியில் ஸஞ்சரிக்கின்றனர். நீங்கள் எல்லாவகை வர்ணங்களோடுங்கூடிய கிரணங்களை விரிக்கின்றீர்கள். அவை எல்லா உலகங்களையும் வியாபிக்கின்றன. அந்தக்கிரணங்களை அநுஸரித்துத்தேவர்களும் ஸஞ்சரிக்கின்றனர். அஸத்தியமில்லாமையால் நாஸத்தியரென்னப்பட்ட அஸ்வினீதேவர்களாகிய அந்த உங்களையும் நீங்கள் அணிந்த தாமரைமாலையையும் நான் பூஜிக்கிறேன். [3]மோக்ஷத்தைக் கொடுப்பவர்களும் கருமபலன்களை விருத்திசெய்கிறவர்களுமான அந்த அச்வினீதேவதைகளன்றி மற்றத்தேவர்கள் தங்கள் ஸ்தானத்திலிருந்து பலன்களைக் கொடுப்பதில்லை. [4]ஒருசிறுவனும் சிறுமியும் முகத்தாலே கர்ப்பத்தைத் தரித்தனர்; ஓர் உயிருமில்லாதவள் இதை நுனிக்காலால் பிரஸவித்தாள்; பிறந்த சிசு உடனே தாயைச் சாப்பிடுகின்றது; அந்த அஸ்வினீதேவர்களாகிய நீங்கள் எல்லாரும் ஜீவிக்கும்படி ஸூர்யகிரணங்களை வியாபிக்கச் செய்கின்றீர்கள். குணங்களைக்கொண்டு உங்களைத்துதிக்க நான் சக்தனல்லேன்; கண்போய் வழிதெரியாமல் இந்த ஆழமானகிணற்றில் நான் விழுந்திருக்கிறேன்; ரக்ஷிக்கத்திறமையுள்ள உங்களை அடைக்கலம்புகுகின்றேன்' என்று துதித்தான்.

---

1 ஸூர்யன் மேகங்களுக்குள் புகுந்து தன்கிரணங்களால் மலையில் மழை பெய்கிறது. [மில்லை.

2 ஸூர்யரப்ஸ்மி இல்லாவிட்டால் திக்குகளில்லை; ஸூர்யஸஞ்சாரமு

3 மோக்ஷத்துக்கும் புண்ணியங்களுக்கும் காரணமான யாகம்முதலிய தேவப்ரீதிகர்மங்களுக்கும் ஸூர்யனே மார்க்கமென்பது பொருள்.

4 ஸூர்யரப்ஸ்மி பூமியிலுள்ள ஜலத்தை எடுத்து ஆகாசம் கர்ப்பமாகிறது: ஆகாசம் உயிரில்லாதது; அதன் நுனியாகிய வாயுமண்டலத்திலிருந்து மழையுருக்கிறபடியால் காலால் பிரஸவிக்கிறது என்றது; கர்ப்பமாகிய மழை ஜலமானது பூமியை அடைந்து தாயைச்சாப்பிடுகின்றது. அஸ்வினீதேவர்கள் ஸூர்யரப்ஸ்மியில் சேர்ந்திருப்பதினால் மழைக்குக் காரணமென்னப்பட்டனர்.

இவ்வாறு அவனால் துதிக்கப்பட்ட அச்வினீதேவர்கள் வந்து அவனைப்பார்த்து, 'நாங்கள் உன்மேல் அன்புள்ளவர்களாயிருக்கிறோம்; இதோ உனக்குப் பக்ஷணமிருக்கிறது; இதைச்சாப்பிடு' என்று சொன்னார்கள். அவர்கள் இவ்வாறு சொல்ல, அவன், 'மஹிமைபொருந்திய நீங்கள் சொன்னது வீணாகாது. ஆனால், நான் குருவுக்குத் தெரிவியாமல் இந்தப்பக்ஷணத்தைச் சாப்பிடமாட்டேன்' என்று மறுமொழிசொன்னான். பிறகு, அஸ்வினீதேவர்கள் அவனைப்பார்த்து, 'முன்னால் உன் உபாத்தியாயர் இவ்வாறே துதிசெய்தபோது, அவருக்கு நாங்கள் பக்ஷணம்கொடுத்தோம்; அவர் அதைத் தம் குருவுக்குத் தெரிவியாமலே சாப்பிட்டார்; உன் உபாத்தியாயர் செய்ததுபோலவே நீயும்செய்' என்றனர். அஸ்வினீதேவர்கள் இவ்வாறு சொன்னபிறகும், 'இந்தவிஷயத்தில் அஸ்வினீதேவர்களாகிய உங்களை மறுபடியும் கேட்டுக்கொள்ளுகிறேன்; நான் குருவுக்குத்தெரிவியாமல் பக்ஷணத்தைச் சாப்பிடமாட்டேன்' என்று உபமன்யு மறுமொழி சொன்னான். 'இந்த உன் குருபக்தியினால் உன்மேல் அன்புறுகிறோம்; உன் உபாத்தியாயருடைய தந்தங்கள் [1]காலாயஸ ஆகவிருக்கின்றன. உனக்கோ பொன்னாகவிருக்கட்டும்; கண்களைப்பெறுவாய்; வித்தையையும் அடைவாய்' என்று அஸ்வினீதேவர்கள் உபமன்யுவுக்குச் சொன்னார்கள்.

அஸ்வினீதேவர்கள் இவ்விதம்சொன்னவுடன், உபமன்யு கண்களைப்பெற்று உபாத்தியாயரிடம் வந்து அபிவாதனஞ்செய்து நடந்த விஷயத்தைச் சொன்னான். உபாத்தியாயர் அவன்மேல அன்புகூர்ந்து, 'அஸ்வினீதேவர்கள் சொன்னபடி உனக்கு விச்வாஸமுண்டாகும்; எல்லாவேதங்களும் எல்லாத் தர்மசாஸ்திரங்களும் பிரகாசிக்கும்' என்றுசொன்னார்; அந்த உபமன்யுவுக்கும் இந்தப் பரீக்ஷைநடந்தது.

பிறகு, அந்த அயோததௌம்யர், வைதனென்ற பெயருள்ளவனை மற்றொரு சிஷ்யனைநோக்கி, 'குழந்தாய்! வைதனே! நீ இந்த என்கிருகத்தில நான் சொல்லுகிறவரையில சிலகாலம் பணிவிடைசெய்துகொண்டிருக்கவேண்டும். உனக்கு நீ விரும்பினவைதமைப் பயன் உண்டாகும்' என்றுசொன்னார். அந்தப்போது அவன், 'அப்படியே ஆகுக' என்றுசொல்லி, நீண்டகாலம் சுச்ருஷைசெய்து கொண்டு குருகுலவாஸஞ்செய்தான். எருதுபோலச் சுமைசுமக்கும்படி குருவினால் எப்போதும் நியமிக்கப்பட்டு வெப்பம், பசி, தாகம்

[1] அயோததௌம்யா என்கிற பெயர் இங்கே பொருந்துமாறு காண்க.

முதலிய கஷ்டங்களைப் பொறுத்துக்கொண்டு எதற்கும் தடைசொல்லாமலிருந்தான். வெகுகாலத்திற்குப்பிறகு அவனிடம் குருவுக்குச் சந்தோஷமுண்டாயிற்று. குருவின்ஸந்தோஷத்தினாலே பைதன் பலனையடைந்து ஸர்வஜ்ஞனானான். இஃது அந்தப்பைதனுக்கு நடந்த பரீக்ஷை; அந்தப்பைதன் உபாத்தியாயராகிய அயோததௌம்யரால விடைகொடுக்கப்பட்டபின் அந்தக்குரு குலவாஸத்தை முடித்துஸமாவர்த்தனம் என்னப்பட்ட பிரமசாரியவிரத ஸமாப்தியைச் செய்துகொண்டு க்ருஹஸ்தாஸ்ரமம் அடைந்தான்.

அந்தப்பைதரென்பவர் க்ருஹஸ்தாஸ்ரமத்திலிருக்கையில், அவருக்கும் மூன்றே சிஷ்யர்கள் இருந்தார்கள். அவர் தம்சிஷ்யர்களைப் பார்த்து வேலைசெய்யென்றாவது குருசுச்ரூஷைசெய்யென்றாவது எதுவும் சொன்னதில்லை. அவர், குருகுலவாஸத்தின் கஷ்டங்களை அறிந்தவராகையால சிஷ்யர்களைக்கஷ்டப்படுத்தக்கருதவில்லை. பிறகு, ஒருகாலத்தில் அந்தப்பைதரென்னும் பிராமணரிடம் ஜனமேஜயன் பௌஷ்யன் என்னும் இரண்டு க்ஷத்திரியர்கள்வந்து அவரை உபாத்தியாயராகவரித்தனர். யாகஞ்செய்விக்கிறகாரியத்திற்காகப்புறப்பட்ட அந்தப்பைதர், உதங்கரென்னும் பெயருள்ள சிஷ்யரைப்பார்த்து, 'அப்பா! நம்முடையகிருகத்தில் எதுவேண்டியிருந்தாலும் அதை நீ குறைவில்லாமற் செய்யவிரும்புகின்றேன்' என்று கட்டளையிட்டுத் தூரதேசம் சென்றார்.

பிறகு, சுச்ரூஷையிலிருக்கும் உதங்கர் குருவின் நியமனத்தை நடத்திக்கொண்டு குருகுலவாஸம் செய்துகொண்டிருந்தார். அவர் அங்கேவஸிக்கும்போது உபாத்தியாயராயுள்ளவர்களுடைய ஸ்திரீகள்சேர்ந்து அவரை அழைத்து, 'உன்னுடையஉபாத்தியாயருடைய பத்னி ருதுஸ்நானஞ் செய்திருக்கிறாள். உபாத்தியாயரும் ஊரிலில்லை. இவளுடைய இந்த ருதுஸ்நானகாலம் வீண்போகாமலிருக்கும்படி நீ செய்யவேண்டும்; இவள் வியஸனப்படுகிறாள்' என்று சொன்னார்கள். இவ்வாறுசொன்ன அந்த ஸ்திரீகளைப்பார்த்து, உதங்கர், 'நான் ஸ்திரீகளுடையசொல்லினாலே இந்த அகாரியத்தைச் செய்யேன். உபாத்தியாயர் அகாரியமாயினும் செய்யென்று எனக்குக் கட்டளையிடவில்லை' என்று மறுமொழிசொன்னார். பிறகு, வெகுகாலம் சென்றபின் அவருடைய உபாத்தியாயர் அந்தப்பிரயாணத்தைமுடித்து வீடுவந்துசேர்ந்தார். அவர் அவருடைய உத்தநடை முழுவதையும் தெரிந்துகொண்டு ஸந்தோஷமடைந்தார். அவரைப்பார்த்து, 'குழந்தாய்! உதங்கனே! உனக்கு என்னவிருப

பத்தை நான் செய்யக்கடவேன்' என்றும், 'நீ தர்மத்தைவிடாமல் எனக்குச் சுச்ரூஷைசெய்ததனால் நம்மிருவருக்கும் அந்யோந்யஸ்நேஹம் வ்ருத்தியாயிற்று; ஆதலால், உனக்கு விடைகொடுக்கிறேன்; விரும்பினவற்றையெல்லாம் பெறுவாய்; போகலாம்' என்றும் சொன்னார்.

இவ்வாறு உபாத்தியாயர்சொல்ல, உதங்கர், 'நான்செய்யவேண்டுமென்று நீங்கள் விரும்புவது யாது? 'ஆசாரியன் ஆசாரியதர்மத்தை விட்டுச்சொன்னாலும் சிஷ்யன் சிஷ்யதர்மத்தைவிட்டுக்கேட்டாலும் அவ்விருவரில் தன்தர்மத்தைவிட்டஒருவன் த்வேஷத்தையும்அடைவான்; இறந்தும்போவான்' என்று சாஸ்திரஜ்ஞர் சொல்லுகின்றனரே. ஆதலால், உங்களால் விடைகொடுக்கப்பெற்ற நான் குருவேண்டுகிறதனத்தைத் தக்ஷிணைகொடுக்கவிரும்புகின்றேன்' என்று கேட்டார். அவர் இப்படிக்கேட்டதற்கு உபாத்தியாயர், 'அப்பா! உதங்கா! நீ இன்னும் சிலகாலமிரு' என்றார். அந்த உதங்கர் மற்றொருநாள், 'உங்களுக்குவேண்டிய குருதக்ஷிணை நான்கொடுக்கவேண்டும்; நீங்கள் கட்டளையிடுங்கள்' என்றுகேட்டார். உபாத்தியாயர், 'அப்பா! உதங்கா! நீ, 'குருதக்ஷிணை கொடுக்கிறேன்' என்று பலமுறை என்னைக்கேட்கிறாய். அப்படியானால், நீ வீட்டுக்குள்ளே போய் உனது இந்த உபாத்யாயபத்னியிடம், 'நான் என்ன கொடுக்கவேண்டும்?' என்றுகேள்; அவள் என்னசொல்லுகின்றாளோ அதைக்கொடு' என்று அவருக்குச்சொன்னார். இவ்வாறு உபாத்தியாயராற்சொல்லப்பட்ட உதங்கர் உபாத்யாயபத்னியிடம் சென்று, 'அம்மா! உபாத்யாயரால் வீட்டுக்குப்போக விடைகொடுக்கப்பட்டிருக்கிறேன்; உமக்குப்பிரியமான குருதக்ஷிணையைக்கொடுத்து என் கடனைத் தீர்த்துக்கொண்டுபோக விரும்புகிறேன்; ஆதலால், நான் கொடுக்கவேண்டிய குருதக்ஷிணை இன்னதென்று நீர் ஆஜ்ஞாபிக்கவேண்டும்' என்றுகேட்டார். இப்படிக்கேட்டபின், அந்தஉபாத்யாயபத்னியானவள் அந்த உதங்கருக்கு, 'நீ பௌஷ்யனென்னும் ராஜாவினிடஞ்சென்று அந்த ராஜாவின்பத்னி அணிந்துகொண்டிருக்கும் குண்டலங்களைக்கேள்; இன்றைக்கு நான்காவதுநாள், ஒருவிரதம் வரப்போகிறது; அந்தக்குண்டலங்களை அணிந்துகொண்டு அழகாகப் பிராமணர்களுக்குப் பரிமாறவிரும்புகிறேன்; அதற்குள் அவற்றைச் சம்பாதித்துக்கொண்டுவா; இப்படிச் செய்தால்தான் உன்ச்ரமத்தை பயன்படும்; இல்லாவிட்டால் நீ நன்மையை அடையமாட்டாய்' என்று சொன்னாள்.

இப்படி உபாத்யாயபத்தினியினால் உரைக்கப்பட்ட அந்த உதங்கர் புறப்பட்டுப்போகும்போது வழியில் மிகப்பெரியதான ஒரு வ்ருஷபத்தையும் அதன்மேல் ஏறிக்கொண்டிருந்த ஒருபெரிய புருஷனையும் கண்டார். அந்தப்புருஷன் உதங்கரைப்பார்த்து, 'ஓ! உதங்கா! இந்தவ்ருஷபத்தின் இந்தக் கோமயத்தைப் பக்ஷணஞ்செய்' என்று சொன்னான். இவ்விதம் சொன்னதைச்செய்ய உதங்கர் இஷ்டப்படவில்லை. அந்தப்புருஷன் மறுபடியும் உதங்கரைப்பார்த்து, 'உதங்கா! சங்கைப்படாமல் பக்ஷிக்கக்கடவாய்; உன் உபாத்தியாயரும் முன்னே இதைப்பக்ஷித்திருக்கிறார்' என்றான். அந்த உதங்கர் இவ்வாறுசொல்லப்பட்டபிறகு சரியென்றுசொல்லி அப்போது அந்த வ்ருஷபத்தினுடைய மூத்திரத்தையும்கோமயத்தையும்உட்கொண்டு எழுந்தவுடன் [1]அவஸரத்தினால் ஜலத்தை ஆசமனம்பண்ணாமற்புறப்பட்டார். அந்தஉதங்கர் பௌஷ்யனென்னும் க்ஷத்திரியன் இருக்குமிடத்திற்குப்போய் அங்கேவீற்றிருந்த அவனைக்கண்டார். அவனருகிற்சென்று ஆசீர்வாதங்களினால்அவனைப்பெருமைப்படுத்தி, 'யாசிப்பதற்கு, உன்னிடம்வந்திருக்கிறேன்' என்றுசொன்னார். பௌஷ்யன் உதங்கருக்கு வந்தனம்பண்ணி, 'பகவானே! நான் பௌஷ்யனல்லவோ? உங்களுக்கு நான் செய்யத்தக்கதுயாது?' என்றுகேட்க, அவனுக்கு உதங்கர், 'உனது பத்நி அணிந்துகொண்டிருக்கும் குண்டலங்களை என்குருவுக்காக யாசிக்கவந்திருக்கிறேன்; அவற்றை நீ கொடுக்கவேண்டும்' என்றுசொன்னார். பௌஷ்யன், 'அந்தப்புரத்துக்குட்போய் அரசியிடம் யாசிக்கக்கடவீர்' என்றுசொல்ல, அவர் அந்தப்புரத்துக்குள்ளே சென்று பார்த்தபோது ராஜபத்னி அவருக்குக்காணப்படவில்லை. உதங்கர் திரும்பவும் பௌஷ்யனிடம் வந்து, 'நீஎன்னைப் பொய்யாக உபசரிப்பது சரியல்ல; அந்தப்புரத்தில் உனது அரசி இல்லை; எனக்கு அவள் அகப்படவில்லை' என்றுசொன்னார். இப்படி அவர் சொன்னபின் பௌஷ்யன் சற்றுநேரம் ஆலோசித்து உதங்கரைப்பார்த்து, 'நீர் நிச்சயமாக ஆசாரங்குறைந்தவராயிருக்கிறீர்; செவ்வையாகநினைத்துப்பாரும்; அந்தஅரசி ஆசாரங்குறைந்தவனுக்கும் அசுத்தனுக்கும் தோற்றமாட்டாள்; கற்புள்ளவளாதலால் அவளைச் சுத்தமில்லாதவன் காண்பதரிது' என்று சொன்னான். இப்படி அவன்சொன்னதன்மேல் உதங்கர் நினைத்துப்பார்த்து, 'உண்

---

1 வடதேசத்துப்பாடத்தால், ஆசாரத்[illegible] ஆசமனஞ்செய்து புறப்பட்டாரென்று தெரிகின்றது.

ளதுதான்; [1]நான் சாப்பிட்டபிறகு சீக்கிரம் வந்ததனால் ஆசமனஞ் செய்யவில்லை' என்றுசொன்னார். அவருக்குப் பௌஷ்யன், 'எழுந்ததும் சீக்கிரம் வரவேண்டியதற்காக நீர் ஆசமனஞ்செய்யாமற்போனது உமதுதவறு' என்றுசொல்ல, பிறகு உதங்கர் அவனைப்பார்த்து, 'ஆம்' என்று சொல்லிக் கிழக்குமுகமாக உட்கார்ந்து, கை கால் முகங்களைச் செவ்வையாகக் கழுவிக்கொண்டு, நுரையில்லாமலும் காய்ச்சப்படாமலுமிருந்த தீர்த்தம் உள்ளேபோவது மார்புவரையில் உணரப்படும்படி சப்தமில்லாமல் மூன்றுமுறைஆசமனஞ்செய்துஇரண்டுமுறை கண், காது, மூக்குமுதலிய இடங்களை ஜலத்தினால் துடைத்துக்கொண்டு அந்தப்புரத்திற்போனார்; பிறகு, அந்தராஜபத்னியைக்கண்டார். அவளும் உதங்கரைக்கண்டவுடன் எதிர்கொண்டு சென்று நமஸ்காரஞ்செய்து, 'பகவானே! உமதுவரவு நல்வரவு; நான் செய்யவேண்டியதைக் கட்டளையிடவேண்டும்' என்றுசொல்ல, உதங்கர், 'இந்தக்குண்டலங்களை என்குருவுக்காக யாசிக்கிறேன்; இவற்றை நீ கொடுக்கவேண்டும்' என்று அவளைக்கேட்டார். அவள் அவருடைய அந்த நல்ல எண்ணத்தினால் ஸந்தோஷித்து, 'இவர் தானத்துக்குத் தகுந்தபாத்திரர்' என்றும் 'விட்டுவிடக்கூடாதவர்' என்றும் நினைத்து அந்தக்குண்டலங்களைக்கழற்றி அவருக்குக்கொடுத்து, 'நாகராஜாவாகிய தக்ஷகன் இந்தக்குண்டலங்களின்மீதுமிகவிருப்பங்கொண்டிருக்கிறான்; ஜாக்கிரதையுடன் நீர் கொண்டுபோகக்கடவீர்' என்றுசொன்னாள். உதங்கர் இவ்வாறுசொன்ன அரசியைப் பார்த்து, 'நீ விசாரப்படவேண்டாம்; நாகராஜனாகியதக்ஷகன் என்னை வெல்லமாட்டான்' என்று சொன்னார்.

அவர் இவ்வாறு சொல்லி அந்தராஜபத்னியிடம்விடைபெற்றுக்கொண்டு பௌஷ்யனிடம்வந்து, 'ஓ! பௌஷ்யனே! திருப்தியடைந்தேன்' என்று சொல்ல, அவரைப்பார்த்துப் பௌஷ்யன், 'மஹானே! யோக்கியர்கள்கிடைப்பதரிது; நீங்கள் சிறந்த அதிதியாதலால் சிராத்தஞ்செய்யவிரும்புகிறேன்; அவகாசம் உண்டாக்கிக்கொள்ளவேண்டும்' என்றுசொன்னான். அவனுக்கு உதங்கர், 'அவகாசம் செய்துகொண்டவனாகவேயிருக்கிறேன்; உன்சக்திக்குத்தக்கபடி நீ சீக்கிரமாக அன்னத்தை ஸித்தஞ்செய்வதை எதிர்பார்க்கிறேன்' என்றுசொன்னார். பௌஷ்யன் 'ஆகட்டும்' என்றுசொல்லித் தன்

---

1 வடதேசபாடத்தால், 'நான் வருவதற்காக நின்றபடி ஆசமனம் செய்தேன்' என்பது தெரியவருகின்றது.

சக்திக்குத் தகுந்த அன்னத்தைக்கொடுத்து உதங்கருக்குப் போஜனஞ்செய்வித்தான். பிறகு, உதங்கர் அன்னம் ஆறிப்போனதையும் அதில் மயிரிருந்ததையுங் கண்டு, 'இஃது அசுசியாயிருக்கிறது' என்று நினைத்து, 'எனக்கு அசுசியான அன்னத்தைக் கொடுத்ததனால் நீ கண்தெரியாதவனாவாய்' என்று அந்தப்பௌஷ்யனுக்குச் சாபங்கொடுத்தார். 'நீர் குற்றமில்லாத அன்னத்தைத் தூஷித்ததனால் ஸந்ததியில்லாதவராவீர்' என்று பௌஷ்யன் அவருக்குப் பிரதிசாபங்கொடுத்தான். உதங்கர் திரும்பவும், 'நீ அசுசியான அன்னத்தையுங்கொடுத்துப் பிரதிசாபமுங்கொடுப்பது நியாயமன்று; அன்னத்தைக்கண்ணாலே பார்' என்றுசொல்ல, பௌஷ்யன் அந்த அசுசியான அன்னத்தைப்பார்த்து அஃது அசுத்தமாயிருந்ததை நேரில் தெரிந்துகொண்டான். அந்த அன்னம் கூந்தலவிழ்ந்த ஸ்திரீயினால்செய்யப்பட்டதென்றும் அஃது ஆறினதும் மயிருள்ளதுமாக இருப்பதினால் அசுசியாயிருக்கிறதென்றும் தெரிந்துகொண்டு அந்தஉதங்கரிஷியைப் பார்த்து, 'மஹிமைபொருந்தியவரே! தெரியாமல் மயிருள்ளதும்ஆறிப்போனதுமாகிய இந்த அன்னம் கொடுக்கப்பட்டது; ஆகலால், நான் குருடனாகாமலிருக்கவேண்டும்; க்ஷமிக்கும்படி உங்களைவேண்டுகிறேன்' என்று அந்த உதங்கரிஷியிடம்வேண்டிக்கொண்டான். உதங்கர், 'நான்சொல்வது பொய்யாகாது. நீ சிலகாலம் கண்தெரியாமலிருந்து பின் சீக்கிரத்தில் கண்தெரிகிறவனாவாய்' என்றும், 'எனக்கும் நீகொடுத்தசாபம் தொடாமலிருக்கவேண்டும்' என்றும் சொன்னதற்குப் பௌஷ்யன், 'நான் சாபத்தைநிவிருத்திசெய்யமாட்டேன்; எனக்குக்கோபம் இன்னமும் அடங்கவில்லை. பிராமணனுக்கு ஹ்ருதயம் வெண்ணெய்போன்றது; வாக்கில் கூரானமுனையுள்ள கத்தி வைக்கப்பட்டிருக்கிறது. க்ஷத்திரியனுக்கு இவ்விரண்டும் மாறாயிருக்கின்றன. வாக்கு நவநீதம்போன்றதும் உள்ளம் கூர்மையானமுனையுள்ளகத்திபோன்றதுமாக இருக்கின்றன என்பது உமக்குந்தெரியாதா? ஆதலால், என்உள்ளம் கொடியதாதலால் இப்படி நடந்தபின் அந்தச்சாபத்தை நான்மாற்றக்கூடாதவன்; நீர்போகலாம்' என்று சொல்ல, உதங்கர், 'அன்னம் அசுசியாயிருந்ததை நீபார்த்தபின்பு என்னைவேண்டினாய். முதலிலும், 'குற்றமில்லாத அன்னத்தைத்தூஷித்தாயாகையால் ஸந்ததியில்லாமற்போவாய்' என்று நான் சபித்திருக்கிறாய். அன்னத்தில் குற்றமிருந்தபோது இந்தச்சாபம் எனக்கு வாராது; போகவேபோகிறேன்' என்றுசொல்லி அந்தக்குண்டலங்களையெடுத்துக்கொண்டு உதங்கர் புறப்பட்டார்.

அவர் வழியில வஸ்திரமில்லாத ஒரு ஸந்யாஸி அடிக்கடி காணப்
படுவதும் மறைந்துபோவதுமாகத் தொடர்ந்துவருவதைக்கண்டார்.
பிறகு, உதங்கர் அந்தக் குண்டலங்களைப்பூமியில்வைத்துவிட்டு ஜலத்
திற்காகப்போனார். இந்தஸமயத்தில் அந்தஸந்யாஸி விரைவாகக்
கிட்டவந்து அந்தக்குண்டலங்களை எடுத்துக்கொண்டு ஓடினான்.
உதங்கர் அவனைப்பார்த்து ஜலத்தின்காரியங்களை முடித்துக்கொண்டு
சுசியாகவும் நியமமுள்ளவராகவும் தேவர்களுக்கும் குருவுக்கும்
நமஸ்காரஞ்செய்து மிக்கவேகத்தோடு ஸந்யாஸியைப் பின்தொடர்ந்
தார்; அதிகஸமீபமானபோது ஸந்யாஸிரூபங்கொண்ட அந்தத்தக்ஷ
கனை உதங்கர் பிடித்தார். அவன் பிடிபட்டவுடன், அந்த ஸந்யாஸி
ரூபத்தைவிட்டுத் தக்ஷகரூபத்தையெடுத்துக்கொண்டு பூமியில்தெரி
கிற ஒருபெரிய வளைக்குள் விரைவாகப்புகுந்தான்; வளையில்புகுந்து
நாகலோகத்துக்குட்சென்று தன்வீடுசேர்ந்தான். பிறகு, உதங்கர் அந்த
ராஜபத்னிசொன்னதைநினைத்து அந்தத்தக்ஷகன் பின்னேஓடி அவன்
நுழைந்தவளையைத் தடியினால்தோண்டினார்; அவரால்தோண்ட
முடியவில்லை. அவர்கஷ்டப்படுவதை இந்திரன் கண்டு தன்வஜ்
ராயுதத்தை, 'நீ போய் இந்தப்பிராமணனுக்கு உதவிசெய்' என்று
அனுப்பினான். பிறகு, வஜ்ராயுதமானது தடிக்குள்ளே பிரவேசித்து
அந்த வளையைப் பிளந்துவிட்டது. உதங்கர் அந்தவளை வழியாகவே
தக்ஷகனுடன்பிரவேசித்து முடிவில்லாததும், பற்பல விதங்களான
ராஜகிருகங்களும் தனிசர்கிருகங்களும் மேல்மாளிகைகளும் கொடிங்
கைகளும் நூற்றுக்கணக்குக்களாகநிரம்பினதும், விளையாட்டிற்குரிய
ஆச்சரியமான இடங்கள் கணக்கில்லாமல் இருப்பதுமாகிய அந்த
நாகலோகத்தைக்கண்டார். அவர் அந்த நாகங்களை அடியில்வரும்
சுலோகங்களினால் துதித்தார்.

அவற்றின்பொருள்:-'ஐராவதமென்னும் நாகனை ராஜாவாகவுடைய
வரும், யுத்தங்களில் பிரகாசிக்கின்றவரும், காற்றினோடும் மின்னலோ
டுஞ்சேர்ந்து மழைபொழியும் மேகங்களைப்போல சரமாரிபொழிகின்ற
வரும், அழகான பற்பலரூபங்களுள்ளவரும், விசித்திரமான குண்ட
லங்களைத்தரித்தவருமாகிய ஐராவதநாகத்தின் குலத்திலுண்டான
நாகர்கள், ஸ்வர்க்கத்தில் தேவர்கள்பிரகாசிப்பதுபோல் பிரகாசிக்கின்
றனர். கங்கையின்வடகரையில் நாகர்களுடைய ஸ்தானங்கள் அநேக
முண்டு. அங்குள்ள மகாநாகர்களையும் நான் துதிக்கிறேன். ஐராவத
நாகனைத்தவிர வேறெவன் சூரியகிரணம்பரவியசேனையில் ஸஞ்
சரிக்கநினைப்பான். திருதராஷ்டிரநாகம்போகும்போது இருபத்தெண்

ணுயிரத்தெண்ணூறு [1]நாகங்கள் (சூரியன் தேர்க்குதிரைகளுக்குக்) கடிவாளங்களாகச் சமீபமாகவும் தூரமாகவும்போகின்றன. நான் ஐராவதநாகத்தின் மூத்தஸஹோதரர்களுக்கும் நமஸ்காரஞ்செய்கிறேன். முன்னே குருக்ஷேத்திரத்திலும் காண்டவவனத்திலும் வாஸஞ்செய்த தக்ஷகனென்ற நாகராஜாவைக் குண்டலத்திற்காகத் துதிக்கிறேன். தக்ஷகனும் அஸ்வஸேனனுமாகிய இருவரும் எப்போதும் கூடவேயிருந்துகொண்டு குருக்ஷேத்திரத்திலும் இக்ஷுமதி நதிக்கரையிலும் வாஸஞ்செய்கின்றனர். நாகர்களுக்குராஜாவாகவிருந்தவிரும்பிமஹத்யுமானென்னும்தீர்த்தத்தில்வஸித்த தக்ஷகனுடைய கடைசிப்புத்திரனாகிய ஸ்ருதஸேனனென்னும் மஹாத்மாவுக்கு நான் எப்போதும் நமஸ்காரஞ்செய்வேன்' என்று ஸ்தோத்திரஞ்செய்தார். இவ்விதமாக அந்த உதங்கரென்னும்பிரம்மரிஷி நாகசிரேஷ்டர்களைத் துதித்தும் அந்தக்குண்டலங்களைப் பெறுததனால் கவலையுற்றார். இவ்வாறு நாகங்களைத்துதித்தும் குண்டலங்கள் கிடைக்காமலிருந்தபோது நெய்கிறயந்திரத்தில்வஸ்திரத்தையேற்றி நெய்தலுக்குரியகோலால் நெய்கின்ற இரண்டுஸ்திரீகளைக் கண்டார். அந்தவஸ்திரத்தில் கறுப்பும்வெளுப்புமான நூல்களிருந்தன. [2]ஆறுகுமாரர்களாற் சுற்றப்படுவதும் பன்னிரண்டு ஆரக்கால்களுள்ளதுமாகிய ஒரு [3]சக்கரத்தையும் ஒருபுருஷனையும் ஓர் அழகானகுதிரையையும் கண்டார். அவர் அவர்களெல்லாரையும் மந்திரார்த்தங்களடங்கிய அடியில்வரும் சுலோகங்களினால் ஸ்துதிசெய்தார். '[4]இருபத்துநான்கு கணுக்களுள்ளதும் எப்போதும்நடப்பதுமாகிய இந்த அழிவில்லாத சக்கரத்தின்நடுவில் [5]மூந்நூற்றறுபது ஆரக்கால்கள் போடப்பட்டிருக்கின்றன. அந்தச்சக்கரத்தை ஆறுகுமாரர்கள் சுற்றுகின்றனர். உலகெங்கும் வியாபித்தஉருவமுள்ள [6]இரண்டு சிறுபெண்கள் [7]கறுப்பும் வெளுப்புமான நூல்களை எப்போதும் திருப்பிக்கொண்டும் பிராணிகளையும் உலகங்களையும் எப்போதும் மாற்றிக்கொண்டும் இவ் [8]வஸ்திரத்தைநெய்கின்றனர். வஜ்ராயுதத்தை வஹிக்கிறவனும், உலகத்தை

---

1 சூரியகதி ஏற்றத்தாழ்வில்லாமல் எப்போதுமிருப்பதற்குக் காரணமாயுள்ள சக்திகளையே கடிவாளங்களான நாகர்களென்று சொன்னது.

2 ஆறுகுமாரர்கள் - ஆறுருதுக்கள்.

3 சக்கரம் என்பது வருஷம்.

4 இருபத்துநான்கு கணுக்களாவன, அமாவாஸ்யையும் பௌர்ணமியும்.

5 மூந்நூற்றறுபது ஆரக்கால்கள் தினங்கள்.

6 இரண்டுசிறுபெண்கள் தாதா விதாதா என்னும் தேவதைகள்.

7 கறுப்புவெளுப்புநூல்கள் இரவும் பகலும்.

8 வஸ்திரமென்பது காலம்.

ரக்ஷிக்கிறவனும், விருத்திரன் நமுசியென்னும் அசுரர்களைக்கொன்றவனும், [1]இரண்டுகெறுப்புவஸ்திரங்களைத் தரித்துக்கொண்டவனும், மஹாத்மாவும், உலகத்தில் உண்மையும்பொய்யுமாகிய ஆத்மா அநாத்மாஇரண்டையும் பகுத்தறிவிப்பவனும், ஜலத்தினுடையபுத்திரனும் புராதனனுமான அக்னியைக் குதிரையாக அடைந்திருப்பவனும், உலகங்களை நடத்துகிறவனும், மூன்றுலோகங்களுக்கும் நாதனுமாகிய அந்த இந்திரனைநமஸ்கரிக்கிறேன்' என்று துதிசெய்தார்.

பிறகு, அந்தக் குதிரைமேலிருந்தபுருஷன் உதங்கரைப்பார்த்து, 'நான் இந்தஸ்தோத்திரத்தினால் உன்னிடம் அன்புள்ளவனானேன்; உனக்கு நான்செய்யவேண்டிய பிரயோஜனமென்ன?' என்றுகேட்க, உதங்கர் அந்தப்புருஷனுக்கு, 'நாகங்கள் எனக்கு வசப்படவேண்டும்' என்று மறுமொழிசொன்னார். பிறகு, அந்தப்புருஷன் உதங்கரைப்பார்த்து, 'நீ இந்தக்குதிரையின் அபானத்தில் ஊது' என்று சொன்னதன்பிறகு உதங்கர் குதிரையின் அபானத்தில் ஊதினார். ஊதப்பட்ட அந்தக்குதிரையின் எல்லாரோமத்துவாரங்களினின்றும் புகையுடன் அக்னிஜ்வாலைகள் வெளிப்பட்டன; அவற்றால் நாகலோகத்தில் வெப்பம்உண்டாயிற்று. தக்ஷகன் அக்னிஜ்வாலையின் பயத்தினால் துயரமுற்று, பரபரப்புடன் குண்டலங்களை எடுத்துக்கொண்டு, விரைவாகவீட்டைவிட்டு வெளியேவந்து, உதங்கரைப்பார்த்து, 'இந்தக்குண்டலங்களை நீங்கள்பெற்றுக்கொள்ளுங்கள்' என்று சொன்னான். உதங்கர் அந்தக்குண்டலங்களை வாங்கிக்கொண்டு, 'உபாத்யாயபத்னியினுடைய அந்தவிரதம் இன்றைத்தினம்தான்; நானோ நெடுந்தூரம் வந்துவிட்டேன்; எவ்வாறு குண்டலங்களை உபயோகப்படுத்துவேன்?' என்று சிந்தித்தார். அவ்வாறு சிந்தித்துக்கொண்டிருந்தஉதங்கரைப்பார்த்து, 'உதங்க! இந்தக்குதிரையின்மேலேயேறிக்கொள்; இது ஒருநொடியில் உன்னை உபாத்யாயர்வீட்டிலே கொண்டுபோய்ச்சேர்க்கும்' என்று அந்தக் குதிரைமேலிருந்த புருஷன் சொன்னான். உதங்கர் அதற்கு, 'அப்படியேயாகட்டும்' என்று சொல்லி அந்தக்குதிரையின்மேலேறிக்கொண்டு உபாத்தியாயர்கிருகத்திற்கு வந்துசேர்ந்தார். அப்போது ஸ்நானஞ்செய்து தலைமயிரை ஆற்றிக்கொண்டு உட்கார்ந்திருந்த உபாத்யாயபத்னி, 'உதங்கன் வரவில்லையே' என்று அவனைச் சபிக்க எண்ணங்கொண்டிருந்தாள். அந்தஸமயத்தில் உதங்கர் உபாத்தியாயருடைய கிருகத்தினுள்ளே

---

[1] இரண்டுமேகங்களோ வெள்ளைநிறமும் கறுப்புநிறமுமாகிய இரண்டு கறுப்புவஸ்திரங்கள்.

போய் உபாத்யாயபத்னிக்கு நமஸ்காரஞ்செய்து அந்தக்குண்டலங்களை அவளிடம்கொடுத்தார். அந்த உபாத்யாயபத்னி அவரைப்பார்த்து, 'உதங்கா! நீ சரியானதேசகாலத்தில்வந்தாய்;குழந்தாய்! இப்போது உனக்கு நல்வரவு; இப்போது நீ வராமலிருப்பாயானால் நான் கோபத்தால் [1]சபித்திருப்பேன்; உனக்கு நன்மை சீக்கிரத்தில் உண்டாகும்; காரியஸித்தியையடைவாயாக' என்று சொன்னாள். பிறகு, உதங்கர் உபாத்தியாயருக்கு வந்தனஞ்செய்தார். உபாத்தியாயர் அவரை, 'குழந்தாய்! உதங்கா! உனக்கு நல்வரவு. ஏன்காலவிளம்பம்செய்தாய்?' என்றுகேட்க, உதங்கர், 'ஐயா! என்னுடைய இந்தக்காரியத்துக்கு நாகராஜனாகிய தக்ஷகன் இடையூறுசெய்தான்; அதனால்,பாதாளலோகம்போனேன்; அவ்விடத்தில் தறியில்ஏற்றி வஸ்திரம்நெய்துகொண்டிருந்த இரண்டுஸ்திரீகளைக்கண்டேன்; அந்த வஸ்திரத்தில் கறுப்புநூல்களும் வெளுப்புநூல்களும் இருந்தன; அவை என்ன? மேலும், அங்கே பன்னிரண்டு ஆரக்கால்களுள்ள ஒருசக்கரத்தை நான் பார்த்தேன்; ஆறு குமாரர்கள் அதைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள்; அந்தச்சக்கரம் யாது? ஒருபுருஷனையும் கண்டேன்; அவன்யார்? ஒரு பெரியகுதிரையையும்பார்த்தேன்; அது யாது? வழியிற்போகும்போது நான் ஒரு வ்ருஷபத்தைப்பார்த்தேன்; அதன்மேல் ஒருபுருஷன் ஏறிக்கொண்டிருந்தான்; அவன் மரியாதையுடன், 'உதங்கா! இந்த வ்ருஷபத்தின்கோமயத்தைப்பக்ஷணம்செய்;உன் உபாத்தியாயரும் இதைப்பக்ஷித்திருக்கிறார்' என்று அன்புடன் எனக்குச்சொன்னான். அவனுடைய அந்தச்சொல்லால் அந்தவ்ருஷபத்தின் கோமயத்தை நான் உட்கொண்டேன்; அவன் யாவன்? இவையெல்லாம் இன்னவையென்று நீங்கள் உபதேசிக்க விரும்புகின்றேன்' என்று உபாத்யாயரை உதங்கர் கேட்டார். அவரால் இவ்வாறு கேட்கப்பட்ட உபாத்யாயர், 'நீ பார்த்த இரண்டு ஸ்திரீகள் [2]தாதாவும் [3]விதாதாவுமாகிய இரண்டுதேவதைகள்; கறுப்பும் வெளுப்புமாகிய நூல்கள் இரவும்பகலும்; பன்னிரண்டு ஆரக்கால்களுள்ள சக்கரத்தைச் சுற்றிக்கொண்டிருந்த ஆறு குமாரர்கள் ஆறுருதுக்கள்; பன்னிரண்டு ஆரங்கள் பன்னிரண்டுமாதங்கள்; சக்கரம் வருஷம்; அந்தப்புருஷன் பர்ஜன்யனென்னும்பெயர்பெற்ற தேவதை; அந்தக்குதிரை தான் அக்னி; நீ வழியிற்போகும்போது கண்ட வ்ருஷபம்

1 [illegible]
2 [illegible]
3 [illegible]

ஐராவதமென்னும் சிறந்தயானை ; அதன்மேலேறியிருந்தபுருஷன் இந்திரன் ; நீசாப்பிட்டவ்ருஷபத்தின்கோமயம்அமிர்தம்;அதனாலேதான் நீஅந்தஸர்ப்பலோகத்தில் அழியாமலிருந்தாய் ; அந்தப்பகவானாகிய இந்திரன் எனக்குஸ்நேஹிதன் ; உன்னிடத்தில் தயையினால் இந்த அனுக்கிரகத்தைச்செய்தான் ; அதனாலேதான் நீ மறுபடியும் குண்டலங்களைப்பெற்றுக்கொண்டுவந்தாய் ; ஸௌமுகனே! இனிப்போகலாம்; உனக்கு அனுமதிகொடுக்கிறேன்;நீ மேன்மையைஅடைவாய்' என்று சொன்னார். உபாத்தியாயரால் விடைகொடுக்கப்பட்ட அந்த மஹிமைபெற்ற உதங்கரிஷி தக்ஷகன்மீதுகோபங்கொண்டு அவனுக்குப் பிரதிசெய்யஎண்ணமுள்ளவராய் ஹஸ்தினாபுரத்திற்குப்புறப்பட்டார். அந்தப்பிராமணசிரேஷ்டராகிய உதங்கர், விரைவாக ஹஸ்தினாபுரம் சென்று ஜனமேஜயராஜாவைச்சந்தித்தார். தக்ஷசிலாநகரத்தில் முன்னேயிருந்தவரும் வைராக்கியமுள்ளவரும் தோல்வியடையாதவரும் நல்லஜயசாலியுமான ஜனமேஜயமஹாராஜா மந்திரிகளாற்சுற்றிலும் சூழப்பட்டிருப்பதைக்கண்டு அவருக்கு முதலில்முறைப்படி ஜயஆசீர்வாதங்களைச்சொல்லி, அவருடைய ஸந்தோஷகாலத்தில் அழகான பதங்களோடுகூடிய வாக்கினால், 'ராஜசிரேஷ்டனே ! நீ செய்யவேண்டியகாரியம்வேறிருக்க மற்றொன்றைச்செய்வது சிறுபிள்ளைத்தனம் போலிருக்கிறது' என்றுசொன்னார். அந்தப்பிராமணர் இவ்வாறு சொல்ல, ஜனமேஜயராஜர் பிராமணோத்தமருக்குக் கிரமப்படி பூஜை செய்து, 'இந்தப்பிரஜைகளைப்பரிபாலனம்செய்வதனால் என்னுடைய க்ஷத்திரியதர்மத்தைக் காப்பாற்றிவருகிறேன் ; நான் இப்போது செய்யவேண்டியதென்ன ? நீர் என்னகாரியம்பற்றி வந்திருக்கிறீர் ? அதைச்சொல்லும்' என்றார். அந்தராஜசிரேஷ்டர் இவ்வாறுசொன்னபிறகு, புண்ணியஞ்செய்தவர்களிற் சிறந்தவரான அந்தப்பிராமணோத்தமர் தாழ்வில்லாதஸ்வபாவமுள்ள ராஜாவைப்பார்த்து, 'ராஜாவே ! உனது சொந்தக்காரியத்தைச்செய்துகொள்; அரசர்களுக்கெல்லாம் அரசனே! உன்பிதாவைக்கொன்ற துராத்மாவான தக்ஷகனென்னும் ஸர்ப்பத்துக்குப் பிரதிசெய்யவேண்டும் ; சாஸ்திரோக்தமான கிரியை செய்ய இதுஸமயமென்று நான்நினைக்கிறேன் ; அரசனே ! ஆதலால், மஹாத்மாவாகிய உனது அந்தத்தந்தைக்கு மரியாதைசெய்; ஏனென்றால், உன்பிதாவாகியராஜா அபராதமொன்றுமில்லாமலே கெட்டஎண்ணமுள்ள அந்தத்தக்ஷகனால் கடிக்கப்பட்டு இடியினால்வீழ்த்தப்பட்ட மரம்போல மரணமடைந்தார். இழிவானஸர்ப்பமாகிய தக்ஷகனென்னும்பாபி பலமும்கர்வமும்மிகுந்து செய்யத்தகாததைச்செய்தான் ;

அவன் ராஜரிஷிவம்சத்தைரக்ஷிக்கிறவரும் தேவதைக்குழப்பான அரசருமாகிய உன்பிதாவைக்கடித்தான்; அந்தப்பாபிஷ்டன் உன்பிதாவினிடம்போகவிரும்பிய காசியபரையும் தடுத்தான் ; மஹாராஜாவே ! அந்தப்பாபியை ஸர்ப்பயாகத்தில் ஜ்வலிக்கிற அக்கினியில் ஹோமஞ் செய்யவேண்டும் ; அந்தஸர்ப்பயாகம் சீக்கிரமாகச் செய்யத்தக்கது ; ராஜாவே ! இப்படிச்செய்தால் உன்பிதாவுக்கும் மரியாதைசெலுத்தினவனுவாய்; எனக்கும் மிகப்பெரிய பிரியமானகாரியத்தைச்செய்ததாகும்; பூமிக்குரக்ஷகனே ! மஹாராஜாவே ! குற்றமற்றவனே! அந்தத்துராத்மா குருதக்ஷிணைக்காகப்போன என்னுடைய காரியத்திற்கும் விரோதம்செய்தான்' என்றுசொன்னார்.

இதுகேட்டஅரசர்,உதங்கர்சொல்லாகிற நெய்யினால்அக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு தக்ஷகன்மீது கோபமடைந்தார். பிறகு, அவ்வரசர் மிகுந்த துக்கத்துடன் தம்மந்திரிகளைப்பார்த்து உதங்கர் முன்னிலையிலேயே, தம்பிதா ஸ்வர்க்கம்போய்விட்டதைப்பற்றிக் கேட்டார். அந்தராஜசிரேஷ்டரான ஜனமேஜயர் பிதா மரணமடைந்த விதத்தை உதங்கரிடம் கேட்டபொழுதே துக்கத்தினாலுண்டான கண்ணீரினால் நனைக்கப்பட்டவரானார்.

பௌஷ்யபர்வம் முற்றிற்று.

---

## நான்காவது அத்தியாயம்.

## பௌலோமபர்வம்.



(ரிஷிகளும் சௌனகரும் ஸூதரும் ஸபையிற்சேர்ந்தது.)

லோமஹர்ஷணருடையபுத்திரரும், ஸூதகுலத்தவரும், புராணங்கள்தெரிந்தவருமாகியஉக்ரஸ்ரவஸென்பவர்,நைமிசாரண்யத்தில் சௌனகரென்னும் குலபதியினுடைய பன்னிரண்டுவருஷம்செய்யத்தக்க ஸத்திரயாகத்தில் வந்திருந்த ரிஷிகளிடம்சென்றார்.

புராணங்கள் தெரிந்தவரும் புராணங்களிலேயே எப்போதும் உழைப்புள்ளவருமாகிய அவர், அந்தரிஷிகளுக்குக் கைகூப்பிக்கொண்டு, "ஜனமேஜயருடைய ஸர்ப்பயாகத்திற்குக் காரணமாக உதங்கருடைய சரித்திரமுற்றும் யான் உங்களுக்குச்சொன்னேன் ; அந்த யாகத்திற்கு மற்றொருகாரணமும் இருக்கிறது;நீங்கள் கேட்கவிரும்புகின்றீர்களா? நான் சொல்லட்டுமா?" என்றுகேட்க, ரிஷிகள், "லோம

ஹர்ஷணபுத்திரரே! நாங்கள் உம்மிடத்தில் முக்கியமாகச் சொல்லுவதாவது:—'கதைகளின்தொகையைக் கேட்கவிரும்புகின்ற எங்களுக்குக் கதையின்விஷயமான வசனம் சொல்லவேண்டும்' என்பதே. மஹிமைபொருந்தியவரும் எங்கள்குலபதியுமான சௌனகர் அங்கே அக்னிஹோத்திரசாலையில் இருக்கிறார்; நீண்டகாலம்செய்யத்தக்க ஸத்திரயாகமாகையால் எல்லாக்கதைகளையுங்கேட்பதற்கு அவகாசமிருக்கிறது. ஸூதபுத்திரரே! தேவர்கள், அஸுரர்கள், மனுஷ்யர்கள், நாகர்கள், கந்தர்வர்கள் ஆகிய இவரெல்லாரையும்பற்றிய அருமையான கதைகளையறிந்தவரும், வித்வானும், காரியங்களில்ஸமர்த்தரும், கூர்மையானபுத்தியுள்ளவரும்சாஸ்திரங்களிலும் ஆரண்யகமென்னும் வேதபாகத்திலும் குருவும், ஸத்தியவாதியும், சாந்தியுள்ளவரும், சிறந்த தவமுள்ளவரும், உறுதியானநியமமுள்ளவரும், எங்களுக்கெல்லாம் பூஜ்யரும், குலபதியுமாகிய அந்தப் பிராமணர் இந்தயஜ்ஞத்தில் தீக்ஷைவஹித்திருக்கிறார்; அவருக்காகச் சற்றுநேரம் நாம் காத்திருக்கவேண்டும். அந்த நமது ஆசாரியர் மிகவும் மேன்மையான ஆஸனத்தில் வீற்றிருந்தபிறகு பிராமணோத்தமராகிய அவர் கேட்பதை நீர்சொல்லுவீராக" என்றுசொன்னார்கள். ஸௌதி, "அவ்வாறே ஆகட்டும்;மஹாத்மாவாகிய அந்த ஆசாரியர் உட்கார்ந்து அவர் ப்ரச்னஞ்செய்ததன்மேல் அநேகவிஷயமான புண்ணியகதைகளைச் சொல்வேன்" என்றுசொன்னார்.

பிறகு, அந்தப்பிராம்மணசிரேஷ்டரான சௌனகர், செய்யவேண்டியவற்றையெல்லாம் சாஸ்திரப்படிசெய்து, மந்திரங்களைச்சொல்லித் தேவர்களுக்கும் பிதிர்க்களுக்கும் ஜலதர்ப்பணம்செய்து, தவத்தில் ஸித்திபெற்றவர்களும் விரதம்தவறாதவர்களுமாகிய அந்தரிஷிகள் ஸூதபுத்திரனை முன்னிட்டுக்கொண்டு ஸுகமாகஉட்கார்ந்திருந்த யஜ்ஞசாலையின் ஸமீபமான இடத்திற்கு வந்து சேர்ந்தார். அப்போது, ரித்விக்குர்களும் கோஷ்டியைச்சேர்ந்தவர்களும் உட்கார்ந்தபிறகு, குலபதியான சௌனகரும் வந்துஉட்கார்ந்து பின்வருமாறு சொல்லலானார்.

முள்ளவரும் உமதுகூடஸ்தருமான சுனகரென்னும்புத்திரர் பிறந்தார்" என்று ஸூதபுத்திரர் சொல்ல, சௌனகர், "ஸூதபுத்திரரே! மஹாத்மாவாகிய அந்தப்பிருகுவின்புத்திரருக்குச்யவனரென்ற பெயர் எவ்வாறு வந்ததென்பதைக்கேட்கிறேன்; அதனை எனக்குச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, ஸூதபுத்திரர்சொல்லுகிறார்:—

"ப்ருகுவுக்குப் புலோமையென்று புகழ்பெற்றமிகப்பிரியமான ஒருமனைவி இருந்தாள்; அவளுக்கு ப்ருகுவின்வீரியத்தினால் கர்ப்பம் உண்டாயிற்று. ப்ருகுகுலசிரேஷ்டரே! பிறகு, புகழ்பெற்ற பிருகு மஹரிஷிக்கு ஒத்த ஒழுக்கமுள்ள தர்மபத்னியாகிய புலோமையினிடம் அந்தக்கர்ப்பம் உண்டாயிருந்தகாலத்தில் தர்மத்தைவஹிக்கிறவர்களுக்கெல்லாம் சிறந்தவராகிய பிருகு ஸ்நானத்திற்காகப்போயிருக்கையில், அவருடைய ஆஸ்ரமத்திற்குப் புலோமாவென்னும் ராக்ஷஸன் வந்தான். அவன் அந்த ஆஸ்ரமத்திற்புகுந்து சிறந்த அழகுள்ள பிருகுபத்னியைக்கண்டு காமபரவசனாய்ப் புத்திதப்பினவனானான். அழகிய ரூபமுள்ள புலோமை, அதிதியாகவந்த அந்தராக்ஷஸனுக்குக் காட்டிலுள்ள காய்கிழங்குமுதலியவற்றை ஆகாரமாகக் கொடுத்தாள். பிராம்மணர்களே! அப்போது அந்தராக்ஷஸன் அவளைப்பார்த்துக் காமத்தினாற் பீடிக்கப்பட்டு, சிறந்த அழகுள்ள அந்தப்புலோமையைக் கொண்டுபோவதற்கு எண்ணங்கொண்டு ஸந்தோஷமடைந்தான். அந்த அழகுள்ளவளைக்கொண்டுபோக நினைத்து 'காரியமாகிவிட்டது' என்று ஸந்தோஷமாகச்சொன்னான். அழகான புன்னகையுள்ள அந்தப்புலோமையை அந்தப்புலோமா என்னும்ராக்ஷஸன் [1]முன்னமேயேவிரும்பியிருந்தான். பிறகு, அவளுடைய பிதா அவளைச் சாஸ்திரப்பிரகாரமாகப் பிருகுவுக்குவிவாஹஞ்செய்துகொடுத்தார். பார்க்கவரே! அப்போதுமுதல் அந்த அபகாரம் அந்த ராக்ஷஸன்மனத்தில் எப்போதும் மறக்காமலிருந்தது. அவன் அப்போது இது ஸமயமென்று நினைத்து அவளைக்கொண்டுபோக எண்ணங்கொண்டான். பிறகு, அக்னிஹோத்ர க்ருஹத்தில் ஜ்வலிக்கும் அக்னியைக் கண்டான். ராக்ஷஸன், ஜ்வலித்துக்கொண்டிருந்த அக்னியைப்பார்த்து, 'அக்னியே! உன்னை சத்தியமாகக்கேட்கிறேன்; இவள் யாருடையபாரியை? எனக்குச்சொல்; தேவர்களுக்கு முகமாயிருக்கிறாய்; எல்லாவற்றையும் பரிசுத்தஞ்செய்கிறவனே! நான்

---

[1] குழந்தையாயிருக்கையில் அழுதபோது பயப்படுத்துவதற்காக, 'ராக்ஷஸா! இவளைப்பிடித்துக்கொள்' என்று அவள்பிதா சொன்னதை அங்கு மறைந்திருந்த புலோமா என்பவன் கேட்டு அவளைத் தன்பாரியையாக நினைத்தான்.

கேட்பதற்குச்சொல்; நான்தானே இந்தச் சிறந்த பெண்ணை முதலில் பாரியையாக வரித்தவன்; பிறகு, பொய்யனாகிய இவள் தந்தை இவளைப் பிருகுவுக்குக்கொடுத்தான்; இப்போது தனிமையிலிருக்கும் இந்தப்பெண் பிருகுவின் பாரியையாக விருந்தால் நீ ஸத்தியமாகச்சொல்; நான் இவளை ஆச்ரமத்திலிருந்து கொண்டுபோக விரும்புகிறேன்; முதலில் எனக்குப் பாரியையான இந்த அழகிய இடையுள்ளவளைப் பிருகு அடைந்தவிஷயத்தில் எனக்குண்டான கோபம் என்னெஞ்சைச் சுடுவதுபோலிருக்கிறது. இப்படிப் பிருகு அடைந்ததை நான் ஒப்பவில்லை; இவளை ஆஶ்ரமத்திலிருந்து கொண்டுபோவேன்' என்றுசொன்னான். அந்த ராக்ஷஸன் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அக்கினியை இவ்வாறு (தன்கருத்துக்கிணங்கும்படி) கேட்டுப் பிருகுவின் பாரியையென்று சங்கித்து, 'பரந்த ஞானமுள்ள அக்கினியே! நீ எல்லாப் பிராணிகளுள்ளேயும் எப்போதும் புண்ணியபாபங்களுக்குச் சாக்ஷியைப்போற் சஞ்சரிக்கிறாய்; ஸத்தியமான வார்த்தையைச் சொல்லு; முதலில் என் மனைவியாயிருந்த இவளைப் பிருகு பொய்யாக அபகரித்துக்கொண்டுபோனான்; இவள் உண்மையாக என்னுடைய பாரியையாயிருந்தால் நீ சொல்லவேண்டும்; உன்னிடத்திற்கேட்டு நீ பார்த்துக்கொண்டிருக்கையில் இந்தப்பிருகுவின் பாரியை ஆஶ்ரமத்திலிருந்து கொண்டுபோவேன்; எனக்கு ஸத்தியவசனம்சொல்' என்று பலமுறை கேட்டான். இப்படி அவன் சொன்னதைக்கேட்டு, அக்னி துக்கத்துடன், 'நான் ஸத்தியம் சொல்வேனாகின் எனக்குச் சிறந்த பிரம்மஞானியான பிருகுவின் சாபம்வரும்; பொய்சொல்வேனாகின் நிச்சயமாக நரகத்தில் விழுவேன்' என்று யோசித்தும், பிருகுவின் சாபத்திற்குப் பயந்து, மெல்ல, 'அஸுரஶ்ரேஷ்டனே! இந்தப் புலோமை முதலில் உன்னால் வரிக்கப்பட்டவள்தான்; ஆனால், இவளை சாஸ்திரப்பிரகாரம் மந்திரத்தோடு நீ முதலில் வரிக்கவில்லை; அதனால், கீர்த்திபெற்ற இந்தப் புலோமையை அவள்தந்தை பிருகுவுக்குக் கொடுத்தார். மிகுந்த க்யாதிமானாகிய இவளுடைய பிதா யசசாலவானுக்கு ஆசைப்பட்டதனால், இவளை உனக்குக்கொடுக்கவில்லை. அஸுரனே! பிறகு, பிருகுமஹரிஷி என்னைச் சாக்ஷியாகவைத்துக்கொண்டு முறைப்படி வேதோக்த கர்மங்களைச்செய்து இவளை விவாகம் செய்துகொண்டார். இவள் இவ்வாறு அவர்பாரியையென்று அறிகிறேன்; நான் பொய்சொல்ல விரும்பேன்; அஸுரஶ்ரேஷ்டனே! உலகத்தில் பொய் ஒருபோதும் ஆதரிக்கப்படுவதில்லை' என்று சொன்னான்.

## ஆறுவது அத்தியாயம்.

## பௌலோமபர்வம். (தொடர்ச்சி.)



(ச்யவனருடைய ஜனனமும் அக்னிக்கு ப்ருகுசாபமும்.)

பிராமணரே! அக்னிசொன்னதைக் கேட்டபிறகு அந்தராக்ஷஸன் மனஸுக்கும் காற்றுக்கும் ஸமானமான வேகமுள்ள பன்றி வடிவத்தோடு அவளைத் தூக்கிக்கொண்டுபோனன். பிருகுவம்சத்திற்சிறந்தவரே! பிறகு, புலோமையின்கர்ப்பத்திலிருந்த அந்தச்சிசு, கோபத்தினல் தாயாரின்வயிற்றிலிருந்து நழுவிவிட்டது; அதனல், அவருக்கு [1]ச்யவனரென்று பெயர்வந்தது. தாயார்வயிற்றினின்றும் நழுவின சூரியனைப்போன்ற காந்தியுள்ள அந்தச் சிசுவைக்கண்டு அந்தராக்ஷஸன் அவளைவிட்டுவிட்டு நீருய்விழுந்தான். அழகான நிதம்பமுள்ள அந்தப்புலோமையானவள், பிருகுவை ஆனந்தப்படுத்துகிறவரும் அவர்புத்திரருமான அந்த ச்யவனரை எடுத்துக்கொண்டு துக்கம் அதிகரித்தவளாய்ச் சென்றாள். நீர்நிறைந்தகண்களுடன் அழுதுகொண்டிருக்கும் அந்த அழகான பிருகுபத்தினியை ஸர்வலோகத்துக்கும் ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மதேவர் தாமே பார்த்தார்; பகவானன பிரம்மா தமது மருமகளாகிய புலோமையைத் தேற்றினர்; அந்தப் பிருகுமஹரிஷியின் பத்தினியினுடைய கண்ணீர்த்துளிகளால் உண்டான பெரியநதி அவள் மார்க்கத்தை அனுஸரித்துக்கொண்டு பெருகிறது; அவளுடைய மார்க்கத்தை அனுஸரித்த அந்த நதியைக்கண்டு லோககர்த்தவாகிய பிரம்மதேவர் ச்யவனுச்ரமத்துக்கு அருகே நின்ற அந்தநதிக்கு [2]வதூஸரையென்று பெயரிட்டார். பிருகுபுத்திரரான மிகுந்த மஹிமையுள்ள அந்த ச்யவனர் இவ்வாறு ஜனித்தார்.

பிதாவான பிருகு அங்கே அந்தச்யவனரைக் கண்டார். பிறகு, தம் பாரியையான அந்தப் புலோமையென்பவளைப் பார்த்துக் கோபத்துடன்கேட்டார்: 'அழகிய புன்சிரிப்புள்ள என்பாரியையாகிய உன்னை அந்த ராக்ஷஸன் அறியானே; உன்னைச் சொன்னவன்யார்? உண்மையைச் சொல்லு; அப்படிச்சொன்னவனை இப்போது கோபத்தினல் நான் சபிக்கக்கருதுகிறேன்; என் சாபத்துக்கு அஞ்சாதவன்யார்? இது யாருடையபிழை' என்றார். புலோமை, 'பகவானே!

---

1 ச்யவனம் = நழுவுதல். 2 பெண்ணுடன் சென்றது.

அந்த ராக்ஷஸனுக்கு என்னை அக்னி தெரிவித்தான்; அதனால் அந்த ராக்ஷஸன், பெண்அன்றிலைப்போலே கதறிக்கொண்டிருந்த என்னைத் தூக்கிக்கொண்டுபோனான்; அப்படிக் கொண்டுபோகப் பட்ட நான் இந்த உமதுபுத்திரனுடைய சக்தியினால் விடுவிக்கப் பட்டேன்; அந்த ராக்ஷஸன் என்னைவிட்டுவிட்டு நீருகிவிழுந் தான்' என்று சொன்னதைக்கேட்டு, மிகுந்த கோபமுள்ள பிருகு அதிககோபமுடையவராய், 'நீ, எல்லாவற்றையும் பக்ஷிப்பவனாகக் கடவாய்' என்று அக்னியைச் சபித்தார்.

---

## ஏழாவது அத்தியாயம்.

## பௌலோமபர்வம். (தொடர்ச்சி.)



அக்னி, பிருகுவினால் சபிக்கப்பட்டபிறகு, கோபங்கொண்டு, 'பிராம்மணரே! என்ன என் விஷயத்தில் இப்படி ஆராய்ந்து பாரா மற் செய்தீர்? தர்மத்தை விடாதவனும் ஸத்தியவாதியுமான நான், ஒருவன் கேட்டபிறகு பக்ஷபாதமின்றி ஸத்தியத்தைச் சொன்னதில் என்பிழை என்ன? தான் கண்ட விஷயத்தைக்கேட்கும்போது எந்த ஸாக்ஷி தெரிந்திருந்தும் மாறாகச் சொல்வனே அவன் தன்குலத்தில் முன்னேழுபேர்களையும் பின்னேழுபேர்களையும் கெடுத்துவிடுவான். செய்யவேண்டிய விஷயங்களில் உண்மைதெரிந்தவன் தெரிந்திருந் தும் ஒன்றும் பேசாமலிருப்பானாயின் அவனுக்கும் அந்தப்பாபம் தொடரும்; இதில் சந்தேகமில்லை; எனக்கும் உம்மைச்சபிக்க சக்தி யுண்டு; ஆனால், பிராம்மணர்களை நாம் பூஜித்தல்வேண்டும்; பிராம ணரே! நீர் தெரிந்தவராயிருந்தபோதிலும் உமக்கு ஒருவிஷயம் நான் சொல்லப்போகிறேன்; அதைத்தெரிந்துகொள்ளும். நான் என்னு டைய தவவன்மையால என்னைப் பலவுருவங்களாகப் பிரித்துக் கொண்டு அக்னிஹோத்ரங்களிலும், ஸத்திரயாகங்களிலும், விவாகாதி கிருககாரியங்களிலும், மற்றயாகங்களிலும் இருக்கிறேன்; வேதத் திற் சொல்லப்பட்ட விதிப்படி என்னிடத்தில் ஹோமஞ்செய்யப் பட்ட ஹவிஸினால் தேவர்களும் பிதிர்க்களும் திருப்தியடைகின்ற னர்; எல்லாத் தேவக்கூட்டங்களும் பிதிர்க்கூட்டங்களும் நெய், பால், ஸோமரஸம் முதலிய ஜலத்தின்பரிணாமத்தினால் உண்டாகிற வர்கள்; [1]தர்சபௌர்ணமாஸயாகங்கள், பிதிர்க்களுக்கும் தேவர்க ளுக்கும் சேர்ந்தே செய்யப்படுகின்றன; ஆதலால், தேவர்களை பிதிர்க்

1 தர்சம் பிதிர்க்களுக்கும், பௌர்ணமாஸம் தேவர்களுக்கும்.

கள்; பிதிர்க்களே தேவர்கள்; புண்ணியகாலங்களில் இவர்கள் ஒன்ருகவும் வேருகவும் காணப்படுகின்றனர்; தேவர்களும் பிதிர்க்களும் என்னிடத்தில் ஹோமஞ் செய்யப்பட்டவற்றையே புசிக்கின்றனர்; தேவர்களுக்கும் பிதிர்க்களுக்கும் என்னை வாயென்று சொல்லுகின்றனர்; அமாவாஸையையில பிதிர்க்களுக்கும் பௌர்ணமாஸியில தேவர்களுக்கும் என்னிடத்திலேதான் ஹோமஞ்செய்கின்றனர்; அந்தஹோமஞ்செய்த ஹவ்யத்தை என்னை வாயாகக்கொண்டுதான் தேவர்களும் பிதிர்க்களும் புசிக்கின்றனர்; இவர்களுக்கு வாயாகிய நான் எல்லாவற்றையும்பக்ஷிப்பவனுவது எப்படி?' என்றுசொல்லி ஆலோசனைசெய்து, பிராம்மணர்களுடைய அக்னிஹோத்திரங்களிலும் யாகங்களிலும் ஸத்திரயாகங்களிலும் சடங்குகளிலும் இல்லாமல தன்னை ஒளித்துக்கொண்டான். பிறகு, அக்னியில்லாமல பிரஜைகள் அனைவரும், [1]ஓங்காரம் [2]வஷட்காரம் [3]ஸ்வதா [4]ஸ்வாஹா ஆகிய இவையொன்றுமில்லாமல வட்டுப்போய் மிகுந்த வருத்தமடைந்தார்கள். பிறகு, ரிஷிகள் மிகவுந் துயருற்றவர்களாய்த் தேவர்களிடம் சென்று, 'குற்றமற்றவர்களே! அக்னியில்லாமல யாகமுதலிய கிரியைகள் தவறிப்போனதனால் மூன்று உலகங்களும் தடுமாறிப்போயின. இந்தவிஷயத்தில் என்ன செய்யவேண்டுமோ அதைக் காலதாமதமின்றிச் செய்யுங்கள்' என்றனர். பிறகு, ரிஷிகளும் தேவர்களும் பிரம்மாவிடம் சென்று அக்னிக்கு நேர்ந்த சாபத்தையும் கருமங்களெல்லாமற்றுப்போனதையும் தெரிவித்து, 'மிக்க பெருமைதங்கினவரே! ப்ருகு ஏதோ ஒருகாரணத்தினிமித்தம் அக்னியைச் சபித்தார்; தேவர்களுக்கு முகமாக இருந்து எல்லா உலகங்களிலும் யாகங்களிலுள்ள தேவபாகங்களை முதலிற்புசிக்கிறவனுகிய அக்னி எல்லாவற்றையும் பக்ஷிப்பவனுக எப்படி ஆகலாம்?' என்று கேட்டனர். உலகங்களைப்படைப்பவராகிய பிரம்மதேவர் அவர்கள் சொன்னதைக்கேட்டு எல்லாப்பொருள்களுக்கும் காரணமும் அழிவில்லாதவனுமாகிய அக்னியையழைத்து, நயமான வசனத்தைச் சொன்னார்.

அதாவது:—'எல்லாஉலகங்களுக்கும் நீயே ஆதியும் அந்தமுமாக இருக்கிருய்; நீ கிரியைகளை நடத்தி மூன்றுலோகங்களையும் தாங்குகிருய்; உலகங்களுக்கெல்லாம் ஈசுவரனே! கிரியைகள் லோபிக்காமலிருக்கும்படிசெய்; அக்னியே! நீ சக்தியுள்ளவனுக இருந்தும் ஏன் இவ்வாறு சுற்றும் அறியாமலிருக்கிருய்? உலகத்திலும் எப்போ

1 வேதம் ஓதுவது. 2 யாகம்செய்வது.
3 சிராத்தம்செய்வது. 4 தேவபூஜை செய்வது.

தும் நீ தான் பரிசுத்தஞ்செய்பவன்; எல்லாப்பிராணிகளுக்கும் நீ தான் ஆதாரம்; நீ உன்சரீரத்தின் எல்லாப்பாகங்களாலும் எல்லாவற்றையும் பக்ஷிப்பவனுவதில்லை; அக்கினியே! உனது பின்புறத்திலுள்ள [1]ஜ்வாலைகள்தாம் எல்லாவற்றையும் பக்ஷிக்கும்; மாம்ஸம் சாப்பிடுகிற [2]உன்சரீரம்எதுவோ அது எல்லாவற்றையும் பக்ஷிப்பதாகும்; எப்படி ஸூர்யகிரணங்கள் பட்டதெல்லாம் சுத்தமாகக் காணப்படுகின்றதோ அப்படியே உன் ஜ்வாலைகளினுல தகிக்கப் பட்டதெல்லாம் சுத்தமாகும்; அக்னியே! நீ உனசொந்தசக்தியிஞற் பிரகாசிக்கின்ற சிறந்த தேஜஸாயிருக்கிருய்; ஸாமர்த்தியமுள்ளவனே! உன்சக்தியிஞலேயே ரிஷியின் அந்தச்சாபத்தை ஸத்தியமாக்ச் செய்வாயாக; உன்வாயில் ஹோமஞ் செய்யப்பட்ட தேவர்பாகத்தையும் உன்பாகத்தையும் வாங்கிக்கொள்' என்பது.

அக்னியும், 'அப்படியே ஆகட்டும்' என்று பிரம்மாவுக்குச் சொல்லி எல்லாருக்கும் மேற்பட்டவரான அந்தப் பிரமதேவருடைய கட்டளைப்படி செய்வதறகுச்சென்ருன். பிறகு, தேவர்களும் ரிஷிகளும் ஸந்தோஷமடைந்து வந்தபடியே சென்றனர். ரிஷிகளும் முன்போலவே பலலாசகிரியைகளையும் விச்சஷிததுச செய்தனர். ஸவர்க்கததுல தேவர்களும் பூலோகத்தல எலலாபபிராணிகளும் சந்தோஷமாயிருந்தனர். அகனியும் துயரம் நீங்கி மிகுந்த திருப்தியடைந்தான். இப்படி, அக்னிபகவான் முன்னே பிருகுவின்சாபததை அடைந்தான். இந்த அக்னிசாபததைப்பறறிய சரிததிரமும் புலோமா வென்னும் அசுரனுடைய நாசமும் ச்யவனருடைய ஜனனமும் இவ்வாறு முன்னே நடந்தன.

---

### எட்டாவது அத்தியாயம்.

## பௌலோமபர்வம். (தொடர்ச்சு.)



பிராமணரே! பிருகுபுத்திரராகிய அந்த ச்யவனரும் ஸுகன்னியென்பவளிடத்தில் ஜ்வலிக்கிற தேஜஸுள்ள மகாத்மாவாகிய ப்ரமதியென்னும் புத்திரரைப் பெற்ருர். ப்ரமதி, கிருதாசியினிடம் ருரு என்பவரைப் பெற்ருர். ருரு ப்ரமத்வரையினிடம்

---

[1] அழுக்குக்களைப் போக்குமென்பது.

[2] மாம்ஸம்சாப்பிடுகிற சரீரமென்பதற்கு வயிறு அல்லது ஜீர்ணம்செய்யும் அக்னி, பக்ஷிக்கததகாதவறறை பக்ஷிப்பதாக இங்கே சொல்லப்பட்டது.

சுனகரைப் பெற்றார். உயர்ந்த ஸத்வகுணமுள்ள சுனகர் பிருகுவம்சத்தாரையெல்லாம் ஸந்தோஷிக்கச்செய்து உக்கிரமான தவத்திலிருந்து பிறகு அழிவில்லாத கீர்த்தியை அடைந்தார். அந்தணரே! மிகுந்தமஹிமையுள்ள அந்த ருருவின் சரித்திரம் முழுதையும் விரிவாகச்சொல்வேன்; அதையெல்லாம் நீங்கள் கேளுங்கள்.

முற்காலத்தில், தவமும் வித்தையு முடையவரும், எல்லாப் பிராணிகளின் நன்மையிலும் கருத்துள்ளவருமாகிய ஸ்தூலகேசரென்று பெயர்பெற்ற ஒருமஹரிஷி இருந்தார். பிரம்மரிஷியே! அந்தக்காலத்தில் விசுவாவஸுவென்று சொல்லப்பட்ட ஒருகந்தர்வராஜன் மேனகையிடம்கர்ப்பாதானஞ்செய்தான். பிருகுவம்சபுத்திரரே! அப்ஸரஸாகியமேனகை கந்தர்வனுக்குண்டான அந்த கர்ப்பத்தைப் பிரஸவகாலத்தில் ஸ்தூலகேசரிஷியின் ஆச்ரமத்துக்குச் சமீபத்தில் ஈன்றாள். பிராமணரே! அந்த அப்ஸரஸாகிய மேனகை அந்தக்குழந்தையைத்தயையில்லாமலும் லஜ்ஜையில்லாமலும் நதியின்கரையிற் போட்டுவிட்டுச்சென்றாள். காந்தியினால் ஜ்வலிப்பவள் போன்றவளும் தேவகன்னிகையைப் போன்றவளும் மனுஷ்யஸஞ்சாரமில்லாத நதிக்கரையிற் பந்துக்களில்லாமல் விடப்பட்டவளுமாகிய அந்தக்கன்னிகையைச் சிறந்த தேஜஸுள்ள அந்த ஸ்தூலகேசமஹரிஷி கண்டார்; அந்தக்கன்னிகையைக்கண்டு சிறந்த பிராமணராகிய அந்த ஸ்தூலகேசரென்றமுனிசிரேஷ்டர் கிருபையோடு எடுத்துவளர்த்தார். அந்த உயர்ந்தபெண் அவருடைய அழகான ஆச்ரமத்தில்வளர்ந்தாள். சிறந்த மகிமையுள்ள ஸ்தூலகேசமஹரிஷி அவளுக்கு ஜாதகர்மமுதலானகிரியைகளை முறையே சாஸ்திரப்படிசெய்தார். அவள் நல்லஸ்வபாவமும் அழகும் குணங்களுமுள்ளவளாய்ப் பெண்களெல்லாரினும் சிறந்தவளாயிருந்ததனால், மஹரிஷியானவர் அவளுக்குப் [1] பிரமத்வரையென்றுபெரிட்டார். அந்தஸ்தூலகேசருடைய ஆச்ரமத்தில் அந்தப் பிரமத்வரையைக்கண்டு, தர்மத்தில் மனமுள்ள ருரு காமத்தால் பீடிக்கப்பட்டவரானார். அவர், பிறகு, தம்சிநேகிதர்களைக் கொண்டு தமது பிதாவாகிய பிரமதிக்குத்தெரிவிக்க, பிரமதியும் பெயர்பெற்றவராகிய ஸ்தூலகேசரிடம் பிரமத்வரையை யாசித்தார். பிறகு, அவள்பிதாவான ஸ்தூலகேசர் அந்தப்பிரமத்வரையென்னும் கன்னிகையை ருருவுக்குக் கன்னிகாதானம் செய்வதாக வாக்குத்தத்தஞ் செய்து, அடுத்துவரும் ஹஸ்தநக்ஷத்திரத்தில் விவாஹம் செய்வதாக நிச்சயஞ்செய்தார். சிலநாள்களுக்குப்பின், விவாஹகாலம்

1 பிரமதா=பெண்கள்; வரா=சிறந்தவள்.

ஸமீபித்தபோது, பெண்களிற்சிறந்தவளாகிய அந்தக்கன்னிகை ஸகிகளோடுகூட விளையாடுகையில் குறுக்கே நீண்டுபடுத்திருந்த ஸர்ப்பத்தை,மரணம் நெருங்கிவிட்டதனால் காலத்தினால் ஏவப்பட்டு,பாராமல் காலால்மிதித்தாள். அந்தஸர்ப்பம் விதியினால் ஏவப்பட்டு,பாராமலிருந்த பிரமத்வரையினுடைய தேகத்தில் விஷமுள்ளபற்களைநன்றாகப்பதித்தது. அவள் அந்தச்சர்ப்பம் கடித்தவுடன் நிறம்மாறி ஒளிகுன்றிப் பிரஜ்ஞைதப்பி ஆபரணங்கள் நழுவிவிழ, திடீரென்று பூமியில் விழுந்தாள். பார்க்கிறதற்கு மிகவும் பிரியமாயிருந்த அந்தப் பிரமத்வரை, தலைமயிரவிழ்ந்து உயிர்போய் அந்தப்பந்துக்களுக்குத் துக்கமுண்டாகும்படி பார்க்கவழங்காதவளானாள். ஸர்ப்பத்தின் விஷத்தினாற் கொல்லப்பட்ட மெல்லிய இடையையுடைய அவள், பூமியில் தூங்கினவள்போல, அந்த நிலைமையிலும் அதிக அழகாகவேயிருந்தாள். பதுமம்போன்ற நிறமுள்ள அவள், பூமியில்விழுந்து துடிக்கும்போது அவளுடைய பிதாவும் மற்ற ரிஷிகளும் பார்த்தனர். பிறகு, ஸ்வஸ்தியாத்ரேயர், மஹாஜானு, குசிகர், சங்கமேகலர், உத்தாலகர், கடர், பெருங்கீர்த்தியுள்ள ஶ்வேதர், பரத்வாஜர், கௌணகுத்ஸ்யர், ஆர்ஷ்டிஷேணர், கௌதமர், பிரமதி, அவர்புத்திரராகிய ருரு ஆகிய இவர்களும் அந்தவனத்தில் வஸிக்கின்ற மற்றப்பிராமண சிரேஷ்டர்கள் யாவரும் இரக்கத்தோடு வந்து சேர்ந்தனர். பாம்பின் விஷத்தினாற் பீடிக்கப்பட்டு உயிர்போன அந்தப்பெண்ணைக் கண்டு, அவர்கள் இரக்கத்தினாற் பரவசமாகிக் கண்ணீர் விட்டழுதனர். ருரு மட்டும் துக்கப்பட்டுக்கொண்டு வெளியிற்சென்றார். அந்தப்பிராமண சிரேஷ்டர்களனைவரும் அங்கேயே உட்கார்ந்திருந்தனர்.

---

## ஒன்பதாவது அத்தியாயம்.

## பௌலோமபர்வம். (தொடர்ச்சி.)



(ருரு தம் பிராயத்திற் பாதியைக்கொடுத்துப் பிரமத்வரையைப் பிழைப்பித்தது.)

அந்த மஹாத்மாக்களாகிய பிராமணர்கள் அங்கே உட்கார்ந்திருக்கையில் ருரு மிகுந்த துக்கத்துடன் யாருமில்லாத காட்டுக்குட் சென்று கதறினார். அவர் வ்யஸனம் தாங்காமல் மிகவும்தீனமாக அழுது தம் பிரியையான பிரமத்வரையை நினைத்துக் கண்ணீர் விட்டுக்கொண்டு, 'மெல்லிய அங்கமுள்ள பிரமத்வரை என்னுடைய

சோகத்தை விருத்தி செய்துகொண்டு, என் பிராணனை அபகரிப்ப வள்போற் பூமியிற் படுத்திருக்கிறாள். பூர்ணசந்திரனைப்போன்றமுகமும், பருத்து விசாலமாகிய நிதம்பமும், தாமரையிதழ்போன்ற நேத்திரங்களுமுடைய அந்தப் பிரமத்வரை இறந்தாலும் என்உயிரையும் உடனே எடுத்துக்கொண்டேபோவாள்; ஸந்ததியில்லாமையால் மாதா பிதாக்கள் ஞாதிகள் இவர்களின் பிண்டத்தை விட்டுவிட்ட எனக்கும் மற்ற அவள்சுற்றத்தார்களுக்கும் இதற்கு மேற்பட்ட துக்கம் என்ன இருக்கிறது? நான் தானங்கொடுத்துத் தவஞ்செய்து குருக்களைச் சுச்ரூஷையினால் செம்மையாகத் திருப்திசெய்தவனாயிருந்தால் அவற்றினால் என்னுடைய பிரியை ஜீவிக்கட்டும்; நான் பிறந்ததுமுதல் மனத்தைஜயித்து உறுதியான தவமுள்ளவனாக இருந்தால், இந்த உயர்ந்த பெண்ணாகிய பிரமத்வரை இப்போது எழுந்திருக்கட்டும்; [1] எங்கும் நிறைந்தவரும், ஐம்புலன்களையும் ஆளுகிறவரும், லோக நாயகரும், அஸுரசத்துருவுமாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்து எனக்கு உறுதியான பக்தியிருக்குமானால், என்னுடைய பிரியையான பிரமத்வரை ஜீவிக்கட்டும்' என்று புலம்பிக்கொண்டிருக்கையில், தேவர்களெல்லாரும் கிருபைகூர்ந்து ருருவுக்கு ஹிதமானவார்த்தையைச் சொல்லும்படி ஒரு தூதனையனுப்பினார்கள்.

தேவர்களுடைய பிரியத்தைச் செய்பவனாயும் சுத்தனாயுமிருக்கும் அந்தத் தூதன் விரைவாகவந்து துக்கப்பட்டுக்கொண்டிருக்கிற ருருவையழைத்து, 'பிராம்மணோத்தமரே! உமக்கு அனுகூலர்களான தேவர்களெல்லாரும் உமக்கு ஹிதத்தைச் சொல்லும்படி என்னை உம்மிடம் அனுப்பியிருக்கின்றனர்; அதை உமக்குச் சொல்லுகிறேன்; கேளும்; ருருவே! நீர் துக்கப்பட்டு உமது வாக்கினாற் சொல்வது பொய்யன்று; தர்மத்தில் சித்தமுள்ளவரே! மனுஷ்யன் ஆயுள்போனபிறகு ஜீவிப்பதில்லை; கந்தர்வனுக்கும் அப்ஸரஸுக்கும் புத்திரியாகிய இந்தப் பாக்கியமில்லாத பிரமத்வரைக்கு ஆயுள் போய்விட்டது; ஆகையால், ஐயா! நீர் எவ்வகையிலும் வ்யஸனப்படவேண்டாம்; இவள் பிழைப்பதற்குரிய உபாயம் முன்னமே சிறந்த மஹிமையுள்ள தேவர்களால் விதிக்கப்பட்டிருக்கிறது; உமக்கு அதைச்செய்ய இஷ்டமிருந்தால் இந்த உலகத்தில் பிரமத்வரையை நீர் அடையலாம்' என்று சொன்னான்.

அதைக்கேட்ட ருரு, 'தேவனே! தேவர்கள் விதித்த உபாயம் யாது? சரியாகச்சொல்; கேட்டபின் நான் அப்படியே செய்வேன்;

---

1 இங்கு ஒரு சுலோகம் விடப்பட்டது.

நீ என்னைக் காப்பாற்றவேண்டும்' என்றுசொல்ல, தேவதூதன் 'பிருகுவம்சபுத்திரரான ருருவே! அந்தக்கன்னிகைக்கு உமது ஆயுளில் ஒருபாதிகொடுத்தால் உமதுபாரியையாகிய அவள் எழுந்திருப்பாள்' என்றுகூற, ருரு, 'தேவசிரேஷ்டனே! அந்தக்கன்னிகைக்கு என் ஆயுளிற் பாதியைக்கொடுக்கிறேன்; அழகான உருவமும் ஆபரணங்களுமுடைய என்பிரியமுள்ள அந்தக் கன்னிகை எழுந்திருக்கட்டும்' என்றுசொன்னார். பிறகு, மிக்கசிரேஷ்டர்களான பிரமத்வரையின் பிதாவாகிய கந்தர்வராஜனும் அந்தத் தேவதூதனுமாகிய இருவரும் யமனிடத்திற்குப்போய், 'தர்மராஜாவே! உனக்கிஷ்டமிருந்தால் இவ்வாறு இறந்துபோன பிரமத்வரையென்னும் ருருவின் அழகானபாரியை ருருவின் ஆயுளின் ஒருபாதியைக்கொண்டு எழுந்திருக்கட்டும்' என்று சொன்னார்கள்.

தர்மராஜன், 'தேவதூதனே! வேண்டுமானால் ருருவின்பாரியையாகிய பிரமத்வரை ருருவின் ஆயுளின் ஒரு பாதியைக்கொண்டு எழுந்திருக்கட்டும்' என்று சொன்னான். இவ்வாறு சொன்ன பிறகு, அந்தக் கன்னிகையான பிரமத்வரையென்னும் உயர்ந்தபெண் அந்த ருருவின் ஆயுளில் ஒருபாதியைக்கொண்டு தூங்கினவள்போல் எழுந்தாள். அதிகமாக விருத்தியடைந்திருக்கும் ஆயுளில் ஒருபாதியை மனைவிக்காகக் கொடுப்பதானது, ருரு சிறந்த மஹிமையுடையவராதலால், அவசியம் நேரிடவேண்டிய விதியினால் [1]அவருக்கு நேர்ந்ததென்று அறியப்பட்டது.

பிறகு, குறிப்பிட்ட தினத்தில் பிரமத்வரை ருரு இவ்விருவருடைய பிதாக்களும் ஸந்தோஷத்துடன் அவர்களுக்கு விவாஹத்தைச் செய்வித்தனர். அவர்களிருவரும் ஒருவர்க்கொருவர் ஹிதத்தையே விரும்புகிறவர்களாக விளையாடிக்கொண்டிருந்தனர். உறுதியானதவமுள்ள ருருவானவர், தாமரைத்தாதுவைப்போல் அழகான நிறமுள்ளவளும் கிடைப்பதற்கு அருமையானவளுமாகிய பாரியை கிடைத்தபின், ஸர்ப்பங்களை அழிப்பதாக நியமஞ்செய்துகொண்டார். அவர் எப்போதும் எந்த ஸர்ப்பங்களைப் பார்த்தாலும் கடுங்கோபங்கொண்டவராய் ஆயுதமெடுத்துக்கொண்டு இயன்றவரையில் அடித்துவந்தார். அந்த ருருவென்னும் பிராமணர் ஒருகாலத்தில் ஒரு பெருங்காட்டுக்குப்போய் அங்கே வயதுசென்ற [2] ஒரு தண்ணீர்ப்பாம்பு படுத்திருந்ததைக்கண்டார். பிறகு, அந்தப் பிராமணர் கோபங்கொண்டு யமனுடைய தண்டாயுதத்துக்கு ஒப்

---

1 மற்றவர்களுக்கு இது முடியாதென்பது. 2 டுண்டுபம் என்பதுமூலம்; டுண்டுபம்=விஷமற்ற ஒருவகைப்பாம்பு.

பான தடியை ஓங்கி அதைக்கொல்லப்போனபொழுது, அந்த நீர்ப் பாம்பு அவரைப்பார்த்து, 'தபோதனரே! நான் இப்போது உமக்குச் சிறிதும் தீங்குசெய்யவில்லையே; ஏன் என்மீது கோபித்து அவஸரமாக என்னைக் கொல்லவருகிறீர்?' என்று கேட்டது.

---

## பத்தாவது அத்தியாயம்.

## பௌலோமபர்வம். (தொடர்ச்சி.)

(ருருவுக்கும் தண்ணீர்ப்பாம்புக்கும் ஸம்வாதம்.)

ருரு, 'என்னுடைய உயிருக்குச்சமானமானமனைவியை ஒரு ஸர்ப்பம் கடித்துவிட்டது; பாம்பே! அதற்காக நான் எந்த ஸர்ப் பத்தை எப்போது கண்டாலும் கொல்லவேண்டுமென்று ஒரு கொடிய ஸங்கல்பத்தை எனக்குள்ளேயே செய்துகொண்டேன்; அதனால், நான் உன்னைக் கொல்லப்போகிறேன்; இப்போது உன் னுயிர் பிரிந்துபோகப்போகிறது' என்றுசொன்னார். டுண்டுபம், 'பிராமணரே! இந்த உலகத்தில் மனிதர்களைக் கடிக்கிற ஸர்ப்பங் கள்வேறு; நீர்ப்பாம்புகள் ஸர்ப்பங்களைப்போலிருப்பதனாலேயே நீர் அவற்றைக்கொல்வது சரியன்று; நீர்ப்பாம்புகளுக்கும் ஸர்ப்பங் களுக்கும் ஸ்வபாவம் வெவ்வேறு; ஸௌக்கியம் வெவ்வேறு; பிற ரால்வரும் உபத்திரவமும் துயரமுமாத்திரம் ஒன்றாயிருக்கின்றன. நீர் தர்மந்தெரிந்தவராக இருந்தும் நீர்ப்பாம்புகளைக் கொல்வது உமக்குத் தகாது' என்று சொல்லிற்று.

அந்தத் தண்ணீர்ப்பாம்புசொன்ன இந்தச் சொல்லைக்கேட்ட போது, அந்த ருரு பயத்தினால் ஒடுங்கியிருந்த தண்ணீர்ப் பாம்பை ரிஷியென்று அறிந்து அதைக் கொல்லவில்லை. எல்லாம் தெரிந்தவரான ருரு அந்தத்தண்ணீர்ப்பாம்பைச் சமாதானம் செய் வதற்காக, 'பாம்பே! நீ யார்? எதனால் இந்தப் பாம்புஜன் மத்தை அடைந்திருக்கிறாய்?' என்று கேட்க, நீர்ப்பாம்பு, 'ருருவே! நான் முன்னே ஸஹஸ்ரபாத் என்று பெயருள்ள ரிஷியாக இருந் தேன்; அப்படியிருந்த நான் ஒரு பிராமணருடைய சாபத்தினால் பாம்புஜன்மத்தை அடைந்தேன்' என்று சொல்லிற்று. ருரு 'உத்தம ஸர்ப்பமே! ஏன் உன்னைப் பிராமணன் கோபத்தினால் சபித்தான்? எவ்வளவு காலம்வரையில் உனக்கு இந்த ஜன்மம் இருக்கும்?' என்று கேட்டனர்.

## பதினோராவது அத்தியாயம்.

## பௌ லோ ம ப ர் வ ம். (தொடர்ச்சி.)

—※—

(நீர்ப்பாம்பின் சரித்திரம்.)

நீர்ப்பாம்பு, 'ஐயா! தவவலிமையுடையவரும் மிக்க கடுஞ் சொல்லுள்ளவருமாகிய ககமரென்றுபெயருள்ள ஒரு பிராம்மணர் முன்னே எனக்கு ஸ்நேஹிதராயிருந்தார். நான் பால்யத்தில் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது, புல்லினால் ஒரு ஸர்ப்பத் தைச்செய்து அக்னிஹோத்திரத்தில் ஞாபகம்வைத்திருந்த அவ ரைப் பயமுறுத்தினேன்; (அதனால்) அவர் மூர்ச்சித்தார்; ஸத் தியவாக்கும் கூர்மையான தவமுமுள்ள அந்தத்தபோதனர் மறு படியும் பிரஜ்ஞைவந்தபின் கோபத்தினால் என்னைத் தகிப்பவர்போல் 'எனக்குப் பயமுண்டாக்குவதற்கு எவ்விதமான சக்தியுள்ள ஸர்ப் பத்தை நீ செய்தாயோ அவ்விதமான சக்தியுள்ள ஸர்ப்பமாக நீ என் சாபத்தாலாவாய்' என்றுசொன்னார். தபோதனனே! அவருடைய தவத்தின் சக்தியை அறிந்த நான் அப்போது மிகவும் மனத்தில் நடுக்கமுற்றேன். பரபரப்புடன் அவரை நமஸ்காரஞ்செய்து கை கூப்பி அவருக்கு எதிரில் நின்று, 'ஸ்நேஹிதரென்று பரிஹாஸம் செய்வதற்கு விளையாட்டாக நான் உமக்கு இதைச்செய்தேன்; பிரா மணரே! என்விஷயத்தில் பொறுக்க வேண்டும்; இந்தச்சாபத்தை நிவர்த்திசெய்யவேண்டும்' என்று அவரை வேண்டினேன். பிறகு, அதி கமாக மனத்தில் துயரமுற்ற என்னை அந்தத்தபோதனர் பார்த்து மிகவும் பச்சாத்தாபமுள்ளவராய் அடிக்கடி உஷ்ணமாகப்பெருமூச்சு விட்டு, 'நான் சொன்னது எவ்வகையிலும் பொய்யாகாது; தபோத னனே! நான்சொல்வதைக்கேள்; குற்றமற்றவனே! கேட்டபின் இந்தச்சொல் எப்போதும் உன்மனத்திலேயே இருக்கட்டும்; பிரம திக்கு ருருவென்னும் சுத்தரான புத்திரர் உண்டாவார்; சீக்கிரமா கவே, அவரைப்பார்த்தவுடன் உனக்குச் சாபவிமோசனமுண்டாகும்' என்றுசொன்னார்; இப்படி அவர்சொல்லலும், நான்ஸர்ப்பரூபமடைந் தேன்; நீர்தாம் அந்த ருருவென்றுகியாதிபெற்ற பிரமதியின் புத்தி ரர்; இப்போது நான் என்முன்னுருவத்தையடைந்து உமக்குஹிதஞ் சொல்லப்போகிறேன்' என்று சொல்லி, மிகுந்தபுகழ்பெற்றஅந்தப் பிராம்மணசிரேஷ்டர், அப்போதே நீர்ப்பாம்பின் வடிவத்தைவிட்டுத் திரும்பவும் பிரம்மதேஜஸோடுகூடிய தம் ரூபத்தையடைந்தார் அந்தப்பிராம்மணர், ஒப்பற்ற மகிமையுள்ள ருருவைப்பார்த்து, 'சிறந்

தவரே! எல்லாப் பிராணிகளையும் ஹிம்ஸிக்காமலிருப்பது முதன்மையான தர்மம்; ஆதலால், பிராமணன எவ்விடத்திலும் எந்தப் பிராணிகளையும் ஹிம்ஸித்தல்கூடாது; இவ்வுலகத்தில் பிராமணன் சாந்தன்தான் என்பது பெரியபிரஸித்தியாக இருக்கிறது; வேத வேதாங்கங்களை அறிந்தவன் எல்லாப் பிராணிகளுக்கும் அபயம் கொடுப்பவனல்லவா? கொல்லாமையும், பொய்யாமையும், பொறுமையும், வேதங்களைமறவாமையும் பிராமணருக்கு முக்கியமான தர்மமென்று நிச்சயிக்கப்பட்டுள்ளன. க்ஷத்திரிய தர்மத்தை, நீர் இப்போது விரும்பத்தகாது. தண்டிப்பதும் கடுமையாயிருப்பதும் பிரஜைகளைக் காப்பதுமாகிய இவையெல்லாம் க்ஷத்திரியதர்மமாக ஏற்பட்டவை. ருருவே! நான் சொல்லுகிறேன்; கேளும். பிராமணோத்தமரே! முன்னமே ஜனமேஜயருடைய யஜ்ஞத்தில் ஸர்ப்பங்களைக் கொன்றதையும், தபஸும் ஸாமர்த்தியமும் மனோபலமுமுள்ளவரும் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவரும் பிராமணர்களுக்குள்ளே சிறந்தவருமான ஆஸ்திகரென்னும் பிராமணர், அந்த ஸர்ப்பயாகத்தில் பயமடைந்த ஸர்ப்பங்களைக் காப்பாற்றினதையும் நான் சொல்லுகிறேன்; கேளும்' என்று சொன்னார்.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

## பௌலோமபர்வம். (தொடர்ச்சி).



(ஜனமேஜயருடைய ஸர்ப்பயாகப் பிரஸ்தாவம்).

ருரு, 'பிராமணசிரேஷ்டரே! ஜனமேஜயராஜா அந்தயாகத்தில் ஸர்ப்பங்களை எவ்வாறு கொன்றார்? அவைகளை எதற்காகக் கொன்றார்? அந்தச் சிறந்தஞானமுள்ள ஆஸ்திகரால் ஸர்ப்பங்கள் ஏன் விடுவிக்கப்பட்டன? பிராமணசிரேஷ்டரே! முழுதும் கேட்க விரும்புகிறேன்' என்று சொல்ல, ரிஷி, 'ருருவே! பெரிதான ஆஸ்கதி சரித்திரம் முழுமையும் பிராமணர்கள் சொல்ல நீர் கேட்பீராக; நான் சீக்கிரம் செலலவேண்டியவனாக இருக்கிறேன்' என்று சொன்னார்.

இவ்வாறுசொல்லி ஸமர்த்தராகிய அந்தரிஷிசிரேஷ்டர் யோக சக்தியால் மறைய, ருரு மனத்தில் பரபரப்புக்கொண்டு அதை ஆச்சரியமாக நினைத்தார்; மறைந்துபோன அந்த ரிஷியைத் தேடிக்கொண்டு முழுபலத்தோடும் எங்கும் ஓடிக் களைத்துப்பூமியில்விழுந்து மிகுந்த மூர்ச்சையடைந்து பிரஜ்ஞைதப்பிப்போனார். பிரஜ்ஞை

வந்தபிறகு, அவர் உண்மையான அந்த ரிஷியின் பேச்சை அடிக்கடி நினைத்துக்கொண்டு வந்து, தம் பிதாவுக்குச் சொன்னார். நீர்ப் பாம்புசொன்னதையும் ஆஸ்தீகரைப்பற்றி அந்த நீர்ப்பாம்புசொன்ன கதையையும் பிதாவுக்குச் சொல்லி, 'பகவானே! அந்தக்கதையை நீங்கள் எனக்குச் சொல்லவேண்டும்; நான் நடந்தபடி கேட்கவிரும்பு கிறேன்' என்றுபிதாவைக்கேட்க, அவருடைய பிதாவும் அவருக்கு அந்தக்கதை முழுவதையும் சொன்னார்.

பௌலோமபர்வம் முற்றிற்று.

---

## பதின்மூன்றாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம்.



ஆஸ்தீகர்சரித்திரம், ஜரத்காருசரித்திரம்.

(ஜரத்காருவுக்கும் அவர்பிதிர்க்களுக்கும்நடந்த ஸம்பாஷணை.)

**சௌனகரானவர்** ஸௌதியைப்பார்த்து, "ஸூதபுத்ரரே! ராஜசிரேஷ்டராகிய அந்தஜனமேஜயராஜாவானவர் எதற்காக ஸர்ப்பயாகத்தினால் ஸர்ப்பங்களை நாசஞ்செய்தார்? அதை யெல்லாம் பூரணமாக நடந்தபடி எனக்கு சொல்லும்; ஜபஞ்செய்கிற வர்களிற் சிறந்தவராகிய ஆஸ்தீகரென்னும் பிராமண சிரேஷ்டர் ஜ்வலித்த அக்கினியிலிருந்து ஸர்ப்பங்களை எதற்காக விடுவித்தார்? ஸர்ப்பஸத்திரஞ்செய்த அந்த ராஜா யாருடைய புத்திரர்? அந்தப் பிராமணசிரேஷ்டராகிய ஆஸ்தீகர் யாருடையபுத்திரர்? அவற்றை எனக்குச்சொல்லும்" என்றுகேட்க, ஸௌதி, "பிராமணரே! ஆஸ்தீகசரித்திரம் பெரியசரித்திரம்; பேசுகிறவர்களுட்சிறந்தவரே! அது பெரியோர்களால் எப்படிச்சொல்லப்பட்டுவருகிறதோ அந்தப் பிரகாரமே நான் முழுவதும் சொல்லுகிறேன்; நீங்கள் என்னிடம் கேளுங்கள்" என்றுசொன்னார்.

சௌனகர், "கீர்த்திபெற்ற புராதனரிஷியாகிய ஆஸ்தீகரென் னும் பிராமணருடைய இந்த அழகான கதையை முழுவதும் கேட்க விரும்புகிறேன்" என்று சொல்ல, ஸௌதி சொல்லுகிறார்:—"இந்த இதிஹாஸத்தைப் [1]புராதனமென்று பிராமணர்கள் சொல்லு கின்றனர். முன்னே நைமிசாரண்யத்திலிருந்த பிராமணர்கள், வியாஸசிஷ்யரும் சிறந்தஞானமுள்ளவரும் என்பிதாவுமாகிய ரோம ஹர்ஷணரைக்கேட்க, அவர் அவர்களுக்குக் கிருஷ்ணத்வைபாயன ராற்சொல்லப்பட்ட இந்தச்சரித்திரத்தைச்சொன்னார்; நான் அவ

---

1 பூர்வகல்பத்திலுமுள்ளது.

ரிடம் கேட்டபடிசொல்வேன். சௌனகரே! எல்லாப் பாவங்களேயும் போக்கத்தக்க இந்த ஆஸ்தீகசரித்திரத்தை இப்போது கேட்கின்ற உமக்கு முழுவதும் சொல்வேன்.

ஆஸ்தீகரின் பிதா ஜரத்காருவென்று கியாதிபெற்றவராயிருந்தார். அவர் பிரம்மாவைப்போன்றவர்; சுதந்திரமானவர்; அவர் பிரமசாரியாகவே உணவைவிட்டு எப்போதும் உக்கிரமான தவத்திலேயே ஊக்கமுள்ளவராயிருந்தார்; அவர் வீரியம் கீழ் நோக்காதவர்; பெருந்தவமுள்ளவர்; கிராமத்துக்கு ஓர் இராத்திரியாகத் தங்குகிறவர்களிற் சிறந்தவர்; தர்மந்தெரிந்தவர்; உறுதியான நியமமுள்ளவர். ஒருஸமயம், தவவலிமை வாய்ந்த மஹானுபாவராகிய அந்த ஜரத்காருமுனி சூரியன் அஸ்தமித்தவிடத்தில் தங்கிக்கொண்டு பூமியெல்லாந் திரிந்தார். சிறந்த மஹிமையுள்ள அம்முனிவர் எல்லாப் புண்ணியதீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்துகொண்டும் மனத்தை ஜயிக்காதவர்கள் செய்யமுடியாத தீக்ஷையை அநுஷ்டித்துக்கொண்டும் ஆகாரமில்லாமல் காற்றையே புசித்துக்கொண்டும் உலர்ந்து கண்மூடாமல் எங்கும் திரிந்துகொண்டிருந்தார்; ஜ்வலிக்கின்ற அக்கினிக்கொப்பான தேஜஸுள்ள அந்தரிஷி, இங்குமங்கும் அலைந்து திரிந்துகொண்டிருக்கும்போது, ஒருகாலத்தில் பெரிய பள்ளத்தில் கால்மேலும் தலைகீழுமாகத் தொங்கிக்கொண்டிருந்த தம் பிதிர்க்களைக் கண்டார். அந்த ஜரத்காரு அந்தப் பிதிர்க்களைக் கண்டதும், 'இந்த வளையில் எப்போதும் ஒளிந்து வஸித்துக்கொண்டிருக்கும் எலியினால் சுற்றிலும் கடிக்கப்பட்ட விலாமிச்சைவேர்க்கோலைப்பற்றிக்கொண்டு இந்தப் பள்ளத்தில் தலைகீழாகத் தொங்குகின்றீர்களே: நீங்கள் யார்?' என்றுகேட்டார். 'நாங்கள் [1]யாயாவரர்களென்று பெயருள்ள உக்கிரமான தவமுள்ள ரிஷிகள்; பிராமணா! ஸந்ததிகுறைந்துபோனதினால் பூமிக்குக்கீழே போய்க்கொண்டிருக்கிறோம்; அதிர்ஷ்டமில்லாத எங்களுக்கு அதிர்ஷ்டஹீனனான ஜரத்காருவென்னப்பட்ட ஒருவன்தான் ஸந்ததியாயிருக்கிறான். அந்தமூடன் தவம் ஒன்றையேபற்றியிருப்பதனால்புத்திரர்களைப் பெறுவதற்குக்காரணமான விவாஹத்தைச் செய்துகொள்ள விரும்பாமலிருக்கிறான்; அவனுக்குச்சந்ததி யில்லாமற்போனதனால் எங்களுக்கு நாதனாக அவன் இருந்தும், நாங்கள் பாபஞ்செய்தவர்களைப்போல் நாதனற்று இந்தப்பள்ளத்தில் தொங்குகிறோம்; மனுஷ்யலோகத்தில் எவர்களுக்குச் சுகந்தரத்தகுந்த சந்ததி யில்லாமலிருக்கிறதோ அவர்கள் புண்ணியம்செய்தவர்களாயினும் அவர்களு

1 கிராமத்துக்கு ஓர் இராத்திரியாகத் தங்குகின்றவர்கள்.

க்கு ஸ்வர்க்கத்தில் ஸ்தானமில்லை ; மிகச் சிறந்தவனே ! நீயார்? பந்துவைப்போல் எங்களைப்பற்றி வ்யஸனப்படுகிறாயே. பிராமணா ! இங்கிருக்கிற நீ எங்களுக்கு என்னமுறை என்பதையும் பரிதாபப்படத்தக்க எங்களைப்பற்றி நீ எதற்காக வ்யஸனப்படுகிறாயென்பதையும் நாங்கள் தெரிந்துகொள்ள விரும்புகிறோம்' என்று பிதிர்க்கள் கேட்க, ஜரத்காரு சொல்லுகிறார்.

'நீங்கள் என்னுடைய முன்னோராகிய பிதிர்க்களும் பிதாமஹர்களுமானவர்கள்; நான் ஜரத்காரு ; இப்போது உங்களுக்கு நான் செய்யவேண்டியதென்ன ? சொல்லுங்கள் ' என்றார். பிதிர்க்கள். 'ஸ்வதந்திரனே ! நம்முடைய குலத்திற்குப் புத்திர ஸந்ததி வேண்டுமென்றாவது உன் ஆத்மார்த்தமாகவாவது எங்களுக்காகவாவது தர்மமென்றேயாவது நினைத்து விவாஹஞ்செய்துகொள்ளச் சிரத்தையுடன் முயல்வாயாக ; புத்திரவான்கள் அடையும் கதியை யடைவது பூர்வஜன்மத்துப் புண்ணியங்களின் பலன்களினாலுமில்லை ; இப்போது ஸம்பாதிக்கின்றதவங்களினாலுமில்லை ; 'புத்திரனே ! ஆதலால், நீ எங்கள் ஆஜ்ஞையின்படி விவாஹஞ் செய்துகொள்வதில் முயற்சியையும் ஸந்ததியில் விருப்பத்தையும் செய் ; எங்களுக்கு இதுதான் பெரிய நன்மை' என்று சொன்னார்கள்.

ஜரத்காரு, 'நான் மனைவியையும் ஜீவனத்துக்காகத் தனத்தையும் தேடேன் ; ஆனாலும், உங்களுடைய நன்மைக்காக விவாஹஞ்செய்துகொள்வேன்; நான் ஒரு நியமத்தை ஏற்படுத்தப் போகிறேன் ; அந்த நியமப்படி எனக்குப் பெண்கிடைத்தால் நான் விவாஹஞ்செய்துகொள்வேன்; இல்லாவிட்டால் இல்லை ; என் பெயருள்ள கன்னிகையாக இருக்கவேண்டும். அந்தக் கன்னிகையை அவள் பந்துக்கள்தாமே எனக்குக் கொடுக்கமுயலவேண்டும். அப்போது அவளை நான் பிக்ஷையைப்போல்வாங்கிக் கொண்டுசாஸ்திரப்படி விவாஹஞ் செய்துகொள்வேன் ; ஏழையான எனக்குப் பாரியை எவன் தேடிக்கொடுப்பான் ? அப்படி ஒருவன் கொடுப்பானாகில் பிக்ஷையைப்போற் பெற்றுக்கொள்வேன். பிதிர்க்களே ! இந்த நியமப்படி விவாஹத்திற்காகப் பலமுறை முயற்சி செய்வேன் ; இதற்கு மாறாகச்செய்யேன் ; அவளிடம் உங்களைக் கரையேற்ற ஒருஸந்ததி உண்டாகும் ; என்னுடைய பிதிர்க்கள் ஸ்திரமானஸ்தானத்தை அடைந்து ஸந்தோஷமாக இருக்கக்கடவர்' என்று சொன்னார்.

## பதினான்காவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(ஜாரத்காருரிஷி வாஸுகியின் ஸஹோதரியான ஜாரத்காருவை மணம்புரிதல்.)

பிறகு, உறுதியான நியமமுள்ள அந்தப்பிராமணர், விவாஹத்திற்காகப் பாரியையைத் தேடிக்கொண்டு பூமிமுழுவதும் ஸஞ்சரித்தும் பாரியையை அடையவில்லை; அந்தப்பிராமணர் ஒருநாள் பிதிர்க்கள் சொன்னதை நினைத்துக்கொண்டு வனஞ்சென்று கன்னிகையைக்கொடுவென்று பிக்ஷைகேட்பதுபோல் மூன்றுமுறை மெதுவாகக்கேட்டார். அப்போது, வாஸுகி தன் ஸஹோதரியைக் கொடுக்க ஸித்தமாக வைத்துக்கொண்டு அவரை அழைத்தான். அவர் அவளைத் தம் பெயருள்ளவள் அல்லளென்று நினைத்து அவளை வாங்கிக்கொள்ளவில்லை. தம் பெயருள்ள பெண்ணை ஒருவன் முன்னமே அவருக்கென்று நிச்சயமாக வைத்திருந்து கொடுப்பானாயின் வாங்கிக்கொள்ளலாமென்று அந்தமஹாத்மாவான ஜாரத்காருவின் மனத்தில் நிச்சயமிருந்தது. சிறந்த புத்தியுள்ளவரும் தவத்திற்சிறந்தவருமாகிய ஜாரத்காரு, 'ஓ நாகனே! இந்த உன் ஸஹோதரி என்ன பெயருள்ளவள்? உண்மையைச் சொல்' என்று கேட்க, வாஸுகி, 'ஜாரத்காருவே! இந்த என் தங்கையும் ஜாரத்காரு என்று பெயருடையவள். அழகிய இடையுள்ள இவளை உமக்குப் பாரியையாக நான் கொடுக்கிறேன்; வாங்கிக்கொள்ளும்; பிராமண சிரேஷ்டரே! இவள் உமக்காக முன்னமே காப்பாற்றி வைக்கப்பட்டிருப்பதனால் இவளை நீர் அங்கீகரிக்கவேண்டும்' என்று சொன்னான்

இவ்விதமாகச் சொல்லி, பிறகு, அந்த ச்லாக்கியமானபெண்ணை அவருக்குப் பாரியையாகக் கொடுத்தான். அவரும் சாஸ்திரோக்தமான கிரியைகளைச் செய்து அவளைப் பாணிக்ரஹணஞ்செய்தார்.

---

## பதினைந்தாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(ஜாரத்காருவுக்கு ஆஸ்தீகர் பிறந்து ஸர்ப்பங்களுக்குச் சாபவிமோசனம் செய்வித்தது.)

பிரம்மஞானிகளுக்கெல்லாம் சிறந்தவரே! முன்னே ஸர்ப்பங்களின் தாயாகிய கத்ரு ஸர்ப்பங்களைப் பார்த்து, 'ஜனமேஜ

யருடையயஜ்ஞத்தில் உங்களை அக்னி தகிக்கப்போகிறான்'' என்று சபித்திருந்தாள். அந்தச்சாபத்தைச் சமனஞ்செய்வதற்காக நாக ஶ்ரேஷ்டனானவாஸுகி தன்ஸஹோதரியைச் சிறந்ததவமுள்ள அந்த மஹாத்மாவாகிய ரிஷிக்குக்கொடுத்தான். அவர் அவளைச் சாஸ்திரப்பிரகாரம் கிரியைகளைச்செய்து பாணிக்கிரஹணம் செய்துகொண்டார். அவருக்கு அவளிடம் ஆஸ்தீகரென்னும் பெயருள்ளபுத்திரர் பிறந்தார். அவர் உயர்ந்தமனமுள்ளவர்; தபஸ்வி; மஹாத்மா; வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவர்; எல்லா ஜனங்களிடத்தும் பக்ஷபாதமின்றி ஸமமாக இருப்பவர்; பிதாவுக்கும் மாதாவுக்கும் பயத்தை நீக்குகிறவர்.

இப்படியிருக்கையில், நெடுங்காலத்துக்குப் பிறகு பாண்டவ வம்சத்திற்பிறந்த ஜனமேஜயராஜர் ஸர்ப்பஸத்ரமென்று பெயருள்ள மஹாயாகத்தைச் செய்தாரென்று நமக்குக்கேள்வி. ஸர்ப்பங்களின் நாசத்திற்காக அந்தயாகம் நடந்தபோது, மிகச்சிறந்த தபஸுள்ள அந்த ஆஸ்தீகர் தமது ஸஹோதரர்களும் மாதுலர்களும் மற்றவர்களுமாகிய அந்தஸர்ப்பங்களைச் சாபத்திலிருந்து விடுவித்தார்; அப்படியே ஸந்ததியைவிருத்திசெய்து பிதிர்க்களைக் கரையேற்றினர். பிராமணரே! தபஸினாலும் பலவிதமான யஜ்ஞதீக்ஷைகளாலும் தேவர்களின் கடனையும் வேதாத்தியயனங்களினால் ரிஷிகளின் கடனையும் தீர்த்தார்; நிரம்பினதக்ஷிணைகளோடுகூடிய யாகங்களினால் தேவர்களையும், பிரமசரிய நியமத்துடன் வேதமோதினதனால் [1]ரிஷிகளையும், புத்திரஸந்ததியினால் பிதிர்க்களையும் த்ருப்தி அடையச்செய்தார்.

உக்கிரமான தவமுள்ளஜரத்காரு பிதிர்க்களின் கடனாகிறபெரிய பாரத்தையிறக்கித் தம் பிதிர்க்களோடுகூடவே தாமும் ஸ்வர்க்கத்துக்குப்போனார்; ஜரத்காருவென்னும்ரிஷி வெகுகாலத்துக்குப்பின்பு ஆஸ்தீகரென்னும் புத்திரரையடைந்து சிறந்த தவத்தையுஞ்செய்து ஸ்வர்க்கம்சென்றார். இந்த ஆஸ்தீகசரித்திரத்தை நடந்தபடி நான் சொன்னேன். ப்ருகுஶ்ரேஷ்டரே!உங்களுக்கு இன்னும்நான்சொல்ல வேண்டியதென்ன ? சொல்லுங்கள் '' என்று ஸௌதி கேட்டனர்.

---

1 வேதங்களையும்.

## பதினொருவது அத்தியாயம்.

### ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)

—※※※—

(கத்ரு வினதை இருவருக்கும் புத்ரஜனனம்.)

சௌனகர், "ஸூதபுத்திரரே! பரந்தஞானமுள்ளவரும் பரோபகாரியுமான ஆஸ்தீகருடைய இந்தக் கதையைத் திரும்பவும் விரிவாக நீர் சொல்லக்கடவீர்; எங்களுக்குக் கேட்கவிருப்பம் அதிகமாயிருக்கிறது. மலர்ந்த முகத்தையுடையவரே! நீர் நயமான எழுத்துக்களோடுகூடிய சொற்களை இனிமையாகச் சொல்லுகிறீர். ஐயா! மிகவும் த்ருப்தியடைகிறோம். உமது பிதாவான ரோமஹர்ஷணர்போலவே நீர் இதைச்சொல்லுகிறீர். உம்முடைய பிதாவும்எங்களுக்குச் சொல்வதற்கு எப்போதும் ஆசையுள்ளவராயிருப்பார். இந்த ஆஸ்தீகசரித்திரத்தை உமதுபிதா சொன்னதுபோலவே நீரும் சொல்லும்" என்று கேட்க, ஸௌதிசொல்லுகிறார்.

"தீர்க்காயுஷ்மானே! என்பிதா சொல்ல நான் கேட்டபடி இந்த ஆஸ்தீகசரித்திரத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். பிராமணரே! குற்றமற்றவரே! முந்தியதேவயுகத்தில் தக்ஷப்பிரஜாபதியின்சிறந்த பெண்களாகிய இரண்டுஸஹோதரிகள் ஆச்சரியப்படத்தக்க ரூபமுள்ளவர்களாக இருந்தனர். கத்ருவென்றும் வினதையென்றும் பெயருள்ள அவ்விருவரும் கசியபருக்குப் பாரியைகளாக இருந்தனர். பிரம்மாவுக்கு ஒப்பான அவர்களுடைய பர்த்தாவாகிய கசியபர் அந்தத் தர்மபத்னிகளின்மீது மிகுந்த ஸந்தோஷமடைந்து அவர்களுக்கு அன்புடன் வரங்கொடுப்பதாகச் சொன்னார். இவ்வாறு கசியபர் சிறந்த வரங்கொடுப்பதைக்கேட்டு அந்தச் சிறந்த பெண்களிருவரும் உள்ளமகிழ்ந்து ஒப்பற்ற ஸந்தோஷத்தையடைந்தனர். கத்ரு என்பவள், ஒரேரூபமுள்ள ஆயிரம்நாகர்களைப் பிள்ளைகளாக வரம் கேட்டனள். வினதை, வலிமையில் கத்ருவின்புத்ரர்களுக்கு மேற்பட்ட இரண்டுபுத்ரர்களை வரித்தாள். அவ்விரண்டுபுத்திரரும் ஒளியிலும் உருவத்திலும் பராக்கிரமத்திலும் மேற்பட்டவர்களாக இருப்பதையும் விரும்பினாள். அவளுக்குப் பர்த்தாவான கசியபர், 'நீ கேட்டபடியான புத்திரர்கள் உனக்கு உண்டாவார்கள்' என்று வரம் அளித்தார். அப்போது வினதையும் கசியபரைப்பார்த்து, 'அப்படியே உண்டாக வேண்டும்' என்று சொன்னாள். வினதை அப்போது தான் விரும்பின வரத்தை விரும்பியபடி அடைந்ததனால் ஸந்

ஸந்தோஷமடைந்தாள். வினதைக்கு அதிகசக்தியுள்ள இரண்டு புத்திரர்கள் கிடைத்ததனாலும், கத்ருவுக்கு ஒரேரூபமான ஆயிரம்புத்திரர்கள் கிடைத்ததனாலும் இருவருக்கும் மனோரதங்கள் நிறைவேறின. சிறந்ததவமுள்ள அந்தக்கசியபர், வரங்களினால் ஸந்தோஷமடைந்த பாரியைகளைப்பார்த்து, 'இருவரும் அவரவர்கர்ப்பத்தை ஜாக்கிரதையாக வைத்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லி வனத்திற்குச் சென்றார்.

பிராமண சிரேஷ்டரே! நீண்டகாலத்துக்குப்பின், கத்ரு ஆயிரம் முட்டைகளையும் வினதை இரண்டு முட்டைகளையும் பெற்றனர். அவ்விருவர்களுடைய முட்டைகளையும் வேலைக்காரிகள் ஸந்தோஷத்துடன் அவற்றிற்குவேண்டிய அளவான உஷ்ணமுள்ள பாத்திரங்களில் ஐந்நூறுவருஷகாலம் வைத்திருந்தனர். பிறகு, ஐந்நூறாவது வருஷத்தில் கத்ருவின் புத்திரர்கள் முட்டைகளை விட்டு வெளிவந்தனர். வினதையினுடைய இரண்டுமுட்டைகளிலிருந்து மட்டும் இரண்டு புத்திரர்களும் காணப்படவில்லை.

பிறகு, புத்திரர்களை விரும்பின வினதாதேவி பரிதாபப்படத்தக்கவளாக வெட்கிப்போய் ஒருமுட்டையை உடைத்தாள். அதில் சரீரத்தின் மேற்பாகம் பூர்ணமடைந்தும் மற்றப்பாகம் தெரியாமலுமிருந்த ஒரு புத்திரனைக்கண்டாள். அந்தப்புத்திரன் கோபாவேசங்கொண்டு, 'அம்மா! நீ அதிக ஆசைகொண்டு என்னை இப்படிச் சரீரம் பூர்ணமாகாமற் செய்ததனால், நீ எவளிடம் பொறாமையுற்றிருக்கிறாயோ அவளுக்கு ஐந்நூறுவருஷங்கள் அடிமையாவாய்' என்றுசபித்து, பிறகு, 'மாதாவே! இந்த வ்யஸனப்படத்தக்க இரண்டாவது பிள்ளையையும் நீ முட்டையையுடைத்து என்னைப்போல் அங்கங்குன்றினவனாகவாவது அங்கமில்லாதவனாகவாவது செய்யாமலிருக்கவேண்டும். அப்படியிருந்தால் அந்தப்பிள்ளை உன்னை அடிமைத்தனத்திலிருந்து விடுவிப்பான். எல்லாருக்கும் மேற்பட்ட பலமுள்ள புத்திரனைவிரும்புகிற நீ மனவுறுதியுடன் ஐந்நூறு வருஷத்திற்கு மேற்பட்டு இவனுடைய ஜனனகாலத்திற்குக் காத்திருக்கவேண்டும்' என்றுசொன்னான். பிராமணரே! இப்படிவினதையைச் சபித்தபிறகு, அந்தப்புத்திரன் ஆகாசத்தையடைந்து காலைவேளையாகிய அப்போது செந்நிறமுள்ளவனாகக் காணப்பட்டான். பிறகு, தேஜஸ்களுக்குராஜாவான சூரியன் இருளைப் போக்கிக்கொண்டு உதயமாகும்போது, அவன், தேஜஸினால் ஜ்வலிப்பவனும் தனக்கொப்பான பிரகாசமுள்ளவனுமாகிய அந்த அருணனைக்கண்டு அன்பு

டன் அவனை ஸாரதியாக வைத்துக்கொண்டான். லோகங்களுக்கெல்லாம் தீபம்போன்றவனாகிய சூரியனுடைய அந்த ரதத்தின்மேலேறித் தேவதையானான்.

ஸர்ப்பங்களைப் புசிக்கிறவனாகிய கருடனும் குறித்தகாலத்தில் ஜனித்தான். பிருகுவம்சஶ்ரேஷ்டரே! பக்ஷிகளுக்கு ராஜாவாகிய அந்தக்கருடன் பிறந்தவுடன், பசியடைந்து தான் புசிக்கத்தக்கதாகப் பிரம்மா தனக்கு விதித்திருக்கும் அன்னத்தைச் சம்பாதிப்பதற்காக வினதையை விட்டுவிட்டு ஆகாயத்திற்போனான்

---

## பதினேழாவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)



(அமிர்தம் கடைவதைப்பற்றித் தேவர்கள் ஆலோசிப்பது.)

தபோதனரே! அதேகாலத்தில் அந்த ஸஹோதரிகளாகிற கத்ரு வினதை இருவரும், தேவக்கூட்டங்களெல்லாவற்றாலும் மிகுந்த ஆனந்தத்துடன் பூஜிக்கப்பெறறதும் அமிர்தம் கடைந்த காலத்தில் உண்டானதும் மிகச்சிறந்ததும் தோல்வியடையாத பலமுள்ளதும் குதிரைகளுள்ளே சிறந்ததும் வேகமுள்ளவற்றிற் சிறந்ததும் அழகுள்ளதும் ஜரையில்லாததும் லக்ஷணங்களெல்லாம் பொருந்தியதுமாகிய உச்சைஶ்ரவம் என்னும் ரத்னம்போன்ற தேவலோகத்துக் குதிரை ஸமீபத்தில் வருவதைக் கண்டனர்' என்று ஸௌதி சொன்னார்.

இவ்வாறு ஸூதபுத்திரர் சொல்ல, சௌனகர், சிறந்த ஒளியுள்ளதும் மிகுந்தசக்தியுள்ளதுமாகிய அந்த உச்சைஶ்ரவம் என்னும் அசுவராஜா உண்டானதற்குக் காரணமான அமிர்தமதனத்தைத தேவர்கள் எங்கே எப்படிச்செய்தனர்? எனக்குச் சொல்லும்; இந்த அமிர்தமதனத்திற்குக் காரணத்தையும். அமிர்தத்திற்குப்பிறகு உண்டானதையும் எனக்குச்சொல்லும்' என்று கேட்க, ஸூதபுத்திரர் சொல்லுகிறார்.

சிறந்த பராக்கிரமமுள்ளவரும் தவமும் நியமமுமுள்ளவருமான தேவர்களெல்லாரும், தேஜஸுகளெல்லாஞ் சேர்ந்து உருக்கொண்டதுபோல் ஜ்வலிப்பதும், மிக உயர்ந்ததும், தங்கத்தினால் பிரகாசிக்கின்ற கொடுமுடிகளினால் ஸூர்யனுடைய காந்தியோடு மாறுகொண்டு விளங்குவதும், தங்கத்தையே ஆபரணமாகவுடையதும், அநேகவர்ணங்களையுடையதும், தேவர்களாலும் கந்தர்வர்களாலும் ஆச்ரயிக்கப்பட்டதும், அளவிடமுடியாததும், பாபம் மிகு

ந்த ஜனங்கள் அடையக்கூடாததும், பயங்கரமான ஸர்ப்பங்களி ஞற் சூழப்பட்டதும், இராத்திரியில் பிரகாசிக்கிற [1]ஜ்யோதிர் லதைமுதலான திவ்ய ஓஷதிகளால் பிரகாசிப்பதும், உயரத்தி ஞல் ஸ்வர்க்கத்தைமறைத்துக்கொண்டு நிற்பதும், சாதாரணமனிதர் கள் மனத்தாலும் செல்ல முடியாததும், நதிகளும் வ்ருக்ஷங்க ளும் நிறைந்ததும், மிக அழகானபலபக்ஷிக்கூட்டங்கள் சப்திப் பதுமாகிய மேருபர்வதத்தை அடைந்து, பலரத்னங்களால் நிறைந் ததும் அழகானதும் முடிவில்லையென்று சொல்லக்கூடியதும் ஒப் பில்லாததுமாகிய அதன்கொடுமுடியின்மேலேறி அதில் ஒன்ருகச் சேர் ந்து உட்கார்ந்துகொண்டு, அமிர்தத்திற்காக ஆலோசிக்கத் தொடங் கினர். அங்கே தேவர்களெல்லாரும் இவ்வாறு அமிர்தத்தைக்குறி த்துச் சிந்தித்துக்கொண்டு அதற்குரிய உபாயத்தை ஆலோசித்துக் கொண்டிருக்கையில், பகவானுன நாராயணர் பிரம்மாவைப்பார் த்து, 'தேவர்களும், அஸுரக்கூட்டங்களும் திருப்பாற்கடலைக் கடையட்டும்; அந்தப் பெருங்கடல் கடையப்படும்போது அமிர்தம் உண்டாகும்' என்றுசொல்லி, பிறகு, 'தேவர்களே! எல்லா ஓஷ திகளையும் எல்லா ரத்னங்களையும் போட்டுச் சமுத்திரத்தைக்கடை யுங்கள்; பிறகு, அமிர்தத்தையடைவீர்கள்' என்று சொன்ஞர்.

## பதினெட்டாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(விஷ்ணு மோஹினிரூபமெடுத்துத் தேவர்களுக்கு அமிர்தபானம் செய்வித்தது.)

பிறகு, மேகங்களின் சிகரங்களைப்போன்ற கொடுமுடிகளிஞல் அலங்கரிக்கப்பட்டதும், கொடிகள் நிரம்ப அடர்ந்ததும், பலவித பக்ஷிகள் சப்திப்பதும், கோரப்பற்களுள்ள பலபிராணிகள் நிரம்பின தும், கின்னரர்களும் அப்ஸரஸுகளும் தேவர்களும் எப்போது மிருப்பதும், பதினோராயிரம்யோசனை உயர்ந்ததும், பூமியின்கீழே பதினோராயிரம் யோசனையளவு சென்றதுமாகிய அந்த மந்தரமென் னுஞ் சிறந்த பர்வதத்தை எடுக்கமுடியாமல் தேவக்கூட்டங்க ளெல்லாம் விஷ்ணுவும் பிரம்மாவும் வீற்றிருக்குமிடஞ் சென்று, 'நீங்களிருவரும் இந்த மந்தரத்தை யெடுக்கும் விஷயத்திற்பயனைத் தரத்தக்க சிறந்தயோசனையைச் செய்யக்கடவீர்; எங்களுடைய நன்மைக்காக முயற்சிசெய்யவேண்டும்' என்றுகேட்டுக்கொண்ட னர். பிருகுவம்சபுத்திரரே! செந்தாமரை மலர்போன்ற கண்களையுடை

[1] இரவிற்பிரகாசிக்கிற ஒருவகைக்கொடி.

யவரும் அறியக்கூடாத ஸ்வரூபமுள்ளவருமாகிய திருமால், பிரம்மாவுடன்கூட, 'அப்படியேயாகட்டும்' என்று அங்கீகரித்து ஆதிசேஷனை ஏவினார். பிறகு, சிறந்தசக்தியுள்ள ஆதிசேஷன் எழுந்து அந்த மந்தரபர்வதத்தைக் தூக்குகிறவேலையில் பிரம்மாவினாலும் விஷ்ணுவினாலும் நியமிக்கப்பட்டான்.

பிராமணரே! அதன்பின் மஹாபலசாலியாகிய ஆதிசேஷன் அந்த மந்தரமென்னும் பெரியமலையைத் தன்பலத்தினால் வனங்களுடனும் வனவாஸிகளுடனும் தூக்கினான். பிறகு, தேவர்கள் அவனுடன்கூடச் சமுத்திரத்திற்குச்சென்று அதைப்பார்த்து, 'அமிர்தத்திற்காக உன்ஜலத்தைக் கடையப்போகிறோம்' என்றுசொல்ல, 'எனக்கும் அந்த அமிர்தத்திற்பாகமிருக்குமானால் அப்போது மந்தரம் சுழலுவதினாலுண்டாகும் மிகுந்த உபத்திரவத்தை நான் பொறுப்பேன்' என்று சமுத்திரம்சொல்லிற்று. தேவர்களும்அஸுரர்களும் சமுத்திரத்திலிருக்கும் பெரிய ஆமையைப்பார்த்து, 'நீ இந்த மலைக்கு ஆதாரமாக இருக்கவேண்டும்' என்று கேட்டுக்கொண்டனர். அந்த ஆமையும், 'அப்படியே ஆகட்டும்' என்றுசொல்லி மந்தரமலைக்கு முதுகுகொடுத்தது. அந்தக்கூர்மத்தின் முதுகிலிருந்த அந்தமலையை இந்திரன் வச்சிராயுததினால் மேலே அமுக்கினான். பிராமணரே! மந்தரத்தை மத்தாகவும் வாஸுகியை கயிறாகவுஞ் செய்து, தேவர்களும் அஸுரர்களும் அமிர்தத்திற்காக ஜலங்களுக்கெல்லாம் ஆதாராமாகிய சமுத்திரத்தைக் கடையத் தொடங்கினர். நாகராஜாவான வாஸுகியின்ஒருகோடியாகிய முகத்தை அசுரசிரேஷ்டர்கள் பிடித்துக் கொண்டனர். முடிவில்லாதவரும் பகவானுமாகிய நாராயணர் எங்கே இருந்தாரோ அந்தவாலின் பக்கத்தில் தேவர்களெல்லோரும் சேர்ந்து நின்றனர். அசுரசிரேஷ்டர்கள் நாகராஜாவாகிய வாஸுகியின் முகத்தைப்பிடித்துக்கொண்டனர். நாகத்தினுடைய தலையை அடிக்கடி தூக்கிப்போட்டனர். அசுரர்கள் வேகமாகப்போட்டபடியால் வாஸுகியென்னும் நாகத்தினுடைய முகத்திலிருந்து அடிக்கடி புகையோடும் ஜ்வாலையோடுங்கூடப் பெருமூச்சுக்கள் கிளம்பின.

பிருகுவம்சபுத்திரரே! பிடிக்கப்பட்ட வாஸுகி கக்கினவிஷத்தோடு அந்தஜலம் சேர்ந்துபோயிற்று. பின்பு, தேவர்களும் அசுரர்களும் கையின்வலிமையினால் மந்தரத்தைக்கொண்டு கடைந்தபோது ஹாலாஹலமென்று பெயர்பெற்ற கொடிய விஷம் உண்டாயிற்று. தேவர்களும் அசுரர்களும் விஷத்தால் தகிக்கபட்டு, பயந்து வ்யஸ

ணமடைந்து அவ்விடம்விட்டோடினர். தேவர்களும் ரிஷிஸ்ரேஷ்டர்களும் சேர்ந்து பிரம்மாவினிடம்போய், 'அமிர்தங்கடையும்போது பிரளயகாலாக்னிக்கு ஒப்பான விஷம் உண்டாயிருக்கிறது; அதனாலேயே, உலகங்கள் தகிக்கப்படுகின்றன; அதற்கு நீங்கள் பரிகாரஞ்செய்யவேண்டும்' என்றனர்.

அவர்கள் இவ்வாறு சொன்னபொழுது, பிரம்மா, லோகேசுவரரும், [1]ஹரரும், மூன்றுநேத்திரங்களுடையவரும், திரிசூலந்தரித்தவரும், தேவர்களுக்குந்தேவரும், பார்வதீபதியுமாகியருத்ரமூர்த்தியைத் தியானஞ்செய்தார். அவராற் சிந்திக்கப்பட்ட ஈசுவரர், அவர் சிந்தித்ததையறிந்து சீக்கிரம் வந்தனர். பிறகு, பிரம்மதேவர் அதையெல்லாம் அந்த ஈசுவரருக்குச்சொல்ல, அதைக்கேட்டுத் தேவர்களுக்குந்தேவரும், ஈசுவரருமாகிய ருத்திரமூர்த்தி உலகங்களுக்கு ஹிதஞ்செய்யக்கருதிப் பிரளயகாலாக்கினிக்கொப்பான தேஜஸோடுகூடிய அந்த விஷத்தைப் பானஞ்செய்தார். ஈசுவரர், லோகஹிதத்திற்காக அந்த விஷத்தைக் கழுத்தினுள் நிறுத்தினார். அதனால், கழுத்திற்கருமையுண்டானதுபற்றி அவர்நீலகண்டரென்று சொல்லப்படுகிறார். அளவற்ற தேஜஸுள்ள ருத்திரராலே விஷம் குடிக்கப்பட்டமாத்திரத்தில் தேவர்கள் ஸந்தோஷமடைந்து திரும்பவும் சமுத்திரத்தைப் பழையபடி கடைந்தனர். தேவாஸுரர்கள் அமிர்தத்திற்காக மறுபடியும் கடலைக்கடைந்தபோது, அசுரர்கள் திடீரென்று பேர்டுவதனால் வாஸுகிநாகத்தின் முகத்திலிருந்து புகையுடனும் ஜ்வாலையுடனும் மூச்சுக்காற்றுக்கள் அடிக்கடி வெளிப்பட்டன. அந்த அதிகப்புகைகள் சேர்ந்து மின்னலோடுகூடிய மேகங்களாக ஆகி, சிரமத்தினாலும் உஷ்ணத்தினாலும் பீடிக்கப்பட்ட தேவக்கூட்டங்களின்மேல் மழையைப் பொழிந்தன. அந்த மந்தரபர்வதத்தின் சிகரத்தின்மேலிருந்து புஷ்பவர்ஷங்கள் தேவாசுரக்கூட்டங்களெல்லாவற்றின்மேலும் நாலுபக்கங்களிலும் விழுந்தன.

தேவாசுரர்கள் மந்தரத்தினால ஸமுத்திரத்தைக்கடையும்போது அதில் மஹாமேககர்ச்சனைபோன்ற ஒருபெரியகோஷம் உண்டாயிற்று. அந்தச் சமுத்திரத்திலுள்ள பல ஜலஜந்துக்களும் அந்தப் பெரியமலையினால் நசுக்கப்பட்டு நாற்றுக்கணக்காக நாசம் அடைந்தன. மலையானது பாதாளத்தில வஸிக்கும் வருணனைச் சேர்ந்த பற்பல பிராணிகளை நாசஞ்செய்தது. அந்த மலையைச் சுழற்றும்போது பெரிய மரங்கள் ஒன்றோடொன்று உரைந்துக்கொண்டு பறவைகளுடன்கூடப் பர்வதத்தின் மேற்

---

1 ஹரர்=கஷ்டங்களைப் போக்குகிறவர்.

பாகத்தினின்றும் விழுந்தன. அவற்றின் உரைதலினுலுண்டான அக்னி அடிக்கடி பெரிய ஜ்வாலைகளுடன் எரிந்துகொண்டு [1]மின்னலோடுகூடிய நீலமேகம்போல் மந்தரமலையின்மேல் வியாபித்து, அங்கிருந்து வெளிப்படுகின்ற யானைகளையும் சிம்மங்களையும் தகித்தது. பலவகையான பிராணிகளனைத்தும் இறந்துபோயின. தேவசிரேஷ்டனுகிய இந்திரன் இங்குமங்கும் தகிக்கின்ற அந்த அக்னியை மேகங்களிலுண்டான ஜலத்தினல் முழுதும் சமனஞ் செய்தான். பின்பு, அந்தஸமுத்ரஜலத்தில் அநேகவகைகளான பெரியமரங்களின் பால்களும் அநேக ஒஷதிகளுடைய ரஸங்களும் பெருகிவிழுந்தன. அமிர்தத்தைப்போன்ற சக்தியுள்ள, அந்தரஸங்களினுலுண்டான பாலினுலும் தங்கம் உருகி ஜலமாகப் பெருகுவதனுலும் தேவர்கள் [2]அமரத்வத்தையடைந்தனர். பிறகு, அந்த ஸமுத்ரத்தினுடைய ஜலம் அந்தச் சிறந்தரஸங்களோடு சேர்ந்ததனுற்பாலாயிற்று; அந்தப்பாலினின்றும் வெண்ணெய் உண்டாயிற்று.

பிறகு, தேவர்கள் வரங்கொடுக்கிறவராக வீற்றிருக்கும் பிரம்மாவைப்பார்த்து, 'பிரம்மாவே! தேவர்களும் அஸுரர்களுமாகிய எல்லாரும் மிகவும் சிரமப்பட்டிருக்கிறோம்; தேவனுகிய நாராயணனில்லாமல் அமிர்தமுண்டாவதில்லை. ஸமுத்திரங்கடைய ஆரம்பித்து வெகுகாலம் ஆயிற்று. எங்களுக்குச் சோர்வுஉண்டாயிற்று. அமிர்தம் இதில் உண்டாகவில்லை' என்றுசொன்னுர்கள். தேவர்களுடைய சொல்லைக்கேட்டபிறகு, உலககர்த்தாவாகிய பிரம்மா பகவானுகிய நாராயணனைப்பார்த்து, 'விஷ்ணுவே! இந்தத்தேவர்களுக்குப் பலத்தையுண்டுபண்ணும்; நீர்தாம் இதற்கு முதன்மையான ஆதாரம்' என்று சொன்னுர். நாராயணர், 'இந்தக் காரியத்தை எடுத்துக்கொண்டவரெல்லாருக்கும் பலங்கொடுக்கிறேன்; எல்லாரும் மந்தரத்தைச் சுழற்றிப் பாலைக்கலக்கட்டும்' என்ருர். நாராயணர் சொன்னதைக்கேட்டு அந்தத் தேவாஸுரர்கள் பலமுள்ளவர்களாகி ஒன்றுசேர்ந்து மறுபடியும் அந்தப்பாலை மிகவும் கலங்கச்செய்தனர். அதில், முதலில் உண்டான அந்த விஷத்தைப் பிரம்மாசொன்னதனுல் லோகத்தை ரக்ஷிப்பதற்காகச் சங்கரர் விழுங்கின பிறகு, கறுத்த உருவத்துடன் எல்லா ஆபரணங்களையும் அணிந்துகொண்டு ஜ்யேஷ்டாதேவி உண்டானுள்.

பிறகு, ஸமுத்திரத்தைக்கடையும்போது குளிர்ந்தநூருயிரம் கிரணங்களுடன் பிரகாசித்துக்கொண்டு நிர்மலரூபமாகச் சந்திரன் உண்

1 மரங்கள் மேகத்தைப்போலவும் ஜ்வாலை மின்னலைப்போலவும் இருந்தன.
2 மரணமில்லாமை.

டானன். பிறகு, வெண்ணெயினின்றும் வெளுப்புவஸ்திரம் தரித்த லக்ஷ்மியும் [1]ஸுராதேவியும் வெள்ளைக்குதிரையும் உண்டாயினர். விரிவான கிரணங்களையுடையதும் நாராயணன்மார்பிலிருப்பதுமாகிய அழகுள்ள சிறந்த கௌஸ்துபமென்னும் ரத்னமும் அந்த வெண்ணெயினின்றும் உண்டாயிற்று. மஹாரிஷியே! பிராமணரே! அபேக்ஷித்த எல்லாப்பலங்களையும் கொடுக்கத்தக்க பாரிஜாதமரமும் காமதேனுவும் அதிலிருந்துண்டாயின. பிறகு, பெரிய சரீரமுள்ளதும் நான்கு தந்தங்களுள்ளதுமாகிய ஐராவதமென்னும் மஹாகஜமுமுண்டாயிற்று. காமதேனுவும், கல்பகவ்ருக்ஷமும், கௌஸ்துபமும், அப்ஸரஸுகளும் சூரியனுடைய மார்க்கமான ஆகாசத்தின் வழியாகத் தேவர்களிருக்கிறவிடம் சேர்ந்தன.

பிறகு, அழகான தேகமுள்ள தன்வந்தரியென்னும் தேவதை அம்ருதத்துடன்கூடின வெள்ளைக்குடத்தை எடுத்துக்கொண்டுகிளம்பினர். அந்த மிகுந்த ஆச்சரியத்தைக்கண்டு அஸுரர்கள் 'இது எங்களுக்குத்தான்' என்று சொல்லிக்கொண்டு அமிர்தத்திற்காகப் பேரிரைச்சலிட்டனர். பிறகு, நாராயணர் எல்லாரையும் மயக்குகின்ற தம் மாயையினால் ஆச்சரியமான ஒரு பெண்ணுருவம் எடுத்துக்கொண்டு அஸுரர்களின் முன்னின்றார். அந்த அஸுரர்கள் அனைவரும் அந்தப் பெண்ணினிடம் மனம்சென்று மதிமயங்கி அந்த அமிர்தத்தை அந்தப் பெண்ணினிடம் கொடுத்தனர். நாராயணருடைய மாயையாகிய அந்தப்பெண் அமிர்தக் குடத்தை எடுத்துக்கொண்டு திதிபுத்திரர்களையும் தனுபுத்திரர்களையும் வரிசையாக உட்காரவைக்கையிலேயே தேவர்களை அமிர்தபானஞ் செய்வித்தாள். அஸுரர்களைக் குடிப்பிக்கவில்லை. அந்த அஸுரர்கள் கூக்குரலிட்டனர்.

---

## பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(தேவாஸுரயுத்தத்தில் தேவர்களுக்கு ஜயமுண்டானது.)

அதன்பின், அஸுரர்களெல்லாரும் ஒன்றுசேர்ந்து சிறந்தகவசங்களைத் தரித்து அநேக ஆயுதங்களையெடுத்துக்கொண்டு தேவர்களை எதிர்த்தார்கள். பிறகு, சக்தியுள்ளவரும் பிரபுவுமாகிய பகவானை விஷ்ணு நரனுடன் சேர்ந்து அந்த அமிர்தத்தை அஸுரச்ரேஷ்

1 கள்.

டர்களிடமிருந்து கவர்ந்தார். பிறகு, பெருங்கலகம் நடக்கும்போது தேவர்கள் அனைவரும் விஷ்ணுவினிடமிருந்து அந்த அமிர்தத்தை வாங்கி அப்போது பானஞ்செய்தனர். நாராயணர் தேவர்களுக்கு அமிர்தபானஞ் செய்விக்கையில் நரனென்பவர் தம்புஜபலத்தினால் வில்லெடுத்து வில்லாளிகளைத் துரத்தித்தகைந்தார். எவரெவர் அமிர்தம் குடித்தனரோ அவரவரெல்லாம் அஸுரர்களோடு யுத்தஞ்செய்தனர்.

தேவர்கள் அமிர்தத்தைவிருப்பத்துடன் பானஞ்செய்யுங்காலத்தில் அங்கே ராகுவென்னும்அஸுரன் தேவவேஷத்துடன் பானஞ்செய்தான். அந்த அமிர்தம் அந்த அஸுரன் நெஞ்சிற்சேரும்போது தேவர்களின் ஹிதத்திற்காகச் சந்திர சூரியர்கள் அதைச் சொன்னார்கள். பிறகு, சக்ராயுதராகிய பகவான், அமிர்தபானஞ் செய்த அந்த அஸுரனுடைய அலங்கரிக்கப்பட்ட தலையைத் தேஜஸுள்ள தம்சக்கரத்தினால் அறுத்தார். மலையின் கொடுமுடிபோலப் பெரிதான அந்த அஸுரன்தலை [1][சக்கரத்தினால் வெட்டப்பட்டுப் பூகம்பத்தை உண்டுபண்ணிக்கொண்டு விழுந்தது] சக்கரத்தினால் வெட்டப்பட்டு, ஆகாசத்திற்கிளம்பி மிகப்பயங்கரமாகச் சப்தஞ் செய்தது; அஸுரனுடைய அந்தக் தலையில்லாஉடல் துடித்துக் கொண்டு பூமியில்விழுந்தது. அந்த அஸுரனுடைய தலை மலைகள் வனங்கள் தீவுகளுடன் கூடிய பூமியைப் பதின்மூவாயிரம் யோஜனை தூரம் சச்சதுரமாக எங்கும் அசையச்செய்தது. பிறகு, அந்தராகுவினுடைய முகம் சந்திர சூரியர்களுடன் தீராப்பகையை உறுதியாகக் கொண்டது; அதனால் இன்னமும் அந்து அவர்களைவிழுங்குகின்றது.

பகவானாகிய விஷ்ணு, அந்த ஒப்பற்ற பெண்ணுருவத்தைவிட்டு விட்டுப் பயங்கரங்களாகிய அநேக ஆயுதங்களோடு அஸுரர்களை நடுங்கச்செய்தார். பிறகு, சமுத்திரகரையருகில தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் எல்லாவற்றையுங்காட்டிலும் அதிக உக்கிரமானபெரிய யுத்தம் நடந்தது. கூர்மையும் பயங்கரமுமாகிய பெரிய பட்டிசங்களும் தோமரங்களும் பலவித ஆயுதங்களும் ஆயிரக்கணக்காக விழுந்தன, பிறகு, அஸுரர்கள் சக்கரத்தினால் வெட்டப்பட்டும், சத்திகளாலும் வேலாயுதங்களாலும்கதாயுதங்களாலும் அடிக்கப்பட்டும் ரத்தத்தை மிகுதியாகக்கக்கிக்கொண்டு பூமியில் விழுந்தனர். கொடியபட்டிசமென்னும் ஆயுதங்களாலும் யுத்தத்தில வெட்டப்பட்ட தலைகள் சிறந்ததங்கமாலைகளுடன் அப்போது இடைவிடாமல் விழுந்தன. அடிக்கப்பட்ட அஸுரச்ரேஷ்டர்கள் ரத்தம் பூசினசரீரங்களுடன்

---

1 இது அதிகபாடம்.

காவிக்கற்களினாற்சிவந்த பர்வதசிகரங்கள்போற் படுத்திருந்தனர். [1] சூரியன் சிவந்திருக்கையில் ஆயுதங்களினால் ஒருவரையொருவர் ஆயிரக்கணக்காக வெட்டும்போது அங்கங்கே ஹாஹாகாரமுண்டா யிற்று. ஸமீபித்தபோது, கூர்மையான இருப்புத்தடிகளாலும் கைக் குத்துக்களாலும் யுத்தத்தில் ஒருவரையொருவர் அடிப்பவருடைய சப்தம் ஆகாசமெல்லாம் வியாபித்தது. 'வெட்டு, பிள, ஓடு, தள்ளு, எதிர்த்துப்போ' என்ற மிக்ககோரமானசப்தங்கள் அந்தயுத்தத்தில் எங்கும் கேட்கப்பட்டன.

இவ்வாறு, மிகவும்பயங்கரமான கடுஞ்சண்டை நடந்துகொண் டிருக்கையில் தேவர்களாகிய நரநாராயணர்கள் போர்க்களத்துக்கு வந் தனர். அங்கே நரனுடைய உயர்ந்ததனுசைப்பார்த்து, பகவானா கிய விஷ்ணுவும் அஸுரர்களைக்கொல்லுவதாகிய தம் சக்கரத்தை நினைத்தார். பிறகு, மிகுந்த பிரகாசமுள்ளதும், சத்துருக்களுக்குத் தாபத்தையுண்டாக்குவதும், சூரியனுக்கு ஒப்பானதும், முனைமழுங் காதசுற்றுப்பக்கத்தையுடையதும், யுத்தத்திற்பார்க்கிறதற்குப் பயங் கரமுமாகிய ஸுதர்சனமென்னும்சக்கரம், நினைத்தமாத்திரத்தில் ஆகாசத்திலிருந்து வந்தது. ஜ்வலிக்கிற அக்னியைப்போலமிக்க ஒளியுள்ளதாகவும், எதிரிகளின்நகரங்களைப் பிளப்பதாகவும், பயங்கர மாகவும் வந்துசேர்ந்த அந்தச் சக்கரத்தை யானைத்துதிக்கைபோன்ற கைகளையுடைய விஷ்ணு கடியவேகமுள்ளவராக மிகுந்தபலத்துடன் பிரயோகித்தார். பிரளயகாலாக்கினிக்கொப்பான தேஜஸுடைய அந்தச்சக்கரம் புருஷோத்தமரான விஷ்ணுவின்கையினால்யுத்தத்திற் பிரயோகிக்கப்பட்டு அஸுரர்களை ஆயிரக்கணக்காகப்பிளந்துகொண்டு வேகத்துடன் சத்துருக்களின்மேல் அடிக்கடி விழுந்தது. அக்கினி யைப்போலச் சில விடங்களில் எரித்துக்கொண்டும், இன்னும் சில விடங்களில் ஜ்வாலைகளாற் பக்கத்திலிருப்பவற்றையும் வளைத்துக் கொண்டும் பலாத்காரமாக அந்த அஸுரக்கூட்டங்களை வெட்டியது. அடிக்கடி மேலும்கீழும் பிரயோகிக்கப்பட்ட அந்தச்சக்கரம் பிசாசு போல் யுத்தத்தில் ரத்தத்தைக்குடித்தது. மிகுந்தபலசாலிகளும் வர்ஷிக்கிறமேகங்களைப் போன்றவர்களுமாகிய அஸுரர்களும் மனத் தில் உத்ஸாஹத்துடன் ஆயிரக்கணக்காக ஆகாசத்திற்கிளம்பி அப் போது தேவக்கூட்டங்களை மலைகளினால் அடிக்கடி பீடித்தனர். பிறகு, பயத்தை உண்டாக்குகின்றவைகளும் மரங்களோடுகூடியவை களும் மேகங்களைப்போற் பலவித உருவங்கொண்டவைகளுமாகிய

[1] சூரியாஸ்தமனகாலத்தில்.

பெரியமலைகள், ஒன்றோடொன்று பலமாக அடித்ததனால், சிகரங்களும் சரிந்து சப்தஞ்செய்துகொண்டு ஆகாசத்தினின்றும் விழுந்தன. பிறகு, அதிகமாகச் சண்டை நடக்கும்போது, போர்க்களத்தில் ஒருவரை யொருவர் எதிர்த்து, அடிக்கடி பெரியகர்ச்சனை செய்து எரிந்த பெரிய மலைகள் விழுந்ததனால் காடுகளுடன் பூமி எங்கும் அதிர்ந்தது.

அதன்பின், அதிகபயங்கரமான அந்த அஸுரக்கூட்டத்தின் யுத்தத்தில் நரனென்பவர், சிறந்த பொன்னைமேலலங்காரமாகவுடையவைகளும் சிறகுகளோடு கூடியவைகளுமான பெரியபாணங்களினால் மலைகளின் சிகரங்களைப்பிளந்து, ஆகாசமார்க்கத்தை மூடிவிட்டார். பிறகு, தேவர்களால் அடிக்கப்பட்ட அந்த அஸுரச்ரேஷ்டர்கள் ஜ்வலிக்கிற அக்னிபோற்பிரகாசித்துக்கொண்டு ஆகாசத்தில் நின்று கோபித்த ஸுதர்சனத்தைக்கண்டு பூமிக்குள்ளும் லவண ஜலமுள்ள சமுத்திரத்துக்குள்ளும் புகுந்தனர். பிறகு, ஜயமடைந்த தேவர்களால் மந்தரம் மிகவும் கௌரவிக்கப்பட்டு முன்னிருந்த இடத்திற் சேர்க்கப்பட்டது.

அதன்பின், அமிர்தத்தைப் பெற்றுக்கொண்ட தேவர்களெல்லாரும் ஆகாசத்தில் ஜயகோஷஞ்செய்துகொண்டு வந்தபடி ஸ்வர்க்கஞ்சென்றனர். ஸ்வர்க்கத்துக்குப்போனபிறகு, தேவர்கள் மேலான ஸந்தோஷத்தைப் பூரணமாக அடைந்து அந்தஅமிர்தத்தைப்பத்திரமாக வைத்தனர். இந்திரன் தேவர்களுடன்கூட அந்த அமிர்த பாத்திரத்தை ரக்ஷிக்கும்படி நரனிடம் கொடுத்தான்.

---

## இருபதாவது அத்தியாயம்.
## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)

(உச்சைச்ரவத்தைப்பற்றி வினதைக்கும் கத்ருவுக்கும் பந்தயமும், ஸர்ப்பங்களுக்குக் கத்ருவின் சாபமும்.)

அழகுள்ளதும் ஒப்பற்ற சக்தியுள்ளதுமாகிய அந்தஉச்சைச்ரவம் உண்டாவதற்குக்காரணமான அமிர்தமதனம் நடந்தபடி முழுவதையும் இப்போது உமக்குச்சொன்னேன். அப்போது அந்த உச்சைச்ரவமென்னும் குதிரையைப் பார்த்தவுடன் கத்ரு வினதையைப் பார்த்து, 'பிரியமானவளே! உச்சைச்ரவம்என்னவர்ணம்; உடனே சொல்' என்றுகேட்டாள். வினதை, 'அழகானவளே! அச்வராஜாவான உச்சைச்ரவம் வெண்மையானதுதான்; நீதான் என்ன நினைக்கிறாய்; நீயும் அதனுடைய வர்ணத்தைச்சொல்; பிறகு, இது

விஷயத்திற் பந்தயம்போடுவோம்' என்று சொன்னாள். கத்ரு, 'வெண்மையான புன்னகையுடையவளே! நான் அந்தக் குதிரைக்குவால் கறுப்பென்று நினைக்கிறேன்; பெண்ணரசி! நம்மில் தோற்றவள் ஜயித்தவளுக்கு அடிமையாவதாகப் பந்தயம்போடுவோம்' என்று சொன்னாள். இப்படி அவர்களிருவரும் ஒருவர்க்கொருவர் அடிமையாயிருப்பதாகப் பந்தயம்போட்டுக்கொண்டு, 'நாளைத்தினம் அந்தக் குதிரையைப் பார்ப்போம்' என்று தம்தம் வீட்டுக்குப்போயினர். பிறகு, கத்ரு வஞ்சகஞ்செய்யநினைத்துத் தன் ஆயிரம்பிள்ளைகளையும் பார்த்து, 'நான் அடிமையாகாமலிருக்கும்படி நீங்கள் மைபோன்ற நிறமுள்ளவால்மயிர்களாகி அந்தக்குதிரையைச்சீக்கிரம் அடையுங்கள்' என்று ஆஜ்ஞாபித்தாள். அவள் தான் சொன்னதை ஏற்றுக்கொள்ளாத ஸர்ப்பங்களைப்பார்த்து, 'புத்திமானாகிய ஜனமேஜயனென்னும் பாண்டவ வம்சத்து ராஜரிஷியின் ஸர்ப்பயாகம் நடக்கும்போது, அக்னி உங்களைத் தகிப்பான்' என்று சபித்தாள்.

இவ்வாறு விதிவசமாகக் கத்ரு மிகக்கொடிய சாபங்கொடுத்ததைப் பிரம்மதேவரே நேரிற்கேட்டு, ஸர்ப்பங்கள் அதிகமாயிருப்பதைக்கண்டு, ஜனங்களின் நன்மைக்காகக் கத்ரு சொன்னதைத் தேவர் கூட்டங்களெல்லாரோடும் ஆமோதித்து, 'இந்த ஸர்ப்பங்கள் கொடியவிஷமுள்ளவைகள்; மிக்கபலமுள்ளவைகள்; கொடிய விஷத்தினால் பிறரைப்பீடிப்பதற்காகவே ஸஞ்சரிக்கின்ற அந்தஸர்ப்பங்களுக்குத்தாயார்செய்தது, ஜனங்களுடைய க்ஷேமத்திற்குத் தகுதியானது. எப்போதும் பிறரைக்கெடுப்பதேகாரியமான மற்றப் பிராணிகளுக்கும் பிராணநாசபரியந்தமான தண்டனை தெய்வத்தினாலேயே விதிக்கப்படுகின்றது' என்றும் சொன்னார். பிரம்மதேவர் இவ்வாறுசொல்லி, அந்தக்கத்ருவைச்சிலாகித்து, அப்போது கசியபரையழைத்து, 'குற்றமற்றவனே! கடுவிஷமும் பெரியஉடல்களுமுள்ள இந்தக் கடிக்கின்ற ஸர்ப்பங்களை நீ உண்டாக்கினாய்; வீரனே! அவற்றை அவற்றின் மாதா சபித்தாள்; அப்பா! நீ அந்த விஷயத்தில் எவ்வகையிலும் கோபிக்கத்தகாது; ஸர்ப்பயாகத்தில் ஸர்ப்பங்கள் அழிந்துபோவது [1]முன்னமே கண்டவிஷயம்' என்று சொன்னார். ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மதேவர் இவ்வாறுசொல்லி, அந்தக்கசியபரைச் சமாதானப்படுத்தி, மஹாத்துமாவாகிய அந்தக் கசியபருக்கு விஷநிவர்த்தி செய்யும் வித்தையையுங் கற்பித்தார்.

---

[1] பூர்வகல்பத்தில்.

பிராமணசிரேஷ்டரே! இவ்வாறு நாகங்கள் கத்ருவினாற் சபிக்கப்பட்டபோது, அவள்சாபத்துக்குப்பயந்து நாகசிரேஷ்டனான கார்க்கோடகன் மிகுந்த அன்புடன் மாதாவாகியகத்ருவைப்பார்த்து 'நான் மைநிறமான வால்மயிராகி உயர்ந்தகுதிரையாகிய உச்சைச்ரவத்தையடைந்து அதனிடம் என்னிறத்தைக் காண்பிக்கப்போகிறேன்; நீ சிறிதும்கவலையில்லாமலிரு' என்றுசொல்ல, கீர்த்திபெற்ற கத்ரு, 'அப்படியே ஆகட்டும்' என்று தன்புத்ரனுக்கு மறுமொழி சொன்னாள்.

---

## இருபத்தோராவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)

(உச்சைச்ரவத்தைப் பார்ப்பதற்கு வினதையும்கத்ருவும் செல்வது.)

தபோதனரே! இரவுமுடிந்து பொழுதுவிடிந்து சூரியோதயமானபின், அடிமையாயிருப்பதாகப் பந்தயஞ்செய்துகொண்ட அந்த ஸஹோதரிகளாகிய கத்ரு வினதை இருவரும், பொறாமையுடனும் கோபத்துடனும் உச்சைச்ரவமென்னும் குதிரையைச் சமீபத்திற் பார்ப்பதற்காக, கரைகளிலுள்ள காடுகளினால் அலங்கரிக்கப்பட்ட சமுத்திரத்தின் அக்கரைக்குச் சென்றனர்.

பிறகு, அவர்கள் ஜலங்களுக்குப் பெரியஆதாரமும், ஆழமும், கலங்கிக்கொண்டு பேரிரைச்சலிடுவதும், பயங்கரமானவைகளும் விகாரமான ரூபமுள்ளவைகளும் க்ரூரஸ்வபாவமுள்ளவைகளும் கோபமுள்ளவைகளுமாகிய அனேகமாயிரக் கணக்கான திமிங்கிலங்கள், சிறுமீன்கள், ஆமைகள், முதலைகள், இன்னும் பலரூபங்களானஜந்துக்கள் நிரம்பினதும், ஒருபொழுதும்வற்றாததும், அணுகமுடியாததும், எல்லாவகை ரத்னங்களும் உண்டாகும் இடமும் வருணனுக்கு இருப்பிடமும், ஸர்ப்பங்களுக்கு வாஸஸ்தானமும், மிகரமணீயமும், நதிகளுக்குப்பர்த்தாவும், வடவாக்கினிக்கு இருப்பிடமும், அஸுரர்களுக்கு ஆதரவும், பிராணிகளுக்குப் பயத்தை உண்டாக்கத்தக்கதும், ஜலத்தின்மிகுதியால் ஸாகரமும், மேவாகவிலக்ஷணமும், தேவர்களுடைய அமிர்தத்துக்கு முக்கியமான இடமும், அளவிடவும் சிந்திக்கவும் முடியாததும், பாவங்களைப்போக்குவதும், ஆச்சரியப்படத்தக்கதும், கம்பீரமும், ஜல ஜந்துக்களின் சப்தத்தினாற் பயங்கரசப்தமுள்ளதும், ஆழமான சுழல்களினால் கஷ்டமுள்ளதும் எந்தப்பிராணிகளுக்கும், பயத்தை உண்டுபண்ணுவதும்,

காறறினுல் ஜலம்ஊஞ்சல்போல் அலேவதும், கலங்கி வேகமாகமேலே கிளம்புவதும், அலேகள் நாலுபக்கங்களிலும் கைகளேப்போல் அசைவதனுல் கூத்தாடுவதுபோல்வதும், சந்திரனுடைய உதயாஸ்தமனங்களே அனுசரித்து அலேகள்மாறுவதும், பாஞ்சஜன்யமென்னும் சங்கத்தின் உத்பத்திஸ்தானமும், உயர்ந்தவஸ்துக்களுக்கு முக்கியமான இருப்பிடமும், அளவில்லாததேஜஸையுடைய பகவானுகிய விஷ்ணு வராஹரூபமெடுத்துப் பூமியைத்தூக்கினபோது அவரால் உள்ளே புகுந்துகலக்கப்பட்ட ஜலமுள்ளதும், அத்ரியென்னும் பிரம்மரிஷி நூறுவருஷகாலம் தவஞ்செய்தும் ஆழமறியப்படாததும், பாதாளத்தின் இருப்பிடமும், மாருததும், கரைகடந்ததேஜஸுள்ள பத்மநாபனென்னப்பட்ட விஷ்ணுஸ்ருஷ்டிக்கு முந்தினகாலத்தில் ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோகநித்திரைசெய்தபோது அவருக்குச் சயனமும், இந்திரனுடையவஜ்ராயுதப் பிரயோகத்துக்குப் பயந்த மைநாகபர்வதத்துக்கு அபயங்கொடுத்ததும், யுத்ததில் அடிபட்டுப் பயத்தினுல் முறையிட்ட அஸுரர்களுக்குச் சிறந்தசரணமான இடமும், வடவையின் முகத்தில்ஜ்வலிக்கிற அக்னிக்கு ஜலமென்னும் ஹவிஸைக்கொடுப்பதும், சுபகரமும், கரைகடந்து விரிந்திருப்பதும், ஆயிரக்கணக்கான அநேகமஹாநதிகள் ஒன்றுக்கொன்று பொருமைகொண்டவைபோல் ஆவலுடன் எப்போதும் பிரவேசிப்பதும் நிரப்புவதுமாகச் சேருமிடமுமாகிய பெருங்கடலேக்கண்டனர்.

அலேகளினுல நர்த்தனம்செய்வதுபோன்றதும், பிரவேசிக்கமுடியாததும், மீன்களும் முதலேகளும் நிரம்பிப்பயங்கரமானதும், ஜலஜந்துக்களின் கடுங்கூச்சலகளினுற கர்ச்சிப்பதுபோல்வதும், ஆகாசம்போல் விசாலமானதும், ஆழமும், முடிவிலலாததுமாகிய பெரிய சமுத்திரத்தை அவர் இருவரும் கண்டனர்.

---

## இருபத்திரண்டாவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)



(நாகங்கள் உச்சைச்ரவத்தின் வால்மயிர்களாக ஆவதும், கத்ருவும் வினதையும் கடலேத்தாண்டுவதும்.)

**நா**கங்கள், 'நமதுதாய், தன்அபீஷ்டம் நிறைவேருமற்போனுல், அன்புவையாமல் நம்மைத்தகித்துவிடுவள்; அவளுக்குத்தயைவந்தால் இந்தச்சாபத்திலிருந்து நம்மை விடுவிப்பள்; அதனுல்

அவள் சொன்னதை நாம்செய்யவேண்டும்; உச்சைச்ரவத்தின் வாலைக் கறுப்பாகச்செய்யவேண்டும்; இதில் ஸந்தேகமில்லை' என்று நிச்சயஞ்செய்து, அந்தக்குதிரைக்குக் கருமையான வால்கள் போலிருந்தன. அப்போதும், அந்த ஸபத்நிகள் இருவரும் பந்தயஞ்செய்துகொண்டனர். பிராமணசிரேஷ்டரே! பந்தயம்போட்டுக் கொண்டிருந்த இந்த ஸகோதரிகள் இருவர்களும் மறுபடியும் பந்தயத்தை நிச்சயித்துக்கொண்டு மிகுந்த ஸந்தோஷத்துடன் ஸமுத்திரத்தின் அக்கரைக்குச் சென்றனர்.

கலக்கமுடியாததும், ஜலங்களுக்கெல்லாமிருப்பிடமும், காற்றினால் அதிகவேகமாகக் கலக்கப்படுவதும், பெரியகோஷமுடையதும், திமிங்கிலமத்ஸ்யங்களும் முதலைகளும் அநேகமாயிரக்கணக்கான பலவகைப் பயங்கரமான ஜந்துக்களும்நிரம்பினதும், அணுக முடியாத ஆழமுள்ளதும், அதிக பயத்தைத் தரத்தக்கதும், ரத்னங்களுக் கெல்லாமிருப்பிடமும், வருணனுடைய கிருகமும், நாகங்களுக்கு வாஸஸ்தானமும், நதிகளுக்கு மிகவும் இனியகணவனும், வடவாக்னிக்கு வாஸஸ்தலமும், அஸுரர்களுக்கும் பயங்கரமான பிராணிகட்கும் இருப்பிடமும், வற்றுதஜலமுள்ளதும், பிரகாசமான நிறமுள்ளதும், ஒப்பற்றதும், தேவாமிர்தத்திற்கு முக்கியமான இடமும், அளவிடவும் சிந்திக்கவும் முடியாததும், பாபத்தைப் போக்குவதும், அங்கங்கே ஆயிரக்கணக்காக அநேக மஹாநதிகளால் மேன்மேலும் நிரப்பப்படுவதும், அலைகளினால் கூத்தாடுவது போல்வதுமாகிய சமுத்திரத்தைப் பார்த்துக்கொண்டு, தக்ஷபுத்திரிகளான கத்ருவும்வினதையும், ஆகாசமார்க்கமாகச் சென்றனர். இவ்வாறாக, மிகவும் அசைகின்ற அலைகளினாற்கலங்குவதும், அகாதமும், அகன்றதும், ஆகாசநிறமுள்ளதும், வடவாக்கினியின் ஜ்வாலையினால் தகிக்கப்படுவதும், கர்ச்சிக்கின்றதுமாகிய அந்தச் சமுத்திரத்தை அவ்விருவரும் விரைவாகத்தாண்டினர்.

## இருபத்துமூன்றுவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)



(கருடஜனனமும், தேவர்துதித்தலால் அவர் தேஜஸைக்குறுக்கினதும்.)

கத்ரு வினதையுடன்கூட விரைவாகச்சென்று, அந்தஸமுத்ரத்தைக்கடந்து,உடனே அந்தக்குதிரையினருகிற்போய்ச் சேர்ந்தாள். பிறகு, அவர்களிருவரும் சந்திரகிரணம்போல்வெண்மையானதும்

கறுத்தவாலுள்ளதும், மிகுந்த வேகமுள்ளதுமாகிய அந்த உயர்ந்த குதிரையைக் கண்டனர். வாலைச்சேர்ந்த மயிர்கள் மிகவும் கறுப்பாயிருப்பதைக்கண்டு, துக்கக்குறிப்போடுகூடிய வினதையைக் கத்ருவானவள் அடிமையாக நியமித்தாள். பிறகு, அந்த வினதை அந்த விஷயத்தில் பந்தயத்தைத் தோற்று, துக்கத்தினால் வருத்தப்பட்டுக்கொண்டு, அடிமைத்தன்மையை வஹித்தாள்.

அப்படியிருக்கிற ஸமயத்தில், குறித்தகாலம் வந்தபோது சிறந்த தேஜஸையுடைய கருடரும், தாயாரில்லாமலே, முட்டையை உடைத்துக்கொண்டு பிறந்தார். சிறந்த உத்ஸாஹமும் பலமுமுள்ளவரும், தம் ஒளியினால் எல்லாத்திசைகளையும் பிரகாசிக்கச் செய்பவரும், நினைத்தபடி ரூபமெடுப்பவரும், நினைத்தபடி போகிறவரும், நினைத்தபடி சக்தி எடுத்துக்கொள்ளுகிறவரும், ஜ்வலிக்கின்ற பெருநெருப்புப்போற் பயங்கரமாகப் பிரகாசிக்கின்றவரும், மின்னல்போற் பிரகாசிக்கும் சிவந்த கண்களையுடையவரும், பிரளயகாலாக்னிக்கொப்பானவருமாகப் பெரிய சரீரத்துடன் வ்ருத்தியடைந்த அந்தப் பக்ஷியாகிய கருடன், பயங்கரமாகவும் பயங்கரசப்தத்துடன் இரண்டாவது வடவாக்கினிபோல் உக்கிரமாகவும் ஆகாயத்திற் சென்றார். அவரைப் பார்த்துத் தேவர்களனைவரும் அக்னியைச் சரணமடைந்தனர். விச்வரூபியாக வீற்றிருக்கும் அக்னியை வந்தனஞ் செய்து, 'அக்னியே! நீ அதிக வ்ருத்தியை யடையாதே; எங்களைத் தஹிக்க விரும்பாமலிருக்கிறாயா? உன்னுடைய மிகப்பெரிய உருவம் ஜ்வலித்துக்கொண்டு பரவுகிறதே' என்று கேட்டனர். அதற்கு அக்னி 'அஸுரசத்ருக்களே! இந்தப் பெரிய உருவம் நீங்கள் நினைக்கிறபடி என்னுடையதன்று; இவன் சிறந்த பலமுள்ள கருடன்; தேஜஸினால் எனக்கொப்பானவன்; பிறக்கும்போதே மிகச்சிறந்த தேஜஸுள்ளவனாகப் பிறந்தவன்; வினதைக்கு ஆனந்தத்தைவிருத்திசெய்கிறவன்; இந்த ஒளியின் மிகுதியைக் கண்டு உங்களுக்குப் பிரமம் உண்டாயிருக்கிறது; இவன் நாகங்களுக்கு நாசத்தை உண்டாக்குகிறவன்; கச்யபரது புத்ரன்; மஹாபலசாலி; தேவர்களுக்கு நன்மை செய்வதிலேயே பிரவர்த்தித்தவன்; அஸுரர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் மட்டும் விரோதி; இவன்விஷயத்தில் எவ்விதத்திலும் நீங்கள் பயப்பட வேண்டாம்; என்னுடன் சேர்ந்து பாருங்கள்' என்று சொன்னான்.

அக்னியால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்தத் தேவர்கள் ரிஷிக்கூட்டங்களுடன் கருடனிடஞ்சென்று தூரத்தில் நின்றுகொண்டு அந்தக்கருடனை அடியில்வரும் வாக்கியங்களினால் துதித்தனர்.

'நீ [1]ரிஷி ; நீ மஹாமஹிமையுள்ளவன் ; நீ தேவனாகிய பக்ஷிராஜன் ; நீ ப்ரபு ; சத்துருக்களுக்குத் தாபம் உண்டுபண்ணுபவன் ; நீ [2]ஸூர்யன் ; நீ உயர்ந்த ஸ்தானத்திலிருப்பவன் ; நீ ப்ரஜைகளைக் காப்பவன் ; நீ [3]இந்திரன் ; நீ ஹயக்ரீவனென்னும் விஷ்ணுவின் அவதாரம் ; நீயே [4]சிவன் ; நீ உலகத்துக்கெல்லாம் ஈச்வரன் ; நீ ப்ரபஞ்சத்துக்கு முகம்போல முதன்மையான ப்ரம்மா ; நீ பிராமணன் ; நீயே அக்னி ; நீயே வாயு ; நீதான் [5] தாதாவும்விதாதாவுமாகிய இரண்டு தேவர்களும் ; [6]நீ தேவச்ரேஷ்டனாகிய விஷ்ணு ; நீ மஹான் ; நீ எப்போதும் சத்துருக்களைத் தோற்கச்செய்பவன் : [7]நீ அமிர்தம் ; நீ பெரிய கீர்த்தி ; நீ பேரொளி ; நீ யாவருக்கும் பிரியமானவஸ்து ; நீயே எங்களெல்லோருக்கும் சிறந்த காப்பு ; நீ தான் எப்போதும் எங்களுக்குக்கதி ; உன்னால் எங்களுக்குப் பயம் வருவதேது ! அழியாத கீர்த்தியுள்ளவனே ! நீ பலமென்னும் அலைநிறைந்த கடல் ; எதையும் சாதிக்கவல்லவன் ; தாழாத ஸ்வபாவமுள்ளவன் ; எல்லாம் நிறைந்தவன் ; நீ எதிரிகளால் தாங்கக்கூடாதவன் ; வருவதும் சென்றதுமாகிய அனைத்தும் உன்னிடமிருந்து உண்டாயின ; நீ மேலானவன் ; ஸூர்யனைப்போல் கிரணங்களினால் இந்த ஜங்கமஸ்தாவரமனைத்தையும் ப்ரகாசிக்கச் செய்கிறாய் ; சூர்யனுடைய ஒளியை மறைத்துவிடுகிறாய் ; நீயே அடிக்கடி முடிவைச் செய்கிறவன் ; இந்த நித்யாநித்யங்கள் யாவும் நீயே ; அக்னியைப் போன்ற ப்ரகாசமுள்ளவனே ! ஸூர்யன் கோபித்துக்கொண்டால் பிரஜைகளை எவ்வாறு தஹிப்பனோ, அவ்வாறு தஹிக்கிறாய் ; யுகங்கள் திரும்புவதை முடிப்பதற்கும் எல்லாவற்றையும் அழிப்பதற்கும் ஜ்வலிக்கிற ப்ரளயகாலாக்னிபோற் பயங்கரனாயிருக்கிறாய் ; மஹத்தான சக்தியுள்ளவனும், அக்னியைப்போன்ற பிரகாசமுள்ளவனும், மேகத்தில்லாமற் பிரகாசிக்கின்ற மின்னலைப் போன்றவனும், இருளையொழிப்பவனும், [8]எல்லாவற்றிற்கும் மேற்பட்டவனும், வரத்தைக் கொடுப்பவனும், ஜயிக்க முடியாத பராக்ரமமுடையவனும், மிகுந்த

---

1 சிறந்த ஞானமுள்ளவன்.

2 செம்மையாக லோகத்தைப் பிரவர்த்திக்கச்செய்பவன்.

3 மிகுந்த ஐச்வர்யமுள்ளவன்.

4 இங்கே சரனென்று பாடம்கொண்டு திரிபுரஸம்ஹாரத்தில் பாணரூபியாயிருந்த விஷ்ணு என்பது பழையஉரை.

5 தாதா=ஞானசக்தி, விதாதா=மாயையென்பது பழையஉரை.

6 இங்கே, நீ தேவசிரேஷ்டன் ; வியாபிப்பவன் என்பன பழையஉரை.

7 ஆனந்தரூபன். 8 காரணகாரியரூபன் என்பது பழையஉரை.

பலமுள்ளவனும், ஆகாசத்தில் ஸஞ்சரிப்பவனுமாகிய பக்ஷிராஜாவான கருடனாகிய உன்னிடம் வந்து நாங்கள் சரணாகதிசெய்கிறோம். ஜகத்துக்கெல்லாம் ப்ரபுவே! மாற்றுயர்ந்த பொன்னிறமான உன் ஒளியினால், உலகமெல்லாம் மிகவும் தாபமுண்டாக்கப்பட்டது. நீ மஹாத்மாக்களாகிய தேவர்களெல்லாரையும்காப்பாயாக. விமானங்களிலேறிச் சஞ்சரிக்கிற தேவர்கள் தோல்வியடைந்தவர்களாய்ப் பயத்துடன் ஆகாயத்தில் வழியைவிட்டு விலகிப்போகின்றனர். ஸமர்த்தனே! பக்ஷிராஜனே! நீ தயையுள்ளவரும் மஹாத்மாவுமாகிய கச்யபரிஷியின் புத்திரன்; ஆதலால், நீ கோபிக்கலாகாது; உலகத்தின்மீது மிகுந்த தயைபண்ணு; நீ ஸமர்த்தன்; தேஜஸ்ஸையடக்கிக்கொள்; எங்களைக் காப்பாற்று; பக்ஷியே! பெரிய இடியின் முழக்கத்துக்குச் சமானமாகிய உன்சப்தத்தினால் திசைகளும் ஆகாசமும் ஸ்வர்க்கமும் இந்தப் பூமியும் எங்கள் மனங்களும் இடைவிடாமல் நடுங்குகின்றன. அக்னியைப்போன்ற இந்த ரூபத்தை அடக்கவேண்டும்; கோபித்த யமனுக்கு ஒப்பான உன் தேஜஸ்ஸைக்கண்டு எங்கள் மனம் நிலைதப்பி அலைகின்றது. பக்ஷிராஜனே! வேண்டுகின்ற எங்கள் விஷயத்தில் அனுக்ரஹஞ்செய்; பகவானே! எங்களுக்கு ஸுகத்தைச்செய்து அனுகூலனாக இருக்கக்கடவாய்' என்றார்கள். தேவர்களாலும் ரிஷிக்கூட்டங்களாலும் இவ்வாறு துதிக்கப்பட்ட அந்தவைனதேயர் உடனே தம்தேஜஸ்ஸை அடக்கிக்கொண்டார்.

---

## இருபத்துநான்காவது அத்தியாயம்.

### ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)

(ராஹுபக்ஷணத்தினால் ஸூர்யனுக்குக் கோபமுண்டானதும், அருணன் ஸூர்யனை மறைத்ததும்.)

அந்தக்கருடர் தேவர்கள் சொன்னதைக்கேட்டுத் தாமும் தம்தேகத்தைப்பார்த்துத் தம்தேகத்தை அடக்கிக்கொள்ள ஆரம்பித்தார். 'பயங்கரமான ரூபத்தோடுகூடிய என் தேகத்தைக் கண்டு எல்லாப்பிராணிகளும் பயப்படாமலிருக்கட்டும்; பயங்கரமான ரூபத்தினால் இவர்கள் பயந்திருக்கிறார்கள்; ஆதலால், ஒளியைக் குறைக்கிறேன்' என்று சொன்னார். பிறகு, தாம் நினைத்தபடி போகத்தக்கவரும் நினைத்தசக்தியெடுத்துக்கொள்ளத் தக்கவருமாகிய அந்தக் கருடர் அருணனையும் தம்முதுகின்மேலேற்றிக்கொண்டு பிதாவின் க்ருஹத்திலிருந்தும் ஆகாசமார்க்கமாகப் புறப்பட்டு மஹாஸமுத்தி

ரத்தின் எதிர்க்கரையிலுள்ள மாதாவினிடம் போய்ச்சேர்ந்தார். சூரியன் மிகஉக்கிரமான தேஜஸுகளால் உலகங்களை எப்போது தஹிக்க நினைத்தானோ அப்போது சிறந்த தேஜஸுள்ள ஸூர்யனுடைய முன்னிலையில் அருணனையும் வைனதேயர் வைத்தார்" என்று ஸூதர் சொன்னார்.

சௌனகர், "பகவானாகிய ஸூர்யன் அப்போது எதற்காக உலகங்களைத் தஹிக்க நினைத்தான்? அவனுடைய எந்தப்பொருளைத் தேவர்கள் அபகரிக்க, அதனால் அவனுக்குக் கோபமுண்டது?" என்று [1]கேட்க, ஸூதர் சொல்லுகிறார்: "குற்றமற்றவரே! அமிர்தம் குடித்த ராஹுவைச் சந்திரசூரியர்கள் காண்பித்துக் கொடுத்தது முதல் அவன் சந்திரசூரியர்களின்மேல் மிக்க பகைகொண்டான். பிறகு, ராஹுக்ரஹணத்தினால் ஸூர்யன் பிடிக்கப்பட்டபோது ஸூர்யன் கோபங்கொண்டு, 'தேவகாரியத்திற்காகத்தானே ராஹுவுக்கு என்மீதுகோபம் உண்டானது; அதிகக்கெடுதியையுண்டாக்குகிற பாபத்திற்கு நானொருவன்தானா பாத்திரம்? எல்லாரும் தங்கள் காரியங்களில் மட்டும் உதவியைத் தேடுகின்றனர். உதவிசெய்தவனுக்குக் கஷ்டம்வந்தபோது அவனைக்கவனிப்பதில்லை; தேவர்கள், ராஹு என்னைவிழுங்குவதைப் பார்த்தும் ஸஹித்திருக்கின்றனர். ஆதலால், உலகங்களை அழிப்பதற்கு ஆரம்பிக்கப்போகிறேன்; இதில் ஸந்தேஹமில்லை' என்று நிச்சயஞ்செய்து அஸ்தமனமானான். அங்கிருந்து உலகமழியும்படி பெருந்தாபத்தைஉண்டுபண்ணினான். பிறகு, மஹரிஷிகள் தேவர்களிடஞ்சென்று, 'இந்த நடுராத்திரியில் எல்லா ஜனங்களுக்கும் பயத்தைச்கொடுப்பதும், மூன்றுலோகங்களுக்கும் நாசத்தையுண்டாக்குவதுமாகிய ஒருபெரிய தாபம் உண்டாகப்போகிறது' என்று சொன்னார்கள். உடனே, தேவர்கள் ரிஷிகளுடன் பிரம்மாவிடம்சென்று, 'இப்போது தஹிப்பதனாலுண்டான பெரிய பயத்திற்கு என்னகாரணம்? இன்னும் ஸூர்யன் தெரியவேயில்லை; இப்போதே பிரளயம்போலத் தோற்றுகிறது; பகவானே! ஸூர்யன் உதயமானபின் இது எவ்வாறாகுமோ?' என்று கேட்டனர். பிரம்மதேவர், அதைக்கேட்டு, 'இந்த ஸூர்யன் உலகங்களையழிப்பதற்காகவே உதயமாக ஆரம்பித்திருக்கிறான்; அவன் காணப்படும்போதே உலகங்களை நீறுக்குவியலாகச் செய்யப்போகிறான்; அதற்குப்பரிஹாரமும் முன்னமே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. கச்யபருடையபுத்ரன அருணனென்று பெயர்பெற்ற சிறந்தஞானமுள்ள ஒருவன் இருக்கிறான்; பெரியசரீரமும்மிகுந்தஒளி

1 ருருகேட்டதும் பிரமதிசொலவதுமாகச் சிலபுஸதகங்களிலிருக்கிறது.

யுமுள்ள அவன் ஸூர்யனுக்குமுன்னே இருக்கப்போகிறான்; ஸூர்யனுக்குஸாரதியாக இருந்து ஸூர்யனுடைய ப்ரகாசத்தையும் இழுக்கப்போகிறான்; அப்போது உலகங்களுக்கும் ரிஷிகளுக்கும்தேவர்களுக்கும் க்ஷேமமுண்டாகும்' என்றுசொன்னார். பின்பு, பிரம்மாவின் ஆஜ்ஞையினால், அருணன் அப்போது அவர் சொன்னதையெல்லாஞ் செய்தான். ஸூர்யன் உதயமானவுடன் அருணனால் மறைக்கப்பட்டான். ஸூர்யனுக்குக் கோபம்வந்ததும், இவனுக்கு ஸமர்த்தனான அருணன் ஸாரத்தியஞ் செய்ததுமாகிய இவையெல்லாம் உமக்குச்சொன்னேன். முன் சொல்லப்பட்டிருந்த கருடன்விஷயத்தையும் மறுபடியும் சொல்லுகிறேன்; கேளும்.

---

## இருபத்தைந்தாவது அத்தியாயம்.

## ஆஸ்திக பர்வம். (தொடர்ச்சி).

(வினதை கத்ருவையும் கருடன் ஸர்ப்பங்களையும் சுமந்ததும். கத்ரு இந்திரனைத் துதித்ததும்.)

அதன்பின்பு, இச்சைப்படி ஸஞ்சரிப்பவரும் மிகுந்த பராக்கிரமத்தையும் மிகுந்த பலத்தையுமுடையவருமாகிய கருடர் சமுத்திரத்தின் எதிர்க்கரையில் பந்தயத்திலதோற்று அடிமைத்தன்மையையடைந்து மிகுந்த துக்கத்தினால் வருத்தமடைந்துகொண்டிருந்த தம் தாயாகிய வினதையிருந்த இடத்திற்குப்போனார். அதன்பின், ஒருகாலத்தில் கத்ருவானவள், வினதையை அழைத்து, வணங்கி நின்ற அவளைப்பார்த்து, அவளுடையபுதல்வன் முன்னிலையில், 'பிரியமான வினதையே! ஸமுத்திரத்தின் நடுவில் ஒருபிரதேசத்தில் மிகச்சிறந்ததும் பார்க்கிறதற்கு இனியதுமாக நாகங்களுக்கு ஓரிடமிருக்கின்றது; என்னை அங்கே தூக்கிக்கொண்டுபோ' என்று சொன்னாள். பிறகு, கருடருடைய தாய் அந்த ஸர்ப்பங்களின் தாயை எடுத்துக்கொண்டுபோனாள். கருடரும், தாயினுடைய வாக்கியத்தினால் ஏவப்பட்டவராகி, ஸர்ப்பங்களைத் தூக்கிக்கொண்டு போனார். வினதையின் புத்திரராகிய அவர் ஸூர்யனுக்கு ஸமீபத்திற்போகையில், ஸூர்யகிரணங்களால் தபிக்கப்பட்டு, ஸர்ப்பங்கள் மூர்ச்சையடைந்தன. கத்ரு அந்தநிலைமையிலிருந்த தன்பிள்ளைகளைக் கண்டவுடன் பின்வருமாறு இந்திரனைத் துதிக்கலானாள்:

'எல்லாத்தேவர்களுக்கும் ஈசனே! உனக்கு நமஸ்காரம்; பலாஸுரனை ஸம்ஹரித்தவனே! உனக்குநமஸ்காரம்; நமுசியைக்கொன்ற

வனே! ஆயிரங்கண்களுடையவனே! இந்திராணியின்கணவனே! உனக்குநமஸ்காரம்; ஸூர்யனால் தபிக்கப்பட்டஸர்ப்பங்களை நீ ஜலத்தினால் நனைக்கக்கடவாய். தேவசிரேஷ்டனே! எங்களுக்கு நீதான் உயர்ந்த காப்பு; புரந்தரனே! நீதானே அளவற்றஜலத்தை வர்ஷிக்கிறதற்குச் சக்தியுள்ளவன்; நீதான் மேகம்; நீ வாயு; நீ அக்னி; நீ மின்னல்; நீ ஆகாயத்தில் மேகக்கூட்டங்களைப் பரவச்செய்பவன்; உன்னையே மஹாமேகமென்று சொல்லுகின்றனர்; ஒப்பில்லாத உக்கிரமான வஜ்ராயுதமும் நீயே; முழக்கமுள்ளமேகமும்நீ; நீதான் லோகங்களுக்கு ஸ்ருஷ்டிகர்த்தாவும் ஸம்ஹாரகர்த்தாவுமாக இருக்கிறாய்; நீ தோல்வியடையாதவன்; நீ ஸர்வப்பிராணிகளுக்குள்ளும் தேஜஸ்என்று சொல்லப்பட்ட சக்தியாக இருக்கிறாய்; ப்ரகாசத்தைத் தனமாகவுடைய ஸூர்யனும் நீயே; நீ அத்புதமான பெரிய பிரம்மம்; நீ ராஜா; நீ தேவச்ரேஷ்டன்; நீ விஷ்ணு; நீ ஆயிரங்கண்ணுள்ளவன்; நீ ஈச்வரன்; நீ மேலான ஆதாரம்; எல்லாம் நீ; அமிர்தம் நீ; தேவனே! மிகவும் பூஜிக்கப்பட்ட சந்திரனும் நீ; முகூர்த்தமும் நீயே; திதியும் நீயே; லவமென்னப்பட்ட க்ஷணத்திற்குஞ் சிறிய காலமும் க்ஷணமும் நீயே; சுக்லபக்ஷமும் நீயே; க்ருஷ்ணபக்ஷமும் நீயே; இமைத்தலும் நீயே; பதினெட்டு இமைக்கொட்டுகள் சேர்ந்த காஷ்டையும் நீயே; முப்பது காஷ்டைகளாகிய கலையும் நீயே; வருஷங்களும் ருதுக்களும் மாஸங்களும் இரவுகளும் பகல்களும் நீயே; மலைகளும் காடுகளுமடங்கிய உத்தமமான பூமியும் நீயே; ஸூர்யனோடுகூடிய இருளற்ற ஆகாசமும் நீயே; [1]திமிகளும் திமிங்கிலங்களும் சுறாமீன்களும் முதலைகளும் வெகுவாயுள்ளதும் பெரிய அலைகளோடு கூடியதுமான மஹாஸமுத்ரமும் நீயே; ஞானவான்களாகிய மஹரிஷிகளாலே நீ உயர்ந்தகீர்த்தியுள்ளவனென்று எப்போதும் பூஜிக்கப்படுகிறாய்; துதிக்கப்பட்டு ஸந்தோஷமுள்ள மனத்தோடு யஜ்ஞங்களில் ஸோமரஸத்தையும் ஹோமஞ்செய்யப்பெற்ற ஹவிஸுகளையும் யஜ்ஞம்பயன்படுவதற்காக நீ பானம்பண்ணுகிறாய்; ஒப்பற்றபெருஞ்சேனைகளுள்ளவனே! பிராமணர் எப்போதும் ப்ரயோஜனத்திற்காக இவ்வுலகத்தில் யாகங்களினால் உன்னை ஆராதிக்கின்றனர்; மந்திரங்களினால் ஸ்துதிக்கின்றனர்; யாகத்தை முக்கியமாக அவலம்பித்த பிராமணச்ரேஷ்டர்கள் உனக்காகத்தான் எல்லா முயற்சிகளுஞ்செய்து வேதங்களையும் வேதாங்கங்களையும் ஓதுகின்றனர்' என்றான்.

---

1 ஒருவகைமீன்.

## இருபத்தாறுவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திரன் வருஷித்ததும், நாகங்கள் ராமணீயகத்தீவை அடைந்ததும்.)

இவ்வாறு கத்ருவினால் துதிக்கப்பட்ட பகவானாகிய இந்திரன் அப்போது கறுத்த மேகங்களின் கூட்டங்களினால் ஆகாசமுழுமையையும் மறையச்செய்து, அந்தமேகங்களைப்பார்த்து, 'ஸுகமான ஜலத்தைப் பொழியுங்கள்' என்று கட்டளையிட்டான். அப்படிக் கட்டளையிடப்பட்ட மேகங்கள், மின்னலாற் பிரகாசித்துக்கொண்டும் ஆகாயத்தில் ஒன்றையொன்றுமிஞ்சுவதுபோல் இடைவிடாமல் கர்ச்சனைசெய்துகொண்டும் மிகுந்தஜலத்தைப் பொழிந்தன. மிகவும் ஆச்சரியமான அந்தமேகங்கள் மிகப்பெரியகர்ச்சனையோடு இடைவிடாமல் அபரிமிதமான ஜலத்தை வர்ஷித்ததனால், ஆகாசத்தில் பிரளயகாலம்வந்ததுபோலிருந்தது. மழைத்தாரைகள் அலைகள்போல் மிகுதியாக இருப்பதனாலும் மேகங்களின் அதிககர்ச்சனைகளாலும் மின்னலுடன்கூடக் காற்றடிப்பதனாலும் ஆகாசம் நர்த்தனஞ் செய்வதுபோலிருந்தது. இடைவிடாத நீர்த்தாரைகளை ஓயாமற்பொழிகின்ற அந்தமேகங்களினால் ஆகாசத்தில் சந்திரஸூர்யர்களின் கிரணங்கள் மறைந்துபோயின. அவ்வாறு இந்திரன் வர்ஷிக்கையில் நாகங்களுக்கு மிகுந்தஸந்தோஷமுண்டாயிற்று. பூமியெங்கும் ஜலத்தினால் நிரப்பப்பட்டது. நிர்மலமான குளிர்ந்த ஜலம் பாதாளம்வரையிற்சென்றது. அப்போது, பூமி பெரும்பாலும் ஜலங்களின் அலைகளால் மூடப்பட்டிருந்தது. ஸர்ப்பங்கள் தங்கள் தாயினுடன் ராமணீயகமென்னும் தீவுக்குச் சென்றன.

---

## இருபத்தேழாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)

(அமிர்தம்கொண்டுவந்தால் வினதையை அடிமைத்தனத்தினின்றும் விடுவிப்பதாகக் கருடனுக்கு ஸர்ப்பங்கள் சொன்னது.)

அப்போது, மேகங்கள் வர்ஷித்ததனால் ஸந்தோஷமடைந்த அந்தநாகங்கள், கருடர் தூக்கிக்கொண்டுபோனதனால் சீக்கிரமாக அந்த ராமணீயகத்வீபத்தைச்சேர்ந்தன. [1]முதலில், அந்தத்தீவுக்கு

1 பிறகு, வேறுதீவுகளுக்குப் போவதனால் முதலென்னப்பட்டது.

வந்து அந்த ஸர்ப்பங்கள், அவ்விடத்தில் பிரம்மாவினுல் முதலைக ளுக்கு இடமாக ஸ்ருஷ்டிக்கப்பட்ட பயங்கரமான [1]லவணஸமுத் ரத்தைக்கண்டன; ஸமுத்ரஜலத்திறை சுற்றிக்கொள்ளப்பட்டதும் பக்ஷிக்கூட்டங்களின் சப்தமுள்ளதும், புதியபுதியபழங்கள் புஷ்ப ங்களுள்ள வனங்களின் வரிசைகளினுல் மறைக்கப்பட்டதும், அழ கான வீடுகள் நிறைந்ததும், தெளிந்த ஜலமுள்ள தாமரைக்குளங்க ளாலும் உயர்ந்த மடுக்களாலும் அலங்கரிக்கப்பட்டதும், உயர்ந்த வாஸனையைக் கொண்டுவரும் பரிசுத்தமான காற்று வீசுவதும், காற்று அசைப்பதனுல் பூமாரி பொழிகின்றவையும் ஆகாயத்தின் மேல் எழும்புகின்றவைபோல் உயர்ந்தவையும் அங்குள்ள நாகங் களைப் பூமாரிகளினுல் நனைப்பவைபோன்றவையுமாகிய சந்தன வ்ரு க்ஷங்களாலும் காற்றினுல்இறைக்கப்பட்ட புஷ்பங்களையுடையவேறு மரங்களாலும் சோபிக்கின்றதும், மனஸுக்கு ஸந்தோஷத்தைக் கொடுப்பதும், பூலோகத்தில் அமையாததும், கந்தர்வர்களுக்கும் அப்ஸரஸுகளுக்கும் பிரியமானதும், வண்டுகள் மதித்துச் சப் திப்பதும், பார்ப்பதற்குப் பிரியமானரூபமுள்ளதும், ஜனங்களின் மனத்தை இழுக்கத்தக்க எல்லாவற்றுலும் அழகியதும், ஸுகமும் பரிசுத்தமும் கத்ருவின் புத்திரர்களுக்குச் சந்தோஷகரமுமாகிய வனத்தை ஸர்ப்பங்கள் கருடருடன் பார்த்தன. அப்போது அந்த ஸர்ப்பங்கள் அந்தவனத்தை அடைந்து விளையாடின. சிறந்த பராக் கிரமமுள்ள பக்ஷிராஜாவாகியகருடனைப்பார்த்து, "எங்களை இதை விட அழகாயும், தெளிந்த ஜலமுள்ளதாயுமிருக்கிற மற்றொருதீவுக் குக் கொண்டுபோ; பக்ஷியே! போகும்போது நீயும் அழகான பல தேசங்களைப் பார்க்கிறுயன்றோ' என்று சொல்லின.

அப்போது, வைனதேயர் ஆராய்ந்துபார்த்துத் தமதுமாதா வாகிய வினதையை நோக்கி, 'தாயே! ஸர்ப்பங்கள்சொல்வதைநான் செய்வதற்கு என்னகாரணம்?' என்றுகேட்டார். வினதை, 'பக்ஷி ராஜனே! என்மாற்றுள் பந்தயம்போட்டு, ஸர்ப்பங்களைக்கொண்டு கெட்ட உபாயத்தினுல் மோசஞ்செய்து அந்தப்பந்தயத்தைப் பொய் யாகச் செய்ததனுல், நான் அவளுக்கு அடிமையாயிருக்கிறேன்' என்றுசொன்னுள். தாய் அந்தக் காரணத்தைச் சொன்னவுடன், அவர், அவளுடைய துக்கத்தினுல் தாமும் வருத்தமுற்று ஸர்ப்பங்

1 முன்பு, அவர்கள் அங்கே லவணஸுரனைப் பார்த்தார்கள்: மறுபடி போனபோது அவனில்லையென்று கருத்து என்பது பழையவுரை.

களைநோக்கி, 'ஓ! நக்குகின்ற பாம்புகளே! எதைக்கொணர்ந்து, அல்லது எதைத்தெரிந்துகொண்டு, அல்லது எவ்விதமான முயற்சியை இங்கே செய்து, உங்களுக்குச்செய்யும் அடிமைத்தனத்திலிருந்து விடுபடுவேன்? உண்மையைச்சொல்லுங்கள்' என்று சொன்னார்.

அதைக்கேட்டு ஸர்ப்பங்கள், 'பக்ஷியே! பராக்கிரமத்தினால் அமிர்தம்கொண்டுவா; அதன்பின் உனக்கு அடிமைத்தனத்திலிருந்து விமோசனம் உண்டாகும்' என்று கருடனுக்குச் சொல்லின.

---

## இருபத்தெட்டாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)

(கருடர் வேடச்சேரியை விழுங்கினது.)

ஸர்ப்பங்களினால் இவ்வாறு சொல்லப்பெற்ற கருடர், பின்பு தாயைநோக்கி, 'நான் அமிர்தம் கொண்டுவரப் போகிறேன்; எனக்கு என்ன ஆகாரமென்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்?' என்று கேட்க, வினதை, 'சமுத்திரத்தின் நடுவிலுள்ள தீவின் ஒரு பாகத்தில் ஒரு பெரிய வேடச்சேரியிருக்கிறது. பக்ஷிராஜனே! அவ்விடத்தில் பாபிகளும், இஹபரமாகிய இரண்டுலோகங்களுமில்லாதவர்களும், தயையற்றவர்களும், துஷ்டர்களுமாகிய வேடர்களுடைய வீடுகளிருக்கின்றன. அநேகமாயிரம் வேடர்கள் இருக்கின்றனர். அவர்களைப் புசித்துவிட்டு அமிர்தத்தைக் கொண்டுவா; பிராமணனைமட்டும், எந்தக்காரியத்திற்காகவும், நீ கொல்ல நினையாதே; பிராமணன் அக்னிக்கொப்பானவன். எந்தப் பிராணிகளும் அவனைவதஞ்செய்தல் தகாது. கோபம்மூட்டப்பட்ட பிராமணன், அக்னிபோலவும் ஸூர்யன்போலவும் விஷம்போலவும் ஆயுதம் போலவுமாகிறான். பிராமணன் எல்லாப் பிராணிகளுக்கும் பெரியவன் என்று சொல்லுகின்றனர். மேற்சொன்ன வகையாகிய ஸ்வபாவங்களாலேதான் பிராமணன் பெரியோர்களால் கௌரவிக்கப்படுகிறான். குழந்தாய்! அப்படிப்பட்ட பிராமணனை எவ்வளவு கோபமிருந்தாலும் நீ கொல்லாதே. எந்தக்காரணத்தாலும் பிராமணர்களுக்குத் துரோகஞ்செய்வது தகாது. குற்றமற்றவனே! கடுந்தவமுள்ள ஒரு பிராமணன் சீற்றினால் எவ்வாறு பஸ்மமாகச்செய்வானோ அவ்வாறு அக்னியும் செய்யாது. ஸூர்யனும்செய்யான்; ஆதலால், நான் சொன்ன அநேக அடையாளங்களைக்கொண்டு நீ வருணங்களில் உயர்ந்தவனான பிராமணனைத் தெரிந்துகொள். பிராமணன் பிராணிகளுக்கு முதலில் உண்டானவன்; வருணங்கள் நான்கினும் சிறந்த

வன்; தந்தையைப்போலவும் குருவைப்போலவுமிருப்பவன்' என்று சொன்னாள். அதற்குக் கருடர், 'அம்மா! பிராமணன் எவ்விதமான வன்? அவன் ஸ்வபாவம் என்ன? சக்தியென்ன? அவன் பார்ப்பதற்கு அக்னியைப்போலிருப்பானா? அல்லது சந்திரனைப்போல இனிமையாயிருப்பானா? அம்மா! நான் ப்ரயோஜனத்திற்காகக் கேட்பதனால்பிராமணனை நான் தெரிந்துகொள்ளக்கூடிய அவனுடைய மேன்மையான அடையாளங்களை நீ எனக்குச் சொல்லவேண்டும்' என்று கேட்க, வினதை சொல்லுகிறாள்.

'புத்திரனே! எவனை நீ விழுங்கும்போது தொண்டையில் தூண்டில்முள் போவதுபோலிருக்குமோ, தணலைப்போற் சுடுமோ, அவனை உயர்ந்தவனான பிராமணனென்று அறி; கோபம்வந்தபோதிலும் எக்காலத்திலும் நீ பிராமணனைக்கொல்லாதே' என்றுசொல்லி, மறுபடியும் புத்ரப்ரேமையினால், 'உன் வயிற்றிற்போன பின் எவன் ஜரிக்காமலிருப்பானோ அவனைப் பிராமணோத்தமனென்றறி' என்றும் சொன்னாள். பிறகு, வினதை கருடருடைய ஒப்பற்ற சக்தியை அறிந்திருந்தும் நாகங்கள் செய்த தீங்கினால் மிகுந்த துக்கங்கொண்டு புத்ரவாத்ஸல்யத்தினால் ஆசீர்வாதம் செய்யத்தொடங்கினாள்: 'உன் சிறகுகளை வாயுபகவான் காக்கக்கடவர்; முதுகைச் சந்திரசூரியர்கள் காக்கக்கடவர்; உன் சிரஸை அக்னிபகவான் காக்கக்கடவர்; உன் சரீரத்தைச் சுற்றிலும் அஷ்டவஸுக்கள் காக்கக்கடவர்; எங்கும் வியாபித்த விஷ்ணு உன் அங்கங்களெல்லாவற்றையும் காக்கக்கடவர். புத்திரனே! நானும் எக்காலத்திலும் உனக்குத் தீங்குகளில்லாமையையும் க்ஷேமமுண்டாவதையும் பிரார்த்தித்துக்கொண்டு இங்கே உட்கார்ந்து எப்போதும் மங்களகார்யங்களைச் செய்துகொண்டிருப்பேன். புத்திரனே! நீ ஆரம்பித்தகார்யம் நல்லமுடிவுபெறும்படி வழியில் தீங்கில்லாமற் செல்வாயாக' என்றாள்.

அந்தக்கருடர், அன்னை சொன்னதைக் கேட்டபிறகு, சிறகுகளைவிரித்துக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பினார். பின்பு, பலவானாகிய கருடர் பசியுடன் வேடர்களிருக்குமிடத்திற்கு உலகத்தையழிக்கிற இரண்டாவது யமன்போலப் போய்ச்சேர்ந்தார். அப்போது அந்தக்கருடர் அந்தவேடர்களை ஸம்ஹரிப்பதற்காக ஆகாசத்தையளாவிய பெருந்தூளியை எழுப்பி ஸமுத்திரத்தின் நடுவிலுள்ள ஜலத்தை வற்றச்செய்து, அருகிலுள்ள [1]பர்வதங்களை அசையச்செய்து,

[1] கிருஷ்ணாசாரியர் பாடத்திற்குப் பர்வதங்களிலுள்ள மரங்களையென்று கொள்க.

வேடர்களுடையவழியைத் தடுத்துக்கொண்டு வாயைப்பெரிதாகத் திறந்தார். பிறகு, வேடர்கள் பயத்தால் பரபரப்படைந்து, அந்தக் கருடர் வாயைநோக்கியே ஓடினர். பெருங்காற்றினால் மரங்கள் ஆடுகின்ற வனத்திலுள்ள பக்ஷிகள் மண்ணோடுகூடிய காற்றினால் திசைதெரியாமல் ஆகாயத்துக்குள் ஓடுவதுபோல, அந்த வேடர்கள் மிகப்பெரிதாகத் திறக்கப்பட்ட அந்தக் கருடருடைய வாயினுள் ஆயிரக்கணக்காக ஓடினர். பிறகு, சத்துருக்களை ஸம்ஹரிக்கிற வரும் மிகுந்த பலமுள்ளவரும் பக்ஷிகளுக்கெல்லாம் ராஜாவும் பசித் தவருமாகிய கருடர் மீன்களினால் ஜீவிப்பவர்கள் பலவகையாரையும் விழுங்கிக் கொல்வதற்காகச் சீக்கிரத்தில் வாயைமூடினார்.

---

## இருபத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(கருடர் பிராமணனை விழுங்காமல் விட்டதும், யானையையும் ஆமையையும் தூக்கிக்கொண்டு சென்றதும்.)

ஒருபிராமணன் தன்பாரியையுடன் கருடருடைய நெஞ்சிற் போகும்போது, எரிகின்றதணல்போற் சுட்டான். அவனைப்பார்த்துப் பக்ஷிராஜர், 'பிராமணசிரேஷ்டனே! வாயைத்திறக்கிறேன்; நீ சீக்கிரம் வெளியிற்போ: எப்போதும் பாவச் செய்கைகளிலேயே இருப்பவனான பிராமணனையும் நான்கொல்லேன்' என்றுசொன்னார்.

இவ்வாறுசொல்லுகின்ற கருடரைப்பார்த்து,அந்தப்பிராமணன், 'என்பாரியையாகிய இந்தவேடச்சியும் என்னுடன்கூட வெளிப்பட வேண்டும்' என்று கேட்டான். கருடர், 'இந்தவேடச்சியையும் அழைத்துக்கொண்டு விரைவாக நீ வெளியிற்செல்; என்ஜாடராக்னியினால் நீ ஜீரணமாவதற்குமுன் சீக்கிரமாக உன்னை நீ காப்பாற்றிக்கொள்' என்றார். பின்பு, அந்தப்பிராமணன் வேடச்சியுடன்வெளிப்பட்டுக் கருடருக்கு ஆசீர்வாதம்செய்து, நினைத்த இடத்திற்குச் சென்றான். அந்தப்பிராமணன் பாரியையுடன் வெளிப்பட்டபின் அந்தப்பக்ஷிராஜர் பக்ஷங்களை விரித்துக்கொண்டு மனோவேகமாக ஆகாசத்தில் எழும்பினார். பிறகு, அறியக்கூடாத மஹிமையுள்ள கருடர் தம்பிதாவான கசியபரைக்கண்டு அவர் கேட்டதற்கு முறைப்படி தம்வரலாற்றைத் தெரிவித்தார். பின்பு, கசியபமஹரிஷி அவரை நோக்கி, 'புத்திரனே! உனக்கும் உன்தமையனுக்கும் உன்தாயா

ருக்கும் போஜனத்தில் மிகுந்தஸௌக்கியம் எப்போதுமிருக்கிறதா? முக்கியமாக உனக்கு வேண்டிய மிகுதியான ஆகாரம் மனுஷ்யலோகத்தில் கிடைக்கின்றதா? அதிவேகமாக நீஎங்கேபோகிறாய்? எனக்கு நீ சொல்லக்கடவாய்' என்று கேட்டதற்குக் கருடர்சொல்லலானார்.

'பிதாவே! என்தாயாருக்கும் என்பிராதாவுக்கும் போஜனத்தில் எப்போதும் ஸௌக்கியந்தான்; எனக்கு மிகுதியான போஜனம் வேண்டியிருப்பதனால் அவர்களைப்போல் ஸுகமில்லை. எல்லாவற்றிலுஞ் சிறந்த அமிர்தத்தைக் கொண்டுவரும்படி என்னை ஸர்ப்பங்கள் ஏவியிருக்கின்றன. என்தாயாரின் அடிமைத்தனத்தை விடுவிப்பதற்காக இப்போது நான் அதைக்கொண்டுவரப் போகிறேன். உணவுக்காக வேடர்களைச் சாப்பிடும்படி என்மாதா சொன்னாள். ஆயிரக்கணக்கான வேடர்களை உண்டும் எனக்குத் திருப்தியுண்டாகவில்லை. பகவானே! பிரபுவே! ஆதலால், நான் எதை உண்டால் அமிர்தத்தைக்கொண்டுவரச் சக்தியுள்ளவனாயிருப்பேனோ, அப்படிப்பட்ட வேறொரு உணவை நீங்கள் எனக்குச் சொல்லுங்கள்; என்பசியும் தாகமும் நிவிர்த்தியாகும்படியான ஆகாரத்தை எனக்கு நீங்கள் சொல்லவேண்டும்' என்றார்.

கசியபர், 'இந்த ஏரி மிகப்புண்ணியமென்று தேவலோகத்திலும் பிரஸித்திபெற்றது. இதில் ஒரு யானை பழம்பிறப்பில் தன் ஜ்யேஷ்டனை ஆமையை எப்போதும் தலைகுனிந்துகொண்டு இழுக்கின்றது. அவ்விரண்டிற்கும் முந்தியஜன்மத்தில் விரோதமுண்டானதையும் அவ்விரண்டினுடைய அளவையும்பற்றி நான் பூர்ணமாகவும் ஸரியாகவும் சொல்லுகிறேன்; கேள். குழந்தாய்! பக்ஷியே! முன்னே அவ்விரண்டுக்கும் மாதாபிதாக்களின் பொருள்களைப் பிரித்துக்கொள்ளுகிற விஷயத்தில் உண்டான விரோதத்தைப் பற்றிய கதையொன்று உனக்குச் சொல்லுகிறேன். அது ஸம்ஸாரத்தில் ஒழிவை விருத்திசெய்யத்தக்கது. நீ கேள்; உனக்கு க்ஷேமமுண்டாகட்டும்' என்று சொல்லத்தொடங்கினார்.

'விபாவஸுவென்று பெயருள்ள ஒரு மஹரிஷியிருந்தார். அவர் அதிககோபமுள்ளவர்; அவருக்கு ஸுப்ரதீகரென்னும் பெயருள்ள தம்பி ஒருவரிருந்தார். அவர் சிறந்த தவமுள்ளவர்; அந்தஸுப்ரதீக மஹரிஷி, தமையனுக்கும் தமக்கும் சொத்துப் பிரியாமலிருப்பதில் இஷ்டமடையவில்லை; ஸுப்ரதீகர் எப்போதும் சொத்தின்விபாகத்தைப் பற்றியே பேசுவது வழக்கம். அந்தஸுப்ரதீகரைப் பார்த்து, ஸஹோதரரானவிபாவஸு 'பெருந்தவமுள்ளவனே! விபாகத்தில்

அநேகம்பிழைகள்நேரிடும். பலர்,அறிவின்மையால் எப்போதும் விபாகத்தையேசெய்யவிரும்புகின்றனர். பிரித்துக்கொண்டபிறகு,திரவியத்தினால் மோஹங்கொண்டு ஒருவரையொருவர் ஆதரிப்பதில்லை. பிறகு, ஸ்வகார்யபரர்களும் தங்கள் தனங்களை வைத்துக்கொண்டு பிறகு தனித்தனியிருப்பவருமான இந்த மூடர்களைத் தெரிந்துகொண்டு விரோதிகள் மித்திரர்களைப்போற்சேர்ந்து, இவர்களைக்கலைக்கின்றனர். மற்றும் சிலர், இவர்கள் கலைந்துபோனதை அறிந்து இடையிலே பிரவேசிக்கின்றனர். விரோதமுள்ளவர்களுக்கு உடனே சீக்கிரத்தில் பெரிய நஷ்டம்வருகின்றது. ஆதலால், [1]பெரியோர்சொல்லிற் கட்டுப்பட்டவர்களும் ஒருவருக்கொருவர் ஸந்தேஹப்படாதவர்களுமான ஸஹோதரர்கள் பிரித்துக்கொள்வதை யோக்கியர்கள் சிலாகிப்பதில்லை' என்றுசொன்னார். இப்படிச் சொல்லப்பட்டும், ஸுப்ரதீகர் எப்போதும் பாகத்தையே சொல்லிக்கொண்டிருந்தார். இவ்வாறு நிர்ப்பந்தம் செய்ததனால் விபாவஸு அந்த ஸுப்ரதீகரைப் பார்த்து, 'ஸுப்ரதீகனே! பிரித்துக்கொண்டு தனத்தைவிரும்புகிற நீ, தடுக்க முடியாமலிருப்பதனால், யானை ஜன்மத்தை அடைவாயாக' என்றுசபித்தார். இப்படிச் சபிக்கப்பட்டஸுப்ரதீகர் விபாவஸுவை நோக்கி, 'நீயும் ஜலத்துக்குள் ஸஞ்சரிக்கிற ஆமையாவாய்' என்று சபித்தார். இப்படிஸுப்ரதீகரும்விபாவஸுவும்திரவியத்தைப்பற்றிப் புத்திமயங்கி ஒருவரையொருவர் சபித்துக்கொண்டு முறையே யானையும் ஆமையுமானார்கள். கோபமென்னும் தோஷந் தொடர்ந்துவந்ததனால், அவர்கள் திர்யக்ஜன்மமெடுத்தும் உருவத்தின் பெரியஅளவினாலும் பலத்தினாலும் மிகுந்த கர்வங்கொண்டு, ஒருவர்மேலொருவர் த்வேஷத்தைவிடவில்லை. பெரிய உருவமுள்ள அவ்விரண்டும் பழையவிரோதத்தை விடாமல் இந்தத் தடாகத்திலிருக்கின்றன. அவ்விரண்டனுள் ஒன்றாகிய அழகுள்ள பெரிய யானைவருகிறது. அதன்சப்தத்தைக்கேட்டு ஜலத்தினுள்ளிருந்த பெரிய சரீரமுள்ள ஆமையும், தடாகமுழுவதையும் கலக்கிக்கண்டு, இதோகிளம்பியது. வீரியமுள்ள இந்தயானை, அந்த ஆமையைக்கண்டு, துதிக்கையைச்சுழற்றிக்கொண்டு அநேகமத்ஸ்யங்கள் நிறைந்த இந்தத் தடாகத்தைத் தந்தங்களாலும் துதிக்கைநுனியினாலும் வாலினாலும் கால்களின் வேகத்தினாலும் கலக்கிக்கொண்டு ஜலத்தில் இறங்குகின்றது.

---

1 கிருஷ்ணாசாரியர் பதிப்பில், 'ஸஹோதரர்கள் பெரியோர் சொல்லிற் கட்டுப்படாமலும் ஒருவருக்கொருவர் ஸந்தேஹித்துக்கொண்டும் விபாகம் செய்துகொள்வதை யோக்கியர் சிலாகிப்பதில்லை' என்றிருக்கிறது.

வீரியமுள்ள ஆமையும், தலையைத் தூக்கிக்கொண்டு யுத்தத்துக்காக எதிர்த்துவருகின்றது. யானை ஆறுயோசனை உயரமும் அதற்கிரண்டத்தனை சுற்றளவுமுள்ளதாக இருக்கின்றது; ஆமை மூன்றுயோசனைஉயரமும் பத்துயோசனை சுற்றளவுமுள்ளதாகஇருக்கின்றது. இவ்விரண்டும் சண்டையில் கொழுத்தவை ; ஒன்றையொன்று கொல்ல விரும்புகின்றவை; இவற்றைப் புசித்துவிட்டு நீ நினைத்த காரியத்தைச் சீக்கிரமாகமுடிப்பாய். திரண்டபெரியமேகம்போன்ற அந்த ஆமையையும் பெரியமலைபோல் உக்கிரமான ரூபத்தோடுகூடிய அந்த யானையையும் புசித்துப் பிறகு அமிர்தத்தைக் கொண்டுவா' என்று சொன்னார்.

கசியபர் இவ்வாறுசொல்லி, பிறகு கருடரைப்பார்த்து, 'பக்ஷியே! நீ தேவர்களோடு யுத்தஞ்செய்கையில் உனக்கு மங்களம் உண்டாகக்கடவது ; பூர்ணகும்பமும் பிராமணுசீர்வாதமும் கோக்களும் இன்னும் வேறு உயர்ந்த க்ஷேமகரமான மங்களங்களும் உனக்கு நேரிடக்கடவன ; சிறந்தபலமுள்ளவனே ! பக்ஷிஸ்ரேஷ்டனே ! நீ தேவர்களுடன் யுத்தஞ்செய்யும்போது, ரிக்யஜுஸ்ஸாம வேதங்களும் பாபத்தைப்போக்குகின்ற ஹோமத்திரவியங்களும் எல்லா ஞானசாஸ்திரங்களும் (மற்ற) எல்லாவேதங்களும் (மந்திரங்களும்) உனக்குப் பலத்தை விருத்திசெய்யக்கடவன ' [1] என்று அவருக்கு மங்கள ஆசீர்வாதஞ்செய்தார்.

இவ்விதம் பிதா சொன்ன பிறகு, கருடர் அந்த மடுவினருகே சென்று, பலவகைப் பறவைகள் நிறைந்த தெளிவான ஜலத்தைப் பார்த்தார். கொடியவேகமுள்ள அந்தக்கருடர் பிதா சொன்னதை நினைத்து யானையை ஒருநகத்தாலும் ஆமையை மற்றொருநகத்தாலும் இடுக்கிக்கொண்டு பிறகு ஆகாயத்தில் உயரக்கிளம்பினார். அவர் [2] லம்பதீர்த்தம்சென்று அங்கே தேவலோகத்து விருக்ஷங்களாகிய கற்பகவிருக்ஷங்களிடம்சென்றார். அவருடைய சிறைக்காற்றினால் அடிக்கப்பட்ட அந்தத் தேவலோகத்து ஸ்வர்ணமயமான விருக்ஷங்கள், 'நம்மை முறிக்காமலிருக்கவேண்டுமே'யென்று பயந்து நடுங்கின. நினைத்தபலனைத்தரும் அம்மரங்கள் நடுங்கினதைக்கண்டு கருடர், பொன்னும் வெள்ளியுமான பழங்களினாலும் வைடூர்யமயமான கிளைகளினாலும் பிரகாசிக்கின்றவையும், ஸமுத்ரஜலத்தினால் சூழப்பட்டவையும், ஒப்பில்லாத ரூபமுள்ளவையுமான வேறு பெரியமரங்

---

1 இங்கே அதிகபாடமாக உள்ள ஒருவரி விடப்பட்டது

2 'ஸாலம்பம்' என்று பாடம்கொண்டு, 'ஆதாரமில்லாமல் ஆகாசமார்க்கமாகப் புண்ணியமான மேருசிகரத்துக்குப்போய்' என்பது பழைய உரை.

களிடம்போனார். அவைகளின் நடுவில் வெகுஅழகாயும் ஆயிரம்யோசனை உயரமுள்ளதாவும் அநேகம் கிளைகளுள்ளதாயும் பக்ஷிகளுக்கு இருப்பிடமாயுமுள்ள தேவலோகத்திய பெரிய [1] ஆலமரமொன்று இருந்தது. அதனுடைய நிழலையடைந்தவன் உடனே ஸௌக்யமடைவான். அங்கே அதிகவளர்ச்சியுள்ள அந்தப் பெரியஆலமரம் மனோவேகமாகவருகின்ற அந்தப்பக்ஷிராஜாவைப்பார்த்து, 'நூறு யோசனை நீளமுள்ள எனது இந்தப்பெரிய கிளையிருக்கின்றதே; இதில், உட்கார்ந்துகொண்டு நீ இந்த யானையையும் ஆமையையும் சாப்பிடு' என்றுசொல்லிற்று. பிறகு, மலைக்குச்சமானமான சரீரமுள்ளவரும் சிறந்தவேகமுள்ளவருமாகியபக்ஷிராஜர் ஆயிரம்பக்ஷிகள் அடைந்திருக்கும் அம்மரம் நடுங்கும்படி விரைவாகவந்து இறங்கினதனால், நெருங்கின இலைகளோடுகூடிய அந்தக்கிளை முறிந்தது.

---

## முப்பதாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



**(கருடர் தாம் உட்கார்ந்ததனால் முறிந்தஆலங்கிளையில் வாலகில்யரிஷிகள் தொங்கிக்கொண்டிருந்ததைக்கண்டு அதை மூக்கினால்கொத்தித் தூக்கிக்கொண்டுபோய் இமயமலையிலிருந்து ஆமையையும் யானையையும் புஜித்தது.)**

அதிகபலவானான கருடர் கால்களால் தொட்டமாத்திரத்தில் அந்தமரக்கிளை முறிந்தது. முறிந்துபோன அந்த ஒருகிளையை விழாமல் காலாற்பிடித்துக்கொண்டார். முறித்த பிறகு அவர் அந்தப் பெருங்கிளையைப் புன்னகையுடன் பார்க்கும்போது, அதில் வாலகில்யரென்னும் ரிஷிகள் தலைகீழாகத் தொங்குவதைக்கண்டார். தவத்தில் ஊக்கமுள்ள அந்தப் பிரம்மரிஷிகள் அதில் தொங்குவதைக்கண்டு, 'இந்த ரிஷிகள் தொங்குகின்றார்களே; நான் இவர்களைக் கொல்லாமலிருக்கவேண்டுமே; இந்தக்கிளை விழுந்தால் இவர்களைக்கொன்று விடுமே' என்றுநினைத்து அந்தவீரராகிய கருடர் யானையையும் ஆமையையும் நகங்களினால் மிகவும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு அந்த

---

1 மூலத்தில், 'ரௌஹிணம்' என்றிருக்கிறது. இது, பாரதம் நீலகண்டவ்யாக்யானத்தாலும், வால்மீகிராமாயணம் ஆரண்யகாண்டம். நரு-வது அத்தியாயம், உசு-வது முதலிய சுலோகங்களாலும், "விண்ணளாவுமோர்வடதருச்சினைமிசைமேவி" என்னும் பாரதச்செய்யுளாலும், ஆலமரமென்றே விளங்குகின்றது; இராமாயணத்தாலேயே அது ஸுபத்ரம் என்னும் பெயருடையது என்பதும் தெரிகிறது. இதற்குச் சந்தன விருக்ஷமென்றும் பொருளுண்டு.

ரிஷிகளுடைய நாசத்திற்குப் பயந்து அவர்களைக் காப்பாற்றுவதற்காகவே வேகமாக ஓடி வாயினால் அந்தக்கிளையைக் கௌவிக்கொண்டார். தேவர்களுக்கும் முடியாத அந்தச்செய்கையை அவரிடங்கண்டு அம்மஹாரிஷிகள் மனத்தில் ஆச்சரியமேலிட்டு அந்தப்பறவைகட்கு அரசரான கருடரைப்பார்த்து, 'ஸர்ப்பங்களைப் புசிப்பவனாகிய இந்தப்பக்ஷிராஜா பெரியபாரத்தையும் தூக்கிக்கொண்டு ஆகாயத்திற் பறப்பதனால் இவனுக்கு, 'கருடன்' என்று பெயர் இருக்கட்டும்' என்றனர். அதன்பிறகு, சிறகின்வேகத்தால் மலைகள் அசையும்படி பறந்துகொண்டு யானையையும் ஆமையையும் இடுக்கிக்கொண்டே வாலகில்யர்களுடைய நலைக்காகக் கிரமமாக அநேகதேசங்களைத் தாண்டினார்; ஓரிடத்திலும் தங்கவில்லை. அவர் நேராகக் கந்தமாதனமென்னும் சிறந்த பர்வதத்திற்குப்போய் அவ்விடத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கும் தமது பிதாவாகிய கசியபரைக்கண்டார். அந்தக்கசியபரும், உயர்ந்தரூபமுள்ளவரும், ஒளியும் பராக்கிரமமும் பலமுமுள்ளவரும், மனத்துக்கும் காற்றுக்கும் ஒப்பானவேகமுள்ளவரும், மலைச்சிகரம்போன்றவரும், மேலே தூக்கப்பட்ட பிரமதண்டம்போன்றவரும், சிந்திப்பதற்கும் தியானஞ்செய்வதற்கும் முடியாதவரும், ஸர்வப்பிராணிகளுக்கும் பயத்தைச்செய்கிறவரும், மஹாசக்தியுள்ளவரும், ஜ்வலிக்கின்ற அக்கினியைப்போல் உக்கிரமானவரும், தேவர்களாலும் அசுரர்களாலும் ராக்ஷஸர்களாலும் எதிர்க்கவும் ஜயிக்கவும் முடியாதவரும், மலைகளின் சிகரங்களைப் பெயர்ப்பவரும், ஸமுத்ரஜலங்களை வற்றச்செய்பவரும், உலகங்களை ஆட்டுகிறவரும், பார்ப்பதற்கு யமனைப்போற் பயங்கரருமான அந்தக்கருடரைக்கண்டார். அப்போது பகவானான கசியபரும் அவர் வந்ததைப்பார்த்து வாலகில்யரைப்பற்றிய அவருடைய அபிப்பிராயத்தையுமறிந்து, 'புத்திரனே! ஸாஹஸகாரியஞ்செய்யாதே; உடனே துன்பத்தையடையாதே; ஸூர்யகிரணங்களைப் பானஞ்செய்கிற வாலகில்யமஹாரிஷிகள் கோபித்து உன்னை நீறாகச் செய்யாமலிருக்கவேண்டும்' என்று புத்திரரைப்பார்த்துச் சொல்லி, பிறகு, கசியபர் தபஸினால் கல்மஷங்களைப்போக்கின மஹாமஹிமையுள்ள வாலகில்யரிஷிகளைப் பார்த்து, 'தபோதனர்களே! கருடனுடைய ஆரம்பம் ஜனங்களின் நன்மைக்காக; அவன் பெரிய காரியத்தைச்செய்ய ஆரம்பித்திருக்கிறான்; அதற்கு நீங்கள் அநுமதிகொடுக்கக்கடவீர்கள்' என்று வேண்டிக்கொண்டார். பகவானான கசியபரால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த வாலகில்யமஹாரிஷிகள் அந்தக் கிளையைவிட்டு நீங்கித் தவத்திற்காகப் புண்யமான இமய

மலைக்குச் சென்றனர். அந்தரிஷிகள் போனபிறகு, கருடர் கிளையினால் தடுக்கப்பட்டவாயுடன் பிதாவானகசியபரைப்பார்த்து, 'பகவானே! இந்தமரக்கிளையை நான் எங்கேபோடலாம்? மனிதர்கள் இல்லாதவிடத்தை நீங்கள் எனக்குச்சொல்லவேண்டும்' என்று கேட்க, அதற்கு அந்தக் கசியபர், மனிதர்களில்லாததும், குகைகளெல்லாம் பனியினால்மூடப்பட்டதும், மற்றவர்கள் மனத்தினாலும் போகக்கூடாததுமாகிய ஒருபர்வதத்தைக் கருடருக்குக் காண்பித்தார். அந்தப்பக்ஷிராஜர் [1]விசாலமான நடுப்பிரதேசத்தையுடைய அந்தப்பர்வதத்தைநோக்கி, கிளை, யானை, ஆமை இவைகளுடன் வேகமாகச்சென்றார். கருடர் தூக்கிக்கொண்டுபோன அந்தப் பருத்து நீண்டகிளையைச்சுற்ற [2]அநேகம் தோல்களால்செய்யப்பட்ட வார்கூடப் போதாது; அதன்பின், அதிககாலதாமஸமில்லாமலே பக்ஷிரர்ஜாவாகிய அந்தக்கருடர், கசியபரிடத்திலிருந்து நூறாயிரம் யோசனை தூரம்போனார். பிதாவின் சொல்லைக்கேட்டு வெகுசீக்கிரமாக அம்மலைக்குச்சென்று அந்தப்பெருங்கிளையைச் சப்தமுண்டாகும்படி அங்கே விட்டுவிட்டார். அந்தப்பெரியமலை, இவருடைய பக்ஷங்களின் காற்றினால் அடிக்கப்பட்டு அசைந்து மரங்கள் பெயர்ந்து புஷ்பவர்ஷத்தையும் வர்ஷித்தது. ரத்தினங்களினாலும் பொன்னினாலும் சித்திரங்களும் அந்தமலைக்கு அழகை உண்டாக்குகின்றவையுமான அதன்சிகரங்கள் நாலுபக்கமும் சரிந்துவீழ்ந்தன. அந்தக் கிளையினாலடிபட்ட அநேக மரங்களும் தங்கமயமான புஷ்பங்களோடு, மின்னலோடுகூடிய மேகங்களைப்போல்விளங்கின. பொன்னிறமாகப் பிரகாசிக்கின்ற அந்தமரங்கள் பூமியில் விழுந்து, அம்மலையிலுள்ள பொன்னிறமான மண்களுடன் சேர்ந்து, சூரியகிரணங்களும் படுவதினால் பிர்காசமாக விளங்கின.

பிறகு, அந்தப்பக்ஷிராஜாவாகிய கருடர், அம்மலையின் கொடுமுடியிலுட்கார்ந்து, அந்தயானை ஆமை இரண்டையும் பக்ஷித்தார். அவர் அவ்விரண்டையும் பக்ஷித்தபின் அந்தப்பர்வத சிகரத்தின் உச்சியிலிருந்து மிகுந்தவேகத்துடன் உயரப்பறந்தார். அப்போது, தேவர்களுக்குப் பயத்தைத்தெரிவிக்கின்ற அபசகுனங்களுண்டாயின. இந்திரனுடைய பிரியமான வஜ்ராயுதமானது பயத்தினால் ஜ்வலித்தது; ஆகாசத்திலிருந்து பகலில் புகையோடும் ஜ்வாலையோடும் எரிகொள்ளி விழுந்தது. வஸுக்கள், ருத்ரர்கள், ஆதித்யர்கள்,

1 'அந்தப்பர்வதத்தின் விசாலமான மத்தியத்தைநோக்கி' என்பது மற்றொருபாடம்.

2 'நூறுமாடுகளின் தோலினாற்செய்யப்பட்டவார்' என்பது பழையஉரை.

ஸாத்தியர்கள், ஸப்தமருத்துக்கள், மற்றுமுள்ள தேவக்கூட்டங்களாகிய எல்லாருடைய ஆயுதங்களும், ஒன்றையொன்று பீடித்தன. தேவாஸுரயுத்தம் நடந்தபோதும், இந்த அபசகுனம் உண்டானதில்லை. காற்று இடியுடன் அடித்தது. எரிகொள்ளிகள் ஆயிரக்கணக்காகவிழுந்தன. மேகமில்லாமலே ஆகாசத்தில் பெருமுழக்கமுண்டாயிற்று. தேவர்களுக்குத்தேவதையாகிய இந்திரன் ரக்தத்தை வர்ஷித்தான்; அவர்களுடைய புஷ்பமாலைகள்வாடின; ஒளிகள் மாறின; பயங்கரமுள்ளவைகளாகிய பிரளயகாலமேகங்கள் அதிக ரக்தத்தை வருஷித்தன. தேவர்களுடைய உயர்ந்தகிரீடங்களைத் தூளிகள்கிளம்பி மூடின. பிறகு, இந்திரன் தேவர்களுடன்கூடப் பயங்கரங்களான அபசகுனங்களைக்கண்டுபயந்து, ப்ருஹஸ்பதியைப்பார்த்து, 'பகவானே! பயங்கரமான அபசகுனங்கள் காரணமில்லாமல் உண்டாயிருப்பதென்ன? நம்மை யுத்தத்தில் எதிர்க்கக்கூடிய சத்துருயாரும் இருப்பதாக எனக்குத்தெரியவில்லை' என்றுகேட்க, ப்ருஹஸ்பதி, 'தேவேந்திரனே! மஹாத்மாக்களான வாலகில்யமஹரிஷிகளின் தவத்தினால் கசியபமுனிக்கு வினதையினிடம்பிறந்த புத்திரனும் நினைத்த ரூபமெடுப்பவனும் மிகுந்தபலவானுமாகிய கருடன் உன்னுடையகுற்றத்தினாலும் அஜாக்கிரதையினாலும் அமிர்தத்தைக் கொண்டுபோக வந்திருக்கிறான். பலவான்களுக்கெல்லாம் சிறந்தவனாகிய பக்ஷிராஜன் அமிர்தத்தைக் கொண்டுபோவதற்கு ஸாமர்த்தியமுள்ளவன்; அவனிடத்தில் எதையும் எதிர்பார்க்கிறேன்; அவன் சாதிக்கக் கூடாததையும் சாதிப்பான்' என்று சொன்னார். இந்திரன் இந்தச் சொல்லைக்கேட்டு, அமிர்தம் காப்பவர்களைப் பார்த்து, 'மிகுந்தபராக்கிரமமும் வன்மையுமுள்ள பக்ஷிராஜன் இங்குள்ள அமிர்தத்தைக் கொண்டுபோக ஆரம்பித்திருக்கிறான்; இதோ உங்களுக்குத் தெரிவிக்கிறேன்; தேவவீரர்களே! கவசங்களைத் தரித்துக்கொண்டும் ஆயுதங்களை எடுத்துக்கொண்டும் நீங்களெல்லாரும் என் ஆஜ்ஞைப்படி அமிர்தத்தைச் சுற்றிக்கொண்டு அவன் பலாத்காரமாகக் கொண்டுபோகாவண்ணம் காப்பாற்றுங்கள். அவனுடைய பலத்துக்கு ஒப்பில்லையென்று ப்ருஹஸ்பதி சொல்லியிருக்கிறார்' என்று சொன்னான். அவ்வாறு இந்திரன் சொன்னதைக் கேட்டு, தேவர்கள் வியப்புற்று முயற்சியுடன் அமிர்தத்தைச் சுற்றி நின்றனர். வீரனாகிய இந்திரனும் வஜ்ராயுதமெடுத்துநின்றான். உத்ஸாஹமுள்ள தேவச்ரேஷ்டர்களனைவரும் சிறந்த ஆபரணங்களை அணிந்து பிரகாசித்துக்கொண்டு, பொன்மயமானவையும் வைடூரியமிழைத்தவையும் மிகுந்தவிலைபெற்றவையுமான விசித்திரகவசங்களை

யும், பிரகாசமுள்ளவைகளும் கெட்டியுமான கேடகங்களையும், பார்ப்பதற்கு உக்கிரமும் கூர்மையுமான பற்பல ஆயுதங்களையும், நெருப்புப் பொறிகளும் ஜ்வாலைகளும் புகைகளும் உண்டாகின்ற சக்கரங்களையும், இருப்புக்கட்டுத்தடிகளையும், திரிசூலங்களையும், கோடாலிகளையும், தீக்ஷணங்களான அநேக வித சக்தி ஆயுதங்களையும், பளபளப்பான கத்திகளையும், பார்ப்பதற்குப் பயங்கரமான கதாயுதங்களையும், தங்கள் தேகங்களுக்கு ஏற்றபடி எடுத்துக்கொண்டு, பிரகாசிக்கின்ற அந்த ஆயுதங்களோடு அச்சமின்றி நின்றனர். ஒப்பற்றபலமும் பராக்கிரமமும் ஒளியுமுள்ளவர்களும், அமிர்தத்தைக் காப்பதில் உறுதியான மனமுள்ளவர்களும், ஜ்வலிக்கிற அக்னியைப்போல் பிரகாசிக்கின்ற சரீரமுள்ளவர்களும், அஸுரருடைய நகரங்களைப் பிளப்பவர்களுமாகிய அந்தத்தேவர்கள், அநேகலக்ஷம் பரிகாயுதங்கள் நிறைந்த அந்தப்பெரியயுத்தத்தில் இவ்வாறு நின்றனர். அப்போது [1] ஸூர்யகிரணங்களினால் பிரகாசிக்கின்ற ஆகாசத்தின் மத்தியம் நழுவிவிழுந்ததுபோலத் தோன்றிற்று.

---

## முப்பத்தோராவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(வாலகில்யர் தபஸினால் கருடர் உண்டானது.)

சௌனகர், "ஸௌதியே! தேவேந்திரனிடத்தில் என்ன குற்றமும், என்ன அஜாக்ரதையும் இருந்தன? வாலகில்யர்களுடைய தவத்தினால் கருடருண்டானது எப்படி? பிராமணரான கசியபருக்குப் பக்ஷிராஜர் பிள்ளையானது எப்படி? அந்தப்பக்ஷிராஜர் எல்லாப் பிராணிகளாலும் எதிர்க்கமுடியாமலும் வதஞ்செய்யமுடியாமலும் ஆனது எவ்வாறு? அந்தப்பக்ஷிராஜர் நினைத்தபடி ஸஞ்சரிப்பவரும் நினைத்தபடி சக்தியுள்ளவருமாக இருந்தது எப்படி? இவை பூர்வ சரித்திரத்திற் சொல்லப்பட்டிருந்தால் நான் கேட்கவிரும்புகிறேன்" என்றுகேட்க, ஸௌதி சொல்லலானார்.

"நீங்கள் என்னைக்கேட்டது புராணத்திலுள்ள விஷயந்தான். பிராமணரே! இவற்றை நான் சுருக்கமாகச்சொல்லுகிறேன்; கேளும். ப்ரஜாஸ்ருஷ்டிகர்த்தாவாகிய கசியபர், புத்திரனைவிரும்பி யாகஞ்செய்யும்போது, ரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் உதவிசெய்தனர்.

---

1 ஆபரணமுதலியவை ஸூர்யகிரணம் போலவும் இருப்பாயுதங்கள் ஆகாசம்போலவும் இருந்தனவென்பது கருத்து.

அதில் இந்திரனும் வாலகில்யரிஷிகளும் மற்றுமுள்ள தேவக்கூட்டங்களும் ஸமித்துக்கள் கொண்டுவருவதற்குக் கசியபரால் நியமிக்கப்பட்டனர். இந்திரன் சக்தியுள்ளவனாதலால் மலைபோன்ற ஸமித்துக்கட்டைத் தன் சக்திக்குத்தக்கபடி எடுத்துக்கொண்டு அதிகச்ரமமில்லாமல் வந்தான். அப்போது கட்டைவிரல் நடுரேகையளவான குறிய சரீரமுள்ளவர்களும் ஒற்றைப் பலாசக்கழியை அநேகர்சேர்ந்து சுமப்பவர்களும், அதன்பாரத்தினால் தங்கள் அங்கங்கள் குன்றியிருப்பவர்கள் போன்றவர்களும், ஜலம் நிறைந்த ஒருமாட்டுக்குளப்படியில் கஷ்டப்படுகிறவர்களும், சக்தியற்றவர்களும், ஆகாரமில்லாதவர்களுமான ரிஷிகளை வழியிற்கண்டான். பராக்கிரமத்தினாற் கர்வமடைந்த இந்திரன், ஆச்சரியத்துடன் அவர்களெல்லாரையும் பார்த்துச் சிரித்து அவமதித்துத் தாண்டிக்கொண்டு வேகமாகச்சென்றான். பிறகு, அவர்கள் கோபத்தோடும் மனத்தில் மிகுந்த துக்கத்தோடும் இந்திரனுக்குப் பயத்தைத்தரத்தக்க பெரிய செய்கையைச்செய்ய ஆரம்பித்தனர். அந்த உயர்ந்த தவமுள்ள பிராமணர்கள், எந்தப் பிரயோஜனத்திற்காக அநேகமந்திரங்களினால் சாஸ்திரப்படி அக்னியில் ஹோமஞ்செய்தார்களென்பதைச் சொல்லுகிறேன்; கேளும். 'விரும்பும் சக்தியுள்ளவனும், நினைத்தபடி ஸஞ்சரிப்பவனும், இந்திரனுக்குப் பயத்தைக் கொடுப்பவனுமாக மற்றோர் இந்திரன் எல்லாத் தேவர்களுக்கும் இருக்கவேண்டும்' என்றும், 'சௌர்யவீரியங்களில் இந்திரனைக்காட்டிலும் நூறுமடங்கு அதிகமுள்ளவனாகவும் மனோவேகமுள்ளவனாகவும் பயங்கரனாகவும் நம்முடைய தபஸின் பலனாக இப்போது உண்டாகவேண்டும்' என்றும் கிரியைசெய்தனர்; அதையறிந்து தேவராஜாவாகிய இந்திரன் மிகுந்தவருத்தமுள்ளவனாகி உக்கிரமான தவமுள்ளகசியபரைச்சரணமடைந்தான். இந்திரன் சொன்னதைக்கேட்டு, பிரஜைகளுக்குப் பிரபுவாகிய கசியபர், வாலகில்யர்களிடம் சென்று,' நீங்கள் என்ன பலனைவிரும்பி இந்தஹோமகாரியத்தை ஆரம்பித்தீர்கள்? எனக்குச் சரியாகச் சொல்லுங்கள்; நான்கேட்க விரும்புகிறேன்' என்றுவாலகில்யர்களின்கிரியையின் முடிவைப்பற்றிக்கேட்க, அவருக்கு ஸத்யவாதிகளான வாலகில்யர்கள், 'ஐஸ்வர்ய கர்வத்தினால் ஒன்றும்தெரியாதமூடனான தேவேந்திரன் புத்தியில் தேர்ச்சியில்லாமல் சிஷ்டர்களுடைய ஆசாரங்களை நிந்தித்து எங்களை அவமதித்தான். கசியபரே! அவனுடைய அந்தக்கர்வத்தைக் கெடுப்பதற்காக நாங்கள் சாஸ்திரப்படி இந்தக்கிரியை ஆரம்பித்திருக்கிறோம்' என்றும், 'இப்படித்தான் ஆகவேண்டும்' என்றும் மறு

மொழிகூறினர். கசியபர் நல்லவார்த்தையுடன் அவர்களைப்பார்த்து, 'இவன் பிரமாவினுடையகட்டளையினால் மூன்று லோகங்களுக்கும் இந்திரனாக ஏற்பட்டிருக்கிறான். தபோதனர்களே! நீங்களும் இந்திரனுக்காகத்தான் முயற்சிசெய்கிறீர்கள்; சிறந்த ஸாதுக்களே! பிரம்மாவின் சொல்லை நீங்கள் பொய்யாகச்செய்தல் தகாது; உங்களுடைய இந்த எண்ணத்தையும் நான் பொய்யாக்க நினைக்கவில்லை; மிகுந்த பலமும் தைர்யமுமுள்ளவனும், உங்கள் கிரியையினாலுண்டானவனுமானபுருஷன் பக்ஷிகளுக்கு இந்திரனாக இருக்கட்டும்; வேண்டிக்கொள்ளுகிற இந்த இந்திரன்விஷயத்தில் நீங்கள் அனுக்ரஹஞ் செய்ய வேண்டும்' என்று நல்லவார்த்தையாகச் சொன்னார்.

இப்படிக் கசியபரால் சொல்லப்பட்ட வாலகில்ய மஹாரிஷிகள், ரிஷிச்ரேஷ்டராகிய கசியபருக்கு மரியாதைசெய்து, 'ஸ்ருஷ்டிகர்த்தாவே! இந்திரனுக்காகவும் உமக்குப் புத்ரஸந்தானத்துக்காகவும் நாங்களெல்லாரும் இதைச்செய்ய ஆரம்பித்தோம்; இந்தக்கிரியையைப் பலனுடன் உமக்குக் கொடுத்துவிடுகிறோம்; நீர் வாங்கிக்கொண்டு எப்படி இருக்குமானால் நன்மையென்று தோன்றுகிறதோ அப்படியே செய்துகொள்ளும்' என்றுசொன்னார். அந்தச் சமயத்தில், அழகும் குணமுமுள்ளவளும் புகழ்பெற்றவளுமான வினதையென்று பெயருள்ள தக்ஷபுத்திரியாகிய கசியபர்பத்னி, புத்திரனை வேண்டித் தவஞ்செய்து நியமத்துடன் ஸ்நானஞ்செய்து நோன்பு நோற்றுத் தனக்குப் பிள்ளைபிறக்கவேண்டுமென்று பரிசுத்தமாகத் தன்பர்த்தாவினிடஞ் சென்றாள். பிறகு, கசியபர் அவளைப்பார்த்து, 'தேவியே! நீ விரும்பினகாரியம் நிறைவேறப்போகிறது; வீரர்களும் மூன்றுலோகங்களுக்கும் ஈசுவரர்களுமாகிய இரண்டு புத்திரர்களைப் பெறுவாய்; வாலகில்யருடைய தவத்தினாலும் என்னுடைய ஸங்கல்பத்தினாலும் மூன்றுலோகங்களும் கொண்டாடத்தக்க சிறந்தமஹிமையுள்ள இரண்டு புத்திரர்களுண்டாவார்கள்' என்று சொல்லி, திரும்பவும் பகவானான கசியபர் அவளைப்பார்த்து, 'மிகப்பெரிய மேன்மையைத் தரத்தக்க இந்தக் கர்ப்பத்தைக் தவறுதலில்லாமல் வைத்துக்கொள்; ஒருபுத்திரன் உலகங்களினால் பூஜிக்கப்பட்டவனும் நினைத்தபடி ரூபமெடுத்துக்கொள்ளுகிறவனும் வீரனுமான பக்ஷியாகப்பிறந்து எல்லாப்பக்ஷிகளுக்கும் இந்திரனாக இருக்கப்போகிறான்' என்று சொன்னார். பிறகு, கசியபர் அன்புடன் இந்திரனைப் பார்த்து, 'மஹாபராக்கிரமசாலிகளான இருவரும் உனக்குப் [1]பிரா

---

1 அன்புள்ள ஸஹோதரர்களைப் போன்றவர்கள்.

தாக்களும் உனக்கு ஸஹாயர்களுமாகஆவார்கள்; புரந்தரனே! அவர்களிடமிருந்து உனக்குத் தீங்குவராது'; இந்திரா! உன் துயரம் விலகக்கடவது; நீதான் இந்திரனாக இருப்பாய்; இனி இவ்விதமாகப் ப்ரம்மநிஷ்டர்களை நீ அவமதியாதே; சொல்லையே வஜ்ராயுதமாகவுடையவர்களும் பலமான கோபமுள்ளவர்களுமாகிய பெரியோர்களைக் கர்வத்தினால் அவமானஞ்செய்வது தகாது' என்று சொன்னார்.

அவர் இவ்வாறு சொன்னபின், இந்திரன் அச்சத்தை விட்டு ஸ்வர்க்கம் சென்றான். வினதையும் தன்காரியம் நிறைவேறியதனால் த்ருப்தியடைந்தாள்; அப்படியே அருணனும் கருடருமாகிய இரண்டு புத்திரரைப் பெற்றாள். அவர்களுள் அங்கங்குறைந்த அருணன் ஸூர்யனுக்கு ஸாரதியானான். (தேவர்கள்) கருடரைப் பக்ஷிகளுக்கு இந்திரனாகப் பட்டாபிஷேகஞ்செய்தனர். பிருகுபுத்திரரே! அவர் செய்த இந்தப் பெரியகாரியத்தைக் கேளும்.

---

## முப்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)

(தேவர்கள் கருடரிடத்தில் யுத்தம்செய்து தோற்றது.)

அதன் பிறகு, மஹா பலசாலியாகிய கருடர் அந்தச்சிறந்த மலையினின்றும் கிளம்பி விரைவாகத்தேவர்களிடம்சென்றார். மிகுந்த பலமுள்ள அந்தக்கருடரைக்கண்டு தேவர்கள் நடுங்கினதால் ஆயுதங்களைக்கூட, ஒருவர்மீது ஒருவர் போட்டுக்கொண்டனர். அவர்களுள் மின்னலுக்கும் அக்னிக்கும் ஸமானமான ஒளியுள்ளவனும் மிகச்சிறந்த பராக்ரமமுள்ளவனும் அளவிடக்கூடாத தன்மையுள்ளவனுமாகிய பௌமனனென்பவன் அமிர்தத்துக்குக் காவலாக இருந்தான். அவன் சற்றுநேரம் ஒப்பற்ற யுத்தம்செய்தபிறகு, அவனை அந்தக்கருடர் சிறகுகளினாலும் மூக்கினாலும் நகங்களினாலும் குத்தியடித்தார். பக்ஷிராஜர் பக்ஷங்களின் காற்றினால் மண்ணை மிகுதியாகக்கிளப்பி உலகங்களைப் பிரகாசமில்லாமற் செய்து அந்தமண்ணைத் தேவர்களின் மேல் இறைத்தார். அந்தத்தூளியினால் மறைக்கப்பட்ட தேவர்கள் திசைமயங்கி நின்றனர்: இப்படித் தூளியினால் மூடப்பட்ட அமிர்த ரக்ஷகர்களுக்குக் கண்தெரியவில்லை. இவ்வகையாகக் கருடர் ஸ்வர்க்கத்தைக் கலக்கினார்; பக்ஷங்களினாலும் மூக்கினாலும் தேவர்களையடித்

துக் கிழித்தார். பிறகு, தேவேந்திரன் வாயுவைப்பார்த்து, 'இந்த மண்மாரியைச் சீக்கிரம் விலக்கு; மாருதனே! இஃது உன்வேலை' என்று ஏவினான். அதன்பின், பலவானாகிய வாயு தன் வன்மையினால் அந்தத்தூளியை ஒதுக்கினான்; பின்பு, இருள்நீங்கினபோது தேவர்கள் அந்தப்பக்ஷியை அடித்தனர். பலவானாகிய அந்தக்கருடர், தேவர்களால் அடிக்கப்பட்டபோது எல்லாப்பிராணிகளும் நடுங்கும்படி, ஆகாசத்திற் பெரியமேகம்போல் மிகக்கர்ச்சித்தார். சிறந்த பராக்கிரமசாலியும் எதிரிகளான வீரர்களைக் கொல்லுபவருமாகிய பக்ஷிராஜர் மேலேகிளம்பினார். தேவர்களுக்குமேல் ஆகாசத்திற் கிளம்பியிருந்த அந்தக்கருடர்மேல் கவசங்கள் தரித்த இந்திராதி தேவர்களெல்லாரும் பட்டிசமென்னும் கத்திகள், பரிகமென்னும் ஆயுதங்கள், சூலங்கள், கதைகள் முதலிய அநேகவித ஆயுதங்களைப் பிரயோகித்தார்கள். ஜ்வலிக்கின்ற அர்த்தசந்த்ரபாணங்கள், ஸூர்யனைப்போற் பிரகாசிக்கின்ற சக்கரங்கள் முதலிய அநேக ஆயுதங்களைப்பிரயோகித்துத் தேவர்களால் நான்குபக்கங்களிலிருந்தும் அடிக்கப்பட்டும் பயங்கரமான யுத்தம் செய்துகொண்டிருந்த கருடர் அசையவில்லை. வைனதேயர் தம்முடைய பராக்கிரமத்தினால் எல்லாரையும் தஹிக்கிறவர்போல் ஆகாசத்தில் நின்று சிறகுகளாலும் மார்பினாலும் தேவர்களை நாற்புறமும் தள்ளினார். கருடரால் அடிக்கப்பட்டுத் தள்ளப்பட்ட அந்தத்தேவர்கள், நகங்களினாலும் மூக்கினாலும் குத்தப்பட்டு ரக்தத்தை மிகுதியாகப் பெருக்கிக்கொண்டு ஓடினர்; மிகுந்த பராக்ரமசாலிகளான தேவர்கள், கருடரால் பீடிக்கப்பட்டு, ஸாத்தியர்களும் கந்தர்வர்களும் கிழக்கிலும், வஸுக்களும் ருத்ரர்களும் தெற்கிலும், ஆதித்யர்கள்மேற்கிலும், அசுவினீதேவர்கள் வடக்கிலுமாக, யுத்தஞ்செய்கிற கருடரைத் திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டு, கூட்டமாக ஓடினார்கள். பக்ஷிராஜாவானவர், வீரனான அசுவக்ரந்தனோடும், ரேணுகனோடும், க்ரதனனோடும், சூரனான தபனனோடும், உலூகனோடும், சுவஸனனோடும், நிமேஷனோடும், ப்ருஜனோடும், புளினனோடும், யுத்தஞ்செய்தார்; பிரளயகாலத்திற் கோபித்தசிவனைப்போல் [1]சத்ருக்களை ஸம்ஹரிப்பவராகிய கருடர் பக்ஷங்களாலும், நகங்கள் மூக்கு இவற்றின் நுனிகளாலும் அந்தத் தேவர்களைப் பிளந்தார். மிகுந்த பலமும் உத்ஸாஹமுமுள்ள அந்தத் தேவர்கள் அந்தக்கருடரால் அநேகவிதமாக அடிக்கப்பட்டு ரக்தப்

---

1 இங்கு, 'பரந்தப' என்றபாடங்கொண்டால் சௌனகரை விளித்தலாம்; அது பொருந்தாமையால் 'பரந்தப:' என்னும் பாடம் கொள்ளப்பட்டது.

பிரவாஹங்களைப் பொழிந்துகொண்டு பெரியரக்தமேகங்களைப்போல் விளங்கினர்; கருடர் அவர்களெல்லாரையுங் கொன்று, அமிர்தத்தை எடுப்பதற்காக அவர்களைத் தாண்டி, நான்குபுறங்களிலும் பெரியஜ்வாலையுள்ளதும், ஜ்வாலைகளினால் ஆகாசத்தை எங்கும் தஹிப்பதுபோன்ற உக்ரமான கிரணங்களுள்ளதும், கடுங்காற்றினால் தூண்டப்பட்டதுமாக நாற்புறமும் சுற்றிக்கொண்டிருந்த [1]அக்னியைக் கண்டார். பிறகு, வேகசாலியும், மஹாத்மாவும், சத்ருக்களைப் பீடிப்பவருமாகிய பக்ஷிராஜவான கருடர் எண்ணாயிரத்து நூறு வாய்களை எடுத்துக்கொண்டு அந்த வாய்களினால் நதிகளைக் குடித்து மறுபடியும் வேகத்துடன் சீக்கிரமாக வந்து அந்த ஜ்வலிக்கிற அக்னியை அந்த நதிகளின்ஜலங்களினால் நனைத்தார்; அக்னியை அவித்த பிறகு, உள்ளே பிரவேசிப்பதற்காக [1] வேறு சிறியஉருவம் எடுத்துக் கொண்டார்.

---

## முப்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(கருடர் அமிர்தமெடுப்பது.)

அந்தப் பக்ஷிராஜர், மிகுந்த கிரணங்களினாற் பிரகாசிக்கின்ற பொன்மயமான உருவத்தோடு வேகமானஜலம் சமுத்திரத்துக்குள்ளே புகுவதுபோலப் பலத்தினால் பிரவேசித்தார். அமிர்தத்தின் ஸமீபத்தில் விடாமற் சுழன்றுகொண்டிருப்பதும், கூர்மையான முனையுள்ளதும், அக்னியைப்போலவும் ஸூர்யனைப்போலவும் தேஜஸுள்ளதும், உக்கிரமும், அமிர்தத்தையெடுப்பவர்களைச் சேதிப்பதும், சுற்றிலும் கத்திமுனையுள்ளதுமாகிய இருப்புச்சக்கரத்தை அவர் கண்டார்; மிகவும் பயங்கரமான ரூபமுள்ள அந்த யந்திரத்தைத் தேவர்கள் செய்துவைத்திருந்தனர். அந்தப்பக்ஷிராஜாவானவர் அதில் நுழைவதற்கு இடைவெளியைப்பார்த்துக்கொண்டு, தாம்சுற்றினார்; ஒருநொடியில் சரீரத்தைக்குறுக்கிக்கொண்டு அதன் ஆரக்கால்களின்சந்தினால் நுழைந்தார். அந்தச்சக்கரத்தின்கீழேயும் ஜ்வலிக்கிற அக்னிக்கொப்பான ஒளியுள்ளவையும், மின்னலைப்போன்ற நாவுள்ளவையும், ஜ்விலிக்கிறவாயையும், ஜ்வலிக்கிறகண்களையுமுடையவையு

---

1 இங்குள்ள அதிகபாடம் விடப்பட்டது.

மிகுந்த சக்தியுள்ளவையும், கண்களில் விஷமுள்ளவையும், மிகவும் பயங்கரமானவையும், எப்போதும் கோபமுள்ளவையும், பலமுள்ளவையும், அமிர்தத்தைக்காப்பதற்காக எப்போதும் சிவந்த கண்களுடன் இமைகொட்டாமலிருக்கின்றவையுமான இரண்டு மஹாஸர்ப்பங்களைக் கண்டார். அவ்விரண்டிலும் எஃது ஒருவனைப்பார்த்தாலும் அவன் உடனே நீறாகிவிடுவான். அவற்றைக்கண்டு கருடர் உடனே வருத்தத்துடன், 'மிகுந்த சக்தியுள்ள இந்தச்சர்ப்பங்களை எவ்வாறு ஜயிக்கலாம்?' என்று நினைத்து, அவ்விரண்டையும் விலக்குவதற்காக உடனே அவற்றின்கண்களில் நிரம்பமண்ணைத்தூவி, தம்மை அவை பார்க்கமுடியாமற்செய்து அவற்றை எல்லாவிடத்திலும் அடித்தார். அந்தக்கருடர் மேலே பறந்துகொண்டு, அவ்விரண்டு ஸர்ப்பங்களின் உடல்களையும் பிடித்து, விரைவாக நடுவில் துணித்து, பிறகு, அமிர்தத்தினிடம்போனார். உடனே, பலவானும் பராக்கிரமசாலியுமான கருடர் அங்கிருந்து அமிர்தத்தைத் தூக்கிக்கொண்டு யந்திரத்தை முறித்து விரைவாக வெளியில் வந்தார். குடிக்காமலே அமிர்தத்தையெடுத்துக்கொண்டு சீக்கிரம் வெளியே புறப்பட்டு ஸூர்யனுடைய ஒளியையும் மறைக்கின்ற தேஜஸோடு களைப்பில்லாமல் அங்கிருந்து சென்றார்.

அப்போது அந்த வைனதேயர் ஆகாயத்தில் விஷ்ணுவைச் சந்தித்தார். அமிர்தபானத்தில் ஆசைவையாத அந்தக்கருடருடைய செய்கையினால் அழிவில்லாத தேவதையாகிய விஷ்ணுவானவர் ஸந்தோஷமடைந்து, அந்தப்பக்ஷிராஜாவைப்பார்த்து, 'உனக்கு நான் வரங்கொடுக்கிறேன்' என்றுசொல்ல, அவர், 'உமக்கு மேலே நான் இருக்கவேண்டும்' என்றும் 'அமிர்தம் உண்ணாமலே ஜரையும் மரணமும் இல்லாமலிருக்கவேண்டும்' என்றும் இரண்டுவரங்கள் விஷ்ணுவினிடம் கேட்டார். விஷ்ணு, அந்தக்கருடரைப்பார்த்து, 'அப்படியே ஆகட்டும்' என்று வரங்கொடுத்தார். அவ்விரண்டு வரங்களையும் பெற்றுக்கொண்டு, கருடர் விஷ்ணுவைநோக்கி, 'உமக்கும் நான் வரம்கொடுப்பேன்; பகவானாகிய நீங்களும் என்னைக்கேட்கவேண்டும்' என்றுசொல்ல, விஷ்ணு, அந்த மஹாபலசாலியாகிய கருடரைத் தமக்கு வாஹனமாயிருக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்; பகவானவர் மேலேயிருப்பாயென்று சொன்னதற்காகக் கருடரைக் கொடியாகவும் செய்துகொண்டார். மிகுந்தவேகசாலியான அந்தக்கருடர், 'அவ்வாறே ஆகட்டும்' என்று பகவானை விஷ்ணுவுக்குச் சொல்லிவிட்டு வேகத்தினால் வாயுவைத்தோல்வியடையச்செய்பவராய் விரைவாகச்சென்றார். அமிர்தத்தை எடுத்

துக்கொண்டு போகின்ற அந்தப்பக்ஷிச்ரேஷ்டரைக் கோபத்துடன் இந்திரன் வச்சிராயுதத்தினால் அடித்தான். பக்ஷிச்ரேஷ்டராகிய கருடர் அந்தக்கடுமையான யுத்தத்தில் அப்படி வஜ்ராயுதத்தால் அடிக்கப்பட்டும், சிரித்துக்கொண்டு அந்த இந்திரனைப் பார்த்து, 'ஓ ! இந்திரனே ! இந்தவஜ்ராயுதம் யாருடைய உடம்பின் எலும்பிலிருந்து உண்டானதோ அந்தரிஷிக்கும் இந்தவஜ்ராயுதத்திற்கும் உனக்கும் மரியாதைசெய்வதற்காக ஒற்றைஇறகை இதோவிடுகிறேன் ; இதன் மற்றொருகோடியை நீ பார்க்கமாட்டாய் ; வஜ்ராயுதம் விழுந்ததனால் எனக்குச் சிறிதும் உபத்திரவமில்லை' என்று நயமான சொல்லாகச் சொன்னார்.

இவ்வாறுசொல்லி, உடனே அந்தப்பக்ஷிராஜர் ஒருசிறகையுதிர்த்தார். கருடரால் உதிர்க்கப்பட்ட அந்த மிகச்சிறந்த சிறகைக்கண்டு அதன் அழகான ரூபத்தைப்பார்த்து எல்லாத்தேவர்களும், ' இவர் [1] ஸுபர்ணர் ' என்று கருடருக்குப் பெயரிட்டனர். அந்தப்பெரிய ஆச்சரியத்தைக்கண்டு ஆயிரங்கண்களுள்ள இந்திரன் இந்தப்பக்ஷி மஹாபூதமென்று நினைத்து, அவரைநோக்கி, ' பக்ஷிராஜரே ! எல்லாவற்றிலும் சிறந்த உம்வலிமையைப்பார்க்க விரும்புகிறேன் ; உம்முடன் அழிவில்லாத ஸ்நேஹத்துக்கும் அபேக்ஷிக்கிறேன் ' என்றான்.

---

## முப்பத்துநான்காவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)



(இந்திரன் கருடரோடு ஸ்நேஹஞ்செய்ததும் வினதையின் அடிமைத்தனம் நீங்கியதும்.)

இப்படிச்சொன்ன இந்திரனுக்கு, கருடர், 'தேவனே ! புரந்தரனே! நீவிரும்புகிறபடி எனக்கும் உனக்கும் ஸ்நேஹமிருக்கட்டும். என்னுடையபலம் பெரிதென்றும் தாங்கக்கூடாததென்றும் நீ அறியவேண்டும். தேவச்ரேஷ்டனே ! யோக்கியர்கள் தங்கள்பலத்தைக் குறித்துத் தாங்கள் சிலாகிப்பதேயில்லை. ஆனால், காரணமில்லாமல் ஸ்துதிசெய்பவன், தான் உடனே தூஷணைக்கிடமாகிறான். ஸ்வர்க்கத்துக்கு ஈசுவரனே! பிறர்கேட்டபின் தன்குணங்களைப்பற்றியும் சொல்லலாம். தானாகச்சொல்வது தகாது. ஸ்நேஹிதனே! நீ கேட்டதனால் நீ ஸ்நேஹிதனென்று நினைத்து நான் உனக்குச்சொல்லுகிறேன். நிஷ்

---

1 அழகான சிறகுள்ளவர்.

காரணமாக ஒருவன் தன்னைத்தானே சிலாகித்துக்கொள்ளல்கூடாது. இந்திரனே! மலைகள், காடுகள், கடல்களடங்கிய இந்தப்பூமியையும், இதில் இருக்கின்ற உன்னையும் ஒருசிறகினால் தூக்குவேன்; அல்லது ஜங்கமங்களும் ஸ்தாவரங்களும் அடங்கிய உலகங்கள் எல்லாவற்றையும் ஒன்றாகச்சேர்த்து, சிரமமில்லாமல் எடுப்பேன். இங்ஙனம் என்னுடைய பெரியபலமென்று அறி' என்று சொன்னார்.

சௌனகரே! இவ்வாறுசொன்னபின் அந்தவீரரானகருடரைப் பார்த்து, சிறந்தஐசுவரியமுள்ளவனும் எல்லாலோகங்களுக்கும் நன்மைசெய்கிறவனும் பிரபுவும் கிரீடதாரியுமாகிய தேவேந்திரன், 'நீர் சொல்வதுசரி; உம்மிடத்தில் எல்லாம் இருக்கக்கூடியதே; இப்பொது என்னுடன் நீர் மிகமேலானஸ்நேஹத்தை வைத்துக்கொள்வீராக. அமிர்தத்தினால் உமக்கு உபயோகமில்லாமலிருந்தால் அதை எனக்குக்கொடும்; ஏனெனின், நீர் இந்த அமிர்தத்தை யாருக்குக் கொடுப்பீரோ அவர்கள் எங்களைப்பீடிப்பார்கள்' என்றுசொன்னான். அதற்குக்கருடர், 'ஒருபிரயோஜனத்தைக்குறித்து நான் இந்த அமிர்தத்தைக் கொண்டுபோகிறேன். நான் இந்த அமிர்தத்தை யாருக்கும் உண்பதற்குக்கொடேன். ஸஹஸ்ராக்ஷனே! ஸ்வர்க்கலோகத்துக்கும் ஈசுவரனே! நான் இதை எங்கேவைக்கிறேனோ அங்கே நீ வந்து உடனே இதையெடுத்துக்கொண்டுபோகலாம்' என்று சொன்னார். இந்திரன், 'பக்ஷிஸ்ரேஷ்டரே! உம்முடைய இந்தச் சொல்லினால்நான்ஸந்தோஷமடைந்தேன். உமக்குவேண்டியவரத்தை என்னிடம்பெற்றுக்கொள்ளும்' என்றான். இப்படி இந்திரன் சொன்னபின், கருடர், கத்ருவின் புத்திரர்களையும் அவர்கள்மோசமாகத் தம் அன்னையை அடிமையாகச்செய்த காரணத்தையும் நினைத்து, 'இந்திரனே! நான் எல்லாவற்றிற்கும்பிரபுவாகஇருந்தாலும் உன்னிடத்தில் வரம்யாசிக்கிறேன். மிகுந்தவலிமையுள்ள ஸர்ப்பங்கள் எனக்கு ஆகாரமாகக்கடவன' என்றுசொன்னார். பிறகு, இந்திரன், 'அப்படியேயாகட்டும்' என்றுசொல்லி, தேவதேவரும் யோகேசுவரரும் மஹாத்மாவுமாகிய விஷ்ணுவினிடம்சென்றான். அவரும் கருடர் சொன்னபிரகாரமே அந்த அமிர்தம் எடுத்துக்கொள்ளும் விஷயத்தை ஒப்புக்கொண்டார். அதன்பின், பெருமை பொருந்திய தேவேந்திரன் அந்தக்கருடரை அழைத்து, 'அமிர்தத்தை நீர்வைத்தபின் எடுத்துக்கொள்ளுகிறேன்' என்று மறுபடியும் சொன்னான்.

அதன்பின் கருடர் வேகமாகத் தாயினிடம் வந்து விநயத்தோடு நமஸ்காரம்செய்து, 'அம்மா! சிறந்ததவமுள்ளவளே! தேவ

லோகத்திலிருந்து, இந்த அமிர்தத்தை இப்போது நான் கொண்டு வந்திருக்கிறேன். இதன்மேல் நான் என்னசெய்யவேண்டும்? கட்டளையிடவேண்டும்' என்றுசொன்னார். வினதை, 'புத்திரனே! உன்னுடைய இந்தச்செய்கையினாலே நான் ஸந்தோஷமடைந்தேன்; நீ மூப்பும் இறப்புமில்லாமல் தேவர்களுக்கு மிக்க அன்பனாயிருக்கக்கடவாய்' என்றுசொன்னாள். பிறகு, கருடர் மிக்கமகிழ்ச்சியடைந்து, ஸர்ப்பங்களையெல்லாம்நோக்கி, 'ஓ! ஸர்ப்பங்களே! இதோ அமிர்தம் கொண்டுவந்திருக்கிறேன்; உங்களுக்காகத் தர்ப்பைகளில் வைக்கிறேன்; நீங்கள் ஸ்நானம்பண்ணி மங்களங்களானகாரியங்களைச்செய்து, பிறகு இதை உண்ணுங்கள்; நீங்கள் இங்கே உட்கார்ந்து அப்போது சொன்னசொல்லின்படி என்மாதா இந்தநிமிஷம்முதல் அடிமையில்லாதவளாகவேண்டும்; உங்களுடைய சொல்லின்படி நான் இதைக்கொடுத்துவிட்டேன்' என்று சொன்னார். உடனே, ஸர்ப்பங்கள், 'அப்படியே ஆகட்டும்' என்று கருடருக்கு மறுமொழி சொல்லிவிட்டு, ஸ்நானம்செய்யப்போயின. இந்திரனும் அமிர்தத்தையெடுத்துக்கொண்டு திரும்பவும் ஸ்வர்க்கம்சென்றான்.

அதன்பின், ஸர்ப்பங்கள் ஸ்நானமும் ஜபமும் மங்களாசாரங்களுஞ்செய்துவிட்டு ஸந்தோஷத்துடன் அமிர்தத்திற்காக அவ்விடம் வந்தன. அமிர்தம் சாப்பிடுகிறவிஷயத்தில், 'நான்முன்னே, நான் முன்னே' என்றுசொல்லிக்கொண்டு ஒன்றுக்கொன்று முந்திமுந்தி அமிர்தம் வைத்திருந்த தர்ப்பைப்பரப்பினிடம் ஓடிவந்தன. அமிர்தம் அபஹரிக்கப்பட்டதைக்கண்டு ஸர்ப்பங்கள் தாங்கள் செய்த மோசத்துக்காகப் பிரதிமோசம் செய்யப்பட்டதென்று தெரிந்து கொண்டு, 'இஃது அமிர்தமிருந்தஇடம்' என்று தர்ப்பங்களை அப்போது நக்கின. அவ்வாறு தர்ப்பத்தை நக்கினதினால் ஸர்ப்பங்களின் நாக்குக்கள் இரண்டாகப் பிளக்கப்பட்டன. அமிர்தம்பட்டதனால் அந்தத்தர்ப்பங்கள் பரிசுத்தமாய்விட்டன. ஸமர்த்தரே! நாகங்கள் வினதையின்அடிமைத்தன்மையை நீக்கி ஏமாந்து கருடருடையபலத்தை நினைத்துத் தாங்கக்கூடாத வ்யஸனத்தையடைந்தன. அந்த மஹாத்மாவாகிய கருடரால் இவ்வாறு அமிர்தமும் தேவலோகத்திலிருந்து அபஹரித்துக்கொண்டுவரப்பட்டது. ஸர்ப்பங்களும் இரட்டைநாவுள்ளவைகளாகச் செய்யப்பட்டன. பிறகு, கருடர் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஸர்ப்பங்களைப் பக்ஷித்துக்கொண்டும் தாயினுடன்கூட அந்தக்காட்டில் ஸஞ்சரித்துக்கொண்டும் பக்ஷிகளால் விசேஷமாகப் பூஜிக்கப்பட்டவராய், விருத்தியடைந்த கீர்த்தியினால் தம் தாயை

மகிழ்வித்தார். பிராமணசிரேஷ்டர்களுடைய ஸபையில் எப்போதும் இந்தக்கதையைக் கேட்பவனும் படிப்பவனுமாகிய புண்ணியசாலியான மனிதன் மஹாத்மாவான கருடருடைய ஸங்கீர்த்தனத்தினால் நிச்சயமாக ஸ்வர்க்கமடைவான்.

---

## முப்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ஆ ஸ் தீ க ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(சௌனகருக்கு ஸௌதபுத்திரர் ஸர்ப்பங்களின்பெயர்களை உரைப்பது.)

சௌனகர், "ஸௌதபுத்திரரே! ஸர்ப்பங்களைத் தாய் சபித்ததற்கும், வினதையைப் புத்திரனாகிய அருணன் சபித்ததற்கும் காரணம் சொன்னீர். அப்படியே கத்ருவுக்கும் வினதைக்கும் பர்த்தா வரம் கொடுத்ததும், வினதையின் புத்திரர்களாகிய [1] அருணன் கருடர் என்னும் இரண்டு பக்ஷிகளின் பெயர்களும் சொல்லப்பட்டன. ஸர்ப்பங்களினுடைய பெயர்களைமட்டும் நீர் சொல்லவில்லை. முக்கியமான பெயர்களை மட்டுமாவது (சொல்லவேண்டும்). நாம் கேட்க விரும்புகிறோம்" என்று கேட்க, ஸௌதபுத்திரர் சொல்லலானார்.

"தபோதனரே! ஸர்ப்பங்கள் அதிகமாகையால் எல்லாவற்றினுடைய பெயர்களையும் நான் சொல்லமுடியாது. முக்கியமான பெயர்களைமட்டும் நான் சொல்லுகிறேன்; கேளும். சேஷன் முதலிற்பிறந்தவன்; அவனுக்குப்பின் வாஸுகி, ஐராவதன், தக்ஷகன், கர்க்கோடகன், தனஞ்சயன், காளியன், மணிநாகன், ஆபூரணன், பிஞ்சரகன், ஏலாபத்ரன், வாமனன், நீலன், அநீலன், கல்மாஷன், சபலன், ஆர்யகன், உக்கிரகன், கலசபோதகன், ஸுமனஸ், ததிமுகன், விமலபிண்டகன், ஆப்தன், கோடரகன், சங்கன், வாலிசிகன், நிஷ்டானகன், ஹேமகுஹன், நஹுஷன், பிங்கலன், பாஹ்யகர்ணன், ஹஸ்திபதன், முத்கரபிண்டகன், கம்பலன், அசுவதரன், காலீயகன், வ்ருத்தன், ஸம்வர்த்தகன், பத்மர்களென்று பெயருள்ளவரிருவர், சங்கமுகன், கூச்மாண்டகன், க்ஷேமகன், பிண்டாரகன், கரவீரன், புஷ்பதம்ஷ்ட்ரன், பில்வகன், பில்வபாண்டுரன், மூஷிகாதன், சங்கசிரஸ், பூர்ணபத்திரன், ஹரித்திரகன், அபராஜிதன், ஜ்யோதிகன், ஸ்ரீவஹன், கௌரவ்யன், திருதராஷ்டிரன், மிகுந்த சக்தியுள்ள சங்கபிண்டன், விரஜஸ், ஸுபாகு, மிகுந்தசக்தியுள்ள சாலிபிண்டன், ஹஸ்திபிண்டன், பிடரகன், ஸுமுகன், கௌணபாசனன், குடரன், குஞ்சரன், பிரபாகரன்,

---

1 சூரியனுடன் ஆகாசத்திற் பறப்பதினால் அருணனைப் பக்ஷி என்பர்.

குமுதன், குமுதாக்ஷன், தித்திரி, ஹலிகன், கர்த்தமன், பகுமூல கன், கர்க்கரன், அகர்க்கரன், குண்டோதரன், மகோதரன் ஆகிய இந்தப் பிரதானமாயுள்ள நாகங்களின் பெயர்களைச் சொன்னேன். பிராமணசிரேஷ்டரே! மிகுதியாயிருப்பதினால் மற்றவற்றின் பெயர்களைச் சொல்லவில்லை. தபோதனரே! இவற்றின்ஸந்ததிகளும்ஸந்ததிகளின் ஸந்ததிகளும் எண்ணமுடியாதவையென்று நினைத்து, அவற்றை நான் சொல்லவில்லை. இந்தஸர்ப்பவம்சங்களில், அநேகமாயிரங்களும், பத்துலக்ஷங்களும், பத்துக்கோடிகளு மிருக்கின்றன. தபோதனரே! அவற்றைக் கணக்கிடமுடியாது" என்றார்.

---

## முப்பத்தாறுவது அத்தியாயம்.

### ஆஸ்திகபாவம். (தொடர்ச்சி.)



(ஆதிசேஷன் பூமியைத்தரித்தது.)

சௌனகர், ஸூதகுமாரரைப்பார்த்து, "ஐயா! சிறந்தசக்தியுள்ளவையும் வெல்லக்கூடாதவையுமான நாகங்களைக் கூறினீர். அவை அந்தச்சாபத்தை அறிந்தபிறகு மேலே என்ன செய்தன?" என்று கேட்க, ஸூதர் சொல்வாராயினர்.

"அந்தநாகங்களுக்குள் பெருங்கீர்த்திபெற்ற சேஷபகவான்; கத்ருவைவிட்டு நீங்கிக் காற்றைப் புசித்துக்கொண்டு உறுதியான நியமத்தோடு உக்கிரமானதவஞ்செய்தான். கந்தமாதன பர்வதத்திற்கும், பதரிகாச்ரமத்திற்கும், கோகர்ணக்ஷேத்திரத்திற்கும், புஷ்கரக்ஷேத்திரமென்கிற அரண்யத்திற்கும், இமயமலையின் சரிவுக்கும்,இன்னும் பற்பலபுண்ணிய தீர்த்தங்களுக்கும், க்ஷேத்திரங்களுக்கும் போய்த் தனிமையாயிருந்துகொண்டு, நியமத்தைவிடாமற் புலன்களையடக்கித் தவஞ்செய்தான். உக்கிரமான தவஞ்செய்கிறவனும், மாம்ஸம் தோல்நரம்பு எல்லாமுலர்ந்தவனும், ஜடையும் மரவுரியும் தரித்தவனுமாகிய அந்த ரிஷியான ஆதிசேஷனைப் பிரம்மாகண்டார். உறுதியைவிடாமல் தவஞ்செய்த அந்த ஆதிசேஷனைப்பார்த்துப் பிரம்மாவானவர், 'சேஷனே! குற்றமற்றவனே! நீ என்ன செய்கிறாய்? பிரஜைகளுக்கு க்ஷேமத்தைச்செய்; நீ கடோரமானதவத்தினால் பிரஜைகளைப் பீடிக்கிறாய். சேஷனே!உன்மனத்திலிருக்கிறவிருப்பத்தை எனக்குச் சொல்' என்றுகேட்டார். அதற்குச்சேஷன், 'என்னுடைய சொந்த ஸஹோதரர்களெல்லாரும் புத்திக்குறைவானவர்கள்; அவர்களுடன்

கூடி வஸிப்பதற்கு நான் விரும்பவில்லை. அதற்குத் தாங்கள்உத்தரவு கொடுக்க வேண்டும். அவர்கள் ஒருவரையொருவர் சத்துருவாக நினைத்து எப்போதும் பொறாமைப்படுகின்றனர்; அதனால், அவர்களைப் பார்க்காமலிருக்க வேண்டுமென்றே நான் தவஞ் செய்கிறேன்; அவர்கள் வினதையிடத்தும் அவள்பிள்ளையிடத்தும் பொறாமைப் படுகிறார்கள்; மேலும், எங்களுடைய மற்றொரு பிராதாவாகிய கருடன் ஆகாசத்திற் சஞ்சரிப்பவன்; அவனை எப்போதும் துவேஷிக்கின்றனர்; அவனுக்கு மஹாத்மாவும் எங்கள் பிதாவுமாகிய கசியபர் வரங்கொடுத்திருப்பதனால், அவன் மிகுந்த பலமுள்ளவனாயிருக்கிறான்; அதனால், நான் தவஞ்செய்து மற்றொரு ஜன்மத்திலும் எனக்கு அவர்களுடன் ஸம்பந்தமில்லாமலிருக்கும்படி இந்தத் தேகத்தை விட்டுவிடப்போகிறேன்' என்றான்.

'இப்படிச்சொல்லுகின்ற சேஷனைப்பார்த்து, பிரம்மா, 'சேஷனே! உன்பிராதாக்கள் எல்லாருடையநடைகளும் தாயார்விஷயத்தில் அபராதஞ்செய்ததனால் அவர்களுக்குப் பெரியபயம் நேர்ந்திருப்பதும் எனக்குத்தெரியும். நாகனே! இதற்குப் பரிஹாரமும் முன்னமே செய்யப்பட்டிருக்கின்றது. உன் ஸஹோதரரெல்லாரையும் குறித்து நீ வ்யஸனப்படவேண்டாம். சேஷனே! நீ விரும்புகிற வரத்தை என்னிடம் கேட்டுக்கொள். உன்னிடத்தில் எனக்கும் மிகுந்த பிரீதியிருப்பதனால் வரங்கொடுப்பேன். ஸர்ப்பஶ்ரேஷ்டனே! நல்லவேளையாக உன்னுடைய புத்தி தர்மத்தில் பிரவிர்த்தித்திருக்கிறது. மேன்மேலும் உன்புத்தி தர்மத்திலேயே மிகவும் உறுதியாக இருக்கக்கடவது' என்றார். பிரம்மா இப்படிச்சொல்ல, சேஷன், 'பிதாமஹரே! தேவரே! இந்தவரம்தான் நான்வேண்டினது. ஈச்வரரே! என் புத்தி தர்மத்திலும் சாந்தியிலும் தவத்திலுமே உத்ஸாஹப்படக்கடவது' என்று சொன்னான்.

அதைக்கேட்டு, பிரம்மதேவர், 'சேஷனே! உன்னுடைய இந்த இந்திரிய ஜயத்தினாலும் மனோஜயத்தினாலும் த்ருப்தியடைந்திருக்கிறேன். பிரஜைகளுக்கு ஹிதமானதொன்றை நான் சொல்லுகிறேன்; அதை என்சொற்படி நீ செய்யவேண்டும். சேஷனே! மலைகளும் வனங்களும் ஸமுத்திரங்களும் கிராமங்களும் தோட்டங்களும் நகரங்களும் நிரம்பியிருப்பதனால் அசைகின்ற இந்தப்பூமியை, அசையாமலிருக்கும்படி நீ செவ்வையாகத் தாங்கிக்கொண்டிரு' என்றுசொல்ல, அதுகேட்ட சேஷன், 'வரங்கொடுப்பவரும் பூமிக்கும் பிராணிகளுக்கும் உலகங்களுக்கும் பதியுமாகியபிரம்மதேவரான

நீங்கள் எப்படிச் சொல்லுகிறீர்களோ அப்படியே பூமியை அசையாமல் தாங்குகிறேன்; பிரம்மதேவரே! எனக்கு அந்தப்பூமி மார்க்கம் கொடுக்கட்டும்' என்று கேட்டான். அதற்குப்பிரம்மா, 'நாகராஜாவே! நீ பூமியின் கீழே போ; பூமி தானகவே உனக்கு மார்க்கத்தைக் கொடுக்கும்; சேஷனே! நீ இந்தப்பூமியைத் தாங்குவதனல் எனக்குப் பெரிய பிரியமான காரியம் செய்யப்பட்டதாகும்' என்றார். நாகராஜாக்களுள் ஜ்யேஷ்டனும் ஸமர்த்தனுமாகிய ஆதிசேஷன் அப்படியே மார்க்கத்தை உண்டுபண்ணிக்கொண்டு பூமியின் கீழே பிரவேசித்து நின்றுகொண்டு ஸமுத்ரங்களாற் சூழப்பட்ட இந்தப் பூமிதேவியை நாற்புறமும் பிடித்துக்கொண்டு சிரஸினல் வஹிக்கிறான். பிரம்மா, 'நாகசிரேஷ்டனே! நீ ஸஹாயமில்லாமல் இந்தப்பூமி முழுவதையும் அநேகம் சிரஸுகளினல் அசையாமல் வஹித்துக் கொண்டு, என்னைப்போலவும் இந்திரனைப்போலவும் காப்பாற்றுவதனல், நீ சேஷனகவும் தர்மதேவதையாகவும் இருக்கிறாய்' என்று சொன்னார்.

இவ்விதமாகச் சக்திமானகிய ஆதிசேஷனென்னும் நாகன், பிரபுவாகிய பிரம்மாவினுடைய ஆஜ்ஞையினல் ஸஹாயமில்லாமல்பூமியை வஹித்துக்கொண்டு பூமியின்கீழிருக்கிறான். அப்போது தேவச்ரேஷ்டராகிய பகவானை பிரம்மா, விநதையின்புத்திரராகியகருடரையும் ஆதிசேஷனுக்கு ஸ்நேஹிதராகக் கொடுத்தார். ஆதிசேஷன் போன பிறகு, மிகுந்தபலமுள்ள வாஸுகி, தேவர்களினல் இந்திரன் பட்டாபிஷேகஞ் செய்யப்படுவதுபோல் நாகங்களினல் அபிஷேகம் செய்யப்பட்டான்.

---

## முப்பத்தேழாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(நாகர்கள் சாபவிமோசனத்திற்கு உபாயம் ஆலோசிப்பது.)

ஸர்ப்பராஜனை வாஸுகி, தாயினிடமிருந்துவந்த அந்தச் சாபத்தைக்கேட்டு, இந்தச்சாபம் எப்படிப் பலிக்காமலிருக்குமென்று சிந்தித்தான். பிறகு, அந்தவாஸுகி, தர்மத்தையே முக்கியமாகக்கொண்ட ஐராவதன்முதலிய ஸஹோதரர்களெல்லாருடனுங்கூடி ஆலோசனை செய்யும்போது, 'குற்றமில்லாதவர்களே! இந்தச்சாபம் எவ்விதமாகச் சொல்லப்பட்டதோ அஃது உங்களுக்குத் தெரியும்; நாம் ஆலோசித்து அந்தச்சாபத்தை விடுவிக்கமுயல்வோம். எல்லாச்சாபங்

களுக்கும் நிவிர்த்தியுண்டு. தாயின் சாபத்துக்கு விடுதலை எங்குமில்லை. அழிவில்லாதவரும் அளவிடக்கூடாதவருமாகியபிரம்மதேவர் முன்பாக நாம்சபிக்கப்பட்டோமென்பதைக் கேட்டுத்தான் என்மனத்தில்நடுக்கமுண்டாகிறது. இது நம்மெல்லாருக்கும் நாசமாக வந்திருக்கிறதென்பதுநிச்சயம். குணமில்லாத தாயினால் மிகக்கடுமையான சாபம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த அழிவில்லாத பிரம்மதேவர் இவள்சபிப்பதைத் தடுக்காமற்போனார். ஆகையால், இப்போது ஸர்ப்பங்களுக்கெல்லாம் க்ஷேமம் எப்படியுண்டாகுமென்பதைக்குறித்து ஆலோசனை செய்வோம். இந்தக்கெட்டகாலம் நம்மை ஆக்கிரமிக்காமலிருக்கவேண்டும். நமக்குள்எல்லாரும் புத்திசாலிகள்; பேசத்தெரிந்தவர்கள். முன்பு தேவர்கள் குகைக்குள் மறைந்துகாணமற்போன அக்னியைக் கண்டுபிடித்ததுபோல் நாமும் ஸர்ப்பங்களின் நாசத்திற்குக் காரணமாக ஜனமேஜயன்செய்யும் சர்ப்பயாகம் நடவாதபடியும் நமக்குத் தீங்குநேரிடாதபடியும் நம்மைச் சாபத்திலிருந்து விடுவித்துக்கொள்வதற்கு உபாயத்தை ஆலோசித்துத் தெரிந்துகொள்வோம்' என்று சொன்னான்.

உடனே, மந்திராலோசனையில் ஸாமர்த்தியமுள்ள கத்ருவின் புத்திரர்களெல்லாரும் ஒன்று சேர்ந்து, 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி, அங்கே அவரவர்களுக்குள் நிச்சயஞ்செய்துகொண்டனர். அவர்களிற் சிலநாகர்கள், 'நாம் பிராமணசிரேஷ்டர்களாகரூபமெடுத்துக்கொண்டு, ஜனமேஜயனிடம் யஜ்ஞம் நடவாமலிருக்கவேண்டுமென்று பிக்ஷைகேட்போம்' என்றனர். மற்றும் சில நாகர்கள், தங்களைச் சிறந்த அறிவுள்ளவர்களாக நினைத்து, 'நாமெல்லாரும் ஜனமேஜயராஜாவுக்கு நிரம்ப நம்பிக்கையான மந்திரிகளாயிருப்போம்; அவன் எல்லாக்காரியங்களிலும் பிரயோஜனம் நிச்சயிப்பதைப்பற்றி நம்மைக்கேட்பான்; அப்போது, யஜ்ஞம் நடவாதபடி புத்திசொல்வோம்; புத்திமான்களுக்குட் சிறந்தவனாகிய அந்த ராஜா புத்திமான்களாகத் தன்னால் மதிக்கப்பெற்ற நம்மை யஜ்ஞத்தைக்குறித்து நிச்சயமாகக்கேட்பான். நாம் அதுகூடாதென்று இம்மையிலும் மறுமையிலும் அநேகங் கொடியபாபங்களைக் காண்பித்து அநேக யுக்திகளாலும் காரணங்களாலும் அந்தயஜ்ஞம் நடவாதபடிசொல்லுவோம். அல்லது, ஸர்ப்பயாகஞ்செய்யும் முறைதெரிந்தவனும் ராஜகாரியத்தில் நன்மையைக் கருதுகிறவனுமாகிய எந்தப் புரோஹிதன், அந்த யஜ்ஞத்திற்கு ஏற்படுவானோ அவனை ஒரு ஸர்ப்பங் கடிக்கட்டும்; அவன்இறந்துபோவான்; யஜ்ஞஞ்செய்கிறவன்

இறந்துபோனல் அந்த யஜ்ஞம் நடவாது. இன்னும் ஸர்ப்பயாகம் தெரிந்தவர்களாக வேறு ரித்விக்குக்கள் யார்வந்தபோதிலும் அவர்க ளெல்லாரையும் கடித்துவிடுவோம். இவ்வாறு காரியங்கள்ஸித்தியாய் விடும்' என்றனர். தர்மத்திற்சித்தமுள்ளவர்களும் தயையுள்ளவர் களுமாகிய மற்றும்சிலநாகர்கள், 'நீங்கள் சொன்ன இந்தப்புத்தி சரி யல்ல; பிரம்மகத்திசெய்வது நல்லதாகாது. வ்யஸனம்வந்தபோது செம்மையாக நல்லதர்மத்தைக்கொண்டு சரியானபரிஹாரம் செய்வது சிறந்தது. அதர்மம் அதிகரித்திருப்பதானது உலகத்தையெல்லாமழி த்துவிடும்' என்றனர். இன்னும் சிலநாகர்கள், 'நாம் மின்னலுள்ள மேகங்களாகஆகி ஜ்வலிக்கின்ற அக்னியை மழையினால் அவித்து விடுவோம்' என்றும், வேறுசில நாகசிரேஷ்டர்கள், 'ராத்திரியில் அங்கிருப்பவர்கள் அயர்ந்திருக்கையிற்போய், யஜ்ஞபாத்திரங்களைச் சீக்கிரத்தில் எடுத்துக்கொண்டு வந்துவிடட்டும். இப்படிச்செய்தால் அதற்கு விக்கினம் வந்துவிடும். அல்லது, அந்தயஜ்ஞத்தில் ஸர்ப்பங்க ளெல்லாம் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் ஜனங்களைக் கடிக்கட்டும். இப்படிச்செய்தால் நமக்குப்பயமுண்டாகாது. அல்லது, ஸர்ப்பங்கள் எல்லாஆகாரங்களையும்கெடுக்கத்தக்க தங்கள் மூத்திரத்தி னாலும் விஷ்டையினாலும், ஸித்தஞ்செய்யப்பட்ட போஜனத்தைக் கெடுத்துவிடட்டும்' என்றனர். அங்கே இன்னும் சில நாகர்கள், 'நாமே அந்தராஜாவுக்கு ரித்விக்குக்களாக இருப்போம். தக்ஷிணை கொடுக்கவேண்டுமென்றுசொல்லி யாகத்துக்கு விக்னஞ்செய்வோம். நமக்குட்பட்ட அந்த அரசன் நாம்கேட்டதையெல்லாம் செய்வான்' என்றனர். அவர்களுள் மற்றும் சில நாகர்கள், 'ராஜா ஜலக்கிரீடை செய்யும்போது,நம்மிடமாகிய பாதாளத்துக்குக்கொண்டுவந்து கட்டி விடுவோம். அப்போது அந்தயஜ்ஞம் நடவாது' என்றனர். தங்க ளைத்தெரிந்தவர்களாக நினைத்த இன்னுஞ் சிலநாகர்கள், 'அந்தராஜா வைப் பிடித்துக்கொண்டு உடனே கடித்துவிடுவோம்; இப்படியானல் காரியமாகிவிடும். அந்தராஜா இறந்துபோனல், அநர்த்தங்களின்வேர் வெட்டப்பட்டதாகும்.வாஸுகியே! எங்களெல்லாருடைய முடிவான ஆலோசனைகளும் இவைதாம். ராஜாவே! இதன்மேல் உனக்கு எது ஸம்மதமோ அதைச் சீக்கிரம் செய்யவேண்டும்' என்றனர்.

இவ்வாறுசொல்லிவிட்டு, நாகர்கள் ஸர்ப்பராஜாவாகிய வாஸுகி (சொல்வதை) எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். வாஸுகியும் தான் செவ்வையாக ஆராய்ந்து அந்தநாகர்களைப் பார்த்து, 'நாகர்களே! நீங் கள் செய்யவேண்டுமென்று நினைத்த இந்தஆலோசனை நன்மையைத்

தாத்தக்கதன்று. எல்லாநாகர்கள் சொன்ன ஆலோசனையும் எனக்குப் பிடிக்கவில்லை. மேற்சொன்ன ஆலோசனையில், உங்களுக்கு ஹிதமாகச் செய்யத்தக்கது என்னஇருக்கிறது? நாகர்களே! மஹாத்மாவான கசியபரை ஸ்நேஹத்துடன் வேண்டிக்கொள்வதுதான் எனக்கும் என்னைச்சேர்ந்த உங்களுக்கும் நன்மையென்று நினைக்கிறேன். என் புத்தி நீங்கள் சொன்னவற்றில் ஒன்றையும்செய்யலாமென்று நினைக்கவில்லை. உங்களுக்கு எது நன்மையாக இருக்குமோ அதை நான் தானே செய்யவேண்டும். இதனுல், நான் மிகவும் கஷ்டப்படுகிறேன். நன்மையும்தீமையும் என்னைப் பொறுத்தவை' என்று சொன்னுன்.

## முப்பத்தெட்டாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(ஏலாபத்ரன் ஆஸ்தீகரால் சாபநிவிர்த்தியைப்பற்றி நாகர்களுக்குச் சொல்வது.)

ஸர்ப்பங்களெல்லாம் இப்படியென்றும் அப்படியென்றும் பலவகையாகச் சொன்னதையும் வாஸுகிசொன்னதையும் கேட்டு, ஏலாபத்ரனென்னும் நாகன் அடியில்வருமாறு சொல்லத் தொடங்கினுன்.

'நாகசிரேஷ்டர்களே! நாகராஜாவான வாஸுகியே! இதுவிஷயத்தில் என்னுடையஆலோசனையை நான் முன்னமே தெரிவித்திருக்கிறேன். உங்களெல்லாருக்கும் இதை ஏற்றுக்கொள்ளக்கூடாதென்ற எண்ணமிருந்தால் அப்படியேயிருக்கட்டும். இப்பொழுதும்அந்தஅபிப்பிராயமே என்ஞாபகத்தில் வந்திருக்கிறது. நாகர்களே! அதைத் தெளிவாகச் சொல்லுகிறேன்; கேளுங்கள்; அந்தஸர்ப்பயாகம் நடவாமலிராது. யாரிடத்திலிருந்து நமக்குப் பெரியபயம் இருக்கிறதோ அந்தப்பாண்டவ வம்சத்து ஜனமேஜயராஜா [1]அப்படிப்பட்டவனல்லன். ராஜாவே! இவ்வுலகில் எந்தப்புருஷன் தெய்வத்தினுற்கெடுக்கப்பட்டவனோ அவன் தெய்வத்தையே அடையவேண்டும். அவனுக்கு வேறு ஆதாரமில்லை. நாகச்ரேஷ்டர்களே!நமக்கு இப்போதுவந்திருப்பது அந்தத்தெய்வபயம். இதற்காகத் தெய்வத்தையே அடைவோம். நான் சொல்வதைக் கேளுங்கள். நாகச்ரேஷ்டர்களே! பிரபுவான வாஸுகியே! சாபங்கொடுத்தவுடனே பயத்தினுல் தாயார்மடியிலேறிக்கொண்டிருந்த நான், 'சிறந்தவைகளானஸர்ப்பங்கள் கொடியவை

1 நீங்கள் மேற்சொன்ன எவ்வகையாலும் யாகஞ்செய்யாமல் நிவிர்த்திக்கக்கூடியவரல்லரென்பது கருத்து.

கொடியவை' என்று தேவர்கள் சொன்னதைக் கேட்டிருந்தேன். சாபத்தினுலுண்டான துக்கமென்னும் அக்னியினால் தஹிக்கப்பட்ட நாகங்களின் க்ஷேமத்தைவிரும்பி மிகுந்தகிருபையுடன் தேவர்கள் பிரம்மாவினிடம்சென்று, 'தேவரே! பிதாமஹரே! மிகக்கொடியவளான கத்ருவைத்தவிர, வேறெவள் அன்புள்ளபிள்ளைகளைப் பெற்று அவர்களை உமதுமுன்னிலையில் இப்படிச்சபிப்பள்? நீரும் அவள்வார்த்தையை, 'சரி' என்று சொன்னீர். நீர் அவளைத் தடுக்காமலிருந்ததற்குக்காரணத்தை நாங்கள் தெரிந்துகொள்ளவிரும்புகிறோம்' என்றனர். பிரம்மா, 'கொடியவையும் பார்க்கப் பயங்கரமானவையும் உக்ரமான விஷமுள்ளவையுமாகிய ஸர்ப்பங்கள் மிகுதியாக இருக்கின்றன. பிரஜைகளின் நன்மையைக்கருதி, அவள் சபித்தபோது நான் தடுக்கவில்லை. அல்பஸ்வபாவமும் பாவச்செய்கையும் கொடியவிஷமுமுள்ளவையும் தர்மத்தைச் செய்யாதவையுமான ஸர்ப்பங்களுக்கு அவசியம் நாசம் வரப்போகிறது. அந்தஸர்ப்பங்களுக்கு அந்தநாசகாலம் வந்தபோது, என்னகாரணத்தினால் பெரும்பயத்திலிருந்து நிவிர்த்தி உண்டாகப் போகிறதோ அதையும் கேளுங்கள். [1]யாயாவரர்குலத்தில் பெரியதபஸுள்ளவராயும் ஜிதேந்திரியராயும் புத்திமானுமுள்ள ஜரத்காருவென்று பெயர்பெற்ற மஹரிஷி ஒருவர் உண்டாகப்போகிறார். அந்த ஜரத்காருவுக்குத் தபோதனராகிய ஆஸ்தீகரென்னும் புத்திரர் உண்டாகப்போகிறார். அவர் ஸர்ப்பங்களின் நாசகாலத்தில், அந்த ஸர்ப்பயாகத்தைத் தடுக்கப்போகிறார். அந்தக்காலத்தில், தர்மிஷ்டர்களான நாகர்கள் மட்டும் விடுபடப்போகின்றனர்' என்றார். அதற்குத்தேவர்கள், 'பிரம்மாவே! பெருந்தவமுள்ளவரும் சிறந்த சக்தியுள்ளவருமாகிய அந்த ஜரத்காருமஹரிஷி மஹாத்மாவான புத்திரனை எவளிடம் உண்டுபண்ணப்போகிறார்?' என்றுகேட்க, பிரம்மா, 'வாஸுகியின் ஸஹோதரியாகிய வெகு அழகான ஒருகன்னிகை பிறந்திருக்கிறாள். அந்தக்கன்னிகையை நாகராஜாவான வாஸுகி ஜரத்காருவுக்குக் கொடுக்கப்போகிறான். அந்தப்பிராமணசிரேஷ்டர், தம்பெயருள்ள ஜரத்காருவென்ற அந்தக் கன்னிகையினிடத்தில் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவனை புத்திரனை உண்டாக்கப் போகிறார்' என்றார். அதற்குத் தேவர்கள், 'அப்படியே ஆகவேண்டும்' என்று பிரம்மாவினிடம் சொன்னார்கள். தேவர்களைப் பார்த்து இவ்வாறு சொல்லி, பிரம்மதேவர் தம்முலகஞ் சென்றார். வாஸுகியே! ஆதலால், ஜரத்காருவென்று பெயர்பெற்ற உன் ஸஹோதரி

[1] ஓரிடத்திலும் தங்காமல் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் ரிஷிகள்.

யிருக்கிருளே, அவளைச் சிறந்ததவமுள்ள அந்த ஜரத்காருவென்னும் ரிஷி கேட்கும்போது, நாகர்களின்பயம் நிவிர்த்தியாவதற்காக நீ பிக்ஷையைப்போல அவருக்குக்கொடு. இதுதான் நான் கேள்விப் பட்ட விமோசனம். இஃது என் ஆலோசனை' என்முன்.

---

## முப்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(வாஸுகி, தன்ஸஹோதரியை ஜாத்காருமஹரிஷிக்குக் கன்னிகா தானஞ்செய்ய நிச்சயித்தது.)

'பிராமணசிரேஷ்டரே! அந்த நாகர்களெல்லாரும் ஏலாபத்ரன் சொன்னதைக்கேட்டு மனமகிழ்ந்து, 'சரி, சரி' என்று கொண்டா டினர். அதுமுதல் வாஸுகி தன்ஸஹோதரியாகிய ஜரத்காருவென் னும் அந்தக்கன்னிகையை மிகுந்த ஸந்தோஷத்துடன் காப்பாற்றி வைத்தான்.

அதன்பிறகு, சில காலங்கடந்தபின் தேவாஸுரர்களெல்லாரும் ஸமுத்ரத்தைக்கடைந்தனர். அதில் பலசாலிகளுக்கெல்லாஞ் சிறந்தவ ஞகிய வாஸுகியென்னும் நாகன் கயிருகவிருந்தான். அந்தவேலையை முடித்துவிட்டு வாஸுகியுடன்கூடத் தேவர்கள் பிரம்மாவினிடம் சென்று, 'பகவானே! இந்தவாஸுகி, சாபத்திஞற்பயந்து மிகவருந்து கிருன்; ஞாதிகளுக்கு நன்மையை விரும்புகின்ற இவனதுமனத்தில் தாயின் சாபத்திஞலுண்டான சல்லியத்தை நீர்தாம் எடுக்கவேண்டும்; இந்த நாகராஜன் நமக்குவேண்டியவன்;எப்போதும் நமக்குப்பிரியமே செய்கிறவன். தேவசிரேஷ்டரே! தயைசெய்து இவன்மனத்திலுள்ள தாபத்தை நிவிர்த்திசெய்யும்' என்று வேண்டினர். அதற்குப் பிரம் மா, 'அமரர்களே! ஏலாபத்ரனென்னும் நாகன் முன்முல் இவனுக்கு என்ன சொன்ஞனே அது நானே மனப்பூர்வமாகச்சொன்னவாக்கி யந்தான். நான்சொன்னதை இந்தநாகராஜஞனவாஸுகி காலம்வந்த போது தானே செய்யக்கடவன். பாபிஷ்டர்கள்மட்டும் அழிவார், தர் மிஷ்டர்கள் அழியார். அந்தஜரத்காருவென்னும்பிராமணர் ஜனித்து உக்ரமான தவத்திலேயே விருப்பமுள்ளவராயிருக்கிருர். இவன் தன் ஸஹோதரியான ஜரத்காருவை அவர் கேட்குங்காலத்தில் அவருக்குக் கொடுக்கக்கடவன். தேவர்களே! ஏலாபத்ரன் என்னும்நாகன் ஸர்ப்

பங்களுக்கு ஹிதமாகச்சொன்னசொல் சரியே. அது பிழையன்று' என்றுசொன்னார். சாபத்தினால் பிரமைகொண்டிருந்த அந்தநாகராஜனானவாஸுகி, இப்படிப் பிரம்மாசொன்னதைக்கேட்டு, ஜரத்காரு என்னும் ரிஷிக்காகத் தன்ஸஹோதரியை ஸித்தமாகவைத்துக்கொண்டு ஸர்ப்பங்களையெல்லாம் அழைத்து, 'யாருக்கும் உட்படாத வரிய ஜரத்காரு எப்போது பாரியையை வரிக்கநினைப்பரோ அப்போது உடனேவந்து எனக்குச் சொல்லவேண்டும். அப்படிச்சொன்னால்தான் நமக்கெல்லாம்க்ஷேமமுண்டாகும்' என்றுசொல்லி அந்த ஜரத்காருவை எப்போதும் கவனித்து எதிர்பார்த்திருக்கும்படி அனேக நாகர்களை அந்த ஜரத்காருவினிடம் நியமித்தான்.

---

## நாற்பதாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(பரிக்ஷித்து வேட்டையாடும்போது சமீகரிஷியின் தோளில் இறந்துபோன பாம்பைப்போட்டது.)

சௌனகர், "ஸூதபுத்திரரே! நீர் ஜரத்காருவென்று சொன்னீரே; அந்த மஹாத்மாவாகிய ஜரத்காருரிஷிக்கு அந்தப்பெயர் பூமியில் பிரஸித்தமானதற்கு என்னகாரணம்? ஜரத்காருவென்ற பெயர் வந்தவரலாற்றை நான் கேட்கவிரும்புகிறேன். நீர் விவரமாகச்சொல்லக்கடவீர்" என்றுகேட்க, ஸூதபுத்திரர் சொல்லுகிறார்.

'பிராமணரே! கெடுவதை ஜரையென்று சொல்லுகின்றனர். துன்பத்தைச்செய்வதற்குக் காருவென்றுபெயர். அவருக்கு வைராக்கியத்தினால் சரீரம் காருவாக இருந்தது. சிறந்தஞானமுள்ள அவர் காலக்கிரமமாக உக்கிரமான தவத்தினால் சரீரத்தைக் குறைத்தார். இந்தக்காரணத்தினால், ஜரத்காருவென்றுசொல்லப்படுகிறார். வாஸுகியின் ஸஹோதரியும், தவத்தினாலேயே ஜரத்காரு என்று பெயர் பெற்றாள்' என்றுசொன்னார். இப்படிச்சொன்னவுடன், தர்மாத்மாவாகிய சௌனகர், அப்போது உக்கிரசிரவஸ்ஸென்னும் ஸூதபுத்திரரை அழைத்து, 'சரி' என்றுசொல்லி, நகைத்து, பிறகு, 'எல்லாவற்றையும் நடந்தபடி சொன்னீர். நானும்கேட்டேன். ஆஸ்தீகர் எவ்வாறு ஜனித்தாரென்பதைக் கேட்கவிரும்புகிறேன்' என்று கேட்க, ஸூதபுத்திரர் புராணத்திலுள்ளபடி சொல்லத்தொடங்கினார்.

"வாஸுகி நாகர்களுக்கெல்லாங் கட்டளையிட்டபின், ஸஹோதரியை ஜரத்காருரிஷிக்காக ஸித்தமாக வைத்துக்கொண்டு மிகுந்தஜாக்கிரதையுடனிருந்தான். பின்பு, உக்கிரமான விரதமுள்ளவரும் சிறந்த ஞானமுள்ளவருமாகிய அந்த ஜரத்காருமுனி வெகுகாலம் வரையில் தவத்திலேயே கருத்தைவைத்து விவாஹத்தை விரும்பாமலிருந்தார். இந்திரியங்களை ஜயித்தவரும், தவத்தில் பிரவிர்த்தித்தவரும், வேதாத்தியயனம் உள்ளவரும், பயமற்றவரும், சுத்தமான மனமுள்ளவருமாகிய அந்த ஜரத்காருவென்னும் மஹாத்மா பூமிமுழுதும் திரிந்தார்; பத்தினியை மனத்தாலும் நினைக்கவில்லை.

பிராமணரே! அதன்பின் மற்றொருகாலம் நேர்ந்தபோது, குருவம்சத்திற்பிறந்த பரிக்ஷித்தென்னும் ஒரு ராஜா இருந்தார். சிறந்த கைகளுள்ளவரும் யுத்தத்திற்சிறந்த வில்லாளியும் அவர்பிரபிதாமஹருமாகிய பாண்டு முன்னே இருந்ததுபோலவே அவரும் வேட்டையையே பழகிக்கொண்டிருந்தார். அபிமன்யுபுத்திரராகிய பரிக்ஷித்து அவருடையபிரபிதாமஹராகிய பாண்டுவைப்போலவே உலகத்தில் பெயர்பெற்றிருந்தார். அந்தராஜா, மான்களையும் பன்றிகளையும் புலிகளையும் எருமைகளையும் இன்னும் பற்பல காட்டு மிருகங்களையும் அடித்துக்கொண்டு ஸஞ்சரித்தார். பகவானாகிய ருத்திரர் தேவலோகத்தில் [1]மான்வடிவங்கொண்ட யஜ்ஞபுருஷனை அடித்ததுபோல, அந்த ராஜா ஒருநாள் பதிவான கணுக்களுள்ள பாணத்தினால் ஒருமானையடித்து, அந்த அடர்ந்தகாட்டில் அதைத்தேடுவதற்காக அதன்பின்னே வில்லுங்கையுமாக இங்குமங்கும்போனார். அவராலடிக்கப்பட்ட மானானது ஜீவித்து அந்தவனத்திற் போய்க்கொண்டிருக்கவில்லை. அந்த அடிபட்டமிருகம் காணமற்போனதே அந்தப் பரிக்ஷித்து மஹாராஜா சீக்கிரத்தில் ஸ்வர்க்கம்போவதைத் தெரிவிக்கிற முன்னறிகுறியாக இருந்தது. அந்தமிருகத்தினால் வெகுதூரம் வனத்தில் இழுக்கப்பட்ட அந்தராஜா களைத்துத் தாகத்தினால் வருந்தி, ஊட்டினகன்றுகளின் வாயிலிருந்து வெளிப்பட்டமிகுந்த பால்நுரையைப் புசித்துக்கொண்டு மாட்டுக்கொட்டில்களில் உட்கார்ந்திருக்கும் ஒருரிஷியைச் சந்தித்தார். பசியோடும் சிரமத்தோடுங்கூடிய அந்தராஜா வில்லையெடுத்தபடி கடுமையான தவமுள்ள அந்த ரிஷியிடம் விரைவாகச்சென்று, 'ஓ! ஓ! பிராமணரே! நான் அபிமன்யுபுத்திரனாகிய பரிக்ஷித்தென்னும்ராஜா; என்னால் அடிக்கப்பட்ட மான் ஒன்று காணப்படவில்லை. அதைக்கண்டீரோ?' என்றுகேட்டார். மௌனவிரதத்திலிருந்த அந்தமுனி அந்த ராஜாவுக்கு விடை

1 இது தக்ஷயாகத்தில் நடந்தது.

ஒன்றும் சொல்லவில்லை. ராஜாவானவர் கோபித்து, இறந்துபோன ஸர்ப்பத்தை அந்தரிஷியின்கழுத்தில் வில்லின் நுனியால் எடுத்து மாட்டினார். அவர் அந்த ராஜாசெய்த பிழையைக் கவனிக்காமல் விட்டுவிட்டார். அவர் அந்தராஜாவைப்பார்த்து நல்லதோ கெட்டதோ எதுவும் சொல்லவில்லை. அந்தராஜா, அவர் அவ்வாறு இருந்ததைக்கண்டு கோபத்தைவிட்டு, துக்கத்துடன் நகரஞ்சென்றார். அந்த ரிஷியோ அப்படியே இருந்தார். பொறுமையே ஸ்பாவமாகவுள்ள அந்தமஹரிஷி, தாம் அவமதிக்கப்பட்டிருந்தும், இராஜதர்மத்தை விடாதவராகிய அந்தராஜச்ரேஷ்டரைச் சபிக்கவில்லை. பாதச்ரேஷ்டராகிய அந்தப்பரிக்ஷித்துமஹாராஜா தர்மத்தைக் கைவிடாத அந்த மஹரிஷியைத் தெரிந்துகொள்ளாமையால், அவரை அப்படி அவமானஞ் செய்தார்.

அந்தரிஷிக்கு, கடுமையான தேஜஸுள்ளவரும் சிறந்த தவமுள்ளவரும் மிகுந்தகோபமுள்ளவரும் சமனம் செய்விக்கமுடியாதவரும் நியமந்தவறாதவரும் இளமைப்பருவமுள்ளவருமாகிய சிருங்கியென்று பெயருள்ளபுத்திரர் ஒருவரிருந்தார். அவர், எல்லாப்பிராணிகளுக்கும் நன்மைசெய்ய எண்ணமுள்ளவரும் உயர்ந்த ஸ்தானத்திலிருப்பவருமாகிய பிரம்மதேவரை ஒவ்வொருகாலத்திலும் மிகுந்த நியமத்துடன் உபாஸித்துவந்தார். பிராமணசிரேஷ்டரே! அந்தச்சிருங்கி அந்தப்பிரம்மாவினால் விடைகொடுக்கப்பெற்று வீட்டுக்குவரும்போது, அதிக கோபஸ்வபாவமுள்ளவரும் விஷம்போன்றவருமாகிய அம்முனிபுத்திரரைநோக்கி, அங்கே விளையாடிக்கொண்டிருக்கும் அவர் ஸ்நேஹிதனாகிய கிருசன் என்னும் ரிஷிபுத்திரன் சிரித்துக்கொண்டு, 'ஓ! சிருங்கியே! சிறந்ததேஜஸும் தவமுமுள்ள உன் பிதா சவத்தைத் தோளிற்சுமக்கிறார்; கர்வப்படாதே; தவத்தில் தேர்ச்சியடைந்தவர்களும் பிரம்மஜ்ஞானிகளும் சிறந்ததவமுள்ளவர்களுமாகிய எம்மைப்போன்ற ரிஷிகுமாரர்கள் பேசும்போது, நீ ஒருபேச்சும் பேசாதே. எந்த நீ பிணஞ்சுமக்கின்ற பிதாவைப் பார்க்கப்போகிறாயோ அந்த உனக்கு ஆண்பிள்ளையென்கிற அபிமானம் ஏது? அதற்குத்தக்க கர்வப்பேச்சுக்கள் எங்கிருந்துவரும்? முனிச்ரேஷ்டனே! உன்னுடையபிதா தமக்குத் தகாதகாரியத்தைச் செய்துகொண்டார். அதனால், நான் மிகவும் வ்யஸனப்படுகிறேன்' என்று, அவன் பிதாவைக்குறித்துக்கேட்டவுடன் கோபமுண்டாகும்படி, பரபரப்புடன் சொன்னான்.

---

## நாற்பத்தோராவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(சமீகர்புத்ரரர்கிய சிருங்கி பரிக்ஷித்துக்குச் சாபம் கொடுத்தது.)

இவ்வாறு அவன்சொன்னவுடன், தேஜஸுள்ளவரும் கோபமுள்ளவருமாகிய அந்தச்சிருங்கி தம்பிதா பிணத்தைச்சுமப்பதாகக் கேட்டு, கோபத்தினுற் கொதிப்புற்ருர். அவர் அந்தக்கிருசனென்பவனைப்பார்த்து, உண்மையும்பிரியமுமான சொல்லைச்சொல்லி, 'எல்லாப் பிராணிகளுக்கும் நன்மையைவிரும்புகிறவரும், எப்போதும் வேறுசித்தமில்லாமல் தேவனுகியவிஷ்ணுவைப் பூஜிப்பவரும், வனத்திலுள்ள ஆகாரத்தைப்புசிப்பவரும், எப்போதும் மௌனவிரதத்தை விடாதவருமாகிய சிறந்ததேஜஸுள்ள ரிஷியான அந்த என்பிதா இப்பொழுது பிணஞ்சுமப்பவரானதெப்படி?' என்றுகேட்டார். கிருசன், 'அன்பனே! பரிக்ஷித்தென்னும் ராஜா வேட்டைக்காகத் திரியும்போது உன்பிதாவின்தோளில் இறந்துபோனஸர்ப்பத்தை இப்போது மாட்டினன்' என்ருன். சிருங்கி, 'அந்தத் துராத்மாவாகிய ராஜாவுக்கு என்பிதாசெய்ததீங்கு என்ன? கிருசனே! அதை உண்மையாகச் சொல்லு; என்னுடைய தவத்தின் வன்மையைப்பார்' என்றுசொல்ல, கிருசன், 'அபிமன்யுவின் புத்திரனுகிய அந்தப் பரிக்ஷித்தென்னும்ராஜா வேட்டையாடிக்கொண்டு தனியாகப்போகையில் விரைவாகஓடுகின்ற ஒருமானைப் பாணத்தால் அடித்துப் பின்தொடர்ந்தான்; அந்த ராஜா அந்தப்பெரியவனத்தில் அலைந்தும் மானைக் காணவில்லை. பசியினுலும் தாகத்தினுலும் சிரமத்தினுலும் பீடிக்கப்பட்ட அவ்வரசன், பேசாமற் கட்டையைப்போல் நிற்பவராகிய உன்பிதாவைப்பார்த்து, காணமற்போன மானைக்குறித்து அடிக்கடி கேட்டான். மௌனவிரதம்வஹித்த அவர் அவனுக்கு உத்தரஞ்சொல்லவில்லை. ராஜா வில்லின் முனையினுல் ஸர்ப்பத்தையெடுத்து அவர்தோளில் மாட்டினன். சிருங்கியே! தவத்தைவிடாத உன்பிதா அப்படியேயிருக்கிருர். அந்த ராஜா ஹஸ்தினுபுரமென்று பெயருள்ள தன் நகரத்துக்குப் போய்விட்டான்' என்ருன்.

இவ்வாறு சவம்தோளில் இருப்பதைக்கேட்டுச் சிறந்தமஹிமையுள்ள அந்தரிஷிபுத்திரர், கோபத்தினுற் கண்கள்சிவந்து ஜ்வலிப்பவர்போலக் கோபாவேசங்கொண்டு அப்போதே ஆசமனஞ்செய்து கோபத்தின்வேகத்தினுல் மெய்ம்மறந்து, 'எந்த ராஜாவென்னும்

பாபி, விருத்தரும் கஷ்டப்படுகிறவருமாகிய என்பிதாவின்தோளில் இறந்துபோனஸர்ப்பத்தைப் போட்டானே அந்தப்பாபியும், பிராமணர்களை அவமதிப்பவனும், குருவம்சத்து அரசர்களுக்கு அபகீர்த்தியை விளைவிப்பவனுமாகிய அயோக்கியனை, பல்லில் விஷமுள்ளவனும் கொடியசக்தியுள்ளவனுமாகிய தக்ஷகனென்னும் ஸர்ப்பராஜன் என்சொல்லின்வன்மையால் தூண்டப்பட்டு மிகுந்த கோபத்துடன் இன்று முதல் ஏழு இராத்திரிகளுக்குள்ளாக யமனுடைய கிருகத்துக்கு அனுப்பப்போகிறான்' என்று சபித்தார்.

சிருங்கி அதிகோபத்துடன் இப்படி சபித்துவிட்டு, இறந்துபோனபாம்பைச் சுமந்துகொண்டு மாட்டுக்கொட்டிலில் உட்கார்ந்திருக்கிற பிதாவினிடஞ்சென்றார். அந்தச் சிருங்கி, தோளிலிருக்கும் இறந்தபாம்புடனிருக்கின்ற அந்தப்பிதாவைக்கண்டு, இன்னும் கோபத்தினால்கலக்கமுற்று, துக்கத்தினால் கண்ணீர்விட்டுக்கொண்டு, பிதாவைப்பார்த்து, 'பிதாவே! அந்தத்துராத்மாவாகிய பரிக்ஷித்து என்னும் அரசன் உமக்குச்செய்த இந்த அவமானத்தைக்கேட்டு நான் கோபத்தினால் குருவம்சத்திற்கே இழிவாகிய அவனுக்குத் தகுந்த உக்கிரமானசாபத்தைக் கொடுத்தேன்; ஸர்ப்பச்ரேஷ்டனாகிய தக்ஷகன் அந்தப்பாவியை இன்றைக்கு ஏழாவதுநாள் மிகப்பயங்கரமான யமனுடையவீட்டுக்கு அனுப்பப்போகிறான்' என்று சொன்னார்.

பிராமணரே! அப்படிக்கோபங்கொண்ட அந்தச் சிருங்கியைப் பார்த்து, அவர் பிதாவாகிய சமீகர், 'குழந்தாய்! நீ செய்தது எனக்குப் பிரியமாக இல்லை; தவஞ்செய்கிறவர்களுக்கு இது தர்மமன்று; நாம் அந்தராஜாவினுடைய தேசத்தில் வஸிக்கிறோம்; அவனால் நியாயமாக ரக்ஷிக்கப்படுகிறோம். அவனுக்குத்தீங்குசெய்வது எனக்குப் பிரியமன்று; புத்திரனே! ராஜா எவ்வாறுநடந்தாலும் அதைப் பொறுப்பது நம்மைப்போன்றவர்களுக்குக் கடமை; தர்மத்தைக் கெடுத்தால் அது நம்மைக்கெடுத்துவிடும்; ஸந்தேகமில்லை; புத்திரா! அரசன் ரக்ஷிக்காமற்போவானானால் நமக்குப் பெருங்கஷ்டம் வரும்; ஸௌக்கியமாகத் தர்மஞ்செய்ய நமக்குமுடியாது. பிரியமானவனே! தர்மத்தில் ஊக்கமுள்ள அரசர்களினால் நாம் காப்பாற்றப்பட்டுப் பெரியதர்மத்தைச் செய்கிறோம்; தர்மத்தில் அவர்களுக்கும் பாகமுண்டு; ராஜா எவ்விதமாக நடந்தாலும் க்ஷமிப்பதுதான் நமக்குக் கடமை; பரிக்ஷித்தோ, அவனுடையபிரபிதாமஹராகியபாண்டு எப்படியோ அப்படியே விசேஷமாக நம்மைக் காப்பாற்றுகிறான்; ஸமர்த்தனே! பிரஜைகளை ரக்ஷிப்பதுதான் ராஜாவின்கடமை; ராஜா இல்

லாத தேசத்தில் எப்போதும் தோஷங்களுண்டாகின்றன ; நிலைகலங்கிய உலகத்தை ராஜா தண்டத்தினாலல்லவோ எப்போதும் ஆளுகிறான் ; தண்டத்தினால் பயமுண்டானபிறகு சமனமுண்டாகிறது ; கலங்கினவன் தர்மஞ்செய்யமாட்டான் ; கலங்கினவன் வேலைசெய்யமாட்டான் ; ராஜாவினால் தர்மம் நிலைநிறுத்தப்படுகிறது ; தர்மத்தினால் ஸ்வர்க்கம் நிலைநிறுத்தப்படுகிறது; யஜ்ஞகாரியங்களெல்லாம் ராஜாவினால் ஸ்தாபிக்கப்படுகின்றன ; யஜ்ஞத்தால் தேவர்கள் ஸ்தாபிக்கப்படுகின்றனர்; தேவர்களால் மழையுண்டாகின்றது ; மழையினால் பயிர்கள் உண்டாகின்றன ; ராஜா பயிர்களினால் மனுஷ்யர்களைக் காப்பாற்றி எப்போதும் அவர்களுக்கு நன்மையைச்செய்து ராஜ்யபரிபாலனமும் செய்கிறான். ஒருராஜா பத்துச் [1]சுரோத்தியர்களுக்கு ஸமானமென்று மனு சொல்லியிருக்கிறார். அந்தராஜா பசியோடு மானைத்தேடிக் களைத்து இங்கு வந்து என்னுடைய இந்த விரதத்தையறியாமல் இதைச்செய்துவிட்டானென்று நினைக்கிறேன். நீ ஏன் ஆலோசிக்காமல் சிறுபிள்ளைத்தனமாக இந்தக் கெட்டகாரியஞ்செய்தாய்? புத்திரனே! எவ்வகையிலும் ராஜா நம்மிடமிருந்து சாபத்தையடையத் தகுந்தவனல்லன்' என்றுசொன்னார்.

---

## நாற்பத்திரண்டாவது அத்தியாயம்.

### ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(சமீகர், கௌரமுகர் என்னும் சிஷ்யரால் தம்புத்திரன் சபித்ததைப் பரிக்ஷித்துக்குத் தெரிவித்தது.)

சிருங்கி, 'பிதாவே! இஃது ஆலோசிக்காமற்செய்ததாயிருந்தாலும், பாவஞ்செய்ததாயிருந்தாலும், உங்களுக்குப் பிரியமாயிருந்தாலும், அப்பிரியமாயிருந்தாலும், நான் சொன்னசொல் பொய்யாதல் கூடாது; இது மாறாது. பிதாவே! இதோ நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; நான் விளையாட்டுக்கும் பொய்சொல்வதில்லை ; நான் சபிப்பது பொய்யாவதேது?' என்று சொல்ல, சமீகர், 'குழந்தாய்! நீ உக்கிரமானசக்தியுள்ளவனென்றும் அப்படியே ஸத்யம்பேசுகிறவனென்றும் நான் அறிவேன் ; ஒருபோதும் நீ பொய்சொன்னதில்லை; இதுவும் பொய்யாகாது. ஆனால், புத்திரன் வயஸுவந்தவனா

---

1 வேதாத்தியயனஞ்செய்த பிராமணர்கள்.

யிருந்தபோதிலும், எப்படி குணமுள்ளவனுவனே, எப்படி பெரிய கீர்த்தியடைவானே, அப்படி பிதா எப்போதும் அவனுக்குச் சொல்ல வேண்டியதுதான். நீயோ பாலனுகவேயிருக்கிறுய்; எப்போதும் தவத்திறைற் பரிபாகமடைந்திருக்கிறுய்; உனக்குச் சொல்வதைப் பற்றி ஸந்தேஹமென்ன? சக்தியுள்ள மஹாத்மாக்களுக்குக் கோபம் மிகுதியாக விருத்தியாகுமானல் இந்தலோகங்கள் அழிந்துவிடும். பொறுப்பது தான் கோபத்துக்குப் பரிஹாரம். தர்மமுள்ளவர்களுட் சிறந்தவனே! நீ புத்திரனுயிருப்பதையும் சிறுவனுயிருப்பதையும் அவஸரக்காரனுயிருப்பதையுங்கண்டு உனக்குச் சொல்வது அவசியமென்றே நான் நினைக்கிறேன்; நீ இந்தக் கோபத்தைவிட்டுவிட்டு, சாந்தியைக் கைப்பிடித்தவனுகி, வனத்திலுள்ள ஆகாரத்தைப் புசித்துக்கொண்டு திரி. இப்படிச் செய்தலால் உனக்குத் தர்மம் தவருமலிருக்கும். யதிகளாயிருந்து கஷ்டப்பட்டுச் சம்பாதித்த புண்ணியத்தையும் குரோதம் அழித்துவிடுகிறதல்லவா? புண்ணியமில்லாதவர்களுக்கு நல்லகதியில்லை. பொறுமையுள்ள யதிகளுக்குத்தான் இந்திரியஜயம் ஸித்தியைச்செய்கின்றது; இந்த லோகமும் பொறுமையுள்ளவர்களுக்கேயுள்ளது; பரலோகமும் பொறுமையுள்ளவர்களுக்கே. ஆதலால், எப்போதும் பொறுமையைவிடாமல் இந்திரியங்களை வசப்படுத்தி நடக்கக்கடவாய்; பொறுமையினுல் பிரம்மாவுக்கு ஸமீபமாயுள்ள லோகங்களையடைவாய். நான் பொறுமையுடன் இனி என்னசெய்யமுடியுமோ அதைச் செய்யப்போகிறேன். குழந்தாய்! அந்தராஜாவுக்கு, 'அரசனே! என்னுடைய புத்திரன் சிறுவன்; புத்தித்தேர்ச்சியடையாதவன்; அவன், உன்னுல் எனக்கு நேரிட்ட இந்த அவமானத்தைக்கண்டு, தாங்காமல் உன்னைச் சபித்துவிட்டான்' என்று ஸமாசாரம் அனுப்பப்போகிறேன்' என்று இவ்வாறுசொல்லி, மிகவுறுதியும் சிறந்ததபஸுமுள்ள அந்தச்சமீகரிஷி தயைகூர்ந்து பரிக்ஷித்தென்னும் ராஜாவினிடம் குசலப்பிரஶ்னஞ் செய்து நடந்தகாரியத்தைத் தெரிவிக்கும்படி சொல்லி, நல்லொழுக்கமுள்ளவரும் பொறுமையுள்ளவருமாகிய கௌரமுகரென்று பெயருள்ள சிஷ்யரை அனுப்பினுர்.

அந்தச்சிஷ்யர், உடனே விரைவாகப் பரிக்ஷித்துமஹாராஜாவினிடஞ்சென்று காவற்காரர்களைக்கொண்டு முன்னர்த்தெரிவித்து, ராஜக்ருஹத்துக்குள் பிரவேசித்தார். களைப்படைந்தகௌரமுகரென்னும் பிராமணர், ராஜாவினுற் பூஜிக்கப்பட்டு, சமீகர்சொல்லியனுப்பின அந்தப் பயங்கரமான செய்திமுழுவதையும் அவர்சொன்னபடி மந்திரி.

களின் முன்னிலையில் அரசனுக்குச்சொன்னர். 'ஓ! ராஜராஜரே! கேளும்; சிறந்த தர்மிஷ்டரும் ஐம்புலன்களையும் மனத்தையும் அடக்கினவருமாகிய பெருந்தவமுள்ள சமீகரென்னும் ரிஷி உங்களுடைய தேசத்தில் இருக்கிருர். புருஷச்ரேஷ்டரே! மௌனத்தை அனுஷ்டிக்கிற அவருடைய தோளில் உங்களால் உயிர்போன ஒரு ஸர்ப்பம் வில்லின் நுனியினல் எடுத்துமாட்டப்பட்டது; அந்த உமது செய்கையை அந்தரிஷி பொறுத்திருந்தார்; அவர்குமாரர் பொறுக்கவில்லை. ராஜச்ரேஷ்டரே! அந்தப்புத்திரர், 'ஏழுராத்திரிக்குள்ளாகத் தக்ஷகன் உமக்கு யமனுகப்போகிருன்' என்று தம் பிதாவுக்குத்தெரியாமற் சபித்திருக்கிருர். அதுவிஷயத்தில் ரக்ஷணஞ்செய்துகொள்ளுமென்று உமக்குச்சொல்லும்படி சமீகர்பலமுறைசொல்லியிருக்கிருர். அந்தச்சாபம்யாராலும்மாற்றமுடியாதது. கோபமுற்ற புத்திரரை அவராலும் அடக்கமுடியவில்லை. அரசரே! அதனல், உமது க்ஷேமத்தை விரும்புகின்ற அந்தச்சமீகர் என்னை உம்மிடம்அனுப்பினர்' என்றுர்.

இப்படிக்கௌரமுகர்சொன்ன கொடியசொல்லைக்கேட்டு, பெருந்தவமுள்ள பரிக்ஷித்துமஹாராஜா, அந்தப்பாவஞ்செய்ததைப்பற்றி மிகத்துன்பமுற்ருர். வனத்திலிருந்த அந்தமுனிச்ரேஷ்டரை மௌனவிரதமுள்ளவரென்றுகேட்டபின், ராஜா அதிகதுக்கத்தினல் மனத்திற்கொதிப்புள்ளவராகி, அந்தச்சமீகருடைய தயையுள்ள ஸ்வபாவத்தைத் தெரிந்துகொண்டபிறகு, அப்படிப்பட்ட ரிஷிவிஷயத்தில்தாம் தீங்குசெய்ததற்காக இன்னும் அதிகபரிதாபமுற்ருர். தேவதைக்கு ஸமானமான கீர்த்தியுள்ள அந்தராஜா அந்தப்பாபகாரியத்தைத் தாம் செய்ததற்காக எப்படிப் பரிதபித்தாரோ அப்படித் தமக்கு நேர்ந்திருக்கும் மரணத்தைக்கேட்டும் பரிதபிக்கவில்லை. உடனே, அரசர், 'பகவானகிய சமீகர் இந்தக்குற்றத்திற்காக என்னிடத்தில் இனிமேலும் க்ஷமிக்கவேண்டும்' என்று சொல்லிக் கௌரமுகரை அனுப்பினர். அப்போது கௌரமுகமுனிவர் ராஜா சொன்னதைக்கேட்டு, அவரிடம் விடைபெற்றுக்கொண்டு,விரைவாகத் தம் குருவின் ஆச்ரமத்திற்குச் சென்ருர்.

அந்தக் கௌரமுகர்போனதும் அரசர் மனத்தில் அச்சமுற்று மந்திரிகளுடன்கூட ஆலோசனைசெய்தார். ஆலோசனையின் வகை தெரிந்த அந்தராஜாவானவர் அவ்வாறு மந்திரிகளுடன் ஆலோசித்தபிறகு, ஒற்றைத்தூணேடுகூடிய மிகவும் பத்திரமுள்ள மாளிகையைக் கட்டுவித்து, அதில் காவலும்ஏற்படுத்தி, வைத்தியர்களையும் ஔஷதங்களையும்மந்திரஸித்தியுள்ளபிராமணர்களையும் எங்கும்நியமித்தார்.

தர்மம் தெரிந்தவராகிய அவர் எல்லாப்பக்கங்களிலும் காப்பாற்றப் பட்டவராக அதில் இருந்துகொண்டு, மந்திரிகளுடன்கூட ராஜகாரியங்களெல்லாவற்றையும் செய்தார். மாளிகையிலேறின ராஜச்ரேஷ்டரிடம் யாரும் அணுகமுடியவில்லை. வெளியில்வந்த காற்றுக்கூட உள்ளேபுகும்போது தடுக்கப்பட்டது. அந்த ஏழாவதுநாள்வந்த போது வித்வானாகிய காசியபரென்னும் பிராமணஸ்ரேஷ்டர் அந்த ராஜாவுக்குச் சிகித்ஸைசெய்வதற்காக வந்தார்; ஏனெனில், நாகஸ்ரேஷ்டனாகிய தக்ஷகன் அந்த ராஜச்ரேஷ்டனை யமனிடம் அனுப்பப்போகிறானென்பதை அவர்கேட்டிருந்தார்; 'ஸர்ப்பராஜனால் கடிக்கப்பட்ட அவரை நான் விஷஉபத்திரவமில்லாதவராகச் செய்வேன்; அதில், எனக்குப் பொருளும் அறமும் கிடைக்கும்' என்று நினைத்தார். அந்தராஜாவாகிய தக்ஷகன், வயதுசென்ற பிராம்மணனாக ரூபமெடுத்துக்கொண்டு, ராஜாவினிடத்தில் ஓரேஞாபகமாகச் செல்லுகின்ற அந்தக்காசியபரை வழியிற்கண்டான். நாகராஜாவானவன் முனிச்ரேஷ்டரான அந்தக்காசியபரைப்பார்த்து, 'நீங்கள் எங்கே விரைவாகப்போகிறீர்கள்? என்னகாரியஞ் செய்யவிரும்புகிறீர்கள்?' என்றுகேட்டான். அதற்குக்காசியபர், குருவம்சத்திற் பிறந்தவரும் எதிரிகளை அடக்குகிறவருமாகிய பரிக்ஷித்தென்னும் ராஜாவைத் தக்ஷகனென்னும் ஸர்ப்பராஜன் தன் விஷபலத்தினால் இன்றைக்கு எரித்துவிடப்போகிறான்; ஸௌம்யரே! அக்னிக்கொப்பான பராக்கிரமமுள்ளவரும் பாண்டவர்களின் வம்சவிருத்தி செய்பவரும் அளவற்ற சக்தியுள்ளவருமாகிய அந்த அரசரை அந்தநாகராஜன் கடித்தவுடன் உபத்திரவமில்லாமற்செய்வதற்கு நான் விரைவாகப்போகின்றேன்; நான் விஷவைத்தியந்தெரிந்தவனாக லோகத்தாரால் பூஜிக்கப்பட்டபிராமணன்; நமதுகுருவின் கடாக்ஷத்தினால் விஷத்தைப்போக்குவதில் நான் ஸாமர்த்தியமுள்ளவன்' என்று சொன்னார். அதைக்கேட்ட தக்ஷகன், 'பிராமணரே! நான்தான் அந்தத்தக்ஷகன்; அந்த ராஜாவைத்தகிக்கப்போகிறேன்; என்னால் கடிக்கப்பட்டவனுக்குச் சிகித்ஸைசெய்வது உம்மால்முடியாது; திரும்பிப்போம்' என்றான். அதற்குக்காசியபர், 'உன்னாற்கடிக்கப்பட்ட அந்தராஜாவை நான் போய் உபத்திரவமில்லாதவனாகச் செய்வேனென்பது என்னுடைய வித்தையின் வலிமையினாலுண்டான நிச்சயம்' என்றார்.

---

## நாற்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)



(தக்ஷகன் கடித்த ஆலமரத்தைக் காசியபர் பிழைப்பித்தது.)

தக்ஷகன், 'காசியபரே! நான்கடித்த எதற்காவது சிகிச்சை செய்ய உமக்குச் சக்தியிருக்குமானால், இந்தமரத்தைக்கடிக்கிறேன்; அதைப்பிழைப்பியும். உமதுமந்திரத்தின் மேலானவலிமை எதுவோ அதைக்காட்ட முயற்சிசெய்யும். பிராமணோத்தமரே! இந்தஆலமரத்தை நீர்பார்க்கும்போதே எரித்துவிடுகிறேன்' என்றான். காசியபர், 'நாகராஜாவே! உனக்கு இந்தக்கர்வமிருக்குமானால் நீ இந்த மரத்தைக்கடி; நீகடித்த இந்தமரத்தை நான் பிழைப்பூட்டுகிறேன்; இப்போது என்மந்திரபலத்தைப்பார். நாகனே! ஆலமரத்தைக்கடி' என்றார். மஹாத்மாவாகிய காசியபரால் இவ்வாறு சொல்லப்பட்ட ஸர்ப்பராஜாவான தக்ஷகன் ஆலமரத்தினிடஞ்சென்று அதைக்கடித்தான். அந்தமரத்தை அந்தமிருந்தசக்தியுள்ள தக்ஷகன் கடித்தவுடன் அவனுடைய பல்லின்விஷம் வியாபித்தமையால் அம்மரமெங்கும் எரிந்தது. அந்தநாகன் அந்தமரத்தை எரித்துவிட்டு மறுபடியும் காசியபரை நோக்கி, 'பிராமணசிரேஷ்டரே! முயற்சியைச்செய்யும்; இந்தமரத்தைப்பிழைப்பியும்' என்றான். அதன்பின், ஸர்ப்பராஜாவின் விஷாக்கினியினால் நீறாய்ப்போனமரத்தின் சாம்பலையெல்லாம் குவித்துக் காசியபர், 'நாகச்ரேஷ்டனே! என்னுடைய வித்தையின் பலத்தை இந்தமரத்தினிடம்பார்; ஸர்ப்பமே! நீ பார்க்கும்போதே இதனை நான் பிழைப்பிக்கிறேன்' என்று சொன்னார்.

பிறகு, சிறந்தமகிமையுள்ளவரும் வித்தையுள்ளவருமாகிய அந்தக்காசியபரென்னும் பிராமணசிரேஷ்டர், சாம்பர்க்குவியலாகச்செய்யப்பட்டவ்ருக்ஷத்தை வித்தையினாற்பிழைப்பித்தார். அதில்முளையை உண்டாக்கினார். பிறகு, இரண்டு இலைகள் உண்டாகச்செய்தார்; இலைகள் விருத்தியாகவும் கிளைகள்கிளைக்கவும் பின்னர் மரமாகவும் செய்தார். மஹாத்மாவாகிய காசியபரால் அம்மரம் பிழைப்பிக்கப்பட்டதைக்கண்டு தக்ஷகன், 'பிராமணசிரேஷ்டரே! என்னுடையதும் என்னைப்போன்றவருடையதுமாகிய விஷங்களையெல்லாம் நீர் நீக்கிவிடுவீரென்பது உம்மிடத்தில் அதிக ஆச்சரியமன்று. தபோதனரே! என்ன பிரயோஜனத்தைக்கருதி நீர் அங்கேபோகிறீர்? அந்த ராஜஸ்ரேஷ்டரிடமிருந்து எதை அடையலாமென்று விரும்புகின்றீரோ

அந்தப்பிரயோஜனம் கிடைக்கஅரிதாயிருந்தபோதிலும், அதைநானே உமக்குக்கொடுப்பேன். பிராமணரே! பிராமணசாபம் மூடிக்கொண்டமையால் ஆயுள்குறைந்த அரசன்விஷயத்தில் நீர் பிரவிர்த்தித்தால் உமதுகாரியஸித்தி ஸந்தேஹமாயிருக்கும். அதனால், மூன்றுலோகங்களிலும் பிரகாசிக்கின்ற உமது கீர்த்தி ஒளி குறைந்த சூரியனைப்போல் இந்த விஷயத்தில் அஸ்தமனமாய்விடும்' என்று சொன்னான்.

காசியபர், 'நாகனே! நான் தனத்துக்காக அங்கேபோகிறேன். அதை நீ எனக்குக்கொடு; தனங்கிடைத்தபோதே நான்திரும்பிவிடுவேன்' என்றார். தக்ஷகன், 'பிராமணசிரேஷ்டரே! அந்த ராஜாவினிடத்திலிருந்து எவ்வளவுதனத்தை எதிர்பார்க்கிறீரோ அதைவிட அதிகதனத்தை நானேகொடுப்பேன்; திரும்பிவிடும்' என்று சொல்லக்கேட்டு, மிகப்பெரிய ஸாமர்த்தியமுள்ளவரும் சிறந்தபுத்தியுள்ளவருமாகிய அந்தக்காசியபரென்னும் பிராமணசிரேஷ்டர் ராஜாவைக்குறித்துச் சிந்தித்தார். திவ்யஞானமுள்ளவரும் மிகுந்த பிரம்மதேஜஸுள்ளவருமாகிய அந்தக்காசியபரென்னும் ரிஷிச்ரேஷ்டர் அப்போது பாண்டவவம்சத்தினராகிய அந்தராஜாவுக்கு ஆயுள்குறைந்ததென்று தெரிந்துகொண்டு, தமக்குவேண்டியவளவு தனத்தைத் தக்ஷகனிடம்பெற்றுக்கொண்டு திரும்பிவிட்டார். அந்தமஹாத்மாவாகிய காசியபர், பணம்பெற்றுக்கொண்டு திரும்பிப்போனபிறகு, தக்ஷகன் துரிதமாக ஹஸ்தினாபுரம் சென்றான்.

பிறகு, அந்தத்தக்ஷகன் போகும்போது, ராஜா விஷங்களைப்போக்கும் உயர்ந்தமந்திரங்களினால் பிரயத்தனத்துடன் காப்பாற்றப்படுவதைக் கேள்வியுற்று, அப்போது அவன், 'இந்தராஜாவை ஒரு கபடப்பிரயோகத்தினால் நான் மோசம்செய்யவேண்டும்; என்னஉபாயம் பொருந்தும்?' என்று சிந்தித்தான். பின்பு, அந்தத்தக்ஷகன் அநேக ஸர்ப்பங்களை ரிஷிவேஷத்துடன் பழங்களையும் இலைகளையும் ஜலத்தையுமெடுத்துக்கொண்டு போகும்படி ராஜாவினிடம் அனுப்பினான். 'நாகர்களே! காரியமிருப்பதனால், நீங்கள் பழங்களையும் இலைகளையும் ஜலத்தையும் ராஜாவுக்குக் கொடுப்பதற்குப் பயப்படாதவர்களாய்ச்செல்லுங்கள்' என்று, தக்ஷகன் நாகர்களுக்குக் கட்டளையிட்டான். தக்ஷகனால் கட்டளையிடப்பட்ட அந்தநாகர்கள் அவ்வாறே செய்தனர். ராஜாவுக்குத் தர்ப்பைகளையும் ஜலத்தையும் பழங்களையும் கொண்டுபோய்க்கொடுத்தனர். சூரராகிய அந்தராஜசிரேஷ்டர், அவைகளெல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு அவர்களுடைய காரியங்களையும் நிறைவேற்றி அவர்களைப் போகலாமென்றும் கூறினர்.

ரிஷிகளாக மாறுவேஷங்கொண்ட அந்த நாகர்கள் சென்றபின், அந்தராஜா, மந்திரிகளையும் ஸ்நேஹிதர்களையும் நோக்கி, 'ரிஷிகளாற் கொண்டுவரப்பட்ட மதுரமான இந்தப்பழங்களையெல்லாம் நீங்கள் என்னுடன் புசியுங்கள்' என்றுசொல்லி, பிறகு, அவர் மந்திரிகளுடன் பழங்களை எடுத்துக்கொள்ள ஆரம்பித்தார். அந்த ரிஷி சாபத்தினாலுண்டான விதியினால் தூண்டப்பட்ட ராஜா எந்தப்பழத்தில் தக்ஷகநாகன் இருந்தானோ அதைத்தான் புசித்தார். சௌனகரே! அவர் சாப்பிட்டுக்கொண்டிருக்கையில், அந்தப் பழத்தினின்றும் நீளமில்லாததும் கறுத்த கண்களையுடையதும் சிவந்த வர்ணமுள்ளதுமாகிய, ஒருசிறியபுழு வெளிப்பட்டது. அந்த ராஜச்ரேஷ்டரும் அந்தப்புழுவையெடுத்து மந்திரிகளைநோக்கி, 'ஸூர்யன் அஸ்தமனமாகிறான்; இனி விஷத்தின் பயம் எனக்கில்லை; அந்தமுனியின் வாக்குப் பொய்யாகாமலிருக்கட்டும்;இந்தப்புழு தக்ஷகனென்று பெயருள்ளதாக இருந்து என்னைக் கடித்திடுக; அப்படியானால் பரிஹாரமாய்விடும்' என்று சொன்னார். அந்தமந்திரிகளும் காலத்தினால் தூண்டப்பட்டவர்களாய் ராஜா சொன்னதை அங்கீகரித்தனர். அந்த ராஜச்ரேஷ்டர் இவ்வாறு சொல்லி, மரணம் ஸமீபித்திருப்பதனால், புத்திகெட்டு, அந்தச்சிறிய புழுவைக் கழுத்தில் வைத்துக்கொண்டு உடனே சிரித்தார். சிரிக்கும்போதே தக்ஷகனுடைய உடலினாற் சுற்றப்பட்டார். எந்தப்பழம் ராஜாவுக்குக் கொடுக்கப்பட்டதோ அந்தப்பழத்திலிருந்து வெளிப்பட்ட தக்ஷகனென்னும் நாகராஜன் தன் உடலினால் ராஜாவைச் சுற்றிக்கொண்டும் பெரிய இரைச்சல் இரைந்துகொண்டும் ராஜாவைக் கடித்தான்.

---

## நாற்பத்துநான்காவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(தக்ஷகன் கடித்ததினால் பரீக்ஷித்து இறந்தபிறகு ஜனமேஜயருக்குப் பட்டாபிஷேகம்.)

அப்படிப் பாம்பின் உடலினால் அந்தராஜா சுற்றப்பட்டதைப் பார்த்து, மந்திரிகள் யாவரும் குனிந்தமுகங்களோடு மிகத்துயரமுற்றுக் கண்ணீர் விட்டனர். பின்பு அந்த நாகத்தைக் கண்டு அந்தமந்திரிகள் ஓடிப்போயினர். அதன்பின், மிகுந்த துக்கத்தை

அடைந்த மந்திரிகள், தாமரைப்பூ நிறமுள்ளவனும் ஆகாயத்தை வகிர்ந்ததுபோற் செல்லுகிறவனுமாகிய தக்ஷகனென்னும் ஆச்சரிய மான ஸர்ப்பச்ரேஷ்டனைக் கண்டனர். உடனே, அவர்கள் ஸர்ப்பத் தின் விஷத்தினாலுண்டான அக்னியினாற் சூழப்பட்டு எரிகின்ற அந் தக் கிருகத்தைவிட்டுவிட்டுப் பயத்தினால் திசைகளில் ஓடினர். அந்த வீடும் இடியினாலடிபட்டதுபோல் விழுந்தது. பிறகு, தக்ஷகனுடைய விஷத்தினாற் கொல்லப்பட்ட ராஜாவுக்குப் பரலோகத்துக்கு வேண் டிய நல்லகிரியைகளெல்லாவற்றையும் செய்து, ராஜாவின் புரோஹித ராகிய பரிசுத்தரான பிராமணரும் மந்திரிகளும் நகரத்தில் வசிக்கும் எல்லா ஜனங்களும் ஒன்றுகூடி, அந்தராஜாவின் புத்திரனை குழந் தையை ராஜாவாகப் பட்டாபிஷேகஞ் செய்தனர். அந்தராஜாவை, சத்துருக்களைத் தொலைப்பவனும் குருவம்சத்துக்கு வீரனுமாகிய ஜனமேஜயனென்று ஜனங்கள் வழங்குகின்றனர்.

அவர், குழந்தையாயிருக்கும்போதே, சிறந்த புத்தியுடன் அர சர்களுக்கெல்லாம் சிறந்தவராக அந்த மந்திரிகளோடும் புரோஹித ரோடுங்கூடவே, குருச்ரேஷ்டராகிய பாண்டவர்களுக்குள் ஜ்யேஷ்ட ரும் தம்முடைய பிரபிதாமஹரும் வீரருமாகிய தர்மராஜா எப்படி ராஜ்யபரிபாலனஞ் செய்தாரோ அப்படியே, அப்போது ராஜ்யபரி பாலனஞ் செய்தார். அதன்பின், அந்தராஜா எதிரிகள் கண்டு நடுங் கும்படியான பராக்கிரமசாலியாயிருப்பதைக் கண்டு, அந்த ராஜாவி னுடைய மந்திரிகள் காசிதேசத்து ராஜாவாகிய ஸ்வர்ணவர்மா என்ப வனிடம் சென்று, வபுஷ்டமை என்ற அவன் பெண்ணை ராஜாவுக்கா கக் கேட்டனர். பிறகு, அந்த ஸ்வர்ணவர்மாவென்னும்ராஜா தர்மத் தில் பரீக்ஷைசெய்து குருவீரராகிய ஜனமேஜயருக்கு வபுஷ்டமை யைக் கன்னிகாதானமாகக் கொடுத்தான். ஜனமேஜயரும் வபுஷ்ட மையை விவாகஞ்செய்துகொண்டு மிகுந்தஸந்தோஷமடைந்து வேறு ஸ்திரீகள் யாரிடத்திலும் மனம்வைக்காமலிருந்தார். பராக்கிரமசாலி யாகிய அந்தராஜச்ரேஷ்டர், முன்பு புரூரவனென்னுமரசன் ஊர்வசி யையடைந்து எப்படி விளையாடினானோ அப்படியே, மனமகிழ்ச்சி யுடன், புஷ்பித்த வனங்களிலும் தடாகங்களிலும் விளையாடினார். பெயர்பெற்ற அழகுள்ளவளும் பதிவிரதையுமாகிய வபுஷ்டமையும் ஜனமேஜயராஜாவைப் பர்த்தாவாக அடைந்து அந்தப்புரஸ்திரீ யாகி மகிழ்வுற்று ரமிக்கிறகாலங்களில் அன்புடன் அவரை மகிழ் வித்தனள்.

---

## நாற்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)



(ஜரத்காருமுனிவருக்கும் அவர் பிதிர்க்களுக்கும் நடந்த ஸம்பாஷணை.)

இதேஸமயத்தில், சிறந்ததவமுள்ளவரும் அஸ்தமித்தஇடமே வீடாகவுடையவருமாகிய ஜரத்காருமுனிவர் பூமிமுழுவதும் ஸஞ்சரித்தார். மிகுந்த தேஜஸுள்ள அம்முனிவர், மனத்தையடக்காதவர்கள் செய்தற்கரிய விரதத்தைச் செய்துகொண்டும், புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்துகொண்டும், வாயுபக்ஷணஞ் செய்துகொண்டும், வேறு ஆகாரமில்லாமல் நாளுக்கு நாள் உலர்ந்துகொண்டும் திரிந்தார். அவர் ஒரு பள்ளத்தில் தலைகீழாகத் தொங்கிக்கொண்டு ஒற்றை அலகுமட்டும் மிச்சமாயுள்ள விலாமிச்சம் புல்லொன்றைப் பிடித்துக்கொண்டிருந்த பிதிர்க்களையும், அந்த விலாமிச்சையின் ஒற்றை அலகை அந்தவளையிலிருந்து ஓரெலி சிறிதுசிறிதாகக் கடித்திழுப்பதையும்கண்டார். அவர், ஆகாரமில்லாமல் இளைத்து ஓய்ந்து துக்கத்துடன் அந்தப்பள்ளத்தில் தங்களுக்கு ரக்ஷணத்தை இச்சிக்கின்ற அந்தப் பிதிர்க்களருகே சென்று, தாமும் மிகுந்த துக்கமுற்றுப் பேசத்தொடங்கினார்.

'வளையிலிருக்கின்ற எலியினால் வேர் அரிக்கப்பட்டுப் பலமில்லாமற்போன விலாமிச்சம் வைக்கோலைப்பிடித்துக்கொண்டு தொங்குகின்றீர்களே; நீங்கள் யார்? இங்கே விலாமிச்சைக்கு ஒற்றைவேர் மிச்சமாக நிற்கிறது; அதையும் இந்த எலி கூர்மையான பற்களினால் கொஞ்சங்கொஞ்சமாக இழுக்கிறது. இந்தவேரில் சிறிது பாகமே மிச்சமிருப்பதினால் இதுவும் சீக்கிரத்தில் அறுந்துபோய்விடும்; அப்போது நிச்சயமாக இந்தப்பள்ளத்தில் தலைகீழாக விழுவீர்கள்; இவ்விடத்தில் தலைகீழாகத் தொங்கிக்கொண்டு கஷ்டமான ஆபத்தையடைந்தஉங்களைக்கண்டு எனக்குத் துக்கமுண்டாயிருக்கிறது; உங்களுக்கு நான் செய்யக்கூடிய பிரியமான காரியம் யாது? இந்த என் தவத்தினுடைய நான்கிலொருபாகத்தினாலாவது, மூன்றிலொருபாகத்தினாலாவது, பாதியினாலாவது இந்த ஆபத்தைத் தாண்டுவதற்கு இஷ்டமிருந்தாற் சொல்லுங்கள்; தாமஸம்வேண்டாம்; அல்லது, என்னுடைய தவம் முழுமையினாலுங்கூட நீங்களெல்லாரும் கரையேறுவதாயிருந்தால் அவசியம் அப்படியே செய்யலாம்' என்றார்.

பிதிர்க்கள், 'நீ பிரம்மசாரி; நீ எங்களைக்காப்பாற்ற நினைப்பது எவ்வாறு? பிராமணசிரேஷ்டனே! தவத்தினால் இதை நிவிருத்தி செய்வது முடியாது; பேசுகிறவரிற் சிறந்தவனே! அப்பா! எங்களுக்கும்தவத்தின்பலன் இருக்கிறது; பிராமணனே! ஸந்ததியில்லாமையால் அசுசியான நரகத்தில் விழுகிறோம்; ஸந்ததியுண்டாக்குவது முக்கியமான தர்மமென்று பிரம்மாவே சொல்லுகிறார்; அன்பனே! இங்கே தொங்குகின்ற எங்களுக்குப் புத்தி தெளிவாக இல்லை; அதனால், உலகத்தில் பிரஸித்தமான தவவன்மையுள்ள உன்னை நாங்கள் கண்டுபிடிக்கமுடியவில்லை; பிறர் பரிதாபப்படத்தக்கவரும் மிகுந்த துயரமுற்றவருமாகிய எங்களிடம் கருணையோடு வ்யஸனப்படுகிற சிறந்தமஹிமையுள்ள நீயவதுமுதிர்ந்தவனாயிருக்கிறாய்;பிராமணனே! நாங்கள் யார் என்பதைக் கேள். நாங்கள் கடோரமான தவமுள்ள 'யாயாவரர்கள்' என்னும் ரிஷிகள்; ரிஷியே! ஸந்ததியில்லாமற்போனதனால் புண்ணியலோகத்திலிருந்து இங்கே நழுவுகின்றோம்; எங்களுக்கு ஸந்ததியாகியதந்து இல்லாமையால் எங்களுடைய கூர்மையானதவம் போய்விட்டது; அத்ருஷ்டஹீனர்களான எங்களுக்கு அத்ருஷ்டஹீனனான ஒருவன் ஸந்ததிக்குத் தந்துவாக இருக்கிறான்; அவன், இருந்தும் இல்லாதவன்போலவே தவம்ஒன்றையே பிடித்துக்கொண்டிருக்கிறான்; அவன், 'ஜரத்காரு' என்று பெயருள்ளவன்; வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவன்; மனத்தை அடக்கினவன்; மஹாத்மா; உறுதியானநியமமுள்ளவன்; மிகச்சிறந்ததவமுள்ளவன்; அவன் தவத்தில் ஆசைவைத்து எங்களை இந்தக் கஷ்டத்திற்கொண்டுவந்துவிட்டான். அவனுக்குப் பாரியையுமில்லை; புத்திரனும்இல்லை; எந்தப்பந்துவுமில்லை; அதனாலே நாங்கள் புத்திமயங்கி அநாதர்களைப்போற் பள்ளத்தில் தொங்குகின்றோம். அப்பா! எங்களுக்கு அவன் நாதனாக இருப்பதினால் நீ அவனைக்கண்டால், 'உன் பித்ருக்கள் கதியற்றவர்களாய்ப் பள்ளத்தில் தலைகீழாகத்தொங்குகின்றனர்; விவாஹஞ்செய்துகொள்; ஸந்ததியையும் உண்டுபண்ணு;அதுதான் நல்லது' என்று அவனுக்குச்சொல்லு; தபோதனனே! எங்கள் குலத்துக்கு அந்த ஒற்றைத்தந்துதான் மிச்சம்;எந்த ஒற்றைவிலாமிச்சம் வைக்கோலை எங்களுக்குப்பிடிப்பாக நீ பார்க்கிறாயோ இதுதான் எங்களுடைய குலத்திற்கு ஓரே ஆதாரவும் தன்குலத்தை விருத்திசெய்யவேண்டியவனுமாகிய அந்த ஜாத்காரு; பிராமணனே! இந்தக் கோரையின் வேர்களைப்பார்க்கிறாயே; இவை எங்களுடைய ஸந்ததிகள்;காலத்தினால் பக்ஷிக்கப்பட்டன; பிராமணனே! நீ பாதிசாப்பிட்ப்

பட்டஎந்தவேரைப்பார்க்கிருயோ, நாங்கள் எதைப்பிடித்துக்கொண்டு பள்ளத்தில் தொங்குகிரூமோ, அது தவத்தையே பிடித்துக்கொண்டிருக்கும் ஜரத்காரு ஒருவனுகும்; பிராமணனே! நீ பார்க்கிற எலிதான் மிகுந்தவலிமையுள்ளகாலம்; அந்தக்காலம் தவத்தில் இருப்பவனும் இனிமேலும் தவத்தில் ஆசைவைப்பவனும் அசக்தனும் அறிவில்லாதவனும் நல்ல எண்ணமில்லாதவனுமாகிய அந்த ஜரத்காருவைக் கொஞ்சங்கொஞ்சமாகக் கடித்தழிக்கிறது; சிறந்த ஸாதுவே! அவனுடைய அந்தத்தவம் எங்களைக்கரையேற்ருது; வேரற்றுநழுவிப்போய்க் காலத்தாற் புத்திகெட்டுப் பாபிஷ்டர்களைப்போலவே கீழே போகின்ற எங்களைப்பார்; நாங்கள் எல்லாப்பந்துக்களோடும் இங்கே விழுந்தோமாஞல், காலத்திஞல் அவனும் அறுபட்டு இந்தநரகத்துக்குத்தான் போகவேண்டியவனுவான்; ஐயா! தவமாகட்டும், யஜ்ஞமாகட்டும், இன்னும் தூய்மையைத்தரத்தக்க எந்தப்பெரிய காரியமாகட்டும், அவையெல்லாம், ஸந்ததிக்கு ஸமானமல்லவென்று பெரியோர்கள் நினைக்கின்றனர்; ஐயா! தபோதனனே! ஆதலால், நீ அந்த ஜரத்காருவைக்கண்டு சொல்லு; இங்கேகண்ட எல்லாவற்றையும் நீ அவனுக்குச் சொல்லவேண்டும்; பிராமணனே! அவனே எங்களுக்கு நாதனுயிருப்பதனுல், எப்படிச்சொன்னுல் அவன் விவாஹஞ்செய்துகொண்டு புத்திரர்களை உண்டுபண்ணுவனே அப்படி, உன்னுடைய குலத்தைப்போல் நினைத்துப் பந்துக்களாகிய எங்களுடைய நன்மைக்காகநீ அவனுக்குச் சொல்லவேண்டும்; சிறந்தஸாதுவே! பந்துவுக்கு வருத்தமடைபவன்போல் எங்களைக்குறித்து வருத்தமடைகிறநீ யார்? இங்கே நிற்கிற நீ எங்களெல்லாருக்கும் என்ன ஆகவேண்டும்? கேட்க விரும்புகிருேம்' என்று சொன்னுர்கள்.

---

## நாற்பத்தாருவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(ஜரத்காரு விவாகத்திற்குக் கன்னிகைதேடுவது.)

இதைக்கேட்ட ஜரத்காரு, மிகவும் வ்யஸனமடைந்துகொண்டு துக்கத்தாலுண்டான கண்ணீரினுல் தழுதழுத்தவாக்கோடு அந்தப் பித்ருக்களைநோக்கி, 'நீங்கள் எனது முன்னேர்களாகிய பித்ருக்களும் பிதாமஹர்களுமாயிருக்கிறீர்கள்; உங்களை ஸந்தோஷமடைவித்தற்காக நான் என்னசெய்யவேண்டும்? சொல்லுங்கள். நான்தான்

உங்களுக்கு அபராதியான ஜரத்காருவென்னும் புத்திரன்; அறிவில்லாதவனும் பாபமுள்ளவனுமாகிய எனக்கு நீங்கள் தண்டனை விதியுங்கள்' என்று சொல்ல, அவர்கள், 'புத்திரனே! தற்செயலாக நீ இவ்விடம் வந்துசேர்ந்தது ஸந்தோஷம்; பிராமணனே! எதற்காக நீ விவாஹஞ் செய்துகொள்ளவில்லை?' என்றுகேட்டனர். ஜரத்காரு, 'பித்ருக்களே! நான் இந்திரியத்தைச் சோஷிக்கச்செய்து இந்தத் தேகத்தை மேலுலகத்துக்குக் கொண்டுபோகவேண்டுமென்ற இந்த ஒருவிஷயம், எப்போதும் என் ஹ்ருதயத்திற் சுற்றிக்கொண்டேயிருக்கிறது. விவாஹஞ் செய்துகொள்வதில்லையென்று என்மனம் ஸ்திரப்படுத்தப்பட்டது. பிதாமஹர்களே! நீங்கள் பக்ஷிகளைப்போல் இவ்வாறு தொங்குவதைக்கண்டுமட்டும் பிரம்மசரியத்திலிருந்தஎண்ணத்தை நான் மாற்றுகிறேன்; நீங்கள் விரும்பின காரியத்தைச் செய்யப்போகிறேன்; ஸந்தேஹமின்றி விவாஹம் செய்துகொள்ளப் போகிறேன்; என் பெயருள்ளவளும் பிக்ஷையைப்போல் எனக்காக ஸித்தமாகவைத்துக் கொடுக்கப்படுபவளுமாகிய ஒருகன்னிகை எப்போது எனக்குக்கிடைத்தாலும் அவளை நான் விவாஹஞ்செய்துகொள்வேன்; ஆனால், நான் அவளைக் காப்பாற்றமாட்டேன்; இவ்விதமான விவாஹம் கிடைக்குமானால் நான் செய்துகொள்வேன்; இல்லாவிட்டாற் செய்துகொள்ளமாட்டேன்; பிதாமஹர்களே! இதுநிஜம். அவளிடம் உங்களைக்கரையேற்றுவதற்கு ஒருஸந்ததியுண்டாகும். என்னுடையபித்ருக்கள் நீண்டகாலம் அழிவில்லாமல் இருக்கக்கடவர்' என்று சொன்னார்.

இவ்வாறு பித்ருக்களை நோக்கிச் சொல்லிவிட்டு, அம்முனி பூமியெல்லாம் திரிந்தார். சௌனகரே! இவர் வயஸு சென்றவரென்ற காரணத்தினால், இவருக்குப் பாரியை கிடைக்கவில்லை. பித்ருக்களால் அவ்வாறு கட்டளையிடப்பட்ட அந்தஜரத்காரு அப்போது வெறுப்புற்று, காட்டுக்குச்சென்று மிகுந்தவ்யஸனத்துடன் உரக்கக் கூவினார். சிறந்த அறிவுள்ள அந்தஜரத்காரு, தம் பித்ருக்களுக்கு நன்மைசெய்வதற்காகக்காட்டுக்குட்சென்று, 'நான் கன்னிகையை யாசிக்கிறேன்' என்றசொல்லை மூன்று தரம் நிறுத்திச்சொன்னார். திரும்பவும், 'இங்குள்ள ஸ்தாவரஜங்கமங்களும் இன்னும் கண்ணுக்குப்புலப்படாத தெய்வங்களுமாகிய எல்லாம் நான் சொல்வதைக் கேட்கக்கடவன; துன்பப்படுகின்ற என் பித்ருக்கள் கடுந்தவத்திலிருக்கின்ற என்னை ஸந்ததியுண்டாக்குவதற்காக விவாகஞ்செய்துகொள்ளும்படி கட்டளையிடுகின்றனர்; விவாஹத்திற்காகக்கன்னிகையென்னும் பிக்ஷையை உத்தேசித்துப்பூமியெல்லாம் திரிகின்றேன்; நான் தரித்திரன்; கஷ்டப்படுவதே இயற்கையாகவுடையவன்; பித்

ருக்களினால் ஆஜ்ஞாபிக்கப்பட்டிருக்கிறேன்; நான் இப்போது குறிப்பிட்டவர்களுள் எவ்வகையாருக்குக் கன்னிகையிருந்தபோதிலும் எல்லாத்திசைகளும் அலைந்த எனக்கு அவர்கள் அக்கன்னிகையைக் கொடுக்கக்கடவர்; என்பெயருள்ளவளாகவும் பிக்ஷையைப்போல் வலிந்துகொடுக்கப்படுபவளாகவும் நான் காப்பாற்றவேண்டாதவளாகவுமிருக்கிற கன்னிகையை எனக்குக்கொடுங்கள்' என்று சொன்னார்.

பிறகு, முன்னமே ஜரத்காருவின் ஸமயத்தைக் கவனிக்கும்படி வாஸுகியினால் கட்டளையிடப்பட்ட அந்த நாகங்கள், அந்தச் சமாசாரத்தைக்கொண்டுபோய் வாஸுகிக்குத்தெரிவித்தன. அவற்றின் சொல்லைக்கேட்டு, அந்த நாகராஜன், அலங்கரிக்கப்பட்ட அந்த ஜரத்காருவென்னும் கன்னிகையையெடுத்துக்கொண்டு காட்டில் அந்த ஜரத்காருரிஷியினிடம் சென்றான். பிராமணரே! அவ்விடத்தில், வாஸுகியென்னும் நாகராஜன் அந்தக்கன்னிகையை அம்மஹாத்மாவுக்குப் பிக்ஷையைப்போற் கொடுத்தான். மோக்ஷத்தைப்பற்றிய அபிப்பிராயத்தில் உறுதியுள்ளவரும் விவாஹத்தில் விருப்பங்குறைந்தவருமான அந்த ஜரத்காரு அவளுக்குப் பெயர் வேறாயிருக்குமென்று நினைத்ததனாலும் காப்பாற்றுவதைப்பற்றின ஏற்பாடுசெய்துகொள்ளாமையாலும் அவளை வாங்கிக்கொள்ளவில்லை. பிருகுபுத்திரரே! பிறகு,அவர் வாஸுகியினிடம்அந்தக்கன்னிகையின் பெயரைக்கேட்டு, 'நான் அவளைக் காப்பாற்றமாட்டேன்' என்றுசொன்னார்.

---

## நாற்பத்தேழாவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)



(ஜரத்காரு விவாஹஞ்செய்துகொண்டு பாரியையை விட்டுப்போனது.)

அப்போது, வாஸுகி ஜரத்காருரிஷியைப் பார்த்து, 'இந்தக் கன்னிகை உம்முடைய பெயருள்ளவள்; என்ஸஹோதரி; தவத்தோடுகூடியவள்; உமதுபாரியையை நான் போஷிப்பேன்; பிராமணோத்தமரே! இவளைக் கிரஹித்துக்கொள்ளும்; தபோதனரே! என்னால் எவ்வளவுகூடுமோ அவ்வளவும் இவளைக்காப்பாற்றுவேன்; முனிஶ்ரேஷ்டர்களுட் சிறந்தவரே! இவள் உமக்காகவே காப்பாற்றிவைக்கப்பட்டிருக்கிறாள்' என்றுசொன்னான். ஜரத்காரு, 'நான் இவளைப் போஷிக்கமாட்டேன்; எனக்கு விருப்பமில்லாததை இவள்

செய்தல்தகாது; செய்தால், இவளைவிட்டுவிடுவேன்; இது நான்செய்திருக்கிறநியமம்' என்றார். அதைக்கேட்டு, 'ஸஹோதரியைப் போஷிக்கிறேன்' என்று நாகராஜன் பிரதிஜ்ஞைசெய்தபின், மந்திரம் தெரிந்தவர்களுக்கெல்லாம் சிறந்தவரும், தவத்திற்பெரியவரும், உறுதியான நியமமுள்ளவரும், தர்மத்திலேயே சித்தமுள்ளவருமாகிய ஜரத்காரு நாகராஜன் வீட்டுக்குப்போய் அங்கே சாஸ்திரோக்தமாக மந்திரத்துடன் அந்தக்கன்னிகையைப் பாணிக்கிரகணஞ்செய்து கொண்டார்.

அதன்பின், பாரியையை அழைத்துக்கொண்டு, மஹரிஷிகளினால் துதிக்கப்பட்டவராய், அழகியதும் தம்மனத்துக்கு இனியதுமான வாஸுகியின் கிருகத்துக்குப்போனார். அந்தச் சயனகிருகத்தில் விலையுயர்ந்தமெத்தை பரப்பினகட்டிலில் படுக்கை அமைக்கப்பட்டிருந்தது. அதில் ஜரத்காரு மனைவியுடன் இருந்தார். அங்கே சிறந்தஸாதுவாகிய ஜரத்காரு தம் பாரியையைப்பார்த்து, 'நீ எனக்கு வேண்டாததை எக்காலமும் செய்யவும் சொல்லவும் கூடாது. அப்பிரியஞ்செய்தபோது, உன்னையும் உன்வீட்டில்வஸிப்பதையும் விட்டுவிடுவேன். நான்சொன்ன இந்தச்சொல்லைக் கிரஹித்துக்கொள்' என்றுநியமனம்செய்தார். அதன்பின், வாஸுகியின் ஸஹோதரி அதிகபயமுற்றவளாய் மிகுந்ததுக்கத்துடன் அவரைநோக்கி, 'அப்படியே ஆகட்டும்' என்று சொன்னாள். சிறந்தகீர்த்தியுள்ள அந்த ஜரத்காரு கஷ்டத்தை இயல்பாக உடையவரான பர்த்தாவுக்குப் பிரியத்தையேகருதி [1]வெள்ளைக்காக்கைபோல் புதிதும் விநோதமுமான உபாயங்களினால் உபசாரஞ்செய்தாள்.

பின்பு, ஒருகாலத்தில் அந்தவாஸுகியின் ஸஹோதரி ருதுஸ்நானஞ் செய்தபிறகு, தன்பர்த்தாவாகிய முனிச்ரேஷ்டருடன் கிரமப்படி சேர்ந்தாள். அப்போது அவளுக்கு அக்னிக்கொப்பான கர்ப்பமுண்டாயிற்று; அக்னியைப்போல் மிகுதியான தேஜஸுள்ள அந்தக்கர்ப்பம் சுக்கிலபக்ஷசந்திரனைப்போல் விருத்தியடைந்தது; பிறகு, சிலதினங்களுக்குப்பின் பெருங்கீர்த்தியுள்ள ஜரத்காருவானவர் களைப்புற்றவராக அந்தப்பாரியையின்மடியில் தலைவைத்துக்

---

1 சுவேதகார்யம் என்பதுமூலம்: சுவேதகாகம் என்பதில், சுவ=நாய், ஏத=மான், காக=காக்கை என்றுபிரித்து, நாயைப்போல் எப்போதும் ஜாக்கிரதையாகவும் மானைப்போல் பயந்தும் காக்கையைப்போல் குறிப்பையறிந்தும் உபசரித்தாள் என்பர் சிலர்; சுவேதகாகம் என்பது கொக்கு என்றும், மழைக்காலத்தில் கூட்டுக்குள்ளிருக்கும் ஆண்கொக்கைப் பெண்கொக்குக் காப்பாற்றுவதுபோல உபசரித்தாள் என்றும் சொல்லுவர் வேறு சிலர்,

கொண்டு நித்திரைசெய்தார். பிராமணரே! அந்தப்பிராமண சிரேஷ்டர் தூங்கினபோது பகலின் முடிவில் ஸூர்யன் அஸ்தமனமானன். அப்போது நல்லமனமுள்ள அந்த வாஸுகியின்ஸகோதரி, தர்மம் கெடுமேயென்று பயந்து, 'நான் பர்த்தாவையெழுப்புவது தர்மமாகுமோ ஆகாதோ? இவர் கஷ்டத்தை இயல்பாகவுடையவர்; தர்மத்திலே சித்தமுடையவர். நான் என்னசெய்தால் இவருக்கு அபராதஞ்செய்தவளாக ஆகாமலிருப்பேன்?' என்று நினைத்தாள். 'தர்மத்தை இயல்பாகவுடைய இவருடையகோபம், தர்மலோபம் என்னும் இரண்டனுள் கோபத்தைக்காட்டிலும் தர்மலோபமே பெரிது' என்று நினைத்து, 'இவரை எழுப்புவேனுனல் நிச்சயமாகக் கோபிப்பார்; நான் எழுப்பாமல் ஸந்தியாகாலம் கடந்துபோனால் இவருக்குத் தர்மலோபம் வருவது நிச்சயம்' என்று எண்ணினாள். இனிமையாகப் பேசுகிறவளும் நாககன்னிகையுமாகிய ஜரத்காருவானவள் இவ்வாறு மனத்தில் நிச்சயஞ்செய்துகொண்டு, ஜ்வலிக்கின்ற தவமுள்ளவரும் அக்னிக்கொப்பானவரும் படுத்திருந்தவருமான அந்த ஜரத்காரு ரிஷியை நோக்கி, 'பெரிய மஹிமையுள்ளவரே! ஸூர்யன் அஸ்தமனமாகிறான்; எழுந்திரும். பகவானே! ஸ்நானஞ்செய்து நியமத்துடன் ஸந்தியை உபாஸனைசெய்யும்; அக்னிஹோத்திரம் ஸித்தமாக இருக்கிறது; இந்தக்காலம் அழகாயும் பயங்கரமாயுமிருக்கிறது. பிரபுவே! மேற்றிசையில் இதோ செவ்வானம் தெரிகின்றது' என்று நயமாகச்சொன்னாள்.

சிறந்ததவமுள்ளவரும் மஹிமைபொருந்தியவருமான அந்த ஜரத்காரு, இவ்வாறு உரைத்த பாரியையைநோக்கி, உதடுதுடிக்க, 'நாககன்னிகையே! நீ எனக்கு இந்த அவமானத்தைச்செய்தாய்; உன் ஸமீபத்திலிருக்கமாட்டேன்; நான் வந்தவழியே திரும்பிப்போவேன்; அழகிய தொடையுள்ளவளே! நான் தூங்கும்போது காலந்தவறாமல் ஸூர்யன் அஸ்தமனமாவது முடியாததென்பது என் மனத்திலிருக்கின்றது; அவமானம் அடைந்தபிறகு, அந்த இடத்தில்வஸிப்பதில் யாருக்குத்தான் விருப்பமிருக்கும்? தர்மத்தை இயல்பாகவுடைய எனக்கும் என்னைப் போன்றவனுக்கும் சொல்லவேண்டுமா?' என்று சொன்னார். அந்த வாஸுகியின் கிருஹத்தில் வாஸுகியின் ஸஹோதரியாகிய ஜரத்காரு தன்னுடைய பர்த்தா இவ்வாறு மனம் நடுங்கும்படி சொன்னபோது, 'பிராமணரே! நான் உங்களை அவமானஞ்செய்து எழுப்பினவளல்லேன்; பிராமணரே! உங்களுக்குத் தர்மலோபம் வரக்கூடாதென்று நான் இப்படிச்செய்தேன்' என்று சொன்னாள். மஹாதபஸுள்ள ஜரத்காருரிஷி இவ்வாறுசொன்ன பாரியையாகிய நாககன்னிகையை விட்டுவிட நினைத்

துக்கோபாவேசங்கொண்டு, 'நாகப்பெண்ணே ! என்வாக்குப் பொய் சொல்லுவதில்லை; நான்போவேன்; நான் முன்னமே உனக்கு ரஹஸ்யத்தில் இந்தநியமம் செய்திருக்கிறேன் ; பிரியமானவளே ! நான் ஸுகமாகவஸித்திருந்தேன் ; சுபமானவளே ! பயந்தவளே ! நான் இதைவிட்டுப்போனபிறகு, 'அந்தப்பகவான்சென்றுவிட்டார்' என்று உன் ஸஹோதரனை வாஸுகிக்குச்சொல் ; நீயும் நான் போனதைப் பற்றி வ்யஸனப்படாதே ' என்றார்.

சிலாக்கியமான சரீரமுள்ளவளும் அழகானநிதம்பமும் தொடைகளுமுள்ளவளுமாகிய அந்த ஜரத்காருவானவள் அவர் இவ்வாறு சொன்னபிறகு, சிந்தையிலும் சோகத்திலும் ஆழ்ந்து, அப்போது அந்த ஜரத்காருமுனியைநோக்கி, கண்ணீரால் தழுதழுத்தசொல்லோடும் உலர்ந்தமுகத்தோடும் கண்ணுங் கண்ணீருமாய்க் கைகூப்பிக்கொண்டு நடுங்குகிற மனத்தோடு தைரியஞ் செய்துகொண்டு, ' தர்மம் தெரிந்தவரே! தர்மத்தில் இருப்பவளும் எப்போதும் உமது பிரியத்தையும் ஹிதத்தையும் நாடுகிறவளுமாகிய என்னைத் தர்மநிஷ்டராகியநீர் குற்றமில்லாமலிருக்கையில் விடுவது தகாது.பிராமணசிரேஷ்டரே ! என்னை உமக்குக் கொடுத்ததற்கு என்ன பிரயோஜனமோ அதையடையாமலிருக்கின்ற பேதையாகிய என்னை வாஸுகி என்னசொல்லுவன்? சிறந்த ஸாதுவே ! தாயின் சாபத்தினால் கெடுக்கப்பட்ட என்ஞாதிகளுக்கு உம்மிடத்திலிருந்துண்டான ஸந்ததி வேண்டியது. அதை இன்னுங் காணவில்லை.உம்மால் ஸந்ததிகிடைத்தால்தான் என் சுற்றத்தாருக்கு க்ஷேமமுண்டாகும். பிராமணரே ! எனக்கும் உம்முடைய இந்தச் சேர்க்கையானது வீணாகாமலிருக்க வேண்டும். பகவானே ! ஞாதிகளுடைய நன்மையைவிரும்பிஉம்மை வேண்டுகிறேன். ஸாது ச்ரேஷ்டரே! எனக்கு நிச்சயப்படாத இந்தக் கர்ப்பத்தை வைத்து, குற்றமில்லாத என்னை விட்டுவிட்டு மஹாத்மாவாகிய நீர் போகநினைப்பது எப்படி ?' என்றுகேட்டாள். இவ்வாறு சொல்லக்கேட்டு, தவமே தனமாகப்பெற்ற அந்தரிஷி, தம்முடைய பாரியையாகிய ஜரத்காருவை நோக்கி, ஸமயத்துக்குத் தக்கபடி அவளுக்குத் தகுதியாக, 'அழகானவளே ! அக்கினிக்கு ஒப்பானவனும் தர்மத்தில் மிகுந்த சித்தமுள்ளவனும் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவனுமாகிய இந்தரிஷி உன்கர்ப்பத்தில் இருக்கிறான்' என்றார். இவ்வாறு சொல்லிவிட்டு அந்தத்தர்மாத்மாவாகிய ஜரத்காருமஹரிஷி திரும்பவும் உக்கிரமான தவஞ்செய்ய நிச்சயஞ் செய்துகொண்டுசென்றார்.

---

## நாற்பத்தேட்டாவது அத்தியாயம்.

## ஆ ஸ் தீ க ப ர் வ ம். (தொடர்ச்சி.)

—— ⟹✱✱⟸ ——

(ஆஸ்தீகர் ஜனனம்.)

தபோதனரே! ஜரத்காருவானவள் பர்த்தாசென்றவுடனே பிராதாவினிடம்வந்து நடந்தவிஷயத்தைத் தெரிவித்தாள். அதன் பின் அந்த நாகச்ரேஷ்டன் மிகப்பெரிய அஸந்துஷ்டியான செய்தியைக் கேட்டு, வருத்தமடைகின்ற தன் ஸஹோதரியைப் பார்த்து, தானும் மிகத் துன்பமுற்று, 'பிரியமானவளே! உன்னைக்கொடுத்ததற்குக் காரணமும் பிரயோஜனமும் உனக்குத்தெரியுமா? நாகர்களுடைய நன்மைக்காகச் செய்தது; அவரால் உனக்குச் சிறந்த சக்தியுள்ள புத்திரன் உண்டாவனேயாயின், அவன் நம்மை ஸர்ப்பயாகத்தினின்றும் விடுவிப்பானென்பதுதான். இப்படி முன்பு பிரம்மதேவர் தேவர்களுடன் சேர்ந்து சொல்லியிருக்கின்றார். ஸுந்தரியே? அந்த முனிச்ரேஷ்டரால் உனக்குக் கர்ப்பம் கிடைத்திருக்கிறதா? அந்த ஞானவானுடைய விவாஹம் பயன்படாமற்போவது எனக்கிஷ்டமில்லை. இப்படிப்பட்ட காரியத்தைப்பற்றி நான் உன்னைக்கேட்பது நியாயமன்றுதான். காரியம் பெரிதாயிருப்பதனால் அதைப்பற்றி நான் உன்னைக்கேட்டேன். மிகுந்த தவமுள்ள உனது பர்த்தா தடுக்கமுடியாதவரென்பது தெரிந்த நான் அவரைப்பின்தொடரமாட்டேன்; ஒருகால் அவர் என்னைச் சபித்தாலும் சபிப்பர். குழந்தாய்! உன் பர்த்தா உன்னிடத்தில் நடந்துகொண்டவரலாறு முழுவதையும் எனக்குச்சொல்; என் ஹ்ருதயத்தில் வெகுநாளாக நாட்டப்பட்ட கொடிய சல்லியத்தை எடுக்கக்கடவாய்' என்று சொன்னான்.

இவ்வாறு சொல்லக்கேட்ட ஜரத்காருவானவள் பரிதபித்துக் கொண்டிருக்கும் ஸர்ப்பராஜாவான வாஸுகியை உடனே ஸமாதானப்படுத்துகிறவளாக மறுமொழி சொல்லத் தொடங்கினாள்:— 'ராஜாவே! ஸஹோதரனே! பெருந்தவமுள்ள அம்மஹாத்மாவினிடம் ஸந்ததியைக் குறித்து நான்கேட்டேன். எனக்கு ஸந்ததி இருக்கிறதென்று உத்தரஞ்சொல்லிவிட்டு அவர் போய்விட்டார். பரிஹாஸங்களிலும் அவர் பொய் ஒன்றும் சொன்னதாக எனக்கு நினைவில்லை. அவர் ஆபத்துக்காலத்தில் பொய்சொல்லுவதேது? 'நாககன்னிகையே! காரியத்தைப்பற்றி நீ ஸங்கடமடையவேண்டாம். அக்னிக்கும் ஸூர்யனுக்கும் ஸமானமான தேஜஸுள்ள புத்

திரன் உனக்குப் பிறக்கப்போகிறான்' என்று எனக்குச் சொல்லி விட்டு அந்தத் தபோதனராகிய என் பர்த்தா சென்றார். ஆதலால், உன்மனத்திலிருக்கின்ற இந்தப் பெருந்துயரமானது விலகிப்போகட்டும்' என்றாள்.

அதைக்கேட்டு ஸர்ப்பராஜனாகிய அந்தவாஸுகி, 'அப்படியே ஆகவேண்டும்' என்றுசொல்லித் தன் ஸஹோதரிசொன்ன வாக்கியத்தை மிகுந்த ஸந்தோஷத்துடன் அங்கீகரித்தான். அந்த நாக ச்ரேஷ்டன் நல்ல வார்த்தைகளாலும் வெகுமானஞ் செய்வதனாலும் தனங்களைக் கொடுப்பதனாலும் மனத்துக்கு மிகப்பிரியமான பூஜையினாலும் தன் ஸஹோதரியைச் சிறப்பாக நடத்தினான். பிராமண சிரேஷ்டரே! அதன்பின் பெரியசக்தியும் பெரிய ஒளியுமுள்ள அவளுடைய கர்ப்பமானது சுக்கிலபக்ஷத்தில் உதயமான சந்திரன் ஆகாசத்தில் விருத்தியடைவதுபோல் விருத்தியடைந்தது. பிராமணரே! அதன்பின் பிரஸவகாலத்தில் அந்த நாகராஜன்ஸஹோதரி பிதாவுக்கும் மாதாவுக்கும் பயத்தை நிவிர்த்திசெய்யத்தக்கவரும் தேவகுமாரனைப்போன்றவருமாகிய ஒரு குமாரரைப் பெற்றாள்.

அவர் அந்த வாஸுகியின் கிருஹத்திலேயே வளர்ந்து பிருகு புத்திரராகிய ச்யவனருடைய புத்திரரிடத்திலிருந்து வேதங்களையும் வேதாங்கங்களையும் அத்தியயனஞ் செய்தார். அவர் சிறுபிராயத்திலேயே புத்தியும் சாந்தியும் குணங்களுமுடையவராகப் பிரம்மசாரி விரதத்தை நிறைவேற்றினார்; ஆஸ்தீகரென்பதாக அவருடைய பெயரும் லோகங்களில் பிரஸித்தமாயிருந்தது. அவர் கர்ப்பத்திலிருக்கும்போதே அவருடைய பிதா அஸ்தி (= இருக்கிறான்) என்று சொல்லி விட்டு வனம்போனதனால் அவருக்கு ஆஸ்தீகரென்னும்இந்தப்பெயர் உண்டாயிற்று. அவர் பாலராக இருக்கையிலேயே அளவில்லாதஞானமுள்ளவராக அந்த வாஸுகியின் கிருஹத்தில் இருந்துகொண்டு ஸஞ்சரிக்கையில், அவரை வாஸுகி மிகுந்த ஜாக்கிரதையோடு காப்பாற்றினான். தேவச்ரேஷ்டரும் பகவானுமான சிவபிரானைப்போல ஸுவர்ணநிறமாக விருத்தியடைந்துகொண்டு அந்த ஆஸ்தீகர் அந்த நாகர்களெல்லாரையும் ஸந்தோஷப்படுத்தினார்" என்றார்.

---

## நாற்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)



(சௌனகர் கேட்டதன்மேல் பரிக்ஷித்தின் மரணத்தை விரிவாக ஸௌதி சொல்லியது.)

சௌனகர், "அப்போது ஜனமேஜயராஜர், தம்பிதா ஸ்வர்க்கம்போனதைப்பற்றி மந்திரிகளை என்னகேட்டாரோ அதை எனக்கு மறுபடியும் விரிவாகச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, ஸூதபுத்திரர் சொல்லத்தொடங்கினர்:—"பிராமணரே! அப்போது ராஜா மந்திரிகளைக்கேட்டதையும் அதற்கு அவர்கள் பரிக்ஷித்தின் மரணத்தைப்பற்றிச் சொன்னதையும் சொல்லுகிறேன்; கேளுங்கள். ஜனமேஜயர் மந்திரிகளைப்பார்த்து, 'நீங்கள் என்னுடைய பிதாவின் விருத்தாந்தத்தையும் பெரியகீர்த்தியுள்ள அவர் அந்தக் காலத்தில் எப்படி மரணமடைந்தாரென்பதையும் அறிவீர்களல்லவா? உங்களிடமிருந்து என்பிதாவின் வரலாறுகளெல்லாவற்றையும் கேட்டபிறகு நியாயமாயிருந்தால் பரிஹாரம் செய்வேன்; இல்லாவிட்டால் ஒருகாலத்தும் செய்யமாட்டேன்' என்று சொன்னர்.

அந்தமஹாத்துமாவான ஜனமேஜயர் கேட்டவுடன் தர்மந்தெரிந்தவர்களும் சிறந்த புத்தியுள்ளவர்களுமாகிய மந்திரிகளனைவரும் ஜனமேஜயராஜாவை நோக்கிச் சொல்லலாயினர்:— 'ராஜாவே! மஹாத்மாவும் அரசர்க்கரசருமாகிய உமதுபிதாவினுடைய சரித்திரத்தையும் அவர் எவ்வாறு மரணமடைந்தாரென்பதையும் நீர் வினவியதற்குச் சொல்லுகிறோம்; கேளும். தர்மத்திற் சித்தமுள்ளவராகவும் சிறந்த ஸ்வபாவமுள்ளவராகவும் பிரஜைகளைப் பரிபாலித்த உமது பிதா இந்தலோகத்தில் எவ்வாறான ஒழுக்கத்தோடிருந்தார் என்பதை நீர் கேட்கவேண்டும். அவர் நாலுவருணங்களையும் தம்தம் தர்மங்களிலிருக்கும்படி செய்து காப்பாற்றினர். தர்மமே உருவங்கொண்டது போன்றவரும் தர்மந்தெரிந்தவரும் ஐசுவரியமுள்ளவரும் ஒப்பில்லாத பராக்கிரமமுள்ளவருமாகிய அந்த ராஜா தர்மமாகவே பூமிதேவியை ரக்ஷித்தார். அவரை விரோதிப்பவர் யாருமில்லை. அவரும் யாரையும் விரோதிப்பதில்லை. பிரம்மாவைப்போல் எல்லாப் பிராணிகளிடத்தும் வேறுபாடின்றி இருந்தார். ராஜாவே! அந்தராஜாவினுற் செவ்வையாக ஆளப்பட்டுப் பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் வைசியர்களும் சூத்திரர்களும் ஒற்றுமையுள்ளமனத்தோடு தம் தம் தொழில்களிலிருந்

தனர். அவர், கணவனிறந்த ஸ்திரீகளேயும் கதியற்றவர்களேயும் அவய வக்குறைவுள்ளவர்களேயும் தரித்திரர்களேயும் காப்பாற்றினர். இரண் டாவது சந்திரனேப்போலவே எல்லாஜனங்களுக்கும் பார்ப்பதற்கு இனிமையாக இருந்தார். அவருடைய ஜனங்கள் த்ருப்தியும் ஸம்பத் தும் உள்ளவர்களாக இருந்தார்கள். மிகுந்த ஸம்பத்துள்ளவரும் ஸத் தியவாக்கியமுள்ளவரும் ஜயிக்கமுடியாத பராக்கிரமத்தையுடைய வருமாகிய அந்தராஜா, வில்வித்தையில் கிருபாசாரியருடைய சிஷ்ய ராயிருந்தார். ஜனமேஜயரே! மிகுந்தகீர்த்தியுள்ள உமதுபிதா கிரு ஷ்ணனிடத்துப் பக்தியுள்ளவராகவும் எல்லா ஜனங்களிடத்தும் அன் புள்ளவராகவுமிருந்தார். பலசாலியாகிய அந்த அபிமன்யுபுத்திரர் கௌரவர்களெல்லாரும்,'பரிக்ஷயம்' என்னப்பட்ட நாசத்தைஅடைந் தபிறகு, உத்தரையினிடத்திற் பிறந்ததனல், பரிக்ஷித்து என்ற பெய ருடையவரானர். அவர் ராஜதர்மங்களிலும் தனலாபங்களிலும் ஸமர்த் தர்; ஜாக்கிரதையுள்ளவர்; எல்லாக்குணங்களும் நிரம்பினவர்; இந்திரி யங்களே ஜயித்தவர்; மனத்தையடக்கியவர்; சிறந்தபுத்தியுள்ளவர்; தர் மத்தை அனுஷ்டிப்பவர்; காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம் என்ற ஆறுஉட்பகையையும் ஜயித்தவர்; மேலான அபிப்பிராயமுள்ளவர்; நீதிசாஸ்திரம் அறிந்தவர்களுக்கெல்லாம் சிறந் தவர்; இந்தப்பிரஜைகளே உமதுபிதா அறுபதுவருஷகாலம் பரிபால னஞ்செய்தார். அதன்பின், எல்லாருக்கும் துக்கத்தை விளேவித்துக் கொண்டு மரணமடைந்தார். புருஷச்ரேஷ்டரே! அவருக்குப்பின் நீர் பால்யமாயிருக்கும்போதே பட்டாபிஷேகம் செய்யப்பெற்றுத் தர்ம மாக எல்லாஜனங்களேயும் காப்பாற்றிக்கொண்டு குருவம்சக்கிரமமாக வந்த இந்தராச்சியத்தை அநேகமாயிரவருஷங்கள் ஆளும்படி அடைந் திருக்கிறீர்' என்றனர்.

அதற்கு ஜனமேஜயர், 'பிரஜைகளுக்கு விருப்பத்தைச் செய் யாதவனும் பிரஜைகளால் விரும்பப்படாதவனுமாகிய ராஜா இந்தக் குலத்தில் ஒருபொழுதுமுண்டானதில்லே. நடையையே முக்கியமாகக் கொண்ட தம்பிதாமஹர்களான பாண்டவர்களுடைய மேலான நடை யைப் பார்த்தபிறகும் சொல்லவேண்டுமோ? அப்படிப்பட்டவராகிய மன்பிதா எவ்வாறு மரணமடைந்தார்? நடந்தபடி எனக்குச் சொல் லுங்கள். தெளிவாகக்கேட்க விரும்புகின்றேன்' என்று கேட்டார்.

இவ்வாறு ராஜாவினல் கேட்கப்பட்ட அம்மந்திரிகளெல்லாரும் ராஜாவின் பிரியத்தையும் ஹிதத்தையும் விரும்புகிறவர்களாக நடந்த படி ராஜாவுக்குச் சொல்லலானர்கள். அதாவது, 'ராஜாவே!

யுத்தத்தில் வில்லாளிகளுக்குட் சிறந்தவரும் சிறந்தவன்மையுள்ள வருமாகிய பாண்டுமஹாராஜா எப்படியோ அப்படியே ஆயுதம் பிடித்தவரெல்லாரிலுஞ் சிறந்தவரான உமதுபிதாவாகிய பரிக்ஷித்து மகாராஜாவும் ராஜ்யகாரியங்களையெல்லாம் எங்களிடம் ஒப்பித்து விட்டு, எப்போதும் வேட்டையாடுவதே காரியமாக இருந்தார். அவர் ஒருகாலத்தில் வனத்துக்குப்போய் பாணத்தினால் ஒரு மானை அடித்தார்; அடித்தவுடன், கத்திகட்டிக்கொண்டும் வில்லை வளைத்துக் கொண்டும் அந்தப்பெருங்காட்டில் அந்தமானைப் பின் தொடர்ந்து கால்நடையாக விரைந்துசென்றார். காட்டிற் காணமற்போன மான் உமது பிதாவுக்கு அகப்படவில்லை. அறுபதுபிராயம்நிரம்பி மூப்பை யடைந்த அந்தராஜா பசித்துக்களைப்படைந்து அந்த மஹாவனத்தில் ஒருமுனிச்ரேஷ்டரைக்கண்டார். அந்தராஜச்ரேஷ்டர்மௌனவிரதத் திலிருந்த அம்முனிவரை, 'மானைக்கண்டீரோ ?' என்று கேட்டனர். அவர்கேட்டும், அம்முனிவர் அப்போது யாதொன்றும் சொல்ல வில்லை. அதன்பின், ராஜா பசியினாலும் சிரமத்தினாலும் பீடிக்கப் பட்டவராய், மரக்கட்டையைப்போலிருந்து மௌனவிரதம் வஹித் துக்கொண்டிருந்த சாந்தரான அம்முனிவர்மேல் உடனே கோபங் கொண்டார். அம்முனிவர் மௌனவிரதம் அனுஷ்டித்திருப்பதை ராஜா அறியவில்லை. அந்த உமது பிதா குரோதத்தினால் ஆவேசங் கொண்டு அவரை அவமானஞ்செய்தார். பரதவம்சசிரேஷ்டரே! இறந்துபோன ஸர்ப்பத்தை வில்லின் நுனியினால் பூமியிலிருந்து தூக் கிப் பரிசுத்தமானமனமுள்ள அந்த ரிஷியின் தோளிற் போட்டார். அதன்பின், அந்தஞானியானரிஷி அவரைப்பற்றிநல்லதாவது கெட்ட தாவது எதுவும் சொல்லவில்லை. கோபியாமல் அப்படியே தோளில் ஸர்ப்பத்தை வைத்துக்கொண்டேயிருந்தார்.

---

## ஐம்பதாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(தக்ஷகனுக்கும் காசியபருக்கும் நடந்த விருத்தாந்தம் தெரிந்தவாலாறு.)

ராஜச்ரேஷ்டரே! பசியினாற்களைத்த அந்தராஜா, அம்முனி வருடையதோளில் பாம்பை மாட்டிவிட்டபிறகு தம் பட்டணத்துக் குத் திரும்பிச்சென்றார். அந்த ரிஷிக்குப் பசுவினிடம் பிறந்த வரும் பெருங்கீர்த்திபெற்றவரும் மிகுந்த பிரம்மதேஜஸுள்ளவரும்

உக்கிரமான சக்தியுள்ளவரும் மிகுந்த கோபமுடையவருமாகிய சிருங்கி என்ற புத்திரர் இருந்தார். அந்தச் சிருங்கியென்றமுனிவர் 1 பிரம்மாவினிடம்போய் அவரைப்பூஜைசெய்தார். ராஜசிரேஷ்டரே! அங்கிருந்து விடைபெற்றுக்கொண்டுவருகையில், அந்தச்சிருங்கி கட்டைபோல் அசைவற்றிருந்த தமதுபிதா யாருக்கும் தீங்குசெய்யாமலிருக்க, அவர்மேல் உமதுபிதா இறந்துபோன பாம்பையெடுத்து மாட்டி அவமானஞ் செய்ததையும் அவர் அதைத் தோளிற் சுமந்திருப்பதையும் தம் ஸ்நேகிதனிடம் கேள்விப்பட்டார். ராஜாவே! அந்த ரிஷிச்ரேஷ்டரான சமீகர் மிகச் சிறந்ததவமுள்ளவர்; ஐம்புலன்களையுமடக்கினவர்; பரிசுத்தர்; தமது கருமம்தவருதவர்; ஆச்சரியமான மஹிமையுள்ளவர்; தவத்தினால் ஆத்மாவை நிர்மலமாக்கிக்கொண்டவர்; தம்முடைய அவயவங்களிலும் மனம்வையாதவர்; இனியசெய்கையும் இனியசொல்லுமுடையவர்; தம்நிலை தவருதவர்; ஆசையற்றவர்; மஹான்; பொருமையில்லாதவர்; வயஸுமுதிர்ந்தவர். எல்லாப் பிராணிகளையும் ரக்ஷிக்கத்தக்கவரான அவர் மௌனவிரதத்தைவஹித்திருக்கையில் உமது பிதா அவருக்குத் தீங்குசெய்தார்.

அதன்மேல், மிகுந்த பிரம்மதேஜஸுள்ள சிருங்கி கோபத்துடன் உமதுபிதாவைச் சபித்தார். சிறுபிராயமாக இருந்தபோதிலும் தமதுபெரியமஹிமையினால்பெரியவரைப்போல் பிரகாசிக்கின்ற அந்த ரிஷிபுத்திரரான சிருங்கி உடனே ஆசமனஞ்செய்து பிரம்மதேஜஸினால் ஜ்வலிப்பவர்போற் கோபத்துடன் உமதுபிதாவை உத்தேசித்து, 'அபராதமில்லாத என்பிதாவின்மேல் இறந்த ஸர்ப்பத்தை எவன் போட்டானே அந்தப்பாவியைக் குரூரமான விஷாக்கினியோடுகூடிய தக்ஷகநாகன், என்சொல்வன்மையினால் தூண்டப்பட்டு, கோபங்கொண்டு இன்றுமுதல் ஏழுநாள்களுக்குள்ளாகத் தன் விஷஜ்வாலையினால் எரித்துவிடுவான். என் தபோபலத்தைப்பார்' என்று சொன்னார்.

அவர் இவ்வாறு சொல்லித் தம் பிதா இருந்த இடஞ்சென்று பிதாவைக்கண்டு தாம் கொடுத்த சாபத்தை அவருக்குத் தெரிவித்தார். அவருடைய பிதாவாகிய முனிச்ரேஷ்டர் நல்லொழுக்கமுள்ளவரும் குணவானுமாகிய கௌரமுகர் என்று பெயருள்ள தம் சிஷ்யரை உமது பிதாவினிடம் அனுப்பினார். அந்தக் கௌரமுகரும் வந்து சிரமபரிகாரம் செய்துகொண்டு ராஜாவைப்பார்த்து, 'ராஜாவே! என்புத்திரனால் சபிக்கப்பட்டிருக்கிறீர். மஹா

1 'பிரம்மா' என்பதற்கு, 'ஆசாரியர்' என்று பொருள்கொண்டு, 'ஆசாரியரிடம்போய் அவருக்குப்பூஜைசெய்து அவரிடம் விடைபெற்றுக்கொண்டு வீட்டுக்கு வந்தார்' என்பது பழையஉரை

அரசரே ! தக்ஷகன் உம்மைவிஷத்தினால் தஹிக்கப்போகிறான் ; ஜாக்கிரதையோடிரும்' என்று குருசொன்ன எல்லாவற்றையும் சொன்னார். ஜனமேஜயரே ! உமது பிதா அந்தக்கொடிய சொல்லைக்கேட்டு, ஸர்ப்பஸ்ரேஷ்டனான தக்ஷகனுக்குப் பயந்து தக்க முயற்சியுடன் இருந்தார்.

அதன்பின், அந்த ஏழாவதுநாள் வந்தபோது காசியபர்என்னும் பிரம்மரிஷி ராஜாவினிடம் போய்க்கொண்டிருந்தார். அப்போது அந்தக் காசியபரைத் தக்ஷகனென்னும் நாகராஜன் கண்டான். அவன் வேகமாகப்போகின்ற அந்தக்காசியபரென்னும் பிராமணரைநோக்கி, 'நீர் எங்கே விரைவாகச் செல்லுகிறீர் ? என்ன காரியஞ்செய்ய நினைத்திருக்கின்றீர்?' என்றுகேட்க, காசியபர், 'ஓ ! பிராம்மணா ! கௌரவச்ரேஷ்டராகிய பரிக்ஷித்தென்னும் ராஜாவினிடம் போகின்றேன் ; அவரை இன்றைக்கினம் தக்ஷகனென்னும் நாகன் எரிக்கப்போகிறானாம்; அவரைக்கடித்தவுடன் அந்தவிஷவேகத்தை நிவிருத்தி செய்வதற்கு நான் வேகமாகப்போகின்றேன் ; நான் காப்பாற்றுவதற்கு ஏற்பட்டிருக்கிற ராஜாவை அந்தஸர்ப்பம் அழிக்கமுடியாது' என்றார். அதுகேட்டதக்ஷகன், 'பிராமணரே! நான்தான்அந்தத்தக்ஷகன் ; நான் கடித்தராஜாவை நீர் ஏன் பிழைப்பிக்க விரும்புகிறீர்? என்னாற்கடிக்கப்பட்ட அவ்வரசனைப் பிழைப்பிப்பதற்கு உம்மாலாகாது; என்னுடைய ஆச்சரிய சக்தியைப்பாரும்' என்றுசொல்லி அந்தத் தக்ஷகன் அங்கேயுள்ள ஒருமரத்தைக் கடித்தான். அவன் கடித்தவுடன் அந்தமரம் நீறாகிவிட்டது. அரசரே ! உடனே காசியபரும் அம்மரத்தைப் பிழைப்பித்தார். பிறகு, அவரைத் தக்ஷகன், 'உமக்கு வேண்டியதைச் சொல்லும்' என்று ஆசைமூட்ட, அந்தக்காசியபர் இப்படிக்கேட்ட அந்தத்தக்ஷகனைநோக்கி, 'நான் திரவியம்கிடைக்குமென்று அவ்விடம் போகிறேன்' என்றுசொன்னார்.

அவரால் இவ்வாறு சொல்லப்பட்ட தக்ஷகன், மஹாத்துமாவான காசியபரைநோக்கி, 'ஓ ! குற்றமில்லாதவரே ! நீர் அரசனிடம் எவ்வளவு தனம் அடையவிரும்புகிறீரோ அதற்கு அதிகமாக என்னிடம் பெற்றுக்கொண்டு திரும்பிப்போம்' என்று நயவசனமாகப் பேசினான். அந்தநாகன் இவ்வாறு சொன்னபின், மனிதர்களுட் சிறந்தவராகிய அந்தக்காசியபர் தக்ஷகனிடமிருந்து தமக்குவேண்டிய அளவு பொருளைப்பெற்றுக்கொண்டு திரும்பிப்போனார். அந்தப் பிராமணர் திரும்பிப்போனபின், தக்ஷகன் மாறுவேஷமாகவந்து, தர்மிஷ்டரும் ராஜஸ்ரேஷ்டருமான உமதுபிதா மாளிகையின்மேல் ஜாக்

கிரதையாகவிருந்தும், அவரை விஷாக்னியினால் எரித்துவிட்டான். புருஷஸ்ரேஷ்டரே! அதன்பின் நீர் லோகத்தை வசப்படுத்துவதற்காகப் பட்டாபிஷேகஞ்செய்யப்பட்டீர். அரசருட் சிறந்தவரே! உள்ளபடி நாங்கள் கண்டதும் கேட்டதும் இதுதான். இந்த மிகக்கொடிய சமாசாரமெல்லாவற்றையும் நாங்கள் உமக்கு விடாமற்சொன்னேம். புருஷஸ்ரேஷ்டரே! ராஜாவுக்கும் இந்த உதங்கரிஷிக்கும் நேர்ந்த அவமானத்தைக் கேட்டபிறகு, அதன்மேற் செய்யத்தக்கதைச் செய்யும்' என்று மந்திரிகள் ஜனமேஜயருக்குச் சொன்னார்கள்.

சத்துருக்களை அடக்குகிறவராகிய அந்த ஜனமேஜயராஜர், அதே காலத்தில் மந்திரிகளெல்லாரையும் பார்த்து, 'மந்திரிகளே! அந்த மரத்தின் விஷயமாக நடந்த வ்ருத்தாந்தம் உங்களுக்கு யாரால் சொல்லப்பட்டது? தக்ஷகனால் சாம்பற்குவியலாகச் செய்யப்பட்ட மரத்தைக் காசியபர் அப்போதே பிழைப்பித்தாரென்பது லோகத்துக்கே ஆச்சரியமான விஷயம்; காசியபருடைய மந்திரங்களினால் விஷம்போக்கப்பட்டவன் இறக்கமாட்டானென்பது நிச்சயம். அந்தக் கெடுநினைவுள்ள நாகங்களுக்குள் இழிவானவன், 'என்னாற்கடிக்கப்பட்ட ராஜாவை இந்தப்பிராமணன் பிழைப்பிப்பானானால் தக்ஷகனுக்கு விஷம் போய்விட்டதென்று உலகத்துக்குப் பரிஹாஸமாகும்' என்று மனத்தில் நினைத்துத்தான் அந்தப்பிராமணனைத் திருப்தி செய்வித்திருக்கவேண்டும்; இனி ஓர் உபாயத்தினால் அவனுக்குத் துன்பத்தைக்கொடுக்கப்போகின்றேன்; ஆனால், அவனுடைய நடையைப்பற்றி ஒன்றுமட்டும் கேட்க விரும்புகின்றேன். மனிதரில்லாத காட்டில் தக்ஷகனுக்கும் காசியபருக்கும் நடந்த அந்த ஸம்பாஷணையைக்கேட்டதும் அவர்களைப்பார்த்ததும் யார்? அந்த ஸமாசாரம் உங்களுக்கு எப்படிவந்தது? இதைக்கேட்ட பிறகு அவனுக்காக ஸர்ப்பங்களையே ஒழிக்கின்ற ஆலோசனையைச் செய்வேன்' என்றார்.

மந்திரிமார்கள், 'அரசரே! பிராமணசிரேஷ்டரான காசியபரும் தக்ஷகனும் வழியில் ஸந்தித்தவிஷயத்தை எங்களுக்கு இன்னார் இவ்வாறு சொன்னார் என்பதைச் சொல்லுகிறோம்; கேளும். வேந்தரே! ஒருமனிதன் விறகுக்காகஅம்மரத்திலுள்ளஉலர்ந்தகிளைகளைத்தேடிக்கொண்டு முன்னமே அம்மரத்தில்ஏறியிருந்தான். அவன்மரத்திலிருந்தது தக்ஷகன்காசியபர் இருவருக்கும்தெரியாது. அரசரே! அவன் அந்தமரத்தோடுகூடவே நீறாகிவிட்டான். ராஜஸ்ரேஷ்டரே! காசியபருடைய பிரபாவத்தினால் அவன் அம்மரத்தோடுகூடவே பிழைத்தான். ஒரு பிராமணனுடைய வேலைக்காரனாகிய அவன் திரும்பிவந்து

தக்ஷகன் காசியபர் அவ்விருவருக்கும் நடந்ததை நடந்தபடியே எங்களுக்குத்தெரிவித்தான். அரசரே! இந்தவிஷயம் எப்படிக் காணப்பட்டது, எப்படிக் கேட்கப்பட்டதென்பதை நாங்கள் உமக்குச் சொன்னோம்; ராஜச்ரேஷ்டரே! இதைக்கேட்டபிறகு மேல்நடக்க வேண்டியதைச்செய்யும்' என்றனர்.

இவ்வாறு மந்திரிகள் சொன்னதைக்கேட்டு அந்தஜனமேஜய ராஜர் கையாற் கையைப்பிசைந்துகொண்டு துக்கத்தினால் மிகவும் பரிதபித்தார்; தாமரைக்கண்ணினராகிய அவர் அடிக்கடி உஷ்ணமான பெருமூச்சுவிட்டுக்கொண்டு கண்ணால் நீர்த்துளிகளைச் சொரிந்து அழுதார்; அவமானத்தால் மனஸ்தாபமும் பிதா இறந்துபோனதனால் வ்யஸனமுமுற்ற அந்த ஜனமேஜயராஜர் நிறுத்தமுடியாத கண்ணீரைவிட்டபிறகு, சாஸ்திரப்பிரகாரம் ஜலத்தினால் முகத்தைக் கழுவி ஆசமனஞ்செய்து சற்றுநேரம் கோபத்துடன் மனத்தில் ஆலோசனைசெய்து ஒரு நிச்சயஞ்செய்துகொண்டு மந்திரிகள் எல்லாரையும் நோக்கி அடியில்வருமாறு சொல்லலானார்:—

'எனதுபிதா ஸ்வர்க்கம் போனதைப்பற்றி நீங்கள் சொன்னதைக் கேட்டபிறகு, எனக்குண்டான உறுதியான அபிப்பிராயத்தை நீங்கள் கேளுங்கள்; துராத்மாவான தக்ஷகனுக்குப் பிரதித் தீங்கு செய்வதுதான் அடுத்துச்செய்யத்தக்க காரியமென்று நான் நினைக்கிறேன்; அவன் சிருங்கியென்னும் ரிஷியைக் காரணமாகமாத்திரம் வைத்துக்கொண்டு ராஜாவாகிய என்பிதாவை எரித்துக்கொன்றவன்; காசியபரைத் திருப்பினதும் அவனுடைய துஷ்டத்தனம்; அந்தப் பிராமணர் வந்திருப்பாரானால் என்பிதா ஜீவித்திருப்பரே; காசியபருடைய அனுக்கிரகத்தினாலும் காசியபருக்கு மந்திரிகள் உபசரிப்பதனாலும் அந்தராஜா ஜீவித்திருந்தால், அந்தத்தக்ஷகனுக்கு என்ன குறைந்துபோம்? யாவரிடத்திலும் தோல்வியடையாத ராஜாவைப் பிழைப்புமூட்டவந்த பிராமணசிரேஷ்டராகிய காசியபரை அவன் கர்வத்தினால் தடுத்தானல்லவா? ராஜாவைப் பிழைப்பு மூட்டாமலிருக்கவேண்டுமென்று அந்தப்பிராமணருக்குத் திரவியம் கொடுத்ததும் துராத்மாவான தக்ஷகன் செய்த பெரிய அநியாயமல்லவா? உதங்கருக்கும் எனக்கும் உங்களெல்லாருக்கும் மிகுந்த பிரியமான காரியத்தைச்செய்து என்பிதாவிஷயத்தில் பகைதீர்ப்பதாகிய மரியாதையைச் செய்யப்போகிறேன்' என்றார்.

---

## ஐம்பத்தோராவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(ஜனமேஜயர் ஸர்ப்பயாகம் செய்தது.)

ஸ்ரீமானாகிய அரசர் இவ்வாறுசொல்ல, மந்திரிகள் அங்கீகரித்த பிறகு, ஸர்ப்பஸத்ரத்துக்காகப் பிரதிஜ்ஞைசெய்தார். பிராமணரே! பேசுகிறவரிற் சிறந்தவரும் பாதஸ்ரேஷ்டரும் பரிக்ஷித்தின் புத்திரருமாகிய ஜனமேஜயராஜர் புரோஹிதரையும் ரித்விக்குக்களையும் அழைத்து, தாம் நினைத்தகாரியம் நிறைவேறுவதற்குத் தகுந்தசொல்லைச் சொல்லத்தொடங்கினர்.

'எனது பிதாவை ஹிம்ஸித்த துராத்மாவான தக்ஷகனுக்கு நான் எவ்விதமான பிரதிசெய்யலாமென்பதை நீங்கள் எனக்குச் சொல்லுங்கள்; அந்தத்தக்ஷகனென்னும்நாகனைப் பந்துக்களுடன் ஜ்வலிக்கிற அக்னியில் எந்தக்கிரியையினால் போடுவேனே அந்தக் கிரியை உங்களுக்குத் தெரியுமா? அவன் என்பிதாவை விஷாக்னியினால் எவ்வாறு தஹித்தானே அவ்வாறே அந்தப்பாவியான ஸர்ப்பத்தைத் தஹிக்கவிரும்புகிறேன்' என்று அரசர்சொல்ல, ரித்விக்குக்கள், 'அரசரே! தேவர்களால் ஏற்படுத்தப்பட்டதும் ஸர்ப்பஸத்ரமென்று பெயர்பெற்றதும் [1]புராணங்களிற் சொல்லப்பட்டதுமாகிய ஒருபெரிய யாகம் உம்முடைய காரியத்திற்கு ஸாதகமாக இருக்கிறது. வேந்தரே! அந்த ஸத்ரயாகஞ் செய்யத்தக்கவர் உம்மைவிடவேறு யாருமில்லையென்றும் பௌராணிகர்கள்சொல்லுகின்றனர். அந்தயாகம் நமக்கு ஸாதகமாயிருக்கின்றது' என்றனர்.

ஸாதுஸ்ரேஷ்டரே! இப்படி அவர்களால் தெரிவிக்கப்பட்ட அந்த ராஜரிஷியானவர், தக்ஷகன் ஜ்வலிக்கிற அக்னிக்குள் விழுந்து எரிக்கப்பட்டுப்போனதாகவே நினைத்தார். பிறகு, அவர், மந்திரங்கள் தெரிந்த அந்தப்பிராமணர்களைநோக்கி, 'அந்த ஸத்ரயாகத்தை நான் செய்யப்போகிறேன்; சேர்க்கவேண்டிய ஸாமக்கிரிகளைச் சேர்க்கவேண்டும்' என்றுசொன்னர். பிராமணசிரேஷ்டரே! பிறகு, அந்தரித்விக்குக்கள் யாகசாலை கட்டுவதற்காக அதற்குவேண்டிய இடத்தைச் சாஸ்திரப்பிரகாரம் அளக்கச்செய்தனர். அவர்களெல்லாரும்

---

1 ஜனமேஜயர் என்ற பெயருள்ளவர் ஸர்ப்பயாகம் செய்ததாகப் பூர்வகல்பசரித்திரங்களில் கேட்டபடி உமக்குப்பெயரும் ஸர்ப்பயாகத்திற்குக் காரணமும் அமைந்திருக்கின்றன என்பது.

வேதங்களைச் சரியாக அறிந்தவர்கள்; புத்தியிற்சிறந்தவர்கள்; அவர்கள் மிகச்சிறப்புள்ளதும் ராஜாவுக்குப்பிரியமும் அநேக பிராமணர் சேர்ந்ததும் தனங்களும் தானியங்களும் மிகுதியாக நிறைந்ததும் ரித்விக்குக்கள் ஸுகமாக இருக்கத்தக்கதுமாகிய அழகான யஜ்ஞ சாலையைச் சாஸ்திரப்பிரகாரம் கட்டுவித்து, பிறகு ராஜாவுக்கு ஸர்ப்ப யாகஞ்செய்யத் தீக்ஷைசெய்வித்தனர். அந்த யஜ்ஞசாலை கட்டும்போது, சிறந்த புத்தியுள்ளவனும் வீடுகட்டுகிறவித்தையில் நிபுணனுமாகிய ஒரு ஸ்தபதி, 'இந்த ஒரு பெரிய நிமித்தம் உண்டாயிருக்கிறது; இது வரப்போகிற ஸர்ப்பயாகத்துக்கு விக்னம் நேரிடுவதை முன்னமே தெரிவிக்கிறது' என்றுசொன்னான். வேலைக்கு நூல் பிடிக்கிற தலைவனும் புராணங்கள்தெரிந்தவனும் ஸூதஜாதியிற் பிறந்தவனுமாகிய அந்தச் சில்பி நிலஅளவு நடந்த இடத்தையும் காலத்தையும் பார்த்துச் சொன்னதாவது, 'ஒரு பிராமணன் காரணமாக இந்தயாகம் முடிவுபெறுமற்போகும்' என்பது. அந்த அரசர் இதைக் கேட்டு, தீக்ஷைசெய்வதற்குமுன்னமே துவாரபாலகனை நோக்கி, 'எனக்குத்தெரியாமல் யாரும் உள்ளேபிரவேசிக்கக்கூடாது' என்று கட்டளையிட்டார்.

---

## ஐம்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ஆ ஸ் தீ க ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(ஸர்ப்பங்கள் அக்கினியில் விழுந்தது.)

பிறகு, ஸர்ப்பயாகம்செய்வதற்குவேண்டிய கிரியைஆரம்பிக்கப்பட்டது. யாகஞ்செய்விக்கிறவர்கள் சாஸ்திரப்படி தம்தம் வேலைகளில் பிரவிர்த்தித்தனர். கறுப்புவஸ்திரங்களைப் போர்த்துக்கொண்டு, புகையினால் சிவந்தகண்களுடன், ஜ்வலிக்கும் அக்னியில் மந்திர பூர்வகமாக ஹோமஞ்செய்தனர். அப்போது ஸர்ப்பங்களெல்லாவற்றையும் அவற்றின்மனம் நடுங்கும்படி அக்னியின் முன்னிலையில் அழைத்தனர். பின்பு, ஸர்ப்பங்கள் ஜ்வலிக்கிற அக்னியில் வந்து விழுந்தன. துடித்துக்கொண்டும் தீனஸ்வரமாக ஒன்றையொன்று கூப்பிட்டுக்கொண்டும் படமெடுத்துச் சீறிக்கொண்டும் தலைகளினாலும் வால்களினாலும் ஒன்றையொன்று கெட்டியாகச்சுற்றிக்கொண்டும் அக்னியில்விழுந்தன. வெளுப்புநிறமும் கறுப்புநிறமும் நீலநிறமுமான ஸர்ப்பங்கள், கிழங்களும் குட்டிகளுமாகப் பலவிதமாக இரைச்சலிட்டுக்கொண்டு ஜ்வலிக்கும் அக்னியில் விழுந்தன. அக்னி

ஹோத்ரிகளிற்சிறந்த சௌனகரே! பசுவின்காதைப்போல் அடி சிறுத்து நடுப்பருத்து நுனிசிறுத்த வடிவமுள்ள, ஒருகுரோச நீளமும் ஒருயோசனைநீளமுமான நாகங்கள் இடைவிடாமல் வேக மாக அக்னியில் விழுந்துகொண்டிருந்தன. இவ்வாறு லக்ஷக்கணக் காகவும் பத்துலக்ஷக்கணக்காகவும் பத்துக்கோடிக்கணக்காகவும் ஸர்ப்பங்கள் அந்த யாகத்தில் தங்கள் ஸ்வாதீனம்தப்பி அழிந்தன; குதிரைகள்போலச் சிலவும் யானைத்துதிக்கைகள்போலச் சிலவும் மதயானைகள்போலப் பெரிய உடலுள்ளவை சிலவுமாக, மிகுந்த பல முள்ளனவும் ஈட்டிகளைப்போலப் பயத்தைச்செய்வனவும் கொடிய விஷமுள்ளனவுமான பலநிறமுள்ள ஸர்ப்பங்கள் தாயின்சாபமென் னும் தடியினாலடிக்கப்பட்டுக் கணக்கில்லாமல் அக்னியில் விழுந்தன.

---

## ஐம்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஆ ஸ் தீ க ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(வாஸுகி தன் சகோதரியான ஜரத்காருவினிடம் முறையிடுவது.)

**சௌனகர்,** "அன்பாகிய ஸூதபுத்திரரே! பாண்டவ வம் சத்திற் பிறந்தவரும் சிறந்தபுத்திமானுமாகிய ஜனமேஜயராஜாவின் அந்த ஸர்ப்பயாகத்தில் ரித்விக்குக்களாக இருந்த பெரிய ரிஷிகள் யார்? ஸர்ப்பங்களுக்கு மிகுந்த பயத்தையும் துன்பத்தையும் விளை விக்கும் அந்த மிகக்கொடிய ஸர்ப்பயாகத்தில் ஸபையிலிருந்தவர் யார்? ஸர்ப்பயாகஞ்செய்கிற விதிதெரிந்தவர்களாக நாம் அறியத்தக் கவர் யார்? எல்லாவற்றையும் விரிவாக நீர் சொல்லக்கடவீர்' என்று கேட்க, ஸூதபுத்திரர் சொல்லத்தொடங்கினார் :—

'நன்று நன்று; அப்போது ஜனமேஜயராஜாவின் ரித்துவிக் குக்களும் ஸதஸ்யர்களுமான ஞானவான்களின் பெயர்களை உமக்குச் சொல்வேன். அந்தயாகத்தில் ச்யவனர்வம்சத்திற் பிறந்தவரும் வேதந்தெரிந்தவர்களுக்கெல்லாம் சிறந்தவருமான சண்டபார்க்கவ ரென்று கியாதிபெற்ற பிராமணர் ஹோதாவாகவும், வ்ருத்தரும் வித்வானும் குத்ஸவம்சத்திற் பிறந்தவருமான ஜைமினியென்னும் பிராமணர் உத்காதாவாகவும், சார்ங்கரவர் பிரம்மாவாகவும், பிங்களர் அத்வர்யுவாகவும் இருந்தார்கள். புத்திரனோடும் சிஷ்யர்களோடும் கூடின வியாஸர், உத்தாலகர், பிரமதகர், சுவேதகேது, பிங்களர், அஸிதர், தேவலர், நாரதர், பர்வதர், ஆத்ரேயர், குண்டர், ஜடரர், கால்கடரென்னும்பிராமணர், வத்ஸகோத்திரத்தாரும் வ்ருத்தரும்

ஜபமும் வேதாத்தியயனமும் நல்லொழுக்கமுமுள்ளவருமாகிய ச்ருத சிரவஸ் என்பவர், கோஹலர், தேவசர்மா, மௌத்கல்யர், ஸமஸௌ ரபர் ஆகிய இவர்களும், வேதங்களிற் கரைகண்ட இன்னும் அநேக பிராமணர்களும் ஜனமேஜயருடைய அந்தயாகத்தில் ஸபையிற் சேர் தவர்களாக இருந்தார்கள்.

அந்த ஸர்ப்பஸத்ரமென்னும் பெரிய யாகத்தில் ரித்விக்குக் கள் ஹோமஞ்செய்கையில் எல்லாப்பிராணிகளுக்கும் பயத்தையுண்டு பண்ணும் கொடியஸர்ப்பங்கள் அதில் வந்து விழுந்தன. ஸர்ப்பங்க ளுடைய ஊன்ஜலத்தையும் கொழுப்புக்களையும் அடித்துவருகிற வாய்க்கால்கள் ஓடின. அப்போது இடைவிடாமல் எரிக்கப்படுகின்ற நாகங்களின் நாற்றம் மிகுதியாக வீசியது. விழுந்துகொண்டும் ஆகா சத்தில் நின்றுகொண்டும் அக்னியினால் மிகுதியாக எரிக்கப்படுகின்ற நாகங்களின் சப்தம் இடைவிடாமற் கேட்கப்பட்டது. அந்த ஜனமே ஜயராஜர் தீக்ஷைசெய்துகொண்டதைக்கேட்டதும், அந்த நாகராஜா வான தக்ஷகன் இந்திரனுடைய க்ருஹத்துக்குச்சென்றான். தான் குற்றஞ்செய்ததனால் பயந்திருந்த தக்ஷகன் நடந்ததையெல்லாம் நடந்தபடி இந்திரனுக்குச்சொல்லி அப்போது அவனிடத்தில் சரணா கதிசெய்தான். இந்திரன் மிக்க அன்புடன் அவனைநோக்கி, 'நாக ராஜாவே! தக்ஷகா! அந்த ஸர்ப்பயாகத்தில் உனக்குஒருபொழுதும் பயமில்லை; உனக்காக முன்னமே பிரம்மதேவனை வேண்டிக்கொண் டிருக்கிறேன்; ஆதலால், உனக்குப் பயமில்லை; உன்மனத்தின்தாபம் நீங்கட்டும்' என்று சொன்னான்.

இப்படி இந்திரனால் தேற்றப்பட்ட அந்த ஸர்ப்பராஜன் ஸந்தோ ஷத்துடன் அந்த இந்திரக்ருஹத்தில் ஸுகமாக இருந்தான். நாகங் கள் அக்னியில் இடைவிடாமல் விழுந்துக்கொண்டிருக்கும்போது, தன் பரிஜனங்களில் சிலர்மட்டும் மிகுந்திருப்பதைக்கண்டு மிகுந்த துக்கத்துடன் வாஸுகி பரிதபித்தான். நாகராஜனான வாஸுகிக்குக் கஷ்டமான மூர்ச்சை உண்டாயிற்று. நடுங்கினமனத்துடன் தன் ஸஹோதரியைப்பார்த்து அடியில்வருமாறு சொல்லத்தொடங்கினான்.

'பிரியமானவளே! என் அங்கமெல்லாம் எரிகின்றது; எனக் குத் திசைதெரியவில்லை; மூர்ச்சையினால் விழுந்தவன்போலிருக்கி றேன்; என்மனம் நிலையற்றிருக்கிறது; என்கண் மிகவும்சுழலுகின் றது; மனம் வெடிப்பதுபோலிருக்கின்றது. இப்போது நான் ஸ்வா தீனம் தப்பி அந்த நெருப்பில் விழப்போகிறேன்; ஜனமேஜயனு டைய இந்தயாகம் எங்களைக்கொல்வதற்காகவே நடக்கின்றது; நிச்

சயமாக நான் யமன்வீட்டுக்குப் போகவேண்டும். என்ஸஹோதரியே! எதற்காக உன்னை ஜரத்காருவுக்குக்கொடுத்தேனோ அதற்குக் காலம் இதோ நேர்ந்திருக்கிறது. நம்மையும் நம்பந்துக்களையும் நீ காப்பாற்று வாயாக. நாககன்னிகைகளுட்சிறந்தவளே! அந்தயாகம் நடக்கும் போது ஆஸ்தீகன்தான் நிறுத்தப்போகிறானென்று பிரம்மா முன்னே நேரில் எனக்குச் சொல்லியிருக்கிறார். குழந்தாய்! ஆதலால், சிறு வனாயிருந்தாலும் வ்ருத்தனைப்போல் கௌரவிக்கப்பட்ட சிறந்த வேதவித்தாகிய உன்புத்திரனிடம், என்னையும் என் பரிஜனங்களையும் விடுவிக்கும்படி சொல்லக்கடவாய்' என்று சொன்னான்.

---

## ஐம்பத்துநான்காவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(ஆஸ்தீகர் ஜனமேஜயருடைய யாகசாலைக்குச் சென்றது.)

நாகராஜாவாகிய வாஸுகியின் அந்தச்சொல்லைக்கேட்டு நாக கன்னிகையாகிய ஜரத்காருவானவள் தன்புத்திரனையழைத்து, 'புத் திரனே! என்னுடைய பிராதா ஒருகாரணம்பற்றி என்னை உன்பிதா வுக்குக் கன்னிகாதானஞ்செய்தான். அதற்குக்காலம் இப்போது நேர்ந்திருக்கிறது. நீ அந்தக்காரியத்தை எப்படிச்செய்யவேண்டி யதோ அப்படிச்செய்வாயாக' என்றுசொன்னாள். அதற்கு ஆஸ்தீ கர், 'என் மாதுலன் என்பிதாவுக்கு உன்னைக் கன்னிகாதானஞ் செய்ததற்குக் காரணம்யாது? அதைத் தெளிவாக எனக்குச்சொல்; கேட்டபின் அதை அப்படியே செய்வேன்' என்று கேட்க, வாஸுகி யின் ஸஹோதரியான அந்த ஜரத்காரு, தன் பந்துக்களுக்கு நன் மையை விரும்புகின்றவளாய், நம்பிக்கையுடன் தன்புத்திரனுக்கு அந்த விஷயத்தைச் சொல்லத்தொடங்கினாள்.

'எல்லாநாகர்களுக்கும் தாயானவள் கத்ருவென்று பெயர் பெற்றவள்; அவள் கோபங்கொண்டு புத்திரர்களைச் சபித்ததற்குக் காரணத்தைச் சொல்லுகிறேன்; கேள். 'புத்திரர்களே! நான் வின தைக்கு அடிமையாகும்படி பந்தயஞ்செய்திருக்க, அந்த உச்சைச்ரவ மென்னும் அஶ்வராஜாவுக்குப் பொய்ரூபத்தை நீங்கள் செய்யாமை யினால் ஜனமேஜயர்செய்யப்போகிற யாகத்தில் உங்களை அக்னிஎரித்து விடும்; அதில் மரணமடைந்து யமலோகம் போவீர்கள்' என்று சபித்தாள். அவள் சபித்ததை உலகத்துக்கெல்லாம் ஸ்ருஷ்டிகர்த்தா

வாகிய பிரம்மதேவர், 'அப்படியேஆகட்டும்' என்று தாமும்சொல்லி, அவள்சொன்னதை அங்கீகரித்தார். குழந்தாய்! அப்போது பிரம்மா சொன்னதைக்கேட்ட வாஸுகியும் அமிர்தங்கடைந்தபின் தேவர்களைச் சரணமடைந்தான். எல்லாவற்றிலும் உயர்ந்ததாகிய அமிர்தம் கிடைத்தபின், கிருதார்த்தர்களாயிருந்த தேவர்களனைவரும் என் ஸஹோதரனை முன்னிட்டுக்கொண்டு பிரம்மதேவரிடம் சென்றனர். அந்தத் தேவர்களெல்லாரும் ஸர்ப்பராஜாவாகிய வாஸுகியோடு கூடப் பிரம்மாவைப்பார்த்து, 'பகவானே! இந்த நாகராஜாவான வாஸுகி, தன் உறவினர்களைக்குறித்துத் துன்பமடைகிறான்; தாயார் கொடுத்த அந்தச்சாபம் வராமலிருக்கவேண்டும்; அதற்கு உபாயம் என்ன?' என்று வேண்டிக்கேட்டனர். அதற்குப் பிரம்மதேவர், 'ஜாரத்காருவென்பவர் ஜாரத்காருவென்பவளை மனைவியாக அடையப் போகிறார்; அவர்களுக்குப் பிறக்கும் புத்திரனாகிய பிராமணன் ஸர்ப்பங்களைச் சாபத்தினின்றும் விடுவிக்கப்போகிறான்' என்றார். தேவதையைப்போன்றவனே! இப்படிப் பிரம்மா சொன்னதைக்கேட்டு நாகராஜாவான வாஸுகி அக்காலம் வருவதற்குமுன்னே மஹாத்மாவான உன்பிதாவுக்கு என்னைக் கன்னிகாதானஞ்செய்தான். அவருக்கு என்னிடத்தில் நீபிறந்தாய். அந்தக்காலம் இப்போது வந்திருக்கிறது. நீ பயத்திலிருந்து எங்களைக் காப்பாற்றவேண்டும். என் ஸஹோதரனையும் அந்தஅக்கினியிலிருந்து ரக்ஷிப்பாயாக. என்ஸஹோதரன் தன்னை விடுவிப்பதற்காகச் சிறந்தஞானமுள்ளவராகிய உன் பிதாவுக்கு என்னைக்கொடுத்தது வீணாகாமலிருக்கும்படி நீசெய்ய வேண்டும். புத்திரனே! நீதான் என்னநினைக்கிறாய்?' என்றாள்.

இவ்வாறு அவள்சொல்ல, அந்த ஆஸ்தீகர், 'அப்படியே ஆகட்டும்' என்று தம் மாதாவுக்குச்சொல்லி, அப்போதே துக்கத்தினால் பரிதபித்துக்கொண்டிருக்கும் வாஸுகியைநோக்கிப் பிழைப்பிக்கிறவர்போற் பேசினார்: 'நாகராஜாவாகிய வாஸுகியே! சிறந்த பலவானே! நான் உன்னை அந்தச்சாபத்திலிருந்து விடுவிப்பேன்; இதை ஸத்யமாக உனக்குச் சொல்லுகிறேன்; நாகனே! நீ மனக்கலக்கம் அடையாதே; உனக்குப் பயமில்லை; அரசனே! எவ்விதமாக நன்மை உண்டாகுமோ, அவ்விதமாக முயல்வேன்; என்வாக்கு விளையாட்டுக்களிலும் பொய்சொன்னதில்லை; மற்றப்பொழுது சொல்வதேது? மாதுலனே! ஸர்ப்பஸ்ரேஷ்டனே! இப்போது யஜ்ஞதீக்ஷைசெய்துகொண்டிருக்கும் ராஜஸ்ரேஷ்டனாகிய அந்த ஜனமேஜயனிடஞ் சென்று, எப்படியானால் அந்த ராஜாவின்யாகமானது நின்றுபோய்

விடுமோ, அப்படியாக மங்களவாக்கியங்களினால் த்ருப்தியடை விக்கப்போகிறேன்; நாகராஜனே! சிறந்தபுத்தியுள்ளவனே! நீ என்னிடத்தில் எதையும் எதிர்பார்க்கலாம்; என்னிடத்தில் நீ வைத்த நம்பிக்கை ஒருபொழுதும் பொய்யாகாது' என்றார். அதற்கு வாஸுகி, 'ஆஸ்தீகனே! நடுங்குகிறேன்; என் ஹ்ருதயம் வெடிக்கின்றது; பிரம்மாவின் தண்டனையாகிய சாபத்தினாற்பீடிக்கப்பட்டுத் திசைதெரியாமலிருக்கிறேன்' என்றுசொல்ல, ஆஸ்தீகர், 'நாக ஶ்ரேஷ்டனே! நீ எவ்வகையிலும் பரிதாபப்படவேண்டாம்; ஜ்வலிக்கின்ற அக்னியினால் உனக்குண்டான பயத்தை நான் ஒழித்துவிடுவேன்; ப்ரளயகாலாக்னிக்கொப்பான சக்தியுள்ள மிக்கபயங்கரமான [1] பிரம்மாவின் தண்டனையை அழிப்பேன்; நீ எவ்வகையிலும் இந்த விஷயத்தில் அச்சமடையவேண்டாம்' என்று சொன்னார்.

பிறகு, பிராமணசிரேஷ்டராகிய ஆஸ்தீகர் வாஸுகியினுடைய தாங்கக்கூடாத மனஸ்தாபத்தைநீக்கி, அதைத் தன் அங்கங்களிலேற்றுக்கொண்டு, நாகச்ரேஷ்டர்களை விடுவிப்பதற்காக, எல்லாச் சிறப்புக்களும் நிரம்பின அந்த ஜனமேஜயயாகத்திற்கு மிகவிரைவாகப் போயினார். அந்த ஆஸ்தீகர்சென்று ஸூர்யனுக்கும் அக்னிக்கும் ஒப்பான தேஜஸுள்ள அநேகர்கள் ஸபையிற்சேர்ந்திருந்த அந்த உயர்ந்த யஜ்ஞசாலையைக் கண்டார். விரோதிகளுக்குத் துன்பமுண்டாக்கத்தக்க அந்தப்பிராமணசிரேஷ்டர் அங்கே பிரவேசிக்கும்போது துவாரபாலர்கள் தடுக்க, தாம் உள்ளேபோவதற்காக அந்த யஜ்ஞத்தைக்குறித்து ஸ்துதிசெய்தனர். புண்யகர்மஞ் செய்பவர்களுக்கெல்லாம் சிறந்தவராகிய அந்தப் பிராமணோத்தமர் மிகச்சிறந்ததாகிய யாகசாலையை யடைந்து, அளவற்ற கீர்த்தியுள்ள ராஜாவையும் ரித்விக்குக்களையும் ஸபையோர்களையும் அக்னியையும் ஸ்துதித்தார்.

---

## ஐம்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(ஜனமேஜயனைப்பற்றி ஆஸ்தீகர்செய்த ஸ்தோத்திரம்.)

'பிரயாகையில் சந்திரனுடைய யாகமும் வருணனுடைய யாகமும் பிரம்மாவினுடைய யாகமும் நடந்தன. [2]பரிக்ஷித்தின்புத்ரரே!

---

1 பிரம்மா சொன்னவாக்கு.

2 இப்படிப் பலமுறை விளித்துக்கூறியது, அரசன் மனத்தில் இரக்கமுண்டாவதற்காகவென்று தோன்றுகிறது.

பரதகுலஸ்ரேஷ்டரே! உமது இந்தயாகம் அப்படியேயிருக்கின்றது. [1] நம் அன்பர்களுக்கு க்ஷேமமுண்டாகக்கடவது. இந்திரனுடைய யாகங்கள் நூற்றுக்கணக்காகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த நூற்றுக்கணக்கை மற்றொரு நூறுஸங்கியையாக்கினால் கூடியபதினாயிரம் யாகங்களுக்கு ஸமானமாக உமதுயாகம் இருக்கிறது. பரதகுலஸ்ரேஷ்டரே! பரிக்ஷித்தின்புத்ரரே! நம்அன்பர்களுக்கு க்ஷேமமுண்டாகக்கடவது. யமனுடைய யாகமும் ஹரியினிடத்தில் பக்தியுள்ளவனாகிய ரந்திதேவனென்னும் ராஜாவின்யாகமும் எப்படி இருந்தனவோ அப்படியே இந்த உம்முடைய யாகமும் இருக்கிறது. பரதகுலஸ்ரேஷ்டரே! பரிக்ஷித்தின்புத்ரரே! நம் அன்பர்களுக்கு க்ஷேமமுண்டாகக்கடவது. கயன், சசபிந்து என்னும் அரசர்களினுடைய யாகங்களும் யக்ஷராஜாவான குபேரனுடைய யாகமும் எப்படியோ அப்படியே இந்த உமதுயாகமும் இருக்கிறது. பரதகுலஸ்ரேஷ்டரே! பரிக்ஷித்தின்புத்ரரே! நம் அன்பர்களுக்கு க்ஷேமமுண்டாகக்கடவது. நிருகனென்னும் ராஜாவினுடையயாகமும் அஜமீடராஜாவின்யாகமும் தசரதபுத்ரராகிய ராமருடையயாகமும் எப்படி இருந்தனவோ அப்படியே இந்த உமதுயாகமும் இருக்கின்றது. பரதகுலஸ்ரேஷ்டரே! பரிக்ஷித்தின்புத்ரரே! நம்அன்பர்களுக்கு க்ஷேமமுண்டாகக்கடவது. தர்மதேவதையின் புத்ரரும் அஜமீடவம்சத்தினருமாகிய யுதிஷ்டிரராஜாவின்யாகம் தேவலோகத்திற் பெயர்பெற்றது; இந்த உம்முடையயாகமும் அப்படியேயிருக்கிறது. பரதகுலஸ்ரேஷ்டரே! பரிக்ஷித்தின்புத்ரரே! நம்அன்பர்களுக்கு க்ஷேமமுண்டாகக்கடவது. ஸத்யவதியின்புத்ரராகிய கிருஷ்ணரென்று சொல்லப்பட்ட வியாஸருடையயாகம் நடந்தது; அதில் அவரே கிரியைகளைச் செய்தார்; உமது இந்தயாகமும் அதைப்போலவேயிருக்கிறது. பரதகுலஸ்ரேஷ்டரே! பரிக்ஷித்தின்புத்ரரே! நம்அன்பர்களுக்கு க்ஷேமமுண்டாகக்கடவது. ஸூர்யனுக்கொப்பான தேஜஸுள்ள இந்த ரித்விக்குக்கள் இந்திரயாகத்தில் இருந்தவர்கள்போலிருக்கின்றனர்; இவர்களுக்கு இனி அறியவேண்டியது ஒன்றுமில்லை; இவர்களுக்குச் செய்யும் தானம் என்றும் அழியாது. த்வைபாயனருக்கு ஒப்பான ரித்துவிக்கு எந்தலோகத்திலும் யாருமில்லையென்பது எனக்கு நன்றாகத்தெரியும். தம்தம்காரியங்களில் ஸமர்த்தர்களாகப் பூமியெங்கும் ஸஞ்சரிக்கின்ற எல்லாரித்விக்குக்களும் அவருடைய சிஷ்யர்கள்தாம். ஒளியையேதனமாகவுடையவரும்பலவர்ணகிரணங்களையுடையவரும்

---

1 நம் அன்பர்களுக்குஎன்பதற்கு ராஜா ரித்விக்குக்கள்முதலியவர்களுக்கு என்றும், நாகர்களுக்கென்றும் இரண்டுபொருள் தோன்றும்.

மஹாத்மாவும் பொன்னை வீரியமாகவுடையவரும் ஹோமஞ்செய்த தைப் புசிப்பவருமாகிய அக்னிபகவான் பிரதக்ஷிணமாகத் திரும்பு கின்ற ஜ்வாலையுடன் ஜ்வலித்துக்கொண்டு உமது இந்த ஹவிஸை ஆசையுடன் வாங்கிக்கொள்ளுகிருர். இந்த மனுஷ்யலோகத்தில் பிர ஜைகளைப் பரிபாலனஞ்செய்யத்தக்கராஜா உம்மைப்போல் வேறொரு வருமில்லை. உம்முடைய தைரியத்தைப்பற்றி நான் எப்போதும் மனத் தில் ஸந்தோஷமடைகிறேன். நீரும் வருணனும் யமனுந்தாம் தர்மத் துக்கு ராஜாக்கள். மனுஷ்யர்களுக்கெல்லாம் இந்திரனே! வச்சிராயு தத்தைக் கையில் தரித்துக்கொண்டிருக்கிற தேவேந்திரன் நேரேவந் ததுபோல் நீர் இந்தலோகத்தில் பிரஜைகளைக்காப்பாற்றுகிறீரென்று நினைக்கிருேம். இந்த உலகத்தில் உம்மைத்தவிர வேறு அரசர் இப் போதுமில்லை! முன்னுமில்லை. கட்வாங்கனுக்கும் நாபாகனுக்கும் திலீபனுக்கும் ஒப்பானவரே! யயாதிக்கும் மாந்தாதாவுக்கும் ஸமான மான சக்தியுள்ளவரே! ஸூர்யனுடைய பிரகாசம்போன்ற பிரகாச முடைய நீர் பீஷ்மரைப்போல உறுதியான விரதமுள்ளவராக விளங்கு கின்றீர். உம்முடைய சக்தியானது வால்மீகியின் சக்தியைப்போல் ஆழ்ந்திருக்கிறது. உமதுகோபம் வஸிஷ்டருடைய கோபம்போல் அடக்கப்பட்டிருக்கிறது. உம்முடைய பிரபுத்துவம் இந்திரபதத்துக்கு ஸமானமென்று நான் நினைக்கிறேன். உமது மஹிமை நாராயண னுடைய மஹிமையைப்போல் விளங்குகின்றது. தருமத்தின் நிச்ச யத்தைஅறிவதில் யமனைப்போலவும், எல்லாக்குணங்களும் நிரம்பின வராகவும் லக்ஷ்மிக்கு இருப்பிடமாகவுமிருப்பதில் விஷ்ணுவைப் போலவும் இருக்கிறீர். நீர் ஸம்பத்துக்களுக்கு நிதியாக இருப்பது போலவே யாகங்களுக்கும் நிதியாக இருக்கிறீர். பலத்தில் தம்போத் பவனென்னும் வேந்தனுக்கு ஸமானமாயிருக்கிறீர். ராமனைப்போல் அஸ்திரங்களும் சஸ்திரங்களும் தெரிந்தவராயிருக்கிறீர். ஔர்வர், திரிதர்என்னும் ரிஷிகளுக்கும் பகீரதனுக்கும் ஒப்பான மஹிமையுள் ளவராகவும் எதிரிகள் கண்ணெடுத்துப் பார்க்கமுடியாதவராகவு மிருக்கிறீர்' என்று ஆஸ்தீகர் இவ்வாறு ஸ்தோத்திரஞ்செய்ய, ராஜா வும் ஸபையிற் சேர்ந்தவர்களும் ரித்துவிக்குக்களும் அக்னியுமாகிய யாவரும் ஸந்தோஷமடைந்தனர். அவர்களுடைய அபிப்பிராயங்களை யும் இங்கிதங்களையுங்கண்டு, பிறகு, ஜனமேஜயராஜர் சொல்லலானர்.

---

## ஐம்பத்தாறுவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(ஸ்துதியினால் ஸந்தோஷமடைந்த ஜனமேஜயராஜாவினிடம் ஆஸ்தீகர் யஜ்ஞத்தை நிறுத்துவதாகிய வரங்கேட்டது.)

ஜனமேஜயமஹாராஜர், 'இவன் பாலனாயிருந்தும் முதிர்ந்தவனைப்போற் பேசுகின்றான்; இவன் பாலனல்லன்; முதிர்ந்தவனே யென்று நான் நினைக்கிறேன். நான் இவனுக்கு வரங்கொடுக்க விரும்புகிறேன். பிராமணர்களே! இதில் நீங்கள் எனக்கு முழுதும் ஒத்திருப்பீர்களாக' என்று சொல்ல, ஸபையிலிருந்தவர்கள், '[1]வித்வானான பிராமணன் இளையவனாயிருந்தபோதிலும் அவனை அரசர்கள் முறைப்படி பூஜிக்கவேண்டும்; அரசரே! உம்முடைய எல்லா அபீஷ்டங்களும் நிறைவேறுவதற்காக இந்தப்பிராமணசிரேஷ்டனைச் சீக்கிரமாக ஸந்தோஷிக்கச் செய்யும்; இப்போது உம்மிடமிருந்து அவன் எல்லாஅபீஷ்டங்களையும் பெறத்தக்கவன்; அதனால், நம்மிடத்துத் தக்ஷகன் சீக்கிரம் வருவன்' என்று சொன்னார்கள்.

விரும்பினதைக் கொடுப்பவராகிய ராஜா அந்தப் பிராமணரை நோக்கி, 'வேண்டிய வரத்தைக்கேளும்' என்று சொல்வதற்கு நினைக்கும்போது, ஹோதாவானவர் மனத்தில உத்ஸாஹங் குறைந்தவராய், 'இந்தக் கிரியையில், தக்ஷகன் இன்னும் வரவில்லையே' என்ற வாக்கியத்தைச் சொன்னார். அதற்கு ஜனமேஜயர், 'நீங்களெல்லாரும் இந்தக்கிரியை சீக்கிரத்தில் முடிவுபெறும்படியும் தக்ஷகன் உடனே வந்துசேரும்படியும் உங்களுடைய பூர்ணசக்தியைக் கொண்டு முயலுங்கள்; தக்ஷகன்தானே எனக்கு விரோதி' என்று சொல்ல, ரித்விக்குக்கள், 'அரசரே! 'தக்ஷகன் பயத்தினால் உபத்திரவிக்கப்பட்டு இந்திரனுடைய வீட்டில் இருக்கிறான்' என்று [2]சஸ்திரமந்திர தேவதைகளும் அக்னிபகவானும் எங்களுக்குச் சொல்லுகின்றனர். பூர்வ கல்பங்களுடைய சரித்திரங்களையறிந்த மஹாத்மாவாகிய [3]லோஹிதாக்ஷரென்னும் ஸூதர் அவ்வாறு முன்னமே தெரிவித்திருக்கிறார்' என்று சொன்னார்கள்.

---

1 கிருஷ்ணாசாரியர் பாடப்படி, 'அவித்வானாயிருந்தாலும் வித்வானாயிருந்தாலும் பூஜிக்கவேவேண்டும்' என்பது பொருள்.

2 சாஸ்திரங்களுமென்னும் பாடத்திற்கு முன்கல்பத்து நடந்ததைச் சொல்லுகின்ற புராணங்களென்று பொருள்கொள்க.

3 சிவந்த கண்ணுள்ளவர்.

அப்போது அரசர் அந்த லோஹிதாக்ஷரென்னும் ஸூதரைக் கேட்க, அவர் அரசரைப்பார்த்து, 'அரசரே! பிராமணர்கள் எப்படிச் சொல்லுகிறார்களோ, அப்படியே இது நடந்திருக்கிறது; பூர்வ கல்பத்துச் சரித்திரத்தை யறிந்து அதைக்கொண்டு நான் சொல்லுகிறேன்; மன்னரே! இந்திரன், தக்ஷகனுக்கு, 'நீ இங்கே எவ்வளவும் பயமில்லாமல் என் ஸமீபத்திலிரு; அக்னி உன்னைத் தஹிக்காது' என்று வரங்கொடுத்திருக்கிறான்' என்று சொன்னார். இதைக் கேட்டு தீக்ஷைசெய்துகொண்டிருந்த அரசர், யாகம்நடக்குங்காலத்தில்வருத்தத்துடன், 'இந்திரனோடுகூடத் தக்ஷகனை அக்னியில் தள்ளுங்கள். அந்தநாகனை விடக்கூடாது' என்று ஹோதாவைத் தூண்டிக்கொண்டிருந்தார். ஹோதாவும் மனத்தில் உறுதியுடன் அவனை மந்திரங்களினால் அழைத்தார். உடனே இந்திரனே நேரேவந்தான். 'இந்திரனும் தக்ஷகனோடுகூட வரக்கடவன்; சீக்கிரமாக நாகராஜனுடன் கூடவே, ஜம்பாஸுரனைக் கொன்றவனாகிய இந்திரன் அக்னியில் விழக்கடவன்' என்று சொல்லி, ஹோதா ஹோமஞ்செய்தார்.

அப்போது தக்ஷகநாகனுக்கு அபயங்கொடுத்த மஹிமையுள்ள தேவேந்திரன் விமானத்திலேறி எல்லாத் தேவர்களாலும் ஸ்துதி செய்யப்பட்டும், மேகங்களாலும் அப்ரஸுகளாலும் வித்தியாதரர்களாலும் கூட்டங்கூட்டமாகப் பின்தொடரப்பட்டும், தக்ஷகனுக்கும் தனக்கும் நாசம்வரப்போகிறதென்று நினைத்துக்கொண்டே வந்து சேர்ந்தான். அந்தத்தக்ஷகனை இந்திரன் தன்உத்தரீயத்தில் மறைத்து வைத்திருந்தும், பயத்தினால் நடுங்கின தக்ஷகனுக்கு ஸுகமுண்டாகவில்லை. பிறகு, தக்ஷகனுடைய நாசத்தைவிரும்புகின்ற ராஜா, கோபத்துடன் திரும்பவும் மந்திரம் அறிந்தவர்களைப்பார்த்து, 'பிராமணர்களே! அந்தத்தக்ஷகனென்னும் நாகன் இந்திரனுடைய க்ருஹத்தில் இருந்தால் இந்திரனோடுகூடவே அவனை அக்னியில் வீழ்த்துங்கள்' என்று சொன்னார். தக்ஷகனைப்பற்றி ஜனமேஜய ராஜாவினால் ஏவப்பட்ட ஹோதாவானவர், இந்திரலோகத்திலிருந்த தக்ஷகநாகனை அங்கிருந்தபடியே ஹோமஞ்செய்தார். அப்படி ஹோமஞ்செய்யும்போது ஒரு நிமிஷத்துக்கெல்லாம் யாகசாலைக்குமேல் ஆகாசத்தில் தூக்கித்த தக்ஷகன் இந்திரனுடன்கூடக் காணப்பட்டான். இந்திரன், அந்த யஜ்ஞத்தைக்கண்டு மிகுந்த பயத்தை அடைந்தான்; பயத்தினால் தக்ஷகனை விட்டுவிட்டுத் தன்க்ருஹத்துக்கே திரும்பிச் சென்றான்.

இந்திரன் சென்றபிறகு, தக்ஷகனென்னும் நாகேந்திரன் ராஜஸ்ரேஷ்டரான ஜனமேஜயரிடம்பயத்தினால் பிரமைகொண்டு மந்திரத்

தின் சக்தியினால் ஸ்வாதீனம்தப்பி, அக்னிஜ்வாலையின் ஸமீபத்தில் வந்தான். அவனைக்கண்டு அங்குள்ள ரித்விக்குக்கள், 'அரசரே! அந்தத்தக்ஷகன் இதோ விரைவாக உமது ஸ்வாதீனத்திற்கு வருகிறான். பயங்கரமாகக்கத்துகின்ற அவனுடைய பெரிய இரைச்சல் கேட்கிறது. நிச்சயமாக அந்தநாகன் இந்திரனால் விடப்பட்டிருக்க வேண்டும். அந்தநாகன் ஸ்வர்க்கத்தைவிட்டுத் தவறி மந்திரத்தினால் உடம்புநடுங்கித் துடித்துக்கொண்டு பிரஜ்ஞைதப்பி உஷ்ணமான பெருமூச்சுவிட்டுக்கொண்டு ஆகாசத்தில்வருகிறான். ராஜஸ்ரேஷ்டரே! பிரபுவே! உமது இந்தக்கிரியை சாஸ்திரப்படி நடந்துகொண்டிருக்கிறது. ஆனால், இந்தப்பிராமணசிரேஷ்டருக்கு நீர் வரங்கொடுக்கக்கடவீர்' என்றனர். அதைக்கேட்டு ஜனமேஜயர் ஆஸ்தீகரைப்பார்த்து, 'அளவற்ற மஹிமையுள்ளவரே! இளமையிலேயே வித்துவானாகிய உமக்குத் தகுதியான வரத்தைக்கொடுக்கிறேன்; உம்முடைய ஹ்ருதயத்திலிருக்கிற மனோரதத்தைக்கேளும். அது கொடுக்கக்கூடாததாயிருந்தாலும் கொடுப்பேன்' என்று சொன்னார்.

தக்ஷகனென்னும் நாகராஜன் அக்னியில் விழப்போகையில், 'இதுதான் ஸமயம்' என்றுநினைத்து அப்போது ஆஸ்தீகர் சொல்லலானார். 'ஜனமேஜயமஹாராஜரே! எனக்கு நீங்கள் வரங்கொடுக்கிறதாயிருந்தால் கேட்கிறேன்; உங்களுடைய இந்தயாகம் நிற்கவேண்டும். இதில் ஸர்ப்பங்கள் விழாமலிருக்கவேண்டும்' என்றார்.

சௌனகரே! அந்தஆஸ்தீகர் அவ்வாறுகேட்டபோது, ஜனமேஜயர், மனத்தில் அதிக ஸந்தோஷமில்லாமல் ஆஸ்தீகரை நோக்கி, 'ஸமர்த்தரே! பிராமணரே! பொன்னையும் வெள்ளியையும் பசுக்களையும் இன்னும்என்னஎன்ன விரும்புகிறீரோ அவையெல்லாவற்றையும் உமக்கு வரங்களாகக் கொடுப்பேன்; என்யாகம்நின்றுபோகக்கூடாது' என்றுசொல்ல, அதற்கு ஆஸ்தீகர், 'மன்னரே! பொன்னையும் வெள்ளியையும் கோக்களையும் உம்மிடம் நான்கேட்கவில்லை. உமது இந்தயாகம் நிற்கவேண்டும்; எங்கள்மாதாவின் வம்சத்திற்கு க்ஷேமமுண்டாகவேண்டும்' என்றார்.

இவ்வாறு ஆஸ்தீகர் சொன்னபிறகு, பேசத் தெரிந்தவர்களிற் சிறந்தவராகிய ஜனமேஜயமஹாராஜர், ஆஸ்தீகரைநோக்கி, 'பிராமணசிரேஷ்டர்களுக்கெல்லாம் சிறந்தவரே! நீர் தயைசெய்து வேறு வரங்கேளும்' என்று பலமுறைசொன்னார். ப்ருகுபுத்ரரே! அவர் வேறுவரம் வேண்டவில்லை. ஐயா! அதன்பின், வேதந்தெரிந்தவர்க

ளாகிய அந்தராஜாவின் ஸபையோர்கள் யாவரும் ஒருமித்து, அந்த ராஜாவைநோக்கி, 'பிராமணர் வரத்தைப்பெறுக' என்றார்கள்.

---

## ஐம்பத்தேழாவது அத்தியாயம்.

## ஆஸ்தீகபர்வம். (தொடர்ச்சி.)



(ஸர்ப்பயாகத்தில் எரிக்கப்பட்ட நாகங்களுள் முக்கியமான வற்றின்பெயர்கள்.)

சௌனகர், "ஸூதபுத்திரரே! அந்த ஸர்ப்பயாகத்தில் அக்னியில்விழுந்த ஸர்ப்பங்களெல்லாவற்றினுடையபெயர்களையும் கேட்க விரும்புகிறேன்" என்றுசொல்ல, ஸூதபுத்திரர் சொல்லத் தொடங்கினார்.

"பிராமணசிரேஷ்டரே! ஸர்ப்பங்கள் ஆயிரக்கணக்காகவும் பத்து லக்ஷக்கணக்காகவும் பத்துக்கோடிக்கணக்காகவும் அந்தயாகத்தில் விழுந்தன; பலவாயிருப்பதனால் அவற்றைஎண்ணமுடியாது. என் ஞாபகத்திலுள்ளவரையில் அக்கினியில் ஹோமஞ்செய்யப்பட்ட முக்கியமான நாகங்களின் நாமதேயங்களை நான்சொல்லுகிறேன்; கேளும். வாஸுகியின் வம்சத்திற்பிறந்தவையும் பயங்கரமானவையும் பெரிய உடல்களுள்ளவையும் உக்கிரமான விஷமுள்ளவையும் கறுப்பும்சிவப்பும்வெண்மையுமானஸர்ப்பங்கள், தாயின்சாபமென்னும் தடியினால் அடிபட்டு ஸ்வாதீனந்தப்பித் துக்கமுற்று ஹோமம் பண்ணப்பட்டவற்றில் முக்கியமான நாகங்களைச் சொல்லுகிறேன்; கேளும். கோடிசன், மானஸன், பூர்ணன், சலன், பாலன், ஹலீமகன், பிச்சலன், கௌணபன், சக்ரன், காலவேகன், பிரகாலனன், ஹிரண்யபாஹு, சரணன், கக்ஷகன், காலதந்தகன்ஆகிய இந்த வாஸுகி வம்சத்திற்பிறந்த நாகங்கள் அக்னியில் விழுந்தன. பிராமணரே! எல்லாம் பயங்கரரூபமும் மிகுந்தபலமுள்ளவையுமான அந்தக்குலத்திற் பிறந்த இன்னும் அநேகஸர்ப்பங்கள் ஜ்வலித்துக்கொண்டிருந்த அக்னியில் ஹோமஞ்செய்யப்பட்டன. தக்ஷகன்குலத்திற்பிறந்தவைகளைச் சொல்லுகிறேன்; கேளும். புச்சாண்டகன், மண்டலகன், பிண்டஸேக்தா, ரபேணகன், உச்சிகன், சரபன், பங்கன், பில்வதேஜஸ், விரோஹணன், சிலி, சலகரன், மூகன், ஸுகுமாரன், பிரவேபனன், முத்கரன், சிசுரோமா, ஸுரோமா, மஹாஹனு ஆகிய இந்தத் தக்ஷக

வம்சத்திற்பிறந்த நாகங்கள் அக்னியில் விழுந்தன. பாராவதன், பாரியாத்ரன், பாண்டரன், ஹரிணன், கிருசன், விஹங்கன், சரபன், மோதன், பிரமோதன், ஸம்ஹதாபனன் ஆகிய இந்தஐராவதகுலத்து நாகங்கள் அக்னியில்பிரவேசித்தன. பிராமணசிரேஷ்டரே! கௌரவ்யநாகன் குலத்திற்பிறந்த நாகங்களைச் சொல்லுகிறேன்; கேளும். ஏரகன், குண்டலன், வேணி, வேணீஸ்கந்தன், குமாரகன், பாகுகன், சிருங்கபேரன், தூர்த்தகன், பிராதன், ராதகன் ஆகிய இந்தக் கௌரவ்யகுலநாகங்கள் அக்னியில் வீழ்ந்தன. பிராமணரே! காற்றுக் கொப்பான வேகமுள்ளவையும் கொடியவிஷமுள்ளவையுமானதிருதராஷ்டிர குலத்திற்பிறந்த நாகங்களை நான் வரிசையாகச்சொல்லுகிறேன்; கேளும். சங்குகர்ணன், பிடரகன், குடாரமுகன், ஸேசகன், பூர்ணாங்கதன், பூர்ணமுகன், பிரஹாஸன், சகுனி, தரி, அமாஹடன், காமடகன், ஸுஷேணன், மானஸன், அவ்யயன், அஷ்டாவக்ரன், கோமலகன், சுவஸனன், மௌனவேபகன், பைரவன், முண்டவேதாங்கன், பிசங்கன், உதபாரகன், ரிஷபன், வேகவான், பிண்டாரகன், மஹாஹனு, ரக்தாங்கன், ஸர்வஸாரங்கன், ஸம்ருத்தன், படவாஸகன், வராஹகன், வீரணகன், ஸுசித்திரன், சித்திரவேகிகன், பராசரன், தருணகன், [1]மணி, ஸ்கந்தன், ஆருணி ஆகியவை திருதராஷ்டிர குலத்திற்பிறந்த நாகங்கள்.

பிராமணரே! இவ்வாறு மிகுந்தகீர்த்தியுள்ள பிரதானமான நாகங்களின் பெயர்களை நான் சொன்னேன். மிகுதியாயிருத்தலால் எல்லாவற்றையும் சொல்லவில்லை. இவற்றின் ஸந்ததிகளும் ஸந்ததிகளின் ஸந்ததிகளும் ஜ்வலித்தஅக்னியில் விழுந்தவற்றைக் கணக்கிடமுடியாது. இரண்டுதலைகளும் ஐந்துதலைகளும் ஏழுதலைகளும் பத்துத்தலைகளும் நூறுதலைகளும் எண்ணில்லாத தலைகளுமுள்ளவையும்ப்ரளயகாலாக்னிக்கொப்பான விஷமுள்ளவையுமானகொடிய ஸர்ப்பங்கள் லக்ஷக்கணக்காக ஹோமஞ்செய்யப்பட்டன. பெரிய உடல்களுள்ளவைகளும் கடியவேகமுள்ளவைகளும் மலையின் கொடுமுடிபோல் உயரமுள்ளவைகளும் ஒருயோசனை இரண்டுயோசனை நீளமுள்ளவையும் நினைத்த ரூபமெடுப்பவையும் நினைத்தபலம்அடைகின்றவையும் ஜ்வலிக்கின்ற அக்னியைப்போன்ற கொடியவிஷமுள்ளவையுமான நாகங்கள் பிரம்மாவின்சொல்லாகிற தண்டனையினால் பீடிக்கப்பட்டு அந்தப்பெரிய யாகத்தில் எரிக்கப்பட்டன.

---

1 மணிஸ்கந்தன் என்று ஒருபெயராகக்கொள்வது தக்ஷிணதேசபாடம்.

## ஐம்பத்தேட்டாவது அத்தியாயம்.

## ஆஸ்திகபர்வம். (தொடர்ச்சி.)



(ஜனமேஜயர் யாகத்தை நிறுத்தின பிறகு நாகலோகத்துக்கு வந்த ஆஸ்தீகரை நாகர்கள் வரம்கொடுத்துக் கௌரவித்தது.)

ஆஸ்தீகரிடத்தில் இந்தமற்றொருபெரிய ஆச்சரியத்தையும் கேட்டிருக்கிறோம்; அதாவது:—"ஜனமேஜயராஜர் அவருக்கு வரங்களைக்கொடுக்கிறதாக அப்படி அன்புடன்சொல்லும்போது, இந்திரன்கையைவிட்டுத் தப்பிப்போன தக்ஷகன் ஆகாசத்திலேயே நின்றான்; அதன்பின் ஜனமேஜயராஜர் மிகுந்த சிந்தையுடனிருந்தார்; சாஸ்திரப்படி ஹோமஞ்செய்யப்பட்டு அதிகமாக ஜ்வலிக்கும் அக்னியில் பயத்தினாற்குன்றின அந்தத்தக்ஷகன்விழாமலிருந்தானென்பது" என்று ஸௌதி சொல்லினர்.

சௌனகர், 'ஸூதரே! ஞானவான்களாகிய அந்தப்பிராமணர்களுக்கு மந்திரங்கள் அப்போது புத்திக்குத் தோன்றாமற்போயினவா? எதனால் அந்தத்தக்ஷகன் அக்னியில்விழவில்லை?' என்றுகேட்க, ஸூதபுத்திரர் சொல்லத்தொடங்கினார்.

"இந்திரன்கையைவிட்டு நீங்கிப் பிரஜ்ஞைதப்பின அந்த நாகராஜனை ஆஸ்தீகர், 'நில் நில்' என்று மூன்றுமுறை சொன்னார். அவன் வருத்தமுற்றமனத்துடன்ஆகாசத்துக்கும் பூமிக்குமிடையில் ஒருமனிதன் நேரே நிற்பதுபோல் நின்றுவிட்டான். பிறகு, ஸபையிலுள்ளவர்களால் அதிகமாகக் கேட்டுக்கொள்ளப்பட்ட ஜனமேஜயராஜர், 'ஆஸ்தீகர் கேட்டது அவர் இஷ்டம்போல் நடக்கட்டும்; இந்தக்கருமத்தை நிறுத்துங்கள்; நாகங்கள உபத்திரவமில்லாமலிருக்கட்டும்; ஆஸ்தீகரும் ஸந்தோஷமடையட்டும்; அந்த லோஹிதாக்ஷரென்னும் ஸூதர்சொன்னதும் ஸத்யமாகட்டும்' என்று சொன்னார். ஆஸ்தீகருக்கு அந்தவரத்தை அளித்தபிறகு அந்தஸபையில் ஸந்தோஷத்தினால் ஹலஹலா என்னும் சப்தம் உண்டாயிற்று. பரிக்ஷித்தின் புத்திரராகிய ஜனமேஜயருடைய அந்தயாகமும் அவ்வளவிலேயேநின்றது. பரதவம்சத்து ராஜாவாகிய ஜனமேஜயரும் த்ருப்தியடைந்து, ரித்விக்குக்களுக்கும் ஸபையிற்சேர்ந்தவர்களுக்கும் அங்கேவந்திருந்த மற்றவர்களுக்கும் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் திரவியங்களைக்கொடுத்தார். பிரபுவாகிய ஜனமேஜயராஜர் லோஹிதாக்ஷரென்னும் ஸூதருக்கும், 'ஒருபிராமணன்

காரணமாக அந்த ஸர்ப்பயாகம் நின்றுபோம்' என்று முதலிலேயே தமக்குச்சொன்ன ஸ்தபதிக்கும் மிகுதியான திரவியங்களைக் கொடுத்தார். அளவிடக்கூடாத பராக்கிரமத்தையுடைய அரசர் தகுந்தபடி போஜனவஸ்திரங்களோடுகூடத் திரவியத்தையும் ஸந்தோஷமாக அந்த ஸ்தபதிக்குக்கொடுத்து, பிறகு சாஸ்திரோக்தமான கிரியையோடு அவபிருதமென்று சொல்லப்பட்ட யாகஸமாப்திஸ்நானஞ்செய்தார். அவர் மனத்தில் த்ருப்தியடைந்தவராகி, தம்காரியம் நிறைவேறினதினால்த்ருப்தியடைந்தவித்வானான ஆஸ்தீகரை மிகுந்தமரியாதையுடன் அவர் க்ருஹத்துக்கு விடைகொடுத்து, அவரைநோக்கி, 'என்னுடைய அஸ்வமேதமென்னும் மஹாயாகத்திற்கு ஸதஸ்யராயிருக்கவேண்டும்; அதற்காகத் திரும்பவும் நீங்கள் வரவேண்டும்' என்று சொல்லியனுப்பினார். அப்போது ஆஸ்தீகரும், 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லித் தம்முடையபெரியகாரியத்தையும் முடித்துக்கொண்டு ராஜாவையும் த்ருப்திசெய்வித்து ஸந்தோஷத்துடன் விரைவாகத் திரும்பிப்போனார். அவர்சென்று மிகுந்தமகிழ்ச்சியுடன் மாதுலனையும் அந்தமாதாவையும் ஸந்தித்து நமஸ்காரஞ்செய்து நடந்தவிஷயத்தைத் தெரிவித்தார்.

அதைக்கேட்டு அவ்விடத்திலிருந்த நாகர்களெல்லாரும் பயம் தீர்ந்து ஸந்தோஷத்துடன் கூட்டமாகச்சேர்ந்து ஆஸ்தீகரிடத்தில் மிகுந்த அன்புள்ளவராகி, 'உனக்கு இஷ்டமான வரத்தைக்கேள்; வித்வானே! நாங்கள் இப்போது உனக்கு என்னபிரியம் செய்யக்கடவோம்? நாங்களெல்லாரும் விடுவிக்கப்பட்டு ஸந்தோஷமுள்ளவர்களாயிருக்கிறோம்; குழந்தாய்! உனக்கு என்ன அபீஷ்டத்தைச் செய்யக்கடவோம்?' என்று பலமுறை அவரைக்கேட்டனர்.

அதற்கு ஆஸ்தீகர், 'இந்தலோகத்தில் பிராமணர்களாகட்டும், மற்ற மனிதர்களாகட்டும், தெளிந்தும் சிறந்தும் இருக்கும் மனத்தோடு இந்த என் தர்மகதையைக் காலையும் மாலையும் படிப்பாராயின் அவர்களுக்கு உங்களிடமிருந்து ஒருபயமும் இல்லாமலிருக்கக்கடவது' என்றார். ஸந்தோஷமடைந்த நாகர்கள், வாஸுகியின்மருகராகிய ஆஸ்தீகரைப்பார்த்து, ஓ! மருமகரே! உம்முடைய இந்த வரம் மிகவும் ஸத்யமாகட்டும். பிரீதியோடுகூட நாங்களெல்லாரும் நீர் கேட்டதை ஜாக்கிரதையாக நிறைவேற்றுவோம். அஸிதனையும் ஆர்த்திமானையும் ஸுநீதனையும் எவன்நினைப்பானோ அவனுக்குப் பகலிலாகட்டும் இரவிலாகட்டும் ஸர்ப்பபயம்நேரிடாது. 'மஹானுபாவர்களான நாகர்களே! ஜரத்காருரிஷியினால் ஜரத்காருவென்பவளிடத்

திற்பிறந்த பெரியகீர்த்தியுள்ள எந்த ஆஸ்தீகர் நாகர்களாகிய உங்களை ஸர்ப்பஸத்ரத்திற் காப்பாற்றினாரோ, அவரை நான் ஸ்மரிக்கிறேன்; என்னை நீங்கள் ஹிம்ஸிக்காமல் இருக்கக்கடவீர்கள். ஸர்ப்பமே! தயைசெய்து ஓடிப்போ; மஹாவிஷமுள்ள ஸர்ப்பமே! போ; ஜனமேஜயர் யாகத்தின்முடிவில் ஆஸ்தீகர்சொன்ன சொல்லைநினை' என்று உம்மைப்பற்றிச் சொல்வதாகிய இம்மந்திரங்களைக்கேட்டபிறகு எந்த ஸர்ப்பம் நிவிர்த்தியாகவில்லையோ அதன்தலை சிம்சவ்ருக்ஷத்தின் பழம்போல் நூறுதுண்டாக வெடித்துப்போம்' என்று சொல்லினர்.

இவ்வாறு முக்கியமான ஸர்ப்பஸ்ரேஷ்டர்கள் சேர்ந்துசொன்னபோது, அந்தமஹாத்மாவாகிய பிராமணசிரேஷ்டர் மிகுந்த த்ருப்தியடைந்து, பிறகு தாம் அந்த இடத்தைவிட்டுப்போவதற்கு நிச்சயஞ் செய்தார். நாகராஜாவாகிய வாஸுகியும் நாகர்களுடைய மத்தியிலிருந்து இவ்வாறுசொல்லி, அந்த ஸர்ப்பங்களுடன்கூடவே தன் க்ருஹம் சென்றான். தர்மாத்மாவாகிய பிராமணசிரேஷ்டர், நாகர்களை ஸர்ப்பயாகத்திலிருந்து விடுவித்து, புத்ர பௌத்ரர்களோடு வாழ்ந்த பிறகு, ஒருகாலத்தில் உலகவாழ்க்கையைத் துறந்தார். இந்த ஆஸ்தீக சரித்திரத்தை நடந்தபடி உமக்கு நான்சொன்னேன்; இதைச்சொன்னால் ஸர்ப்பபயம்எங்குமிராது. ப்ருகுவம்சஸ்ரேஷ்டரே! பிராமணரே! ஞானவானாகிய ஆஸ்தீகருடைய அழகுள்ள சரித்திரத்தை ருரு கேட்டபோது உமதுகூடஸ்தராகிய பிரமதி அவருக்கு அன்புடன் சொன்னதைக்கேட்டிருந்த நான், அவர் சொன்னபடியே முதலிலிருந்து உமக்குச் சொன்னேன். பிராமணரே! தண்ணீர்ப்பாம்பு சொன்னதாக நான் சொல்லக்கேட்டு, நீர் என்னை வினாவிய கதை இது. இந்திரியங்களை ஜயித்தவராகிய பிராமணரே! உம்முடைய் பெரிய ஆவல் தீரட்டும். சிறந்த தர்மமுள்ளதும் புண்ணியத்தை விருத்திசெய்வதுமாகிய ஆஸ்தீகசரித்திரத்தைக் கேட்பவன் எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டுத் தீர்க்காயுளை அடைவன்" என்றனர்.

ஆஸ்தீகபர்வம் முற்றிற்று.

---

## ஐம்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## அம்சாவதரணபர்வம்.

(ஸர்ப்பயாகத்தில் ஜனமேஜயநுக்கு வைசம்பாயனர் சோன்னபடி மஹாபாரதகதையைச் சோல்லும்படி சௌனகர் கேட்டதன்மேல் ஸூதர் சோல்ல ஆரம்பித்தது.)

சௌனகர், "ஐயா! ஸூதபுத்திரரே! பிருகுவம்சம் முதலாகவே பெரியசரித்திரமுழுவதும் உம்மாற் சொல்லப்பட்டது. அதனால், உம்மிடத்தில் த்ருப்தியடைந்தேன். ஸூதநந்தனரே! இன்னும் உம்மைத் தக்கபடி அனேகம் கேட்பேன். வியாஸரிடமிருந்துவந்த கதைகளை இன்னும் எனக்குச் சொல்லும். நிறைவேற்றுவதற்கு மிகவும் கடினமான அந்த ஸர்ப்பயாகத்தில் மஹாத்மாக்களாகிய ஸபையோர்கள் யாகத்தின் கிரியைகளின் மத்தியகாலங்களில் எந்தஎந்த விஷயங்களில் எவ்வாறெவ்வாறுஎன்னஎன்னவிசித்திரமானஸம்பாஷணைகளை நடத்தினரோ, அவற்றையெல்லாம் நாங்கள் உம்மிடம் கேட்க விரும்புகின்றோம். ஸூதபுத்திரரே! நீர் எங்களுக்குச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, ஸூதபுத்திரர், "கிரியைகளின் மத்தியகாலங்களில் பிராமணர்கள் வேதவிஷயங்களைப்பற்றின பிரஸங்கங்களைப் பேசினர். வியாஸர்மாத்திரம் விசித்திரமான பாரதமென்னும் பெரிய சரித்திரத்தைச் சொல்லினர்" என்று சொன்னார்.

அதற்குச் சௌனகர், "ஸர்ப்பயாககாலத்தில் சாஸ்திரப்பிரகாரம் நடந்த கிரியைகளின் மத்தியில் ஜனமேஜயர் கேட்கும்போது, கிருஷ்ணத்வைபாயனர் பாண்டவர்களுடைய புகழை விருத்திசெய்யத்தக்க மஹாபாரதமென்கிற சரித்திரத்தைச்சொன்னாரல்லவா? அந்தப் புண்ணியகதையை நான் ஒழுங்காகக் கேட்க விரும்புகிறேன். ஸாதுஶ்ரேஷ்டரே! யோகத்தால் பரிசுத்தமான புத்தியுள்ள வியாஸமஹரிஷியின் மனமென்னும் ஸமுத்திரத்தினின்றும் உண்டானதும் ரத்னங்களைப்போன்ற விஷயங்களெல்லாம் பொருந்தினதுமாகிய அந்தக் கதையைச் சொல்லும்" என்று கேட்க, ஸூதபுத்திரர் சொல்லத் தொடங்கினார். "ஆகட்டும்; கிருஷ்ணத்வைபாயனராற் சொல்லப்பட்ட உத்தமமான மஹாபாரதமென்னும் இதிஹாஸத்தை ஆதிமுதல் உமக்குச் சொல்லுகிறேன். பிராமணரே! நான் விடாமல் முழுதும் சொல்லுகிறேன்; கேளும். இந்த இடத்தில் எனக்கும் அதைச் சொல்வதற்குப் பெரிய உத்ஸாஹமுண்டாயிருக்கிறது" என்று சொல்லத் தொடங்கினார்.

## அறுபதாவது அத்தியாயம்.

## அம்சாவதரண பர்வம். (தொடர்ச்சி.)



(வியாஸர் ஸர்ப்பயாகத்துக்குவந்து, ஜனமேஜயர்கேட்ட பாரதகதையைச் சொல்லும்படி வைசம்பாயனருக்குக் கட்டளையிட்டது.)

“காளி என்று சொல்லப்பட்ட ஸத்யவதியானவள், விவாஹமாகாமலிருக்கும்போதே சக்திமுனிவரின் புத்திரராகிய பாராசரமஹரிஷிக்குப் பாண்டவர்களின் பிதாமஹராகிய எவரை யமுனையின் தீவில் பெற்றாளோ, பெருங்கீர்த்தியுள்ள எவர் பிறந்தமாத்திரத்தில் இச்சையினால் உடனே தம்தேஹத்தை வளரச்செய்துவேதங்களையும் வேதாங்கங்களையும் இதிஹாஸங்களையும் அறிந்தாரோ, தவத்தினாலும் வேதாத்தியயனத்தினாலும் விரதத்தினாலும் உபவாஸத்தினாலும் பிறப்பினாலும் யாகத்தினாலும் எவருக்குமேல் யாருமில்லையோ (அவரும்), வேதமறிந்தவர்களிற் சிறந்தவரும், மேலானவற்றையும் கீழானவற்றையும் அறிந்தவரும், கவியும், ஸத்யத்தையே விரதமாகக் கொண்டவரும், பரிசுத்தமான எவர் ஒருவேதத்தை நான்காக வகுத்தாரோ (அவரும்), நிர்மலமான பெரும்புகழுள்ளவரும், சந்தனுவின் ஸந்ததியை விருத்திசெய்வதற்காகப் பாண்டுவையும்திருதராஷ்டிரனையும் விதுரரையும் உண்டுபண்ணினவருமாகிய அந்தக்கிருஷ்ணத்வைபாயனரென்னும் மஹரிஷி, ஜனமேஜயர் ஸர்ப்பயாகத்துக்காகத் தீக்ஷைசெய்துக்கொண்டதைக்கேட்டு அவரிடம் சென்றார். அந்த மஹாத்மாவானவர் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவர்களாகிய தம் சிஷ்யர்களுடன் ஜனமேஜயரென்னும் ராஜரிஷியின் யாகஸபையிற் பிரவேசித்தார். அந்தஸதஸில் தேவர்களாற் சூழப்பட்ட இந்திரனைப்போல் அநேகம் ஸபையோர்களாலும், பட்டாபிஷேகஞ் செய்துகொண்ட பற்பல தேசாதிபதிகளாலும், யஜ்ஞகாரியத்தில் ஸமர்த்தர்களாகிய பிரம்மாவுக்கு ஒப்பான ரித்விக்குக்களாலும் சூழப்பட்ட ஜனமேஜயராஜாவைப் பார்த்தார்.

பரதஸ்ரேஷ்டராகிய அந்த ஜனமேஜயரென்னும் ராஜரிஷி, அந்த ரிஷிவந்ததைக்கண்டு ஸந்தோஷத்துடன் கூட்டங்களோடு விரைவாக எதிர்கொண்டழைத்தார். அந்த அரசர் ஸபையோர்களால் அனுமதி கொடுக்கப்பெற்று, ப்ருஹஸ்பதிக்கு இந்திரன்செய்வதுபோல், அந்த மஹரிஷிக்குப் பொன்மயமான ஆஸனம் அளித்தார். தேவர்கள் ரிஷிகள் இவர்களுடையகூட்டங்களினாற் பூஜிக்கப்பட்டவரும்வரங்கொடுப்

பவருமாகிய அம்மஹரிஷி ஆஸனத்தில்வீற்றிருந்தபின், ஜனமேஜயர் சாஸ்திரோக்தமானகிரியையால் அவரைப் பூஜித்தார். ஜனமேஜயர் தமதுகூடஸ்தரும் பூஜைக்குரியவருமான வியாஸருக்குச் சாஸ்திரப் பிரகாரம் அர்க்கியபாத்தியாசமனீயங்களையும் கொடுத்துக் கோதான முஞ்செய்தார். வியாஸர், பாண்டுவம்சத்தவராகிய ஜனமேஜயரிடத்தில் அந்தப் பூஜையைப் பெற்றுக்கொண்டு கோவைமட்டும்அனுப்பி விட்டு ஸந்தோஷமுள்ளவரானார். அரசர், தமக்குக் கூடஸ்தராகிய அவரை அவ்வாறுஅன்புடன்பூஜைசெய்து,மனமகிழ்ந்துஸமீபத்தில் உட்கார்ந்து குசலப்பிரச்னஞ்செய்தார். வியாஸபகவானும் அவரை நோக்கித் தம்க்ஷேமத்தைத் தெரிவித்து ஸதஸ்யாகளெல்லாராலும் பூஜிக்கப்பட்டு, அந்த ஸதஸ்யர்களுக்கும் பிரதிமரியாதை செய்தார். பிறகு, ஜனமேஜயர், ஸதஸ்யர்கள் எல்லாருடனுங்கூடக் கைகூப்பிக் கொண்டு, பிராமணசிரேஷ்டரான வியாஸரைப்பார்த்து அடியிலவருமாறு கேட்டனர் :—

"கௌரவர்களைப்பற்றியும் பாண்டவர்களைப்பற்றியும் நீர் நேரில் அறிவீர். பிராமணரே! அவர்களுடைய சரித்திரத்தை நீங்கள் சொல்லவேண்டுகிறேன். சிலாக்கியமான செய்கைகளையுடைய அவர்களுக்கு விரோதம் எப்படி உண்டாயிற்று? என் பிதாமஹர்கள் எல்லாருக்கும் தெய்வத்தினால் புத்தியில் ஆக்கிரகம் உண்டாகிப் பிராணிகளுக்கெல்லாம் நாசத்தைச்செய்யும் அந்தப் பெரியயுத்தமானது எவ்வாறு நடந்தது? பிராமணசிரேஷ்டரே! அதை முழுதும் நடந்தபடி எனக்குச் சொல்லக்கடவீர். பகவானே! நீர் தெரிந்தவராதலால் உம்மிடத்தில் சரியாகக் கேட்கவிரும்புகிறேன்" என்றார்.

கிருஷ்ணத்வைபாயனர் அப்போது அவர்சொன்னதைக்கேட்டு, தம்ஸமீபத்தில்உட்கார்ந்திருந்த வைசம்பாயனரென்னும் சிஷ்யரைப் பார்த்து, 'கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் முன்னே விரோதம் எவ்வாறு உண்டானதோ, அதுமுழுதையும் நீ என்னிடத்திற கேட்டபடி ஜனமேஜயனுக்குச் சொல்' என்று கட்டளையிட்டார். அப்போது பிராமணசிரேஷ்டரான வைசம்பாயனர், தம் குருசொன்னதைஏற்றுக்கொண்டு, முன்காலத்தில் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்குமுண்டான விரோதத்தையும் அதனால்எல்லாருக்கும் நாசமுண்டானதையும்பற்றிய புராதனமான இதிஹாஸம் முழுதையும் அந்த ஜனமேஜயராஜாவுக்கும் அவர் ஸபையிற்சேர்ந்தவர்களுக்கும் அங்குள்ள அரசர்களெல்லோருக்கும் சொல்லத் தொடங்கினார்.

---

## அறுபத்தோராவது அத்தியாயம்.

## அம்சாவதரணபர்வம் (தொடர்ச்சி.)



(பாரதகதையை வைசம்பாயனர் சுருக்கமாகச் சொல்லியது.)

**வைசம்பாயனர்**, "அரசரே! ஸஹோதரர்களும் வீரர்களுமாகிய பாண்டவர்கள் ஐவருக்கும் கெட்டஎண்ணமுள்ள திருதராஷ்டிர புத்திரர்களோடு விரோதம்வந்த வகையைக்கேளும். முதலில் அன்பையும் அறிவையும் தியானத்தையும் குருவினிடம்செலுத்திக் குருவுக்கு நமஸ்காரஞ்செய்து, பிராமணர்களும் மற்றவர்களுமான வித்துவான்களெல்லாரையும் பூஜித்து, எல்லாலோகங்களிலும் பிரஸித்திபெற்றவரும் சிறந்தபுத்தியுள்ளவரும் அளவற்ற மஹிமையுள்ளவருமாகிய வியாஸமஹரிஷியின் அபிப்பிராயத்தை முழுவதும் இங்கே சொல்லப்போகிறேன். வேந்தரே! நீர் இதைக் கேட்பதற்கு உரியவர். [1]இந்தப் பரதவம்சத்தின்கதையை எடுத்துக்கொண்டு என் குருவின் நா அசைந்தது, என்மனத்தை உத்ஸாகப்படுத்துகிறது. மன்னரே! பரதகுலசிரேஷ்டரே! ராஜ்யத்திற்காகக் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் விரோதம் எவ்வாறு உண்டானதென்பதையும் சூதாடினதால் வனவாஸம் நேர்ந்ததையும் பூமியில்ஜனங்களுக்கு அழிவை உண்டாக்குகின்றயுத்தம் எவ்வாறு நடந்ததென்பதையும் விரும்புகின்ற உமக்குச் சொல்லப்போகிறேன்; கேளும்.

அந்த வீரர்களான பாண்டவர்கள் பிதா இறந்துபோனபின் வனத்திலிருந்து தங்கள் க்ருஹம்வந்து வெகுசீக்கிரத்தில் வேதத்திலும் வில்வித்தையிலும் தேர்ந்தவராயினர். அவ்வாறு பலமும் பராக்கிரமமும் முயற்சியும் நிரம்பப்பெற்றவர்களும் நகரஜனங்களினால் நன்கு மதிக்கப்பட்டவர்களுமாகிய அந்தப் பாண்டவர்கள் ராஜ்யாதிபத்தியத்தையும் கீர்த்தியையும் அடைந்திருப்பதைக்கண்டு, கௌரவர்கள் பொறாமையுற்றனர். அதன்பின், கொடியவனாகிய துரியோதனனும் கர்ணனும் சகுனியும் அவர்களுக்குப் பலவகையாகத் தீங்குகளையும் ஊரைவிட்டு ஓட்டுவதையும் செய்யத்தொடங்கினர். பிறகு, கொடியவனான துரியோதனன் [2] குலிங்கபக்ஷியைப்போன்ற சகுனியினுடைய அபிப்பிராயத்தை

---

1 குரு பாரதம்சொன்னது என்பதற்கு வைசம்பாயனரைப் பாரதம்சொல்லக்கட்டளையிட்டதென்பது பழையஉரை.

2 வஞ்சகமாக ஸிம்மத்தின் தொண்டையிலுள்ள மாம்ஸத்தையெடுக்கும் குலிங்கபக்ஷியைப்போன்றமையால் சகுனியைக் குலிங்கனென்றது; கு - கெட்ட, லிங்கம். - லக்ஷணம்: கெட்டலக்ஷணமுடையவனென்றுமாகும்.

அனுஸரித்து ராஜ்யத்திற்காகப் பாண்டவர்களைப் பற்பலவழிகளால் துன்புறுத்தினான். அப்போது, பாபிஷ்டனாகிய திருதராஷ்டிரபுத்திரன் பின்பு பீமனுக்கு விஷத்தைக்கொடுத்தான். வீரனாகியபீமன் அந்தவிஷத்தைஅன்னத்துடன்கூடவே ஜீர்ணம்செய்துகொண்டான். மறுபடியும் பிரமாணகோடியென்னும் கங்கைக்கரையிலுள்ள இடத்தில் தூங்கிக்கொண்டிருந்த பீமனைக்கட்டிக் கங்காஜலத்தில்போட்டுவிட்டு நகரம்வந்துசேர்ந்தான். சிறந்தபுஜபலமுள்ள குந்திபுத்திரனை பீமஸேனன் கண்விழித்தவுடனே கட்டினையறுத்துக்கொண்டு நோயில்லாமல் எழுந்துவந்தான். அவன் தூங்கினபோது, பல்லில்விஷமுள்ள கருநாகங்களைக்கொண்டு துர்யோதனன் அவனை எல்லா அங்கங்களிலும் கடிப்பித்தான். சத்துருக்களை ஸம்ஹரிப்பவனாகிய பீமஸேனன்இறக்கவில்லை. சிறந்தபுத்தியுள்ளவிதுரர் பாண்டவர்களைத் துர்யோதனன்செய்த பலவகைகளான தீங்குகளிலிருந்து விடுவிப்பதிலும் அவற்றிற்குப் பிரதிசெய்வதிலும் கவனமுள்ளவராக இருந்தார். இந்திரன் ஸ்வர்க்கத்திலிருந்துகொண்டு மனுஷ்யலோகத்துக்கு ஸுகத்தைச்செய்வதுபோலவே விதுரரும் எப்போதும் பாண்டவர்களுக்கு ஸுகத்தைச்செய்பவராயிருந்தார். தெய்வத்தினால் அவஶ்யம்நேரிடத்தக்க காரியத்திற்காகக் காப்பாற்றப்பட்ட பாண்டவர்களை ரஹஸ்யங்களும் வெளிப்படைகளுமான அநேக உபாயங்களைச்செய்தும் அவன் கொல்லமுடியாமற்போனபோது, கர்ணன் துச்சாஸனன்முதலிய மந்திரிகளோடுகூட ஆலோசனைசெய்து திருதராஷ்டிரனை ஸம்மதிக்கச்செய்து அரக்கினால் க்ருஹத்தைக்கட்டும்படி கட்டளையிட்டான். அடங்காத பராக்கிரமமுள்ள அந்தப்பாண்டவர்களை அதில் வஸிக்கச்செய்தான். அம்பிகாபுத்திரனாகிய திருதராஷ்டிரமஹாராஜன் பிள்ளையின்விருப்பத்தைச் செய்யக்கருதி ராஜ்யஸுகத்தைத் தன்பிள்ளைகள் அனுபவிக்கவேண்டுமென்கிற எண்ணத்தினால் அந்தப்பாண்டவர்களை ஹஸ்திநாபுரத்திலிருந்து வெளிப்படுத்தினான். அவர்கள் சேர்ந்து ஹஸ்திநாபுரத்திலிருந்து புறப்பட்டனர். புறப்படும்போது மஹாத்துமாக்களான பாண்டவர்களுக்கு விதுரர் புத்திசொன்னார். அதனால், நடுராத்திரியில் அரக்குமாளிகையிலிருந்து தப்பித்துக்கொண்டு வனத்திற்கு ஓடிப்போயினர். மஹாத்மாக்களும் எதிரிகளைத் துன்பப்படுத்துகிறவர்களுமாகிய குந்தியின்புத்திரர்கள் தாயாருடன்கூட ஹஸ்திநாபுரத்திலிருந்து வாரணாவதநகரம்போய் வாஸஞ்செய்தனர். துர்யோதனன்மந்திரியாகிய புரோசனனிடத்திலிருந்து தங்களைப் பாதுகாத்துக்கொண்டு ஒருவருஷகாலம் ஜாக்ரதை

யோடு அரக்குமாளிகையில் திருதராஷ்டிரன்கட்டளைப்படி வாஸஞ் செய்தனர். அந்தவீரர்கள் விதுரர்தெரிவித்தபடி சுரங்கம் செய்வித்துக்கொண்டு அரக்குமாளிகையைக்கொளுத்திப் புரோசனனைஎரித்துவிட்டுப் பயத்தினால் துரிதமுள்ளவர்களாகித் தாயாருடனோடினர். [1] பயங்கரமானகாட்டில் மிகுந்தபலமும் பராக்கிரமமுமுள்ள ஹிடிம்பனென்னும் கொடியராக்ஷஸனைக் கண்டனர். அந்தராக்ஷஸச்ரேஷ்டனைக் கொன்றபின், தங்களைப் பிறர் தெரிந்துகொள்வாரென்று பயந்து, துர்யோதனபயத்தினால் பீடிக்கப்பட்ட பாண்டவர்கள் இரவிலேயே ஓடினர். பீமஸேனன் ஹிடிம்பையையடைந்தான். அவளிடத்தில் கடோத்கசன் பிறந்தான். பிறகு, பாண்டவர்கள் ஏகசக்ராபுரிசென்று அங்கே உறுதியானநியமத்தோடு வேதாத்யயனஞ் செய்துகொண்டு பிரம்மசாரிகளாக இருந்தனர் அந்தப் புருஷச்ரேஷ்டர்கள் நியமமுள்ளவர்களாகத் தாயாருடன் அந்த ஏகசக்ராநகரத்தில் ஒருபிராமணனுடையக்ருஹத்தில் சிலகாலம் வஸித்தனர். அங்கே சிறந்தபுஜபலமுள்ள பீமஸேனன் மிகுந்தபலமுள்ளவனும் பசித்தவனும் மனிதர்களைப் புசிப்பவனுமாகிய பகனென்னும்ராக்ஷஸனிடம் போனான். புருஷச்ரேஷ்டனும் வீரனுமாகிய பீமஸேனன் அந்தப்பகனைத் தன்புஜபராக்ரமத்தினால் விரைவிற்கொன்றுவிட்டு நகரஜனங்களுக்குப் பயத்தைப்போக்கினான். பிறகு, அந்தப்பாண்டவர்கள் பாஞ்சாலதேசத்தில் திரௌபதீஸ்வயம்வரம் நடப்பதைக் கேள்வியுற்றனர். கேட்டதும், சென்று, அவளையடைந்தனர். அந்தப் பாண்டவர்கள் திரௌபதியையடைந்து எதிரிகளைஜயித்து ஒருவருஷகாலம் அங்கே வஸித்தபிறகு அறியப்பட்டவர்களாக ஹஸ்தினபுரத்திற்குத் திரும்பிவந்தனர்.

திருதராஷ்டிரமஹாராஜனும் பீஷ்மாசாரியரும் அவர்களைப் பார்த்து, 'அப்பா! உங்களுக்குப் பிராதாக்களுடன்கூடத் துவேஷம் உண்டாகாமலிருக்கவேண்டுமென்றுநினைத்து, நாங்கள், 'காண்டவப்ரஸ்தம்என்கிறவிடத்தில் நீங்கள்வஸிக்கலாம்' என்று நிச்சயித்தோம்; ஆதலால், நீங்கள் விரோதத்தைவிட்டு, கிராமங்களோடு கூடினதும் ராஜவீதிகள் செம்மையாக வகுக்கப்பட்டதுமாகிய காண்டவப்ரஸ்தநகரத்தில் வஸிப்பதற்குச்செல்லுங்கள்' என்றனர். திருதராஷ்டிரன் பீஷ்மர் இருவருடைய சொல்லையுங்கேட்டு அந்தப்பாண்டவர்கள்

---

1 'மலையருவியில் ஹிடிம்பனென்னும் கொடியராக்ஷஸனைக் கண்டனர்' என்பது கிருஷ்ணசாரியர்பாடம்; ஆனால், அருவியின் சமீபத்தில் என்று வருவிப்பது பழையஉரை. பின்வருங்கதையில் அருவியில் கண்டதாக இல்லை.

வேண்டியவர்களெல்லாருடனும் உயர்ந்த பொருள்களெல்லாவற்றை யும் எடுத்துக்கொண்டு காண்டவபிரஸ்தமென்னும் நகரத்துக்குச் சென்றனர். அந்தப்பாண்டவர்கள் அஸ்திரசக்தியினால் மற்றராஜாக் களை உட்படுத்திக்கொண்டு அநேகவருஷகாலங்கள் அங்கேவாஸஞ் செய்தனர். இவ்வாறு அவர்கள் தர்மத்தையேகடைப்பிடித்து, ஸத் யத்தையே விரதமாகக்கொண்டு, ஊக்கத்தோடும் முயற்சியோடும் பொறுமையோடும் பகையரசர்களை யெல்லாம் பயப்படச்செய்து கொண்டிருந்தனர். சிறந்தகீர்த்தியுள்ள பீமஸேனன் கீழ்த்திசையை யும், வீரனாகிய அர்ஜுனன் வடதிசையையும், நகுலன்மேற்றிசையை யும், எதிரிகளான வீரர்களைக்கொல்லுகிறவனாகிய ஸஹதேவன் தென் றிசையையும் ஜயித்தனர். இவ்வாறு எல்லாரும் இந்தப்பூமிமுழுவ தையும் வசப்படுத்திக்கொண்டனர். ஸூர்யனைப்போன்றவரும் தவ றுதபராக்கிரமமுள்ளவருமாகிய பாண்டவர் ஐவரும் ஸூர்யனும் பிர காசிப்பதனால் பூமியானது ஆறுஸூர்யர்களையுடையதுபோலாயிற்று.

அதன்பின், ஏதோ ஒருகாரணத்திற்காகச் சக்தியுள்ளவரும் ஸத்யத்திலுறுதியுள்ளவருமாகிய தர்மராஜாவான யுதிஷ்டிரர், புருஷ ஸ்ரேஷ்டனும் உறுதியான மனமுள்ளவனும் குணங்கள் பொருந் தினவனும் தமக்கு உயிரைப்பார்க்கிலும் அதிகஅன்பனும் இரண்டு கைகளாலும் பாணம் பிரயோகிக்கத்தக்கவனும் ஸஹோதரனுமாகிய அர்ஜுனனை வனத்துக்கு அனுப்பினார். அவன் ஒருவருஷமுழு தும் மேலே ஒருமாஸமும் வனத்தில்வஸித்து, தீர்த்தயாத்திரையும் செய்து, நாககன்னிகையையும் பாண்டியன் பெண்ணையும் அடைந்து அவர்களுடன்கூட அங்கே வாஸஞ்செய்தான். பிறகு, ஒருகாலத்தில் அர்ஜுனன் துவாரகாபுரியில் கிருஷ்ணனிடம்போனான். அங்கே தாமரைமலர்போன்ற கண்களையுடையவளும் அழகாகப் பேசுகிற வளும் கிருஷ்ணனுக்குத் தங்கையுமாகிய ஸுபத்ரையைப் பாரி யையாக அடைந்தான். அந்தஸுபத்ரை, இந்திராணி இந்திரனோடு சேர்ந்ததுபோலவும் லக்ஷ்மி கிருஷ்ணனோடு சேர்ந்ததுபோலவும் பாண்டவனாகிய அர்ஜுனனுடன் அன்போடு சேர்ந்தாள். ராஜஸ்ரே ஷ்டரே! குந்திபுத்திரனாகிய அர்ஜுனன் கிருஷ்ணனுடன்சேர்ந்து காண்டவவனத்தில் அக்னியைத் திருப்தி அடைவித்தான். தன் ஸங் கல்பமே ஸஹாயமாகக்கொண்ட விஷ்ணுவுக்கு அஸுரர்களை வதஞ் செய்வதில் அதிகஸ்ரமம் இல்லாததுபோலவே கிருஷ்ணனோடுசேர்ந்த அர்ஜுனனுக்கு எதிரிகளைக்கொல்வதில் அதிகஸ்ரமம் இல்லாமலிருந் தது. அக்னி அர்ஜுனனுக்குக் காண்டீவமென்னும் உயர்ந்ததனுஸை

யும் பாணங்கள்குறையாத இரண்டுதூணிகளையும் ஹநுமக்கொடி யுள்ள ரதத்தையுங்கொடுத்தான். அந்தக் காண்டவதஹனகாலத்தில் அர்ஜுனன் மயனென்னும்அஸுரஶ்ரேஷ்டனைவிடுவித்தான். அந்த மயன்எல்லாவிதமான ரத்னங்களுஞ்சேர்ந்த உயர்ந்தஸபையை நிர்மா ணஞ்செய்தான். புத்தியில்லாதவனும் மிகக்கெட்ட எண்ணமுள்ள வனுமாகிய துர்யோதனன் அந்தஸம்பத்தில் ஆசைவைத்தான். அவன் பிறகு சகுனியைக்கொண்டு சூதாடித் தர்மராஜாவை மோசஞ்செய்து பன்னிரண்டுவருஷகாலம் வனத்துக்கு அனுப்பினான். அதற்குமேல் பதின்மூன்றாவதுவருஷமாகிய ஒருவருஷகாலம் யாருக்குந்தெரியா மல் ஒருதேசத்தில் வஸிக்கும்படி விதித்தான். அதற்குப்பிறகு, பதினான்காவதுவருஷத்தில், பாண்டவர்கள் தங்கள்தனத்தைக் கேட் டும் திரும்ப அடையாமற்போனார்கள்.

மஹாராஜாவே! அதன்பின், யுத்தம்நடந்தது. பிறகு, அந்தப் பாண்டவர்கள் க்ஷத்திரியர்களையழித்து ராஜாவாகிய துர்யோதன னைக்கொன்று பெரும்பான்மையும் ஜனங்கள் அடிபட்டுப்போன ராஜ்யத்தைத் திரும்பப்பெற்றுக்கொண்டனர். அஶ்வமேதம்முதலான பலவிதமான அநேகம் யாகங்களைச் செய்தனர். திருதராஷ்டிரனும் ஸ்வர்க்கம்போக விதுரரும் தேகத்தைவிட்டபிறகு, மிகுந்தமஹிமை யுள்ள ராஜாக்களுக்கு ஸ்வர்க்கத்துக்கு யோக்கியமான கிரியைகளை நடத்திவைத்து,கிருஷ்ணபகவான் தமதுஉலகத்தைஅடைந்தபோது, கிருஷ்ணனுடைய ஸ்திரீகளைக்காப்பாற்றிமஹாப்பிரஸ்தானஞ்செய்து பாண்டவர்கள் மேன்மையான ஸ்வர்க்கத்தையடைந்தனர். ஜயசாலி களுட்சிறந்தவரே! சிலாக்கியமான செய்கைகளையுடைய அந்தப் பாண்டவர்களுக்குக் கௌரவவிரோதம்வந்ததும் ராஜ்யம்போனதும் ஜயம்வந்ததும் இவ்வாறாக முன்னே நடந்தவை" என்றனர்.

---

## அறுபத்திரண்டாவது அத்தியாயம்

## அம்சாவதரணபர்வம். (தொடர்ச்சி.)



(பாரதத்தின் மஹிமை.)

ஜனமேஜயமஹாராஜர், "பிராமணோத்தமரே! கௌரவர்களின் பெருஞ்சரித்திரமாகிய மஹாபாரதமென்னும்இதிஹாஸம்முழுவதும் உம்மால் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. தபோதனரே! நிர்மலரே! விசித்திரமான விஷயங்களடங்கிய இந்தக்கதையைச்சொல்லும்; விரி

வாகக்கேட்பதில் எனக்கு மிகுந்த ஆசையுண்டாயிருக்கிறது; ஆத லால், நீங்கள் இதை மறுபடியும் விரிவாகச் சொல்லக்கடவீர். முன் னோர்களுடைய பெரிய சரித்திரத்தைக் கேட்டு எனக்குத் திருப்தி யுண்டாகவில்லை. தர்மந்தெரிந்த பாண்டவர்கள் கொல்லத்தகாதவர் களையெல்லாம்கொன்றும், மனிதர்களால் புகழப்படுகின்றனரென்பது சிறியகாரணத்தினாலிராது. அந்தப்புருஷஶ்ரேஷ்டர்கள் திறமையுள்ள வர்களாகவும் குற்றமற்றவர்களாகவுமிருந்தும், துராத்மாக்கள்செய்த உபத்திரவங்களை எதற்காகப் பொறுத்தனர்? பிராமணோத்தமரே! பதினாயிரம்யானை பலமுள்ளவனும் சிறந்த புஜபலமுள்ளவனுமாகிய பீமஸேனன் பீடிக்கப்பட்டும் கோபத்தை எவ்வாறு அடக்கினான்? த்ருபதபுத்ரியாகிய க்ருஷ்ணையானவள் துராத்மாக்களான கௌர வர்களால் பீடிக்கப்படும்போது, சக்தியுள்ளவளாயிருந்தும் திருத ராஷ்டிரபுத்திரர்களைக் கோபப்பார்வையினால் எரிக்காமலிருந்ததேன்? குந்திபுத்திரர்களும் மாத்திரிபுத்திரர்களுமாகிய அந்தப்புருஷஶ்ரேஷ் டர்கள், கெட்டவர்களாகிய கௌரவர்களால் பீடிக்கப்பட்டவர்களா கச் சூதாட்டத்தில் ஆசைவைத்த தர்மராஜாவை எவ்வாறு ஒத்துப் போயினர்? தர்மத்தைக் காப்பவர்களுக்கெல்லாம் சிறந்தவரும் தர் மந்தெரிந்தவருமாகிய தர்மபுத்திரரான யுதிஷ்டிரர் கஷ்டத்தைஅடை யக் கூடாதவராயிருந்தும் அந்தப் பெருங்கஷ்டத்தை எப்படி ஸஹித் தார்? அர்ஜுனன் கிருஷ்ணனென்கிற ஸாரதியுடன் ஒருவனாகப் பாணப் பிரயோகஞ்செய்து, மிகுதியான ஸேனைகள் எல்லாவற்றையும் எவ் வாறு யமலோகத்துக்கு அனுப்பினான்? தபோதனரே! இதையும், அம் மஹாரதர்கள் அந்தஸமயங்களில் இன்னும் என்னஎன்ன செய்தார் களோ அவையெல்லாவற்றையும் நடந்தபடி சொல்லும்" என்று கேட்டதற்கு, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"மஹாராஜாவே! அவகாசம் செய்துகொள்ளும்; இந்தப்புண்ணிய மான சரித்திரத்தைப்பற்றிக் கிருஷ்ணத்வைபாயனர் சொன்னதாகிய கதைத்தொடர்ச்சி, நான் சொல்லப்போவது; பெரிது. எல்லாலோகங் களிலும் பூஜிக்கப்பட்டவரும் அளவற்ற மஹிமையுள்ளவரும் மஹாத் மாவுமாகிய வியாஸமஹரிஷியின் அபிப்பிராயத்தை முழுவதும்சொல் லப்போகிறேன். மிகுந்த சக்தியுள்ள வியாஸர் இந்தக் கிரந்தத்தில் புண்ணியகர்மம் செய்தவரைப்பற்றியஶ்லோகங்கள் நூறாயிரம் சொல் லியிருக்கிறார். உத்தமமாகிய பாரதம் உபாக்கியானங்களுடன்கூடக் கேட்கவும் அறியவும் தக்கது. ராஜாவே! ஆனால் இதையெல்லாம் சுருக்கமாகச்சொல்லப்போகிறேன். இரண்டாயிரம்அத்தியாயங்களும்

[1] நூறுபர்வங்களும் நூறுயிரம்ஸ்லோகங்களும் இதில்உள்ளன. அந்த நூறுபர்வங்களையும் மஹரிஷி பதினெட்டுப்பர்வங்களாக வகுத்தனர். இதைச் சொல்லுகிற வித்வானும் கேட்கிறமனிதர்களும் பிரம்ம லோகஞ்சென்று பிரம்மாவுக்கு ஒப்பாயிருப்பார்கள். இந்தப்புராணம் வேதங்களுக்கொப்பானது ; புண்ணியமானவற்றுள் உத்தமமானது ; கேட்கத்தக்கவைகளுள் சிறந்தது. ரிஷிகளாலும் புகழப்பட்டது. இந்த மஹாபுண்ணியமான இதிஹாஸத்தில் பொருளும் இன்பமும் மோக்ஷத்தைப்பற்றிய ஞானமும் பூர்ணமாக உபதேசிக்கப்படுகின்றன. வித்வானுயிருப்பவன் கிருஷ்ணத்வைபாயனரால் சொல்லப்பட்ட வேதமாகிய இந்தப்பாரதத்தைப் பெருந்தன்மையுள்ளவர்களும் கொடுப்பவர்களும் ஸத்யம் தவருதவர்களும் நாஸ்திகரல்லாதவர்களுமான மனிதர்களுக்குச் சொல்லிப் பொருளை ஸம்பாதிக்கிருன். மிகக்கொடியவனுன மனிதனும் இந்த இதிஹாஸத்தைக் கேட்பதனுல் கர்ப்பத்தைக்கொல்லுவதனுலுண்டான பாபத்தையும் நிவிர்த்தித்துவிடுவனென்பது நிச்சயம். இதைக்கேட்பவன், சந்திரன் ராகுவினுல் விடப்படுவதுபோல எல்லாப்பாபங்களாலும் விடப்படுவான். இந்தஇதிஹாஸம் ஜயமென்று சொல்லப்பட்டது. ஜயிக்க விரும்புகிறவன் இதைக்கேட்கவேண்டும்; ராஜாவாயிருப்பவன் எதிரிகளைஜயித்துப் பூமியை வசப்படுத்திக்கொள்வான். இந்நூல் ஒருவனுக்குப் புருஷஸந்தானம் உண்டாவதற்குச் சிறந்தகாரணம் ; மங்களங்களுக்குப் பெரியஆதாரம் ; அரசிகளும் இளவரசர்களும் பலமுறை கேட்பதற்குரியது ; அரசியானவள் வீரனுனபுத்திரனையாவது இராஜ்யத்தையடையக்கூடிய பெண்ணையாவது பெறுவள். அளவற்றஞானமுள்ள வியாஸராற்சொல்லப்பட்ட இந்தமஹாபாரதம் புண்ணியத்தைக்கொடுக்கும் தர்மசாஸ்திரமாகவும் சிறந்த ராஜநீதி சாஸ்திரமாகவும் மோக்ஷசாஸ்திரமாகவும் இருக்கிறது. பரதஸ்ரேஷ்டரே ! தர்மார்த்த காமமோக்ஷங்களைப்பற்றி இதில் என்னவிருக்கிறதோ அது தான் மற்றவற்றிலுமிருக்கிறது ; இதில் இல்லாதது எதிலுமில்லை. இந்தலோகத்தில் இந்தஇதிஹாஸம் பிராமணர்களால் பிராமணர்களுக்குச் சொல்லப்பட்டுவருகிறது. இதை இப்போதும் சொல்லிக்கொண்டிருக்கின்றனர். அப்படியே பின்னிட்டவரும் கேட்கப்போகின்றனர். இதைக்கேட்பதனுல் புத்திரர்கள் பிதிர்சுஸ்ரூஷை செய்பவராகவும் வேலைக்காரர்கள் எஜமானன் விரும்பினதைச் செய்பவராகவும் ஆவார்கள். பரதவம்சத்தாருடைய மேலானஜனனத்தை வெறுக்காமற்

1 சிறுபிரிவு ; பர்வஸங்கிரஹத்தில் பார்க்க.

கேட்பவருக்கு வியாதிபயமேயில்லை. அவர்களுக்குப் பரலோகத்தைப்பற்றிய பயமில்லையென்பது சொல்லவும் வேண்டுமா? இதைக் கேட்கிறமனிதன் சரீரத்தினாலும் வாக்கினாலும் மனத்தினாலுஞ் செய்த பாபமெல்லாவற்றையும் உடனே விட்டுவிடுகிறான். தனத்தையும் புகழையும் தீர்க்காயுளையும் புண்ணியத்தையும் ஸ்வர்க்கத்தையும் தருவதாகிய இந்த இதிஹாஸம், அதிகதனமும் பராக்கிரமமுமுள்ளவரும் லோகத்தில் பெயர்பெற்ற செய்கைகளையுடையவரும் எல்லா வித்தைகளிலும் தெளிவுள்ளவருமான மஹாத்மாக்களாகிய பாண்டவர்கள் மற்றுமுள்ள க்ஷத்திரியர்கள் ஆகிய இவர்களுடைய கீர்த்தியை உலகத்தில் பிரகாசப்படுத்தி, புண்ணியத்தை விருத்திசெய்ய விருப்பமுள்ள கிருஷ்ணத்வைபாயனரால் செய்யப்பட்டது. லோகத்தில் எந்தமனிதன் மிகுந்த புண்ணியத்தைத் தருவதான இந்தஇதிஹாஸத்தைப் புண்ணியத்தைவிரும்பிப் பரிசுத்தர்களான பிராமணர்களுக்குச் சொல்வானோ, அவனுக்கு அழியாதபுண்ணியமுண்டாகும். ஶ்லாக்கியமான கௌரவர்களின் வம்சத்தை எப்போதும் பரிசுத்தனாயிருந்து சொல்லுகிறவன் பெரியவம்சவ்ருத்தியடைவான், உலகத்திலும் மிகக்கொண்டாடத்தக்கவனாவான். எந்தப்பிராம்மணன் நியமம் தவறாமல் புண்ணியமான பாரதத்தை வருஷாகாலமான நாலுமாதங்களிலும் படிப்பானோ, அவன் எல்லாப்பாபங்களாலும் விடப்படுவான். பாரதத்தைப்படிப்பவன் எவனோ, அவனை வேதங்களின்கரைகண்டவனாக அறியலாம். இதில் பாபங்கள் நீங்கிப் புண்ணியம் நிரம்பினவர்களாகிய தேவர்களும் ராஜரிஷிகளும் பிரம்மரிஷிகளும் சொல்லப்படுகின்றனர். அவ்வாறே தேவர்களுக்கெல்லாம் ஈஶ்வரராகிய பகவானான விஷ்ணுவும் சொல்லப்படுகிறார். [1]தேவியும் சொல்லப்படுகிறாள். இதில் [2]அநேகர்களால் ஜனனமுள்ள குமாரருடைய உற்பத்தியும் சொல்லப்படுகின்றது. இதில் பிராம்மணர்களுடைய மஹிமையும் பசுக்களுடையமஹிமையும் சொல்லப்படுகின்றன. எல்லாவேதங்களினுடைய தொகையுமாகிய இதைத் தர்மத்தில் எண்ணமுள்ளவர்கள் கேட்கவேண்டும். எந்தவித்வான் இதைப் புண்ணியகாலங்களில் பிராமணர்களுக்குச்சொல்வனோ, அவன் பாபங்களைஉதறி ஸ்வர்க்கத்தைஜயித்துச் சாஶ்வதமான பிரம்மத்தையடைவான். ஶ்ராத்தத்தில்

---

1 விஷ்ணுவுக்குப்பின் இருப்பதனால் லக்ஷ்மியென்றும், பிறகு சுப்பிரமண்யரைச் சொல்வதனால் பார்வதியென்றுங் கொள்ளலாம்.

2 ஆறுகிருத்திகைகளுக்கும் பார்வதிக்கும் அக்னிக்கும் நாணற்காட்டுக்கும் புத்திராராகஇருந்ததுபற்றி இப்படிக்கூறப்பட்டனர்.

இதன் ஒரு ஸ்லோகத்தின் ஓர்அடியையாவது பிராமணர்களை ஒருவன் கேட்பித்தால் அவன்செய்கிற அந்தஸ்ராத்தம் அழியாப்பயனுள்ளதாகப் பிதிர்க்களிடம் சேரும். ஒருமனிதன் இந்திரியங்களினலாவது மனத்தினலாவது தெரிந்தும்தெரியாமலும் ஒருதினம் செய்கிறபாபம் மஹாபாரதமென்கிற இதிஹாஸத்தைக்கேட்டவுடன் அழிந்துபோகின்றது. பரதவம்சத்தாருடைய மஹத்தான ஜன்மந்தான் மஹாபாரதமென்று சொல்லப்படுகின்றது. இப்பெயரின் இந்தக்காரணத்தை அறிகிறவனை எல்லாப்பாபங்களும் விட்டுவிடுகின்றன. பரதர்களுடைய இந்த இதிஹாஸம் மிகஅத்புதமானதனல், அது, சொல்லப்பட்டமாத்திரத்தில் மனிதர்களைப் பெரியபாபத்தினின்றும் விடுவிக்கும். சிறந்தமஹிமையுள்ளவரும் ஸாமர்த்தியமுள்ளவருமாகிய கிருஷ்ணத்வைபாயனர் மூன்றுவருஷகாலம் எப்போதும் தூங்காமல் பரிசுத்தராயிருந்துகொண்டு மஹாபாரதத்தைஆதிமுதல்சொன்னர். தவத்துக்குரிய நியமங்களைவஹித்து வியாஸமஹரிஷி இம்மஹாபாரதத்தைச் செய்தார். ஆதலால், இதைப்பிராம்மணர்கள் நியமத்துடன் கேட்கவேண்டும். வியாஸராற் சொல்லப்பட்டதும் புண்ணியமும்உத்தமமுமாகிய இந்தப்பாரதகதையைப் பிறருக்குச்சொல்லுகின்ற பிராமணர்களும் கேட்கிறமனிதர்களும் எவ்வகையாக நடந்தாலும் [1]செய்தவற்றையும் செய்யாதவற்றையும்பற்றி வ்யஸனப்படவேண்டியவரல்லர். தர்மத்தில்விருப்பமுள்ளமனிதன்இந்த இதிஹாஸத்தை முழுவதும் விடாமற் கேட்கவேண்டும். அதனல் அவனுக்குநினைத்தது கைகூடும். இவ்வாறு மிகுந்தபுண்யமாகிய இந்த இதிஹாஸத்தைக்கேட்டு ஒருமனிதன் எந்தஸந்தோஷத்தையடைகிருனே, அந்த ஸந்தோஷத்தை ஸ்வர்க்கத்திற்குப்போயும் அடைகிறதில்லை. அத்புதமான இந்த இதிஹாஸத்தைச் சிரத்தையுடன்கேட்கிறவனும் கேட்பிக்கிறவனுமாகிய புண்யசாலியானமனிதன் ராஜஸூயம், அஸ்வமேதம்என்னும் யாகங்களுடைய பலனையடைவான். மகிமைதங்கிய ஸமுத்திரமும் மஹாமேருவென்னும்மலையும் ரத்னங்களுக்கு நிதிகளென்று எவ்வாறுசொல்லப்படுகின்றனவோ, அவ்வாறே மஹாபாரதமும் [2]ரத்னங்களுக்கு நிதியென்றுசொல்லப்படுகின்றது. இது வேதங்களெல்லாவற்றிற்கும் ஸமமும் பாபங்களைப்போக்குவனவற்றுட் சிறந்ததும் செவிக்கினியதும் மனத்தைப் பரிசுத்தஞ்செய்வதும் நல்லொழுக்கத்தை விருத்திசெய்வதுமானது. ஆதலால், இதை யாவரும் அவஸ்யங்

1 பாபஞ்செய்ததற்கும் புண்ணியஞ்செய்யாததற்கும்.

2 உயர்ந்தவிஷயங்கள்.

கேட்கவேண்டும். ராஜாவே! எவன் இந்தப்பாரதபுஸ்தகத்தை வாசிப்பவனுக்குத் தானஞ்செய்கிறானோ, அவன் கடல்சூழ்ந்தபுவனியெல்லாம் தானஞ்செய்தவனாவான். பரிக்ஷித்தின்புத்திரரே! என்றாற் சொல்லப்படும் இந்தஸந்தோஷகரமான உயர்ந்தகதையைப் புண்ணியத்திற்காகவும் ஜயத்திற்காகவும் முழுதுங்கேளும். கிருஷ்ணத்வைபாயனமஹரிஷி மூன்றுவருஷகாலம் எப்போதும் தூங்காமல் இந்த அத்புதமான மஹாபாரதமென்னும் இதிஹாஸத்தைச் செய்தார். அந்தப்புராதனமான இதிஹாஸத்தை நான் சொல்லக்கேளும்.

---

## அறுபத்துமூன்றாவது அத்தியாயம்.

## அம்சாவதரணபர்வம். (தொடர்ச்சி.)



### (பூருவம்சம்.)

மிகுந்த பராக்கிரமமுள்ள உமது கூடஸ்தர்களாகிய ராஜாக்களின்வம்சமாகிய பாக்கியம்பெற்ற பூருவம்சத்தை நான் சொல்லப்போகிறேன்; அவர்களுடைய பெயர்களைக்கேளும். 'அவ்யக்தம்' என்றுசொல்லப்பட்ட அறியக்கூடாத பிரம்மத்தினிடமிருந்து என்றும் அழியாதவரும் குற்றங்களில்லாதவருமாகிய பிரம்மதேவர் உண்டானார். அவரிடமிருந்து மரீசி, தக்ஷர் என்னும் இரண்டு ஸ்ருஷ்டிகர்த்தர்கள் உண்டானார்கள். பிரம்மதேவர் கட்டைவிரலிலிருந்து தக்ஷரையும் கண்களிலிருந்து மரீசியையும் ஸ்ருஷ்டித்தார். மரீசியின் புத்திரர் கசியபரென்பவர். தக்ஷருடையபெண் அதிதியென்பவள். கசியபருக்கு அதிதியினிடம் பிறந்தவன் ஸூர்யன். ஸூர்யபுத்திரன் மனு. வைவஸ்வதமனுவின்பெண் இளையென்பவள். இளையின்புத்திரன்புரூரவஸ். புரூரவஸின்புத்திரன்ஆயு. ஆயுவின்புத்திரன்நகுஷன். நகுஷன்புத்திரன் யயாதி. யயாதிக்குச் சுக்கிரனுடையபெண் தேவயானியென்பவளும் விருஷபர்வாவென்னும் அஸுரராஜாவின்பெண் சர்மிஷ்டையென்பவளுமாகிய இரண்டு பாரியைகளிருந்தனர். அவர்களின் பின்வம்சம் அடியில்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

அதாவது:—'தேவயானியானவள் யதுவையும் துர்வஸுவையும்பெற்றாள். விருஷபர்வாவின் பெண்ணாகிய சர்மிஷ்டை, த்ருஹ்யுவையும் அநுவையும் பூருவையும் பெற்றாள்' என்பது.

அவர்களில், யதுவின்வம்சத்தவர் யாதவர்கள். பூருவின்வம்சத்தவர் பௌரவர்கள். பூருவுக்குக் கௌஸல்யையென்னும் பாரியையிரு

ந்தாள். அவனுக்கு அவளிடம் ஜனமேஜயன் ஜனித்தான். அவன் மூன்று அசுவமேதங்கள் செய்தான்; விசுவஜித்து என்னும்யாகத்தை யுஞ்செய்து வனத்துக்குச்சென்றான். ஜனமேஜயன் மகததேசத்து ராஜாவின் பெண்ணாகிய ஸுநந்தையென்பவளை விவாஹஞ்செய்து கொண்டான். அவனுக்கு அவளிடத்தில் பிராசீன்வான் என்பவன் பிறந்தான். அவன் ஸூரியன் உதயமாகின்ற இடம்வரையில் கிழக் குத்திக்கைஜயித்தான். அதனால், அவனுக்குப் பிராசீன்வான் என்று பெயர்வந்தது. பிராசீன்வானென்பவன் யதுவம்சத்திற்பிறந்தவளா கிய ஆஸ்மகியென்பவளை விவாஹஞ்செய்துகொண்டான். அவனுக்கு அவளிடத்தில் [1] சையாதிபிறந்தான். சையாதி திரிசங்குவின்பெண் ணைவராங்கியென்பவளை மணம்புரிந்தான். அவனுக்கு அவளிடம் அஹம்யாதி பிறந்தான். அஹம்யாதி கிருதவீரியன் பெண்ணைபானு மதியென்பவளை விவாஹஞ்செய்தான். அவனுக்கு அவளிடம் ஸார்வ பௌமன் பிறந்தான். ஸார்வபௌமன் கேகயதேசத்தரசன் பெண் ணை ஸுநந்தரையென்பவளை ஜயித்துக்கொண்டுவந்து மணஞ்செய்து கொண்டான். அவனுக்கு அவளிடம் ஜயத்ஸேனன்பிறந்தான். ஜயத் ஸேனன் விதர்ப்பராஜாவின் பெண்ணாகிய ஸுஸ்ரவையென்பவளை விவாஹஞ்செய்தான். அவளிடம் அவனுக்கு அபாசீனன்பிறந்தான். அபாசீனன் மற்றொரு விதர்ப்பராஜனுடைய புத்திரியாகியமரியாதை யென்பவளை மணம்புரிந்தான். அவளிடம் அவனுக்கு அரிஹன் பிறந் தான். அரிஹன் அங்கதேசத்துஅரசன் பெண்ணை விவாஹஞ்செய் தான். அவளிடம் அவனுக்கு மஹாபௌமன் பிறந்தான். மஹாபௌ மன் பிரஸேனஜித்தின் பெண்ணாகிய ஸுயஜ்ஞையென்பவளை விவா ஹஞ்செய்தான். அவளிடம் அவனுக்கு அயுதாநாயியென்பவன்பிறந் தான். அவன் புருஷமேதம் என்னப்பட்ட நரயாகத்தில் பதினாயிரம் மனிதர்களைக் கொண்டுவந்தான்; அதனால், அவனுக்கு [2]அயுதாநாயி என்றுபெயர்வந்தது. அயுதாநாயியென்பவன் ப்ருதுஸ்ரவஸின்பெண் ணாகிய பாஸையென்பவளை விவாஹஞ்செய்தான். அவளிடம் அவனு க்கு அக்குரோதனன் பிறந்தான். அக்குரோதனன் களிங்கராஜன் பெண்ணாகிய 'கண்டு' என்பவளை மணம்புரிந்தான். அவளிடம் அவ னுக்குத் தேவாதிதிபிறந்தான். தேவாதிதி விதர்ப்பராஜாவின் பெண் ணாகிய மரியாதையென்பவளை விவாஹஞ்செய்தான். அவளிடம் அவ

---

1 சர்யாதி என்பது உத்தரதேசத்துப் பாடம்.

2 அயுதாநாயி - பதினாயிரம்பெயரைக் கொண்டுவந்தவன்; அயுதம்=பதி னாயிரம்; அநாயி=கொண்டுவந்தவன்.

னுக்கு ரிசன்பிறந்தான். ரிசன் அங்கராஜன்பெண்ணாகிய வாமதேவி யென்பவளிடத்தில் ரிக்ஷனென்னும் புத்திரனைப்பெற்றான். ரிக்ஷன் தக்ஷகன் பெண்ணாகிய ஜ்வலந்தியென்பவளை விவாஹஞ்செய்தான். அவளிடம் அந்தியநாரனென்பவனை உண்டாக்கினான். அந்தியநாரன் ஸரஸ்வதிநதிக்கரையில் பன்னிரண்டுவருஷம்செய்யத்தக்கஸத்ரயாகத்தைச்செய்தான். அவனை யாகஸமாப்திகாலத்தில ஸரஸ்வதிதேவியே நேரில்வந்து பர்த்தாவாக வரித்தாள். அவளிடத்தில் திரஸ்நுவென்னும் புத்திரனை உண்டுபண்ணினான். இதில பின்வம்சத்தைப் பற்றி அடியில்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

அது, 'ஸரஸ்வதி அந்தியநாரனுக்குத் திரஸ்நுவென்னும் புத்திரனைப் பெற்றாள். திரஸ்நு காளிந்தியென்பவளிடத்தில் இலிலனென்னும் புத்திரனையுண்டாக்கினான்' என்பது.

இலிலன் ரதந்தரியென்பவளிடம் துஷ்யந்தன்முதலிய ஐந்து புத்திரர்களை உண்டுபண்ணினான். துஷ்யந்தன் பகீரதன்பெண்ணாகிய லாக்ஷியென்பவளை மணம்புரிந்தான். அவளிடம் அவனுக்கு ஜனமேஜயன் பிறந்தான். அந்தத்துஷ்யந்தனை விஸ்வாமித்திரர் பெண்ணான சகுந்தலையென்பவளை விவாஹஞ்செய்தான். அவளிடம் அவனுக்குப் பரதன்பிறந்தான். அந்தப்பரதன்விஷயத்தில அடியில்வரும் இரண்டு ஸ்லோகங்களிருக்கின்றன.

அவற்றின்பொருளாவது :—' தாயார் தோற்பை போன்றவள் ; புத்திரன் பிதாவுக்குச்சொந்தம் ; எவனுக்கு எவன்பிறந்தானோ, அவன் அவனேதான். துஷ்யந்தனுக்குப் பிறந்தபுத்திரனை எடுத்துக்கொள். சகுந்தலை நிஜம்சொல்லுகிறாள். ராஜாவே! புத்திரன் தன் உற்பத்திக்காகக் கர்ப்பாதானஞ்செய்தவனை நரகத்திலிருந்து கரையேற்றுகிறான். நீ இந்தப்புத்திரனுக்குக் கர்பபாதானம்செய்தவன். சகுந்தலை ஸத்யம்பேசுகிறாள்' என்பது.

'நீ இவனைப்பரிக்கவேண்டும்' என்று அசரீரவாணி துஷ்யந்தனுக்குச் சொன்னதனால், அந்தப்புத்திரனுக்குப் பரதனென்று பெயர் வந்தது. பரதன் காசிராஜாவாகிய ஸர்வஸேனன்பெண்ணான ஸுநந்தையென்பவளை மணம்புரிந்தான். அவளிடம் அவனுக்குப் புமன்யு என்பவன் ஜனித்தான். புமன்யுவென்பவன் யதுவம்சத்துப் புத்திரியாகிய ஸுவர்ணையென்பவளை விவாஹஞ்செய்தான். அவளிடம் அவனுக்கு ஸுஹோத்ரனென்பவன் ஜனித்தான். ஸுஹோத்ரன் இக்ஷவாகுவம்சத்துப் புத்திரியாகிய ஜயந்தியென்பவளைக்கல்யாணஞ்செய்து

கொண்டான். அவளிடம் அவனுக்கு ஹஸ்தியென்பவன்பிறந்தான். அந்தஹஸ்தியென்பவன் இந்நகரத்தை நிர்மாணஞ்செய்தான். அதனாலேதான் [1]ஹஸ்தினபுரம் என்னப்படுகிறது. ஹஸ்தியென்பவன் திரிகர்த்த தேசத்தரசன் பெண்ணாகிய யசோதையென்பவளைக் கல்யாணம் செய்தான். அவனுக்கு அவளிடத்தில் விகுஞ்சனனென்பவன் பிறந்தான். விகுஞ்சனன் யதுவம்சத்துப் புத்ரியாகிய ஸுநந்தையென்பவளை மணம்புரிந்தான். அவளிடம் அவனுக்கு அஜமீடனென்பவன்பிறந்தான். அஜமீடனுக்குக் கைகேயி, நாகை, காந்தாரி, விமலை, ரிக்ஷையென்னும் ஐந்துபாரியைகளிடத்தில இரண்டாயிரத்து நானூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவ்வரசர்கள் தனித்தனியாக வம்சங்களை உண்டுபண்ணினார்கள். அந்தப்புத்திரர்களுக்குள் ஸம்வரணனென்பவன் அஜமீடனுக்கு ரிக்ஷையினிடம் பிறந்தவன். அவன் வம்சத்தை விருத்திசெய்தவன். ஸம்வரணன் ஸூர்யன் புத்திரியான தபதியென்பவளை விவாஹஞ்செய்துகொண்டான். அவளிடம் அவனுக்குக் குருவென்பவன் ஜனித்தான். குருவென்பவன் யதுவம்சபுத்திரியாகிய சுபாங்கியென்பவளை மணம்புரிந்தான். அவளிடம் அவனுக்கு விதூரதன்பிறந்தான். விதூரதன் மகதராஜன்பெண்ணாகிய ஸம்பிரியையென்பவளைக் கல்யாணஞ்செய்துகொண்டான். அவளிடம் அவனுக்கு அனஶ்வானென்பவன் பிறந்தான். அனஶ்வான் மகதராஜன்பெண்ணாகிய அமிர்தையென்பவளை விவாஹம் பண்ணிக்கொண்டான். அவளிடம் அவனுக்குப் பரிக்ஷித்தென்பவன் பிறந்தான். பரிக்ஷித்து பாகுகன்பெண்ணாகிய ஸுவேஷை யென்பவளைக் கல்யாணம் பண்ணிக்கொண்டான். அவளிடம் அவனுக்குப் பீமஸேனனென்பவன் பிறந்தான், பீமஸேனன் கேகயராஜன்குமாரியான ஸுகுமாரியென்பவளைக் கல்யாணஞ்செய்துகொண்டான். அவளிடம் அவனுக்குப் பரிஶ்ரவஸ்என்பவன் பிறந்தான். அந்தப் பரிஶ்ரவஸையே பிரதீபனென்றும் சொல்வர். பிரதீபன் சிபிசக்ரவர்த்தியின் பெண்ணாகிய ஸுநந்தியென்பவளை விவாஹஞ்செய்துகொண்டான். அவளிடத்தில அவனுக்குத் தேவாபி, சந்தனு, பாஹ்லீகன் என்ற மூன்றுபுத்திரர்கள் பிறந்தார்கள். தேவாபியென்பவன் சிறுபிராயத்திலேயே வனஞ்சென்றான். சந்தனு ராஜாவாக இருந்தான். அவன்விஷயத்தில ஒரு ஶ்லோகமிருக்கிறது.

அதன்பொருளாவது :—'மூப்புள்ள எவரெவரைச் சந்தனு கைகளினால் தொடுகிறானோ அவர்களெல்லாம்ஸுகமடைந்துமறுபடி

---

1 ஹாஸ்தினபுரம் என்றும் வழங்கப்படுகிறது.

யும் யௌவனத்தை அடைகின்றனர்; ஆதலால், அவனைச் [1]சந்தனு என்று நினைக்கின்றனர்' என்பது.

இவ்வாறு இவனுக்குச் சந்தனுவென்று பெயர்வந்தது. சந்தனு பகீரதன்புத்திரியான கங்காதேவியை விவாஹஞ்செய்துகொண்டான். அவளிடம் அவனுக்குத் தேவவ்ரதரென்பவர் ஜனித்தார். அவரைப் பீஷ்மரென்றுஞ் சொல்லுவர். பீஷ்மர் பிதாவின் பிரியத்தைச்செய்யக் கருதி ஸத்யவதியென்பவளைத் தமக்கு மாதாவாகக்கொண்டுவந்தார். அவளைக் காளியென்றும் சொல்லுவர். முதலில் கன்னிகையாயிருக்கும்போதே அவளிடத்தில் பராசரருக்குப் பிறந்தவர் த்வைபாயனர். அவளிடத்திலேயே சந்தனுவுக்குச் சித்ராங்கதன், விசித்ரவீரியன் என்னும் இரண்டுபுத்திரர்கள் பிறந்தார்கள். சித்ராங்கதன் ராஜ்யத்திற்கு வந்ததும் ஒருகந்தர்வனால் கொல்லப்பட்டான். பிறகு, விசித்ரவீரியன் ராஜாவானான். விசித்ரவீரியன் காசிராஜன் பெண்களாகிய அம்பிகை, அம்பாலிகை என்பவர்களை விவாஹஞ்செய்தான். விசித்ரவீரியன் ஸந்ததியுண்டாகாதிருக்கும்போதே தேகவியோகமடைந்தான். பிறகு, ஸத்யவதியானவள் எவ்வாறு சந்தனுவின் [2]பிண்டம் விட்டுப்போகாமலிருக்குமென்று சிந்தித்தாள். அதன் பிறகு, அவள் த்வைபாயனரை நினைத்தாள். அவர்வந்து நான் செய்யவேண்டியதென்னவென்றுகேட்டு முன்னேநின்றார். ஸத்யவதி அவரைநோக்கி, 'உன்பிராதா ஸந்ததியில்லாமல் ஸ்வர்க்கம்போனான். அவனுக்காக நீ ஸந்ததியையுண்டாக்கக்கடவாய்' என்றாள்.

அவர் ஸரியென்றுசொல்லி, அந்தஸந்தர்ப்பத்தில் திருதராஷ்டிரன், பாண்டு, விதுரர் என்ற மூன்றுபுத்திரர்களை உண்டுபண்ணினார். வியாஸருடையவரப்பிரஸாதத்தினால்காந்தாரியினிடம் திருதராஷ்டிரனுக்கு நூறுபிள்ளைகள் பிறந்தனர். அந்தநூறுபுத்திரர்களுள் துர்யோதனன், துச்சாஸனன், விகர்ணன், சித்ரஸேனன் என்ற நால்வரும் முக்யமானவர்கள். பாண்டுவுக்குக் குந்தியென்றும், மாத்திரியென்றும் ரத்னங்கள்போன்ற இரண்டுஸ்திரீகள் இருந்தார்கள். அந்தப்பாண்டு வேட்டையாடுகையில் ஒருரிஷி மிருகரூபத்தோடு பெண்மானிடம் புணர்ச்சிசெய்துகொண்டிருந்தகாலத்தில அவரைப்பாணத்தால் அடித்தார். பாணத்தாலடிபட்ட அவர் பாண்டுவைப்பார்த்துச் சொன்ன ஶ்லோகம் இருக்கிறது. அதன்பொருள் வருமாறு:—

'குரூரனே! மிருகரூபமெடுத்துக்கொண்ட என்னைப் புணர்ச்சியின் ஆசை நிறைவேறாமலிருக்கையிலேயே பாணத்தாலடித்த

1 சம் = சுகத்தை, தனு = செய்கிறவன். 2 தேகஸம்பந்தம்.

யாதலின், உனக்கும் இவ்விதமானநிலைமை துரிதமாகவேநேரிடும்' என்பது.

இவ்வாறு மிருகரூபமாகத் திரிந்துகொண்டிருந்த ரிஷியினால்சபிக்கப்பட்டு மிகுந்ததுக்கமுற்ற அந்தப்பாண்டு அந்தச்சாபத்தை விலக்குவதற்காகப் பாரியைகளைச் சேராமலிருந்தார். ஒருகாலத்தில் அவர் தமது பாரியையான குந்தியைப்பார்த்து, 'என்யோசனைக்குறைவினால் எனக்கு இந்தச்சாபம்நேர்ந்தது. ஸந்ததியில்லாதவனுக்குப் புண்ணியலோகங்களில்லையென்று புராணங்களில் சொல்லியிருப்பதை நான்கேட்டிருக்கிறேன்; ஆதலால், நீ எனக்காகப் புத்திரர்களையுண்டாக்கிக்கொள்' என்றுசொன்னார். அந்தக்குந்தியானவள் தர்மதேவதையினிடம் யுதிஷ்டிரரையும் வாயுவினிடம் பீமஸேனனையும் இந்திரனிடம் அர்ஜுனனையும் பெற்றுக்கொண்டாள். அந்தப்பாண்டு மிகுந்த ஸந்தோஷத்துடன், 'இந்த உன்மாற்றாளாகிய மாத்திரி யோக்கியமானவள்; இவள் ஸந்ததியில்லாமையால் வெட்கமடைகிறாள்; இவளுக்கு ஸந்ததியுண்டாக்கவேண்டும்' என்று குந்தியை நோக்கிச் சொல்ல,அந்தக்குந்தியும் 'ஆகட்டும்'என்று சொல்லி, அந்த மாத்திரிக்கும் விரதத்தை உபதேசித்தாள். பிறகு, அவளுக்கு அஸ்வினிதேவர்களால், நகுலனும் ஸஹதேவனும் இரட்டைப்பிள்ளைகளாகப் பிறந்தனர். பாண்டு செவ்வையாக அலங்காரஞ்செய்துகொண்டிருந்த மாத்திரியைப்பார்த்து விருப்பமுற்றார். அவளைச் சேர்ந்தவுடனே, அவர் தேகவியோகமடைந்தார். பிறகு, மாத்திரி கணவருடன் கூடச் சிதையேறினாள். அப்போது மாத்திரி குந்தியைநோக்கி, 'பெரியவளான நீ நகுல ஸஹதேவர்களைப்பற்றியும் கவனமுள்ளவளாக இருக்கவேண்டும்' என்று சொன்னாள்.

அதன்பின், பாண்டவர்கள்ஐவரையும் குந்தியுடன்கூட ரிஷிகள் ஹஸ்தினாபுரத்துக்கு அழைத்துக்கொண்டு போய் விட்டு, பீஷ்மருக்கும் திருதராஷ்டிரனுக்கும் விதுரருக்கும் பாண்டு ஸ்வர்க்கம்போனதைப்பற்றி நடந்தபடி தெரிவித்தனர். பாண்டவர்களைக் குந்தியுடன் கூட அரக்குமாளிகையில் எரிப்பதற்குத் திருதராஷ்டிரபுத்திரன்ஆரம்பித்தான். அவர்களை விதுரர் விடுவித்தார். பிறகு, பீமஸேனன் ஹிடிம்பனைக்கொன்று ஹிடிம்பையினிடம் கடோத்கசனென்றபுத்திரனை உத்பத்திசெய்தான். பின்பு, (பாண்டவர்) க்ஷேமமாக ஏகசக்ராநகரம் சேர்ந்தனர். அதன்பின்பு, பாஞ்சாலதேசஞ்சென்று ஸ்வயம்வரத்தில் திரௌபதியையடைந்து பாதிராஜ்யம் பெற்றுக்கொண்டு இந்திரப்பிரஸ்தத்தில் வாஸஞ்செய்தபோது அந்தத்திரௌபதியிடம்

புத்திரர்களைப்பெற்றனர். யுதிஷ்டிரருடைய புத்திரன் பிரதிவிந்தியன்; பீமன்புத்திரன் ஸுதஸோமன்; அர்ஜுனன்புத்திரன் சுருதகீர்த்தி; நகுலன்புத்திரன் சதாநீகன்; ஸஹதேவனுடைய புத்திரன் சுருதஸேனன். யுதிஷ்டிரர் சைப்யனுடையபுத்திரியாகிய தேவகியென்பவளை விவாஹஞ்செய்துகொண்டார். அவளிடம் யௌதேயனென்னும் புத்திரனைப்பெற்றார். பீமஸேனன், காசியில் காசிராஜன் பெண்ணாகியஜலந்தரையைஸ்வயம்வரத்தில் விவாஹஞ்செய்துகொண்டான். அவளிடம் அவனுக்குச் சர்வத்திராதனென்னும் புத்திரன் பிறந்தான். அர்ஜுனன் துவாரகைக்குப்போய்க் கிருஷ்ணபகவானுடைய ஸஹோதரியான ஸுபத்ரையென்னும் கன்னிகையை விவாஹஞ்செய்துகொண்டு, அவளிடம் அபிமன்யுவென்னும் புத்திரனை உத்பத்திசெய்தான். நகுலன் சேதிராஜாவின்பெண்ணாகிய ரேணுவதியென்பவளை விவாஹஞ்செய்து அவளிடம் நிரமித்ரனென்னும் புத்திரனை உத்பத்திசெய்தான். ஸஹதேவன் மத்திரதேசத்துராஜாவின் பெண்ணாகிய விஜயையென்பவளை ஸ்வயம்வரத்தில் பாரியையாக மணம்புரிந்து அவளிடம் ஸுஹோத்திரனென்னும் புத்திரனைப்பெற்றான். பீமஸேனன் முன்னமே ஹிடிம்பையென்னும் ராக்ஷஸியினிடத்தில் கடோத்கசனென்னும்புத்திரனை உத்பத்திசெய்திருந்தான். அர்ஜுனனோவெனில், நாககன்னிகையாகிய உலூபியினிடம் இராவானென்னும் பெயருள்ள புத்திரனைப்பெற்றான். அதன்பின் [1] மணலூர்புரத்தரசன் பெண்ணாகிய சித்திராங்கதையினிடம் பப்ருவாஹனனென்று பெயருள்ள புத்திரனைப்பெற்றான். இந்தப் பாண்டவர்களின்புத்திரர்கள் பதின்மூவர். விராடன்புத்திரியாகிய உத்தரையென்பவளை அபிமன்யு விவாஹஞ்செய்துகொண்டான். அவளிடம் அபிமன்யுவுக்குஉண்டானகர்ப்பம் இறந்ததாகப்பிறந்தது. அந்தக்கர்ப்பத்தைப் புருஷோத்தமரான கிருஷ்ணபகவானுடைய கட்டளையினால் குந்தி தன்மடியில் ஏந்திக்கொண்டாள். 'ஆறுமாஸத்தியகர்ப்பத்தை நான் காலால்தொட்டுப் பிழைப்புமூட்டுகிறேன்' என்றும், 'அளவற்ற பராக்கிரமமுள்ளகுமாரனை நான் பிழைப்பிக்கிறேன்; இந்தக்குழந்தை அபிமன்யுவுக்கே ஜனித்தவன் என்ற ஸத்தியத்தினால் இந்தப்பூமி இவனைத்தாங்கட்டும்' என்றும் வாஸுதேவர் சொன்னபிறகு, அவர் பாதம்பட்டதனால் அந்தச் சிசுவுக்கு உயிர் உண்டாயிற்று. 'குலமெல்லாம் [2]பரிக்ஷீணமானபின் கீர்த்திமானை அபிமன்யுவுக்கு உத்தரையினிடம் இவன்பிறந்ததனால், இந்தவீரனு

1 மணிபுரம் என்பது வடதேசத்துப்பாடம். 2 அழிவு.

க்கு, 'பரிக்ஷித்து' என்பதுபெயர்' என்று ஸூபத்ரை அந்தக்குழந்தைக்குப் பெயரிட்டாள். பரிக்ஷித்து பத்திரவதி யென்பவளை விவாஹஞ்செய்துகொண்டார். அவளிடம் ஜனமேஜயராகிய நீங்கள் பிறந்தீர்கள். ஜனமேஜயராகிய உங்களுக்கு வபுஷ்டமையென்பவளிடத்தில் சதாநீகன், சங்குகர்ணன் என்ற இரண்டுபுத்திரர்கள் உண்டாயிருக்கின்றனர். சதாநீகன் விதேஹராஜாவின்பெண்ணை விவாஹஞ்செய்துகொண்டான். அவளிடம் அவனுக்கு அஸ்வமேததத்தனென்னும் புத்திரன் பிறந்திருக்கிறான். இவ்வாறு இந்தப்பூரு, பாண்டு இவர்களுடைய வம்சம்சொல்லப்பட்டது. இந்தப்பூருவம்சத்தைக்கேட்பவனுக்கு எல்லாப்பாவங்களும் விலகிப்போகின்றன.

---

## அறுபத்துநான்காவது அத்தியாயம்.

### அம்சாவதரணபர்வம். (தொடர்ச்சி.)



(உபரிசரவஸுவின் சரித்திரமும், வியாஸர், பீஷ்மர், சித்ராங்கதன், விசித்ரவீர்யன், த்ருதராஷ்டிரன், பாண்டு, விதுரர், பாண்டவர்கள், கௌரவர்கள், பாண்டவர்களின் புத்ரர்கள் முதலான குருவம்சத்தவரின் ஜனனமும்.)

எப்போதும் தர்மத்தைவிடாதவனும் வேதாத்தியயனமுள்ளவனும் பரிசுத்தனுமாகிய உபரிசரனென்னும்ராஜா ஒருவன் இருந்தான். அவன் எப்போதும் வேட்டையாடிக்கொண்டேயிருந்தான். பூருவம்சத்தவரை விருத்திசெய்கிறவனாகிய அந்த உபரிசரவஸுவென்னும் ராஜாவானவன், இந்திரன்சொன்னதனால் அழகான சேதிதேசத்தைப்பிடித்தான். ஆயுதங்களைவிட்டுவிட்டு ஆஸ்ரமத்தில்வஸித்துக்கொண்டு சிறந்த தவஞ்செய்துகொண்டிருந்த அந்த ராஜாவினிடம் இந்திரன்முதலான தேவர்கள், 'இந்தராஜா தன்தபஸினால் இந்திரபதத்திற்குரியவனாயிருக்கிறான்' என்றுநினைத்து அவர்கள் நேரே வந்து அந்தராஜாவை நல்லவார்த்தைகளினால் தவத்திலிருந்து நிவிருத்திக்கச் செய்தனர்.

தேவர்கள் அவனைப்பார்த்து, 'அரசனே! பூமியில் இந்தத்தர்மம் வ்யவஸ்தைதப்பாமலிருக்கவேண்டும்; நீ தர்மத்தை நிலைநிறுத்துவதனாலேதான் அந்தத்தர்மம் உலகத்தையெல்லாம் தாங்கிக்கொண்டிருக்கிறது' என்றுசொன்னார்கள். இந்திரன், 'நான் தேவர்களை

ரக்ஷிக்கிறேன்; நீ மனிதர்களை ரக்ஷி; நீ எப்போதும் முயற்சிசெய்து கொண்டு ஊக்கத்துடன் உலகத்தில் தர்மத்தைக்காப்பாற்று; தர்மத்தில் பிரவர்த்தித்தவனாகிப் பிற்காலத்தில் அழிவில்லாத புண்ணிய லோகங்களையடைவாய்; ஸ்வர்க்கத்திலிருக்கின்ற எனக்குப் பூமியிலுள்ள நீ அன்புள்ள தோழனாக ஆனாய். அரசனே! பூமியென்னும் பசுவுக்கு மடியைப்போன்ற தேசமெதுவோ, அதில் நீ வாஸஞ்செய். இந்தத்தேசம் பசுக்களுக்கு அனுகூலமானது; புண்ணியக்ஷேத்திரம்; தனங்களும் தான்யங்களும் மிகுதியாக உள்ளது; *ஸுகமாக ரக்ஷிக்கக்கூடியது; † சாந்தமானது; ஸுகமான பூஸாரமுள்ளது; இந்தத்தேசம் ஸம்பத்துள்ளது; இதில்தனங்களும் ரத்தினங்கள்முதலியவையும் எப்போதும் இருக்கின்றன. சேதிராஜனே! இந்தப்பூமியில் எல்லாஸம்பத்துக்களும் நிறைந்திருக்கின்றன. ஆதலால், நீ சேதிதேசத்தில் வாஸஞ்செய். கிராமங்களிலுள்ள ஜனங்கள் தர்மந்தவறாதவர்களும் எளிதில் த்ருப்தியடைகிறவர்களும் யோக்யர்களுமாக இருக்கின்றனர். இந்தத் தேசத்தில் விளையாட்டாகவும் பொய்சொல்வதில்லை; மற்றப்படி சொல்வதேது? புத்திரர்கள் பிதாவுடன் பாகஞ்செய்து கொள்வதில்லை; பெரியோர்களுக்கு நன்மை செய்வதிலேயே விருப்பமுள்ளவர்கள். இளைத்த வ்ருஷபங்களை நுகத்தடியிற் பூட்டுகிறதில்லை; அவற்றைப் புஷ்டி செய்விக்கின்றனர். கௌரவத்தைக் கொடுக்கிறவனே! சேதிதேசத்தில் எல்லாவருணத்தாரும் எப்போதும் தங்கள் தர்மங்களில் இருக்கின்றனர். மூன்றுலோகங்களிலும் உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. தேவர்கள்மாத்திரம் அனுபவிக்கத்தக்கதும் தேவலோகத்திலுள்ளதும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பதுமாகிய பெரிய ஸ்படிகமயமான விமானத்தை நீ ஆகாயத்தில் ஸஞ்சரிப்பதற்காக உனக்கு நான் கொடுக்கிறேன். அஃது உன்னிடம் வரும். மனுஷ்யரெல்லாருள்ளும் நீ ஒருவன்தான் தேவர்களேறுகிற உயர்ந்தவிமானமேறி மனித உருவங்கொண்ட தேவனைப்போல் ஆகாசத்தில் ஸஞ்சரிப்பாய். வாடாத தாமரைப்புஷ்பங்களையுடைய வைஜயந்தியென்னும் ஜயத்தைத்தரத்தக்க மாலையை உனக்குக்கொடுக்கிறேன். அது யுத்தங்களில் ஆயுதங்களால் காயங்கள் படாமல் உன்னைக் காப்பாற்றும். ராஜாவே! இந்திரமாலையென்று கியாதிபெற்றதும் பாக்கியத்தைக் கொடுப்பதும் நிகரற்றதுமான இந்தமாலையே இந்த லோகத்தில் உனக்குச் சிறந்தஅடையாளமாக இருக்கும்'

* ஸ்வர்க்கம் போன்றதாதலால் ரக்ஷிக்கத்தக்கது என்பது பழையஉரை.

† கொடிய ஜந்துக்களில்லாதது என்பது கருத்து.

என்று சொன்னான். இந்திரன் அவனுக்குத் தான் அன்புடன் ஒன்று கொடுக்கக்கருதி, சிஷ்டர்களைக் காப்பாற்றுதற்குரிய ஒரு மூங்கிற்கோலையும் அவனுக்குக் கொடுத்தான். இவ்வாறு இந்திரன் ராஜாவைச் சந்தோஷப்படுத்தித் தவத்திலிருந்து நிவிர்த்திக்கச்செய்தான். அந்தத் தேவகாரியத்தை நிறைவேற்றித் தேவர்களுடன் சென்றான்.

அதன்பின், சேதிதேசத்தரசன் இந்திரன் கொடுத்த ஆபரணமாகிய வைஜயந்திமாலையை அணிந்துகொண்டும், அவனாற்கொடுக்கப்பட்ட அந்தவிமானத்தில் ஏறிக்கொண்டும் நகரத்துக்குப் போனான். அப்போது பூமியில் இந்திரனைப் பூஜிப்பதற்காக அந்த அரசன் அந்தக் கோலுக்கு எல்லா உத்ஸவங்களிலும் சிறந்த நகரப்ரவேசம் என்கிற உத்ஸவத்தைச் செய்வித்தான். மஹாராஜாவே! அதுமுதல் இன்னமும் அந்தராஜா நடத்தினபடி எல்லா ராஜஸ்ரேஷ்டர்களும் மார்கழிமாதம் சுக்கிலபக்ஷத்தில் கோலுக்கு நகரப்ரவேசத்தைப் பெரிய யாகமாகச் செய்கின்றனர். அதற்குமறுதினம் அந்தக்கோலைப் பொற்கிங்கிணிகளாலும் சந்தனங்களாலும் புஷ்பமாலைகளாலும் ஆபரணங்களாலும் அலங்காரஞ்செய்து, அரசர்கள் எடுத்து நாட்டுகின்றனர். புஷ்பமாலைகளாற்சுற்றப்பட்டதும் முப்பத்திரண்டுசாண் அளவுள்ளதுமாகிய அந்தக் கோலைத்தூக்கி ஸுவர்ணமயமான வஸ்திரங்களை அந்தக் * கோலுக்குச்சுற்றி, வஸ்திரங்களினாலும் அன்னபானங்களினாலும் பிராமணஸ்ரேஷ்டர்களைத் திருப்திசெய்வித்து அவர்களால் புண்ணியாஹவாசனஞ்செய்வித்து ஆறுகஜம் உயரமிருக்கும்படி பள்ளத்தில் அந்தத் துவஜத்தைநாட்டுகின்றனர். அந்தக்காலத்தில் சங்கங்களும்பேரிகளும் மிருதங்கங்களும் வாசிக்கப்படும். மஹாத்துமாவான உபரிசரவஸுவினிடம் அன்பினால் தானே கோல்வடிவமெடுத்துக்கொண்டுவந்த பகவானாகிய இந்திரன் அந்தக்கோலில் பூஜிக்கப்படுகிறான். மாணிபத்திரன்முதலிய யக்ஷர்களும் தேவர்களுடன்கூடப் பூஜிக்கப்படுகின்றனர். வேண்டுகிறவர்களுக்கு அனேகவிதமான தானங்களைக்கொடுத்து இஷ்டமித்திரர்களுடன்புஷ்பமாலைகளாலும் பலவிதஆடைகளாலும் அலங்காரஞ்செய்துகொண்டு ராஜாவின் ஆஜ்ஞையினால் ஜலம்நிரம்பிய அநேகம்தோல்துருத்திகளைக்கொண்டு விளையாடி, ராஜாவைக்கண்டு வேடிக்கையான பேச்சுகளைப்பேசி, நகரத்து ஜனங்களும் கிராமத்து ஜனங்களும் விளையாடுகின்றனர். ஸூதர்களென்னப்பட்ட பௌராணிகர்களும், அரசனைப்பற்றிய ஸ்தோத்திரங்களைப்பாடுகிற மாகதர்களும், நாடகம் ஆடுகிறவர்களும், நர்த்தனஞ்செய்கிறவர்களும் ஸந்தோஷிக்

* இஃது இந்திரத்வஜமெனவும் வழங்கும்.

கின்றனர். ராஜஶ்ரேஷ்டரே! அந்த உபரிசரராஜன்காலத்தில் எல்லாரும் ஸந்தோஷமாகப் பெரியஉத்ஸவத்தைச்செய்தனர். அப்போது, சேதிதேசத்தரசனுன உபரிசரவஸு அந்தப்புரஸ்திரீகளோடும் மந்திரிகளோடும் எல்லாஆபரணங்களையும் அணிந்துகொண்டும், ஸுவர்ணமயமான பீதாம்பரங்களை உடுத்துக்கொண்டும், உயர்ந்தசாதிலிங்கம் பூசிக்கொண்டும் ஸந்தோஷமாகஇருந்தான். சேதிராஜாவான வஸுவானவன் எப்படி ஸந்தோஷமாக இந்திரனுடைய உத்ஸவம் செய்தானே அப்படியே தேசத்திலுள்ளவர் அனைவரும் இந்திரோத்ஸவத்தைக் கொண்டாடினுர்கள். வஸுவினுற்செய்யப்பட்ட இந்தச் சிறந்தபூஜையைக்கண்டு தேவேந்திரனும் ஹரிகள்என்றுபெயருள்ள குதிரைகள் பூட்டின ஆகாசத்திற்போகின்ற தன்ரதத்தில் இந்திராணியுடன் ஏறிக்கொண்டு அப்ஸரஸுகளுடைய கூட்டங்களினுற் சூழப்பட்டவனுக வந்து, ராஜஶ்ரேஷ்டனுன உபரிசரவஸுவைச்சந்தித்து, 'ஜனங்களாகட்டும், அரசர்களாகட்டும், சேதிராஜாவைப்போல ஸந்தோஷமாக என்னுடைய உத்ஸவத்தைச்செய்து கொண்டாடுவாராயின், அவர்களுக்கும் அவர்கள்தேசங்களுக்கும் ஸம்பத்தும் ஜயமுமுண்டாகும்; அப்படியே தேசம் செழுமையாகவும் ஸந்தோஷமாகவுமிருக்கும். அநேகவிதமானபயிர்கள் கெடுதியில்லாமல் உண்டாகும். ராக்ஷஸர்களும், பிசாசர்களும் அவற்றை எவ்வகையிலும் கெடுக்கமாட்டார்கள்' என்றுசொன்னுன்.

வேந்தரே! இவ்வாறு அந்தமஹாத்மாவாகிய தேவேந்திரனுல் வஸுமஹாராஜன் பிரீதியுடன் கௌரவிக்கப்பட்டான். இவ்வாறு கௌரவித்துத் தேவேந்திரன் தன்னிடஞ்சென்றுன். எந்தமனிதர் பூமிகள் இரத்தினங்கள் முதலியவற்றைத் தானஞ்செய்து இந்திரோத்ஸவஞ்செய்கின்றனரோ அவர் உபரிசரவஸுவைப்போலவே பூஜிக்கப்படுவர். இந்திரனுற்கொண்டாடப்பட்ட வஸுவென்னும் சேதிராஜன், கேட்டவற்றைக் கொடுத்துக்கொண்டும் மஹாயாகங்களையும் இந்திரோத்ஸவத்தையுஞ் செய்துகொண்டும் சேதிதேசத்திலிருந்தே இந்தப்பூமியையெல்லாம் தர்மமாகப் பரிபாலனஞ்செய்தான். சேதிராஜாவான உபரிசரவஸு இந்திரனிடத்தில் பக்தியோடு இந்திரோத்ஸவத்தைச் செய்தான்.

அவனுக்கு அளவற்ற மஹிமையுள்ளவர்களும் மிகுந்த பராக்கிரமமுள்ளவர்களுமாகிய ஐந்துபுத்திரர்களிருந்தார்கள். சக்கரவர்த்தியாகிய அந்தராஜா புத்திரர்களை அநேகராஜ்யங்களில் பட்டாபிஷேகம் செய்வித்தான். ராஜாவே! மகததேசத்து அரசர்களில் பிரஸித்தி

பெற்றமஹாரதனுகியபிருஹத்ரதனும்பிரத்தியக்ரகனும்மணிவாஹன னென்று வழங்கப்பட்ட குசாம்பனும் மத்ஸில்லனும் தோல்வியடையாத யதுவென்னும் ராஜாவுமாகிய இவர்கள் மிகுந்தமஹிமையுள்ள அந்த வஸுவென்னும் ராஜரிஷியின் புத்திரர்கள். இந்தப்புத்திரர்கள் தங்கள்பெயர்களினுலேயே தேசங்களேயும் நகரங்களேயும் ஏற்படுத்தினர். உபரிசரவஸுவின் புத்திரர்களாகிய ஐந்துராஜாக்களும் தனித்தனி வம்சங்களோடு நெடுங்காலம் இருந்தார்கள். இந்திரக்ருஹத்திலும் ஆகாசத்திலும் ஸ்படிகமயமான விமானத்திலுமிருக்கும்போது, அந்த மஹாத்மாவான வஸுவென்னும் ராஜாவைக் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் ஸேவித்தனர். அதன்பிறகுதான், அந்தராஜாவுக்கு * உபரிசரன் என்றபெயர் பிரஸித்தமாயிற்று.

அவனுடைய பட்டணத்துக்குச் சமீபத்தில் வெள்ளம்பெருகியோடுகின்ற சுக்திமதியென்னும் நதியைக் கோலாஹலமென்னும் பர்வதம் புருஷரூபமாகக் காமங்கொண்டு தடுத்தது. அந்தக்கோலாஹலமலையை உபரிசரவஸு காலால் உதைத்தான். அந்த உதையினுலுண்டான துவாரத்தினுல் அந்தநதி வெளியிற்போயிற்று. அந்த நதியினிடம் கோலாஹலபர்வதத்திற்கு ஆணும்பெண்ணுமாகிய இரண்டுகுழந்தைகள் பிறந்தன. அரசன் கோலாஹலமலையின் தடையினின்று விடுவித்ததனுல் ஸந்தோஷமடைந்த சுக்திமதிநதி ராஜாவினிடம்சென்று, 'இந்தப்பெண் உனக்கு அரசியாகவும் இந்த ஆண் உனக்குச் சேனுதிபதியாகவும் இருக்கவேண்டும்' என்று தெரிவித்தது. சுக்திமதிநதி சொன்னதைக்கேட்டு, அவ்விரண்டு குழந்தைகளேயும்பார்த்து, ராஜரிஷிகளில் ஶ்ரேஷ்டனும் ஸம்பத்தைக்கொடுப்பவனும் வீரனுமான வஸு அந்தப்பிள்ளேயைச் சேனுதிபதியாகவும் கிரிகையென்னும் பெயருள்ள அந்தப்பெண்ணேத் தனக்குப் பத்நியாகவுஞ் செய்துகொண்டான்.

வஸுவின்மனேவியான கிரிகை ருதுகாலத்துக்குப்பின் ஸ்நானஞ் செய்து பரிசுத்தையாக இருந்துகொண்டு, ஸந்ததிக்காகத் தனக்கு விருப்பம் இருப்பதைத் தெரிவித்தாள். அதேதினத்தில் பிதிர்க்கள் அன்புடன் அந்த ராஜஶ்ரேஷ்டனிடம் வந்து 'மிருகங்களேக் கொல்' என்று சொன்னுர்கள். புத்திமான்களிற் சிறந்தவனுகிய அந்த அரசன் அப்போது பிதிர்க்களின் கட்டளேயினுல் அந்தக்கிரிகையை விட்டுவிட்டு அவள்மேல் காமத்துடன், இரண்டாம் லக்ஷ்மியே நேரே வந்தாற்போன்ற மிகுந்த அழகுள்ள அவளேயே நினேத்

* மேலே சஞ்சரிப்பவன்.

துக்கொண்டு வேட்டையாடினன். அசோகங்கள் சண்பகங்கள் மாமரங்கள் தினிசமரங்கள் புன்னைமரங்கள் கொன்றைமரங்கள் மகிழமரங்கள் உயர்ந்தபாதிரிமரங்கள் பலாமரங்கள் தென்னைமரங்கள் சந்தனமரங்கள் மருதமரங்களாகிய இனியகனிகளோடு கூடியவையும் அழகும் பரிசுத்தமுமுள்ளவையுமான இந்தப்பெரியமரங்களோடு கூடியதும், குயில்கள்நிரம்பச் சப்திக்கப்பெற்றதும், மதமுள்ளவண்டுகள் ரீங்காரங்கள் செய்யப்பெற்றதும், சைத்ரரதமென்னும் குபேரனுடைய தோட்டத்துக்கு ஒப்பானதுமாகிய அந்தவனத்தை வஸந்தகாலத்திற் பார்த்து மன்மததாபமுற்ற மனத்துடன் கிரிகையைக் காணுமல் காமத்தாற் கொதிப்படைந்து ஸஞ்சரிக்கையில், தற்செயலாகப் புஷ்பங்களால் கிளைகளின் நுனிகள் மறைக்கப்பட்டதும் தளிர்களினல் சோபிக்கின்றதும் அழகானதும் பூங்கொத்துகளால் மறைக்கப்பட்டதுமாகிய ஓர் அசோகமரத்தைக் கண்டான். அதன்கீழ் நிழலில் ஸுகமாக வீற்றிருந்தராஜன் காற்றினல் கொண்டுவரப்பட்டதும் *தேன்மணமுள்ளதுமாகிய அந்தஇனிய புஷ்பவாஸனையைமோந்து ஸந்தோஷமடைந்தான். மனைவியை நினைக்கும்போது அந்தராஜாவுக்குக் காமமென்னும் அக்னிவிருத்தியாயிற்று. அவன்இருண்ட காட்டில் ஸஞ்சரிக்கும்போது அவனுடையவீரியம் வெளிப்பட்டது. வெளிப்பட்டமாத்திரத்தில், அந்த அரசன், 'என்னுடையவீரியம் வீணுகவிழக்கூடாது' என்றுநினைத்து, உடனே அதனை இலையில் ஏந்தினன். ராஜா அந்தவீரியத்தில் தன்மோதிரத்தினல் முத்திரை வைத்துச் சிவந்த அசோக புஷ்பங்களாலும் தளிர்களினலும் மூடிக் கட்டினன். 'இந்த என்வீரியம் வீணுக விழுந்ததாகாமலும், அந்த என்பத்தினியின் ருதுகாலம் வீணுகாமலும் எவ்வாறிருக்கும்' என்று அறம் பொருள் இவைகளின் நுட்பமான உண்மையை அறிந்திருந்த அந்த ஸமர்த்தனுகிய ராஜஶ்ரேஷ்டன் சிந்தித்துப் பலமுறை ஆராய்ந்து பார்த்து, தன்வீரியம் வீணுவதில்லையென்பதை நிச்சயித்து, அதைத் தன்பத்தினிக்கு அனுப்புவதற்கு 'இதுகாலம்' என்று நினைத்து, அதற்குக் கர்ப்பாதான மந்திரத்தைஜபித்து, அருகே நிற்பதும் விரைவாகச் செல்லத்தக்கதுமாகிய ஒருபருந்தினிடம் சென்று, 'பிரியமானவனே! என்விருப்பத்தைச் செய்வதற்காக இந்த என் வீரியத்தை என்கிருகத்திற்குக் கொண்டுபோய் உடனே கிரிகைக்குக் கொடு; இப்போது அவளுக்கு ருதுகாலம்' என்றுசொன்னன்.

* வேறுபாடம்.

மிகுந்தவேகமுள்ள பக்ஷியாகியபருந்து அப்போது அதை எடுத்துக்கொண்டு உடனேகிளம்பி மிகுந்தவேகத்துடன் ஓடிற்று. அந்தப்பருந்து வருவதைப்பார்த்து, மற்றொருபருந்து மாம்ஸத்தையெடுத்துக்கொண்டு போவதாக நினைத்து உடனே அதைஎதிர்த்தது. பிறகு, ஆகாசத்தில் அவ்விரண்டும் மூக்கினால் சண்டைசெய்தன. அவை சண்டைபோடும்போது அந்தவீரியம் யமுனாஜலத்தில் விழுந்தது. அங்கே அத்திரிகையென்று பெயர்பெற்ற ஒருசிறந்த அப்ஸரஸ் பிரம்மாவின்சாபத்தினால் மீன்ஜன்மமெடுத்து யமுனையில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தாள். அந்த மச்சரூபத்தோடுகூடிய அத்திரிகையானவள் பருந்தின்காலிலிருந்து தவறிவிழுந்த அந்தவஸுவினுடைய வீரியத்தை விரைவாக ஓடிவந்து எடுத்துக்கொண்டாள். பரதஶ்ரேஷ்டரே! அதற்குப்பிறகு, பத்தாவதுமாஸம் வந்தபோது ஒருநாள் அந்தமீனைச் செம்படவர்கள் பிடித்தார்கள். அதன்வயிற்றிலிருந்து மனுஷ்யர்களாகிய ஒருஸ்திரீயையும் ஒருபுருஷனையும் எடுத்தார்கள். உடனே, ராஜாவினிடஞ்சென்று, 'வேந்தரே! மீனின் சரீரத்தில் இந்த இரண்டுமனுஷ்யர் உண்டாயிருந்தனர்' என்று அந்த ஆச்சரியத்தைத் தெரிவித்தனர். அப்போது ராஜாவாகிய உபரிசரவஸு அந்தக்குழந்தைகளுள் ஆண்குழந்தையை வாங்கிக்கொண்டான். அந்த ஆண்குழந்தை தர்மசீலனும் ஸத்தியந்தவறாதவனுமாகிய மத்ஸ்யனென்னும் ராஜாவானான். அந்தமீன் உடனே சாபம்நீங்கி அப்ஸரஸாக ஆய்விட்டது. அந்த அழகான அப்ஸரஸுக்கு முன்னே பகவானாகிய பிரம்மா, 'நீ திரியக்குஜாதியிலிருந்து இரண்டு மனுஷியர்களைப் பெற்றுப் பிறகு சாபவிமோசனம் அடைவாய்' என்றுசொல்லியிருந்தார். அதனால், அந்தச்சிறந்த அப்ஸரஸ் அவ்விரண்டு குழந்தைகளையும்பெற்றுச் செம்படவர்களால் கொல்லப்பட்டு மீன்வடிவத்தைவிட்டுத் தேவரூபத்தைஅடைந்து, உடனே ஸித்தர்களும் ரிஷிகளும் சாரணர்களும் ஸஞ்சரிக்கும்மார்க்கத்தில் சென்றாள்.

மீனின்பெண்ணாகிய அந்தக்கன்னிகை மீன்நாற்றம் உள்ளவளாயிருந்ததினால் அவளை உபரிசரவஸு, 'இவள் உனக்குப் பெண்ணாகவிருக்கட்டும்' என்று ஒருசெம்படவனுக்குக் கொடுத்தான். அழகும் விநயமுமுள்ளவளும் குணங்களெல்லாம் நிரம்பினவளும் மந்தஹாஸமுகமுள்ளவளுமான ஸத்யவதியென்று பெயருள்ள அவள் மீன்பிடிப்பவனிடம் இருந்ததனால் சிலகாலம்வரையில் மத்ஸ்யகந்தையென்ற பெயரோடேயேயிருந்தாள். தன்தகப்பனுக்குப் பணிவிடை

செய்வதற்காக ஜலத்தில் ஓடத்தை நடத்திக்கொண்டிருக்கும் அவ ளைத் தீர்த்தயாத்திரையாக ஸஞ்சரித்துக்கொண்டுவந்த பராசரர் கண் டார். மிகவும் அழகு நிரம்பினவளும் தேவர்களும் விரும்பத்தக்கவ ளும் புன்னகையோடுகூடிய முகமுள்ளவளுமாகிய அந்தப் பெண் ணைக்கண்டவுடன், சிறந்தஞானியான அந்தப்பராசரரிஷி காமமுற்றார். வாழைமரம்போன்ற தொடைகளையுடையவளும் தேவதையைப்போ ன்றவளுமாகிய அந்த வஸுபுத்திரியான கன்னிகையைப்பார்த்து அவ ளுடைய பிறப்பைப்பற்றிச் சிந்தித்துத் தெரிந்துகொண்டு, சக்தியின் புத்திரராகிய பராசரரென்னும் முனிஸ்ரேஷ்டர், 'உயர்ந்தபெண்ணே! இந்த ஓடத்தைநடத்துகிற ஓடக்காரன் எங்கே? சொல்' என்று அவ ளைக்கேட்க, மத்ஸ்யகந்தை 'பிராமணரே! நான் ஸந்ததியில்லாத செம்படவனுக்குப்பெண்; அவன்பிரியத்தைச் செய்யக்கருதி ஆயி ரம் ஜனங்கள் நிரம்பிய இந்த ஓடத்தை நான் நடத்துகிறேன்' என்று சொன்னாள். பராசரமஹரிஷி, 'நல்லது; வஸுவின்புத்திரியே! அழ கானவளே! ஏன் தாமதிக்கிறாய்? ஓடத்தைநடத்து. ஆயிரத்தில்பாதி ஐந்நூறு சங்கியையுள்ள பொன் உனக்கு வரப்போகிறது. நான் ஒரு வன் இருப்பேன். சீக்கிரம்ஓட்டுவாய்' என்றுசொல்ல, மத்ஸ்யகந் தையானவள், 'ஆகட்டும்' என்றுசொல்லி ஜலத்தில் ஓடத்தைநடத்தும் போது, தன்னைப்பார்க்கின்ற பராசரமுனியை நோக்கி, 'என்னைச் செம்படவன்பெண்ணாகிய மத்ஸ்யகந்தையென்று ஜனங்கள் சொல்லு கின்றனர். இந்தத் துக்கத்தினால் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற *நான் ஜனித்த வரலாற்றை நீர் எவ்வாறுஅறிவீர்? சொல்லவேண்டும்' என்றுகேட்க, பராசரர் சொல்லத்தொடங்கினார்.

'வஸுபுத்திரியே! உன் தேகத்தைப் பார்த்தமாத்திரத்தில் உன் னுடைய ஸ்னேஹம் பெறுவதைப் பிரயோஜனமாகக்கருதி, என்னு டைய திவ்யஜ்ஞானத்தினால் நான்கண்டதை உனக்குச் சொல்லப்போ கிறேன்; அதை நீ கேள். பர்ஹிஷத்துக்கள் என்று சொல்லப்பட்ட பிதிர்த்தேவதைகள் இருக்கின்றனர்; அவர்கள் அமிர்தபானஞ்செய் தவர்கள். நீ அவர்களுக்கு மனத்தினால் உண்டாக்கப்பட்ட பெண். † அச்சோதம் என்பதாகத் தேவலோகத்தில் தடாகம் ஒன்றிருக்கின் றது; அதிலிருந்து நீ உண்டானதனால் உனக்கு அச்சோதையென்று பெயர் உண்டாயிற்று. நீ உன்பிதாக்களை ஒருகாலத்துங் கண்டதில்லை. அவர்களின் மனத்தினால் நீ உண்டானவளாதலால், உன்பிதிர்க்களை நீ

* 'வஸுபுத்திரியே' என்று தன்னை அவர் விளித்ததுபற்றிச் சொல்லியது.

† தெளிந்த ஜலமுள்ளது.

அறியாய்; அதனால், உன்பிதிர்க்களைத்தாண்டி நீ, அத்ரிகையென்னும் அப்ஸரஸுடன்சேர்ந்து ஆகாசத்தில் தேவவிமானமேறி அங்கேயே ஸஞ்சரித்துக்கொண்டிருந்த வஸுஎன்றுபெயர்பெற்ற மனுபுத்திரனை உனக்குப்பிதாவாக விரும்பினாய். வேறுபிதாவைப் பிரார்த்தித்ததனாலுண்டான மனத்தின் மாறுபாட்டினால் நினைத்தபடி ஸஞ்சரித்துக்கொண்டிருந்த நீ யோகசக்தியை இழந்து கீழேவிழுந்தாய். அப்படி நீ விழுந்துக்கொண்டிருந்தபோது ஸமீபத்தில் மூன்றுவிமானங்களைக்கண்டாய். பலகணிவழியாகவிழுகின்ற ஸூர்யகிரணத்தில் புகைபோற்காணப்படும் திரஸரேணு என்னப்பட்ட சிறிய அணுவளவாக உற்றுப்பார்க்கக்கூடியவர்களும் அவயங்களின்பிரிவுகள் தோன்றாதவர்களும் அவயங்களுள் மறைந்தவைபோன்ற தேகங்களுள்ளவர்களுமான உன்பிதிர்க்கள் அந்தவிமானங்களில் இருப்பதைக்கண்டு, தலைகீழாகவிழுந்துகொண்டே துக்கத்துடன் அவர்களைநோக்கி, 'தந்தைகளே' என்றாய். அவர்கள், 'பயப்படாதே' என்று சொன்னதனால் ஆகாசத்திலேயே நின்றாய். அதன்பின், தீனஸ்வரத்தோடு உன் பிதாக்களுக்கு ஸமாதானம்செய்தாய்.

பிழைசெய்ததனால் யோகமஹிமை தப்பிப்போன அந்தக்கன்னிகையான உன்னைநோக்கி அந்தப்பிதிர்க்கள், 'புன்னகையுள்ளவளே! உனது குற்றத்தினால் யோகசக்தியற்று நீ விழுகிறாய்; இந்தலோகத்தில் தேவர்கள் எந்தச்சரீரங்களால் கருமங்களைச் செய்கின்றனரோ அவற்றிலேயே அக்கருமங்களின் பலனை அனுபவிக்கின்றார்கள். மனுஷ்யர்களோவெனில், தங்கள் நல்வினை தீவினைப்பயன்களை மற்றொரு தேகமெடுத்து அனுபவிக்கிறார்களென்பது நிச்சயம். தேவர்களாயிருக்கையிற் செய்தகருமங்கள் அப்போதேபலிக்கும். மனிதராயிருக்கையிற் செய்த கருமங்கள் வேறு ஜன்மத்திற்பலிக்கும். பெண்ணே! ஆதலால், நீ விழுகிறாய்; அடுத்தஜன்மத்தில் இதன்பலனைஅனுபவிப்பாய். நீ பிதாஇல்லாதபெண்ணாகவும் வஸுவின் புத்திரியாகவும் இருக்கநினைத்தாய். அத்திரிகையென்பவள் கங்கை யமுனைகளின் ஸங்கமத்தில் மத்ஸ்யரூபமாகப் பிறந்திருக்கிறாள். மத்ஸ்யமாயிருக்கின்ற அவளுடைய கர்ப்பத்தில் ராஜாவுக்குப்பிறந்த பெண்ணாகஆகப் போகிறாய். நீ பராசரருக்கு ஒரு புத்திரனைப் பெறப்போகிறாய். அந்தப்பிரம்மரிஷியாகிய புத்திரன், ஒன்றாகவிருக்கிற வேதத்தை நான்காக வகுக்கப்போகிறான். மஹாபிஷக்என்னும் ராஜாவின் புத்திரனாகிய சந்தனுவின்கீர்த்தியை விருத்திசெய்கிறவர்களும் வீரர்களும்

கியாதிபெற்றவர்களுமாகிய மூத்தவனை சித்ராங்கதனையும் பிறகு விசித்ரவீர்யனையும் பெறப்போகிருய். இந்த ஸத்புத்ரர்களைப்பெற்ற பிறகு, திரும்பவும் உன் உலகத்துக்குப்போவாய். பிதிர்க்களின் அபராதத்தினல் இழிவான ஜன்மத்தை யடைவாய். இந்த ராஜாவுக்கே அத்திரிகையினிடம் நீ பெண்ணகப் பிறக்கப்போகிருய். இருபத்தெட்டாவது சதுர்யுகத்தைச்சேர்ந்த துவாபரயுகத்தில் நீ மத்ஸ்ய யோனியில் ஜன்மத்தையடைவாய்' என்று சொன்னர்கள்.

அவர்களால் முன் ஜன்மத்தில் இவ்வாறுசொல்லப்பட்ட நீ அழகானஸத்தியவதியாக இப்போதுபிறந்திருக்கிருய்; அத்திரிகையென்று பெயர்பெற்ற சிறந்தஅப்ஸரஸ் பிரம்மாவின்சாபத்தினல் மீன்ஜன்மமடைந்து உன்னைப்பெற்றபிறகு ஸ்வர்க்கஞ்சென்ருள். அந்த அச்சோதையென்னும்பெண்ணகிய நீ வஸுவென்னும்ராஜாவின் வீரியத்திற்கு, மீன்ஜன்மமெடுத்த அந்த அப்ஸரஸினிடம் பிறந்திருக்கிருய். ஆதலால், இவ்வாறு வஸுவின்புத்ரியாக இருப்பவளே! உனக்குச் சுபமுண்டாகக்கடவது. வம்சவ்ருத்திகரனகிய புத்திரனை வேண்டுகிறேன். அழகானவளே! என்னுடன் ஸங்கமஞ்செய்' என்று நயமாகப்பேசினர்.

அவள் பூர்வஜன்மத்தின் ஞாபகத்தையடைந்து ஆச்சர்யத்தினல் அங்கமெல்லாம் பூரித்தவளாகி, 'பகவானே! அக்கரையில் ரிஷிகளிருப்பதைப்பாரும்; அவர்கள் பார்க்கையில் நாமிருவரும் எவ்வாறு சேரலாம்?' என்றுகேட்டனள். அப்படி அவள் சொன்னவுடன், எல்லாந்தெரிந்தவரும் ஸமர்த்தருமான பராசரமஹரிஷி பனியை உண்டுபண்ணினர். அந்தப்பனியினல் அந்தத் தேசமெல்லாம் இருளடைந்ததுபோலாயிற்று. அந்தமஹரிஷியினல் ஸ்ருஷ்டிசெய்யபட்ட அந்தப்பனியைக்கண்டு அந்தக்கன்னிகை வியப்புற்றவளாகி வெட்கத்தோடும் *விருப்பத்தோடும் அம்முனிவரை நோக்கிச்சொல்லலானள். 'பகவானே! நான் எப்போதும் தந்தைக்குட்பட்டிருக்கிற கன்னிகையென்று அறியும். குற்றமில்லாதவரே! உங்களுடைய சேர்க்கையினல் என்னுடையகன்னிகாதர்மம் கெட்டுப்போம். ப்ராம்மணஶ்ரேஷ்டரே! ரிஷியே! சிறந்த ஞானமுள்ளவரே! கன்னிகாதர்மம் கெட்டுப்போனல் நான் எப்படி வீடுபோகமுடியும்? ஆதலால், நீர் சொன்னபடி இருக்க நான்விரும்பவில்லே. பகவானே! நீங்கள் இதை நன்ருக ஆராய்ந்து அதன்பின் செய்யவேண்டியதைச்செய்யுங்கள்' என்ருள்.

*'தபஸ்விநீ' என்பது கிருஷ்ணசாரியர்பாடம்; 'தந்தையின்சொற்படியிருப்பதாகிய நியமமுள்ள கன்னிகை' என்பதுபொருள்.

இவ்வாறுசொன்ன அவளைநோக்கி அந்தரிஷிஸ்ரேஷ்டர் மிகுந்த அன்புடன், 'பயமுள்ளவளே! உயர்ந்தபெண்ணே! என்விருப்பத்தை நிறைவேற்றினபின் நீ கன்னிகையாகவே ஆகிவிடுவாய்; உனக்கு வேண்டிய வரத்தையும்கேள்; அழகியபுன்னகையுள்ளவளே! என்னு டைய அனுக்ரகம் எப்போதும் வீணானதில்லை' என்றுசொன்னார். இவ்வாறு அவர் சொன்னபின், அவள் தன் சரீரத்தில் மேலான நல்ல மணமிருப்பதையே வரமாகக்கேட்டாள். அந்தஸமர்த்தரான பராசர பகவானும் அவள்மனத்துக்கு இஷ்டமானவரத்தை அவளுக்குக் கொடுத்தார். பிறகு,வரத்தைப்பெற்றுக்கொண்டு ஸந்தோஷமடைந்த அவள் ஸ்திரீகளுக்குரிய சிறந்த விருப்பக்குறிப்புக்களினால் அலங்கரிக் கப்பட்டவளாகி, ஆச்சர்யமான செய்கையுள்ள ரிஷியுடன்சேர்க்கை யையடைந்தாள். அந்த வரத்தினால் இவளுக்குக் கந்தவதி யென்னும் பெயர் பூமியில் பிரஸித்தமாயிற்று. பூமியில் மனிதர்கள் ஒருயோஜனை தூரத்திலிருந்து அவளுடைய கந்தத்தைமோந்து அறிந்தனர். அத னால், அவளுக்கு யோஜனகந்தையென்று மற்றொருபெயரும் சொல் லப்பட்டது. இவ்வாறு மேலானவரத்தையடைந்து மனமகிழ்ச்சியுள் ளஸத்யவதியானவள் பராசருடன் புணர்ந்து உடனே கர்ப்பத்தைப் பிரஸவித்தாள். சிறந்தமஹிமையுள்ள அந்தப்பராசரபுத்திரர் யமுனை யின் தீவிற்பிறந்தார். அவர் தாயாரிடம் விடை பெற்றுக்கொண்டு தவத்திலேயே மனத்தைச் செலுத்தினார். அவர், 'உனக்குக் காரிய மாகவேண்டியபோது என்னை நீ நினைத்தால் நானே என் ரூபத்தை உனக்குக் காண்பிப்பேன்' என்று தாயாருக்குச் சொல்லினர்.

இவ்வாறு, பராசருக்கு ஸத்யவதியினிடம் த்வைபாயனர் பிறந் தார். அவர் சிசுவாயிருக்கும்போது, த்வீபத்தில் விடப்பட்டதனால் * த்வைபாயனர் என்று அவருக்குப்பெயர்வந்தது. எல்லாம்தெரிந்த அந்த த்வைபாயனர் தர்மம் ஒவ்வொருயுகத்துக்கும்காற்பங்குவிலகிப் போவதையும் மனிதர்களின் ஆயுஸும் சக்தியும் யுகங்களுக்குத்தக்க படியிருப்பதையும்பார்த்து வேதத்தையும் பிராமணர்களையும் அநுக் ரஹிக்கக்கருதி, வேதங்களை வகுத்ததனால், அவருக்கு 'வ்யாஸர்' என்றுபெயர்வந்தது. ஸமர்த்தரும் மிகச்சிறந்தவரும் வேண்டின வரத்தைக் கொடுப்பவருமாகிய அந்தவியாஸர்,ஸுமந்துவுக்கும் ஜை

* த்வீபத்தில் இருந்ததனால் த்வீபர் என்பது பராசரரைச்சொல்லுகிறது; அவருடையபுத்ரர் என்பதுபற்றி த்வைபாயனர் என்றபெயர் வந்ததென்று வியாகரணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. த்வீபமாகிற அயனம் - இடம்; அதில் உண்டானதனால் த்வைபாயனர்என்று பொருள்கூறுவது பழையஉரை.

ஸ்ரீ:

பராசரருக்கும் ஸத்தியவதிக்கும் விவாஹம்நடந்ததாகச் சொல்லுகிறபகுதி [1]ப்ரக்ஷிப்தமென்று வெளிப்படையாகத் தெரிகிறபடியால், முன்பு மொழிபெயர்க்கப்படவில்லை. இப்பால், சிலநண்பர்கள் அதனையும் மொழிபெயர்க்க வேண்டுமென்று விரும்பியபடியால் அதனைத் தனியே மொழிபெயர்த்து வெளியிட்டோம்.

இனி, ப்ரக்ஷிப்தமென்று தோன்றுகிற அதிகபாடங்கள் அங்கங்கே குறிப்புக்களுடன் வெளியிடப்பெறும்.

பராசரஸத்யவதி விவாஹத்தைப்பற்றிய பாகம் உத்தரதேசபாடத்திலில்லை. தக்ஷிணதேசபாடங்களில் ப்ரக்ஷிப்தமாக இருத்தல் வேண்டும். ஏனெனின்:—

பராசரருக்கும் ஸத்யவதிக்கும் சாஸ்திரீயமாக விவாஹம்நடந்திருந்தால் அவள் மறுபடியும் சந்தனுவை விவாஹம் பண்ணிக்கொள்வது முறையாகாது. வஸிஷ்டர்முதலிய ரிஷிகளும் உபரிசரவஸுவும் பிதிர்க்களும்சேர்ந்து நடத்தின விவாஹம் ஸம்ஸ்காரமாகாமற் போவதற்கு நியாயமில்லை. ஸம்ஸ்காரமாயிருந்தால் இரண்டாவது விவாஹஸம்ஸ்காரம் எப்படிக்கூடும்?

இவ்வளவுபெயர்களும் அறிய நடத்தின விவாஹத்தை ஸத்யவதியின் பிதாவான செம்படவனுக்குமட்டும் தெரிவியாமல் நடத்துவானேன்?

மறுபடியுங் கன்னிகையாவதென்றால் என்ன? விவாஹம்செய்யப்படாதவளாவதா? அப்படியாயின் விவாகம்செய்யப்பட்டவள் விவாஹம் செய்யப்படாதவளாக ஆவதுமுடியுமா? அது ரிஷிகளால் நடத்தப்பட்ட விவாகமாதலின் உலகவழக்கத்தில் வேறுவிவாஹம் நடத்தத் தடையில்லை என்னலாமா? ரிஷிகள்செய்த விவாஹத்தை மாற்றி உலகமுறையில் வேறுவிவாஹம் பெண்களுக்குச் செய்யலாமென்பதற்குச் சாஸ்திரமாவது சரித்திரமாவதுகாணப்படவில்லையே.

மேலும், 'கானீனன்' என்றபதம், 'கன்னியின் புத்ரன்' என்ற அர்த்தத்தில் வருவதை, விதிக்கும் பாணினிஸூத்ரத்தின் வ்யாக்யானத்தில், ஸித்தாந்தகௌமுதியில், 'வ்யாஸரும் கர்ணனும் கானீனர்கள்' என்று உதாரணம் காட்டப்பட்டிருக்கிறது. கர்ணன் குந்திக்கு விவாஹமாகாத பருவத்தில் ஜனித்ததினால் கானீனனானான். அவ்வாறே, வ்யாஸரும் ஸத்யவதிக்கு விவாஹமில்லாமலே ஜனித்திருக்க வேண்டும். அந்தஸூத்ரத்தின் மஹாபாஷ்யத்திலும்,கன்னிகைக்குப் புத்திரனுண்டாவதும், புத்திரனைப்பெற்றவள் கன்னிகையாயிருப்பதும் பொருந்தாவென்று ஆக்ஷேபித்துப் புருஷனும் மனைவியும் மன்னும் நியமம் ஒருவருக்கொருவர் செய்துகொண்டபிறகு புருஷஸம்போகஞ்செய்தவள்கன்னிகையாகாள் என்றும்,அந்த ஏற்பாடில்லாமல் புருஷனைச் சேருகிறவள் கன்னிகைதானென்றும், அவளுக்குப்பிறந்தவன் கானீனனென்றும் ஸமாதானம்சொல்லியிருப்பது, ஸத்யவதிக்

---

1 சேர்க்கப்பட்டது.

கும் பராசரருக்கும் விவாகம் நடந்ததாகச் சொல்லுகிற பக்ஷத்தில் விரோதிக்கிறது. இந்தக் 'கானீனர்' என்ற பெயர் வ்யாஸருக்குப் பிரயோகிக்கப்பட்டிருப்பதை இந்த மஹாபாரதத்திலும் மற்றும்பல நூல்களிலும் பரக்கக்காணலாம்.

மூன்றுவருணங்களைச் சேராதவர்களுக்குமட்டுமே காந்தர்வம், ஆஸுரம், ராக்ஷஸம் என்னும் இம்மூன்றும் உரியனவென்று இந்த அதிகபாடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இது, ஆஸுரம், பைசாசம் என்னுமிரண்டு விவாஹங்கள்மட்டும் அதமங்களென்றும் காந்தர்வமும் ராக்ஷஸமும் க்ஷத்ரியர்களுக்கு முக்கியங்களென்றும் சகுந்தலோபாக்கியானத்திலும், காசிராஜபுத்ரிகளின் ஸ்வயம்வரத்தில் பீஷ்மர் சொல்லும் ஸந்தர்ப்பத்திலும், மனுஸ்மிருதி ௩-வது அத்தியாயத்திலும் சொல்லியிருப்பதற்கு மாறாகஇருக்கிறது.

ஸத்யவதி தன்தந்தையின் ஓடத்தைத் தான் ஓட்டுவதாகவும் தந்தைக்கடங்கின கன்னிகையென்றும் சொல்லியிருக்க, அவளுக்குத் தந்தைமுதலானவர்கள் யாருமில்லைஎன்று பராசரர்சொல்வது எவ்வாறு? செம்படவராஜன் வளர்த்த தந்தையல்லவா? பெற்றதந்தையன்றென்றால் சந்தனுவுக்குக் கன்னிகாதானம் செய்வதற்கு அவன் எவ்வாறு உரியவனாக இருந்தான்?

வியாஸர்அவ்வளவுபெரிய ஞானியாயிருந்தும் தாயாரைமுரட்டுத்தனமாக இகழ்ந்துபேசினாரென்பதும்தந்தைசொன்னபிறகு சிறிது இணங்கினாரென்பதும் அவர்பெருமைக்குச் சிறிதும்பொருந்தவில்லை. வ்யாஸர் வேதங்களைவகுத்துப் பாரதமும்செய்துசிஷ்யபரம்பரையைக் கொண்டு ப்ரவசனங்களும் செய்வித்ததைச் சொல்லி, அதன்பிறகு, ஸத்யவதி தன்வீட்டுக்குச் சென்றாளென்பதும் பொருந்தவில்லை.

மறுபடியும் அவள் கன்னிகையாயிருக்கும்படி பராசரர் வரங்கொடுத்தார் என்றதன்கருத்து யாதெனில், அந்தமஹரிஷியின் திவ்ய சக்தியினால் பதிவ்ரதாதர்மம் கெடாமலிருந்ததும், அதற்கு அடையாளமாகப் புருஷஸம்யோகத்தாலும் ப்ரஸவத்தாலும் தேஹத்திலுண்டாகக்கூடிய எவ்வகை மாறுதலும் உண்டாகாமல் பூர்வஸ்திதியாகவே அவள் இருந்தாளென்பதுமேயாம்.

சகுந்தலைக்கும் துஷ்யந்தனுக்கும் நடந்த காந்தர்வவிவாஹத்திலும் புரோகிதர்முதலியோர்கள் சேர்ந்து ஹோமங்கள்முதலிய சடங்குகளுடன் விவாஹத்தை நடத்தினதாகச் சொல்லியிருப்பதும் காந்தர்வ விவாஹஇலக்கணத்துக்குப் பொருந்தவில்லை. மந்திரமில்லாமல் வதூவரர்கள் மனமொத்துச்சேருவது காந்தர்வமென்று மனு காந்தர்வ விவாஹத்துக்கு இலக்கணங்கூறியிருக்கிறார்.

கண்வருடைய ஆஶ்ரமத்தில் அவருக்குத் தெரியாமல் புரோஹிதர்முதலியோர்கள் விவாஹத்தைச் செய்வித்திருக்கக்கூடுமா?

இதுவும் உத்தரதேசபாடத்திலில்லை. ஆதலால், இதுவும் ப்ரக்ஷிப்தமென்றே தெளிவாகிறது. பின்னும் குறிப்பிடுமிடங்களில் இவ்வாறே கண்டுகொள்க.

## கூச-வது அத்தியாயத்தில் ப்ரக்ஷிப்தமாகவுள்ள கதை.

(உஉஎ-வது பக்கம் குறிப்பிற் பார்க்க.)

அதன்பின், பராசரயோகி, அழகான வனப்ரதேசத்தில், சிறந்த விரிப்பில் [1]வீராஸனம் போட்டுக்கொண்டு தியானத்திலிருந்தார். வெண்பட்டினாற் செய்யப்பட்ட அழகான வீட்டில் மேலே துப்பட்டி போர்த்த படுக்கையில் தம்யோகசக்தியினால் பிரகாசித்துக்கொண்டு, மௌனமாக இருந்த அந்தக் கன்னிகையைக்கண்டு, தம்சித்தத்தை அடக்கிப் பலமுறை ஆராய்ந்து 'எதுசெய்தால் ஸரியாகச்செய்ததாகும்' என்பதைப்பற்றிச் சிந்தித்தார். 'சிஷ்டர்கள் தொன்றுதொட்டுச் செய்துவரும் ஆசாரத்தைச் சிஷ்டாசாரமென்று சொல்லுகின்றனர். வேதங்களையும் தர்மசாஸ்திரங்களையும் தர்மஸூக்ஷ்மங்களையும் அறிந்த பிராம்ணர்கள் ஞானிகளெனப்படுகின்றனர். தர்மந்தெரிந்த பிராமணர்களால் ஶ்ரௌதமென்றும் ஸ்மார்த்தமென்றும் இருவகைத் தர்மங்கள் விதிக்கப்பட்டுள்ளன. தானம் அக்நிஹோத்ரம் யாகம் இவை ஶ்ரௌததர்மத்தின்பிரிவுகள். (அஹிம்ஸை, பொய்யாமை, திருடாமை, பிரம்மசரியம், பற்றில்லாமை ஆகிய) யமங்களோடும் (தூய்மை அல்லது சௌசம், உள்ளதில் திருப்தியடைவது, தவஞ் செய்வது, வேதமோதுவது, ஈஶ்வரத்தியானம்பண்ணுவது ஆகிய) நியமங்களோடுங் கூடிய வர்ணாஶ்ரம தர்மானுஷ்டானம், ஸ்மார்த்தமென்னப்படுகிறது. தர்மமென்னும் பதத்தின் பகுதிக்கு, 'தரிப்பது' அதாவது, 'எல்லாவற்றிற்கும் ஆதாரமாகஇருப்பது' என்றும், 'விடாமல் கூடஇருப்பது' என்றும் பொருள்கள் கூறப்பட்டிருக்கின்றன. இனிய பலனைப் பெறுவிப்பது தர்மமென்று ஆசாரியர்களால் உபதேசிக்கப்படுகிறது. இன்னாதபலனைப் பெறுவிப்பது அதர்மமென்றும் அவர்களால் சொல்லப்பட்டுள்ளது. ஆதலால், இனியபலனைப்பெறுவதற்குத் தர்மத்தையே பற்றவேண்டும். பிராம்மம், தைவம், ஆர்ஷம், பிராஜாபத்யம் என்னும் விவாஹங்கள்மட்டும்பிராமணர்களுக்குத் தர்மமானவை; காந்தர்வவிவாஹம் ஒருபொழுதும் தர்மமாகாது. பிரம்மக்ஷத்ரியவைசியர்களென்னும் மூன்றுவருணங்களிற் சேராதவர்களுக்குக் காந்தர்வம் ஆஸுரம் ராக்ஷஸமென்னும் விவாஹங்கள் தர்மமானவை. பைசாச விவாஹம் யாரும் செய்யத் தகாதது. பைசாசமென்னும் எட்டாவது விவாஹம் இழிவானது. கோபத்தைஇயல்பாகவுடையவள், அங்கஹீனமுடையவள், தன்மாத்ருவம்சத்திற்பிறந்தவள், வயஸில் முதிர்ந்தவள், வைராக்யமுள்ளவள், மலட்டுலக்ஷணமுள்ளவள், பெரும் பாதகமுள்ளவள், ரஜஸ்வலையாயிருப்பவள், [2]அபஸ்மாரரோகமுள்ளகுலத்திற்பிறந்தவள், கூந்தலும் விழிகளும் செந்நிறமாயிருப்பவள், குஷ்டரோகமுள்ளவள், மேக

---

1 இடக்காலை வலமுழங்கால்மேலும் வலக்காலை இடமுழங்கால்மேலும் போட்டுக்கொண்டும் கைகளிரண்டையும் சேர்த்து நிமிர்த்து மடியில்வைத்துக் கொண்டும் உட்காருவது.

2 காக்கைவலிப்பு

விரணமுள்ளவள் ருதுஸ்நானமாகாதவள் ஆகிய கன்னிகைகளைச் சேரத்தகாதுஎன்பது தர்மசாஸ்திரம். தந்தை, பாட்டன், உடன் பிறந்தான், தாய், அம்மான், [1]உபாத்தியாயர்கள், புரோகிதர்களாகிய இவர்கள் கன்னிகையைத் தானம்செய்வதற்கு அதிகாரமுள்ளவர்கள். இவர்களால் கொடுக்கப்பெற்றேதான் கன்னிகையை அடையவேண் டும். கொடுக்கப்படாதவளைக்கிரகித்துக்கொள்ளலாகாது என்பதைத் தர்மந்தெரிந்தவர்களிற் சிறந்தவர்களான ரிஷிகள் விவாஹவிஷயத் தில் கூறுகின்றனர். இவளுக்குத்தந்தை, உடன்பிறந்தான், தாய், அம்மான் யாருமில்லை.காந்தர்வவிவாஹத்தினுல் என்இச்சையாகநான் தொடேன். வைதிகக்கிரியைகளில்லாத காந்தர்வவிவாஹத்தை ஆபத் காலத்தில்தவிரச் செய்வது தகாது. இவளிடத்தில் பிறக்கும் புதல் வன் வேத [2]வ்யாஸனுன ரிஷியாவான். வைதிகக்கிரியையில்லாத பிரா மணன் மேலான அறிவுள்ளரிஷியாக ஆவது எவ்வாறு?' என்று இப் படித் தூய்மையான மனமுள்ள அம்மஹரிஷி சிந்தித்துக்கொண்டி ருக்க, அவர்கருத்தையறிந்து பர்ஹிஷதர்கள் என்னும் பிதிர்க்கள் வந்தனர். அந்தநிமிஷத்தில் பிரம்மபுத்ரரான வஸிஷ்டரும் வந்துசேர் ந்தார். வஸிஷ்டர் அவர்களைக்கண்டு முதலில், 'நல்வரவு' என்று சொல்லிப் பேசிக்கொண்டிருக்க, பிதிர்க்கள் அவரைநோக்கி, 'எங் களுடைய மானஸபுத்திரியும் எங்கள் சாபத்தினுல் வஸுவின் புத்ரி யாயிருப்பவளுமான இக்கன்னிகையை உமதுபௌத்ரனுக்காக விரும் புகிறீராயின் உடனே பெற்றுக்கொள்ளும்' என்றனர். பிதிர்க்களு டையசொல்லைக்கேட்டு வஸிஷ்டர், 'மஹரிஷிகளின்வாக்குப் பொய் யாகாது என்று புராணங்களிலும் நான் கேட்டிருக்கிறேன். பராசரன் ப்ரம்மசாரியாகவும் ஸந்ததியை விரும்புகிறவனுகவும் என் வம்சத் துக்கு ஆதாரமாகவுமிருக்கிருன்' என்று மறுமொழிசொன்னுர். இவ் வாறு வஸிஷ்டர் பிதிர்க்களுடன் ஸம்பாஷணை செய்துகொண்டிருக் கையில், நைமிசாரண்யத்தில் வஸிப்பவர்களான ரிஷிகள் சிறந்தஞானி யும் சக்தியின்புத்ரருமான பராசருடைய விவாஹத்தைக் காண விரும்பி அங்கேவந்தனர். பெயர்பெற்ற மஹானுபாவையான அருந் ததியும் அதிர்ஸ்யந்தியென்னும் பெயருள்ள பராசரர்தாயாருடன்கூட அங்கேவந்தனள். அந்த அருந்ததி விஸ்வகர்மாவினுல் நிர்மாணம் செய்யப்பட்ட சிறந்தபர்ணசாலைக்குள் சென்று விவாஹத்திற்குரிய ஸாமக்ரிகளை முறைப்படி சேகரித்து மருமகளாகிய ஸத்தியவதியைக் கையினுற்பிடித்துக்கொண்டு, மங்களமான ஆஸனத்தில் உட்கார வைத்து, இந்திராணியை ஆவாஹனம் செய்தாள். சுக்லபக்ஷத்தில் சந்திரனுடையதான விசாகநக்ஷத்திரத்தில் திரயோதசிதிதியில் சுப மான கிரஹங்களோடுசேர்ந்த மைத்ரமென்னும் முகூர்த்தம் வந்த போது, வஸிஷ்டர் விவாஹத்துக்கு இதுகாலமென்று சொல்லி ரிஷி களுடன்கூட யமுனையின் தீவைச்சேர்ந்து தம்சிஷ்யர்களோடும் முனி வர் குழாங்களோடும் ஸ்தண்டிலமென்று சொல்லப்பட்ட சச்சதுர

1 வித்தைகற்பிக்கிறவர்கள். 2 வேதங்களை வகுப்பவன்.

மான மேடையைக் கோமயத்தினால்மெழுகி அக்ஷதைகளினாலும் கனி களினாலும் மலர்களினாலும் மோதகங்களினாலும் மாந்தளிர்களினாலும் ஜலம்நிரம்பின பூர்ணகும்பங்களினாலும் நாற்புறங்களிலும் சோபிக்கச் செய்து அந்த ஸ்தண்டிலத்தின் நடுவில் தர்ப்பாஸனத்தில் முனிவரில் தலைவரானபராசரரை உட்காரவைத்தார். வெண்கடுகு, யவதான்யம் இவற்றின் குழம்புகளாலும், எல்லா ஓஷதிகளின் ரஸங்களினாலும் ஸ்நானம் செய்வித்து வெண்மையான ஆடைகளை அம்மஹாமுனி வருக்கு உடுத்து, புண்யாகவாசனம் செய்வித்து, அக்ஷதைகளினால் ஆசீர்வதித்தனர். பிறகு, அந்தப் பராசரமுனிவர், சந்தனம் பூசிக் கொண்டு புஷ்பமாலைகளைத் தரித்துக் கையில் சவுக்குப்பிடித்துக் கால் நடையாகச் செல்லாமல் (ரதமேறி) அங்கிருந்து (பெண்ணின்வீட்டுக் குச்) சென்று பெண்ணின் சுற்றத்தாரால் பூஜிக்கப்பெற்று, மங்கள ஸ்நானஞ்செய்தவளும் கோடிஉடுத்தினவளும் சாந்தணிந்து மலர் மாலைகளினால் பிரகாசிப்பவளும் மங்களங்களான மஞ்சள் குங்கு மம் முதலியவற்றுடன் கூடினவளும் கையில் அம்புதரித்திருப்ப வளுமாகிய மணமகளைக்கண்டு, காலந்தெரிந்தவரும் எல்லாத்தர்மங் களையும் அறிந்தவருமான அவர் அந்தக்காலத்தில், 'வாங்குவது கொடுப்பவனுடைய அதீனம் என்று முன்னமே நான் கேட் டிருக்கிறேன். பிதிர்த்தேவதைகள் எவ்வாறு நியமிப்பார்களோ அவ்வாறு நாம் செய்வோம்' என்று சொன்னார். ஸத்தியவாதியான பராசரர் மிக்க தர்மமுள்ளதும் புகழைத்தருவதுமாகச் சொன்ன சொல்லைக் கேட்டுப் பற்றையும் அபிமானத்தையும் விட்டவர்களான பிதிர்க்களனைவரும் தர்மிஷ்டர்களிற் சிறந்தவனை உபரிசரவஸுவை வருவித்து, 'ஐயா! உமக்கு மத்ஸ்யயோனியில் ஜனித்த பெண் ணை இவளைப் பராசரமுனிவருக்கு விசேஷமான தர்மத்துடன் நீர் கொடுக்கத் தகுதியுள்ளவராயிருக்கிறீர்' என்றுசொன்னார்கள். அத ற்கு வஸு, 'நிஜம்; அவள் என்னுடைய புத்திரிதான். செம்படவ ராஜனால் வளர்க்கப்பட்டவள். பிரஜைகளைப் பாலனஞ்செய்யும் அரச னாகிய நான் என்பிரஜைகளைக் கேட்பவர்களுக்குக் கொடுக்க ஸ்வதந் திரமுள்ளவன்' என்றான். பிதிர்க்களெல்லாரும், 'நாங்களெல்லாரும் பலனை விரும்பாதவர்கள்; விருப்பும் வெறுப்புமில்லாதவர்கள்; 'எனது' என்ற பற்றையொழித்தவர்கள். கன்னிகாதானம் செய்வதனாலுண் டாகும் ஸம்பந்தத்தைத் [1]தக்ஷிணைபந்தம் என்று சொல்லுகின்றனர். மனுஷ்யலோகம் கருமங்கள் செய்தற்குரிய இடம். ஸ்வர்க்கலோகம் ஸுகத்தை அனுபவிக்கும் இடம். இந்த மனுஷ்யலோகத்தில் புண்ய கருமங்கள் செய்தவர்கள் ஸ்வர்க்கலோகம் அடைகிறார்கள் என்பது திண்ணம். இவ்வுலகத்தில் பாபம்செய்த கொடியவர்கள் நரகம் புகு கின்றனர். புண்ணிய பாவங்களிரண்டும் தக்ஷிணைபந்தம்என்று சொல் லப்பட்டிருக்கின்றன. யோகிகள் தக்ஷிணைபந்தத்தை அடைவராயின் அவர்கள் கீழேவிழுகின்றனர். அரசரே! ஆதலால், யோகத்தி

1 தாக்ஷிண்யத்தினால் உண்டாகும் பற்று.

னின்றும் வழுவி உனக்குப் பெண்ணுகப்பிறந்தவளும் எங்கள்மானஸ புத்ரியும்ஸாத்வியுமான இந்தக்கன்னிகையைப் பராசரருக்குப்பிக்ஷை யாகக் கொடும்' என்றுசொல்லி அப்போதே ஒருநொடியில் அந் தர்த்தானமாயினர். உடனே, யாஜ்ஞவல்க்யமுனிவரை விவாஹம் செய்விக்கும் ஆசாரியராகவரித்து உபரிசரவஸுவையும் அழைத்துக் கொண்டு முனிவர்களுடன்கூடச் சாஸ்த்ரோக்தக்ரியைகளைச்செய்து வஸிஷ்டர் விவாஹத்தைச் செய்வித்தார். 'பராசரரே! மஹாஜ் ஞானியே! நான் எனதுபெண்ணை உமக்குக் கொடுக்கப்போகிறேன். இவளை வாங்கிக்கொள்ளும். உமக்கு ஸுகமுண்டாகக்கடவது. உமது கையினுல் இவளைப் பாணிக்ரஹணஞ் செய்துகொள்ளும்' என்ற உப ரிசரவஸுவின் சொல்லைக்கேட்டு, யாஜ்ஞவல்க்யர் சொன்னதையும் அனுஸரித்துக் கங்கணதாரணமுதலிய மங்களகாரியங்களைச்செய்து, (பராசரர்) தமது கையினுல் அவள்கையைப்பிடித்தார். நெய்மிகுதியாக வுள்ள [1] ஹவிஸை மந்திரங்களோடு அக்கியில் ஹோமஞ்செய்து, அக்கியை மூன்றுமுறை வலம்வந்து பூஜித்து, யாஜ்ஞவல்க்யர் முத லிய மஹரிஷிகளுக்குத் தக்ஷிணைகள்கொடுத்துத் திருப்தியடைவித்து உடனே அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு அவர்களை நமஸ்கரித் துப் பிரதக்ஷிணஞ்செய்தார். பராசரர் விவாஹஞ்செய்துகொண்ட வுடனே, தேவர்கள் ரிஷிக்கூட்டங்களுடன்கூடி மகிழ்ந்து 'ஒருநொடி யில் வேதவ்யாஸர் பிறப்பார்' என்று சொல்லிச்சென்றனர். இவ்வாறு ஸத்யவதி கௌரவத்தையடைந்து மனங்களித்து விரும்பினபடிபரா சரருடன் சேர்ந்து உண்டான கர்ப்பத்தை உடனே பிரஸவித்தாள். மஹிமைபொருந்திய அந்தப் பராசரபுத்ரர் யமுனையின்திட்டில் பிறந் தார். பிறந்தவுடனே, அவர் வளர்ந்து அப்போதே ஏழுவருஷத்துக் குமாரராஞர். அந்தவ்யாஸர் ஸ்நானஞ்செய்து பிதாவுக்கு வந்தனஞ் செய்து அடக்கத்துடன் நின்றூர். 'க்ஷேமம்' என்ற சொல்லையும் சொல்லி, ஓர் உயர்ந்தகுடத்தையும் கொடுத்தார். பராசரர் கலசத்தை வாங்கிக்கொண்டிருந்தபோது, வ்யாஸர் பணிவுடன் நின்றூர். பரா சரபத்நியான ஸத்யவதி செம்படவனுக்கு அஞ்சி அந்தக்குடத்து ஜலத்தினுல் ஸ்நானஞ்செய்தவுடன் கன்னிகையாகிவிட்டாள். அவள் பராசரமுனிவருடைய பாதங்களைப்பிடித்து வந்தனஞ்செய்து கையி ஞல் தன் புத்திரரைப் பிடித்துக்கொண்டாள். அந்தப்புத்ரர் அவள் தொட்டமாத்திரத்தில் அவளை அதட்டி, 'அம்மா! என் தந்தை தொட்டதனுல் நீ சுத்தமாக இருந்தாய்; இப்போது கன்னிகையாகி விட்டாய்; நீ செம்படவப்பெண். குற்றமற்றவளே! என்னைத்தொடா தே' என்றுசொன்னுர். வியாஸர் சொன்னதைக் கேட்டபோதே அந்தப்பெண்,மானிடத்தன்மையினுல் கண்ணீர்நிரம்பினமுகத்துடன் பராசரமுனிவருடைய பாதங்களில் வீழ்ந்தாள். தர்மந்தெரிந்தவரான பராசரபகவான் அவளிடம் பெருங்கருணையுடன் தமதுபுத்திரரைப் பார்த்துச் சொல்லலானுர்.

---

1 அன்னத்தை.

'நீ இப்படிச் செய்யலாகாது. இது தர்மத்திற்குரியதென்று நாம் நினைக்கவில்லை. முதலில் பேருதவி செய்தவர்களான தாய்தந்தையர்களைத் தூஷிக்கத்தகாது. கர்ப்பத்தில் தரித்ததனாலும் கஷ்டங்களைப் பொறுத்ததனாலும், பெற்றோர்களிருவருள் தாய் மிகச்சிறந்தவள். உலகத்துப்பயிர் வித்தும் நிலமும் சேர்ந்தபோதுதான் முளைக்கிறது. அவ்வாறே, புருஷனும் ஸ்திரீயும் சேர்ந்துதான் புத்திரன் உண்டாகிறான். மான்களிடத்தும் பறவைகளிடத்தும் அப்ஸரஸுகளிடத்தும் சூத்திரஜாதிப் பெண்களினிடத்தும் வேதங்களிற்கரை கண்ட ரிஷிகள் உத்பத்தியாகின்றனர். ரிஸ்யஸ்ருங்கர் மானின்புத்ரர். அவ்வாறே கண்ணுவர் மயிலின்புத்ரர். அகஸ்தியரும் வஸிஷ்டரும் ஊர்வசிக்குப் பிறந்தவர்கள். ஸோமஸ்ரவஸ் என்பவர் பெண்நாகத்தினிடம் பிறந்தவர். அஸ்வினீதேவர்கள் குதிரையினிடம் ஜனித்தவர்கள். ஸ்கந்தர் முற்காலத்தில் நாணற்காட்டிற்சிதறின ஈசுவரருடைய வீரியத்திற்குப் பிறந்தவர். தேவர்கள் ரிஷிகள் இவர்களின் உத்பத்தி இவ்வகையாகவேதான் இருக்கிறது. உலகநடைகளையும் சாஸ்திரவிதிகளையும்பற்றிப் புத்திசாலிகள் ஒருபோதும் யுக்தி விசாரிக்கத்தகாது. நீ புராணத்திலேயே வேதவ்யாஸனென்று பிரம்மாவினாற்சொல்லப்பட்டவன். மஹரிஷிகளுக்கும் மானிடர்களுக்கும் தர்மோபதேசம் செய்கிறவன் நீயே. புத்ரனே! ஆதலால், யோகத்தை ஆசரிப்பவனாகியநீ இந்த வஸுபுத்திரியை இகழத்தகாது. சிறந்த பிரஜ்ஞையுள்ளவனே! என் விருப்பத்திற்காகவும் நீ அன்பு வைத்துப் பேசவேண்டும். தபோதனனே! பிரஜைகளின் நன்மைக்காக ஸ்ரீவிஷ்ணுவின் அம்சத்தால் மஹரிஷிவடிவமாக ஆவிர்ப்பவித்திருக்கிறாய். ஆதலால், நீ உன் தாயினிடம் அன்போடு பேசக்கடவாய்' என்று இவ்வாறு தமதுதந்தை சொன்னதைக்கேட்டு, அப்போதே வியாஸர் அன்புள்ளவரானார். உலகநடையை நினைத்துத் தாயார் மடியை அடைந்தார். புத்ரனைத் தொடுவதைப்பார்க்கிலும் வேறு சிறந்தஸுகம் எவ்வுலகிலுமில்லையன்றோ? அவள் தாமரைஇதழ்போன்ற கண்களையுடைய வியாஸரைத் தழுவி முலைப்பாலின் பெருக்கினால் நனைத்துத் தன் புத்திரனை உச்சியில் மோந்து கண்ணீர்சொரிந்து, வ்யாஸரைநோக்கி, 'ஸந்ததியை விரும்புகிறவர்களுக்குப் புத்ரலாபத்திற்கு மேலான லாபம் இவ்வுலகத்தில் ஒன்றுமில்லை. பெறுவதற்கரிய பெருந்தவத்தை நான் பெற்றதாக நினைக்கிறேன். ஓ! மஹாஜ்ஞானியே! பெருந்தவத்தினாலும் பெரியயோகமகிமையினாலும் தேவர்களுக்கு அமிர்தம் கிடைத்ததுபோல் எனக்கு நீ கிடைத்திருக்கிறாய். ரிஷிபுத்ரனே! ஆதலால், இப்போது நீ என்னைவிடத்தகாது' என்றுசொன்னாள். அவள் இவ்வாறுசொன்னபின், வியாஸரும் தாயாரைப்பார்த்து அன்புடன், 'ராஜபுத்ரியே! நான் உன்னால் தொடப்பட்டேன்; தழுவப்பட்டேன்; பலமுறை உச்சிமோக்கவும்பெற்றேன். இவ்வளவு மாத்திரத்தினாலேயே நான் திருப்தியுள்ளவனாக இருக்கிறேன். இனி, காரியங்கள்நேரும்போது நீ நினைத்தால் என்உருவத்தை

உனக்குக் காண்பிப்பேன்' என்று சொன்னார். அவர் தாயாரிடம் விடைபெற்றுக்கொண்டு தவத்திலேயே மனத்தைச்செலுத்தினார். அதன்பிறகு, பராசரபகவான் மறுபடியும் கன்னிகையாகவேயிருக்கும்படி ஸத்யவதிக்குச்சொல்லி அவளிடம் விடைபெற்றுக்கொண்டு தம்புத்திரருடன்சென்றார். பராசரர் பரிசுத்தமான தமது ஆஶ்ரமத்திற்குச்சென்று அத்ருஶ்யந்தியென்னும் தம்தாயாரைக்கொண்டு தம் புத்திரருக்கு நியாயப்படி ஜாதகர்மமுதலிய ஸம்ஸ்காரங்களைச்செய்வித்தார். பாரதரே! வியாஸர், யாஜ்ஞவல்க்யமுனிவரால் உபநயனஞ் செய்யப்பட்டு, மூன்றுமாத்திரைகளோடு ஓங்காரத்தை உச்சரித்து வேதவேதாங்கங்களை ஓதினார். குருதக்ஷிணை தந்தபின், தவஞ்செய்யத் தொடங்கினார். இவ்வாறு பராசரருக்கு ஸத்யவதியினிடம் த்வைபாயனர் ஜனித்தார். அவர் குழந்தையாயிருக்கும்போதே யமுனைத்தீவில் விடப்பட்டதனால், 'த்வைபாயனர்' என்று பெயருள்ளவரானார். எல்லாம்தெரிந்த அந்த பிரம்மரிஷி தர்மம் ஒவ்வொருயுகத்திலும் நாலிலொருபாகம் விலகிப்போயிருப்பதையும் மனிதர்களின் ஆயுளும்சக்தியும் யுகத்துக்குயுகம் பின்வாங்குவதையுங்கண்டு பிராமணர்களை அநுக்கிரஹிக்கக்கருதி, வேதங்களை வகுத்தார். அதனால், வேதவியாஸரென்று பெயர்பெற்றார். வித்வானும் மகிமைபெற்றவரும் மிகச்சிறந்தவரும் வரங்கொடுப்பவருமாகிய அம்மஹரிஷி ஸுமந்து, ஜைமினி, பைலர், தம்புத்திரரான சுகர், வைசம்பாயனர் ஆகிய ஐந்துசிஷ்யர்களையும் அழைத்து நியமத்துடன் ரிக், எஜுஸ், ஸாமம்,அதர்வணமென்னும் நான்குவேதங்களையும் ஐந்தாம்வேதமான மஹாபாரதத்தையும் ஓதுவித்தார். அந்தச்சிஷ்யர்களால் வேதஸம்ஹிதைகளும் பாரதஸம்ஹிதையும் தனித்தனியாகச் சொல்லப்பட்டன.

பிறகு, ஸத்யவதி மகிழ்வுற்றுத் தன்மனைக்குச்சென்றாள். அவளுடைய தேகமணத்தைப் பூமியிலுள்ளமனிதர்கள் யோசனைதூரத்திலிருந்து மோந்தனர். செம்படவராஜன் அவள்மணத்தைமோந்து மனக்களிப்புற்று, 'பெண்ணே! உன்னை மத்ஸ்யகந்தையென்று சொல்லுகிறார்களே! இந்தஸுகந்தம் ஏது? மத்ஸ்யகந்தத்தைவிலக்கி இந்தஸுகந்தத்தைத் தந்தவர் யார்?' என்றுகேட்க, ஸத்யவதி, 'சக்தியின்புத்திரரும் பராசரரென்று பெயர்பெற்றவருமான ஒருமஹாஜ்ஞானி ஓடத்தைநடத்தின என்னுடைய கைத்தேர்ச்சியைக் கண்டு என்மத்ஸ்யகந்தத்தை நீக்கி யோசனைகந்தம் தந்தார். ரிஷியின் அநுக்கிரஹத்தைக்கண்டு ஜனங்களும் சந்தோஷமடைந்தனர். நான் நல்லமணத்தை இவ்வாறு அடைந்தேன். நீர் கோபம்செய்யலாகாது' என்று சொன்னாள். செம்படவர்களுக்கு அரசனும் அவள் சொன்னதைச் சிலாகித்து மகிழ்ந்தான். பரிசுத்தியைச்செய்வதும் புண்ணியலோகத்தைத் தருவதுமாகிய வியாஸஜனனமென்னும் இந்தச் சிறந்த சரித்திரத்தைக் கேட்பவர்களும் சிலாக்கியமான சந்ததியுள்ளவர்களாகின்றனர்.

---

மினிக்கும் பைலருக்கும் தம் புத்ரராகிய சுகருக்கும் வைசம்பாயன ருக்கும் நான்குவேதங்களையும் ஐந்தாவதுவேதமாகிய மஹாபாரதத் தையும் ஓதுவித்தார். அந்தச்சிஷ்யர்கள் மஹாபாரதத்திற்குமூலங் களாயுள்ள வேதங்களைத் தனித்தனியே வெளிப்படுத்தினார்கள்.* அப்படியே அளவற்ற பராக்கிரமமுள்ளவரும் மிகுந்த பலமுள்ள வரும் பெரும்புகழ்பெற்றவருமான பீஷ்மர் வஸுக்களின் ஸாராம் சத்தினால் சந்தனுவுக்குக் கங்காதேவியினிடம் பிறந்தார்.

வேதார்த்தமறிந்தவரும் பெருங்கீர்த்தியுள்ளவரும் சிறந்தமஹி மையுள்ளவருமாகியஒருபழமையான பிரம்மரிஷி திருடாமலிருக்கை யில், அவரைத் திருடனென்று நினைத்து, ராஜா கழுமரத்தில் ஏற்றி னான். ஆணிமாண்டவ்யரென்று சொல்லப்பட்ட அந்தப் பெரியபுகழ் படைத்தமஹரிஷி, முன்னே தர்மதேவதையையழைத்து, 'தர்மனே! நான் பால்யத்தில் ஒருபக்ஷியை எஃகினாற்குத்தியிருக்கிறேன்; அந்தப் பாபம்தான் எனக்கு ஞாபகமிருக்கிறது; வேறுபாபம் தெரியவில்லை; அந்தப்பாபத்தை அதற்கு ஆயிரம்மடங்குகொண்டதும் அல்லது அளவற்றதுமாகிய எனது இந்தத்தபஸு எப்படிஜயிக்காமற்போயி ற்று; எந்தப்பிராணிகளைக் கொல்லுவதினும் பிராமணவதஞ்செய்வது மிகப்பெரிதாதலின் இந்தப்பாபத்தினால் நீ சூத்திரயோனியில் பிறப் பாய்' என்று சொன்னார். அந்தச்சாபத்தினால் தர்மதேவதையும் அந்த அபராதத்திற்காக விதுரரூபமாக வித்துவானாகவும் தர்மிஷ்ட னாகவும் சூத்திரயோனியில் ஜனித்தான்.

ரிஷிக்கொப்பான ஸஞ்சயனென்னும் ஸூதன் கவல்கணனுக் குப்பிறந்தான். மஹாபலசாலியான கர்ணன் பிறக்கும்போதே கவ சத்தைத் தரித்துக்கொண்டு குண்டலங்களினால் அலங்கரிக்கப்பட்ட முகத்தோடு குந்திபோஜன்பெண்ணாகிய குந்தியினிடத்தில் ஸூர்ய னுக்குப்பிறந்தான்.

உலகங்களால் நமஸ்கரிக்கப்பட்டவரும் பெருங்கீர்த்திபெற்றவ ரும் ஆதியும்அந்தமுமில்லாதவரும் உலகங்களைப் படைத்தவரும் எல்லாவற்றிற்கும் ஈஸ்வரரும் ஸ்வயமேபிரகாசிக்கின்றவருமான திரு மால் லோகங்களை அனுக்கிரஹிப்பதற்காக வஸுதேவருக்குப் புத்ர ராகத் தேவகியினிடம் அவதரித்தார். எவரை, அறியக்கூடாததும்

* இந்தஇடத்தில், அஅ - சுலோகங்களின்கதை பொருந்தாமையால் முன்பு விடப்பட்டது. பின்பு, சிலர்விருப்பத்தின்படி மொழிபெயர்க்கப்பெற்று 226-ம் பக்கத்திற்குப்பின் சேர்க்கப்பட்டுள்ளது. கிருஷ்ணாசாரியரும் அந்த ஸ்லோகங்களுக்குத் தனி எண் கொடுத்திருத்தல் காண்க.

அழிவில்லாததுமான பிரம்மமென்றும்*மூன்றுகுணங்களும் சேர்ந்த மூலப்ரக்ருதியென்றும்தோஷமில்லாதஆத்மாவென்றும் காரியப்ரக்ருதியாகியமஹத்தென்றும் அஹங்காரம் முதலிய ஜடங்களுக்கு ஈசுவரரென்றும் அந்தர்யாமியென்றும் உலகமெல்லாம் அவர்செயலாயிருப்பதனாலும்நல்வினைதீவினைகளாகியகருமங்களுக்கெல்லாம் பயன்களைக் கொடுப்பதனாலும் விஸ்வகர்மாவென்றும் † ஸத்வகுணமுள்ளவரென்றும் நித்யமான அக்ஷரமாகிய பிரணவரூபியென்றும் தேசத்தாலும் காலத்தாலும்ஸ்வரூபத்தாலும் அளவிடப்படாதவரென்றும் அசைவற்றவரென்றும் பிரகாசஞானரூபியென்றும்‡ஹம்ஸரென்றும் ஜீவன்களுக்கெல்லாம் தஞ்சமாயிருப்பதனாலும் ஜீவாத்மாக்களுக்கு ஆத்மாவாயிருப்பதனாலும்நாராயணரென்றும் தமக்குமேல் ஈஸ்வரனில்லாதவரென்றும்எல்லாவற்றையும்தாங்குகிறவரென்றும் ஜனனமில்லாதவரென்றும் ஸூக்ஷ்மங்களுக்கும் மேலான ஸூக்ஷ்மமென்றும் ஸ்வரூபம்மாறாதவரென்றும் ஒன்றிலும் பற்றில்லாத கைவல்யரென்றும் நிர்க்குணரென்றும் தாமே எல்லாமுமாயிருப்பவரென்றும் அநாதியென்றும் தாமேபிரம்மரூபமாயிருப்பவரென்றும் ஓரேதன்மையாயிருப்பவரென்றும் சொல்லுகின்றனரோ அந்தப்பரமபுருஷரும் ஸ்ருஷ்டிகர்த்தாவும் எல்லாப் பிராணிகளுக்கும் மூலபுருஷருமாகிய அந்த விஷ்ணுபகவான் தர்மத்தைநிலைநிறுத்துவதற்காக அந்தகர் யாதவர்களுக்குள் அவதரித்தார்.

அஸ்திரங்கள் தெரிந்தவர்களும் மிகுந்த பராக்ரமமுள்ளவர்களும் எல்லாச்சாஸ்திரங்களிலும் § பாண்டித்திய முள்ளவர்களும் அஸ்திரங்களைப் பிரயோகிக்கவல்லவர்களும் கிருஷ்ணனை அனுஸரித்தவர்களுமாகிய ஸாத்யகியும் கிருதவர்மாவும் முறையே ஸத்தியகனிடத்தும் ஹிருதிகனிடத்தும் ஜனித்தனர். உக்ரமான தவமுள்ள பரத்வாஜமஹரிஷியினுடைய விழுந்துபோன வீரியம் ¶த்ரோணியென்னும் பாத்திரத்தில்விருத்தியடைந்தது. அதிலிருந்து துரோணர் பிறந்தார். கௌதமகோத்ரத்திற்பிறந்த சரத்வானென்பவருக்கு நாணல்தண்டில் அசுவத்தாமாவின் தாயாரும் மஹாபலசாலி

* ஸத்வம், ரஜஸ், தமஸ்.

† ஸத்வகுணத்தினலுண்டான ஆத்மத்யானத்தினல் அடையத்தக்கவரென்பது பழையஉரை.

‡ ஸந்யாஸ ஆஸ்ரமரூபமாக இருப்பவர் என்பது பழையஉரை. ஹம்ஸாவதாரம் செய்து பிரம்மாவுக்கு வேதோபதேசம் செய்ததினல் ஹம்ஸரென்பது.

§ ஆகிய ராமகிருஷ்ணர்கள் ஜனித்தனர் என்பது பழையஉரை.

¶ த்ரோணியென்பது மலையின்குகை என்பது பழையஉரை.

யானகிருபாசாரியரும் இரட்டையராகப்பிறந்தனர். அந்தத்துரோண ருக்கு மஹாபலசாலியான அஸ்வத்தாமா பிறந்தார். அப்படியே அக் னியே நேரேவந்ததுபோலப் பிரகாசிக்கின்ற வீரனை திருஷ்டத்யும் னனும் துரோணரை அழிப்பதற்காக யஜ்ஞம் நடந்துகொண்டிருக் கும்போது தனுஸையேந்திக்கொண்டு அக்னியிலிருந்து பிறந்தான். சிறந்த ஒளியுள்ளவளும் நல்ல லக்ஷணங்களுள்ளவளும் மேன்மை யான அழகுள்ளவளாகச் சரீரத்தால் பிரகாசிக்கின்றவளுமான கிருஷ் ணையும் யாகவேதிகையிற் பிறந்தாள். பிரஹ்லாதர்சிஷ்யன் நக்ன ஜித் என்பவன்; அவனுக்கு ஸுபலன்பிறந்தான். அவனுடைய ஸந் ததி தேவதையின் கோபத்தினால் தர்மத்தைக்கெடுப்பதற்கு உண்டா யிற்று. அதனால் * ராஜ்யகாரியங்களில் நிபுணர்களாகிய † சகுனி யும் துரியோதனன்தாயாரும் காந்தாரராஜாவாகிய ஸுபலனுக்குப் பிறந்தனர். கிருஷ்ணத்வைபாயனரால் விசித்திரவீரியனுடைய பாரி யைகளிடத்தில் திருதராஷ்டிரராஜாவும் மஹாபலசாலியான பாண்டு வும் ஜனித்தனர். தர்மசாஸ்திரத்திலும் ராஜநீதியிலும் நிபுணரும் பிரம்மஜ்ஞானமுள்ளவரும் கூர்மையான புத்தியுள்ளவரும்பாபங்களை விலக்கியவருமாகிய விதுரர் கிருஷ்ணத்வைபாயனருக்குச் சூத்திர ஜாதிஸ்திரீயின் கர்ப்பத்தில் ஜனித்தார். பாண்டுவுக்கு இரண்டு ஸ்தி ரீகளிடம் ஐந்துபுத்திரர்கள் ஒவ்வொருவரும் தேவர்களுக்குச் சமான மாகப் பிறந்தனர். அவர்களுக்குள் யுதிஷ்டிரர் குணங்களிற் சிறந்த வராயிருந்தார். தர்மதேவதையினிடமிருந்து யுதிஷ்டிரரும் வாயுவி னிடமிருந்து பீமஸேனனும் இந்திரனிடமிருந்து அழகுள்ளவனும் ஆயுதம்பிடித்தவர்களிற் சிறந்தவனுமாகிய தனஞ்சயனும் பிறந்தனர். பெரியவர்களுக்குப் பணிவிடைசெய்வதில் ஸ்ரத்தையுள்ளவர்களும் அழகிற் சிறந்தவர்களுமாகிய நகுலஸஹதேவர்கள் அச்வினிதேவர் களால் இரட்டையாகப்பிறந்தனர். அவ்வாறே, சிறந்தஅறிவுள்ள திரு தராஷ்டிரனுக்கும் துரியோதனன்முதலான நூறுபுத்திரர்கள் ஜனித் தார்கள். பாரதரே! அவர்களுள் யுயுத்ஸு என்று சொல்லப்பட்ட கரணன், துச்சாஸனன், துஸ்ஸஹன், துர்மர்ஷணன், விகர்ணன், சித் திரஸேனன், விவிம்சதி, ஜயன், ஸத்தியவிரதன், புருமித்திரன், ஆகிய ‡ பதினொருவரும் மஹாரதர்கள். வைசியஜாதிப் பெண்ணிடம் பிற

---

* காந்தாரிக்கே ராஜ்யத்தில் விருப்பமிருப்பதாக இதனால் குறிப்பிக்கப் பட்டது.

† சகுனியும் காந்தாரியின் புத்திரர்களும் தர்மத்தைக்கெடுத்தவர்.

‡ துரியோதனனோடு பதினொருவர்.

ந்ததினால், யுயுத்ஸுவுக்கு * கரணனென்பதுபெயர். ஸுபத்ரையினிடம் அர்ஜுனனுக்கு அபிமன்யு பிறந்தான். அவன் கிருஷ்ணனுடைய மருமகன்; மஹாத்மாவாகிய பாண்டுவின் பௌத்திரன். பாண்டவர்களுக்குத் திரௌபதியினிடம் ரூபமுள்ளவர்களும் ஸர்வ சாஸ்திரங்களிலும் பாண்டித்யமுள்ளவர்களுமாகிய ஐந்துகுமாரர்கள் பிறந்தார்கள். யுதிஷ்டிரருக்குப் பிரதிவிந்தியனும், பீமஸேனனுக்கு ஸுதஸோமனும், அர்ஜுனனுக்குச் சுருதகீர்த்தியும், நகுலனுக்குச் சதாநீகனும், ஸஹதேவனுக்குப் பராக்ரமசாலியான சுருதஸேனனும் பிறந்தனர். பீமனுக்கு வனத்தில் ஹிடிம்பையினிடம் கடோத்கசன் பிறந்தான். துருபதனுக்குச் சிகண்டி பிறந்தான். அவன் முதலில் பெண்ணாகவிருந்து பிறகு ஆணானான். அவனை ஸ்தூணனென்னும் யக்ஷன் துருபதராஜனுக்குப் பிரியஞ்செய்வதற்காகப் புருஷனாகச்செய்தான். அந்தக் கௌரவர்களுடைய பெரியயுத்தத்தில் சண்டைபோடுவதற்காக அநேகலக்ஷம் அரசர்கள் வந்துசேர்ந்தார்கள். அளவிடக் கூடாதவர்களான அவர்களுடைய நாமதேயங்கள் பதினாயிரவருஷங்களானாலும் முழுதும் சொல்லமுடியா. எவர்களால் இந்தப் பாரதசரித்திரம் விரிவாயிருக்கிறதோ அந்த முக்கியமாயுள்ளவர்களைப்பற்றிமட்டும் சொன்னேன்" என்று வைசம்பாயனர் சொன்னார்.

---

## அறுபத்தைந்தாவது அத்தியாயம்.

## அம்சாவதரணபர்வம். (தொடர்ச்சி.)



ஜனமேஜயர், "பிராம்மணரே! எவர்கள் இப்போது சொல்லப்பட்டவர்களோ இன்னும்எவர்கள் சொல்லப்படாதவர்களோ அந்த ஆயிரக்கணக்கான அரசர்களும் மற்றவர்களுமாகிய அவர்கள் எல்லாரையும்பற்றிக் கேட்கவிரும்புகின்றேன். மஹானுபாவரே! தேவர்களுக்குச் சமானமாகிய மஹாரதர்கள் இந்தப் பூமியில் எதற்காக ஜனித்தார்களென்பதையும் எனக்குத் தெளிவாகச் சொல்லவேண்டும்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லலானார்.

"அரசரே! இது தேவர்களுடைய ரஹஸ்யமென்று நாம்கேட்டிருக்கிறோம்; ஆகிலும், பிரம்மாவுக்கு நமஸ்காரஞ்செய்து நான்அதனை

---

* க்ஷத்திரியனுக்கு வைஶ்யஜாதிப் பெண்ணினிடம் பிறந்தவன் என்பது பொருள். சஎஎ-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

உமக்குச்சொல்லுவேன். முன்னே ஜமதக்நியின்புத்திரரானபரசுராமர் இருபத்தொருமுறை பூமியில் க்ஷத்திரியர்களில்லாமற் செய்துவிட்டு மஹேந்திரமென்னும் சிறந்தபர்வதத்தில் தவஞ்செய்தார். ராஜாவே! உலகத்திலேயே க்ஷத்திரியர்களில்லாமல் பரசுராமரால் செய்யப்பட்ட பொழுது க்ஷத்திரியஸ்திரீகள் புத்திரர்களைவிரும்பி, பிராமணர்களிடம் சேர்ந்தனர். புருஷஸ்ரேஷ்டரே! பிராமணர்கள் உக்கிரமான நியமத்தோடேயே ஒவ்வொரு ருதுகாலத்திலும் அவர்களிடம்சேர்ந்தனர்; காமத்தாற் சேரவில்லை; * ருதுகாலமில்லாதபோதும் சேரவில்லை. அந்தப்பிராமணர்களால் அந்த ஆயிரக்கணக்கான க்ஷத்திரியஸ்திரீகள் கர்ப்பந்தரித்தனர். ராஜாவே! அதன்பின், முன்னிலும் அதிகபராக்கிரமசாலிகளாகிய க்ஷத்திரியர்களைப் பெற்றனர். மறுபடியும், க்ஷத்திரியர்கள் விருத்தியடையும்படி புத்திரர்களையும் புத்திரிகளையும் பெற்றனர். இப்படிச் சிறந்ததவமுள்ள பிராமணர்களினால் க்ஷத்திரிய ஸ்திரீகளிடத்திலுண்டாகி விருத்தியடைந்த க்ஷத்திரியர்கள் தருமமும் தீர்க்காயுளும் பொருந்தியிருந்தனர். அப்போது நான்குவருணத்தார்களும்பிராமணர்களையேமேன்மையாகக்கொண்டிருந்தார்கள். (மனிதர்கள்) ருதுகாலத்திலேதான் ஸ்திரீகளைச்சேர்ந்தனர்; காமத்தாலும்சேரவில்லை; ருதுவில்லாதகாலத்திலும் சேரவில்லை. திர்யக்ஜாதியிலுள்ள மற்றப்ராணிகளும் ருதுகாலத்திலேதான் பெண்களிடம் சேருகின்றன. பரதஸ்ரேஷ்டரே! அதுதான் ஸரி. ராஜாவே! அந்தத்தர்மத்தினால் அந்தஸந்ததிகள் தர்மத்தினுடையநியமங்கள் தவறாமல் அநேகநூற்றாண்டளவும் ஜீவித்திருந்தனர். மனுஷ்யர்களனைவரும் வ்யஸனமற்றும் நோயற்றுமிருந்தனர்.

சிறந்தயானையைப்போன்ற நடையுள்ளவரே! அதன்பின், ஸமுத்திரத்தைஎல்லையாகவுடைய மலைகள், வனங்கள், நகரங்களுள்பட இந்தப்பூமிமுழுதையும் திரும்பவும் க்ஷத்திரியர்கள் ஆண்டனர். மறுபடியும், க்ஷத்திரியர்கள் இந்தப்பூமியைத் தருமமாகஆளும்போது, பிராமணர்முதலிய வருணத்தார்கள் மிகுந்தஸந்தோஷத்தை அடைந்தார்கள். அரசர்கள் ஸ்னேஹத்தினாலும் கோபத்தினாலுமுண்டாகக்கூடிய தோஷங்களைவிலக்கித் தண்டிக்கத்தக்கவர்களுக்கு நியாயமாகத்தண்டனைவிதித்துக்கொண்டுராஜ்யபரிபாலனஞ்செய்தனர். க்ஷத்திரியர்கள் அவ்வாறு தருமத்தைக் கடைப்பிடித்தபோது, நூறுயாகங்கள் செய்தவனாகியதேவேந்திரன் ஸரியான இடத்திலும் ஸரியானகாலத்திலும் ஜனங்கள் திருப்திப்படும்படி இனியமழையைப் பெய்தனன். ராஜா

* ருதுகாலத்திலும் காமத்தாற் சேரவில்லையென்பது கருத்து.

வே! அப்போது யாரும் சிறுபிராயத்தில் இறக்கவில்லை. யௌவன வயஸுவராத ஸ்திரீயை யாரும்சேர்ந்ததில்லை. பரதஸ்ரேஷ்டரே! இவ்வாறு இந்தக்கடல்சூழ்ந்தபூமி ஆயுள்வளர்ந்திருந்த ஜனங்களால் நிறைந்திருந்தது. அப்போது க்ஷத்திரியர்கள் மிகுந்ததக்ஷிணைகளு ள்ள மஹாயாகங்களைச் செய்தார்கள். பிராமணர்கள் வேதங்களை அங்கங்களோடும் உபநிஷத்துக்களோடும் அத்தியயனஞ்செய்தார்கள். ராஜாவே! அக்காலத்தில் பிராமணர்கள் வேதத்தைவிக்கிரயஞ்செய்ய வில்லை. சூத்திரர்கள்ஸமீபத்தில் வேதத்தை உச்சரித்ததும் இல்லை. இந்தப்பூமியில் வைசியர்களும் விருஷபங்களைக்கொண்டுஉழும்போது இளைத்தவிருஷபங்களை நுகத்திற்கட்டவில்லை; அவற்றைப்போஷித் தனர். மனுஷ்யர்கள், கன்றுகள் பாலையேகுடிக்கும் நிலைமையிலிருக் கையில் மாடுகளைக்கறக்கவில்லை.வர்த்தகர்கள் விற்கவேண்டியவற்றை மோசஅளவுகளால் விற்கவில்லை. புருஷஸ்ரேஷ்டரே! மனிதர்கள் தர்மமே ஆதாரமென்றுநினைத்துத் தர்மத்தையேகவனித்துத் தர்ம மானகாரியங்களையே செய்தனர். ராஜாவே! எல்லாவருணத்தாரும் தம்தம்கருமங்களை விடாமலிருந்தனர். புருஷஸ்ரேஷ்டரே! அப்போது இவ்வாறு தருமம் ஓரிடத்திலும் குறையவில்லை. பரதஸ்ரேஷ்டரே! பசுக்களும் ஸ்திரீகளும் காலத்தில் பிரஸவித்தனர். விருக்ஷங்களுக்கு அந்தஅந்தருதுக்களில் பூக்களும் காய்களும்உண்டாயின. அரசரே! இவ்வாறு அப்போது கிருதயுகம் செவ்வையாகநடந்ததனால்பூமிமுழு தும் அநேகம்பிராணிகளால்அதிகமாகநிரப்பப்பட்டது. பரதஸ்ரேஷ் டரே! மனிதர்க்கரசே! இவ்வாறு மனுஷ்யலோகம் செவ்வையாக விருத்தியடைந்திருக்கையில் ராஜஸ்திரீகளிடம்அஸுரர்கள்ஜனித்த னர். தேவாஸுரயுத்தத்தில் தேவர்களால் அநேகந்தடவைஜயிக்கப் பட்டு ஐஸ்வரியத்திலிருந்து நீக்கப்பட்ட அஸுரர்கள் அப்போது ஸ்வர்க்கத்தைவிட்டு இந்தப்பூமியில் பிறந்தனர். ராஜஸ்ரேஷ்டரே! பிரபுவே! பரிதபிக்கத்தக்கஅஸுரர்கள் இந்தப்பூமியில் ராஜாக்களாக இருக்கவிரும்பி மனுஷ்யர்களிடத்திலும் கோக்கள், அஸ்வங்கள், கழு தைகள், ஒட்டகங்கள், எருமைகள், மாம்ஸந்தின்கிற பிராணிகள், யானைகள், மான்கள்முதலியஅநேகம்பிராணிகளிடத்திலும்பிறந்தனர். ராஜாவே! எல்லாவற்றிற்கும் ஆதாரமானபூமியானது, அந்தஅஸுரர் கள் தன்னிடத்தில்முன்னமே ஜனித்தும் இன்னும்ஜனித்துக்கொண்டு மிருப்பதனால் தன்னைத் தானாக நிலைநிறுத்திக்கொள்ள முடியாமற்போ யிற்று. ஸ்வர்க்கலோகத்திலிருந்துவிழுந்த திதிபுத்திரர்களும் தனு புத்திரர்களுமாகியஅஸுரர்கள் உடனே இந்தப்பூமியில் மிகுந்தகர்வ

முள்ள சில அரசர்களாகப்பிறந்தனர். மிகுந்த பராக்ரமமுள்ளவர்களும் கர்வமுள்ளவர்களும் சத்ருக்களைப் பீடிப்பவர்களுமாகிய அவர்கள் பலரூபங்களையெடுத்துக்கொண்டு ஸமுத்ரஞ்சூழ்ந்த இந்தப்பூமியெல்லாம் வியாபித்தனர். பலத்தினால் பிராமணர்களையும் க்ஷத்திரியர்களையும் வைஸ்யர்களையும் சூத்ரர்களையும் மற்றப்பிராணிகளையும்பீடித்தனர். ராஜாவே! பராக்ரமத்தினால் கர்வங்கொண்ட அந்தஅஸுரர்கள் கொழுப்பினாலும் பலத்தினாலும் எல்லாப்பிராணிக்கூட்டங்களையும் பயமுறுத்திக்கொண்டும், வதஞ்செய்துகொண்டும், ஆங்காங்கு ஆஸ்ரமங்களிலிருந்த மஹரிஷிகளை உபத்ரவித்துக்கொண்டும், பிராமணர்களுக்கு விரோதிகளாக லக்ஷக்கணக்காகப் பூமியெங்கும் ஸஞ்சரித்தனர்.

ராஜாவே! இவ்வாறு பராக்கிரமத்தினாலும் பலத்தினாலும் கர்வங்கொண்ட அந்தஅஸுரஸ்ரேஷ்டர்களாற் பீடிக்கப்பட்ட இந்தப் பூமிதேவியானவள் பிரம்மாவினிடம் போனாள். பஞ்சபூதங்களின் சக்திகளாகிய திக்கஜங்களும் ஆதிசேஷன்முதலிய அஷ்டநாகங்களும் *குலபர்வதங்களும் அஸுரர்களின் பலத்தினால் பீடிக்கப்பட்ட இந்தப்பூமியைத் தாங்குவதற்குச் சக்தியில்லாமற்போயின. ராஜாவே! அதனால், பூமிதேவியானவள் பாரம் தாங்கமுடியாமல் மிகுந்தபயத்துடன் எல்லாப்பிராணிகளுக்கும் ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மதேவரைச் சரணமடைந்தாள். சிறந்த மஹிமையுள்ள தேவர்களாலும்பிராமணர்களாலும் மஹரிஷிகளாலும் சூழப்பட்டவரும் † வந்திகளின் செய்கையை மேற்கொண்டிருக்கும் கந்தர்வர்களாலும் அப்ஸரஸுகளாலும் ஸந்தோஷத்துடன் ஸேவிக்கப்பட்டவருமான லோககர்த்தாவாகிய பிரம்மாவை அந்தப்பூமிதேவி கண்டு, அவர்ஸமீபத்திற்போய் நமஸ்காரஞ்செய்தாள். பாரதரே! பிறகு, அந்தப்பூமி தனக்கு ரக்ஷணத்தை விரும்பிக்கொண்டு எல்லாத் திக்குப்பாலகர்களுடைய முன்னிலையிலும் பிரம்மதேவரிடம் தன்காரியத்தை விஜ்ஞாபனஞ்செய்தாள். ராஜாவே! பூமியினுடைய அந்தக்காரியமானது, உயர்ந்தஸ்தானத்திலிருப்பவரும் முதற்கர்த்தாவுமாகிய பிரம்மாவுக்கு முன்னமே தெரிந்திருந்தது. பாரதரே! ஜகத்தையே ஸ்ருஷ்டிசெய்தவர், தேவர்கள் அஸுரர்கள்முதலிய பிராணிகளின் மனத்திலுள்ளவற்றையெல்லாம் அறியாமலிருப்பரோ? மஹாராஜாவே! பூமிக்குநாதரும் சக்தி

* 'ஸகாம்' என்ற பாடத்தைவிட்டு 'ஸகாஃ' என்றபாடம் கொள்ளப்பட்டது.

† வந்திகள்—ஸ்துதிபாடுவோர்.

யுள்ளவரும் எல்லாவற்றிற்கும் ஆதிகாரணரும் எல்லாவற்றையும் நடத்துகிறவரும் ஸுகத்தைத்தருபவருமாகிய பிரம்மாவானவர் அந்தப் பூமியைநோக்கி, 'பூமியே! நீ எந்தக்காரியத்திற்காக என்னிடம்வந்தாயோ அந்தக்காரியத்தைக்குறித்து எல்லாத்தேவர்களையும் அனுப்பப்போகிறேன்; எழுந்திரு; உன்னிடம்செல்' என்றுசொல்ல, அந்தப்பூமிதேவியும் சென்றாள்.

ராஜாவே! ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய அந்தப்பிரம்மதேவர் இவ்வாறு சொல்லிப் பூமியைஅனுப்பிவிட்டு, எல்லாத்தேவர்களையும் நேரேபார்த்து, 'இந்தப் பூமியின்பாரத்தை நிவிருத்திசெய்வதற்காக நீங்கள் தேவரூபத்தை மறைத்து உங்கள் அம்சங்களைக்கொண்டு தனித்தனியாக இந்தப்பூமியிலேயே ஜனியுங்கள்' என்று ஆஞ்ஞாபித்தார். அப்படியே கந்தர்வக்கூட்டங்களையும் அப்ஸரஸுக்கூட்டங்களையும்அழைத்து அவர்களெல்லாரையும் பார்த்து, 'நீங்கள் உங்கள் இஷ்டப்படி உங்கள் அம்சங்களைக்கொண்டு மானிடர்களாகப்பிறப்பீர்கள்' என்று சொல்லி, செய்யவேண்டியகாரியத்தைக் கட்டளையிட்டார். அதன்பின், அந்த இந்திராதிதேவர்களெல்லாரும் யதார்த்தமும் காரியமுள்ளதும் ஹிதமுமாகிய அந்தத் தேவஸ்ரேஷ்டரான பிரம்மாசொன்ன சொல்லைக்கேட்டு, உடனே அதனை அங்கீகரித்தார்கள். பிறகு, அவர்களெல்லாரும் தங்கள் அம்சங்களினால் பூலோகத்துக்குப்போக நிச்சயஞ்செய்துகொண்டு, சத்துருக்களை ஸம்ஹரிப்பவரும் வைகுண்டவாஸியுமான நாராயணரிடம்சென்றனர். சக்கரத்தையும் கதாயுதத்தையும் கையிலேந்தியவரும் பீதாம்பரத்தைத்தரித்தவரும் கரியதிருமேனியுள்ளவரும் நாபியிற்கமலமலரையுடையவரும் அஸுரர்களைக்கொல்லுபவரும் அகலமும் அழகும் விசாலமுமான கண்களையுடையவரும் பிரம்மாவுக்குநாதரும் தேவர்களுக்குப்பிரபுவும் சிறந்தசக்தியுள்ளவரும் ஸ்ரீவத்ஸமென்னும் மறுவை அடையாளமாகவுடையவரும் ஐம்புலன்களையும் ஆளுகிறவரும் எல்லாத்தேவர்களாலும் பூஜிக்கப்பெற்றவருமாக இருப்பவரெவரோ அந்தப் புருஷோத்தமரைப்பார்த்து, இந்திரன், 'பூமியைச்சுத்திசெய்வதற்காகத் தேவரீர் அம்சத்தினால் அவதரிக்கக்கடவீர்' என்று பிரார்த்தித்தான். ஹரியும் 'அப்படியே ஆகட்டும்' என்று அவனுக்கு விடையளித்தனர்.

அம்சாதவதரணபர்வம் முற்றிற்று.

---

## அறுபத்தாறுவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம்.



பிறகு, இந்திரன் தானும் தேவர்களுடன்கூட ஸ்வர்க்கத்திலிருந்து பூமியில்அம்சங்களைக்கொண்டு ஜனிப்பதாக நாராயணரிடம் பிரதிஜ்ஞை செய்தான். இந்திரன் தானே எல்லாத்தேவர்களுக்கும் கட்டளையிட்டு மறுபடியும் நாராயணருடைய ஸ்தானமாகிய அந்தவைகுண்டத்திலிருந்து சென்றான். அந்தத்தேவர்கள், அஸுரர்களை அழிப்பதற்காகவும் எல்லாலோகங்களுக்கும் நன்மைசெய்வதற்காகவும் ஸ்வர்க்கத்தினின்றும் பூமியில் ஒவ்வொருவராக இறங்கினர். ராஜஶ்ரேஷ்டரே! பிறகு, தேவர்கள் தங்களிஷ்டப்படி பிரம்மரிஷிகளின் வம்சங்களிலும் ராஜரிஷிகளின்வம்சங்களிலும் ஜனித்தார்கள். அஸுரர்களையும் ராக்ஷஸர்களையும் கந்தர்வர்களையும் நாகர்களையும் இன்னும் மனிதர்களைத் தின்கிற வேறுஅநேகம் பிராணிகளையும் கொன்றனர். பரதஶ்ரேஷ்டரே! அந்தத்தேவர்கள் பிறந்ததுமுதல் பலசாலிகளாக இருந்ததனால் குழந்தையாயிருக்கும்போதுகூட அஸுரர்களும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் நாகர்களும் அவர்களைக் கொல்லமுடியவில்லை" என்று வைசம்பாயனர் சொல்லினர்.

ஜனமேஜயர், "தேவாஸுரக்கூட்டங்கள் கந்தர்வர்கள் அப்ஸரஸுகள் மனிதர்கள் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் இவர்களெல்லாருடைய உத்பத்தியையும் ஆதிமுதல் முழுதும் தெளிவாகக் கேட்க விரும்புகிறேன். எல்லாப் பிராணிகளுடைய ஜனனத்தைப்பற்றியும் நீர் சொல்லவேண்டும்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

"அப்படியே ஆகட்டும்; பிரம்மாவுக்கு நமஸ்காரஞ்செய்து, தேவர்கள்முதலான ஜனங்களுடைய பிறப்பு இறப்புக்களை நான் உமக்குத் தெளிவாகச்சொல்லப்போகிறேன். மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலஸ்த்யர், புலஹர், க்ரது ஆகிய இந்த ஆறு மஹரிஷிகள் பிரம்மதேவர் மனத்தினால் ஸ்ருஷ்டித்தபுத்ரர்களென்று பிரஸித்தமானவர்கள். மரீசியினுடைய புத்ரர் கஶ்யபர். மிகுந்தமஹிமையுள்ள தக்ஷருடைய பெண்கள் பதின்மூவர், கஶ்யபரால் அடியில்வரும் ஸந்ததிகளை உண்டாக்கினர். புருஷஶ்ரேஷ்டரே! பாரதரே! அதிதி, திதி, தனு, காலை, தனாயு, ஸிம்ஹிகை, குரோதை, பிராதை, விஶ்வை, வினதை, கபிலை, முனி, கத்ரு இவர்கள் தக்ஷபுத்ரிகள். இவர்களுக்குப் பராக்

கிரமசாலிகளான பிள்ளைகளும் பேரர்களும் எண்ணில்லாதவர்கள் உண்டானார்கள்.

அதிதியினிடம் லோகங்களுக்கெல்லாம் ஈஸ்வரர்களாகிய பன்னிரண்டு ஆதித்யர்கள் பிறந்தார்கள். பாரதரே! அவர்களைப்பெயர்களோடு உமக்குச்சொல்வேன். அவர்கள் தாதா, மித்ரன், அர்யமா, சக்ரன், வருணன், அம்சன், பகன், விவஸ்வான், பூஷா, ஸவிதா, த்வஷ்டா, விஷ்ணு என்று பன்னிரண்டுபேர்கள். எல்லா ஆதித்யர்களிலும் கடைசியவனாகிய விஷ்ணு குணங்களிற்சிறந்தவன்.

ஹிரண்யகசிபு ஒருவன்தான் திதியின்புத்ரனென்று சொல்லப்பட்டவன். ஸ்ரேஷ்டனாகிய அந்தஹிரண்யகசிபுவுக்குப் பிரஸித்தமானபெயருள்ள புத்ரர்கள் அடியில்வரும் ஐவர்கள். அவர்களுள், பிரஹ்லாதன் ஜ்யேஷ்டன்; அடுத்தவன் ஸம்ஹ்லாதன்; மூன்றாமவன் அனுஹ்லாதன்; அவனுக்குப்பின், சிபி, பாஷ்கலனென்னும் இருவருமாவர். பாரதரே! விரோசனன், கும்பன், நிகும்பனென்று பிரஹ்லாதனுக்கு மூன்றுபுத்ரர்கள். அவர்கள் எங்கும் பிரஸித்தமானவர்கள். சிறந்த பராக்ரமமுள்ள பலிஒருவன்தான் விரோசனனுடைய புத்ரன். பாணனென்னும் அஸுரஸ்ரேஷ்டன் பலியின்புத்ரனென்று பிரஸித்தன். அவன் மிகுந்தஸம்பத்துள்ளவன். அவன் மஹாகாலரென்று சொல்லப்பட்ட ருத்ரருடையதாஸன்.

பாரதரே! தனுவுக்கு * நாற்பதுபுத்ரர்கள். அவர்கள் எங்கும் பெயர்பெற்றவர்கள். அவர்களுக்குள் ஜ்யேஷ்டனும் புகழ்பெற்றவனுமாகிய விப்ரசித்தியென்பவன் ராஜாவாயிருந்தான். சம்பரன், நமுசி, பெயர்பெற்ற புலோமன், அஸிலோமன், கேசி, துர்ஜயன், அயசிரன், அஸ்வசிரன், சூரனாகிய அஸ்வசங்கு, ககனமூர்த்தா, வேகவான், கேதுமான், ஸ்வர்பானு, அஸ்வன், அஸ்வபதி, வ்ருஷபர்வா, அஜகன், அஸ்வக்ரீவன், ஸூக்ஷ்மன், மிகுந்தபலமுள்ள துஹுண்டன், † இஷுபாத், ஏகசக்ரன், விரூபாக்ஷன், ‡ ஹரன், அஹரன், நிசந்திரன், நிகும்பன், குபடன், கபடன், சரபன், சலபன், ஸூர்யன், சந்த்ரமஸ் இவர்கள்தாம் தனுவின்வம்சத்தில் § பெயர்பெற்ற தான

* 'சத்வாரிம்சத்' என்ற இடத்தில 'சதுஸ்திரிம்சத்' என்று பாடமிருக்க வேண்டும். வேறுசிலரும் இப்படியே அபிப்பிராயப்படுகின்றனர்.

† ஏகபாத் என்றும் பாடம்.

‡ மஹோதரன் என்பது வடதேசபாடம். 68-வது அத்யாயத்தில் ஹரன் அஹரன் என்பவர்களுக்கு ஸந்ததி சொல்லியிருக்கிறது. மஹோதரனுக்கு ஸந்ததி சொல்லவில்லை.

§ மற்றவர்களின் பெயர் பிரஸித்தமாக இல்லை.

வர்களென்று சொல்லப்பட்டவர்கள். தேவர்களுக்குள் ஸூர்யசந்தி ரர்கள் வேறு, அஸுரஶ்ரேஷ்டர்களுக்குள் ஸூர்யசந்த்ரர்கள் வேறு என்று சொல்லப்பட்டனர். மஹாராஜாவே! தானவவம்சத்தில் பிறந்தவர்களும் ப்ரஸித்தர்களும் வீரர்களும் மிக்கபலசாலிகளுமான ஏகாக்ஷன், ம்ருதபன், ப்ரலம்பன், நரகன், வாதாபி, சத்ருதபனன், அஸுரஶ்ரேஷ்டனாகிய சடன், கவிஷ்டன், வனாயு, தீர்க்கஜிஹ்வன் ஆகிய இந்தப்பதின்மரும் தனுவின்புத்ரர்களே. பாரதரே! அவர்களுடைய புத்ரர்களையும் பௌத்ரர்களையும் எண்ணுதல் முடியாது. ஸிம்ஹிகையென்பவள், ராகு, சந்திரார்க்கமர்த்தனன், ஸுசந்திரன், சந்திரஹர்த்தா, சந்திரப்ரமர்த்தனன் என்ற புத்ரர்களைப் பெற்றாள்.

குரூரையான குரோதையினுடைய குரூரமானஸ்வபாவமுள்ள புத்ரர்களும் பௌத்ரர்களும் எண்ணில்லாதவர்கள். அவர்கள்கொடிய செய்கையுள்ளவர்களும்சத்துருக்களை அழிக்கிறவர்களுமாகியகுரோதவசர்கள் என்று பெயருள்ள ஒருகூட்டமாயிருந்தார்கள். விக்ஷரன், பலன், வீரன், வ்ருத்ராஸுரன் என்ற நான்குஅஸுரஶ்ரேஷ்டர்கள் தனாயுவின் புத்ரர்கள்.

யமனைப்போன்றவர்களும் ஹிம்ஸிக்கிறவர்களும்அஸுரர்களுக்குள்பெரியவீரர்களென்று பெயர்பெற்றவர்களும் எதிரிகளைத் துன்பப்படுத்துகிறவர்களுமாகிய விநாசனன், குபோதன், குரோதஹந்தா, குரோதசத்ரு இவர்களும் காலகேயர்களென்று பெயர்பெற்ற இன்னும் சிலரும் காலையினுடைய கியாதிபெற்ற புத்ரர்கள். பிருகு மஹரிஷிபுத்ரரான சுக்ராசாரியர் அஸுரர்களுக்குப் புரோஹிதராக இருந்தார். தேஜஸில் ஸூர்யனைப் போன்றவர்களும் பிரம்மலோகத்துக்குப் போகத்தக்கவர்களுமாகிய த்வஷ்டாவும், அவனுக்குப்பின் அத்ரியும், மற்றஇருவர்களான ரௌத்ரனும் கர்மியுமாகிய இந்தநாலு புரோஹிதர்களும் சுக்ராசாரியரின் புத்ரர்களென்று பிரஸித்தர்கள்.

இவ்வாறு, பராக்கிரமசாலிகளான தேவாஸுரர்களின் வம்சோத்பத்தியை நான் புராணத்திற் கேட்டிருந்தபடி உமக்குச்சொன்னேன். ராஜாவே! இவர்களுடைய ஸந்ததியை முழுதும் எண்ணமுடியாது. அதைச்சேர்ந்த உட்பிரிவும் அளவில்லாதது. தார்க்ஷ்யன், அரிஷ்டநேமி, கருடன், அருணன், ஆருணி, வாருணி, இவர்கள் வினதையின் புத்ரர்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றனர். சேஷன், அநந்தன், வாஸுகி, தக்ஷகன், கூர்மன், குலிகன் இவர்கள் கத்ருவின் புத்ரர்களென்று சொல்லப்பட்டவர்கள். ராஜாவே! பீமஸேனன்,

உக்ரஸேனன், ஸுபர்ணன், வருணன், கோபதி, திருதராஷ்டிரன், ஸூர்யவர்ச்சஸ், ஸத்யவாக்கு, அர்க்கபர்ணன், பெயர்பெற்ற பிரயுதன், பீமன், பிரஸித்தனும் எல்லாந்தெரிந்தவனும் ஜிதேந்திரியனுமாகிய சித்ரரதன், சாலிசிரஸ், பர்ஜன்யன், கலி, நாரதன்என்றஇந்த தேவகந்தர்வர்கள் முனியென்பவளுக்குப் பிள்ளைகளாகச் சொல்லப்பட்டனர். பாரதரே ! இதன்மேல் இன்னும் அநேகவம்சங்களைஉமக்குச்சொல்வேன். அனவத்யை, மனு, வம்சை, அஸுரை, மார்க்கணப்பிரியை, அரூபை, சுபகை, பாஸி இந்தப்பெண்களைப் பிராதையென்பவள் பெற்றாள். ஸித்தன், பூர்ணன், பர்ஹிஸ், பெரியகீர்த்தியுள்ள பூர்ணயுஸ், பிரம்மசாரி, ரதிகுணன், ஸுபர்ணன், விஸ்வாவஸு, பானு, ஸுசந்திரன், இந்தத் * தேவகந்தர்வர்கள் ப்ராதையின் புத்திரர்களென்று சொல்லப்பட்டிருக்கின்றனர்.

நல்ல லக்ஷணங்களோடுகூடிய பிரஸித்தமாகச்சொல்லப்போகிற அப்ஸரஸுகளின் வம்சத்தைச் சுபமான ஸுபகாதேவியானவள் முன்னே தேவரிஷிக்குப்பெற்றாள். அவளிடத்தில் அலம்புஷை,மிச்ரகேசி, வித்யுத்பர்ணை, திலோத்தமை, அருணை, ரக்ஷிதை, ரம்பை, மனோரமை, கேசினி, ஸுபாஹு, ஸுரதை, ஸுரஜை, ஸுப்ரியை இந்த அப்ஸரஸுகள் உண்டானார்கள். அதிபாஹு, பெயர்பெற்ற ஹாஹா, ஹூஹூ, தும்புரு, இந்நான்குகந்தர்வஸ்ரேஷ்டர்களும் ஸுபகையின்புத்திரர்கள். அமிர்தம், பிராம்மணர்கள், பசுக்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸுகள் இவர்கள் கபிலையின்புத்திரர்கள் என்பது பூர்வகல்ப சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாக எல்லாப் பிராணிகளின் ஜனனத்தைப்பற்றியும் உமக்கு நான் சொன்னேன். கந்தர்வர்கள், அப்ஸரஸுகள், நாகர்கள், கருடர்கள், ருத்திரர்கள், தேவர்கள், கோக்கள், சிறப்புற்றவர்களும் புண்ணியகர்மங்கள் செய்பவர்களுமாகிய பிராமணர்கள் ஆகிய எல்லாருடைய உத்பத்தியையும் சரியாக நிர்ணயித்துச்சொன்னேன். இஃது ஆயுளையும் புண்ணியத்தையும் பாக்கியத்தையும்கொடுப்பது; கேட்பதற்கு ஸுகமானது; அஸூயையின்றி எப்போதும் கேட்கவும் கேட்பிக்கவும்வேண்டியது. இந்த மஹாத்மாக்களுடைய வம்சத்தைப் பிராமண ஸன்னிதானத்திலும் தேவதாஸன்னிதானத்திலும், நியமத்துடன், எவன் படிப்பானோ அவன் பூர்ணமான ஸந்ததிலாபத்தையும் கீர்த்தியையும் இறந்தபின் மேலானலோகத்தையும் அடைவான்.

---

* தேவஜாதியைச்சேர்ந்த கந்தர்வர்கள்.

## அறுபத்தேழாவது அத்தியாயம்.

## ஸ ம் ப வ ப ர் வ ம் (தொடர்ச்சி.)



பிரம்மாவின் மனத்திலிருந்து பிறந்த புத்திரர்களாகிய ஆறு மஹரிஷிகளையும் தெரியுமே. மிகுந்த தேஜஸுள்ளருத்திரருடைய புத்திரர் பதினொருவரென்று சொல்லப்பட்டிருக்கின்றனர். மிருக வ்யாதர், ஸர்ப்பர்,பெரியகீர்த்தியுள்ள நிருருதி, அஜைகபாத், அஹிர்ப் புத்னியர், வீராராகியபிநாகி, தஹனர், ஈஸ்வரர், பெரியதேஜஸுள்ள கபாலி, ஸ்தாணு, மஹிமையுள்ளவராகிய பகன் ஆகிய இவர்கள் பதி னொருருத்திரர்களென்றுசொல்லப்பட்டிருக்கின்றனர். மிகுந்தமஹி மையுள்ள மரீசி, அங்கிரஸ், அத்ரி, புலஸ்த்யர், புலஹர், க்ரது என்ற இந்த ஆறுமஹரிஷிகளும் பிரம்மாவின்புத்திரர்கள். உறுதி யான தபஸுள்ளவர்களும், எல்லாலோகத்திலும் பெயர்பெற்றவர் களுமாகிய ப்ருஹஸ்பதி, உதத்தியர், ஸம்வர்த்தர்என்ற மூவரும் அங் கிரஸின்புத்திரர்கள். ராஜாவே! அத்திரியினுடைய புத்திரர்கள்அநே கர்களென்று சொல்லப்படுகின்றனர். அவர்களெல்லாரும் வேத வித்துக்களும் தவத்தில் ஸித்திபெற்றவர்களும் அடங்கின மனமுள் ளவர்களுமாகிய மஹரிஷிகள். மனுஷ்யஸ்ரேஷ்டரே! ராக்ஷஸர்க ளும் வானரர்களும்*கின்னரர்களும் யக்ஷர்களும் சிறந்தஞானமுள்ள அந்தப்புலஸ்த்யருடைய புத்திரர்கள். ராஜாவே! சரபங்களும் ஸிம் ஹங்களும் † கிம்புருஷர்களும் புலிகளும் கரடிகளும் ஓநாய்களும் புலகருடைய ஸந்ததிகளாகச் சொல்லப்படுகின்றன. க்ரது என்பவ ருக்கு ஸூர்யனோடுகூட ஸஞ்சரிக்கிறவர்களும் ஸத்யத்தையும் தவத் தையுமே முக்கியமாகக் கொண்டவர்களுமென்று மூன்றுலோகத் திலும் பெயர்பெற்ற அவரைப்போன்ற வாலகில்யர்களென்னும் புத் திரர்கள் உண்டாயினர்.

ராஜாவே! சாந்தமான மனமுள்ளவரும் மிகச்சிறந்த தவமுள்ள வருமாகிய தக்ஷரென்னும் மஹிமைபொருந்திய ரிஷி பிரம்மாவின் வலக்கைக்கட்டைவிரலினின்றும் பிறந்தார். மஹாத்மாவான தக்ஷரு டையபாரியை பிரம்மாவின் இடக்கைக் கட்டைவிரலினின்றும் பிறந் தாள். அவளிடம் அந்தத்தக்ஷரென்னும் ரிஷி ஐம்பதுபெண்களைப் பெற்றார். அழகான தேகமுள்ளவர்களும் கமலம்போன்ற கண்களை

* குதிரைமுகமும் மனிதஉடம்பும் உடையவர்கள்.

† மனுஷ்யமுகமும் குதிரைஉடம்பும் உடையவர்கள்.

யுடையவர்களுமாகிய அந்தப்பெண்கள் அனைவரையும் தக்ஷரென்னும் பிரஜாபதியானவர் புத்திரனில்லாமையால் * புத்ரிகைகளாக வைத்துக்கொண்டார். ராஜாவே! அவர் தர்மதேவதைக்குப் பத்துப் பெண்களையும் சந்திரனுக்கு இருபத்தேழுபெண்களையும் கஶ்யபருக்குப் பதின்மூன்றுபெண்களையும் தேவதாவிவாஹக் கிரமமாகக் கன்னிகாதானஞ்செய்தார். தர்மதேவதையின் பத்தினிகளுடைய பெயர்களைச்சொல்லுகிறேன்; கேளும். கீர்த்தி, லக்ஷ்மி, † திருதி, ‡மேதை § புஷ்டி || ஶ்ரத்தை, ¶ கிரியை, $ புத்தி, **லஜ்ஜை, †† மதி இந்தக்குணங்களின் அதிஷ்டான தேவதைகளாகிய பத்துக்கன்னிகைகள் தர்மதேவதையின் பத்தினிகளானார்கள். இவர்களையே தர்மத்துக்கு மார்க்கமென்று பிரம்மா ஏற்படுத்தியிருக்கிறார். சந்திரனுடையபத்தினிகள் இருபத்தேழுபேர்களும் உலகத்தில்பிரஸித்தமானவர்கள். காலத்தைத் தெரிவிப்பதற்குப் பிரவர்த்தித்தவர்களும் பிரஸித்தமான தபஸுள்ளவர்களுமாகிய சந்திரன் மனைவியரெல்லாரும் உலகநடைகளை நடத்துவதனால் ‡‡நக்ஷத்திரங்களென்றபெயர்பெற்றவர்கள். ரிஷியாகிய தர்மதேவதை பிரம்மாவினுடைய புத்திரர். தக்ஷப்பிரஜாபதியும் பிரம்மாவினுடையபுத்திரரே. அஷ்டவஸுக்களும் தர்மதேவதையின் புத்திரர்கள். அவர்களின் விவரத்தைப்பற்றிச் சொல்வேன். தரன், த்ருவன், ஸோமன், அஹஸ், அநிலன், அநலன், ப்ரத்யூஷன், ப்ரபாஸன் ஆகிய இவர்கள் அஷ்டவஸுக்களென்று சொல்லப்படுகின்றனர். தரன், தூம்ரையினுடையபுத்திரன்; துருவன் பிரமவித்தியினுடைய புத்திரன்; ஸோமன் மனஸ்வினியின் புத்திரன்; அநிலன் சுவாஸையின்புத்திரன்; அஹஸ்என்பவன் ரதையின் புத்திரன்; அநிலன் சாண்டிலியின்புத்திரன்; ப்ரத்யூஷனும் ப்ரபாஸனும் ப்ரபாதையின்புத்திரர்களென்றுசொல்லப்படுகின்றனர்.

த்ரவிணனும் ஹுதஹவ்யவஹனும் தரனுடைய புத்திரர்கள். வைதண்டியன், சிரமன், சாந்தன், முனி இவர்கள் ஆபனுடையபுத்திரர்கள். உலகங்களை நடத்துகின்ற பகவானாகிய காலபுருஷன் துருவனுடையபுத்திரன். ஸோமனுடையபுத்திரன் வர்ச்சஸ்என்பவன்.

---

* எந்தப்பெண்ணின் ஜ்யேஷ்டபுத்திரனைத் தான் எடுத்துக்கொள்வதாகப் பிதா கலியாணஞ்செய்யும்போதே ஏற்படுத்திக்கொள்ளுகிறானோ அவளுக்குப்புத்திரிகை என்றுபெயர்.

† திருப்தி. ‡ ஸ்திரபுத்தி. § தேகபலம். || நம்பிக்கை. ¶ செய்கை. $ நிச்சயம். ** வெட்கம். †† விவேகம். ‡‡ அழிவில்லாதவை.

அவனாலேதான் எல்லாரும் தேஜஸுள்ளவர்களாவது. சிசிரன், பிராணன், ரமணன் இவர்கள் மனோஹரையின் புத்ரர்கள். ஜ்யோதி, சமன், சாந்தன், முனி இவர்கள் அஹஸின்புத்ரர்கள். சரவணத்திற் பிறந்த ஸ்ரீமானாகிய குமாரக்கடவுள் அக்னியென்று சொல்லப்பட்ட அநலனுடையபுத்ரர். சாகன், விசாகன், நைகமேயன் இவர்கள் அவருக்குப்பின் பிறந்தவர்கள். க்ருத்திகாதேவி எடுத்துவளர்த்த தனால் அவர் கார்த்திகேயரென்றும் சொல்லப்படுகிறார். சிவையென்பவள் அநிலனுடைய பார்யை; அவளிடம் அநிலனுக்கு மனோஜவனும் அவஜ்ஞாதகதியுமாகிய இரண்டுபுத்ரர்கள் பிறந்தார்கள். தேவலர் என்று பெயருள்ளரிஷியைப் ப்ரத்யூஷனுடைய புத்ரரென்று அறிகின்றனர். தேவலருக்குப் பொறுமையுள்ளவர்களும் ஞானவான்களுமாகிய இரண்டுபுத்ரர்கள் இருந்தார்கள். ப்ருஹஸ்பதியின் ஸஹோதரியும் பிரம்மஜ்ஞானமுள்ளவளுமாகிய யோகஸித்தையென்னும் சிறந்தபெண் உலகமெங்கும் தடையின்றிச் சஞ்சரித்தாள். அவள் வஸுக்களில் எட்டாமவனாகிய ப்ரபாஸனுடையபார்யை; சிற்பவிஷயத்தில் பிரம்மாவும் அநேகஆயிரம் கைத்தொழில்களைச்செய்கிறவனும் தேவர்களுக்குத் தச்சனும் எல்லாப்பூஷணங்களையும் செய்பவனும் சிற்பிகளுக்கெல்லாம் ராஜாவுமாகிய சிறந்தமஹிமையுள்ள விஸ்வகர்மா அவளிடம் ஜனித்தான். அவன் தேவர்களுக்கு ஆகாயத்திற்செல்லும் விமானங்களைச்செய்தான். அம்மஹாத்மாவின் சில்பத்தை மனிதர்களும் அனுஸரிக்கின்றனர். அழிவில்லாத அந்த விஸ்வகர்மாவை எப்போதும் பூஜையுஞ்செய்கின்றனர்.

எல்லாலோகங்களுக்கும் ஸுகத்தைச்செய்கிறபகவானான தர்மதேவதை மனுஷ்யசரீரத்துடன் பிரம்மாவின் வலஸ்தனத்தைப் பிளந்துகொண்டு வெளிப்பட்டார். அவருக்கு எல்லாப்பிராணிகளுடைய மனஸையும் கவருகின்றவரும், தேஜஸினால்உலகங்களைத்தாங்குகின்றவருமாகிய சமன், காமன், ஹர்ஷன் என்ற மூன்று சிறந்தபுத்ரர்கள் பிறந்தார்கள். காமனுடையபார்யை *ரதி; சமனுடையபார்யை †ப்ராப்தி; ஹர்ஷனுடையபார்யை ‡ நந்தை. அவர்களைப்பற்றியே உலகங்கள் நிலைபெறுகின்றன. ராஜஸ்ரேஷ்டரே! மரீசியின்புத்ரர் கஸ்யபர். கச்யபருக்குத் தேவர்களும் அஸுரர்களும் பிறந்தார்கள். அவர்தாம் லோகங்களுக்கே உத்பத்திகாரணம். விஸ்வகர்மாவின்பெண் ஸூர்யனுடைய பார்யையானாள். அந்தமஹானுபாவை பெண்குதிரைவடிவமெடுத்துக்கொண்டு ஆகாசத்தில் அஸ்வினிதேவர்களிருவரையும்பெற்

* ரதி=ஸுகம். † பிராப்தி=கிடைத்தல். ‡ நந்தா=குறைவின்மை.

ருள். ராஜாவே! அதிதியின்புத்ரர்கள் சக்ரன்முதலான பன்னிரண்டுபேர்கள்தாம். அவர்களுள் கடைசியிற்பிறந்தவர் விஷ்ணு. அவர் லோகங்களுக்கு ஆதாரமாக இருக்கிறார். இப்படி *தேவர்களின்வகை முப்பத்துமூன்று. அவர்களுடைய வம்சங்களையும்,பக்ஷங்களையும், குலங்களையும், கணங்களையும் நான் உமக்குச்சொல்வேன். ருத்ரர்களுக்கும் ஸாத்யர்களுக்கும் மருத்துக்களுக்கும் கிருஷ்ண பக்ஷம் ,சுக்ரனையும் விஸ்வேதேவர்களையும் வஸுக்களைச்சேர்ந்தவர்களாக அறியவேண்டும். வினதையின் புத்ரர்களும், சிறந்த பலமுள்ளவர்களுமாகிய அருணன் கருடனிருவரும், ப்ருஹஸ்பதிபகவானும் ஆதித்யர்களிலேயேசேர்த்து எண்ணப்படுகின்றனர். அஸ்வினீதேவர்களையும் ஓஷதிகளெல்லாவற்றையும் † பசுக்களையும் யக்ஷகணமென்று அறியும். ராஜாவே! இந்தத்தேவகணங்களை வரிசையாக உமக்குச்சொன்னேன். மனிதன் இவர்களைச்சொல்வதினால் எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான்.

பகவானாகிய பிருகுமஹரிஷி, பிரம்மாவின் ஹ்ருதயத்தைப் பிளந்துகொண்டு வெளிப்பட்டவர். கவியும் ‡ கவியின்புத்ரரும் நவக்ரஹங்களில் ஒருவருமாகிய சுக்ரர் பிருகுவின்புத்ரர். அவர் மூன்று லோகங்களும் ஜீவிப்பதற்காக மழை மழையின்மை பயம் பயமின்மை இவைகளைச்செய்யும்படி பிரம்மாவினால் ஏற்படுத்தப்பட்டு உலகத்தைச்சுற்றுகிறார். யோகத்தில் ஆசாரியரும் சிறந்தஞானமுள்ளவரும் கூர்மையான புத்தியுள்ளவரும் இந்திரியங்களை ஜயித்தவரும் உறுதியான வ்ரதமுள்ளவருமாகியசுக்ராசாரியர் அஸுரர்களுக்கும்§தேவர்களுக்கும் குருவாயிருந்தார். அந்தப் பிருகுபுத்ரரான சுக்ரர் பிரம்மாவினால் உலகத்தின்லாபத்திற்கும் க்ஷேமத்திற்குமாக நியமிக்கப்பட்டபோது ப்ருகு, ஜ்வலிக்கிறதபஸுள்ளவரும் தர்மத்திலேயே சித்தமுள்ளவரும் புகழ்பெற்றவருமாகிய ச்யவனரென்று பெயருள்ள மற்றொரு சிறந்தபுத்ரரை உண்டுபண்ணினார். பரதவம்சத்தில் பிறந்தவரே! அவர் தம்தாயாரைப் புலோமாவென்னும்ராக்ஷஸனிடமிருந்து விடுவிப்பதற்காகக் கோபத்தினால் கர்ப்பத்திலிருந்து வெளிவந்தவர். ஆருஷியென்ற பெயருள்ளமனுவின்பெண், சிறந்தஞானமுள்ள அந்த ச்யவனருடைய பத்னி. அவளிடத்தில் பெரும்புகழுள்ளவரும் மிகு

* வஸுக்கள் 8, ருத்ரர்கள் 11, ஆதித்யர்கள் 12, பிரஜாபதி, வஷட்காரன் 2 ஆக 33.

† நாலுகாலுள்ளவை.

‡ பரந்தஞானமிருந்ததனால் பிருகுவுக்கும் கவியென்றுபெயர்.

§ ப்ருஹஸ்பதிபுத்ரனாகிய கசனுக்கு வித்யோபதேசஞ் செய்ததனால் தேவகுருவானார்.

ந்த தேஜஸுள்ளவரும் மிகுந்தசக்தியுள்ளவரும் சிறுபிராயத்திலே யே குணங்கள் நிரம்பியவருமாகிய ஔர்வர் தொடையைப்பிளந்து கொண்டு பிறந்தார். ஔர்வருடைய புத்ரர் ரிசீகர். ரிசீகருக்கு ஜமதக்னிபிறந்தார். மஹாத்மாவாகிய ஜமதக்னிக்கு நான்குபுத்தி ரர் இருந்தனர். இராமர் அவர்களுக்கெல்லாம் கடைசியாகவும் முத ன்மையான குணங்களுள்ளவராகவும் இருந்தார். அவர் எல்லா அஸ்தி ரங்களிலும் நிபுணர்; க்ஷத்ரியர்களை அழித்தவர்; ஜிதேந்திரியர். ஔர்வருக்கு ஜமதக்நிமுதலான நூறுபுத்ரர்கள் இருந்தார்கள். அவர் களுக்கு அனேகம் ஆயிரம்புத்ரர்கள் உண்டானார்கள். அவர்கள் பூமி யில் மிகுதியாகஆனார்கள்.

பிரம்மாவுக்கு வேறிரண்டு புத்ரர்களிருந்தார்கள். அவர்களிடத் தில்*லக்ஷணமென்பது இருக்கின்றது. அவர்கள் உலகத்தில் தாதா விதாத்தாவென்று சொல்லப்பட்டவர்கள்; மனுவினுடன் இருப்பவர் கள். தாமரைமலரை இருப்பிடமாகவுடையமங்களகரையான†லக்ஷ்மி தேவி அவர்களுடைய ஸஹோதரி. ஆகாசத்தில் ஸஞ்சரிக்கின்ற ‡குதிரைகள்அந்தலக்ஷ்மியினுடைய மனத்திலுண்டான ஸந்ததிகள். §வருணனுடைய பார்யையாகிய ஜ்யேஷ்டாதேவியானவள் சுக்ரனிட த்திலிருந்துஜனித்தாள். பலனை அவளுடையபுத்ரனாகவும் தேவர்களை மகிழ்விக்கும் ஸுரையை அவளுடைய புத்ரியாகவும் அறியும். ஜனங் கள் பசித்து ஒருவரையொருவர்பக்ஷித்ததினால் அந்தஸுரையினிடம் எல்லாப்பிராணிகளையும் அழிக்கும்படியான அதர்மனென்னும் புத் ரன் பிறந்தான். அந்த அதர்மனுக்கு நிருருதி பார்யை. அவளுக்குப் பிறந்ததினால் ராக்ஷஸர்களுக்கு நைருருதர்கள் என்றுபெயர். அந்த நிருருதிக்குக் கொடியவர்களும் எப்போதும் பாபஞ்செய்வதிலேயே எண்ணமுடையவர்களுமாகிய பயன், மஹாபயன், எல்லாப்பிராணிக ளையுமழிக்கும் ம்ருத்யு ஆகிய மூன்றுபுத்ரர்களிருந்தார்கள். ம்ரு த்யு எல்லாவற்றையும் அழிக்கிறவனாதலால் அவனுக்குப் பார்யையு மில்லை; புத்ரனுமில்லை.

---

* உலகத்தின் இயல்பு.

† வஸ்துக்களில் மனதைக் கவரத்தக்க சோபை இங்கே லக்ஷ்மியென் னப்படுவது.

‡ ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற ஸூர்யகிரணங்கள்முதலியவற்றைக் குதி ரைகளென்றது. லக்ஷ்மியென்பதைப் பிரம்மா என்றும் குதிரைஎன்பதைப் பிதிர்க்கள் முதலானவர் என்றும் பழைய உரை கூறுகிறது.

§ வருணனுடைய பார்யையான ஜயேஷ்டாதேவியானவள் அவனுடைய வீரியத்தினால் பலனென்னும் புத்ரனையும் ஸுரையென்னும் பெண்ணையும் பெற்றாள் என்பது பழையஉரை.

தாம்ராதேவியானவள் காகி, சேனி, பாஸி, த்ருதராஷ்ட்ரி, சுகி ஆகிய லோகப்ரஸித்தமான இந்தப்பெண்களையும் பெற்றாள். ராஜாவே! காகியென்பவள் கோட்டான்களையும், சேனி பருந்துகளையும், பாஸியென்பவள் கள்ளிக்காக்கைகளையும் கழுகுகளையும், சுபமான த்ருதராஷ்ட்ரியென்பவள் எல்லா ஹம்ஸங்களையும் * கலஹம்ஸங்களையும் சக்ரவாகங்களையும் உண்டாக்கினாள். கீர்த்தியுள்ளவளும் நல்ல குணங்கள் நல்லலக்ஷணங்கள் நிரம்பினவளுமாகிய சுகியென்பவள் கிளிகளையே பெற்றனள்.

அதன்பின், க்ரோதவசையென்பவள் † கோபதேவதையினிடமிருந்து ம்ருகி, ம்ருகமந்தா, ஹரி, பத்ரமனஸ், மாதங்கி, சார்த்தூலி, ஸ்வேதை, ஸுரபி, எல்லாலக்ஷணங்களும்பொருந்தியஸுரஸை ஆகிய ஒன்பதுபெண்களைப்பெற்றாள். ராஜஸ்ரேஷ்டரே! மிருகங்களெல்லாம் ம்ருகியின்ஸந்ததிகள். கரடிகளும்பெரியகவரிமான்களும்மிருகமந்தையின்ஸந்ததிகள். ‡ பத்ரமனஸ்என்பவள் ஐராவதமென்னும் யானையை ஸந்ததியாகப்பெற்றாள். தேவர்களின்யானையாகிய ஐராவதமென்னும் மஹாகஜம் அவள்ஸந்ததி. பலசாலிகளாகிய குரங்குகளும் கருங்குரங்குகளும் கோலாங்கூலங்களும் ஹரியின் ஸந்ததிகளென்று சொல்லுகின்றனர். சார்த்தூலியென்பவள் அநேகங்களான ஸிம்மங்களையும் புலிகளையும் வேங்கைகளையும் இன்னும்மிகுந்த பலமுள்ளவையான எல்லாவற்றையும் பெற்றாள். இதில் ஸந்தேகமில்லை, ராஜாவே! மாதங்கியென்பவள் யானைகளை ஸந்ததிகளாகப்பெற்றாள். ஸ்வேதையென்பவள் வேகமாகச்செல்லத்தக்க ஸ்வேதமென்று பெயருள்ள திக்கஜத்தைப்பெற்றாள்.

பாரதரே! ராஜாவே! உமக்கு ஸுகமுண்டாகட்டும். ஸுரபியென்பவள் ரோஹிணி, கீர்த்திபெற்ற கந்தர்வி, விமலை, அநலைஎன்கிறபெண்களைப்பெற்றாள். ரோஹிணியிடம் பசுக்கள் பிறந்தன. குதிரைகள் கந்தர்வியின் ஸந்ததிகள். இரையென்பவளுக்குத் தாமரைப்புஷ்பம்போன்ற கண்களையுடைய மூன்றுகன்னிகைகள் பிறந்தார்கள். அவர்களிடமிருந்து § பூவாமற்காய்க்கிறமரங்களும் மற்றமரங்களும் கொடிகளும்பிறந்தன. லதையென்றும் ருஹையென்றும்இரண்டுபேர்கள்தாம் பிரஸித்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றனர். அவர்கள்மூவரும் மேற்

* காரன்னங்கள்.

† கோபதேவதை, 'பிரம்மாவினிடமிருந்து' என்பது தக்ஷிண தேசத்துப் பாடம்.

‡ பத்ரமனஸ் என்பது மனத்தில எப்போதும் ஜலமுள்ளதேவதைக்குப் பெயராதலின் ஐராவதம் அவள்ஸந்ததி யெனப்பட்டது.

§ இதற்குத் தமிழில் கோளியென்று பெயர்.

சொன்ன கொடிசெடிவர்க்கங்களுக்கெல்லாம் உரியவர்கள். புஷ்பங்களில்லாமலே காய்க்குமரங்களெல்லாம் லதையென்பவளுடைய ஸந்ததிகளென்று அறியத்தக்கவை. அவற்றைத்தாம் வனஸ்பதிகளென்று சொல்லுகின்றனர். புஷ்பித்துப்பலிக்கின்ற வ்ருக்ஷங்களோருஹையென்பவளுடைய ஸந்ததியென்று அறிகின்றனர். புதர்களும் மரங்களும் தோலில் பலமுள்ள மூங்கில்முதலிய புல்ஜாதிகளும் கொடிகளும் ருஹையினுடையஸந்ததிகள். *அவர்களிருவரோடும் வம்சம்முடிந்துபோகின்றது. அநலையென்பவள் பிண்டபலன்களென்று சொல்லப்பட்ட உருண்டைவடிவான பழங்களுள்ள வ்ருக்ஷங்களைப் பெற்றாள். †சுகியென்பவள் அநலையின்பெண். ஸுரஸையின்புத்ரன் கங்கன். அருணனுடையபார்யையாகிய சேனி பராக்ரமமுள்ளவர்களும் மிகுந்தபலமுள்ளவர்களுமாகிய ஸம்பாதியையும் ஜடாயுவையும் பெற்றாள். ஸுரஸை நாகங்களையும் கத்ரு‡பன்னகங்களையும் ஸந்ததிகளாகப்பெற்றனர். வினதைக்குக் கருடன் அருணன் என்று இரண்டுபுத்ரர்கள் பிரஸித்திபெற்றவர்கள். ராஜாவே! புத்திமான்களிற் சிறந்தவரே! இவ்வாறு, எல்லாமுக்யப்பொருள்களுடைய உற்பத்தியையும் நான்தெளிவாகச்சொன்னேன். இதைக்கேட்டபுருஷன் பாபத்தினின்று முழுதும்நீங்குவான்; § ஸர்வஜ்ஞனுமாவான்; மேலான ஸுகத்தையும் பெறுவான்" என்றனர்.

---

## அறுபத்தெட்டாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



ஜனமேஜயர், "பகவானே! தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், நாகர்கள், ராக்ஷஸர்கள், ஸிம்மங்கள், புலிகள், மிருகங்கள், பன்னகங்கள், பக்ஷிகள், மற்றுமுள்ளபிராணிகள், மனிதர்களில் மஹாத்மாக்களானவர்கள் ஆகிய இவர்களுடைய ஜனனத்தை நான் விவரமாகக் கேட்கவிரும்புகிறேன். இந்தப்பிராணிகளின் பிறப்பை

---

* மூன்றுகன்னிகைகள் என்று சொல்லப்பட்டவர்களில் மூன்றாமவளுக்குத் தனித்து ஸந்ததியில்லாமையால் பெயர்கூறவில்லை.

† இவள் வேறாயிருக்கவேண்டும்.

‡ ஸர்ப்பங்களின் ஜாதிபேதம்.

§ இதில் ஸூக்ஷ்மகாரணங்களைச் சொன்னதனால் ஸ்தூலகாரணங்கள் வேறு சொல்லப்பட்டாலும் விரோதமில்லை.

யும் செய்கையையும் வரிசையாகக்கேட்க விரும்புகிறேன்" என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

"ராஜாவே! தேவர்களிலும் அஸுரர்களிலும் எவர்கள் மனுஷ்யர்களிடம் முதலில் ஜனித்தனர்களோ, அவர்களையெல்லாம் உமக்குச் சொல்வேன். விப்ரசித்தியென்று பெயர்பெற்ற அஸுரஶ்ரேஷ்டனிருந்தானல்லவா, அவன் ஜராஸந்தனென்று பெயர்பெற்ற ராஜாவானான். ராஜாவே! திதியின்புத்ரன் ஹிரண்யகசிபுவென்று சொன்னேனே, அவன் மானிடலோகத்தில் சிசுபாலனென்ற ராஜாவாகப்பிறந்தான். ப்ரஹ்லாதனுக்குத் தம்பியாகிய ஸம்ஹ்லாதனென்பவன் சல்லியனென்று பெயருள்ள வாஹ்லீக அரசனாகப்பிறந்தான். ப்ரஹ்லாதனுடைய கடைசித்தம்பியாகிய பராக்கிரமுள்ள அநுஹ்லாதனென்று சொல்லப்பட்டவன் த்ருஷ்டகேதுவென்று பெயர்பெற்ற ராஜாவாகப் பிறந்தான். ராஜாவே! சிபியென்ற திதியின் புத்ரனைச் சொன்னேனே, அவன் பூமியில த்ருமனென்றுபெயருள்ள ராஜாவானான். அஸுரர்களுக்குள் பெயர்பெற்ற பாஷ்கலனென்பவன் பகதத்தனென்று க்யாதிபெற்ற ராஜாவானான். ராஜாவே! அயசிரனும், அஶ்வசிரனும், பராக்ரமசாலியான அயசங்குவும், ககனமூர்த்தாவும், வேகவானுமாகிய வீரர்களான இவ்வைந்துஅஸுரஶ்ரேஷ்டர்களும்கேகய தேசத்தில் மஹாத்மாக்களாகிய ராஜஶ்ரேஷ்டர்களாகப் பிறந்தார்கள்.

அவர்களைத்தவிர வேறாகியபராக்ரமசாலியான கேதுமானென்பவன், அமிதௌஜஸ்என்றுபெயர்பெற்ற கொடியசெய்கையுள்ளராஜாவாக ஜனித்தான். ஸ்வர்பானுவென்று சொல்லப்பட்ட மிகுந்த ஐஶ்வர்யமுள்ள அஸுரஶ்ரேஷ்டன் உக்ரஸேனனென்று பெயர்பெற்ற உக்ரமான செய்கையுள்ள ராஜாவாகப்பிறந்தான். அஶ்வனென்று சொல்லப்பட்ட மிகுந்த ஐசுவர்யமுள்ள அஸுரஶ்ரேஷ்டனிருந்தானன்றோ, அவன்பெரியவீரியமுள்ள தோல்வியடையாத அசோகனென்னும் ராஜாவாகப்பிறந்தான். ராஜாவே! அவனுக்குத்தம்பி அஶ்வபதியென்று சொன்னேனன்றோ, அந்தஅஸுரன் புருஷஶ்ரேஷ்டனாகிய ஹார்த்திக்யனென்னும் ராஜாவாகஜனித்தான். வ்ருஷபர்வாவென்று சொல்லப்பட்ட ஐஶ்வர்யமுள்ள அஸுரராஜன் பூமியில் தீர்க்கப்ரஜ்ஞனென்று சொலலப்பட்ட அரசனாகப்பிறந்தான். ராஜாவே! வ்ருஷபர்வாவின்தம்பியாகியஅஜகனென்பவன் ஸால்வனென்று பெயருள்ள ராஜாவாகப் பூமியிற்பிறந்தான். அஶ்வக்ரீவனென்று சொல்லப்பட்டவனாகிய அஸுரஶ்ரேஷ்டன் பூமியில்ரோசமானனென்று சொல்லப்பட்ட ராஜாவாகப்பிறந்தான். ராஜாவே! மதிப்புள்ள

வனும் கீர்த்தியுள்ளவனுமாகிய ஸூக்ஷ்மனென்று சொல்லப்பட்ட அஸுரன் பூமியில் ப்ருஹத்ரதனென்று பெயர்பெற்றராஜாவாகப் பிறந்தான். துஹுண்டனென்று க்யாதிபெற்ற அஸுரோத்தமன் ஸேனபிந்துவென்ற க்யாதிபெற்ற ராஜாவாகப்பிறந்தான். அந்த அஸுரர்களுக்குள் பலத்திற்சிறந்தவனாகிய இஷுபாத்என்பவன் பூமியில் பராக்கிரமத்திற் புகழ்பெற்ற நக்னஜித்என்னும் ராஜாவாகப் பிறந்தான். ஏகசக்ரனென்று க்யாதிபெற்ற அஸுரஸ்ரேஷ்டன் பூமியில் பிரதிவிந்தியனென்ற பெயரோடு புகழ்பெற்றிருந்தான். விசித்ரமான யுத்தஞ்செய்பவனாகிய திதியின்புத்ரனான விருபாக்ஷனென்னும் அஸுரராஜன் பூமியில் சித்ரதர்மாவென்று பெயர்பெற்றராஜாவாகப் பிறந்தான். சத்ருக்களைப்பீடிக்கிற வீரனாகிய ஹரனென்னும் அஸுரோத்தமனிருந்தானல்லவா, அவன் ஸுபாஹுவென்றுபெயர்பெற்ற ஸ்ரீமானான அரசனாகப் பிறந்தான். பெரியபராக்ரமசாலியும் எதிரிகள்பக்ஷத்தை ஒழிப்பவனுமாகிய அஹரனென்பவன் பூமியில் பாஹ்லீகனென்று பெயர்பெற்ற ராஜாவாகப்பிறந்தான். சந்திரன் போன்றமுகமுள்ள நிசந்திரன்என்னும் அஸுரோத்தமன் முஞ்சகேசனென்று க்யாதியுள்ள ஸ்ரீமானனஅரசனாகப் பிறந்தான். யுத்தத்தில் தோல்வியடையாதவனும் சிறந்தபுத்தியுள்ளவனுமாகிய நிகும்பனென்னும் அஸுரன் பூமியில் தேவாதிபனென்று சொல்லப்பட்ட ராஜஸ்ரேஷ்டனாகப்பிறந்தான். அந்தஅஸுரர்களில் சரபனென்னும் மஹாஸுரன் ராஜரிஷியாகிய பௌரவனென்று பெயருள்ள ராஜாவாகப்பிறந்தான். ராஜாவே! சிறந்தபராக்ரமமுள்ள ஸ்ரீமானாகிய குபடனென்னும் அஸுரஸ்ரேஷ்டன் பூமியில் ஸுபார்ஸ்வனென்று பெயர்பெற்ற ராஜாவாகப்பிறந்தான். ராஜாவே! கபடனென்னும் அஸுரஸ்ரேஷ்டன் பொன்மலைக்கொப்பான பார்வதேயனென்று சொல்லப்பட்ட ராஜரிஷியாகப் பூமியிற்பிறந்தான். அந்தஅஸுரர்களுள் இரண்டாமவனான சலபன், ப்ரஹ்லாதனென்னும் பாஹ்லீகதேசத்தரசனாகப் பிறந்தான். சந்திரனென்னும் அஸுரஸ்ரேஷ்டன் சந்திரனைப்போன்றவனான சந்திரவர்மாவென்று பெயர்பெற்ற காம்போஜதேசத்து ராஜாவாகப்பிறந்தான். ஸூர்யனென்று பெயர்பெற்ற அஸுரஸ்ரேஷ்டன் ரிஷிகனென்றுபெயருள்ள ராஜரிஷியாகிய ராஜஸ்ரேஷ்டனாகப்பிறந்தான். ராஜஸ்ரேஷ்டரே! மிருதபனென்றுபெயர்பெற்ற அஸுரோத்தமன்தான் பச்சிமானூபகனென்ற ராஜாவென்று அறியும். மிகுந்தபராக்ரமமுள்ள கவிஷ்டனென்றுபெயர்பெற்றஅஸுரராஜன் த்ருமஸேனனென்று க்யாதியுள்ள ராஜாவாகப் பூமியில்ஜனி

த்தான். மயூரனென்றுசொல்லப்பட்ட ஸ்ரீமானான அஸுரஸ்ரேஷ்டன் விஸ்வனென்று பெயர்பெற்ற ராஜாவாகப்பிறந்தான். ஸுபர்ணனென்றுசொல்லப்பட்டவனாகிய அவன் தம்பி, காலகீர்த்தியென்று சொல்லப்பட்ட அரசனாகப் பூமியில் பிறந்தான். சந்திரஹந்தாவென்று சொல்லப்பட்ட ஸ்ரேஷ்டனானபெரியஅஸுரன் ராஜரிஷியாகியசுனகனென்னும் ராஜாவாகப்பிறந்தான். சந்த்ரப்ரமர்த்தனனென்று சொல்லப்பட்ட அஸுரராஜன் ஜானகியென்றுபெயருள்ள ராஜாவாகப் பிறந்தான்.

குருவம்சத்தவரே! ராஜாவே! தீர்க்கஜிஹ்வனென்றுசொல்லப்பட்டஅஸுரஸ்ரேஷ்டன் தான்பூமியில் காசிராஜனென்றுபெயர்பெற்றிருக்கிறான். ஸிம்ஹிகை சந்திரார்க்கமர்த்தனனாகிய எந்தராகுவைப் பெற்றாளோ, அவன் க்ராதனென்றுபெயர்பெற்ற ராஜாவாகப்பிறந்தான். தனுயுவின்புத்ரர்கள்நால்வரில் முதல்வனும் பராக்கிரமசாலியுமாகிய விக்ஷரனென்னும்அஸுரன்வஸுமித்ரனென்றராஜாவென்று நினைக்கப்படுகிறான். ராஜாவே! விக்ஷரனுக்குஅடுத்தவனாகிய பெரிய பலனென்னும் அஸுரன் பாண்டியதேசாதிபதியான ராஜாவென்று புகழ்பெற்றிருக்கிறான். வீரனென்றுபெயருள்ள பலவானாகியஅஸுரோத்தமன் பௌண்ட்ரமாத்ஸ்யகனென்ற ராஜாவாக ஜனித்தான். ராஜாவே! வ்ருத்ரனென்றுபெயர்பெற்ற மஹாஸுரன்தான் ராஜரிஷியாகிய மணிமானென்னும் ராஜாவாகப்பிறந்தான். வ்ருத்ரன்தம்பியாகிய க்ரோதஹந்தா என்னும் அஸுரன் பூமியில் தண்டனென்று பெயர்பெற்ற ராஜாவாகப்பிறந்தான். க்ரோதவர்த்தனன் என்னப்பட்ட மற்றோர்அஸுரன் தண்டதாரனென்று ப்ரஸித்தனான ராஜாவாக ஜனித்தான். ராஜஸ்ரேஷ்டரே! (காலேயர்களின்) புத்ரர்களில் எட்டுப்பெயர்கள் புலிக்குஸமானமான பராக்ரமமுள்ள ராஜாக்களாகப்பிறந்தனர். அந்தக்காலேயபுத்ரர்கள் எட்டுப்பெயர்களுக்குள் ஜ்யேஷ்டனான அஸுரஸ்ரேஷ்டன் மகததேசத்தில் ஜயத்ஸேனனென்னும் ராஜாவாக ஜனித்தான்.

அவர்களில் இரண்டாமவன் ஸ்ரீமானாகவும் இந்திரனுக்கொப்பாகவுமிருக்கிற அபராஜிதனென்னும் ராஜாவாகப்பிறந்தான். சிறந்த பராக்ரமமும் மேலானமாயையுமுடைய மூன்றாவது அஸுரஸ்ரேஷ்டன் பயத்தைத்தரத்தக்க பராக்ரமத்தையுடைய *நிஷாதராஜாவாகப் பூமியில்ஜனித்தான். அவர்களில் நாலாமவனாகச்சொல்லப்பட்டவன் பூமியில்ஸ்ரேணிமானென்றுசொல்லப்பட்டராஜரிஷிஸ்ரேஷ்டனானான்.

---

* வேடர்கள்.

அவர்களில் ஐந்தாமவனுகிய சிறந்த அஸுரஸ்ரேஷ்டன்இந்தலோகத்தில் மஹோஜஸ்என்று சொல்லப்பட்ட வீரனுகப்பிறந்தான். அவர்களில் ஆருமவனுகிய புத்திசாலியான அஸுரஸ்ரேஷ்டன் புவியில் அபீருவென்றுபெயர்பெற்ற சிறந்த ராஜரிஷியாக ஆனுன். ஸமுத்ரம்சூழ்ந்தபூமியில் பெயர்பெற்றவனும் அறம்பொருள்களைச் சரியாகத்தெரிந்துகொண்டவனுமாகிய ஸமுத்ரஸேனனென்னும் ராஜா அந்தக்காலேயர்களின் கூட்டத்திலிருந்து உண்டானவன்தான். ராஜாவே ! அந்தக்காலேயர்களில் எட்டாமவனுகிய ப்ருஹத்என்பவன்எல்லாப்பிராணிகளின்நன்மையிலும் ஊக்கமுள்ள தர்மாத்மாவாகியராஜாவாகப்பிறந்தான். அரசரே ! தானவர்களுள் மிகுந்த பலவானுகிய குக்ஷியென்றுபெயர்பெற்ற அஸுரன்,பொன்மலேபோன்றவனுனபார்வதீயனென்று பெயர்பெற்ற அரசனுகப்பிறந்தான். மிகுந்த பராக்ரமமுள்ளவனும் ஸ்ரீமானும் ராஜாவுமாகிய க்ரதனனென்னும் அஸுரஸ்ரேஷ்டன்தான் பூமியில் ஸூர்யாக்ஷனென்று பெயர்பெற்றராஜாவாகஜனித்தான். அஸுரர்களுக்குள் ஸூர்யனென்று சொல்லப்பட்ட ஸ்ரீமானுகிய அஸுரஸ்ரேஷ்டன், எல்லாராஜாக்களுக்கும்சிறந்த தரதனென்னும்பெயருள்ள பாஹ்லீகராஜனுக ஆனுன். ராஜாவே! க்ரோதவசர்களென்கிறதாக ஒருகூட்டம்சொன்னேனல்லவா, அவர்களிடமிருந்து வீரர்களாகியஅரசர்கள் இந்தப்பூமியிற் பிறந்திருந்தார்கள். குருவம்சத்தவரே ! மத்ரகன், கர்ணவேஷ்டன், ஸித்தார்த்தன், கீடகன், ஸுவீரன், ஸுபாஹு, மஹாவீரன், பாஹ்லீகன், க்ரதன், விசித்ரன், ஸுரதன், ஸ்ரீமானுகிய நீலனென்னுமரசன், சீரவாஸஸ், பூமிபாலனென்னும் அரசன், தந்தவக்த்ரன் என்னுமரசன், துர்ஜயனென்பவன், ருக்மியென்னும் ராஜஸ்ரேஷ்டன், ஜனமேஜயராஜன், ஆஷாடன், வாயுவேகன், பூரிதேஜஸ், ஏகலவ்யன், ஸுமித்திரன், வாடதானன், கோமுகன், கரூஷதேசத்தரசர்கள், க்ஷேமதூர்த்தி, ஸ்ருதாயுஸ், உத்வஹன், ப்ருஹத்ஸேனன், க்ஷேமன்,அக்ரதீர்த்தன், கலிங்கதேசத்துஅரசனுகிய குஹரன், மதிமானென்னுமரசன், ஈஸ்வரனென்றுபெயருள்ளவன் ஆகிய இந்தராஜாக்களின்கூட்டம் க்ரோதவசர்களென்னும்அஸுரக்கூட்டத்தினின்றும்பூமியில்உண்டானது.

பெரியபாக்கியசாலியும் பெரியகீர்த்தியுள்ளவனும் மிகுந்த பலமுள்ளவனும் அஸுரர்களுக்குட் பெரியவீரனுமாகிய காலநேமியென்று பெயர்பெற்றவன் முன்னிருந்தானன்றே, அவன்தான் உக்ரஸேனன்புத்ரனுகிய பலவானுன கம்ஸனென்று க்யாதிபெற்றிருந்தான். இந்திரனுக்கொப்பான தேஜஸையுடைய தேவகனென்னும்

அரசனிருந்தானல்லவா, அவன், தலைமையாகிய கந்தர்வராஜாவே அரசனாகப் பூமியிற்பிறந்தவன். பாரதரே! பெரிய தேவரிஷியாகிய ப்ருஹஸ்பதியினுடைய அம்சத்திலிருந்து பரத்வாஜருக்குத் துரோணர் கர்ப்பாசயத்திலிருந்து ஜனிக்காமல் பிறந்தாரென்று அறியும். ராஜஸ்ரேஷ்டரே! அவர் வில்லாளிகளுக்குள் மேலானவரும் அஸ்திரங்களெல்லாம்தெரிந்தவரும் பெரும்புகழும்பெரும்பராக்ரமமுமுள்ளவருமாக ஜனித்தார். வேதமறிந்தவர்கள் அந்தத் துரோணரைத் தனுர்வேதத்திலும் வேதத்திலும் மிகச்சிறந்தவராகவும் அருமையான செய்கையுள்ளவராகவும் தமதுகுலத்தை வ்ருத்திசெய்பவராகவும் அறிகின்றனர். பரதவம்சத்தவரே! எதிரிகளைப் பீடிப்பவரும் சிறந்த பராக்ரமமுள்ளவரும், சத்ருபக்ஷங்களுக்குப் பயத்தையுண்டுபண்ணுகிறவரும், தாமரையிதழ்போன்ற கண்களையுடையவரும்,சூரருமாகிய அஸ்வத்தாமாவானவர், சிவன் யமன் இவர்கள் ஒன்றுசேர்ந்து காமத்திலிருந்தும் கோபத்திலிருந்தும் உண்டுபண்ணப்பட்டு, மனிதர்களிற் சிறந்தவராகப் பூமியிலிருந்தார். அஷ்டவஸுக்கள் வஸிஷ்டருடைய சாபத்தாலும் இந்திரனுடைய கட்டளையினாலும் சந்தனுராஜாவுக்குக் கங்காதேவியினிடம் புத்ரர்களாக ஜனித்தனர். அவர்களுள் கடைசியானவரும், கௌரவர்களுக்கு அபயம் கொடுத்தவரும், சிறந்தபுத்தியுள்ளவரும், வேதங்களை அறிந்தவரும், நல்லவாக்குள்ளவரும், சத்ருபக்ஷங்களை யொழிப்பவருமாகிய பீஷ்மாசாரியர் அந்தச் சந்தனுவின் புத்ரர்; அஸ்திரம் தெரிந்தவர்கள்எல்லாருள்ளும் சிறந்தவரும், மஹாபராக்ரமசாலியுமான அவர் மஹாத்மாவாகிய பரசுராமருடன் யுத்தஞ் செய்தார். ராஜாவே! க்ருபர்என்று பெயருள்ள பிரம்மரிஷி, பூமியிலிருந்தாரன்றோ, மிகுந்தசக்தியுள்ள அவர் ருத்ரர்களுடைய கூட்டத்திலிருந்து உண்டானவரென்று அறியும். இந்தலோகத்தில் மஹாரதனை சகுனியென்னும் ராஜா இருந்தானே, எதிரிகளைப் பீடிப்பவனாகிய அவனைத் துவாபரயுகமே வந்துபிறந்ததாக அறியும். ஸத்யஸந்தனும் வ்ருஷ்ணிகுலஸ்ரேஷ்டனும் எதிரிகளையழிப்பவனுமாகிய ஸாத்யகி, தேவர்களாகிய ஸப்தமருத்துக்களின்பக்ஷத்திலிருந்து ஜனித்தவன். ராஜாவே! இந்த மனுஷ்யலோகத்தில் ஆயுதம்பிடித்தவர்களெல்லாரினும் ஸ்ரேஷ்டனை த்ருபதனென்னும் ராஜரிஷி, அந்த மருத்துக்களின் கூட்டத்திலிருந்தே பிறந்தவன். ராஜாவே! நிகரில்லாத செய்கையையுடையவனும் க்ஷத்ரிய ஸ்ரேஷ்டர்களுக்கெல்லாம் சிறந்தவனுமாகிய க்ருதவர்மாவென்னும் ராஜாவையும் அந்தக்கூட்டத்திலிருந்து வந்தவனாக அறியும். சத்துருக்களையழிப்பவனும்

எதிரிகளின் தேசங்களுக்குத் தாபத்தையுண்டாக்குகின்றவனுமாகிய விராடனென்னும் ராஜாவையும் ஸப்தமருத்துக்களின் கூட்டத்திலிருந்து உண்டானவனாகவே அறியும். அரிஷ்டையென்பவளின் புத்ரனாகிய ஹம்ஸனென்று பெயர்பெற்ற கந்தர்வராஜன், க்ருஷ்ணத்வைபாயனருடைய புத்ரனாகிய த்ருதராஷ்ட்ரனென்று பெயர்பெற்ற கௌரவராஜனாகப் பிறந்தான். நீண்டகைகளும் சிறந்த பராக்கிரமமுமுள்ளவனும் அறிவே கண்ணாகவுடையவனுமாகிய த்ருதராஷ்ட்ர ராஜன் தன்தாயார்செய்த குற்றத்தினாலுண்டான ரிஷியின்கோபத்தினால் குருடனாகவே பிறந்தான். சஸ்திரம்பிடித்தவரெல்லாரிலும் சிறந்தவனும் சிறந்தகைகளையுடையவனும் உன்பிதாவுக்குப் பாட்டனும் அந்தத்திருதராஷ்டிரனுக்குத் தம்பியும் மிகுந்ததைரியமும்பலமுமுள்ளவனுமாகிய பாண்டுவென்னும் வீரன் ஸப்தமருத்துக்களின் கூட்டத்திலிருந்து ஜனித்தவன். மிகச்சிறந்த பாக்கியமுள்ளவரும் [1] புத்ரவான்களுக்குட் சிறந்தவரும் புத்திமான்களுக்குள் ஶ்ரேஷ்டருமாகிய அந்தவிதுரர், தர்மதேவதையின் அம்சத்திலிருந்து பூலோகத்தில் ஜனித்த வ்யாஸபுத்ரரென்று அறியும். கலியினுடைய அம்சமானது,அறிவில்லாதவனும் கெட்ட எண்ணமுள்ளவனும் கௌரவர்களுக்கு அபகீர்த்தியை உண்டாக்குகிறவனுமாகிய துர்யோதனனென்னும் ராஜாவாகப் பூமியில் ஜனித்தது. ராஜாவே! எல்லாஉலகமும் விரோதிக்கத்தக்க கலிபுருஷனாகிய துர்யோதனன் பூமிமுழுவதையும் ஹதஞ்செய்தான். அவனால் எல்லாப்பிராணிகளுக்கும் நாசத்தையுண்டாக்கும் பெரியவிரோதம் தூண்டிவிடப்பட்டது. புலஸ்திய புத்ரர்களாகிய ராக்ஷஸர்கள் இந்த மனுஷ்யலோகத்தில் துர்யோதனன் ஸஹோதரர்களும் எல்லாரும் கொடியசெய்கையுள்ளவர்களுமான துச்சாஸனன்முதலிய நூறுபேர்களாகப் பிறந்தனர். பரத ஶ்ரேஷ்டரே! துர்முகனும் துஸ்ஸஹனும், இன்னும் நான் பெயர் குறிக்காத துர்யோதனனுக்கு ஸஹாயமாயிருந்தவர்களும் ராக்ஷஸர்களே. த்ருதராஷ்ட்ரனுக்கு வைஶ்யஜாதிப்பெண்ணினிடம்பிறந்த நூற்றோராவது புத்ரனாகிய யுயுத்ஸுவும் ராக்ஷஸனே" என்று வைசம்பாயனர் சொல்ல, ஜனமேஜயர், "ஸமர்த்தரே! இந்தத் திருதராஷ்டிரபுத்ரர்களில் மூத்தவர் இளையவர் வரிசையையும் அவர்களுடைய பெயர்களையும் வரிசையாகச் சொல்லக்கடவீர்" என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"ராஜாவே! துர்யோதனன், யுயுத்ஸு, துச்சாஸனன், துஸ்ஸஹன்,

---

1 இதனால் விதுரருக்கு நல்லபிள்ளைகளிருந்தார்களென்று தெரிகிறது.

துச்சலன், [1] துர்முகன், விவிம்சதி, விகர்ணன், ஜலஸந்தன், ஸுலோசனன், விந்தன், அநுவிந்தன், துர்த்தர்ஷன், ஸுபாஹு, துஷ்ப்ரதர்ஷணன், துர்மர்ஷணன், துர்முகன், துஷ்கர்ணன், கர்ணன், சித்ரன், உபசித்ரன், சித்ராக்ஷன், சாருசித்ராங்கதன், துர்மதன், துஷ்ப்ரஹர்ஷணன், விவித்ஸு, விகடன், ஸமன், ஊர்ணநாபன், பத்மநாபன், நந்தன், உபநந்தன், ஸேனபதி, ஸுஷேணன், குண்டோதரன், மஹோதரன், சித்ரபாஹு, சித்ரவர்மா, ஸுவர்மா, துர்விரோசனன், அயோபாஹு, [2] மஹாபாஹு, சித்ரசாபன், ஸுகுண்டலன், பீமவேகன், பீமபலன், பலாகி, பீமவிக்ரமன், உக்ராயுதன், பீமசரன், கனகாயு, த்ருடாயுதன், த்ருடவர்மா, த்ருடக்ஷத்ரன், ஸோமகீர்த்தி, அனூதரன், ஜராஸந்தன், த்ருடஸந்தன், ஸத்தியஸந்தன், ஸஹஸ்ரவாக், உக்ரஶ்ரவஸ், உக்ரஸேனன், க்ஷேமமூர்த்தி, அபராஜிதன், பண்டிதகன், விசாலாக்ஷன், துராதனன், த்ருடஹஸ்தன், ஸுஹஸ்தன், வாதவேகன், ஸுவர்ச்சஸ், ஆதித்யகேது, பஹ்வாசி, நாகதத்தன், அனுயாயீ, கவசீ, நிஷங்கீ, தண்டீ, தண்டதாரன், தனுர்க்ரஹன், உக்ரன், பீமரதன், வீரன், வீரபாஹு, அலோலுபன், அபயன், ரௌத்ரகர்மா, த்ருடரதன், அனுத்ருஷ்யன், குண்டபேதி, விராவி, தீர்க்கலோசனன், தீர்க்கபாஹு, மஹாபாஹு, வ்யூடோரு, கனகாங்கதன், குண்டஜன், சித்ரகன் இவர்கள் த்ருதராஷ்ட்ரபுத்ரர்கள். துச்சலையென்றபெண் நூற்றொராமவள். த்ருதராஷ்ட்ரனுடைய வைஶ்யஸ்திரீபுத்ரனாகிய யுயுத்ஸுவும் நூற்றுக்குமேற்பட்டவன். ராஜாவே! இந்தநூற்றொரு புத்ரர்களும், ஒருகன்னிகையும் சொல்லப்பட்டனர். குறித்தபேர்வரிசைப்படி ஜ்யேஷ்டர்கனிஷ்டர் என்பதை அறிகின்றனர். ராஜாவே! எல்லாரும் அதிரதர்களானசூரர்கள்; எல்லாரும் யுத்தத்தில் பாண்டித்யமுள்ளவர்கள்; எல்லாரும் வேதம் தெரிந்தவர்கள்; எல்லாரும் சாஸ்திரத்தின்கரைகண்டவர்கள்; எல்லாரும் யுத்தத்தைச்சேர்ந்த வித்தைகளில் தேர்ந்தவர்கள்; கல்வியினாலும் குலத்தினாலும் சோபிக்கின்றவர்கள்; ராஜாவே! எல்லோருக்கும் தகுதியான பார்யைகள் கல்யாணஞ்செய்யப்பட்டனர். ராஜாவே! குருவம்சத்தவனாகிய த்ருதராஷ்ட்ரமஹாராஜா துச்சலையென்னும் பெண்ணைவிவாகத்துக்குரியபருவத்தில்காந்தாரியின்அபிப்பிராயப்படி ஸிந்துதேசத்தரசனாகிய ஜயத்ரதனுக்குக் கன்னிகாதானஞ்செய்தான்.

ராஜாவே! ராஜாவானயுதிஷ்டிரரைத் தர்மதேவதையின் அம்ச

---

1 இஃது இரண்டுமுறை வருகிறது.

2 இஃது இரண்டுமுறை வருகிறது.

மாகவும், பீமஸேனனை வாயுவின் அம்சமாகவும், அர்ஜுனனை இந்திர னுடைய அம்சமாகவும்,எல்லாப்பிராணிகளுடையமனத்தையும்கவரு கிறவர்களும் அழகில்நிகரற்றவர்களுமாகிய நகுல ஸஹதேவர்களைப் பூமியில்வந்த அஸ்வினீதேவர்களுடைய அம்சங்களாகவும் அறிவீர்.

வர்ச்சஸ்என்றுபெயர்பெற்றபராக்ரமசாலியானசந்திரபுத்திரன் தான் பெரியகீர்த்தியுள்ள அபிமன்யுவென்னும் அர்ஜுனபுத்ரனாகப் பிறந்தான். ராஜாவே! அவன் அவதரிக்கும்போது தேவர்களைநோக் கிச் சந்திரன்சொன்னதாவது :—‘எனக்குப்பிராணனிலும் அதிகப் பிரியமானபுத்ரனை நான் கொடுக்கமாட்டேன்.நான் சொல்லப்போகிற நியமத்தைச் செய்துகொள்ளவேண்டும்; அதைத் தாண்டக்கூடாது. பூமியில் அஸுரர்களைக் கொல்வதாகிய தேவர்களுடையகாரியம் நமது காரியம்தான்; இந்தவர்ச்சஸ் அங்கே போகப்போகிறான்; ஆனால், அதிக்காலம் நிற்கமாட்டான். நாராயணருக்கு ஸகாவான நரன், இந்திரபுத்ரனாகிய அர்ஜுனனென்றுபெயர்பெற்றபராக்ரமசாலியான பாண்டுபுத்ரனாகப் பிறக்கப்போகிறான்; இவன் அவனுடையபுத்ரனா கப்பிறக்கப்போகிறான்; இவன் பாலனாகஇருக்கையிலேயே பூமியில் மஹாரதனாவான். தேவஸ்ரேஷ்டர்களே! பதினாறுவருஷகாலம்அங்கே இருப்பான்; இவனுடைய பதினாரும்பிராயத்தில் உங்களுடைய அம் சங்களெல்லாம் வீரர்களைக்கொல்லும்செய்கையைநடத்துகிற அந்த யுத்தம் நடக்கப்போகிறது. தேவர்களே! நரநாராயணர்கள அந்தச் சண்டையிலில்லாமலிருக்கிறபோது அஸுரர்கள் சக்ரவ்யூஹத்தைச் செய்துகொண்டு உங்களோடு யுத்தஞ்செய்யப்போகின்றனர். சிறு வனாகிய என்னுடையபுத்திரன் கலைக்கமுடியாத வ்யூகத்துக்குள் ப்ரவேசித்து ஸஞ்சரிக்கப்போகிறான்; சத்துருக்களெல்லாரையும் முகங்காட்டாமல் ஓடச்செய்யப்போகிறான்; மஹாரதர்களான வீரர் களை வதஞ்செய்யப்போகிறான்; சிறந்தகைகளுள்ள அந்த என்புத் திரன்,ஒருதினத்தின் ஒருபாதிக்குள் சத்துருக்களுடைய நாலிலொரு பாகத்தை யமபட்டணத்துக்கு அனுப்பப்போகிறான். மஹாரதர் களாகிய அநேகவீரர்களோடு யுத்தத்தில் ஸந்தித்து ஸாயங்காலத்தில் அந்தவீரன் மறுபடியும் என்னோடு சேரப்போகிறான்; வம்சவ்ருத்தி யைச்செய்யும்வீரனை ஒரு புத்திரனைப்பெறப்போகிறான். அந்தப் புத்திரன் அழிந்துபோன பாரதவம்சத்தை மறுபடியும் நிலைநிறுத் தப்போகிறான்’ என்பது. இந்தச்சந்திரனுடைய சொல்லைக்கேட்டுத் தேவர்களெல்லாரும் சேர்ந்து, ‘அவ்வாறே ஆகக்கடவது’ என்று சொல்லிச் சந்திரனைக் கௌரவித்தனர்.

ராஜாவே! இவ்வாறு உமதுபிதாவின்பிதாவாகியஅபிமன்யுவின் ஜனனத்தை நான்சொன்னேன். மஹாரதனுகிய த்ருஷ்டத்யும்னனை அக்னியின் அம்சமென்று நீர் அறியும்; ராஜாவே! முதலில் ஸ்திரீயாயிருந்தசிகண்டியை ராக்ஷஸனுகஅறியும். பரதஸ்ரேஷ்டரே! பிரதிவிந்தியன், ஸுதஸோமன், ஸ்ருதகீர்த்தி, நகுலன்புத்ரனுன சதானீகன் பராக்ரமசாலியான ஸ்ருதஸேனனென்ற திரௌபதிபுத்ரர்கள் ஐவர் இருந்தனரே, அவர்களை, விஸ்வரென்னும்தேவக்கூட்டங்களேஜனித்தனவாகஅறியும். வஸுதேவரின்பிதாவானசூரனென்னும் யாதவஸ்ரேஷ்டன் ஒருவன்இருந்தான். பூமியில் அழகில்நிகரற்ற ப்ருதையென்பவள் அவனுக்குப்பெண். பராக்ரமசாலியாகிய அந்தச்சூரன் பிள்ளையில்லாமலிருந்த தன்அத்தையின்புத்ரனுடைய புத்ரனுகிய குந்திபோஜனென்பவனுக்குத் தன்ஸந்ததியில் முதன்மையானதைக் கொடுப்பதாகப் பிரதிஜ்ஞைசெய்தபடி, அந்தப்பெண் முதலிற்பிறந்தவளாதலால், அந்தக்குந்திபோஜனை வ்ருத்திசெய்வதற்காக, அவளை அவனுக்குப் பெண்ணுகக்கொடுத்தான். தன்பிதாவின்க்ருஹத்தில் பிராமணர்களையும் அதிதிகளையும்பூஜிப்பதற்குநியமிக்கப்பட்டிருந்த அவள், கடுமையானவரும் பயங்கரமானவரும் கடுந்தவமுள்ளவரும் தர்மத்தில் த்ருடமான உறுதியுள்ளவருமாகிய துர்வாஸரென்று சொல்லப்பட்ட பிராமணருக்குப் பணிவிடைசெய்தாள். சிலாக்யமான மனஸுள்ள அந்தஉக்ரானரிஷியை எல்லாவகையானமுயற்சிகளாலும் ஸந்தோஷப்படுத்தினுள். அவர் த்ருப்தியடைந்தவராகி மந்திரமுள்ளகிரியையை முறைப்படி உபதேசித்தார். சிறந்தமஹிமையுள்ள அந்தத்துர்வாஸர் அவளைப்பார்த்து, 'ப்ரியமானவளே! உன்னிடத்தில் த்ருப்தியுள்ளவனுக இருக்கிறேன். தேவியே! நீ இந்தமந்திரத்தினுல் எந்தஎந்தத் தேவதையை ஆவாஹனஞ்செய்வாயோ, அந்தஅந்தத் தேவதையின் அனுக்ரஹத்தினுல் புத்ரர்களைப்பெறுவாய்' என்றுசொன்னுர்.

இவ்வாறுசொல்லப்பட்ட கீர்த்தியுள்ள அந்தச்சிறுமி பரீக்ஷைபாரக்கவேண்டுமென்கிற ஆசையுடன், கன்னிகையாயிருக்கும்போதே ஸூர்யபகவானையழைத்தாள். பிரகாசத்தையுண்டுபண்ணுகிறஸூர்யபகவான் அப்போது அவளிடத்தில் கர்ப்பாதானஞ்செய்தான். ஆயுதம்பிடிப்பவர்களெல்லாரிலும் ஸ்ரேஷ்டனும் கவசகுண்டலங்களுள்ளவனும் அழகுள்ளவனும் ஒளியினுல் ஸூர்யனுக்கு ஒப்பானவனும் எல்லா அங்கங்களிலும் ஆபரணங்களை அழகாக அணிந்தவனுமாகிய தேவபுத்ரனுனபிள்ளையை அவளிடத்தில் உண்டுபண்ணினுன். அப்போது, குந்தி பந்துவர்க்கத்தின்பயத்தினுல் பிறந்ததை மறைப்பதற்

காகப் புகழ்பெற்ற அந்தக்குமாரனை ஜலத்தில்விட்டுவிட்டாள். ஜலத்தில்விடப்பட்ட அந்தக்குழந்தையை ராதையின் கணவனும் மிகுந்த கீர்த்தியுள்ளவனுமாகிய ஒரு [1]ஸூதன் தன்மனைவியாகிய ராதையின்புத்ரனாகச்செய்தான். அந்தத்தம்பதிகளிருவரும் அந்தக்குழந்தைக்கு எல்லாத்தேசங்களிலும் ப்ரஸித்தமானவஸுஷேணனென்கிற நாமதேயத்தைச்செய்தனர். பலவானாகிய அவன் வளர்ந்து எல்லாஅஸ்திரங்களிலும் மேலானவனானான். ஜபம்செய்பவருட் சிறந்தவனாகியஅவன் வேதாங்கங்களெல்லாவற்றையும் ஜபஞ்செய்தான். உறுதியானபராக்ரமமுள்ளவனும் புத்திமானுமாகிய மஹாத்மா ஜபஞ்செய்துகொண்டிருக்குங்காலத்தில் பிராம்மணர்களுக்குக் கொடுக்கத்தகாதது அவனுக்குஒன்றும் இருந்ததில்லை. பிராணிகளைவ்ருத்திசெய்கிற இந்திரன் தன்புத்திரனுக்காகப் பிராமணரூபமெடுத்துக்கொண்டு அந்தவீரனிடத்தில் அவன்சரீரத்திற்கூடவேபிறந்த கவசகுண்டலங்களை யாசித்தான். அப்படியே கர்ணன் கவசகுண்டலங்களையறுத்து எடுத்துக்கொடுத்தான். இந்திரன் அவனுக்கு ஆச்சர்யத்துடன் சக்தியென்னும் ஆயுதத்தைக்கொடுத்து, 'ஜயிக்கமுடியாதவனே! தேவர்கள், அஸுரர்கள், மனுஷ்யர்கள், கந்தர்வர்கள், நாகர்கள், ராக்ஷஸர்கள் இவர்களுக்குள் [2]எவன்மீது இதைப்பிரயோகிப்பாயோ அந்தஒருவன் இருக்கமாட்டான்' என்றுசொன்னான். முதலில் அவனுக்குப் பூமியில் வஸுஷேணனென்ற பெயர்மாத்திரம்இருந்தது. பிறகு, அந்தஸூர்யபுத்திரன் அந்தச் செய்கையினால் (கவசத்தையறுத்ததினால்) [3] கர்ணனென்றுபெயர்பெற்றான்.

கவசத்தைத் தரித்துக்கொண்டபடி பிறந்த பெரும்புகழ்பெற்ற அந்த வீரன்தான் கர்ணனென்று பெயர்பெற்ற குந்தியின் ஜ்யேஷ்டபுத்ரன். ராஜஶ்ரேஷ்டரே! அந்தவீரன் ஸூதன்வீட்டில்வளர்ந்தான். ராஜாவே! ராஜஶ்ரேஷ்டனும் ஆயுதம்பிடித்தவர்களுக்கெல்லாம் சிறந்தவனும் துர்யோதனனுடைய மந்திரியும் ஸ்நேஹிதனும் சத்ருக்களையழிப்பவனுமாகிய அந்தக்கர்ணனை ஸூர்யனுடையசிறந்தஅம்சம் என்றுஅறியும். தேவர்களுக்குந்தேவரும் சாஶ்வதருமாகிய நாராயணருடைய அம்சந்தான் மனுஷ்யர்களுள் பராக்ரமசாலியான வஸுதேவபுத்திரனாகிய கிருஷ்ணனாக அவதரித்தது. மஹாபலசாலியாகிய பலராமர் ஆதிசேஷனென்னும் நாகனுடைய அம்சம். ராஜாவே! மிகுந்ததேஜஸுள்ளப்ரத்யும்னனை ஸனத்குமாரரென்றுஅறியும். இப்

1 தேரோட்டுகிறவன். 2 ஒருவனைமட்டும்கொல்லும் என்பதுகருத்து.
3 க்ருண் (=சேதிப்பது) என்றபகுதியிலிருந்துவந்தது.

படி இன்னும் அநேகராஜாக்கள் தேவர்களுடைய அம்சங்களாக வஸுதேவருடைய வம்சத்தில் வம்சவ்ருத்திசெய்துகொண்டு பிறந்தனர். ராஜாவே! அப்ஸரஸுகளுடையகூட்டம் நான்சொன்னேனே, அவர்களுடைய பாகங்கள் இந்திரனுடைய கட்டளையினால் பூமியில் பிறந்தன. ராஜாவே! இவர்கள்தாம் மனுஷ்யலோகத்தில் க்ருஷ்ணனால் விவாஹஞ்செய்யப்பட்ட பதினாறாயிரம் ஸ்திரீகளாக இருந்தனர். லக்ஷ்மியினுடைய அம்சம் கிருஷ்ணனுடைய ப்ரீதிக்காகப் பூமியில் பீஷ்மகராஜாவின் வம்சத்தில் ருக்மிணியென்று பெயருள்ள பதிவ்ரதையாக ஜனித்தது. ஸ்லாக்கியமான த்ரௌபதியென்பவள் இந்திராணியின் பாகத்திலிருந்து உண்டானாள்; த்ருபதன்வீட்டில் யஜ்ஞமேடையின்நடுவில்உண்டானவள்; குற்றமில்லாதவள்; அதிகக்குட்டையுமல்லள்; அதிகநெட்டையுமல்லள்; நீலோத்பலபுஷ்பம்போன்ற நல்லமணமுள்ளவள்; தாமரைப்புஷ்பங்கள்போன்ற நீண்டகண்களையுடையவள்; அழகான நிதம்பமுள்ளவள்; மிகக்கறுத்தும் சுருண்டுமிருக்கிற கூந்தலையுடையவள்; எல்லாலக்ஷணங்களும்நிரம்பினவள்; வைடூர்யக்கல் நிறமானவள்; ரஹஸ்யத்தில் புருஷஶ்ரேஷ்டர்களாகிய ஐவர்களுக்கும் மனஸைக் கலக்குகிறவள். [1]ஸித்தியென்றும் [2] த்ருதியென்றும் சொல்லப்பட்ட தேவஸ்திரீகளே குந்தியென்றும் மாத்ரியென்றும்சொல்லப்பட்ட ஐவரின் தாய்மார்களாகப் பிறந்தனர். [3] மதியென்னும் தேவதைதான் காந்தாரியாகப் பிறந்தது. ராஜாவே! இவ்வாறு தேவர்கள், அஸுரர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸுகள் ராக்ஷஸர்கள் இவர்களுடைய அம்சங்கள் பூமியில் அவதரித்ததைப் பற்றி உமக்கு நான் சொன்னேன். யுத்தத்தில் அடங்காத மதமுள்ள அந்த மஹாத்மாக்களான ராஜாக்கள் விரிவான யதுவம்சத்திற்பிறந்து பூமியிற்பிரகாசித்தனர். பிராமணர்களையும் க்ஷத்திரியர்களையும் வைசியர்களையும்பற்றி உமக்குச்சொன்னேன். தனத்தையும் கீர்த்தியையும் புத்ரனையும் ஆயுஸையும் ஜயத்தையும் கொடுக்கத்தக்க இந்த அம்சாவதாரமானது வெறுப்பில்லாமற் கேட்கத்தக்கது. தேவகந்தர்வராக்ஷஸர்களுடைய அம்சாவதரணத்தைக்கேட்டு ஜனனமரணங்களையறிந்த புத்திமான் கஷ்டங்களில் சோர்வையடையான்'' என்று வைசம்பாயனர் கூறினர்.

---

[1] ஜயம். [2] ஸந்தோஷம். [3] விவேகம்.

## அறுபத்தொன்பதாவது அத்தியாயம்.

## ஸ ம் ப வ ப ர் வ ம். (தொடர்ச்சி.)



ஜனமேஜயர், "பிராமணரே! தேவர்கள், அஸுரர்கள், ராக்ஷஸர்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸுகளாகிய இவர்களுடைய அம்சங்கள் பூமியில் அவதரித்தவிதத்தைச் செம்மையாக உம்மிடமிருந்து கேட்டேன். பிராமணரே! பிரம்மரிஷிகளின் கூட்டத்தின்முன்னிலையில் இந்தக்குருக்களுடைய வம்சத்தை முதலிலிருந்து நீங்கள் மறுபடியும் சொல்லவிரும்புகிறேன்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

"தர்மார்த்தகாமங்களோடுகூடியதும் பாபங்களைப் போக்குவதுமாகிய சிறந்தஞானமுள்ள ராஜரிஷிகளின்சரித்திரத்தை நான் இப்போது சொல்லுகிறேன்; கேளும். குற்றமற்றவரே! தக்ஷரென்பவர், வைவஸ்வதமனு, பரதன், குரு, அஜமீடவம்சத்தவனாகிய பூரு, யாதவர்கள், கௌரவர்கள், பரதவம்சத்தவர்கள் இவர்களெல்லாருடையதும், புண்ணியமும், மங்களத்தையும் ஸம்பத்தையும் கீர்த்தியையும் ஆயுளையும் மிகுதியாகத்தருவதுமாகியவம்சத்தை உமக்குச் சொல்லப்போகிறேன். எல்லாரும்தேஜஸுகளினால் பிரகாசிப்பவரும் மஹரிஷிகளுக்கொப்பான தேஜஸையுடையவர்களுமாகிய ப்ராசீனபர்ஹிஷியின்புத்ரர்கள் பதின்மர், ஸாதுக்களாகவும் புண்ணியஸ்வபாவமுள்ள ஜனங்களாகவும் சொல்லப்பட்டிருக்கின்றனர். அவர்களுடைய முகத்திலிருந்த அக்னியினாலே மிகுந்த செழுமையுள்ள விருக்ஷங்களும் ஓஷதிகளும் எரிக்கப்பட்டன. அவர்களிடமிருந்து ப்ராசீனபர்ஹிஷியின் வம்சத்திற்பிறந்ததனால் பிராசேதஸர்என்று சொல்லப்பட்ட தக்ஷர்பிறந்தார். புருஷஶ்ரேஷ்டரே! தக்ஷரிடமிருந்து இந்தப் பிரஜைகள் உண்டாயின. அதனால், அவர் லோகத்துக்குப் பிதாமஹராகஆனார். பிரசேதஸின் புத்திரரும் ரிஷியுமாகிய தக்ஷர் [1] வீரணி என்பவளோடுசேர்ந்து கூர்மையானதவமுள்ள தம்மைப்போன்றபுத்ரர்கள் ஆயிரம்பேரை உண்டுபண்ணினர். ஆயிரக்கணக்கான தக்ஷபுத்ரர்கள் சேர்ந்திருக்கையில் நாரதர் அவர்களுக்கு மோக்ஷத்திற்குக் காரணமாகிய சிறந்த தத்வஜ்ஞானத்தைக்கற்பித்தார்; அவர்கள்காணாமற்போவதற்காகவே திக்குக்களின்முடிவுகளைத் தெரிந்துகொள்வதாகிய வியாபாரத்தில் (அவர்) அவர்களை நியமித்தார்.

1 வீரணன் புத்திரி.

ஜனமேஜயரே! பிறகு, பிரஜைகளை ஸ்ருஷ்டிக்கவிரும்பின தக்ஷரென்பவர், ஐம்பதுபெண்களைப் புத்ரிகைகளாக நிச்சயஞ்செய்து கொண்டார். அவர் தர்மதேவதைக்குப் பத்துப்பெண்களையும், கஶ்யபருக்குப் பதின்மூன்றுபெண்களையும், சந்திரனுக்குக் காலத்தைத்தெரிவிப்பதற்காக ஏற்பட்ட இருபத்தேழுபெண்களையும் கன்னிகாதானஞ்செய்தார். மரீசியின் புத்ரராகியகஶ்யபர் பதின்மூன்றுமனைவிகளுக்குள் முதன்மையான அதிதியென்னும்தக்ஷபுத்ரியிடம் மிகுந்தபராக்கிரமமுள்ள இந்திராதிதேவர்களையும் ஸூர்யனையும்உண்டாக்கினார்; வைவஸ்வதன் என்றுசொல்லப்பட்ட ஸமர்த்தனாகிய யமன் ஸூர்யனுடையபுத்ரனாகப்பிறந்தான். அரசரே! [1]யமிஎன்னும்பெண்ணும் ஸூர்யனுக்குப்பிறந்தாள். சிறந்தஞானமுள்ளவரும் ஸமர்த்தருமாகிய மனுவும் ஸூர்யனுடைய புத்திரராகப்பிறந்தார். அந்தப்புத்திமானாகிய மனு தர்மத்திலேயே சித்தமுள்ளவர்; அவரிடத்தில் வம்சம்நிலைபெற்றது. மனுஷ்யர்களுடைய இந்தப்பிரஸித்தமானவம்சம் அந்தமனுவினிடத்திலிருந்து உண்டாயிற்று. பிரம்மக்ஷத்ரியர்முதலானவர்கள் அந்தமனுவிடமிருந்துஉண்டானதனால் மானவர்களானார்கள். மஹாராஜாவே! அதனால், பிராம்மணர்கள் க்ஷத்ரியர்களுடன் சேர்ந்திருந்தனர். மனுபுத்ரர்களாகிய பிராமணர்கள் அந்தக்ஷத்ரியர்களுக்கு வேதங்களை அங்கங்களுடன் கற்பித்தனர். வேனன், த்ருஷ்ணு, நரிஷியத், நாபாகன், இக்ஷ்வாகு, காருஷன், சர்யாதி, எட்டாவதுஇளையென்னும்பெண், ஒன்பதாவது க்ஷத்ரியதர்மத்தைக் கடைப்பிடித்த ப்ருஷத்ரன், பத்தாவது [2]அரிஷ்டன் இவர்களை மனுபுத்ரர்களென்று சொல்லுகின்றனர். அப்படியே மனுவுக்கு வேறு ஐம்பதுபுத்ரர்கள் பூமியில் இருந்தனரென்றும், பரஸ்பரவிரோதத்தினால் அவர்களெல்லோரும் அழிந்துபோயினரென்றும் நமக்குக்கேள்வி.

அதன்பிறகு, வித்வானாகிய புரூரவஸ்என்பவன் இளையினிடம் பிறந்தான். அந்த இளை அவனுக்கு மாதாவாகவும் பிதாவாகவும்இருந்தாளென்று நாம் கேட்டிருக்கிறோம். பதின்மூன்று ஸமுத்ரத்வீபங்களை வசப்படுத்தின பெரிய யசஸுள்ள புரூரவன், தான் மனுஷ்யனாகஇருந்து மனுஷ்யரல்லாத [3]பிராணிகளினால் ஸஹாயமாகவேண்டப்பட்டான். பராக்ரமத்தினால் கர்வங்கொண்ட அந்தப்புரூரவன் பிராமணர்களுடன் சண்டைசெய்தான். அவன் பிராமணர்கள் கதறி

---

1 யமுனை.

2 'நாபாகாரிஷ்ட' என்று மூலத்தில் இருப்பதனால் அரிஷ்டனுக்கும் நாபாகனென்கிற பெயர் உண்டென்று தெரிகிறது. 3 தேவர்கள்.

யும் அவர்களுடைய ரத்னங்களையெல்லாம் அபஹரித்தான். ராஜாவே! ஸநத்குமாரர் பிரம்மலோகத்திலிருந்துவந்து அவனுக்குச் சாஸ்திரத்தைப் போதித்தார். அவன் அதையும் அங்கீகரிக்கவில்லை. பிறகு, பொருளாசைகொண்டவனும் பலத்தின்கர்வத்தினால்விவேகம் தப்பினவனுமாகிய அவ்வரசன், கோபித்த மஹரிஷிகளினால் சபிக்கப்பட்டு உடனேயழிந்துபோனான். அந்தச்சக்கரவர்த்தியானவன் ஊர்வசியுடன்சேர்ந்து, கந்தர்வலோகத்திலிருந்த [1]மூன்றுவிதமாகப் பிரிக்கப்பட்ட அக்னிகளைச் சாஸ்திரப்படி யஜ்ஞம்செய்வதற்காகக் கொண்டுவந்தான். அந்த இளையின்புத்ரனாகிய புரூரவனுக்கு ஊர்வசியினிடம்ஆயுஸ், தீமான், அமாவஸு, த்ருடாயுஸ், வனாயுஸ், சதாயுஸ் ஆகிய ஆறுகுமாரர்கள் பிறந்தார்கள். நகுஷன், விருத்தசர்மா, ரஜி, கயன், அநேநஸ் இவர்கள் ஆயுவுக்கு ஸ்வர்ப்பானவி என்பவளிடம்பிறந்த புத்ரர்களாகச் சொல்லுகின்றனர். ராஜாவே! புத்திமானும் ஸ்திரமான பராக்ரமமுள்ளவனும் ஆயுவின்புத்ரனுமான நகுஷனென்பவன், மிகப்பெரியராஜ்யத்தைத் தர்மமாகப் பரிபாலித்தான். நகுஷன் பிதிர்க்களையும், தேவர்களையும், ரிஷிகளையும், பிராமணர்களையும், கந்தர்வர்களையும், நாகர்களையும், ராக்ஷஸர்களையும், பிரம்மக்ஷத்திரிய வைஸ்யவர்ணங்களையும் பரிபாலித்தான். அவன் கொள்ளைக்காரர்களின் கூட்டங்களைக்கொன்று ரிஷிகளைக் கப்பங்கொடுக்கச் செய்தான். பராக்ரமசாலியான அவன் அவர்களைப் பசுக்களைப்போல் முதுகில் தன்னைத் தூக்கச்செய்தான். தேவர்களைக்கீழ்ப்படுத்தி இந்திராதிகாரத்தைச் செலுத்தினான்; நகுஷன் சபிக்கப்பட்டு ஒளி, தவம், சக்தி, உத்ஸாஹம் இவையெல்லாம் நீங்கி உடனே மலைப்பாம்பாக ஆனான்; யதி, யயாதி, ஸம்யாதி, ஆயாதி, அயதி, த்ருவன் என்னும் இன்சொல்லாகப் பேசுகின்ற ஆறுபுத்ரர்களைப் பெற்றான். யதியென்பவன் யோகஞ்செய்து ரிஷியாகிப் பிரம்மமாய்விட்டான். ஸ்திரமான பராக்கிரமமுள்ள யயாதியென்னும் நகுஷபுத்ரன் சக்ரவர்த்தியாக இருந்து பூமியைப் பரிபாலனஞ்செய்தான்; அநேகயாகங்களும் செய்தான்; தோல்வியடையாத யயாதி எப்போதும் நியமமுள்ளவனாகப் பிதிர்க்களையும் தேவர்களையும் மிகுந்த பக்தியுடன் ஆராதனஞ்செய்துகொண்டு எல்லாஜனங்களுக்கும் நன்மைசெய்தான். மஹாராஜாவே! மேலானவில்லாளிகளும் குணங்களெல்லாம் நிரம்பினவர்களுமாகிய புத்ரர்கள் அவனுக்குத் தேவயானியிடமும் சர்மிஷ்டையிடமும் பிறந்தனர். யதுவும் துர்வஸுவும்

---

1 1. கார்ஹபத்யம், 2. ஆஹவனீயம், 3. தக்ஷிணம்.

தேவயானியினிடம் பிறந்தனர். த்ருஹ்யுவும், அநுவும், பூருவும், சர்மிஷ்டையினிடம் பிறந்தனர். ராஜாவே! அந்த நகுஷபுத்ரன் அநேக வருஷகாலங்கள் தர்மமாகப் பிரஜைகளைப் பரிபாலித்துவந்து, ரூபத்தையழிப்பதும் மிக்க துன்பத்தைத்தருவதுமாகிய மூப்பை அடைந்தான். பாரதரே! ஜரையினாற்பீடிக்கப்பட்ட அந்தராஜா, யது, பூரு, துர்வஸு, த்ருஹ்யு, அநுவென்னும் புத்ரர்களைநோக்கி, 'புத்ரர்களே! நான் யௌவனவயஸோடு போகங்களையநுபவித்துக் கொண்டு யுவதிகளுடன் யுவாவாக விளையாடவிரும்புகிறேன். உதவி செய்யுங்கள்' என்றுசொன்னான். அவனைப்பார்த்துத் தேவயானியின் முதல்புத்ரன், 'எங்கள் யௌவனத்தினால் உமக்கு ஆகவேண்டிய ப்ரயோஜனம்யாது?' என்றுகேட்டான். யயாதி அவனைநோக்கி, 'என் ஜரையை நீ பெற்றுக்கொள்; உன் யௌவனத்தினால் நான் போகங்களையனுபவிக்கக் கடவேன்; நீண்டகாலம் செய்யத்தக்க ஸத்ரயாகத்தைச் செய்ததனாலும் ரிஷியான சுக்ரருடையசாபத்தினாலும் இந்தக் காமபுருஷார்த்தம் எனக்கு இல்லாமற்போகிறது; அதனால், வருத்தமடைகிறேன். புத்ரர்களே! உங்களில் ஒருவன் என் (மூப்புள்ள) சரீரத்தைக்கொண்டு ராஜ்யத்தை ஆளக்கடவன். நான் புதிய சரீரத்துடன் யுவாவாகஇருந்து காமஸுகத்தையடையக்கடவேன்' என்றான். அந்த யதுமுதலிய புத்ரர்கள், அவனுடைய ஜரையை வாங்கிக்கொள்ளவில்லை. அப்போது ஸ்திரமான பராக்ரமமுள்ள கனிஷ்டனாகிய பூரு யயாதியைநோக்கி, 'ராஜாவே! யௌவனத்தை எடுத்துக்கொண்டு புதியசரீரத்துடன் விஷயங்களை அனுபவியும். நான் உமது ஆஜ்ஞைப்படி மூப்பைவாங்கிக்கொண்டு ராஜ்யத்திலிருப்பேன்' என்று சொன்னான்.

இவ்வாறு சொல்லப்பட்ட அந்தராஜரிஷி, தவத்தின்வலிமையாகிய ஆதாரத்தைக்கொண்டு அப்போது அந்தமஹாத்மாவான புத்ரனிடம் தன்ஜரையைப்போகச்செய்தான். பிறகு, ராஜா பூருவின்வயஸைக்கொண்டு யௌவனமடைந்தான். பூருவும் யயாதியின்வயஸுடன் ராஜ்யபரிபாலனஞ் செய்தான். அதன்பின், புலிக்கு ஸமானமான பராக்ரமமுள்ள அந்த யயாதியென்னும் ராஜஸ்ரேஷ்டன் அநேகமாயிரவருஷம் தோல்வியடையாமலிருந்தான். யயாதிஇரண்டு பத்னிகளுடனும் நீண்டகாலம் ரமித்துத் திரும்பவும் விஸ்வாசியென்னும் அப்ஸரஸுடன் சேர்ந்து சைத்ரரதமென்னும் குபேரனுடைய உத்யானவனத்தில் ரமித்தான். அப்போது அந்தப் பெரும்புகழ் பெற்றவன் போகங்களின் விஷயத்தில் த்ருப்தியடையவில்லை. ராஜா

வே! அப்போது மனத்தினால்நிச்சயஞ்செய்து இந்தக் காதைகளை (ஸ்லோகங்களைச்) சொன்னான். அவற்றின்பொருளாவது:—

'காமம், விரும்பினவற்றை அனுபவித்ததனால் தீருவது ஒரு பொழுதும் இல்லை; நெய்யினால் அக்னிஜ்வலிப்பதுபோல் இன்னும் அதிகமாகவே வ்ருத்தியாகிறது. பூமியில் நெல், யவதான்யம், பொன், பசுக்கள், பெண்கள்முதலிய எவையெவைஉண்டோ, அவை யெல்லாம் ஒருவனுக்குப்போதாவென்று தெரிந்து ஒழிவையடைய வேண்டும். எப்போது ஒருவன் செய்கையினாலாவது மனத்தினாலா வது வாக்கினாலாவது எந்தக்காலத்திலும் எந்தப்பிராணிகளுக்கும் தீங்குசெய்யாமலிருக்கிறானோ, அப்போது அவன் பிரம்மமாகிறான்; எப்போது இவன் பயமற்றிருக்கிறானோ, எப்போது இவனிடத்து மற்றவர் பயமற்றிருக்கின்றனரோ, எப்போது விருப்பும்வெறுப்பும் இல்லாமலிருக்கிறானோ அப்போது பிரம்மமாகிறான்' என்பது.

ராஜாவே! அந்தச் சிறந்தஞானமுள்ள யயாதி காமஸுகங்கள் இழிவானவையென்பதை இவ்வாறுஆராய்ந்து, அறிவினால்மனத்தை நிறுத்திக்கொண்டு பிள்ளையினிடமிருந்து மூப்பைத் திரும்பவாங்கிக் கொண்டான். தோல்வியடையாத யயாதி அநேகமாயிரம் வருஷங்க ளுக்குப்பின் யௌவனத்தைப் பூருவுக்குக்கொடுத்துப் பூருவை ராஜ் யத்தில் பட்டாபிஷேகஞ்செய்து காமஸுகங்களில் த்ருப்தியடையாத வனாகவே பூருவென்னும் புத்திரனைநோக்கி, 'உன்னாலேதான் நான் புத்திரவானாயிருக்கிறேன். நீதான் என்வம்சவ்ருத்திசெய்யும் புத் ரன். உன்னால் இந்தவம்சம் பௌரவவம்சமென்று லோகத்தில்க்யாதி பெறும்' என்றான்.

ராஜஸ்ரேஷ்டரே! பிறகு, அந்தயயாதி, பூருவுக்கு ராஜ்யாபிஷே கஞ்செய்வித்துப் பிறகு ப்ருகுதுங்கமென்னும் மலையில் மிகுந்ததவஞ் செய்து, புண்ணியத்தை ஸம்பாதித்து நீண்டகாலத்துக்குப்பின் தேகவியோகமடைந்தான். உபவாஸத்தைச்செய்து பார்யையுடன் ஸ்வர்க்கம் சேர்ந்தான்" என்று வைசம்பாயனர் சொல்லினர்.

---

## எழுபதாவது அத்தியாயம்.

## ஸ ம் ப வ ப ர் வ ம். (தொடர்ச்சி.)



ஜனமேஜயர், "தக்ஷரென்பவருடையபத்தாவதுதலைமுறையும் எங்களுக்குக் கூடஸ்தருமான அந்த யயாதி, தமக்குக் கிடைப்ப

தற்கு மிகவும் [1]அரிய சுக்ரபுத்திரியை எவ்வாறு அடைந்தார்? தபோதனரே! நான் இதை விரிவாகக் கேட்க விரும்புகிறேன். தனித்தனி வம்சங்களுக்கு மூலபுருஷர்களான ராஜாக்களையும் எனக்கு வரிசையாகச் சொல்லும்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

"ஜனமேஜயரே! யயாதியென்கிற ராஜா இந்திரனுக்குஒப்பான சக்தியுள்ளவனாக இருந்தான். அந்தராஜாவைச் சுக்ராசாரியரும் வ்ருஷபர்வா என்கிற அஸுரனும் முன்னே எவ்வாறு வேண்டினார்களென்பதையும் தேவயானிக்கும் நகுஷபுத்ரனாகியயயாதிக்கும் உண்டான ஸம்பந்தத்தையும்பற்றிக் கேட்கின்ற உமக்கு நான் சொல்வேன். ஜங்கமங்களும் ஸ்தாவரங்களும் சேர்ந்த மூன்றுலோகங்களையும் ஆளுகையைப்பற்றித் தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் ஒருவருக்கொருவர் விரோதமுண்டாயிற்று. அப்போது, தேவர்கள் தாங்கள் ஜயிக்கவேண்டுமென்ற எண்ணத்தினால் ரிஷியாகிய ப்ருஹஸ்பதியைத் தங்களுக்கு யஜ்ஞங்கள் செய்விக்கிற புரோஹிதராக வரித்தனர். எதிரிகளான அஸுரர்கள் [2]கவியின்புத்ரராகிய சுக்ரரை வரித்தனர். அந்தப் பிராமணர்களிருவரும் எப்போதும் ஒருவர்க்கொருவர் மிஞ்சுவதற்குத் திடமான எண்ணமுள்ளவராயிருந்தார்கள். அந்தத் தேவாஸுரர்களுக்குள் யுத்தத்தில்ஸந்தித்த எந்தஅஸுரர்களைத் தேவர்கள் கொன்றார்களோ அவர்களைச் சுக்ராசாரியர் வித்தையின்பலத்தை ஆதாரமாகக்கொண்டு மறுபடியும்பிழைப்பித்தனர். அதனால், அவர்கள் திரும்பவும்எழுந்து தேவர்களுடன் போர் செய்தனர். போர்முனையில் அஸுரர்கள் எந்தத்தேவர்களைக் கொன்றனரோ, அவர்களைச் சிறந்தபுத்தியுள்ள ப்ருஹஸ்பதி பிழைப்பிக்கவில்லை. ஏனெனில், மிகுந்தசக்தியுள்ள சுக்ராசாரியருக்குத் தெரிந்த 'ஸஞ்சீவினி' என்னும்வித்தை ப்ருஹஸ்பதிக்குத்தெரியாது. அதனால், தேவர்கள் மிகுந்த துயரமடைந்தனர். அப்போது கவிபுத்ராகிய சுக்ரரிடமுள்ள பயத்தால் நடுங்கின அந்தத்தேவர்கள் ப்ருஹஸ்பதியின் ஜ்யேஷ்டபுத்ரனாகிய கசனென்பவனிடம்சென்று அடியில்வருமாறு சொல்லத்தொடங்கினர்.

'உன்னை அடுக்கின்ற எங்களை நீ அங்கீகரிக்கக்கடவாய்; எங்களுக்கு உத்தமமான ஓர் உபகாரத்தைச் செய்யக்கடவாய். அளவற்றசக்தியுள்ள சுக்ரரென்னும் பிராமணரிடத்தில் எந்தவித்தை

1 பிராமணப்பெண்ணை க்ஷத்திரியன் மணஞ்செய்தல் தகுதியன்று.

2 ஞானத்தின்மிகுதியால் ப்ருகுவைக் கவியென்பர்.

இருக்கிறதோ அதைத் துரிதமாகச் சம்பாதித்துக்கொண்டுவா. எங்களுடன் நீயும் யஜ்ஞபாகத்துக்கு உரியவனாவாய். அந்தப்பிராமணரை நீ வ்ருஷபர்வாவின் ஸமீபத்தில்தான் காணமுடியும். அவர் அங்கிருந்து அஸுரர்களைக் காப்பாற்றுகிறார்; அஸுரரல்லாதவரைக் காப்பாற்றுவதில்லை. நீ முந்தியவயஸாயிருப்பவனாதலால், அந்தக்கவியைச் சுச்ரூஷையினால் சந்தோஷிக்கச்செய்யத் திறமையுள்ளவன். அந்த மஹாத்மாவின் அன்புள்ள குமாரியாகிய தேவயானியையும் நல்லொழுக்கம், மனம்போல்நடத்தல், பிரியமாகப்பேசுதல், செய்கை, அடக்கம் இவற்றினால் ஸந்தோஷப்படுத்துவதற்குச் சக்தியுள்ளவன் நீ தான்; வேறுயாருமில்லை. தேவயானி ஸந்தோஷமடைந்தபோது நீ அந்தவித்தையைப் பெறுவது திண்ணம்' என்றனர்.

பிறகு, ப்ருஹஸ்பதியின் புத்ரனாகிய கசன், 'அப்படியே' என்றுசொல்லித் தேவர்களால் மரியாதைசெய்யப்பட்டு, அப்போதே வ்ருஷபர்வாவின் ஸமீபம்சென்றான்; ராஜாவே! தேவர்களால் அனுப்பப்பட்ட அந்தக்கசன் விரைவாகச்சென்று அஸுரருக்குஅரசனாகிய வ்ருஷபர்வாவின் நகரத்தில் சுக்ரரைக்கண்டு, 'அங்கிரஸ்என்னும் ரிஷியின்பேரனும், ப்ருஹஸ்பதியின் ஔரஸபுத்ரனும் கசனென்றபெயரினால் ப்ரஸித்தியுள்ளவனுமாகிய என்னை நீங்கள் சிஷ்யனாக ஏற்றுக்கொள்ளக்கடவீர். குருவாகியஉங்களிடம் நான் பூர்ணமான [1] பிரம்மசர்யத்தை ஆயிரவருஷகாலம் செய்யப்போகிறேன். பிராமணரே! எனக்கு அனுமதி கொடுக்கக்கடவீர்' என்றுகேட்க, சுக்ரர், 'கசனே! உனக்குமிக்கநல்வரவு உண்டாகக்கடவது; உன்சொல்லை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன்? கௌரவிக்கத்தகுந்த உன்னை நான் கௌரவிப்பேன்; அதனால், ப்ருஹஸ்பதி கௌரவிக்கப்பட்டவராவர்" என்று மறுமொழிசொன்னார்.

கசனும், சுக்ராசார்யரைநோக்கி ஸரியென்றுசொல்லிக் கவிபுத்ரராகிய உசனஸ் என்று சொல்லப்பட்ட அவராலேயே கட்டளையிடப்பட்டஅந்தப்பிரம்மசர்யவிரதத்தைமேற்கொண்டான். பாரதரே! யுவாவாகிய அந்தக்கசனென்னும்முனி உபாத்தியாயருக்குச் சுச்ரூஷைசெய்வதற்கும் யௌவனத்திலிருக்கும் அந்தத்தேவயானியை எப்போதும் ஸந்தோஷப்படுத்துவதற்கும் யுக்தமானவ்ரதகாலத்தை அவர் சொல்லின்படி அங்கீகரித்தான். பாடியும் ஆடியும் வாத்தியம்வாசித்தும் தேவயானியை ஸந்தோஷிக்கச்செய்தான். பாரதரே!யௌவனம் வந்தகன்னிகையாகிய தேவயானியை அவன் ஸ்நேஹஞ்செய்து

1 குருசுச்ரூஷை.

கொண்டு, புஷ்பங்களாலும் பழங்களாலும் ஏவல்செய்வதனுலும் ஸந்தோஷப்படுத்தினன். தேவயானியும், தவத்தையும் பிரம்மசர்யவிரதத்தையும் வஹித்தவனுகிய அந்தப்பிராமணனை ரஹஸ்யத்தில்பாடியும் விளையாடியும் அவனைப்போலவே உபசரித்தாள். பாடுகிறவனும், திரவியத்தைக்கொடுப்பவனும், இனிமையாகப் பேசுகிறவனும், அழகுள்ளவனும், புஷ்பமாலை சூட்டிக்கொண்டவனுமாகிய புருஷனைப் பெண்கள் விரும்புவார். இவ்வாறு கசன்பிரம்மசர்யவிரதம்நடத்திக்கொண்டுவருகையில், அவ்விடத்தில் ஐந்நூறுவருஷங்கள் சென்றன. பிறகு, அஸுரர்கள் அந்தக் கசனைத்தெரிந்துகொண்டு அப்போது ஜனமில்லாதவனத்தில் அவன்ஏகாகியாகப் பசுமேய்க்கக் கண்டு, ப்ருஹஸ்பதியினிடமுள்ள த்வேஷத்தினுலும், சுக்ருடைய வித்தை கசனிடம்போகாமல் காப்பாற்றுவதற்காகவும், பொறுமையுடன் (அவனைக்)கொன்றனர். அவனைக்கொன்று துண்டுதுண்டாகச் செய்து நாய்களுக்குப்போட்டனர். பிறகு, அந்தப்பசுக்கள் மேய்ப்பவனில்லாமல் தங்கள்கொட்டிலுக்குத் திரும்பிவந்தன. பாரதரே! கசனில்லாமல் வனத்திலிருந்து திரும்பிவந்தபசுக்களைக்கண்டு, அந்தத்தேவயானி அப்பொழுது அடியில்வரும்சொல்லைச் சொன்னாள்:

'பிரபுவே! ஸமர்த்தரான என்தந்தையே! உமது அக்நிஹோத்ரமும் ஆய்விட்டது; ஸூர்யனும் அஸ்தமனமானன்; பசுக்கள் மேய்ப்பவனில்லாமல் வந்திருக்கின்றன; கசனே காணப்படவில்லை. பிதாவே! கசன் கொல்லப்பட்டோ, இறந்துபோயோ இருக்கவேண்டும்; ஸந்தேஹமில்லை. அவனைவிட்டு நான்ஜீவிக்கமாட்டேனென்பதைஉமக்கு உண்மையாகச்சொல்லுகிறேன்' என்றாள். அதற்குச் சுக்ரர், 'நான் இறந்துபோனவனை வாவென்றுஅழைத்து இப்போதேபிழைப்பிப்பேன்' என்றுசொல்லி, உடனே ஸஞ்சீவினிவித்தையைப் பிரயோகித்துக் கசனைக் கூப்பிட்டார். வித்தையினல் கூப்பிடப்பட்ட அந்தக்கசன் நாய்களுடைய சரீரங்களைப்பிளந்துகொண்டு வெளிப்பட்டு ஸந்தோஷமுள்ளவனாக எதிர்வந்துநின்றான். 'ஏன் விளம்பஞ்செய்தாய்?' என்று தேவயானியால் கேட்கப்பட்டகசன், சுக்ரபுத்ரியாகிய அவளுக்கு மறுமொழிசொல்லத் தொடங்கினன்.

'பெண்ணரசி! நான் ஸமித்துக்களையும், தர்ப்பம்முதலியவற்றையும், பிறகு சுமையையும் எடுத்துக்கொண்டு மிகுந்த சுமையினல் களைப்புற்று ஓர்ஆலமரத்தையடைந்தேன். மாடுகளும் எல்லாம்ஒன்று சேர்ந்து மரத்துநிழலைஅடைந்தன. அஸுரர்கள் அங்கே என்னைக் கண்டு, 'நீயார்?' என்று கேட்டனர்.' 'நான் ப்ருஹஸ்பதியின்புத்ரன்;

கசனென்று பெயர்பெற்றவன்' என்றுசொன்னமாத்திரத்தில், அஸுரர்கள் என்னைக்கொன்று அரைத்து நாய்களுக்குப்போட்டுவிட்டு ஸந்தோஷமாகத் தங்கள் இடஞ்சென்றனர். அன்புள்ளவளே! மஹாத்மாவாகிய சுக்ராசாரியரால் வித்தையைக்கொண்டு கூப்பிடப்பட்டு எப்படியோ சிரமப்பட்டு உயிருள்ளவனாகி உன்ஸமீபம்வந்துசேர்ந்தேன்' என்றும், 'நான் இறந்தவனேதான்' என்றும் அந்தப்பிராமணப்பெண்கேட்க (அவன் மறுமொழி) சொன்னான். மற்றொருநாள் தேவயானியினால், 'பிராமணா! எனக்குப் புஷ்பம்கொண்டுவா' என்று கட்டளையிடப்பட்ட அந்தக் கசனென்னும்பிராமணன் வனஞ்சென்றான். அஸுரர்களும் அவனைக்கண்டனர். மறுபடியும், அவனை அரைத்து ஸமுத்ரஜலத்திற்கரைத்தனர். மறுபடியும், அந்தக்கன்னிகை அவன்போய் வெகுநேரமானதைத் தந்தைக்குத்தெரிவித்தாள். மறுபடியும், அந்தப்பிராமணரான சுக்கிரரால் வித்தையைக்கொண்டு அழைக்கப்பட்ட அந்தப்பிருஹஸ்பதிபுத்திரன் திரும்பிவந்து அந்தச் செய்தியை நடந்தவாறு தெரிவித்தான். பிறகு, மூன்றாவதுதரம் அவனைக்கொன்று கொளுத்தி மாவாய்ப்பொடித்து, மதுவிற்சேர்த்து அஸுரர்கள் அந்தப்பிராமணரான சுக்ரருக்கே கொடுத்தனர். சுக்கிரர் கசனுடையசாம்பலை மதுவுடன்கூடவே குடித்தனர். அந்தத் தேவயானி, ஸாயங்காலத்தில் மேய்ப்பவனின்றி வந்தபசுக்களைக் கண்டு ஐயமுற்றவளாய்ப் பிதாவைநோக்கி, 'பிதாவே! புஷ்பங்கள் கொண்டுவரப்போன என்ஏவல் செய்கின்ற கசன் காணப்படவில்லை. தாதையே! கொல்லப்பட்டவனாகவோ இறந்தவனாகவோ கசன்போயிருக்கவேண்டும். இதுநிச்சயம். அந்தக்கசனைவிட்டு நான் ஜீவித்திரேன்; உமக்கு இதை உண்மையாகச் சொல்லுகிறேன்' என்று சொன்னாள்.

அரசரே! தன்பெண்ணின்சொல்லைக்கேட்டுச் சுக்ராசாரியர், கசன் தம்வயிற்றுக்குள்ளிருப்பதையறியாமல் வெளியிலிருப்பதாக நினைத்து மந்திரத்தைச்சொல்லி, கசனைக்கூப்பிட்டார். பிறகு, அவர், 'பெண்ணே! ப்ருஹஸ்பதியின் புத்ரனாகிய கசன் இறந்துபோனான். நமதுவித்தையினாற் பிழைப்பிக்கப்பட்டபோதிலும் இவ்வாறு கொல்லப்படுகிறான். நாம் என்னசெய்வோம்? தேவயானி! வேதமும், பிராமணர்களும், இந்திராதிதேவர்களும், அஷ்டவஸுக்களும், அஸ்வினிதேவர்களும், அஸுரர்களும், ஜகமனைத்தும் உன்ஸமீபத்தில் வரும்போது உனதுமஹிமைபற்றி வணங்குகின்றனர். அப்படிப்பட்டநீ வ்யஸனப்படாதே; அழாதே; உன்னைப்போன்றவள் மரண

மடைபவனைப்பற்றித் துக்கப்படுவது ஸரியன்று ; இந்தப்பிராமண னைப் பிழைப்பிக்கமுடியாது ; பிழைப்பித்தால் மறுபடியும் கொல் லப்படுகிறான்' என்று தேவயானிக்குச்சொன்னார். அதற்குத் தேவ யானி, 'எவனுக்கு மிகப்பெரியவராகிய அங்கிரஸ்என்பவர் பிதாமஹ ரோ, தபஸுக்கெல்லாம் நிதியாகிய ப்ருஹஸ்பதியும் பிதாவோ, அப் படிப்பட்ட ரிஷியின்பௌத்ரனும், ரிஷியின்புத்ரனுமாகிய அந்தக்கச னைப்பற்றி நான் எப்படித் துக்கிக்காமலிருப்பேன்? எப்படி அழாம லிருப்பேன்? அவன் பிரம்மசாரி ; தபஸைத் தனமாகவுடையவன் ; எப்போதும் முயற்சியுள்ளவன் ; வேலைகளில் நிபுணன். பிதாவே ! கசன் சென்றமார்க்கத்தை நானும் அடையப்போகிறேன் ; உண் ணேன் ; அந்த அழகான கசனிடத்தில் நான் அன்புள்ளவள்' என்றுசொன்னாள்.

அதற்குச் சுக்ரர், 'நிரபராதியான என்சிஷ்யனைக்கொல்லு கிற இந்தஅஸுரர்கள் நிச்சயமாக எனக்கேவிரோதம்செய்கின்றனர். அடிக்கடி என்னைமீறுகின்ற இந்தக்கொடியஅஸுரர்கள் தங்களுக் குப் பிராமணஸஹாயமில்லாமற் செய்துகொள்ள விரும்புகின்றனர். இந்தப்பாபத்திற்கு இவ்வுலகத்தில் நிவிருத்தியுண்டோ? பிரம்ம ஹத்தி இந்திரனையிருந்தபோதிலும்எவனைத் தஹிக்காமல்விடும்?' என் றார். மறுபடியும் தேவயானியினால் தூண்டப்பட்ட மஹரிஷியாகிய சுக்ரர் அஸுரர்கள்மீது கோபத்துடனேயே ப்ருஹஸ்பதிபுத்ரனான கசனை அழைத்தார். ராஜாவே! வித்தையினால் அழைக்கப்பட்டு வித் தையின்பலத்தினால் பிரஜ்ஞையையடைந்த சிறந்தமஹிமையுள்ளவ னும் மேலான ஸ்வபாவமுள்ளவனுமாகிய அந்தக்கசன் குருவினிடம் பயந்துகொண்டு, அவர்வயிற்றிலிருந்து மெல்ல அடியில்வரும் சொல் லைச் சொன்னான்.

'பகவானே ! என்மீது அநுக்ரஹஞ்செய்யக்கடவீர். கசனாகிய நான் வந்தனஞ்செய்கிறேன். புத்ரனைஅபிமானிப்பதுபோல் என்னை நீங்கள் நினைக்கவேண்டும்' என்றான். அவனைப்பார்த்துச் சுக்ரா சாரியர், 'பிராமணா ! நீ என்வயிற்றிலிருக்கிறாய் ; எந்தவழியாகக் கொண்டுவிடப்பட்டாய்? சொல், பிராமணா! இந்தநிமிஷத்தில் அஸு ரர்களையழித்துவிட்டு உடனே நான் தேவர்களிடம்போகிறேன்' என்றுசொன்னார். அதற்குக் கசன், 'உங்கள் அநுக்ரஹத்தினால் ஞாப கம் என்னைவிடவில்லை. எஃது எப்படிநடந்ததோ அஃதெல்லாம் என க்கு நினைவிருக்கிறது. என்தபஸு இவ்வகையால் அழியாமலிருக்க வேண்டும். அதற்காக இந்தக்கடினமான கஷ்டத்தைப் பொறுக்கி

றேன், கவிபுத்ரரே! அஸுரர்களால் கொல்லப்பட்டும், எரிக்கப்பட்டும், அரைக்கப்பட்டும் மதுவிற்கலந்து உங்களுக்குக் கொடுக்கப்பட்டேன். பிராமணரே! நீர் இருக்கும்போது பிராமணர்களுடைய மாயையிலும் அஸுரர்களுடைய மாயையிலும் தேவர்களுடைய மாயையிலும் எவ்வாறு ஒருவன்மேலாவான்?'' என்றான். சுக்ரர், 'பெண்ணே! இப்போது உனக்கு என்னபிரியத்தைச் செய்வேன்? நான் இறந்தால்தான் கசனுக்குப் பிழைப்புண்டாகும். தேவயாணி! எனக்குள்ளிருக்கிற கசன் என்வயிற்றைப்பிளந்தாலல்லது தோன்ற மாட்டான்' என்றுசொல்ல, தேவயாணி, 'கசனுக்கு நாசம்வந்தாலும்ஸரி; உமக்கு அழிவு நேர்ந்தாலும் ஸரி; இரண்டுதுக்கங்களும் நெருப்பைப்போல்என்னைத்தஹிக்கும். கசன்இறந்தால் எனக்குஸுகமில்லை; நீர் போய்விட்டால் நான்பிழைப்பதற்கேமுடியாது' என்றாள்.

அது கேட்ட சுக்கிரர், 'ப்ருஹஸ்பதியின் புத்ரா! உனக்குக்கார்ய ஸித்தி செம்மையாகஆயிற்று. ஏனெனில்,நீயும் தேவயாணியிடம்பற்றுவைத்தாய். தேவயாணியும் உன்னிடம் பற்றுள்ளவளாயிருக்கிறாள். நீ கசனுடைய வேஷத்தோடுவந்த இந்திரனாகஇராமலிருந்தால், இந்த ஸஞ்சீவினியென்னும் வித்தையைப் பெற்றுக்கொள்.பிராமணன் ஒருவனைத்தவிரமற்றயாரும்ஜீவித்து என்வயிற்றிலிருந்து திரும்பி வெளிவரமாட்டார். ஆதலால், வித்தையைப்பெற்றுக்கொள். குழந்தாய்! நீ என்னால் பிழைப்பிக்கப்பெற்று நம் சரீரத்திலிருந்து வெளிவந்து புத்ரனாகஆகி என்னைப் பிழைப்பிக்கக்கடவாய். குருவினிடமிருந்து வித்தையைப் பெற்றுக்கொண்டு வித்தையுள்ளவனாகிய நீ தர்மமுள்ளபுத்தியை ஆலோசிப்பாயாக' என்றார். பிராமணனும் வித்வானுமாகிய கசன் பிராமணரும் தன்குருவுமாகிய சுக்ராசாரியரிடமிருந்து வித்தையைப்' பெற்றுக்கொண்டு அந்தக்ஷணத்திலேயே அவர் குக்ஷியைப்பிளந்துகொண்டு, சுக்லபக்ஷத்தின் கடைசியான பௌர்ணமாஸியில் சந்திரன் புறப்படுவதுபோல் வெளிவந்தான். வேதமே உருவங்கொண்ட அந்தச்சுக்ரர் விழுந்திறந்ததைக்கண்டு கசனும் அவரை வித்தையினால்எழுப்பினான். பலித்துப்போன அந்த வித்தையைப் பெற்றுக்கொண்டு அந்தக்குருவை வந்தனஞ்செய்து பிறகு கசன் அடியில்வருமாறு சொன்னான்: 'வித்தையில்லாதவனுக்கு வித்தையென்னும் அமிர்தத்தை உம்மைப்போன்ற எந்தஆசாரியர் காதுகளிற் பிழிகின்றாரோ, அவரைத்தான் பிதாவாகவும் மாதாவாகவும் நான் நினைக்கின்றேன். அவருடைய உபகாரத்தையறிந்திருப்பவன் அவருக்குத் தீங்குசெய்யான். எல்லாவற்றிலும் சிறந்த

ஸத்யமானவித்தையைக் கொடுத்தவரும், நிதிகளைப்போன்ற வித்தைகளுக்கு நிதியுமான பூஜிக்கத்தக்க குருவை, வித்தையைப்பெற்றுக்கொண்டு எவர்கள் பூஜிக்காமலிருக்கின்றனரோ அவர்கள் புகழ் அழிந்து * பாபலோகங்களுக்கும் செல்லுவார்கள்' என்றான். அப்போது, வித்வானும் மஹானுபாவரும் கவிபுத்ரருமான சுக்ராசார்யர், மதுபானத்தினால் ஏமாறுதலையும் மிகவும் பயங்கரமான பிரஜ்ஞாபங்கத்தையுமடைந்து தெரியாமையால் அவ்வளவு பிரியமான கசனைக் கூட மதுவுடன் தாம்குடித்ததை நினைத்துக் கோபத்துடன் எழுந்து பிராமணர்களுக்கு ஹிதத்தைச்செய்ய விரும்பி மத்யபானத்தைப் பற்றி வெறுப்புற்றவராக அடியில்வரும் வாக்கியத்தைச் சொன்னார்.

'இன்றுமுதல் எந்தப்பிராமணன் அறிவின்மையால் மத்யபானம் செய்வானோ அவன் மதிகெட்டுத் தர்மம்விட்டுப் ப்ரம்மஹத்தி செய்தவனாகி இந்தலோகத்திலும் பரலோகத்திலும் இகழப்படுபவனாவான். என்னால் எல்லாலோகங்களிலும் வரம்பாக நிலைநிறுத்தப்பட்ட இந்தப் பிராமணதர்மத்தைப்பற்றிய முடிவானசொல்லைக் குருக்களிடம் சாஸ்திரங்களைக்கேட்ட ஸாதுக்களான பிராமணர்களும் தேவர்களும் எல்லாஜனங்களும் கேட்கக்கடவர்' என்றார். மஹானுபாவரும் தவங்களென்னும் புதையல்களுக்கு இருப்பிடமும் அளவிடக்கூடாத மஹிமையுள்ளவருமான அந்தச்சுக்ரர் இந்தச்சொல்லை இவ்வாறு சொல்லிவிட்டுத் தெய்வத்தினால் மதிமயங்கின அந்த அஸுரர்களையழைத்து அடியில்வரும் சொல்லைச்சொல்லலானார்.

'அஸுரர்களே! உங்களுக்குச்சொல்லுகிறேன்; மூடர்களாயிருக்கிறீர்கள். கசன் காரியசித்தியையடைந்தான். மஹாத்மாவும் எனக்கு ஈடான ப்ரபாவமுள்ளவனுமாகிய அந்தப் பிராமணன் ஸஞ்சீவினி வித்தையை யடைந்து † பிரம்மாவைப்போலாகி என் ஸமீபத்தில் வஸிக்கப்போகிறான். தேவர்களுக்காக யாருக்கும் செய்தற்கரிய காரியத்தைக் கசன்செய்தான். அவனுடையகீர்த்தி அழியாது. யஜ்ஞபாகத்துக்கு உரியவனாகவும் அவன் ஆவான்' என்று இவ்வளவு சொல்லைச்சொல்லி, அந்தச்சுக்ரர் நின்றார். அஸுரர்கள் வியப்புற்றவர்களாகத் தங்கள் க்ருஹஞ்சென்றனர். அந்தக்கசன் ஆயிரவருஷகாலம் குருவினிடம் வஸித்து, பிறகு, அவரால் விடைகொடுக்கப்பெற்று ஸ்வர்க்கம் செல்ல விரும்பினான்.

---

* நரகங்கள்.

† இறந்தவனைப் பிழைப்புமூட்டுவதனால் பிரம்மாவை யொப்பானவன்.

## எழுபத்தோராவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



பிரம்மசர்யவ்ரதம் முடிந்து ஸ்நானமானபிறகு, குருவினால் விடைகொடுக்கப்பட்டுத் தேவலோகத்துக்குப் புறப்படுகையில், தேவயானி கசனைநோக்கி அடியில்வருமாறு சொல்லலானாள் :

'அங்கிரஸ் என்னும் ரிஷியின்பௌத்ரனே! ஒழுக்கத்தினாலும் குலத்தினாலும் கல்வியினாலும் தவத்தினாலும் இந்திரியங்களையடக்கியிருப்பதனாலும் நீ சோபிக்கிறாய்; பெரியகீர்த்தியுள்ள அங்கிரஸ்என்னும்ரிஷி எப்படி என்பிதாவுக்குக் கௌரவிக்கத்தக்கவரோ அப்படியும், இன்னும்அதிகமாகவும் ப்ருஹஸ்பதி எனக்குக் கௌரவிக்கத்தக்கவர்; பூஜிப்பதற்குரியவர். தபோதனனே! நான்தெரிந்துகொண்டே இவ்வாறுசொல்லுகிறேனென்பதை நீ தெரிந்துகொள். நீ பிரம்மசர்யவிரதத்திலிருந்துகொண்டு நியமந்தவறாதிருக்கையில், நான் எப்படி நடந்துகொண்டேனோ அப்படியே வித்தைநிறைவேறின நீ அன்புள்ளஎன்னிடம் அன்புவைக்கத் தகுதியுள்ளவனாயிருக்கிறாய்; மந்திரங்களைச்சொல்லிச் சாஸ்திரமுறைப்படி என்னைப்பாணிக்ரஹணஞ்செய்வாயாக' என்றாள். அதைக்கேட்டுக் கசன், 'குற்றமற்ற அழகுள்ளவளே! பகவானாகிய உனதுபிதா எனக்குஎப்படிப்பூஜிப்பதற்கும் கௌரவிப்பதற்கும்உரியவரோ, அப்படியேதான் நீயும்; இன்னும்அதிகமாகவும் நீஎனக்குப் பூஜைக்குரியவள். மஹாத்மாவாகிய சுக்ராசாரியருக்கு உயிரைவிட நீ அதிகப் பிரியமானவள். அன்புள்ளவளே! குருபுத்திரியாகிய நீ தர்மத்தினால் எனக்கு எப்போதும் பூஜிக்கத்தக்கவள். தேவயானி! என்குருவும் உன்பிதாவுமாகிய சுக்ரர் எப்படி எனக்குஎப்போதும் கௌரவிக்கத்தகுந்தவரோஅப்படியேதான் நீயும்; என்னைநீ இவ்வாறு சொல்லத்தகாது' என்றுசொன்னான். திரும்பவும் தேவயானி, 'நீ என்பிதாவுக்குப் பூஜ்யரான அங்கிரஸின்புத்திரராகிய ப்ருஹஸ்பதியின் புத்திரனேயல்லது என்பிதாவின்புத்திரனல்லை. ப்ராம்மணோத்தமனே! ஆதலால், எனக்கும் நீ பூஜிக்கத்தக்கவனும் கௌரவிக்கத்தக்கவனுமாக இருக்கிறாய். கசனே! நீ அஸுரர்களால் பலமுறை வதஞ்செய்யப்பட்டகாலத்திலும் ஆதிதொடங்கி உன்னிடத்தில் நான்வைத்தஅன்பை நீ இப்போது நினைக்கவேண்டும். ஸ்நேஹத்தினாலும் காமத்தினாலும் நான் செய்த உயர்ந்தஅன்பை நீ அறிவாய். தர்மந்தெரிந்தவனே! பற்றுள்ளவளும் குற்றமில்லாதவளுமாகிய என்னை நீ விடத்தகாது.' என்றாள்,

கசன், 'தேவயானியே! ஏவத்தகாதவேலையில் என்னை நீ ஏவுவதுதகுதியன்று; அழகானபுருவங்களையுடையவளே! நீ என்விஷயத்தில் தயைசெய்யக்கடவாய். சுபமானவளே! எனக்கு நீ குருவுக்கும் மேலானகுரு;விசாலமான நேத்திரங்களுடையவளே!சந்திரனைப்போன்றமுகமுள்ளவளே! இனியவளே! கோபமுள்ளவளே! சுக்ரருடைய எந்தவயிற்றில் நீ வஸித்தாயோ அதேவயிற்றுக்குள் நானும் வஸித்திருக்கிறேன். அழகான இடையுடையவளே! தர்மப்படி நீ எனக்கு ஸஹோதரி; இவ்வாறு சொல்லாதே; அன்புள்ளவளே! ஸுகமாக வஸித்தேன்; எனக்குக்கோபமில்லை. உன்னிடம் நான் விடைபெற்றுக்கொள்ளுகிறேன்; செல்வேன். எனக்கு வழியில் சுபத்தைவேண்டக்கடவாய். தர்மத்துக்கு விரோதமின்றிப் பிரஸ்தாவங்களின் நடுவில் நானும் நினைக்கத்தக்கவன்; தவறுதலின்றிச் சோம்பலில்லாமல் என்ஆசார்யரானசுக்ரருக்கு எப்போதும் பணிவிடைசெய்யக்கடவாய்' என்றுசொன்னான். அதுகேட்டதேவயானி, 'கசனே! தர்மத்தோடு கூடிய காமமென்னும் பிரயோஜனத்திற்காக என்னால்வேண்டப்பட்ட நீ என்னை விட்டுவிடுவாயானால், அப்போது இந்தவித்தை உனக்குப் பயன்பெறாது' என்றாள். கசன், 'நான் குருபுத்ரியென்று நினைத்து உன்னைவிடுகிறேன்; உன்குற்றத்தினால்அன்று; குருவும்எனக்கு இவ்வாறு அனுமதிகொடுக்கவில்லை. நீ இஷ்டப்படி இன்னமும் என்னைச்சபி. தேவயானி! ரிஷிகளாற்சொல்லப்பட்ட தர்மத்தைச்சொல்லுகிற நான் சாபத்திற்குத் தகாதவனாயிருந்தும், தர்மத்தாலின்றிக் காமத்தினால் இப்போது உன்னாற்சபிக்கப்பட்டேனாதலால், உன்னுடையகாமம் ஸரியாகநிறைவேறப்போகிறதில்லை. ரிஷிபுத்ரன்எவனும் உன்னைப் பாணிக்ரஹணஞ் செய்யப்போகிறதில்லை. நீ என்னைப் பார்த்து, 'உனக்கு வித்தை பயன்பெறாது' என்று சொன்னது அப்படியே இருக்கட்டும். நான் யாருக்குக்கற்பிக்கிறேனோ அவனுக்கு வித்தைபலித்துவிடும்' என்றுஅந்தப்பிராம்மணஸ்ரேஷ்டனாகியகசன் தேவயானியைநோக்கிச் சொல்லி, அப்போதே விரைவாக ஸ்வர்க்கத்துக்குச் சென்றான். அவன் வந்ததைக்கண்டு இந்திரன்முதலான தேவர்கள் * ப்ருஹஸ்பதியைக் கௌரவித்து, கசனைநோக்கி, 'எங்களுக்கு நன்மையான பெரியஆச்சர்யமானகார்யத்தை நீசெய்ததனால் உன்கீர்த்தி அழியாது; நீ யஜ்ஞபாகத்திற்கும் உரியவனாவாய்' என்று சொன்னார்கள்.

---

* கசனைப் புத்திரனாகப் பெற்றதற்காகக் கௌரவித்தது.

## எழுபத்திரண்டாவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



பாதஸ்ரேஷ்டரே! வித்தையை ஸாதித்துக்கொண்டு கசன்வந்த பிறகு, தேவர்கள் மிக்கமகிழ்ச்சியுடன் கசனிடமிருந்து அந்தவித்தையைக் கற்றுக்கொண்டு கார்யஸித்தியை அடைந்தனர். பிறகு, எல்லாரும்சேர்ந்து இந்திரனைநோக்கி, 'புரந்தரனே! இனி உனக்குப்பராக்ரமம்செய்யத் தருணம்; சத்ருக்களைக்கொல்' என்றனர். இவ்வாறு தேவர்களால் ஒன்றுசேர்ந்து சொல்லப்பட்ட இந்திரன் அப்போது 'அப்படியே ஆகட்டும்' என்றுசொல்லிப் புறப்பட்டான். அவன் ஒருவனத்தில் பெண்களைக்கண்டான். சைத்ரரதம்என்றுபெயருள்ள குபேரனது உத்தியானத்துக்கொப்பாகியவனத்தில் ஜலக்ரீடைசெய்யும் கன்னிகைகளின் ஆடைகளெல்லாவற்றையும் காற்றுருபமாகிக் கலந்தான். பிறகு, அந்தக்கன்னிகைகள் சேர்ந்து ஜலத்திலிருந்து கரையேறி, தமக்குஸமீபமாயுள்ள அந்தவஸ்திரங்களை அனேகமாக எடுத்துக்கொண்டனர். அப்போது, வ்ருஷபர்வாவின் பெண்ணாகிய சர்மிஷ்டை, கலந்துபோனது தெரியாமல் அங்கே தான்வைத்தவிடத்திலுள்ள தேவயானியின் ஆடையைஉடுத்துக்கொண்டனள். ராஜஸ்ரேஷ்டரே! அந்த வஸ்திரவிஷயமாகத் தேவயானிக்கும்சர்மிஷ்டைக்கும் அங்கேயே விவாதம்உண்டாயிற்று. 'அஸுரப்பெண்ணே! நீ என் சிஷ்யையாயிருந்தும் என்வஸ்திரத்தை எப்படியுடுக்கிறாய்? மரியாதையைவிட்ட உனக்கு நன்மையுண்டாகாது' என்று தேவயானி சர்மிஷ்டையைநோக்கிச் சொன்னாள். ராஜாவே! அதற்குச் சர்மிஷ்டை, 'உன்தந்தை, உட்காரும்போதும்படுக்கும்போதும்அடங்கினவரைப்போல் குனிந்து நின்றுகொண்டு வந்தியைப்போல் எப்போதும் என்தந்தையைத் துதிக்கின்றார். நீ, யாசித்துக்கொண்டும் துதித்துக்கொண்டும் வாங்கிக்கொண்டுமிருப்பவருடையபெண். நான், துதிக்கப்படுகிறவரும் கொடுப்பவரும் தானம் வாங்காதவருமாக இருப்பவருடையபெண். யாசிப்பவளே! மனவருத்தத்தை உண்டு பண்ணு; உபத்திரவஞ்செய்; தீங்குசெய்; கோபித்துக்கொள்; பிச்சைக்காரி! ஆயுதமில்லாத ஏழையாகிய நீ ஆயுதமுள்ளவளிடத்தில் கலங்குகிறாய். உனக்குச் சரியான சண்டைக்காரி கிடைப்பள். அடீ! யாசகீ! இதுமுதல் விரோதமாகப்பேசுவாயாகில் நான்உன்னைமதிப்பதில்லை' என்றுசொல்லி, பிறகு, அவள் கோபமிகுந்து, வஸ்திரத்

தைப் பிடித்துக்கொண்டிருந்த தேவயானியைக் கிணற்றில் தள்ளி விட்டுத் தன்பட்டணம் சேர்ந்தாள். கெட்டஎண்ணமுள்ள சர்மிஷ்டை மிகுந்த கோபத்தையடைந்தவளாய், இவள்இறந்தாளென்று நினைத்துத் திரும்பிப்பாராமல் வீடுசென்றாள். அஸுரர்களின் தன்மையையடைந்து வீடுசென்றும் கலங்காமலிருந்தாள். அதன்பின், நகுஷன்புத்ரனாகிய யயாதி, தேர்க்குதிரைகளும் ஏறுகுதிரையுங்களைப்புற மானைத்தேடிக்கொண்டு தாகத்துடன் அந்தஇடம் வந்துசேர்ந்தான். அந்தநகுஷபுத்ரனாகிய ராஜா அந்தஜலமில்லாதகிணற்றைப்பார்க்கையில், அதில்அக்னிஜ்வாலையைப்போன்ற அந்தக்கன்னிகையைக் கண்டான். கண்டவுடன், தேவதையைப்போன்றரூபமுள்ள அந்தக்கன்னிகையைஅந்தராஜஶ்ரேஷ்டன் மிகவும் அழகான இன்சொல்லினால் தேற்றி வினவினான். 'சிவந்த நகங்களுடையவளும் பிரகாசமான ரத்னகுண்டலங்களைத் தரித்தவளுமாகிய யுவதியான நீ யார்? ஏன் நீண்டஆலோசனைசெய்கிறாய்? ஏன் துக்கத்தினால் பெருமூச்சுவிடுகிறாய்? கொடிகளும்புற்களும்மூடினஇந்தக்கிணற்றில் எப்படி விழுந்தாய்? நீ யார்பெண்? அழகான இடையுள்ளவளே! உள்ளதைச் சொல்' என்றுகேட்க, தேவயானி மறுமொழி சொல்லலானாள்.

'எவர் தேவர்களாற்கொல்லப்பட்ட அஸுரர்களை வித்தையினால் பிழைப்பிக்கின்றாரோ, அந்தச் சுக்ரருடையபெண்நான்; என்னை அவர் அறியாமலிருக்கிறார். ராஜாவே! சிவந்த நகங்களும் விரல்களுமுள்ள என்வலக்கை இதோ; பிடித்து என்னைத்தூக்கிவிடு; நல்ல குலத்திற் பிறந்தவனென்று உன்னை நான் நினைக்கிறேன். உன்னைச் சாந்தியுள்ளவனென்றும் சக்தியுள்ளவனென்றும் கீர்த்தியுள்ளவனென்றும் அறிகிறேன். ஆதலால், விழுந்தஎன்னை இந்தக்கிணற்றிலிருந்து தூக்கிவிடுவதற்கு நீ தகுதியுள்ளவன்' என்றுதேவயானி சொல்ல, பிறகு, நகுஷபுத்ரனாகிய யயாதி அந்தக்கன்னிகையைப் பிராமணப்பெண்ணென்று தெரிந்துகொண்டு வலக்கையைப்பிடித்து அந்தக்கிணற்றிலிருந்து தூக்கினான். அரசன் தன்சக்தியினால் அந்தக் கிணற்றிலிருந்து அவளைத்தூக்கிவிட்டு, 'சுபமானவளே! இஷ்டப்பிரகாரம் செல்; உனக்குப் பயமில்லை' என்றான். இவ்வாறுசொல்லப்பட்ட தேவயானி ராஜாவைநோக்கி, 'நீ என்னையழைத்துக் கொண்டு விரைவாகப்போ. எனக்கு நீ அன்பன். உன்னால் நான்கைபிடிக்கப்பட்டேன். ஆதலால், நீ எனக்குப் பதியுமாவாய்' என்று மறுமொழி சொன்னாள். இவ்வாறுசொல்லக்கேட்ட அரசன், 'அன்புள்ளவளே! நான் க்ஷத்திரியகுலத்திற்பிறந்தவன்; நீ பிராமணப்பெண். ஆதலால்,

என்னுடன் விவாஹம் உனக்குத் தகாது. அழகானவளே! சுக்ராசார்யர் எல்லாலோகங்களுக்கும் ஆசார்யர். நீ அவர்பெண். அதனுலேயும், எனக்கு இப்போது பயமிருக்கிறது. ஆதலால், மங்களமானவளே! நீ எனக்குரியவள் அல்லை' என்றுசொன்னான். அதற்குத் தேவயானி, 'ராஜாவே! இப்போது என்பேச்சைக்கொண்டு என்னை நீ அங்கீகரிக்க விரும்பாமலிருந்தால் என்தந்தையின் மூலமாகவே உன்னைவரிக்கிறேன். அவரிடத்திலிருந்து நீ என்னை அடையப்போகிருய்; செல்' என்றுசொன்னாள். யயாதி, அழகான நிதம்பமுள்ள தேவயானியிடம் விடைபெற்றுக்கொண்டு தனது நகரஞ்சென்றான்.

அந்த நகுஷபுத்ரன் சென்றபிறகு, சிறந்தபெண்ணாகிய தேவயானியும் ஓரிடம்சென்று அழுதுகொண்டு ஒருமரத்தை அடுத்துநின்றாள். பிறகு, சுக்ராசார்யர் பெண்வரத் தாமதித்தபோது அவளிடத்திலுள்ள ப்ரேமையினால் தளர்ச்சியுற்றுப் பெண்ணைநினைத்து அவளுடைய தாதியைப்பார்த்து, 'தாதியே! அழகிய இடையுள்ள தேவயானியை நீ சீக்கிரம் அழைத்துவா' என்றார். இவ்வாறுசொன்னவுடன், அந்தத்தாதி அவளை அழைத்துவருவதற்காக அவள் தன் தோழிமார்களோடுகூட விளையாடுகிற இடங்களுக்கெல்லாம் துரிதமாகச்சென்று அவளிருக்குமிடத்தைத் தேடினாள். அவள், அப்படிக் களைப்புற்றுத் துக்கத்துடன் அழுதுகொண்டுநின்ற தேவயானியைக் கண்டாள். (கண்டு,) 'ப்ரியமானவளே! இஃது என்ன வ்ருத்தாந்தம்? உடனேசொல்; பிதா அழைக்கிருர்' என்றாள். இப்படிச்சொல்லப்பட்ட தேவயானி, வ்யஸனத்தினால் கொதிப்புற்றவளாகி ஸமாசாரம் கொண்டுவந்த வேலைக்காரியாகிய தாதியை முன்னேநோக்கி, சர்மிஷ்டைசெய்த பிழையைத்தெரிவித்து, 'தாதியே! விரைவாகச்செல்; நான் இனி வ்ருஷபர்வாவின் நகரத்திற்குள் நுழையமாட்டேன் என்பதை என்தந்தைக்கு உடனேசொல்' என்றுசொன்னாள். மஹானுபாவரான ஜனமேஜயரே! அந்தவேலைக்காரி உடனே அந்த அஸுரக்ருஹத்திற்குச்சென்று சிறந்தஞானமுள்ள சுக்ராசாரியரைக்கண்டு புத்தியிற் படபடப்புக்கொண்டு, தேவயானி வனத்தில் வ்ருஷபர்வாவின் பெண்ணான சர்மிஷ்டையினால் அடிபட்டதைத்தெரிவித்தாள்.

சுக்ராசாரியர் அந்தவனத்தில் தம்பெண் சர்மிஷ்டையினால் அடிபட்டதைக்கேட்டுத் துக்கங்கொண்டு வனத்தில் பெண்ணைத்தேடுவதற்கு விரைவாகப்புறப்பட்டார். பிறகு,வனத்தில் பெண்ணாகிய தேவயானியைக்கண்டு, சுக்ராசார்யர் துக்கத்துடன் இரண்டுகைகளாலும் தழுவிக்கொண்டு, 'எல்லாஜனங்களும் கஷ்டத்தையடைவதும்

ஸௌக்யத்தை அடைவதும், தங்கள்குற்றங்களாலும் குணங்களாலுந் தான். உன்னிடத்தில் பிழையிருக்கிறது. இஃது அதற்குச்செய்யப் பட்ட பரிஹாரந்தானென்று நினைக்கிறேன்' என்றுசொன்னார். (அப் படிச்சொன்னவுடன்) தேவயானி, 'எனது தப்புக்குச்சிக்ஷையிருக் கட்டும்; அல்லது இல்லாமலிருக்கட்டும்; வ்ருஷபர்வாவின்பெண் சர்மிஷ்டை என்னைச் சொன்னசொல்லைக் கவனித்து என்னிடம் கேளும். நீர் அஸுரர்களிடம் ஸ்தோத்திரங்களைப் பாடுகிறவரென்று அவள் சொல்லுகிறது நிஜமா? வ்ருஷபர்வாவின்பெண் சர்மிஷ்டை மிகவும் கோபத்தினால் சிவந்தகண்களுடன், 'நீ, துதிப்பவரும் யாசி ப்பவரும் கையேந்துகிறவருமாயிருப்பவருடைய பெண். நானோ, துதிக்கப்படுபவரும் கொடுப்பவரும் கையேந்தாதவருமாய் இருப்பவ ருடையபெண்' என்று சூடும் கடுமையுமானபேச்சை என்னைப்பார்த் துச்சொல்லுகிறாள். வ்ருஷபர்வாவின் பெண்ணான சர்மிஷ்டை கோ பத்தினால் சிவந்தகண்களுடன் மிக்க கர்வம்கொண்டு பலமுறைஇந் தப்பேச்சை என்னைப்பார்த்துச்சொன்னாள். பிதாவே! 'நான் துதிப் பவரும் கையேந்துகிறவருமாய் இருப்பவருடையபெண்ணாயிருந்தால் நான் தயைசெய்யும்படி உன்னைக் கேட்டுக்கொள்வேன்' என்று ஸகி யான சர்மிஷ்டையைநோக்கியே சொன்னேன். இவ்வளவு சொல்லி யும் என்னை அவள் மிகவும் இகழ்ந்து ஜனமில்லாதகாட்டில் கிணற்றில் தள்ளிவிட்டாள்; தள்ளிவிட்டு வீடுசேர்ந்தாள்' என்றுசொன்னாள்.

அதுகேட்டு, சுக்ராசார்யர், 'நீ ஸ்தோத்திரம் செய்பவனுக் கும் யாசிப்பவனுக்கும் கையேந்துபவனுக்கும் பெண் அல்லை. தேவ யானி! துதியாமல் பிறரால்துதிசெய்யப்படுகிறவனுடைய பெண் ணாகிறாய்; அது வ்ருஷபர்வாவுக்கேதெரியும்; இந்திரனுக்குத்தெரி யும்; நகுஷன்புத்ரனாகிய யயாதியென்னும் ராஜாவுக்கும் தெரியும். சிந்திக்கமுடியாததும், ஒப்பற்றதும், ஈஶ்வரன் கொடுத்ததுமாகிய மந் திரம் எனக்குப்பலம். இந்தலோகத்தில் என்றும்அழியாத ஸஞ்சீவினி யென்னும் வித்தையைத் தெளிவாக அறிந்திருக்கிறேன். தாமரைப் புஷ்பம்போன்ற கண்களையுடையவளே! அந்தவித்தையினால், இறந்து போனபிராணி பிழைப்பிக்கப்படுகிறது. ஆனால், ஸாதுவானவன் தன்குணங்களைப்பற்றிய புகழ்ச்சியைத் தானேசெய்வதனால் வருத்த மடைகிறான். அதனால், நான் சொல்லிக்கொள்ளமுடியவில்லை. என் னுடையபலம் எதுவோ அஃது உனக்குத்தெரியும்; ஆதலால், எழுந் திரு. குலத்தைச் சிறப்பிக்கிறபெண்ணே! விசாலமான கண்ணை யுடையவளே! பொறுமையை அடைந்து வீடு செல்வோம். ஸத்புரு

ஷர்களுக்கு க்ஷமைதான்பலம். பூமியிலும் ஸ்வர்க்கத்திலும் மற்ற எல்லா இடங்களிலுமுள்ளவற்றிற்கெல்லாம் நான் எப்போதும் ப்ரபு என்று பிரம்மா ஸந்தோஷத்துடன் என்னைச்சொல்லியிருக்கிறார். நான் ஜனங்களுடைய நன்மையைவிரும்பி ஜலத்தைவர்ஷிக்கிறேன். எல்லா ஓஷதிகளையும் வ்ருத்திசெய்கிறேன். இஃது உண்மையாக உனக்குச்சொல்லுகிறேன்' என்றுசொன்னார். துக்கமுற்றும் கோபத்தினால் பீடிக்கப்பட்டிருக்கும் அவளை இவ்வாறு இனிமையும் சாந்தமுமான சொற்களினால் பிதாவான சுக்ரர் தேற்றினார்.

---

## எழுபத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



சுக்ராசார்யர் தேவயானியைப்பார்த்துச் சொல்லுகிறார்:— 'தேவயானீ! எந்தமனிதன் எப்போதும் அயலார்சொல்லும் நிந்தனையான சொற்களை அதிகமாகப் பொறுக்கிறானோ அவனால் இந்த உலகமெல்லாம் ஜயிக்கப்பட்டதென்று அறி; உண்டான கோபத்தை, குதிரையை அடக்குவதுபோல், எவன் அடக்குகிறானோ அவன்தான் ஸாரதியென்று தெரிந்தவர்களால் சொல்லப்படுகிறான். கடிவாளத்தைப் பிடிப்பவன் ஸாரதியென்று சொல்லப்படுவதில்லை. தேவயானீ! மூளுகிறகோபத்தை அடக்குவதினால் விலக்குகிறவன் எவனோ, அவனால் உலகமெல்லாம் ஜயிக்கப்பட்டதென்றறி. பாம்பு பழையசட்டையை உரிப்பதுபோல் எவன் உண்டானகோபத்தை க்ஷமையினால் நீக்கிவிடுகிறானோ, அவன்தான் ஆண்பிள்ளையென்று சொல்லப்படுவன். எவன் கோபத்தை அடக்குகிறானோ, எவன் நிந்தனைகளைப் பொறுக்கிறானோ, எவன் பிறர் வருத்தியும் வருந்தாமலிருக்கிறானோ, அவன் நிச்சயமாகக் காரியஸித்திக்குப் பாத்ரமாகிறான். நூறுவருஷகாலம் ஒவ்வொருமாஸமும் சோர்வின்றி யாகம் செய்பவனொருவனும் எதற்கும் கோபிக்காதவனொருவனுமாகிய அவ்விருவருள் கோபிக்காதவனே மேலானவன். ஆதலால், கோபிக்காதவனே எல்லாரிலும் சிறந்தவன். காமமும் கோபமும் இழிவானவை. கோபிப்பவனுடைய தானமும் யாகமும் தவமும் பயன்பெறாதவை. அன்புள்ளவளே! ஆதலால், கோபமில்லாதவனிடத்தில் யஜ்ஞம், தவம், தானம் இவற்றின் பயன் மிகுதியாகஉண்டாகும்; கோபிப்பவ

னிடத்தில் ஒருபொழுதும் உண்டாகாது. இது நிச்சயம். எவன் கோப த்துக்கு உட்படுவனோ அவன் யதியுமாகான்; ரிஷியுமாகான்; யாகஞ் செய்பவனுமாகான்; தர்மத்தையுமடையான்; அவனுக்கு (இம்மை மறுமை) இரண்டுலோகங்களுமில்லை. கோபிக்கிற ஸ்வபாவமுள்ளவ னுக்குப் புத்ரன், வேலைக்காரன், ஸ்னேகிதன், ஸஹோதரன், பார்யை, தர்மம், ஸத்யம் இவையெல்லாம் நிச்சயமாக விலகிப்போம். சிறுவர் களும் சிறுமிகளும் புத்தியில்லாமல் விரோதஞ்செய்வதை ஞானமுள் ளவன் அனுஸரிக்கத்தகாது. ஏனெனில், அவர்கள் கோபம் பொறு மை இவற்றின் லாபங்களை அறியார்' என்றார்.

அப்படிச் சொல்லக்கேட்டு, தேவயானி, 'பிதாவே! நான் சிறு பெண்ணாயிருந்தாலும் தர்மங்களின் ஸூக்ஷ்மத்தை இப்போது அறி ந்திருக்கிறேன். பொறுமைக்கும் நிந்தனைக்கும் உள்ள பலாபலங்களை யும் நான் அறிவேன். ஆனால், தான்செய்யவேண்டியதைச் செய்யா மல் உண்மையில் தர்மத்தை விட்டுவிட்டு, சிஷ்யனது முறைமையை விட்டுவிட்ட சிஷ்யன்விஷயத்தில் பொறுப்பது அபிவ்ருத்தியை விரும்புகிறவனுக்குத் தகாது. ஏவக்கூடியவனாகிய சிஷ்யன் தன் நடையைவிட்டுப் * பயன்படாமற் போயிருக்கிறான். ஆதலால், ஒழு க்கந் தப்பினவர்களிடம் வஸிப்பது எனக்குப் பிரியமில்லை. எந்த மனிதர்கள், நடையைப்பற்றியும் குலத்தைப்பற்றியும் பிறரை நிந்திக் கின்றனரோ, அந்தக்கெட்ட புத்தியுள்ளவர்களிடம் ஶ்ரேயஸைவிரும் பும் அறிஞன் வஸிக்கக்கூடாது. ஒழுக்கத்தாலும் குலத்தினாலும் யார் எவனை ஸரியாக மதிக்கின்றனரோ, அந்த ஸாதுக்களிடம் அவன் வஸிப்பது தகும். அந்தவாஸம் மிகச்சிறந்ததாகச் சொல்லப் படுகிறது. மனிதர்கள் தனமில்லாமலிருந்தபோதிலும் தம்மை அடக் கிக்கொள்வதில் எப்போதும் ஊக்கமுள்ளவர்களாயிருந்தால் சிறந்தவ ராவார்கள். ஒழுக்கம்கெட்டவரும் பாபஞ்செய்கிறவரும் தனவான் களாயிருந்தாலும் சண்டாளர்கள்தாம்; ஜன்மத்தினால்மட்டும் சண்டா ளர்களாவதில்லை. தமக்கு விதித்த செய்கையைவிட்டுத் தனம், குலம், வித்தை இவைகளில் ஆசைவைத்தவர்கள் சண்டாளனுடைய செய் கையைச் செய்கிறவர்கள்தாம்; அவர்கள் காரணமில்லாமல் த்வேஷம் செய்வார்கள்; தூஷணையையும் சொல்லுவார்கள். அவர்களிடம் ஸாது வஸித்தல் தகாது. பாபிகளுடன்வஸித்தால் பாபியாவான். நன்மையோ அல்லது தீமையோ எதில் எந்தமனிதன் பழகுகிறானோ, அதில் அவனுக்குப் பற்றுதல் நிச்சயமாக உண்டாகிவிடும். ஆதலால்,

* தன் நடையைவிட்டுப் போயிருக்கிறானென்பது வேறுபாடம்.

த்வேஷத்தை விரும்பத்தகாது; வ்ருஷபர்வாவின் பெண்சொன்ன மிகக்கொடியகெட்டசொல், அக்னியை வேண்டுகிறவன் அரணிக்கட்டையைக் கடைவதுபோல் என்மனத்தைக் கடைகிறது. ஐசுவரியமில்லாத ஒருவன் சத்துருவினிடம் விளங்கிக்கொண்டிருக்கிற ஐசுவரியத்தினிடம் காத்திருப்பதைவிடச் செய்யத்தகாதகாரியம் மூன்று லோகங்களினும் வேறுஇருப்பதாக நான் நினைக்கவில்லை. அப்படிப்பட்டவனுக்கு மரணமே நல்லதென்று தெரிந்தவர்கள் அறிகின்றனர். நீசர்களின் சேர்க்கையினால் ஒருவன் காலக்ரமத்தில் அவமானத்தை அடைவான்; வாய்களினின்றும் வரம்புகடந்தசொற்கள் புறப்படுகின்றன. அவைகளால்அடிபட்டவன் இரவும்பகலும் துக்கப்படுகிறான். அவை எதிரியின்மர்மஸ்தானங்களிலேதான் விழுகின்றன. ஆதலால், தெரிந்தவன் அவற்றை அயலாரிடம் ப்ரயோகிக்கமாட்டான். ஆயுதங்களினால்வெட்டப்பட்டது ஆறும்;தீயினால் சுடப்பட்டதும்ஆறும்; சொல்லினால் உண்டானபுண் பிராணிகளுக்குத் தேகமுள்ளவரையிலும் ஆறாது. பாணங்களினால் அடிபட்டதும் கோடாலியினால்வெட்டப்பட்டதுமாகிய வனம் மறுபடியும் வளருகின்றது. வாக்கினால் கெட்டசொற்களைச் சொல்வதனாலுண்டான அருவருப்பான சொற்புண் ஆறாது' என்றாள்.

---

## எழுபத்துநான்காவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



பிறகு, ப்ருகுவம்சத்திற்சிறந்தவராகிய சுக்ராசாரியர், வீற்றிருக்கும் வ்ருஷபர்வாவினருகேசென்று கோபத்துடன் ஆலோசிக்காமல் அடியில்வருமாறு சொன்னார்.

'ராஜாவே! ஒருவனுக்குத் தான்செய்தபாவம் பசுவைப்போல் உடனே பலனைத் தருவதில்லை. ஆனால், * தொடர்ச்சியாகச் செய்யப்பட்டபோது காலக்ரமத்தினால் செய்பவனுடைய † வேர்களையறுக்கும். புத்ரர்களிடத்தும் பேரன்மார்களிடத்தும் தன்னிடத்துமுள்ள பாபத்தை ஒருவன் கவனிக்காமலிருப்பானாகில், அந்தப்பாபமானது, மிகுதியாக உண்ணப்பட்டது வயிற்றில் எப்படியோ அப்படியே நிச்சயமாகத் தன் பயனைக்காட்டும். ராஜாவே! படிக்கிறவனும் பொறு

---

* அதற்குக் காலக்ரமத்தினால் பரிபாகமடைந்து செய்பவனுடைய வேர்களையறுக்கும் என்பது வேறுபாடம்.

† பூர்வபுண்ணியங்களை.

மையுள்ளவனும் இந்திரியங்களை ஜயித்தவனும் பாபத்தைச் செய்யாதவனும் தர்மத்தையறிந்தவனும் என்வீட்டில் அன்புடன் எனக்குச் சுச்ரூஷைசெய்தவனும் ப்ருஹஸ்பதிபுத்ரனுமான அந்தக் கசனென்னும் பிராமணனை முன்னேகொல்வித்தாய். ப்ரபுவே! மானமுள்ளவளாகிய தேவயானி, சர்மிஷ்டையினால் மிகக் குரூரமாகச் சொல்லப்பட்டு, விரோதஞ்செய்து கோபத்தினால் கிணற்றிலும் தள்ளப்பட்டாள். அவள், இங்கேவஸிப்பதற்கு முடியாதவளாயிருக்கிறாள். அவளில்லாமல் நான் இங்கே எப்படிவஸிப்பேன்? ராஜாவே! ஆதலால், உன் தேசத்தை விட்டுவிடுகிறேன். வ்ருஷபர்வாவே! கொல்லத்தகாதவனாகிய அந்தக்கசனைக்கொன்றதனாலும், என்பெண்ணைக் கொல்ல ஆரம்பித்ததனாலும், உன்னையும் உன்பந்துக்களையும் விடப்போகிறேன். இதை நீ அறி. ராஜாவே! உன்தேசத்தில் உன்னுடன் நான் இருக்கமுடியாது. ராஜாவே! வ்ருஷபர்வாவே! நீ வ்யஸனமடையாதே; கோபமுஞ்செய்யாதே. ராஜாவே! தேவயானியைவிட்டு உன்தேசத்தில்வஸிக்க என்னால்முடியாது. இவளுடைய இடந்தான் எனக்கும் இடம்; இவளுடையவிருப்பந்தான் எனக்கும்விருப்பம்' என்றார்.

(இப்படிச் சொல்லக்கேட்ட) வ்ருஷபர்வா, 'பிராமணரே! நான் சர்மிஷ்டையைக்கொண்டு தேவயானியை அடிக்கச்செய்தாலும் தூஷிக்கச்செய்தாலும் அதனால் ஹீனகதியை அடைகிறேன்' என்றான். சுக்ரர், 'ஓ, அஸுரா! என்னைப் பொய்பேசுகிறவனாக நினைக்கிறாய். ஆச்சர்யம்! அதனாலேதான் இந்தத் தன்குற்றத்தைஅடக்காமல் உபேக்ஷை செய்கிறாய்' என்றுசொன்னார். வ்ருஷபர்வா, 'ப்ருகுபுத்ரரே! அதர்மத்தையாவது பொய்சொல்வதையாவது உங்களிடத்திலிருப்பதாக நான் நினைக்கவில்லை. தர்மமும் ஸத்யமும் உங்களிடத்திலிருக்கின்றன. ஆதலால், நீங்கள் எங்கள்விஷயத்தில் அநுக்ரஹம் செய்யக்கடவீர்கள். ப்ருகுபுத்ரரே! நீங்கள் எங்களைவிட்டு இவ்விடமிருந்து போவீர்களேயாகில், முன்னதாகவே நானும் என்பந்துக்களும் ஸமுத்ரத்திலாவது பாதாளத்திலாவது அக்னியிலாவது ப்ரவேசிப்போம். வேறு ஆதரவில்லை. க்ருஹங்களுக்கு ராஜாவே! நீர் என்னையும் விட்டுத் தேவர்களிடமும் போய்ச் சேருவீராயின், அப்போது நான் எல்லாவற்றையும் த்யாகஞ்செய்து அக்னியிற் பிரவேசிப்பேன்' என்றான். சுக்ராசாரியர், 'அஸுரர்களே! ஸமுத்திரத்திலேதான் விழுங்கள்; திசைகளெங்குந்தான் ஓடுங்கள்; என்பெண்ணினுடைய துக்கத்தை நான் தாங்கமுடியாதவன். எனக்கு அவள் ப்ரியமானவள்.

தேவயானியை நீ ஸமாதானப்படுத்தவேண்டும். என்னுயிர் அவளி டத்திலிருக்கிறது. நான் இந்திரனுக்கு ப்ருஹஸ்பதியைப்போல் உனக்கு லாபத்தையும்க்ஷேமத்தையும்செய்பவன்' என்றார். வ்ருஷ பர்வா, 'ப்ருகுபுத்ரரே! அஸுரராஜாக்களின் தனமாகட்டும், யானை கள் பசுக்கள் குதிரைகளாகட்டும், பூமியில் என்ன என்ன உண்டோ அவற்றிற்கு நீங்களே ப்ரபு. எனக்கு நீங்களேதாம் ப்ரபு' என்று சொன்னான். அதைக்கேட்டுச் சுக்ரர், 'அஸுரராஜனே! அஸுர ராஜாக்களின் திரவியமெல்லாவற்றிற்கும் நான் ப்ரபுவாயிருப்பேனா யின் இந்தத்தேவயானியை நீ சமாதானப்படுத்தவேண்டும்' என் றார். இப்படிச்சொல்லப்பட்ட வ்ருஷபர்வா 'அப்படியே'யென்று சிற ந்த கவியாகிய சுக்ராசார்யருக்குச் சொன்னான். சுக்ராசார்யரும் தேவயானியிடஞ்சென்று அவன்சொன்ன விஷயத்தைச்சொன்னார்.

தேவயானி, 'பிதாவே! ப்ருகுபுத்ரரே! ராஜாவின் திரவியத்துக்கு நீர் ப்ரபுவாயிருந்தால் அந்தவிஷயம் எனக்குத்தெரியாமையால் அதை ராஜாவே சொல்லட்டும்' என்று சொன்னாள். சுக்ரர் தேவயானி யின்சொல்லைத் தெரிவிக்கக்கேட்டு, வ்ருஷபர்வா தன்சுற்றத்தாருடன் தேவயானியிடஞ்சென்று, 'தேவயானியே! தயைசெய்' என்று பூமியில் அவள்பாதங்களில்விழுந்து, 'அழகானவளே! உன்தந்தை எப்போதும் என்னால் ஸ்துதிக்கப்பட்டும் வந்தனஞ்செய்யப்பட்டுமிரு ப்பவர். சிரித்தமுகமுள்ள தேவயானியே! நீ எதைவிரும்பினாலும், அது பெறக்கூடாததாயிருந்தாலும், அதை உனக்கு நான் கொடுப் பேன்' என்றுசொன்னான். அதற்குத் தேவயானி, 'ஆயிரம் கன் னிகைகளுடன் சர்மிஷ்டையை என் வேலைக்காரியாயிருக்கநான்விரு ம்புகிறேன். என்னை என்பிதா எந்தஇடத்தில் கொடுப்பாரோ அங் கும் அவள் என்பின்னே செல்லவேண்டும்' என்றுசொல்ல, வ்ருஷ பர்வா, 'ஓ! தாதி! நீ எழுந்திரு. சர்மிஷ்டையை உடனே அழைத்து வா. தேவயானி எந்தஇஷ்டத்தை விரும்புகிறாளோ, அதைஅவள் செய்யக்கடவள். ஒரு குலத்திற்காக ஒருவனைவிடவேண்டும்; ஒரு க்ராமத்திற்காக ஒருகுலத்தை விடவேண்டும்; ஒருதேசத்திற்காக ஒருக்ராமத்தை விடவேண்டும். *தனக்காகப் பூமியையே விட்டுவிட வேண்டும்' என்றான். உடனே, தாதி சர்மிஷ்டையிடஞ்சென்று, 'அம்மா! சர்மிஷ்டையே! எழுந்திரு. உன்பந்துக்களுக்கு ஸௌக் யத்தைச் செய். தேவயானியினால் ஏவப்பட்டுப் பிராமணர் சிஷ்யர்

* தன் ஆத்மா முக்திபெறுவதற்கு விஷயங்களில் பற்றுதலைவிடவேண்டு மென்பது கருத்து.

களை விட்டுவிடுகிறார். குற்றமில்லாதவளே! அவள் எதைவிரும்புகிறாளோ, அதை இப்போது நீசெய்யவேண்டும்' என்றுசொன்னாள். சர்மிஷ்டை, 'இப்படி தேவயானிக்காகச் சுக்ரர் என்னை அழைப்பாரானால் அவள் எதைவிரும்புகிறாளோ அதை இப்பொழுதே நான் செய்வேன். என்பிழையினால் சுக்ரர் போகவேண்டாம்; தேவயானியும் எனக்காகப்போகவேண்டாம்' என்றாள்.

பிறகு, ஆயிரம் கன்னிகைகளினால் சூழப்பட்டவளாகப் பல்லக்கிலேறிப் பிதாவின் ஆஜ்ஞைப்படி அந்தப்புரத்திலிருந்து விரைவாக வெளிப்பட்டாள். 'நான் ஆயிரம் வேலைக்காரிகளுடன் உனக்குப் பணிவிடைசெய்யும் தாஸியாக ஆகிறேன்.' உன்னை உன்பிதா எந்த இடத்தில் கொடுப்பாரோ, அங்கேயும் உன்னைப் பின்செல்வேன்' என்று தேவயானியைநோக்கிச் சர்மிஷ்டை சொன்னாள். அதற்குத் தேவயானி, 'நான் உனக்குத் துதிப்பவன், யாசிப்பவன், வாங்குகிறவன் பெண்ணல்லவா? துதிக்கப்படுகிறவன் பெண்ணாகிய நீ எனக்கு எப்படித் தாஸியாகலாம்?' என்றாள். அதைக்கேட்டு, சர்மிஷ்டை, 'துக்கப்படுகிற பந்துக்களுக்கு எவ்வகையாலும் சௌக்யத்தைச் செய்யவேண்டும். ஆதலால், உன்பிதா உன்னைக் கொடுக்குமிடத்துக்கு உன்னைப் பின்தொடர்ந்துசெல்வேன்' என்றாள்.

ராஜஸ்ரேஷ்டரே! வ்ருஷபர்வாவின்பெண் வேலைக்காரியாயிருக்க வாக்குத்தத்தஞ்செய்தபிறகு, தேவயானி தன்பிதாவைநோக்கி, 'தந்தையே! பிராமணஸ்ரேஷ்டரே! நான் த்ருப்தியானேன். இனி பட்டணத்துக்குள் வருகிறேன். உம்முடையஞானமும் உமதுவித்தையின்பலமும் வீணல்ல' என்றுசொன்னாள். அந்தப்பெருங்கீர்த்தியுள்ள பிராமணஸ்ரேஷ்டர், இவ்வாறு தம்பெண்ணினால் சொல்லப்பட்டபிறகு, எல்லா அஸுரர்களாலும் பூஜிக்கப்பட்டு ஸந்தோஷத்துடன் வ்ருஷபர்வாவின்பட்டணத்தில் ப்ரவேசித்தார்.

---

## எழுபத்தைந்தாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



ராஜஸ்ரேஷ்டரே! பிறகு, நீண்டகாலத்துக்குப்பின், பெண்களுட் சிறந்தவளாகிய தேவயானி, அந்த ஆயிரம்வேலைக்காரர்களோடு கூடிய சர்மிஷ்டையுடன்விளையாடுவதற்காக முன்புபோன அந்தவனத்திற்கேபோனாள். அந்த இடத்தையடைந்து அந்தஎல்லா ஸகிக

ளோடும் மிக மகிழ்ந்தவளாக விருப்பம்போல ஸஞ்சரித்தாள். அனை வரும் விளையாடிக்கொண்டும், புஷ்பமதுவைக் குடித்துக்கொண்டும், பலவகையான பக்ஷணங்களைப் புசித்துக்கொண்டும்,பழங்களைக் கடித் துக்கொண்டும், ஸந்தோஷமாக இருந்தனர். திரும்பவும் நகுஷ புத்ரனுகிய யயாதிமஹாராஜா தற்செயலாக மிருகத்தைத்தேடிக்கொ ண்டு ஶ்ரமத்தினுல்இளைத்து ஜலத்தைவிரும்பி அதேஇடம்வந்துசேர் ந்தான். அவன், குடித்துக்கொண்டும் விளையாடிக்கொண்டும் உயர்ந்த ஆபரணங்களை அணிந்துகொண்டுமிருந்த தேவயானியையும் சர்மிஷ் டையையும் அந்த மற்றப்பெண்களையும் கண்டான். அந்தஸ்திரீக ளின்நடுவில், எல்லாரத்னங்களினுலும் அலங்கரிக்கப்பட்ட தேவதா யோக்யமான சிறந்தஆஸனத்தில் அழகிய புன்னகையோடு உட்கார்ந் திருந்தவளும் அழகில் நிகரற்றவளும் சிறந்தபெண்ணுமாகிய தேவயா னியைக்கண்டான். அந்தத்தேவயானியின் ஆஸனத்திற்குக் கொஞ் சந்தாழ்வாக உட்கார்ந்திருப்பவளும் பொன்னுபரணங்களை அணிந் தவளும் அழகியநகைமுகமுள்ளவளும் பிராமணப்பெண்ணுகிய தேவ யானியின் பாதங்களைப்பிடித்துக்கொண்டிருப்பவளும் ஶ்லாக்யமான ரூபமுள்ளவளுமான அஸுரராஜாவின்பெண்ணையும் கண்டான். பார தரே! அப்போது பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் வாத்யம் வா சித்துக்கொண்டுமிருந்த அந்தப்பெண்கள் ஒப்பில்லாத ரூபமுள்ள யயாதியைக்கண்டு நாணத்தினுல் தலைகுனிந்து நின்றனர்.

யயாதி, (தேவயானியைப்பார்த்து,) 'அழகானவளே! நீங்கள் இரண்டுகன்னிகைள் இரண்டாயிரம் கன்னிகைகளினுற் சூழப்பட்டி ருக்கின்றீர்கள். உங்களிருவருடைய குலங்களையும் பெயர்களையும் நான்தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்றுகேட்க, தேவயானி, 'ராஜாவே! நான்சொல்லப்போகிறேன். என்சொல்லை நீர்ஏற்றுக் கொள்ளும். சுக்ரரென்னும் அஸுரகுருஇருக்கிருர். என்னை அவர் பெண்ணென்றுஅறியும்; இவள் அஸுரராஜாவாகிய வ்ருஷபர்வா வின்பெண்; சர்மிஷ்டையென்பவள்; என்தோழியும் என்தாதியுமான வள்; நான்எங்கேபோனுலும் அங்கேபோகிறவள்' என்ருள்.

யயாதி, 'அஸுரராஜன்பெண்ணும், அழகிய புருவங்களையுடை யவளும்,உத்தமஸ்திரீயுமாகிய இந்தக்கன்னிகை உனக்கு ஸகியாகவும் தாதியாகவும் இருப்பதுஎவ்வாறு? இதைத்தெரிந்துகொள்ள எனக்கு விருப்பம் அதிகமாகஇருக்கிறது. இவ்விதமான ரூபமுள்ளபெண் தேவஸ்திரீகளிலும் கந்தர்வஸ்திரீகளிலும் யக்ஷஸ்திரீகளிலும்கின்னர ஸ்திரீகளிலும் பூமியிலுள்ள ஸ்திரீகளிலும் இதற்குமுன் நான்கண்ட

தில்லே. லக்ஷ்மியைப்போன்றவளும், நீண்டனவும் தாமரைப்புஷ்பங்கள்போன்றனவுமாகிய கண்களோடும் எல்லா லக்ஷணங்களும் பொருந்தினவளும்,எல்லா அலங்காரங்களும் சோபிக்கிறவளுமாகிய அஸுரராஜாவின் பெண்ணுன கன்னிகை அவளுடைய துர்ப்பாக்யத்தினுற் கெடுக்கப்பட்டாளா? அல்லது உன்தவத்தினுற் கெடுக்கப்பட்டாளா? இவ்வாறன்றிக் குற்றமற்ற ரூபமுள்ள இவள் இங்கே அடிமையாவது நேராது. உன்னுடையரூபம் இவளுடைய ரூபத்துக்கு எவ்வளவும் நிகரல்ல. பூர்வஜன்மத்திற்செய்த பாபத்தினுல் இவள் உனக்கு அடிமையாயிருக்கிருள்; ஐயோ' என்றுன். அதற்குத் தேவயானி, 'புருஷஶ்ரேஷ்டரே! யாவரும் விதியைத்தாண்டுவதில்லே. விதியினுற்செய்யப்பட்டதென்றுநினைத்து, புதுமையான பேச்சுக்களேப் பேசலாகாது. உம்முடையரூபமும் வேஷமும் ராஜாவைப்போலிருக்கின்றன. பிராமணவாக்கை வஹிக்கிறீர் (பேசுகிறீர்). நீர் யார்? எங்கிருந்துவருகிறீர்? யாருடையபுத்திரர்? எனக்குச்சொல்லும்'என்றுகேட்க, யயாதி, 'நான் பிரம்மசர்ய வ்ரதமிருந்ததனுல் வேதம்முழுவதும் என்கேள்விக்கு வந்திருக்கிறது. நான் ராஜா; ராஜாவின்புத்ரன்; யயாதியென்று பிரஸித்தியுள்ளவன்' என்றுசொன்னுன். தேவயானி, 'ராஜாவே! என்ன கார்யத்திற்காக இந்தஇடம் வந்தீர்? ஜலத்திலுண்டான தாமரைப் புஷ்பம் முதலியவற்றைப் பறிக்கவா? அல்லது மானேப்பிடிக்கவா?' என்று கேட்டாள். 'ப்ரியமானவளே! ம்ருகத்தைத் தேடிக் கொண்டுவந்த நான் ஜலத்திற்காக இங்குவந்தேன். பலவகையாலும் என்னே ப்ரச்னஞ் செய்தாய்விட்டது. ஆதலால், எனக்கு நீ விடை கொடுக்கலாம்' என்று யயாதி சொன்னுன். 'இரண்டாயிரம் கன்னிகையோடும் தாஸியான சர்மிஷ்டையோடும் உம் ஸ்வாதீனமாக இருக்கிறேன். எனக்கு ஸ்நேஹிதராகவும் பர்த்தாவாகவும் ஆகக்கடவீர். உமக்கு ஸுகமுண்டாகக்கடவது' என்று தேவயானிசொன்னுள். யயாதி, அஸுரராஜாவின் பெண்ணேப்பார்த்து அவளிடம் பற்றுள்ள மனஸோடு, அவள் தனக்கு மஹிஷியாகவேண்டும் என்று நினைத்து, தேவயானியைப் பார்த்து ஒருவசனம்சொன்னுன்.

'சுக்ரபுத்ரியே! உயர்ந்தபெண்ணே! நான் உனக்குத்தகுந்தவனல்லேன் என்பதையறி. உனக்கு ஸுகமுண்டாகட்டும். தேவயானி! உன்பிதாவுக்கு அரசர் விவாஹஸம்பந்தத்துக்கு உரியவரல்லர். அயலானுடைய பார்யையும் ஸஹோதரியும் மேலானஜாதியிற் பிறந்தவளும் ஒரேகோத்ரமுள்ளவளும் பதிதையும் மருமகளும் இழிவானவளும் பிச்சைக்காரியும் வ்யாதியுள்ளவளும் சோக்

கூடாதவர்களென்று தெரிந்தவர்களால் சொல்லப்பட்டிருக்கின்றனர்' என்றான். அவன் அப்படிச்சொல்லலும், தேவயானி, 'க்ஷத்ரியஜாதியோடு பிராமணஜாதியும் பிராமணஜாதியோடு க்ஷத்ரியஜாதியும் சேர்ந்தே இருக்கின்றன. அதிக ஸூக்ஷ்மமாகப் பார்த்தால் அவ்விரண்டுஜாதிகளுக்கும் வேற்றுமையில்லை. ஓ! நகுஷபுத்ரரே! நீர் ரிஷியாகவும் ரிஷிபுத்ரராகவும் இருக்கிறீர். என்னை விவாஹஞ்செய்துகொள்ளும்' என்றுசொன்னாள். 'சிறந்த பெண்ணே! நான்குவருணங்களும் ஒருதேகத்தில் உண்டானவை. ஆனால், அவற்றிற்குத் தர்மங்களும் ஆசாரங்களும் வெவ்வேறு. அவற்றுள்பிராமணவருணம் மேலானது'' என்று யயாதிசொன்னான். 'நகுஷபுத்ரரே! இந்தப் பாணிக்ரஹணமென்னும் தர்மமானது இதற்குமுன் எந்தப்புருஷர்களாலும் எனக்குச் செய்யப்படவில்லை. எனது அந்தக்கையை நீர் முன்னே பிடித்திருக்கிறீர். ஆதலால், நான் உம்மைவரிக்கிறேன். ரிஷிபுத்ரரும் தாமே ரிஷியுமாகிய உம்மாற் பிடிக்கப்பட்டதாகிய உறுதியான மனமுள்ள எனதுகையை வேறுபுருஷன் எவ்வாறுதொடலாம்?' என்று தேவயானிசொன்னாள்.

யயாதி, அந்தவசனத்தைக்கேட்டு, 'பல்லில் விஷமுள்ள சீறிய ஸர்ப்பத்தைக்காட்டிலும், எல்லாப்பக்கத்திலும் வியாபிக்கின்றதீயைக் காட்டிலும், பிராமணன் மிகவும்நெருங்கமுடியாதவனென்று அறிவுள்ள மனுஷ்யன் தெரிந்துகொள்ளவேண்டும்' என்றான். 'புருஷ ஶ்ரேஷ்டரே! பிராமணன் பல்லில்விஷமுள்ள ஸர்ப்பத்தைக்காட்டிலும், எங்கும் வியாபிக்கின்ற தீயைக்காட்டிலும், அணுகமுடியாதவனென்று ஏன்சொல்லுகிறீர்?' என்று தேவயானிகேட்க, யயாதி, 'ஸர்ப்பம் ஒருவனைக்கொல்லுகிறது. ஆயுதத்தினால் ஒருவன் கொல்லப்படுகிறான். கோபமூட்டப்பட்ட பிராமணன் அநேகதேசங்களையும் நகரங்களையுமல்லவா கொல்லுகிறான்? பயமுள்ளவளே! அதனால், பிராமணன் மிகவும் அணுகக்கூடாதவனென்று நான்நினைக்கிறேன். அன்புள்ளவளே! இதனால், உன்பிதா கன்னிகாதானஞ்செய்யாமல் உன்னை நான் விவாஹம் செய்யேன்' என்றான். 'ராஜாவே! அப்படியானால் என்னால் புருஷராக வரிக்கப்பட்ட நீர் என்பிதா கொடுத்தபின் என்னை மணஞ்செய்துகொள்ளும்; தான் கேட்காமலே பிறரால் கொடுக்கப்பட்டவளைப் பெற்றுக்கொள்பவனுக்குப் பயமில்லையே. ராஜாவே! சற்றுநேரமிரும்; நான் பிதாவுக்குச்செய்தி அனுப்புகிறேன்' என்று தேவயானி யயாதிக்குச்சொல்லி, தன்தாதியைப்பார்த்து, 'தாதீ! நீ சீக்ரம்போய் பிரம்மாவுக்கொப்பான என்பிதாவை இங்கே

அழைத்துவா. நகுஷபுத்திரரை நான் ஸ்வயம்வரமாக வரித்திருப்பதையும் சீக்கிரம் அவருக்குத் தெரிவி' என்று சொன்னாள். அப்போது தேவயானியினால் தன்பிதாவுக்குச் சொல்லியனுப்பப்பட்ட செய்திமுழுமையையும் உடனே தாதி அவருக்கு நடந்தபடிதெரிவித்தாள். கேட்டவுடன், அந்தச் சுக்ராசார்யர் ராஜாவின்முன்னே வந்துநின்றார். வந்த சுக்ராசார்யரைப் பார்த்ததும், ராஜாவாகிய யயாதி பிராமணராகியசுக்ரரை வந்தனஞ்செய்து கைகூப்பி வணங்கி நின்றான். தேவயானியானவள், 'பிதாவே! நகுஷனுடைய புத்ராகிய இந்தராஜா ஆபத்துக்காலத்தில் முன்னே யாரும்பிடித்திராத என்கையைப் பிடித்தார். ஆதலால், நான் ஆபத்துநீங்கினவளாகச் செய்யப்பட்டேன். உங்களுக்கு நமஸ்காரம். என்னை இவருக்குக் கொடுங்கள். இந்தலோகத்தில் நான் வேறுபதியை வரிப்பதில்லை' என்று சொன்னாள். சுக்ரர், 'தர்மம்வேறு; விருப்பம்வேறு. முன்னேயே கசனுடையசாபம் நேர்ந்ததினால் நீ நகுஷபுத்ரனை உனக்குப் பதியாக வரித்தாய். அது வித்யாஸமாகத் தகாது. ஓ! வீரனே! நகுஷபுத்ரனே! எனது ப்ரியமானபெண்ணாகிய இவள் உன்னைப் பதியாகவரித்திருக்கிறாள். பிராமணப்பெண்ணைத் தானாக ஒருவன் க்ரஹித்துக்கொண்டால், வருணங்கள் கலந்துபோவதினால் பெரிய குற்றந்தான். ஆனால், என்னால் கொடுக்கப்பட்ட இவளை உன் மஹிஷியாக நீ அங்கீகரிக்கக்கடவாய்' என்றுசொன்னார்.

யயாதி, 'ப்ருகுபுத்ரரே! பிராமணரே! இதுவிஷயத்தில் வருணங்கள் கலப்பதினாலுண்டான பெரியஅதர்மம் என்னைத்தொடாமலிருக்கவேண்டுமென்று நான் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்' என்றான். சுக்ரர், 'உன்னைப் பாபத்திலிருந்து நீக்கிவிடுகிறேன். உனக்குவேண்டியவரத்தை நீகேள். இந்த விவாஹத்தில் வருத்தப்படாதே. நான் உன்பாபத்தை விலக்குகிறேன். அழகான இடையுள்ள தேவயானியைத் தர்மமாகவே பார்யையாக விவாஹஞ்செய்துகொள். இவளுடன் ஒப்பில்லாத ஸ்நேஹத்தையடை. ராஜாவே! இந்த ராஜகுமாரியாகிய வ்ருஷபர்வாவின்பெண் சர்மிஷ்டையுங்கூட உன்னால் எப்போதும் கௌரவிக்கத்தக்கவள். ஆனால், இவளைச் சயனத்தில்மட்டும் அழைக்காதே; இவளை ஏகாந்தத்தில் அழைத்துப் பேசாதே; தொடவுந்தொடாதே; தேவயானியைப் பார்யையாக விவாஹஞ்செய்துகொள். உனக்கு ஶ்ரேயஸ் உண்டாகக்கடவது. நினைத்ததையெல்லாம் அடைவாய்' என்றார்.

இப்படிச் சொல்லப்பட்ட யயாதியென்னும் அரசன் சுக்ரரைப்

பிரதக்ஷிணஞ்செய்து சாஸ்திரத்திற்சொன்ன முறையின்படிசுபமான விவாஹத்தைச் செய்துகொண்டான். சுக்ராரிடமிருந்து நிரம்பின தனத்தையும், இரண்டாயிரம்கன்னிகைகளுடனும் சர்மிஷ்டையுடனும் உத்தமஸ்திரீயான தேவயானியையும் அடைந்து, சுக்கிராராலும் அஸுரர்களாலும் பூஜிக்கப்பட்ட அந்தராஜஸ்ரேஷ்டன் மஹாத்மாவாகிய சுக்ரரால் விடைகொடுக்கப்பெற்று ஸந்தோஷத்துடன் தன் நகரஞ்சென்றான்.

---

## எழுபத்தாறுவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம் (தொடர்ச்சி.)



யயாதி, தேவேந்திர நகரத்துக்கொப்பான தன்நகரத்தையடைந்து அந்தப்புரத்துக்குட்சென்று அதில்தேவயானியைஇருக்கச்செய்தான். தேவயானியின் அனுமதியின்படி அந்த வ்ருஷபர்வாவின் பெண்ணை அசோகவனிகையென்னும் தோட்டத்தின் ஸமீபத்தில் க்ருஹம்கட்டி அதிலிருக்கச்செய்தான். ஆயிரம்வேலைக்காரிகளாற் சூழப்பட்ட வ்ருஷபர்வாவின் பெண்ணாகிய சர்மிஷ்டையைவஸ்திரங்களையும் அன்னபானங்களையும் கொடுத்துச் செவ்வையாகக் கௌரவித்து, நகுஷபுத்ரனான அந்தஅரசன் தேவயானியுடன்சேர்ந்து மிகுந்த ஸ்நேஹமுள்ளவனாக அனேகவருஷகாலம் மகிழ்ந்திருந்தான். தேவயானி பரிசுத்தமாயும் மனஸுக்கினிமையாயுமுள்ள அசோகவனத்தின்மத்தியில் சர்மிஷ்டையுடன்சேர்ந்து விளையாடிவிட்டு அங்கேயே அவளையனுப்பி ராஜாவுடன் க்ருஹத்துக்குட்சென்றாள். இப்படியே அந்தராஜா ஸ்நேஹத்துடன் வெகுகாலம் ஸந்தோஷமாக இருந்து தேவதையைப்போல் மனமகிழ்ந்து ஸுகமடைந்து அனேகவருஷகாலம் விளையாடினான். உயர்ந்தபெண்ணாகிய தேவயானி ருதுகாலம் வந்தபோது முதலாவது கர்ப்பத்தைத்தரித்தாள்; குமாரனையும்பெற்றாள். அநேகவருஷகாலங்கள் கடந்தபின் யௌவனமடைந்த வ்ருஷபர்வாவின் பெண்ணாகிய சர்மிஷ்டையும் தனக்கு ருதுகாலம் வந்ததைப்பார்த்துச் சிந்தையுற்றாள். ஸ்நானஞ்செய்து நிர்மலமாக இருந்த சர்மிஷ்டை, எல்லாஅலங்காரங்களினாலும் சோபித்துக்கொண்டு அழகிய பூங்கொத்துக்கள்நிறைந்த அசோகமரத்தின் கிளையைப்பிடித்துக்கொண்டு கண்ணாடியில் முகம்பார்த்துப் பர்த்தாவைப்பார்க்க ஆவலுள்ளவளாகச் சோகத்தினாலும் மோகத்தினாலும் ஆவேசங்கொண்டு அடியில்வரும் சொல்லைச்சொன்னாள்.

'அசோகமே! சோகத்தினால் அடிபட்ட மனமுள்ளவர்களுக்கெல்லாம் சோகத்தை விலக்குவாய். என்கணவனைக்காட்டி என்னையும் *உன்பேருள்ளவளாக இப்போது செய்யக்கடவாய்' என்றாள். (இப்படிச்) சொல்லிவிட்டு அந்தச்சர்மிஷ்டை, மறுபடியும், 'எனக்கு ருதுகாலம்நேர்ந்திருக்கிறது. நான் ஒருபதியையும் வரித்திருக்கவில்லை; எஃது உசிதம்? என்னசெய்யலாம்? எதைச்செய்தால் ஸுகமுண்டாகும்? இந்தத்தேவயானி பிள்ளையைப்பெற்றிருக்கிறாள்; எனக்கு வந்த யௌவனம்வீண்; அவள் எப்படிப் பர்த்தாவை வரித்தாளோ, அப்படியே நானும் அவனையேவரிக்கிறேன்; எனக்குப் புத்ரலாபத்தை ராஜாதான் கொடுக்கவேண்டியவ னென்பது என்னுடைய உறுதியானஎண்ணம்; அந்தத்தர்மாத்மாவான ராஜா ஏகாந்தத்தில் இப்போது எனக்குப் பார்க்கக்கிடைப்பானா? எனக்குப்பர்த்தாவாகிய ராஜாவைக் † கூந்தலினாற்கட்டி யாசிப்பேன்; தேவயானியின் புத்திரனை அடிக்கடிபார்த்துக்கொண்டு அவளுடைய அந்தப்புரத்தில் விளையாடிக்கொண்டிருக்கும் அரசன் எப்போதாவது ஒழிவையடைந்து இந்தஇடத்தை விரும்புவானா?' என்று சொல்லிக்கொண்டிருந்தாள். அந்தக்காலத்தில் அந்தஅரசன் தற்செயலாகவெளிப்பட்டு அசோகவனிகையின் ஸமீபத்தில்நிற்கின்ற சர்மிஷ்டையை ஸந்தித்தான். ஏகாந்தத்தில் ஒருவனாகஇருந்த ராஜாவைக்கண்டு சர்மிஷ்டை அழகிய மந்தஹாஸமுகத்துடன் எதிர்கொண்டுபோய்க் கைகளைக் கூப்பிக்கொண்டு ராஜாவைநோக்கி அடியில்வருமாறு சொல்லலானாள்.

'நகுஷபுத்திரரே! சந்திரன், இந்திரன், விஷ்ணு, யமன், வருணன் இவர்கள்வீட்டிலும் உம்வீட்டிலுமிருக்கும் ஸ்திரீகளை எவன் பார்க்கக்கூடும்? ராஜாவே! ரூபத்தினாலும், குலத்தினாலும், ஒழுக்கத்தினாலும் என்னை எப்போதும் நீர் அறிந்தவர்; அந்தநான் இப்போது உம்மைப்பிரார்த்தித்து யாசிக்கிறேன். ராஜாவே! எனக்கு ருதுகாலத்தின் ப்ரயோஜனத்தைக் கொடுக்கக்கடவீர்' என்றாள். யயாதி அந்தவசனத்தைக்கேட்டு, 'அஸுரராஜன் பெண்ணாகிய உன்னை நல்லொழுக்கம் நிரம்பினவளென்றும் உயர்ந்த ரூபமுள்ளவளென்றும் நான்அறிவேன். உன்ரூபத்தில் ஊசிமுனையளவும் குற்றத்தை நான்பார்க்கவில்லை. உயர்ந்தவளே! உன்னை நான் பார்த்தது முதல் உன்நினைவாகவேயிருக்கிறேன். நான் எப்போது தேவயானியைக் கல்யாணஞ்செய்தேனோ அப்போது கவிபுத்ரராகிய சுக்ராசார்யர், 'இந்த வ்ருஷபர்வாவின் பெண்ணை நீ சயனத்தில் கூப்பிடத்

---

* அசோகை - சோகமில்லாதவள். ‡ தலையால்வணங்கி.

தகாது. தேவயானியின் ப்ரியத்தைச்செய்து சர்மிஷ்டையையும் காப்பாற்று' என்றுசொல்லியிருக்கிறார்' என்றுசொன்னான். 'ராஜா வே! பரிஹாசத்துக்காகவும், ஸ்திரீகளிடத்தும், விவாஹகாலத்தி லும், ப்ராணாபாயகாலத்திலும், எல்லாச்சொத்தும் பறிக்கப்படுங்கால த்திலும் சொல்லப்படும் பொய் தீங்குசெய்யாது. இந்த ஐந்துபொய்க ளையும் பாபமல்லாதவையென்றுசொல்லுகின்றனர். ராஜாவே! ஸாக்ஷ யத்தில் கேட்கப்பட்டவன் வித்தியாஸமாகப் பொய் பேசினால் அவ னைப் பதிதனென்று சொல்லுகின்றனர். ஒருகார்யத்தை நிச்சயிக்கும் போது பொய்சொல்லுகிறவனை அந்தப் பொய்கெடுக்கும். ஸ்த்ரீகளி டத்தும், பரிஹாஸத்திலும், விவாஹத்திலும், தன்உயிரும்பொரு ளும் நஷ்டமாகும்போதும் சொல்லப்படும் பொய் பொய்யன்று; அதுவே சிறப்பையடையும்' என்று சர்மிஷ்டைசொன்னாள்.

'யயாதி, 'ராஜாதான் ஜனங்களுக்கு உதாஹரணம்; அவன்பொய் சொன்னால் கெடுவன். ராஜ்யகார்யத்தில் ஸங்கடம் வந்தபோதி லும் நான்பொய்சொல்ல விரும்பேன்' என்றான். அதற்குச்சர்மிஷ் டை, 'ராஜாவே! தன்பதியும், ஸகியின்பதியும், ஒன்றாகவேநினைக் கப்படுகின்றனர். ஒருமையாக இருப்பதைத்தானே விவாஹமென்று சொல்லுகின்றனர். என் ஸகி உம்மைப்பதியாக வரித்தேயிருக்கிறாள். சிறந்தபுத்தியுள்ள சுக்ராசார்யரால் தேவயானியுடன்கூடவே நானும் பூஜிக்கத்தக்கவளென்றும் போஷிக்கத்தக்கவளென்றும் சொல்லிக் கொடுக்கப்பட்டிருக்கிறேன். அதை நீர் பொய்யாகச்செய்யத்தகாது. பொன், மணி, முத்து, வஸ்திரம், ஆபரணம், பசு, பூமிமுதலிய எல்லா வற்றையும் நீர்யாசிப்பவருக்குக்கொடுக்கிறீர்; அவையெல்லாம் வெளி ப்பட்டதானங்களாகச் சொல்லப்பட்டனவேயன்றிச் சரீரத்தைச்சேர் ந்தவையல்ல. ராஜாவே! புத்ரனைக்கொடுப்பதும் தன்னைக்கொடுப்ப தும் செயற்கரிய தானங்கள். ஐயா! சரீரத்தைக்கொடுப்பதினால் மற் றவையெல்லாம் கொடுக்கப்பட்டவையாகும். ராஜாவே! 'எவனெவ னுக்கு என்னஎன்னவிருப்பமோ அவனவனுக்கு அவற்றையெல் லாம் நான்கொடுக்கிறேன்' என்றுசொல்லிஉம்நகரத்தில்நீரே மூன்று தரம் பறையடித்திருக்கிறீர். ராஜாவே! உமதுசொல்லும் நீர்செய்த விளம்பரமும்பொய்யாய்விடும். ராஜஸ்ரேஷ்டரே! குபேரனைப்போன்ற நீர் அதை ஸத்யமாகச்செய்யும்' என்றாள். யயாதி, 'யாசிப்பவ ருக்குக் கொடுக்கவேண்டுமென்பதை நான் விரதமாகவைத்திருக்கி றேன். நீ என்னை யாசிக்கிறாய். உனக்கு என்ன விருப்பத்தை நான் செய்யவேண்டும்? அழகானபுன்சிரிப்புடையவளே! உனக்குப்பொரு

னைக்கொடுக்கட்டுமோ? ராஜ்யத்தைக்கொடுக்கட்டுமோ? சொல்' என்ருன். சர்மிஷ்டை, 'ராஜாவே! பாபம்வராமல் என்னைக்காப்பாற்றும்; தர்மத்தைக்கொடும். புத்ரனைவிரும்புகிற நான்வேறுபுருஷனைவரிப்பதில்லை. புத்ரனைக்காட்டிலும் சிறந்ததொன்றுமில்லை. உம்மிடத்திலிருந்து புத்ரனையடைந்து லோகத்தில் உயர்ந்த தர்மத்தைச் செய்யக்கடவேன். ராஜாவே! பார்யை, அடிமை, புத்ரன் இம்மூவரும் தாம்வேருகத் தங்களுக்குத் தனமில்லாதவர்கள். இவர்கள் அடைவதெல்லாம் இவர்கள் யாரைச்சேர்ந்தவர்களோ அவருடையதனந்தான். புத்ரனைப் பெறுவதற்கும், பர்த்தாவைப் போஷிப்பதற்குந்தான் பிரம்மதேவர் ஸ்திரீகளைப்படைத்திருக்கிருர். கன்னிகைகள் பதியில்லாமலும் புத்ரனில்லாமலுமிருப்பார்களாயின், இந்தலோகத்தில் அவர்களுடைய ஜன்மம்வீண். பரலோகமும் அவர்களுக்கில்லை. நான் தேவயானிக்கு வேலைக்காரியாயிருக்கிறேன். அந்தத்தேவயானி உமக்கு வசப்பட்டவளாயிருக்கிருள். ராஜாவே! அவளையும் என்னையும் நீர்தாம் அடையத்தக்கவர். என்னை அங்கீகரிக்கக்கடவீர்' என்று சொன்னுள்.

இவ்வாறுசொல்லப்பட்ட அந்தஅரசன் ஸரியென்றறிந்து சர்மிஷ்டையைக் கொண்டாடினுன். தர்மத்தையும்கொடுத்தான். அவன் சர்மிஷ்டையைச்சேர்ந்து ஸுகமாகஇருந்தபிறகு, அவர்களிருவரும் ஒருவரையொருவர் மரியாதைசெய்து வந்தபடியே சென்றனர். அந்தச்சேர்க்கையில் அழகான புருவங்களுடையவளும் மதுரமான சிரிப்புள்ளவளுமாகிய சர்மிஷ்டை அந்த ராஜஸ்ரேஷ்டனிடத்திலிருந்து முதல்கர்ப்பத்தைத் தரித்தாள். ஜனமேஜயராஜாவே! தாமரைப் புஷ்பம்போன்ற கண்களையுடைய சர்மிஷ்டை, பிறகு, ப்ரஸவகாலத்தில் தாமரைக்கண்ணனும் தேவகுமாரனைப் போன்றவனுமாகிய ஒரு புத்ரனைப்பெற்றுள்.

---

## எழுபத்தேழாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



சுக்லபக்ஷத்தில் சுபராசியைச்சேர்ந்த சந்திரனுடன் கூடிய சுபநக்ஷத்திரம் பொருந்திய அந்தத்தினத்தில் அந்தச் சக்ரவர்த்தியாகிய ராஜா அந்தச்சர்மிஷ்டையோடு கூடி மகிழ்ந்திருந்தான். அந்தராஜா, 'ஜனங்களுக்கு ஸம்பத்து ஸமீபிப்பதுபோல் எனக்குச் சர்மிஷ்டை மனைவியானுள். எனக்குத் தேவயானி ஸர்ப்பம்போலப் பயங்கரரூப

முள்ளவளாக ஆய்விட்டாள். வ்ருஷபர்வாவின் புத்ரியாகிய சர்மிஷ்டை எனக்குப் பயிர்களுக்கு மேகம்போலவும் தேவர்களுக்கு அமிர்தம்போலவுமிருக்கிறாள்' என்று மனத்தில்நினைத்து, தேவயானியை விட்டுவிட்டான். பாரதரே! இனிய சிரிப்புள்ள தேவயானியானவள் குமாரன்பிறந்ததைக் கேள்வியுற்றுத் துக்கமுள்ளவளாகச் சர்மிஷ்டையைப்பற்றி ஆலோசித்தாள். பின் சர்மிஷ்டையிடஞ்சென்று, 'அழகான புருவங்களையுடையவளே! காமஸுகத்துக்கு ஆசைப்பட்டு என்ன இந்தப் பாவஞ்செய்துவிட்டாய்?' என்ற சொல்லைச்சொன்னாள். சர்மிஷ்டை, 'அழகிய சிரிப்புள்ளவளே! தர்மமே உருவங்கொண்டவரும் வேதங்களில் கரைகண்டவருமான ஒருரிஷி வந்தார். வரங்கொடுக்கவந்த அவரை நான் தர்மத்துடன்சேர்ந்த காமத்தை யாசித்தேன். நான் புத்ரலாபத்தைப்பற்றி அவரைக் கேட்டுக்கொண்டேன். சுத்தமான புன்னகையுள்ளவளே! நான் அனியாயமாகக் காமஸுகத்தை அடையேன். அந்த ரிஷியினிடமிருந்து எனக்குப் புத்திரனுண்டானானென்பதை உனக்கு உண்மையாகச் சொல்லுகிறேன்' என்று சொன்னாள். அதற்குத் தேவயானி, 'பயந்தவளே! ஆனால் ஸரி. [1] த்விஜருடைய கோத்ரமும் இருப்பிடமும் உனக்குத்தெரியுமா? நானும் அந்தத் துவிஜரைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்' என்றுகேட்க, சர்மிஷ்டை, 'சுத்தமான புன்னகையுள்ளவளே! தவத்தினாலும் ஒளியினாலும் ஸூர்யனைப்போல் ஜ்வலித்துக்கொண்டிருந்த அவரைப்பார்த்துக்கேட்க எனக்குச்சக்தியில்லாமற்போயிற்று' என்றாள். தேவயானி, 'சர்மிஷ்டையே! இஃது இப்படியாக இருந்தால் பெரியவரும் சிறந்தவருமாகிய பிராமணரிடம் உனக்கு ஸந்ததிகிடைத்ததனால் உன்மேல் எனக்குக் கோபமில்லை' என்று சொன்னாள். அவ்விருவர்களும் இவ்வாறு ஒருவரோடொருவர் ரஹஸ்யமாகப் பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டுமிருந்தபிறகு, சுக்ரபுத்ரியான தேவயானி அதை நிஜமென்றே நம்பிக்கொண்டு அந்தப்புரம்சென்றாள். யயாதிராஜன், இரண்டாவது இந்திரனையும் விஷ்ணுவையும் ஒத்த யது துர்வஸு என்னும் இரண்டு புத்திரர்களைத் தேவயானியினிடம் பெற்றான்.

அந்தக்காலத்தில் ராஜரிஷியாகிய யயாதிராஜன் தேன்சுவையுடன் சேர்க்கப்பட்டதும் மதத்தை விருத்திசெய்வதும் சிவப்பும்மஞ்சளும் கலந்தவர்ணமுள்ளதுமான மதுவைச் சுக்கிரர்பெண்ணான தேவயானியைக் குடிக்கும்படிசெய்தான். அந்தமதுவைக் குடித்துக்

1 த்விஜன் = பிராமணன், க்ஷத்ரியன், வைசியன்.

குடித்து அந்தத்தேவயானி மயக்கங்கொண்டாள். அடிக்கடி அழுது கொண்டும் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் மிகுதியாகப் பிதற்றிக்கொண்டுமிருந்த அந்தத்தேவயானி, ராஜாவைநோக்கி, 'ஓ! பிராமணஶ்ரேஷ்டனே! உன்உருவமும் அலங்காரமும் ராஜாவுக்கிருப்பது போலிருக்கின்றன. எதற்காக நீ இங்கேவந்தாய்? ஜனங்களில்லாத கடினமானகாட்டுக்கு என்னகார்யத்திற்காக வந்தாய்? யயாதியென்னும் ராஜஶ்ரேஷ்டன் கொடிய பார்வையுள்ளவன். ஆதலால், பிராமண! நன்மையை விரும்பினாயானால் இவ்விடம்விட்டு ஓடிப்போ' என்று இவ்வாறுபிதற்றிக்கொண்டிருந்த தகாதவளும் பாபத்தைவிருத்திசெய்கிறவளுமான அந்தத்தேவயானியை யயாதி வசனங்களினால் பயமுறுத்தினான். பிறகு, அலிகளையும் ஊமையரையும் அங்கப்பிழையுள்ளவர்களையும் கிழவர்களையும் முடவர்களையும் தேவயானியைப் பாதுகாக்கவும் போஷிக்கவும் கட்டளையிட்டான். சிறந்தபுத்தியுள்ள நகுஷபுத்திரனான அந்தராஜா பிறகு சர்மிஷ்டையைச்சேர்ந்து வெகுகாலம் அவளுடன்கூடி ரமித்தான். விருஷபர்வாவின் பெண்ணாகிய சர்மிஷ்டை, அதேராஜரிஷிக்கு த்ருஹ்யு, அனு, பூரு என்னும் மூன்று குமாரர்களைப் பெற்றாள்.

ஜனமேஜயராஜாவே! அதன்பின் ஒருஸமயத்தில் தெளிவான நகையுள்ள தேவயானி, யயாதியுடன்சேர்ந்து ஜனமில்லாததோட்டத்திற்குச் சென்றாள். அப்போது அவள் அவ்வனத்தில் தேவர்களுக்கொப்பானரூபத்துடன் அச்சமின்றி விளையாடுகின்ற குமாரர்களைக் கண்டு வியப்புற்றவளாகி, 'ராஜாவே! தேவகுமாரர்களுக்கொப்பான இந்த அழகிய குமாரர்கள் யாருடையவர்? ஒளியினாலும் அழகினாலும் உன்னைப்போல் இருக்கிறார்களென்று நான் நினைக்கிறேன்' என்று ராஜாவைக்கேட்டாள். இப்படி ராஜாவைக்கேட்டபின் குழந்தைகளையும் விசாரித்தாள். அந்தக்காலத்தில் அதைக்கேட்ட அந்தக் குழந்தைகளின்தாதி, 'குமாரர்களே! ஒருபிராமணஶ்ரேஷ்டர் உங்களுக்குப் பிதாவென்பதை நீங்கள் ஏன்சொல்லவில்லை?' என்றுகுமாரர்களை நோக்கிச் சொன்னாள். குமாரர்கள், 'ரிஷியும் வேதாத்தியயனம் செய்தவருமான ஒரு த்விஜர்தாம் எங்களுக்குத்தந்தை. சர்மிஷ்டை பொய்சொல்வதில்லை; தேவயானி! எங்களை மன்னிக்கக்கடவாய்' என்றனர்கள். அதற்குத்தேவயானி, 'புத்ரர்களே! உங்கள் பிதாவாகிய பிராமணருக்குப் பெயரும்கோத்ரமும்என்ன? அவர்யார்? எங்கிருக்கிறார்? உண்மையாக உடனே சொல்லுங்கள். அவரைப்பற்றி நான் கேட்கவிரும்புகிறேன். எனக்கு நிஜத்தைச் சொல்லுங்கள்'

என்றுகேட்டாள். அழகிய இடையையுடைய தேவயானியால் இவ்வாறு கேட்கப்பட்ட அந்தக்குமாரர்கள் சுட்டுவிரலால் அந்தராஜஸ்ரேஷ்டனையே காட்டினர். சர்மிஷ்டை தாயாரென்பதையும் அந்தக்குமாரர்களே சொன்னார்கள். இவ்வாறுசொல்லிவிட்டு அந்தக்குழந்தைகளெல்லாரும் ராஜாவினருகில் சென்றார்கள். தேவயானியின் ஸமீபத்தில் அவர்களை ராஜா அழைக்கவில்லை. அதன்மேல் அந்தக்குழந்தைகள் அழுதுகொண்டுசர்மிஷ்டையினிடம் போனார்கள். அழகானகண்களையுடைய சர்மிஷ்டை ராஜாவைப்பற்றி ஒன்றும்சொல்லாமலே ராஜாவுக்குச் சிறிது தூரத்தில் தலைகுனிந்துநின்றாள். அந்தக் குழந்தைகள் சொன்னதைக்கேட்டு ராஜா வெட்கப்பட்டுநின்றான். மறுமொழிசொல்ல முடியாமல் ராஜா மௌனமாக இருந்தான்.

ராஜாவினிடத்தில் அந்தக்குழந்தைகளின் ஸ்நேஹத்தைக்கண்டு தேவயானி உண்மையையறிந்துகொண்டு சர்மிஷ்டையைநோக்கி, 'பெண்ணே ! ஒரு ரிஷி என்னிடம் வருகிறாரென்றுசொன்னாயே? இப்படி நீ யயாதிராஜாவை மறைத்தாயல்லவா ? நீ பிழைசெய்திருக்கிறாயென்று நான் முன்னமேசொன்னேன். எனக்கு உட்பட்டவளாக இருந்தும் எனக்கே விரோதத்தை ஏன்செய்தாய்? இன்னும் அதே அஸுரத்தன்மையைவஹித்து நீஎன்னிடம்பயப்படாமலிருக்கிறாய்' என்று சொன்னாள். அதற்குச்சர்மிஷ்டை, ' அழகான சிரிப்புமுகமுள்ளவளே ! ரிஷியென்றுதானே நான்சொன்னேன். அதுநிஜம். நியாயமாகவும் தர்மத்தைவிடாமலும் நடத்தலால், நான் உனக்குப்பயப்படவில்லை. நீ பர்த்தாவை எப்போது வரித்தாயோ அப்போதே நானும் வரித்தாய்விட்டது. அழகானவளே ! தர்மப்படி ஸகியின் பர்த்தா தனக்கும் பர்த்தாவாகலாம் ; நீ எனக்குப் பூஜிக்கத்தக்கவள் ; கௌரவிக்கத்தக்கவள். ஏனெனில், வயதில் பெரியவளாகவும், பிராமணப்பெண்ணாகவுமிருக்கிறாய் ; உன்னைப்பார்க்கிலும் ராஜரிஷி எனக்கு அதிகமாகப் பூஜ்யர்; உனக்குத்தெரியாதா ? அழகானவளே! என்குருவாகிய உன்பிதாவினால் நாமிருவரும் கொடுக்கப்பட்டோம் ; ஆதலால், பார்த்தாவாகவும் பூஜ்யராகவுமிருக்கிற இவர் இங்கே போஷிக்கப்படவேண்டியவளாகிய என்னைப் போஷிக்கிறார் ' என்றுசொன்னாள். அவள்சொல்லைக் கேட்டபிறகு, தேவயானி, 'ராஜாவே! சர்மிஷ்டையாகிய பாரியையுடன் உன் இஷ்டப்படி ரமித்துக்கொண்டிரு. நீ எனக்குவேண்டாதகாரியம் செய்திருக்கிறாய். இனி நான் இங்கிரேன் ' என்றுசொன்னாள். இவ்வாறுசொல்லிக் கருமையான விழிகளையுடைய தேவயானி, வெட்கத்தோடிருக்கும் சர்மிஷ்டையை

எரிப்பவள்போற்பார்த்து எல்லாப்பூஷணங்களையும் கழற்றியெறிந்து விட்டு மிகுந்தகோபத்தினால் ஜ்வலிப்பவள் போலானாள். உடனே எழுந்து கண்ணும்கண்ணீருமாகச் சுக்கிராசாரியரிடம் விரைவாகப் போகத்தொடங்கிய யுவதியான தேவயானியைப்பார்த்து, ராஜா வருத்தமுற்றவனாகிப் பரபரப்புடன் நல்வார்த்தைசொல்லிக்கொண்டு பின்தொடர்ந்தான். கோபத்தினால் சிவந்தகண்களையுடைய தேவ யானி திரும்பவேயில்லை. அவள் ராஜாவுக்கு ஒன்றும்சொல்லாமல் கண்ணும்கண்ணீருமாக விரைவில் கவிபுத்ரராகிய சுக்ரர்ஸமீபம் சேர்ந்தாள். அவள் தன்பிதாவைக்கண்டவுடன் நமஸ்காரஞ்செய்து அவர்முன்னின்றாள். பிறகு, யயாதியும் சுக்ராசார்யரைப்பூஜித்தான். தேவயானி, 'தந்தையே! அதர்மத்தினால் தர்மம் வெல்லப்பட்டது. கீழ்மேலாக நடந்துபோயிற்று. விருஷபர்வாவின்பெண் சர்மிஷ்டை என்னைமிஞ்சிவிட்டாள். இந்தராஜாவாகிய யயாதி அவளிடம்மூன்று புத்திரர்களை உண்டுபண்ணினான். அதிர்ஷ்டமில்லாத எனக்கு இரு வரே புத்திரர்கள். தந்தையே! உமக்குச் சொல்லுகிறேன். ப்ருகு குலஶ்ரேஷ்டரே! இந்தராஜா தர்மந்தெரிந்தவனென்று பெயர்பெற்ற வன். இவன் வ்யவஸ்தை தவறினவனாயிருக்கிறான். கவிபுத்ரரே! இதை உமக்குச்சொல்கிறேன்' என்றுசொன்னாள். சுக்ரர், யயாதி யைப்பார்த்து, 'மஹாராஜாவே! நீதர்மந்தெரிந்தவனாயிருந்தும் அத ர்மத்தை விருபத்துடன் செய்ததினால் உன்னால் ஜயிக்கமுடியாத மூப்பு உன்னை விரைவில் மூடிக்கொள்ளும்' என்றுசொன்னார்.

யயாதி, 'பகவானே! அஸுரராஜன்பெண் ருதுகாலத்தின்பயனை வேண்டினதற்காக நான் தர்மத்தையனுஸரித்து வேறுவிதமான எண் ணமில்லாமல் இதைச்செய்தேன். பிராமணரே! ருதுவின்பயனையாசிக் கிறஸ்திரீக்கு அதைக்கொடாமலிருக்கிற புருஷன், கர்ப்பஹத்திசெய் தவனென்று இவ்வுலகத்தில் வேதம்தெரிந்தவர்களாற் சொல்லப்படு கிறான். விரும்பினவளும் சேரத்தகுதியுள்ளவளுமாகிய ஸ்திரீ, ரஹஸ் யத்தில் வேண்டினபோது, அவளையடையாதவன் கர்ப்பஹத்தி செய் தவனென்று தர்மசாஸ்திரம் தெரிந்தவர்கள் சொல்லுகின்றனர். என் னை எவன் என்னகேட்கிறானோ அதையெல்லாம் அவனுக்குக்கொடுக்க வேண்டுமென்பது என்னுடையவிரதம். அவளும் உம்மாலேயே எனக்குக்கொடுக்கப்பட்டாள். அவள் இவ்வுலகத்தில் வேறொருகண வனைவிரும்பவில்லை. ப்ருகுகுலஶ்ரேஷ்டரே! இவ்வாறு இந்தக்காரண ங்களை ஆராய்ந்து நான் பாபம்வருமென்றபயத்தினால் கலக்கமுற்றுச் சர்மிஷ்டையிடம் சேர்ந்தேன். பிராமணரே! நான்செய்ததைத்தர்ம

மென்று நினைத்து என்விஷயத்தில் க்ஷமைசெய்யவேண்டும்' என்று சொன்னான்.

சுக்ராசார்யர், 'ஓ! நகுஷபுத்ரனே! ராஜாவே! நீ என்னை எதிர் பார்த்திருக்கவேண்டும்; எனக்குப்பட்டவனாயிருக்கிறாய்; தர்மங் களில் பொய்யான ஆசாரமுள்ளவன் திருடனாகிறான்' என்றுசொன் னார். கோபங்கொண்ட சுக்கிராசாற்சபிக்கப்பட்ட நகுஷபுத்திரனாகிய யயாதி உடனே இளமைப்பருவத்தைவிட்டு மூப்பையடைந்தான். அப்போது யயாதி, 'ப்ருகுகுலஸ்ரேஷ்டரே! என்யௌவனவயஸி னுடைய த்ருப்தியைத் தேவயானியிடம் நான் அடையவில்லை. பிரா மணரே! எனக்கு அனுக்கிரஹஞ்செய்யக்கடவீர். இந்தமூப்பு என்னை அடையாமலிருக்கவேண்டும்' என்றுகேட்க, சுக்கிரர், 'ராஜாவே! நான் பொய் சொல்வதில்லை. நீ இதோ ஜரையையடைந்திருக்கி றாய். ஆனால், உனக்கு விருப்பமிருந்தால் இந்த ஜரையை வேறொருவ னிடம் மாற்றிக்கொள்ளலாம்' என்றுசொன்னார். யயாதி, 'பிராம ணரே! என்னுடையபுத்திரர்களில் எவன் தன்வயஸைஎனக்குக்கொ டுப்பனோ அவன்தான் ராஜ்யத்துக்குரியவனாகவும் புண்ணியமுள்ள வனாகவும் புகழுள்ளவனாகவுமிருப்பான். அதற்கு நீங்கள் அனுமதி கொடுக்கவேண்டும்' என்றான். சுக்கிரர், 'நகுஷபுத்ரனே! மனஸி னால் என்னைத்தியானஞ்செய்து ஜரையைஉன்இஷ்டப்படிமாற்றலாம். உனக்குப் பாபம்வராது. எந்தப்புத்திரன் உனக்கு இளமையைத் தரு வனோ அவனே ராஜாவாகவும் தீர்க்காயுஸுள்ளவனாகவும் புகழ்பெற் றவனாகவும் அதிகஸந்ததியுள்ளவனாகவும் இருப்பான்' என்று சொன்னார்.

---

## எழுபத்தேட்டாவது அத்தியாயம்.

## ஸ ம் ப வ ப ர் வ ம். (தொடர்ச்சி.)



யயாதி ஜரையையடைந்து தன்நகரம்சேர்ந்து சிறந்தவனும் ஜ்யேஷ்டனுமான யதுவென்னும் புத்ரனைநோக்கி, 'குழந்தாய்! மூப் பும் மடிப்புக்களும் நரைகளும், கவிபுத்ரரான சுக்கிராசாரியருடைய சாபத்தினால் என்னைச் சூழ்ந்திருக்கின்றன. யௌவனத்தினால் திரு ப்தியை நான் அடையவில்லை. யதுவே! மூப்புடன்கூடத் துன் பத்தை நீ வாங்கிக்கொள். உன்னுடைய யௌவனத்தினால் நான் போகங்களை அனுபவிப்பேன். ஆயிரம்வருஷங்கள் நிறைந்தபின்நான்

உன்யௌவனத்தை உனக்குக்கொடுத்துவிடுவேன்; துன்பத்தையும் மூப்புடன்கூடப் பெற்றுக்கொள்வேன்' என்றுசொல்ல, யதுவென்னும் புத்திரன் மறுமொழி சொல்லத்தொடங்கினன்.

'ராஜாவே! மூப்பில் பானம்பண்ணுதலாலும் உண்பதனுலும் செய்யப்படுங்குற்றங்கள் அனேகமுண்டு. ஆதலால், உம்முடைய ஜரையை நான்வாங்கிக்கொள்ளமாட்டேன். இஃதுஎன்அபிப்பிராயம். மனிதன் ஜரையினல் மீசைநரைத்து உத்ஸாஹம்குறைந்து தளர்ச்சியடைந்து உடம்பெல்லாம் மடிப்புண்டாகிப் பார்க்கவழங்காமல் பலம்குன்றி இளைத்துக் காரியங்களைச்செய்யச் சக்தியில்லாமல் சிறுபெண்களுடைய கூட்டங்களாலும் வேலைக்காரர்களாலும் அவமதிக்கப்படுகிறான். ஆதலால், நான் ஜரையை விரும்பவில்லை. ராஜாவே! உமக்கு என்னிலும் அதிகப்பிரியமான புத்திரர்கள் இருக்கின்றனர். தர்மந்தெரிந்தவரே! ஆதலால், வேருெருவனை ஜரையை வாங்கிக்கொள்ள வேண்டிக்கொள்ளும்' என்றான். இப்படி யதுவினல் நிராகரிக்கப்பட்ட யயாதிமஹாராஜன், 'குழந்தாய்! எனது ஹ்ருதயத்திலிருந்து பிறந்த நீ உன்வயதை எனக்குக்கொடாமையால் உன்ஸந்ததி ராஜ்யத்தையடையாமலே போகும்' என்றுசொல்லி, துர்வஸுவை நோக்கி, 'துர்வஸுவே! புத்திரனே! ஜரையுடன்கூடத்துன்பத்தைவாங்கிக்கொள். உனது யௌவனத்தினல் போகங்களை அனுபவிப்பேன். ஆயிரம் வருஷங்கள் நிரம்பினபின் உன் யௌவனத்தைத் திருப்பிக்கொடுத்துவிட்டு ஜரையுடன் துன்பத்தை வாங்கிக்கொள்வேன்' என்றுசொன்னன். அதற்குத் துர்வஸு, 'தந்தையே! காமஸுகத்தைக் கெடுப்பதும் பலத்தையும ரூபத்தையும் அழிப்பதும் அறிவையும் உயிரையும் கெடுப்பதுமாகிய ஜரையை நான்விரும்பவில்லை' என்று சொன்னதன்மேல், யயாதி, 'துர்வஸுவே! என்ஹ்ருதயத்திலிருந்து பிறந்த நீ உன்வயதை எனக்குக் கொடாமையால் உன்ஸந்ததி நாசத்தையடையும். மூடனே! ஆசாரங்களிலும் தர்மங்களிலும் வ்யவஸ்தை தப்பினவர்களும் சாஸ்திரத்துக்கு மாருனநடையுள்ளவர்களும் மாம்ஸம் தின்பவர்களும் எல்லாவருணங்களுக்கும் தாழ்ந்தவர்களும் குருபத்னிகளிடம் சேருகிறவர்களும் திர்யக்ஜாதியின் நடையுள்ளவர்களும் மிருகத்தன்மையுள்ளவர்களும் பாபிஷ்டர்களுமாகிய மிலேச்சர்களுக்கு நீ ராஜாவாவாய்' என்று சொன்னன். அந்த யயாதி தன்புத்ரனகிய துர்வஸுவை இவ்வாறு சபித்து, சர்மிஷ்டையின் புத்ரனகிய த்ருஹ்யுவைநோக்கி, அடியில்வரும் சொல்லைச்சொன்னன்.

'த்ருஹ்யுவே! நிறத்தையும் அழகையும் கெடுக்கின்ற என் ஜரையை ஆயிரவருஷகாலம் நீ எடுத்துக்கொள்; உன்இளமையை எனக்குக்கொடு. ஆயிரவருஷமானபிறகு, யௌவனத்தைத்திருப் பிக்கொடுப்பேன். ஜரையுடன் துன்பத்தை நான் திரும்ப வாங்கிக் கொள்வேன்' என்றுசொல்ல, த்ருஹ்யுவானவன், 'ஜரையுள்ளவன் யானையையும் தேரையும் குதிரையையும் ஸ்திரீயையும் அனுபவிக்க மாட்டான். சொல்தடுமாறுதலும் அவனுக்கு உண்டாய்விடுகிறது. அந்தஜரையைநான்விரும்பவில்லை' என்றான். யயாதி, 'த்ருஹ்யுவே! என்ஹ்ருதயத்திலிருந்து பிறந்த நீ உன்வயஸை எனக்குக்கொடா மையால் நீ விரும்புகிறஇன்பம் உனக்கு எங்கும் நிறைவேறாது. குதிரைகள் கட்டின சிறந்ததேர்களும், குதிரைகளும், யானைகளும், தள்ளுகிறவண்டிகளும், கழுதைகளும், ஒட்டகங்களும், மாடுகளும், பல்லக்குக்களும் போகக்கூடாததும், எப்போதும் ஓடத்தாலேயே தாண்டவேண்டியதுமான இடத்தில் ராஜ்யமில்லாமல் உன்ஸந்ததி யோடு போஜன் என்ற பெயரைஅடைந்து இருக்கப்போகிறாய்' என்றான்.

பிறகு, யயாதி, (அனுஎன்பவனைப்பார்த்து), 'அனுவே! நீ ஆயி ரம்வருஷகாலம் ஜரையுடன் துன்பத்தை வாங்கிக்கொள்; உன்யௌ வனத்தினால் நான் போகங்களை அனுபவிப்பேன்' என்றுசொல்ல, அவன், 'கிழவன், குழந்தையைப்போல் சுத்தியில்லாமலே பசித்த போது உணவையுண்ணுகிறான்; காலத்தில் அக்நிஹோத்ரம் செய் யான். அப்படிப்பட்ட மூப்பை நான் விரும்பவில்லை' என்றுசொன் னான். யயாதி, 'என் ஹ்ருதயத்திலிருந்து பிறந்த நீ உன்வயஸைக் கொடாமையோடு மூப்புக்குக் குற்றமும் சொன்னபடியால், அந்தக் குற்றத்தை நீ அடைவாய். அனுவே! உன்னுடைய ஸந்ததிகளும் யௌவனவயஸு வந்தவுடன் இறந்துபோம். நீயும், அக்நிஹோத் ரத்தை விட்டவனாவாய்' என்றுசொன்னான்.

புதல்வர் நால்வராலும் நிராகரிப்பட்ட யயாதி, யதுமுதலிய அந்நால்வரையும் சபித்துப் பூருவைத் தன்சொல் தவறாதவனென்று நினைத்து அவனிடஞ்சென்று, 'பூருவே! நீ எனக்கு அன்பனான புதல்வன். நீ மிகச்சிறந்தவனாவாய்; குழந்தாய்! மூப்பும் மடிப்புக் களும் நரைகளும் சுக்ராசாரியர்சாபத்தினால் என்னைச்சூழ்ந்தன. யௌவனஸுகத்தில் எனக்குத் திருப்தியாகவில்லை. பூருவே! ஜரை யுடன் துன்பத்தை நீ வாங்கிக்கொள். சிலகாலம் உன்வயஸினால் போகங்களை அனுபவிக்கக்கடவேன். ஆயிரம்வருஷம்நிரம்பினதும்

உன்யௌவனத்தைத் திருப்பிக்கொடுத்துவிட்டுத் துன்பத்தை ஜரையுடன் வாங்கிக்கொள்வேன்' என்றுசொன்னான்.

இவ்வாறுசொல்லப்பட்ட பூருவானவன் மனத்தில் கபடமின்றித் தன் தந்தையைநோக்கி, 'மஹாராஜாவே! நீர்எதைச்சொல்லுகிறீரோ அதைச்செய்வேன். குருவின்வாக்கியம் மனிதர்களுக்குப்புண்ணியத்தையும் சுவர்க்கத்தையும் தீர்க்காயுஸையும் செய்யத்தக்கது. இந்திரன் குருவின் அனுக்ரகத்தினால் மூன்றுலோகங்களுக்கும் ஆதிபத்தியத்தை அடைந்தான். குருவினுடைய அங்கீகாரம் கிடைத்தால் எல்லாவிருப்பங்களையும் ஒருவன் அடைவான். நீர் எதுவரையில் விரும்புகிறீரோ, அதுவரையில் உமதுஜரையை வஹிப்பேன். ராஜாவே! ஜரையுடன் துன்பத்தையும் வாங்கிக்கொள்வேன். என்னிடமிருந்து யௌவனத்தைப்பெற்றுக்கொள்ளும்; விரும்பியஸுகங்களை அனுபவியும். நான் யௌவனத்தை உமக்குக் கொடுத்துவிட்டு, ஜரையினால்மூடப்பட்டு, உமதுவயஸையும் ரூபத்தையும் வஹித்துக்கொண்டு நீர்சொல்லுகிறபடி நடப்பேன்' என்றுசொன்னான். 'குழந்தாய்! பூருவே! உன்னிடம் ஸந்தோஷமடைந்தேன். ஸந்தோஷத்துடன் இதை (ஜரையை) உனக்குக்கொடுக்கிறேன். உனதுராஜ்யத்தில் பிரஜைகள் எல்லாமனோரதங்களும்நிரம்பியிருப்பார்கள்' என்று சிறந்த தபஸுள்ள யயாதி சுக்ரரைத்தியானித்து அப்போது மஹாத்மாவாகிய பூருவினிடம் ஜரையை மாற்றினான்.

---

## எழுபத்தோன்பதாவது அத்தியாயம்.

### ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



பிறகு, ராஜஸ்ரேஷ்டனும் நகுஷபுத்திரனுமான யயாதி, பூருவின் வயஸையடைந்து, ரூபமும்யௌவனமும் நிரம்பினகுமாரனாகி ஸந்தோஷத்துடன் தான்விரும்பினஸுகங்களை அனுபவித்தான். விருப்பத்துக்கும் உத்ஸாஹத்துக்கும் தக்கபடி அந்த அந்தக்காலங்களில் தர்மத்துக்கு விரோதமில்லாமலிருக்கும்படி அந்தராஜஸ்ரேஷ்டன் ஸுகத்தை அனுபவித்தான். யஜ்ஞங்களினால் தேவர்களையும், சிராத்தங்களினால் பிதிர்க்களையும் த்ருப்திசெய்தான். அன்புடன்கூடிய உபகாரங்களினால் ஏழைகளையும், அபீஷ்டபூர்ணம்செய்வதனால் ப்ராமணோத்தமர்களையும், அன்னங்களினாலும் பானங்களினாலும் விருந்தினர்களையும் தனரக்ஷணஞ்செய்வதனால் வைசியர்களையும், தயை

யினால் சூத்திரர்களையும், நியாயமான தண்டனையினால் திருடர்களை யும், தர்மத்தினால் எல்லாஜனங்களையும் ஸரியாக ரஞ்சனம் செய்து கொண்டு இரண்டாவது இந்திரனே நேரில்வந்ததுபோல யயாதி ராஜ்யபரிபாலனஞ்செய்தான். சிங்கம்போன்ற பராக்ரமமுள்ள அந்த ராஜா, இளமைப்பிராயத்தோடு போகங்களை அடைந்து தர்மத்துக்கு விரோதமில்லாமல் மேலானஸுகத்தை அனுபவித்தான். மனிதர்க ளைக் காப்பாற்றுகிற அவ்வரசன் இனியபோகங்களை அடைந்துஸுகி த்து ஆயிரம்வருஷம் முடியுங்காலத்தை வருத்தத்துடன்நினைத்தான்; வீரனும் காலத்தையறிந்தவனுமாகிய அந்தராஜரிஷி, யௌவனத்தை யடைந்தபின் ஆயிரம்வருஷகாலங்களை நிமிஷங்களாகவும் நொடிக ளாகவும் கணக்கிட்டு விஶ்வாசியென்னும் அப்ஸரஸுடன்கூடி நந்தன வனத்திலும் அளகாபுரியிலும் மேருவின் வடகொடுமுடியிலும் அந் தக்காலமெல்லாம் ரமித்துக்கொண்டு ஆனந்தித்தான். அப்போது அந் தத் தர்மாத்துமாவாகிய அரசன் காலத்தை ஆராய்ந்து குறித்தகாலம் பூர்த்தியானதைநினைந்து, புத்திரனாகிய பூருவைப்பார்த்துச் சொன்ன தாவது :—

'எதிரிகளையடக்குகின்றவனே! புத்திரனே! நான் உனதுயௌ வனத்தைக்கொண்டு விருப்பத்திற்கும் மனஉத்ஸாஹத்துக்கும் தக்க படி குறிப்பிட்டகாலம்வரையில் விஷயஸுகங்களை அனுபவித்தேன். விருப்பமானது விரும்பினவற்றையனுபவிப்பதினால்அடங்குவது ஒரு காலத்திலுமில்லை; நெய்விடுவதனால் அக்னிஎப்படியோ அப்படியே இன்னுமதிகமாகத்தான் விருத்தியாகிறது. இந்தப்பூமியிலுள்ளநெல், யவம்முதலான தானியங்களும், பொன்னும், பசுக்களும், பெண்களும் ஒருவனுக்கும்திருப்தியாகா; ஆதலால், ஆசையைவிடவேண்டும்.எது நல்லறிவில்லாதவர்களுக்குவிடமுடியாதோ, எது மனிதன் தளர்ச்சிய டைந்தாலும் தான் தளர்ச்சியடையாதோ, எஃதுஉயிருள்ளவரையிலு முள்ள ரோகமோ, அப்படிப்பட்டதாகிய ஆசையை விடுகிறவனுக்குத் தான் ஸுகம்; நான் காமஸுகங்களில் மனத்தைச் செலுத்தினபின் ஆயிரம்வருஷங்கள்நிறைந்தன. ஆயினும், எனக்கு இந்தஸுகங்களில் ஆசை ஒவ்வொருநாளும் புதிதாக உண்டாகிறது. ஆதலால், இதை நான்விட்டுப் பிரம்மத்தினிடம் மனத்தைவைத்து, [1]இரண்டைவிட்டு, எனதென்றபற்றையொழித்து, மிருகங்களுடன் ஸஞ்சரிக்கப்போகி றேன். பூருவே! உன்னிடம் ஸந்தோஷமடைந்திருக்கிறேன். உனக் குச் சிரேயஸ் உண்டாகக்கடவது. இந்த உனது யௌவனத்தை நீ

1 சீதோஷ்ணம்; ஸுகதுக்கம்; லாபநஷ்டம்; ஜயாபஜயம்.

வாங்கிக்கொள். இந்தராஜ்யத்தையும் நீயே பெற்றுக்கொள். நீ எது வரையில் யௌவனம்விரும்புகிறாயோ அதுவரையில் தீர்க்காயுஸுடன் அதை அனுபவிக்கக்கடவாய். நீதானே என்பிரியத்தைச்செய்த புத்திரன்' என்பது.

அப்போதே நகுஷபுத்ரனாகிய யயாதிராஜன் ஜரையையடைந்தான். சிறந்தமனமுள்ள பூருவும் திரும்பவும் தன் யௌவனத்தை அடைந்தான். கனிஷ்டபுத்ரனாகிய பூருவுக்கு ராஜ்யாபிஷேகம்செய்யக் கருதின அரசனைநோக்கி, பிராம்மணர்முதலிய நான்கு வருணத்தார்களும், 'பிரபுவே! சுக்கிராசாரியருடைய பேரனும், தேவயானியின் புத்திரனும், ஜ்யேஷ்டனுமாகிய யதுவைத்தாண்டிப் பூருவுக்கு ராஜ்யத்தை எவ்வாறு கொடுக்கிறாய்? யது, உன்னுடைய முதற்பிள்ளை; அவனுக்குப் பின்பிறந்தவன் துர்வஸு. சர்மிஷ்டையின்புத்ரன் த்ருஹ்யு; அவன்பின் அனு; பிறகு பூரு. மூத்தவர்களைத் தாண்டிக் கடைசியவன் ராஜ்யத்திற்கு எவ்வாறு உரியவன்? இதனை உனக்குத் தெரிவிக்கிறோம். நீ தர்மத்தைக்காப்பாற்று' என்றுகூறினர்.

யயாதி, 'பிராமணர்கள்முதலிய எல்லாவருணத்தாரும், ஜ்யேஷ்டனுக்கு ராஜ்யம் எவ்வகையிலும் கொடுக்கத் தகாதென்பதைப்பற்றி நான் சொல்வதைக் கேட்கக்கடவர். ஜ்யேஷ்டனாகிய யது, என் கட்டளையை அனுஸரிக்கவில்லை. பிதாவுக்கு விரோதமாக நடப்பவன் எவனோ அவனைப் புத்திரனென்று பெரியோர்கள் நினைக்கவில்லை. தாய்தந்தையர்கள் சொல்லைச்செய்பவனும், அவர்களுக்குவேண்டியவனும்,நெறிதவறாதவனும் தாய்தந்தையர்களிடம் புத்திரன்நடக்கவேண்டியபடி நடந்துகொள்பவனும்எவனோ அவன்தான் புத்திரன்.புத்தென்பது நரகத்தின்பெயர். துக்கத்தைநரகமென்றறிகின்றனர். இம்மையிலும் மறுமையிலும் அந்த நரகமென்னப்பட்ட துக்கத்திலிருந்து காப்பாற்றுவதனால் எல்லாரும் புத்திரனை விரும்புகின்றனர். பிதிர்க்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் பூஜிப்பதில் தன்னை ஒத்திருப்பவனும் அநேகருக்கு நன்மைசெய்பவனுமாகிய புத்திரன் எவனோ அவனைத்தான் ஜ்யேஷ்டபுத்திரன் என்பர். ஊமையும், குருடனும், செவிடனும்,வெண்குஷ்டமுள்ளவனும், தன்தர்மத்தைச் செய்யாதவனும், திருடனும், பாபியும் முதலிற்பிறந்ததனால் ஜ்யேஷ்டபுத்திரனென்று சொல்லப்படுவதில்லை. இவ்வுலகத்தும் அவ்வுலகத்தும் நன்மையைச்செய்கின்ற குணமுள்ள சிறந்த புத்திரன்தான் ஜ்யேஷ்டபாகம் பெற்றுக்கொள்ளத் தகுதியுள்ளவன். அவன்தான் புத்திரன். மற்றவன் புத்திரன் அல்லன்; வீணனவன். தர்மந்தெரிந்தவர்கள், பிதிர்க்க

ளுக்குப் புண்ணியம் புத்திரனாலுண்டாகிறதென்று கூறுகின்றனர். என்னுடைய ஹ்ருதயத்திலிருந்து இவன் பிறந்தவனென்று புத்திர ஜனனத்தைப்பற்றி வேதம் சொல்லுகிறது. இந்தப்பிதாவின் தேக ஸம்பந்தமானவையெல்லாம் புத்ரனுக்கும் உண்டாயிருக்கின்றன. அதனால்தானே புத்திரன்என்று சுருதிச் சொல்லுகிறது. யதுவினால் நான் அவமதிக்கப்பட்டேன். அப்படியே துர்வஸுவினாலும் த்ருஹ்யுவினாலும் அனுவினாலும் என்விஷயத்தில் மிகவும் அவமதி செய்யப்பட்டது. பூருமட்டும் என்சொல்லைச் செய்தான்; என்னை விசேஷமாகக் கௌரவித்தான். என்ஜரையை வாங்கிக்கொண்ட கடைசியவன் தான் என்சொத்தை வாங்கிக்கொள்வதற்குரிய புத்திரன். பூருதான் எனக்கு மித்திரனாகஇருந்து என்விருப்பத்தை நிறைவேற்றினான். கவிபுத்திரராகிய சுக்ராசாரியரும், 'உனக்கு ஒத்திருக்கும் புத்திரன் எவனோ அவன்தான் ராஜா; பூமிக்கு அதிபன்' என்றவரத்தைத் தாமேகொடுத்தார். புத்திரர்களுக்குள் எவன் பிதாவுக்கு இணங்கி நடப்பனோ அந்தப் புத்திரன்தான் தாயபாகத்திற்கு உரியவன். இவ்வாறு உங்களைவேண்டுகிறேன். பூருவுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்ய வேண்டும்' என்றான்.

'எந்தப்புத்திரன் குணங்கள் நிரம்பினவனும் எப்போதும் தாய்தந்தையர்களுக்கு வேண்டியவனுமாக இருக்கிறானோ அவன் எல்லாநன்மைகளுக்கும்உரியவன். சிறியவனாயிருந்தாலும் அவன் பெரியவனென்பது வேதத்திலும் தர்மசாஸ்திரங்களிலும் முன்னே ரிஷிகளால் சொல்லப்பட்டிருக்கிறது. 'உனக்குப் பிரியஞ்செய்த புத்திரனாகியபூரு இந்த ராஜ்யத்திற்குத் தகுதியுள்ளவன்' என்று சுக்கிரரும் வரம்கொடுத்திருப்பதனால் இதை மறுத்துச்சொல்ல முடியாது' என்று நகரத்துஜனங்களும் தேசத்துஜனங்களும் த்ருப்தியுடன்சொன்னபின், அப்போதே யயாதி தன்னுடையபுத்திரனாகிய பூருவுக்கு ராஜ்யாபிஷேகம் செய்வித்தான். யது, துர்வஸு, த்ருஹ்யு, அவன் தம்பியாகிய அனு ஆகிய தன்புத்திரர்களை ராஜ்யத்தின் எல்லைக்கோடிகளில் நியமித்து, பூருவுக்கு ராஜ்யத்தைக்கொடுத்து, வனவாஸத்துக்குத் தீக்ஷைசெய்துகொண்டு அந்தராஜா பிரம்மரிஷிகளுடன் நகரம் விட்டுப் புறப்பட்டான். பாரதரே! அந்தராஜா தேவயானி, சர்மிஷ்டை என்னும் பாரியைகளுடன்சேர்ந்து வனத்தில் உத்தமமான தவஞ்செய்தான். யதுவினிடமிருந்து யாதவர்கள் பிறந்தார்கள். துர்வஸுவினிடமிருந்து பிறந்தவர்கள் யவனர்கள் என்னப்படுகிறவர்கள். த்ருஹ்யுவின் புத்திரர்கள் போஜர்கள். அனுவின்புத்ரர்கள் மிலேச்ச

ஜாதியார்கள். ராஜாவே! பூருவினிடமிருந்து வந்தது பௌரவவம்சம். ஜிதேந்திரியராகிய நீர் இந்தராஜ்யத்தை ஆயிரம்வருஷகாலம் ஆளுவதற்கு அந்தவம்சத்திற் பிறந்திருக்கிறீர்.

---

## எண்பதாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(யயாதி சரித்திரத்தின் பிற்பகுதி.)

இவ்வாறு நகுஷபுத்திரனாகிய அந்த யயாதிமஹாராஜன், தன் பிரியமானபுத்திரனை ராஜ்யத்தில் அபிஷேகஞ்செய்வித்துத் திருப்தியடைந்தவனாக வானப்பிரஸ்தாஶ்ரமம் எடுத்துக்கொண்டு ரிஷியானான். கடுந்தவமுள்ளவனாகக் காய்களையும் கிழங்குகளையும் புஜித்துக்கொண்டு புலன்களையடக்கிப் பிராமணர்களுடன் வனத்தில் வாஸஞ்செய்து, அதன்பிறகு இவ்வுலகத்தைவிட்டுச் சுவர்க்கம்போனான். பிறகு, ஸந்தோஷமாகவும் ஸுகமாகவும் ஸ்வர்க்கவாஸத்தை அனுபவிக்கையில் அவன் மிகநீண்டகாலமாகாமலிருக்கையிலேயே மறுபடியும் இந்திரனால் தள்ளப்பட்டான். ஸாதுக்களுடன் சேர்க்கை கிடைத்தபின் மறுபடியும் ஸ்வர்க்கமடைந்தான்" என்று வைசம்பாயனர்சொல்ல, ஜனமேஜயர் அவரைப்பார்த்து, "பிராமணரே! ஸ்வர்க்கம்போய்த் தேவர்களுடைய கிருகத்தில் வஸித்திருந்தும் அதிகநீண்டகாலம் ஆவதற்குமுன்னமே இந்திரனால் எவ்வாறு தள்ளப்பட்டான்? ஸ்வர்க்கத்தைவிட்டு நழுவிவிழும்போது பூமியினிடம்சேராமல் ஆகாயத்தில் அவன் அப்போது நின்றுகொண்டிருந்தானென்றும் வஸுமான், அஷ்டகன், பிரதர்த்தனன், சிபியென்ற அரசர்களை ஸபையில் ஸந்தித்து அந்த ஆகாசத்திலிருந்தே அந்தவீரன் மறுபடியும் ஸ்வர்க்கம்சென்றானென்றும் நான் கேட்டிருக்கிறேன். அந்தஅரசன் எந்த நற்கருமத்தினால் திரும்பவும் ஸ்வர்க்கமடைந்தான்? பிராமணரே! இவற்றையெல்லாம் முற்றும் நடந்தபடி இந்தப் பிரம்மரிஷிகளின் கூட்டத்தின் முன்னிலையில் நீர்சொல்லக் கேட்கவிரும்புகிறேன். குருவம்சத்தை விருத்திசெய்பவனும் அக்கினிக்கொப்பான தேஜஸுள்ளவனுமாகிய யயாதியென்னும் அரசன் இந்திரனுக்கு ஒப்பாகவல்லவோ இருந்தான்! விசாலமான புகழ்பெற்றவனும் உண்மையான புகழுள்ளவனுமாகிய அம்மஹாத்மாவினுடைய இங்கும் ஸ்வர்க்கத்திலும் நடந்ததாயுள்ள சரித்திரமுழு

மையையும் நான் கேட்கவிரும்புகிறேன்'' என்றுசொல்ல, வைசம்பாய னர் சொல்லத்தொடங்கினர்.

"ஆ!! ஆ!! நன்று; புண்யமான விஷயமடங்கியதும் எல்லாப் பாவங்களையும் ஒழிப்பதுமாகிய, ஸ்வர்க்கலோகத்திலும் இவ்வுலகத்தி லும் நடந்ததாகிய யயாதியின் பிற்பட்டகதையை உமக்குச்சொல்லு வேன். நகுஷபுத்திரனாகிய யயாதிராஜா கடைசிப்புத்திரனாகிய பூருவு க்கு ராஜ்யத்தில் அபிஷேகஞ்செய்வித்து மகிழ்ச்சியோடுவனஞ்சென் ருன். அப்போது அவ்வரசன் யதுமுதலானபுத்திரர்களைத் தேசங்க ளின்கோடிகளில் நியமித்துவிட்டு வனத்தில் காய்கிழங்குகளைப் புஜித் துக்கொண்டு, நீண்டகாலம் வஸித்தான். பரிசுத்தமான மனஸோடு கோபத்தை யடக்கி, பிதிர்க்களையும் தேவர்களையும் த்ருப்தியடையச் செய்துகொண்டு, வானப்பிரஸ்தர்களின் ஆசாரத்தையனுஸரித்துச் சாஸ்திரப்படி அக்னிஹோத்திரஞ்செய்துகொண்டு, அந்தப்பிரபு சித றின தானியங்களையும் நொய்களையும் ஜீவனமாகஎடுத்துக்கொண்டு, காட்டிலுள்ள அன்னத்தினல் அதிதிகளைத் திருப்திசெய்வித்து, சேஷமாகிய அன்னத்தினல் தான் ஆகாரஞ்செய்துகொண்டிருந்தான். ஆயிரம்வருஷகாலம் பூர்ணமாக அந்த அரசன் இவ்விதமானஆகாரத் தோடிருந்தான். முப்பதுவருஷகாலம் ஜலத்தைமாத்திரம் உணவாகக் கொண்டு வாக்கையும் மனத்தையும் கட்டியிருந்தான். அதன்பின், ஒரு வருஷகாலம் வாயுபக்ஷணஞ்செய்துகொண்டு சோராமலிருந் தான். அவ்வாறே [1] ஐந்து அக்னிகளின் மத்தியில் ஒருவருஷம் அவன் தவஞ்செய்தான். ஆறுமாதகாலம் காற்றையே பக்ஷித்துக் கொண்டு, ஒற்றைக்காலால் நின்றுகொண்டிருந்தான். பரிசுத்தமான கீர்த்திபெற்ற அவன் ஆகாசம் பூமிஇரண்டையும், (கீர்த்தியினல்) வியாபித்துச் சுவர்க்கஞ்சென்ருன்.

---

## எண்பத்தோராவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



ஸ்வர்க்கம்போய்த் தேவர்களாலும் ஸாத்தியர்களாலும் ஸப்த மருத்துக்களாலும் அஷ்டவஸுக்களாலும் பூஜிக்கப்பட்டு, தேவர்க ளுடைய க்ருஹங்களில் வாஸஞ்செய்துகொண்டிருந்த புண்ணியஞ் செய்தவனும் இந்திரியங்களைஜயித்தவனுமாகிய அந்தஅரசர்களுக்கும்

1 நாலுபக்கமும் நாலுஅக்னிகளும் மேலேசூரியனும்.

அரசனையயாதியென்னும்ராஜா தேவலோகத்திற்கும்பிரம்மலோகத்திற்கும் போய்வந்துகொண்டு நெடுங்காலமிருந்தானென்று கேள்வி. அந்த ராஜஸ்ரேஷ்டனாகிய யயாதி ஒருகாலத்தில் இந்திரனிடம் போனான். அங்கே பேச்சுக்களின்முடிவில், இந்திரன், அவ்வரசனைப் பார்த்து, 'எப்போது பூரு உன் ரூபத்தையும் ஜரையையும் வாங்கிக்கொண்டு பூமியில் ஸஞ்சரித்தானோ அப்போது ராஜ்யத்தைக்கொடுத்து அவனுக்கு நீ என்னசொன்னாய்? இதில் உண்மையைச்சொல்' என்று கேட்டான்.

அதற்கு யயாதி, 'கங்கைக்கும் யமுனைக்கும் நடுவிலுள்ள தேசமுழுதும் உன்னுடையது. பூமியின்மத்திக்கு நீராஜா; கோடிகளுக்கு உன்ஸஹோதரர்கள் அதிபர்கள். மனிதன்ஏழைமைத்தனத்தையும் மோசஞ்செய்வதையும் கோபிப்பதையும் கபடத்தையும் பொறாமையையும் த்வேஷத்தையும் செய்யலாகாது. எங்கும் இவற்றைச் செய்வித்தலுமாகாது. ராஜஸ்ரேஷ்டனே! புத்தியுள்ளவர்கள் மாதாவையும் பிதாவையும் ஜ்யேஷ்டனையும் வித்துவானையும் ரிஷியையும் பொறுத்தவனையும் அவமதித்தலாகாது. சக்தியுள்ளவன்எப்போதும் பொறுப்பான், சக்தியில்லாதமனிதன் கோபிப்பான். துஷ்டன் ஸாதுவையும், பலமில்லாதவன் மிகுந்த பலமுள்ளவனையும், ரூபமில்லாதவன் ரூபமுள்ளவனையும், தனமில்லாதவன் தனமுள்ளவனையும், கருமம்விட்டவன்கருமஞ்செய்பவனையும், அதர்மிஷ்டன்தர்மிஷ்டனையும், குணமில்லாதவன் குணமுள்ளவனையும் பகைப்பார்கள். புத்திரனே! இது கலியுகத்தின் லக்ஷணம். ராஜேந்திரனே! இவற்றிற்கு எதிர்மறையானவை க்ருதயுகத்தின்லக்ஷணங்கள். பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் யாராகட்டும் நல்லவிஷயங்களிற் பிரவிர்த்தித்தால் கீர்த்திபெற்றவர்களாகப் புகழப்படுகின்றனர். ஆதலால், ராஜேந்திரனே! மனிதன்சிலாக்கியமானகாரியத்தில்மனம்வைத்தவனாக இருக்கவேண்டும். உன்ஸஹோதரர்கள் உலகமறியாதவர்கள்; புகழப்படாதவர்கள்; மதிகெட்டவர்கள்; பிதாவின்சாபத்தினால் எல்லாரும் தேசத்தின்கோடிகளுக்கு அதிபராயிருந்தனர் என்றுசொன்னேன்' என்றான். இந்திரன், 'ராஜாவே! நீ தர்மமறிந்தவனாயிருக்கிறாய். மேலானதர்மத்தை ஸ்துதிக்கிறாய். மறுபடியும் உலகத்திலுள்ளமேலான விருத்தாந்தத்தை எனக்குச்சொல்' என்றுகேட்க, யயாதி சொல்லத்தொடங்கினான்.

'கோபிக்கிறவனிலும் கோபியாதவன் சிறந்தவன்; பொறுமையில்லாதவனிலும் பொறுமையுள்ளவன் சிறந்தவன்; மனிதரல்

லாதவற்றைப் பார்க்கிலும் மனிதர் சிறந்தவர்; அவித்துவானிலும் வித்துவான் சிறந்தவன். ஒருவன் திட்டப்பட்டாலும் அதற்குப் பிரதியாகத் திட்டக்கூடாது. பொறுக்கிறவனுடைய வருத்தமே திட்டுகிறவனை எரித்துவிடும். திட்டுகிறவனுடைய புண்ணியத்தையும் திட்டப்படுகிறவன் அடைவான். யாருக்கும் புண்ணைக் குத்துகிறது போன்ற மிக்கதுன்பத்தைச் செய்கிறவனாகவும் ஹிம்ஸையான சொல்லைச் சொல்லுகிறவனாகவுமிருத்தல் தகாது. குறைந்தவனிடமிருந்து அதிகத்தை வாங்கத்தகாது. இவனுடைய எந்தச்சொல்லினால் அயலான் துன்பம் அடைவனோ அந்தஅமங்களமும் பாபலோகத்துக்கு ஹேதுவுமாகிய சொல்லைச் சொல்லலாகாது. புண்ணைக் குத்துகிறது போன்ற மிக்கதுன்பத்தைச்செய்கிறவனும்கொடியவனும்கடுஞ்சொல்லுடையவனும் முள்ளைப்போன்ற சொற்களினால் மனிதர்களைக்குத்துகிறவனும் ஜனங்களுக்குள் மிகுந்த அமங்களமுள்ளவனென்றும் வாயில் நிருதியென்னும் துஷ்டதேவதையை வஹிக்கின்றவனென்றும் அறியத்தக்கவன். யோக்கியமான நடையுள்ளவன் யோக்கியர்களை அனுஸரித்து நடக்கவேண்டும். முன்னும் ஸாதுக்களினால் பூஜித்தழைக்கப்படவேண்டும். [1]பின்னும்ஸாதுக்களினால் காப்பாற்றப்படவேண்டும். அயோக்கியர்களுடைய வரைகடந்தபேச்சுக்களைஎப்போதும் பொறுத்தல்வேண்டும். தானும் நல்ல நடையையுடையவனாகஇருந்து ஸாதுக்களுடைய நடையையும் கிரஹித்துக் கொள்ளவேண்டும். சொற்களென்னும் அம்புகள் வாயினின்றும் புறப்படுகின்றன. அவற்றால் அடிக்கப்பட்டவன் இரவும்பகலும் அழுகிறான். அவை பிறருடைய மர்மஸ்தானங்களில்தான் விழுகின்றன. தெரிந்தவன் அவற்றைப் பிறரிடம் பிரயோகிக்கமாட்டன். பிராணிகளிடத்துக் கருணையும் நேசமும் கொடையும் இன்சொல்லும்போலவசப்படுத்தும்வகை மூன்றுலோகங்களிலும் வேறில்லை. ஆதலால், இனியசொல்லே சொல்லத்தக்கது. கடுஞ்சொல் எங்கும் சொல்லத்தகாதது. பூஜைக்குரியவர்களைச் செம்மையாகப் பூஜிக்கவேண்டும்; கொடுக்கவேண்டும்; ஒருகாலும் யாசிக்கக்கூடாது' என்றான்.

---

1 யோக்கியர்களால் திருத்தப்படவேண்டும்.

## எண்பத்திரண்டாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



இந்திரன், 'ராஜாவே! எல்லாக்கர்மங்களையும் பூர்த்திசெய்து இல்லறத்தைவிட்டுவனஞ்சென்றாய்;ஓ! நகுஷபுத்திரனே! யயாதியே! அதனால், உன்னைக்கேட்கிறேன், தவத்தில் நீ யாருக்கு ஒப்பானவன்?' என்றுகேட்க, யயாதி, 'இந்திரனே! தேவர்களிலும் மனிதர்களிலும் கந்தர்வர்களிலும் ரிஷிகளிலும் தவத்தில் எனக்கு ஒப்பானவன் ஒருவனையும் நான்காணவில்லை' என்று மறுமொழி சொன்னான். 'ராஜாவே! ஸமானமானவர்களையும் மேலானவர்களையும் தாழ்வானவர்களையும் அவர்களின் மஹிமையையறியாமலே நீ அவமதித்தாயாதலின் உனக்கு இந்தலோகங்கள் முடிவுள்ளவையாம். புண்ணியம் அழிந்து இப்போதே விழுவாய்' என்று இந்திரன் சொன்னான்.

யயாதி, 'இந்திரனே! தேவர்களையும் ரிஷிகளையும் கந்தர்வர்களையும் மனிதர்களையும் அவமதித்ததினால் எனக்கு லோகங்கள் அழிந்தனவாயின், தேவராஜாவே! நான் தேவலோகத்தைவிட்டு விழும்போது, ஸாதுக்களின்நடுவே விழுவதற்குவிரும்புகிறேன்' என்றான். 'ராஜாவே! ஸாதுக்களின் சமீபத்திலேயே விழுவாய்; அங்குவிழுந்தால் திரும்பவும் இந்த ஸ்தானத்தையடைவாய். யயாதியே! இதை அறிந்துகொண்டு இனிஸமானர்களையும் மேலானவர்களையும் தாழ்ந்தவர்களையும் நீ அவமதியாதே' என்று இந்திரன் சொன்னான்.

பிறகு, தேவராஜாவினால் ஆளப்பட்ட புண்ணியலோகங்களைவிட்டு விழுகின்ற யயாதியைப்பார்த்து, ராஜரிஷிகளுக்குட்சிறந்தவனும் ஸாதுக்களுடைய தர்மானுஷ்டானத்தைக் காப்பவனுமாகிய அஷ்டகனென்பவன் சொன்னதாவது:—

'இந்திரனுக்கொப்பான ரூபமுள்ளவனும் தன் ஒளியினால் அக்னியைப்போல் பிரகாசிப்பவனும் யுவாவுமாகஇருக்கிற நீ, இருள்போல் எழும்புகின்ற மேகங்களோடுகூடிய ஆகாயத்தினின்றும், கிரகங்களுக்குட் சிறந்தவனாகிய சூரியனைப்போல விழுகிறாய்; நீ யார்? அக்கினிக்கும் சூரியனுக்கும் ஒப்பான ஒளியுள்ளவனும் அளவிடக்கூடாதவனுமாகிய நீ சூரியனுடைய மார்க்கத்திலிருந்து விழுவதைக்கண்டு, இஃது என்னவிழுகின்றதென்று ஊகித்துக்கொண்டு எல்லாரும் பிரமித்துப்போயிருக்கிறோம். தேவர்களின் மார்க்கத்தில் நிற்பவனும் இந்திரனுக்கும் சூரியனுக்கும் விஷ்ணுவுக்கும்

ஓப்பானமஹிமையுள்ளவனுமான உன்னைக்கண்டு நாங்களெல்லாரும் இப்போது நீவிழுவதற்குரிய காரணத்தை அறியவிரும்பி உன்னை எதிர்கொண்டழைக்கிறோம். உன்னை முதலிற்கேட்கவும் நாங்கள் தைரியப்படவில்லை. நீயும் நாங்கள் யாரென்பதைப்பற்றி எங்களை விசாரிக்கவில்லை. ஆயினும், உன்னைக்கேட்கிறேன். ஆசைப்படத் தக்க ரூபமுள்ளவனே! நீ யாரைச்சேர்ந்தவன்? என்னகாரணத்தினால் இங்குவந்தாய்? இந்திரனுக்கொப்பான பிரபாவமுள்ளவனே! உனதுபயம் நீங்கட்டும். தூக்கத்தையும் மயக்கத்தையும் சீக்கிரம் விட்டுவிடு. ஸாதுக்களிடமிருக்கின்ற உன்னைப் பலாத்காரஞ்செய்வதற்கு,பலாஸுரனைக்கொன்ற இந்திரனும் ஸமர்த்தனல்லன். தேவேந்திரனுக்கொப்பானவனே! ஸுகத்திலிருந்து தவறினஸாதுக்களுக்கு எப்போதும் ஸாதுக்கள்தாமே ஆதாரம். ஸ்தாவரங்களுக்கும் ஜங்கமங்களுக்கும் பிரபுக்களாகிய அந்த ஸாதுக்கள் சேர்ந்திருக்கின்றனர். நீ உன்னைப்போன்ற ஸாதுக்களிடம் நிலைபெற்றிருக்கிறாய். தஹிப்பதில் அக்னி [1]பிரபு; விதைவிதைப்பதில் பூமி பிரபு; பிரகாசம் உண்டு பண்ணுவதில் சூரியன் பிரபு; ஸாதுக்களுக்குத் தம்மிடம் தேடிவந்தவனை அதிதி பிரபு' என்பது.

---

## எண்பத்துமூன்றாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



யயாதி, 'நான், நகுஷனுடைய புத்திரனும், பூருவின் பிதாவுமாகிய யயாதி'என்பவன் எல்லாப்பிராணிகளையும் அவமதித்ததனால் தேவர்களும் ஸித்தர்களும் ரிஷிகளுமிருக்கும் லோகத்தைவிட்டு விலக்கப்பட்டுப் புண்ணியம்குறைந்து நழுவிவிழுகிறேன். நான் உங்களிலும் வயஸில் மூத்தவனாதலால் உங்களுக்கு நான் அபிவாதனம் செய்யவில்லை. வித்தையினாலாவது தவத்தினாலாவது ஜன்மத்தினாலாவது எவன்பெரியவனோ அவன்தான் [2] த்விஜர்களில் பூஜ்யனாகிறான்' என்றான். அஷ்டகன், 'ராஜாவே! நீ இவ்வாறுசொன்னாய்; ஆகிலும், எவன் வயஸுமிகுந்தவனோ அவன் பெரியவனாகச் சொல்லப்படுகிறதில்லை. த்விஜர்களுக்குள் எவன் வித்தையினாலும் தவத்தினாலும் மேற்பட்டவனோ அவன்தான் பூஜ்யனாகிறான்' என்றான்.

---

1 ஸமர்த்தன்.

2 இருபிறப்பாளர்; அவர், பிராமணரும் க்ஷத்திரியரும் வைசியருமாவர்.

யயாதி, 'நல்லகர்மங்களுக்குப் பாவம் விரோதியென்று சொல்லுகின்றனர். இழிவானலோகத்திற்குக் காரணமாகிய அந்தப்பாபம் பணிவில்லாதவனிடமிருக்கின்றது. அயோக்கியர்களுடைய இந்தப்பாபத்தை ஸாதுக்கள் ஒத்துக்கொள்வதில்லை. ஸாதுக்கள் எப்படி இந்த நல்லகருமங்களுக்கு ஸாதகர்களாகலாமோ அப்படிநடந்தனர். 'எனக்கு மிகுந்த தனமிருந்தது ; அதுபோய்விட்டது; நான் முயற்சிசெய்தும் அதை அடைவதில்லை' என்று தெரிந்துகொண்டு ஆத்மாவினுடைய ஹிதத்திலேயே ஊக்கத்துடனிருப்பவன் எவனோ அந்தப் புத்திசாலிதான் தெரிந்தவன். மிகுந்த தனமுள்ள எவன் நல்ல யஜ்ஞங்களைச் செய்கிறவனாகவும் எல்லாக்கல்விகளிலும் தேர்ச்சியடைந்தவனாகவுமிருக்கிறானோ, புத்திமானாகிய அந்தப்புருஷன் வேதங்களை ஓதித் தேகத்தைத் தவத்துடன்கூட்டி அஜ்ஞானம்நீங்கிச் சுவர்க்கத்திற்குச் செல்வன். பெரிய செல்வத்தினால் ஒருபோதும் ஸந்தோஷமடையக்கூடாது. வேதங்களை ஓதவேண்டும். அஹங்காரத்தை விடவேண்டும். இவ்வுலகத்தில் வெவ்வேறு தன்மையுள்ள அனேகர்கள், தெய்வத்துக்குட்பட்டவராகச் செய்கையும் ஸாமர்த்தியமும் அழிந்து போயிருக்கின்றனர். தைரியமுள்ளவன் தன்புத்தியினால் தெய்வம் அதிகபலமுள்ளதென்று நினைத்திருப்பதனால் அவன் ஸுகதுக்கங்கள் வரும்போது அவற்றினால்[1] கெடுக்கப்படான். விதிவசமாக நேர்ந்த இன்பத்தையும் துன்பத்தையும் அனுபவிக்கிறான். தன் சக்தியினால் ஆவதொன்றுமில்லை. அதனால்தெய்வம்பெரிதென்றுநினைப்பவன் எவ்வகையிலும் வ்யஸனமும் ஸந்தோஷமும்படான். ஞானமுள்ளவன் துக்ககாரணங்களினால் துக்கப்படலாகாது; ஸுககாரணங்களினால் ஸந்தோஷப்படவுங்கூடாது. எந்தக்காலத்திலும் ஒரேவிதமாக இருத்தல்வேண்டும். விதி அதிகவன்மையுள்ளதென்று நினைத்து எவ்வகையாலும் வ்யஸனத்தையும் ஸந்தோஷத்தையும் அடையத்தகாது. அஷ்டகனே! பிரம்மா, என்னை உலகத்தில் எவ்விதமாக ஸ்ருஷ்டித்திருக்கிறாரோ, அவ்விதமாகவே நான்நிச்சயமாகஇருக்கவேண்டியவன் என்றுநினைத்து அதனால் நான் பயம்நேரும்போது ஒருபொழுதும் கலங்குவதில்லை. என்மனத்தில் வ்யஸனம் சிறிதும் இல்லை. [2]ஸ்வேதஜங்களும், அண்டஜங்களும், உத்பிஜ்ஜங்களும், ஸர்ப்பங்களும், புழுக்களும், ஜலத்திலுள்ள மீன்களும், கற்களும், புற்களும், கட்டைகளுமாகிய யாவும் தம்தம்விதி முடிந்தபின் அவற்

1 கர்வத்தையும் சோர்வையும் அடையான்.

2 57-ஆம்பக்கத்தில் இந்த அடையாளமுள்ள குறிப்பைப் பார்க்க.

தின் [1] இயற்கையை அடைகின்றன. அஷ்டகனே! ஸுகமும் துக்கமும் நிலையற்றவையென்பதையறிந்தபின் நான் எதனால் துன்பமடைவேன்? என்னசெய்வேன்? எதைச்செய்துதான் துன்பப்படாமலிருப்பேன்? ஆதலால், விவேகத்தைக்கொண்டு துக்கத்தை விலக்குகிறேன்' என்றுசொன்னான்.

பிறகு, அஷ்டகன், தனக்குமாதாமஹனும் குணங்களெல்லாம் நிரம்பினவனுமான யயாதிமஹாராஜா ஸ்வர்க்கத்திலிருப்பதுபோலவே ஆகாசத்திலிருந்து இவ்வாறு பேசும்போது திரும்பவும் அவனைக் கேட்கலானான்.

'ராஜஸ்ரேஷ்டனே! எந்தஎந்தச் சிறந்தலோகங்களை எவ்வளவு காலம் எவ்வாறு நீ அனுபவித்தாய்? ராஜாவே! அவற்றையெல்லாம் தெளிவாகச்சொல். தத்துவஞானியைப்போல் நீ தர்மங்களைச் சொல்லுகிறாய்' என்றுகேட்க, யயாதி சொன்னதாவது:—'நான் இந்தப் பூமியில் சக்கரவர்த்தியான ராஜாவாக இருந்தேன். அதன்பின், சிறந்தலோகங்களையும் வசப்படுத்தினேன். அவற்றில் ஆயிரவருஷகாலம் வஸித்தேன். அங்கிருந்து வேறுலோகத்திற்குச் சென்றேன். அங்கே ஆயிரம் வாயில்களுள்ளதும் நூறுயோசனைதூரம் நீண்டதுமாகிய அழகான இந்திரனுடைய நகரத்தில் ஆயிரவருஷகாலம் வஸித்தேன். அங்கிருந்து வேறுலோகம் போனேன். அப்போது மேலானதும் அழிவில்லாததும் யாருக்கும் கிடைக்காததுமாகிய லோகநாதரான பிரம்மாவினுடையலோகத்தையடைந்து அதில்ஆயிரம்வருஷம்வரையில் வஸித்தேன். அங்கிருந்தே வேறுலோகம்போனேன். அப்போது நான் நினைத்தபடி அனேகலோகங்களில் ஸஞ்சரித்துக்கொண்டு எல்லாத்தேவர்களாலும் பூஜிக்கப்பட்டுத் தேவஸ்ரேஷ்டர்களுக்கொப்பான மஹிமையையும் ஒளியையும் அடைந்து தேவர்களுக்கும் தேவரான பிரம்மாவின் கிருகத்தில் வஸித்தேன். அப்ஸரஸுகளுடன் கூடிவிளையாடிக்கொண்டும் அழகானமணமும் ரூபமுமுள்ளபுஷ்பித்த மரங்களைப் பார்த்துக்கொண்டும் பத்துலக்ஷவருஷகாலம்நந்தனவனத்தில் வஸித்தேன். அதன்பின், வெகுகாலம் கடந்தபிறகு, அந்தநந்தனவனத்திலிருந்துகொண்டு தேவர்களுடைய ஸுகங்களில் அதிகமாகப் பற்றுள்ளவனாக இருந்த என்னைப்பார்த்து உக்கிரமானரூபமுள்ள தேவதூதனொருவன் மூன்றுமாத்திரைகளுள்ள ஸ்வரத்துடன் உரத்தகுரலாக, 'அழிந்துபோ' என்று மூன்றுமுறை சொன்னான், ராஜஸிம்மமே! இவ்வளவுதான் எனக்குத் தெரியும். உடனே,

---

1 அந்தஜன்மத்தின் முடிவு.

யமழிந்து நந்தனவனத்திலிருந்து நான் தவறிவிழும்போது, 'ஐயோ! கஷ்டம்!! புண்ணியஞ்செய்து நல்ல புகழ்பெற்ற யயாதி, புண்ணியம் அழிந்து இதோவிழுகிறான்!' என்று ஆகாயத்தில் என்னைப்பற்றித் தயையுடன் துக்கப்படுகின்றதேவர்கள் சொன்ன சொற்களைக் கேட்டேன். பிறகு, விழுகின்றநான் அவர்களைநோக்கி, 'நான் எப்படி ஸாதுக்களின்மத்தியில் விழுவேன்?' என்றுகேட்க, அவர்களால் நீங்கள் யாகஞ்செய்யுமிடம் தெரிவிக்கப்பட்டது. இதைப் பார்த்து யாகபூமியின் இடத்துக்குரிய ஹோமத்ரவ்யத்தின் வாஸனை புகையினால் கொண்டுவரப்பட்டதை மோந்துகொண்டு ஸந்தோஷத்துடன் வேகமாகவந்தேன்' என்றான்.

---

## எண்பத்துநான்காவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(ஸ்வர்க்கஞ்சென்றவன் புண்ணியம் அழிந்தபின் மறுபடியும் ஜனிப்பதைப்பற்றி அஷ்டகனுக்கு யயாதிசொல்வது.)

அஷ்டகன், 'கிருதயுகத்து ராஜாக்களில் முக்கியமானவனே! நினைத்தபடி ரூபமெடுப்பவனாகப் பத்துலக்ஷவருஷகாலம் நந்தனவனத்தில் வஸித்தவன் அதைவிட்டுப் பூமிக்கு வந்ததற்கு என்னகாரணம்?' என்றுகேட்க, யயாதி, 'இந்தலோகத்தில் பணமில்லாதவன் பந்துவாயிருந்தாலும் ஸ்நேஹிதனாயிருந்தாலும் தன்மனிதனாகவேயிருந்தாலும் அவனை மனிதர்கள் எப்படி விட்டுவிடுகிறார்களோ, அப்படியே அந்தலோகத்தில் புண்ணியமழிந்த மனுஷ்யனை இந்திராதிதேவர்களனைவரும் உடனே விட்டுவிடுகிறார்கள்' என்றுசொன்னான்.

அஷ்டகன், 'அந்தலோகத்தில் புண்ணியம் அழிந்தவர்களாக ஆவது [1]எப்படிஎன்றவிஷயத்தில் என்மனம் மிகவும் மயங்குகிறது. என்ன சிறப்புள்ளவர்கள் யாருடைய லோகத்துக்குப் போவார்கள்? அவற்றையெல்லாம் சொல்; உன்னைத் தத்துவந்தெரிந்தவனாக நான் நினைக்கிறேன்' என்றுகேட்டனன். யயாதி, 'ராஜாவே! அவர்களெல்லாரும் அழுதுகொண்டு இந்தப்பூமியிலுள்ளநரகத்தில் விழுகின்றனர். புண்ணியம்போனபிறகு அவர்கள் கழுகுகள், நரிகள் இவற்றின் கூட்டங்களுக்கு உணவாக ஆகும்படி பல ஜன்மங்களெடுக்கின்றனர். ராஜாவே! ஆதலால், உலகத்தில் கெட்டதும் இகழத்தக்கது

---

1 புண்ணியலோகத்தில் புண்ணியம் கெடாதென்பது கேள்வியின்கருத்து.

மாகிய கருமத்தைவிடவேண்டும். ராஜாவே! உனக்கு நான் [1]எல்லாம் சொல்லியிருக்கிறேன். மறுபடியும் உனக்கு இப்போது என்னசொல்லக்கடவேன்? சொல்' என்றுசொன்னான்.

அஷ்டகன், 'அந்தப் பிராணிகளைக் கழுகுகளும் மயில்களும் மற்றப்பக்ஷிகளும் துண்டித்து விடுகின்றனவே, பிறகு, அவை எவ்வாறு உண்டாகின்றன?எவ்வாறு வளர்கின்றன? பூமியிலுள்ள நரகமென்று நான் வேறு கேள்விப்படவில்லை' என்று கேட்க, யயாதி, 'தேகம் போனபிறகு கருமம் விருத்தியடைவதினால், ஸ்தூலசரீரமடைந்து பிராணிகள் பூமியில் ஸஞ்சரிக்கின்றன. அவைதாம் இந்தப்பூமியிலுள்ள நரகத்தில் விழுகின்றவை. அவை அநேகவருஷங்கள் கடந்துபோவதை அறியாமலிருக்கின்றன. அறுபதினாயிரம் வருஷங்களும் எண்பதினாயிரம் வருஷங்களும் ஸ்வர்க்கத்தில் வஸித்துஆகாயத்தில் பறக்கின்றன. அவைகள் பூமியில்விழும்போது பூமியிலுள்ள பயங்கரமான [2]ராக்ஷஸர்கள் கூர்மையான பற்களைக்கொண்டு அவற்றைக் கடிக்கின்றனர்' என்றுசொன்னான்.

அஷ்டகன், 'பாபத்தினால்விழுகின்ற அவைகளைப் பூமியிலுள்ள பயங்கரமான ராக்ஷஸர்கள் கூரியபற்களினால்கடிக்கின்றனரே, அவைகள் மறுபடி எவ்வாறு பிறக்கின்றன? எவ்வாறு வளர்கின்றன? எவ்விதமாகக் கர்ப்பத்திலுண்டாகின்றன?' என்றுகேட்க, யயாதி, 'புஷ்பங்களையும் பலங்களையும் புஜிப்பதனாலுண்டான ரக்தமானது புருஷவீரியமாகமாறுகிறது. அதுபுருஷனால்விடப்பட்டு ஸ்திரீயின்சோணிதத்தைச் சேருகின்றது. அஃது அவ்விடத்தில் கர்ப்பமாகப் பரிணமிக்கிறது. ஜீவன்கள் ஆகாயத்தையும் [3]வாயுவையும் ஜலத்தையும் பூமியையும் மரங்களையும் பூண்டுகளையும் அடைந்தபிறகு நான்குகால்களுள்ளவைகளும்இரண்டு கால்களுள்ளவைகளுமானபிராணிகளெல்லாவற்றையுமடைந்துகர்ப்பங்களில்சேருகின்றன' என்றுசொன்னான்.

'இவ்வுலகத்தில் இந்த மானிடயோனிக்குப் போகிற ஜீவன், வேறுசரீரத்தை எடுத்துக்கொண்டு கர்ப்பத்தில் சேருகிறானா? அல்

---

1 கருமம் அநித்யமாதலின் புண்ணியம் அழியத்தக்கது. புண்ணியமழிந்தால் விழுவதும் மறுபடியும் பிறப்பதும் விடமுடியாதவை; ஆதலால், கருமத்தைவிட்டு மோக்ஷத்திற்குக் காரணமான ஞானத்தையே பெறவேண்டும் என்பது கருத்து.

2 பிணி பசிமுதலியவையும் காமக்குரோதம்முதலியவையும் ராக்ஷஸர்கள் என்னப்பட்டன. 'பிள்ளை மலைவிமுதலியவை' என்பது பழையவுரை.

3 இங்கே வாயுவின்பின் தேஜஸைச் சேர்த்துக்கொள்வது வேதத்திற்கொத்தது.

லது, தன்ஸ்வரூபத்தோடு மாத்திரம் போகிறானா? ஸம்சயத்தினால் கேட்கிறேன்; எனக்குச்சொல். சரீரத்தின் பருமனையும் உயரத்தையும் கண் காதுகளையும் புத்தியையும் எதனாலே அடைகிறான்? இதன் உண்மையைக் கேட்கிறேன்; முழுதும் சொல்லு; ஐயா! நாங்களெல்லாரும் உன்னை ஞானியென்று நினைக்கிறோம்' என்று அஷ்டகன் கேட்க, யயாதி, '[1]பூக்களிலிருந்தும் காய்களிலிருந்தும் வந்த வீரியத்தை ஸ்திரீயின் ருதுகாலத்தில் கர்ப்பவாயு, கர்ப்பாசயத்தில் கொண்டுவந்து விடுகிறது. அந்தக்கர்ப்பத்தில் அந்தவாயு அந்தவீரியத்தின் ஸூக்ஷ்மஅவயவங்களில் பிரவேசித்து நாளடைவில் கர்ப்பத்தை விருத்தியாகச்செய்கிறது. அவயவங்கள் பிரிக்கப்பட்டு விருத்தியடைகிற கர்ப்பம் புத்தியையடைந்து மனுஷ்யனாகி இவ்வுலகத்தில் காதினால் சப்தத்தைக் கேட்கின்றது; கண்ணினால் ரூபத்தைப் பார்க்கின்றது;மூக்கினால் மணத்தையும் நாவினால் ரஸத்தையும் த்வக்கினால் ஸ்பரிசத்தையும் மனத்தினால் அபிப்பிராயத்தையும் நுகருகின்றது. அஷ்டகா! மஹாத்மாவான ஆத்மாவுக்குச் சரீரத்தில் இந்திரியங்கள் இவ்வாறு ஸம்பந்தப்பட்டனவென்று அறி' என்று சொன்னான்.

அஷ்டகன், 'இறந்துபோன மனிதன் கொளுத்தவாவது புதைக்கவாவது இழுத்துவிடவாவது செய்யப்படுகிறான். இறந்து இல்லாமல்போனவன் பிறகு [2] தன்னையறிவது எப்படி?' என்று கேட்க, யயாதி, 'ராஜஸிம்மமே! உயிர்போனபிறகு அவன் தூங்கினவனைப்போல் சப்தம்செய்துகொண்டு, தன்புண்ணியத்தையோ பாபத்தையோ முன்னிட்டுக்கொண்டு சுவாசத்தின் முனையை அனுஸரித்து இந்தத்தேகத்தைவிட்டு வேறு கர்ப்பத்துக்குப் போகிறான். புண்ணியஞ்செய்தவர்கள் புண்ணியஜன்மமடைகின்றனர். பாபஞ்செய்தவர்கள் பாபஜன்மமடைகின்றனர். பாபமுள்ளவர்கள் புழுக்களும் பறவைகளுமாகின்றனர். மஹாநுபாவனே! நான் சொல்லவேண்டியதொன்றுமில்லை. அப்படிப் புண்ணியபாபங்களைச்செய்த பிராணிகள் நான்கு கால்களுள்ளனவும் இரண்டு கால்களுள்ளனவும் ஆறு கால்களுள்ளனவுமான கர்ப்பங்களாக ஆகின்றன. இவற்றையெல்லாம் முற்றும் சொன்னேன். ராஜஸிம்மமே! இன்னும் என்ன கேட்கிறாய்?' என்று சொன்னான்.

---

[1] இங்கு, 'புஷ்பபலாநுப்ருத்தம்' என்றபாடத்தைக்கொண்டு, 'புஷ்பமென்று சொல்லப்பட்ட கருமத்தின் ரஸமாகிய அதிர்ஷ்டத்துடன் சேர்ந்த புருஷவீரியத்தை' என்பது பழையவுரை.

[2] ஞானம் வந்தது எவ்வாறு என்பது கருத்து.

இப்படிச் சொல்லியதைக்கேட்ட அஷ்டகன், 'ஐயா! மனிதன் எதைச்செய்து தவத்தினாலும் வித்தையினாலும் மேலான லோகங்களை அடைகிறான்? அந்தமேலான லோகங்களை எந்தக்கிரமத்தினால் அடைகிறான் என்பதை நான் கேட்கிறேன்; எல்லாம் சரியாகச் சொல்' என்றுகேட்க, யயாதி, 'தவம், தானம், இந்திரியங்களையடக்குதல், மனத்தைஜயித்தல், நாணம், உள்ளும்புறமும் ஒத்திருத்தல், எல்லாப்பிராணிகளிடத்தும் தயை ஆகியஇவ்வேழினையே மனிதர்களுக்குச் சுவர்க்கலோகத்தின் பெரியவாயில்களென்று சொல்லுகின்றனர். தமோகுணமிகுந்தமனிதர்கள் எப்போதும் அகங்காரப்படுவதனால் அழிகின்றனர் என்று பெரியோர் சொல்லுகின்றனர். (வேதம்) ஓதித் தன்னைப்பண்டிதனென்று நினைத்துக்கொண்டு தன் கல்வியினால் பிறர்புகழை அழிப்பவனுக்கு நல்லலோகங்கள் அழிவுள்ளவையாகின்றன. அந்தப் பரப்ரம்மமும் அவனுக்குப் பலனைத்தருவதில்லை. அக்னிஹோத்ரம், [1]மௌனம், வேதமோதுதல், யாகம் செய்தல் ஆகிய நான்கு கருமங்கள் பாபபயத்தைப் போக்குகின்றவை. அந்நான்கு கருமங்களும் பெருமைக்காகச் செய்யப்பட்டவையாயின், பயத்தைக்கொடுக்கின்றன. வெகுமானத்தினால் கௌரவிக்கப்பட்டவன் ஸந்தோஷத்தைஅடைதல்தகாது.அவமானத்திற்காகத் துன்பத்தையும் அடையக்கூடாது. இந்தலோகத்தில் ஸாதுக்கள் ஸாதுக்களைப் பூஜிக்கின்றனர். அஸாதுக்கள் ஸாதுக்களுடைய புத்தியை அடைவதில்லை. 'இதற்காகத் தானஞ்செய்வேன்; இதற்காக யாகஞ்செய்வேன்; இதற்காக வேதமோதுவேன்; இதற்காகத் தவஞ்சேய்வேன்' என்ற இவை பயங்கரங்களென்று சொல்லுகின்றனர். அவற்றை முழுதும்விடவேண்டும். மனத்தை வசப்படுத்தின எவர்கள், மனம்செல்வதனால் அடையப்பட்ட புராதன ஆதாரமான பிரம்மத்தை அறிகின்றனரோ, அவர்கள் இந்தலோகத்தில் மேலான சாந்தியையும்,சரீரத்தை விட்டபிறகு அந்தப்பிரம்மத்துடன் சேர்ந்து மோக்ஷஸுகத்தையும் அடைவர்' என்றான்.

---

1 இந்திரிய நிக்ரஹம்.

## எண்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(பிரம்மசர்யமுதலிய ஆஶ்ரமங்களைப்பற்றி அஷ்டகன் கேட்க யயாதி சொல்லுவது.)

அஷ்டகன், யயாதியைப்பார்த்து, 'ஆசாரியசுஶ்ருஷைசெய்கிற பிரம்மசாரியும், கிருஹஸ்தனும், வானப்பிரஸ்தனும், ஸந்யாஸியும், ஸரியான மார்க்கத்திலிருந்து தர்மங்களை எப்படிச்செய்யவேண்டும்? இவர்களுக்கு அநேகதர்மங்களை ரிஷிகள் தெரிவிக்கின்றனரே' என்று கேட்க, யயாதி சொல்லுகிறான்.

'உபாத்தியாயர் அழைத்தபின் அத்தியயனஞ் செய்கிறவனும் குருவின்காரியங்களைஏவாமற்செய்பவனும், முன்எழுந்திருப்பவனும், பின்படுப்பவனும், பணிவுள்ளவனும், இந்திரியங்களையடக்கினவனும், திருப்தியுள்ளவனும், ஊக்கமுள்ளவனும், ஓதுவதை விடாதவனுமாகிய பிரம்மசாரி பயன்படுகிறான். க்ருஹஸ்தன் தர்மத்தினால் கிடைத்த தனத்தைப்பெற்றுக்கொண்டு எப்போதும் யாகமும் தானமும் செய்யக்கடவன்; விருந்தினர்களைப் புசிப்பிக்கக்கடவன்; பிறர் கொடாததை எடுத்துக்கொள்ளாமலிருக்கக்கடவன். இது க்ருஹஸ்தனைப்பற்றிய பழைமையாகிய ரஹஸ்யமானசாஸ்திரம். தன்சக்தியினால் ஜீவிப்பவனும், பாபகாரியத்தைவிட்டுநீங்கினவனும், பிறருக்குக் கொடுப்பவனும், பிறரைப் பீடிக்காதவனும், ஆஹாரத்தையும் வ்யவகாரத்தையும் அடக்கினவனுமாகிய வனத்தில்வஸிக்கும் முனியென்று சொல்லப்பட்ட வானப்பிரஸ்தன் மேலான ஸித்தியையடைகிறான். தொழிலால் ஜீவிக்காதவனும், குணங்கள் நிரம்பினவனும், எப்போதும் இந்திரியங்களை ஜயித்தவனும், எல்லாவற்றையும் விட்டவனும் வீட்டில் படுக்காதவனும் கையில் ஒன்றுமில்லாதவனும் செய்கைகள் குறைந்தவனும் தனியாகத் தேசங்களில் ஸஞ்சரிப்பவனுமாக இருப்பவன் ஸந்யாஸியாவான். விருப்பத்தினால் ஸம்பாதிக்கப்பட்ட ஸுகமான புண்ணியலோகங்கள் எந்தராத்திரியில் விரும்பாமல் விடப்பட்டவையாகின்றனவோ அந்தராத்திரியே மனத்தை அடக்கிய அந்தவித்துவான், காட்டிலிருப்பவனாக ஆவதற்கு முயலவேண்டும். காட்டிலிருப்பவன் தன் சரீரத்தின் தாதுக்களாகிய ரக்த மாம்ஸமுதலியவற்றைக் காட்டிலேயே விட்டுவிட்டு, (அதனால்) தனக்குமுன் பதின்மரும் தனக்குப்பின் பதின்மருமாகிய தன்குலத்தோ

யையும் இருபத்தோராமவனாகிய தன்னையும் புண்ணியத்தில் நிலைநிறுத்துகிறான்' என்று யயாதி சொன்னான்.

அஷ்டகன், 'முனிவர்கள் எத்தனைவகைப்படுவார்கள், [1] மௌனங்களும் எத்தனைவகையாகின்றன என்பவற்றைச்சொல்; நாம் கேட்க விரும்புகிறோம்' என்று கேட்க, யயாதி, 'ராஜாவே! எவனுக்கு வனத்தில் வஸிக்கையில் கிராமமும் கிராமத்தில் வஸிக்கையில் வனமும் பின்னிடுகின்றனவோ அவன் முனிஆவான்' என்றுசொன்னான்.

அஷ்டகன், 'வனத்தில் வஸிப்பவனுக்குக் கிராமம் பின்னிடுவதும் கிராமத்தில் வஸிப்பவனுக்கு வனம் பின்னிடுவதும் எப்படி?' என்றுகேட்டான். யயாதி, 'வனத்தில் வஸிக்கின்ற முனி கிராமத்திலுள்ளவற்றுள் ஒன்றையும் உபயோகம் செய்யக்கூடாது. அவ்வாறு வனத்தில் வஸிப்பவனுக்குக் கிராமம் பின்னிடுகிறது. முனியானவன் அக்கினியில்லாதவனும் வீடில்லாதவனும் பிறந்தகுலமும் வித்தியாவம்சமுமில்லாதவனுமாகி மறைக்கத்தக்க அங்கத்தைமறைக்குமளவு வஸ்திரத்தையும் உயிர்தரிக்குமளவு ஆகாரத்தையும் விரும்பக்கடவன். அப்படி கிராமத்தில் வஸிக்கிறவனுக்கு [2]வனம் பின்னிடுகிறது. எவன் விருப்பங்களையும் கருமங்களையும்விட்டுப் புலன்களையடக்கி [3] மௌனத்தைஅடைவானோ அந்தமுனி இவ்வுலகத்தில் ஸித்திபெறுவன். (ஆகாரசுத்தத்திற்காகப்) பற்களின்சுத்தமடைந்தும், (ஹிம்ஸையைவிட்டதற்காக) நகங்கள் அறுக்கப்பட்டும், (மனத்தூய்மைக்காக) எப்போதும் ஸ்நானம்செய்தும், (சாந்திமுதலியநற்குணங்கள் பொருந்தி) அலங்கரிக்கப்பட்டும், பற்றினால் கட்டப்படாமலுமிருக்கிறஅந்தச் சுத்தமான கருமமுள்ளவனை யார்தாம் பூஜிக்கமாட்டார்கள்? அவன் தவத்தினால் ஒடுக்கப்பட்டு இளைத்து மாம்ஸமும் எலும்பும் ரக்தமும் சோஷித்தவனாகி, இவ்வுலகத்தையும் ஜயித்துப் பரலோகத்தையும் ஜயிக்கின்றான். முனியானவன் மௌனத்தை வஹித்துக்கொண்டு எப்போது [4] இரண்டைவிட்டவனாகிறானோ அப்போது இந்தலோகத்தையும் ஜயித்துப் பரலோகத்தையும் ஜயிக்கிறான். முனியானவன் எப்போது பசுவைப்போல் [5]வாயினால் ஆகாரத்தைத் தேடுகிறானோ

1 விரதங்கள்.

2 கிராமத்திலிருப்பதொன்றையும் ரக்ஷிக்காமல் வனத்திலிருப்பவன், கிராமத்தைவிட்டவன். கிராமத்திலிருந்தும் வனத்திலிருப்பவன்போல் ஒன்றையும் விரும்பாதவனுக்கு வனம்போவதனால் விசேஷமில்லை.

3 ஒழிவு.

4 சீதம் உஷ்ணம்; ஸுகம் துக்கம்; லாபம் நஷ்டம்; ஜயம் அபஜயம்.

5 வாயில்வந்து சேர்ந்ததைத்தவிரக் கையினால்ஸம்பாதிக்கமுயலாதிருத்தல்.

அப்போது இவ்வுலகமெல்லாம் அவனுடையது. அவன்முக்திக்கும் அருகனாகிறான். கோபமும் ஆசையும் பிறருக்குத் தீங்குசெய்தலும் பொறாமையும் எல்லாருக்கும் பொதுவானதன்மை.விரோதத்தையும் வஞ்சகத்தையும் கர்வத்தையும் கபடத்தையும் கோள்சொல்லுவதையும் கோபத்தையும் ஆசையையும்விட்டுவிட்ட எவனுக்கு எனதென்பது இல்லையோ அவன்தான் தர்மந்தெரிந்தவன்' என்றுசொன்னான்.

அஷ்டகன், 'பிரம்மசாரி கிருஹஸ்தன் வானப்பிரஸ்தன் ஸந்யாஸி இவர்கள் நித்தியமாக உண்ணுகிறவராயிருந்தும் உண்ணுவதனால் பாபத்தை அடையாதிருப்பதெப்படியென்று இப்போது கேட்கிறேன்; எனக்குச் சொல்லவேண்டும்' என்று கேட்க, யயாதி, 'ஸந்யாஸிக்கு எட்டே கவளங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. வானப்பிரஸ்தனுக்குப் பதினாறு கவளங்களும் கிருஹஸ்தனுக்கு முப்பத்திரண்டு கவளங்களும் சொல்லப்பட்டன. பிரம்மசாரிக்கு ஸங்கியையில்லை. அஷ்டகா! இவ்வாறு இந்தக் காரணங்களைக்கொண்டு நல்லதும் தீயதும் அறியத்தக்கவை' [1]என்று சொன்னான்.



## எண்பத்தாறுவது அத்தியாயம்.

### ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)

(அஷ்டகனும் பிரதர்த்தனனும் தங்கள் புண்ணியங்களைக் கொடுப்பதாகச்சொல்ல, யயாதிமறுப்பது.)

அஷ்டகன், 'ராஜாவே! சூரியனையும் சந்திரனையும்போல் ஓடுகின்ற முன்சொல்லப்பட்ட (கிராமத்தில் வஸிப்பவனும் வனத்தில் வஸிப்பவனுமாகிய) [2]இவ்விருவருள் எவன் முதலில் [3]தேவர்களோடு ஒப்புமையடைகிறான்?' என்றுகேட்க, யயாதி, 'கிருஹஸ்தர்கள் நடுவில் வாஸஞ்செய்யாதவனாகவும் [4]விருப்பத்தின் பிரவிர்த்திகளை அடக்கினவனாகவும் கிராமத்திலேயே வஸிக்கும் யதி, அவரிருவர்களுள் முதலில் தேவஸாம்யத்தை அடைகிறவன். [5]எவன் நீண்டவாழ்நாளை

1 நியமத்துடன் புஜிப்பதனால் பாபம் வராதென்பது கருத்து.

2 'யோகியும் ஞானியும்' என்பது பழையவுரை. 3 முத்தியை.

4 வைராக்கியமுற்றவன்.

5 தவஞ்செய்துகொண்டிருக்கையில் மனம் விஷயத்தைப் பற்றியதனால் தவம்கெட்டபிறகு தன்பிழையைப்பற்றி அநுதாபமிருந்தால் வேறுதவம்செய்வதற்கு அந்த அநுதாபமே ஸாதகமாம். பிறகு, தவஞ்செய்யப்போதுமான ஆயுள் இராவிட்டால் மறுஜன்மத்திலாவது ஸித்திபெறுவதற்கு, பின்செய்யும் அந்தத்தவம் உதவியாகுமென்பது கருத்து.

அடையாமல் மனத்தின் விகாரத்தை அடைந்துதிரிவனோஅவன்அவ் வாறு செய்ததனால் அனுதாபப்படுவனேயாயின், பிறகு, வேறுதவம் செய்யக்கடவன். [1] எந்தமனிதன் எப்போதும் பாபகாரியங்களுக்குப் பயந்திருப்பனோ அவன் எப்போதும் தன் ஸுகத்தைச் செய்து கொண்டிருந்தாலும் மேலான [2]ஸுகத்தை அடைகிறான். எது ஹிம் ஸையை உண்டுபண்ணுவதோ அதைத்தான் அஸத்தியமென்று சொல்லுகின்றனர். ராஜாவே! ஒருவன் ஒன்றைத் தன்சொத்தென்றும் அதற்குத் தான் ஸ்வாமியென்றும் நினையாமலும் பலனைக்கருதாமலும் தர்மத்தைச் செய்வானாயின் அதுதான்நேர்மை; அதுதான் நிஷ்டை; அதுதான் யோக்கியம்' என்றுசொன்னான்.

அஷ்டகன், 'ராஜாவே! இளம்பிராயமுள்ளவனும்புஷ்பமாலைகளை அணிந்தவனும் அழகுள்ளவனும் ஒளியுள்ளவனுமாகிய நீ யாரால் அழைக்கப்பட்டிருக்கிறாய்? யாரால் அனுப்பப்பட்டிருக்கிறாய்? எங் கிருந்து வந்தாய்? எத்திசைநோக்கி வந்தாய்? உனக்குப் பூமியில் வேறுஇடம் ஏதாவது இருக்கிறதா?' என்றுகேட்க, யயாதி, 'இவ் வாறு அறிந்தவனும் கூர்மையான புத்தியுள்ளவனும் யோக்கியமான எண்ணமுள்ளவனுமாகிய நான் புண்ணியம்கெட்டு இந்தப்பூமியி லுள்ள நரகத்தில் பிரவேசிக்கிறதற்காக மேலுலகத்திலிருந்து நீக்கப் பட்டுப் பூமிக்குவந்தேன். எனக்கு மேலுலகத்துக்குரிய கருமமெல் லாம் இருந்தது. உங்களுக்கு மறுமொழி சொல்லிவிட்டு உடனே நான் பூமியில் விழப்போகிறேன். பிரம்மாவினால் நியமிக்கப்பட்ட லோகபாலகர்கள் என்னைத் துரிதப்படுத்துகின்றனர். நல்லவர்க ளிடம் விழுவதை நான் கேட்டுக்கொண்டேன். எல்லாரும் குண முள்ளவர்களாக நீங்கள் சேர்ந்திருக்கின்றீர்கள். ராஜாவே! நான் பூமியில் விழப்போகையில் இந்திரனிடத்திலிருந்து இந்தவரம் எனக் குக் கிடைத்தது' என்று மறுமொழி சொன்னான்.

அஷ்டகன், 'உன்னைக் கேட்கிறேன்; அதுவரையில் நீவிழாதே. ராஜாவே! ஆகாயத்திலாவது சுவர்க்கத்திலாவது உள்ள லோகங்கள்

---

1 இங்கு, 'பிபீயாத்' என்பதற்கு, 'பிப்ருயாத்' என்றுபாடங்கொண்டு எந்தமனிதன் ஸுகமென்று சொல்லப்பட்ட பிரம்மத்தை எப்போதும் தியா னத்தினால் தன்மனத்தில் தரித்திருப்பனோ அவன் பாபகர்மங்களைச் செய்தா லும் நித்யஸுகம் பெறுவானென்பதும் முன்சொன்னவன் யோகியென் றும் இவன் ஞானியென்றும் சொல்வதும் பழையஉரை. ஆனால், நேர்ந்த பிழையில் அநுதாபமும் வரும்பிழையில் பயமும் இருப்பதே ஒருவனுக்கு முக்திபெறுவதற்கு முக்கியமான ஸாதனம்என்பது மூலத்தின் கருத்து.

2 மோக்ஷத்தை.

எனக்குண்டா ? நீ அதற்குக்காரணமான புண்ணியத்தின் தத்துவ மறிந்தவனென்று நான் நினைக்கிறேன்' என்று கேட்டான். யயாதி, 'இந்தப்பூமியில் கோக்களும் அஸ்வங்களும் காடுகளிலும் மலைகளிலு முள்ளமிருகங்களும் எந்தக்காலம்வரையில் ஸ்ருஷ்டியிலிருக்குமோ அந்தக்காலம்வரையில் உனக்கு மேலுலகங்கள் இருக்கின்றன. ராஜ ஸிம்மமே ! நீ அவ்வாறு தெரிந்துகொள்' என்றான்.

அஷ்டகன், 'ராஜஸ்ரேஷ்டனே ! மேலுலகத்தில் எனக்குள்ள மேலுலகங்கள் எல்லாவற்றையும் உனக்குத் தானஞ்செய்கிறேன் ; நீ விழாதே; ஆகாயத்திலிருந்தாலும் ஸ்வர்க்கத்திலிருந்தாலும்அவற்றை நீ அச்சமின்றிச் சீக்கிரமாக அடையலாம்' என்று சொல்ல, யயாதி, 'ராஜஸ்ரேஷ்டனே ! பிராமணஜாதியிற் பிறவாத நம்மைப்போன்ற பிரம்மஜ்ஞானமுள்ளவனுக்கு வாங்குவது விருத்தியன்றே. ஏனென்றால், எப்போதும் பிராமணர்களுக்கு நாம்கொடுக்கவேண்டும். ராஜாவே! அப்படியே நான் முன்னே கொடுத்திருக்கிறேன். பிராமணனாக இல்லாதவனும் பிராமணஜாதிப்பெண்ணாகஇல்லாதஅந்தவீரனுடைய பத்தினியும் ஒருகாலும் யாசித்து ஜீவித்தல்தகாது. ஆதலால், நான் முன்செய்யாததைச் செய்யேன். செய்யக்கருதினால் அந்தஜாதியில் யோக்கியனாவேனோ?' என்று சொன்னான்.

அங்கே பிரதர்த்தனனென்பவன், 'விரும்பத்தக்க ரூபமுள்ளவனே ! நான் பிரதர்த்தனன் ; உன்னைக் கேட்கிறேன். ஆகாயத்திலாவது அதற்கு மேலுலகத்திலாவது எனக்கு லோகங்கள் இருக்கின்றனவா ? அதற்குக்காரணமான புண்ணியத்தின் தத்துவம் உனக்குத் தெரியுமென்று நான் நினைக்கிறேன்' என்றான். யயாதி, 'தேஜஸ்ஸோடு ஒளிர்கின்றவையும் நெய்யுள்ளவையும் துயரமற்றவையுமான அனேக லோகங்கள் உனக்கு இருக்கின்றன. ஒவ்வொன்றையும் எவ்வேழு நாள் அனுபவித்தாலும் முடிவுபெறாதவை.அவை உன்னை எதிர்பார்க்கின்றன' என்றுசொன்னான். பிரதர்த்தனன், 'அவற்றை உனக்கு நான் கொடுக்கிறேன்; விழாதே; என்னுடையலோகங்கள் எவையோ அவை ஆகாயத்திலிருந்தாலும் அதற்குமேலிருந்தாலும் உன்னுடையவையாகட்டும். அச்சமின்றிச் சீக்கிரமாக அவற்றையடையலாம்' என்று சொல்ல, யயாதி, 'ராஜாவே ! உனக்குச்சரியான சக்தியுள்ள ராஜாவாக இருப்பவன் தன் லாபத்திற்காகவும் ஸுகத்திற்காகவும் பிறர்புண்ணியத்தை விரும்பான். தெரிந்தவனாகிய ராஜா தெய்வத்தின் கட்டளையினால் ஆபத்தையடைந்தாலும் இழிவானகாரி

1 பிரியமும் ஹிதமுமானது என்பது கருத்து.

யத்தை ஒருபொழுதும் செய்யத்தகாது. அரசன் தர்மத்தைப்பார்த்து முயற்சியுடன் புண்ணியத்தையும் புகழையும்தரத்தக்க உபாயத்தையேசெய்யவேண்டும். தர்மத்தில் எண்ணமுள்ள என்னைப்போன்றவன் அறிந்திருந்தும் நீசொல்லும் இந்தயாசகவிருத்தியைச் செய்யலாகாது. அயலார்செய்யாததை ஒருவன் புதிதாகச்செய்யலாமா? செய்யவிரும்பினால் அதில் என்னநன்மை? எவன் புண்ணியபாபங்களைச் சரியாகத்தெரிந்துகொண்டு செய்யத்தக்கவற்றிலும் செய்யத்தகாதவற்றிலும் தவறுதலின்றிச் செம்மையாகநடப்பானோ அவன்தான் ஞானமுள்ளவன்; சத்தியமுள்ளவன்; மனத்தூய்மையுள்ளவன்; தன்மஹிமையினால் உலகங்களையெல்லாம் ரக்ஷிக்கிற ராஜாவாவன்; தர்மம்செய்யும்போது (பிரயோஜனத்தைப்பற்றிய) ஸந்தேகம் வந்தாலும் பொருளுமின்பமும் செவ்வையாகக் கிடைக்கக்கூடியவையாயிருந்தாலும் அந்தவிஷயத்தில் தர்மகாரியத்தையே முதலிற்செய்யவேண்டும். பொருளையும் இன்பத்தையும் கெடுக்காமலிருப்பது தான் தர்மம்' என்றுசொன்னான். இவ்வாறுசொல்லும் அந்த யயாதிராஜனைநோக்கி,வஸுமானென்னும் ராஜஶ்ரேஷ்டன்சொல்லுகிறான்.

---

## எண்பத்தேழாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



**(வஸுமான்,சிபி,அஷ்டகன் இவர்களுடன் யயாதிஸம்பாஷணம்செய்த பிறகு, அவர்களுக்குத்தாயும் யயாதியின் பெண்ணுமாகிய மாதவியென்பவள் வந்துசொல்ல,யயாதி அவர்களைத்தன்தௌஹித்ரர்களென்று தெரிந்துகொண்டு பிறகு அவர்களுடன் ஸ்வர்க்கஞ் செல்வது.)**

வஸுமானென்பவன், 'ராஜாவே! உஷதஶ்வன்புத்ரனாகிய வஸுமானென்று சொல்லப்பட்ட நான் உன்னைக்கேட்கிறேன்.மஹாத்மாவே! ஆகாயத்திலாவது அதற்குமேலாவது எனக்கு நல்லலோகமிருக்கிறதா? அந்தப் புண்ணியத்தின் உண்மை உனக்குத்தெரியுமென்று நான் நினைக்கிறேன்' என்றுகேட்க, யயாதி, 'சூரியன் தன் ஒளியினால் பிரகாசஞ்செய்கின்ற ஆகாயமும் பூமியும் திசைகளும் எவ்வளவுள்ளனவோ அவ்வளவுலோகங்கள் உனக்குமேலே இருக்கின்றன. அவை முடிவில்லாதவை; உனக்குக் காத்திருக்கின்றன' என்றுசொன்னான். வஸுமான், 'ராஜாவே! அவற்றை உனக்குக்கொடுப்பேன்; விழாதே; என்னுடையலோகங்களெல்லாம்

உன்னுடையவையாகட்டும். ஞானமுள்ளவனே! தானம்வாங்குவது உனக்குத் தோஷமாகஇருந்தால் ஒரு துரும்பையாவது கொடுத்து இதைக் கிரயத்துக்கு வாங்கிக்கொள்' என்றுசொன்னான். யயாதி, 1 'அதர்மத்தில் பயமுள்ள நான் குழந்தைப்பருவம் முதல் பொய்யாக விற்கப்பட்டதைப் பொய்யாக வாங்கிக்கொண்டதாக எனக்கு நினைவில்லை. மற்றவர்கள் இதற்குமுன் செய்யாததை நான் செய்யவே செய்யேன்; செய்ய நினைத்தால் அந்தவிஷயத்தில் நான் யோக்யனாவேனோ?' என்று சொல்ல, வஸுமான், 'ராஜாவே! உனக்குக் கிரயத்தில் விருப்பமில்லாவிட்டால் என்னால் தானஞ்செய்யப்படும் அந்த லோகங்களை நீ பெற்றுக்கொள்; நான் அந்தலோகங்களுக்குப் போவதில்லை. அந்த லோகங்களெல்லாம் உனக்கேயிருக்கட்டும்' என்று சொன்னான்.

அங்கே சிபியென்பவன், 'ஐயா! உசீநரன்புத்திரனாகிய சிபியென்னும் நான் கேட்கிறேன். ஆகாயத்திலாவது அதற்குமேலாகவாவது உள்ளலோகங்கள் எனக்கு இப்போது இருக்கின்றனவா? நீ அந்தத்தர்மத்தின் ஸூக்ஷ்மம் தெரிந்தவனென்று நான் நினைக்கிறேன்' என்றுசொல்ல, யயாதி, 'ராஜாவே! உன்னிடம் ஏதாவது அடைய விரும்பின ஸாதுக்களை நீ மனத்தினாலும் வாக்கினாலும் இகழ்ந்தாயில்லை. அதனால், உனக்கு மேலே அளவற்ற லோகங்களிருக்கின்றன. அவை மின்னலைப்போலப் பிரகாசித்துக்கொண்டு இனிய ஸங்கீதவாத்திய முழக்கத்துடன் சிறப்புற்றிருக்கின்றன' என்று சொன்னான். சிபி, 'ராஜாவே! உனக்குக் கிரயத்தில் விருப்பமில்லாவிடில், என்னால் தானஞ்செய்யப்பட்ட அந்தலோகங்களை நீ பெற்றுக்கொள். கொடுத்தபின் அவற்றை நான் எடுத்துக்கொள்ளமாட்டேன். சிறந்த ஞானமுள்ளவர்கள் அங்கேபோய்த் துயரப்படாமலிருக்கின்றனர்' என்று சொல்ல, யயாதி, 'ராஜாவே! நீ எப்படி இந்திரனுக்கொப்பான மஹிமையுள்ளவனாகவும் அளவற்ற புண்ணியலோகங்களுள்ளவனாகவுமிருக்கிறாயோ அப்படியே நானுமிருந்தவன். பிறர் கொடுத்த லோகத்தில் எனக்கு ஸுகமிராது. சிபியே! ஆதலால், நீ கொடுத்ததை நான் அங்கீகரிக்கவில்லை' என்றுசொன்னான்.

பிறகு, அஷ்டகன், 'ராஜாவே! நாங்கள் தனித்தனியே கொடுத்தலோகங்களை நீ அங்கீகரியாவிட்டால், நாங்களெல்லாரும் உனக்குக்

1 சிம்சுமார சக்கரம் என்று சொல்லப்பட்ட காலசக்கரத்துக்குப் பயந்த நான் என்பர் சிலர்; குழந்தையினிடம் வாங்குவதில் பயந்த நான் என்பர் மற்றும் சிலர்.

கொடுத்ததனால் [1]நரகம்போவோம்' என்றான். யயாதி, 'க்ஷத்தியர் தவறுதலஸத்புருஷர்களே! நான் எதற்குத் தகுதியுள்ளவனோ அதைச் செய்யமுபலுங்கள். நான் இதற்குமுன் செய்யாதகாரியத்தை இப்போ துஅங்கீகரிக்கவில்லை' என்று சொன்னான். அஷ்டகன், 'அழியாத லோகங்களுக்குச் செல்ல விரும்புகின்ற மனிதன் ஏறத்தக்க ஐந்து பொன்மயமான ரதங்கள் காணப்படுகின்றனவே; இவையெல்லாம் யாருடையவை?' என்றுகேட்க, யயாதி, 'அக்னிஜ்வாலைகளைப் போல்ஜ்வலித்துக்கொண்டு மேலேநின்று பிரகாசிக்கின்ற இவ்வைந்து பொன்மயமான ரதங்களும் உங்களுக்கு வாஹனங்களாகப்போகின் றன' என்று சொன்னான்.

பாரதரே! பிரம்மதேவரால் முற்காலத்தில் விதிக்கப்பட்ட அசு வமேதமென்னும் மஹாயாகத்தைஅஷ்டகன்முதலானவர்கள் செய்து வந்தபோது குதிரையின் எந்த அவயவங்களை வெட்டிக்கிரமமாக ஹோதா, அத்வரியு, உத்காதா, பிரம்மா இவர்களும் மற்றப்பதினாறு ரித்விக்குக்களும் சாஸ்திரப்படி அக்னியில் ஹோமஞ்செய்தனரோ அவற்றின் புகைவாஸனையை ஆக்கிராணஞ்செய்து பூமியில் மிகுந்த பாபஞ்செய்த மனிதர்கள் உடனே பாபம்நீங்கிப் பரிசுத்தர்களாயினர். அந்தச்சமயத்தில் மான்தோலை உடுத்துக்கொண்டும், மான்தோலைப் போர்த்துக்கொண்டும், மிருகத்தின் ஆகாரத்தையும் செய்கையையும் செய்துகொண்டும், மிருகங்களுடன் ஸஞ்சரிப்பவளும் தபஸையே தனமாகஉடையவளுமாகிய மாதவியென்பவள்மான்கூட்டங்களுடன் அந்த யஜ்ஞசாலைக்குட்புகுந்து, புகைவாசனையை ஆக்கிராணஞ் செய்து, மிகுந்த ஆச்சரியத்துடன் மிருகங்களுடனேயே திரிந்தாள். அந்தமாதவி யஜ்ஞசாலைக்குள் திரிந்துகொண்டிருக்கையில் தோல்வி யடையாதவர்களான தன் புத்திரர்களையும் யஜ்ஞத்தின் பெருமையை யுங் கண்டு ஸந்தோஷமடைந்தாள். அப்போது ஆகாயத்திலிருந்து கொண்டு பூமியைத்தொடாமல் அங்கேவந்த நகுஷபுத்திரனை யயா தியைத் தன்பிதாவென்று தெரிந்து வந்தனஞ்செய்தாள்.

அப்போது வஸுமான், சிறந்த தவமுள்ளவளாகிய தன் மாதா வைநோக்கி, 'நீ இவருடைய பாதங்களுக்கு வந்தனஞ்செய்தாயே; தேவதைக்கொப்பான இந்தராஜா யார்? வந்தனஞ்செய்கிற நீ யார்? எனக்குச்சொல்' என்றுகேட்டான். அதற்கு மாதவி, 'என்புத்தி ரர்களே! நீங்கள் சேர்ந்துகேளுங்கள். இந்த நகுஷபுத்திரரான

[1] கொடுத்ததை வாங்கிக்கொள்ளாவிட்டால தத்தாபஹாரதோஷம் வரும் என்பது கருத்து.

யயாதி, என்தந்தை; என் புத்திரர்களாகிய உங்களுக்கு மாதாமஹ ரென்று எனக்குத் தெரிகிறது. என் ஸஹோதரனாகிய பூருவை ராஜ் யத்தில் பட்டாபிஷேகஞ் செய்துவிட்டு ஸ்வர்க்கம்சென்றார். பெரிய கீர்த்தியுள்ள இவர் என்னகாரணத்தினால் இங்கேவந்தார்!'' என்றாள்.

இவளுடைய அந்தச்சொல்லைக்கேட்டு, வஸுமான், 'சுவர்க் கத்தைவிட்டுத் தவறிப்போனார்' என்றுசொன்னான். அந்தமாதவி தன்புத்திரன் சொல்லியதைக்கேட்டு, மனத்தில் பரபரப்புக்கொண்ட வளாகித் தௌஹித்ரர்களாற்சூழப்பட்ட தன்பிதாவை நோக்கி, 'தவத்தால் ஜயிக்கப்பட்ட எனது லோகங்களைப் பெற்றுக்கொள் ளும். தர்மத்தினால் ஸம்பாதிக்கப்பட்ட தனம் [1]புத்திரர்களுடையது எப்படியோ அப்படியே அவர்களின் புத்திரர்களுடையதும் தனது தனமேயென்று இந்த லோகத்தில் தர்மோபதேசஞ்செய்யும் ரிஷிகள் சொல்லுகின்றனர். ஆதலால், நாங்கள்செய்த தானங்களையும் தவங் களையும் கொண்டு சுவர்க்கம்செல்லும்' என்றுசொன்னாள். யயாதி, 'உனது தவத்தின்பலன் எனக்கு நன்மையாகஇருக்குமானால், அப் போது, நான் பெண்ணினாலும் மஹாத்மாக்களாகிய தௌஹித்திரர்க ளாலும் கரையேற்றப்பட்டவனாகிறேன். ஆதலால், இதுமுதல் பிதிர் கருமத்தில் பெண்ஸந்ததி புண்ணியபலனைத் தருவதாகும். தௌஹித் திரன், குதபகாலம், எள்ளு இம்மூன்றும், சிராத்தத்தில்புண்ணியமா னவை. சுசியாயிருத்தல், கோபத்தைவிடுதல், அவஸரமில்லாமை இம் மூன்றையும் சிராத்தத்தில் சிலாக்கியமாகச் சொல்லுகின்றனர். புஜிக் கிறவர்களும், பரிமாறுகிறவர்களும், வேதம்சொல்லுகிறவர்களும் பரி சுத்தம் செய்கிறவர்கள். பகலின் எட்டாவது முகூர்த்தத்தில் சூரி யன் உஷ்ணம் குறைந்திருக்கும்போது இருக்கிறகாலம் குதபமென்று சொல்லப்பட்டது. அதில் பிதிர்க்களுக்குக் கொடுத்தது [2] அக்ஷ யமாகும். எள்ளு பிசாசத்தினின்றும் காப்பாற்றுகின்றது; தர்ப்பம் ராக்ஷஸர்களிடத்தினின்றும் காப்பாற்றுகின்றது; வேதம்ஓதின பிரா மணர்கள் தாங்களிருக்கும் பங்க்தியையே காப்பாற்றுகின்றனர். யதிகள்புஜிப்பது அக்ஷயமாகிறது; அழியாதபலனுள்ளது. ஞான முள்ளவனும் வேதமோதினவனும் தனமுள்ளவனும் சுசியுள்ளவனு மாகிய நல்லபாத்திரன்கிடைத்தால், அதுதான்காலம். அந்தக்காலத் திலேதான் கொடுத்தல்வேண்டும். காலம்இதைவிட வேறாகநினைக்கப் படவில்லை' என்றுசொல்லி, புத்திமானாகிய யயாதி, 'நீங்களெல்லா

1 பன்மை மகனையும் மகளையும் குறிக்கும். 2 அழியாதது.

ரும் யஜ்ஞஸமாப்திஸ்நானஞ்செய்தவர்கள்; காரியம் முக்கியமானதா ஞல் சீக்கிரம் புறப்படுங்கள்" என்று அவர்களுக்கு மறுபடியும் சொன்னான்.

அஷ்டகன், "ராஜாவே! நீ உன்ரதத்தின்மேலேறி ஆகாயம் போ; எங்களுக்கு எப்போது காலம்வருமோ அப்போது நாங்களும் பின்னே வருவோம்" என்றுசொன்னான். "நாமெல்லோரும் இப்போதே போகவேண்டும். நாம் ஒன்றுசேர்ந்து ஸ்வர்க்கத்தை ஜயித்திருக்கிறோம். இதோ நமக்கு ரஜோகுணம்விலகிய தேவலோகத்தின் மார்க்கம் தெரிகிறது" என்று யயாதி சொன்னான்.

பிறகு, அஷ்டகனும் சிபியும் காசிராஜாவாகிய பிரதர்த்தனனும் இக்ஷ்வாகுவம்ச ராஜாவாகிய வஸுமனஸும் இந்த ஸாதுக்களாகிய நான்குராஜாக்களும் அப்போது அவபிருதமென்கிற யாகஸமாப்திஸ்நானஞ்செய்து சேர்ந்தே சுவர்க்கம் சென்றார்கள். அந்தராஜஸ்ரேஷ்டர்களெல்லாரும் ரதங்களிலேறி ஒளிகளினால் ஆகாயத்தைநிரப்பிக்கொண்டு, தங்கள் புண்ணியத்தினால் ஆகாயம் பூமி இரண்டையும் வியாபிக்கச்செய்து சென்றனர்.

அப்போது அஷ்டகன், "நானொருவன்தான் முன்னேபோகிறவனாக நினைத்தேன். மஹாத்மாவாகிய இந்திரன் எல்லாவகையிலும் எனக்குச் சிநேகிதன். இப்படியிருக்க, உசீனரன்புத்திரனாகிய இந்தச் சிபியென்னும் ஒருவன் மற்றஇரதங்களை முழுவேகத்தினால் எவ்வாறு தாண்டினான்" என்றுகேட்க, யயாதி, "உசீனரன் புத்திரனாகிய இந்தச்சிபி எவ்வளவுதனம் சம்பாதித்தானோ அவ்வளவையும் யாசகர்களுக்குக் கொடுத்தான். ஆதலால், இவன் உங்களுக்குள் மிகச்சிறந்தவன். ராஜாவே[1] கொடையும் தவமும் ஸத்தியமும் [2] தர்மமும் (செய்யத்தகாததைச் செய்வதில்) நாணமும் ஒளியும் பொறுமையும் அன்பும் செய்யும்கருமத்திலஉத்ஸாஹமுமாகியஇவையெல்லாம் புத்தியில் ஒப்பில்லாத சிபியென்னும் ராஜாவினிடத்தில் அளவிடக்கூடாதவையாயிருக்கின்றன. இவ்வளவு நடையுடன் நாணத்தை விடாமலிருப்பதால், சிபியானவன் ரதத்தினால் உன்னைக் கடந்து போனான்" என்றுசொன்னான்.

பிறகு, அஷ்டகன், இந்திரனுக்கொப்பான மாதாமஹனைநோக்கி, தெரிந்துகொள்ளவிரும்பி, "ராஜாவே[1] உன்னை நான் கேட்கிறேன். நிஜத்தைச்சொல்; நீ எங்கிருந்துவருகிறாய்; நீயார்; யாருடைய புத்

1. இவனை வஸுமானென் என்றும் சொல்லப்படுவன்.
2. [illegible]

திரன்? ஏனெனில், நீசெய்தகாரியத்தை இவ்வுலகத்தில் உன்னைவிட வேறு க்ஷத்திரியனிலும் பிராமணனிலும் செய்பவன் இல்லை" என்று மறுபடியும்கேட்க, யயாதி, "நான் யயாதி; நகுஷனுடைய புத்திரன்; பூருவின்பிதா. இந்தப்பூமியில் சக்கரவர்த்தியாக இருந்தேன். இன்னும் ரஹஸ்யமான விஷயத்தையும் என்னைச்சேர்ந்த உங்களுக்கு வெளிப்படையாகச் சொல்லுகிறேன். நான் உங்களுக்கு மாதாமஹன். இந்தப் பூமிமுழுவதையும்ஜயித்து அதையும் அழகியநிறமுள்ள உயர்ந்தலக்ஷணமுள்ள நூற்றொரு குதிரைகளையும் பிராமணர்களுக்குக் கொடுத்துவிட்டு வானப்பிரஸ்தராகப் போகிறவர்கள் புண்ணியபலனை அடைந்து தேவர்களாகின்றனர். நான் குதிரைகளும் பசுக்களும் பொன்னும் உயர்ந்ததனங்களும் நிறைந்த இந்தப்பூமி முழுவதையும் பிராமணர்களுக்குத் தானஞ்செய்தேன். ஆயிரம்கோடி பசுக்களை நான் அப்போது கொடுத்தேன். என்னுடைய ஸத்தியத்தினால் ஆகாயமும் பூமியும் வியாபிக்கப்பட்டிருந்தன. மனுஷ்யர்களுக்குள் [1] அக்னியும் ஜ்வலித்தது; என்சொல் பொய்யாகப் போனதேயில்லை. ஸத்தியத்தைத்தானே பெரியோர்கள் கௌரவிக்கின்றனர். அஷ்டகனே! உனக்கும் உஷதஸ்வ வம்சத்தவனாகிய பிரதர்த்தனனுக்கும் நான் ஸத்தியமாகச் சொல்லுகிறேன். எல்லாஜனங்களும் ரிஷிகளும் தேவர்களும் ஸத்தியத்தினாலேதான் பூஜிக்கத்தக்கவராகிறார்களென்பது என் மனத்தில் உள்ளது. எவனொருவன் சுவர்க்கத்தை ஜயித்தவர்களாகிய நம்மெல்லாரையும்பற்றி நடந்தபடி பொறாமையின்றிப் பிராமணஸ்ரேஷ்டர்களுக்குத் தெரிவிப்பானோ அவன் நமது ஸாலோக்யத்தை அடைவான்" என்று யயாதி சொன்னான்.

சத்துருக்களை அடக்குகிறவனும் மிகச்சிறந்த காரியமுள்ளவனுமாகிய அந்தச் சிறந்தமஹாத்மாவாகிய ராஜா இவ்வாறு தன் தௌஹித்திரர்களினால் கரையேற்றப்பெற்று, தன் புண்ணியகருமங்களினால் பூமியைநிரப்பிப் பூமியைவிட்டு ஸ்வர்க்கம்சென்றான்.

---

1 விசேஷமான பிரபாவம் இருந்தது என்பது கருத்து.

## எண்பத்தெட்டாவது அத்தியாயம்

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(பூருவம்சத்தைப்பற்றிச் சொல்லியது.)

ஜனமேஜயமஹாராஜா, "தர்மபரிபாலனஞ் செய்கிறவரிற் சிறந்தவனும் யயாதியின் புத்ரனுமாகிய பூருவையும் அந்தப் பூருவின் வம்சத்தை விருத்திசெய்த மற்றவர்களையும்பற்றி வரிசையாகச்சொல்லும். பிராமண ஸ்ரேஷ்டரே! துஷ்யந்தன் புத்திரனை ஜனமேஜயனென்பவனைவிட்டுப் பரதன் எவ்வாறு ராஜாவானனென்பதை மறுபடியும் விரிவாகச்சொல்லும்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்:—

"ராஜாவே! ராஜசிரேஷ்டனாகிய பூரு அவன்பிதாவான யயாதியைப்போலவே தர்மத்தை விடாதவனாகவும் இந்திரனுக்குழப்பான பராக்கிரமமுள்ளவனாகவும் ராஜ்யாதிபத்யம் செய்துகொண்டிருந்தான். பூருவுக்குப் பௌஷ்டியென்பவளிடம் ப்ரவீரன், ஈசுவரன், ரௌத்ராஸ்வனென்று மஹாரதர்களான மூன்றுபுத்திரர்கள்பிறந்தார்கள். பூருவுக்குப் பிறகு ப்ரவீரன் வம்சத்தை விருத்தி செய்தான். ப்ரவீரனுக்குச் சூரஸேனியென்பவளிடம்,நான்குகடல்களையும் எல்லையாகவுடைய பூமியைக்காப்பவனும் தாமரைப்புஷ்பத்துக்கு நிகரான கண்களையுடையவனும் ஸமர்த்தனுமாகிய மனஸ்யுவென்னும்புத்திரன் பிறந்தான். சக்தன், ஸம்ஹனனன், வாக்மியென்று மூன்றுபுத்திரர்கள் மனஸ்யுவுக்கு * ஸௌவீரியென்பவளிடம் பிறந்தனர். எல்லாரும் சூரர்கள்: எல்லாரும் மஹாரதர்கள். சிறந்தமனஸுள்ள ரௌத்ராச்வனுக்கு மிஸ்ரகேசியென்னும் அப்ஸரஸினிடம் சிறந்தவில்லாளிகளான அன்வக்பானு முதலிய புத்திரர்கள் பதின்மர் பிறந்தனர். எல்லாரும் சாஸ்திரப்படி யஜ்ஞஞ்செய்தவர்களாகவும் சூரர்களாகவும் ஸந்ததிகளுள்ளவர்களாகவும் மிகுந்த கல்விகேள்வியுள்ளவர்களாகவும் எல்லா அஸ்திரங்களும் தெரிந்தவர்களாகவும் தர்மத்தைமுக்கியமாகக் கொண்டவர்களாகவுமிருந்தனர். அவர்கள் ரிசேயு, கக்ஷேயு, வீரனாகிய க்ருகணேயு, ஸ்தண்டிலேயு, வனேயு, சிறந்தகீர்த்தியுள்ள ஜலேயு, பலவானாகியதேஜேயு, புத்நமானும் சந்திரனைப்போன்றபராக்ரமமுள்ளவனுமாகிய ஸதயேயு, தர்மேயு, தேவர்களுக்கொப்பான பராக்ரமமுள்ள ஸன்னதேயு என்றவர்கள் பதின்மர். அவர்களுக்

* ஸௌவீரதேசத்தரசன் பெண்.

குள், அநுதிருஷ்டியென்று சொல்லப்பட்ட ரிசேயுவென்பவன் தேவர்களுக்குள் இந்திரன்போல் பூமியில் ஓரோராஜாவாகவும் வித்துவானாகவும் பராக்ரமசாலியாகவுமிருந்தான். அநுதிருஷ்டியின் புத்திரன் ராஜஸூயயாகமும் அச்வமேதயாகமுஞ்செய்த உயர்ந்த தர்மிஷ்டனாகிய மதிநாரன் என்று பெயர்பெற்ற ராஜாவாக இருந்தான்.

ஜனமேஜயராஜாவே! தம்ஸு, மஹான், அதிரதன், ஈடில்லாத சக்தியுடைய த்ருஹ்யு அளவற்ற பராக்ரமமுள்ள இந்நால்வரும் மதிநாரன் புத்திரர்கள். அவர்களுக்குள், சிறந்த பராக்ரமமுள்ள தம்ஸுவென்பவன் பூருவின் வம்சத்தைச் சிறப்பித்துக்கொண்டு பிரகாசமான கீர்த்தியைச் சம்பாதித்தான்; பூமியை ஜயித்தான். பராக்ரமசாலியாகிய தம்ஸு, *இலிலனென்னும் புத்திரனைப்பெற்றான். ஜயிப்பவர்களில் சிறந்த அந்த இலிலனும் இப்புவனி முழுவதையும் ஜயித்தான். இலிலன் ரதந்தரியென்பவளிடம் துஷ்யந்தன், சூரன், பீமன், ப்ரவஸு, வஸு ஆகிய பஞ்சபூதங்களுக்கொப்பாகிய ஐந்து புத்திரர்களைப்பெற்றான். அவர்களுள் பெரியவனும் யுத்தத்தில் பிறரால் ஜயிக்க முடியாதவனுமாகிய துஷ்யந்தன் ராஜாவாகவிருந்தான். துஷ்யந்தனுக்கு லக்ஷணையென்பவளிடம் ஜனமேஜயன் பிறந்தான். சகுந்தலையினிடம் பரதனென்னும் புத்திரன் பிறந்தான். அவனிடமிருந்துதான் பரதவம்சத்திற்குப் பெருங்கீர்த்தி ஆரம்பித்தது" என்று கூறினர்.

---

## எண்பத்தோன்பதாவது அத்தியாயம்.

---

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி)



(சகுந்தலை உபாக்யானத்தின் ஆரம்பம். துஷ்யந்தன் ராஜ்யபாரம்.)

ஜனமேஜயர், "ப்ராஹ்மண! மஹாத்மாவாகிய பரதனுடைய ஜனனத்தையும் செய்கையையும் கேட்க விரும்புகிற எனக்கு இங்கே அவற்றை விரிவாகச் சொல்லக்கடவீர்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

பரதஶ்ரேஷ்டரே! பௌரவர்களுடைய வம்சவிருத்தியைச் செய்த துஷ்யந்தனென்னும் வீரன் நாலுஸமுத்திரமும் சூழ்ந்த பூமிக்கு ரக்ஷகனாகிருந்தான். யுத்தங்களில் ஜயம்பெறுகிறவனும் எதிரிகளை அழிக்கிறவனுமாகிய அந்தத்துஷ்யந்தராஜா சமுத்திரங்களால் சூழப்பட்ட தீவுகளாகிய தேசங்களையும், ரத்னங்கள் நிரம்பினஸமுத்தி

* ஈலினனென்னும் இவனுக்குப் பெயர் வழங்குகிறது.

ரங்களாற் சூழப்பட்டவையும் நாலுவருணத்து ஜனங்களும் நிரம்பின வையும் மிலேச்சதேசம் வரையிலுள்ளவையும் [1]நாலுபாகங்களாகப் பிரிக்கப்பட்டவையுமான தேசங்களெல்லாவற்றையும் ஆண்டான். அந்தராஜா ஆளும்போது வருணங்களின் வியவஸ்தைகளை மீறுகிறவ னும், [2]உழுவதையும் சுரங்கமெடுப்பதையும் செய்பவனும், பாபம் செய்பவனும் யாரும் இருக்கவில்லை. புருஷச்ரேஷ்டரே! அந்தத் துஷ்யந்தன் தேசங்களுக்கு ராஜாவாகஇருந்தகாலத்தில் அப்போதுள்ள மனுஷ்யர்கள் தர்மத்திலேயே ஆசைவைத்தவர்களாகி அறம்பொரு ளிரண்டையும் சம்பாதித்தனர். ஐயா! அவன் தேசத்தையாளும் போது திருடர் பயமும் பசியின் பயமும் வியாதியின் பயமும் சிறி தும் இல்லை. எல்லாவருணத்தாரும் அந்த ராஜாவை ஆச்ரயித்துத் தெய்வச்செய்கையை எதிர்பாராமல் தந்தம் தர்மங்களினாலேயேதிருப் தியாயிருந்தனர். யாரிடத்திலும் பயமில்லாமலிருந்தனர். மேகமும் காலத்தில் வருஷித்தது. பயிர்கள் ஸாரமுள்ளவையாயிருந்தன. பூமி யில் எல்லாரத்னங்களும் பசுக்களும் நிரம்பஇருந்தன. பிராமணர்கள் தங்கள் கருமங்களில ஊக்கமுள்ளவர்களாயிருந்தனர். அவர்களிடத் தில் அஸத்தியம் இருக்கவில்லை. அந்தராஜா வியக்கத்தக்க பெரிய பராக்கிரமமுள்ளவன்; வஜ்ராயுதம்போல் உறுதியானசரீரமுள்ளவன்; யௌவனமுள்ளவன்; மந்தரமலையைச் செடிகள் மரங்களுடன் கைக ளால் தூக்கியெடுப்பான்; நாலுவகையான கதாயுத்தத்திலும் எல்லா ஆயுதங்களிலும் யானையேற்றம் குதிரையேற்றங்களிலும் தேர்ந்தவ னாக இருந்தான். பலத்தில் விஷ்ணுவுக்கு ஒப்பாகவும், தேஜஸில் சூரியனுக்கொப்பாகவும், கலக்கக்கூடாமையில கடலுக்குஒப்பாகவும் பொறுமையில் பூமிக்கு ஒப்பாகவுமிருந்தான். எல்லாருக்கும் பிரிய மானவனும், பட்டணத்தையும் தேசத்தையும் ஸந்தோஷிக்கச்செய்ப வனுமாகிய அவ்வரசன் மேன்மேலும் தர்மத்தையே முக்கியமாகக் கொண்ட செய்கைகளினால் ஸந்தோஷமாயிருக்கும்படி ஜனங்களை ரக்ஷித்தான்" என்றார்.

---

1 குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பது தமிழ்நூல் வழக்கு.

2 உழாமலே பயிர்விருத்தியும் இயற்கையாகவே தனவிருத்தியும் இருந்தன.

## தொண்ணூருவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(துஷ்யந்தன் வேட்டைக்குச் சென்றது.)

ஜனமேஜயர், "பகவானே! தத்துவஜ்ஞானியே! புத்திமான்களிற்சிறந்தவரே! சிலாக்கியமானபுத்தியுள்ள பரதனுடைய பிறப்பையும் சரித்திரத்தையும் சகுந்தலையின் பிறப்பையும் நான் விவரமாகக் கேட்க விரும்புகிறேன். வீரனும் புருஷசிரேஷ்டனுமான துஷ்யந்தனால் சகுந்தலை அடையப்பட்ட விவரத்தையும் நான் கேட்கவிரும்புகிறேன்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"சிறந்த புஜபலமுள்ளவனும், ஸைன்யங்களும் வாகனங்களும் மிகுதியாக உள்ளவனுமாகிய அந்தத் துஷ்யந்தன் ஒருகால் அநேக நூறுக்கணக்கான குதிரைகளோடும் யானைகளோடும் கத்திகளையும் வேல்களையும் கதாயுதங்களையும் உலக்கைகளையும் ப்ராஸமென்னும் ஆயுதங்களையும் ஈட்டிகளையும் கைகளில் தரித்துக்கொண்ட அநேகம் போர்வீரர்களோடும்கூட மிகவும் அழகான சதுரங்க ஸைன்யத்தினால் சூழப்பட்டவனாக அடர்ந்தகாட்டுக்குச் சென்றான். அந்தராஜா பலவித ஆயுதங்களையும் பலவேஷங்களையும் தரித்துக்கொண்ட சேனைவீரர்களுடன் போகையில், போர்வீரர்களின் கர்ச்சனைகளினாலும், சங்கவாத்தியங்கள் துந்துபிவாத்தியங்கள் இவற்றின் முழக்கங்களினாலும், ரதசக்கரங்கள் ஓடும் ஓசைகளினாலும், சிறந்தயானைகளின் சப்தங்களினாலும், குதிரைகளின்சப்தங்களாலும், தோள் தட்டுகிற சப்தங்களாலும் கலகலவென்ற சப்தமுண்டாயிற்று. சூரனும் தனக்குப் புகழைச்சம்பாதிக்கிறவனும் சிறந்த ராஜலக்ஷணம் பொருந்தியவனுமாகிய அவ்வரசனை அந்தப்புரத்திலுள்ள ஸ்திரீகள் உயர்ந்த மாளிகைகளின்மேலேநின்று பார்த்தனர். இந்திரனுக்கொப்பானவனும் எதிரிகளையழிப்பவனும் எதிரிஸைன்யத்தின் யானைகளைத் தடுப்பவனுமாகிய அவனை அங்கேபார்த்த பெண்களின் கூட்டங்கள் இந்திரனென்றே நினைத்தனர். "இவன்தான் யுத்தத்தில் வஸுவென்னும் தேவஜாதியைப்போலப் பராக்கிரமமுள்ள அந்தப் புருஷச்ரேஷ்டன். இவனுடைய கைபலத்தின்முன் அணுகிய எதிரிகளுடைய கூட்டங்கள் நிற்பதில்லை" என்றசொற்களைச் சொல்லிக்கொண்டு அந்தஸ்திரீகள் அன்புடன் அந்தராஜாவை ஸ்துதிசெய்து அவன்சிரஸில் புஷ்பவர்ஷங்களையும் வர்ஷித்தனர். ஆங்காங்குப் பிரா

மணஸ்ரேஷ்டர்களாலும் நாற்புறமும் ஸ்துதிசெய்யப்பட்டு, மிக்க மகிழ்ச்சியுடன் வேட்டையாடுவதற்கு வனத்திற்குப் புறப்பட்டான். இந்திரனுக்கொப்பான அவ்வரசன் மதயானையின்மேலேறிப் புறப்படும்போது, பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் வைசியர்களும் சூத்திரர்களும் அவனைப் பின்சென்றனர். நகரத்தாரும் தேசத்தாருமாகிய அவர்கள் மங்கள ஆசீர்வாதங்களாலும் ஜயஜயவென்ற சப்தத்தாலும் அந்தராஜாவைச் சிறப்பித்துக்கொண்டு வெகுதூரம்பின்சென்றனர், அதன்பின் ராஜாவினால் விடை கொடுக்கப்பெற்றுத் திரும்பினர்.

பிறகு, அவ்வரசன் கருடனுக்கொப்பான வேகமுள்ள ரதத்திலேறி அதனுடைய கோஷத்தினால் பூமியையும் ஸ்வர்க்கத்தையும் நிரப்பினான். சிறந்த புத்தியுள்ள அவ்வரசன் சென்று நந்தனவனத்துக்கொப்பானதும், பில்வங்களும் எருக்குக்களும் கருங்காலிமரங்களும் விளாமரங்களும் வெள்வேலமரங்களும் நிறைந்ததும், மலைகளினின்றும் சரிந்தகற்கள்நிரம்பி மேடுபள்ளமாக இருப்பதும், மனிதரில்லாததும், ஜலமில்லாததும், அனேகயோசனைதூரம் நீண்டதும், மான்களும் ஸிம்மங்கள் முதலிய மற்றப் பயங்கரமான வனமிருகங்களும் நிறைந்ததும், நந்தனவனத்தைப்போன்றதுமான வனத்தைக்கண்டான்.

புருஷஸ்ரேஷ்டனான துஷ்யந்தன்வேலைக்காரர்களோடும் சேனையோடும் வாகனங்களோடும் பற்பல மிருகங்களைகொன்று அந்தவனத்தைக் கலக்கினான். அவ்விடத்தில் துஷ்யந்தன் பாணத்தின் எதிரிலகப்பட்ட அநேகம் புலிக்கூட்டங்களைப் பாணங்களினால் பிளந்து கீழேதள்ளினான். அவ்வரசன் தூரத்திலிருந்த சிலவற்றைப் பாணங்களினால் பிளந்தான்; அருகில்வந்த சிலவற்றைக் கத்தியினால் வெட்டினான். ஸமத்தர்களில் சிறந்தவனாகிய அவன் சிலமான்களைச் சக்தியாயுதத்தினால் அடித்தான். கதாயுதத்தைச் சுழற்றுவதின் ரஹஸ்யங்களை அறிந்தவனும் அளவற்ற பராக்ரமமுள்ளவனுமாகிய அவன் தோமரங்களாலும், கத்திகளாலும், கதாயுதங்களையும் உலக்கைகளையும் சுழற்றுவதனாலும், அந்தக்காட்டிலுள்ள மிருகங்களையும் பக்ஷிகளையும் கொன்றுகொண்டு ஸஞ்சரித்தான். வியக்கத்தக்க பராக்கிரமமுள்ள அரசனாலும் சண்டையில் விருப்பமுள்ள போர்வீரராலும் கலக்கப்பட்ட அந்தப்பெருங்காட்டைவிட்டு ஸிம்மங்கள்ஓடின. பிறகு, அவ்விடத்தில் கூட்டங்கள் கலைந்தோடியும் கூட்டத்துக்கு முக்கியமானவைகள் அடிபட்டும் இருந்த மான்மந்தைகள் ஆவலினால் ஆங்காங்குச் சப்தஞ்செய்தன, ஓடித்திரிந்து மார்பு படபடவென்று துடி

ந்தசிலர் ஜலமில்லாத நதிகளையடைந்து ஜலத்தில் ஆசையைவிட்டு வருத்தமடைந்து பசியினாலும் தாகத்தினாலும் பீடிக்கப்பட்டுக் களைத்துப் பிரஜ்ஞைதப்பிப் பூமியில்விழுந்தனர். அங்கே பசியுள்ள புருஷ ஸ்ரேஷ்டர்களால் சிலமிருகங்கள் பக்ஷிக்கப்பட்டன. அந்தவனத்தில் சஞ்சரிக்கும் மற்றும்சிலர் நெருப்பைமூட்டி மாம்சங்களைப் பாகஞ் செய்து ஒழுங்காக அரைத்துப் புஜித்தனர். அங்கே பலமுள்ள சில மதயானைகள் ஆயுதங்களினால் அடிக்கப்பட்டுப் பயந்து துதிக்கை நுனிகளைச் சுரிக்கிக்கொண்டும், லத்தியைப் போட்டுக்கொண்டும், மூத்திரம் விட்டுக்கொண்டும், மிகுதியாக ரக்தத்தைப் பெருகிக் கொண்டும் விரைந்தோடின. அவ்விடத்திலுள்ள பெருங்காட்டானைகள் அநேக மனிதர்களைத் துவைத்தன. அந்தவனத்திலுள்ள ஸிம்மங்கள் ராஜாவினால் கொல்லப்பட்டபோது மிருகங்கள்நிறைந்த அந்த வனம் அம்புகளென்னும் மழைதாரைகளைப் பொழிகின்ற சேனையென்னும் மேகத்தினால் மறைக்கப்பட்டதாக விளங்கிறது.

---

## தொண்ணூற்றோராவது அத்தியாயம்.

---

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(துஷ்யந்தன் கண்ணுவாச்ரமம் போவது)

**அ**தன்பின், அனேகமாயிரம் மிருகங்களைக் கொன்றுவிட்டு, சேனை வாகனங்களுடன் அங்கே பட்டணத்துக்கு இரண்டுயோசனை தூரத்தில் ஸித்தர்களும் சாரணர்களும்வஸிப்பதும், திரண்டுநெருங்கின மேகம்போன்றதுமாகிய வனத்தைக் கண்டான். காட்டுமிருகங்களைத் துரத்தின களைப்பினால் சோர்ந்த ராஜா மிருகங்களைத் தொடர்ந்துகொண்டே வேகமாகக் குதிரைகளை ஓட்டினான்.

பிறகு, அந்தஅரசன் ஒரு மானைத்தொடர்ந்துகொண்டு வேறு வனம்புகுந்தான். உயர்ந்த பலமுள்ளராஜா தனியாகவே பசி தாகம் சிரமங்களுள்ளவனாகி அவ்வனத்தின் அருகேசென்று ஒரு பெரிய பாழான இடத்தையடைந்தான். அவ்வரசன் அதையுந்தாண்டி உயர்ந்த ஆச்ரமங்களுடையதும், மனத்தை மகிழ்விப்பதும், பார்ப்பதற்கு மிக இனியதும், குளிர்ந்தகாற்றுள்ளதும், புஷ்பங்களுள்ள மரங்கள் நிறைந்ததும், வெகுஸுகமானபுல்பிரதேசமுடையதும், விசாலமானதும், இனிமையான குரலுள்ளபறவைகளும் குயில்களும் கூவிக் கொண்டிருப்பதும், சுவர்க்கோழிகள் கத்தப்பெற்றதும், வளர்ந்த

கிளைகளுள்ளவையும் ஸுகமான நிழலுள்ளவையுமான மரங்களினால் மூடப்பட்டதும், பூமியெல்லாம் வண்டுகள் மொய்த்துக்கொண்டிருப்பதும், மிக்க அழகுள்ளதுமாகிய வேறொரு பெரியவனத்திற்குச் சென்றான்.

அந்தவனத்தில் பூவாமலும் காய்க்காமலும் ஒருமரமுமில்லை; முள்ளுள்ள மரமுமில்லை; வண்டுகிரம்பாதமரமுமில்லை; பக்ஷிகள் ஆரவாரிக்கப்பெற்றதும், புஷ்பங்களினால் மிக்கஅலங்காரமுள்ளதும், எல்லாக்காலங்களிலும் புஷ்பமுள்ளவையும் சுகமான நிழலுள்ளவையுமான மரங்களினால் மறைக்கப்பட்டதும், மனத்தை கவர்கின்றதுமான அந்தச் சிறந்தவனத்தில் சிறந்த வில்லாளியாகிய அரசன் பிரவேசித்தான். அவ்வனத்தில் புஷ்பித்த கிளைகளோடுகூடிய அம்மரங்கள் காற்றினால் அசைக்கப்பட்டு அநேகவர்ணமுள்ள பூமாரியை அடிக்கடி பொழிந்தன. ஆகாயத்தை அளாவியவையும் இனிய குரலுள்ள பக்ஷிகள் கூவுகின்றவையுமாகிய அந்தக்காட்டிலுள்ள மரங்கள் பலநிறங்களான புஷ்பங்களால் வஸ்திரங்களை அணிந்துகொண்டவைபோலச் சோபித்தன. அங்கே புஷ்பங்களின்மிகுதியினால் சாய்ந்திருக்கும் அம்மரங்களின் தளிர்களில் மதுவில் ஆசைகொண்டவண்டுகள் இனிய சப்தங்களைச் செய்துகொண்டிருந்தன. அவ்விடத்தில் புஷ்பங்கள் சிதறிக்கிடந்ததனால் அலங்கரிக்கப்பட்டவையும் கொடிப்பந்தல்களினால் மறைக்கப்பட்டவையும் மனத்துக்கு விருப்பத்தை விருத்திசெய்கின்றவையுமான அநேக இடங்களைப்பார்த்து, மிகுந்த பராக்கிரமசாலியான அவ்வரசன் சந்தோஷமடைந்தான். ஒன்றுக்கொன்று கிளைகள் உரைந்துகொண்டு புஷ்பங்கள் நிறைந்து இந்திரனுடைய த்வஜத்துக்கொப்பாயிருந்த மரங்களினால் அவ்வனம் அழகாயிருந்தது. அந்தவனம் ஸித்தர்கள் சாரணர்கள் கந்தர்வர்கள் அப்ஸரஸுகள் மதமுள்ள வானரர்கள் கின்னரர்கள் இவர்களின்கூட்டங்களினால் நிரம்ப வியாபிக்கப்பட்டிருந்தது. ஸுகமான குளிர்ச்சியுள்ளதும் இனிய மணமுள்ளதுமான புஷ்பங்களின் மதுக்களை வஹித்துக்கொண்டு வருங்காற்று அந்தவனத்தில்ஸஞ்சரிக்கும்போது விளையாடுவதற்காக மரங்களைத் தாவுவதுபோலிருந்தது. இவ்வகையான குணங்கள் நிறைந்ததும் நதியின்பக்கத்திலுள்ள ஊற்றல்களிலுண்டாயிருப்பதும் த்வஜஸ்தம்பம் அலங்கரித்ததுபோல் அழகியதுமாகிய வனத்தை அவ்வரசன் பார்த்தான்.

மிகக் கலகலப்பான பக்ஷிகளோடுகூடிய அவ்வனத்தைப் பார்த்துக்கொண்டிருக்கையில், அழகியதும் மனத்துக்கு இனியதும் அநேக

விருக்ஷங்கள் நிரம்பியதும், அக்னிஹோத்ராக்னிகள் ஜ்வலித்துக்கொண்டிருப்பதுமாகிய சிறந்தஆஸ்ரமம் ஒன்றைக்கண்டான். ராஜலக்ஷ்மியையுடையஅவ்வரசன், யதிகளும் பிறப்புமுதல் பிரம்மசாரிகளான வாலகில்யர்களென்னும ரிஷிகளும் பலரிஷிக்கூட்டங்களுமுள்ளதும் அநேக அக்னிஹோத்ர சாலைகளுள்ளதும் புஷ்பங்கள் மெத்தைகளைப்போற பரவப்பெற்றிருப்பதும், அநேகம் பெரியதிட்டுக்களினால் விசேஷமாகச் சோபிக்கின்றதுமாகிய அந்த நிகரற்ற ஆஸ்ரமத்தை அப்போது கௌரவித்தான். ஜனமேஜயராஜாவே ! அருகில்பரிசுத்தமாயும் ஆரோக்கியமான ஜலமுள்ளதாயும் அநேக பக்ஷிக்கூட்டங்கள் நிரம்பினதாயும் ஆஸ்ரமத்திறகு அழகையுண்டாக்குவதாயுமிருக்கிற மாலினிநதியையும் அதன் அருகிலுள்ள துஷ்டமிருகங்கள்கூடச் சாந்தமாக இருப்பதையும்கண்டு அவன் சந்தோஷமடைந்தான். வீரர்களில் தனக்கொப்பாரில்லாதவனாகிய அந்த ஸ்ரீமான், தேவலோகத்துக்கொப்பானதும் எப்பக்கங்களிலும் மிக்கரமணீயமுள்ளதுமான அந்த ஆஸ்ரமத்திற்குப்போனான். ஆஸ்ரமத்தின் அருகே ஓடுவதும், புண்ய தீர்த்தமுள்ளதும், அங்குள்ள பிராணிகளெல்லாவற்றிற்கும் தாயைப் போலநிறபதும், மணலகளில் சக்கரவாகபக்ஷிகளிருக்கப்பெற்றதும் கரையிலுள்ள மரஙகளின் புஷ்பங்களையும் நுரைகளையும் அடித்துக் கொண்டுபோவதும்,கின்னரக்கூட்டங்கள் வசிக்குமிடங்களுள்ளதும், (குரங்குகளும்,) கொண்டைமுசுறுகளும் நிரம்பினதும், பரிசுத்தமான வேதாத்தியயன சப்தமுள்ளதும், மணறகுன்றுகளினால் அழகாயிருப்பதும், மதயானைகளும் புலிகளும் மஹாஸர்ப்பங்களும் நிரம்பினதுமாகிய அந்தநதியையும் கண்டான். அந்த நதியின்கரையில் அழகியதும் மஹாரிஷிக்கூட்டங்களினால் ஆஸ்ரயிக்கப்பட்டதுமாகிய, முக்காலமுமறிந்த மஹாத்மாவான கண்ணுவரிஷியின் சிறந்த ஆஸ்ரமத்தையும் கண்டான். ஆஸ்ரமத்தோடுசேர்ந்த நதியையும் ஆஸ்ரமமிருக்கும் இடத்தையும்கண்டு அவ்வரசன் அப்போதே உள்ளேபோவதற்கு விருப்பங்கொண்டான். திட்டுக்களோடுகூடியதும் அழகானகரையுள்ளதுமாகிய மாலினிநதியினால் அலங்கரிக்கப்பட்டதனால், கங்கையினால் சோபிக்கின்ற நரநாராயணாஸ்ரமம்போன்றதும், மயில்கள் கர்வத்துடன் சப்திப்பதுமான அந்தப்பெரியவனத்தில் பிரவேசித்தான். அந்தப்புருஷஸ்ரேஷ்டன்மைசத்ரரதமென்னும் குபேரனதுஉத்தியானவனத்துக்கொப்பாகிய அந்தவனத்துக்குட்சென்று எல்லாக் குணங்களும் மிகநிரம்பினவரும் பிரம்மதேஜஸினால் கண்ணெடுத்துப் பார்க்கக்கூடாதவரும் தபஸையே தனமாகவுடையவருமாகிய கஸ்யப

கோத்திரத்திற் பிறந்த கண்ணுவமஹரிஷியைக்காண்பதற்காக, குதிரைகளும் யானைகளும் காலாட்களும் நிறைந்ததும் கொடிகள் பிரகாசிக்கின்றதுமான தன்சேனையை வனத்திற்கு வெளியிலேயேநிறுத்தி, 'நான் ரஜோகுணமற்றவரும் தவத்தையே தனமாகவுடையவருமாகிய கண்ணுவமஹரிஷியைக் காண்பதற்குப் போகப்போகிறேன். நான்வருமளவும் இங்கே நிற்கவேண்டும்' என்றுகட்டளையிட்டான். மனிதர்களுக்கு ராஸ்வரனாகிய அவ்வரசன் நந்தனவனம்போல் விளங்குகின்ற அந்தவனத்தையடைந்ததும் பசிதாகங்களை விட்டான்; பூர்ணமான ஆனந்தத்தையும் அடைந்தான்.

பிறகு, அவ்வரசன், தவமேஉருவங்கொண்டவரும்தோஷமில்லாதவருமாயிருக்கிற அந்தரிஷியைத்தரிசிக்கக்கருதி, வில் கிரீடம்முதலிய ராஜசின்னங்களைநீக்கிவிட்டுப் புரோஹிதர்களுடனும் மந்திரிகளுடனும்அந்தஉத்தமமான ஆஸ்ரமத்தை அடைந்தான். வண்டுகளினுடைய சிறந்தபாட்டினால் சப்தமுள்ளதும், அநேகவிதபக்ஷிக்கூட்டங்கள் நிரம்பினதும், பிரம்மலோகத்துக்கு ஒப்பானதுமாகிய அந்த ஆஸ்ரமத்தைக்கண்டு, அந்தராஜா ஆச்சரியத்தினால் மலர்ந்தகண்களுடன் மகிழ்வுற்றான். அங்கே யாகங்கள் செய்யப்படும்போது ரிக்வேதிகளுட் சிறந்தவர்களால் பதங்களோடும் கிரமங்களோடும் உச்சரிக்கப்பட்ட ரிக்வேதமந்திரங்களை அந்தப் புருஷஸ்ரேஷ்டன் கேட்டான். யஜ்ஞவித்தையின் அங்கங்களாகிய கல்பஸூத்திரமுதலியவற்றை அறிந்தவர்களும், யஜுர்வேதம்தெரிந்தவர்களும், மதுரமான ஸாமகானஞ்செய்கிறவர்களும், 'பாருண்டம்' என்னும்ஸாமகானத்திலும் அதர்வசிரஸென்னும் அதர்வணவேதோபநிஷத்திலும், சிறந்தவர்களும், உறுதியானதவமுள்ளவர்களும், மனத்தையும் இந்திரியங்களையும் அடக்கினவர்களுமாகிய ரிஷிகளினால் அந்தஆஸ்ரமம் அப்போது சோபித்தது. அதர்வணவேதத்தில் தேர்ந்தவரும், 'பூதயஜ்ஞம்' என்னும் ஒருவிதஸாமத்தைப்பாடுகிறவர்களும் ஆகிய அந்த ரிஷிகள் பதத்தோடும் கிரமத்தோடும் ஸம்ஹிதையென்னும் வேதபாகத்தைச் சொல்லிக்கொண்டிருந்தனர். சொற்களின் ஸ்வரவர்ணசுத்தியுடன் ஓதுகின்ற இன்னும் அநேகம்பிராமணர்களினால் வேதகோஷம்செய்யப்பட்ட அந்தஆஸ்ரமம் இரண்டாவது பிரம்மலோகம் போல அழகுள்ளதாக இருந்தது. யஜ்ஞத்தில் தர்ப்பைபரப்புவது முதலான செய்கைகளையறிந்தவர்களும், [1]கிரமம், [2]சிக்ஷை இவற்றில்

1 வேதபதங்களைக் கோத்துச்சொல்லுவது.

2 ஸ்வரம் பகுத்து முதலியவற்றின் லக்ஷணம்.

நிபுணர்களும், [1]நியாயசாஸ்திரத்தில் சரியானஞானமும் ஆத்ம ஞானமும் நிரம்பினவர்களும், வேதத்தின் கரைகண்டவர்களும், மீமாம்ஸைதெரிந்தவர்களும், அநேகவிதமானவாக்கியங்களின்தொகுதிகளிலும் அன்வயங்களிலும் நிபுணர்களும், வைசேஷிகசாஸ்திரத்தின் விஷயம் தெரிந்தவர்களும், மோக்ஷதர்மத்தை அவலம்பித்தவர்களும், ஒருபக்ஷத்தை ஸ்தாபிப்பதையும் இதரபக்ஷத்தைஆக்ஷேபிப்பதையும் தமக்குவந்த ஆக்ஷேபத்தைவிலக்கி ஸித்தாந்தம் செய்வதையும் உண்மையான விஷயங்களையும் தெரிந்தவர்களும், சொல்லிலக்கணம் யாப்பிலக்கணம் சொற்கள்வந்தகாரணங்கள் இவை தெரிந்தவர்களும், [2]காலமறிவதில் நிபுணர்களும், பொருள்களும் அவற்றின்செய்கைகளும் குணங்களும் தெரிந்தவர்களும், ஒவ்வொன்றுக்கும் காரியத்தையும் காரணத்தையும் அறிந்தவர்களும், பறவைகள் வானரங்கள் இவைகளுடைய சப்தங்களை அறிந்தவர்களும், விரிவான கிரந்தங்களை ஆதாரமாகக்கொண்டவர்களும், லோகாயதம் அறிந்தவர்களில் சிறந்தவர்களுமாகிய ரிஷிகளால் எங்கும் எதிரொலியுண்டாகும்படி உச்சரிக்கப்படும் வித்யாகோஷத்தைச் செவியுற்றான்.

எதிரிகளான வீரர்களைச் சங்கரிப்பவனாகிய அவ்வரசன் அந்த அந்தஇடங்களிலும் நியமமுள்ளவர்களும், உறுதியான தவமுள்ளவர்களும், ஜபஹோமங்களைச் செய்பவர்களுமாகிய பிராமணர்களைக் கண்டான். அவர்கள் பிரயாசப்பட்டுச்செய்த அழகும் விசித்திரமுமான ஆஸனங்களைக்கண்டு அரசன் வியப்புற்றான். பிராமணர்களாற் செய்யப்பட்ட தேவாலயபூஜையைக்கண்டு அந்த ராஜஶ்ரேஷ்டன் தன்னைப் பிரம்மலோகத்திலிருப்பவனாக நினைத்தான். காஸ்யபருடைய தவத்தினால் காப்பாற்றப்பட்டதும் தபோவனத்துக்குரிய குணங்கள் நிரம்பினதும் க்ஷேமகரமுமான அந்தச்சிறந்த ஆஶ்ரமத்தைப் பார்ப்பதில் அவனுக்கு ஆசைநிரம்பவில்லை. அந்தவீரன் மந்திரிபுரோகிதர்களுடன்கூடினவனாகி உறுதியான நியமமுள்ளவர்களும் தவமே தனமாகவுடையவர்களுமாகிய ரிஷிகளால் நாலுபக்கமும் சூழப்பட்டதும், ஏகாந்தமானதும், மனத்தை மிகவும் கவர்கின்றதும், புண்ணியமுமாகிய கண்வருடைய பர்ணசாலையில் பிரவேசித்தான்.

---

[1] தர்க்கசாஸ்திரத்தில் கௌதமரால் சொல்லப்பட்டது நியாயம்; கணாதரால் சொல்லப்பட்டது வைசேஷிகம்.

[2] சோதிஷம்.

## தொண்ணூற்றிரண்டாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(கண்ணுவராஸ்ரமத்தில் சகுந்தலைக்கும் துஷ்யந்தனுக்கும் ஸம்பாஷணை.)

பிறகு, சிறந்தபுஜபலமுள்ள அவ்வரசன், அந்த மந்திரிகளையும் நிறுத்திவிட்டுத் தனிமையாகப்போனான். அந்த ஆஸ்ரமத்தில் கடுமையான தவமுள்ள அந்த ரிஷியைக்காணவில்லை. அவன் அந்தரிஷியைக் காணாமையால், ஆஸ்ரமத்தில் யாருமில்லாமலிருப்பதைக்கண்டு, வனமுழுதும் எதிரொலியுண்டாகச் செய்கிறவன்போல், 'யார் இங்கே?' என்று உரக்கக்கூப்பிட்டான். அவனுடைய அந்த ஒலியைக்கேட்டு, லக்ஷ்மியே உருவங்கொண்டு வந்தாற்போன்றவளும் ரிஷிவேஷந் தரித்தவளுமாகிய ஒருகன்னிகை அவ்வாஸ்ரமத்தினின்றும் வெளிப்பட்டாள். ஜனமேஜயரே! கறுத்த கண்களையுடைய அந்தப்பெண், பூஜிக்கத்தக்கவனும் எல்லாரையும் ஆளுகிறவனுமாகிய அந்தத் துஷ்யந்தமகாராஜா அதிதியாக வந்திருப்பதைக்கண்டு மிகுந்த சந்தோஷமடைந்தாள். அழகும் பருவமும் நிரம்பினவளும், சிறந்த ஒழுக்கமும் ஆசாரமுமுள்ளவளும், மங்களமான லக்ஷணங்கள் சேர்ந்தவளுமாகிய அந்தப்பெண் தாமரைப்புஷ்பம்போல் விசாலமான கண்களும் அகன்றமார்பும் சிறந்தபுஜமும் ஸிம்மம்போன்ற தோள்களும் நீண்ட கைகளுமுடையவனும் எல்லா நல்லலக்ஷணங்களும் பொருந்தினவனுமாகிய அவ்வரசனைநோக்கி இனியசொற்களினால் தெளிவாகப் பேசினாள். 'உமக்கு நல்வரவு' என்று சீக்கிரமாகச் சொன்னாள். ஜனமேஜயரே! ஆசனங்கொடுத்து மரியாதைசெய்து அர்க்கியபாத்தியங்களினால் பூஜித்து ராஜாவை க்ஷேமத்தையும் ஆரோக்கியத்தையும் விசாரித்தாள். நியாயப்படி பூஜித்துக் குசலப்பிரஸ்னம்செய்த பிறகு மலர்ந்தமுகத்துடன், 'என்னகாரியம் செய்யவேண்டும்?' என்றும், 'நீர் என்னகாரியம் செய்யக்கருதி ஆஸ்ரமத்திற்கு வந்திருக்கிறீர்? இப்போது மஹரிஷியின் இந்தப்புண்ணியாஸ்ரமத்திற்கு வந்த நீர் யாவர்?' என்றும் கேட்டாள்.

பிறகு, சாஸ்திரப்பிரகாரம் பூஜிக்கப்பெற்ற அவ்வரசன், எந்த அவயவங்களிலும் குற்றமில்லாதவளும், இனிமையாகப் பேசுகிறவளுமாகிய அந்தப் பெண்ணைப்பார்த்து, 'தாமரைப்புஷ்பம்போன்ற கண்களையுடையவளே! நான் இலிலன்என்னும் பிரஸித்திபெற்ற மஹாத்

மாவான ராஜரிஷியின்புத்திரன். துஷ்யந்தனென்பது என்பெயர். இது நிஜம். மஹானுபாவராகிய கண்ணுவமஹரிஷியை உபாஸிப்பதற்கு நான் வந்திருக்கிறேன். அன்புள்ளவளே! அழகானவளே! அந்தப் பகவான் எங்கேபோயிருக்கிறார்? அதை எனக்குச்சொல்' என்று கேட்க, சகுந்தலை, 'பகவானாகிய என்பிதா பழங்கள் கொண்டுவருவதற்காக ஆஶ்ரமத்தைவிட்டுப் போயிருக்கிறார். சற்றுநேரம் இரும்; அவர்வந்தபின் பார்க்கலாம்' என்று சொன்னாள். அந்தச் சகுந்தலை அவ்வாறு சொல்லியதைக்கேட்ட அந்த அரசன், அந்த ரிஷியைக் காணாமையால், அழகுள்ளவளும், மனோஹரமான சிரிப்புள்ளவளும், சரீரத்தினாலும் தபஸினாலும் அடக்கத்தினாலும் சோபிக்கிறவளும், அழகும் பருவமும் நிரம்பினவளுமாகிய அந்த உத்தமமான பெண்ணைப்பார்த்து, 'அழகான நிதம்பமுள்ளவளே! நீ யார்? யாருடைய பெண்? எதற்காக வனத்தில்வந்தாய்? அழகானவளே! இப்படி அழகும்குணமுமுள்ள நீ எங்கிருந்துவந்திருக்கிறாய்? அழகானவளே! உன்னைப் பார்த்தமாத்திரத்தில் நீ என்மனத்தை அபகரித்துவிட்டாய். உன்னை நான் தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். ஆதலால், அழகியே! எனக்குச்சொல். அளவற்ற ஸௌந்தர்யமுள்ளவளே! காத்திருக்கிறேன்; ஒன்றுசொல்லவும் நினைக்கிறேன். யானைத்துதிக்கைபோன்ற தொடைகளையுடையவளே! பெண்ணரசியே! என்சொல்லைக்கேள். நான் ராஜரிஷிவம்சத்திற் பிறந்தவன். அதிலும் விசேஷமான பூருவம்சத்திற்பிறந்தவன். நான் துஷ்யந்தனென்பவன். பெண்ணரசியே! இப்போது உன்னை நான்வரிக்கிறேன். எனக்கு க்ஷத்திரியப் பெண்ணைத்தவிர வேறு ரிஷிபுத்திரிகளிடத்திலும், தாழ்ந்த பெண்களிடத்திலும், உயர்ந்தபெண்களிடத்திலும் மனம் ஒருபொழுதும் செல்வதில்லை. இனிமையாகப்பேசுகிறவளே! ஆதலால், என்னைக் கட்டுப்பட்டமனமுள்ளவனென்று அறி. எனக்கு உன்னிடம் அபிப்பிராயம்உண்டானதனால் நீ க்ஷத்திரியப்பெண்ணாகை இருக்கவேண்டும். நீயார்? சொல்; பயந்தவளே! என்மனம் பிராமணப்பெண்ணிடம்செல்வதற்கு யத்தனப்படாது. நீண்ட கண்களையுடையவளே! உன்னைநான் விரும்புகிறேன். விருப்பமுள்ள என்னை நீயும் விரும்பக்கடவாயாக; விசாலமான கண்களையுடையவளே! ராஜ்யத்தைஅனுபவி. வேறுவிதமாக எண்ணாதே' என்று சொன்னான். ஆஶ்ரமத்தில் அந்தராஜாவினால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்தக்கன்னிகை, சிரித்துக்கொண்டு அவனைநோக்கி, மிக இனிமையானசொற்களுள்ள பின்வரும் வாக்கியத்தைச் சொன்னாள்.

'துஷ்யந்தராஜாவே! உயர்ந்ததவமுள்ளவரும் த்ருடமானசித்தமுள்ளவரும் தர்மந்தெரிந்தவரும் மஹாத்மாவுமாகிய பகவானான கண்ணுவர் என்னைப் பெண்ணாக நினைத்திருக்கிறார். ராஜஸ்ரேஷ்டரே! எனக்கு என்விஷயத்தில் ஸ்வதந்திரமில்லை. கண்ணுவர் எனக்கு எஜமானரும் பிதாவுமாக இருப்பவர். உமது காரியத்தைப்பற்றி அவரையேகேளும். தகாததைச்செய்வது ஸரியன்று' என்றாள். 'பெரியபாக்கியமுள்ளவளே! உலகமெல்லாம் பூஜிக்கத்தக்கபகவானாகிய கண்ணுவர் ஊர்த்வரேதஸ்; தர்மதேவதையே ஒழுக்கத்தை விட்டு விலகினாலும்விலகும்; அந்தக்கடுமையான நியமமுள்ள கண்ணுவர் விலகார். பெண்ணரசியாகிய நீ அவருக்குப் பிறந்த பெண்ணென்பது எவ்வாறு? இந்தவிஷயத்தில் எனக்குப் பெரியஸம்சயம் இருக்கிறது. அதை எனக்கு நீ நிவிர்த்திசெய்யவேண்டும்' என்று துஷ்யந்தன் சொன்னான். சகுந்தலை, 'ராஜாவே! நான் கண்ணுவரிஷியின் பெண்ணாக இருக்கின்றவிஷயம் முன்னால் எவ்வாறு நடந்ததென்பதைப்பற்றி எனக்குத் தெரிந்தவகையை விவரமாகச்சொல்லுகிறேன்; கேளும். எவன் தான் ஒருவனாகஇருக்க வேறொருவனாகப் பெரியோர்களிடம் சொல்லுகிறானோ அவன் பாபத்தினால் மூடப்பட்டவனும் மூடனும் தன்னை அபகரித்த திருடனுமானவன். ஒருரிஷி, என் பிதாவினிடம்வந்து என் ஜனனத்தைப்பற்றி, 'நீர் ஊர்த்வரேதஸாக இருக்கிறீர். இந்தச்சகுந்தலை உமக்குப்புத்திரியாவது எவ்வாறு? உமக்கு இவள் எவ்வாறுஜனித்தாள்? உண்மையை எனக்குச் சொல்லும்' என்றுகேட்டார். அரசரே! அவருக்குக் கண்ணுவபகவான் என்ன உத்தரம் சொன்னாரோ அதைக்கேளும். 'முற்காலத்தில் விசுவாமித்திரர் கடுந்தவம்செய்து தேவக்கூட்டங்களுக்கெல்லாம் பிரபுவாகிய இந்திரனுக்கு மிக்கபயத்தை உண்டுபண்ணினார். 'தவத்தினால் ஜ்வலிக்கின்ற சக்தியுள்ள இவர் என்னை இந்திரபதத்திலிருந்து தள்ளிவிடுவர்' என்று விஸ்வாமித்திரருக்கு அஞ்சின இந்திரன் மேனகையைநோக்கி, 'மேனகையே! நீ அருமையான குணங்களினால் அப்ஸரஸுக்களுக்கெல்லாம் மேலாகஇருக்கிறாய். அழகானவளே! எனக்கொரு நன்மைசெய். நான் சொல்லுவதைக்கேள். சூரியனைப்போல் பிரகாசித்துக்கொண்டிருக்கிற இந்தப் பெருந்தவமுள்ள விசுவாமித்திரர் கடுந்தவஞ்செய்து என் உள்ளத்தை நடுங்கச் செய்கிறார். அழகிய இடையுள்ள மேனகையே! இந்த விசுவாமித்திரர் சுத்தமான மனத்தோடு யாராலும் கலக்கமுடியாதவராக உக்கிரமான தவத்திலிருக்கிறார்; அவர் என்னை ராஜ்யத்தைவிட்டுத் தள்

ளாமலிருக்கும்படி, நீ போய் அவரைமயங்கச்செய். அவர் தவத்து க்கு இடையூறுசெய்து என்னுடையமுடிவான விருப்பத்தை நிறை வேற்று. அழகானவளே! ரூபத்தினாலும் யௌவனத்தினாலும் இனிமையினாலும் செய்கையினாலும் புன்னகையினாலும் சொற்களி னாலும் மயக்கி, அவரைத் தவத்திலிருந்து விலக்கிவிடு; இஃதுஉன்னு டையபொறுப்பு' என்றுசொன்னான். அதற்குமேனகை, 'அந்தப் பகவான் மிகுந்தமகிமையும் கடுந்தவமும் உள்ளவர்; கோபக்காரர்; அவர் அப்படிப்பட்டவரென்பதை நீங்களும் அறிவீர்கள். அந்த மஹாத்மாவின் சக்திக்கும் தவத்திற்கும் கோபத்திற்கும் நீங்களும் பயப்படுகிறீர்கள். நான் எவ்வாறு நடுங்காமலிருப்பேன்? மிகுந்த பிரபாவமுள்ள வஸிஷ்டரைப் பிரியமான புத்திரர்களைவிட்டு அவர் பிரித்தவர்; முதலில் க்ஷத்திரியஜாதியிற்பிறந்து தமதுவன்மையினால் பிராமணரானவர்; தமக்கு ஸ்நானத்திற்காக நிரம்பின ஜலத்தினால் இறங்கிச் செல்லமுடியாத நதியையுண்டுபண்ணினவர். அதைத்தான் இவ்வுலகத்தில் மிகுந்தபுண்ணியமுள்ள கௌசிகிநதியென்று ஜனங் கள் அறிகின்றனர். முன்னே பஞ்சக்காலத்தில் இந்தமஹாத்மாவினு டைய பாரியையை வேடனாகப்போன [1]மதங்கனென்னும் தர்மிஷ்ட னை ராஜரிஷி காப்பாற்றினான். அந்தப்பஞ்சகாலம் கடந்தபின் திரும்பவும் ஆஸ்ரமத்திற்குவந்து ஸமர்த்தராகிய அந்தமஹரிஷி [2] பாரையென்று அந்தநதிக்குப் பெயரிட்டார். மனமகிழ்ந்து தாமே அவ்விடத்தில் சண்டாளனுக்கு யாகம்செய்வித்தார். தேவேந்திர ரே! அவரிடம்பயந்து அந்தச்சண்டாளனுடைய யஜ்ஞத்தில் ஸோம ரஸம் பானஞ்செய்கிறதற்கு நீங்களும் போனீர்கள். அவர் கோபங் கொண்டு நக்ஷத்திரங்கள்நிறைந்த வேறுலோகத்தையும் ஸ்ருஷ்டித் தார். [3] ப்ரதிஸ்ரவணம்முதலிய நக்ஷத்திரங்கள் அவர் செய்தவை.

---

1 திரிசங்கு. 2 நிரம்பினது.

3 ப்ரதிஸ்ரவணம் என்பது ஸ்ரவணத்துக்கெதிராக விச்வாமித்திரர் படைத்த நக்ஷத்திரமாக இருத்தல்வேண்டும்.

அனுஷம் கேட்டை மூலம் பூராடம் உத்தராடம் இவ்வைந்துநக்ஷத்திரங் களும் ஒருகொத்தாகத் தெற்கிலும், மற்ற இருபத்திரண்டு நக்ஷத்திரங்களும் தனித்து வடக்கிலுமிருப்பதுபற்றி அதிக எண்ணுள்ளநக்ஷத்திரங்களை முத லிற் கூறுவதற்காக ஸ்ரவணத்தை முதலாகக்கூறினதாகக்கொள்க.

வால்மீகிராமாயணம், பாலகாண்டம், ௬௦ - வது ஸர்க்கம், ௨௦ - வது ஶ்லோகம்முதல் ௨௩ - வது ஶ்லோகம்வரையில், விஶ்வாமித்ரர் கோபமூண்டு, ஸப்தரிஷிகளையும் நக்ஷத்திரவம்சத்தையும் தக்ஷிணமார்க்கத்தில் வேறாகப் படைத்து, மறுபடியும் கோபத்துடன், 'வேறுஇந்திரனையாவது படைப் பேன்; அல்லது இந்திரன் இல்லாமலேயாவது லோகம்இருக்கட்டும்' என்று

குருவாகிய வஸிஷ்டருடைய சாபத்தால் கெடுக்கப்பட்ட திரிசங்குவுக்கு அபயங்கொடுத்தார்.

ராஜரிஷியாகிய கௌசிகர் பிரம்மரிஷியின் சாபத்தை எவ்வாறு நிவிர்த்திப்பது என்று அவமதித்து, தேவர்கள் அந்த யஜ்ஞத்தின் கருவிகளை அழித்தனர். அந்தப் பெருஞ்சக்தியுள்ளவரும் ஸ்வதந்திருமான விசுவாமித்திரர் வேறு யாகக்கருவிகளைப் படைத்தார். மிகுந்த தவமுள்ள அவர் த்ரிசங்குவை அப்போதே சுவர்க்கத்துக்கு அனுப்பினார். அவருடைய செய்கைகள் இப்படிப்பட்டவை. அவரிடத்தில் நான் மிகவும் நடுங்குகிறேன். பிரபுவே! அவர் கோபித்து என்னை எரிக்காமலிருக்கும்வண்ணம் எனக்குக் கட்டளையிடுங்கள். அவர் மகிமையினால் உலகங்களை எரித்துவிடுவார்; காலால் பூமியை நடுங்கச்செய்வர்; மஹாமேருவை எறிந்துவிடுவர்; வேகமாகத் திசைகளைச்சுழற்றிவிடுவர். அவ்விதமான தவமுள்ளவரும் எரிகிற நெருப்பைப்போன்றவருமாகிய அந்த ஜிதேந்திரியரான விசுவாமித்திரரை எங்களைப்போன்ற ஒருபெண் எவ்வாறு தொடுவாள்; தேவேந்திரரே! அக்கினியையே முகமாகவும் சூரியசந்திரர்களைக் கண்களாகவும் யமனைநாவாகவுங்கொண்டு ஜ்வலிக்கின்றவரை எங்களைப்போன்றவள் அணுகுவது எப்படி? யமனும் சந்திரனும் மஹரிஷிகளும் ஸாத்

---

தியர்களும் அவரை வணங்குகின்றனர். நக்ஷத்திரசங்கிரமண மரியாதைகளைக் கடந்து, தேவர்களையும் கோபத்தினால் ஸ்ருஷ்டிக்கத்தொடங்கினர். என்பது சொல்லப்பட்டிருக்கிறது.

அதற்கு, கோவிந்தராஜீயவ்யாக்யானத்தில் 'வடக்கில் த்ருவன் சலிக்காமலிருப்பதுபோல் தெற்கில் திரிசங்குஇருக்கட்டும்; த்ருவனைச்சுற்றி ஸப்தரிஷிகளிருப்பதுபோலவே திரிசங்குவைச்சுற்றியும் ஸப்தரிஷிகளுமிருக்கட்டும்; அங்கே இருபத்தேழுநக்ஷத்திரங்களிருப்பதுபோலவே இங்கும் இருபத்தேழுநக்ஷத்திரங்களிருக்கட்டும்; இதாநக்ஷத்திரக்கூட்டமும் அங்கிருப்பதுபோலவே இங்குமிருக்கட்டும் என்று ஸங்கற்பித்துக்கொண்டு இந்தலோகத்திற்கு இந்த இந்திரனைத்தள்ளி வேறு இந்திரனையாவது ஸ்ருஷ்டிப்பேன்; லோகத்தில் இந்திரனை இல்லாமற்செய்தாலும் செய்வேன்; இந்திரனில்லாத மற்றொருலோகத்தைப் படைத்தாலும்படைப்பேன்' என்று ஆரம்பித்தார் என்றிருக்கிறது.

௨௯, ௩0, ௩௧, ௩௨ - வது ஶ்லோகங்களில் விசுவாமித்ரர் தாம்படைத்த நக்ஷத்திரங்கள் முதலியயாவும் உலகமுள்ளவரையில் அழியாமலிருக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ள, பிரம்மாதிதேவர்கள் 'அவ்வாறே இப்போதுள்ள நக்ஷத்திரஸஞ்சாரமார்க்கத்திற்குவெளிப்பட்டு அவை சாஶ்வதங்களாக இருக்கட்டும்; அவற்றின்நடுவில் திரிசங்குமட்டும் தலைகீழாகத் தேவதையைப்போற் பிரகாசித்துக்கொண்டு நக்ஷத்திரரூபமாக இருக்கட்டும்' என்றுசொன்னதாகவும் சொல்லியிருக்கிறது.

இங்கு பாரதத்திலும் நக்ஷத்திரங்கள்நிறைந்த மற்றொருலோகத்தைப் படைத்தார் என்றதனால், முன்னிருந்தநக்ஷத்திரங்களுக்கெதிராக எல்லாநக்ஷத்திரங்களையும் விஶ்வாமித்ரர் படைத்ததாக ஏற்படுகிறது.

தியர்களென்னும் தேவர்களனைவரும் வாலகில்யர்களெல்லோரும் எவருடைய மஹிமைக்கு நடுங்குகின்றனரோ அவரிடம் என்னைப்போன்றவள் எவ்வாறு பயப்படாமலிருப்பள்? தேவராஜாவே! நீங்கள் இவ்வாறு சொன்னபின், அந்தரிஷியின் சமீபத்திற்கு நான் எப்படிச்செல்லாமலிருப்பேன்? தேவராஜாவே! என்னைக் காப்பாற்றுவதைப் பற்றியும் ஆலோசிக்கவேண்டும். நான் காப்பாற்றப்பட்டு உமதுகாரியத்தை முடிக்கக்கடவேன். தேவரே! நான் அந்தஇடத்தில் விளையாடிக்கொண்டிருக்கையில் என்வஸ்திரத்தை வாயு இஷ்டப்படி விலக்கிவிடவேண்டும். உங்கள் அனுக்கிரகத்தினால் அந்தக்காரியத்தில் எனக்கு மன்மதன் உதவியாக இருக்கவேண்டும். நான் அந்தரிஷியை வஞ்சிக்கும்போது அந்தக்காலத்தில் காட்டிலிருந்து வாஸனையுள்ளகாற்று வீசவேண்டும்' என்று சொன்னாள். 'அப்படியேயாகட்டும்' என்றுசொல்லி இந்திரனால் அந்தஏற்பாடு செய்யப்பட்டபின், மேனகை விசுவாமித்திரருடைய ஆஸ்ரமஞ்சென்றாள்.

---

## தொண்ணூற்றுமூன்றாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(சகுந்தலைபிறந்த வரலாறு.)

மேனகை இவ்வாறு கேட்டுக்கொள்ள, இந்திரன் வாயுவை அனுப்பினான். அந்தக்காலத்தில் வாயுவுடன்கூட மேனகை புறப்பட்டாள். பிறகு, பெண்களுட்சிறந்தவளாகிய மேனகை பயமுள்ளவளாகி, பாபங்களெல்லாம் நீறாகும்படி தவஞ்செய்துகொண்டிருந்த விசுவாமித்திரரை ஆஸ்ரமத்திற் கண்டாள். பிறகு, அவள் அவரை வந்தனஞ்செய்துவிட்டு ரிஷியின் அருகே விளையாடினாள். வாயு அவளுடைய சந்திரனுக்கொப்பான ஆடையை விலக்கினான். உயர்ந்த பெண்ணாகிய மேனகை அக்கினிக்கொப்பான தேஜஸையுடைய அந்த ராஜரிஷியான விசுவாமித்திரர் பார்க்கையில் வெட்கமுற்றுக் காற்றைநிந்தித்து, அந்த ஆடையையெடுப்பதற்காகத் துரிதமாகப் பூமியில் இறங்கினாள். அப்போது ரிஷிஸ்ரேஷ்டரான விசுவாமித்ரர் மாசற்றரூபமுள்ளவளும் வயஸிலும் அழகிலும் ஒப்பிடக்கூடாதவளுமான அந்தமேனகை வஸ்திரமில்லாமல்ஸங்கடப்பட்டுக்கொண்டு ஆடையில் ஆசைவைத்துப் பரபரப்புடனிருப்பதைக்கண்டார். அப்போது அந்தப்பிராமணஸ்ரேஷ்டர் அவளுடைய அழகையும்குணங்

களையுங்கண்டு காமத்துக்குட்பட்டு அவளோடு சேரஎண்ணங்கொண்டார்; அவளை அழைக்கவும் அழைத்தார். அந்தச்சிறந்தபெண்ணும் ஸம்மதித்தாள். அவர்களிருவரும் அங்கே அப்போது வெகுநீண்டகாலம்ஒருதினம்போல்இஷ்டப்பிரகாரம் ரமித்துக்கொண்டிருந்தனர். எப்போதும் தவத்திலிருந்த ரிஷியானவர் இவ்வாறு காமக்குரோதங்களை அடக்காதவராகி அநேக ஆயிரவருஷங்கள் கடந்துபோனதை நினைக்காமற்போனார். அந்தரிஷி வெகுகாலமாகச் சம்பாதித்த தவத்துக்கு அழிவைச் செய்துகொண்டார். தவமழிந்ததனாலேயும் அம்முனிவர் மோகத்தையடைந்தார். கோபமே இயல்பாகவுடையவரும் காய்கிழங்குகளைப் புசிப்பவருமாகிய முனிவர் பெண்மயக்கத்தில்அகப்பட்டுக்கொண்டு காலலம்புவதனால் ஜலத்தில் சப்தத்தைச் செய்துவிட்டு நதியின் உள்திட்டிலுள்ள ஆஸ்ரமத்திற்குச்சென்றார். தானும் விட்டுநீங்குவதற்கு விரும்பின மேனகை ஜலத்தின் சப்தத்தைக் கேட்டாள்.'தபவினால்ஜ்வலித்த மகிமையுள்ள இவர் போவதும் வருவதும் ஆகாசமார்க்கத்தாலேதான். இப்போது இவர் தவம்குறைந்துபோனதினுடைய அடையாளத்தை நான் அறிகிறேன். இப்போது நாம்போவது ஸரியன்று' என்றுசொல்லி, மேனகை ருதுஸ்நானஞ்செய்து, காமத்தின் விருப்பத்தில் அகப்பட்டவராகிய அம்முனிவரின் அருகிற்சென்றாள். அந்தரிஷி மாலினிநதியின்ஸமீபத்தில் அழகான இமயமலையின் சாரலினிடத்தே மேனகையினிடம்சகுந்தலையை உண்டுபண்ணினார். தெய்வப்பெண்ணுக்கு ஒப்பானவளும் எல்லா ஆபரணங்களும் அணிந்துகொண்டு அழகிய சயனத்தில் படுத்திருப்பவளுமான அந்தப் பெண்ணைப்பார்த்து, மேனகை, 'பெண்ணரசியே! நீ உக்கிரமான தவமுள்ள மஹாரிஷியின் வீரியமாகஇருக்கிறாய். *ஆதலால், தேவகாரியத்திற்காகவந்த நான் ஸ்வர்க்கம்செல்வேன்' என்று சொன்னாள். பிறந்தவுடன், அந்தக் கர்ப்பத்தை மாலினிநதியினருகில் விட்டுவிட்டு, தான்வந்த காரியத்தை நிறைவேற்றிக்கொண்ட மேனகை உடனே விரைவாக இந்திரஸபைக்குச் சென்றாள். சிங்கங்களும் புலிகளும் நிறைந்த ஜனமில்லாத காட்டிற் படுத்திருக்கும் அந்தக் குழந்தையைப்பார்த்துப் பக்ஷிகள் சுற்றிலும் சூழ்ந்துகொண்டன. 'குரூரமான மிருகங்கள் மாம்ஸத்தில் ஆசைவைத்து இந்தப் பெண்குழந்தையைக் கொல்லக்கூடாது'என்று பக்ஷிகள் அங்கேஅந்த மேனகையின் பெண்ணைக் காத்தன. ஸ்நானத்திற்காகப்போன நான்

* மானிடப் பெண்ணை ஸ்வர்க்கத்தில் எடுத்துக்கொண்டுபோகக்கூடாது என்பது கருத்து.

ஜனமில்லாத அழகானகாட்டில் பக்ஷிகளினாற் சூழப்பட்டுப் படுத்தி ருந்த இவளைக்கண்டேன். அழகாகக் கூவுகின்ற பக்ஷிகளெல்லாம் என்னைப்பார்த்துக் கிட்டவந்து என்கால்களில் விழுந்து, 'பிராமண ரே! இந்தவிசுவாமித்திரருடைய பெண்ணை அடைக்கலம்போல்வைத் துக் காப்பாற்றக்கடவீர். உமது சிநேகிதர் காமக்குரோதங்களை அடக் காமல் கௌசிகநதிக்குச்சென்றார். ஆதலால்,தயையோடுஅவருடைய பெண்ணை வளர்க்கக்கடவீர்' என்று இனிமையாகவும் தெளிவில்லா மலும் சொல்லின. பிராணிகளின் பாஷைகளையெல்லாம் தெரிந்தவ னும் எல்லாப்பிராணிகளிடத்தும்தயையுள்ளவனுமாகியநான்உடனே அவளைக் கொண்டுவந்து பெண்ணாக வைத்துக்கொண்டேன். சரீ ரத்தை உண்டுபண்ணுகிறவன், உயிரைக்கொடுப்பவன், எவனுடைய அன்னத்தைப் புசிக்கிறார்களோ அவன் ஆகிய இம்மூவரும் முறை யாகத் தந்தைகளென்று தர்மசாஸ்திரத்தில் சொல்லப்படுகின்றனர். ஜனமில்லாத வனத்தில் பறவைகளினால் சூழப்பட்டதனால் நான் இவ ளுக்குச் * சகுந்தலை என்று பெயரிட்டேன். பிராமணரே! சகுந்தலை இவ்விதமாக எனது பெண்ணென்றறியும். உயர்ந்த பெண்ணாகிய சகுந்தலையும் என்னையே பிதாவென்று நினைக்கிறாள்' என்று என் னைப்பற்றிக் கேட்டபோது, என்பிறப்பைஅந்தமஹரிஷிக்கு என்பிதா சொன்னார். ராஜாவே! இவ்வாறு நான் கண்ணுவருடைய பெண்ணெ ன்று நீர்அறியும். பெற்றதகப்பனை அறியாதவளாகிய நான் கண்ணுவ ரையே பிதாவாக நினைத்திருக்கிறேன். ராஜாவே! இவ்வாறு நான் கேட்ட என்வரலாற்றைச் சொன்னேன்' என்றாள்.

---

## தொண்ணூற்றுநான்காவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(துஷ்யந்தன் சகுந்தலையைக் காந்தர்வ விவாகஞ்செய்து, நகரத்திற்குச் சென்றபிறகு, கண்ணுவர் வந்துசேர்ந்து சகுந்தலைக்கு வரமளித்தது.)

**து**ஷ்யந்தன், 'கல்யாணியே! நீ சொல்லுகிறபடி நீ ராஜபுத் திரியென்பது தெளிவாகிறது. அழகிய நிதம்பமுள்ளவளே! நீ என க்கு மனைவியாகக்கடவாய். உனக்கு நான் என்னசெய்யவேண்டும்? சொல். பொன்மாலையையும்,வஸ்திரங்களையும், பொன்மயமான குண்

---

* சகுந்த - பறவைகளினால், லா - இரக்ஷிக்கப்பட்டவள்.

டலங்களையும், ஒளியுள்ளவையும் மங்களகரங்களுமாகிய அனேகவித நகரங்களிலுண்டான முத்துக்களையும், ரத்னங்களையும், பொன்காசு முதலியவற்றையும், தோல்களையும், இப்போது உனக்கு நான் கொடுக்கிறேன். ராஜ்யமெல்லாம் இப்போதே உனதாகஆகட்டும். அழகானவளே! எனக்கு நீ பார்யையாகக்கடவாய். சுந்தரியே! அச்சமுள்ளவளே! காந்தர்வமென்னும் விவாகத்தினால் நீ என்னிடம்சேர். வாழைமரம்போன்ற தொடையையுடையவளே! விவாகங்களுக்குள் காந்தர்வவிவாகம் சிறந்ததாகச்சொல்லப்படுகிறது' என்றுசொன்னான். அதைக்கேட்டசகுந்தலை, 'ராஜாவே! எனதுபிதா பழங்கள் கொண்டு வருவதற்காக இந்த ஆச்ரமத்தைவிட்டுப் போயிருக்கிறார். சற்று நேரம் இரும். அவர் என்னை உமக்குக்கொடுப்பார். எனக்குப்பிதாவே அதிகாரி. அவர் எனக்கு முக்கியமான தேவதை. பிதா என்னை யாருக்குக்கொடுப்பாரோ அவரே எனக்குப் பர்த்தாவாவர். இளமையில் பிதா காப்பாற்றுகிறார். பருவகாலத்தில் கொழுநன் காப்பாற்றுகிறான். முதிர்ந்த பிராயத்தில் புத்திரன் காப்பாற்றுகிறான். ஸ்திரீ ஸ்வதந்திரமாய் இருக்கத்தக்கவள் அல்லள். ராஜச்ரேஷ்டரே! தர்மிஷ்டரே! சிறந்ததவமுள்ள என்பிதாவை மதிக்காமல் அதர்மமாக வரனை நான் எப்படிஅடையலாம்?' என்றுசொன்னாள். துஷ்யந்தன், 'சுந்தரியே! தவமே உருக்கொண்டவரும், சாந்தியை இயல்பாக உடையவருமான கண்ணுவரைப்பற்றி நீ இவ்வாறு சொல்வது தகாது; தகாது' என்று சொல்ல, கேட்ட சகுந்தலை, 'பிராம்மணர்களுக்குக் கோபமே ஆயுதம்; பிராமணர்கள் கையில் ஆயுதம்பிடிப்பவரல்லர்; இந்திரன் வஜ்ராயுதத்தினால் அஸுரர்களைக் கொல்வதுபோல் பிராமணர்கள் கோபத்தினால் சத்துருக்களைக் கொல்லுகின்றனர். அக்னி ஜ்வாலைகளினால் தகிக்கிறது; சூரியன் கிரணங்களினால் தகிக்கிறான்; ராஜா தண்டனையினால் தகிக்கிறான்; பிராமணன் கோபத்தினால் தகிக்கிறான். கோபம் மூட்டப்பட்ட பிராமணன், கோபத்தினாலேயே, இந்திரன் அஸுரர்களைக் கொன்றதுபோலவே கொல்லுகிறான்' என்றுசொன்னாள். அதற்குத் துஷ்யந்தன், 'பிரியமானவளே! அந்தக் கண்ணுவமஹரிஷியை நான் அறிவேன். அவருக்குக் கோபமில்லை. அழகான நிதம்பமுள்ளவளே! சிலாக்யமானவளே! நீ என்னை அடைவதை நான் விரும்புகிறேன்; உனக்காகவே நான் இங்கு இருப்பதாக அறி; என்மனம் உன்னிடம் இருக்கிறது. தானே தனக்கு உறவு; தானே தனக்கு உதவி; தர்மப்படி நீயே உன்னைத் தானம்செய்யத் தகுதியுள்ளவளாயிருக்கிறாய்.

*பிராம்மம், தைவம், ஆர்ஷம், பிராஜாபத்யம், ஆஸுரம், காந்தர்வம், ராக்ஷஸம், பைசாசம் ஆகிய இந்த எட்டுவிவாகங்கள்தாம் விவாகங்களென்றுதர்மசாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றிலும், தர்மமான விவாஹங்களைப்பற்றி முன்னமே ஸ்வாயம்புவமனு எவ்வாறு சொல்லியிருக்கிறாரென்பதைச் சொல்லுகிறேன். சிலாக்கியமானவளே! பிராமணனுக்கு முதல் நான்கு விவாஹங்களும் சிலாக்கியங்களென்றறி. க்ஷத்திரியனுக்கு முதலிலிருந்து ஆறுவிவாஹங்கள் தர்மமுள்ளவையென்றறி; ராஜாக்களுக்கு ராக்ஷஸவிவாஹமும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆஸுரமென்னும் விவாஹம் வைசியர்களுக்கும் சூத்திரர்களுக்கும் சொல்லப்பட்டது. † ஐந்து விவாஹங்களுக்குள் ‡ மூன்று தர்மமுள்ளவை. (ஆஸுரம், பைசாசம் ஆகிய) இரண்டும் தர்மமில்லாதவையென்று சொல்லப்பட்டிருக்கின்றன. பைசாசமும் ஆஸுரமும் ஒருபோதும் செய்யத்தகாதவை. இந்தவிதிப்படி விவாஹம் செய்யத்தக்கது. இது தர்மத்தின் மார்க்கமென்று தர்மசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. காந்தர்வமும் ராக்ஷஸமும் க்ஷத்திரியனுக்குத் தர்மமானவை. அவற்றைப்பற்றி நீ சந்தேகிக்காதே. அவ்விரண்டையும் வெவ்வேறாகவும் செய்யலாம்; சேர்த்தும்செய்யலாம். இதில்ஸம்சயமில்லை. உத்தமமானபெண்ணே! விருப்பமுள்ள நீ விருப்பமுள்ள எனக்குக் காந்தர்வ விவாகத்தினால் பாரியையாவதற்கு உரியவளாயிருக்கிறாய்' என்றுசொன்னான்.

சகுந்தலை, 'பௌரவஶ்ரேஷ்டரே! ராஜாவே! நீர் சொல்வது தர்மமார்க்கமாக இருந்து நானே என்னைக்கொடுத்துக்கொள்ள ஸ்வதந்திரமிருந்தால் எனது ஒரு நிச்சயத்தை நீர்கேளும். நான் இரகசியத்தில் சொல்லப்போவதை நீர் ஸத்தியமாக வாக்குத்தத்தம் செய்யக்கடவீர். எனக்குப் பிறக்கிறபுத்திரன் உமக்கடுத்த இளவரசனாக

---

* அலங்கிருத கன்னிகாதானம் பிராம்மவிவாகம்; யாகத்தின்முடிவில் ரித்விக்குக்களுக்குத் தக்ஷிணையாகக் கன்னிகாதானஞ்செய்வது தைவவிவாகம்; இருவருஞ்சேர்ந்து தர்மம் செய்யட்டுமென்று மனவினால தானஞ்செய்துவிட்டுவிடுவது பிராஜாபத்யம்; வரனிடமிருந்து இரண்டு கோக்களை வாங்கிக்கொண்டு கன்னிகாதானஞ்செய்வது ஆர்ஷவிவாஹம்; மிகுந்ததிரவியம் வாங்கிக்கொண்டு கன்னிகாதானஞ்செய்வது ஆஸுரவிவாஹம்; கன்னிகையும் வரனும் மனமொப்பிச் சேர்ந்துகொள்வது காந்தர்வவிவாஹம்; தூக்கத்திலும் குடிமயக்கத்திலும் கன்னிகையைத் தூக்கிக்கொண்டுபோவது பைசாசவிவாஹம்; சண்டைபோட்டுப் பலாத்காரமாகக் கன்னிகையைக் கொண்டுபோவது ராக்ஷஸவிவாஹம்.

† நான்காவதுமுதல் எட்டாவதுவரையில் உள்ளவை. மநுஸ்மிருதி, ௩-வது அத்தியாயம் ௨௫-ம் ஶ்லோகம்; குல்லூகபட்டர் வ்யாக்யானம்.

‡ பிராஜாபத்யம் காந்தர்வம் ராக்ஷஸம்.

வேண்டும். மஹாராஜாவே! இதனை உமக்கு உண்மையாகச்சொல்லு கிறேன். துஷ்யந்தரே! இஃதுஇவ்வாறுநடக்குமானால் எனக்கு உம் முடன் விவாஹம் நடக்கலாம்' என்றாள். *[அவள் சொன்ன எல்லா வற்றையும் சொன்னபடி பிரதிஜ்ஞைசெய்து அந்தராஜாவாகிய துஷ் யந்தன், 'இன்னும் என்னஎன்ன விரும்புகிறாயோ அவற்றையெல் லாம் கேள்' என்று மறுபடியும் சொன்னான். சகுந்தலை, 'சாஸ்திரீய விவாஹமென்னும் லோகவியவஹாரம் பிரசித்தமாயிருக்கிறது. பெரி யோர்கள் விவாஹமென்ற கிரியையைச் சந்ததிக்குநன்மையென்று சிலாகிக்கின்றனர். உலகத்தாரின்பழிப்பு நிவிருத்தியாகும்படி சாஸ் திரப்பிரகாரம் விவாஹம் செய்யும்; இங்கே யாகத்திற்குரிய பாத்தி ரங்களும், தர்ப்பங்களும், புஷ்பங்களும், அக்ஷதைகளுமிருக்கின்றன. விவாஹம் எப்படி யோக்கியமாயிருக்குமோ அப்படி ஸந்ததியும் யோக்கியமாயிருக்கும்; ஆதலால், ராஜாவே! ஹோமம்பண்ணத்தக்க நெய்யும், அன்னமும், பொரிகளும், மணலும், பிராமணர்களும், விவாஹத்திற்குரிய மற்றக்கருவிகளும் உமக்கு இங்கேசேர்ந்திருக் கின்றன, ராஜஶ்ரேஷ்டரே! தர்மத்திற்காக நான் தடுத்துச்சொன்ன தையும் நீர் பொறுக்கவேண்டும்' என்று சொன்னாள்.]

ராஜா, சங்கிக்காமல் அவளைநோக்கி, 'அப்படியே ஆகட்டும்' என்று மறுமொழிசொல்லி மறுபடியும், 'அழகிய புன்னகையுள்ள வளே! அழகிய நிதம்பமுள்ளவளே! உன்னை நான் உன்தகுதிக்கு ஏற்றபடி என்நகரத்திற்கு அழைத்துக்கொண்டு போவேன் என்பதை உனக்குச்சொல்லுகிறேன். உனக்கு விருப்பமா?' என்று அந்த ராஜரிஷி அழகாக நடக்கின்ற அவளைப்பார்த்து இவ்வாறுசொல்லி, *[புரோஹிதரை அழைத்து ஸமயோசிதமானசொல்லைச்சொன்னான். 'ராஜகுமாரியான சகுந்தலை சொன்னதை வியர்த்தமாக்குவதற்கு நான் கருதவில்லை. சிறந்தகீர்த்தியுள்ள எனதுபுத்ரன் ஸம்ஸ்கார மில்லாதவனாக ஆகத்தகாது. ஆதலால், சாஸ்திரவிதிப்படி விவாஹ த்தை நடத்தும்; காலவிளம்பம் செய்யவேண்டாம்' என்றான். ராஜா வினால் இவ்வாறு சொல்லப்பட்ட பிராமணர், 'அரசர்க்கரசே! நியா யம்' என்றுசொல்லிச் சிறந்த நியமமுள்ளவராகச் சாஸ்திரப்படி விவாஹத்தைச் செய்தார். அந்தப் பிராமணஶ்ரேஷ்டர் சொற்படி மங்களகங்கணம் கட்டிக்கொண்டு சாஸ்திரப்படி சகுந்தலையைப் பாணிக்கிரஹணஞ் செய்துகொண்டு] அவளுடன்கூட இருந்தான். அவன் அவளை ஸமாதானப்படுத்திப் பிரயாணப்படும்போது, 'உனக்

* [] இவற்றுக்குட்பட்டவை உத்தரதேச பாடத்திலில்லை.

காகச் சதுரங்கஸேனையையும் அனுப்புவேன்' என்று பலமுறையும் சொன்னான். 'அழகிய புன்னகையுள்ளவளே! மூன்றுவேதங்களை யும் அறிந்த பெரியோர்களோடும் அநேக ராஜஸேவகர்களோடும் அநேகமாயிரம்பல்லக்குக்களோடும்கூட என்பந்துக்கள்வருவார்கள். ஊமையர்களும் வேடர்களும் கூனர்களும் குள்ளர்களும் அலிகளும் புராணம் சொல்லுகிறவர்களும் ஸ்துதிபாடுகிறவர்களும் சேர்ந்தசேனை சங்கதுந்துபி வாத்தியங்களின் முழக்கங்களுடன் வனத்திற்கு வரப் போகிறது. அவ்வாறாக உன்னை என்நகரத்திற்கு வருவிப்பேன். அவ்வாறு மங்களங்களான எல்லா ஆசாரங்களாலும் கௌரவம் செய் யாமல் சாதாரணமாக உன்னை என் அரண்மனைக்கு அழைக்கமாட் டேன். அழகிய புருவமுள்ளவளே! உனக்கு ஸத்தியஞ்செய்கி றேன்' என்றுசொன்னான். அழகாக நடக்கின்ற அந்தச் சகுந்தலை க்கு அந்தராஜரிஷி இவ்வாறு சொல்லி, அவளை இரண்டுகைகளினா லும் தழுவிக்கொண்டு, மலர்ந்தமுகத்துடன் பார்த்து, தான் சொன் னதை அவள் ஒப்புக்கொண்டதன் பின், மறுபடியும் அவளைத்தழு விக்கொண்டான். அழகியமுகமுள்ள அந்தச் சகுந்தலை ராஜாவின் பாதங்களில் விழுந்தாள். ஜனமேஜயராஜரே! தன்மனைவியான அந் தச் சகுந்தலையை மறுபடியும் தழுவியெடுத்து, 'ராஜகுமாரியே! நீ விசனப்படாதே; நான் அழைத்துக்கொண்டுபோவேன்; என் தர்மத்தின்மேல் ஆணை' என்று பலமுறை அவளுக்கு உறுதிமொழி சொல்லி, அவ்வாசன் கண்ணுவரைப்பற்றி மனத்தில் சிந்தித்துக் கொண்டே சென்றான். 'சிறந்ததவமுள்ளவரும் ஈசியபகுலத்தவரு மான பகவான் கண்ணுவர்கேட்டு என்னசெய்வாரோ? அந்தப்பிரா ணஸ்ரேஷ்டரைத் நயைசெய்யுமென்று மன்னிப்புக் கேட்டுக்கொள் ளாமல் நான்வந்துவிட்டேனே' என்று நினைத்துக்கொண்டே தனது நகரத்தில் பிரவேசித்தான்.

அவன் போனபின் சற்றுநேரத்திற்கெல்லாம் கண்ணுவர் ஆஸ்ர மம் வந்துசேர்ந்தார். சகுந்தலை நாணத்தினால் தன்தந்தையினிடம் போகவில்லை. அவள் அஞ்சினவளாகக் கண்ணுவரிஷியினிடம் மெல் லச்சென்றாள். பிறகு, அந்த மஹாத்மாவான கண்ணுவர் கொண்டு வந்த சுமையைவாங்கிக்கொண்டு அவருக்கு ஆசனமிட்டு அவர்பாதங் களை அலம்பினாள். லஜ்ஜையினால் சகுந்தலைக்கு அவரைக்கண்ணெ டுத்துப் பார்க்கமுடியவில்லை. நாணமுற்ற சகுந்தலை அந்தரிஷியினிடம் பேசவுமில்லை. பாரதஸ்ரேஷ்டரே! ஜிதேந்திரியையாயிருந்த அவள் ஸ்வதந்திரமெடுத்துக்கொண்டு அந்த ஸ்வதர்மத்திலிருந்து தவறி

னவளாகத் தன்பிழையைத் தெரிந்துகொண்டவளாகையால் பயமுற்றிருந்தாள். அப்போது கண்ணுவரிஷி, நாணமுற்ற சகுந்தலையைப் பார்த்து, 'நீண்ட ஆயுளுள்ளவளே! வாழைமரம்போன்ற தொடைகளுள்ளவளே! நீ வெட்கப்பட்டுக்கொண்டேயிருக்கிறாய்; முன்போலவுமில்லை; நடந்ததைச்சொல்; அச்சப்படாதே' என்றார். பிறகு, சிறந்த லக்ஷணங்களுடையவளும், பூருவம்சத்தவருக்குள் முதன்மையான துஷ்யந்தனையடைந்ததனால் சிறந்தசோபையுள்ளவளும், நுண்ணியஇடையுள்ளவளும், அழகான புன்னகையுள்ளவளுமான சகுந்தலை, ரிஷியின்பாதங்களை அலம்பி, சிரமபரிகாரமானபின், அவருக்கு வேண்டியகாய்களையும்கிழங்குகளையும் கொண்டுவந்துவைத்து, அவர் புஜித்தபிறகு, கால்களைப்பிடித்துப் பின்பு வெட்கத்துடன் பிரயத்தனப்பட்டுத் தழுதழுத்து அடியில்வருமாறு அவரைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினாள்:

'பிதாவே! இலிலன்புத்திரரான துஷ்யந்தன் என்னும் ராஜா இங்கேவந்தார்; அதிர்ஷ்டவசமாகஇவ்விடத்திற்குவந்த அந்தராஜாவை நான் எனக்குப் பதியாக வரித்தேன். பதியான அவர் மிக்கவிரிவான புகழுள்ளவர். தந்தையே! அவர்விஷயத்தில் அனுக்கிரகஞ் செய்யக்கடவீர். இதற்குமேல் நடந்ததையெல்லாம் திவ்யஜ்ஞானத்தினால் நீரே அறிவீர். அந்த க்ஷத்திரியவம்சத்திற்குப் பயமில்லாமலிருக்கும்படி அனுக்கிரகம் செய்யக்கடவீர்' என்றாள். சிறந்த மகிமையுள்ளவரும், மிகச்சிறந்த தவமுள்ளவருமாகிய அந்தக் கண்ணுவ மஹரிஷி அந்தராஜாவின்மனம் தர்மத்தினின்றும் தவறவில்லையென்பதையும், அவன் விர்த்தாந்தங்களையும் ஞானக்கண்ணினாலறிந்து, அந்த ராஜா தர்மிஷ்டன் என்பதையும் நினைத்துச் சந்தோஷத்துடன் சொல்லலானார்.

'இதை நடந்தபடி ஜ்ஞானக்கண்ணினால் தெரிந்துகொண்டேன். ராஜவம்சத்திற்பிறந்தநீ இப்போது என்னைக்கேளாமல் புருஷனுடன்சேர்ந்தது தர்மத்திற்கு விரோதமன்று. அன்புள்ளவளே! உனக்குப் பயமில்லை. நீ விசனப்படாதே. நீசெய்தது தர்மமே. காந்தர்வமென்னும் விவாஹம் க்ஷத்திரியனுக்கு மிகச்சிறந்ததாகச்சொல்லப்படுகிறது. விருப்பமுள்ள புருஷனுக்கும் விருப்பமுள்ளபெண்ணுக்கும் நடக்கும் விவாஹம் மிகவும் சிலாக்கியமாகச் சொல்லப்படுகிறது. சாஸ்திரப்படி விவாஹம் செய்துகொண்டபிறகு குற்றமென்ன இருக்கிறது? நல்ல ஸந்ததியைப்பெறுவாய். சகுந்தலையே! துஷ்யந்தன் தர்மத்தில் சித்தமுள்ளவன்; மஹாத்மா; புருஷர்களுள்

உத்தமன்; அவன் தன்னைவிரும்பின உனக்குப் பதியாகஆனான். உலகத்தில் பெரும்புகழ் உள்ளவனும் மஹாத்மாவுமாகிய புத்திரன் உனக்குப் பிறக்கப்போகிறான். அவன் கடல்சூழ்ந்த பூமிமுழுமையும் ஆளுவான். அந்த மஹாத்மாவும் சக்கரவர்த்தியுமான உன் புத்ரன் எதிரிகளை எதிர்த்துச்செல்லும்போது அவன்சேனை ஒருபோதும் தடைப்படாமலிருக்கும். சிறந்தபெண்ணே! உனக்காக அவன்விஷயத்தில் நான் அனுக்கிரகமுள்ளவனாயிருக்கிறேன். அழகான சிரிப்புள்ளவளே! உன்னுடைய அனேக ருதுகாலங்கள் வீணாகப்போயின. இப்போதுதான் அந்த ருதுகாலம் பயன்பெற்றது. குற்றமில்லாதவளே! உனக்குப் பாபமில்லை. அதனால், நீ விரும்பின வரத்தை என்னிடம்பெற்றுக்கொள்' என்றார். அப்படிச் சொல்லியதைக்கேட்டுச் சிறந்தமனமுள்ள சகுந்தலை, 'புருஷர்களில் உத்தமரான துஷ்யந்தஅரசர் என்னால் பதியாகவரிக்கப்பட்டுத் தேவர்கள் முன்னிலையில் விவாஹஞ் செய்துகொள்ளப் பெற்றிருக்கிறார். அவருக்கும் அவர் மந்திரிகளுக்கும் நீர் அனுக்கிரஹஞ்செய்யக்கடவீர்' என்றுசொல்லி, மனத்தினால் சிந்தித்துப்பார்த்துத் துஷ்யந்தனுக்கு ஹிதம்செய்வதற்காக அவன் தர்மிஷ்டனாயிருப்பதையும் அவனுக்கு ராஜ்யம் தவறாமலிருப்பதையும் கண்ணுவரிடம் வரங்களாகக் கேட்டுக்கொண்டாள். தர்மத்தைக் காப்பவர்களுட் சிறந்தவராகியகண்ணுவர் பௌரவ வம்சத்தைச்சேர்ந்த துஷ்யந்தனுடைய நன்மையைக் கருதி 'அவ்வாறே ஆகட்டும்' என்று அந்தச்சகுந்தலைக்கு உத்தரஞ் சொன்னார். லக்ஷ்மியே பிரத்தியக்ஷமாக வந்ததுபோலிருக்கிற தம் பெண்ணை இருகரங்களாலும் தடவிக்கொடுத்து, 'மஹாத்மாவான துஷ்யந்தனுடைய மனைவியாகிய நீ இதுமுதல் பதிவ்ரதைகளின் நடையை அனுஸரிப்பாயாக' என்றுசொன்னார். இப்படிச்சொல்லித் தர்மாத்மாவான கண்ணுவர் சுத்திக்காக அவளைப்பரிசித்தார். அவரால் சரீரம் தொடப்பட்டமாத்திரத்தில் அவள் மிகுந்த ஆனந்தமடைந்தாள்.

---

## தொண்ணூற்றைந்தாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(சகுந்தலைக்குப் புத்திரன் ஜனித்தது.)

துஷ்யந்தன் உறுதிமொழிகூறித் திரும்பிப்போனபின், அந்த ராஜகுமாரியாகிய சகுந்தலையினிடம் மஹாத்மாவான துஷ்யந்த

னுக்கு உண்டான கர்ப்பம் நாளுக்குநாள் அபிவிருத்தியாயிற்று. சகுந்தலை ராஜாவையே நினைத்துக்கொண்டு தன் * காரியம் பெரிதாக இருந்ததனால் இரவும்பகலும் நித்திரையின்றி ஸ்நானபோஜனங்களை விட்டு ராஜாவின் தூதர்களாகிய பிராமணர்கள் சதுரங்கசேனையோடு இன்றைக்கோ நாளைக்கோ அடுத்தநாளோ வருவார்களென்று நிச்சயமாயிருந்தாள். பாரதரே! நாட்களும், பக்ஷங்களும், மாதங்களும், ருதுக்களும், அயனங்களும், வருஷங்களும் எண்ணப்பட்டுப் பூர்ணமாக மூன்றுவருஷங்கள் கடந்தன. மூன்றுவருஷங்கள் நிரம்பினபின் கண்ணுவரிஷிசொன்னசொல்லிற் கௌரவத்தினால் அனேகரிஷிபத்னிகள் நியாயமுள்ளசொல்லை உரைக்கலாயினர்.

'அன்புள்ளவளே! உலகத்திலுள்ள நடைகளைக்கேள்; கேட்டபின்னர், உனக்கு எதுநன்மையென்று தோன்றுகிறதோ அதைச் செய். அரசியே! பிதாவின்சொல்லைக் கௌரவிக்காமலிருத்தல் தகாது. தேவர்களுக்குத் தேவதை விஷ்ணு; பிராமணர்களுக்குத் தேவதை அக்நியும் வேதமும்; பெண்களுக்குத் தேவதை கொழுநன்; ஜனங்களுக்குத் தேவதை பிராமணன்; பகவானாகிய உன்பிதா பிரஸவகாலத்தில் பிரஸவித்து விடுவாயாக என்று சொல்லியிருக்கிறார். பிதிருவாக்யத்தை நான் செய்வேனென்று ஸங்கல்பித்து நீ செய்யவேண்டும். அப்போது தான் உனக்குப் புண்ணியமுண்டாகும்' என்றனர். அவ்வாறு ரிஷிபத்நிகள் சொன்னதைக்கேட்டுச் சகுந்தலை 'நன்றுநன்று' என்றுநினைத்தாள். அழகான தொடைகளுள்ள சகுந்தலை கர்ப்பத்திலிருந்த அளவற்ற சக்தியுள்ள குமாரனைப்பெற்றாள். ஜனமேஜயரே! மூன்றுவருஷங்கள் நிரம்பினபின் சகுந்தலை அழகும் கம்பீரமும் குணங்களும்சேர்ந்த துஷ்யந்தனுடைய புத்திரனைப்பெற்றாள். அந்தப் புத்திரன் பிறந்தபோது ஆகாயத்திலிருந்து பூமாரிபெய்தது. தேவதுந்துபிகள் முழங்கின. அப்ஸரஸுகள் கூட்டங்களாக நர்த்தனஞ்செய்தனர். இனிமையாகப் பாடுகிற தேவர்களுடன்கூட இந்திரன் அங்கேவந்து, 'சகுந்தலையே! உன்புத்திரன் சக்கரவர்த்தியாகப் போகிறான். இவனுடைய தேகவன்மையும் பராக்கிரமமும் அழகும் பூமியிலுள்ள யாருக்கும் ஒப்பில்லாதவை. இந்தப் பூருவம்சத்துப் புத்திரன் தன்னுடைய தனத்தைப் பிராமணர்களுக்கு வழங்கி அளவற்ற தக்ஷிணைகொடுத்து நூறு அசுவமேதயாகங்களையும் ராஜஸூயம் முதலான அனேகமாயிரம் யாகங்களையும் செய்யப்போகிறான்' என்றுசொன்னான். தேவர்களுடைய சொல்லைக் கேட்டுக் கண்ணுவ

* தன் புத்திரனுக்கு ராஜ்யம் கிடைக்கவேண்டுமென்பது.

ருடைய ஆஸ்ரமத்தில் வஸிக்கும் மஹாரிஷிகள் அனைவரும் கண்ணுவர்பெண்ணாகிய சகுந்தலையைப் பூஜித்தனர். அந்தச் சகுந்தலையும் அதைக்கேட்டு மிகமகிழ்வுற்றாள். புண்ணியவான்களுட் சிறந்தவரும் மிக்க புகழுடையவருமாகிய கண்ணுவ மஹாரிஷி பிராமணர்களையும் ரிஷிகளையுமழைத்து அவர்களுக்கு மரியாதைசெய்து விரைவில் வளர்ந்துகொண்டிருக்கும் அந்தக்குழந்தைக்கு ஜாதகர்மம் முதலான ஸம்ஸ்காரங்களைச் செய்வித்தனர். எல்லாக்கிரியைகளையும் சாஸ்திரப்படியே க்ஷத்திரிய முறைப்பிரகாரம் செய்வித்தனர். அந்தக்குமாரன் வெளியனவும் அழகியமுனையுள்ளவைகளுமாகிய பற்களோடு கூடியவனும் ஸிம்மத்துக்கொப்பான வடிவமைப்புள்ளவனுமாயிருந்ததுமன்றிக் கையில் சக்கர அடையாளம் இருந்ததனாலும் *லக்ஷ்மிபொருந்தியிருந்ததனாலும் இரண்டாவது விஷ்ணுவைப் போலிருந்தான். நாலுமுழ உயரமுள்ளவனும், மிகுந்த பராக்கிரமமுள்ளவனும், பெரியதலையுள்ளவனும், மிகுந்தபலமுள்ளவனும், தேவகுமாரனைப் போன்றவனுமாகிய அந்தக்குமாரன் அந்தவனத்தில் சீக்கிரமாக வளர்ந்தான்.

துஷ்யந்தனோவெனில், நினைவிருந்தும் ரிஷியினிடத்துள்ள பயத்தினால் உடனே சகுந்தலையை அழைக்கவில்லை. நெடுங்காலமானபிறகு ரிஷிபுத்திரியாகிய சகுந்தலையை நினைக்கவேயில்லை. பிறந்தபின் ஆறுவருஷங்களானபோது துஷ்யந்தபுத்திரனாகிய அந்தச்சிறுவன் கண்ணுவருடைய ஆஸ்ரமத்தினருகிலிருந்து ஆஸ்ரமத்துக்கு உபத்திரவஞ் செய்துகொண்டிருந்த கொடியமிருகங்களாகிய புலிகளையும் ஸிம்மங்களையும் பன்றிகளையும் செந்நாய்களையும் எருமைகளையும் கொண்டைமுசிறுகளையும் கால்களினால் உதைத்தான். அவைகளைப் புஜபலத்தால் பிடித்து அடக்கி ஆஸ்ரமத்துக்குச் சுற்றிலுமுள்ள மரங்களிற்கட்டி மரங்களின்மேலேறி விளையாடிக்கொண்டே ஓடினான். ஸிம்மக்கூட்டங்களினாலும் புலிக்கூட்டங்களினாலும் நிறைந்த அவ்வனத்தையே கலக்கினான். பிறகு, சத்துருக்களாகிய எல்லா ராக்ஷஸர்களையும் பிசாசங்களையும் யுத்தத்தில் குத்துச்சண்டையிற்கொன்று ரிஷிகளுக்குச் சந்தோஷத்தை விளைவித்தான். பெரியபலமுள்ள ஓர் அஸுரன், அஸுரர்கள் அவனால் கொல்லப்படுவதைச் சகிக்காமல் அவனைக்கொல்வதற்காக எதிர்த்தான். எதிர்த்துவந்த அவனைச் சிரித்துக்கொண்டே கைகளினால் தழுவிக் கெட்டியாகக்கட்டிக் கைகளாலேயே இறுக்கினான். கசக்கப்பட்ட அவ்வஸுரன் இந்தக்குமாரன் அதிக பலவானாக இருந்ததனால் இவனிடமிருந்து தப்பித்துக்கொள்ள

* ஐசுவரியம்.

மாட்டாமற் பயங்கரமாகக் கதறினான். அவனுடைய வாய் மூக்கு முதலிய துவாரங்களினின்றும் இரத்தம்வெளிப்பட்டது. அவன் சப்தத்தினால் மான்கள் ஸிம்மங்கள் முதலியவை மருண்டு மஜலங்களைவிட்டன. ஆஸ்ரமத்திலிருப்பவர்கள் விரைந்தோடினார்கள். அந்த அஸுரனை முழங்காலடிகளினால் உயிரைமாய்த்துவிட்டான். அந்த அஸுரன் விழுந்தான். அந்தக் குழந்தையின் அந்தச் செய்கையைக்கண்டு எல்லாரும் வியப்புற்றனர். அஸுரர்களும் ராக்ஷஸர்களும் எப்போதும் அடிக்கப்பட்டு அந்தக்குமாரனிடமுள்ள அச்சத்தினாலேயே அந்த ஆஸ்ரமத்துக்குப் போகவில்லை. பிறகு, கண்ணுவருடைய ஆஸ்ரமத்தில் வஸிக்கின்றவரனைவரும் மனிதருக்கெட்டாத அவன் செய்கையைக்கண்டு கண்ணுவருடன் சேர்ந்து, 'இவன் எல்லாவற்றையும் அடக்குவதனால் ஸர்வதமனனென்ற பெயருள்ளவனாக இருக்கக்கடவன்' என்று அவனுக்குப் பெயரிட்டனர். ஸர்வதமனன் என்னும் பெயருள்ள அந்தக்குமாரன் பராக்கிரமத்தோடும் உத்ஸாஹத்தோடும் பலத்தோடும் கூடினவனாக இருந்தான். துஷ்யந்தன் தன் மஹிஷியையும் புத்திரனையும் அழைக்காமலிருந்தபோது வெண்ணிறம்படர்ந்த தேகமுள்ளவளும், கவலையில் மூழ்கினவளும் முன்வைச்சிமயிர்கள் தொங்க விசனப்பட்டுக்கொண்டு இளைத்து அழுக்கடைந்த ஆடையுடுத்தவளுமாகிய சகுந்தலையைப் பார்த்து அம்மஹரிஷி சிந்தையுற்றார். அப்போது பன்னிரண்டுவயதான அந்தக் குமாரனுக்கு அஸ்திரவித்தையும் எல்லாவேதங்களும் கற்பிக்கப்பட்டிருந்தன.

---

## தொண்ணூற்றாறாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(சகுந்தலையைக் கண்ணுவர் ரிஷிகளுடன் துஷ்யந்தனிடம் அனுப்புவது.)

அந்தப் பிரம்மரிஷியாகிய கண்ணுவர் அந்தக்குமாரனையும் மனிதர்கள் செய்யமுடியாத அவன் செய்கையையுங்கண்டு இவன் யுவராஜாவாவதற்கு இது தருணமென்று நினைத்துச் சகுந்தலையை அழைத்துப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினார்:—

'எனது இனியபெண்ணே! அழகான சிரிப்புள்ளவளே! நான் சொல்வதைக் கேள். பதிவ்ரதையான பெண்களுக்கு * மனத்தாலும் †வாக்காலும் செய்கையாலும் பதிக்குச் சுச்ரூஷைசெய்வது முத

* அன்பினாலும். † இனியசொல்லினாலும்.

ன்மையானசிறப்பென்று சொல்லப்படுகிறது. நான் முன்னமே உன் விவாஹத்தை அங்கீகரித்திருக்கிறேன். உன்னுடைய பதிவ்ரதா தர்மத்தைக் கொண்டாடவேண்டும். இந்த ஒழுக்கத்தினாலேயே நீ புண்ணியலோகங்களை அடைந்து அதன்முடிவில் மனுஷ்யலோகத்திற் சிறந்த ஐசுவரியத்தையடைவாய். பிரியமானவளே! ஆதலால், இப்போது பௌரவராஜாவின் சமீபத்துக்குச் செல்லவேண்டும். அழகான முகமலர்ச்சியுள்ளவளே! உனக்குக் குறித்தகாலம் கடந்ததாக நினைத்து அந்தராஜா தானாகவராமலிருக்கிறான். நீ உன்னுடைய நன்மையின்பொருட்டு நீயேபோய் ராஜாவான துஷ்யந்தனைச் சந்தோஷப்படுத்து. துஷ்யந்தனுடைய புத்திரன் யுவராஜாவாயிருப்பதைக்கண்டு மகிழ்ச்சியடைவாய். தேவதைகளிடத்தும் பெரியோர்களிடத்தும் அரசர்களிடத்தும் கணவர்களிடத்தும் தாமேசெல்வதுமிகநன்மையாகும். பெண்ணே! ஆதலால், என்விருப்பத்தைச்செய்வதற்காகக்குமாரனோடுகூட நீபோகவேண்டும். எனக்கு மாறான விடைகொடாதே. என் பாதங்களின்மீது ஆணைவைக்கப்பட்டிருக்கிறாய்' என்றார். கண்ணுவர் தம்பெண்ணைப் பார்த்து இவ்வாறுசொல்லி, அங்கே பூருவம்சத்தவனாகிய தம் *பேரனையும்அழைத்துக் கைகளினால் ஆலிங்கனஞ்செய்து உச்சிமோந்து, 'துஷ்யந்தனென்று பெயர்பெற்ற சந்திரவம்சத்திற்பிறந்த ராஜாவொருவன் இருக்கிறான். பரிசுத்தமான விரதமுள்ள இந்தஉன்தாயார் அவனுடையபட்டமஹிஷி. அழகானஇடையுள்ள இவள் உன்னுடன் கணவனிடம்போக விரும்புகிறாள். நீ சென்று ராஜாவை வந்தனஞ்செய்து யௌவராஜ்யத்தை அடையப்போகிறாய். அரசர்க்கரசன் உன்தந்தை. நீ அவனுக்கு உட்பட்டிரு. உன்தந்தைபாட்டன்வழியாகவந்த ராஜ்யத்தை இயற்கையாகவே நீ அடைவாய். பூருவம்சத்துப் புத்திரனே! நீ உன்ராஜ்யத்திலிருந்துகொண்டு அந்தக்காலத்தில் என்னை நினை' என்றுசொல்லினர். பூருவம்சத்திற் பிறந்தவனாகிய அந்தக்குமாரன் ரிஷியின்பாதங்களில் வந்தனஞ்செய்து அடியில்வரும் சொல்லைச் சொன்னான்.

'ஓ பிரம்மரிஷியே! எனக்குத்தந்தையும் நீர்; தாயும் நீர்; ரக்ஷகரும் நீர்; பெருந்தவமுள்ளவரே! உம்மைத்தவிர வேறுபிதா இருப்பதாக நான் நினைக்கவில்லை. உமக்குச் சுப்ரூஷைசெய்வதுதான் இந்த லோகத்திலும் அந்தலோகத்திலும் புண்ணியம். கணவனிடம் அன்பு வைத்த சகுந்தலைமட்டும் அவள்விருப்பத்தின்படி செல்லட்டும். நான் உங்கள் பாதத்தினடியிற் பணிவிடைசெய்துகொண்டு வஸிக்கிறேன்.

* 'புத்ரியின் புத்ரனை' என்னும் அர்த்தத்தில் 'பௌத்ரம்' என்றிருக்கிறது.

முன்போல நான் துஷ்டமிருகங்களுடன்கூட விளையாடமாட்டேன். உங்கள் கட்டளையிலடங்கி எப்போதும் வேதாத்தியயனம் செய்கிறேன்' என்றான். இவ்வாறுசொல்லிக் கண்ணுவருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டுநிற்கிற அந்தக்குமாரனுடைய அந்தச்சொல்லைக்கேட்டுச் சகுந்தலை கண்ணீர்விட்டாள். பிதாவினிடத்திலும் புத்திரனிடத்திலுமுள்ள ஸ்நேகத்தினால் *சந்தோஷமும் வியஸனமும் அடைந்தாள். துக்கத்துடன் கண்ணீரைவிடுகிற அவளைநோக்கி, துஷ்யந்தபுத்திரனை ஸர்வதமனன், 'சகுந்தலையே! பகவானை கண்ணுவருடைய சொல்லைக்கேட்டபிறகு ஏன்அழுகிறாய்? உனக்குக்கணவனிடம் அன்பிருக்குமானால் காலையிலெழுந்து போகவேண்டும்' என்றுசொன்னான். சகுந்தலை, 'ஒருவன் பாபம்செய்கிறான். அதன் பலனை மஹாஜனங்கள் அனுபவிக்கின்றனர். நித்தியம் நான்தடுத்தும் நீ என்சொற்படி செய்கிறதில்லை. குழந்தாய்! பூருவம்சபுத்திரனே! வெளியில்வந்த யானைகளை நித்தியம் கைகளால் கசக்கியும் ஸிம்மங்களும் புலிக்கூட்டங்களும் நிறைந்தவனத்தை எப்போதும் கலக்கியும், இவ்வகையான இன்னும் அனேகஞ் செயல்களைச்செய்தும் எல்லாம் தெரிந்தரிஷிக்கு நீ கோபமுண்டாக்கினாய். அதனால், நாம் அனுப்பப்படுகிறோம். நான் துஷ்யந்தராஜாவினிடம்செல்லேன். நான் புத்திரனுடைய நன்மையை விரும்புகிறவளல்லேன். ஆத்மஜ்ஞானியான மஹரிஷியின் பாதத்தினடியில் வஸிப்பேன்' என்று சொல்லி அழுதுகொண்டு ரிஷியின்கால்களில் விழுந்தாள். இப்படி அழுகின்ற அவளைப் பகவானாகிய கண்ணுவர் பலநியாயங்களால்ஸமாதானஞ்செய்து மறுபடியும் தயையினால் அவளுக்கு நன்மையான சொல்லைச் சொல்லலாயினர்.

'சகுந்தலையே! பெண்மணியே! உனக்கு நன்மையும் நியாயமுமாக நான் சொல்வதைக்கேள். பதிவ்ரதையாக இருப்பதற்குரிய குணங்களைவிட்டு நீ செய்யத்தக்கதொன்றுமில்லை. பதிவ்ரதைகளுக்குத் தேவர்களும் மகிழ்ந்து எல்லாவரங்களையும் கொடுப்பர்; அனுக்கிரகமும் செய்வர்; கஷ்டங்களையும் விலக்குவர். பதிவ்ரதைகள் பதியின் அனுக்கிரகத்தினால் புண்ணியத்தைப் பெறுவர்; பாபத்தையடையார். மலர்ந்த முகமுள்ளவளே! ஆதலால், நீசென்று ராஜாவுக்குப்பணிவிடைசெய்' என்றார். அவ்வாறு சகுந்தலைக்குச்சொல்லி, பிறகு அவளுடைய புத்திரனைநோக்கிச் சொல்லத்தொடங்கினர்.

---

* பர்த்தாவினிடம் செல்வதனால் சந்தோஷமும், பிதாவையும் புத்ரனையும் பிரிவதனால் விசனமும்.

'நீ எனது * தௌஹித்ரன்; மஹாத்மாவான இலிலனுடைய † பௌத்ரன். குற்றமற்றவனே! உனக்கு உண்மைசொல்லுகிறேன். நான்சொல்லுவதைக்கேள். மனத்தினால் கணவனைவிரும்பிக்கொண்டு வாக்கினால்மாத்திரம் வேறாகப்பேசி இந்த அழகியசகுந்தலை போக விரும்பாமலிருக்கிறாள். ஆதலால், குழந்தாய்! இவளை அழைத்துக் கொண்டுபோ. பௌரவனே! ரிஷிகளுடன் கூடப்போவதற்கு நீ சக்தியுள்ளவன்' என்று ஸர்வதமனனைநோக்கிச் சொல்லிவிட்டு, பிறகு, கண்ணுவர் சிஷ்யர்களைப்பார்த்து, 'உயர்ந்தலக்ஷணங்களெல்லாம் பொருந்திய இந்தச்சகுந்தலையைப் புத்திரர்களுடன்கூடச் சீக்கிரத்தில் இந்த ஆஸ்ரமத்திலிருந்து பர்த்தாவின் ஸமீபத்திற்கொண்டு போய்விடுங்கள். பெண்கள் தம்மைச்சேர்ந்தஉறவினர்களிடம் வெகு காலம் வஸிப்பது புகழையும் ஒழுக்கத்தையும் தர்மத்தையும் கெடுக்கும். அதில் எனக்கு இஷ்டமில்லை. ஆதலால், சீக்கிரம் கொண்டு போய்விடுங்கள்' என்றார். கசியபகுலத்தில் பிறந்த கண்ணுவரால் முறைப்படி கௌரவிக்கப்பட்ட தன்புத்திரனைக்கண்டு சகுந்தலை கண்ணுவரிடம்விடைபெற்றுக்கொண்டு சந்தோஷமடைந்தாள். கண்ணுவர் 'கணவனிடம்செல்' என்று பலமுறை சொன்னதைக்கேட்டு அந்தப் பூருவம்சத்துக் குமாரன் 'அப்படியே ஆகட்டும்' என்று கண்ணுவருக்குச் சொல்லித் தன்தாயாரைப்பார்த்து, 'அம்மா! நீ ஏன் தாமதிக்கிறாய்? ராஜாவின்வீட்டுக்குப் போவோம்' என்றுசொன்னான். மஹாத்மாவாகிய துஷ்யந்தனுடையமனைவியான அந்தச்சகுந்தலையைப்பார்த்து இவ்வாறுசொல்லிக் கண்ணுவரிஷியின்பாதங்களில் வந்தனஞ்செய்து அந்தக்குமாரன் போவதற்கு விரும்பினான். சகுந்தலையும் பிதாவுக்கு வந்தனஞ்செய்து கைகூப்பிப் பிரதக்ஷிணம் செய்து, 'நான் எனது பிதாவென்பதனால் தெரியாமல் விரோதமாகச் சொல்லியிருந்தாலும், பொய் சொல்லியிருந்தாலும், செய்யத்தகாததையும் உமக்குப் பிரியமாயிராததையும் செய்திருந்தாலும், அதை நீங்கள் க்ஷமிக்கவேண்டும்' என்று பிதாவுக்குச்சொன்னாள். இவ்வாறுசொல்லப்பட்ட ரிஷி ஒன்றும் சொல்லாமல் தலைகுனிந்து நின்றார். கண்ணுவர் ரிஷியாயிருந்தும் மானிடத்தன்மையினால் கண்ணீர் சொரிந்தார். கண்ணுவமுனிவர் ஜலபக்ஷணஞ் செய்கிறவர்களும் வாயுபக்ஷணம் செய்கிறவர்களும் சருகுபக்ஷணஞ் செய்கிறவர்களும் காய்கிழங்குகளைப் புசிக்கிறவர்களுமாகிய ஜிதேந்திரியர்களும், இளைத்தவர்களும், நரம்புக்கூடுகளாக இருப்பவர்களும், சிறந்தநவமுள்ள

* பெண்ணின் புத்ரன். † புத்ரனுடைய புத்ரன்.

வர்களும், மரவுரிகள் தோல்கள் தரித்தவர்களும், சிலர் ஜடைதரித்த வர்களும், சிலர் சிரோமுண்டனம்செய்துகொண்டவர்களுமான ரிஷிகளை அழைத்துச் சகுந்தலையினிடத்துள்ள அன்பினால் பின்வருமாறு சொல்லலானார் :

'புகழ்பெற்ற இந்தப்பெண் என்னால் எப்போதும் லாலனைசெய்யப்பட்டவள்; வனத்திற் பிறந்தவள் ; வனத்தில் வளர்ந்தவள்; இவள் ஒன்றும்அறியாள். நீங்களெல்லாரும் ஆஸ்ரமத்திலிருந்து இவளையழைத்துக்கொண்டு க்ஷத்திரியன்வீட்டுக்கு வழியோடே போகவேண்டும். பிராமணர்களே! இதற்கு இரண்டு *யோஜனைதூரத்தில் பிரதிஷ்டானமென்னும் நகரமிருக்கின்றது. பிரதிஷ்டான நகரத்தில் சகுந்தலையின் புத்திரனுக்குக் கூடஸ்தனாகிய புரூரவஸ்என்னும் ராஜா ஊர்வசியுடன்சேர்ந்து முன்னே வெகுகாலம் இருந்தான். ஜலக்கரைகளும் காடுகளுமுள்ளதும் தனதான்யங்கள் நிரம்பினதுமாகிய அந்த உயர்ந்தநகரம் கங்கையமுனைகளின் ஸங்கமத்தில் இருக்கின்றது. தபோதனர்களே! ஸங்கமத்திற்சென்று அதில் ஸ்நானஞ்செய்து அக்நிஹோத்ரஞ் செய்துவிட்டு, கீரைகளையும் கிழங்குகளையும் காய்களையும் புஜித்துத் திரும்பிவாருங்கள். பிராமணர்களே! புசிக்காவிட்டால் வழிநடப்பதனால் சிரமமுண்டாகும்' என்றார். சிறந்த மகிமையுள்ள அந்த ரிஷிகளெல்லாரும் 'அப்படியே'என்றுசொல்லிச் சகுந்தலையை முன்னிட்டுக்கொண்டு துஷ்யந்தனுடைய நகரத்திற்குப் புறப்பட்டனர். தாமரைப் புஷ்பங்களைப்போன்ற கண்களையுடையவனும் தேவதைக்கொப்பானவனுமாகிய அந்தச் சகுந்தலாபுத்ரனையும் சகுந்தலையையும் அழைத்துக்கொண்டு தர்மத்தில் அன்புள்ளரிஷிகள் வனத்திலிருந்து துஷ்யந்தன்வஸிக்கும் அழகான பட்டணத்துக்குப் போயினர். அவர்கள் வனங்களையும், நதிகளையும், குன்றுகளையும், மலையருவிகளையும், குகைகளையும், மலைச்சரிவுகளையும், தேசங்களையும், நகரங்களையும், பரிசுத்தமான ரிஷியாஸ்ரமங்களையும் கடந்து களைப்பில்லாமல் மெல்ல மத்தியான்னவேளையில் பிரதிஷ்டான நகரஞ்சேர்ந்தனர். இளையின் புத்ரனாகிய புதனுக்காக இந்திரனால் நிர்மாணஞ் செய்யப்பட்டதும், அகழிகளாலும் அனேகம் உதவிக்கட்டிடங்களோடுகூடிய பிரதானமான பிராகாரங்களாலும் பீரங்கிகளாலும் சக்கரயந்திரங்களாலும காக்கப்பட்டதும், எதிரிகளால் அணுகமுடியாததும், தனவான்கள்வீடுகளும் ராஜக்ருஹங்களும் நெருங்கியதும், பலவகையான வியாபாரப் பொருள்களினால் அலங்கரிக்கப்

* யோஜனை = எட்டுமைல்.

பட்டதும், அழகிய மண்டபங்களும் ஸபைகளும் தண்ணீர்ப்பந்தல்க ளும் நிரம்பினதும், நேராக வகுக்கப்பட்ட பெரிய விசாலமான ராஜ மார்க்கத்திஞற் சோபிப்பதும், கைலைமலையின் சிகரம்போன்ற கோபு ரங்களினால் அலங்கரிக்கப்பட்டதும்,மங்களாலங்காரங்களோடு கூடிய வாயில்களாலும் மேல்வளைவுகளாலும் அவற்றின் ஸ்தம்பங்களாலும் விளங்குவதும், பூந்தோட்டங்களும் மாஞ்சோலைகளுமுடையதும், மேகலைபோன்ற பிராகாரத்தையுடையதும், அனேகம் தாமரைத்தடா கங்களாலும் தோட்டங்களாலும் சூழப்பட்டதும், எல்லாவருணத் தாரும் ஆஶ்ரமத்தாரும் தங்கள் தங்கள் கடமைகளிலிருந்துகொண்டு நித்தியோத்ஸவத்துடன் சந்தோஷமாக இருக்கப்பெற்றதும்,தனதானி யங்களும் சிறந்த ரத்னங்களும் மிகுதியாக இருப்பதனால் ஸந்தோஷ மடைந்த ஜனங்களையுடையதும், எப்போதும் யஜ்ஞமும் அக்நி ஹோத்ரமுஞ் செய்துகொண்டு அகாரியம்செய்வதை விலக்கினவரும் கொடுப்பதை இயல்பாகஉடையவரும் தயையுள்ளவரும் பாவத்துக்கு அஞ்சினவரும் ஸ்வர்க்கலோகத்தை ஜயிக்க விரும்பினவருமான அநேக வித்துவான்களையுடையதுமாகிய இரண்டாவது இந்திரலோ கம்போன்ற அந்தப்பிரதிஷ்டானநகரியைச் சேர்ந்தனர்.

திரவியக் குவியல்கள் நிறைந்ததும் இந்திரனுடைய க்ருஹத் துக்கொப்பானதுமான ராஜாவின் அரண்மனை அந்த நகரத்தின் நடு விலிருந்தது. அந்த அரண்மனையின் நடுவிலே பலவகைரத்னங்களி னால் அலங்கரிக்கப்பட்ட ஓர் உயர்ந்த ஸபையிருந்தது. அந்தஸபை யில் எல்லாஆபரணங்களையும்அணிந்துகொண்டு, பிராமணர்களாலும் க்ஷத்திரியர்களாலும் மந்திரிகளாலும் சூழப்பட்டு, *ஸூதர்களாலும் † மாகதர்களாலும் ‡ வந்திகளாலும் ஸ்துதிசெய்யப்பட்ட அந்த அர சர்க்கரசனான ராஜரிஷி இருந்தான். வியவஹாரத்திற்காக வந்தவாதிப் பிரதிவாதிகள் அப்போது வந்து வியவஹாரத்தைமுடித்துக்கொண்டு போனபிறகு அந்த ராஜா ஸுகமாகவீற்றிருந்தான். அந்தக்காலத்தில் நிமித்தம்தெரிந்த அம்மஹரிஷிகள், பக்ஷிகள் கூவினதைக் கேட்டு, 'சகுந்தலையே! நமக்கு நல்ல நிமித்தங்களாகின்றன. இவை நம்மு டைய காரியம் ஸித்திப்பதைத் தெரிவிக்கின்றன. நிச்சயமாக நீ ராஜ பத்தினியாகப்போகிருய். உன்புத்திரன் இன்றையத்தினமே யுவராஜா வாகப்போகிருன்' என்றனர். வாத்தியங்களின்முழக்கங்களினால் ஒலி நிரம்பின தலைமையான அரண்மனைவாயிலில் சகுந்தலையைமுன்னிட்

* பௌராணிகர்கள். † ராஜவம்சக்கிரமத்தைப் பாடுகிறவர்கள்.

‡ கட்டியம் கூறுகிறவர்கள்.

டுக்கொண்டு அம்மஹரிஷிகள் பிரவேசித்தனர். பார்ப்பவர்கள் பிரவேசிக்கின்றராஜபுத்திரனைச் சிலாகித்தனர். அந்தப்பூருவம்சகுமாரன் தலைக்கோட்டைவாயிலில் புகும்போதே மகிழ்ச்சியுடன் தன்னை இந்திரலோகத்திலிருப்பவனாக நினைத்தான். பாரதரே! பட்டணத்துஜனங்களனைவரும் ராஜகுமாரனைப்பார்ப்பதற்காக ஒருவரைஒருவர் அழைத்துக்கொண்டு அங்கே வந்துசேர்ந்தனர். 'இவள் இந்த ஜனங்களின் முன் தேவதையாகிய ஸ்ரீதேவியே வந்ததுபோலவும், ஜயந்தனென்னும் புத்திரனுடன் இந்திரலோகத்திலிருந்து இந்திராணியேவந்தது போலவும் சோபிக்கிறாள்' என்றுசொல்லி, அந்தஜனங்களெல்லாரும் சேர்ந்து தேவதைகளைப்போன்ற ரூபமுள்ள அம்மஹரிஷிகளை வந்தனஞ்செய்து, 'இப்போது எமதுஜன்மம் ஸபலமாயிற்று. சூரியனைப் போன்ற தேஜஸையுடைய இம்மஹரிஷிகளைக்கண்டு நாம் க்ருதார்த்தரானோம்' என்றனர். இவ்வாறுசொல்லி, சிலர் ஒன்றாகச்சேர்ந்து பார்வதிபுத்திரராகிய குமாரக்கடவுளைப்போன்றஅந்தத்தாமரைக்கண்ணனாகிய ராஜகுமாரனை அநுஸரித்துச் சென்றனர். சகுந்தலையின் குமாரனைப் பார்ப்பதற்காக வந்தவர்களில் சிலமூடர்கள் கிருஷ்ணாஜினம் போர்த்துக்கொண்டிருந்த ரிஷிகளைப்பார்க்க விரும்பாமல், 'விகாரரூபமுள்ள இவர்கள் நாகரிகர்களுக்குப் பிசாசுகளைப்போலக் காணப்படுகின்றார். ஸந்தியாகாலம் வாராமலிருக்கும்போதே பிசாசங்கள் இந்த உயர்ந்தநகரத்தில் பிரவேசிக்கின்றனவே!' என்று சொன்னார்கள். பசியினாலும் தாகத்தினாலும் பீடிக்கப்பட்டவர்களும், களைத்தவர்களும், மரவுரியையும் தோலையும் தரித்தவர்களும், தோலும் எலும்புமாக இருப்பவர்களும், மாம்ஸமில்லாதவர்களும், நரம்புக்கோவைகளாக இருப்பவர்களும், சிவந்தகண்களும் செம்பட்டை நிறமான ஜடைகளும் நீண்டபற்களுமுடையவர்களும், வயிறுலொட்டினவர்களும், தலையில்வஸ்திரமில்லாதவர்களும், கைகளைத்தூக்கினவர்களுமாகிய அவர்களைக்கண்டு பட்டணத்து ஜனங்கள் பரிஹாஸம்செய்தனர். இவ்வாறு சொல்லிக்கொண்டிருந்த அந்த ஜனங்களின் சொல்லைக்கேட்டு அந்த மஹரிஷிகள் ஒருவரை ஒருவர் அழைத்துப் பின்வருமாறு சொல்லலாயினர்.

'ஸத்யவாதியான பகவானாகிய கண்ணுவர் சொன்னசொல்லை நாம் செய்யாமற்போனோம். இந்த நகரப்பிரவேசம் செய்யத்தகாதென்பது அவருடையகட்டளை. துர்ஜனர்கள் மிகுதியாயுள்ள நகரத்தில் நாம் ஏன் பிரவேசிக்கவேண்டும். பற்றுக்களை ஒழித்தரிஷிகளுக்கு நகரத்தில் என்னகாரியம்? ஆதலால், கங்கையும் யமுனையும்

சேருகிற இடமாகிய வனத்துக்குப்போவோம்' என்றுசொல்லி அந்த ரிஷிக்கூட்டங்கள் வந்தவழியே திரும்பிப்போயின.

---

## தொண்ணூற்றேழாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(வந்த சகுந்தலையைத் துஷ்யந்தன் நிராகரிப்பது.)

அந்தச் சகுந்தலை ரிஷிக்கூட்டங்கள் திரும்பிப்போவதைக் கண்டு கையினால்புத்திரனைப்பிடித்துக்கொண்டு தாய்தந்தைகள்விட்டு விட்ட குழந்தைகள் எப்படி அழுமோ அப்படி அழுதுகொண்டிருந்தாள். அந்தப்பிராமணர்கள் மறைந்துபோனபின், துயரப்பட்டுக் கொண்டிருந்த சகுந்தலை தைரியத்தை அடைந்து புத்திரனையே துணையாக அழைத்துக்கொண்டு ராஜமார்க்கத்தினால் மெல்லமெல்லச் சென்றாள். ராஜமார்க்கமாகச் செல்லும் அந்தக்குமாரன் முன்பார்க்காத தனிகர்க்ருஹங்களையும் ராஜக்ருஹங்களையும் தேவாலயங்களையும் விசித்திரங்களான உயர்ந்த ஸபைகளையும் விருப்பத்துடன் பார்த்து வியப்புற்றான்.

நடையினால் அன்னத்தையும், குரலால் குயிலையும், முகத்தால் சந்திரனையும், ஒளியால் லக்ஷ்மியையும், புன்னகையினால் குருக்கத்தி மலரையும் ஒத்திருப்பவளும், மலர்மகளே கையிலேந்திய தாமரைப் புஷ்பமாகிய அடையாளத்தை நீக்கிவந்தவள் போன்றவளும், தாமரை இதழ்போன்ற அகன்ற கண்களையுடையவளும், தாமரைப்பூவிலுள்ள காயும் உருக்கின தங்கமும்போன்ற நிறமுள்ளவளுமாகிய அந்தச்சகுந்தலையைக்கண்டு எல்லாஜனங்களும் 'இவள் கைக்குள்ளடங்கும் இடையுள்ளவளும், அழகிய கூந்தலுள்ளவளும், நெருங்கிய ஸ்தனங்களுள்ளவளுமாக இருக்கிறாள். இவளுடைய நிதம்பம் மிகவிசாலமாயிருக்கிறது. தொடைகள் யானைத்துதிக்கைக்கொப்பானவை. கால்கள் உயர்ந்தும் உள்ளங்கால்சிவந்தும் பூமியில் நன்றாகப் பதிந்துமிருக்கின்றன. இப்படிப்பட்ட ரூபமுள்ள இவள் ஸ்வர்க்கலோகத்திலிருந்து வந்தவள்போலிருக்கிறாள்' என்று சொன்னார்கள். துஷ்யந்த நகரத்திலுள்ள ஜனங்களனைவரும் இவ்வாறாகவே நினைத்தனர். 'இவன் ஸிம்மம்போன்ற பார்வையுடையவன்; ஸிம்மம்போன்றபற்களுடையவன்; ஸிம்மம்போன்ற தோள்களையுடையவன்; ஸிம்மம்

போன்ற மார்பையுடையவன்; ஸிம்மத்துக்கொப்பான பலமுள்ளவன்; ஸிம்மம்போல் தீரமாக நடப்பவன்; பருத்ததோள்களை யுடையவன்; நீண்ட கைகளையுடையவன்; விசாலமான மார்பையுடையவன்; * குடைவடிவமான தலையுள்ளவன்; வளர்ச்சியுள்ளவன்; உள்ளங்கை உள்ளங்கால்கள் சிவந்தவன்; சிவந்தவாயுள்ளவன்; துந்துபி வாத்தியத்துக்கொப்பான த்வனியுள்ளவன்; ராஜலக்ஷணங்களுள்ளவன்; ராஜலக்ஷ்மி இவனிடத்தில் காணப்படுகிறாள். தோற்றத்திலும் அழகிலும், சரீரத்திலும், ஸாமர்த்தியத்திலும் துஷ்யந்தனுக்கு ஸமானமாக இருக்கிறான். இவன் யாருடைய புத்திரனாக இருக்கலாம்?" என்று சகுந்தலையின் புத்திரனுடைய குணங்களைப்பற்றியும் அந்தஜனங்கள் அடிக்கடி பேசினர். இவ்வாறு சொல்லிக்கொண்டு அவர்களெல்லாரும் ஆயிரக்கணக்காகச் சிலாகித்தனர். ஆண்பெண்களனைவரும் ஊகித்துப் பேசிக்கொண்டனர். பந்துக்களைப்போல் அன்புடன் சகுந்தலையின்பின் சென்றனர். நகரத்து ஜனங்களினுடைய அந்தச்சொல்லைக் கேட்டுக்கொண்டு அந்தராஜகுமாரியான சகுந்தலை ஒன்றும்பேசாமல் ராஜமாளிகையின் வாயிலையடைந்து தன்காரியம் பெரிதாயிருப்பதுபற்றி உடனே மனம்சோர்ந்து சிந்தையுற்றாள். ஜனமேஜயராஜாவே! வெட்கத்தினால் உடம்புகுன்றி, 'என் காரியத்திற்காக வெட்கமில்லாமல் ராஜாவின் எதிர்நின்று என்ன சொல்வேன்?' என்று சிந்தையுடன் சொல்லிக்கொண்டு வருத்தமுற்றவளான அந்தச்சகுந்தலை, ராஜாவினிடம்சென்று தெரிவித்தபிறகு, உள்ளே அனுப்பப்பட்டாள். பாலஸூரியனுக்கொப்பான ஒளியுள்ள அந்தக் குமாரனுடன் சகுந்தலை ஸிம்மாஸனத்திலிருக்கும் இந்திரனுக்கொப்பான சக்தியுள்ள ராஜாவைப்பார்த்துத் தலைவணங்கி மிகுந்த சந்தோஷத்தையடைந்து நியாயப்பிரகாரம் ராஜாவுக்கு மரியாதை செய்து தன் புத்திரனைப்பார்த்து, 'நியமம்தவறாத உன் பிதாவாகிய ராஜாவுக்கு வந்தனஞ்செய்' என்று சொன்னாள். அவள் இவ்வாறு புத்திரனுக்குச் சொல்லி நாணத்தினால் தலைகுனிந்து, அங்கேயே தூணைக்கட்டிக்கொண்டு நின்று ராஜாவைப்பார்த்து, 'தயைசெய்யுங்கள்' என்றுசொன்னாள். சகுந்தலையின் புத்திரனும் ராஜாவைநமஸ்கரித்துக் கைகூப்பிக்கொண்டு ஆனந்தத்தினால் மலர்ந்தகண்களுடன் ராஜாவையே நோக்கிநின்றான். அந்தத் துஷ்யந்தன் தர்மமான புத்தியினால் சிந்தித்துக்கொண்டு, 'உத்தமஸ்திரீயே! நீ வந்த காரியமென்ன? சொல்; சந்தேகமில்லாமற் செய்வேன். புத்திரனுள்ளவள்

* நடுவுயர்ந்து பக்கங்கள் தாழ்ந்திருப்பதென்பது கருத்து.

விஷயத்தில் சொல்லவேண்டுமோ?' என்று சொன்னான். அதைக்கேட்டுச் சகுந்தலை சொல்லலானாள்: 'மகாராஜாவே! புருஷர்களில் உத்தமரே! நான்சொல்லப்போவதைத் தயைசெய்து கேளும். ராஜாவே! வீரரே! இவன் என்னிடம் உமக்குப்பிறந்த புத்திரன். ஆதலால், ராஜாவே! உமதுபுத்திரனை நீர் யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்யக்கடவீர். உத்தமபுருஷரே! அந்த ஆஶ்ரமத்தில் நீர் சொன்னபடி நடந்துகொள்ளும்; வீரரே! முன்னேகண்ணுவருடைய ஆஶ்ரமத்தில் நீர் என்னுடன் சேர்ந்தபோது செய்தபிரதிஜ்ஞையை நினைத்துப்பாரும்' என்று சொன்னாள்.

ஜனமேஜயரே! வேறு ஸ்திரீகளுடைய போகத்தில் அகப்பட்டுக்கொண்ட அந்தத் துஷ்யந்தனுக்குச் சகுந்தலையும் அவள் புத்திரனும் * மனத்தினுள்ளே மறைந்துபோயினர். அவன் அப்போது புத்திரனுடன் வந்த அந்தப் புன்னகையுள்ள சகுந்தலையை மனத்துக்குள்வைத்து உள்ளன்புடன் நெடுநேரம் சந்தோஷமடைந்திருந்தான். அந்தராஜா அவள்சொல்லைக் கேட்டபின், அவளுடைய நினைவையடைந்தும், 'அன்புள்ளவளே! உன்னுடைய சேர்க்கையைப்பற்றி எனக்கு நினைவில்லை. (நான் விவாகம் செய்துகொள்ளாமல்) வீணாக ஸ்திரீசங்கமம்செய்யமாட்டேனென்பது என்னுடைய நிச்சயம். அழகியவளே! உன்னுடன் சேர்க்கையைப்பற்றி எனக்கு நினைவில்லை. அறம்பொருளின்பம் மூன்றிலும் எனக்கு உன்னுடன் சம்பந்தமிருப்பதாக நான் நினைக்கவில்லை. சென்றாலும் செல்; நின்றாலும் நில்; வேறென்ன விரும்புகிறாயோ அதையும் நீ செய்யலாம். உன் இஷ்டம்' என்றான்.

---

## தொண்ணூற்றெட்டாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(சகுந்தலைக்கும் துஷ்யந்தனுக்கும் நடந்தவிவாதம்.)

உயர்ந்தமனமுள்ள சகுந்தலை அவனால்இவ்வாறுசொல்லப்பட்டு வெட்கமுற்று, துக்கத்தினால் பிரஜ்ஞைதப்பினவள்போலாகித் தூண்போல் அசைவற்றுநின்றாள். படபடப்பினாலும் கோபத்தினாலும் கண்கள் சிவந்து உதடுகளிரண்டும் துடித்துக்கொண்டு பார்வையினால் எரிக்கின்றவள்போல ராஜாவைக் குறுக்காக நோக்கினாள். கோபத்

* அவன் அவர்களை மறந்தான்.

திலை் தூண்டப்பட்ட அபிப்பிராயத்தைமறைத்துத் தபஸினல் சம் பாதிக்கப்பட்ட மகிமையை அப்போது அடக்கிக்கொண்டாள். சற்று நேரம் சிந்தித்து விசனமும் கோபமுங்கொண்டு பார்த்தாவை நோக்கி நியாயத்தைவிடாமல் பின்வருமாறு சொல்லத்தொடங்கினுள் :—

'மஹாராஜாவே! நீர் அறிந்திருந்தும் ஸாதாரணமான அற்ப மனிதனைப்போல் அறியேனென்று ஏன் இப்படி அஞ்சாமற்பேசுகிறீர்? நீர் சொல்வது சத்தியமென்பதும் பொய்யென்பதும் உமதுமனத்துக் கேதெரியும். ஸாக்ஷியான உமதுமனத்தை நீரே அவமானஞ்செய் கிறீர். ஐயோ! எவனொருவன் ஒருவகையாக இருக்கிறமனத்தினை அதற்கு மாறுனவகையில் காண்பிக்கிருனே (அவன்) தன்னைத் திரு டிக்கொண்ட அந்தத்திருடன் செய்யாதபாபம் என்ன இருக்கிறது? 'நான் ஒருவனுயிருக்கிறேன்' என்று நீர் நினைத்துக்கொண்டிருக்கி றீர். உமது மனத்துக்குள் மறைந்திருக்கும் ஆதிபுருஷனுகியகடவுளை நீர் அறியவில்லை. எவன் பாபகாரியத்தைப் பார்த்துக்கொண்டிருக் கிருனே அவனருகில் நீர் பாபத்தைச்செய்கிறீர். எப்போதும் பொய் யைவிட்டவர்களாகிய ஸத்புருஷர்களெவர்க்கும்நன்மைக்குக்காரண மானதும் துன்பத்தைச் செய்யாமலிருப்பதும் தர்மமொன்றுதான். ஒருவன் பாபத்தைச்செய்து தன்னை யாரும் அறியவில்லையென்று நினைக்கிருன். தேவர்களும் அந்தர்யாமியான பரமாத்மாவும் அவனைப் பார்த்திருக்கின்றனர். ஸூரியனும் சந்திரனும் வாயுவும் அக்நியும் ஆகாயமும் பூமியும் ஜலமும் தன்மனஸும் யமனும் பகலும் இரவும் இரண்டு ஸந்திகளும் தர்மதேவதையும் மனிதனுடைய நடையை அறிகின்றனர். செய்யுங்கருமங்களைப் பார்த்துக்கொண்டிருக்கும் தன் ஹிருதயத்திலுள்ள ஜீவாத்மா எவனுக்குத் திருப்தியாகிருனே அவ னுடையபாபத்தைச் ஸூரியபுத்திரனுகியயமன் விலக்கிவிடுகிருன். துரா த்மாவாகிய எந்தமனிதனுக்குத் தன்ஆத்மா திருப்தியாகவில்லையோ அந்தப்பாபகாரியம்செய்கிற நிர்ப்பாக்கியனை யமன்பயமுறுத்துகிருன். எவன் தானுக ஆத்மாவை அவமதித்து மனத்தை வேருகக்காண்பிக் கிருனே அவனுக்குத் தேவர்கள் நன்மைசெய்வதில்லை. அவனுக்குத் தன்ஆத்மாவே உதவவில்லையே. பதிவ்ரதையாகிய என்னைத் தானுக வந்தாளென்று இவ்வாறு அவமதிக்கவேண்டாம். மரியாதைக்குரிய பாரியையாகிய நான் ஸ்வயமாகவே வந்திருக்கையில் நீர் மரியாதை செய்யாமலிருக்கிறீர். எதற்காக நீர் நாடோடியைப்போல் ஸபை யில் என்னை அனுதரவுசெய்கிறீர்? நான் இப்போது யாருமில்லாத இடத்தில் முறையிடவில்லை. நான்சொல்வது உமக்குச்செவியிற்பட

வில்லையா? துஷ்யந்தரே! வேண்டுகின்ற என்னுடையசொல்லைநீர்செய் யாவிட்டால் உமது தலை இப்போதே நூறு துணுக்குக்களாக வெடித் துப்போம். புருஷன் தன்மனைவியின் கர்ப்பத்திற்புகுந்து அவளிடத் தில் அவன்மறுபடியும் ஜனிக்கிறான். அப்படி ஜனிப்பதினாலேதான் புராணங்கள் தெரிந்தகவிகளும் ரிஷிகளும்அவளை ஜாயையென்று அறி ந்திருக்கின்றனர். சாஸ்திரோக்த கருமங்களைச்செய்கிற புருஷனுக்கு எந்த ஸந்ததிஉண்டாகிறதோ அந்தஸந்ததி, அவனுடையமுன்னிறந் துபோன பிதாமஹர்களை (த்தன்னாலும்) தன்சந்ததியினாலும் கரை யேற்றுகின்றது. புத்ரன் பிதாவை, 'புத்' என்னும் நரகத்திலிருந்து காப்பாற்றுவதனால் புத்ரனென்று பெயருள்ளவனாக முன்னமேபிரம்ம தேவரால் கூறப்பட்டிருக்கிறான். புத்திரனால்புண்ணியலோகங்களை ஒருவன் வசப்படுத்துகிறான். புத்திரனுடைய புத்திரனால் அழிவில் லாமையை அடைகிறான். அதன்பின்,பௌத்திரனுடையபுத்திரனால் இவன் முன்னோர்கள் ஆனந்திக்கின்றனர். எவள் வீட்டுவேலையில் தேர்ந்தவளோ அவள் பாரியை; எவள் ஸந்ததியுள்ளவளோ அவள் பாரியை; எவள் கணவனை உயிராக நினைப்பவளோ அவள் பாரியை; எவள் கற்புடையவளோஅவள் பாரியை; பாரியையென்பவள் புருஷ னுடைய ஒருபாதியாவாள். பாரியை மிகச்சிறந்த *ஸகா; பாரியை அறம்பொருளின்பமாகிய மூன்றுபுருஷார்த்தங்களுக்கும் காரணம். பாரியையுள்ளவனே சுற்றங்களுள்ளவன்; பாரியையுள்ளவர்களே † கிரியைகளுள்ளவர்கள்; பாரியையுள்ளவர்களே க்ருஹஸ்தர்கள்; பாரியையுள்ளவர்களே ஸுகமுள்ளவர்கள்; பாரியையுள்ளவர்களே ஸம்பத்துள்ளவர்கள். இன்சொற் சொல்லுகின்ற பாரியைகள்ரகஸ்ய காலத்தில் சிநேகிதர்களாகவும், தர்மகாரியங்களில் ‡ தந்தைகளாக வும், கஷ்டப்படும்போது தாய்களாகவும், வழிநடக்கும்போது காடு களிலேயும் ஆறுதலாகவும் இருக்கின்றனர். எவன் பாரியையுள்ள வனோ அவனே நம்பிக்கைக்குரியவன். ஆதலால், பாரியை முக்கிய மான ஆதரவு. ஜீவித்திருக்கும்போதும் இறந்துபோனபோதும் கஷ் டங்களில் ஸகாயமின்றி அகப்பட்டபோதும் பதிவ்ரதையானபாரியை ஒருத்திமட்டுமே பர்த்தாவைவிடாமல்அநுஸரிக்கிறாள். முதலில் இற ந்துபோன மனைவி தன்கணவனுக்குப் பரலோகத்தில் காத்திருக்கி றாள். முன்னிறந்த கணவனைக் கற்புடையமனைவி பின்னேயும் அநு ஸரிக்கிறாள். ராஜாவே! இந்தலோகத்திலும் பரலோகத்திலும் பாரியை

* துணை. † யஜ்ஞாதிகாரியங்கள் செய்யத்தக்கவர்.

‡ ஹிதம்சொல்லுகிறவர்கள்.

யைக் கணவன் அடைகிறான். இந்த லோகத்தில் பாரியை தேகத்தை வளர்ப்பதற்குரியவள்; ஸ்வர்க்கலோகம்செல்லுகிறவனுக்குக் கட்டுஸாதம் போன்றவள். இந்தக்காரணத்தினாலேதான் பாணிக்கிரகணம் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது. தானே தன்னால் ஜனித்துப் புத்திரனாகிறானென்று தெரிந்தவர் சொல்லுகின்றனர். ஆதலால், கணவன் புத்திரனுக்குத்தாயாகிய தன்பாரியையைத் தாயைப்போல் பார்க்கவேண்டும். எல்லாருக்கும்புத்திரனென்பவன் தன்னுடையஆத்மாவேதான் என்று சொல்லுகின்றனர். நடையும் உருவமும் செய்கையும் சுழிகளும் லக்ஷணங்களும் பிதாக்களிடம் எவ்வாறாகக் காணப்படுகின்றனவோ அப்படியே புத்திரர்களிடமும் இருக்கின்றன. புத்திரர்களுக்குப் பிதாவின்சம்பந்தத்தினாலேதான் நல்லவையும் கெட்டவையுமானஒழுக்கங்களும் குணங்களும் செய்கைகளும் உண்டாகின்றன. பிதாவானவன் தன் பாரியையினிடத்தில் உண்டாக்கப்பட்ட தன்புத்திரனைத் தன் முகத்தைக் கண்ணாடியிற் பார்ப்பதுபோல் பார்த்து, புண்ணியஞ்செய்தவன் ஸ்வர்க்கலோகம் சென்று ஆனந்தமடைவதுபோல் ஆனந்தமடைகிறான். பதிவ்ரதைகளைப்போல் வேஷதாரிகளான ஸ்திரீகள் அன்னியபுருஷனுடைய கர்ப்பத்தை வாங்கிக்கொள்வதனால் தங்கள் பர்த்தாக்களின் குலங்களையுமழித்துத் தாங்களும் கொடிய நாகம் புகுகின்றனர். தம் பாரியையிடம் அவள் நினைத்தபடி பரபுருஷர்களால் உண்டாக்கப்பட்ட புத்திரர்களைத் தமதுபுத்திரர்களென்று ஜனங்கள் நினைக்கின்றனர். அவர்கள் புத்திரர்களாயிருந்தும் சத்துருக்களேயாவார். அவர்கள் த்வேஷம் செய்வார்கள்; சொன்னதைச் செய்யார்; மாறாகச்செய்வார்; பிதாவும் அவர்களை வெறுப்பான். ராஜாவே! தனக்குப் பிறந்தவன்விஷயத்தில் அவ்வாறில்லை. புத்திரன் தன்னை உத்பத்திசெய்த பிதாவைப் பகைக்கமாட்டான். அவ்வாறே உத்பத்திசெய்த பிதாவும் புத்திரனைப் பகைக்கமாட்டான். ஆதலால், தானே புத்திரனாக இருப்பன். மனத்துயரங்களாலும் மிகுதியான நோய்களாலும் வருந்திக்கொண்டிருக்கும் ஜனங்கள், கோடைக்காலத்தில் தாபமடைந்தவர் தண்ணீரில் ஆறுவதுபோல், தங்கள் மனைவிகளிடம் ஆறுகின்றனர். தூரதேசம்போய் இளைத்துப் பலஹீனர்களாய் அழுக்கடைந்த வஸ்திரங்களோடுகூடிய மனிதர்களும் தங்கள் மனைவிகளைக்கண்டு, தரித்திரர்கள் தனலாபமடைந்து மகிழ்வதுபோல மகிழ்கின்றனர். அறிவுள்ளவன் தன் ஸுகமும் சந்தோஷமும் தர்மமும் தன் பாரியைகளிடமிருப்பதை ஆராய்ந்து அவர்கள் தனக்குப் பிரியமில்லாத சொற்சொன்னாலும்

அவர்களுக்குப் பிரியமில்லாத சொல்லைச் சொல்லலாகாது. ஸ்திரீ தன்னில் பாதியென்பது வேதவாக்கியம். அவள் இவனுடைய தனத்தையும் ஸந்ததிகளையும் தேகத்தையும் உலகவாழ்க்கையையும் தர்மத்தையும் ஸ்வர்க்கத்தையும் ரிஷிகளையும் பிதிர்க்களையும் காப்பாற்றுகிறாள். பரிசுத்தமான ஸ்திரீகள் தாம்உத்பத்தியாகும் நிலமாக இருக்கின்றனர்; எப்போதும் விடாதவர்கள். ஸ்திரீகளின்றிச் சந்ததியை உண்டுபண்ணுவதற்கு ரிஷிகளாலேயும் எப்படி முடியும்? தேவர்களுக்கும் தங்களை உத்பத்திசெய்விப்பதற்கு ஸாமர்த்தியமேது? உலகங்களில் எல்லாமறிந்தவனுக்கும் ஸ்ருஷ்டிசெய்வது ஸ்திரீகளிடம் ஏற்பட்டிருக்கிறது. சண்டாள ஸ்திரீகளிடத்திலும்கூட ரிஷிகளுக்குப் பிறந்தசிலர் ரிஷிகளாக இருந்திருக்கின்றனர். புதல்வன், புரண்டு தரையிலுள்ளமண் உடம்பில் படிந்தபடி தந்தையின் அங்கத்தைத் தழுவிக்கொள்வானானால் அதைக்காட்டிலும் சிறந்தது என்ன இருக்கிறது? அப்படிப்பட்ட பிதாவாகிய நீர், விருப்பத்துடன் கிட்டவந்து கடைக்கண்ணினால் பார்க்கின்ற இந்தமானியான புத்திரனை எதற்காக அநாதரவுசெய்கிறீர்? எறும்புகளும் தங்கள் முட்டைகளை எடுத்துக்கொண்டு போகின்றன; விட்டுவிடுவதில்லை. நீர்மட்டும் இவ்விதமான புத்திரனை எல்லாவகையிலும் ஆதரிக்காமலிருப்பது ஏன்? என்னிடத்தில் பிறந்த உமதுபுத்திரனை நீர் எப்படி எடுக்காமலிருக்கலாம்? காக்கைகளும் குயில்களின் முட்டைகளைத் தம்முட்டைகளென்று நினைத்து வளர்க்கின்றன. எல்லாம் தெரிந்தநீர் இப்படிப்பட்ட புத்திரனை ஏன் மதிக்காமலிருக்கிறீர்? பொதியமலையிலுண்டான சந்தனம் மிகக்குளிர்ச்சியென்று சொல்லுகின்றனரே! அந்தச் சந்தனத்தைக் காட்டிலும் தன்குழந்தையைத் தழுவுவது மேற்பட்டதாகும். தன்பிள்ளை குழந்தைப்பருவத்தில் கட்டிக்கொள்ளும்போது அவனைத் தொடுவது எவ்வாறு இனிமையாக இருக்குமோ அவ்வாறு நல்லவஸ்திரங்கள் படுவதும் ஸ்திரீகளைத் தழுவுவதும் ஜலத்தில் ஸ்நானஞ்செய்வதும் ஸுகமாகவிரா. புத்திரன் மேலே தொடுவதைப் பார்க்கிலும் அதிக இனிய ஸ்பர்சம் உலகத்தில் இல்லை. பார்வைக்கு இனியவனாகிய இந்தப்புத்திரன் உம்மைக் கட்டிக்கொண்டு தொடட்டும். மனிதர்களுக்குள் பிராமணன் சிறந்தவன். நாலுகால்களுள்ளவற்றுள் கோ சிறந்தது. பூஜிக்கத் தக்கவர்களுக்குள் ஆசாரியர் சிறந்தவர். தொடுவதற்கு இனியவற்றுள் புத்திரன் சிறந்தவன். வீரரே! ராஜஶ்ரேஷ்டரே! மூன்றுவருஷம் நிறைந்தபின் இந்தவீரனாகிய குமாரன் உமது துக்கத்தைப் போக்குவதற்காக என்னிடத்திற் பிறந்

திருக்கிறான். இப்போது நான் கட்டளையிட்டதன்மேல் நீர் அழைப்பதை எதிர்பார்க்கிறான். 'பூருவம்சத்துக் குமாரனாகிய இவன் நூறு அசுவமேதங்கள் செய்யப்போகிறான்; அளவற்ற தக்ஷிணைகளுள்ள ராஜஸூயம்முதலான வேறுயாகங்களையும் செய்யப்போகிறான்' என்று முன்னே என்னுடைய பிரஸவகாலத்தில் ஆகாசவாணி எனக்குச் சொல்லிற்று. ஆ! ஆ! வேறு ஊருக்குப்போன மனிதர்களும் திரும்பிவந்து புத்திரர்களை அன்புடன் தங்கள் மடியில்வைத்து உச்சி மோந்து ஆனந்திக்கிறார்களல்லவா? பிராமணர்கள் புத்திரர்களுடையஜாதகர்மத்தில் வேதங்களிலுள்ள மந்திரக்கோவையைப் பின்வருமாறு படிக்கின்றனர். உமக்கும் அது நன்றாகத் தெரிந்ததுதான். அவையாவன:—'என் ஒவ்வொரு அங்கத்திலிருந்தும் நீ ஜனித்திருக்கிறாய். என் ஹ்ருதயத்திலிருந்தும் அதிகமாக உண்டாயிருக்கிறாய். புத்ரனென்ற பெயருள்ள நானாகவே நீ இருக்கிறாய். அந்த நீ நூறுவருஷகாலம் ஜீவித்திருக்கக்கடவாய். என்னுடையஉயிர் உன்னால் இருப்பது. என்னுடைய ஸந்ததி உன்னால் குன்றாமல் இருக்கவேண்டும். ஆதலால், எனது புத்திரனே! அப்படிப்பட்ட நீ நூறுவருஷகாலம் ஸுகமாக ஜீவித்திருக்கக்கடவாய்' என்னும் இந்த மந்திரங்களினால் தந்தைகள் புத்திரர்களை உச்சியில் மோக்கின்றனர். முதலில் ஒருவனாக இருந்து பிறகு இரண்டாக ஆயிருக்கிறாயென்று உலகச்சொல்லிருக்கிறது. இவன் உம்முடையஅவயவங்களிலிருந்து பிறந்தவன்; புருஷனிடமிருந்துவந்த மற்றொருபுருஷன், தெளிவான தடாகத்தில் தனது இரண்டாவது உருவைப்பார்ப்பதுபோல் உமது புத்திரனைப் பாரும். தெளிவான தடாகத்தில் சந்திரனைப்பார்ப்பதுபோல் உம்மை என்னிடம் பாரும். ஆகவனீயம்என்னும் அக்னி கார்ஹபத்யமென்னும் அக்னியிலிருந்து எப்படி எடுக்கப்படுகின்றதோ அப்படியே இவன் உம்மிடமிருந்து எடுக்கப்பட்டவன். நீர் ஒருவராக இருந்து இப்போது இருவராகச் செய்யப்பட்டிருக்கிறீர். ராஜாவே! வேட்டையாடிக் கொண்டிருந்தநீர் ஒரு மானினால் இழுக்கப்பட்டபோது என் பிதாவின் ஆஶ்ரமத்தில் கன்னிகையாகஇருந்த என்னை அடைந்தீர். ஊர்வசி, பூர்வசித்தி, ஸஹஜன்யை, மேனகை, விஶ்வாசி, க்ருதாசி, இவ்வறுவர்தாம் அப்ஸரஸுகளுள்ளே சிறந்தவர்கள். அவர்களில், பிரம்மாவினிடமிருந்து பிறந்த சிறந்த அப்ஸரஸான மேனகையென்பவள் ஸ்வர்க்கத்திலிருந்து பூமிக்குவந்து விசுவாமித்திரருக்கு என்னைப் பெற்றாள். ஐசுவர்யமுள்ளவரும் தர்மத்தைக் கடைப்பிடித்தவரும் இரண்டாவது அக்னியைப்

போன்றவரும், பிரம்மாவின்புத்திரரும் விசுவாமித்திரருக்குக் கூடஸ்தருமாகிய குசரென்னும் ராஜரிஷி ஒருவர் இருந்தார். பலவானும் தர்மம்செய்பவருமாகிய குசநாபரென்பவர் குசருடைய புத்ரர். ராஜாவே! குசநாபருடைய புத்ரர் காதி. காதியின்புத்ரர் விசுவாமித்ரர். என்பிதா இப்படிப்பட்டவர். என்னுடைய தாயாராகியமேனகை சிறந்தவள். அந்த மேனகையென்னும் அப்ஸரஸ் இமயமலையின் சரிவில் என்னைப்பெற்றாள். அந்தத் துஷ்டை ஊரார்பிள்ளையைப்போலவே என்னையெறிந்துவிட்டுச் சென்றாள். அந்தப் புண்ணியமுள்ள பக்ஷிகள் என் பாக்கியத்தினால் வந்துசேர்ந்து சிறகுகளினால் என்னைக் காத்தன. அதனால், நான் சகுந்தலையென்று பெயர்பெற்றேன். அதன்பின், மஹாத்மாவாகிய கண்ணுவமஹரிஷியினால் பார்க்கப்பட்டேன். அக்நிஹோத்ரம் செய்வதற்கு ஜலத்திற்காகப் போன அம்மஹரிஷியைப் பக்ஷிகள்கண்டு தயாவானாகிய அவருக்கு என்னை அடைக்கலம் வைக்கப்பட்ட சொத்தைப்போல் கொடுத்தன. கண்ணுவமஹரிஷி என்னைப்பார்த்து, 'திரேதாக்கினிகள்சந்தோஷப்படுகின்றன' என்று என்மீது அன்புவைத்து அரணியைப்போல் என்னையெடுத்துக்கொண்டு தமது ஆஶ்ரமம்சென்றார். ராஜாவே! அந்தமஹரிஷி தாமாகவே கிருபைசெய்து சிறந்தபெண்ணாகிய என்னைத் தம் பெண்ணைப்போல் நடத்தினார். ராஜாவே! நான் விசுவாமித்ரர் பெண்; கண்ணுவமஹரிஷியினால் வளர்க்கப்பட்டவள். ராஜாவே! யௌவனப்பருவத்திலிருக்கும்போது ஜனமில்லாத ஆஶ்ரமத்தில் பர்ணசாலையில் கன்னிகையாயிருந்த என்னை நீர் கண்டீர். யாருமில்லாத ஆஶ்ரமத்தில் பிதாஇல்லாமல்தெய்வத்தினால்புத்திகொடுக்கப்பட்ட என்னை ரஹஸ்யத்தில் உண்மையும் பிரியமுமான பேச்சுக்களினால் நீர் ஸந்ததிக்காகக் கேட்டுக்கொண்டீர். அறம், பொருள், இன்பம் மூன்றையும் வேண்டி நீர் ஆஶ்ரமத்தில் வாஸம் செய்தீர். காந்தர்வமென்னும் சாஸ்திரோக்தவிவாஹத்தினால் என்னைப் பாணிக்ரஹணம்செய்தீர். அந்த நான் எனது குலத்தையும் ஒழுக்கத்தையும் பொய்யாமையையும் தர்மத்தையும் முன்னிட்டுக்கொண்டு உம்மை இப்போது சரணமடைந்திருக்கிறேன். ஆதலால், 'ஆகட்டும்'என்றுபிரதிஜ்ஞைசெய்து அந்தச் சொல்லைப் பொய்யாக்குவது உமக்குத் தகாது. லோகநாதராகிய நீர் உமது தர்மத்தைப் பின்னேதள்ளி,உம்மையே கணவராக உடையவளும் பிழையில்லாதவளுமாகிய நான் வந்திருக்க, என்னை நீர் விடத்தகாது. ராஜாவே! நான் முன்ஜன்மத்தில் என்ன பாபகர்மஞ்செய்தேனோ? ஏனெனில், குழந்தைப்பருவத்தில் பெற்றோரால் விடப்பட்

டேன்; இப்போது உம்மால் விடப்பட்டேன். விடப்பட்டநான் ஆஶ்ரமத்துக்குப் போகவே போவேன். உமதுபுத்திரனுகிய இந்தக் குழந்தையைமட்டும் நீர் விட்டுவிடாதீர்' என்ருள்.

இப்படிச் சொல்லக்கேட்ட துஷ்யந்தன், 'சகுந்தலேயே! உன்னிடத்தில் புத்திரன் பிறந்ததைப்பற்றி எனக்குத்தெரியவில்லை. பெண்கள் பொய்சொல்வர். உன்சொல்லை எவன் நம்புவன்? முக்கியமாக என்னிடத்தில் இந்த நம்பத்தகாதசொல்லைச் சொல்லுகிற நீ வெட்கப்படவில்லை. கெட்டரிஷிப்பெண்ணே! செல்லலாம். தவத்தில் தீவிரமுள்ள விசுவாமித்ரமஹரிஷி எங்கே! அந்தமேனகையென்னும் அப்ஸரஸ் எங்கே! இப்படிநீதியில்லாமல் ரிஷிவேஷம்கொண்ட நீ எங்கே! இந்தஉன்னுடைய புத்திரன் சிறுவனுகஇருந்தும் பெரிய தேகமுள்ளவனுகவும் மிகுந்த பலமுள்ளவனுகவுமிருக்கிறுன். எப்படி மரத்தினடிபோல் கொஞ்சகாலத்தில் கிளம்பிவிட்டான்? உனது பிறப்பு வெகுதாழ்வானது. உன்னை வியபிசாரியென்று நினைக்கிறேன். மேனகைக்கு இஷ்டம்போல் காமம்வைத்த சினேகத்தினுல் பிறந்தவளாக அல்லவோ இருக்கிருய்? ரிஷிகன்னிகையே! நீ சொல்வது ஒன்றும் எனக்குத் தெரிந்ததாயில்லை. உலகத்தில் பெண்களனைவரும் கொடியவர்கள்; காமத்தை முக்கியமாகக் கொண்டவர்கள். எல்லாப்பெண்களும் அயலாருக்குட்படுகிறவர்கள். எல்லாரும் கோபத்தை மேற்கொண்டவர்கள். பெண்களெல்லாரும் பொய்சொல்லுகிறவர்கள். கண்ணுவரைப்பற்றி நீ பேசத்தகாது. உன் தாயாராகியமேனகை தயையற்றவள்; வியபிசாரி. அவள்உன்னை இமயமலைச்சரிவில் * நிர்மாலியத்தைப்போல் எறிந்து விட்டாளல்லவா? அந்த க்ஷத்திரியஜாதியில் பிறந்த உன் பிதாவாகிய விஶ்வாமித்ரரும் தயையில்லாதவர். பிராம்மணராக ஆவதற்கு ஆசைகொண்டவர்; காமத்துக்குட்பட்டவர்; தேவஸ்திரீ விஶ்வாமித்ரருக்குத் தன்இஷ்டப்படியே பெற்ருளென்று சொல்லுகிருய். வியபிசாரியே! ஆ! ஆ! உன்னுடைய பிறப்பே ஜனங்களால் இகழப்பட்டதென்று நான் நினைக்கிறேன். மேனகை அப்ஸரஸுகளுள் சிறந்தவள். உன்பிதாவோ மஹரிஷி. அவரிருவருக்கும் பெண்ணுகிய நீ ஏன் வியபிசாரியைப்போல் பேசுகின்ருய்? உன்ஜாதியும் இழிவானது. நல்ல குலத்திற்பிறந்தவளென்று நீ சொல்லிக்கொள்ளுகிருய். பெற்று விடப்பட்ட நீ குயிலைப்போல் பிறரால் வளர்க்கப்பட்டிருக்கிருய். பாபங்களினுல் கெட்டபுத்தி வளர்க்கப்படுவதுபோல் நீ வளர்க்கப்பட்டாய். கண்

* தேவதைக்கு நிவேதனம் பண்ணின சேஷம்.

னுவர் உனக்கு வளர்த்ததகப்பனுரா? ரிஷிப்பெண்ணே! நீ பிதற்று கிற இந்தச்சொல் நம்பத்தகாதது. அதை ராஜாவினிடத்திற் சொல்லுகிருய். விரும்பின இடத்திற்குச் செல்லலாம். ரிஷிப்பெண்ணே! பொன், ரத்னம், முத்து, ஆடை, ஆபரணங்கள் இவற்றில் எதை நீ அனுபவிக்க விரும்புகிருயோ அதைவாங்கிக்கொள். நான் உன்னைப்பார்க்க விரும்பவில்லை. இதைவிட்டு உன் இஷ்டப்படி போகலாம்' என்ருன்.

---

## தொண்ணூற்ருென்பதாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(துஷ்யந்தனைக் கோபித்துச் சகுந்தலை புத்திரனுடன் திரும்புவது.)

சகுந்தலைசொல்லுகிருள்:—'ராஜாவே! பிறருடைய துவாரங்கள் * கடுகளவாயிருப்பினும் அவற்றை நீர் பார்க்கிறீர். உம்முடையவை † வில்வப்பழவளவாயிருப்பினும் அவற்றைப்பார்த்தும் பார்க்காமலிருக்கிறீர். மேனகை தேவர்களிலேயே இருப்பவள். தேவரும் மேனகையை அனுஸரிப்பவர். துஷ்யந்தராஜாவே! உமதுபிறப்பைப்பார்க்கிலும் என்பிறப்புத்தான் மேலானது; ராஜாவே! நீர்பூமியில் சஞ்சரிக்கிறீர். நான் வானத்தில் சஞ்சரிக்கிறேன். மஹாமேருவுக்கும் கடுகுக்குமிருப்பதுபோல் நம்மிருவருக்கும் வித்தியாசம் இருக்கிறது; பாரும். ராஜாவே! நான் தேவேந்திரன், குபேரன், யமன், வருணன் இவர்களின் இருப்பிடங்களுக்குச்செல்வேன். என் பிரபாவத்தைப் பாரும். மஹாராஜாவே! முன்னர் உமது கூடஸ்தரானஆயுஎன்னும்ராஜா, ஊர்வசிஎன்னும் அப்ஸரஸினிடத்தில் உண்டாக்கப்பட்ட புத்திரர். அநேக மகரிஷிகளும் வீரர்களான க்ஷத்திரியர்களும் அப்ஸரஸுகளிடம் உண்டாக்கப்பட்டவர்கள். ரிஷிகளுக்குத் தாயைப்பற்றிய தோஷமில்லை. ராஜாவே! நான் சொல்லப்போகிற ஜனவாக்கியம்கூட உண்மையாகவே இருக்கிறது. உமக்கு அதை உதாரணம் காட்டுவதற்காகச் சொல்லப்போகிறேன். துவேஷத்தாலன்று. அதைக்கேட்டு நீர் மன்னிக்கக்கடவீர். குரூபியாயுள்ளவன் கண்ணுடியில் தன்முகத்தைப் பார்க்காதவரையில் தன்னை மற்றவரைவிட மிகுந்தஅழகுள்ளவனுக நினைக்கிருன். எப்போது விகார

* கடுகு நுழையுமளவு. † பில்வப்பழம் நுழையுமளவு.

மான தன்ரூபத்தை அவனே கண்ணாடியிற் பார்க்கிறானோ அப்போது வெட்கமுற்றுத் தனக்கும் *பிறருக்குமுள்ள வேற்றுமையை அறிந்து கொள்வான். மிக்க அழகுபொருந்தினவன் யாரையும் இகழ்வதில்லை. மிகுதியாகக் கெட்டசொற்களைச்சொல்பவன் இவ்வுலகத்தில் † விதூஷகனாகிறான். மதம்பிடித்த யானைகள் தலைகள்மீது புழுதிகளைப் போட்டுக்கொள்வதனால் எப்படிமகிழ்கின்றனவோ அப்படியே துஷ்டபுத்தியுள்ளவன் ‡ அன்னியர்களைத் தூஷித்துச் சந்தோஷமடைகிறான். உண்மையையும் தர்மத்தையும்விட்டுத் தவறின மனிதனைக் கண்டால் சீறியபாம்பைக் கண்டதுபோல் மிகுந்த நாஸ்திகனான மனிதனும் அஞ்சுகிறான். ஆஸ்திகனைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? தான் தன்னைப்போன்ற புத்திரனை உத்பத்திசெய்து அவனையே நிந்திக்கிறவனுக்கு க்ஷேமத்தைத் தேவர்களே அழித்துவிடுகின்றனர். அந்த நிமித்தத்தில் இவனைக் §கலிஆக்ரமிக்கிறது. பிறருக்கு நன்மைசெய்யாதவனிடத்தும் பொய்யனிடத்தும் சுத்தமில்லாதவனிடத்தும் நாஸ்திகனிடத்தும் துராசாரனிடத்தும் ஆசாரம் தப்பினவனிடத்தும் உடனே கலிவருகின்றது. தர்மஞ்செய்பவரிடம் கலிவருவதில்லை. மூடன், பேசுகிறமனிதர்களுடைய நல்லவையும் கெட்டவையுமான சொற்களைக் கேட்டபிறகு விஷ்டையைப் பன்றி எடுப்பதுபோல் கெட்டசொல்லை மாத்திரம் எடுத்துக்கொள்ளுகிறான். அறிவுள்ளவனோவெனின், பேசுகிறமனிதர்களின் நல்லவையும் கெட்டவையுமான சொற்களைக் கேட்டபிறகு, ஹம்ஸம் ஜலத்திற்கலந்தபாலை எடுப்பதுபோல் குணமுள்ள சொல்லைமாத்திரம் எடுத்துக்கொள்ளுகிறான். தெளிவில்லாத புத்தியுள்ளவன் தான் கெட்டஎண்ணமுள்ளவனாயிருப்பதையறிந்து பிறரிடத்தும் தன் குணங்களுக்கொப்பான குணங்களையே கிரஹிக்கிறான். அதமர்கள் தங்களால் தாங்கமுடியாத பிறர்புகழென்னும் தீயினால் சுடப்பட்டு அவர்களின் வழியை அனுசரிக்கமுடியாமல் அவர்கள்மீது தூஷணங்களை மிகுதியாகச்செய்கின்றனர். யோக்கியன் பிறரைத் தூஷிப்பதனால் எப்படி வருத்தப்படுகிறானோ அப்படியே அயோக்கியன் அயலாரைத் தூஷிப்பதனால் ஆனந்தமடைகிறான். மூர்க்கர்கள் பிறரை நிந்திப்பதிலேயே முக்கியமாகக் கவனமுள்ளவர்களாயிருக்கின்றனர். ஸாதுக்கள் பிறரை நிந்

* இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

† இங்கு வேறுபாடம் கொள்ளப்பட்டது.

‡ பிறரைத் தூஷிப்பது தனக்கே பாபமாதலின் அது தன்மேல் புழுதியைப்போட்டுக்கொள்வது போலானது.

§ பாபம்.

தியாமலிருப்பதில் முக்கியமாகக் கவனமுள்ளவர்களாக இருக்கின்றனர். ஸத்புருஷன் பெரியோர்களை வந்தனஞ்செய்து எவ்வாறு திருப்தியை அடைகிறானோ அவ்வாறே மூர்க்கன்யோக்கியர்களைத் தூஷித்துத் திருப்தியடைகிறான். மூர்க்கர் பிறர்குற்றங்களையே கவனித்துக்கொண்டு தங்கள் குற்றங்களையறியாமல் ஸுகமாகஜீவிக்கின்றனர். அதனாலேதான், தாங்கள் பிறர் நிந்திப்பதற்குரியவர்களாயிருக்கப் பிறரை அவ்வகையாகச் சொல்லுகின்றனர். தாங்கள் துர்ஜனர்களாயிருப்பவர் யோக்கியனைத் துர்ச்சனனென்றுசொல்லுவராயின் லோகத்தில்இதற்குமேற்பட்ட பரிஹாஸம் வேறொன்றுமில்லை. ஜனங்களுக்குக் கொடுமையான மனவருத்தமுண்டாக்குவதனால் ஒருவன் துயரமடைவது திண்ணம். *பிதிர்க்கள்புத்திரனைக் குலத்தின் சந்ததிவிருத்திக்கு ஆதாரமென்று சொல்லுகின்றனர். ஆதலால், எல்லாத் †தர்மங்களுக்கும் மேற்பட்டவனாகிய புத்திரனை எவனும் விட்டுவிடுதல் தகாது. தன் தர்மபத்தினிக்குப்பிறந்தவர்களையும்நாதனில்லாமல் அகப்பட்டவர்களையும் ‡ஸ்வீகாரம்செய்யப்பட்டவர்களையும் அபிமானித்து வளர்க்கப்பட்டவர்களையும் கிரயத்துக்கு வாங்கப்பட்டவர்களையும் விவாகமில்லாதகன்னிகைகளிடம்பிறந்தவர்களையும்புத்திரர்களென்று மனு சொல்லியிருக்கிறார். அந்த அறுவரும் தாயபாகம் பெறத்தக்க பந்துக்கள். மற்ற அறுவர் தாயபாகம்பெறத்தகாத பந்துக்கள். மனிதர்களுக்குத் தர்மத்தையும் கீர்த்தியையும் உண்டுபண்ணுகிறவர்களும் மனமகிழ்ச்சியை விருத்திசெய்கிறவர்களும் புண்ணியக் கப்பல்களுமான புத்திரர்கள்பிறந்து பிதிர்க்களை நரகத்திலிருந்து காப்பாற்றுகின்றனர். ராஜஸ்ரேஷ்டரே! ஆதலால், நீர் உமது புத்திரனைவிடத் தகாது. அரசரே! ஆதலால், புத்திரனையும் சத்தியத்தையும் காப்பாற்றும். இவ்விரண்டையுமே காப்பாற்றும்; பொய்சொல்லவேண்டாம். ராஜாவே! உம்முடைய §ஆத்மாவையும் ஸத்தியத்தையும் ‖தர்மத்தையும் காப்பாற்றக்கடவீர். ராஜஸிம்மமே! நீர் கபடத்தை வஹிக்கத் தகாது. ¶ ஒருகுளம் நூறுகிணறுகளைப்பார்க்கிலும் சிறந்தது. ஒரு யாகம் நூறுகுளங்களைப்பார்க்கிலும் சிறந்தது. ஒருபுத்திரன் நூறு

* கூடஸ்தர்கள்.

† நரகத்திலிருந்து காப்பாற்றுவதினால் புத்திரனைத் தருமமென்றது.

‡ தன்னால் உபநயனமுதலான ஸம்ஸ்காரம்செய்யப்பட்டவரையும் என்பது பழையஉரை.

§ புத்ரனையும்.

‖ தான் கலியாணம்செய்த மனைவியை விடாமலிருப்பது தர்மம்.

¶ கிணறுகட்டுவது குளம்வெட்டுவது யாகஞ்செய்வது ஸத்யம்சொல்வது புத்திரோத்பத்தி ஆகிய தர்மங்களின் சிறப்பைச்சொன்னது.

யாகங்களிலும் சிறந்தவன். ஸத்யமானது நூறுபுத்திரர்களைவிடச் சிறந்தது. ஆயிரம்அசுவமேதங்களையும் ஒருஸத்யத்தையும் தராசில் நிறுத்தால் ஆயிரம்அசுவமேதங்களைப்பார்க்கிலும் ஒருஸத்யமே மிகுந்திருக்கும். ராஜேந்திரரே! எல்லாவேதங்களையும் ஓதுவதும் எல்லாப் புண்ணியதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்வதும் ஸத்யத்தின் பதினாறில் ஒருபாகத்திற்கு ஈடாகாது. ஸத்யத்துக்கொப்பான தர்மமில்லை. ஸத்யத்துக்கு மேற்பட்டதொன்றுமில்லை. அஸத்யத்திற்கு மேற்பட்ட கொடியபாபம் இவ்வுலகத்திலில்லை. ராஜாவே! ஸத்யம் உயர்ந்த தர்மம். வாக்குத்தத்தம் ஸத்யத்துக்கும் மேற்பட்டது. ராஜாவே! வாக்குத்தத்தத்தை விட்டுவிடாதீர். உம்முடைய சிநேகம் * ஸத்யமாக இருக்கட்டும். ராஜாவே! எந்தப்பாபியானவன் ஒருகாரியத்தைச் செய்து அதை மறந்துபோகிறானோ அவன் பொய்யனாவதனால் அந்த மறப்பதைப்போன்ற பாபம் ஒன்றும் இவ்வுலகத்தில் இல்லை. ஸத்தியத்தைப்பற்றியும் அஸத்தியத்தைபற்றியும் உமதுஉள்ளமே அறிந்திருக்கிறது.ஆதலால்,தர்மத்தினால் உமது நன்மையைப்பற்றிய ஆலோசனையை நீர் செய்யக்கடவீர். எவன் சத்துருவையும் மித்ரனையும் காமக்ரோதங்களினாலும் த்வேஷத்தினாலும் மோசம் செய்யாமலிருக்கிறானோ அவன்மட்டுமே உத்தமபுருஷன். நீர் என்னிடத்தில் சேர்ந்தது பொய்யாயிருந்தாலும் நான்சொல்வதை நீர் நம்பாமலிருந்தாலும் நான் ஆஸ்ரமத்திற்கே போகவிரும்புகிறேன். உம்மைப்போன்றவனிடத்தில் சிநேகமில்லை.இவன் உமதுபுத்ரன் என்பதைப்பற்றி ஸம்சயமிருந்தால் நீரே புத்தியினாலாராய்ந்து நிச்சயம் செய்யலாம். எவனுடைய நடையும் குரலும் ஞாபகசக்தியும் பொய்யாமையும் ஒழுக்கமும் கல்வியும்† பராக்கிரமும் அஞ்சாத ஸ்வபாவமும்அபிப்பிராயமும் சுழிகளும் மயிர்வரிசைகளும் எவனுடைய நடைமுதலியவற்றிற்கு ஒப்பாக இருக்கின்றனவோ அவன் அவனுடைய புத்திரனென்பதில் ஐயமில்லை. ராஜாவே! உமக்கும் இவனுக்குமிருக்கிற ஒப்புமையினால் இவன் உம்முடைய தேகத்திலிருந்து எடுக்கப்பட்ட பிரதிபிம்பமாக இருக்கிறான். ராஜாவே! 'பிதாவே'என்றழைக்கிறகுழந்தையை வீணாக விடாதேயும். கழுதைப்பாலில்லாமலும் என்பிள்ளை பால்குடிப்பன். மேலும், வேந்தரே! மஹாமேருவைக் கிரீடமாகத்தரித்த இந்த நாலு கடல்களும்சூழ்ந்த புவனியை என்புத்ரன் நீர் இல்லாமலே ஆளப் போகிறான். 'சகுந்தலையே! உன்பிள்ளை சக்கரவர்த்தியாகப்போகி

* ஸபலமாக.

† ராஜ்யலக்ஷணம் கழுதைப்பால், யோகலக்ஷணம் பசுவின்பால்.

ஞன்' என்று தேவேந்திரனேசொல்லியிருக்கிருன். அது வீணுகாது. தேவதூதர்கள் முதலான அநேகரை நான் சாக்ஷியாக இருக்கச்சொல்லியிருக்கிறேன். அவர்கள் நிஜம் அல்லது பொய்யென்பதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை. அதிர்ஷ்டமில்லாத நான் சாக்ஷிகளில்லாமல் வந்தவழியே செல்லப்போகிறேன்' என்கிற இவ்வளவு சொல்லைச் சொல்லி, சகுந்தலை புறப்பட்டாள். கோபத்தினுல் உண்டான அக்கி புகையுடன் அவள் தலையில் காணப்பட்டது. பிறகு, தன்னுள் உண்டான கோபமென்னும் தீயைத் தன் அங்கங்களிலேயே அடக்கிக்கொண்டு அழகான அங்கமுள்ள சகுந்தலை புத்திரனுடன் வனத்திற்கே புறப்பட்டாள்.

---

## நூறுவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(அசரீரிவாக்குச் சொன்னதன்மேல் ராஜா சகுந்தலையை அங்கீகரித்துப் பரதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வது.)

பிறகு, ரித்விக்குக்களாலும் புரோகிதர்களாலும் ஆசாரியர்களாலும் மந்திரிகளாலும் சூழப்பட்ட துஷ்யந்தனைநோக்கி ஆகாயத்தில் ஓர் அசரீரிவாணி சொன்னதாவது: 'தாய் தோற்பைபோன்றவள்; புத்ரன் பிதாவைச்சேர்ந்தவன். எவன் எவனுக்குப் பிறந்தானே அவன் அவனேதான்; இந்தத் துஷ்யந்தபுத்ரனை எடுத்துக்கொள். சகுந்தலை ஸத்தியமாகவே சொல்லுகிருள். ஒவ்வோர் அங்கத்திலிருந்தும் ஒவ்வோர் அங்கத்தைப்பெற்றுப் பிதாவினிடத்திலிருந்து நேரே புத்ரன் உண்டாகிருன். பூருவம்சத்தவனே! ஆதலால், உன்னுடைய ஆத்மாவே (சரீரமே) புத்ரனென்ற பெயரோடிருக்கிறது. தான் கர்ப்பாதானஞ்செய்து மறுபடி தானே பிறந்தவனுகிய இந்தப்புத்ரனை நீ காப்பாற்று. பதிவ்ரதையான சகுந்தலையை நீ பூஜிக்கவேண்டும்; அவமதிக்கலாகாது. பெண்கள் ஒப்பில்லாத பரிசுத்த வஸ்து. துஷ்யந்தனே! இது தர்மசாஸ்திரத்தை அனுசரித்தது. ஏனெனில், ஒவ்வொரு மாதத்திலும் ருதுகாலம் இவர்களுடைய பாபங்களைப்போக்கி விடுகிறது' என்பது. அவ்வாறு சொன்னபின், நாலுபக்கத்திலுமுள்ள தேவர்களெல்லோரும் துஷ்யந்தனைப்பார்த்து, 'இந்தப்புத்திரன் உன் சரீரத்திலிருந்து கர்ப்பாதானம் செய்யப்பட்டவன். சகுந்தலையை நிராகரிக்காதே, ராஜாவே! புத்திரன் தனக்கு வித்துப்போட்டவனை நரகத்திலிருந்து தூக்கிவிடுகிருன். நீ இந்தப்புத்திரனுக்குக் கர்ப்

பாதானம் செய்தவன். சகுந்தலே ஸத்யமாகச் சொல்லுகிருள். கண வனே மனைவியின் கர்ப்பத்தில் பிரவேசிக்கிருன். அவனே அவளி டம் மறுபடியும் ஜனிக்கிருன். இவ்வாறு இவர்கள் ஒருவர்க்கொரு வர் காரணமாக இருக்கின்றனர். சகுந்தலேயை நிராகரிக்காதே. தன் சரீரத்தை இரண்டாகச்செய்து பிரிக்கப்பட்ட புத்திரனைத்தான் மனைவி பெறுகிருள். துஷ்யந்தராஜாவே! ஆதலால், சகுந்தலேயின் புத்திரனை எடுத்துக்கொள். இது சிறந்த ஐசுவரியம்; விடத்தகாதது. தன் உயிரானபுத்திரனைக் காப்பாற்று. துஷ்யந்தனே! மஹாத்மா வும் பூருவம்சத்தவனுமாகிய சகுந்தலேயின் புத்திரனை எடுத்துக் கொள். இவனை நீயாகவும் எங்கள் சொல்லுக்காகவும் தாங்கிக்கொ ள்ளவேண்டியிருப்பதனுல் இந்த உன் புத்திரனுக்குப் பரதனென்று பெயர் இருக்கட்டும். பரதனுலுண்டானபுகழ் பாரதி என்னப்படும். இவனுல் இந்தக் குலத்திற்கே பாரதமென்ற பெயர்வரும். இவனுக் குப் பிந்தினவரும் முந்தினவரும் பாரதர்களேயாவார்' என்று சொ ன்னுர்கள். இவ்வாறு பதிவ்ரதை யென்றுசொல்லித் தேவர்களும் தவத்தையே தனமாகவுடைய ரிஷிகளும் சந்தோஷத்துடன் பூமாரி பெய்தனர். துஷ்யந்தன் அந்தத் தேவர்களுடைய சொல்லேக்கேட்டு ஸிம்மாஸனத்திலிருந்தெழுந்து தேவர்களுக்கு நமஸ்காரம்செய்து, சந்தோஷத்துடன் புரோகிதர்களேயும் மந்திரிகளேயும் நோக்கி, 'நீங் களும் இந்தத் தேவதூதன் சொல்லேக்கேளுங்கள். தேவர்களும், மஹரிஷிகளும் சொல்லுவதையும் கேளுங்கள். நானும் இவர்கள் சொன்னபடி இவனை எனக்குப்பிறந்த புத்திரனென்றே அறிகிறேன். இவளுடைய பேச்சினுல்மட்டும் நான் இவனை எனது புத்திரனுகக் கிரஹிப்பேனுயின் ஜனங்களுக்கு ஸந்தேகமுண்டாகும். அப்படிக் கிரஹிப்பதனுல் இவன் நிச்சயிக்கப்பட்டான்' என்றுசொன்னுன். அப்போது, ராஜா அவளேத் தேவர்கள் மஹரிஷிகள் சொல்லினுல் தெளிவாக நிச்சயம்செய்துகொண்டு திருப்தியோடும் மகிழ்ச்சியோ டும் அந்தப்புத்திரனை அழைத்தான். அதன்பிறகு, ராஜா அந்தப்புத் திரனுக்கு மகிழ்ச்சியுடனும் ஸ்நேகத்துடனும் பிதா செய்யவேண் டிய ஜாதகர்மம்முதலிய கர்மங்களேயெல்லாம் செய்தான். அவனை உச்சியில்மோந்து சிநேகத்துடன் தழுவிக்கொண்டான். பிராம்ம ணர்களால் பூஜிக்கப்பட்டும் வந்திகளால் துதிக்கப்பட்டும் அவ்வர சன் புத்ரனைத் தொடுவதனுலுண்டான மிகுந்த ஆனந்தத்தையடைந் தான். தர்மம்தெரிந்த ராஜா தனது பாரியையாகிய சகுந்தலேயையும் தர்மப்படி கௌரவித்தான்.

பிறகு, ராஜா அவளை (நோக்கி), இனியசொற்களை முன்னிட்டுச் சொன்னதாவது: 'நம்மிருவருடைய சம்பந்தமும் முன்னேஜனங்களுக்குத் தெரியாமலிருந்தது. மறுபடியும் இப்போது ஜனங்களுக்குத் தெரியும்படி ஸம்பந்தம்செய்யப்பட்டது. ஆதலால், நம்முடையசம்பந்தத்திற்கு முன் நடந்த நிமித்தத்தைப்பற்றி இவ்வாறு பேசினேன். நீ ஸ்திரீயாயிருப்பதனால் நான் விவாகம் செய்துகொண்டதைப்பற்றி இந்தலோகம் ஸந்தேகிக்கவும் கூடும். ஆதலால், உன்னிடத்தில் அந்த ஸந்தேகம் தெளிவதற்காக நான் இந்த விசாரணை செய்தேன். தேவியே! வெவ்வேறு பிரிவுகளாகவுள்ள பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் வைசியர்களும் சூத்ரர்களும், பதிவிரதையென்று தெளிவாகத் தெரிந்த உன்னைக் கௌரவிப்பர். இந்தப் புத்திரனும் ராஜ்யத்திற்காக வரிக்கப்பட்டிருக்கிறான். நீ முதல்மஹிஷியாக இரு. பிரியமானவளே! நீ மிகுந்த கோபத்துடன் என்னை அப்பிரியமான வார்த்தை சொன்னாயே. விசாலமான கண்களையுடையவளே! அழகானவளே! நீ அன்புள்ளவளாதலால் அதை நான் பொறுத்தேன். விசாலமான கண்களையுடையவளே! பொய்யாயிருந்தாலும் இன்னாததாயிருந்தாலும் சொல்லத்தகாததாயிருந்தாலும் மிகுந்த பாபமாயிருந்தாலும் நான்சொன்ன கெட்டசொல்லை நீயும் இவ்வாறே பொறுக்கவேண்டும். புருஷன்செய்த பிழையைப் பொறுப்பதனால் ஸ்திரீகள் பதிவ்ரதாதர்மத்தை அடைகின்றனர்' என்று சொன்னான்.

பாரதரே! அந்த ராஜரிஷியாகிய துஷ்யந்தன் இவ்வாறுசொல்லி அழகாக நடக்கின்ற தனக்குப்பிரியமான அந்தப் பட்டமஹிஷியை அந்தப்புரத்திற்கு அழைத்துக்கொண்டுபோய் ஆடைகளாலும் அன்னபானங்களாலும் சிறப்பித்து ரதந்தரியையென்னும் தன் தாயிடம்போய், 'புகழ்பெற்றவளே! இவன் எனக்கு வனத்திற்பிறந்த புத்திரன்; உன் வ்யஸனத்தைப் போக்குகிறவன். உன்னுடைய பேரனால் நான் இப்போது *கடனிலிருந்து விடுபட்டேன். இவள் விசுவாமித்ரருக்குப் பெண்; கண்ணுவரால் வளர்க்கப்பட்டவள்; உன் மருமகள். சிறந்த பாக்கியமுள்ளவளே! சகுந்தலையினிடம் தயை செய்' என்றுசொன்னான். அந்நரதந்தரியை, தன்புத்ரனான துஷ்யந்தன் சொன்னதைக்கேட்டுப் பேரனைத்தழுவிக்கொண்டாள். கால்களில்விழுந்த சகுந்தலையைக் கைகளாலணைத்து ரதந்தரியை ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள்.

---

* பித்ரர்கடன்.

ரதந்தரியை சகுந்தலையைப்பார்த்து, 'நீ சொன்னது சத்தியம். துஷ்யந்தனுடைய லக்ஷணங்களை இந்தக்குழந்தையினிடம் நான்பார்க்கிறேன். விசாலமான கண்களையுடையவளே! உன்புத்ரன் சக்ரவர்த்தியாகப்போகிறான். விசாலாக்ஷீ! உன்கணவன் மூன்றுலோகங்களையும் ஜயிப்பவனாவான். பெண்ணரசியே! நீ உயர்ந்தபோகங்களை அனுபவிப்பாயாக' என்றாள். இப்படி ரதந்தரியையினால் சொல்லப்பட்ட சகுந்தலை மிகுந்த ஆனந்தமடைந்தாள். அப்போது ராஜா சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட கர்மங்களைச்செய்து எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட சகுந்தலையை முதல்மஹிஷியாகப் பட்டாபிஷேகம்செய்து பிராம்மணர்களுக்கும் சேனைத்தலைவர்களுக்கும் தனங்களைக்கொடுத்துச் சகுந்தலையின் புத்ரனாகிய தன்மைந்தனுக்குப் பரதனென்று பெயரிட்டு அவனுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தான். பரதனிடத்தில் ராஜ்யபாரத்தை ஒப்பித்து ராஜா க்ருதார்த்தனானான். பிறகு, துஷ்யந்தமஹாராஜா நூறுவருஷங்கள் நிரம்ப ராஜ்யபரிபாலனஞ்செய்து அப்பால் வனத்திற்குச்சென்று ஸ்வர்க்கலோகம் அடைந்தான்.

---

## நூற்றோராவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி).



### (பரதனுடைய வம்சம்.)

அந்தப் பரதன் துஷ்யந்தனிடமிருந்து ராஜ்யத்தைக் கிரமப்படி அடைந்தான். மஹாத்மாவாகிய அந்தப்பரதனுடைய பரிசுத்தமான அந்தராஜ்யவியாபாரம் தேவர்க்குரியதும் தோல்வியடையாததும் ஜனங்களால் மிகச் சிலாகிக்கப்பட்டதுமாகப் பிரகாசித்துக்கொண்டு நடந்தது. அவன் அரசர்களைஜயித்துத் தனக்குக்கீழ்ப்பட்டவர்களாகச் செய்தான். ஸாதுக்களுடைய தர்மத்தை அனுஷ்டித்த பராக்கிரமசாலியான அந்தராஜா எல்லாவற்றிற்கும் மேலான புகழையடைந்து பூமி முழுமைக்கும் ஈசுவரனாகிய சக்கரவர்த்தியாயிருந்தான். தேவர்களுக்கு ராஜாவாகிய இந்திரனைப்போலவே அனேக யாகங்களைச்செய்தான். தக்ஷருக்கொப்பான கண்வமஹரிஷி மிகுந்த தக்ஷிணைகளுடன் அவனுக்கு யாகம்செய்வித்தார். அவன் * கோவிததம் என்று சொல்லப்பட்ட சிறப்புள்ள அச்வமேதயாகத்

* கோக்களை மிகுதியாகவுடையது.

ஷதைச் செய்தான். பரதன் அந்தயாகத்தில் கண்ணுவமஹரிஷிக்கு ஆயிரம் *பத்மங்கள் பொன்னைக்கொடுத்தான். அவன் யமுனைக் கரையிலிருந்துகொண்டு அங்கே அநேகநூறு அஸ்வமேதயாகங்களைச் செய்தான். ஸரஸ்வதிக்கரையில் முந்நூறு அஸ்வமேதங்களைச் செய்தான்; கங்கைக்கரையில் நானூறு அஸ்வமேதங்களைச் செய்தான். துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும்புத்ரனாகிய பரதனென்னும்அரசன் இவ்வாறு யஜ்ஞங்களைச்செய்தான். பரதவம்சத்திற்கு அவன்காலம் முதலாக பெரும்புகழ் பரவியது. பரதனுக்கு உயர்ந்தஸ்திரீகளிடமிருந்து தனித்தனியே புத்திரர்கள் பிறந்தனர். அப்போது ராஜா அந்தப் புத்திரர்கள் தனக்குத் தகுந்தவர்களல்லரென்று நினைத்து அவர்களை ஆதரிக்கவில்லை. பிறகு, அந்தப்புத்திரர்களைத் தாய்மார்கள் கோபத்துடன் யமனிடத்திற்கனுப்பினர். அதனால், அந்தராஜாவுக்கு அந்தப் பிள்ளைகள் பிறந்தது வீணாகிவிட்டது. பாரதரே! அதன்பின், பரதன் பெரியயாகங்களைச்செய்து அப்போது பரத்வாஜமஹரிஷியின் அனுக்ரஹத்தினால் புமன்யுவென்னும் புத்திரனையடைந்தான். பரதஸ்ரேஷ்டரே! பூருவம்சத்தவரைச் சந்தோஷிக்கச்செய்கின்ற பரதன் அந்தப்புத்திரன் பிறந்தபிறகுதான் தன்னைப் புத்திரவானென்று நினைத்து அந்தப் புமன்யுவுக்கு யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தான். அதன்பின், புமன்யுவுக்குத் திவிரதன்என்னும் குமாரன் பிறந்தான். புமன்யுவுக்குப் புஷ்கரணியென்பவளிடம் ஸுஹோத்ரன், ஸுஹோதா, ஸுஹவிஸ், ஸுயஜுஸ், ரிசீகன்என்னும் புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களுள் ஜ்யேஷ்டனாகிய ஸுஹோத்ரன் பூர்வராஜாக்களுடைய ராஜ்யத்தை அடைந்தான். அவன் ராஜஸூயம், அஸ்வமேதம் முதலிய அநேகயாகங்களைச் செய்தான். ஸுஹோத்ரன் யானைகளும் பசுக்களும் குதிரைகளும் பலவகையான ரத்னங்களும் நிரம்பினதும் கடலை ஆடையாகவுடையதுமான பூமிமுழுவதையும் ஆண்டான். யானைகளும் குதிரைகளும் தேர்களும் நிறைந்ததும் மனிதர்கள் மிகுதியாக நிரம்பினதுமாகிய அவனுடைய பூமி மிகுந்த பாரத்தினால் பீடிக்கப்பட்டு அமிழ்ந்ததுபோலிருந்தது. அந்த ஸுஹோத்ரனென்னும் ராஜா தர்மமாகப் பிரஜைகளையாளும்போது பூமி லக்ஷக்கணக்காகத் தேவாலயங்களினாலும் யூபஸ்தம்பங்களினாலும் அடையாளஞ்செய்யப்பட்டதாக இருந்தது. எப்போதும் ஜனங்களும் பயிர்களும் விருத்தியடையப்பெற்றுச் சிறப்புற்றிருந்தது. பாரதரே! இக்ஷ்வாகுவின் புத்திரியானவள் ஸுஹோத்ரராஜாவுக்கு அஜமீட

---

* ஆயிரம்கோடி.

னையும் ஸுமீடனையும் புருமீடனையும் பெற்றாள். அவர்களுள் அஜமீடன் சிறந்தவன், அவனே சந்ததிக்கு ஆதாரமாக இருந்தான். மூன்று ஸ்திரீகளிடம் ஆறுபுத்திரர்களைப் பெற்றான். தூமினியென்பவள் ரிக்ஷனையும், நீலியென்பவள் துஷ்யந்தனையும் பரமேஷ்டியையும், கேசினி யென்பவள் ஜன்ஹுவையும் *ஜனனையும் ரூஷ்ணனையும் பெற்றனர். வீரனாகிய ஸம்வரணன் ரதந்திரனுடைய பெண்ணினிடம் ரிக்ஷனுக்குப்பிறந்த புத்திரனென்று அறிகின்றனர். ராஜாவே! அப்படியே இந்தப் பாஞ்சாலதேசத்து ராஜாக்களனைவரும் துஷ்யந்தன் பரமேஷ்டி இவர்களுடைய ஸந்ததிகள். குசிகர்கள் அளவற்ற தேஜஸையுடைய ஜன்ஹுவின்சந்ததிகள். ரிக்ஷனென்னும்ராஜாவை ஜனனுக்கும் ரூஷ்ணனுக்கும் மூத்தவனென்று கூறுகின்றனர். ராஜாவே! உம் வம்சத்துக்குக் கூடஸ்தனாகிய ஸம்வரணன் ரிக்ஷனிடமிருந்து உண்டானவன். ராஜாவே! ரிக்ஷபுத்திரனாகிய ஸம்வரணன் பூமியையாளும்போது பிரஜைகளுக்குப் பெரிய நாசமுண்டானதென்று நமக்குக்கேள்வி. அப்போது பசி, மரணம், மழையில்லாமை, பிணி ஆகிய பலவகைகளான கெடுதிகளினால் பீடிக்கப்பட்டுத் தேசம் சிதறிப்போயிற்று. பரதவம்சத்தாரை எதிரிகளின் சேனைகள் அடித்தன. பாஞ்சாலதேசத்தரசன் தன்பராக்கிரமத்தினால் பூமியைஜயித்துச்சதுரங்கசேனையினால் இந்தஉலகத்தைநடுங்கும்படிசெய்துகொண்டுபத்து அக்ஷௌஹிணிகளுடன் அந்தஸம்வரணனை எதிர்த்து ஜயித்தான். பிறகு, ஸம்வரணராஜன் மிகுந்தபயத்தினால் பாரியை மந்திரிகள் புத்திரிகள் சினேகிதர்களுடன் அந்தத்தேசம்விட்டு ஓடிப்போனான். அப்போது அந்தப் பரதவம்சத்தவர் தோல்வியடைந்து மேற்றிசை சென்று ஸிந்துஎன்னும் பெரிய †நதத்தின் கரையிலுள்ளபுதர்களில் வஸித்தனர். பாரதர்கள் அங்கே பர்வதத்தினருகிலுள்ள ஸிந்துநதியைச்சேர்ந்த தேசத்தின் கோடியில் ‡ மலைத்துர்க்கத்தையடைந்து வெகுகாலம் வஸித்தனர். அவர்கள் ஆயிரவருஷகாலம் அங்கே வஸித்தபிறகு பகவானாகிய வஸிஷ்டரிஷி அந்தப் பரதவம்சத்தார்களிடம்வந்தார். அந்தப் பாரதர்களனைவரும் அப்போதுவந்த வஸிஷ்டரை ஆதரவுடன் எதிர்கொண்டுபோய் வந்தனம்செய்து அவருக்கு அர்க்கியம்கொண்டுவந்தனர். சிறந்த பிரம்மதேஜஸுள்ள வஸிஷ்டமஹாரிஷிக்கு ஸத்காரஞ்செய்து எல்லாப்பொருளையும் கொடுத்து, அவர் ஆஸனத்தில் வீற்றிருந்தபிறகு, ஸம்வரணராஜா, 'நாங்கள்

---

* வ்ரஜனனையும் ரூபியையும் என்பது வடதேசத்துப் பாடம்.

† மேற்கு முகமாக ஓடும் நதி. ‡ மலையரண்.

ராஜ்யத்திற்காக முயலவேண்டும்; நீங்கள் எங்களுக்குப் புரோகிதராக இருக்கவேண்டும்' என்று தானாக அவரைவரித்தான். வஸிஷ்டரும் 'ஆகட்டும்' என்று பாரதர்களுக்கு மறுமொழிசொன்னார். அதன் பின், பூருவம்சத்தவனாகிய ஸம்வரணனை பூமிமுழுமைக்கும் சிகரம் போலிருக்கும்படி எல்லாக்ஷத்திரியர்களுக்கும் சக்ரவர்த்தியாகப் பட்டாபிஷேகஞ் செய்தாரென்று நாம் கேட்டிருக்கிறோம். முன்பு, பாதன் வஸித்த உத்தமமான ஹஸ்தினாநகரத்தில் அவன் வாஸஞ் செய்தான். மறுபடியும் எல்லாஅரசர்களையும் கப்பம்கட்டுகிறவர் களாகச் செய்தான். பிறகு, சிறந்தபராக்ரமமுள்ள அந்த அஜமீட பௌத்ரனாகிய ஸம்வரணன் ராஜ்யத்தையடைந்து மறுபடியும் மிகுந்த தக்ஷிணைகளோடுகூடிய அநேகம் மஹாயாகங்களைச்செய்தான். அந்த ஸம்வரணனுக்குச் சூரியன்புத்திரியாகிய தபதியென்பவள் குரு வென்பவனைப் பெற்றாள். பிரஜைகளனைவரும் அந்தக்குருவைத் தர் மந்தெரிந்தவனென்று நினைத்து ராஜாவாக இருக்கும்படி வரித்தனர். அவன் மகிமையினால் குருவம்சத்தவர் மிகுந்த கீர்த்தியையடைந்த னர். அவன்பேரினால் குருஜாங்கலமென்னும் தேசம் பூமியில் பெயர் பெற்றது. சிறந்ததவமுள்ள அவ்வரசன் தன் தவத்தினால் குருக்ஷேத் திரத்தைப் புண்ணியக்ஷேத்திரமாகச்செய்தான். அச்வவான், அபிஷ் யந்தன், சைத்ரரதன், முனி, ஜனமேஜயன் என்று பெயர்பெற்ற அந் தக்குருவின் புத்திரர்களைக்கேட்டிருக்கிறோம். சிறந்த மனஸுள்ள வாஹினியென்பவள் இவ்வைந்து புத்திரர்களையும் பெற்றாள். அவி க்ஷித்து என்று பெயருள்ள அச்வவானுக்குப் பரிக்ஷித்து, வீரனாகிய சபலாச்வன், ஆதிராஜன், விராஜன், சிறந்தபலமுள்ள சால்மலி, உச்சைச்ரவஸ், பங்ககாரன், ஜிதாரி ஆகிய இந்த எட்டுப்புத்ரர்கள் இருந்தனர். இவர்களுடைய வம்சத்தில் ஜனமேஜயன் முதலான எழுவரும் மற்றுமுள்ள மஹாரதர்களும் தங்கள் பராக்கிரமத்தினா லுண்டான சிறப்பைப்பற்றிக் கியாதிபெற்றிருந்தனர். கக்ஷஸேனன், உக்ரஸேனன், வீரனாகிய சித்ரஸேனன், இந்திரஸேனன், ஸுஷே ணன், பீமஸேனன் என்ற பெயருள்ள பரிக்ஷித்தின் புத்திரர்களனை வரும் தர்மசாஸ்திரத்திலும் ராஜநீதிசாஸ்திரத்திலும் நிபுணர்களா யிருந்தனர். ஜனமேஜயனுடைய புத்திரர்கள் பூமியில் மிகுந்தபல முள்ளவர்களாகக் கியாதிபெற்றிருந்தனர். ஜ்யேஷ்டன், திருத ராஷ்டிரன்; பிறகு பாண்டுவும், பாஹ்லீகனும், மிகுந்த பராக்கிரம முள்ள நிஷதனும், பலவானாகிய ஜாம்பூநதனும், குண்டோதர னும், பதாதியும், வஸாதியும் ஆக எண்மர் சொல்லப்பட்டிருக்கின்ற

னர். அவர்களெல்லாரும் தர்மசாஸ்திரத்திலும் ராஜநீதி சாஸ்திரத்திலும் நிபுணர்கள்; எல்லாப்பிராணிகளுக்கும் நன்மை செய்வதில் ஊக்கமுள்ளவர்கள். பிறகு, திருதராஷ்டிரன் ராஜாவாக இருந்தான். அவனுடைய புத்திரர்கள் குண்டிகன், ஹஸ்தி, விதர்க்கன், க்ராதன், ஐந்தாமவனான குண்டினன், ஹவிஸ்ரவஸ், இந்திராபன், தோல்வியடையாதவனாகிய புமன்யு ஆகிய இவர்கள். பாரதரே! திருதராஷ்டிரன்புத்திரர்களில் ப்ரதீபன், தர்மநேத்ரன், ஸுநேத்ரன் இந்த மூவரும் பூமியில் கியாதி பெற்றவர்கள். அந்த மூவருள்ளும் ப்ரதீபன் பூமியில் ஒப்பற்றவனென்று புகழ்பெற்றிருந்தான். பரதஸ்ரேஷ்டரே! ப்ரதீபனுக்குத் தேவாபி, சந்தனு, மஹாரதனான பாஹ்லீகன் ஆகிய மூன்று புத்திரர்கள் பிறந்தனர். அவர்களுள் தேவாபி தர்மத்தினாலுண்டாகும் ஹிதத்தைவிரும்பிக் காட்டுக்குச்சென்றான். மஹாரதர்களாகிய சந்தனுவும் பாஹ்லீகனும் ராஜ்யத்தை அடைந்தனர். இந்தப் பரதவம்சத்திற்பிறந்த அநேக ராஜஸ்ரேஷ்டர்கள் மஹாரதர்களாகவும் தேவர்களைப்போன்றவர்களாகவும் பிரம்மதேவருக்கொப்பானவர்களாகவும் இருந்தனர். மஹாராஜரே! தேவர்களைப்போன்ற வடிவமுள்ளவரும்,எதிரிகளைத் தொலைப்பவரும்,புரூரவஸின் வம்சத்தை விருத்திசெய்கின்றவருமான இப்படிப்பட்ட மஹானுபாவர்கள் உமது வம்சத்திற் பிறந்தனர். ஜனமேஜயரே! பெரும்புகழ்பெற்றசகுந்தலையின் புத்ரனான பரதனென்னும் அரசன் கங்கைக்கரைசேர்ந்து தீக்ஷைசெய்துகொண்டு அநேகமாயிரம் அஸ்வமேதங்களையும்அநேக நூறுவாஜபேய யாகங்களையும் செய்தான். மறுபடியும், அக்நிஷ்டோமம், அதிராத்ரம், உக்தம், வாஜபேயயாகம், இஷ்டிகள், ஸத்ரயாகம் என்னும் அநேகமாயிரம் மஹாயாகங்களை மிகுந்த சிறப்புடன் தக்ஷிணைகள் நிரம்பக்கொடுத்து ஸோமபானஞ்செய்து பிராம்மணர்களைத் தனங்களினால் திருப்தியடைவித்து நிறைவேற்றினான். மறுபடியும், ஆயிரம் பத்மக்கணக்குள்ள பொன்நாணயங்களையும் உயர்ந்த தங்கங்களையும் கண்ணுவருக்குக்கொடுத்தான். நூறுபாகம்பருமனுள்ளவைகளும் ஆயிரம்பாகம் உயரமுள்ளவைகளுமான அழகாகிய எல்லாவகை ரத்னங்களாலும் அலங்கரிக்கப்பட்டுப்பிரகாசித்தபரதனுடையபொன் யூபஸ்தம்பங்கள் இந்திராதி தேவர்களால்நாட்டப்பட்டன. பொன்னையும் யானைகளையும் குதிரைகளையும் எருமைகளையும் ஒட்டகங்களையும் செம்மறியாடுகளையும் வெள்ளாடுகளையும் வேலைக்காரிகளையும்வேலைக்காரர்களையும் தனத்தையும் தானியத்தையும் கன்றுகளுடன் நற்குணமுள்ள பசுக்களையும் ஆயிரம் யூபஸ்தம்பங்களை அடையாளமாக

வுடைய இந்தப்பூமியையும் கண்ணுவருக்குச் சிறந்ததக்ஷிணையாகக் கொடுத்தான். பிரம்மாவுக்கொப்பான அநேகம் பிராமணர்களுக்குத் தனத்தையும் கிராமங்களையும் வெண்மையானகுதிரைகளையும்கோடி கோடியாகக் கொடுத்து அநேகம் யாகங்களைச்செய்தான். பரதனிடத்திலிருந்து பரதவம்சத்தாருக்குக் கீர்த்தியுண்டாயிற்று. அவனால்,இந்தக்குலம் பாரதமென்று பெயர்பெற்றது. பரதனுடைய வம்சத்திற் பிறந்த மஹாரதர்களாகிய அநேக ராஜஸ்ரேஷ்டர்கள் தேவர்களைப் போலவும் பிரம்மதேவரைப்போலவும் இருந்தனர். அவர்களுடைய பெயர்கள் எண்ணமுடியாமல் இருக்கின்றன. பாரதரே! அந்த அவர்களுடையவம்சத்தில்தேவர்களைப்போன்றவர்களும், ஸத்தியத்தையும் மனவாக்குக் காயங்கள் ஒத்திருப்பதையும் கடைப்பிடித்தவர்களுமான முக்கியமான மஹானுபாவர்களைமட்டும் உமக்குச் சொல்லப் போகிறேன்.

---

## நூற்றிரண்டாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(மஹாபிஷக் என்னும் ராஜாவின் சரித்திரம். வஸுக்கள் கங்கையினிடம் முறையிட்டுக் கொண்டது.)

ஸத்தியவாக்குள்ளவனும் தோல்வியடையாத பராக்கிரமமுள்ளவனுமாகிய *மஹாபிஷக் என்று பெயர்பெற்ற இக்ஷ்வாகுவம்சத்து அரசன் பூமியைப் பரிபாலித்துக்கொண்டிருந்தான். அவன் ஆயிரம் அஸ்வமேதயாகங்களாலும் நூறுராஜஸூயங்களாலும் தேவேந்திரனைத் திருப்திசெய்வித்தான். பிறகு, அந்தராஜா ஸ்வர்க்கத்தையடைந்தான். பிறகு, ஒருகாலத்தில் தேவர்கள் பிரம்மதேவரை ஸேவித்துக் கொண்டிருந்தனர். அங்கே ராஜரிஷிகளும் இருந்தனர். அந்த மஹாபிஷக் என்னும் ராஜாவும் இருந்தான். அப்போது நதிகளுக்குட் சிறந்த கங்காதேவியானவள் பிரம்மாவினிடம் வந்தாள். சந்திரனைப் போன்ற நிறமுள்ளதான அவளுடைய ஆடை காற்றினால் விலக்கப்பட்டது. அப்போது தேவக்கூட்டங்கள் உடனே தலைகுனிந்து நின்றன. மஹாபிஷக் என்னும் ராஜரிஷியோவெனில், கூச்சமின்றி அவளைப் பார்த்தான். அந்த மஹாபிஷக் பகவானாகிய பிரம்மதேவரால் இகழப்பட்டான். பிரம்மதேவர் 'நீ மனிதர்களிற் பிறந்து பிறகுதான்

* மஹாபிஷன் என்பது வடதேசத்துப்பாடம்.

நல்ல லோகங்களையடைவாய். அறிவுகெட்டவனே ! எந்தக்கங்கையி ஞல் உன்மனம் இழுக்கப்பட்டதோ அந்தக்கங்காதேவி மனுஷிய லோகத்தில் உனக்கு வேண்டாதவற்றைச் செய்யப்போகிருள். அத ஞல் உனக்குக்கோபம் எப்போதுவருமோ அப்போதுதான் நீ சாபத் திலிருந்து விடுபடுவாய்' என்றுசொன்ஞர். அந்தராஜா மற்ற ராஜாக் களையும் ரிஷிகளையும் நினைத்துப்பார்த்து மிகுந்த மஹிமையுள்ள ப்ர தீபனையே தனக்குப்பிதாவாக விரும்பினன். நதிகளுக்குட் சிறந்த கங்காதேவி மஹாபிஷக் என்னும் அரசன் மனோஜயமில்லாமற்போன தைக்கண்டு அவனையேமனத்தில் நினைத்துக்கொண்டு திரும்பிச்சென் ருள். ஜனமேஜயராஜாவே ! அவள் போகும்போது ஸ்வர்க்கத்தில் வஸிக்கின்ற தேவர்களாகிய வஸுக்கள் தேகத்தின் ஒளிகுன்றி அறிவுகலங்கி வழியில் இருக்கக்கண்டாள். அவ்வாறிருந்த அவர்களைக் கண்டு நதிகளிற்சிறந்த கங்கை, 'ஏன் இப்படி நிறமாறிப்போயிருக் கின்றீர்கள் ? தேவர்களுக்கு க்ஷேமந்தாஞ?' என்று வினவிஞள். தேவர்களாகிய வஸுக்கள் அவளைநோக்கி, 'மஹாநதியே ! நாங் கள் மஹாத்மாவாகிய வஸிஷ்டரால் சிறியபிழைக்காகக் கோபித்துச் சபிக்கப்பட்டிருக்கிரும். முன்னர் நாங்களெல்லாரும் அறியாமல், (தமதுமஹிமையை வெளிக்காட்டாமல்) ஸந்தியாவந்தனஞ் செய்து கொண்டிருந்த ரிஷிப்ரேஷ்டரான அந்தவஸிஷ்டரை உல்லங்கனஞ் செய்தோம். அவர் கோபத்திஞல், 'மானிடகர்ப்பத்தில் பிறக்கக்கட வீர்' என்று எங்களைச்சபித்தார். வேதவாக்குள்ளஅவர் எதுசொன்ஞ ரோ அது மாற்றுவதற்கு முடியாதது. நீ மானிடப்பெண்ணுகப்பூமியி லிருந்து வஸுக்களாகிய எங்களைப் புத்திரர்களாகப் பெறக்கடவாய். சிறந்தவளே ! மனுஷ்யஸ்திரீகளுடைய வயிற்றில் நாங்கள் புகோம்' என்றனர். அந்தவஸுக்களிஞல் இவ்வாறு கேட்டுக்கொள்ளப்பட்ட கங்காதேவியானவள், 'அப்படியே ஆகட்டும்' என்று அங்கீகரித்து, 'மனிதர்களில் எந்தப் புருஷப்ரேஷ்டன் உங்களை உத்பத்திசெய்யக் கூடியவஞவான் ?' என்றுகேட்டாள். அதற்கு, வஸுக்கள், 'ப்ரதீப னுடைய புத்திரஞகிய சந்தனுவென்னும் ராஜா லோகத்தில் கியாதி பெற்றிருக்கப் போகிருன். மனுஷ்யலோகத்தில் அவன்தான் எங் களை உத்பத்திசெய்பவஞகலாம்' என்றனர். 'தேவர்களே ! குற்ற மில்லாதவர்களே ! நீங்கள் என்னிடம் என்ன சொல்லுகிறீர்களோ அஃது எனக்கும் ஸம்மதம். அந்தராஜாவுக்கும் உங்களுக்கும் விருப்ப மான இந்தக்காரியத்தை நான்செய்வேன்' என்று கங்கைசொன் ஞள். உடனே, வஸுக்கள், 'மூன்றுலோகங்களும் செல்லுகிறவளே!

நீண்டகாலம் எங்களுக்கு இந்தச்சாபதண்டனை இல்லாமலிருக்கும்படி உன்குமாரர்களைப் பிறந்தவுடனே ஜலத்திற் போட்டுவிடவேண்டும். புத்தியில்லாத நாங்கள் எல்லோரும் வஸிஷ்டருடைய பசுவைப் பிடிக்கவிரும்பி அந்தப்பிரமரிஷியினால் சபிக்கப்பட்டோம். அப்படிச் சபிக்கபட்ட எங்களை நீ விரைவில் விடுவிக்கக்கடவாய்' என்றனர். கங்கை, 'அப்படியே இந்தக்காரியத்தைச் செய்வேன். ஆனால், அந்தச் சந்தனுராஜாவுக்கு ஒருபுத்திரனை நிறுத்தவேண்டும். புத்திரனுக்காக அவன் என்னுடன் சேருவது வீணாகாமலிருக்கவேண்டும்' என்றுசொல்ல, 'நாங்கள் ஒவ்வொருவரும் எங்கள்சக்தியில் நாலிலொரு பாகத்தைக்கொடுப்போம். அந்தச்சக்தியுடன் உனக்கும் அந்த ராஜாவுக்கும் பிரியமானபுத்திரன் உண்டாவான். ஆனால், மனுஷ்யலோகத்தில் அவனுக்கு ஸந்ததியிராது. ஆதலால், உன்னுடையவீரனாகிய புத்திரனுக்குப் புத்திரன் உண்டாகமாட்டான்' என்றுசொன்னார்கள். இவ்வாறு அந்தவஸுக்கள் கங்காதேவியோடு ஏற்பாடு செய்துகொண்டு மனமகிழ்ச்சியுடன்உடனே இஷ்டப்படிசென்றனர்.

---

## நூற்றுமூன்றாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(சந்தனுபிறந்து பெண்ணுருவமான கங்காதேவியைப் பார்த்தது.)

பிறகு, எப்போதும் எல்லாப்பிராணிகளுக்கும் நன்மைசெய்துகொண்டிருந்த ப்ரதீபனென்னும்அரசன் ஒருவன்இருந்தான். அவன் கங்கோத்பத்திக்குப்போய் அநேகவருஷகாலம் ஜபஞ்செய்துகொண்டு உட்கார்ந்திருந்தான். அந்தராஜரிஷி வேதம் சொல்லிக்கொண்டிருக்கையில், அழகிய முகமுள்ளவளும் தேவதாரூபமுள்ளவளும் அழகும் குணங்களும் பொருந்தினவளும் மிகவும் ஆசைப்படத்தக்க தேகத்தோடு கூடிய பெண்ணுருவத்தைத் தரித்துக்கொண்டவளுமான கங்காதேவி அந்த ஜலத்தினின்றும் கரையேறி, வேதாத்தியயனஞ் செய்துகொண்டிருந்த அந்த ராஜரிஷியினது ஆஸ்ரமம் போன்ற வலத்தொடையை அடைந்தாள்.

பேசத்தெரிந்தவர்களுக்குட் சிறந்தவனும் தர்மத்தின் முடிவை நிச்சயமாக அறிந்தவனுமாகிய அந்த ப்ரதீபனென்னும்ராஜா மிகுந்த கீர்த்தியுள்ள அந்தக் கங்காதேவியை நோக்கி, 'அழகியவளே! உன

க்கு என்ன பிரியத்தை நான் செய்யக்கடவேன்? நீ விரும்புவது யாது?' என்றுகேட்க, கங்கையானவள், 'ராஜாவே! நான் உன்மீது காதல்கொண்டிருக்கிறேன். உன்னையடைகின்றஎன்னை நீயும் அடையக்கடவாய்; காதல் வைத்த பெண்களை விட்டுவிடுவதை ஸாதுக்கள் நிந்திக்கின்றனர்' என்று சொன்னாள். ப்ரதீபன், 'இனிய பெண்ணரசியே! நான் பிறர் மனைவியையும் வேறுவருணத்திற்பிறந்தபெண்ணையும் விருப்பத்தினால் அடையமாட்டேன். இது தர்மத்துடன் கூடிய எனதுநியமம். எவன் தன் மனைவியை விட்டுப் பிறர்மனைவியை அடைகிறானோ அவன் பிரளயகாலம்வரையில் நரகத்திலிருந்து விடுபடான்' என்று சொன்னான். 'ராஜாவே! நான் இழிவானவளல்லேன்; சேரத்தகாதவளல்லேன்; ஒரு காலத்திலும் நிந்திக்கத்தக்கவளுமல்லேன்; தேவகன்னிகையும் பெண்ணிற் சிறந்தவளுமாகிய நான்உன்னை அடையும்போது நீயும் என்னை அடைவாயாக' என்று கங்கைசொன்னாள். ப்ரதீபன், 'நீ எந்த விருப்பத்தைப்பற்றி என்னைத் தூண்டுகிறாயோ அஃது உன்னாலேயே நிவிருத்தி செய்யப்பட்டது. நான்அதற்கு விரோதமாகச்செய்தால் தர்மத்தவறுதலானது என்னை அழித்துவிடும். சிறந்தபெண்ணே! நீ எனது வலத்தொடையில் உட்கார்ந்து என்னைத் தழுவினாய். அச்சமுள்ளவளே! இது தன் ஸந்ததிகளுக்கும் மருமகளுக்கும் உட்காருமிடமென்று அறி. காதலி அனுபவிக்கத் தக்கது இடத்தொடை. நீ அதனை விட்டுவிட்டாய். பெண்ணரசியே! ஆதலால், நான் உன்னிடத்தில் விருப்பத்தைச் செய்யேன். அழகிய நிதம்பமுள்ளவளே! நீ எனக்கு மருமகளாகக் கடவாய். என் புத்ரனுக்காக உன்னை நான் வரிக்கிறேன். அழகிய தொடையையுடையவளே! நீ வந்து மருமக்களுடைய பாகமாகிய வலத்தொடையை அடைந்தாய்' என்றான். அதைக்கேட்ட அந்தப்பெண், 'தர்மந்தெரிந்தவனே! இவ்வாறும் ஆகலாம்; உன் புத்திரனோடு நான் சேரக்கடவேன். உன்னிடமுள்ள அன்பினால் பெயர்பெற்ற பாரதவம்சத்தை நான் அடையப்போகிறேன். இந்தப் பூமியிலுள்ள அரசர்களெல்லாருக்கும் நீங்களே ஆதாரமானவர்கள். உங்களுடைய குணங்கள் நூற்றுக்கணக்கான வருஷங்கள் சொன்னாலும் என்னால் சொல்லிமுடியா. உங்கள் குலத்திற் பெயர்பெற்றவர் எவரோ அவருடைய யோக்கியதை மேலானது. தர்மந்தெரிந்த பிரபுவே! இப்போது நான் செய்யும் உடன்படிக்கையின்படி எதைச்செய்வேனோ அதையெல்லாம் உமது புத்திரன் ஒருபோதும் விசாரிக்காமலிருக்கவேண்டும். இவ்வாறு உனதுபுத்திரனிடமிருந்துகொண்டு நான் அவனுக்கு ஸுகத்தை விருத்திசெய்

வேன். உனது புத்திரன் பிரியமான புண்ணியகுமாரர்களுடன் ஸ்வர்க்கமடைவான்' என்று சொன்னாள். ஜனமேஜயராஜாவே! அவள், 'அப்படியே ஆகட்டும்'என்று அந்தராஜாவினாற்சொல்லப்பட்டவளாக அந்தர்த்தானமாயினாள். அந்த ராஜஸ்ரேஷ்டன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அவள் அவன்கண்ணுக்குப் புலப்படாதவளானாள். அந்த அரசன் புத்திரன்பிறப்பதையெதிர்பார்த்து அதனைமனத்தில் வைத்துக்கொண்டிருந்தான். குருவம்சபுத்திரரே! அதேகாலத்தில்ராஜஸ்ரேஷ்டனான ப்ரதீபன் புத்திரனைப்பெற விரும்பிப் பாரியையுடன் கூடித் தவஞ்செய்தான். ப்ரதீபனுடைய பாரியையினிடம் அழகுள்ள கர்ப்பம், மிகுந்தசோபையோடு சரத்காலத்து வளர்பிறைச் சந்திரன் போல் வளர்ந்தது. பிறகு,பத்தாவதுமாதத்தில் ப்ரதீபனுடையமனைவி சூரியனுக்கொப்பான ஒளியுள்ளவனும் தேவ குமாரனைப்போன்றவனுமான குமாரனைப்பெற்றாள். அந்த மஹாபிஷக் வயோதிகர்களான அவ்விருவருக்கும் புத்ரனாகப்பிறந்தான். உரியபிராயம் கடந்தபின் அந்தஸந்தானம் உண்டானதினால்,அந்தப்புத்திரன் *சந்தனுவென்று சொல்லப்பட்டான். அந்தப்புத்திரன் பிறந்தபிறகு,ப்ரதீபராஜன் ஜாதகர்மம் முதலான ஸம்ஸ்காரங்களைப் பிராமணர்களைக்கொண்டு வேதத்திற்சொல்லிய விதிப்படி செய்வித்தான். ஜனமேஜயராஜாவே! பிராமணர்கள் சந்தனுவுக்கு வேதோக்தமான கிரியைகளோடு நாமகரணத்தை மிகச் சிறப்பாகச்செய்தனர். பிறகு, தக்க பருவமுள்ளவனாக வளர்ந்தசந்தனுராஜன் உலகத்துக்கெல்லாம் தர்மிஷ்டனானான்.அவன் பெருங்கீர்த்தியை அடைந்து தர்மத்தைக் காப்பவர்களுள் சிறந்தவனாகித் தனுர்வேதத்திலும் வேதத்திலும் மேலான ஞானத்தையடைந்தான். பேசுகிறவர்களிற் சிறந்தவனாகிய அந்தக்குமாரன் யௌவனத்தையுமடைந்தான். தன்னுடைய நல்ல கருமத்தினால் ஜயிக்கப்பட்ட அழிவில்லாத லோகங்களை அறிந்திருந்தும் குருவம்சத்திற்சிறந்தவனாகிய சந்தனு புண்ணியகருமங்களைச் செய்துகொண்டேதானிருந்தான். பிறகு, ப்ரதீபன் யௌவனம்வந்த தனது புத்ரனான சந்தனுவைநோக்கி, 'சந்தனுவே! உனது ஸ்ரேயஸுக்காக முன்னே ஒரு பெண் என்னிடம்வந்தாள். புத்திரனே! அழகு நிரம்பிய தேவலோகத்துப்பெண்ணாகிய அந்தப்பெண்ணரசி புத்திரனை விரும்பிக்காதலுற்று ரகஸ்யத்தில் உன்னிடம் வருவாளாயின் அவளை, நீ, 'பெண்ணே! நீ யார்? யாருடையபெண்' என்றுகேட்காதே. குற்றமற்றவனே! அவள்

---

* சம் = சாந்தமானபோது; தநு: = உண்டாக்கப்பட்டவன். சாந்தனு என்று மூலத்திலிருக்கிறது.

எந்தக்காரியம் செய்தாலும் அதைப்பற்றி அவளைக்கேட்கவேண்டாம். உன்னையடைகின்ற அவளை நீ என் கட்டளையினால் அங்கீகரிக்கக்கடவாய்'என்று கட்டளையிட்டான். ப்ரதீபராஜா இவ்வாறு தனதுபுத்திரனாகிய சந்தனுவுக்குக்கட்டளையிட்டுத் தனது ராஜ்யத்தில் அவனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வித்து வனத்திற்புகுந்தான். சிறந்தபுத்தியுள்ளவனும் தேவேந்திரனுக்கொப்பான பராக்கிரமமுள்ளவனுமாகிய அந்தச்சந்தனுமஹாராஜன் ஸத்தியவாதியென்று எல்லாலோகங்களிலும் கியாதிபெற்றிருந்தான். பருத்ததோள்களும் நீண்டகைகளும் உடையவனும், மதயானைபோல்நடப்பவனும், குறைவற்றசெல்வங்களோடும் ராஜாவுக்குரிய எல்லாலக்ஷணங்களோடும்கூடியவனும், சிறப்புற்ற மந்திரிகளோடு கூடியவனும், க்ஷத்திரியதர்மங்களின் விசேஷங்களையறிந்தவனுமான அந்தச்சந்தனுமஹாராஜன் தான்ஒருவீரனாக ராஜாக்களை ஜயித்து இந்தப்பூமியைத் தன்ஸ்வாதீனமாக்கிக்கொண்டான். வேதங்களெல்லாவற்றையும் ராஜதர்மங்களனைத்தையும் தெரிந்துகொண்டான். மிகுதியான தக்ஷிணைகளோடுகூடிய அநேக ஸத்ரயாகங்களையும் யாகங்களையும்செய்தான். வேதாத்யயனத்தில் தேர்ந்த பிராமணர்களை அளவற்ற ரத்னங்களாலும், பசுக்களாலும், கிராமங்களாலும், அசுவங்களாலும், தனங்களாலும் திருப்தியடைவித்தான்; வயஸும்ரூபமும் முயற்சியும் தேகவன்மையும் பிரபுத்வமும் உத்ஸாகமும் பராக்ரமமும் தனமும் நிரம்பினவனாகவும், ஸத்தியமாக நடப்பவனாகவும், எல்லாத் தர்மங்களும் தெரிந்தவனாகவும் இருந்தான். அரசர்கள் அந்தராஜாவை அரசர்களுக்கரசனாகச்செய்தனர். பரதஸ்ரேஷ்டரே! அரசர்கள் விசனமும்பயமும் பிறருடையஉபத்ரவமுமில்லாமல் ஸுகமாகத் தூங்கியெழுந்துகொண்டு ஐசுவரியத்தை அடைந்திருந்தனர். அனுஷ்டானங்களினால் பிராமணவருணம் எல்லாவருணங்களினும்மேலாக இருந்தது. க்ஷத்திரியர்கள் பிராமணர்களுக்கு அநுகூலர்களாகவும், வைசியர்கள் க்ஷத்திரியர்களுக்கு அனுகூலர்களாகவும் இருந்தனர். பிராமணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் ஒற்றுமையாகஇருந்த வைசியர்களுக்குச் சூத்திரர்கள் பணிவிடைசெய்தனர். இவ்வாறு சந்தனு ராஜ்யத்திலிருக்கும்போது ஆடுமாடுகளுக்கும் பன்றிகளுக்கும் மான்களுக்கும் பக்ஷிகளுக்கும் வீணான ஹிம்ஸை நடக்கவில்லை. ஸுகமற்றவையும் நாதனற்றவையுமான திரியக்ஜாதிகளிற்பிறந்தபிராணிகளெல்லாவற்றிற்கும்கூட அந்தராஜா பிதாவைப்போலிருந்தான். ஹஸ்தியென்னும் பெயருள்ளநகரத்தில் விளையாடிக்கொண்டிருந்த அந்தத்தர்மாத்மாவான குருவம்சத்தரசன் பராக்கிரமத்தில் சூரியனுக்

கொப்பாகவும் பலத்தில் வாயுவுக்கொப்பாகவும் கோபத்தில்யமனுக்கொப்பாகவும் பொறுமையில் பூமிக்கொப்பாகவுமிருந்தான். உறுதியான பராக்கிரமமுள்ள அந்தராஜா தன் பிரஜைகளிடத்தில் நல்ல அன்புள்ளவனாக இருந்தான். அந்தச்சந்தனு வேட்டையேபழகிக்கொண்டு காட்டிற்சென்று அழகானவனங்களிலும் மலையருவிகளிலும் திரிந்துகொண்டிருந்தான். அந்த ராஜஸ்ரேஷ்டன் ஸித்தர்களும் சாரணர்களும் வஸிக்கின்ற கங்கைக்கரையோரமாக மான்களையும் எருமைகளையும் அடித்துக்கொண்டு தனிமையாக ஸஞ்சரித்தான். மஹாராஜாவே! அவன், ஒருகாலத்தில், ஜ்வலிப்பதுபோல் பிரகாசிக்கிற தேகமுள்ளவளும் இரண்டாவது லக்ஷ்மியே நேரேவந்தாற்போல்பவளும், அங்கமுழுவதும் தோஷமில்லாதவளும், அழகிய பற்களையுடையவளும், சிறந்த ஆபரணங்களையணிந்தவளும், மெல்லிய ஆடையைத்தரித்தவளும், தாமரைப்புஷ்பத்தினுள்ளேயிருக்கிற காய்க்குலப்பான நிறமுள்ளவளும், தனித்திருந்தவளுமாகிய ஓர் உத்தம ஸ்திரீயைக் கண்டான். ஸ்நானஞ்செய்து சுத்தமான சரீரமுள்ளவளும், தூயஆடைதரித்தவளும், கூந்தலையவிழ்த்து இருகரங்களாலும் ஆற்றுகிறவளும், அழகினாலும் வயஸினாலும் ஒளியினாலும் அவயவங்களினாலும் முகமலர்ச்சியினாலும் அன்பினாலும் விளையாட்டுக்களாலும் கடைக்கண் ஓட்டங்களாலும் பெரியநிதம்பத்தினாலும் இடையினாலும் ஸ்தனங்களாலும் மார்பினாலும் பார்வையினாலும் குழற்கற்றையினாலும் கால்களாலும் இங்கிதத்தினாலும் புன்னகையினாலும் குயில்கூவுதலைப்போன்ற ஸல்லாபங்களினாலும் ஸரஸ்வதியையும் பார்வதியையும் லக்ஷ்மியையும் தேவஸ்திரீகளையும் மற்ற ஸ்திரீகளையும் கீழ்ப்படுத்துகின்றவளுமாகிய கங்காதேவியைக் கண்டான். குறைவை நிவிருத்திசெய்பவளாகிய அவள் சந்தனுவினிடம் வந்தாள். சந்தனு அவளைக்கண்டு அழகினுடைய நிறைவினால் வியப்புற்று மயிர்க்கூச்சமுள்ளவனானான். அவ்வரசன் கண்களால் அவளைக் குடிப்பவன்போல் பார்த்துத் திருப்தியடையவில்லை. அந்தப் பெண்ணும், சிறந்த பராக்கிரமமுள்ளவனைச் சஞ்சரிக்கின்ற அந்த ராஜாவைக்கண்டவுடன், விருப்பத்தினால்ஸ்நேஹத்தையடைந்து, பார்ப்பதில் சலிப்பில்லாதவளாக இருந்தாள். கின்னரப்பெண்போலவும் அப்ஸரஸைப்போலவுமிருக்கின்ற அந்தக் கங்கையென்னும் பெண் விருப்பத்தோடு ராஜாவைப்பார்த்துக்கொண்டு அவன் முன்னிலையில் ஸஞ்சரித்தாள். ரூபத்தினால் எல்லா ராஜஸ்திரீகளுக்கும் மேற்பட்டிருக்கின்ற அவளைக்கண்டு, சந்தனு அவளைப் பார்ப்பதினாலேயே

மிகுந்த ஆனந்தமுள்ளவனாக இருந்தான். பிறகு, ராஜா இன்சொல்லினால் அவளைத் தைரியப்படுத்திச் சொல்லலானான்: 'அழகான இடையுடையவளே! நீ தேவப்பெண்ணா? அஸுரப்பெண்ணா? கந்தர்வப் பெண்ணா? அப்ஸரஸா? யக்ஷப்பெண்ணா? நாககன்னிகையா? மனுஷ்யப்பெண்ணா? தேவதைபோன்றவளே! குற்றமில்லாதவளே! நீ யாராயிருந்தாலும் எனக்குப் பாரியையாகக் கடவாய்; என்னுடைய உயிரும் எனக்குள்ள தனம் யாவும் உன்னைச்சேர்ந்தவை. தேவப்பெண்ணைப் போன்றவளே! உன்னிடத்தில் நான் யாசிக்கிறேன். அழகுள்ளவளே! நீ எனக்கு மனைவியாகக் கடவாய்' என்றுசொன்னான்.

---

நூற்றுநான்காவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



### (கங்கை சந்தனுவுக்கு மனைவியானது.)

அந்தச் சந்தனுராஜன், புன்சிரிப்புடன் மிருதுவாகவும் அழகாகவும் சொன்ன இந்தச் சொல்லைக்கேட்டு, புகழ்பெற்ற அந்தப்பெண், அவனுடைய நன்மைக்காக அவனிடம்வந்தாள். சிலாக்கியமானரூபமுள்ள அவள், தான் வஸுக்களுக்கு வாக்குத்தத்தம்செய்ததையும் ப்ரதீபன் சொன்னதையும் நினைத்து ஸந்ததியைவிரும்பி ராஜபுத்திரனும்ராஜாவுமான சந்தனுவிடம் தானாக வந்துசேர்ந்தாள். வஸுக்களின் சாபத்தினால் தூண்டப்பட்ட அவள் இதுதருணமென்றுநினைத்துப் பேச்சினால் ராஜாவின்மனத்தை மகிழ்வித்துக்கொண்டு, 'ராஜாவே! நான் உன் ஸ்வாதீனமான மஹிஷியாவேன். நீயாவது மற்றவராவது என்னைப்பற்றி எவ்வகையிலும் தெரிந்துகொள்ள விரும்பக்கூடாது. ராஜாவே! நல்லதோ கெட்டதோ நான் என்னசெய்வேனோ அதில் என்னைத்தடுக்காமலிருக்கவேண்டும். அப்படியே எனக்கு விருப்பமில்லாததைச் சொல்லாமலிருத்தல் வேண்டும். ராஜாவே! இவ்வாறு நடந்துகொள்ளும்வரையில் நான்உன்னிடம்வஸிப்பேன்; என்னைத்தடுத்தாலும் விருப்பமில்லாததைச்சொன்னாலும் உன்னைஸந்தேஹமின்றி விட்டுவிடுவேன். ராஜாவே! இதுவென்னுடையநியமம். உன்இஷ்டப்படி நீ என்னைஅடையலாம். உன்பிதாவினால் நான்அங்கீகரிக்கப்பட்டிருக்கிறேன். பிரபுவே! நீ என்பர்த்தாவாகக்கடவாய்' என்று சொன்னாள். பரதஸ்ரேஷ்டராகியஜனமேஜயரே!'அப்படியேஆகட்டும்'

என்று ராஜாசொன்னபோது அந்த ராஜஸ்ரேஷ்டனையடைந்து அவள் மிகுந்த ஆனந்தமடைந்தாள். அவள்கேட்டதற்கு 'அப்படியே ஆகட்டும்' என்றுவாக்குத்தத்தஞ்செய்து அந்தக்கங்காதேவியைத்தேரின்மேலேற்றிக்கொண்டு சந்தனுமஹாராஜன் அவளுடன்சென்றான். அவள், பிரத்தியக்ஷமாகவந்த இரண்டாவது லக்ஷ்மியைப்போல்சந்தனுவையடைந்தாள். ஜிதேந்திரியனாகிய சந்தனுவும் அவளையடைந்து காமஸுகமனுபவித்தான். கேட்பது அயுக்தமென்று நினைத்துஅவன் அவளை ஒன்றும்கேட்கவில்லை. அவளுடைய விநயத்தாலும் ஒழுக்கத்தாலும் அழகினாலும் உயர்ந்ததன்மையாலும் குணங்களினாலும் ரஹஸ்யத்திற்செய்யும் உபசாரத்தினாலும் அந்தஅரசன்திருப்தியடைந்தான். உயர்ந்தஸ்திரீயினால் உபசரிக்கப்பட்ட அந்தஅரசன் மிகவும் மகிழ்வுற்றான். தேவதாரூபமுள்ளவளும் *மூன்றுமார்க்கங்களுக்கும் செல்லுகிறவளுமாகிய அந்தப்பெண்ணரசியான கங்காதேவி, அழகுள்ள மனிதப்பெண்ணுருவம்எடுத்துக்கொண்டு, அதிர்ஷ்டத்தினால் மனோரதம் நிறைவேறினவனும் இந்திரனுக்கொப்பான மகிமையுள்ளவனுமாகிய சந்தனுவென்னும் ராஜஸ்ரேஷ்டனுக்குப் பாரியையாக வந்து சேர்ந்தாள். புணர்ச்சியினாலும் ஸ்நேகத்தினாலும் சாதுர்யத்தினாலும் முகமலர்ச்சியினாலும் அழகியவிளையாட்டுக்களாலும்அந்தப் பிரபு பிரியப்படும்படி அவனைச் சந்தோஷிக்கச் செய்தாள். அந்த உத்தமஸ்திரீயின் குணங்களினால் இழுக்கப்பட்டு அவ்வரசன்போகத்திலேயே அழுந்தியிருந்தான்.

---

## நூற்றைந்தாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



**(ஏழுபுத்திரர்கள் பிறந்தவுடன் கங்கைஅவர்களைக் கொன்றதைப்பார்த்து, சந்தனு எட்டாவது புத்திரனைக் கொல்லாமலிருக்கும்படிகேட்க, அவள் மறுமொழிசொன்னது.)**

அவளுடன்கூடி விரும்பினபடியெல்லாம் ரமித்துக்கொண்டிருந்த அரசன் அநேகவருஷங்களும் ருதுக்களும் மாதங்களும் கடந்துபோனதை அறியவில்லை. அவ்வரசன்தேவலோகத்திலுள்ளவையும் மனுஷ்யலோகத்திலுள்ளவையுமாகிய போகங்களையெல்லாம் அனுபவித்தான். ராஜலக்ஷ்மிபொருந்திய சந்தனு அந்தப்பெண்ணரசியை

---

* ஸ்வர்க்கம், பூமி, பாதாளம்.

அடைந்து மகிழ்ந்தான். அந்தக்கங்காதேவி ருதுஸ்நானமானகாலத்தில் தேவகுமாரனைக் கர்ப்பத்தில் தரித்தாள். தேவதைக்கொப்பான சந்தனுவுக்கு எட்டுக்குமாரர்களைப் பெற்றாள். பாரதரே! ஒவ்வொருபுத்திரரையும் பிறக்கப்பிறக்கஜலத்திற்போட்டுவிட்டாள். அந்தப்புத்திரர்களைப்பிரஸவித்தபோதே கழுத்தைப்பிடித்துயமலோகம் அனுப்பினாள். 'உன்னை நான் சந்தோஷப்படுத்துவேன்' என்று ராஜாவுக்குச்சொல்லிவிட்டுப் புத்திரர்களைக் கங்காப்ரவாகத்தில் அமிழ்த்தினாள். அப்போது அந்தச்சந்தனுமஹாராஜனுக்கு அவள்செய்தது பிரியமாயிருக்கவில்லை. நீங்கிவிடுவாளென்று பயந்து அரசன் அவளை ஒன்றும்சொல்லவில்லை. அவள்செய்கைக்குக் காரணத்தையும் அவள் வந்தகாரணத்தையும் கேட்கத்தகாதென்று தன்பிதா சொன்னசொல்லை நினைத்துக்கொண்டு, சந்தனு, புத்திரர்கள்விஷயத்தில் அவள்செய்த தீங்கைப்பற்றிக் கேட்காமலேஇருந்தான். அந்த ஸ்திரீ சிறந்த ஏழுகுமாரர்களைப் பிறக்கப்பிறக்கக் கொன்றுகொண்டிருந்தாள். சந்தனு *தர்மம்கெடுமென்று அவளை வெகு பிரயாஸத்தோடு ஒன்றும் கேளாமலிருந்தான். எட்டாவது புத்திரனை அவள் கொல்லவிரும்பியபோது சந்தனுவின் மனவுறுதி கலங்கியது. எட்டாவது புத்திரன் பிறந்தபின் சிரித்துக்கொண்டிருந்த அந்தக் கங்காதேவியைநோக்கித் துக்கத்தினால் வருந்தித் தன்புத்திரனைக் காப்பாற்றுவதற்கு விரும்பியஅரசன் கேட்டனன். புத்திரனைக் கொல்லுகின்ற அவளைக்கண்டு அப்போது மிகுந்ததுயரமுற்ற ஸ்ரேஷ்டனாகிய கௌரவராஜன், 'கொல்லாதே; நீ யாரைச்சேர்ந்தவள்? நீ யார்?' என்றும், 'பிள்ளைகளை ஏன்கொல்லுகிறாய்?' என்றும் 'புத்திரனைக்கொல்லுகிறவளே! உனக்கு மிகஇழிவான பெரும்பாவம்நேர்ந்திருக்கிறது' என்றும் சொன்னான். கங்கை, 'புத்திரனிடத்தில் விருப்பமுள்ளவனே!புத்திரரைப்பெற்றவருட்சிறந்தவனே!உன்புத்திரனை நான் கொல்லுகிறதில்லை. நாம்செய்த ஏற்பாட்டின்படி நான் இங்கே வஸிப்பது முடிந்தது. நான் ஜன்ஹுமஹாிஷியின்புத்திரியும் மஹரிஷிகளுடையகூட்டங்களினால் ஆஸ்ரயிக்கப்பட்டவளுமாகியகங்கை. தேவர்களுக்குச் செய்யவேண்டிய பிரயோஜனத்தை நிறைவேற்றுவதற்காக நான் உன்னுடனிருந்தேன். இவர்கள் தேவர்களும் மிகுந்த புண்ணியமுள்ளவர்களும் மிகுந்தசக்தியுள்ளவர்களுமாகிய எட்டு வஸுக்கள்; வஸிஷ்டருடைய சாபமென்னும் தோஷத்தினால் மானிடத்தன்மையை அடைந்தனர். அவர்களுக்குப் பிதாவாகத்தக்கவன்

---

* தான் செய்த பிரதிஜ்ஞை.

உன்னைக்காட்டிலும் வேறேயாரும் பூமியிலில்லை. என்னைப்போன்ற தாயாகவும் இவ்வுலகத்தில் மனுஷ்யஸ்திரீ யாருமில்லை. ஆதலால், அவர்களுக்குத் தாயாயிருப்பதற்காகமானிடதேகமெடுத்தேன். எட்டு வஸுக்களையும் புத்திரர்களாகப்பெற்று அழியாதலோகங்களை நீ ஜயித்தாய். தேவர்களாகியவஸுக்களுக்கு, 'நான்உங்களைப்பிறந்தவுடன்பிறந்தவுடன் மானிட ஜன்மத்தினின்று விடுவிப்பேன்' என்றஉறுதியான வாக்குத்தத்தம்செய்தேன். ஆதலால், அவர்கள் மஹாத்மாவானஆபவர் என்று சொல்லப்பட்ட வஸிஷ்டருடைய சாபத்தினின்றுவிடப்பட்டனர். உனக்குமங்களமுண்டாகட்டும். நான்செல்வேன். மிகுந்த விரதமுள்ளவனாகிய இந்தப்புத்திரனை நீ காப்பாற்று. குலத்தைச்சிறப்பிக்கின்ற இந்தஉன்புத்திரன் அந்த எட்டுவஸுக்களின் சக்திகளும் சேர்ந்து உண்டாயிருக்கிறான். மனிதரால்லாகாத காரியத்தைச்செய்யப் போகிறான். நிச்சயம். வஸுக்கள் என்னிடத்தில் இப்படிமாறுரூபத்தோடு வாஸம்செய்தனர். என்னிடம்பிறந்த இந்தப் புத்திரனைக் *கங்காதத்தன் என்றறி' என்றாள்.

---

## நூற்றுருவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(வஸுக்கள் வஸிஷ்டசாபத்தினால் புத்திரர்களாகவந்ததைச் சந்தனுவுக்குக் கங்காதேவியுரைத்தது.)

சந்தனு, 'மங்களமூர்த்தியே! அழகிய நோக்குள்ளவளே! எந்த ஆபவரென்பவருடைய சாபத்தினால் அந்த வஸுக்களெல்லாரும் மனுஷ்யகர்ப்பத்துக்கு வந்தனரோ, அவர் யார்? அவர்சபித்ததற்குக் காரணமாகிய வஸுக்களின் அபராதம்யாது? உன்னால் எனக்குக் கொடுக்கப்பட்ட இந்தக்குமாரன்மாத்திரம் மனுஷ்யலோகத்தில் வஸிக்கவேண்டியதாக இருக்கும்படி நேர்ந்த இவன்செய்கையாது? எல்லாஉலகத்துக்கும்ஈசுவரர்களாகிய அந்தவஸுக்கள் எவ்வாறு மனுஷ்யர்களிடம்பிறந்தனர்? ஜன்ஹுபுத்திரியே! அவற்றையெல்லாம் எனக்குச்சொல்' என்றுகேட்டான். புருஷஸ்ரேஷ்டராகிய ஜனமேஜயரே! இவ்வாறுசொல்லியதைக்கேட்டு ஜன்ஹுபுத்ரியாகியகங்காதேவி, அப்போது சந்தனுமஹாராஜாவை நோக்கிப் பின்வருமாறு சொல்லலானாள்:—

---

* கங்கையினால் கொடுக்கப்பட்டவன்.

'பரதஸ்ரேஷ்டனாகிய சந்தனுமஹாராஜனே! முன்பு வருணன் எவரைப்புத்திரராக அடைந்தானோ அந்தவஸிஷ்டரென்றுபெயருள்ள முனிவர் * ஆபவரென்று பிரஸித்திபெற்றவர். புண்ணியமானதும், மிருகங்களும் பக்ஷிகளும் நிரம்பியிருப்பதும், எல்லாக்காலங்களின் புஷ்பங்களும் பூர்ணமாக இருப்பதுமாகிய வஸிஷ்டரிஷியின் ஆஸ்ரமம் மேருவென்னும் சிறந்தபர்வதத்தின் சாரிலிருக்கிறது. பரதவம்சஸ்ரேஷ்டனே! புண்ணியஞ்செய்பவருக்குட்சிறந்தவரும் வருணபுத்திரருமான அந்தவஸிஷ்டர் மதுரமான கிழங்குகளும் காய்களும் ஜலமுமுள்ள அந்தமேருவின் சாரிலிருக்கிற அவ்வனத்தில் தவஞ்செய்துகொண்டிருந்தார். பரதரேறே! ஸுரபியென்று சொல்லப்பட்ட தக்ஷபுத்திரிஎவளோ அந்தத்தேவி, நினைத்ததையெல்லாம் கறக்கின்ற சிறந்தபசுவை லோகானுக்ரஹஞ் செய்வதற்காகக் கசியபருக்குப் பெற்றாள். தர்மாத்மாவாகிய அந்தவஸிஷ்டர் அந்தப்பசுவைத் தமது ஹோமதேனுவாக க்ரஹித்துக்கொண்டார். அந்தத்தேனுவானது, ரிஷிகளினால் அடையப்பட்டதும் புண்ணியமும் ரமணீயமுமான அந்தத் தபோவனத்திலிருந்துகொண்டு, பயமில்லாமல் ஸஞ்சரித்தது. பரதஸ்ரேஷ்டரே! பிறகு, ஒருகாலத்தில், ப்ருதுமுதலான தேவர்களாகிய வஸுக்களெல்லாரும் தேவரிஷிகளால் அடையப்பட்ட அந்தவனத்துக்கு வந்தனர். அவர்கள் தங்கள் மனைவிகளுடன் அழகான குன்றுகளிலும் வனங்களிலும் விளையாடிக்கொண்டு அந்த வனமெங்கும் ஸஞ்சரித்தனர். இந்திரனுக்கொப்பான பராக்கிரமமுடையவனே! ராஜஸ்ரேஷ்டனே! அந்தவஸுக்களிலொருவனுடைய பாரியையாகிய அழகான இடையையுடையபெண் அவ்வனத்தில் ஸஞ்சரிக்கையில் எல்லாக் காமதேனுக்களிலும் சிறந்த அந்த நந்தினியென்னும் பசுவைக்கண்டாள். சிறந்த விருஷபத்துக்கொப்பான கண்களையுடையவனே! அவள் அந்தப்பசுவின் குணமாகிய தனத்தின்சிறப்பினால் வியப்புற்றவளாகி நல்லபுஷ்டியுள்ளதும், செம்மையாகக் கறப்பதும், அழகானவாலும் குளம்புகளுமுள்ளதும், மங்களகரமானதும், எல்லாச்சிறப்புக்களும்நிரம்பியதும், மிகச்சிறந்த ஸாதுத்தன்மையுள்ளதுமாகிய அந்தத்தேனுவை † த்யோவென்னும் வஸுவுக்குக் காண்பித்தாள். பூருவம்சத்துப் புத்திரனாகிய ராஜேந்திரனே! சிறந்த யானைக்கொப்பான நடையுடையவனே! முன்னே

* ஆபம் = ஜலங்களின் வர்க்கம். அவற்றிற்கு யஜமானனாயிருப்பதினால் வருணன் ஆபவன் என்னப்படுகிறான். அவனுடைய புத்திரராகிய வஸிஷ்டருக்கும் அந்தப்பெயர் சொல்லப்பட்டது. † த்யோ = ப்ரபாஸர். பக்கம்-உ௬௦.

வஸுவின்பாரியை இவ்வகையான குணங்கள் நிரம்பின அந்தத்தேனு வை வஸுவுக்குக் காண்பித்தாள். ராஜாவே ! த்யோவானவன் அப் போது அந்தக்கோவைக்கண்டு தன்மனைவிக்கு அதினழகையும் குண ங்களையும் தெரிவித்துச் சொல்லலானன் :

"*கருமையான கண்களையுடையவளே ! சிறந்த நிதம்பமுள்ள வளே ! இந்த உத்தமதேவதையாகிய தேனு, இந்த உயர்ந்த தபோ வனத்திற்குடையவராகிய வஸிஷ்டமஹரிஷியுடையது. அழகான இடையுடையவளே ! இதனுடைய சுவையுள்ள பாலைக்குடிக்கும்மனி தன் யௌவனமழியாமல் பதினாயிரவருஷகாலம் ஜீவித்திருப்பன்' என்றான். ராஜஸ்ரேஷ்டனே! அழகானஇடையையுடையவளும்சிலாக் கியமான அங்கமுடையவளுமாகிய அந்த வஸுபத்னி இதைக்கேட்டு மிகுந்த ஒளியுள்ள தன் கணவனைநோக்கிப் பின்வருமாறு சொல்லலா னள்:

'மனுஷ்யலோகத்தில் அழகினாலும் யௌவனத்தினாலும் சோபி க்கின்ற ஜிதவதியென்று பெயருள்ள ராஜபுத்திரி எனக்குத்தோழி யாக இருக்கிறாள். ஸத்தியஸந்தனும் சிறந்த புத்தியுள்ளவனுமாகிய உசீனரனென்னும் ராஜரிஷியின் புதல்வியான அவள் மானிடலோகத் துக்குள் அழகின்சிறப்பினால் பெயர்பெற்றவள். மிகுந்த மஹிமை யுள்ளவனே ! தேவர்களிற் சிறந்தவனே ! புண்ணியத்தை விருத்தி செய்பவனே ! அவளுக்காக நான் விரும்புகின்ற இந்தக்கோவைக் கன்றோடுகூடத் துரிதமாகக் கொண்டுவா. கௌரவத்தைக் கொடுப் பவனே! என்னுடைய அந்தஸகியொருத்தி இந்த ஆவின்பாலைக்குடித்து மனிதர்களுக்குள் மூப்பும்பிணியும் இல்லாதவளாக இருக்கக்கடவள். சிறந்த மஹிமையுள்ளவனே! குற்றமில்லாதவனே! நீ எனக்கு இதை ச்செய்யக்கடவாய்.இந்தப்பிரியத்தைவிட வேறு மேலானபிரியம் என க்கு எவ்வகையிலுமில்லை' என்றாள். அவளுடைய இந்தச்சொல்லைக் கேட்டுத் தன்மனைவியின் விருப்பத்தைச் செய்யக்கருதி த்யோவான வன் ப்ருதுமுதலிய ஸஹோதரர்களுடன்கூட அந்தப்பசுவை அப் போது கொண்டுபோனான். ராஜாவே! தாமரையிதழ்போன்ற கண்களை யுடைய அந்தமனைவியினால்ஏவப்பட்ட த்யோவென்பவன்அப்போது அந்த ரிஷியின் உக்கிரமானதபஸைக் கவனிக்கமாட்டாமற்போனான். அப்போது அவன் அந்தப்பசுவைக் கொண்டுபோனான்; அதனால்வரு ம்தீங்கை நினைக்கவில்லை. பிறகு, பழங்களை யெடுத்துக்கொண்டு வஸி

* 'அஸிதேக்ஷணே' என்பதைவிட்டு 'அஸிதேக்ஷணே' என்ற பாடம் கொள்ளப்பட்டது.

ஷ்டர் ஆஸ்ரமம்வந்தார். அந்தச்சிறந்த வனத்தில் அந்தப்பசுவைக் கன்றுடன் காணவில்லை. பிறகு, அந்தத்தபோதனர் அந்தவனத்தில் அதைத்தேடினார். உயர்ந்த புத்தியுள்ள அம்முனிவர் தேடியும் அந்தப்பசுவைக்காணவில்லை. திவ்யஜ்ஞானமுள்ள அவர் அந்தப்பசு வஸுக்களால் அவ்வாறு கொண்டுபோகப்பட்டதையறிந்து உடனே கோபத்துக்கு வசப்பட்டு வஸுக்களை அப்போதே சபித்தார்: 'அழகிய வாலுள்ள என் கறவைப்பசுவை வஸுக்கள் கொண்டுபோனதனால் அவர்கள்யாவரும் மனிதர்களில் ஜனிக்கப்போகின்றனர்; சந்தேகமில்லை' என்று அந்த வஸிஷ்டபகவான் அந்த வஸுக்களைச் சபித்தார். பரதஸ்ரேஷ்டரே! சிறந்த மஹிமையுள்ள ஆபவரென்னும் முனிஸ்ரேஷ்டர் கோபம் மேற்கொண்டு அந்த வஸுக்களை இவ்வாறு சபித்தபின் தவத்திலேயே மனத்தைச் செலுத்தினார். ராஜாவே! மிகுந்த மஹிமையுள்ளவரும் தவத்தைத் தனமாகக் கொண்டவருமாகிய அந்தப் பிரமரிஷி இந்தக்காரணத்தினால் கோபங்கொண்டு தேவர்களாகிய வஸுக்கள் எண்மரையும் சபித்தார். மிகச்சிறந்தவனே! த்யோவின் குற்றத்தினால் எட்டுவஸுக்களும் வஸிஷ்ட மஹரிஷியினால் இவ்வாறு சபிக்கப்பட்டனர். ராஜஸ்ரேஷ்டனே! அதன்பின், அந்த வஸுக்கள் 'சபிக்கப்பட்டோம்' என்று தெரிந்து மறுபடியும் அம்மஹாத்மாவின் ஆஸ்ரமம்வந்து அந்த ரிஷிக்கு அனுக்ரஹம்வரும்படி செய்வதற்காக அம்முனிவரிடஞ்சென்றனர். புருஷஸ்ரேஷ்டனே! எல்லாத்தர்மங்களும் தெரிந்தவராகிய அந்த வஸிஷ்டமஹரிஷியின் அநுக்ரகத்தை அவர்கள் பெறவில்லை. அந்தத் தர்மாத்மாவான வஸிஷ்டர், 'என்னால் சபிக்கப்பட்ட தரன் முதலிய நீங்கள் எல்லோரும் ஒருவருஷத்துக்குப்பின் சாபத்திலிருந்துவிடுபடுவீர்கள். யாருக்காக நீங்கள் என்னாற்சபிக்கப்பட்டிருக்கின்றீர்களோ அந்த த்யோவென்னும் வஸுமட்டும் தான் செய்ததற்காக நீண்டகாலம்மனுஷ்யலோகத்தில் வஸிப்பான். நான் உங்களைக் கோபித்துச் சொன்னசொல்லைப் பொய்யாக்க விரும்பவில்லை. சிறந்த மனமுள்ள இவன் மனுஷ்யர்களில் ஸந்ததியை உண்டு பண்ணமாட்டான். இவன் தர்மாத்துமாவாகவும் எல்லாச் சாஸ்திரங்களிலும் வல்லவனாகவும் தன்பிதாவின் விருப்பத்தையும் நன்மையையும் செய்வதில் ஊக்கமுடையவனாகவும் இருப்பான். ஸ்திரீபோகங்களை விட்டுவிடுவான்' என்றார்.

இவ்வாறு வஸுக்களெல்லாரையும் நோக்கிச் சொல்லிவிட்டு அந்த மஹரிஷி சென்றார். அதன்பின் அந்த வஸுக்களெல்லாரும் சேர்ந்து என்னிடம் வந்தனர். ராஜாவே! அவர்கள், 'கங்கையே!

எங்களைப் பிறக்கப்பிறக்க நீ நேரே ஜலத்தில் போட்டுவிடு ’ என்று என்னை வரங்கேட்டனர். நானும் அதனை அப்படியே செய்தேன். ராஜஸ்ரேஷ்டனே! பாரதனே! இவ்வாறு, நான், சபிக்கப்பட்ட வஸுக்களை மனுஷ்யலோகத்திலிருந்து விடுவிப்பதற்காக நியாயமாகவும் செம்மையாகவுஞ்செய்தேன். ராஜஸ்ரேஷ்டனே ! த்யோவென்னும் வஸுவாகிய இந்தக்குமாரன் ஒருவன்மாத்திரம்அந்தரிஷியின் சாபத்தினால் மனுஷ்யலோகத்தில் வெகு காலமிருப்பன். உன்புத்திரனாகிய இந்தக்குமாரன் பெரியவனானபிறகு மறுபடியும்உன்னிடம்வருவான். ராஜாவே! நானும் நீ அழைக்கும்போதுஉன்னிடம் வருவேன்’ என்று கங்காதேவி சொன்னாள். இதைச்சொன்னபின், அந்தக்கங்காதேவி அங்கேயே அந்தர்த்தானமாயினாள். அந்தக் குமாரனையுமழைத்துக் கொண்டு அவள் தன் இஷ்டப்படி சென்றாள். அந்தக்குமாரன் தேவவ்ரதனென்றும் காங்கேயனென்றும் பெயர் பெற்றிருந்தான். சந்தனுவின் புத்திரனாகிய த்யோவென்னும் வஸு,குணங்களில் சந்தனுவுக்கு மேலாக இருந்தான். சந்தனு சோகத்தினால் பீடிக்கப்பட்டவனாகி வனத்திலிருந்து தன் நகரம் சென்றான். அந்தப்பாரதவம்சத்தவனும் மஹாத்மாவுமான சந்தனுராஜாவின் மிகுதியான குணங்களையும் மஹிமையையும்பற்றி நான் சொல்லப்போகிறேன்.அவனுடைய அழகுள்ள சரித்திரம் மஹாபாரதமென்று சொல்லப்படுகின்றது.

---

## நூற்றேழாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(கங்காதேவி பீஷ்மரை வயஸுவந்தபிறகு சந்தனுவுக்குக்கொடுக்க,சந்தனு அவரை யுவராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்ததும், பீஷ்மர் ஸத்தியவதியைத் தம் பிதாவுக்குக் கொண்டுவந்து கொடுத்ததும்.)

அந்தச் சந்தனுமஹாராஜன் சிறந்த ஞானமுள்ளவன்; தேவர்களாலும் ராஜாக்களாலும் ரிஷிகளாலும் கௌரவிக்கப்பெற்றவன் ; தர்மத்திலேயே சித்தமுள்ளவன் ; ஸத்யவாக்கென்று எல்லாலோகங்களிலும் பெயர்பெற்றவன். சந்தனுவின் குணங்களெல்லாவற்றையும் நான் சொல்லப்போகிறேன். இந்திரிய ஜயம், கொடை, பொறுமை, புத்தி, (அகாரியங்களில்) லஜ்ஜை, தைரியம், உயர்ந்த

பராக்கிரமம் ஆகிய இவை உயர்ந்த ஸ்வபாவமுள்ள புருஷஸ்ரேஷ்டனை சந்தனுவினிடத்தில் நிலைபெற்றிருந்தன. இவ்வகையான குணங்கள்நிரம்பினவனும் தர்மத்திலும் ராஜநீதியிலும் ஸமர்த்தனுமாகிய அவ்வரசன் பரதவம்சத்தையும் எல்லாப்பிரஜைகளையும் காப்பவனாக இருந்தான்; * சங்குபோன்ற கழுத்துள்ளவனும் பருத்ததோள்களையுடையவனும் மதயானைபோன்ற நடையுள்ளவனும் பரிபூர்ணமான பயன்களையுடைய ராஜலக்ஷணங்களெல்லாம் நிரம்பினவனுமாயிருந்தான். புகழ்பெற்ற அவ்வரசனுடைய ஒழுக்கத்தைக் கண்டு மனிதர்கள் எப்போதும் இன்பத்தையும் பொருளையும் காட்டிலும் அறமே சிறந்ததென்று உறுதியுள்ளவராயிருந்தனர். பரதஸ்ரேஷ்டராகிய ஜனமேஜயரே! சந்தனு இவ்வாறு மேலான ஸ்வபாவமுள்ளவனாகியிருந்தான். தர்மத்தில் அவனுக்கு ஈடான அரசன் ஒருவனும் இருக்கவில்லை. தர்மங்களிலேயேயிருந்துகொண்டு தர்மத்தைக் காப்பாற்றுகிறவர்களெல்லாரிலும் சிறந்த அந்தராஜாவை ராஜராஜாவாக மற்ற அரசர்கள் பட்டாபிஷேகஞ் செய்வித்தனர். பரதவம்சத்திற்கு ரக்ஷகனாகிய அந்தச்சந்தனுவைத் தங்களுக்கு நாதனாகப்பெற்ற அரசர்கள் துன்பமும் பயமும் பிறரால் உபத்திரவமும் நீங்கினவர்களாகவும் ஸுகமான நித்திரையும் விழிப்புமுள்ளவர்களாகவுமிருந்தனர். புகழ்பெற்றவனும் இந்திரனுக்கொப்பான பராக்கிரமமுடையவனுமாகிய சந்தனுவினால் ஆளப்பட்ட அரசர்கள் யாகம் தானம்முதலிய காரியங்களைச் செய்துகொண்டிருந்தனர். சந்தனுவைத் தலைவனாகவுடைய அரசர்களினால் உலகம்ரக்ஷிக்கப்படும்போது எல்லா வருணங்களிலும் வியவஸ்தையுடன் தம்தம் தர்மமே மேலாக இருந்தது. க்ஷத்திரியன் பிராமணனுக்குச் சுஸ்ரூஷைசெய்தான். வைசியர்கள் க்ஷத்திரியர்களை அநுஸரித்திருந்தனர். சூத்திரர்கள் பிராமணர்களிடத்திலும் க்ஷத்திரியர்களிடத்திலும் அன்புவைத்து வைசியர்களையும் ஸேவித்தனர். அவன் (சந்தனு) கௌரவர்களின் ராஜதானியாகிய அழகான ஹஸ்திநபுரத்தில் வஸித்துக்கொண்டு கடல்சூழ்ந்த பூமியை ஆண்டான். இந்திரனுக்கு ஒப்பானவனும் தர்மம் தெரிந்தவனும் ஸத்தியம்தவறாதவனும் உள்ளும்புறமும் ஒத்திருப்பவனுமாகிய அவன், தானம் தர்மம் தவம் இவை சேர்ந்திருந்ததனால் சிறந்தசெல்வம் அடைந்தான். விருப்பும் வெறுப்புமில்லாதவனாகவும், சந்திரனைப்போல் இனிய காட்சியுள்ளவனாகவும், † தேஜஸினால் சூரியனுக்கொப்பானவனாகவும்,

* மூன்றுரேகைகளோடுகூடிய கழுத்து.

† எல்லாவற்றையும் அடக்கும் சக்தி.

வேகத்தில் வாயுவுக்கு ஒப்பானவனாகவும், கோபத்தில் யமனுக்கு ஒப்பானவனாகவும், பொறுமையில் பூமிக்கு ஒப்பானவனாகவுமிருந்தான். ஜனமேஜயமஹாராஜாவே! சந்தனுமஹாராஜா பூமியை ஆண்டுகொண்டிருக்கையில் ஆடுமாடுகளும் பன்றிகளும் காட்டுமிருகங்களும் பக்ஷிகளும் ஹிம்ஸிக்கப்படவில்லை. பிராமணதர்மமே அதிகரித்திருந்த ராஜ்யத்தில் அடக்கமுள்ள மனத்தையுடைய சந்தனு இந்திரியஸுகங்களில் ஆசையைவிட்டுப் பிராணிகளைப் பக்ஷபாதமின்றி ஆண்டனன். சகோரம்போலக் கண்களுடையவனும் சிவந்தவாயுள்ளவனும் ஸிம்மத்துக்கும் விருஷபத்துக்கும் ஒப்பான நடையுள்ளவனும் பூர்ணசந்திரனுக்கு ஒப்பான முகமுள்ளவனுமான சந்தனு, யௌவனவயஸிலிருக்கும்போதே தன்னை அடுப்பதற்குக் காரணங்களாகிய குணங்களையெல்லாம் ஒப்பில்லாமல் வஹித்தவனும் ஆழ்ந்த கருத்துள்ளவனும் தைரியமுள்ளவனுமாயிருந்தான். அக்காலத்தில் தேவர்கள் ரிஷிகள் பிதிர்க்கள் இவர்களின் * யாகங்களுக்காகக் காரியங்கள் செய்யப்பட்டன. அதர்மமாக எந்தப்பிராணிகளும் கொல்லப்படவில்லை. ஆதரவில்லாதவையும் ஸௌக்கியமில்லாதவையுமான திர்யக் ஜாதியிற்பிறந்த பிராணிகளெல்லாவற்றிற்கும் அந்தராஜாவே பிதாவாகஇருந்தான். குருவம்சத்தலைவர்களுட் சிறந்தவனாகிய அந்தச் சந்தனுமஹாராஜன் அரசர்க்கரசனாக ஆண்டுவருகையில், சொற்களெல்லாம் ஸத்தியம் தவறாமலிருந்தன; உள்ளங்களெல்லாம் தானத்திலும் தர்மத்திலும் பற்றியிருந்தன; பசுக்கள் யாகத்திற்காகவே ஸ்ருஷ்டிக்கப்பட்டிருந்தன; ஆண் பெண்புணர்வது சந்ததிக்காகவேயிருந்தது. அவன் † பதினாறு, எட்டு, நாலு, எட்டு ஆகியவருஷங்கள் ஸ்திரீஸுகத்தை அனுபவிக்காமல் காட்டிலேயே திரிந்துகொண்டிருந்தான். அவனுக்குக் கங்கையினிடம் பிறந்த புத்திரனும் வஸுக்களின் அம்சமுமாகிய தேவவ்ரதனென்பவன் ரூபத்திலும் செய்கையிலும் ஒழுக்கத்திலும் கல்வியிலும் அவனைப்போலவே இருந்தான். சிறந்த வன்மையும் சிறந்த தீரமும் சிறந்தபராக்கிரமமுமுள்ள அந்த மஹாரதனான தேவவ்ரதன் பூமியிலுள்ளவையும் ‡ இல்லாதவையுமான எல்லா அஸ்திரங்களிலும் தேர்ச்சியுள்ளவனாகி இருந்தான். அந்தச் சந்தனுமஹாராஜன் ஒருகாலத்தில் மான்களை வேட்டையாடிக்கொண்டு கங்காநதிக்கரையில்ஸஞ்

* தேவயாகம் = அக்நிஹோத்ரம் முதலியவை; ரிஷியாகம் = வேதமோதுவது; பிதிர்யாகம் = ஶ்ராத்தம் முதலியவை.

† முப்பத்தாறு வருஷங்கள். ‡ தேவலோகத்திலுள்ளவை.

சரிக்கையில் கங்கை ஜலம்குறைவாயிருப்பதைக் கண்டான். அதைக் கண்டு புருஷஶ்ரேஷ்டனாகிய சந்தனு, 'இந்தமஹாநதி இப்போது முன்போல் ஏன் பெருகவில்லை?' என்று சிந்தித்தான். பிறகு, அதன் காரணத்தைப்பற்றித் தேடிக்கொண்டு போகும்போது அந்த உயர்ந்த மனமுள்ள சந்தனு அழகு நிரம்பினவனும் வளர்ச்சியுள்ளவனும் அழகான பார்வையுள்ளவனும் தேவேந்திரனைப்போல் தேவலோகத்து அஸ்திரத்தைப் பிரயோகிப்பவனுமாகிய ஒருசிறுவன் கூர்மையான அம்புகளால் கங்கைமுழுவதையும் தடுத்துக்கொண்டு நின்றதைக்கண்டான். அந்தச் சிறுவனுடைய ஸமீபத்தில் அந்தக்கங்காநதி அம்புகளினால் தடுக்கப்பட்டிருந்ததைக்கண்டு மனிதர்க்குமுடியாத அவன் செய்கையையறிந்து ராஜா வியப்புற்றவனானான். முன்னே பிறந்தவுடன் பார்த்திருந்த அந்தத்தன்புத்திரனைச் சிறந்தபுத்தியுள்ள சந்தனு தன்புத்திரனென்று அப்போது அடையாளம்கண்டுகொள்ள முடியாமற்போனான். அந்தப்புத்திரனும் தன்பிதாவைப்பார்த்து மாயையையுண்டுபண்ணிப் பிரமிக்கச்செய்தான். அவனை மயக்கினபின், உடனே அவன் அங்கேயே மறைந்துவிட்டான். அவ்விடத்தில் அந்த ஆச்சரியத்தைக்கண்ட சந்தனுமஹாராஜன் உடனே தன்புத்திரனென்று ஸம்சயித்துக் கங்கையைப் பிரத்தியக்ஷமாகும்படி கேட்டுக்கொண்டான். கங்கை உத்தமமான ரூபத்தையெடுத்துக்கொண்டு அலங்கரிக்கப்பட்ட அந்தக்குமாரனை வலக்கையிற்பிடித்துக்கொண்டு ராஜாவுக்குஎதிரே தோன்றினள். ஆபரணங்களினால் அலங்கரிக்கப்பெற்று நிர்மலமான ஆடையுடுத்துக்கொண்டுவந்த அந்தக்கங்காதேவியை முன்னேபார்த்திருந்தும் அவளை அந்தச்சந்தனு அப்போது தெரிந்துகொள்ளவில்லை. அப்போது கங்காதேவி, 'ராஜாவே! முன்னே எந்தஎட்டாவது புத்திரனை நீ என்னிடத்தில் அடைந்தாயோ அவன்தான் இவன். புருஷஶ்ரேஷ்டனே! எல்லா அஸ்திரங்களும் தெரிந்தவன் இவனுக்கு மேற்பட்டவன் யாருமில்லை. மஹாராஜாவே! என்னால் வளர்க்கப்பட்ட இந்தப்புத்திரனை வாங்கிக்கொள். பிரபுவே! புருஷஶ்ரேஷ்டனே! இவனை உன்வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போ. இந்தவீரன் வஸிஷ்டரிடமிருந்தே வேதங்களையும் வேதாங்கங்களையும் ஓதினான்; அஸ்திரங்களில் தேர்ந்தவன்; முதன்மையான வில்லாளி; யுத்தத்தில் இந்திரனுக்கொப்பானவன்; பரதவம்சத்தவனே! தேவர்களாலும் அஸுரர்களாலும் எப்போதும் மதிக்கப்பெற்றவன். சுக்ராசாரியருக்கு எந்தச் சாஸ்திரம்தெரியுமோ அஃதெல்லாம் இவனுக்கும்தெரியும். சிறந்தகைகளையுடையவனும்மஹாத்

மாவுமாகிய இந்த உன்புத்திரனிடத்தில் தேவர்களாலும் அஸுரர்க ளாலும் நமஸ்கரிக்கப்பட்ட அங்கிரஸின் புத்திரராகிய ப்ருஹஸ்பதி யறிந்த சாஸ்திரமெல்லாம் ஸாங்கோபாங்கமாக நிலைபெற்றிருக்கின் றன. ரிஷியும் எதிரிகளால் ஜயிக்கமுடியாத பராக்கிரமமுள்ளவரு மான பரசுராமருக்கு என்னஅஸ்திரம்தெரியுமோ அஃது இவனிடம் நிலைபெற்றிருக்கிறது. ராஜாவே! பெரியவில்லாளியும் ராஜதர்மத் திலும் ராஜநீதியிலும் தேர்ந்தவனுமாகிய இந்த உன் புத்திரனை நான் உனக்குக்கொடுக்கிறேன். வீரனே! நீ இந்தவீரனை உன்வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோ' என்று சொன்னாள்.

இவ்வாறுசொல்லி, அர்த்தமஹாநுபாவையான கங்கை அங்கேயே மறைந்தாள். அந்தக்கங்கையினால் இவ்வாறு விடைகொடுக்கப்பெற்ற சந்தனுமஹாராஜன் சூரியனைப்போல் பிரகாசிக்கின்ற புத்திரனை அழைத்துக்கொண்டு தன் நகரத்துக்குச்சென்றான். அந்தப்பூருவம் சத்திற்பிறந்தவனை சந்தனு இந்திரபுரிக்கு ஒப்பான தன்பட்டணம் சேர்ந்து தான்விரும்பினவையெல்லாம் நிறைவேறினவாகத் தன்மன த்தில்நினைத்தான். அதன்பின், ராஜ்யம் பூருவம்சத்தாரிடம் நிலைபெறு வதற்காகப் பிரஜைகளுக்கு அபயம்கொடுப்பவரும் சிறந்தகுணங்க ளுள்ளவரும் மஹாத்மாவுமாகிய தன்புத்திரருக்கு யௌவராஜ்யபட் டாபிஷேகம் செய்வித்தான். பரதஸ்ரேஷ்டராகிய ஜனமேஜயரே! பெருங்கீர்த்திபெற்றவராகிய அந்தச்சந்தனுவின்புத்திரர் தம் ஒழுக் கத்தினால் பூருவம்சத்தவரையும் தம்பிதாவையும் தேசத்தையும் மகிழ்வித்தார். அளவற்றசக்தியுள்ள அந்தச் சந்தனுமஹாராஜன் தன்புத்திரருடன்கூட அவ்வாறுமகிழ்ந்துகொண்டு நாலுவருஷங்க ளைக் கடத்தினான். அவ்வரசன் ஒருகால் வனஞ்சென்று யமுனையாற் றங்கரையில் ஒப்பிடமுடியாத ஒரு சிறந்தவாசனையை நுகர்ந்தான்; அதுவந்தகாரணத்தைத் தேடிக்கொண்டு எங்கும் திரிந்தான். அப் போது அவன் தேவதையைப்போன்ற ரூபமுள்ள ஒருசெம்படவப் பெண்ணைக்கண்டான். கறுத்தகண்களையுடைய அந்தக்கன்னிகை யைக்கண்டவுடன், 'அச்சமுடையவளே! நீயார்? யாருடையபெண்? என்னசெய்துகொண்டிருக்கிறாய்?' என்றுகேட்டான். அதற்குஅவள், 'நான் செம்படவப்பெண். செம்படவர்க்கரசனும் மஹாத்மாவுமாகிய என்தந்தையின்கட்டளையினால் புண்ணியத்திற்காக ஓடத்தைநடத்து கிறேன். *உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும்' என்று சொன்னாள். அந்தராஜாவாகிய சந்தனு அழகும் சொல்லினிமையும் மணமும் நிரம்

* இது தக்கமனிதரிடம் பேசும்போது சொல்லும்மரியாதைச்சொல்.

பினவளும் தேவதாருடமுள்ளவளுமாகிய அந்தச்செம்படவப் பெண்ணைக் கண்டு விருப்பங்கொண்டு அவள் தந்தையினிடம்சென்று தனக்காக அவளைவேண்டி அவளைக்கேட்டான். அந்தச்செம்பா வஅரசன், அந்தராஜாவைநோக்கி, 'பிரஜைகளுக்கு ஈசுவரனே! அவள் பெண்ணாகப்பிறந்தமாத்திரத்திலேயே நான் அவளை ஒருவருக்குக்கொடுக்க வேண்டியதுதான். ஆனால், விருப்பம் ஒன்று என்மனதிலிருக்கிறது. அதைத்தெரிந்துகொள். குற்றமற்றவனே! நீ இவளைஉனக்குத் தர்மபத்நினியாகும்படிஎன்னிடம்கேட்பையாயின்,சொல்தவருதவனாகிய நீ ஸத்தியத்தைமுன்னிட்டு எனக்கு ஓர் உடன்படிக்கை செய்துகொடு; ராஜாவே! இந்தக் கன்னிகையை அந்த ஏற்பாட்டின்படி உனக்கு நான்கொடுப்பேன். எனக்கு உன்னைப்போன்ற ஒருவரன் ஒருகாலத்திலும் நேரமாட்டான்' என்று மறுமொழி சொன்னான். அதைக்கேட்டு, '* தாசனே! நீ கேட்கிறவரத்தை நான் தெரிந்துகொண்டு உன்விஷயத்தில் நிச்சயிப்பேன். கொடுக்கக்கூடியதாயிருந்தால் அதைக்கொடுப்பேன்; கொடுக்கக்கூடாததை எவ்வகையிலும் கொடேன்' என்றுசொல்ல, தாசன், 'பூமியையாளும் அரசனே! இவளிடத்தில் பிறக்கும் புத்திரன் எவனோ அவனை உனக்குப்பின் ராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்யவேண்டும்; மற்றயாரையும் செய்யக்கூடாது' என்றான். பாரதரே! சந்தனு தாங்கக்கூடாத மன்மத தாபத்தினால் தகிக்கப்பட்டிருந்தும் அந்தச்செம்படவன் கேட்ட வரத்தை அவனுக்குக் கொடுக்க விரும்பவில்லை. அப்போது அவ்வரசன் அந்தச் செம்படவப்பெண்ணைச் சிந்தித்துக்கொண்டே மன்மதனாற்பீடிக்கப்பட்ட மனத்துடன் ஹஸ்திநபுரத்திற்குத் திரும்பிச் சென்றான். அதன்பிறகு, ஒருகால் வியஸனப்பட்டுக்கொண்டும்கவலையுற்றுமிருந்த தம்பிதாவினிடம் சந்தனுபுத்திராகிய தேவவ்ரதர் சென்று, 'ராஜாவே! உமக்கு எல்லாம் க்ஷேமமாக இருக்கின்றன. எல்லா அரசர்களும் அடங்கியிருக்கின்றனர். அப்படியிருக்க, இப்போது எதற்காக இடைவிடாமல் துக்கப்பட்டுக் கண்ணீர்விடுகிறீர்? கவலைப்படுகிறவர்போலவேயிருந்துகொண்டு என்னிடம் நீர் ஒன்றும்பேசவில்லை. குதிரையின்மேலேறி வெளியிற் போவதுமில்லை. வர்ணமாறி வெளுத்தும் இளைத்துமிருக்கிறீர். உமதுநோயைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். அதனால், நான் அதைப்பரிகரிப்பேன்' என்ற சொல்லைச்சொன்னார். அவருடையபிதாவாகிய சந்தனு அந்தச் செம்படவப்பெண்விஷயமாக இவ்வகையான தன்விருப்பம்

* செம்படவன்.

சொல்லத்தகாததனால் அதைத் தன்புத்திராரிடம் வெளியிடமுடியா மல்இருந்தான். தன்புத்திரரால் இவ்வாறு கேட்கப்பட்ட அந்தச்சந் தனு, 'குழந்தாய்! நீசொன்னபடி நான் கவலையுற்றவனாகவேயிருப் பது நிண்ணம். அஃது எதனாலென்பதைச் சொல்லுகிறேன்; கேள். பாரதனே! நமது பெரியகுலத்தில் நீ ஒருபுத்திரன்தானிருக்கிறாய். எப்போதும் அஸ்திரப்பழக்கம் விடாதவனும் பராக்ரமமுள்ளவனு மாயிருக்கிறாய். புத்திரனே! உலகவாழ்க்கை நிலையில்லாமையைப் பற்றி நான் துயரப்படுகிறேன். கங்காபுத்திரனே! எவ்வகையிலாவது உனக்கு அபாயம்வந்தால் நமதுகுலமே இல்லாமற்போய்விடும். நீ ஒருவனே நூறு புத்திரர்களைக்காட்டிலும் சிறந்த புத்திரனென்பதில் ஸந்தேகமில்லை. நான் வீணாக மறுபடியும் விவாஹஞ்செய்துகொள்ள வும் பிரியப்படவில்லை. ஸந்ததி கெடாமலிருப்பதற்காகமாத்திரம் ஆசைப்படுகிறேன். * உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும். தர்மசாஸ்தி ரோபதேசம் செய்கிறவர்கள் ஒருபுத்திரன் இருப்பதும் புத்திரன் இல்லாமலேயிருப்பதும் ஒன்றுதானென்று சொல்லுகின்றனர். பாரா தனே! ஒற்றைக்கண்ணிருப்பதும் ஒரு புத்திரனிருப்பதும் இல்லா மையே. கண்ணழிந்தால் சரீரத்திற்கழிவு. புத்திரனழிந்தால் குலத் துக்கழிவு. அக்நிஹோத்ரமும் மூன்றுவேதங்களையும் ஓதுவதும் நிரம் பின தக்ஷிணையோடு பலயாகங்கள் செய்வதுமாகிய இவையெல்லாம் ஸந்தானத்தின்பதினாறில் ஒருபாகத்துக்கும் ஈடாகா. மிகத்தெரிந்த வனே! மனிதர்களுள் இஃது இவ்வாறுதான். எல்லாப்பிராணிகளுக் கும் ஸந்ததியென்பதுதான் எல்லாமாக இருக்கிறது. அதில் எனக்கு ஸந்தேகமில்லை. லோகத்தில் புத்திர ஸந்தானத்தினாலேதான் ஒரு வன் பிதிர்க்களின் கடனைத் தீர்க்கிறானென்பது நிச்சயம். இது பூர் விகர்களான ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் சாஸ்வதமானவேதம். பாரதனே! புத்திரனும் நல்லகருமங்களும் ஜ்ஞானமுமாகிய மூன்றும் ஒளிகளுள்ளன. பாரதனே! நீயோ சூரன்; எப்போதும் அவமானம் தாங்காதவன்; ஆயுதப்பயிற்சியை விடாதவன்; ஆதலால், யுத்தத்தை விட்டு வேறு எவ்வகையிலும் உனக்கு அபாயமில்லை. ஆகையால், உனக்குக் கெடுதிநேர்ந்தால் எப்படி யாகுமோ என்ற ஸந்தேகத்தை நான் அடைந்திருக்கிறேன். குழந்தாய்! இதுதான் எனது துக்கத் திற்குக்காரணம்! இதை உனக்கு முற்றிலும் சொன்னேன்' என்று மறுமொழி சொன்னான். பிறகு, ராஜாவின் அந்தக்காரணத்தையெல் லாம் பூர்ணமாகத் தெரிந்துகொண்டு சிறந்தஞானமுள்ள பீஷ்மர்

* நீ வருத்தப்படாதே என்பது கருத்து.

தமது புத்தியினால் ஆராய்ந்தார்; ஸந்தானமென்னும் பிரயோஜனத்தோடுகூடிய அந்தத்தந்தையின் சொல்லைக்கேட்டு மறுபடியும் வருத்தத்துடன் தமதுபிதாவின் ஸாரதியை வருவித்தார். அவருடைய கட்டளையினால் குருஶ்ரேஷ்டனாகிய சந்தனுவின்ஸாரதி வந்தான். உயர்ந்தபுத்தியுள்ள பீஷ்மர் தமதுபிதாவின் அந்த ஸாரதியைநோக்கி, 'ஸாரதியே! நீ என்பிதாவிற்குத் தேரின்முன்னே நிற்கும் சினேகிதனாக இருக்கிறாய். ராஜாவினுடைய விருப்பம் எந்தப்பெண்ணினிடம்இருக்கிறது? உனக்குத்தெரியுமா? நான்உன்னைக்கேட்கிறேன். நீ அதைச்சொல்; நான் அதைச்செய்வேன்; மாறாகச்செய்யேன்' என்றுசொல்ல, ஸாரதி, 'குருஶ்ரேஷ்டரே! ஒருசெம்படவப்பெண் இருக்கிறாள். உமதுபிதாவின் விருப்பம் அவளிடம்சென்றிருக்கிறது. ராஜா பெண்ணைக்கேட்டதற்கு அந்தச்செம்படவன், 'இவளுக்குப் பிறந்தஆண்பிள்ளை உனக்குப்பின் அரசனாகவேண்டும்' என்றசொல்லைச்சொன்னான். அப்போது உமதுபிதா அவன்கேட்டதைக்கொடுக்க விரும்பவில்லை. அப்படியில்லாமல் பெண்ணைக் கொடுப்பதில்லையென்பது அந்தச்செம்படவனுடைய நிச்சயம். இதைஉமக்குச்சொன்னேன். மேலே செய்வதைச்செய்யும்' என்றுசொன்னான். பிறகு, அந்தப்புத்திரராகிய பீஷ்மர் தமதுபிதா நினைத்ததைத் தெரிந்துகொண்டு நன்றாகஆராய்ந்து தந்தையின் * உட்கருத்தையுமறிந்து யமுனையை நோக்கிச்சென்றார். தர்மாத்மாவான பீஷ்மர் தர்மிஷ்டர்களான க்ஷத்திரியவிருத்தர்களுடன் சிறந்தகீர்த்தியுள்ள அந்தச்செம்படவனிடம்சென்று தமது பிதாவுக்குக் கன்னிகையைத் தாமேகேட்டார். அந்தச்செம்படவன் அவரை முறைப்படி பூஜைசெய்து அழைத்தான். பாரதனே! ராஜஸபையில் உட்கார்ந்திருக்கும் பீஷ்மரைநோக்கி அந்தச்செம்படவன் சொல்லலானான்.

'கேட்பவர்களிற் ஶ்ரேஷ்டரானவரே! இந்தக்கன்னிகை ராஜ்யமென்னும் பரிசத்திற்குக் கொடுக்கத்தக்கவள். இவளுக்குப்பிறக்கும் புத்திரன் உமது தந்தைக்குப்பிற்காலம் ராஜாவாக இருக்கவேண்டும். சிறந்த கைகளையுடையவரே! இப்போது ஆயுதம்பிடித்தவர்களிற்சிறந்தவராகிய நீரே சந்தனுவின் வம்ச விருத்தியைச் செய்கிற புத்திரராக இருக்கிறீர். உமக்கு நான் என்னசொல்லைச்சொல்வேன்? பாரதரே! பெண்ணுக்குக் கொடுக்கவேண்டிய சுல்கத்திற்காக ஒரு விஷயம் கேட்கப்போகிறேன். எல்லோராலும் சிலாகிக்கத்தகுந்ததும் விரும்பப்பட்டதுமாகிய இப்படிப்பட்ட விவாகஸம்பந்தத்தைத்

---

* பெண்ணின்மேலுள்ள விருப்பம்.

தவறவிடுவதனுல் ஸாக்ஷாத்தேவேந்திரனுகஇருந்தபோதிலும் எவன் பரிதபிக்கமாட்டான்? இவள், குணங்களில் உங்களுக்கொப்பான பெரியவருடைய (உபரிசரவஸுவினுடைய) பெண். இந்தப்பெண்ண ரசியாகிய ஸத்யவதி எவருடைய வீரியத்துக்குப் பிறந்தவளோ அந்தஉபரிசரவஸு, உமது பிதாவைப்பற்றி எனக்குப்பலமுறை, ' அந்தத்தர்மம்தெரிந்த அரசன் ஸத்தியவதியை விவாகஞ்செய்து கொள்ளத்தக்கவன்' என்று சொல்லியிருக்கிறார்: இந்த * ஸத்திய வதியென்னும் பெண் உமதுபிதாவைநோக்கி அவ்வாறே (ராஜ்யசுல் கம் வேண்டுமென்றே) சொன்னுள். அவள்கேட்டதனுலேதான் ராஜ ரிஷியான உமதுபிதாவை முன்னமே நான் மறுத்துவிட்டேன். ராஜா வே! ஆனுல், நான் பெண்ணுக்குத் தகப்பனுயிருப்பதுபற்றி உம்மிடம் ஒன்று சொல்லப்போகிறேன். இந்தவிவாஹத்தில் பலவானுகிய எதி ரியிருப்பதைமாத்திரந்தான் நான்குற்றமாகநினைக்கிறேன். தோல் வியடையாதவரே! உமதுவிஷயத்தில் அந்தக்குற்றத்தை மிகப்பெரி தாக நினைக்கிறேன். எதிரிகளைப் பீடிப்பவரே! நீர் எவனுக்கு எதிரி யாயிருப்பீரோ அவன் கந்தர்வனுயிருந்தாலும் அஸுரனுயிருந்தா லும் நீர்கோபித்தபிறகு நீண்டகாலம்ஜீவிப்பது ஒருபோதுமில்லை. ராஜாவே! இதிலுள்ளதோஷம் இவ்வளவுதான்; வேறொன்றுமில்லை. வீரரே! கொடுக்கவேண்டிய கன்னிகையைக் கொடுக்காமலிருக்கும் விஷயத்தில் இந்தக்காரணத்தை நீர் அறிந்துகொள்ளும். உமக்கு ஸுகமுண்டாகக்கடவது' என்றான். பாரதவம்சத்தவரே! அவனுல் இவ்வாறுசொல்லப்பட்ட பீஷ்மர் அரசர்கள்கேட்கத் தமதுபிதாவின் பிரயோஜனத்திற்காக அவனுக்குத் தகுதியாகிய மறுமொழிசொல் லத் தொடங்கினுர்.

'இந்த என்சொல்லை நீ ஏற்றுக்கொள். இந்தச்சொல்லைச் சொல்லுகிறவன் என்னைப்போல் மற்றொருவன் பிறந்ததுமில்லை;பிறக் கப்போவதுமில்லை; இப்போதிருக்கவுமில்லை; நீகேட்பதை நீசொல் லுகிறபடியே நான்செய்யப்போகிறேன். இவளுக்குப்பிறக்கப்போகிற புத்திரன்எவனே அவனே எங்களில் ராஜாவாக இருப்பான்' என் ருர். இவ்வாறு அவர்சொல்ல, அந்தச்செம்படவன் திரும்பவும் அவ ரைநோக்கி, 'பரதஸ்ரேஷ்டரே! ராஜ்யவிஷயத்தில் யாரும்செய்யாத காரியத்தை நீர் செய்யவிரும்புகிறீர். அளவற்ற சக்தியுள்ளவரே!

* 'ரிஷிஸ்ரேஷ்டராகிய அஸிதர்என்பவரும் தேவரிஷியும் முன்னே ஸத் தியவதியிடம் விருப்பமுள்ளவராக இருந்தார். அவரையும் நான்முன்னே மறுத்துவிட்டேன்' என்பது உத்தரதேசபாடம்.

நீர்தாம் சந்தனுவுக்கு நாதராகவுமிருக்கிறீர். தர்மத்தில் சிறந்துள்ளவரே! இந்தக்கன்னிகைக்கும் நீரே பிதா. இவளைக்கொடுப்பதற்கும் நீரே அதிகாரி. ஸௌம்யரே! ஆனால், இந்த என்சொல்லையும் என்காரியத்தையும் நீர் அறிந்துகொள்ளும். சத்ருக்களையடக்குகிறவரே! பெண்ணைச்சேர்ந்தவர்களின் முறைமையினால் நான் ஒன்று சொல்லப்போகிறேன். ஸத்தியத்தையும் தர்மத்தையும் கடைப்பிடித்தவரே! நீர் ஸத்தியவதிக்காக அரசர்களின் நடுவே வாக்குத்தத்தம் செய்தது உமக்கே தகும். சிறந்தகைகளையுடையவரே! அது மாறாது. இந்தவிஷயத்தில் எனக்கு ஸந்தேகம் ஒன்றுமில்லை. ஆனால் உமக்குண்டாகும் ஸந்ததிவிஷயத்தில் எனக்குப் பெரியஸந்தேகமிருக்கிறது" என்றான். அரசரே! அவனுடைய இந்த அபிப்ராயத்தை அறிந்துகொண்டு ஸத்தியத்தையும் தர்மத்தையும் முக்கியமாகக் கொண்டபீஷ்மர் தமது தந்தையின் விருப்பத்தைச்செய்யக் கருதியதனால் அப்போது வாக்குத்தத்தஞ்செய்தார்: "மேலான புகழுள்ளவனே! ஜனங்களின் ஸபையில் நான் செய்யும் பிரதிஜ்ஞையைத் தெரிந்துகொள். இங்குள்ள ரிஷிகளும் தேவர்களும் கண்ணுக்குத் தெரியாமலிருக்கிற பூதங்களனைத்தும் கேட்கட்டும். இந்தச்சொல்லைச் சொல்லுபவன் யாருமில்லை. செம்படவர்க்கரசனே! அரசருட் சிறந்தவனே! அரசர்கள்கேட்க என்பிதாவுக்காக நான்சொல்லும் இந்தச்சொல்லை நீ தெரிந்துகொள். அரசர்களே! ராஜ்யமுழுதும் முன்னமே என்னால்விடப்பட்டது. ஸந்ததிக்காகவும் இப்போது பிரதிஜ்ஞை செய்யப்போகிறேன். செம்படவனே! இன்றுமுதல் எனக்குப் பிரம்மசாரிவிரதமே இருக்கும். எனக்குப் புத்திரனில்லாமலிருந்தபோதிலும் அழிவற்ற புண்ணியலோகங்கள் மேலேயிருக்கும். நான் பிறந்ததுமுதல் இவ்வுலகில் ஒருபொய்யும் சொன்னதில்லை. என்னுயிர் என்தேகத்தை ஒட்டியிருக்கும் வரையில் நான் புத்ரோத்பத்திசெய்யேன். இக்கன்னிகையை என்பிதாவுக்குக்கொடு. நான் ராஜ்யத்தையும் பெண்கலவியையும் முழுதுமேவிடுகிறேன். வீரியத்தைவிடாதவனாக இருக்கப்போகிறேன். செம்படவனே! உனக்கு ஸத்தியமாகச்சொல்லுகிறேன்" என்றார். அந்தத்தர்மாத்மாவான தாசன் பீஷ்மருடைய அந்தச்சொல்லைக்கேட்டு மயிர்சிலிர்த்தவனாகி, 'கொடுப்பேன்' என்றே அவருக்கு மறுமொழிசொன்னான். செய்தற்கருமையான அந்தச்செய்கையைப் பார்த்து அரசர்கள் புகழ்ந்தார்கள். பிறகு, ஆகாயத்தில் அப்ஸரஸ்களும் தேவர்களும் ரிஷிக்கூட்டங்களும் பீஷ்மர்மீது புஷ்பவருஷம் வருஷித்தனர்; "இவர்

*பீஷ்மர்'' என்றும் கூறினர். அதன்பிறகு, பீஷ்மர் தமது பிதாவுக்காக அந்தப் புகழ்பெற்ற ஸத்தியவதியை நோக்கி, "தாயே! தேரில் ஏறும். நம்மனைக்குப்போவோம்'' என்றுசொன்னார். பீஷ்மர் இவ்வாறு சொல்லி அந்தப்பெண்மணியை ரதத்தின்மேலேற்றிக்கொண்டு ஹஸ்தினபுரம்வந்து சந்தனுவுக்குத்தெரிவித்தார். அவருடைய அந்தச் செயற்கரியசெய்கையை அரசர்கள் சேர்ந்தும் தனித்தும் புகழ்ந்தனர். 'இவர் பீஷ்மர்' என்றும் கூறினர். பாரதரே! பீஷ்மராற் செய்யப்பட்ட அந்தச்செயற்கரியசெய்கையைக் கேள்வியுற்று சந்தனுமஹாராஜன் வெகுநாள் துயரமுற்றிருந்தான். அந்தஅரசன் தன் குமாரருடைய அந்தச்செய்கையினால் திருப்தியடைந்து அன்புடன் அம்மஹாத்மாவுக்கு அவர்கருதியபோது மரணம் நேரிடுவதை வரமாகக் கொடுத்தான். "குற்றமற்றவனே! நீ எதுவரையில் ஜீவித்திருக்க விரும்புகிறாயோ அதுவரையில் உன்விஷயத்தில் யமனுக்கு அதிகாரமிராது. உன்னுடைய அனுமதி பெற்றபிறகுதான் யமன் அதிகாரியாவான்'' என்றான்.

---

## நூற்றெட்டாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(சந்தனுவுக்கு ஸத்தியவதியினிடம் இரண்டுபுத்திரர்கள் பிறந்ததும், சந்தனு காலம்சென்றபிறகு சித்ராங்கதனுக்குப் பீஷ்மர் ராஜ்யாபிஷேகம் செய்வித்ததும், அவன் கந்தர்வனால் யுத்தத்தில் அடிபட்டபிறகு அவனுக்கு இளையவனான விசித்ரவீர்யனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்ததும்.)

அந்த ஸத்தியவதியைச் சேதிராஜாவாகிய உபரிசரவஸுவின் புத்ரியென்றும் செம்படவர்க்கரசனால் வளர்க்கப்பட்டவளென்றுமறிந்து அரசன் சாஸ்திரோக்தமான கிரியையைச்செய்து விவாகஞ்செய்தான். அந்தவிவாஹம் நடந்தபிறகு அந்தராஜாவாகிய சந்தனு அழகுநிரம்பிய அந்தப்பெண்ணைத் தன் அந்தப்புரத்தில் வைத்துக் கொண்டான். பிறகு, சந்தனுவுக்கு ஸத்தியவதியினிடம் சிறந்தபுத்தியுள்ளவனும்புருஷஸ்ரேஷ்டனும் வீரனுமாகியசித்ராங்கதனென்னும் புத்திரன் பிறந்தான். பிறகு, வீரனாகிய சந்தனுமஹாராஜன் சிறந்த வில்லாளியும் அரசனுமாகிய விசித்திரவீரியனென்னும் இரண்டாவது புத்திரனை ஸத்தியவதியினிடம் உண்டுபண்ணினான். புருஷஸ்ரே

---

* யாரும் பயப்படத்தக்கவர்.

ஷ்டனாகிய அந்த விசித்ரவீரியனுக்கு யௌவனம்வருவதற்கு முன்னமே புத்திமானாகிய அந்தச் சந்தனுமஹாராஜாவின் காலம் முடிந்தது. சந்தனு ஸ்வர்க்கம்போனபின், பீஷ்மர் ஸத்தியவதியின் அபிப்ராயத்தை அனுஸரித்து வீரனாகிய சித்ராங்கதனை ராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ்செய்வித்தார். அந்தச் சித்ராங்கதன் சௌர்யத்தினால் எல்லா அரசர்களையும் கீழ்ப்படுத்தினான். மனிதரில் ஒருவனையும் தனக்கு ஒப்பாக அவன் நினைக்கவில்லை. தேவர்களையும் மனிதர்களையும் அஸுரர்களையும் தோற்கச்செய்கிற அவனை, அதேபெயருள்ள மிகுந்த பலசாலியான கந்தர்வராஜன் எதிர்த்துச்சென்று, அப்போது, "ராஜகுமாரனே! நீ என்பெயருள்ளவனாயிருக்கிறாய்; எனக்கு யுத்தத்தைக்கொடு. யுத்தம் கொடுக்கமாட்டாயாயின் வேறு பெயரையாவது வைத்துக்கொள்; உன்னோடு யுத்தத்தை நான் விரும்புகிறேன்; என்பெயர்உனக்கிருப்பதனால் உன்னிடத்திற்குவந்திருக்கிறேன்;என் பெயரைச்சொல்லிஉன்னையழைப்பதனால் என்பெயர்வீணாகத்தகாது" என்றுசொன்னான். இவ்வாறுசொன்னபின், அவ்விருவரும் கர்ச்சித்துக்கொண்டுஹிரண்வதிநதிக்கரைக்குச்சென்றனர். சித்ராங்கதனுக்கு அந்தக்கந்தர்வனோடு குருக்ஷேத்திரத்தில் பெரும்போர் நடந்தது. பலசாலிகளாகிய கந்தர்வராஜனும் குருராஜனுமாகிய இருவருக்கும் அந்த ஹிரண்வதிநதிக்கரையில் மூன்றுவருஷகாலம் சண்டைநடந்தது. இடைவிடாமல் ஆயுதங்களை வருஷிப்பதினால் பயங்கரமான அந்தப் பெருஞ்சண்டையில் மாயையில் மிகுந்தவனாகிய கந்தர்வன் குருஶ்ரேஷ்டனாகிய சித்ராங்கதனென்னும் வீரனைக்கொன்றான். அந்தக் கந்தர்வன் எதிரிகளையடக்குகிற ராஜாவான சித்ராங்கதனை அடித்து முடியும்படிசெய்து பிறகு ஸ்வர்க்கம்சென்றான். மிகுந்தசக்தியுள்ள அந்தப்புருஷஸிம்மமாகிய சித்ராங்கதன் கொல்லப்பட்டபின், சந்தனுபுத்ரரான பீஷ்மர் தாமே ராஜாவாகஇருந்து அவனுடைய பிரேதகாரியங்களைச் செய்வித்தார். அப்போது, சிறந்த புஜபலத்தையுடைய பீஷ்மர் பருவம்வராதசிறுவனான விசித்ரவீரியனை அவனுக்கு அடுத்தவனாகக் கௌரவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தார். ஜனமேஜயமஹாராஜரே! அப்பொழுது அந்த விசித்ரவீர்யன் பீஷ்மர் சொல்லுகிறபடியே தன்தகப்பன் பாட்டன்வழியாகவந்த ராஜ்யத்தை ஆண்டான். அவ்வரசன் தர்மசாஸ்திரத்தில் தேர்ந்தவராகிய சந்தனுபுத்ரரான பீஷ்மரை முறைப்படி பூஜித்தான். அவரும் விசித்ரவீர்யனைப் பரிபாலித்தார்.

---

## நூற்றொன்பதாவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் தமது ஸஹோதரனை விசித்ரவீர்யனுக்காகக் கொண்டுவந்த அம்பை அம்பாலிகை அம்பிகையென்னும் மூன்றுபெண்களில், அம்பையென்பவள் தான் சால்வனை விரும்பினதாகச்சொல்ல, அவளை விட்டுவிடுதலும், மற்றொருபுருஷனிடமிருந்து வந்ததனால் சால்வனும் அவளை அங்கீகரிக்காமலிருந்ததும், அதன்மேல் அவள் பீஷ்மரைக் கொல்வதற்குத் தவம் செய்தபோது குமாரக்கடவுள் அவளுக்கு மாலைகொடுத்து அனுக்ரகம் செய்ததும்.)

குருவம்சத்தவனே! சித்ராங்கதன் இறந்தபின், பீஷ்மர் தம் ஸஹோதரனை விசித்ரவீரியன் சிறுவனாயிருந்தபோது ஸத்தியவதியின் அபிப்பிராயத்தையனுசரித்து அந்தராஜ்யத்தைப் பரிபாலனஞ்செய்தார். புத்திமான்களுட்சிறந்தவரான பீஷ்மர் அவ்வாறு ஒப்பற்ற ஸௌக்கியத்திலிருந்துகொண்டிருந்த விசித்ரவீரியனுக்கு யௌவனம் வந்ததைக்கண்டு அவனுடைய விவாஹத்தைப்பற்றி ஆலோசனை செய்தார். பிறகு, பீஷ்மர் அப்ஸரஸுகளுக்கொப்பாகிய காசிராஜாவின் கன்னிகைகள்மூன்றுபெயர் சேர்ந்து ஸ்வயம்வரம்செய்வதைக் கேள்வியுற்றார். பிறகு, தேராளிகளிற் சிறந்தவரும் சத்துருக்களை ஜயிப்பவரும் ஸமர்த்தருமான அந்தப் பீஷ்மர் தமது தாயாரிடம் அனுமதிபெற்றுக்கொண்டு ஒற்றைத்தேரோடு காசிக்குச் சென்றார். அவ்விடத்தில் சந்தனுபுத்திரரான பீஷ்மர் எல்லாத்தேசங்களினின்றும் வந்து கூடியிருக்கின்ற அரசர்களையும் அந்தப்பெண்களையும் கண்டார். அந்தப்பெண்கள்மீது ஆசையோடு கர்வித்துக் காசிதேசத்தவரும், கோசலதேசத்தவரும், வங்கதேசத்தவரும், புண்ட்ரதேசத்தவரும், கலிங்கதேசத்தவருமாகிய அரசர்கள் கூட்டமாக அந்நகரத்திற்குப் போயினர். எல்லாஅரசர்களின் பெயர்களும் சொல்லப்படும்போது சந்தனுபுத்திரரும் வயதில் முதிர்ந்தவருமாகிய பீஷ்மர் தனித்திருக்கக்கண்டு மிக்கஅழகான அந்தக்கன்னிகைகள் அனைவரும் கிழவனென்ற எண்ணத்தினால் பயந்தவர்கள்போல் விலகிப்போயினர். பாரதனே! அங்கிருந்த அற்பர்களான அரசர்கள், 'முதிர்ந்தவரும் மிக்கதர்மாத்மாவும் மடிப்பையும் நரையையும் தரித்தவரும் பரதஸ்ரேஷ்டருமாகிய பீஷ்மர் லஜ்ஜையைவிட்டு இங்கு ஏன்வந்திருக்கிறார்? இந்தப்பாதர் பிரதிஜ்ஞையைப் பொய்யாகச்செய்து

விட்டு ஜனங்களுக்குளென்னசொல்லுவார் ? இவர் பிரம்மசாரியென்று பூமியில் வீண்புகழ்பெற்றார்' என்று பேசிக்கொண்டு சிரித்தனர். ஜனமேஜயராஜரே ! அந்த அரசர்களின் சொல்லைக்கேட்டுப் பீஷ்மர் கோபித்தார். ஸமர்த்தரான பீஷ்மர் அப்போது அந்தக்கன்னிகைகளைத் தாமாகவே வரித்தார். ஜனமேஜயராஜரே ! அந்தப்பெண்களைத் தமதுதேரின்மேல் ஏற்றிக்கொண்டு போர்செய்கிறவரிற் சிறந்த பீஷ்மர் மேககர்ச்சனைக்கொப்பான குரலுடன் அவ்வரசர்களை நோக்கிச் சொல்லலானார்.

" * குணமுள்ளவர்களையழைத்து இயன்ற அளவு பொருள் கொடுத்துப் பெண்களுக்கு அலங்காரஞ்செய்து அந்தப்பெண்களை அவர்களுக்குக்கொடுப்பது ரிஷிகளாலே தர்மசாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. † இன்னும்சிலர் இரண்டுபசுக்களை வாங்கிக்கொண்டும் கன்னிகையைக்கொடுக்கின்றனர். ‡ பணம்பேசிக்கொண்டு சிலர் கொடுக்கின்றனர். § இன்னும் சிலர் ஸாமர்த்தியத்தினாலே கன்னிகையைச் சம்மதிக்கச்செய்து விவாகஞ்செய்கின்றனர். ₰ இன்னும் சிலர் தூக்கமயக்கம் முதலியவற்றிலிருக்கின்ற கன்னிகையை அபகரித்து விவாஹஞ்செய்கின்றனர். ‖ மற்றும்சிலர் பெற்றோர் அனுமதியின் மேல் தாங்களே கன்னிகைகளை விவாஹஞ்செய்கின்றனர். ¶ இன்னும் சிலர் வேதோக்தமான யஜ்ஞவிதியைமுன்னிட்டு விவாஹஞ் செய்துகொள்ளுகின்றனர். எட்டாவதான ராக்ஷஸவிவாகமும புத்திசாலிகளால் விரும்பப்பட்டதென்றறியுங்கள். மேலும், ராஜபுத்திரர்கள் ஸ்வயம்வரத்தைச் சிலாகிக்கவும் சிலாகிக்கின்றனர்; செய்யவும் செய்கின்றனர். ஆனால், தர்மசாஸ்திரம் சொல்லுகின்றவர்கள் பலாத்காரமாகக் கொண்டுபோகப்பட்டவளே சிறந்தவளென்று சொல்லுகின்றனர். அரசர்களே ! ஆதலால், இந்தப்பெண்களை இங்கிருந்து பலாத்காரமாகக் கொண்டுபோகக் கருதுகிறேன். நீங்கள் உங்கள் சக்தியளவு ஜயிக்கவோ தோற்கவோ ஆரம்பஞ்செய்யுங்கள். அரசர்களே ! நான் யுத்தத்துக்காக நிச்சயம் செய்துகொண்டு நிற்கிறேன்" என்றார்.

வீரரான அந்தப்பீஷ்மர் அரசர்களையும் காசிராஜனையும் நோக்கி இவ்வாறுசொல்லி அந்தக்கன்னிகைகளைத் தமது ரதத்தின்மேலேற்றி அந்தஅரசர்களிடம் விடைபெற்றுக்கொண்டு அந்தக்கன்னிகைகளு

---

* பிராம்மவிவாஹம். † ஆர்ஷவிவாஹம். ‡ ஆஸுரவிவாஹம்.
§ காந்தர்வவிவாஹம். ₰ பைசாசவிவாஹம். ‖ ப்ராஜாபத்யம்.
¶ தைவவிவாஹம்.

டன் விரைவாகச்சென்றார். பிறகு, அவ்வரசர்களனைவரும் கோப முற்றுத் தங்கள்தோள்களைத் தட்டிக்கொண்டும், உதடுகளைக் கடித் துக்கொண்டும் கிளம்பினர். வெகு அவசரமாக அவர்கள் ஆபரணங் களையும் கவசங்களையும் அணிந்துகொள்ளும்போது மிகுந்த கலக்க முண்டாயிற்று. ஜனமேஜயரே ! எல்லா ஆபரணங்களும் எல்லாக்கவ சங்களும் சேர்ந்து நக்ஷத்திரங்கள் சேர்ந்ததுபோலிருந்தன. அந்த வீரர்களெல்லாரும், ஸாரதிகளால் உத்தமமான குதிரைகளைப்பூட்டிக் கொண்டுவரப்பட்ட அழகிய தேர்களில் எல்லா ஆயுதங்களோடும் ஏறி, கவசங்களும் ஆபரணங்களும் இங்குமங்கும் சிதறக் கோபத் தினாலும் பொறாமையினாலும் புருவங்களை நெறித்துக் கண்கள்சிவந்து, முன்னேபோகின்ற பீஷ்மரை ஆயுதங்களை ஓங்கிக்கொண்டு பின் தொடர்ந்தனர். பிறகு, அவ்வரசர்கள் அநேகருக்கும் பீஷ்மர் ஒருவ ருக்கும் பயங்கரமும் மயிர்க்கூச்சமுண்டாக்குவதுமாகிய யுத்தம் நேர்ந்தது. அவர்கள் பதினாயிரம்பாணங்களைப் பீஷ்மர்மீது ஓரே காலத்தில் எய்தனர். அந்தப்பீஷ்மர் இடைவிடாமல் ஓடுகின்றபெரிய சரமாரியினால் அவர்களம்புகளெல்லாம் தம்மிடம்வாராமலே விரைவாக இடையில் அறுத்துத்தள்ளினார். பிறகு, அவ்வரசர்களனை வரும் பீஷ்மரைச் சுற்றிலும்வளைத்துக்கொண்டு மேகங்கள் மலையின் மீதுவருஷிப்பதுபோல சரமாரிபொழிந்தனர். பீஷ்மர், நான்குபுறங்க ளிலும் வந்த அந்தப் பாணவருஷங்களைப் பாணங்களினால் தடுத்துப் பிறகு எல்லா அரசர்களையும் மும்மூன்று பாணங்களினால் அடித்தார். ஜனமேஜயராஜாவே ! அவ்வரசர்களில் ஒவ்வொருவரும் ஐந்து ஐந்து பாணங்களினால் பீஷ்மரை அடித்தார்கள். அவரும் பராக்ரமத்தைக் காண்பித்து இரண்டிரண்டு பாணங்களினால் அவர்களை மறுபடி அடித் தார். அம்புகளும் சக்தியாயுதங்களும் மிகுதியாகவுள்ள அந்தக் கடும்போரானது பார்க்கின்ற உலகத்திலுள்ள வீரர்களுக்கெல்லாம் தேவாஸுரயுத்தம்போல் பயங்கரமாக இருந்தது. பீஷ்மர் அந்தயுத் தத்தில் தனுஸுகளையும் கொடிகளின் நுனிகளையும் கவசங்களையும் தலைகளையும் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் துணித் தார். யுத்தத்தில் பீஷ்மர் ரதமேறிச் சஞ்சரித்துச் செய்ததான மனி தர் செய்யமுடியாத செய்கையையும் அவருடைய ஹஸ்தலாகவத் தையும் தம்மை அவர் காப்பாற்றிக்கொள்வதையும் சத்ருகளும் சிலா கித்தனர். நினைப்பதற்கரிய பராக்ரமமுள்ள அந்தக்கங்காபுத்ரரான பீஷ்மர் தாம்அடிபடாமல் சத்ருகளையழித்துக் காசிராஜாவின் பெண் களைக்கொண்டுவந்தார். ஆயுதம்பிடித்தவர்களிற் சிறந்தவரும் பரத

குலத்தவருமாகிய அந்தப் பீஷ்மர் யுத்தத்தில் அவர்களை ஜயித்துக் கன்னிகைகளுடன்கூடப் பரதநாட்டிற்குச்சென்றார்.

ஜனமேஜயராஜாவே! மஹாரதனும் அறிவுக்கூடாத மனமுடையவனுமாகிய சால்வராஜன் சந்தனுபுத்ரராகிய பீஷ்மரை யுத்தத்தில் பின்தொடர்ந்தான். பலமுள்ள வலிமை நிறைந்த யானைக்கூட்டத்து அரசயானையானது பெண்யானையைத் தொடரும்போது மற்றோர் ஆண்யானையைத் தந்தங்களினால் இடிப்பதுபோல் பீஷ்மரைப் பின்னடித்துக்கொண்டு நிதம்பங்களையுடைய அந்தச் சால்வராஜன் பெண்களின்மேல் விருப்பங்கொண்டு பொறாமையினால் தூண்டப்பட்டவனாகப் பீஷ்மரை நோக்கி, 'நில் நில்' என்று சொன்னான். பிறகு, எதிரிகளுடைய ஸைன்யத்தை அழிப்பவரும் மஹாரதரும் புருஷஸ்ரேஷ்டருமான பீஷ்மர் அவன்சொல்லினால் கலங்கச்செய்யப்பட்டுக் கோபத்தினால் புகையொழிந்த அக்கினிபோல் ஜ்வலித்துக்கொண்டு தொடுத்த அம்போடுகூடிய வில்லைக் கையிலேந்தி நெறித்த நெற்றியோடு க்ஷத்ரியதர்மத்தை முன்னிட்டுப் பயமும் பரபரப்பும் அற்றவராகச் சால்வனையெதிர்த்து ரதத்தைத் திருப்பினார். அவர் திரும்பிவருவதைக்கண்டு அங்குள்ள எல்லா அரசர்களும் பீஷ்மரும் சால்வனும் சந்திப்பதைப் பார்ப்பவர்களாயினர். பலத்தினாலும் பராக்ரமத்தினாலும் சோபிக்கின்ற அவர்கள் ஒரு பசுமாட்டின்பொருட்டு இரண்டு பலமுள்ள விருஷபங்கள் கர்ச்சிப்பதுபோலக் கர்ச்சித்துக்கொண்டு ஒருவரையொருவர் எதிர்த்துச்சென்றனர். பிறகு, சந்தனுபுத்ரராகிய பீஷ்மர்மீது புருஷஸ்ரேஷ்டனாகிய சால்வராஜன் விரைவாகச் செல்லுகின்ற பாணங்களை லக்ஷக்கணக்காக வருஷித்தான். முதலில் சால்வனால் பீஷ்மர் அடிக்கப்பட்டதைக்கண்டு அவ்வரசர்கள் வியப்புற்று 'நல்லது நல்லது' என்றுகூறினர். அவ்வரசர்களெல்லாரும் யுத்தத்தில் சால்வனுடைய ஹஸ்தலாகவத்தைக்கண்டு ஸந்தோஷமடைந்து அவனை ஸ்தோத்திரங்களினால் சிறப்பித்தனர். பிறகு, க்ஷத்ரியர்களின் ஸ்தோத்திரங்களைக் கேட்டுச் சத்ருக்களின்நகரங்களை ஜயிப்பவரும் சந்தனுபுத்திரருமாகிய பீஷ்மர் கோபித்துச் சால்வராஜனை, 'நில் நில்' என்றுசொன்னார். கோபித்துக்கொண்டு ஸாரதியைநோக்கி, "அந்தஅரசன் இருக்கிறவிடம் செல்; பாம்பைக் கருடன்கொல்வதுபோல் இப்போது அவனைக்கொல்லப்போகிறேன்" என்றுசொன்னார். பிறகு, அந்தக்கௌரவர் வாருணாஸ்திரத்தைச் செம்மையாகத்தொடுத்தார். ஜனமேஜயராஜாவே! அதனால் சால்வராஜன்குதிரைகள் நான்கையும் கொன்றார். ராஜஸ்ரேஷ்டரே! கௌரவராகிய பீஷ்மர் சால்வ

ராஜாவின் அஸ்திரங்களை அஸ்திரங்களால் தடுத்து அவன் ஸாரதியைக்கொன்று அதன்பிறகு ஐந்திராஸ்திரத்தினால் அவனுடைய உத்தமமான குதிரைகளையும் கொன்றார். புருஷஸ்ரேஷ்டரே! சந்தனுபுத்திரராகிய பீஷ்மர் ராஜஸ்ரேஷ்டனாகிய சால்வனை ஜயித்து பெண்களுக்காக அப்போது உயிரோடு விட்டுவிட்டார். பரதஸ்ரேஷ்டரே! பிறகு, சால்வராஜன் தன் நகரஞ்சென்று க்ஷத்ரியதர்மப்படி ராஜ்யபரிபாலனஞ் செய்துகொண்டிருந்தான். அவ்விடத்தில் ஸ்வயம்வரம் பார்க்கவிரும்பி அங்கேவந்திருந்த வீரர்களான அரசர்களும் தங்கள் தங்கள் தேசங்களுக்கே சென்றனர்.

இவ்வாறு யுத்தஞ்செய்தவர்களுள் சிறந்தவராகிய பீஷ்மர் அந்தக் கன்னிகைகளை அழைத்துக்கொண்டு குருவம்சத்து ராஜாவாகிய விசித்ரவீரியனிருப்பிடமான ஹஸ்தினாபுரத்திற்குச் சென்றார். தர்மாத்மாவான விசித்ரவீரியன் தன்பிதாவும் குருவம்சத்து ராஜஸ்ரேஷ்டனுமாகிய சந்தனுவைப்போலவே இந்தப்புரியை ஆண்டுகொண்டிருந்தான். அரசரே! நினைக்கமுடியாத பராக்ரமமுள்ள அந்தச் சந்தனுபுத்திரராகிய பீஷ்மர் போரில் தாம் அடிபடாமல் எதிரிகளையழித்துச் சீக்கிரத்தில் நதிகளையும் மலைகளையும் பலவகைமரங்கள் நிறைந்த வனங்களையுங்கடந்து காசிராஜாவின் பெண்களைக்கொண்டுவந்தார். தர்மாத்மாவாகிய அந்தப்பீஷ்மர் மருமகளைப்போலவும் உடன்பிறந்த சகோதரிகளைப்போலவும் பெண்களைப்போலவும் அழைத்துக்கொண்டு குருக்ஷேத்ரம்போனார். சிறந்தகைகளையுடைய பீஷ்மர் தம் ஸஹோதரனுடைய விருப்பத்தை நிறைவேற்றக்கருதி அவர்களைக் கொண்டுவந்தார். எல்லாக்குணங்களும் நிரம்பின அந்தப்பெண்களைத் தம்பராக்ரமத்தினாற்கொண்டுவந்து தமது இளையஸஹோதரனான விசித்ரவீரியனுக்கு அவன் ஸஹோதரனான பீஷ்மர் கொடுத்தார். தர்மந்தெரிந்தவரும் சுத்தமான மனமுள்ளவருமாகிய பீஷ்மர், இப்படித் தர்மத்தோடு, மனிதருக்கு முடியாதசெய்கையைச் செய்து ஸத்தியவதியோடுகூட நிச்சயமாக ஆலோசனைசெய்து தம் ஸஹோதரனை விசித்ரவீரியனுக்கு விவாஹஞ்செய்யத் தொடங்கினார்.

அப்போது, அவர்களுக்குள் மூத்தவளாகிய காசிராஜாவின் பெண், விவாஹஞ்செய்விக்கத்தொடங்கின பீஷ்மரைநோக்கிப் புநகைக்கு அடியில்லதமாறு சொல்லலானாள். "நான் சௌபநகரத்தரசனான சால்வனைப் புருஷனாக முன்னமே என் மனத்தால் வரித்துவிட்டேன். அவனும் முன்னமே என்னை வரித்திருந்தான். என் தகப்பனுடைய அபிப்பிராயமும் இதுதான். அந்த ஸ்வயம்வரத்தில் நான் சால்

வனை வரிப்பதற்கிருந்தேன். தர்மந்தெரிந்தவரே! இதையறிந்தபின் நீர் ஸரியானதர்மத்தை நடத்துவீராக" என்றாள். பிராம்மணஸபையில் அந்தக்கன்னிகை இவ்வாறுசொன்னபின் வீரரானபீஷ்மர் அந்த விவாஹகாரியத்தைப்பற்றிய ஆலோசனையைச் செய்தார்: "என்னால் ஜயிக்கப்பட்டமூத்தபெண்ணாகிய இந்த அம்பையென்னும் கன்னிகை வேறு புருஷன்மேல ஆசைவைத்தவளாகவிருக்கிறாள். வாக்காலே கொடுக்கப்பட்டவளும் மனத்தாலே கொடுக்கப்பட்டவளும் விவாகத்தைச்சேர்ந்த மந்திரங்கள் சொல்லப்பட்டவளும் அயலானுக்காகக் குறிப்பிடப்பட்டவளும் அயற்புருஷனிடத்தில் ஆசைவைத்தவளும் விடத்தக்கவர்கள்" என்றுசொல்லித் தம்சொற்படி நடக்கின்ற தம் சகோதரனுடைய அனுமதியின்மேல் வேதங்களின் கரைகண்ட பிராம்மணர்களுடன் ஆலோசனைசெய்து தர்மந்தெரிந்த பீஷ்மர் அப்போதே காசிராஜாவின் ஜ்யேஷ்டபுத்ரியாகிய அம்பையை அனுப்பினார். தம் கனிஷ்டசகோதரனாகிய விசித்ரவீரியனுக்குச் சாஸ்திரோக்த கிரியையைச்செய்து அம்பிகை அம்பாலிகை என்னும் இருவரையும்பாரியைகளாகப் பீஷ்மர் கன்னிகாதானஞ்செய்தார். அழகினாலும் யௌவனத்தினாலும் கர்வங்கொண்ட தர்மாத்மாவாகிய விசித்ரவீரியன் அவ்விருவர்களையும் பாணிக்ரஹணஞ்செய்துகொண்டபின் அம்பையை எவ்வகையிலும் விரும்பவில்லை. பார்ப்பதற்குஅழகான அம்பை மற்றொரு புருஷனைப்பற்றிச் சொன்னதற்காக விசித்ரவீரியன், "ஆரியரே! அயோக்கியமும் பிரயோஜனமில்லாததுமாகிய இந்தக்காமம் பாவத்தின் பயன்தான். பரபுருஷனை விரும்பினவளை அனுபவிப்பதற்கு என்னை நீங்கள் கட்டளையிடாமலிருக்கவேண்டும்" என்றுசொன்னான். பீஷ்மர், "குழந்தாய்! தர்மாத்மாவே! காமத்திற்குட்படாத நடையுள்ள உன்னை ஸந்ததியாகப்பெற்ற சந்தனுவம்சம் புகழ்பெற்றது. உன் அபிப்பிராயம் நியாயமென்று நான் நினைக்கிறேன்" என்று விசித்ரவீரியனுக்குச் சொல்லி, அம்பையைநோக்கி அடியில்வருமாறு சொல்லத்தொடங்கினார்: "குற்றமற்றவளே! உனக்கு விடைகொடுக்கிறேன்; நீ விருப்பம்போலே செல்லலாம்; என் அன்பனான ஸஹோதரனை ஏவத்தகாத காரியத்தில் ஏவுவதற்கு நான் ஸமர்த்தனல்லேன். வேறுபுருஷனிடம் மனம்வைத்த பெண்ணை எவன் வீட்டில் வைத்துக்கொள்ளுவன்? ஆகலால், உன்னை நான் வைத்துக்கொள்ளமாட்டேன். நீ வேறொருவனை விரும்பியிருக்கிறாய். போகலாம். நான் ஜிதேந்திரியன்; விவாஹத்தில் விருப்பமற்றவன்; நம்மிருவருக்கும் ஸம்பந்தம் எவ்வகையிலும் சேராது" என்றார்.

ஜனமேஜயராஜரே ! சால்வராஜனைக் குறிப்பிட்டவளான அம்பை அவ்விடத்தில் பீஷ்மரால் இவ்வாறு சொல்லப்பட்டபின், தன் ஸகிகளுடன்கூடிச் சால்வராஜனுடைய பட்டணத்துக்குமெல்லமெல்லச்சென்றாள். பிறகு, அந்த அம்பை சால்வனிடம்சென்று அவனைக் கௌரவித்து, "அழகான முகமுள்ளவனே ! நீ முன்னேயே மனத்தினால் குறிப்பிட்டபடியால் பரதஸ்ரேஷ்டராகியபீஷ்மரையும்அவர்தம்பியையும் விட்டுவிட்டு உன்னிடம் வந்திருக்கிறேன்.வலுவில்வந்திருக்கிற என்னைச் சாஸ்திரப்படி விவாஹம்செய்துகொள். உனக்கு ஸுகமுண்டாகட்டும்'' என்றுசொன்னாள். அவளால் இவ்வாறு சொல்லப்பட்ட சால்வனும் சிரித்துக்கொண்டு அவளைப்பார்த்து, "பீஷ்மர் அரசர்களின் நடுவில் என்னைஜயித்து உன்னைவசப்படுத்திக்கொண்டார்.அழகியவளே! வேறொருவனால் வசப்படுத்தப்பட்டு அவனால் தன் வீட்டிலிருந்து அனுப்பப்பட்டவளை நான் அங்கீகரிக்கமாட்டேன். பெண்ணரசியே ! நீ அங்கேயே போகலாம்" என்றுசொன்னான். அவனால் இவ்வாறுசொல்லப்பட்ட அந்த அம்பை சிறப்புள்ள குருராஜ்யத்திற்கு வந்து அங்கே பீஷ்மரைநோக்கி, "நீ என்னைப் பலாத்காரமாகக் கொண்டுவந்தாய்; க்ஷத்திரிய தர்மத்தை ஆய்ந்துபார்; நியாயமாக நீதான் எனக்குக் கணவன். எவன் தன்பராக்கிரமத்தின் சிறப்பினால் ஸ்வயம்வரத்தில் எல்லாராஜாக்களையும் ஜயித்து ஒருகன்னிகையை ஸ்வாதீனப்படுத்துகிறானோ அவன் அவளை நிச்சயமாக விவாஹம்செய்துகொள்ளவேண்டும். நீ என்னை ஜயத்தினால் அடைந்தவனாதலால் எனக்கு நீதான் கணவன். பீஷ்மனே! ஆகலால், ஸபையில் உன்னால் ஜயித்து வசப்படுத்தப்பட்ட என்னை நீயே விவாஹம்செய்துகொள்'' என்று சொன்னாள். பீஷ்மர், 'நான் ஜிதேந்திரியன்' என்று பலமுறை மறுத்தார். அந்த அம்பையும், "நீ எவ்வாறு ஜயித்தாயோ அவ்வாறே செய்'' என்று பீஷ்மருக்குச்சொன்னாள். தாமரைப் புஷ்பம்போன்ற கண்களையுடைய அம்பை ஆறுவருஷம் இவ்வாறு அனுஸரித்தாள். பீஷ்மர், "அழகியவளே ! நான் ஜிதேந்திரியன். விவாஹத்தை விரும்பாதவனாகிவிட்டேன். நீ முதலிலேயே மனத்தினால்வரித்த சால்வனிடத்திற்கே செல்லலாம். நீ வேறொருவனிடத்தில் ஆசைவைத்ததாகஉன்னைப்பற்றிமுன்னேஎன்சொன்னாய்? வேறொருவனிடத்தில் ஆசைவைத்த வயதுவந்த கன்னிகையைத் தம் வீட்டில் யாரும் வைத்துக்கொள்ளமாட்டார். அழகியவளே! நான் என் இளையஸகோதரனான விசித்ரவீர்யனுக்கும் உன்னை மணம்செய்விக்கமாட்டேன்; உன்விருப்பம்போலப் போகலாம்'' என்று சொன்

ளூர். அம்பை மறுபடியும் சால்வனிடம்போய், "அரசனே! என்னைக் கிரஹித்துக்கொள்" என்று சொன்னாள். "மற்றொருவன் ஜயித்தவளை நான் அங்கீகரிக்கமாட்டேன்" என்று சால்வன் விட்டுவிட்டான். "நான் ஜிதேந்திரியன்" என்றுசொல்லிப் பீஷ்மரும் விட்டுவிட்டார். ஜனமேஜயராஜாவே! பருத்தும் உயர்ந்துமிருக்கின்ற இரண்டு ஸ்தனங்களும் அகன்ற ஜகனமும் கண்களுமுடையவளும், நிதம்பங்களின் பாரத்தினால் மென்மையான நடையையுடையவளும், பூர்ணசந்திரனுக்கொப்பான முகமுடையவளும், பொழிகின்ற மேகக்கூட்டத்தின்மேல் பிரகாசிக்கின்ற மின்னலைப்போன்றவளும் உயர்ந்தமனமுள்ளவளுமான அந்த அம்பை கண்ணீரினால் பூமிநனையும்படி வ்யஸனப்பட்டுக்கொண்டு பீஷ்மரைவிட்டுச் சால்வனிடமும் சால்வனைவிட்டுப் பீஷ்மரிடமுமாக இவ்வாறு பலமுறை போக்குவரவுகளினால் ஆறுவருஷகாலம் கழித்தாள். அவள் அதற்குப்பின் பன்னிரண்டு வருஷகாலம் இமயமலையின் அழகானசரிவில் பாஹுதா நதிக்கரையில கடுந்தவம் புரிந்தாள். அவ்விடத்தில் ஐம்புலன்களையுமடக்கி மிக்கமனவுறுதியுடன் தவஞ்செய்துகொண்டு கால்கட்டைவிரலால்நின்றாள். அதனால் தேவர்கள் நடுங்கினர். அழியாதசேனையுடையவரும் வரம்கொடுப்பவரும் ஸர்வசக்தியுள்ளவருமாகிய ஷண்முகக் கடவுள் தேவர்களுக்கும் பயத்தையுண்டாக்கத்தக்க அவளுடைய அந்தத்தவத்தைக்கண்டு ஆச்சரியமும்ஸந்தோஷமும் அடைந்து அவளுக்கு அனுக்ரஹிக்க எண்ணங்கொண்டு அந்தராஜபுத்ரியைக் கௌரவிப்பதற்காக அவளுக்கு அழகான மாலையை அளித்தார்; "அம்பையே! அழகியதாமரைப்புஷ்பங்களையுடைய இந்தத்தேவலோகத்து மாலை உனக்குத்தக்கபடி வந்திருக்கிறது. இது பூமியில் உன்வ்யஸனத்தை நிவிர்த்திசெய்வதாகும். நான்கொடுத்த இந்தமாலையைத் தரிப்பவன் எவனோ அவன் பீஷ்மருடைய மரணத்துக்குக் காரணமாவான்" என்று சொல்லினர்.

---

## நாற்பப்பத்தாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



**(அம்பை பாஞ்சாலதேசத்தில் துருபதராஜனின் அரண்மனை வாயிலில் மாலையை மாட்டிவந்ததும், ராஜபுத்ரியானசிகண்டினி அதைத்தரித்துத் தந்தையினால் கோபித்துவிடப்பட்டுக் கங்கோத்பத்திக்குச் சென்று கந்தர்வனைக்கண்டு ஆணுருவமடைந்து திரும்பிவந்ததும்.)**

**அ**ம்பை, "மூடனானசால்வன் நான் வேறொருபுருஷனை அடைந்தவளென்று நினைத்து என்னை அங்கீகரிக்கவில்லை. அதனால், பதியில்லா

மல் தர்மத்தையும் காமத்தையும்விட்டுத் துக்கத்தைப்பொறுத்துக்கொண்டு எல்லாப் பக்கங்களிலுமுள்ள க்ஷத்ரியர்களாகிய உங்களனைவரையும் அழைக்கிறேன். க்ஷத்ரியர்களே! பீஷ்மனைக் கொல்வதற்குக் காரணமான இந்தமாலையை நீங்கள் வாங்கிக்கொள்ளுங்கள். எவன் பீஷ்மனைக் கொல்வானோ அவனுக்கு நான்பாரியையாவேன்'' என்றுசொன்னாள். அவள் இவ்வாறு அலைந்துகொண்டிருக்கப் பின்னும் ஐந்து வருஷங்கள் சென்றன. பீஷ்மரிடம் பயந்திருந்ததனால் க்ஷத்ரியன் ஒருவனும் அவளுக்குத் தஞ்சமாகவில்லை. அந்தஅம்பை புகழ்பெற்றவனும் பிரதிஜ்ஞை தவறாதவனும் சிறந்தவில்லாளியும் பொய்யாமையையும் தர்மத்தையும் முக்கியமாகக்கொண்டவனுமான ஸோமகனென்னும் பாஞ்சாலதேசத்தரசனிடம்சென்றாள். அழகான கைகளையுடைய அந்தஅம்பை பாஞ்சாலதேசத்தாரால் காக்கப்பட்டசபையின் வாயிலையடைந்து இருகரங்களையும் தூக்கிக்கொண்டு பாஞ்சாலதேசத்தரசனைநோக்கி, "யஜ்ஞஸேனனே! பீஷ்மனாற்கொல்லப்படுகிறவளும் மடுவில் முழுகுகிறவள்போன்றவளுமாகிய என்னை நீ இங்கே ஓடிவந்து கையைப்பிடித்துத் தூக்கிவிடு. அந்தப்பீஷ்மனால் என்னுடைய எல்லாத் தர்மங்களும் எல்லாக் காமஸுகங்களும் இம்மை மறுமையாகிய இரண்டுலோகங்களும் புகழும் * வேரோடும் † பலனோடும் அழிக்கப்பட்டன. நான் இவ்வாறு கதறியும் எங்கும் ஒரு ராஜபுத்ரனும் எனக்கு அடைக்கலமாகக் கிடைக்கவில்லை. இந்த லோகத்தில் திக்கற்றுத்துயரமுறும்படியாக க்ஷத்ரியர்கள் இல்லாமற் போயினரா? ராஜஸ்ரேஷ்டர்களே! எல்லா அரசர்களும் சேர்ந்திருக்கும்போது நான் சொல்லுகிறேன். இக்ஷ்வாகுவம்சத்தவரிற் பெரியவரும் பாஞ்சாலதேசத்தவரிற் சிறந்தவரும் யோக்கியர்களுமான ராஜாக்களனைவரும் நான் சொல்வதைக் கேட்கக்கடவர். ஸோமகனாகிய யஜ்ஞஸேனனே! இந்த விவாஹவிஷயத்தில் தர்மம் என்னைக் கெடுத்துவிடாமலிருக்கவேண்டும். தயைசெய்து இப்போது நீ எனக்கு அடைக்கலமாக இருக்கக்கடவாய்'' என்று கூவினாள்.

அதைக்கேட்டு, யஜ்ஞஸேனன், "ராஜபுத்ரியே! உன்னை நான் அறிந்திருக்கிறேன். முக்கியமாக உனக்கு ஒன்று தெரிவிக்கிறேன். என்சக்திக்கும் க்ஷத்ரியதர்மத்திற்கும் தக்கபடி நான்ஸேனையைவைத்துக்கொண்டிருக்கிறேன். ராஜகுமாரியே! உனக்கு மற்றராஜாக்களிடம் என்னபயம் இருந்தாலும் அதைப் போக்குவதற்குத் தகுந்த உபாயத்தைச்செய்ய என்னால் முடியும். சிறந்த அஸ்திரபலமுள்ள

* விவாஹம். † புத்ரோத்பத்தி.

பீஷ்மர் யுத்தஞ்செய்யும்போது பயத்தைப்போக்க நான் சக்தனல்லேன். க்ஷத்ரியதர்மமாகிய யுத்தம் பலத்துக்குத்தக்கபடிதான் இருக்கிறது. அழகியவளே! ஆதலால், நல்லது; செல்; பீஷ்மர் தமது வன்மையினால் என்னை எரித்துவிடாமலிருக்கவேண்டும். மற்ற அரசர்களெல்லாம் என்னகாரணத்தினால் உன் சொல்லை அங்கீகரிக்கவில்லையோ அதனை நானறியேன். பீஷ்மரைஜயித்து உன் தர்மத்தைக் காப்பாற்றுவதற்கு என்னால் எவ்வகையிலும் முடியாது" என்றுசொன்னான்.

இவ்வாறு சொல்லப்பட்ட அம்பை ராஜாவின்வாயிலில் அந்த மாலையை மாட்டிவிட்டு ஓடிப்போனாள். எல்லாஜனங்களாலும் விடப்பட்டவளும் உக்கிரமான தவமுள்ளவளுமாகிய அந்த அம்பையைத் துருபதன், "ஸுந்தரியே! மாலையையெடுத்துக்கொள்; எங்களுக்கு விரோதத்தைக் கொண்டுவந்துவிடாதே" என்று பலமுறை நல்வார்த்தை சொல்லிக்கொண்டு பின்தொடர்ந்தான். அம்பை, "நான் சொன்னபடியேதான் நீ செய்யவேண்டும். விதி இவ்வாறிருக்கிறது; இது மானிடச்செயலன்று; விதியைமாற்றமுடியாது; எவன் இந்த மாலையையெடுத்துத் தானே கழுத்தில் போட்டுக்கொள்ளுகிறானோ அவன், என் தர்மத்தைக்கெடுத்த பீஷ்மனை யுத்தத்திற்கொல்லப்போகிறான்" என்றுசொன்னாள். அந்தத் துருபதராஜன் சிலகாலம்வரையில் அந்தமாலையை யாரும் எடுக்காமல் காப்பாற்றிவந்தான். அதன்பின் யாரும் எடுக்கமாட்டார்களென்ற நம்பிக்கையுடன் அதைக்கவனிக்காமல் விட்டுவிட்டான். சிகண்டினியென்னும் சிறு பெண் தந்தை சொன்னதைக் கவனிக்காமல் அந்தமாலையைப்போட்டுக்கொண்டாள். பீஷ்மர்விஷயத்தில் அபராதமென்றுபயந்து உடனே அந்தப்பெண்ணைத் தகப்பன்விட்டுவிட்டான். அந்தப்பெண் பயந்து கங்கோத்பத்தியில் தவஞ்செய்துகொண்டிருந்த இஷீகனென்னும் பிரம்மரிஷியை ஆராதிப்பதற்காகத் தானும் தவவேஷம் தரித்துக் கொண்டு அவரிடம் சென்றாள். அந்தரிஷிஸ்ரேஷ்டர் அவளுடைய சுச்ரூஷையினால் ஸந்தோஷமடைந்து அவளைநோக்கி, "கங்கையின் உத்பத்தியில் சீக்கிரகாலத்தில் விபஜனமென்னும் உத்ஸவம் வரப்போகிறது. அதில் பார்ப்பதற்கினிய தும்புருவென்னும் கந்தர்வராஜனைச் சந்தோஷப்படுத்த யத்தனஞ்செய். அவனுக்குச் செம்மையாகப்பணிவிடைசெய். அழகானவளே! நானும் இந்தவிஷயத்தில் உனக்கு உதவிசெய்வேன். அந்தக் கந்தர்வராஜனுக்கு நான் சொன்னதைச் செய்; உனக்கு க்ஷேமம் உண்டாகும்; அவன் உனக்கு நன்மையைச்

செய்வன்" என்று சொன்னார். பிறகு, அந்தஇடத்தில் விபஜனமென்னும் கந்தர்வர்களுடைய உத்ஸவம் நடந்தது. மிகுந்த தேஜஸுள்ள கந்தர்வர் இருவர் அங்கே தங்கிநின்றனர். அவர்களில் ஒருவன் ஸ்திரீயாவதற்கு விரும்பி அந்தச் சிகண்டினியை நோக்கி, "இந்த என் புருஷரூபத்தை வாங்கிக்கொள்; நான் உன் ஸ்திரீரூபத்தை விரும்புகிறேன்" என்று சொன்னான். கந்தர்வன் சிகண்டினி இருவரும் முறையே பெண்ணாகவும் ஆணாகவும்மாற உடன்பாடு செய்துகொண்டனர். சிகண்டினி வீரர்களாகிய சத்ருருக்களை ஸம்ஹரிக்கத்தக்க சிகண்டியென்னும் ஆண்பிள்ளையாகிவிட்டாள். அந்தக்கந்தர்வன் பெண்ணாக ஆகி ஆனந்தமுற்றவனாகச்சென்றான். துருபதபுத்ரனும் மிகுந்த புகழ்பெற்றவனுமாகிய சிகண்டி மிகமகிழ்வுற்று, பிறகு புத்புதகம் என்னுமிடத்திற்குச் சென்று பலமுறை அஸ்திராப்பியாசஞ்செய்தான். குருபுத்ரரே! அவன் அங்கே தேவலோகத்து அஸ்திரங்களை அப்பியஸித்து மிகச்சிறந்த பராக்ரமத்துடன் ஸ்வதேசமாகிய பாஞ்சால தேசத்திற்கு வந்துசேர்ந்தான். சிறந்த வில்லாளியாகிய அவன் பிதாவின் பாதங்களை வந்தனஞ்செய்து கைகூப்பிக்கொண்டு, "நீங்கள் பீஷ்மரிடம் எவ்வகையிலும் அச்சமடையவேண்டாம்" என்றுசொன்னான்.

---

## நூற்றுப்பதினோராவது அத்தியாயம்.

### ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(விசித்ரவீரியனுடைய விவாஹமும் மரணமும்.)

அப்போது, அம்பை வெளியிற்போனபின் சந்தனுபுத்ரராகிய பீஷ்மர், ராஜாவாகிய விசித்ரவீரியனுக்கு விவாககாரியத்தை முறைப்படி செய்வித்தார். அம்பிகை அம்பாலிகை இருவரையும் அக்னியின் முன்னிலையில் விவாகஞ்செய்துகொண்டு தர்மத்தில் மனமுள்ள குருவம்சத்தவனாகிய விசித்ரவீரியன் அவ்விருவர்களையும் பாணிக்கிரகணஞ் செய்துகொண்டபிறகு தன் ரூபத்தைப்பற்றி இறுமாப்புடையவனாகிக் காமஸுகத்திலேயே விருப்பமுள்ளவனானான். வளர்ச்சியும் நடுயௌவனமுமுள்ளவர்களும், கறுத்துச்சுருண்ட கூந்தலுடையவர்களும், சிவந்தும் உயர்ந்துமிருக்கிற நகங்களுள்ளவர்களும், பருத்த நிதம்பங்களும் ஸ்தனங்களுமுடையவர்களும், நல்ல லக்ஷணங்களும் அழகும் பொருந்தியவர்களுமாகிய அந்த அம்பிகை

அம்பாலிகைகளிருவரும் விசித்திரவீரியனைத் தங்களுக்குத் தகுதியான புருஷனைக் கிடைத்தானென்று நிச்சயித்து அவனைப் பூஜித்தனர். ஒருத்தியை ஒருத்தி நேசித்துக்கொண்டு ஒருமனமுள்ளவர்கள்போல்இருந்தனர். அழகில் அசுவினீதேவர்களுக்கொப்பானவனும் பராக்கிரமத்தில் தேவர்களுக்கொப்பானவனும் தனிமையிற்காணும் பெண்கள் எல்லாருடைய சித்தத்தையும் கலங்கச்செய்பவனுமாகிய யௌவனப்பிராயத்திலிருக்கும் அந்த விசித்ரவீரியனும் அந்தமனைவிகள் இருவரோடும்கூடி ஏழுவருஷகாலம் ரமித்து க்ஷயரோகத்தினால் ஆக்ரமிக்கப்பட்டான். அன்புள்ளவர்கள் நம்பிக்கையான வைத்தியர்களுடன் சேர்ந்து சிகித்ஸைசெய்தும் அந்தக்குருவம்சத்தாசன் சூரியன் அஸ்தமனமாவதுபோல யமனுலகுசென்றான். தர்மாத்மாவும் கங்காபுத்ரருமான அந்தப்பீஷ்மர் கவலையும் வ்யஸனமுமடைந்து ரித்விக்குகள் கௌரவசிரேஷ்டர்கள் எல்லாருடனும் சேர்ந்து ஸத்யவதியின் அபிப்பிராயத்தை அனுஸரித்து அந்த விசித்ரவீரிய ராஜாவின் பிரேதகாரியங்களனைத்தையும் செம்மையாகச் செய்வித்தார்.

---

## நூற்றுப்பன்னிரண்டாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(விசித்ரவீரியனுடைய பாரியைகளிடம் புத்ரோத்பத்தி செய்யும்படி ஸத்தியவதி கட்டளையிட, பீஷ்மர் தம் பிரதிஜ்ஞையை நிறைவேற்றுவதற்காக அதனை ஒப்புக்கொள்ளாமை.)

ஜனமேஜயரே! பிறகு, பிள்ளையினிடம் அன்புள்ள ஸத்யவதிதேவி துயரத்தினால் பீடிக்கப்பட்டவளாய்த் துக்கக்கடலில் மூழ்கித் தைரியமற்று ஓய்ந்து மருமக்களுடன்கூடப் புத்ரனுடைய பிரேதகாரியங்களைச்செய்து பர்த்தாஇறந்த துக்கத்தினாற்பீடிக்கப்பட்ட அந்த மருமக்களிருவரையும் தேற்றிக் குலதர்மத்தையும் தன் புத்ரனுடைய மாதாபிதாக்களின் விருத்தியையும் ஆராய்ந்துபார்த்துப் பீஷ்மரை நோக்கிச் சொல்லத்தொடங்கினாள்.

"தர்மத்தை விடாதவரும் சிறந்தகீர்த்தியுள்ளவரும் குருவம்சத்தாசருமான சந்தனுவுக்குப் பிண்டதானமும் புகழும் சந்ததியும் உன்னைப் பற்றியனவாக இருக்கின்றன. சகோதரனான விசித்ரவீரியன் பிராணிகளடையும் முடிவையடைந்தான். ஒருவன் நல்ல கருமஞ்

செய்வதனால் ஸ்வர்க்கம் அடைவது எப்படி நிச்சயமோ, ஸத்தியம் சொல்லுவதனால் தீர்க்காயுவாயிருப்பது எப்படி நிச்சயமோ, அப்படியே தர்மம் உன்னிடத்தில் நிச்சயமாயுள்ளது. தர்மம் தெரிந்தவனே! நீ தர்மங்களைத் தொகுத்தும் வெவ்வேறாகவும் அறிந்திருக்கிறாய். பலவகையான வேதங்களையும் வேதாங்கங்களையும் முற்றும் அறிந்திருக்கிறாய். தர்மத்தில் உன்னுடைய உறுதியையும், குலாசாரத்தையும், சுக்கிரனையும் பிருகஸ்பதியையும்போலக் காரியசங்கடங்களில் புத்தி நிச்சயத்தையும் நான் உன்னிடம் காணுகிறேன். தர்மத்தைக் காப்பவர்களிற் சிறந்தவனே! ஆதலால், உன்னிடம் மிகவுறுதியான நம்பிக்கைவைத்து உன்னை ஒருகாரியத்தில் நியமிக்கப்போகிறேன். நீ கேட்டு அதைச்செய்யவேண்டும். புருஷசிரேஷ்டனே! என் புத்ரனும் சிறந்த பராக்ரமமுள்ளவனுமாகிய உனது மிக்க அன்பனான சகோதரன் இளமையிலேயே சந்ததியில்லாமல் ஸ்வர்க்கம்போனான். பாரதனே! உன் சகோதரனுடைய பாரியைகளாகிய இந்த அழகான காசிராஜன்பெண்களிருவரும் ரூபமும் யௌவனமும் நிரம்பினவரும் புத்ரன் வேண்டுமென்ற விருப்பமுள்ளவருமாயிருக்கின்றனர். நமது குலவிருத்திக்காக நீ அவர்களுக்குப் புத்திரசந்ததியை உண்டாக்கக்கடவாய். மஹாவீரனே! நான் சொல்வதற்காக நீ இந்தத் தர்மத்தைச் செய்யத்தகுவாய். ராஜ்யத்திலும் நீ பட்டாபிஷேகஞ்செய்து கொண்டு பாரதேசத்தை ஆளக்கடவாய். தர்மப்படி விவாகமும் செய்துகொள். பிதிர்க்களை அமிழ்த்தாமற் கரையேற்று" என்று சொன்னாள்.

எதிரிகளைத் துன்பப்படுத்துகிறவரும் தர்மத்தில் சித்தமுள்ளவருமாகிய அந்தப்பீஷ்மர் தம் தாயாரும் சுற்றத்தாரும் இவ்வாறு சொன்னபின் தர்மத்திலின்றும் வழுவாத மறுமொழியைப் பின்வருமாறு சொல்லலானார்; "தாயே! நீ சொன்னது மேலான தர்மமென்பதில் ஸம்சயமில்லை. ஸந்தானத்தைப்பற்றி நான் செய்த முடிவான உறுதிமொழியையும் நீ அறிந்திருக்கிறாய். உன்னைப்பற்றி கன்யாசுல்கத்துக்காக நடந்ததும் உனக்குத் தெரியும். ஸத்தியவதியே! ஆதலால், மறுபடியும் நான் உன்னிடத்தில் ஸத்தியமாகப் பிரதிஜ்ஞை செய்கிறேன். நான் மூன்றுலோகங்களையும் விடுவேன். தேவராஜ்யத்தையும் விட்டாலும் விடுவேன். இவ்விரண்டினும் மேற்பட்டது எதுவோ அதையும்விடுவேன். ஸத்தியத்தைமட்டும் எவ்வகையிலும் விடேன். பூமியும் தன்மணத்தை இழக்கும்; அப்புவும் தன்ரஸத்தை இழக்கும்; தேயுவும் தன் ரூபத்தையிழக்கும்; வாயுவும் தன் ஸ்பர்ச

குணத்தையிழக்கும்; சூரியன் தன் ஒளியையும், அக்னி உஷ்ணத்தையும், ஆகாயம் சத்தத்தையும், சந்திரன் தன் கிரணங்களின் குளிர்ச்சியையும், இந்திரன் தன் சக்தியையும், தர்மதேவதை தர்மத்தையும் விட்டாலும்விடுவர்; நான்மட்டும் எவ்வகையிலும் ஸத்தியத்தைவிடக் கருதேன். லோகங்களுக்கெல்லாம் பிரளயம் வந்தபோதிலும் நான் தேவதையாக ஆவதற்காகவும் மூன்றுலோகங்களுக்காகவும் தனத்துக்காகவும் நான்சொன்னதை மாற்றமாட்டேன்" என்றார்.

இவ்வாறு, மிகுந்த சக்தியையும் உத்ஸாஹத்தையுமுடையபுத்திரன் சொல்லக்கேட்ட மாதாவான ஸத்யவதி அதன்பின் பீஷ்மனை நோக்கிச் சொல்லத்தொடங்கினள்: "அழியாத பராக்ரமமுள்ளவனே! ஸத்தியத்தில் உனது முடிவான உறுதியை நான் அறிவேன். நீ நினைத்தால் உன்சக்தியினால் வேறு மூன்றுலோகங்களைச் சிருஷ்டி செய்வாய். நீ என்விஷயமாகச் சொன்னது எதுவோ அதைத் தவறமாட்டாயென்றும் நான் அறிவேன்; குழந்தாய்! பாரதனே! ஆனால், ஆபத்காலதர்மத்தை ஆராய்ந்து நீ கூடஸ்தர்களின் காரியபாரத்தை வகிக்கக்கடவாய். வீரனே! உன்னுடைய குலத்தின் தொடர்ச்சியும் தர்மமும் கெடாமலிருக்கும்படியும் உன்சுற்றத்தார் சந்தோஷிக்கும்படியும், உனக்கு நன்மையாகவும் எனக்குப் பிரியமாகவுமுள்ள காரியத்தை நீ செய்யவேண்டும்" என்றாள். புத்திரனிடமுள்ள அன்பினால் இவ்வாறு அடிக்கடி புலம்புகிறவளும் தர்மத்திலிருந்து விலகிப் பேசுகின்றவளுமாகிய துயரமுற்ற அந்தத்தாயை நோக்கிப் பீஷ்மர் மறுபடியும் பின்வருமாறு சொல்லலானார்: "அரசியே! தர்மங்களைப் பார்; நம்மையெல்லாம் அழித்துவிடாதே. க்ஷத்ரியன் ஸத்தியம் தவறுவது தர்மசாஸ்திரங்களில் அங்கீகரிக்கப்படவில்லை. அரசியே! சந்தனுவின் சந்ததியும் பூமியில் அழிந்துபோகாமலிருக்கும்படி புராதனமான க்ஷத்ரியதர்மத்தை உனக்குச் சொல்லப்போகிறேன். ஞானமுள்ளவர்களும், ஆபத்தர்மத்திலும் ராஜநீதியிலும் தேர்ந்தவர்களுமாகிய புரோகிதர்களுடன் அதனை நீ கேட்டு உலகநீதியையும் ஆராய்ந்து உத்தரம்சொல்" என்றார்.

---

## நூற்றுப்பதின்மூன்றாவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(புத்ரோத்பத்திக்கு உபாயம் தெரிவிப்பதற்காக, பீஷ்மர் தீர்க்கதமஸ் என்னும் ரிஷியின் உபாக்யானம் சொல்லியது.)

"முன்னே ஹைஹயதேசத்தரசனான கார்த்தவீர்யார்ச்சுனன் பரசுராமருடையபிதாவை வதஞ்செய்ததனால் கோபமுற்றுஅவர்அவ் வரசனைக் கோடாலியினால் கொன்றார். கார்த்தவீர்யார்ச்சுனனுடைய ஆயிரம்கைகள் அவரால் அறுக்கப்பட்டன. அவர் ஜனங்களுக்காக மிகவும் செய்தற்கரிய தவத்தைச்செய்தார். அவர் மறுபடியும்தனுஸை எடுத்துக்கொண்டு பூமியையெல்லாம் ஜயிப்பதற்காக ஒற்றைத்தேரா ளியாக க்ஷத்திரியர்களைப் பலமுறை எதிர்த்தார். இவ்வாறு முன்னே மஹாத்மாவாகிய பரசுராமர் எண்ணமுடியாத அஸ்திரங்களினால் இரு பத்தொருமுறை பூமியில் க்ஷத்ரியர்களில்லாமற் செய்தார். இவ்வாறு, அந்த மஹரிஷியினால் பூமியில் க்ஷத்ரியர்களேயில்லாமற்செய்யப் பட்டபொழுது எல்லாத்தேசங்களிலுமுள்ள க்ஷத்ரியஸ்திரீகள் அனை வரும் வேதங்களிற் கரைகண்ட பிராம்மணர்களுடன் சேர்ந்து புத்தி ரோத்பத்தி செய்துகொண்டனர். பாணிக்ரஹணம் செய்தவனுக் குத்தான் புத்ரனென்பது வேதங்களில் நிச்சயிக்கப்பட்டது. அந்த க்ஷத்திரிய ஸ்திரீகள் மனத்தில் தர்மத்தை நிலையாகவைத்துக் கொண்டு பிராம்மணர்களைச்சேர்ந்தனர். க்ஷத்ரியர்களுடைய இவ்வகை யான உற்பத்தியானது உலகத்தில் *(பலராலும்) அனுஷ்டிக்கப்பட்டி ருப்பதைக்கண்டிருக்கிறோம். அதன்பின், க்ஷத்ரியஜாதி மறுபடியும் அபிவிருத்தியாயிற்று. இதுவிஷயத்தில் பின்வரும் பழமையான இதி ஹாஸத்தையும் உனக்குச் சொல்லப்போகிறேன். முற்காலத்தில் உசத்யரென்று க்யாதிபெற்றவரும் சிறந்த ஞானமுள்ளவருமான ஒருரிஷியிருந்தார். அவருக்கு மிகப் பிரியமுள்ளவளாகிய மமதை யென்னும் பாரியை இருந்தாள். உசத்யருடைய கனிஷ்ட ஸஹோ தரரும் தேவபுரோஹிதருமாகிய பெரிய மஹிமையுள்ள ப்ருஹஸ்பதி மமதையென்பவளை அடைந்தார். அந்த மமதையென்பவள் பேசுகிற வரிற் சிறந்தவரான அந்தத் தன் மைத்துனரைநோக்கி, "நான் உமது ஜ்யேஷ்டஸஹோதரருடைய கர்ப்பத்தைத் தரித்திருக்கிறேன். நீர்

---

* கல்மாஷபாதனுடைய பாரியையான மதயந்திக்கு வஸிஷ்டரால் புத்ரர்கள் பிறந்ததைக்காண்க.

ஆசையை ஒழிக்கவேண்டும். பெரிய மஹிமையுள்ள ப்ருஹஸ்பதியே! இந்த உசத்யருடைய புத்திரன் என்வயிற்றுக்குள்ளிருந்தே ஆறு அங்கங்களுடனுங்கூடிய வேதத்தை அத்தியயனஞ்செய்திருக்கிறான். உம்முடைய வீர்யமும் வீணாகாதது. இந்தக் கர்ப்பத்தில் இருவருக்கு இடமில்லை; ஆதலால், இப்படியிருக்கும்போது, நீர் இந்தச்சமயம் நிவிர்த்தியடையவேண்டும்" என்று சொன்னாள். இப்படி அவளால் செம்மையாகச் சொல்லப்பட்டிருந்தும் சிறந்தபுத்தியுள்ள ப்ருஹஸ்பதி காமத்திலிழிந்த தம்மனத்தைக் கட்டமுடியாமற் போயினார். பிறகு, காமமுற்ற ப்ருஹஸ்பதி விருப்பமில்லாதிருந்த அந்த மமதையுடன் புணர்ந்தார். அவர் வீர்யத்தை விடும்போது, கர்ப்பத்திலிருந்த குழந்தை, "ஓ! பிதாவே! புணர்ச்சி செய்யவேண்டாம். இங்குஇருவருக்குஇடமில்லை. பகவானே! இடம் சிறிது. நான் முன்னமே இங்கு வந்திருக்கிறேன். உம்முடைய வீரியம் வீணாகாது. நீர் எனக்கு உபத்திரவம்செய்தல் தகாது" என்றுசொல்லிற்று. ப்ருஹஸ்பதி கர்ப்பத்திலிருந்த அந்தச்சிசுவின் சொல்லைக் கேளாமலே அழகான கண்களையுடைய மமதையைப் புணருவதற்கே ஆரம்பித்தார். பிறகு, அவளுடைய கர்ப்பத்திலிருந்த ரிஷி, வீரியத்தைவிடும் சமயமறிந்து ப்ருஹஸ்பதியின் வீரியம் வருகிற மார்க்கத்தைக் கால்களினால் தடுத்தார். பிறகு, அந்தவீரியம் கர்ப்பஸ்தானம் சேராமலே திருப்பப்பட்டு உடனே பூமியில்விழுந்தது. அதனால், ப்ருஹஸ்பதிக்குக் கோபமுண்டாயிற்று. விழுந்த வீரியத்தைக்கண்டு கோபமடைந்த அந்தப்பகவானாகிற ரிஷி கர்ப்பத்திலிருந்த உசத்தியருடைய புத்திரரைப் பயமுறுத்தி, "எல்லாப்பிராணிகளும் விரும்பத்தக்க இப்படிப்பட்ட சமயத்தில் என்னைப்பார்த்து நீ இவ்வகையான சொல்லைச்சொன்னதினால் நீண்ட * இருளையடைவாய்" என்று சபித்தார். ப்ருஹஸ்பதிக்கொப்பான ப்ரபாவமுள்ளவரும் வேதங்களையறிந்தவரும் புத்தியிற் சிறந்தவருமான அந்தரிஷி பெருங்கீர்த்தியுள்ள ப்ருஹஸ்பதியின் சாபத்தினால் பிறவிக்குருடராகித் தீர்க்கதமஸ் என்று பெயருள்ளவராயிருந்தார். அவர் தம் கல்வியினால், யௌவனமும் அழகும் நிரம்பிய ப்ரத்வேஷியென்னும் பெயருள்ள பிராம்மணப் பெண்ணைத் தமக்கு மனைவியாக அடைந்தார். அப்போது பெரும்புகழுள்ள அந்தத் தீர்க்கதமஸ் என்னும் ரிஷி, உசத்யரிஷியின் குலம் சந்ததியால் விருத்தியடைவதற்காகக் கௌதமர்முதலிய புத்திரர்களைப்பெற்றார். தர்மாத்மாவும்

* கண்தெரியாமை.

மஹாத்மாவும் வேதங்களிலும் வேதாங்கங்களிலும் கரைகண்டவரு மாகிய அந்தரிஷி காமதேனுவின் புத்திரனிடமிருந்து பசுக்களின் தர்மத்தை முழுதும் கறறுக்கொண்டு கூச்சமில்லாமல் அதைச் செய்வதற்குச் சிரத்தையுடன் ஆரம்பித்தார். அந்தத் தீர்க்கதமஸ் என்னும் முனிவர் வரைகடந்துபோனதைக் கண்டபிறகு, அந்தஆச்ர மத்தில் வஸித்திருந்த ரிஷிஸ்ரேஷ்டர்களனைவரும் அவர் செய்தது பாவமென்று பிரமித்து, "ஆ! ஆ! இவர் வரைகடந்தவர்; ஆஸ்ரமத் தில் வஸிக்கத்தகாதவர்; ஆதலால், பாபசித்தமுள்ள இவரை நாமெல் லோரும் விட்டுவிடுவோம்" என்று ஒருவர்க்கொருவர் பேசிக் கொண்டு கோபித்தனர். அந்தப்பத்தினியும் புத்திரர்கள் கிடைத்தத ஞல் அப்போது தன்கணவனை விரும்பவில்லை. பகைக்கின்ற தன் மனைவியை நோக்கி அந்தரிஷி, "என்னை ஏன்பகைக்கிறுய்?" என்று கேட்டதற்கு, அவள், "பாரியையைப் போஷிப்பதனுல் பர்த்தாவென் றும் பாதுகாப்பதனுல் பதியென்றும் சொல்லுகின்றனர்; நான் உம் மைப் போஷிப்பதற்கு முடியாதவள். சிறந்த தவமுள்ளவரே! எந் தக்காலமும் கஷ்டத்திறைல் வருந்திக்கொண்டு பிறவிக்குருடனையும் பிள்ளைகளையும் நான் போஷிக்கமாட்டேன்" என்றுள். அந்த ரிஷி தமது மனைவிசொன்ன அந்தச் சொல்லைக்கேட்டு, கோபத்துடன் புத்திரர்களோடுகூடிய ப்ரத்வேஷியென்னும் பத்தினியை நோக்கி, "என்னை ராஜகுலத்திற்குக் கொண்டுபோ; உனக்குத்தனலாபமும் நேரிடும்" என்று மறுமொழிசொன்னுர். ப்ரத்வேஷியென்பவள், "பிராமணு! நீர்கொடுக்கும்தனம் துன்பத்திற்குக் காரணம். அதை நான்விரும்பேன். பிராம்மணஸ்ரேஷ்டரே! உம்இஷ்டம்போலேசெய் யும். முன்போல் நான் உம்மைப்போஷிக்கமாட்டேன்" என்றுள். அப்படிச்சொல்ல, அந்தத் தீர்க்கதமஸ் என்னும்ரிஷி, "இன்றுமுதல் உலகத்தில் நான் ஒரு வியவஸ்தையை ஸ்தாபிக்கிறேன். ஒருபெண் ணுக்கு அவள் உயிருள்ளவரையிலும் ஒரேகணவன்தான் கதி. அவன் இறந்தாலும் உயிரோடிருந்தாலும் அவள் வேறொருபுருஷனை அடை யத் தகாள். வேறொரு புருஷனையடைந்தால அந்தஸ்திரீ பதிதையா வாள்; ஸந்தேகமில்லை. இதுமுதல ஸ்திரீகள் புருஷனைவிட்டிருந் தால் அவர்களுக்கு எல்லாச்செல்வமுமிருந்தாலும் பாவந்தான். அவர் களின் புணர்ச்சி பயன்படாமறபோகக்கடவது. அபகீர்த்தியும் தூஷ ணைகளும் அவர்களுக்கு எப்போதும் உண்டாகக்கடவன" என்று சபித்தார். அப்படி அவர் சொன்னதைக்கேட்டு, அந்தப் பிராம்மண ஸ்திரீ மிக்ககோபமுற்றவளாகி, "புத்திரர்களே! இவரைக் கங்கை

யில் தள்ளுங்கள்" என்றாள். லோபித்தனத்தாலும் அறிவின்மையாலும் மூடப்பட்ட அந்தக்கௌதமர்முதலிய புத்திரர்கள் அவரைக் கட்டி ஓடத்திற்போட்டுக் கங்கையில் விட்டுவிட்டனர். "குருடனும் கிழவனுமாகிய இவனை எதற்காகக் காப்பாற்றவேண்டும்?" என்று நினைத்துக் கொடியவர்களான அந்தப்புத்திரர்கள் பிறகு அங்கிருந்து வீட்டுக்குத் திரும்பிப்போயினர். பொட்டையரான தீர்க்கதமஸ் என்னும்ரிஷி அந்த ஓடத்துடனே பிரவாகத்தின்வழியே மிதந்து கொண்டு தற்செயலாக அநேக தேசங்களுக்குச் சென்றார். தர்மந் தெரிந்தவரெல்லாரினும் சிறந்தவனாகிய பலியென்னும் ராஜா நீராடப்போனபோது பிரவாகத்தின்வழியே தன் அருகில்வந்த அந்த ரிஷியைக்கண்டான். தர்மசித்தமுள்ளவனும் அழியாதபராக்கிரமமுள்ளவனுமாகிய அந்தப்பலியென்னும் அரசன் அந்தரிஷியை எடுத்தான். அந்த அரசன அவருடையவரலாற்றையறிந்து தனக்குப் புத்திரனுண்டாவதற்காக அவரைப் பிரார்த்தித்தான். அந்தராஜரிஷி அம்முனிவரைப் பூஜித்து அவர் இளைப்பாறினபின், "மிகுந்தமஹிமையுள்ளவரே! கௌரவத்தைக் கொடுப்பவரே! என் ஸந்ததிக்காக என் பாரியைகளிடம் தர்மசாஸ்திரத்திலும் ராஜநீதியிலும் வல்லவர்களான புத்திரர்களை உண்டாக்குங்கடவீர்" என்றுசொன்னான். அந்தச் சிறந்த மஹிமையுள்ளரிஷி, இவ்வாறுசொன்ன அவ்வரசனுக்கு, "அப்படியே ஆகட்டும்" என்று மறுமொழிசொன்னார். அப்போது அவ்வரசன் ஸுதேஷ்ணையென்று பெயருள்ள தன்மனைவியை அந்தரிஷியினிடம் அனுப்பினான். அவள் குருடரென்றும் கிழவரென்றும் நினைத்து அவ்வரசி அவருடன்சேரவில்லை. அப்போது அவள் தன் தாதியின்மகளை அந்தக்கிழவரிடம் அனுப்பினாள். தர்மாத்மாவாகிய அந்தரிஷி அந்தச் சூத்ரஸ்திரீயின் கர்ப்பத்தில் கக்ஷீவான்முதலிய பதினொரு புத்திரர்களை உண்டுபண்ணினார். கக்ஷீவான்முதலிய அந்தப் புத்திரர்களனைவரும் வேதமோதுவதைக்கண்டு பலியென்னுமரசன் அந்த ரிஷியைநோக்கி, "இவர்கள் என்புத்திரர்கள்" என்று சொன்னான். "உனது மனைவியாகிய புத்தியில்லாத ஸுதேஷ்ணைபொட்டையனும் வயதுசென்றவனுமான என்னைக்கண்டு அவமதித்துத் தன் தாதியின் மகளாகிய சூத்திரப்பெண்ணை எனக்கு அனுப்பினதன்மேல் கக்ஷீவான்முதலிய இந்தப்புத்திரர்கள் அந்தச் சூத்ரஸ்திரீயின் கர்ப்பத்தில் எனக்கு ஜனித்ததனால் என்புத்திரர்களேயாவர்; உன்புத்ரர்களல்லர்" என்று அம்மஹரிஷி அந்தராஜாவுக்குச்சொன்னார். அப்போது, பலியென்னும் அரசன் அந்தரிஷிஶ்ரேஷ்டரைப் பலமுறைவேண்டிக்

கொண்டு மறுபடியும் தன்பாரியையாகிய ஸுதேஷ்ணையை அவரிடம் அனுப்பினான். அந்தத் தீர்க்கதமஸ் என்னும் ரிஷி அந்த அரசியை அங்கங்களில்தொட்டு, "உனக்கு தேஜஸில் சூரியனுக்கொப்பாகிய அங்கன், வங்கன், களிங்கன், புண்ட்ரன், ஸும்ஹன் என்ற புத்திரர்கள் உண்டாவர். அவர்கள்பெயர்களினால் புவியில்கியாதிபெற்றதேசங்கள் இருக்கப்போகின்றன" என்றுசொன்னார். அங்கனுடையதேசம் அங்கமென்றும், வங்கனுடையதேசம் வங்கமென்றும், களிங்கனுடையதேசம் களிங்கமென்றும், புண்ட்ரனுடையதேசம் புண்ட்ரமென்றும், ஸும்ஹனுடையதேசம் ஸும்ஹமென்றும் கியாதிபெற்றவையாயின. இவ்வாறு, முன்னே பலியினுடையவம்சம் மஹரிஷியினால் உண்டானதாகப்பிரஸித்தமாயிருக்கிறது. சிறந்தவில்லாளிகளும் மேலானதர்மந்தெரிந்தவர்களும் வீரர்களும் மிகுந்தபலமுள்ளவர்களுமாகிய இன்னும் அனேகக்ஷத்திரியர்களும் பூமியில் இவ்வாறேபிராம்மணர்களால் உண்டாயிருக்கின்றனர். அம்மா! இதைக்கேட்டபின், நீயும் இந்தவிஷயத்தில் விருப்பம்போலச் செய்யலாம்.

---

## நூற்றுப்பதினன்காவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(ஸத்யவதி தான் கன்னிகையாயிருந்தபோது வ்யாஸர் பிறந்ததைப் பீஷ்மருக்கு உரைத்துப் பீஷ்மர் அநுமதியினால் வ்யாஸரை வருவித்து அவரைப் புத்ரோத்பத்திக்காக நியமித்தல்.)

மறுபடியும், பரதவம்சத்தின் சந்ததி அபிவிருத்தியாவதற்குச் சரியான காரணம் சொல்லப்போகிறேன். நான் சொல்லும் அந்தக் காரணத்தைக் கேள். விசித்ரவீரியனுடைய பாரியைகளிடம் புத்ரர்களை உற்பத்திபண்ணுவதற்குக் குணங்கள் நிரம்பின ஒரு பிராம்மணனைத் தனம்கொடுத்துப் பிரார்த்திக்கவேண்டும்" என்று பீஷ்மர் சொன்னார். தர்மமும் காரணமும் காரியமும் அடங்கியதான பீஷ்மருடைய சொல்லைக்கேட்டு, அவர் தயாரான ஸத்யவதி, மறுபடியும் அவருக்குச் சொல்லத்தொடங்கினாள்:

"உசத்யருடைய புத்ரரான தீர்க்கதமஸ் என்பவரைப்பற்றியும் அவர் புத்ரனான அங்கனென்பவனைப்பற்றியும் நீ சொன்னது புராணத்திலுள்ள கதையாதலால் நீ இந்தக்காலத்துக்குத் தக்கதைச் செய்யவேண்டும். பரதகுலத்தோனே! மைந்தா! நீ இந்தக்குலத

திற்குப் பெரியவனும் சிறந்தவனுமாயிருக்கிறாய். பாவமற்றவனே! பிதாவின்சொல்லை நிறைவேற்றுவதுபோல் என்சொல்லையும் நீ நிறைவேற்ற வேண்டியதுதான். பரதஸ்ரேஷ்டனே! உனது இளையசகோதரனும் உனக்கு மிக்க நண்பனும் பரதகுலத்தோனுமாகிய என்மைந்தன் இளமையிலேயே ஸ்வர்க்கஞ்சென்றான். பாரதனே! அவனுடைய அரசிகளும் அழகும் யௌவனமும் நிரம்பினவர்களுமான இந்தக்காசிராஜன் புதல்விகளிருவரும் இங்கே புத்ரனை விரும்பிக்கொண்டிருக்கின்றனர். இது பெரிய தர்மகாரியமென்றறிந்து நமது குலத்திற்குச் சந்ததியையும் உத்தேசித்து என்கட்டளையினால் இவ்விரண்டு பெண்களுடனும் சேர்ந்து தர்மத்தை நிறைவேற்றுவதற்கு உரியவனாகிறாய்'' என்றாள். பீஷ்மர், "தாயே! நீ சொன்னது சிறந்த தர்மமென்பதில் ஸம்சயமில்லை. நான் வைத்திருக்கும் இந்தப் பிரதிஜ்ஞையைப்பற்றி நீயும் அறிவாய். நான் உயிரைவிட்டாலும் விடுவேன். நான் தேவத்துவத்திற்காகவும் திரிலோகாதிபத்தியத்திற்காகவுங்கூட எவ்வகையிலும் பிரதிஜ்ஞையை விடேன்'' என்றுசொன்னார். ஸத்யவதி, "தர்மந்தெரிந்தவனே! தவறாத பராக்கிரமமுள்ளவனே! எதிரிகளை அடக்குகிறவனே! உன்னிடத்தில் ஸத்தியமிருப்பதை நான் அறிவேன். நீ விரும்பினால் இப்போதே வேறு மூவுலகங்களைப்படைப்பாய். ஆனால், நமதுகுலமும் குலதர்மமும் கெடாமலிருக்கும்படியும் நமக்கு வேண்டியவர்கள் மகிழ்ந்திருக்கும்படியும் நீசெய்யவேண்டும்'' என்றாள். அதைக்கேட்டுப் பீஷ்மர், "நீதான் நமதுகுலத்திற் பெரியவளாயிருக்கிறாய். உன்னிடத்திற் பெருந்தன்மை விசேஷமாக இருக்கிறது. ஆதலால், நம்முடைய குலத்திற்குச் சந்ததியுண்டாவதற்குச் சிறந்த உபாயத்தை நீ சொல்லத் தகுதியுள்ளவள். ஸ்திரீகள் எப்போதும் குலத்தில் முக்கியமான ரஹஸ்யத்தை வைத்திருப்பார்கள். பலவகையான வஞ்சகங்களினால் புருஷர்களை வசப்படுத்துவார்கள். ஆதலால, ஸத்தியமே முக்கியமாகவுடைய ஸத்தியவதியே! நான் ஸத்தியத்தைவிடாமலும் நமதுகுலம் கெடாமலுமிருக்கும்படி நீ தர்மத்தை ஆராய்ந்து பார்க்கக்கடவாய்'' என்றுசொன்னார். அதன் பிறகு, ஸத்தியவதி தழுதழுத்த குரலோடு நகைமுகமாக நாணமுற்றுப் பீஷ்மரை நோக்கி அடியில்வரும் வசனத்தைச் சொல்லத் தொடங்கினாள்.

"சிறந்தகைகளையுடையவனே! பாரதனே! நீ சொல்வது நிஜம். நம்முடைய குலத்திற்குப் புத்திரசந்தானத்திற்காக உன்னிடத்தில் நம்பிக்கையினால் ஒருவிஷயம் வெளியிடப்போகிறேன். அப்படிப்

பட்ட ஆபத்காலத்தின் தர்மத்தை உனக்கு நான் சொல்லாமலிருக்க முடியாது; நமது குலத்திற்கு நீதான் தர்மம்; நீதான் ஸத்யம்; நீதான் முக்கியமான ஆதாரம். நீ எதைச்சொல்வாயோ அதை நாம் செய்யவேண்டியதென்பது நிச்சயம். ஆதலால், நான் சொல்லும் உண்மையைக் கேட்டுப் பின் செய்யவேண்டியதைச் செய்வாயாக. பீஷ்மா! அறம்பொருளடங்கியதும் நன்மையுமாகிய என்சொல்லைக் கேள். நான் நம்பிச்சொல்லுகிறதை நீ வெளியிடத்தகாது. பரதஸ்ரேஷ்டனே! முற்காலத்தில் வஸுவென்னும் அரசர் ஒருவரிருந்தாரென்று நீ கேட்டிருக்கலாம். அவருடைய வீரியத்தினால் ஒருமீனானது என்னைக் கர்ப்பமாகத் தரித்தது. தர்மந்தெரிந்தவர்களிற் சிறந்தவனாகிய ஒருசெம்படவன் என்தாயான மத்ஸ்யத்தை ஜலத்திலிருந்து பிடித்து என்னைத் தன்வீட்டிற் கொண்டுவந்து பெண்ணாக வைத்துக்கொண்டான். பிறகு, தர்மிஷ்டனான அந்தச்செம்படவன் தர்மப்படி எனக்குப் பிதாவானான். தர்மமுள்ள என்பிதாவினிடம் தர்மத்திற்காகவே ஓர் ஓடமிருந்தது. யௌவனப்பிராயம் ஆரம்பமாயிருந்த நான் ஒருநாள் அந்த ஓடத்தினிடம் போயிருந்தேன். அப்போது, தர்மந்தெரிந்தவர்களுட் சிறந்தவரும் சிறந்த ஞானமுள்ளவருமாகிய பராசரரென்னும் மஹரிஷி, யமுனைநதியைத் தாண்டுவதற்காக ஓடத்தினிடம் வந்தார். அவரை நான் யமுனையைத் தாண்டுவிக்கும்போது அந்த ரிஷிஸ்ரேஷ்டர் காமநோயுற்றவராய் என்னிடம் வந்து, என்னைத் தைரியப்படுத்தி, என்ஜன்மத்தையும் என்குலத்தையும் எனக்குச்சொல்லி, "நீ செம்படவன் மகள் அல்லை" என்று இனியசொல்லாற் சொன்னார். பாரதனே! அவர் சாபத்துக்கும் என்பிதாவின்கோபத்திற்கும் பயந்திருந்தநான், பெறுவதற்கரிய வரங்களை எனக்கு அவர் கொடுத்தபிறகு, அவரை நான் நிராகரிக்க முடியவில்லை. "யமுனையின் அக்கரையிலும் இக்கரையிலும் நின்ற மஹானுபாவர்களான ரிஷிகளெல்லாரும்; ஜ்வலிக்கின்ற அக்னிபோல் எதிரிலும் இளஞ்சூரியன் பிரகாசிக்கின்றான். அதனால், இந்த ஆகாயம் சிவந்த ஆடை உடுத்ததுபோலப் பிரகாசிக்கின்றது" என்று சொன்னேன். இவ்வாறு நான் சொன்னமாத்திரத்தில் த்ருடமான தைரியத்தையுடையவரும் ஸமர்த்தருமான பராசரர் அந்தயமுனையின்திட்டிலும் ஜலத்திலும் பனியையுண்டுபண்ணினார். பாரதனே! அவர் தம்மஹிமையினால் உலகத்தை இருள்மூடச்செய்து சிறுமியாகியஎன்னை ஓடத்திலிருந்தபடியே ஆக்கிரமித்து வசப்படுத்திக்கொண்டார். முன்னே அருவருக்கத்தக்க மீன்நாற்றம் என்னிடம் மிகுதி

யாயிருந்தது. அந்தமஹரிஷி அதைப்போக்கி இந்த இனியமணத்தை எனக்குக்கொடுத்தார். 'இந்தநதியின் நிட்டிலேயே என்கர்ப்பத்தைப் பிரஸவித்தபின் நீ கன்னிகையாகவே ஆய்விடுவாய்' என்று பிறகு அம்முனிவர் எனக்குச்சொன்னார். வித்வானாகிய அம்மஹரிஷி என்னிடம் அன்புவைத்து மறுபடியும் கன்னிகைப்பருவத்தையும்கொடுத்தார். அந்தமஹாத்மாவின்மஹிமை அவ்வாறு சிறந்திருந்ததைக்கண்டு நான் வியப்பும் களர்ச்சியுமுற்று, என்சரீரத்தையே கொடுத்தேன். பாரதனே! அந்தக்காலத்தில் அந்தமஹாத்மாவாகிய பராசரர் கன்னிகையாகிய என்னிடம் சந்தோஷத்துடன் அந்தத்தீவிலேயே புத்ரனை உண்டாக்கினார். அந்தப்பராசரபுத்ரன் மஹாயோகசக்தியுள்ள மஹரிஷியானான். நான் முன்னே கன்னிகையாயிருந்தபோது பிறந்த அந்தப்புத்திரன் தீவிற்பிறந்ததனால் த்வைபாயனன் என்று சொல்லப்படுகிறான். சிறந்த மகிமையுள்ள அந்தரிஷி தன் தவத்தினால் வேதங்களை நாலாகவகுத்து உலகத்தில் வ்யாஸனென்று பெயர்பெற்றான். கறுத்த நிறத்தினால்கிருஷ்ணனென்றும் சொல்லப்பட்டான். ஸத்தியவாதியும் சாந்தியைக்கடைப்பிடித்தவனும் சிறந்த தவமுள்ளவனும் பாபங்களை நீக்கினவனுமாகிய அந்தமஹான் பிறந்தமாத்திரத்தில் தந்தையுடன் கூடி அப்போசென்றான். நானும்நீயும் கட்டளையிட்டால் ஒப்பில்லாத மகிமையுள்ள அந்தப் புத்ரன் தன்ஸஹோதரன்பாரியைகளிடத்தில் உயர்ந்தபுத்திரனை உண்டாக்குவது நிச்சயம். 'உன்கஷ்டகாலங்களில் நீ என்னைநினை' என்று அவன் அங்கேயே எனக்குச்சொன்னான். மஹாபுஜனான பீஷ்மனே! நீ ஒப்புக்கொண்டால் அவனை நான் நினைப்பேன். பீஷ்மா! உன்சம்மதத்தின்மேல சிறந்ததவமுள்ள அந்த என்புத்ரன் விசித்ரவீர்யன்பத்தினிகளிடம் நிச்சயமாகப் புத்திரர்களையுண்டாக்குவான்'' என்றாள்.

அந்தவியாஸரிஷியின் பெயரெடுத்தபோது பீஷ்மர் கைகூப்பிக்கொண்டு சொல்லலானார். "இடமும் காலமும் உனக்குத்தெரியும். காரியம்நிறைவேறுவதற்காக நீ சொன்னது செய்யத்தகும். தர்மார்த்த காமங்களாகிய மூன்றுபுருஷார்த்தங்களையும் பின்னே பொருள்தொடர்த்தக்க பொருளீட்டத்தையும் தர்மம் தொடர்ந்தக்க தர்மானுஷ்டானத்தையும் காமஸுகம் தொடர்த்தக்க காமபுருஷார்த்தத்தையும் இவற்றிற்கு மாறானவற்றையும் தனித்தனியே புத்தியினால் ஆராய்ந்து செய்யத்தக்க தைரியசாலி எவனோ அவன்தான் புத்திசாலி. ஆதலால், தர்மமுள்ளதும் நமது குலத்துக்கு நன்மையும் சிலாக்கியமுமாக நீசொன்னது எனக்கு மிகவும் பிரியமாயிருக்கிறது''

என்முர். குருவம்சபுத்திராகிய ஜனமேஜயரே! பீஷ்மர் அதை அங்கீகரித்தபிறகு, ஸத்தியவதி கிருஷ்ணத்வைபாயனமுனியைநினைத்தாள். குருவம்சபுத்திரரே! வேதங்களை வகுத்துச் சொல்லிக்கொண்டிருந்த அந்தச்சிறந்தபுத்திமான் தமது தாயார் நினைத்ததையறிந்து க்ஷணத்துக்குள்ளே யாருக்குந்தெரியாமல் எதிரேதோன்றினுர். பிறகு ஸத்தியவதி, புத்திரரானவியாஸருக்குச்சாஸ்திரோக்தப்பிரகாரமாகப்பூஜையைச்செய்து அவரைக் கைகளினுல் தழுவிக்கொண்டு பாற்சுரப்பினுல் நனைத்தனள். செம்படவப்பெண்ணுகிய ஸத்தியவதிவெகுகாலத்திற்குப்பின் தன்மைந்தனைக்கண்டு கண்ணீர் சொரிந்தாள். ஸத்தியவதியின் ஜ்யேஷ்டபுத்ரராகிய வியாஸமஹரிஷி வ்யஸனப்பட்ட தம் தாயாரின்மேல் ஜலத்தைத்தெளித்து வந்தனம் செய்து பின்வருமாறு சொல்லலானுர்.

"உனக்கு எதுவிருப்டமோ அதைச்செய்வதற்கு நான் வந்திருக்கிறேன். தர்மத்தின் ஸ்வரூபத்தையறிந்தவளே! எனக்குக்கட்டளையிடு. உன்விருப்பத்தைச்செய்வேன்" என்முர். பிறகு,புரோகிதர் அம்மஹரிஷிக்குப் பூஜைசெய்தார். அவரும் சாஸ்திரோக்தமாக மந்திரத்தைச்சொல்லி அந்தப்பூஜையைப் பெற்றுக்கொண்டார். மந்திரத்தைமுன்னிட்டுச்சாஸ்திரவிதிப்படி பூஜிக்கப்பட்டதனுல் வியாஸமஹரிஷி ஸந்தோஷமடைந்தார். அவர் ஆஸனத்திலிருந்தபின் அவர்தாயாரான ஸத்தியவதி க்ஷேமத்தையும் ஆரோக்யத்தையும் விசாரித்து அவரைப்பார்த்துஅடுத்துச் சொல்லவேண்டிய சொல்லைச்சொல்லலானுள். "கவியே! புத்ரர்கள் தாய்க்கும் தந்தைக்கும்பொதுவாகப் பிறக்கின்றனர். அந்தப் புத்ரர்கள்விஷயத்தில் தந்தைக்கிருப்பதுபோலவே தாய்க்கும் அதிகாரமுண்டென்பதில் ஸந்தேகமில்லை. பிரம்மரிஷியே! நீ எனக்கு முதற்புதல்வனுக விதியினுலே உண்டாக்கப்பட்டிருக்கிருய். அவ்வாறே விசித்ரவீர்யன் எனதுகனிஷ்டபுத்ரன். பிதாவைப்பற்றிப் பீஷ்மன்எப்படியோ அப்படியே மாதாவைப்பற்றி நீயும் ஸகோதரன். புத்ரனே! நீதான் என்னநினைக்கிருய்? தவருதபராக்ரமமுள்ள சந்தனுபுத்ரனுகிய பீஷ்மன் தன்ஸத்யத்தைக்காப்பாற்றுவதற்காகச் சந்ததியிலும் ராஜ்யபரிபாலனத்திலும் எண்ணம்வைக்காதவனுகஇருக்கிருன். ஆதலால், குற்றமற்றவனே! நீ உன் ஸகோதரனுக்காகவும் வம்சத்தின் ஸந்ததிவிருத்திக்காகவும் பீஷ்மனும் நானும் சொல்வதனுல் எண்ணம்வைக்கக்கடவாய். எல்லாப்பிரஜைகளையும் ரக்ஷிப்பதற்காக அன்பினுலும் கருணையினுலும் நான் என்னசொல்லுகிறேனே அதைக்கேட்டு நீசெய்யவேண்டும். உன் இளையஸஹோதர

னுடைய பாரியைகளிருவர் தேவகன்னிகைகளுக்கு ஒப்பானவர்; அழகும் யௌவனமும் நிரம்பினவர்; தர்மத்துடன் புத்ரனைவிரும்புகின்றவர். புத்ரனே! அவர்களுக்கு ஸந்தானத்தையுண்டுபண்ணு. இந்தக் குலத்திற்குத்தகுந்த ஸந்ததியையுண்டுபண்ணுவதற்கு நீ ஸமர்த்தனாக இருக்கிறாய்" என்றாள். வியாஸர், "சிறந்தபிரஜ்ஞையுள்ள ஸத்தியவதியே! முக்கியமும் அமுக்யமுமாயுள்ள தர்மங்களெல்லாம் உனக்குத்தெரியும். அதனால் உன்னுடையபுத்தி தர்மத்திலேயே நிறுத்தப்பட்டிருக்கிறது. ஆகலால், நான் உன்னுடைய கட்டளைப்படி தர்மத்தையே காரணமாக நினைத்து நீவிரும்பினதைச் செய்யப்போகிறேன். இந்தப் புத்ரோத்பத்திமார்க்கம் சாசுவதமாகச் சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது. சூரியனுக்கும் வருணனுக்கும் ஒப்பான புத்திரர்களை என்ஸஹோதரனுக்குக் கொடுக்கப்போகிறேன். அந்த இரண்டு அரசிகளும் ஒருவருஷகாலம் நான் சொல்லுகிற விரதத்தை முறைப்படி அனுஷ்டிக்கக்கடவர். பிறகு, சுத்தர்களாவர். எந்தப் பெண்ணும் விரதஞ்செய்யாமல் என்னைச் சேரத்தகாது" என்றார். அதற்கு ஸத்தியவதி, "ராஜஸ்திரீகள் கர்ப்பத்தை உடனே தரிக்கும்வழியைச்செய். ராஜாவில்லாத ராஜ்யத்தில் பிரஜைகள் காப்பவனில்லாமல் அழிந்துபோகின்றனர். எல்லாக்கர்மானுஷ்டானங்களும் கெட்டுப்போகின்றன. மழையில்லை. தேவதையில்லை. ஸமர்த்தனே! ராஜா இல்லாத ராஜ்யத்தை எவ்வாறு நிறுத்தமுடியும்? ஆதலால், கர்ப்பத்தையுண்டுபண்ணு; அதைப் பீஷ்மன் வளர்ப்பன்" என்றாள்.

வியாஸர், "என்ஸஹோதரனுக்கு அகாலத்தில் நான் புத்ரனைக் கொடுக்கவேண்டுமானால் எனதுவிகாரரூபத்தை அவர்கள் (அம்பிகை, அம்பாலிகை) சகிக்கக்கடவர்கள். அவர்களுக்கு இதுவே பெரியவிரதம். என்னுடைய கந்தத்தையும் நிறத்தையும் வேஷத்தையும் சரீரத்தையும் சகிப்பளானால் இப்போதே * கௌசல்யை உயர்ந்த கர்ப்பத்தைத்தரிக்கலாம். அந்தப்புத்ரனுக்கும் குருவம்சத்தைக் காப்பவர்களும் உன்னுடைய சோகத்தையொழிப்பவர்களுமாகிய நூறுபுத்திரர்கள் பிறப்பார்கள்; ஸந்தேகமில்லை" என்றார். மிகுந்த தேஜஸுள்ள அந்த வியாஸமுனி இவ்வாறு சொன்னபிறகு, "கௌசலையையென்னும்அம்பிகை வெண்மையான ஆடைமுதலியவற்றினால்அலங்காரஞ் செய்துகொண்டு படுக்கையிலிருந்துகொண்டு என்வரவை எதிர்பார்க்க வேண்டும்" என்றும் சொல்லி, அப்போதே அந்தர்த்தானமாயினார். பிறகு, ஸத்யவதீதேவி சென்று தனிமையில் தன்னுடன்சந்தித்த தன்

* அம்பிகை.

மருமகளைநோக்கி, தர்மமும் அர்த்தமுமுள்ள நன்மையானசொல்லைச் சொல்லத்தொடங்கினாள் : "கௌஸல்யையே! தர்மத்தை முக்கியமாகக்கொண்டு உனக்கு நான் சொல்லப்போவதை நீ தெரிந்துகொள். என்னுடைய அதிர்ஷ்டக்குறைவினால் பரதவம்சத்துக்கு அழிவுவந்திருப்பது தெரிந்தவிஷயம். நான் வ்யஸனப்பட்டிருப்பதையும் எனது பிதிர்வம்சத்திற்குக் கெடுதல்வந்திருப்பதையும் பீஷ்மன் பார்த்து இந்தக்குலம் அபிவிர்த்தியாகத்தக்க புத்திமதியை எனக்குச் சொன்னான். அந்தப்புத்திமதி உன்னுடைய ஸ்வாதீனமாயிருக்கிறது. பெண்ணே! என்னை அவ்வாறு நடத்திவை; அழிந்துபோன பரதவம்சத்தை மறுபடியும் கைதூக்கிவிடு. அழகிய நிதம்பமுள்ளவளே! இந்திரனுக்கொப்பான தேஜஸோடுகூடிய புத்திரனைப்பெறு. அவன்தான் நமது குலத்தைச்சேர்ந்த பெரியராஜ்யபாரத்தை வகிக்கவேண்டும்" என்றாள். இவ்வாறு அந்த ஸத்யவதீதேவி தன்மருமகளுக்குச் சொல்லித் தர்மந்தவறாதவளாகிய அந்தக் கௌஸல்யாதேவியைத் தர்மத்தைக்கொண்டே பிரயாஸத்தினால் இணங்கச்செய்து, உடனே பிராமணர்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் அதிதிகளையும் பூஜிப்பித்தாள்.

---

## நூற்றுப்பத்தினைந்தாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(திருதராஷ்டிரன் பாண்டு விதுரர் இவர்களின் ஜனனம்.)

பிறகு, ஸத்யவதி ருதுகாலத்தில் ருதுஸ்நானஞ்செய்த தன்மருமகளைச் சயனத்திற் படுக்கவைத்து அப்போது மெல்ல, "கௌஸல்யையே! உனக்கு மைத்துனர் இருக்கிறார். அவர் இன்றைத்தினம் உன்னிடம் சேரப்போகிறார். பாதிராத்திரியில் வருவார். அஜாக்கிரதையைவிட்டு அவரை எதிர்பார்த்திரு" என்ற சொல்லைச் சொன்னாள். தனது மாமியாருடைய அந்தச் சொல்லைக்கேட்டு அந்தக் கௌஸல்யை அழகானபடுக்கையிற் படுத்துக்கொண்டு அந்தக்காலத்தில் பீஷ்மரையும் மற்றுமுள்ள கௌரவவம்சத்து வீரர்களையும்கருதினாள். பிறகு, பெரும்பாலும் ஜனங்கள் தூங்கிப்போயிருக்கும் பாதிராத்திரிவேளையில் தீபங்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கையில் பகவானான வியாஸமஹரிஷி கிருகத்தில் பிரவேசித்தார். சொல் தவ

ருதவரும் பெருந்தவத்திலிருப்பவருமாகிய அந்த வியாஸமஹாரிஷி அம்பிகையினிடம்முதலிற்கட்டளையிடப்பட்டிருந்ததனால் அப்போது அவள்சயனத்தினிடம் போனார். பார்க்க வழங்காமலிருந்த அவரைக்கண்டு, அவ்வாறு பார்த்து வழக்கப்படாத கௌஸல்யை, விகாரரூபமாயிருக்கிறாரென்று பயந்து கூச்சத்துடன் கண்களை மூடிக்கொண்டாள். அவர் விகாரமானஉருவமுள்ளவராகவும் ஜடையுள்ளவராகவும் விகாரமான நிறமுள்ளவராகவும் முருடாகவும் இளைத்தவராகவும் கெட்டவாஸனையுள்ளவராகவும் எல்லாவகையாலும் அணுககமுடியாதவராகவுமிருந்தார். உக்ரத்தநிறமுள்ள அந்த வியாஸரின் செம்பட்டைநிறமான ஜடையையும் ஜ்வலிக்கின்ற கண்களையும் செம்பட்டைநிறமான தாடிகளையுங்கண்டு அவ்வரசி கண்களை மூடிக்கொண்டாள். வியாஸர் தமது தாயாரின்விருப்பத்தைச் செய்யவேண்டுமென்ற எண்ணத்தினால் அவளுடன் கலந்தார். காசிராஜன்பெண் பயத்தினால் அவரைப் பார்க்கமுடியாமற்போனாள். அங்கிருந்து வெளியில்வந்த தன்புத்திரனைத் தாயாரான ஸத்தியவதி சந்தித்து, “புத்திரனே! இவளுக்குக் குணவானான ராஜபுத்திரன் பிறப்பானா?” என்று கேட்டாள். இந்திரியங்களுக்கெட்டாதவிஷயங்களையுமறிந்த ஸத்தியவதீபுத்திரரான வியாஸர் முறைப்படி தாயாரால் கேட்கப்பட்டபின், “பதினாயிரம் யானைகளின் பலமுள்ளவனும் எல்லாந்தெரிந்தவனும் சிறந்தபாக்கியமுள்ளவனும் சிறந்த பராக்ரமமுள்ளவனும் சிறந்தபுத்தியுள்ளவனும் ஸ்ரேஷ்டனுமான ஒருராஜரிஷி உண்டாவான். அந்த மஹாத்மாவுக்கு நூறுபுத்திரர்கள் பிறப்பார்கள். ஆனால், தாய்செய்த தவறுதலினால் அவன் பொட்டையனாகத்தான் பிறப்பான்” என்றுசொன்னார். அவருடைய அந்தச்சொல்லைக்கேட்டு அவர் தாயாகிய ஸத்தியவதி தன் புத்திரனைநோக்கி, “தபோதனனே! குருவம்சத்தார்க்குப் பொட்டையன் தகுதியானராஜாவல்லன்! சுற்றத்தாரின் வம்சங்களைக் காப்பாற்றுகிறவனும், தன் பிதிர்வம்சத்தை அபிவிருத்திசெய்பவனும், என்துயரத்தையொழிப்பவனும், ராஜாவாகக்கூடியவனுமாகிய மற்றொருபுத்திரனை மற்றொருத்தியினிடம் அவளுக்கிளையவளாக உண்டாக்கக்கடவாய். இவளும் உன்ஸஹோதரனுடைய பத்னியாமனைவி; அழகினாலும் யௌவனத்தினாலும் சோபிக்கிறவள். என்சொல்லுக்காக இவளிடத்தில் குணங்கள்மிகுந்தஸந்ததியை உண்டாக்கக் கடவாய். குருவம்சத்துக்கு ராஜாவாகத்தக்க இரண்டாவது புத்திரனைக்கொடுக்கக்கடவாய்” என்றுசொன்னாள். பெரும்புகழுள்ள அந்தவியாஸர் ஆகட்டுமென்று வாக்குத்தத்தம்செய்து வெளியிற்சென்றார். அந்தக்கௌஸல்யையும்

நாளடைவில் அவர்சொன்னபடி கண்தெரியாத பிள்ளையைப்பெற்றாள். வீரரே! மறுபடியும் அந்தஸத்யவதீதேவி மருமகளுக்குத் தெளிவாகச்சொல்லிவைத்துப் பிறகு முன்போலவே வியாஸமஹரிஷியை வருவித்தாள். மறுபடியும் ஸத்தியவதி, குலத்தின் ஸந்ததிக்காக அம்பாலிகையையழைத்து அவளிடம் தன்புத்ரரான வியாஸரை மறுபடியும் நியமித்தாள். பதிவ்ரதையான அம்பாலிகை உயர்ந்த படுக்கையில் வ்யஸனத்துடன் உட்கார்ந்துகொண்டு யார்வரப்போகிறாரோவென்று சிந்தித்துக்கொண்டு ஜாக்கிரதையாக எதிர்பார்த்திருந்தாள். பிறகு, முன்போலவே வியாஸமஹரிஷி அந்த அம்பாலிகையினிடம் வந்துசேர்ந்தார். பாரதரே! அவளும் அந்த ரிஷியைப்பார்த்ததும் நிறம்மாறி வெண்ணிறமாக ஆனாள். பாரதரே! பயந்தவளும் வெண்ணிறமுள்ளவளும்வ்யஸனமுற்றவளுமான அம்பாலிகையைநோக்கிஸத்யவதியின் புத்ரராகிய வியாஸர், "நான்விகாரரூபமாயிருப்பதைக்கண்டு நீ வெண்மைநிறம் அடைந்ததனால் உன்னுடையபுத்ரன் (பாண்டு) வெண்மையாகவே இருப்பான். அழகான முகமுள்ளவளே! அவனுக்குப் பாண்டுவென்பதே பெயராகஇருக்கும்" என்றுசொன்னார். இவ்வாறு சொல்லிவிட்டு அந்தப் பகவானாகிய ரிஷிஶ்ரேஷ்டர் வெளியில்வந்தார். அங்கிருந்து வெளியில் வந்த அந்தப் புத்திரரைக்கண்டு ஸத்யவதி, "புத்ரனே! இவளிடத்தில் நல்ல ராஜகுமாரன் உண்டாவானா? எனக்குச்சொல்" என்றுகேட்டாள். "அந்தக்குழந்தை வெண்மையாக இருப்பன்" என்று தம்தாயாருக்கு வியாஸர் சொன்னார். "மிகுந்த பராக்ரமமுள்ளவனும் எல்லாத்திசைகளிலும் புகழ்பெற்றவனுமாகிய குமாரன் பிறக்கப்போகிறான். ஆனால், தாயினுடைய பிழையினால் அவனுடைய நிறம் வெளுப்பாகஇருக்கும். அவனுக்குச் சிறந்த வில்லாளிகளாகிய ஐந்துபுத்ரர்கள் உண்டாவார்கள்" என்றும் சொல்லி, அங்கேயே தாயாருக்குவந்தனஞ்செய்து, வ்யாஸமஹரிஷி சென்றார். அந்தத்தாய் மறுபடியும் மற்றொருபுத்ரன் வேண்டுமென்று அவரிடம் வேண்டிக்கொண்டாள். வியாஸமஹரிஷியும் தமது தாயாருக்கு, "அப்படியே ஆகட்டும்" என்று மறுமொழிசொன்னார். பிறகு பிரஸவகாலம் வந்தபோது அம்பாலிகாதேவி ராஜலக்ஷணங்கள் நிரம்பினவனும் ஒளியினால் ஜ்வலிப்பவன்போன்றவனுமாகிய வெண்ணிறமானகுமாரனைப் பெற்றாள். அவனுக்குச் சிறந்த வில்லாளிகளாகிய பஞ்சபாண்டவர்களென்னும் புத்ரர்கள் பிறந்தனர். பீஷ்மர் அவ்விரண்டுபுத்ரர்களுக்கும் முறையே வேதங்களின் கரைகண்டவர்களாகிய பிராமணர்களைக்கொண்டு ஜாதகர்மம் முதலான கிரியைகளனைத்தை

யும் சாஸ்திரப்படி க்ரமமாகச் செய்வித்தார். அம்பிகைக்குப்பிறந்த புத்ரன் குருடனாயிருந்ததைக்கண்டு ஸத்தியவதியானவள் தன் புத்ர ராகிய வியாஸரையழைத்து, "இவன் பொட்டையன்; அம்பிகைக்கு மற்றொரு நல்லபிள்ளையை நான் விரும்புகிறேன்" என்று சொல்லி அம்பிகைக்காக மற்றொருபுத்ரனை வேண்டினாள். இவ்வாறு வேண் டப்பட்ட வியாஸமஹரிஷி தமது மாதாவைநோக்கி, "அழகான கௌஸல்யை மற்றொருமுறை ஸரியாக இருப்பாளாயின், அவளுக் குத் தர்மசாஸ்திரமும் ராஜநீதிசாஸ்திரமும் தெரிந்த குமாரன் உண் டாவான்" என்றுசொன்னார். ஸத்தியவதியானவள் மறுபடியும் தன் மூத்தமருமகளாகிய அம்பிகையைத் தைரியப்படுத்தி ருதுகாலத்தில் அவளை வியாஸரிடம் அனுப்பினாள். தேவகன்னிகைக்கு ஒப்பான அந்த அம்பிகை அம்மஹரிஷியினது பழைய உருவத்தையும் மணத் தையும்நினைத்துப் பயத்தினால் ஸத்யவதிசொன்னதைச்செய்யவில்லை. பிறகு, அந்தக் காசிராஜனுடையபெண் அப்ஸரஸுக்கொப்பான தன் தாஸியைத் தன்ஆபரணங்களினால் அலங்காரஞ்செய்து வியாஸருக்கு அனுப்பினாள். அந்த வேலைக்காரியோவெனில் அம்மஹரிஷிவந்த போது எதிர்கொண்டழைத்து நமஸ்காரஞ்செய்து அவர் அனுமதி கொடுத்தபின் படுத்தாள்; அவரைக்கௌரவித்து உபசாரஞ்செய்தாள். ரஹஸ்யத்தில்இன்சொல்லையும் இஷ்டத்தையும்கொடுத்துத்தேகத்தை நன்றாக ஆலிங்கனஞ்செய்து காமஸுகத்தைக்கொடுத்ததனால் வியாஸ மஹரிஷி அவளிடம் திருப்தியடைந்தார். ராஜாவே! தீவ்ரமான தபஸுள்ள அந்தமஹரிஷி அவளுடன்கூடச் சயனித்திருந்தார். எழு ந்திருக்கும்போதே அவளைப்பார்த்து, "நீ அடிமைத்தன்மை நீங்கின வளாவாய்; அழகியவளே! மிகச்சிலாக்கியமான இந்தக்கர்ப்பம் உன் வயிற்றில் வந்திருக்கிறது. இந்தப்புத்ரன் தர்மாத்மாவாகவும் உல கத்திலுள்ள புத்திமான்கள் எல்லாரிலும் சிறந்தவனாகவுமிருப்பான்" என்றுசொன்னார். கிருஷ்ணத்வைபாயனருடையஇந்தப்புத்ரன் விதுர னென்னும் பெயருடையவனாகத் திருதராஷ்டிரனுக்கும் மஹாத்மா வாகிய பாண்டுவுக்கும் ஸஹோதரனாகப் பிறந்தான். நீதிசாஸ்திரங்க ளின் நுட்பம்தெரிந்தவனும் காமக்குரோதங்களற்றவனுமாகிய தர்ம தேவதை அந்த மஹாத்மாவான ஆணிமாண்டவ்யரிஷியின் சாபத் தினால் விதுரனாகப் பிறந்தான். வியாஸபகவானும் கௌஸல்யை தன்னை ஏமாற்றினதையும் சூத்ரப்பெண்ணுக்குப் புத்ரன் பிறப்பதை யும்பற்றி ஸத்யவதிக்குத் தெரிவித்தார். அவர் தமதுதர்மத்தின் கட னைத் தீர்த்தவராகி மறுபடியும் தாயாரைச் சந்தித்துக் கர்ப்பத்தைப்

பற்றி அவனுக்குத் தெரிவித்தபிறகு அங்கேயே அந்தர்த்தானமாயி னர். குருவம்சத்தை விருத்திசெய்கின்றவரும்தேவகுமாரருக்கொப் பானவருமான இந்தப் புத்ரர்கள் விசித்ரவீர்யனுடைய மனைவிகளி னிடம் த்வைபாயன மஹரிஷிக்குப் பிறந்தார்கள்.

---

## நூற்றுப்பதினொருவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(அரசர், அறியாமல் ஆணிமாண்டவ்யரைக் கழுவேற்றியது.)

ஜனமேஜயர், "தர்மராஜன் நான் சாபமடைந்ததற்குக் காரணமான கர்மம் என்னசெய்தான்? எந்தப் பிரம்மரிஷியின் சாபத்தினால் அவன் சூத்ரயோனியிற் பிறந்தான்?" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்:—

"மனவுறுதியுள்ளவரும் எல்லாத் தர்மங்களையும் அறிந்தவரும் ஸத்யத்திலும் தவத்திலும் நிலைபெற்றவருமாகிய மாண்டவ்யர் என்று பெயர்பெற்ற ஒரு பிராமணர் இருந்தார். அவர் தீர்த்தயாத்திரைக் காகக் கிராமங்களின் சமீபங்களிலுள்ள தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் தம் இஷ்டப்படி ஸஞ்சரித்துவந்தார். அம்மஹரிஷி அவ்விடத்தில் ஓராஸ்ரமம் கட்டிக்கொண்டு வாஸஞ்செய்தார். சிறந்ததவமுள்ள அம் மஹாயோகி தம் ஆஸ்ரமத்தின்வாயிலில் மரத்தினடியில் கைகளைத் தூக்கிக்கொண்டு மௌனவிரதத்தை வஹிக்கின்றார். பாரதரே! அவர் தவத்திலிருக்கும்போது நீண்டகாலத்துக்குப்பின் திரவியத்தைத் திருடிக்கொண்டுபோகும் கொள்ளைக்காரர்கள், காவலாளிகள் அனேகர் பின்தொடர்ந்துவர அந்தஆஸ்ரமத்துக்கு வந்துசேர்ந்தனர். அவர்கள் உறுதியான தவமுள்ள அந்தமுனி எந்தவிடத்திலிருந்தாரோ அதேஇடத்திற்குக் கிராமத்திலிருந்து திருடிக்கொண்டு வந்த திரவியத்தோடுவந்தனர். குருஸ்ரேஷ்டரே! அந்தக் கொள்ளைக்காரர்கள் திருடினதிரவியத்தைப் பயத்தினால் சேனைவருவதற்குமுன்னே அவ்வாஸ்ரமத்தில் வைத்து, அங்கேயே ஒளிந்திருந்தனர். அவர்கள் ஒளிந்தபின், அந்தக்காவலாளிகளுடைய சேனை வெகுசீக்கிரத்தில் அவ்விடம்வந்து சேர்ந்தது. திருடரைத் தொடர்ந்துவந்த காவலாளிகள் அங்கே அந்தரிஷியைக்கண்டனர். ராஜாவே! பிறகு அவர்கள் அவ்வாறு மௌனவிரதத்திலிருந்த அம்முனிவரைநோக்கி, "பிராம

ணோத்தமரே! திருடர்கள் எந்தவழியாகச் சென்றனர்? பிராம்மண ரே! நாங்களும் இன்னும் விரைவாக அந்தவழியே செல்லவேண்டும்" என்றுகேட்டனர். அரசரே! அவ்வாறு அந்தக்காவலாளிகள் கேட் கும்போது அந்தரிஷி நல்லதோகெட்டதோ ஒருசொல்லையும் சொல்ல வில்லை. பிறகு, அந்தக்காவலாளிகள் அந்த ஆஸ்ரமமுழுதும் தேடி அங்கே ஒளிந்திருந்த அந்தத்திருடர்களையும் அவர்கள் திருடின திரவியத்தையும் கண்டனர். பிறகு, அந்தக்காவலாளர்களுக்கு அந்த ரிஷியின்மேல் ஸந்தேகம் உண்டாயிற்று. பிறகு, அவரையும் அந்தத் திருடர்களையும்கட்டி அரசனிடம் ஒப்புவித்தனர். அரசன் திருடர்க ளுடன்கூடவே அவரையும் வதஞ்செய்யக்கட்டளையிட்டான். சிறந்த தவமுள்ள அந்தரிஷி அந்தக்காவலாளிகளின் அறிவின்மையினால் சூலத்தில் ஏற்றப்பட்டார். அந்தக் காவலாளர்கள் அந்தரிஷியைச் சூலத்திலேற்றிவிட்டு அப்போதே அந்தத்தனங்களை எடுத்துக்கொ ண்டு ராஜாவினிடம் சென்றனர். சூலத்திலிருந்த தர்மாத்மாவான அந்தப்பிரம்மரிஷி வெகுகாலம்வரையில் ஆகாரமில்லாமலிருந்தும் மர ணமடையவில்லை. உயிரைநிறுத்திக்கொண்டு ரிஷிகளையும் வருவித் தார். அந்தமஹாத்மா சூலத்தின்முனையிலும் செய்துகொண்டிருந்த தவத்தால் தவமுள்ள முனிவர்கள் கொதிப்படையடைந்தனர். பார தரே! அந்தமுனிவர்கள் இராத்திரியில் பக்ஷியுருவம் எடுத்துக்கொ ண்டு சேர்ந்து பறந்துவந்து, அந்தப் பிராமணஸ்ரேஷ்டரைக்கண்டு, "பிராமணரே! நீர் இந்தச்சூலத்தில் பயங்கரமான துயரடைதற்குக் காரணமாக என்னபாபஞ்செய்திருக்கிறீர்? அதைக்கேட்க விரும்பு கிறோம்" என்று தம்தம் சக்திக்கேற்ப வினவினர்.

---

## நூற்றுப்பதினேழாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(ஆணிமாண்டவ்யர் தர்மதேவதையினிடம் சென்று தம்மைத்தண்டித்த தற்குக் காரணங்கேட்டுத் தர்மதேவதைக்குச் சாபங்கொடுத்தது.)

பிறகு, அந்த ரிஷிஸ்ரேஷ்டர், "நான் யாரிடத்தில் குற்றம்நினைப் பேன்? வேறொருவன் எனக்குத் தீங்குசெய்யவில்லை" என்று அந்த ரிஷிகளுக்கு மறுமொழிகூறினார். ஜனமேஜயராஜரே! வெகுகாலத் திற்குப்பின் ஒருநாள் காவலாளிகள் அந்தக்கழுவில் அவ்வாறிருந்த

அந்த ரிஷியைக்கண்டு நடந்ததை நடந்தபடி ராஜாவுக்குத்தெரிவித்த னர். ராஜாவும் அவரை ரிஷியென்றுகேட்டு அப்போது மந்திரிக ளுடன்கூடி வெளிப்புறப்பட்டு வந்து சூலந்திலிருக்கும் அந்த ரிஷி ஸ்ரேஷ்டரைப்பார்த்து, "ரிஷிஸ்ரேஷ்டரே ! அறியாமையினால்பிர மித்து நான்செய்த அபசாரத்தை மன்னிக்கும்படி உங்களை வேண்டுகி றேன். அந்தவிஷயத்தில் நீங்கள் என்மேல் கோபிக்காமலிருக்கவேண் டும்" என்று பிரார்த்தித்தான். ராஜாவினால் இவ்வாறு கேட்டுக்கொள் ளப்பட்ட மாண்டவ்யரிஷி மன்னிப்பைச்செய்தார். மன்னித்தவராகிய அவரை ராஜா அந்தச்சூலத்திலிருந்து இறக்கிவைத்தான். சூலத் தின் முனையினின்று இறக்கினபின் அந்தச்சூலத்தை இழுத்தான். அந்தச்சூலத்தை இழுக்கமுடியாமையால் அதை அடியில் வெட்டி விட்டான். உள்ளே நின்றுபோன சூலத்துண்டுடன்கூடவே அந்த முனிவர் திரிந்துகொண்டிருந்தார். கழுத்திற்கும் விலாப்புறங்களுக் கும் இடையிலிருந்த ஆணியுடன் ஸஞ்சரித்துக்கொண்டு அந்தரிஷி அதில் புஷ்பக்குடலையை மாட்டிக்கொள்ளலாமென்று நினைத்தார். அவர் மிகுந்ததவத்தினால் பிறருக்குத்துர்லபங்களான லோகங்களை ஜயித்தார். அந்தச்சூலமிருந்ததனால் அவர் ஆணிமாண்டவ்யரென்று உலகங்களிற் சொல்லப்படுகிறார். பிரம்மஜ்ஞானியான அந்தப்பிராம ணர் தர்மதேவதையின் வீடுசென்று அங்கே ஆசனத்தில் வீற்றிருக் கும் பிரபுவான தர்மதேவதையைக்கண்டு, "இப்படிப்பட்ட இந்தப் பலனை நானடையும்படியாக நான் அறியாமற்செய்த தீவினை யாது? அதனை நீ உடனே எனக்குச்சொல்; என் தவத்தின் வன்மையைப் பார்" என்று ஆக்ஷேபித்தார். அதற்குத் தர்மதேவதை, "தபோ தனரே ! உம்மால் பக்ஷிகளின் வாற்புறங்களில் ஈர்க்கு கோக்கப்பட் டது. அந்தக்கர்மத்திற்காக இந்தப்பலனை நீர் அனுபவிக்கிறீர். பிரம்ம ரிஷியே! தானமானது ஸ்வல்பமாகக் கொடுக்கப்பட்டாலும் அனேக மடங்காக விருத்தியாகிறதுபோலவே பாவமும் அதிகதுக்கமாகிய பயனைக்கொடுக்கும்" என்றான். ஆணிமாண்டவ்யர், "எந்தக்கா லத்தில் அந்தப்பாவம் என்னாற்செய்யப்பட்டதென்பதை ஸரியாகச் சொல்" என்றுகேட்க, "நீர் குழந்தைப் பருவத்திற்செய்தது" என்று தர்மதேவதை மறுமொழிசொன்னான். ஆணிமாண்டவ்யர், "பிறந் ததுமுதல் பன்னிரண்டுவருஷம்வரையில் ஒருபால்யன்எதைச்செய் தாலும் அதனால் பாபம்வராது. ஏனெனில், அவன் அந்தக்காலத்தில் சாஸ்திர உபதேசங்களை அறியான்; சிறியகுற்றத்திற்கும் பெரியதண் டனை உன்னால் என்விஷயத்தில் விதிக்கப்பட்டது. எந்தப்பிராணிக

ளையும் ஹிம்ஸிப்பதைப்பார்க்கிலும் பிராம்மணவதம் மிகப்பெரியது. தர்மனே! ஆதலால், நீ மனுஷ்யனுகச் சூத்திரயோனியிற் பிறப்பாய். இதுமுதல் உலகத்தில் வினைப்பயனுண்டாவதற்கு ஒருவரம்பு ஏற்படுத்துகிறேன்; அதாவது, பதினுலாவது பிராயம்வரையில் பாபம் சேராது; அதற்குமேல் பாவம்செய்கிறவர்களுக்குமட்டும் குற்றம் அவசியம் உண்டாகும்'' என்றுசொன்னுர். தர்மதேவதை, இந்த அபராதம் செய்ததனுல் அம்மஹாத்மாவின் சாபத்தையடைந்து விதுரர்வடிவமாகச் சூத்ரயோனியிற் பிறந்தான். அந்தவிதுரர் தர்மசாஸ்திரத்திலும் ராஜநீதிசாஸ்திரத்திலும் தேர்ந்தவர்; ஆசையும் கோபமும் அற்றவர்; தீர்க்கமாக ஆராய்கிறவர்; சாந்தியையே முக்கியமாகக் கொண்டவர்; கௌரவர்களின் நன்மையில் கருத்துள்ளவர்.

---

## நூற்றுப்பதினெட்டாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி)



(பாண்டுவுக்கு ராஜ்யாபிஷேகமும் ராஜகுமாரர்களின் விவாகத்தைப்பற்றிப் பீஷ்மர் நினைப்பதும்.)

திருதராஷ்டிரனும் பாண்டுவும் மஹாத்மாவாகியவிதுரருமாகிய இம்மூன்று குமாரர்களும் பிறந்தபின் குருஜாங்கலமென்னும் இடமும் குருதேசமும் குருக்ஷேத்ரமென்ற ஊருமாகிய இம்மூன்றும் அபிவிருத்தியைஅடைந்தன. பூமி வளர்ந்தபயிர்களுள்ளதாகவும், பயிர்கள் மிகுந்தபலன்களுள்ளவையாகவும், மேகங்கள் காலத்தில் வருஷிப்பனவாகவும், மரங்கள் பூக்களும் காய்களும் நிரம்பினவைகளாகவும், யானைகுதிரைகள்முதலிய வாஹனங்கள் உத்ஸாஹமுள்ளவைகளாகவும், மிருகங்களும் பக்ஷிகளும் மகிழ்ச்சியுள்ளவையாகவும், மலர்கள் மிகுந்தமணமுள்ளவையாகவும், பழங்கள் மிக்கசுவையுள்ளவையாகவுமிருந்தன. நகரங்கள் வர்த்தகர்களாலும் தொழிலாளிகளாலும் நிரம்பப்பெற்றிருந்தன. சூரர்களும் கல்வியில் தேர்ந்தவர்களும் ஸாதுக்களும் ஸுகமாக இருந்தனர். அந்தத்தேசங்களின் எந்தப்பாகங்களிலும் எந்த ஜனங்களும் திருடர்களாகவும் பாவத்தில் விருப்பமுள்ளவர்களாகவும் இருக்கவில்லை; கிருதயுகமாக நடந்தது. அப்போது பிரஜைகள் தம்தம் தர்மங்களைச் செய்கிறவர்களாகவும் யாகங்களை விடாதவர்களாகவும் ஸத்யத்தை விரதமாகக் கடைப்பிடித்தவர்களாகவும் ஒருவர்க்கொருவர் நேசமுள்ளவர்களாகவும்மேன்மை

யுற்றனர். மனிதர்கள் அகங்காரமும் கோபமும் பொருளாசையுமில்லாதவர்களாகி ஒருவர்மீது ஒருவர் அன்புடனிருந்தனர். தர்மமே மேலாக இருந்தது. கருங்கடல்போல் நிரம்பின அந்த அஸ்தினாநகரம் மேகக்கூட்டம்போன்ற கோபுரங்களோடும் மாடப்புரைகளோடும் இருபுறமும் ஸ்தம்பங்களோடும்கூடி அனேகம் அரண்மனைகள் நெருங்கியிருந்ததனால் தேவேந்திர நகரத்துக்கொப்பாக விளங்கிற்று. ஜனங்கள் நதிகளிலும், அடர்ந்தகாடுகளிலும், வாவிகளிலும், தடாகங்களிலும், மலைச்சாரல்களிலும், அழகான தோட்டங்களிலும் மகிழ்ந்து விளையாடினர். உத்தரகுரு தேசத்தவரும், தக்ஷிணகுரு தேசத்தவரும் தேவர்களோடும் ரிஷிகளோடும் சாரணர்களோடும், தாம் மேற்படவேண்டுமென்கிற எண்ணத்துடன் * திரிந்தனர். கௌரவர்களினால் சிறப்பாகச்செய்யப்பட்ட அந்த அழகானதேசத்தில் ஒருவனும் ஏழையாக இருக்கவில்லை. ஸ்திரீகள் விதவைகளாகவில்லை. அரசரே! பீஷ்மரால் எல்லாவிடங்களிலும் தர்மத்துடன்காப்பாற்றப்பட்ட அந்தராஜ்யத்தில் கிணறுகளும் தோட்டங்களும் ஸபைகளும் வாவிகளும் இருந்தன. அவ்வாறே பிராமணர்களுடையக்ருஹங்கள்எல்லாச்செல்வங்களும் நிரம்பி நித்யோத்ஸவமுள்ளவைகளாயிருந்தன. பகைவரின் ராஜ்யங்களைத் †தொலைத்து, அந்தக்குருதேசம், பீஷ்மரால் பெருகச் செய்யப்பட்டு நூற்றுக்கணக்கான தேவாலயங்களும் யூபஸ்தம்பங்களுமாகிய அடையாளங்களினால் அழகாக இருந்தது. அந்தராஜ்யத்தில் பீஷ்மரால் ஏற்படுத்தப்பட்ட தர்மமென்னும் சக்கரம் சுழன்றுகொண்டே இருந்தது. மஹாத்மாக்களான ராஜகுமாரர்களுக்கு ஜாதகர்மமுதலான ஸம்ஸ்காரங்கள் செய்யப்படும்போது நகரத்திலும் தேசத்திலுமுள்ள ஜனங்களனைவரும் மிக்க ஆனந்தமுள்ளவராக இருந்தனர். ஜனமேஜயராஜரே! கௌரவராஜர்களுடைய க்ருஹங்களிலும் நகரத்தாருடைய வீடுகளிலும், "கொடு, உண்," என்னும் சொற்களே எங்கும் கேட்கப்பட்டன. திருதராஷ்டிரனும் பாண்டுவும் சிறந்தபுத்தியுள்ளவிதுரரும்பிறந்தது முதல் பீஷ்மரால் தமது புத்திரர்களைப்போலப்பரிபாலிக்கப்பட்டனர்.

அவர்கள் ஜாதகர்மம் முதலான ஸம்ஸ்காரங்கள் செய்யப்பெற்று, பிரம்மசாரிகளாக அத்தியயனஞ்செய்து, சாஸ்திர பரிசயத்திலும் சரீரப்பயிற்சியிலும் தேர்ச்சியுள்ளவராகி யௌவனமடைந்தனர். தனுர்வேதத்திலும் (வேதத்திலும்)கதாயுத்தத்திலும் கத்திகேடகங்களிலும் யானைப்பழக்கத்திலும் ராஜநீதிசாஸ்திரங்களிலும் கரைகண்டவராயி

---

* அவ்வளவு ஆனந்தமாக இருந்தனர். † தலைங்களைப் பிடுங்கிக்கொண்டு.

னர். இதிஹாசங்களிலும் புராணங்களிலும் அநேகஸ்வபலக்ஷணங் களிலும் கற்பிக்கப்பட்டவர்களாயும் வேதங்களிலும் வேதாங்கங்களி லும் யதார்த்தஜ்ஞானமுள்ளவர்களாயும் எல்லாவிஷயங்களிலும்ஞான முள்ளவர்களானார்கள். வேதாத்யயனத்தில ஊக்கமுள்ளவனும் ராஜ நீதிசாஸ்திரங்களில் கரைகண்டவனுமாகிய கௌரவனை திருதராஷ் டிரனை ராஜாவாகப் பீஷ்மர் பட்டாபிஷேகம்செய்தார். தனுர்வேதத் திலும் குதிரையேறுவதிலும் கதாயுத்தத்திலும் கத்திகேடகங்களி லும் யானைப்பழக்கத்திலும் பலவகையான அஸ்திரங்களிலும் பற்பல வகையான அர்த்தசாஸ்திரங்களிலும் தர்மசாஸ்திரங்களிலும் பாண்டு கரைகண்டவனானபிறகு அவனைப் பீஷ்மர் சேனாபதியாகச் செய்தார். பராக்ரமசாலியான பாண்டு வில்வித்தையில் மனிதருக்குள் மேலான வனாகவிருந்தான். ராஜாவாகிய திருதராஷ்டிரன் மற்றவர்களிலும் பலம் மிகுந்தவனாக இருந்தான். விதுரர் பால்யராயிருக்கும்போதே புகழ் பெற்ற அரசனாகிய திருதராஷ்டிரனுக்கு எல்லாத்தர்மங்களையும் உப தேசிக்கிற மந்திரியாகப் பீஷ்மரால் ஏற்படுத்தப்பட்டார். எல்லாச் சாஸ்திர விஷயங்களிலும் நுட்பமறிந்தவரும் க்ரஹிப்பதிலும் ஊகிப்பதிலும் ஸமர்த்தருமாகிய விதுரர் இளமைப் பருவத்திலிருக் கும்போதே சாஸ்திரத்தில் கட்டுப்பட்ட மனத்தினால் உலகத்தை யெல்லாம்அறிந்தார். அரசரே! விதுரருக்கொப்பான தர்மநிஷ்டனும் அவரைப்போலச் சிறந்த தர்மத்தையறிந்தவனும் மூவுலகங்களிலும் யாரும்இருந்ததில்லை. அழிந்துபோன சந்தனுவின் வம்சம் மறுபடி யும் தூக்கிவிடப்பட்டதைக் கண்டபிறகு, இவ்வுலகத்திலுள்ள எல் லாத் தேசங்களிலும், 'வீரர்களான புத்ரர்களைப்பெற்றவர்களுக்குள் காசிராஜன் பெண்களிருவரும், தேசங்களுக்குள் குருஜாங்கலதேச மும், தர்மந்தெரிந்தவர்கள் எல்லாருள்ளும் பீஷ்மரும், நகரங்களில் அஸ்தினபுரமும் சிறந்தவை' என்று புகழ்பரவியது. ஆனால்,கண்ணில் லாமையால திருதராஷ்டிரனும் தாஸிக்குப்பிறந்ததனால் விதுரரும் ராஜ்யமடைவதற்குஉரியவராகவில்லை. அதனால பாண்டுராஜாவானான். பிறகு, பீஷ்மர் அழகும் யௌவனமும் நிரம்பின ஒருபெண் குந்தி போஜராஜனுக்கிருப்பதாகவும், காந்தாரதேசத்து அரசனாகிய ஸுபல னுக்குச் சிறந்தபெண் ஒருத்தியிருப்பதாகவும்,மத்ரதேசத்தரசனுக்கு அழகில பூமியில் ஒப்பில்லாத ஒருபெண் இருப்பதாகவும் பிராமணர் களால் கேள்வியுற்றார். பிறகு, ஒருகாலத்தில நீதிமான்கள் எல்லா ரிலும் சிறந்தவரான பீஷ்மர் தர்மரஹஸ்யம் தெரிந்தவராகியவிதுரரை நோக்கி அந்தக்காலத்துக்குத் தகுதியானசொல்லைச் சொல்லலானார்.

## நாற்றுப்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(திருதராஷ்டிரனுடைய கல்யாணத்தைப்பற்றிப் பீஷ்மரும் விதுரரும் பேசிக்கொள்வதும் திருதராஷ்டிரனுக்கும் காந்தாரிக்கும் விவாஹமும்.)

"எல்லாக்குணங்களும் செம்மையாகச்சேர்ந்த இந்த நம்முடைய பெயர்பெற்ற குலமானது, பூமியில் எல்லா அரசர்களுக்கும் மேற்பட்டு, ராஜ்யத்தின் பெருமையை அடைந்திருக்கிறது. தர்மந்தெரிந்த மஹாத்மாக்களான வேந்தர்களால் முன்காப்பாற்றப்பட்டு வந்த இந்த நமது குலம் இவ்வுலகத்தில்ஒருகாலமும் கெடுதலையடையவில்லை; என்னாலும் ஸத்தியவதியாலும் மஹாத்மாவாகிய வியாஸராலும் குலத்துக்குச் சரடுபோல நீங்கள் உண்டானபோது மறுபடியும் நிலைநிறுத்தப்பட்டது. அப்படியாகிய இந்தக்குலம் எவ்வாறு மேன்மேலும் கடல்போலப் பெருகுமோ அவ்வாறு நானும் நீயுமாகச் செய்யவேண்டுமென்பது நிச்சயம். யதுவம்சத்தில் பெண்ணிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அவள் நமது குலத்துக்கு மிகத் தகுதியுள்ளவள். ஸுபலனுடைய பெண்ணும் மத்ரதேசத்தரசன் பெண்ணும் அப்படியே தகுதியுள்ளவர்கள்தாம், புத்ரனே! அந்தக் கன்னிகைகளெல்லாரும்நல்லகுலத்திற்பிறந்தவர்கள்; அழகுள்ளவர்கள். அந்தக்ஷத்ரியஶ்ரேஷ்டர்களும் நாம் ஸம்பந்தஞ்செய்யத் தகுதியுள்ளவர்கள். புத்திமான்களிற் சிறந்தவனே! இந்தக்குலத்தின் ஸந்தானவிருத்திக்காக இந்தப்பெண்களை நாம் வரிக்கவேண்டுமென்று நான் நினைக்கிறேன். விதுரா! நீ என்ன நினைக்கிறாய்?" என்று பீஷ்மர் கேட்க, விதுரர், "எங்களுக்குத் தந்தையும் நீங்கள்; தாயும் நீங்கள்; முக்கியமான ஆசாரியரும் நீங்கள். ஆதலால், இந்தக்குலத்திற்கு எது நன்மையோ அதை நீங்களே ஆராய்ந்துசெய்யவேண்டும்" என்று மறுமொழிசொன்னார். பிறகு, பீஷ்மர் ஸுபலன்பெண்ணாகிய காந்தாரியென்பவளைப்பற்றிப் பிராமணர்களிடம் கேட்டார். வரங்கொடுப்பவரும் *பகனென்னும் தேவதையின் நேத்ரத்தைப் பிடுங்கினவருமாகிய தேவரான ஈசுவரனை ஆராதனஞ்செய்து புண்ணியவதியான காந்தாரி நூறுபுத்திரர்களைப் பெறும்படி வரம்பெற்றாளென்றும், குருவம்சத்துப் பெரியவராகிய பீஷ்மர் உண்மையாகக் கேள்வியுற்றார்.

* ஆதித்யர் பன்னிருவரில் ஒருவர்.

பாரதரே! பிறகு, காந்தாரதேசத்து அரசனைக்குத் தூது அனுப்பினர். அங்கே திருதராஷ்டிரன் கண்ணில்லாதவனென்பதனால் ஸுபல னுக்கு ஆக்ஷேபமிருந்தது. ஆயினும், அந்த ஸுபலன், தன்புத்தியி னால் குலத்தையும் க்யாதியையும் ஒழுக்கத்தையும் ஆராய்ந்து பார்த் துத் திருதராஷ்டிரனுக்குப் பதிவ்ரதாதர்மத்தை விடாதவளாகிய அந் தக் காந்தாரியைக்கொடுத்தான். பாரதரே! பிறகு, காந்தாரி திருத ராஷ்டிரனுக்குக் கண்ணில்லையென்றும் அவனுக்குத்தன்னைக்கொடுக் கத் தாயுந்தந்தையும் நினைத்திருக்கிறார்களென்றும் கேள்வியுற்றாள். அரசரே! பதிவ்ரதாதர்மத்தைப் பெரிதாகக்கொண்ட அந்தக் காந் தாரி, "நான் கணவனை இகழாமலிருக்கவேண்டும்" என்று நிச்சயஞ் செய்துகொண்டு ஒரு வஸ்திரத்தையெடுத்துப் பலமடிப்பாக மடித் துத் தன் நேத்திரங்களிரண்டையும் கட்டிக்கொண்டாள். அதன்பின், காந்தாரதேசத்தரசன்புத்ரனாகிய சகுனி தன்ஸஹோதரியை மிகுந்த ஸம்பத்துடன்கூட அழைத்துக்கொண்டு கௌரவர்களிடம் வந்தான். அப்போது, சிறந்த அலங்காரங்களோடுகூடிய அவளைத் திருதராஷ்டிர னுக்குக் கொடுத்தான். பீஷ்மர் ஒப்புக்கொண்டதன்மேல் விவாஹத் தைச் செய்வித்தான். அந்தவீரன் தன்ஸஹோதரியையும் தன் தகு திக்குத்தக்க சிறப்புக்களையும் கொடுத்துப் பீஷ்மரால் எதிர்மரியாதை செய்யப்பட்டவனாகத் திரும்பவும் தன்நகரம்சென்றான். பாரதரே! சிறந்த பெண்ணாகிய காந்தாரியும் வணக்கத்தினாலும் ஒழுக்கத்தினா லும் செய்கையினாலும் கௌரவர் எல்லாருக்கும் திருப்தியையுண்டு பண்ணினாள். அந்தக்காந்தாரி தனக்கு ஈசுவரனைப்பதி அறிவையே கண்ணாகப்பெற்றிருப்பதைக்கண்டு பர்த்தாவைவிட்டு மாறாக நடப் பதில் மிகவும்துக்கமுற்றவளாய்ச் சிந்தையுற்றாள். அவள் பார்வையை மறைத்துக்கொண்டதனால் தன்புருஷனைப்போலானாள். அப்போது, அவள் பர்த்தாவைவிட்டுச் சிறிதும் தவறுதலாயிருக்கவில்லை. கண வனையே முக்கியமாகக்கொண்டவளும் பதிவ்ரதையுமான காந்தாரி தன் ஒழுக்கத்தினால் அந்தப்பெரியோர்களெல்லாரையும் திருப்திசெய் வித்து வாக்கினாலும் வேறுபுருஷர்களை எடுத்துச்சொல்லாமலிருந் தாள். பீஷ்மரால் அப்போதே வரிக்கப்பட்டு, காந்தாரராஜனாகிய ஸு பலன், அந்தக்காந்தாரியின் ஸஹோதரிகளாகிய பத்துக்கன்னிகை களைப் பின்னும் திருதராஷ்டிரனுக்குக்கொடுத்தான்; ஸத்யவ்ரதை, ஸத்யஸேனை, ஸுதேஷ்ணை, ஸம்ஹிதை, தேஜச்ச்ரவை, ஸுச்ரவை, நிக்ருதி, சுபை, சம்படை, தசார்ணை என்று பெயர்பெற்ற காந்தார ராஜாவின் பெண்கள் பதின்மரையும் ஒரே தினத்தில் திருதராஷ்டிரன்

பாணிக்ரஹணஞ் செய்துகொண்டான். அதன்பின், சிறந்த வில்லாளியும் சந்தனுபுத்திரருமான பீஷ்மர் ஆங்காங்கிருந்து நூற்றுக்கு மேற்பட்ட ராஜபுத்திரிகளைத் தருவித்துத் திருதராஷ்டிரனுக்குக் கொடுப்பித்தார்.

---

## நூற்றிருபதாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(குந்தி துர்வாஸரிஷியினிடம் மந்திரம் பெற்று அதைப்பரீக்ஷிப்பதற்காக ஸூர்யனையழைக்கக் கர்ணன்பிறந்ததும், அவனை ஜலத்தில்விட ஸூதன் எடுத்துவளர்த்ததும், அவனுக்கு இந்திரனிடம் சக்தியாயுதம் கிடைத்ததும்.)

வஸுதேவருக்குப் பிதாவாகிய சூரனென்னும்பெயரையுடைய யாதவச்ரேஷ்டன் ஒருவன் இருந்தான். அவனுடையபெண் ப்ருதையென்பவள். அவளுக்கு ஒப்பானபெண் உலகத்திலில்லை, பாரதரே! ஸத்யவாக்கான அந்தச்சூரனென்பவன், ஸந்ததியில்லாதவனும் தனது உபகாரத்தை விரும்புகிறவனும் தன் ஸ்நேகிதனுமான குந்திபோஜனென்னும் தன் அத்தைமகனைக்குத் தன்னுடைய முதற்குழந்தையைக்கொடுப்பதாகப் பிறக்கிறதற்குமுன்னமே பிரதிஜ்ஞைசெய்து, பிறகு, ஸத்யவாக்கான அந்தச் சூரனென்பவன் முதலிற்பிறந்தவளாகிய அந்தப்பெண்ணை அம்மஹாத்மாவுக்குத் தத்தாகக்கொடுத்தான். அவள், பிராமணர்களான அதிதிகளைப் பூஜிப்பதில் நியமிக்கப்பட்டுத் தன்பிதாவின் க்ருஹத்திலிருக்கும்போது, உக்ரமானதவமுள்ளவரும் தர்மத்தைப் பரீக்ஷிப்பதில் தம் அபிப்ராயத்தை வெளிவிடாதவருமான துர்வாஸஸ் என்று க்யாதிபெற்ற கொடியபிராமணருக்கு அங்கே பணிவிடைசெய்தாள். கொடியவரும் சுத்தமான மனமுள்ளவருமாகிய அவரை எல்லாவகையான பிரயாஸங்களாலும் திருப்தி அடைவித்தாள். மிகச்சிறந்த நற்குணமுள்ள குந்தி ஒவ்வொருநாளும் தவறாமல் அந்த யோகீச்வரருக்குத் தயிர் நெய் முதலிய வ்யஞ்சன வகைகளை ஆயிரக்கணக்காகக் கொடுத்து உபசாரம்செய்தாள். அந்தத் துர்வாஸஸ்என்னும் ரிஷி ஒருவருஷத்தின்முடிவில் சிறந்தபுகழுள்ள அந்தப்ப்ருதைக்கு நேரும் ஆபத்தர்மத்தை ஆலோசித்துப்பார்த்து அப்போது வசப்படுத்துகிற கிரியையோடுகூட ஒரு மேலானமந்திரத்தைக்கொடுத்து அவளைப்பார்த்து, "நீ இந்த மந்திரத்தினால் எந்தஎந்தத் தேவதையை ஆவாஹனஞ்செய்வாயோ அந்த அந்தத்

தேவதையின் மஹிமையோடுகூடிய புத்ரன் உனக்குப்பிறப்பான்'' என்றுசொன்னார்.

புகழ்பெற்ற குந்தி அந்தப் பிராம்மணரால் அவ்வாறு சொல்லப் பட்டு அதைப் பரீக்ஷிக்க எண்ணங்கொண்டு கன்னிகையாயிருக்கும் போதே ஸூரியபகவானை அழைத்தாள். பிறகு, அந்தஸூர்யன் தன் னுடைய மார்க்கத்தை மேகங்களால் மறைக்கப்பட்டதாகச் செய்து கொண்டு, விசாலமான கண்களையுடைய கன்னிகையான அந்த ப்ரு தையினிடம் வந்துசேர்ந்தான். அழகான அங்கமுள்ள அந்தப்ருதை லோகங்களைப் பிரகாசப்படுத்தும் அந்தஸூர்யன் வருவதான அந்தப் பெரிய அற்புதத்தைக் கண்டதனால் திகைத்து நின்றாள். "பக வானே! என்முன்னே தோன்றின நீர் யார்?" என்று அவள்கேட்க, ஸூர்யன், "பிரியமானவளே! வெண்மையான புன்னகையுள்ளவளே! ரிஷியின் மந்திரத்தினால் ஏவப்பட்டு நீ அழைத்ததனால் உனக்குப் புத்திரலாபம்கொடுக்க வந்திருக்கும் ஸூர்யனென்னும் தேவதை யென்று என்னை அறி. அழகான முகமுள்ளவளே! அழகான புருவ முள்ளவளே! கேள். என்னைப்போன்ற புதல்வன் உனக்கு ஸ்ருஷ்டி செய்யப்பட்டிருக்கிறான். அழகான புன்னகையுள்ளவளே! என்னு டைய குண்டலங்களையும் என்னுடைய கவசத்தையும் அணிந்தவனா கப் பாணங்களாலும் அஸ்திரங்களாலும் பேதிக்கமுடியாத புத்ரன் பிறப்பான். பிராம்மணர்களுக்கு அவன் கொடுக்கத்தகாதது ஒன்றும் இராது. நான் தடுத்தாலும் அவன் அதை ஸரியாக நினைக்கமாட் டான். பிராம்மணர்களுக்குக் கொடுத்தேதீருவான். மானமுள்ளவனாக இருப்பான்'' என்று சொன்னான். இவ்வாறு சொல்லப்பட்ட குந்தி ஸூரியனைப்பார்த்து, "நான் பிதாவுக்குட்பட்ட கன்னிகை; எனக்கு இதில் புருஷார்த்தமொன்றுமில்லை. சத்ருக்களை ஸம்ஹரிக்கிறவரே! எனக்கு ஒரு பிராமணர் ஒருவித்தையையும் கொடுத்து வரத்தையும் அளித்தார். பிரபுவே! அதைப் பரீக்ஷிக்க நினைத்ததனால் உம்மை அழை த்தேன். இந்தக்குற்றத்திற்காக உம்மை நான் தலையால்வணங்கி மன் னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறேன். பிழையிருந்தபோதிலும் பெண் களை எப்போதும் காப்பாற்றவேண்டுமல்லவா?" என்று மறுமொழி சொன்னாள். "துர்வாஸஸ் உனக்கு வரம்கொடுத்த விஷயமெல்லாம் எனக்குத் தெரியும். நீ பயத்தைவிட்டு என்னிடம் சேருவது தான் நியாயம். அழகானவளே! என்னை நீ பார்த்தது வீணாகலாகாது; நீ என்னை அழைத்திருக்கிறாய். பயப்படுகிறவளே! வீணாக அழைப்ப திலும் உனக்குப் பாவம் வரும்; அதில் ஸந்தேகமில்லை; பயப்படுகி

வனே! இப்படி நீ நினைத்தால் சூரியனை நீ ஏன் அழைக்கிறாய்? என்னை நீ அவமதித்தால் யாரிடத்தில் மந்திரம்பெற்றுக்கொண்டு நீ கர்வத்தினால் மதிக்காமலிருக்கிறாயோ அந்தரிஷியே இருக்கமாட்டார். கோபத்தால் ஜ்வலிக்கின்ற கண்ணால் உன்குலத்தையும் இப்போதே எரித்துவிடுவேன்" என்று சூரியன் சொன்னான். பாரதரே! சூரியனால் இவ்வாறு பலவகையாக அன்புபாராட்டிச் சொல்லப்பட்டும் அந்தப் புகழ்பெற்ற உத்தமஸ்திரீயாகிய குந்தி தன்பந்துக்களுடைய வர்க்கத்தினிடமுள்ள பயத்தினாலும் வெட்கத்தினாலும் கலக்கமுள்ளவளாகி, 'நான் கன்னிகை' என்றுசொல்லி ஸூர்யபகவான் சொன்னதை விரும்பவில்லை. பரதஸ்ரேஷ்டரே! மறுபடியும் ஸூர்யபகவான் அவளை நோக்கி, "ராஜகுமாரியே! என் அனுக்ரஹத்தினால் உனக்கு ஒரு குற்றமும்வராது" என்றுசொன்னான். குந்தி, "பகவானே! என் மீது தயைபண்ணுங்கள். எனக்குக் கர்வமில்லை; கன்னிகையின் தர்மத்தைக் கெடுப்பது நீங்களே விடத்தக்கவிஷயம்" என்றுசொல்ல, ஸூர்யன், "உன்பயம் இப்போது விலகட்டும். குமாரனைப் பார்ப்பாய். நீ என்னிடம் அனுமதிபெற்றுக்கொண்ட பிறகு மறுபடியும் கன்னிகையாய்விடுவாய்" என்று கூறினான். இவ்வாறு ஸூர்யன் சொல்ல, அழகான புருவங்களையுடையகுந்தி மயிர்க்கூச்சம் எடுத்தவளாய் மஹாத்மாவான ஆதித்யனுடன் சேர்ந்தாள். ப்ரகாசத்தைச் செய்பவனாகிய ஸூர்யன் கன்னிகைப் பருவத்திலேயே குந்திக்குக் கர்ப்பத்தைக்கொடுத்தான். அந்தக்கர்ப்பத்திலிருந்து வீரனும், ஆயுதம்தரிப்பவர் எல்லாரிலும் சிறந்தவனும், அழகும் ஒளியும் பொருந்தினவனும், உடன்பிறந்த கவசத்தை வகித்துக் குண்டலங்களினால் விளங்கச் செய்யப்பட்ட முகமுள்ளவனும், எல்லாலோகங்களிலும் பெயர்பெற்றவனும், தேவகுமாரனுமான கர்ணனென்னும் புதல்வன் பிறந்தான். மிகுந்தப்ரகாசமுள்ள அந்த ஸூர்யன் குந்திக்கு மறுபடியும் கன்னிகைப்பருவத்தைக் கொடுத்தான். கொடுத்தவுடன், ப்ரகாசிப்பவரிற் சிறந்தவனான ஸூர்யன் அங்கிருந்து ஆகாயத்திற் கிளம்பிச் சென்றான். அந்த யதுவம்சத்துப்புத்திரியாகிய குந்தி பிறந்தகுமாரனைக்கண்டு உள்ளம்வருந்தி, "என்னசெய்தால் செவ்வையாக முடிவுபெறும்?" என்று ஒருநிலையாகச் சிந்தையுற்றாள். அப்போது, அவள், சுற்றத்தாரிடத்திற்பயந்து தன்குற்றத்தைமறைப்பதற்காக ஒருபெட்டியில் ரத்னங்களைநிரப்பி, அப்பெட்டியில் அந்தக் குழந்தையையும்விட்டு, மிகுந்தபலமுள்ள அந்தக்குமாரனைப் பெட்டியுடன் ஜலத்தில் விட்டுவிட்டாள்.

ஜலத்தில்விடப்பட்டிருந்த அந்தக்குழந்தையைச் சிறந்த புகழ் பெற்றவனும் ஸூதபுத்திரனும் ராதையென்பவளின் கணவனுமானவன், தன்பாரியையுடன் தன்பிள்ளையாகவைத்துக்கொண்டான். அவர்களிருவரும், "இவன் தனத்துடன்கூடப்பிறந்திருப்பதினால், *வஸுஷேணனாக இருக்கட்டும்" என்று அந்தக்குழந்தைக்குப் பெயரிட்டனர். சிறந்தபலமுள்ள அவன் வளர்ந்து எல்லா அஸ்திரங்களிலும் பயிற்சியுள்ளவனானான். அந்தவீரன் †முதுகுசுடுகிறவரையில் ஸூரியனை உபாசித்திருந்தான். ஜபம்செய்துகொண்டிருந்த அந்தப் புத்திமானானவீரனுக்கு அந்தக்காலத்தில்பிராம்மணர்கள்விஷயத்தில்கொடுக்கத்தகாதபொருள் ஒன்றும் இப்பூமியில் இருந்ததில்லை. பிறகு, ஒரு காலத்தில் கனவில் அவனிடம் ஸூரியன் பிராமணரூபமாகவந்து, "வீரனே! என்சொல்லைக்கேள். இந்தராத்திரிவிடிந்தவுடனே இந்திரன் உன்னிடம்வருவன். அவன் பிராமணவடிவத்தோடு இருப்பன். அவனுக்கு நீ பிக்ஷைகொடாமலிருக்கவேண்டும். உன்கவசத்தையும் குண்டலங்களையும் வாங்கிக்கொண்டுபோக அவன் நிச்சயித்திருக்கிறான். அதனால் இப்போது நான் உனக்குத் தெரிவிக்கிறேன். என் சொல்லை நீ நினைப்பாயாக" என்றுசொன்னான். அதற்குக் கர்ணன், "ஓ!பிராமணனே! இந்திரன் பிராமணரூபத்தோடுஎன்னிடம்வந்திருந்தால் அவனுக்கு நீங்கள் தெரிவித்தபடி எப்படி நான் கொடாமலிருப்பேன்? தேவர்களும் தமது நன்மையைவிரும்பிப் பிராமணர்களைப்பூஜிப்பதற்குக் கடமைப்பட்டவர்களல்லவா? அவனைத் தேவர்களுக்கும் தேவனென்று நான் அறிந்தபின் நான் நிராகரிக்கச் சக்தனல்லேன்" என்றான். ஸூர்யன், "வீரனே! இவ்வாறானால் நான் சொல்வதைக் கேள். அந்த இந்திரனும் உனக்கு ஒருவரம்கொடுப்பான்; அதற்கு நீயும் சத்துருக்களெல்லாரையும் வதைக்கத்தக்க சக்தியாயுதத்தைக் கேள்" என்று சொன்னான். இவ்வாறு சொன்னபின் அந்தப் பிராமணரூபனான ஸூர்யன் அந்த ஸ்வப்னத்திலேயே மறைந்தான். கர்ணன் கண்விழித்துக்கொண்டபின் அந்தக்கனவைப்பற்றியே நினைத்துக்கொண்டிருந்தான். அப்போது உலகங்களைக் காப்பவனாகிய மிகுந்த தேஜஸுள்ள இந்திரன் தன்புத்திரனாகிய அர்ஜுனனுக்காகப் பிராமணரூபமெடுத்துக்கொண்டு கர்ணனிடம் குண்டலங்களையும் கவசத்தையும் விரும்பிக்கேட்டான். அவன், மனத்தில் துன்பப்படாமல்

---

* வஸு=த்ரவ்யத்துடன், ஷேணன்=ஸம்பந்தப்பட்டவன்; நல்ல ரத்நங்களோடும் கவசகுண்டலங்களோடும் கிடைத்தவனென்பது.

† ஸூர்யன் பின்சாயும்வரையில.

தன்காதுகளையும் விலாப்புறங்களையும் சேதித்துத்தன்உடம்பிலிருந்து ரக்தம்பெருகும்படி கவசத்தையெடுத்துக் கைகூப்பிக்கொண்டு கொடுத்தான். தேவராஜாவான இந்திரன் அதைவாங்கிக்கொண்டு அவன் செய்த அந்தச்செய்கையினால் திருப்தியடைந்து, மனத்தோடு சிரித்துக்கொண்டு, "ஆ! ஆ! அரியசெய்கை" என்று சொல்லி, "தேவர்கள், அஸுரர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், நாகர்கள், ராக்ஷஸர்கள் முதலியயாரிலும் இந்தக்காரியம் செய்பவன் இருப்பானென்று நான் நினைக்கவில்லை. இந்தச்செய்கையினால் திருப்தியடைந்தேன். நீவிரும்புகிறவரம் என்ன? சொல்" என்று அவனைக்கேட்டான். அதற்குக் கர்ணன், "சத்துருக்களை ஸம்ஹரிக்கத்தக்க சக்தியாயுதமொன்றை நீங்கள் கொடுக்கவேண்டுமென்று விரும்புகிறேன்" என்றான். இந்திரன் ஆச்சரியத்தோடு அவனுக்குச் சக்தியாயுதத்தைக் கொடுத்து, "தேவர்கள், அஸுரர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள், நாகர்கள், ராக்ஷஸர்கள் இவர்களில் யார்மேல் நீகோபித்து இதை ப்ரயோகிப்பாயோ அவன் இதனாலேயே இல்லாமற்போவான். யுத்தத்தில் யாராவது ஒரு சத்துருவைக்கொன்று பின் இந்தச்சக்தி என்னிடம்வந்துவிடும்" என்று சொல்லி, அவனுக்குஇந்தவரம் கொடுத்தவுடன், இந்திரன் அந்தர்த்தானமாயினான். கர்ணனுக்கு வஸுஷேணனென்ற பெயர் முன்னே சொல்லப்பட்டது. கவசகுண்டலங்களையறுத்ததனால் *கர்ணன் என்றும் வைகர்த்தனனென்றும் அவன் பெயர் பெற்றான்.

---

## நூற்றிருபத்தோராவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டுவுக்கும் குந்திக்கும் விவாஹம்)

விசாலமானகண்களையுடைய குந்திபோஜன்புதல்வியாகிய ப்ருதை, தைரியமும் அழகும் குணங்களுமுள்ளவளாகவும், தர்மத்தில் நிற்பவளாகவும், உறுதியான நியமமுள்ளவளாகவுமிருந்தாள். அழகினாலும் யௌவனத்தினாலும் சோபிக்கின்றவளும் பெண்களுக்குரிய குணங்கள் மிகப்பொருந்தினவளுமாகிய அந்த ஒளியுள்ள

* க்ருனு, க்ரதீ என்கிற இரண்டுபகுதிகளும் சேதிப்பது என்றபொருளுள்ளவை. அவற்றிலிருந்து, கர்ணன், வைகர்த்தனன் என்ற பெயர்கள் முறையே வந்தன.

கன்னிகையைச் சில அரசர்கள் வேண்டினர். ராஜஸ்ரேஷ்டரே! பிறகு, அவள்பிதாவாகிய குந்திபோஜனென்னும் வேந்தன் அரசர்களை வருவித்து அந்தப்பெண்ணை ஸ்வயம்வரத்திற்கொடுக்க நினைத்தான். அப்போது உறுதியான மனமுள்ள குந்தி அந்த அரசர்க்குள் ஸிம்மத்தைப்போல் கர்வமுள்ளவனும், அகன்ற மார்புடையவனும், விருஷபம்போன்ற பார்வையுடையவனும், சிறந்த பலமுடையவனும், சூரியனைப்போல் அந்த ராஜஸபையில் எல்லா அரசர்களின் ஒளிகளையும் மறைத்துக்கொண்டு இருப்பவனும், பரதஸ்ரேஷ்டனுமாகிய பாண்டுவென்னும் ராஜஸிம்மத்தைக்கண்டாள். சிலாக்கியமான அங்கமுடையவளும் நல்ல லக்ஷணங்கள் பொருந்தினவளுமாகிய அந்தக் குந்திபோஜன்மகள் ஸ்வயம்வர மண்டபத்திலுள்ள ராஜஸபையில் இரண்டாவது இந்திரனைப்போலிருக்கும் அந்தப் பாண்டுமஹாராஜனைக்கண்டு மனத்தில் கலக்கமுற்றாள். காமத்தினால் அங்கம்வாடி ஒருமுறை மனங்கலங்கினவளாக நாணிக்கொண்டே குந்தி அந்த ராஜாவின்கழுத்தில் மாலையை அணிந்தாள். அந்தப்பாண்டுவைக் குந்தி வரித்ததைக்கண்டு அரசர்களெல்லாரும் யானைகளிலும் குதிரைகளிலும் ரதங்களிலுமேறிக்கொண்டு வந்தவழியே திரும்பிச்சென்றனர். ஜனமேஜயரே! அதன்பின், பிதாவாகிய குந்திபோஜராஜன் அவளுக்கு விவாஹத்தை நடத்தினான். அளவற்ற அழகுள்ள அந்தக் கௌரவராஜனான பாண்டு அந்தக் குந்திபோஜன்பெண்ணுடன், இந்திராணியுடன் இந்திரன் சேருவதுபோல் சேர்ந்தான். அரசர்க்கரசே! குருஸ்ரேஷ்டனே! குந்திபோஜனென்னும் அரசன் குந்திக்கும் பாண்டுவுக்கும் விவாஹத்தைச் செய்வித்து அப்போதே அந்தப் பாண்டுவுக்குப் பலவகையான தனங்களினால் மரியாதைசெய்து அவனை அவன்நகரத்துக்கு அனுப்பினான். பிறகு, பலவகையான கொடிமரங்களும் கொடிகளுமுள்ள பெருஞ்சேனையுடன் பிராமணர்களாலும் மஹரிஷிகளாலும் ஆசீர்வாதங்கள் சொல்லித் துதிக்கப்பட்டவனாகிக் கௌரவபுத்திரனான அந்தப் பாண்டுமஹாராஜன் அஸ்தினாபுரம் சென்று தன் பாரியையான குந்தியைத் தனது கிருகத்தில் பிரவேசிக்கச் செய்து அவளைத் தன் கிருகத்தில் பட்டத்தரசியாகச் செய்தான்.

---

## நூற்றிருபத்திரண்டாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டு மாத்ரியை விவாஹம்பண்ணிக்கொண்டதும், திக்விஜயம் செய்ததும்.)

அதன்பிறகு, சிறந்தபுத்தியுள்ளவரும் சந்தனுபுத்ரருமான பீஷ்மர், புகழ்பெற்ற அரசனாகிய பாண்டுவுக்கு மற்றொரு விவாஹ நிமித்தமாக ஆலோசனைசெய்தார். அவர், வயதுமுதிர்ந்த மந்திரிகளோடும் பிராமணர்களோடும் மஹாரிஷிகளோடும் சதுரங்கசேனைகளோடுங்கூட மத்ரராஜனுடைய நகரம் சென்றார். * வாஹீகர்களிற் சிறந்தவனாகிய மத்ரராஜன் அந்தப்பீஷ்மர் வந்ததைக்கேட்டு எதிர்கொண்டழைத்துப் பூஜித்து அவருக்கு நகரப்ரவேசம் செய்வித்தான். மத்ரராஜன் அவருக்கு நிர்மலமான ஆஸனத்தையும் அர்க்கியபாத்யங்களையும் †மதுபர்க்கத்தையும் கொடுத்து அவர் வந்த காரியத்தைக் கேட்டான். குருஶ்ரேஷ்டராகிய பீஷ்மர் அந்த மத்ரராஜனைநோக்கி, "எதிரிகளையடக்குகிறவனே! நான் கன்னிகையை விரும்பி வந்தவனென்று நீ அறி. உன் ஸஹோதரியாகிய மாத்ரியைக் கற்புள்ளவளாகவும் புகழுள்ளவளாகவும் கேள்விப்படுகிறேன். அந்த க்யாதிபெற்ற பெண்ணை நான் பாண்டுவுக்காகக் கேட்கிறேன். ராஜாவே! நமக்கு நீயும் உனக்கு நாங்களும் ஸம்பந்தவிஷயத்தில் மிகத் தகுதியுள்ளவர்கள். மத்ரதேசாதிபதியே! இதனை ஆராய்ந்து எங்களை முறைப்படி அங்கீகரித்துக்கொள்" என்றுசொன்னார். இவ்வாறுசொல்லும் பீஷ்மரைநோக்கி மத்ரதேசாதிபதியாகிய சல்யன், "உம்மைவிட மேலான ஸம்பந்தி எனக்கு வேறு யாருமில்லையென்பது எனது நிச்சயம். ஆனால், இந்தக்குலத்தில் முன்னோர்களான ராஜஶ்ரேஷ்டர்களால் நடத்தப்பட்டது ‡ ஒன்றுண்டு. சரியோ பிழையோ அதை நான் உல்லங்கனம் செய்ய விரும்பவில்லை. உமக்கும் அது தெளிவாகத் தெரிந்தவிஷயமென்பதிலும் ஸந்தேகமில்லை. மிகச்சிறந்தவரே! நீர் கொடுமென்று சொல்வதும் அவ்வளவு சரி அன்று. வீரரே! அஃது எங்கள் குலதர்மம். எங்களுக்கு அது முக்கியமான பிரமாணம். சத்ருக்களை ஒழிப்பவரே! அதனால், இந்த விவா

* ஒருகுலத்தோர்.

† சிரமமாதவும்பலமுண்டாகவும் ஸித்தஞ்செய்யப்பட்ட மதுரபதார்த்தம்.

‡ பணம் வாங்கிக்கொண்டு பெண் கொடுப்பது.

ஹத்தைப்பற்றி நிச்சயமான சொல்லை உமக்கு நான் சொல்லாமலிருக்கிறேன்" என்றான். "ராஜாவே! இந்தத்தர்மம் * முக்யமானதென்று பிரம்மாவினால் நேரவே சொல்லப்பட்டிருக்கிறது. இந்த நியமம் உன் பெரியோர்களாற்செய்யப்பட்டிருப்பதனால், இதில் ஒருகுற்றமுமில்லை. சல்லியனே! இந்த நியமம் சாதுக்கள் ஒப்புக்கொண்டதென்பதும் உனக்குத் தெரிந்தவிஷயம்" என்று ராஜாவான பீஷ்மர் அந்த மத்ர ராஜனுக்கு மறுமொழிகூறினார். மிகுந்த தேஜஸுள்ள பீஷ்மர் இப்படிச்சொல்லி நாணயங்களும் கட்டிகளுமான பொன்களையும் விசித்ரங்களான ரத்நங்களையும் ஆயிரக்கணக்காகச் சல்லியனுக்குக்கொடுத்தார். யானைகளையும், குதிரைகளையும், ரதங்களையும், வஸ்திரங்களையும், ஆபரணங்களையும், உயர்ந்த மணிகளையும், முத்துக்களையும், பவழங்களையும், கங்காபுத்ரரான பீஷ்மர் சல்லியனுக்குச் சுபமாகக் கொடுத்தார். சல்லியன், அந்தத்தனம் எல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு மிகமகிழ்வுற்ற மனத்துடன் அந்தத் தன் ஸஹோதரியைச் செவ்வையாக அலங்கரித்து அந்தக் கௌரவஶ்ரேஷ்டரான பீஷ்மரிடம் கொடுத்தான். கங்காபுத்ரரும் சிறந்த புத்தியுள்ளவருமாகிய அந்தப் பீஷ்மர் அந்த மாத்ரியைப் பெற்றுக்கொண்டு திரும்பிவந்து அஸ்தினபுரத்தில் ப்ரவேசித்தார். அதன்பின், பெரியோர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டதும் தம்மனத்துக்கு இசைந்ததுமானநல்லநாளும் நல்ல முகூர்த்தமும் நேர்ந்தபோது பீஷ்மர் மஹாத்மாவான பாண்டுவுக்கு விவாஹத்தைச் செய்வித்தார். பாண்டுமஹாராஜன் சாஸ்திரப்படி மாத்ரியைப் பாணிக்ரஹணஞ்செய்தான். அந்தவிவாஹம் நடந்தபின் குருவம்ச புத்ரனாகிய அந்தப் பாண்டுமஹாராஜன் உத்தமஸ்திரீயான அந்த மனைவியைச் சிறந்த கிருஹத்தில் வாஸஞ்செய்வித்தான். அரசர்களுள் சிறந்தவனாகிய அந்தப் பாண்டுமஹாராஜா குந்தி மாத்ரி என்னும் அவ்விரண்டுமனைவிகளுடனும் கூடத் தன்விருப்பத்திற்குத் தக்கபடி ஸுகமாக இருந்தான். பிரபுவாகிய ஜனமேஜயரே! அந்தக் குருவம்சத்தரசனாகிய பாண்டு, முப்பது ராத்திரிகள் ஸுகமாக இருந்து பிறகு பூமியை ஜயிக்கக்கருதி நகரத்திலிருந்து புறப்பட்டான். அவன், பீஷ்மர்முதலான பெரியவர்களையும் கௌரவனாகிய திருதராஷ்டிரனையும் மற்றுமுள்ள கௌரவவம்சத்துப் பெரியோரையும்நமஸ்காரஞ்செய்து வணக்கத்துடன் அவர்களிடம்விடைபெற்றுக்

* ஆர்ஷம் என்னும் விவாஹத்தில் இரண்டுகோக்களை வாங்கிக்கொண்டு கன்னிகாதானம் செய்யலாமென்று விதித்திருப்பதைப்பற்றி இது வேதோக்தந்தான் என்பது கருத்து.

கொண்டு அவர்கள் மங்களகாரியங்களைச்செய்து ஆசீர்வாதங்களைச் சொல்லிவிடைகொடுத்தபிறகு, யானைகளும் குதிரைகளும்தேர்களும் நிரம்பிய பெருஞ்சேனையுடன் சென்றான். தேவகுமாரனுக்கொப்பான அந்தப்பாண்டுமஹாராஜன் பூமியை ஜயிக்கக்கருதி மகிழ்ச்சியுள்ளவையும் நிரம்பினவையுமான சேனைகளுடன் பகைவர்களனேகர்களை எதிர்க்கச்சென்றான். கௌரவராஜர்களின் புகழை விருத்திசெய்கிற புருஷஸிம்ஹமாகிய பாண்டு, முதலிற்சென்று தீங்குசெய்தவர்களாகிய தசார்ண தேசத்தரசர்களை யுத்தத்தில் ஜயித்தான். பிறகு, பாண்டு பலவகைக் கொடிகளோடுகூடியதும் யானைகளும் குதிரைகளும் மிகுதியானதும் காலாட்களும் தேர்களும் நிரம்பினதுமான தன்சேனையை அழைத்துக்கொண்டு சென்றான். ராஜகிருஹம் என்னும் நகரத்தில் பலத்தினால் கர்வங்கொண்டு அனேக அரசர்களுக்குத் தீங்குசெய்தவனாகிய தீர்க்கனென்னும் மகததேசத்தரசன் பாண்டுவினால் கொல்லப்பட்டான். பாண்டு அங்கிருந்து தனத்தையும் வாகனங்களையும் மிகுதியாக எடுத்துக்கொண்டு மிதிலாபுரிக்குச்சென்று விதேகராஜர்களைப் போரில் வென்றான். புருஷஸ்ரேஷ்டரே! அவ்வாறே காசிதேசத்திலும் ஸும்ஹதேசத்திலும் தன் கைவன்மையினாலுண்டான பராக்ரமத்தினால் கௌரவர்களுக்குப் புகழையுண்டுபண்ணினான். அம்புக்கூட்டமென்னும் பெருஞ்சுவாலையையும் அஸ்திரங்களென்னும் கிரணங்களையுமுடைய பாண்டுவென்னும் எதிரிகளையழிக்கும் தீயையடைந்த மற்ற அரசர்கள் எரிந்துபோயினர். சேனைகளுடன்கூடின அவ்வரசர்கள், சேனைகளுடன்கூடிய பாண்டுவினால் தங்கள்சேனைகள் அழிக்கப்பட்டு அவனுக்கு வசப்பட்டவர்களாய்க் கௌரவர்களின் வேலைகளிலேயே நியமிக்கப்பட்டார்கள். பூமியிலுள்ள அவ்வரசர்களெல்லாரும் பாண்டுவினால் ஜயிக்கப்பட்டவர்களாகி அவனைத்தேவர்களில் தேவேந்திரனைப்போல ஒப்பற்ற வீரனென்று நினைத்தனர். எல்லா அரசர்களும் மணிகளையும், முத்துக்களையும், பவழங்களையும், மிகுதியான பொன் வெள்ளிகளையும், பசுக்களிலும் குதிரைகளிலும் தேர்களிலும் யானைகளிலும் சிறந்தவற்றையும், கோவேறுகழுதைகளையும், ஒட்டகங்களையும், எருமைகளையும், செம்மறியாடுகளையும், வெள்ளாடுகளையும், உயர்ந்தகம்பளங்களையும், தோல்களையும், ரத்நக்கம்பளவிரிப்புக்களையும், இன்னும் பல உயர்ந்த பொருள்களையும், தனங்களையும் எடுத்துக்கொண்டுகைகூப்பி நமஸ்காரஞ்செய்துபாண்டுவினிடம்வந்து சேர்ந்தனர். அஸ்தினபுரத்தரசனான பாண்டுமஹாராஜன் அவற்றையெல்லாம் வாங்கி எடுத்துக்கொண்டு உற்சாகமுள்ள யானை குதிரை

முதலிய வாகனங்களோடு தன் தேசத்தாரை மகிழ்விப்பதற்காக அஸ்திஞபுரம் சென்றான். "ராஜஸிம்மமானசந்தனு, சிறந்த புத்திமானுன பரதசக்ரவர்த்தி இவர்களின் புகழிஞலுண்டான பெயர் அழிந்துபோயிருந்தது; பாண்டுவிஞல் மறுபடியும் கொண்டுவரப்பட்டது. கௌரவர்களின் தேசங்களையும் தனங்களையும் முன்னே எவர்கள் அபஹரித்தனரோ அவர்கள் அஸ்திஞபுரத்து ஸிம்மமான பாண்டுவிஞல் கப்பம் கொடுப்பவராகச் செய்யப்பட்டனர்" என்று இவ்வாறு ராஜாக்களும் ராஜமந்திரிகளும் பட்டணத்து ஜனங்களும் தேசத்து ஜனங்களும் சேர்ந்து மிகச் சந்தோஷமுள்ளவர்களாகப் பாண்டுவினிடம் அன்புகூர்ந்து பேசினர். பீஷ்மர் முதலான அஸ்திஞபுரத்துள்ளவர்களனைவரும் வந்தபாண்டுவைக் கொஞ்சதூரம் வழியிற்சென்றுஎதிர்கொண்டழைத்தனர். அனேகங்குதிரைகளிஞற் கொண்டுவரப்பட்ட பலவித தனங்களாலும் அளவற்ற ரத்தினங்களாலும் உயர்ந்த யானை குதிரை தேர்களாலும் பசுக்களாலும் ஒட்டகங்களாலும் ஆடுகளாலும் லோகமே வியாபிக்கப்பட்டிருப்பதைக் கௌரவர்கள் பீஷ்மருடன் சென்று மகிழ்ச்சியோடு கண்டனர். அவற்றிற்கு முடிவைக் காணவில்லை. கௌஸல்யையின் ஆனந்தத்தை விருத்திசெய்பவனுகிய பாண்டு தன் தந்தையான பீஷ்மருடைய பாதங்களில் வந்தனம்செய்து, நகரத்து ஜனங்களையும் தேசத்துஜனங்களையும் அவரவர்தகுதிக்கேற்பக்கௌரவித்தான். பீஷ்மர், எதிரிகளின் தேசங்களையழித்து வெற்றியுடன் திரும்பிவந்த தன்புத்திரனைத் தழுவிக்கொண்டு ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார். அந்தப்பாண்டு தூரியவாத்யங்கள், சங்கங்கள், பேரிகைகள் இவற்றின் பெரியமுழக்கங்களிஞல் நகரத்துஜனங்கள்அனைவரையும் மகிழ்வித்துக்கொண்டு அஸ்திஞபுரம் பிரவேசித்தான்.

---

## நூற்றிருபத்துமூன்றுவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டு வேட்டையாடக் காட்டுக்குப் போனபோது மான் உருவம்கொண்ட கிந்தமமுனிவர் அவனுக்குச் சாபம் கொடுத்தது.)

அந்தப்பாண்டு, த்ருதராஷ்டிரனுல் அனுமதிகொடுக்கப்பெற்று, தன் புஜபலத்திஞல் ஜயித்துக்கொண்டுவந்த தனத்தைப் பீஷ்மருக்கும் ஸத்யவதிக்கும் தன்தாயாருக்கும் காணிக்கையாகக் கொடுத்தான்.

தர்மாத்மாவான பாண்டு அந்தத் தனத்தை விதுரருக்கும் அனுப்பி ஞன். பாரதரே! பிறகு, பாண்டு தான்ஜயித்துச் சம்பாதித்த உயர்ந்த வஸ்துக்களால் ஸத்யவதியையும் பீஷ்மரையும் புகழ்பெற்ற அம்பாலிகையையும் சந்தோஷிக்கச்செய்தான். ஒப்பற்ற பராக்ரமமுள்ள அந்தப் புருஷஶ்ரேஷ்டனுகிய பாண்டுவைத் தழுவிக்கொண்டு தாயான கௌஸல்யை ஜயந்தனைத்தழுவிய இந்திராணியைப்போல் களிப்புற்ருள். அந்த வீரனுகிய பாண்டுவின் பராக்ரமபலத்தினுல் திருதராஷ்டிரன் லக்ஷக்கணக்கான தக்ஷிணைகளுடன் அஶ்வமேதத்துக்கொப்பான அனேகம் பெரியயாகங்களைச் செய்தான். பரதஶ்ரேஷ்டரே! அப்போது பாண்டு சோர்வைவிட்டுக் குந்தியோடும் மாத்ரியோடும் சேர்ந்து காட்டில் சஞ்சரிப்பவனுஞன். அரண்மனையில் வாஸத்தையும் ஸுகமான படுக்கைகளையும் விட்டுவிட்டு எப்போதும் வேட்டையே காரியமாகக் காட்டிலேயே வாஸஞ்செய்துகொண்டிருந்தான். அவன் இமயமலையின் அழகான தென்பக்கத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு குன்றுகளின் சிகரங்களிலும் பெருமரங்களடர்ந்த காடுகளிலும் வஸித்தான். குந்தியோடும் மாத்ரியோடும்கூடி வனத்தில் ஸஞ்சரிக்கும்போது, பாண்டு இரண்டு பெண்யானைகளின் நடுவிலிருக்கும் அழகுள்ள ஐராவதம்போலச் சோபித்தான். விசித்திரமான கவசத்தை அணிந்து கத்தியையும் அம்புகளையும் வில்லையும் தரித்துப் பாரியைகளுடன்கூடி ஸஞ்சரிக்கும் வீரனும் மேலான அஸ்திரங்கள் தெரிந்தவனுமாகிய பரதவம்சத்தரசனை பாண்டுவைப்பார்த்து அவ்வனத்திலிருப்பவர் இவன் தேவதையென்று நினைத்தனர். அவனுடைய விருப்பங்களையும் ராஜபோகத்துக்குரிய பொருள்களையும் திருதராஷ்டிரனுல் அனுப்பப்பட்ட மனிதர்கள் காட்டுப்பிரதேசங்களிலும் ஒவ்வொருநாளும் சோம்பலின்றிக் கொண்டுவந்தனர். மான்களாலும் துஷ்டமிருகங்களாலும் அடையப்பட்ட அப்பெருங்காட்டையடைந்து அதில் புணர்ச்சியிலிருந்த ஒரு மான்கூட்டத்தின் அரசைக்கண்டான். பிறகு, பாண்டு அந்த ஆண்மானையும் பெண்மானையும் தங்கப்பிடிகளோடும் அழகான சிறகுகளோடும் கூடிய, விரைவாகச்செல்லும் ஐந்துகூர்மையான அம்புகளினுல் அடித்தான். ராஜாவே! சிறந்த மஹிமையுள்ளவரும் தவத்தையே தனமாகவுடையவருமான ஓர் அழகான ரிஷிபுத்திரர் அந்தமான்வடிவத்தோடு தம் மனைவியுடன் சேர்ந்திருந்தார். பெண்மானுக இருந்த அந்தத் தம் மனைவியுடன் சேர்ந்திருந்த அந்தமானுருவமான ரிஷிபுத்திரர் நொடியில் தரையில் விழுந்து மானிடவாக்கைச் சொல்லித் துக்கத்துடன் புலம்பினர்.

"காமக்குரோதங்களுக்கு உட்பட்டவர்களும் விபரீதபுத்தியுள்ளவர்களும் பாபகாரியங்களிலேயே ப்ரவர்த்திப்பவர்களுமான மனிதர்களுங்கூட மிகக்கொடிய செய்கைகளை விடுகின்றனர். மதி விதியைவெல்லுகிறதில்லை. விதிமட்டும் மதியைவெல்லுகிறது. விதிவசமாகவரும் பயன்களை மதியுள்ளவனும் அநுபவிக்கிறான். பரதவம்சத்தவனே! எப்போதும் தர்மமே இயற்கையாக உடையவர்களின் சிறந்த வம்சத்திற் பிறந்த உனக்குக் காமவிருப்பத்தால் மூடப்பட்டு மதிபோனதேன்?" என்று அந்தமான்வடிவமானமுனிவர் சொன்னார். பாண்டு, "மானே! ராஜாக்களுக்குச் சத்ருவதத்தில் என்னசெய்கையோ அதேசெய்கைதான் மிருகவதத்திலும் விதிக்கப்பட்டுள்ளது. நீ தெரியாமையால் என்னைத்தூஷிப்பது தகுதியன்று. மோசமில்லாமலும் ஒளிவில்லாமலும் மிருகங்களைக் கொல்வது சாஸ்திரவிஹிதம். அதுதான் ராஜாக்களுக்குத் தர்மம். அதை நீ நிந்திப்பதெவ்வாறு? அகஸ்தியமஹரிஷி, பெருங்காட்டில் ஸத்ரயாகஞ் செய்யும்போது எல்லாத் தேவதைகளையும் உத்தேசித்துக் காட்டிலுள்ள மிருகங்களையெல்லாம் ஜலத்தைத் தெளித்து * வேட்டையாடினார். † பிரமாணங்களிற் காணப்பட்ட தர்மத்திலிருக்கும் எம்மை நீ எவ்வாறு இகழ்கிறாய்? அகஸ்தியருடைய மந்திரப்ரயோகத்தினாலேயே உங்களைக்கொல்வது சாஸ்திரவிஹிதமாகின்றது. வீரர்கள் பகைவர்களைக் குறிப்பிட்டே பாணப்ரயோகம் செய்வதென்பதில்லை. ஏமாந்தபோது வதஞ்செய்வது முக்கியமாக வீரர்களுக்குச் சிறப்பித்துச் சொல்லப்படுகிறது. அஜாக்ரதையாயிருந்தாலும் ஜாக்ரதையாயிருந்தாலும் மறைவில்லாமலிருப்பவனைச் சக்தியினால் அநேகம் நுட்பமான உபாயங்களைக்கொண்டு கொல்லுகின்றனர். மானே! ஏன் தூஷிக்கிறாய்?" என்றான். அதற்கு அந்தமானுருவங்கொண்ட முனிவர் மறுமொழிகூறலானார்: "ராஜாவே! மிருகங்களைக்கொல்லுகிறவனைப்பற்றி நான் தூஷிக்கவில்லை; எனக்காகவும் நான் தூஷிக்கவில்லை. இப்போது இந்தவிஷயத்தில் கொடியவனென்று பெயரெடாமலிருக்கும்பொருட்டுப் புணருங்காலம்வரையில் நீ காத்திருக்கவேண்டும். எல்லாப்பிராணிகளுக்கும் ஸுகமும் எல்லாப்பிராணிகளும் விரும்புவதுமான ஸமயத்தில்காட்டில்புணர்ச்சி செய்துகொண்டிருக்கும் மிருகத்தைத் தெரிந்தவன் எவன் கொல்லுவான்? ராஜஶ்ரேஷ்டனே! காமமென்னும் புருஷார்த்தத்தின் பயனாகிய ஸந்ததியை உண்டுபண்ணுவதற்கு இந்தப்பெண்மானிடம் உத்ஸாகத்துடன் புணர்ச்சிசெய்துகொண்டிருந்தேன். அஃது உன்னால்

---

* கொன்றார். † சாஸ்திரங்களிலும் சிஷ்டாசாரங்களிலும்.

வீணுக்கப்பட்டது. மஹாராஜாவே! கௌரவனே! உயர்ந்தசெய்கை யுள்ளவர்களாகிய அந்தப் பௌரவர்களின் வம்சத்திற்பிறந்த உனக்கு இது தகாது; இது மிகவும்கொடியகாரியம்; எல்லாலோகத்தாராலும் நிந்திக்கப்பட்டது; ஸ்வர்க்கத்துக்கும் புகழுக்கும் விரோதமானது; பாபத்திற்கும் காரணமானது. தேவதையைப் போன்றவனே! ஸ்திரீ ஸம்போகங்களின் மேன்மையையறிந்தவனும்சாஸ்திரங்களையும்தர்ம ங்களையும்ராஜநீதிகளையும் செவ்வையாக அறிந்தவனுமாகிய நீ ஸ்வர்க் கத்துக்கு விலக்கான இப்படிப்பட்ட காரியத்தைச் செய்யத்தகாது. ராஜஸ்ரேஷ்டனே! ஹிம்ஸைசெய்கிறவர்களும் பாவம்செய்கிறவர்க ளும் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று புருஷார்த்தங்களையும் இழந்தவர்களுமான மனிதர்களை நீ தண்டிக்கவேண்டியவன். புருஷ ஸ்ரேஷ்டனே! அரசனே! எப்போதும் சாந்தியையேமுக்கியமாகக் கருதிக் காய்கிழங்குகளைப் புசித்துக்கொண்டு மான்வேஷத்துடன் காட்டில் வஸித்துக்கொண்டிருக்கும் நிரபராதியான ரிஷியாகிய என் னைக்கொன்றதில் உனக்கு என்னகிடைத்தது? நீ என்னை ஹிம் ஸித்ததனுல், பிழைசெய்யாத எங்களிருவருக்கும் ஹிம்ஸைசெய்த உனக்கும் நீ அறியாமலே புணருங்காலத்தில் ஸுகத்தில் மயங்கி யிருக்கும்போது உயிர்வாழ்வு முடிவாகும்நிலைமை வரும். நான் தவ த்தினுல் தூய்மைபெற்ற கிந்தமனென்னும் முனி. மனிதர்களிடம் வெட்கமுற்று மானுருவைவஹித்துப் பெண்மானுடன்புணர்ச்சிசெய் துகொண்டு மான்களுடன்கூடவே அடர்ந்தகாட்டில் திரிந்துகொண் டிருந்தேன். காமஸுகத்தில் விருப்பத்தினுல் மானுருவம்தரித்த என்னை இவ்வாறுதெரியாமற் கொன்றதினுல் உனக்கு இது பிரம்ம ஹத்தி ஆகாது. மூடனே! ஆனுல், இதற்கு இவ்வகையான பலனை மட்டும் நீ அடையப்போகிருய். நீயும்உன்மனைவியுடன்கூடச்சயனத் திற்சேர்ந்து கலவியில் மயங்கியிருக்கும்போது நானிருந்த நிலைமையி லேயே யமலோகம் செல்வாய். புத்திசாலிகளுக்குட் சிறந்தவனே! முடிவுக்காலத்தில் எந்த மனைவியுடன்கூடச்சயனத்தையடைவாயோ அவள்தான் எந்தப்பிராணிகளும் தப்பித்துக்கொள்ளக்கூடாத யம புரத்துக்குப் போகும் உன்னை அன்புடன் பின் செல்வாள். நான் எவ் வாறு ஸுகத்திலிருக்கையில் உன்னுல் துக்கமடைவிக்கப்பட்டேனே அவ்வாறே ஸுகத்தை அடைந்திருக்கும் உன்னையும் துக்கம்வந்து சேரும்" என்றுசொன்னுர். மிகுந்த துக்கத்தினுற் பீடிக்கப்பட்டு அந்த மான்வடிவமான கிந்தமமுனிவர் இவ்வாறு சொன்னவுடன் உயிரைவிட்டார். பாண்டுவும் உடனே துன்பமுற்றவனுனன்.

## நூற்றிருபத்துநான்காவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டு சாபத்தினால்வருந்தி மனைவிகளுடன் தவம்செய்துகொண்டு சதச்ருங்கமென்னும் மலையையடைந்தது.)

பாண்டுமஹாராஜா, இறந்துபோன அம்முனியைத் தன் பந்துவைப்போல் ஸம்ஸ்காரஞ்செய்து பாரியைகளுடன் அவரிறந்த துக்கத்தினாலும் சாபத்தினாலுண்டான வருத்தத்தினாலும் தாபங்கொண்டு தளர்ந்துபுலம்பினான். "சான்றோர்குலத்திற் பிறந்தவர்களும் மனத்தை அடக்காமல் மன்மதன்வலையில் மயங்கித் தங்கள்செய்கையினாலேயே கெட்டமுடிவையடைகின்றனர். ஐயோ! எப்போதும் தர்மத்திற் சித்தம்வைத்த சந்தனுமஹாராஜாவுக்குப் பிறந்தவரான என்தந்தையும் சிற்றின்பத்தில் மனம்வைத்துத்தான் சிறுபிராயத்திலேயே உயிர்வாழ்வின் முடிவையடைந்தாரென்று எமக்குக் கேள்வி. காமலோகத்தில் எண்ணமுள்ளவராயிருந்த அந்தராஜாவின் மனைவியினிடம் மௌனவ்ரதம் வஹித்தவரும் சிறந்த மஹிமைபொருந்தினவருமான வியாஸமஹரிஷியே நேரே என்னை உண்டுபண்ணினார். இப்போது தர்மத்தைவிட்டு வேட்டைக்குத்திரிகின்ற அந்தஎனக்குத் தேவர்கள் கைவிட்டதனால் துன்பத்தைத் தாக்தக்ககாரியத்தில் இந்தஇழிவான எண்ணம் உண்டாயிற்று. நான் மோக்ஷத்தையே விரும்புகிறேன். பற்றுத்தான் பெருந்துன்பம். என்பிதாவான வியாஸருடைய குற்றமற்ற நல்ல *செய்கையை நான் அனுஸரிக்கப்போகிறேன். என்மனத்தைத் தவத்தில் மிகுதியாக வைக்கப்போகிறேன். இது நிச்சயம். ஆதலால், ஒவ்வொருநாளைக்கு ஒவ்வொருமரத்தினிடம் கனியைப் பிக்ஷையாகவாங்கிக்கொண்டும் தலையைமுண்டனஞ்செய்துகொண்டும் ரிஷியாக இந்தஆஸ்ரமங்களில் திரியப்போகிறேன். தூளிகள்படிந்த உடம்புடன் பாழ்வீடுகளிலாவது மரத்தடிகளிலாவது வாஸஞ்செய்துகொண்டும், விருப்புவெறுப்புக்கள் எல்லாவற்றையும் விட்டுத் துன்பமும் இன்பமுமில்லாமல் இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் ஸமமாக நினைத்தும், ஆசீர்வாதம்நமஸ்காரம்இரண்டையும்விலக்கியும், சீதோஷ்ணங்களைவிட்டுப் பற்றறுத்து ஒருவனையும் பரிஹாஸம்செய்யாமலும், யாரிடத்தும் புருவத்தை நெரிக்காமலும், எப்போதும் மலர்ந்தமுகத்துடன் எல்லாப்பிராணிகளுக்கும்நன்மைகளிலே மனம்வைத்தும், ஜங்க

---

* தவம்.

மங்களும்ஸ்தாவரங்களுமாகிய*நான்குவகைப் பொருள்களில்ஒன்றை யும்ஹிம்ஸைசெய்யாமலும், தன்குழந்தைகளிடத்திலிருப்பதுபோல் எல்லாப்பிராணிகளிடத்தும் எந்தக்காலத்திலும் வேற்றுமையில்லாம லும்,ஓரேவேளை பத்து அல்லது ஐந்து வீடுகளில் பிக்ஷையெடுத்துக் கொண்டும், பிக்ஷைநேரிடாதபோது உபவாஸங்களைச்செய்துகொண் டும், ஒவ்வொருவேளை அல்ப ஆகாரம் புசித்துக்கொண்டும், முதல் பிக்ஷைகிடைக்காதபோது ஆசைப்பட்டு வேறு இடங்களில் ஒருஸம யமும் பிக்ஷையெடுக்காமலும், ஒன்றும் கிடைக்காதபோது ஏழுகிரு ஹங்களோடு திருப்தியடைந்துகொண்டும், கிடைத்தாலும் கிடைக் காவிட்டாலும் மனவேறுபாடில்லாமல் பெருந்தவம் செய்துகொண் டும், வாய்ச்சியினால் ஒருகையை வெட்டுகிறவனும் சந்தனத்தினால் மற்றொருகையை நனைக்கிறவனுமாகிய அவ்விருவருக்கும் முறையே தீமையையும் நன்மையையும் கருதாமலும், ஜீவிக்க ஆசைப்பட்ட வன்போலவும் இறந்துபோகக் கருதினவன்போலவும் எதையும் செய்யாமலும், வாழ்வதையும் இறந்துபோவதையும் பற்றி விருப்பும் வெறுப்புமில்லாமலும், ஜீவித்திருப்பவன் தன் நன்மைக்காகச் செய் யக்கூடிய செய்கைகள் எல்லாவற்றையும் விட்டும், இமையைக்கொ ட்டுவது முதலியவற்றில் மாத்திரம் நின்றுகொண்டும், அநித்யங்களா யுள்ள அந்தச்செய்கைகளில இந்திரியங்களின் பிரவர்த்திகள் எல்லா வற்றையுமே ஒழித்தும், தர்மார்த்தங்களை விலக்கியும், மனத்தினழுக் குக்களைச் செம்மையாகக் கழுவியும்,பாவங்கள் எல்லாவற்றினின்றும் நீங்கியும், எல்லாவலைகளையும் கடந்தும், யாருக்கும் உட்படாமலும் காற்றுக்கொப்பாகவும்இருந்துகொண்டும்,இவ்வகையான செய்கையுட னே எப்போதும் நடந்துகொண்டும் (ஸம்ஸார)பயமற்றமோக்ஷமார்க் கத்தையடைந்து தேகத்தை முடிக்கப்போகிறேன். தனதுபுத்ரோத் பத்திசக்தியானது குறைந்து போவதனால் விசனப்படத்தக்கதும் தன் கிருஹஸ்தாச்ரமதர்மத்துக்கு முழுவதும் விலக்குமாகிய மிகத் தாழ்வான வழியில் அசக்தனாக நான் திரியமாட்டேன். எவன்உலக ஸுகங்களில் விருப்பம்வைத்து, நன்குமதிக்கப்பட்டாலும் அவம திக்கப்பட்டாலும் தீனமானபார்வையுடன் இழிவான ஜீவனத்தை அனுஸரிக்கிறானோ அவன் நாய்களின் வழியிலிருப்பவன்" என்று அவ்வரசன் இவ்வாறுசொல்லி மிகத்துயரமுற்று அதிகமாகப்பெரு மூச்செறிந்துகொண்டு குந்தியையும் மாத்ரியையும் பார்த்துச்சொல் லத்தொடங்கினான்:

---

* ஜராயுஜம் முதலியவை.

"கௌஸல்யை, க்ஷத்தாவென்று சொல்லப்பட்ட விதுரர், ராஜா வாகிய த்ருதராஷ்டிரன், பந்துக்கள், பெரியவளாகிய ஸத்யவதியம் மை, பீஷ்மர், ஸோமபானஞ் செய்தவர்களும் உறுதியான நியமமுள் ளவர்களும் மஹாத்மாக்களும் ராஜபுரோகிதர்களுமான அங்குள்ள பிராமணர்கள், நம்மை ஆச்ரயித்து அங்கே வஸிக்கின்ற நகரத்துப் பெரியவர்கள் ஆகிய இவர்களெல்லோரையும் நமஸ்காரஞ்செய்து பாண்டு காட்டில் துறவியானுனென்று சொல்லவேண்டும்" என்றான். ஸந்யாஸதருமத்தில் மனம்வைத்த கணவனுடைய சொல்லைக்கேட்டு அவனுக்குத் தகுதியான மறுமொழியைக் குந்தியும் மாத்ரியும் உரை த்தனர். "பரதஸ்ரேஷ்டரே! எங்களுடன்கூடத் தர்மத்தைச் செய்து கொண்டு வஸிப்பதற்குரிய வேறு ஆஸ்ரமங்களும் இருக்கின்றன. தர்மபத்நிகளாகிய எங்களுடன்கூடப் பெருந்தவஞ் செய்வதற்கும் சிறந்த பலனுள்ள மோக்ஷதர்மத்தை அடைந்து சரீரத்தை விடுவதற் கும் ஆலோசிக்கவேண்டும். ஸ்வர்க்கத்திலும் நீரே பர்த்தாவாகப் போகிறீர்; ஐயமில்லை. நாங்களும் பர்த்தாபோகும் லோகத்தையே கருதிப் புலன்களையெல்லாம் அடக்கி விருப்பத்தையும் சௌக்கியத் தையும்விட்டுப் பெருந்தவம் செய்வோம். சிறந்தஞானியே! மனித ருக்குஅதிபதியே! நீர் எங்களை விட்டுவிடுவீராயின் இப்போதே நாங் கள் உயிரை இழந்துவிடுவோம். இதில் ஸந்தேகமில்லை" என்றனர். அவர்கள் அப்படிச்சொல்ல, பாண்டு, "உங்களிருவருக்கும் கூடத் தர்மத்துடன்சேர்ந்த இந்த நிச்சயமிருந்தால் என் பிதாவாகிய வியாஸ ருடைய அந்தக்குற்றமற்ற நடையையே நானும் அனுஷ்டிப்பேன். அற்பஸுகங்களின் அனுபவத்தைவிட்டு உயர்ந்த தவத்தைச்செய்து கொண்டும் மரவுரிதரித்துக் காய்கிழங்குகளைப் புசித்துக்கொண்டும் இந்தமஹாவனத்தில் திரியப்போகிறேன். காலைமாலை இரண்டுகாலங் களிலும் ஸ்நானமும் அக்கிஹோத்திரமும் செய்துகொண்டு, ஆகாரம் குறைந்து இளைத்து மரவுரியையும் தோலையும் உடுத்து ஜடையை யும் தரித்துக் குளிரையும் காற்றையும் வெயிலையும் தாங்கி, பசிதாகங் களைக் கவனிக்காமல் செயற்கரியதவத்தினால் இந்தச் சரீரத்தைவற் றச்செய்து தனிமையிலிருந்து தியானம் செய்துகொண்டு சமைத்த தையோ சமைக்காததையோ இரண்டையும் தின்றுகொண்டு, பிதிர்க் களையும் தேவர்களையும் காட்டிலுள்ள ஆகாரங்களை நிவேதனஞ்செய் வதனாலும் மந்திர ஜபங்களினாலும் ஜலதர்ப்பணத்தினாலும் திருப்தி செய்வேன். குடும்பத்துடன் வஸிக்கின்ற வானப்ரஸ்தர்களைக்கூடப் பார்க்கமாட்டேன்; அவர்களுக்குவேண்டாதனவற்றையும்செய்யேன்;

கிராமங்களில் இருப்பவரைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? இவ்வாறு கொடியதும் கொடியதினும் கொடியதுமாகிய வானப்ரஸ்தசாஸ்திரங்களிற் சொன்னவிதிகளை இந்தத்தேகத்தை விடுகிறவரையில் விருப்பத்துடன் நான் எடுத்துக்கொள்ளப்போகிறேன்'' என்றான்.

கௌரவவம்சத்துப் புத்திரனாகிய பாண்டுமஹாராஜன் அந்தப் பாரியைகளைநோக்கி இவ்வாறு சொல்லி, உடனே தலையிலுள்ள ரத்நத்தையும், கழுத்திலுள்ள பொன்மாலையையும், தோள்வளைகளையும், குண்டலங்களையும், விலைபெற்ற வஸ்திரங்களையும், ஸ்திரீகளுக்குரிய ஆபரணங்களையும், சிறந்த வாஹனங்களையும், ஆயுதங்களையும், கவசங்களையும், பொன்மயமான குதிரைகளின்ஆபரணங்களையும், சிறந்த கட்டில்களையும், மெத்தைகளையும், பலவகையான விலையுயர்ந்த முத்துக்களையும், பவழங்களையும், பலவகை ரத்நங்களையும், பிராமணர்களுக்குமுழுதும் கொடுத்துத் தன்வேலைக்காரர்களை நோக்கி, "கௌரவபுத்ரனை பாண்டு, பொருள் விருப்பம் இன்பம் சிறந்த புத்ரனைக் கொடுக்கத்தக்க ஸ்திரீஸம்போகம் முதலிய எல்லாவற்றையும் முற்றிலும் விட்டுவிட்டுப் பாரியைகளுடன்கூடி வனத்தில் துறவியாகச் சென்றானென்று அஸ்திநபுரம் சென்று நீங்கள் சொல்லவேண்டும்'' என்றுசொன்னான். பிறகு, அவன்பின் சென்ற அந்தவேலைக்காரர்கள் பரதவம்சத்து விம்மமாகிய பாண்டுவின் அனேகவிதமான துக்கவசனங்களைக்கேட்டு பயங்கரமாக அழுது, ஹா! ஹா! வென்று கூவினர். உஷ்ணமான கண்ணீரைச் சொரிந்துகொண்டு அந்த ராஜாவை விட்டுவிட்டு அவனுடைய தனமெல்லாவற்றையுமெடுத்துக் கொண்டு விரைவாக அஸ்திநநகரம் சென்றனர். அவர்கள் நகரம் சென்று மஹாத்மாவாகிய அந்தராஜாவின்நிலைமையை நடந்தவாறு திருதராஷ்டிரமஹாராஜாவுக்குச் சொன்னார்கள். அந்த அனேகவிதமானதனத்தையும் கொடுத்தனர். பிறகு, மஹாவனத்தில் நடந்ததையெல்லாம் நடந்தபடி அவர்களிடம் கேட்டு ராஜாவாகியத்ருதராஷ்டிரன் பாண்டுவைப்பற்றியே விசனமுற்றான். சோகத்தினால்மூடப்பட்டு அதேவிஷயத்தைநினைத்துக்கொண்டு படுப்பதிலும் உட்காருவதிலும் மற்றுமுள்ள ஸுகங்களிலும் ஒருபோதும் விருப்பத்தை அடையாமலிருந்தான். ஜனமேஜயரே! ராஜபுத்ரனை பாண்டுவோவெனின், கிழங்குகளையும் காய்களையும் உணவாகக்கொண்டு பத்தினிகளுடன் கூடி அங்கிருந்து நாகசதமென்னும் மலைக்குச் சென்றான். அவன் சைத்ராதமென்னும் குபேரனுடைய உத்யானவனத்தை அடைந்து காலகூடமென்னும் இடத்தைத்தாண்டி இமயமலையைக் கடந்து

கந்தமாதன மலைக்குப்போனான். ஜனமேஜயமஹாராஜரே ! பெரிய பூதங்களாலும் ஸித்தர்களாலும் மஹரிஷிகளாலும் காப்பாற்றப் பட்டவனாக அவன் ஸமபூமிகளிலும் மேடுபள்ளமான இடங்களிலும் வாஸஞ்செய்தான். மஹாராஜரே ! இந்திரத்யும்னமென்னும் தடா கத்தைச் சேர்ந்து ஹம்ஸகூடமென்னும் இடத்தைக் கடந்து சத ஶ்ருங்கமென்னும் மலையில் ரிஷியாயிருந்து தவஞ்செய்தான்.

---

## நூற்றிருபத்தைந்தாவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(ரிஷிகளுடன்கூடப் பிரம்மலோகம்போகப் புறப்பட்ட பாண்டுவை ரிஷிகள் நிறுத்தியது.)

பாரதரே! அங்கும் அந்தவீரன் சிறந்ததவத்திலிருந்துகொண்டு ஸித்தசாரணர்களின் கூட்டங்களுக்குப் பார்ப்பதற்கு இனியவனாக இருந்தான். பெரியோருக்குப் பணிவிடைசெய்துகொண்டும் அகங்கா ரம் பேசாமலும் மனத்தையடக்கியும் புலன்களைவென்றும் தன் சக்தி யினால் ஸ்வர்க்கம்போவதற்கு உத்ஸாஹத்துடனிருந்தான். சில ரிஷிக ளுக்கு ஸஹோதரனாகவும் மற்றும் சிலரிஷிகளுக்குச் சினேகிதனாகவு மிருந்தான். இன்னும் சில ரிஷிகள் இவனைப் புத்ரனைப்போற் காப் பாற்றினர். பரதஶ்ரேஷ்டரே ! அந்தப் பாண்டு, நீண்டகாலத்திற்குப் பின் மாசற்ற தவத்தையடைந்து, பிரம்மரிஷிக்கு ஒப்பாக ஆனான். ஓர் அமாவாஸ்யைத்தினத்தில் உக்ரமான தவத்தினையுடைய அம் மஹரிஷிகள் சேர்ந்து பிரம்மாவைக் காண்பதற்கு விரும்பிப் புறப்பட் டனர். புறப்பட்ட ரிஷிகளைக்கண்டு, "நீங்கள் எங்கே போகப்போகின் றீர்கள் ? பேசத்தெரிந்தவர்களிற் சிறந்தவர்களே ! அதை எனக்குச் சொல்லுங்கள்" என்று பாண்டு கேட்டான். ரிஷிகள், "மஹாத்மாக் களாகிய தேவர்கள், ரிஷிகள், பித்ருக்கள் இவர்களுடைய பெரியஸபை பிரம்மலோகத்தில் இன்றைத்தினம்கூடுகிறது. நாங்கள்பிரம்மாவைக் காண விரும்பினவர்களாக அங்கேபோகின்றோம்" என்று மறுமொழி கூறினர். மஹரிஷிகளுடன் போவதற்கு விரும்பிய அந்தப்பாண்டு விரைவாக எழுந்து ஸ்வர்க்கத்தின் எல்லையைத் தாண்டவிரும்பினவ னாகப் பத்னிகளுடன்கூடச் சதஶ்ருங்கமலையிலிருந்து வடக்குநோக் கிப் புறப்பட்டான். அந்தரிஷிகள் அவனுக்குப் பின்வருமாறு சொல் லத்தொடங்கினர்.

"நாங்கள் இந்தச்சிறந்தமலையிலிருந்து வடக்குநோக்கி மேலே மேலே போகும்போது அழகானமலையில் யாரும் போகக்கூடாத அனேக இடங்களையும், நூற்றுக்கணக்கான தேவர்களுடைய விமானங்கள் நெருங்கியதும் ஸங்கீதசப்தத்தினால் நிரம்பினதுமாகிய தேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் விளையாடுமிடங்களையும், ஸமபூமியும் மேடுபள்ளமுமாயுள்ள குபேரனுடைய தோட்டங்களையும், பெரிய நதிகளின் கரைகளையும், செல்லமுடியாதமலைகளின் குகைகளையும் கண்டிருக்கிறோம். விடாதபனியுள்ளவைகளும் செடிகளும் மிருகங்களும் பக்ஷிகளும் இல்லாதவைகளுமான தேசங்களிருக்கின்றன. சில இடங்களில் செல்லமுடியாதவைகளும் கிட்டநெருங்க முடியாதவைகளுமான சில பெரிய குகைகளிருக்கின்றன. அந்த இடங்களைப் பக்ஷிகள்கூடத் தாண்டமாட்டா; மிருகங்கள்முதலிய மற்றவை தாண்டுவதென்பது எப்படி? இந்த இடங்களில் வாயு ஒன்றுதான் ஸஞ்சரிக்கும். தவத்தில் ஸித்திபெற்ற மஹரிஷிகள் செல்வர். கஷ்டத்தில்வழக்கப்படாத இந்த ராஜகுமாரிகள் இந்த மஹாபர்வதத்தின்மேல் போகும்போது எவ்வாறு சோராமலிருப்பர்? பரதஸ்ரேஷ்டனே! நீ போகாதே" என்றனர். பாண்டு, "மஹானுபாவர்களான ரிஷிகள் ஸந்ததியில்லாதவனுக்கு ஸ்வர்க்கமார்க்கத்தைச் சொல்லவில்லை. அதனால், ஸந்ததியில்லாத நான் பரிதாபமுற்று உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிப்பட்ட நான் ஸந்ததியில்லாதவனாயினும் மனைவிகளுடன் கடுந்தவஞ்செய்து உயிரை விட்டபிறகு தீவ்ரமான என் நல்லகருமத்தினால் ஸ்வர்க்கத்தை அடையக்கடவேன்" என்றுசொன்னான். "தர்மாத்மாவே! ராஜாவே! தேவதைக்கொப்பானதும் அழகியதும் தீங்கில்லாததுமாகிய புத்ரஸந்தானம் உனக்கு இருக்கிறது. நாங்கள் ஞானதிருஷ்டியினால் அறிகிறோம். புருஷஸ்ரேஷ்டனே! விதியினாலேற்படுவதை உன்கருமத்தினால் நீ இங்கே ஸம்பாதித்துக்கொள். புத்தியுள்ள மனிதன் வியாகுலப்படாமல் எளிதாகப் பலனையடைவான். ராஜாவே! உனக்கிருப்பதாக நாங்கள் கண்ட அந்தப்பலனுக்காக நீ முயற்சிசெய்தற்கு உரியவனாயிருக்கிறாய். குணங்கள் நிரம்பினதும் ஸுகத்தைத்தருவதுமாகிய ஸந்ததியை நீ அடையப்போகிறாய்" என்று ரிஷிகள் மறுமொழிகூறினர். அந்த ரிஷிகளின் சொல்லைக்கேட்டு மானாக இருந்த ரிஷியின் சாபத்தினால் தனக்கு ஸந்ததியின் உபாயம் கெடுக்கப்பட்டிருப்பதை அறிந்து பாண்டு சிந்தைமிகுந்திருந்தான்.

---

## நூற்றிருபத்தாறுவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(விதுரர்விவாஹமும், அவருக்குப் புத்திரர்கள் பிறந்ததும், காந்தாரிக்குக் கர்ப்பம் உண்டானதும், பாண்டுவுக்குப் புத்ரனில்லாமையால் அவன் குந்தியினிடம் விசாரப்படுவதும்.)

"அதன்பிறகு, பீஷ்மாசாரியர், தேவகனென்னும்ராஜாவின்வைப்பாட்டியின்பெண் அழகும் யௌவனமும் நிரம்பியிருப்பதைச் செவியுற்றார். பிறகு, பரதஸ்ரேஷ்டராகிய பீஷ்மர் அவளைவரித்து அழைத்து வந்து சிறந்தபுத்தியுள்ள விதுரருக்கு விவாஹஞ்செய்வித்தார். கௌரவபுத்திரரே! அவளிடத்தில் விதுரர் விநயம்பொருந்தினவர்களும்குணங்களில் தமக்கொப்பானவர்களுமாகியபுதல்வர்களை உண்டுபண்ணினார். ஜனமேஜயரே! பிறகு, த்ருதராஷ்டிரனுக்குக் காந்தாரியிடம் நூறுபுத்ரர்கள் பிறந்தனர்; வைசியஜாதிப்பெண்ணிடம் நூற்றுக்கு மேற்பட்டவனாகிய ஒருபுத்திரன் பிறந்தான். பாண்டுவுக்குக் குந்தியிடமும் மாத்ரியிடமும் மஹாரதர்களான ஐந்துபுத்திரர்கள் குலத்தின் அபிவிருத்திக்காகத் தேவர்களிடமிருந்து உண்டாயினர்" என்று வைசம்பாயனர்சொல்ல, ஜனமேஜயர், "பிராமணஸ்ரேஷ்டரே! காந்தாரிக்கு நூறுபுத்ரர்கள் எவ்வாறு உண்டாயினர்? எவ்வளவு காலத்தால் பிறந்தனர்? அவர்களுடைய பூர்ணமானஆயுள் என்ன? த்ருதராஷ்டிரனுக்கு ஒருபுத்திரன் வைசியப்பெண்ணினிடம் எவ்வாறு பிறந்தான்? தர்மத்தையனுஷ்டிப்பவளும் ஒற்றுமையாக நடப்பவளும் தனக்குத்தகுதியான மனைவியுமான காந்தாரியை த்ருதராஷ்டிரராஜன் எவ்வாறுஅதிக்ரமித்திருந்தான்? அந்தமஹாத்மாவாகிய கிந்தமரால் சபிக்கப்பட்டிருந்த பாண்டுவுக்கு மஹாரதர்களாகிய ஐந்துபுத்ரர்கள் தேவர்களால்உண்டானதெப்படி? வித்வானே! தபோதனரே! இவற்றை நடந்தபடி விரிவாகச் சொல்லக்கடவீர். என் பந்துக்களைப்பற்றிச் சொல்வதைக்கேட்பதில் எனக்குள்ளவிருப்பம் தணியவில்லை" என்று கேட்டார். அதைக்கேட்டு, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினார்:

"பசித்தும் களைத்தும்வந்த த்வைபாயனமுனிவரைக் காந்தாரி ஆராதித்தாள். அவளுக்கு வியாஸர் வரம்கொடுத்தார். அவள் தன் பர்த்தாவைப்போன்ற நூறுபுத்ரர்கள் தனக்கு வேண்டுமென்றுகேட்டாள். பிறகு, காலக்கிரமத்தில் அவள் த்ருதராஷ்டிர ராஜனுக்குக் கர்ப்பத்தையடைந்தாள். வீரரே! காந்தாரி கர்ப்பம் தரித்தபோது

அம்பாலிகையின் புத்ரனுகிய பாண்டு தனக்கு ஸந்ததியைப்பற்றிப் பெருந்துயரமடைந்தான். காந்தாரி கர்ப்பம்தரித்தபின், மானுயிருந்த முனியின் சாபத்தினுல் சந்ததியின்உபாயம் அற்றுப்போய்ப் பெருந் துயரமுற்ற பாண்டு தன்னை வெறுத்துக்கொண்டிருந்தான். பூமியில் விசுவாமித்திரரைப்போலத் தவத்தினுல் ஸித்தியையடைந்துதேகத்தை விடுவதற்கு நிச்சயஞ்செய்துகொண்டிருந்த அந்தப்பாண்டு, பின் வரும் சொல்லைச் சொல்லலானுன்: "பெண்ணே! பிதிர்க்கள், தேவர்கள், மனிதர்கள், ரிஷிகள் ஆகிய நால்வர்விஷயத்திலும் கடன்பட்டவனுகவே மனிதன் பூமியிற்பிறக்கிருன். அவன் தர்மத்தையறிந்து அந்தஅந்தக் காலங்களில் இந்தக்கடன்களிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளாமலிருப்பனே அவனுக்கு நல்லலோகங்களில்லையென்று லோகங்களை அறிந்தவர் நினைக்கின்றனர். தேவர்களை யஜ்ஞங்களினுலும், ரிஷிகளை வேதாத்தியயனம்செய்வதனுலும் தவம்செய்வதனுலும், பிதிர்க்களைப் புத்ரஸந்தானத்தை உண்டுபண்ணுவதனுலும் சிராத்தம் செய்வதனுலும், மனிதர்களை அன்பினுலும் (மனிதன்) ஆராதிக்கவேண்டும். நான் என்தர்மத்தைச்செய்து ரிஷிகள், தேவர்கள், மனிதர்கள் இவர்களுடைய கடன்களிலிருந்து என்னைவிடுவித்துக்கொண்டேன். பிதிர்க்களின் கடனிலிருந்துமாத்திரம் விடுவித்துக்கொள்ளவில்லை. அந்தக்கடன் மற்றவற்றைவிடப் பெரிது. எனதுதேகம் போகும்போது பிதிர்க்களுக்கே நாசம்வருமென்பது நிச்சயம். மற்றமூன்றுக்கும் கெடுதல்வரும்போது தான்மட்டும்கெடுவன். ஆதலால், இந்தலோகத்தில் புத்திரஸந்தானம்கிடைப்பதற்காகஉத்தமர்களான பிராமணர்கள் பிரவிர்த்திக்கின்றனர். என்னுடையபிதாவின்பாரியையினிடம் அந்த மஹாத்மாவாகிய வ்யாஸரால் நான் எப்படி உண்டாக்கப்பட்டேனே அப்படியே இந்த என்பாரியையினிடம் ஸந்ததி உண்டாக்கப்படலாமா?" என்றுசொன்னுன். அந்தப்பரதஸ்ரேஷ்டன் குந்தியையும் மாத்ரியையும் அழைத்து, புத்திரலாபத்தைப் பூர்த்திசெய்வதே எல்லாவற்றினும்மேலானகடமையென்பதை உரைக்கலானுன்: "*ஆபத்காலங்களில் தாழ்ந்தகுலத்தோர் மேற்குலத்துப்புருஷனுல் புத்ரோத்பத்தியை விரும்புகின்றனர். உயர்குலத்தோனுல் உண்டாகும் சந்ததி தர்மபலனைக் கொடுக்குமென்று சான்றோர் கொள்கின்றனர்" என்று சொல்லி, மஹாப்பிராமணர்களின் ஸபையில் அந்தக்குந்திமாத்ரிஇருவரையும் செம்மையாக மனம் ஒப்பச்செய்து தர்மந்தெரிந்த பாண்டு சிறந்த குணங்களையுடைய ஒருபிராமணனைப்பற்றிச் சிந்தித்தான்.

---

* புத்ரன்கிடைக்கக்கூடாத காலங்களில்.

அவன் ரஹஸ்யத்தில் தனதுதர்மபத்நியும் புகழ்பெற்றவளுமான குந்தியைநோக்கி, "ஆபத்காலத்தில் புத்ரனை உண்டுபண்ணிக்கொள்ளும் விஷயத்தில் உபாயத்தை நீ ஆலோசிக்கவேண்டும். குந்தியே! லோகத்தில் ஸந்தானமென்பது தர்மத்திற்கு ஆதாரமென்று தர்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ற அறிஞர்கள் நெடுங்காலமாக அறிந்திருக்கின்றனர். ஸந்தானம் இல்லாதவனுக்கு யாகமும் தானமும் தான்செய்ததவமும் ஒழுங்காகஅநுஷ்டிந்தவிரதங்களும் ஒன்றும் பாவத்தைப்போக்குகின்றவையாக இவ்வுலகத்தில் சொல்லப்படுவதில்லை. அழகியபுன்சிரிப்புள்ளவளே! நான் இவ்வகையை அறிந்துதான் புத்ரனில்லாமல் நல்லலோகங்களையடையமாட்டேனென்று நினைத்து இவ்வாறு ஆலோசிக்கிறேன். பிள்ளையில்லாமல் நான்மரணத்தையும் விரும்பவில்லை. உயிர்வாழ்க்கையையும் விரும்பவில்லை. யாருமில்லாதவனத்தில் என்னுடைய கொடுஞ்செய்கையினால்மாத்திரம் எல்லாநன்மையையும் கெடுக்கத்தக்க மானாகஇருந்த ரிஷியின்சாபம் வந்தது உனக்குத்தெரியுமே. தர்மசாஸ்திரத்தில் * ஆறுபுத்ரர்கள் தாயபாகத்திற்குரிய சுற்றத்தவரென்றும் மற்ற † ஆறுபுத்ரர்கள் தாயபாகத்திற்குரியரல்லாத சுற்றத்தவரென்றும் சொல்லப்பட்டனர். குந்தியே! அவர்களைப்பற்றி நான் சொல்லுகிறேன்; கேள். தன் தர்மபத்நியிடம் தனக்குப்பிறந்த ஔரஸன், அவளிடத்திலேயே தன் அநுமதியினால் உயர்குலத்தோனுக்குப்பிறந்த க்ஷேத்ரஜன், தாய்தந்தைகளால்விடப்பட்ட ‡ அபவித்தன், ஒருபெண்ணினிடம் இரண்டாவது விவாகம்செய்துகொண்ட புருஷனுக்குப்பிறந்த பௌனர்ப்பவன், விவாகம்செய்துகொள்ளாமல் கன்னிகையாயிருக்கும்போதுபிறந்த ‡ கானீனன், இன்னானுக்கென்று தெரியாமல் பரபுருஷனுக்குப்பிறந்த கூடோத்பன்னன், தத்தபுத்ரன், தாய்தகப்பனர்களுக்குக் கிரயம்கொடுத்து வாங்கப்பட்டக்ரீதபுத்ரன், புத்திரன்போல் அபிமானிக்கப்பட்ட க்ரித்ரிமபுத்திரன், தானே உனக்குப்புத்ரனாக இருக்கிறேனென்றுவந்த ஸ்வயம்தத்தனென்பவன், கர்ப்பிணியாகவே விவாகம் செய்யப்பட்டவளுக்குப் பிற

* 1 ஔரஸன், 2. க்ஷேத்ரஜன், 3. தத்தன், 4. க்ரித்ரிமன், 5. கூடோத்பன்னன், 6. அபவித்தன்.

† 1. கானீனன், 2. ஸஹோடன், 3. க்ரீதன், 4. பௌனர்ப்பவன், 5. ஸ்வயம்தத்தன், 6. பாரசவன்.

‡ 'அபவித்தன் என்பவன் ஒருவனுக்குப் பணங்கொடுத்து அவனைக்கொண்டு தன்மனைவியினிடம் உண்டாக்கிக் கொள்ளப்பட்டவன்' என்பதும், 'கானீனன் என்பவன் விவாஹத்துக்குமுன், இவளுக்குப்பிறக்கும் புத்திரன் எனக்குவேண்டுமென்று உடன்பாடுசெய்துகொண்ட அவள் பிதாவினால் தத்தெடுத்துக் கொள்ளப்பட்டவன்' என்பதும் பழையவுரை.

ந்த ஸகோடன் என்னும் புத்ரன், *ஞாதிபுத்ரன், சூத்ரஜாதி ஸ்திரீயினிடம் தனக்குப்பிறந்தவனாகிய பாரசவன் இவர்கள் பன்னிரண்டு புத்ரர்கள். இவர்களில் முன்சொன்ன புத்ரர்கள் இல்லாமையைப்பார்த்துப் பின்சொன்னபுத்ரர்களை அடையவிரும்பவேண்டும். ஆபத்காலத்தில் மேல்ஜாதியான புருஷனிடமிருந்தும் மைத்துனனிடமிருந்தும் ஸ்திரீகள் புத்ரனைவிரும்பலாம். குந்தியே! மனிதர்கள் தம்வீர்யத்துக்குப் பிறந்தவனைவிட ஜாதியில் சிறந்தவனுக்குப்பிறந்த புத்திரனை அடைவது தர்மபலனைக்கொடுக்குமென்று ஸ்வாயம்புவமனுசொல்லியிருக்கிறார். ஆதலால், நானாக ஸந்ததியுண்டுபண்ணுவதற்கில்லாமலிருக்கிற நான் இப்போது உனக்கு அனுமதிகொடுக்கிறேன். புகழ்பெற்றவளே! நமது ஸமானகுலமான ஜ்ஞாதியினிடத்திலிருந்தாவது உத்தமகுலமான பிராமணனிடத்திலிருந்தாவது நீ ஸந்ததியையடையக்கடவாய். குந்தியே! சாரதண்டாயனி என்பவளைப்பற்றி நான் சொல்லும் கதையைக்கேள். "கற்புள்ளவளும் புகழுள்ளவளுமான சுருதஸேனையென்னும் பெயருள்ள உன்சகோதரியை உயர்ந்தவனாகிய சாரதண்டாயனியென்னும்கேகயதேசத்தரசன் விவாஹம்செய்துகொண்டான். குந்தியே! வீரபத்னியாகிய அவள் தன்குருவினால் (பர்த்தாவினால்) புத்திரோத்பத்திசெய்துகொள்ளும்படிகட்டளையிடப்பட்டு ருதுஸ்நானஞ்செய்து நியமத்துடனிருந்து ராத்திரியில் நாலுசந்து கூடுமிடத்திலிருந்த ஒருதவஸித்திபெற்றபிராமணனைவரித்துப் †பும்ஸவனம் என்னும் கிருயையில் அக்கியில்ஹோமஞ்செய்துஅந்தக்கிரியைமுடிந்தபின் அந்தப்பிராமணருடன்கூடவே சேர்ந்திருந்தாள். அதனால்,அவள் துர்ஜயன்முதலான மூன்றுமஹாரதர்களைப்பெற்றாள். அழகானவளே! அப்படியே நீயும் தவத்திற்சிறந்த பிராமணனைக்கொண்டு புத்ரனை உண்டாக்கிக்கொள்வதற்கு என்கட்டளையின்மேல் சீக்கிரம் ப்ரயத்னஞ்செய்" என்றான்.

---

## நூற்றிருபத்தேழாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டுவுக்கு, குந்தி, வ்யுஷிதாஸ்வன் கதையைச் சொல்லியது.)

"ஜனமேஜயமஹாராஜரே! இவ்வாறு சொல்லப்பட்ட குந்தி கௌரவஸ்ரேஷ்டனும் வீரனும் பூமிக்கும் தனக்கும் பதியுமாகிய

* இவன்புத்ரனாக நினைக்கப்படவில்லை.

† ஆண்பிள்ளை பிறப்பதற்குச்செய்வது.

பாண்டுவைப்பார்த்துப் பேசத்தொடங்கினாள். தர்மந்தெரிந்தவரே! தாமரைக் கண்ணராகிய உம்மிடத்திலேயே பற்றுள்ள தர்மபத்நியாகிய என்னைப்பார்த்து எந்தக்காரணத்தாலும் நீர் இவ்வாறு சொல்லத்தகாது. சிறந்த கைகளையுடையவரே! பாரதரே! வீரரே! நீரே என்னிடத்தில் தர்மப்படி பராக்ரமமுள்ள புத்ரர்களை உண்டுபண்ணப் போகிறீர். மனுஷ்யஸ்ரேஷ்டரே! உம்மோடுசேர்ந்து ஸ்வர்க்கம் போவேன். கௌரவபுத்ரரே! ஸந்ததிக்காகவும் நீரே என்னைச் சேரக்கடவீர். உம்மைத்தவிர வேறொருபுருஷனை மனத்தினாலும் நான் அடையேன். உமக்கு மேலானமனிதர் வேறுயார் பூமியில் இருக்கிறார்? தர்மத்தில் சித்தமுடையவரே! விசாலமான கண்களையுடையவரே! நான் கேட்டிருந்த ஒரு பூர்வகதையை உமக்கு இப்போது சொல்லப் போகிறேன். அதை நீர் இப்போது கேட்பீராக.

"முன்னாளில் மிகுந்த தர்மிஷ்டனும் பூருவின்வம்சத்தைவிருத்தி செய்பவனுமாகிய வ்யுஷிதாஸ்வனென்று கியாதி பெற்ற ஓரரசன் இருந்தான். தர்மசித்தமுள்ளவனும் சிறந்த புஜபலமுள்ளவனுமாகிய அவ்வரசன் யாகம்செய்துகொண்டிருக்கையில் இந்திராதிதேவர்களும் தேவரிஷிகளும் அவனிடம் வந்துசேர்ந்தனர். ஸோமபானத்தினால் இந்திரனும் தக்ஷிணைகளினால் பிராமணர்களும் திருப்தியடைந்தனர். அப்போது, மஹாத்மாவாகிய வ்யுஷிதாச்வன் என்னும் ராஜரிஷியின் அந்த யாகத்தில் தேவர்களும் பிரம்மரிஷிகளும் தாங்களே வேலை செய்தனர். ராஜாவே! அதனால், வ்யுஷிதாச்வன் மனிதர்[illegible]மிகுந்த சினவனாக, வஸந்தகாலத்து ஸூர்யனைப்போல் எல்லா ஜனங்களுக்கும் பிரகாசித்தான். அந்தச் சிறந்த பராக்ரமமுள்ள வ்யுஷிதாஸ்வன் என்னும் ராஜஸ்ரேஷ்டன் அஸ்வமேதமென்னும் மஹாயாகம் நடக்கும்போது கிழக்கிலும் வடக்கிலும் மேற்கிலும் தெற்கிலுமுள்ள அரசர்களை ஜயித்துப் பிடித்துத் துரத்தினான். அரசர்க்கும்அரசனை வ்யுஷிதாச்வன் பத்துயானைகளின் பலமுடையவனாக இருந்தான். கௌரவர்களிற் சிறந்தவரே! கீர்த்திபெற்றபெரியவனான அந்த வ்யுஷிதாஸ்வராஜாவிஷயத்தில் பூர்வசரித்திரம் தெரிந்த ஜனங்கள்பின்வரும் காதையைப்பாடுகின்றனர்: அதன்பொருள், "வ்யுஷிதாஸ்வன் சமுத்திரத்தை எல்லையாகவுடைய இந்தப்பூமியை ஜயித்து எல்லாவருணங்களையும் பிதா தன் வயிற்றிற்பிறந்த புத்திரர்களைக் காப்பாற்றுவதுபோல் காப்பாற்றினான்" என்பது தான். அவன் பெரியயாகங்களைச்செய்து பிராம்மணர்களுக்குத் தனம் கொடுத்தான். அளவற்ற ரத்னங்களைச் சம்பாதித்துப்*பெரியயாகங்களைச் செய்தான். அனேகம்

* இங்கு, 'அக்நிஷ்டோமம் அத்யக்நிஷ்டோமம் முதலிய ஏழுயாகங்களைச் செய்தான்' என்பது பழையவுரை.

நரம் ஸோமரஸம் பிழிந்தான்; ஸோமலதை உண்டாகும்இடங் களை விருத்திசெய்தான். ராஜாவே! அவனுக்கு மிக்கபிரியமான வளும் அழகில் பூமியில் நிகரில்லாதவளும் கக்ஷீவானுடைய புத்திரி யுமாகிய பத்ரையென்பவள் அவனுக்கு மனைவியாக இருந்தாள். அவர்களிருவரும் ஒருவர்மேலொருவர் விருப்பமுற்றிருந்தனரென்று எனக்குக்கேள்வி. அவள்மேலே விருப்பங்கொண்ட அவ்வரசன் க்ஷய ரோகத்தை அடைந்தான். அதனால், வெகு சீக்கிரத்தில் ஸூர்யன் அஸ்தமனமாவதுபோல் முடிவையடைந்தான். அவ்வரசன்இறந்து போனபின் அவன்மனைவி மிகுந்த துயரமுற்றாள். புருஷச்ரேஷ்டரே! பத்ரையென்பவள் புத்ரனில்லாமல் மிகுந்த துக்கத்தினால் வருந்தின வளாகப் புலம்பினளென்று நமக்குக் கேள்வி. ராஜாவே! அவள் புலம்பலைச் சொல்லுகிறேன்; கேளும். "தர்மந் தெரிந்தவர்களிற் சிறந் தவரே! புருஷனில்லாத பெண் எவளாகட்டும் புருஷனைப்பிரிந்தபின் ஜீவித்திருப்பாளாயின் துக்கமுற்ற அவள் ஜீவித்திருப்பவள் ஆகாள். க்ஷத்ரியர்களிற் சிறந்தவரே! கணவனில்லாத பெண்ணுக்கு இறப்பே சிறப்பு. உம்வழியிற்செல்ல விரும்புகிறேன். தயவுடன் என்னை அழைத்துக்கொண்டுபோம். உம்மைவிட்டு ஒருநிமிஷமும் நான் ஜீவிக்கமாட்டேன். ராஜாவே! என்மேல் அனுக்ரஹம் செய்யும். என்னை இங்கிருந்து விரைவாக அழைத்துக்கொண்டுபோம். ராஜ ச்ரேஷ்டரே! திரும்பிவராமலிருக்கும்படி செல்லுகின்ற உம்மை நான் சமபூமிகளிலும் கரடுமுரடுகளிலும் பின்தொடர்ந்துவருவேன். ராஜாவே! ஆண்சிங்கமே! எப்போதும் உம்விருப்பத்தையும் உமது நன்மையையும்நாடி உமக்கடங்கி நிழலைப்போல் எப்போதும் விட்டுப் பிரியாமலிருக்கப்போகிறேன். அரசரே! தாமரைக்கண்ணரே! இது முதல் நீர் இல்லாமையால் நெஞ்சைவற்றச்செய்கின்ற தாங்கக்கூடாத மனநோய்கள் என்னை மூடிக்கொள்ளும். அதிர்ஷ்டமில்லாத நான், கூடியிருந்த ஆண்பெண்களைப் பூர்வஜன்மத்தில் பிரித்திருக்கவேண் டும். அதனாலேதான், இந்த உம்பிரிவு எனக்குநேர்ந்தது. அரசரே! பதியைவிட்டுப் பிரிந்தபின் எந்தப்பாவி சற்று நேரமாவது ஜீவித்தி ருக்கிறாளோ அவள் நரகத்திலிருப்பவள்போல் துக்கத்துடன் ஜீவிக் கிறாள். நான் முன்ஜன்மத்தில் சேர்ந்திருந்த ஸ்திரீபுருஷர்களைப் பிரித் திருக்கவேண்டும். ராஜரே! பூர்வஜன்மங்களில் செய்ததீவினைகளி னால் ஸம்பாதிக்கப்பட்ட அந்தத்துயரம் இப்போது உம்பிரிவினால் எனக்குவந்துசேர்ந்தது. ராஜாவே! துயரம்மேலிட்ட நான் இதுமுதல் உம்மைப்பார்ப்பதையே பயனாகக்கருதித் தர்ப்பசயனத்தில் படுத்திரு

க்கப்போகிறேன். மனிதரிற் சிறந்தவரே! மனிதர்க்கரசரே! துயர முற்று அழுதுபுலம்பிக்கொண்டிருக்கும் ஏழைக்குக் காட்சிகொடுத்துக் கட்டளையிடும்" என்றாள். இவ்வாறு அவள் அந்தப்பிரேதத்தைத் தழுவிக்கொண்டு இடைவிடாமல் பலவகையாகப் புலம்பிக்கொண்டிருக்கையில் ஓர் அசரீரிவாக்கு, "ஓ! பத்ரையே! நீ எழுந்துசெல். உனக்கு இப்போது ஒருவரம்கொடுப்பேன். அழகிய நகைமுகமுள்ளவளே! நானே உன்னிடத்தில் புத்ரர்களை உண்டாக்கப்போகிறேன். சிறந்தபெண்ணே! ருதுஸ்நானமாயினபின்உன்படுக்கையில்சதுர்த்தசிதினமும் அஷ்டமிதினமும் என்னுடன் சயனம்செய்வாய்" என்று சொல்லிற்று. அசரீரிவாக்கினால் இவ்வாறுசொல்லப்பட்ட அந்தப் பதிவ்ரதையான பத்ராதேவி புத்ரனைவிரும்பி அந்தக்காலங்களில்அசரீரிவாக்குச்சொன்னதைச் சொன்னபடியே செய்தாள். பாரதரேறே! பரதகுலத்தில் சிலாக்யரே! அந்த இறந்துபோன பர்த்தாவினால்அந்த ராஜஸ்திரீ ஸால்வதேசத்தரசர் மூவரையும் மத்ரதேசத்தரசர் நால்வரையும்புத்ரர்களாகப்பெற்றாள்.பரதஸ்ரேஷ்டரே! அவ்வாறே, தவம் போகம் இவற்றின்வன்மையுள்ள நீரும் உமது ஸங்கல்பத்தினாலேயே எனக்குப் புத்திரர்களை உண்டுபண்ணுவதற்கு ஸாமர்த்தியமுள்ளவர்" என்று குந்திசொன்னாள்.

---

## நூற்றிருபத்தேட்டாவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(உத்தாலகர் கதை.)

தர்மந்தெரிந்த பாண்டுமஹாராஜன், குந்தியினால் இவ்வாறு சொல்லப்பட்டபின், அந்தக் குந்திதேவியைநோக்கி மறுபடியும் தர்மமுள்ளதும் உயர்ந்ததுமான அடியில்வரும் சொல்லைச்சொன்னான்: "குந்தியே! அழகுள்ளவளே! நீ சொன்னபடிதான் இந்தக் காரியத்தை முன்னே வியுஷிதாஸ்வன் செய்தானும். அவனே தேவதையைப்போன்றவனாக இருந்தான் ஆனாலும், தர்மந்தெரிந்த மஹாத்மாக்களாகிய ரிஷிகளாற்கண்டறியப்பட்ட இந்தப் பழமையாயுள்ள தர்மரஹஸ்யத்தை நான் சொல்லப்போகிறேன். நீ அறிந்து கொள். சிறந்தமுகமும் அழகியபுன்சிரிப்புமுள்ளவளே! முற்காலத்தில் பெண்கள் கட்டில்லாதவர்களாகவும் விரும்பினபடி நடந்துகொண்டிருப்ப

வர்களாகவும் ஸ்வதந்திரர்களாகவும் இருந்தனர். அழகானவளே! பெண்ணரசியே! அதுவே முற்காலத்திய தர்மமாயிருந்ததனால் அவர்கள் யௌவனத்தினால் தங்கள்புருஷர்களைமீறி விபசரித்தும் அவர்களுக்குப் பாவமுண்டாகவில்லை. அந்தப்பழைய தர்மத்தைத்தான் திரியக்ஜாதியிற்பிறந்த பிராணிகள் காமக்ரோதங்கள் இல்லாமலே இன்றைக்கும் அநுஸரித்துவருகின்றன. இது ப்ரத்யக்ஷமாகப் பார்க்கப்பட்ட தர்மம். மஹரிஷிகளாலும் அஃது அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. வாழைமரம்போன்றதொடைகளையுடையவளே! உத்தர குரு தேசங்களில் இன்னமும் அந்தத்தர்மம் கொண்டாடப்படுகிறது. அது ஸ்திரீகளுக்கு நன்மையைச்செய்கிற சாச்வதமான தர்மம். அக்கினிக்கு விறகுகளும் சமுத்திரத்துக்கு நதிகளும் யமனுக்கு ஸர்வப்ராணிகளும் பெண்களுக்குப் புருஷர்களும் போதுவதில்லை. அதனாலேதான், ஸ்திரீகளுக்கு ஒவ்வொரு புருஷன்மேலும் ஆசையிருக்கிறது. அழகிய புன்னகையுள்ளவளே! சோரத்தனத்தவரிடம் சேராமலிருப்பதென்பது பெண்களுக்கு ஒருபோதுமில்லை. சிலபெண்களுக்குப் புத்ரனுயிருந்தாலும் பௌத்ரனுயிருந்தாலும் ஸகோதரனுயிருந்தாலும் ரஹஸ்யத்தில் புருஷனைக்கண்டபின் * (மனவேறுபாடு) உண்டாகின்றது. அழகியவளே! இது பெண்களுக்கு இயற்கையிலுண்டானது; காரணத்தினால் வந்ததன்று. அழகானசிரிப்புள்ளவளே! இந்த லோகத்தில் இந்த வியவஸ்தை சிலநாளாகத்தான் நிலைநிறுத்தப்பட்டது. அதை யார் எந்தக்காரணத்திற்காகச்செய்தார்களென்பதை விரிவாகச் சொல்லுகிறேன்; கேள்: உத்தாலகரென்று பெயர்பெற்ற ஒரு மஹரிஷி இருந்தாரென்று நமக்குக்கேள்வி. அவருக்கு ச்வேதகேதுவென்று கியாதிபெற்ற புத்ரராகிய ஒரு ரிஷியிருந்தார். தாமரையிதழ் போன்ற கண்களையுடையவளே! அந்த ச்வேதகேதுவினால் கோபத்தினால் தர்மத்தைப்பற்றி இந்த நியமம் செய்யப்பட்டது. அஃது எதற்காகவென்பதை இப்போது சொல்லுகிறேன்; கேள்:

தவத்திற்சிறந்தவராகிய சுவேதகேதுவின்பிதா முதுவேனிற்காலத்தில் பஞ்சாக்கினிமத்தியிலிருந்துகொண்டும் மழைக்காலத்தில் திறந்த வெளியிலிருந்துகொண்டும் பனிக்காலத்தில் ஜலத்தில் நின்றுகொண்டும் பாரியையுடன்கூடி உக்கிரமான தவத்தைச்செய்துகொண்டிருந்தார். தவஞ்செய்பவரும் நியமத்தினால் த்யானத்திலிருப்பவருமாகிய உத்தாலகருக்கு அவர்புத்ரரான ச்வேதகேதுபணிவிடைசெய்துகொண்டிருந்தார். மடிப்புக்களும் நரையும் நிரம்பின ஒரு பிராமணர்

* மூலத்தில் வேறுமாதிரியாக இருக்கிறது.

அவரிடம் வந்தார். (பாரதரே!) அவரைக்கண்டமாத்திரத்தில் அம் முனிவர் அன்புகூர்ந்து நல்வரவுகேட்பதினாலும் பாத்யம்கொடுப்பதி னாலும் இன்சொற்களினாலும் சாஸ்திரப்படி பூஜைசெய்தார். காட்டி லுள்ள கீரைகளாலும் கனிகள் கிழங்குகளாலும் காட்டிலுண்டாகிற மற்றவைகளாலும் பூஜித்தார். பசியினாலும் தாகத்தினாலும் உண் டான களைப்பினால் சோர்வுற்ற பிராமணர் அம்மஹரிஷியினால் பூஜிக் கப்பட்டுக் களைப்புந்தீர்ந்தபின் ரிஷியிடம்சென்று, "உத்தாலக மஹ ரிஷியே! நீர் எனக்கு உண்மையைச்சொல்லும்; பொய்சொல்லாதேயும். பாலயனை இந்த ரிஷிகுமாரன் பார்ப்பதற்கு மிகப்பிரியமாயிருக்கி றான். இவனை உமது புத்திரனென்று நினைக்கிறேன். பாக்கியசாலியா யிருக்கிறீர். அதைச்சொல்லும்" என்று வினவினார். சிறந்த பிரஜ்ஞை யுள்ளவரே! எனது மனைவி குரிகருடையபெண்; எனக்கன்புள்ள வள்; எனக்கு ஒத்திருக்கும்பாரியை; எந்தக்காலமும் என்னைவிட்டுப் பிரியாதவள்; பதிவிரதைகளில் அருந்ததியைப்போன்றவள்; தவத்தி னால் ஸ்தனங்கள் சுருங்கிப்போனவள். சிறந்த தவமுள்ள ஸ்வேத கேது எனக்கு இவளிடத்தில்பிறந்தபுத்திரன். பிராமணரே! இவன் வேதவேதாந்தங்கள் தெரிந்தவன்; என்சொல்தவறாதவன்; உலகந் தெரிந்தவன்; எல்லாலோகங்களிலும் பெயர்பெற்றவன்; பொய்யா மொழியன்; தயையுள்ளவன்" என்று உத்தாலகர்சொன்னார். பிராம ணர், "எனக்குப்புத்திரனில்லை; பாரியைவேண்டும். நான் வயதில்முதி ர்ந்தவன்; கண்பார்வை குறைந்தவன். பித்ருக்களின் கடனிலிருந்து விடுபடாமலிருக்கிறேன். முன்னமேயே விவாஹஞ்செய்துகொள்ளா மற்போனேன். வந்ததிக்கு அரணியைப்போன்றவளும் சிறந்தகுல மும் ஒழுக்கமும் உள்ளவளுமாகிய உமது பாரியை கோத்திரத்தில் எனக்கு ஒத்தவளாயிருக்கிறாள். இவளை அழைத்துக்கொண்டு போகி றேன். நீர் என்னை மன்னிக்கவேண்டும்" என்று சொல்லி, மான்குட் டியின் கண்களைப்போல் அலையுங்கண்களையுடையவளும் மரவுரியை யும்கிருஷ்ணாஜினத்தையும் ஆடையாகவுடையவளும் தன்வேலையைச் செய்யவே சக்தியில்லாதவளும் அவரிடத்தில் விருப்பமில்லாதவளும் சிறந்தவளுமாகிய ஸ்வேதகேதுவின் தாயாரை உடம்புதளர்ந்து தடி யையே ஆதாரவாகப் பிடித்தவரும் கண்ணொளியும் புத்தியும் குறைந்த வருமாகிய அந்தப்பிராமணர் ஸ்வேதகேதுவின் பிதாவின்கண்முன்னா லேயே கையிற்பிடித்துக்கொண்டு, "நாமிருவரும் செல்வோம்" என் றும் சொன்னார். அப்போது அந்த ரிஷிபுத்திரர் தாயாரை அவ்வாறு பலாத்காரமாகக் கொண்டுபோவதைக்கண்டு கோபங்கொண்டார்

தவத்தினால் ஜ்வலிக்கும் சக்தியோடுகூடிய ச்வேதகேது அதைப் பொறுக்கவில்லை. ச்வேதகேது தம் தாயாரைக் கையிற்பிடித்துக் கொண்டு, " துஷ்டப்பிராமணரே! பதிவிரதையான என்தாயாரைநீர் விட்டுவிடும். என்பிதா இயற்கையில் பொறுமையுள்ளவரும் பிரம்ம ஜ்ஞானிகளிற் சிறந்தவருமானபிரம்மரிஷி. சாபம் செய்யவும் அனுக்ர ஹம் செய்யவும் சக்தியுள்ளவர். சிறந்த தவமுள்ளவராயிருப்பதனால் பேசாமலிருக்கிறார். இவள் அவருடைய பத்தினி; இந்திரியங்களை ஜயித்தவள்; மேலும் என்னுடைய தாயார். பிராமணரே! கற்புள்ள வளும் தவத்தாற்பெரியவளும் நல்லொழுக்கங்களே அணிகலங்களாக வுடையவளும் உமக்கே தாயைப்போன்றவளுமாகிய இவளைத் தவறு செய்யாமல் விட்டுவிடும்" என்று சொன்னார். இவ்வாறுசொல்லி, "விடும்" என்று அடிக்கடிவேண்டுகிற ச்வேதகேதுவை நோக்கி, [ராஜாவே!] அந்தப்பிராமணர் கெஞ்சிக்கேட்டுக்கொண்டு பின்வரும் தைரியமில்லாதசொல்லைச் சொல்லத்தொடங்கினார்: "ஸ்வேதகேது வே! வயது முதிர்ந்தவனும் கண்ணொளி குறைந்தவனுமானநான் புத் திரஸந்தானத்தில் விருப்பமுள்ளவனாக இருக்கிறேன். கஸ்யபகோத் திரத்தவனே! நீ புத்ரனாகப் பிறந்ததனால் உன்பிதா பிதிர்க்களின் கடனிலிருந்து விடப்பட்டவரானார். நான் கடனிலிருந்து விடப்படா தவனாக இருக்கிறேன்; வயது முதிர்ந்தவன்; விஷயங்களில் விருப்ப மில்லாதவன். எனக்கு யௌவனம்வந்தபெண்ணை எவன் கன்னிகா தானம் செய்வன்? சிறந்த தவமுள்ளவனே! நீ இவளை ஸந்ததிக்கு அரணியாகிய பத்நியாக எனக்குவிடு. ஒருஸந்தானத்தினால் திருப்தி அடைந்து உன் தாயாரை உன்னிடம் ஒப்பித்துவிடுகிறேன்" என் றார். இவ்வாறு சொல்லப்பட்ட ஸ்வேதகேது வெட்கத்துடன் கோப த்தையடைந்தார். அவர் கோபித்ததைக்கண்டு அவருடையபிதா ச்வேதகேதுவை நோக்கி, " குழந்தாய்! நீ கோபிக்காதே. இது புராத னமான தர்மந்தான். பூமியில் எந்தவருணங்களிலும் ஸ்திரீகளுக்குக் கட்டுஇல்லை. புத்ரனே! மனிதர்கள், பசுக்கள் இருப்பதுபோலவே தம்தம் வருணங்களிலிருக்கின்றனர். அவ்வாறிருந்தும் குடும்பங்களில் அவர்கள் தவறிடக்கவில்லை. ருதுகாலம் வந்தபோது அவர்கள் புரு ஷனைவிடாமலிருந்தனர்" என்றார். பிறகு, ரிஷிபுத்திரராகிய ஸ்வேத கேது அந்தத்தர்மத்தை ஸஹிக்கவில்லை. மிகுந்த பாக்கியமுள்ள வளே! அப்போது அந்த ச்வேதகேது மனிதர்களுக்குமட்டும் ஆண் பெண்களுக்கு அடியில்வரும் நியமத்தைச் செய்தார். மற்ற ஜந்துக் களில் செய்யவில்லை. அது, "இது முதல் பதியைவிட்டு விபசரிக்கும்

பெண்ணுக்குக் கர்ப்பத்தைக்கொன்றதற்கு ஸமானமும் துன்பத்தைத் தருவதுமாகிய பெரியபாபம் உண்டாகும்'' என்பது. அது முதல் தான் இந்தவரம்பு நின்றதென்று நாம்கேட்டது. புகழ்பெற்றவளே! இன்னமும் உத்தர குருதேசங்களில் காமக்குரோதங்களை விட்டு அனு ஸரிக்கின்றனர். புராணத்தில் கண்ட தர்மம் இது. மஹரிஷிகளால் பூஜிக்கப்படுகிறது. அவ்வாறே பால்யமுதல் நியமந்தவறாத கற்புள்ள மனைவியை விட்டு விபசரிக்கும் புருஷனுக்கும் பூமியில் இதேபாபம் உண்டாகும். புத்திரஸந்தானத்திற்காகக் கணவனாலேயே கட்டளை யிடப்பட்ட மனைவி அதை அவ்வாறு செய்யாளாயின் அவள் மிகப் பெரியபாபத்தையடைவாள். பயமுள்ளவளே! இவ்வகையான தர் மத்திற்குரிய நியமமானது உத்தாலக புத்திரரான ச்வேதகேதுவி னால் முன்னே பலமாக ஏற்படுத்தப்பட்டது. வாழைமரம் போன்ற தொடைகளையுடையவளே! ஸௌதாஸனென்னும் ராஜாவினால் புத்தி ரோத்பத்திக்காக நியமிக்கப்பட்ட மதயந்தியென்பவள் வஸிஷ்டமஹ ரிஷியைச் சேர்ந்தாளென்று நமக்குக்கேள்வி. அந்த உத்தமஸ்திரீ அந்த வஸிஷ்டரால் அச்மகன் என்று பெயருள்ள புத்திரனை அடைந் தாள். அவளும் பர்த்தாவின் விருப்பத்தைச் செய்வதற்காகத்தான் இவ்வாறு செய்தாள். தாமரைக்கண்ணியே! அச்சப்படுகிறவளே! கௌரவர்களின்வம்சம் விருத்தியாவதற்காகக் கிருஷ்ணத்வைபாயன ரால் நாங்கள் ஜனித்ததும் உனக்குத் தெரிந்ததுதான். குற்றமற்ற வளே! ஆதலால், இந்த நியாயங்களெல்லாவற்றையும் ஆராய்ந்து தர்ம முள்ள இந்த என்சொல்லை நீ செய்வதற்கு உரியவளாயிருக்கிறாய். ராஜபுத்திரியே! பதிவ்ரதையே! ஒவ்வொரு ருதுகாலங்களில்மட்டும் ஸ்திரீ கணவனின்மீறிநடக்கக்கூடாதென்பதே தர்மமென்றும் மற்றக் காலங்களெல்லாவற்றிலும் பெண் தன்இஷ்டப்படி நடப்பதற்குரியவ ளென்றும் தர்மந்தெரிந்தவர்கள் அறிகின்றனர். ஸாதுஜனங்கள் இவ் வாறாகவே பழையகாலத்துத் தர்மமிருப்பதாக நிச்சயித்திருக்கின் றனர். ராஜபுத்திரியே! தர்மமோ அதர்மமோ எதைப் பாரியைக்குப் பர்த்தா சொல்லுவானோ அதை அவள் செய்யவேண்டுமென்று வேதந் தெரிந்தவர்கள் நிச்சயிக்கின்றனர். சிலாக்யமான அழகுள்ளவளே! புத்திரனை விரும்புகிறவனும் தானாக ஸந்ததியை உண்டாக்குவதற்கு வகையற்றவனுமாகிய நான் புத்திரனைப்பார்க்கவேண்டுமென்ற ஆசை யுடன்சொல்வதை நீ செய்வது முக்கியம். அழகியவளே! அழகியநிதம் பங்களையுடையவளே! சிவந்த நகங்களையுடைய விரல்களுள்ளதும் தாம ரையிதழ்போன்றதுமாகிய இந்த அஞ்சலி உன்னைவேண்டிக்கொள்

வதற்காகச் சிரமேல் எடுக்கப்பட்டது. அழகிய கூந்தலின் நுனிகளை யுடையவளே! என் கட்டளையினால் தவத்திற்சிறந்தபிராமணனைக்கொண்டு குணங்கள் நிரம்பின புத்திரர்களை உண்டாக்கிக்கொள்வதற்கு உரியவளாகிறாய். பருத்ததிரண்டதொடைகளையுடையவளே! நான் உன்னால் புத்திரவான்களுடைய லோகத்துக்குச் செல்லக்கடவேன்'' என்று பாண்டு சொன்னான். கணவனுடைய விருப்பத்திலும் நன்மையிலும் எண்ணமுள்ள உத்தமஸ்திரீயான குந்தி, இவ்வாறுசொல்லப்பட்ட பிறகு, பகைவரின் பட்டணங்களை ஜயிப்பவனாகிய பாண்டுவுக்கு மறுமொழி சொல்லலானாள் :

"பரதவம்சத்திற் சிறந்தவரே! க்ஷத்திரியரேறே! பாரியையானவள் வேண்டிக்கொள்வதற்குரியவனாகிய கணவன்,பாரியையைவேண்டிக்கொள்வதென்பது பெண்களுக்குப் பெரிய பாவம். சிறந்தகைகளை யுடையவரே! ஸந்தோஷகரமாக நான்சொல்லும் என்னுடைய சொல்லைக்கேளும். நான் சிறுபெண்ணாயிருக்கையில் என்பிதாவின் கிருஹத்தில் வரும் அதிதிகளைப் பூஜிப்பதற்கு நியமிக்கப்பட்டிருந்தேன். அங்கே கொடியவரும் கடுந்தவமுள்ளவரும் தர்மத்தில் யாருக்குந் தெரியாத நிச்சயமுள்ளவருமாகிய துர்வாஸஸ் என்று பெயர்பெற்ற பிராமணருக்குப் பணிவிடைசெய்தேன்.உக்கிரமானமனமுள்ள அவரை நான் எல்லாமுயற்சிகளையும்செய்து திருப்தியடைவித்தேன்.சிறந்தமனவுறுதியைப்பொருந்திய அவர் வசீகரண சக்தியோடு ஒரு சிறந்த மந்திரத்தை எனக்கு வரமாகக்கொடுத்து என்னைப்பார்த்து, "ராஜபுத்திரியே! நீ இந்த மந்திரத்தினால் எந்தத் தேவதையை ஆவாஹனம் செய்வாயோ அந்தத் தேவதை விருப்பமிருந்தாலும் இல்லாவிட்டாலும் உனக்கு வசப்படுவான். அந்தத் தேவதையின் அனுக்கிரஹத்தினால் உனக்குப் புத்திரனுண்டாவான்'' என்றுசொன்னார். பாரதரே! என்பிதாவின் கிருஹத்தில் அந்தப் பிராமணரால் நான் இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறேன். பிராமணர்சொல் தவறாது. அதற்கு இது காலம் நேர்ந்திருக்கிறது. ராஜாவே! உம் அனுமதியின்மேலே நான் தேவதையை வருவிப்பேன். மஹாராஜாவே! பெரும்புகழ்பெற்ற அந்தரிஷி எந்தவித்தையை எனக்குக் கொடுத்தாரோ அந்த வித்தையினால் அழைக்கப்பட்டதேவதை தேவதைக்கொப்பான புத்திரனைக் கொடுப்பான். வீரரே! அந்தப் புத்திரன், ஸந்ததியில்லாமையினால் உமக்குண்டான வ்யஸனத்தை விலக்குவான்.

---

## நாற்றிருபத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(தர்மதேவதையினிடம் குந்திக்கு யுதிஷ்டிரர் பிறந்ததும், அதனால் துக்கித்தகாந்தாரி வயிற்றிலிடித்துக்கொண்டு மாம்ஸபிண்டத்தைப்பெற்றதும், வியாஸரால் அப்பிண்டம் நூற்றொரு கூறாக்கப்பட்டுத் தனித்தனி தண்டங்களில் வைத்து ரக்ஷிக்கப்பட்டதும், குந்தியினிடத்தில் வாயு தேவதையின் அம்சத்தினால் பீமன் பிறந்ததும், ஒரே மாதத்தில் திருதராஷ்டிரனுக்குத் துர்யோதனன் முதலிய நூறுபிள்ளைகளும் துச்சலையென்னும் பெண்ணும் பிறந்ததும்.)

'எனக்குப் புத்திரன் வேண்டும்' என்றபுத்திரனைப்பற்றிய உமது விருப்பம் இவ்வாறு நிறைவேறலாம். அப்படியில்லாவிட்டால்குணங்கள் நிரம்பினவனும் எல்லாப்பிராணிகளின் நன்மையிலும் நோக்கமுள்ளவனுமாகிய ஒருபிராமணனுக்காவது அனுமதிகொடும். உமக்குச் சுகமுண்டாகக்கடவது. பதிதானே ஸ்திரீகளுக்குத் தேவதை. தர்மந்தெரிந்தவரே! சிறந்தகைகளையுடையவீரரே! தேவதையையோ பிராமணனையோ யாரைப்பற்றி நீர் நியமிப்பீரோ அவரிடம் நீர்சொன்னபடி அந்தக் காரியத்தைச் செய்வேன். ஆனால், தேவதையினிடம் புத்திரனென்னும் பிரயோஜனம் உடனே வரும். பிராமணனிடத்தில் காலாந்தரத்தில்வரும். பரதச்ரேஷ்டரே! இப்போது எந்தத்தேவதையை வருவிக்கலாம்? இந்த இஷ்டகாரியத்தில் உமது ஆஜ்ஞையை எதிர் பார்ப்பவளென்று நீர் என்னை அறியும்" என்று குந்தி சொன்னாள். பாண்டு, "நான் கிருதார்த்தனானேன். தெய்வானுக்ரஹம் பெற்றவனானேன். நமது குலத்திற்கு நீ தாய். உனக்குவரங்கொடுத்த அந்த மஹரிஷிக்கு நமஸ்காரம். தர்மந்தெரிந்தவளே! தர்மமின்றிப் பிரஜைகளைப்பரிபாலனம்செய்யமுடியாது. பெண்மணீ! ஆதலால், உனக்குப் புத்ரலாபத்திற்காகவும் என் ஸந்ததிவிருத்திக்காகவும் எல்லாத்தேவர்களிலும் சிறந்த தர்மதேவதையை ஆவாஹனம் செய்" என்றான். ஜனமேஜயமஹாராஜரே! பரதவம்சத்தானாகிய புகழ்பெற்ற பாண்டுவினால் அனுமதிகொடுக்கப்பெற்றபோது குந்தி தர்மதேவதையை ஆவாஹனம்செய்ய எண்ணங்கொண்டாள். பாண்டு, "பெண்மணியே! நீ இப்போதே முறைப்படி ஆரம்பம்செய். குருவம்சத்தாருக்குத் தர்மிஷ்டனானபுத்திரன் உண்டாவனென்பதில் ஸந்தேஹமில்லை.

தர்மதேவதையினல் கொடுக்கப்படும் அந்தப்புத்ரனுடைய மனம் அதர்மத்தை விரும்பாது. தர்மந்தெரிந்தவளே! தர்மத்தையேஆதியும் அந்தமும் நடுவுமாகவுடைய ஸந்ததிதான் விரும்பப்படுவது. அஃது உலகங்களில் புகழையும்கௌரவத்தையும்விருத்திசெய்வது. அழகிய புன்னகையுள்ளவளே! ஆதலால், நீ நியமத்தோடும் அலங்காரமான ரூபத்தோடும் நல்ல ஆசாரத்தோடுங்கூடத் தர்மத்தை முன்னிட்டுத் தர்மதேவதையை நேராகவே பக்தியுடன் ஆராதனஞ்செய்" என்றுசொன்னன். தனது பர்த்தாவாகிய அந்தப்பாண்டுவினல் அவ்வாறுசொல்லப்பட்ட அந்த உத்தமஸ்திரீயாகிய குந்தி, "ஆகுக" என்றுசொல்லிப் பர்த்தாவை நமஸ்கரித்து, விடைகொடுக்கப்பெற்றுப் பிறகு பிரதக்ஷிணம்செய்தாள். ஜனமேஜயரே! காந்தாரியின் கர்ப்பம் ஒருவருஷம் தரித்திருந்தபின் குந்தி தன் கர்ப்பத்திற்காகத் தவருமல் பயன்கொடுக்கும் தர்மதேவதையை அழைத்தாள். அந்தக் குந்திதேவி சிரத்தையுடன் தர்மதேவதைக்குப் பூஜைக்குரிய திரவியங்களை அர்ப்பணம் செய்தாள். துர்வாஸஸினல் முன்னே கொடுக்கப்பட்டிருந்த மந்திரத்தையும் முறைப்படி ஜபம்செய்தாள். தர்மத்தையே முக்கியமாக அறிந்து தர்மதேவதையை வசியம் செய்யத் தொடங்கினள். பிறகு, எல்லாப்பிராணிகளாலும் நமஸ்கரிக்கப்பட்ட தர்மதேவதை குந்தியினல் நியமத்துடன் மந்திரபலத்தால் அழைக்கப்பட்டவுடனே அவளிடம் வந்தான். பகவானன தர்மதேவதை சூரியனைப்போலப்பிரகாசிக்கின்ற விமானத்திலேறிக்கொண்டு பாண்டுவுக்கு ஸந்ததிகொடுப்பதற்காக, குந்தி ஜபஞ் செய்துகொண்டிருந்த இடத்தில் தோன்றினன். பிறகு, அவளைநோக்கிச் சிரித்து, "குந்தி! உனக்கு நான் என்ன கொடுக்கவேண்டும்? சொல்" என்றான். தன்னைப்பார்த்துச் சிரித்துக்கொண்டு கேட்கும்போதும் அந்தக்குந்தி, "எனக்குப் புத்திரனைக்கொடும்" என்பதைமட்டும்சொன்னள். மிகுந்த கற்புள்ள குந்தி சதச்ருங்கமென்னும் உயர்ந்தமலையில் அனேக மிருகங்களுள்ள அந்தவனத்தில் பாண்டுவின்பிரயோஜனத்திற்காகத் தர்மதேவதையை அடைந்தாள். புகழ்பெற்றவளும் அழகிய நிதம்பங்களையுடையவளும் பதிவ்ரதையுமான குந்தி ருதுகாலம் வந்தபோது ஸ்நானஞ்செய்து பரிசுத்தமாகி வெள்ளைவஸ்திரம் தரித்துத் தர்மதேவதையுடன்கூடச் சயனத்தையடைந்தாள். அவள், யோகசக்தியினல் சரீரமெடுத்துக்கொண்ட தர்மதேவதையுடன் சேர்ந்து, சிறந்தகைகளையுடையவனும் மனிதர்கள் எல்லாரிலும் உயர்ந்தவனுமாகிய புத்திரனைப்பெற்றாள். குந்தி, ஸூர்யன் துலாராசியிலிருக்கும்போது

நல்ல லக்ஷணங்களோடு கூடிய பூர்ணதிதியாகிய பஞ்சமியில் இந்திரனைத் தேவதையாகவுடைய கேட்டைநக்ஷத்திரம் சந்திரனோடு சேர்ந்திருக்கையில் அபிஜித் என்று சொல்லப்பட்ட எட்டாவது முகூர்த்தத்தில் நிறைந்தபுகழுள்ள சிறந்தபுத்திரனைப் பெற்றாள். அந்தப்புத்திரன்பிறந்தவுடனே, ஓர்அசரீரிவாக்கு, "இவன் தர்மிஷ்டர்களுக்குள் சிறந்த புருஷச்ரேஷ்டனாக இருப்பான்; பராக்ரமமுள்ளவனும் ஸத்யவாக்குள்ளவனுமாகிய ராஜாவாகப் பூமியில் இருக்கப்போகிறான். பாண்டுவின் முதற்புதல்வனாகிய இவன் * யுதிஷ்டிரன் என்று க்யாதி பெற்று மூன்றுலோகங்களிலும் பெயர்போன சிறந்த ராஜாவாகவும் புகழும் பிரதாபமும் ஒழுக்கமும் பொருந்தினவனாகவும் இருக்கப்போகிறான்" என்று சொல்லியது. காந்தாரிக்கு இரண்டாவது வருஷம் வந்தபோது வயிறு பெரிதாயிற்று. அப்போது ஒன்றும் பிறக்கவில்லை. அதனால், அவளுக்குத் துயரம் உண்டாயிற்று. ஸுபலன் புத்ரியான காந்தாரி, குந்திக்குப் பாலஸூர்யனுக்கொப்பான தேஜஸுள்ள புத்திரன் பிறந்ததைக்கேட்டும் தன்வயிறு உறுதியாயிருப்பதைக்கண்டும் அதிகத் துயரமுற்றவளாகி, திருதராஷ்டிரனுக்குத் தெரியாமல், தானே மிக ஓங்கி வயிற்றை இடித்துக்கொண்டாள். அதிலிருந்து இரும்புக் குண்டுபோல் கெட்டியான ஒருமாம்ஸபிண்டம் வெளிப்பட்டது. வயிற்றில் இரண்டுவருஷங்களாக வளர்ந்த அந்தப் பிண்டத்தை அவள் எறிந்துவிட ஆரம்பித்தாள். பிறகு, வியாஸர் அதனையறிந்துகொண்டு உடனே வந்துசேர்ந்தார். அந்த ரிஷிச்ரேஷ்டர் அந்த மாம்ஸபிண்டத்தைக் கண்டார். பிறகு அவர் அந்தக் காந்தாரியைநோக்கி, "நீ செய்யக்கருதின இந்தக்காரியம் என்ன?" என்றுகேட்டார். அவளும் தான் நினைத்ததையெல்லாம் அந்த மஹரிஷிக்குச் சொல்லத் தொடங்கினாள்: "குந்திக்கு ஸூர்யனுக்கு ஒப்பான ஒளியுள்ள மூத்தகுமாரன் பிறந்ததைக்கேட்டு மிகுந்ததுயரத்தினால் நான் இந்தவயிற்றை இடித்துக்கொண்டேன். முன்னே எனக்கு நீர் நூறுபுத்திரர்களைப்பெற வரங்கொடுத்தீரல்லவா? நூறுபுத்திரர்களுக்குப் பிரதியாக இந்த மாம்ஸஉருண்டை எனக்குப் பிறந்தது" என்றாள். வியாஸர், "ஸௌபலன்பெண்ணே! நான் சொன்னது ஸரிதான். அது ஒருபோதும் மாறாது. நான் விளையாட்டிலும் பொய்சொன்னதில்லை. மற்றப்போது கேட்பானேன். நூறுகுடங்களைச் சீக்கிரத்தில் நெய்யினால் நிரப்பவேண்டும்; மிகவும் பத்திரமுள்ள இடங்களில் அவற்றை ரக்ஷணஞ்செய்யவேண்டும். இந்தப்பிண்

* யுத்தத்தில் ஓடாமல் நிற்பவன்.

டத்தைக் குளிர்ந்தஜலத்தினால் நனைக்கவும் வேண்டும்" என்று சொன்னார். நனைக்கப்பட்ட அந்தமாம்ஸபிண்டம் அப்போது நூறு பிரிவாக ஆயிற்று. ஜனமேஜயராஜாவே! அந்த பிரிஷத்தில் கட்டைவிரற்கணு அளவுள்ள அதனதன் அங்கங்கள் பூர்ணமான நூற்றொருபிண்டங்கள் இருந்தன. அரசரே! பிறகு, வியாஸமஹாரிஷி, நூறுகுடங்களை அங்கே வருவித்து முதிருங்காலம் வருகிறவரையில், மாம்ஸபிண்டத்திலிருந்து அந்தச் சிசுக்களையெல்லாம் அந்தக் குடங்களில் வரிசையாகவைத்தார். அதிக பத்திரமான இடங்களில் அவற்றை ரக்ஷிக்கும்படி செய்வித்தார். அவ்வாறாகவே சிசுக்களைப் பாதுகாத்து வரும்படியாகவும், வ்யாஸர் கட்டளையிட்டார். வியாஸபகவான் காந்தாரியைப்பார்த்து, "புண்ணியவதியே! மறுபடியும் இவ்வளவு காலமானபிறகு குடங்கள் வெடிக்கும்போது புத்திரர்கள்பிறந்ததாக அறி" என்றும், "(அப்போது) இந்தக்குடங்கள் திறக்கத்தக்கவை" என்றும் சொன்னார். சிறந்த ஞானமுள்ள வ்யாஸபகவான் அவ்வாறு ஏற்பாடுசெய்து காந்தாரிக்கும் இந்தச் சொல்லைச் சொல்லிவிட்டு இமயமலைக்குத் தவஞ்செய்யச் சென்றார். ஒவ்வொரு தினம் பின்தினவர்களாக அந்தக் குமாரர்கள் குடங்களிலிருந்து பிறந்தார்கள். அந்த முறையாலேதான் அவர்கள் ஜ்யேஷ்டகனிஷ்டர்களானது. பிறப்பினாலும் உருவத்தினாலும் குந்தியின்புத்ரன் பெரியவனாக இருந்தான். தர்மிஷ்டனை புத்ரனைப்பார்த்து, பாண்டு குந்தியினிடம், "க்ஷத்ரியன் பலத்தினால் பெரியவனென்று சொல்லுகின்றனர்; நீ பலத்திற்சிறந்த புத்ரனை வேண்டு" என்று சொன்னான். ஜனமேஜயரே! பிறகு, பாண்டு குந்தியினிடம் சென்று, "நீ வாயுவை ஆவாஹனஞ்செய். அவன் மிகுந்தபலமுள்ள தேவதை. யாகங்களிற் சிறந்தது அஸ்வமேதம்; தேஜஸ்களிற் சிறந்தவன் ஸூர்யன்; மனிதர்களிற் சிறந்தவன் பிராமணன்; தேவர்களிற் சிறந்தவன் வாயு. பெண்ணரசியே! தேவர்களிற் சிறந்தவனும் எல்லாப்பிராணிகளாலும் துதிக்கப்பட்டவனுமாயிருக்கிற வாயுவை நமக்குப் புத்திரனுக்காக நியமத்துடன் ஆவாஹனஞ்செய். அழகிய நிதம்பங்களையுடையவளே! அந்த வாயு நமக்கு எந்தக்குமாரனைத்தருவனோ அவன் மனிதர்களுக்குள் மிகுந்தவன்மையும் பராக்கிரமமுமுள்ளவனாயிருப்பன். அரசர்கள் பலத்தினாலேதான் பெரியோர்களாகிறார்கள்" என்று அதிகமாக வற்புறுத்திச் சொன்னான். அவன் அவ்வாறு சொன்னபிறகு, இந்தக்குந்தி அந்தத் துர்வாஸஸ் சொன்னவிதிப்படி மறுபடியும் ருது காலத்தில் இரண்டாவது பூஜைபோடு வாயுபகவானை அழைத்தாள்.

முன்னிருந்த நியமங்களோடேயிருந்து மந்திரக்கோவையை ஜபித்தாள். பிறகு, வாயுபகவான் வந்து, "நான் என்னசெய்யவேண்டும்?" என்றுகேட்டான். பிறகு, குந்தி நாணமுற்று மிகுந்த பலமுள்ள புத்ரனைவேண்டினாள். வாயுபகவான், 'அவ்வாறே ஆகட்டும்' என்று சொல்லி அவளைத் தழுவிக்கொண்டு தேவலோகம் சென்றான்.

அவளிடம் மிக்கசூரனும்(பிறர்)அச்சப்படத்தக்க பராக்ரமமுடையவனுமாகிய *பீமன்பிறந்தான். பாரதரே! மிகுந்த பலமுள்ள அவன் பிறந்ததைப்பற்றியும் அசரீரிவாக்கு, "இவன் பலசாலிகளெல்லாரிலும் சிறந்தவனாகப் பிறந்திருக்கிறான்" என்று சொல்லியது. அந்தக் குமாரன் பிறந்தவுடன் எல்லாதேசத்தரசர்களும் மூர்ந்நிரம்விட்டுக் கொண்டனர். எல்லாரும் துயரத்தையும் அடைந்தனர். வாகனங்கள் சிதறின. கண்ணீர்த்துளிகள் விழுந்தன. மிகுதியாக விருத்தியான காற்று எப்படியோ அப்படியே பயப்படத்தக்க பராக்ரமமுள்ளவனும் புஷ்டியான அங்கமுள்ளவனுமாகிய பீமனும் பூமியை அசையச் செய்வதில் ஸமர்த்தனாயிருந்தான். † வ்ருகோதரன் பிறந்தமாத்திரத்தில் மற்றோர் அற்புத ஆச்சரியமுண்டாயிற்று. அதாவது, அவன் தாயாரிடுப்பிலிருந்து விழுந்து தன் அங்கம்பட்டதினால் கருங்கல்லைப் பொடியாகச்செய்தான். யதுபுத்ரியாகிய குந்தியோ பத்தாவதுநாள் புத்திரனுடன்கூட மிக்க அழகான தடாகத்திலேபோய் ஸ்நானஞ்செய்து பிள்ளையை எடுத்துக்கொண்டு, தேவதாபூஜை செய்வதற்காக ஆச்ரமத்திலிருந்து புறப்பட்டாள். பரதஸ்ரேஷ்டரே! அப்போது அவள் மலையிலோரமாகப் போகையில் ஒரு பெரும்புலி அவளைக்கொல்ல எண்ணங்கொண்டு மலையின் குகையிலிருந்து புறப்பட்டது. தேவதைக்கொப்பான பராக்ரமமுள்ள பாண்டு உயர்ந்தவில்லை வளைத்து மூன்றுபாணங்களினால் ஓடிவரும் அந்தப் புலியைப் பிளந்தான். பேரிரைச்சலினால் அம்மலைக்குகையை நிரப்புகின்ற அந்தப் புலியைக்கண்டு பயத்தினால் குந்தி மலைமேலேற ஆரம்பித்தாள். பரதஸ்ரேஷ்டரே! அப்போது அவள் பயந்ததனால் அவள்இடுப்பிலிருந்து குழந்தைவிழுந்தது. அவள் பருவதத்தின்மேலிருக்கையில் குழந்தை கீழேவிழுந்தது. அந்தச்சிசு இந்திரனால்விடப்பட்ட வஜ்ராயுதம் போலக் கல்லைத்தூளாக்கிற்று. பிறகு,பாண்டு புத்ரனிடமுள்ள நேசத்தினால் மலையின் சரிவுக்கு ஓடினான். விழுந்த அந்தக் குழந்தையின் அங்கம்பட்டு அந்தப்பாறை நூறுசுக்காகப் பொடிக்கப்பட்டிருந்தது. பொடியாகச் செய்யப்பட்ட சிலையைக்கண்டு பாண்டு மிக்க வியப்படை

---

* எல்லாரும் பயப்படத்தக்கவன். † பீமன்.

ந்தான். புலிக்கொப்பான பராக்ரமமுள்ளபாண்டு, பீமன்பிறந்தபோது மலைமேலிருந்து பெருங்கத்தல்கத்தின ஒருபுலியைக்கண்டான். கௌரவபுத்ரனாகியபாண்டு தன்மனைவியைக் காப்பதற்காகவும் மைந்தனைக் காப்பதற்காகவும் எப்போதும் கையில் அம்பும் வில்லுமாக இருந்தான். ஸிம்மத்தில் குருவும், துலாத்தில் ஸூர்யனும், மகநக்ஷத்திரத்தில் சந்திரனும் சேர்ந்தபோது சுபமான திரயோதசிதிதியில் பித்ருக்களின் முகூர்த்தத்தில் அந்தக்குந்தி உறுதியான பராக்கிரமமுள்ள பீமனைப் பெற்றாள். பரதச்ரேஷ்டரே! ராஜாவே! *எந்தத் தினத்தில் பீமன் பிறந்தானோ அதேதினத்தில் துரியோதனனும் பிறந்தான். ராஜாவே! அந்தத் திருதராஷ்டிரபுத்திரன் பிறந்தவுடனேயே கழுதை கத்துவதுபோல்அழுதான்; இரையவும் இரைந்தான். கழுதைகளும் கழுகுகளும் காக்கைகளும் மாம்ஸம் தின்னும் குரூரமான மிருகபக்ஷிகளும் அமங்கலமான சப்தத்தோடு கூடிய நரிகளும் அவனுக்கு எதிராகக் கதறின. அப்போது, பெருங்காற்று அடித்தது. திசைகளில் தீப்பற்றிக்கொண்டது. ராஜாவே! பிறகு, திருதராஷ்டிரராஜா பயமுற்று அநேகம்பிராம்மணர்களையும் பீஷ்மரையும் விதுரரையும் மற்றும் வேண்டியவர்களையும் குருவம்சத்தைச் சேர்ந்தவர் அனைவரையும் வரவழைத்து அடியில்வரும்சொல்லைச் சொன்னான்: "யுதிஷ்டிரன் நமதுகுலத்தைவிருத்திசெய்யும் மூத்தராஜகுமாரன். அவன் குணங்களினால் ராஜ்யத்துக்கு யோக்கியனாயிருக்கிறான். அவன் விஷயத்தில் நாம் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை. இவன் அவனுக்குப் பிறகு ராஜாவாவனோ? இதுவிஷயத்தில் எது நிச்சயமாக நேரிடுமோ அதை ஸரியாக எனக்குச் சொல்லுங்கள். இவன் பிறந்தபோது உண்டான சகுனங்கள் இங்கே பெரிய அமங்களத்தைத் தெரிவிக்கின்றன. உடனே, பயம் எனக்கு உட்புகுந்தது. விதுரனே! அதனால் சொல்லுகிறேன்" என்றுசொன்னான். ஜனமேஜயரே! இந்தத் திருதராஷ்டிரன் சொல் முடிந்தபோது, எல்லாத் திசைகளிலும் ஹிம்ஸிக்கிற கொடியபிராணிகளும் அமங்களமான த்வனியுள்ள நரிகளும் கத்தின. ராஜாவே! அந்த நிமித்தங்களெல்லாம் பயங்கரமாக இருப்பதைக் கண்டு அந்தப் பிராமணர்களும் சிறந்த புத்தியுள்ள விதுரரும் சொல்லலாயினர்:

"த்ருதராஷ்டிரமஹாராஜாவே! புருஷச்ரேஷ்டரே! உமக்குஜ்யேஷ்டபுத்ரன் பிறந்தபோது இந்தப் பயங்கரமான நிமித்தங்கள் உண்டா

---

* எந்தப்பகலில் பயப்படத்தக்க பராக்ரமமுள்ள பீமன் பிறந்தானோ அதன் முந்தியராத்திரியில் துரியோதனன் பிறந்தான்.

யிருப்பதனுல் இந்த உமதுபுத்திரன் நிச்சயமாகக் குலத்துக்கு க்ஷயத்தைச் செய்பவனுக இருப்பான். புத்திரனை விடுவதனுலேதான் அதற்குப் பரிகாரம். புத்திரனைக் காப்பாற்றுவதில் பெருந்தீங்குவரும். இந்தத் துரியோதனராஜன் தேன்போலச் சிவந்த கண்களோடிருக்கிருன். இவன் குலத்துக்கு மாத்திரமேயல்ல; க்ஷத்திரியர்களுக்கே நாசத்தைச்செய்வான். ராஜாவே! உமக்கு ஒன்றுகுறைய நூறுபுத்திரர்களிருந்தாலும் இருக்கட்டும். பாரதரே! குலத்துக்குச் சௌக்கியத்தை விரும்பினீராஞல் இவனெருவனை விட்டுவிடும். ஒருவனுல் குலத்துக்கும் உலகத்துக்கும் க்ஷேமத்தைச்செய்யும். ஒருகுலத்திற்காக ஒருவனை விடவேண்டும்; ஒருகிராமத்திற்காக ஒருகுலத்தை விடவேண்டும்; ஒருதேசத்திற்காக ஒருகிராமத்தை விடவேண்டும்; தனக்காகப் பூமியையே விடவேண்டும்" என்றனர். விதுரராலும் அந்தப்பிராமணேத்தமர்களனைவர்களாலும் அவ்வாறு சொல்லப்பட்ட ராஜா புத்ரஸ்நேஹங்கொண்டு அவ்வாறுசெய்யவில்லை. ராஜாவே! நூறுதினங்களில் நூறுபுத்திரர்கள் திருதராஷ்டிரனுக்குப் பிறந்தனர். நூற்றுக்குமேல் ஒருபெண்ணும் பிறந்தாள். வயிறு பருத்துக் காந்தாரி கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கையில் கன்னிகையானஒருவைசியப்பெண் திருதராஷ்டிரனுக்குப் பணிவிடைசெய்து கொண்டிருந்தாள். திருதராஷ்டிர மஹாராஜன் தற்செயலாக அவளுடன்சேர்ந்தான். ராஜாவே! அந்தவருஷத்தில் திருதராஷ்டிரனுக்குப் பெரும்புகழுள்ளவனும் சிறந்தபுத்தியுள்ளவனும் *கரணனுமாகிய யுயுத்ஸுவென்பவன் அந்த வைச்யப்பெண்ணினிடம் பிறந்தான். இவ்வாறு சிறந்த புத்தியுள்ள திருதராஷ்டிரனுக்கு மஹாரதர்களும் வீரர்களுமாகிய நூறுபுத்திரர்களும், நூற்றுக்குமேல் ஒருபெண்ணும், மிகுந்த ஒளியுள்ளவனும் சிறந்தபராக்கிரமமுள்ளவனும் வைசியப்பெண்ணின்மகனுமான யுயுத்ஸுவும் பிறந்தனர்" என்று வைசம்பாயனர்சொன்னுர்.

---

## நூற்றுமுப்பதாவது அத்தியாயம்.

## ஸம்பவபாவம். (தொடர்ச்சி.)



### (துச்சலையின் வரலாறு.)

ஜனமேஜயர், "வியாஸமஹரிஷியின் அனுக்கிரஹத்தினுல்திருதராஷ்டிரனுக்கு நூறுபுத்திரர்கள் உண்டானது ஆதிதொடங்கி உம்

* கரணனென்பது, வைசியனுக்குச் சூத்திரப்பெண்ணினிடம் பிறந்தவனுக்குப் பெயரென்று நிகண்டு கூறுகின்றது. உயர்ந்தஜாதிப் புருஷனுக்குத் தாழ்ந்தஜாதிப் பெண்ணிடம் பிறந்தவனென்கிற ஒப்புமை பற்றி இவனையும் 'கரணன்' என்று கூறியிருக்க வேண்டும்.

மாற்சொல்லப்பட்டது. கன்னிகையோசொல்லப்படவில்லை. வைசியப் பெண்ணினுடைய புத்ரன் யுயுத்ஸு என்றும் நூற்றோராமவள்பெண் ணொருத்தி உண்டென்றும் சொன்னீர். குற்றமற்றவரே! அளவற்ற மகிமையுள்ள அந்த வியாஸமஹரிஷியினால் கந்தாரிக்கு நூறுபுத் ரர்கள் தாம் சொல்லப்பட்டனர். பகவானே! அந்த வ்யாஸமஹரிஷி யினால் மாம்ஸபிண்டம் நூறுபாகங்களாகச்செய்யப்பட்டிருந்தால் இப் போது கன்னிகையைப்பற்றி நீர் எனக்குச்சொல்வது எவ்வாறு? காந்தாரி பிறகு எவ்வகையிலும் ப்ரஸவிக்காமலிருந்தால் துச்சலை யென்னும் கன்னிகை பிறந்ததெப்படி? ப்ரம்மரிஷியே! இதுவிஷயத் தில் நடந்தது நடந்தபடி எனக்குச் சொல்லும். எனக்கு இதில் விருப் பம் மிகுதியாக இருக்கிறது" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல் லலானார்.

"பாண்டவவம்சபுத்ரரே! நீர் இந்தப்பிரச்னம் ஸரியாகக்கேட் டீர். நான் உமக்குச்சொல்லுகிறேன். சிறந்த தவமுள்ள வியாஸ பகவான் தாமே அந்த மாம்ஸபிண்டத்தைக் குளிர்ந்த ஜலத்தினால் நனைத்து, பாகம்பாகமாகப் பிரித்தார். ராஜாவே! எந்த எந்தப் பாகம் எவ்வாறு பிரிக்கப்பட்டதோ அந்த அந்தப் பாகத்தை அவ்வாறாகவே தாதியைக்கொண்டு நெய்நிரப்பின குடங்களில் ஒவ்வொன்றாகப்போடு வித்தார். இந்தச்சமயத்தில் கற்புள்ளவளும் உறுதியான நியமமுள்ள வளும் புகழ்பெற்றவளும் உத்தமஸ்திரீயுமான காந்தாரிதேவி பெண் ணினிடத்துண்டான ஆசைமிகுதியை நினைத்து ரிஷியினிடத்துள்ள கௌரவத்தினால் அந்த ரிஷியைநோக்கி ஒன்றும்பேசாமல் மனத்தில் மட்டும், 'எனக்கு இந்த நூறுபுத்திரர்கள் உண்டாகப்போகிறார்கள். சந்தேகமில்லை. ரிஷிசொல்வது மாறாது. எனக்கு ஒருபெண் பிறப் பாளானால் அதுதான் மிகுந்தஸந்தோஷம். 'எல்லாருக்கும் இளையவ ளாகிய நூற்றோராவது பெண்குழந்தை பிறக்கவேண்டும். அதனால், இந்த என்கணவர் தௌஹித்திரனால் வரத்தக்க லோகங்களுக்கு உரி யவராவர். ஸ்திரீகளுக்கு மருமகனால் உண்டாகும் ஸந்தோஷம் அதி கமாயிருக்கும். நூற்றுக்கு மேற்பட்டு எனக்கும் ஒருபெண்பிறப்பா ளாயின் புத்ரர்களாலும் தௌஹித்ரர்களாலும் சூழப்பட்டுக் கிரு தார்த்தையாவேன். நான் தவம்செய்ததும் தானம்செய்ததும் ஹோ மம் செய்ததும் பெரியோர்களை ஆராதித்ததும் நிஜமாயிருக்குமாயின், அதனால் எனக்குப் பெண்உண்டாகவேண்டும்' என்று நினைத்தாள். அதேகாலத்தில் பகவானும் ரிஷிச்ரேஷ்டருமாயிருக்கிற கிருஷ்ண த்வைபாயனர் அந்தப்பிண்டத்தைத் தாமேவகுத்தார், குடங்கள்எண்

ணப்படும்போது அந்தமஹாத்மாவினால் நூறுகுடங்கள் நிரப்பப் பட்டபின் அவருடைய இடக்கரத்தில் மற்றொருதுண்டு மிருந்திருந் தது. நூறுபாகங்கள் நிறைந்துபோனதைக் கணக்கிட்டபிறகு, வ்யா ஸர் காந்தாரியைப்பார்த்து, 'இந்த நூறுபுத்திரர்கள் நிறைந்தனர். நான்சொன்னவாக்குப் பொய்யாகவில்லை. தெய்வச்செயலாக நூற் றுக்குமேல் ஒருபாகம் மிஞ்சியிருக்கிறது. இது நீ விரும்பினபடி பாக்கியசாலியான பெண்ணைப் பிறக்கப்போகிறது' என்றுசொன்னார். சிறந்ததவமுள்ள வியாஸமஹரிஷி மற்றொரு நெய்க்குடத்தை வரு வித்து, அந்தப்பெண்பாகத்தையும் போட்டார். (சில) காலங்கழித்து எல்லாருக்கும் இளையபெண் பிறந்தாள். பரதவம்சத்து ராஜாவே! இதுதான் துச்சலையின் ஜனனம்; உமக்குச் சொன்னேன். அரசர்க் கரசரே! குற்றமற்றவரே! உமக்கு இன்னும் நான் என்னசொல்ல வேண்டும்? சொல்லும்" என்றார்.

---

## நூற்றுமுப்பத்தோராவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(துர்யோதனாதியர்களின் பெயரும் துச்சலையின் விவாஹமும்.)

ஜனமேஜயர், " அந்த த்ருதராஷ்டிர புத்திரர்களின் ஜ்யேஷ்ட கனிஷ்ட முறையையும் தனித்தனியே பெயர்களையும் எனக்குத் தொடர்ச்சியாகச் சொல்லும்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல் லலானார்.

(துர்யோதனாதியர்களின் பெயர்வரிசை.)

ராஜாவே! *துரியோதனன், யுயுத்ஸு, துச்சாஸனன், துஸ்ஸ ஹன், துச்சலன், துர்முகன், விவிம்சதி, விகர்ணன், ஜலஸந்தன்,

---

* இது கிருஷ்ணாசாரியர் பதிப்பு கூஅ - வது அத்தியாயம், கூ-வது சுலோகமுதல் கOரு-வது சுலோகம்வரையிலுள்ளபடி மாற்றியும், இரட்டித்து வந்த பெயர்களைவிட்டும், இந்த அத்தியாயத்திலுள்ள அதிகப் பெயர்களில் சில வற்றைக்கூட்டியும் நூறாகக் கணக்கிடப்பட்டது. கூஅ - வது அத்தியாயத் துப்பாடமும் தக்ஷிணதேசபாடமும் அநேகமாக ஒத்திருத்தலால், அதன்படி பெயர்களின் வரிசை எடுத்துக்கொள்ளப்பட்டது. கூஅ-வது அத்தியாயப் பாடத்திலுள்ள கூஅ பெயர்களில் இரண்டுபெயர்கள் இரட்டித்துவந்திருத் தலால், அவைகளைநீக்கி, கிருஷ்ணாசாரியர்பதிப்புப்படி இந்த அத்தியாயத்தி லுள்ள க கூ பெயர்களில் நான்குபெயர்கள் எடுத்துக்கொள்ளப்பட்டன.

ஸுலோசனன், விந்தன், அநுவிந்தன், துர்த்தர்ஷன், ஸுபாஹு, துஷ்ப்ரதர்ஷணன், துர்மர்ஷணன், ப்ரமாதி, துஷ்கர்ணன், கர்ணன், சித்ரன், உபசித்ரன், சித்ராக்ஷன், சாருசித்ராங்கதன், துர்மதன், துஷ்ப்ரஹர்ஷன், விவித்ஸு, விகடன், ஸமன், ஊர்ணநாபன், பத்மநாபன், நந்தன், உபநந்தன், ஸேநாபதி, ஸுஷேணன், குண்டோதரன், மஹோதரன், சித்ரபாஹு, சித்ரவர்மா, ஸுவர்மா, துர்விரோசனன், அயோபாஹு, மஹாபாஹு, சித்ரசாபன், ஸுகுண்டலன், பீமவேகன், பீமபலன், பலாகி, பீமவிக்ரமன், உக்ராயுதன், பீமசரன், கனகாயு, த்ருடாயுதன், த்ருடவர்மா, த்ருடக்ஷத்ரன், ஸோமகீர்த்தி, அனூதரன், ஜராஸந்தன், த்ருடஸந்தன், ஸத்யஸந்தன், ஸஹஸ்ரவாக், உக்ரச்ரவஸ், உக்கிரஸேனன், க்ஷேமமூர்த்தி, அபராஜிதன், பண்டிதகன், விசாலாக்ஷன், துராதனன், த்ருடஹஸ்தன், ஸுஹஸ்தன், வாதவேகன், ஸுவர்ச்சஸ், ஆதித்யகேது, பஹ்வாசி, நாகதத்தன், அனுயாயி, தண்டி, நிஷங்கி, கவசி, தண்டதாரன், தனுர்க்ரஹன், உக்கிரன், பீமரதன், வீரன், வீரபாஹு, அலோலுபன், அபயன், ரௌத்ரகர்மா, த்ருடரதன், அநாத்ருஷ்யன், குண்டபேதி, விராவி, தீர்க்கலோசனன், தீர்க்கபாஹு, தீர்க்கரோமன், வ்யூடோரு, கனகாங்கதன், குண்டஜன், சித்ரகன், ப்ரமதன், துஷ்பராஜயன். துச்சலை, நூற்றோராமவள்.

ராஜாவே! இவர்கள் நூறுபுத்ரர்கள். நூற்றோராமவள் பெண். இவர்களின்பெயரைச்சொன்னவரிசைப்படி பிறப்பின் கிரமத்தையும் அறிந்துகொள்ளும். எல்லாரும் அதிரதர்களான சூரர்கள்; எல்லாரும் யுத்தத்தில் ஸமர்த்தர்கள்; எல்லாரும் வேதந்தெரிந்தவர்கள்; எல்லாரும் எல்லா அஸ்திரங்களிலும் பண்டிதர்கள். ராஜாவே! அவர்களுக்கு விவாகஞ்செய்யத்தக்க காலத்தில் திருதராஷ்டிரமஹாராஜா பரீக்ஷைசெய்து எல்லாருக்கும் தகுதியானபெண்களைச்சாஸ்திரப்படி கலியாணஞ்செய்வித்தான். ராஜாவே! இவ்வாறு புத்ரர்கள் நூறுபேர்கள். யுயுத்ஸுவும் துச்சலை என்னும் பெண்ணும் நூற்றுக்குமேற்பட்டவர்கள். இதை நடந்தபடி உமக்குச் சொன்னேன்.

பரதச்ரேஷ்டரே! த்ருதராஷ்டிரமஹாராஜா, துச்சலையையும், விவாஹத்துக்குரிய காலத்தில், சாஸ்திரப்படி ஜயத்ரதனுக்குக் கன்னிகாதானஞ்செய்தான்.

---

### மேலேகாட்டியபடி,
### துர்யோதனன் முதலிய நூற்றுவரின் பெயரகராதி.

அபயன்.
அபராஜிதன்.
அயோபாஹு.
அலோலுபன்.
அநுத்ருஷ்யன்.
அநுயாயி.
அநுவிந்தன்.
அநூதரன்.
ஆதித்யகேது.
௧0 உக்ரச்ரவஸ்.
உக்ரன்.
உக்ரஸேனன்.
உக்ராயுதன்.
உபசித்ரன்.
உபநந்தன்.
ஊர்ணநாபன்.
கர்ணன்.
கவசி.
கனகாங்கதன்.
௨0 கனகாயு.
குண்டபேதி.
குண்டஜன்.
குண்டோதரன்.
சாருசித்ராங்கதன்.
சித்ரகன்.
சித்ரசாபன்.
சித்ரபாஹு.
சித்ரவர்மா.
சித்ரன்.
௩0 சித்ராக்ஷன்.
த்ருடரதன்.
த்ருடவர்மா.
த்ருடஸந்தன்.
த்ருடஹஸ்தன்.
த்ருடக்ஷத்ரன்.
த்ருடாயுதன்.
தண்டதாரன்.
தண்டி.
தநுர்க்ரஹன்.
௪0 தீர்க்கபாஹு.
தீர்க்கரோமன்.
தீர்க்கலோசனன்.
துச்சலன்.
துச்சாஸனன்.
துர்த்தர்ஷன்.
துர்மதன்.
துர்மர்ஷணன்.
துர்முகன்.
துர்யோதனன்.
௫0 துர்விரோசனன்.
துராதனன்.
துஷ்கர்ணன்.
துஷ்ப்ரதர்ஷணன்.
துஷ்ப்ரஹர்ஷன்.
துஷ்பராஜயன்.
துஸ்ஸஹன்.
நந்தன்.
நாகதத்தன்.
நிஷங்கி.
௬0 ப்ரமதன்.
ப்ரமாதி.
பண்டிதகன்.
பத்மநாபன்.
பலாகி.
பஹ்வாசி.
பீமசரன்.
பீமபலன்.
பீமரதன்.
பீமவிக்ரமன்.
௭0 பீமவேகன்.
மஹாபாஹு.
மஹோதரன்.
யுயுத்ஸு.
ரௌத்ரகர்மா.
வ்யூடோரு.
வாதவேகன்.
விகடன்.
விகர்ணன்.
விசாலாக்ஷன்.
௮0 விந்தன்.
விராவி.
விவித்ஸு.
விவிம்சதி.
வீரபாஹு.
வீரன்.
ஜராஸந்தன்.
ஜலஸந்தன்.
ஸத்யஸந்தன்.
ஸமன்.
௯0 ஸஹஸ்ரவாக்.
ஸுகுண்டலன்.
ஸுபாஹு.
ஸுலோசனன்.
ஸுவர்ச்சஸ்.
ஸுவர்மா.
ஸுஷேணன்.
ஸுஹஸ்தன்.
ஸேனாபதி.
ஸோமகீர்த்தி.
௧00 க்ஷேமமூர்த்தி.

௯௮ - வது அத்தியாயத்திலுள்ளபடி,
௯௮-பெயர்களின் அகராதி.

அபயன்.
அபராஜிதன்.
அயோபாஹு.
அலோலுபன்.
அனுத்ருஷ்யன்.
அனுயாயி.
அனுவிந்தன்.
அனாதரன்.
ஆதித்யகேது.
௧௦ உக்ரச்ரவஸ்.
உக்ரன்.
உக்ரஸேனன்.
உக்ராயுதன்.
உபசித்ரன்.
உபநந்தன்.
ஊர்ணநாபன்.
கர்ணன்.
கவசி.
கனகாங்கதன்.
௨௦ கனகாயு.
குண்டபேதி.
குண்டஜன்.
குண்டோதரன்.
சாருசித்ராங்கதன்.
சித்ரகன்.
சித்ரசாபன்.
சித்ரபாஹு.
சித்ரவர்மா.
சித்ரன்.
௩௦ சித்ராக்ஷன்.
த்ருடரதன்.
த்ருடவர்மா.
த்ருடஸந்தன்.
த்ருடஹஸ்தன்.
த்ருடக்ஷத்ரன்.
த்ருடாயுதன்.
தண்டதாரன்.
தண்டி.
தநுர்க்ரஹன்.
௪௦ தீர்க்கபாஹு.
தீர்க்கலோசனன்.
துச்சலன்.
துச்சாஸனன்.
துர்த்தர்ஷன்.
துர்மதன்.
துர்மர்ஷணன்.
*துர்முகன்.
துர்முகன்.
துர்யோதனன்.
௫௦ துர்விரோசனன்.
துராதனன்.
துஷ்கர்ணன்.
துஷ்ப்ரதர்ஷணன்.
துஷ்ப்ரஹர்ஷணன்.
துஸ்ஸஹன்.
நந்தன்.
நாகதத்தன்.
நிஷங்கி.
பண்டிதகன்.
௬௦ பத்மநாபன்.
பலாகி.
பஹ்வாசி.
பீமசரன்.
பீமபலன்.
பீமரதன்.
பீமவிக்ரமன்.
பீமவேகன்.
*மஹாபாஹு.
மஹாபாஹு.
௭௦ மஹோதரன்.
யுயுத்ஸு.
ரௌத்ரகர்மா.
வ்யூடோரு.
வாதவேகன்.
விகடன்.
விகர்ணன்.
விசாலாக்ஷன்.
விந்தன்.
விராவி.
௮௦ விவித்ஸு.
விவிம்சதி.
வீரபாஹு.
வீரன்.
ஜராஸந்தன்.
ஜலஸந்தன்.
ஸத்யஸந்தன்.
ஸமன்.
ஸஹஸ்ரவாக்.
ஸுகுண்டலன்.
௯௦ ஸுபாஹு.
ஸுலோசனன்.
ஸுவர்ச்சஸ்.
ஸுவர்மா.
ஸுஷேணன்.
ஸுஹஸ்தன்.
ஸேனாபதி.
ஸோமகீர்த்தி.
க்ஷேமமூர்த்தி.

இதிலும் அடுத்த அகராதியிலும் இந்த * அடையாளமுள்ள பெயர்கள் இரட்டித்துவந்துள்ளன.

## கிருஷ்ணாசாரியர் பதிப்புப்படி,
## கஙக - வது அத்தியாயத்திலுள்ள க0சு-பெயர்களின் அகராதி.

அக்ரயாயி.
அபயன்.
அபராஜிதன்.
அயோபாஹு.
அலோலுபன்.
அநுக்ருஷ்யன்.
அநுவிந்தன்.
அநாதரன்.
ஆதித்யகேது.
க0 உக்ரச்ரவஸ்.
உக்ரன்.
உக்ரஸேனன்.
உக்ராயுதன்.
உபசித்ரன்.
உபநந்தகன்.
ஊர்ணநாபன்.
க்ரதனன்.
கர்ணன்.
கவசி.
உ0 கனகத்வஜன்.
குண்டசாயி.
குண்டாசி.
குண்ட.
குண்டதரன்.
குண்டதாரன்.
குண்டபேதி.
சராஸனன்.
சலன்.
சாருசித்ரன்.
ங0 *சித்ரகுண்டலன்.
சித்ரகுண்டலன்.
சித்ரபாணன்.
சித்ரவர்மா.
சித்ரன்.
சித்ராங்கன்.
சித்ராயுதன்.
சித்ராக்ஷன்.
த்ருடதாச்ரயன்.
த்ருடவர்மா.
ச0 த்ருடஸந்தன்.
த்ருடஹஸ்தன்.
த்ருடக்ஷத்ரன்.
தநுர்த்தரன்.
தீர்க்கபாஹு.
தீர்க்கரோமன்.
துச்சலன்.
துச்சாஸனன்.
துர்த்தர்ஷன்.
துர்மதன்.
ரு0 துர்மர்ஷணன்.
துர்முகன்.
துர்யோதனன்.
துர்விகாஹன்.
துர்விமோசனன்.
துராதரன்.
துஷ்கர்ணன்.
துஷ்ப்ரதர்ஷணன்.
துஷ்பராஜயன்.
துஸ்ஸஹன்.
சா0 நந்தன்.
நாகதத்தன்.
நிஷங்கி.
ப்ரமதன்.
ப்ரமாதி.
ப்ருந்தாரகன்.
பலவர்த்தனன்.
பலாகி.
பஹ்வாசி.
பாசி.
எ0 பீமபலன்.
பீமரதன்.
பீமவேகன்.
*மஹாபாஹு.
மஹாபாஹு.
மஹோதரன்.
யுயுத்ஸு.
ரௌத்ரகர்மா.
வ்யூடோரன்.
வாதவேகன்.
அ0 விகடானனன்.
விகர்ணன்.
விசாலாக்ஷன்.
விந்தன்.
விரஜன்.
விராவி.
விவித்ஸு.
விவிம்சதி.
வீரபாஹு.
வீரன்.
கூ0 ஜராஸந்தன்.
ஜலஸந்தன்.
ஸத்யஸந்தன்.
ஸத்வன்.
ஸதன்.
ஸமன்.
ஸஹன்.
ஸுநாபன்.
ஸுபாஹு.
ஸுலோசனன்.
க00 ஸுவர்ச்சஸ்.
ஸுவர்மா.
ஸுவாக்.
ஸுஷேணன்
ஸுஹஸ்தன்.
ஸேநானி.
ஸோமகீர்த்தி.

### ௬௮ - வது அத்தியாயத்திலுள்ளனவும், ௧௩௧ - வது அத்தியாயத்தில் இல்லாதனவுமான பெயர்கள்.

அனுயாயி.
கனகாங்கதன்.
கனகாயு.
குண்டஜன்.
குண்டோதரன்.
சாருசித்ராங்கதன்.
சித்ரகன்.
சித்ரசாபன்.
சித்ரபாஹு.
௧௦ த்ருடரதன்.
த்ருடாயுதன்.
தண்டதாரன்.
தண்டி.
தனுர்க்ரஹன்.
தீர்க்கலோசனன்.
துர்விரோசனன்.
துராதனன்.
துஷ்ப்ரதர்ஷன்.
பண்டிதகன்.
௨௦ பத்மநாபன்.
பீமசரன்.
பீமவிக்ரமன்.
வ்யூடோரு.
விகடன்.
ஸஹஸ்ரவாக்.
ஸுகுண்டலன்.
ஸேனாபதி.
க்ஷேமமூர்த்தி.

### ௧௩௧ - வது அத்தியாயத்திலுள்ளனவும், ௬௮ - வது அத்தியாயத்தில் இல்லாதனவுமான பெயர்கள்.

அக்ரயாயி.
க்ரதனன்.
கனகத்வஜன்.
குண்டசாயி.
குண்டாசி.
குண்டி.
குண்டதரன்.
குண்டதாரன்.
சராஸனன்.
௧௦ சலன்.
சாருசித்ரன்.
சித்ரகுண்டலன்.
சித்ரபாணன்.
சித்ராங்கன்.
சித்ராயுதன்.
த்ருடாச்ரயன்.
தனுர்த்தரன்.
தீர்க்கரோமன்.
துர்விகாஹன்.
௨௦ துர்விமோசனன்.
துராதரன்.
துஷ்பராஜயன்.
ப்ரமதன்.
ப்ரமாதி.
ப்ருந்தாரகன்.
பலவர்த்தனன்.
பாசி.
வ்யூடோரன்.
விகடானனன்.
௩௦ விரஜன்.
ஸத்வன்.
ஸதன்.
ஸஹன்.
ஸுநாபன்.
ஸுவாக்.
ஸேனானி.

---

## நூற்றுமுப்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



### (அர்ஜுனன் ஜனனம்.)

பலவான்களிற்சிறந்த பீமஸேனன் பிறந்தபிறகு, பாண்டு, "உலகத்துக்குள் மிகச்சிலாக்கியனை மற்றொருபுத்ரன் எனக்கு எவ்வாறு உண்டாவான்?" என்று சிந்தித்தான். பிறகு, பாண்டுமஹாராஜன், "இந்தஉலகம் தெய்வச்செயலையும் மனுஷ்ய யத்னத்தையும் ஆதாரமா

கக்கொண்டிருக்கிறது. அவற்றுள் தேவன்செயல் காலத்திற்குரியகரு மம் செய்வதனுல் கிடைக்கிறது. இந்திரன் ராஜாவென்றும் தேவர் களில் முதன்மையானவனென்றும் நாம் கேட்டிருக்கிறேம். அவன் அளவிடக்கூடாதசக்தியையும் *உத்ஸாஹத்தையும் உடையவன்;சிற ந்த †பராக்ரமமுள்ளவன்; அளவற்ற மஹிமையுள்ளவன்; அவனைத் தவத்தினுல் ஆராதித்து மிகுந்தசக்தியுள்ள புத்திரனை அடையப் போகிறேன். அவன் எனக்கு எந்தப்புத்திரனைக்கொடுப்பனே அந்தப் புத்திரன் மிகச்சிறந்தவனுயிருப்பன். அவன்,போரில் மனிதர்களையும் மனிதரல்லாத தேவாஸுரர் முதலியவரையும் கொல்வான். ஆதலால், சரீரத்தாலும் மனத்தாலும் வாக்காலும் பெருந்தவம் செய்வேன்" என்று, மஹரிஷிகளுடன்கூடி ஆலோசனைசெய்து,ஒருவருஷம்வரை யில் உயர்ந்த நியமத்தைச் செய்யும்படி குந்திக்குக் கட்டளையிட்டான். அந்தவீரனுகியபாண்டு தானும் உக்ரமானதவத்தை மேற்கொண்டு சிறந்தநியானத்துடன் ஒற்றைக்காலால் நின்றுகொண்டிருந்தான்.பார தரே! தர்மாத்மாவான அந்தப்பாண்டு தேவர்களுக்கு ஈசுவரனுகிய அந்தஇந்திரனை ஆராதிக்கக்கருதி ஸூர்யனுடன் கூடவே (உதயம் முதல் அஸ்தமனம்வரையில்) தாபத்தைத் தாங்கியிருந்தான். வெகு காலத்திற்குப்பின் இந்திரன் அவனிடம்வந்து, "மூன்றுலோகங்களி லும் பெயர்பெற்ற புத்திரனை உனக்குக் கொடுக்கப்போகிறேன். பிரா மணர்களுக்கும் பசுக்களுக்கும் தன்நண்பர்களுக்கும் காரியங்களைச் சாதிப்பவனும், பகைவர்க்குத் துயரத்தை உண்டுபண்ணுகிறவனும், சுற்றத்தாரெல்லாரையும் மகிழ்விப்பவனும், எதிரிகளெல்லாரையும் அழிப்பவனுமாகிய ஒருசிறந்தபுத்திரனை உனக்குக் கொடுக்கப்போகி றேன்" என்று சொன்னுன்.

மஹாத்மாவான இந்திரனுல் இவ்வாறு சொல்லப்பட்ட தர்மாத் மாவான பாண்டுமஹாராஜன், இந்திரன்சொல்லை நினைத்துக்கொண்டு குந்தியைநோக்கி, "பாக்யவதியே! உனக்கு நல்லபலன் வரப்போகி றது. தேவக்கூட்டங்களுக்கெல்லாம் ஈசுவரனுகிய இந்திரன் அனுக் ரஹம்செய்து நீ விரும்பினபடியான புத்திரனை உனக்குத் தரக்கருது கிருன். அழகான நிதம்பங்களையுடையவளே! மனிதர்க்கெட்டாத செய்கையுடையவனும் சிறந்த புகழுள்ளவனும் பகைவரையடக்கு கிறவனும் நீதியுள்ளவனும் மஹாத்மாவும் சூரியனுக்குநிகரான பிர தாபமுள்ளவனும் ஜயிக்கமுடியாதவனும் ஸத்கருமமுள்ளவனும் பார் ப்பதற்கு மிக்க ஆச்சரியமானவனும் க்ஷத்ரிய சக்திகளுக்கெல்லாம்

* சோர்வில்லாமை. † மற்றவரை அடக்குந்திறமை.

இருப்பிடமானவனுமாகிய புத்திரனைப் பெறக்கடவாய். தேவேந்திரனிடத்திலிருந்து அனுக்ரஹம் கிடைத்திருக்கிறது. அழகிய புன்சிரிப்புள்ளவளே! தேவேந்திரனை அழை" என்றுசொன்னான். இவ்வாறு சொல்லப்பட்டவுடனே, புகழ்பெற்ற குந்தியானவள் இந்திரனை அழைத்தாள். பிறகு, தேவேந்திரன்வந்து அர்ச்சுனனை உண்டுபண்ணினன். * பூர்வபல்குனியும் † உத்தரபல்குனியுஞ் சேர்ந்த பகலில் ‡பால்குன மாஸத்திற் பிறந்ததனால், அவன் பால்குனன் அல்லது பல்குனன்என்று பெயர்பெற்றான். அந்தக்குமாரன் பிறந்தவுடன், பிரஸவஅறையிலிருக்கும் குந்தியைநோக்கி எல்லாப்பிராணிகளையும் மகிழ்விக்கும் ஓர் அசரீரிவாக்கு மிக்க கம்பீரமான ஒலியினால் ஆகாயத்தைச் சப்திக்கச்செய்துகொண்டு எல்லாப்பிராணிகளும் அந்த ஆச்ரமத்திலிருப்பவர்களும் கேட்கும்படி, தூயநகையுள்ள குந்தியைக்கூப்பிட்டுப் பின்வரும்சொல்லைத் தெளிவாகச்சொல்லத்தொடங்கிற்று.

"குந்தியே! கார்த்தவீர்யனுக்கு ஒப்பானவனும் சிவனுக்கு ஈடான பராக்ரமமுடையவனும் தேவேந்திரனைப்போல் ஜயிக்கமுடியாதவனுமாகிய இந்தப்புத்திரன் உன்புகழைப் பரவச்செய்யப்போகிறான். அதிதியென்பவளுக்கு விஷ்ணு எவ்வாறு ஆனந்தத்தை அபிவிருத்திசெய்தாரோ அவ்வாறே விஷ்ணுவுக்கொப்பான அர்ச்சுனன் உனக்கு மகிழ்ச்சியை அபிவிருத்திசெய்வான். இவன் மத்ரதேசத்தவரையும் கௌரவர்களையும் ஸோமகர்களையும் சேதிதேசத்தவரையும் காசிதேசத்தவரையும் கருசதேசத்தவரையும் ஜயித்துக் கௌரவர்களின் ராஜ்யலக்ஷ்மியை வஹிக்கப்போகிறான். இவன்கைவன்மையினால், காண்டவவனத்தில் அக்கினிபகவான் எல்லாப்பிராணிகளின் கொழுப்பினாலும் மிகுந்ததிருப்தியை அடையப்போகிறான். சிறந்த பலமுள்ள இந்தவீரன் தலைமையாகநின்று அரசர்களைஜயித்து ஸஹோதரர்களுடன் சேர்ந்து மூன்று அசுவமேதங்களை நடத்தப்போகிறான். குந்தியே! இவன் பரசுராமனுக்கு ஒப்பானவனாகவும், விஷ்ணுவுக்கொப்பான பராக்ரமமுடையவனாகவும், வீரர்களிற் சிறந்தவனாகவும், மிகுந்த புகழ்பெற்றவனாகவுமிருக்கப்போகிறான். இவன், சிறந்த தேவதையான சங்கரரை யுத்தத்தில் சந்தோஷிக்கச் செய்யப்போகிறான். சந்தோஷமடைந்த அவரிடமிருந்து பாசுபதமென்னும் அஸ்திரத்தை அடையப்போகிறான். §நிவாதகவசர்களென்னும் அஸு-

* பூரநக்ஷத்திரம். † உத்தரநக்ஷத்திரம். ‡ பங்குனி.

§ பலமான கவசங்களையுடையவர்.

ரர்கள் தேவர்களுக்கு விரோதிகள். சிறந்தபுஜங்களுள்ள உன்புத்ரன் இந்திரன்கட்டளையினால் அவர்களை வதம்செய்யப்போகிறான். தேவ லோகத்திலிருந்தே தேவர்களுக்குரிய அஸ்திரங்களெல்லாவற்றையும் அடையப்போகிறான். இந்தப்புருஷச்ரேஷ்டன், அழிந்துபோனராஜ்ய லக்ஷ்மியையும் கொண்டுவரப்போகிறான்" என்றது. குந்தி பிரஸ வித்தபோது இந்த அதிக ஆச்சரியகரமான வாக்கைக் கேட்டாள். உரக்க உச்சரிக்கப்பட்ட அந்த அசரீரிவாக்கைக்கேட்டுச் சதச்ருங்க மலையில் வஸிக்கும் ரிஷிகளுக்கும் தேவரிஷிகளுக்கும் இந்திராதி தேவர்களுக்கும் அதிக ஆனந்தமுண்டாயிற்று. ஆகாயத்தில் துந் துபிவாத்தியங்களின் பெருமுழக்கம் உண்டானது. பூமாரிகள் நிரம் பின. பேரொலி கிளம்பிற்று. தேவர்களின் கூட்டங்கள்சேர்ந்து அர்ச்சுனனைக் கொண்டாடின. கத்ருவின்புத்திரர்களாகிய நாகர்க ளும் வினதையின் புத்திரர்களாகிய கருடன் முதலியவர்களும் கந்த ர்வர்களும் அப்ஸரஸுக்களும் பரத்வாஜர், கசியபர், கௌதமர், விச்வா மித்திரர், ஜமதக்னி, வஸிஷ்டர், ஸூர்யன் நாசமடைந்தபோது தாமே உதயமாகிப் பிரகாசித்துப் பெயர்பெற்ற அத்ரிபகவான் ஆகிய பிரஜா ஸ்ருஷ்டி கர்த்தர்களும் மஹான்களுமான ஸப்தரிஷிகளும், மரீசி, அங்கிரஸ், புலஸ்தியர், புலஹர், க்ரது, தக்ஷர் ஆகிய இவர்களும் வந்த னர். கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் தேவலோகத்துப் புஷ்பமாலை களைத்தரித்து, தேவலோகத்து வஸ்திரங்களை உடுத்து, எல்லா அலங் காரங்களையும் அணிந்து, அர்ஜுனனைப்பற்றிக் கானம் செய்தனர். அப்ஸரஸுகளின் கூட்டத்தார் நர்த்தனம்செய்தனர். அவ்வாறே மஹரிஷிகளும் அங்கே சுற்றிலும் வேதமந்திரங்களை ஜபித்தனர். அழகுள்ள தும்புருவும் கந்தர்வர்களுடன்சேர்ந்து கானஞ்செய்தார். ராஜாவே! பீமஸேனன், உக்ரஸேனன், ஊர்ணாயு, அனகன், கோபதி, த்ருதராஷ்டிரன், ஸூர்யவர்ச்சஸ், யுகபன், த்ருணபன், கார்ஷ்ணி, நந்தி, சித்ரரதன், சாலிசிரஸ், பர்ஜன்யன், கலி, நாரதர், ருத்வான், ப்ரஹத்வான், ப்ரஹகன், பெரியமனஸுள்ளகாராளன், பிரம்மசாரி, பஹுகுணன், ஸுவர்ணனென்று பெயர்பெற்றவன், விச்வாவஸு, புமன்யு, ஸுசந்திரன், சரு, மிகவும் மதுரமாகப்பாடுதலிற் பெயர் பெற்ற ஹாஹா ஹூஹூ என்னும் இருவர் ஆகிய இந்தத் *தேவ கந்தர்வர்களும் அங்கேசென்றனர். அவ்வாறே, மிகுந்த பாக்கிய முள்ளவர்களும் நீண்ட கண்களுடையவர்களுமாகிய அப்ஸரஸுகள்

* தேவஜாதியில் ஸங்கீதம்பாடுவதைத் தொழிலாக உடையவர்; மனுஷ்ய கந்தர்வர் முதலிய வகுப்பும் உண்டு.

எல்லாப்பூஷணங்களையுமணிந்துகொண்டு உத்ஸாஹத்துடன்ஆடினார்; பாடினர். அநுசானை, அநவத்யை, குணமுக்யை, குணவரை, அத்ரிகை, ஸோமை, மிச்ரகேசி, அலம்புஷை, மரீசி, ஸுசிகை, வித்யுத்பர்ணை, திலோத்தமை, அம்பிகை, லக்ஷணை, க்ஷேமை, தேவி, ரம்பை, மனோரமை, அஸிதை, ஸுபாஹு, ஸுப்ரியை, வபுஸ், புண்டரீகை, ஸுகந்தை, ஸுரஸை, பிரமாதினி, காம்யை, சாரத்வதி முதலியவர்கள் கூட்டங்கூட்டமாக அங்கே நர்த்தனஞ்செய்தனர். நீண்டகண்களையுடையவர்களாகிய மேனகை, ஸஹஜன்யை, கர்ணிகை, புஞ்சிகஸ்தலை, ருதுஸ்தலை, க்ருதாசி, விச்வாசி, பூர்வசித்தி, உம்லோசை என்றும் ப்ரம்லோசையென்றும் பெயர்பெற்றவர்கள், ஊர்வசி ஆகிய பதினொரு அப்ஸரஸுகளும் பாடினர். வீரரே! ராஜாவே! தாதா, அர்யமா, மித்ரன், வருணன், அம்சன், பகன், இந்திரன், விவஸ்வான், பூஷா, பர்ஜன்யன், த்வஷ்டா, ஜன்மத்தில் கடைசியானவனும் குணத்தில் முதலானவனுமான விஷ்ணு, ஆகிய ஸூர்யனுக்குரிய ப்ரகாசத்தினால் ஜ்வலிக்கின்ற இந்தப்பன்னிரண்டு ஸூர்யர்களும், ம்ருகவ்யாதன், ஸர்ப்பன், மிகுந்த புகழ்பெற்ற நிருருதி, அஜைகபாத், அஹிர்ப்புத்னியன், பிநாகி, தஹனன், ஈசுவரன், கபாலி, ஸ்தாணு, பகவானாகிய பகன் ஆகிய பதினொருருத்திரர்களும் அங்கே வந்திருந்தனர். அசுவினிதேவர்களும் அஷ்டவஸுக்களும் மிகுந்தபலமுள்ள ஸப்த மருத்துக்களும் விச்வேதேவர்களும் ஸாத்யர்களும் அங்கே சுற்றிலும் நின்றுகொண்டிருந்தனர். தவமுள்ளவர்களும் மிகுந்த கோபமுள்ளவர்களும் சிறந்த பலவான்களுமாகிய கார்க்கோடகன், வாஸுகியென்னும் நாகன், கச்சபன், குண்டன், தக்ஷன்என்னும் மஹாநாகன் ஆகியஇவர்களும் இன்னும் அநேகநாகர்களும் அங்கேவந்திருந்தனர். தார்க்ஷ்யன், அரிஷ்டநேமி, கருடன், அஸிதத்வஜன், அருணன், ஆருணியாகிய விநதையின்புத்ரர்களும் இருந்தனர். விமானங்களிலும் மலைச்சிகரங்களிலுமிருந்த அந்தத் தேவக்கூட்டங்களையெல்லாம் தவத்தில் ஸித்திபெற்ற மஹரிஷிகள்மட்டும் கண்டனர்; மற்ற ஜனங்கள் காணவில்லை. அந்தப் பெரிய புதுமையைக்கண்டு வியப்புற்ற ரிஷிச்ரேஷ்டர்கள், அதன் பிறகு, அர்ச்சுனனிடத்தில் விசேஷமான மரியாதையைச்செய்தனர்.

பாண்டு, மகிழ்ச்சியுள்ள மனத்துடன் தேவர் முதலானவர்களைப் பூஜித்தான். பாண்டுவினால் பூஜிக்கப்பட்ட தேவர்கள், புருஷச்ரேஷ்டனான பாண்டுவைநோக்கி, "தேவர்களின் அனுக்ரஹத்தினால் தர்மதேவதையே இந்த முதற்புத்திரனாகப்பிறந்திருக்கிறான். வாயுவே

பலசாலியும் பகைவரையழிப்பவனுமாகிய இந்தப்பீமனைப் பிறந்திருக்கிறான். இந்திரன் அனுக்ரஹஞ்செய்து தானே நேர இந்த அர்ச்சுனனைப் பிறந்திருக்கிறான். நீ தேவர்களுக்குப் பிதாவாயிருப்பதனால் உனக்குமேலான புண்யபுருஷனில்லை. பிதிர்க்களின் கடனிலிருந்து விடுபட்டுப் புண்ணியத்தைக்கொண்டு ஸ்வர்க்கமடைவாய்" என்றனர். இவ்வாறு சொன்னபின், தேவர்களனைவரும் வந்தவாறே திரும்பிச்சென்றனர். மிகுந்த கீர்த்தியுள்ள பாண்டுவோவெனில், புத்திரன்மேலுள்ள ஆசையினால் அழகானபிள்ளையைவிரும்பித் திரும்பவும் குந்திக்குக் கட்டளையிட்டான். அவனுக்கு, குந்தி, "இதற்குமேல் நான்காம் புத்திரனை எந்தஆபத்திலும் விதிக்கவில்லை. இதற்குமேல் ஆசைப்படும்பெண் கற்பிலலாதவளாவாள். ஐந்தாம்புத்திரனை விரும்பினால் வேசைஆவாள். எல்லாந்தெரிந்தவரே! நீர் இந்தத் தர்மத்தை அறிந்திருந்தும் புத்திரனுக்காக வரைதப்பி என்னைப் பார்த்துப் புத்திதவறினதுபோல் பேசுவதேன்?" என்றுசொன்னாள்.

---

## நாற்றுமுப்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(நகுலஸஹதேவர்கள் ஜனனமும், பாண்டவர்களுக்கு நாமகரணமும், வஸுதேவர் அனுப்பின புரோஹிதர் பாண்டவர்களுக்கு உபநயனாதி ஸம்ஸ்காரங்களைச் செய்ததும், அவர்கள் சுகனிடத்தில் தனுர்வேதாப்பியாஸம் செய்ததும்.)

குந்தியின் புத்ரர்களும் த்ருதராஷ்டிரன் புத்ரர்களும் பிறந்தபின்னர், மாத்ரி, ரஹஸ்யத்தில் பாண்டுவினிடம், "வீரரே! நீர் எனக்கு அனுகூலமில்லாமலிருப்பதிலும் எனக்குத் துன்பமில்லை. குற்றமற்றவரே! பெருமைக்குத் தகுதியுள்ள குந்திக்குத் தாழ்மையாக எப்போதும் நான் இருந்ததனாலும் எனக்குவருத்தமில்லை. ராஜாவே! குருவம்சத்தை விருத்திசெய்கிறவரே! அவ்வாறே, காந்தாரிக்கு நூறுபுத்ரர்கள் பிறந்ததைக்கேட்டும் எனக்கு அவ்வளவுதுக்கம் உண்டாகவில்லை. நான் குந்திக்கு ஸமமாயிருக்கும்போது எனக்குமட்டும் புத்திரனில்லாமலிருப்பதுதான் எனக்குப் பெருந்துயரம். இப்போது குந்தியினிடத்திலாவது என்பர்த்தாவின் ஸந்ததி உண்டானது எனக்குச் சந்தோஷம். குந்திபோஜன்பெண் எனக்கும் புத்ர

ஸந்தானத்தை உண்டுபண்ணுவாளாயின், எனக்கும் அவள் அனுக்ர ஹம் செய்ததாகும்; உமக்கும் நன்மையாகும். குந்தி எனக்கு மாற்றாளாயிருப்பதனால் அவளிடத்தில் நான் சொல்வதற்கு எனக்கு மானமாயிருக்கிறது. உமக்கு என்னிடத்தில் தயையிருந்தால் நீரே அவளை ஆஜ்ஞாபிக்கவேண்டும்" என்று சொன்னாள். அதற்குப் பாண்டு, "மாத்ரியே! என் உள்ளத்திலும் இந்தவிஷயம் எப்போதும் சுழன்றுகொண்டிருக்கிறது. உனக்கு விருப்பமிருப்பதும் இல்லாத தும் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதனால் நான் உன்னிடம் வலி யச் சொல்லவில்லை. இந்த உன்எண்ணம் தெரிந்தபிறகு முயற்சிசெய் வேன். நான்சொன்னால் அவசியம் என்சொல்லைக் குந்தி அங்கீகரிப் பாளென்று நினைக்கிறேன்" என்று சொன்னான். பிறகு, பாண்டு, குந்தியைநோக்கி ரஹஸ்யத்தில் பின்வருமாறு சொல்லலானான்:

"குணவதியே! மாத்ரிக்கும் அனுக்ரஹம்செய். என்குலத் திற்கு ஸந்தானத்தையும் லோகத்திற்குப் பிரியத்தையும்செய். குண முள்ளவளே! எனக்கும் மஹாத்மாக்களாகிய என்முன்னோர்களுக் கும் *பிண்டநாசமில்லாமைக்காகவும் என்விருப்பத்திற்காகவும் ஒரு மேலானசுபத்தைச்செய். உனது புகழுக்காகவுங்கூட மற்றவர்கள் செயற்கரியகாரியத்தை நீ செய்யக்கடவாய். இந்திரன் தேவராஜ்யத் தையடைந்தபின் கீர்த்தியைவிரும்பி அநேகயாகங்கள் செய்தான். பெண்ணரசியே! அவ்வாறே மந்திரங்களையறிகின்ற பிராமணர்கள் மிகக்கடினமானதவத்தைச்செய்து புகழுக்காகப் பெரியோர்களிடம் படிந்திருக்கின்றனர். ராஜரிஷிகளும் தவத்தையேபொருளாகவுடைய பிராமணர்களும் எல்லாரும் கீர்த்திக்காகவே அளவற்ற செயற்கரிய கருமங்களைச் செய்திருக்கின்றனர். குற்றமற்றவளே! அவர்களைப் போன்றநீயும் இந்தமாத்ரியை ஓடத்தினால் தாண்டுவிப்பதுபோல் தாண்டுவிக்கக்கடவாய். அவளுக்குச் சந்ததியைக்கொடுப்பதனால் சிற ந்தகீர்த்தியைப்பெறுவாயாக" என்றான். அதைக்கேட்டுக் குந்தி, "கௌரவபுத்திரரே! தர்மசாஸ்திரத்திற்சொல்லப்பட்ட தர்மத்தைப் பற்றி நீர் சொல்வது ஸரிதான். ஆதலால், மாத்ரிக்கும் உபகாரத்தைச் செய்வேன்" என்றுசொன்னாள். குந்தி, பாண்டுவுக்கு இவ்வாறு சொல்லி மாத்ரியைப்பார்த்து, "நீ ஒருதரம் தேவதையைத் தியானிப் பாயாக. அதனால் உனக்குத் தகுதியான ஸந்ததி நிச்சயமாக உண்

* 'ஶ்ராத்தத்தில் பிதிர்பிண்டம் விட்டுப்போகாமைக்காகவும்' என்றும், 'சரீரஸம்பந்தத்தொடர்ச்சி விட்டுப்போகாமைக்காகவும்' என்றும் கொள்ளலாம்.

டாகும்'' என்றுசொன்னாள். பிறகு, சாஸ்திரோக்தமான அனுஷ்டானத்துடன் அந்தமந்திரம் உபதேசிக்கப்பட்டபின், அந்தராஜபுத்ரியான மாத்ரி ஸ்நானஞ்செய்து சயனத்திற் படுத்தாள். பிறகு, மாத்ரி தான் தனிமையாகத் தன்புத்தியில் ஆராய்ந்து அச்விநிதேவர்களை மனத்தினால் நினைத்தாள். அவர்கள் இருவரும்வந்து பூமியில் அழகில் நிகரற்றவர்களாகியநகுலன்ஸஹதேவனென்னும் இரட்டைப் பிள்ளைகளை அவளிடம் உண்டுபண்ணினர். முன்போலவே அசரீரி வாக்கு அவ்விரட்டைப்பிள்ளைகளைப்பற்றியும், "இவர்கள் அசுவினி தேவர்களுக்குமேல் தர்மமும் பக்தியும் ஒழுக்கமும் கல்வியும் பலமும் அழகும் குணங்களும் பொருந்தினவர்களாக இருக்கின்றனர். அழகு என்னும் தனத்தினுடைய நிறைவினாலும் ஒளியினாலும் அதிகமாகப் பிரகாசிக்கின்றனர்'' என்று சொல்லிற்று. ராஜாவே! சதச்ருங்க மலையில் வஸிக்கும்ரிஷிகள் *பக்தியோடும் சாஸ்திரோக்தகருமங்களோடும் † ஆசீர்வாதங்களோடுங்கூடப் பஞ்சபாண்டவர்களுக்கு நாமகரணங்கள்செய்தனர். குந்தியின்புத்ரர்களில், ஜ்யேஷ்டனை ‡யுதிஷ்டிரனென்றும் நடுவாமவனைப் § பீமஸேனனென்றும் மூன்றாமவனை ¶ அர்ஜுனனென்றும் பெயரமைத்தனர். மாத்ரியின் புத்திரர்களில் முதலாமவனை நகுலனென்றும் இரண்டாமவனை **ஸஹதேவனென்றும் அந்தப்பிராமணர்கள் மனமகிழ்ந்து சொன்னார்கள். அந்தக் கௌரவவம்ச சிரேஷ்டர்களாகிய பாண்டுபுத்ரர்கள் ஒவ்வொருவருஷத்திற்குப்பின் பிறந்தவராயினும் எல்லாரும் சிறந்தசுபாவமுள்ளவர்களும் மிகுந்த சக்தியுள்ளவர்களும் சிறந்தபலமும் பராக்ரமமுமுடையவர்களுமாக ஐந்துவருஷங்களானவர்கள்போல் விளங்கினர். தேவர்களைப்போன்ற ரூபமுள்ளவர்களும் மிகுந்த பராக்ரமசாலிகளுமாகிய அந்தப்புத்திரர்களைக்கண்டு பாண்டுமஹாராஜன் மிகுந்த உத்ஸாஹத்தையும் திருப்தியையும் அடைந்தான். அந்தப்புத்திரர்கள் சதஸ்ருங்கமலையில்வஸிக்கும் ரிஷிகளனைவர்க்கும் அவர்கள்பத்தினிகளுக்கும் பிரியமாகஇருந்தனர். பாண்டு திரும்பவும் மாத்ரிவிஷய

* இவர்கள் தேவாம்சங்கள் என்கிற பக்தி.

† எல்லாநன்மையும் உண்டாகவேண்டும் என்கிற பிரார்த்தனை.

‡ யுத்தத்தில் புறங்காட்டிஓடாமல் ஸ்திரமாய் நிற்பவன்.

§ எல்லாரும்பயப்படத்தக்கஸேனையுடையவன்.

¶ சுத்தன் = குற்றமில்லாதவன்.

‖ ஸர்ப்பங்களுக்குக் கீரியைப்போல் பகைவர்களுக்குப் பயங்கரமானவன்.

** தாயாரைப்பற்றிய வேற்றுமையின்றி மற்ற ஸகோதரர்களுடன் ஒத்திருப்பவன்.

மாகக் குந்திக்குக்கட்டளையிட்டான். ராஜாவே! ரஹஸ்யத்தில் கட்டளையிடப்பட்ட ஸாத்வியான குந்தி, பாண்டுவைப்பார்த்து, "நான் உபதேசித்ததில் இவள் ஒருதடவையில் இரண்டுபுத்ரர்களையடைந்தாள். அதனால், நான் மோசம் செய்யப்பட்டேன். இவளிடம் தோற்பேன் என்றுபயப்படுகிறேன். கெட்டபெண்களின்நடை இப்படிப்பட்டது. இரட்டையானதேவர்களையழைப்பதில் இரண்டுபலன்களிருப்பதை அறிவில்லாதநான் அறியாமற்போனேன். ஆதலால், கட்டளையிடவேண்டாம். இஃது எனக்கு நீர்கொடுத்த வரமாக இருக்கட்டும்" என்றாள். இவ்வாறு பாண்டுவுக்கு மிகுந்தபலமுள்ள ஐந்துபுத்திரர்கள் தேவர்களால் கொடுக்கப்பட்டனர். புகழ்பெற்றவர்களும் கௌரவ வம்சத்துக்கு மேன்மையைச் செய்கிறவர்களும் நல்ல லக்ஷணங்கள் நிரம்பினவர்களும் சந்திரனைப்போல் பார்ப்பதற்கு இனியவர்களும் ஸிம்மம்போல் கர்வமுள்ளவர்களும் சிறந்தவில்லாளிகளும் ஸிம்மம் போலப் பாய்ந்துநடப்பவர்களும் ஸிம்மத்தின்கழுத்துக்கொப்பான கழுத்துள்ளவர்களும் தேவர்களுக்கொப்பான பராக்கிரமமுள்ளவர்களுமாக அந்தராஜகுமாரர்கள் வளர்ந்தார்கள். புண்ணியபூமியான அந்த இமயமலையைச்சார்ந்தகுன்றில் அவர்கள் வளர்ந்துகொண்டிருக்கும்போது அங்கேசேர்ந்திருந்த மஹரிஷிகளுக்கு வியப்பையுண்டாக்கினர். சதச்ருங்கத்தில்வஸிக்கும்ரிஷிகள் பாண்டுபுத்திரர்களைப் பிறந்த மாத்திரத்தில் எடுத்துக்கொண்டு தங்கள்பிள்ளைகளைப்போல நினைத்தனர். பிறகு, பாண்டு, சாபத்தினால்பயந்து சதச்ருங்கம்போய் அங்கே தவஞ்செய்துகொண்டிருக்கும் ரிஷிகளுடன்கூடவே தானும் ரிஷியாகிவிட்டான். "பாண்டுமஹாராஜன் இலைகளையும் கிழங்குகளையும் கனிகளையும் புஜிததுக்கொண்டும் தவம்செய்துகொண்டும் ஐம்புலன்களையும்கட்டித் தியானநிஷ்டையிலிருப்பவனானான்" என்று பேசுகிறவர்கள் பலர்பேசினதைக்கேட்டு வஸுதேவர்முதலான யாதவர்களனைவரும் வ்யஸனத்தினால் வருந்தினர். அந்தயாதவர்களனைவரும் தங்கள்பந்துக்களுடன்சேர்ந்து, "பாண்டு அன்புடன்பேசுகிற ஸம்பாஷணைகளை நாம் எப்போதுகேட்போம்?" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது பாண்டுவுக்குப் புத்திரலாபம் நேர்ந்ததைக் கேட்டு ஸந்தோஷமடைந்தனர். அவர்கள் ஒருவரோடொருவர் சேர்ந்து வஸுதேவரிடம், "மிகுந்தபலசாலிகளாகிய பாண்டுபுத்திரர்கள் ஜாதகர்மம்முதலிய ஸம்ஸ்காரங்களில்லாமல் போகத்தகாது. பாண்டுவின்விருப்பத்தையும் நன்மையையும்தேடுகிற நீர் உமது புரோகிதரையனுப்பும்" என்று அன்புடன் சொன்னார்கள். வஸுதேவர்

ஆகட்டுமென்றுசொல்லித் தம்புரோகிதரை அனுப்பினர். பாரதரே! பாண்டுகுமாரர்களுக்குத்தகுதியான அநேகம் உயர்ந்தவஸ்துக்களையும், குந்திக்கும் மாத்ரிக்கும் வாய்ஸமாசாரத்துடன் வேலைக்காரிகளையும், வேலைக்காரர்களையும், அவர்களுக்கு வேண்டியபதார்த்தங்களையும், பசுக்களையும், பொன்வெள்ளிகளையும் அனுப்பினர். அவையெல்லாவற்றையுங்கொண்டு அந்தப்புரோகிதர் சென்றார். கசியபகோத்திரத்தவரும்பிராம்மணசிரேஷ்டருமானஅந்த வந்தபுரோகிதரைப் பகைவரின்நகரங்களைஜயிப்பவனாகியபாண்டு கிரமப்படி பூஜித்தான். குந்தியும் மாத்ரியும் மிகமகிழ்ந்து வஸுதேவரைச்சிலாகித்தனர். பிறகு, பாண்டு தன்புத்திரர்களுக்கு எல்லாஸம்ஸ்காரங்களையும் செய்வித்தான். பாரதரே! கர்ப்பாதானம்முதலாகச் சௌளம், உபநயனம், உபாகர்மம் ஆகிய எல்லாஸம்ஸ்காரங்களையும் அந்தக்காசியபர் செய்தார். விருஷபம்போற்கண்களுடையவர்களும் புகழ்பெற்றவர்களுமாகிய குமாரர்களனைவரும் சௌளமும் உபநயனமுமானபிறகு வேதாத்தியயனத்தில் கரைகண்டவரானார்கள். சர்யாதியின் ஜ்யேஷ்டகுமாரனும் பகைவரைவருத்துகிறவனுமான சுகனென்னும் ஒருவன் இருந்தான். அவன் கடல்சூழ்ந்தபூமியை வில்லினால்ஜயித்தவன்; சிறந்த புத்தியுள்ளவனும் மஹாத்மாவுமாகிய அந்தச்சுகன் நூறுஅஸ்வமேத மஹாயாகங்களைச்செய்து, தேவர்களனைவரையும்பிதிர்க்களையும் திருப்தியடைவித்து, இலை கிழங்கு கனிகளைப்புசித்துக்கொண்டு, சதச்ருங்கமென்னும்மலையில்தவஞ்செய்துகொண்டிருந்தான். அவனால் சிறந்த ஆயுதங்களைக்கொடுத்தும் பயிற்சி செய்வித்தும் அபிவிருத்திசெய்யப்பெற்ற பாண்டவர்கள்அவனுடைய அன்பினால்வில்வித்தையில் கரைகண்டவராயினர். பீமஸேனன் கதாயுத்தத்தில் தேர்ந்தவனானன். யுதிஷ்டிரர் ஈட்டிச்சண்டையில் ஸமர்த்தரானார். பலவான்களிற்சிறந்தவர்களாகிய நகுலஸஹதேவர்கள் கத்திகேடகங்களில் தேர்ந்தவர்களானார்கள். பகைவரைத்துயரப்படுத்துகிற ஸவ்யஸாசியாகிய அர்ச்சுனன் தனுர்வேதத்தில் கரைகண்டவனானன். பிரபுவே! அர்ச்சுனன், சுகனால் 'இவன் எனக்குச் சமானமானவன்' என்று சொல்லி விடைகொடுக்கப்பெற்றான். கொடுப்பவர்களிற் சிறந்தவனாகிய அந்த ராஜா, அர்ச்சுனனுக்கு விடைகொடுத்துச் சக்திஆயுதத்தையும், கத்தியையும், அம்புகளையும், பனைமர அளவுள்ளதும் மிகுந்த ஒளியுள்ளதுமாகிய வில்லையும், கழுகிறகுகளினால் அலங்கரிக்கப்பட்டவையும் மஹாஸர்ப்பங்களுக்கொப்பான பிரகாசமுள்ளவையுமான விபாடம், க்ஷுரம், நாராசம் என்னும் பாணங்களையும் அவனுக்கு ஸந்தோஷத்

துடன் கொடுத்தான். எல்லா ஆயுதங்களையுமடைந்து மகிழ்வுற்ற இந்திரபுத்திரனை அர்ச்சுனன் அரசர்கள்அனைவரையும் தன்சக்திக்குப் போதாதவர்களாக நினைத்தான். இவ்வாறு ஒருவருக்கொருவர் ஒரு வருஷம் வித்தியாசமுள்ளவர்களும் சூரர்களுமான குந்திபுத்ரர்களும் மாத்ரிபுத்ரர்களும் ஒருவரையொருவர் ஒத்திருந்தனர். குருவம்சத்தை விருத்திசெய்பவராகிய இவ்வைவரும் திருதராஷ்டிரபுத்திரர்கள் நூறுபெயருமான எல்லாரும் நிறைந்தஜலத்தில் தாமரைப்புஷ்பங்கள் வளர்வதுபோல் கொஞ்சகாலத்திற்குள் வளர்ந்தனர்.

---

## நூற்றுமுப்பத்துநான்காவது அத்தியாயம்.

## ஸம்பவபார்வம். (தொடர்ச்சி.)



(பாண்டவர்களின் ஆயுளும், பாண்டுமரணமும், மாத்ரியின் அநுமரணமும், பாண்டுவின் தேகஸம்ஸ்காரமும்.)

ஜனமேஜயர், "தேவர்களால் கிடைத்த பாண்டுபுத்ரர்கள் எந்தவயதில் ஹஸ்தினபுரம்சேர்ந்தனர்? அவர்களின் பூர்ணமான ஆயுள் எவ்வளவு?" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினர்.

"ஜனமேஜயரே! இப்போது பாண்டவர்களின் ஆயுளைச்சொல்லுகிறேன்; கேளும். அஸ்தினபுரம்போனபோது யுதிஷ்டிரருக்குப் பிராயம் பதினாறு; பீமஸேனனுக்குப் பதினைந்து; அர்ச்சுனனுக்குப் பதினான்கு; நகுலஸஹதேவர்களுக்குப்பதின்மூன்று. அந்தஅஸ்தினபுரத்தில்பதின்மூன்றுவருஷகாலம் த்ருதராஷ்டிரபுத்ரர்களோடுவஸித்தனர். அரக்குமாளிகையிலிருந்து விடப்பட்டு ஆறுமாஸமிருந்தனர். அப்போது கடோத்கசன் பிறந்தான். ஏகசக்ராநகரியில் ஆறுமாஸமிருந்தனர். பாஞ்சாலராஜன் கிருஹத்தில் ஒருவருஷம் வஸித்தனர். பாரதரே! த்ருதராஷ்டிரபுத்ரர்களுடன்கூட மறுபடியும்ஐந்து வருஷம் வாஸஞ்செய்து, பிறகு இந்திரப்பிரஸ்தத்தில் இருபத்துமூன்றுவருஷம் வஸித்தனர். பிறகு, சூதாட்டத்தில் தோல்வியடைந்து பதின்மூன்றுவருஷம் இருந்தனர். ராஜாவே! கிருஷ்ணனையே ஆதாரமாகவுடைய அம்மஹாத்மாக்களனைவரும் கடல்சூழ்ந்தபூமியை முப்பத்தாறுவருஷம் ஆண்டு, அதன்பின் ஆறுமாஸங்களுக்குப்பிறகு பரிக்ஷித்துக்கு ராஜ்யபட்டாபிஷேகஞ்செய்து, தெய்வகதியையடைந்

தனர். இவ்வாறு யுதிஷ்டிராருக்கு நூற்றெட்டுவருஷம் ஆயுளிருந்தது. சிறந்த மஹிமையுள்ள கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு மூன்றுமாதம் பெரியவர். மஹாபலசாலியான பலராமர் கிருஷ்ணனுக்கு மூன்றுமாதம் பெரியவர். அப்போது மிகுந்த பராக்ரமசாலியான பாண்டு சதச்ருங்கமலையில் காசியபரென்னும் புரோஹிதரோடும் தன்தேவிமார்களோடுங்கூட அந்த ஐந்துபுத்ரர்களையும் பார்த்துக்கொண்டு மிகவும் மகிழ்வுற்றிருந்தான். வனங்களில் புஷ்பங்கள் மிகுதியாகவுள்ள சித்திரை வைகாசிமாதங்களாகிய வஸந்தகாலத்தின் ஆரம்பத்தில், புத்திசாலியாகிய அர்ச்சுனனுக்குப் பதினைன்காவது பிராயம்நிரம்பி அவன்பிறந்த உத்தரபல்குனிநக்ஷத்திரம் வந்ததினத்தில் ஸ்வஸ்திவாசனம் நடத்துவதிலும் பிராமணபோஜனம் செய்விப்பதிலும் பிரவிர்த்தித்திருந்த குந்தியானவள், பாண்டுமஹாராஜாவைக் காப்பாற்றுகிற விஷயத்தில் மறந்திருந்தாள்; புரோகிதருக்கும் மற்றப்பிராம்மணர்களுக்கும் போஜனம் பரிமாறிக்கொண்டிருந்தாள். பிறகு, தன்கைவன்மையைச் சகாயமாகவுடையபாண்டு, வனங்கள் செவ்வையாகப் புஷ்பித்து எல்லாப்பிராணிகளையும் மயங்கச்செய்வதாகிய சித்திரை வைகாசிமாதங்களாகிய வஸந்தகாலத்தில் பெருங்காடடர்ந்த அழகான சதச்ருங்கமலையில் பார்ப்பதற்கினிய தன்புத்ரர்களான அந்தஐவரையும் பார்த்துக்கொண்டே பாரியையுடன் வனத்தில் திரிந்தான். பலாசமரங்களும், மாமரங்களும், சண்பகமரங்களும், பாரிஜாதமரங்களும், பழங்களும் புஷ்பங்களும் நிரம்பின இன்னும் அனேக விருக்ஷங்களும், பற்பல தடாகங்களும், தாமரைஓடைகளும் விளங்கப்பெற்றதான அவ்வனத்தைப் பார்த்த பாண்டுவின் மனத்தில் காமமுண்டாயிற்று. மகிழ்வுற்றமனத்துடன் தேவதையைப்போல் அந்த வனத்தில் ஸஞ்சரிக்கும் பாண்டுவை மாத்ரி அழகான ஆடையுடுத்துக்கொண்டு தனித்துப் பின்சென்றாள். இளமைப்பருவத்திலிருப்பவளும் மெல்லிய ஆடையைத் தரித்தவளுமாகிய அவளைக் கண்டபோது காட்டில் அக்கி உண்டாவதுபோல், அவனுக்கு விருப்பமுண்டாயிற்று. தாமரைப்புஷ்பம்போன்றகண்களையுடையமாத்ரியை யாருமில்லாத இடத்தில் தனித்துப் பார்த்ததனால் மன்மதனால் ஜயிக்கப்பட்ட அரசன் அந்தவிருப்பத்தை அடக்கமுடியாமற்போனான். பிறகு, பதினெட்டாவதுவருஷத்தில், வஸந்தகாலத்தில், அலங்காரஞ்செய்துகொண்டவளும் புகழ்பெற்றவளுமாகிய மாத்ரியை (ப்பார்த்ததனால்) பாண்டு புத்திமாறினவனாக அவளையழைத்தான். பிறகு,பாண்டு மஹாராஜா துடித்துக்கொண்டிருக்கும் மாத்ரிதேவியினால் தன்னால்

கூடியவரையில் தடுக்கப்பட்டும் தனித்திருந்த அவளைப் பலாத்காரமா கப்பிடித்துக்கொண்டான். காமத்தினால் புத்திமாறின அந்தப்பாண்டு அந்தச்சாபத்தை நினைக்கவில்லை. ஜனமேஜயரே! அவன் விதியினால் ஏவப்பட்டு, சாபத்தினாலுண்டான பயத்தைவிட்டுத் தன் உயிர்முடிவ தற்காக மன்மதனுக்கு வசப்பட்டவனாகி மாத்ரியினிடம் பலாத்கார மாகப் புணர்ச்சிசெய்தான். காமஸுகத்தில் விருப்பம்வைத்த அந்த ராஜாவின் அறிவானது, வஸந்தகாலரூபமாகப் பிரத்தியக்ஷமாய் வந்த காலனாலேயே மயக்கப்பட்டு ஐம்புலன்களையும் கலக்கி மனத்தோடு கூடஅழிந்துபோயிற்று. கௌரவர்களைச் சிறப்பிக்கிறவனும் உயர்ந்த தர்மாத்துமாவுமாகிய அந்தப்பாண்டு அந்தமனைவியோடு சேர்ந்த வுடன், காலதர்மமென்று சொல்லப்பட்ட மரணத்தோடு சேர்ந்தான். மாத்ரி, உடனே உயிர்போன ராஜாவைக் கட்டிக்கொண்டு துக்கத்தி னால் பலமுறை உரக்கக்கூச்சலிட்டாள். பிறகு,குந்தியும் அவள்புத்ரர் களும் மாத்ரியின் புத்ரர்களுமாகிய பாண்டவர்களும் சேர்ந்து, ராஜா அப்படிப்பட்டநிலைமையடைந்திருந்த இடத்திற்கு வந்தனர். ஜனமே ஜயராஜாவே! அப்போது மாத்ரி அழுதுகொண்டு குந்தியைநோக்கி, "நீமட்டும் தனித்து இங்கேவா; சிறுவர்கள் அங்கேயே நிற்கட்டும்" என்று சொன்னாள். அவளுடைய அந்தச்சொல்லைக்கேட்டு, குந்தி பிள்ளைகளை அங்கேயே நிறுத்தி, "நான் கெட்டேன்" என்று கதறிக் கொண்டு விரைவாக ஓடிவந்தாள். மாத்ரியும் பாண்டுவும் தரையில் படுத்திருப்பதைக்கண்டு வ்யஸனத்தினால் பரிதபித்த அங்கத்தோடு கூடிய குந்தி மிகுந்ததுயரத்தினால் புலம்பினாள். "எப்போதும் புத் திமானாகிய இந்தவீரர் என்னால் எந்தக்காலமும் காப்பாற்றப்பட்டி ருந்தும் மானின்சாபத்தை அறிந்திருந்தும் உன்னை எவ்வாறு அதிக் கிரமஞ்செய்தார். மாத்ரியே! ராஜாவை நீயுந்தானே காப்பாற்றி யிருக்கவேண்டும். இப்படிப்பட்ட மனிதரில்லாதஇடத்தில் ராஜாவை எவ்வாறு விருப்புறச்செய்தாய்? எப்போதும் அந்தச் சாபத்தையே நினைத்துத் துன்பத்தோடிருந்தவருக்குத் தனிமையிலிருந்த உன்னைப் பார்த்தபிறகு எப்படி மகிழ்ச்சியுண்டாயிற்று? பாஹ்லீகன்பெண் ணே! நீ பாக்கியமுள்ளவள்; என்னிலும் சிறந்த பாக்யவதி; சந் தோஷமுற்ற மஹாராஜாவின்முகத்தை நீயல்லவோ கண்டாய்" என் றாள். மாத்ரி, "தேவியே! நான் அழுதுகொண்டு பலமுறை தடுத் தும் அவர் விதியை ஸத்யமாகச்செய்யவிரும்பித் தம்மனத்தை அடக் காமற்போனார்" என்றுசொன்னாள். அவளுடைய அந்தச்சொல்லைக் கேட்டுத் துக்கமென்னும் அக்கினியினால் தகிக்கப்பட்ட குந்தி வேர்

அறுக்கப்பட்ட மரம்போல் உடனே பூமியில்விழுந்தாள். மூர்ச்சையோடு பூமியில்விழுந்து செயலற்ற குந்தி அசையவேயில்லை. ஜனமேஜயரே! அந்த நிமிஷத்துக்குள் மாத்ரி பாண்டுவுக்கு ஸ்நானஞ்செய்வித்துப் புதுவஸ்திரம்போர்த்து அலங்காரங்கள்செய்து நல்லபடுக்கையில் படுக்கவைத்தபிறகு, மூர்ச்சையினால் பிரஜ்ஞை தப்பியிருந்த குந்தியை எழுப்பி, "அம்மா! வா" என்றழைத்து அவளுக்குக் காண்பித்தாள். குந்தி, பாதங்களில் விழுந்து மறுபடி எழுந்து செஞ்சந்தனம்பூசின உடம்போடும் குஸும்பாச்சாய வஸ்திரத்தோடும் சிரித்த முகத்தோடும் பேசுகிறவன்போலிருந்த பாண்டுமஹாராஜாவைக் கட்டிக்கொண்டு பிரமைகொண்டு ஐம்பொறிகளும் கலங்கிப் புலம்பினாள். அந்த மாத்ரியும் ராஜாவைக்கட்டிக்கொண்டு புலம்பினாள். அவ்வாறு சயனித்துக்கொண்டிருந்த ராஜாவினிடம் புத்ரர்களும் ரிஷிகளும் *சாரணர்களுமாகிய எல்லோரும்சேர்ந்துவந்து வ்யஸனத்தினால் கண்ணீர்விட்டார்கள். ஸூர்யன் அஸ்தமனமானதுபோலவும், கடல்வற்றினதுபோலவுமிருக்கும் புருஷச்ரேஷ்டனை பாண்டுவைக்கண்டு மஹரிஷிகள் துக்கித்தனர். ரிஷிகளும் பாண்டவர்களும் ஓரேதுக்கமுள்ளவர்களாயிருந்தனர். சிறந்தஸ்திரீகளாகிய அந்தக்குந்தியும் மாத்ரியுமாகிய இருவரும் பிராமணர்களால் தேற்றப்பட்டவர்களாகப் புலம்பினர்.

குந்தி, "ஆ! ராஜாவே! எங்களை யாரிடம்விட்டுவிட்டுத் தேவலோகத்துக்குச் செல்லுகிறீர். ஆ! ராஜாவே! நான் புத்தியில்லாமலிருக்கையில் ஏன் நீர் மாத்ரியுடன்சேர்ந்து மரணமடைந்தீர்? ராஜாவே! என்பாக்கியக்குறைவினாலேதான் நீர் மரணமடைந்தீர். ராஜாவே! யுதிஷ்டிரன், பீமஸேனன், அர்ச்சுனன், நகுல ஸஹதேவரிருவர் ஆகிய உம்முடைய அன்புள்ள புதல்வர்களை யாரிடம்விட்டுப் பிரயாணம்போயிருக்கிறீர்? பாரதரே! உம்மைப்பார்த்துத் தேவர்களெல்லாரும் மகிழ்கின்றனரென்பது நிச்சயம். ஏனெனில், நீர் பிராமணர்களின் கூட்டத்தில் கடுந்தவஞ் செய்திருக்கிறீரல்லவா? ராஜாவே! ஸுகமான ஸ்வர்க்கத்துக்கு எங்களிருவருடனும் சேர்ந்துபோகக்கடவீர். அஜமீடவம்சத்தவரே! கௌரவர்களிற்சிறந்தவரே! புண்ணியகர்மங்களைச்செய்த அஜமீடவம்சத்தார் அடைந்த நல்லகதிக்கு எங்களிருவரோடுங்கூடவே நீர்போவதாக நான் வனத்திற்குக்கூட வரும்போது பிரதிஜ்ஞைசெய்திருக்கிறீரல்லவா? ராஜாவே! அதனால், எங்களுடன் கூடத்தான் நீர் போகவேண்டும். ராஜாவே! சற்றுநேரம்

---

* ஒருவகை தேவஜாதியார்.

பொறுத்திரும். *நானும் உமது முகத்தைக்காண்பேன்" என்றாள். அவ்விருவரும் அதிகமாகப்புலம்பி வேடர்களால் ஆண்மான் அடிக்கப்பட்டபோது காட்டிலுள்ள பெண்மான்கள் விழுவதுபோல், பிரஜ்ஞையைத்தப்பிப் பூமியில்விழுந்தனர். வேதங்களில் கரைகண்டிருந்த யுதிஷ்டிரர்முதலிய அந்தப்பாண்டவர்களனைவரும் பிதாவினடியில் வந்து ஞாபகம்தப்பித் தரையில்விழுந்தனர். பாண்டவர்கள் 'பாண்டுவின் பாதங்களைக் கட்டிக்கொண்டு, "ஆ! பிதாவே! கெட்டோம்" என்று அழுதனர். "ஆ! நாதனில்லாமற்போனோம்! மஹாப்ராஜ்ஞரே! சிறுவர்களானநாங்கள் நீங்களில்லாமல் எப்படிப்பிழைப்போம்? மஹாராஜரே! லோகநாதனுடைய புத்ரர்களாயிருந்தும் ஒருநொடியில் நாதனில்லாதவர்களானோம். ஆ! ஆ! உலகம் என்னவிசித்ரம்; பாரதரே! ராஜபுத்ரகளாயிருந்து எங்களைப்போல் பாக்யஹீனர்களானவர்கள் யாருமில்லை. அரசர்க்கரசரே! நீங்கள்இறந்ததனாலும் நாங்கள் ராஜ்யத்திலில்லாமையாலும் பாண்டவர்களாகிய நாங்களெல்லாரும் மிக்கவ்யஸனத்தை அடைந்திருக்கிறோம். ராஜாவே! நாங்களென்ன செய்வோம்? செய்யத்தக்கதை அனுக்ரஹித்து எங்களைக் கட்டளையிடக்கடவீர்" என்று யுதிஷ்டிரர் புலம்பினார். பீமஸேனனும், "அரசர்க்கரசரே! ராஜ்யத்தையும் போகங்களையும்விட்டுச் சதச்ருங்கமலையில்வாஸஞ்செய்துகொண்டு பெருந்தவஞ்செய்து நீர் எங்களையடைந்தீர். கௌரவத்தைவிட்டுக் காட்டுக்குச்சென்று தாமே உணவைத் தேடிக் காட்டிலுள்ள இலை வேர் காய்களைக்கொண்டு எங்களைக் காப்பாற்றினீர். அறம்பொருள் இன்பமென்னும் த்ரிவர்க்க புருஷார்த்தங்களைவிரும்புகிற பிதாக்கள் மஹாத்மாக்களான புத்ரர்களைப்பெற்று என்னபலனையடைய விரும்புகின்றனரோ அதை அடைவதற்கு இதுதான் காலம்வந்திருக்கிறது. பாரதராஜரே! அந்தப்பலனை அனுபவிக்காமல் நீர்போகத்தகாது" என்று பிதாவைப்பார்த்துச்சொல்லி அழுதான். அர்ச்சுனனும், "சௌக்யத்தைச்செய்பவரே! 'அழிந்துபோனபரதவம்சம் பாண்டுவினால் மறுபடி உத்தாரணம்செய்யப்பட்டது. அந்தப்பாண்டு வனம்போனபோது ராஜாஇல்லாமல் ராஜ்யம் அழிந்துபோயிற்று. மறுபடியும் பாண்டுபுத்ரர்கள்ஐவராலும் க்ஷத்ரியசக்திவெளிப்படுத்தப்பட்டது' என்றசொல்லைக்கேட்டு ஸந்தோஷித்த பிறகு நீர் போகத்தகும்" என்று பிதாவைப்பார்த்துச் சொல்லி அழுதான். நகுல ஸஹதேவர்களும், "பரதச்ரேஷ்டரே! கடினமான தவஞ்செய்து எங்களையடைந்தபிறகுஎல்லாலாபங்களிலும் பெரிதான

---

* அனுமரணம்செய்வேன்என்பது கருத்து.

புத்ரலாபத்தின் பயனுகச் சுஸ்ரூஷைமுதலியவற்றுள் ஒன்றையும் பெற்றுக்கொள்ளாமல் முன்காலத்தில் தசரதர் எப்படியோ அப்படியே நீரும்போனீர்" என்றுசொல்லித் தாங்கமாட்டாமல்அழுதனர். குந்தி, "ஓ! மாத்ரியே! நான் முதலாவது தர்மபத்நி; தர்மத்தின்பலன் முதலில் என்னுடையதுதான். அவசியம் நேரிடத்தக்கவிஷயத்தில் நீ என்னைத்தடுக்காதே. இறந்துபோனபர்த்தாவை நான் இப்போது பின்செல்லுகிறேன். நீ இவரைவிட்டு எழுந்திரு. இந்தப்பிள்ளைகளைக் காப்பாற்று. பயன்பெற்றபுத்ரர்களையடைந்தும் வீரபத்நியாவதையே நான் விரும்புகிறேன்" என்றுசொன்னுள். மத்ரராஜன்பெண்ணுனவள் குந்தியைநோக்கி, "என்னைமோசம்செய்த பர்த்தாவை நானேதான் பின்செல்வேன். காமபோகத்திலும் நான் திருப்தியடையாதவளாயிருக்கிறேன். வயதில்மூத்தவளாகியநீ எனக்கு அனுமதிகொடுக்கவேண்டும். இந்தப்பரதச்ரேஷ்டர் என்னிடம் ஆசைவைத்துஎன்னைச்சேர்ந்து இறந்தார். அந்தவிருப்பம் அவர் யமன்வீட்டிலிருக்கும்போது கெடும்படி நான்செய்யலாமா? ராஜரிஷிகளிற்சிறந்த இந்த ராஜா என்னிமித்தமாகத்தானே ஸ்வர்க்கம்சென்றூர். அவருடைய புத்தி அப்படிப்பட்டதல்லவே! எனக்கு அவரைப்போன்ற பந்துக்களுமில்லை;பர்த்தாவைவிட்டுப்பிரிந்து உயிரைவைத்துக்கொள்ளவும் என்னுல்முடியாது. ஆதலால், யமன்வீட்டுக்குச்செல்லும் அந்தக் கணவர்பின்னேடு யானும்போவேன். மேலும், நான் என்பிள்ளைகளிடத்தில் நடப்பதுபோல் உன்பிள்ளைகளிடத்தில் ஒருபோதும் நடக்கமாட்டேன். அவ்வாறு வித்தியாஸமாக நடக்கின்ற எனக்குப் பெரும்பாவம்வரும். ஆதலால், தேவியே! நீ உன்புத்திரர்களிடமிருப்பதுபோல் என்புத்திரர்களிடமும் இருக்கவேண்டும். யமனிடம்போகின்றபதியை நான் பின்தொடரப்போகிறேன். என்னைநேசித்துத் தான் இவ்வரசர் உயிரிழந்தார். ராஜாவின் சரீரத்தோடுகூட இந்த என்சரீரமும் செம்மையாகமறைக்கப்பட்டுத் தகனஞ்செய்யத்தக்கது. அம்மா! இந்தஎன்விருப்பத்தைச் செய்யக்கடவாய். என்னுல்கேட்டுக்கொள்ளப்பட்ட நீ குழந்தைகள்விஷயத்தில் தவருமலேயிருப்பாய். அதனுல், உனக்கு நான் ஹிதம்சொல்லவேண்டியது ஒன்றும் எனக்குத்தெரியவில்லை" என்றுசொன்னுள். சிறந்த தபஸுள்ளரிஷிகள் தவருத பராக்ரமமுள்ள அந்தப்பாண்டவர்களைச் சமாதானம் செய்தபின், குந்தியையும் மாத்ரியையும் சமாதானம்செய்து, பின்வருமாறு சொல்லலானுர்கள்.

"பாக்யசாலிகளே! நீங்கள் பாலபுத்திரர்களையுடையவர்கள்; எவ்

வகையிலும் மரணமடையத்தகாது. வீரர்களானபாண்டவர்களையும் குரு ராஜ்யத்திற்கு அழைத்துக்கொண்டுபோவோம். த்ருதராஷ்டிர னும் தர்மமல்லாத திரவியலாபங்களில் ஆசையுள்ளவன். அவன் பாண்டவர்கள்விஷயத்தில் கிரமப்படிநடவாமலுமிருப்பன். குந்திக்கு யாதவர்களும் குந்திபோஜனும்நாதர்களாக இருக்கின்றனர். மாத்ரிக்கும் பலவான்களிற் சிறந்த மஹாரதனான சல்லியன் ஸஹோதரனாயிருக்கிறான். பர்த்தாவுடன்கூடமரணமடைவது பலனுள்ளதுதான். அதில் ஸந்தேகமில்லை. உங்களுக்குமட்டும் இது செய்யக்கூடாததென்று பிராமணஸ்ரேஷ்டர்கள் சொல்லுகின்றனர். கற்புள்ளபெண் கணவன் இறந்தபின் பிரம்மசரியமென்னும் விரதத்தை யெடுத்துக்கொண்டு மனம் வாக்குக்காயங்களையடக்குவதினாலும் அனுஷ்டான நியமங்களினாலும்பரிசுத்தமடைந்து நல்லவளாகபர்த்தாவையே நினைத்துக்கொண்டிருந்து தன்பர்த்தாவைக் கரையேற்றுவாள். அப்படிப்பட்டவளால்அவளுடைய ஆத்மாவும் கணவனும் புத்ரனும் கரையேற்றப்படுவார்கள். ஆதலால், உங்களிருவருக்கும் இந்த உயிர்வாழ்க்கையே நன்மையென்று நாங்கள் நினைக்கிறோம்'' என்றுகூறினர். அதற்குக் குந்தி, "பிராமணஸமுதாயத்தின் ஆஜ்ஞையைப் பாண்டுவின் ஆஜ்ஞையைப்போலவே சிரஸில் வைத்துகொண்டேன். அதை அவ்வாறே நிறைவேற்றவும்போகிறேன். மஹான்கள்சொல்வதெதுவோ அதையே என்பர்த்தாவுக்கும் புத்ரர்களுக்கும் எனக்கும் மிகுந்த நன்மையென்று உறுதியாகநினைக்கிறேன்'' என்றுசொன்னாள். மாத்ரி, " புத்திரர்களுடைய யோகக்ஷேமத்தை நடத்துவதில் குந்தி ஸாமர்த்தியமுள்ளவள். அருந்ததியும் புத்தியில் இவளுக்கீடாகஇருக்கமாட்டாள். யாதவர்களும் குந்திபோஜனும் குந்திக்கு ஆதரவாக இருக்கின்றனர். குந்தியே! உன்னைப்போல் புத்ரர்களைக்காப்பதில் நான் திறமையுள்ளவளல்லேன். அப்படிப்பட்டநான் பர்த்தாவுடன் செல்வேன். காமஸுகத்திலும் நான் திருப்தியாகவில்லை. மூத்ததேவியே! பர்த்தாவின் லோகத்திற்குப்போக எனக்கு விடைகொடுக்க வேண்டும். தர்மந்தெரிந்தவரும் நன்றிமறவாதவரும் ஸத்யந்தவறாதவரும் சிறந்தபுத்தியுள்ளவருமாகிய பர்த்தாவின்பாதங்களுக்குப் பணிவிடைசெய்யப்போகிறேன். பூஜிக்கத்தக்க நீ அப்படியேசெய்ய இப்போதே எனக்கு அனுமதிகொடுக்கவேண்டும்'' என்றுசொன்னாள். ஜனமேஜயராஜாவே! சிறந்தவளான மத்ரராஜன்பெண் இவ்வாறு சொல்லித் தலையினால்வணங்கிக் குந்தியிடம் அப்போதே நகுலஸஹதேவர்களை ஒப்புவித்தாள். அந்தமாத்ரி மஹரிஷிகளை வந்தனஞ்

செய்து குந்தியின்புத்ரர்களும் தன்புத்ரர்களுமாகிய பாண்டவர்களை அணைத்துக்கொண்டு பலமுறைஉச்சிமோந்து யுதிஷ்டிரரைக் கையில் பிடித்துக்கொண்டு, 'உங்களுக்குக் குந்தி தாயார்; நான் உபமாதா; பிதா இறந்துபோனார். நான்குபெயருக்கும் ஜ்யேஷ்டனாகிய யுதிஷ்டிரன் தர்மப்படி எப்போதும் உங்களுக்குப் பிதா. பெரியோர்முதலியவர்களைப்பணிவதில் ஊக்கமுற்றவர்களும் ஸத்தியத்தையும் தர்மத்தையும் கைவிடாதவர்களுமாகிய யுதிஷ்டிரனைப்போன்றவர்கள் அழியார்கள்; தோல்வியடையார்கள். ஆதலால், நீங்களனைவரும் சோம்பலைவிட்டுப்பிதாவினிடம் நடக்கவேண்டியநடையை யுதிஷ்டிரனிடம்செய்யுங்கள்" என்றாள். ரிஷிகளுக்கும் குந்திக்கும் பலமுறை நமஸ்காரம்செய்து, துக்கத்தினால் சோர்வுற்றமாத்ரி அப்போது குந்தியைநோக்கி மறுபடியும் சொல்லத்தொடங்கினாள்: "ஸ்வர்க்கத்தைக்காண விருப்பமுள்ளநான் இந்தரிஷிகள்முன்னிலையில் சொன்ன வாக்கு இப்போது பொய்யாகப்போகக்கூடாது. யதுபுத்ரியே! நீ பாக்யவதி. உனக்குநிகரான ஸ்திரீ இல்லை. குந்தியே! அளவற்றசக்தியுள்ளவர்களும் புகழ்பெற்றவர்களுமாகிய ஐந்துபுத்ரர்களுடைய பலத்தையும் பராக்ரமத்தையும் தவவன்மையையும்மஹிமையையும் நீ பார்க்கப்போகிறாயல்லவா? தேவியே! நீ நல்லொழுக்கமுள்ளவள். நான் நமஸ்கரிப்பதற்கும் பூஜிப்பதற்கும் நீ உரியவள்; எல்லாவகையாலும் பெரியவள்; மிகச்சிறந்தவள். உன்னுடைய நற்குணங்களாலேயே நீ அலங்கரிக்கப்பட்டவள். யாதவகுமாரியே! நீ விடைகொடுப்பதை விரும்புகிறேன். புண்யத்தையும் ஸ்வர்க்கத்தையும் புகழையும் நீ காரணமாக நான் எவ்வாறு அடைவேனோஅவ்வாறு நீ இப்போதுசெய்யக்கடவாய்; சிந்திக்காதே" என்றாள். புகழ்பெற்றகுந்தி கண்ணீரினால் தெளிவில்லாதவாக்குடன், "பாக்யவதியே! அனுமதிகொடுத்திருக்கிறேன். விசாலமானகண்களையுடையவளே! சிறந்தபெண்ணே! இப்போதே ஸ்வர்க்கத்தில் உனக்குப் பர்த்தாவுடன்கூடச் சேர்க்கை சீக்கிரமாக உண்டாகக்கடவது. ஸ்வர்க்கலோகத்தில் நீடூழிகாலம் சேர்ந்து ரமிக்கக்கடவாய்" என்றுசொன்னாள்.

பிறகு, பிரேதகாரியங்களில் தேர்ந்தவரான கசியபரென்னும் புரோஹிதர் ஸ்நானஞ்செய்து ரிஷிகளைக்கொண்டு தங்கத்துண்டுகளையும் நெய்யையும் எள்ளையும் தயிரையும் அரிசியையும் தண்ணீர்க்குடங்களையும் கோடாலியையும் வருவித்து அசுவமேதாக்கினியைக் கொண்டுவந்து இறந்துபோன பாண்டுவின் அந்த உத்தரக்கிரியையைக் கிரமப்படி பூர்ணமாகச் செய்வித்தார். பாண்டுபுத்திரரான

யுதிஷ்டிரர், புரோகிதர்சொன்னபடி அந்த அக்கினியினால் பாண்டுவைத் தஹனஞ்செய்தார். கிரியைகளைச் செய்தபின் யுதிஷ்டிரர் சோகத்தினால் தபிக்கப்பட்டு அழுதுகொண்டு பூமியில்விழுந்தார். தர்மபத்நியும் புகழ்பெற்றவளும் ராஜகுமாரியுமாகிய மாத்ரி, ரிஷிகளையும் புத்ரர்களையும் குந்தியையும் விட்டுவிட்டுச் சிதையின் அக்கினியிலிருக்கும் புருஷச்ரேஷ்டனான பர்த்தாவை நமஸ்காரஞ்செய்து உடனே தானும் சிதையிலேறினாள். குற்றமற்றவரான தர்மராஜர் ஸஹோதரர்களுடன்கூடப் புதியவஸ்திரம் தரித்துக்கொண்டு புரோஹிதர்சொல்லிற் கட்டுப்பட்டு அவ்விடத்தில் ஜலதர்ப்பணஞ்செய்தார். தகுதியுள்ள அந்தப்பாண்டுவின் உத்தரக்கிரியைகளைச் சதச்ருங்கமலையில் வஸிக்கும் தபஸுள்ள சாரணர்கள் ரிஷிகளுடன்கூட முறைப்படி செய்தனர்.

---

## நூற்றுமுப்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(ரிஷிகள், பாண்டவர்களை அஸ்தினாபுரத்துக்கு அழைத்துவந்து, பாண்டுவின் ஸமாசாரத்தைச்சொல்லி, பீஷ்மரிடம் அவர்களை ஒப்பித்துத் திரும்பிச்சென்றது.)

மந்திரங்களையறிந்தவர்களும் தேவர்களுக்குச் சரியானவர்களுமான மகரிஷிகளனைவரும் பாண்டு முடிவுபெற்றதைப் பார்த்து, பிறகு ஒருவரோடொருவர் ஆலோசனைசெய்தனர். "பெரும்புகழுள்ளவனும் மஹாத்மாவுமாகிய அந்தப்பாண்டுமஹாராஜன் ராஜாதிகாரத்தையும் தேசத்தையும்விட்டு இந்தஇடத்தில் தவஞ்செய்து தவசிகளையே சரணமாக அடைந்திருந்தான். அந்தராஜாவாகிய பாண்டு, பிறந்ததுமாத்திரமாய் (விவாஹம் அபிஷேகம் எதுவும் செய்விக்கப்படாமல்) இருக்கிறபுத்திரர்களையும்பத்தினியையும் இங்கேஉங்களிடம் அடைக்கலமாக ஒப்பித்து இங்கிருந்தே ஸ்வர்க்கம்போனான். அந்த மஹாத்மாவின் இந்தப்புத்திரர்களையும் *தேகத்தையும் பத்னியையும் அவர்கள் தேசத்திற்கு அழைத்துக்கொண்டுபோவோம். இதைத் தர்மமாக நாம்நினைக்கிறோம்" என்றுசொல்லி, தேவர்களைப்போன்றவர்களும் உயர்ந்த மனமுள்ளவர்களும் ஸித்திபெற்றவர்களுமாகிய அந்த

---

* தகனஞ்செய்தும் கலையாத எலும்புக்கோவை.

மஹரிஷிகள், ஒருவரை யொருவர் அழைத்துக்கொண்டு, பாண்டவர்களை முன்னிட்டுக்கொண்டு அஸ்தினாகரம்சென்றுபீஷ்மரிடமும் த்ருதராஷ்டிரனிடமும் பாண்டவர்களை ஒப்பிப்பதற்கு நிச்சயம்செய்தனர். அந்தநிமிஷத்திலேயே அந்தரிஷிகளனைவரும் பாண்டுவின் பத்னியாகிய குந்தியையும் புத்ரர்களையும் பாண்டுவும் மாத்ரியுமாகிய இருவரின் அந்தச் சரீரங்களையும் எடுத்துக்கொண்டு புறப்பட்டனர். முன்னர்ப்போதும் ஸௌக்கியமுள்ளவளாயிருந்து அப்போது நீண்டவழியை நடந்தகுந்தி புத்திரர்களிடமுள்ள அன்பினால் அந்த வழியைக் குறுகினதாக நினைத்தாள். புகழுள்ள குந்தி ஸ்வல்பகாலத்தில் குருஜாங்கலமென்றதேசத்தையடைந்து நகரத்தின்முன்கோட்டைவாயிலையணுகினாள். ரிஷிகள் வாயில்காப்பவனிடம், 'ராஜாவுக்குத் தெரிவி' என்றுசொன்னார்கள். அப்போது வாயில்காப்பவர்கள் ஒருநொடியில் ஸபைக்குச்சென்று அனேகமாயிரம் சாரணர்களும் ரிஷிகளும் வந்திருப்பதைத் தெரிவித்தனர்.

அதைக்கேட்டு அஸ்தினாபுரத்திலிருக்கும் மனிதர்களுக்கு ஆச்சரியமுண்டாயிற்று. ஸூர்யன் உதயமாகி ஒரு முகூர்த்தமானபின் அஸ்தினாபுரத்திலிருப்பவரனைவரும் ரிஷிகளைப்பார்ப்பதற்குக் குழந்தைகளோடும் பத்னிகளோடும்கூட வெளியிற்புறப்பட்டனர். க்ஷத்ரியர்களும்க்ஷத்திரியஸ்திரீகளும் பிராமணர்களும்பிராமணஸ்திரீகளும் கூட்டங் கூட்டங்களாக அனேக வாகனங்களிலேறிக்கொண்டு புறப்பட்டனர். அவ்வாறே வைச்யசூத்ரர்களின் கூட்டமும் மிகுதியாக இருந்தது. ஒருவனும் * பொறாமைப்படவில்லை. எல்லாரும் தர்மசிந்தையோடிருந்தனர். அவ்வாறே, சந்தனுபுத்ரரான பீஷ்மரும், பாஹ்லீகனை, ஸோமதத்தனும், ராஜரிஷியான த்ருதராஷ்டிரனும், க்ஷத்தாவென்ற பெயருள்ள விதுரரும், ஸத்யவதீதேவியும், புகழ்பெற்ற அம்பாலிகையும், ராஜஸ்திரீகளால் சூழப்பட்ட காந்தாரியும், தாங்களாகவே புறப்பட்டனர். துரியோதனன்முதலான த்ருதராஷ்டிரபுத்திரர்கள் நூற்றுவரும் விசித்ரங்களான ஆபரணங்களையணிந்துகொண்டு புறப்பட்டனர். கௌரவர்களனைவரும் புரோகிதர்களுடன் கூட அந்தரிஷிக்கூட்டங்களைக்கண்டு தலைகளால்வணங்கி அவர்கள் ஸமீபத்தில் உட்கார்ந்தனர். பட்டணத்திலும் தேசத்திலுமுள்ள ஜனங்களனைவரும் அப்படியே தலைவணங்கி வந்தனஞ்செய்து அவர்களுக்குப்பின் பூமியில் உட்கார்ந்தனர். ராஜாவே! பீஷ்மர் அந்த ஜனக்கூட்டமுழுதும் சப்தமில்லாமலிருந்ததைத் தெரிந்துகொண்டு

* ரிஷிகள் அழைத்துவந்ததனால் பொறாமை இல்லை.

அந்த ரிஷிகளுக்கு அர்க்கிய பாத்யங்களைக்கொடுத்துக் கிரமப்படி பூஜைசெய்து, ராஜ்யாதிபத்யத்தையும் தேசத்தையும் மஹரிஷிகளுக்கு அர்ப்பணம் செய்தார். பிறகு, அவர்களுள் மிகமுதிர்ந்தவரும் ஜடைகளையும் கிருஷ்ணாஜினத்தையும் தரித்தவருமாகிய ஒரு மஹரிஷி ப்ரத்யுத்தானஞ்செய்து மற்றரிஷிகளின் அபிப்ராயத்தை எடுத்துக்கொண்டு பின்வருமாறு சொல்லத்தொடங்கினார்.

"கௌரவ வம்சத்துப் புத்ரனாகிய பாண்டுவென்னும் பெயர் பெற்றஅரசன் காமஸுகங்களைவிட்டு நீங்கி இங்கிருந்து சதச்ருங்க மலைக்குச் சென்று ராஜஸுகங்களைத் துறந்து தபஸ்வியாகிவிட்டானல்லவா? அந்தத்தர்மாத்மா சிலகாலம் இலைகளையும் கிழங்குகளையும் கனிகளையும் புஜித்துக்கொண்டு பத்னிகளுடன்கூடச் சாஸ்திரப்பிரகாரம் ஓய்வில்லாமல் தவஞ்செய்தான். அவன் அந்தச்சதச்ருங்கமலையில் வாசஞ்செய்யும் சிறந்ததவமுள்ளமுனிவர்களைத் தன் ஒழுக்கத்தினாலும் செய்கைகளினாலும் தவத்தினாலும் சந்தோஷிக்கச்செய்தான். பத்னிகளுடன்கூட ஸ்வர்க்கலோகம்போகவிரும்பிக் கிளம்பின அந்தராஜாவைப் பிரம்மரிஷிகள்தடுத்து, 'ராஜாவே! ஸந்ததியில்லாதஉனக்குப் புண்ணியலோகங்களில்லை. ராஜச்ரேஷ்டனே! ஆதலால், பத்னிகளுடன்கூடத் தர்மன், வாயு, இந்திரன், அசுவினிதேவர்கள் ஆகிய இந்தத்தேவர்களை ஆராதனஞ்செய். அவர்கள் அனுக்கிரஹஞ்செய்து புத்திரர்களைக்கொடுப்பார்கள். பிதிர்க்கடனிலிருந்து விடுபட்டவனாவாய். உனக்கு அவ்வாறு புத்திரர்கள் உண்டாவார்களென்பதை நாங்கள், தவத்தினால்ஞானக்கண்ணைப் பெற்றிருத்தலால், காண்கிறோம்" என்று சொன்னார்கள். எங்கள்சொல்லைக்கேட்டு அப்போதே தேவர்களை ஆராதனஞ்செய்தான். பிரம்மசாரிவிரதத்திலிருந்த பாண்டுவுக்கு அதிர்ஷ்டம்காரணமாக நேரே தர்மதேவதையிடத்திலிருந்து யுதிஷ்டிரனென்னும் இந்தப்புத்திரன் சதச்ருங்கமலையில் பிறந்தான். அவ்வாறே, மஹாத்மாவான அந்தராஜாவுக்கு வாயுபகவான் பலவான்களிற் சிறந்தவனும் பெரும்பராக்ரமமுள்ளவனுமாகிய இந்தப் பீமனென்னும் புத்ரனைக் கொடுத்தான். இந்திரனால் ஸத்திய பராக்ரமனான இந்தப் புத்ரன் குந்திக்குப் பிறந்தான். சிறந்த வில்லாளியாகிய இவன் பிறந்ததும் இந்திரன் குந்தியை நோக்கி, "குந்தியே! என் அனுக்ரஹத்தினால் ஸ்திரமான பராக்கிரமமுள்ள இவன் பிறந்திருக்கிறான். ஜயிக்கமுடியாத தேவர்கள் முதலிய எதிரிகளையும் இவன் ஜயிக்கப்போகிறான். ஸந்தேகமில்லை" என்று சொன்னான். இவனுடைய கீர்த்தி சிறந்த வில்லாளிகளெல்லாரை

யுமமறைத்துவிடப்போகிறது. யுதிஷ்டிரன் இந்தஸஹோதரனுடைய பராக்கிரமத்தினுல் ராஜஸூயயாகத்தை நிறைவேற்றப்போகிருன். இவன் ஸமஸ்தமானமனிதர்களேயும் கந்தர்வர்களேயும் ராக்ஷஸர்களே யும் ஜயிக்கப்போகிருன். இவன் துர்யோதனன்முதலான கௌரவர் களேயும் ஜயிக்கப்போகிருன். தர்மதேவதையின்புத்திரனும் எப்போ தும் தர்மத்திலேயே ஊக்கமுள்ளவனுமாகிய யுதிஷ்டிரன் இந்த வீர னுடைய பராக்ரமத்தினுல் ராஜஸூயம்முதலான யாகங்களேச்செய் யப்போகிருன். சிறந்தவில்லாளிகளும் புருஷச்ரேஷ்டர்களும் புலிகள் போன்றசூரர்களுமாகிய இந்தமாத்ரீபுத்ரர்களிருவரும் அசுவினிதேவ ர்களால் உண்டானவர்கள். அவர்களும் இதோ இருக்கின்றனர். நகு லன் ஸஹதேவனென்றுபெயருள்ள அவ்விருவரும் அளவற்றசக்தி யுள்ளவர்கள். புகழ்பெற்றபாண்டு வனவாஸஞ்செய்துதவத்தைவிடாம லிருந்து தன்முன்னேர்களின் இந்தவம்சத்தை மறுபடியும் தலே யெடுக்கச்செய்தான். பாண்டுபுத்ரர்களுடையபிறப்பையும் வளர்ப்பை யும் வேதாத்யயனத்தையும் எப்போதும்பார்த்து மிகுந்தமகிழ்ச்சியை யடைவீர்கள். பாண்டு ஸாதுக்களின்ஒழுக்கத்திலிருந்து புத்ரலாபத் தையும் அடைந்தான்; இன்றைக்குப் பதினேழாவதுநாள் பித்ர்லோ கத்துக்கும் சேர்ந்தான். சிதையையடைந்து அக்கிமுகத்தில் ஹோ மஞ்செய்யப்பட்ட அந்தப் பாண்டுவைக்கண்டு மாத்ரி தன்னுயிரை வெறுத்துவிட்டு அக்கிப்ரவேசம்செய்தாள். அனுகமனம்செய்தஅவள் அவனேடுகூடவே பதிலோகத்தையடைந்தாள். அவளுக்கும் அந்தப் பாண்டுவுக்கும் இதற்குமேல் செய்யவேண்டியகாரியத்தை நீங்கள் செய்யலாம். உங்கள் வீடுவந்துசேர்ந்த குந்தியையும் புகழ்பெற்ற பாண்டவர்களேயும் கிரமப்படி அங்கீகரிக்கக்கடவீர்கள். இதுதான் சாச்வதமான தர்மம். இவையிரண்டும் அந்தமாத்ரி பாண்டு இருவ ருடைய *சரீரங்கள். இவர்களும் அவ்விருவர்களின் சிறந்தபுத்ரர்கள். இந்தவீரர்களேயும் இவருடையதாயாரையும் செய்கைகளினுல் காப் பாற்றக்கடவீர்கள். தஹனமுதலியபிரேதகாரியமானபின் மிகுந்த புகழ்பெற்றவனும் எல்லாத்தர்மங்களேயும் அறிந்தவனும் குருவம்சத் தைத்தாங்குகிறவனுமாகிய பாண்டு பித்ர்மேதமென்னப்பட்ட ஸ்ராத் தத்தையடையக்கடவன்" என்றார். கௌரவர்களனைவர்களேயும் பார் த்து இவ்வாறுசொன்னபின், அந்தக்கௌரவர்கள் பார்த்திருக்கும் போதே, ரிஷிகளும் சாரணர்களுமாகிய எல்லாரும் நொடியில்மறைந் தனர். ரிஷிகள் சாரணர்கள்ஆகிய இவர்களின்கூட்டம் இந்திரஜால த்திற்காணும் கந்தர்வநகரம்போல் தெரிந்தஇடத்திலேயே திரும்ப வும் மறைந்துபோனதைக்கண்டு திக்கவியப்புற்றனர்.

* எலும்புக்கூடு.

## நூற்றுமுப்பத்தாருவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டுவின் அஸ்திஸம்ஸ்காரமும் ப்ரேதக்ரியைகளும்.)

த்ருதராஷ்டிரன், "விதுரனே! ராஜஸிம்மமாகிய பாண்டுவுக்கும் மாத்ரிக்கும் பிரேதகாரியங்களெல்லாவற்றையும் ராஜாவுக்குத் தக்கபடி சிறப்பாகச் செய்விக்கக்கடவாய். பாண்டுவுக்காகவும் மாத்ரிக்காகவும் பசுக்களையும் பலவகை வஸ்திரங்களையும் இரத்தினங்களையும் தனங்களையும் கேட்பவர்களுக்கு வேண்டிய அளவு கொடு. செவ்வையாகமூடப்பட்ட அந்தமாத்ரியைக் காற்றும் சூரியனும்கூடக் காணுமலிருக்கும்படிசெய்து அவளுக்குக் குந்தி செய்யவேண்டிய மரியாதை எவ்வகையோ அதைச்செய்யவேண்டும். தேவர்களுக்கொப்பானவர்களும் வீரர்களுமான ஐந்துபுத்ரர்களையும்பெற்ற குற்றமற்ற பாண்டுமஹாராஜனைப்பற்றி நாம் வருத்தப்படவேண்டியதில்லை; சிலாகித்தல் வேண்டும்" என்றுசொன்னான். பாரதரே! விதுரர் த்ருதராஷ்டிரனுக்கு, 'அப்படியே' என்றுசொல்லி, பீஷ்மருடன்கூடி மிக ஶ்லாக்கியமான இடத்தில் பாண்டுவுக்கு ஸம்ஸ்காரங்களைச் செய்வித்தார். ராஜாவே! அப்போது புரோஹிதர்கள் நகரத்திலிருந்து நெய்மணம் முன்வீசுகின்ற ஜ்வலிக்கின்ற அக்நிகளை விரைவாகக்கொணர்ந்தனர். அதன்பின், அந்தக்காலத்திலுள்ள பலவகைப்பட்ட உயர்ந்தபுஷ்பங்களாலும் சந்தனம்முதலிய வாஸனைத்திரவியங்களாலும் பல்லக்கைஅலங்காரஞ்செய்து அதை வஸ்திரத்தினுல் முழுதும்மூடி, அப்படியே புஷ்பங்களாலும் விலையுயர்ந்த வஸ்திரங்களினுலும் சோபிக்கின்ற பல்லக்கில், பாண்டுவை மந்திரிகளும் உறவினர்களும் ஸ்நேகிதர்களும் ஏற்றினர். புருஷஸிம்மமான பாண்டுவை மாத்ரியுடன்கூடச் செவ்வையாகமறைத்துச் சிறந்த அலங்காரமுள்ளதும் மனிதரெடுப்பதுமாகிய அந்த உயர்ந்தவாஹனத்தினுல் எடுப்பித்தனர். அப்போது வெண்குடையினுலும் சாமரங்களாலும் எல்லா வாத்யசப்தங்களாலும் சிறப்பித்தனர். நூற்றுக்கணக்கான மனிதர்கள் மிகுதியான ரத்னங்களையெடுத்துக்கொண்டுவந்து அந்தப்பாண்டுவின் ஸம்ஸ்காரகாலத்தில் விரும்பினவர்களுக்குக் கொடுத்தனர். பிறகு, வெண்குடைகளையும் பெரியசாமரங்களையும் அழகிய வஸ்திரங்களையும் பாண்டுவுக்காகக் கொண்டுவந்தனர். வெள்ளைவஸ்திரம் தரித்துக்

கொண்ட புரோகிதர்களால் ஹோமம்பண்ணப்பட்டு ஜ்வலிக்கின்ற அக்நிகள் கந்தம் புஷ்பம்முதலிய அலங்காரங்களோடு பாண்டுவின் முன்னே சென்றன. பிராமணர்களும் க்ஷத்ரியர்களும் வைசியர்களும் சூத்ரர்களும் ஆயிரக்கணக்காக வ்யஸனத்தினால் கொதிப்படைந்து கண்ணீர்விட்டுக்கொண்டு ராஜாவைப் பின்சென்றனர். பாண்டவர்களனைவரும் பீஷ்மரும் விதுரரும் பாஹ்லீகனென ஸோமதத்தனும் பூரிஸ்ரவஸ் என்னுமரசனும் இன்னுமனேகரும், "இந்தராஜா, நம்மைப்பிரித்து நீண்ட துயரத்தில் அமிழ்த்தி நாதனில்லாதவர்களாகவும் செய்து எங்கே போகப்போகிறான்" என்று கதறிக்கொண்டும் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டும் பின்சென்றனர். ஸத்யவாதிகளான பீஷ்மர்முதலியவர்கள் கங்கைக்கரையிலுள்ள அழகான வனப்பிரதேசத்தில் புண்ணியமான ஸமபூமியில் அந்தப்பல்லக்கை வைக்கச் செய்தனர். பிறகு, புருஷஸிம்மமும் உயர்ந்தகாரியங்களைச் செய்பவனுமாகிய பாண்டுவின்சரீரத்திலும் அவன் பாரியையான மாத்ரியின்சரீரத்திலும் எல்லா வாஸனைகளையும்சேர்த்து நல்ல அகிற்சேறும் உயர்ந்த சந்தனக்குழம்பும் பூசிப் பொற்குடங்களினால் சுற்றிலும் ஜலம் கொட்டி, வெண்சந்தனத்தையும் காரகிலோடுகூடிய புன்னைரஸத்தையும் எங்கும் பூசினர். பிறகு, பலதேசங்களிலுண்டான வெளுப்புவஸ்திரங்களை அவனுக்குப் போர்த்தனர். உயர்ந்தசயனத்தில் படுப்பதற்குத்தகுதியுள்ள புருஷஸ்ரேஷ்டனை பாண்டுமஹாராஜன் வஸ்திரங்களினாற் போர்க்கப்பட்டபின் ஜீவித்திருப்பவன்போல விளங்கினான்.

ஸகலமான ரித்விக்குக்களும் புரோஹிதர்களும் அச்வமேதாக்நியைக்கொண்டு வேதோக்தவிதிகளைச்செய்து மந்திரங்களோடு ஸம்ஸ்காரஞ்செய்தனர். ரித்விக்குக்களின் அனுமதிப்படி பிரேதகாரியம் நடந்தபின் ராஜாவையும் மாத்ரியையும் நெய்பூசி அலங்காரங்களைச் செய்து புன்னை, பத்மகமென்னும் வாஸனைமரம், நல்லவாஸனையுள்ள சந்தனமரம், ஸாளமரம், தேவதாருமரம், குங்கிலியமரம், கொம்பரக்கு, செஞ்சந்தனமரம், அலரிச்செடி, வெட்டிவேர் இவைகளாலும் இன்னும் பலவகை வாஸனைக்கட்டைகளினாலும் சாஸ்திரப்பிரகாரம் தஹனஞ்செய்வித்தனர். அவர்களுடைய இரண்டு சரீரங்களையுங் கண்டு அம்பாலிகை, "ஹா! ஹா! புத்ரனே!" என்றுசொல்லி, மூர்ச்சையடைந்து உடனே பூமியில்விழுந்தாள். துக்கத்துடன்வீழ்ந்த அவளைக்கண்டு நகரத்திலும் தேசத்திலுமுள்ள ஜனங்கள் ராஜபக்தியினால் அன்புகூர்ந்து துயரத்தினால் தாபமுற்று அழுதனர். குந்தியின் அழுகைக்குரலினால் மனிதர்களுடன்கூடப் பசுபக்ஷிகள் முத

லிய திர்யக்ஜாதியிலுள்ள பிராணிகளெல்லாம் கதறின. அப்படியே சந்தனுபுத்ரராகிய பீஷ்மரும் சிறந்தஞானமுள்ள விதுரரும் கௌர வர்களனைவரும், மிகத்துயரமுற்றுக் கதறினர். பிறகு, பீஷ்மரும்விது ரரும் திருதராஷ்டிர மஹாராஜாவும் கௌரவ ஸ்திரீகளனைவரும் பாண்டவர்களுடன்கூடப் பாண்டுவுக்கு ஜலதர்ப்பணஞ் செய்தார்கள். பாண்டவர்களனைவரும் சந்தனுபுத்ரரான பீஷ்மரும் விதுரரும் ஞாதி களும் அழுதுகொண்டே ஜலதர்ப்பணஞ்செய்தனர். ராஜாவே! ஜல தர்ப்பணஞ் செய்தபின் வ்யஸனத்தினால் பீடிக்கப்பட்ட அந்தப்பாண் டவர்களை மந்திரிகளனைவரும் எடுத்துக்கொண்டு அழுதுகொண்டே ஸமாதானப்படுத்தினர். ராஜாவே! பாண்டவர்களும் அவர்கள் பந்துக் களும் எவ்வாறு தரையிற் படுத்தனரோ அவ்வாறே பிராம்மணர்முத லிய நகரத்துஜனங்களும் தரையிறபடுத்தனர். அந்நகரமானது பாண் டவர்களுடன்கூடக் குழந்தைநள்முதல் (முதியவர்கள்வரையில்) பன் னிரண்டுராத்திரிகள் ஸந்தோஷமில்லாமலும் மனத்தில் ஆறுதலில்லா மலும் உத்ஸாஹமில்லாமலுமிருந்தது.

---

## நூற்றுமுப்பத்தேழாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டுவுக்கு ச்ராத்தம்செய்ததும், குழந்தைகள் விளையாடிக்கொண் டிருக்கும்போது பீமனுக்கும் துர்யோதனாதிகளுக்கும் விரோதமுண்டான தும், பிரமாணகோடியென்னுமிடத்தில் பீமனைக் கங்கையில் தள்ளினதும், பாம்புகளைக்கொண்டு கடிப்பித்ததும்.)

பிறகு, விதுரரும்பீஷ்மரும்வியாஸரும்த்ருதராஷ்டிரமஹாராஜா வும் பந்துக்களுடன்கூட நெய்யுடன்சேர்ந்த அன்னத்தை ஹோமஞ் செய்து பாண்டுவுக்குச் சிராத்தம்செய்தனர். அவர்கள் புரோஹிதர்க ளின் உதவியினால் சாஸ்திரப்பிரகாரம் செய்தனர்; கௌரவர்களையும் ஆயிரக்கணக்கான பிராமணச்ரேஷ்டர்களையும் புசிப்பித்து, அந்தப் பிராமணச்ரேஷ்டர்களுக்கு இரத்தினக்குவியல்களையும் சிறந்த கிரா மங்களையும் தானஞ்செய்து ஸ்நானஞ்செய்தபிறகு பரதச்ரேஷ்டர்க ளான அந்தப்பாண்டவர்களை அழைத்துக்கொண்டு எல்லாரும் அஸ் தினபுரத்தில் ப்ரவேசித்தனர். பட்டணத்திலிருப்பவரும் தேசத்தி லிருப்பவருமாகிய யாவரும் தமதுபந்து இறந்ததைப்பற்றி வ்யஸனப் படுவதுபோல் அந்தப் பரதச்ரேஷ்டனான பாண்டுவைப்பற்றி எப்போ

தும் வ்யஸனப்பட்டுக்கொண்டிருந்தனர். அந்தச்சிராத்தம் முடிந்த பின் துக்கப்பட்டுக்கொண்டிருந்த அந்தஜனங்களைக்கண்டு ஒன்றும் தெரியாமல் தாங்கக்கூடாத துக்கமடைந்த தம் தாயாரான ஸத்ய வதிக்கு வியாஸர் பின்வருமாறு சொல்லலானார்:

"கடந்துபோனகாலம் ஸுகமாகவும் வருங்காலம் கடினமாகவும் இருக்கின்றன. தினங்கள், முந்தியவற்றைப் பார்க்கிலும்பிந்தியவை அதிகக்கெடுதல்களாக இருக்கின்றன. பூமிக்கு யௌவனம்போய் விட்டது. அதிக வஞ்சகங்கள் வ்யாபித்ததும், பலவகையான பாபங் களினால் கலக்கமுள்ளதும், வர்ணாச்ரமமுதலிய தர்மங்களும் நல்ல காரியங்களும் நல்லொழுக்கங்களும் அழிந்துபோனதுமாகிய கொடிய காலம் வரப்போகிறது. கௌரவர்களின் அநீதியினாலேயும் பூமி நிலைக்கப்போகிறதில்லை. நீ யோகாப்பியாஸம்செய்துகொண்டு ஸ்திர மானமனத்துடன் தபோவனத்தில்வாஸஞ்செய்வதற்குச் செல். உன் னுடைய இந்தக்குலத்துக்கு நேரப்போகின்ற கஷ்டமானநாசத்தை நீ பாராதே" என்றார். அந்த ஸத்தியவதி, 'அப்படியே ஆகட்டும்' என்று அங்கீகரித்து உள்ளேபோய் மருமகளைப்பார்த்து, "அம்பிகை யே! உன்பேரனான துரியோதனனுடைய அநீதியினால் சுற்றங்க ளுடன்கூடப் பரதவம்சத்தவரும் நகரத்துஜனங்களும் அழிந்துபோ வார்களென்று நாம்கேட்டோம். ஆதலால், விருப்பமிருந்தால் புத்ர சோகத்தினால வாதிக்கப்பட்டுத துயரமுற்ற இந்த அம்பாலிகையை யும் அழைத்துக்கொண்டு நாமிருவரும் வனத்திற்குப்போவோம்; உனக்குச்சுகமுண்டாகும்" என்றுசொன்னாள். பாரதரே! அம்பிகை, 'ஆகட்டும்' என்று ஸம்மதித்தபின், ஸத்யவதி பீஷ்மரைக்கேட் டுக்கொண்டு இரண்டுமருமக்களுடன்கூடச் சிறந்தநியமமுள்ளவளாக வனம்சென்றாள். பரதச்ரேஷ்டரே! மஹாராஜரே! அப்போது அந்தராஜஸ்திரீகள் மிக்ககடுந்தவஞ்செய்து தேகத்தைவிட்டுத் தாங் கள் விரும்பினலோகம் சென்றனர்.

அதன்பின், பாண்டவர்கள் வேதத்திற்சொலலப்பட்ட சௌளம் உபநயனம்முதலிய ஸம்ஸ்காரங்களையடைந்து போகங்களையனுபவித் துக்கொண்டு பிதாவிருந்தவீட்டில வளர்ந்தனர். த்ருதராஷ்டிரபுத்ரர் களுடன் சேர்ந்து ஸுகமாக உத்ஸாஹத்துடன் விளையாடிக்கொண் டிருந்த அவர்கள் சிறுவர்கள்விளையாட்டுக்கள் எலலாவற்றிலும் தங் கள் சக்தியினால் சிறந்தவராயினர். அந்தப் பீமஸேனன் வேகத்திலும் குறித்ததைஎடுப்பதிலும் போஜனத்திலும் புழுதியிலிழுப்பதிலும் த்ருதராஷ்டிரபுத்ரர்களெல்லாரையும் பீடித்தான். ராஜாவே! ஸங்

தோஷமாக விளையாடிக்கொண்டிருக்கும் த்ருதராஷ்டிரபுத்ரர்களைப் பிடித்துக்கொண்டொளிந்தான். அவர்களைத் தலைகளில்பிடித்துப்பாண்டவர்களுடன் முட்டினான். மிகுந்தபராக்ரமமுள்ள அந்தக்குமாரர்கள் நூற்றொருவரையும் பீமஸேனன் ஒருவனாகவே அதிகஸ்ரமப்படாமல் அடக்கிவிட்டான். பலவானான பீமஸேனன் பலத்தினால் அவர்கள் கதறும்படி தலைமயிர்களிற்பிடித்து அடித்து முழங்கால்களும் தலைகளும் தோள்களும்தேயத் தரையில்இழுத்தான். ஜலத்தில்விளையாடும்போது அவன் பத்துப்பிள்ளைகளைக் கைகளிற்பிடித்துக்கொண்டு முழுகியிருந்தான்; இறந்தவர்கள்போலானபின் அவர்களைவிட்டான். மரத்தின்மேலேறி அவர்கள் பழங்களைப்பறித்துக்கொண்டிருக்கையில் பீமஸேனன் மரங்களைக் காலால்உதைத்து அசைத்தான். அப்போது உதையின்வேகத்தினால் அதிர்ந்தமரங்கள் அலைந்ததனால் பழங்களுடன்கூட மரங்களினின்றும் பிள்ளைகளும் விழுந்தனர். துரியோதனன்முதலிய ஸஹோதரர்களனைவரும் பீமஸேனன்கையினாற் பிடிக்கப்பட்டுச் சிலருக்குத் தலைகளும்மார்புகளும், சிலருக்குஇடைகளும் முகங்களும் அடிபட்டன; அவர் விழுந்தனர். கைச்சண்டையிலும் ஓட்டத்திலும் தேகப்பயிற்சியிலும் அந்தக்குமாரர்கள் பீமஸேனனை மிஞ்சஆரம்பித்தும் ஒருபோதும் அவனுக்கு மேலானகாரியங்களைச்செய்யவில்லை. இவ்வாறு அந்தப் பீமஸேனன் கெட்டஎண்ணமில்லாமலே பால்யசேஷ்டையினால் த்ருதராஷ்டிரபுத்ரர்களை ஆக்கிரமித்து அவர்களுக்கு மிக்கவிரோதத்திற்கு இடமாகஇருந்தான்.

அதன்பிறகு, மிகுந்தபராக்ரமமுள்ள துரியோதனன், பீமஸேனனுடையஅந்தவலிமை மிகப்பிரஸித்திபெற்றதைக்கண்டு தன்கெட்ட எண்ணத்தைக்காண்பிக்க ஆரம்பித்தான். தர்மத்தைவிட்டுவிலகினவனும் பாவங்களையேபார்ப்பவனுமாகிய அந்தத்துரியோதனனுக்கு அறிவின்மையாலும் ஐசுவரியத்திலுள்ளஆசையாலும் கெடுமதியுண்டாயிற்று. "இந்தக்குந்தியின்புத்ரனான *வ்ருகோதரன் பலவான்களுள் மிகச்சிறந்தவன்; குந்தியின்புத்ரர்களின் நடுவாமிவனைமோசத்தினால்ஜயிக்கவேண்டும். இவன்பலசாலி; அதிக சக்தியுள்ளவன்; மிகுந்த சூரத்தன்மையுள்ளவன். பீமனொருவனாக நம்மனைவரையும் விரோதிக்கிறான். அவனை நகரத்தின்தோட்டத்தில் தூங்கும்போது கங்கையில் தள்ளிவிடுவோம். அதன்பிறகு, இவன்தம்பியாகிய அர்ச்சுனனையும்அதன்பிறகு அவன்தமையனையுதிஷ்டிரனையும்பிடித்துச் சிறையிற்போட்டு நான் பூமியையாள்வேன்" என்று நிச்சயஞ்செய்து

* பீமன்.

கொண்டு அந்தப்பாவியான துரியோதனன், அப்போது எந்தவேளை யும் மஹாத்மாவானபீமனுக்காக ஸமயம்பார்த்துக்கொண்டிருந்தான்.

பாரதரே! அதன்பின், ஜலக்கிரீடைக்காக விசித்ரங்களும் பெரியவைகளுமான வஸ்திரகூடாரங்களையும் சால்வைக்கூடாரங்களையுஞ் செய்வித்தான். அவ்விடத்தில் வேண்டியவையெல்லாம்நிரம்பினவையும் கொடிகள்எடுத்துக்கட்டப்பட்டவையும் பலவகைப்பட்டவையுமான அனேகவீடுகளைச் செய்வித்தான். பாரதரே! பிரமாணகோடியென்னுமிடத்தில் ஒருஸ்தலத்தை அடைந்து அந்தஇடத்தை உதகக்கிரீடனமென்றுபெயரிட்டான். விளையாட்டின்முடிவில் அவர்களனைவரும் சுத்தவஸ்திரம்தரித்து நன்றாகஅலங்கரித்துக்கொண்டு எல்லா ரஸங்களும்நிரம்பின அந்தஅன்னத்தை மெல்லமெல்லப் புசித்தனர். வீரர்களாகியகௌரவச்ரேஷ்டர்கள் விளையாடிக் களைப்புற்றுச் சாயங்காலவேளையில் விளையாட்டுக்காகஏற்பட்டகூடாரங்களிலேயேவஸிக்க நினைத்தனர். பலவானும் ஸமர்த்தனுமான பீமஸேனன் ஜலக்கிரீடைக்குவந்த அந்தக்குமாரர்களைத்தூக்கி அதிகவேலை செய்ததனால் களைத்துப் பிரமாணகோடியில் வஸிப்பதற்காகஏற்பட்ட ஸ்தலத்தில் மேலேயேறிப்படுத்தனன். மத்தியபானத்தினால்மயக்கமுற்ற அந்தப் பாண்டவன் குளிர்ந்திருக்கும்வாஸஸ்தலத்தையடைந்து ஓய்வுடன் அசைவற்று இறந்தவன்போலத் தரையில்தூங்கினான். பிறகு, துரியோதனன் கயிறுகளைப்போன்றகொடிகளினால் பிரமாணகோடியில் தூங்கினபீமஸேனனை மெல்லக்கட்டிக் கங்கையின்ஜலத்தில் போட்டான். யுத்தவீரரிற்சிறந்தபீமன் உடனே கண்விழித்துக்கொண்டு தன்பலத்தினால் கட்டுக்களெல்லாவற்றையும் அறுத்துமறுபடியும்எழுந்தான். சிறந்தபலமுள்ள அவன் கட்டிலிருந்துவிடுபட்டபின் அது துரியோதனன்செய்ததென்றறியவில்லை. அந்தப்பலவான்மறுபடியும் நித்திரையினால்பரவசனாகி அந்தஇடத்திலேயேதூங்கினான். பாதிராத்திரியானபின் கௌரவர்களும் பாண்டவர்களும் எழுந்தனர். துரியோதனன் பீமஸேனனைக்கண்டு துன்பமடைந்தான். மறுபடியும், தூங்கினவனைக் கூர்மையானபற்களுள்ளவையும் கொடியவிஷமுள்ளவையுமான சீறுகின்றஸர்ப்பங்களைவிட்டு அங்கங்களின் ஸந்திகளெல்லாவற்றிலும் கடிக்கச்செய்தான். ஸர்ப்பங்களின் பற்கள் உயிர்ஸ்தானங்களில் பதிப்பிக்கப்பட்டும் பெரியமார்பையுடைய பீமஸேனனுடைய வன்மையானதோலைக் குத்தவில்லை. பீமஸேனன் விழித்துக்கொண்டு அந்தஸர்ப்பங்களெல்லாவற்றையும் தள்ளிவிட்டான். துரியோதனனுக்குப் பிரியனானஸாரதியையும் புறங்கையினால்கொன்றான். ராஜா

வே! அவ்வாறே மிக்கபொறாமைகொண்ட துரியோதனன் கொல்ல எண்ணங்கொண்டு சகுனியின் அபிப்ராயத்தைக்கேட்டு, வலனன் என்னும்சமையற்காரனுடன் ஆலோசித்துப் பிறகு அவனைக்கொண்டு பீமஸேனனுடையஆஹாரத்தில் விஷத்தைப்போடுவித்தான். கொடிய தும்மயிர்க்கூச்சமெடுக்கச்செய்வதுமாகிய காளகூடவிஷம் சேர்க்கப்பட்டது. பீமஸேனன் அதையும்புஜித்து ஓர்உபாதியுமில்லாமல் ஜரிப்பித்துக்கொண்டான். அந்தவிஷம் கொடியதாயிருந்தும் அவனுக்கு உபத்திரவத்தையுண்டாக்கவில்லை. பீமன் பயப்படத்தக்க தேகவன்மையையுடையவனானதலால் விஷத்தை ஜரிப்பித்துக்கொண்டான். ராஜாவே! மற்றொருநாள் துரியோதனன் பீமஸேனனைக் கொல்லக்கருதி மந்திரியாகியசகுனியுடன்ஆலோசனைசெய்தான். இரவும்பகலும் ஓயாமல்சிந்தித்துக்கொண்டு தூங்காமலிருந்தான். இவ்வாறு துரியோதனனும் கர்ணனும் ஸுபலன்புத்திரனான சகுனியும் அனேகஉபாயங்களினால் அந்தப்பாண்டவர்களைக் கொல்லக்கருதினர். வைசியப்பெண்ணின்புத்திரனாகியயுயுத்ஸு பாண்டவர்களின்நன்மையிலுள்ளவிருப்பத்தினால் அதைப் பாண்டவர்களுக்குச் சொன்னான். எதிரிகளையடக்கத்தக்கபாண்டவர்களும் விதுரர்அபிப்பிராயத்திலேயே நின்றுகொண்டு வெளிக்காட்டாமல் அவற்றையெல்லாம் அறிந்து கொண்டார்கள்.

---

## நூற்றுமுப்பத்தேட்டாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(பீமனுக்கு விஷம்கலந்த பக்ஷியங்களைக்கொடுத்ததும், பிரமாண கோடியென்னுமிடத்தில் கங்கையில் வசிநர்ட்டினஇடத்தில் அவனைத்தள்ளினதும், அவன் பாதாளலோகம்சென்று வாஸுகி கொடுத்த ரஸத்தைப் பானம்செய்ததும்.)

பிறகு, அந்தத்துரியோதனன்முதலானவர்கள், "பீமஸேனன் பலமுள்ளவன்; ஸாமர்த்தியமுள்ளவன்; மிகுந்தசூரத்தன்மையுள்ளவன்; இந்த வ்ருகோதரன் நம்மை எப்போதும் விரோதிக்கிறான். இவனை நகரத்தின்தோட்டத்தில் தூங்கும்போது ஜலத்தில் நாட்டப்பட்ட சூலத்தின்மேல் போடுவோம்" என்று நிச்சயம்செய்தனர். பாரதரே! பிரமாணகோடியென்னுமிடத்தில்போய் ஜலக்ரீடைக்காக ஒருஸ்தலம்செய்வித்தனர். அவ்விடத்தில் சமையல்வேலையில்தேர்ந்த மனிதர்களினால் பக்ஷணமுதலிய உணவும் குடிக்கத்தக்கவையும்

உறிஞ்சத்தக்கவையும் நக்கிச்சாப்பிடத்தக்கவையும் ஸித்தம்செய்யப்பட்டன. அப்போது வேலைக்காரர்கள் துரியோதனனுக்கு அதைத் தெரிவித்தனர். பிறகு, துர்ப்புத்தியுள்ள துரியோதனன் அங்கே பாண்டவர்களைப்பார்த்து, "தோட்டங்களினாற்சோபிக்கின்ற கங்கைக்குச் செல்வோம். ஸஹோதரர்களாகிய நாமனைவரும்சேர்ந்து ஜலக்கிரீடைசெய்வோம்" என்றுசொன்னான். யுதிஷ்டிரரும், 'அப்படியேயாகட்டும்' என்று அவனுக்கு மறுமொழிகூறினர். சூரர்களான அந்தக்கௌரவபாண்டவர்கள் நகரங்கள்போன்ற தேர்களிலும் அந்தத் தேசங்களிலுண்டான சிறந்தயானைகளிலும் ஏறிக்கொண்டு நகரத்தை விட்டுப்புறப்பட்டனர். உத்யானவனம்சேர்ந்தவுடன் ஜனக்கூட்டத்தையனுப்பிவிட்டு வீரர்களாகிய அந்தச்சகோதரர்களனைவரும் வெண்மையானகாரியசாலைகளாலும், நடுவேயுயர்ந்து இருபுறமும் சரிவாயுள்ள கூரைகளோடுகூடிய தூண்கள்நிறுத்தின சாலைகளாலும், பல கணிகளாலும், துவாரங்களாலும், ஜலயந்திரங்களாலும், நடப்பதற்குரியபாதைகளாலும் சோபிப்பதும் கொத்தர்களால் மெழுகப்பட்டதும் சித்திரக்காரர்களால் சித்திரமெழுதப்பட்டதுமான உத்தியானத்தைப்பார்த்துக்கொண்டே ஸிம்மங்கள் மலைக்குகைகளிற்பிரவேசிப்பதுபோல் அதிற்பிரவேசித்தனர். ஜலம்நிரப்பப்பட்ட வாவிகளிலும் தாமரையோடைகளிலுமுள்ள ஜலம், மலர்ந்த தாமரைப்புஷ்பங்களினால் மூடப்பட்டு அழகாயிருந்தது. அப்படியே காலத்துக்குரியபுஷ்பங்களினால் பூமி மறைக்கப்பட்டிருந்தது. அந்தப்பாண்டவகௌரவர்களனைவரும் அங்கே உட்கார்ந்து, ஆங்காங்கிருந்து கொண்டுவரப்பட்டனவும் தாங்கள்விரும்பினவுமான உணவுகளைப் புஜித்தனர். அந்தச் சிறந்த உத்யானத்தில் விளையாடிக்கொண்டிருந்த அவர்கள் அந்த அந்தப்பக்ஷணங்களையும்'ஒருவர்க்கொருவர் வாய்களிற் கொடுத்தனர்.

அப்போது பாவியானதுரியோதனன், பீமஸேனனைக்கொல்லக் கருதி அந்தப்பக்ஷணத்தில் காளகூடவிஷத்தைப் போடும்படிசெய்தான். அப்போது உள்ளத்தில் கத்தியைப்போன்றவனும் பேச்சில் அமிர்தத்துக்கொப்பானவனுமாகிய அந்தப்பாவியான துரியோதனன் தானேயெழுந்து ஸஹோதரனைப்போலவும் ஸ்நேஹிதனைப்போலவும் பீமனுக்கு மிகுதியாகப் பக்ஷணத்தையூட்டினான். அந்தமோசத்தை யறியாமல் பீமஸேனன் செம்மையாகப்பக்ஷித்தான். பிறகு, மனிதர்களுக்குள் அதமனான துரியோதனன், அந்தப்பீமனைப்பற்றி மனஸுக்குள்சிரித்துக்கொண்டு தான் கிருதார்த்தனானதுபோல நினைத்தான். பிறகு, அந்தப்பாண்டவர்களும் திருதராஷ்டிரபுத்திரர்களும்

எல்லோரும்சேர்ந்து களிப்புற்றமனத்துடன் ஜலக்கிரீடை செய்தனர். விளையாட்டுக்காகஏற்பட்ட கூடாரங்களிலேயே அந்தவீரர்கள் வஸிக்க விரும்பினர். பலவீரனாகிய பீமன், பிரமாணகோடியில் ஜலக்கிரீடைக்காகவந்த அந்தக்குமாரர்களைநடத்தி ஜலத்தில் விளையாடின ப்ரமத்தினால், அதிகமாகப் போஜனம்செய்து தங்குமிடந்தேடி அந்த இடத்தையடைந்தான். களைப்புற்றும் குடிமயக்கத்தினால் மயங்கியும், விஷம் தேகத்தில்வ்யாபித்துமிருந்ததனால் குளிர்ந்தகாற்றையடைந்தவுடன் அசைவற்றுத் தூங்கினான். பிறகு, துரியோதனன் தானேகயிறுகளைப்போன்றகொடிகளால் பீமனைக்கட்டி, சூலங்களை ஓட்டையளவு இடைவிட்டு ஜலத்தில்நாட்டிக் கயிறுகளாகச்செய்யப்பட்ட கொடிகளினால் கெட்டியாகக்கட்டப்பட்ட அந்தப்பீமனை உடனே கரையிலிருந்து ஜலத்தில் தள்ளிவிட்டான். அந்தப்பீமனுக்கு வாழ்நாள் மிச்சமிருந்ததனால் ஜலத்தில் சூலங்கள்நடப்பட்டஇடத்தில்விழவில்லை. அவன் விழுந்த இடத்தில் தற்செயலாகச்சூலமிருக்கவில்லை. அந்தப்பீமஸேனன் பிரஜ்ஞையில்லாமல் நாகலோகத்திலுள்ள நாககுமாரர்களைப்பிடித்துக்கொண்டு கவிழ்ந்து ஜலத்துக்குள்மூழ்கினான். பிறகு, கொடியவிஷமுள்ளவையும் பெரிய கோரப்பற்களுள்ளவையுமான அனேகநாகங்கள்சேர்ந்து அதிகமாக விஷத்தைக்கொட்டிப் பீமனை மிகக்கடித்தன. அவன்கடிக்கப்படும்போது, ஸ்தாவரவிஷமாகியகாளகூடம் ஜங்கமமானஸர்ப்பவிஷத்தாலேயே அடிக்கப்பட்டது. கூர்மையானபற்களையுடைய அந்தஸர்ப்பங்களின்பற்கள் பெரிய மார்பையுடைய அந்தப்பீமனுடைய நட்பஸ்தானங்களில் பாய்ச்சப்பட்டும் வன்மையினால் அவன்தோலை (பல்லழுந்தும்படி) கொத்தாமற்போயின. பிறகு, பீமஸேனன் விழித்துக்கொண்டு கட்டுக்களையெல்லாமறுத்து அந்தஸர்ப்பங்களை நசுக்கினான். சிலஸர்ப்பங்கள் பயந்தோடின. பீமனால் அடிபட்டவற்றில் மிஞ்சினநாகங்களெல்லாம், ஸர்ப்பராஜாவும் இந்திரனைப்போன்றவனுமான வாஸுகியினிடம்சென்று, "நாகராஜாவே! இம்மனிதன் ஜலத்தில்கட்டித் தள்ளப்பட்டான். இவன் விஷம்குடித்திருக்கவேண்டுமென்று நாங்கள் நினைக்கிறோம். (இவன்) அசைவற்றவனாக எங்களிடம்வந்தான்; கடிக்கப்பட்டவுடன் விழித்துக்கொண்டான். பிரஜ்ஞையடைந்தவுடன் கட்டையறுத்துக்கொண்டு எங்களைநசுக்குகின்ற இந்த மஹாவீரனை நீ தெரிந்துகொள்ளவேண்டும்" என்றன.

பிறகு, வாஸுகி, நாகங்கள்பின்தொடர்ந்துவர (சென்று) பயப்படத்தக்க பராக்ரமமுள்ள சிறந்தகைக்காரனாகிய பீமனைப்பார்த்தான்.

குந்திக்குக்கூடஸ்தனை * ஆர்யகனென்னும்நாகத்தினலும் அவன் பார்க்கப்பட்டான். அப்பொழுது தன்பேரனுக்குப்பேரனை பீமனை ஆர்யகன் இறுகக்கட்டிக்கொண்டான். பெருங்கீர்த்தியுள்ளவாஸுகி பீமனிடத்தில் அன்புடன், "இவனுக்கு என்னவிருப்பத்தை நாம் செய்யலாம்? பணக்குவியலையும் இரத்தினக்குவியலையும் இவனுக்கு வெகுமானமாகக்கொடுப்பாயாக" என்று தன்னுடனிருந்த நாகனுக்குக் கட்டளையிட்டான். இவ்வாறுசொல்லப்பட்ட அந்த ஆர்யகன், வாஸுகியைநோக்கி, "நாகராஜாவே! உனக்கு விருப்பமிருந்தால் இவனுக்குத் தனக்குவியலால் என்னஉபயோகம்; உன்பிரீதியிருக்கும் போது மஹாபலசாலியான இந்தக்குமாரன் ரஸத்தைக்குடிக்கட்டும். ஆயிரம்யானைபலமுள்ள ரஸம் ஒருகுடத்தில்வைக்கப்பட்டிருக்கிறது. இந்தக்குமாரன் எவ்வளவுகுடிப்பனே அவ்வளவு இவனுக்குக்கொடுக்கலாம்" என்று மறுமொழிசொன்னன். 'அப்படியே ஆகட்டும்' என்று அந்தநாகனுக்கு வாஸுகி சொன்னன். பிறகு, பீமஸேனன் நாகர்களினல் மங்களாசீர்வாதம்செய்யப்பெற்றுப் பரிசுத்தனுகக் கிழக்குமுகமாயுட்கார்ந்து ரஸத்தைப் பானஞ்செய்தான். மஹாபலமுள்ள பீமஸேனன் ஒருமூச்சில் ஒருகுடம்குடித்தான். இவ்வாறு அந்தப் பாண்டுபுத்ரன் எட்டுக்குடங்களைக்குடித்தான். அதன்பின், சிறந்த புஜங்களுள்ளவனும் சத்துருக்களை யொழிப்பவனுமாகிய பீமஸேனன் ஸுகமாக நாகர்கள்கொடுத்த உயர்ந்தசயனத்தில் நித்திரைசெய்தான்.

---

## நூற்றுமுப்பத்தோன்பதாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



**(பீமன்வராததைப்பற்றிக் குந்திக்கும் விதுரனுக்கும் நடந்த ஸம்பாஷணையும், பதினுயிரம் யானைபலத்துடன் பீமன் திரும்பி அஸ்தினுபுரம் வந்ததும், பீஷ்மர், குமாரர்கள் எல்லாரையும் தனுர்வேத சிக்ஷைக்காகக் கிருபாசாரியரிடம் ஒப்பித்ததும்.)**

பாபசிந்தையுள்ள துரியோதனன் பீமஸேனனை ஸர்ப்பங்களுள்ள மடுவில்தள்ளிவிட்டு அப்போதே தன்னைக் கிருதார்த்தனுக நினைத்தான். இரவுகழிந்ததும், "பீமஸேனன் நமக்கு முன்னமேயே போய்விட்டான்" என்றுசொல்லிக்கொண்டு அவ்விடமிருந்து நகரம்

---

* ஆர்யகனுடைய பெண்வயிற்றுப்பிள்ளை சூரன்; அவன்பெண் குந்தி; குந்தியின்குமாரன் பீமன்.

போனான். தாம் பாபம்செய்தறியாத தர்மாத்மாவான யுதிஷ்டிரர் தம்மைப்போலவே பிறரையும் யோக்கியராக நினைத்திருந்தார். பிராதாவினிடம் அன்புள்ள அந்தத்தர்மபுத்திரர் தாயாராகிய குந்தியிடம் வந்து நமஸ்காரஞ்செய்து, "அம்மா! பீமன் இங்கேவந்தானா? அம்மா! இங்கே அவனைக்காணவில்லையே? எங்கேபோயிருப்பான்? தோட்டங்களிலும் காடுகளிலும் எல்லாம் அவனைத் தேடினோம். நாங்கள் அந்தவீரனான பீமனைக் காணவில்லை. மஹானுபாவையே! அதன் பிறகு, நமக்குமுன்னமே அவன்போய்விட்டானென்று நினைத்து எல்லோரும் கலங்கினமனத்துடன் வந்திருக்கிறோம். இங்கேவந்து எங்கேயாவது போனானா? அல்லது நீ எங்கேயாவது அனுப்பினாயா? புகழுள்ளவளே! சிறந்தகைகளையுடைய பீமஸேனனைப்பற்றிச்சொல்லு. சிறந்தவளே! அந்தவீரனைப்பற்றி என்மனம்தெளிவாயில்லை. ஏனென்றால், நான் பீமன் தூங்கினதாகநினைத்தேன். அவன் இல்லையென்பதனால் அவன் கொல்லப்பட்டவன்தான்" என்றார். சிறந்த புத்தியுள்ள தர்மராஜாவினால் இவ்வாறுசொல்லப்பட்ட குந்தி,உடனேபதைபதைத்து ஹாஹாகாரஞ்செய்து யுதிஷ்டிரரைப்பார்த்து, "புத்திரனே! பீமஸேனனை நான்பார்க்கவில்லையே! அவன் என்னிடம் வரவில்லையே! நீ தம்பிகளுடன்கூட அவனைத்தேடுவதில் முயற்சிசெய்" என்றுசொன்னாள். பாண்டவர்கள் விரைவாக நகரத்தின் தோட்டத்திற்குச்சென்று தேடினர். பாண்டவர்கள் வாயினால், "பீமா, பீமா" என்று உரக்கக்கூவினர். அவர்கள் எல்லோரும்தேடியும் ஸஹோதரனைக்காணவில்லை; அப்போது மறுபடியும் தங்கள்வீட்டிக்குவந்து குந்தியைப்பார்த்து, "அம்மா! மஹாபாகுவானபீமனை வனத்திலும் தோட்டங்களிலும் தேடினோம்; நதிகளிலெல்லாம்தேடினோம்; காணவில்லை" என்றுகூறினர். பிறகு, அந்தக்குந்தி விதுரரைத் தன்வீட்டிக்குவருவித்து, "விதுரரே! பலசாலியான பீமஸேனனைக் காணவில்லையே! ஸஹோதரர்களானபாண்டவர்கள் ஸஹோதரர்களான கௌரவர்களோடுகூடத் தோட்டத்திலிருந்துவந்தனர். அவர்களில் மஹாபாகுவானபீமன் ஒருவன்மட்டும் இங்கே என்னிடம்வந்துசேரவில்லை. அவன் துரியோதனனுடைய கண்ணுக்கு ஒருபொழுதும் பிரியமாயிருக்கவில்லை. துரியோதனன் கொடியவன்; கெட்டவினையுள்ளவன்; அற்பன்; ராஜ்யத்தில் ஆசைவைத்தவன்; வெட்கமில்லாதவன். துரியோதனன் கோபம்வைத்து அந்தவீரனைக் கொன்றுமிருப்பான். அதனால், என்மனம் கலங்குகின்றது. என்னுள்ளம் எரிவதுபோலிருக்கிறது" என்றாள். விதுரர், "குணமுள்ளவளே! இந்த

விஷயத்தைச் சொல்லாதே. புத்திரர்களைக் காப்பாற்று. துஷ்டஸ்வபாவமுள்ள துரியோதனனை நிந்தித்தால் உன்னுடையமற்றப்புத்திரர்களையும் கொன்றுவிடுவான். வியாஸ மஹரிஷிசொன்னபடி உன்னுடையபுத்திரர்கள் தீர்க்காயுஸுள்ளவர்களே. உன்புத்திரன்வந்து உனக்கு ஸந்தோஷத்தையும் உண்டுபண்ணுவன்" என்றுசொன்னர். வித்வானுகியவிதுரர் இவ்வாறுசொல்லித் தமதுமனைக்குச்சென்றார். குந்தி புத்திரர்களுடன்கூடக் கவலையுற்றவளாக வீட்டுக்குள் இருந்தாள்.

அதன்பின், எட்டாவதுநாள் பீமஸேனன் விழித்துக்கொண்டான். அப்போது அந்தரஸம் ஜரித்தபின் பலவானுன அவன் அளவிடக்கூடாத பலமுள்ளவனுனன். தூங்கியெழுந்த அந்தப்பீமனைப் பார்த்து அந்தநாகர்கள், மெல்லச் சமாதானப்படுத்தி, "மஹாபாகுவே! சக்திநிரம்பின இந்தரஸத்தை நீகுடித்ததனுல்பதிணுயிரம் யானைகளின்பலத்தோடு போரில் வெல்லமுடியாதவனுவாய். இப்போது நீ இந்தத்தேவலோகத்துள்ள ஜலத்தினுல ஸ்நானஞ்செய்து உன்வீடுசெல. குருச்ரேஷ்டனே! உன்னைவிட்டு உன்ஸஹோதரர்கள் துக்கப்படுகின்றனர்" என்றசொல்லையும் சொன்னர்கள். சிறந்த கைகளையுடையவனும் மஹாபலசாலியும் வீரனுமாகியபீமன் உடனே ஸ்நானஞ்செய்து பரிசுத்தமும் வெண்மையுமான வஸ்திரங்களையும் புஷ்பங்களையும்தரித்து நாகனுடையகிருஹத்தில் விஷங்களைப்போக்குகின்றவைகளும் நல்ல மணமுள்ளவைகளுமாகிய மூலிகைகளினுல் விசேஷமாக மங்களகங்கணங்கள்கட்டப்பட்டு, நாகர்களால்கொடுக்கப்பட்ட பரமான்னத்தைப்புஜித்து நாகர்களுடைய பூஜைகளையும் ஆசீர்வாதங்களையும்பெற்றுத் தேவலோகத்துள்ள ஆபரணங்கள்நிறைந்தவனுக நாகர்களிடம் விடைபெற்றுக்கொண்டு மனமகிழ்ச்சியோடு நாகலோகத்திலிருந்து மேலேஏறினன். தாமரைக்கண்ணனுகியபீமஸேனன் நாகர்களால் ஜலத்திலிருந்து தூக்கிக்கொண்டுவந்து முன்னிருந்த வனப்பிரதேசத்திலேயே விடப்பட்டான். பீமஸேனன் பார்த்திருக்கும்போதே அந்தநாகர்கள் மறைந்தார்கள்.

மஹாபலசாலியும் சிறந்தகைகளையுடையவனும் குந்திபுத்திரனுமாகிய பீமஸேனன் உடனே எழுந்து விரைவாகத் தாயாரிடம் வந்தான். பிறகு, பகைவரையழிப்பவனுகிய பீமன் தாயாரையும் ஜ்யேஷ்டஸஹோதரரான தர்மபுத்திரரையும் வந்தனஞ்செய்து, தம்பிகளை உச்சிமோந்து, புருஷச்ரேஷ்டர்களான அந்தச்சகோதரர்களாலும் தாயாராலும் தழுவிக்கொள்ளப்பட்டான். ஒருவர்மேலொருவர்நேசமுற்றஅவர்கள், "நற்காலம்! நற்காலம்!" என்றுசொல்லிக்கொண்ட

னர். மிகுந்தபலத்தையும் பராக்கிரமங்களையுமுடைய பீமஸேனனும் துரியோதனன்செய்தவைகளெல்லாவற்றையும் தன்ஸஹோதரர்களுக்குச் சொன்னான். பீமஸேனன் நாகலோகத்தில் என்னநடந்தனவோ அந்தநன்மைதீமைகளெல்லாவற்றையும்பூரணமாகச்சொன்னான். பிறகு, ராஜாவானயுதிஷ்டிரர் பீமஸேனனைப்பார்த்து உட்கருத்தமைந்த சொல்லைச்சொல்லலானார். "நீபேசாமலிரு. இந்தக்காரியம் எவ்வகையிலும் சொல்லத்தக்கதன்று. இதுமுதல நீங்களெல்லாரும் ஒருவர்க்கொருவர் ஜாக்கிரதையுடன் பீமனைக்காப்பாற்றுங்கள்" என்றார். சிறந்தகைகளையுடைய தர்மராஜாவானயுதிஷ்டிரர் இவ்வாறுசொல்லி அப்போதுமுதல் ஸஹோதரர்கள் எல்லாருடனும்கூடி ஜாக்கிரதையாக இருந்தார். பாண்டவர்கள் பீமன்விஷயத்தில் (நடந்த) அந்தச் செய்கையைத்தெரிந்துகொண்டபோது, ரஹஸ்யத்தை ரக்ஷிப்பதில் ஜாக்கிரதையுடன், (அதை) வெளிப்படுத்தாமலேயிருந்தார்கள். தர்மாத்மாவும் புத்திமானுமாகிய விதுரர் அவர்களுக்கு ஆலோசனை சொன்னார். துரியோதனனும் அந்தப்பீமன் திரும்பிவந்ததைக்கண்டு ஒவ்வொருநாளும் இதையேநினைத்துப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு தாபமடைந்தான். திருதராஷ்டிர மஹாராஜா, மிகுந்தபலகர்வத்தோடு விளையாடிக்கொண்டிருக்கும் அந்தக்குமாரர்களைக்கண்டு அவர்களுக்கு (அஸ்திரவித்தையைக்) கற்பிக்கிறதற்காக நாணல்கட்டையிற்பிறந்தவரும் வேதங்களிலும் சாஸ்திரவிஷயங்களிலும் கரைகண்டவருமாகிய கிருபாசாரியரைக் குருவாகத்தேடி அவர்களை அவரிடம் ஒப்புவித்தார். ராஜாவினால்அவரிடம் ஒப்பிக்கப்பட்ட அந்தக்கௌரவர்களனைவரும் அவரிடம் குருகுலவாஸஞ்செய்து தனுர்வேதத்தை கற்றனர்" என்று வைசம்பாயனர் சொன்னார்.

---

## நூற்றுநாற்பதாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(கிருபர், துரோணர், அச்வத்தாமா இவர்களுடைய உத்பத்தியும் துரோணர் பரசுராமரிடம் அஸ்திரலாபம் பெற்றதும்.)

அதுகேட்ட ஜனமேஜயர், "பிராமணரே! கிருபருடையஜனனத்தைப்பற்றியும் எனக்குச் சொல்லக்கடவீர். அவர் நாணல்தண்டிலிருந்து எவ்வாறு உண்டானார்? எவ்வாறு அஸ்திரங்களையடைந்தார்?" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லலானார்.

"மஹாராஜாவே! பிரபுவே! கௌதமமஹரிஷிக்குச் சரத்வா னென்றும் *கௌதமரென்றும்சொல்லப்பட்ட புத்திரர் பாணங்களு டன்பிறந்தார். சூரரே! அந்தச் சரத்வானுக்குப் புத்தி தனுர்வேதத் தில் எவ்வாறு பிரவிர்த்தித்ததோ அவ்வாறு வேதாத்தியயனத்தில்பிர விர்த்திக்கவில்லை. பிரம்மசாரிகள் வேதங்களைத் தவத்தினால் எவ்வாறு கிரகித்தனரோ அவ்வாறு அவர் தவத்துடன்கூடி எல்லா அஸ்திரங்க ளையுமடைந்தார். அந்தக் கௌதமபுத்திரரான சரத்வான் தனுர் வேதத்தில் ஊக்கமுடையவராயிருந்ததனால் பெருந்தவஞ்செய்து இந் திரனுக்குப்பெருந்துயரத்தையுண்டுபண்ணினார். கௌரவரே! அதன் பிறகு, தேவராஜன் அவர்தவத்திற்கு இடையூறு செய்யென்று சொல்லி ஜாலவதியென்னும் தேவகன்னிகையை அனுப்பினான். அந் தச்சிறுமி சரத்வானுடைய அழகான ஆச்ரமத்திற்குச்சென்று தனு ஸையும் பாணத்தையும் தரித்திருக்கும் சரத்வானை மயங்கச்செய் தாள். கௌதமர் உலகத்தில் ஒப்பில்லாத வடிவுள்ளவளும் ஒற்றை வஸ்திரம் தரித்தவளுமாகிய அந்த அப்ஸரஸை வனத்திற்கண்டுமலர் ந்த கண்களுடையவரானார். அவருடைய இருகரங்களினின்றும் வில் லும் அம்புகளும் பூமியில் விழுந்தன. உடனே அவருடையசரீரத்தி லும் நடுக்கமுண்டாயிற்று. ஆனால், மிகுந்தஞானமுள்ள அந்தக்கௌத மர் ஞானத்தின் சிறப்பினாலும் தபோபலத்தினாலும் மிக்க உறுதியுட னிருந்தார். ராஜாவே! அவருக்கு அவளைப்பார்த்தவுடனே உண்டான மனவேறுபாட்டினால் வீரியம் நழுவிற்று. அவர் அதனை அறியவில்லை. அந்தமுனி வில்லையும், அம்புகளையும், கிருஷ்ணாஜினங்களையும் அந்த ஆச்ரமத்தையும், அந்த அப்ஸரஸையும் விட்டுச்சென்றார். அவரு டையஅந்தவீரியம் நாணற்றண்டில்விழுந்தது. ராஜாவே! நாணற்றண் டில் விழுந்த அந்தவீரியம் இரண்டுபாகமாகப் பிரிந்தது. பிறகு, அந் தக் கௌதமராகிய சரத்வானுக்கு ஆணும்பெண்ணுமாகிய ஓர் இர ட்டைபிறந்தது. அந்தக் கௌதமமஹரிஷியின் ஆச்ரமஸமீபத்தில் சந்தனுமஹாராஜா வேட்டையாடிக்கொண்டிருக்கையில் சைனியத் தைச்சேர்ந்த ஒருவன் தற்செயலாகக் காட்டில் அந்த ஆணும்பெண் ணுமாகிய குழந்தைகளைக் கண்டனன். வில்லையும் அம்புகளையும் கிருஷ்ணாஜினங்களையும் கண்டு தனுர்வேதத்திற்கரைகண்ட பிராம ணர்களுடைய குழந்தைகளென்றறிந்து அவன் அந்த இரண்டு குழந் தைகளையும் அம்புகளோடுகூடிய வில்லையும் சந்தனுமஹாராஜாவுக் குக் காண்பித்தான். அந்தராஜா கிருபைகூர்ந்து அவ்விரண்டுகுழந்

* கோதமர்குலத்தில் பிறந்தவர்.

தைகளையும் எடுத்துக்கொண்டு "எனதுபெண், எனதுபிள்ளை" என்றுசொல்லித் தன்வீட்டிற்குச் சென்றான்.

பிறகு, ப்ரதீபபுத்திரனாகிய அவ்வரசன் கௌதமருடைய அவ்விரண்டுகுழந்தைகளையும் வளர்த்து ஜாதகர்மமுதலான ஸம்ஸ்காரங்களையுஞ் செய்வித்தான். இந்தக்குழந்தைகள் தன்னால் க்ருபையோடுவளர்க்கப்பட்டதனால் அவ்வரசன் அவர்களுக்கு அதேபெயரை இட்டான். அதனால் புத்திரன் கிருபனென்றும் அந்தப்பெண்கிருபி என்றும்சொல்லப்பட்டார்கள். அவர்களுடையபிதாவாகிய கௌதமரும் தவத்தினால் அவர்கள் அங்கிருப்பதையறிந்து அப்போது தாம் வந்து அந்தப்புத்திரனுக்குக் கோத்திர முதலிய எல்லாவற்றையும் சொன்னார். ராஜாவே! கிருபரும் அப்போதுமுதல் தனுர்வேதத்திலேயே பற்றுள்ளவராக இருந்தார். *நான்குவகையானதனுர்வேதத்தையும் அநேகசாஸ்திரங்களையும் நுட்பமான விஷயங்களெல்லாவற்றையும் கிருபருக்கு அவர்பிதா பூரணமாகக்கற்பித்தார். அந்தக்கிருபர் ஸ்வல்பகாலத்தில் சிறந்த ஆசாரியரானார். பீஷ்மாசாரியர் கிருபரையழைத்து, "இவர்கள்உமதுசிஷ்யர்கள்" என்றுசொல்லித் தம்பேரன்மார்களைக்கொண்டுவந்துவிட்டுக்கிருபாசாரியரைஉபசரித்தார். பிறகு, மஹாரதர்களாகிய அந்தத்ருதராஷ்டிரபுத்திரர்களும் பாண்டுபுத்திரர்களுமாகிய யாவரும் யாதவர்களுடன்சேர்ந்து தனுர்வேதத்தை அத்யயனஞ்செய்தனர். யாதவர்களும் பற்பலதேசங்களினின்றும் வந்த மற்றஅரசர்களும் கிருபரை ஆசாரியராகஅடைந்து சிறந்தஅஸ்திரங்கள் தெரிந்தவர்களாயினர். ராஜாவே! அதன்பிறகு, பீஷ்மர், தம் பௌத்திரர்களுக்கு இன்னும் அதிகமான சிறப்பை விரும்பிக் கற்பிப்பதற்காகப் பாணங்களிலும் அஸ்திரங்களிலும் நிபுணர்களும் பராக்கிரமத்தில்பெயர்பெற்றவர்களுமாகிய ஆசாரியர்களைப்பற்றிவிசாரித்தார். ராஜாவே! மஹாபலசாலிகளான கௌரவர்களுக்கு அஸ்திரங்கள்

---

* நான்குவகையான தனுர்வேதமாவன:—ப்ரயோகம்=விடுப்பது, ஸம்ஹாரம்=திரும்பியெடுப்பது, கல்பம்=மந்திரசித்திக்குரிய புரச்சரணை முதலிய விரதம், ரஹஸ்யம்=அவைகளின் ஸ்வரூபஜ்ஞானம் என்பனவாம். 'முக்தம்=விட்டுவிடத்தக்கபாணம், அமுக்தம்=விடாமல் உபயோகிக்கத்தக்க கத்திமுதலியவை, முக்தாமுக்தம்=விட்டுத் திரும்பியெடுக்கத்தக்க அஸ்திரங்கள், மந்திரமுக்தம்=எடுக்கமுடியாமல் மந்திரத்தினால் பிரயோகிக்கப்படும் அஸ்திரங்கள் என்றாவது, சஸ்திரம்=ஆயுதம்,அஸ்திரம்=மந்திரத்தோடு கூடியது, ப்ரத்யஸ்திரம்=அஸ்திரத்தைத்தடுக்கும் அஸ்திரம், பரமாஸ்திரம்=எதிர் அஸ்திரமில்லாத அஸ்த்ரம் என்றாவது, ஆதானம்=எடுப்பது, ஸந்தானம்=தொடுப்பது, விமோக்ஷம்=விடுப்பது, ஸம்ஹாரம்=திருப்புவது என்றாவது நான்குவகை' என்பது பழைய உரை.

கற்பிக்க அற்பபுத்தியுள்ளவனும் பெரியமஹிமையில்லாதவனும் அஸ்த்ரங்களில் நிபுணனுமில்லாதவனும் தெய்வக்கண்மை இல்லாதவனும் தகான்" என்றுநினைத்துப் பரதச்ரேஷ்டராகிய பீஷ்மர், அப்போதே வேதங்களையறிந்தவரும் சிறந்த புத்தியுள்ளவருமான பரத்வாஜபுத்திரராகிய துரோணரிடம் பாண்டுபுத்திரர்களையும் திருதராஷ்டிரபுத்திரர்களையும் சிஷ்யர்களாக ஒப்பித்தார்.

பெரியமஹிமையுள்ளவரும் அஸ்திரவித்வான்களுட்சிறந்தவரும் பெரும்புகழ்பெற்றவருமாகிய துரோணர், அந்தமஹாத்மாவான பீஷ்மரால் சாஸ்திரப்ரகாரம் செம்மையாகப் பூஜைசெய்யப்பெற்றுத் திருப்தியடைந்து அவர்களனைவரையும் சிஷ்யர்களாக அங்கீகரித்தார். துரோணர், அவர்களுக்குத் தனுர்வேதத்தை முழுதும் கற்பித்தார். ராஜாவே! அளவற்றபராக்ரமமுள்ள அந்தக்கௌரவர்களும் பாண்டவர்களும் ஸ்வல்பகாலத்தில் எல்லாஆயுதங்களிலும் தேர்ந்தவர்களாயினர்" என்றுசொல்ல, ஜனமேஜயர், "பிராம்மணரே! துரோணர் எப்படிப்பிறந்தார்? எவ்வாறு அஸ்த்ரங்களையடைந்தார்? கௌரவர்களிடம் எவ்வாறுவந்தார்? அந்தவீரர் யாருடையபுத்ரர்? அஸ்த்ரம் தெரிந்தவர்களிற்சிறந்தவரும் அவருடையபுத்ரருமான அந்த அசுவத்தாமா எவ்வாறுபிறந்தார்? இதை நான் கேட்க விரும்புகிறேன்; விரிவாகச்சொல்லுங்கள்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லத் தொடங்கினர்.

"முற்காலத்தில் கங்கையின் உத்பத்திக்கு ஸமீபத்தில், மஹிமை பெற்றவரும் எப்போதும் கடுமையானதவமுள்ளவருமாகிய பாத்வாஜரென்றுபெயர்பெற்ற ஒருமஹரிஷியிருந்தார். அந்தப் பாத்வாஜர் ஸ்நானத்திற்காகக் கங்கைக்குச்சென்றார். அந்தப் பாத்வாஜரிஷி மஹரிஷிகளுடன்கூட ஹவிர்த்தானமென்னுமிடத்தில் ஸஞ்சரிக்கும்போது, அழகும்யௌவனமும்நிரம்பினவளும் மதமுள்ளவளும்யௌவனமதத்தினால் மெல்லநடப்பவளுமாகிய க்ருதாசியென்னும் அப்ஸரஸ் முன்னமேவந்து ஸ்நானஞ்செய்துகொண்டிருப்பதைப் பிரத்யக்ஷமாகப் பார்த்தார். அந்தநதிக்கரையில் அவளுடையஆடையைக் காற்றுவிலக்கிற்று. வஸ்திரம்விலகிப்போன அவளைக்கண்டு ரிஷி அப்போதேவிருப்பமுற்றார். சிறந்தஞானமுள்ள பாத்வாஜரிஷி அவளிடம் மனம்பற்றி ஆனந்தமடைந்தபோது அவருடைய வீரியம் நழுவிற்று. அந்தரிஷி அதைத் துரோணமென்னும்பாத்திரத்தில் வைத்தினர். அதனால், அந்த ஞானமுள்ள பரத்வாஜரிஷிக்குத் துரோணர் குடத்தில்பிறந்தார். அவர் வேதங்களையும் வேதாங்கங்களையும் முதுழும் அத்யயனஞ்

செய்தார். காசியபரிஷி அக்கினியினிடமிருந்து அஸ்திரம்பெற்றுக் கொண்டு எனைத்தெரிந்துகொண்டிருந்தாரோ அந்த அஸ்திரவித்தை யைத் தேவகாரியத்திற்காகப் பரத்வாஜர் காஸ்யபரிடமிருந்து அடைந்தார். பராக்ரமசாலியும் அஸ்திரம் தெரிந்தவர்களிற் சிறந்தவருமாகிய பரத்வாஜர் மிகுந்தமஹிமையுள்ள அக்கிவேஸ்யருக்கு அந்த ஆக்நேயாஸ்திரத்தைக் கொடுத்தார். பரதச்ரேஷ்டரே ! அந்த அக்கிவேஸ்ய முனிவர் பரத்வாஜபுத்ரரும் தமக்குஸஹோதரருமாயிருக்கும் துரோணருக்குத் தமக்குப் பரத்வாஜரிடமிருந்து கிடைத்த அந்தஆக்நேய மென்னும் மஹாஸ்திரத்தைக் கொடுத்தார். பரத்வாஜருக்கு ஸ்நேஹிதனாகிய ப்ருஷதனென்று பெயருள்ள ஓரரசன் இருந்தான். அவனுக்கு த்ருபதன் என்னும்புத்திரன்உண்டானான். அந்தக்ஷத்ரிய ஸ்ரேஷ்டனாகிய துருபதராஜன் ஒவ்வொருநாளும் ஆச்ரமத்திற்குச் சென்று துரோணருடன்கூடி விளையாடிக்கொண்டும் அத்யயனஞ் செய்துகொண்டுமிருந்தான்.

பிறகு,ப்ருஷதன் காலஞ்சென்றபின்,வீரனும் புருஷச்ரேஷ்டனுமாகிய துருபதன் வடபாஞ்சாலதேசத்தில் அரசாட்சிசெய்தான். அப்போது மஹிமைபொருந்திய பரத்வாஜமஹரிஷியும் ஸ்வர்க்கஞ் சென்றார். சிறந்ததவமுள்ள துரோணர் அங்கேயேவஸித்துத் தவம் செய்துகொண்டிருந்தார். வேதங்களையும் வேதாங்கங்களையும் அறிந்தவரும் தபஸினால் பாபங்களைப் பஸ்மஞ்செய்தவருமாகிய பெருங் கீர்த்திபெற்ற அந்தத்துரோணர் தம்பிதாவினுடையஆஜ்ஞையில்மனம் வைத்துப் புத்திரனைவிரும்பி அக்கினிஹோத்ரத்திலும் தம்தர்மத்திலும் இந்திரியஜயத்திலும் எப்போதும் ஊக்கமுள்ளவளாகிய சரத்வானுடைய புத்திரியான கிருபியைப் பாரியையாக அடைந்தார். * கௌதமி, அசுவத்தாமாஎன்னும் புத்திரனைப்பெற்றாள். அந்தப்புத்திரன் பிறந்தவுடன்உச்சைஸ்ரவம் என்னும்குதிரையைப்போல்கனைத்தான். அதைக்கேட்டு ஆகாசத்திலிருந்து கண்ணுக்குத்தெரியாத ஒருபூதம், " இவனுடைய உரத்தசப்தம் குதிரையின் சத்தம்போல் திக்குக்களில் வியாபித்ததனால் இந்தக்குழந்தை † அசுவத்தாமா என்ற பெயரோடிருப்பன்" என்றுசொல்லிற்று பிறகு, அந்தப்புத்திரனால் துரோணாசாரியர் மிகுந்த ஸந்தோஷமடைந்தார். அந்தப்புத்திமானாகிய துரோணர் அங்கேயே வஸித்துக்கொண்டு தனுர்வேதத்திலேயே ஞாபகத்தோடிருந்தார்.

அரசரே ! அப்போது மஹாத்மாவும் எல்லாவித்தைகளும்தெரி

* கிருபி. † அஸ்வம்=குதிரையைப்போன்ற, ஸ்தாமா=சப்தமுடையவன்.

ந்தவரும் ஆயுதம்பிடித்தவரெல்லாரிலும் மேலானவரும் பகைவரைத் துயரப்படுத்துகிறவருமாகிய பரசுராமரென்னும்பிராமணர், தம்பொருளையெல்லாம் பிராமணர்களுக்குக் கொடுக்கவிரும்பினதை அந்தத் துரோணர் கேள்விப்பட்டார். பரசுராமருடைய தனுர்வேதத்தையும் திவ்யாஸ்திரங்களையும் கேள்வியுற்று அவற்றிலும் ராஜநீதிசாஸ்திரத்திலும் ஆசைவைத்தார். பிறகு, அந்தச்சிறந்ததபஸுள்ளவரும் ச்ரேஷ்டமானபாகுபலமுடையவருமாகிய அந்தத்துரோணர், தவமும்பிரம்மசாரி வ்ரதமுமுள்ள சிஷ்யர்களால் சூழப்பட்டவராய்ப் பர்வதங்களிற் சிறந்த மஹேந்திரத்துக்குப் போகப் புறப்பட்டார். பிறகு, மஹாதபஸ்வியான துரோணர் மஹேந்திரம்சேர்ந்து க்ஷத்ரியர்களைக்கொல்லுகிறவரும் விரோதிகளைக்கொல்லுகிறவருமாகிய அந்தப்பரசுராமரைக்கண்டார். பிறகு, துரோணர் சிஷ்யர்களுடன்கூட ப்ருகுச்ரேஷ்டரான பரசுராமரையடைந்து தம்பெயரையும் அங்கிரஸின்குலத்தில் தம்ஜனனத்தையும் தெரிவித்தார்; தெரிவித்தபின், பூமியில் தலைபடும்படி அவர்பாதங்களில்வந்தனஞ்செய்தார். பிறகு எல்லாவற்றையும்கொடுத்துவிட்டு அப்போதே வனம்போகக்கருதின மஹாத்மாவான பரசுராமரைநோக்கித் துரோணர், "பிராமணோத்தமரே! பரத்வாஜருக்குப்பிறந்தவனும் அயோநிஜனுமாகிய துரோணனென்று பெயருள்ளநான் திரவியத்தைவிரும்பி வந்திருப்பவனென்று நீர் அறியக்கடவீர்" என்றுசொன்னார். க்ஷத்ரியர்களெல்லாரையும் அழித்தவராகிய அந்தமஹாத்மா துரோணரைநோக்கி, "பிராமணச்ரேஷ்டனே! உனக்கு நல்வரவு; என்னவிரும்புகிறாய்? எனக்குச்சொல்" என்றுசொன்னார். இவ்வாறு பரசுராமரால் கேட்கப்பட்ட துரோணர் யுத்தவீரர்களிற்சிறந்தவரும் அனேகதனங்களைக் கொடுக்கப்போகிறவருமாகிய பரசுராமரைநோக்கி, "சிறந்ததவமுள்ளவரே! நான் அளவற்றதனத்தை வேண்டுகிறேன்" என்றுசொன்னார். அதற்குப் பரசுராமர், "தபோதனனே! இங்குள்ளபொன்னும் மற்றஎன்னஎன்ன பொருள்உண்டோ அவையனைத்தும் என்னால் பிராமணர்களுக்குக்கொடுக்கப்பட்டன. அவ்வாறே அனேகநகரங்களை மாலைபோல்அணிந்த இந்தக்கடல்சூழ்ந்த பூமிதேவியை முழுவதும் கசியபருக்கு நான்கொடுத்துவிட்டேன்; இப்போது இந்தச்சரீரமாத்திரமும் அனேகவிதங்களான உயர்ந்தஅஸ்திரசஸ்திரங்களும் எனக்கு மிச்சமாயுள்ளன. பிராமணனே! சரீரத்தையாகட்டும், அஸ்திரங்களையாகட்டும், சஸ்திரங்களையாகட்டும் நீ கேள்: துரோணா! உனக்கு நான் என்னகொடுக்கவேண்டும்; அதைஉடனேசொல்" என்றார்.

துரோணர், "பார்க்கவரே! அஸ்திரங்களெல்லாவற்றையும் *பிரயோகம், †ஸம்ஹாரம், ‡ரகஸ்யம் இவற்றுடன் எனக்குப் பூர்ணமாகக் கொடுக்கக்கடவீர். பிராம்மணோத்தமரே! இதுதான் தனங்களுக்கெல்லாம் தனம்" என்றார். பரசுராமர், 'ஆகட்டும்' என்றுசொல்லி, உடனே அவருக்கு ரகஸ்யமென்றுசொல்லப்பட்ட ஸ்வரூபஜ்ஞானத்தோடும் §புரச்சரணவிரதத்தோடும் தனுர்வேதத்தையும் அஸ்திரங்களையும்பூர்ணமாகக்கொடுத்தார். அவையெல்லாவற்றையும் பெற்றுக்கொண்டு அஸ்திரங்களில்தேர்ந்த பிராமண ச்ரேஷ்டரான துரோணர் மிகுந்தஸந்தோஷத்துடன் தம் அன்புள்ளஸ்நேகிதனாகிய துருபதனிடம் சென்றார்.

---

## நூற்றுநாற்பத்தோராவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(துரோணர் துருபதனிடம்சென்று பழையஸ்நேகத்தைப் பாராட்டிப் பேசினபோது துருபதனால் அவமதிக்கப்பட்டதும், அதனால் கோபத்துடன் அஸ்தினாபுரம்வந்ததும், ராஜகுமாரர்களுக்கு விளையாட்டில் கிணற்றில்விழுந்தபந்தையும் மோதிரத்தையும் எடுத்துக்கொடுத்ததும், அந்தஸமாசாரத்தைக்கேட்டுப் பீஷ்மர் அவரை எதிர்கொண்டழைத்ததும்.)

பிறகு, பராக்ரமசாலியான துரோணர் துருபதராஜாவினிடம் சென்று, "ராஜாவே! இங்குவந்திருக்கும் என்னைஸ்நேகிதனாக அறி" என்றுசொன்னார். ஸ்நேகிதராகிய துரோணரால் அன்புடன் இவ்வாறுசொல்லப்பட்ட பாஞ்சாலதேசத்தரசன் இவருடைய அந்தச் சொல்லைப் பொறுக்கவில்லை. ஐச்வரியத்தினுடையகர்வம் நிரம்பின அந்தத்துருபதராஜன் கோபத்தாலும் பொறாமையாலும் புருவங்களை நெறித்துச் சிவந்தகண்களோடு துரோணரைப்பார்த்து அடியில்வருமாறு சொல்லலானான். "பிராம்மணரே! உம்முடைய இந்தப்புத்தி திருந்தவில்லை; நல்லபொருத்தமுள்ளதாயில்லை. பிராமணரே! அதனால், என்னைப்பார்த்து உமக்கு நான் ஸ்நேகிதனென்று துணிந்து பேசுகிறீர். புத்திக்குறைவுள்ளவரே! அபிஷிக்தியிலிருக்கிறராஜா

---

* விடுவது. † திருப்பியெடுத்துக்கொள்வது. ‡ ஸ்வரூபஜ்ஞானம்.
§ முன்னதாகஅனுஷ்டிக்கவேண்டியவை.

க்களுக்கு அதிர்ஷ்டமும் பொருளுமில்லாத (உம்மைப்போன்ற) இவ்வகையானமனிதர்களோடு ஸ்நேகமிருப்பது எங்குமில்லை. உள்ள ஸ்நேகங்களும் மனிதன்முதிரும்போது காளடைவில் தளர்ந்துபோகின்றன. எனக்கு உம்முடன் ஸ்நேகம் உம்முடையஸாமர்த்தியத்தைப்பற்றி முன்னேஉண்டாயிற்று. இவ்வுலகத்தில யாருடையமனத்திலும் ஸ்நேகம் அழியமால்நிற்பதில்லை. ஸ்நேகத்தைக் பெண்ணுசையும் அழித்துவிடும்; கோபமும் அழித்துவிடும். இவ்வாறு ஒரு காரணம்பற்றியுண்டான பழமையாகப்போனஸ்நேகத்தை நீர் ஆதாவாகப்பற்றுதேயும். பிராம்மணஸ்ரேஷ்டரே! எனக்கு உம்முடன் ஸ்நேகம் காரியத்தைப்பற்றியுண்டாயிருந்தது. தரித்திரன் தனவானுக்கும், மூர்க்கன் வித்வானுக்கும், பேடியானவன் சூரனுக்கும், ஸ்நேகனாவதில்லை. ஸ்நேகிதனென்பதைமுன்னிட்டு ஏன் என்னை விரும்புகின்றீர்? எந்தஇருவருக்கும் ஐச்வரியம்ஸமமாகஇருக்குமோ எந்தஇருவருக்கும் கல்விகேள்விகள் ஸமமாகஇருக்குமோ, அவ்விருவருக்குந்தான் விவாகமும் ஸ்நேகமும் பொருந்தும். வலுத்தவனுக்கும் இளைத்தவனுக்கும் பொருந்தா. வேதமோதாதவன் வேதமோதினவக்கு ஸ்நேகனாகான். ரதமுள்ளவன் ரதமில்லாதவனுக்கு நேசனாகான். ராஜ்யமில்லாதவன் ராஜாவுக்கு ஸ்நேகனாகான். ஸ்நேகனென்பதைமுன்னிட்டு ஏன் என்னைவிரும்புகிறீர்?" என்றான். பரத்வாஜபுத்ரரான துரோணர் துருபதனால் இவ்வாறுசொல்லப்பட்டபின் சற்றுநேரம் கலக்கமுற்றுக் கோபம்மிகுந்தவராயினர். அந்தப்பெருமைபொருந்திய புத்திமான், துருபதனைப்பற்றி மனத்தில் ஒருநிச்சயஞ் செய்துகொண்டு தாம் ஸ்வல்பகாலத்தில்நிறைவேற்றக்கூடிய ஒரு பிரதிஜ்ஞையைச்செய்து சிஷ்யர்களால் சூழப்பட்டவராய்ப் புத்திரருடன் கௌரவராஜர்களின் நகரமாகிய அஸ்தினபுரம்சேர்ந்தார்.

அந்தப்பிராம்மணச்ரேஷ்டரான துரோணர் அஸ்தினபுரம்வந்து அங்கே க்ருபருடைய கிருகத்தில் மறைவாகத் தம்மை யாருக்கும் தெரிவியாமல்வஸித்தார். பிறகு, ஸமர்த்தராகிய அவருடையபுத்ரர், கிருபர்சொல்லிவைத்தபிறகு பாண்டவர்களுக்கு அஸ்திரங்களைக் கற்பித்தார். அவரையும் ஜனங்களறியவில்லை. இவ்வாறு அவர் பிறருக்குத்தெரிவியாமலே அங்கே சிலகாலம் வஸித்தார். பிறகு, வீரர்களாகிய ராஜகுமாரர்கள் சேர்ந்து அஸ்தினபுரத்திலிருந்து வெளியே போய் அவ்விடத்தில் பந்துவிளையாடிக்கொண்டு உத்ஸாஹத்துடன் திரிந்துகொண்டிருந்தனர். அவர்கள் விளையாடும்போது தர்மபுத்திரருடையமோதிரம் கிணற்றில்விழுந்தது; பந்தும் அதிலேயேவிழு

ந்தது. கிணற்றுஜலத்தினால்மூடப்பட்டு ஆகாயத்தில் நக்ஷத்திரத்தின்உருவம்போல் காணப்படும் அந்தமோதிரத்தைக்கண்டு அந்தக்குமாரர்கள் முயற்சியுடன் அந்தக்கிணற்றைச்சுற்றிக்கொண்டனர். பிறகு, அவர்கள் ஊக்கத்துடன் பந்தையெடுக்க முயற்சிசெய்தனர். ஆனால், பந்துகிடைக்கத்தக்கஉபாயத்தை அவர்கள் கண்டுபிடிக்கவில்லை. அதனால் வெட்கித் தலைகுனிந்தவர்களாக ஒருவரையொருவர் பார்த்தனர். உபாயத்தையறியாதவர்களாகவும் அந்தப்பந்தின் மேல் விருப்பங்கொண்டவர்களாகவுமிருந்தனர். அவர்களின்ஸமீபத்தில் அக்னிஹோத்திரம்செய்துகொண்டிருப்பவரும், கறுத்தும் வறுமையுற்றும் நரைத்தும் இளைத்துமிருப்பவரும், பிரயோஜனத்தைவிரும்புகிறவருமாகிய ஒரு பிராமணரைக்கண்டனர். காரியத்திலேயே மனம்வைத்த அந்தக்குமாரர்கள் உத்ஸாஹம்குன்றி அம்மஹாத்மாவானபிராமணரைக்கண்டு அவரிடம்சென்று அவரைச்சூழ்ந்துகொண்டனர். பிறகு, சக்தியுள்ளவரும் தம்காரியத்தைமுக்கியமாகக்கொண்டவருமாகிய துரோணர் இந்தக்குமாரர்களைக்கண்டு மெல்லச்சிரித்து நயமாகப்பேசத்தொடங்கினர். "ஆ! உங்கள்க்ஷத்ரியபலம் என்ன! உங்களுக்கு இதென்ன அஸ்திராப்யாஸம்! பரதவம்சத்திற்பிறந்தவர்கள் பந்தைஎடுக்காமலிருக்கின்றீர்களே! நான் இந்தப்பந்து மோதிரம் இரண்டையும் *சீவீர்க்குக்களினால் எடுத்துவிடுவேன். எனக்குப் போஜனம்கொடுங்கள்" என்றார். உடனே, அவர்களுள் குந்திபுத்ரரானயுதிஷ்டிரர் துரோணரைநோக்கி, "பிராம்மணரே! கிருபருடைய அனுமதியின்மேல் சாஸ்வதமான போஜனத்தை நீர் அடையலாம்" என்றுசொன்னார். இவ்வாறுசொல்லப்பட்ட துரோணர், சிரித்துக்கொண்டு பரதகுமாரர்களைப்பார்த்து, "இந்தப் பிடிஈர்க்குக்களை நான் அஸ்திரமந்திரத்தினால் மந்திரித்திருக்கிறேன்; இவற்றின்சக்தியைப் பாருங்கள். இந்தச்சக்தி மற்றவர்களிடம்இராது. ஓர் ஈர்க்கினால் பந்தைக்குத்துவேன்; அந்தஈர்க்கை மற்றொன்றினாலும் அதையும்வேறொன்றினாலும் சேர்க்கும்போது பந்தை நான் எடுத்துவிடுவேன்" என்றுசொன்னார். பிறகு, துரோணர் தாம்சொன்னதையெல்லாம் சொன்னபடியே சீக்கிரத்தில் செய்தார். அதைக்கண்டு அந்தக்குமாரர்கள் வியப்பினால் மலர்ந்தகண்களோடு இது மிக்கஆச்சரியமென்று நினைத்து, "பிரம்மரிஷியே! இந்தமோதிரத்தையும் சீக்கிரமாக எடுக்கக்கடவீர்" என்றுசொன்னார்கள். பிறகு, ஸமர்த்தரும் பெரும் புகழ்பெற்றவருமாகிய துரோணர் அம்பையும் வில்லையும் எடுத்துக்

* ஒருவகைப்புல்.

கொண்டு அம்பினால் மோதிரத்தைக்குத்தி அதை மேலேற்றினார். அவர் அம்புடன் மோதிரத்தைக் கிணற்றிலிருந்து எடுத்து ஆச்சரியத்துடனிற்கும் குமாரர்களுக்குத் தாம் கர்வப்படாமல் கொடுத்தார். மோதிரம்எடுக்கப்பட்டதைக்கண்டு அந்தக்குமாரர்கள், "பிராமணரே! நமஸ்காரஞ்செய்கிறோம். இந்தஸாமர்த்தியம் மற்றவரிடமில்லை. நீர் யாவர்? யாருடையவர்? உமக்கு நாங்கள் என்னசெய்யக் கடவோம்? நாங்கள் தெரிந்துகொள்ளவேண்டும்" என்று அவரைக் கேட்டனர். இவ்வாறுசொல்லப்பட்ட துரோணர், பிறகு ராஜபுத்திரர்களைப்பார்த்து, "என்உருவத்தையும் குணங்களையுஞ்சொல்லிப் பீஷ்மருக்கு என்னைத்தெரிவியுங்கள். மிகச்சிறந்தபராக்கிரமமுள்ள அந்தப்பீஷ்மரே அறிந்துகொள்வார்"என்றுசொன்னார். குமாரர்கள், 'அப்படியே'என்றுசொல்லி, பீஷ்மரிடம்சென்று அந்தப்பிராமணர்சொன்னதையும் அவருடைய அவ்விதமானசெய்கையையும் முழுவதும் உரைத்தனர். பீஷ்மர் குமாரர்களிடம்கேட்டு அவரைத் துரோணரென்று தெரிந்துகொண்டார். அப்போது ஆயுதம்பிடித்தவர்களிற் சிறந்தவரான பீஷ்மர் அவர்தாம் மிகத்தகுதியுள்ள ஆசாரியரென்று நினைத்து உடனே துரோணரைத் தாமே விசேஷமரியாதையோடு அழைத்துவந்து அவருடையவரவுக்குக் காரணத்தைத் தெளிவாக விசாரித்தார். துரோணரும் அதையெல்லாம் தெரிவிக்கத்தொடங்கினார்.

"தவறுதலில்லாதவரே! நான் முன்னே தனுர்வேதத்தைப்பெற வேண்டுமென்கிறவிருப்பத்தினாலும் அஸ்திரங்களுக்காகவும் அக்னிவேச்யமஹரிஷியிடம் போனேன். அடங்கினமனஸோடுஜடைகளைத் தரித்துக் குருசுஶ்ரூஷையில் ஊக்கத்துடன் பிரம்மசாரியாக அநேக வருஷகாலம் அவரிடம் தீர்க்கவாஸஞ்செய்தேன். பாஞ்சாலதேசத்தவனும் மஹாபலசாலியும் பிரபுவுமான யஜ்ஞஸேனனென்னும் ராஜகுமாரனும் அஸ்திரங்களுக்காக அவரிடத்திலேயே குருகுலவாஸஞ் செய்தான். அங்கே அவன் எனக்குச் ஸ்னேகிதனாகவும் உதவிசெய்பவனாகவும் அன்புள்ளவனாகவுமிருந்தான். கௌரவவம்சத்துப்பிரபுவே! பீஷ்மரே! நான் சிறுபிராயமுதல் அவனோடுசேர்ந்து வெகுகாலம் கூடவே அத்தியயனஞ்செய்துகொண்டிருக்கும்போது, எனக்குப்பிரியமாகப்பேசுகிறவனும் என் பிரியத்தையேசெய்கிறவனுமாகிய அந்த எனதுஸ்னேகிதன் என்னைப்பார்த்து, "துரோணரே! மஹாத்மாவாகிய என்தந்தைக்கு நான் மிக்கஅன்புள்ளபுதல்வன். அந்தப் பாஞ்சாலராஜா, "எப்போது எனக்கு ராஜ்யபட்டாபிஷேகம் செய்யப்

போகிருரோ அப்போது அதில் பாதிராஜ்யம் நீர் அனுபவிக்கத்தக் கது ; என்ஸத்நியத்தின்மேல் ஆணையிடுகிறேன் ; என்னுடையபோக ங்களும் தனமும் ஸுகமும் உம்முடையஸ்வாதீனம்" என்று எனக்கு ஸந்தோஷத்தைவிருத்திசெய்கிறசொல்லைச் சொன்னான். இவ்வாறு சொல்லி அஸ்திரங்களைக்கற்றுக்கொண்டபிறகு, என்னால்கௌரவிக் கப்பட்டுச் சென்றான். அப்படி அவனால் சொல்லப்பட்ட நான் அப் போதுமுதல் அந்தச்சொல்லை எப்பொழுதும் மனத்தில் நினைத்துக் கொண்டு பிதாவின்கட்டளைப்படி புத்திரலாபத்திற்காகப் புகழ்பெற்ற வளும், சிறந்தபுத்தியுள்ளவளும், மஹாபதிவிரதையும், அக்கிஹோ த்திரத்திலும் வேள்வியிலும் இந்திரியஜயத்திலும் எப்போதும்ஊக் கமுள்ளவளுமாகிய ஸத்வகுணமுடையபுத்திரியான க்ருபியை விவாஹம் செய்துகொண்டேன். அந்தக்கௌதமியாகிய கிருபி பயப்படத்தக்க ஸாமர்த்தியத்தையும் செய்கையையுமுடையவனும் சூரியனுக்கொப் பான ப்ரதாபமுள்ளவனுமாகிய அச்வத்தாமாஎன்னும்ஔரஸபுத்தி ரனைப் பெற்றாள். என்னால் பரத்வாஜர் எப்படியோ அப்படியே நான் அந்தப்புத்ரனால் ஸந்தோஷமுற்றேன். அங்குள்ள தனிகர்களுடைய பிள்ளைகள் பசுவின்பால்குடிக்கக்கண்டு குழந்தையான அசுவத்தாமா அழுதான். அது என்னைத் திசைமயங்கச்செய்தது. பீஷ்மரே! ஸ்வதர்மத்திலிருக்கும்*ஸ்நாதகன் கஷ்டப்படக்கூடாது என்று மன விஸ்நிச்சயம்செய்துகொண்டு சுத்தமான தனத்தைத் தர்மமாகஸம்பா திக்கநினைத்து அந்தத்தேசமெல்லாம் இந்தக்கோடிக்கு அந்தக்கோடி அனேகம்தரம் சுற்றித்திரிந்தும் ஒருகறக்கிறபசு எனக்குக்கிடைக் காமற்போயிற்று. இந்தக்குமாரனை யவஅரிசியின் மாக்கரைத்தஜலத் தைக்கொடுத்து ஏமாற்றினேன். கௌரவரே! இக்குழந்தை மாக் கரைத்தஜலத்தைக்குடித்து இளமையினால் 'தெரியாமல் நானும்பால் குடித்தேனென்று மகிழ்ந்து எழுந்து கூத்தாடினான். கூத்தாடிக் கொண்டு குழந்தைகளால்சுற்றிக்கொள்ளப்பட்டுப் பரிகாசம்செய்யத் தக்கநிலைமையையடைந்த அந்தப்புத்திரனைக்கண்டு அதனால் எனக்கு வருத்தமுண்டாயிற்று. "ஏழையான துரோணனால் என்னஉதவி? அவனுக்குத் தனம்கிடைக்கிறதில்லை. அவன்பிள்ளை பாலின்மேல் ஆசையினால் கரைத்தமாவைக்குடித்து ஆனந்தம்கொண்டு நானும் பால்குடித்தேனென்று கூத்தாடுகிறான்" என்று பேசிக்கொள்ளும் ஜனங்களின்சொல்லைக்கேட்டபிறகு என்னறிவு விழுந்தது. நான் எனக்குள்ளேயே நிந்தித்துக்கொண்டு, "நான் பிராமணர்களால்விடப்

---

* ஆதிபர்வம், கஎ, ௫௫அ, ௬௬௬-வது பக்கங்களின் குறிப்புக்களிற் காண்க.

பட்டு இகழப்பட்டவனுக வஸித்தாலும் வஸிப்பேன். பொருளா சைப்பட்டுப் பிறரிடம் மிக்கஇழிவானஸேவையைச் செய்யேன்'' என்று மனத்தில்நினைத்தேன். பீஷ்மரே! இவ்வாறு நினைத்து, பிறகு, நான் என்பத்நியுடன்கூட என்பிரியமானபுத்திரனை அழைத்துக்கொ ண்டு பழைய ஸ்னேகத்தையனுஸரித்துத் துருபதனிடம்சென்றேன். துருபதனுக்குப் பட்டாபிஷேகமானதைக்கேட்டதும், அவனுடைய ஸ்னேகத்தையும் அந்தவாக்கையும் நினைத்து நான் க்ருதார்த்தனெ ன்று எண்ணி ராஜ்யாதிபத்நியத்திலிருக்கும் சினேகிதனிடம் மிகுந்த ஸந்தோஷத்தோடு போனேன். பிரபுவே! துருபதினிடம்சென்ற போது, ஸ்னேகிதன் என்பதை முன்னிட்டு, "புருஷஸ்ரேஷ்டனே! என்னை ஸ்னேகிதனுக அறி" என்றுசொன்னேன். துருபதனிடம் சினேகிதனேப்போலவே நெருங்கி ஸந்தித்தேன். அவன் என்னை முன்அறியாதவன்போல் சிரித்துக்கொண்டு பின்வருமாறுசொல்லலா னன்: "பிராமணரே! உம்முடைய இந்தப்புத்தி திருந்தவில்லை. நல்ல பொருத்தமுள்ளதாக இல்லை. பிராமணரே! அதனுல் என்னைப்பார் த்து உமக்கு நான் ஸ்நேகிதனென்று துணிந்து பேசுகிறீர். இவ்வுல கத்தில் சினேகங்கள் மனிதன்முதிரும்போது நாளடைவில் தளர்ந்து போகின்றன. எனக்கு உம்முடன் ஸ்நேகம் உம்முடைய ஸாமர்த்திய த்தைப்பற்றி முன்னேயுண்டாயிற்று. வேதம் தெரியாதவன் வேதம் தெரிந்தவனுக்கும், ரதமில்லாதவன் ரதமுள்ளவனுக்கும், சினேகித ராகார். ஒற்றுமையினுல் ஸ்நேகமுண்டாகிறது; வேற்றுமையினுல் இல்லாமற்போகிறது. உலகத்தில் ஸ்னேகம் அழியாமலிருப்பது எக் காலத்திலும் யாருக்கும் இல்லை. ஸ்நேகத்தைப் பெண்ணுசையும் அழித்துவிடும்; கோபமும் அழித்துவிடும். இவ்வாறு ஒருகாரணம் பற்றி உண்டாகிப் பிறகு பழமையாகப்போனஸ்னேகத்தை நீர் ஆதர வாகப்பற்ருதேயும். பிராமணஸ்ரேஷ்டரே! எனக்கு உம்முடன் ஸ்நேகம் காரியத்தைப்பற்றி உண்டாயிருந்தது. தரித்திரன் தனவா னுக்கும், மூர்க்கன் வித்வானுக்கும், கையாலாகாதவன் சூரனுக்கும் ஸ்நேகராவதில்லை. ஸ்நேகிதனென்பதைமுன்னிட்டு ஏன் என்னை விரும்புகிறீர்? புத்திக்குறைவுள்ளவரே! அபிவிருத்தியிலிருக்கிற அரசர்களுக்கு அதிர்ஷ்டமும் பொருளுமில்லாத இவ்வகையான மனிதர்களோடு ஸ்நேகமிருப்பது எங்குமில்லை. வேதமோதாதவன் வேதமோதினவனுக்கும், ரதமில்லாதவன் ரதமுள்ளவனுக்கும், ராஜ்ய மில்லாதவன் ராஜாவுக்கும் ஸ்நேகராகார். ஸ்நேகிதனென்பதை முன்னிட்டு ஏன் என்னை விரும்புகிறீர்? நான் ராஜ்யத்தைப்பற்றி

உமக்குப் பிரதிஜ்ஞைசெய்திருப்பதாக எனக்குத் தெரியவில்லை. பிராமணரே! ஒரு ராத்திரிமட்டும் நீர்விரும்பினபோஜனத்தைக்கொடுப்பேன்" என்றான். இவ்வாறு அவனால் உரைக்கப்பட்ட நான் ஸ்வல்பகாலத்தில் நிறைவேற்றக்கூடிய ஒரு பிரதிஜ்ஞையைச்செய்து அப்போதே என்மனைவியுடன் புறப்பட்டேன். பீஷ்மரே! இவ்வாறு துருபதனால்சொல்லப்பட்ட நான் கோபம்நிரம்பிக் குணமுள்ளசிஷ்யர்களைவேண்டிக் கௌரவர்களிடம் வந்தேன். அதனால், உம்முடைய மனோரதத்தைப் பூர்த்திசெய்வதற்காக நான் அங்கிருந்து இந்தஅழகான அஸ்தினாபுரத்திற்கு வந்திருக்கிறேன். உமக்கு என்னசெய்யக்கடவேன்? சொல்லும்" என்று துரோணர் சொன்னார். இவ்வாறு சொல்லப்பட்ட பீஷ்மர், துரோணரைப்பார்த்து அப்போதே, "வில்லில் ஏறிடப்பட்டநாணைத் தளர்த்தலாம். நல்ல அஸ்திரவித்தையைக் கொடும். கௌரவர்களின்க்ருகத்தில் விசேஷமாகக்கௌரவிக்கப்பட்டு ஸந்தோஷத்துடன் ஸௌக்கியங்களையனுபவியும். கௌரவர்களுக்குள்ளதனம் ராஜ்யாதிபத்தியம் தேசங்கள் ஆகிய எல்லாவற்றிற்கும் நீரே முதன்மையானராஜா. எல்லாரும் உமக்கு ஏவல்செய்கிறவர்கள். பிராமணரே! நீர் வேண்டினது எதுவோ அதுசெய்யப்பட்டதென்று நினைக்கவேண்டும். பிரம்மரிஷியே! நீர்வந்தது ஸந்தோஷம். என்னிடத்தில் பெரியஅனுக்கிரஹம்செய்திருக்கிறீர்" என்றுசொன்னார்.

---

## நூற்றுநாற்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



**(துரோணர், கௌரவபாண்டவர்களைச் சிஷ்யர்களாக அங்கீகரித்ததும், அர்ச்சுனனுக்கு ரஹஸ்யங்களை விசேஷமாகச் சொன்னதும், துரோணாசாரியாதுப்ரதிமையை ஆராதித்து ஏகலவ்யன் தனுர்வித்தையில் தேர்ச்சியடைந்ததும், வேட்டைக்காகப்போன பாண்டவர்கள் அதைக்கண்டபிறகு அர்ச்சுனனுக்காகத் துரோணர் ஏகலவ்யனிடம்சென்று அவன்வலக்கைக்கட்டைவிரலைத் தக்ஷிணையாகவாங்கினதும், துரோணர் சிஷ்யர்களைப் பரீக்ஷைசெய்ததும்.)**

**பீ**ஷ்மர் அந்தத்துரோணரைக் குருவாக அங்கீகரித்தார். ராஜாவே! பீஷ்மர், பாண்டவர்களுடன்கூட அந்தப்பேரன்மார்களனைவரையும்அழைத்துக்கொண்டு 'இவர்கள்உமதுசிஷ்யர்கள்' என்றுசொல்லிப் பலவகையானதனங்களோடு சாஸ்திரப்பிரகாரம் துரோணருக்குஅர்ப்

பணம்செய்தார். அப்போது துரோணர் புத்திமான்களுட்சிறந்தவ ராகிய பீஷ்மரைநோக்கி, "ஆயுதங்கள்தெரிந்தவரும் சிறந்தபிரஜ்ஞை யுள்ளவரென்று எல்லாராலும்மதிக்கப்பெற்றவருமாகிய கிருபாசாரி யரும்இருக்கிறார். ராஜாவே ! நான்இருப்பதில் அந்தப்பிராமணர் மன வருத்தத்தை அடைவாராயின் நான் உங்களிடம்கொஞ்சம்தனத்தை யாசித்துப்பெற்றுக்கொண்டு ஸந்தோஷமடைந்து வந்தபடியே என் ஆச்ரமத்திற்குச் செல்வேன்" என்றசொல்லைச்சொன்னார். இவ் வாறுசொன்னவுடன், யுத்தவீரரிற்சிறந்தவரான பீஷ்மர், பிராம்மண ஶ்ரேஷ்டரும் ஆசாரியர்களில்முதன்மையானவரும் ஆயுதம்தெரிந்த வர்களுக்குள் மேலானவருமாகிய துரோணரை நோக்கி, "கிருபர் இரு க்கட்டும். அவர், நான் எப்பொழுதும்பூஜிப்பதற்கும்போஷிப்பதற்கும் உரியவர். நீர் என்னுடைய பேரன்மார்களுக்குக் குருவாகஇரும். உம் மைத்தான் ஆசாரியராக நான்நினைக்கிறேன். இந்தக்குமாரர்களை அங்கீ கரித்துக்கொள்ளும். இவர்களை எப்போதும் வைத்துக்கொண்டு அஸ் திரங்கள்தெரிந்தவர்களாகச்செய்யக்கடவீர்" என்றுசொன்னார். மனி தர்களிற்சிறந்தவரும் மஹாபராக்ரமசாலியுமான துரோணர் பீஷ்ம ரால் கௌரவிக்கப்பட்டபிறகு, கௌரவர்களின்கிருஹத்தில் அர்க்கிய பாத்யம்முதலிய ஸத்காரமடைந்து களைப்பாறினார். அந்தக்குருவான வர் களைப்பாறினபின், பீஷ்மர், தம்பேரன்மார்களாகிய குருவம்சபுத் திரர்களையழைத்துக்கொண்டு பலவகைப்பொருள்களுடன் சிஷ்யர்க ளாகக்கொடுத்தார். பிரபுவாகியபீஷ்மர், வேண்டியபண்டங்களினால் செம்மையாக நிரப்பப்பட்டதும் தனதானியங்கள் நிரம்பினதுமாகிய வீட்டை மிகுந்தஸந்தோஷத்துடன் துரோணருக்குக்கொடுத்தார். அந்தச்சிறந்தவில்லாளியான துரோணர் மனமகிழ்ந்து பாண்டுபுத்திரர் களும் த்ருதராஷ்டிரபுத்திரர்களுமாகிய அந்தக்கௌரவர்களைச்சிஷ்யர் களாகஏற்றுக்கொண்டார். துரோணர் ஸந்தோஷமடைந்து அவர்க ளெல்லாரையும் அங்கீகரித்து யாருமில்லாமல் தாம்மட்டும் தனித் திருக்கையில் பாதங்களில்வந்தனஞ்செய்த அவர்களைநோக்கி, "குற்ற மற்றவர்களே! நான்விரும்பியகாரியம் ஒன்று என்னுள்ளத்தில் இடைவிடாமலிருக்கிறது. நீங்கள் அஸ்திரங்களில் தேர்ந்தபின் என க்கு அதனை நிறைவேற்றவேண்டும். அதைப்பற்றிச் சொல்லுங்கள்" என்று சொன்னார். ஜனமேஜயராஜாவே! அதைக்கேட்டு அந்தக் கௌரவர்கள் ஒன்றும் பேசாமலிருந்தனர். வீரரே ! அர்ச்சுனன்மட் டும் அவர்கேட்டதையெல்லாம் வாக்குத்தத்தம்செய்தான். அதனால் துரோணர் அப்போதே அர்ச்சுனனைப் பலமுறை உச்சிமோந்து அன்

புடன் தழுவிக்கொண்டு உடனே ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார். துரோணர் அசுவத்தாமாவை அழைத்து, "அர்ச்சுனனை உனக்குச் சிநேகிதனாக அறி. என்னால்கொடுக்கப்பட்ட இவனை நீ வாங்கிக்கொள்" என்றுசொன்னார். பாண்டுபுத்திரனாகிய அர்ச்சுனன், 'நல்லது, நல்லது' என்றுசொல்லி அசுவத்தாமாவைக்கட்டிக்கொண்டு துரோணரைப்பார்த்து, "பிராம்மணஸ்ரேஷ்டரே! இன்றுமுதல்நியாயப்படிஉமக்குஉட்பட்டவனாக இருக்கிறேன். நான் சிஷ்யன். பிராம்மணோத்தமரே! உமது அருளினால் ஜீவிக்கிறேன்" என்றுசொல்லி அப்போதே அவர்பாதங்களைப் பிடித்துக்கொண்டான். பிறகு, வீரரான துரோணர் பாண்டவர்களுக்குத் தேவசம்பந்தமும் மனுஷ்யசம்பந்தமுமாகிய அனேகவிதங்களான அஸ்திரங்களைக் கற்பித்தார். பரதஸ்ரேஷ்டரே! யாதவர்களும் அந்தகதேசத்தவரும் இன்னும்பலதேசத்தவருமாகிய அனேகராஜகுமாரர்களும் ராஜாக்களும் வந்துசேர்ந்து அஸ்திரவித்தைக்காகப் பிராமணச்ரேஷ்டரான துரோணரை அடைந்தார்கள். அப்போது தேரோட்டுகிறவனுக்கும் ராதையென்பவளுக்கும் புத்திரனாகிய கர்ணன் துரோணரைக் குருவாகஅடைந்தான். மிகவும்பெருமைக்காரனாகிய அந்தஸாரதியின்புத்திரன் அர்ச்சுனன் மீது பொறாமையுற்றுத் துர்யோதனனிடம்சேர்ந்துகொண்டு பாண்டவர்களை அவமதித்தான். அதனால், அவன் தனுர்வேதம்கற்கவேண்டுமென்கிறஆசையோடுதுரோணரை அடைந்தான். பாண்டுபுத்திரனாகிய அர்ச்சுனன் அப்யாஸத்தினாலும் புஜபலத்தினாலும் விடாமுயற்சியினாலும் அஸ்திரவித்தையிலுள்ள ஆசையினாலும்அவர்களெல்லாரிலும் சிறப்புற்றவனானான். அர்ச்சுனன், அஸ்திரப்பிரயோகம் ஒன்றாயிருந்தும் லாகவமாகச்செய்வதிலும் செய்கைக்குத்தக்கபடி அங்கங்களை அமைத்துக்கொள்வதிலும் எல்லாச்சிஷ்யர்களிலும் மேலாக இருந்தான். துரோணர் உபதேசிக்குங்காலங்களில் இந்திரபுத்திரனாகிய அர்ச்சுனனை ஒப்பற்றவனென்று நினைத்தார். இவ்வாறு எல்லாக்குமாரர்களுக்கும் பாணங்களையும் அஸ்திரங்களையும் கற்பித்தார். துரோணர் காலதாமதமாக வரவேண்டுமென்பதை உத்தேசித்தே எல்லாக்குமாரர்களுக்கும் * கமண்டலுவைக் கொடுத்தார். சீக்கிரம்வருவதை உத்தேசித்துத் தமதுபுத்திரரிடம் குடத்தைக்கொடுத்தார். அந்தக்குமாரர்கள் வருவதற்குள்ளாகவே தம் புத்திரருக்கு ரகஸ்யமான செய்கையை உபதேசித்தார். அந்தச்செய்கையை அர்ச்சுனன் ஊகித்துத் தெரிந்துகொண்டான். பிறகு, அந்த

* குறுகியவாயையுடையதாதலால் விரைவில் ஜலம் நிரம்பாது.

அர்ச்சுனன் வாருணாஸ்திரத்தினால் கமண்டலுவைநிரப்பிக்கொண்டு ஆசாரியபுத்திரருடன்கூடவே ஆசாரியரிடம் வந்தான். சிறந்தபுத்தியுள்ளவனும் அஸ்திரங்கள் தெரிந்தவர்களில் மேலானவனுமாகிய அந்தஅர்ச்சுனன், விசேஷங்களைத் தெரிந்துகொள்ளும் தருணங்களில் அந்த ஆசாரியபுத்திரரைவிட்டுத் தனித்துப்பிரியவில்லை. அர்ச்சுனன் குருவைப்பூஜிப்பதில் மிகுந்த முயற்சியை எடுத்துக்கொண்டான். அஸ்திரங்களிலும் அதிக ஊக்கம்வைத்தான்; துரோணருக்குப்பிரியமாகவுமிருந்தான். அர்ச்சுனன் பாணங்களைப்பற்றியும் அஸ்திரங்களைப்பற்றியும் எப்போதும் முயற்சியோடிருப்பதைக்கண்டு, துரோணர் சமையற்காரனை அழைத்து ரகஸ்யமாக, "நீ ஒருபோதும் அர்ச்சுனனுக்கு இருட்டானஇடத்தில் அன்னம்போடவேண்டாம். இப்படி நான்சொன்னதை நீ அருச்சுனனிடத்தில்சொல்லக்கூடாது" என்றுசொன்னார். பிறகு, ஒருகாலத்தில் அர்ச்சுனன் புசித்துக்கொண்டிருக்கையில் காற்று மிகுதியாக அடித்தது. அதனால், அங்கே எரிந்துகொண்டிருந்த அந்தத்தீபம் அவிக்கப்பட்டது. அர்ச்சுனன் சாப்பிட்டுக்கொண்டேதான் இருந்தான். அந்தத் தேஜஸ்வியான அர்ச்சுனனுடையகை வாயைத்தப்பி வேறிடம்செல்லவில்லை. சிறந்தகைகளையுடைய அந்தப் பாண்டுபுத்திரனாகிய அர்ச்சுனன் அது அப்யாஸத்தால் உண்டானதென்று நினைத்து அப்யாஸத்தைச் செய்யக்கருதி ராத்திரியிலும் விற்பயிற்சி செய்துகொண்டிருந்தான். பாரதரே! அவனுடையவில்லின்நாண் உள்ளங்கையில் உரைந்ததனாலுண்டான சப்தத்தைக்கேட்டுத் துரோணர் எழுந்துவந்து அவனைத் தழுவிக்கொண்டு, "இந்தஉலகத்தில் உன்னைப்போன்ற வில்லாளி வேறொருவன்இல்லாமலிருக்கும்படி பயிற்சிசெய்விக்கப்போகிறேன். இதனை உனக்கு உண்மையாகச் சொல்லுகிறேன்" என்றுசொன்னார்.

பிறகு, துரோணர் அர்ச்சுனனை மறுபடியும் குதிரைச் சண்டையிலும் யானைச்சண்டையிலும் தேர்ச்சண்டையிலும் கால்நடையுத்தத்திலும் பழக்கினார். துரோணர் கௌரவர்களுக்குக் கதாயுத்தத்திலும் கத்திச்சிலம்பத்திலும் தோமரங்கள் ஈட்டிகள் சக்தியாயுதங்கள் ஆகிய இவற்றின்சிலம்பத்திலும் பல ஆயுதங்கள்கலந்த சண்டையிலும் கற்பித்தார். துரோணருடைய அந்தஸாமர்த்தியத்தைக்கேள்வியுற்றுத் தனுர்வேதத்தைக்கற்க ஆவலுடன் ராஜாக்களும் ராஜகுமாரர்களும் ஆயிரக்கணக்காக வந்துசேர்ந்தனர். ஆயுததாரிகளிற்சிறந்தவரான துரோணர் அவர்களெல்லாருக்கும் சிக்ஷைசொல்லிவைத்தார். மஹாராஜாவே! அதன்பின், வேடர்களுக்கு அரசனாகிய ஹிர

ண்யதனுஸ் என்பவனுடைய மகனை ஏகலவ்யனென்பவன் துரோணரிடம் வந்துசேர்ந்தான். தர்மந்தெரிந்த துரோணர் கௌரவர்களிடமுள்ளதாக்ஷிண்யத்தினுல் சிந்தித்து அவன்வேடன்மகனென்று சொல்லி அவனை வில்வித்தையில் சிஷ்யனுகஅங்கீகரிக்காமலிருந்தார். அவனைப்பார்த்து, "ஓ! நிஷாதபுத்திரனே! நீ எப்போதும் பாணப்பிரயோகத்தில் மிகுந்தபலமுள்ளவனுவாய்; என்சிஷ்யன்தான்; உன் வீட்டுக்குத்திரும்பிச்செல்; உனக்கு அனுமதிகொடுத்தேன்" என்று சொன்னர். வீரனுகிய அந்தஏகலவ்யனேவெனின், துரோணருடைய பாதங்களைச் சிரஸினுல் வந்தனஞ்செய்து காட்டுக்குச்சென்று மண்ணுல் துரோணரைப்போல்(ஒருபதுமை)செய்து அதனிடத்தில் உயர்ந்த ஆசாரியனிடத்தில் செய்யவேண்டியவழிபாடுகளைச்செய்துகொண்டு சிறந்தநியமத்துடன் அப்போதுமுதல் பாணங்களிலும் அஸ்திரங்களிலும் பயிற்சிசெய்யத்தொடங்கினுன். அவன் மிகுந்தசிரத்தையோடும் சிறந்தஅப்யாஸத்தோடும் பாணத்தைஎடுப்பதிலும் தொடுப்பதிலும் விடுப்பதிலும் மிகுந்தலாகவத்தையடைந்தான்; லாகவத்தையும் அஸ்திராப்யாஸத்தையும் சீக்கிரமாகத் தெரிந்துகொண்டான். பிறகு, ஒருகாலத்தில் பகைவர்களை அழிப்பவர்களாகிய கௌரவர்களும்பாண்டவர்களுமாகியஅனைவரும் துரோணரால் அனுமதிகொடுக்கப்பெற்றுத் தேர்களிலேறி வேட்டைக்குப்புறப்பட்டனர். ராஜாவே! அப்போது ஒருமனிதன் ஆயுதங்களையெடுத்துக்கொண்டும் ஒரு நாயைஅழைத்துக்கொண்டும் தனியாகப் பாண்டவர்களின்பின்சென்றுன். அவர்கள்பற்பலஆயுதக்கிரியைகளைச்செய்யக்கருதி அந்தவனத்தில்ஸஞ்சரிக்கையில், வழியோடுவிளையாடிக்கொண்டுஸஞ்சரித்தஅந்த நாய் வேடச்சிறுவனிடம் சென்றது. அந்தநாய் கறுத்தவனும் உடம்பில் அழுக்கைப்பூசிக்கொண்டவனும் மான்தோலையும் ஜடையையும் தரித்தவனுமாகிய வேடச்சிறுவனைக்கண்டு குரைத்துக்கொண்டு அவனருகில்நின்றது. அவன்அப்போது அஸ்திரப்பிரயோகத்தில் தன்னுடைய லாகவத்தைக் காண்பித்து அந்தக் குரைக்கின்ற நாயின்வாயில் ஏழுபாணங்களை ஒருகொத்தாகவிடுவதுபோல்விடுத்தான். அந்தநாய் பாணங்களினுல் நிரப்பப்பட்டவாயுடன் பாண்டவர்களிடம்வந்தது. வீரர்களானபாண்டவர்கள் அதைக்கண்டு மிகுந்த ஆச்சரியம்கொண்டனர். அவனுடைய உயர்ந்தலாகவத்தையும் சத்தத்தினுல்குறியை அடிப்பதையும் கண்டு அவர்களனைவரும் நாணமுற்றனர்; அவனைச் சிலாகிக்கவும்சிலாகித்தனர். ராஜாவே! அப்போது அந்தப்பாண்டவர்கள் வனத்தில்தேடி இடைவிடாமல் சரங்களைவிடுத்துக்கொண்

டிருக்கும் அந்தவேடனைக்கண்டனர். பார்வைக்கு விகாரமாயிருக்கும் அவனை அவர்கள் இன்னானென்றறியவில்லை. அதனால், 'நீ யார்?' என்றும், 'யாருடையவன்?' என்றும் கேட்டனர். அவன், "வீரர்களே! வேடர்க்கரசனாகிய ஹிரண்யதனுஸ்என்பவனுடைய புத்திரனென்றும், தனுர்வேதத்தில் அப்பியாஸம்செய்துகொண்டிருக்கும் துரோணசிஷ்யனென்றும் என்னையறியுங்கள்" என்றுசொன்னான். அந்தப்பாண்டவர்கள் அவனைச் சரியாகத்தெரிந்துகொண்டு திரும்பி வந்து வனத்தில்நடந்தஆச்சரியமெல்லாவற்றையும் நடந்தபடி துரோணருக்கு உரைத்தனர். ராஜாவே! குந்திபுத்திரனாகிய அர்ச்சுனன் மட்டும் ஏகலவ்யனையேநினைத்துக்கொண்டு ஏகாந்தத்தில் துரோணரிடம்சென்று ஸ்நேகத்துடன், "ஐயா! நீங்கள் என் ஒருவனை அன்புடன்தழுவிக்கொண்டு, 'உனக்குமேற்பட்டசிஷ்யன்எனக்கில்லை' என்றசொல்லைச்சொன்னீர்கள். அப்படியிருக்க, நிஷாதராஜன்புத்திரன்என்னைவிடவும் லோகத்தைவிடவும் சிறந்தபராக்கிரமமுள்ள வேறொரு சிஷ்யனாக உங்களுக்கிருப்பது எவ்வாறு?" என்றுகேட்டான். துரோணர் அந்தவிஷயத்தைப்பற்றிச் சற்றுநேரம் சிந்தித்துப்பார்த்து அர்ச்சுனனையழைத்துக்கொண்டு நிஷாதபுத்ரனிடம்சென்றார். சரீரமெல்லாம் அழுக்குப்படிந்து ஜடைதரித்து மரவுரியுடுத்து வில்லும்கையுமாக இடைவிடாமல்சரங்களைவிடுத்துக்கொண்டிருக்கும் ஏகலவ்யனைக்கண்டார். ஏகலவ்யன் அருகில்வரும் துரோணரைக்கண்டு எதிர்கொண்டுபோய்ப் பாதங்களைப்பிடித்துக்கொண்டு பூமியில்தலைபட வந்தனஞ்செய்தான். பிறகு, அந்தநிஷாதபுத்ரன் துரோணரைக் கிரமப்படிபூஜித்துத் தன்னைச் சிஷ்யனென்றுதெரிவித்துக் கைகூப்பி அவர்முன்நின்றான். ராஜாவே! பிறகு, துரோணர் ஏகலவ்யனைநோக்கி, "வீரனே! நீ என்சிஷ்யனாயின் எனக்குக்குருதக்ஷிணைகொடுக்கவேண்டும்" என்றுசொன்னார். ஏகலவ்யன் அதைக்கேட்டுச் சந்தோஷத்துடன், "பகவானே! நான் என்னகொடுக்கவேண்டும்? குரு எனக்குக்கட்டளையிடவேண்டும். சிறந்தபிரம்மஜ்ஞானியே! குருவுக்குக் கொடுக்கத்தகாததுஎனக்கு ஒன்றுமில்லை" என்றுசொன்னான். துரோணர், அவனை, "நீ வலக்கைக்கட்டைவிரலைக் கொடுக்கவேண்டும்" என்றுசொன்னார். எப்போதும் ஸத்தியந்தவறாதவனாகிய ஏகலவ்யன் துரோணருடைய அந்தக்கொடுஞ்சொல்லைக்கேட்டுத் தன்சொல்லைக் காப்பாற்றுவதற்காக முன்போலவே மலர்ந்தமுகத்தோடும் முன்போலவே உற்சாகமுள்ளமனத்தோடும் ஒன்றும்சிந்திக்காமல் தனதுஅந்த வலக்கைக்கட்டைவிரலை வெட்டித் துரோணருக்குக் கொடுத்தான்.

அதன்பின், அந்தவேடன் பாணத்தை மற்றைவிரல்களால் இழுத்து விட்டான். ராஜாவே! முன்னிருந்ததுபோல் விரைவாகஇருக்கவில்லை. பிறகு, அர்ச்சுனன் மனமகிழ்ந்து ஜ்வரம்விட்டவனானான். துரோண ரும் சொல்தவருதவரானார். மற்றொருவன் அர்ச்சுனனைவெல்லப்போவ தில்லை. எப்போதும் சீறினமனமுள்ள துரியோதனனும் பீமனும் அப்போது துரோணருக்குக் கதைப்பயிற்சியுள்ள சிஷ்யர்களாயிருந் தனர். அசுவத்தாமா * ரகஸ்யங்களெல்லாவற்றிலும் மேலாகஇருந் தார். அப்படியே இரட்டையராகிய நகுலஸஹதேவர்களிருவரும் மற்றவீரர்களைக்காட்டிலும் மேலான சிலம்பக்காரர்களாக இருந்தனர். யுதிஷ்டிரர் தேர்ச்சண்டையில் சிறந்தவரானார். அர்ச்சுனன் எல்லா வற்றிலும் புகழ்பெற்றுக் கடல்சூழ்ந்தஉலகத்தில் தேராளிகளின் அதி பதிகளுக்கும் அதிபதியாகியும், புத்தியிலும் யோகசக்தியிலும் பலத் திலும் உற்சாகத்திலும் எல்லா அஸ்திரங்களிலும் தேர்ச்சியடைந்தவ னாகியும், அஸ்திரவித்தையிலும் குருபக்தியிலும் எல்லாரிலும்மேலாக இருந்தான். அஸ்த்ரோபதேசம் எல்லாருக்கும் ஒன்றாகஇருந்தும் அந்தவீரனாகிய அர்ச்சுனன்ஒருவன் அவயவங்களின் அமைப்பினால் எல்லாக்குமாரர்களிலும்மேலானவீரனாகஇருந்தான். பலத்தில் அதி கரித்தபீமஸேனன்மேலும் வித்தையில்தேர்ந்த அர்ச்சுனன்மேலும் துராத்மாக்களாகிய திருதராஷ்டிரபுத்திரர்கள் ஒன்றுசேர்ந்து பொறா மையுற்றனர். எல்லாவித்தைகளிலும் அஸ்திரங்களிலும்கற்றுணர்ந்த அவர்களெல்லாரையும்கூட்டிப்புருஷச்ரேஷ்டராகிய துரோணர்லக்ஷ யத்தை அடிக்கும்விஷயத்தில் பரீக்ஷைசெய்யக்கருதி, குமாரர்களுக் குத்தெரியாமல் சிற்பிகளாற்செய்யப்பட்ட ஒரு †பாஸபக்ஷியைப்போ ன்றபதுமையை மரத்தின் நுனியிலேற்றி அதை அவர்களுக்குக் குறி யாகக்காண்பித்தார். "நீங்களனைவரும் சீக்கிரமாக வில்லுகளெல்லா வற்றையும் எடுத்துக்கொண்டு அம்புகளைத்தொடுத்து இந்தப்பாஸம் என்னும்பக்ஷியைக்குறியிட்டு நில்லுங்கள். என்சொல்புறப்படுங்கால த்தில் இதன்சிரஸைத் தள்ளிவிடவேண்டும். ஒவ்வொருவனாகக் கட் டளையிடுவேன். புத்திரர்களே! அவ்வாறு செய்யுங்கள்" என்று துரோணர் சொன்னார்.

பிறகு, அங்கிரஸ்வம்சத்தாரில்சிறந்தவராகிய துரோணர் முதலில் யுதிஷ்டிரரைநோக்கி, "ஜயிக்கக்கூடாதவீரனே! பாணத்தைத்தொடு; என்சொல்லின்முடிவில் அதைவிடு" என்றார். குருவின்வாக்கியத்தி னால் தூண்டப்பட்டவீரரானயுதிஷ்டிரர், உடனே முதலில்வில்லையெடு

* மந்திரத்தியானமுதலியவை. † கள்ளிக்காக்கை.

த்துப் பாஸபக்ஷியைக்குறிவைத்து நின்றார். பரதஸ்ரேஷ்டரே! பிறகு துரோணர், வில்லைவளைத்துக்கொண்டிருக்கும் அந்தக்கௌரவபுத்திராகியயுதிஷ்டிரரைநோக்கிச் சற்றுநேரம்பொறுத்து,"ராஜகுமாரனே! மரத்தின்நுனியிலிருக்கும் பாஸபக்ஷியை நீ பார்க்கிறாயா ?" என்று கேட்டார். யுதிஷ்டிரர், 'பார்க்கிறேன்' என்று ஆசாரியருக்கு மறுமொழிசொன்னார். மறுபடியும் சற்றுநேரம்பொறுத்துத் துரோணர், "இந்தமரத்தையும் என்னையும் உன்சகோதரர்களையும் பார்க்கிறாயா ?" என்று யுதிஷ்டிரரைக்கேட்டார். அதற்கும் அந்த யுதிஷ்டிரர், " இந்தமரத்தையும் உங்களையும் என்ஸகோதரர்களையும் பாஸபக்ஷியையும் பார்க்கிறேன் " என்று பலமுறைசொன்னார். துரோணர் மனத்தில்அதிருப்தியுடன், "இந்தலக்ஷயம் உன்னால் அடிக்க முடியாது " என்றிகழ்ந்து, அவரைப்போகும்படிசொன்னார். பெரும் புகழ்பெற்ற துரோணர் பிறகு மற்றச்சிஷ்யர்களாகிய துரியோதனன் முதலான த்ருதராஷ்டிரபுத்திரர்களையும், பீமன்முதலியவர்களையும், அந்நியதேசத்து அரசர்களையும் பரீக்ஷிப்பதற்கு யுதிஷ்டிரரைக்கேட்ட முறையாகவே கேட்டார். எல்லாரும் எல்லாவற்றையும் பார்க்கிறோமென்று சொன்னபோது, அவர்கள் அவரால் நிந்திக்கப்பட்டார்கள்.

---

## நூற்றுநாற்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(குறிவைத்த பாஸபக்ஷியை அர்ச்சுனன் சேதித்ததும், அவன் முதலையைக்கொன்று துரோணரை விடுவித்ததும், துரோணர் அவனுக்குப் பிரம்மசிரஸ் என்னும் அஸ்திரத்தைக் கொடுத்ததும்.)

பிறகு, துரோணர் சிரித்துக்கொண்டு அர்ச்சுனனைப்பார்த்து, " நீ இப்போது அடிக்கவேண்டும் ; இந்த லக்ஷியத்தைப்பார் ; நான் சொல்லுகிறகாலத்தில் பாணம் விடவேண்டியதாயிருக்கும் ; புத்திரனே ! தனுஸை வளைத்துக்கொண்டு சற்றுநேரம் சரியாகநில்" என்று சொன்னார். இவ்வாறுசொல்லப்பட்ட ஸவ்யஸாசி வில்லைமண்டலமாக வளைத்துக்கொண்டு குருவின்சொல்லினால் தூண்டப்பட்டுப் பாஸபக்ஷியைக் குறிவைத்து நின்றான். சற்றுநேரம் பொறுத்துத் துரோணர் அவனையும் முன்போலவே, " அர்ச்சுனா ! இங்கிருக்கும் இந்தப் பாஸபக்ஷியையும் மரத்தையும் என்னையும் பார்க்கிறாயா ?" என்று கேட்டார். பாரதரே! அவன் "பாஸம் ஒன்றைமட்டும் பார்க்கிறேன் ;

மரத்தையும் பார்க்கவில்லை; உங்களையும் பார்க்கவில்லை" என்று துரோணரைப்பார்த்து மறுமொழிகூறினான். பிறகு, ஜயிக்கமுடியா தவராகிய துரோணர் மனத்தில் திருப்தியடைந்து சற்றுநேரம் பொறுத்துத் திரும்பவும் பாண்டவர்களுள் மஹாரதனாகிய அந்த அர்ச்சுனனைநோக்கி, "நீ இந்தப்பாஸபக்ஷியைப் பார்க்கிறாயாயின் அந்தச்சொல்லை மறுபடியும் சொல்" என்றுகேட்டார். அவன், "பாஸத்தின் சிரஸைப்பார்க்கிறேன். உடலைப்பார்க்கவில்லை" என்று மறுமொழிகூறினான். அர்ச்சுனனால் இவ்வாறு சொல்லப்பட்டதும் துரோணர் மயிர்க்கூச்சலெடுத்தவராகி அர்ச்சுனனைநோக்கி, "விடு" என்றுசொன்னார். அவன் உடனே விட்டுவிட்டான். அப்போது அந்தப்பாண்டவன் மரத்திலிருக்கும் அந்தப்பாஸபக்ஷியின் தலையைக் கூர்மையான அர்த்தசந்திரபாணத்தினால் அறுத்து வேகமாகக் கீழே தள்ளினான். அந்தச்செய்கை நிறைவேறினவுடன் துரோணர், அர்ச்சுனனைக் கட்டிக்கொண்டார்; யுத்தத்தில் துருபதனை ஸேனையோடு கூடத் தோற்கச்செய்யத் தக்கவனாக நினைத்தார்.

பரதஸ்ரேஷ்டரே! அதன்பிறகு, சிலகாலத்திற்கெல்லாம்அங்கிரஸ் வம்சத்தவரிற் சிறந்த துரோணர் சிஷ்யர்களுடன்கூட ஸ்நானம் செய்யக் கங்கையைநோக்கிச் சென்றார். பிறகு, ஜலத்தில் அமிழ்ந்த துரோணாசாரியரை ஜலத்தில்ஸஞ்சரிக்கும் பலமுள்ள ஒரு முதலை காலத்தினால் ஏவப்பட்டுக் கணைக்காலில் பிடித்தது. அவர் விடுவித்துக்கொள்ள வல்லவராயிருந்தும், "முதலையைக்கொன்று என்னைச் சீக்கிரம் விடுவியுங்கள்" என்று சிஷ்யர்களெல்லாரையும் துரிதப்படுத்தி ஏவினார். அவர் சொல் புறப்படுங்காலத்திலேயே அர்ச்சுனன் தடுக்கமுடியாத கூர்மையான ஐந்து அம்புகளினால் நீருக்குள் மூழ்கியிருந்த முதலையை அடித்தான். அப்போது மற்றவர்கள் ஒன்றுந் தோன்றாமல் அங்குமிங்கும் ஓடினர். கிரியையுள்ள அந்த அருச்சுனனைக்கண்டு துரோணர் எல்லாச்சிஷ்யர்களிலும் சிறந்தவனென்று நினைத்து அப்போது மிகுந்ததிருப்தியுள்ளவரானார். அர்ச்சுனன் பாணங்களினால் அனேகம்துண்டுகளாகச்செய்யப்பட்ட அந்தமுதலை மஹாத்மாவான துரோணருடைய கணைக்காலைவிட்டுவிட்டு மரணமடைந்தது. எல்லாச்செய்கைகளையும் தெரிவிப்பதற்காகச் சிஷ்யர்களைவரவழைத்தார். சிறந்தபராக்கிரமமுள்ள துரோணர் துரியோதனனையும் சித்திரஸேனனையும் துச்சாஸனனையும் விவிம்சதியையும் அர்ச்சுனனையும் அசுவத்தாமாவையும் அழைத்து மண்ணாலொருகுழந்தைசெய்வித்துச் சிஷ்யர்கள் பார்த்திருக்கையில் கங்கையில் போட்

டார். கண்களைத் துணியினால்கட்டிவிட்டு வில்லைக்கொடுத்தார். "கண் கட்டினபடியே ஜலத்திலிருக்கிற இந்தக்குழந்தையை அடியுங்கள்" என்றார். உடனே ஸமர்த்தனான அர்ச்சுனன், ஜலத்தில்மூழ்கியிருந்த சிசுப்பதுமையைப் பதினைந்துபாணங்களினால் அடித்தான். அந்தக் கிரியைகளெல்லாவற்றையும்பார்த்துத் துரோணர்எல்லாச்சிஷ்யர்களி லும் அர்ச்சுனனைச் சிறந்தவனாக நினைத்தார். அப்போது மிகுந்த ஸந் தோஷமடைந்தார். பிறகு, துரோணர், மஹாரதனும் மஹாத்மாவு மாகிய அர்ச்சுனனைநோக்கி, "சிறந்தகைகளையுடையவனே! சிறப் புள்ளதும் தாங்குவதற்கு மிக அஸாத்தியமுமாகிய இந்தப் பிரம்ம சிரஸ் என்னும் அஸ்த்ரத்தைப் பிரயோகஸம்ஹாரங்களோடும் பெற் றுக்கொள். நீ இதை எவ்வகையிலும் மனிதர்களின்மேல் பிரயோகிக் காதே; அற்பசக்தியுள்ளவன்மேல் பிரயோகித்தால் இஃதுஉலகத்தை எரித்துவிடும். குழந்தாய்! இந்தலோகங்களில் இந்த அஸ்திரம் நிக ரற்றதென்று சொல்லப்படுகின்றது. அதை நியமத்துடன்தரித்துக் கொள். நான் இனிசொல்லப்போகிறசொல்லையும் கேள்; வீரனே! யுத்தத்தில் மனிதரல்லாத தேவர்முதலிய சத்துருக்கள் எவராயினும் உன்னைவருத்துவாராயின் அப்போது அவரை வதஞ்செய்வதற்கு இந்த அஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்" என்றுசொன்னார். அந்த அர்ச்சுனன் 'அப்படியே' என்று பிரதிஜ்ஞைசெய்து கைகூப்பி அந்த மேலான அஸ்திரத்தைப்பெற்றுக்கொண்டான். குரு மறுபடியும்அவ னைநோக்கி, "உலகத்தில் உன்னைப்போன்றவில்லாளி மற்றொருபுரு ஷன் இரான்" என்றுசொன்னார்.

---

## நூற்றுநாற்பத்துநான்காவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



**(துரோணருடைய சிஷ்யர்களைப் பரீக்ஷிப்பதற்காக ஒரு சிலம்பக்கூடஞ் செய்து அதைச்சேர்ந்த காட்சிமண்டபத்தில் பீஷ்மர் முதலியவர்கள் பிரவேசித்ததும், சிஷ்யபரீக்ஷையும், பீமனையும் துர்யோதனனையும் கதாயுத்தத்தில் பரீக்ஷித்ததும்.)**

பாரதரே! ராஜரே! துரோணர், திருதராஷ்டிரபுத்திரர்களும் பாண்டுபுத்திரர்களும் அஸ்த்ராப்யாஸத்தில் தேர்ந்திருப்பதையறிந்து கிருபர், ஸோமதத்தன், புத்திமானான பாஹ்லீகன், பீஷ்மர், வியா ஸர்,விதுரர் இவர்களுடைய முன்னிலையில் த்ருதராஷ்டிர மஹாராஜா

வைப்பார்த்து, "ராஜாவே! குருச்ரேஷ்டனே! உனது குமாரர்களு க்கு வித்தைவந்திருக்கிறது. ராஜாவே! உன் அனுமதியின்மேல் அவர்கள் தங்கள் கல்வியைக் காண்பிக்கக்கடவர்" என்றுசொன்னார். பிறகு, திருதராஷ்டிரமஹாராஜன் மனமகிழ்ந்து, "பாரத்வாஜபுத் ரரே! பிராமணஸ்ரேஷ்டரே! நீர் பெரியகாரியம் செய்திருக்கிறீர். நீங்கள் எந்தக்காலத்தையும் எந்த இடத்தையும் என்னஎன்ன வகை யான செய்கையையும் நினைக்கிறீர்களோ அவற்றையெல்லாம் அவ்வா றுகச்செய்யும்படி நீங்களே எனக்குக் கட்டளையிடுங்கள். இப்போது எனக்குள்ள துக்கத்தினால்,அஸ்திரவிஷயத்தில் பராக்ரமத்தைச்செய் யும் என்புத்திரர்களை எவர்கள்காண்பார்களோ அந்தக்கண்ணைப் பெற்றமனிதர்கள்மேல் நான் ஆசையுள்ளவனாகவிருக்கிறேன். விது ரனே! பெரியவராகிய ஆசாரியர் எதைச்சொல்லுகிறாரோஅதை அப் படியேசெய். தர்மத்தில் விருப்பமுள்ளவனே! இவ்வகையானபிரியம் இனிவருமென்று நான்நினைக்கவில்லை" என்றுசொன்னான். பிறகு, சிறந்தபுத்திமானாகிய துரோணாசாரியர் திருதராஷ்டிரமஹாராஜாவி னிடத்திலும் விதுரரிடத்திலும் அனுமதிபெற்றுக்கொண்டு மேடு பள்ளமில்லாமலும் மரங்களில்லாமலும் புதர்களில்லாமலும் வடக்கே தாழ்ந்துமிருக்கிற அழகான ஓரிடத்தை அளக்கச்செய்தார். நல்ல நக்ஷத்திரத்தோடுகூடிய திதியில் அந்தப்பூமியில் பலியைச்செய்தார். பரதச்ரேஷ்டரே! அந்தப்பலிக்காகப் பட்டணமுழுதும் பறையடிக் கப்பட்டது. பெயர்பெற்றசில்பிகள் சிலம்பஞ்செய்யுமிடத்தில் மிக்க விசாலமும் சாஸ்திரத்தில் சொன்னபடி ஸரியாக வகுக்கப்பட்டது மான காட்சிச்சாலையைத் துரோணாசாரியர்கட்டளைப்படி செய்தனர். ராஜாவே! தேசத்திலுள்ளஜனங்கள், அவ்விடத்தில் ஸ்திரீகளுக்காக எல்லாஆயுதங்களோடுங்கூடியகாவல்களையும், அகலமும்உயரமுமுள்ள மஞ்சங்களையும் மிகுந்தவிலைபெற்றபல்லக்குக்களையும் செய்வித்தனர். பிறகு, அந்தக்குறிப்பிட்ட தினம் வந்தபோது திருதராஷ்டிரமஹா ராஜா, வியாஸரிடம் அனுமதிபெற்று, ஸபையாரோடும் அந்தப்பு ஸ்திரீகளோடும் மந்திரிகளோடும் பீஷ்மரையும்ஆசாரியர்களிற்சிறந்த கிருபரையும் முன்னிட்டுக்கொண்டும் பாஹ்லீகனையும் ஸோமதத்தனை யும் பூரிஸ்ரவஸையும் மற்றக்கௌரவர்களையும் ஸஹாயமாக அழைத் துக்கொண்டும் பிராம்மணர்களுடன்கூட நகரத்திற்குவெளியில் சிலம் பஞ்செய்யுமிடஞ்சேர்ந்து, சுற்றிலும் முத்துச்சரங்கள்தொங்கவிடப் பட்டதும் வைடூரியங்களினாலும் ரத்னங்களினாலும் பிரகாசிப்பதும் பொன்மயமும் அற்புதமுமான காட்சிச்சாலையை அடைந்தான்.

ஜயிக்கிறவர்களிற் சிறந்தவரே! மிகுந்த பாக்கியமுள்ள காந்தாரியும் குந்தியும் மற்றுமுள்ள ராஜஸ்திரீகளனைவரும், தாதிகளோடும் விருதுகளோடும் தேவஸ்திரீகள் மேருவின்மேல் ஏறுவதுபோல், ஸந்தோஷத்தோடு மஞ்சங்களின்மேலேறினர். பிராமணர்கள் க்ஷத்திரியர்கள்முதலிய நான்குவருணத்தார்களும் ராஜகுமாரர்களுடைய ஆயுதப்பயிற்சியைப் பாரக்கக்கருதிப் பட்டணத்திலிருந்து விரைவாக வந்தனர். பார்க்கவிரும்பின ஜனங்கள் ஒருநொடியில் அங்கே ஓரிடத்திற் சேர்ந்தனர். அப்போது அந்த ஸபையானது செவ்வையாக வாசிக்கப்பட்ட வாத்தியங்களாலும் ஜனங்களின் உத்ஸாகத்தினாலும் பெருங்கடல் கலங்கினதுபோலிருந்தது. பிறகு, வெண்மையான ஆடையையுடுத்தவரும் வெளுப்பான யஜ்ஞோபவீதம் தரித்தவரும் வெளுத்த தலைமயிரோடு வெளுப்பான மீசைதாடிகளையுடையவரும் வெளுத்த புஷ்பசந்தனங்களை அணிந்தவருமாகிய அந்தத் துரோணாசாரியர், மேகங்களால விடுபட்ட ஆகாயத்தில அங்காரகனுடன் சந்திரன் பிரவேசிப்பதுபோற சிலம்பக்கூடத்தின் நடுவில் தம்புத்திரருடன்கூடப் பிரவேசித்தார். பலவான்களிற் சிறந்த துரோணர் வ்யாஸருடைய அனுமதியைப்பெற்றுக்கொண்டு சிலம்பக்கூடத்திற்குப் பூஜைசெய்தார். மந்திரங்களைச் செவ்வையாக அறிந்தபிராமணர்களைக்கொண்டு மங்களகார்யங்களைச்செய்வித்தார். த்ருதராஷ்டிரமஹாராஜா துரோணருக்கும் கிருபருக்கும் பொன்னையும் ரத்தினங்களையும் முத்துக்களையும் பலவகை வஸ்திரங்களையும் தக்ஷிணையாகக் கொடுத்தான். ஸுகத்தைத் தரத்தக்கதும் புண்ணியமுமான புண்ணியாஹவாசனத்தைச் செய்தபிறகு, வேலைக்காரர்கள் பலவகைகளான ஆயுதக்கருவிகளை எடுத்துக்கொண்டு வந்தனர். அதன் பிறகு, மஹாரதர்களும் பரதச்ரேஷ்டர்களுமாகிய ராஜகுமாரர்கள், * விரல்களில் கவசங்களை அணிந்து கச்சைகளையும் தூணிகளையும் கட்டிக்கொண்டு வில்லுகளை யெடுத்துக்கொண்டு பிரவேசித்தனர். அந்தப் புருஷச்ரேஷ்டர்கள் அரங்கத்தின்நடுவிலிருந்து துரோணருக்கு அபிவாதனஞ்செய்து, துரோணாசாரியருக்கும் கிருபாசாரியருக்கும் முறைப்படி மரியாதைசெய்தனர். அவர்களால்செய்யப்பட்ட ஆசீர்வாதங்களினால் கௌரவர்களெல்லாரும் மனத்தில் ஸந்தோஷமடைந்து திரும்பவும் வந்தனஞ்செய்து முன்னமேபூஜைசெய்யப்பட்டிருந்த அஸ்திரங்களைச்செஞ்சந்தனத்தினாலும் பூஜைக்குரியபுஷ்பங்களாலும் தாங்களே பூஜித்தனர். செஞ்சந்தனம்பூசிக்கொண்டவர்களும்

* உடும்புத்தோலினால் செய்யப்பட்ட விரலுறை.

சிவந்தமாலைகள் தரித்தவர்களும் சிவந்த கொடிகள் பிடித்தவர்களும் சிவந்தகடைக்கண்களுடையவர்களும் மாற்றுயர்ந்த பொன்னாபரணங்ளணிந்துகொண்டவர்களும் பற்பல ரூபங்களோடுகூடியவர்களுமாகிய அந்தக்கௌரவவீரர்களனைவரும் துரோணரால் அனுமதிகொடுக்கப்பெற்று ஆயுதங்களையெடுத்துக்கொண்டனர். முதலில்விற்களையெடுத்து நாணேற்றிட்டு அம்புகளைத்தொடுத்துநாண்சப்தத்தையும்உள்ளங்கைச்சப்தத்தையுஞ்செய்து, அதனால் ஜனங்களை மூர்ச்சிக்கச்செய்தனர். யுதிஷ்டிரர்முதலிய சிறந்தபராக்ரமமுள்ள அந்தராஜகுமாரர்கள், அங்கே ஜ்யேஷ்டன்முதலாக வரிசைப்படி மிகவியக்கத்தக்க ஆயுதப்பயிற்சியைச்செய்தனர். ராஜாவே! அந்தஸபையில் சிலருடைய பூமாலைகளில் அம்புகள் விழுந்தன. சிலர் தலையிற்சூட்டிக்கொண்ட புஷ்பங்களில் பாணங்கள்விழுந்தன. சிலர் தங்கள் பெயரடையாளமுள்ள பலவகைப்பாணங்களை லாகவமாகவிட்டுப் பெரியவைவையும்சிறியவையுமானகுறிகளை அடித்தனர். சிலமனிதர்கள் பாணம்விழுமென்றபயத்தினால் தலைகுனிந்தனர். இன்னும்சிலமனிதர்கள் பயமற்று ஆச்சரியத்துடன்பார்த்திருந்தனர். அந்தக்குமாரர்கள் குதிரைகளிலேறிக்கொண்டு தங்கள்பெயர் அடையாளங்களினால்விளங்குகின்ற பலவகைப்பாணங்களை லாகவமாகவிட்டு லக்ஷியங்களை விரைவில் அடித்தனர். பாணங்களையும் வில்லுகளையும் தரித்துக்கொண்டிருக்கும் அந்தக்குமாரர்களின்கூட்டம் கந்தர்வநகரம்போலிருந்ததைக்கண்டு அங்குள்ளஜனங்கள் திகைத்திருந்தனர். பாரதர்ஷப! அங்கே லக்ஷக்கணக்கானமற்றஜனங்கள் ஆச்சரியத்தினால் மலர்ந்தகண்களோடு நல்லது நல்லதென்று விரைவாகக்கூவினர். மிகுந்தபலமுள்ள அந்தராஜகுமாரர்கள் தேர்கள்மேலும் யானைகள்மேலும் குதிரைகள்மேலும்ஏறிவில்யுத்தத்திலும் கைச்சண்டையிலும் பலவழிகளைச்செய்துகாண்பித்து மறுபடியும் கத்திகேடகங்களைப்பிடித்து யுத்தஞ்செய்து கத்திச்சிலம்பத்தின்வழிகளையுஞ்செய்து உபதேசப்படி எல்லாஇடங்களிலும்ஸஞ்சரித்தனர். அந்தக்குமாரர்களெல்லோருக்கும் கத்திகேடகங்களிலுள்ள லாகவத்தையும் அங்கஅமைப்பையும் திருத்தத்தையும் நின்றநிலைதவறாமையையும் பிடித்தபிடிவிடாமையையும்ஸமயத்தில்ப்ரயோகிப்பதையும் அங்குள்ளஜனங்கள்பார்த்தனர். பிறகு, எப்போதும் உற்சாகமுள்ளதுரியோதனனும் பீமஸேனனும் கைகளில்கதைகளையெடுத்துக்கொண்டு ஒற்றைக்கொடுமுடியுள்ள இரண்டுமலைகள்போல் பிரவேசித்தனர். சிறந்தகைகளையுடையவர்களும் பராக்கிரமம்தவறாதவர்களுமாகிய அவ்விருவர்களும் கச்சைகட்டிக்கொண்டு ஒரு பெண்

யானைக்காக மதங்கொண்ட இரண்டுபெரியயானைகள்போவதுபோலப் போயினர். மஹாபலசாலிகளான அவ்விருவரும் மண்டலசஞ்சாரத்தையாரம்பித்து மதமுள்ளஇரண்டுயானைகளைப்போல் வலமும்இடமுமாக அனேகமண்டலங்கள் சுற்றினர். திருதராஷ்டிரனுக்கு விதுரரும், காந்தாரிக்குக் குந்தியும் குமாரர்களின் அந்தச்செய்கையையெல்லாம் தெரிவித்தனர்.

---

## நூற்றுநாற்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(அர்ச்சுனனைப் பரீக்ஷித்தபோது சிலம்பக்கூடத்தில் கர்ணன் ப்ரவேசித்தது.)

குருராஜனாகிய துரியோதனனும் பலவான்களிற்சிறந்த பீமஸேனனும் களத்திலிருக்கும்போது அவர்களிடம் பக்ஷபாதத்தினால் சினேகம்வைத்த ஜனங்கள் இரண்டுவகையாகப் பிரிந்தனர். "குருராஜனே! ஜயம்பெறு" என்றும், "பீமனே! ஜயம்பெறு" என்றும் மனிதர்களுடைய பெருங்கூச்சல்கள் உடனே எழுந்தன. பிறகு சிறந்தபுத்தியுள்ள துரோணர் கலங்கின கடலைப்போலிருந்த ஸபையைக்கண்டு தமது அன்புள்ளபுத்திரராகிய அசுவத்தாமாவைநோக்கி, "இந்த இரண்டு மஹாவீரர்களையும் அடக்கு; இருவரும் பயிற்சியில் தேர்ந்தவர். பீமனுக்காகவும் துரியோதனனுக்காகவும் அரங்கத்திற்கு அந்தக்கலக்கம் உண்டாகக்கூடாது" என்றுசொன்னார். பிறகு, அசுவத்தாமா விரைவாகஎழுந்து, "பீமா! குருவின் ஆஜ்ஞை" என்றும், "துரியோதன! குருவின்கட்டளை" என்றும்சொல்லி "உங்களுக்குக் குருவின் உபதேசத்தினால் உண்டானவேகத்தையும் ஸாகஸத்தையும் காண்பித்ததுபோதும்" என்று தடுத்தார். பிறகு, ஓங்கினகதைகளோடுகூடிய அவ்விருவரும் பிரளயகாலத்துக்காற்றினால் கொந்தளிக்கின்ற இரண்டுகடல்கள் பெருங்கரைகளுக் கடங்குவதுபோல், குருபுத்திரராகியஅசுவத்தாமாவினால் அடக்கப்பட்டனர்.

அதன்பின், துரோணர் ஸபையின்முன்னின்று பெரியமேகமுழக்கத்துக்கொப்பான வாத்தியசப்தத்தையடக்கி, "என்புத்திரனைவிட எனக்குமிக்கநண்பனும் எல்லாஆயுதங்களிலும் நிபுணனும் உபேந்திரனாகிய விஷ்ணுவுக்கொப்பானவனுமாகிய இந்தஇந்திரபுத்திரனை

பார்த்தனைப் பாருங்கள் " என்றுசொன்னார். உடனே, ஆசாரியர் வாக்கினால் ஆசீர்வாதம்செய்யப்பட்ட யௌவனத்தையுடையவனை அர்ச்சுனன் விரலில் உறையணிந்து தூணிகளில் பாணங்களைநிரப்பிக்கொண்டு வில்லைப்பிடித்துப் பொன்மயமானகவசத்தைத்தரித்து, ஸூர்யனோடும் இந்திரதனுஸோடும் மின்னலோடுங்கூடிய ஸந்தியாகாலத்துச் சிவப்புமேகம்போல் எதிரில் காணப்பட்டான். பிறகு, ஸபை முழுமைக்குமே ஒரு மலர்ச்சிஉண்டாயிற்று வாத்தியங்களும் சங்கங்களும் எங்கும் முழக்கப்பட்டன. பார்ப்பவர்கள், "இவன் குந்திபுத்திரன்; இவன் அழகுள்ளவன்; இவன் பாண்டவர்களில் நடுவாமவன்; இவன் தேவேந்திரனுடைய புத்ரன்; இவன் கௌரவர்களைக்காப்பாற்றுகிறவன்; இவன் அஸ்திரம்தெரிந்தவர்களிற்சிறந்தவன்; இவன் தர்மிஷ்டர்களிற்சிறந்தவன்; இவன் சீலமுள்ளவர் எல்லாரிலும் சிறந்தவன்; நல்லொழுக்கத்திற்கும் ஞானத்திற்கும் நிதியானவன் " என்று உரக்கச்சொன்னவார்த்தைகளை எல்லாரும் கேட்டனர். குந்தியின் மார்பு பால்சுரந்து ஆனந்தக்கண்ணீரால்நனைக்கப்பட்டிருந்தது. அந்தப்பெரிய ஜனத்திரளிலிருந்து உண்டாகியசப்தத்தினால் நிரப்பப்பட்ட காதுகளையுடையதிருதராஷ்டிரமஹாராஜன் மனமகிழ்ந்து விதுரரை நோக்கி, "விதுரனே! கலங்கினசமுத்திரத்தின்கோஷத்துக்கொப்பான இந்தமிகப்பெரியசப்தம் ஏது? ஆகாசத்தைக்கிழிப்பதுபோல் ஸபையில் திடீரென்றுஉண்டாயிருக்கிறதே " என்றுகேட்டான். அதற்கு விதுரர், "மஹாராஜாவே! குந்திபுத்திரனும் பாண்டு புத்திரனுமாகிய இந்தப்பல்குனன் கவசத்துடன் அரங்கத்தில் இறங்கியிருக்கிறான். அதற்காக இந்தப்பெருங்கோஷமுண்டாயிற்று" என்றுசொன்னார். த்ருதராஷ்டிரன், "சிறந்தபுத்தியுள்ளவனே! பாக்கியம்பெற்றேன். குந்தியென்னும் அரணியிலுண்டான மூன்றுபாண்டவர்களென்னும் திரேதாக்னிகளால் சிறப்பிக்கப்பட்டேன்; ரக்ஷிக்கப்பட்டேன்"என்று சொன்னான். அந்தஸபையிலுள்ளஜனங்கள் பிரயாஸப்பட்டுவந்து ஸந்தோஷமாகஇருக்கும்போது அர்ச்சுனன் தன் அஸ்திரசாதுரியத்தை ஆசாரியருக்குக்காண்பித்தான். ஆக்நேயாஸ்திரத்தினால் தீயையும், வாருணாஸ்திரத்தினால்ஜலத்தையும்,வாயுஅஸ்திரத்தினால் காற்றையும் மேகாஸ்திரத்தினால் மேகங்களையும், பூமியஸ்திரத்தினால் பூமியையும், பர்வதாஸ்திரத்தினால்மலைகளையும் உண்டுபண்ணினான். அந்தர்த்தானமென்னும் அஸ்திரத்தினால் தானே மறைந்தான். ஒருக்ஷணம் உயர்ந்தவனும் மறுக்ஷணம்குள்ளனுமாகவும் க்ஷணத்துக்கெல்லாம் தேர்த்தட்டிலும் மறுக்ஷணம் தேர்நடுவிலும் அடுத்தக்ஷணம்பூமியி

லும் இருப்பவனாகவும் காணப்பட்டான். ஆசாரியருக்கு அன்பனாகிய அந்தஅர்ச்சுனன் ஸௌஷ்டவமென்றுசொல்லப்பட்ட அங்கங்களின் அமைப்புடன்கூடிப் பலவகைகளானபாணங்களினால் மெதுவும் பெரிதும் சிறிதுமான லக்ஷியங்களையடித்தான். சுழன்றுகொண்டிருக்கும் இருப்புப்பன்றியின்வாயில் ஒரேகாலத்தில் ஐந்துபாணங்களை ஒரு பாணம்போல் தடையில்லாமல்விடுத்தான். சிறந்தபராக்ரமமுள்ளஅர்ச்சுனன், கயிற்றில்தொங்கிஆடிக்கொண்டிருக்கும் கூர்மையான மாட்டுக்கொம்பில் இருபத்தொருபாணங்களைநாட்டினான். குற்றமற்றவரே! ஆயுதங்களில்ஸமர்த்தனாகிய அர்ச்சுனன் கத்தியிலும் தனுவிலும் இப்படிப்பட்ட மிகப்பெருங்காரியங்களைச்செய்து, கதையிலும் மண்டல ஸஞ்சாரங்களைக் காண்பித்தான்.

பாரதரே! அப்போது அந்தவேலை அனேகமாகமுடிந்து ஸபையும் வாத்தியகோஷமும் ஓய்ந்திருக்கையில் வஜ்ராயுதத்தின் அடிக்கு ஒப்பானதும் மஹிமையையும் வன்மையையும் அறிவிப்பதுமாகிய தோள்தட்டின்சப்தம் வாயிற்பக்கத்திலிருந்து கிளம்புவதாகக் கேட்கப்பட்டது. ராஜாவே! 'மலைகள்பிளக்கப்படுகின்றனவா? பூமிவெடிக்கின்றதா? நீர்த்தாரைகள்நிரம்பினமேகங்களினால் ஆகாயம் நிரப்பப்படுகின்றதா?' என்றஎண்ணம் ஒருக்ஷணம் ஸபையிலுள்ளவர்களுக்கு உண்டாயிற்று. அப்போது பார்ப்பவர்களனைவரும் வாயிலைநோக்கினர். ஸஹோதரர்களாகிய பஞ்சபாண்டவர்களால்சூழப்பட்ட துரோணர், ஹஸ்தநக்ஷத்திரம்ஐந்தோடுகூடிய சந்திரனைப்போல விளங்கினார். சத்துருக்களைக் கொல்லுகிறவனாகிய துரியோதனன் எழுந்திருக்க, அசுவத்தாமாவுடன்கூடப் பலமுள்ள நூறுஸஹோதரர்களும் அவனைச் சூழ்ந்துகொண்டனர். ஆயுதங்களைத்தூக்கிக்கொண்டு உறுதியாகநிற்கின்ற அந்தஸஹோதரர்களால் சூழப்பட்டுக் கதையை நுனிக்கையில்பிடித்திருந்தஅந்தத்துரியோதனன், முற்காலத்தில் அஸுரஸம்ஹாரஞ்செய்தபோது தேவக்கூட்டங்களினாற்சூழப்பட்ட இந்திரனைப்போல்விளங்கினான்.

---

## நூற்றுநாற்பத்தாறுவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(கர்ணனுடையபரீக்ஷையில் அவனுக்கும் அர்ச்சுனனுக்கும் நடந்த வாக்குவாதத்தில் கிருபாசாரியர் கர்ணனை இகழ்ந்ததற்காகத் துரியோதனன் கர்ணனுக்கு ராஜ்யாபிஷேகம்செய்தது.)

அதேகாலத்தில் அந்தஜனக்கூட்டத்தில் மனிதர்கள் வழிவிட்டு விலக, பகைவரின்நகரங்களைஜயிப்பவனும் உடன்பிறந்த கவசத்தைத் தரிப்பவனும் குண்டலங்களினால்சோபிக்கும் முகமுள்ளவனும் குந்திக்குக் கன்னிப்பருவத்திற்பிறந்தவனும் உக்கிரமானகிரணங்களையுடைய சூரியனுடையஅம்சமானவனும் பெரியகண்களையுடையவனும் சத்ருசைனியத்தையழிப்பவனுமாகிய கர்ணன் உற்சாகத்தினால் மலர்ந்தகண்களுடன் கத்தியைக்கட்டிக்கொண்டு வில்லையேந்திப் பர்வதம் காலால்நடப்பதுபோல் விசாலமான ரங்கத்தில் பிரவேசித்தான். பலத்தில்யானைக்கும் சூரத்தனத்தில்விருஷபத்திற்கும் எல்லாவற்றையும் அடக்குந்திறமையில் ஸிம்மத்துக்குமொப்பானவனும், ஒளியில் சூரியனுக்கும் தண்மையில்சந்திரனுக்கும் ஜ்வலிப்பதில் அக்கினிக்குமொப்பானவனும், பொற்பனைமரம்போல் உயரமானவனும், ஸிம்மம் போன்ற சரீரக்கட்டுடையவனும், யௌவனவயஸிலிருப்பவனும், எண்ணிமுடியாதகுணங்களுடையவனும், அழகுள்ளவனும், சிறந்த கைகளுள்ளவனும், அந்தஸூர்யபுத்ரனுமாகியகர்ணன் வட்டமான ஸபையைச் சுற்றிலும்பார்த்து அதிகமாகமதியாதவன்போல் துரோணருக்கும் கிருபருக்கும் நமஸ்காரஞ்செய்தான். அந்தச்சபையிலுள்ளஜனங்களனைவரும் அசைவற்றுக் கண்கொட்டாமல் இவன்யாரென்று கலக்கமுண்டாகிப் பார்க்கஆவல்கொண்டு அசைவற்ற கண்களுடன் அசைவற்றுநின்றனர். பேசுகிறவர்களிற்சிறந்தவனும் ஸூர்யபுத்ரனும் அர்ச்சுனனுடைய ஸஹோதரனுமாகிய கர்ணன், இந்திரபுத்ரனும் தனக்குத்தெரியாத தன்ஸஹோதரனுமாகிய அர்ச்சுனனைநோக்கி மேககர்ச்சனம்போலக் கம்பீரமானகுரலுடன் பேசலுற்றான்.

“அர்ச்சுனா! நீ என்னகாரியம் செய்தாயோ அதற்குமேற்பட்ட செய்கையைப் பார்த்திருக்கும் மனிதர் முன்னிலையில் நான் செய்யப் போகிறேன். உன்னைப்பற்றியே நீ கர்வப்படாதே” என்றான். பேசுகிறவரிற்சிறந்த ஜனமேஜயரே! அவனுடையபேச்சு முடியாமலிருக்

கையிலேயே அங்கிருந்தஜனங்கள் யந்திரத்தினால் தூக்கப்பட்டவர்கள் போல் எல்லாப்புறங்களிலிருந்தும் ஓரேகாலத்தில் எழுந்தனர். புருஷச்ரேஷ்டரே! துரியோதனனிடம் ஸந்தோஷம்குடிகொண்டது. உடனே அர்ச்சுனனுக்கு வெட்கமும் கோபமும் உண்டாயின. மிகுந்த பலமுள்ளவனும் எப்போதும் யுத்தத்தில் விருப்பமுள்ளவனுமாகிய கர்ணன் துரோணரால் அனுமதிகொடுக்கப்பட்டபிறகு, அங்கே அர்ச்சுனன்செய்தவற்றையெல்லாம் செய்தான். பாரதரே! பிறகு துரியோதனன் தன்ஸகோதரர்களுடன்கூட அங்கே கர்ணனை ஸந்தோஷத்துடன் தழுவிக்கொண்டு, பின்பு, "மஹாபாஹுவே! உன்வரவு நல்வரவு. எனக்குக் கௌரவத்தைக்கொடுப்பவனே! நீ வந்தது என் பாக்கியம். என்னையும் கௌரவர்களுடையராஜ்யத்தையும் உன்னிஷ்டப்படி உபயோகித்துக்கொள்ளலாம்" என்றுசொன்னான். கர்ணன், "எனக்கு எல்லாம் நீ செய்தானதாக நினைக்கிறேன். உன்னுடன் சினேகத்தைவேண்டுகிறேன். பிரபுவே! நான் அர்ச்சுனனுடன் தொந்தயுத்தம்செய்ய விரும்புகிறேன்" என்றான். ராஜாவே! இவ்வாறு கர்ணனால்சொல்லப்பட்ட துரியோதனன் அப்போது நீண்டும் பருத்துமுள்ள கைகளையுடைய கர்ணனைக்கட்டிக்கொண்டு, "பகைவரை அடக்குகிறவனே! என்னோடுகூடப் போகங்களை அனுபவி; என் உறவினர்களுக்குச் சந்தோஷத்தைச்செய்துகொண்டிரு; என்பகைவர்கள் எல்லாருடையதலைமேலும் உன்காலை வை" என்றுசொன்னான். பிறகு, அர்ச்சுனன் தான்இகழப்பட்டதாகநினைத்துத் தன் ஸஹோதரர்களாகிய துரியோதனன்முதலியோர்நடுவில் மலைபோல் நின்றகர்ணனைநோக்கி, "கர்ண! நீ என்னாலடிக்கப்பட்டு, அழைக்கப்படாமல்வந்தவர்களும் கேட்கப்படாமல்பேசுகிறவர்களும் எந்தலோகங்களையடைவார்களோ அந்தலோகங்களை அடையப்போகிறாய்" என்றுசொன்னான். அதைக்கேட்டுக் கர்ணன், "பல்குன! இந்த ஸபை எல்லாருக்கும்பொது; இதில் உனக்கென்னவிசேஷம்? ராஜாக்கள் பராக்கிரமத்தினால் பெரியவர்கள். ராஜதர்மம் பலத்தை அனுஸரித்திருக்கிறது. பாரதனே! நிந்தையும் பலஹீனர்கள்படும்கஷ்டங்களும் உனக்கேன்? பாணங்களினால் பேசு. இப்போது குருவின் கண்ணெதிரே உன் தலையைஅம்புகளினால் எடுத்துவிடப்போகிறேன்" என்றுசொன்னான். பிறகு, சத்துருக்களின் நகரங்களைஜயிப்பவனாகிய பார்த்தன், துரோணரால் அனுமதிகொடுக்கப்பெற்றும் தன்ஸஹோதரர்களால் பரபரப்போடுஆலிங்கனம்செய்யப்பட்டும் யுத்தம்செய்யக் கர்ணனைச்சந்தித்தான். பிறகு, கர்ணனும், துரியோதனனாலும் அவன்

ஸஹோதரர்களாலும் தழுவிக்கொள்ளப்பட்டு, வில்லையும் அம்புகளை யும் எடுத்துக்கொண்டு யுத்தத்திற்கு ஆயத்தமாகநின்றான். உடனே ஆகாயம் மின்னலும்கர்ச்சனையுமுள்ளவையும், இந்திர தனுஸைமுன் வைத்துக்கொண்டவையும், நாரைகளின்மாலைகளாகிய பல்வரிசைகளி னால் அட்டகாசம்செய்கின்றவைபோன்றவையுமான மேகங்களினால் மறைக்கப்பட்டது. பிறகு, இந்திரன் புத்ரஸ்நேகத்தினால் அரங்கைப் பார்ப்பதாகக்கண்டு, ஸூர்யனும் தன்னருகில்வந்த மேகங்களை நாசஞ் செய்தான். அப்போது அர்ச்சுனன் மேகங்களின்நிழலினால் வியாபி க்கப்பட்டவனாகக் காணப்பட்டான். கர்ணன் ஸூர்யகிரணங்களி னால் வியாபிக்கப்பட்டவனாகக் காணப்பட்டான். த்ருதராஷ்டிரபுத் ரர்கள் கர்ணனிருந்தபக்கத்தில் இருந்தனர். துரோணரும், கிருபரும் பீஷ்மரும் அர்ச்சுனனிருந்தபக்கத்தில் இருந்தனர். ஸபையே இர ண்டுபிரிவாக ஆயிற்று. ஸ்திரீகளிலும் இரண்டுபிரிவுகள் உண்டா யின. *விஷயம்தெரிந்தவளாகியகுந்தி மூர்ச்சையடைந்தாள். அவ் வாறு மூர்ச்சையடைந்த அந்தக்குந்தியை ஸர்வதர்மங்களும்தெரிந்த விதுரர் வேலைக்காரிகளைக்கொண்டு சந்தனக்குழம்புகளினால் தேற்றி னார். பிறகு, மூச்சுவந்தகுந்தி, யுத்தஸன்னத்துடன் கவசமணிந் திருந்த அவ்விரண்டுபுத்ரர்களையும்கண்டு மிக்க ஆவலுற்றவளாகி ஒன் றுந்தோன்றாமலிருந்தாள். தொந்தயுத்தத்தின் மரியாதைதெரிந்தவ ரும்ஸர்வதர்மங்களும் தெரிந்தவருமாகிய சாரத்வதரென்றுசொல்லப் பட்ட கிருபாசாரியர், சிறந்த தனுஸுகளை யெடுத்துக்கொண்ட அக் கர்ணார்ஜுனர்களை நோக்கிச் சொல்லலானார்.

"குந்தியின் இளையபுத்திரனும் பாண்டுபுத்திரனும் கௌரவனு மாகியஇந்தஅர்ச்சுனன் உன்னுடன் தொந்தயுத்தஞ் செய்யப்போகி றான். சிறந்தகைகளையுடையவனே! நீயும் இவ்வாறு உன்தாயையும்தந் தையையும் நீ எந்தராஜாக்களின் குலத்திற்குப்பூஷணமாகஇருக்கிறா யோ அந்தராஜவம்சத்தையும்சொல். உன்னைத்தெரிந்துகொண்டபிறகு அர்ச்சுனன் உனக்கெதிர்நின்று யுத்தஞ்செய்வானோ செய்யமாட்டா னோ. குலமும் குலாசாரமும் இல்லாதவர்களோடு ராஜகுமாரர்கள்ஸம யுத்தம் செய்யார்" என்றார். இவ்வாறு அவரால்உரைக்கப்பட்ட கர்ண னுடையமுகம் வெட்கத்தினால்குனிந்து, மழைஜலத்தினால்நனைந்து தலைவணங்கிய தாமரைமலர்போல் விளங்கிற்று. அப்போது துரி யோதனன் கிருபரைப்பார்த்து, "ஆசார்யரே! சாஸ்திரங்களில் நிச்ச யித்தபடி ராஜாக்களின்ஜாதிகள் மூன்றுவகை. நல்லகுலத்திற்பிறந்த

* கர்ணனையும் தன்புத்ரனென்றறிந்தது.

வன் ஒருவன் ; சூரன் ஒருவன் : ஸேனையை நடத்துகிறவன் மற்றொருவன். ஜலத்திலிருந்து அக்கியும் பிராம்மண ஜாதியிலிருந்து க்ஷத்திரியஜாதியும் கல்லிலிருந்து லோஹமும் உண்டாயின. அவற்றினுடையசக்தி எங்கும் வியாபிக்கிறது ; தங்கள் காரணங்களில் அடங்குகிறது. இந்த அர்ச்சுனன் ராஜனல்லாதவனோடுயுத்தம்செய்யவிரும்பானுயின் அந்தக்காரணம்பற்றியே நான் இந்தக்கர்ணனை அங்கதேசத்தின் ராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்கிறேன்" என்று சொன்னான். பிறகு, ராஜாவான த்ருதராஷ்டிரனையும் பிதாமகராகிய பீஷ்மரையும் அனுமதிகேட்டுக்கொண்டு அபிஷேகத்துக்குவேண்டிய சாமக்கிரிகளைப் பிராமணர்களைக்கொண்டு சேகரித்து ஸத்கர்மங்களைச்செய்யும் பிராமணர்களுக்கு ஆயிரம்பதினாயிரக்கணக்காகக் கோதானங்களைச்செய்து, 'இவன் அங்கதேச ராஜ்யாதிபத்யத்திற்குத் தகுதியானவன்' என்று பிராமணர்களால் சொல்வித்தான். பிறகு மஹாரதனும் மஹாபலசாலியுமான கர்ணன் அதேநிமிஷத்தில் மந்திரம்தெரிந்தபிராமணர்களால் தங்கச்சிங்காசனத்தில் உட்காரவைக்கப்பெற்று நெற்பொரிகளும் புஷ்பங்களும்நிரம்பினபொற்குடங்களினால் அங்கராஜ்யபட்டாபிஷேகம் செய்யப்பட்டான்; கிரீடத்தாலும்ஹாரத்தாலும் தோள்வளைகளாலும் கைக்கடகங்களாலும் அரசர்களுக்குரிய மற்றுமுள்ள அழகிய ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு,குடை சாமரங்களோடும் ஜயசப்தத்தோடுங்கூட ராஜ்யலக்ஷ்மியை அடைந்தான். அப்படிப்பட்டசிறப்புடைய கர்ணன் அப்போதே துர்யோதனனைப்பார்த்து, "ராஜச்ரேஷ்டனே! நீ இந்தராஜ்யம் கொடுத்ததற்கீடாக உனக்கு நான் எதைக்கொடுப்பேன் ? சொல். ராஜாவே ! உன் சொற்படியே செய்வேன்" என்று சொன்னான். அந்தத்துரியோதனன் அவனைநோக்கி, "அதிகஸ்நேகத்தை விரும்புகிறேன்" என்றான். இவ்வாறுசொல்லப்பட்ட கர்ணன் 'அப்படியே ஆகட்டும்' என்று உடனே அவனுக்கு மறுமொழிசொன்னான். இருவரும் உற்சாகத்தோடு கட்டிக்கொண்டு மிகுந்தஸந்தோஷத்தை யடைந்தனர்.

---

## நூற்றுநாற்பத்தேழாவது அத்தியாயம்.

## ஸம் ப வ ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(கர்ணனுடைய பிதாவாகிய தேர்ப்பாகன் சிலம்பக்கூடத்துக்கு வந்தபோது பீமன் கர்ணனை நிந்தித்ததும், எல்லாரும் அரங்கத்திலிருந்து புறப்பட்டுப்போனதும்.)

பிறகு, தேரோட்டுகிறவன், மேல்வஸ்திரம்நழுவி வேர்த்து நடுக்கமுற்றுத் தடியை ஆதாரமாகப்பிடித்துக் கர்ணனையழைப்பவன்போல் அரங்கத்தில் பிரவேசித்தான். அவனைப்பார்த்ததும் அபிஷேகத்தினால் ஈரமான தலையையுடைய கர்ணன் பிதாவினிடமுள்ள மரியாதைக்குக் கட்டுப்பட்டுத் தனுஸைவிட்டுத் தன்தலையினால் அவனுக்கு வந்தனஞ்செய்தான். உடனே, அந்தஸாரதி பரபரப்புற்று வஸ்திரத்தின் தலைப்பினால் பாதங்களைமூடிக்கொண்டு "புத்திரனே!" என்று நிரம்பினபொருளுள்ளசொல்லைச்சொன்னான். பிறகு புத்ரஸ்நேகத்தினால் தளர்ந்து அவனைக்கட்டிக்கொண்டு அங்கராஜ்யபட்டாபிஷேகத்தினால் நனைந்திருக்கும் அவன்தலையை மறுபடியும் கண்ணீரினால் நனைத்தான். பாண்டுபுத்திரனான பீமஸேனன் அந்தஸாரதியைப்பார்த்தபிறகு இவன்ஸூதபுத்திரனென்று கர்ணனை நினைத்துச் சிரித்துக்கொண்டே பின்வரும்சொல்லைச் சொல்லத்தொடங்கினான்.

"ஸூதபுத்ரனே! நீ அர்ச்சுனனால் யுத்தத்தில் வதஞ்செய்யப்படத்தகுந்தவனல்லை. உன் குலத்துக்குத் தகுதியான சவுக்கை நீ உடனே எடுத்துக்கொள்ளலாம். புருஷர்களில் இழிவானவனே! யஜ்ஞத்தில் அக்கினியின்ஸமீபத்திலிருக்கும் ஹவிஸைச் சாப்பிடுவதற்கு நாய் எப்படிதகுதியில்லையோ அப்படி அங்கராஜ்யத்தை அனுபவிப்பதற்கு நீ உரியவனல்லை" என்றான். இவ்வாறுசொல்லப்பட்டகர்ணன் உடனே கொஞ்சம்உதடுதுடித்துப் பெருமூச்சுவிட்டு ஆகாயத்திலிருக்கும் சூரியனைப்பார்த்தான். பிறகு, மஹாபலசாலியான துரியோதனன் கோபத்துடன் தன்னுடைய அந்த ஸஹோதரர்கூட்டத்திலிருந்து, மதங்கொண்டயானை தாமரைக்குளத்திலிருந்து கிளம்புவது போலக் கிளம்பினான். அவன், பயப்படத்தக்க செய்கையையுடையவனாகநிற்கும் பீமஸேனனைநோக்கி, "விருகோதரனே! இவ்வாறான சொல்லைச்சொல்வது உனக்குத் தகாது. க்ஷத்ரியர்களுக்குப் பலம் பெரிது. க்ஷத்ரியவம்சத்தவன் யுத்தம்செய்யவேண்டும். சூரர்களு

க்கும் நதிகளுக்கும் மூலம்கவனிக்கத்தகாது. ஜங்கமங்களிலும் ஸ்தாவரங்களிலும் வியாபித்திருக்கும் அக்னி ஜலத்திலிருந்துஉண்டானது. அஸுரர்களைக்கொல்லும்வஜ்ராயுதம் ததீசியுடையஎலும்பினால் செய்யப்பட்டது. பகவானையும் தேவராயும் ஸர்வரகஸ்யங்களுக்கும்நிதியாயுமுள்ள ஸுப்ரமண்யரை அக்நிபுத்ரரென்றும் க்ருத்திகாபுத்ரரென்றும் ருத்திரபுத்ரரென்றும் கங்காபுத்ரரென்றும் கேள்விப்படுகிறோம். க்ஷத்ரியர்களிடமிருந்துவந்த பிராமணர்களைப்பற்றியும்நீ கேட்டிருக்கலாம். விசுவாமித்திரர்முதலானவர்கள் அழியாத பிராம்மணத்தன்மையை அடைந்தனர். ஆசாரியரும் சஸ்திரம்பிடித்தவர்களிற்சிறந்தவருமாகிய துரோணர் குடத்திலிருந்து பிறந்தவர். க்ருபர் கௌதமருடையவம்சத்தில் நாணற்கட்டையிற்பிறந்தவர். உங்களுடையபிறப்பையும் நான் தெரிந்துகொண்டிருக்கிறேன். குண்டலங்களோடும் கவசத்தோடும்கூடியவனும் ராஜலக்ஷணங்களெல்லாம் பொருந்தினவனும் ஸூர்யனுக்கு ஒப்பானவனுமாகிய இந்தப் புலிபோன்றவனை மான் எவ்வாறுபெறும்? இந்தப்புருஷச்ரேஷ்டன் அங்கதேச ராஜாவாயிருப்பதற்குமாத்திரம் உரியவனல்லன்; அவனுடைய பாகுபலத்தினாலும் நான் அவனுடைய ஆஜ்ஞைக்கு உட்பட்டிருப்பதனாலும் பூமிமுழுமைக்குமே ராஜாவாயிருப்பதற்குரியவன். அல்லது, எந்த மனிதனுக்கு நான்செய்த இந்தக்காரியம் ஸகிக்கவில்லையோ அவன் தன்கால்களினால் ரதமேறி வில்லைவளைக்கட்டும்" என்றுசொன்னான். பிறகு, அந்தஸபைமுழுமைக்கும் 'ஸரி' என்றசொல்லுடன் சேர்ந்த பெரியஹாஹாகாரம் உண்டாயிற்று. ஸூர்யனும் அஸ்தமனமானான். பிறகு, ராஜாவான துர்யோதனன் கர்ணனை நுனிக்கையிற்பிடித்துக்கொண்டு விளக்குக்களினால் வெளிச்சமுண்டாக்கி அந்தஸபையினின்றும் புறப்பட்டான். ராஜாவே! பாண்டவரனைவரும் துரோணரோடும் கிருபரோடும் பீஷ்மரோடுங்கூடத் தம்தம்கிருஹங்களுக்குச் சென்றனர். பாரதரே! அப்போது அர்ச்சுனனென்று சிலஜனங்களும் கர்ணனென்றுசிலஜனங்களும் துரியோதனனென்று சிலஜனங்களும் சொல்லிக்கொண்டுபோயினர்.

குந்தி, கர்ணனை உயர்ந்தராஜலக்ஷணங்களினால் தன்புத்திரனென்று தெரிந்து, (அவன்) அங்கதேசாதிபதியானதைக்கண்டு புத்ரஸ்நேகத்தினால் மனத்தில் ஸந்தோஷமடைந்தாள். ராஜாவே! அப்போது துரியோதனனுக்கும் கர்ணனையடைந்தவுடனே அர்ச்சுனனிடத்திலுண்டானபயம் மறைந்துபோயிற்று. ஆயுதங்களில் தேர்ச்சியடைந்த அந்தவீரனாகிய கர்ணனும் மிக்க அன்புடன் துரியோதனனிடம்பேசினான். அப்போது, யுதிஷ்டிரருக்கும், கர்ணனுக்கு ஒப்பாக விற்பிடித்தவன் பூமியிலில்லையென்று எண்ணமுண்டாயிற்று.

## நூற்றுநாற்பத்தேட்டாவது அத்தியாயம்.

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(துரோணருக்கு குருதக்ஷிணைகொடுப்பதற்காகத் துருபதராஜனை உயி ரோடுபிடித்துக்கொண்டுவரக் கௌரவர்கள்போனதும், அவர்கள் அவனிடம் தோற்றுவந்தபிறகு பாண்டவர்கள்போனதும், அவர் களில் அர்ச்சுனன் அவனை உயிருடன் பிடித்துவந்ததும், துருபதனுடைய பாதிராஜ்யத்தை துரோணர் வாங்கிக் கொண்டதும், பின்பு துருபதன் புத்ரோத்பத்திக் காக முயற்சி செய்ததும்.)

பாண்டுபுத்ரர்களும் த்ருதராஷ்டிரபுத்ரர்களும் அஸ்திரங்களில் தேர்ந்ததைக்கண்டு, அந்தக்குருவான துரோணர் ஸரியான காலத்தில் குருதக்ஷிணையைப்பற்றி நினைத்தார். அஸ்திரங்களில் தேர்ச்சியைப்பற்றி எல்லாராலும் அங்கீகரிக்கப்பட்டு அரங்கின்வாயிலுக்கு வந்துசேர்ந்த பிறகு, அவர்களெல்லாரையும் நோக்கித் துரோணாசாரியர், "நீங்களெல்லாம்சேர்ந்து எனக்கு ஓர் உயர்ந்த தக்ஷிணையைக் கொடுக்க விரும்புகிறேன்" என்று சொன்னார். இவ்வாறு சொல்லப்பட்டசிஷ்யர்களனைவரும் அங்கே உடனே துரோணரைப் பார்த்து, "பகவானே! நாங்கள் என்னகொடுக்கக்கடவோம்? குரு எங்களுக்குக்கட்டளையிடவேண்டும்" என்றுகேட்டனர். ராஜாவே! அதன் பிறகு துரோணாசாரியர் சிஷ்யர்களனைவரையுமழைத்து, "நீங்கள் பாஞ்சாலராஜாவாகிய துருபதனைப் போர்முனையிற்பிடித்துக்கொண்டு வாருங்கள். உங்களுக்கு ஸுகமுண்டாகக்கடவது. அதுதான் உயர்ந்த தக்ஷிணையாகும்" என்று தக்ஷிணைக்குரிய பொருளைக்கட்டளையிட்டார். அவர்களெல்லாரும், "அப்படியேயாகட்டும்" என்றுசொல்லிக் குருதக்ஷிணை கொடுப்பதற்காகத் துரோணருடன்சேர்ந்து இரதங்களிலேறி யுத்தஞ்செய்ய விரைவாகப் புறப்பட்டனர். பிறகு அந்தப்புருஷ ஶ்ரேஷ்டர்கள் பாஞ்சால தேசத்தைத் துன்பப்படுத்திக்கொண்டே சேர்ந்தனர். துர்யோதனன், கர்ணன், மிகுந்த பலமுள்ள யுயுத்ஸு, துச்சாஸனன், விகர்ணன், ஜலஸந்தன், ஸுலோசனன் இவர்களும் மிகுந்தபராக்ரமமுள்ள இன்னும்அனேகம் ராஜகுமாரர்களும் ராஜாக்களும் நான்முன்னே நான்முன்னேயென்று மஹாபராக்ரமசாலியான அந்தத்துருபதனுடையநகரத்தை அழித்தனர். பிறகு, உயர்ந்தரதங்களிலேறின குமாரர்களனைவரும் சாரதிகளுடன் நகரத்தில்பிரவேசித்து ராஜமார்க்கத்தைச்சேர்ந்தனர். ராஜாவே! அந்தக்காலத்தில்

பாஞ்சாலதேசத்தரசனாகிய துருபதன் பெரியஸைனியத்தைப்பற்றிக் கேட்டும் பார்த்தும் தன்ஸஹோதரர்களுடன்கூடத் தன்வீட்டிலிருந்து துரிதமாகப்புறப்பட்டான். அப்போது துருபதனுடைய அந்தச்சகோதரர்களனைவரும் கவசமுகலியவற்றைத் தரித்துக்கொண்டு சரமாரிகளைப்பொழிந்து கர்ச்சனஞ்செய்தனர். பிறகு, யாருக்கும்வெல்லமுடியாத துருபதன் வெண்மையான ரதத்திலேறி யுத்தத்தில் கௌரவர்களை ஸந்தித்து உக்கிரமான பாணங்களை வருஷித்தான். அர்ச்சுனன் முன்னமே ராஜகுமாரர்களுடைய அதிககர்வத்தைப்பற்றி ஆராய்ந்து பிராமணோத்தமரான துரோணாசாரியரிடம், "இவர்கள் பராக்ரமம் முடிந்தபின் நாம் பராக்கிரமத்தைக்காண்பிப்போம்; பாஞ்சாலராஜனைப்போர்த்தலையிற்பிடிக்க இவர்களால்முடியாது" என்று சொன்னான். குற்றமற்ற அந்த அர்ச்சுனன் இவ்வாறுசொல்லித் தன் ஸஹோதரர்களுடன்கூட நகரத்துக்குவெளியில் அரைக்குரோசதூரத்திலேயே நின்றான். துருபதன் கௌரவர்களைப்பார்த்துப் பெரிய பாணவர்ஷத்தினால் அவர்களுடையஸேனையை மயங்கச்செய்து சுற்றிலும்ஓட்டினான். ரதத்திலேறி யுத்தத்திற்குஆரம்பித்தவனும் யுத்தச்செய்கைகளை விரைவாகச்செய்கின்றவனுமாகிய அந்தத்துருபதன் ஒருவனைப்பார்த்து அங்கிருந்த கௌரவர்கள் பயத்தினால் அனேகர்களிருப்பதைப்போல நினைத்தனர். துருபதனுடைய உக்கிரமான பாணங்கள் எல்லாத்திசைகளிலும் சஞ்சரித்தன. மஹாராஜாவே! அப்போது பாஞ்சாலர்களுடையவீடுகளில் சங்கங்களும் பேரிகைகளும் மிருதங்கங்களும் ஆயிரக்கணக்காக வாசிக்கப்பட்டன. மஹாத்மாக்களாகிய பாஞ்சாலர்களுடைய ஸிம்மநாதமும் வில்லின்நாண்கள் கைத்தலத்தில் உரைபடுவதனாலுண்டான பெரியசப்தமும் ஆகாயத்தைவியாபித்துக் கிளம்பின. துரியோதனன், விகர்ணன், ஸுபாஹு, தீர்க்கலோசனன், துச்சாஸனன் இவர்கள் கோபித்துச் சரமாரிகளைப் பொழிந்தனர். பாரதரே! யுத்தத்தில் யாருக்கும் ஜயிக்க முடியாத சிறந்தவில்லாளியான அந்தத் துருபதன் அதிகமாக அடிக்கப்பட்டு (பின்பு) அந்தச்சேனைகளை அந்தநிமிஷத்திலேயே ஊதிவிட்டான். அந்தத் துருபதன், சுற்றப்பட்ட எரிகொள்ளியைப்போல் சேனையைச்சுற்றி ஸஞ்சரித்துக்கொண்டு துரியோதனனையும் விகர்ணனையும் மஹாபலசாலியானகர்ணனையும் வீரர்களான அனேகராஜகுமாரர்களையும் பலவிதமானசேனைகளெல்லாவற்றையும் பாணங்களினால் திரப்பினான். பிறகு, நகரத்துஜனங்களனைவரும் மேகங்கள் மழைபொழிவதுபோல் கௌரவர்களின்மேல் உலக்கைகளையும் தடிகளையும்

பொழிந்தனர். பாரதரே! காம்பில்யநகரத்தவர், பெரியயுத்தம்நடப்ப தைக்கேட்டு உடனே கௌரவர்களையே எதிர்த்துச்சென்றனர். கௌரவர்கள் கதறினர்; ஓடினர். பாண்டவர்களைக்கூவிக்கொண்டு கதறின அவர்களுடைய மயிர்க்கூச்சமெடுக்கச்செய்யும் குரலைக்கேட்டவுடனே பாண்டவர்கள் துரோணரை அபிவாதனஞ்செய்து ரதங்களில் ஏறினர். அப்போது அர்ச்சுனன் பாண்டுபுத்திரரானயுதிஷ்டிரரை, "நீர் யுத்தஞ்செய்யவேண்டாம்" என்றுநிறுத்தி, உடனே மாத்ரியின்புத்ரர்களைத் தேரின் சக்ரரக்ஷகர்களாகச்செய்தான். அப்போது பீமஸேனன் கதையுடன்கூட ஸேனைக்குமுன்போகிறவனானான். அப்போது குற்றமற்ற அர்ச்சுனன் சத்ருக்களின்சப்தத்தைக்கேட்டுத் தன்தேரினால் திசைகளில் சப்தமுண்டாக்கிக்கொண்டு தன்ஸஹோதரர்களுடன்கூட விரைவாகச்சென்றான்.

பிறகு, கொந்தளித்தகடலைப்போல் ஒலிக்கின்ற பாஞ்சாலர்களின் மஹாஸேனையில், தண்டாயுதத்தைக்கையில்தரித்த யமனுக்கொப்பான சிறந்தகைகளையுடைய பீமஸேனன் ஸமுத்திரத்தில்முதலைபிரவேசிப்பதுபோல் பிரவேசித்தான். பிறகு, சதுரங்கஸைனியமும் நிறைந்த அந்தயுத்தமென்னும்உற்சவத்தில் கதையைத்தரித்தபீமன் ஸ்வயமாகவே யானைச்சேனையை எதிர்த்தான். யுத்தத்தில்நிபுணனும் பாகு பராக்ரமத்தில்ஒப்பற்றவனும் யமனைப்போன்றஉருவத்தைத் தரித்தவனுமாகிய பீமன் கதையினால் யானைச்சேனையையடித்தான். மலைகளைப் போன்ற அந்தயானைகள் பீமஸேனனுடைய கதையினால் உருண்டை வடிவங்களான மஸ்தகங்கள் பெயர்க்கப்பட்டு மிகுதியாகிய இரத்தத்தைப் பெருக்கிக்கொண்டு, வஜ்ராயுதத்தினால் அடிபட்டமலைகளைப் போல்பூமியில்விழுந்தன. அர்ஜுனனுக்குஜ்யேஷ்டனானபீமன் யானைகளையும் குதிரைகளையும் தேர்களையும் வீழ்த்தினான். இடையன் வனத்தில் பசுக்களைத் தடியினால் அடிப்பதுபோல் காலாட்களையும்தேராளிகளையும் அடித்தான். பீமஸேனன் தேர்களையும் யானைகளையும் ஓட்டிக்கொண்டுசென்றான். ராஜாவே! துரோணாசார்யருடைய விருப்பத்தைச்செய்ய ஆரம்பித்த அந்தப்பாண்டவனாகிய அர்ச்சுனன் அப்போது பாணவருஷங்களை வருஷித்துக் குதிரைகளையும் தேர்களையும் யானைகளையும் கூட்டங்கூட்டங்களாக நாலுபக்கங்களிலும் வீழ்த்தி யுத்தத்தில் பிரளயகாலாக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு துருபதனிடம்வந்தான். அப்போது அடிக்கப்பட்ட அந்தப்பாஞ்சாலதேசத்தாரும் ஸ்ருஞ்சயதேசத்தாருமாகிய அனைவரும் பலவகை அம்புகளினால் அர்ச்சுனனை விரைவாகமறைத்துவாய்களினால்ஸிம்மநாதங்களைச்

செய்து அர்ச்சுனனுடன் யுத்தம்செய்தனர். அந்தயுத்தம் பயங்கரமாகவும் பார்ப்பதற்கு மிக்கஆச்சரியமாகவுமிருந்தது. ஸிம்மநாதத்தைக்கேட்டு இந்திரபுத்ரனை அர்ச்சுனன் கோபமுற்றான். பிறகு, அர்ச்சுனன் வேகமாகப் பாஞ்சாலர்களை அதிகமான பாணவருஷத்தினால்மறைத்துத் திசைமயங்கச்செய்து தூரத்தினான். புகழ்பெற்ற அர்ச்சுனன் பாணங்களை இடைவிடாமல்விடுத்துக்கொண்டும்தொடுத்துக்கொண்டுமிருக்கும்போது இவ்விரண்டிற்கும் இடையிட்டகாலம் காணக்கூடாமலிருந்தது. மஹாராஜாவே! அப்போது அந்தச்சண்டையில் திசைகளும் ஆகாயமும் பூமியும் ஒன்றும்காணப்படவில்லை. காண்டீவமென்னும்வில்லைத்தரித்துப் பலவானான அர்ச்சுனன் பாணங்களினால் இருளை உண்டாக்கினபோது பாஞ்சாலர்களும் கௌரவர்களும் நல்லதுநல்லதென்றுகூவினசப்தமும் பேரிகைகளின்முழக்கமும் சங்கங்களின் பெருமுழக்கமும் சிலாகிக்கும் சப்தத்தோடுகூடிய துருபதனுடையஸிம்மநாதமும் அங்கேஉண்டானபிறகு, தேவேந்திரனைச் சம்பரன்எதிர்த்ததுபோல் ஸத்யஜித்என்பவனுடன்கூடத் துருபதன் அர்ச்சுனனை விரைவாகஎதிர்த்தான். அர்ச்சுனன் பெருஞ்சரமாரியால் பாஞ்சாலராஜனை மூடிவிட்டான். அப்போது மஹாஸிம்மமானது * யூதபதியானயானையைப் பிடிக்கப்போகையில் மற்றயானைகளிடமுண்டாகும்சப்தம்போல் பாஞ்சாலர்சேனையில ஹாஹாகாரம்பிறந்தது. அப்போது தனஞ்சயன்வருவதைக்கண்டு உறுதியானபராக்ரமமுள்ள ஸத்யஜித்என்பவன் துருபதனைக்காப்பாற்றுவதற்காக அவனையெதிர்த்துப்போனான். அப்போது அந்தஅர்ச்சுனனும் துருபதனும், இந்திரனும் மஹாபலியும்போல் யுத்தஞ்செய்வதற்காகச் சந்தித்துச் சேனைகளைக் கலங்கச்செய்தனர். அப்போது பார்த்தன் ஸத்யஜித்தை மர்மங்களைப்பேதிக்கின்ற பத்துப்பாணங்களை ஆழப்பாய்ச்சிபலமாகஅடித்தான். அது ஆச்சரியமாகஇருந்தது. பிறகு ஸத்யஜித் நூற்றுக்கணக்கானபாணங்களினால அர்ச்சுனனை விரைவாகப் பீடித்தான். மஹாரதனும் மிகுந்தவேகமுள்ளவனுமாகிய அர்ச்சுனன் பாணவருஷத்தினால் மூடப்பட்டபோது தனுவின்நாணைஉருவி வேகத்தைச்செய்தான். உடனே ஸத்யஜித்தினுடையவில்லை அறுத்துவிட்டுத் துருபதராஜாவை எதிர்த்துச்சென்றான். அதன்பின் ஸத்யஜித் மிகவும்விரைவாக மற்றொருவில்லையெடுத்துக்கொண்டு அர்ச்சுனனைத் தேர்க்குதிரைகளோடும் ஸாரதியோடும் தேரோடும்கூட விரைவாகஅடித்தான். யுத்தத்தில ஸத்யஜித்தினாலஅடிக்கப்பட்ட அர்ச்

* யூதம் - யானைக்கூட்டம்.

சுனன் அதைப்பொறுக்கவில்லை. பிறகு, அவனையொழிப்பதற்காகப் பாணங்களைவிட்டான். குதிரைகளையும் கொடியையும் விற்பிடியை யும் பின்காப்பவனும்ஸாரதியுமாகியஇருவரையும் அடித்தான். அவ்வாறு திரும்பத்திரும்ப விற்கள் பிளக்கப்பட்டும் குதிரைகள் துணிக்கப்பட்டும் போனபோது அந்தஸத்யஜித் யுத்தத்தைவிட்டுத் திரும்பிப் போனான். ராஜாவே! அவ்வாறு யுத்தத்தில் ஸத்யஜித் திரும்பிப் போனதைக்கண்டு அர்ச்சுனன் துருபதனை மிகுந்தவேகத்துடன் எதிர்த்துப்போனான். அப்போது ஜயிப்பவர்களுக்கெல்லாம்மேலான அர்ச்சுனன் பெரியயுத்தஞ்செய்தான். பார்த்தன், துருபதனுடைய வில்லைவெட்டிக் கொடியையும் தரையில்வீழ்த்தினான். ஐந்துபாணங்களினால் அவனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் அடித்தான். அர்ச்சுனன் உடனே அந்தவில்லைவைத்துவிட்டுக் கேடகம்பிடித்துக் கத்தியையுருவிக்கொண்டுஸிம்மநாதத்தைச்செய்தான். உடனே எழும்பித் துருபதன் தேரின்ஏர்க்காலிலகுதித்தான். தனஞ்சயன்பயமில்லாமல் துருபதனுடையமீதேரையடைந்து கருடன்கடலைக்கலக்கிநாகத்தைப் பிடிப்பதும்போல் அவனைப்பிடித்தான். பிறகு, பாஞ்சாலதேசத்தாரனைவரும் பத்துத்திசைகளிலும் ஓடினர். அந்தத்தனஞ்சயன் எல்லாச்சேனைகளுக்கும்தன்கைவன்மையைக்காண்பித்து ஸிம்மகர்ச்சனைபோன்ற கர்ச்சனையைச்செய்து வெளிப்புறப்பட்டான். அர்ச்சுனன்வருவதைக்கண்டு கௌரவகுமாரர்கள்சேர்ந்து மஹாத்மாவான அந்தத்துருபதனுடையநகரத்தை அப்போதே அழிக்கத்தொடங்கினர். அப்போது அர்ச்சுனன், "பீமனே! ராஜச்ரேஷ்டனாகிய துருபதன் கௌரவவீரர்களுக்குச் சிநேகிதன். அவனுடையசேனையைக் கொல்லாதே; குருதக்ஷிணைதானே கொடுக்கவேண்டும்" என்றான். மிகுந்தபலமுள்ளபீமஸேனன் அர்ச்சுனனால்தடுக்கப்பட்டபோது யுத்தம்செய்ததில் திருப்தியில்லாமலே திரும்பினான். பரதச்ரேஷ்டரே! அவர்கள் போர்முனையில யஜ்ஞஸேனனென்றுசொல்லப்பட்ட துருபதனை மந்திரியுடன்பிடித்துத்துரோணரிடம்கொண்டுவந்தனர். கர்வபங்கம் செய்யப்பட்டும் தனத்தைப்போக்கப்பட்டும் அவ்வாறு பிடிக்கப்பட்ட அந்தத்துருபதனைப்பார்த்துத் துரோணர் த்வேஷத்தை மனத்தில்வைத்துப் பேசலானார்.

"என்னால் உன்னுடையதேசம் துடைக்கப்பட்டது. உன்நகரமும் பிடிக்கப்பட்டது. உயிரோடு எதிரியின் வசத்திலகப்பட்ட பிறகு சிநேகிதனென்பதை முன்னிட்டு என்னைவிரும்பலாமா?" என்றுசொல்லி, மறுபடியும் கொஞ்சம்சிரித்துக்கொண்டு அவனைப்

பார்த்துச் சொல்லத்தொடங்கினர். "வீரனே! உயிருக்கு அபாயம் வருமென்று பயப்படாதே. நாங்கள் பொறுமையுள்ள பிராமணர்கள். க்ஷத்ரியச்ரேஷ்டனே! பால்யத்தில் என்னேடுகூட ஆச்ரமத்தில்விளையாடினதினல் சிநேகமும் அன்பும் விருத்திசெய்யப்பட்டன. ராஜாவே! மறுபடியும் உன்னுடன் ஸ்நேகத்தையே வேண்டுகிறேன். ராஜாவே! உனக்கு ஒருவரம்தருகிறேன். அதாவது, ராஜ்யத்தில் பாதியையடை. யஜ்ஞஸேன! ராஜாவாக இராதவன் ராஜாவுக்குஸ்னேகிதனுக இருக்கத்தகாதவனல்லவா? அதனலேதான், உன்னுடைய ராஜ்யத்தைப்பற்றிப் பிரயத்னஞ்செய்தேன். கங்கையின் தென்கரையில் உன்ராஜ்யம்; வடகரையில் என்ராஜ்யம். பாஞ்சாலராஜனே! விருப்பமிருந்தால் என்னை ஸ்னேகிதனென்று நீயறியலாம்" என்றார். துருபதன், "பிராமணரே! பராக்ரமமுள்ளமஹாத்மாக்களிடம் இஃது ஆச்சரியமன்று. நான் உம்மிடத்தில் ப்ரீதிவைக்கிறேன். உம்முடைய தீர்க்கமான ப்ரீதியையும் விரும்புகிறேன்" என்றான். பாரதரே! அவனல் இவ்வாறுசொல்லப்பட்டபோது துரோணர் அந்தத்துருபதனை விடுவித்தார். அவனுக்கு மரியாதையும்செய்து மனத்தில் அன்புடன் ராஜ்யத்திற்பாதியையும் கொடுத்தார். பிறகு, அந்தத் துருபதன் மனத்தளர்ச்சியடைந்து கங்கைக்கரையில் அனேகதேசங்களோடுகூடிய மாகந்தியென்னும் பட்டணத்தையும் காம்பில்யமென்னும் சிறந்தபட்டணத்தையும் சர்மண்வதிவரையிலுள்ள தக்ஷிண பாஞ்சாலதேசத்தையும் ராஜ்யமாகச்செய்தான். இவ்வாறு துரோணரால் அவமதிக்கப்பட்டுப் பிறகு காப்பாற்றப்பட்ட துருபதன் தனது க்ஷத்ரியபலத்தினல அவர் தோல்வியடைவதை நினைக்கவில்லை. துருபதன் பிரம்மதேஜஸ் என்னும்பலம் தனக்கில்லாமையைத் தெரிந்துகொண்டு, புத்ரன்ஜனிக்க உபாயம்தேடிப் பூமியெல்லாம்ஸஞ்சரித்தான். துரோணர் அஹிச்சத்ரம் என்னும் தேசத்தையெடுத்துக்கொண்டார். ராஜாவே! அனேகதேசங்களடங்கிய அஹிச்சத்ராபுரி இவ்வாறு அர்ச்சுனனல் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டுத் துரோணருக்குக் கொடுக்கப்பட்டது.

---

## நூற்றுநாற்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஸ ம் ப வ ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(துருபதன் துரோணரைக்கொல்லத்தக்க புத்ரன் உண்டாவதற்காக யாஜோபயாஜர்களைக்கொண்டு யாகஞ்செய்வித்ததும், ஹவிஸைக் கொடுப்பதற்காகத் துருபதபத்னியையழைக்க அவள் கர்வங் கொண்டு வாராமலிருந்ததனால் அக்னியில்ஹோமம் செய்ததும், அக்னியிலிருந்தே த்ருஷ்டத்யும் னனும் த்ரௌபதியும்பிறந்ததும், த்ருஷ்டத் யும்னனுக்குத் துரோணரே அஸ்த்ர வித்தையைக்கற்பித்ததும்.)

துருபதன் துரோணரிடம் துவேஷத்தை நினைத்துக்கொண்டு அதுமுதல் தூங்கவில்லை. க்ஷத்ரியபலத்தினால் அவரைஜயிப்பதையும் எதிர்பார்க்கவில்லை. அவன் பிரம்மதேஜோபலம் தனக்கில்லாமையை அறிந்து பொறுமையுடன் கர்மங்களில்ஸித்திபெற்ற பிராம்மணோத் தமர்களைத்தேடிக்கொண்டு அனேகம் பிராம்மணஅக்ரஹாரங்களில் திரிந்தான். அவன் துரோணருக்குப் பிரதிசெய்யக்கருதி, "என க்குச்சிறந்தபுத்திரனுமில்லை; பந்துக்களும் உதவியற்றவர்; மித்திரர் களுமில்லை; உலகத்திலேயே சக்தியுள்ளவன் யாருமில்லை" என்று சொல்லிக்கொண்டு நெட்டுயிர்ப்பெறிவதே காரியமாயிருந்தான். தனக்குப் புத்திரோத்பத்தியையடையவிரும்பி இப்பூமியெல்லாந் திரிந்தான். அவன் முயற்சிசெய்தும், தன்பராக்கிரமத்தினாலும் யுத் தப்பயிற்சியினாலும் ஆயுததேர்ச்சியினாலும் அஸ்த்ரங்களின்வன் மையினாலும் துரோணரைவெல்ல அசக்தனாயிருந்தான். பிறகு, அவ் வரசன் திரிந்துகொண்டிருக்கையில், கங்காதீரத்தில் கல்மாஷியென் னும் நகரத்திற்கருகில ஒருபரிசுத்தமான பிராமணக்கிராமத்தை அடைந்தான். அங்கே *ஸ்நாதகன் அல்லாதவனும் தபஸில்லாதவனு மாகிய பிராம்மணன் ஒருவனுமிருக்கவில்லை. துருபதன் அவ்வாறாக வே மிகுந்தமஹிமையுள்ளவர்களும் சிறந்ததவமுள்ளவர்களுமாகிய யாஜர் உபயாஜரென்றுபெயர்பெற்ற இரண்டுசகோதரர்களான பிரம்ம ரிஷிகளைக்கண்டான். அவன் வேதாத்யயனத்தில ஊக்கமுள்ளவர் களும் காசியபகோத்திரத்தனர்களும் காட்டிருளிக்க மிகத்தகுதியுள் ளவர்களும் ரிஷிஸ்ரேஷ்டர்களுமாகிய அந்தஇரண்டு பிராம்மணர்களை யும்,விரும்பினவற்றையெல்லாம்கொடுப்பதாகச்சொல்லி, உற்சாகத்து டன் புரோகிதர்களாகவரித்தான். அவர்களுள் இளையவரும் உறுதி

* ஸ்நாதகன் = வித்தையிலும் தபஸிலும் பூர்த்திபெற்றவன்.

யானகவமுள்ளவருமாகிய உபயாஜருடைய தவவன்மையையும் புத்தியையும்கண்டு அவர்விரும்பினவற்றைக்கொடுப்பதாக அவருக்குச்சந்தோஷத்தையுண்டாக்கி ரஹஸ்யத்தில் அவரைச்சரணமடைந்தான். குருபணிவிடை செய்வதில் ஊக்கமுள்ளவரும் எல்லாருக்கும்பிரியத்தைச்செய்பவருமாகிய அந்த உபயாஜர் விரும்பினவற்றையெல்லாம் கொடுப்பவனாகிய அந்தத்துருபதனுக்கு அர்க்கியபாத்தியங்கள் கொடுத்து ஆஸனம்போட்டுக் கனிகளைத்தந்து முறைப்படிமரியாதைசெய்து, பிறகு, "எந்தமுக்கியமானகாரியத்திற்காக நீ நம்மைவிரும்பி இந்த முயற்சி செய்திருக்கிறாய்? நீ அதைச்சொல்லக்கடவாய்" என்று கேட்டார். அப்போது அந்தத்துருபதன் அந்தரிஷிச்ரேஷ்டர் அன்புற்றிருப்பதாகஅறிந்து விரும்பத்தக்கவற்றைக்கொடுப்பதாக ஆசையுண்டாக்கி அந்தரிஷியைநோக்கி, "பிராம்மணரே! உபயாஜரே! எந்தக்கர்மம் செய்வதனால் த்ரோணனைக்கொல்லத்தக்க புத்திரன் எனக்கு உண்டாவனோ அந்தக்கருமத்தை நீர்செய்யக்கடவீர். உமக்குத் தனம் கொடுப்பேன்" என்றுசொன்னான். அதற்கு உபயாஜர், "துருபதனே! நான் பிரயோஜனத்தைவிரும்புகிறவனல்லேன். யார் விரும்புகிறவரோ அவரிடம்போகலாம்" என்றார். அந்தத்துருபதன் ஸாதுக்களின்முன்னிலையில் அவரால் இவ்வாறு மறுக்கப்பட்டபோது அவருக்குத் தன்னிடம் அன்பையுண்டாக்குவதற்காகப் பணிவிடை செய்துகொண்டிருந்தான். அதன்பிறகு, ஒருவருஷம் முடிந்தபோது ஒருகால் பிராமணோத்தமராகிய உபயாஜர் துருபதனை நோக்கிப் பின்வருமாறு இனியசொல்லாகச் சொல்லத்தொடங்கினார்.

"எனது மூத்தஸஹோதரர் ஜனங்களில்லாதகாட்டில் ஸஞ்சரிக்கையில் சுத்தமென்று நிச்சயிக்கப்படாத பூமியில் விழுந்த பழத்தை எடுத்துக்கொண்டார். பின்சென்றுகொண்டிருந்த நான் என் ஸஹோதரருடைய அந்தத் தகாதசெய்கையைக்கண்டேன். அவர் பிரயோஜனத்தை அடையும்விஷயத்தில் எவ்வகையிலும் விசாரணை செய்யார். அவர் பழத்தைக்கண்டபிறகு அதைத் தொடர்ந்துவரக்கூடிய குற்றங்களை நினைக்கவில்லை. சுத்தத்தைவிரும்பி அதைப்பற்றி ஆராய்ந்துபார்க்கவில்லை. அவர் மற்றவிஷயத்திலும் அவ்வாறிருப்பார். ராஜரிஷியே! வேதஸம்ஹிதையை அத்யயனம் செய்தபிறகு *பஞ்சமஹாயஜ்ஞங்களைச்செய்து, பூமியில் இறைந்து பொறுக்கப்பட்டவற்றுடன்சேர்த்துப் பிக்ஷான்னத்தை அப்போதைக்கப்போதுபுஜித்துக்கொண்டிருக்கையில், உணவின்சுவையைப்பற்றி அடிக்கடி பேசிக்

* தேவயஜ்ஞம், பிதிர்யஜ்ஞம், பிரம்மயஜ்ஞம், பூதயஜ்ஞம், மநுஷ்யயஜ்ஞம்.

கொண்டிருப்பார். வனத்தில் குருகுலவாசஞ்செய்து வேதாத்யயனம்செய்யும்போது மற்றவர்கள் எறிந்துவிட்ட பிக்ஷையை எப்போதும் புஜித்துக்கொண்டிருந்தார். பிறகு, அன்னங்களின் குணங்களைச் சொல்லி அடிக்கடி மகிழ்வார். ராஜாவே! இவ்வாறு அவர் பிரயோஜனத்தைவிரும்புகிறவராதலால், உனக்கு அவர் யாகம்செய்விப்பாரென்று ஊகமென்னும்கண்ணினால் அறிகிறேன். நீ இப்போது அவரிடமேசெல்" என்றார். துருபதராஜன் உபயாஜருடையசொல்லைக் கேட்டு அதனைமனத்தில்நினைத்து அருவருப்புடன் யாஜருடையஆஸ்ரமத்திற்குப் போனான். பூஜிப்பதற்குரிய யாஜரென்னும் ரிஷியைச் செவ்வையாகப்புஜித்து, "யாஜரே! சக்தியுள்ளவரே! உமக்கு எண்ணூறுபசுக்களைக் கொடுப்பேன். பிராம்மணஜாதியினிடமிருக்கும் க்ஷத்ரியபலத்தை க்ஷத்ரியன்ஜயிக்கமுடியாது. பிராமணரே! ஆதலால், இப்போது துரோணருடையவிரோதத்தில் அகப்பட்டுக்கொதிப்புற்று விசனத்துடன் சரணாகதிசெய்த எனக்கு யாகம் செய்வியும். எந்தக் கருமம் செய்வதினால் துரோணர் மரணத்துக்குக்காரணமான புத்திரனும் அர்ச்சுனனுக்கு மனைவியாகத்தக்கபுத்திரியும் எனக்கு உண்டாவார்களோ அதைச்செய்வித்துத் துரோணர் பயத்தினின்றும் என்னைக்காப்பாற்றவேண்டும். அந்தத் துரோணர் பிரம்மஜ்ஞானிகளிற் சிறந்தவர். பிரம்மதேஜஸிலும் க்ஷத்ரியசக்தியிலும் அவருக்கு மேற்பட்டவரில்லை. அதனால், துரோணர், ஸ்நேஹிதர்களுக்குண்டான சண்டைகாரணமாக என்னை ஜயித்துவிட்டார். அவருக்கு ஸமானமாக முதன்மையான க்ஷத்ரியன் ஒருவனும் இப்புவியிலில்லை. பரதவம்சத்தாருக்கு முதன்மையான ஆசாரியரும் பாரத்வாஜபுத்திரரும் சிறந்த புத்திமானுமாகிய துரோணருடைய அம்புகளின் வரிசைகள், சத்ருக்களின் வரிசைகளையும் சத்ருக்களின் தேகங்களையும் பிளப்பவை; அவருடையவில் ஆறுமுழமுள்ளது, அவருடைய கத்தியும் ஒப்பற்றது; சிறந்தவில்லாளியும் மிகுந்தவன்மையுள்ளவருமாகிய அந்தத்துரோணர் பிராமணவடிவந்தோடிருந்துகொண்டு க்ஷத்ரியர்வலிமையைநிச்சயமாகத் தடுத்துவிடுகிறார். அவர், யுத்தத்தில் கார்த்தவீர்யனுக்கும் கட்வாங்கனுக்கும் ஒப்பானவர்; பரசுராமரைப்போலவே க்ஷத்ரியர்களையழிப்பதற்காக உண்டாக்கப்பட்டிருக்கிறார்; க்ஷத்ரியதேஜஸும் பிராம்மணதேஜஸும் சேர்ந்தவரான துரோணர் கீர்த்தி பெற்றிருப்பது தகுமென்று நான் இப்போதுநினைக்கிறேன்; அம்புகளும் ஈட்டிகளும் கத்திகளும் அவருக்குத் தீங்குசெய்யா; அவருடையபெரிய பிரம்மதேஜஸ் மந்திரங்களோடு கூடிய ஆகுதிகளினால் ஜ்வலிக்கின்ற

அக்கினியைப்போன்றது; அவருடைய அஸ்க்ரபலமும் பயங்கரத்தக்க தும் பூமியிலுள்ள எதிரிகளால் தாங்கக்கூடாததுமாயிருக்கிறது; பிரம்மதேஜஸைமுன்னிட்டுக்கொண்டிருக்கிற க்ஷத்ரியதேஜஸ் சத்துருக்களைச் சந்தித்தவுடன் ஜயித்துவிடுகிறது; பிரம்மதேஜஸும் க்ஷத்ரியதேஜஸும் ஸந்திக்கும்போது பிரம்மதேஜஸே மேலாகிறது. ஆகலால், க்ஷத்ரியபலம்பிந்தித் தோல்வியுற்றநான் பிரம்மதேஜஸைச் சரணமடைந்திருக்கிறேன். துரோணருக்குமேற்பட்ட சிறந்தபிரம்மஜ்ஞானியாகிய உங்களையடைந்தபின், துரோணர்மரணத்திற்குக் காரணமும் யுத்தத்தில் வெல்லமுடியாதவனுமான புத்திரனை நான் அடையக்கடவேன். யாஜரே! துரோணமரணத்திற்குக்காரணமான வீரனாகியபுத்ரன் எந்தக்கர்மஞ்செய்வதனால் எனக்குண்டாவனோ அந்தக்கருமத்தை எனக்குச்செய்யக்கடவீர். உமக்குப் பத்துக்கோடிபசுக்களைக் கொடுப்பேன்" என்றான். யாஜர் அவனுக்கு, 'அப்படியேயாகட்டும்' என்று சொல்லி யாகத்துக்காக ஆரம்பஞ்செய்து விருப்பமில்லாத உபயாஜரையும் *குருவின்காரியம் என்று ஏவினர். துருபதமஹாராஜனை நோக்கி, "நீ பயப்படாதே; என்கிரியையினால் உனக்குப்புத்திரனைக்கொடுப்பேன்; சீக்கிரம் எழுந்திரு; கவலையில்லாமல் வேண்டியஸாமக்கிரிகளைச் சேகரம்செய்" என்றுசொன்னார். இவ்வாறு ஆஜ்ஞாபித்து வாக்குத்தத்தஞ்செய்து யாஜமுனி அவனுடைய காரியத்தைமேற்கொண்டார். பிராமணரும் மனிதர்களிற்சிறந்தவருமாகிய யாஜர் அவ்வரசனுக்குத் துரோணர்மரணத்தைப்பற்றிச் சாஸ்திரப்படியும் கிரமப்படியும் யாகம்செய்வித்தார். பிறகு, சிறந்ததவமுள்ள உபயாஜரும் தமதுகுருவான யாஜருடைய பிரயோஜனத்திற்காக அவர் ஸமீபத்திலிருந்து அந்தராஜாவுடைய காரியத்தைநடத்தினார். அவ்வாறு புத்ரபலனுக்குக் காரணமான அந்தயாககாரியத்தைப் பற்றி, "ராஜாவே! இந்தயாகத்தில் நீ எவ்வகையான புத்திரனைவிரும்புகிறாயோ அவ்வகையான சிறந்தபராக்கிரமமும் சிறந்த ஒளியும் மிக்க பலமுமுள்ள புத்திரன் உண்டாகப்போகிறான்" என்றுசொன்னார். ராஜாவே! அப்போது அந்தத்துருபதராஜன் துரோணரைக்கொல்லத்தக்கவனைப்பற்றிநினைத்துக்கொண்டு விரதியாவதை உத்தேசித்து அந்தக்கருமத்தைச்செய்தான். மனிதரிற்சிறந்த அந்தப்பிராம்மணரும் சாஸ்திரப்படி ஹோமஞ்செய்தார். புத்திரனைவிரும்பின அந்தத் துருபதனுக்கு ஸௌத்ராமணியென்னும் அந்தயாகத்தில் பத்தினியாயிருந்த கௌஸவியென்பவளிடம் பூர்ணாகுதிகாலத்தில் அந்தயாஜர்

* ஜ்யேஷ்டராகியயாஜர்.

சென்றார். அந்தயாகத்தின்முடிவில் யாஜர், "ராஜபத்னியானப்ருஷதியே! என்னிடம் இந்தஹவிஸைப் புஜிக்கவருக. உனக்குத் தங்கள்பிதாவின்வம்சத்தைவிருத்திசெய்யத்தக்க ஒருகுமாரனும் ஒருகுமாரியுமாகிய இருவர் சீக்கிரத்திலுண்டாகப்போகின்றனர்" என்று சொன்னார். "*நான் முகத்தில்மஞ்சள்பூசிக்கொள்ளவில்லை. இனிய கந்தங்களைத் தரித்துக்கொண்டிருக்கிறேன். புத்ரோத்பத்திக்குரிய உம்முடையஇந்தயஜ்ஞத்தில் நான் பத்தினியாவதற்கில்லை. யாஜரே! என்விருப்பத்தின்படி, நீர் இருக்கக்கடவீர்" என்று ப்ருஷதிசொன்னாள். "யாஜரால் பாகம்செய்யப்பட்டு உபயாஜரால்மந்திரிக்கப்பட்ட ஹவிஸ் எவ்வாறு இஷ்டபலனைச்சேர்ப்பிக்காமலிருக்கும்? ப்ருஷதியே! வந்தாலும்வா; நின்றாலும்நில்" என்று யாஜர்சொன்னார். இவ்வாறுசொல்லி யாஜர் மந்திரசுத்தமானஹவிஸை ஹோமஞ்செய்தபோது அந்தஅக்கினியிலிருந்து ஜ்வாலைநிறமுள்ளவனும் பயப்படத்தக்க உருவமுள்ளவனும் கிரீடம், கவசம், கத்தி, வில், அம்பு இவைகளைத்தரித்தவனும் தேவனைப்போன்றவீரனுமான ஒருகுமாரன் அடிக்கடிகர்ச்சித்துக்கொண்டு அக்கினியிலிருந்து எழுந்தான். அவன் சிறந்ததேரிலேறி அதனால் ஸஞ்சரித்தான். அந்தக்குமாரன் ஜனித்த மாத்திரத்தில் ஓர் அசரீரிவாக்கு, "இவன் துரோணருக்குச்சிஷ்யனாகவும் யமனாகவும் பிறந்திருக்கிறான். இந்தராஜபுத்ரன் பாஞ்சாலர்களுக்குப் பயத்தைப்போக்கிப் புகழையுண்டுபண்ணுகிறவன். இவன் துரோணவதம்செய்து த்ருபதராஜாவின் துயரத்தைஒழிப்பதற்குப் பிறந்தவன்" என்றுசொல்லிற்று. ஆகாயத்தில்ஸஞ்சரிப்பதும் கண்ணுக்குத்தெரியாததுமான ஒருபெரியதெய்வம் இவ்வாறு சொன்னவுடனே பாஞ்சாலர்கள்மகிழ்ந்து 'நல்லது, நல்லது' என்று சப்தஞ்செய்தனர். இரண்டாவதுஹோமகாலத்தில் மந்திரம்சொல்லி ஹவிஸை அக்கினியில்ஹோமம்செய்தபோது பாஞ்சாலியாகியகுமாரியும் யாகவேதிகையின் மத்தியிலிருந்தெழுந்தாள். பரதச்ரேஷ்டரே! ப்ருஷதியாகியகௌஸலி புரோகிதரானயாஜரைமறுத்ததனால்மறுபடியும் அழகானபாஞ்சாலியென்னும்குமாரியும் யாகவேதிகையின்மத்தியிலிருந்தேஉண்டானாள். மனத்தைமிகவும்கவருகின்றவளும், கறுத்தநிறமும் தாமரையிதழ்போன்ற கண்களும் கறுத்துச் சுருண்ட அளகங்களுமுடையவளுமான அந்தக்கன்னிகை ஸ்ரீதேவியே வேறுநிறத்தோடு மானிடவடிவமெடுத்துவந்ததுபோல் வேதிகைக்குள்ளிருந்து உண்டானாள். சிவந்தும்உயர்ந்துமிருக்கும் நகங்களோடும் அழகிய

* ஸ்நானம்செய்யவில்லை என்பது கருத்து.

புருவங்களோடும் அழகிய பெருத்த ஸ்தனங்களோடும்கூடினவளாக இருந்தாள். கருநெய்தல்மலர்மணத்துக்கொப்பான அவளுடையதேக மணம் ஒருகுரோசம்வரையில் வீசிற்று. அவளுடையஅழகு எல்லாவற்றிற்கும் மேலானது. பூமியில் அவளுக்குஉவமையில்லை. அவள் தேவர்களும் அஸுரர்களும் யக்ஷர்களும் விரும்பத்தக்க சிறந்த பெண். அழகியநிதம்பங்களையுடைய அவள்பிறந்தபிறகும், "எல்லாப் பெண்களிலும்சிறந்தவளான கிருஷ்ணை க்ஷத்திரியர்களுக்கு நாசத்தையுண்டாக்கப்போகிறாள். அழகிய இடையுள்ள இவள் காலம்வரும்போது *தேவகாரியத்தை நிறைவேற்றப்போகிறாள். இவள்காரணமாக க்ஷத்ரியர்களுக்குப் பெரியபயம்உண்டாகப்போகின்றது" என்று அசரீரிவாணிசொல்லிற்று. அதைக்கேட்டுப் பாஞ்சாலர்கள் அனைவரும் ஸிம்மக்கூட்டம்போல் கர்ச்சித்தனர். ஸந்தோஷம்நிரம்பின அவர்களை இந்தப்பூமி தாங்காமற்போயிற்று. மஹாத்மாவாகிய துருபதனுக்கு இனியவர்களும் மனிதர்களிற்சிறந்தவர்களும் ராஜலக்ஷ்மி மிகப்பொருந்தினவர்களும் க்ஷத்ரியர்க்குரிய சரீர அமைப்புள்ளவர்களுமாகிய குமாரகுமாரிகளிருவரும் அவ்வாறு பிறந்தனர். அவர்களைக் கண்டபிறகு அந்தப்பிருஷதி சந்ததியைவிரும்பி, "இவர்களிருவரும் என்னைத்தவிர வேறொருத்தியைத் தாயாராக அறியாமலிருக்கவேண்டும்" என்று யாஜரைச் சரணமடைந்தாள். யாஜர் ராஜாவின்விருப்பத்தைச்செய்யக்கருதிஅவளுக்கு, 'அப்படியேஆகட்டும்'என்றுசொன்னார். "பயப்படாமல், †த்ருஷ்டனாயிருப்பதனாலும், த்யும்னமென்னப்பட்டபொன்மயமான கவசகுண்டலமுதலானவற்றோடு பிறந்ததனாலும், இந்தத்துருபதனுடையகுமாரன் த்ருஷ்டத்யும்னன்என்றபெயரோடிருக்கட்டும்" என்றும், "இந்தக்கன்னிகைநிறம் கருமையாயிருப்பதனால் கிருஷ்ணையென்றபெயருள்ளவளாயிருக்கட்டும்" என்றும் பிராம்மணர்கள் ஸந்தோஷம்நிரம்பினமனத்தோடு அவர்களிருவருக்கும் பெயர்களிட்டனர். அவ்வாறு அவ்விருவரும் துருபதனுக்கு மஹாயாகத்தில் பிறந்தனர். அதன்பின் திருஷ்டத்யும்னன் வேதாத்யயனத்தில் பாரங்கதனானான். பராக்ரமசாலியாகிய துரோணர் துருபதபுத்திரனாகிய த்ருஷ்டதயும்னனைத் தம்வீட்டிற்கழைத்து வந்து அஸ்த்ரவித்தை சொல்லிவைப்பதற்காக உபாகர்மமென்றுசொல்லப்பட்ட வித்தியாரம்பத்தைச்செய்தார். சிறந்தஞானமுள்ள துரோணர் அவசியம்நேரிடத்தக்கவிதியை விலக்கமுடியாதென்றுநினைத்துத் தமது கீர்த்தியைக்காப்பாற்றிக்கொள்வதற்காக அதனை அவ்

* பூபாரத்தையொழிப்பது. † த்ருஷ்டன் = ஜயிக்கமுடியாதவன்.

வாறுசெய்தார். அவனும் உயர்ந்தபுத்தியினால் எல்லா அஸ்த்ரங்களை யும் சீக்கிரத்தில் கிரஹித்துக்கொண்டான்.

---

## நூற்றைம்பதாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(துருபதனுடைய ஜனனம்.)

ஜனமேஜயர், "பிரம்மரிஷியே! துருபதனுடைய ஜனனத்தை யும் கேட்க விரும்புகிறேன். அவன் எவ்வாறுபிறந்தான்? எவ் வாறு அஸ்த்ரங்களையடைந்தான்? பகவானே! பிராம்மணோத்தமரே! இதனை உங்களிடம் செவ்வையாகக்கேட்க விரும்புகிறேன்; அவர்க ளுடைய பிறப்பைச்சொல்லும்போது கேட்கக்கேட்க எனக்கு மிகு தியாக விருப்பம் மிகுகின்றது" என்று சொல்ல, வைசம்பாயனர் சொல்லுகிறார்.

"பாஞ்சாலதேசத்தரசன் புத்திரனைவிரும்புகிறவனாக இருந் தான். அந்தமஹாராஜா புத்திரனுக்காக வனஞ்சென்று கடுமையான தவமுள்ளமஹரிஷிகளுக்கு முயற்சியோடு சுச்ருஷைசெய்துகொண்டு மிக்க கடுந்தவத்தைச்செய்தான். ராஜாவே! மான்கூட்டங்களோடு கூடியவனத்தில் புத்திரனுக்காக அவன் தவஞ்செய்துகொண்டிருக் கும்போது வெகுகாலமாயிற்று. மிகுந்ததேஜஸுள்ள அந்த அரசன் சிலகாலம் காற்றைப்புஜித்துக்கொண்டும் சிலகாலம் ஆகாரமில்லாம லும் கடுந்தவம்புரிந்தான். ராஜஶ்ரேஷ்டரான பரதவம்சத்து மஹா ராஜாவே! அந்தமஹாவீரன் அவ்வாறிருக்கையில் நெடுங்காலஞ் சென்றது. பரதச்ரேஷ்டரே! பிறகு, சிலநாளைக்கெல்லாம் காமத்தை விருத்திசெய்யத்தகுந்த வஸந்தகாலத்தில் பிராணிகளின்மனங்களை மிகவும் கவருவதான புஷ்பித்த அசோகவனத்தில் தாமரைமலர்போ ன்றகண்ணையுடையவனான அவ்வரசன் கங்காநதிக்கரைக்குச்சென்று அங்கே தவத்திலிருந்துகொண்டிருந்தான். ராஜாவே! பிறகு, சில காலத்துக்கெல்லாம்அந்த வனத்திற்கு மேனகையென்றுபெயர்பெற்ற அப்ஸரஸ் வந்து அங்கேபுஷ்பித்தமரங்களில் மறைந்துகொண்டுவரு கையில் ராஜாவின்பார்வைக்கு எதிர்ப்பட்டாள். ராஜாவே! அவ்வி டத்தில் ஆஸனத்திலிருந்த அரசனை அவள் பார்க்கவில்லை. ராஜாவுக்கு மட்டும் அந்த அப்ஸரஸைப்பார்த்ததனால் வீரியம் பூமியில்விழுந்தது. ராஜஶ்ரேஷ்டரே! தீர்க்காயுஸ் உள்ளவரே! மனிதர்களுக்குப் பிரபு வாகியஅவ்வரசன்வெட்கத்துடன் கால்களினால் அதனைமறைத்தான்.

அதிலிருந்து துருபதன் உண்டானான். பாரதரே! அப்போது பரிசுத்தமானமனத்தையுடைய அந்த ராஜரிஷியின் தவவன்மையினால் கால்வைத்தவுடன் புத்திரன் உண்டானதனால தபோதனர்களும் வித்வான்களுமான ரிஷிகளெல்லோருஞ்சேர்ந்து அவனுக்குத் * துருபதன் என்று பெயர்வைத்தனர். ராஜாக்களுக்கெல்லாம் உத்தமரானராஜவே! பாரதரே! அவன் அந்தப்பரத்வாஜருடைய ஆஸ்ரமத்திலேயே விரும்பினவற்றையெல்லாம் அடைந்து மிகவும்ஸுகமாக வளர்ந்தான். ராஜேந்திரரே! பிரபுவாகிய பாஞ்சாலதேசத்தரசனும் அந்தப்புத்திரனை வித்தியாப்யாஸத்திற்காக மஹாத்மாவான பரத்வாஜரிடம் ஒப்புவித்துத் தனது ராஜ்யத்திற்குச்சென்றான். ராஜாவே! பாரதரே! பிறகு, அந்தக்குமாரன் துரோணருடன்சேர்ந்து அந்தக் காட்டில் வேதங்களையும் வேதாங்கங்களையும் தனுர்வேதங்களையும் அப்யஸித்தான். அவன் அந்தவனத்தில் மிகுந்தஸந்தோஷமுற்று ஸுகமாகத்திரிந்தான். ராஜாவே! அவன் இவ்வாறு அந்தக்காட்டிலுள்ளவர்களோடு கூடியிருக்கையில் வெகுகாலத்திற்குப்பிறகு அவனுடையதந்தை ஸ்வர்க்கமடைந்தான். அப்போது பாஞ்சாலர்கள் சேர்ந்து அவனைப் பாஞ்சாலதேசாதிபதியாகப் பட்டாபிஷேகஞ்செய்தனர். அரசர்க்கரசே! அவன் ராஜ்யத்தையடைந்தபின், நண்பர்களுக்கு ஸந்தோஷத்தைவிருத்திசெய்துகொண்டு இந்திரன்ஸ்வர்க்கத்தை ரக்ஷிப்பதுபோல் கிரமமாகராஜ்யபரிபாலனஞ்செய்தான். ராஜஶ்ரேஷ்டரே! இந்தத்துருபதனென்னும்ராஜரிஷியின்பிறப்பும்திருஷ்டத்யும்னனுடையபிறப்பும் நடந்தபடி என்னால் உமக்குச் சொல்லப்பட்டன.

---

## நூற்றைம்பத்தோராவது அத்தியாயம்.

## ஸ ம் ப வ ப ர் வ ம். (தொடர்ச்சி.)



(தர்மராஜாவுக்கு யௌவராஜ்யபட்டாபிஷேகமும் பலராமரிடம் பீமஸேனன் கதாயுத்தம்கற்றுக்கொண்டதும், துரோணர் அர்ச்சுனனுக்குப் பிரம்மசிரஸ்என்னும் அஸ்த்ரத்தைப்பற்றியவிதிகளைவிதித்ததும், பீமார்ச்சுனர்கள் திக்குவிஜயஞ்செய்ததும்.)

" **ரா**ஜேந்திரரே! கௌரவபுத்ரராகிய யுதிஷ்டிரர் ராஜ்யத்தை ரக்ஷிப்பதில் ஸமர்த்தரென்றறிந்து அவருக்கு யுவராஜ்யபட்டாபிஷேகஞ்செய்வதற்காக த்ருதராஷ்டிரன் மந்திரிகளுடன்ஆலோசனைசெய்

* துரு = மரத்தடியில், பதன் = கால்வைத்ததனாலுண்டானவன்.

தான். அப்போது, அந்தத்ருதராஷ்ட்ரனுடையபுத்ரர்கள் தெரிந்து கொண்டு வருத்தப்பட்டனர். ராஜாவே! பிறகு, ஒருவருஷத்தின் முடிவில் பாண்டுபுத்திரராகிய யுதிஷ்டிரர் த்ருதராஷ்டிரனால் யௌவ ராஜ்யபட்டாபிஷேகம் செய்யப்பெற்றார். பிறகு, கொஞ்சகாலத்தில் குந்தியின்புத்ரராகிய யுதிஷ்டிரர் வினயத்தினாலும் ஒழுக்கத்தினாலும் சாந்தகுணத்தினாலும் தகப்பனாருடைய கீர்த்தியை மறைத்துவிட் டார். பாண்டுபுத்ரனாகிய பீமஸேனன் கத்திச்சண்டையிலும் கதா யுத்தத்திலும் ரதயுத்தத்திலும் எப்போதும் பலராமரிடம் சிக்ஷை சொல்லிக்கொண்டான். சிக்ஷைமுடிந்தபின் பீமன் பலத்தில் த்யுமத் ஸேனனுக்கு ஒப்பாகஇருந்தான். பராக்கிரமம் நிரம்பினவனாக இருந் தும் தன்ஸஹோதரர்களுக்கு உட்பட்டிருந்தான். அர்ச்சுனன் நேரும் வளைவும் அகலமுமான கத்திபோல் இருபக்கங்களும் கூர்மை யுள்ளபாணங்கள், ஊசிபோன்ற நாராசபாணங்கள், * பல்லங்களென் னப்பட்டபாணங்கள், அர்த்தசந்திரபாணங்கள் இவைகளை நழுவாமல் கெட்டியாகப்பிடிப்பதிலும் தூரிதமாகவிடுவதிலும் குறிதவறாமலடிப் பதிலும் ரஹஸ்யம்தெரிந்து பிரயோகிப்பவனாகஇருந்தான். வேகத் திலும் அங்கங்களின் அமைப்பிலும் அர்ஜுனனுக்கொப்பானவன் உலகத்தில் மற்றொருவனுமில்லையென்று துரோணர் நிச்சயஞ்செய் தார். பிறகு, துரோணர் கௌரவர்களின்ஸபையில் அர்ஜுனனைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லலானார்:

"பாரதனே! அக்னிவேச்யரென்று க்யாதிபெற்ற என்குரு வானவர் முன்னே தனுர்வேதத்தில் அகஸ்தியருடையசிஷ்யராகஇரு ந்தார். நான் அந்த அக்னிவேச்யருடைய சிஷ்யன். நான் இந்த வித்தையை ஒரு நல்லபாத்திரத்திலிருந்து மற்றொரு நல்லபாத்திரத் தில்சேர்க்க ஆரம்பித்தவன். நான் தவத்தினால் அடைந்ததும் வீண் போகாததும் வஜ்ராயுதம்போன்றதுமாகிய பிரமசிரஸ் என்னும்பெய ருள்ள ஓர் அஸ்த்ரம் இருக்கிறது. அது பூமிமுழுதையும் தகித்து விடும். என்குரு எனக்குக்கொடுக்கும்போது, 'பாரத்வாஜபுத்திர னே! நீ இந்தஅஸ்த்ரத்தை யுத்தத்தில் மனிதர்கள்மீது பிரயோகிக் கத்தகாது. அவர்கள் சக்தியில்குறைந்தவர்கள்' என்று சொல்லி யிருக்கிறார். மிகுந்தபராக்ரமமுள்ளவனே! உன்னுடன் மறைந்து யுத்தம்செய்யத்தக்க தேவாஸுரர்முதலிய பூதம் எதுவாயிருந்தா லும் அதை யுத்தத்தில் இந்த அஸ்த்ரத்தினால் நீ கொன்றுவிடலாம். வீரனே! உனக்குக்கிடைத்த இந்தஅஸ்த்ரம் தேவலோகத்தது.

* முன்னும் பின்னும் முள்ளுள்ள பாணங்கள்.

உன்னைவிட வேறொருவன் இதற்குத்தகுதியுள்ளவனல்லன். ராஜாவே! அக்னிவேச்ய முனியினால் எனக்குவிதிக்கப்பட்ட *வியவஸ்தையை நீ காப்பாற்றவேண்டும். உன்உறவினர்முன்பாக எனக்கு நீ குருதக்ஷிணைகொடு" என்றார். அர்ஜுனன், "கொடுக்கிறேன்" என்று பிரதிஜ்ஞைசெய்தபின், குருவான துரோணர், "குற்றமற்றவனே! யுத்தகாலத்தில் நான் யுத்தஞ்செய்யும்போது நீ எனக்கு எதிர்யுத்தம் செய்யவேண்டும்" என்றுகேட்டார். கௌரவர்களிற்சிறந்த அர்ஜுனன் "அப்படியே ஆகட்டும்" என்று துரோணருக்கு வாக்குத்தத்தஞ்செய்து அவர்பாதங்களைத்தொட்டு வந்தனஞ்செய்து வணக்கமாகச் சமீபத்திலிருந்தான். துரோணர் அர்ஜுனனைத் தழுவிக்கொண்டு, "பார்த்தனே! இவ்வுலகத்தில் எல்லா ஆயுதங்களாலும் யுத்தஞ்செய்வதிலும் உனக்கீடாக எந்தமனிதனையும் நான் ஒருகாலும்செய்வதில்லையென்று முன்னமே நான் உனக்குச்சொல்லியிருந்ததைச் செவ்வையாக நிறைவேற்றிவிட்டேன். உனக்கு ஈடானவனில்லை. தேவர்களாகட்டும் தைத்தியர்களாகட்டும் தானவர்களாகட்டும் யுத்தத்தில் உன்னையெதிர்க்க வல்லவரல்லர். நானே யுத்தத்தில் உன்னைவிடச் சிறந்தவனல்லன். மற்றமனிதர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமா? யாதவகுலத்திற்பிறந்தவரும் கம்ஸனையும்காளியனையும் வதஞ்செய்தவரும் தாமரைமலர்போன்ற கண்களையுடையவருமான பகவான் ஒருவர்தாம் இவ்வுலகத்தில் உனக்கு மேற்பட்டவர். அவர் எல்லாலோகங்களையும் ஜயிப்பவர்; எல்லாஆயுதங்களையும் தரிப்பவர். அர்ஜுனா! இதனால் இப்போது நான் உனக்குப் பொய்சொன்னவனாகேன். உலகமெல்லாம் அவரால் காக்கப்படுகிறது; அவரிடம் லயமாகப்போகிறது; அவரிடமிருந்துதான் உண்டானது. அவருடைய ஸ்வரூபத்தைப் பிரம்மா ஈசானன்முதலியவரும்அறியார். அவருடையநாபியிலுண்டானபிரம்மா ஸர்வப்பிராணிகளையும்படைத்தவர். உலகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹாரங்களுக்குக் கர்த்தாவும் உலகமனைத்துமாக இருப்பவரும் அந்தக்கிருஷ்ணபகவானே. இறந்ததும் நிகழ்வதும் வருவதுமாகிய பிரபஞ்சமும் அவரே. அவர் பரமபுருஷர்; நித்தியர்; எங்கும்வியாபித்தவர்; விகாரமற்றவர்; அசைவற்றவர்; எப்போதும் ஒரேவிதமாகஇருப்பவர்; யோகமே மூர்த்தீகரித்த அந்தக்கிருஷ்ணமூர்த்தி உலகத்தைக்காப்பாற்றுவதற்கு லீலையாக அவதாரஞ்செய்திருக்கிறார். அவருக்கொப்பானவர் பிறக்கவுமில்லை; பிறந்ததுமில்லை; பிறக்கப்போவதுமில்லை. ஜங்கமங்களுக்கும் ஸ்தாவரங்களுக்

* மனிதர்களிடம் பிரயோகிக்காமலிருப்பது.

கும் பிதாவும் பூஜ்யருமாகிய அவர் உனக்கு மாதுல புத்ரராயிருக்கிறார். தனது நன்மையை அறிந்த எந்தமனிதன் அவரைஜயிக்கவிரும்புவன்? அவர் உனக்குமைத்துனரும் ஸ்நேஹிதருமாவார். அவருக்கும் நீ உயிர்போன்ற அன்பனுவாய். அவருக்கு உன்னிடத்தில் சிநேகம் அதிகமாகவும் உனக்கும் அவரிடத்தில்நேசம் உறுதியாகவுமிருக்கும். அதனால், உனக்கு அவருடன்விளையாட்டாகவும் யுத்தம் நேராது. மேலும், முன்னே கிருஷ்ணன் நந்தகோபருடையகோகுலத்தில் வளர்ந்துகொண்டிருந்தபோது இந்திரன் அவரிடம் உன் விஷயமாக, "என்னுடைய அம்சமானவனும் பூலோகத்தில் புருஷர்களில் உத்தமனும் குந்திபுத்ரர்களில் கனிஷ்டனும் சிறந்தவீரனும் பாண்டுபுத்ரனுமாகிய அர்ஜுனனென்பவன் பூபாரத்தையொழிப்பதில் உமக்கு உதவிசெய்யப்போகிறான். பிரபுவே! அவனுக்காக அபயம்கொடும். நம்மைப்பற்றி அவனைக்காப்பாற்றும்" என்றுகேட்டுக்கொண்டான். அர்ச்சுன! சங்கசக்ரகதாதரரும் லக்ஷ்மீபதியுமான செந்தாமரைக்கண்ணர் இவ்வாறு இந்திரனால் கேட்டுக்கொள்ளப்பட்டபோது அவனைப்பார்த்து, "பாண்டுவம்சத்திற்பிறந்தவனும் மிகுந்த தர்மிஷ்டனும் அஸ்த்ரம்பிடித்தவர்களெல்லாரிலும் சிறந்தவனும் என் அத்தைமகனுமாகிய அர்ஜுனனை நான் அறிவேன். எல்லாலோகங்களிலும் மஹாவீரனும் உன் அம்சமுமாகிய அவனை நான் காப்பாற்றுவேன். எங்களிருவருடையஸ்நேஹத்தைப்போன்ற ஸ்நேஹம் உலகத்தில்இருக்கப்போகிறதில்லை. அவனிடம்பக்தியுள்ளவனெவனோஅவன்என்னிடத்திலும்பக்தியுள்ளவன். அவனைவிரோதிப்பவனெவனோ அவன்என்னையும்விரோதிப்பவன். என்னுடையதனமெல்லாம் அவனுடையது. அவனில்லாமல் நான் ஜீவிக்கமாட்டேன்" என்றார். அர்ச்சுன! ஸர்வேச்வரரானகிருஷ்ணன் இந்திரனுக்குமுன்னே இவ்வாறுரைத்திருக்கிறார். ஆதலால், உனக்குஒப்பானவனும் அதிகமானவனுமாகியபுருஷன் அவரைவிடவேறொருவனும்இவ்வுலகத்தில் உண்டாகப்போவதில்லை. நீ அவரையே சரணமடை. தேவர்க்குந்தேவராகிய ஜனார்த்தனர் எல்லாப்பிராணிகளையும் காப்பதற்குரியவர்" என்றார். அர்ச்சுனன் ஸரியென்று துரோணரிடம்ஒப்புக்கொண்டு அவருடையபாதவந்தனஞ்செய்தபிறகு தர்மராஜாவுக்குக் கீழ்ப்படிந்தவனாக இருந்தான். உலகத்தில், 'அர்ச்சுனனைப்போன்றவில்லாளி ஒருவனுமில்லை' என்றபெயர் கடல்சூழ்ந்தபூமியெல்லாம்தானாகவே பரவியது. பாண்டவனானதனஞ்சயன் கதாயுத்தத்திலும் கத்திச்சண்டையிலும் தேர்ச்சண்டையிலும் வில்யுத்தத்திலும் பாரங்கதனாக

இருந்தான். நீதிதவறாத ஸஹதேவனும் நீதிசாஸ்திரஜ்ஞானம் எல்லா வற்றையும் தேவேந்திரனிடமிருந்து அடைந்து அஸ்த்ரசஸ்த்ரங்களி லும் சாஸ்திரங்களிலும் தேர் யானை குதிரைகளின்பழக்கத்திலும் பாண்டித்தியத்தையடைந்து ஸஹோதரர்களுக்குட்பட்டிருந்தான். இவ்வாறே துரோணராற்கற்பிக்கப்பட்டவனும் சகோதரர்களுக்கு அன்பனுமாயுள்ள நகுலன் சித்திரயுத்தம்செய்பவனாகவும் அதிரதர் களிற்சிறந்தவனாகவும் பெயர்பெற்றிருந்தான். கந்தர்வர்களின்விரோத மிருந்தும் மூன்றுவருஷங்கள் தடையின்றி யஜ்ஞஞ்செய்துமுடித்தவ னாகிய ஸௌவீரனென்னும் அரசன் அர்ச்சுனன்முதலியபாண்டவர்க ளால் போரில்கொல்லப்பட்டான், வீரனாகியபாண்டுவும் எவனை அடக்க வில்லையோ அந்த யவனதேசத்ததிபதியாகியஸௌவீரராஜன் அர்ச் சுனனால்ஜயிக்கப்பட்டான். மிக்க பலம்கிரம்பினவனும் கௌரவர்க ளைப்பற்றிஎப்போதும் கோபமுள்ளவனுமாகிய விபுலனென்னும்பெய ருள்ள அந்தஸௌவீரதேசத்தரசன் சிறந்தபுத்திமானாகிய அர்ச்சுன னால் கொல்லப்பட்டான். யுத்தத்தில் ஜயிக்கிறநிச்சயத்தோடுகூடிய வனும் தத்தாமித்ரனென்று மற்றொருபெயருள்ளவனுமாகிய ஸுமி த்ரனென்னும் ஸௌவீர அரசனையும் அர்ச்சுனன் பாணங்களால்ஜயித் தான். பீமஸேனனைச் சகாயமாகக்கொண்ட அந்தஅர்ச்சுனன் கிழக் குத்தேசத்தவர்களான பதினாயிரம் மஹாரதர்களைத் தான் ஒற்றைத் தேராளியாகவேயிருந்து ஜயித்தான். அப்படியே ஒரே ரதிகனாகச் சென்று தென்திசையைஜயித்தான். தனஞ்சயன் தனக்குவியலைக் குருதேசத்திற்கொண்டுவந்துசேர்த்தான். அவன் பதினைந்தாவது பிராயத்தில் இதையெல்லாம்செய்ததனால் அவனைக்கண்டு த்ருதராஷ் டிரபுத்ரர்களுக்குப் பயமுண்டாயிற்று. சிறந்தகைகளையுடையவனும் பலவான்களிற்சிறந்தவனுமாகிய எந்தப்பீமஸேனன் த்ருதராஷ்டிரபுத் ரர்களெல்லாருக்கும் தன்பலத்தினால் அபகாரஞ்செய்தானோ அந்தக் கெட்ட எண்ணமில்லாத பீமஸேனனைக் குற்றத்தையேநாடும் த்ருத ராஷ்டிரபுத்ரர்களனைவரும் அவனுடையசெய்கையினாலுண்டான பய த்தினால் குற்றமுள்ளவனாகநினைத்தனர். அவனுடைய செய்கைகளைக் கண்டும், பாண்டவர்களெல்லாரும் புகழ்பெற்றுப் பலத்தினால்அனேக மடங்கு அதிகரித்திருப்பதைக்கண்டும், த்ருதராஷ்டிரபுத்ரர்கள் தங்க ளுக்குத்தீங்குவருவதைநினைத்து அவர்களிடம் பயந்தனர். இவ்வாறு புருஷச்ரேஷ்டர்களும் மஹாத்மாக்களுமாகிய பாண்டவர்களனைவ ரும் முன்னே அயல்தேசங்களைஜயித்துத் தங்கள்தேசத்தைவிருத்தி செய்தனர். பிறகு, வலியவில்லாளிகளாகிய பாண்டவர்களின்பலம்

மிகப்புகழ்பெற்றிருப்பதைத்தெரிந்துகொண்ட த்ருதராஷ்டிரனுக்குப் பாண்டவர்களிடமிருந்த எண்ணம் உடனேகெட்டுப்போயிற்று. அதிகமாகக் கவலையடைந்திருந்த அவ்வரசனுக்கு ராத்திரியில் நித்திரை வரவில்லை.

---

## நூற்றைம்பத்திரண்டாவது அத்தியாயம்.

## ஸம்பவ பர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரருக்குராஜ்யாபிஷேகஞ்செய்யும்படி நகரத்துஜனங்கள்சொன்னதைக்கேட்டுத் துயரமுற்றுத் துரியோதனன் தந்தையிடம்பேசுவது.)

பலத்திற்சிறந்த பீமஸேனனையும் வித்தையிற்சிறந்த அர்ச்சுனனையும்கண்டு துரியோதனன் துக்கத்தினால் பரிதபித்தான். பிறகு, சூரியபுத்திரனானகர்ணனன் ஸுபலன்புத்திரனான சகுனிமுதலானோர்கள் அனேகஉபாயங்களால் பாண்டவர்களைக் கொல்லக்கருதினர். பாண்டவர்களும் விதுரருடையபுத்திமதியை அனுஸரித்து வெளிக்காட்டாமல் அவையெல்லாவற்றிற்கும் கூடியவரையிற் பரிகாரஞ்செய்தனர். பாரதரே! அந்தக்காலத்தில் நகரத்துஜனங்கள், பாண்டுபுத்ரர்கள் குணங்களெல்லாம்சேர்ந்திருப்பதைக்கண்டு அவர்களின்குணங்களைப் பற்றி ஸபைகளில்பேசினர். அப்போது நாற்சந்திகளிலும் ஸபைகளிலும் ஜனங்கள்கூடி ராஜ்யலாபம்பெற்ற பாண்டுபுத்திரர்களில் ஜ்யேஷ்டரான யுதிஷ்டிரரைப்பற்றிப் பேசினர். "அறிவேகண்ணாகவுடையத்ருதராஷ்டிரராஜன் கண்ணில்லாமையால் முன்னமேராஜ்யம் அடைந்திருக்கவில்லை. அவன் இப்போது ராஜாவாவதெப்படி ? ஸத்யஸந்தரும் சிறந்தநியமமுள்ளவருமாகிய சந்தனுபுத்ரரான பீஷ்மர் முன்னே ராஜ்யத்தை மறுத்துவிட்டு இப்போது ஒருகாலும் அங்கீகரிக்கமாட்டார் ; ஆதலால், நாம் இளையவரும் முதிர்ந்தகுணமுள்ளவரும் ஸத்யமும்தயையுமுள்ளவருமாகிய பாண்டுபுத்ரர்களில் ஜ்யேஷ்டரை இப்போது ராஜ்யாபிஷேகஞ்செய்யவேண்டும். அதுதான் ஸரி. தர்மந்தெரிந்த அந்தயுதிஷ்டிரர் சந்தனுபுத்ரரான பீஷ்மரையும் த்ருதராஷ்டிரனையும் த்ருதராஷ்டிரபுத்ரர்களையும் மேன்மைப்படுத்திப் பலவகையான ராஜபோகங்களையுமளிப்பார்" என்றனர். கெட்டபுத்தியுள்ள துரியோதனன் யுதிஷ்டிரரிடத்தில் நேசம்வைத்துப்பேசுகின்ற அந்தஜனங்களுடைய அந்தவசனங்களைக்கேட்டுத் துயரமுற்றான்.

கெட்டசித்தமுள்ள துரியோதனன் மனக்கொதிப்புற்றவனாகி அவர்கள்பேசுவதைப்பொறுக்கவில்லை; பொறாமையினால் அதிகதாபத்தையடைந்து த்ருதராஷ்டிரனிடம் சென்றான்; அப்போது அவன் பிதாவைத் தனிமையில்கண்டு மரியாதைசெய்து, பிறகு நகரத்துஜனங்கள் யுதிஷ்டிரனிடம்வைத்திருக்கும் அன்பினாலுண்டான துயரத்துடன் பின்வருமாறு சொல்லத்தொடங்கினான் :

"பிதாவே! பிதற்றுகின்ற நகரத்து ஜனங்களுடைய அயோக்கியமானபேச்சுக்களை நான்கேட்டேன்; உம்மையும் பீஷ்மரையும் அவமதித்து, பாண்டுபுத்ரன் ராஜாவாயிருப்பதை விரும்புகின்றனர். பீஷ்மர் ராஜ்யபரிபாலனத்தை விரும்புகிறதில்லை. இஃது அவருடைய உறுதி. பட்டணத்திலுள்ளஜனங்கள் நமக்குத்தான் துயரத்தையுண்டாக்கவிரும்புகின்றனர். பாண்டு முன்னே தன்னுடையகுணங்களினால் தந்தையினிடமிருந்து ராஜ்யத்தைப்பெற்றான். உமக்குக் கண் தெரியாமையென்னும் குற்றமிருந்ததனால் உமக்குரியராஜ்யத்தை நீர் அடையாமல்போனீர். இந்தப்பாண்டவன் பாண்டுவின்தாயபாகமாக ராஜ்யத்தையடைந்தால், அவன்புத்திரன் நிச்சயமாக ராஜ்யத்தை அடைந்தவனே. அவனபுத்திரனும் அவனுக்குப்புத்திரனும் அவ்வாறுதான். ராஜாவே! ஆதலால், நாங்கள் எங்கள்ஸந்ததிகளுடன் கூட ராஜவம்சமில்லாமல் உலகத்தில் அவமதிக்கப்பட்டிருப்போம். ராஜாவே! எப்படிச்செய்தால் நாங்கள் எப்போதும் பிறர்அன்னத்திற்குக்காத்திருந்து நரகம்போன்ற துக்கத்தை அனுபவிக்காமலிருப்போமோ அப்படிப்பட்டநீதியை நீங்கள் செய்யவேண்டும். ராஜாவே! இந்தராஜ்யத்தை முன்னமே நீரடைந்திருப்பீராயின் ஜனங்களுக்கு விருப்பமில்லாமலிருந்தபோதிலும் நாங்கள் நிச்சயமாக ராஜ்யத்தை அடைவோம்" என்றான்.

தன்புத்திரன் இவ்வாறுசொன்னதைக்கேட்டு, த்ருதராஷ்டிரன் சற்றுநேரம் சிந்தித்து, பிறகு துரியோதனனைநோக்கி, "கௌரவனாகியபாண்டு தர்மந்தவறாதவன்; என்னிடத்திலும் என்னைச்சார்ந்த ஞாதிகளெல்லாரிடத்திலும் விசேஷமாக அன்புவைத்திருந்தவன். சிறந்ததர்மிஷ்டனாகிய பாண்டு இந்த உலகத்தில் போஜனமுதல் ஒன்றையும் தனக்குவேண்டுமென்று நினைப்பதில்லை. அவற்றையெல்லாம் என்னிடம்தெரிவிப்பான். பாண்டுவைப்போலவே அவன்புத்திரனும் எப்போதும் தர்மத்தைவிடாதவன்; குணங்கள்நிரம்பினவன்; உலகத்தில் பிரக்யாதிபெற்றவன்; நகரத்திலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறான். மனிதரிற்சிறந்தவனாகிய அவன் நம்மால் எவ்வாறுகுறைக்கக்கூடிய

வன்? நமதுராஜ்யத்தை அவன் அடைந்தேயிருக்கிறான். ஸஹாயர்களும் அவனுக்கு விசேஷமாக இருக்கின்றனர். பாண்டுவினால் மந்திரிகள் எப்போதும் ஆதரிக்கப்பட்டிருந்தனர். ஸேனைகளும் மதிக்கப்பெற்றிருந்தன. அவர்களின்புத்திரர்களும் பௌத்திரர்களும் விசேஷமாக ஆதரிக்கப்பட்டனர். குழந்தாய்! பாண்டுவோடு அவ்வாறுபழகினதேசத்திலுள்ள அந்தமனிதர்கள் யுதிஷ்டிரனுக்காக நம்மையும் நம்மைச்சேர்ந்தவர்களையும் எவ்வாறுகொல்லாமலிருப்பார்கள்? இந்த ஜனங்கள் நாம் தர்மத்தைவிட்டால் முக்கியமாக நம்தேசத்திலேயே இருக்கவிரும்பார். குழந்தாய்! அப்படிப்பட்ட நாம் மஹாத்மாக்களாகிய இந்தக்கௌரவராஜர்களுக்கும் உலகத்துக்கும் எவ்வாறு பழிக்கத்தகாதவர்களாவோம்?" என்றுசொன்னான். அதைக்கேட்ட துரியோதனன், "பீஷ்மர் எப்போதும் ஒருபக்ஷத்திலும்சேராதவர். துரோணருடைய புத்திரர் என்பக்ஷத்திலிருக்கிறான். புத்திரரிருக்கிறபக்ஷத்தில் துரோணரிருப்பார். இதில் ஸந்தேகமில்லை. சாரத்வதராகிய கிருபரும் நமதுபக்ஷத்திலேயேயிருப்பார். ஏனெனில், அவர் மருகராகிய அசுவத்தாமாவை எவ்வகையிலும்விடார். விதுரர் நமக்கும் பந்து; ஆனால் எதிரிகளிடம் வெளிப்படாமல் மறைவாக அன்பு வைத்திருக்கிறார்; நம்மை எதிர்ப்பதற்குச் சமர்த்தரல்லர். நம்மிடத்தில் சங்கைப்படாத பாண்டவர்களை அவர்கள் தாயாருடன்கூட இப்போதே வாரணாவதத்திற்கு அனுப்பிவிடும். இதில் குற்றம்உண்டாகாது. உள்ளத்தில் ஆணி அடித்ததுபோல் பொறுக்கமுடியாததும் தூக்கத்தைக்கெடுப்பதுமாகக் கிளம்பியிருக்கிற வ்யஸனமென்னும் தீயை இந்தச்செய்கையினால் அவிக்கக்கடவீர்" என்றுசொன்னான்.

---

## நூற்றைம்பத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)



(கணிகர் த்ருதராஷ்டிரனுக்குக் கெட்டநீதி உபதேசிப்பதும், ஜம்புகோபாக்யானமும்.)

பாண்டுபுத்ரர்கள் வீரர்களாகவும் அதிகபலமும் அதிகபராக்ரமமுமுள்ளவர்களாகவுமிருப்பதைக் கேள்வியுற்று த்ருதராஷ்டிரமஹாராஜா வ்யஸனத்தினால் சிந்தையுற்றான். பிறகு, ராஜ்யஆலோசனைதெரிந்

தவரும் ராஜநீதிசாஸ்திரத்தின் ரஹஸ்யத்தைச் செவ்வையாகஅறிந்தவருமாகியகணிகரென்னும் மந்திரிஸ்ரேஷ்டரையழைத்துத்ருதராஷ்டிரன், "பிராம்மணச்ரேஷ்டரே! பாண்டவர்கள் எப்போதும் சர்வமுள்ளவர்களாயிருக்கின்றனர். அவர்களை நான்வெறுக்கிறேன். கணிகரே! அவர்கள்விஷயத்தில் சந்திவிக்ரஹங்களைச்செய்வதற்கு மிக்க நிச்சயமானஉபாயத்தை நீர் எனக்குச்சொல்லும். நீர்சொல்வதைச் செய்வேன்" என்றுசொன்னான். பரதச்ரேஷ்டரே! பிறகு, துரியோதனன், சகுனி, கர்ணன், துச்சாஸனன் இவர்கள் சகுனியின்மந்திரியாகிய கணிகரைவந்தனஞ்செய்து பாண்டவர்களைப்பற்றிப் பலவகையாகக்கேட்டனர். "பாண்டவர்கள் எப்போதும் ஜாக்கிரதையோடிருக்கின்றனர். அவர்களிடத்தில் நாங்கள்பயப்படுகிறோம். பாரத்வாஜரே! நம்மைச்சேர்ந்தவர் எல்லாருக்கும் குறைவின்றி க்ஷேமத்தையுண்டாக்குவது எது? நாம் எவ்வகையாகக் காரியங்களைச்செய்யவேண்டுமென்பதைச்சொல்லுங்கள்" என்றனர். த்ருதராஷ்டிரனால் கேட்கப்பட்ட அந்தப்பிராமணோத்தமர் தெளிந்தமனத்தோடு ராஜசாஸ்திரத்தின்ரஹஸ்யத்துக்கு நிதர்சனமான ஒருகொடியசொல்லைச்சொல்லலானார். "ராஜாவே! குற்றமற்றவரே! அந்தவிஷயத்தில் நான்சொல்லப்போவதைக்கேளும். கௌரவச்ரேஷ்டரே! நான்சொன்னதைக் கேட்டபிறகு என்மேல் கோபஞ்செய்யத்தகாது. ராஜாவானவன் எப்போதும் தண்டிப்பதற்கு முயற்சியுள்ளவனாக இருக்கவேண்டும். பராக்கிரமத்தை வெளிப்படுத்திக்கொண்டு தன்னிடத்தில்பிறர்பிரவேசிக்க மார்க்கமில்லாமல் பிறரிடம் தான்பிரவேசிக்கமார்க்கத்தைக் கண்டு அதில்பிரவேசிப்பவனாகவும் எப்போதுமிருக்கவேண்டும். எப்போதும் தண்டிப்பதற்குமுயற்சியுள்ளவனாகஇருப்பவனிடத்தில் ஜனங்கள் மிக அச்சப்படுவர். ஆதலால், எல்லாக்காரியங்களையும் தண்டத்தினாலேயே ஸ்தாபிக்கவேண்டும். தன்னுடையகுற்றத்தைப் பிறரறியாதபடிசெய்யவேண்டும். பிறரைத் தவறும்தருணத்தில் எதிர்க்கவேண்டும். ஆமை தன் அங்கங்களை வைத்துக்கொள்வதுபோல் ராஜாங்கங்களை ரஹஸ்யமாக வைத்துக்கொள்ளவேண்டும். தனக்குக் குறைவுவராமல் காத்துக்கொள்ளல்வேண்டும். தன்நன்மையைவிரும்புகிறஅரசன் பிராம்மணர்களை எப்போதும்பூஜித்தல்வேண்டும். பிராம்மணர்களைக்காக்கவும் துஷ்டர்களையடக்கவுந்தான் அரசன்படைக்கப்பட்டிருக்கிறான். துஷ்டநிக்ரஹமும் சிஷ்டபரிபாலனமுமாகியஇரண்டினாலும் தர்மம்விருத்தியாகின்றது. தர்மம் விருத்தியாவதனால் இம்மைமறுமையாகிய இரண்டுலோகங்களும் ஜயிக்கப்படுகின்றன.

ஆதலால், தர்மத்தைச்செய்யவேண்டும். எந்தஅரசன் ஒருமனிதன் குற்றவாளியாயிருப்பதைக்கண்டு மன்னித்துவிடுகிறானோ அவன் அதனால் இந்தலோகத்தில் அவமானத்தையும் பரலோகத்தில் நரகத்தையும் அடைகிறான். எவன் ராஜாவினிடத்திலிருந்து உயர்ந்தசெல்வத்தையடைந்து அவனுக்குத் தீங்குசெய்கிறானோ அந்த அதமனைப் பிடித்துக்கொன்று அவன்பொருளை ஏழைகளுக்குக் கொடுக்கவேண்டும். காரியத்தை நிர்வஹிக்க நியமிக்கப்பட்டவர்கள் ராஜாவுக்குவசப்படாமற்போவாராயின், அவர்கள்ஸ்தானத்தில் தர்மசாஸ்திரத்திலும் அர்த்தசாஸ்திரத்திலும் நிபுணர்களான பொய்யுரையாத மனிதர்களை ராஜா நியமித்தல்வேண்டும். அவ்வாறு நியமிக்கப்பட்டவரெவரோ அவர்கள் ஜனங்களுக்கு ஆதாரமானதேசத்தையாவது நகரத்தையாவது கிராமத்தையாவது பீடிக்கிறார்களா இல்லையாவென்று பரீக்ஷிப்பதற்காக, மாறுவேஷமுள்ள தன்னைச்சேர்ந்த வேலைக்காரர்களையனுப்பவேண்டும். பரீக்ஷைசெய்தபிறகு துஷ்டனை அவனுடையபொருள்களையெல்லாம் எடுத்துக்கொண்டு விட்டுவிடவேண்டும். ஒருகாரியத்தையாரம்பித்தபிறகு அதைச் செவ்வையாகநிறைவேற்றாமல் ஒருகாலத்தும் இருக்கத்தகாது. தைத்தமுள்ளும்கூடப் பிசகாகஎடுக்கப்பட்டால் வெகுகாலம் புண்ணையுண்டாக்கும். தீங்குசெய்யும் பகைவர்களைக் கொல்வதுதான் சிலாக்கியமென்று சொல்லுகின்றனர். ஆபத்துவருங்காலத்திலெல்லாம் நல்லபராக்ரமமுள்ளவனும்செவ்வையாக யுத்தஞ்செய்யத்தக்கவனுமாகிய எதிரியை நன்றாகப்பிளந்து ஓட்டிவிடவேண்டும். அதைப்பற்றி ஆலோசிக்கத்தகாது. ஐயா! சத்ரு, பலஹீனனாகஇருந்தபோதிலும் எவ்வகையிலும் அவனை அலக்ஷியஞ்செய்யத்தகாது. சிறியநெருப்பும் பெரியஆதாரத்தைப்பற்றி வனம் முற்றிலும் எரித்துவிடுகிறது. பொட்டையனாகஇருக்கவேண்டியகாலத்தில் பொட்டையனாகஇருக்கவேண்டும்; செவிடனாகஇருக்கவேண்டியகாலத்தில் செவிடனாகவுமிருக்க வேண்டும். வில்லைப் புல்லைப் போல் செய்யவேண்டும். மான்போல் (எச்சரிக்கையாக) படுக்கவேண்டும். ஸாமம்முதலிய உபாயங்களினால் வசப்பட்டுப்போன சத்துருவைக் கொன்றுவிடவேண்டும். சரணமடைந்தவனென்று அவனிடத்தில் தயைசெய்யத்தகாது. அப்படிச்செய்தால்தான் பயமற்றிருக்கலாம். கொல்லப்பட்டவனிடம் பயமில்லை. சத்துருவாயிருப்பவனையும் முன் அபகாரஞ்செய்தவனையும் * தானத்தினால் கொன்று

* அவனால் நம்பப்பட்ட சமையற்காரன்முதலியவர்களுக்கு லஞ்சம்கொடுத்து அவர்களைக்கொண்டு கொல்லவேண்டும்.

விடவேண்டும். * மூன்றும் ஐந்தும் ஏழுமாக எதிரி பக்ஷத்திலுள்ளவரெல்லாரையும் கொல்லவேண்டும். எப்போதும் எதிர்ப்பக்கத்தின்வேராகிய ராஜாவைமட்டுமாவது முதலில் அறுக்கவேண்டும். அதன்பின் அவனுக்குச் சகாயமாயிருப்பவர்களையும் அதற்குப்பிறகு அவர்கள் பக்ஷத்தைச் சேர்ந்தவர்களனைவரையும் கொல்லவேண்டும். ராஜ்யத்தின் வேர்அறுந்தால் அதைப்பற்றி ஜீவிக்கின்றயாவரும் அழிந்தவரே. வேரறுந்தமரத்தின்கிளைகள் நிற்பதெவ்வாறு? எப்போதும் ஓரேஊக்கத்துடன் தன்ரஹஸ்யத்தை வெளிப்படுத்தாமலும் எதிரியின்ரஹஸ்யத்தை அறிந்துகொண்டுமிருக்கவேண்டும். ராஜாவே! எப்போதும் விரோதிகளாயிருப்பவர்களிடத்தில் நாள்தோறும் பயத்தோடேயேநடக்கவேண்டும். அக்கிஹோத்திரத்திலும் யாகத்தினுலும் காஷாயவஸ்திரத்தினுலும் ஜடைதரிப்பதினுலும் தோலுடுப்பதினுலும் ஜனங்களை முதலில் நம்பவைத்துத்தான் பிறகுசெந்நாயைப்போல அழிக்கவேண்டும். கருதியபயன்களை யடைவதற்கு அக்னிஹோத்திரமுதலிய ஆசாரங்கள் துறட்டிபோன்றவை;(அவைகளால்) பழங்கள்நிரம்பின கிளையைவளைத்துக்கொண்டு பழுக்கப்பழுக்கக் கனிகளை உதிர்க்கவேண்டும். உலகத்தில் புத்திமான்களானபுருஷர்கள் விரும்பினபலனைப்பற்றிச் செய்யும்உபாயம் இதுதான். தன்அனுகூலகாலம் திரும்பிவருகிறவரையில் சத்ருவைத் தோளினுற்சுமந்துகொண்டிருக்கவேண்டும்; தன்காலம் மறுபடியும்வந்தவுடன் குடத்தைக் கல்லிற்போட்டு உடைப்பதுபோல் உடைத்துவிடவேண்டும். மிகஇரக்கமானசொல்லைச்சொன்னபோதிலும் பகைவனைவிடலாகாது. அவன் விஷயத்தில் தயைசெய்யத்தகாது. தீங்குசெய்தவனைக் கொல்லவேண்டும். விரோதியை நல்வார்த்தையினுலாவது கொடுப்பதனுலாவது கொல்லவேண்டும். விரோதியைச் சாமத்தினுலாவது தானத்தினுலாவது மித்ரபேதத்தினுலாவது யுத்தத்தினுலாவது எல்லா உபாயங்களையுஞ்செய்தாவது ஒழித்துவிடவேண்டும்" என்றூர். திருதராஷ்டிரன், "ஸாமதானபேததண்டங்களினுல் சத்ருவை எவ்வாறு கொல்லக்கூடும்? அதை எனக்குத் தெளிவாகச்சொல்லும்" என்று கேட்க, கணிகர் சொல்லத்தொடங்கினூர்.

* 'மூன்று: பிரபுசக்தி, மந்திரசக்தி, உற்சாகசக்தி. ஐந்து: மந்திரி தேசம், அகழ், பொக்கசம், ஸேனை. ஏழு: ராஜா, மந்திரி, ஸ்நேகன், பொக்கசம், தேசம், அகழ், சேனை.' என்பது பழையவுரை.

மூன்று: ராஜா, மந்திரி, மித்ரன்; ஐந்து: முன்சொன்னமூன்றோடு கோசாதிபதியும், ஸேனுதிபதியும்; ஏழு: முன்சொன்னஐந்துடன் தேசரக்ஷகரும் துர்க்கரக்ஷகரும். எழுவரையும் கொல்லமுடியாவிட்டால் ஐவரையாவது, அதுவும் முடியாவிடத்து மூவரையாவது கொல்லவேண்டும். இதனுல் எல்லாம்ஒழியும்.

"மஹாராஜாவே! முன்னே தர்மசாஸ்திரத்தின் ஸூக்ஷ்மங்களையறிந்த ஒருநரி காட்டில்வஸித்துக்கொண்டிருந்து செய்தசெய்கையைச் சொல்லுகிறேன்; கேளும். தேர்ந்தபுத்தியுள்ளதும் ஸ்வகாரியத்தைச்சாதித்துக்கொள்வதில் மிக்க சாமர்த்தியமுள்ளதுமான ஒருநரி தன்சிநேகிதர்களாகிய புலி, எலி, செந்நாய், கீரிப்பிள்ளை, இவைகளுடன்கூட வாஸஞ்செய்துகொண்டிருந்தது. அந்தநரியும் அதன்சிநேகிதர்களும் அந்தக்காட்டில் மிகுந்தவலிமையுள்ள ஒரு மான்கூட்டத்தரசைக்கண்டன: அதைப்பிடிக்கத் திறமையில்லாமல் அங்கே ஆலோசனைசெய்தன. அப்போது நரி, "புலியே! இந்த வனத்தில் இதைக்கொல்வதற்குப் பலமுறை நீ ஆரம்பித்திருக்கிறாயல்லவா? இஃது இளம்பிராயமுள்ளது; மிகுந்தவேகமுள்ளது! புத்தியுள்ளது. ஆதலால், உன்னால்முடியவில்லை. இதுபடுத்திருக்கையில் கால்களை இந்த எலிதின்றுவிடட்டும். பிறகு,கால்கடிக்கப்பட்ட இதைப் புலி பிடித்துக்கொள்ளட்டும். அதன்பிறகு, எல்லோரும் மனமகிழ்ந்து தின்போம்" என்றுசொல்லிற்று. நரிசொன்னவாறே எல்லாம் ஒரு மனத்தோடுசெய்தன. எலியினால் கால்கள் தின்னப்பட்ட அந்தமானை அப்போதே புலி கொன்றது. பூமியில் அசைவற்றுக்கிடந்தமானின் தேகத்தைக்கண்டவுடன் நரி, 'நீங்கள் ஸ்நானஞ்செய்துவாருங்கள். உங்களுக்கு க்ஷேமமுண்டு. இதை நான் காத்துக்கொண்டிருக்கிறேன்.' என்றுசொன்னதன்மேல், அவையெல்லாம்அங்கிருந்து ஆற்றுக்குச்சென்றன. அந்தநரி மிகுந்தசிந்தையுடன் அங்கேயேயிருந்தது. பிறகு, மஹாபலசாலியானபுலி முதலில்ஸ்நானஞ்செய்துவிட்டு வந்து, சிந்தையினால்மனக்கலக்கமுற்றநரியைக்கண்டு, "மிகுந்தபுத்தியுள்ளவனே! ஏன்வ்யஸனப்படுகிறாய்? நம்முள் நீதானே சிறந்தபுத்திசாலி. இப்போது நாம் மாம்ஸத்தைப்புஜித்து விளையாடுவோம்" என்றுசொல்லிற்று. நரி, "மஹாவீரனே! எலிசொன்னசொல்லை நான்சொல்லுகிறேன்; கேள். 'மிருகராஜாவானபுலியின்பலம் இழிவானது. இந்தமான் இப்போது என்னால்கொல்லப்பட்டது. புலி என்புஜபலத்தை ஆகாரமாகக்கொண்டு இப்போது பசிதீர்த்துக்கொள்ளப்போகிறது' என்று எலிசொல்லிற்று. இவ்வாறு அது வீரவாதஞ்செய்ததைக்கேட்டபின் நான் இந்தஉணவைவிரும்பவில்லை" என்று சொல்லிற்று. புலி, அதைக்கேட்டு, "அஃது இவ்வாறுசொல்லுகிறதா? எனக்குச் சரியானகாலத்தில்தெரிவித்தாயே! நான் என்கைவன்மையைக்கொண்டே காட்டிலிருக்கும் மிருகங்களைக்கொன்று அவற்றின் மாம்ஸங்களை புஜிக்கப்போகிறேன்" என்றுசொல்லிவிட்டுக்காட்

டுக்குப்போயிற்று. அது போனஸமயத்தில் எலியும்வந்துசேர்ந்தது. அதுவந்ததைக்கண்டு நரி, "எலியே! உனக்குச்சுகமுண்டாகட்டும். கீரிப்பிள்ளை, 'நான் மான்மாம்ஸத்தையுண்ணேன். இதுவிஷம்; எனக்குப்பிடிக்கவில்லை. எலியைப் பக்ஷிக்கப்போகிறேன். அப்படிச்செய்வதற்கு, நீ அனுமதிகொடுக்கவேண்டும்' என்று என்னிடம் சொல்லிற்று" என்றது. நரியின்சொல்லைக்கேட்டு, எலி பயந்து வளைக்குள் போய்விட்டது. ராஜாவே! பிறகு, அந்தச்செந்நாயும் ஸ்நானஞ்செய்து அங்கேவந்தது. அதுவந்ததைப்பார்த்து அப்போது நரி, "புலி உன்மீது கோபித்துக்கொண்டிருக்கிறது. உனக்கு நன்மை உண்டாகாது. அது தன்மனைவியுடன் இவ்விடம் வரப்போகிறது. மேலே செய்யவேண்டியதைச் செய்துகொள்" என்றுசொல்லிற்று. மாம்ஸம் புஜிக்கவந்த அந்தச்செந்நாய் அந்நரியினால் இவ்வாறு அறிவிக்கப்பட்டவுடன் உடம்பைச்சுருக்கிக்கொண்டு ஓடிவிட்டது. அப்போது கீரிப்பிள்ளையும் வந்தது. மஹாராஜாவே! வனத்தில் நரி அந்தக்கீரிப்பிள்ளையைநோக்கி, 'என்புஜபலத்தைக்கொண்டு என்னால்வெல்லப்பட்ட அவர்களெல்லாம் வேறிடங்களுக்குச் சென்றனர். நீயும் எனக்குக் கைச்சண்டையைக்கொடுத்தபிறகு வேண்டியவரையில் மாம்ஸத்தைப்புஜிக்கலாம்" என்றுசொல்லிற்று. "மிருகராஜாவான புலியும் செந்நாயும் புத்திமானை எலியுமாகிய இந்தவீரர்களை நீ ஜயித்ததனால் நீ அவர்களினும் மேலானவீரன். உன்னோடுயுத்தஞ்செய்ய என்னால்முடியாது" என்றுசொல்லி அதுவும் போய்விட்டது. நல்ல ஆலோசனையின் நிச்சயத்தினால் நரி மனமகிழ்ச்சியுடன் தான் தனியாக அந்தமாம்ஸத்தைச் சாப்பிட்டது. இவ்வாறு செய்துகொண்டிருக்கும் அரசன் எப்போதும் ஸுகமாக விருத்தியாவான். பயமுள்ளவர்களைப் பயத்தைக்காட்டிக் கலக்கவேண்டும். சூரனைக் கும்பிடுவதனால் மாற்றவேண்டும் பொருளாசையுள்ளவனையும் ஒத்தபலமுள்ளவனாயிருப்பவனையும் பொருள்கொடுப்பதனாலும், குறைந்தவனைப் பராக்கிரமத்தினாலும் ஒதுக்கவேண்டும். ராஜாவே! இந்தவிஷயம் உமக்குச் சொல்லியாயிற்று. அவ்வாறே மற்றொன்றும் சொல்லுகிறேன்; கேளும். புத்திரனாயினும் மித்திரனாயினும் ஸஹோதரனாயினும் தந்தையாயினும் ஆசாரியனாயினும் பகைமையிலிருப்பார்களாயின் நன்மையைவிரும்புகிறவனால், (அவர்கள்) கொல்லப்படவேண்டியவர்களாயிருக்கிறார்கள். காப்பாற்றுவதாக ஸத்யஞ்செய்தாவது பொருள்கொடுத்தாவது விஷம் அல்லது வஞ்சகத்தினாலாவது கொன்றுவிடவேண்டும். எவ்வகையிலும் விடக்கூடாது. இருவரும் ஜயிப்

பதில் ஸந்தேகமுள்ளவராயின் அவர்களுள் ஜாக்கிரதையுள்ளவன் ஜயிப்பான். காரியாகாரியம் தெரியாமல் கர்வத்தோடு துர்மார்க்கத்தில்போனவன் குருவாயிருப்பினும் அவனைத்தண்டிப்பது நியாயமாகும். கோபமுற்றவனாயிருந்தாலும் கோபிக்காதவன்போல் காண்பித்துக்கொண்டு புன்னகையுடன் ஸம்பாஷணைசெய்துகொண்டிருக்க வேண்டும். இவனுக்குக்கோபமிருப்பதை யாரும் எவ்வகையினாலும் அறியாமலிருக்கவேண்டும். கோபமுள்ளவன் ஒருபொழுதும் எதிரியை இகழ்ந்துபேசத்தகாது. பாரதரே! போரும்போதும் அடிக்கும்போதும் இன்சொல்லையேசொல்லவேண்டும். அடித்தபிறகும் வ்யஸனப்படுகிறவன்போலவும் அழுகிறவன்போலவும் இன்சொல்லையே சொல்லவேண்டும். எதிரியைக்கூட, ஸாமத்தினாலும் அறம்பொருள்களைப்பற்றியஒழுக்கங்களாலும் நம்பவைக்கவேண்டும். வழிதப்பியிருந்த அந்தஎதிரியைப் பிறகு சமயம்நேர்ந்தபோது அடித்துவிடவும் வேண்டும். பெருங்குற்றம்செய்தவனும் தர்மத்தைக்கைவிடாமலிருந்தால் அவனுடைய அந்தப் பெருங்குற்றமும் இருண்டமேகங்களினால் குன்று மறைக்கப்படுவதுபோல் மறைக்கப்படுகின்றது. கொல்லத்தகுந்தவனுடைய வீட்டில் தீவைக்கவேண்டும். பொருளில்லாதவர்களையும் நாஸ்திகர்களையும் கள்ளர்களையும் விஷங்கொடுக்கும் வேலையில் நியமிக்கவேண்டும். எதிர்சென்று ஆஸனங்கொடுப்பதுமுதலிய உபசாரங்களாலும் சிறந்தவெகுமதிகொடுப்பதனாலும் மிகவும் நம்பினவனைக்கூரானபற்களையுடையபாம்புமுதலியவை தலைவணங்கிக் கடிப்பதுபோல் கொன்றுவிடவேண்டும். தன்னிடம் சங்கையுற்றவர் சங்கையில்லாதவர்முதலிய யாரைப்பற்றியும் தான் சங்கையுற்றவனாகவே இருத்தல்வேண்டும். தான்சங்கைப்படாமல் நம்பினவனாலுண்டாகும்பயம் வேரையும்அறுத்துவிடும். தன்னைநம்பாதவனிடம் தான் நம்பிக்கைவைக்கலாகாது. நம்பினவனிடத்தும் அதிநம்பிக்கைவைக்கத்தகாது. நம்புவதனால்உண்டாகும்பயம் வேர்களையும் அறுத்துவிடும். தன்தேசத்திலும் அன்னியதேசத்திலும் செவ்வையாகப்பரீக்ஷிக்கப்பட்ட சாரனை நியமிக்கவேண்டும். * பாஷண்டர்களையும் ரிஷிகள்முதலானவர்களையும் அயல்தேசங்களில் தூதர்களாக நியமிக்கவேண்டும். தோட்டங்களிலும் பௌத்தாலயங்களிலும் தேவாலயங்களிலும் பர்ணசாலைகளிலும் வீதிகளிலும் †புண்ணியதீர்த்தங்களெல்லா

* பாஷண்டர்=நாஸ்திகர்.

† 'புண்ணிய தீர்த்தம்: க. மந்திரி, உ. புரோஹிதன், ௩. யுவராஜன், ௪. ஸேனாபதி, ௫. த்வாரபாலகன், ௬. அந்தப்புராதிகாரி, எ. சிறைச்சாலையதிகாரி,

வற்றிலும் நாற்சந்திகளிலும் கிணற்றங்கரைகளிலும் மலைகளிலும் காடுகளிலும் ஜனசபைகளெல்லாவற்றிலும் நதிகளிலும் நடப்பதை விசாரிக்கவேண்டும். நயமாகவும் கருத்தில் கத்திபோலவுமிருக்க வேண்டும். கொடுமையானசெய்கையைச்செய்ய நிச்சயத்தோடிருக்கும்போது புன்சிரிப்புடன் அனுகூலமாகப்பேசுகிறவனாகவிருத்தல் வேண்டும். கும்பிடுவது, ஸத்யஞ்செய்வது, இன்சொற்சொல்லுவது, தலைவணங்கிப் பாதவந்தனஞ்செய்வது, வேண்டியவற்றைக்கொடுப்பது, ஆசைகாட்டுவது முதலியவற்றை ஐசுவரியத்தைவிரும்புகிறவன் செய்யவேண்டும். நல்ல*புஷ்பங்களைப் பூத்தும் † பழங்களில்லாமலிருக்கவேண்டும். பழங்களிருந்தாலும் ‡ ஏறக்கூடாமலிருக்கவேண்டும். பழுத்ததாகத்தோன்றிக்கொண்டு பழுக்காமலேயிருக்கவேண்டும். ஒருபோதும் § ஜரித்துப்போகத்தகாது. அறம்பொருள் இன்பமென்னும் த்ரிவர்க்கத்தில் கஷ்டங்களும் பலன்களும் மூன்றுவகை. அவற்றில் பலன்களை அனுகூலமாகத்தெரிந்துகொண்டு கஷ்டங்களை விலக்கிவிடவேண்டும். தர்மத்தையதிகமாகச்செய்பவனுக்கு அது அர்த்தகாமங்களைக்கெடுப்பதனால் துயரமுண்டாகிறது. பொருளில் ஆசைகொண்டு பொருளை அதிகமாகத்தேடுபவனுக்கும் தர்மம் காமமிரண்டுங்கெடுவதனால் துன்பமுண்டாகிறது. காமத்தில் அதிகமாகப்பிரவிர்த்திப்பவனுக்கும் அறம்பொருளிரண்டும் கெடுவதனால் துன்பமுண்டாகிறது. மனத்தில்கர்வப்படாமல் ஜாக்கிரதையுள்ளவனாகவும் இன்சொற்சொல்லுகிறவனாகவும் கோபமில்லாதவனாகவும் பிரயோஜனங்களைக்கவனிப்பவனாகவுமிருந்து சுத்தமானபுத்தியுடன் பிராம்மணர்களோடுகூட மந்த்ராலோசனை செய்யவேண்டும். குறைந்துபோன தன்னை மென்மை அல்லது கடுமையான எந்தச்செய்கையினாலாவது 'தூக்கிவிட்டுக்கொள்ளவேண்டும். சக்திவந்தபின் தர்மத்தைச்செய்யவேண்டும். ஒருமனிதன் பிராணஸந்தேகத்தையடையாமல் ஐஶ்வரியத்தைக்காண்பதில்லை. பிராணஸந்தேகத்தையடைந்தபின் ஜீவித்திருந்தால் ஐஶ்வரியத்தைக்காண்பான். எவ

அ. திரவியத்தை வாங்கிவைப்பவன், க. திரவியத்தைச் செலவழிப்பவன், கO. ஆஜ்ஞையை நடத்துகிறவன், கக. நகராதிகாரி, கஉ. காரியங்களைவிதிப்பவன், கங. தர்மாதிகாரி, கச. ஸபாத்யக்ஷன், கரு. தண்டபாலன், கசு. துர்க்கபாலன், கஎ. ராஷ்டிராந்தபாலகனென்னும் எல்லைக்காவலாளி, கஅ. அடவிபாலகனென்னும் காட்டதிகாரி என்று நீதிசாஸ்திரங்களில் கணக்கிடப்பட்ட பதினெட்டுத்தீர்த்தங்களிலும்' என்பது பழையஉரை.

* புஷ்பம் = இன்சொல்; † பழம் = காரியம்; ‡ ஏறக்கூடாமை = ஸமயத்தில்பெறக்கூடாமை; § ஜரித்துப்போதல் = வசப்பட்டுப்போதல்.

னுடையபுத்தி வ்யஸனத்தினுல் சோர்வடையுமோ அவனை முன்நடந்த ராமர்முதலியோருடைய சரித்திரங்களைச்சொல்லித் தேற்றவேண்டும். நம்பிக்கையில்லாதவனைப் பின்வருகிற நன்மைகளைக்காட்டித் தேற்றவேண்டும். எல்லாம் தெரிந்தவனைத் தற்காலத்தில் உதவி செய்து தேற்றவேண்டும். எவன் எதிரியோடு ஸ்நேஹமாயிருந்து கொண்டு க்ருதார்த்தனைப்போலத் தூங்குவனே அவன் நுனிமரத்தில் தூங்கினவனைப்போல் விழுந்தபின் விழித்துக்கொள்வன். எப்போதும் கோபிக்காமல் தான்செய்த மந்திராலோசனையை மறைப்பதில் முயற்சிசெய்யவேண்டும். சாரன் கவனித்திருக்கும்போதும் தன் கருத்தை வெளிக்காட்டாமலிருக்கவேண்டும். தெரிந்தவன் இராத்திரியில் ஆலோசனைசெய்யக்கூடாது. யாராவது கவனிக்கும்படியும் ஆலோசனை செய்யக்கூடாது. மேல்மாடியிலும் குன்றின்மேலும் ஜனங்களில்லாத விசாலமான இடத்திலும் அதைச்சுற்றி நம்பிக்கையானவர்கள் காவலாகப் பார்த்திருக்கும்படி வைத்து ஆலோசனை செய்யவேண்டும். அந்த மந்திராலோசனைஸ்தானத்தில் நாணத்தான் குருவியையும் ஆண்பெண்கிளிகளையும் சிறுவர்களையும் மூடர்களையும் பித்தர்களையும் வைக்கத்தகாது. உள்ளேயிருந்தவர்களையும் வெளிப்படுத்தித் தர்மிஷ்டர்களும் ராஜநீதிதெரிந்தவர்களும் தர்க்கசாஸ்திரம்தெரிந்தவர்களும் இதிஹாஸங்களில் நன்ருகத்தேர்ந்தவர்களுமாகிய பிராம்மணர்களுடன் ஆலோசிக்க வேண்டும். ஆலோசனையின் முடிவில் செய்தஆலோசனை பொசிந்துவெளிப்படாமல் காக்கப்படுவதைப்பற்றித் தானே நிச்சயம்செய்யவேண்டும். முன்பு வீரர்களால் அபிப்பிராயம்சொல்லப்பட்ட ஆலோசனையையனுசரித்துப் பிறகு தர்மார்த்தங்களைப்பற்றித் தான் ஒருவனுகவேயாவது அல்லது சரியானபுத்திசாலியென்று தனக்குத்தெரிந்த ஒருபிராமணனேடுகூடவாவது யோசித்துக் காரியநிச்சயஞ் செய்யவேண்டும். மூன்ருமவனை மற்றெருமனிதனுடன்புத்திமான்நிச்சயத்தைச்செய்யத்தகாது. ஆறு காதுகளுக்குப்போன மந்திரம் உடைபட்டுப்போமென்று நீதி சாஸ்திரங்களிற் படிக்கப்படுகிறது. வெளிப்பட்டமந்திரம் கைக்கு வந்த லக்ஷ்மியையும் கெடுத்துவிடும். ஞானமுள்ளவன் தன்அபிப்பிராயத்தையும் பிறர்அபிப்பிராயத்தையும் பலமுறைஆராய்ந்து குணமுள்ளசொல்லை எடுத்துக்கொள்ளவேண்டும். போதுமென்று திருப்தியடையத்தகாது. அயலானுடைய ரஹஸ்யங்களை வெளிப்படுத்தாமலும் கொடியகாரியத்தைச் செய்யாமலும் மீன்பிடிப்பவனைப்போல் ஹிம்ஸிக்காமலும் ஒருவன் பெரியஐசுவரியத்தை அடைவதில்லை.

இளைத்ததும் நோய்பிடித்ததும் நனைந்ததும் தண்ணீர்குடிக்காததும் ஆகாரமில்லாததும் நம்பிக்கையினால் சுறுசுறுப்பற்றதுமாகிய எதிரி சைனியத்தை அடிக்கவேண்டும். பொருளுள்ளவன் பொருளுள்ளவனிடம்போவதில்லை. காரியமானவனிடத்தில் சிநேகமிராது. ஆதலால், எல்லாக்காரியங்களையும் பூர்த்திசெய்யாமல் மிச்சமானவைகளையாகவே செய்யவேண்டும். ஐசுவரியத்தைவிரும்புகிறவன் கோபத்தைவிட்டு மித்திரர்களைச்சேர்ப்பதிலும் பகைவரைப்பகைப்பதிலும் வெறுப்பில்லாமல் முயற்சிசெய்துகொண்டிருக்கவேண்டும். முயற்சியினால் உத்ஸாஹத்தை விருத்திசெய்யவேண்டும். இவன்செய்யப்போகிறகாரியங்களை மித்திரர்களும் சத்துருக்களும் அறியாமலிருக்கவேண்டும். ஆரம்பித்துச் செவ்வையாகமுடிந்தவற்றைத்தான் யாரும் அறியவேண்டும். பயம்வருவதற்குமுன் பயந்தவனைப்போல் உபாயங்களைச்செய்யவேண்டும். பயம்வந்ததைக்கண்டபிறகு பயமில்லாதவனைப்போல் யுத்தம்செய்யவேண்டும். தெய்வத்தினால் கெடுக்கப்பட்டசத்துருவுக்கு எவன் உபகாரம்செய்கிறானோ அவன் கோவேறு கழுதை கர்ப்பம்தரிப்பதுபோல் தனக்கு ம்ருத்யுவை ஸம்பாதிக்கிறான். நேரிடாதகாரியத்தையும் ஸமீபத்தில் நேரிடப்போகிறகாரியத்தையும் முன்னறியவேண்டும். அறிவின்மையினால் ஒருபிரயோஜனத்தையும் தவறவிடாமலிருக்கவேண்டும். ஐசுவரியத்தைவிரும்புகிறவன் தேசகாலங்களையும் தெய்வபலத்தையும் தர்மார்த்தகாமங்களையும் பகுத்தறிந்து பிரயத்தனம்செய்து உத்ஸாஹத்தை விருத்திசெய்துகொள்ளவேண்டும். தேசகாலங்கள் காரியஸித்திக்கு முக்கியமானவையாக அறியத்தக்கவை. இது நிச்சயம். மூளைக்கும் சத்துருவைக் கவனிக்காமலிருந்தால் பனைபோல்வேரூன்றுகிறான்; காட்டில்விடப்பட்ட அக்கினியைப்போல் விரைவில் அபாத்தியனாகிறான். எந்தமனிதன் சிறுநெருப்பைப்போல் தன்னைத்தானேவிருத்திசெய்துகொள்ளுகிறானோ அவன் விருத்தியடைந்தபின் பெருங்கூட்டத்தையும் பக்ஷித்துவிடுகிறான். ஆரம்பத்திலேயே வேண்டியதைக்கொடுப்பதாகப் பொருளில்லாத இன்சொல்லைச் சொல்லவேண்டும். ஆசையைக் காலம் நீடிக்கவிடவேண்டும். காரியகாலங்களில் இடையூறுகளைக் காண்பிக்கவேண்டும். அந்த இடையூற்றுக்குக் காரணம்சொல்லவேண்டும். அந்தக்காரணத்தைச் சரியானநியாயமுள்ளதாகத் தெரிவிக்கவேண்டும். எஃகினால் செய்யப்பட்டதும் மயிர்பிடிக்கத்தக்க கூர்மையுள்ளதுமாகிய கத்தி உறையில் மறைந்திருந்து சமயத்தில் பகைவர்களையறுப்பதுபோல் மனிதன் காலஸகாயத்தை வைத்துக்

கொண்டு தன்கருத்து வெளிப்படாமல் நுண்ணியவிஷயங்களையும் இரக்ஷித்துக் கூர்மையாகஇருந்து எதிரிகளைத்தொலைத்து அவர்களுடைய உயிரையெடுத்துவிடவேண்டும். கௌரவராஜாவே! பாண்டவர்களிடத்தும் மற்றவர்களிடத்தும் உமது புத்திரர்களிடத்தும் நியாயப்படி நடக்கும்போது நீர் முழுகிப்போகாமலிருக்கும்படி செய்வனவற்றை நன்ருகச்செய்யும். ராஜாவே! எல்லாச்செல்வங்களும் நிரம்பினவன்தான் சிறந்தவனென்பது நிச்சயம். ஆதலால், பாண்டுபுத்திரர்களிடமிருந்து உம்மைக்காத்துக்கொள்ளும். ராஜாவே! பாண்டவர்கள் உமக்குச் சகோதரபுத்திரர்கள். அவர்கள் மிகுந்தபலமுள்ளவர்கள். பின்னிட்டு வருத்தமுண்டாகாமலிருப்பது எவ்வாறோ அவ்வாறு உபாயத்தைச்செய்யவேண்டும்" என்று கணிகர் இவ்வாறுசொல்லிவிட்டுத் தம்வீடுதிரும்புச்சென்ருர். கௌரவனுகிய த்ருதராஷ்டிரனும் வ்யஸனத்திலைல் பீடிக்கப்பட்டவனுஞன்.

ஸம்பவபர்வம் முற்றிற்று.



நூற்றைம்பத்துநான்காவது அத்தியாயம்.

ஜதுக்ருஹ பர்வம்.

(வைசம்பாயனர், ஆக்தமாளிகை கொளுத்தியகதையைச் சுருக்கமாகச் சொன்னபிறகு ஜனமேஜயர் கேட்டதன்மேல் விரிவாகச் சொல்லத்தொடங்கியதும், துரியோதனனுக்கும் த்ருதராஷ்டிரனுக்கும் நடந்தஸம்வாதமும்.)

"பரதஸ்ரேஷ்டரான ஜனமேஜயரே! துரியோதனனும் கர்ணனும் ஸுபலன்புத்திரனை சகுனியும் துச்சாஸனனுமாகிய அந்த நால்வரும் கணிகருடைய அபிப்பிராயம் முழுதும் கேட்டபிறகு ஒருகால் ஆலோசனைசெய்தனர். அவர்கள் கௌரவனுகிய த்ருதராஷ்டிரமஹாராஜாவின் ஸம்மதம்பெற்றுக்கொண்டு குந்தியையும் அவள் புத்திரர்களையும் எரித்துவிடவேண்டுமென்று நிச்சயஞ்செய்துகொண்டனர். இங்கிதத்தையும் கருத்தையுமறிந்து உண்மையைக் கண்டுபிடிக்கிறவராகிய விதுரர் கெடுநினைவுள்ள அந்நால்வருடைய அந்த ஆலோசனையையும் அவர்களின்நடை அல்லது நோக்கத்திலைலேயே தெரிந்துகொண்டார். பிறகு, அறியவேண்டியவற்றைப் புத்தியில் அறிந்துகொண்டவரும் பாண்டவர்களின்நன்மையில் ஊக்கம்வைத்த

வருமாகிய குற்றமற்றவிதுரர், குந்தியோடும் அவள்புத்திரர்களோடும் கூட ஓடிப்போவதைப்பற்றி ஆலோசனைசெய்து, உடனே யந்திரங்களோடுகூடியதும், காற்றுக்கும் அலைகளுக்கும் அசையாததும், கொடிகள்கட்டியதுமாகிய விமானகப்பலைச் செய்வித்துக் குந்தியை நோக்கி, "இந்தத்திருதராஷ்டிரன் இந்தக்குலத்தின் கீர்த்தியையும் ஸந்தான அபிவிருத்தியையுமழிப்பதற்கு விபரீதபுத்தியோடு பிறந்திருக்கிறான். அழியாப்பயனுள்ள தர்மத்தை இவன் விட்டுவிடுகிறான். இந்தக்கப்பல் அலைகளுக்கும் காற்றுக்கும் தாங்கக்கூடியதாக ஜலமார்க்கத்தில் விடப்பட்டிருக்கிறது. மேன்மையுள்ளவளே! இதனாலேதான் நீயும் உன்புத்திரர்களும் காலபாசத்திலிருந்து விடுவிக்கப்படுவீர்கள்" என்றுசொன்னார். பாரதஶ்ரேஷ்டரே! புகழ்பெற்ற குந்தி அதைக்கேட்டுத் துயரமுற்றவளாகத் தன்புத்திரர்களுடன் கூட அந்தக்கப்பலிலேறிக் கங்கையிற்சென்றாள். பிறகு, விதுரர் சொற்படி பாண்டவர்கள் கப்பலைவிட்டுவிட்டுக் கௌரவர்கள்கொடுத்த தனத்தையெடுத்துக்கொண்டு தங்களுக்கு க்ஷேமமானவனத்திற் பிரவேசித்தனர். ஏதோ காரணம்பற்றி அங்கு வந்தவளும் ஐந்துபுத்திரர்களையுடையவளும் நிரபராதையுமான ஒருவேடச்சி தன்புத்திரர்களுடன் அந்த அரக்குமாளிகையில் கொளுத்தப்பட்டாள். அந்த இழிந்தமிலேச்சனான புரோசனனென்னும்பாபிஷ்டனும் அந்த அரக்குமாளிகையில் எரிக்கப்பட்டான். கெடுநினைவுள்ள த்ருதராஷ்டிர புத்திரர்களும் அவரைச்சேர்ந்தவர்களும் மோசம்போயினர். விதுரருடைய அவ்வகையான ஆலோசனையினால் மஹாத்மாக்களாகிய குந்திபுத்திரர்கள் ஜனங்களுக்குத்தெரியாமலே தாயாருடன்கூட அபாயமில்லாமல் விடுபட்டனர். பிறகு, வாரணாவதமென்று பெயர்பெற்ற அந்தநகரத்திலுள்ள ஜனங்கள் அரக்குமாளிகை எரிந்ததைக்கண்டு துக்கத்துடன் அழுதனர். அவர்கள் திருதராஷ்டிர மஹாராஜாவுக்கு, 'கௌரவராஜாவே! உன்பெருவிருப்பம் நிறைவேறியது; பாண்டவர்களை எரித்துவிட்டாய்; பூர்ணமனோரதனாக இருந்து உன்புத்திரர்களுடன் ராஜ்யத்தையனுபவிக்கலாம்' என்று சொல்லி ஹஸ்தினபுரத்திற்கு நடந்ததைநடந்தபடி தெரிவிப்பதற்கு மனிதர்களையனுப்பினர். த்ருதராஷ்டிரன் தன்புத்திரனை துரியோதனனுடன்கூட அதைக்கேட்டு வ்யசனப்பட்டுக்கொண்டு பந்துக்களுடன்கூடப் பாண்டவர்களுக்குப் பிரேதகாரியங்களைச்செய்தான். விதுரரும் குருஶ்ரேஷ்டரானபீஷ்மரும் அவ்வாறேசெய்தனர்" என்று வைசம்பாயனர் சொல்ல, அவரைப்பார்த்து, ஜனமேஜயர், "பிராம்ம

ஞோத்தமரே! இந்த மிக்ககொடியசெய்கை அந்தத் திருதராஷ்டிர
புத்ரர்களுக்குக் கொடியவரான கணிகரால் உபதேசிக்கப்பட்டது.
அரக்குமாளிகைநொளுந்தினதையும் பாண்டவர்கள் விடுபட்டதை
யும்பற்றியே மறுபடியும் விரிவாகக் கேட்கவிரும்புகிறேன். அவற்றை
நடந்தவாறுசொல்லும். எனக்கு மிக்கவிருப்பம்இருக்கிறது" என்று
கேட்க, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"ராஜாவே! வீரரே! அரக்குமாளிகை எரிந்துபோனதையும்
பாண்டவர்கள் விடுபட்டதையும்பற்றி நான் விரிவாகச்சொல்லுகி
றேன்; கேளும். கணிகர்போனபிறகு, ராஜாவாகிய துரியோதனன்
திருதராஷ்டிரனைப்பார்த்து, "பாண்டவர்களால் நமக்குப் பயமுண்
டாகும். அவர்களைத் தக்கஉபாயத்தினால் நீர் வாரணாவதநகரம்செல்
லும்படி அனுப்பிவிடும்" என்றுசொன்னான். த்ருதராஷ்டிரன் தன்
மகன் சொன்னசொல்லைக்கேட்டுச் சற்றுநேரம்ஆராய்ந்து உடனே
துரியோதனனைப்பார்த்துப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினான்:
"பாண்டு எப்போதும் தர்மந்தவறாதவனாகவும் தன்சுற்றத்தார்எல்லார்
விஷயத்திலும் நியாயப்பிரகாரமேநடப்பவனாகவும் என்விஷயத்தில்
விசேஷமாகத் தர்மத்தைஅனுசரித்தவனாகவுமிருந்தான். போஜனம்
முதலியவற்றில் ஒன்றையும் தனக்குவேண்டியதாக அவன்அறிந்த
தில்லை. அவன் தர்மத்தின் நியமத்தைவகித்து எப்போதும் ராஜ்ய
விஷயத்தைஎனக்குத்தெரிவிப்பான். அவனுடையபுத்திரனும் பாண்டு
எவ்வாறோ அவ்வாறே தர்மத்தையே பெரிதாகக்கொண்டவன்; குண
ங்கள்நிரம்பினவன்; உலகத்தில் க்யாதிபெற்றவன்; பூருவம்சத்தா
ராலும் நன்றாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறான். அவனுக்குப் பிதிர்
பிதாமஹர்பரம்பரையாகவந்த இந்தராஜ்யத்தைவிட்டுப் பலவந்தமாக
விலக்குவதற்கு நம்மால் எவ்வாறுமுடியும்? அவனுக்கு ஸகாயர்களும்
விசேஷமாகஇருக்கின்றனர். ஏனெனில், மந்திரிகள் பாண்டுவினால்
ஆதரிக்கப்பெற்றவர்கள்; சேனையும் எந்தக்காலத்திலும் போஷிக்கப்
பட்டது. அவர்களின் புத்திரர்களும் பௌத்திரர்களும்கூட விசேஷ
மாகப் போஷிக்கப்பட்டவர்கள். குழந்தாய்! பாண்டுவினால் முன்னே
ஆதரிக்கப்பட்ட அந்தநகரத்துஜனங்கள் யுதிஷ்டிரனுக்காக நம்மை
யும் நம்மைச்சேர்ந்தவர்களையும் ஏன் கொல்லார்கள்?" என்றான்.

அதற்குத் துரியோதனன், "தந்தையே! நீங்கள்சொன்னது
சரி. நம்மிடத்தில் ஏற்பட்ட குறைவைக்கண்டுதான் மந்திரிகளெல்
லாரையும் திரவியங்களினாலும் வெகுமதிகளினாலும் நான் சிறப்பித்
திருக்கிறேன். அவர்கள் நமக்கு முக்கியமானஸகாயர்களாயிருப்ப

ரென்பது நிச்சயம். ராஜாவே! எல்லாப்பொருள்களும் மந்திரிக ளும் இப்போது என்ஸ்வாதீனத்திலிருக்கின்றனர். ஆதலால், நீர் பாண்டவர்களை நயமானஉபாயத்தினால் உடனே வாரணாவதநகரத் துக்குப் பிரயாணப்படுத்தவேண்டும். பாரதராஜாவே! இராச்சியம் எப்போது என்னிடத்தில் நிலைத்திருக்குமோ அப்போது குந்தியும் தன்புத்திரர்களுடன் மறுபடிவரலாம்" என்றுசொன்னான். த்ருதரா ஷ்டிரன், "துரியோதனா! இந்தஆலோசனை என்னுள்ளத்திலும் விடா மலிருந்துகொண்டிருக்கிறது. ஆனால் இந்தஎண்ணம்கெடுதலாதலின் நான் வெளிப்படுத்தாமலிருக்கிறேன். குந்தீபுத்ரர்களை ஊரைவிட்டுப் புறப்படுத்துவதைப் பீஷ்மர், துரோணர், விதுரன், கிருபர் முதலிய யாரும் ஒருபோதும் ஸம்மதிக்கமாட்டார்கள். புத்ரனே! குருவம்சத் தைச்சேர்ந்தவர்களுக்குப் பாண்டவர்களும் நாமும் ஸமந்தானே. தர்ம முள்ளவர்களும் நல்ல மனமுள்ளவர்களுமாகிய இவர்கள் வித்தியா ஸம் நினைக்கமாட்டார்கள். குழந்தாய்! அப்படிச்செய்கிறநம்மை இந்த மஹாத்மாக்களான கௌரவர்களும் மற்றஉலகத்தாரும் எவ்வாறு கொல்லாமல்விடுவார்கள்?" என்றுகேட்க, துரியோதனன், "பீஷ்மர் எப்போதும் எந்தப்பக்கமும்சாராமல் நடுநிலையில்நிற்பவர். துரோண புத்திரர் என்பக்ஷத்திலிருப்பவர். புத்திரரிருக்கும்பக்ஷத்தில் துரோணரிருப்பாரென்பதில் ஸந்தேஹமில்லை. சரத்வானுடைய புத் திரராகியகிருபரும், துரோணரும் துரோணபுத்திரரும்சேர்ந்திருக்கு மிடத்திலேதான் சேருவார். அவர் துரோணரையும் தம்மருகரை யும் ஒருபோதும் விட்டிரார். விதுரர் திரவியசம்பந்தத்தினால் நமக் குக்கட்டுப்பட்டவர்; இரகசியமாக எதிரிகளுக்குவசப்பட்டிருக்கிறார். அவர் ஒருவர்மட்டும் பாண்டவர்களுக்காக நம்மையெதிர்த்துப் பீடி க்கவல்லவரல்லர். நீர் மிகுந்ததுணிவுடன் பாண்டவர்களைத் தாயா ருடன் புறப்படுத்தலாம். அவர்கள் இப்போதே வாரணாவதம்போவ தற்கு என்னஉபாயமோ அதைச்செய்யும். உறக்கமில்லாமற்செய்வ தும் நெஞ்சில் ஆணிஅடிக்கப்பட்டதுபோல் பொறுக்கக்கூடாதது மாக விருத்தியடைந்திருக்கும் சோகமென்னும் அக்னியை இந்தச் செய்கையினால் அவித்துவிடும்" என்றுசொன்னான்.

---

## நூற்றைம்பத்தைந்தாவது அத்தியாயம்.

## ஜதுக்ருஹபர்வம். (தொடர்ச்சி.)



(துரியோதனன் ராஜ்யந்தின்அங்கத்தினரைத் தன்வசப்படுத்திக் கொண்டபிறகு வாரணாவதத்திற்குப்போகும்படி பாண்டவர்களுக்குத் திருதராஷ்ட்ரன் அநுமதி கொடுத்தது.)

பிறகு, ராஜாவாகிய துரியோதனன் தன்ஸஹோதரனாகிய யுயுத்ஸுவென்னும் த்ருதராஷ்டிரபுத்திரன் ஒருவன்தவிர மற்றத்தம்பிகளுடன்கூட மந்திரிகளெல்லாரையும், திரவியத்தையும்கௌரவத்தையும்கொடுப்பதனால் காலக்கிரமத்தில் வசப்படுத்திக்கொண்டான். நிபுணர்களாகியசிலமந்திரிகள் த்ருதராஷ்டிரனால் ஏவப்பட்டு வாரணாவத நகரம் அழகாயிருப்பதைப்பற்றிச் சொல்லலாயினர்; "எல்லா ரத்னங்களும்நிரம்பினதும் புண்ணியக்ஷேத்ரமும் மனத்திற்கினியதுமாகிய வாரணாவதநகரத்தில் சிவபெருமானுக்குரிகப்பெரியதோர்உத்ஸவம் இப்பூமிக்குள் மிக்கஅழகாக நடக்கப்போகிறது" என்று த்ருதராஷ்டிரன்சொல்லின்மேல் பிரஸ்தாவங்கள்செய்தனர். ராஜாவே! அழகான வாரணாவதநகரத்தைப்பற்றி அவ்வாறுகச்சொன்னபோது பாண்டவர்களுக்கு அங்கேபோவதில் எண்ணமுண்டாயிற்று. அவர்களுக்கு விருப்பமுண்டாயிருக்கிறதென்று தெரிந்தபோதே அம்பிகாபுத்திரனை த்ருதராஷ்டிரமஹாராஜன் பாண்டவர்களிடம்வந்து, "நீங்கள் இவ்விடத்தில் சாஸ்திரங்களைப் பூர்ணமாகக்கற்றுணர்ந்தும், துரோணரிடமிருந்தும் சரத்வானுடையபுத்ரராகிய கிருபரிடமிருந்தும் அஸ்த்ரவித்தையை அப்பியஸித்தும், எல்லாவித்தைகளிலும் நிபுணர்களாய்க் கிருதார்த்தர்களானீர்கள். குழந்தைகாள்! இவ்வாறுநடந்தபின் எப்போதும் ராஜ்யரக்ஷணத்தையும் வியவஹாரம்பார்ப்பதையும் ஜனங்களுக்கு நன்மைசெய்வதையும்பற்றி நானே பூர்ணமாகக் கவனித்துக்கொள்ளுகிறேன். இந்தஜனங்கள் உலகத்தில் வாரணாவதநகரம் மிக்கஅழகியதென்று எனக்குப் பிரதிதினமும் பலமுறைசொல்லுகிறார்கள். குழந்தைகளே! இப்படிக் கிருதார்த்தர்களான நீங்கள் வாரணாவதத்தில்நடக்கும் உத்ஸவத்தைப் (பார்க்க) விரும்புவீர்களாயின் சேனைகளோடும் பந்துக்களோடும் (சென்று) தேவர்களைப்போல் அங்கே விளையாடிக்கொண்டிருங்கள். தேவர்களைப்போல் அழகான ரூபமுள்ளநீங்கள் பிராம்மணர்கள் பாடகர்கள் அனைவருக்கும் ரத்னங்களை யதேஷ்டமாகக்கொடுங்கள். இவ்வாறு கொஞ்சகாலம் விநோத

மாகஇருந்து மிகுந்தஸந்தோஷத்தையனுபவித்து மறுபடியும் ஸுக மாக இந்த அஸ்தினுபுரத்துக்குவரலாம். ராஜ்யரக்ஷணத்தைக் கவ னித்து அங்கேயே வாஸஞ்செய்யுங்கள். வீரர்களே! உங்களுக்கு அங்கே வேறுபாடு ஒன்றுமிராது'' என்றுசொன்னுன். யுதிஷ்டிரர் த்ருதராஷ்டிரனுடைய அந்தக்கருத்தையும் தமக்கு ஸஹாயம் யாருமி ல்லாமலிருப்பதையும் தெரிந்துகொண்டு 'அப்படியேஆகட்டும்' என்று அவனுக்கு மறுமொழிசொன்னுர். பிறகு, யுதிஷ்டிரர் சந்தனுபுத் திரரான பீஷ்மரையும் சிறந்த புத்திமானுன விதுரரையும் துரோணு ரையும் பாஹ்லீகனையும் கௌரவனுன ஸோமதத்தனையும் கிருபரை யும் ஆசாரியபுத்திரரான அசுவத்தாமாவையும் பூரிஸ்ரவஸையும் கௌ ரவிக்கத்தக்கவர்களான மற்றமந்திரிகளையும் தபோதனர்களான பிரா மணர்களையும் புரோகிதர்களையும் நகரத்துஜனங்களையும் புகழ்பெற்ற காந்தாரியையும் தாய்மாரனைவரையும் விதுரருடைய ஸ்திரீகளையும் மரியாதைசெய்து துக்கத்துடன் மெல்லமெல்லப் பின்வரும்சொல் லைச் சொல்லலானுர்:

"திருதராஷ்டிரர்கட்டளையினுல் நாங்கள் இனத்தாருடன்கூட அழகியதும் ஜனங்கள்நிரம்பினதுமாகிய அந்தவாரணுவதநகரத்துக்கு ப்போகிறோம். நீங்களெல்லோரும் உள்ளமகிழ்ந்து எங்களுக்கு நல்ல சொற்களைச்சொல்லுங்கள். உங்கள் ஆசீர்வாதங்களினுல் காப்பாற் றப்பட்டஎங்களைத் துன்பம்பீடிக்காது'' என்றூர். பாண்டுபுத்திரரான யுதிஷ்டிரரால் இவ்வாறுசொல்லப்பட்டஅந்தக்கௌரவர்களனைவரும் மலர்ந்தமுகமுள்ளவர்களாகி, "பாண்டுபுத்திரர்களே! நீங்கள் வழி யிற்போகும்போதும் மற்ற எல்லாக்காலங்களிலும் எல்லாத் தெய்வங் களாலும் க்ஷேமமாயிருக்கக்கடவீர்கள். எவ்வகையிலும் ஒருதீங்கும் வராமலிருக்கக்கடவது'', என்று பாண்டவர்களை ஆசீர்வதித்தனர். ராஜ் யம் திரும்பவும்கிடைக்கும்படி ஆசீர்வாதம்செய்யப்பட்ட பாண்டவர் கள் உடனே எல்லாக்காரியங்களையும் முடித்துக்கொண்டு வாரணுவ தத்திற்குப் புறப்பட்டனர்.

---

## நூற்றைம்பத்தாறுவது அத்தியாயம்.

### ஜதுக்ருஹபர்வம். (தொடர்ச்சி.)



(துரியோதனன் கட்டளையினுல் புரோசனன் வாரணுவதத்தில் அரக்குமாளிகைகட்டியது.)

பாரதரே! த்ருதராஷ்டிரனுல் பாண்டவர்கள் ஆஜ்ஞாபிக்கப் பட்டபோது, துராத்மாவான துரியோதனன் மிகுந்தஆனந்தமடைந்

தான். பிறகு, சகுனியும் கர்ணனும் துரியோதனனும் குந்தியையும் அவள் புத்திரர்களையும் எரித்துவிட ஆலோசனைசெய்தனர். பரதஸ்ரேஷ்டரே! அந்தத் துராத்மாவாகிய த்ருதராஷ்டிர புத்திரன் அவர்களுடன் ஆலோசனை செய்து புரோசனனென்னும் மந்திரியை ஏகாந்தமாக அழைத்து அவன் வலக்கையைப் பிடித்துக்கொண்டு பின்வருமாறு சொல்லலானான்:

"அன்பனான புரோசனா! தனம்நிரம்பின இந்தப்பூமி என்னுடையதாக ஆகும்படி நீ கவனிக்கவேண்டும். நான் உன்னுடன்கலந்து மந்திராலோசனை செய்வதுபோலச்செய்யத்தக்க அதிகநம்பிக்கையுள்ள சினேகிதன் உன்னைவிட எனக்கு வேறொருவனுமில்லை. நண்பனே! என் இரகசியத்தையும் காப்பாற்று; என் எதிரிகளையும் நல்ல உபாயத்தினால்களைந்துவிடு; நான்சொல்வதைச் சரியாகச்செய். பாண்டவர்கள் த்ருதராஷ்டிரராஜாவினால் வாரணாவதத்திற்கு அனுப்பப்பட்டிருக்கின்றனர்; த்ருதராஷ்டிரருடைய கட்டளைப்படி உத்ஸவத்தில் மகிழ்ந்துகொண்டிருப்பர். கோவேறுகழுதைகள்கட்டி விரைவாகச்செல்லத்தக்க தேரிலேறி இப்போதே நீ வாரணாவதம்சேரும்படி முயற்சி செய்யக்கடவாய். நீபோய் வாரணாவத நகரத்தின்ஸமீபத்தைப் பிடித்துக்கொண்டு அங்கே ஒன்றுக்கொன்று எதிராக நாலுசபாமண்டபங்களமைந்த சதுஶ்ஶாலமென்னும்பெருவிலைபெற்றகிருகத்தைச்சிறந்த பிராகாரத்தினால் சூழப்பட்டதாகச் செய்விக்கக்கடவாய். சணல் குங்கிலியமுதலான தீப்பிடிக்கத்தக்கசரக்குக்கள் இவ்வுலகத்தில் என்ன என்னஉண்டோ அவற்றையெல்லாம் அதில் சேர்ப்பிக்கக்கடவாய். விழல், மெழுகு, நெய், எண்ணெய், கொழுப்பு, மிகுதியான அரக்கு இவைகளோடு மண்ணைக்கலந்து சுவர்களில்பூசும்படிசெய்வி. சணல், எண்ணெய், நெய், அரக்கு, மரங்கள் இவற்றையெல்லாம் அந்தக்கட்டிடத்தில் எல்லாப்புறங்களிலும் சேர்ப்பிக்கக்கடவாய். அரக்கு சணல் தேன்மெழுகு மண் இவைகளால் பூசப்பட்ட (உத்தரம்முதலிய)பெருமரச்சாமான்களைப் பாண்டவர்களும் மற்றமனிதர்களும்பரிசோதித்துப்பார்த்தபோதிலும் அஃது அக்னிக்காகச்செய்த காரியமென்று கண்டுபிடிக்காமலிருக்கும்படி அந்தக்கட்டிடத்தில் சீக்கிரம்சேர்ப்பிக்கக்கடவாய். இவ்வாறு கட்டப்பட்ட அந்தவீட்டில் அந்தப்பாண்டவர்களையும் குந்தியையும் அவர்களுக்குவேண்டியவர்களையும் மிகுந்தமரியாதைசெய்து வசிக்கும்படிசெய்வாயாக. என்தகப்பனாருக்குச் சந்தோஷமுண்டாகும்படியாகப் பாண்டவர்களுக்கு மேலான ஆஸனங்களையும் வாகனங்களையும் சயனங்களையும் ஏற்படுத்தவேண்டும். வார

ணுவதநகரத்திலுள்ளவர்கள் அதைத் தெரிந்துகொள்ளாமலிருக்கும் படியும் அந்தவாரணுவதநகரத்தில் பாண்டவர்கள் சங்கையின்றிவிளையாடிக்கொண்டிருக்கும்படியும், குறித்தகாலம்வருமிறவரையில் எல்லாம்செய்யவேண்டும். அவர்கள் மிகவும் சங்கையற்று எங்கும் பயமின்றிப் படுத்திருப்பதையறிந்து அப்போதே நீ அந்த வீட்டின்வாயிலில் தீயைவைத்துவிடவேண்டும். இவ்வாறு அவர்கள் தகிக்கப்பட்டபோது பாண்டவர்கள் தங்கள் வீட்டிலேயே எரிக்கப்பட்டனரென்று நினைத்துப் பாண்டவர்களுக்காக ஜனங்கள் நம்மை ஒருபோதும் நிந்திக்கமாட்டார்கள்" என்றான். அந்தப் புரோசனன் 'அவ்வாறே ஆகட்டும்'என்று துரியோதனனுக்கு உறுதியாகச் சொல்லிக் கோவேறுகழுதைகள்கட்டிய விரைவாகச்செல்லத்தக்க தேரின்மேலேறிப் புறப்பட்டான். ராஜாவே! துரியோதனனுடைய அபிப்பிராயத்திலநின்ற அந்தப்புரோசனன் துரிதமாகச்சென்று ராஜபுத்திரனுன துரியோதனன் சொன்னபடி எல்லாவற்றையும்செய்தான். அந்தப்பாண்டவர்களுக்குக் கொடியவீட்டைக் கட்டுவித்தான்.

---

## நூற்றைம்பத்தேழாவது அத்தியாயம்.

### ஜதுக்ருஹபர்வம். (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரர் வாரணுவதத்திற்குப்போகும்போது கூடவந்தநகரத்து ஜனங்களைத் திருப்பியனுப்பியதும், விதுரர் யுதிஷ்டிரருக்கு மிலேச்சபாஷையிற்சொன்ன உபதேசமும்.)

பாண்டவர்கள் காற்றைப்போல் வேகமான சிறந்தகுதிரைகள் பூட்டின தேர்களிலேறும்போது பீஷ்மர், ராஜாவாகிய த்ருதராஷ்டிரன், மஹாத்மாவாகிய துரோணர், கிருபர், விதுரர் இவர்களின் பாதங்களையும்இன்னும் அனேகம்பெரியோர்களுடைய பாதங்களையும் துக்கத்துடன் வந்தனஞ்செய்தனர். விரதம்தவறாதவர்களாகிய பாண்டவர்கள் இவ்வாறு பெரியோர்களான கௌரவர்களனைவரையும் நமஸ்காரஞ்செய்தும், தங்களுக்குச் சரிவயதாயிருப்பவர்களைத் தழுவிக்கொண்டும், சிறுவர்களால் வந்தனஞ்செய்யப்பட்டும், தாய்மாரனைவரையும் பிரதக்ஷிணஞ்செய்து அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டும், ஜனங்களெல்லாருக்கும் சொல்லிக்கொண்டும் வாரணுவதத்திற்குப் புறப்பட்டனர். சிறந்தபுத்தியுள்ள விதுரரும் மற்றக்குருவம்சத்துத்தலைவரும் நகரத்துஜனங்களும் வ்யஸனத்துடலபீடிக்கப்பட்டுப்

புருஷஸிம்மங்களான பாண்டவர்களைப் பின்சென்றனர். அப்போது அவர்களில் சிலபிராமணர்கள், பாண்டவர்கள் மிகவும்வ்யஸனப்பட்டதைக்கண்டு தாங்களும் மிகத்துயரமுற்றவர்களாகப் பயத்தை விட்டு,"கௌரவவம்சத்துராஜாவாகிய த்ருதராஷ்டிரமஹாராஜா வித்தியாஸமாகப் பார்க்கிறான். அவன் எல்லாவகையிலும் மிகமந்தபுத்தியுள்ளவன். அவன் தர்மத்தைப்பார்க்கிறதில்லை. பரிசுத்தமானமனமுள்ள பாண்டுபுத்திரரான யுதிஷ்டிரரும் பலவான்களிற்சிறந்தபீமனும் தனஞ்சயனுமாகிய இந்தக்குந்திபுத்திரர்கள் யாருக்கும் தீங்கைக்கருதார். மஹாத்துமாக்களும் மாத்ரிபுத்திரர்களுமாகிய நகுலஸஹதேவர்கள் தீங்குசெய்வதேது? அவர்கள் தந்தையின்ராஜ்யத்தையடைந்திருப்பதை த்ருதராஷ்டிரன் பொறுக்கவில்லை. மிக்க பாபமான இந்தச்செய்கையைப் பீஷ்மர் எவ்வாறு ஒப்புக்கொள்ளுகிறார்? அவர்களை நிஷ்காரணமாக நகரத்தைவிட்டு வெளிப்படுத்துவதை அவர் அங்கீகரிக்கிறாரே. சந்தனுவின்புத்திரனுகிய விசித்திரவீரியனும் ராஜரிஷியானபாண்டுவுமாகிய கௌரவஸ்ரேஷ்டர்கள் முன்னே நமக்குப் பிதாவைப்போலிருந்தனர். புருஷஸிம்மமாகிய அந்தப்பாண்டு தேவத்தன்மையையடைந்த பிறகு பாலர்களான இந்த ராஜபுத்திரர்களின்மேல் த்ருதராஷ்டிரன் பொறாமைகொண்டிருக்கிறான். இதனை விரும்பாத நாம்அனைவரும் வீடுகளைவிட்டு இந்தச்சிறந்தநகரத்திலிருந்துயுதிஷ்டிரர்போகுமிடத்திற்குப் போவோம்"என்றுசொன்னார்கள். அவ்வாறு பேசித் துக்கமுற்றிருந்த அந்தநகரஜனங்களைப்பார்த்துத் தர்மராஜாவான யுதிஷ்டிரர் தாமும் துக்கத்தினல்பீடிக்கப்பட்டவராய் மனத்திற்சிந்தையுற்றுச் சொல்லலானார்: "பிதாவும் பூஜிக்கத்தக்கவரும் பெரியவரும் சிறந்தவருமாகிய ராஜா என்னசொல்லுகிறாரோ அதை நாங்கள் சங்கிக்காமற்செய்யவேண்டுமென்பது எங்களுடையவிரதம். நீங்கள் எங்களுக்கு வேண்டியவர்கள். நீங்கள் செல்லுங்கள். பிரதக்ஷிணஞ்செய்து எங்களுக்கு ஆசீர்வாதங்களினல் அநுக்ரஹஞ்செய்து தம்தம்வீடுகளுக்குப்போகத் திரும்புங்கள். உங்களால் எங்களுக்கு ஆகவேண்டியகாரியம் நேரிடும்போது எங்கள் விருப்பங்களையும் நன்மைகளையும் செய்யக்கடவீர்" என்றார். இவ்வாறுசொல்லப்பட்ட பட்டணத்துஜனங்கள் அப்போதே பிரதக்ஷிணஞ்செய்து ஆசீர்வாதங்களினல் அவர்களுக்கு அநுக்ரஹஞ்செய்து நகரத்துக்கே திரும்பிச்சென்றனர். பட்டணத்துஜனங்கள் திரும்பிப் போனபின், எல்லாத்தர்மங்களையும் அறிந்தவரும் சிறந்தபுத்தியுள்ளவரும் பேசத்தெரிந்தவருமாகிய விதுரர்,பேச்சையறிந்தவரும் சிறந்த

புத்தியுள்ளவரும் பாண்டவஸ்ரேஷ்டருமான யுதிஷ்டிரரைப் பார்த்துப் பின்வரும் சொல்லைச்சொல்லலானார்:

"ராஜநீதிசாஸ்திரத்தையேதொடர்ந்துகொண்டிருக்கும் எதிரியின்புத்தியை எவனறிகிறானோ அவன் (அதனை) அறிந்தபின் இங்கே ஆபத்தைத்தாண்டத்தக்க உபாயத்தைச்செய்யவேண்டும். லோஹத்தினால் செய்யப்படாமலே தேகத்தைச்சேதிக்கத்தக்க கூர்மையான ஆயுதத்தை எவன் அறிந்து அதைத்தடுக்கும் உபாயத்தையும் அறிந்திருக்கிறானோ அவனைப் பகைவர் கொல்லார். காடுகளையழிப்பதும் குளிரைப்போக்குவதுமாகிய (நெருப்பாகிய) ஒன்று, பெருங்காட்டில் வளைக்குள் வஸிக்கும் எலிமுதலியவற்றைத் தகிக்காதென்றறிந்து தன்னை எவன்காப்பாற்றிக்கொள்ளுகிறானோ அவன் ஜீவித்திருப்பான். கண்ணில்லாதவன் வழியையறியான். கண்ணில்லாதவன் திசைகளை அறியான். தைரியமில்லாதவன் ஐசுவரியத்தைப்பெறான். நான் இவ்வாறு அறிவித்ததைக்கொண்டு நீ தெரிந்துகொள். லோகத்தினால் செய்யப்படாததும் பகைவர்பிரயோகிப்பதுமாகிய ஆயுதத்தையே மனிதன் *வாங்கிக்கொள்ளுகிறான். முள்ளம்பன்றி சுரங்கத்தில் புகுந்துகொண்டு தீயிலிருந்து தன்னைவிடுவித்துக்கொள்ளும். நடப்பவன் மார்க்கங்களையறிகிறான். நக்ஷத்திரங்களினால் திசைகளையறிகிறான். மனத்தினால் தன்னுடையஐம்புலன்களையும் அடக்குபவன் யாராலும் பீடிக்கப்படான்" என்றார். பாண்டுபுத்திரரும் தர்மராஜாவுமான யுதிஷ்டிரர் இவ்வாறுசொல்லப்பட்டபோது வித்வான்களிற்சிறந்தவராகிய விதுரரைநோக்கி, 'தெரிந்தது' என்றே மறுமொழிசொன்னார். அந்தப்பாண்டவர்களுக்கு உபதேசஞ்செய்து அவர்களைப்பிரதக்ஷிணமாசவந்து விடைகொடுத்து விதுரர் தம் கிருஹத்திற்குச்சென்றார். விதுரரும் பீஷ்மரும் நகரஜனங்களும் திரும்பிப்போனபிறகு குந்தி தர்மராஜாவினிடம்சென்று, "விதுரர் ஜனங்களின்நடுவில் சொல்லாதவர்போல் ஒருசொல்லைச்சொன்னார். அவருக்கு நீயும் அப்படியேயென்று அங்கீகரித்து மறுமொழிசொன்னாய். எங்களுக்கு அதுதெரியவில்லை. நாங்கள் அதைத்தெரிந்துகொள்ளக்கூடுமானால், அப்படித்தெரிந்துகொள்வதனால் குற்றம்நேரிடாதிருக்குமானால், உனக்கும் அவருக்கும் நடந்த சம்பாஷணை முழுமையையும் நான் கேட்கவிரும்புகிறேன்" என்றுசொன்னாள். யுதிஷ்டிரர், "விஷத்திலிருந்தும் தீயிலிருந்தும் காத்துக்கொள்ள வேண்டும்' என்றும், 'வழிகளைத்தெரிந்துகொண்டு நக்ஷத்திரங்களால்

* தான் வாங்கித் திருப்பிப்போடுகிறான்.

திசைகளை அறிந்துகொள்ளவேண்டும்' என்றும் 'சுவர்களையும்பார்த்து வைத்துக்கொள்ளவேண்டும்' என்றும் 'அப்போது சுத்தியுண்டு' என்றும்'ஜிதேந்திரியனுயிருப்பவன் ராஜ்யத்தையடைவான்'என்றும் விதுரர் எனக்குச் சொன்னார். அதெல்லாம்தெரிந்ததென்று நான் விதுரருக்கு மறுமொழிசொன்னேன்" என்றுசொன்னார். அந்தப்பாண்டவர்கள் பங்குனிமாதம் எட்டாவதுநாள் ரோகிணிநக்ஷத்திரத்தில்புறப்பட்டு வாரணாவதம்போய் நகரத்துஜனங்களைக் கண்டனர்.



## நூற்றைம்பத்தெட்டாவது அத்தியாயம்.

### ஜதுக்ருஹபர்வம். (தொடர்ச்சி.)

(பாண்டவர்கள் வாரணாவதத்திற் பிரவேசித்தது.)

பிறகு, புருஷஸ்ரேஷ்டர்களான பாண்டவர்கள்வருகிறதை நகரத்துஜனங்களனைவரும்கேட்டு உடனே மிகுந்தசந்தோஷத்துடன் ஸமஸ்தமான மங்களப்பொருள்களோடுங்கூட ஆயிரக்கணக்கான பலவகைவாகனங்களேறிச் சுறுசுறுப்புடன் வாரணாவதநகரத்திலிருந்து அவர்களை எதிர்கொண்டு சென்றனர். அந்த வாரணாவதத்துஜனங்களனைவரும் அந்தப்பாண்டவர்களையடைந்து ஜயஜயவென்று ஆசீர்வாதங்களைச்செய்து அவர்களைச் சுற்றிக்கொண்டுநின்றனர். புருஷஸ்ரேஷ்டரும் தேவதையைப்போல் பிரகாசிப்பவருமாகிய தர்மராஜாவான யுதிஷ்டிரர் அந்தஜனங்களினால்சூழப்பட்டிருந்தபோது தேவர்களால் சூழப்பட்ட இந்திரன்போல் விளங்கினார். குற்றமற்றஜனமேஜயரே! பட்டணத்து ஜனங்களால் மரியாதைசெய்யப்பட்ட பாண்டவர்கள், தாங்களும் அவர்களுக்கு மரியாதைசெய்து அலங்கரிக்கப்பட்டதும் ஜனங்கள் நிறைந்ததுமாகிய வாரணாவதத்தில்பிரவேசித்தனர். அந்த வீரர்கள் பட்டணத்தில்பிரவேசித்து அங்கே கிருகத்தில்பிரவேசஞ்செய்தனர். ராஜாவே! தேராளிகளிற்சிறந்தவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான பாண்டவர்கள் தங்கள்கர்மானுஷ்டானங்களில் ஊக்கமுள்ளபிராமணர்களின்கிருகங்களுக்கும்நகராதிகாரிகளின்கிருகங்களுக்கும் வைஸ்யசூத்ரர்களின் கிருகங்களுக்கும் சென்றனர். பரதஸ்ரேஷ்டரே! பாண்டவர்கள் நகரத்துஜனங்களினால் பூஜிக்கப்பெற்றபிறகு, புரோசனனைமுன்னிட்டுக்கொண்டு தங்கள்கிருகத்திற்குச் சென்றனர். அந்தப்புரோசனன் அவர்களுக்குப் பக்ஷியங்களையும் பானங்களையும் ஸுகமானபடுக்கைகளையும் சிறந்தஆஸனங்களையும் கொடுத்

தான். அவனால் மிகஉயர்ந்த பொருள்களைக் கொடுத்து உபகரிக்கப் பெற்றபாண்டவர்கள் நகரத்தில்வஸிக்கும் ஜனங்களினால் ஸேவிக்கப் பெற்றவர்களாக அந்தக்கிருகத்தில்வாஸஞ்செய்தனர். அவர்கள் அந் தக்கிருகத்தில் பத்துராத்திரிகள் வாஸஞ்செய்தபின், புரோசனன் மங் களமென்றபெயரையுடைய ஓர் அமங்களமானவீட்டை அவர்களுக் குக் காண்பித்தான். அந்தப் புருஷச்ரேஷ்டர்களான பாண்டவர்கள் புரோசனன்சொல்லினால் தங்கள் ஸாமக்ரிகளுடன் கைலாஸத்தில் யக்ஷர்கள்பிரவேசிப்பதுபோல் அந்தக்கிருகத்தில் பிரவேசித்தனர். தர்மிஷ்டர்களெல்லாரிலும்சிறந்தவரான யுதிஷ்டிரர் அந்தவீட்டைப் பார்த்து நெய் அரக்குகளோடுசேர்ந்த கொழுப்பின்நாற்றத்தை மோ ந்து இது நெருப்பினுக்காகச்செய்யப்பட்டதென்பதைப்பற்றிப் பீம ஸேனனுக்குச் சொல்லலானார்.

"பகைவர்களுக்குப்பரிதாபமுண்டுபண்ணுகிறவனே! இந்தவீடு தீப்பிடிப்பதற்கு எளிதாகச்செய்யப்பட்டிருக்கிறதென்பது தெளிவாக இருக்கிறது. சணல், குங்கிலியம், முஞ்சம்புல், விழல், மூங்கில்முத லான பொருள்களையெல்லாம் நெய்யில் நனைத்து, இந்த வீடுகட்டும் போது நிச்சயமாகச் சேர்த்திருக்கின்றனர். அப்படியே இந்தவீட் டைச்சுற்றிலுங்கூடத் தீப்பிடிக்கத்தக்கவையானபுல், விழல், பருத்தி, மூங்கில், மரம், பாய் இவைகளும்போடப்பட்டிருக்கின்றன. வீடு கட்டுகிறவேலையில் தேர்ந்தவர்களும் நம்பிக்கையுள்ளவர்களுமான வேலைக்காரர்கள் இதைச்செவ்வையாகக்கட்டியிருக்கின்றனர். இந்தப் பாபியானபுரோசனன் நம்பின என்னைக் கொளுத்தஎண்ணங்கொண் டிருக்கிறான். இந்தப்புத்தியற்றவன் துரியோதனனுக்குவசப்பட்டு அவன்சொற்படியேநடக்கிறான். சிறந்தபுத்தியுள்ளவிதுரர் இந்தஆப த்தை அப்போதேஅறிந்திருக்கிறார். பீமனே! அதனாலேதான் முன் னமே எனக்கு அவர் குறிப்பித்தனர். புத்தியுள்ளவர்களாகியநாம், எப்போதும் நமது நன்மையைவிரும்புகிறவரும் நமதுசிறியதகப்பனா ருமாகிய விதுரரால், இந்தஅமங்களமானகிருகம் துரியோதனன்சொ ல்லை அனுசரிக்கும் அயோக்கியர்களால் நமக்குத் தெரியாமல் உறுதி யாகக் கட்டப்பட்டிருக்கிறதென்று அறிவிக்கப்பட்டிருக்கிறோம்" என்றுசொன்னார். அதைக்கேட்டபீமஸேனன் சொல்லலானான்.

"இந்தக்கிருஹம் தீக்குரியதாகச் செய்யப்பட்டதென்று நீர் நினை த்தால் நாம் முன்வஸித்திருந்தஇடத்திற்கேசெல்வது நலம். [*நாம்

* இந்த அதிகபாடம் அஸ்தினபுரத்தைவிட்டுப்புறப்படும்போதே சொல் லப்பட்டிருக்க வேண்டும்.

இதை அறிந்திருந்தும் தனியாகப்போவது ஸரியானகாரியமன்றெ ன்று நான் நினைக்கிறேன். நன்மைநேர்ந்தாலும் தீமைநேர்ந்தாலும் அவர்களுடன்கூடவே நாமும் வஸிக்கவேண்டும். நாம்வெளிப்படு வோமாயின் பயத்தினால்லயர்ந்திருக்கும் த்ருதராஷ்டிரபுத்திரன் இது முதல் ராஜ்யத்தில் ராஜாவாக வேரூன்றிப்போவான். ராஜ்யமே அவ னுடையதாகிவிடும், இந்த ஜனங்களும் அவன்பக்ஷமாவார். ஆதலால், நாம் கழுத்தில் அடிவைத்துக்கொண்டு கூடவேவஸிப்போம். நமக் குக் காலம் அநுகூலமாகவரும்போது சத்ருவினிடத்திலிருந்து ராஜ் யத்தைப்பிடுங்கிக்கொண்டு நமதுபிதாவினுடையஸம்பத்தையும் சுகத் தையும் நீடூழிகாலம் அநுபவிப்போம். த்ருதராஷ்டிரன்சொல்லை நாம் எதற்காகஅநுஸரிக்கவேண்டும்? ராஜாவே! அவர்களிடமிருந்துபிரி ந்து வேறாகப்போவதாகியபலஹீனம் உமக்கு வந்ததேன்? ஆபத்துக் களில் நம்மைக்காப்பாற்றுகிற சிறந்தபுத்திமானான விதுரர் இருக் கிறார். பீஷ்மர் ராஜ்யஸுகத்தைவிரும்பாமையால் ஒருபக்கமும் சே ராதவரன்றோ? பாஹ்லீகன்முதலானபெரியவர்கள் எப்போதும் மத் தியஸ்தர்களே. துரோணர் அர்ச்சுனனிடத்தில் பிரீதியுள்ளவராத லின் நம்பக்ஷமாகவேஇருப்பர். ராஜாவே! ஆதலால், கூடவேவஸித்தல் வேண்டும். எவ்வகையிலும் பிரிந்துபோகலாகாது. ராஜாவே! அல் லது பராக்கிரமத்தில்வெல்லசக்தியற்றவர்களும் அற்பர்களுங் கபட முள்ளவர்களும் வஞ்சகஞ் செய்பவர்களுமாகிய அந்த த்ருதராஷ்டிர புத்திரர்கள் நாம் ஜாக்ரதையாயிருக்கும்போது என்ன செய்யவல்ல ராவர்? அவர்கள் எதைச்செய்யார்? முன்னே எனக்கு அவர்கள் மஹாவிஷத்தைக்கொடுக்கவில்லையா? பல்லில்விஷமுள்ள மிகக்கொ டிய ஸர்ப்பங்களினால் என்னைக் கடிக்கச்செய்யவில்லையா? ராஜாவே! பிரமாணகோடியில் தூக்கத்தினால் நான் தேகம்தெரியாமலிருந்த போது த்ருஷ்டியில்விஷமுள்ள கொடியஸர்ப்பங்களைவிட்டுக் கடிக் கச்செய்து கங்கையில்வரிசையாகநாட்டினசூலங்களில் அவர்கள் என் னைத் தள்ளிவிடவில்லையா? அப்போது நான் இறந்துபோனேனா? ராஜச்ரேஷ்டரே! அந்தப்பாவிகளால் கெட்டஎண்ணத்தோடுசெய்யப் பட்ட அந்தக்கொடிய ஆபத்துக்களில் எந்த ஈசுவரர் நம்மைரக்ஷித் தாரோ, சராசரமாகியஉலகமனைத்தும் எவருடையஸ்வாதீனமாகஇரு க்கிறதோ, அவர் இப்போது எங்கேபோய்விட்டார்? நாம் எதுவரை யில் ஸஹிக்கலாமோ அதுவரையில் ஜாக்ரதையோடு பொறுத்திருப் போம். எப்போது நமக்குப்பொறுக்கமுடியவில்லையோ அப்போது நம்முடையஜீவிதத்தைத் தேடுவோம். இப்போது நாம் அவஸரமா

கப் பலத்தினால் யுத்தஞ்செய்து பார்க்கவேண்டியது என்னவிருக்கிறது? ஸாமத்தினாலும் தானத்தினாலும் பேதத்தினாலும் பாதி ராஜ்யத்தை அடைவதற்கு முயல்வோம். அதற்குமேற்பட்டுத்தான் யுத்தம் சிலாக்கியமாகும். ஆதலால், அவர்களுள்ளத்தில்அடிக்கப்பட்ட ஆணியைப்போல் அவர்களுடன்கூடவே வாஸஞ்செய்தல்வேண்டும். மிகப்பயந்தவனைப்போலக்காண்பித்து எங்கும் வேறுபட்டுப்போகலாகாது"] என்று பீமஸேனன் சொன்னான். அதைக்கேட்டு, யுதிஷ்டிரர் மறுமொழிசொல்லலானார்.

"நாம் அயர்ச்சியில்லாமல் நம்மனத்துக்குஇனியதும் அபாயமில்லாததுமாகியமார்க்கத்தை இங்கிருந்தே தேடிக்கொண்டு நம்மெண்ணம்வெளிப்படாமல் ஜாக்ரதையோடு இந்தஇடத்திலேயேவஸித்திருப்பது நலமென்று நான் நினைக்கிறேன். அந்தப்புரோசனனுக்கு நம்முடையகுறிப்பு வெளிப்படுமானால் அப்போது அவன் சீக்கிரம் செய்யத்தொடங்கி உடனே பலாத்காரமாகவும் தகித்துவிடுவான். இந்தப்புரோசனன் உலகநிந்தனைக்காவது பாவத்திற்காவது பயப்படுகிறவனல்லன். அதனாலேதான் புத்தியற்றஇவன் துரியோதனனுக்கு உட்பட்டிருக்கிறான். மேலும், நாம் தகிக்கப்பட்டுப்போனபிறகு நமது பிதாமஹராகிய பீஷ்மர் ஏன்கோபிப்பார்? அவர் கௌரவர்களைத்தான் ஏன் கோபமூட்டுவார்? அல்லது நாம் இங்கே தகிக்கப்பட்டபின் நமதுபிதாமஹரானபீஷ்மரும் மற்றக்கௌரவஸ்ரேஷ்டர்களும் தர்மமென்பதைப்பற்றியே கோபிக்கவும் கோபிக்கலாம்; அதனால், என்ன உபயோகம்? நாம்எரிக்கப்பட்டபின் நம்முடைய சிறந்தவம்சத்தினால்சொல்லப்பட்ட மற்றத்தர்மந்தெரிந்த கௌரவஸ்ரேஷ்டர்களும் கோபித்தால் அது நியாயந்தான். ஆனால், நாம் கொளுத்தப்படுவதற்குப்பயந்து ஓடுவோமாயின் ராஜ்யத்திற்காசைப்பட்ட துரியோதனன் சாரர்களைக்கொண்டு நம்மெல்லாரையும் கொன்றுவிடுவான். நாம் ராஜ்யத்திலிராதவர். அவன் ராஜ்யத்திலிருப்பவன். நாம் ஸஹாயமில்லாதவர். அவன் ஸஹாயமுள்ளவன். நமக்குப் பொக்கசமில்லை. அவனுக்குப் பெரியபொக்கசமிருக்கிறது. அவசியம் உபாயங்களினால் கொன்றுவிடுவான். வீரனே! ஆதலால், நாம் இந்தப்பாபியையும் அந்தத்துரியோதனனென்னும்பாபியையும் ஏமாற்றுவதற்காகக் கருத்து வெளிப்படாமல் பற்பலஇடங்களில்வஸித்தல்வேண்டும்.அதன்பொருட்டு நாம் வேட்டையேகாரியமாக இந்தப்பூமியில் திரிவோம். அதனால் நாம் ஓடுவதற்கு வழிகள்தெரிந்துபோம். இப்போதே பூமிக்குள் மிக்கரஹஸ்யமாக ஒருசுரங்கம்செய்வோம்.அதில் நாம் மறைந்துபுறட்

பட்டுப்போகும்போது நம்மை அக்கினிதகிக்காது. நாம் இந்தவழியில் ஓடுவதைப் புரோசனனும் பட்டணத்திலுள்ள ஜனங்களில் ஒருவரும் அறியாமலிருக்கும்படி, நாம் ஜாக்கிரதையாகச் செய்ய வேண்டும்'' என்று சொன்னார்.

---

## நூற்றைம்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஜதுக்ருஹபர்வம். (தொடர்ச்சி.)



(கனகன் சுரங்கஞ் செய்தது.)

ராஜாவே! விதுரருக்குஆப்தனும் ஸமர்த்தனுமாகிய ஒரு* கனகன் ஏகாந்தமானஓர்இடத்தில் பாண்டவர்களை நோக்கிப் பின்வரும் சொல்லைச்சொல்லலானன்: "நான் திறமையுள்ள சுரங்கவேலைக்காரன். 'பாண்டவர்களின்பிரியத்தை நீசெய்யவேண்டும்' என்றுசொல்லி விதுரரால் அனுப்பப்பட்டிருக்கிறேன். உங்களுக்கு நான்என்னசெய்யக்கடவேன்? உம்முடையநன்மையைப்பற்றி மறைவாக மிலேச்சபாஷையில் விதுரர்உமக்குச்சொன்னதும் நீர்அதற்குஆகுகவென்றுமறுமொழிசொன்னதும்தாம் என்னை நம்புவதற்குக் காரணம். கிருஷ்ணபக்ஷம்சதுர்த்தசிராத்திரி உமதுக்ருஹத்தின் இந்தவாயிலில் புரோசனன் தீவைக்கப்போகிறான். புருஷச்ரேஷ்டர்களான பாண்டவர்களை அவர்கள்தாயாருடன்கூடக் கொளுத்திவிட வேண்டுமென்பது துர்ப்புத்தியுள்ள அந்தத்துரியோதனனுடைய நிச்சயம்'' என்றான். உறுதியான தைரியமுள்ளவரும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரர் அவனுக்கு மறுமொழிசொல்லத்தொடங்கினார்.

"அன்பனே! நீ விதுரருக்குவேண்டியவனென்றும் சுத்தனென்றும் நம்பத்தக்கவனென்றும் அன்பனென்றும் எப்போதும் உறுதியான பக்தியுள்ளவனென்றும் நான்அறிவேன். †கவியாகியவிதுரருக்குத் தெரியாதகாரியம் ஒன்றுமில்லை. நீ அவருக்கெவ்வாறோ அவ்வாறே நமக்கும் வேண்டியவன். உன்னிடம் எமக்கு வேற்றுமையில்லை. நாம் விதுரருக்கெப்படியோ அப்படியேதான் உனக்கும்வேண்டியவராயிருக்கிறோம். எங்களைக் கவியாகிய விதுரர் காப்பாற்றுவது போலவே நீயும் காப்பாற்று. இந்த வீடு தீப்பிடிக்க எளிதானது. துரியோதனன் கட்டளையினால் புரோசனன் எனக்காகக் கட்டிவைத்ததெ

---

* சுரங்கம்செய்பவன். †பரவியஞானமுள்ளவர்.

ன்று எனக்குத்தெரியும். துஷ்டபுத்தியுள்ளவனும் பாபியுமாகிய அந்தத்துர்யோதனனுக்குப் பொக்கசமும் மனுஷ்யஸஹாயமுமிருக்கின்றன. அந்தப்பாபசிந்தையுள்ளவன் எந்தக்காலமும் எங்களைப்பீடிக்கிறான். ஆதலால், நீ தகுந்த யத்தனஞ்செய்து இந்த அக்கினியிலிருந்து எங்களை விடுவிக்கவேண்டும். நாங்கள் இந்தஇடத்தில் எரிந்துபோனால் துரியோதனன்விருப்பம் நிறைவேறிப்போம். அந்தத்துராத்மாவான துரியோதனனுடைய இந்தஆயுதசாலை ஆயுதங்களால்நிரம்பி இருக்கிறது. மதில்சூழ்ந்ததும் பரிஹாரத்திற்கு உபாயமில்லாததுமான இந்தஇடத்தைக்கண்டுபிடித்து இந்தப்பெரியவீடு கட்டப்பட்டிருக்கிறது. அவன்செய்யக்கருதிய இந்தக்கெட்டசெய்கையை விதுரர் முன்னமே நிச்சயமாகஅறிந்திருக்கிறார். அதனால் எங்களுக்குத் தெரிவித்தார். விதுரர் முன்னமேகண்டறிந்த அந்த ஆபத்து இதோ சமீபத்திலிருக்கிறது. புரோசனனுக்குத்தெரியாமல் எங்களை நீ விடுவிக்கக்கடவாய்'' என்றார். அந்தக்கனகன் 'அவ்வாறேயாகட்டும்' என்று வாக்குத்தத்தஞ்செய்து முயற்சியுடன் அகழியையிறைப்பவன்போல் பெருஞ்சுரங்கத்தையுண்டுபண்ணினான். பாரதரே! அந்தவீட்டின் நடுவில் அதிகப்பெரியதாயிராததும் கதவுள்ளதும் பூமிக்குஸமமாயிருப்பதனால் யாருக்கும்தெரியக்கூடாததுமான துவாரத்தையுண்டுபண்ணினான். புரோசனனிடமுள்ளபயத்தினால், அந்தத்துவாரத்தைமறைவாகவேசெய்தான். கெட்டஎண்ணமுள்ள அந்தப்புரோசனன் எப்போதும் அந்தவீட்டின்வாயிலிலேயே வஸித்துக்கொண்டிருந்தான். ராஜாவே! அந்தப்பாண்டவர்களனைவரும் இரவுமுழுதும் ஆயுதபாணிகளாகவே அங்கேவஸித்தனர். பாண்டவர்கள் பகலில் வேட்டையாடிக்கொண்டு காட்டுக்குக்காடு திரிந்தனர். ராஜாவே! அவர்கள் புரோசனனைநம்பாமலிருந்தும் நம்பினவர்கள்போலவும் மனத்தில் ஸந்தோஷமில்லாமலிருந்தும் ஸந்தோஷமுள்ளவர்கள்போலவும் நினைக்கச் செய்து ஏமாற்றிக்கொண்டு மிகுந்த ஆச்சரியத்துடன் வாசஞ்செய்தனர். விதுரருடையமந்திரியாகிய அந்தச்சிறந்தகனகனைத்தவிர அந்நகரத்தில் வஸிக்கும்ஜனங்கள்யாவரும் இவர்கள்கருத்தைஅறியவில்லை.

———

## நாற்றுமபதாவது அத்தியாயம்.

## ஜதுக்ருஹ பர்வம். (தொடர்ச்சி.)

(ராத்திரியில் குந்தி பிராமணபோஜனஞ்செய்வித்தபின் பீமன் அரக்கு மாளிகையைக்கொளுத்திக் குந்தியையும் ஸஹோதரர்களையும் அழைத்துக்கொண்டு சுரங்கவழியாக வெளிப்பட்டது.)



ஒருவருஷத்துக்குமேல் ஒற்றுமையானமனத்துடன் வஸித்திருந்த பாண்டவர்களைப் புரோசனன்கண்டு (அவர்கள்) தன்னை நம்பினவர்களென்றறிந்து களிப்புற்றான். அவன்மனத்தில் ஸந்தோஷத்துடன், 'பாண்டவர்களையழிப்பதற்கு இது யுக்தமானகாலமென்று நினைக்கிறேன்' என்று ஆலோசனைசெய்தான். கௌரவஸ்ரேஷ்டரும் சிறந்தபுத்திசாலியும் தர்மபுத்திரருமான யுதிஷ்டிரர் அவனுடைய அந்தஎண்ணத்தையறிந்து கவலையுற்றார். புரோசனன் அவ்வாறு களிப்புற்றிருக்கையில் தர்மந்தெரிந்தவரும் குந்தீபுத்ரருமாகிய யுதிஷ்டிரர், பீமஸேனனையும் அர்ச்சுனனையும் நகுலஸஹதேவர்களிருவரையும்பார்த்து, " இந்தப்பாபிஷ்டனுனபுரோசனன் நாம் நிரம்பநம்பியிருப்பதாக நினைக்கிறான். கொடியநினைவுள்ள இவன் ஏமாந்திருக்கிறான். ஓடுவதற்குஇதுகாலமென்று நினைக்கிறேன். ஆயுதசாலையில் தீமூட்டிப் புரோசனனையும் எரித்து இங்கே ஆறு மனிதர்களை வைத்துவிட்டு யாருக்குந்தெரியாமல் ஓடிப்போவோம்" என்றுசொன்னார். மஹாராஜாவே! பிறகு, குந்தி அன்னதானஞ்செய்வதை வியாஜமாகக்கொண்டு இரவில் பிராம்மணபோஜனஞ் செய்வித்தாள். ஸ்திரீகளும் அங்கேவந்தனர். பாரதரே! அந்தஸ்திரீகள் இஷ்டப்படிவிளையாடிப் போஜனமும்பானமுஞ்செய்து குந்தியிடம் விடைபெற்றுக்கொண்டு இரவிலேயே தம்தம்வீடுகளுக்குச் சென்றனர். புரோசனனால் தூதுவிடப்பட்ட ஒருவேடச்சி கெட்டஎண்ணத்துடன் எப்போதும் ஸமயம்பார்த்துக்கொண்டு குந்தியையே அடுத்திருந்தாள். அந்த வேடச்சிக்கும் ஐந்துபுத்திரர்களிருந்தார்கள். முன்னமேயுள்ள பழக்கத்தினால் குந்தியினிடம் ஸ்நேகஞ்செய்துகொண்டு அவளுக்கு ஸகியாயிருந்த அந்தவேடச்சி, பலவகையானதேன்களையும் கிழங்குகளையும் கனிகளையுமெடுத்துக்கொண்டு அன்னத்தைவிரும்பிக் காலத்தினால் தூண்டப்பட்டவளாகப் புத்திரர்களுடன் வந்துசேர்ந்தாள். மிகக் கொடியவளும் ஐந்துபுத்திரர்களுள்ளவளுமான அந்தவேடச்சி குந்

திக்கு மணமொத்தஸகியாயிருந்தாள். அவள் புத்திரர்களுடன் மது பானஞ்செய்து மயக்கமுற்று அதனால் அயர்ந்திருந்தாள். ராஜாவே! புருஷஸ்ரேஷ்டரே! அவள் தன்பிள்ளைகளெல்லாரோடுங்கூடப்பிரஜ்ஞைதப்பி இறந்தவள்போல் அதேவீட்டில் தூங்கினாள். பிறகு, அதிகமாகக்காற்றடிக்கையில் ஜனங்களெல்லாம் தூங்கினபாதிராத்திரியில் பீமன் அந்தவீட்டைப் புரோசனன் எங்கேபடுத்திருந்தானோ அந்த இடத்தில் கொளுத்தினான். அங்கே பீமன் அரக்குமாளிகையின்வாயிலில் தீமூட்டிப் பிறகு அந்தவீட்டைச் சுற்றிலும் அக்னிப்ரதானஞ் செய்தான். சிறந்தபுத்தியுள்ள பீமஸேனன் முன்னதாகவே வீட்டையொழித்துக் குந்தியைப் பாண்டவர்களுடன் அந்தச்சுரங்கத்தில் அனுப்பியிருந்தான். நல்லபுத்திசாலியானபீமன் அந்தவீட்டைச் சுற்றிலும் தீயைவைத்து உடனே வீட்டிலிருந்த பொருளையெடுத்துக்கொண்டு அந்தச்சுரங்கவழியாக வெளிப்பட்டான். அந்தவீடு முழுதும்பற்றிக்கொண்டதையறிந்தபிறகு பகைவர்களை அடக்குகின்ற பாண்டவர்கள் தாயாருடன்கூடச் சுரங்கத்துக்குள் விரைவாகப்புகுந்தனர். அதன்பிறகு தீயினுடைய மிகவும்அதிகமானஎரிச்சலும் சத்தமும்உண்டாயின. அதனால் அப்போது அந்தஜனக்கூட்டம் விழித்துக்கொண்டது. அந்தவீடு எரிவதைக்கண்டு அந்த வாரணாவத நகரத்துஜனங்கள் முகம்வாடினவர்களாய், "துரியோதனனால் அனுப்பப்பட்ட புத்திஹீனனான பாவியினால் தான்கெடுவதற்காகவே வீடு கட்டுவிக்கப்பட்டது. அஃதுஎரிக்கவும்பட்டது. ஆ! ஆ! சீச்சீ! த்ருதராஷ்டிரனுடையபுத்தி அவ்வளவுசெவ்வையாயில்லை. அவன் பரிசுத்தர்களான பாண்டுபுத்திரர்களைத் துவேஷிகளைப்போல் எரித்துவிட்டானே! கெடுநினைவுள்ளபுரோசனன் கொளுத்தினபிறகு நல்லவேளையாய்த் தானும் இப்போது எரிந்தான். அவன் குற்றமில்லாமல் செவ்வையாக நம்பினவர்களான உத்தமபுருஷர்களைக் கொளுத்தினானே!" என்று புலம்பிக்கொண்டு இரவில் அந்தவீட்டை நாலு பக்கமும் சுற்றிக்கொண்டுநின்றனர். அந்தப்பாண்டவர்களனைவரும் தாயாருடன்கூட மிகத்துயரமுற்றவர்களாகி அந்தச்சுரங்கத்தின்வழியாக வெளிப்பட்டு யாருக்குந்தெரியாமல் விரைவாகச்சென்றனர். அவ்வாறு தூக்கமில்லாததனாலும் பயத்தினாலும் அந்தவீரர்களான பாண்டவர்கள் தாயாருடன்கூடச் சீக்கிரம்நடப்பதற்குச் சக்தியில்லாதவர்களாயிருந்தனர். அரசர்க்கரசே! அச்சப்படத்தக்க வேக பராக்ரமங்களையுடையபீமஸேனன் ஒருவனே தன்ஸஹோதரர்களனைவரையும் தாயாரையும் எடுத்துக்கொண்டு சென்றான். மிகச்சிறந்த

தேகபலமும் பராக்ரமமுமுள்ள வீரனான அந்தப்பீமஸேனன் தாயாரைத்தோளிலும் நகுலஸஹதேவர்களை இடுப்பிலும் எடுத்துக்கொண்டும் யுதிஷ்டிரரையும் அர்ச்சுனனையும் இரண்டுகைகளால் பிடித்துக்கொண்டும் மரங்களை மார்பினால் முறித்துக்கொண்டும் பூமியைக்கால்களினால் மிதித்துக்கொண்டும் வாயுவேகமாக விரைவிற்சென்றான்.

---

## நூற்றுறுபத்தோராவது அத்தியாயம்.

## ஜதுக்ருஹபர்வம். (தொடர்ச்சி.)



(பாண்டவர்கள், விதுரர்அனுப்பின தூதன்கொணர்ந்த கப்பலிலேறிக் கங்கையைத்தாண்டியது.)

அதேகாலத்தில் கவியாகியவிதுரர் முன்செய்தஸங்கேதப்படி கங்கையைத்தாண்டுவிப்பதற்காக நல்லநடக்கையுடையவனும் தமக்கும் பாண்டவர்களுக்கும் முன்னமேதெரிந்தவனும் நம்பத்தகுந்தவனும் அடையாளத்தையும் வாய்ச்சமாசாரத்தையும் தெரிந்துகொண்டவனுமாகிய ஒருமனிதனை அந்தவனத்துக்கு அனுப்பினார். அவன் அவ்வனத்தில் குறித்தஇடம்சென்று பாண்டவர்களைக்கண்டான், கௌரவர்களாகிய அவர்களைத் தாயாருடன்கூடக் கங்கைக்கரைக்கு அழைத்துக்கொண்டுபோனான். பிறகு, சிறந்த புத்தியுள்ளவரும் மஹாத்மாவுமாகிய விதுரர் பாவஙினைவுள்ள அந்தப்புரோசனனுடைய அந்தச்செய்கையையும் சாரனால் தெரிந்துகொண்டார். அதனால் விதுரரால் அப்போதே ஒருதெரிந்தமனிதன் அனுப்பப்பட்டான். அவன் தீங்கில்லாதகங்கைக்கரையில் நம்பிக்கையுள்ளமனிதர்களாற்செய்யப்பட்டதும் மனத்தையும் காற்றையும்போல வேகமாகச்செல்லத்தக்கதும்எந்தக்காற்றையும்தாங்குவதும் யந்திரம்பூட்டப்பட்டதும் கொடிகட்டியதுமாகிய ஒருகப்பலை பாண்டவர்களுக்குக் காண்பித்தான். அதைக்காண்பித்தபிறகு முன்பு விதுரர்சொல்லியதை அடையாளமாகச் சொல்லலானான்.

"யுதிஷ்டிரரே! அடையாளத்திற்காகக் கவியானவிதுரருடைய இந்தவசனத்தை நான் சொல்லக்கேளும். அதாவது, 'காட்டையழிப்பதும் குளிரைப்போக்குவதுமாகிய ஒன்று பெருங்காட்டில் வளையில் இருப்பனவற்றைக் கொல்வதில்லை என்றறிந்து அவ்வகையாகத் தன்னை எவன் காத்துக்கொள்ளுகிறானோ அவன் ஜீவிப்பனென்றது

தெரிந்துகொள்ளவேண்டும்’ என்று விதுரர் எந்தச்சொல்லைச்சொன்னாரோ அது இப்போது அப்படியேயாயிற்று. இந்த அடையாளத்துடன் அவரால் அனுப்பப்பட்டவனும் நம்பிக்கையுள்ளவனுமாக என்னை அறியும். எல்லாவிஷயங்களிலும் உண்மையையறிந்தவரும் உயர்ந்தபுத்தியுள்ளவருமாகிய க்ஷத்தாவான விதுரர் துரியோதனனையும் அவன்ஸஹோதரர்களையும்இகழ்ந்து என்னிடம் மற்றொருசொல்லையும் சொன்னார். அதாவது, ‘குந்திபுத்திரரே! கர்ணனையும் தம்பிமார்களுடன்கூடிய துரியோதனனையும் சகுனியையும் ஐயமின்றி நீர் சண்டையில்வெல்லப்போகிறீர்’ என்பதுதான்” என்றான்.

பிறகு, அந்தபாண்டவர்களும் சிறப்புள்ளகங்காதீரத்திற்குச் சென்றனர் (அங்கே,) செம்படவர்க்குஅரசனும் வீரனும் மிகுந்ததர்மிஷ்டனும் பாபமற்றவனும் மானுமியுமாகிய ஒருசெம்படவன், விளக்குவெளிச்சத்தினால் பாண்டவர்களைத்தேடிக்கொண்டுவந்தான். அவனை அந்தபாண்டவர்கள் கண்டனர். அந்தச்செம்படவன் சிறந்தபுத்தியுள்ள விதுரர் மிலேச்சபாஷையினால்பேசினதுமுதலிய அடையாளங்களென்னவோ அவற்றைப் பாண்டவர்களுக்கு அப்போது தெரிவிக்கத்தொடங்கினான். “விதுரர் எனக்குச் சிறந்த திரவியங்களை மிகுதியாகக்கொடுத்து, ‘நீ கங்கைக்கரையில் வசித்துக்கொண்டிருந்து பாண்டவர்களைக் கரையேற்றக்கடவாய்’ என்று கட்டளையிட்டிருக்கிறார். அவ்வாறு கட்டளையிடப்பட்டநான், சதுர்த்தசியாகிய இன்றைத்தினம் கங்கையின்ஸமீபத்தில் மான்கூட்டங்களோடு கூடிய இந்தவனத்தில் தூதர்களையனுப்பித் தேடிக்கொண்டிருக்கிறேன். பிரபுக்களே! உங்களுக்கு ஸுகமுண்டாகக்கடவது. இப்போது, நீங்கள், துடுப்புக்களோடும்கொடிகளோடும்கூடியதும்ஓட்டையில்லாததும் வீட்டுக்கொப்பானதுமாகிய கப்பலில் ஏறிச்செல்லலாம். இந்தக்கப்பல் ஜலமார்க்கத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஜலத்தில் நன்றாகப்போகத்தக்கது. உங்களெல்லாரையும் இந்தஇடத்திலிருந்து கொண்டுபோய்விடும். ஸந்தேஹமில்லை” என்றான். பிறகு, அந்தப் புருஷஶ்ரேஷ்டர்களைத் தாயாருடன்கூடக் கப்பலிலேற்றிக்கொண்டு, கங்கையில்போகும்போது, அவர்கள் தாக்கப்பட்டிருப்பதைக்கண்டு, அந்தச்செம்படவன், “விதுரர் உங்களை உச்சிமோந்து தழுவிக்கொண்டு ‘நீங்கள் வியாகுலப்படாமல் க்ஷேமமானமார்க்கத்தில்செல்லுங்கள்’ என்று பலமுறைசொன்னார்” என்று திரும்பவுஞ்சொன்னான். ராஜேந்திரரே! விதுரரால்அனுப்பப்பட்ட அந்தமனிதன் புருஷஶ்ரேஷ்டர்களான அந்தவீரர்களுக்கு இவ்வாறு சொல்லிக் கப்பலால் கங்

கையைத்தாண்டுவித்தான். கங்கையைத்தாண்டுவித்தபின் அக்கரை சேர்ந்த அவர்களெல்லோரையும்நோக்கி, 'ஜய' என்ற ஆசீர்வாதத்தைச்சொல்லிப் பிறகு அவன் தான்வந்தவாறேசென்றான். மஹாத்மாக்களாகிய பாண்டவர்களும் கங்கையைத்தாண்டினபின் கவியாகிய விதுரருக்கு ஸமாசாரம்சொல்லியனுப்பி யாருக்குந்தெரியாமல் மறைந்துகொண்டு விரைவாகச்சென்றனர். அந்தவீரர்கள் அவ்விடத்தில் அலைகள் எழும்புகிற கங்கையைத்தாண்டினபிறகு தென்திசையைநோக்கி வேகமாகப்புறப்பட்டனர். ஆசரே! இரவில் நக்ஷத்திரங்களினால் மார்க்கத்தைத்தெரிந்துகொண்டு தெற்குமுகமாக ஒருகாட்டிலிருந்து வேறோர் அடர்ந்தகாட்டிக்குச் சென்றனர் பிறகு, களைத்துப் பசிதாகங்களினால்வருத்தமுற்றவர்களாகிப் பயத்தினால்நடுங்கிக்கொண்டு மிகுந்தபராக்ரமமுள்ள பீமஸேனனைநோக்கிப் பலமுறை பின்வரும்சொல்லைச் சொல்லினார்கள். "நாம் இந்த அடர்ந்தகாட்டில் திசையும்அறியோமே; நடக்கவும் முடியாமலிருக்கிறோமே; இதற்குமேலான கஷ்டம் என்னவிருக்கிறது? அந்தப்பாவியான புரோசனன் எரிந்துபோனானோ என்னவோ நாம்அறியோம். நாம் யார் கண்ணிலும் அகப்படாமல் இந்தப்பயத்திலிருந்து எவ்வாறுவிடுபடுவோம்? பாரதனே! எங்களையெடுத்துக்கொண்டு முன்போலவே துரிதமாகச்செல். நம்முள் நீ ஒருவன்தானே காற்றைப்போன்றபலமுள்ளவன்" என்றனர். இவ்வாறு தர்மராஜாவினால் சொல்லப்பட்ட மஹாபலசாலியும் வாயுபுத்திரனுமான அந்தப்பீமஸேனன் குந்தியையும் ஸஹோதரர்களையுமெடுத்துக்கொண்டு விரைவாகச்சென்றான்.

---

## நூற்றறுபத்திரண்டாவது அத்தியாயம்.

## ஜதுக்ருஹபர்வம். (தொடர்ச்சி.)

**(வாரணாவதத்துஜனங்கள் காலையில் அரக்குமாளிகையெரிந்ததைக்கண்டு புரோசனனும் பாண்டவர்களும் எரிந்துபோனதாகநினைத்து அதனைத் திருதராஷ்டிரனுக்குத் தெரிவிக்கும்படி தூதனை அனுப்பினதும், திருதராஷ்டிரன் தாயாதிகளுடன் அவர்களுக்குத் தர்ப்பணஞ் செய்ததும், பீஷ்மரும் விதுரரும் பேசிக்கொண்டதும்.)**

பிறகு, இரவுநீங்கினவுடன் நகரத்துஜனங்களனைவரும் பாண்டவர்களைப்பார்க்கவிரும்பித் துரிதமாக அவ்விடம்வந்தனர். அந்தஜனங்கள் நெருப்பையவித்து அவ்விடத்தில் எரிந்துபோன அரக்குவீட்

டையும் புரோசனனென்னும் மந்திரியையும் கண்டனர். "பாவச் செய்கையுள்ள துரியோதனனால் பாண்டவர்களையழிப்பதற்காக இந்த வீடு கட்டப்பட்டது திண்ணம்" என்று அந்தஜனங்கள் கூவினர். "த்ருதராஷ்டிரன் மகன் த்ருதராஷ்டிரனுக்குத்தெரிந்தே பாண்டு புத்திரர்களை எரித்திருக்கிறான். ஸந்தேஹமில்லை. திருதராஷ்டிரன் இதைத்தடுத்தவனல்லன். இவர்கள் விஷயத்தில் பீஷ்மரும் துரோணரும் விதுரரும் கிருபரும் மற்றக்குருவம்சத்தவரும் தர்மத்தை அனுஸரிக்கவில்லை; நிச்சயம். ஆ ஆ! தர்மசிந்தையுள்ளவர்களும் தர்மம் கெட்டுப்போனதை விதியினால்பாராமலிருக்கின்றனர். கல்விகேள்வியுள்ளவர்களும் பணக்காரர்களுக்கு உட்பட்டிருக்கின்றனர். ஆ ஆ! பெரியவர்களுங்கூட, தர்மிஷ்டர்களும் ஸத்யத்தையும் தவத்தையும் கடைப்பிடித்தவர்களும் கதியற்றவர்களுமாகிய ஸத்புருஷர்களைப் பார்க்கவில்லையே அவர்களுக்குத் தெய்வந்தான் ஆதாரம். இந்த நாம் துராத்மாவான திருதராஷ்டிரனுக்கு, 'உன்னுடைய முக்கியமான விருப்பம் நிறைவேறியது பாண்டவர்களை எரித்துவிட்டாய்' என்று செய்தியனுப்புவோம்" என்றுகூறினர். பிறகு, அவர்கள் பாண்டவர்களைத்தேடுவதற்காகத் தீயையவிலக்கி, ஐந்துபுத்திரர்களோடு எரிக்கப்பட்ட ஒருநிரபராதையான வேடசியைக் கண்டனர். "இதோ பாருங்கள்! யதுவம்சத்தவளாகிய இந்தக்குந்தி, புத்திரர்களோடெரிக்கப்பட்டுப் பரிதாபப்படத்தக்கவளாகக்கிடக்கிறாள். ஐயோ!" என்று நகரத்துஜனங்கள் பேசினர். அந்தவீட்டைப் பரிசோதிக்கும்போது அந்தச்சுரங்கவேலைசெய்தவனால் மேலேப் சுரங்கத்தின்வழி மண்போட்டு மூடப்பட்டது. அந்தச்சுரங்கவழி அந்தமனிதர்களால் காணப்படவில்லை. அப்போது அந்தநகரத்துஜனங்கள் பாண்டவர்களும் மந்திரியானபுரோசனனும் அக்னியினால் எரிக்கப்பட்டதைத் திருதராஷ்டிரனுக்குச் சொல்லியனுப்பினர் ராஜாவாகிய திருதராஷ்டிரன் மிகப் பெரியதுக்கமான பாண்டுபுத்ரர்களுடைய அந்தமரணத்தைக்கேட்டு மிகத்துயரமுற்றழுதான். ஆழமான மடு கோடைக்காலத்தில் அடியில் குளிர்ச்சியும் மேலேஉஷ்ணமுமாயிருப்பதுபோல் அவன் உள்ளத்தில் மகிழ்ச்சியும் வெளியில்துக்கமுமுள்ளவனாகி இருந்தான். "அந்தவீரர்கள் தாயாருடனுங்கூடஎரிந்துபோனதினால், மிகுந்தகீர்த்திபெற்ற என்ஸஹோதரனை பாண்டுமஹாராஜன் இப்போதுதான் முடிவாக இறந்துபோனான். வாரணாவதநகரத்துக்குச் சீக்கிரமாக மனிதர்கள் செல்லவேண்டும். அந்தவீரர்களையும் ராஜபுத்திரியாகிய குந்தியையும் சிறப்பிக்கவேண்டும். இன்னும் அங்கே அவர்களுக்கு வேண்டியவர்

கள் எவர்கள் இறந்துபோயினரோ அவர்களுக்கும் குலத்துக்குத்தக்கபடி பரிசுத்தமாகவும் சிறப்பாகவும் கிரியைகளைச்செய்யவேண்டும். என்வம்சத்தின்ஸந்ததியை அபிவிருத்திசெய்கிறவர்களான மஹாத்மாக்கள் எரிந்துபோயினர். இவ்வாறு ஆனபின் பாண்டவர்களுக்கும் குந்திக்கும் என்னென்ன நல்லகாரியம் என்னாற்செய்யக்கூடுமோ அவற்றையெல்லாம் நான் தனங்களினாற்செய்யவேண்டும்" என்று திருதராஷ்டிரன் சொன்னான். பிறகு, பீஷ்மருடன் கூடச்சேர்ந்த கௌரவர்களனைவரும் திருதராஷ்டிரனும் அவனுடையபுத்திரர்களும் ஒற்றையாடையுடுத்துச் சந்தோஷமில்லாமல் ஆபரணங்களையும்தலைப்பாகைகளையும் நீக்கி மஹாத்மாக்களான பாண்டவர்களுக்கு ஜலதர்ப்பணஞ்செய்யக்கருதிக் கங்கையைநோக்கிச் சென்றனர். அம்பிகையின்புத்திரனாகிய திருதராஷ்டிரன் இவ்வாறு சுற்றத்தாரால்சூழப்பட்டவனாகச்சென்று பாண்டுபுத்திரர்களுக்கு ஜலதர்ப்பணஞ்செய்தான். எல்லாரும்சேர்ந்து மிகுந்தவ்யஸனத்தையடைந்துபுலம்பினர். அந்த ஜனங்களில், 'ஆ! கௌரவவர்த்தனனாகியயுதிஷ்டிரா!' என்று சிலரும், 'ஆ! பீமா!' என்று மற்றும்சிலரும், 'ஆ! பல்குனா!' என்று இன்னும்சிலரும், 'ஆ! இரட்டையரே!' என்று வேறுசிலரும், குந்தியைப்பற்றிச் சிலஜனங்களும் அழுதுகொண்டு ஜலதர்ப்பணஞ்செய்தனர். இவ்வாறே நகரத்திலுள்ளமற்றஜனங்களும் பாண்டவர்களைப்பற்றி வ்யஸனப்பட்டனர். விதுரர்மாத்திரம் கொஞ்சமாகவ்யஸனப்பட்டார். அவர் *உண்மையறிந்தவரல்லவோ? விதுரருக்குத்திருதராஷ்டிரனுடைய ஹ்ருதயத்திலுள்ளதெல்லாம் தெரியும். அதனால், வித்வான்களிற்சிறந்த விதுரர், "இவன் பிரமதேவனாலேயே கெடுநினைவுள்ளவனாகவும் வஞ்சகஎண்ணமுள்ளவனாகவும் படைக்கப்பட்டிருக்கிறான்" என்றுநினைத்துத் துக்கமுற்றஉறவினரோடுகூட ஜனங்களுக்குத் துக்கத்தைக்காண்பித்துக்கொண்டு மனத்தில் பாண்டவர்கள் எவ்வளவுதூரம்போயிருப்பார்களென்று சிந்தையுற்றிருந்தார். பாண்டவர்களனைவரும் தமதுபுத்திரரென்றே நினைத்துக்கொண்டிருந்தார்.

பிறகு, பீஷ்மர், பாண்டுராஜன்புத்திரர்கள் தாயாருடன்கூட இறந்துபோயினரென்பதைக்கேட்டு மிகத்துயரமுற்றுக் கண்ணீர்விட்டுப் புலம்பினார். "ஆ! யுதிஷ்டிரா! ஆ! பீமா! ஆ! தனஞ்சயா! ஆ! இரட்டையரே! ஆ! குந்தியே! நீ புத்திரர்களுடன்கூட ஓரிரவில் ஸ்வர்க்கஞ்சென்றாயோ? தாயாருடன்கூட அந்தக்குமாரர்களனைவரும் அங்கே

* எல்லாம் அநித்யமென்பதையறிந்தவரென்பதும் நடந்தவிஷயந்தெரிந்தவரென்பதும் இருவகைக்கருத்து.

யே முடிந்தனர். அந்தப்பீமனும் தனஞ்சயனும் மனத்தில்வேக முண்டானபோது பலத்தினால் மந்தரமலையையும்உடைக்கத் திறமை யில்லாமற்போகமாட்டாரே! குந்தியும் பாண்டவர்களும் இறந்து போவார்களென்று நான் நினைக்கவில்லை. அவர்கள் மரணமடைந் திருப்பாராயின் அஃதுஎவ்வகையிலும்மாறானது. அந்தத்தர்மராஜன் *யுதிஷ்டிரனென்று பிராமணர்களால் சொல்லபபட்டவன். அந்தத் தனஞ்சயனும் பூமியிலுள்ள தேராளிகளுக்குள் மிகச்சிறந்தவனு வான். உறுதியானநியமமுள்ளவனும் தர்மதேவதையினால் கொடுக் கப்பட்டவனும் பொய்யாமொழியனும் மங்களகரமானலக்ஷணங்கள் அமைந்தவனும் பாண்டுபுத்திரனுமான யுதிஷ்டிரன் காலன்வசத்தில் எவ்வாறு அகப்பட்டான்? தன்னையே உவமையாகக்கொண்டு பிறர் விஷயத்தில் நடப்பவனெனவனே அந்தக்கௌரவனான யுதிஷ்டிரன், தாயாருடன்கூடவே காலன்வசத்தில் அகப்பட்டதெவ்வாறு? வெகு நாள் காப்பாற்றப்பட்டமரம் காய்க்குங்காலத்தில் காற்றின்வேகத்தி னால் முறிக்கப்பட்டாலெப்படியோ அப்படியே ராஜாவானயுதிஷ்டி ரன் ஆயினான். எவன், தனது தந்தையினுடைய யௌவராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ்செய்யப்பட்டபின், ஸத்தியத்தோடும் தர்மத்தோடுங் கூடிய நடக்கைகளினாலே தனக்கும் தன்பிதாவுக்கும்புகழைக்கொண்டு வந்தானோ அந்தப்பிராமணப்பிரியனும் ஆய்ந்துபார்ப்பவனுமாகிய யுதிஷ்டிரன், என்னுள்ளத்தில் துயரத்தைநிறுத்திவிட்டுக் காலத்து டன்கூட முழுகிப்போனான். சீ! தெய்வம் பயனற்றது. அவனு டையதாயாராகிய அந்தக்குந்தி வனவாஸத்தினால் துக்கத்தையடைந் திருந்தும்புத்திரர்களிடத்துள்ள மிக்கவிருப்பத்தினால் கணவனுடன் அனுமரணஞ்செய்யாமலிருந்தாள் நல்லகுலத்திற் பிறந்தவளாகிய எவள் பதியினாலுண்டானசந்தோஷத்தை ஸ்வல்பகாலந்தானடைந் தாளோ அந்தக்குந்தி தனதுவிருப்பம் நிறைவேறுமலே புத்திரர்க ளுடன் இப்போது எரிந்துபோனாள். பீமன் இறந்துபோனானென் பதைக்கேட்டு என்னுள்ளம் நம்பவில்லையே. இதைநினைக்கும்போது என்மனம் பலவகையில் துன்பப்படுகிறது. எனது ஹ்ருதயம் என் தேகத்தைவிட்டு வெடித்துப்போகிறது. பருத்ததோள்களும் அழ கியகைகளுமுடையவனும் மேருமலையின் சிகரத்துக்கொப்பானவ னும் யௌவனவயதிலிருப்பவனுமாகிய பீமன் இறந்துபோனானென் பதைக்கேட்டு என்உள்ளம் நம்பவில்லை. பெருங்கொடையாளியும், யுத்தவீரனும், வேகமானகைகளையுடையவனும், ஆயுதப்பிடிவிடாதவ

*யுத்தத்தில் அசையாதவன்.

னும், நிச்சயமுள்ளவனும், குறிதப்பாதவனும், ரதம்நடத்துவதில் நிபுணனும், தூரத்திலிருந்தடிப்பவனும், அச்சப்படாதவனும், மஹா பராக்ரமசாலியும், சிறந்த அஸ்திரபலமுள்ளவனும், மனம்சோராதவ னும், சிறந்த ஆண்பிள்ளையும், வில்லாளிகளனைவரிலும் சிறந்தவனும், கீழைத்தேசத்தாரையும் ஸௌவீரதேசத்தாரையும்தக்ஷிணதேசத்தா ரையும் ஜயித்தவனும், மூன்றுலோகங்களிலும் தன்பராக்கிரமத்தைக் கியாதிபெறச்செய்தசூரனும், நான்பிறந்தபோதே குந்திக்கும் வீர னை பாண்டுவுக்குப் பணத்துயரத்தைவிலக்கினவனும், இந்திரனுக் கொப்பானவனுமான அர்ஜுனன் காலனுக்குவசப்பட்டதெவ்வாறு? விருஷபத்தின் *திமில்போன்ற தோள்களையுடையவர்களும் ஸிம்மத் துக்கொப்பான பராக்கிரமமும் நடையுமுள்ளவர்களும் பகைவர்களை அடக்குகின்றவர்களுமாகிய இரட்டையர்கள் மரணத்தையடைந்த தெவ்வாறு? ஆ! என்மருமகளே! யதுபுத்ரியே! குழந்தைகள் என் னுள்ளத்தில் துன்பத்தைவைத்துவிட்டுக் கிழவனும் மிகத்துன்ப முற்றவனுமாகிய என்னைவிட்டுவிட்டு எங்கேபோயினர்? வாரணவ தத்திற்குப் பிரயாணம்போகும்போது வழியில் என்னசகுனங்களா யிருக்குமோ? குந்தியின் புத்ரர்காள்! உலகத்தில் இவ்வாறு அல்பாயு ஸுகளாவீர்களென்று நீங்கள் எவர்களால் சபிக்கப்பட்டீர்கள். குந்தீ! எனக்குக் குழந்தைகளைக்காண்பி. என்னை நாதனைவுடைய பாண்டவர்கள் எனக்கு நாதர்களும் எனக்குமேநத்ரங்களுமாயிருந்த னர். ஆ! என்பாண்டவர்களே! ஆ! என்குழந்தைகளே! ஆ! எனதுசிங்கக்குட்டிகளே! ஆ! எனதுஉயர்ந்தயானைகளே! ஆ! எனது ஆனந்தத்தைவிருத்திசெய்பவர்களே! உங்களால் விடப்பட்ட எனக்கு எல்லாலோகங்களும் இருள்மூடிப்போயின. பாலஸூர்யர் களைப்போன்ற ஒளியுள்ள குந்திபுத்திரர்களை நான் எப்போது காண் பேன். என்புத்திரர்களைப்போல் சந்தோஷமுண்டுபண்ணுகிறவர்க ளே! சிறந்தகைகளையுடைய உங்களைக்காணாமல் எனக்கு என்னவழி? நானெங்கேபோவேன்? என்குழந்தைகளை எவ்வாறுகாண்பேன்? ஆ! யுதிஷ்டிரா! ஆ! பீமா! ஆ! ஆ! பல்குனா! ஆ! இரட்டையரே! போகாதேயுங்கள்; திரும்புங்கள்; என்மேலுள்ள கோபத்தைவிடுங் கள்" என்றார். கண்ணீரும்ஜலமும் விட்டுக்கொண்டிருக்கும் அந்தபீஷ் மருடைய அந்த அழுகையைக்கேட்டு விதுரர் இடத்தையும் ஸமயத் தையும்பார்த்துச் சொல்லத்தொடங்கினார்.

"புருஷஸ்ரேஷ்டரே! நீர் வ்யஸனப்படாதேயும். மிகுந்ததைரிய

---

* எருத்தின் கழுத்திலுள்ள கொண்டை.

முள்ளவரே! துயரத்தை ஒழித்துவிடும். அவர்களுக்கு மரணமில்லை. காலத்திற்செய்யவேண்டியது என்னால்செய்யப்பட்டது. பாரதரே! அவர்களுக்காக இந்தஜலத்தை நீர்விடாதேயும்" என்ற இந்தச்சொல்லைக் கௌரவர்கள்காதில் படாமலிருக்கும்படி விதுரர் பீஷ்மருக்குச் சொன்னார். ஜனமேஜயராஜாவே! அந்தக்கூட்டத்தில் பீஷ்மர், விதுரர் அருகிற்சென்று கண்ணீர்மிகுதியால் தடைப்பட்டகுரலோடு அவரைப்பார்த்து மெல்லமெல்லப் பின்வருமாறு சொல்லலானார். "அன்பனே! மஹாயசைஸ்விகளான அந்தப்பாண்டுபுத்திரர்கள் எவ்வாறு ஜீவிக்கின்றனர்? பாண்டுவின்வர்க்கம் நமக்காக அழிக்கப்படாமலிருந்ததெவ்வாறு? என்னைத்தலைமையாகக்கொண்ட அந்தக்கௌரவர்கள், கருடனால் அமிர்தாயார்விடுவிக்கப்பட்டதுபோல், பெரும்பயத்திலிருந்து விடுவிக்கப்பட்டுக் கைதூக்கிவிடப்பட்டதெவ்வாறு?" என்றார். ஜனமேஜயரே! இவ்வாறுசொல்லப்பட்ட அந்தத் தர்மாத்மாவான விதுரர் கௌரவர்கள் கேட்காமலிருக்கும்படி ஆச்சரியமானசெய்கையையுடைய பீஷ்மருக்குச் சொல்லத்தொடங்கினார். "த்ருதராஷ்டிரன், சகுனி, ராஜாவாகிய துரியோதனன் இவர்களால் பாண்டுபுத்ரர்களை அழித்துவிடுவதற்காகப் புத்தியில் நிச்சயஞ்செய்யப்பட்டது. அப்போது நானும் அந்தப்பாவியான புரோசனனுடைய எண்ணத்தைத்தெரிந்துகொண்டு அவனைக்கொல்லக் கருதினவனாக அவர்களோடு ஒத்திருந்தேன். பிறகு, திருதராஷ்டிரபுத்திரனாகிய துரியோதனனுடைய கட்டளையினால் அரக்குமாளிகைக்குப்போய்க் குந்தியைப் புத்திரர்களுடன் அதில் கொளுத்துவதற்குப் புரோசனன் நியமிக்கப்பட்டிருந்தபோது, கனகனைவரவழைத்து அங்கே சுரங்கத்தையும் அதன்வாயிலையும் வெகுமறைவாகச்செய்வித்து, அந்தப்பாண்டுபுத்திரர்கள் குந்தியுடன்கூட அந்தக்காலத்தில் எரிவதற்குமுன்னமே என்னால் வெளிப்படுத்தப்பட்டனர். நீங்கள் வ்யஸனத்தில் மனத்தைச்செலுத்தவேண்டாம். அதன்பிறகு, நான் குந்தியைப் புத்ரர்களுடன்கூடக் கப்பலிலேற்றிவைத்துக் குந்திக்கும் அவள்புத்திரர்களுக்கும் அபயம்கொடுத்து அரக்குமாளிகையைக் கொளுத்தச்செய்தேன். ஆதலால், உங்களுக்குத் துயரம்வேண்டாம். பாண்டவர்கள் நீங்கியிருந்து விடுபட்டனர். அரசரே! வீரர்களான பாண்டவர்கள் தாயாருடன்கூட நான்செய்த அந்த உபாயத்தினால் மிகக்கொடிய அக்னிதகனத்தினின்றும் வெளிப்பட்டுப்போயினர். இந்த வ்யஸனம் நீங்கள் அடையவேண்டாம். பாண்டவர்கள் ஜீவித்தேயிருக்கின்றனர். காலம் திரும்பிவருகிறவரையில் மறைந்தே சஞ்சரிக்கப்

போகின்றனர். அந்தக்காலம்வந்தபிறகு, கிருஷ்ணபக்ஷம்முடிந்தபின் உதயமாகிய நிர்மலமான சந்திரனை உலகம்பார்ப்பதுபோல், யுதிஷ்டிரனைப் பூமியிலுள்ளமனிதர்கள் பார்ப்பார்கள். எவனுக்குத் தனஞ்சயனும் வெல்லமுடியாதபீமஸேனனும் மாத்ரியின்புத்ரர்களாகிய அந்த இரட்டையர்களும் ஸஹோதரர்களோ அவனுக்கு அழிவை நான் நினைக்கவில்லை" என்றார்.

பிறகு, பீஷ்மர் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சமடைந்து ஸந்தோஷத்துடன் சிறந்தபுத்தியுள்ள விதுரரைக் கொண்டாடி, "நல்லவேளை! நல்லவேளை!" என்றுசொல்லி, "அப்பனே! யுக்தியாகவும் தகுதியாகவும் சிறந்தகாரியம் உன்னால்செய்யப்பட்டிருக்கிறது. நாமும் துக்கத்திலிருந்து விடுவிக்கப்பட்டோம் பாண்டுவின்வர்க்கமும் அழிக்கப்படாமலிருக்கிறது" என்றுசொன்னார். அரசரே! இவ்வாறுசொல்லிவிட்டுக் கௌரவர்களோடும் நகரத்துஜனங்களோடும் சேர்ந்து பீஷ்மர் அனேகஜனங்கள் நெருங்கியிருக்கும் நகரத்தில் பிரவேசித்தார். பிறகு, அம்பிகாபுத்ரனை திருதராஷ்டிரன், பாண்டவர்கள் அழிந்துபோனதை உண்மையாகநினைத்து மந்திரிகளோடும் கர்ணனோடும் சகுனியோடும் புத்ரர்களோடுங்கூட மகிழ்ந்திருந்தான். வேந்தரே! வெல்லக்கூடாதபீஷ்மரும் மேன்மையானபுத்தியுள்ள விதுரருமாகிய அவ்விருவரும் அரக்குவீட்டுத்தீயிலிருந்து பாண்டவர் விடுபட்டதைநினைத்து மகிழ்ந்தனர். துரோணர் முதலானவர்களும் அந்தப்பாண்டவர்களுடைய ஸத்தியத்தினாலும் அடக்கத்தினாலும் குணங்களினாலும் ஒழுக்கத்தினாலும் தேசத்துஜனங்களுக்கு அவர்களிடமுள்ள அன்பினாலும் அவர்களுடையதர்மங்களாலும் அவர்கள் விடுபட்டிருப்பதாகவே நினைத்தனர். அவ்வாறே நகரத்துஜனங்களும் தேசத்துஜனங்களும், சூரத்தன்மையினாலும் தேககாந்தியினாலும் மகிமையினாலும் வடிவங்களினாலும் தேகபலத்தினாலும் மனோபலத்தினாலும் பாண்டவர்கள் சௌக்கியமாகத்தானிருப்பார்களென்று நினைத்தனர். மற்றச்சாதாரணஜனங்களும் அனேகமான ஸ்திரீகளும் ஸந்தேஹப்பட்டுக்கொண்டு, "ஜீவித்திருக்கிறார்களோ அப்படியன்றித் தஹிக்கப்பட்டார்களோ" என்று கூறினர்.

---

## நூற்றறுபத்துமூன்றாவது அத்தியாயம்.

## ஜதுக்ருஹபர்வம். (தொடர்ச்சி.)



(தாயாரையும் ஸஹோதரர்களையும் ஆலமரத்தினடியில் விட்டுவிட்டு நெடுந்தூரம்போய் ஜலங்கொண்டுவந்தபீமன், தரையில்தூங்கின அவர்களைக்கண்டு வ்யஸனத்தினால் புலம்பினது.)

அந்தப்பீமன் நடக்கும்போது தொடைகளின்வேகக்காற்றினால் அசைக்கப்பட்டகாட்டுமரங்கள் கிளைகளுடன்கூடப் பயத்தினால் நடுங்கினவைபோலாயின. அவன்கணைக்காற்காற்று ஆனி ஆடிமாசத்தில் காற்றடிப்பதுபோலடித்தது. மிகுந்தபலமுள்ளகாற்று வழியிலுள்ளகொடிகளையும்செடிகளையும் சாய்த்துவிட்டது. அந்தப்பீமஸேனன் அந்தமார்க்கத்தின்ஸமீபத்தில்முளைத்துப் பூத்தும்காய்த்துமிருக்கும் மரங்களையும் புதர்களையும் முறித்துக்கொண்டும், கோபமூட்டப்பட்ட மும்மதமும் பெருகுகின்ற பராக்கிரமமுள்ள அறுபதுவருஷத்திய உத்தமயானையைப்போலக்கோபித்து வனத்திலுள்ள பெருமரங்களை மிதித்துக்கொண்டும் முறித்துக்கொண்டும் சென்றான். கருடனுக்கும் காற்றுக்குமொப்பானவேகமுள்ள அந்தப்பீமஸேனன் செல்லுகின்றவேகத்தினால் பாண்டவர்களுக்கு மூர்ச்சையுண்டானது போலாயிற்று. தூரமாகத்தாண்டவேண்டிய ஆறுகுளங்களுள்ள இடத்தைக் கைகளாகிறதெப்பங்களினால் அடிக்கடிதாண்டித் திருதராஷ்டிரபுத்திரனிடமுள்ள பயத்தினால் வழியில் மறைவாகச்சென்றனர். ஆற்றங்கரைகளிலும் மேடுபள்ளங்களிலும், அந்தப்பீமன் மெல்லியவளும் புகழ்பெற்றவளுமாகிய தன் தாயாரைக் கஷ்டப்பட்டு முதுகிற் சுமந்தான். பரதஶ்ரேஷ்டரே! கிழங்குகளும் காய்களும் ஜலமும் குறைவானதும், குரூரமான பக்ஷிகளும் மிருகங்களுமுள்ளதும், பயங்கரமான ஒருவனப்பிரதேசத்தைச் சாயங்காலத்தில் அடைந்தான். பயங்கரமான மாலைக்காலம்வந்தது. குரூரமானபக்ஷிகளும் மிருகங்களும் சஞ்சரித்தன. அரசரே! அக்காலத்தில் திடீரென்றுஉண்டான காற்றுக்களினால் இலைகளும் காய்களும் உதிர்ந்தும், மிகுதியாக முறிக்கப்பட்டும் சாய்க்கப்பட்டும் பலமரங்களோடு பின்னிக்கொண்டிருக்கின்ற அனேகம் புதர்களாலும்,சிறுகிளைகளாலும்,மரங்களாலும் திசைகளெல்லாம் மறைக்கப்பட்டிருந்தன. அந்தப்பாண்டவர்கள் களைப்பினாலும் தாகத்தினாலும் மிகுந்தநித்திரையினாலும் பீடிக்கப்பட்டவர்களாகி அப்போது நடக்கச்சக்தியற்றவராயினர். அவர்க

ளனைவரும் ஸௌக்கியமில்லாத பெருங்காட்டில் உட்கார்ந்தனர். இரவிலேயே இருபத்துநான்கு யோசனை தூரம் விரைவாகச்சென்றனர். பிறகு, தாகத்தினால்வாடின குந்தி, "பஞ்சபாண்டவர்களின் நடுவிலிருக்கும் தாயாராகியநான் நாதனற்றவள்போல இந்தமஹாவனத்தில் தாகத்தினால் கஷ்டப்படுகிறேன். இனிமேல் ஓர் அடியிலிருந்து ஓர் அடிகூட நடக்க என்னால்முடியாது. இந்தமரத்தினடியிற் படுப்பேன். திருதராஷ்டிரபுத்திரர்கள் என்னைத்தூக்கிக்கொண்டுபோகட்டும். பீமா! என்சொல்லைக்கேள். கௌரவர்கள் உன்பாஹுபலத்திற்குமுன் நிற்கச்சக்தரல்லர். குந்தியின்புத்திரா! ஏன் அஞ்சுகிறாய்? இந்தப்பூமியில் என்பீமஸேனனைவிட வேறுமகாரதனில்லை. திருதராஷ்டிரபுத்திரனிடம் வீணாகப்பயந்துகொண்டு நான் இங்கே தூங்குவதை விரும்பாமலிருக்கிறாய்" என்றுசொன்னாள். அவள் பீமன் முதுகிலிருந்துகொண்டே துன்பப்பட்டமனத்தோடு வழியில் இவ்வாறு அழுதுகொண்டு இரவில் நித்திரையினால் பரவசமடைந்தாள். அந்தச்சொல்லைக்கேட்டுப் பீமஸேனனுடையமனம், தாயினிடத்துள்ள அன்பினாலும்இரக்கத்தினாலும் கொதிப்புற்றது. அவன் நடக்கவேதொடங்கினான். பிறகு, பீமன் பயங்கரமும் ஜனமில்லாததுமாகிய பெருங்காட்டிற்புகுந்து பரந்தநிழலுள்ளதும் ரமணீயமுமான ஓர் ஆலமரத்தைக் கண்டான். பரதவம்சத்தோனான பீமன் அவர்களெல்லாரையும் அங்கேவிட்டு, "நான் இங்கே ஜலத்தைத்தேடுகிறேன். அதுவரையில் இங்கேகளைப்பாறுங்கள். இந்தஸாரஸங்களென்னும் நீர்ப்பறவைகள் இனிமையாகக்கூவுகின்றன. இவ்விடத்தில் பெரிய நீர்நிலை இருக்கவேண்டுமென்று எனக்குத் தோற்றுகிறது" என்று சொன்னான்.

ஜனமேஜயரே! ஜ்யேஷ்டஸஹோதரரான யுதிஷ்டிரரால் 'செல்' என்றுவிடைகொடுக்கப்பெற்ற அந்தப்பீமன் ஸாரஸங்களென்னும் நீர்ப்பறவைகளிருக்குமிடம்சென்றான். அவன் தாமரைவனத்தினால் அலங்கரிக்கப்பட்ட ஒருபெருந்தடாகத்தைக்கண்டான். பரதஶ்ரேஷ்டரே! அதில் தீர்த்தபானஞ்செய்துஸ்நானமுஞ்செய்து, ஸஹோதரர்களிடம் அன்புள்ள அந்தப்பீமன் அந்தஸஹோதரர்களுக்காக ஜலம் எடுத்தான். பாரதரே! உத்தரீயத்தினால் ஜலத்தைக்கொண்டுவந்தான். அநேகம்தாமரைஇலைகளாலும் தனித்தனியே ஜலத்தை எடுத்துக்கொண்டுவந்தான். இரண்டுகுரோசங்களிலிருந்து விரைவாகத் தாயாரிடம்வந்து துயரத்தினாலும் களைப்பினாலும் மனத்தில்கஷ்டங்கொண்டு ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிட்டான். அரசரே! அந்தப்

பீமன் மிக்கபயங்கரமான இருண்டகாட்டில் மிகக்குளிர்ச்சியானமரத்தினடியில் தூங்கிக்கொண்டிருந்த தாயாரையும், அம்மரத்தில் எப்போதும்வஸிக்கும் பிரேதராக்ஷஸர்களின்பயந்தெரியாமல் தரையில் விரிக்கப்பட்ட கைகால்களையுடையவர்களும் நீண்டகுறட்டையோடு அண்ணாந்த வாய்களையுடையவர்களும் பெருஞ்சரீரங்களுள்ளவர்களும் தூக்கத்தினால் தங்கள்சக்திவிலகினவர்களும் ஐந்து இந்திரர்களைப்போல மஹாபலசாலிகளுமான ஸஹோதரர்களையுங்கண்டு மிகுந்த துயரத்தினால்பீடிக்கப்பட்டுப் புலம்பத்தொடங்கினான். "*மிகுந்த பாக்கியக்குறைவுள்ளநான் பூமியில் படுத்திருக்கும் ஸஹோதரர்களை இப்போதுபார்க்கிறேனே; இதைவிட அதிககஷ்டம் பார்க்கக்கூடியதென்னவிருக்கிறது? எவர்கள் முன்னே வாரணாவதநகரத்தில்உயர்ந்த சயனங்களில் நித்திரையையடையாமலிருந்தார்களோ அவர்கள் இப்போது தரையில்தூங்குகின்றார்களே! சத்துருக்களுடையகூட்டத்தை மிதிப்பவராகிய வஸுதேவருடையஸஹோதரியும், குந்திராஜன்புத்திரியும், எல்லாநல்லலக்ஷணங்களும் பொருந்தினவளும், விசித்ரவீரியனுடையமருமகளும், மஹாத்மாவானபாண்டுவின்மனைவியும், எங்கள் அன்னையும், தாமரைப்புஷ்பத்தினுள்ளிருக்கிற காய்போன்றநிறமுள்ளவளும், மிகமெல்லியவளும், மிகுந்தவிலைபெற்ற சயனத்தில் வழக்கப்பட்டவளுமாகிய இந்தக்குந்தி தனக்குத்தகாத இந்தத்தரையில் அவ்வாறேபடுத்திருக்கக்காண்கிறேனே! தர்மனிடமிருந்தும் இந்திரனிடமிருந்தும் வாயுவினிடமிருந்தும் எவள் இந்தப் புத்திரர்களைப்பெற்றாளோ அரண்மனையில்படுப்பவளாகிய அவள் இதோ தரையில் களைத்துத்தூங்குகிறாள். இப்போது இந்தப்புருஷஸிம்மங்கள் தரையிற் படுத்திருப்பதைப்பார்க்கிறேனே! இதைவிட வேறு அதிகதுக்கம் என்னால் காணக்கூடியதென்னவிருக்கிறது? தர்மந்தவறாதவராகிய எந்தராஜா திரிலோகாதிபத்தியத்திற்குத் தகுதியுள்ளவரோ அவர் இதோ களைப்புற்றுச் சாதாரணமனிதனைப்போலப் பூமியில்படுத்திருக்கிறார். இதென்ன! இருண்டமேகம்போலக்கறுத்தவனும் மனிதருள் நிகரற்றவனுமாகிய இந்த அர்ஜுனன் சாமான்யனைப்போலப்படுத்திருக்கிறானே! இதற்குமேலான துயரம் ஏது? ரூபத்தின்மேன்மையினால் தேவர்களில் அசுவினிதேவர்கள் எவ்வாறோ அவ்வாறாகிய இந்தநகுல ஸஹதேவர்கள் பிராகிருதமனிதரைப்போல இப்போதுபூமியில்உறங்குகின்றனர். எவனுக்கு விரோதிகளும் குலத்தைக்கெடுப்பவருமாகிய ஞாதிகளில்லாமலிருப்பரோ அவன் கிராமத்தில் தனித்துமுளைத்திரு

*இங்கு ஒருவரிவிடப்பட்டது.

க்கும் மரம்போல் இவ்வுலகத்தில் ஸுகமாகஜீவிப்பான். எந்தஒற்றை மரம் கிராமத்தில் ஒன்றாயிருந்ததோ அஃது, இலைகாய்கள் நிரம்பின தாகவும் ஞாதிகளில்லாததாகவும் வழிப்போக்கரால்பூஜிக்கப்பட்ட தாகவும் *சைத்யமென்றபெயர்பெற்றிருக்கிறது. எவர்களுக்குச்சூரர் களும் தர்மத்தைப்பற்றினவர்களுமாகிய அனேகதாயாதிகளிருக்கின் றனரோ அவர்களும் உலகத்தில் ஸுகமாகஜீவிக்கின்றனர்; தீங்கில் லாமலுமிருக்கின்றனர். பலவான்களும் ஸம்பத்துநிரம்பினவர்களும் மித்திரர்களையும் சுற்றத்தாரையும் மகிழ்விப்பவர்களுமான ஜனங்கள் காட்டிலுண்டான மரங்களைப்போல் ஒருவரையொருவர்சார்ந்துஜீவிக் கின்றனர். நாமோ, கெட்டபுத்திரனோடுகூடியவனும் கெட்டமன முள்ளவனும் ராஜ்யத்திலாசைவைத்தவனும் மூர்க்கனும் துர்மந்திரி களோடுசேர்ந்தவனும் கெட்டவனும் பாவச்செய்கையுள்ளவனும் தன் லாபம்ஒன்றிலேயே எண்ணம்வைத்தவனுமான த்ருதராஷ்டிரனால்ஓட் டப்பட்டோம். விதுரருடைய புத்தியின்சக்தியினால் எரிக்கப்படாம லிருந்தோம். அந்தத்தீயிலிருந்துவிடுபட்டு நாம் இந்தமரத்தையடைந் திருக்கிறோம்; எந்தத்திசைக்குச் செல்வோம். எல்லாவற்றிற்கும் மேலானகஷ்டத்தையடைந்தோம். கெட்டபுத்தியுள்ளவனே! சிற் றறிவாளனே! த்ருதராஷ்டிரன்மைந்தனே! எண்ணம்கூடிவந்தவனாக வாழ். உனக்குத் தெய்வத்தின் அனுக்கிரஹமிருப்பது நிச்சயம். அத னால், யுதிஷ்டிரர் உன்னைக்கொல்ல எனக்கு அனுமதிகொடாமலிருக் கிறார். மதிகெட்டவனே! அதனால் நீ ஜீவித்திருக்கிறாய். அடா! இப்போதே கோபத்தினால் ஆவேசங்கொண்டநான்சென்று, புத்திரர் கள், மந்திரிகள், கர்ணன், தம்பிகள், சகுனி இவர்களுடன்கூட உன்னை யமன்வீட்டுக்குஅனுப்பிவிடுவேன். பாவச்செயலுள்ளவனே! தர்மாத்மாவும் பாண்டவர்களில் ஸ்ரேஷ்டருமாயிருக்கிற ராஜாவான யுதிஷ்டிரர் கோபிக்கவில்லையே! நான் என்னசெய்யமுடியும்?" என்று புலம்பினான்.

இவ்வாறுசொல்லிச் சிறந்தகைகளையுடையபீமஸேனன், கோபத் தால் ஜ்வலிக்கின்றமனத்தோடு கையினால்கையைப்பிசைந்து பெரு மூச்சுவிட்டு மனத்தில் துயரத்துடன் சுவாலைதணிந்த அக்கினியைப் போலப் பின்னும் மனத்தளர்ச்சியுள்ளவனாகி, சாதாரணஜனங்களைப் போல அசைவற்றுத் தரையில்படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தசகோ தரர்களைப்பார்த்தான். "இந்தவனத்திற்குக் கொஞ்சதூரத்தில் நகர மிருப்பதாக அறிகிறேன். விழித்துக்கொண்டிருக்கவேண்டிய இடத்

* வீதியில்முளைத்தகுறிப்புள்ளமரம்; அஃது உத்தேசவிருக்ஷமென்னப்படும்.

தில் இவர்கள் தூங்குகின்றனர். ஐயோ! நான் மட்டும் விழித்திருக்கிறேன். இவர்கள் ச்ரமந்தீர்ந்து விழித்துக்கொண்டபிறகு ஜலத்தைப்பார்ப்பர்" என்று பீமன் நிச்சயஞ்செய்துகொண்டே தான்மட்டும் அப்போது கண்விழித்துக்கொண்டிருந்தான்.

ஜதுக்ருஹபர்வம் முற்றிற்று.

---

நூற்றறுபத்தநான்காவது அத்தியாயம்.

## ஹிடிம்பவதபர்வம்.

(ஹிடிம்பனால் பாண்டவர்களிடம் அனுப்பப்பட்ட ஹிடிம்பை பீமனைக் கண்டு அவன்மீதுமோகித்து அவனோடு ஸம்பாஷணைசெய்வது.)

அங்கே, அவர்கள் படுத்திருக்கும்போது, அந்தவனத்திற்குச் சமீபத்தில் ஓர் ஆச்சாமரத்திலேறியிருந்த கொடியவனும், மனிதர்களின்மாம்ஸத்தைத் தின்பவனும், மிகுந்தபலமும் பராக்ரமமுமுள்ளவனும், கார்காலத்து மேகம்போல இருண்டவனும், சிவந்தகண்களுடையவனும், அச்சப்படத்தக்க உருவமுள்ளவனும், கோரப்பற்களுடன் திறந்தவாயுள்ளவனும், பெரிய உருவமுள்ளவனும், பார்ப்பதற்குப் பயங்கரமாயிருப்பவனும், நிதம்பங்களும் வயிறும்தொங்குகிறவனும், சிவந்தமீசைகளும் தலைமயிர்களுமுள்ளவனும், பெரிய மரம்போன்ற கழுத்தையும் தோள்களையுமுடையவனும், முளைகளைப்போன்றகாதுகளுள்ளவனும், மிக்கபயத்தையுண்டுபண்ணுபவனுமாகிய ஹிடிம்பனென்னும்ராக்ஷஸன் மஹாரதர்களான அந்தப்பாண்டவர்களைத் தற்செயலாகப்பார்த்தான். விகாரமானரூபத்தையுடையவனும் சிவந்த கண்களையுடையவனும் பயங்கரமானவனும் கொடியபார்வையுடையவனும் பெரியதேகமுள்ளவனும் மிகுந்தபலமுள்ளவனுமாகிய அவன், பசியினால்பிடிக்கப்பட்டு மாம்ஸத்தைவிரும்பித் தற்செயலாக வாசனையைமோந்துபார்த்து விரல்களை மேல்தூக்கித் தலையைச்சொறிந்து கட்டையான தலைமயிர்களைத்தட்டிப் பெரியவாயுடன் கொட்டுவாய்விட்டு அடிக்கடிபார்த்து மனிதர்மாம்ஸத்தில் சந்தோஷமுற்று மனிதர்வாசனையை மோந்துபார்த்துத் தன்சகோதரியைநோக்கிப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினான்.

"வெகுகாலத்திற்குப்பின் இப்போதுதான் என்மனத்திற்கினிய உணவுகிடைத்திருக்கிறது. மோந்துபார்க்கும்போதே எனது நா விருப்பத்தினால் தண்ணீரூறி வாய்க்குவெளியில்வருகிறது. மிகக்கூர்மையான முனைகளையுடையவைகளும் படும்போதுதாங்கக்கூடாத

வைகளுமான எனது எட்டுக்கோரப்பற்களையும், அழகாயும் மாம்ஸ மயங்களாயுமிருக்கிற தேகங்களில் வெகுகாலத்திற்குப்பின் பதிப்பிக் கப்போகிறேன். மனிதர்களின் கழுத்தைப்பிடித்து, நரம்பைக்கடித்து, சுடுகையுள்ளதும் நுரையுள்ளதுமாகிய புதியரக்தத்தை மிகுதியாகக்குடிக்கப்போகிறேன்; செல்; யார்இவர்கள்? இந்தக்காட்டையடைந்து தூங்குகின்றனர்; அறி. மனிதர்நாற்றம் மிக்கவலிமையாக என்மூக்குக்குத் திருப்திசெய்விக்கிறது. இந்தமனிதரெல்லாரையும் கொன்று என்னிடம்கொண்டுவா. நம்தேசத்தில்தூங்குகின்ற இவர்களிடம் உனக்கு அச்சமில்லை. இந்தமனிதர்களுடைய மாம்ஸங்களை அறுத்தெடுத்து நாமிருவரும்சேர்ந்து இஷ்டப்படிதின்போம். என் சொல்லை நிறைவேறும்படிசெய். மனிதரின்மாம்ஸங்களை வேண்டிய அளவு உண்டு நாமிருவரும்சேர்ந்து பலவகையாகத்தாளம்போட்டுக் கூத்தாடுவோம்" என்றான். பெருங்காட்டில் இவ்வாறு ஹிடிம்பனால் கட்டளையிடப்பட்ட ஹிடிம்பையென்னும் ராக்ஷஸி, ஸஹோதரனது சொல்லைக்கேட்டு மரங்களைத் தாண்டித்தாண்டி விரைவாகப் பாண்டவர்களிடம்சென்றாள்; வனத்தில் பாண்டவர்கள்படுத்திருக்கும்இடத்திற்குச் சென்றாள். அவள் அவ்விடம்சென்று குந்தியுடன் தூங்குகிறபாண்டவர்களையும் விழித்துக்கொண்டிருக்கும் தோல்வியடையாத பீமஸேனனையும் கண்டாள். பீமனால்காக்கப்பட்டவர்களும் அழகினாலும் யௌவனவயஸினாலும் சோபிக்கின்றவர்களும் மிருதுசரீரமுள்ளவர்களும் தேகப்பயிற்சியினால் இளைத்திருப்பவர்களும் துக்கமுள்ளவர்களும் ஒருவர்க்கொருவர் ஜ்யேஷ்டகனிஷ்டர்களும் பகைவர்களை ஸம்ஹரிப்பவர்களுமாகிய பாண்டவர்களையும் பார்க்கஅழகான பீமஸேனனையும் கொடியவளாகிய அவ்வரக்கி பார்த்தாள். ஆச்சாமரத்தினடிபோல் வளர்ந்திருக்கின்றவனும் பூமிக்குள் அழகில் நிகரற்றவனுமாகிய பீமஸேனனைக்கண்டவுடன் அந்தஅரக்கி காமமுற்றாள். "கருநிறமும் நீண்டகைகளும் ஸிம்மம்போன்றதோள்களும் சங்குபோன்றகழுத்தும் தாமரைமலர்போன்றகண்களுமுடைய இந்தப் பெருந்தேஜஸுள்ளவன் எனக்குப்பர்த்தாவாகத் தகுதியுள்ளவன். கொடியதும் தகாததுமாகிய என்சகோதரன்சொல்லை நான் ஒருபோதும்செய்யேன். கணவனிடமுள்ள அன்பு எல்லாவற்றிலும் வலியது. சகோதரன்நேசம் அவ்வாறன்று. மேலும், இவர்களைக் கொல்வதனால் எனக்கும் என்ஸஹோதரனுக்கும் சற்றுநேரம் வயிறு நிரம்பியிருக்கும். கொல்லாமலிருந்தால் பலவருஷகாலம் நான் ஆனந்தமடைவேன்" என்று அவ்வரக்கி மனத்துக்குள் சிந்தித்தாள். அந்த

ஹிடிம்பை பெருங்கைகளையுடைய பீமனைப்பார்த்து இவ்வாறு நிச்சயஞ்செய்து ராக்ஷஸஉருவத்தைவிட்டு மானிடஉருவமெடுத்துக்கொண்டாள். நினைத்தருபம் எடுப்பவளான அந்தச்சிறந்தபெண் காமனால் மயலுற்று (தனக்கு) அழகை உண்டுபண்ணிக்கொண்டு மஹாத்மாவான பீமஸேனனிடம் சென்றாள். ஜாடைகளையும் கருத்துக்களையும் அறிந்தவளாகிய அவள் மெள்ளமெள்ள நகிட்டப்போனாள். உயர்ந்த ஆபரணங்களையணிந்துகொண்டு கொடிபோல்வளைந்துகொஞ்சங்கொஞ்சமாகச் சமீபத்திற்குவருகிறவளும் மகிழ்வுற்றவளும் மெல்லியவளும் பருத்தகொங்கைகளுள்ளவளும் சந்திரன்போன்ற முகமுள்ளவளும் தாமரைப்பூப்போன்ற கண்களையுடையவளும்கறுத்தும் சுருண்டுமிருக்கிறகூந்தலையுடையவளும் கறுத்தநிறமுள்ளவளும் வெண்மையான பற்களும் கோவைப்பழம்போன்றஇதழ்களுமுள்ளவளும் பார்ப்பதற்குஅழகாயிருப்பவளுமான அவளைப் பீமன்கண்டான்.

சிறந்தருபமுள்ளவளும் சிரிப்புடன்கூடிய மனத்தைக்கவருகிற அழகியகுணங்களோடுகூடியவளுமாகிய அவளைக்கண்டு பீமன் வியப்புற்றான். பிறகு, சிறந்தமுகமுள்ள அந்தப்பெண்ணரசி பீமன்ஸமீபஞ்சென்று பேசக்கூடியஸமயத்தில் அவனைப்பார்த்துப் பேசலுற்றாள். எல்லா ஆபரணங்களினாலும் அலங்கரிக்கப்பட்ட அந்தப்பெண் நாணத்தினால் தலைகுனிந்து புன்சிரிப்புடன் பின்வருமாறு பேசத்தொடங்கினாள். "புருஷஶ்ரேஷ்டரே! நீர்யார்? எங்கிருந்துவந்திருக்கிறீர்? இவ்விடத்தில்படுத்திருக்கின்ற இந்தத்தேவதாருபமான புருஷர்கள்யாவர்? மாசற்றவரே! பெரியஉருவமுள்ளவளும் நடுயௌவனத்திலிருப்பவளும்மெல்லியவளுமான இவள் இந்தவனத்தை அடைந்தும், தன்வீட்டிலிருப்பதுபோல அச்சமற்றுத்தூங்குகிறாள். இவள் உமக்கு என்னஉறவினள்? இது ராக்ஷஸர்கள்வாஸஞ்செய்யும் கடுமையானகாடென்று நீங்கள் அறியீர்களா? இதில்பாவசித்தமுள்ள ஹிடிம்பனென்னும் அரக்கன் வஸிக்கிறானே! தேவர்களைப்போன்றவரே! என்ஸஹோதரனான அந்தராக்ஷஸனால் உங்கள்மாம்ஸத்தைத் தின்னவிரும்பிக் கெட்டஎண்ணத்துடன் நான் அனுப்பப்பட்டிருக்கிறேன். அப்படிவந்தநான் தேவகுமாரனுக்கொப்பான ஒளியுள்ள உம்மைப்பார்த்தபிறகு வேறுகணவனைவிரும்பவில்லை. இதனை உண்மையாக உமக்குச்சொல்லுகிறேன். தர்மந்தெரிந்தவரே! இதைத்தெரிந்துகொண்டு என்னிடத்தில் நியாயமாகநடந்துகொள்ளும். மதனனால்பீடிக்கப்பட்ட மனமுள்ளவளாகிவந்திருக்கிற என்னை நீர் அங்கீகரிக்கக்கடவீர். சிறந்தகைகளுடையவரே! மனிதர்களைத்தின்பவனு

கியராக்ஷஸனிடமிருந்து உம்மைக்காப்பாற்றுவேன். நாமிருவரும் யாரும்போகக்கூடாதமலைகளில் வஸிப்போம். மாசற்றவரே! எனக்குக் கணவராக இரும். வீரரே! உம்மைவிரும்புகிறேன். உமக்குச்சுகம் உண்டாகட்டும். என்உயிரைப்போக்காதேயும். சத்துருக்களையடக்குகிறவரே! உம்மால் நான்விடப்பட்டேனானால் பிழைக்கமாட்டேன். நான் ஆகாசத்தில்ஸஞ்சரிப்பவளல்லவா? விரும்பினபடி ஸஞ்சரிப்பேன். என்னுடன்கூடப் பலவிடங்களில் (சென்று) ஒப்பில்லாத ஆனந்தத்தையடைவீராக" என்றாள்.

அதனைக்கேட்ட பீமன், "நான் பூஜிக்கத்தக்கவரும் எனக்கு முக்கியமான ஆசாரியருமாகிய இந்த என்ஜ்யேஷ்டஸகோதரர் விவாஹஞ்செய்துகொள்ளவில்லை ஆதலால், நான் எவ்வகையிலும் மூத்தவரைமிஞ்சி விவாஹஞ்செய்துகொள்வேனா? ராக்ஷஸியே! சக்தியுள்ளவன் எவன் தாயாரையும் ஜ்யேஷ்டஸஹோதரனையும் மற்ற இளைய தம்பிமார்களையும் இப்போது இந்தஇடத்தில் விட்டுவிடுவான்? என்னைப்போன்றமனிதன் எவன்தான், தூங்கிக்கொண்டிருக்கும் இந்த ஸஹோதரர்களையும் தாயையும் ராக்ஷஸர்களுக்கு இரையாகக்கொடுத்துவிட்டுக் காமுகனைப்போல் செல்வான்?" என்றுசொல்ல, ராக்ஷஸி, "வீரரே! உம்மொருவரைத் தாயாருடன்கூடத் தப்புவிப்பேன். இந்தச் சகோதரர்களைவிட்டுவிடும் நீர் என் இடுப்பில் ஏறிக்கொள்ளும்" என்றுசொன்னாள். பீமன், "ராக்ஷஸியே! என்ஸஹோதரர்களைவிட்டு நான் ஜீவிக்கவிரும்பவில்லை எனக்குப் பிரியமில்லாததைப் பேசுகிறாய். உன்விருப்பம்போலச்சென்று தனித்துச்செல்" என்றுசொன்னான். அதற்கு, ஹிடிம்பை, "உமது விருப்பம் எதுவோ அதைச்செய்வேன். வேண்டுமானால்; இவர்களெல்லாரையும் மனிதர்களைத்தின்பவனாகிய ராக்ஷஸனிடத்தினின்றும் விடுவிப்பேன். இவர்களை எழுப்பும்" என்று சொன்னாள். பீமஸேனன், "ராக்ஷஸியே! காட்டில் ஸுகமாகத்தூங்குகின்ற ஸஹோதரர்களையும் என்தாயாரையும் துராத்மாவான உன் ஸஹோதரனிடத்திற்பயந்து நான்எழுப்பேன். பயப்படுகிறவளே! அழகானகண்களையுடையவளே! ராக்ஷஸர்களும் மனிதர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் என்பராக்கிரமத்தைத் தாங்கவல்லவரல்லர். சென்றாலும்செல்; நின்றாலும்நில். பிரியமானவளே! அல்லது, எதனை விரும்புகிறாயோ அதனைச்செய். மெல்லியசரீரமுடையவளே? மனிதர்களைத்தின்பவனாகிய அந்தஉன்ஸஹோதரனை அனுப்பினாலும் அனுப்பு" என்று சொன்னான்.

---

## நூற்றறுபத்தைந்தாவது அத்தியாயம்.

## ஹிடிம்பவதபர்வம். (தொடர்ச்சி.)



(ஹிடிம்பைதிரும்பிவரத் தாமதித்ததனால் தானேவந்தஹிடிம்ப னுக்கும் பீமனுக்கும் யுத்தம்நடந்தது.)

அவள் போய் வெகுநேரமானதாகத் தெரிந்துகொண்டு, ராக்ஷஸர்க்கரசனான ஹிடிம்பன் அந்தமரத்திலிருந்து இறங்கிப் பாண்டவர்களிடம் விரைவாகவந்தான். சிவந்தகண்களும் நீண்டகைகளும் நெறித்ததலைமயிர்களும் பெரியவாயும் மேகமண்டலம்போன்ற சரீரமும் கூர்மையானகோரப்பற்களுமுடையவனும் பயங்கரனும் சுழலுகின்ற கண்களையுடையவனுமாகிய ஹிடிம்பன், கோபித்து உள்ளங்கையை உள்ளங்கையினால் அறைந்து, அடிக்கடி கைகளையுதறிப் பற்களைப்பற்களாற்கடித்து, 'எந்தஅறிவுகெட்டவன் புசிக்கவிரும்புகின்ற எனக்கு இப்போது இடையூறுசெய்கிறான்? ஹிடிம்பையும் பயப்படவில்லை; அனுப்பப்பட்டவள் ஏன்வரவில்லை?' என்றுசொன்னான். அவ்வாறு விகாரமானபார்வையுடன் ஓடிவருகின்ற அவனைக்கண்டதும், ஹிடிம்பை பயந்து பீமஸேனனை நோக்கிப் பின்வருமாறு சொல்லத் தொடங்கினாள்.

'துஷ்டஸ்வபாவமுள்ள ராக்ஷஸன் கோபத்துடன் இதோவருகிறான். ஆதலால், நான் எதைச்சொல்லுகிறேனோ அதைச் ஸகோதரர்களுடன்கூட அப்படியேசெய். வீரனே! நான் நினைத்தபடி போகிறவள்; ராக்ஷஸபலமுள்ளவள். இந்த என் இடுப்பில் ஏறு. உன்னை ஆகாசமார்க்கமாகக் கொண்டுபோவேன். பகைவரைவருத்துகிறவனே! தூங்குகின்ற இந்தச்ஸகோதரர்களையும் தாயாரையும் எழுப்பு. உங்களெல்லாரையும் எடுத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாகப்போவேன்' என்றாள். பீமன், 'பெரியனவும் அழகியனவுமாகிய நிதம்பங்களையுடையவளே! நீ அஞ்சாதே. நானிருக்கையில் இவன்ஒன்றும் செய்யான். அழகியஇடையுள்ளவளே! நீபார்க்கும்போதே இவனை நான்கொல்லுவேன். பயந்தவளே! இந்தராக்ஷஸாதமன் யுத்தத்தில் எனதுசெய்கையைத்தாங்கி எதிர்நிற்கமாட்டான். இவனன்றியும் எல்லாராக்ஷஸர்களும்கூட எதிர்நிற்கமாட்டார்கள். யானைத்துதிக்கைகளுக்குழப்பான மிகவும் திரண்டுருண்ட இந்தஎன் இரண்டுகைகளையும், கதவுக்குறுக்குமரம்போன்றஇந்தஎன்தொடைகளையும், திடமும் பெரிதுமான என்மார்பையும் பார். அழகானவளே! இந்திரனுடைய

பாரக்கிரமத்தைப்போன்ற என்னுடையபராக்கிரமத்தை நீயே இப்போது காணப்போகின்ருய் பெரிய நிதம்பங்களையுடையவளே! என்னை மனிதனுகநினைத்து இப்போது குறைவாகப்பேசாதே' என்று சொல்ல, ஹிடிம்பை, 'புருஷஸிம்மமே! தேவதையைப்போல் உருவமுள்ள உம்மைநான் குறைவாகப்பேசவில்லை. அந்தராக்ஷஸனுடைய வன்மையை மனிதர்களிடத்திலேநான் நான்கண்டிருக்கிறேன்' என்று சொன்னுள்.

ஜனமேஜயரே! அவ்வாறு ஸம்பாஷணை செய்துகொண்டிருக்கும் அந்தப்பீமஸேனனுடைய அந்தச்சொற்களைக்கேட்டும் அந்தஹிடிம்பையினுடைய மனுஷ்யரூபத்தைக்கண்டும் மனிதனைத்தின்பவனுகிய ஹிடிம்பனென்னும்ராக்ஷஸன் கோபித்தான். புஷ்பமாலைகளால் நிரப்பப்பட்டகூந்தலுடையவளும், பூர்ணசந்திரனைப்போன்ற முகமுள்ளவளும், அழகியபுருவங்களும் மூக்கும் கண்களும் மயிர்நுனிகளுமுடையவளும், மெல்லியநகங்களும் தோலுமுள்ளவளும், ஸர்வாபரணங்களையும்பூட்டிக்கொண்டவளும், மிக்கஇலேசான வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டவளும், அவ்வாறு அழகான மனிதப்பெண்ணுருவத்தை எடுத்துக்கொண்டவளுமான அவளைப் புருஷனை விரும்புகிறவளாகநினைத்து ராக்ஷஸன் கோபித்தான். கௌரவஶ்ரேஷ்டரே! பிறகு, சகோதரியின்மீது கோபமுற்றராக்ஷஸன் பெரியகண்களைநெறித்து அவளை நோக்கி, 'ஹிடிம்பையே! எந்தமதிகெட்டவன், புசிக்கவிரும்புகின்ற எனக்குத் தடைசெய்கிறுன்? காமமோகம் கொண்டு என்கோபத்திற்கு நீபயப்படாமலிருக்கிருய். என்ன? கெட்டவளே! புருஷன்மேல் ஆசையுள்ளவளே! எனக்குவேண்டாததைச் செய்கிறவளே! நமதுமுன்னேர்களாகிய ராக்ஷஸராஜர்களனைவர்க்கும் இகழ்ச்சியைச்செய்கிறவளே! நீ கெட்டாய். எவர்களையடைந்து எனக்கு மிகப்பெரிய அனிஷ்டத்தைச்செய்தாயோ அப்படிப்பட்ட இவர்களனைவரையும் உன்னையுங்கூட நான் இப்போதே கொல்லப்போகிறேன்' என்றுசொன்னுன். இவ்வாறு ஹிடிம்பையைப் பார்த்துச்சொல்லி, சிவந்தகண்களையுடைய அந்த ஹிடிம்பன் பற்களால் பற்களைக்கடித்துக்கொண்டு பாண்டவர்களைக்கொல்வதற்காக ஓடிவந்தான். பகைவர்களானவீரர்களை வதைசெய்பவனுகிய பீமஸேனன் ஜனமில்லாதகாட்டில் இவ்வாறுகர்ச்சனைசெய்கின்ற ஹிடிம்பனைப்பார்த்துத் தன்ஸஹோதரர்களும் தாயாரும் விழித்துக்கொள்ளாமல் காத்திருந்தான். யுத்தஞ்செய்கிறவர்களிற்சிறந்தவனும் மிகுந்தபராக்கிரமசாலியுமாகிய பீமஸேனன் அவன்வரும்போதேபார்த்து

அவனைப்பயமுறுத்தி, 'நில்; நில்' என்று சொன்னான். ஸஹோதரியின்மேல் கோபித்த அந்த ராக்ஷஸனைப்பார்த்துப் பீமஸேனன் சிரித்துக்கொண்டு பின்வருமாறு சொல்லலானான்.

'ஹிடிம்பா! ஸுகமாகத்தூங்குகின்ற இவர்களை எழுப்புவதனால் உனக்கு ஆவதென்ன? புத்திகெட்டவனே! மனிதரைத்தின்பவனே! நீ பலத்தினால் என்னிடம் வா; என்னையே அடிக்கவருவாய். ஸ்திரீயைக்கொல்வது உனக்குத்தகாது. அதிலும், அவள் உனக்குத் தீங்குசெய்யாமல் வேறொருவன் தீங்குசெய்திருக்கையில் அவளைக்கொல்வது தகாது. இப்போது இந்தச்சிறுமி தன்புத்திபூர்வகமாக என்மேல் அன்புவைக்கவில்லை. சரீரத்துக்குள் ஸஞ்சரிப்பவனாகிய அனங்கனாலல்லவோ இவள் ஏவப்பட்டிருக்கிறாள். கெட்ட நடக்கையுள்ளவனே! ராக்ஷஸர்களுடைய புகழைக்கெடுப்பவனே! உன் கட்டளையினாலேயே வந்த இங்குப்பயந்தவளாகிய உன் ஸஹோதரி இப்போது என் ரூபத்தைப்பார்த்து என்மேல் ஆசைப்படுகிறாள். உன்னிடத்தில் இவள் அபராதப்படவில்லையே? மன்மதனாற் செய்யப்பட்ட குற்றத்திற்காக நீ இவளை இகழத்தகாது. துஷ்டஸ்வபாவமுள்ளவனே! நானிருக்கையில் நீ பெண்வதைசெய்யத்தகாது. மனிதரைத் தின்பவனே! நீயொருவன் என் ஒருவனோடு சண்டைக்குவா. நான் ஒருவனாக உன்னை இப்போதே யமன் வீட்டுக்கனுப்புவேன். ராக்ஷஸனே! இப்போது என்பலத்தால் பிடிக்கப்பட்ட உன் தலை மிகுந்த பலமுள்ள யானையின் காலால்மிதிக்கப்பட்டதுபோல் பிளந்துபோகட்டும். இப்போது யுத்தத்தில் என்னாற்கொல்லப்பட்ட உன் உறுப்புக்களைக் கழுகுகளும் பருந்துகளும் நரிகளும் மகிழ்ந்து தரையில் இழுக்கட்டும். மனிதர்களைப்புசிக்கின்ற உன்னால் முன்னர் எப்போதும் கெடுக்கப்பட்டிருந்த இவ்வனத்தை நான் இப்போதுஒருநொடியில் ராக்ஷஸர் அற்றதாகச்செய்வேன். ராக்ஷஸனே! இப்போது உன் ஸஹோதரி, மலையைப்போன்றஉன்னை ஸிம்மம் மஹாகஜத்தை இழுப்பதுபோலப் பலமுறை நான் இழுப்பதைப் பார்க்கப்போகிறாள். ராக்ஷஸர்களில் பாவியே! நீ என்னாற் கொல்லப்பட்டபின் வனத்தில்ஸஞ்சரிக்கும் மனிதர்கள் இந்த வனத்தில் உபத்திரவமில்லாமல் ஸஞ்சரிப்பார்கள்' என்றுசொல்ல, ஹிடிம்பன், 'மானிடனே! உன்னுடைய வீண் இரைச்சலாலும் தற்புகழ்ச்சியினாலும் என்னபயன்? இதையெல்லாம் செய்கையாற்செய்தபின் புகழ்ந்துகொள்வாயாக. தாமதம் செய்யாதே. உன்னைப்பலமுள்ளவனாகவும் பராக்கிரமமுள்ளவனாகவும் நினைக்கிறாயல்லவா? இப்போது என்னுடன் எதிர்த்தபிறகு, நீ அதிக

பலமுள்ளவனுயிருப்பதை அறியப்போகிறாய். நான் இப்போது இவர்களைக்கொல்லப்போகிறதில்லை. இவர்கள் ஸுகமாகத்தூங்கட்டும். கெட்டபுத்தியுள்ளவனே! இந்த நான் அப்பிரியமாகப்பேசுகின்ற உன்னைத்தான் இப்போது கொல்லுகிறேன். உன் சரீரத்தினின்றுவரும் இரத்தத்தைக்குடித்துவிட்டு அதன்பிறகு இவர்களையும்கொல்வேன். எனக்குப்பிரியமில்லாததைச்செய்த இவளையும் அதன்பிறகு கொல்வேன்' என்று சொன்னான்.

இவ்வாறுசொல்லி, பிறகு, ராக்ஷஸன், கோபத்துடன் கையை ஓங்கிக்கொண்டு, எதிரிகளையடக்குகிறவனாகிய பீமஸேனனை எதிர்த்தோடினான். பயப்படத்தக்க பராக்ரமமுள்ள பீமன், எதிர்த்து ஓடிவரும் அவனால் வேகமாக ஓங்கப்பட்டகையைச் சிரித்துக்கொண்டே துரிதமாகப் பிடித்தான். பீமன் அவனைப் பலாத்காரமாகப்பிடித்து, துள்ளுகின்ற அவனை ஸிம்மம் அற்பமிருகத்தையிழுப்பதுபோல்எட்டுவிற்கிடைத்தூரம் இழுத்தான். பாண்டவனால் பலாத்காரமாகப்பிடிக்கப்பட்ட அவ்வரக்கன் உடனே கோபித்துப் பீமஸேனனைக்கட்டிக்கொண்டு பயங்கரமான சப்தத்தைச்செய்தான். மிகுந்தபலமுள்ள பீமன், ஸுகமாகத்தூங்குகின்ற தன் ஸஹோதரர்களுக்குச் சப்தம் உண்டாக்கக்கூடாதென்று நினைத்து மறுபடியும் அவனைப் பலாத்காரமாக இழுத்தான். அந்த ராக்ஷஸனைக் கையிற்பிடித்துக்கொண்டு கருடன் ஸர்ப்பத்தை மூக்கினால் வாயில்பிடித்துக்கொண்டு போவதுபோல் வெகுதூரம் வேறிடத்திற்குக் கொண்டுபோனான். அந்த ஹிடிம்பனும் பீமஸேனனுமாகிய இருவரும் பலத்தினால் ஒருவரையொருவர் பிடித்து இழுத்தனர்; சிறந்த பராக்கிரமத்தைவெளியிட்டனர். கோபங்கொண்ட இரண்டு மதம்பிடித்த அறுபதுவருஷத்து யானைகளைப்போல் அவர்கள் அப்போது மரங்களைமுறித்தனர். கொடிகளையிழுத்தனர். வேகமும் பலமுமுள்ள அவ்விருவரும் தொடைகளின்வேகக்காற்றினால்மரங்களைப்பெயர்த்தும்தொடைகளினால்கொடிப்பந்தல்களையெல்லாம் அறுத்தும்சப்தங்களினால்எங்குமுள்ளவிலங்குகளையும் பறவைகளையும் பயப்படுத்தியும் பலத்தினால் கர்வித்து ஒருவரையொருவர்வதஞ்செய்யக்கருதினவர்களாயிருந்தனர். அப்போது பீமனுக்கும் ராக்ஷஸனுக்கும், முன்னே தேவாஸுரயுத்தத்தில் வ்ருத்ராஸுரனுக்கும் இந்திரனுக்கும் நடந்ததுபோல், கொடியசண்டை நடந்தது. பெருங்கிளைகளுள்ள மரங்களை முறித்துக் கோபத்தினால் அடித்துக்கொண்டனர். ஆச்சாமரங்களையும் பனைமரங்களையும் பச்சிலைமரங்களையும் மாமரங்களையும்ஆலமரங்களையும்மருதமரங்களையும்

தான்றிமரங்களையும் *ந்யக்ரோதமரங்களையும் புளியமரங்களையும்பே ரீச்சமரங்களையும் பலாமரங்களையும் இன்னும் எல்லா மஹாவிருக்ஷங் களையும் பிடுங்கியும், கற்களையும் முட்களையும் எடுத்தும், ஒருவர்மேல் ஒருவர் கோபத்தினால் யுத்தத்தில் அடித்தனர்; மரங்கள் நிறைந்த அவ் வனமெல்லாம், மரங்களில்லாமற்போனபோது, கற்களையும் புதர்களை யும் முட்செடிகளையும் மலைகளின் சிகரங்களையும் ஆகாயத்தையளாவு கின்றமலைகளையும் கற்குவியல்களையும் பாறைகளையும் பெயர்த்தெடுத் துப் பகையுடன் ஒருவரையொருவர் ஜயிக்கவிரும்பி யுத்தத்தில்மேலே எறிந்தனர். அவ்வனத்தைச்சுற்றி ஐந்துயோசனைதூரம் கொடிகள் புதர்கள் கற்களில்லாமலும் மிருகங்களில்லாமலும் முழுவதுஞ்செய் தனர். ராஜஶ்ரேஷ்டரே! அந்தப்பிரமராக்ஷஸர்களுடைய யுத்தத்தில் அந்த அழிவில்லாதவனம் சற்றுநேரத்தில் ஆமைமுதுகுபோல் தூலக்க மாக ஆகிவிட்டது. தொடைகளையும் கைகளையும்வருத்தி ஒருவரை யொருவர் இழுத்தும், மேலேதூக்கியும், கீழே இழுத்தும், பின்னால் இழுத்தும், வாய்ப்பேச்சில்லாமலே ஒருவர்க்கொருவர் கர்ச்சனைசெய்து கொண்டும், ஒருவரையொருவர் கட்டியிழுத்துக்கொண்டும், கற்களை யொன்றோடொன்றுமோதுவதுபோன்றஅடிகளினால்ஒருவரையொரு வர் அடித்தனர். யுத்தத்திலுள்ள ஆவேசத்தினால், 'பூ! பூ!' என்ற சப்தம்வெளிப்பட்ட பயங்கரமான கைச்சண்டை, பலிசக்ரவர்த்திக் கும்இந்திரனுக்கும்நடந்ததுபோல்நடந்தது. அவர்களுடைய பெருஞ் சப்தத்தினால் விழித்துக்கொண்ட அந்தப்புருஷஶ்ரேஷ்டர்களாகிய பாண்டவர்களும் அவர்கள் தாயாரானகுந்தியும் முன்னே நின்ற ஹிடிம்பையைக் கண்டனர்.

---

## நூற்றறுபத்தாறுவது அத்தியாயம்.

## ஹிடிம்பவதபர்வம். (தொடர்ச்சி.)

(பிறகு குந்தியும் அவள்புத்ரர்களும் கண்விழித்துக்கொண்டு ஹிடிம்ப னோடு பீமன்யுத்தஞ்செய்வதை ஹிடிம்பைமுகமாக்தெரிந்து, அவ்விடம்சென்றபோது ஹிடிம்பனைப் பீமன் கொன்றது.)

அந்தப்புருஷஶ்ரேஷ்டர்கள் குந்தியுடன்கூடக் கண்விழித்துக் கொண்டு மானிடர்க்கரிதான ஹிடிம்பையின் அழகைக்கண்டு வியப் புற்றவராயினர். பிறகு, குந்தி, அவளுடைய மிகுதியான அழகைக்

---

* ஆலில் ஒருவகை.

கண்டு திகைத்து நயமாகவும் மெல்லவும் பின்வருமாறு இனியசொற்களைச் சொல்லத்தொடங்கினாள்.

'தெய்வப்பெண்ணைப்போன்றவளே! பெண்ணரசே! நீ யாருடையவள்? நீ யாவள்? என்னகாரியமாகவந்தாய்? எங்கிருந்து வருகிறாய்? நீ இந்தவனத்திற்கே தேவதையா? அல்லது அப்ஸரஸா? எதற்காக இங்கே நிற்கிறாய்? அதையெல்லாம் எனக்குச்சொல்' என்றாள். அதற்கு ஹிடிம்பை, 'இதோ நீ பார்க்கின்ற இருண்டமேகத்துக்கொப்பான இந்தப்பெரியவனம் ஹிடிம்பனென்னும் ராக்ஷஸனுக்கும் எனக்கும் இருப்பிடம். அம்மா! பெண்களிற்சிறந்தவளே! என்னை அந்த ராக்ஷஸராஜனுடைய உடன்பிறந்தவளென்றும் உன்னையும் உன்புத்திரர்களையும் கொல்லவிரும்புகின்ற அவனால் அனுப்பப்பட்டவளென்றும் அறி. கொடிய எண்ணமுள்ள அவனுடைய சொல்லினாலேதான் நான் இங்கேவந்தேன். மெருகிட்டபொன்போன்ற ஒளியுள்ளவனும் மிகுந்த பலசாலியுமான உன்மகனைக் கண்டேன். மேலானவளே! அதன்பின், எல்லாப்பிராணிகளின் உள்ளங்களிலும் ஸஞ்சரிக்கும் மன்மதனால் உன்புத்திரனைக்குறித்து ஏவப்பட்டு அவன் வசப்பட்டிருக்கிறேன். அதனால், மஹாபலசாலியான உன்புத்திரன் என்கணவனாக என்னால் வரிக்கப்பட்டான். அவனை இவ்விடம்விட்டுக்கொண்டுபோவதற்கும் ஆரம்பித்தேன். ஆனால், என்னால்முடியவில்லை. பிறகு, நான் தாமதிப்பதைக்கண்டு அந்தராக்ஷஸன் தானே இந்த உன்புத்திரர்களனைவரையும் கொல்வதற்குவந்தான். புத்திசாலியும் மஹாத்மாவும் எனது நேசனுமாகிய உன்புதல்வனால் அவன் பலாத்காரமாக இங்கிருந்து கசக்கிக் கொண்டுபோகப்பட்டான். இவ்வாறு யுத்தத்தில் பராக்கிரமத்தைக் காண்பிக்கின்றவர்களும் மிகுந்தவேகமுள்ளவர்களும் ஒருவரையொருவர் இழுப்பவர்களும் கர்ச்சிப்பவர்களுமான இந்த நரராக்ஷஸர்களைப்பார்' என்றுசொன்னாள்.

அவள்சொல்லைக்கேட்டதும், வீரர்களாகிய யுதிஷ்டிரரும் அர்ஜுனனும் நகுலனும் ஸஹதேவனும் எழுந்தனர் அவர்கள். ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு இழுக்கிறவரும் ஜயத்தை விரும்புகிறவரும் இரண்டுஸிம்மங்களைப்போல் மிகுந்த வலிமையுள்ளவருமாகிய அவ்விருவரையும் கண்டார்கள். அப்போது, ஒருவரையொருவர்கட்டிக்கொண்டு பலமுறை இழுத்துக் காட்டுத்தீயின் புகைக்கொப்பான பூமியின் தூளியைக் கிளப்பினர். தரையின்தூசியினால் மூடப்பட்டவர்களும் மலைபோன்றவர்களுமாகிய அவர்கள் பனியினால் மூடப்பட்ட இரண்டு குன்றுகளைப்போல் காணப்பட்டனர். அப்போது ராக்ஷஸ

னால் பீமன் பிடிக்கப்படுவதைக்கண்டு அர்ஜுனன் மெல்ல நகைத்துக் கொண்டு, 'பீமா! சிறந்தகைகளுள்ளவனே! அஞ்சாதே. ஸ்ரமத்தினால் களைத்துப்போன நாங்கள், பயங்கரமான உருவமுள்ள ராக்ஷஸனோடு நீ எதிர்த்ததை அறியாமற்போனோம். குந்திபுத்ரனே! உனக்கு உதவிசெய்வதற்கு நானிருக்கிறேன். ராக்ஷஸனைத் தள்ளிவிடுவேன். நகுலனும் ஸஹதேவனும் தாயாரைக்காப்பாற்றுவர்' என்று சொல்ல, பீமஸேனன், 'சும்மா பார்த்துக்கொண்டிரு நீ அவசரப்படவேண்டாம் என்கைக்குளகப்பட்ட இவன் மறுபடி ஜீவிப்பது எக்காலமுமில்லை. 'பீமஸேனன்கைக்குளகப்பட்ட ராக்ஷஸன் இறந்து போகாமல் அர்ஜுனன்பராக்கிரமத்தினால் இறந்தான்' என்றசொல் வாத்தகாது. அர்ஜுனா! இந்தராக்ஷஸன் நம்மை ஒருபோதும் கொல்லமுடியாது. உயிருடன் இவனைவிட மாட்டேன். பரதஸ்ரேஷ்டனே! பயப்படாதே' என்றுசொல்ல, அர்ஜுனன், 'பீமனே! கொடிய ராக்ஷஸனோடு இரவின் முன்பாகத்திலேயே சேர்ந்திருக்கிறாய். ராத்திரி முடிந்தது; இன்னமும் பெருஞ்சண்டைமுடிவாகவில்லை. பீமனே! இந்தப் பாவியானராக்ஷஸன் வெகுநேரம்ஜீவித்திருப்பானேன்? சத்துருக்களையழிப்பவனே! போகவேண்டியதாயிருக்கையில் இங்கே அதிகநேரம் நிற்கமுடியாது. கிழக்குச்சிவக்கப்போகிறது. காலைச் சந்தி வரப்போகிறது. ருத்திரருடையகாலமாகிய ஸந்தியாகாலத்தில் ராக்ஷஸர்கள் இன்னும் அதிகபலவான்களாவார்கள். பீமனே! துரிதப்படு; விளையாடாதே. பயங்கரமானராக்ஷஸனைக் கொல்; மாயையை மிகுதியாகச்செய்வான். கைகளின்வலிமையை உபயோகப்படுத்து. உன்னுடையமஹிமை உனக்குத்தெரியும். முன்னே மிகுந்தபலமுள்ள விருத்திராஸுரனை இந்திரன்கொன்றதுபோல் மனிதர்களுடைய நன்மைக்காக ராக்ஷஸனைக்கொல். அவ்வாறன்றி யுத்தத்தில் இந்தராக்ஷஸனை நீ கஷ்டமாகநினைக்கிறாயாயின், உனக்கு நான் உதவி செய்கிறேன். விரைவாகமட்டும் இவன்கொல்லப்படவேண்டும். விருகோதரனே! அல்லது நானே இவனைக்கொன்றுவிடுவேன். வேலை செய்து களைப்புற்றநீ இப்போது நிற்பதுநலம்' என்று சொன்னான். அர்ஜுனனால் இவ்வாறு சொல்லப்பட்ட பீமன் கோபத்தினால் ஜ்வலிப்பவன்போலாகி, ப்ரளயகாலத்திலுள்ள வாயுவைப்போன்ற பலத்தை எடுத்துக்கொண்டான். பிறகு, பீமன் கோபங்கொண்டு மேகம்போன்ற அவ்வரக்கனுடைய தேகத்தைத்தூக்கி வேகமாக நூறுமுறை சுழற்றினான். சிறந்தகைகளையுடைய பீமஸேனன் கோபித்து ராக்ஷஸனுடையசரீரத்தைச் சுழற்றிக்கொண்டும் அடிக்கடி கர்ச்

சித்துக்கொண்டும் பின்வருமாறு சொல்லவும்சொன்னான். 'நீ மனிதர்களுடையமாம்ஸங்களினால் வீணாகப்பருத்திருக்கிறாய்; வீணாக வளர்ந்திருக்கிறாய்; வீண்எண்ணமுள்ளவன்; ஆதலால், நீ * வீண் மரணத்துக்குத் தகுதியுள்ளவன். இப்போது சும்மாஇரு இந்த வனத்தை உபத்திரவமான சத்துருவில்லாமல் க்ஷேமமாகச்செய்துவிடுவேன். ராக்ஷஸா! மறுபடியும் மனிதரைக்கொன்று தின்னமாட்டாய்' என்றுசொல்லி, அவனைத் தரையில்தேய்த்துக் கைகளினால்கசக்கி ஆட்டைக்கொல்வதுபோலச் சீக்கிரமாகக்கொன்றான். அவன் பீமனால் கொல்லப்படும்போது ஜலத்தினால்நனைக்கப்பட்ட பேரிகையைப்போல் அவ்வனத்தையெல்லாம் நிரப்பிக்கொண்டு பேரிரைச்சல் இரைந்தான் பலசாலியான பீமன் அவனைக் கைகளினால் அமுக்கியெடுத்து அவனுடைய அந்தத்தலையைத்திருகிக் கழுத்துடன் அதையெடுத்துவிட்டான். அவன் தலையைப்பெயர்த்தபிறகு அதைக் கழுத்துடன் மேலேஎறிந்தான். பீமஸேனனால்எறியப்பட்ட அந்தராக்ஷஸனுடைய தலையானது காதுகளும் கண்களும்போனதும் நாவில்லாததும் பற்களில்லாததும் ரக்தத்தினால்நனைக்கபட்டதுமாகக் காணப்பட்டது. அங்கே ராக்ஷஸன் கைகளைநீட்டியிழுக்கப்பட்டும் மாம்ஸமும் தோலும் உட்புறங்களும் கிழிக்கப்பட்டும் வஜ்ராயுதத்தினால் அடிபட்டவன்போலத் தலையிலாத உடலாகஇருந்தான். ஹிடிம்பன் கொல்லப்பட்டதைக்கண்டு அந்தப்பலசாலிகளானபாண்டவர்கள் மகிழ்ந்தனர். அந்தராக்ஷஸன் யுத்தத்தில் கொல்லப்பட்டதைக்கண்டு அந்தஹிடிம்பையும், கண்ணுக்குத்தெரியாதவர்களாக ஸ்வர்க்கத்திற் சேர்ந்திருந்த ரிஷிகள் சாரணர்கள்முதலியவர்களும் ஸந்தோஷமடைந்து, 'நல்லது, நல்லது'என்று அந்தபீமனைக்கொண்டாடினர். யுதிஷ்டிரர்முதலான ஸஹோதரர்களும்ஸந்தோஷமடைந்து சத்ருஸம்ஹாரஞ்செய்த புருஷஸிம்மமான பீமஸேனனைக் கௌரவப்படுத்தினர். அர்ஜுனன், பயப்படத்தக்க பராக்ரமமுள்ள மஹாத்மாவான பீமஸேனனைப்பூஜித்து மறுபடியும் அவனைநோக்கி, 'பிரபுவே! இந்த வனத்திற்கு அருகில் நகரமிருப்பதாக நான் நினைக்கிறேன். துரிதமாகச்செல்வோம் உனக்கு ஸுகமுண்டாகட்டும். துரியோதனன் நம்மைஅறியாமலிருக்கவேண்டும்' என்றுசொன்னான். பிறகு, மஹாரதர்களாகிய அந்தப் புருஷஶ்ரேஷ்டர்களனைவரும், 'அப்படியே' என்றுசொல்லித் தாயாருடன்கூடப் புறப்பட்டனர். ராக்ஷஸியான ஹிடிம்பையும் புறப்பட்டாள்.

---

* ஸ்வர்க்கம் முதலியன இல்லாதமரணம்.

## நூற்றறுபத்தேழாவது அத்தியாயம்.

## ஹிடிம்பவதபர்வம். (தொடர்ச்சி.)



**(பீமன் ஹிடிம்பையைக்கொல்ல ஆரம்பித்ததைத் தர்மராஜர் தடுத்ததும், அவள் தான் ராக்ஷஸத்தன்மையில்லாதவளென்றும் வருங்கால உணர்ச்சியுடையவளென்றும் தெரிவித்ததும், பிறகு அவளை அங்கீகரிக்கும்படி பீமனுக்குக் குந்தி கட்டளையிட்டதும்.)**

அந்தராக்ஷஸனுடைய ஸஹோதரியாகிய ஹிடிம்பையென்னும் அந்தராக்ஷஸி பேசாமல் அந்தப்பாண்டவர்களைநோக்கியேசென்றாள். பிறகு, குந்தியையும் பாண்டுபுத்ரரான தர்மராஜாவையும் வணங்கி அனைவரையும் கௌரவித்தபிறகு, பீமஸேனனைப்பார்த்து, "நான் உன்னைப்பார்த்தமாத்திரத்திலேயே மன்மதனுக்கு வசப்பட்டேன். அந்தநான் என்சகோதரனுடைய கொடியசொல்லை விட்டுவிட்டு உன்னையே அனுஸரித்திருக்கிறேன். மிக்கபயங்கரனான ராக்ஷஸன் விஷயத்தில் உன்செய்கையைக்கண்டேன். நான் பணிவிடை செய்துகொண்டு உன்சரீரத்தையநுபவிக்க விரும்புகிறேன்" என்றாள். பீமன், அதைக்கேட்டு, "ராக்ஷஸர்கள் பிறரைமயங்கச்செய்கின்ற வஞ்சகத்தைக்கைக்கொண்டு பகைமையைமனத்திலேயேவைத்திருப்பர். ஹிடிம்பையே! நீ உன்ஸஹோதரன்போன இந்தவழியே செல்" என்று சொன்னான். யுதிஷ்டிரர், "ஆண்சிங்கமே! பீமனே! நீ கோபித்திருந்தபோதிலும் பெண்வதைசெய்யாதே. பாண்டவனே! உன்சரீரத்தைக் காத்துக்கொள்வதிலும் அதிகமாகத் தர்மத்தைக்காப்பாற்று. கொல்லுகிற எண்ணத்தோடுவந்த மஹாபலசாலியானராக்ஷஸனையே கொன்றாய். அந்தராக்ஷஸனுடைய சகோதரி கோபித்து நம்மை என்னசெய்யலாம்?" என்றுசொன்னார். பிறகு, ஹிடிம்பை குந்தியையும் குந்திபுத்ரரானயுதிஷ்டிரரையும் வந்தனஞ்செய்து கை கூப்பிப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினாள்.

"அம்மா! இவ்வுலகத்தில் பெண்களுக்கு மன்மதனாலுண்டான துயரத்தைப்பற்றி நீ அறிவாயே? சிறந்தவளே! அஃது இப்போது பீமஸேனன்விஷயமாக எனக்குவந்திருக்கிறது. அந்தப்பெருந்துக்கமானது காலத்தையெதிர்பார்த்து என்னால் பொறுக்கப்பட்டிருந்தது. அந்தக்காலம் இதோ வந்திருக்கிறது. எனக்கு ஸௌக்கியலாபம் வரப்போகிறது. மேலானவளே! வேண்டியவர்களையும் ஸ்வதர்மத்தையும் உறவினரையும்விட்டு, புருஷஸ்ரேஷ்டனான உன்னுடைய இந்

தப்புத்திரன் கணவனாக என்னால் வரிக்கப்பட்டான். புகழ்பெற்ற நான் இந்தவீரனாலும் உன்னாலும் நிராகரிக்கப்பட்டால் பிழைத்திரேன். இதனை உண்மையாக உனக்குச்சொல்லுகிறேன். உத்தமஸ்திரீயே! அதனால், நீ என்னைத்தெரியாதவளென்றாவது அன்புள்ளவளென்றாவது அனுஸரித்தவளென்றாவது நினைத்து என்மீது தயைசெய்யத் தகுதியுள்ளவளாயிருக்கிறாய். மிகுந்த பாக்கியமுள்ளவளே! என்கணவனாகிய இந்த உன்புத்திரனோடு என்னைச்சேர்த்துவை. தேவதாரூபமுள்ள அவனையெடுத்துக்கொண்டு என் இஷ்டப்படி செல்வேன். மறுபடியும் கொண்டுவந்துவிடுவேன். சிறந்தவளே! என்னிடத்தில் நம்பிக்கைவை. என் ஸகோதரன் என்னை அனுப்பின ஸமயத்தில் முதலிலேயே நான் இவனை அடைந்திருப்பேன். என்ஸகோதரன், ராத்திரியில் பீமஸேனனைக் கொல்லக்கருதினதினால் உடனே வந்துவிட்டான். அவன்எவ்வளவுக்கெவ்வளவு பராக்ரமஞ்செய்தானோ எவ்வளவுக்கெவ்வளவுஎதிரியை ஆக்கிரமித்தானோ அவ்வளவுக்கவ்வளவு நான் பாண்டவனைப்பற்றி மன்மதனால் மோகமடைந்தேன். அம்மா! அரசியே! நான் ராக்ஷஸியல்லேன். நான் இரவில்சஞ்சரிப்பவளல்லேன். நான் ஸாலகடங்கடிஎன்னும் ஈசுவரி. ராக்ஷஸனுக்குச் ஸகோதரியாயிருப்பதுமாத்திரமே. சிறுபெண்ணும் தேவதையைப்போன்ற ரூபமுள்ளவளுமாகிய நான் உன்புத்திரனுடன் சேர்ந்து அவனை முன்னிட்டு உங்கள்எல்லாருக்கும் பணிவிடைசெய்யப்போகிறேன். புருஷஸிம்மங்களே! நீங்கள் அஜாக்கிரதையாயிருக்கும்போது ஜாக்கிரதையோடு கவனித்துக்கொண்டும் அடிமையைப்போல எப்போதும் பணிவிடைசெய்துகொண்டும் ஆபத்காலத்தில் உங்களைக்கரையேற்றிவைப்பேன். புண்ணியஞ்செய்தவர்களைத் தேவவிமானம்வஹிப்பதுபோல் உங்களை என்முதுகினால் எடுத்துச்செல்வேன். நீங்கள் அனுக்கிரஹஞ்செய்யுங்கள். பீமஸேனன் என்னையடையக்கடவன். நான் இவ்வாறுசொல்லியும் என்காரியத்தைப்பற்றி முன்போலவே நிராகரிக்கப்படுவேனாயின் இந்தப்பூமியிலுள்ள பாபலோகங்களுக்குப் போவேனென்பதில் ஸந்தேஹமில்லை. நான் மனத்தினால்நினைத்து எக்காலத்திலுமுள்ள எல்லாவற்றினையுமறிவேன். இந்த ஆபத்தைத் தாண்டுவித்தால்மட்டும் நான் உயிரைவைத்திருப்பேன்; மற்றொன்றினாலும் வைத்திரேன். தர்மந்தெரிந்தவன் எல்லாவற்றையும் அங்கீகரித்து நடத்தவேண்டும். ஆபத்தில் உயிரைக்காப்பவன் எவனோ அவன்தான் தர்மமறிந்தவரிற் சிறந்தவன். தர்மத்திலிருப்பவர்களுக்கு வரும்ஆபத்துத் தர்மத்திற்கே அபாயமென்று சொல்

லப்படுகிறது. புண்ணியத்தினாலேதான் மனிதன் ஒருயிரைக்காப் பாற்றுகிறான். உயிரைக்காப்பதும் புண்ணியந்தான். எந்தவகையி னாலாவது தர்மத்தையே செய்தல்வேண்டும். அதில் இகழ்ச்சியில்லை. இந்தஸமயத்தில் எல்லாவற்றினும்பெரிதான காமத்தினால்பீடிக்கப் பட்ட பெண்ணாகியஎன்னையும் காப்பாற்று. ஸாதுக்கள் தர்மார்த்த காமமோக்ஷங்களாகிய நான்குபுருஷார்த்தங்களுக்குமே தயைசெய் வார்கள். தர்மத்தினிடம் அன்புள்ளரிஷிகள் அப்படிச்செய்வதைத் தர்மமென்று சொல்லுகின்றனர். நான் திவ்யஞானத்தினால் நடந்த வற்றையும் இனிநடப்பனவற்றையும் அறிகிறேன். ஆதலால், உங்க ளுக்கு நன்மையைச்சொல்லப்போகிறேன். ஒருசிறந்ததடாகம் ஸமீ பத்திலிருக்கிறது. இப்போது அந்தத்தடாகத்துக்குச்சென்று ஸ்நா னஞ்செய்து மரத்தின்கீழ்ப்படுத்திருந்து, நாளைக்காலையில் ஜகத்பிரபு வும் தாமரையிதழ்போன்ற கண்களையுடையவரும் * மஹாத்மாவு மாகிய வ்யாஸபகவான் எதிர்வந்துதோன்றக்கண்டு, துயரத்தைநீக்கப் போகிறீர்கள். துரியோதனனால் ஊரைவிட்டுப்போனதும் வாரணாவ தத்தில் கொளுத்தப்பட்டதும் விதுரரால் நீங்கள்காப்பாற்றப்பட்ட தும் அவருக்கு ஞானக்கண்ணினால்தெரிந்திருக்கின்றன. அவர் உங்க ளுக்குச் சாலிஹோத்ரரிஷியின் ஆச்ரமத்தில் வாஸத்தை விதிக்கப் போகிறார். இந்தப்புண்ணியவிருக்ஷம் மழை காற்று வெயில்களைக் காக்கக்கூடியது. இந்தஜலத்தைக் குடித்தவுடன் பசிதாகங்கள்போய் விடும். இந்தத்தடாகமும் இந்தமரமும் சாலிஹோத்திர மஹரிஷி தவத்தினால் உண்டாக்கப்பட்டவை. காரன்னங்களும், நாரைகளும், ராஜஹம்ஸங்களும், ஆண்பெண்அன்றில்களும் கந்தர்வர்களின் குர லோடொத்த இனியகீதங்களைப் பாடுகின்றன" என்றாள்.

அவளுடைய அந்தவாக்கியத்தைக்கேட்டு, குந்தி, சிறந்தப்ராஜ் ஞையுள்ளவரும் எல்லாத்தர்மங்களிலும் நிபுணருமானயுதிஷ்டிரரைப் பார்த்து, "பாரதனே! தர்மவான்களிற்சிறந்த நீ நான்சொல்வதைக் கேள். இந்தராக்ஷஸியானவள் தன்வசத்தினால் தர்மத்தைச் செவ்வை யாகச்சொல்லுகிறாள். கருத்தில் கெட்டவளாயிருந்தால் ராக்ஷஸி பீமனை என்னசெய்யலாம்? நீ அங்கீகரிக்கும்பக்ஷத்தில் இவள் புத்தி ரோத்பத்தியைப்பற்றி வீரனான பீமனையடையட்டும்" என்றுசொன் னாள். பிறகு, யுதிஷ்டிரர், "ஹிடிம்பையே! நீசொல்வது ஸரிதான். இந்தவிஷயத்தில் ஸம்சயமில்லை. அழகிய இடையுள்ளவளே! ஆனால், நான் எவ்வாறுசொல்வேனோ அவ்வாறு நீ தர்மத்திலிருக்கவேண்டும்.

* 'மகத்பூதம்'என்பது மூலம்.

பிரியமானவளே! நீ ஒவ்வொருநாளும் கடமைகளைமுடித்துக்கொண்டு ஸ்நானஞ்செய்து பரிசுத்தையாகிஇனியரூபத்தோடிருந்து,பீமஸேன னும் ஸ்நானஞ்செய்து கடமைகளைமுடித்துஉத்ஸாஹத்திற்குரிய மங் களங்களைச் செய்துகொண்டபின் இவனைத் தினந்தோறும்அடையக் கடவாய். மனோவேகமுள்ள நீ பகற்காலங்களில் இஷ்டப்படி இவ னுடன்ஸஞ்சரி. ஆனால், ஒவ்வொருராத்திரியிலும்இந்தப்பீமஸேனனை நீ கொண்டுவந்து விடவேண்டும். ஸந்தியாகாலத்துக்கு முன்னமே இவன் விடவேண்டியவன். எப்போதும் காப்பாற்றப்படவேண்டிய வன். நீ கர்ப்பம்தரிக்கிறவரையில் இப்படியே பீமனோடுரமித்துக் கொண்டிரு. பிரியமானவளே! உனக்கு இது நியமம். எந்தக்காலமும் அனுகூலையாயிருந்து அஜாக்ரதையைவிட்டுப் பணிவிடைசெய்ய வேண்டும். நன்மையையே செய்யவேண்டும்" என்றுசொன்னார்.

---

## நூற்றறுபத்தெட்டாவது அத்தியாயம்.

## ஹிடிம்பவதபர்வம். (தொடர்ச்சி.)

**(பாண்டவர்கள் ஹிடிம்பையோடு சாலிஹோத்ரஸரஸுக்குப் போய் அவர் செய்த ஆதித்யத்தைப்பெற்றுக்கொண்டதும், வியவஸ்தைசெய்து கொண்டு பீமன் ஹிடிம்பையை விவாஹஞ் செய்துகொண்டு அவளோடு அநேகஇடங்களில் சென்றுவந்ததும், வியாஸர் வந்து குந்தியை ஸமாதானஞ்செய்து போனதும்.)**

யுதிஷ்டிரர்சொல்லைக்கேட்டுப் பீமனையடைந்த அந்தஹிடிம் பை குந்தியைத் தன்சரீரத்திலேற்றிக்கொண்டு பீமார்ஜுனர்களுக்கு இடையிற்செல்லுகின்றவளும் நகுலஸஹதேவர்களுக்கு முன்செல்லு கின்றவளும் யுதிஷ்டிரரைத் தனக்குமுன்னிட்டுக்கொண்டவளுமாக ஜலத்தைத்தேடி ரமணீயமான சாலிஹோத்திரஸரஸை அடைந்தாள். மாத்திரனடிக்குச்சென்று அதைவீட்டைப்போல்விளக்கிப் பாண்டவர் களுக்கு இலைகளினால் வஸிக்குமிடம்கட்டித் தனக்கும்குந்திக்கும் ஒருபுறத்தில் இடஞ்செய்தாள். பிறகு, பசிதாகத்தினால்பீடிக்கப்பட்ட பாண்டவர்கள் ஸ்நானஞ்செய்து பரிசுத்தர்களாகி ஸந்தியாவந்தனஞ் செய்து தாகத்திற்காக ஜலத்தைமாத்திரம் உட்கொண்டனர். அப் போது சாலிஹோத்திரமஹரிஷி அங்கே பாண்டவர்கள்பசித்திருப் பதையறிந்து மிகுதியான அன்னபானங்களை மனத்தினால்நினைத்தார். அப்போது அந்தப்பாண்டவர்களனைவரும் குந்தியுடன் சயனம்பண்

ணிக்கொண்டு அரக்குமாளிகையில்நடந்ததையும் ராக்ஷஸன்செய்ததையும் இன்னும் பலவிதமான கதைகளையும் சொல்லிப் பேச்சுமுடிந்தபோது, ராஜபுத்திரியான குந்தி பாண்டுபுத்திரனான பீமஸேனனை நோக்கிச் சொல்லலானாள்.

“உனக்குப் பாண்டுமஹாராஜர் எப்படியோ அப்படியே ஜ்யேஷ்டஸஹோதரனான யுதிஷ்டிரனும் பூஜிக்கத்தக்கவன். நான் தர்மந்தெரிந்த இந்தயுதிஷ்டிரனுக்கும் பூஜ்யை. ஆதலால், உனக்கு மிகவும்பூஜ்யை. யுவராஜாவே! ஆதலால், பாண்டுவின்ப்ரீதிக்காக என்விருப்பத்தைச்செய். ஸஹோதரனே! பாவியும் புத்தித்தேர்ச்சியில்லாதவனுமாகிய துரியோதனனால் அபகாரஞ்செய்யப்பட்டநான் அந்தஅபகாரத்திற்குப் பரிஹாரத்தைக் காணாமலிருக்கிறேன். சில தினங்களில் யோகக்ஷேமம் உண்டாகும். ஆதலால், பயமில்லாததும் பிறர்வரக்கூடாததுமாகிய இந்தஇடத்தில் நாம் க்ரமமாகவஸிப்போம். ஸஹோதரனே! இது மற்றொருபெருந்துயரமும் தர்மசங்கடமுமாயிருக்கிறது. சிறந்தபிரஜ்ஞையுள்ளவனே! உன்னைப்பார்த்தவுடன் மன்மதனால்தூண்டப்பட்ட இந்தப்பெண், தர்மத்தைமுன்னிட்டு யுதிஷ்டிரனிடமும் என்னிடமும் வேண்டிக்கொண்டிருக்கிறாள். தர்மத்திற்காக நீ இவளுக்குப் புத்திரனைக்கொடு அந்தப்புத்திரன் நமக்கு நன்மையைச்செய்வான். மறுமொழியை நான்விரும்பவில்லை. நாங்களிருவரும் சொல்வதைச் செய்” என்றாள்.

பீமஸேனன், அதைக்கேட்டு ஆகட்டுமென்றுபிரதிஜ்ஞைசெய்து, “உன் ஆஜ்ஞையை வேதவிதியென்றெண்ணித்துச் செய்வேன்” என்று சொன்னான். ஸஹோதரர்கள்நடுவில் அந்தராக்ஷஸியைப்பார்த்து நேராகவும் சொல்லத்தொடங்கினான். “ராக்ஷஸியே! நான் உனக்கு ஸத்தியத்தோடுகூடிய ஒருவ்யவஸ்தையைச்சொல்லுகிறேன்; கேள். சிறந்தவளே! அழகியஇடையுள்ளவளே! எவ்வளவுகாலத்தில் உனக்குப்புத்திரோத்பத்திநேரிடுமோ அவ்வளவுகாலம்வரையில் உன்னுடன்கூடச் சஞ்சரிப்பேன். முக்கியமாக உன்னுடையஅற்பத்தனத்தை என்னிடத்தில்வெளிப்படுத்தாதே. பெண்ணரசி! உத்தமஜாதிப்பெண்களுடைய குணங்களைபொருந்தினவளாக என்னை அடையக்கடவாய்”என்றான். அந்தஹிடிம்பையென்னும் ராக்ஷஸி, ‘அப்படியே ஆகட்டும்’ என்று பிரதிஜ்ஞைசெய்து பகலில் தன்வீடுசென்று ராஜாக்களுக்குரிய உணவுகளைக்கொண்டுவந்தாள். அந்தஹிடிம்பை அழகியரூபத்துடன் பீமஸேனனைத்தூக்கிக்கொண்டுவிளையாடுவதற்காக மேலேசென்றாள். உயர்ந்தரூபத்தையெடுத்து எல்லாஆபரணங்களையுமணிந்துகொண்டு மிரு

கங்களும் பக்ஷிகளும் சப்திக்கின்ற அழகானமலைச்சிகரங்களிலும் ரமணீயமான தேவாலயங்களிலும் மிக்கஇனிமையாக ஸம்பாஷணைசெய்து எந்தக்காலமும் பீமஸேனனை ஸந்தோஷப்படுத்திக்கொண்டிருந்தாள். அவ்வாறுகவே போகமுடியாதகாடுகளிலும், மலைகளிலும், மரங்களிலும், மலைச்சரிவுகளிலும், தாமரைப்புஷ்பங்களும் நீலோத்பலங்களும் அடர்ந்த அழகானதடாகங்களிலும், வைடூரியக்கல்மயமான மணல்களையுடைய ஆற்றுத்தீவுகளிலும், அழகானதேவதாவனங்களிலும், மலைச்சிகரங்களிலும், அழகானதுறைகளும் காடுகளும் ஜலங்களுமுடைய காட்டாறுகளிலும், மணிகளும் பொன்னும்நிரம்பிய நகரப்பிரதேசங்களிலும், யக்ஷர்களுடையஇடங்களிலும்,குலபர்வதங்களின் சிகரங்களிலும், எல்லாக்காலங்களிலும் காய்த்தமரங்களோடுகூடிய மானஸஸரோவரத்தின்காடுகளிலும் மிக்கஅழகுள்ளரூபத்தைத்தரித்துப் பீமனை ஸுகிக்கச்செய்தாள். புண்ணியஞ்செய்தவன் அப்ஸரஸுடன்கூட ஸ்வர்க்கத்தில் எவ்வாறு மிக்கசந்தோஷத்துடனிருப்பனே அவ்வாறே சிறந்ததேஜஸுள்ள பீமஸேனன் மிக்க அதிகமான ஸந்தோஷத்தையடைந்து அவளுடன்கூடி ரமித்தான். அழகாயும், பொன்னும் ரத்னமும்சேர்ந்த மேகலையுள்ளதாயுமிருக்கிற அவளுடையநிதம்பத்தை அடிக்கடிமர்த்தனஞ்செய்து பீமன் திருப்தியடையவில்லை. மனோவேகமுள்ள அவள் அவ்வாறு ஆங்காங்கு பீமனைச்சந்தோஷப்படுத்திக்கொண்டு அவனால் தானும் அடிக்கடி சந்தோஷமடைந்து உத்ஸாஹத்துடன் ரமித்தாள். அவள் பகற்காலங்களில் பீமஸேனனுடன்ரமித்து இராக்காலங்களில் அவன்வீட்டில் கொண்டுவந்து அவன்தாயாரிடம் காண்பித்தாள். அவ்வாறு பீமஸேனன் ஒவ்வொருநாளும் ஸஹோதரர்களுடன் தூங்கிக்கொண்டிருந்தான். அவளும் குந்திக்குப்பணிவிடைசெய்துகொண்டு அவள்பக்கத்திலேயே இரவுமுழுவதும் வஸித்துக்கொண்டுசாப்பாட்டையும்வாய்க்குத்தாம்பூலம்வாசனைமுதலான போகப்பொருள்களையும் கொண்டுவருவாள்.

அந்தராத்திரிநீங்கியவுடன், த்ருடமானநியமமுள்ளவரும் சிறந்தப்ரஜ்ஞையுள்ளவரும் திவ்யஜ்ஞானமுள்ளவரும் சிறந்ததவமுள்ளவருமாகிய வ்யாஸர் வந்தார். மஹாத்மாவும் நன்மையைச்செய்பவருமாகிய க்ருஷ்ணத்வைபாயனரை நமஸ்காரஞ்செய்து அந்தப்பாண்டவர்களும் குந்தியும் அவள்மருமகளான ஹிடிம்பையுமாகிய அனைவரும் கைகூப்பிநின்றனர். "பரதஸ்ரேஷ்டர்களே! த்ருதராஷ்டிரபுத்திரர்கள் தாங்கள் நன்றாகவாழ்ந்துகொண்டு உங்களை அதர்மமாக ஊரைவிட்டுஓட்டினரென்பது எனக்குமுன்னமே மனத்தில்தெரிந்தவிஷயம்.

அதனையறிந்துதான் உங்கள் விஷயத்தில் உயர்ந்தநன்மையைச் செய்யக்கருதி வந்திருக்கிறேன். நீங்கள் வ்யஸனப்படவேண்டாம். இவையெல்லாம் உங்களுடையஸுகத்திற்கேயாகும். வீரர்களே! நண்பர்களைப்பிரிக்குஞ்செய்கையை நீங்கள் பூர்வஜன்மத்தில் செய்திருக்கிறீர்கள். அதன்பயனாக இதுநேர்ந்திருக்கிறது. பகைவரைப் பரிதபிக்கச்செய்பவர்களே! நீங்கள் வ்யஸனப்படவேண்டாம். தீவினைப் பயன்முடிந்தபிறகு நீங்கள் பழையநிலைமையுள்ளவர்களாகவே உறவினருடன் சொந்தராஜ்யத்தில் விளையாடிக்கொண்டிருப்பீர்கள். ஐயமில்லை. வேண்டியவர்கள் தாழ்ந்தவர்களிடத்திலும் குழந்தைகளிடத்திலும் நேசம்வைக்கின்றனர். ஆதலால், இப்போது எனக்கு உங்களிடத்தில்ஸ்நேஹம்அதிகமாயிருக்கிறது. நான் ஸ்நேஹத்தைமுன்னிட்டு எந்தநன்மையைச் செய்யக்கருதுகிறேனோ அதைச்சொல்லுகிறேன்; கேளுங்கள். என்வரவையெதிர்பார்த்து இங்கேயேமறைவாகவாஸஞ்செய்யுங்கள். இது சாலிஹோத்ரரிஷியின்தவத்தினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட தடாகம். இந்தஜலம் அழகானது. பசி தாகம் களைப்புக்களைப் போக்குவது. காரியத்தைநாடி ஆறுமாதம்வரையில் ஸௌக்கியமாக இங்கே ஸஞ்சரியுங்கள்" என்று அந்தவியாஸர் வீரர்களான அந்தப் பாண்டவர்களைத்தேற்றி அன்புடன் தழுவிக்கொண்டு, பின்பு, அந்தப் பிரபு, குந்தியையும், "மருமகளே! அழாதே! அழாதே!" என்ற சொல்லைச்சொல்லித் தேற்றத்தொடங்கினர். "ஜீவிக்கிறபுத்ரர்களையுடையவளே! தர்மந்தவறாதவனும் தர்மராஜாவும் உனதுபுத்ரனுமான இந்தயுதிஷ்டிரன் பூமியிலுள்ள அரசர்களனைவரையும் ஆளப்போகிறான். இவன் பூமிமுழுவதையும் தர்மத்தினால்ஜயித்துத் தர்மத்தைச் செய்து புலன்களையடக்கி மலைகளும் காடுகளுமடங்கிய சிறந்தபூமி முழுமையையும் பீமார்ஜுனர்களுடையபலத்தினால் தன்வசத்தில் வைத்துக்கொண்டு ஆளப்போகிறான். இது திண்ணம். உனக்கும் மாத்ரிக்கும் புத்ரர்களும் லோகப்பிரஸித்தர்களுமான இவ்வைவரும் உலகத்தில் புகழ்பெற்று அப்போது தங்கள்தேசத்தில் ஸந்தோஷமான மனத்தோடு ஸுகமாக விளையாடப்போகின்றனர். இந்தப்புருஷஶ்ரேஷ்டர்கள், இந்தப்பூமியைஜயித்து நிரம்பின தக்ஷிணையுள்ள ராஜஸூயம் அஶ்வமேதமுதலிய யாகங்களைச்செய்யப்போகின்றனர். உன் புத்திரர்கள் தனத்தாலும் ஸௌக்கியத்தாலும் வேண்டியவர்களைச்சிறப்பித்துப் பித்ருபிதாமஹபரம்பரையாகவந்த ராஜ்யத்தை அடையப்போகின்றனர். தாமரைஇதழ்போன்ற கண்களையுடைய உன்மருமகள் கமலபாலிகையென்றுபெயருள்ளவள். இவள், பீமன்வசத்திலிருந்து

கொண்டு ஒருபுத்திரனைப்பெறப்போகிறாள். அந்தப்புத்திரனால் கஷ்ட காலங்களில் நீங்கள் கரையேற்றப்படுவீர்கள். ஒருமாதம் இங்கே காத்திருங்கள். நான் திரும்பவும்வருவேன். இவ்வாறு தேசகாலங் களையறிந்துகொண்டு மிகுந்தஸந்தோஷத்தையடைவீர்கள்". என்று சொன்னார். ஜனமேஜயராஜாவே! அவர்களெல்லாரானும் கைகூப்பிக் கொண்டு, 'அவ்வாறேயாகட்டும்' என்று சொல்லப்பட்டு, பிரபுவும் ரிஷியுமான வ்யாஸபகவான் வந்தவாறே சென்றார்.

---

## நூற்றறுபத்தோன்பதாவது அத்தியாயம்.

## ஹிடிம்பவதபர்வம். (தொடர்ச்சி.)

(கடோத்கசஜனனமும், பிறகு நினைத்தபோது வருவதாகச்சொல்லி ஹிடிம்பையும் கடோத்கசனும் சென்றதும்.)

வியாஸபகவான்சென்றபிறகு,பாண்டவர்கள் துக்கத்தைவிட்டு அந்தஆலமரத்தண்டை ஆறுமாதம் ஸுகமாகவஸித்தனர். இலைகளை யும் கிழங்குகளையும் கனிகளையும் ஆகாரமாகக்கொண்டு பாண்டவர் கள் தவஞ்செய்துகொண்டிருந்தனர். ஜனமேஜயமஹாராஜாவே! பிறகு, அநுமதிகொடுக்கப்பெற்ற காமரூபிணி மானிடர்க்கரிய ஆப ரணங்களையும் ஆடைகளையும் மலர்மாலைகளையும் சாந்துகளையும்அணி ந்துகொண்டு மனோவேகமாக ஆங்காங்கு பீமஸேனனை எப்போதும் மகிழ்வித்துக்கொண்டிருந்தாள். நினைத்தரூபமெடுக்கின்ற ஹிடிம்பை யென்னும்ராக்ஷஸி பீமஸேனனுக்காகச் ஸகோதரரானபாண்டவர்களை ஏழுமாஸகாலம் இவ்வாறு வனத்தில் வஸிக்கச்செய்தாள். அந்தப் பீமன் ஸுகமாகவிளையாடிக்கொண்டு அந்தக்காலத்தைக்கழித்தான். காமரூபமெடுக்கின்ற அந்தராக்ஷஸி பீமஸேனனோடு ஏழுமாதம்சேர் ந்துவஸித்தபிறகும் ஸம்போகதிருப்திபெறாமலே கர்ப்பம்தரித்தாள். அந்த அரக்கி, மிகுந்தபலமுள்ள பீமஸேனனிடமிருந்து, விகாரமான கண்களும் பெரியவாயும் முளைகளைப்போன்ற காதுகளுமுடையவ னும், மிக்கபயங்கரனும், பயங்கரமானநிறமுள்ளவனும், மிகச்சிவந்த கண்களும் கூர்மையானகோரப்பற்களுமுடையவனும், மஹாரதனும், பெரியவில்லாளியும், மஹாபராக்கிரமசாலியும், மஹாபலவானும்,மஹா வேகமுள்ளவனும், பெரியதேகமுள்ளவனும், மிகக்கறுத்தவனும், பெருங்கழுத்தும் பெருங்கைகளுமுடையவனும், மனுஷ்யனுக்குப் பிறந்தும் மனுஷ்யத்தன்மையில்லாதவனும், அஞ்சத்தக்கவேகமுள்

ளவனும், முரட்டுத்தனமுள்ளவனும், பகைவரை அடக்குகிறவனு மாகிய புத்திரனைப் பெற்றாள் அவன், பிசாசங்களையும் மனிதர்களை யும் மற்றப் பிராணிகளையும் அதிக்கிரமித்திருந்தான். அரசரே! அவன் பாலனாயிருக்கும்போதே மனிதர்களில் அதிக சக்தியையடைந் திருந்தான்; எல்லா அஸ்திரங்களிலும் சிறந்தவீரனாகவும் மிக்கபலசாலி யாகவுமிருந்தான். ராக்ஷஸப்பெண்கள் கர்ப்பத்தைத்தரித்து உடனே பிரஸவிக்கின்றனர்; நினைத்தரூபம் தரிப்பவரும் அநேக ரூபங்க ளெடுப்பவருமாயிருக்கின்றனர். சிறந்தவில்லாளியும் விரிந்த தலைமயி ருள்ளவனுமாகிய அந்தப்புத்திரன் அப்போது தாய் தகப்பன்மார்களை வந்தனஞ்செய்து அவர்களின் பாதங்களைப் பிடித்துக்கொண்டான். அவர்கள் அவனுக்குப் பெயரிடத்தொடங்கினர். 'இவனுடைய கடம் என்று சொல்லப்பட்டதலை நெறித்தமயிருள்ளதாயிருக்கிறது' என்று அவனுடையதாய் அவனைப்பற்றிச் சொன்னாள் அதனால், அவனுக்குக் கடோத்கசன் என்ற பெயர் உண்டாயிற்று. அந்தக்கடோத்கசன் அந் தப்பாண்டவர்மேல் அன்புள்ளவனாக இருந்தான். அவர்களுக்கும் அவன் எப்போதும் அவர்கள் மனத்தைவிட்டுப்பிரியாத அன்பனாயிருந் தான். பெரியதேகமுள்ள கடோத்கசன் குந்தியையும் பாண்டவர்களை யும் வரிசையாக நமஸ்காரஞ்செய்து, அவர்களையழைத்து, 'குற்றமற்ற வர்களே! பெரியோர்களானஉங்களுக்குநான்என்னசெய்யக்கடவேன்? கூச்சமில்லாமற் சொல்லுங்கள்' என்றுசொன்னான். அவ்வாறுசொல்லு கின்ற அந்தப் பீமஸேனபுத்திரனைப்பார்த்துக் குந்தி, 'நீ கௌரவர்கள் வம்சத்திற் பிறந்தவன்; பீமஸேனனைப்போன்ற பலவானாகவே இருக் கிறாய். ஐவர்களுக்கும் நீ மூத்த குமாரன். புத்திரனே! ஸஹாயம் செய்' என்று சொல்ல, குந்தியினால் இவ்வாறு சொல்லப்பட்டபிறகு, கடோத்கசன் தந்தைமார்களை நமஸ்காரஞ்செய்து, 'இவ்வுலகத்தில் ராவணனும் இந்திரஜித்தும் எவ்வாறு மஹாபலவான்களாயிருந்தனரோ அவ்வாறே தேகப்பிரமாணத்தாலும் பராக்கிரமத்தாலும் அவர்களுக்கு ஒப்பானவனாகவும் உலகத்திலுள்ள மனிதர்களுக்கு மேற்பட்டவனாகவு மிருக்கிறேன். காரியம் வரும்போது உங்களிடம் வந்து சேருவேன்' என்று சொன்னான். அந்தராக்ஷஸத்தலைவன் அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு வடதிசையைநோக்கிச்சென்றான். மஹாரதனாகிய அந்தக்கடோத்கசன் நிகரற்றபராக்ரமமுள்ளகர்ணனுடைய சக்தியாயு தத்தினிமித்தமாக ப்ரதியுத்தம் செய்கிறவனாக மஹாத்மாவான பகவா னால் ஸ்ருஷ்டி செய்யப்பட்டவன். அப்போது, பீமன் அந்த ஹிடிம்பை யைப்பார்த்து, 'கமலபாலிகையே! எனக்கு உன்சகவாசம் முடிந்தது.

மறுபடியும் ராஜ்யத்திலிருக்கும்போது நீ எங்களைப் பார்ப்பாய்' என்று சொன்னான். அந்த ஹிடிம்பை, 'நாதரே! பிரபுவே! பாரதரே! எப்போது ரகஸ்யத்தில் ரமிக்கவிரும்பி என்னை நினைப்பீரோ அப்போது உடனே மறுபடியும் உம்மிடம் வருவேன்' என்று சொல்லி உடனே சென்றாள். ஹிடிம்பை பீமஸேனனிடம் காதல் வைத்தும் தான் செய்துகொண்ட வியவஸ்தையை நினைத்துத் தன்னிடத்திற்குத் திரும்பிச் சென்றாள்.

---

நூற்றேழுபதாவது அத்தியாயம்.

## ஹிடிம்பவதபர்வம். (தொடர்ச்சி.)

(வியாஸர் பாண்டவர்களை வனத்தில் ஸந்தித்து ஏகசக்ரநகரியில் பிராம்மணக்ருகத்தில் குடிவைத்தது.)

பிறகு, அந்தப் பாண்டவர்களனைவரும் சாலிஹோத்ர மஹரிஷியின் ஆஸ்ரமத்தில் அந்த ரிஷியினால் காட்டிஉள்ளவற்றைக்கொண்டு பூஜிக்கப்பெற்றனர். அப்போது அந்த மஹாத்மாக்களெல்லாரும் குந்தியுடன்கூட அம்மஹரிஷியினிடம் அனுமதிபெற்றுக்கொண்டு தாங்கள் ஜடைகளைத்தரித்து மரவுரிகளையும் தோல்களையும் உடுத்து ரிஷிவேஷம்தரித்துப் பிராம்மணர்க்குரிய ரூபத்தோடு வேதங்களையும் வேதாங்கங்களையும்முழுதும்அத்தியயனஞ்செய்துகொண்டிருந்தனர். அரசரே! தர்மந்தெரிந்தவர்களும் மஹாரதர்களுமான அந்தப்பாண்டவர்கள் சாலிஹோத்ரமஹரிஷியின் அனுக்கிரகத்தினால் ராஜநீதிசாஸ்திரஜ்ஞானத்தையும் தர்க்கசாஸ்திரஜ்ஞானத்தையும் அடைந்து சந்தோஷமுற்று ஒருவனத்தின் வழியாக மற்றொருவனம்சென்று அநேக மிருகக்கூட்டங்களைக்கொன்று மத்ஸ்யதேசத்துக்கும் த்ரிகர்த்ததேசத்துக்கும் பாஞ்சாலதேசத்துக்கும் கீசகதேசத்துக்கும் இடையிலுள்ள அழகான காட்டுப் பிரதேசங்களையும் தடாகங்களையும் பார்த்துக் கொண்டு விரைவாக வனத்தைத்தாண்டிச்சென்றனர். அம்மஹாத்மாக்கள் சிலவிடங்களில் தாயாரைத் தூக்கிக்கொண்டு விரைந்துசென்றனர்; சிலவிடங்களில் களைத்து நின்றனர்; சில காடுகளில் ஸந்தோஷமடைந்துநின்றனர். அவர்கள் சிலவிடங்களில் இஷ்டப்படிநடந்து அடிக்கடிபந்தயத்துடன்சென்றனர். அவர்களெல்லோரும் வழியில் தங்கள்

பிதாமஹராகிய வியாஸரைக்கண்டனர். அந்த வீரர்களனைவரும் அப்போது அம்மஹாத்மாவான கிருஷ்ணத்வைபாயனரை அபிவாதனஞ் செய்து தாயாருடன்கூடக் கைகூப்பிநின்றனர்.வியாஸர்,'புருஷஶ்ரேஷ்டர்களே! நீங்கள் அந்த ஆஶ்ரமத்தைவிட்டுப் புறப்பட்டது எனக்குத் தெரிந்தது. கடோத்கசன் பிறந்தது தெரிந்ததனாலும் எனக்கு ஸந்தோஷம் அதிகமாயிற்று. இதோ ஸமீபத்தில் அழகியதும் தீங்கில்லாததுமாகிய நகரமிருக்கிறது. இங்கு என்வரவை எதிர்பார்த்து மறைந்து வாஸஞ் செய்யுங்கள்' என்று கூறினர். அந்தப்பிரபுவான வியாஸர் வீரர்களான அந்தப்பாண்டவர்களை இவ்வாறு தைரியப்படுத்தி, ஏகசக்ரநகரத்துக்குப் புறப்பட்ட குந்திக்கு ஸமாதானஞ்சொல்லலானார். 'எந்த மனிதனும் தர்மத்தை மாத்திரமே செய்யான்; அவ்வாறே பாபத்தை மாத்திரமே செய்யான். புண்ணியபாபங்கள் இரண்டையும் செய்யாதவன் உலகத்தில் எவனுமில்லை. செய்பவன் புண்ணியபாபங்களின் பலனை அடைந்தேதீருவான். பாபத்தின் பயனாகப் பெருந்துயரம் நேர்ந்தது. யதுபுத்ரியே! கௌரவிக்கத்தக்கவளே! அதனால், விசனத்தில் மனத்தைச் செலுத்தாதே' என்று சொல்லி, அவர்களை ஒரு பிராம்மணனது வீட்டில் குடிவைத்து ரிஷியும் பிரபுவுமாகிய வ்யாஸபகவான் தம்மிஷ்டப்படி சென்றார்' என்றனர்.

ஹிடிம்பவத பர்வம் முற்றிற்று.

---

நூற்றெழுபத்தோராவது அத்தியாயம்.

## ப க வ த ப ர் வ ம்.

(பாண்டவர்கள் ஏகசக்ரநகரத்தில் வஸித்ததும், அந்த வீட்டுப்பிராமணன் மனைவியுடன் துக்கித்ததைக்கண்டு குந்தி அங்கு சென்றதும், அவன் குந்தியிடம் புலம்பியதும்.)

ஜனமேஜயர், "பிராமணஶ்ரேஷ்டரே! மஹாரதர்களும் அந்தக் குந்திபுத்திரர்களுமான பாண்டவர்கள் ஏகசக்ரநகரம்சென்று அதற்குமேல் என்னசெய்தனர்?" என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்.

"ரமணீயமான பலவகை வனங்களையும் பூமியிலுள்ள தேசங்களையும் நதிகளையும் தடாகங்களையும் பார்த்துக்கொண்டு ஏகசக்ரநகரம்

சென்று அந்த மஹாரதர்களாகிய குந்திபுத்ரர்கள் ஒரு பிராமண கிருகத்தில் வஸித்தனர். அரசரே! அவரனைவரும் அப்போது பிக்ஷையெடுத்தனர்; யுதிஷ்டிரரையும் குந்தியையும் நினைத்துக்கொண்டே பிக்ஷையெடுத்தனர். ஜடையோடுகூடிய பிரம்மசாரிகளாகப் பிக்ஷையெடுத்துக்கொண்டிருக்கும்போது, குணங்களினால் நகரத்துஜனங்களுக்குப் பார்ப்பதற்கினியவர்களாயிருந்தனர். நகரத்து ஜனங்கள், 'பார்ப்பதற்கினியவரும் பரிசுத்தரும் தேவகுமாரரைப்போன்றவரும் யோக்யரும் மென்மையான சரீரமுள்ளவருமாகிய இந்தத்தவமுள்ள பிராமணர்கள் பிக்ஷையெடுக்கத்தகாதவர்கள்; ராஜ்யத்துக்குத் தகுதியுள்ளவர்' என்றும், 'இந்த மிருதுவான சரீரமுள்ள ரிஷிகள் உண்மையில் பிராமணரல்லர்; ஏதோ காரணத்தினால் இந்தப்பூமியில் மாறுவேஷமாகச் சஞ்சரிக்கின்றனர்; எல்லா லக்ஷணங்களும் அமைந்த இவர்கள் ஒவ்வொருநாளும் பிக்ஷையெடுப்பதற்குத் தகுதியுள்ளவர்களல்லர்; காரியத்தைக்கருதித் திரிகின்றனர்' என்றும் ஊகித்துச் சொல்லிக்கொண்டனர். தங்களுக்குப் பந்துக்கள் வந்ததாக நினைத்து நகரத்து ஜனங்கள் ஒவ்வொருநாளும் உபசாரங்களோடு பிக்ஷாபாத்திரங்களைப் பக்ஷணங்களினாலும் போஜனங்களினாலும் நிரம்பச்செய்தனர். பாண்டவர்கள் மௌனவிரதமெடுத்துக்கொண்டு பிக்ஷைகளை வாங்கினர். அந்தப் பாண்டவர்கள் போய் நேரமானதை நினைந்துத் தாயார் அவர்களைப்பற்றி விசனப்பட்டுக்கொண்டு துக்கத்தினால் நீர் நிரம்பின கண்களோடு தரையைக் கீறிக்கொண்டிருந்தாள். பிராமணகிருஹங்களில் தாயாரை நினைத்துக்கொண்டே பிக்ஷையெடுத்துத் தாயாரிடத்திலுள்ள மரியாதையினால் கட்டுப்பட்டவர்களாக விரைவில் திரும்பிவந்தனர். இரவும் பகலும் எடுக்கும் பிக்ஷைகளைத் தாயாராகிய குந்தியிடம் ஒப்புவித்தனர். ஒன்றுசேர்ந்த பிக்ஷான்னமெல்லாவற்றையும் தாயார் தனித்தனியே பகுத்துக்கொடுத்த பிறகு, தம் தம் பாகங்களை அவர்கள் இஷ்டப்படி தனித்தனியே புஜித்தனர். வீரர்களாகிய பாண்டவர்கள், தாயாருடன் கூடியநால்வரும் முழுப்பிக்ஷான்னத்தில் ஒருபாதியைப் புஜித்தனர்; மஹாபலசாலியான பீமன் மாத்திரம் ஒருபாதியைப் புஜித்தான். முன்னே சிறந்த அன்னத்தைப் புஜித்தவனான அந்தப்பீமன் நிரம்பின போஜனஞ்செய்தவனாக இருக்கவில்லை; போஜனத்ருப்தியில்லாமையினாலுண்டான நிறம் மாறுதலையும் இளைப்பையும் அடைந்தான். வெந்நீர்! ஜ்வலிக்கின்றபெருந்தீயில் ஒரு நெய்த்துளி எப்படியிருக்குமோ அவ்வாறே பிக்ஷைச் சோற்றின் அரைப்பாகம் அவனுக்கு இருந்தது. அரசரே! பாரதரில்

சிறந்தவரே! அந்த மஹாத்மாக்கள் அவ்வாறே அவ்விடத்தில் வஸிக்கும்போது நீண்டகாலமாயிற்று. பீமனும் பிராம்மண ஸ்நேகிதர்களோடு விளையாடின பிறகு, ஒரு குயவனுடைய சினேகத்தினால் மிகப் பெரிய பாண்டத்தை அடைந்தான். அந்தப்பீமனுடைய செய்கையினால் வியப்புற்ற குயவன் சிரித்துக்கொண்டு அளவுக்கு மிஞ்சின பெரிய பாண்டத்தைச் செய்து பீமனுக்குக் கொடுத்தான்; அவன் வியக்கத்தக்க காரியம் செய்வதற்காக, பீமன் பெரிய மண் சுமையை எடுத்தான். நூறாயிரம் மண்சுமைகளினால் குயவனைச் சந்தோஷப் படுத்தினான். பிக்ஷையை விடாமல் எடுத்துக்கொண்டே மண்பாண்டங்களை அடிக்கடி செய்தான். அந்த மண்பாத்திரத்தை எடுத்துக்கொண்டுவந்த பீமனைக்கண்டு ஜனங்கள் நகைத்துப் பரிகாசம் செய்தனர். பலவகையான பக்ஷணங்களையும் போஜனங்களையும் கொணர்ந்து போட்டனர். இவ்வாறாகவே எப்போதும் புஜித்த பிறகு, தாயாரிடம் ஏகாந்தத்தில், 'அம்மா! முன்னே சிறந்த அன்னத்தினால் வளர்க்கப்பட்ட நான் வயிறு நிரம்பாமலே இருக்கிறேன' என்று சொன்னான். பிறகு, ஒருகால் அந்தப் புருஷச்ரேஷ்டர்கள் பிக்ஷைக்குப்போயினர். பீமஸேனன்மட்டும் குந்தியுடன் சேர்ந்து அங்கே இருந்தான். பாரதரே! அப்போது பிராம்மணன் வஸிக்குமிடத்தில் துக்கத்தினாலுண்டான மிகப்பயங்கரமான பெரிரைச்சல் கிளம்பினதைக் குந்தி செவியுற்றாள். அரசரே! அதிகமாகக் கதறிப் புலம்புகிற அவர்களைக்கண்டு அந்தக்குந்தி தயையினாலும் நல்ல சுபாவத்தினாலும் தாங்கவில்லை. நல்லவளான குந்தி மனத்திலுண்டான துக்கத்தினால் கலக்கப்பட்டவள்போலத் தயையுடன் பீமனை நோக்கிப் பின்வருமாறு சொல்லலானாள்: 'புத்திரனே! பிராம்மணன் வீட்டில் திருதராஷ்டிரன்பிள்ளைக்குத் தெரியாமலும் கௌரவிக்கப் பெற்றும் வியஸனத்தைவிட்டுப் மிகச்சுகமாக வஸிக்கிறோம். புத்திரனே! அதனால், நான் இந்தப் பிராம்மணனுக்கு ஸுகமாக வஸித்தவர்கள் எந்த இஷ்டத்தைச் செய்வரோ அவ்வகையான அந்த இஷ்டத்தை எப்போது செய்வேனென்று ஸதாகாலமும் நினைத்துக்கொண்டிருக்கிறேன். குழந்தாய்! எவனிடத்தில் செய்ந்நன்றிகெடாமலிருக்கிறதோ அவன்மாத்திரந்தான் மனிதன். மற்றொருவன் இவனுக்கு எவ்வளவு செய்வனோ அதைவிட மிகுதியாக அவனுக்கு இவன் செய்யக்கடவன். இந்தப் பிராம்மணனுக்கு இந்தத்துயரம் நிச்சயமாக வந்துவிட்டது. ஆதலால், இந்தச் சமயத்தில் உதவிசெய்தோ

மானால் புண்ணியமுண்டாகும்' என்றாள். பீமன் (அதைக்கேட்டு), 'இவனுக்கு என்ன துன்பம் யாரால் உண்டாயிற்றென்று தெரிந்து கொள். தெரிந்துகொண்டபிறகு, மிக்க அசாத்தியமாயினும் அதைச் செய்வேன்' என்று சொன்னான்.

அரசரே! அவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்போது, மறுபடியும் அந்தப் பிராம்மணனும் அவனது மனைவியும் அழுவதனா லுண்டான கூசசலேச செவியுற்றனர். பிறகு, குந்தி, கட்டப்பட்ட கன்றையுடைய பசுவைப்போல அந்தமஹாத்மாவான பிராம்மண னுடைய அந்தப்புரத்தில் துரிதமாக நுழைந்தாள் அப்போது அங்கே மனைவியோடும் பிள்ளையோடும் பெண்ணோடுங்கூட முகம்வேறுபட் டிருந்த அந்தப்பிராம்மணன் பேசுகிறான். 'ஸமில்லாததும் பயனற்ற தும் துன்பத்திற்குக்காரணமும் பிறர்க்குட்பட்டதும் மிக்கவெறுப் புக்கு இடமுமாகிய இவ்வுலகவாழ்க்கை எதற்கு? பிழைத்திருப்பதில் துயரம் அதிகம் பிழைத்திருப்பதில் தாபமதிகம் உயிர்வாழ்க்கையி லிருப்பவனுக்கு இரட்டைகள் (அவையாவன: ஸுகதுக்கம், லாப நஷ்டம், ஜயாபஜயம், சீதோஷ்ணம் முதலியவைகள்) வருவது தவ றாது. ஆத்மா ஒன்றுதான் தர்மார்த்தகாமங்களை அனுபவிக்கின் றது. இவைகளில் பிரிவும் முடிவில்லாப் பெருந்துயரம் சிலர் வீட் டைச் சிலாக்கியமாகச் சொல்லுகின்றனர்* அஃது எவ்வகையிலு மில்லை. அர்த்தத்தையடைந்தால் எல்லா † நரகங்களும் வருகின்றன. பொருளீட்டமுயலவது பெருந்துயரம் பொருள் கிடைத்தபின் அதற்குமேலான துயரம். பொருளில் ஆசைஉண்டானவனுக்கு அது விலகினபோது மிகப்பெருந்துயரம் உண்டாகிறது. மனுக்குத் தான் விரும்பின திரவியலாபங்கள் எவ்வளவு உண்டாகின்றனவோ அவ்வளவு வ்யஸனமென்னும் ஆணிகள் அவன் உள்ளத்தில் நாட் டப்படுகின்றன. கொஞ்சகாலமிருக்கத்தக்கதும் மஹாபயமுள்ளது மாகிய அவ்விதமான இந்த உயிர்வாழ்க்கையை அடைந்து பாரியை யோடுஞ்சேர்ந்த எனக்கு வைராக்கியம் கிடைக்கவில்லை இந்த ஆபத்திலிருந்து எதனால விடுபடுவேனோ அந்த உபாயம் எனக்குத் தெரியவில்லை. பிள்ளை, பெண்டிர்களுடன்கூட உபத்திரவமில்லாத இடத்திற்கு ஓடிப்போவேன் பிராமணப்பெண்ணே! எங்கே க்ஷேம மோ அங்கே போவதற்கு நான் முன்னே முயற்சிசெய்தேன். அஃது

* தார்லபமானது என்பது.

† துன்பங்களும்.

உனக்குத்தெரியும். ஆனால் நீ என்சொல்லைக்கேட்கவில்லை. அறிவுகெட்டவளே! என்னால் பலமுறை வேண்டப்பட்டும், 'இங்கு பிறந்தேன்; இங்கு வளர்ந்தேன்; இங்கு என் தந்தையும் தாயுமிருக்கின்றனர்' என்று சொன்னையல்லவா? கிழவனாகிய உன்பிதா வெகுநாளைக்குமுன்னே ஸ்வர்க்கம் சென்றான் உன் தாயும் அப்படியேயானாள். உறவினர்களும் முன்னேயிருந்தனர். அந்தஇடத்தில்வஸிப்பதில்என்ன ஆசை? எங்கே போஜனத்துக்குத் தடையிராதோ எங்கே ஸ்திரீயின்பிறந்தவீடு கட்டுப்படுத்தாதோ அந்தத்தேசம் மிக்கதூரத்திலிருந்தபோதிலும் மனிதன் கருடனைப்போலவும் ஹம்ஸத்தைப்போலவும் செல்லவேண்டும். பந்துக்களை விரும்பி, நான் சொன்னதை நீ கேட்காமலிருந்ததனால், எனக்கு மிக்கதுயரத்தை உண்டாக்குகின்ற அந்தப் புத்திரனென்னும் பந்துவின்மரணம் இதோ நேர்ந்திருக்கின்றது. அல்லது இஃது என் மரணமேதான். ஏனெனில், நான் ஜீவித்திருந்து என் உறவாகிய எவனையும் கொடியவனைப்போல் விடச்சக்தியற்றவன். எப்பொழுதும் என்னுடன் கூடவே தர்மத்தைச் செய்பவளும், ஐம்புலன்களையும்ஜயித்தவளும், எனக்குத் தாய்போன்றவளும், எனக்குச் சிநேகிதையும், தேவர்களால் முக்கியமாக விதிக்கப்பட்ட சிறந்ததான ஆதரவும், என் தாய்தந்தையரால் ஏற்படுத்தப்பட்டவளும், எப்போதும் கிருஹஸ்தாச்ரமத்தில் பாகமுள்ளவளும், நல்லகுலத்திற் பிறந்தவளும், நல்லொழுக்கமுள்ளவளும், புத்ரஸந்தானமுள்ளவளும், கற்புள்ளவளும், இன்னாதனசெய்யாதவளும், எப்போதும்ஒத்திருப்பவளுமான பாரியையாகிய உன்னை முறைப்படி வரித்து மந்திரபூர்வமாக விவாஹம்செய்துகொண்டு என் உயிருக்காகவிடுவதற்கு நான் ஸமர்த்தனல்லேன். பருவம்வராத சிறுமியும் பின் லக்ஷணங்கள் சரீரத்தில் உண்டாகாதவளும் மஹாத்மாவாகிய பிரம்மதேவனால் கணவனுடைய உபயோகத்திற்காக நிதியைப்போல் நம்மிடம் வைக்கப்பட்டவளுமான எனது புதல்வியை நானே விட்டுவிட என்னால் எவ்வாறு முடியும்? எவளால் நானும் என்பிதிர்க்களும் தௌஹித்ரனால் வரத்தக்கலோகங்களை எதிர்பார்க்கிறோமோ அந்தப்பெண்ணை நானே உண்டுபண்ணி எவ்வாறு விடத்துணிவேன்? சில மனிதர்கள் தந்தைக்குப் புத்திரனிடம் ஸ்நேகம் அதிகமென்று நினைக்கின்றனர்; மற்றும் சிலர் பெண்ணினிடம் அதிகமென்று நினைக்கின்றனர் எனக்கு இருவரும் ஸமமென்றே அபிப்பிராயம். எவளிடத்தில் புண்ணியலோகங்களும்சந்ததியும் சந்தோஷமும் எப்போதும் இருக்கின்றனவோ குற்றமில்லாமலிருக்கிற அந்தப்பெண்குழந்தையை நானெவ்வாறு விடத்துணிவேன்?

என் புத்திரனை விடுவதேது? எவனைப்பற்றி மிகுந்த ஸுகத்தையும் ஸ்வர்க்கத்திலுள்ள பலன்களையும் நான் எதிர்பார்க்கலாமோ, ஜனித்தவுடன் எவனுடைய முகத்தைக்கண்டு பிதிர்க்கள் ஸ்வர்க்கம் சென்றனரோ, பிறந்தவுடன் எவனுடைய மஹிமையினால் நான் பிதிர்க்களின் கடனிலிருந்து விடுபட்டேனோ எனக்குப்பிரியனும் குலத்தைக் கரையேற்றுகிறவனும் எனக்கு எஜமானனுமாகிய என் மூத்தகுமாரனை அந்தக் குழந்தையை நான் எப்படிவிடமாட்டுவேன்? எனக்குப் பிண்டதர்ப்பணங்கள்கொடுக்கும் நிதியாகிய அருமைப்புதல்வனை எவ்வாறு விடுவேன்? என்னையாவது என்புத்ரனையாவது உன்னையாவது உன் பெண்ணையாவது விடுவது இதோ நேர்ந்திருக்கிறது. அது நாம் இங்கே வஸித்ததின்பலன். பெண்ணே! என்சொல்லை நீ கேட்கவில்லை. அதன்பலனை அனுபவி; அல்லது நானே சாவதற்கும் என் ஒருபுத்திரனையாவது உன்னையாவது பெண்ணையாவது விடுவதற்கும் சக்தியுள்ளவனல்லன். நான் ஜீவித்திருந்து, தான் தப்பித்துக் கொள்வதற்காகக் கொடியவனைப்போல் ஒருபந்துவையும் விடச்சக்தியுள்ளவனல்லன். நான் என் சரீரத்தைவிட்டு யமலோகம் சென்றால் என்னாலும் உன்னாலும் விடப்பட்ட இவர்கள் இவ்விடத்தில் ஜீவித்திருக்க முடியாதவர்கள். இவர்களில் யாரைவிடுவதும் கொடியதே; அறிஞரால்இகழப்பட்டது. நான் ஆத்மத்யாகஞ்செய்தாலும்,இவர்கள் நானில்லாமல் இறந்துபோவர். அதனால், நான் சங்கடமான ஆபத்தை அடைந்திருக்கிறேன். இதைத் தாண்டமுடியவில்லை. ஐயோ! சீ! நான் என்பந்துக்களுடன்கூட எந்தவழிச்செல்வேன்? எல்லாருடனுங் கூட இறந்துபோவது சிலாக்கியம். நான்ஜீவித்திருப்பது தகுதியன்று' என்றான்.

---

## நூற்றெழுபத்திரண்டாவது அத்தியாயம்.

## பகவதபர்வம். (தொடர்ச்சி.)

### (பிராமணனைப்பார்த்து அவன்பத்தினி சொல்வது.)

பிராமணன்மனைவி சொல்லுகிறாள். 'நீர் ஸாமான்யமனிதனைப் போல் பரிதாபப்படுவது ஒருபோதும் தகாது. வித்வானாகிய உமக்கு

இது பரிதாபகாலமாக இருக்கவில்லை. இவ்வுலகத்திலுள்ள மனிதரனைவரும் அவசியம் மரணமடைய வேண்டியவர்தாம். அவசியம் வரத்தக்க இந்த விஷயத்தில் வருத்தமில்லை. மனைவியும் மைந்தனும் மகளும் மற்றயாவும் தனக்காகவென்று நினைக்கப்படுகின்றன. நீர் நல்லறிவினால் துன்பத்தைவிடும். நானே அங்கே போவேன். தன் உயிரையும்விட்டுத் தன் கணவனுக்கு நன்மைசெய்வதுதான் இவ்வுலகத்தில் பெண்களுக்குப் பழமையான முக்கிய தர்மம். அப்படிச் செய்வது பரலோகத்திற்குச் செய்யவேண்டியகர்மம் செய்ததாகிறது; உமக்கும் இப்போது ஸௌக்கியத்தைச் செய்வதாகிறது; பரலோகத்திலும் அழியாத பயனுள்ளதாயிருக்கிறது; இவ்வுலகத்திலும் புகழையுண்டுபண்ணுகிறது. நான் உமக்குச் சொல்லப்போவதும் ஒரு பெரியதர்மந்தான். இதில் உமக்கு அர்த்தமும் தர்மமும் மிகுதியாகக் காணப்படுகின்றன. பாரியை எதற்காக விரும்பப்படுகிறாளோ அந்தப்பிரயோஜனமாகிய ஒருபுத்திரியையும் புத்ரனையும் நீர் என்னிடம் அடைந்திருக்கிறீர். உம்மால் நான் கடனில்லாதவளாகச் செய்யப்பட்டேன். பெண்ணையும் பிள்ளையையும் வளர்ப்பதற்கும் காப்பதற்கும் நீர் எவ்வாறு சக்தியுள்ளவரோ அவ்வாறு போஷண ரக்ஷணங்கள் செய்ய நான் திறமையுள்ளவளல்லேன். என்னுடைய பிராணன் தனம் எல்லாவற்றிற்கும் ஈசுவரரே! நீங்களில்லாமல் புத்திரியும் புத்திரனும் எனக்கு எவ்வாறு உண்டாவர்? நான் எவ்வாறு குழந்தைகளைக்காப்பேன்? நீங்களில்லாமல் கணவனில்லாத அநாதையும் இளங்குழந்தைக்காரியுமாகிய நான், உங்களைவிட்டு எவ்வாறு யோக்கியர்கள் சென்ற மார்க்கத்திலிருந்துகொண்டு இவ்விருகுழந்தைகளையும் வளர்ப்பேன்? உம்முடைய ஸம்பந்தத்திற்குத் தகாத *கர்வமுள்ளவர்களால் கேட்கப்பட்ட இந்தப்பெண்ணைக் காப்பாற்றுவதற்கு என்னால் எவ்வாறு முடியும்? தரையிற் போடப்பட்ட மாம்ஸத்தைப் பறவைகள் எவ்வாறு விரும்புகின்றனவோ அவ்வாறே புருஷனில்லாத ஸ்திரீயை எல்லா ஜனங்களும் விரும்புகின்றனர். பிராமணோத்தமரே! புருஷனில்லாமல் கெட்டவர்களால் விரும்பப்பட்டு மனம் தடுமாறும்படி செய்யப்பட்ட நான் ஸாது ஜனங்கள் ஒப்பினமார்க்கத்தில் நிற்கச் சக்தியுள்ளவளாகமாட்டேன், நாதரே! துஷ்டஜனங்கள் மிகுந்த இவ்வுலகத்தில் பெண்ஜன்மம் இழிவானது. கன்னிகையாயிருக்கும்போது தாய்தந்தையர் வசத்திலும், விவாக

---

* குல ஒழுக்கமில்லாதவர்கள்.

மானபின் பர்த்தாவின் வசத்திலும், இவர்களில்லாதபோது புத்திரன் வசத்திலும் இருக்கவேண்டும். ஸ்வதந்திரையான ஸ்திரீ இகழப் பட்டவள். நெய்யில் நனைக்கப்பட்ட வஸ்திரத்துண்டு நாய்களால் எப்படியிழுக்கப்படுகிறதோ அப்படிப் பெண்களுக்கு நாதனில்லாம லிருப்பது துஷ்டர்களுக்கு வாயில் திறந்துவிட்டது போலல்லவா? உமது குலத்திற்கு ஏகபுத்திரனை குற்றமில்லாத இந்தக் குழந்தை யைத் தந்தைபாட்டன் சென்றவழியில் நடத்துவதற்கு என்னால் எவ்வாறு முடியும்? நாதனற்று எல்லாம்போய்விட்ட இந்தக்குழந் தைக்கு நாம் விரும்பின கல்விமுதலிய குணங்களைத் தர்மங்தெரிந்தநீர் செய்வதுபோல நான் எவ்வாறு கற்பிக்கத் திறமையுள்ளவளாவேன்? நாதனில்லாத உமது இந்தப் பெண்குழந்தையையும் சூத்ரர்கள் வேதாத்யயனத்தை விரும்புவதுபோலத் தகாதவர்கள் என்னை நிரா கரித்து விரும்புவார். அப்படி விரும்பப்பட்டவளை நான் கொடுக்க விரும்பாமலிருப்பேனாயின் நற்குணங்கள் நிரம்பின இவளை அவர்கள் யஜ்ஞத்திலிருந்த ஹவிஸ்ஸைக் காக்கைகள் எடுப்பதுபோலப் பலாத் காரமாகக் கொண்டுபோவார். பிராம்மணரே! உமது இந்தப் புத்திரி அயோக்கியர்களிடம் அகப்பட்டுக்கொண்டு நமக்குத் தகாதிருப்பதைப் பார்த்தும் உலகத்திலுள்ள கர்வித்தமனிதர்களால் அவமதிக்கப்பெற் றும் என்னையறியாமலே நான் இறந்துபோவேன்; நிச்சயம். என்னா லும் தங்களாலும் விடப்பட்ட இந்த நமது ஸந்ததிகளாகிய இருகுழ ந்தைகளும், ஜலம்வற்றினதினால் மத்ஸ்யங்கள் எவ்வாறோ அவ்வாறு அழிந்துபோவர்; ஸந்தேகமில்லை. நீங்கள் விட்டுவிட்டால் இவ்வாறு அவசியம் மூவர் அழிவார்களென்பதில் ஸந்தேகமில்லை. ஆதலால், நீர் என்னை (ராக்ஷஸனுக்கு இரையாக) விட்டுவிடுவது உசிதம். ஓ! பிராமணரே! கணவனுக்குமுன் பரலோகமடைவது புத்ரனுள்ள ஸ்திரீகளுக்குப் பெரும்பாக்கியமென்று தர்மசாஸ்திரஜ்ஞர்கள் அறிகி ன்றனர். இவ்வுலகத்தில் புத்திரர்களிடத்தில் திரிவது அஸௌக்கியம். எவள் மஞ்சள், மை, புஷ்பம்முதலிய ஸுமங்கலி லக்ஷணங்க ளோடுகூடியவளாயிருந்து பர்த்தாவின் பாதங்களில் மனம் வைத்து அவன்கொடுத்த தர்ப்பணஜலத்தைப் பானஞ்செய்பவளாகக் கணவன் முன்னிலையில் மரணமடைகிறாளோ அவள் பார்வதீலோகத்தையடை கிறாள். பார்வதிக்குத் தோழியாயிருந்து அந்தப் பர்வதராஜகன்னிகை யுடன்கூட மகிழ்ந்திருக்கிறாள். தந்தையும் ஸ்வல்பம் கொடுக்கிறான்; தாயும் ஸ்வல்பம்கொடுக்கிறாள்; புதல்வனும் ஸ்வல்பம்கொடுக்கிறான்.

அளவற்றதைக்கொடுப்பவனாகிய கணவனை எவள் பூஜிக்கமாட்டாள்? சிலாக்கியனான பதியின்றி ஆசிரமங்களும் அக்னிஹோத்ரங்களும் ஜபங்களும் ஹோமங்களும் விரதங்களும் ஸ்திரீகள் செய்யத்தகாதவை. பொறுமையும் தூய்மையும் உபவாஸமுமாகிய இவ்வளவுதாம் பெண்களுக்கு விதிக்கப்பட்டுள்ளன. இந்தப்புத்திரனும் இந்தப் புத்திரியும் என் உறவினரும் என்னால் விடப்பட்டனர் என்னுயிரும் உமக்காகத்தானிருக்கிறது பலவகையான யாகம், தவம், நியமம், கொடை இவையெல்லாவற்றையும்காட்டிலும் கணவனது விருப்பத்தையும் நன்மையையும் விடாமலிருப்பதுதான் பெண்ணுக்குச் சிறப்பானது. ஆதலால், மிகவும் சாஸ்திரசம்மதமான இந்தத்தர்மத்தை நான் செய்யவிரும்புகிறேன் இது, உமக்கும் குலத்துக்கும் பிரியமும் அனுகூலமுமானது. புத்திரர்களும் திரவியங்களும் அன்புள்ள ஸ்நேகிதர்களும் பாரியையும் ஆபத்தர்மத்தில் விடுவதற்காக விரும்பப்படுகிறவர்களென்பது ஸாதுக்களுடைய ஸம்மதம். ஆபத்காலத்திற்காகத் தனத்தைக்காப்பாற்றிவைக்கவேண்டும். தனத்தினால் மனைவியைக்காப்பாற்றவேண்டும். தனத்தினாலும் மனைவியினாலும் தன்னை எப்போதும் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். பாரியை புத்திரன் தனம் கிருகம் இவையெல்லாம் திருஷ்டபலனுக்காகவும் அதிர்ஷ்டபலனுக்காகவும் ஸம்பாதிக்கவேண்டியவையென்பது வித்வான்களுடைய நிச்சயம். குலமனைத்தும் ஒருதட்டு; குலத்தைவிருத்திசெய்யும் தான் ஒருதட்டு; வித்வான்களே! இவ்விரண்டில் எது அதிகம்? குலத்தைவிடத் தானே அதிகம். தானிருப்பதினால் தனக்குப் பதினான்கு லோகங்களுமிருக்கின்றன. பிராம்மணசிரேஷ்டரே! ஆதலால், நீர் உம்மைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். தானில்லாதபோது அவனுக்கு இவ்வுலகத்தில் எதுவுமில்லை. ஆதலால், இந்தஜகமனைத்தும் தனக்கொப்பாவதில்லை. ஆதலால், நீர் என்னால் காரியத்தைச்செய்து கொள்ளும். உம்மால் உம்மைக்கரையேற்றும். பூஜ்யரே! எனக்கு விடைகொடும். என்குழந்தைகளைக் காப்பாற்றும். தர்மந்தெரிந்தவர்கள் ஸ்திரீகளைக்கொல்லக்கூடாதென்று தர்மசாஸ்திரங்களிற் சொல்லுகின்றனர். ராக்ஷஸர்களுக்கும் தர்மந்தெரியுமென்று சொல்லுகின்றனர். அவன் என்னைக் கொல்லாமலுமிருக்கலாம். புருஷர்களை வதஞ்செய்வதில் ஸந்தேகமில்லை. ஸ்திரீகளைக் கொல்வது ஸந்தேகம். தர்மந்தெரிந்தவரே! ஆதலால், என்னையே நீர் அனுப்பத்தகும். போகங்களை அனுபவித்தேன்; விரும்பினவற்றையடைந்தேன்; தர்மானுஷ்டானஞ்

செய்தேன். உமக்குச் சுச்ரூஷை செய்ததனால் எனக்குண்டான கீர்த்தியும் ஒப்பற்றது. உம்மால் பிரியமான ஸந்ததியையும் பெற்றேன். மரணம் என்னை வருத்தாது. புத்திரர்களுண்டானவளும் முதிர்ந்தவளும் எப்போதும் உம்முடைய விருப்பத்தையே விரும்புகிறவளுமாயிருக்கிறேன். இதையெல்லாம் ஆராய்ந்து, நான் இந்த விஷயத்தில் ஆரம்பத்தைச் செய்கிறேன். பூஜ்யரே! என்னைவிட்டபிறகும் நீர் வேறொரு ஸ்திரீயையடைந்தாலும் அடைவீர். அதனால் உமது தர்மம் மறுபடியும் நிலைபெற்றதாகும். பிரியரே! புருஷர்களுக்கு அனேகம் பத்தினிகளிருப்பது அதர்மமுமாகாது. பெண்களுக்குமட்டில் முதல் புருஷனை அதிக்கிரமிப்பதில் மிகப்பெரிய பாவமிருக்கிறது. இவைகளெல்லாவற்றையும் பிராணத்தியாகம் நிஷித்தமென்பதையும் ஆராய்ந்து, நீர் இப்போது உம்மையும் உமது குலத்தையும் இந்தக்குழந்தைகளையும் விரைவில் காப்பாற்றக்கடவீர்" என்றாள். பாரதரே! அவளால் இவ்வாறு சொல்லப்பட்ட பர்த்தா அவளைத் தழுவி அவளுடன் கூடவே மிக்கதுயரமடைந்து மெல்லிய குரலோடு கண்ணீர் விட்டழுதான். "அன்புள்ளவளே! அழகான இடையுள்ளவளே! நீ இவ்வாறு பேசாதே; இங்கேயே இரு. ஞானமுள்ளவன் மனைவியையும் புதல்வர்களையும் ஒருபோதும் விடத்தகாது. புத்தியுள்ள புருஷன் இவ்வுலகத்தில் ஸ்திரீயை முக்கியமாக ரக்ஷிக்கவேண்டும். எந்தக்காலத்திலும் விடத்தகாதவர்களாகிய இவர்களைவிட்டுப் புருஷன் ஜீவிப்பானாயின் அவன் தர்மார்த்தகாமமோக்ஷங்களுள் ஒன்றையும் சரியாக அறியான்" என்று பிராமணன் சொன்னான்.

---

## நூற்றெழுபத்து மூன்றாவது அத்தியாயம்

## பகவதபர்வம். (தொடர்ச்சி.)

**(பிராமணனைப்பார்த்துப் பெண் சொன்னதும், சிறுபிள்ளையாகிய அவர்களுடைய புதல்வன் வசனத்தைக்கேட்டுக் கொஞ்சம் ஸந்தோஷமடைந்த ஸமயத்தில் குந்தி அவர்களிடம் சென்றதும்.)**

அளவுக்கு மிஞ்சித் துக்கப்படுகின்ற அவ்விருவர்களுடையசொல்லையும்கேட்டு உடனே துக்கத்தினால் மாறுபட்ட அங்கத்தோடுகூடிய அவர்களுடையபெண், அவ்விருவரையும் நோக்கிப் பேசத்தொடங்கினாள். "ஏன் இவ்வாறு அதிக துக்கத்தினால் பீடிக்கப்பட்டவர்களாக

அநாதைகளைப்போல் அழுகிறீர்கள்? என் சொல்லும் கேட்கப்பட வேண்டும். கேட்டபின் யுக்தத்தைச் செய்யலாம். தர்மப்பிரகாரம் என்னை நீங்கள் விடவேண்டும். இதில் சந்தேகமில்லை. விடத்தக்கவளான என்னை விட்டுவிட்டு என் ஒருத்தியால் எல்லாவற்றையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள். தன்னை ஆபத்திலிருந்து தாண்டுவிக்குமென்பதற்காகத்தான் ஸந்ததி விரும்பப்படுகிறது. இந்தக்காலம் நேர்ந்தபோது தெப்பத்தினால் தாண்டுவதுபோல் என்னால் ஆபத்தைத் தாண்டுங்கள். பிராமணரே! இவ்விடத்திலாவது துக்கத்திலிருந்து தாண்டுவிக்கவேண்டும்; பரலோகத்திலாவது தாண்டுவிக்கவேண்டும். எவ்வகையிலும் தாண்டுவிக்கிற புத்திரன்தான் புத்திரனென்று தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள். * கூடஸ்தர்கள் என்னிடத்தில் † தௌஹித்திரர்களை எப்போதும் விரும்புகின்றனர். அதனால், நானே பிதாவின் உயிர்போகாமல் காப்பாற்றுவேன். எனது சகோதரன் குழந்தை. நீர் பரலோகம் சென்றால், அவன் சீக்கிரகாலத்திலேயே இறந்துபோவானென்பது நிச்சயம். தந்தையும் ஸ்வர்க்கம் சென்று என் தம்பியும் நாசமடைந்தால் நம்முடைய பிதிர்க்களுக்குப் பிண்டம் விட்டுப்போம். அஃது அவர்களுக்கு வெறுப்பையுண்டாக்கும். துக்கப்பட்டு வழக்கமில்லாத நான் தாயாலும் தந்தையாலும் ஸஹோதரனாலும் விடப்பட்டவளாகத் துக்கத்துக்குமேல் பெருந்துக்கத்தை அடைந்து இறப்பேனென்பது நிச்சயம். நீர் மனோவியாதியில்லாமல் விடுபட்டீராயின், தாயாரும் குழந்தையான என்ஸஹோதரனும் குலத்தின் புத்ரஸந்தானமும் பிதிர்க்களின் பிண்டமும் நிச்சயமாக நிலைத்து நிற்கும். 'தானே புத்திரன்; மனைவி தனக்குத்துணை; பெண்ணென்பது துயரம்' என்பர். ஆதலால், நீர் உம்மைத் துக்கத்திலிருந்து விடுவித்துக்கொள்ளும்; என்னையும் தர்மத்திற் பிரவிர்த்திக்கச் செய்யும். தந்தையே! அசக்தையும் சிறுபெண்ணுமாகிய நான் நீரில்லாமல் அநாதையாய் எங்கேயோ ஓரிடத்திற்குச்சென்று எப்போதும் விசனமுள்ளவளாயிருப்பேன். அப்படியில்லாமல் இந்தக் குலத்துக்கு விமோசனம் செய்வேனாயின் செயற்கரிய கருமம் செய்ததனால் பயன் பெற்றவளாவேன். பிராம்மணோத்தமரே! அவ்வாறன்றி என்னைவிட்டு நீர் அங்கே போவீராயின், நான் பீடிக்கப்பட்டவளாவேன். ஆதலால், என்னையும் கவனி

* பிதிர்க்கள்.

† பெண்வயிற்றுப்பிள்ளைகள்.

யும். சிறந்தஸாதுவே! ஆதலால், எங்களுக்காகவும் தர்மத்திற்காகவும் ஸந்ததிக்காகவும் உம்மைக்காப்பாற்றிக்கொள்ளும். விடத்தக்க என்னை விட்டுவிடும். அவசியம் செய்யவேண்டிய காரியத்தில் உமக்கு இந்தக்காலம் தாண்டிப்போகலாகாது. நீர் ஸ்வர்க்கம் போய்விட்டால் அயலாரிடம் சோற்றை யாசித்துக்கொண்டு நாயைப்போல ஓடுவோம். அதற்குமேற்பட்ட துயரம் யாது? நீர் தீங்கில்லாமல் பந்துக்களுடன் இந்தக்கஷ்டத்திலிருந்து விடுபட்டால் இறக்காதவள் போலவே பரலோகத்தில் சுகமாக வசித்துக்கொண்டிருப்பேன். * இவ்வுலகத்தில் கொடுப்பதிலேதான் தேவர்களும் பிதிர்க்களும் இருக்கிறார்களென்று நமக்குக்கேள்வி. உம்மால் கொடுக்கப்பட்ட ஜலதர்ப்பணத்தினால் எனக்கு ஸுகமே உண்டாகும். பிதாவே! இவ்வாறு † இவ்விரண்டையும் பார்த்து உமக்கும் அன்னைக்கும் உமது புத்திரனுக்கும் எது ஹிதமோ அதைச்செய்யும். தாய்க்கும் தகப்பனுக்கும் குணமுள்ள புத்திரர்கள் பிறப்பர். புத்ரனுக்குமட்டும் பெற்றவர்கள் மறுபடியும் ஒருபோதும் கிடைக்கமாட்டார்கள்" என்றாள். இவ்வாறு அந்தப்பெண்ணின் அநேகவிதமான புலம்பலைக்கேட்டு, தந்தைதாய் அந்தப்பெண் இம்மூவரும் அழுதனர். அப்போது, அவர்களெல்லாரும் அழுவதைக்கண்டு, உடனே அந்தச் சிறுபுதல்வன் மலர்ந்தகண்களுடன் மதுரமான மழலைச்சொல்லினால், "அப்பா! அழாதே; அம்மா! அழாதே; அக்காள்! அழாதே" என்று சொல்லி அவர்களெல்லாரையும்பார்த்துச் சிரித்துக்கொண்டு ஒவ்வொருவர் ஸமீபத்திலும் போனான். பிறகு, அந்தக் குழந்தை சந்தோஷத்துடன் ஒரு துரும்பையெடுத்து, "மனிதனைத்தின்கிற ராக்ஷஸனை நான் இதனால் கொல்வேன்" என்று மறுபடியும் சொல்லினன். துக்கத்தினால், அவ்வாறு பீடிக்கப்பட்டிருந்தும் குழந்தையின் அந்த மழலைச்சொல்லைக்கேட்டபிறகு அவர்களுக்குப் பெரிய ஸந்தோஷமுண்டாயிற்று. குந்தி இது ஸமயமென்றறிந்து அவர்களின் ஸமீபம் சென்று, இறந்துபோனவரை அமிர்தத்தால் பிழைப்பு மூட்டுவதுபோல் அவர்களைப் பிழைப்பு மூட்டுகிறவளாகப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினாள்.

---

* ஹோமம் தர்ப்பணம் முதலியவற்றை நம்பியிருப்பவர்.

† நம்மிருவரைக் கொடுப்பதில் உள்ள குணதோஷங்களை.

## நூற்றெழுபத்துநான்காவது அத்தியாயம்.

## பகவதபர்வம். (தொடர்ச்சி.)



(குந்தி அவர்களை, அழுவதற்குக் காரணம் கேட்க, பிராமணன் பகாஸுரன் விருத்தாந்தம் சொல்வது.)

குந்தி, "இந்தத்துக்கம் என்ன காரணத்தினாலுண்டானது? ஸரியாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். தெரிந்துகொண்ட பிறகு, நிவிர்த்தி செய்ய முடியுமானால் நிவிர்த்திசெய்யவும் செய்வேன்" என்று சொன்னாள். அதன்மேல் பிராமணன் சொல்லுகிறான்:—

"தபோதனையே! நீ சொல்லுவது ஸாதுக்களுக்குப் பொருந்தியது தான். ஆனால், இந்தத்துயரத்தைவிலக்க மனிதரால் முடியாது. ஆகிலும், இந்தத்துக்கத்தின் உற்பத்தியைச் சரியாகச் சொல்லுகிறேன். அன்புள்ளவளே! முடியுமானாலும் முடியாமற்போமானாலும் உள்ள விஷயத்தைக் கேள். இந்த நகரத்தின் ஸமீபத்தில் பகன் என்னும் ராக்ஷஸன் வஸிக்கிறான். இதற்கு இரண்டு குரோசதூரத்தில் யமுனையின்உற்பத்தியில் ஒரு குகையிருக்கிறது. அதில்கொடியவனும் கொல்லுவதில் விருப்பமுள்ளவனும் மனிதர்களைத்தின்பவனும் ராக்ஷஸகுலநீசனுமாகிய பகன் என்றுபெயருள்ள அந்தத்துஷ்டன் வஸிக்கிறான். மிகுந்தபலமுள்ள அவன் இந்தத்தேசத்திற்கும் நகரத்திற்கும் தலைவனாயிருக்கிறான். துர்ப்புத்தியுள்ள அந்த ராக்ஷஸன் மனிதர்மாமிசத்தினாலேயே வளர்ந்தவன். அந்தராக்ஷஸன் வியாபகமுள்ளவன்; நினைத்த ரூபமெடுப்பவன்; மஹாபலசாலி. அவனால் இந்த நகரம் பீடிக்கப்பட்டு இது பதின்மூன்றாவதுவருஷம். அவனைப் பற்றி வேறுராஜாக்களுடைய சேனையினாலும் புலிகரடி முதலிய பிராணிகளாலும் எங்களுக்குப் பயம் உண்டாகவில்லை. மனிதரைத் தின்னும் அந்தக்கொடியபாவியினால் பக்ஷிக்கப்பட்ட இந்த நாதனற்ற நகரம், ரக்ஷிக்கின்ற பிரபுவை அடையாமலிருக்கிறது. அந்தத்துஷ்டன் அந்தக்குகையில் வஸித்துக்கொண்டு ஸ்திரீகள் பாலர்கள் விருத்தர்கள் யுவாக்கள் முதலிய எல்லாஜனங்களையும் எப்போதும் வருத்தி வருகிறான். இங்கே பிராமணஸ்ரேஷ்டர்களினால் அந்தத் துராத்மாவான ராக்ஷஸன் மந்திரங்களினாலும் ஹோமங்களினாலும் போஜனங்களினாலும் துதிக்கவும் பூஜிக்கவும் பெற்றான். அந்த ராக்ஷஸன் எப்போது எல்லாரையும் இவ்வாறு கொன்றுகொண்டிருந்தானோ அப்

போது, பிராமணர்களனைவரும் ஒரு நியமம் செய்யும்படி அவனைக் கேட்டுக்கொண்டனர். "ராக்ஷஸனே! நீ நினைத்தபடி கொல்லாதே. பிரபுவே! நாங்கள் உனக்கு வேண்டிய மாம்ஸங்களையும் அன்னங்களையும் எப்போதும் முறையாகக்கொடுத்துவருவோம். மாம்ஸத்தோடும் எள்ளுப்பொடியோடும் நெய்யோடும் கறிகாய்களோடுங்கூடிய அன்னத்தையும், எள்ளுச்சேர்ந்த மூன்றுவகையான பருப்பு உருண்டைகளையும், பொரிகளையும், அப்பங்களையும், கள் சாராயங்களையும், காய்ச்சினவையும் காய்ச்சாதவையுமான பானங்கள் நிரம்பினகுடங்களையும், பக்குவமும் அபக்குவமுமாயுள்ள பெரிய மாம்ஸங்களையும், சமைத்தவையும் சமைக்காதவையுமான காட்டிலுள்ள எருமை பன்றிகராதிகளின் மாம்ஸங்களையும், பல நெய்க்குடங்களையும், பல தயிர்க்குடங்களையும், புதிதாகச் சமைக்கப்பட்டு எள்ளுப்பொடி கலந்த சித்ரான்னங்களையும், வீட்டுக்கொரு மனிதனையும், இரண்டு கறுப்புக்காளைமாடுகளையும் ராக்ஷஸபாகமாக நாங்கள் ஏற்படுத்துவதை நீகோபிக்காமல் பெறுவாயாக. எங்களுடைய இந்தஉடன்படிக்கையில் நீ நிற்கவேண்டும்" என்று பிராமணர்கள் அவனைவேண்டினர். அந்த ராக்ஷஸன் அவர்கள் சொன்னதை ஆகட்டுமென்று அங்கீகரித்தான். அவனுக்கு அந்தப்பாகத்தைக் குறிப்பிட்டபிறகு, அந்தப் பலவானை ராக்ஷஸன் உடன்படிக்கையில் நின்றுகொண்டு, மற்றச் சைனியங்களிடத்திலிருந்தும் காட்டுமிருகங்களிடத்திலிருந்தும் (எங்களை) ரக்ஷணஞ்செய்கிறான். ஒவ்வொருமனிதனை அவனுக்குச் சம்பளமாகக் கொடுக்கின்றனர். ஜனங்கள் செய்வதற்குமுடியாத அந்தவாரம்அநேக வருஷங்களாக நடக்கிறது. அதை விடுவிப்பதற்கு எந்த மனிதர்களாகிலும் எங்கேயாகிலும் ஆரம்பஞ்செய்வாராயின் அவர்களை அந்த ராக்ஷஸன் பிள்ளை பெண்களுள்படக் கொன்றுதின்றுவிடுகிறான். வேத்திரகீயக்ருகம் என்ற நகரத்திலுள்ள இந்த அரசனும் இந்த விஷயத்தில் மார்க்கஞ்செய்யவில்லை. மந்தபுத்தியுள்ள அவன் இந்தக்காலத்தில் இந்த ஜனங்களுக்கு எந்த உபாயத்தினால் நீடித்த ஸுகம் உண்டாகுமோ அதனைப்பிரயாஸப்பட்டாவது செய்கிறதில்லை. துர்ப்பலனை ராஜாவின்தேசத்தில் நித்யமாக வஸிப்பவரும் இழிவான ராஜாவை ஆச்ரயித்தவருமாகிய நாங்கள் இதற்குத்தான் தகுந்தவர்களாக வஸிக்கிறோமென்பது நிச்சயம். பிராம்மணர்கள் யாருக்கு ஏவத்தக்கவர்கள்? யாருடையவிருப்பத்தை அனுஸரிப்பவர்கள்? இவர்கள் இயற்கையான குணங்களால் பக்ஷிகளைப்போல் யதேச்சையாகச்

சஞ்சரிப்பவர்கள்; முதலில் அரசனை அடையவேண்டும். அதன் பிறகு, மனைவியையும் அதன் பிறகு தனத்தையும் அடையவேண்டும். இவ்வுலகத்தில் அரசன் இல்லாதபோது மனைவியேது? தனமேது? இம்மூன்றையும் சம்பாதிப்பதனால் சுற்றத்தாரையும் புத்திரர்களையும் காப்பாற்றவேண்டும். நான் இம்மூன்றையும் முழுதும் விரோதமாகச் சம்பாதித்திருக்கிறேன். அதனால், இந்த ஆபத்தையடைந்து நாங்கள் நிரம்பத் தபிக்கிறோம். குலத்தையழிப்பதாகிய அந்தவாரம் இப்போது எங்களுக்கு வந்திருக்கின்றது. போஜனத்தையும் ஒருமனிதனையும் சம்பளமாக நான் கொடுக்கவேண்டும். எங்கேயாவது ஒரு மனிதனை விலைக்கு வாங்குவதற்கு எனக்குப் பொருளில்லை. வேண்டியவர்களைக் கொடுக்க ஒருபோதும் என்னால் முடியாது அந்த ராக்ஷஸனிடமிருந்து விடுவித்துக்கொள்ள வேறு மார்க்கம் எனக்குத் தெரியவில்லை. அப்படிப்பட்ட நான் மிகவும் அஸாத்யமான துயரக்கடலில் மூழ்கியிருக்கிறேன். இப்போது இந்த உறவினரோடு கூடவே அந்த ராக்ஷஸனிடம் செல்வேன். அப்போது எங்களெல்லாரையுமே சேர்த்து அந்தப்பாவி உண்ணட்டும் அம்மா! குற்றமில்லாதவளே! இந்தத் துயரத்தின் காரணத்தை நீ கேட்டதனால் உனக்குச் சொன்னேன்" என்றான்.

---

## நூற்றெழுபத்தைந்தாவது அத்தியாயம்.

## பகவதபர்வம். (தொடர்ச்சி.)

(குந்தி பகாஸுரனிடத்துத் தன்புத்திரனை அனுப்புவதாகச் சொல்வது.)

குந்தி, 'இந்தப்பயத்திற்காக நீர் எவ்வகையிலும் துன்பப்பட வேண்டாம். இப்போது அந்த ராக்ஷஸனிடத்திலிருந்து நீர் தப்பிக் கொள்வதற்கு உபாயத்தை நான் கண்டிருக்கிறேன். நீரும் உமது ஸந்ததிகளும் அவனிடம் போவதை நான் விரும்பவில்லை. உமக்கு ஓரேபுத்திரன்; அவனும் குழந்தை; பெண்ணும் ஒருத்தி; அவள் பரிதாபப்படத்தக்கவள். இவர்களும் உமது மனைவியும் நீரும் போவதற்கு நான் ஸம்மதிக்கவில்லை. பிராம்மணரே! எனக்கு ஐந்து குமாரர்களிருக்கின்றனர். அவர்களில் ஒருவன் அந்தக்கொடிய ராக்ஷஸனுக்கு இரையை எடுத்துக்கொண்டு உமக்காகச் செல்வன்' என்று சொன்னாள். பிராமணன், 'நான் என் உயிரைவிரும்பிச் சொந்தப்பிர

யோஜனத்திற்காக எனக்கு அதிதியான பிராமணனுடைய உயிரைப் போக்குகிற இந்தக்காரியத்தை எவ்வகையிலும் செய்யேன். ஆனால், ஒரு பிராமணனுக்காகத் தன்னையாவது தன் புத்திரனையாவது விடுவதென்பது, உயர்ந்தகுலத்திற் பிறவாமலும் தர்மிஷ்டராயில்லாமலுமிருக்கிற ஸ்திரீகளிடம் இருப்பதில்லை. ஒருவன் தான் கொலையுண்டு போவது மேலாக அறியத்தக்கதென்று எனக்குத் தோன்றுகிறது. பிராம்மணனை வதஞ்செய்வதும் தற்கொலை செய்துகொள்வதுமாகிய இரண்டனுள் தற்கொலை செய்துகொள்வது மேலானதென்பது என்கருத்து. பிரம்மஹத்தி அதிகபாவம். அதற்குப் பிராயச்சித்தம் இல்லை. அறியாமற் செய்தாலுங்கூடப் பாபமுண்டன்றோ? சிறந்தவளே! சுபமானவளே! நான் ஸ்வதந்திரமாகத் தற்கொலை செய்துகொள்ள விரும்பவில்லையே. அயலார் என்னை வதஞ்செய்வதால் எனக்கு ஒரு பாபமுமில்லை. பிராம்மணவதஞ்செய்யும்படி நான் எண்ணம்வைத்தேனாயின் அதற்குப் பிராயச்சித்தம் எனக்குத் தெரியவில்லை. அது கொடியது; இழிவானது. வீட்டுக்கு வந்தவனையும் அடைக்கலம்வேண்டுபவனையும் யாசிப்பவனையும் கொல்வது கொடியது; அறிஞரால் இகழப்பட்டது இகழப்பட்ட கொடிய செய்கையை எவ்வகையிலும் செய்யலாகாதென்று ஆபத்கால தர்மமறிந்த முன்னோரான மஹாத்மாக்கள் அறிந்திருக்கின்றனர். இப்போது என் மனைவியுடன்கூட நானே இறப்பது எனக்கு மிகச்சிலாக்கியமாகும். ஒருபோதும் பிராம்மணவதத்துக்கு நான் இணங்கேன்' என்றுசொல்லினன். குந்தி, 'பிராம்மணரே! பிராம்மணர்கள் காப்பாற்றப்படவேண்டியவர்களென்னும் இந்த எண்ணம் எனக்கும் உறுதியாயுள்ளது. நூறு புத்திரர்களிருப்பினும் எனக்குப் புத்திரன் விரும்பப்படாதவனல்லன். ஆனால், அந்த ராக்ஷஸன் என்புத்திரனைக்கொல்வதற்கு வல்லவனல்லன். என்புதல்வன் சூரன்; மந்திரஸித்திபெற்றவன்; மஹிமையுள்ளவன்; அந்த இரைஅனைத்தையும் ராக்ஷஸனுக்குக் கொண்டுபோவான்; தன்னையும் விடுவித்துக்கொள்வான் என்பது எனது திண்ணமான எண்ணம். பலசாலிகளும் மகத்தான தேகங்களுள்ளவர்களுமாகிய அனேக ராக்ஷஸர்கள் இந்த வீரனோடு ஸந்தித்துக் கொல்லப்பட்டிருப்பதைக் கண்டிருக்கிறேன். பிராமணரே! ஆனால், இது யாரிடத்திலும் எவ்வகையிலும் சொல்லத்தகாது. ஏனெனில், இந்த வித்தையை வேண்டுபவர்கள் ஆசையினால் என் புத்திரர்களை வருத்தப்படுத்துவார்கள். என்னுடைய எந்தப்புத்திரன் குருவின் அனுமதிபெறாமல் பிறருக்கு வித்தையைச் சொல்வ

ளே அவன் அந்த வித்தையினால் முன்போலக் காரியம் செய்யமாட்டான் என்பது பெரியோர்களின் அபிப்பிராயம்' என்று சொன்னாள். குந்தியினால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்தப் பிராமணன் மனைவியுடன்கூடமகிழ்ந்து அமிர்தத்துக்கொப்பான அவளுடைய சொல்லைக் கொண்டாடினான். பிறகு, குந்தியும் பிராமணனும் சேர்ந்து அந்தப் பீமனைப்பார்த்து, 'செய்' என்று சொன்னார்கள். அவனும் 'அவ்வாறே ஆகட்டும்' என்று சொன்னான்.

---

## நூற்றெழுபத்தாறுவது அத்தியாயம்.

## பகவதபர்வம். (தொடர்ச்சி.)

**(பிக்ஷைக்குப்போன யுதிஷ்டிரர்முதலியவர்கள் வந்து பீமன் பகாஸுரனிடம் செல்லப்போவதைக் கேட்டு மிகுந்துயரப் படுவதும், குந்தி பீமஸேனன்பிரபாவத்தைச் சொல்லி அவர்களைத்தேற்றுவதும்.)**

**பா**ரதரே! பீமஸேனன் செய்வேனென்று பிரதிஜ்ஞை செய்த பிறகு, அந்தப் பாண்டவர்களனைவரும் பிக்ஷைகளை வாங்கிக்கொண்டு அவ்விடம் வந்து சேர்ந்தனர். பிறகு, அவ்வாறு மலர்ந்த முகமுள்ள பீமஸேனனைக்கண்டு தர்மபுத்திரர் எடுத்தகாரியத்தை முடிப்பவனாகிய அவன் ஸந்தோஷமாயிருக்கிறானென்றறிந்தார். அரசரே! பெரியவரான அந்த யுதிஷ்டிரர் பீமன் யுத்தம்செய்யக் கருதியிருப்பதாக அறிந்து, அவனது ஸந்தோஷத்திற்குக் காரணம்யாதென்றுமனத்தில் ஆராய்ந்தார். பாண்டுபுத்ரரான யுதிஷ்டிரர் முகக்குறிப்பினாலேயே அதனை அறிந்துகொண்டு தாம்தனித்துஉட்கார்ந்துகொண்டு ரகஸ்யத்திலுடனே தாயாரைநோக்கி,'பயப்படத்தக்கபராக்கிரமமுள்ள இந்தப் பீமன் என்னசெய்கை செய்யக்கருதுகிறான்? உன் அனுமதியின்மேல் செய்யக்கருதுகிறானா? அல்லது,தானே செய்யக்கருதுகிறானா?'என்று வினவினார். குந்தி, 'இந்தவீரன் என்சொல்லினாலேதான் பிராமணனுக்காகவும்இந்தநகரத்திற்கேவிமோசனத்திற்காகவும்பெரியகாரியம்செய்யப்போகிறான். மைந்தனே! தர்மபுத்திரனே! பகனுக்காக உயர்ந்ததாக விதிக்கப்பட்டதும் ஸித்தஞ்செய்யப்பட்டதுமிருக்கிறதான இரையை ஒருநாளாவது பூர்ணமாகப்பீமன்புஜிக்கட்டும்' என்றுசொன்னாள்.யுதிஷ்டிரர்,'இதென்ன!செய்

தற்கரியகொடிய ஸாஹஸத்தை நீசெய்திருக்கிறாய். பிள்ளையைவிட்டு விடுவதைப் பெரியோர்கள் சிலாக்கியமாகச் சொல்லவில்லையே. பிறர் பிள்ளைக்காக உன் பிள்ளையை எவ்வாறுவிடக்கருதுகிறாய்? புத்திரனை விடுவதனால் நீ உலகத்திற்கும் சாஸ்திரத்திற்கும் மாறான காரியத்தைச் செய்தவளாகிறாய். எவனுடைய புயவலிமையை ஆதாரமாகக் கொண்டு நாமெல்லாரும் ஸுகமாகத் தூங்குகிறோமோ, ஈனர்களால் எடுத்துக்கொள்ளப்பட்ட ராஜ்யத்தைத் திரும்பவும் எவனாற்பெறுவதற்கு எதிர்பார்க்கிறோமோ, அளவற்ற சக்தியுள்ள எவனுடைய பராக்ரமத்தை நினைத்துத் துரியோதனன் துயரத்தினால்இரவுகளெல்லாம் சகுனியுடன்கூடத் தூங்காமலிருக்கிறானோ, எந்த வீரனுடைய பராக்ரமத்தினால் நாம் அரக்குமாளிகையிலிருந்தும் இன்னுமனேகம் தீங்குகளிலிருந்தும் விடுபட்டுப் புரோசனனும் கொல்லப்பட்டானோ, எவனுடைய சக்தியைநம்பித் திருதராஷ்டிரபுத்திரர்களைக் கொன்று தனம்நிறைந்த இப்புவனியை நாம் அடைந்ததாக நினைக்கிறோமோ, அவனை விடுவதற்கு என்ன ஆலோசனைசெய்ய நீ ஆரம்பித்தாய்? துயரங்களினால் மனம் நொந்து உன்புத்தி அழிந்து போகாமலிருக்கிறதா ?' என்று சொல்ல, குந்தி, 'யுதிஷ்டிரா! விருகோதரனுக்காக நீ பரிதாபப்படவேண்டாம். நான் புத்திக்குறைவினால் இந்த ஆரம்பம் செய்திருக்கவில்லை. சோகப்பட்டு மனம்குன்றினதினால் என் புத்தி கெட்டிருக்கவில்லை. புத்திரனே! இந்தப் பிராம்மணக்ருஹத்தில் த்ருதராஷ்டிரபுத்திரர்களுக்குத் தெரியாமல் துக்கத்தைவிட்டு மரியாதையோடு ஸுகமாக வஸித்துக்கொண்டிருக்கிறோம். புத்திரனே! அதற்கு இந்தப்பிரதியுபகாரம் என்னால் கண்டறியப்பட்டது. செய்ந்நன்றி யாரிடத்தில்குன்றுமோ அவன் மாத்திரமே மனிதன்; பிறர் இவனுக்கு எவ்வளவு செய்வரோ அதற்குப் பலமடங்கு அதிகமாக இவன் பிறருக்குச் செய்யவேண்டும். பிராம்மணனுக்காகச் செய்யும் தருமம் பெரிது. பீமஸேனனிடத்தில் இந்த ஸாமர்த்தியமிருப்பதையும் நான் அறிந்திருக்கிறேன். அப்போது, அரக்குமாளிகையிலும் ஹிடிம்பவதத்திலும் பீமனுடைய மிகுந்த பராக்கிரமத்தைக் கண்ட பிறகு, எனக்கு அவனிடத்தில் நம்பிக்கையுண்டாயிற்று. யானையைப் போன்ற நீங்கள் வாரணாவதத்திலிருந்து எவனால் தூக்கிக்கொண்டு வரப்பட்டீர்களோ அந்தப் பீமனுடைய கைவன்மை பெரிது; பதினாயிரம் யானைக்கொப்பானது. பலத்தில் விருகோதரனுக்கு ஈடானவன் மற்றொருவனில்லை. எல்லாரிலும் சிறந்த வஜ்ரபாணியாகிய இந்திரனையும் பீமன் யுத்தத்தில் தானேவென்றுவிடுவன். முன்னமே

இவன் பிறந்தவுடன் என் இடுப்பிலிருந்து மலையில் விழுந்தான். இவன் தேகத்தின் பாரத்தினால் இவனுடைய அவயவங்கள்பட்டகல் பொடியாகச் செய்யப்பட்டது. பாண்டவனே! பீமனுடைய அந்தப் பலத்தை நான் புத்தியினாலறிந்து, பிராமணருக்குப் பிரதியுபகாரமும் செய்யவேண்டியபோது அதற்காக இந்த ஆலோசனையைச் செய்தேன். இது பொருளை விரும்பியாவது புத்திக்குறைவினாலாவது ஸரியாகத்தெரிந்துகொள்ளாமலாவது என்னால் நிச்சயிக்கப் படவில்லை. விவேகத்தைமுன்னிட்டே தர்மத்திற்காக இந்த ஆரம்பம் என்னால் செய்யப்பட்டது. யுதிஷ்டிரா! நாம் குடியிருந்ததற்குப் பிரதியுபகாரம் செய்வதும் பெரிய *தர்மத்தைச்செய்வதுமாகிய இரண்டு பிரயோஜனங்கள் நிறைவேறினவையாகும். எந்த க்ஷத்திரியன் பிராம்மணகாரியங்களில் எப்போதாவது உதவிசெய்வனோ அவன் சிறந்தலோகங்களையடைவானென்பது என்கருத்து. ஒருக்ஷத்திரியன் மற்றொருக்ஷத்திரியனையே மரணத்திலிருந்து தப்புவித்தால் இந்தலோகத்திலும் பரலோகத்திலும் பரந்த புகழையடைவான். பூமியில் வைசியனுக்குஉதவிசெய்யும்க்ஷத்திரியனும் நிச்சயமாகஎல்லாலோகங்களிலுமுள்ள பிரஜைகளின் அன்புக்குரியவனாவன். அடைக்கலம் விரும்பி வந்த சூத்திரனை அரசன் விடுவிப்பானாயின் இந்தலோகத்தில் நல்லஸம்பத்தோடு கூடியதும் அரசர்களால் பூஜிக்கத்தக்கதுமாகிய குலத்தில் ஜனனமடைவன். கௌரவர்களை மகிழ்விப்பவனே! அருமையான ஞானமுள்ள வியாஸபகவான் முன்னமே எனக்கு இவ்வாறுசொல்லியிருக்கிறார். அதனால், இவ்வாறு செய்யக்கருதினேன்' என்றாள்.

---

## நூற்றெழுபத்தேழாவது அத்தியாயம்.

## பகவ்தபர்வம். (தொடர்ச்சி.)

(பீமன், மறுநாள்காலையில் பிராமணன் கொடுத்த அன்னத்தை வண்டியிலேற்றிக்கொண்டு பகாஸுரன் வஸிக்கும் வனஞ்சென்று வண்டியிலுள்ள அன்னத்தைப் புஜித்துக்கொண்டிருப்பதைக்கண்ட பகாஸுரன் பீமனிடம் யுத்தத்துக்கு வந்ததும், அவனைப் பீமன் கொன்றதும்.)

யுதிஷ்டிரர், 'தாயே! நீ விவேகத்தை முன்னிட்டுத் துன்பமுற்ற பிராமண விஷயத்தில் தயையினால் இவ்வாறு செய்தது நியாய

* பிராமணர்களைக் காப்பது.

மானது. நீ பிராமண விஷயத்தில் தயையுள்ளவளாக இருப்பதனால் இந்தப்பீமன் எவ்வகையிலும் அந்த ராக்ஷஸனைக்கொன்று திரும்பி வருவது திண்ணம். ஆனால், இதை நகரத்தில் வஸிக்கும் மனிதர்கள் இவ்வாறு அறியாமலிருக்கவேண்டுமென்று இந்தப் பிராமணர்க்குச் சொல்லவேண்டும். ஜாக்கிரதையோடு பிராம்மணரை நம்முடைய சொல்லுக்கு உடன்படுத்தவேண்டும்' என்று சொன்னார். வீரரே! ஜனமேஜயரே! யுதிஷ்டிரரோடு ஆலோசனை செய்தபிறகு, குந்தி உள்ளேசென்று புத்திரர்களெல்லாரிடமும் பிராமணகாரியத்தைப் பற்றி ஆலோசித்தாள். பிறகு, இரவு விடிந்தபோது, மஹாபலவானான பீமஸேனன் பிராமணனிடம் சென்று, 'பிராம்மணரே! எனது அன்ப ராகிய உம்மை உமது ஸந்ததியுடன்கூட ஆபத்திலிருந்து விடு விப்பேன். அந்த ராக்ஷஸனுக்கு அஞ்சவேண்டாம். நீர் என்னைப் பலியாகக்கொடும். இந்த வீட்டில் நான் ஒருதரம் திருப்தியாகச் சாப்பிடும்படி செய்யப் பிரயத்தனப்படும். பிறகு, அந்தப் பயங்கர மான ராக்ஷஸனுக்கு நான் என்னைக் கொடுப்பேன். துரிதப்படுங்கள்; ஏன் தாமதிக்கின்றீர்கள்? குற்றமற்றவர்களே! தாமதம் செய்யாதீர் கள். இப்போது என் உயிரைக்கொடுத்து உங்களை ரக்ஷிப்பதற்காக இப்போதே மனத்தில் நிச்சயம் செய்கிறேன்' என்றுசொல்லிச்சொன் ஞன். பரதஸ்ரேஷ்டரே! பீமனால் இவ்வாறு உரைக்கப்பட்ட அந்தப் பிராம்மணர் நம் பந்துக்களுக்கு அந்த விஷயத்தைச் சொல்லி, செவ் வையாகச் சேகரிக்கப்பட்ட போஜனத்தைக்கொடுத்தார். பிறகு,அந்த நகரவாஸிகள் நெய்யோடும் காய்கறிகளோடும் பலவகைப் பருப்புக்க ளோடும்கூட மாம்ஸத்தோடுசேர்ந்த அன்னத்தைப் பீமனுக்குக் கொணர்ந்தனர். அப்போது, பீமஸேனன் பலவகையான மாமிசங் களையும் உயர்ந்த பக்ஷணங்களையும் பலவகைச் சித்ரான்னங்களையும் உண்டபிறகு, பதக்குப்பிடிக்கும்படியான அனேகம்தயிர்க்குடங்களைக் குடித்தான். அவன் உண்டபோது நகரத்து ஜனங்கள், நிரம்பின மனத்தோடு செம்மையாகச் சேகரித்த பதார்த்தங்களில் தத்தம் பாகங்களைப் பூர்ணமாகக் கொண்டுவந்தனர். பிறகு, அந்த விருகோ தரன் நகரத்து ஜனங்களினால் சூழப்பட்டவனாக அந்தக் காலவேளை யில் காய்கறிகளும் தயிருங்கலந்த அன்னம் நிரம்பிய வண்டியின் மேலேறி வாத்திய முழக்கங்களோடு புறப்பட்டான். 'சிறுபிள்ளையும் அழகில் ஒப்பற்றவனும் பலசாலியுமாகிய இவன் தன் வயிற்றுக்காகத் தானே இரையாகத் தன்னை ராக்ஷஸனுக்குக் கொடுக்கப்போகிறான்'

என்று இவ்வாறான சொற்களால் துதிசெய்யப்பட்ட அந்தப்பீமன் உடம்பெல்லாம் கறுப்பான இரண்டு வண்டிஎருதுகளையும் ஓட்டினான். பிறகு, நாற்புறமும் மனிதர்களாற் சூழப்பட்டவனாக மிகச் சந்தோஷ முற்று வாத்தியங்களின் முழக்கத்தோடு அவ்வரக்கனை நோக்கிச் சென்றான். அந்த இடம் சேர்ந்தபிறகு, அவன் தனித்துக் கிட்டப் போனான். ஜனக்கூட்டம், ராக்ஷஸபயத்தினால் அஞ்சி, அங்கேயே நின்றது. அவன் தென்றிசையைநோக்கித் தூரவழிசென்று அந்த இடத்தில் முன்னமே குறிப்பிடப்பட்ட பெரிய மரத்தைக்கண்டான். அந்தமரம் மயிர்களும், மச்சைநீர்களும், எலும்புகளும், கொழுப்புக் களும், ரக்தமுள்ளவையும் ரக்தம்வற்றினவையுமான கைகளும், தொடைகளும், கால்களும் நாற்புறமும் வியாபிக்கப்பட்டிருந்தது. கழுகுகள் பருந்துகள் இவைகளின் கூட்டங்களினால் மறைக்கப்பட்ட தும், நரிக்கூட்டங்களால் காக்கப்பட்டதும், கடுமையான நாற்றமுள் ளதும், பார்க்க வழங்காததும், ஶ்மசானம்போல் கொடியதுமாகிய அந் தப்பெரிய மரத்தினிடம் சென்று அந்தவீரன் சிந்திக்கலானான். 'பல வகை உணவுகளாலும் பெரிய அன்னக்குவியல்களாலும் நிரப்பப் பட்டதும், பருப்புக்கள் நிரம்பினதுமாகிய இந்த வண்டியைப் பலத் தில் மிகுந்த பகனென்னும் பெயருள்ள அரக்கன் எதற்குள் பார்ப் பானோ; அதற்குள்ளே இவ்விடத்திலேயே நான் புஜித்துவிடுவேன் மறுபடி இஃது எனக்குக்கிடைப்பது அரிது. நான் ராக்ஷஸனோடு யுத்தஞ் செய்யும்போது எல்லாம் இறைந்துபோய்விடும். பகனைக் கொன்ற பிறகு பிணம் தொட்டதனால் உண்ணத் தகாததாய்விடும்' என்று பயங்கரமான செய்கையுள்ளவனும் உயர்ந்த வீரனுமான பீம ஸேனன் இவ்வாறு ஆராய்ந்து ஜனமில்லாத இடத்தில் உட்கார்ந்து அந்த உயர்ந்த உணவையுண்டான். அப்போது நகரத்தார் நாலுபுறங் களிலும் மரங்களிமேலேறி அவனைப் பார்த்தனர். 'ராக்ஷஸனல்லாதவன் இந்தப் பெரியபலியை இவ்வாறு உண்ணமாட்டான். பகனே இந்தப் பிராமண உருவத்தோடு புஜிக்கிறான்' என்று ஜனங்கள் பேசிக் கொண்டனர். மிகுந்த பலமுள்ள பீமன் அந்த அன்னத்தை உட் கொண்டபிறகு பகனைப் பரிகாசம் செய்தான். பிறகு, பலசாலியாகிய பாண்டவன் அந்த ராக்ஷஸனிருக்கும் வனத்தைச் சேர்ந்து அந்த அன்னத்தைக் காண்பித்து, அவனைப் பெயரிட்டழைத்தான். அப் போது அந்தப் பீமனுடைய பேச்சினால் கோபமுற்ற அவ்வரக்கன் மிகுந்த ஆக்கிரகத்தோடு பீமனிருந்த இடத்திற்கு வந்தான்.

பெரியதேகமுள்ளவனும், சிவந்த கண்களுடையவனும், விகாரரூபமுள்ளவனும், மீசைதாடிகளும் தலைமயிர்களும் சிவந்தவனும், காதுவரையில் திறக்கப்பட்டவாயுள்ளவனும், முளைகள்போன்ற காதுகளையுடையவனும், மிகப்பயங்கரனுமான அந்தராக்ஷஸன் மிக்க வேகத்தினால் பூமியைப் பிளப்பவன்போல் புருவங்களை மூன்று நெறிப்பாக நெறித்துக்கொண்டும் உதட்டைக்கடித்துக்கொண்டும், அன்னத்தைப் புஜிக்கும் அந்தப் பீமனைக்கண்டு கோபித்துக் கண்களையுருட்டி, 'எனக்காகச் சேகரிக்கப்பட்ட இந்த அன்னத்தை என் கண்முன்னே புஜிக்கிறானே! யமன்வீட்டுக்குப் போகக்கருதிய இம்மதிகெட்டவன் யார்?' என்று சொன்னான். பாரதரே! பிறகு, பீமஸேனன் அதைக் கேட்டுச் சிரித்துக்கொண்டே அந்தராக்ஷஸனைக் கவனிக்காமல் பின்னே திரும்பிக்கொண்டு புஜித்துக்கொண்டேயிருந்தான். அந்த ராக்ஷஸன் கடுமையான இரைச்சலிட்டு இரண்டுகைகளையும் ஓங்கிப் பீமஸேனனைக்கொல்ல ஓடிவந்தான். அப்படியிருந்தும், எதிரிகளான வீரர்களைக் கொல்லுகிறவனும் பாண்டுபுத்திரனுமான விருகோதரன் அந்த ராக்ஷஸனை அவமதிப்புடன் பார்த்துக்கொண்டு அன்னத்தைப் புஜித்துக்கொண்டேதான் இருந்தான். அந்தராக்ஷஸன் கோபம் நிரம்பினவனாகப் பின்னே நின்று இரண்டுகைகளாலும் குந்திபுத்திரனான விருகோதரனை முதுகில் அறைந்தான். அவ்வாறு, பலவானான ராக்ஷஸனால் இரண்டு கைகளாலும் உளைய அடிக்கப்பட்ட அந்தப்பீமன் ராக்ஷஸனைத் திரும்பிப்பார்க்கவேயில்லை; புஜித்துக்கொண்டேதான் இருந்தான். அதன்பிறகு, பலவானான அந்தராக்ஷஸன் இன்னும் அதிக கோபங்கொண்டு மரத்தையெடுத்துப் பீமஸேனனையடிக்க மறுபடியும் எதிர்த்தோடிவந்தான். வீரனான பீமன் கோபத்தோடு ராக்ஷஸனால் எறியப்பட்ட அம்மரத்தை இடக்கையினால் தடுத்து வலக்கையினால் புஜித்துக்கொண்டே இருந்தான். பீமஸேனன் வண்டியிலுள்ள அன்னத்தைப்புஜிக்கையில் மலைபோன்ற அந்தமுழுமரத்தையும் ராக்ஷஸனுடைய கையுடன்கூடப் பிடித்துச் சிரித்துக்கொண்டே புஜித்து ராக்ஷஸனைவிட்டுவிட்டுப் பிறகு நூற்றுக்கணக்கான தயிர்நிரம்பின குடங்களையும் நெய்க்குடங்களையும் குடித்துவிட்டுக் கையலம்பிக்கொண்டு உற்சாகத்துடன் இரண்டாவது மலைபோலநின்றான். பெரிய மரத்தைச் சுழற்றிக்கொண்டுவருகிற பார்ப்பதற்குப் பயங்கரமான ராக்ஷஸனைக்கண்டு, வீரனான பீமஸேனன் யுத்தத்திற்காக எழுந்து வஸிம்மகர்ச்சனஞ் செய்தான். பிறகு, கைகளுடைய வேகத்தையும்

தோள் தட்டுதலையும் கர்ச்சனையின் மஹாசப்தத்தையுஞ்செய்து மிகுந்த கோபத்துடன் பீமஸேனன் ராக்ஷஸனை அழைத்தான். இடிமுழக் கம்போன்ற குரலினால் ராக்ஷஸனைப் பயமுறுத்துகிறவன்போலப் பேசலுற்றான். 'இராக்ஷஸர்களில் இழிவானவனே! இரண்டுகால் களும் நாலுகால்களுமுள்ள ஜந்துக்களின் மாம்ஸங்களாலும் மிகுந்த அன்னங்களினாலும் அநேகநாளாக உன்சரீரம் வளர்க்கப்பட்டிருக்கி றது. என் கைபலத்தினிடம் வந்தபின் மறுபடி நீ இரையெடுக் கப்போகிறதில்லை இப்போது என்கைகளினால் பிசையப்பட்டவ னாக யமன்வீடு செல்வாய். இந்தநகரத்திற்கு முள்ளைப் போன்ற உன்னை எடுத்துவிட்டபிறகு, இன்று முதல் வேத்திரகீய நகரத்தில் வஸிப்பவர்கள் அச்சமற்றுத் தூங்குவார். இப்போது யுத்தத்தில் என்னால் கொல்லப்பட்ட உன்தேகத்தைக் கழுகுகளும் நரிகளும் காக்கைகளும் தின்னட்டும்; தரையில்அக்குவேறாக இழுக்கட்டும்' என் றான். இவ்வாறு சொல்லி மிகுந்தகோபத்துடன் பகனைக்கொல்வ தற்குஓடினான். ராஜஸ்ரேஷ்டரே! பெரியஉடலும்சிவந்தநிறமும்சிவந்த கண்களுமுடைய அந்தப்பகனும் மிகுந்த வேகத்தினால் பூமியைப் பிளப்பவன்போலப் பீமஸேனனை எதிர்த்தோடினான். அந்தப் பலவா னானராக்ஷஸன் இன்னுமதிக கோபமுற்றுப் புருவங்களைமூன்றுநெறிப் பாக நெறித்து உதட்டைக்கடித்து மரத்தையெடுத்துப் பீமனையடிப் பதற்காக விரைவாக ஓடிவந்தான். பாரதரே! கோபித்துக்கொண்ட ராக்ஷஸனால் எறியப்பட்ட மரத்தைப் பீமஸேனன் சிரித்துக்கொண்டு இடக்கையினால் விளையாட்டாகப்பிடித்தான். பிறகு, அந்தப்பலவானா கியபகனும் யுத்தத்தில் மறுபடியும் பலவகைமரங்களையெடுத்துப்பீம ஸேனன்மேல்போட்டான். எல்லாமரங்களையும் பீமஸேனன் தன்கை விரலினால் தள்ளிவிட்டான். ராஜேந்திரரே! மரங்களின் சோலைகளை அழிப்பதாகிய அந்த விருக்ஷயுத்தம் பகனுக்கும் பீமனுக்கும் அப் போது மிகக்கொடியதாகவும் பெரியதாகவும் நடந்தது. அந்தப்பக னென்னும் ராக்ஷஸன் தன் பெயரைப் புகழ்ந்துசொல்லிக் கடுமை யான வேகத்தோடு பீமஸேனனை எதிர்த்து யுத்தஞ்செய்தான். அவர்களுடைய மிகுந்த வேகத்தினால் பூமி நடுங்கிற்று. மிகு ந்த அளவுள்ள மரங்களை பொடியில் பொடியாகச் செய்தனர். பகன் விரைவாக ஓடிவந்து கைகளினால் பீமனை எடுத்து எறிந்தான். எறியப்பட்ட பீமஸேனனும் சிரித்துக்கொண்டே மறுபடியும் எழுந்தான். பீமஸேனன் பகனைத் தழுவித் தரை யில் அடித்தான். பீமன், விழுந்த அந்தப்பகனை விட்டுவிட்டு,

'ராக்ஷஸா! களைப்பாறு'என்றுசொல்லி மறுபடியும் தோள்தட்டி, 'எழுந்திரு' என்றுசொன்னான். பிறகு, விகாரரூபமுள்ள பகன் கோபத்துடன் எழுந்து மிகப்பெரிய உருவமெடுத்துக்கொண்டு உடனே விருகோதரனைப் பயமுறுத்திக்கொண்டுநின்றான். பீமஸேனனும் பார்க்கப் பயங்கரமான ராக்ஷஸனைப் பார்த்து நகைத்தான். பீமன் பின்னின்று கைகளினால் ராக்ஷஸனைப்பிடித்து முழங்கால்களினால்அமுக்கிப் பிறகு கீழே வீழ்த்தினன். திரும்பவும் கோபமுற்றபீமன் கோபத்தையே உயிராகவுடைய அவ்வரக்கனைவிட்டுத்தன் இடுப்பைக்கொஞ்சம்தூக்கி அந்த ராக்ஷஸனுடைய புஜங்களைப்பிடித்தான். பலவானான பீமஸேனன் விரைவாக அவன் இரண்டு புஜங்களையும்பிடித்துத் தூக்கிஉதறி அவனைக் கீழேதள்ளினான். அச்சப்படத்தக்க பராக்கிரமமுள்ளபீமன் கோபித்துக் கீழேவிழுந்த அவனை மார்பில் இடக்காலால் உதைத்தான்; வாயைத்திறந்துகொண்டும் நாக்குத்தொங்கிக்கொண்டும் பயங்கரமாயிருந்த அந்தக்கொடியராக்ஷஸன் எதிர்த்துவந்து பீமனைத் தலையில் அடித்தான். பயங்கரமான பராக்கிரமமுள்ள அந்தப்பீமன் மிகுந்த பலவானான ராக்ஷஸனால் இவ்வாறு அடிக்கப்பட்டு மிகுந்த கோபாவேசங்கொண்டான். பலவானானபீமன் ராக்ஷஸனை இடுப்பைப்பிடித்துத் தூக்கிநிறுத்தினான். அந்த ராக்ஷஸனும் பீமனும் மதம்பிடித்த பெரிய யானைகளைப்போல் ஒருவரையொருவர் பிடித்து ஒருவரைஒருவர் இழுத்தனர். அப்போது பீமன்ராக்ஷஸன் இவர்களுடையகையடியின் சப்தங்களினால் வேத்ரகீயநகரமுழுதும் நடுக்கமுற்றது. அவ்விருவருடைய பெரிய வேகத்தினாலும் அங்கே பூகம்பம் உண்டாயிற்று; வேகத்தினால் மரங்களையும் கொடிகளையும் பொடியாகச் செய்தனர். ஒருவரையொருவர் வதஞ்செய்யக்கருதிச் சந்தித்த அந்த வீரர்கள் மலைகளாலும் கொடுமுடிகளாலும் மலைகளினின்றும்சரிந்த பாறைகளாலும் ஒருவரையொருவர் அடித்து அவற்றைச் சூர்ணமாகச் செய்தனர். யுத்தத்தில் மிகுந்த மதங்கொண்ட அவ்விருவரும் பூமியை நீளத்திலும் அகலத்திலும் இரண்டு யோசனைதூரம் எங்கும் மரங்களும் கற்களும் புற்களும் புதர்களும் கொடிகளுமில்லாமல் ஆமைமுதுகைப்போன்றதாகச் செய்தனர். ராக்ஷஸனும் கௌரவராஜனும் இவ்வாறு சற்றுநேரம் யுத்தஞ்செய்தபிறகு, கௌரவராஜன் ராக்ஷஸனை ஒழிப்பதற்காக எண்ணங்கொண்டு பற்களால் கடகடவென்றுசப்தஞ்செய்து உதட்டைக்கடித்துக் கண்களை விசாலமாகத்திறந்து உருட்டிவிழித்து ராக்ஷஸனைக் குறுக்காகப் பார்த்தான். பிறகு, மிகுந்தபலமுள்ள பீமஸேனன் அந்த ராக்ஷஸனை ஆட்டித் தழுவிப்பிடித்தான்.

அவனைக் கைகளாற்கட்டி முழங்கால்களினால் விலாப்புறங்களிலும் வயிற்றிலும் முதுகிலும் மார்பிலும் உதைத்தான். பகன் தொடைகளும் கைகளும் மார்பும் பிளந்து தேகக்கட்டுவிட்டு அதிக வியர்வையும் பெருமூச்சுமுற்று உயிரும்கண்களும் வெளிக்கிளம்பிப் பிரம்மாண்டம் வெடித்துப்போகச்செய்யும்படி கத்தி மூச்சுக்குறைந்து தரையில் விழுந்து, தடியினால் அடிபட்ட பாம்புபோலத் துடித்துக் கொண்டிருந்தான். துடிக்கின்ற பெரியசரீரமுள்ள பகனைப் பீமன் சுற்றிலும் இழுத்தான். அதிக பலமுள்ள பாண்டவனால் வேகமாக இழுக்கப்பட்ட ராக்ஷஸன் மிகுந்த சிரமத்தை அடைந்தான். புருஷஸ்ரேஷ்டனான பீமஸேனன் ராக்ஷஸனுக்குப் பலம்குறைவதைக்கண்டு பூமியில் தேய்த்து முழங்கால்களினால் இடித்தான். பிறகு, பீமன் அவனுடைய முதுகை முழங்காலினால் பலமாக அமுக்கிக்கொண்டு தன்வலக்கையினால் கழுத்தைப்பிடித்தான்; இடக்கையினால் இடுப்பு வஸ்திரத்தைப் பிடித்துக்கொண்டு அவனுடைய முதுகை முழங்காலில் ஏற்றிப் பேரொலியுண்டாகும்படி முறித்தான். ராஜாவே! அப்போது, பீமனால் முறிக்கப்பட்ட அந்தக்கொடிய ராக்ஷஸனுடைய வாயிலிருந்து இரத்தம் பெருகிற்று

---

## நூற்றெழுபத்தெட்டாவது அத்தியாயம்.

## பகவதபர்வம். (தொடர்ச்சி.)

(பகனை வதஞ்செய்தபிறகு அங்குவந்த பகனுடைய பரிவாரங்கள் பீமனுடன் உடன்படிக்கை செய்துகொண்டதும், பீமன் நகரத்தின்வாயிலில் பகனுடைய சரீரத்தைப்போட்டுவிட்டுப் பிராமணன்வீடுவந்து குந்திமுதலானவர்களுக்குப் பகனுடைய விருத்தாந்தத்தைச் சொன்னதும், மரணமடைந்த பகனைப் பார்ப்பதற்குப் பட்டணத்து ஜனங்கள் சென்றதும், திருவிழாக்கொண்டாடினதும், பகவதஞ்செய்த பீமனை எல்லோரும் துதிசெய்ததும்.)

பிறகு, பெரியமலைபோன்ற அந்தப்பகன் விலாப்புறங்களும் உடலும் முறிந்து பயங்கரமான சத்தம் செய்து உயிர்போய் விழுந்தான். அரசரே! அந்த ராக்ஷஸனுடைய அந்தச் சப்தத்தினால் ஜனங்கள் பயந்து வேலைக்காரர்களுடன்கூடவே வீட்டிலிருந்து வெளிப்பட்டனர். அரசரே! அப்போது பகனுடையதம்பி பீமனைச் சரணமடைந்

தான். பிறகு, மிகுந்த பலமுள்ள ராக்ஷஸராஜனான பகன் கொல்லப்பட்டதைக்கண்டு, ராக்ஷஸர்கள் மிகப்பயமுற்றுப் பீமனைச்சரணமடைந்தனர். யுத்தஞ்செய்கிறவரிற் சிறந்தவனும் பலவானுமான பீமனிடமுள்ள பயத்தினால் அறிவுதப்பியிருந்த அந்தராக்ஷஸர்களைச் சமாதானஞ்செய்து, 'நீங்கள் மறுபடி ஒருபோதும் மனிதர்களைத் துன்பம் செய்யக்கூடாது' என்றும், 'துன்பஞ் செய்பவர்களுக்குச் சீக்கிரம் இவ்வாறே வதம் நேரிடும்' என்றும் சொல்லி நியமத்தில் நிற்கச்செய்தான். பாரதரே! அந்தப்பீமனுடைய அந்தச்சொல்லைக்கேட்டு அவ்வரக்கர்கள் அவனிடம், 'அவ்வாறே ஆகட்டும்' என்றுசொல்லி அந்த உடன்படிக்கையை அங்கீகரித்தனர். அப்போது பகனுடைய ஸஹோதரன் தன் இனத்தாருடன் பீமனை வந்தனஞ்செய்தான். பாரதரே! அந்த நகரத்தில் அதுமுதல் ராக்ஷஸர்கள் சாந்தர்களாகவே நகரத்திலுள்ள ஜனங்களினால் காணப்பட்டனர். பிறகு, பீமனால் கழுத்து முறிக்கப்பட்டுக் காதுபோய்க் கண்கள்போய் நாக்குவெளிப்பட்டுப் பிரஜ்ஞையற்று இறந்துபோன அந்த ராக்ஷஸன் பலவிதமான விளையாட்டுச்செய்கையுடன் நகரத்தின் கோபுரவாயிலில் இழுத்துவிடப்பட்டான். வாயிலில் போட்டுவிட்டு அந்தப் பீமன் நகரத்துக்குள் வந்தான். பாலர்களும் விருத்தர்களுமாகிய மனிதர்கள் அந்தராக்ஷஸனை நிச்சயமாக மறுபடியும் நமது நகரத்திற்குள் வருகிறானென்று பயந்து ஓடினர். பகனைக்கொன்றபிறகு, பீமன் அங்கே அந்தப் பிராமணகிருஹத்துக்குச் சென்று, இரண்டு காளைமாடுகளையும் வண்டியையும் பிராமணனிடம் ஒப்புவித்தான். 'பேசாமல் வீட்டுக்குள்போம்' என்று அந்தப் பிராமணோத்தமனைப் பார்த்துச் சொல்லிவிட்டு இரவில் தாயார் ஸஹோதரர்கள் முன்னிலையில் படுக்கைக்குப்போய் யுத்தம் எவ்வாறு நடந்ததோ அதையெல்லாம் சொன்னான். விடியற்காலத்தில் அந்த நகரத்திலிருந்து வெளியிற்போன மனிதர்கள், அடிக்கப்பட்டு இரத்தத்தினால்நனைந்திருக்கிற ராக்ஷஸனைத் தரையிற் கண்டனர். மலையின் கொடுமுடிபோல் விழுந்திருக்கும் பயங்கரமான அந்த ராக்ஷஸனைக் கண்டு அந்த நகரத்து ஜனங்கள் மயிர்க்கூச்சமெடுத்தவராயினர்; உடனே, ஏகசக்கரநகரத்துக்குட் சென்று நகரத்துக்குள்ளிருப்பவர்களுக்குச் சமாசாரம் தெரிவித்தனர். அரசரே! பிறகு, நகரத்திலுள்ள ஜனங்கள் ஆயிரக்கணக்காகப் பெண்டுகளும் கிழவர்களும் குழந்தைகளும் பகனைப்பார்க்க அங்கே வந்தனர். பிறகு, மனிதர் செய்யமுடியாத அந்தச் செய்கையைக்கண்டு அவரனைவரும் வியப்புற்றனர். முன்னே

பயத்தினால் தாங்கள் வேண்டிக்கொண்டிருந்த தேவதைகளுக்குப் பூஜைகள் செய்தனர். அதன்பிறகு, 'இன்றைத்தினம் பகனுடைய இரைக்கு யாருடைய முறை' என்று எண்ணிப்பார்த்தனர். தெரிந்த பிறகு, அவர்களனைவரும் அந்தப் பிராமணனிடம் வந்து கேட்டனர். இவ்வாறு பலவிதமாகக் கேட்கப்பட்ட அந்தப் பிராமணஶ்ரேஷ்டன் அப்போது பாண்டவர்களை வெளியிடாமல் நகரத்து ஜனங்களனைவருக்கும் பின்வருமாறு சொல்லலானான்:—

'பகனுடைய இரைக்காக நியமிக்கப்பட்டுச் சுற்றத்தாருடன் அழுதுகொண்டிருந்த என்னை மந்திரஸித்தி பெற்றவரும் உயர்ந்த மனமுள்ளவருமாகிய ஒரு பிராமணர் கண்டார். அந்தப்பிராமண ஶ்ரேஷ்டர் முதலில் இந்த நகரத்தின் துயரத்தைப்பற்றி என்னைக்கேட்டு என்னை நம்பச்செய்து சிரித்துக்கொண்டு, 'அந்தத்துராத்மாவுக்கு இந்த அன்னத்தை நான் கொண்டுபோய்ச் சேர்ப்பேன். எனக்காகப் பயப்படவேண்டாம்' என்று சொன்னார். அவர் அந்த அன்னத்தை எடுத்துக்கொண்டு பகனுடைய வனத்தை நோக்கிச் சென்றார். உலகங்களுக்கு அனுகூலமான இந்தக்காரியம் அவரால் செய்யப்பட்டிருக்கவேண்டுமென்பது நிச்சயம்' என்று சொன்னான். பிறகு, அந்தப் பிராம்மணர்கள் க்ஷத்திரியர்கள் வைசியர்கள் சூத்திரர்களனைவரும் மிகுந்த ஆச்சரியமும் ஸந்தோஷமுமுற்றவர்களாகி, அப்போதே பிராம்மண பூஜை செய்தனர். பிறகு,கிராமங்களிலுள்ளவர்களனைவரும் அந்த மிகுந்த ஆச்சரியத்தைபபார்ப்பதற்கு அந்த நகரத்திற்கு வந்தனர். பாண்டவர்களும் அங்கேயே வஸித்தனர். வேத்திரகீயகிருஹம் என்னும் ஊரிலுள்ளவர்கள் அனைவரும் ஆச்சரியத்துடன் பயங்கரமான பராக்கிரமமுள்ள பீமனைச்சூழ்ந்துகொண்டு அவனிடம் வந்து சேர்ந்தனர். 'மஹாத்மாக்களான பிராம்மணர்களிடத்தில் ஒன்றும் பொருந்தாமல் போகாது' என்று சொல்லிப் பீமனைமரியாதை செய்து பட்டணத்து ஜனங்கள் சுற்றிலும் சூழ்ந்துகொண்டனர்; 'இவர் பிதாவைப்போல் உண்மையாகக் கஷ்டங்களிலிருந்து நம்மைக் காப்பாற்றினவர். இவருடைய அடிபணிந்து நின்று காத்திருப்போம்' என்றனர். அந்தப்பகன் கொல்லப்பட்டபின் அந்த மனிதர்கள் பயந்து அவனை நினைத்துக்கொண்டு பீமனுக்கு மாமிசங்களும் தயிருமுள்ள அன்னத்தை முறையாகக் கொண்டுவந்தனர். வீரர்களான பாண்டவர்கள் தாயாருடன்கூட அங்கிருந்து வேகமாகப் போயினர். உக்கிரமான தவமுள்ள அந்தப் பாண்டவர்கள் ஏகசக்கிர

நகரஞ் சென்று உறுதியான தவமுள்ளவர்களாகவும் வேதாத்யயனத்தில் ஊக்கமுள்ளவர்களாகவும் ஜடைகள் தரித்த பிரம்மசாரிகளாகவும் அந்தப் பிராமணகிருகத்தில் வாஸஞ்செய்தனர். அவர்கள் நீண்ட காலம் தாயாருடன்கூட ஏகசக்ராநகரத்தில் ஒன்று சேர்ந்திருந்தனர்.

பகவதபர்வம் முற்றிற்று.

---

நூற்றெழுபத்தோன்பதாவது அத்தியாயம்

# சைத்ரரதபர்வம்.

(பிராமணன் வீட்டுக்குவந்த ஓர் அதிதி த்ரௌபதி ஸ்வயம்வரத்தையும் த்ருஷ்டத்யும்னன் த்ரௌபதி இவர்களுடைய பிறப்பையும் பாண்டவர்களுக்குச் சொல்லியது.)

ஜனமேஜயர், "பிராமணரே! அவ்வாறு பகனென்னும் ராக்ஷஸனைக்கொன்ற பிறகு, அந்தப்புருஷச்ரேஷ்டர்களாகிய பாண்டவர்கள் அங்கே என்ன செய்தனர்?" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்.

"அரசரே! பகனென்னும் ராக்ஷஸனைக் கொன்றபிறகு, வேதத்தையே அத்யயனஞ்செய்துகொண்டு அங்கேயே பிராமணன் வீட்டில் வாஸஞ்செய்தனர். பிறகு, சில நாளுக்குப்பின் கடுமையான தவமுள்ள ஒரு பிராமணன் இருப்பிடம் வேண்டி அந்தப்பிராமணனுடைய வீட்டிற்கு வந்தான். அப்பொழுது, எப்போதும் எந்த அதிதியையும் ஆதரிப்பதை விரதமாகக்கொண்ட அந்தப் பிராமணசிரேஷ்டன் வந்தவனாகிய அந்தப் பிராமணனை நன்றாகப்பூஜித்து அவனுக்கு இடங்கொடுத்தான். பிறகு, புருஷச்ரேஷ்டராகிய அந்தப்பாண்டவரனைவரும் குந்தியுடன்கூட அழகிய கதைகளைச் சொல்லும் அந்தப்பிராமணனை அடுத்திருந்தனர். அவன் புண்ணியக்ஷேத்திரங்களையும் புண்ணிய தீர்த்தங்களையும் நதிகளையும் அரசர்களையும் ஆச்சரியமான பற்பல தேசங்களையும் நகரங்களையும்பற்றிக் கதைசொல்லினன். ஜனமேஜயரே! அந்தப்பிராமணன் அங்கே கதைமுடிவில் பாஞ்சால தேசத்தில் ஆச்சரியமான வடிவத்தையுடைய திரௌபதியின் ஸ்வ

யம்வரத்தையும் த்ருஷ்டத்யும்னன் பிறந்ததையும் சிகண்டி பிறந்ததையும் திரௌபதி கர்ப்பத்திலிருந்து பிறவாமல் துருபதனுடைய பெரியயாகத்தில் பிறந்ததையும் சொல்லினன். அந்தமஹாத்மாவான பிராமணனுடைய உலகத்தில் மிக்க ஆச்சரியமான அந்தச் சொல்லைக்கேட்டுப் புருஷஸ்ரேஷ்டர்களான பாண்டவர்கள் கதையை விரிவாகக் கேட்க விரும்பி, 'துருபதன்புத்திரனாகிய த்ருஷ்டத்யும்னன் அக்னியிலிருந்தும் த்ரௌபதி யஜ்ஞவேதி நடுவிலிருந்தும் பிறந்த ஆச்சரியம் எவ்வாறு? சிறந்த வில்லாளியும் துரோணருக்கு மரணத்தைக் கொடுப்பவனுமாகிய த்ருஷ்டத்யும்னன் சிறந்த வில்லாளியான துரோணரிடத்தில் அஸ்திரங்களெல்லாவற்றையும் கற்றுக்கொண்டதும் எவ்வாறு? பிராமணரே! துரோணரும் த்ருபதனுமாகிய இருவரும் எவ்வாறு ஸ்நேகிதர்களாயினர்? யாருடைய செய்கையினால் வேறுபட்டனர்?' என்று கேட்டனர். அரசரே! புருஷஸ்ரேஷ்டர்களான பாண்டவர்களால் இவ்வாறு கேட்கப்பட்ட அந்தப்பிராமணன், அப்போது அவையெல்லாவற்றையும் திரௌபதியின் ஜனனத்தையும் சொல்லலானான்.

---

## நூற்றெண்பதாவது அத்தியாயம்

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

### (துரோண துருபதர்களுடைய உற்பத்தியும் வரலாறும்.)

'கங்கையின் உற்பத்தியில், சிறந்த தவமுள்ளவரும் சிறந்த ஞானமுள்ளவரும் எப்போதும் உறுதியான வ்ரதமுள்ளவருமாகிய பரத்வாஜரென்னும் மஹரிஷி இருந்தார். ஸ்நானஞ்செய்வதற்காகக் கங்கைக்குப்போன ரிஷி, முன்னேயேவந்து ஸ்நானஞ்செய்துகொண்டிருந்த க்ருதாசி யென்னும் அப்ஸரஸை அங்கே கண்டார். அப்போது நதிக்கரைக்காற்று அவளுடைய வஸ்திரத்தை அடித்துக்கொண்டுபோயிற்று. அப்போது பரத்வாஜரிஷி வஸ்திரம் விலகின அவளைக்கண்டு காமங்கொண்டார். பருவத்திலிருக்கும் பிரம்மசாரிக்கு வெகுகாலத்திற்குப்பின் அவளிடம் மனம்பற்றினதினால் வீர்யம் நழுவிற்று. பரத்வாஜரிஷி அதைத் துரோணமென்னும் பாத்திரத்தில் ஏந்தினர். சிறந்த ஞானவானான பரத்வாஜருக்கு அதிலிருந்து

துரோணரென்னும் குமாரர் பிறந்தார். அவர் வேதங்களையும் வேதாங்கங்களையும் முழுதும் ஓதினர். பரத்வாஜருக்கு ஸ்நேகனான ப்ருஷதனென்னும் ஓர் அரசன் இருந்தான் அவனுக்கு அப்போது துருபதனென்னும் புத்திரன் பிறந்தான். ப்ருஷதனது புத்திரனும் க்ஷத்திரிய ஸ்ரேஷ்டனுமான அந்தத் துருபதன் ஒவ்வொரு நாளும் ஆஸ்ரமத்துக்குச் சென்று துரோணருடன்கூட விளையாடினன்; வேதாத்யயனத்தையுஞ் செய்தான். பிறகு, ப்ருஷதன் காலஞ்சென்றபோது அந்தத்துருபதன் அரசனானன். பரசுராமர் தமது தனம் முழுதையும் கொடுக்கக்கருதியிருப்பதாகத்துரோணர் கேள்வியுற்றார். வனத்திற்குப் புறப்பட்ட பரசுராமரை நோக்கிப் பரத்வாஜபுத்திரரான துரோணர், 'பிராம்மணோத்தமரே! நான் துரோணன். திரவியத்தில் ஆசையோடு வந்திருக்கிறேனென்றறியும்' என்று சொன்னார். அதைக்கேட்ட பரசுராமர், 'இப்போது என்னால் தேகம் ஒன்று மட்டுமே மிகுக்கப்பட்டிருக்கிறது. பிராம்மணனே! அஸ்திர வித்தை, தேகம் இந்த இரண்டனுள் ஏதாவதொன்றைவேண்டு' என்று சொன்னார். துரோணர், 'அஸ்திரங்களெல்லாவற்றையும் அவையெல்லாவற்றிற்கும் ப்ரயோக ஸம்ஹாரங்களையும் எனக்கு நீங்கள் கொடுக்கக் கடவீர்கள்' என்று கேட்டனர். ப்ருகுநந்தனரான பரசுராமர், 'அவ்வாறேயாகட்டும்' என்றுசொல்லி, உடனே அவருக்கு அஸ்திரங்களைக் கொடுத்தார். அப்போது துரோணர் அவற்றைப் பெற்றுக்கொண்டு க்ருதார்த்தரானர். துரோணர் பரசுராமரிடமிருந்து மிக்க சிறப்புள்ள பிரம்மாஸ்திரத்தைப் பெற்றுக் கொண்டு மனமகிழ்ந்து மனிதர்களுள் மேற்பட்டவரானர். அதன் பின், பராக்ரமசாலியும் புருஷ ஸிம்மமுமாகிய துரோணர் துருபதனைச் சந்தித்து, 'ஸ்நேகிதனான என்னைத் தெரிந்துகொள்' என்று சொன்னார். துருபதன், 'வேதமோதாதவன் வேதமோதினவனுக்கும் ரதயுத்தம்தெரியாதவன் ரதயுத்தம் தெரிந்தவனுக்கும் ராஜ்யமில்லாதவன் ராஜ்யமுள்ளவனுக்கும் தோழனாவதில்லை. தோழனென்பதை முன்னிட்டு எதைவிரும்பலாம்?' என்றுசொன்னன். புத்திமானாகிய அந்தத்துரோணர் பாஞ்சாலராஜனைப்பற்றித் தம்மனத்துள் ஒருநிச்சயஞ் செய்துகொண்டு கௌரவஸ்ரேஷ்டர்களுடைய நகரமாகிய அஸ்தினபுரத்திற்குச் சென்றார். பீஷ்மர், வந்துசேர்ந்த சிறந்த புத்திமானான அந்தத்துரோணருக்குப் பலவகைத் தனங்களைக் கொணர்ந்து கொடுத்துத் தம்முடைய பேரன்மார்களை அவரிடம் சிஷ்யர்களாக ஒப்புவித்தார். பிறகு, துரோணர்

தமது அந்தச் சிஷ்யர்களையெல்லாம் வருவித்துத் துருபதனைத் தன் வசப்படுத்துவதற்காகப் பாண்டவர்களாகிய சிஷ்யர்களைப் பார்த்து, 'குற்றமற்றவர்களே! குருதக்ஷிணையொன்று என்னுள்ளத்திலிருக்கிறது. நீங்கள் அஸ்திரவித்தையில் தேர்ந்தபிறகு, அது கொடுக்கத் தக்கதாகும். உண்மைசொல்லுங்கள்' என்று சொன்னார். அப்போது, அந்த ஆசாரியர் அர்ஜுனன்முதலியவர்களால், 'அவ்வாறுஆகட்டும்' என்றுசொல்லப்பட்டார். பாண்டவர்களனைவரும் அஸ்திரங்களை அப்பியஸித்துக்குருதக்ஷிணைகொடுக்க நிச்சயத்தோடிருந்தபோது, துரோணர் மறுபடியும், 'பிருஷதனுடைய புத்திரனை துருபதன் சத்ராவதி நகரத்தில் ராஜாவாயிருக்கிறான். அவனிடமிருந்து அந்தராஜ்யத்தைப் பறித்து உடனே எனக்குக்குருதக்ஷிணைவிஷயமாகக் கொடுக்கவேண்டும்' என்றசொல்லைச் சொன்னார். அந்தத் திருதராஷ்டிரபுத்திரர்கள் பாஞ்சாலதேசத்தரசனிடம் பயந்தனர். மறுபடியும், பாண்டவர்கள் முதலியவர்கள் திருதராஷ்டிரபுத்ரர்களுடன் சேர்ந்து துரோணரால் அனுப்பப்பட்டார்கள். கர்ணன் துரியோதனன் முதலிய அந்த க்ஷத்திரிய ச்ரேஷ்டர்கள் துருபதனைச் சந்தித்துத் தோல்வியடைந்து திரும்பினர். பிறகு, பாண்டுபுத்திரர்கள் ஐவரும் துருபதனை அவன்மந்திரிகளுடன் யுத்தத்தில் ஜயித்துக்கட்டித் துரோணருக்குக் காண்பித்தனர். யாராலும் ஜயிக்கமுடியாத தேவேந்திரனைப்போன்ற தேவேந்திர புத்திரனை அர்ஜுனன், தேவேந்திரன் தானவனைஜயிப்பதுபோல் பாஞ்சாலராஜனை துருபதனை அப்போது ஜயித்தான். மஹாபராக்ரமசாலியான அந்த அர்ஜுனனுடைய அந்தச் சிறந்த சக்தியைக்கண்டு யஜ்ஞஸேனனைச்சேர்ந்த ஜனங்களனைவரும் வியப்புற்று, 'சூரத்தன்மையில் அர்ஜுனனுக்கொப்பான ராஜபுத்திரன் இல்லை' என்று கூறினர். துரோணர், 'அரசனே! மறுபடியும் உன்னுடன் ஸ்நேகத்தை விரும்புகிறேன். ராஜாவாக இல்லாதவன் ராஜாவுக்குத் தோழனாக இருக்கத் தகுதியில்லையே? யஜ்ஞஸேனா! அதனால், ராஜ்யத்திற்காக உன்னுடன் யுத்தத்துக்கு ஆரம்பஞ்செய்தேன். கங்கையின் தென்கரைக்கு நீ அரசன். வடகரைக்கு நான்' என்று சொன்னார். சிறந்த புத்தியுள்ள துரோணரால் இவ்வாறு சொல்லப்பட்ட பாஞ்சாலராஜன், அஸ்திரங்களை அறிந்தவர்களிற் சிறந்த பிராம்மணோத்தமராகிய துரோணரை நோக்கி, 'பரத்வாஜ புத்திரரே! சிறந்த புத்தியுள்ளவரே! இவ்வாறே ஆகட்டும். உமக்கு ஸுகமுண்டாகட்டும். நீர் எந்தநேசத்தை விரும்புகிறீரோ அது சாசுவதமாக இருக்கட்டும்' என்று சொன்னான். வீரர்களாகிய அந்தத்

துரோண பாஞ்சாலரிருவரும் இவ்வாறு ஒருவரோடொருவர் பேசிக் கொண்டும் மிருந்த ஸ்நேகஞ்செய்துகொண்டும் தம்தம்இடம்சென்றனர். ஆனால், அந்தப் பெரிய அவமரியாதை சிறிதுநேரமாயிருந்தாலும் அவ்வரசனுடைய மனத்திலிருந்து விலகவேயில்லை. அவன் துயரப்பட்டுச் சரீரம் மெலிவுற்றனன்.

---

## நூற்றெண்பத்தோராவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

**(துருபதன் துரோணரைக் கொல்லுபவனை புத்திரனை அடையவிரும்பி யாகஞ்செய்விப்பவரைத் தேடிச்செல்லுகையில் உபயாஜரிடம் சென்று அவர்வார்த்தையினால் யாஜருடையஸமீபம் சென்றதும், புத்ரனுக்காக யாகம் நடந்தபொழுது அக்கினிகுண்டத்திலிருந்து த்ருஷ்டத்யும்னனும் பாஞ்சாலியும் பிறந்ததும், அவர்களுக்குப் பெயரிட்டதும், த்ருஷ்டத்யும்னனுக்குத் துரோணர் அஸ்திரவித்தை கற்பித்ததும்.)**

கோபமூண்ட த்ருபதராஜன், துன்பத்தினால் கெடுக்கப்பட்ட மனமுள்ளவனைகப் புத்திரோத்பத்தியைப்பெற விரும்பி, கிரியைகளில் ஸித்திபெற்ற பிராம்மண ப்ரேஷ்டர்களைத் தேடிக்கொண்டு அநேகம் பிராம்மணஅக்ரஹாரங்களில் திரிந்தான் துரோணராற்செய்யப்பட்ட துவேஷத்தைநினைத்துத் துருபதன் எப்போதும் உறங்காமலேயிருந்தான். 'எனக்குச் சிறந்த ஸந்ததியில்லையே' என்று எக்காலமும் சிந்தித்துக்கொண்டிருந்தான் அவன், பிறந்திருந்த புத்திரர்களையும் சுற்றத்தாரையும் வெறுப்பினால் சீ என்று இகழ்ந்தான். துரோணருக்குப் பிரதி செய்ய வேண்டுமென்கிற விருப்பத்தினால் பெருமூச்சுவிடுவதே காரியமாயிருந்தான் அவ்வரசக்கரசனான துருபதன் துரோணரின் மஹிமையையும் கல்வியையும்ஆயுதபயிற்சியையும்செய்கைகளையும் நினைத்துப்பயற்சிசெய்தும் க்ஷத்ரியபலத்தினால் அவருக்குப் பிரதி செய்வகை அறியவில்லை பிறகு, அவ்வரசன் யமுனையினருகிலும் கங்கைக்கரையிலும் திரிந்துகொண்டுபோகையில் பரிசுத்தமான ஒரு பிராம்மண அக்கிரஹாரத்தை அடைந்தான். அவ்விடத்தில் *ஸ்நாதகனல்லாதவனும் தபஸில்லாதவனுமான பிராமணன் எவனுமில்லை.

*ப்ரம்மசரிய வ்ரதத்தை ஒழுங்காக முடித்தவன்.

அவன், வேதம் ஓதுகிறவர்களும் மிகுந்த மகிமையுள்ளவர்களும் சிறந்த தவமுள்ளவர்களும் சாந்தியுடையவர்களும் மேன்மை பெற்றவர்களுமாகிய யாஜர் உபயாஜர் என்னும் இரண்டு பிரம்மரிஷிகளைக் கண்டான். வேதாத்யயனத்தில் ஊக்கமுள்ளவர்களும் காசியபகோத்திரத்தவர்களும் ரிஷிஶ்ரேஷ்டர்களுமாகிய அந்தப் பிராம்மணர்களிருவரும் துயரத்தைத்தாண்டுவிப்பதில் *மிகத்தகுதியுள்ளவர்கள். விரும்பினவற்றையெல்லாம் கொடுக்கப் பின்வாங்காதவனான அந்தத் துருபதன் அவர்களுடைய தவமேன்மையையறிந்து அவ்விருவரையும் அழைத்தான். அவர்களுள் சிரேஷ்டமான தவமுள்ளவரும் இளையவருமான உபயாஜரென்பவரை விரும்பினபொருள்களைக் கொடுப்பதாகச் சொல்லிச் சரணமடைந்தான். அவன் அவருடைய பாதத்தில் பணிவதில் ஊக்கத்துடன், வேண்டியவற்றையெல்லாம் கொடுப்பதாக இன்சொற்சொல்லி முறைப்படி அவரைப்பூஜித்து, 'பிராம்மணரே! உபயாஜரே! துரோணர் மரணத்துக்குக்காரணமான ஒரு புத்திரனும் அர்ஜுனனுக்குப் பாரியையாகத்தக்க ஒரு சிறந்த பெண்ணும் எந்தக் கிரியையினால் உண்டாவரோ அந்தக்கிரியை உங்களால் செய்யப்பட்டதானல் உங்களுக்குப் பத்துக்கோடி பசுக்களைக் கொடுப்பேன். பிராமணஶ்ரேஷ்டரே! அல்லது, உமது மனத்திற்கு மிக்கப்பிரியமானவை வேறு என்ன இருக்குமானாலும் அவற்றையெல்லாம் நான்கொடுப்பேனென்பதில் ஸந்தேகமில்லை' என்று சொன்னான். இவ்வாறு சொல்லப்பட்ட ரிஷி, 'நான் அப்படிச் செய்கிறவனல்லேன்' என்றே அவனுக்கு மறுமொழி சொன்னார். அந்தத்துருபதன் அவர்மனம் திருப்தியடையும்படி செய்யக்கருதி மறுபடியும் அவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தான். பிறகு, ஒரு வருஷத்தின் முடிவில் பிராம்மணோத்தமரான அந்த உபயாஜர் ஒருசமயத்தில் துருபதனை நோக்கி இனியசொல்லாகச் சொல்லலானார்

'அரசனே! என்ஜ்யேஷ்டஸஹோதரர் ஜனமில்லாத வனத்தில் நடந்துகொண்டிருக்கையில் சுத்தமென்று பரிசோதிக்கப்படாத பூமியில் விழுந்திருந்த கனியை எடுத்தார். பின்னேசென்ற நான் என் தமையனாருடைய அந்தத்தகாதசெய்கையைக்கண்டேன். அவர்சோதிக்காதபொருளைப் பெறும்விஷயத்தில் ஒருபோதும் ஐயப்படார். கனி

*இங்கே, யாஜ உபயாஜர்களைக் கன்னிகைப்பிறந்தவர்களென்றும் வீர்ய பக்தர்களென்றும் பழைய உரை கூறுகிறது.

யைப்பார்த்தபின் பாபத்தைக்கொடுக்கும் அதன்குற்றங்களை அவர் ஆராய்ந்துபார்க்கவில்லை. எவர் அதன் சுத்தத்தைப் பகுத்தறியவில்லையோ அவர் மற்றவற்றிலும் எவ்வாறிருப்பார்? எவர் வேதாத்யயனஞ் செய்துகொண்டு குருகுலவாஸஞ்செய்கையில் மற்றவர்கள் எறிந்து விட்டபிக்ஷையை எப்போதும் புஜித்துக்கொண்டும் லஜ்ஜையை விட்டு அன்னத்தின் சிறப்பை பலமுறைசொல்லிக்கொண்டுமிருந்தாரோ அந்த என்ஸஹோதரரைப் பிரயோஜனத்தைமட்டும் கருதுகிறவரென்று என் ஊகமென்னும் கண்ணினால் நான் அறிகிறேன். ராஜனே! அவரிடம்செல். அவர் உனக்குச் செவ்வையாக யாகம்செய்விப்பார்' என்று சொன்னார். அரசனும் உபயாஜர்சொல்லைக்கேட்டு அதனை மனத்துள் நினைந்து அருவருப்புடன் யாஜருடைய ஆச்ரமம் சென்றான். பிறகு, பூஜைக்குரிய யாஜரைச் செம்மையாகப் பூஜைசெய்து, 'ஸமர்த்தரே! எனக்கு யஜ்ஞம் செய்வியும். உமக்கு எண்பதினாயிரம் பசுக்கள் கொடுப்பேன். துரோணருடைய விரோதத்தினால் கொதிப்புற்ற என்னை மகிழ்விக்கத் தகுதியுள்ளவராயிருக்கிறீர். அந்தத் துரோணர் பிரம்மஜ்ஞானிகளிற் சிறந்தவர்; பிரம்மாஸ்திரத்திலும் தமக்குமேல் உயர்ந்தவரில்லாதவர். அதனால், அந்தத்துரோணர் ஸ்நேககலகவிஷயமாக என்னைச் சண்டையில் தோற்கச் செய்தார். கௌரவர்களுக்குச் சிறந்த ஆசாரியரும் சிறந்த புத்தியுள்ளவருமாகிய அந்தத்துரோணருக்கு முன் நிற்கும் க்ஷத்திரியன் இந்தப்புவனியில் ஒருவனுமில்லை. துரோணருடைய பாணவரிசைகள் பிராணிகளின் தேகங்களை ஒழிக்கின்றவை. ஆறுமுழமுள்ள அவருடைய வில்லும் மிகப்பெரிதாகக் காணப்படுகிறது. சிறந்தவில்லாளியும் மிகுந்ததைரியமுள்ளவருமாகிய அந்தத் துரோணர் பிராம்மணவடிவத்தோடு க்ஷத்திரியபலத்தை ஐயமின்றித் தடுத்துவிடுகிறார். பரசுராமரைப்போல் க்ஷத்திரியர்களுடைய நாசத்திற்காக உண்டாக்கப்பட்டவராயிருக்கிறார். அவருடைய அஸ்திரபலம் பெரிது. புவியிலுள்ள மனிதர்களால் அவரை வெல்லமுடியாது. ஆஜ்யாகுதி செய்யப்பட்ட அக்னியைப்போல் பிரம்மதேஜஸை வகிக்கும் அந்தத்துரோணர் க்ஷத்திரிய தர்மத்தை முன்னிட்டு யுத்தத்தில் வந்து சேர்ந்து எரித்துவிடுகிறார். பிரம்மதேஜஸ் க்ஷத்திரியதேஜஸ் இரண்டும் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில், பிரம்மதேஜஸ் சிறந்தது. ஆதலால், நான் க்ஷத்ரிய பலத்தினால் குறைவடைந்தவனாகப் பிரம்மதேஜஸை அடைக்கலமாகப் பற்றியிருக்கிறேன். துரோணரிற் சிறந்த உயர்ந்த பிரம்மஜ்ஞானியாகிய

உங்களையடைந்த பிறகு துரோணரையழிப்பவனும் போரில் வெல்லக் கூடாதவனுமான புத்திரனைப் பெறக்கடவேன். யாஜரே! அந்தக்கிரியையை எனக்காகச் செய்யும்; பத்துகோடி பசுக்கள் கொடுக்கிறேன்' என்று சொன்னான். யாஜர் அவனுக்கு, 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி யாகஞ்செய்வதற்குரிய வற்றை ஸித்தஞ்செய்தார். அவர், விருப்பமில்லாத உபயாஜரையும் குருவின் காரியமென்று ஏவினர். அப்படியாக அந்த யாஜர் துரோணரை அழிப்பதற்குப் பிரதிஜ்ஞை செய்தார். பிறகு, பெருந்தவமுள்ள உபயாஜர் அவ்வரசனுக்குப் புத்திரலாபத்திற்காக யாகம்செய்யும்படி அப்போது அவனுக்குச் சொல்லி, 'அரசனே! எவ்விதமான பிள்ளையை நீ விரும்புகிறாயோ அவ்விதமாக இருக்குந் சக்தியுள்ளவனும் சிறந்த ஒளியுள்ளவனும் மஹாபலசாலியுமான புத்திரன் உனக்கு உண்டாவான்' என்றார். அந்தத் துருபதராஜன் துரோணரைக்கொல்லுகிற புத்திரனைக்கருதி யாககாரியம் நிறைவேறுவதற்காக வேண்டியவற்றையெல்லாம் அவர் சொன்னபடியே சேகரித்தான். யாஜர் ஹோமத்தின் முடிவில் ராஜமஹிஷியை, (நோக்கி,) 'ப்ருஷதியே! என் ஸமீபத்திற்கு வா. ஆணும் பெண்ணுமாகிய இரண்டு குழந்தைகள் உனக்கு உண்டாகப் போகின்றன' என்று கட்டளையிட்டார். அரசி, 'பிராம்மணரே! எனது வாய் சுத்தஞ்செய்யப்படவில்லை. தேகத்தில் உயர்ந்த வாஸனைகளையும் தரித்திருக்கிறேன். புத்திரோத்பத்திக்காக நான் ஒன்றையும் தொடக்கூடியவளாயில்லை. யாஜரே! என் விருப்பமான புத்திரோத்பத்திக்காக (ருதுஸ்நானம் வரை) காத்திரும்' என்று சொல்ல, யாஜர், 'யாஜரால் யாகஞ்செய்யப்பட்டும் உபயாஜரால் மந்திரம் ஜபிக்கப்பட்டுமுள்ள ஹவிஸ் எவ்வாறு விரும்பினதைக் கொடாமலிருக்கும்? ஆதலால், நீ இப்போது வந்தாலும் வா; நின்றாலும் நில்' என்று சொன்னார். இவ்வாறு சொன்னபிறகு, சுத்தமான ஹவிஸ் யாஜரால் ஹோமஞ்செய்யப்பட்டபோது, ஜ்வாலைபோன்ற நிறமுள்ளவனும் உக்கிரரூபமுள்ளவனுமாகிய தேவகுமாரனைப் போன்ற குமாரன் கிரீடத்தையும் உயர்ந்த கவசத்தையும் தரித்துக் கத்தி அம்பு வில்லுகளோடு, அடிக்கடி கர்ச்சனை செய்துகொண்டு அந்தத் தீயிலிருந்து எழுந்தான். அவன் அப்போது உயர்ந்த தேரிமேலேறிச் சென்றான். அப்போது பாஞ்சாலர்கள் மகிழ்ந்து, 'நல்லது, நல்லது' என்று கூவினர். அப்போது ஸந்தோஷத்தால் ஆவேசங்கொண்ட அவர்களை இந்தப் பூமி தாங்கவில்லை. 'பாஞ்சாலர்களுக்குப் பயத்தைப் போக்கு

கிறவனும் புகழையுண்டுபண்ணுபவனும் துருபதராஜாவின் துயரத்தைக் கெடுப்பவனுமாகிய இந்தராஜபுத்திரன் துரோணவதத்திற்காகப் பிறந்திருக்கிறான்' என்று, ஆகாசத்தில் ஸஞ்சரிப்பதும் கண்ணுக்குத் தெரியாததுமான ஒருபெரிய பூதம்கூறிற்று. சுபலக்ஷணங்கள் பொருந்தினவளும், பார்க்கத்தக்க அங்கங்களோடுகூடியவளும், மிகக்கறுத்தும் நீண்டும் தாமரையிதழ்களைப்போன்றுமிருக்கிற கண்களையுடையவளும், கறுத்த நிறமுள்ளவளும், கறுத்தும் சுருண்டுமிருக்கின்ற கூந்தலையுடையவளும், சிவந்தும் உயர்ந்துமிருக்கும் நகங்களையுடையவளும், அழகிய புருவங்களையுடையவளும், அழகிய பருத்தஸ்தனங்களையுடையவளுமாகிய பாஞ்சாலியென்னும் ராஜகுமாரியும் தேவப்பெண்ணை நேரில் மானிட உருவமெடுத்ததுபோல யாகவேதிகையின் நடுவிலிருந்து எழுந்தாள். கருநெய்தல்மலரின் மணத்துக்கொப்பான அவள் மணம் ஒருகுரோசம் வியாபித்தது அவள் சிறந்த அழகுள்ளவள். பூமியில் அவளுக்கு நிகரில்லை. தேவர்களும் தானவர்களும் யக்ஷர்களும் விரும்பத்தக்க அந்தத் தேவதா ரூபமுள்ள குமாரியைப்பார்த்து ராஜபக்தியுள்ள ஜனங்கள் மனங்களித்து, 'பாண்டு புத்திரனும் பரத வம்சத்தில் பிறந்தவனுமாகிய அர்ஜுனனுக்குத் தகுதியுள்ளவள்' என்றுஉரைத்தனர். அழகான நிதம்பங்களையுடைய அவள் பிறந்ததைப்பற்றியும் அசரீரவாக்குச் சொன்னதாவது:—'எல்லாப் பெண்களிலும் சிறந்தவளான கிருஷ்ணை க்ஷத்திரியர்களை நாசஞ்செய்யக் கருதுகிறவள். அழகான இடையுள்ள இவள் ஸமயத்தில் தேவகாரியத்தை நிறைவேற்றப் போகிறாள். இவள் காரணமாகக் கௌரவர்களுக்குப் பெரும்பயம் உண்டாகப்போகிறது' என்பது. அதைக்கேட்டுப் பாஞ்சாலர்களனைவரும் சிங்கக் கூட்டங்களைப்போலக் கர்ச்சித்தனர். சந்தோஷம் நிறைந்த இவர்களை இந்தப் பூமி தாங்கவில்லை. பாஞ்சாலராஜனாகிய துருபதன் அவளைப்பார்த்து ஆனந்தக்கண்ணீர் சொரிந்தான். அந்தக் கிருஷ்ணையென்னும் பாஞ்சாலியைத் தழுவிக்கொண்டும் பாண்டுவின் மருமகளென்று சொல்லி மடியின் மேலேற்றி வைத்துக்கொண்டும் அவ்வரசன் சந்தோஷமடைந்தான். துருபதன் மனைவி, அவ்விருகுழந்தைகளையும் கண்டு, 'இவர் இருவரும் என்னைவிட வேறு ஒருத்தியைத் தாயாராக அறியாமலிருக்க வேண்டும்' என்று யாஜரைச் சரணமடைந்தாள். யாஜரும் ராஜாவின் விருப்பத்தைச் செய்யக் கருதினதினால், 'அப்படியே ஆகட்டும்' என்று அவளுக்குச் சொன்னார். பிராம்மணர்கள், 'ஸந்தோஷம் நிறைந்த

மனத்தோடு கர்வமுள்ளவனாகவும் அதிககோபமுள்ளவனாகவும் இருப்பதனால் த்ருஷ்டன் என்றும், பராக்கிரமமென்னும் தனமிருப்பதனாலும் கிரீடகுண்டலங்கள் முதலிய தனங்களுடன் பிறந்திருப்பதனாலும் த்யும்னன் என்றும், இந்தத் துருபதகுமாரன் த்ருஷ்டத்யும்னனென்று பெயருள்ளவனாக இருக்கட்டும்' என்றனர். நிறம் கறுப்பாயிருந்ததனால் அந்தக்குமாரிக்குக்கிருஷ்ணையென்றேபெயரிட்டனர். அவ்வாறு அந்த ஆண் பெண் இரண்டுகுழந்தைகளும் துருபதனுடைய மஹாயஜ்ஞத்தில்பிறந்தனர். த்ருஷ்டத்யும்னன் வேதாத்யயனத்தில் கரைகண்டவனானான். பராக்ரமசாலியான துரோணர் துருபதபுத்திரனை த்ருஷ்டத்யும்னனைத் தம் வீட்டிற்கழைத்து அஸ்திரவித்தையைக் கற்பிக்கிறதற்காக வித்தியாரம்பஞ்செய்தார். சிறந்தபுத்தியுள்ள துரோணர் விதியை விலக்கமுடியாமல் அவசியம் நேரிடுமென்று நினைத்துத் தம் கீர்த்தியைக் காப்பாற்றுவதற்காக அதனை அவ்வாறு செய்தனர்.

---

## நூற்றெண்பத்திரண்டாவது அத்தியாயம்

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

**(துரியோதனன் பாண்டவர்களை அரக்குமாளிகையில் எரித்ததை ஜனங்கள் சொல்லக்கேட்ட துருபதன் தன்புரோஹிதர் சொல்லால் பாண்டவர்கள் அழியவில்லை என்பதைத் தெரிந்துகொண்டிருந்தும் ஸந்தேகத்துடன் தன் புத்திரியின் விவாகத்தைக்குறித்து ஸ்வயம்வரம் ஏற்படுத்தியிருப்பதைக் குந்திக்கு ஒரு பிராம்மணன் சொல்வதும், பிராம்மணனுடன் பாண்டவர்கள் பாஞ்சாலநகரம் செல்வதும்.)**

உறுதியான அனுஷ்டானங்களுள்ள பிராம்மணர்கள் அரக்குமாளிகையில் நடந்ததைக் கேள்வியுற்றுப் பாஞ்சாலராஜனை துருபதனிடம் பின்வருமாறு சொல்லத் தொடங்கினர்:—'த்ருதராஷ்டிர புத்ரர்கள் மந்திரிகளுடன்கூடி இரகஸியமாக ஆலோசனைசெய்து பாண்டவர்களையழிப்பதற்காக மிகக்கொடிய நிச்சயத்தைச் செய்தனர். மஹாராஜாவே! மிக்க கெட்ட புத்தியுள்ள புரோசனனென்னும் மந்திரி துரியோதனனால் ஏவப்பட்டு வாரணாவதம்சென்று பெரிய அரக்கு

மாளிகை கட்டி அந்த மாளிகையில் குந்தியுடன் மிகவும் அச்சமற்றிருந்த பாண்டவர்களை நடுநிசியில் எரித்துவிட்டான். அந்தத் தயையற்ற அற்பன், தானும் அந்த அக்கினியினால் எரிக்கப்பட்டான். இதைக்கேட்டபோதே திருதராஷ்டிரன் பந்துக்களுடன் மிகுந்த ஸந்தோஷமுற்றுச் சிறிது வியஸனமும் உள்ளத்தில் மகிழ்ச்சியுமாக விதுரரை நோக்கி, 'மிகத்தெரிந்தவனே! பாண்டவர்களுக்குப் பிண்டதானத்தையும் ஜலதர்ப்பணத்தையும் செய்' என்று கட்டளையிட்டு, 'ஆ! ஆ! அவர்கள் விதிவசமாக யமன் வீடுபோயினரே' என்று சொல்லித் தன் உறவினருடன் அங்கே அழுதான். விதுரர் பீஷ்மருடன் கேட்டுப் பிரேத காரியங்களைச் செய்தனர்; பாண்டவர்களை அழிப்பதற்காகத் துராத்மாவான துரியோதனனால் இந்தக்காரியம் செய்யப்பட்டது; இந்தக்காரியம்செய்தவனை முன்னம் நாம்கண்டதுமில்லை; கேட்டதுமில்லை மிகுந்த பாக்கியமுள்ளவனே! பாண்டவர்களைப்பற்றிய இந்தச்செய்தி நாங்கள் கேள்வியுற்றோம்' என்றனர் அவர்கள்சொன்னதைக்கேட்டுச் சிறந்தபுத்தியுள்ள ராஜாவான யஜ்ஞஸேனன் தன் வயிற்றில் பிறந்த பிள்ளை இறந்துபோனால் ஒருவன் எவ்வாறு விசனப்படுவானோ அவ்வாறு பாண்டவர்களின் நாசத்தைப்பற்றிப் பரிதாபமுற்றான். அப்போது துருபதன் வ்யஸனத்துடன் நகரத்துஜனங்களெல்லாரையும் மந்திரிகளையும் அழைத்துப் பின்வருமாறு சொல்லலானான்.

'அன்பர்களே! என்ன அழகு! என்ன தைரியம்! என்ன சூரத்தனம்! என்ன பலம்! அர்ஜுனனையே இரவும் பகலுமாகநினைத்துக்கொண்டிருக்கிறேன் அவன் உடன்பிறந்தவர்களோடும் தாயாரோடும்கூடத் தீயில் எரிக்கப்பட்டானோ! உலகத்தில் இதைக்காட்டிலும் புதுமை என்னவிருக்கிறது! காலம் யாவர்க்கும் தாண்டமுடியாதது. பிரதிஜ்ஞை செய்தது பொய்யானதால் உள்ளத்திலுள்ள துயரத்தினால் இரவும்பகலும் தகிக்கப்படுகின்ற நான் இப்போது இவ்வுலகத்தில் என்னசெய்வேன்? குற்றமில்லாதவர்களான அந்த யாஜோபயாஜர்களிருவரையும் நான் சுச்ரூஷைசெய்து துரோணரைக்கொல்லுகிறபுத்திரனையும் அர்ஜுனனுக்குப் பார்யையாகிற பெண்ணையும்வேண்டினேன். அப்படியே யாஜர் எனக்கு மாக்குத்தத்தஞ்செய்ததும் உலகத்துக்குத்தெரியும். யாஜர் புத்திரகாமேஷ்டியென்னும் ஹோமத்தைச் செய்தபிறகு, எனக்குஸந்தோஷத்தையுண்டுபண்ணுகிற இந்தத்திருஷ்டத்யும்னனும்கிருஷ்ணையுமாகிய இருவரும் பிறந்தனர். அந்தப்பாண்டவர்கள்

குந்தியுடன் இறந்தனர். நான் என்ன செய்வேன்?' என்று இவ்வாறு சொல்லித் துருபதன் மிகத்தாங்காதவனாக அழுதான். இப்படி அதிகமாக வ்யஸனப்படுகின்ற துருபதனைக்கண்டு ஸத்துவகுணமுள்ளவரும் வித்தையின் மட்டத்தைச் செவ்வையாக அறிந்தவருமாகிய புரோஹிதர், 'பாண்டவர்கள், பெரியோர்கள்உபதேசத்தில்ஊக்கமுள்ளவர்கள்; தர்மானுஷ்டானம் செய்பவர்கள்; அப்படிப்பட்டவர்கள் அழியவுமழியார்கள்; கேடில்வியுமடையார்கள். இதனை ஸத்தியமாக நான் கண்டிருக்கிறேன். அரசனே! நீ கேள்; பிராம்மணர்களாற் சொல்லப்பட்டதும் வேதங்களில் நான் கேட்டதும் ஸத்தியந்தான். முன்னே இந்திரன் காணமற்போய், இந்திராணி பிருஹஸ்பதியின் அபிப்பிராயத்தை அநுஸரித்து உடனே *உபஶ்ருதிகேட்க, அந்த உபஶ்ருதியினால் தாமரைக்கிழங்கின் கணுவில் அகப்பட்டானல்லவா? மஹாராஜாவே! பாண்டவர்களைப்பற்றியும் நான்உபஶ்ருதிகேட்டேன். அந்தப்பாண்டவர்கள் ஏதோ ஓரிடத்தில் ஜீவித்திருக்கின்றனர் ஸந்தேகமில்லை. நான் நிமித்தங்கள் கண்டேன். பாண்டவர்கள் இங்கேயே வருவார்கள்.வேந்தனே!எந்தக்காரணம்பற்றி இங்கேவருவரோ அதைக் கேள். க்ஷத்திரியர்கள் கன்னிகாதானஞ் செய்வதற்கு ஸ்வயம்வரம் விதிக்கப்பட்டுள்ளது. ராஜஶ்ரேஷ்டனே!நகரத்தில்ஸ்வயம்வரத்தைப் பற்றிப் பிரஸித்தஞ்செய்யவேண்டும். வேந்தனே! அந்தப்பாண்டவர்கள் தூரத்திலிருந்தாலும்ஸமீபத்திலிருந்தாலும் ஸ்வர்க்கத்திலிருந்தாலும் இன்னும்எங்கிருந்தாலும் ஸ்வயம்வரத்தைக்கேட்டுக்குந்தியுடன் கூட வந்துசேருவார்கள்; ஸந்தேகமில்லை. அரசனே! ஆதலால், ஸ்வயம்வரத்தைப்பிரகடனஞ்செய்யவேண்டும்;காலதாமதம்செய்யவேண்டாம்' என்றார். புரோகிதர்சொல்லைக்கேட்டு ஸந்தோஷமடைந்த துருபதன் அப்போதே நகரத்தில் பிரஸித்தஞ் செய்வித்தான். 'எழுபத்தைந்து நாட்களுக்குப்பின் தைமாதம் சுக்கிலபக்ஷம் ரோகிணி நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் திரௌபதிக்கு ஸ்வயம்வரம் நிச்சயமாக நடக்கப்போகிறது' என்று நகரத்தில் பறையறைவித்தான். தேவர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் தவமேதனமாகவுடைய ரிஷிகளும் ஸ்வயம்வரத்தைப்பார்க்கவிரும்பிப் போய்க்கொண்டேயிருக்கின்றனர். சந்தேகமில்லை. பிராம்மணியே! உன் புதல்வர்கள் மஹாத்மாக்கள். மிக்க அழகுடையவர்கள். அந்தத்திரௌபதி தற்செயலாக இவர்களில் ஒருவனைக்கணவனாக அடையலாம்; உலகத்தில் பிரம்மாவினுடைய

*உபஶ்ருதி—வாய்ச்சொல்.

நல்லகருத்தை எவன் அறிவான்? ஆதலால், விருப்பமிருந்தால் புத்திரர்களுடன் கூட நீ செல்லலாம். தபோதனையே! அந்தப்பாஞ்சால தேசம் எந்தக்காலத்திலும் செழுமையானது. அந்த யஜ்ஞஸேனனென்னும் அரசனும் பிராம்மணர்களுக்கு உபகாரி; சொன்னசொல் தவறாதவன்; பட்டணத்து ஜனங்களனைவரும் பிராம்மணர்களிடம் அன்புடையவர்; எந்தக்காலமும் நாம்வேண்டாமலே அழைத்துக்கொடுப்பவர். நானும் இந்த என்சிஷ்யர்களுடன் கூட அங்கே போகிறேன். பிராம்மணியாகிய உனக்கு இஷ்டமிருந்தால் ஒரு கூட்டமாகச் சேர்ந்துபோவோம்' என்றான். இவ்வாறு சொல்லைச் சொல்லி அந்தப் பிராம்மணன் நிறுத்தினன்.

---

## நூற்றெண்பத்துமூன்றாவது அத்தியாயம்

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

---

### (பாண்டவர்கள் பாஞ்சாலதேசத்துக்குப் புறப்படுவது.)

**பாரதஸ்**ரேஷ்டரான ஜனமேஜயரே! இதைக்கேட்டபின்னர், பாண்டவர்களனைவரும் மன்மதபாணங்களினால் துளைக்கப்பட்டு மனத்தினால் திரௌபதியையடைந்தனர். ஜனமேஜயராஜாவே! அதன்பின், மஹாபலசாலிகளான அந்தப் பாண்டவர்களனைவரும் அவ்விரவு முழுதும் அம்புதைத்தவர்கள்போல உள்ளத்தில் நோயுற்றவராயினர். அப்போது, ஸத்தியம் பேசுகிறவளாகிய குந்தி, தன்புதல்வர்களெல்லாரும் அந்தத்திரௌபதியினிடம் மனஞ்சென்றவர்களாயிருப்பதைக்கண்டு யுதிஷ்டிரரை நோக்கிப் பின்வருமாறு சொல்லலானாள்.

'நாம் இந்த அழகானநகரத்தில் பிக்ஷை நிரம்பக்கிடைத்ததனால் மகிழ்ச்சியுற்று மஹாத்மாவான பிராம்மணருடைய இந்தக்க்ருஹத்தில் பலநாள் வாஸஞ்செய்தோம். வீரனே! இங்கு இவ்விடத்திலுள்ள அழகான காடுகளும் தோட்டங்களும் எவையோ அவையனைத்தையும் பலமுறை கண்டோம். பின்னும் அவைகளே பார்க்கப்பட்டால் இப்போது முன்போல நமக்குச் சந்தோஷத்தையுண்டாக்கவில்லை. வீரனே! கௌரவனே! பிக்ஷைகளும் முன்போலக் கிடைக்கவில்லை. ஆதலால், உனக்கிஷ்டமிருந்தால் நாம் பாஞ்சாலதேசத்திற்குப் போ

வோம். வீரனே! புதிய இடங்களைக்காண்பது இனிமையாயிருக்கும். சத்துருக்களைத் தொலைப்பவனே! பாஞ்சாலதேசம் செழுமையான தென்றும் கேள்விப்படுகிறோம். அந்த யஜ்ஞஸேனராஜன் பிராம்மணப் பிரியனென்றும்கேட்டிருக்கிறோம். ஓரிடத்தில்நெடுங்காலம்வஸிப்பது தகாது. எனக்கும் அதில் விருப்பமில்லை. புத்திரனே! ஆதலால், உனக்கு விருப்பமிருந்தால் அங்கே போவதுநலம்' என்றாள். யுதிஷ்டிரர், 'உனக்கு இஷ்டமானகாரியம் எதுவோ அதுதான் எங்களுக்குச் சிறந்த நன்மை. ஆனால், என் தம்பிகள் போவார்களோ மாட்டார்களோ நான் அறியேன்' என்று சொல்ல, பிறகு குந்தி பீமஸேனனுக்கும் அர்ஜுனனுக்கும் நகுலஸஹதேவர்களுக்கும் அங்கேபோகிறதைப்பற்றிச் சொன்னாள். அப்போதே அவர்களும், 'அப்படியே ஆகலாம்' என்றனர். பிறகு, குந்தி ராஜபுத்திரர்களாகிய பாண்டவர்களுடன்கூட அந்தப்பிராம்மணரை விடைகேட்டுக்கொண்டு மஹாத்மாவாகிய துருபதனுடைய அழகான நகரத்துக்குப் புறப்பட்டாள்.

---

## நூற்றெண்பத்துநான்காவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

(புறப்படுகிறசமயத்தில் வ்யாஸபகவான்வந்து பாண்டவர்களுக்குத் திரௌபதி கிடைக்கப்போகிறளென்பதைச்சொல்லித் திரும்பிச்செல்வது.)

அப்போது, அந்த மஹாத்மாக்களான பாண்டவர்கள் மாறுவேஷத்தோடு வஸிக்கையில், ஸத்தியவதீபுத்திரரான வியாஸர் அவர்களைப் பார்ப்பதற்காக வந்தனர். வீரர்களாகிய பாண்டவர்கள், அவர் வந்ததைக் கண்டவுடன், எதிர்கொண்டுசென்று நமஸ்கரித்து அபிவாதனஞ்செய்து கைகூப்பி நின்றனர். பாண்டவர்களால் ரஹஸ்யத்தில் பூஜிக்கப்பெற்ற வியாஸர் அவர்களெல்லாருக்கும் உட்கார அநுமதி கொடுத்து அவர்கள் உட்கார்ந்தபின், 'ஓ! வீரர்களே! சாஸ்திரத்தையும் தர்மத்தையும் அநுஸரித்து நடக்கிறீர்களா? பூஜிப்பதற்கு அருகர்களாகிய பிராம்மணர்விஷயத்தில் உங்களுடைய பூஜை தவறாமலிருக்கிறதா?' என்று கேட்டனர். பிறகு, தர்மமும் ராஜநீதியுமடங்கிய வார்த்தையைச் சொல்லி, அந்த வியாஸபகவான் பற்பல புதியகதைகளைக்கூறி மறுபடியும் பின்வருமாறு சொல்லத் தொடங்கினார்.

'ஒருதபோவனத்தில் நுண்ணிய இடையையுடையவளும் அழகிய நிதம்பமும் அழகிய புருவங்களும் உடையவளும் எல்லாக் குணங்களும் நிரம்பினவளுமாகிய ஒரு மஹாத்மாவான ரிஷியின் கன்னிகை இருந்தனள். ஆனால், அவள், தான் செய்தவினைகளினால்பாக்கியஹீனையாயிருந்தாள். அவள் அழகுள்ள கன்னிகையாயிருந்தும் அவளுக்குக் கணவன் கிடைக்கவில்லை. பிறகு, அதனால் துயரமுற்றுக் கணவனை வேண்டித் தவஞ்செய்யத் தொடங்கினாள். அவள் கடுந்தவஞ் செய்து சங்கரரை ஆராதித்தாள். அந்தக்கன்னிகையின் விஷயத்தில் சந்தோஷமடைந்த பகவானான சங்கரர் சிறந்த புகழுள்ள அவளை நோக்கி, 'வரம் கேள். உனக்கு ஸுகமுண்டாகட்டும். வரம் கொடுப்பவனாக இருக்கிறேன்' என்று சொன்னார். பிறகு, அவள் ஈசுவரரிடம், 'எல்லாக்குணங்களும் நிரம்பினகணவனை விரும்புகிறேன்' என்று தன் விருப்பத்தைப் பலமுறை சொன்னாள். பாரதர்களே! பிறகு, பேசுகிறவரிற் சிறந்தவரான ஈசுவரர் அவளை நோக்கி, 'அன்புள்ளவளே! உனக்கு ஐந்து புருஷர்கள் வருவர்' என்று மறுமொழி சொன்னார். இவ்வாறு சொல்லப்பட்ட கன்னிகை பிறகு வரம்கொடுத்த ஈசுவரரை நோக்கி, 'தேவரே! பிரபுவே! நுமது அருளினால் நான் ஒருகணவனை வரிக்கிறேன்' என்று சொன்னாள். மறுபடியும் ஈசுவரர், 'நீ என்னிடம் பதியைக்கொடும்' என்று ஐந்து தரம் சொல்லியிருக்கிறாய். ஆனால், நீ மற்றொருதேகம் எடுத்தபோது நான் சொன்னவாறு அந்த விஷயம் நடக்கும்' என்ற முடிவான சொல்லைச் சொன்னார். தேவதையைப்போல் அழகுள்ள அந்தக்கன்னிகை துருபதன் குலத்திற் பிறந்திருக்கிறாள். துருபத புத்திரியாகிய சிலாக்கியமான கிருஷ்ணை உங்களுக்கு மனைவியாக நியமிக்கப்பட்டிருக்கிறாள். மஹாபலசாலிகளே! அதனால பாஞ்சாலநகரத்தில வாஸஞ்செய்யுங்கள். அவளையடைந்தபிறகு, ஸௌக்கியமுள்ளவர்களாவீர்கள்; நிச்சயம்' என்று சொல்லி, மிகுந்தமஹிமையுள்ளவரும் மிக்கதவமுள்ளவரும் பாண்டவர்களுக்குப் பிதாமகருமான வ்யாஸர் பாண்டவர்களிடமும் குந்தியினிடமும் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார்.

---



## நூற்றெண்பத்தைந்தாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

(பாஞ்சாலநகரத்துக்குப்போகிற பாண்டவர்கள் வழியில் பிராம்மணர்களோடு ஸம்பாஷணஞ் செய்வது.)

பகவானாகிய வியாஸர் சென்றபின், அந்தப்புருஷச்ரேஷ்டர்களும் வீரர்களுமான பாண்டவர்கள் மனக்களிப்புற்றுத் தாயாருடன் புறப்பட்டனர்; இனத்தார்களுடன் பாஞ்சாலதேசத்துக்குச் செல்லும் பிராம்மணர்களை வழியில் கண்டனர். பிறகு, அந்தப்பிராம்மணர்கள் பிரம்மசாரிகளான பாண்டவர்களைநோக்கி, 'நீங்கள் எவ்விடத்திற்குப்போகின்றீர்கள்? எங்கிருந்து வருகின்றீர்கள்?' என்றனர். யுதிஷ்டிரர், 'நாங்கள் ஏகசக்ரநகரத்திலிருந்து புறப்பட்டோம்; ஸஹோதரர்கள்; தேவதாதர்சனஞ் செய்யும் உத்தேசமுள்ள பிரம்மசாரிகள்; பாஞ்சாலதேசத்தில் துருபதநகரத்திற்கு நாங்களெல்லோரும்செல்லுகிறோமென்று நீங்கள் தெரிந்துகொள்ளுங்கள். நாங்கள் உங்களைப் பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறோம். எங்களுக்கு மிகுந்த விருப்பமிருக்கிறது' என்றுசொன்னார். அதைக்கேட்ட பிராம்மணர்கள், 'இதோ நாங்கள் கூடவே புறப்பட்டிருக்கிறோம். நாங்களும் அங்கே செல்லுகிறவர்கள். அங்கே ஆச்சரியமாக விளங்கும் மஹோத்ஸவம் நடக்கப்போகிறது. அந்தஊரில் மஹாத்மாவாகிய யஜ்ஞஸேனனென்று சொல்லப்பட்ட துருபதனுக்குக் கர்ப்பத்தில் ஜனிக்காத பெண்ணிருக்கிறாளே, அவள் ஸ்வயம்வரத்தில்நிற்கப்போகிறாள். அவள் அழகுள்ளவள்; அங்கங்களிற்குற்றமில்லாதவள்; மெல்லியவள்; புகழ்பெற்றவள்; த்ரோணருக்குச் சத்துருவும் பராக்கிரமசாலியுமான த்ருஷ்டத்யும்னனுடைய ஸஹோதரி; சூரனும் மஹாத்மாவும் ஸோமகர்களுக்குள் மஹாரதனுமாகிய அந்த த்ருஷ்டத்யும்னன் வில்லம்புகளோடு, ஹோமஞ்செய்து ஜ்வலித்த அக்னியிலிருந்து பிறந்தவன். அவன்பிறக்கும்போது, 'இதோ இவன் த்ரோணருக்கு யமனும் சிஷ்யனுமாகப் பிறக்கிறான்' என்று அசரீரிவாக்குச் சொல்லிற்று. பெண்களுக்குள் இரத்தினமும் கறுத்தகண்களையுடையவளும் கருநெய்தல்மலர்போல் கறுத்தநிறமுள்ளவளும் அவன் ஸஹோதரியுமாகிய அவள் அந்தப்பெருவேள்வியில் யாகமேடையிலிருந்து பிறந்தவள். யஜ்ஞஸேனன்குமாரியாகிய அந்தத் த்ரௌபதியென்னும் சிறந்தபெண்ணையும் அவளுடைய அந்தஸ்வயம்வரத்தை

யும் பார்ப்பதற்கு அங்கேபோகிறோம். ராஜாக்களும், ராஜபுத்திரர்களும், மிகுந்த தக்ஷிணைகள் கொடுத்து முறைப்படி யாகங்கள்செய்தவர்களும், வேதாத்யயனஞ்செய்த பரிசுத்தர்களும், மஹாத்மாக்களான தபஸ்விகளும், அழகும்பலமுமுள்ளவர்களும் அண்டமுடியாதவர்களும் மஹாரதர்களும் அஸ்திரங்கள் கற்றவர்களுமாகிய இளவரசர்களும் அங்கே சேரப்போகின்றனர். அங்கே அந்த அரசர்கள் தம் தம் காரிய ஸித்திக்காகத் தனங்களையும் கோக்களையும் பக்ஷிய போஜ்யங்களையும் பலவகைத் தானங்களையும் எல்லாருக்குங்கொடுப்பார்கள். ஸ்வயம்வரத்திலிருக்கும் கிருஷ்ணையையும், அந்தராஜபுத்திரி அந்தச்சபையில் எந்தக்ஷத்திரியனை வரிக்கப்போகிறாளோ அவனையும் பார்த்து அந்தத்தானங்களையும் பெறுவோம். அப்போது மிகுந்த ஸாமர்த்தியமுள்ள [1]வைதாளிகர்களும், [2]நர்த்தகர்களும் [3]ஸூதர்களும் [4]மாகதர்களும், (நித்திரையினின்றும்) எழுப்புகிறவர்களும், பலதேசங்களிலிருந்தும் வந்துசேர்வார்கள். இந்தவினோதத்தை அவ்விடத்திற்கண்டு தானத்தையும்பெற்றுக்கொண்டு மஹாத்மாக்களாகிய நீங்களும் உங்கள் தாயாரும் எங்களுடன்கூட ஸுகமாக வஸிக்கலாம். அழகானவர்களும் ஓரேவிதமான ரூபமுள்ளவர்களுமாகிய நீங்களெல்லாரும் வந்திருப்பதைக்கண்டு கிருஷ்ணை உள்ளம்பற்றி உங்களில் ஒருவனைக் கணவனாகவரிக்கலாம். அழகானவனும் சிறந்த கைகளுடையவனுமான உங்களுடைய இந்த ஒரு [5]ஸஹோதரன் சந்தித்துக் கைச்சண்டைசெய்தால் பெருந்தனத்தை ஜயித்துவிடுவான்' என்று சொன்னார்கள். யுதிஷ்டிரர், 'ஐயா! நிரம்ப ஸரியானது. யஜ்ஞஸேனனுக்குப் பெண்ணான திரௌபதியையும் அவளுடைய ஸ்வயம்வரமஹோத்ஸவத்தையும் பார்ப்பதற்கு அங்கே செல்வோம்' என்று சொன்னார்.

---

1 தாளமின்றிப்பாடுபவர்கள். 2 நட்டுவர்கள். 3 புராணங்கள் சொல்லுகிறவர். 4 விருதுகளைப் பாடுபவர்கள். 5 பீமன்.

## நூற்றெண்பத்தாறுவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)



(பாதிராத்திரியில் பாண்டவர்கள் கங்கைக்கரைசென்றதும், அங்கு ஸ்திரீக ளுடன் ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்த சித்ரரதன் என்னும் கந்தர்வ னுடன் அர்ஜுனன் யுத்தம் செய்ததும், அர்ஜுனன் ஆக்னேயாஸ் திரத்தால் அவனையெரித்துப் பிடித்ததும், கந்தர்வனுடையமனைவி யின் வேண்டுகோளினாலும் யுதிஷ்டிரருடைய உத்தரவினாலும் மறுபடி அவனை விடுவித்ததும், கந்தர்வன் ஆக்னேயாஸ் திரத்தைப் பெற்றுக்கொண்டு அர்ஜுனனுக்கு கந்தர் வாஸ்திரத்தைக் கொடுத்ததும், அவன் புரோ ஹிதரைச் சம்பாதித்துக்கொள்ளும்படி பாண்டவர்களுக்குச்சொன்னதும்.)

ஜனமேஜயரே! புருஷச்ரேஷ்டர்களான அந்தப்பாண்டவர்கள் வடக்கேபோகின்ற மேடுபள்ளமில்லாத வழிகளினால் தாயாரை முன் னிட்டுக்கொண்டு குறிப்பிட்டபடி சென்றனர். பாஞ்சாலநகரத்தைக் குறித்து இரவும்பகலும் நடந்து தேவலோக நதியாகிய கங்கையை நோக்கிச் சென்றனர். புருஷச்ரேஷ்டர்களான பாண்டவர்கள் சந்தி ராஸ்தமனகாலமாகிய ஸந்தியின் ஸந்தியில் ஜலத்தில் ஸ்நானஞ்செய் வதற்காகச் சங்கரருடைய வாஸஸ்தானமாகிய கங்கைத் துறையைச் சேர்ந்தனர். மஹாரதனாகிய தனஞ்சயன், வெளிச்சத்திற்காகவும் ரக்ஷைக்காகவும் எரிகொள்ளியை எடுத்துக்கொண்டு அங்கே அவர்க ளுக்குமுன்னே சென்றான். ஏகாந்தமும் ரமணீயமுமான அந்தக்கங்கா ஜலத்தில் ஸ்திரீகளை விளையாடச்செய்து ஜலக்கிரீடைசெய்துகொண் டிருந்த கந்தர்வராஜன் நதிக்குவருகின்ற அவர்களுடைய சப்தத்தைப் பொறுமையுடன் கேட்டான். பலவானான அந்தக் கந்தர்வராஜன் அந்த ஒலி காதில் நுழைந்தவுடன் கோபங்கொண்டான். அவன் அங் கே வீரர்களான பாண்டவர்கள் தாயாருடன் இருக்கக்கண்டு உக்கிர மானவில்லை நாணேற்றிக்கொண்டு பின்வருமாறு சொல்லத்தொடங்கி னான்.

'ராத்திரிகளின் முன்பாகங்களில் ஸந்தியை சிவந்து பயங்கரமா யிருக்கின்றதல்லவா? அதில் எண்பது விநாடிகள்போக மிச்சமுள்ள காலம் காமசாரிகளான யக்ஷகந்தர்வராக்ஷஸர்களுக்காக ஏற்பட்ட தென்று சொல்லுகின்றனர். இதுதவிர, மற்றக்காலந்தான் மனிதர்கள்

தங்கள் வேலைகளில் பிரவிர்த்திப்பதற்குரியதென்று நினைக்கப்பட்டிருக்கிறது. அந்த [1] வேளைகளிலுள்ள ஆசையினால் ஸஞ்சரிக்கின்ற மூடர்களான மனிதர்களை நாங்கள் ராக்ஷஸர்களுடன் சேர்ந்து உபாயங்களைச்செய்து அடக்கிவிடுவோம் இதனாலேதான் பிரம்மஜ்ஞானிகளான ஜனங்கள், ஸேனையோடுகூடிய அரசர்களுள்பட எல்லாமனிதர்களும், இரவில் ஜலத்தினிடம் வருவதை மறுக்கின்றனர். தூரத்தில் நில்லுங்கள்; எங்கள் அருகில் அணுகவேண்டாம்; நான் கங்காஜலத்திற்கு வந்திருப்பதை நீங்கள் ஏன் அறியவில்லை? நான் உரிமையான சக்தியை ஆதாரமாகக்கொண்ட அங்காரபர்ணனென்னும் கந்தர்வனென்று அறியுங்கள். நான் கௌரவமுள்ளவன்; பொறாமைக்காரன்; குபேரனுக்கு அன்புள்ள ஸ்நேகிதன். இதுவும் அங்காரபர்ணம் என்று பெயர்பெற்ற என் வனம்; கங்கைக்கரையில் காமஸுகங்களை அனுபவித்துக்கொண்டு புதிதுபுதிதாக நான் ரமிக்குமிடம். ராக்ஷஸர்களும் ஆபிசாரமார்க்கத்தை அனுஸரித்தவர்களும் தேவர்களும் மனிதர்களும் இங்கு அணுகமாட்டார்கள். குபேரனுக்குக் கிரீடம்போன்ற என்னிடம் எவ்வாறு நெருங்குகின்றீர்கள்?' என்றான். அர்ஜுனன், 'துர்ப்புத்தியுள்ளவனே! சமுத்திரத்திலும் இமயமலையினருகிலும் இந்தக் கங்காநதியிலும் இரவிலும் பகலிலும் ஸந்தி வேளையிலும் யாருக்குப் பாத்தியம் ஏற்பட்டிருக்கிறது? கந்தர்வனே! மேலும், நாங்கள் பூரணசக்தியையுடையவர்கள். அகாலத்தில் உன்னை ஆக்ரமித்தோம் கொடியவனே! யுத்தத்தில் சக்தியில்லாத மனிதர்களல்லவா உங்களைப் பூஜிக்கின்றனர்? இமயமலையில் பொற்கொடு முடியிலிருந்து புறப்பட்ட இந்தக் கங்கை [2] ஏழுபிரிவுகளாகச் சென்று சமுத்திரஜலத்தைச் சேர்ந்தது. கங்கை, யமுனை, ப்லக்ஷஜாதை, ஸரஸ்வதீ, ரதஸ்தை, ஸரயு, கோமதி, கண்டகி இவற்றின் தீர்த்தத்தையும் அப்படியே (முன் சொன்ன) ஏழுநதிகளின் தீர்த்தத்தையும் பருகுபவர்களிடம் பாவங்கள் தங்குவதில்லை. கந்தர்வனே! இத்தக்கங்கை [3] ஒரு கரையுள்ளதாகவும் அழுக்கற்றதாகவும் ஸ்வர்க்கலோகத்தில் பிரவகித்துத் தேவர்களில் அளகநந்தையென்ற கியாதியை அடைந்திருக்கிறது. கங்கையே [4] பிதிர்களையடைந்து தீவினைசெய்தவர்

[1] ஸந்தியா காலம் முதல் நடு இரவு வரை.

[2] 1. வஸ்வோகஸாரா, 2. நளினீ, 3. பாவனீ, 4. ஸீதா, 5. சக்ஷுஸ், 6. ஸிந்து, 7. அளகநந்தை.

[3] ஆகாயமொன்றையே கரையாகவுடையது.

[4] பிதிர்க்களென்றது, பிதிர்லோகத்தை.

கள் தாண்டக்கூடாத வைதரணீநதியாக ஆகிறதென்று ஸ்ரீ வ்யாஸ பகவான் சொல்லியிருக்கிறார். அந்தத் தேவநதியானது எந்தக்காலத்திலும் தடையில்லாதது; ஸ்வர்க்கத்தைக் கொடுப்பது; புண்ணியமானது; அதனை எவ்வாறு தடுக்க விரும்புகிறாய்? இது சாச்வதமான தர்மமன்று. தடுக்கமுடியாததும் எக்காலமும் தடையில்லாததுமாகிய புண்ணியமுள்ள கங்காஜலத்தை உன்பேச்சினால் நாங்கள் விரும்பினபடி ஏன் தொடாமலிருப்போம்?' என்று சொன்னான்.

அங்காரபர்ணன் அதனைக்கேட்டுக் கோபித்து வில்லைவளைத்துப் பல்லில் விஷமுள்ள ஸர்ப்பங்களைப்போன்ற கூர்மையான அம்புகளை விடுத்தான். பாண்டுபுத்திரனான தனஞ்சயன் எரிகொள்ளியையும் உத்தரீயமாயிருந்த தோலையும் வேகமாகச் சுழற்றி அவனுடைய அம்புகளெல்லாவற்றையும் விலக்கினான். அர்ஜுனன், 'கந்தர்வனே! பயப்படுத்துவது அஸ்திரம் தெரிந்தவர்களிடத்தில் பிரயோகிக்கப்படுவதில்லை; அஸ்திரம்தெரிந்தவர்களிடத்தில் பிரயோகிக்கப்பட்டால் அது நுரைபோல் அழிந்துவிடும் கந்தர்வனே! கந்தர்வர்களெல்லாரையும் மனிதருக்கு மேற்பட்டவர்களென்று நான் அறிவேன். ஆதலால், திவ்யாஸ்திரத்தினால் நான் யுத்தஞ்செய்வேன்; கபடயுத்தஞ் செய்யேன். கந்தர்வா! முன்னர் இந்த ஆக்நேயாஸ்திரத்தை இந்திரனுக்குப் பூஜ்யரும் ஆசாரியருமான பிருஹஸ்பதி பரத்வாஜமுனிவருக்குக் கொடுத்தனராம். பரத்வாஜரிடமிருந்து அக்னிவேச்யரும் அக்னிவேச்யரிடமிருந்து என்குருவும் இதனை அடைந்தனர். பிராமணச்ரேஷ்டராகிய துரோணர் எனக்கு இதனைச்செம்மையாகக்கொடுத்தார்' என்று கோபத்துடன் சொல்லி, ஜ்வலிக்கின்ற ஆக்நேயாஸ்த்ரத்தைக் கந்தர்வன் மேல் பிரயோகித்தான் அந்த அஸ்திரம் அந்தக்கந்தர்வன் உதிரத்தை எரித்தது. அஸ்திரத்தின் தாபத்தினால் மூர்ச்சையடைந்து ரதத்தை விட்டுக் கீழே குதித்துத் தலைகவிழ்ந்து விழுகின்ற அந்தக்கந்தர்வனை மஹாபலசாலியான அந்தத் தனஞ்சயன் புஷ்பமாலைபோன்கூடிய தலைமயிர்களிற் பிடித்தான்.

பிறகு, அஸ்திரம் விழுந்ததனால் பிரஜ்ஞைதப்பின கந்தர்வனைத் தன் ஸஹோதரர்களருகில் இழுத்துவந்தான். கும்பீனஸியென்று பெயருள்ள அந்தக் கந்தர்வபத்தினி தன்பதியைக்காப்பாற்ற விருப்பமுள்ளவளாகி யுதிஷ்டிரரைச் சரணமடைந்தாள். அவள், 'மஹானுபாவரே! என்னைக்காப்பாற்றும். இந்த என் கணவனை விட்டுவிடும். பிரபு

வே! கும்பீனஸியென்னும் பெயருள்ள கந்தர்வப் பெண்ணாகிய நான் சரணாகதி செய்கிறேன்' என்று சொன்னாள். யுதிஷ்டிரர், அர்ஜுனனைப்பார்த்து, 'அன்பனே! சத்துருக்களை ஸம்ஹரிப்பவனே! யுத்தத்தில் தோல்வியடைந்தவனும் புகழற்றவனும் பெண்ணே கதியாகவுடையவனும் பராக்கிரமம் கெட்டவனுமான பகைவனை எவன் கொல்வன்? இவனை விட்டுவிடு' என்றார். அர்ஜுனன், 'கந்தர்வா! உயிரைப் பெற்றுக்கொள்; செல்; விசனப்படாதே. கௌரவராஜரான யுதிஷ்டிரர் உனக்கு இப்போது அபயங்கொடுக்கிறார்' என்றான். கந்தர்வன், 'உன்னால் ஜயிக்கப்பட்ட நான் அங்காரபர்ணனென்னும் முன்பெயரை விட்டுவிடுகிறேன். தனது பெயர், புகழ்போனபிறகு, ஜனஸபையில் சிலாக்கியமாகாது. நான் இந்த லாபத்தை நன்றாகப்பெற்றேன். திவ்யாஸ்திரங்களையுடையவனான அர்ஜுனனுக்குக் கந்தர்வர்களின்மாயையைச் சேர்ப்பிக்க விரும்புகிறேன். விசித்திரமான இந்த என்னுடைய உத்தமரதம் அஸ்திராக்னியினால் எரிக்கப்பட்டது. ஆதலால், சித்ரரதனென்ற பெயரோடிருந்த நான் இப்போது எரிக்கப்பட்ட ரதனானேன். முன்னே தவஞ்செய்து சம்பாதித்த இந்த வித்தை இருக்கிறது. இதனை என் உயிரைக்கொடுத்த மஹாத்மாவுக்கு இப்போது சொல்லப்போகிறேன்; தன் பராக்ரமத்தினால் வெல்லப்பட்டு அசையாமலிருக்கச் செய்யப்பட்ட எதிரி சரணாகதனாகும்போது அவனுக்கு உயிரைக்கொடுப்பவனெவனோ அவன் எந்த நன்மைக்குத்தான் உரியவனல்லன்? இந்த வித்தை * சாக்ஷுஷியென்ற பெயருள்ளது. இதை மனு சந்திரனுக்குக்கொடுத்தார். சந்திரன் விஸ்வாவஸு என்னும் கந்தர்வனுக்குக் கொடுத்தான். விஸ்வாவஸு எனக்குக் கொடுத்தான். குருபரம்பரையாகக்கொடுக்கப்பட்ட அந்த வித்தை அற்பமதிகளையடைந்து அழிந்துவிடுகிறது. இது வந்த வழியை நான் சொன்னேன். இதன் மஹிமையைப் பற்றி நான் சொல்லக்கேள். இம்மூன்றுலோகங்களிலும் எந்த ஒன்றை எவன் கண்ணால்காண விரும்புவனோ அத்தகையதாகப் பார்க்க விரும்புவனோ அவன் அதனை அத்தகையதாகப் பார்க்கத் தகுந்தவனாவான். ஆறுமாதகாலம் ஒற்றைக்காலால்நின்று தவஞ்செய்து இந்தவித்தையைப் பெறவேண்டும். விரதானுஷ்டானஞ் செய்தபின் அந்தவித்தையை உன்னிடம் வரும்படி நானே செய்வேன். வேந்தனே! இந்தவித்தையினால்நாங்கள் மனிதரைப்பார்க்கிலும் சிறப்புற்றோம். மகிமையைக் காண்பித்துத் தேவர்களுக்கொப்பாயிருக்கிறோம். புருஷச்ரேஷ்டனே! நான் உனக்கும் உன்ஸஹோதரர்களுக்கும் கந்தர்வலோகத்திற்பிறந்த

* கண்ணைச்சேர்ந்தது.

குதிரைகளில் தனித்தனியே நூறு நூறு கொடுக்கிறேன். உயர்ந்த நிறமும் மனோவேகமுமுள்ள தேவகந்தர்வர்களின் வாஹனங்களான அந்தக்குதிரைகள் இளைத்தாலும்பலக்குறைவில்லாமலிருக்கும். வேகத்திலும் மற்றெவற்றிலும் பின்வாங்கா. முன்னே தேவேந்திரனுக்காக விருத்ராஸுரனைக் கொல்வதாகியவஜ்ராயுதம் விசுவகர்மாவினால்செய்யப்பட்டது. அது விருத்ரன் தலையிற்பட்டுப் [1]பத்துத்துண்டாகவும் நூறுதுண்டாகவும் சிதறிப்போயிற்று. அவற்றில், தேவர்களால்பிரித்தெடுத்துக்கொள்ளப்பட்ட வஜ்ராயுதத்தின் துண்டுகள் பூஜிக்கப்படுகின்றன. உலகத்தில் புகழையே தனமாகவுடையனவையெல்லாம் அந்த வஜ்ராயுதத்தின்ரூபமென்றே சொல்லப்படுகின்றன. பிராமணனுக்குக் கை வஜ்ரம்; க்ஷத்திரியனுக்கு ரதம் வஜ்ரம்; வைசியர்களுக்குக்கொடை வஜ்ரம்; சூத்ரர்களுக்குத் தொழில் வஜ்ரம்; க்ஷத்திரியர்களின் வஜ்ரமாகிய ரதத்தின் ஒருபாகமாகியிருத்தலினால் குதிரைகள் முக்கியமானவையென்று சொல்லப்படுகின்றன. பெண்குதிரை தேரின [2]அங்கத்தைப்பெறுகிறது குதிரைகளில் தேர்ச்சியுள்ளவர்கள்தாம் சூரர்கள். கந்தர்வலோகத்திற்பிறந்த என்குதிரைகள் நினைத்தவர்ணமும் நினைத்தவேகமுமெடுத்து நினைத்தபோது வந்துநின்று நினைத்தகாரியத்தை நிறைவேற்றும்' என்றான்.

அர்ஜுனன், 'கந்தர்வனே! நீ என்னிடம் அன்புவைத்துக்கொடுத்தாலும் பிராணஸங்கடம்பற்றிக்கொடுத்தாலும் அந்த வித்தையையாவது பொருளையாவது ஞானத்தையாவது நான் விரும்பவில்லை' என்றான். கந்தர்வன், 'மஹான்களின் சேர்க்கையே ஸந்தோஷத்தைக் கொடுப்பதாகக்காணப்படுகிறது. நீ எனக்கு உயிரைக்கொடுத்ததனால் ஸந்தோஷமடைந்த நான் உனக்கு வித்தையைக்கொடுக்கிறேன். பரதஸ்ரேஷ்டனே! அர்ஜுனா! உன்னிடமிருந்தும் உத்தமமான ஆக்னேயாஸ்திரத்தை வாங்கிக்கொள்வேன். அப்படிச் செய்தால் நியாயமாகும். காலதாமதம் வேண்டாம்' என்றான். அர்ஜுனன், 'சிநேகிதனே! கந்தர்வனே! அஸ்திரம்கொடுப்பதனால் உன்னிடமிருந்து குதிரைகளைப்பெறவிரும்புகிறேன். நம்மிருவருடையஸ்நேகமும் நீடித்திருக்கட்டும். எதனால் உங்களிடமிருந்து மனிதருக்குப்பயமுண்டாகுமோ அதைச் சொல். கந்தர்வனே! வேதந்தெரிந்தவர்களும் ஸாதுக்களும் சத்துருக்களைச்சிக்ஷிப்பவர்களுமாகியநாங்களெல்லாரும் இரவில்செல்லும்போது

---

[1]பெருந்துண்டு பத்து, சிறுதுண்டு நூறு. [2]குட்டிபோடுகிறது.

உன்னால் எந்தக்காரணம்பற்றி எதிர்க்கப்பட்டோமோ அந்தக்காரணம் யாது? சொல்' என்று கேட்க, கந்தர்வன், 'பாண்டுபுத்திரர்களே! உங்களுக்கு அக்னியுமில்லை; ஹோமமுமில்லை; நீங்கள் பிராம்மணர்களை முன்னிட்டுக்கொள்ளவுமில்லை. ஆதலால், என்னால் எதிர்க்கப்பட்டீர்கள். புருஷஶ்ரேஷ்டனே! யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் பிசாசங்களும் பக்ஷிகளும் நாகங்களும், பிராம்மணரை முன்னிட்டுக்கொண்டு போகின்றவரை எதிர்ப்பதில்லை. [1]அக்கினிவான்களிற் சிறந்தவனே! ஆதலால், உங்களுடைய பராக்கிரமத்தையும் குலத்தையுமறிந்திருந்தும் உங்களுடைய இந்தயாத்திரையைநான் முதலில் தடுத்தேன். பரதஶ்ரேஷ்டனே! மூன்றுலோகங்களிலும் உங்களையறியாதவன்யார்? சிறந்தமஹிமையுள்ள உங்கள்குணங்களினாலுண்டானதும் சிறந்ததும் அழகுள்ளதுமாகிய புகழ் எங்கும் பரவியிருக்கிறது. ஞானமுள்ளவர்களாகிய யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் பிசாசர்களும் நாகர்களும் அஸுரர்களும் குருவம்சத்தில் வரலாற்றைச் சொல்லுகின்றனர். வீரனே! சிறந்தபுத்தியுள்ள உன்முன்னோர்களின் குணங்களை நாரதர்முதலிய தேவரிஷிகள் சொல்ல யான் கேட்டிருக்கிறேன். கடல்சூழ்ந்த இந்தப்பூமியெல்லாம்ஸஞ்சரித்தநான் உன்உயர்ந்தகுலத்தின்பெருமையை நேராகவும் கண்டிருக்கிறேன். அர்ஜுனா! வேதத்திலும் வில்வித்தையிலும் உனக்கு ஆசாரியரும் மூன்றுலோகங்களிலும் வ்யாபித்த புகழுள்ளவருமாகிய த்ரோணரை நான் அறிவேன். வேதந்தெரிந்தவரெல்லாரிலும் சிறந்தவரும் ஆயுததாரிகளுக்கெல்லாம்மேலானவரும் பாணப்பிரயோகங்களிலும்அஸ்திரப்பிரயோகங்களிலும்வில்லெடுப்பதிலும் நிபுணரும் ப்ருஹஸ்பதிபகவானுடைய சிஷ்யர்களிற் சிறந்தவருமான த்ரோணரை அறிவேன். கௌரவஶ்ரேஷ்டனே! தர்மதேவதை, வாயு, இந்திரன், அசுவினிதேவர்கள், பாண்டு இவ்வறுவரும் கௌரவவம்சத்தைவிருத்திசெய்தவர்களென்றுநானறிந்திருக்கிறேன். குந்திபுத்திரனே! தேவர்களிலும் மனிதர்களிலும் உத்தமர்களாகிய இவர்கள் உன் தந்தையர்களென்று நானறிவேன். ஸஹோதரர்களாகிய நீங்களனைவரும் தெய்வத்தன்மையுள்ளவர்கள்; மஹாத்மாக்கள்; ஆயுததாரிகளெல்லாரிலும் சிறந்தவர்கள்; சூரர்கள்; விரதங்களை நன்றாக அனுஷ்டானஞ் செய்பவர்கள். அர்ஜுனா! பரிசுத்தாத்மாக்களாகிய உங்களுடைய சிறந்த உள்ளத்தையும் அறிவையும் அறிந்தும் இங்கே உங்களுக்குத் தடைசெய்தேன். கௌரவனே! மேலும், கைவன்மையாகிற தனத்தையடைந்த ஆண்பிள்ளை பெண்களினருகில்

---

[1] ஆக்னேயாஸ்திரமிருப்பதுபற்றி இங்ஙனம் அழைத்தது.

தனக்கு அவமதிப்புவருவதைப் பொறுக்கமாட்டான். கௌந்தேயனே! இரவில் எங்களுக்குப் பலம் இன்னும் அதிகமாகும். ஆதலால், மனைவிகளுடனிருந்த எனக்குக் கோபம்வந்தது. தபதியின்வம்சத்தை விருத்தி செய்பவனே! அப்படிப்பட்ட நான் இந்தச்சண்டையில் எந்தக் கிரியையினால் உன்னால் ஜயிக்கப்பட்டேனோ அதை நான் சொல்லக்கேள். அர்ஜுனா! பிரம்மசரியம் சிறந்ததர்மம். அஃது உன்னிடத்தில் தவறாமலிருக்கிறது. ஆகையால், யுத்தத்தில் நான் உன்னால் ஜயிக்கப்பட்டேன். பகைவரைத் துயரப்படுத்துகிறவனே! எந்த க்ஷத்திரியன் காமத்தையடக்காமலிருப்பானோ அவன் இரவில் யுத்தத்திற்கு வருவானாயின் எவ்வகையிலும் பிழைத்திரான். அர்ஜுனா! புலன்களை அடக்காதவனாயிருந்தாலும் எவனொருவன் பிராம்மணர்களை முன்னிட்டுக்கொண்டிருப்பானோ புரோகிதரை முன்வைத்துக்கொண்ட அவன் ராத்திரியில் சஞ்சரிக்கும் பூதங்களையெல்லாம் வெல்வன். தபதிவம்சத்திற் பிறந்தவனே! ஆதலால், மனிதர்களுக்கு இவ்வுலகில் எந்தநன்மை விரும்பப்படுவதாயிருந்தாலும் அந்தக்காரியத்தில் சித்தத்தையடக்கின புரோஹிதர்களை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். ஆறு அங்கங்களுள்ள வேதத்தில் ஊக்கமுள்ளவரும் சுத்தரும் பொய்யாதவரும் தர்மசிந்தனையுள்ளவரும் தேர்ந்த அறிவுள்ளவருமாகிய புரோகிதர் அவர்களுக்கு இருக்கவேண்டும். எவனுக்குத் தர்மந்தெரிந்தவரும் சிறந்தவாக்குள்ளவரும் நல்லொழுக்கமுள்ளவரும் சுத்தருமாகிய புரோஹிதர் இருப்பாரோ அந்த அரசனுக்கு ஜயம் நிச்சயம். அதன்பிறகு ஸ்வர்க்கமும் நிச்சயம். ராஜாவானவன் கிடைத்தற்கரிய லாபத்தைப்பெறுவதற்கும் கிடைத்ததைக் காப்பதற்கும் குணங்கள் நிரம்பின புரோஹிதரை முன்வைத்துக்கொள்ளக்கடவன். எவன் செல்வத்தையும் கடலை ஆடையாகவுடுத்த பூமிமுழுமையையும் தான் அடைய விரும்புவனோ அவன் புரோகிதர்கருத்தில் நிற்கவேண்டும். தாபத்யனே! பிராம்மணனை வைத்துக்கொள்ளாத ஓர் அரசன் வெறுமையான பராக்கிரமத்தாலும் குலத்தாலும் பூமியை ஜயிப்பது எங்கும் இல்லை. கௌரவர்களின் வம்சவிருத்திசெய்கிறவனே! ஆதலால், பிராம்மணனை முன்வைத்துத்தான் ராஜ்யத்தை நீடூழிகாலம் ஆளக்கூடுமென்றறி' என்றான்.

---

## நூற்றெண்பத்தேழாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)



**(ஸூர்யனின் பெண்ணான தபதியின் சரித்திரமும், ஸூர்யன் தன்பக்தனான ஸம்வரணனுக்குத் தன்பெண்ணைக்கொடுக்க நிச்சயஞ்செய்ததும், வேட்டையாடப்போன ஸம்வரணன் மலையில் தபதியைக் கண்டு காமமுற்றதும், அவன் அவளுடன் ஸம்பாஷணஞ் செய்ய ஆரம்பித்ததும், அவள் மறைந்ததும்.)**

அர்ஜுனன், 'இங்கு என்னைப்பார்த்துத் தாபத்யனென்ற சொல்லைச் சொன்னாயல்லவா? அந்தத் தாபத்யனென்பதன் பொருளைத் தெளிவாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். எவளைப்பற்றி நாங்கள் தாபத்யர்களாயிருக்கிறோமோ அந்தத் தபதியென்பவள் யார்? ஸாதுவே! ஸத்புருஷனே! நாங்கள் கௌந்தேயர்களல்லவா? உண்மையை அறிய விரும்புகிறேன்' என்றான். இவ்வாறு சொல்லப்பட்ட அந்தக் கந்தர்வன் மூன்றுலோகங்களிலும் புகழ்பெற்ற குந்திபுத்திரனாகிய தனஞ்சயனுக்குக் கதை சொல்லத் தொடங்கினான்.

'புத்திமான்கள் எல்லாரிலும் சிறந்த பார்த்தனே! ஆகட்டும்; இந்த விநோதமான கதையை நடந்தபடி முழுதும் உனக்குச் சொல்லுவேன். தாபத்யனென்றசொல்லை உனக்கு எந்தக்காரணத்தினால் சொன்னேனோ அதனை உனக்குச் சொல்லப்போகிறேன். மன ஊக்கத்துடன் கேள். பிரபுவே! ஆகாயத்தில் வாஸஞ்செய்துகொண்டு தன் ஒளியினால் ஸ்வர்க்கத்தையும் வியாபிக்கின்றவனான இந்தத் தேவனாகிய ஸூர்யனுக்குத் தகுதியான பெண்ணும் ஸாவித்ரிக்கு இளையவளுமான தபதியென்பவள் ஒருத்தி இருந்தாள். தவத்துடன் கூடிய தபதி மூவுலகிலும் பெயர்பெற்றவள். தேவப்பெண்களிலும் அஸுரப்பெண்களிலும் யக்ஷப்பெண்களிலும் ராக்ஷஸப்பெண்களிலும் அப்ஸரஸுகளிலும் கந்தர்வப்பெண்களிலும் எவளும் ரூபத்தில் அவளுக்கொப்பாக இருந்ததில்லை. அந்தப்பெண் அழகான பிரிவுகளையுடையவையும் குற்றமற்றவையுமான அங்கங்களோடு கூடியவளும் மிகக் கறுத்தும் நீண்டுமுள்ள கண்களையுடையவளும் நல்லொழுக்கமுள்ளவளும் கற்புள்ளவளுமாயிருந்தாள். பாரதனே! ரூபத்தினால் சோபிக்கின்ற அந்தப்புதல்வி பதினாறு வருஷங்களாகி, பருவமடைந்து, விவாஹத்திற்குரிய பெண்ணாயிருந்ததைக் கண்டு, சூரியன் அழகி

லும் ஒழுக்கத்திலும் குணத்திலும் கல்வியிலும் அவளுக்கு ஈடான கணவனொருவனும் மூன்றுலோகங்களிலும் இருப்பதாக நினைக்கவில்லை. ஸூர்யன் கன்னிகாதானத்தைப்பற்றி நினைத்து அந்த விஷயத்தில் நிச்சயம் பெறவில்லை. கௌந்தேயனே! அப்போது ரிக்ஷனுடைய புத்திரனும் கௌரவர்களிற் சிறந்தவனும் பலசாலியுமான ஸம்வரணராஜன் நியமத்தோடு சுத்தனாக இருந்து ஆர்க்யம், கந்தம், புஷ்பம் இவை முதலியவற்றினாலும், புலன்களையடக்குவதனாலும், உபவாஸத்தினாலும், தியானத்தினாலும், பலவகைகளாக ஸூர்யனை ஆராதனஞ்செய்தான். கௌரவபுத்திரனே! அவன் அகங்காரத்தை விட்டுப் பரிசுத்தனாகச் சுச்ரூஷை செய்துகொண்டு ஸூர்யன் உதயமாகும்போது பக்தியுடன் பூஜைசெய்தனன். பிறகு, நன்றியறிந்தவனும் தர்மந்தெரிந்தவனும் பூமியில் அழகில் நிகரற்றவனுமாகிய ஸம்வரணனைத் தபதிக்குத் தகுந்த கணவனென்று ஸூர்யன் நினைத்தான். கௌரவனே! பிறகு, பெயர்பெற்ற குலத்தோனும் அரசர்களிற் சிறந்தவனுமான அந்த ஸம்வரணனுக்கு ஸூர்யன் அந்தக் கன்னிகையைக் கொடுக்கக்கருதினன். ஆகாயத்தில் ஜ்வலிக்கும் கிரணங்களோடு கூடிய ஸூர்யன் தன் ஒளியினால் எவ்வாறு எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்கிறானோ அவ்வாறே பூமியில் ஸம்வரணராஜன் தன் பிரகாசத்தினால் பிரகாசிக்கச் செய்துகொண்டிருந்தான். பார்த்தனே! பிராம்மணிஷ்டர்கள் உதயமாகிற ஸூர்யனை எவ்வாறு பூஜிக்கின்றனரோ அவ்வாறே பிராம்மண வருணத்திற்குத் தாழ்ந்த வருணத்து ஜனங்கள் ஸம்வரணனைப் பூஜித்தனர். அந்த ஸ்ரீமானாகிய ஸம்வரணராஜன், மிகவும் விரும்பப்படுவதனாலும் அன்பர்களுக்கு இனியனாயிருத்தலாலும் சந்திரனையும், மிக்க தேஜஸையுடைமையாலும் பகைவர்களுக்குத் துன்பஞ்செய்வதினாலும் ஸூர்யனையும் மிஞ்சியிருந்தான். கௌரவனே! இவ்வகையான குணங்களும் அநுஷ்டானங்களுமுள்ள அந்த ஸம்வரணராஜனுக்குத் தபதியென்னும் தன் கன்னிகையைக் கொடுக்கவேண்டுமென்று சூரியன் தானாகவே மனங்கொண்டான். பார்த்தனே! பிறகு, ஒருநாள் அளவற்ற பராக்கிரமமுள்ள ஸ்ரீமானான அவ்வரசன் மலையைச்சார்ந்தவனத்தில் வேட்டையாடித்திரிந்துகொண்டிருந்தான். கௌந்தேயனே! வேட்டையில் திரிந்த அவ்வரசனது நிகரற்ற குதிரை பசியும் தாகமுமடைந்து மலையில் இறந்தது. பார்த்தனே! அவ்வரசனாகிய அவன் குதிரையிறந்ததனால் கால்களாலேயே மலைமேல் ஸஞ்சரிக்கையில் உலகத்தில் நிகரற்றவளும் நீண்டகண்களையுடையவளுமான ஒரு கன்னிகையைக் கண்டான். எதிர்ப்படைகளை வருத்தத்தக்கவ

ணாகிய அவ்வரசஸிம்மம் தனித்திருந்த அந்தக் கன்னிகையைச் சந்தித்துக் கண்கள் அசையாமல் பார்த்திருந்தான். அவ்வரசன் அவளை அழகினால் ஸ்ரீதேவியென்றே நினைத்தான். திரும்பவும் அழகினாலும் ஒளியினாலும் ஆதித்யனுடைய ஒளியே தவறிவிழுந்ததென்றும் அக்னி ஜ்வாலையென்றும் ஊகித்தான். மாசற்றிருப்பதனாலும் மனத்தைக்கவருவதனாலும் களங்கமற்ற சந்திரகலையென்றும் நினைத்தான். மிகக் கறுத்தகண்களையுடைய அவள், மலையின்மேல் எந்தவிடத்தில் நின்றாளோ அந்தவிடத்தில் பொற்பிரதிமைபோல் பளபளப்புடன்சோபித்தாள். அவளுடைய விசேஷமான ரூபத்தினாலும் அலங்காரத்தினாலும் அம்மலையிலுள்ள மரங்கள் சிறுகிளைகள் கொடிகளுடன் பொன்மயம் போலிருந்தன அவ்வரசன் அவளைக்கண்டு எல்லாலோகங்களிலுமுள்ள பெண்களையும் அவமதித்தான்; தான் கண்படைத்ததற்குப் பயன் கிடைத்ததாகவும் நினைத்தான் அவ்வரசன் தான் பிறந்தது முதல் எந்த எந்த ரூபத்தைக்கண்டானோ அவையெல்லாம் அவளுக்கு நிகரல்லவென்று நினைத்தான். அவ்வாறு குணங்களென்னும் கயிறுகளினால் கட்டப்பட்ட மனத்தையும் கண்களையுமுடையவனாகி அந்த இடத்தைவிட்டுச் சலிக்கவில்லை; ஒன்றையும் உணரவுமில்லை. விசாலமான கண்களையுடைய இவளுடைய ரூபமானது பிரமதேவரால் தேவர்களும் அஸுரர்களும் மனிதர்களுமடங்கிய இவ்வுலகத்தைக் கடைந்தெடுத்து வியக்தமாகச் சிருஷ்டிக்கப்பட்டது' என்று அவளழகென்னும் தனத்தின் நிறைவினால் ஊகித்தான் சிறந்தகுலத்தோனாகிய ஸம்வரணராஜன் அப்போது உலகத்தில் நிகரற்ற அந்த அழகான கன்னிகையைக் கண்டவுடன் மன்மதபாணத்தினால் பீடிக்கப்பட்டு உள்ளத்தில் கவலையுற்றான். தாங்கக்கூடாத காமாக்கினியினால் தபிக்கப்பட்ட அவ்வரசன், வெட்கப்படுகின்ற அந்த அழகிய கன்னிகையைப் பார்த்துத் தைரியமாக அப்போது பேசத்தொடங்கினான்.

'வாழைமரம்போன்ற தொடைகளையுடையவளே! நீயாவள்? யாருடைய பெண்? எதற்காக இங்கிருக்கிறாய்? தெளிவான புன்னகையுள்ளவளே! என் மனிதரில்லாக் கானகத்தில் தனியாகச் சஞ்சரிக்கிறாய்? எல்லா அங்கங்களிலும் பிழையில்லாதவளும் எல்லா ஆபரணங்களும் அணிந்துகொண்டவளுமாகிய நீ இந்த ஆபரணங்களை விரும்பத்தக்க ஆபரணம்போலிருக்கிறாய். உன்னை நான் தேவப்பெண்ணாகவும் அஸுரப்பெண்ணாகவும் யக்ஷகன்னிகையாகவும் ராக்ஷஸகன்னிகையாகவும் நாககன்னிகையாகவும் கந்தர்வகன்னிகையாகவும் மானிடப்பெண்

ளுகவும் நான் நினைக்கவில்லை. பெண்ணரசியே! எந்த உயர்ந்த பெண்களை நான் கண்டும் கேட்டுமிருக்கிறேனோ அவர்களையெல்லாம் உனக்கொப்பாக நான் நினைக்கவில்லை, அழகிய முகமுள்ளவளே! சந்திரனைப் பார்க்கிலும் மிக்க இனியதும் தாமரையிதழ்போன்ற கண்களையுடையதுமாகிய உன்முகத்தைக் கண்டவுடன் மன்மதன் என்னைக் கலக்குகிறுனே' என்று அவ்வரசன் அவளைப்பார்த்துச்சொன்னுன். அப்போது அவள் ஜனமில்லாதகாட்டில் காமபீடிதனுன அரசனுக்கு யாதொரு மறுமொழியும் சொல்லவில்லை. பிறகு, அரசன் அடிக்கடி பிதற்றிக்கொண்டிருக்கும்போதே நீண்ட கண்களையுடைய அவள், மேகங்களில் மின்னல் மறைவதுபோல அங்கேயே மறைந்தாள் தாமரையிதழ்போன்ற கண்களையுடைய அவளைத் தேடுவதற்கு அவ்வரசன் பித்தங்கொண்டவன்போல் பிரமைகொண்டு வனமெங்கும் திரிந்தான். அந்த ராஜஶ்ரேஷ்டன் அவளைக்காணுமல் அங்கே அதிகமாகப் புலம்பிச் சற்றுநேரம் அசைவற்றிருந்தான்.

---

## நூற்றெண்பத்தெட்டாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

(பூமியில் விழுந்த ராஜனைக்கண்டு அவனிடம் தபதி வருவதும், அவர்கள் ஸம்பாஷிப்பதும்.)

பிறகு, அவள் காணக்கூடாமற் போனபோது, மதனுல் மயலுற்ற அரசன் பகைவர் கூட்டங்களை வீழ்த்துகிறவனுயினும் தரையின்மீது வீழ்ந்தான். அவன் பூமியில் விழுந்தபிறகு, அழகிய நகையுள்ளவளும் பருத்தும் அகன்றுமிருக்கிற நிதம்பங்களையுடையவளுமாகிய அந்தப்பெண் மறுபடியும் அவ்வரசனுக்குப் புலப்பட்டாள். பிறகு, அந்த அழகுள்ள தபதியென்பவள், கௌரவர்களின் வம்சத்தை விருத்தி செய்பவனும் காமனுல் பீடிக்கப்பட்ட மனமுள்ளவனுமாகிய அவ்வரசனை இனிய சொல்லினுல் அழைத்துச் சிரித்துக்கொண்டே, 'பகைவரையடக்குகிறவனே! ராஜஸிம்மமே! எழுந்திரு; எழுந்திரு; உனக்கு ஸுகமுண்டாகட்டும். பூமியில் நீ வெளிப்படையாக மயங்கிக் கிடக்கத்தகாது' என்ற மதுரமான சொல்லைச் சொல்லினள். இவ்வாறு அழகிய சொல்லினுல் அழைக்கப்பட்ட அவ்வரசன், அப்போதே பருத்த நிதம்பத்துடன் அவளை தன்

முன்நிற்கக்கண்டான். உடனே, அவ்வரசன் மன்மதாக்கினியினால்கொதிப்புற்ற மனமுள்ளவனாகி, எழுத்துக்கள் தெளிவில்லாத சொல்லினால் கறுத்தகண்களையுடைய அவளை அழைத்துப்பேசினான். 'கறுத்த கண்களையுடையவளே! நல்லது. பெண்ணரசியே! மதனனால் வருத்தப்பட்டு உன்மீதுபற்றுள்ள என்னை நீ அடைவாயாக; என்னுயிர் என்னை விட்டுவிடுகின்றது. விசாலமானகண்களையுடையவளே! தாமரைமலரின்உட்காய்போன்ற நிறமுள்ளவளே! உன்னைப்பற்றி இந்தமன்மதன் கூரம்புகளினால் என்னை ஓயாமல் துளைக்கிறான். அழகியவளே! சிறந்த முகமுள்ளவளே! இவ்வாறாகக் கேள்வியில்லாத இடத்தில் மன்மதனென்னும் பெரியஸர்ப்பத்தினால் கடிக்கப்பட்ட என்னைப் பருத்ததும் விசாலமுமான நிதம்பத்தையுடைய நீ அடைவாயாக. கின்னர கீதம்போலப் பேசுகிறவளே! என்னுயிர் உன்ஸ்வாதீனம். முழுதும் குற்றமற்ற அழகான அங்கமுடையவளே! பதுமத்திற்கும் சந்திரனுக்கும் ஒப்பான முகமுள்ளவளே! அச்சமுள்ளவளே! உன்னைவிட்டு நான் பிழைத்திருக்கமுடியாதவன். தாமரையிதழ்போன்ற கண்களையுடையவளே! இந்த மன்மதன் என்னைத்துளைக்கிறான். விசாலமான கண்களையுடையவளே! பெண்ணரசியே! ஆதலால், என் விஷயத்தில் தயைசெய். கறுத்தகண்களையுடையவளே! பற்றுள்ள என்னை நீ விடத்தகாது. பெண்ணரசியே! நீ அன்புவைத்து என்னைக்காப்பாற்றுதற்குரியவளாகிறாய். உன்னைப்பார்த்ததனாலே நேசம்வைத்த என் மனம் மிகக்கலங்குகிறது. அழகியே! உன்னைப்பார்த்தபின் மற்றொருத்தியைப் பார்க்க எனக்கு விருப்பமில்லை. பெண்ணரசியே! தயைசெய். நான் உன்ஸ்வாதீனம். பற்றுள்ள என்மேல் அன்புவை. சிறந்த நிதம்பமுடையவளே! விசாலமானகண்களையுடையவளே! உன்னைப்பார்த்தவுடன் மன்மதன் உள்ளே மறைந்து அம்புகளினால் அடித்துவிட்டான். தாமரைக்கண்ணியே! மதனனென்னும் தீயினால் எனக்குண்டான தாபத்தை அன்புவைப்பதென்னும் பெயருள்ள ஜலத்தினால்தணிக்கக்கடவாய். இனியவளே! பெண்ணரசியே! உன்னைக்கண்டதனாலுண்டாகித் தாங்கமுடியாத அம்புகளினால் அடிப்பவனும் ஜயிக்கமுடியாதவனும் உக்ரமான அம்பும் வில்லுமுடையவனுமான மதனனை நீ உன்னைக்கொடுப்பதனால் சமனஞ்செய்வாயாக. மங்கையரிற் சிறந்தவளே! காந்தர்வமென்னும்விவாகத்தினால் என்னைச்சேர். வாழைமரம்போன்ற தொடைகளுடையவளே! விவாகங்களுள் காந்தர்வ விவாகம் சிறந்ததென்று சொல்லப்படுகின்றது' என்றான்.

தபதி, 'அரசனே! நான் தந்தைக்கடங்கிய கன்னிகை. என் விஷயத்தில் நான் ஸ்வதந்திரையல்லள். என்னிடத்தில் உனக்கு விருப்பமிருந்தால் என் தந்தையைக்கேள். வேந்தனே! நீ என்னைப்பார்த்தமாத்திரத்தில் உன்னுயிர் என்னால் எவ்வாறு அபகரிக்கப்பட்டதோ அவ்வாறாகவும் அதற்கதிகமாகவும் நீ என்னுயிரை அபகரித்துவிட்டாய். ராஜஸ்ரேஷ்டனே! ஆனால், என்தேகத்துக்கு நான் அதிகாரியன்று. அதனால், உன்னிடம் வரவில்லை. பெண்கள் ஸ்வதந்திரைகளல்லர். எல்லா உலகங்களிலும் கியாதிபெற்ற குலமுடையவனும் அடுத்தவர்களிடம் அன்புள்ளவனுமாகிய பிரபுவை எந்தக் கன்னிகை கணவனாகவிரும்பாள்? ஆதலால், இவ்விதமானகாலத்தில் என் தந்தையான ஆதித்யரை நமஸ்காரத்தினாலும் தவத்தினாலும் விரதத்தினாலும் ஆராதித்து வேண்டிக்கொள். பகைவரைமாய்ப்பவனே! அரசனே! அவர் என்னை உனக்குக் கொடுக்கவிரும்புவாராயின், நான் உனக்கு எப்போதும் வசப்பட்டிருப்பவளாக இப்போதே ஆகிவிடுவேன். க்ஷத்திரியஸ்ரேஷ்டனே! நான் தபதியென்று பெயருள்ளவள். உலகத்துக்கெல்லாம் தீபமாகிய இந்த ஸூர்யனுடைய பெண்ணான ஸாவித்திரிக்கு இளையவள்' என்றாள்.

---

## நூற்றெண்பத்தோன்பதாவது அத்தியாயம்.

### சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

**(மறுபடி தபதிமறைந்ததும், மயக்கங்கொண்ட ஸம்வரணனிடம் மந்திரிவந்து தேறுதல் செய்ததும், அரசன் ஸூர்யனை உபாஸித்தும்காலத்தில் வஸிஷ்டர் வந்ததும், வஸிஷ்டர் ஸூர்யனிடம்சென்று ஸூர்யனைத்துதிக்க அதனால் ஸந்தோஷமடைந்த ஸூர்யன் ஸம்வரணனுக்காகத் தன்பெண்ணை வஸிஷ்டரிடம் கொடுத்ததும், அந்தமலையிலேயே தபதியும் ஸம்வரணனும் விவாகஞ் செய்துகொண்டு அங்கேயே கிரீடைசெய்து கொண்டிருக்கையில் அவன் ராஜ்யத்தில் துவாதசவருஷக்ஷாமம் வந்ததும், அதனை வஸிஷ்டர் நிவிர்த்தி செய்ததும்.)**

சிறந்தவளான தபதி இவ்விதம் சொன்னபிறகு விரைவாக மேலுலகஞ்சென்றாள். அரசன் மனநோயுற்றவனாக, 'தபதி, தபதி' என்றே புலம்பினான். அவ்வரசன் பலமுறை தடுக்கிவிழுந்தான்; மறுபடியும்

எழுந்து ஓடினான். ஓடியும் தபதியைக்காணாமலே அவ்வரசன் அந்தப்பூமியிலேயே திரும்பியும் விழுந்தான். படையுடனும் வேலைக்காரர்களுடனும்கூட வேந்தனைத்தேடிவந்த அமைச்சன், உத்ஸவகாலத்தில் நாட்டப்பட்ட இந்திரத்வஜம்வீழ்ந்ததுபோலப் பெரியவனத்தில்தரையில் வீழ்ந்திருக்கும் அரசர்களிற் சிறந்த அந்த ஸம்வரணனைக்கண்டான். அப்படிப்பட்ட சிறந்த வில்லாளி யாவராலும் விடப்பட்டுத் தரையில் விழுந்திருப்பதைக்கண்டு அவனுடைய அந்த மந்திரி தீயினாற் கொளுத்தப்பட்டவன்போல் ஆனான். அவன் விரைவாக அருகில் வந்து சினைகத்தினால் பரபரப்புற்றுப் பெண்மீது மோகங்கொண்டு மூர்ச்சித்து விழுந்திருந்த அந்த அரசர்க்கரசனான ஸம்வரணராஜனைப் புத்திரனைப் பிதா எடுப்பதுபோலப்பூமியிலிருந்து தூக்கியெடுத்தான் புத்தியிலும் பிராயத்திலும் புகழிலும் நீதிசாஸ்திரஜ்ஞானப்பயிற்சியிலும் முதிர்ந்தவனாகிய அந்தமந்திரி அந்தஅரசனைத் தூக்கியெடுத்த பின் துயரம் நீங்கினவனானான். எழுந்திருந்த அவ்வரசனை நோக்கி, இனிமையும் நன்மையுமுள்ள சொல்லினால், 'மானிடப்புலியே! பயப்படாதே. குற்றமற்றவனே! உனக்கு ஸுகமுண்டாகும்' என்றுசொன்னான். போரில் சத்துருக்களைவீழ்த்துபவனான அவ்வரசன் தான் பசியினாலும் தாகத்தினாலும்களைத்துத் தரையில்வீழ்ந்ததாக ஊகித்தான். தாமரைமலரின் வாசனையோடுகூடிய குளிர்ந்தஜலத்தினால் அவ்வரசன் தலையை நனைத்துக் கிரீடத்தைத் திருத்திவைத்தான். பிறகு, பலசாலியான அவ்வரசன் மூர்ச்சைதெளிந்து அவ்வமைச்சன் ஒருவனைத்தவிர மற்றச்சேனையெல்லாவற்றையும் அனுப்பிவிட்டான். அப்போது, அவ்வரசனுடையகட்டளையினால் பெருஞ்சேனை புறப்பட்டது. அவ்வரசன் மாத்திரம் மறுபடியும் அம்மலைச்சரிவில் உட்கார்ந்தான். பிறகு, அவன் அந்தச்சிறந்தமலையில் ஸ்நானமுதலியவற்றினால் பரிசுத்தனாகி ஸூர்யனை ஆராதிக்கக் கருதிக் கைகூப்பிக்கொண்டு மேனோக்கிய முகத்துடன் பூமியில் நின்றான். அப்போது ஸம்வரணராஜன் காமக்குரோதங்களாகிய சத்துருக்களையழித்த புரோகிதரான வஸிஷ்டரென்னும் ரிஷிசிரேஷ்டரை மனத்தில் தியானித்தான். அவ்வாறு அவ்வரசன் இரவும் பகலும் ஓரிடத்தில் நின்றுகொண்டிருந்தபோது, பன்னிரண்டாவது தினத்தில் பிரம்மரிஷியான வஸிஷ்டர்வந்தார். ஆத்மஜ்ஞானமுள்ளவரும் ரிஷிசிரேஷ்டரும் தர்மாத்மாவுமாகிய வஸிஷ்டமாமுனிவர் அவ்வாறு தவத்தில் மனம்வைத்திருந்த அவ்வரசனைக் கண்டவுடன், தபதியினால் அவன்மனம் அபகரிக்கப்பட்டிருப்பதைத் திவ்யஜ்ஞானத்தினாலறிந்து, அவன் விரும்பினதை நிறைவேற்றக்கருதி

அவனிடம் பேசினார். ஸூர்யனுக்கொப்பான தேஜஸுள்ள அந்த வஸிஷ்டபகவான் அவ்வரசன்பார்த்திருக்கையிலேயே ஆயிரம் கிரணங்களுள்ள ஆதித்யனைக்காண்பதற்கு மேலேசென்றார்.

தபோதனரான அந்தப் பிரம்மரிஷி லக்ஷம் யோசனைதூரம் ஒரு நொடியில் சென்று அங்கே பக்தியுடன் கைகூப்பிநின்று, 'நான் வஸிஷ்டன்' என்று தம்மைத்தெரிவித்தார். சிறந்தஒளியுள்ள ஸூர்யன் அம்முனிச்ரேஷ்டரைநோக்கி, 'மஹரிஷியே! உமக்கு நல்வரவு; நீர் விரும்பினதைச் சொல்லும். மஹானுபாவரே! சிறந்தவாக்குள்ளவரே! என்னிடத்தில் எதைவிரும்புகிறீரோ அந்த உமது அபீஷ்டம் மிக்கதுர்லபமாயிருப்பினும் அதனை உமக்கு நான்கொடுப்பேன்' என்றுசொன்னான். ஸூர்யனால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த வஸிஷ்டமாமுனிவர், பிரகாசமான கிரணங்களோடுகூடிய ஸூர்யனை நமஸ்கரித்து வாக்கினால் துதிசெய்துகொண்டு அவன் ஒவ்வொருநாளும் ஒருநிமிஷத்திற்குமுந்நூற்றுபத்துநான்கு [1]யோஜனைதூரம் குதிரைகளால் செல்லுகிறானோ அந்தச் சூரியன்பக்கத்தில் நின்றுகொண்டு பின்வருமாறு சொல்லத்தொடங்கினார். 'ஜனனமில்லாதவரும்மூன்றுலோகங்களையும் சுத்தஞ்செய்கிறவரும் பிராணிகளுக்கு ஆத்மாவும் கிரகங்களுக்கு அதிபதியும் வருஷிப்பவரும் சிருஷ்டிபிரளயங்களுக்கு இருப்பிடமும் உத்தமமான மஹாதயாளுவுமாகிய ஸூர்யனை நமஸ்கரிக்கிறேன். ஞானத்திற்குநிதியும் எல்லாப்பிராணிகளுக்கும் அந்தராத்மாவும் உலகத்திற்குப் பெருவிளக்கும் உலகங்களின்நன்மையை விரும்புகிறவரும் தாமே உண்டானவரும் ஜ்வலிக்கின்ற ஆயிரம்கிரணங்களோடு கூடியவரும் தேவச்ரேஷ்டரும் விரிவான ஒளியுள்ளவருமாகிய [2]விவஸ்வானைநமஸ்கரிக்கிறேன். உலகங்களுக்கொருகண்ணும் லோகங்களின் பிறப்புக்கும் இருப்புக்கும் இறப்புக்கும் காரணமும் [3]மூன்று வேதரூபியும் [4]முக்குணங்களாலாகிய சரீரங்களைத்தரிப்பவரும் பிரம்மவிஷ்ணுமஹேச்வரஸ்வரூபியுமாகிய [5]ஸவிதாவை நமஸ்கரிக்கிறேன்' என்று துதிசெய்தார். ஸூர்யபகவான், 'சிறந்ததவமுள்ளவரே! உம்மால் துதிக்கப்பட்ட நான் இப்போது வரம்கொடுப்பவனாக இருக்கிறேன். உம்மாற்சொல்லப்பட்ட துதி, என்னிடம் பக்தியுள்ளவர்கள் ஜபஞ்செய்வதற்குரியது. நான் அவர்களுக்கும் வரம்கொடுப்பேன்' என்று சொல்ல, வஸிஷ்டர், 'ஸூர்யபகவானே! ஸாவித்ரிக்கு இளையவளான இக்

[1]எட்டு மைல். [2]ஸூர்யன். [3]ரிக், யஜுஸ், ஸாமம்.
[4]ஸத்வரஜஸ்தமோகுணங்கள். [5]ஸூர்யன்.

தத்தபதியென்னும் உமதுகுமாரி இருக்கிறாளே, இவளை ஸம்வரண னுக்காக உம்மிடம்வரிக்கிறேன். அவ்வரசன் பெரியகீர்த்தியுள்ளவன்; தர்மார்த்தங்களை அறிந்தவன்: உயர்ந்தபுத்தியுள்ளவன். ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவரே! உமதுபெண்ணுக்கு ஸம்வரணன் தகுதியான கண வன்' என்றார். இவ்வாறு வஸிஷ்டரால் சொல்லபபட்ட அந்தஸூர்ய பகவான், அந்தப்பிராம்மணர் சொன்னதை அங்கீகரித்துக் கொடுக்க லாமென்றே நிச்சயஞ்செய்துகொண்டு, 'ரிஷியே! அரசர்களில் ஸம் வரணன் சிறந்தவன். நீர் ரிஷிகளிற் சிறந்தவர். தபதி பெண்களிற் சிற ந்தவள். கொடுப்பதைத்தவிர வேறென்ன இருக்கிறது?' என்று மறு மொழி சொன்னான். பிறகு, பலாக்யமான எல்லா அங்கங்களையுமு டைய தபதியைத் [1]தபனன் தானகவே ஸம்வரணனுக்காக மஹாத் மாவான வஸிஷ்டரிடம் கொடுத்தான்.

வஸிஷ்டமஹரிஷி அந்தத் தபதியென்னும் கன்னிகையைப்பெற் றுக்கொண்டபிறகு விடைபெற்றுக்கொண்டு அப்போதே புகழ்பெற்ற கௌரவஶ்ரேஷ்டனை ஸம்வரணனிருக்குமிடத்திற்குத் திரும்பி வந்தனர். அந்தத் தபதியினிடம் சென்றமனத்துடன் மன்மதாவேசங் கொண்டிருந்த அவ்வரசன், அழகிய நகையுள்ள அந்தத்தபதியென் னும் தேவகன்னிகை வஸிஷ்டருடன்கூட வரக்கண்டு மிக்க மகிழ்ச்சி யுற்றவனாக விளங்கினான். அழகிய புருவங்களுள்ள அந்தத்தபதி ஆகாசத்திலிருந்து வரும்போது மேகத்திலிருந்துவிழுந்த மின்னலைப் போல் ஒளியினால் திசைகளை விளக்கிக்கொண்டு அதிகமாகப் பிரகா சித்தாள். அவ்வரசனுக்குக் கஷ்டத்துடன் பன்னிரண்டுஇரவு ஸமா தியிற் சென்றபிறகு, பரிசுத்தாத்மாவான ரிஷியாகிய வஸிஷ்டபகவான் வந்தார். ஸம்வரணன், வரங்கொடுப்பவரும் கிரகங்களுக்கு அதிபதியும் ஈஶ்வரருமாகிய ஸூர்யபகவானைத் தவத்தினால் ஆராதனஞ்செய்த பிறகு, வஸிஷ்டருடைய மஹிமையினாலேதான் பாரியையையடைந் தான். அதன் பிறகு, தேவகந்தர்வர்களால் ஆஶ்ரயிக்கப்பட்ட அந்தச் சிறந்த பருவதத்தில் அவ்வரசன் சாஸ்திரப்படி தபதியைப் பாணிக் கிரஹணஞ் செய்தான். அந்த ராஜரிஷி வஸிஷ்டரால்அனுமதிகொடுக் கப்பெற்று அந்தப் பர்வதத்திலேயே மனைவியுடன் கூடி விளையா டக்கருதினான். அப்போது அரசன் அங்கிருந்துகொண்டுநகரத்தையும் தேசத்தையும்காடுகளையும்தோட்டங்களையும் ஆளும்படி அந்தஅமை ச்சனையே நியமித்தான். அரசனிடம் விடைபெற்றுக்கொண்டு வஸி

---

[1] சூரியன்.

ஷ்டர் உடனே சென்றார். பிறகு, அவ்வரசன் அம்மலையில் தேவதை யைப்போல் விளையாடினன். அது முதல் பன்னிரண்டு வருஷகாலம் அரசன் அந்த மனைவியுடன்கூடவே அம்மலையிலுள்ள காடுகளிலும் தடாகங்களிலும் ரமித்தான். சிறந்த ஸாதுவே! பாரதனே! அவ்வர சனுடைய அந்த நகரத்திலும் தேசத்திலும் பன்னிரண்டு வருஷ காலம் இந்திரன் மழை பொழியவில்லை பகைவரையடக்குகிறவனே! அங்கே அந்த *அனவிருஷ்டி நேர்ந்தபோது,ஸ்தாவரங்களும்ஜங்கமங் களுமாகிய எல்லாப் பிரஜைகளும் நாசமடைந்தன. அப்படிப்பட்ட மிக்க கொடியகாலம் நேர்ந்தபோது பூமியில் பனியும்விழவில்லை. அத னல், பயிர்கள் முளைக்கவில்லை. அப்போது பசியின்பயத்தினால் பீடிக் கப்பட்ட ஜனங்கள் மனங்கலங்கி வீடுகளைவிட்டுத்திசைகளிலும் மூலை களிலும் திரிந்தனர். பிறகு, அந்த நகரத்திலும் தேசத்திலும் பசியி னல் வருந்தின ஜனங்கள் மனைவியரிடத்தும் அபிமானத்தை விட்டு வரைகடந்து ஒருவரையொருவர் கொன்றனர். அவ்வாறு பசியினல் வருந்தினவரும் மகிழ்வற்றவரும் பிணங்கள் போன்றவருமான மனி தர்களினல் அந்தநகரம் பிரேதங்களினல் சூழப்பட்ட யமபுரம்போ லாயிற்று. பிறகு, அவ்வாறிருந்த அந்த நகரத்தைக்கண்டு தர்மாத்மா வும் ரிஷிஸ்ரேஷ்டருமாகிய அந்த வஸிஷ்டபகவானே அரசனிடம் ஓடிவந்தனர் அர்ஜுன! பன்னிரண்டாவதுவருஷம்கடந்தபின், அந்த ராஜஸ்ரேஷ்டனைத் தபதியுடன்கூட அந்தநகரத்துக்கு அழைத்துவந் தார். உடனே இந்திரன் அங்கே முன்போலவே நல்லமழைபெய்தான். அந்த ராஜஸ்ரேஷ்டன் மறுபடியும் நகரத்துள்பிரவேசித்தபோது பிர புவாகிய இந்திரன் முன்போலப் பயிர்களை விருத்திசெய்வதற்காக நல்ல மழை பொழிந்தான். அதனல் பரிசுத்தமான மனமுள்ள அந்த ராஜ ஸ்ரேஷ்டனல் பரிபாலனஞ்செய்யப்பட்ட அந்தநகரத்துடன்தேசமும் மிகமகிழ்ந்து அபிவிருத்தியாயிற்று. பிறகு, ஸம்வரணராஜன் மறுபடி யும் தன்பத்னியாகிய தபதியுடன்சேர்ந்து இந்திராணியுடன்சேர்ந்த இந்திரன்போலப் பன்னிரண்டுவருஷம் யாகஞ்செய்தான். பார்த்தனே! உனது கூடஸ்தையான தபதியென்னும் மஹா பாக்கியவதியான ஸூர்யபுத்திரி இவ்வாறிருந்தாள். அவளால் நீ தாபத்யனென்றுசொல் லப்படுகிறாய். பராக்கிரமசாலிகளிற் சிறந்தவனே! அர்ஜுன! அந்தத் தபதியினிடம் ஸம்வரணராஜன் குருவென்பவனைப்பெற்றான். ஆத லால், நீ தாபத்யனகிறாய்' என்றான்.

---

* மழையில்லாமை.

## நூற்றுத்தொண்ணூறுவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

(கந்தர்வன் வஸிஷ்டருடைய மஹாத்மியத்தைச் சொல்வது.)

பாரதஶ்ரேஷ்டரான ஜநமேஜயரே! அந்த அர்ஜுனன் கந்தர்வன் சொன்ன அந்த வசனத்தைக்கேட்டு அப்போதே சிறந்த பக்தியுடன் பூர்ணசந்திரன்போலப் பிரகாசித்தான். சிறந்தவில்லாளியான அர்ஜுனன் வஸிஷ்டருடைய தவவன்மையைப்பற்றி மிக்க வியப்படைந்து கந்தர்வனைப்பார்த்து, 'கந்தர்வராஜாவே! எந்தமஹரிஷி எங்களுடைய முன்னோர்களுக்குப் புரோஹிதராயிருந்தாரோ அவருக்கு வஸிஷ்டரென்ற பெயர் உன்னால்சொல்லப்பட்டது. அஃது எவ்வாறு வந்ததென்பதையும் அந்தப் பகவானான ரிஷி எப்படிப்பட்டவரென்பதையும் நான் கேட்கவிரும்புகிறேன். அதனை எனக்குச்சொல்' என்றுகேட்டான். கந்தர்வன், "[1]வஸிஷ்டர் பிரம்மாவுக்கு [2]மானஸபுத்திரர்; அருந்ததிக்குப் பர்த்தாவாகியவர். தேவர்களாலும் வெல்லமுடியாத காமக்குரோதங்களிரண்டும் அவருடைய தவத்தினால் ஜயிக்கப்பட்டு அவருக்குக் [3] கால்பிடித்துக்கொண்டிருந்தன. இந்திரியங்களை வசப்படுத்தினதனால் வஸிஷ்டரென்றுசொல்லப்படுகிறார். மனிதர்களால் வெல்லக்கூடாத காமக்குரோதங்கள் அவரால் எவ்வாறு ஜயிக்கப்பட்டனவோ அவ்வாறே எதிரிகளும் ஜயிக்கப்பட்டனர். லோகங்களும் ஜயிக்கப்பட்டன. லோகங்களுக்குப்போகிற வழிகளும் திசைகளும் ஜயிக்கப்பட்டன. சிறந்த ஞானமுள்ள வஸிஷ்டர், விசுவாமித்திரர் செய்த பிழையினால் உண்டான மிகுந்தகோபத்தை அடக்கிக்கொண்டு குசிகவம்சத்தவரை அழிக்காமலிருந்தார். புத்திரசோகத்தினால் கொதிப்புற்றபோது வல்லமையுள்ளவராயிருந்தும் வல்லமையில்லாதவன்போல் விசுவாமித்திரரை அழிக்கத்தக்க கொடியகருமம் செய்யாமலிருந்தார். இறந்துபோன புத்திரர்களையும் யமன் வீட்டிலிருந்து திருப்பிக் கொண்டுவர வல்லமையுள்ளவராயிருந்தும் கருங்கடல் கரையை மீறாமலிருப்பதுபோலத் தெய்வத்தை அதிக்ரமிக்காமலிருந்தார்.

---

[1] காமக்குரோதங்களை ஜயித்து இந்திரியங்களை வசப்படுத்தியவர்.

[2] வருணனுடைய வீரியத்திலிருந்து பிரம்மாவினுடைய அனுக்ரகத்தினால் ஜனித்தவர்.

[3] உருவத்தோடு அவர்கால்பிடிக்கும்வேலைக்காரர்களாக இருந்தனபோலும்.

மனிதர்களிற்சிறந்தவர்களாகிய இக்ஷ்வாகு வம்சத்தவர்கள், மனத்தை ஜயித்தவராகிய அம்மஹாத்மாவைச்சேர்ந்தபிறகுதான் இப்புவனியை அடைந்தனர். கௌரவபுத்திரனே! அவ்வரசர்கள் ரிஷிஸ்ரேஷ்டராகிய அந்த வஸிஷ்டரைப் புரோகிதராகப் பெற்று அநேகயாகங்கள் செய்தனர். பாண்டவஸ்ரேஷ்டனே! அந்தப்பிரம்மரிஷி அந்தராஜஸ்ரேஷ்டரெல்லாருக்கும் தேவர்களுக்கு ப்ருஹஸ்பதிபோல் யாகங்களைச் செய்வித்தார். ஆதலால், தர்மத்தையே பிரதானமாக உள்ளத்திற்கருதினவரும் வேதமும் தர்மசாஸ்திரமுந் தெரிந்தவரும் மனத்திற்கினியவரும் குணவானுமாகிய ஒரு பிராம்மணபுரோகிதரை (நீங்கள்) தேடவேண்டும். பார்த்தனே! பூமியைஜயிக்க விரும்புகின்ற நல்லகுலத்திற்பிறந்த க்ஷத்திரியன் ராஜ்யத்தின் அபிவிருத்திக்காக முதலில் புரோகிதனை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். பூமியை ஜயிக்கவிரும்புகின்ற அரசன் பிராமணனை முன்னிட்டுக்கொள்ளவேண்டும். ஆதலால், குணவானும் ஜிதேந்திரியரும் வித்துவானும் அறம்பொருளின்பங்களின் உண்மையை அறிந்தவருமாகிய ஒரு பிராம்மணபுரோஹிதர் உங்களுக்கிருக்கவேண்டும்' என்றான்.

---

## நூற்றுத்தொண்ணூற்றோராவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

**(வஸிஷ்ட உபாக்யானத்தில் விஶ்வாமித்திரர் வஸிஷ்டருடைய ஆஶ்ரமஞ் சென்றதும், வஸிஷ்டர் விசுவாமித்திரருக்கு ஆதித்யஞ்செய்ததும், விஶ்வாமித்திரர் வஸிஷ்டருடையபசுவையாசித்தும் கொடாததினால் பசுவைப் பலாத்காரமாக அபகரித்ததும், கோபமடைந்த விசுவாமித்திரரைத் தோற்கச்செய்ததும், விசுவாமித்திரர் தவஞ்செய்து பிராம்மணரானதும்.)**

அர்ஜுனன், 'சிறந்த ஆஶ்ரமத்தில் வாஸஞ்செய்துகொண்டிருந்த வஸிஷ்டவிஶ்வாமித்திரர்களுக்குயாதுகாரணம்பற்றி விரோதம் உண்டாயிற்று? அதனை முழுதும் எங்களுக்குச்சொல்' என்று கேட்க, கந்தர்வன் சொல்லுகிறான்:—

'அர்ஜுனா! இந்த வஸிஷ்டருடைய சரித்திரத்தை எல்லாலோகங்களிலும் புராணமென்று சொல்லுகின்றனர். அதனை உள்ளபடி என்

ளிடத்தில் கேள். பரதஶ்ரேஷ்டனே! கான்யகுப்ஜதேசத்தில் குசிகரின் புத்திரரான காதியென்று உலகத்திற் கியாதிபெற்ற ஒருமஹாராஜர் இருந்தார். அந்தத்தர்மாத்மாவின் புத்ரராகிய விசுவாமித்திரரென்று பெயர்பெற்ற ராஜர் சேனைகளும் வாகனங்களும் மிகுதியாக அடைந்து பகைவரை அழிப்பவராயிருந்தார். அவர் சேனைகளுடன் மஹாவனத்தில் வேட்டையாடித்திரிந்தார். புருஷஶ்ரேஷ்டனே! அழகான மலைகளிலும் பாலைவனங்களிலும் மான்களையும் பன்றிகளையும் அடித்துச் சிரமத்தினால் களைப்புற்ற அவர் மானைத் தேடிக்கொண்டு தண்ணீரை விரும்பி வஸிஷ்டருடைய ஆஶ்ரமம் நோக்கினார். ஶ்ரேஷ்டர்களைப் பூஜிப்பவராகிய வஸிஷ்டமகரிஷி, புருஷஶ்ரேஷ்டரான அந்த விசுவாமித்திரர் வந்ததைக்கண்டு அவரை மரியாதையுடன் அழைத்தார். பாரதனே! அர்க்கிய பாத்ய ஆசமனீயங்கள் கொடுத்து நல்வரவுசொல்லி வனத்திலுள்ள அன்னத்தையுமளித்து அவரை அப்போது ஆதரித்தார். பிறகு, அந்தமஹாத்மாவான வஸிஷ்டருடையகாமதேனு, 'வேண்டியவற்றைக் கொடு' என்று அவரால்கட்டளையிடப்பட்டவுடனே விரும்பினவற்றைக் கறந்தது. அர்ஜுனா! ஆவியோடுகூடிய பருவதம்போன்ற அன்னக் குவியல்களையும், மோர் ரஸம் துவையல் முதலியவற்றையும், பருப்புக்களையும், தயிர்வாய்க்கால்களையும், நெய்நிரம்பின கிணறுகளையும், சர்க்கரைப்பொங்கல்களையும், கரும்புகளையும், தேன்களையும், பொரிகளையும், [1]மைரேயம் என்னும் உயர்ந்தசாராயங்களையும், கிராமங்களிலும் காடுகளிலுமுள்ள ஓஷதிகளையும், பாலையும், ஆறுரஸங்களும்சேர்ந்து அமிர்தத்துக்கொப்பான சிறந்த [2]ரஸாயனத்தையும், உண்ணத்தக்கவை குடிக்கத்தக்கவையான பலவகைப் பக்ஷணங்களையும், அமிர்தத்துக்கொப்பான [3]லேஹ்யங்களையும், [4]சோஷ்யங்களையும், பலவகைகளான உயர்ந்த விலைபெற்ற ரத்னங்களையும், ஆடைகளையும் மிகுதியாகக் கொடுத்தது. அந்தராஜா மந்திரிகளோடும் சேனைகளோடுங்கூட ஒன்றாய்க் குறைவில்லாத அந்த இனியவஸ்துக்களினால் பூஜை செய்யப்பெற்று அப்போது மிகவும் திருப்தியடைந்தார்.

[5]ஆறு அவயவங்கள் நீண்டதும், அழகான விலாப்புறங்களும் தொடைகளுமுடையதும் [6]ஐந்து இடங்கள் பருத்திருப்பதும், கவலைக்

---

[1] மிரையென்னும் தேசத்திலுண்டானது. [2] பலத்தைத்தரும் உணவு. [3] நக்கிச்சாப்பிடத்தக்கவை. [4] உறிஞ்சிச் சாப்பிடத்தக்கவை. [5] தலை, கழுத்து, தொடைகள், அலைதாடி, வால், முலை. [6] நெற்றி, காது இரண்டு, கண் இரண்டு.

கண்போன்ற கண்களையுடையதும், அழகிய உருவமுள்ளதும், பருத்த மடியுள்ளதும், நல்லலக்ஷணங்கள் பொருந்தியதும், அழகான வாலுள்ளதும், முளைகள்போன்ற காதுகளுடையதும், அழகான கொம்புகளுடையதும், மனத்திற்கினியதும், பருத்தும் நீண்டுமிருக்கும் தலையும் கழுத்துமுடையதுமாயிருக்கிற அந்தத் தேனுவைக்கண்டு அந்தவிசுவாமித்திரர் வியப்புற்றார். காதியின் புத்திரராகிய அந்த அரசர் அந்தநந்தினியென்னும் பெயருள்ள பசுவைச்சிலாகித்து அப்போது அந்தவஸிஷ்டமஹரிஷியைப் பார்த்து மிகுந்த ஸந்தோஷத்துடன், 'பிராம்மணரே! பத்துக்கோடி பசுக்களையாவது அல்லது என்னுடைய ராஜ்யத்தையாவதுபெற்றுக்கொண்டு நந்தினியை எனக்குக்கொடும். மஹாமுனிவரே! ராஜ்யத்தை அநுபவியும்' என்று சொன்னார். அதைக்கேட்டு வஸிஷ்டர், 'தேவதைகளுக்கும் அதிதிகளுக்கும் பிதிர்க்களுக்கும் எம்மைப் புரோஹிதராகவைத்து யாகஞ்செய்பவருக்குமாக இந்த நந்தினியென்னும்பசு இருக்கிறது. குற்றமில்லாதவரே! ராஜ்யத்தைக் கொடுத்தாலும் இதை உமக்குக்கொடுக்கத்தகாது' என்றார். விசுவாமித்திரர், 'பகவானே! இந்தப்பசு *ரத்னம். ரத்னத்தையெடுத்துக் கொள்பவன் அரசன். நான் க்ஷத்திரியன். நீர் தவத்தையும் வேதாத்யயனத்தையும் கருவிகளாகவுடைய பிராம்மணர். சாந்தர்களும் மனத்தை அடக்கினவர்களுமாகிய பிராம்மணர்களுக்குப் பராக்கிரமம் ஏது? பத்துக்கோடிபசுக்களை வாங்கிக்கொண்டு நான் விரும்பினதை நீர் கொடாவிட்டால் நான் என் தர்மத்தைவிட்டுவிடேன். பசுவைப் பலாத்காரமாகக் கொண்டேபோவேன்' என்றார். வஸிஷ்டர், 'நீர் சேனையுடனிருப்பவர்; அரசர்; க்ஷத்திரியர்; கைவன்மையுள்ளவர். நீர் எவ்வாறு விரும்புகிறீரோ அவ்வாறு உடனே செய்யும்; சங்கைப்படவேண்டாம்' என்றார். அர்ஜுனா! வஸிஷ்டரால் இவ்வாறு சொல்லப்பட்ட விசுவாமித்திரர் ஹம்ஸத்திற்கும் சந்திரனுக்கும் ஒப்பான தேனுவைப் பலாத்காரமாக இழுத்தார். பிறகு உத்தமகுணமுள்ளதான அந்தவஸிஷ்டருடையநந்தினியென்னும் தேனு விசுவாமித்திரருடையசேவகர்களால் பலாத்காரமாக இழுக்கப்பட்டுங் கசைகளாலும் தடிகளாலும் இங்குமங்கும் அடித்துத் துரத்தப்பட்டும், 'அம்மா' என்று கூவிக்கொண்டு பகவானை வஸிஷ்டருக்கெதிரேவந்து தலைதூக்கிநின்றது. மிகுதியாக அடிக்கப்பட்டும் அந்த ஆச்ரமத்தைவிட்டுச் செல்லவில்லை. அதைப்பார்த்தவஸிஷ்டர், 'பிரியமுள்ள நந்தினியே! அடிக்கடி

*உயர்ந்தபொருள்.

கதறுகின்ற உன் சப்தத்தைக் கேட்கிறேன். நீ விசுவாமித்திரரால் பலவந்தமாக இழுக்கப்படுகிறாய். அதற்கு என்னாற்செய்யக்கூடியது என்ன? நான் பொறுமையுள்ள பிராம்மணனல்லவா?' என்று சொன்னார். பரதஸ்ரேஷ்டனான அர்ஜுனா! அந்த நந்தினி அந்தச் சேனைகளின் பயத்தினாலும் விசுவாமித்திரரிடமுள்ள பயத்தினாலும் வருத்தமுள்ளதாகி வஸிஷ்டரைச் சரணமடைந்து, 'பகவானே! கொடியவர்களான விசுவாமித்திரருடைய சேனையாகிய ஜனங்களினால் கசைகளாலும் தடிகளாலும் அடிக்கப்பட்டு அநாதையைப் போலிருக்கிறேன். என்னை ஏன் கவனிக்காமலிருக்கிறீர்?' என்று சொல்லிற்று.

அர்ஜுனா! இவ்வாறு அந்தத்தேனு பீடிக்கப்பட்டபோது, உறுதியான நியமமுள்ள வஸிஷ்டமாமுனிவர் கலங்கவுமில்லை; தம் நிலையை விட்டுப் பெயரவுமில்லை. அப்போது வஸிஷ்டர், 'க்ஷத்ரியர்களுக்குப் பராக்கிரமம் வன்மை; பிராம்மணர்களுக்குப் பொறுமை வன்மை; பொறுமை என்னை அடைந்திருக்கிறது. ஆதலால், உனக்கிஷ்டமிருந்தால் செல்' என்றுசொல்ல, நந்தினி,'பகவானே! நான் உம்மால்விடப்பட்டேனா என்ன? ஏன் இவ்வாறுபேசுகிறீர்? பிராம்மணரே! நான் உம்மால் விடப்படாமலிருந்தால் என்னைப் பலாத்காரமாகக் கொண்டு போகமுடியாதே' என்றது. வஸிஷ்டர், அதைக்கேட்டு, 'குணமுள்ள நந்தினியே! நான் உன்னைவிடவில்லை; முடியுமானால் நிற்கலாம். கெட்டியான கயிற்றினால்கட்டி இந்த உன்கன்று பலாத்காரமாகக் கொண்டு போகப்படுகிறது' என்று சொன்னார். 'நிற்கலாம்' என்று வஸிஷ்டர் சொன்னதைக்கேட்ட அந்தக்காமதேனு உயரஎடுக்கப்பட்ட தலையும் கழுத்துமுடையதாகவும் கொடிய பார்வையுள்ளதாகவும் காணப்பட்டது. அந்தத்தேனு, கோபத்தினால் கண்கள்சிவந்து, 'அம்மா' என்று உரக்கக்கூவிக்கொண்டு, விசுவாமித்திரருடைய அந்தச்சேனையெல்லாவற்றையும் துரத்திற்று. கோபத்தினால் கண்கள் சிவந்த அந்தத்தேனு சாட்டைநுனிகளாலும் தடிகளாலும் அடிக்கப்பட்டு அங்குமிங்கும் துரத்தப்படும்போது இன்னும் அதிககோபத்தையடைந்தது. வாலிலிருந்து பெரியநெருப்பு மழையை அடிக்கடி வருஷித்தது; கோபத்தினால் சரீரமெல்லாம் ஜ்வலித்து மத்தியானகாலத்து ஸூர்யன் போல் பிரகாசித்தது. வாலிலிருந்து பஹ்லவர் என்னும் ஜாதியாரையும், மடியிலிருந்து திராவிடர்களையும் சகர்களையும், பின்பக்கத்திலிருந்து யவனர்களையும், சாணத்திலிருந்து பல சபரர்களையும், மூத்திரத்திலிருந்து வேறு சிலசபரர்களையும், விலாப்பக்கங்களிலிருந்து

பௌண்டரர்களையும், கிராதர், யவனர், ஸிம்ஹலர், பர்ப்பரர், கஸர், சிபுகர், புளிந்தர், சீனர், ஹூணர், கேரளர் இவர்களையும், வாய்நுரையிலிருந்து அனேகவிதமான மிலேச்சர்களையும், அந்தத்தேனு உண்டுபண்ணிற்று. பலவகைகளான கவசங்களாற் போர்க்கப்பட்டவர்களும் பலவகை ஆயுதங்களைத் தரித்தவர்களுமாய் காமதேனுவினால் ஸ்ருஷ்டி செய்யப்பட்டவர்களுமாகிய அந்த மிலேச்சக்கூட்டங்களாகியபெரும் படைகளினால் மிகுந்த கோபத்துடன் விசுவாமித்திரருடைய சேனை அவர் பார்த்திருக்கும்போதே ஆக்ரமிக்கப்பட்டது. அப்போது, ஒவ்வொரு போர்வீரனும் ஐந்து பேர்களாலும் ஏழு பேர்களாலும் பிடிக்கப்பட்டான். அப்போது பெரும்சாமரிகளினால் அடிக்கப்பட்ட சேனையெல்லாம் விசுவாமித்திரர்கண்ணெதிரிலேயே தோற்றுப் பயமுற்றது. ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைப்படைகளோடு கூடியதும் மிகவும் தாங்கக்கூடாத உக்கிரமுமாகிய அந்த விசுவாமித்திரர் சைனியம் நாற்புறமும் அடிக்கப்பட்டுக் காமதேனுவினால் ஜயிக்கப்பட்டது. பரதஸ்ரேஷ்டனே! அந்தவிசுவாமித்திரருடைய சேனையிலுள்ள வீரர்கள்யாவரும் கோபங்கொண்ட வஸிஷ்டசேனைகளினால் உயிர் போக்கப்படவில்லை. அந்தத்தேனு அந்தச்சேனையையெல்லாம் தூரத் துரத்திற்று. மூன்று யோசனைதூரம் துரத்தப்பட்ட அந்த விசுவாமித்திரசேனை பயத்தினால் கலங்கிக் கதறிக் காப்பவனை அடையாமற் போயிற்று.

பிறகு, அந்தவிசுவாமித்திரர் பார்த்துக் கோபத்தினால் ஆவேசங்கொண்டு ஆகாயத்தையும் பூமியையும் நிரப்புகின்ற சரமாரிகளை ரிஷிஸ்ரேஷ்டரான வஸிஷ்டர்மீது பொழிந்தார். விசுவாமித்திரரால்பிரயோகிக்கப்பட்ட கொடிய உருவமுள்ள நாராசபாணங்களையும் கத்திகளையும் அர்த்தசந்திரபாணங்களையும் வஸிஷ்டமாமுனிவர் மூங்கிற்றடியினால் ஒதுக்கினார். அப்போது, யுத்தத்தில்வஸிஷ்டர்செய்கையின்ஸாமர்த்தியத்தைக்கண்டு சத்ருக்களையழிப்பவராகிய விசுவாமித்திரர் அதிகம் கோபங்கொண்டு அந்தரிஷியின்மேல் திவ்யாஸ்திரங்களை மழையாகப்பொழிந்தார். ஆக்னேயாஸ்திரம், வாருணாஸ்திரம், ஐந்திராஸ்திரம், யாமாஸ்திரம், வாயவ்யாஸ்திரம்முதலிய எல்லாவற்றையும்சிறந்த மஹிமையுள்ள பிரம்மபுத்திரரான வஸிஷ்டர்மேல் பிரயோகித்தார். அந்த அஸ்திரங்கள் பிரளயகாலத்தில் உக்கிரங்கொண்ட ஸூர்யரஸ்மிகளைப்போல் எங்கும் ஜ்வாலைகளை இறைத்துக்கொண்டுவந்தன. மிகுந்த பிரபாவமுள்ள வஸிஷ்டருந் தம்முடையபிரம்மதேஜஸின் வன்

மையினால், பிரயோகிக்கப்பட்ட அந்த அஸ்திரங்களையெல்லாம் சிரித்துக்கொண்டே தண்டத்தினால் தடுத்துவிட்டார். பிறகு, அவையெல்லாம் நீருக்கிலத்தில்வீழ்ந்தன. வஸிஷ்டர்,திவ்யாஸ்திரங்களை ஒதுக்கிவிட்டு, 'மஹாராஜாவே! துராத்மாவே! காதிபுத்ரனே! தோற்றாய். இதற்குமேற்பட்ட பராக்கிரமம் உனக்கிருக்குமானால் அதை நானிருக்கையிற் காண்பி' என்றுசொன்னார். ராஜாவாகிய விசுவாமித்திரர், வஸிஷ்டரால் அவ்வாறுசொல்லப்பட்டபோது,பெருஞ்சேனைவெருட்டப்பட்டு வெட்கம்நிரம்பினவராக ஒன்றும் பேசாமலிருந்தார். அப்போது, விசுவாமித்திரர் பிரம்மதேஜஸினாலுண்டான அந்தப்பெரிய ஆச்சரியத்தைக்கண்டு க்ஷத்திரியஜன்மத்தில்வெறுப்புற்று, 'க்ஷத்திரியனுடைய பராக்கிரமமென்னும் வன்மை நிந்திக்கத்தக்கது. பிரம்மதேஜஸின் வலிமையே வலிமை. பலாபலங்களைத் தூக்கிப்பார்க்கையில் தவவலிமையே சிறந்தது' என்றுசொன்னார். அவர் எல்லாவளங்களும் நிரம்பிய ராஜ்யத்தையும் சிறந்த அந்த ராஜ்யலக்ஷ்மியையும்விட்டு ஸுகங்களை அலக்ஷியஞ்செய்து தவத்திலேயே மனம் வைத்தார். அவர் தவத்தினால் ஸித்தியையடைந்து தம்தேஜஸினால் உலகங்களையெல்லாம்தகைந்து, தாபத்தையுண்டுபண்ணி ஜ்வலிக்கின்ற தேஜஸுடன் பிராம்மணத்தன்மையை அடைந்தார். பிறகு, அவர் இந்திரனுடன்கூட ஸோமரஸத்தையும் பானஞ்செய்தார்.இவ்விதமான சக்தியுள்ள ராஜரிஷி பிரம்மரிஷியானார்' என்றான்.

---

## நூற்றுத்தொண்ணூற்றிரண்டாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

(வஸிஷ்டபுத்ரரான சக்தி *கல்மாஷபாதனுக்குச் சாபங்கொடுத்ததும், ராக்ஷஸாவேசங்கொண்ட கல்மாஷபாதன் வஸிஷ்டபுத்திரர்களைப் பக்ஷித்ததும், வஸிஷ்டர் புத்திரசோகத்தினால் தாபமடைந்து பிராணனை விடுவதற்குப் பல முயற்சிகள் செய்ததும்.)

அர்ஜுனன், 'கந்தர்வராஜனே! (விசுவாமித்திரர் பிரம்மரிஷியான பிறகு) வஸிஷ்டர் விசுவாமித்திரர் இவ்விரண்டு ரிஷிகளுக்கும்

---

* இவனுக்கு ஸௌதாஸனென்றும் மித்ரஸஹனென்றும் பெயர்களுண்டு.

எதைப்பற்றித் துவேஷம் உண்டானதோ அதைமுழுதும் எனக்குச் சொல்; கந்தர்வனே! வஸிஷ்டருடைய ப்ரம்மதேஜஸின் மஹிமையையும், க்ஷத்திரியரும் மஹாத்மாவுமான விசுவாமித்திரர் ப்ராம்மணரானதையும் கேட்டு நான் திருப்தியடையவில்லை. கந்தர்வராஜனே! கதையைச்சொல். வஸிஷ்டவிசுவாமித்திரர்களுடைய மஹிமையைச் சொல்லுகிறாய். அதனை எனக்குப் பூர்ணமாகச்சொல்' என்று கேட்க, கந்தர்வன் சொல்லுகிறான்.

'பார்த்தனே! இந்தவஸிஷ்டருடைய சரித்திரம் புராணம்; மிகுந்த புண்ணியமானது. எல்லா உலகங்களிலும் ப்ரஸித்தி பெற்றது. அதனை என்னிடம் கேள். பார்த்தனே! இவ்வுலகத்தில் இக்ஷ்வாகு வம்சத்தில் கல்மாஷபாதனென்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன் இந்தப்பூமியில் ஒப்பற்றபராக்கிரமமுள்ளவன். ஒருகால் அவ்வரசன் வேட்டைக்காக நகரத்திலிருந்து வனஞ்சென்றான். சத்துருக்களைப் பீடிப்பவனாகிய அவ்வரசன் மான்களையும் பன்றிகளையும் அடித்துக்கொண்டு திரிந்தான்; மிக்கபயங்கரமான அந்த வனத்தில் காண்டாமிருகங்களையும் மிகுதியாகக்கொன்றான். அவ்வரசன் நெடுநேரம் அடித்துக் களைத்து அங்கிருந்து திரும்பினான். மஹிமைபொருந்திய விசுவாமித்திரர் அவனுக்குத் தாம் யாகஞ்செய்விக்க விரும்பினார். யுத்தத்தில் தோல்வியடையாத அவ்வரசன் பசிதாகங்களினால் வருத்தப்பட்டு ஒற்றையடிப்பாதையான வழியிற்போகும்போது தனக்குநேராக வந்த ரிஷிச்ரேஷ்டரான வஸிஷ்டபுத்திரரைக் கண்டான். அவன் மஹானுபாவரும் வஸிஷ்டவம்சத்தைவிருத்திசெய்கிறவரும் மஹாத்மாவான வஸிஷ்டருடைய நூறுபுத்திரர்களில் மூத்தவருமான அந்தச் சக்தியென்னும் முனிவரைக்கண்டு, 'நம்முடைய வழியைவிட்டுவிலகும்' என்று சொன்னான். ரிஷி, அவ்வாறுசொன்ன அரசனை நயமான வசனங்களினால் ஸமாதானஞ்செய்து, 'மஹாராஜனே! இது என் வழி; இதுதான் சாஶ்வதமான தர்மம். கிழவன், பயந்தவன், அரசன், ஸ்நாதகன், பெண், ரோகிஷ்டன், கலியாணப்பிள்ளை, வண்டிக்காரன் இவர்களுக்கு வழிவிடவேண்டும். அவர்களில் சிலருக்கு அரசர்கள் வழிவிடவேண்டும் மற்றும் சிலர் அரசர்களுக்கு வழிவிடவேண்டும். அரசன் பிராம்மணனுக்கு வழிவிடவேண்டுமென்பதுதான், எல்லாத் தர்மங்களிலுமுள்ளது' என்றார். அவர்களிருவரும் வழிக்காக ஒருவர்க்

*பூர்வகல்பங்களிலுள்ளது.

கொருவர் இவ்வாறுபேசினர். 'விலகு, விலகு' என்றசொல்லையே, மேன் மேலும் சொன்னார்கள். தர்மப்படி தம்மார்க்கத்தில் நின்ற அந்தரிஷி விலகிப்போகவில்லை. அரசனும் கோபத்தினால் ரிஷியின்மார்க்கத்தை விட்டு விலகாமலிருந்தான். அப்போது வழிவிடாமலிருந்த அந்த முனிவரை அந்தராஜஸ்ரேஷ்டன் அறிவின்மையால்ராக்ஷஸனைப்போல் கசையால் நீண்டினன் கசையால் அடிக்கப்பட்ட அந்த வஸிஷ்டபுத்திரரானமுனிஸ்ரேஷ்டர் உடனேகோபமிகுந்து, 'அரசர்களில் இழிவானவனே! நீ ராக்ஷஸனைப்போல் ரிஷியையடிக்கிறாய். ஆதலால், இன்றுமுதல் நீ ராக்ஷஸனாவாய். மனிதர்மாம்ஸத்தில் ஆசைவைத்து இந்தப் பூமியெல்லாம் திரிவாய்' என்று அந்தராஜஸ்ரேஷ்டனைச் சபித்தார். தவவன்மையையே சக்தியாகவுடைய சக்திமுனிவரால், 'ராஜாதமனே! செல்' என்று அவன் சொல்லப்பட்டான். அவனுக்குப் புரோஹிதர்களாயிருக்கிறநிமித்தம் விசுவாமித்திரருக்கும் வஸிஷ்டருக்கும் விரோதமிருந்தது அந்தச்சமயத்தில் விசுவாமித்திரர் அவனிடம் வந்தார். பார்த்தனே! (சக்தியும் கல்மாஷபாதனுமாகிய) அவர்களிருவரும் இவ்வாறுவிவாதப்பட்டுக்கொண்டிருக்கையில், உக்ரமான தவமுள்ளவரும் பிரபாவமுள்ளவருமாகிய விசுவாமித்திரரிஷி ஸமீபத்தில்வந்தார் அதன்பிறகு, அந்தராஜஸ்ரேஷ்டன் தேஜஸில்வஸிஷ்டருக்கொப்பான அந்தச்சக்திமுனிரிஷியை, வஸிஷ்டமஹரிஷியின் புத்திரரென்று அறிந்தான். பாரதனே! பிறகு, விசுவாமித்திரரும் தம்மையொளித்துக் கொண்டு தம்விருப்பத்தைச் செய்யக்கருதி அவ்விருவரையும் (மறைந்து) தாண்டிச்சென்றார். அந்தச்சக்தியென்னும் ரிஷியினால் சபிக்கப் பட்டிருந்த அந்தராஜஸ்ரேஷ்டன் அப்போது அவருடைய கோபத்தைத் தெளிவிப்பதற்கு அவரைப்பூஜித்துச் சரணமடைந்தான்.

குருஸ்ரேஷ்டனே! அந்தவிசுவாமித்திரர் அவ்வரசனுடையஎண்ணத்தையறிந்து உடனே அரசனின்மீது ஒரு ராக்ஷஸனை ஏவினார். அந்தப்பிரம்மரிஷியானசக்தியின்சாபத்தினாலும் விசுவாமித்திரருடைய ஏவலினாலும் கிங்கரனென்னும்ராக்ஷஸன் அப்போதே ராஜாவின் மேல் ஆவேசமானான். வீரனே! அவன் ராக்ஷஸனால்பீடிக்கப்பட்டதை அறிந்து ரிஷிஸ்ரேஷ்டரானவிசுவாமித்திரர் அவ்விடத்திலிருந்து விலகிப்போனார். பிறகு, தெரிந்தவனான அவ்வரசன், உள்ளேயிருக்கும் ராக்ஷஸனால் பலமாகப் பீடிக்கப்பட்டிருந்தபோதிலும் தன்னைத் தன் புத்தியினால் அடக்கிக்கொண்டிருந்தான். முன்னே அரசன் வனத்

திற்குப்புறப்படும்போதே பசியினால்வருந்தின ஒருபிராம்மணன் கண்டு மாம்ஸஞ்சேர்ந்த உணவை யாசித்தான். அப்போது, மித்திரர்களை ஆதரிப்பவனாகிய அந்த ராஜரிஷி அந்தப்பிராம்மணனைப்பார்த்து, 'பிராம்மணா! நீ இங்கேயே சற்றுநேரம் காத்திரு; திரும்பிவந்தபிறகு, விரும்பினபோஜனத்தை உனக்குத்தருவேன்' என்று சொன்னான். இவ்வாறுசொல்லிவிட்டு அரசன் சென்றான். பிராம்மணச்ரேஷ்டன் அங்கேநின்றான். பார்த்தனே! பிறகு, அரசன் பெரியமனமுள்ள தன் விருப்பம்போல் ஸுகமாகத்திரிந்து திரும்பிவந்து அந்தப்புரத்திற் பிரவேசித்தான். அந்த அரசன் பிராம்மணன் சொன்னதைக் கேட்டுக் கொண்டு உள்ளேபோய் அந்தப்புரம் சென்றபின் அதனைமறந்துவிட்டான். பிறகு, அரசன் நள்ளிரவிலெழுந்து பிராம்மணனுக்கு வாக்குத் தத்தஞ்செய்ததை நினைத்து உடனே சமையற்காரனை வருவித்து, 'போ; இந்தவனத்தின் ஆரம்பத்தில் ஒரு பிராம்மணன் அன்னத்தை வேண்டி என்னை எதிர்பார்த்திருக்கிறான். அவனை மாம்ஸம்சேர்ந்த அன்னத்தினால் நீ திருப்தியடைவிக்கக்கடவாய்' என்றான். இவ்வாறு சொல்லப்பட்டவுடன், அந்தச் சமையற்காரன் எங்கும் மாம்ஸங்கிடைக்காமையால் வருத்தத்துடன் அதனை அந்த அரசனுக்குத் தெரிவித்தான். ராக்ஷஸனால் ஆவேசிக்கப்பட்ட அரசன் சமையற்காரனைப் பார்த்து, 'மனிதர் மாமிசத்தினாலாவது அவனுக்குப் போஜனம் செய்வி' என்று மனத்தில் வருத்தமில்லாமல் பலமுறை சொன்னான். பிறகு, சமையற்காரன், 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லிக் கொல்லப் படத்தக்கவர்களைக்கொல்லுகிறவர்களிருக்கும் இடத்திற்குச் சென்று அச்சமின்றி நரமாம்ஸத்தைக்கொணர்ந்தான். அதனை உடனே முறைப்படி சமைத்து அன்னத்துடன் சேர்த்துத் தவமுடையவனான அந்தப் பசித்த பிராம்மணனுக்குக் கொடுத்தான். அந்தப் பிராம்மணச்ரேஷ்டன் தன் யோகதிருஷ்டியினால் அந்த அன்னத்தைத் தெரிந்துகொண்டு கோபத்தினால் கலங்கின கண்களுடன், 'இது புஜிக்கத்தகாது' என்றும், 'அந்த அதமனான அரசன் உண்ணத்தகாத உணவை எனக்குக் கொடுத்ததனால் முன்னே சக்தி சொன்னபடி மனிதர் மாம்ஸங்களில் விருப்பமுற்றுப் பிராணிகள் அச்சப்படும்படி இந்தப்பூமியெல்லாம் திரிவான்' என்றும் சொன்னான். இரண்டாந்தரம் வற்புறுத்திச் சொல்லப்பட்ட பிறகு, அரசனுக்கு அந்தச்சாபம் உறுதிப்பட்டது. ராக்ஷஸனுடைய பலத்தினால் ஆவேசிக்கப்பட்ட அரசன் அறிவிழந்தவனானான். பாரதனே! பிறகு, ராக்ஷஸனால் அறிவுபோக்கப்பட்ட அந்த ராஜச்ரேஷ்டன் சிலகாலத்துக்குப்

பின் அந்தச்சக்திமுனிவரைக்கண்டு, 'இந்தத் தகாத சாபத்தை நீர் என்மேல் பிரயோகித்ததனால், முதலில் உம்மைத் தொடங்கித்தான் நான் மனிதர்களைத்தின்ன ஆரம்பிக்கப் போகிறேன்' என்று சொன்னான். இவ்வாறு சொன்ன பிறகு, உடனே அந்தச்சக்திமுனிவருடைய உயிரைப்போக்கி, புலி பசுவைத் தின்பதுபோல் விருப்பத்துடன் அவரைத்தின்றான். சக்திபிறந்துபோனதைக் கண்டு, பிறகு, விசுவாமித்திரர் திரும்பத்திரும்ப வஸிஷ்டரின் புத்திரர்களின்மீதே அந்தராக்ஷஸனை ஏவினார். அவ்வரசன் கோபித்துச் சக்திக்கு இளையவர்களும் மஹாத்மாக்களுமான வஸிஷ்டரின் புத்திரர்களை ஸிம்மம் அற்பமிருகங்களைப் பக்ஷிப்பதுபோல் பக்ஷித்தான்.

அந்தப்புத்திரர்கள் விசுவாமித்திரரால் கொல்விக்கப்பட்டதைக் கேட்டு, வஸிஷ்டர் அந்தத்துயரத்தைப் பெரியமலை பூமியைத்தாங்குவதுபோலத் தாங்கினார். அந்த ரிஷிப்ரேஷ்டர் தாம் இறப்பதற்கும் எண்ணங்கொண்டார். ஞானமுள்ளவர்களிற் சிறந்த அவர் விசுவாமித்திரரையழிப்பதைப்பற்றிமட்டும் நினைக்கவேயில்லை. அந்த வஸிஷ்டபகவான் மஹாமேருவின் சிகரத்திலிருந்து தமது சரீரத்தை வீழ்த்தினார்; அம்மலையின்பாறையின்மேல் பஞ்சுப்பொதியின்மேல் விழுவதுபோல் வீழ்ந்தார். பாண்டவனே! அந்தப்பகவான் அப்படி வீழ்தலினால் மரணமடையாமற்போனபோது மஹாவனத்தில் ஜ்வலிக்கின்ற அக்னியில் பிரவேசித்தார். அப்போது செம்மையாக எரிந்துகொண்டிருந்த அக்னியும் அவரைக் கொளுத்தவில்லை. சத்துருக்களை ஸம்ஹரிப்பவனே! அங்கே ஜ்வலிக்கின்ற அக்னியும் அவருக்குக் குளிர்ச்சியாகவேயிருந்தது. சோகாவேசங்கொண்ட அம்மாமுனிவர் ஸமுத்திரத்தைக்கண்டு உடனே பெரும்பாறையைக் கழுத்தில் கட்டிக்கொண்டு அதன் ஜலத்தில் விழுந்தார். அம்மஹாமுனிவர் கடலின் அலைவேகத்தினால் கரையில் ஒதுக்கப்பட்டனர். கடுமையான தவமுள்ள அந்தப் பிரம்மரிஷி எவ்வகையினும் எப்போது மரணமடையவில்லையோ அப்போது துயரத்துடன் திரும்பவும் ஆச்ரமத்திற்குச்சென்றார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றுமூன்றுவது அத்தியாயம்.

### சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)



(சில உபாயங்களால் பிராணனை விடமுயன்றும் அது நேராமற்போகவே வஸிஷ்டர் மறுபடி கங்கையில்விழுந்தும் பிராணன்போகாமையால் ஆச்ரமத்துக்குத் திரும்பிவந்ததும், அங்கேவந்த சக்தியின்பாரியையான அத்ருச்யந்தி கர்ப்பமாயிருப்பதைத் தெரிந்துகொண்டு தன்கொலை செய்துகொள்வதை நிறுத்தினதும், அத்ருச்யந்தியுடன் கூடப்போகும் வஸிஷ்டரைப் பக்ஷிப்பதற்குவந்த கல்மாஷபாதனுக்கு அவர் சாபவிமோசனஞ் செய்வித்ததும், அவனுடையமனைவி வஸிஷ்டரிடம் கர்ப்பத்தையடைந்து அச்மகனைப் பெற்றதும்.)

பிறகு, புத்திரர்களில்லாத அந்த ஆச்ரமத்தைக்கண்டு மிகுந்த துயரத்தினால் பீடிக்கப்பட்ட அந்தமுனிவர் அந்த ஆச்ரமத்திலிருந்து மறுபடியும் வெளியிற்சென்றார். பார்த்தனே! அவர், கார்காலத்தில் புதுஜலம் நிரம்பினதும் கரையில்முளைத்த பலவகைமரங்களை மிகுதியாக இழுத்துக்கொண்டுபோவதுமாகிய நதியைக்கண்டனர். கௌரவபுத்திரனே! துன்பமுற்ற அவர் அதைக்கண்டவுடனே, 'இந்நதியின் ஜலத்தில் மூழ்கிவிடுவேன்' என்று மறுபடியும் நினைத்தனர். மிகுந்த துயரமுற்ற அம்மஹரிஷி, பிறகு, தமது சரீரத்தைக் கயிறுகளினால் உறுதியாகக் கட்டிக்கொண்டு அம்மஹாநதியின் ஜலத்தில் மூழ்கினார். எதிரிகளின் படைகளைப் பொடிப்பவனே! பிறகு, அந்நதி அவருடைய கட்டுக்களையறுத்து அம்முனிவரைக் கட்டில்லாமல் தரையிலிருக்கும்படி விட்டுவிட்டது கட்டுக்களினால் விடப்பட்ட அம்மஹரிஷி அந்நதியிலிருந்து கரையேறினார் மஹரிஷி அந்நதிக்கு [1]விபாசையென்று பெயர்வைத்தனர். பாரதனே! புருஷச்ரேஷ்டனே! சொல்தவறாதவராகிய அந்தரிஷியின்சொல்லினால் அந்நதி உலகத்தில் விபாசையென்று கியாதிபெற்றது. அரசனே! துக்கமுள்ள வஸிஷ்டபகவான் அப்போது கரையேறி உடனே புத்தியை வ்யஸனத்திலேயே செலுத்தினார்; ஓரிடத்திலும் நிற்கவில்லை. அவர் மலைகளுக்கும் நதிகளுக்கும் தடாகங்களுக்கும் சென்றார். அவர் அப்போது கொடிய முதலைகளையுடையதும் பயங்கரமுமான இமயமலையின்நதியைக்கண்டு

1 கட்டை விடுத்தது.

திரும்பவும் அதனை ஜலத்தில் வீழ்ந்தார். அந்தச்சிறந்த ஆறும், அந்தப் பிரம்மரிஷியை அக்கினிக்கொப்பானவரென்று நினைத்து நூறுபிரிவு களாகப் பிரிந்தோடிற்று. அதனால், அது [1]சதத்ரு என்று பெயர்பெற் றது. பிறகு, அதிலும் தாம் தரையிலிருக்கக்கண்டு நாமாகமரணமடை வது யாருக்கும் கூடாத காரியமென்றுசொல்லித் திரும்பவும் ஆச்ரமத்திற்கே சென்றார். அவர் பலவிதமலைகளும் பலவகைத்தேசங்களும் போனபிறகு ஆச்ரமத்தில் அத்ருச்யந்தியென்று பெயருள்ள மருமக ளாற் பின்செல்லப்பட்டார். பிறகு, அவள் பின்னே ஸமீபித்து வந்த தனால், பொருள்நிரம்பினதும் ஆறு அங்கங்களாகிய சீக்ஷை, வியாகர ணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் இவற்றினால் அலங்கரிக் கப்பட்டதுமாக வேதம் ஓதுகிற குரலைச்செவியுற்றார். பிறகு, 'யார் இவன் என்பின் வருகிறான்?' என்று அவர்கேட்டனர். மிகுந்த பாக்கிய முள்ளவனே! அவர் இவ்வாறு சொன்னபின், அவர்மருமகளும் சக்தி யின் மனைவியும் தவமுள்ளவளுமாகிய அத்ருச்யந்தியானவள் அம் முனிவரை நோக்கி, 'நானொருத்திதான் உம்முடன் வருகிறேன். மற் றொருவருமில்லை' என்று மறுமொழி சொன்னாள். வஸிஷ்டர், 'மகளே! வேதவேதாங்கங்களை ஓதுகிற இந்தக்குரல் யாருடையது? முன்னர் சக்திஸாங்கவேதாத்யயனஞ்செய்தகுரலைப்போல்எனக்குக்கேட்டதே' என்றார். அத்ருச்யந்தி, 'முனிவரே! உமது புத்ரராகிய சக்தியின் கர்ப்பம் என்வயிற்றில்இதோஉண்டாயிருக்கிறது. இந்தவயிற்றிலேயே இந்தக்கர்ப்பம் வேதாத்யயனஞ்செய்ய ஆரம்பித்துப் பன்னிரண்டு வருஷங்கள் ஆகின்றன' என்று சொன்னாள்.

அர்ஜுனா! சிறப்புற்றவரான வஸிஷ்டரிஷி அவள் இவ்வாறு சொல்லக்கேட்டு மகிழ்ந்து, 'ஸந்தானம் இருக்கிறது' என்று சொல்லி மரணத்திலிருந்து நிவர்த்தியானார். குற்றமற்றவனே! அவர் அங்கிரு ந்து அம்மருமகளுடன்கூடத் திரும்பிவரும்போது ஜனங்களில்லாத காட்டில் உட்கார்ந்திருந்த கல்மாஷபாதனைக்கண்டார். பாரதனே! உக்கிரமான ராக்ஷஸனால் ஆவேசிக்கப்பட்ட அவ்வரசன் அவரைக் கண்டதும் கோபித்தெழுந்து அப்போதே அம்முனிவரைப் பக்ஷிக்கக் கருதினான். அத்ருச்யந்தி கொடிய செய்கையுள்ள அவனை நேரிற் கண்டு வஸிஷ்டரைப்பார்த்துப் பயத்தினால் தழுதழுத்த குரலோடு, 'பகவானே! உக்கிரமான தண்டாயுதத்தோடு யமன்வருவதுபோல் கையிற்பிடித்ததடியோடு இந்தக்கொடியராக்ஷஸன் இங்கேவருகிறான்.

---

[1] நூறாக ஓடினது.

மஹானுபாவரே! வேதந்தெரிந்தவரெல்லாரினும்சிறந்தவரே! இவனைத் தடுப்பதற்குத் திறமையுள்ளவன் இப்புவியில் இப்போது உம்மைத் தவிர வேறொருவரும் இல்லை. பகவானே! பார்ப்பதற்குப்பயங்கரமான இந்தப்பாவியினிடமிருந்து என்னைக் காப்பாற்றும்; நிச்சயமாக இந்த ராக்ஷஸன் இங்கே நம்மிருவரையும் பக்ஷிக்கக்கருதுகிறான்' என்றாள். வஸிஷ்டர், 'பெண்ணே! அச்சப்படாதே; ராக்ஷஸனுக்குஅஞ்சவேண்டுவது எவ்வகையிலுமில்லை. யாரால் பயம்வந்திருப்பதாக நீ பார்க்கிறாயோ இவன் அரக்கனல்லன். இவன் பூமியில்புகழ்பெற்றபராக்ரமசாலியான கல்மாஷபாதனென்னும் அரசன். இவன் இவ்வாறுமிகவும்பயங்கரனாக இந்தவனப்பிரதேசத்தில் வஸிக்கிறான்' என்றார். பாரதனே! சிறந்தமஹிமையுள்ள வஸிஷ்டபகவான் அவனுடைய கண்டு ஹுங்காரத்தினாலேயே நிறுத்தினார். மறுபடியும் மந்திரசுத்தமான தீர்த்தத்தினால் அவ்வரசனுக்குப் புரோக்ஷணஞ்செய்து தமதுயோகமஹிமையினால் சாபநிவர்த்தி செய்வித்தார். அவன் பன்னிரண்டுவருஷகாலம் வஸிஷ்டபுத்திரராகியசக்தியின்பிரபாவத்தினால், அமாவாஸைக்காலத்தில் ஸூர்யன் ராகுகேதுக்களாகிய கிரஹத்தினால் பீடிக்கப்படுவதுபோல் பீடிக்கப்பட்டிருந்தான். பிறகு, அவ்வரசன் ராக்ஷஸனால்விடப்பட்டு ஸந்தியாகாலத்து மேகத்தை ஸூர்யன் சிவக்கச்செய்வதுபோல் அந்தப் பெருவனத்தைத் தன் ஒளியினால் சிவந்ததாகச் செய்தான். பிறகு, அவ்வரசன் பழையஞாபகத்தையடைந்து முனிஸ்ரேஷ்டரானவஸிஷ்டரை நமஸ்கரித்துக்கைகூப்பிக்கொண்டு,'மஹானுபாவரே! முனிஸ்ரேஷ்டரே! நான் ஸுதாஸபுத்திரன்; உம்மால் யாகஞ்செய்விக்கப் பெற்றவன். இந்தக்காலத்தில் உமக்கு என்னவிருப்பமோ அதைச்சொல்லும். உமக்கு நான் என்னசெய்யக்கடவேன்?'என்றுஅப்பொழுது கேட்டான். அதைக்கேட்ட வஸிஷ்டர், 'எனக்கு நேர்ந்த துக்கமாகிய இது,காலத்தை அநுஸரித்து நடந்துபோயிற்று. நீசெல். ராஜ்யத்தையாளு. அரசனே! பிராம்மணனைமட்டும் ஒருபோதும்அவமதிக்காதே' என்று சொன்னார். அதற்கு அரசன், 'மஹானுபாவரே! நான் இனிஒருபோதும் பிராம்மணஸ்ரேஷ்டர்களை அவமதிப்பதில்லை. நான் உமது கட்டளைப்படி பிராம்மணர்களைச் செம்மையாகப் பூஜிப்பேன். பிராம்மணோத்தமரே! வேதம்தெரிந்தவரெல்லாரினும் சிறந்தவரே! நான் எதனால் இக்ஷ்வாகுவம்சத்துக்கூடஸ்தர்களுக்குக் கடன் தீர்ந்தவனாவேனோஅதனைஉம்மிடத்திற்பெறவிரும்புகிறேன். இக்ஷ்வாகுகுலத்தின் அபிவிருத்திக்காகஎன்னால்விரும்பப்படும் புத்திரஸந்தானத்திற்பொருட்டு ஒழுக்கமும் அழகும் குணமும் நிரம்பின என்மனைவி

யிடம் சேரக்கடவீர்' என்றுசொன்னான். சொன்னசொல்தவறாத பிராம்மணோத்தமரான வஸிஷ்டர், சிறந்த வில்லாளியாகிய அவ்வரசனை நோக்கி, 'கொடுப்பேன்' என்பதாகவே அந்தவிஷயத்திற்கு மறுமொழி சொன்னார். ராஜாவான அர்ஜுனனே! அந்தக்காலத்தில் வஸிஷ்டர் அவ்வரசனோடுகூடவே உலகத்திற்பெயர்பெற்ற அயோத்தியென்னும் நகரத்திற்குச் சென்றார். ஜனங்களெல்லாரும், பாவம்நிவர்த்தியான அம்மஹாத்மாவான வேந்தனை இந்திரனைத் தேவர்களழைப்பதுபோல் ஸந்தோஷத்துடன் எதிர்கொண்டழைத்தனர். வெகுகாலத்துக்குப் பின் அரசன் அந்த வஸிஷ்டமஹரிஷியுடன் சேர்ந்து அழகானலக்ஷணங்களோடு கூடிய அந்த நகரத்தில் பிரவேசித்தான். ஸூர்யோதயமானதுபோலப் புரோஹிதருடன் வந்த அந்த அரசனை அயோத்தியிலிருக்கும் ஜனங்கள் கண்டனர். அழகுள்ளவர்களிற்சிறந்த அவ்வரசன் சரத்காலத்தில் உதயமான சந்திரன் ஆகாயத்தைத் தன் ஒளியினால் நிரம்பச் செய்வதுபோல் அவ்வயோத்தி நகரத்தைத் தன் ஒளியினால் நிரப்பினான். நீர்தெளித்து விளக்கப்பட்ட வீதிகளையுடையதும் கொடிகளாலும் கொடிமரங்களாலும் பிரகாசிப்பதுமாகிய அந்தச் சிறந்தநகரம் அவ்வரசனுள்ளத்தை மகிழ்வித்தது. கௌரவபுத்திரனே! அப்போது ஸந்தோஷமும்செல்வமும்நிரம்பின ஜனங்களுள்ள அந்நகரம் இந்திரனால் அமராவதி சோபிப்பதுபோல் அவ்வரசனால் சோபித்தது. அந்தராஜரிஷி அந்தச்சிறந்தபட்டணத்திற்பிரவேசித்த பிறகு, அந்தராஜாவின்கட்டளையினால் அவனுடையமனைவி அவரிடம் சென்றாள். சிறப்புற்றவராகிய வஸிஷ்டமஹரிஷி, பிறகு, ருதுகாலம் வந்தபோது *தேவதைகளின்நடையையநுஸரித்து அந்தஅரசியுடன் சேர்ந்தார். உடனே அவளுக்குக் கர்ப்பம் உண்டாக, அம்முனிஶ்ரேஷ்டர் அவ்வரசனால் வந்தனஞ்செய்யப்பட்டுத் தமது ஆஶ்ரமத்திற்குச் சென்றார். புகழ்பெற்ற அந்த அரசி நீண்டகாலமாகியும் அந்தக்கர்ப்பத்தைப் பிரஸவிக்காமலிருந்தபோது கல்லினால் வயிற்றிலிடித்துக் கொண்டாள். அதனால்,பன்னிரண்டாவதுவருஷத்தில் அந்தக்கர்ப்பம் புருஷஶ்ரேஷ்டனாகிய அஶ்மகன் என்னும் ராஜரிஷியாகப் பிறந்தது. அவன் பௌதன்யம் என்னும் பட்டணத்தை நிர்மாணஞ்செய்தான்.

---

*ஸ்பரிசமாத்திரத்தினால்.

## நூற்றுத்தொண்ணூற்றுநான்காவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)



(பராசரர் பிறந்ததும், கல்மாஷபாதன் தமதுபிதாவைக் கொன்றதைக்கேட்டு அவர் உலகத்தை நாசஞ்செய்ய யத்தனித்ததும், வஸிஷ்டர் அவருக்குக் கார்த்தவீர்யனைச்சேர்ந்த க்ஷத்திரியர்கள் தனத்துக்காகப் பிருகுவம்சத்தவர்களைக் கொன்றதையும் பயந்தோடின ஒரு பிராம்மணியின் தொடையில் தரித்திருந்தகர்ப்பத்தைக் கொல்ல முயலும்போது தொடையைப்பிளந்துகொண்டு வெளியில் வந்த குழந்தையின் தேஜஸினால் அவர்கள் குருடராகப் பிராம்மணியைச் சரணமடைந்ததையும் சொன்னதும்.)

ராஜாவான அர்ஜுனா! பிறகு, ஆஸ்ரமத்திலிருந்த அதிருச்யந்தி யென்பவள் சக்தியின் குலத்தை விருத்திபண்ணுகிறவனும் இரண்டாவது சக்தியைப்போன்றவனுமான குமாரனைப் பெற்றாள். பரதஸ்ரேஷ்டனே! அந்தப் பகவானான வஸிஷ்டமாமுனிவர் அந்தப்பேரனுக்கு ஜாதகர்மமுதலிய ஸம்ஸ்காரங்களைத் தாமேசெய்தார். இறந்துபோவதற்காக இருந்த அந்த வஸிஷ்டமுனிவர் அந்தக்குழந்தை கர்ப்பத்திலிருந்த மாத்திரத்தினாலே நிலைபெறச்செய்யப்பட்டபடியால், அந்தக்குமாரர் பராசரர் என்று உலகத்திற் பெயர்பெற்றார். தர்மாத்மாவாகிய அந்தப்பராசரமுனி ஜனித்ததுமுதல் தந்தையுடனிருப்பதுபோல் அந்த வஸிஷ்டருடன் விடாமலிருந்ததனால் அவரையே தந்தையாக நினைத்தார். பகைவரைத் துயரப்படுத்துகிறவனாகிய அர்ஜுனா! அந்தப்பராசரர்தமது தாயான அதிருச்யந்தியின் முன்னிலையில்பிரம்மரிஷியான வஸிஷ்டரை நோக்கி,'தந்தையே!' என்றழைத்தார். அந்தக் குமாரர், 'பிதாவே!' என்று நிறைந்த அர்த்தத்தோடுசொன்ன அந்த இன்சொல்லைக்கேட்டு அதிருச்யந்தி நீர்நிரம்பின கண்களோடு அந்தப் பாலனை நோக்கி, 'குழந்தாய்! தந்தைக்குத்தந்தையாகிய இவரை, 'பிதாவே' என்று அழைக்காதே. குழந்தாய்! உன் தந்தை நடுக்காட்டில் ராக்ஷஸனால் பக்ஷிக்கப்பட்டார். மாசற்றவனே! யாரைத் தந்தையென்று நினைக்கிறாயோ இவர் உனக்குத்தந்தையல்லர் இந்தப் பெரியவர் புகழ்பெற்ற அந்த உனது தந்தைக்குத்தந்தை' என்றாள். தவறுமொழியரும் சிறந்த மனமுள்ளவருமாகிய அந்தப்பராசரமஹரிஷி,

தாபாரால் இவ்வாறு சொல்லப்பட்டபின் துயரமுற்று எல்லா லோகங்களையும் அழிப்பதற்கு எண்ணங்கொண்டார்.

அவ்வாறு மனத்தால் நிச்சயஞ்செய்த அந்தப்பராசரரை மஹாத்மாவும் மஹாதபஸ்வியும் பிரம்மஜ்ஞானிகளிற் சிறந்தவரும் மேலான அறிவுள்ளவரும் மைத்ராவருணியென்று சொல்லப்பட்டவருமாகிய அந்தவஸிஷ்டர் என்னகாரணத்தினால் தடுத்தாரென்பதைக் கேள். வஸிஷ்டர் பராசரருக்குச்சொல்வது:—

வேதம் தெரிந்தவர்களாகிய பிருகுவம்சத்தவரால் யாகஞ்செய்விக்கப்பெற்றவனும் அரசரிற்சிறந்தவனுமாகிய கிருதவீர்யன் என்னும் கியாதிபெற்ற அரசன் ஒருவன் இவ்வுலகத்தில் இருந்தான். குழந்தாய்! முதல் போஜனத்துக்குத் தகுதியுள்ள அந்தப் பார்க்கவர்களை ஸோமபானமானவுடன் நிரம்பின தனதான்யங்களினால் திருப்தியடைவித்தான். அந்தராஜஸ்ரேஷ்டன் ஸ்வர்க்கஞ்சென்றபின், ஒருகாலத்தில் அவன் குலத்தோருக்குத் திரவியத்தின் உபயோகம் கடுமையாக நேர்ந்தது. அவ்வரசர்களனைவரும் பார்க்கவர்களிடம் தனமிருப்பதைத்தெரிந்துகொண்டு யாசிப்பதற்காக அந்தப் பார்க்கவஸ்ரேஷ்டர்களிடம் சென்றனர். பார்க்கவர்களிற்சிலர் திரவியத்தைப் புரியாமல் பூமிக்குள் புதைத்தனர். சிலர் க்ஷத்திரியர்களால் பயம் நேரிடுமென்பதையறிந்து பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தனர். குழந்தாய்! மற்றும் சிலபார்க்கவர்கள் அந்த க்ஷத்திரியர்களுக்குத் திரவியம் வேண்டிய அவசியத்தைத் தெரிந்துகொண்டு அவர்களுக்கு வேண்டியபடி தனத்தைக் கொடுத்தனர். குழந்தாய்! பிறகு, ஒருகால் ஒரு க்ஷத்திரியன் தற்செயலாக ஒரு பார்க்கவர்வீட்டில் பூமியைத் தோண்டினதனால் அவனுக்குத் திரவியம் கிடைத்தது. அந்தத்தனத்தை க்ஷத்திரியஸ்ரேஷ்டர்களனைவரும் கூடிப் பார்த்தனர். பிறகு, அந்தச் சிறந்தவில்லாளிகள் கோபத்தால் அந்தப்பார்க்கவர்களை நிராகரித்து, சரணமடைந்த அவர்களனைவரையும் கூர்மையான அம்புகளினால் அடித்தனர். கர்ப்பத்திலிருக்கிற சிசுமுதலாக எல்லாரையும் வெட்டிக்கொண்டு பூமியெல்லாம் திரிந்தனர். இவ்வாறு அவர்கள் பார்க்கவர்களை அழிக்கும்போது, அவர்களின் மனைவிகள் பயத்தினால் இமயமலையாகிய துர்க்கத்தையடைந்தனர். அவர்களில் அழகியதொடைகளையுடையவளாகிய ஒருத்தி, தன் பர்த்தாவின்குலம் விருத்தியாவதற்காக, பயத்தால்வெளிப்பட்ட சிறந்த பிரபாவமுள்ள கர்ப்பத்தை ஒற்றைத்தொடையினால் தாங்கினள். ஒரு பிரா

மணப்பெண் அந்தக் கர்ப்பத்தைக்கண்டு பயத்தினால் கலக்கமுற்று உடனே க்ஷத்திரியர்களிடம்சென்று ரகஸ்யமாகத் தெரிவித்தாள். உடனே, அந்தக்ஷத்திரியர்கள் அந்தக் கர்ப்பத்தைக் கொல்லும் யத்னத்துடன் சென்றனர். பிறகு, அவர்கள், தன் ஒளியினால் ஜ்வலிக்கின்ற பிராம்மணப்பெண்ணைக் கண்டனர். உடனே, அந்தக்கர்ப்பம் அந்தப் பிராம்மணப் பெண்ணின் தொடையைப் பிளந்துகொண்டு மத்தியானகாலத்துச் சூரியனைப்போல் க்ஷத்திரியருடைய திருஷ்டிகளை அபகரித்துக்கொண்டே வெளிப்பட்டது. அதனால், அவர்கள் கண்ணில்லாமல் மலைத்தூர்க்கங்களில் தடுமாறினர். அப்போது மௌண்ணம்வீணாகப்போன அவ்வரசர்கள் பயத்தினால் கலக்கமுற்றுக் கண்ணைவேண்டி அந்தச்சிறந்த பிராம்மணப்பெண்ணைச்சரணமடைந்தனர். அந்த மதிகெட்ட அரசர்கள் துயரமுற்று அவிந்த அக்னியைப்போல ஒளிமழுங்கி மஹாநுபாவையான அந்தப்பிராம்மணியை நோக்கி, 'பெருமை பெற்ற அம்மாளுடைய தயையினால் க்ஷத்திரிய ஜாதி க்ஷேமத்தை அடையவேண்டும். எல்லோரும் பாவச்செய்கையை நிவ்ருத்திசெய்து செல்வோம் சிறந்தவளே! நீ உன் புத்திரனுடன் கூட எங்கள்மீது தயைசெய்யக்கடவாய். மறுபடியும் கண்ணைக்கொடுத்து வேந்தர்களைக் காப்பாற்றுவாயாக' என்று வேண்டினர்.

---

## நூற்றுத்தொண்ணூற்றைந்தாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)



**(பிராம்மணியின் சொல்லைக்கேட்டு ஔர்வரைச் சரணமடைந்த க்ஷத்திரியர்களுக்குக் கண்கிடைத்ததும், உலகத்தை நாசஞ்செய்யத் தவஞ்செய்யும் ஔர்வரை அவர்பிதா அவருடைய தவத்திலிருந்து விலக்கியதும்.)**

அதனைக்கேட்டு, அந்தப்பிராம்மணி, 'புத்ரர்களே! நான் கோபங்கொண்டு உங்கள் கண்களைப்பறித்துவிடவில்லை. பிருகுவம்சத்தவனை இந்த *ஊருஜன் இப்போது உங்கள்மேல் கோபித்திருக்கின்றான். பிள்ளைகளே! அம்மஹாத்மா தன்பந்துக்கள் கொல்லப்பட்டதை நினைத்துக் கோபத்தினால் உங்கள்கண்களைப் பறித்திருக்கிறான்; சந்தேகமில்லை. புத்திரர்களே! நீங்கள் பிருகுவம்சத்தவரின் கர்ப்பங்களைக்கூட எப்போது கொன்றீர்களோ அப்போது

---

*தொடையிற் பிறந்தவன்.

இந்தக்கர்ப்பம் நூறுவருஷகாலம் என்னால் தொடையிலடக்கிவைக்கப் பட்டிருந்தது. இவன்கர்ப்பத்திலிருக்கையிலேயே, ஆறுஅங்கங்களோ டும்கூடியவேதமெல்லாம் ப்ருகுவம்சத்துக்கு மேன்மேலும் நன்மை யைச் செய்யக்கருதி இவனிடம் பிரவேசித்தன. அப்படிப்பட்ட இவன் பிதிர்வதத்தினாலுண்டான கோபத்தினால் உங்களைக்கொல்ல விரும்புவது நிச்சயம். அவனுடைய திவ்யதேஜஸினாலேதான் உங்கள் கண்கள் பறிக்கப்பட்டன. அந்த ஔர்வனாகிய எனது உத்தமபுத்தி ரனையே நீங்கள் வேண்டிக்கொள்ளுங்கள். உங்களுடைய நமஸ்காரத் தினால் இவன் ஸந்தோஷமடைந்து கண்களைக் கொடுப்பன்' என்று சொன்னாள். அவளால் இவ்வாறு சொல்லப்பட்ட அவ்வரசர்களனைவ ரும் உடனே அந்த ஊருஜரைப்பார்த்து, 'தயைசெய்யும்' என்று கேட் டுக்கொண்டனர். அப்போது அவர் தயைசெய்தார். அந்தச் சிறந்த பிரம்மரிஷி தொடையைக் கிழித்துக்கொண்டு பிறந்தனர். இந்தக்கார ணம்பற்றி ஔர்வரென்னும் பெயரினால் உலகத்தில் ப்ரக்யாதிபெற்றார். அப்போது அரசர்கள் மறுபடியும் அவரால் கண்களைப் பெற்றுத் திரும்பிச்சென்றனர்.

அந்தப் பார்க்கவரான முனிவர் எல்லாலோகங்களுக்கும் கெடுதி யைக்கருதினார். அப்பா! அவர் அப்போது எல்லாஉலகங்களையும் அழிப் பதற்காக நினைத்துத் தம்மனம் முழுவதையும் அதுவிஷயத்தில் ஏகாக்ரமாகச்செய்தார். மிகுந்ததவத்தினால் ஜ்வலித்த அந்தப் பிருகு வம்சபுத்திரராகிய ஔர்வமுனிவர் தமது பிதிர்க்களைத் திருப்தி செய்விப்பதற்காகப் பார்க்கவர்களின் பகைதீர்க்க விரும்பி எல்லாலோ கங்களும் அழியும்படி தேவாஸுரமனுஷ்ய லோகங்களையெல்லாம் உக் கிரமான பெருந்தவத்தினால் கொதிப்புறச்செய்தார். குழந்தாய்! குலத் துக்கு ஆனந்தகரனான அந்தப்புத்திரன் அவ்வகையாக இருந்ததைக் கண்டறிந்து, பிதிர்க்களனைவரும் பிதிர்லோகத்திலிருந்துவந்து, பின் வருமாறுசொல்லினார். 'ஔர்வனே! புத்திரனே! உனதுகடுமையான தவத்தின் மஹிமையைக் கண்டோம். லோகங்களினிடம் அனுக்ரஹஞ் செய். உன் கோபத்தையடக்கு. குழந்தாய்! முன்னே க்ஷத்திரியர்கள் ஹிம்ஸிக்கையில் பரிசுத்தாத்மாக்களான பார்க்கவரனைவரும் சக்தி யில்லாமல் தங்கள் வதையைத் தடுக்காமலிருக்கவில்லை. குழந்தாய்! நீண்ட ஆயுளினால் எப்போது எங்களுக்குத் துயரமுண்டாயிற்றோ அப்போது நாங்களாகவே க்ஷத்திரியர்களால் கொல்லப்படுவதை விரு ம்பினோம். முன்னே ஒருவன் பார்க்கவர்களின் கிருகத்தில் தனத்தைப் புதைத்துவைத்ததும் க்ஷத்திரியர்களுக்குத் துவேஷத்தையும் கோபத்

தையும் உண்டாக்குவதற்காகவே தான். பிராம்மணோத்தமனே! குபேரனே நமக்கு மிகுதியான தனத்தைக் கொணர்ந்து கொடுத்த போதிலும் அந்தத் தனத்தினால் ஸ்வர்க்கத்தை விரும்புகின்ற நமக்கு ஆகவேண்டியதென்ன? குழந்தாய்! எங்கள் எல்லோரையும் யமன் எடுக்கமுடியாமலிருந்தபோது நாங்களே ஸம்மதித்துக் கண்டுபிடிக்கப்பட்ட உபாயம் இது. குழந்தாய்! ஆத்மஹத்தி செய்துகொள்ளும் புருஷன் நல்ல லோகங்களைப்பெறான். அதனால், செம்மையாக ஆராய்ந்து நாங்கள் ஆத்மவதம் செய்துகொள்ளவில்லை. அப்பா! நீ செய்யக்கருதுகிற இந்தக்காரியம் எங்களுக்கு இஷ்டமன்று. எல்லாலோகங்களையும் அழிப்பதாகியபாபத்தினின்று இந்தமனத்தையடக்கு. குழந்தாய்! புத்திரனே! க்ஷத்திரியர்களையும் ஏழுலோகங்களையும் கெடுக்காதே. தவத்தின்வன்மையைக் கெடுக்கும் கோபத்தைக் கொல்' என்றனர்.

---

## நூற்றுத்தோண்ணூற்றுருவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

(பிதிர்க்கள்சோற்படி ஔர்வர் கோபத்தை ஸமுத்திரத்தில்விட்டது.)

ஔர்வர், 'பிதிர்க்களே! நான் கோபத்தினால் எல்லா லோகங்களையும்அழிப்பதைப்பற்றி முதலிற்செய்தபிரதிஜ்ஞைவீணாகாது. வீண்கோபமும் வீண்பிரதிஜ்ஞையுமுள்ளவனாக நான் ஜீவித்திருக்கமாட்டேன். நிறைவேற்றப்படாத கோபம், அக்கினி அரணிக்கட்டையை எரிப்பதுபோல் என்னை எரித்துவிடும். காரணம்பற்றியுண்டான கோபத்தை எவன் பொறுப்பதற்கு முயற்சிசெய்கிறானோ அந்தமனிதன் தர்மார்த்தகாமங்கள்மூன்றையும் ஸரியாகக்காப்பதற்கு வல்லவனாகான். எல்லாவற்றையும் ஜயிக்கவிரும்புகின்ற அரசர்களினால் துஷ்டர்களைச்சிக்ஷிப்பதற்கும் சிஷ்டர்களை ரக்ஷிப்பதற்கும் கோபம் காலங்களில் பிரயோகிக்கப்படுவதாகும். க்ஷத்திரியர்கள் பிருகுவம்சத்தவரை வதஞ்செய்தபோது கர்ப்பப்பையில்அடங்கித்தொடையிலிருந்த நான் தாய்வர்க்கங்களின் கூச்சலைக்கேட்டேன். ஈனர்களான க்ஷத்திரியர்கள் பிருகுவம்சத்தவரைக் கர்ப்பம்முதல் ஒழித்ததை லோகத்திலுள்ள தேவர்முதலானவர்கள் எப்போது பொறுத்தனரோ அப்

போதே கோபம் என்னிடம் ஆவேசமாயிற்று. பயத்தினால் விரித்த கூந்தலோடுகூடிய என் தாய்மார்களும் தந்தைமார்களும் எந்தவுலகங்களிலும் அடைக்கலம் பெறுமற்போனார்கள். அந்தப் பார்க்கவர்களின் மனைவிகளை யாரும் காப்பாற்றாமலிருந்தபோது மேன்மையுற்ற இந்த என் தாய் ஒற்றைத்தொடையில் என்னைத் தாங்கினாள். பாவத்தைத் தடுப்பவன் உலகங்களில் எப்போதிருப்பனோ அப்போதுதான் எல்லா உலகங்களிலும் பாவஞ்செய்பவன் இரான். எப்போது பாவியைத்தடுப்பவன் எங்கும் நேரிடாமலிருக்கிறானோ அப்போது அநேக ஜனங்கள் பாவச்செய்கைகளையேசெய்துகொண்டிருப்பார்கள். எவன் ஸமர்த்தனாயிருந்தும் தெரிந்திருந்தும் தன் சக்தியினால் பாவத்தைத் தடுக்கவில்லையோ அவனையும் அந்தப்பாவம் சேரும். அரசர்களும் தேவர்களும் காப்பாற்றச் சக்தியுள்ளவராயிருந்தும், என் பிதிர்க்கள் இவ்வுலகத்தில் ஜீவித்திருப்பதை இஷ்டமாக நினைத்து, அவர்களை ரக்ஷிப்பதற்கு ஆரம்பிக்காமற்போயினர். ஆதலால், இந்த லோகங்களின்மேல் நான் கோபித்தேன் எனக்குச் சாமர்த்தியமிருக்கிறது உங்களுடைய சொல்லையும் நான் அதிக்ரமிக்கக்கூடவில்லை நான் ஸமர்த்தனாக இருந்தும் உபேக்ஷைசெய்தால் இவ்வாறே மறுபடியும் உலகங்களுக்குப் பாபத்தினால் பெரிய பயம் உண்டாகும். என் கோபத்தினாலுண்டான எந்த அக்னி லோகங்களைப் பக்ஷிக்கவிரும்புகிறதோ அதனையடக்கினால், அது தன் வலிமையினால் என்னையே எரித்துவிடும். தேவர்களே! நீங்களும் எல்லாஉலகங்களுக்கும் நன்மையையேவிரும்புகிறவர்களென்பதை நான் அறிகிறேன் ஆதலால், உலகங்களுக்கும் எனக்கும் எது நன்மையோ அதனைக் கட்டளையிடுங்கள்' என்று சொன்னார்.

பிதிர்க்கள், 'உன் கோபத்தினாலுண்டான எந்த அக்னி லோகங்களைப்பற்ற ஆரம்பிக்கிறதோ அதனை ஜலத்தில் விட்டுவிடு; உனக்கு ஸுகம் உண்டாகட்டும் லோகங்கள் ஜலத்தை ஆதாரமாகக்கொண்டவை. எல்லா ரஸங்களும் ஜலமயம் உலகமே ஜலமயம். பிராம்மணோத்தமனே! ஆதலால், இந்த உன் கோபாக்னியை ஜலத்தில் விட்டுவிடு. பிராம்மணனே! ஸம்மதமாயிருந்தால், உன் கோபத்தினாலுண்டான இந்தஅக்னி ஜலத்தையெரித்துக்கொண்டு ஸமுத்திரத்தில் நிற்கட்டும். உலகங்கள் ஜலமயமானவையென்றுசொல்லப்பட்டிருக்கின்றன. குற்றமற்றவனே! இவ்வாறு உனது இந்தப் பிரதிஜ்ஞையும் ஸத்யமாகிவிடும். இதனால், தேவர்களும் உலகத்தோரும் நாசமடையார்கள்' என்றனர்.

குழந்தாய்! பிறகு, ஔர்வர் அந்தக்கோபத்தினாலுண்டான அக்னியை ஸமுத்திரத்தில்விட்டுவிட்டார். அதுதான் வடவாமுகாக்கினியென்னப்

பட்ட பெருங்குதிரைத்தலையாகி ஸமுத்திரத்திலுள்ள ஜலங்களைப் பக்ஷிக்கிறதென்று வேதமறிந்தவர்கள் அறிகின்றனர். அஃது அக்னியை வாயிலிருந்துகக்கி ஸமுத்திரஜலத்தைக் குடிக்கிறது. ஞானிகளிற் சிறந்தபராசரனே! ஆதலால், நீயும் லோகங்கள் முக்கியமானவையென்று அறிந்து அவற்றைக் கெடுக்காமலிருக்கக்கடவாய். உனக்கு ஸுகமுண்டாகட்டும்' என்று சொன்னார்.

---

## நூற்றெண்பத்தோராவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

**(பராசரர் வஸிஷ்டருடைய உபதேசத்தினால் உலகத்தையழிப்பதைவிட்டு ராக்ஷஸரையழிப்பதற்கு யாகஞ் செய்ய ஆரம்பித்ததும், புலஸ்தியருடைய பிரார்த்தனையினால் யாகத்தை முடித்ததும்.)**

மஹாத்மாவான வஸிஷ்டரால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்தப் பராசரப் பிரம்மரிஷி தமது கோபத்தை ஸர்வலோகங்களையும் அழிப்பதிலிருந்து நிவ்ருத்திசெய்தார். சிறந்த பிரம்மதேஜஸுள்ளவரும் வேதமறிந்தவரெல்லாரிலும் சிறந்தவரும் சக்திபுத்திரருமான அந்தப் பராசரமுனிவர் ராக்ஷஸஸத்ரம் என்னும் யாகஞ்செய்தார். அப்போது, அம்மஹாமுனி, சக்தியின்வதத்தை நினைத்து முதிர்ந்தவர்களும் பாலர்களுமான ராக்ஷஸர்களைத் தாம் செய்யும் யாகத்தில் எரித்தார். வஸிஷ்டர், 'இவனுடைய இரண்டாவது பிரதிஜ்ஞையையும் நான் தடுக்கமாட்டேன்' என்ற நிச்சயத்தினால் அவரை ராக்ஷஸவதத்திலிருந்து நிவ்ருத்திக்கச்செய்யவில்லை. அந்த யாகத்தில் அந்தப் பராசரமுனிவர், ஜ்வலிக்கின்ற திரேதாக்னிகளின் முன்னிலையில் நான்காவது அக்னியைப்போலிருந்தார். தமது சக்திக்குத்தக்கபடி ஹோமஞ் செய்யப்பட்ட அந்தப் பரிசுத்தமான யாகத்தினால் அந்த ஆகாயம் மேகங்கள் போனபிறகு ஸூர்யனால் பிரகாசிப்பதுபோலப்பிரகாசிக்கச் செய்யப்பட்டது. அங்கே தமது பிரம்மதேஜஸினால் பிரகாசிக்கின்ற அந்தப்பராசரரை வஸிஷ்டர்முதலிய முனிவர்களெல்லாரும் இரண்டாவதுஸூர்யனைப்போல நினைத்தனர். பிறகு, சிறந்த புத்திமானாகிய அத்ரிமுனிவர் பராசரரைவிட வேறொருவரால் ஸாதிப்பதற்கு முற்றும் முடியாத ராக்ஷஸஸத்ரத்தை நிறுத்தக் கருதி அவரிடம் வந்தார். சத்

ருக்களை ஸம்ஹரிப்பவனே! அவ்வாறே புலஸ்தியரும் புலகரும் பெரு வேள்வி செய்தவராகிய க்ரதுமுனிவரும் ராக்ஷஸர்கள் பிழைப்பதைக் கருதி அங்கே வந்தனர். பரதஸ்ரேஷ்டனே! பார்த்தா! புலஸ்தியர் அந்த ராக்ஷஸர்களுடைய வதத்தைப்பற்றி எதிரிகளையழிப்பவராகிய பராசரரைநோக்கிப் பின்வருமாறு சொல்லலானார்.

'அப்பா! உனக்கு இடையூறு ஒன்றுமில்லாமலிருக்கிறதா? புத்திரனே! அறியாதவர்களும் நிரபராதிகளுமான எல்லா ராக்ஷஸர்களையும் வதஞ்செய்வதனால் நீ ஸந்தோஷப்படுகிறாயா? எனக்கு இந்த ஸந்ததிநாசத்தை நீசெய்யத்தகாது. குழந்தாய்! இது தபஸ்விகளான பிராம்மணர்களுக்குத் தர்மமாகக் காணப்பட்டதல்லவே. சாந்தியன்றோ மேலான தர்மம். பராசரா! அதைச்செய். பராசரா! நீ ஸ்ரேஷ்டனாக இருந்து பெரிய அதர்மத்தைச் செய்கிறாய். தர்மந்தெரிந்த சக்திமுனியையும் நீ அதிக்ரமிக்கத்தகாது. இவ்வாறு என் ஸந்ததிநாசத்தையும் நீ செய்யத்தகாது. வஸிஷ்டவம்சத்தவனே! சக்திக்குத் தமது சாபத்தினாலேதானே அந்த மரணம் முன்னேநேர்ந்தது? தம்மிடத்திலுண்டான கோபதோஷத்தினால் அந்தச்சக்தி இவ்வுலகத்திலிருந்து ஸ்வர்க்கத்தில் சேர்ப்பிக்கப்பட்டார். ரிஷியே! அவரைப் பக்ஷிப்பதற்கு ராக்ஷஸன் எவனும் ஸமர்த்தனல்லன். விசுவாமித்திரர் ஏவிய ராக்ஷஸனால் அந்த வஸிஷ்டபுத்திரர் பக்ஷிக்கப்பட்டார். அப்போது,வஸிஷ்டபுத்திரர்கள் பொறுமையுள்ளவர்களாகச் சாபமிடாமலும் தங்களைக்காப்பதற்கு உபாயந்தேடாமலும் வேறுதேகம்வரட்டுமென்று நினைத்து அந்தத்தேகத்தைத் தகித்தனர். அந்தச் சக்திமுனிவர் தம்மரணத்தைத் தாமே தேடிக்கொண்டார். அப்போது அவருக்கு மரணம்வந்தது. பராசரனே! அதில் விசுவாமித்திரர் வ்யாஜமாக இருந்தார். கல்மாஷபாதனென்னும் அரசனும் ஸ்வர்க்கமேறி ஆனந்தப்படுகிறான். மஹாமுனியே! சக்திக்கு இளையவர்களாகிய வஸிஷ்டபுத்ரர்களனைவரும் தேவர்களுடன் சேர்ந்து ஸந்தோஷமுள்ளவர்களாக விளையாடுகின்றனர். மஹரிஷியே! இதெல்லாம் வஸிஷ்டருக்குத்தெரிந்த விஷயம். குழந்தாய்! பேதையர்களான ராக்ஷஸர்களுக்கு இந்த நாசம் வந்திருக்கிறது. வஸிஷ்டபௌத்ரனே! இந்தயாகத்திற்கு நீகாரணமாயிருக்கிறாய். இந்தயாகத்தை நீ விட்டுவிடு. உனக்கு ஸுகமுண்டாகட்டும். உனது இந்த யாகம் முடிவு பெறட்டும்' என்றார். புலஸ்தியரால் இவ்வாறு சொல்லப்பட்டபோது, சிறந்த

ஞானமுள்ள வஸிஷ்டராலும் அப்படியே அங்கீகரிக்கப்பட்டதன் மேல், சக்திபுத்திரரான பராசரமஹாமுனிவர் அந்த ஸத்திரத்தை முடித்துவிட்டார். எல்லாராக்ஷஸர்களேயும் ஸம்ஹரிக்கும் யாகத்திற்காக வளர்க்கப்பட்டதீயை அப்போதே இமயமலையின் வடபுறத்திலுள்ள பெருங்காட்டில் விட்டுவிட்டார். அந்த அக்னி இன்னமும் அவ்விடத்தில் எப்போதும் ராக்ஷஸர்களையும் மரங்களையும் கற்களையும் பக்ஷித்துக்கொண்டு பர்வகாலங்தோறும் காணப்படுகிறது.

---

## நூற்றுத்தொண்ணூற்றெட்டாவது· அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம்· (தொடர்ச்சி.)

**(ஸௌதாஸன்மனைவியினிடத்தில் வஸிஷ்டர் புத்திரனை உண்டுபண்ணினதற்குக்காரணம் கேட்ட அர்ஜுனனுக்கு ஸௌதாஸன்கதையையும் அவனுக்குப் பிராம்மணியின் சாபம் நேர்ந்ததையும் சொல்வது.)**

சிறந்த பிரம்மதேஜஸும் மிகச்சிறந்த தபஸுமுள்ள சக்திபுத்ரரான பராசரர், விசுவாமித்திரரை வதஞ்செய்யக்கருதி மறுபடியும் உக்கிரமான *தீயைவளர்த்தனர். சிறந்த ஞானவானான ஸுப்ரம்மண்ய தேவர் விசுவாமித்திரருடைய ஹிதத்தைக்கருதி, அக்னிக்கொப்பான தமதுதேஜஸினால் பராசரரால்மூட்டப்பட்டஅந்தஅக்கினியை விழுங்கினார்' என்று கந்தர்வன் சொன்னதைக்கேட்டு, அர்ஜுனன், 'கல்மாஷபாதனென்னும் ராஜாவினால் பிரம்மஜ்ஞானிகளிற் சிறந்தவரான தன்குருவினிடம் என்னகாரணம்பற்றித் தன்மனைவி அனுப்பப்பட்டாள்? மஹாத்மாவான அந்தவஸிஷ்டமஹரிஷி முக்கியமான தர்மத்தையறிந்திருந்தும் சேரத்தகாதஸ்திரீயை ஏன் சேர்ந்தார்? ஸ்நேஹிதனே! முன்னே வஸிஷ்டராலும் மிகப்பாபமான செய்கை ஏன் செய்யப்பட்டது? இதைப்பற்றி வினவுகின்ற என்ஸம்சயத்தையெல்லாம் நீ தீர்க்கக்கடவாய்' என்றான். அதைக்கேட்ட கந்தர்வன், 'யாராலும் ஜயிக்கமுடியாத தனஞ்சயனே! வஸிஷ்டரையும் மித்ரஸஹன் என்னப்பட்ட கல்மாஷபாதராஜனையும்பற்றி நீ என்னைக்கேட்டதற்கு நான் சொல்வதைத் தெரிந்துகொள். பரதஸ்ரேஷ்டனே! வஸிஷ்டபுத்ரரும் மஹாத்மாவுமான சக்தியினால் அவ்வரசன் எவ்வாறு சபிக்கப்பட்டானென்பதை முழுதும் உனக்குச் சொன்

---

*யாகம்செய்தார்.

னேன். சாபத்திலகப்பட்டுக்கொண்ட அந்த வீரனாகிய அரசன் கோபத்தினால் கண்கள் கலங்கித் தன்மனைவியுடன் பட்டணத்திலிருந்து வெளியே சென்றான்; ஜனமில்லாத காட்டுக்குச்சென்று மனைவியுடன் திரிந்தான். அனேக மான்கூட்டங்களும் இன்னும் பற்பல பிராணிகளும் நிரம்பினதும், பயங்கரமான சப்தமுள்ளதும், அனேகவிதமான புதர்களாலும் கொடிகளாலும் மரங்களாலும்மறைக்கப்பட்டதுமான வனத்தில் சாபத்தினால் பீடிக்கப்பட்டுத் திரிந்துகொண்டிருந்த அவ்வரசன், ஒருநாள் பசிமிகுந்து தன் உணவைத் தேடிக்கொண்டு மிகவுங் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கையில், மனிதரில்லாத ஒரு காட்டில் ஒரு பிராம்மணனும் பிராம்மணியும் புணர்வதற்குச் சேர்ந்திருப்பதைக்கண்டான். அவ்விருவரும், அவனைக்கண்டதும், மிகவும் பயந்து விருப்பம் நிறைவேறாமலே ஓடினர். ஓடுகிற அவ்விருவருள் அந்தப் பிராம்மணனை அரசன் பலவந்தமாகப் பிடித்தான். தன் பர்த்தா பிடிபட்டதைக்கண்டு உடனே அந்தப் பிராம்மணி, 'வேந்தனே! நல்ல நியமமுள்ளவனே! உனக்கு நான் சொல்லுகிறதைக்கேள். நீ ஸூர்ய வம்சத்திற் பிறந்தவன்; லோகத்தில் கியாதிபெற்றவன்; தர்மத்தினின்றும் தவறாதிருப்பவன்; பெரியோருக்குப்பணிவிடைசெய்வதில் ஊக்கமுடையவன். சாபத்தாற் கெடுக்கப்பட்டவனே! ஜயிக்கமுடியாதவனே! நீ பாபஞ் செய்யலாகாது. ருதுகாலம் வந்தபிறகு ஸந்ததிக்காக என் புருஷருடன் சேர்ந்திருந்த நான், விருப்பம் நிறைவேறாமலே என் கணவரைபற்றிய வ்யஸனத்தினால் பீடிக்கப்பட்டவளாவேன். ராஜஸ்ரேஷ்டனே! தயைசெய்து இந்த என்பர்த்தாவை விட்டுவிடு' என்றாள்.

அவள் இவ்வாறு கதறும்போதே, அவன், தயையில்லாமல், புலி தான்விரும்பின மானைத் தின்பதுபோல் அவள்கணவனைத் தின்றான். கோபம்மேற்கொண்ட அவளது கண்ணீர்த்துளிகள் தரையில் விழுந்ததும் ஜ்வலிக்கின்ற அக்னியாகி அந்த இடத்தையே எரித்தன. அப்போது துயரத்தினால் கொதிப்புற்ற அந்தப்பிராம்மணி, தன் கணவனுக்கு நேர்ந்த ஆபத்தினால்பீடிக்கப்பட்டுக் கோபத்துடன் கல்மாஷபாதனென்னும்ராஜரிஷியைப் பார்த்து, 'அயோக்கியனே! மதிகெட்டவனே! என் விருப்பம் நிறைவேறாதபோது, நான் பார்த்திருக்கையில் மிகுந்த புகழுள்ளவரும் என் அன்பருமான கணவரை நீ தயை சிறிதுமில்லாமல் தின்றாயாதலால், நீயும் என்சாபத்தாலடிபட்டு, ருதுகாலத்தில்உன்பாரியையைப்புணர்ந்தவுடன்உயிரைவிடுவாயாக'என்று

சபித்தாள். பிறகு, அந்த ராஜாவினால் பிரார்த்திக்கப்பட்ட அந்தப் பிராம்மணி அவனுக்கு அனுக்ரகஞ் செய்தாள். 'எந்த வஸிஷ்டமஹரிஷியின் புத்திரர்கள் உன்னாலழிக்கப்பட்டனரோ அந்த வஸிஷ்டமஹரிஷியுடன் புணர்ந்து உன்மனைவி புத்திரனைப்பெறுவள். அரசர்களில் இழிவானவனே! அந்தப்புத்திரன்தான் உன் வம்சத்திற்காக இருக்கப்போகிறான்' என்றாள். அந்த அழகான அங்கிரஸின் வம்சத்துப்பெண் இவ்வாறு ராஜாவுக்குச் சாபங்கொடுத்து அவன் முன்னிலையிலேயே ஜ்வலிக்கின்ற தீயில் மூழ்கினள். வீரனே! மிகுந்த மஹிமையுள்ள வஸிஷ்டர், தமது சிறந்த யோகஞானத்தினால் இதையெல்லாம் பிரத்தியக்ஷமாக உணர்ந்தார். அதற்குப்பின் வெகுகாலங்கடந்து சாபம் தீர்ந்த அந்தராஜரிஷி ருதுகாலத்தில் சேரப்போனபோது மதயந்தி யென்னும் அவன்மனைவியால் தடுக்கப்பட்டான். காமத்தினால் மோகங்கொண்ட அவ்வரசனுக்கு அந்தச்சாபம் நினைவில்லை. அப்போது தன் மனைவியின் சொல்லைக்கேட்டு, அந்தராஜஸ்ரேஷ்டன் பரபரப்போடு அந்தச்சாபத்தை நினைத்து மிகவருத்தமுற்றான். புருஷஸ்ரேஷ்டனே! இந்தக்காரணத்தினால் சாபமாகிய தோஷமடைந்த அரசன் வஸிஷ்டரைத் தன் மனைவியிடம் சேர்ப்பித்தான்' என்றான்.

---

## நூற்றுத்தொண்ணூற்றொன்பதாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)

**(அர்ஜுனன் தகுந்த புரோஹிதர் யாரென்று கேட்க, கந்தர்வன் தௌமியரை வரிக்கச்சொன்னதும், கந்தர்வனுக்கு ஆக்னேயாஸ்திரம் கொடுத்ததும், உத்கோசகமென்ற தீர்த்தத்தில் பாண்டவர்கள் தௌமியரைப் புரோஹிதராக வரித்ததும்.)**

அர்ஜுனன், 'கந்தர்வனே! எங்களுக்குத் தகுந்த புரோஹிதர் வேதம் தெரிந்தவருள் யாரிருக்கலாம்? அவரைச்சொல். உனக்கு எல்லாந் தெரியுமே?' என்றுகேட்க, கந்தர்வன், 'தேவலமுனிவரின் இளைய ஸஹோதரராகிய தௌமியமுனிவர் இந்தா வனத்தில் உத்கோசகமென்னும் புண்ணியதீர்த்தத்தில் புண்ணியக்ஷேத்திரத்தில் தவஞ்செய்கிறார். விருப்பமிருந்தால் அவரை வரித்துக்கொள்ளுங்கள்' என்றான். பிறகு, அர்ஜுனன் அந்த ஆக்னேயாஸ்திரத்தை முறையோடு கந்தர்வனுக்குக்கொடுத்தான். அவனும் ஸந்தோஷமடைந்து,'ஸ்நேகிதனே!

சிறந்தகுதிரைகள் என்னிடம் இருக்கின்றன. அவற்றை உனக்குக் கொடுப்பேன். உபகாரஞ்செய்த ஸ்நேஹிதனுக்குப் பிரதியுபகாரத்தைச் செய்கிறேன். பரதஶ்ரேஷ்டனே! சாக்ஷுஷியென்னும் மோஹவித்தையைப் பெற்றுக்கொள்' என்றுசொன்னான். இவ்வாறு சொல்லப்பட்ட அர்ஜுனன், ஸந்தோஷமடைந்து,'கந்தர்வராஜனே! குதிரைகள் உன்னிடத்திலேயே இருக்கட்டும். உபயோகப்படுங்காலத்தில் நாங்கள் பெற்றுக்கொள்வோம். உனக்கு க்ஷேமம் உண்டாகக்கடவது' என்று சொன்னான். அந்தக் கந்தர்வனும் பாண்டவர்களும் ஒருவரையொருவர் மரியாதைசெய்து அழகான கங்கைக்கரையிலிருந்து விருப்பம்போலச் சென்றனர். ஜனமேஜயரே! பிறகு, அந்தப் பாண்டவர்கள் உத்கோசதீர்த்தத்தில் தௌம்யாஶ்ரமத்துக்குச் சென்று தௌம்யரைப் புரோகிதராகவரித்தனர். வேதம் தெரிந்தவர்களெல்லாரிலும் சிறந்தவராகிய தௌம்யர் காட்டிலுள்ள காய்கிழங்குகளைக் கொடுத்தும் புரோஹிதராக இருப்பதையங்கீகரித்தும் அவர்களுக்கு மரியாதை செய்தார். அந்தப்பாண்டவர்கள், அந்தப் பிராம்மணரை முன்னிட்டுக் கொண்டபிறகு, ஸம்பத்தையும் ராஜ்யத்தையும் ஸ்வயம்வரத்தில் திரௌபதியையும் தாங்கள் அடைந்ததாகவேநினைத்தனர். ஆசாரியரான அந்தப் புரோஹிதருடன்சேர்ந்த பரதஶ்ரேஷ்டர்கள் அப்போது தங்களுக்கு நாதனிருப்பதாக நினைத்தனர். அவர்களுடைய ஆசாரியரான அந்தத் தௌம்யரென்னும் பிராம்மணோத்தமர் வேதங்களையும் வேதார்த்தங்களையும் சரியாக அறிந்தவர்; உயர்ந்தபுத்தியும் சிறந்த வாக்குமுள்ளவர்; அழகுள்ளவர். அந்தத் தௌமியர் பிரம்மதேஜஸினாலும் புத்தியினாலும் அழகினாலும் புகழினாலும் பாக்கியத்தினாலும் பலவகையான மந்திரங்களினாலும் பிருஹஸ்பதிக்குநிகராயிருந்தார். அந்தப் பிரம்மரிஷியும், அவர்களை ஸ்வபாவத்தாலேயே பூமியில் எல்லாரிலும் மேற்பட்டவராக நினைத்தார். தர்மஜ்ஞரும் ஸர்வஜ்ஞருமான அந்தத் தௌமியரால் தாம் யாகஞ்செய்விக்கத் தகுதியுள்ளவர்களாக அங்கீகரிக்கப்பெற்ற வீரர்களான பாண்டவர்களனைவரும் ராஜ்யம் கிடைத்ததாகவே நினைத்தனர். புத்தியும் பராக்கிரமமும் தேகவன்மையும் மனவெழுச்சியுமுள்ளவர்களும் இரண்டாவது தேவர்களைப் போன்றவர்களும் அரசர்களுமாகிய அந்தப்பாண்டவர்கள், அந்தத் தௌம்யரால் ஆசீர்வதிக்கப்பெற்று, அவருடன்சேர்ந்து அந்தப் பாஞ்சாலியின் ஸ்வயம்வரத்திற்குச் செல்ல நிச்சயித்தனர்.

**சைத்ரரதபர்வம் முற்றிற்று.**

---

இருநூறாவது அத்தியாயம்

# ஸ்வயம்வர பர்வம்.

(நடுவழியில்வந்த வ்யாஸருடைய கட்டளையினால் பாண்டவர்கள் துருபதநகரம் சென்று பிக்ஷையெடுத்துப்புஜித்துக்கொண்டு ஒரு குயவன் வீட்டில் வசித்திருந்ததும், திரௌபதியின் ஸ்வயம்வரத்துக்குக் காரணம் சொல்வதும், துருபதன்செய்த ஸ்வயம்வர ப்ரகடனத்தைக் கேட்டு க்ஷத்திரியக் கூட்டங்கள் வந்து அவரவர் தங்கள் தங்களுக்குத் தகுந்த இடத்தில் வீற்றிருக்கையில் பாண்டவர்கள் பிராம்மணர்களின் நடுவில் உட்கார்ந்ததும், திரௌபதி மங்களஸ்நானஞ் செய்து அலங்காரஞ் செய்துகொண்டு ஸ்வயம்வரமண்டபத்துக்கு வந்ததும், திருஷ்டத்யும்னன் லக்ஷியத்தையடிப்பவர்களுக்குத் திரௌபதி உரியவளாவாளென்று சொன்னதும்.)

பிறகு, புருஷஸ்ரேஷ்டர்களும் ஸஹோதரர்களுமான அந்தப் பாண்டவரனைவரும் பாஞ்சாலியின் ஸ்வயம்வரத்தையும் மஹோத்ஸவம் நடக்கின்ற அந்தத்தேசத்தையும் காண்பதற்கு அந்தப் பிராம்மணரான (தௌமியரை) முன்னிட்டுக்கொண்டு புறப்பட்டனர். அப்போது அந்த வீரர்களான பாண்டவர்கள், மஹாத்மாவும் பரிசுத்தாத்மாவும் குற்றமற்றவரும் கியாதிபெற்றவருமான த்வைபாயனரை அந்தமார்க்கத்தில் கண்டனர்; க்ரமப்படி அவருக்கு ஸத்காரஞ் செய்து அவராலும் கௌரவிக்கப்பெற்று வார்த்தைசொல்லி முடிந்தபின் அவரால் விடைகொடுக்கப்பெற்றுத் துருபதகிருஹத்துக்குச் சென்றனர். மஹாத்மாக்களான பாண்டவர்கள் அழகான வனங்களையும் தடாகங்களையும் பார்த்துக்கொண்டும் ஆங்காங்குவாஸஞ்செய்துகொண்டும் மெல்லமெல்லச் சென்றனர். வேதாத்யயனமுள்ளவர்களும் பரிசுத்தர்களும் இனியவர்களும் இன்சொற்சொல்லுகிறவர்களுமான பாண்டவர்கள் கிரமமாகப் பாஞ்சாலதேசம் சேர்ந்தனர். அப்போது அந்தப் பாண்டவர்கள் அந்த நகரத்தையும் ராஜமாளிகையையும் பார்த்துவிட்டு, ஒரு குயவனுடைய வேலைச்சாலையில் வாஸஞ் செய்தனர். பிராம்மணவிருத்தியை அனுஸரித்துப் பிக்ஷைகளை அங்கே கொண்டுவந்தனர். அவ்வாறு வந்திருந்த அந்த வீரர்களை எந்த மனிதர்களும் அறியவில்லை. அப்போது, பாஞ்சால தேசத்தரசனாகிய யஜ்ஞஸேனன், பீஷ்மரிடத்திலும் துரோணரிடத்திலும் தான் அபராதஞ்செய்தவனாக நினைத்து, தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்

குத் தகுதியான காரியத்தை ஆரம்பித்தான். அவன் த்ருஷ்டத்யும்னனை அடைந்தபிறகு துரோணரைப்பற்றி நினைக்கவில்லை. ஆனால், பழைய விரோதம் மாறாமலிருப்பதனால் பீஷ்மரிடம் பயமிருப்பதை நினைத்தான். கன்னிகையைக்கொடுப்பதனால் அதற்குப் பரிகாரத்தை அவ்வரசன் நினைத்தான். பாண்டவனாகிய கிரீடிக்குக் கிருஷ்ணையைக் கொடுப்பேனென்பதுதான் யஜ்ஞஸேனனுடைய அபிப்பிராயம். ஆனால், அவன் அதனை வெளியிடுகிறதில்லை. மருமகனுடையபலம் சேருவதுதான் தனக்குமிக்கவன்மையாக அவன்நினைத்தான். பாரதரே! ஜனமேஜயரே! பாண்டவர்களைத் தேடிக்கொண்டிருந்த அந்தப் பாஞ்சால ராஜன் ஒருதிடமான வில்லை வளைக்கவேண்டுமென்று ஏற்பாடுசெய்தான். வியாக்ரபதன்புத்திரனாகிய ஸ்ருஞ்சயன் என்பவனுக்குத் தேவதைகளினால் கொடுக்கப்பட்டதும் கிந்துரமென்று பிரஸித்திபெற்றதும் உறுதியுள்ளதுமான அந்தவில்லை வருவித்தான் அதற்கு மிருந்த வலிமையுள்ள இருப்புநாண் கட்டப்பட்டிருந்தது. அதன்நாணையே மற்றொருவன் இழுக்கமாட்டான். அந்தவில் மிகச்சிறந்தது. அது மஹாத்மாவான சங்கரபகவான் சந்தோஷமடைந்து வரமாகக்கொடுத்தது. '(இந்த வில்லைக்கொண்டு) ஒரு லக்ஷியத்தை அடிப்பதாகிய அரியகாரியத்தை நான் ஏற்படுத்தவேண்டும்' என்று மனத்தில் நிச்சயஞ்செய்துகொண்டு, ஓர் உயர்ந்த லக்ஷியத்தைச் செய்வித்தான். ஆகாயத்தில் ஒரு விசித்ரமான வேலைப்பாடுள்ள [1] யந்திரத்தைச்செய்வித்தான். அரசரே! ஒரு பொன்மயமான லக்ஷியத்தையும் அந்த [2]யந்திரத்துடன் சேர்ந்ததாகச் செய்வித்தான். இந்தவில்லை நாணேறிட்டுத் தொடுக்கப்பட்ட இந்த அம்புகளினால் [3]யந்திரத்தைத் தாண்டி லக்ஷியத்தையடிப்பவனெவனோ அவன்தான் என் பெண்ணை அடையலாம்' என்றும் சொன்னான். இவ்வாறு, அந்தத் துருபதராஜன் ஸ்வயம்வரத்தைப்பற்றிப் பிரஸித்தஞ் செய்வித்தான். பாரதரே! வேந்தரே! அதைக்கேட்டு அரசர்களனைவரும், ஸ்வயம்வரத்தைப் பார்க்க விரும்பின மஹாத்மாக்களான ரிஷிகளும், கர்ணனோடுகூடின துரியோதனாதிகளான கௌரவர்களும், கிருஷ்ணனுடன் கூடிய யாதவர்களும், அந்தகர்களும், விருஷ்ணிகளும், அங்கே சேர்ந்தனர். பிறகு,

---

1 சக்ரமாகச் சுழலுவது.

2 யந்திரத்தின் நேர் மேலிருப்பதாக.

3 சுற்றுகிற யந்திரத்தின் துவாரங்களின் வழியாக மேலே அம்புசென்று லக்ஷ்யத்தை அடித்தல்.

மஹாத்மாவான த்ருபதனால் பூஜிக்கப் பெற்ற அநேக அரசர்கள் ஸ்வயம்வரம்பார்க்கும் விருப்பத்துடன் மஞ்சங்களில் வரிசையாக உட்கார்ந்தனர். மிகுந்த மஹிமையுள்ள பிராம்மணர்களும் பலதேசங்களிலிருந்து வந்தனர். பாண்டவர்கள் பிராம்மணர்களுடன்சேர்ந்தே உட்கார்ந்தனர். முப்பத்துமூன்றுகோடி தேவர்களும் விமானங்களோடு ஆகாயத்தில்நின்றனர். பிறகு, நகரத்து ஜனங்களெல்லாருடையகோஷமும், கொந்தளிக்கின்ற ஸமுத்திரம் கோஷிப்பதுபோலிருந்தது. சிம்சுமாரசக்ரம் என்று சொல்லப்பட்ட முதலையைப்போன்ற வடிவமுள்ள நக்ஷத்திரக்கூட்டத்தின் தலையாகிய வடகிழக்குத் திசையையடைந்து அவ்வரசர்கள் உட்கார்ந்தனர். அவ்விடம், நகரத்துக்கு வடகிழக்கில் அழகானஸமபூமியில் நான்குபக்கமும் வீடுகளால் சூழப்பட்டதும், மதில்அகழிகளோடு கூடியதும், வாயில்களினாலும் தோரணங்களினாலும் அலங்கரிக்கப்பட்டதும், விசித்ரமானமேற்கட்டிகளினால்எங்கும் அலங்கரிக்கப்பெற்றதும், பலவகை வாத்தியகோஷங்கள் நிரம்பியதும், உயர்ந்த அகிற்புகையுள்ளதும், சந்தனக்குழம்புதெளித்ததும், பூமாலைகளினால் சோபிக்கின்றதுமாயிருந்தது. கைலாஸ சிகரங்களுக்கொப்பானவையும்ஆகாயத்தைக்கிழிக்கின்றவையும் செவ்வையாகச்செய்யப்பட்ட சிகரங்களுள்ளவையும் பொன்மயமான பலகணிகள் நிரம்பினவையும் கல்லிழைத்த தளவரிசைகளினால் அலங்கரிக்கப்பட்டவையும் ஏறுவதற்கு எளிய படிகளுள்ளவையும் உயர்ந்தஆஸனங்கள்முதலிய பண்டங்களுள்ளவையும் புஷ்பமாலைகளினால் மறைக்கப்பட்டவையும் உயர்ந்த அகில்வாஸனையுள்ளவையும் ஹம்ஸத்தின் நிறத்துக்கொப்பானவையும் ஒருயோஜனை தூரம் பரவுகின்ற நல்லவாஸனையுள்ளவையும் விசாலமான அநேக வாயில்களுள்ளவையும் படுக்கைகளாலும் ஆஸனங்களாலும் சோபிக்கின்றவையும் பலவர்ணங்களுள்ள தாதுப்பொடிகளுடன் சேர்ந்த் இமயமலைச்சிகரங்கள்போன்றவையும் நிர்மலமானவையுமாகிய ராஜக்ருஹங்களினால் எங்கும்சூழப்பெற்று அந்த ஸபாமண்டபம் விளங்கிற்று. அப்போது, அவ்வரசர்களனைவரும் நன்றாக அலங்காரஞ்செய்துகொண்டு ஒருவரையொருவர்மிஞ்சுகின்றவர்களாக அந்த ஸபாமண்டபத்தில் அநேகவிதமான மண்டபங்களில் உட்கார்ந்தனர். அங்கே ஸாமான்யஜனங்கள், உயர்ந்தஅபிப்பிராயமுள்ளவர்களும் மஹானுபாவர்களும் மிகுந்த கருணையுள்ளவர்களும் பிராம்மணப்பிரியர்களும் தங்கள் தேசங்களைச் செம்மையாகக் காப்பவர்களும் திருந்தச் செய்யப்பட்ட நற்கருமங்களினால் எல்லா ஜனங்களுடைய மனத்தையும் கவருகின்றவர்களுமான ராஜ

ஸிம்மங்கள் காரகிற்சாந்தணிந்து வீற்றிருப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தனர். நகரத்துஜனங்களும் தேசத்துஜனங்களும் க்ருஷ்ணையைப் பார்ப்பதற்காக விலைபெற்றமஞ்சங்களில் நாற்புறமும் உட்கார்ந்தனர். அந்தப் பாண்டவர்களும் பாஞ்சாலராஜனுடைய சிறந்த ஐஶ்வரியத்தைப்பார்த்துக்கொண்டு ப்ராம்மணர்களுடன் சேர்ந்து உட்கார்ந்தனர். ஜநமேஜயராஜரே! அங்கே அந்தஸபை ப்ரீதியான ரத்னதானங்களுடையதும் நாடகங்களும் ந்ருத்தங்களும் ஆடுகிறவர்களால் சோபிப்பதுமாக அநேகதினங்கள் வரையில் விசேஷமாக விளங்கிற்று. அழகான அந்த ஸமாஜம் நடந்துகொண்டிருக்கையில் பதினாறாவது தினத்தில் மைத்ரம் என்னும் எட்டாவது தாராபலத்தோடுகூடிய முகூர்த்தத்தில், பூர்வசரித்திரங்கள் தெரிந்தவர்களும் புத்திரவதிகளுமான ராஜஸ்திரீகள் உயர்ந்த வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு அந்தத் திரௌபதிக்கு அலங்காரஞ்செய்யத் தொடங்கினர். முதலில், வைடூர்யக்கல்லால் செய்யப்பட்ட பலகையில் உட்கார்ந்த திரௌபதியைப் பொற்குடங்களிலுள்ள ஜலங்களினால் வாத்யமுழக்கங்களுடன் மஞ்சனஞ்செய்வித்தனர். ஸ்நானமானபின், இரண்டுபட்டுக்களை இடையிலும் மேலிலும் தரித்துக்கொண்ட திரௌபதியைச் செம்மையாக அலங்கரிக்கப்பட்டதும் ரத்னஸ்தம்பத்தோடுகூடினதுமாகிய மேடைக்கு அழைத்துப்போயினர். மகிழ்ச்சியுற்ற அந்தத் திரௌபதியைக் கிழக்குமுகமாக உட்காரவைத்தபிறகு, அலங்காரஞ்செய்யவந்தஸ்திரீகள், 'இவளை எந்த அலங்காரத்தால் அலங்கரிப்பது' என்று திகைத்த கண்களோடு ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். கூந்தலின் ஈரத்தை அகிற்புகையின் உஷ்ணத்தினால் போக்கினர். இனியமணமுள்ள புஷ்பமாலைகளினால் அவளுடைய கூந்தலைக் கட்டினர். அறுகம்புல்லும் இலுப்பைப்பூக்களும் சேர்த்துத் தொடுத்த மாலையை அவள் கையிற் கொடுத்தனர். காரகிற் சாந்தினால் இரண்டு ஸ்தனங்களிலும் மகரிகாபத்ரம் என்னும் இலை இலையாக இருக்கும் சித்திரத்தை எழுதினர். அவள், * சக்ரவாகங்களை அடையாளமாகவுடையதும் பொன்னை மிகுதியாகவுடையதுமாகிய சிறந்தநதிபோல் விளங்கினாள். அவளுடைய மலர்ந்தமுகம் கருண்ட கூந்தலால் விளங்கிற்று. அது, வண்டுகள் மொய்த்துக்கொண்டிருக்கும் தாமரைப்புஷ்பத்தையும் களங்கத்தோடு கூடிய சந்திரமண்டலத்தையும் ஜயித்தது. (கண்கள் இயற்கைக் கறுப்புடையனவாயிருந்தமையால்) அவைகளுக்கு

* ஸ்தனங்கள் சக்ரவாகங்களாகவும் ஆபரணங்கள் பொன்னாகவும் கூறியது.

மையை ஸம்பிரதாயத்திற்காக இட்டனர். ரத்னங்களிழைத்த ஆபரணங்களினால் உசிதப்படி அலங்காரஞ்செய்தனர். அவளுடைய தாயாராகிய ப்ருஷதி அரிதாரத்தையும் மனோசிலையையும் இரண்டு விரல்களினால் எடுத்து முகத்தில் திலகமிட்டாள். அலங்கரிக்கப்பட்ட மணமகளைக் கண்டு அந்தமங்கையர்கள் மகிழ்ச்சியுற்றனர். எப்படிப்பட்ட கணவன் கிடைப்பானோ என்ற நினைவினால் அவளுடைய தாயார் ஸந்தோஷப்படவில்லை. பிறகு, துருபதனுடைய கட்டளையினால் [1]அண்ணகர்கள் வந்து, ஸ்தனங்களையே அலங்காரமாகவுடைய அந்தத் திரௌபதியைப் பெண்யானையின்மேல் ஏற்றிவைத்தனர். அப்போது வாத்தியங்கள் முழங்கின. மங்கள சப்தங்கள் ஆகாயத்தில் பரவின. பாங்கிமார்களும் சிறந்த அநேகம் பெண்யானைகளிலேறி மங்களகானங்களைப் பாடிக்கொண்டு இருபக்கங்களிலும் சென்றனர். வாயில்காப்போர் ஜனங்களை விலக்குவதில் பரபரப்புடன் முன்னே சென்றனர். அப்போது அந்தச் சிறந்த நகரத்தில் பெரிய கோலாஹலமுண்டாயிற்று. பாரதனே! த்ருஷ்டத்யும்னன் குதிரைமேலேறிக்கொண்டு முன்னேசென்றான். துருபதன் வலியவில்லாளிகளால் காக்கப்பட்ட பெரும்படையை வகுத்துவைத்துக்கொண்டு பெருங்கூட்டத்துடன்கூட ஸபாமண்டபத்தில் நின்றான். மங்களஸ்நானஞ் செய்தவளும் நல்லஆடையுடுத்து எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவளுமான திரௌபதி நல்ல அலங்காரத்தோடுகூடிய பொன்மயமான மாலையை எடுத்துக்கொண்டு, அலங்கரிக்கப்பட்ட ஸ்வயம்வர மண்டபத்திற்கு வந்ததை அனைவரும் கண்டனர். உடனே, திரௌபதி ஸ்வயம்வரமண்டபத்தில் பிரவேசித்தாள். அவள் நாணமுற்று, மகிழ்ந்திருந்த அரசர்களனைவரையும் கடைக்கண்ணாற்பார்த்து, பார்ப்பவர்களின் மனங்களை மிகவும்கவர்ந்துகொண்டு ஸ்வயம்வரமண்டபத்தில் நின்றாள். அப்போது ஸோமகராஜர்களுக்குப் புரோஹிதரும் மந்திரங்கள் தெரிந்தவரும் பரிசுத்தருமான பிராம்மணர் சாஸ்திரப்பிரகாரம் அக்கினியைச்சுற்றித் தர்ப்பங்களைப்பரப்பி அதில் [2]ஆஜ்யாகுதிசெய்தனர். அக்கினிக்குத் திருப்தி செய்வித்தும் பிராம்மணர்களைக்கொண்டு [3]ஸ்வஸ்திவாசனஞ் செய்வித்துமான பிறகு, நாற்புறங்களிலும் வாத்தியங்களையெல்லாம் நிற்கச் செய்தார்கள். ஜனமேஜய ராஜாவே! அந்த ஸ்வயம்வரமண்டபம் சப்தமில்லாததாகச் செய்யப்

1 அலிகள்.
2 அக்னியில் நெய்யைவிடுவது.
3 மங்களமான வேதமந்திரங்களைச் சொல்வது.

பட்டபோது, மேகத்துக்கும் துந்துபிவாத்தியத்துக்கும் ஒப்பான குரலுள்ள திருஷ்டத்யும்னன், கிருஷ்ணையை அழைத்துக்கொண்டு அந்த ஸ்வயம்வரமண்டபத்தின் நடுவில்வந்து மேகம்போலக் கம்பீரமானகுரலோடு நயமாயும் அர்த்தம் நிரம்பினதாயுமிருக்கிற பின்வரும் சிறந்தவசனத்தை வழக்கப்படி உரக்கச் சொல்லலானான்.

'இங்கே சேர்ந்திருக்கிற அரசர்கள் நான் சொல்வதைக் கேட்கக்கடவர். இது வில். இது லக்ஷ்யம். இவை அம்புகள். யந்திரத்தின் துவாரத்தின்வழியாக ஆகாசத்திற்குப் போகின்ற கூர்மையான ஐந்துசரங்களினால் லக்ஷியத்தை அடியுங்கள். குலமும் ரூபமும் பலமும்பொருந்திய எவன் இந்தமஹாகாரியத்தைச் செய்கிறானோ அவனுக்கு என் ஸஹோதரியான இந்தக்கிருஷ்ணை இப்போதே பாரியையாவாள். உண்மையாகச் சொல்லுகிறேன்' என்றான். துருபதபுத்திரன் அவர்களைப் பார்த்து இவ்வாறுசொல்லி, உடனே தன் ஸஹோதரிக்கு அங்கே சேர்ந்திருக்கும் அரசர்களுடைய பெயர், குலம், சக்தி இவைகளைத் தெரிவித்துச்சொல்லலானான்.

---

## இருநூற்றோராவது அத்தியாயம்.

## ஸ்வயம்வரபர்வம். (தொடர்ச்சி.)

**(ஸ்வயம்வரமண்டபத்துள்ள அரசர்களின் பெயரைச்சொன்னது.)**

'துரியோதனன், துர்விஷஹன், துர்முகன், துஷ்பிரதர்ஷணன், விவிம்சதி, விகர்ணன், ஸஹன், துச்சாஸனன், யுயுத்ஸு, வாயுவேகன், * பீமவேகரவன் (பீமவேகன்), உக்கிராயுதன், பலாகி, கரகாயு (கனகாயு), விரோசனன் (துர்விரோசனன்), குண்டகன், சித்ரஸேனன், ஸுவர்ச்சஸ், கனகத்வஜன், பராக்கிரமசாலியான நந்தகன், நந்தன், துகுண்டன், விகடன் இவர்களும் இன்னும் மஹாபலசாலிகளும் வீரர்களுமான த்ருதராஷ்டிரபுத்திரர்களும் கர்ணனுடன்கூட உனக்காக வந்திருக்கின்றனர். க்ஷத்திரியஜாதியிற் சிறந்தவர்களும் மஹாத்மாக்களுமான அரசர்கள் எண்ணில்லாதவர்கள் இருக்கின்றனர். ஸுபல புத்ரனான சகுனியும், வ்ருஷகனும், ப்ருஹத்பலனுமாகிய இந்தக் காந்தாரராஜ புத்திரர்களெல்லாரும் வந்திருக்கின்றனர். ஆயுததாரிகளெல்லாரிலும் சிறந்த மஹாத்மாக்களாகிய அஸ்வத்தாமாவும், போஜ

---

* நூற்றுமுப்பத்தோராவது அத்தியாயத்திலும், அதன் பின்னுள்ள அகராதிகளிலும் காண்க.

னும் நன்றாக அலங்காரஞ்செய்துகொண்டு உனக்காக வந்துசேர்ந்திருக்கின்றனர். ப்ருஹந்தன், மணிமான், தண்டதாரராஜன், ஸஹதேவன், ஜயத்ஸேனன், மேகஸந்திராஜன், சங்கனும் உத்தரனுமாகிய புத்திரர்களோடுகூடிய விராடராஜன், வ்ருத்தக்ஷேமன் புத்ரனான ஸுசர்மா, சேனாபிந்துராஜன், ஸுநாமா ஸுவர்ச்சஸ்என்னும் புத்திரர்களோடுகூடிய ஸுகேது, ஸுசித்ரன், ஸுகுமாரன், வ்ருகன், ஸத்யத்ருதி, ஸூர்யத்வஜன், ரோசமானன், நீலன், சித்ராயுதன், அம்சமான், சேகிதானன், மஹாபலசாலியான ஸ்ரேணிமான், ஸமுத்ரஸேனன்புத்திரனும் மஹாபராக்ரமசாலியுமான சந்திரசேனன், ஜலஸந்தன், தந்தையும் புதல்வனுமாகிய விதண்டனும் தண்டனும், பௌண்ட்ரகவாஸுதேவன், வீரனான பகதத்தன், கலிங்கன், தாம்ரலிப்தன், பத்தனாதிபதி, வீரர்களான ருக்மாங்கதனும் ருக்மரதனுமாகிய புத்திரர்களுடன்கூட மஹாரதனும் மத்ரராஜனுமான சல்லியன், கௌரவனாகியஸோமதத்தன், மஹாரதனான அவன்புத்ரன், சூரர்களாகியபூரி பூரிஸ்ரவஸ் சலன் ஆகிய மூவர் இவர்களும்சேர்ந்திருக்கின்றனர். காம்போஜதேசத்தரசனாகியஸுதக்ஷிணன், பூருவம்சத்தவனான த்ருடதன்வா, ப்ருஹத்பலன், ஸுஷேணன், உசீநரபுத்திரனான சிபி, திருடர்களை ஒழிப்பவனாகிய காருஷதேசத்தரசன், பலராமன், கிருஷ்ணன், வீரனாகிய ருக்மிணியின்புத்திரன் பிரத்யும்னன், ஜாம்பவதியின்புத்திரனான ஸாம்பன், சாருதேஷ்ணன், பிரத்யும்னனுடையபுத்திரனான அநிருத்தன், கதன், அக்ரூரன், ஸாத்யகி, சிறந்தபுத்தியுள்ள உத்தவன், ஹ்ருதிகன்புத்ரனான கிருதவர்மா, ப்ருது, விப்ருது, விதூரதன், கங்கன், சங்கு, கவேஷணன், ஆசாவஹன், அநிருத்தன், ஸமீகன், ஸாரிமேஜயன், வீரனான வாதபதி, ஜில்லி, பிண்டாரகன், பராக்ரமசாலியான உசீநரன் ஆகிய இந்த யாதவர்களும் உனக்குச்சொல்லப்பட்டனர். பகீரதன், ப்ருஹத்க்ஷத்ரன், ஸிந்துதேசாதிபதியானஜயத்ரதன், ப்ருஹத்ரதன், பாஹ்லீகன், மஹாரதனான ச்ருதாயு, உலூகன், கைதவராஜன், சித்ராங்கதன், சுபாங்கதன், சிறந்தபுத்தியுள்ள வத்ஸராஜன், கோஸலாதிபதி, பராக்ரமமுள்ள சிசுபாலன், ஜராஸந்தன் ஆகிய இவர்களும் பூமியிற் பெயர்பெற்ற பற்பல தேசாதிபதிகளான இன்னும் அநேக க்ஷத்திரியர்களும், உனக்காகவந்திருக்கின்றனர். அன்புள்ளவளே! பராக்ரமசாலிகளான இவர்கள் உனக்காகச் சிறந்த லக்ஷியத்தை அறுப்பார்கள். அழகியவளே! இந்தலக்ஷியத்தை எவன் அடிக்கிறானோ அவனை இப்போதே வரிக்கக்கடவாய்' என்று திருஷ்டத்யும்னன் சொன்னான்.

---

## இருநூற்றிரண்டாவது அத்தியாயம்.

## ஸ்வயம்வரபர்வம். (தொடர்ச்சி.)



**(பிராம்மணர்களுக்குநடுவில் பாண்டவர்களிருப்பதாகக் கிருஷ்ணபகவான் அறிந்து பலராமருக்குச் சொன்னதும், வில்லைப்பார்த்தவுடன் சிலஅரசர்கள் ஆசையொழிந்ததும், சிசுபாலன்முதலானவர் வில்லைநாணேற்றுகையில் பங்கமடைந்ததும், அர்ஜுனன் வில்லை நாணேற்ற விரும்பினதும்.)**

அலங்காரஞ் செய்துகொண்டவர்களும், குண்டலங்கள் தரித்துக்கொண்டவர்களும், அழகினாலும்பராக்ரமத்தினாலும்குலத்தினாலும் ஒழுக்கத்தினாலும் தனத்தினாலும் இளமைப்பருவத்தினாலும் கர்வம் விருத்தியடைந்தவர்களுமான அந்த யுவராஜர்களனைவரும் ஒருவரையொருவர் மிஞ்சக்கருதித் தம் தம்மிடமுள்ள அஸ்திரபலத்தையும் தேகவன்மையையும் நினைத்து, மதவேகத்தினால் கூட்டத்தினின்றும் வேறுபட்ட இமயமலையிலுள்ள மதயானைகள்போல ஆயுதபாணிகளாகக் கிளம்பினர். அப்போது அவ்வரசர்கள் ஒருவரையொருவர் பொறாமையுடன் நோக்கிக்கொண்டும் மதனனால் அங்கங்கள் பீடிக்கப்பட்டும், 'திரௌபதி எனக்குத்தான்' என்று சொல்லிக்கொண்டும் ஆஸனங்களினின்றும் எழுந்தனர். அந்தத் திரௌபதியை ஜயித்துக் கொண்டுபோகும் விருப்பத்துடன் ஸ்வயம்வரமண்டபத்தில் கூட்டமாகச் சேர்ந்த அவ்வரசர்கள் பர்வதராஜபுத்ரியான பார்வதியை அடையவிரும்பிக் கூடின தேவக்கூட்டங்களைப்போல விளங்கினர். மன்மதபாணங்களால் பீடிக்கப்பட்ட அங்கங்களையுடைய அந்த அரசர்கள் திரௌபதியையடைந்த மனத்தோடு ஸபா மண்டபத்தில் இறங்கினபிறகு, ஸ்நேகிதர்களாயிருந்தும் திரௌபதியினிமித்தம் பகை செய்துகொண்டனர். தேவக்கூட்டங்கள், ருத்திரர்கள், ஆதித்தியர்கள், வஸுக்கள், அசுவினிதேவர்கள், ஸாத்யர்கள், மருத்துக்கள் இவர்களெல்லாரும் யமனையும் குபேரனையும் முன்னிட்டுக்கொண்டு விமானங்களோடு அங்கே வந்தனர். அஸுரர்களும், கருடர்களும், மஹாநாகர்களும், நாரதர் பர்வதர் முதலிய தேவரிஷிகளும், யக்ஷர்களும், சாரணர்களும், அப்ஸரஸுகளோடுகூட விஶ்வாவஸு முதலான கந்தர்வஶ்ரேஷ்டர்களும், விரைவாக அங்கே வந்தனர். பலராமரும் கிருஷ்ணனும் வ்ருஷ்ணிகளும் அந்தகர்களுமாகிய யாதவஶ்ரேஷ்டர்கள் மேலானவர்களுக்குஅடங்கிப் பார்த்துக்கொண்

டிருந்தனர். மஹான்களாகிய அவர்கள் கிருஷ்ணனுடைய அபிப்பிராயத்தில் அடங்கியிருந்தனர். மதங்கொண்ட பெரியயானைகள்போன்ற உருவமுள்ள அந்த * ஐவரும் தாமரைத்தடாகங்களில் சிறந்த ஐந்து யானைகளிருப்பதுபோலிருக்கக்கண்டு யதுவீரர்களிற் சிறந்தவரான மாதவர் அவர்களை நீறுபூத்து மறைந்திருக்கும் பஞ்சாக்னிகளைப்போல நினைத்தனர். யுதிஷ்டிரரையும்பீமனையும்அர்ஜுனனையும் வீரர்களான நகுலஸஹதேவர்களையும் முறையே பலராமருக்குச் சொன்னார். பலராமர் அவர்களைக்கண்டு உள்ளம்மகிழ்ந்து கிருஷ்ணனை நோக்கினார். கிருஷ்ணனையடைந்த பார்வைகளும் மனோவிருத்திகளுமுடையவர்களும் முயற்சியுள்ளவர்களும் உதடுகளைக் கடித்துக் கண்கள் சிவந்தவர்களும் வீரர்களுமான மற்ற ராஜபுத்திரர்களும் ராஜபௌத்திரர்களும் அந்தப் பஞ்சபாண்டவர்களைப் பார்க்கவில்லை. அவ்வாறே சிறந்த கைகளையுடைய அந்தக் குந்திபுத்திரர்கள் மஹானுபாவர்களும் வீரர்களுமாகிய நகுலஸஹதேவர்கள் ஆகிய இவர்களனைவரும் அந்தத் திரௌபதியைக் கண்டபோதே மன்மதபாணங்களால் அடிக்கப்பட்டவராயினர். அப்போது, அந்த ஆகாயம் தேவர்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் நிரம்பினதும், கருடர்களும் நாகர்களும் அஸுரர்களும்ஸித்தர்களுமாகிய இவர்களாலடையப்பட்டதும்,திவ்ய பரிமளம் வீசுவதும், தேவலோகத்திய புஷ்பவருஷங்கள் சொரிவதும், ஸபாமண்டபத்தின்மேல் ஆகாயத்தில் எங்கும் நிறைகின்ற மேககர்ச்சனம்போன்ற தேவர்களுடைய துந்துபிகளின் பெருமுழக்கங்களும் புல்லாங்குழல்கள் வீணைகள் பணவங்களின் நாதங்களும் நிரம்பினதும், நாற்புறங்களிலும் தேவவிமானங்கள் நெருங்கினதுமாயிருந்தது. பிறகு, அந்த ராஜக்கூட்டங்கள் வரிசையாகத் திரௌபதியை உத்தேசித்துத் தம் பராக்கிரமங்களைக் காண்பிக்கத் தொடங்கினர். கர்ணன், துரியோதனன், ஸால்வன், சல்லியன், அசுவத்தாமா, க்ராதன், ஸுநீதன், வக்ரன் (தந்தவக்கிரன்), களிங்கதேசத்தரசன், வங்கதேசத்தரசன், பாண்டியன், புண்ட்ரதேசத்தரசன், விதேகராஜன், வனராஜன் இவர்களும் தாமரையிதழ்களைப்போன்ற கண்களும் பெருங்கைகளுமுடையவர்களும் கிரீடங்களையும் முத்துமாலைகளையும் தோள்வளைகளையும் மிகுதியாக அங்கங்களில் அணிந்துகொண்டவர்களும் பராக்ரமமும் தைரியமுமுள்ளவர்களுமான இன்னும் அனேகம் தேசாதிபதிகளாகியராஜபுத்திரர்களும்ராஜபௌத்திரர்களும் தங்கள்

* 'ஸர்வாங்கஸுந்தரமாகிய ஐந்து கஜேந்திரங்கள்' என்பது பழையவுரை.

தங்கள் பராக்கிரமங்களைப்பற்றிக் கர்ஜித்தனர். அந்த உறுதியான வில்லை நாணேறிடுவதற்கு மனத்தினாலும் முடியவில்லை. அவ்வரசர்கள் தம்சக்தியைக்காண்பிக்கும்போது அந்தப்பாரமான வில் அதிர்வதினால் அலைக்கப்பட்டுத் தடுமாறித் தங்கள் வன்மையினாலும் சிக்ஷையின் சிறப்பினாலும் பூமியின்மேல் நிலைத்துநின்றபிறகு உற்சாகம்குறைந்து கிரீடங்களும் ஹாரங்களும்நழுவப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு முயற்சியை விட்டுவிட்டனர். அப்போது அந்தராஜக்கூட்டங்கள் கடினமான வில்லினால் ஹாரங்களும் தோள்வளைகளும் நழுவ ஹாஹாகாரஞ்செய்து திரௌபதியின் மேலுள்ள விருப்பத்தைவிட்டுத் துயரமடைந்திருந்தனர். இவ்வாறு, அவ்வரசர்கள் நாற்புறங்களிலும்திரும்பிப்போன பிறகு, சேதிதேசாதிபதியும் வீரனும் யமனுக்கொப்பான பலசாலியும் சிறந்த கீர்த்தியுள்ளவனும் புத்திசாலியும் தமகோஷபுத்ரனுமான சிசுபாலன், அரசர்களின்முன்னிலையில் தனுஸின் அருகில் வந்துநின்றான். அந்தவில் அவனால் நாணேறிடப்படும்போது நாண்பூட்டுவதற்கு உளுந்தளவு மிச்சமிருக்கையில் அவன் அந்த வில்லினால் பீடிக்கப்பட்டு முழங்கால் மடித்துப் பூமியில் விழுந்தான். உடனேயெழுந்து அவ்வரசன் தன் தேசத்திற்குச்சென்றான். அவனுக்குப்பிறகு, பெரிய சூரனும் மிகுந்த பலசாலியும் சங்குபோன்ற கழுத்தும் பருத்ததோள்களுமுடையவனும் மதயானைபோல நடப்பவனும் மதயானைபோலச் சிவந்த கண்களையுடையவனும் மதயானைபோன்ற வேகமுள்ளவனுமாகிய ஜராஸந்தனென்னுமரசன் மலைபோல் அசையாதவனாக வில்லினருகில் வந்துநின்றான். அவனால் ஏறிடப்படும்போது வில்பூட்டுவதற்கு இன்னும் கடுகளவு இருக்கையில் திரும்பியடித்தது. அவனுக்குப்பின், மஹாவீரனும்மஹாபலசாலியும் மத்ரதேசத்தரசனுமான சல்லியனும் வந்தான். அவனால் ஏறிடப்படும்போது, பின்னும் பயற்றினளவிருக்கையில் திரும்பியடித்தது. உடனே, பின் திரும்பிப்பாராமல் தன் ராஜ்யத்திற்குப் புறப்பட்டான். பிறகு, 'இந்த உயர்ந்தவில்லை இப்போது எந்த அரசன்தான் நாணேறிடுவான்' என்று மனத்தில் நிச்சயஞ்செய்துகொண்டு மறுபடியும் நின்றான். அவனுக்குப்பிறகு, அகங்காரமுள்ளவனும் அஸ்திரங்களில் நிச்சயமான ஞானமுள்ளவனும் ராஜலக்ஷணங்களெல்லாம் பொருந்தினவனும் மஹா பலசாலியும் சூரனும் திருதராஷ்டிர புத்திரனுமான துரியோதனராஜன் அங்கே ஸ்நேஹாதரர்களின் நடுவில் விரைவாக எழுந்தான்; திரௌபதியைக் கண்டு களிப்புற்று வில்லினருகில் வந்தான். அவன் வில்லை எடுத்துக்கொண்டபிறகு, வில்லைத்தரித்த இந்திரனைப்போல்விளங்கினான். அவன்

தனுசை நாணேற்றத்தொடங்கினன். ஏற்றப்பட்ட அந்தவில் இன்னும் எள்ளளவிருக்கையில் திரும்பியடித்தது. அப்போது, துரியோதனராஜன்கை விற்பிடியை விட்டதனால் வன்மையுள்ள அந்தவில்லினால் அடிக்கப்பட்டு அண்ணாந்துவிழுந்தான். வில்லினால் அடிக்கப்பட்ட அந்த அரசன் வெட்கத்துடன் சென்றான். அவனுக்குப்பிறகு, ஸூர்யபுத்திரனும் ஸூதபுத்திரனும் ஶ்ரேஷ்டனுமானகர்ணன் வில்லினிடம்வந்து அதைத் தூக்கினான். அதனாலும் ஏற்றப்பட்ட அந்தவில் மயிரிழையளவில் திரும்பியடித்தது. மூன்று லோகங்களையும் ஜயிக்கத்தக்கவனும் பலத்தினால் மூன்று லோகங்களிலும் பெயர்பெற்றவனுமான அந்தக்கர்ணனும் அந்தவில்லினால் தோல்வியடைந்தானென்றதனால் எல்லோரும் அந்தவில்லினிடம் பயமுற்றனர். கர்ணனும் அந்தவில்லினால் இவ்வாறு தோற்கச்செய்யப்பட்டுப்போகவே, ராஜஶ்ரேஷ்டர்கள் தாமரைமலர்போன்ற முகங்கள் கவிழ்ந்து கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. கர்ணன் தோல்வியுற்றதைப் பார்த்து, உலகத்தில் வீரர்களான ராஜஶ்ரேஷ்டர்கள் வில்லெடுப்பதிலும் திரௌபதியை அடைவதிலும் ஆசையற்றவராயினர். அந்த ஸபையில் ஜனங்கள் பரபரப்படைய, அரசர்கள் வீரவாதம்செய்து ஓய்ந்தபோது, வீரனும் குந்திபுத்திரனுமாகிய அர்ஜுனன் அந்தத்தனுசை நாணேற்றவும் அம்புதொடுக்கவும் நினைத்தான். பிறகு, அஸுரர்களுக்கும் தேவர்களுக்கும் மிகமேலானவரும் மிகச்சிறந்தபுத்தியுள்ளவரும் யதுவம்சவீரருமான வாஸுதேவர், திரௌபதி பாண்டுபுத்திரனை அர்ஜுனன்கைக்கு வந்ததாக நினைத்துப் பலராமருடன் கைபிசைந்து களிப்புற்றார். யதுவீரர்களாகிய ராமகிருஷ்ணர்களும் தௌம்யரும் தர்மபுத்திரரும் அவர்ஸஹோதரர்களும் தவிர, அந்த ஜனக்கூட்டத்திலுள்ள ராஜஶ்ரேஷ்டர்களும் ப்ராம்மணஶ்ரேஷ்டர்களும் அப்போது நிஜரூபம்மறைந்திருந்த பாண்டவர்களை அறியவில்லை.

---

## இருநூற்றுமூன்றாவது அத்தியாயம்.

## ஸ்வயம்வரபர்வம். (தொடர்ச்சி.)

(வில்லைநாணேறிட வெழுந்திருந்த அர்ஜுனனுக்குப் பிராம்மணர்கள் ஆசீர் வாதஞ்செய்ததும், அர்ஜுனன் வில்லைநாணேறிட்டு லக்ஷ்யத்தை அறுத்ததும், திரௌபதி அர்ஜுனனுக்கு மாலையிட்டதும்.)

எப்போது அரசர்கள் தனுஸை நாணேறிடும் செய்கையிலிருந்து நிவர்த்தியாயினரோ அப்போது உயர்ந்த புத்தியுள்ள அர்ஜுனன் பிராம்மணர்மத்தியிலிருந்து எழுந்தான். இந்திரத்துவஜம்போன்ற ஒளியையுடைய பார்த்தன் புறப்பட்டதைக்கண்டு பிராம்மணஶ்ரேஷ்டர்கள் கிருஷ்ணாஜினங்களை வீசிக் கூவினர். சிலர் வருத்தமுள்ளவராயினர். சிலர் ஸந்தோஷமுள்ளவராயினர். புத்திமான்களும் காரியந்தெரிந்தவர்களுமான மற்றும் சிலர், 'பிராம்மணர்களே! எந்தவில், உலகத்தில் கியாதிபெற்றவர்களும் பலவான்களும் தனுர்வேதத்தையே முக்கியமாகக் கொண்டவர்களுமாகிய கர்ணன் சல்லியன் முதலான க்ஷத்திரியர்களால் வளைக்கப்படவில்லையோ அந்தவில்லை அஸ்திரப்பயிற்சியில்லாதவனும் தேகவன்மையில் மிகக் குறைந்தவனுமான ஒரு சிறுபையனால் எவ்வாறு நாணேறிடமுடியும்? சாபல்யத்தினால் ஆராய்ந்துபாராமற்செய்யும் இந்தக்காரியம் பயன்படாமற்போனால் எல்லா அரசர்களின்நடுவிலும் பிராம்மணர்கள் பரிகாசத்துக்குரியவராவார்கள். இவன் கர்வத்தினாலாவது ஸந்தோஷத்தினாலாவது பிராம்மணர்களுக்குள்ள சபலத்தினாலாவது வில்லைவளைக்கப் புறப்பட்டிருந்தால் தடுக்கப்படவேண்டும். போகாமலிருப்பது நலம். அரசர்களின் ஏளனத்திற்குப் பாத்திரர்களாகாமலிருப்போம்; அவமதிப்பை அடையாமலிருப்போம்; உலகத்தில் இகழப்படாமலிருப்போம்' என்று ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டனர். இன்னும் சிலர், 'யௌவன வயதிலிருப்பவன்; அழகுள்ளவன்; மஹாகஜத்தின் துதிக்கைபோன்ற கைகளையுடையவன்; பருத்த தோள்களும் தொடைகளும் புஜங்களுமுடையவன்; தைரியத்தில் இமயமலைபோன்றவன்; ஸிம்மம்போலக்கம்பீரமான நடையுள்ளவன்; மதயானையைப்போல் நடக்கிறவன்; ஒளியுள்ளவன்; இவனிடத்தில் இக்தக்காரியத்தில் திறமை எதிர்பார்க்கக் கூடியதே. இவனுடைய உற்சாகத்தினாலும் ஊகிக்கத் தகுதியிருக்கிறது. இவனுடைய சக்திதான்

பெரிய உற்சாகத்தைத் தருவது. அசக்தன் தானே செல்லான்; மேலும், பிராம்மணர்களுக்கு அஸாத்தியமான கருமம் ஒன்றும் எந்தலோகங்களிலும் சரீரத்தோடு ஸஞ்சரிக்கும் எந்தப் புருஷர்களிடத்திலும் இருப்பதில்லை. ஜலத்தையும்காற்றையும்புஜிப்பவர்களும் காய்கிழங்குகளை ஆகாரமாகக் கொண்டவர்களும் உறுதியான தவமுள்ளவர்களுமான பிராம்மணர்கள் தேகபலம் குறைந்தவர்களாயிருந்தும் தங்கள் தவவன்மையினால் அதிக பலவான்களாகிறார்களன்றோ? ஸரியோ தவறோ, ஸுகமோ கஷ்டமோ, பெரிதோ சிறிதோ, வலியநேர்ந்தகருமத்தைச் செய்யும் பிராம்மணன் அவமதிக்கத் தகான். ஜமதக்னிபுத்திரரானபரசுராமரால் க்ஷத்திரியர்கள்யுத்தத்தில்அபஜயப்பட்டனர். அகஸ்தியர் தமது பிராம்மதேஜஸினால் அகாதமான கடலைக் குடித்தனர். ஆதலால், இங்குள்ளவரனைவரும், 'இவன் சிறுவன்' என்று சொல்லட்டும். இவன் சிறந்தவன். சீக்கிரத்தில் வில்லை நாணேறிடட்டும்' என்றனர். மற்றப்பிராம்மணஶ்ரேஷ்டர்கள், 'அவ்வாறே ஆகட்டும்' என்றனர். இவ்வாறு அந்தப்பிராம்மணர்கள் பலவகைச்சொற்களைச்சொல்லிக்கொண்டிருக்கையில், அர்ஜுனன் தனுஸின்ஸமீபத்தில் பின்வாங்காமல் மலைபோலநின்றான். பிறகு, பாண்டவஶ்ரேஷ்டனான அர்ஜுனன் திருஷ்டத்யும்னனை நோக்கி, 'இந்தத்தனுஸ் பிராம்மணர்கள் நாணேறிடக்கூடியதுதானோ?' என்றான். அவன்சொன்னதைக்கேட்டுத்திருஷ்டத்யும்னன், 'பிராம்மணோத்தமா! பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் இவர்களில்யாராயினும் இந்தச்சிறந்ததனுஸைநாணேறிடுவானாயின் அவனுக்கு என் ஸஹோதரியைக் கொடுப்பேன். நான் ஸத்தியமாகச் சொன்னேன்' என்று சொன்னான். அதன்பிறகு, மஹாபராக்ரமசாலியும் போரில் வெல்லமுடியாதவனுமான அந்த அர்ஜுனன், அந்தத் தனுஸைச் சுற்றிப் பிரதக்ஷிணஞ்செய்தான். பிறகு, அவன் வரத்தைக்கொடுக்கும் தேவதையும் பிரபுவுமாகிய ஈசுவரனுக்குத் தலைவணங்கிக் கிருஷ்ணனை மனத்தில் நினைத்து வில்லையெடுத்தான். தனுர்வேதத்தில் சிறந்தவர்களான ருக்மன், ஸுநீதன், வக்ரன், கர்ணன், துரியோதனன், சல்லியன், ஸால்வன் ஆகிய இவர்களால் முதலில் மிகுந்த முயற்சிசெய்தும் எந்தவில் நாணேறிட முடியாமற் போயிற்றோ அந்தவில்லை அப்போது வீரர்களுள் கர்வமுள்ளவனும் கிருஷ்ணனுக்கொப்பான மஹிமையுள்ளவனும் இந்திரபுத்திரனுமான அர்ஜுனன் ஒருநொடியில் நாணேறிட்டான்; ஐந்து பாணங்களையெடுத்து லக்ஷியத்தையும் அடித்தான். செம்மையாக அடிக்கப்பட்ட அந்த லக்ஷியம் உடனே யந்திரத்துவாரத்தின் வழி

யாகப் பூமியில் விழுந்தது. பிறகு, ஆகாயத்திலும் தேவர்களின் கோஷம் உண்டாயிற்று. சபைநடுவிலும் பெரிய ஆரவாரம் உண்டாயிற்று. சத்துருக்களை வதஞ்செய்கிறவனாகிய அர்ஜுனனுடைய தலையில் இந்திரன் தேவமலர்களைப் பொழிந்தான். அங்கிருந்த ஆயிரக்கணக்கான பிராம்மணர்கள் உத்தரீயங்களை வீசினர். எல்லாரும் ஆச்சரியமுற்று ஹாஹாகாரங்களைச்செய்தனர். ஆகாயத்திலிருந்து அந்த ஸபையில் நாற்புறங்களிலும் பூமாரிகள் பொழிந்தன. வாத்தியக்காரர்கள் அநேகம் உபவாத்தியங்களுடன் வாத்தியங்களை வாசித்தனர். அங்கே ஸூதமாகதர்களின் கூட்டங்களும் நல்லிசையுடன் துதிசெய்தன. சத்துருக்களைக்கொல்லுபவனாகிய துருபதன் அவனைக்கண்டு ஸந்தோஷம் அடைந்தான். அவன் தன் ஸைன்யங்களுடன் தான் அர்ஜுனனுக்கு உதவிசெய்யவிரும்பினான். அந்தப் பெரிய ஆரவாரம் விருத்தியடைந்தபோது, தர்மிஷ்டர்களிற் சிறந்த யுதிஷ்டிரர், புருஷஶ்ரேஷ்டர்களான நகுலஸஹதேவர்களுடன்கூட இருப்பிடத்திற்கே சென்றார். அடிக்கப்பட்ட லக்ஷியத்தையும் இந்திரனுக்கொப்பானபார்த்தனையும் பார்த்த கன்னிகையாகிய கிருஷ்ணை, எப்போதும் வழக்கமாகப்பார்ப்பவர்களுக்கும் புதியவள்போலிருந்தாள். நகைக்காமலிருக்கும்போதே நகைப்பவள்போலவும் மதுமதமில்லாமலே ஶ்ருங்காரவிலாஸங்களினால் மயங்கினவள்போலவும் வாக்கினாலல்லாமல் பார்வையினாலேயே பேசுகிறவள் போலவும் வெண்மையான உயர்ந்தபுஷ்பமாலையையெடுத்துக்கொண்டு புன்னகையுடன் அர்ஜுனனிடம் சென்றாள். க்ஷத்திரியவீரர்களின் மத்தியிலிருந்த கிருஷ்ணை, அச்சமின்றி அவர்களுக்குப்பின்னே சென்று பிராம்மணக் கூட்டத்தின் மத்தியிலிருக்கும் அர்ஜுனனது மார்பில் மாலையை அணிந்து, தேவேந்திரனை இந்திராணிபோலவும், அக்கினியை ஸ்வாகாதேவிபோலவும், விஷ்ணுவை லக்ஷ்மிபோலவும், ஸூர்யனை உஷையென்னும் காலைஸந்திபோலவும், மன்மதனை ரதிதேவிபோலவும், மஹேஶ்வரனைப் பார்வதிபோலவும் வரனாகவரித்தாள். நினைத்தற்கரிய செய்கையுள்ள அந்த அர்ஜுனன் ஸபாமண்டபத்தில் ஜயித்து அந்தப் பிராம்மணர்களால் கொண்டாடப் பெற்று அந்தத் தன் மனைவியை அழைத்துக்கொண்டு அவளால் பின்தொடரப்பெற்று ஸ்வயம்வர மண்டபத்தினின்றும் புறப்பட்டான்.

---

## இருநூற்றுநான்காவது அத்தியாயம்.

## ஸ்வயம்வரபர்வம். (தொடர்ச்சி.)



**(அரசர்கள் கோபங்கொண்டு துருபதனைக் கொல்லவந்தபோது பீமார்ஜுனர்கள் சண்டைக்கு ஆயத்தமாயிருப்பதைத் தெரிந்து கிருஷ்ண பகவானும் பலராமரும் பேசிக்கொள்வது.)**

அப்போது, துருபதராஜன் தன் பெண்ணை அந்தப்பிராம்மணனுக்குக் கொடுக்க நினைத்தபோது, அரசர்கள் ஒருவரையொருவர் ஸமீபித்துப்பார்த்துக்கொண்டு கோபமுற்றனர். அவர்களனைவரும் பரஸ்பரம் ஒற்றுமையான எண்ணத்துடன் சேர்ந்துபேசிக்கொண்டனர் 'நாமெல்லோரும்துராத்மாவான துருபதனால் அழைக்கப்பட்டுஸ்வயம்வரம் பார்க்கிற ஆசையினால் சேர்ந்துவந்தோம். இந்தத் துருபதன் நம்மெல்லாரையும் துரும்பாகநினைத்து நம்மைத்தாண்டிப் பெண்களிற் சிறந்த திரௌபதியை ஒரு பிராம்மணனுக்குக் கொடுக்கநினைக்கிறான். செடியைவளர்த்துக் காய்க்கிறகாலத்தில் இவன்வெட்டுகிறான். நம்மை அவமதிக்கின்ற இந்தத் துராத்மாவை நாம்கொன்றுவிடுவோம். இவன் குணங்களைப்பற்றிக் கௌரவிப்பதற்கும் பெரியவனென்ற மரியாதைக்கும் தகுந்தவனாயிருக்கவில்லை. க்ஷத்ரியர்களுக்குப் பகைவனான இந்தத் துராசாரமுள்ளவனையும் இவனுடையபுத்திரனையும் கொல்வோம். இவன்எல்லாஅரசர்களையுமழைத்துமரியாதைசெய்துஉயர்ந்த அன்னத்தையும் புஜிப்பித்து அதன்பின் அவமதித்திருக்கிறான். தேவஸபைபோன்ற இந்த ராஜஸபையில் தகுதியான அரசர்கள்ஒருவரையும் இவன் காணவில்லையா? ஸ்வயம்வரவிஷயத்தில் பிராம்மணர்களுக்குத்தகுதியில்லை. ஸ்வயம்வரம் க்ஷத்ரியர்களுக்கென்பது சாஸ்திரப்பிரஸித்தமானது. அரசர்களே! அல்லது, இந்தப்பெண் க்ஷத்திரியன் எவனையும் அடைய விரும்பாமலிருப்பாளாயின் இவளை நெருப்பில் போட்டுவிட்டு நம் தேசங்களுக்குச் செல்வோம். பிராம்மணன் அவஸரத்தினாலாவது ஆசையினாலாவது ராஜஶ்ரேஷ்டர்களுக்கு விருப்பமில்லாத இந்தக் காரியத்தைச் செய்திருப்பானாயின், அவனை எவ்வகையிலும் நாம் கொல்லலாகாது. ஏனெனில், நமது ராஜ்யம் வாழ்வு தனம்புத்ரபௌத்ரர்கள் மற்றுமுள்ள நமதுஸம்பத்துஆகியவெல்லாம் பிராம்மணர்களுக்காகவே இருக்கின்றன. அவமானத்திற்குப்பயந்தும் தங்கள்தர்மத்தைக்காப்பதற்காகவும், மற்றஸ்வயம்வரங்களுக்கும் இவ்விதமான முடிவு வாராமலிருக்கும்படி செய்யவேண்டும்' என்றுசொல்

விப் பரிகாயுதங்கள்போன்ற கைகளையுடைய ராஜஶ்ரேஷ்டர்கள் கோபித்துத் துருபதனைக் கொல்வதற்கு ஆயுதங்களுடன் எதிர்த்துப் போயினர். அவர்களிற் பலர் வில்லுகளையெடுத்துக் கோபித்துவரு கிறதைக் கண்டு பயந்து துருபதன் பிராம்மணர்களைச் சரணமடைந் தான். துருபதன் பயத்தினாலாவது சக்தியில்லாமையினாலாவது உயி ரைக் காப்பாற்றிக்கொள்ளவாவது பிராமணரைச்சரணமடையவில்லை; அரசர்களை ஸமாதானப்படுத்துவதற்காக அவர்களிடம் போனான். மதம்பிடித்த யானைகள்போல வேகமாக ஓடிவருகின்றஅவ்வரசர்களைச் சத்துருக்களை வெல்லுகிறவர்களும் சிறந்த வில்லாளிகளும் பாண்டு புத்திரர்களுமான பீமார்ஜுனர்கள் எதிர்த்துச் சென்றனர். பிறகு; அவ்வரசர்கள் கோபத்தோடுஆயுதங்களையெடுத்துக்கொண்டும் மணிக் கட்டுக்கும் விரல்களுக்கும் தோலுறைகள் போட்டுக்கொண்டும் குரு குலபுத்திரர்களாகிய பீமார்ஜுனர்களைக் கொல்லக்கருதிக் கிளம்பி னர். அப்போது, ஆச்சரியமும் பயங்கரமுமான செய்கைகளையுடைய வனும் மஹாபலசாலியும் இடிக்கொப்பான வன்மையுள்ளவனும் ஒப்பற்ற வீரனும் மஹாகஜத்தைப்போன்றவனுமாகியபீமன் இரண்டு கைகளினாலும் ஒருமரத்தைப்பிடுங்கி இலைகளையுதறினான். எதிரிகளை அழிப்பவனும் பருத்தும் நீண்டுமுள்ள புஜங்களுள்ளவனுமாகியபீமன் தண்டாயுதனை யமன் உக்கிரமான தண்டாயுதத்தை எடுத்துக் கொள்வதுபோல அம்மரத்தையெடுத்துக்கொண்டு புருஷஶ்ரேஷ்ட னை அர்ஜுனனுக்கு ஸமீபத்தில் நின்றான். நினைக்கமுடியாத செய் கையுள்ளவனும் மனிதருக்கு மேற்பட்ட புத்தியுள்ளவனும் இந்திர னுக்கொப்பான பராக்கிரமமுள்ளவனுமாகிய அந்த அர்ஜுனன் தன் ஸகோதரனை பீமனுடைய அந்தச் செய்கையைக்கண்டு வியப்புற் றான்; பயமின்றி விற்பிடித்து நின்றான்.

மனிதருக்கெட்டாத ஞானமுள்ளவரும் நினைத்தற்கரியசெய்கை யுள்ளவருமாகிய கிருஷ்ணபகவான் பீமார்ஜுனர்களுடைய அந்தச் செய்கையைக்கண்டு, பலராமரை நோக்கிப்பின்வருமாறுசொல்லலானார். 'ஸிம்மம்போலவும் விருஷபம்போலவும் கர்வமாக நடந்துகொண்டு பனைமரஉயரமுள்ளமஹா தனுஸை இழுக்கிறானே, இவன் அர்ஜுனன் தான். ஸங்கர்ஷணரே! நான் வஸுதேவபுத்திரனாயிருந்தால் இதில்ஸந் தேகமில்லை. இதோபலத்தினால்விருக்ஷத்தைப்பிடுங்கிஅரசர்களைவெல் லுவதற்கு ஸாஹஸமாக ஆரம்பித்திருக்கிறானே இவன் வ்ருகோதரன். அவனைத்தவிர மற்றொருவன் இந்தப் புவனியில் இப்போது யுத்தத்

தில் இவ்விதமான செய்கையைச் செய்யவல்லவனில்லை. தாமரைப் புஷ்பம்போன்ற நீண்டகண்களையுடையவரும் பெரிய தேகமுடைய வரும் ஸிம்மம்போன்ற நடையுள்ளவரும் வணக்கமுள்ளவரும் பசுமை நிறமுள்ளவரும் நீண்டு பிரகாசிக்கின்ற அழகிய மூக்குடையவருமாக இதோ எதிரில் வருகிறாரே அவர் தர்மபுத்திரரே. கிருத்திகா புத்திரர்களான இரண்டு சுப்பிரமணியர்களைப்போலிருப்பவர் அசுவினிதேவதைகளுடைய புத்திரர்களான நகுல ஸஹதேவர்களென்பது என்னுடைய ஊகம். பாண்டவர்களும் குந்தியும் அந்த அரக்கு மாளிகை எரித்ததிலிருந்து விடுபட்டதை நான் கேள்விப்பட்டேன்' என்றார். ஜலமில்லாத மேகம்போன்ற நிறமுள்ள பலராமர் ஸந்தோஷத்துடன், 'நமது அத்தையாகிய குந்தி கௌரவச்ரேஷ்டர்களான புத்திரர்களுடன்கூட விடுபட்டதைக்கண்டு ஸந்தோஷமடைந்தேன்' என்று தமது தம்பியான ஸ்ரீகிருஷ்ணனிடம் சொன்னார்.

---

## இருநூற்றைந்தாவது அத்தியாயம்.

## ஸ்வயம்வர பர்வம். (தொடர்ச்சி.)

**(அர்ஜுனன் கர்ணனைத்தோற்கச் செய்ததும், பீமன் சல்லியனைத்தோற்கச் செய்ததும், யுதிஷ்டிரமுதலானவர்கள் துரியோதனாதியரைத்தோற்கச் செய்ததும், மறுபடி யுத்தத்துக்குஆயத்தமான அரசர்கள் கிருஷ்ணனுடைய வார்த்தையைக்கேட்டு யுத்தமுயற்சியைவிட்டு அவரவர் இருப்பிடம் சென்றதும், திரௌபதியுடன் பீமார்ஜுனர்கள் குயவன் வீட்டுக்குச் சென்றதும்.)**

அங்குள்ள பிராம்மணச்ரேஷ்டர்கள், கிருஷ்ணாஜினங்களையும் கமண்டலங்களையும் உதறிக்கொண்டு, 'நீங்கள் பயப்படவேண்டாம். சத்துருக்களுடன் நாங்கள் சண்டைசெய்வோம்' என்றனர். இவ்வாறு சொன்ன அந்தப்பிராம்மணர்களைப்பார்த்து அர்ஜுனன் சிரித்துக் கொண்டு, 'நீங்கள் பார்ப்பவர்களாக என்பக்கத்தில் நின்றுகொண்டிருங்கள். நான் கூர்மையான முனையுள்ள அம்புகளை நூற்றுக்கணக்காக இறைத்துச் சீறின ஸர்ப்பங்களை மந்திரங்களினால் தடுப்பதுபோல் இவர்களைத் தடுத்துவிடுவேன்' என்றான். மஹாபலசாலியான அர்ஜுனன் இவ்வாறுசொல்லிக் கன்னியா சுல்கமாகக் கிடைத்த அந்தவில்லை வளைத்துக்கொண்டு ஸஹோதரனை பீமஸேனனுடன்

கூட மலைபோல அசையாமல்நின்றான். பிறகு, பீமார்ஜுனர்களிரு வரும் யுத்தத்தில் மிக்ககர்வமுள்ள கர்ணன்முதலாகிய க்ஷத்திரியர்களைக்கண்டு பயப்படாமல் இரண்டுயானைகள் எதிரியானைகளைச் சந்திப்பதுபோலச் சந்தித்தனர். யுத்தஞ்செய்ய ஆயத்தரான அவ்வரசர்கள், 'பிராம்மணன் எதிர்த்து யுத்தஞ்செய்யவருவானாயின் அவனை யுத்தத்தில் வதஞ்செய்யக் கண்டிருக்கிறோம்' என்ற கடுஞ்சொற்களைச் சொன்னார்கள். அவ்வாறுசொல்லி அரசர்கள் உடனே பிராம்மணர்களைத் துரத்தினர். மஹாபராக்ரமசாலியான கர்ணன், பெண்யானைக்காக ஓர் ஆண்யானை எதிரியானையை நோக்கிச் செல்வது போல அந்த யுத்தத்தில் அர்ஜுனனையெதிர்த்துச் சண்டைக்குச் சென்றான். மத்திரதேசத்தரசனும் பலவானுமான சல்லியன் பீமஸேனனை அந்தயுத்தத்தில் எதிர்த்துச்சென்றான். துரியோதனன் முதலியவரனைவரும் பிராம்மணர்களுடன் சேர்ந்து மெள்ள ஆரம்பித்துப் பிரயாஸமின்றி எதிர்த்து யுத்தஞ்செய்தனர். அப்போது, எதிர்த்துவரும் ஸூர்யபுத்திரனான கர்ணனைச் சிறந்தவனான அர்ஜுனன் வன்மையுள்ள வில்லையிழுத்துக் கூர்மையான பாணங்களினால் எதிர்த்து அடித்தான். உக்கிரமான சக்தியும் கூர்மையுமுள்ள அந்தச்சரங்களின் வேகத்தினால் பிரமித்த கர்ணன் பிரயாசத்துடன் அர்ஜுனனைத் தொடர்ந்தான். பாணம்விடுகிற வேகத்தில் அளவிடமுடியாத அவ்விரண்டு சிறந்த வீரர்களும் ஒருவரையொருவர் ஜயிக்கக்கருதி மிக்க கோபத்துடன் யுத்தஞ்செய்தனர். 'நீ செய்ததற்குப் பிரதியாக நான் செய்ததைப்பார்' என்றும், 'என் கைவன்மையைப் பார்' என்றும் ஒருவர்க்கொருவர் வீரவாதம்கூறினர். புவியில் நிகரற்றதான அர்ஜுனனுடைய புஜபராக்ரமத்தைக்கண்டு ஸூர்யபுத்ரனான கர்ணன் உடனே கடுங்கோபத்துடன் யுத்தஞ்செய்தான். அப்போது அர்ஜுனனால் விடப்பட்ட அந்த வேகமுள்ள பாணங்களைத்தடுத்து உரக்கக் கர்ச்சனை செய்தான். அவன் சேனைகள் அதைக்கொண்டாடின.

அப்போது, கர்ணன், 'பிராம்மணஶ்ரேஷ்டனே! உன் கைகளின்பராக்கிரமத்திற்காகவும் யுத்தத்தில் சோராமலிருப்பதற்காகவும், பாணங்களிலும் அஸ்திரங்களிலுமுள்ள இந்த மேன்மைக்காகவும் நான் சந்தோஷப்படுகிறேன். பிராம்மணோத்தமனே! நீ உருவத்துடன்வந்த தனுர்வேதமோ? அல்லது, பரசுராமனோ? அல்லது, ப்ரத்யக்ஷமாகவந்த இந்திரனோ? அல்லது, ப்ரத்யக்ஷமாகவந்த நித்தியரான விஷ்ணுவோ? நீ உன்னை மறைத்துக்கொள்வதற்காக இந்தப்பிராமணரூபத்தையெடுத்

தாக் கைவலிமையைக்கொண்டு எனக்குஎதிர்யுத்தஞ்செய்கிறாயென்று நினைக்கிறேன். யுத்தத்தில் கோபமுற்ற என்னுடன் பிரதியுத்தஞ் செய்வதற்கு நேரில்வர இந்திரனையும் பாண்டுபுத்திரனான அர்ஜுனனையும்தவிர வேறு ஓர் ஆண்பிள்ளை வல்லவன் அல்லன். பாண்டவர்களனைவரும் அர்ஜுனனுள்பட அப்போதே அரக்கு மாளிகையில் எரிந்து போயினர். அர்ஜுனனைத்தவிர மற்றொருவன் யுத்தத்தில் என்னையடிக்கச் சக்தனல்லன்' என்றுசொன்னான். அவன் இவ்வாறு சொன்னதற்கு, அர்ஜுனன், 'கர்ண! நான் தனுர்வேதமல்லேன்; பராக்கிரமசாலியான பரசுராமருமல்லேன்; யுத்தஞ்செய்பவரிற் சிறந்தவனும் ஆயுததாரிகளெல்லாரிலும் மேலானவனுமான ஒருபிராம்மணன்; குருவின் உபதேசத்தினால் பிரம்மாஸ்திரத்திலும் இந்திராஸ்திரத்திலும் தேர்ச்சியுள்ளவன். வீரனே! இப்போது உன்னை யுத்தத்தில் ஜயிப்பதற்குஇருக்கிறேன். நீ அசையாமல் நில். 'தோற்றேன்'என்றாவது சொல்.அதன்பிறகு, ஸுகமாகச்செல்லலாம்'என்று மறுமொழி சொன்னான். அர்ஜுனன் இவ்வாறு சொல்லி, உடனே கர்ணனுடைய வில்லை முறித்தான். உடனே, கர்ணன் வேறுவில்லையெடுத்து யுத்தஞ் செய்ய அம்புதொடுத்தான். அர்ஜுனன்பார்த்து அவனுடைய அந்த வில்லையும் அம்புகளினால் துணித்து, ஸூர்யகுமாரனான அவனையும் யுத்தத்தில் அடித்தான். அப்போது ராதையின் புத்திரனும் மஹாபலசாலியுமானகர்ணன் வில்முறிந்து பாணங்களினால் அங்கங்களில் அதிகமாக அடிபட்டு உடனே ஓடினான். மறுபடியும், சற்று நேரத்துக்குப்பின் கர்ணன் அம்புகளுடன் வில்லையெடுத்துக்கொண்டு வந்தான்; அப்போது அர்ஜுனன்மேல் சரமாரிகளைப் பொழிந்தான். அர்ஜுனன் அந்தச்சரமாரிகளைத் தன் சரங்களினால்அறுத்தான். அப்போது மஹாரதனான கர்ணன் எல்லாப்பாணங்களும் உக்கிரமாயிருப்பதைக் கண்டு, பிரம்மதேஜஸை ஜயிக்க முடியாதென்று நினைத்துக்கொண்டு விரைவாக வெளியேஓடினான்.

ஸபையின் மற்றோரிடத்தில், பலபராக்ரமசாலிகளும் கல்வியிலும் மேதகவன்மையிலும் யுத்தத்திற்சிறந்தவர்களுமாகிய சல்லியன் பீமன் இருவர்களும், மதங்கொண்ட இரண்டு மஹாகஜங்கள் போல ஒருவரையொருவர் சண்டைக்கழைத்துக் குத்துக்களாலும் முழங்கால்களினாலும் ஒருவரையொருவர் அடித்துப் பின்னும் முன்னும் அருகிலும் தூரத்திலும் ஒருவரையொருவர் இழுத்தனர்; குத்துக்களினாலும் அடித்துக்கொண்டனர். அப்போது அவரிருவரிடத்தும் மிகக் கடுமையான சடசடவென்ற சப்தம் உண்டாயிற்று. கற்கள் விழுவதற்

கொப்பான அடிகளால் அடித்துக்கொண்டனர். அவர்களிருவரும் அந்தச் சண்டையில் ஒருவரையொருவர் சற்றுநேரம் இழுத்தனர். அந்தயுத்தத்தில் கௌரவப்ச்ரேஷ்டனை பீமன் சல்லியனை இரண்டு கைகளினாலும் தூக்கிக் கீழேபோட்டான். அப்போதுபிராம்மணர்கள் நகைத்தனர். அங்கேபுருஷச்ரேஷ்டனும்பலசாலியுமானபீமஸேனன், பலவானான சல்லியன் பூமியில் தள்ளப்பட்டிருந்தும், அவனைக் கொல்லாமலிருந்ததனால், எல்லோரும்ஆச்சரியத்தையடைந்தனர். பீமஸேனனால் சல்லியன் தள்ளப்பட்டும் கர்ணன் பயந்துமிருந்தபோது பார்த்திருந்த மனிதர்களனைவர்க்கும் ஆச்சரியமுண்டாயிற்று. பிறகு, ராஜ ஸமூகம் பார்த்திருக்கையில் பீமன் ஒருமரத்தைப்பிடுங்கினான். அப்போது தர்மராஜர் குறிப்புக் (=ஜாடை)களினால் பீமஸேனனைத்தடுத்தார். பீமஸேனனும் தன்ஸோதரரான தர்மபுத்திரருடைய குறிப்பை அறிந்து நிவர்த்தியடைந்தான். கௌரவராகிய ஜனமேஜயரே! தர்மராஜாவும், ஸபைநடுவில் அரசர்கள் பார்த்திருக்கையில் பொறாமைக்காரனான துரியோதனனுடன் சண்டைசெய்தார். அப்போது துரியோதனன் தான் அதிக பலசாலியாயிருப்பதனால் *யுதிஷ்டிரரை மதிக்காமல் அவருடன் யுத்தஞ் செய்யவில்லை அந்த ஸமயத்தில் தர்மராஜரான யுதிஷ்டிரர் தாழ்ந்த கணுக்களையுடைய பாணத்தினால் சத்துருக்களைக் கொல்லுகிறவனான துரியோதனனை அடித்தனர். பிறகு, துரியோதனன் தடியினாலடிக்கப்பட்ட பாம்பைப்போலக் கோபித்து மிகுந்த ஜாக்ரதையெடுத்துக்கொண்டு தர்மராஜாவுடன் எதிர்த்து யுத்தஞ் செய்தான். தர்மபுத்திரர் யுத்தத்தில் துரியோதனனுடைய வில்லையும் நாண்கயிற்றையும் அறுத்து அவன்மேல் பாணவர்ஷம் வர்ஷித்தார். அவன் யுத்தத்தை விட்டோடினான். ஜனமேஜயராஜரே! துச்சாஸனன் கோபமுற்று ஸஹதேவனுடன் நெடுநேரம் யுத்தஞ்செய்து அவனால் ஜயிக்கப்பட்டவனாக வில்லைப்போட்டுவிட்டு முழங்காலை மடித்துக்கொண்டு யுத்தபூமியில் விழுந்தான். அவன் எழுந்தவுடன், கத்தி கேடகங்களை எடுத்துக்கொண்டு எதிர்த்தோடிவந்தான். கௌரவரான ஜனமேஜயரே! அந்தக் கௌரவனான துச்சாஸனன், பலஹீனனை பிராம்மணனோடு யுத்தம் வேண்டாமென்றுசொல்லி விகர்ணன் சித்ரஸேனன் இவ்விருவராலும் தடுக்கப்பட்டான். துஸ்ஸகன் நகுலனிருவரும் யுத்தஞ்செய்யத்தொடங்கினர். மஹாபலசாலிகளான அவ்விருவரையும்பார்த்து, 'கௌரவர்களே! நீங்கள் யுத்தத்தைவிட்டுத் திரும்புங்கள். பிராம்மணர்களிடத்தில் குரூரகாரியம் எதற்கு? இந்தப்

*யுதிஷ்டிரரென்று அறியாமல்.

பிராம்மணர்கள் பலஹீனர்கள். நீங்களோ மஹாபலசாலிகள்; இங்கே இரண்டு பிராம்மணர்கள் கொடியவர்கள்; பலத்தில் வாயுவுக்கும் இந்திரனுக்கும் ஒப்பானவர்கள். அவர்கள் யாராயிருந்தாலும்,பிராம்மணர்களுக்கு நமஸ்காரம்; நாம் நமது நகரம்செல்வோம்' என்று கௌரவர்கள் சொன்னார்கள். இவ்வாறு சொல்லிக்கொண்டே அவர்கள் யுத்தத்தை விட்டுப் போயினர். பிராம்மணர்கள் ஆங்காங்கு கூட்டம் கூட்டமாகச் சேர்ந்து மகிழ்ந்தனர். அப்பொழுது அந்தப்போர்முனையில்நின்ற பிராம்மணர்களை அங்குள்ள க்ஷத்திரியர்கள் அநேகர் பார்த்துக்கொண்டு நாற்புறத்தும் நின்றனர். பிராம்மணர்களும் வெற்றியடைந்து கன்னிகையை அழைத்துக்கொண்டு புறப்பட்டனர். பீமஸேனனால் சல்லியன் ஜயிக்கப்பட்டும் கர்ணன் தோற்றும் துரியோதனனும் துச்சாஸனனும் சண்டையிலிருந்து ஓடியும்போனபோது, எல்லா அரசர்களும் பயந்து பீமஸேனனைச் சுற்றிக்கொண்டனர். அவர்கள் அங்கேசேர்ந்து,'இந்தப் பிராம்மணஶ்ரேஷ்டர்கள் இருவரும் எங்கே ஜனித்தவர்கள்;எவ்விடத்தில் வஸிப்பவர்களென்று செம்மையாக அறியவேண்டும். பரசுராமரையும் துரோணரையும் பாண்டவனான கிரீடியையும் தேவகிபுத்திரரான கிருஷ்ணபகவானையும் சாரத்வதரான கிருபாசாரியரையும் தவிர, ராதா புத்திரனான கர்ணனை யுத்தத்தில் எதிர்க்கவல்லவனெவன்? துரியோதனனைத்தான் யுத்தத்தில் எதிர்த்துச் சண்டைசெய்யவல்லவன் யாவன்? அவ்வாறே பலவான்களிற் சிறந்த மத்திரதேசாதிபதியான சல்லியனை யுத்தத்தில் கீழேவீழ்த்துவதற்கு வல்லவன், வீரரான பலராமரையும் பாண்டவனான பீமனையும் வீரனான துரியோதனனையும் தவிர, வேறு எவன் இருக்கிறான்? பிராம்மணர்கள் நிரம்பின இந்தச் சண்டையிலிருந்து சேனைகளைத் திருப்பவேண்டும். பிராம்மணர்கள் குற்றவாளிகளாயிருப்பினும் எந்தக்காலத்திலும் அவசியம் காப்பாற்றப்படத்தக்கவர்கள். அதனால், இங்கே இவர்களைத் தெரிந்துகொண்டு பிறகு உற்சாகத்துடன் யுத்தஞ்செய்வோம்' என்று சொன்னார்கள். பீமார்ஜுனர்கள் யுத்தத்தில் அந்தச் செய்கையைச்செய்தபிறகு, அவ்வாறு பேசிக்கொண்டிருந்த அவ்வரசர்களனைவரையும் மற்றமனிதர்களையும்பார்த்து ஒன்றும் பேசாமலிருந்தனர். பீமஸேனனுடைய அந்தச்செய்கையைக் கண்டபின் அவ்விருவரையும் குந்திபுத்திரர்களென்று நினைத்துக் கண்ணபிரான் அவ்வரசர்களனைவரையும் அழைத்து, 'திரௌபதி தர்மமாகவே அடையப்பட்டவள்' என்று சமாதானஞ்செய்து யுத்தஞ்செய்யாமல் தடுத்தார். யுத்தத்தில் ஸமர்த்தர்களான அந்த ராஜஶ்ரேஷ்டர்களெல்லாரும் இவ்வாறுயுத்தத்தைவிட்டு நீங்கி

வியப்புடன் (தம்தம்) இடங்களுக்குச் சென்றனர். அவ்விடத்தில் வந்திருந்தவர்கள், 'ஸ்வயம்வரமண்டபத்தில், பிராம்மணர்கள் மேன்மை அடைந்துவிட்டார்கள். பாஞ்சாலி பிராம்மணர்களால் அடையப்பட்டாள்' என்று சொல்லிக்கொண்டு சென்றனர். மான்தோலுடுத்த பிராம்மணர்களால் சூழப்பட்ட அந்தப் பீமார்ஜுனர்கள் பிரயாஸத்தினால் அங்கிருந்து வெளிப்பட்டனர். சத்ருருக்களினால் விசேஷமாகப் புண்பட்டவர்களும் கிருஷ்ணையினால் பின்தொடரப்பட்டவர்களுமாகிய அந்த இரண்டு வீர புருஷர்களும் ஜனக்கூட்டத்திலிருந்து விடுபட்டுப் பூர்ணசந்திரனும் ஸூர்யனும் ஏககாலத்தில் உதயமாகி மேகங்களினால் விடுபட்டதுபோல் விசேஷமாகப் பிரகாசித்தனர். அவர்களின் தாயாரான குந்தி பிக்ஷைக்குக் காலங்கடந்தும் தன் புத்திரர்கள் வாராமலிருந்தபோது, அவர்களின் நாசத்தைப் பற்றியே பலவகைகளால் சிந்தையுற்றாள், புத்திரவாஞ்சையினால் மதிமயங்கின அவள், 'கௌரவஶ்ரேஷ்டர்களான என் புத்திரர்கள் த்ருதராஷ்டிர புத்திரர்களால், அறியப்பட்டுக் கொல்லப்பட்டிருப்பரோ? அல்லது, மாயாவிகளான மிகக் கொடிய ராக்ஷஸர்களால் பழைய விரோதம்பற்றிக் கொல்லப்பட்டிருப்பரோ? மஹாத்மாவான வியாஸருடைய நிச்சயங்கூட மாறுகிவிட்டதே' என்று இவ்வாறு சிந்தித்தாள். பிறகு, மேகங்கள் மூடி ஜனங்கள் தூங்கினதுபோல் வெளிப்படாமல் ஓய்ந்துபோயிருந்த மழைநாளாகிய அந்தத்தினத்தில் ஸாயங்காலவேளையில் மேகங்களால் மூடப்பட்ட ஸூர்யனைப்போலப் பிராம்மணர்களால் சூழப்பட்ட அர்ஜுனன் அந்தக் குயவன்சாலையில் பிரவேசித்தான்.

---

## இருநூற்றுறுவது அத்தியாயம்.

## ஸ்வயம்வரபர்வம். (தொடர்ச்சி.)

(பீமார்ஜுனர்கள் திரௌபதியைப் பிட்சையென்று தெரிவித்ததைக்கேட்டுக் குந்தி 'ஐவர்களும் சேர்ந்து புஜியுங்கள்' என்றுசொன்னதும், பிறகு திரௌபதியைக்கண்டு மிகவும் வியாகுலப்படும்போது யுதிஷ்டிரனும் அர்ஜுனனும் பேசிக்கொண்டதும், கிருஷ்ணத்வைபாயனர்வசனத்தை நினைந்து ஸஹோதரர் எல்லோருக்கும் திரௌபதி மனைவியென்று யுதிஷ்டிரர் நிச்சயித்ததும், குயவன் வீட்டிற்குக் கிருஷ்ண பகவான் வந்ததும்.)

மஹானுபாவர்களும் புருஷஶ்ரேஷ்டர்களுமான பீமார்ஜுனர்கள் அந்தக் குயவனுடைய வேலைச்சாலைக்குப்போய்க் குந்தியிடம்

சென்று மிகுந்த ஸந்தோஷத்துடன் அந்தத் திரௌபதியைப் பிக்ஷை யென்று தெரிவித்தனர். குந்தி, வீட்டுக்குள்ளிருந்தபடி, பாராமலே, 'எல்லோரும் சேர்ந்து புஜியுங்கள்' என்று அந்தப் புத்திரரிருவருக்கும் சொல்லினள். பிறகு, கிருஷ்ணையைக்கண்ட குந்தி, 'நான் தீங்காகச் சொல்லிவிட்டேன்' என்று சொன்னாள். பாவத்தில் பயந்தவளாகிய அந்தக் குந்தி சிந்தையுற்று மிகவும் பிரியப்படத்தக்க அந்தத் திரௌபதியைக் கையிற்பிடித்துக்கொண்டு யுதிஷ்டிரரிடம் சென்று, பின்வருமாறு சொல்லலானாள்.

'புத்திரனே! அரசனே! இந்த த்ருபதராஜன் புத்திரி உன் தம்பிகளினால் என்னிடம் ஒப்புவிக்கப்பட்டாள். நானும் பாராமலே, 'சேர்ந்து புஜியுங்கள்' என்று வழக்கம்போற் சொல்லிவிட்டேன். கௌரவஸ்ரேஷ்டனே! இப்போது நான் பொய்சொன்னதாக இல்லாமலிருப்பது எவ்வாறு நேரிடும்? இந்தப் பாஞ்சால ராஜபுத்திரிக்கு அதர்மம் எவ்வாறு வராமலிருக்கும்? இவள் எவ்வாறு தவறுதலில்லாமலிருப்பள்? நீ சொல்' என்றாள். சிறந்த புத்திசாலியும் புருஷஸ்ரேஷ்டரும் கௌரவவீரருமான தர்மராஜர் தாயாரால் இவ்வாறு சொல்லப்பட்டபோது, சற்றுநேரம் ஆராய்ந்து குந்தியைச்சமாதானஞ்செய்து, தனஞ்சயனைப் பார்த்து, 'பல்குனனே! திரௌபதி உன்னாலேதான் பந்தயத்தில் ஜயிக்கப்பட்டாள். இந்த ராஜபுத்திரி உன்னாலேதான் பிரகாசிக்கப் போகிறாள். எதிரிகளை ஜயிப்பவனே! அக்கினிசாக்ஷியாகச் சாஸ்திரப்படி நீ இவளைப் பாணிக்ரஹணஞ்செய்துகொள்' என்றார். அர்ஜுனன், 'ராஜரே! என்னைப் பாவத்துக்குரியவனாக நீர் செய்யத்தகாது. இது தர்மமாகாது. இது பெரியோர்களால் அங்கீகரிக்கப்பட்டதன்று. முதலில் நீரும், உமக்குப் பிறகு சிறந்தகைகளையுடையவனும் நினைத்தற்கரிய செய்கையையுடையவனுமாகிய இந்தப் பீமனும், அவனுக்குப் பிறகு நானும், எனக்குப்பின் நகுலனும், பின்பு பலசாலியான இந்த ஸஹதேவனும் விவாஹஞ்செய்துகொள்ளுதற்குரியவர்கள். அரசரே! பீமனும் நானும் நகுலஸஹதேவர்களும் இந்தப்பெண்ணும் உமது கட்டளைக்குட்பட்டவர்கள். இஃது இவ்வாறிருக்கையில், தர்மத்திற்கும் புகழுக்கும் எது தகுதியோ, பாஞ்சாலராஜனுக்கும் எது நன்மையோ அதனை ஆராய்ந்து நீர் செய்யவேண்டும். எங்களுக்குக் கட்டளையிடும். நாங்களனைவரும் உமக்குட்பட்டிருக்கிறோம்' என்று சொன்னான். பக்தியோடும் ஸ்நேகத்தோடும் சேர்ந்த அர்ஜுனனுடைய சொல்லைக்கேட்டுப் பாண்டவர்கள் பாஞ்சாலியின்மீது பார்

வையை வைத்தனர் அங்கே உட்கார்ந்துகொண்டிருந்த அவர்களெல்லாரும், பார்த்துக்கொண்டிருக்கும் புகழ்பெற்ற கிருஷ்ணையைக் கண்டு ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு அவளை உள்ளத்தில் நிறுத்தினர். திரௌபதியைக் கண்டபிறகு, அந்த அளவற்ற பராக்ரமமுள்ள அனைவர்க்கும் ஐம்புலன்களையும் கலக்கிக்கொண்டு மன்மதன் ஆவிர்ப்பவித்தான். பாஞ்சாலியின் ரூபம் ஆசைப்படத்தக்கதாகவே பிரம்மதேவரால் தம்இஷ்டப்படி சிருஷ்டிசெய்யப்பட்டது. அஃது எல்லாப் பிராணிகளின் உள்ளங்களையும் கவருவதாகவும் மற்றப்பெண்களின் உருவங்களிலெல்லாம் சிறந்ததாகவுமிருந்தது. புருஷஶ்ரேஷ்டரும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரர் அவர்களின் எண்ணங்களைக் குறிப்புக்களினால் தெரிந்துகொண்டு வியாஸர் சொன்னதை முழுதும் நினைத்தார். அந்தத் தர்மபுத்திரர் ஒருவர்க்கொருவர் விரோதம் வருமென்ற பயத்தினால் ஸஹோதரரெல்லாரையும் பார்த்து, 'சிறப்புள்ள திரௌபதி நம்மெல்லோருக்கும் பாரியையாவாள்' என்றார்'' என்றுசொன்னார்.

ஜனமேஜயர், "கிருஷ்ணன் சக்தியுள்ளவராக இருந்தும் அவரால் ஏன் வில் நாணேறிடப்படவில்லை? என்னகாரணம்பற்றி அந்தலக்ஷியம் அவரால் அடிக்கப்படவில்லை? புருஷஶ்ரேஷ்டரே! அதனை எனக்குச் சொல்லும்'' என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்: "கிருஷ்ணன் சக்தியுள்ளவராயிருந்தும் பாண்டவர்களைத் தெரிந்துகொள்ள விரும்பினதினால் அந்தவில்லை நாணேறிடவில்லை. கேள்வியினால் மட்டும் பாண்டவர்கள் இவ்வுலகத்தில் ஜீவித்திருக்கின்றனரென்று அவர் நிச்சயித்திருந்தார். உத்தமமான வில்லோடுகூடிய அந்த ஸ்வயம்வரத்தில் மற்ற அரசர்கள் அசக்தர்களென்பதைக் கண்டறிந்து, ஒப்பற்றவீரனாகிய தனஞ்சயன் தான் அந்தவில்லை நாணேறிடுவனென்றும் ஊகித்து வஸுதேவபுத்திரராகிய கண்ணபிரான் அநேக உபாயங்களினால் பாண்டவர்களைத் தெரிந்துகொள்ள விரும்பிப் பார்த்துக்கொண்டு அந்த வில்லைத் தாம் நாணேறிடக் கருதாமலிருந்தார். பார்த்தர்கள் இவருக்கு மிகப் பிரியர்களாயிருந்தார்களன்றோ? அப்போதுபாண்டவர்களனைவரும்தங்கள்ஜ்யேஷ்டஸஹோதரரானதர்மராஜருடையசொல்லைக்கேட்டுஅதே விஷயத்தை உள்ளத்தில் நினைத்து உற்சாகங்குறையாமலிருந்தார்கள். விருஷ்ணிவீரராகிய கிருஷ்ணபகவான் அவர்களைக் கௌரவவீரர்களென்றுநினைத்துப்பலராமருடன்கூட அந்தப்புருஷஶ்ரேஷ்டர்கள் வஸிக்கும் அந்தக் குயவனுடைய வேலைச்சாலைக்குச் சென்றார். அங்கே வீற்

றிருந்த பெருத்தும் நீண்டுமிருக்கும் கைகளோடு கூடிய *அஜாதசத்ருவையும் அவரைச்சுற்றி ஸமீபத்திலுட்கார்ந்திருக்கின்ற அக்கினியைப் போலப் பிரகாசிக்கும் அந்தப் பாண்டவர்களையும் பலராமருடன்கூடிய வாஸுதேவர் கண்டார். பிறகு, வாஸுதேவர் தர்மிஷ்டர்களில் மிகச் சிறந்தவரும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரரிடம் சென்று அஜமீட வம்சத்து ராஜாவாகிய அவருடைய பாதங்களில் வந்தனஞ்செய்து, 'நான் கிருஷ்ணன்' என்று சொன்னார். அவருக்குப்பின் பலராமரும் அவ்வாறே சொன்னார். அவ்விருவரையும் கௌரவர்கள் மகிழ்ந்து கொண்டாடினர். புருஷஶ்ரேஷ்டரான ஜனமேஜயரே! அந்தயதுவீரர்களிருவரும் தமது தந்தையின் ஸஹோதரியான குந்தியையும் பாதவந்தனம்செய்தனர். கௌரவவீரராகிய அஜாதசத்ருவும், கிருஷ்ணனைக் கண்டுகுசலப்ரஶ்னஞ்செய்தார். 'வாஸுதேவரே! இவ்விடத்தில்யாருக்கும் தெரியாமல் மறைந்து வசிக்கும் நாங்களெல்லாரும் உம்மால் எவ்வாறு கண்டறியப்பட்டோம்?' என்று கேட்க, அவரைப்பார்த்துக் கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு, 'வேந்தரே! அக்கினிமறைந்திருந்தாலும் அது வெளியில் அறியவேபடும். பாண்டவர்களை மிஞ்சி அந்தப் பராக்கிரமஞ் செய்கிறவன் மனிதர்களில்வேறுயாரிருக்கிறான்? சத்துருக்களை ஜயிப்பவராகிய பாண்டவர்களே! நல்லகாலம்; நீங்களனைவரும் அந்தக்கொடிய தீயிலிருந்து விடுபட்டீர்கள். நல்லகாலத்தினால் பாபிஷ்டனை திருதராஷ்டிரபுத்திரனும் அவன்மந்திரிகளும் எண்ணம் நிறைவேறுமற் போனார்கள். உங்களுடைய க்ஷேமம், குகைக்குள் வைக்கப்பட்டதுபோல ரகஸ்யமாயிருக்கட்டும். (பிறகு,) ஜ்வலிக்கின்ற அக்கினியைப்போல விருத்தியையடையுங்கள். அரசர்கள் யாரும் உங்களை அறியாமல் இருக்கவேண்டும். நாங்களிருவரும் விடுதிக்கே செல்வோம், என்று சொன்னார். பாண்டுபுத்ரரான தர்மபுத்ரரால் விடைகொடுக்கப் பெற்று, நித்திய ஸ்ரீயுள்ள கிருஷ்ணபகவான் பலதேவருடன்சேர்ந்து விரைவாகச்சென்றார்.

---

* தர்மபுத்திரர்.

## இருநூற்றேழாவது அத்தியாயம்.

## ஸ்வயம்வர பர்வம். (தொடர்ச்சி.)



**(பாண்டவர்கள் வஸிக்குமிடத்தில் திருஷ்டத்யும்னன் ஒளிந்திருந்ததும், பீமன்முதலானவர்கள் கொண்டுவந்த பிக்ஷையைக் குந்தியின் கட்டளையினால் திரௌபதி பரிமாறினதும், பாண்டவர்களுடைய விருத்தாந்தங்களைத் தெரிந்துகொண்டு திருஷ்டத்யும்னன் திரும்பிச் சென்றதும்.)**

கௌரவஶ்ரேஷ்டர்களான பீமார்ஜுனர்கள் குயவன்சாலைக்குப்போகும்போதே துருபதபுத்திரனான திருஷ்டத்யும்னனும் அவர்களின் பின்னாலேயே தொடர்ந்துசென்றான். அவன் யாருக்கும்புலப்படாமல் நாலுபக்கமும் மனிதரைக் காவல்வைத்து, தான் குயவன்சாலையில் அவர்களுடைய ஸமீபத்தில் ஒளிந்துகொண்டிருந்தான். சத்துருக்களைக் கொல்லுகிறவனாகிய பீமனும் அர்ஜுனனும் மஹானுபாவர்களான நகுலஸஹதேவர்களும் பிக்ஷையெடுத்து மகிழ்ந்த மனமுள்ளவர்களாக யுதிஷ்டிரரிடம் ஒப்புவித்தனர். அந்தக் காலத்தில் உதாரகுணமுள்ள குந்தி, அந்தத் திரௌபதியை நோக்கி, 'பிரியமானவளே! அதில் முதல்பாகத்தை எடுத்துப் பலியையும் பிராம்மண பிக்ஷையையும் கொடு. எவர்கள் அன்னத்தை வேண்டுகின்றனரோ அவர்களுக்கும் எந்தமனிதர் நம்மைச்சுற்றி அடுத்திருக்கின்றனரோ அவர்களுக்கும் அன்னத்தைக்கொடு. இனியவளே! அதன்மிச்சத்தை உடனே இரண்டாகப்பகுத்து அதிலொருபாதியை என் நாலுபுத்திரர்களுக்கும் எனக்கும் உனக்குமாகவும் மற்றொருபாதியைப் பீமனுக்காகவும் பிரித்துக்கொடு. மஹாகஜத்துக்கும் விருஷபத்துக்கும் ஒப்பானரூபமுள்ளவனும் பசுமையானநிறமுள்ளவனும் தேகக்கட்டுள்ளவனும் வீரனுமான இந்த யுவா எப்போதும் மிகுதியாகப் புஜிப்பவன்' என்ற சொல்லைச்சொன்னாள். கற்புள்ளவளான அந்த ராஜபுத்திரியும் மிகுந்த ஸந்தோஷத்துடன் சங்கைப்படாமல் அவள் சொன்னதைச் சொன்னபடி ஒழுங்காகச் செய்தாள். அவர்களனைவரும் அந்த அன்னத்தைப் புஜித்தனர். தவத்திற் சிறந்த மாத்ரிபுத்ரனான ஸஹதேவன் பூமியில் தர்ப்பங்களினால் படுக்கையையமைத்தான். பிறகு, அந்தவீரர்களனைவரும் தங்கள் கிருஷ்ணாஜினங்களை அதன்மேல் விரித்துத் தரையில் படுத்தனர். அந்தக் குருஶ்ரேஷ்டர்களின் சிரங்கள் அகஸ்தியருக்குப் பிரியமான தென்திசையை நோக்கியிருந்தன. அவர்களின் சிரங்க

ளுக்குமுன் குந்தி இருந்தாள். அவளுக்குப்பின் அவர்களின் பாதங்களின் கடையில் கிருஷ்ணை இருந்தாள். அந்தத்திரௌபதி பாண்டவர்களுக்குக் காலணையாகப் போடப்பட்டவள்போல் அவர்களுடன் கூடத் தரைமேல் தர்ப்பங்களில் படுத்தாள். அந்தவிஷயத்தில் அவள் மனத்துக்குள்ளேயும்துன்பமுண்டாகவில்லை. அவள் அந்தக் கௌரவப்ரேஷ்டர்களைக் குறைவாகவும் நினைக்கவில்லை. அவ்விடத்தில் அந்தச் சூரர்கள் சேனைகளைப்பற்றியும், திவ்யாஸ்திரங்களைப்பற்றியும், தேர்கள் யானைகள் கத்திகள் கதைகள் கோடாலிகளைப்பற்றியும், அருமையான ஸம்பாஷணைகளைச் செய்துகொண்டிருந்தனர். அப்போது அவர்கள் பேசின அந்த ஸம்பாஷணைகளைத் த்ருபதனுடைய புத்திரனை திருஷ்டத்யும்னன் செவியுற்றான். திரௌபதி அவ்வாறு படுத்திருப்பதை அவனும் அவனுடன்வந்த மனிதர்களுமாகிய எல்லாரும் பார்த்தனர். ராஜபுத்ரனாகிய திருஷ்டத்யும்னன் ராத்திரியில் அவர்களுடைய நடக்கைகளையும் ஸம்பாஷணைகளையும் முழுதும் விடாமல் த்ருபதராஜாவுக்குத் தெரிவிப்பதற்காக விரைவாகச் சென்றான். மஹாத்மாவான பாஞ்சாலராஜன் அவர்களைப் பாண்டவர்களென்றறியாமல் மிக்க துயரமுற்றவனாகத் திருஷ்டத்யும்னனைப் பார்த்துக் கேட்கத்தொடங்கினான். 'அந்தக்கிருஷ்ணை எங்கே போனாள்? யாரால் கொண்டுபோகப்பட்டாள்? தாழ்ந்த ஜாதியிற் பிறந்த சூத்திரனாலேயும் கப்பங்கட்டுகிறவைசியனாலேயும் அடையப்படாமலிருக்கிறாளா? சேற்றுக்கால் நம்தலையில் படாமலிருக்கிறதா? புஷ்பமாலை ப்மசானத்தில் விழாமலிருக்கிறதா? அந்த மனிதன் சிறந்த க்ஷத்திரியவம்சத்தைச் சேர்ந்தவனா? அல்லது, மேல்வருணத்தோனாகிய பிராம்மணனோதானா? புத்திரனே! கிருஷ்ணையைத் தொட்டவனால் எனது தலையில் அவன் இடக்கால் வைக்கப்படாமலிருக்கிறதா? நான் பரிதபிக்காமல், புருஷப்ரேஷ்டனை அர்ஜுனனுடன் ஸம்பந்தஞ் செய்து மிகுந்த ஸந்தோஷமுற்றிருப்பேனா? இப்போது என் பெண்ணைப் பந்தயம் ஜயித்தவன் யார்? குருவம்சத்து வீரனும் விசித்திரவீரியன்மைந்தனுமாகிய பாண்டுவின் புத்திரர்கள் பிழைத்திருக்கிறார்களா? குந்திபுத்திரர்களில் இளையவனை அர்ஜுனனால் இப்போது வில்லெடுக்கப்பட்டு லக்ஷியம் அடிக்கப்பட்டதா? சிறந்த பிரபாவமுள்ளவனே! உண்மையை உரை' என்றான்.

**ஸ்வயம்வரபர்வம் முற்றிற்று.**

---

இருநூற்றெட்டாவது அத்தியாயம்.

# வைவாஹிகபர்வம்.



(திருஷ்டத்யும்னனுடைய வார்த்தையைக்கேட்டு த்ருபதன் உண்மையைத் தெரிந்துகொள்ளும் நிமித்தம் புரோஹிதரை அனுப்பியது.)

வேஸா!கர்களில் முதன்மையான ராஜபுத்திரனை த்ருஷ்டத்யும்னன் பிதாவினால் அவ்வாறு கேட்கப்பட்டவுடன் மிகுந்த ஸந்தோஷமுற்று, அந்தவிஷயம் எவ்வாறு நடந்ததென்பதையும் கிருஷ்ணையை அழைத்துக்கொண்டு போனவன் யாரென்பதையும் தன் தந்தைக்கு உரைக்கலானான். 'சிறுபிள்ளையும் நீண்டும் சிவந்துமிருக்கின்ற கண்களையுடையவனும் கிருஷ்ணாஜினம் தரித்தவனும் தேவதைக்கொப்பான ரூபமுள்ளவனுமாகிய எவன் அந்தச்சிறந்தவில்லை நாணேறிட்டு, அந்த லக்ஷியத்தைப் பூமியில் விழச்செய்தானோ அந்தவீரன், பிராம்மணஸ்ரேஷ்டர்களாற்சூழப்பட்டும் கௌரவிக்கப்பட்டும், அஸுரர்களை ஜயித்தபோது தேவர்கள் முனிவர்களனைவராலும் பூஜிக்கப்பெற்ற *வஜ்ரபாணியைப்போல உற்சாகத்துடன் சென்றான். கிருஷ்ணை அவனுடைய கிருஷ்ணாஜினத்தைப் பிடித்துக்கொண்டு, பெண் யானை ஆண்யானையை அனுசரிப்பதுபோல, மகிழ்ச்சியுடன் அவன் பின் சென்றாள். கருநிறமுள்ளவனும் சிறுபிள்ளையும் மதயானைபோல நடப்பவனுமாகிய எவனொருவன் அந்தச் செயற்கரிய பெருங்காரியத்தைச் செய்தபிறகு, கர்ணனோடு யுத்தம்செய்தானோ தேவேந்திரனுக்கொப்பான க்ரூரத்தன்மையுள்ள அவனை அர்ஜுனனென்று நினைக்கிறேன். அரசர்கள் பொறுமையுற்றுக் கோபத்துடன் அங்கே சேர்ந்தபோது அவனுக்கடுத்திருந்தவன் பெருமரத்தைப் பிடுங்கி அரசர்களின் கூட்டத்தின் நடுவிலிருந்துகொண்டு அம்மரத்தினால் அரசர்களின் கூட்டங்களை யமன் பிராணிகளைத் துரத்துவதுபோலத் துரத்தினானே அவன் பீமன். மன்னவரே! எதிர்த்துப்பார்க்கமுடியாத ரூபமுள்ள அந்தப் புருஷஸ்ரேஷ்டர்களிருவரும், வேந்தர்கள் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அவ்வரசர்களைத் தங்கள் பராக்கிரமத்தினால் கலக்கியும் ஓட்டியும் சந்திரஸூர்யர்களைப்போலப் பிரகாசிப்பவர்களாகக் கிருஷ்ணையை அழைத்துக்கொண்டு நகரத்துக்கு வெளியிலுள்ள குயவனுடைய வேலைச்சாலையை அடைந்தனர். ஸமீபத்தில்

---

*இந்திரன்.

உட்கார்ந்தவர்களும் அக்கினிக்கு ஸமானவர்களுமாகிய அவர்களைப் போன்ற மூன்று வீரபுருஷர்களுடன் அக்கினிஜ்வாலைபோல அங்கே உட்கார்ந்திருந்தவள் அவர்களுடைய அன்னையென்பது எனது ஊகம். அவர்களிருவரும் உடனே அவளுக்குப் பாதவந்தனஞ்செய்து கிருஷ்ணையையும் வந்தனஞ்செய்யச்சொல்லிக் கிருஷ்ணையை அவளிடம் ஒப்புவித்து அங்கேயேநின்றனர். பிறகு, அந்தப் புருஷஶ்ரேஷ்டர்கள் பிக்ஷையெடுப்பதற்குச் சென்றனர் அவர்களுடைய பிக்ஷைகளைக் கிருஷ்ணை வாங்கிக்கொண்டு பலிகொடுத்தபிறகு, பிராம்மணர்களுக்கும் அன்னம் கொடுத்து அந்தப்பெரியவர்களுக்கும் அந்த வீரர்களுக்கும் பரிமாறித் தானும் புஜித்தாள். ராஜரே! அவர்களனைவரும் படுத்தபிறகு, கிருஷ்ணையும் அவர்களின் காற்பக்கத்தில் படுத்தாள். அவர்களுடைய படுக்கை பூமியில் தர்ப்பங்களின்மேல் உயர்ந்த தோல் விரிப்புடன் கூடியதாயிருந்தது. அவர்கள் கர்ஜிக்கின்ற காளமேகங்களைப்போலப் பலவிதமான ஸம்பாஷணைகளைச் செய்தனர். அந்தவீரர்கள் வைசிய சூத்திரர்களுக்குரிய பேச்சுக்களையும் பிராம்மணர்களுக்குரிய பேச்சுக்களையும் பேசவில்லை. அரசரே! அவர்கள் யுத்தத்தைப் பற்றிப் பேசினதனால், அவர்கள் க்ஷத்திரியஶ்ரேஷ்டர்களென்பது திண்ணம். நம்முடைய இஷ்டவிருப்பம் பூர்த்தியாகிவிட்டது; ஸந்தேஹமில்லை. பாண்டவர்கள் தீப்பற்றிக்கொண்டதிலிருந்து விடுபட்டதைக் கேள்விப்படுகிறோமல்லவா? அவன் தன்பலத்தினால் அந்த வில்லை நாணேற்றினதனாலும், லக்ஷியத்தையடித்ததனாலும், அவர்கள் ஒருவருக்கொருவர் ஸம்பாஷணைசெய்யும் வகையினாலும் அவர்கள் மறைந்துதிரிகிற பாண்டவர்களென்பது நிச்சயம்' என்றான். அதன் பிறகு, துருபதராஜன் மிகுந்தஸந்தோஷத்துடன், 'நீங்கள் மஹாத்மாக்களாகிய பாண்டவர்களா? உங்களை நாங்கள் தெரிந்துகொள்ளவேண்டும்' என்று தான் கேட்பதாகச் சொல்லும்படி, புரோஹிதரை அவர்களிடம் அனுப்பினான். புரோஹிதர் ராஜாவின் சொல்லைக்கேட்டு அவர்களிடஞ்சென்று அவர்களைத் துதிசெய்து அரசன் சொன்னதையெல்லாம் சொன்னபடி வரிசையாகத் தைரியத்துடன் சொல்லத் தொடங்கினர்.

'வரங்கள்பெறத் தகுதியுள்ளவர்களே! வரங்களைக்கொடுக்கத்தக்க பூமிக்கரசனாகிய பாஞ்சாலராஜன் உங்களைத் தெரிந்துகொள்ளவிரும்புகிறான். லக்ஷியத்தையடித்த இந்தப் புருஷனைக்கண்டபிறகு, அந்த அரசன் ஆனந்தத்தின் எல்லையைக் காணவில்லை. நீங்கள்பிறந்த

வம்சபரம்பரையைச்சொல்லுங்கள். பகைவர்களின் சிரங்களில் பாதங்களை ஊன்றுங்கள். இந்த என் உள்ளத்தையும் சுற்றத்தாருடன் கூடிய பாஞ்சாலராஜரின் உள்ளத்தையும் மகிழச்செய்யுங்கள். பாண்டு மஹாராஜர் த்ருபத மஹாராஜாவுக்கு உயிருக்கொப்பான அன்புள்ள நண்பராயிருந்தார். அந்தத் துருபதமஹாராஜாவுக்கு, 'இந்த எனது புத்திரி இப்போது பாண்டுவுக்கு மருமகளாவள்' என்கிற ஆசையிருக்கிறது. சிலாக்கியமான ரூபமுள்ளவர்களே! 'பருத்தும் நீண்டுமிருக்கிற கைகளையுடைய அர்ஜுனன் தர்மப்பிரகாரம் எனது இந்தப்பெண்ணை அடைவானோ?' என்றஇந்தவிருப்பந்தான் துருபதராஜாவின் உள்ளத்தில் எப்போதும் உள்ளது 'அதுவே இப்போது நடந்திருந்தால் இஃது எனது பாக்கியம்; எனக்குப் புகழ்; என்னுடைய புண்ணியம்; எனக்குப்பிரியம்' என்று த்ருபதராஜன் சொல்லுகிறான்" என்றார். இவ்வாறு த்ருபதன் சொன்னதைச் சொல்லி வணக்கத்துடன் அங்கேநின்ற அந்தப்புரோஹிதரைக்கண்டு தர்மபுத்திரர் ஸமீபத்திலிருந்த பீமனைநோக்கி, 'இவருக்கு அர்க்கியபாத்யங்களைக் கொடு. இவர் பூஜ்யரான த்ருபதராஜாவின் புரோஹிதர். இவருக்கு விசேஷமானபூஜை செய்யவேண்டும்' என்று கட்டளையிட்டார். ஜனமேஜய ராஜாவே! உடனே, பீமன் பூஜைசெய்தான். அப்போது அந்தப்பூஜையைச் சந்தோஷத்துடன்பெற்றுக்கொண்டுஸுகமாகஉட்கார்ந்தபுரோஹிதப்பிராம்மணரைநோக்கி, யுதிஷ்டிரர் பின்வருமாறுசொல்லலானார்.

'பாஞ்சாலராஜனால் தர்மத்தைப்பார்த்துப் பெண் கொடுக்கப்பட்டாள்; மனவிருப்பப்படி கொடுக்கப்படவில்லை. அந்த வீரனான துருபதராஜாவினால் அவளுக்குப் பந்தயம் நிச்சயிக்கப்பட்டது. அவள் அதனையே அனுஸரித்தாள். அந்தப்பந்தயத்தில் வருணம் குலம் கோத்திரம் ஒழுக்கங்களைப்பற்றி வ்யவஸ்தை செய்யப்படவில்லை. வில்லைநாணேற்றுவதனாலும் லக்ஷியத்தை அடிப்பதனாலும் அந்தக்கன்னிகை கொடுக்கப்படுவதாகச் சொல்லப்பட்டாள். அவ்வாறாகவே, இந்த மஹாத்மாவினால் இந்தக்கிருஷ்ணை அரசர்கூட்டத்தின் நடுவில் ஜயிக்கப்பட்டாள். இவ்வாறு நடந்திருக்க, ஸோமகவம்சத்து ராஜன் இப்போது துயரமுண்டாகும்படி பின்மனஸ்தாபம் வைத்துக் கொள்வது ஸரியன்று. பூமிக்குத்தலைவனாகிய துருபதமஹாராஜனுடைய விருப்பம் எதுவோ அதுவும் பூர்த்தியாகும். பிராம்மணரே! இந்தராஜபுத்திரி பிரசஸ்தமாக அங்கீகரிக்கத்தக்கவளாகவே ஆனா

ளென்று நான் உறுதியாக நினைக்கிறேன். அந்தவில் குறைந்த சக்தியுள்ளவனால் நாணேற்றப்பட இயலாது. அவ்வாறாகவே அஸ்த்ரேர்ச்சியில்லாதவனாலும் தாழ்ந்த ஜாதியிற் பிறந்தவனாலும் அந்தலக்ஷியம் வீழ்த்தள்ளவும் சாத்தியமில்லை. ஆதலால், பாஞ்சாலராஜன் இனிப் பெண்ணைப்பற்றித் துன்பப்படுவதற்குரியவனல்லன். இவ்வாறன்றி, ஸாமான்ய மனிதனால் அந்த லக்ஷியம் இப்பூமியில் தள்ளப்படுவது அஸாத்யம்' என்றார். இவ்வாறு யுதிஷ்டிரர் சொல்லிக்கொண்டிருக்கும்போதே, பாஞ்சால ராஜனிடமிருந்து மற்றொரு இரண்டாவது மனிதன், அங்கேயே அன்னம்ஸித்தமாயிருப்பதாகத் தெரிவிப்பதற்கு விரைவாக அங்கே வந்தான்.

---

## இருநூற்றிரண்டாவது அத்தியாயம்.

## வைவாஹிக பர்வம். (தொடர்ச்சி.)

**(குந்தியுடன் பாண்டவர்கள் த்ருபதன்வீட்டுக்குச் சென்றதும், த்ருபதன் பரீக்ஷிப்பதற்காகப் பலவித வஸ்துக்களைக் கொண்டுவந்ததும், த்ரௌபதியுடன் குந்தி அந்தப்புரம் சென்றதும், போஜனமானபின்பு பாண்டவர்கள் யுத்தத்துக்குரிய ஆயுதங்கள் நிரம்பின இடத்தில் பிரவேசித்ததும்.)**

த்ருபதராஜனால் அனுப்பப்பட்ட தூதன், 'விவாஹகாரியத்தைப் பற்றி வரனைச் சேர்ந்தவர்களுக்குத் த்ருபதமஹாராஜாவினால் அன்னம் சிறப்பாகச்செய்விக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் எல்லாக்காரியங்களையும் முடித்துக்கொண்டு அதனை அங்கீகரியுங்கள் கிருஷ்ணையும் அங்கே வரட்டும். காலவிளம்பம் செய்யவேண்டாம் பொற்றாமரைப் புஷ்பங்களினால் விசித்திரமானவையும் உயர்ந்த குதிரைகள் பூட்டினவையுமாயிருக்கின்ற அரசர்களுக்குத் தகுதியான ரதங்கள் இருக்கின்றன. நீங்கள் எல்லோரும் இவற்றின் மேலேறிப் பாஞ்சாலராஜாவின் அரண்மனைக்குச் செல்லுங்கள்' என்று சொன்னான். பிறகு, அந்தக் கௌரவஶ்ரேஷ்டர்களனைவரும் அந்தப் புரோஹிதரைய முன்பிவிட்டு அந்த உயர்ந்த தேர்களில் ஏறிச்சென்றனர். குந்தியும் கிருஷ்ணையும் ஒருதேரில் ஏறிச்சென்றனர். ஸ்திரீகளினால் நல்லவாஸனைகளையும் வஸ்திரங்களையும் புஷ்பமாலைகளையும் கொடுக்கப்பெற்றும், விசித்திரமான ஆபரணங்களினால் அலங்கரிக்கப்பெற்றும் இனிய மங்களகானங்

களும் வாத்திய கோஷங்களும் முழங்க, புண்ணியஞ்செய்தவர்களிற் சிறந்த பிராம்மணர்களுடன்கூட ஸந்தோஷமடைந்து ஜ்வலிக்கின்ற மங்களதீபங்களுடன் சென்றனர். யுதிஷ்டிரரால் அவ்வாறு சொல்லப் பட்ட அந்தச் சிரேஷ்டரான பாஞ்சாலராஜன்புரோஹிதர் சென்று யுதிஷ்டிரர் சொன்னதையெல்லாம் சொல்லியபடி அரசனுக்குத்தெரி வித்தார். ஜனமேஜயரே! தர்மராஜர் சொன்ன சொற்களைப் புரோஹி தர்சொல்லக் கேட்டபிறகு,கௌரவஶ்ரேஷ்டர்களைத்தெரிந்துகொள் வதற்காகவே அநேக வகையான திரவியங்களைத் துருபதராஜன்சேர் த்துவைத்தான். அரசரே! துருபதராஜன் பழங்கள், பூமாலைகள், நன் ருக வேலைசெய்யப்பட்ட கவசங்கள், தோல்கள், ஆஸனங்கள், பசுக்கள், கயிறுகள், விதைகள், இன்னும் கிருஷிக்குரிய மற்றவைகள், சிற்ப வேலைக்குரிய ஸாதனங்களானவை, விளையாட்டிற்குரியவையாகிய எல் லாவற்றையும் அங்கே சேர்த்துவைத்தான். பிரகாசமுள்ளகவசங்களும் கேடகங்களும் கத்திகளும் விசித்திரமான சிறந்த குதிரைகளும் தேர்களும் உயர்ந்ததனுஸுகளும்பலவகையம்புகளும் பொன்னுலலங் கரிக்கப்பட்ட சக்தியாயுதங்களும் தடிகளும் ஈட்டிகளும் முஸுண்டி யென்னும் ஆயுதங்களும் கோடாலிகளும் இன்னும் யுத்தத்திற்கு உரியவையாவும் உயர்ந்த ஸாமான்களுள்ள படுக்கைகளும் ஆஸனங் களும் அவ்வாறே வெவ்வேறு விதமானவஸ்திரங்களும் அங்கிருந்தன. குந்தியும், பதிவ்ரதையான கிருஷ்ணையையழைத்துக்கொண்டு துருபத னுடைய அந்தப்புரத்துக்குட் சென்றாள். மங்கையர்கள் மனமகிழ்ச்சி யுடன் கௌரவராஜ பத்னியாகிய அந்தக்குந்தியை எதிர்கொண் டழைத்து மரியாதைசெய்தனர். ஜனமேஜயராஜாவே! ஸிம்மத்தைப் போன்ற பராக்கிரமமும் நடையுமுள்ளவர்களும் மஹா விருஷபங் களைப்போன்ற கண்களையுடையவர்களும் கிருஷ்ணாஜினத்தை உத்த ரீயமாகத் தரித்தவர்களும் தோள்எலும்பு தெரியாதவர்களும் மஹா ஸர்ப்பத்தின் உடல்கள்போல நீண்ட கைகளுள்ளவர்களுமாகிய அந்த வீரபுருஷர்களைக் கண்டு அரசனும் அவனுடைய மந்திரிகளெல்லோ ரும் ராஜபுத்திரர்களும் மித்திரர்களும் வேலைக்காரர்களுமாகிய அங்கு ள்ளவர்களனைவரும் மிகுந்தஸந்தோஷத்தை முழுதும் அடைந்தனர். புருஷஶ்ரேஷ்டர்களாகிய அந்தவீரர்கள் அவ்விடத்தில் பாதபீடங்க ளோடு கூடிய விலைபெற்ற உயர்ந்த ஆஸனங்களில் கூச்சப்படாமலும் ஆச்சரியப்படாமலும் வரிசைப்படி உட்கார்ந்தனர். மிகச்சிறந்த அலங் காரங்களோடுகூடிய வேலைக்காரர்களும் வேலைக்காரிகளும் பரிமாறு கிறவர்களும் பொன் வெள்ளிமயமான பாத்திரங்களில் அரசர்கள்

புஜிக்கத்தகுந்த பலவைகைகளான போஜனங்களைக் கொண்டுவந்தனர். அரசரே! அவ்விடத்தில் அந்த வீர புருஷர்கள் தம் தம் விருப்பப்படி புஜித்தபிறகு மிகுந்த ஸந்தோஷமுற்று எல்லாத் திரவியங்களையும் தாண்டி யுத்தத்திற்குரிய ஸாமான்களிற் பிரவேசித்தனர். த்ருபதராஜனுடைய புத்திரர்களும் த்ருபதராஜனும் முக்கியமந்திரிகளனைவரும் வந்து அதனைக்கண்டு ஸந்தோஷமடைந்து சக்ரவர்த்திபுத்திரரான பாண்டவர்களென்று அவர்களை நிச்சயித்தனர்.

---

## இருநூற்றுப்பத்தாவது அத்தியாயம்.

## வை வா ஹி க ப ர் வ ம். (தொடர்ச்சி.)

**(துருபதன் கேட்டபிறகு தர்மபுத்திரர் தாங்கள் பாண்டவர்களென்று சொன்னதும், திரௌபதி ஐவருக்கும் மனைவியாதலைப்பற்றித் துருபதன் ஆக்ஷேபித்ததும், பிறகு வ்யாஸர் வந்ததும்.)**

பிறகு, மிகுந்த தேஜஸுள்ளபாஞ்சாலராஜன், ராஜபுத்திரரான யுதிஷ்டிரரையழைத்து, மிகுந்த தேஜஸுள்ள அவரைப்பிராம்மணருக்குரிய மரியாதையினால் கௌரவித்து, தளராத மனத்துடன் கேட்கத் தொடங்கினன். 'நாங்கள் உங்களை க்ஷத்திரியர்களென்று அல்லது பிராம்மணர்களென்று அல்லது குணங்கள் நிரம்பின வைசியரென்று அல்லது சூத்திரயோனியிற்பிறந்தவரென்று அல்லதுமாயாரூபமெடுத்துக்கொண்டு தேசங்களெல்லாம் திரிகின்ற ஸித்தர்களென்று எவ்வாறறிவோம்? கிருஷ்ணைநிமித்தம் பார்க்க விருப்புற்றவர்களாகத் தேவர்களும் வந்திருக்கின்றனர். எங்களுக்கு நீர் உண்மையைச் சொல்லக்கடவீர். இதுவிஷயத்தில் எங்களுக்குப் பெரிய ஸந்தேகமிருக்கிறது. ஸம்சயத்தின்முடிவிலாவது எங்கள்மனம் திருப்தியடையுமா? வீரரே! எங்களுடைய அதிருஷ்டங்கள் நல்லவையாயிருக்குமா? அந்த ஸத்தியத்தை மனப்பூர்வமாகச் சொல்லும். அரசர்களிடத்தில் ஸத்தியந்தான் பிரகாசிக்கும். யாகஞ்செய்வது குளம்வெட்டுவது முதலியவற்றுடன் பொய்சொல்லாமலிருப்பதும் தர்மம். பொய்மாத்திரம் சொல்லலாகாது. தேவதை போன்றவரே! சத்ருக்களை அடக்குகிறவரே! உமது சொல்லைக்கேட்டபின், சாஸ்திரப்பிரகாரம் விவாஹம் செய்கிறதை நிச்சயமாக ஆரம்பிக்கப்போகிறேன்' என்றான்.

யுதிஷ்டிரர், 'பாஞ்சாலதேசத்தரசரே! நீர் துயரப்படவேண்டாம். உமக்குச் சந்தோஷமுண்டாகட்டும். நீர் விரும்பின மனோரதம் இதோ பலித்திருக்கிறது. ஸந்தேகமில்லை. வேந்தரே! நாங்கள் க்ஷத்திரியர்கள்; மஹாத்மாவான பாண்டுவின் புத்திரர்கள். நான் குந்தியின் ஜ்யேஷ்டபுத்திரனென்றறியும். இவ்விருவரும் பீமஸேனனும் அர்ஜுனனும். வேந்தரே! இவர்களால் உமது புத்திரி ராஜஸபையில் பந்தயத்தில் ஜயிக்கப்பட்டாள். இவர்களிருவரும் இரட்டையர். கிருஷ்ணை யிருக்குமிடத்தில்இருப்பவள் குந்தி. புருஷஶ்ரேஷ்டரே! உமது மனத்துயரம் நீங்கட்டும். நாங்கள் க்ஷத்திரியர்கள். தாமரை ஒருமடுவிலிருந்து மற்றொருமடுவுக்குப் போவதுபோல் உமது இந்தப்பெண் ஒரு ராஜகுலத்திலிருந்து மற்றொரு ராஜகுலத்திற்கே போனாள். மஹாராஜரே! நான் உமக்குச் சொல்வதெல்லாம் உண்மை. நீர் எங்களுக்குப் பூஜ்யரும் முக்கியமான ஆதாரமும் அல்லவா?' என்று சொன்னார். உடனே, ஸந்தோஷமுற்று ஆனந்தக்கண்ணீர் ததும்புகின்ற கண்களோடுகூடிய அந்தத் துருபதராஜன் அந்த யுதிஷ்டிரருக்கு மறுமொழி சொல்லமாட்டாமலிருந்தான். அந்தவீரன் அவ்வானந்தத்தைப் பிரயத்தனத்தினலடக்கிக்கொண்டு யுதிஷ்டிரரை நோக்கி அவருக்குத் தக்கபடி தன் வாக்கினால் மறுமொழிகூறினான். தர்மாத்மாவான த்ருபதன் அந்தப் பாண்டவர்கள் நகரத்திலிருந்து தப்பி ஓடிப்போன வகையைப்பற்றித் தர்மராஜாவை வினவினான். அந்தப் பாண்டவரும் அவனுக்கு எல்லாவற்றையும் முறையாகச்சொன்னார். துருபதராஜன் குந்திபுத்ரருடைய அந்தச் சொல்லைக்கேட்டபோது திருதராஷ்டிர ராஜனை இகழ்ந்தான். பேசுகிறவரிற் சிறந்த துருபதன் அந்தக்குந்தி புத்திரரான யுதிஷ்டிரரைத்தேற்றினான்; ராஜ்யத்திற்காகவும் வாக்குத்தத்தஞ்செய்தான். பிறகு, குந்தியும் கிருஷ்ணையும் பீமஸேனனும் அர்ஜுனனும் நகுலஸஹதேவர்களும் துருபதராஜாவினால் ஏற்படுத்தப்பட்டபெரியமாளிகையில்கிருஹப்ரவேசஞ்செய்தனர். ஜனமேஜயராஜரே! அவர்கள் யஜ்ஞஸேனனால் பூஜிக்கப்பெற்று அங்கேவஸித்தனர். பிறகு, புத்திரர்களுடன்கூட மனக்கலக்கம் தீர்ந்த துருபத மஹாராஜன் தர்மராஜரைப் பார்த்து, 'சிறந்தகைகளையுடைய இந்தக் குருவம்சபுத்திரனை அர்ஜுனன் சுபதினமாகிய இன்றைத்தினம் சாஸ்திரப்பிரகாரம் பாணிக்ரஹணம் செய்துகொள்ளட்டும். எல்லாருக்கும் உற்சாகத்தை உண்டுபண்ணட்டும்' என்று சொன்னான். பிறகு, ராஜாவும் தர்மாத்மாவுமாகிய யுதிஷ்டிரர் அந்த த்ருபதனை

நோக்கி 'அரசரே! எனக்கும் விவாஹம் இனித்தான் செய்யவேண்டும். அதனால், நான் முதலிற் செய்துகொள்ளவேண்டும். அதற்கு நீங்கள் அனுமதி கொடுக்கக்கடவீர்கள்' என்றார்.

அங்ஙனங்கூறக் கேட்ட துருபதன், 'வீரரே! என்பெண்ணைச் சாஸ்திரப்படி நீர் பாணிக்ரஹணஞ்செய்தாலும் செய்யும்; அல்லது, யாருக்கு இஷ்டப்படுகிறீரோ அவருக்குக் கிருஷ்ணையைக் குறிப்பிட்டாலும் குறிப்பிடும்' என்று சொன்னான். யுதிஷ்டிரர், 'ராஜரே! திரௌபதி எங்களனைவர்க்கும் மனைவியாயிருக்கவேண்டும். மனிதர்க்கதிபதியே! என் தாயாரால் முதலிலேயே இவ்வாறு சொல்லப்பட்டது. நானும் விவாகமாகாதவன். பாண்டுபுத்திரனான பீமஸேனனும் விவாகமாகாதவன். ரத்னம் போன்ற இந்த உமது பெண் அர்ஜுனனால் பந்தயத்தில் ஜயிக்கப்பட்டவள். அரசரே! கிடைத்ததைச் சேர்ந்து அனுபவிப்பதென்பது எங்கள் உடன்பாடு. ராஜச்ரேஷ்டரே! அந்த உடன்பாட்டை நாங்கள் விடவிரும்போம். முறைதவறாக விவாஹம் செய்துகொள்ளுவதானால் தர்மத்திற்குப் பெரியகெடுதல் உண்டாகும். தர்மப்பிரகாரமே கிருஷ்ணை எங்களனைவர்க்கும் மனைவியாகலாம். எங்களெல்லாரையும் முறையே அக்கினிசாக்ஷியாக அவள் பாணிக்ரஹணஞ்செய்யட்டும்' என்று சொன்னார். அதற்கு, த்ருபதன், 'கௌரவரே! ஒருவனுக்கு அனேக மனைவிகள் இருப்பது சாஸ்திரத்தில் அங்கீகரிக்கப்பட்டது. ஒருத்திக்கு அனேக புருஷர்கள் கணவர்களாகஇருப்பதை எங்கும்கேள்விப்பட்டதில்லை. நீர்சொல்வது ஒருகாலத்திலும் தர்மமென்று உலகவழக்கத்திலும் வேத சாஸ்திரத்திலும் அங்கீகரிக்கப்படவில்லை. குந்திபுத்ரரே! தர்மந்தெரிந்தவரும் பரிசுத்தருமான நீர் உலகத்திற்கும் வேதத்திற்கும் விரோதமான அதர்மத்தைச் செய்யத்தகுந்தவரல்லீர். ஏன் உமக்கு இப்படிப்பட்ட புத்தி உண்டாயிருக்கிறது?' என்று கேட்க, யுதிஷ்டிரர், 'மஹாராஜரே! தர்மம் நுட்பமானது. அதன் வழியை நாம் அறியோம். முன்னோர்கள் பரம்பரையாகச்சென்ற வழியை நாமனுஸரிக்கிறோம். என் வாக்குப் பொய்சொல்வதில்லை. என் புத்தி அதர்மத்தில் செல்லாது. என் தாயாரும் இவ்வாறே சொல்லுகிறாள். என்மனத்திலிருப்பதும் இதுதான். ஆச்ரமத்தில் ருத்திரரால் அனுப்பப்பட்ட வியாஸரிடமிருந்து நான் கேட்டதும் இதுவே. அரசரே! இது தர்மமென்பது நிச்சயம். இதனைச் சங்கிக்காமல் நீர் நடத்துவீராக. பூமிக்கதிபதியே! இந்த விஷயத்தில் உமக்கு எவ்வகையிலும் ஸந்தேகம் வேண்டாம்'

என்று சொன்னார். துருபதன், 'குந்திபுத்ரரே! நீரும் குந்தியும் எனது மகனான திருஷ்டத்யும்னனும், 'இன்னது செய்யவேண்டும்' என்று சொல்லுங்கள். நாளைக்காலையில் செய்வோம்' என்றான். ஜனமேஜயரே! பிறகு, அவரனைவரும் சேர்ந்து பேசினர். ராஜரே! அப்போது தற்செயலாக வியாஸபகவான் வந்துசேர்ந்தனர்.

---

## இருநூற்றுப்பதினோராவது அத்தியாயம்.

## வைவாஹிகபர்வம். (தொடர்ச்சி.)

**(ஒருத்தி பலருக்கு மனைவியாவதில் உங்களுக்குள்ள ஆக்ஷேபத்தைச் சொல்லுங்களென்று துருபதன்முதலியோர்களை வியாஸர் கேட்கையில் அவரவர் தம் தம் அபிப்பிராயத்தைச் சொன்னதும், வியாஸர் திரௌபதி ஐவர்க்கும் பத்தினியாவது தர்மமென்று சொன்னதும்.)**

பிறகு, அந்தப்பாண்டவர்களனைவரும் மிகுந்தபுகழ்பெற்றபாஞ்சாலதேசத்தரசனும் மஹாத்மாவானகிருஷ்ணத்வைபாயனரை எதிர்சென்றழைத்து அவருக்கு வந்தனஞ்செய்தனர். சிறந்த மனமுள்ள அந்த வியாஸர் அந்தப் பூஜையைப்பெற்றுக்கொண்டு குசலப்ரச்னஞ்செய்து பிறகு பரிசுத்தமான பொன்ஆஸனத்தில் உட்கார்ந்தனர். அந்தப்புருஷச்ரேஷ்டர்களனைவரும்அளவற்றமஹிமைபொருந்தியகிருஷ்ணத்வைபாயனரால் அனுமதிகொடுக்கப்பெற்று விலையுயர்ந்தஆஸனங்களிலிருந்தனர். ஜனமேஜயராஜரே! பிறகு, சற்றுநேரம் பொறுத்துத் துருபதன் திரௌபதிக்காக அந்த மஹாத்மாவினிடம் இன்சொற்சொல்லி, 'ஒருத்தி அநேகர்களுக்கு எவ்வாறு பாரியையாகலாம்? தர்மம் எவ்வாறு பரிசுத்தமாயிருக்கும்? பகவானாகியநீங்கள் இவற்றையெல்லாம் உள்ளதுள்ளபடி எனக்குச் சொல்லக்கடவீர்கள்' என்று கேட்டான். வியாஸர், 'லோகத்திற்கும்வேதத்திற்கும்விரோதமானதும் நிச்சயம் பெறாததுமான இந்தத் தர்மத்தின்விஷயத்தில்யார்யாருக்கு என்ன என்ன அபிப்பிராயமோ அவற்றையெல்லாம் அவரவரிடம் கேட்கவிரும்புகிறேன்' என்றார். த்ருபதன், 'இஃது உலகத்திற்கும் வேதத்திற்கும் விரோதமானதினால் இஃது அதர்மமென்பது என்கரு

த்து. பிராம்மணோத்தமரே! ஒருத்தி அனேகர்களுக்குப் பத்தினியாவது இல்லையே. இந்த நடை முன்னோர்களான மஹாத்மாக்களாலும் அனுஷ்டிக்கப்படவில்லையே. தெரிந்தவர்கள் அதர்மத்தை எவ்வகையிலும் செய்யத்தகாது. ஆதலால், இந்த விவாஹகாரியத்தைப்பற்றிய நிச்சயத்தை நான் செய்யவில்லை. இந்த ஆசாரம் எந்தக் காலத்திலும் ஸந்தேகிக்கப்பட்டதாகவே எனக்குத் தோன்றுகிறது' என்று சொன்னான். த்ருஷ்டத்யும்னன், 'பிராம்மணஸ்ரேஷ்டரே! தபோதனரே! பிரம்மஜ்ஞானியே! நன்னடக்கையிலிருக்கின்ற ஜ்யேஷ்டஸஹோதரன் இளையவன்பாரியையிடம் எவ்வாறு சேரலாம்? தர்மம் நுட்பமானதனால் அதன் முடிவை நாங்கள் எவ்வகையிலும் அறியமாட்டோம் பிராம்மணரே! அதர்மமென்றாவது தர்மமென்றாவது தீர்மானஞ் செய்வதற்கு எங்களைப்போன்றவர்களால் முடியாது. அதனால், கிருஷ்ணை ஐவருக்கும் பாரியையாகலாமென்பதை நாங்கள் எவ்வகையிலும் ஒப்பவில்லை' என்று சொன்னான். யுதிஷ்டிரர் என் வாக்குப் பொய் சொல்வதில்லை. என் புத்தி அதர்மத்தில் செல்லாது. என் மனம் இந்த விஷயத்தில் பிரவர்த்திக்கிறது. ஆதலால், இஃது எவ்வகையிலும் அதர்மமாகாது தர்மிஷ்டர்களிற் சிறந்தவளும் கௌதமகோத்திரத்தவளுமாகிய ஜடிலையென்பவள் ஸப்தரிஷிகளினிடம் இருந்தாளென்று புராணத்திலும் கேள்விப்படுகிறோமல்லவா? அவ்வாறே; ரிஷிபுத்திரியான * வார்க்ஷியென்பவள் தவங்களினால் மனத்தூய்மையையடைந்த பிரசேதஸுகள் என்று ஒரேபெயருள்ள பத்துச் சகோதரர்களிடம் சேர்ந்திருந்தாள். தர்மம் தெரிந்தவர்களுளெல்லாம் உத்தமரே! பெரியோருடைய சொல் தர்மத்துக்கு விலக்காயிராதென்று சொல்லுகின்றனர். பெரியோரெல்லாரிலும் மாதா முதன்மையான பெரியவள். அவள், 'பிக்ஷையைப்போலப் புஜியுங்கள்' என்றசொல்லை உரைத்தாள். பிராம்மணோத்தமரே! அதனால், இதனைச் சிறந்த தர்மமென்று நான் நினைக்கிறேன்' என்று சொன்னார்.

அதன்மேல், குந்தி, 'தர்மானுஷ்டானம் தவறாத யுதிஷ்டிரன் சொல்லுகிறபடிதான் இது நடந்தது. 'பிராதாக்களுடன்சேர்ந்து புஜிக்கக்கடவாய்' என்று அர்ஜுனனுக்குக் கட்டளையிட்டேன். எனக்குப் பொய்யில் மிகுந்த பயமுண்டு. நான் எவ்வாறு பொய்யிலிருந்து விடுபடுவேன்' என்று சொன்னாள். வ்யாஸர், 'சிறந்தவளே! நீ பொய்யி

---

* இவளுக்கு 'மாரிஷா' என்றும் பெயருண்டு.

விருந்து விடுபடுவாய். பாஞ்சாலராஜனே! இந்த எல்லோருக்கும் எக்காலத்துமுள்ள தர்மந்தானென்பதைப்பற்றிச் சொல்லப்போகிறேன். எப்படிச் சாஸ்திரவிஹிதமான தர்மமென்பதையும் எவ்வாறு இந்த எக்காலத்திலும் உள்ளதென்பதையும்பற்றிநான்சொல்வதைக் கேள். யுதிஷ்டிரன் சொல்லுகிறபடியே இது தர்மமென்பதில் ஸம்சயமில்லை'என்றார். ஸமர்த்தரான த்வைபாயனரென்று சொல்லப்பட்ட வ்யாஸபகவான் உடனே எழுந்து துருபதராஜனைக் கையில்பிடித்து அழைத்துக்கொண்டு ராஜகிருஹத்துக்குள் பிரவேசித்தார். பாண்டவர்களும் குந்தியும் துருபதபுத்திரனை த்ருஷ்டத்யும்னனும் அங்கேயே பிரவேசித்தனர். அவர்கள் அந்தத் துருபதன் வியாஸர் இருவருக்கும் காத்திருந்தனர். அப்போது த்வைபாயனர் அந்த மஹாத்மாவான அரசனுக்கு அநேகருக்கு ஒருமனைவிஇருப்பது எவ்வாறு தர்மமாகும் என்பதையும் முன்னர் அந்த ராஜபுத்திரியின் தவத்தினால் ஸந்தோஷமடைந்த தர்மன் முதலிய தேவர்கள், ஐவருக்குப் பத்தினியாயிருப்பதை அவளுக்கு வரமாகக்கொடுத்ததையும் சொல்லத் தொடங்கினார்.

---

## இருநூற்றுப்பன்னிரண்டாவது அத்தியாயம்.

## வைவாஹிகபர்வம். (தொடர்ச்சி.)

**(வியாஸர்இந்திரஸேனையென்கிற நாளாயனியின் உபாக்கியானத்தைச்சொல்ல ஆரம்பித்து, அவள் வயோதிகரும் குஷ்டரோகியுமான மௌத்கல்யரை ஆராதித்து, ஸந்தோஷமடைந்த அவர் அவளுடைய வேண்டுகோளினால் ஐந்துரூபத்துடன் அவளுடன்ரமித்ததையும் அவளே கிருஷ்ணையாகப் பிறந்திருக்கிறாளென்பதையும் சொல்லியது.)**

ராஜனே! 'என் பெண் ஐவருக்கு மனைவியா?' என்று உனக்கு மனஸ்தாபம் வேண்டாம். யாககாலத்திலேயே இவளுடையதாயார், 'என்பெண் ஐவருக்குப் பாரியையாயிருக்கவேண்டும்' என்று வேண்டிக்கொண்டாள். தர்மந் தவறாதவர்களாகிய அந்த யாஜோபயாஜர்கள் தங்கள்தவத்தினால் இவளுக்கு ஐந்துபதிகள் இருக்கச் செய்தனர். அதனால், கிருஷ்ணை பாண்டுபுத்திரர்கள் ஐவர்களாலும் பாரியையாக அடையப்பட்டாள். உன்குலம் மகிழ்ந்தடைவது. ராஜனே! உன்னைவிட மேலானவன் இவ்வுலகத்தில் வேறொருவனும்

இல்லை. எல்லா எதிரிகளுக்கும் வெல்லக் கூடாதவனாயிருக்கிறாய். இவள் ஐவருக்குப் பத்தினியாயிருக்கும்படி நேர்ந்ததற்கு மற்றொரு காரணத்தையும் நான் சொல்லுகிறேன். நீ ஆயாசத்தை விட்டுக் கேள். இவள் பூர்வஜன்மத்தில் நாளாயனியென்பவள்; சிறந்த ரூபமுள்ள இவள், கிழவரும் குஷ்டரோகியுமான மௌத்கல்யரென்ற பெயர்பெற்ற கணவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தாள். தோலும் எலும்புமாயிருப்பவரும், கொடுமையும் நிலையில்லாத சித்தமும் பொறாமையும் கடுங்கோபமுமுள்ளவரும், வாயில் துர்க்கந்தமுள்ளவரும், மடிப்புக்களும் நரைமயிருமுள்ள கிழவரும், அருவருக்கத்தக்க ரூபமுள்ளவரும், நகங்களும் தோல்களும் உதிர்கின்றவருமாகிய அம்மஹாமுனிவருடைய எச்சிலைப் புஜித்துக்கொண்டு அவருக்கு இவள் பணிவிடைசெய்தாள். பிறகு, ஒருகாலத்தில் அவர் போஜனஞ்செய்துகொண்டிருக்கையில் அவருடைய கட்டைவிரல் உதிர்ந்தது. அதனை அன்னத்திலிருந்து எடுத்துவிட்டு அந்த அன்னத்தை அருவருப்பின்றிப் புஜித்தாள். அப்போது அவளிடத்தில் அன்புகூர்ந்து விருப்பத்துடன் ஸம்பாஷணைசெய்த அம்முனிவரால், 'வரம் கேள்' என்று பலமுறை சொல்லப்பட்ட பிறகு, அவரை அவள் வரங்கேட்டனள். மௌத்கல்யர், 'நான் கிழவனுமல்லேன்; கொடியவனுமல்லேன்; பொறாமைக்காரனுமல்லேன்; கோபிஷ்டனுமல்லேன்; வாயில் துர்நாற்றமுள்ளவனுமல்லேன்; இளைத்தவனுமல்லேன்; நிலையில்லாத சித்தமுள்ளவனுமல்லேன். சிறந்தவளே! உன்னை நான் எவ்வாறு இன்புறச் செய்யவேண்டும்? எவ்வாறு வைத்துக்கொள்ளவேண்டும்? நீ உள்ளத்தில் விரும்புகிறதை உள்ளபடி எனக்குச்சொல்' என்று கேட்டார். உயர்ந்தசெய்கையுள்ளவரும் எல்லாவிருப்பங்களையும் நிறைவேற்றுகிறவருமாகிய அந்தத் தன்பர்த்தா அனுக்ரஹத்துடன் வரங்கொடுப்பதாகச் சொல்லும்போது குற்றமற்ற ரூபமுள்ள அந்த நாளாயனி, 'நினைத்தற்கரிய பிரபாவமுள்ளவரே! உலகங்களிலெல்லாம் புகழ்பெற்ற பகவானாகிய நீர் உமது சரீரத்தை ஐந்து பாகமாகச் செய்துகொண்டும் மறுபடியும் ஒரு ரூபத்தையெடுத்துக் கொண்டும் என்னிடம் ரமிக்கக்கடவீர்' என்று அவருக்கு மறுமொழி சொன்னாள். சிறந்த ஞானமுள்ளவரும் தவத்திற்சிறந்தவருமான அம்மஹரிஷி, 'அப்படியே ஆகட்டும்' என்று அவளுக்குச் சொல்லினார். அந்த மௌத்கல்யர், ஐந்துசரீரங்களை எடுத்துக்கொண்டு, அழகிய கூந்தல் நுனியுள்ளவளும் இனிய நகையுள்ளவளுமாகிய அந்த நாளாயனியுடன் எல்லாப்பிரதேசங்களிலும் ரமித்துக்கொண்டிருந்தார். மறுபடியும், அந்த மௌத்கல்யமுனி மஹரிஷி

களினால் விசேஷமாகப் பூஜிக்கப்பெற்று விரும்பத்தக்க சரீரத்தோடு ஆச்ரமங்களில் தமது விருப்பப்படி சஞ்சரித்தார். அவர் ஸ்வர்க்கத்திற்குப் போனபோது அந்தத் தேவலோகத்தில் அமிர்தபானஞ்செய்து கொண்டு தேவரிஷிகளுடன்கூட ஸஞ்சரித்தனர்.

இந்திரகிருஹத்திலும் இந்திராணியினால் பூஜிக்கப்பெற்று மஹேந்திரஸேனை என்று பெயருள்ள அந்நாளாயனியுடன் ரமிக்க விருப்பத்துடன் ஸஞ்சரித்தார். ஸமர்த்தரான அந்த மௌத்கல்யபகவான் ஸூர்யனுடைய திவ்யரதத்திலேறி மறுபடியும் மஹாமேருவைச் சேர்ந்து அதில் வஸிக்கக்கருதினர். அந்தத் தம்பதனர் அந்நாளாயனியுடன்கூட ஆகாசகங்கையில் ஸ்நானஞ்செய்து சந்திரகிரணங்களினிடையில் காற்றைப்போல் வாஸஞ்செய்தார். மறுபடியும் அம்மஹரிஷி தம்யோகசக்தியினால் மலைஉருவம் எடுத்தார். அந்நாளாயனியும் அவர் பிரபாவத்தினால் அம்மலைநடுவில் மஹாநதியானாள். பகவானாகிய மௌத்கல்யமுனிவர் மலர்கள் நிரம்பின மரமாக ஆனபோது நாளாயனியும் அந்தமரத்தைச் சுற்றிக்கொண்ட கொடியானாள். எவ்வெவற்றின்உருவத்தை அவரடைந்தாரோ அவ்வவற்றிற்கொத்த உருவத்தை அவளும் அடைந்தாள். பர்த்தாவுடன்கூட மானிடதேகத்தோடும் ஸஞ்சரித்தாள். அதனால், அவருக்கும்அவளுக்கும் அன்பு ஸமமாகவே விருத்தியாயிற்று. அவளும் அவரிடம் அவ்வாறிருந்தாள். அந்தப் பகவானை ரிஷிச்ரேஷ்டரும் அவளிடத்தில் அனுக்ரஹத்தினால் அவ்வாறிருந்தார். அந்தச் சிறந்தபெண்ணும் பாக்யவசத்தினால் அவரிடம் விசேஷமாக ரமித்தாள். அவரும் தமது தவத்தினாலும் யோகசக்தியினாலும் அவளிடம் ரமித்தார். அவள் முதலில் எப்போதும் அவ்வாறாக ஐந்துபுருஷர்களோடு கூடியவளாயிருந்து, பிறகு, ஒரு பதியை அடைந்து அருந்ததியைப்போலவும் ஸீதையைப்போலவும் சிறந்த பதிவ்ரதையாகப் புகழ்பெற்றிருந்தாள். அவள் தன் தாயாகிய * தமயந்தியைப்பார்க்கிலும் அதிகமான மேன்மையைப்பெற்றாள். மஹாராஜரே! இஃது உண்மை. உனது புத்தி வேறுபடவேண்டாம். அரசனே! அந்த நாளாயனியே ஏதோ ஒருவிதிபலத்தினால் ஒளியும் அழகுமுள்ள உனது பெண்ணான கிருஷ்ணையாக யாகவேதிகையிற் பிறந்திருக்கிறாள். அந்த மௌத்கல்யமுனிவரிடம் பற்றுவைத்த அவள் மனம் ஒருகாலத்தும் சலித்ததில்லை. அந்தப் பிராம்மணோத்தமரிடம் அவள் மனம் அவ்வாறு பற்றியிருந்தது' என்றார்.

---

* இதனால் நளனுடைய பெண்ணே நாளாயனி யென்று தெரிகிறது.

## இருநூற்றுப்பதின்மூன்றுவது அத்தியாயம்.

## வைவாஹிகபர்வம். (தொடர்ச்சி.)



('நாளாயனி எனக்கு எவ்வாறு பெண்ணானள்' என்றுகேட்டத்ருபதனுக்கு வியாஸர், மௌத்கல்யர் நாளாயனி போகத்தில்திருப்தியடையாதிருந்ததைக்கண்டு, 'ஐந்து புருஷர்களை அடைவாய்' என்று சபித்ததையும் அவள் ருத்திரரைக்குறித்துத்தவஞ்செய்து பிரஸன்னரான ருத்திரரிடத்தில் ஐந்துமுறை 'பதியைக்கொடும்' என்று கேட்டதினால் அவர் 'ஐந்துபதிகளை அடுத்தஜன்மத்தில்அடைவாய்' என்றும், 'நீ யுவதியாயிருப்பாய்' என்றும்வரங்கொடுத்து, 'நீ கங்காதீர்த்தத்திலிருக்கையில்வரும் இந்திரனையழைத்துவா' என்று கட்டளையிட்டதையும்சொல்லியது.)

துருபதன், 'வேதம் தெரிந்தவர் எல்லாரினும் சிறந்த பிராம்மணரே! புண்ணியவதியான நாளாயனி என்யாகத்தில் கிருஷ்ணையாக ஜனித்ததற்குக் காரணம்யாது? அதனைச்சொல்லுக' என்றுகேட்க, வியாஸர் சொல்லலானார்.

'ராஜனே! இவளுக்கு ருத்திரரால் எவ்வாறு வரன்கொடுக்கப்பட்டதென்பதையும், புகழ்பெற்ற இவள் உன் வீட்டில் எதற்காகப் பிறந்தாளென்பதையும் கேள். ஆ! ஆ! கிருஷ்ணையினுடைய முன்ஜன்மசரித்திரத்தை உனக்குச் சொல்லப்போகிறேன். முன்ஜன்மத்தில் இந்திரஸேனையென்றுபுகழ்பெற்ற பாக்யவதியான நாளாயனி மௌத்கல்யரென்னும் பர்த்தாவையடைந்து களிப்பின்றிச் சஞ்சரித்தாள். வேந்தனே! மௌத்கல்யரிஷிக்கும் அவளுடன்கூடி விளையாடிக்கொண்டிருக்கையில், அநேக வருஷகாலம் ஒரு நொடிபோலக் கடந்துபோயிற்று. பிறகு, ஒருகால் அந்தத் தர்மாத்மா காமபோகங்களிற் சலிப்புற்று வைராக்கியமடைந்தார். உயர்ந்ததான மோக்ஷதர்மத்தை விரும்பிப் பிரம்மத்தியானத்தைக் கடைப்பிடித்தவராயினர். அந்தப் பிராம்மணர் அந்த நாளாயனியை விட்டுவிட்டார். அவள் அப்போது பூமியில்விழுந்தாள். ராஜஸ்ரேஷ்டனே! மௌத்கல்யர் எப்போதும் தவத்தினால் பரிசுத்தமானவர். அப்போது, நாளாயனி, 'பகவானே!

என்மீது அருள்செய்யக்கடவீர். என்னை நீர் விடத்தகாது. பிரம்ம ரிஷியே! இதுவரையில் விரும்பினவற்றை அனுபவித்ததினால் போகங்களில் திருப்திபெறாதவளாயிருக்கிறேன்' என்று கேட்க, மௌத்கல்யர், 'நீ அச்சமில்லாமல் பேசத்தகாததை என்னிடம்பேசி என்தவத்திற்கு இடையூறு செய்கிறாயாதலின், நான் சொல்வதைக்கேள். நீ மனுஷ்ய லோகத்தில் மஹாத்மாவான த்ருபதனென்னும் பாஞ்சால தேசத்தரசன் பெண்ணென்று புகழ்பெற்ற ராஜபுத்திரியாயிருப்பாயாக. அந்த ஜன்மத்தில் உனக்குப் புகழ்பெற்ற ஐந்து கணவர்கள் இருப்பார்கள். அழகான உருவங்களுடைய அவர்களுடன் வெகுகாலம் இன்பத்தையடைவாய்' என்று சொன்னார்.

புகழ்பெற்ற அந்த நாளாயனி இவ்வாறு சபிக்கப்பட்டுத் துயரத்துடன் வனத்திற்சென்றாள். அப்பொழுது காமஸுகங்களில் திருப்தியடையாமையால் தேவதேவரான சங்கரரைக்குறித்துத் தவஞ்செய்தாள் விருப்பங்களைவிட்டும் காற்றைப் புசித்தும் உணவையொழித்தும் சூரியனைப்பார்த்துக்கொண்டு பஞ்சாக்னிமத்தியினின்று தவம் புரிந்தாள். பசுபதியும் ஸர்வலோகங்களுக்கும் ஈசுவரரும் பிரபுவுமாகிய சங்கரர் அவளுடைய கடுந்தவத்தினால் ஸந்தோஷமடைந்து, உடனே,'புண்ணியவதியே! உனக்கு அடுத்த ஜன்மம் வரப்போகிறது. சிறந்த பெண்ணைப் பிறக்கப்போகிறாய் எல்லாரும் தேவேந்திரனுக்கொப்பான தேகமுள்ளவர்களும் தேவேந்திரனுக்கொப்பான பராக்கிரமமுள்ளவர்களுமான புகழ்பெற்ற ஐந்துபர்த்தாக்கள் அந்த ஜன்மத்தில் உனக்கு வரப்போகின்றனர். நீ அவர்களிடமிருந்து பெரிய *தேவகாரியத்தை செய்யப்போகிறாய்' என்று வரங்கொடுத்தார். அதைக்கேட்டு நாளாயனி, 'நான் ஒரு கணவனைத்தானே வரமாகக் கேட்டேன். இந்த ஐவர் எதற்கு? ஒருத்திக்கு ஒருகணவன்தானே உண்டு; அநேகர் இல்லையே; அதனை எனக்குச் சொல்லவேண்டும்' என்றுகேட்டாள். மஹேசுவரர், 'புண்ணியவதியே! நீ, 'பதியைக் கொடும்' என்று திரும்பத்திரும்ப ஐந்துமுறை என்னைக்கேட்டாய். உனக்கு ஐந்துபதிகளும் ஸுகத்தைத் தருகிறவர்களாயிருப்பார்கள்' என்றார். நாளாயனி, 'பெண்களுக்கு ஒருகணவனிருப்பதுதான் தர்மம் என்பது பூர்வகாலத்திலேயே விதிக்கப்பட்டுள்ளது. புருஷனுக்குமட்டும் அநேகமனைவிகளிருப்பது தர்மம்; அஃது அநேகரால் அனுஷ்டிக்கப்பட்டும் வருகிறது ஒருத்தி ஒரு பர்த்தாவுக்கே எப்

*பூபாரத்தை யொழிப்பது.

போதும் துணையாகத் தர்மானுஷ்டானஞ்செய்யவேண்டியவளென்று சொல்லப்படுகிறது. இதுதான் முதலிலேயே ரிஷிகளினால் விதிக்கப்பட்ட ஸ்திரீ தர்மம். பெண்களுக்கு இளமைப்பருவமுள்ள ஒரு கணவனிருப்பதுதான் உலகநடைக்கும் உரியது. ஆபத்காலங்களில் (ஸந்ததியில்லாதபோது) கணவன் கட்டளையின்மேல் பெண்ணுக்கு இரண்டாவது புருஷனும் சொல்லப்பட்டிருக்கிறான். மூன்றாமவனைச் சேரலாகாது. அப்படிச் சேருகிறவளுக்குப் பிராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது. நாலாமவனைச் சேர்ந்தால் ஸ்திரீ பதிதையாகிறாள். ஐந்தாமவனைச் சேர்ந்தால் விபசாரிணியாவாள். தர்மத்தின் மார்க்கம் இவ்வாறிருக்கையில் அநேக புருஷர்களுக்குப் பாரியையாயிருப்பதை நான் விரும்பவில்லை. உலகத்தில் அநுஷ்டிக்கப்படாத அந்த அதர்மத்திலிருந்து நான் எவ்வாறு விடுபடுவேன்?' என்று கேட்டாள்.

மஹேச்வரர், 'முன்பு பெண்கள் கட்டில்லாமலேயிருந்தனர்; ருதுகாலங்களில் அவர்கள் சுத்தையாகின்றனர். நீ, 'பதியைக்கொடும்' என்று ஒருமுறை சொல்லவில்லை. ஆதலால், உனக்கு அதர்மம்வராது' என்று சொன்னார். அதைக்கேட்டு நாளாயனி, 'எனக்கு ஐந்துபதிகள் உண்டாயின் அவர்களுடன் தனித்தனியே ரமிப்பதைவிரும்புகிறேன். அவர்களில் ஒவ்வொருவரோடும் சேர்க்கை நேரிடும்போதெல்லாம் எனக்கு இளமைப்பருவமே இருக்கவேண்டும். பூர்வஜன்மத்திலும்பதி சுச்ரூஷை செய்ததனாலேயே பெருந்தவப்பயன் எனக்குக்கிடைத்தது. போகத்திலுள்ள விருப்பம்மட்டும் எனக்குத் தீரவில்லை. அந்தப் போகஸுகமும் எனக்கு உண்டாகவேண்டும்' என்று கேட்டாள். சங்கரர், 'புண்ணியவதியே! காமஸுகமும் தவப்பயனும் ஒன்றோடொன்று சேர்வதில்லை. நீ மாத்திரம் காமஸுகங்களையும் தவப்பயனையும் யோகமஹிமையையும் அடைவாய். அடுத்த மற்றொரு ஜன்மத்தில் அழகும் பாக்கியமும் குணங்களும் பொருந்தினவளாக ஐந்து புருஷருடன் சேர்ந்து இளமையடைந்து மஹாபாக்கியவதியாயிருப்பாய். சிறந்தவளே! பரிசுத்தமான புன்னகையுள்ளவளே! செல். நீ கங்காஜலத்திலிருக்கும்போது எந்தப்புருஷனைப்பார்க்கிறாயோ அந்தப் புருஷனாகிய இந்திரனை என்னிடத்துக்கு அழைத்துவா' என்றனர். உலகத்தையே உருவமாகக்கொண்ட ஈசுவரரால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த நாளாயனி, அந்தருத்திரரைப் பிரதக்ஷிணஞ்செய்து புண்ணியமானதும் ஸ்வர்க்க மத்திய பாதாளமென்னும் மூன்று வழிகளிலும் செல்வதுமாகிய கங்காநதியைக் குறித்துச்சென்றாள்.

---

## இருநூற்றுப்பதினொன்காவது அத்தியாயம்.

## வைவாஹிக பர்வம். (தொடர்ச்சி.)



(நைமிசாரணியத்தில் தேவர்கள் செய்தயாகத்தில் யமன் ஸாமித்ரம்என்னும் பசுவைக்கொல்லும் கிரியையில் அமர்ந்ததனால் உலகத்தில்பிராணிகள் அதிகமானதும் அவைகளை ஸம்ஹரிப்பதற்காகத் தேவர்கள் பிரமதேவரிடம் சென்றதும், இந்திரன், பிரமதேவருடைய கட்டளைப்படி நைமிசாரண்யஞ் சென்றதும், கங்கையில்வந்த தாமரைப்புஷ்பத்தை எடுக்கச்செல்லுகையில் அந்த அழுதுகொண்டிருந்த பெண்ணைக்கண்டதும், அவள் பின்சென்ற அவன் பர்வததுறையில் தனக்கு முன்வந்திருந்த நாலு இந்திரரைக்கண்டதும், பலராமன் கேசவன் திரௌபதி இவர்களுடைய உத்பத்தியும், வியாஸரால் ஞானக்கண்ணையடைந்த துருபதன் பாண்டவர்கள் த்ரௌபதி இவர்களுடைய பழைய ரூபத்தைக்கண்டதும், திரௌபதியின் அடுத்த முன் ஜன்மத்தின் வரலாறும்.)

அரசரே! முற்காலத்தில் நைமிசாரண்யத்தில் தேவர்கள் ஸத்ர யாகஞ்செய்து கொண்டிருந்தனர். அப்போது அந்த யாகத்தில் யமன் (ஸாமித்ரம்) என்னும் பசுவைக் கொல்லும் வேலையைச் செய்தான். அரசரே! அப்போது அந்தயாகத்தில் தீக்ஷை செய்துகொண்டிருந்த யமன் பிரஜைகளில் யாரையும் கொல்லவில்லை. அதனால் அந்தப் பிரஜைகள் காலங்கடந்தும் மரணமடையாமல் மிகுதியாக விருத்தியானார்கள். இந்திரன், சந்திரன், வருணன், குபேரன், ஸாத்யர்கள், ருத்திரர்கள், வஸுக்கள், அசுவினிதேவர்கள் இவர்களும் மற்றுமுள்ள தேவர்களும் உலகத்தைப் படைப்பவராகிய பிரம்மதேவரிருக்குமிடத்திற்குப் போய்ச்சேர்ந்தனர். அப்போது மனிதர்களின் அதிக விருத்தியினாலுண்டானபயத்தினால் உலகங்களுக்கெல்லாம் பிதாவாகிய பிரம்மதேவரைச் சந்தித்து, 'ஐயா! பிரஜாவிருத்தியினால் கலக்கமுற்ற நாங்களனைவரும் ஸுகத்தை விரும்பி உங்களைச் சரணமாக அடைகிறோம்' என்று கூறினர். பிரம்மதேவர், 'நீங்களனைவரும் தேவர்களாயிருக்க உங்களுக்கு மனிதரிடம் பயம் யாது? மனிதர்களிடத்தில் உங்களுக்குப் பயம் வரத்தகாது' என்று சொல்ல, தேவர்கள், 'இறப்பவர் இறக்காதவர்களாகி விட்டார்கள். அதனால், எங்களுக்கும் அவர்களுக்கும் வித்தியாஸம் ஒன்றுமில்லை. விசேஷமில்லாமையால் பயந்து விசேஷத்திற்காக உங்களிடம் வந்

தோம்' என்று சொன்னார்கள். பிரம்மதேவர், 'யமன் ஸத்ரயாகத்திற்காகப்பிரவர்த்தித்திருக்கிறான். அதனாலேதான் இந்த மனிதர்கள் இறப்பதில்லை. காரியத்தில் ஊக்கமுள்ள அந்த வைவஸ்வதன் அந்தக் காரியத்தை முழுதும் நிறைவேற்றினபிறகு, இந்த மனிதர்களுக்கு முடிவுக்காலம் அவசியம்வரும். யமனுடைய தேகாம்சமே பிரிக்கப்பட்டு உங்கள் சக்திகளும்சேர்ந்து அபிவிருத்தி செய்யப்பட்டிருக்கிறது. அந்தச்சரீரந்தான் முடிவில் இம்மனிதர்களின் மரணத்துக்குக் காரணமாகப் போகிறது. அப்போது மனிதர்களுக்குச் சக்தி இராது' என்றுசொன்னார். அப்போது அந்தத் தேவர்கள், முதல் தேவராகிய பிரம்மதேவருடையசொல்லைக்கேட்டுத் தேவர்கள் யாகம்செய்யுமிடத்திற்குச் சென்றனர். மஹாபலசாலிகளான அந்தத் தேவர்கள் சேர்ந்து உட்கார்ந்திருக்கும்போது கங்கையில் ஒரு வெண்டாமரைப்பூவைக் கண்டனர். அவர்கள் அதைக்கண்டு வியப்புற்றனர். அவர்களுக்குள் சூரனான இந்திரன் அவ்விடத்திற்குப் போனான். அவன் அப்போது கங்காதேவி இடைவிடாமல் பிரவாகித்துக்கொண்டிருக்குமிடத்தில் அக்கினிக்கொப்பான ஒளியுள்ள ஒரு பெண்ணைக்கண்டான். அந்தப் பெண் ஜலத்தைவிரும்பிக் கங்கையில் இறங்கி அழுதுகொண்டிருந்தாள். அவளுடைய கண்ணீர்த்துளி அந்த ஜலத்தில் விழுந்தபோதே பொற்றாமரை மலராயிற்று. அப்போது இந்திரன் அந்த ஆச்சரியத்தைக்கண்டு அந்தப் பெண்ணின் அருகிற்சென்று, 'சிறந்தவளே! நீ யார்? எதற்காக அழுகிறாய்? நீ உண்மையாகச்சொல். நான் கேட்க விரும்புகிறேன்' என்று கேட்டான். அந்தப்பெண், 'தேவராஜாவான இந்திரனே! பாக்கியமற்றவளான யான் எதற்காக அழுகிறேனென்பதைப்பற்றி இப்போதே நீ அறிவாய் அரசனே! நான் முன் செல்வேன். நீயும் வா. நான் எதற்காக அழுகிறேனென்பதைக் காண்பாய்' என்று சொன்னாள். அவள் செல்லும்போது இந்திரனும் பின்சென்றான். அவன், சிறந்தமலையில் ஸிம்ஹாஸனம்போட்டு வீற்றிருந்து ஒரு சிறுமியுடன்கூடச் சொக்கட்டான் ஆடிக்கொண்டிருந்த ஓர் அழகான சிறுவனை அருகிற்கண்டான். இந்திரன், சொக்கட்டானாடிக்கொண்டு சிறிதும் கவனிக்காமலிருந்த அந்தச் சிறுவனைக்கண்டு கோபத்துடன், 'ஓ! வித்வானே! இவ்வுலகம் என்வசத்தில் இருப்பதென்றும் இதற்கு நான் ஈசுவரனென்றும் அறியும்' என்று சொன்னான். ஈசுவரர், இந்திரன் கோபிப்பதைக் கண்டு நகைத்தார். அவனை மென்மையாகக் கண்ணெடுத்து நோக்கினார். அவரால் பார்க்கப்

பட்ட தேவராஜன், உடனே அசைவற்றவனுகிக் கட்டைபோல் நின்றான். அவர் போதுமானவரையில் விளையாடினபிறகு, அழுது கொண்டிருந்த அந்தத் தேவகன்னிகையை நோக்கி, 'நீ இவனை நானிருக்குமிடத்திற்குச் சமீபத்திற் கொண்டுவா. இவனுக்கு மறுபடியும் கர்வம் உண்டாகாமலிருக்கவேண்டும்' என்று சொன்னார். பிறகு, இந்திரன் அவளால் தொடப்பட்டவுடன், அங்கங்கள் தளர்ந்து பூமியில் விழுந்தான் உக்கிரமான சக்தியுள்ள பகவான் அவனை நோக்கி, 'இந்திரா! இனி எவ்வகையிலும் இவ்வாறு செய்யாதே. அந்தச் சிறந்த பர்வதத்திற்குத் திரும்பிப்போ. உன்னுடைய பலமும் ஸாமர்த்தியமும் அளவிடக் கூடாதவைதாம் இந்தப் பர்வதத்தின் குகை நடுவில் நுழை. அதில் உன்னைப்போன்றவர்கள் ஸூர்யனைப்போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றனர்' என்றார். அவன் அந்தப் பர்வதத்தினுடைய பெரியகுகையைத் திறந்து தன்னைப்போன்ற ஒளியுள்ள மற்றை நால்வரைக் கண்டான் அவர்களைக்கண்டபின், அவன், 'நானும் இவர்களைப்போல் ஆகாமலிருப்பேனு' என்று நினைத்துத் துயரமுற்றவனானான் பிறகு, தேவரான கிரீசர் கோபத்துடன் கண்களை விழித்து இந்திரனை நோக்கி, 'சதக்ரதுவே! நீ முதலில் சிறுபிள்ளைத்தனமாக என்னை அவமதித்ததனால் இந்தக் குகையுள் புகு' என்று சொன்னார். பிரபுவினால் இவ்வாறு சொல்லப்பட்ட தேவேந்திரன், அவருடைய கோபத்திற்கு மிகப்பயந்து அங்கங்கள் தளர்ந்து, மலைத்தலையில் காற்றினலடிக்கப்பட்ட அரசஇலைபோல் நடுங்கினான். விருஷபவாகனரால் இவ்வாறுசொல்லப்பட்ட இந்திரன் உடனேநடுக்கமுற்று விபர்வருடைய உக்கிரரூபமான ஈசுவரரை நோக்கி, கைகூப்பிக்கொண்டு, 'ஈசுவரரே! இப்போது நீர்தாம் எல்லா உலகங்களுக்கும் முதன்மையானவர்' என்று சொன்னான். உக்ரசக்தியுள்ள ஈசர் நகைத்துக்கொண்டு அவனை நோக்கி, 'இவ்வகையான தன்மையுள்ளவர்கள் இவ்வுலகத்தில் அனுக்ரஹம் பெறுவதற்கு உரியவர்களல்லர். இங்கிருப்பவர்களும் முன்னே உன்னைப்போலவே நடந்தவர்கள். ஆதலால், நீயும் இந்தக் குகையில் பிரவேசித்துக் கிட. இவள் உங்களுக்குப் பாரியை ஆவாள்; ஸந்தேகமில்லை நீங்கள் அனைவரும் மானிட ஜன்மத்தை அடைவீர்களாக. அந்த ஜன்மத்தில் நீங்கள் யாருக்கும் செய்ய முடியாத செய்கையைச் செய்து பகைவர்கள் அனேகர்களை வதஞ்செய்து திவ்யாஸ்திரங்களைக்கொண்டு மானிடர்களோடு யுத்தஞ்செய்து சூரரெல்லாரையும் போரில் வென்று நீங்கள் புண்ணியத்தி

ஞல் முதலில் ஸம்பாதித்த சிறந்த இந்திரலோகத்திற்குத் திரும்ப வும் வருவீர்கள். இவ்வாறு நான் சொன்னவையெல்லாவற்றையும் அனேகப்பிரயோஜனங்களோடு கூடிய மற்றக்காரியங்களையும் நீங்கள் செய்யவேண்டும்" என்றுசொன்னுர்.

பழைய இந்திரர்கள், "துர்லபமான சாபவிமோசனம் மனுஷ்ய லோகத்தில் எங்களுக்கு விதிக்கப்பட்டிருப்பதனுல் நாங்கள் தேவ லோகத்தைவிட்டு மனுஷ்யலோகத்துக்கே செல்வோம். ஆனுல், தர் மன், வாயு, இந்திரன், அசுவினிதேவர்களாகிய தேவர்களை எங்க ளைத் தாயினிடத்தில் கர்ப்பாதானஞ் செய்யக்கடவர்" என்று கேட் டனர். புது இந்திரன் இந்தச்சொல்லைக்கேட்டுமறுபடியும்தேவஶ்ரேஷ் டரான ஈசுவரரைப்பார்த்து, "நான் காரியத்திற்காக என்வீரியத்தி ஞல் எனக்குப்பிறந்த புத்திரனை இவர்களுக்கு ஐந்தாமவனுகக் கொ டுப்பேன்" * என்று சொன்னுன். அந்த ஐந்து இந்திரர்களுள் முத லாமவன் விசுவபுக்; இரண்டாமவன் பூததாமன்; மூன்ருமவன் பராக்ரமசாலியான சிபிச்சக்கரவர்த்தி; நாலாமவன் சாந்தி; †ஐந்தா மவன் தேஜஸ்வி. உக்கிரமான தனுஸையுடையபகவான், தம்முடைய சிறந்த ஸ்வபாவத்தினுல், அவர்கள் விரும்பியபயனைக் கேட்டுக்கொ ண்டபடி கொடுத்தனர். உலகமெல்லாம் விரும்பத்தக்க ராஜலக்ஷ்மியா கிய அந்தப்பெண்ணை மானிடலோகத்தில்அவர்களுக்குப்பாரியையாயி ருக்கக்கட்டளையிட்டார். பிறகு, அந்தஈசுவரர் அவர்களுடன்கூடவே அறியமுடியாதவரும் அளவில்லாதவரும் காரணபூதரும் ஜனனமில்லா தவரும் முற்காலத்திலும் எக்காலத்திலுமிருப்பவரும் எல்லாம்தாமாக இருப்பவரும் அளவற்ற அவதாரரூபங்களெடுப்பவருமாகிய திருமா லிடம் சென்றனர். அவரும் அவையெல்லாவற்றையும் அவ்வாறே நிய மித்தார். பிறகு, அவர்களனைவரும் தேவர்களில் முதன்மையானநரன் என்னுந் தேவதையை இந்திரனுக்கு ஜனிக்கத்தக்க ஐந்தாமவனுன ஜிஷ்ணு என்பவனுக நிச்சயித்துப் புவனியில் ஜனித்தனர். அந்தத் திருமாலானவர் ஒன்று வெண்மையும் மற்றொன்று கருமையுமாகிய இர ண்டு கேசங்களைத் தலையிலிருந்தெடுத்தார். அந்தஇரண்டு கேசங்க ளும் தேவகி ரோகிணியென்னும் இரண்டு யாதவகுலத் ஸ்திரீகளின் கர்ப்பங்களில் பிரவேசித்தன. அந்தத்திருமாலினுடைய அவ்விரண்டு

*நானே நேரில் ஜனிக்கமாட்டேன்.

†இவன்தான் புதிய இந்திரன்.

கேசங்களில் வெண்மையாயிருந்தவொன்று பலராமனாகப்பிறந்தது. இரண்டாவது கறுத்தநிறமாகச் சொல்லப்பட்ட கேசம் கேசவனாகப் பிறந்தது. வடதிசையிலுள்ள அந்தமலையின் குகையில் இந்திரரூபத்துடன் அடைக்கப்பட்டவர்கள் எவரோ அவர்களே வீரர்களான பாண்டவர்களாக இங்கு இருக்கின்றனர். ஸவ்யஸாசி என்னும் பாண்டவன் இந்திரனுடைய அம்சமே. அரசனே! எவர்கள் முன்னர் இந்திரர்களாயிருந்தனரோ அவர்களே இவ்வாறு இந்தப்பாண்டவர்களாக ஜனித்திருக்கின்றனர்; திவ்யரூபமுள்ள இந்தத்ரௌபதி அவர்களுக்குப் பாரியையாயிருக்க முன்னமே கட்டளையிடப்பட்டிருந்த ராஜலக்ஷ்மிதான். தெய்வக்கட்டளையின்றி உன்னுடைய யாகத்துக்காகப் பூமியிலிருந்து பெண்கிளம்புவது எவ்வாறுஉண்டாகும்? இவளுடைய ரூபம் சந்திரனையும் ஸூர்யனையும்போல் ஒளியுள்ளது. இவளுடைய தேகமணம் ஒருகுரோசதூரம் வீசுகிறது. மன்னவனே! அன்பைமுன்னிட்டு உனக்குத் திவ்யதிருஷ்டியைக் கொடுக்கிறேன். ஆச்சரியமான மற்றொருவரத்தையும் கொடுக்கிறேன். புண்ணியமான பழையதேவதேகங்களோடு பாண்டவர்களை நீ காண்பாயாக" என்றார்.

மிகச்சிறந்த செய்கையுடையவரும் பரிசுத்தரும் பிரம்மரிஷியுமாகிய வியாஸர், இவ்வாறு சொல்லித் தமது தவத்தினால் அவ்வரசனுக்குத் திவ்யதிருஷ்டியை அளித்தார். அவ்வரசனும், அவர்களனைவரும் முந்திய தேவதேகங்களோடிருப்பதை உள்ளபடி பார்த்தான். அந்தத் திவ்யதிருஷ்டியினால் பொற்கிரீடங்களையும் பொன்மாலைகளையும் அணிந்தவர்களும் இந்திரனுக்கும் அக்கினிக்கும் ஆதித்யனுக்கும் ஒப்பான ஒளியுள்ளவர்களும் தலைகளில் மாலை சூட்டிக்கொண்டவர்களும் அழகிய தேகங்களுள்ளவர்களும் இளமைப்பருவத்திலிருப்பவர்களும் அகன்ற மார்புகளையுடையவர்களும் பனைமரப் பிரமாணமுள்ளவர்களுமாகிய திவ்யபுருஷர்களைக் கண்டான். அழுக்கில்லாத திவ்யவஸ்திரங்களாலும் நறுமணமுள்ள சிறந்த புஷ்பமாலைகளாலும் மிகவும்விளங்கிக்கொண்டு நேரேவந்தமுக்கண்ணர்களோவஸுக்களோ ருத்திரர்களோ ஆதித்யர்களோஎன்னும்படி எல்லாக்குணங்களும்நிரம்பினவர்களும் பழைய இந்திரர்களுமாகிய அந்த ஸுந்தரபுருஷர்களையும் இந்திரனைப்போன்ற ரூபமுள்ள இந்திரபுத்திரனை அர்ஜுனனையும் பார்த்துத் துருபதராஜன் மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்தான். அந்த அரசர்க்கரசன் அந்தத்தேவமாயை அறிவுக்கெட்டாததென்று

நினைத்துச் சிறந்த அழகுள்ளவளும் சந்திரனும் அக்னியும் நேரே வந்ததுபோலப் பிரகாசிக்கின்றவளுமான அந்தத் தேவலோகத்துப்பெண்ணரசியைப்பார்த்து அழகினாலும் ஒளியினாலும் புகழினாலும் அவள் அவர்களுக்குத் தகுதியான மனைவியென்று மதித்துக் களிப்புற்றான். அவன் அந்த மிக்க ஆச்சரியமான ரூபத்தைக்கண்டு ஸத்யவதிபுத்ரரான வியாஸருடைய பாதங்களைப்பிடித்துக்கொண்டு, "ரிஷிம்ரேஷ்டரே! உம்மிடத்தில் இது புதுமையன்று" என்று சொன்னான்.

வியாஸர் மனமகிழ்ந்து துருபதனைப்பார்த்து, "விவாஹவிஷயத்தில் பூர்வகாலத்து ராஜரிஷிகளின் பூர்வசரித்திரத்தையும் இப்போது நான்சொல்லக்கேள். இப்புவியில் நிதந்துஎன்றுபெயர்பெற்ற ராஜரிஷி ஒருவன் இருந்தான். அவனுக்குப் பூமியையாளத்தக்கவர்களும் சூரர்களும்ஆபத்தைத்தடுப்பவர்களும்வேள்விகள் புரிபவர்களுமாகியஸால்வேயன், சூரஸேனன், ம்ருதஸேனன், திந்துஸாரன், அதிஸாரன் என்று சிறந்த வில்லாளிகளான ஐந்து புத்திரர்கள் இருந்தார்கள். அவர்கள் ஒருவரையொருவர்மீறாதவர்களும்ஒருவர்க்கொருவர் இன்சொற்சொல்லுகிறவர்களும் இனியனசெய்கிறவர்களும் பொறாமையற்றவர்களும் தர்மந்தெரிந்தவர்களும் கடுமையில்லாதவர்களுமாயிருந்தார்கள். சிபியின்புதல்வியாகியபௌமாம்வியென்பவள்நிதந்துவின்புத்திரர்களான இவ்வைந்து ராஜவீரர்களையும் கணவர்களாக ஸ்வயம்வரத்தில் வரித்தாள். அப்போது எல்லாப்பெண்களிலும் சிறந்த பௌமாம்வியானவள் கந்தர்வர்களின் ராகமூர்ச்சனையைப்போலவும் வீணையைப்போலவும் இனிய குரலுள்ளவளாயிருந்தாள் எல்லாக்குணங்களும் நிரம்பினவர்களும் க்ஷத்ரியம்ரேஷ்டர்களும் நிதந்துராஜபுத்ரர்களுமாகிய ஐந்து அரசர்களும் அவளுக்குப் பர்த்தாக்களாயிருந்தனர். அப்படிப்பட்ட அழகும் குணங்களும்பொருந்தின சிறந்த பௌமாம்வியென்னும் சிபியின்புத்திரியொருத்தி அவ்வரசர்களுக்கு மனைவியாயிருந்தாள். ராஜம்ரேஷ்டனே! அவள் அப்போது அந்த நிதந்துபுத்ரர்கள் ஐவர்க்கும் ஐந்து புதல்வர்களை ஐந்து காலங்களில் ஈன்றாள். ஸஹோதரர்களான அந்தப்பௌமாம்வியின் புத்ரர்களுக்குப் பூமியில்ஐந்து பெயர்கள் தனித்தனியேயிருந்ததை வரிசையாகச் சொல்லுகிறேன். ராஜம்ரேஷ்டனே! கேள். இவர்களின் வம்சத்திற்பிறந்தவர்களும் ஸால்வேயர்கள், சூரஸேனர்கள், ம்ருதஸேனர்கள், திந்துஸாரர்கள், அதிஸாரர்கள் என்னும் அரசர்களாகவே இருந்தனர். இப்படிப்பௌமாம்வி அனேகருக்கு ஒரு பாரியையாகப் பூமியில் பெயர்பெற்றிருந்

தாள். துருபதனே! குற்றமற்றவளும் ப்ருஷதவம்சத்துக்கு அலங்காரமானவளும் தேவதாரூபமுள்ளவளுமான கிருஷ்ணையென்னும் இந்தஉன்பெண் பௌமாஸ்வியைப்போலவே ஐவருக்குப்பத்தினியாக விதிக்கப்பட்டவள்.

ஒருதபோவனத்தில் மஹாத்மாவாகியரிஷிகன்னிகையொருத்தி இருந்தாள். அவள் அழகுள்ளகன்னிகையாயிருந்தும், அவளுக்குக் கணவன் கிடைக்கவில்லை. அவள் சங்கரரை நோக்கிக் கடுந்தவஞ்செய்தாள். சங்கரர் அனுக்ரஹம் செய்து பிரத்யக்ஷமாக வந்து, "வரம் கேள்" என்று அவளுக்குச் சொன்னார். இவ்வாறு சொல்லப்பட்ட அந்தக்கன்னிகை வரம்கொடுக்கும் தேவராகிய ஈசுவரரைப்பார்த்து, "எல்லாக்குணங்களும் பொருந்தின கணவனை வேண்டுகிறேன்" என்று பலமுறை சொன்னாள். அந்தத் தேவஸ்ரேஷ்டரான சங்கரர் மனத்தில் அன்புகூர்ந்து, "அன்புள்ளவளே! உனக்கு ஐந்துபதிகள் வருவார்கள்" என்று அவள்கேட்டவரத்தை அவளுக்குக்கொடுத்தார். அவள் அவருடைய அனுக்ரஹத்தை வேண்டி மறுபடியும், "சங்கரரே! நான் குணமுள்ள ஒருபதியை உம்மிடத்திலிருந்து பெறுதற்குரியவள்" என்றுசொன்னாள். தேவதேவராகிய சங்கரர் மனத்தில் அன்புகூர்ந்து மறுபடியும் அவளைப் பார்த்து, "அன்புள்ளவளே! 'பதியைக் கொடும்' என்று நீ என்னைத் திரும்பத்திரும்ப ஐந்துதரம் கேட்டாய். அந்தச்சொல் அவ்வாறுதான் நடக்கும். உனக்கு நன்மையுண்டாகக்கடவது. மற்றொரு ஜன்மம் வரும்போது இவையெல்லாம்உனக்கு நேரிடும்" என்று சொன்னார். துருபதனே! அவள்தான் தேவதாரூபமுள்ள இந்த உன்பெண்ணாகப் பிறந்திருக்கிறாள். குற்றமில்லாதவளும் ப்ருஷதவம்சத்துக்கு அலங்காரமுமாகிய கிருஷ்ணை ஐவருக்கு மனைவியாக விதிக்கப்பட்டிருக்கிறாள். அவளேதான் புவியில் ரூபத்தில் தனக்குநிகரில்லாத நாளாயனியாகப்பிறந்து மௌத்கல்யமுனியைப் பர்த்தாவாக அடைந்து பிறகு சிவனிடம் வரம்பெற்றவள். ராஜஸ்ரேஷ்டனே! இந்தத் தேவரகஸ்யத்தை உனக்குச் சொன்னேன். இது தேவரகஸ்யமாயிருப்பதினாலேதான் யாருக்கும்சொல்லத்தகாது. தேவர்களுடைய ராஜலக்ஷ்மி பாண்டவர்களுக்காகத்தான் உன்மஹாயாகத்திற்பிறந்தாள். நீ கடுந்தவஞ் செய்ததினால் அவள் உன்மகளாக வந்திருக்கிறாள். அழகுள்ளவளும் தேவர்களால் விரும்பப்பட்டவளுமாகிய அந்தத் தேவகன்னிகை, தான்செய்தகருமத்தினால் இந்தலோ

கத்தில் தேவர்களாகிய ஐவருக்கு ஒரேமனைவியாகப் பிரம்மதேவரா லேயே படைக்கப்பட்டிருக்கிறாள். துருபதராஜாவே! இதைக்கேட்ட பிறகு உன்விருப்பத்தைச் செய்யலாம்" என்றார்.

---

## இருநூற்றுப்பதினைந்தாவது அத்தியாயம்.

## வைவாஹிகபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர்முதலியவர்கள் வரிசைப்படி திரௌபதியைப் பாணிக்ரஹணம் செய்தது.)

துருபதன், "மஹரிஷியே! உங்களுடைய இவ்விதமான சொல்லைக் கேளாமல்தான் நான் முதலில் காரியம் ஆரம்பித்தேன். விதியைவிலக்க முடியாது. அதேவிதிதான் இதோ நேர்ந்திருக்கிறது. தெய்வத்தின் முடிவை அவிழ்க்கமுடியாது. * விதியினால் செய்யப்படும் எதுவும் ஒருவனுடைய அந்தக் கர்மாவினால்தான். ஒருவரனுக்காக இவ்விடத்தில் லக்ஷியம் உண்டாக்கப்படவில்லை; அதேவிதி இப்போது வந்துநேர்ந்தது. கிருஷ்ணையானவள் தனக்கு அநேகம் பதிகளைக் கொடுக்கவேண்டுமென்று பகவானை முதலில் கேட்டபடியே அந்தப்பகவானும் அவளுக்கு அதனைவரமாகக்கொடுத்தார். இந்த விஷயத்தில் எதுமுக்கியமோ அஃது அந்த ஈசுவரருக்குத் தானே தெரியும். சங்கரராலேயே இவ்வாறு விதிக்கப்பட்டிருந்தால் தர்மமாயிருந்தாலும் அதர்மமாயிருந்தாலும் அந்தவிஷயத்தில் என்னுடைய தவறுதல் ஒன்றுமில்லை. கிருஷ்ணை இவர்களெல்லாருக்கும் விதிக்கப்பட்டிருப்பதனால் இவர்கள் நிச்சயித்தபடி யதாசாஸ்திரமாக இவளைப் பாணிக்ரஹணஞ் செய்துகொள்ளட்டும்" என்றுசொன்னான்.

வ்யாஸர், "மானிடர்களுக்கு விவாஹத்தில் இது நியாயமாகாது. இவர்களோ தேவர்கள். திரௌபதியும், லக்ஷ்மி முன்செய்த தவத்தினாலுண்டான சங்கரருடைய அநுக்ரஹத்தினால் பாண்டவர்களெவர்க்கும் மனைவியானாள். வேந்தனே! மற்ற ஸ்திரீ புருஷர்களுக்கு மனு சொன்னபடி இது தர்மமாகாது. தெய்வத்தன்மையுள்ளவர்களுக்கு

---

* 'இவ்வுலகில் தன் செய்கையினால் முடிக்கப்படுவது ஒன்றுமில்லை; ஒருவரனுக்காக இவ்விடத்தில் லக்ஷியம் உண்டாக்கப்பட்டது; பழையவிதியே இப்போது வந்துநேர்ந்திருக்கிறது' என்பது, உத்தரதேசபாடம்.

மட்டுமே திரௌபதிக்கும் பாண்டவர்களுக்கும் நடப்பதாகிய விவாஹம் போன்றது சாஸ்திரவிஹிதமாகும்" என்று சொன்னார். உடனே புத்திரர்களுடன் குந்தியும் துருபதபுத்திரனான திருஷ்டத்யும்னனும் எங்கே இருந்தனரோ அந்த இடத்திற்கு அந்த வ்யாஸரும் துருபதனும் வந்தனர். பிறகு, பகவானான கிருஷ்ணத்வைபாயனர் தர்மராஜாவான யுதிஷ்டிரரிடம் வந்து, "பாண்டவர்களுள் மூத்தவனே! சந்திரன் சுபமான * புஷ்யநக்ஷத்திரத்தோடு சேர்ந்திருக்கிற இந்தச்சுபதினத்திலேயே நீ முதலில் கிருஷ்ணையைப் பாணிக்ரஹணஞ்செய்" என்று சொன்னார். தர்மராஜாவுக்கு இவ்வாறு சொன்னபிறகு, பீமன் முதலானவர்களைப்பார்த்து, "புருஷஶ்ரேஷ்டர்களே! முறையே உங்கள் கைகளினால் திரௌபதியின்கையைப் பிடித்துக்கொள்ளுங்கள். குற்றமற்றவர்களே! இவ்வாறாகவே இதெல்லாம் முன்னமே நடந்திருப்பதை நான் கண்டிருக்கிறேன்" என்று கூறினர். பிறகு, யஜ்ஞஸேனராஜா புத்திரர்களுடன்கூட வரனுக்காகக் குறிப்பிடப்பட்ட பற்பல உயர்ந்த பொருள்களை மிகுதியாகச் சேர்ப்பித்தான். மஹானுபாவனான அவன் புத்திரர்களோடும் இனத்தாரோடும்கூட மகிழ்ச்சியுற்றுத் தன் பெண்ணாகிய கிருஷ்ணைக்கு மங்களஸ்நானஞ்செய்வித்து அனேக ரத்னாபரணங்கள் பூட்டி அவளை வருவித்தான். பிறகு, ராஜாவினுடைய மித்திரர்களும் மந்திரிகளும் பிராமணர்களும் பட்டணத்து ஜனங்களும் மிகுந்த ஸந்தோஷத்துடன் விவாஹத்தைப் பார்ப்பதற்குத் தகுதிப்படி வந்துசேர்ந்தனர். பிறகு, மேன்மையான மனிதர்களினால் பிரகாசிப்பதும் மிகுதியான தாமரைகருநெய்தல்முதலிய மாலைகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட வாயிலையுடையதும் பெருஞ்சேனையினாலும் ரத்னவரிசைகளாலும் விசித்திரமுமான துருபதராஜன்மாளிகை பிரகாசமான நக்ஷத்திரங்களோடு கூடிய ஆகாயம்போல் விளங்கியது. பிரபுவான ஜனமேஜயரே! அப்போது அந்த யௌவனப்பருவத்திலிருக்கும் கௌரவராஜபுத்திரர்களனைவரும் மங்களஸ்நானஞ்செய்து மங்களகாரியங்களைச் செய்துகொண்டு குண்டலங்களையும் மற்றஅணிகலங்களையும் அணிந்து விலையுயர்ந்த ஆடைகளையுடுத்துக் கலவைச்சாந்தணிந்து அக்கினிக்கொப்பான தேஜஸை

---

*புஷ்யம் = போஷிப்பது; அதாவது விருத்திகரமானதினம் என்று சொல்லவேண்டும்; ஏனெனில், புஷ்யம் விவாஹத்திக்குரியதன்று என்பது பழைய உரை.

யுடைய புரோஹிதரான தௌம்யருடன்கூட மகிழ்ச்சியடைந்து மஹாவிருஷபங்கள் கொட்டிலிற் புகுவதுபோல் துருபதராஜனுடைய அந்தவிவாஹஸபையில் வரிசையாகப்பிரவேசித்தனர். பிறகு, வேதத்திற்கரைகண்டவரும்மந்திரங்களேயறிந்தவருமாகிய அந்தத்தௌம்யர் அக்கினிஸந்தானஞ்செய்வித்து ஜ்வலித்தஅக்கினியில் மந்திரபூர்வகமாக ஹோமஞ்செய்தார். யுதிஷ்டிரரை அழைத்து அவரைக்கிருஷ்ணையோடுசேர்ப்பித்தார். வேதத்தில் கரைகண்டவரான அந்தத்தௌம்யர் பாணிக்ரஹணஞ்செய்துகொண்ட அந்தக்கிருஷ்ணையுதிஷ்டிரர் இருவரையும்அக்கினியைப்பிரதக்ஷிணம்செய்வித்தார். அந்தராஜாவானயுதிஷ்டிரர், முதலில் தனங்களாலும் பசுக்களாலும் பலவகையானரத்னங்களாலும்பிராம்மணர்களுக்குத்திருப்திசெய்வித்து,தௌம்யர் அக்கினிக்கொப்பான ரிஷிகளுடன்சேர்ந்து சாஸ்திரப்பிரகாரம் அக்கினியில் ஹோமம்செய்தபின் அக்கினியின்எதிரில் திரௌபதியைப்பாணிக்ரஹணம் செய்தார். அப்போது, ஆகாயத்திலிருந்து பூமாரிகள் பெய்தன; மிக்க இனிய மணமுள்ளகாற்று வீசியது. அப்போது மஹானுபாவரும் ராஜ புரோகிதருமான தௌம்யர், ஸபையில் சோபிக்கின்ற அந்த யுதிஷ்டிரரிடம்அனுமதிபெற்றுக்கொண்டும் பிராம்மணர்களெல்லாரையும் துருபதராஜாவின்சுற்றத்தாரையும்சேர்த்துக்கொண்டும், உயர்ந்த ஸ்வபாவமுள்ள அந்தத்துருபதமஹாராஜாவினிடம்மறுபடியும்நடக்க வேண்டிய விஷயத்தைப்பற்றி, "அரசரே! இனி மற்ற ராஜகுமாரர்களும் சாஸ்திரப்படி கன்னிகையைப் பாணிக்ரஹணம் செய்யலாமே" என்றுகேட்டனர். துருபதனும் அந்தப்பிராம்மணரைக்கௌரவித்து, "அப்படியே செய்வியும்" என்று அவருக்குக் கட்டளையிட்டான். ராஜாவும் புரோஹிதரும் அனுமதி கொடுத்ததனால், அந்த ராஜபுத்திரர்கள்மகிழ்ந்தனர். உத்தமமான ரூபத்தையுடையவர்களும் மஹாரதர்களும் கௌரவவம்சத்தைப் பெருகச்செய்கிறவர்களுமாகிய அந்தமற்ற ராஜகுமாரர்களும் ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவராக வரிசைப்படி அந்தச்சிறந்த பெண்ணைப்பாணிக்ரஹணஞ்செய்தனர். அவ்விடத்தில் மனிதர்களில்லாத மற்றொருசிறந்த ஆச்சரியம் நடந்ததைத் தேவரிஷியாகிய நாரதர் சொன்னார். மஹானுபாவையாகிய அந்த அழகிய இடையுள்ளபெண் ஒவ்வொருநாள்கடந்தபிறகும் கன்னிகையாகவே இருந்தனளாம். தன்கணவனுடைய மூத்தஸஹோதரரிடத்தில் கணவனும்மாமனும்என்னும் எண்ணத்தையும், கணவனுக்குக்கடைசித்தம்பியினிடத்தில் கணவனும் மைத்துனனுமென்னும் எண்ணத்தையும்,

இடையிலிருப்பவர்களிடத்தில் கணவன் மாமன் மைத்துனன்என்னும் மூவகை எண்ணத்தையும் வைத்திருந்தனளாம். விவாஹம் நடந்த பிறகு, மஹாரதர்களான பாண்டவர்களுக்குத் துருபதன் அனேக விதமான உயர்ந்த தனங்களையும் சிறந்தபொன்மாலைகள் கட்டினவை யும் பொற்கடிவாளங்கள் போடப்பட்டவையுமான நாலுகுதிரைகள் பூட்டின நூறுரதங்களையும், பொற்கொடிமுடியுள்ள குன்றங்களைப் போன்ற தாமரைப்பூவடிவமாகச்செய்யப்பட்ட பொன் அம்பாரிகள் அமைத்த நூறுயானைகளையும் கொடுத்தான். அவ்வாறே மறுபடியும் மஹானுபாவனான துருபதன் தேவரூபங்களாகக்காணப்படுகின்ற பாண்டவர்கள் ஒவ்வொருவருக்கும் இளமைப்பருவ ஆரம்பத்திலிருப்ப வர்களும் விலையுயர்ந்த ஆடை ஆபரணங்கள் புஷ்பமாலைகள் முதலிய வற்றால் அலங்கரிக்கப்பட்டவர்களுமாகிய நூறுதாதிகளையும் தனங் களையும் ஆடையாபரணங்களையும் அவர்களின் மஹிமைக்குத்தக்க படி அக்கினியின்முன்னிலையிற் கொடுத்தான். அந்தவிவாஹம் நட ந்தபிறகு மஹாபலசாலிகளும் இந்திரனுக் கொப்பானவர்களுமாகிய பாண்டவர்கள் ரத்னங்கள் நிரம்பின அந்த ஐசுவரியத்தைப் பெற்று அந்தப்பாஞ்சால நகரத்திலேயே மகிழ்ந்திருந்தனர்.

---

## இருநூற்றுப்பதினொருவது அத்தியாயம்.

## வை வா ஹி க ப ர் வ ம். (தொடர்ச்சி.)

---

**(குந்தி திரௌபதியை ஆசீர்வதித்ததும், கிருஷ்ணன் அனுப்பிய ஆபரணங்களைப் பாண்டவர்கள்பெற்றுக்கொண்டதும்.)**

பாண்டவர்களுடன் ஸம்பந்தம் பெற்ற துருபதனுக்கு, தேவர்க ளிடத்திலுங்கூட எவ்வகையிலும் சிறிதும் பயமுண்டாகவில்லை. ம ஹாத்மாவான துருபதனுடைய அந்தஸ்திரீகள் குந்தியிடம்சென்று தங்கள் பெயரைச்சொல்லி அவள்பாதங்களைத் தங்கள் சிரங்களினால் அடைந்தனர். கிருஷ்ணையும் பட்டுடுத்து விவாகமங்களங்கள்செய்து கொண்டபின் மாமிக்கு வந்தனம் செய்து கைகூப்பிவணக்கத்துடன் நின்றாள். அழகும் ராஜலக்ஷணங்களும் பொருந்தினவளும் நற்கு ணங்களும் நல்லொழுக்கமுமுள்ளவளும் தன் மருமகளுமான திரௌ பதிக்குக் குந்தி ப்ரேமையினால், "இந்திரனுக்கு இந்திராணிபோல

வும் அக்கினிக்கு ஸ்வாகாதேவிபோலவும் சந்திரனுக்கு ரோஹிணி போலவும் நளனுக்குத் தமயந்திபோலவும் குபேரனுக்குப் பத்ராதேவி போலவும் வஸிஷ்டருக்கு அருந்ததிபோலவும் திருமாலுக்கு ஸ்ரீ தேவிபோலவும் நீ உன் கணவர்களுக்கிருப்பாயாக. அன்புள்ளவளே! தீர்க்காயுஸான வீரர்களைப்பெற்று மிகுந்த ஸுகமடைந்து நல்லபாக்யமுள்ளவளும் ராஜபோகங்கள் நிரம்பினவளும் யாகத்திற்குரியபத்னியும் பதிவ்ரதையுமாக இருக்கக்கடவாய். தேடிவந்த விருந்தினர்களையும் முனிவர்களையும் இளைஞர்களையும் முதியோர்களையும் பெரியோர்களையும் முறைப்படி எப்போதும் ஆதரித்துக் கொண்டே உனக்கு வருஷங்கள் செல்லட்டும். தர்மத்தில் அன்புள்ள நீ ராஜ்யாபிஷேகம் பெறுவாயாக மஹாபலசாலிகளான உன்கணவர்கள் பராக்ரமத்தினால் ஜயித்த பூமிமுழுதையும் அசுவமேதமென்னும் மஹாயாகத்தில்பிராம்மணர்களுக்குத்தானங்கொடுத்துவிடுவாயாக. குணங்கள் நிரம்பினவளே! சுபலக்ஷணங்கள் பொருந்தியவளே! நீ நூறுவருஷகாலம் ஸுகத்திலிருந்துகொண்டு குணங்களில் சிறந்த ரத்னங்களென்றுசொல்லப்பட்ட பொருள்கள் பூமியில் என்ன என்ன உண்டோ அவற்றையெல்லாம் அடைவாயாக" என்றுஆசீர்வதித்து, "மருமகளே! இப்போது பட்டுடுத்தின உன்னைப்பார்த்து எவ்வாறுஸந்தோஷிக்கிறேனோஅவ்வாறே குணவதியான உனக்குப் புத்திரர்கள் பிறந்தபிறகு மறுபடியும் சந்தோஷப்படுவேன்" என்றாள். பாண்டவர்களுக்குவிவாஹஞ் செய்தானபிறகு, ஸ்ரீயப்பதியான கிருஷ்ணபகவான் வைடூரியங்களினாலும் பலவகைரத்னங்களினாலுஞ் செய்யப்பட்ட விசித்ரமான பொன்னாபரணங்களையும், விலையுயர்ந்த பலதேசத்து ஆடைகளையும், தொடுவதற்கு இனிமையானரத்னங்கள்போன்றசால்வைகளையும், தோல்களையும் பலவகைப் பெரிய படுக்கைகளையும், ஆஸனங்களையும், வாகனங்களையும், வைடூரியங்களினாலும் வஜ்ரங்களினாலும் இழைக்கப்பட்ட நூற்றுக்கணக்கான பாத்திரங்களையும் அனுப்பினார். அழகும் இளமையும் விநயமுமுள்ளவர்களும் நல்ல அலங்காரங்களுள்ளவர்களும் நல்ல அலங்காரங்கள் செய்யத்தெரிந்தவர்களுமாகிய பற்பல தேசத்துப் பணிப்பெண்களையும் கிருஷ்ணபகவான் அனுப்பினார். அறிய முடியாத ஸ்வரூபத்தையுடைய மதுஸூதனர் அவர்களுக்குப் பழகின *பத்ரங்களென்னும் யானைகளையும் நன்றாக அலங்கரிக்கப்பட்ட

*எப்போதும் மதப்பெருக்குள்ள பெரிய யானைகள்.

உயர்ந்த குதிரைகளேயும் பிரகாசிக்கின்ற தங்கப்பட்டங்களினலலங்கரிக்கப்பட்ட தந்தத் தேர்களேயும் கோடிக்கணக்கான பொன்னாணயங்களேயும் அவ்வாறே தங்கக்கட்டிகளேயும் வரிசைகளாக அனுப்பினூர். தர்மராஜாவான யுதிஷ்டிரர் தம்மிடத்தில் கோவிந்தனுடைய பிரீதியை விரும்பினவராக அவற்றையெல்லாம் மிகுந்த ஸந்தோஷத்துடன் பெற்றுக்கொண்டார்.

வைவர்ஷிக பர்வம் முற்றிற்று.

---

## இருநூற்றுப்பதினேழாவது அத்தியாயம்.

# விதுராகமன பர்வம்.

(அரசர்களால் பாண்டவர்களின் விருத்தாந்தத்தைக் கேட்ட மற்றஅரசர்கள் திருதராஷ்டிரன்முதலியவர்களே நிந்திப்பதும், திருதராஷ்டிரபுத்திரர்கள் பாண்டவர்களேப்பற்றி ஆலோசிக்கையில்அவர்களேக்கொல்லவேண்டுமென்று சகுனிசொன்னதும், 'அவர்களேக் கொல்லமுடியாது. ஸமாதானமே செய்துகொள்ளவேண்டும்' என்று ஸோமதத்தபுத்திரன் சொன்னதும்.)

பிறகு, அரசர்களுக்கு நம்பிக்கையுள்ள தூதர்கள், "சிறந்தலக்ஷணங்கள் பொருந்திய திரௌபதி பாண்டவர்களேக் கணவர்களாக அடைந்தாள். எந்த மஹாத்மா அந்தவில்லேயெடுத்து லக்ஷ்யத்தை அறுத்தானே அவன், ஜயிப்பவர்களிற்சிறந்தவனும் பெரியவில்லேயும் அம்பையும்தரித்தவனுமான அர்ஜுனன். அந்த ஸமயத்தில் ஒருவிதமான கலக்கத்தையும் அடையாமல் மத்ரராஜனுன சல்லியனேத் தூக்கிப்போட்டவனும் யுத்தத்தில் வந்தவீரர்களேக் கோபத்துடன் மரத்தினுல் அச்சமுறச் செய்தவனும் அணுகமுடியாத அச்சப்படத்தக்க எதிரிகளின்ஸேனங்கங்களாகிய ரதகஜதுரகபதாதிகளெல்லாவற்றையும் வீழ்த்துபவனுமாகிய அவன் பலவானுன பீமஸேனன். எவர் துரியோதனனேடு யுத்தஞ்செய்கையில் யுத்தத்தில் அவனே அவ்வாறு ஜயித்தாரோ அவர்புண்ணியவானும் சிறந்தபுத்திசாலியும் பாண்டவர்களுள் மூத்தவருமாகிய தர்மபுத்திரர். எவர்கள் துரியோதனனுடைய தம்பிகளுடன் பகைவர்களேப்போல் யுத்தம் செய்தனரோ அவ்விருவரும் நல்லொழுக்கமும் பலபராக்ரமங்களும் நிரம்பின நகுல ஸஹதேவர்கள்" என்னும் செய்தியைக் கொண்டுவந்தார்

கள். பாண்டவர்களை பிராம்மணவேஷம்தரித்துக்கொண்டு அடக்க முற்றிருந்ததைக் கேட்டபிறகு அரசர்கள் வியப்புற்றனர். அரசர்களனைவரும் நகரத்திலுள்ளவர்களும் ஆச்சரியமுற்றவராயினர். புகழ் பெற்றகுந்தி, புத்திரர்களுடன்கூட அரக்குமாளிகையில் எரிந்துபோனாளென்று எல்லாத்தேசத்தவர்களும் அரசர்கள்யாவரும் கேள்விப் பட்டிருந்தனர். அதனால், அவ்வரசர்கள் பாண்டவர்களை மறுபிறப்புப் பிறந்தவர்களென்றே நினைத்தனர். தர்மம், நல்லொழுக்கம், தாயாரின் விருப்பத்தில் ஊக்கமுதலிய இவ்வகைகளான குணங்கள் நிரம்பின பாண்டவர்களைக் கௌரவனான த்ருதராஷ்டிரன் புரோசனனாற் செய் யப்பட்ட மிகக்கொடியசெய்கையினால் அழிக்கக்கருதினதினால் அவனையும் பீஷ்மரையும் இகழ்ந்தனர். பாரதரான ஜனமேஜயரே! அந்த ஸ்வயம்வரம் நடந்தபிறகு, கர்ணனாலும் சகுனியாலும் கலக்கப்பட்ட திருதராஷ்டிரபுத்திரர்களனைவரும் அங்கே மந்திராலோசனை செய் தனர். அதில் சகுனி, "ஒருவகைச்சத்துருவுக்குப் பலத்தைக்குறைக்க வேண்டும்; மற்றொருவனைத் துன்பப்படுத்தவேண்டும். குந்திபுத்திரர் களைமட்டும் எல்லா க்ஷத்திரியர்களும் ஒழித்துவிடவேண்டுமென்பது என் அபிப்பிராயம். அபஜயமடைந்த நீங்களனைவரும் ஒரு நிச்சயத் தையும் செய்யாமல் இவ்வாறே திரும்பிப்போவீர்களாயின் நிச்சய மாக உங்கள்மனம் பின்பு துன்பப்படும். நாம் பாண்டவர்களைப்பிடிப் பதற்கு இதுதான் இடம்; இதுதான் காலம்; இவ்விதம் செய்யாமற் போவீர்களாயின் உலகம் நகைக்கத்தக்கவர்களாவீர்கள். இவர்கள் எந்த அரசனை அடுத்து வாஸஞ்செய்ய விரும்புகின்றனரோ அந் தத்துருபதன் பராக்ரமமும் ஸைனியமும் குறைந்த அரசனென்று நான் நினைக்கிறேன். சிறந்தபலமுள்ள துருபதனோடு ஒற்றுமையை அடைந்திருக்கும்பராக்கிரமசாலியும் புருஷஶ்ரேஷ்டனும்சேதிதேசத் தரசனுமான சிசுபாலனும் யாதவவீரர்களும் இவர்கள் ஜீவித்திருப்ப தை அறியாமலிருக்கையிலேதான் நமக்குப் பராக்கிரமகாலம். ராஜா வே! அவர்கள் இனி வெல்லக்கூடாதவர்களாக ஆகிவிடுவார்கள்; ஸந் தேகமில்லை. அரசர்களனைவரும் பாண்டவர்களென்ற நிச்சயத்தை எதுவரையில் அடையாமலிருக்கின்றனரோ அதற்குள்ளேயே பாண் டவர்களை வதஞ்செய்யமுயல்வோம்; அரவின்வாய்போலப் பயங்கர மான அரக்குமாளிகையிலிருந்து விடுபட்ட அவர்கள் இப்போது மறு படியும் விடப்படுவாராயின் நமக்குப் பெரியபயம் வந்துவிட்டதா கும்; யாதவர்முதலியஅரசர்களும் இங்குவந்துசேர்ந்து இந்தப்பாண்

டவர்களும் இங்கேயே நீண்டகாலம் ஊன்றி வாஸஞ்செய்வார்களாயின் இவர்களுக்கிடையில் நாம் நிற்பது இரண்டுமஹாகஜங்களின் நடுவிலிருப்பதுபோல் அஸாத்தியமாகும்; பலவான்களிற்சிறந்தவர்களே! பாண்டவர்களால் ஸம்பாதிக்கப்பட்ட ஸைனியங்கள் பறவைகள்போல் வந்து நம்முடையஸேனையில் விழுமுன்னே அவர்களை வதஞ்செய்யுங்கள். இந்நகரத்தை எல்லாரும் சேர்ந்து எதிர்த்துக்கெடுக்கவேண்டும். புருஷஶ்ரேஷ்டனான துரியோதனனே! இதுதான் எனது அபிப்பிராயம். காலமும் நேர்ந்திருக்கிறது'' என்று சொன்னான். துர்ப்புத்தியுடன் பேசுகின்ற சகுனியின்சொல்லைக்கேட்டு ஸோமதத்த புத்திரனாகிய அரசன் அதைக்காட்டிலும் சிலாக்கியமான வாக்கியத்தைப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினான்:—

"அரசன், அமைச்சன், மித்ரன், பொக்கசம், தேசம், துர்க்கம், படையாகியஏழுராஜ்யாங்கங்களையும் தன்பக்கத்திலும் பிறன்பக்கத்திலும் இடத்தையும் காலத்தையும் பரிசோதித்து [1]ஸந்தி, [2]விக்கிரகம், [3]யானம், [4]ஆஸனம், [5]த்வைதீபாவம், [6]ஸமாஶ்ரயம் என்னும் ஆறுவகைக்குணங்களையும் உபயோகித்தல்வேண்டும். [7]ஸ்தானத்தையும், [8]விருத்தியையும், [9]க்ஷயத்தையும், [10]பூமியையும், [11]மித்ரர்களையும், [12]சக்தியையும், தன்பக்கத்திலும் பிறன்பக்கத்திலும் ஆராய்ந்து சத்ரு, காமம், சூதாட்டம் முதலியவைகளால் ஏற்படக்கூடிய வ்யஸனங்களினால் நெருக்கப்பட்டபோது அவனை எதிர்க்கவேண்டும். அந்தப்படி பாண்டவர்கள் மித்திரர்களும் திரவியங்களுமுள்ளவர்களும் பலபராக்கிரமங்கள் தவறாதவர்களும் தங்கள் நற்செய்கைகளினால் ஜனங்களுக்குவேண்டியவர்களுமாக இருப்பதாக நான் நினைக்கிறேன். அர்ஜுனன் தன்வடிவத்தினாலேயே பிராணிகளின் நேத்திரங்களையும் மனங்களையும் கவருகிறான்; இன்சொல்லினால் மனிதர்களுடையகாதுகளைக்கவருகிறான். கேவலம் அதிருஷ்டத்தினால் மாத்திரம் ஜனங்கள் அன்புடன் அவனையடுத்தார்களில்லை. அவர்கள்மனத்திற்கு

---

1. ஸமாதானம்; 2. சண்டை; 3. எதிர்த்துச்செல்வது புறங்காட்டிச்செல்வது ஆகிய இரண்டு யாத்திரைகள்; 4. ஓரிடத்திலிருப்பது; 5. ஸேனையை இரண்டாகப் பகுத்துச்செல்வது; 6. மற்றொருபலவானையடுப்பது; 7. மாறாமல் ஒருநிலையில் நிற்பது; 8. நிலைமை உயர்வது; 9. நிலைமை குறைவது; 10. அடையவிரும்பின தேசத்தின்வளப்பம்; 11. தன்மித்திரர்களுக்கும் பிறர்மித்திரர்களுக்குமுள்ள வித்தியாஸம்; 12. தன்சக்திக்கும் பிறர்சக்திக்குமுள்ள வித்தியாஸம்.

விருப்பமாக இருந்ததோ அதையெல்லாம் அவன்செய்து நிறை வேற்றினன். இன்சொல்லனை பார்த்தனுடைய வார்த்தை, யுக்திவி ரோதமாகவாவது தனக்குப்பற்றுள்ளதாகவாவது அஸத்தியமாகவா வது பிறருக்கு இன்னததாகவாவது இருந்ததில்லை. இப்படிப்பட்ட குணங்கள் நிரம்பினவர்களும் ராஜலக்ஷணங்களெல்லாம் பொருந்தின வர்களுமாகிய அந்தப் பாண்டவர்களைப் பலாத்காரமாக அழிப் பதற்கு எவர்கள் சக்தர்களோ அவர்களை நான் பார்க்கவில்லை. (ஸைனியம் பொக்கசங்களின் மிகுதியாகிய) பிரபுசக்தியும், (காரியங் களை ஆலோசிக்குந்திறமையாகிய பரம்பரையாகவந்த மந்திரிசேனாதி பதிமுதலிய) மந்திரசக்தியும் சோர்வின்மையாகிய உற்சாகசக்தியும் பாண்டவர்களிடத்தில் மிகவும்நிரம்பியிருக்கின்றன. யுதிஷ்டிரர், மூல பலங்கள் மித்திரபலங்கள் விஷயத்தில் காலமறிந்துநடப்பவர். அதனல் யுதிஷ்டிரர் கோபமில்லாமலே ஸாமதானபேத தண்டங்களென்னும் உபாயங்களைக் கொண்டு பகைவர்களை ஜயிப்பதற்கும் காலமறிந்தவ ரென்பது என்கருத்து; பாண்டுபுத்திரரான தர்மராஜர் தனங்களினல் சத்ருக்களையும் மித்திரர்களையும் சேனைகளையும் விலைக்குவாங்கித்தம் மூலபலத்தைச் சீராகவைத்துக்கொண்டு பூமியைஆள்வர். எவர்க ளுக்காக ராமகிருஷ்ணர்களிருவரும் எப்பொழுதும் ஊக்கத்துடனிருக் கிறார்களோ அந்தப்பாண்டவர்கள் இந்த்ராதி தேவர்களுக்கும் ஜயிக்க முடியாதவர்களென்று நான் நினைக்கிறேன். உங்கள் நன்மையை நீங்கள் விரும்பினலும் என்கருத்து உங்களுக்கு அபிமதமாயிருந்தா லும் பாண்டவர்களெல்லாருடனும் ஸந்திசெய்துகொண்டு வந்தவாறே நாம்செல்வோம். சிறந்தநகரங்களிலும் சிறந்ததான இந்தத்துருபத நகரம் உயரமானகோபுரங்களாலும் மதில்களாலும் நூற்றுக்கணக் கான மதிற்சார்புகளாலும் காக்கப்பட்டிருக்கிறது; அகழிகளினல் சூழப்பட்டிருக்கிறது. புற்களும் தானியங்களும்விறகுகளும்ரஸபதார்த் தங்களும் யந்திரங்களும் ஆயுதங்களும் மருந்துகளும் நிரம்பினதும், அனேகங்கதவுகளும் உறுதியாகக்கட்டப்பட்ட திரவியசாலைகளுமுள் ளதும், பயப்படத்தக்கபெரியசக்கரம்மேலேவைக்கப்பெற்றதும், பெரிய மதிலாற்சூழப்பட்டதும், உறுதியான மதிற்சிகரங்களையுடையதும், அனேக * சதக்னிகள் நிரம்பினதுமாக இருக்கிறது. கற்கட்டுமதில் மரப்பிராகாரம் மனிதர்காவல் என்று பிராகாரங்களைக்கட்டுவதில்

---

* பீரங்கிகள்.

தேர்ந்தவர்கள்சொல்லும் மூவகைப்பிராகாரங்களும் உள்ளே மனிதர்கள் அடங்கியவைகளாகச்சிறந்துவிளங்குகின்றன. அவ்வாறே, இந்தத் துருபதநகரம் மனிதர்கள் உள்ளேநிரம்பினதும் அனேகம் பனை உயரமுள்ள இந்தவெண்மதிலினால்மறைக்கப்பட்டதுமாகவிளங்குகின்றது. ஜனங்கள்மஹாத்மாவான துருபதனிடம் அன்புவைத்திருக்கின்றனர். நகரத்திற்குள்ளிருப்பவர்களும் வெளியிலிருப்பவர்களும் கொடையினாலும் வெகுமதியினாலும் வசப்பட்டிருக்கின்றனர். பயங்கரமான பராக்கிரமமுள்ள மன்னர்களால் இவர்கள் தகையப்பட்டிருப்பதை அறிந்தவுடன், யாதவர்கள் சிறந்த ஆயுதங்களை ஓங்கிக்கொண்டுவந்து விடுவர். ஆதலால், என்சொல் ஸரியாயிருந்தால் பாண்டவர்களுடன் துரியோதனனைச் சந்திசெய்வித்து நமதுராஜ்யங்களுக்கேசெல்வோம். இதுதான் என் அபிப்பிராயம். விருப்பமிருந்தால் எல்லாரும் செய்யலாம். இதுதான் நல்லகாரியமென்றும் அரசர்களுக்கு க்ஷேமமென்றும் நான்நினைக்கிறேன்" என்றுசொன்னான்.

---

## இருநூற்றுப்பதினெட்டாவது அத்தியாயம்.
## விதுராகமனபர்வம். (தொடர்ச்சி.)

**(துர்யோதனாதியர் கர்ணன் ஆலோசனையைக்கேட்டுப் பாண்டவர்களைக் கொல்வதற்காகப் பாஞ்சாலநகரம்சென்று பாண்டவரால் தோல்வியடைந்து திரும்பி ஹஸ்தினபுரம்சேர்ந்ததும், கிருஷ்ணபலராமர்கள் பாஞ்சாலநகரம்வந்ததும்.)**

எல்லாருக்கும் வேண்டியவற்றையெல்லாம் வர்ஷிப்பவனும் எல்லாக்காரியங்களையும் செய்யவேண்டிய காலத்தையறிந்தவனும் ஸூர்யபுத்திரனுமான கர்ணன், ஸௌமதத்தி சொன்னதைக்கேட்டு, அக்காலத்திற்குரிய சொல்லைச் சொல்லலானான். "இந்தவாக்கியம் முழுவதும் நீதிசாஸ்திரத்தை முக்கியமாகக்கொண்டு சொல்லப்பட்டது; பொருளடங்கியது. இந்தவாக்கியத்தில் எனக்குப் பொறுமையில்லை. நான் சொல்கிறதையும் கேட்கலாமென்றுதான் சொல்லுகிறேன். மனிதர்கள் எந்தக்காரியங்களிலும் அபிப்பிராயங்களின் வேறுபாட்டுடன் இருக்கலாகாது. மனவேறுபாட்டுடன் செய்தால் எந்தக்காரியமும் நிறைவேறாது. எதிர்த்துச் செல்வதனாலாவது இங்கேயே சேனையுடன் நிற்பதனாலாவது வருத்தத்தையுண்டுபண்ணுவதனாலா

வது இந்தத் துருபதநகரத்தைப்பிடிப்பது முடியாது. பெரியயுத்த மும் நல்லதன்று. நினைத்துப்பார்க்கையில் இங்கே யுத்தத்தில் விருப்பமுள்ள யாதவர்கள் நமது பின்இடத்தைப்பிடிப்பதற்குமுன் நாம் அவர்களை அழிப்பதற்கு இதுகாலமென்று எனக்குத்தோன்றுகிறது. நீங்களும் அதற்குத்தக்கபடி உற்சாகமுள்ளவர்களாயும் தம்தம் கைவன்மையினால் சோபிக்கின்றவர்களாயுமிருக்கிறீர்கள். நீங்கள் மதிலை இடியுங்கள்; அகழியைத்தூருங்கள். ஜலத்தை வெளிப்படுத்திவிடுங்கள். மேடுபள்ளங்களைச் சமமாகச்செய்யுங்கள். இப்பட்டணத்தின் அகழியை மிகுதியானபுற்களையும் கழிகளையும்போட்டுத் தூர்க்கவேண்டும்; 'எதிரிகளுடைய யானைகளையும் குதிரைகளையும் காலாட்களையும் எவன் கொல்வனோ அவன் தனத்தையும் வெகுமானத்தையும் அடைவன். ஒருயானைக்குப் பதினாயிரம்பொன்னும் குதிரைக்கும் காலாட்களுக்கும் ஐயாயிரம்பொன்னும் ரதத்திற்கு யானைக்கிருமடங்குபொன்னும் அரசர் கொடுப்பார்' என்று ராஜமார்க்கங்களில் பறையடித்துப் பிரவசித்தஞ் செய்யத்தக்கது. காமஸுகங்களிலேயே பற்றுள்ளவர்களும் சிறுவர்களும் முதிர்ந்தவர்களும் பயத்தினால் யுத்தஞ்செய்ய மனமில்லாதவர்களும் இருக்கட்டும். அவர்களின்மேல் அம்புபோடத்தகாது. கட்டளையின்றி யாரும் செல்லத்தகாது. புகையைக்காப்பாற்றுங்கள். உங்களுக்குச் சுகமுண்டாகட்டும். நாம் பகைவரைவெல்வோம். காற்றும் நாம் செல்லும் திசையாகவே விடாமற் செல்லுகிறது. மிருகங்களும் பக்ஷிகளும் நற்சகுனமாகவேயிருக்கின்றன. அக்கினியும் புகையின்றிப் பிரகாசமாக ஜ்வலிக்கிறது.நமது ஆயுதங்களும் கவசங்களும் பிரகாசிக்கின்றன" என்றான். அவ்வாறு கர்ணன்சொன்னதைக் கேட்டுத் துரியோதனனுடைய விருப்பத்தை அனுஸரிக்கின்ற அரசர்கள் எதிரிகளை யுத்தத்தில் துரத்துவதற்குப் புறப்பட்டனர். பகைவர்களான எதிரிகளைப் பலாத்காரமாக அதம் செய்யப்போன அவ்வரசர்களுக்கு அதில் மனப்பற்று எவ்வாறிருந்ததோ அவ்வாறு விரும்பத்தக்க எந்தவிஷயங்களிலும் இருக்கவில்லை. கர்ணனென்னும் கீழ்காற்றோடு கூடியதும், ஜயத்ரதனென்னும் அலையின் பெருமுழக்கத்தையும் துச்சாஸனனென்னும் பெரிய மத்ஸ்யத்தையும்துரியோதனனென்னும் பெருமுதலையையுமுடையதும்,பயங்கரமானசப்தத்தைக் காண்பிக்கிறதும், பயத்தைத் தரத்தக்கதுமாகிய அந்த அரசக்கூட்டமென்னும சமுத்திரம் விரைவாக அந்தநகரத்தை அபஸவ்யமாக எதிர்த்துச்சென்றது. தீயைப்போலவும் ஸர்ப்பங்களைப்

போலவும் ஆயுதங்கள் பிரகாசிக்க எதிர்த்துக்கிளம்பிவந்த அந்த வெல்லக்கூடாத சேனையைக்கண்டு துருபதபுத்திரர்கள் கர்ச்சனைசெய்தனர். திருஷ்டத்யும்னன், சிகண்டி, ஸௌமித்திரன், பிரியதர்சனன், சித்ரகேது, ஸுகேது, வீரனான த்வஜகேது ஆகிய பலவான்களும் வீரர்களுமாகிய அந்தத் துருபதராஜபுத்திரர்கள் ஜயத்தைவிரும்பி மேகமுழக்கத்துக்கொப்பான உருளைகளின்சத்தமுள்ள சிறந்த ரதங்களிலேறிப் போரிற் பகைவர்கள் அச்சப்படும்படி நகரத்தின் கோட்டைவாயிலின் வழியாகப் புறப்பட்டனர். பராக்ரமமுள்ள துருபதனும் வெள்ளைத்தலைப்பாகையும் வெள்ளைக்கொடியும் வெண்சாமரமும் வெண்குடையும் வெண்மையான கொடிமரமும் வெள்ளைக்குதிரைகளுமுள்ளவனுகப் புறப்பட்டான். தன் புத்திரர்களின் கூட்டத்தின் நடுவிலிருந்த அந்த அரசன் பௌர்ணமாவஸியில்நட்சத்திரக்கூட்டங்களுக்கிடையில்உதயமாகியிருக்கும் சந்திரன்போல் விளங்கினுன். பிறகு, அசைகின்ற நுனிகளையுடைய கொடிகளையுடையதும் நேரே எதிர்த்து வருகின்றதும் சோர்வற்றதுமான துருபதஸைன்யத்தைக் கௌரவர்களுடைய படை எதிர்த்துச்சென்றது. அவ்விரண்டு சேனைகளும் ஒன்றன்மேலொன்றுஎதிர்த்து வ்யாபிக்கும்போது இரண்டு நதிப்பிரவாகங்கள் எதிர்த்துச்சேருவதுபோலப் பெரியஆரவாரம் உண்டாயிற்று. அந்தச் சேனையில் நாற்புறமும் சிதறினதேர்களும் யானைகளும் குதிரைகளும் இறைந்திருக்கும் நக்ஷத்திரங்களைப்போலப் பிரகாசித்தன. கர்ச்சனைகளும் பேரிகைமுழக்கங்களும் நிரம்பின பேராரவாரம் உண்டானபோது, மஹாத்மாக்களும் பரதஶ்ரேஷ்டர்களுமாகிய பாண்டவர்கள் கோபித்து மேகங்களைப்போலச் சப்திக்கின்றவையும் உயர்ந்த குதிரைகள் பூட்டப்பட்டவையும் கொடிகள் உள்ளவையுமாகிய வெண்மையான ரதங்களிலேறி அச்சத்தையுண்டுபண்ணிக்கொண்டு நகரத்தினின்று புறப்பட்டனர். அப்போது விற்களை எடுத்துக்கொண்டு ரதங்களிலேறிவரும் பாண்டவர்களைக் கண்டு அரசர்களுக்கு உடம்பில் உதறலும் உள்ளத்தில் அச்சமும் உண்டாயின. அவ்வாறு பாண்டவர்கள் புறப்பட்டபோது, அந்தத் துருபதசேனைக்கு யுத்தத்தில் மிகுந்த உற்சாகமும் ஜயத்தைப்பற்றி நம்பிக்கையும் உண்டாயின. சற்றுநேரம் சேனைகள் நெருங்கிக் கைகலந்தன. பிறகு, மரணம்முன்நிற்பதென்னும் நிச்சயத்தைச் செய்துகொண்டு தொந்தயுத்தம் செய்தன. அந்தச்சண்டையில், ஜயத்ரதனும் கர்ணனும் அர்ஜுனன் பார்த்திருக்கையில் முறையே ஸௌமித்ரனையும் பிரியதர்சனனையும் கொ

ன்றனர். ஸுமித்ரனும் பிரியதர்சனனும் கொல்லப்பட்டதைப்பார்த்து, அர்ஜுனன் தந்தையின் அருகிலிருந்த ஜயத்ரதபுத்திரனைக் கொன்றான். விருஷஸேனன்தம்பியும் கர்ணபுத்திரனும் பெரிய வில்லாளியுமான ஸுதாமனையும் அவனுடைய தந்தையின் அருகிலிருக்கும்போதே தேர்த்தட்டிலிருந்து வீழ்த்தினான். பலசாலிகளும் சிறந்த புஜவலிமையுடையவர்களும்ராஜஸிம்மங்களுமானஜயத்ரதன்கர்ணன் இருவரும் தங்கள் மைந்தர்களிருவரும் கொல்லப்பட்டதைக் கண்டு மஹாகஜங்கள் அடிதாங்காமலிருப்பதுபோலக்கோபமுற்றனர். அவர்கள் அச்சப்படாமல் கையுறைகளைப் போட்டுக்கொண்டும் ஒருவரோடொருவர் சபதம்கூறிக்கொண்டும் அர்ஜுனனது தேரை எதிர்த்துச் சென்றனர் அந்தப் பெரியயுத்தத்தில் அவ்விருவரும் எதிர்த்ததானது இந்திரனுடன் விருத்ரனும் சம்பரனும்சேர்ந்து யுத்தத்திலெதிர்த்தது போல மிகப்பயங்கரமாயிருந்தது. அந்தப் புருஷஶ்ரேஷ்டர்களிருவரும் அர்ஜுனனுடைய தேர்க்குதிரைகளில் மூன்றை அடித்தனர். அப்போது, அங்கே கௌரவர்களுக்குள் கலகலவென்ற சப்தமுண்டாயிற்று. அந்தக்குதிரைகள் அடிபட்டதைக்கண்டு பராக்ரமசாலியான பீமஸேனன் ஒரு நிமிஷத்துக்குள்ளாகவே தேரில் குதிரைகளைப்பூட்டினான். அந்தத்தேர் வந்ததைக்கண்டு வீரர்களான சகுனியும் ஸௌமதத்தியும் துரியோதனனை முன்னிட்டு யுத்தத்தில் வந்து சேர்ந்தனர். அப்போது மஹாபலசாலியான பீமஸேனன், யோகீசுவரன் ஐம்புலன்களின் விஷயங்களோடு யுத்தஞ் செய்வதுபோல அவ்வைவர்து வீரர்களோடும் மனஞ்சோராமல் யுத்தஞ்செய்தான். யுத்தத்தில் ஜயிப்பவனுகிய பீமஸேனன் அவ்வைவரால் தடுக்கப்பட்டும் ஐந்து மதயானைகளால் எதிர்க்கப்பட்ட ஸிம்மம்போலப் பயப்படாமலிருந்தான். அவ்வைவரும் ஒரே காலத்தில் ஐந்து கூர்மையான அம்புகளினால் பீமனுடைய ஸாரதியையும் குதிரைகளையும் யமனிடம் அனுப்பினர். மஹாரதனான பீமஸேனன் குதிரைகள் அடிபட்ட அந்தச் சிறந்த தேரிலிருந்து இறங்கிக் கத்தியை எடுத்துக்கொண்டு பற்பல கதிகளில் ஸஞ்சரித்தான். குதிரைகளின் முதுகுகளிலும் தேர்ச் சக்கரங்களின்மேலும் நுகத்தடிகளிலும் ஏர்க்கால்களிலும் ஏறிக் கருடன் ஸர்ப்பங்களை வீழ்த்துவதுபோலச் சத்துருக்களை வீழ்த்திக் கொண்டே ஸஞ்சரித்தான். வில்லில்லாமலும் கவசமில்லாமலும் ரதமில்லாமலுமிருந்த பீமனைக்கண்டு திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் யுத்தத்தில் வெல்லக்கூடாத நகுலஸஹதேவர்களுமாகிய புருஷஸிம்

டங்களான மஹாரதர்கள் அர்ஜுனனை முன்னிட்டு எதிர்த்துச் சென்றனர். அந்தமஹாரதர்கள் சேர்ந்து யுத்தம் நடந்தபோது தேர்களும் கொடிமரங்களும் கொடிகளுமாகிய யாவும் சரமாரிகளால் மறைக்கப்பட்டன. அந்தச்சண்டை நடந்தபோது வெகு நேரம் ஏற்றத்தாழ்வில்லாமலேயிருந்தது. மறுபடியும், சிறந்த கைக்காரனான அர்ஜுனன் ரதமேறிச்சென்று அவர்களை அடித்தான். அவன் வருவதைக் கண்டதும் சிறந்த பாகுபலமுடையவனும் அஸ்திரம் தெரிந்தவர்களிற் சிறந்தவனுமான கர்ணன் வில்லெடுத்துப் பாணங்களினால் அவனைத் தடுத்தான். அந்த அர்ஜுனன் அவனால் அடிக்கப்பட்டதும், கோபித்த கர்ணனைவதஞ்செய்வதற்காக வஜ்ராயுதத்தையொத்த மூன்றுபாணங்களைத் தொடுத்தான். எதிரிகளுடைய நகரங்களை ஜயிப்பவனாகிய கர்ணன் அந்தப் பாணங்களாலடிபட்டுக் கொடிமரத்திற் சார்ந்திருக்கையில் ஸாரதி அவனை விரைவாக ரதத்துடன் வெளியிற் கொண்டுபோனான். அவ்வாறு கர்ணன் தோற்றுப்போனபோது பாண்டவர்கள் மேன்மையுற்றதைக்கண்ட துரியோதனனுக்குப் பெரியபயமுண்டாயிற்று. அந்த ஸைனியம் அவ்வாறு அதிகமாக நடுங்கினதைக்கண்ட சகுனி இனிய சொல்லினால் பலமுறை தேற்றினான். அர்ஜுனனால் மிகவும் பீடிக்கப்பட்ட அந்தச்சேனை, பிறகு, துரியோதனன் முதலிய திருதராஷ்டிரபுத்ரர்களனைவராலும் மறுபடியும் தைரியப்படுத்தப்பட்டது. பிறகு, பயங்கரமான பராக்கிரமமுள்ளவனும் சிறந்த புஜபலமுள்ளவனுமான பீமன் துரியோதனனைப் பார்த்து அரக்குமாளிகையை நினைத்துக் கோபித்தான். உடனே, போர்க்களத்தினிடத்தில் ஐம்பது தோள் உயரமுள்ளதாக மிக உன்னதமாக நிற்கின்ற பெரியமரமொன்றைக்கண்டான். பெருத்த அடியுள்ளதும் அதிக உயரமுள்ளதும் இந்திரனுடைய த்வஜம் நாட்டப்பட்டதுபோன்றதுமாகிய அம்மரத்தை இருகரங்களாலும்பேர்த்துத்தன்கால்களையும்வீசிக்கொண்டு இந்திரன் அஸுரர்களை எதிர்ப்பதுபோலச் சண்டையில் எதிரிகளை எதிர்த்துப் போனான். பீமஸேனனுடைய பயத்தினால் கலங்கினதும் அர்ஜுனனாலடிக்கப்பட்டதுமாகிய அந்தத்துரியோதனஸேனை கண்ணெடுத்துப் பார்க்கவும் சக்தியற்றதாயிற்று. போர்வீரர்கள்நடுக்கமுற்றும்குதிரைகளும்யானைகளும்ஓய்ந்துமிருந்த அந்தப்படைகளைப்பீமன் ஆகாயத்து மேகங்களைக் காற்றுத்துரத்துவதுபோலத் திசைகளெங்கும் துரத்தினான். மகிழ்வற்றுத் திரும்பியோடின அந்த யுத்தவீரர்களையும் யானைகளையும்குதிரைகளையும்பாண்டவர்கள்பின்தொடரவுமில்லை; அடிக்கவு

மில்லை; கடுஞ்சொல்லொன்றுஞ்சொல்லவுமில்லை. பாணங்களினால் அடிக்கப்பட்ட க்ஷத்திரியர்கள் தம்தம் கூடாரங்களுக்குச் சென்றனர். மற்றவர்களும் பாண்டவரைச் சேர்ந்தவர்களும் மகிழ்ந்து பட்டணத்து ஜனங்களுக்கு ஸௌக்கியத்தைச்செய்துகொண்டு நகரத்தை நோக்கிச் சென்றனர். அந்தக் கௌரவர்களுக்குப் பாண்டவர்களுடன்கூடச் சற்றுநேரம் யுத்தம்நடந்தது. தேவாஸுரயுத்தம்போன்ற அந்தப் பெருஞ்சண்டை எவ்வளவில் உண்டாயிற்றோ அவ்வளவில் அடங்கிப்போயிற்று. திரும்பிப்போன மஹாரதர்களாகிய சகுனி ஜயத்ரதன் துரியோதனன் கர்ணன் இவர்களனைவரும், பாண்டவர்கள் நற்றவஞ் செய்தனரென்றும் மணமகள் நல்லநோன்புநோற்றாளென்றும் துருபதனும் திருஷ்டத்யும்னனும் நினைத்தகாரியம் முடித்தார்களென்றும் கூறினர். அப்போது, அவர்களுள்ளத்தில் துயரம்மிகுந்தது. வாக்கினால்மாத்திரம் ஒன்றுஞ்சொல்லவில்லை. பிறகு, அரசர்களனைவரும் வந்தவாறே சென்றனர் அந்தத் திருதராஷ்டிரபுத்திரர்களனைவரும் அப்போது ஹஸ்தினபுரத்திற்கே சென்றனர்.

நகரத்தைத் தகைவதற்குமுன்னே பாண்டவர்கள், தாங்கள் சௌக்கியமாயிருப்பதைச் சொல்லுவதற்காக, 'கிருஷ்ணனிடம் செல்லுங்கள்' என்று குதிரைப்படைகளை அனுப்பினர். அவர்கள் சீக்கிரத்தில் யாதவர்களின் நகரத்தைச்சேர்ந்து பேசுவதிற் சமர்த்தரான ராமகிருஷ்ணர்களிடம் பின்வருமாறு சொல்லலாயினர். அந்தகர்கள் விருஷ்ணிகள் அனைவருக்கும் பாண்டவர்களின் க்ஷேமத்தைச்சொன்னார்கள். அவர்கள், 'தாங்களும் அழியாமல்அரக்குமாளிகையிலிருந்து விடுபட்டதாகத் தெரிவிக்கின்றனர். ஒழுக்கம் செய்கை மனஉறுதி இவையெல்லாவற்றிலும் தங்களுக்குத்தகுதியுள்ளவளும் தாமரையிதழ்போன்ற கண்களையுடையவளுமான திரௌபதி ஸ்வயம்வரஸபையில் தங்களுக்குக்கிடைத்ததையும் சொல்லுகின்றனர்' என்றனர். அந்தச் சொல்லைக்கேட்டுக் கிருஷ்ணபகவான் அவர்களுக்கு, 'அந்த ராக்ஷஸனுடைய வதம் முதலாக நடந்தவற்றையெல்லாம் நானறிவேன்' என்று மறுமொழி சொன்னார். உடனே, அவர் சதுரங்கதளத்தை ஸந்நாகஞ்செய்துகொண்டு பாஞ்சாலநகரத்தை நோக்கி விரைவாகச் சென்றனர். அத்தையாகிய குந்தியைக் கௌரவித்து நமஸ்காரஞ்செய்து திரௌபதிக்கு முறைப்படி உயர்ந்த ஆபரணங்களைப் பரிசாக அளித்துப் பாண்டவர்களை மகிழ்வித்துக் கௌர

வித்தனர்; மஹாத்மாவாகிய த்ருபதராஜாவினால் முறைப்படி பூஜிக்கவும் பெற்றனர். அப்போது மஹாத்மாக்களான பாண்டவர்களால் கௌரவிக்கப்பெற்ற அந்தயாதவர்களனைவரும் பாஞ்சால நகரத்தில் பாண்டவர்களுடன் கூடவே மகிழ்ந்திருந்தனர்.

---

## இருநூற்றுப்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## விதுராகமனபர்வம். (தொடர்ச்சி.)



**(திருதராஷ்டிரன் பாண்டவர்களுடைய விருத்தாந்தத்தை விதுரரிடம் கேட்டுத் திரௌபதியை அழைத்துவரும்படி ஆஜ்ஞாபித்த பிறகு, அவனிடம் துரியோதனனும் கர்ணனும் ஏகாந்தமாகப்பேசினது.)**

அவ்வரசர்களனைவரும், ஸ்வயம்வரம் நடந்தபிறகு, பாண்டவர்கள் வரிக்கப்பட்டதைக்கண்டு வந்தபடியே திரும்பிச்சென்றனர். பிறகு, ராஜாவான துரியோதனன் திரௌபதியால் அர்ஜுனன் வரிக்கப்பட்டதைக்கண்டு, மனம் குன்றினவனாக ஸஹோதரர்களுடனும் அசுவத்தாமாவுடனும் மாதுலனான சகுனியுடனும் கர்ணனுடனும் கிருபாசாரியருடனும் திரும்பிச்சென்றான். அவனைநோக்கித் துச்சாஸனன் வெட்கமில்லாமல் மெல்லமெல்ல, 'இவன் பிராம்மணனாக இராவிடின் திரௌபதியையடைந்திரான். ராஜனே! யாவரும் அவனைத் தனஞ்சயனென்று உண்மையாக அறியவில்லை. தெய்வமே மேலானதென்றும் முயற்சி பயனற்றதென்றும் நினைக்கிறேன். பாண்டவர்கள் இவ்விடத்தில் ஜீவித்திருப்பதனால் மனிதனுடையயோசனை பயனற்றது. இங்கே,பாண்டவர்கள் அரசர்களுடன் நமது கண்களையும்மறைத்துத் திரௌபதியை விவாஹஞ்செய்திருக்கின்றனர். குந்திபுத்திரர்களால் அரசர்களின்மேல் இடக்கால்வைக்கப்பட்டது. அரக்குமாளிகைத்தீயிலிருந்து இவர்கள் எவ்வாறு விடுபட்டனர்? அதனால் நம்முடையபிரயத்தனமும் உற்சாகமும் புத்தியும் போய்விட்டன. மாமா! புரோசனனைநம்பிஇப்போது நாம்கெட்டோம்.இந்தப்பாண்டவர்களைக் கொளுத்தாமல் நெருப்பில் தான் எரிந்துபோனான். மாமா! நம்மைவிடப் பாண்டவர்கள் மிகுந்தபுத்தியுள்ளவர்களென்று நினைக்கிறேன். அரக்குமாளிகையிலிருந்து விடுபட்ட அவர்களுக்கு மரணத்தில்பயமில்லை'என்

ருன். அவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டு புரோசனனையும் ஐந்துபுத்திரர்களோடுகூடின வேடச்சியையும் சிலாக்கியமான புத்தியுள்ள விதுரரையும் இகழ்ந்துகொண்டும், தீயிலிருந்துவிடுபட்டுத் துருபதனுடன் ஸம்பந்தஞ்செய்தமிருந்தபராக்கிரமசாலிகளானபாண்டவர்களைக்கண்டும், எல்லாயுத்தங்களிலும் சமர்த்தரான திருஷ்டத்யும்னன் சிகண்டி முதலிய துருபதபுத்திரர்களெல்லாரையும் நினைத்தும், பயந்து துயரமுற்று மனங்குன்றித் தங்கள் எண்ணங்களையெல்லாம்விட்டு அஸ்தினபுரத்திற்பிரவேசித்தனர். பிறகு, க்ஷத்தாவென்னப்பட்டவிதுரர், அந்தப்பாண்டவர்கள் திரௌபதியினால் சுயம்வரம்செய்யப்பட்டதையும் த்ருதராஷ்டிரபுத்ரர்கள் வெட்கிக் கர்வமொழிந்துவந்ததையும்கேட்டு மனமகிழ்ந்து திருதராஷ்டிரனைப்பார்த்து, 'அரசனே!நல்லகாலமாதலால் கௌரவர்கள்விருத்தியடைகின்றனர்'என்றுசொன்னார்.பாரதரே! ஜனமேஜயரே! திருதராஷ்டிரமஹாராஜன் விதுரர் சொன்னதைக்கேட்டு மிகவுமகிழ்ந்து, 'நல்லகாலம்; நல்லகாலம்' என்றுசொன்னான். அறிவேகண்ணாகவுடைய அவ்வரசன், தன் ஜ்யேஷ்டபுத்திரனாகிய துரியோதனன் திரௌபதியினால் வரிக்கப்பட்டானென்று அறியாமையால் நினைத்தான். உடனே, 'கிருஷ்ணையை அழைத்துவா' என்றும் அவளுக்கு மிகுதியான ஆபரணங்களைக்கொடுக்கும்படிக்கும் தனது புத்திரனாகிய துரியோதனனுக்குக் கட்டளையிட்டான். அதன்பிறகு,விதுரர், 'கௌரவர்களென்னும் பொதுச்சொல்லால்உன்புத்திரர்களை எண்ணாதே; விருத்தியாகின்றனரென்னும் என்சொல்லினால்பாண்டவர்கள் தாம் சிறப்பிக்கப்பட்டனர். ராஜனே! பாக்கியவசமாகப்பாண்டவர்கள் திரௌபதியினால் ஸ்வயம்வரஞ்செய்யப்பட்டும் வேந்தர்களின் போரினின்றும் விடுபட்டும் துருபதனால் பூஜிக்கப்பெற்றும் க்ஷேமமாயிருக்கின்றனர்' என்றுசொன்னார். இவ்வாறு விதுரர்சொன்னதைக் கேட்டபிறகும், திருதராஷ்டிரன் எண்ணத்தைமறைப்பதற்காக, 'விதுரா! நற்காலம்! நற்காலம்! இப்படியா? உனக்குச்சுகமுண்டாகட்டும். பாண்டவர்கள் ஜீவித்திருக்கிறார்களா? அமிருதத்திற்கொப்பான உன்சொல்லினாலுண்டான ஆனந்தம் என்தேகத்தில் அடங்கவில்லை. அவர்கள் நன்னடக்கையுடையவர்களாதலின் மிகச்சிலாக்கியமான துருபதஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்தது; நல்லகாலம் நல்லகாலம்' என்றும் சொன்னான். 'துருபதன் உபரிசரவஸுவின் வம்சமாகிய சிறந்த மத்ஸ்யகுலத்திற்பிறந்தவன்; ஒழுக்கத்தினாலும் கல்வியினாலும் தவத்தினாலும் பெரியவன்; ராஜாக்களுக்கும் பூஜ்யன். அவனுடைய புத்தி

ரர்கள் பௌத்திரர்கள் அனைவரும் செம்மையாகப் பிரமசாரிவிரதம் அனுஷ்டித்தவர்கள். அவர்களைச்சேர்ந்த மற்றவரனேகரும் மஹாபலசாலிகள். அவர்களும் எனக்குப் பாண்டுபுத்திரர்களைப்போன்றவர்களும் அவர்களுக்கு அதிகமானவர்களுமாயிருக்கின்றனர். விதுரா! அவர்களுடைய இந்நடை மற்றவர்களுடைய நடைகளிலும் சிறந்ததென்று நான்நினைக்கிறேன். ஸமர்த்தனே! எனக்குப்பாண்டவர்களிடமுள்ள அன்புக்கீடான அன்பு மற்ற எவரிடத்துமில்லை. விதுரனே! நான் எப்போதும் உண்மையாக நினைத்திருப்பது இதுவே. உனக்கு என்ஸத்தியத்தின் மேல் ஆணையிடுகிறேன். மஹாரதர்களும் வீரர்களுமான அந்தப்பாண்டுபுத்திரர்கள் ஸௌக்கியமாகமித்திரர்களையடைந்திருப்பதனால் துரியோதனன் முதலிய எனது புத்திரர்களும் அவ்வாறேயாயினர் பாண்டுபுத்திரர்கள் நெருப்பில் எரிந்துபோனார்களென்று எப்போது நான் கேள்வியுற்றேனோ அப்போதுமுதல் அல்லும்பகலும் கொதிப்புற்றிருந்தேன்; உண்ணவுமில்லை; உறங்கவுமில்லை. என்புத்திரர்கள் துணையில்லாமையால் சிறகொடிந்தபறவைபோலிருந்தனர். விதுரா! நான் உண்மையாகச் சொல்லுவதைக்கேள். என்புத்திரர்களுக்குநல்லதுணையுண்டாயிற்று. இப்போதுதான் எனது ஆதிபத்யம் ஆசந்திரார்க்கமாக நிலைபெற்றது. விதுரா! சுற்றத்தாருடன் கூடிய துருபதனை நண்பனாகப்பெற்றபிறகு ஐசுவரியம் போனவனாயிருந்தாலும் மேன்மையைவிரும்பின எந்த அரசன் தன்விருத்தியில்நம்பிக்கையுற்றவனாயிரான்' என்றும்சொன்னான். அவ்வாறு சொல்லுகின்றஅந்தத்திருதராஷ்டிரனுக்கு விதுரர், 'அரசனே! நூறுவருஷகாலமும் இந்தஎண்ணமே உனக்கு நிலையாக இருக்கட்டும்' என்று மறுமொழி சொன்னார். ஜனமேஜயரே! இவ்வாறு சொன்னபிறகு, விதுரர் தம்இல்லம்சென்றார். ஜனமேஜயரே! பிறகு, துரியோதனனும் கர்ணனும் திருதராஷ்டிரனிடம் வந்து, 'விதுரர்முன்னிலையில் உம்மிடத்திற்குற்றஞ்சொல்ல எங்களுக்குக்கூடவில்லை. இப்போது ஏகாந்தமாயிருப்பதனாற் சொல்லுகிறோம்; இப்போது நீர் என்னகாரியம்செய்யக்கருதினீர்? தந்தையே! எதிரியினது அபிவிருத்தியை உம்முடைய விருத்தியாக நினைக்கிறீர். மனிதரிற்சிறந்தவரே! விதுரரிடத்தில்அவர்களைத்துதிக்கிறீர். குற்றமற்றராஜரே! செய்யவேண்டியதொன்றிருக்க மற்றொன்றைச் செய்கிறீர். தந்தையே! எப்போதும் நாம் அவர்களின் பலத்திற்

குத் தடைசெய்யவேண்டும். ஆதலால், நாம் புத்திரர்கள் சேனைகள் சுற்றத்தார்களுடன் அவர்களால் விழுங்கப்படாமலிருக்கும்படி காலத்திற்குத்தக்க உபாயத்தை ஆலோசிப்போம்' என்றனர்.

---

## இருநூற்றிருபதாவது அத்தியாயம்.

## விதுராகமனபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரனும் துரியோதனனும் பேசிக்கொண்டது.)

அரசரே! துரியோதனனும் கர்ணனும் இவ்வாறு சொல்லப்பட்ட திருதராஷ்டிரன் தன் புத்திரனையும் ஸூதபுத்திரனை கர்ணனையும் நோக்கிப் பின்வருமாறு சொல்லலானான்:—'நீங்கள் நினைத்தது போலவே நானும் இதனைச் செய்யக்கருதுகிறேன். ஆனால், விதுரனுக்கு என் எண்ணத்தை வெளியிட நான் விரும்பவில்லை. அதனால், பாண்டவர்களுடைய குணங்களையே சிறப்பித்துக்கூறுகிறேன். விதுரன் என்கருத்தைக் குறிப்புக்களினாலும் அறியாமலிருத்தல் வேண்டும். ஸுயோதனா! உனக்கு எது யுக்தமென்று தோன்றுகிறதோ அதையும்சொல்; கர்ணா! உனக்கும் காலோசிதமென்று எதுதோன்றுகிறதோ அதையும் உடனேஎனக்குச்சொல்'என்றான். துரியோதனன், 'இப்போது ஸமர்த்தர்களும் கருத்தை வெளியிடாதவர்களும் நம்பிக்கையாகக் காரியத்தை முடிப்பவர்களுமாகியபிராமணர்களைக்கொண்டு அந்தக் குந்திபுத்திரர்களுக்கும் மாத்ரிபுத்திரர்களுக்கும் பித்ரபேதஞ் செய்விப்போம். அப்படியில்லாவிடில் துருபதனும் அவன்புத்திரர்களும் மந்திரிகளுமாகிய அனைவரும் குந்திபுத்திரனாகிய யுதிஷ்டிரனை விட்டுவிடும்படி அவர்களுக்குப் பெருந்திரவியக்குவியல்களைக் கொடுத்து வசப்படுத்துவோம். அல்லது, பாண்டவர்கள் அங்கேயே வஸிப்பதை விரும்பும்படி அந்தப் பிராம்மணர்கள் செய்யட்டும். இவ்விடத்தில் அவர்கள் வஸிப்பதனால் அவர்களுக்கு உண்டாகுந்தீங்குகளைத் தனித்தனியே பலர் விரித்துரைக்கட்டும். கலக்கப்படுவதனால் அந்தப் பாண்டவர்கள் அவ்விடத்திலேயே மனம்வைக்கட்டும். அன்றியும், உபாயங்களில்நிபுணர்களும் புத்திசாலிகளுமான சிலமனிதர்கள்,பாண்டவர்கள் ஒருவர்மேலொருவர்வைத்திருக்கும் நேசத்தைமாற்றிவிடட்டும். திரௌபதியையாவது வேறுபடுத்திவிடட்டும்.அவர்கள் அனேகரா

யிருப்பதனால் அது செய்தற்கெளிது. அல்லது, பாண்டவர்களுக்கு அவளிடத்திலும் அவளுக்குப்பாண்டவர்களிடத்திலும் விரோதத்தை உண்டுபண்ணவேண்டும்; அரசரே! அவ்வாறில்லாவிடில், தந்திரங்களில் நிபுணர்களான மறைவான மனிதர்களைக்கொண்டு பீமஸேனனுக்குத் தெரியாமல் மரணத்தைஉண்டுபண்ணவேண்டும். அவர்களுக்குள் அவன்தான் பலத்தில் மிகுந்தவன். அவனுடைய அவலம்பத்தினாலே தான் யுதிஷ்டிரன் முன்னமே நம்மை லக்ஷியஞ்செய்யவில்லை. அவன் கொடியவன்; சூரன்; அவர்களுக்கும் முக்கியமான ஆதாரம். அரசரே! அவன் கொல்லப்பட்டால்அவர்கள்உற்சாகங்கெட்டுச்சக்தியொழிந்து ராஜ்யத்திற்காக முயலாமலிருப்பர். அவன்தானே அவர்களுக்கு ஆதரவு. பீமஸேனன் பின்காப்பவனாக இருப்பதனாலேதான் யுத்தத்தில் அர்ஜுனனைஜயிப்பது கடினமாயிருக்கிறது. அவனில்லாவிட்டால் அர்ஜுனன் யுத்தத்தில் கர்ணனில் காற்பாகமுமிரான். அவர்கள், பீமஸேனனில்லாவிட்டால், தங்களுக்குநேர்ந்த பெரியபலஹீனத்தையும் நமது அதிகபலத்தையுமறிந்து பலக்குறைவினாலேயே யுத்தமுயற்சி செய்யாமலிருப்பார்கள். அரசரே! அல்லது, அவர்கள் இவ்விடத்தில் வந்து ஆஜ்ஞைக்குட்பட்டிருந்தபிறகு,நீதிசாஸ்திரத்தையனுஸரித்து அவர்களை நிக்ரஹிக்க ஆரம்பஞ்செய்வோம். வேந்தரே! அல்லது, அவர்கள் அவ்விடத்தில் கர்வப்பேச்சுப்பேசும்போது, மானமுள்ளவர்களாகிய துருபதபுத்திரர்களில் சிலர் மற்றவர்களால் அவர்களிடமிருந்து பேதஞ்செய்யப்படலாம். அதுவுமில்லாவிடில், அழகான ஸ்திரீகளைக் கொண்டு குந்திபுத்திரர்களில் ஒவ்வொருவரையும்மயங்கச்செய்யலாம். அதனால் திரௌபதி வெறுப்படைவாள். பிறகு, அவர்களை இங்கே அழைத்துவருவதற்காக நீர் கர்ணனையனுப்பலாம். கிட்டவந்தபிறகு, நம்பிக்கையுள்ளவர்களைக்கொண்டு பற்பலதந்திரங்களினால் அவர்களை அழித்துவிடலாம். இந்த உபாயங்களுக்குள் எதுகுற்றமில்லாதது என்று உமக்குத் தோன்றுகிறதோ அதைப்பிரயோகிக்க ஆரம்பஞ் செய்யும். இனிக் காலங் கடந்துபோம். அரசர்க்கரசனாகிய துருபதனிடத்தில் அவர்களுக்கு எவ்வளவுவரையில் பற்றுதலுண்டாகாமலிருக்கிறதோ அவ்வளவுவரையில் ஸாதிக்கக்கூடும்; பிறகு, சாதிப்பது முடியாது. தந்தையே! அவர்களை அடக்கும்விஷயத்தில் எனக்கு இவ்விதமாக ஆலோசனையுண்டாகிறது. அது ஸரியோ; பிழையோ; கர்ண! நீதான் என்ன நினைக்கிறாய்?' என்றான்.

---

## இருநூற்றிருபத்தோராவது அத்தியாயம்.

## விதுராகமன பர்வம். (தொடர்ச்சி.)



**(துரியோதனனுக்குக் கர்ணன் சொன்ன புத்தியைக்கேட்ட திருதராஷ்டிரன் பீஷ்மர்முதலியவர்களோடு மந்திராலோசனை செய்தது.)**

கர்ணன், "துரியோதனராஜனே! உன்னுடைய ஆலோசனை சரியாக இல்லையென்பது என்கருத்து. கௌரவர்களை விருத்திசெய்கிறவனே! அந்தப்பாண்டவர்களைத் தந்திரத்தினால் ஜயிக்கமுடியாது. நீ அவர்கள்விஷயத்தில் நுட்பமான உபாயங்களினால் முன்னம் ஆரம்பம் செய்திருக்கிறாயே. வீரனே! அப்போது உன்னால் அடிக்கக்கூடவில்லையே. அரசனே! இங்கேயே உன் ஸமீபத்திலிருந்துகொண்டு சிறகு முளைக்காத குஞ்சுகளாயிருந்த அவர்களையே உன்னால் பிடிப்பதற்கு முடியாமற் போயிற்று. இப்போது அவர்கள் சிறகுமுளைத்து வேறு தேசத்திலிருந்துகொண்டு எல்லாவகையாலும் விருத்தியடைந்திருக்கின்றனர். அந்தப்பாண்டவர்களை உபாயங்களினால் வெல்லமுடியாதென்பது எனது உறுதியான எண்ணம். அவர்களுக்கு அதிர்ஷ்டத்தின் வன்மையிருப்பதனால் காமம் முதலிய துன்பங்களை உண்டுபண்ணுவது முடியாத காரியம்; அவர்கள் சக்தியுமுள்ளவர்கள். அவர்கள் தங்கள் பிதிர்பிதாமஹர் வரிசையாகவருகிற ராஜ்யத்தைப்பெற விருப்பமுள்ளவர்கள். அவர்களுக்கு ஒருவரோடொருவர் மித்திரபேதஞ் செய்வதும் அஸாத்தியம்; ஒருமனைவியினிடம் நேசம் வைத்தவரெவரோ அவர்கள் ஒருவரோடொருவர் விரோதப்படார். கிருஷ்ணையும் அவர்களிடத்து விரோதப்படும்படி பிறர் செய்யமுடியாது. இளைத்தவர்களையே வரித்தவள் இப்போது சிறப்படைந்திருக்கிறவர்களின் விஷயத்தில் அன்போடிருப்பதைப்பற்றிச் சொல்லவும்வேண்டுமோ? ஒருத்திக்குப்பலகணவர்களிருப்பதுபெண்கள்விரும்பத்தக்கவிசேஷம்; அதைக்கிருஷ்ணை அடைந்திருக்கிறாள். அவளை மித்திரபேதஞ்செய்ய முடியாது. துருபதராஜன் யோக்யமான நடையுள்ளவன். அவன் தனத்தைவிரும்புகிற அரசனல்லன். ராஜ்யங்களையெல்லாம் கொடுத்தாலும் அவன் பாண்டவர்களைவிடானென்பது திண்ணம். அவனது புத்திரனாகிய திருஷ்டத்யும்னனும் அவனைப்போலவே குணமுள்ளவன்; பாண்டவர்களிடம் நேசமுள்ளவன். ஆதலால், உபாயங்களினால் அவர்களை ஜயிப்பது எவ்வகையிலும் முடியாதென்று நான் நினைக்கிறேன். புருஷஶ்ரேஷ்டனே! இந்த ஒன்றுமாத்திரம் இப்

போது நாம் செய்யத்தகுந்தது. மன்னவனே! அந்தப் பாண்டவர்கள் வேரூன்றிப்போவதற்கு முன்னமே அவர்களை யுத்தத்தில் ஜயிக்கவேண்டும். அன்பனே! உன்மனமும் அதனையே விரும்பவேண்டும். எப்போது நம்முடைய பக்ஷம் வலிமையுற்றும் துருபதராஜன்பக்ஷம் சளைத்துமிருக்குமோ அப்போதே பாண்டவர்களோடு யுத்தஞ்செய்ய வேண்டும். சிந்திக்காதே; காந்தாரியின் புத்திரனே! அரசனே! வாகனங்களும் சினேகிதர்களும் சந்ததிகளும் அவர்களுக்கு மிகுதியாவதற்குமுன்னமே அவர்கள்மேல் எதிர்த்துச்செல். ராஜனே! பாஞ்சாலராஜன் மஹாவீரர்களான தன்புத்திரர்களுடன்கூட யுத்தஸன்னாகஞ் செய்வதில் மனத்தைச் செலுத்துவதற்கு முன்னமே நீ எதிர்த்துச் செல்வாயாக; பாண்டவர்களுக்கு ராஜ்யம் வருவதற்காகக் கிருஷ்ணன் யாதவஸேனைகளை இழுத்துக்கொண்டு பாஞ்சாலநகரம் போவதற்கு முன்னே நீ பராக்ரமஞ்செய். தனங்களாகட்டும், பலவகைப் போகங்களாகட்டும், ராஜ்யம் முழுதுமேயாகட்டும்; பாண்டவர்களின் விஷயத்தில் கிருஷ்ணன் விடக்கூடாததை எவ்வகையிலும் இரா. மஹாத்மாவான பரதசக்கரவர்த்தி தன்பராக்கிரமத்தால் பூமியை அடைந்தான். இந்திரன் பராக்கிரமத்தினால் மூன்றுலோகங்களையும் ஜயித்தான். அரசனே! பராக்ரமத்தைத்தான் க்ஷத்திரியர்களுக்குச் சிறப்பாகக் கூறுகின்றனர். ராஜஶ்ரேஷ்டனே! சூரர்களுக்குப் பராக்ரமம் ஸ்வதர்மம். வேந்தே! ஆதலால், நாம் பெரிய சதுரங்க ஸேனையுடன் துருபதனைப்பிடித்துப் பாண்டவர்களைச் சீக்கிரமாக இங்கே கொண்டுவருவோம். நல்வார்த்தையினாலாவது தானத்தினாலாவது மித்ரபேதத்தினாலாவது பாண்டவர்களைவசப்படுத்த முடியாது. ஆதலால், பராக்கிரமஞ்செய்தே அவர்களைக் கொல்வாயாக. பராக்ரமத்தினால் அவர்களை ஜயித்து இந்தப்பூமி முழுவதினையும் ஆளக்கடவாய். அரசனே! காரியத்திற்கு இதைக்காட்டிலும் வேறு உபாயம் எனக்குத் தெரியவில்லை' என்று சொன்னான். கர்ணனுடைய சொல்லைக்கேட்டு, பராக்ரமசாலியான திருதராஷ்டிரன், சிலாகித்துப் பின்வரும் சொல்லைச்சொல்லலானான். 'கர்ண! சிறந்தபுத்தியுள்ளவனும் அஸ்திரங்களில் தேர்ந்தவனுமாகிய நீ பராக்ரமம் நிரம்பின இவ்வகையான இந்தச் சொல்லைச் சொல்வது பொருந்தினதுதான். ஆயினும், மறுபடியும் பீஷ்மரும் துரோணரும் விதுரனும் நீங்களிருவரும் சேர்ந்து மேன்மேலும் நமக்கு ஸௌக்கியத்தைத்தரத்தக்க ஆலோசனையைச்செய்யுங்கள்' என்றான். ஜனமேஜய மஹாராஜரே! அதன்பிறகு,

மிக்க கியாதிபெற்ற திருதராஷ்டிரன் அந்தப்பீஷ்மர் முதலிய மிகுந்த புகழையுடைய எல்லா மந்திரிவர்க்கங்களையும் வருவித்து ஆலோசனை செய்தான்.

---

## இருநூற்றிருபத்திரண்டாவது அத்தியாயம்.

## விதுராகமனபர்வம். (தொடர்ச்சி.)

---

**(பாண்டவர்களுக்குப் பாதிராஜ்யம் கொடுக்கவேண்டுமென்று பீஷ்மர் சொன்னது.)**

அப்போது,பீஷ்மர், 'பாண்டுபுத்திரர்களோடுவிரோதம் எனக்கு எவ்வகையிலும் இஷ்டமில்லை. எனக்குத் திருதராஷ்டிரன்எப்படியோ அப்படியேதான் பாண்டுவென்பதும் நிச்சயம். எனக்குக் குந்தியின் புத்திரர்களும் காந்தாரியின்புத்ரர்களைப் போன்றவர்கள்தாம். அந்தப் பாண்டுபுத்திரர்களைக் காப்பாற்றுவதுஎனக்குஎப்படியோ அப்படியே உனக்கும் கடமைதான். அரசனே! எனக்கும் உனக்கும் எப்படியோ அப்படியேதான் துரியோதனனுக்கும்மற்றக்கௌரவர்களுக்கும்அது கடமை. இப்படியிருக்க, அவர்களுடன் கலகஞ்செய்வதில் எனக்கு விருப்பமில்லை. அந்தவீரர்களோடு ஸமாதானஞ்செய்துகொண்டு ராஜ்யத்திற்பாதியை அவர்களுக்குக் கொடுப்பது தகும். இது கௌரவ ஶ்ரேஷ்டர்களான அவர்களுக்கும் தகப்பன், பாட்டன், அவன் தகப்பன் வழியாகவந்தராஜ்யம்தான். துரியோதனா! குழந்தாய்! இந்தராஜ்யத்தை நீபார்ப்பதுபோலவே அந்தப்பாண்டவர்களும் தமது பிதிரார்ஜிதமென்று பார்க்கின்றனர். புகழ்பெற்ற அந்தப்பாண்டவர்கள் இந்த ராஜ்யத்திற்குரியவராகாவிடின் இஃது உனக்குத்தான்ஏது? பரதவம்சத்திற் பிறந்த மற்றவர்களுக்குத்தான் ஏது? பரதஶ்ரேஷ்டனே! நீ ராஜ்யத்தை முறைத்தவறாக அடைந்திருக்கிறாய்;அவர்களும்உனக்கு முன்னமேராஜ்யத்தைஅடைந்தவர்களென்பதுஎன்கருத்து; நயமாகவே அவர்களுக்குப் பாதிராஜ்யம்கொடுப்பதுநியாயம் புருஷஶ்ரேஷ்டனே! இதுதான்எல்லாஜனங்களுக்கும்விருப்பம். இதற்குமாறாகச்செய்தால் நமக்கு அஃது இஷ்டமாகாது; உனக்கும்அபகீர்த்தி நிரம்பஉண்டாகுமென்பதில் சந்தேகமில்லை. கீர்த்தியைக் காப்பாற்றமுயல்; புகழ்தான் சிறந்தவன்மை; புகழழிந்தமனிதனுடைய வாழ்வு பயனற்றதாக

உரைக்கப்படுகின்றது; கௌரவனே! காந்தாரியின்புதல்வனே! கீர்த்தி அழியாமலிருக்கும்வரையில்தான் மனிதன் ஜீவித்திருப்பவன்; புகழ் அழிந்தவன் அழிந்தவனே. ஆதலால், குருவம்சத்திற்குத் தகுதியான இந்தத்தர்மத்தைக் கடைப்பிடி; சிறந்தபுஜபலமுடையவனே! உனக்கும் உன்முன்னோர்களுக்கும் தகுதியான காரியத்தைச் செய்; நல்ல காலத்தினால் பாண்டவர்கள் ஜீவித்திருக்கின்றனர். நல்ல காலத்தினால் அந்தக்குந்தி ஜீவித்திருக்கிறாள். நல்லகாலத்தினால் பாபியான புரோசனன் தன்னெண்ணம்முடியாமல் முடிவடைந்தான். காந்தாரியின்புத்திரனே! அந்தக்குந்திபுத்திரர்கள் தகிக்கப்பட்டுக்குந்தியும் அவ்வாறு ஆய்விட்டாளென்றுகேட்டதுமுதல், இவ்வுலகத்துள்ளபிராணிகளில் எதையும்நான் பார்க்கமுடியாமற்போனேன். புருஷச்ரேஷ்டனே!உலகம் உன்னைக் குற்றமுள்ளவனாகநினைப்பதுபோலப் புரோசனனைநினையாது. ஆதலால், அவர்கள் தப்பிப்பிழைத்திருத்தல் உனது தவறுதலுக்குப்பரிகாரம்; மஹாராஜனே! பாண்டவர்களின்காட்சியைநீவிரும்ப வேண்டும். கௌரவபுத்திரனே! அந்த வீரர்கள் ஜீவித்திருக்கையில் அவர்களின் பிதிரார்ஜிதபாகத்தை எடுத்துக்கொள்ளவஜ்ரபாணியான இந்திரன் நேரேவந்தாலும் முடியாது; அவர்களனைவரும் தர்மம் தவறாதவர்கள்; அனைவரும் ஒரேமனமுள்ளவர்கள்; ராஜ்யம் உனக்கும் அவர்களுக்கும் பொதுவாயிருக்க, மிகுந்த அதர்மத்தினால் நீ அவர்களை விலக்குகிறாய்; நீ தர்மத்தையும் என்விருப்பத்தையும் உன்க்ஷேமத்தையும் செய்வதாயிருந்தால் அவர்களுக்குப்பாதிராஜ்யம் கொடுத்துவிடு' என்று சொன்னார்.

---

## இருநூற்றிருபத்துமூன்றாவது அத்தியாயம்.

## விதுராகமனபர்வம். (தொடர்ச்சி.)

---

**(பீஷ்மர் சொன்னதை அனுஸரித்துத் துரோணர்சொல்ல அவ்விரண்டையும் கர்ணன் மறுத்ததன்மேல் துரோணர் கர்ணனைக்கண்டித்தது.)**

துரோணர், 'திருதராஷ்டிர மஹாராஜனே! ராஜ்யாலோசனைக்காக அழைக்கப்பட்ட ஆப்தர்கள் அறம்பொருள்புகழ்களுக்கு ஒத்ததாகச் சொல்லவேண்டுமென்று கேட்டிருக்கிறோம். ஐயா! மஹாத்மாவான பீஷ்மருடைய அபிப்பிராயந்தான் என்னுடைய அபிப்பிரா

யமும்;பாண்டவர்களுக்குப் பாகம்கொடுக்கவேண்டுமென்பது பழமையானதர்மம். பாரதனே! பாண்டவர்களுக்காக மிகுதியாகச் சிறந்த பொருள்களை எடுத்துக்கொண்டு துருபதனிடம் செல்லும்படி இன்சொல்லாகப் பேசத்தக்க ஒருமனிதனை உடனே அனுப்பவேண்டும். அந்தமனிதன் காரியத்தை ரஹஸ்யமாகவைத்துக்கொண்டு பொருளுடன் துருபதனிடம் செல்லவேண்டும்; மேலும், த்ருபதனுடையஸம்பந்தத்தினால் மிகுந்தமேன்மை உண்டாயிருப்பதாகவும் சொல்லவேண்டும். மன்னவ! நீயும்துரியோதனனும் மிக்ககளிப்புள்ளவர்களாகவிருப்பதாகவும் அவன் சொல்லக்கடவன் பாரதனே! துருபதனிடத்திலும் திருஷ்டத்யும்னனிடத்திலும் அவர்களுடையசம்பந்தம்யோக்கியமென்பதையும் பிரியமென்பதையும் பலமுறைவிரித்துரைக்கவேண்டும்.ராஜஶ்ரேஷ்டனே! உனது சொல்லாகக் குந்திபுத்திரர்களுக்கும் மாத்ரிபுத்ரர்களுக்கும் பலமுறை பிரியவசனம்சொல்லி, ஒளியுள்ள அனேகம் பொன்னணிகலங்களைத் திரௌபதிக்குக் கொடுக்கக்கடவன். பரதஶ்ரேஷ்டனே!அப்படியே துருபதபுத்திரர்கள்எல்லாருக்கும், பாண்டவர்கள்எல்லாருக்கும், குந்திக்கும் தகுதியானவை எவையோ அந்த விலைபெற்ற பொருள்களைத்தந்து பாண்டவர்களைமகிழ்விக்கவேண்டும்; இவ்வாறு பாண்டவர்களுக்கும் துருபதனுக்கும் பிரியவசனம் சொல்லியபிறகு, அந்தத்தூதன் பாண்டவர்கள் இங்கே வரவேண்டுமென்பதைப்பற்றித் துருபதனிடம் சொல்லக்கடவன்.துருபதன் அந்தவீரர்களுக்கு அனுமதி கொடுத்தபிறகு, துச்சாஸனனும் விகர்ணனும் அவர்களையழைத்துவர நமது சேனைகளுடன் செல்வது நலம். அதன்பிறகும், அந்தச்சிரேஷ்டர்களான பாண்டவர்கள் எந்தக்காலமும் உன்னால் கௌரவிக்கப்பெற்று மந்திரிவர்க்கத்தின் அனுமதியையடைந்து தங்கள் பிதாவின் ராஜ்யத்திலிருக்கட்டும். மஹாராஜாவே! பாரதனே! இதுதான் நீ அவர்களிடத்திலும் உனது புத்திரர்களிடத்திலும் நடந்துகொள்ளவேண்டிய நியாயமென்று பீஷ்மரோடு ஒத்து நான் அபிப்பிராயப்படுகிறேன்' என்று சொன்னார்.

அதனைக்கேட்டு, கர்ணன்,'உம்மிடத்துப் பொருளையும் பெருமையையும்பெற்று எல்லாக் காரியங்களிலும் உமக்கு அந்தரங்கமாயிருப்பவர்களாகிய இவ்விருவரும் உமது நன்மையை ஆலோசிக்காமலிருப்பாராயின் அதற்கு மேற்பட்ட புதுமை என்னவிருக்கிறது? எவன் மனத்திற் கெடுதியை வைத்துக்கொண்டு உள்ளத்தை வெளிப்படுத்

தாமல்நன்மையைப்போலப்பேசுகிருனே அவன் ஸத்புருஷர்களுடைய கொள்கையை நடத்துவது எவ்வாறு ? காரியங்களில் கஷ்டம் வரும் போது நன்மைக்கும் தீமைக்கும் மித்திரர்கள் உபயோகமில்லை. எவனுக்கும் இன்பமும் துன்பமும் விதியை அனுஸரித்தவை. மனிதன் அறிவின் திருத்தமுள்ளவனுயிருந்தாலும் இல்லாதவனுயிருந்தாலும் சிறியவனுயிருந்தாலும்பெரியவனுயிருந்தாலும்சகாயமுள்ளவனுயிருந்தாலும் இல்லாதவனுயிருந்தாலும் எல்லாவிடங்களிலும் எல்லாவற்றையும் தன் விதிக்குத்தக்கபடி அடைகிருன் ; முன்னர், ராஜகிருகமென்னும் நகரத்தில் மகததேசத்தரசர்களுள் சிறந்தவனுகிய அம்புவீசனென்னும் ஓர் அரசன் இருந்ததாகக் கேள்விப்படுகிருேமல்லவா? அப்போது அவ்வரசன் எல்லா * இந்திரியங்களுமற்று மூச்சுவிடுவதை மாத்திரம் பிரதானமாகக்கொண்டு எல்லாக்காரியங்களிலும் மந்திரிகளையே நம்பியிருந்தான். அப்போது, அவனுடைய மந்திரியாகிய மஹாகர்ணியென்பவன் தனி அரசனுக இருந்தான். அவன் தான் தனக்குப் பலம்கிடைத்ததாகநினைத்து ராஜாவை அவமதித்தான். அப்போது அந்தமூடன் ராஜபோகத்திற்குரிய மங்கையர்களையும்ரத்தினங்களையும்தனங்களையும் ஐசுவரியங்களையும் அதிகாரத்தையும்முழுமையும் தானேயெடுத்துக்கொண்டான்; அவற்றையெடுத்துக்கொண்ட பின்னும், அந்த லோபிக்கு ஆசையின்மேல் ஆசைபெருகிற்று; அதனுல், எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டும் எல்லாப்புலன்களுமற்று மூச்சு விடுவதுமாத்திரமே பிரதானமாகவுள்ள அவ்வரசனுடைய ராஜ்யத்தையும் அபகரிக்கக் கருதினுன்.முயற்சிசெய்தும்அவனுடைய ராஜ்யத்தையெடுத்துக்கொள்ள முடியவில்லையென்று நாம் கேள்வியுற்றிருக்கிருேம். வேறு என்னகாரணம் இருக்கிறது? அவ்வரசனுக்குராஜ்யாதிகாரம் விதியினுல் ஏற்பட்டதென்பது நிச்சயம். அரசனே!உனக்கும் ராஜ்யம் விதியினுல் ஏற்பட்டதாகவிருக்குமானுல் எல்லாஜனங்களும் அபகரிக்கஜாக்கிரதையாகஇருக்கும்போதே நிச்சயமாக அஃது உன்னைவிட்டுப் போகாமலிருக்கும்.இதற்குமாருக விதியிருக்குமானுல் முயற்சி செய்தும் ராஜ்யத்தை அடையாய்.தெரிந்தவனே!இவ்வாறே, மந்திரிகளுடைய யோக்கியதையையும் அயோக்கியதையையும் கண்டறிந்துகொள்; கெட்டவர்களுடைய சொல்லையும் நல்லவர்களுடைய

*ஸ்வயம் ஞானமில்லாமல்.

சொல்லையும் அறியவேண்டும்' என்றுசொல்ல, துரோணர், 'துஷ்டா! நீ கெட்ட எண்ணத்துடன் எதற்காக இந்தச்சொல்லைச் சொல்லுகிறு யென்பதை நாங்களறிவோம். நீ பாண்டவர்களுக்காக எங்கள் மேலும் குற்றத்தைச் சொல்லுகிறுய். கர்ண! குலத்திற்குஅபிவிருத்திகரமான மேலானநன்மையை நான் சொல்லுகிறேன். நீ அதைக்கெடுதலாக நினைத்தால், எஃது இதிலும் சிறந்தநன்மையோ அதைச்சொல். நான் எந்தச் சிறந்தநன்மையைச் சொல்லுகிறேனே அதற்குமாருகச் செய்யப்படுமாயின், கௌரவர்கள் வெகுசீக்கிரத்தில் அழிந்துபோவார்களென்பது என்கருத்து' என்ருர்.

---

## இருநூற்றிருபத்துநான்காவது அத்தியாயம்.

## விதுராகமனபர்வம். (தொடர்ச்சி.)

(பீஷ்மநும் துரோணநும் சொல்லியதே ஸரியென்று, விதுரர் திருதராஷ்டிரனுக்கு உரைத்தது.)

**விதுரர்**, 'திருதராஷ்டிரராஜனே! உன்னுடைய பந்துக்கள் நிச்சயமாக உனக்கு நன்மையைச் சொல்லவேண்டும். ஆனல், உனக்குக் கேட்க விருப்பமில்லாமலிருந்தால் அந்தச்சொல் இப்போது நிலைபெருது. அரசனே! சந்தனுபுத்திரரும் கௌரவஶ்ரேஷ்டருமாகிய பீஷ்மர், நீ விரும்பத்தக்கதும் நன்மையைத் தருவதுமான வசனத்தைச் சொல்லியிருக்கிருர். நீ அதனை எடுத்துக்கொள்ளவில்லை. அவ்வாறே த்ரோணரும் மேலான நன்மையைப் பலமுறைசொன்னர். அதையும் ராதையின் மகனை கர்ணன் உனக்கு நன்மையாக நினைக்கவில்லை. அரசனே! நான் நினைத்துப் பார்க்கையில், இந்தப் பீஷ்மதுரோணர்களாகிய இரண்டுபுருஷஸிம்மங்களைவிட அறிவிற்சிறந்தவனை அதிக ஆப்தன் உனக்கிருப்பதாக நான் அறியவில்லை. அரசர்க்கரசே! இவர்கள் இருவரும், பிராயத்திலும் புத்தியிலும் கல்வியிலும் முதிர்ந்தவர்கள்; உன்னிடத்திலும் பாண்டுபுத்திரர்களிடத்திலும் வேறுபாடில்லாமலிருப்பவர்கள். பாரதனே! தர்மத்திலும் ஸத்யத்திலும் தசரதபுத்திரராகிய ராமருக்கும் கயனுக்கும் கீழ்ப்படாதவர்கள்; ஸந்தேகமில்லை. இதற்குமுன்னும், யாதொருதீங்கையும் சொன்னவர்களல்லர். உன்விஷயத்தில் இவர்கள் ஒருதீங்கும்செய்ததாகவும் தெரியவில்லை. அப்படிப்பட்ட தோல்வியடையாதபராக்ரமமுள்ள அவ்விரண்டு

புருஷ ச்ரேஷ்டர்களும் நீ ராஜாவாகவும் நிரபராதனாகவுமிருக்க, உன் நன்மையைப்பற்றி ஏன் ஆலோசிக்கமாட்டார்கள்? குருச்ரேஷ்டனாகிய அரசனே! ஆதலால், சிறந்த ஞானமுள்ளவரும் இவ்வுலகத்தில் மிகச் சிறந்தவருமாகிய இவ்விருவரும் உன் விஷயத்தில் யாதொருகெடுதலும் சொல்லாரென்பது எனதுஉறுதியான எண்ணம். தர்மந்தெரிந்த இவர்கள் பொருளாசையினால் ஒருபக்ஷத்தில்சார்பாகப்பேசார். பாரதனே! இவர்கள்சொன்ன இதுதான் உனக்குமேலானநன்மையென்று நான் நினைக்கிறேன். வேந்தனே! துரியோதனன்முதலியவர்கள் எப்படி உன் புத்திரர்களோ அப்படியேதான் பாண்டவர்களும் உன் புத்திரர்கள். மன்னவனே! இது நிச்சயம். விஷயந்தெரியாத மந்திரிகள் அந்தப் பாண்டவர்களுக்குத் தீங்கானதொன்றை ஆலோசனையிற்சொல்வாராயின் அவர்கள் முக்கியமாகஉன்க்ஷேமத்தைக்கருதாதவர்கள். வேந்தே! அல்லது, உனக்கு உன்புத்திரர்களிடத்தில் அதிக அன்பிருக்குமானால் அது மறைந்திருப்பதை வெளிப்படுத்துகிற அந்தமந்திரிகள் உன்நன்மையைச்செய்யாதவர்களென்பது நிச்சயம். அரசனே! மஹாத்மாக்களும்மஹாசக்தியுள்ளவர்களுமாகிய இந்தப் பீஷ்மத்ரோணர்களிருவரும், இதற்காகத்தான் ஒன்றையும்வெளிப்படையாகச்சொல்லவில்லை. இஃது உன்னுடைய எண்ணமுமல்லவே? புருஷச்ரேஷ்டனே! புருஷச்ரேஷ்டர்களான பீஷ்மத்ரோணர்கள் பாண்டவர்களைவெல்லமுடியாதென்று உனக்குச்சொன்னார்களே; அதுவும்உண்மைதான். அதனால் உனக்கு ஸுகமுண்டாகவேண்டும். மன்னவ! சிறப்புள்ளவனும் * ஸவ்யஸாசியும் பாண்டுபுத்ரனுமான தனஞ்சயனை யுத்தத்தில்ஜயிப்பதற்குத் தேவேந்திரனாலும் முடியுமா? பீமஸேனன் சிறந்தகைகளையுடையவன்; பதினாயிரம்யானை பலமுள்ளவன்; ச்ரேஷ்டன்; ராக்ஷஸர்களுக்குப்பயத்தைத்தருபவன்; தன்கைகளின்மேலேயேபுகழ்பெற்றவன்; அளவற்றபலமுள்ளவன். பாரதனே! அரசர்க்கரசே! மஹாபலசாலியான ஹிடிம்பனையும் யுத்தத்தில் ராவணனுக்கொப்பான பகனென்னும் அரக்கனையும் எவன் கைச்சண்டையினால் கொன்றானோ அந்தப் பயத்தைத்தரத்தக்க பராக்ரமத்தோடுகூடிய பீமன்யுத்தஞ்செய்யும்போது அவனை யுத்தத்தில் வெல்லுவதற்குத் தேவராலும் முடியுமா? அவ்வாறே சமர்த்தர்களும் யுத்தத்தில் யமபுத்திரர்களைப்போன்றவர்களுமாகிய அந்த நகுல ஸஹதேவர்களை உயிரோடிருக்கவிரும்புகிற

---

* இரண்டு கைகளினாலும் பாணம் விடுபவன்.

ஒருவன் யுத்தத்தில் ஜயிக்க ஆரம்பிக்கக்கூடுமோ? தைரியமும் தயையும் பொறுமையும் ஸத்தியமும் பராக்கிரமும் எவரிடத்தில் ஸ்திரமாயிருக்கின்றனவோ, அந்தப்பாண்டவர்களில் மூத்தவராகிய யுதிஷ்டிரரை யுத்தத்தில் வெல்வதெவ்வாறு? எவர்கள்பக்ஷத்தில் பலராமர் ஆதாரமோ, எவர்களுக்குக் கண்ணன் மந்திரியோ, எவர்கள்பக்ஷத்தில் சாத்யகி யிருக்கிறானோ, எவர்களுக்குத் துருபதன் மாமனாரோ, எவர்களுக்குத் துருபதபுத்திரர்களான திருஷ்டத்யும்னன் முதலிய வீரர்களான ஸஹோதரர்கள் மைத்துனர்களோ, எவர்களுக்குச் சேதிதேசத்தரசனும் மஹாரதனுமாகிய சிசுபாலன் பிராதாவோ அவர்கள் யுத்தத்தில் ஜயிக்காதது என்ன உண்டு? பாரதனே! ஆதலால், நீ அவர்களை ஜயிக்கமுடியாதென்பதையும் அவர்கள் ஆதியிலேயே ராஜ்யத்துக்குரியவர்களென்பதையும் செவ்வையாக ஆராய்ந்து அவர்களிடம் சரியான தர்மத்துடன் நடந்துகொள். ராஜனே! புரோசனனுலுண்டாக்கப்பட்ட இந்தப் பெரிய அபகீர்த்தியான அழுக்கு உன்மேல் ஏற்றப்பட்டிருக்கிறது. இப்போது பாண்டவர்களுக்கு அனுக்ரஹஞ்செய்வதென்னும் நீரினால் அதனைச் சுத்தஞ்செய்துகொள். இப்போது அவர்களிடம் அனுக்ரஹஞ்செய்வது நமது குலத்தோர் எல்லாருக்கும் பிராணதாரமும் மேலான க்ஷேமமும் க்ஷத்ரிய ஜாதிக்கே அபிவிருத்திகரமுமாயிருக்கும். துருபதனும் பெரியராஜா; நம்மிடத்திலும் முன்னமே விரோதஞ்செய்தவன். ராஜாவே! அவனைச் சேர்த்துக்கொள்வது நம்முடைய பக்ஷத்தின் அபிவிருத்திக்குக் காரணம். ராஜாவே! யாதவர்களும் மிகுந்த பலசாலிகள்; அனேகர்கள்; அவர்களெல்லாரும் கிருஷ்ணன் எந்தப்பக்கமோ அந்தப்பக்கம் இருப்பர். கிருஷ்ணன் எங்கேயோ அங்கேயே ஜயம். ராஜாவே! எந்தக்காரியம் இனியசொல்லினால் செய்யக்கூடியதோ அந்தக்காரியத்தை விரோதத்தோடு செய்பவன் சாபத்தையடைந்தவன். ராஜாவே! பாண்டவர்கள் ஜீவித்திருப்பதைக்கேட்டு நகரத்திலும் தேசத்திலுமுள்ள ஜனங்களும் அந்தப் பலவான்களைப்பார்க்க உற்சாகமுள்ளவர்களாயிருக்கின்றனர். அவர்களின் விருப்பத்தையும் செய்யக்கடவாய். துரியோதனனும் கர்ணனும் ஸௌபலபுத்திரனான சகுனியும் பாவத்திற் பிரவர்த்திப்பவர்கள்; புத்திகெட்டவர்கள்; சிறுவர்கள். இவர்கள்சொன்னதைச் செய்யாதே. ராஜாவே! துரியோதனன் ஒருவனுடைய அபராதத்தினால் இந்த ஜனங்களெல்லாம் அழியப்போகின்றனரென்பதைக் குணவானான உனக்கு முன்னமே நான் சொல்லியிருக்கிறேன்" என்றனர்.

---

## இருநூற்றிருபத்தைந்தாவது அத்தியாயம்.

### விதுராகமனபர்வம், (தொடர்ச்சி.)



(விதுரர் துருபதநகரஞ்சென்று அங்கே கிருஷ்ணன் முதலானோர் இருக்கும்போது திருதராஷ்டிரன் சொல்லிய செய்தியைத் தெரிவித்தது.)

திருதராஷ்டிரன், "வித்துவானும் சந்தனுபுத்திரருமாகிய பீஷ்மரும் மகிமைபொருந்திய ரிஷியாகிய துரோணரும் மிக்க நன்மையும் உண்மையும் பயனுமுள்ளதான சொல்லை உரைத்தனர். நீயும் எனக்கு மிக்கநன்மையும் சத்தியமுமானவார்த்தையைச்சொல்லுகிறாய். மஹாரதர்களும் வீரர்களுமான அந்தப்பாண்டவர்கள் பாண்டுவுக்கெப்படியோ அப்படியே தர்மப்படி எனக்கும் புத்திரர்களென்பதில் ஸந்தேகமில்லை. இந்தராஜ்யம் என்புத்திரர்களுக்கெப்படி உரியதோ அப்படியே பாண்டுபுத்திரர்களுக்குமென்பதிலும் சந்தேகமில்லை. பாரதனான விதுரா! நீ செல். தேவதையைப்போன்ற ரூபமுள்ள கிருஷ்ணையுடன் பாண்டவர்களையும் அவர்கள் தாயாரான குந்தியையும் அழைத்துவா. நல்லகாலம்; அந்தப் பாண்டவர்கள் ஜீவித்திருக்கின்றனர். அந்தக் குந்தி ஜீவித்திருப்பதும் நல்லகாலம். மஹாரதர்களான பாண்டவர்கள் திரௌபதியையடைந்ததும் சந்தோஷம். அதிருஷ்டத்தினால் நாமெல்லாரும் அபிவிருத்தியாகிறோம். புரோசனன் ஒழிந்ததும் நல்லகாலம். சிறந்தகீர்த்தியுள்ளவனே! என்னுடையபெருந்துயரம் நல்லகாலத்தினால் விலக்கப்பட்டது. விதுரா! நீயேசென்று அவர்களை உடனே இங்கே அழைத்துவா" என்றான். அவன் இவ்வாறுசொல்ல, ராஜதர்மந்தெரிந்த விதுரர் விரைவாகச் செல்லத்தக்க ரதத்திலேறிச் சிலதினங்களில் பாஞ்சாலதேசம் சேர்ந்தார். பாரதனே! பிறகு, விதுரர், திருதராஷ்டிரனுடைய அந்த ஆஜ்ஞையால் திரௌபதிக்கும் பாண்டவர்களுக்கும் துருபதனுக்கும் பலவகைத் தனங்களையும் ரத்னங்களையுமெடுத்துக்கொண்டு துருபதனும் பாண்டவர்களுமிருக்குமிடத்திற்குச் சென்றார். ராஜாவே! தர்மந்தெரிந்தவரும் ஸர்வசாஸ்திரங்களிலும் நிபுணருமாகிய விதுரர், அவ்விடஞ்சென்று சம்பந்தியான துருபதனிடம் முறைப்படி சேர்ந்தார். அப்போது, அந்தத் துருபதனும் விதுரரை முறைப்படியழைத்தான். ஒருவர்க்கொருவர் மரியாதைப்பிரகாரம் யோகக்ஷேமம் விசாரித்துக்கொண்டனர். பாரதரே! விதுரர் அவ்விடத்தில் பாண்டவர்களையும் கண்ணபிரானையும் கண்டு உடனே அன்புடன் அவர்களைத் தழுவிக்கொண்டு க்ஷேமத்தை விசாரித்தார். ராஜாவே! அளவற்ற ஞானமுள்ள அந்த விதுரர் அவர்களா

லும் கிரமப்படி பூஜிக்கப்பெற்று அந்தப்பாண்டவர்களைத் திருதராஷ்டிரன் சிநேகத்துடன் பலமுறை குசலப்பிரச்னம் செய்ததாகவும் சொன்னார். ராஜாவே! பாண்டவர்களுக்கும் குந்திக்கும் திரௌபதிக்கும் துருபதனுடைய புத்ரர்களுக்கும் கௌரவர்கள்கொடுத்த அநேக விதங்களான இரத்தினங்களையும் தனங்களையும் கொடுத்தார். அளவற்ற புத்தியுள்ள விதுரர், வினயத்துடன் பாண்டவர்கள் கிருஷ்ணன் இவர்கள் முன்னிலையில் வணக்கமுள்ள துருபதனிடம் பேசத் தொடங்கினார்.

"ராஜாவே! அமைச்சரோடும் புதல்வரோடுங்கூட என் சொல்லைக் கேளும். ராஜாவே! திருதராஷ்டிரனும் தன் புதல்வர்களோடும் மந்திரிகளோடும் பந்துக்களோடுங்கூட அன்புகூர்ந்து அனேகமுறை குசலப்பிரச்னம் செய்கிறான். ராஜாவே! உன் ஸம்பந்தத்தினால் மிகுந்த ஸந்தோஷமடைந்திருக்கிறான். அப்படியே ஞானவான்களிற்சிறந்தவரும் சந்தனுபுத்திரருமான பீஷ்மரும் கௌரவரனைவருடனுங்கூட எல்லாவகைகளிலும் உன்க்ஷேமத்தை விசாரிக்கிறார். உனக்கு அன்புள்ள ஸ்நேஹிதரும் சிறந்த ஞானவானும் பரத்வாஜபுத்திரருமான துரோணர் உன்னை தழுவிக்கொண்டு குசலப்ரச்னம்செய்கிறார். பாஞ்சாலராஜனே! திருதராஷ்டிரனும் மற்றக் கௌரவர்களனைவரும் உன் ஸம்பந்தத்தைப்பெற்றதனால் தம்மைக் கிருதார்த்தராக நினைக்கின்றனர். யஜ்ஞஸேனா! உன்னுடன் ஸம்பந்தம்பெற்றதெப்படியோ அப்படி ராஜ்யலாபங்கூட ஸந்தோஷத்தையுண்டாக்குவதாக அவர்கள் நினைக்கவில்லை. நீ இதையறிந்து பாண்டவர்களை அனுப்பவேண்டும். பாண்டுபுத்திரர்களைப்பார்ப்பதற்குக் கௌரவர்கள் மிகவும் ஆவலோடிருக்கின்றனர். புருஷச்ரேஷ்டர்களான இந்தப்பாண்டவர்களும் குந்தியும் நெடுங்காலமாகத் தேசம்விட்டுப் போனதினால் நகரத்தைப் பார்க்க ஆவலுள்ளவர்களாயிருப்பார்கள். பாஞ்சாலியையும் கௌரவ ராஜஸ்திரீகளனைவரும் பார்க்கவிரும்புகின்றனர். எங்கள் நகரத்திலும் தேசத்திலுமுள்ள ஜனங்களும் எதிர்பார்க்கின்றனர். ஆதலால், நீ பாண்டுபுத்திரர்களைப் பாரியையுடன்கூட உடனே அவ்விடம்போவதற்கு விடைகொடுக்கவேண்டும். இந்தவிஷயத்தில் இதுவே என்னுடைய அபிப்பிராயம். ராஜாவே! மஹாத்மாக்களான பாண்டவர்களுக்கு நீ விடைகொடுத்தபிறகு, குந்திபுத்திரர்களான அவர்களும் குந்தியும் கிருஷ்ணையுடன்கூட வரப்போகிறார்களென்று விரைவாகப் போகத்தக்க தூதர்களை நான் திருதராஷ்டிரனுக்கு அனுப்புவேன்" என்று கூறினர்.

---

## இருநூற்றிருபத்தாறுவது அத்தியாயம்.



### விதுராகமனப்ர்வம், (தொடர்ச்சி.)

(துருபதன், பாண்டவர்களுக்கு ஹஸ்திநாபுரம்செல்லும்படி அனுமதி கொடுத்ததும், விதுரர் குந்தியைப்பார்த்துப் பேசியதும், பாண்டவர்கள் புறப்படுவதும், அவர்களுக்குத் துருபதன் சீரனுப்பியதும், அவர்கள் கௌரவர்களால் எதிர்கொண்டழைக்கப்பட்டுக் கிரகப்பிரவேசம் செய்ததும்.)

துருபதன், "மஹா ஞானவானான விதுரரே! நீர் இப்போது எனக்குச் சொல்வது ஸரி. கனவானே! இந்த ஸம்பந்தஞ்செய்ததில் எனக்கும் அதிக ஸந்தோஷமே. இந்த மஹாத்மாக்களான பாண்டவர்கள் தங்கள்தேசம் போவதும் உசிதமாகத்தான் இருக்கும். ஆனால், நானே என்வாக்கினால் இதைச் சொல்லத்தகாது. வீரரும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரரும் பீமஸேனனும் அர்ச்சுனனும் புருஷச்ரேஷ்டர்களான நகுலஸஹதேவர்களும், தர்மத்தை யறிந்தவர்களான கிருஷ்ண பலராமர்களும் எப்போது நினைக்கிறார்களோ அப்போதே ......போகலாம். புருஷச்ரேஷ்டர்களாகிய இந்த ராமகிருஷ்ணர்கள் பாண்டவர்களுடைய விருப்பத்தையும் நன்மையையும் கருதுகிறவர்கள்" என்று சொன்னான். யுதிஷ்டிரர், "ராஜாவே! நாமும் நம்மைச் சேர்ந்தவர்களனைவரும் உமக்கு அதீனர்கள். நீர் அன்புடன் எங்களுக்கு எதைச்சொன்னாலும் அதை நாங்கள் செய்வோம்" என்றார். பிறகு, கிருஷ்ணபகவான், "மேலேசொல்லியது யுக்தமென்று எனக்குத் தோன்றுகிறது. எல்லாத் தர்மங்களுந்தெரிந்த துருபதராஜா எவ்வாறு நினைக்கிறாரோ" என்றார். அதைக்கேட்டுத் துருபதன், "வீரரும் புருஷோத்தமரும் சிறந்த கைகளையுடையவருமாகிய கிருஷ்ணன் எஃது இந்தக் காலத்திற்குத் தகுதியானதென்று நினைக்கிறாரோ அது தான் என்னுடைய நிச்சயமான எண்ணம். மஹானுபாவர்களான பாண்டவர்கள் இப்போது எனக்கு எப்படியோ அப்படியேதான் கிருஷ்ணனுக்குமென்பதிற் சந்தேகமில்லை. இந்தப் பாண்டவர்களின் நன்மையைப்பற்றிப் புருஷச்ரேஷ்டராகிய கிருஷ்ணன் சிந்திப்பதுபோலக் குந்திபுத்திரரும் பாண்டுபுத்திரருமான யுதிஷ்டிரரும் சிந்திப்பதில்லை" என்றான். பிறகு, மஹாபுத்திமானான விதுரர் குந்தியிருக்கும் இடம் சென்று குந்தியின் பாதங்களிற் சிரம் படும்படி பூமியில் பணிந்தார்,

மைத்துனரைக்கண்டு குந்தி மிகவும் விசனப்பட்டு, "விசித்ரவீர்யபுத்திரரே! உமது புத்திரர்களை நீர் எப்படியோ பிழைப்பித்தீர். அரக்கு மாளிகையில் இறந்துபோனவர் உமதுகருணையினால் திரும்பிவந்தனர். ஆமை தான் எந்தவிடத்திலிருந்தாலும் குஞ்சுகளை நினைப்பதுபோல, உமதுநினைவினாலேயே உமதுபுத்திரர்கள் க்ஷேமமாயிருக்கும்படி விருத்திசெய்யப்பட்டிருக்கின்றனர். பாதச்ரேஷ்டரே! உமதுபுத்திரர்கள் உம்மிடத்தில்வைத்திருக்கும் பக்தியினாலேயே பிழைத்திருக்கின்றனர். ஐயா! எப்படி குயிற்குஞ்சுகளைக் காக்கை வளர்க்குமோ அப்படியே என்புத்திரர்களை நீர் எப்போதும் காப்பாற்றுகிறீர். உயிர் முடிவையும் உண்டாக்கத்தக்க அநேககஷ்டங்களை நானடைந்தேன். இதற்குமேல் நானறியேன். செய்யவேண்டிய காரியத்தை நீர்தாம் அறியத்தகுந்தவர்" என்றாள். விதுரர், "குந்தீ! உலகங்களுக்குள் மஹாபலசாலிகளான உன்புதல்வர் அழிவதில்லை. சொற்பகாலத்தில் அவர்களெல்லாரும் சுற்றத்தாருடன்சேர்ந்து தங்கள் ராஜ்யத்தைப் பெற்றவராவர். நீ துயரப்படாதே" என்றுசொன்னார்.

பிறகு, மஹாத்மாவான துருபதனால் அநுமதிகொடுக்கப்பட்ட அந்தப்பாண்டவர்களும் கிருஷ்ணனும் சிறந்தபுத்திமானான விதுரரும் புகழ்பெற்ற திரௌபதியையும் குந்தியையும் அழைத்துக்கொண்டு விநோதமாகவும் ஸுகமாகவும் அஸ்தினாபுரத்துக்குச்சென்றனர். அப்போது துருபதன் பொன்மயமான கச்சைகளும் கழுத்துப்பட்டைகளுமுள்ளவையும் பொன் அங்குசத்தினால் அலங்கரிக்கப்பட்டவையும் பொன்னாபரணங்களையுடையவையும் கன்னங்களிலும் முகங்களிலும் மதஜலம்பெருகுகின்றவையும் பாகர்களால் நடத்தப்பட்டவையும் எல்லா ஆயுதங்களோடும் கூடியவையும் உயர்ந்த கவசங்களுள்ளவையுமான ஆயிரம்யானைகளையும், பொன்னினாலும் ரத்னங்களினாலும் சித்திரமாகச் செய்யப்பட்டவையும் நாலுகுதிரைகள்பூட்டப்பட்டவையும் பிரகாசமுள்ளவையுமான ஆயிரம் தேர்களையும், பொன் ஆபரணங்களோடு கூடியவையும் உயர்ந்தசாமரங்களை மாலைகளாக உடையவையுமான ஐம்பதினாயிரம் உயர்ந்த ஜாதிக் குதிரைகளையும், சிறந்த அணிகளணிந்த பதினாயிரம் தாதிமார்களையும், சிறந்த வில்லாளிகளான பதினாயிரம் சேவகர்களையும் ஐவருக்கும் கொடுத்தான். பாஞ்சாலராஜன் மிக்க சந்தோஷமுள்ளவனாகிப் பொன்மயமான படுக்கைகள் ஆஸனங்கள் பாத்திரங்கள் முதலிய பொருள்களையும் பசுக்களையும் கோடிகோடியாக ஒவ்வொருவருக்கும் கொடுத்தான். நூறுபல்லக்குக்களையும் அவற்றை யெடுப்பவரான ஐந்நூறுமனிதர்களையும் இவ்வாறு இன்னும்

அனேகங்களையும் மருமக்களுக்குத் தனமாகப் பாஞ்சாலராஜன் குறைவின்றிக்கொடுத்தான். ஸோமகராஜன் பாஞ்சாலிக்குத் தந்தை கொடுக்கவேண்டியசீரையும்கொடுத்தான். பாரதரான ஜனமேஜயரே! அப்போது திருஷ்டத்யும்னன் ஆயிரக்கணக்காக வாத்தியகோஷங்கள்முழங்கத் தன்னுடன்பிறந்தவளையழைத்துக்கொண்டு சென்றான். பாரதரே! அம்பிகாபுத்திரனை திருதராஷ்டிரன், வீரர்களானபாண்டவர்கள் வந்ததைக்கேட்டு அவர்களை யெதிர்கொண்டழைப்பதற்குக் கௌரவர்களும் சிறந்த வில்லாளிகளுமான விகர்ணன் சித்ரஸேனன் இவர்களையும் முதன்மையான வில்லாளியாகிய துரோணரையும் கௌதமரான கிருபரையும் அனுப்பினான். அப்போது சூரர்களால் சூழப்பட்ட மஹாரதர்களான அந்தப்பாண்டவர்கள் உத்ஸாகத்துடன் மெல்லமெல்ல அஸ்தினாபுரத்தில் பிரவேசித்தனர். நகரத்துஜனங்கள் பாண்டவர்கள் வந்ததைக்கேட்டு ஸந்தோஷத்துடன் அந்த அஸ்தினா நகரத்தை அலங்காரஞ்செய்தனர். எங்கும் தனிமலர்கள் தூவப்பட்டதும் எங்கும் ஜலம்தெளிக்கப்பட்டதும் உயர்ந்ததூபம் போடப்பட்டதும் மங்களத்திரவியங்கள் நிரம்பினதும் உயர்ந்தகொடிகளில் பூமாலைகள் கட்டப்பட்டதுமாகிய அந்நகரம் ஒப்பற்றதாக விளங்கிற்று. சங்கம் பேரிமுதலிய பற்பல வாத்தியங்களின் முழக்கங்களினாலும் பட்டணமே ஸந்தோஷத்தினால் நிரப்பப்பட்டதுபோலிருந்தது. அங்கே பாண்டவர்களின் விருப்பத்தைச் செய்யக்கருதின ஜனங்கள் மனக்கொதிப்போடும் துயரத்தோடும், "இந்தச்சூரர்கள் திருதராஷ்டிரனால் பீடிக்கப்பட்டுத் தாயாருடன்கூட முன்னமே நகரத்திலிருந்து வெளிப்பட்டனர்; இப்போது நல்லகாலமாக மீண்டுவந்தனர்" என்று உள்ளங்கவரும் பிரியவசனம்சொல்லுகிறதைப் புருஷச்ரேஷ்டர்களான பாண்டவர்கள் எல்லாவிடங்களிலும் கேட்டனர். பட்டணத்து ஜனங்கள், "எவர் நம்மைத் தம்மக்களைப்போலத் தர்மமாகக் காப்பவரோ அந்த தர்மந்தெரிந்த புருஷச்ரேஷ்டர் இதோ திரும்பவும் வனத்திலிருந்து இப்போது வந்திருக்கிறார். இது பாண்டு மஹாராஜாவே நமது மனவிருப்பத்தைச் செய்யக்கருதி வனத்திலிருந்து திரும்பவும் வந்தது போலிருக்கிறது. இதில் ஸந்தேகமில்லை. நாம் என்ன புண்ணியம் செய்தோம். நம்மெல்லாருக்கும் சிறந்ததான விரும்பியபொருள் கிடைத்திருக்கிறது. ஏனெனில், வீரர்களான குந்திபுத்திரர்கள் திரும்பவும் நம்மையாளுகிறவர்களாக வந்திருக்கின்றனர். நாம் செய்த தானமும் ஹோமமும் தபஸும் இருக்குமாயின் அவற்றின்பயனாகப் பாண்டவர்கள் நூறுவருஷகாலம் இந்நகரத்தில் இருக்கவேண்டும்"

என்று சொல்லிக்கொண்டனர். பிறகு, அந்தப் பாண்டவர்கள் திருத ராஷ்டிரனையும் மஹாத்மாவான பீஷ்மரையும் மற்றும் வந்தனத்திற் குரியவர்களாகிய எல்லோரையும் பாதவந்தனஞ்செய்தனர். அவர்கள், நகரத்தாரெல்லாராலும் குசலப்ரச்னஞ் செய்யப்பட்டுத் திருதராஷ் டிரன் கட்டளைப்படி கிருஹப்ரவேசஞ்செய்தனர்.

விதுராகமனபர்வம் முற்றிற்று.

## இருநூற்றிருபத்தேழாவது அத்தியாயம்.

## ராஜ்யலாப பர்வம்.



(திருதராஷ்டிரன் தர்மபுத்திரருக்கு அர்த்தராஜ்யாபிஷேகஞ்செய்ததும், பிறகு பாண்டவர்கள் காண்டவப்பிரஸ்தம்சென்றதும், ஸ்ரீ கிருஷ் ணனால் நினைக்கப்பட்ட இந்திரன் விசுவகர்மாவையனுப்ப அவன் இந்திரப்பிரஸ்தத்தை நிர்மாணஞ்செய்ததும், கிருஷ்ணன் குந்தியினிடம்விடைகேட்டுக்கொண்டு துவாரகைசென்றதும்.)

அப்போது, துரியோதனன் மனைவியாகிய காசிராஜன்பெண் மற்றத் திருதராஷ்டிரபுத்திரர்களுடைய மனைவிகளுடன் சேர்ந்து, பதிவிரதையும் இரண்டாவது லக்ஷ்மியையும் இந்திராணியையும் போல வந்திருப்பவளும், மரியாதைக்குரியவளுமான திரௌபதியை மரியாதைசெய்து அழைத்தாள். அவ்விடத்தில் திரௌபதியுடன் கூடக் குந்தி, காந்தாரிக்கு நமஸ்காரஞ்செய்தாள். அந்தக் காந்தாரி ஆசீர்வாதங்களைச்சொல்லிப் பாஞ்சாலியைத் தழுவிக்கொண்டாள். அவள் தாமரைக்கண்ணியான கிருஷ்ணையைத் தழுவிக்கொண்ட வுடன், "இவள்தான் என்புத்திரர்களுக்கு நமன்" என்று நினைத்தாள். ஸுபலன் புத்திரியான காந்தாரி யுக்திகளைக்கொண்டு நன்றாக ஆராய்ந் துபார்த்து விதுரரை நோக்கி, "விதுரரே! உமக்கு யுக்தமாகத்தோன் றினால் ராஜபுத்திரியான குந்தியை அவள் மருமகளோடும் பண்டங்க ளோடுங்கூடச் சீக்கிரத்தில் சுபமான நல்ல நக்ஷத்திரமும் கரணமும் லக்னமுஞ்சேர்ந்த தினத்தில் பாண்டுவின்கிருஹத்திற்கு அழைத்துக் கொண்டு போகவேண்டும். குந்தி தன் புத்திரர்களுடன்கூட அவள் வீட்டில் ஸுகமாக மகிழ்ந்திருக்கட்டும்" என்று சொன்னாள். அப் போது விதுரரும், 'அப்படியே' யென்று அங்கீகரித்து அவ்வாறே அதைச் செய்வித்தார். அப்போது சுற்றத்தார்களும் நகரத்து ஜனங் களும் சங்கத்தலைவர்களும் பாண்டவர்களுக்கு மரியாதை செய்தார் கள். பீஷ்மரும் துரோணரும் கிருபரும் கர்ணனும் பாஹ்லீகனும்

அவன்புத்திரனும் திருதராஷ்டிரன் கட்டளையினால் ஆதித்தியஞ்செய்தனர். இவ்வாறு சந்தோஷமாகவிருந்த அந்த மஹாத்மாக்களான பாண்டவர்களின் காரியங்களையெல்லாம் திருதராஷ்டிர மஹாராஜாவின் கட்டளையினால் விதுரர் நடத்தினார்.

மஹாத்மாக்களான அந்தப் பாண்டவர்கள் கிருஷ்ணனுடன்கூடச் சிலகாலம் வசித்தபிறகு, திருதராஷ்டிர மஹாராஜாவும் பீஷ்மரும் அவர்களை வருவித்தனர். அப்போது திருதராஷ்டிரன், "யுதிஷ்டிரனே! நான் சொல்லப்போகிறதை உன் ஸஹோதரர்களுடன் கேள். இந்தராஜ்யம் பாண்டுவினால் விருத்திசெய்யப்பட்டது. ஜனங்கள் காப்பாற்றப்பட்டனர்; குந்திபுத்திரா! ராஜாவே! மஹாபலசாலியான என்ஸஹோதரன் எந்தக்காலமும் என்கட்டளையின்மேல் செயற்கரிய செய்கையைச் செய்துவந்தான்; கௌந்தேயனே! ஆதலால், நீயும் என்கட்டளையை உடனேசெய்; யுதிஷ்டிரா! என்மைந்தர்களனைவரும் துராத்துமாக்கள்; அகங்காரமுள்ளவர்கள்; ஒருபோதும் என் கட்டளையைச்செய்யார். எப்போதும் ஸ்வயநயத்திலேயே ஊக்கமுள்ளவர்களும் கர்வித்தவர்களும் துராத்துமாக்களுமாகிய இவர்களோடு மறுபடியும் விரோதம் வரலாகாது; நீ காண்டவப் பிரஸ்தத்துக்குச்செல்; இந்திரனால் தேவர்கள் காக்கப்படுவதுபோல் அர்ஜுனனால் காக்கப்பட்டு அங்கேவஸிக்கும் உங்களைப்பிடிக்க எவனாலும்முடியாது. பாதிராஜ்யத்தைப் பெற்றுக்கொண்டு காண்டவப்பிரஸ்தஞ்சேர்; கிருஷ்ணனுடைய ஸம்மதமிருந்தால் அதை நிச்சயமாகச் செய்யலாம்" என்று சொன்னான். பாண்டவர்களெல்லாரும் அந்தத் திருதராஷ்டிர மஹாராஜாவின் வாக்கியத்தை அங்கீகரித்து அவனுக்கு நமஸ்காரஞ்செய்து கிருஷ்ணனுடன் ஆலோசனைசெய்துகொண்டு உட்கார்ந்திருந்தனர். அப்போது, திருதராஷ்டிரன், "விதுரா! அபிஷேகத்திற்குரிய பொருள்களைச் சீக்கிரம் சேகரிப்பாயாக. யுதிஷ்டிரனுக்கு இப்போதே ராஜ்யாபிஷேகஞ் செய்யப்போகிறேன். பிராமணர்களையும் நகரத்திலுள்ள பெரியமனிதர்களையும் சங்கத்தலைவர்களனைவரையும் மந்திரிகளையும் முக்கியமான பந்துக்களையும் அழைக்கவேண்டும். அப்பா! புண்ணியாகவாசனஞ் செய்விக்கத்தக்கது. ஆயிரம் கோதானம் செய்யவேண்டும். பிராமணர்களுக்கு மிகுதியான தக்ஷிணைகளோடு முதன்மையான கிராமங்களைத் தானங்கொடுக்கவேண்டும். விதுரா! தோள்வளைகளையும் கிரீடத்தையும் மோதிரத்தையும் முத்துஸரங்களையும் ஹாரங்களையும் பவுன்மாலைகளையும் தோடாக்களையும் அரைஞாணையும் பொற்பூணூலையும் அரைக்கச்சையையும் கொண்டுவா;

புரோஹிதர்களானபிராமணர்களால் ஏறப்பட்ட ஆயிரத்தெட்டுயானை கள் சீக்கிரம் கங்காஜலம் கொண்டுவரட்டும். குந்தியின் ஜ்யேஷ்ட புத்திரனும் அஜமீடவம்சத்தவனுமாகிய யுதிஷ்டிரன் பட்டாபிஷேக ஜலத்தினால் ஸ்நானஞ்செய்தபிறகு எல்லா ஆபரணங்களையும் அணிந்து இராஜவாகனத்தின்மேலேறிக்கொண்டு உயர்ந்த சாமரங்கள்போட வும் பொன்னினாலும் ரத்தினங்களினாலும் விசித்ரமான வெண்குடை விளங்கவும் பிராம்மணர்களும் அரசர்களும் 'ஜயஜய' வென்று துதி செய்யவும்கண்டு அவன்சினேகிதரான மற்றஜனங்களும் உள்ளன்பு கூர்ந்து சிலாகிக்கட்டும். இந்தராஜ்யத்தை நான் அவனுக்குக்கொடு ப்பதனால், எனக்கு உபகாரஞ்செய்தபாண்டுவுக்குப் பிரத்யுபகாரஞ் செய்ததாகுமென்பதிற்சந்தேகமில்லை" என்றுசொன்னான்.

அப்போது, பீஷ்மரும் துரோணரும் கிருபரும் விதுரரும் "சரி சரி" என்றனர். கிருஷ்ணமூர்த்தி, "மஹாபாக்கியம் பெற்றவரே! அரசர்க்கரசரே! இது தகும். இது கௌரவர்களுக்குக்கீர்த்தியைத் தரத்தக்கது. நீர்சொன்னதை இப்போதே விரைவாகச்செய்யக்கட வீர்" என்றுசொன்னார். இவ்வாறு சொல்லிக் கிருஷ்ணன் துரிதப் படுத்தித் திருதராஷ்டிரன்சொன்னதை அப்போதே செய்வித்தார். ஜனமேஜயமஹாராஜாவே! அந்தக்ஷணத்தில் கிருஷ்ணத்வைபாயனர் வந்து மித்திரர்களின் கூட்டத்தோடுசேர்ந்த கௌரவர்கள் அனைவரா லும் பூஜிக்கப்பட்டு ராஜ்யாபிஷேகஞ்செய்துகொண்ட அரசர்களோ டும் வேதங்களிற்கரைகண்ட பிராம்மணர்களோடும்சேர்ந்து கிருஷ் ணன்சொற்படி சாஸ்திரோக்தமாக அபிஷேகத்தைச்செய்வித்தார். அப்போது, கிருபரும் துரோணரும் பீஷ்மரும் தௌமியரும் வியாஸ ரும் கிருஷ்ணனும் பாஹ்லீகனும் ஸோமதத்தனும் நாலுவேதமுந் தெரிந்தபிராம்மணர்களை முன்னிட்டுக்கொண்டு யுதிஷ்டிரரை ஸிம்மா ஸனத்தில் உட்காரவைத்து மந்திரயுக்தமாகப் பட்டாபிஷேகஞ்செய் தனர். வியாஸர், "நீ பூமிமுழுதையும்ஜயித்து ராஜாக்களையுட்படுத் திச் சிறந்ததக்ஷிணையோடுகூடிய ராஜஸூயமுதலான யாகங்களைச் செய்து *அவபிருதஸ்நானஞ்செய்து வேண்டியவர்களுடன் மகிழ்ந் திருக்கக்கடவாய்" என்றுசொன்னார். அவர் இவ்வாறுசொன்ன பிறகு, அங்குள்ளாரனைவரும் ஆசீர்வாதங்களினால் தர்மராஜாவைச் சிறப்பித்தனர். சீக்ரமில் பட்டாபிஷேகஞ்செய்யப்பெற்ற கௌரவ ராஜாவான யுதிஷ்டிரர் எல்லாஆபரணங்களையுமணிந்துகொண்டு 'ஜய ஜய' வென்று துதிசெய்யப்பெற்று அளவற்றதனத்தைத் தானஞ்செய்

* யாகமுடிவிலசெய்யும ஸ்நானம்.

தார். ராஜாவாக ஏற்படுத்தப்பட்ட யுதிஷ்டிரர் தேவர்களால் தேவேந்திரன் கௌரவிக்கப்படுவதுபோல ராஜ்யாபிஷேகஞ்செய்துகொண்ட ராஜாக்களனைவராலும் கௌரவிக்கப்பெற்று அரசர்க்குரிய வாகனத்திலேறி வெண்குடைகவிக்க விளங்கினர். பிறகு, ராஜாவானவர் அஸ்தினாநகரத்தை வீதிவலஞ்செய்து பட்டணத்துஜனங்களினால்கொண்டாடப்பட்டவராகத் தமதுஅரண்மனையிற் பிரவேசித்தார். இவ்வாறு பட்டாபிஷேகஞ்செய்துகொண்ட தர்மராஜாவினிடம் காந்தாரியின் புத்திரர்களாகிய அவர்கள் சுற்றத்தாருடன் விசனப்பட்டுக்கொண்டு வந்தனர். திருதராஷ்டிரன் தன்புத்திரர்களுடைய துயரத்தைக்கண்டு கிருஷ்ணனுக்கும்குருவம்சத்தாருக்கும்முன்னிலையில் யுதிஷ்டிரரைப் பார்த்து, "கௌரவராஜாவே! மனத்திருத்தமில்லாதவர்கள் பெறக்கூடாத ராஜ்யாபிஷேகத்தை நீபெற்றாய். உன்காரியம்ஆயிற்று. இப்போதே நீசெல். அரசரிற்சிறந்தஅரசே! ஆயுவும் புரூரவஸும் நகுஷனும் யயாதியும் அந்தக்காண்டவப்பிரஸ்தத்திலேதான் வாஸஞ்செய்தனர். சிறந்தபுஜபராக்ரமமுடையவனே! பூருவம்சத்தவரெல்லாருக்கும் அதுதான் ராஜதானி. புதன்புத்திரனாகிய புரூரவஸினுடைய லோபத்தன்மையினால் ரிஷிகள் அதையழித்தனர். ஆதலால், நீ காண்டவப்பிரஸ்தமென்னும்பட்டணத்தையும் அதைச்சேர்ந்ததேசத்தையும் விருத்திசெய்வாய். குணங்களால்சிறப்புற்ற பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் வைசியர்களும் சூத்திரர்களும் மற்றப் பிராணிகளும் உன்னிடத்திலுள்ளபக்தியினால் அந்த அழகானபட்டணத்தை அவசியம்அடைவர். அந்தத்தேசங்களும் வளப்பமுள்ளவை. தனங்களும் தான்யங்களும் நிரம்பியவை. குற்றமற்றகௌந்தேயனே! ஆதலால், உன்ஸஹோதரர்களுடன் நீசெல்லலாம்" என்றுசொன்னான். புருஷச்ரேஷ்டரான பாண்டவரனைவரும் திருதராஷ்டிரன்சொல்லை அங்கீகரித்து அவனுக்கு நமஸ்காரஞ்செய்து தேர்களும் யானைகளும் குதிரைகளும் காலாட்களுமாகிய சதுரங்கஸேனைகளுடன், சப்திக்கின்ற சிறந்ததேர்களிலேறி அங்கிருந்துபுறப்பட்டனர். அவர்கள் போகிறதைக்கண்டு நகரத்து ஜனங்களனைவரும் அவர்களிடமுள்ள அன்பினால் தாமும் புறப்பட்டனர். பாண்டவர்களுடன்செல்லுகின்ற அஸ்தினாபுரிஜனங்களைக்கண்டு துரியோதனனும் சகுனியும் பாண்டவர்களுடன்சேர்ந்து யாரும்போகக்கூடாதென்று நகரத்தில் பறையறைவித்தனர். பிறகு, பாண்டவர்கள் கிருஷ்ணனை முன்னிட்டுக்கொண்டு அவ்விடம்சென்று அந்தக்காண்டவப்பிரஸ்தநகரத்தை ஸ்வர்க்கத்திலிருந்து நழுவின ஒருபாகத்தைப்போலிருக்கும்படி அலங்

கரித்தனர். லோகாதராகிய கண்ணபிரான் இந்திரனை நினைத்தார். ராஜாவே ! அவரால் சிந்திக்கப்பட்ட தேவேந்திரன் விசுவகர்மாவைப் பார்த்து, "அறிவிற்சிறந்த விசுவகர்மாவே ! இன்றுமுதல் அந்நகரம் இந்திரப்பிரஸ்தமென்று புகழ்பெற்றுப் பூமியிலுள்ளதேவலோகமாக இருக்கவேண்டும்" என்று கட்டளையிட்டான். இந்திரனுடைய கட்டளையினால் விசுவகர்மாசென்று யாவரும்பணியத்தக்கவரான கண்ணபிரானைப்பணிந்து, "நான் என்ன செய்யவேண்டும்?" என்று கேட்டான். கிருஷ்ணபகவான் அதைக்கேட்டு விசுவகர்மாவைப்பார்த்து, "இந்திரன்பெயரால் இந்திரப்பிரஸ்தம்என்று சொல்லப்பட்டதும்அவனுடைய அமராவதிநகருக்கொப்பானதுமான மஹாநகரத்தை யுதிஷ்டிரருக்காக நிர்மாணஞ்செய்வாயாக" என்று கட்டளையிட்டார். மஹாரதர்களான பாண்டவர்கள் வியாஸரைமுன்னிட்டுப் பரிசுத்தமும் மங்களகரமுமான பிரதேசத்தில்சாஸ்திரப்படி சாந்திஹோமமும் ஸ்வஸ்திவாசனமும் செய்வித்து, "இஃது இந்திரப்பிரஸ்தமாக இருக்கட்டும்" என்றுசொல்லி அந்தப்பட்டணத்திற்கு அளவெடுக்கச்செய்தனர். அதன்மேல்,அந்தவிசுவகர்மாவானவன் உத்தமமான நகரத்தைச்செய்யத்தொடங்கினான். கடலுக்கொப்பான அகழிகளினால் சூழப்பட்டதும்,வெண்மேகம்போலவும் சந்திரன்போலவும் விளங்கி ஆகாயத்தை மறைத்துநிற்கின்ற மதிலோடுகூடியதுமான அந்தச் சிறந்நகரம் நாகங்களினாற் சுற்றப்பட்ட போகவதியென்னும் நாகலோகத்து நகரம் போல விளங்கிற்று. அந்தச் சிறந்தநகரம், (இரண்டுகதவுகளென்னும்) பக்ஷங்களுடைமையால் கருடனைப்போல்பிரகாசிக்கின்ற வாயில்களாலும், மேகக்கூட்டத்துக்கொப்பான மாளிகைகளாலும், மந்தரமலைக்கொப்பானவையும் தகர்க்கப்படாதவையும் ஆயுதங்கள்நிரம்பி நன்றாகக் காப்பாற்றபட்டவையுமான அனேகவிதகோபுரங்களாலும் விளங்கியது. அஃது இரண்டுநாவுள்ளஸர்ப்பங்களைப்போன்ற சக்தியாயுதங்களால் நிரம்பினதும், பயிற்சிக்களங்களோடுகூடியதும், படைச்சேவகர்காவலுள்ளதும், கூர்மையானஈட்டிகளாலும் பீரங்கிகளாலும் அனேக யந்திரவலைகளாலும் இரும்பினாற்செய்யப்பட்ட பெருஞ்சக்கரங்களாலும் அலங்கரிக்கப்பட்டதுமாய் விளங்கியது. நன்றாகவகுக்கப்பட்ட பெரியவீதிகளுள்ளதும் தெய்வக்குற்றமில்லாததும் வெண்மையான பற்பலஉயர்ந்தவீடுகளினால்விளங்குவதும் ஸ்வர்க்கத்தைப் போலப்பிரகாசிப்பதுமான அந்தஇந்திரப்பிரஸ்தநகரம், ஆகாயத்தில் நிலையாகநிறுத்தப்பட்ட மின்னலோடுகூடிய மேகக்கூட்டம்போலவும் விளங்கியது. அந்தநகரத்தில் அழகியதும் சாஸ்திரலக்ஷணம்பொரு

ந்தியதுமான ஓர்இடத்தில் தர்மராஜாவின் தனங்கள்நிரம்பின அரண் மனை குபேரன்அரண்மனைக்கொப்பாக விளங்கியது. ராஜாவே! வேதம் தெரிந்தவரெல்லாரிலும் சிறந்தவர்களும் எல்லாத்தேசபாஷைகளையும் அறிந்தவர்களுமாகிய பிராம்மணர்கள் அங்கேசென்று வஸிக்கவிரும்பி னர். பொருளீட்டும்வணிகர்களும் பற்பலதேசங்களிலிருந்து அவ்விட த்திற்குவந்தனர். அப்போது எலலாவகைச்சிற்பிகளும் அங்கே வாஸ ஞ்செய்யவந்தனர். அழகியபுஷ்பங்களோடு மனத்தைக்கவருகின்ற வையும் கனிகளின்மிகுதியினால் வளைக்கப்பட்டவையுமான மாமரங்க ளாலும் ஆம்ராதகமரங்களாலும் கடம்பமரங்களாலும் அசோகங்க ளாலும் சண்பகங்களாலும் புன்னைமரங்களாலும் நாககேஸரங்களா லும் எலுமிச்சமரங்களாலும் பலாமரங்களாலும் ஆச்சாமரங்களாலும் பனைமரங்களாலும் பச்சிலைமரங்களாலும் மகிழமரங்களாலும் தாழை களாலும்அருநெல்லிமரங்களாலும் லோத்திரமரங்களாலும்அங்கோல மரங்களாலும் நாவல்மரங்களாலும் பாதிரிமரங்களாலும் நீர்நொச் சில்மரங்களாலும் தினிசமரங்களாலும் அலரிச்செடிகளாலும் பாரி ஜாதமரங்களாலும் எப்போதும் புஷ்பங்களும் பலங்களும் நிரம்பின வையும்அனேகபக்ஷிக்கூட்டங்கள் சேர்ந்தவையும்இன்னுமனேகவகை மரங்களினால்சோபிக்கின்றவையுமானதோட்டங்களும் அந்நகரத்தைச் சுற்றியிருந்தன. மயில்களும் குயில்களும் எப்போதும் களிப்புடன் கூவிக்கொண்டிருப்பனவும் கண்ணாடிகள்போல் விளங்குவனவுமான வீடுகளாலும், பலவகைக்கொடிப்பந்தல்களாலும், மனத்தைக்கவரு கின்ற சித்ரசாலைகளாலும், செய்குன்றுகளாலும், நல்லஜலம்நிரம்பின அனேகம்வாவிகளாலும், தாமரைமலர்கள் நீலோத்பலங்கள் முதலிய இனியமணமுள்ள புஷ்பங்களுள்ளவையும் அன்னங்களும் நீர்க்காக் கைகளும் சக்கரவாகங்களும் விளங்காநின்றவையுமான மிக்கஅழ கான நீர்நிறைந்ததடாகங்களாலும் அந்நகரம்சோபித்தது. அங்கே மரக்கட்டிடங்களினால் மறைக்கப்பட்ட அழகிய தாமரையோடைகள் அனேகமும் அழகும்விசாலமுமான குளங்களனேகமுமிருந்தன. நந் தினியென்று பேர்பெற்ற ஒருநதியும் அந்நகரத்தைச்சுற்றி ஓடிற்று. நாலுவருணங்களும்நிரம்பினதும் அநேகம் சிற்பிகளாலடையப்பட்ட தும் எப்போதும் ஸாதுக்கள்வரப்பெற்றதும் வேண்டியபோகங்கள் நிரம்பினதும் எல்லாப்பொருள்களிலும்குறைவில்லாததும் யோக்கியர் களானஜனங்கள் எப்போதுமிருப்பதும் புருஷர்களும்பெண்களும் கூட்டங்களாகச்சேருவதும் குதிரைகளும் யானைகளும்நிரம்பினதும் பசுக்களும் ஒட்டகங்களும் கோவேறுகழுதைகளும் ஆடுகளுமுள்

ளதுமாக விசவகர்மாவினல் நிர்மாணஞ்செய்யப்பட்ட அந்த இந்திரப் பிரஸ்தநகரம் தேவலோகத்திற்குநிகராக விளங்கியது. ராஜாவே! எல்லாச்சிறப்புக்களும்நிரம்பினதாக விசவகர்மாவினல் உண்டாக்கப் பட்ட அந்தநகரத்தில் பௌரவர்களுக்கு முதன்மையானவரும் குந்தி புத்திரருமான தர்மபுத்திரர் ஸஹோதரர்களுடன்கூடி மங்களகரமான காரியங்களைச்செய்கிறவர்களும் வேதங்களிற் பாரங்கதர்களுமான பிராம்மணர்களோடு வியாஸமஹரிஷியை முன்னிட்டுத் தௌமிய ருடையகருத்தையும் அநுஸரித்துப் பிரவேசித்தார். எதிரிகளையடக் குகிறவரும் மஹாபராக்கிரமசாலியுமான தர்மராஜாவானவர் கண்ண பிரானுடன் ராஜவாஹனமேறி ராஜமார்க்கத்தைத்தாண்டி, முகம் போன்ற முதற்கோட்டைவாயிலோடுகூடியதும் முப்பத்திரண்டுவாயி ல்களோடுகூடியதுமாகிய நகரத்தில் முதல்வாயில்வழியாகப்பிரவே சித்தார். அப்போது சங்கதுந்துபிவாத்தியங்களின் முழக்கங்கள் மிக ப்பெரிதாகக்கேட்கப்பட்டன. 'ஜயஜய' வென்னும்பிராம்மணர்களின் வாக்குக்கள் மிகுதியாகக்கேட்கப்பட்டன. ராஜவாஹனமேறும்தர்ம ராஜா, முனிவர்களாலும் ஸூதர்களாலும் மாகதர்களாலும் வந்திக ளாலும் ஸ்துதிசெய்யப்பெற்று ராஜமார்க்கத்தைத்தாண்டி மங்களா சாரங்கள்செய்யப்பட்டிருந்த தமது சிறந்த அரண்மனையிற் பிரவேசித் தார். அரண்மனையிற்பிரவேசித்தபிறகு தர்மராஜாவானவர் ஆனந்த மும் உத்ஸாகமுமுள்ள நகரஜனங்களாற்சூழப்பட்டுக் காணிக்கை களாற்கௌரவிக்கப்பெற்றனர். பிராம்மணசிரேஷ்டர்களையும் மஹா த்மாவானகிருஷ்ணனையும் பூஜித்தனர். பிறகு, அந்தநகரமும் அந்தத் தேசமும் புருஷர்களும் ஸ்திரீகளும் கூட்டமாகச்சேரப்பெற்றும் கோதனங்கள்நிரம்பப்பெற்றும் பயிர்களால் அபிவிருத்தியடையப்பெ ற்றுமிருந்தன. மஹாராஜாவே! தர்மிஷ்டர்களான ஜனங்களுள்ள அந்தப்பெரியதேசத்தில் பிரவேசிக்கும்போது பாண்டவர்களுக்குச் சந்தோஷம் மேன்மேலும்விருத்தியாயிற்று. காண்டவப்பிரஸ்தத்தில் வஸிக்கும் பாண்டவர்கள் சகுனியினாலும் கர்ணனாலும் திருதராஷ் டிரபுத்திரர்களாலும் கிருபராலும் பீஷ்மராலும் தர்மத்தில்விருப்ப முள்ளதிருதராஷ்டிரமஹாராஜாவாலும் சிறப்பிக்கப்பெற்றனர். சிறந்த வில்லாளிகளும் இந்திரனைப்போன்றவர்களுமாகிய அந்தப்பஞ்சபாண் டவர்களால் ஆளப்பட்ட அந்தச்சிறந்தநகரம் நாகர்களோடுகூடிய போகவதியென்னும் பாதாளலோகநகரம்போலவிளங்கிற்று. பிறகு, தர்மபுத்திரர் விசுவகர்மாவையும் வியாஸரையும் பூஜித்து விடைகொடு த்தனுப்பிவிட்டு, செல்லும்விருப்பத்துடன் புறப்படுவதற்கு ஸமயத்

தைப்பார்த்துக்கொண்டிருந்த கிருஷ்ணனைப்பார்த்து, "விருஷ்ணிவம்ச திலகரே! குற்றமற்றவரே! கிருஷ்ணா! தோஷமற்றவரே! உமது அனுக்கிரஹத்தினால் எனக்கு ராஜ்யம்கிடைத்தது. வீரரே! உமது அனுக்ரஹத்தினாலேதான் பாழ்த்திருந்ததேசம் எதிரிகள்பிரவேசிக்க முடியாததாயிற்று; உமது அனுக்கிரஹத்தினாலேதான் நாங்களும் ராஜ்யாதிகாரத்திலிருக்கிறோம்; மாதவா! பாண்டவர்களுக்கு எந்த ஆபத்துக்காலத்திலும் நீரேகதி; குற்றமற்றவரே! பாண்டவர்கள்விரும்பத்தக்கதும் நீர் ஒப்புக்கொள்ளத்தக்கதுமானகாரியத்தை நீரே அறிந்து எங்களைக்கொண்டு செய்விக்கக்கடவீர்" என்றுசொன்னார். கிருஷ்ணபகவான், அதைக்கேட்டு, "பிரபுவே! உமதுசக்தியினால் தர்மப்படி பெரியராஜ்யம் உமக்குக்கிடைத்தது. தகப்பன் பாட்டன் வரிசையாகவந்த ராஜ்யம் உமக்கு ஏன் இல்லாமற்போகும்; கெட்டநடையுள்ள திருதராஷ்டிரபுத்திரர்கள் பாண்டவர்களை என்னசெய்யலாம்; தர்மத்தோடு ராஜ்யபாரத்தைவகித்து ஜனங்களின் இஷ்டத்தை அனுஸரித்து உலகத்தைப்பரிபாலனஞ்செய்யும்; பௌரவரே! மேல்மேலும் ஸந்தோஷமாயிருக்கும்படி பிராம்மணர்களைக் காப்பாற்றும்; மஹிமைபொருந்திய நாரதமாமுனிவர் இப்போதே விரைவில் வருவர்; அவர்சொல்லும்சொற்களை வாங்கிக்கொள்ளும்; அவருடைய உபதேசத்தை நடத்தும்" என்றுசொன்னார். கிருஷ்ணன் இவ்வாறுசொன்னபின் குந்தியை வந்தனஞ்செய்து, "உனக்கு நமஸ்காரம்; நான் செல்லுகிறேன்" என்று நயமானசொல்லைச்சொன்னார். குந்தி, "குற்றமற்றவனே! யாதவசிரேஷ்டனே! நான் எப்போது அரக்குமாளிகையிற்சேர்ந்திருந்தேனோ அப்போதே உனக்கும் பலராமனுக்குந் தானே தெரிந்திருந்தது; கோவிந்தா! நீ நாதனாகஇருப்பதனால் மிகப் பெருந்துயரத்தைத் தாண்டினேன்; நாதனில்லாதவர்களுக்கும் ஏழைகளுக்கும் முக்கியமாக நீ நாதனல்லவா? உன்னைப்பார்த்தமாத்திரத்திலேயே என் துயரங்களெல்லாம் விலகிப்போகின்றன; மஹாஞானியே! இந்தப்பாண்டவர்களை நீ ஞாபகத்தில்வை; நீ சிந்திப்பதனால்தான் இவர்கள் ஜீவித்திருக்கின்றனர்" என்று சொன்னாள். கண்ணபிரானும், அப்படியேயென்றுசொல்லித் தம் அத்தையான குந்தியை வணங்கி விடைபெற்றுக்கொண்டு தம்பின் வந்தவர்களுடன்கூடப் போவதற்கு எண்ணினார். ராஜாவே! உடனே அந்தவீரர் அந்தப் பாண்டவர்களை நிறுத்திவிட்டு அவர்களிடம் அனுமதிவாங்கிக்கொண்டு பலராமருடன் த்வாரகாநகரம்சென்றார்" என்று வைசம்பாயனர் சொல்லினர்.

---

## இருநூற்றிருபத்தேட்டாவது அத்தியாயம்.

## ராஜ்யலாபபர்வம், (தொடர்ச்சி.)



(நாரதர் பாண்டவர்களிடம்வந்து அவர்களுக்கு விதம்சொல்லியது.)

ஜனமேஜயர், "தபோதனரே! மஹாத்மாக்களும் என்கூடஸ்தர்களும் புருஷச்ரேஷ்டர்களுமாகிய பாண்டவர்களனைவரும் இந்திரப்பிரஸ்தத்தில் இவ்வாறு ராஜ்யாதிகாரத்தையடைந்து அதற்குமேல் என்னசெய்தனர். அவர்களுடையதர்மபத்னியான திரௌபதியும் அவர்களிடம் எவ்வாறு நடந்துகொண்டாள்? மஹானுபாவர்களான அந்தப்புருஷச்ரேஷ்டர்கள் கிருஷ்ணை ஒருத்தியிடம் எவ்வாறு இருந்தனர்? ஒருவருக்கொருவர் விரோதப்படாமலிருந்தனரா? அவ்விடத்தில் கிருஷ்ணையுடன்கூடின பாண்டவர்கள் ஒருவர்க்கொருவர் நடந்துகொண்டதை நடந்தபடி விரிவாக நான்கேட்கவிரும்புகிறேன்" என்றுகேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார்.

"புருஷச்ரேஷ்டர்களான பாண்டவர்கள், திருதராஷ்டிரனால் அனுமதிகொடுக்கப்பெற்று அந்த இந்திரப்பிரஸ்தநகரம்போனபிறகு கிருஷ்ணையுடன்கூடிச் சுகித்திருந்தனர். மிகுந்தசக்தியுள்ளவரும் ஸத்தியஸந்தருமான யுதிஷ்டிரர் இராச்சியத்தையடைந்தபின் சகோதரர்களுடன் தர்மந்தவறாது தேசத்தைப் பரிபாலனஞ்செய்தார்.

மஹாத்மாக்களும் ஸத்தியத்தையும் தர்மத்தையும்விடாதவர்களுமாகிய பாண்டவர்கள் இவ்வாறு அந்நகரத்தைச்சேர்ந்து பகைவரையடக்கி அங்கேவாஸஞ்செய்தனர். அந்தப்பரதச்ரேஷ்டர்கள் நகரத்தின்வியவகாரகாரியங்களெல்லாவற்றையும் நடத்திக்கொண்டு அரசர்க்குரிய விலைபெற்ற ஸிம்மாஸனங்களில் வீற்றிருந்தனர். அந்த மஹாத்மாக்களான பாண்டவர்கள் அங்கே உட்கார்ந்திருக்கையில் ஒருகால் நாரதமஹரிஷி, தர்மராஜாவைப்பார்க்கவிரும்பி, நக்ஷத்திரங்களினாலடையப்பட்டதும் கருடன்ஸஞ்சரிப்பதும் சந்திரசூரியர்கள் பிரகாசிப்பதும் மஹரிஷிகள்நடப்பதும் சிறந்ததபஸில்லாதவர்களுக்கு அடையமுடியாததுமாகிய சிறந்தஆகாயமார்க்கமாக வந்தனர். எல்லாப்பிராணிகளாலும் பூஜிக்கப்பட்டவரும் ஒளிமிகுந்தவரும் பெருந்தவமுள்ளவரும் ஸகலவேதாந்தங்களையுமறிந்தவரும் வேதங்கள் அங்கங்கள் எல்லாவற்றிலும்பாரங்கதரும் எக்காலமும் சிறந்ததவத்தைவிடாதவரும் பிரம்மஞானமுள்ளவரும் யுக்தியிலும் ராஜநீதிசாஸ்திர

த்திலும் ஊக்கமுள்ளவரும் மஹாமுனிவரென்று கியாதிபெற்றவரும் பாத்துக்கும்பரமான பொருளைப்பற்றினவரும் தர்மங்களைச் செம்மையாக அறிந்தவரும் சுத்தமான ஆத்மாவுடையவரும் ஆசையைவிட்டவரும் ஐம்புலன்களையும் அடக்கினவரும் கோபமில்லாதவரும் கபடமில்லாதவரும் பிராம்மணருமாகிய நாரதர், தேசங்களாலும் வீடுகளாலும் அலங்கரிக்கப்பட்ட பூமியைப்பார்த்துக்கொண்டே வந்தனர். தமது தர்மத்தினால் தேவர்கள் அஸுரர்கள் மனிதர்கள் அனைவராலும் கௌரவிக்கப்பெற்றவரும் செய்கருமங்களைவிட்ட பாபிகளான பலவகைப் பிராணிகளுக்கும் பலவிதங்களான வேதோபதேசங்களை யனுசரித்து அவரவர்களுக்குத்தக்க தர்மவியவஸ்தை செய்பவரும் சுத்தமான யாகத்தில் ஸோமபானஞ்செய்பவரும் புண்ணியஞ்செய்கிறவரும் அக்நிஹோத்ரஞ்செய்பவரும் ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம்தெரிந்தவரும் நியாயசாஸ்திர தர்மசாஸ்திரங்களில் நிபுணரும் மனோவாக்குக்காயங்கள் ஒத்திருப்பவரும் மேன்மேலும் உயர்ந்தபடியிற்செல்லுகிறவரும் எப்போதும்வழிநடப்பவரும் குற்றமில்லாதவரும் அழகான குடுமியுள்ளவரும் மிகுந்தஒளியுள்ளவருமான நாரதர், தேவேந்திரனால்அளிக்கப்பட்டவையும் தூயவையும் நுண்ணியவையுமான இரண்டு அழகான பெரியதிவ்யவஸ்திரங்களையும், மண்ணுண்ணிப்பாம்பின்முகம்போன்றமுகமுள்ளவையும் அக்னிக்கும் ஸூர்யனுக்கும் ஒப்பானவையும் புதியவையும் அழகியவையுமான இரண்டுஉயர்ந்த பொற்குண்டலங்களையுந் தரித்துக்கொண்டும், விசித்ரமும் மிகுந்தஒளியுள்ளதுமாகிய வெள்ளிக்குடையைப்பிடித்துக்கொண்டும், யாருக்குங் கிடையாத உயர்ந்தபிரம்மதேஜஸைவகித்தவராகி இரண்டாவது பிருஹஸ்பதியைப்போலத் தர்மராஜாவின்ஸபையில்இறங்கினார். வேதங்களிலும் தர்மசாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கும் பிரவிருத்தி நிவிருத்தியென்னும் இரண்டுபாகுபாடுடையதர்மத்தையும் வருணாச்சிரமதர்மத்தையும் கரைகண்டவரும் *காதைகளையும் மிக்கஅழகான ஸாமவேதங்களின் மந்த்ரப்பிராம்மணங்களையும் பரமாத்மாவையும் அறிந்தவரும் முக்திமார்க்கத்திலிருப்பவர்எல்லாரைப்பற்றியும்முயற்சி செய்பவரும் காரியோபாயங்களையறிந்தவரும் யஜுர்வேதங்களிற் சொல்லப்பட்ட அனேகவிதமானயாகம்முதலிய நற்கருமங்களையறிந்தவரும் புத்திமான்களிற்சிறந்தவரும் எல்லாவிஷயங்களும் தெரிந்தவரும் எல்லாரிடத்திலும் வித்தியாஸமில்லாமலிருப்பவரும் வேதங்களிலுள்ள ஸந்தேகங்களை நீக்குகிறவரும் பொருள்களைப்பகுத்துரைப்

* தேசபாஷைச்செய்யுட்கள்.

பதில் வல்லவரும், ஐயங்களைப்போக்குகிறவரும், தமக்கு எப்போதும் ஸந்தேகமில்லாதவரும், இயற்கையில் தர்மந்தெரிந்தவரும், பிறர்க்குத் தர்மோபதேசஞ்செய்பவரும், பதங்களுக்குள்ளகெடுதல் தோன்றல் புணர்ச்சி ஸமாஸம், ஒருசொல்லுக்குப்பலபொருள் ஒருபொருளுக்கு அனேகம்சொல், ஒவ்வொருபொருளுக்கும் ஒவ்வொருசொல்லுக்குமுள்ளவேறுபாடுகள், அவற்றின் உபயோகங்கள் இவற்றையெல்லாம் ஆராய்கிறவரும், லோகவியவகாரங்கள் மீமாம்ஸாவியவகாரங்களெல்லாவற்றிலும் யாரும் நம்பத்தக்கவரும், எழுத்துக்களெல்லாவற்றின் பிரிவுகளையும் அறிவதில் பண்டிதர்களால் எப்போதும் பூஜிக்கப்பெற்றவரும், பலவகைஸ்வரங்களிலும் (உயர்த்திச்சொல்வது அந்தஸ்வரத்திலும்தாழ்ந்துசொல்வது) பலவகைச்சந்தங்களிலும் ஒரேஉருப்பிலுண்டாகும் எழுத்துக்களனைத்திலும் ஸமஸ்தமானசூத்திரங்களிலும் பகுதிகளிலும் இலக்கியங்களைச்சொல்லுகிறவரும், இலக்கியமெல்லாவற்றிற்கும் லக்ஷணம்சொல்லுகிறவரும், வாக்கியங்களுடைய உட்கருத்தின் உண்மையையறிந்தவரும், சொற்களையும் அவற்றின் பகுதிவிகுதிமுதலிய பாகுபாட்டையும் நினைவில் வைத்திருப்பவரும், இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலங்களின் பிரயோகத்தை விஷயத்துக்குத் தக்கபடிவிசாரிப்பவரும், விகற்பமாகச்சொல்லப்பட்டதும் விதிக்கப்பட்டதும் அழகியதுமாகிய பிரயோகிக்கவேண்டியபதத்தை உலகவழக்கிலுள்ளபடி அறிகிறவரும், * ஆத்மனேபதம், பரஸ்மைபதம் அவற்றிற்கு உறுப்புக்களாயுள்ள உயிரெழுத்து மெய்யெழுத்துக்கள் இவைகளின் உபயோகங்களையறிந்தவரும், இவற்றிற்குத்தகுந்த உச்சாரணங்களையறிந்தவரும், சமயங்களில் நினைவுடன் பிறருக்குச்சொல்லுபவரும், தனக்குத்தானேபிரகாசிக்கும் ஞானமுள்ளவரும், பிறர்சொல்லுகிற வாக்கியங்களின் பொருளின் ஒற்றுமையையும் பொருள்வேறுபாட்டையும் அறிபவரும், ஆழ்ந்தகருத்துக்களையும் பலவகைக்குற்றங்களையும் சேர்த்தும் பகுத்தும் மிகுதியாக அறிந்தவரும், தாமும் பலவகைவாக்கியங்களைப் பேசுகிறவரும், பற்பலதேசங்களைப்பார்த்தவரும், தாதுவிலும் பிரத்யயத்திலும் உபசர்க்கத்திலும் ஸந்தியிலும் ஸமாஸத்திலும்வருகிற ஐந்துவகை ஆகமங்களையும் (தோன்றல்) பலவகை ஆதேசங்களையும் (திரிதல்) பலபொருள் குறிக்கும் சொற்களையும் தெரிந்தவரும், தத்திதவிகுதிகளெல்லாம் தெரிந்தவரும், சொற்

* ஒருவன் தனக்காகச்செய்துகொள்ளும் செய்கையைக்குறிக்கும் விகுதிக்கு ஆத்மனேபதம் என்றும், பிறர்க்காக வேலைசெய்வதைக்குறிக்கும் விகுதிக்குப் பரஸ்மைபதம் என்றும் வடமொழியில் பெயர்கள் வழங்குகின்றன.

களை உயிரெழுத்து மெய்யெழுத்துக்களின் உச்சரிப்பிலும் பொருளிலும் அலங்காரஞ்செய்பவரும், ஒவ்வொரு பகுதியையும் விகுதியையும் விளக்கமாக விரித்துரைப்பவரும், எழுத்துக்களின் கசடதப என்னும் ஐந்துவர்க்கங்களையும் உயிரெழுத்துக்களையும் அறிந்தவருமான நாரதர் வந்தார். அந்தரிஷி வரக்கண்டு யுதிஷ்டிரர் எதிர்சென்றழைத்து அபிவாதனஞ்செய்து அவருக்கு அழகான ஆஸனத்தைக்கொடுத்தார். கிருஷ்ணாஜினம் மேலேபோடப்பட்ட அந்த ஆஸனத்தில் நாரதமஹரிஷி உட்கார்ந்தார். உட்கார்ந்த தேவரிஷிக்குப் புத்திமானை யுதிஷ்டிரர் சாஸ்திரப்படி அர்க்கியத்தைத் தாமேகொடுத்தார். ராஜ்யத்தையும் அவரிடம் ஒப்புவித்தார். அப்போது அந்தப் பூஜையைப்பெற்றுக்கொண்டு மனங்களித்த நாரதமஹரிஷி ஆசீர்வாதத்தினால் யுதிஷ்டிரரைச் சிறப்பித்து 'உட்காரலாம்' என்று சொன்னார். அவரால் அனுமதிகொடுக்கப்பெற்றபிறகு தர்மராஜா உட்கார்ந்தார்; நாரதபகவான் வந்திருப்பதாகத் திரௌபதிக்குச் செய்தியனுப்பினார். அதைக்கேட்டதும், திரௌபதி சுசியுள்ளவளாக அவரிடம் மனத்தைநிறுத்திக்கொண்டு நாரதர்வீற்றிருக்குமிடம் சேர்ந்தாள். தர்மத்தைச்செய்கிறவளாகிய திரௌபதி அந்தத் தேவரிஷியின் பாதங்களில் வணங்கிச் செவ்வையாக வஸ்திரத்தைப்போர்த்துக்கொண்டு கைகூப்பி நின்றாள். தர்மாத்மாவும் ஸத்தியஸந்தரும் ரிஷிச்ரேஷ்டருமாகிய நாரதபகவான் அந்த ராஜபுத்திரியான திரௌபதிக்கு அனேக ஆசீர்வாதங்களைச்சொல்லிக் குற்றமற்றவளான அவளைப்பார்த்துச் 'செல்லலாம்' என்று சொன்னார். கிருஷ்ணை சென்றபிறகு, நாரதபகவான் யுதிஷ்டிரர்முதலான பாண்டவர்களனைவரையும்பார்த்து, "புகழ்பெற்ற பாஞ்சாலி உங்களெல்லாருக்கும் ஒரே தர்மபத்தினியாயிருக்கிறாள். இதுவிஷயத்தில் உங்களுக்கு எவ்வாறு விரோதம் வராமலிருக்குமோ அப்படிப்பட்டமுறையை நீங்கள் செய்துகொள்ளவேண்டும். முன்னர் மூன்றுலோகங்களிலும்பிரஸித்திபெற்ற ஸுந்தோபஸுந்தரென்னும் ஸஹோதரர்களிருவர் ஒன்றுசேர்ந்து யாராலும் வதஞ்செய்ய முடியாதவர்களாயிருந்தார்கள்; அவர்களுக்கு ராஜ்யம்ஒன்று; கிருகம்ஒன்று; படுக்கையொன்று; ஆஸனம்ஒன்று; போஜனம்ஒன்று; அவர்களிருவரும் திலோத்தமைகாரணமாக ஒருவரையொருவர் கொன்றனர்; ஆதலால், ஒருவர்க்கொருவர் அன்பை உண்டாக்குவதாகிய ஸ்நேகத்தைக் காப்பாற்றவேண்டும். யுதிஷ்டிரா! இதுவிஷயத்தில் உங்களுக்கு விரோதம் உண்டாகாமலிருக்கும்படி செய்துகொள்ளு" என்று ரகஸ்யத்திற்சொன்னார். யுதிஷ்டிரர், "மஹாமுனிவரே! ஸுந்

தோபஸுந்தர்களென்னும் அஸுரர்கள் யாருடையபுத்திரர்கள். அவர்களுக்கு எவ்வாறு விரோதமுண்டாயிற்று; ஒருவரை ஒருவர் எவ்வாறு கொன்றனர். எவள்மேல் காமவெறியுற்று அவர்கள் பரஸ்பரம் வதஞ்செய்துகொண்டனரோ அந்தத் திலோத்தமையென்னும் தேவகன்னிகையான அப்ஸரஸ் யாருடையபெண்; தபோதனரே! திலோத்தமை அப்ஸரஸ்என்னும் தேவகன்னிகையல்லவா? அவள் யாருக்குச் சொந்தம்? தபோதனரே! இதையெல்லாம் நடந்தபடி விரிவாகக் கேட்க விரும்புகிறோம்; பிராம்மணரே! எனக்கு இதில் மிகுந்த விருப்பமிருக்கிறது" என்றார்.

---

## இருநூற்றிருபத்தோன்பதாவது அத்தியாயம்.

---

*ராஜ்யலாபபர்வம்*, (தொடர்ச்சி.)



(நாரதர்சொல்லும் ஸுந்தோபஸுந்த உபாக்கியானத்தில், ஸுந்தோபஸுந்தர்கள் பிரம்மாவினிடம் வரம்பெற்றது.)

*நாரதர்*, "குந்திபுத்ரா! யுதிஷ்டிரா! நீ உன் ஸஹோதரர்களுடன்கூட இந்தப்பழமையானசரித்திரத்தை என்னிடம் விரிவாகக் கேள். முற்காலத்தில் ஹிரண்யகசிபுவென்னும் அஸுரராஜன் வம்சத்தில் மிகுந்த பராக்கிரமமுள்ளவனும் பலசாலியுமான நிகும்பனென்னும் அஸுரராஜன் ஒருவன் இருந்தான். அவனுக்கு மஹாவீரர்களும் பயங்கரமான பராக்கிரமமுள்ளவர்களும் கொடியவர்களும் கொடிய எண்ணமுள்ளவர்களும் அஸுரச்ரேஷ்டர்களுமாகிய ஸுந்தோபஸுந்தர்களென்னும் புத்திரர்கள் இருவர் இருந்தனர். அந்த இரண்டு அஸுரரும் எப்போதும் ஒரேஎண்ணமுள்ளவர்களும் ஒரே காரியத்தையும் ஒரேபிரயோஜனத்தையும் நினைப்பவர்களும் ஒரேஸுகதுக்கமுள்ளவர்களுமாக எப்போதும் பேதமில்லாமலிருந்தனர். ஒருவனைவிட்டு மற்றொருவன் உண்பதுமில்லை; பேசுவதுமில்லை; ஒருவனுக்கு மற்றொருவன் இனியதையேசெய்துகொண்டும் இனியதையே பேசிக்கொண்டும் ஒரேஒழுக்கமும் செய்கையுமுள்ளவர்களாய் ஒருவனே இரண்டாகவகுக்கப்பட்டதுபோலிருந்தனர். மஹாபராக்கிரமசாலிகளும் காரியங்களில் ஒரேநிச்சயமுள்ளவர்களுமாகிய அவர்கள் விருத்தியடைந்து மூவுலகங்களையும் ஜயிப்பதற்காக ஒற்றுமையாக நிச்சயத்தைச்செய்துகொண்டு தவத்திற்குத் தீக்ஷைசெய்துகொண்டு

விந்தியமலைசென்று உக்கிரமானதவஞ்செய்தனர். அவர்கள் நீண்ட காலம் தவஞ்செய்துகொண்டிருந்தனர். பசிதாகங்களினாற்சோர்வுற்று ஜடையும் மரவுரியும்தரித்து உடம்பெல்லாம் அழுக்குப்படிந்தவர்களாய் வாயுபக்ஷணஞ்செய்துகொண்டிருந்தனர். தங்கள்மாமிசங்களை ஹோமஞ்செய்துகொண்டும் கால் கட்டைவிரல்நுனிகளையூன்றி நின்றுகொண்டும் கைகளை உயரத்தூக்கிக்கொண்டும் இமைகொட்டாமலும் நெடுங்காலம் தவத்திலிருந்தனர். அவர்கள் தவத்தின்மஹிமையினால் வெகுகாலம் கொதிப்புண்டாக்கப்பட்ட விந்தியமலையானது புகையை வெளிவிட்டது. அஃது ஓர் ஆச்சரியமாயிருந்தது. அப்போது அவர்களின் உக்கிரமானதவத்தைக்கண்டு தேவர்கள் அச்சமுற்றனர். பிறகு, தவத்தைக்கெடுப்பதற்காகத் தேவர்கள் இடையூறுகளையுண்டாக்கினர். அவ்விருவருக்கும் ரத்னங்களையும் ஸ்திரீகளையும் பலமுறைகாட்டி ஆசைமூட்டினர். மிகப்பெரிய உறுதியுள்ள அவர்கள் தவத்தைக் கெடுத்துக்கொள்ளவில்லை. பிறகு, தேவர்கள் மஹாத்மாக்களான அவர்களிடத்தில் மாயையை மறுபடியும் உண்டு பண்ணினர். அவர்களுடைய ஸஹோதரிகளும் தாய்மார்களும் மனைவிகளும் சுற்றத்தாரும் சூலாயுதத்தைக்கையிற்பிடித்த ராக்ஷஸனால் தள்ளப்பட்டு விழுந்தனர். கூந்தல்கள் ஆபரணங்களோடுவிழவும் நகைகளும் ஆடைகளும்விழவும் அவர்களனைவரும் ஸுந்தோபஸுந்தர்களையழைத்து, "காப்பாற்று" என்று கூவினர். மிகவுறுதியானதவமுள்ள அவர்கள் தவத்தைக் கைவிடவில்லை. எப்போது அவர்களிருவரிலொருவரும் மனக்கலக்கத்தையாவது துயரத்தையாவது அடையாமலிருந்தனரோ அப்போது அந்தப்பெண்களும் அதற்குக்காரணமான மாயையாகிய பிசாசமும் எல்லாம் மறைந்துபோயின. அதன் பிறகு, எல்லாலோகங்களுக்கும் பந்துவும் பிரபுவுமான பிரம்மதேவர் அம்மஹா அஸுரர்களிடம் நேரேவந்து வரம்கொடுப்பதாகச் சொன்னார். அப்போது உறுதியான பராக்கிரமமுள்ள ஸஹோதரர்களாகிய அந்தஸுந்தோபஸுந்தர்கள் பிரம்மதேவரைக்கண்டவுடன் கை கூப்பிநின்றனர். அப்போது அவ்விருவரும்சேர்ந்து பிரபுவான பிரம்மதேவரை நோக்கி, "எங்களுடைய இந்தத் தவத்தினால் பிரம்மதேவரான உங்களுக்குச் சந்தோஷமுண்டாயிருந்தால், எங்களிடத்தில் பிரபுவான உங்களுக்கு அனுக்கிரஹம் உண்டாயிருந்தால், நாங்களிருவரும் மாயைகளையும் அஸ்திரங்களையும் அறிந்தவர்களாகவும் அதிக பலசாலிகளாகவும் நினைத்த ரூபமெடுப்பவர்களாகவும் மரணமில்லாதவர்களாகவும் இருக்கக்கடவோம்" என்று கேட்டனர். அவர்களைப்

பார்த்துப் பிரம்மதேவர், "மரணமில்லாமையைத்தவிர மற்றும் நீங்கள் கேட்டவையெல்லாம் உங்களுக்கு உண்டாகும். மரணத்தைத்தவிர மற்றப் பாக்கியங்களைத் தேவர்களோடு ஸமமாக நீங்கள் கேளுங்கள். ஐசுவரியத்தைஅடையக்கடவோமென்றுநினைத்து நீங்கள் மஹத்தான தவத்தைச்செய்யத்தொடங்கினீர்கள். ஆதலால், உங்களுக்கு அமரத்வம் கொடுக்கப்படாது. அஸுரராஜர்களே! மூன்று லோகங்களையும் ஜயிப்பதற்காக நீங்களிருவரும் தவஞ்செய்தீர்களாதலின், உங்கள் விருப்பத்தை நான்செய்யேன்" என்றார். ஸுந்தோபஸுந்தர்கள், "பிதாமஹரே! எங்களில் ஒருவனைத்தவிர வேறு இம்மூன்றுலகிலுமுள்ள தாவரமாவது ஜங்கமமாவது எந்தப்பொருளினாலும் எங்களுக்குப் பயம்உண்டாகாமலிருக்கவேண்டும்" என்று கேட்டனர். அதற்குப் பிரம்மதேவர், "நீங்கள்கேட்ட வரத்தை நீங்கள் கேட்டபடியே நான் கொடுக்கிறேன்; மரணத்தைப்பற்றிய விதியும் உங்களுக்கு இப்போது நீங்கள் கேட்டவாறே உண்டாகும்" என்றார். பிரம்மதேவர் அவர்களுக்கு அப்போதே இந்த வரத்தைக் கொடுத்து அவர்களைத் தவத்திலிருந்து நிவிருத்தித்து ஸத்யலோகம் சென்றார். வரங்களையடைந்தபிறகு ஸஹோதரர்களாகிய அவ்விரண்டு அஸுரராஜர்களும் உலகத்திலுள்ளவர் எவராலும் வதஞ்செய்யக் கூடாதவர்களாகித் தம்மில்லம் சென்றனர். மனவுறுதியுள்ள அவ்விருவரும் வரங்களைப் பெற்று விருப்பம் நிறைவேறிவருகிறதைக்கண்டு அவர்களுக்குவேண்டிய ஜனங்களனைவரும் மகிழ்வுற்றனர். அதன்பிறகு, அவர்கள் ஜடைகளை நீக்கிக் கிரீடம் தரித்து விலையுயர்ந்த ஆபரங்களையணிந்து மாசற்ற வஸ்திரங்களைத் தரித்திருந்தனர். நிலாக்காலமில்லாதகாலத்திலும் நிலவைநீடித்திருக்கச்செய்தனர். அவர்களுடைய சுற்றத்தாரும் ஸதாகாலமும் ஆனந்தத்தோடிருந்தனர். ஒவ்வொருவீட்டிலும் "பக்ஷணம்தின்; உண்; கொடு; விளையாடு; பாடு; குடி" என்ற சப்தங்களே எந்தக்காலமும் இருந்தன. ஆங்காங்கு பெரிய வாத்தியகோஷங்களோடும் உயர்ந்த கைகொட்டலின் பெருஞ்சத்தங்களோடும் அஸுரர்கள் நகரமுழுதும் உற்சாகமும் ஆனந்தமுமாயிருந்தது. நினைத்தரூபங்களையெடுத்துப் பற்பல விளையாட்டுக்கள் விளையாடிக்கொண்டிருந்த அவ்வஸுரர்களுக்கு அநேகவருஷங்கள் ஒருதினம்போற் சென்றன.

---

## இருநூற்றுமுப்பதாவது அத்தியாயம்.

---

## ராஜ்யலாபபர்வம். (தொடர்ச்சி.)



(ஸுந்தோபஸுந்தர்கள் திக்குவிஜயஞ்செய்து குருக்ஷேத்திரத்தில் வஸித்தது.)

உத்ஸவம் நடந்தவுடன், அந்த ஸுந்தோபஸுந்தர்களிருவரும் திரிலோகாதிபத்யத்தை விரும்பி ஆலோசனைசெய்து உடனே சேனையை ஏவினர். ஸ்நேஹிதர்களிடத்தும் அஸுரப் பெரியோரிடத்தும் மந்திரிகளிடத்தும் விடைபெற்றுக்கொண்டும் யாத்திரைக்குரிய மங்களகாரியங்களைச் செய்துகொண்டும் மகநக்ஷத்திரத்தோடு சேர்ந்த ராத்திரியில் புறப்பட்டனர். கதைகளையும் ஈட்டிகளையும் சூலங்களையும் உலக்கைகளையும் கைகளில் பிடித்தும் கவசங்களைத் தரித்துமிருக்கிற பெரிய அஸுரசேனையோடுகூடிப் புறப்பட்டனர். அவர்கள் சாரணரென்னும் பாடகர்கள் "ஜயஜய" என்றுசொல்லி மங்களங்களையும்தோத்திரங்களையும்பாடித் துதிசெய்ய மிகுந்த உத்ஸாகத்துடன் சென்றனர். நினைத்தபடிசெல்லுந்திறமையுள்ள அவ்விரண்டு அஸுரர்களும் யுத்தஞ்செய்வதற்காகக் கொடிய இறுமாப்புடன் ஆகாசத்திற்கிளம்பித் தேவலோகத்திற்கே சென்றனர். பிறகு, தேவர்கள் அவர்களின்வரவையும் அவர்களுக்குப் பிரம்மாகொடுத்த வரத்தையும்நினைத்து ஸ்வர்க்கலோகத்தைவிட்டுப் பிரம்மலோகத்திற்குச் சென்றனர். உக்கிரமான பராக்கிரமமுள்ள அவ்வஸுரர்களிருவரும் இந்திரலோகத்தை ஜயித்தபிறகு யக்ஷராக்ஷஸக்கூட்டங்களையும் இன்னும் ஆகாசத்தில் சஞ்சரிக்கின்ற பிராணிகளையும் கொன்றனர். மஹாரதர்களான அந்த ஸுந்தோபஸுந்தர்கள் பூமியின் உட்புறமாகிய பாதாளலோகத்திலிருக்கும் நாகர்களை ஜயித்தபிறகு ஸமுத்திரத்தீவுகளில்வஸிக்கின்ற மிலேச்சஜாதிகளெல்லாரையும் ஜயித்தனர். கொடுங்கோலுள்ளவர்களாகிய அவர்கள் அதன்பிறகு பூமிமுழுமையும்ஜயிக்க ஆரம்பித்துத் தம் படையாட்களையழைத்து மிகக்கொடிய வசனத்தையுரைத்தனர். அதாவது, "ராஜரிஷிகள் மஹாயாகங்களினாலும் பிராமணர்கள் ஹோமங்களினாலும் சிராத்தங்களினாலும் தேவர்களுக்குச் சக்தியையும் பலத்தையும் ஐசுவரியத்தையும் விருத்திசெய்கின்றனர். அசுரர்களுக்கு விரோதிகளாக இவ்வாறு ஆரம்பித்திருக்கிற அவர்களெல்லாரையும்நாமெல்லாரும் சேர்ந்து எவ்வகையிலும் வதஞ்செய்யவேண்

டும்" என்பது. எல்லாருக்கும் இவ்வாறுகட்டளையிட்டுக் கொடிய ஆலோசனைசெய்து மஹாஸமுத்திரத்தின்கீழ்கரையில் எல்லாத்திசைகளையும்நோக்கிச் சென்றனர். பலசாலிகளான ஸுந்தோபஸுந்தர்கள் எந்தப்பிராமணர்கள்யாகம்செய்கின்றனரோ எந்தப்பிராமணர்கள் யாகம்செய்விக்கின்றனரோ அவர்களெல்லாரையும் பலவந்தமாகக் கொன்று ஆங்காங்குதிரிந்தனர். அவர்களுடைய படையாட்கள் பரிசுத்தாத்மாக்களான முனிவர்களின் ஆச்ரமங்களிலுள்ள அக்நிஹோத்ரங்களையெடுத்து அச்சமின்றி ஜலத்தில் சேர்த்தனர். மஹாத்மாக்களாகிய தபோதனர்கள் அவர்கள்மேற் கோபித்துச்சொன்ன சாபங்களுங்கூடப் பிரம்மாவின் வரதானத்தால் விலக்கப்பட்டு அவர்களை ஒன்றும் செய்யவில்லை. அந்தச்சாபங்கள் கற்களிற்பிரயோகிக்கப்பட்ட பாணங்களைப்போல் அவர்களை யொன்றும் செய்யாமலிருந்தபோது அவ்வந்தணர்கள் அநுஷ்டானங்களைவிட்டு ஓடினர். இப்புவனத்துள் தவத்தில்தேறினவர்களும் மனத்தையும் புலன்களையும் அடக்கினவர்களுமான முனிவர்களும், ஆச்ரமங்கள்மிதிக்கப்பட்டும் இடிக்கப்பட்டுமிருந்ததனாலும் தண்ணீர்க் குடங்களும் யஜ்ஞபாத்திரங்களும் சிதற அடிக்கப்பட்டதனாலும் அவர்களிடம்பயந்து கருடனைக்கண்ட ஸர்ப்பங்களைப்போல் ஓடிப்போயினர். அப்போது, உலகமெல்லாம் பிரளயகாலத்தினால் கெடுக்கப்பட்டதுபோலப் பாழாயிற்று. ராஜாவே! அப்போது ரிஷிகள் காணப்படாமற்போனதனால் அம்மஹாஸுரர்களிருவரும் அவர்களை வதஞ்செய்ய மனத்தில் நிச்சயஞ்செய்துகொண்டு பலவடிவங்களெடுத்தனர். அவர்கள் கன்னங்களில் மதஜலம்பெருகுகின்ற மதயானை உருவமெடுத்து மலைச்சந்துகளில் ஒளிந்திருந்தவர்களையும் யமலோகத்துக்கனுப்பினர். அவ்விரண்டு கொடிய அஸுரர்களும் ஸிம்மங்களும் புலிகளுமாக ரூபமெடுத்தும் மறைந்தும் பற்பல உபாயங்களினால் திரும்பத்திரும்ப ரிஷிகளைக்கண்டுபிடித்துக் கொன்றனர், அப்போது பூமியில் யாகங்களும் வேதாத்யயனங்களுமில்லை. ராஜாக்களும் பிராமணர்களும் அழிந்தனர். கலியாணம்முதலியஉற்சவங்களும் புண்ணியகருமங்களுமில்லாமற்போயின. பூமியானது, ஹாஹாகாரம் உண்டானதாகவும், பயத்தால் நிலையற்றதாகவும், கடைகளும் கடைத்தெருவுகளும் எடுபட்டதாகவும், தேவகாரியங்களும் விவாஹமுதலிய புண்ணியகாரியங்களும் அற்றதாகவும், பயிர்செய்வதும் பசுமேய்ப்பதும்விடப்பட்டதாகவும், நகரங்களும் ரிஷிஆச்ரமங்களும் நாசம்செய்யப்பட்டதாகவும்,எங்கும்எலும்புக்கூடுகளிறைபட்டதாகவும், பார்ப்பதற்குப் பயங்

காமாகவுமிருந்தது. அப்போது, உலகத்தில் சிராத்தங்களும் யாகங்களும் ஜயகாரியங்களுமற்றுப் பயங்கரமும் பார்க்கக்கூடாததுமாக ஆய்விட்டது. ஸுந்தோபஸுந்தர்களுடைய அந்தச்செய்கையைக் கண்டு சந்திரசூரியரும் நவக்கிரகங்களும் ஸப்தரிஷிகளும் அசுவினி முதலானநக்ஷத்திரங்களும் தேவர்களும் துயரமுற்றனர். அவ்வஸுரர்கள் இவ்வாறான கொடியசெய்கையால் எல்லாத்திசைகளையும் ஜயித்து எதிரில்லாதவர்களாய்க் குருக்ஷேத்திரத்தில் வாஸஞ்செய்தனர்.

---

## இருநூற்றுமுப்பத்தோராவது அத்தியாயம்.

---

### ராஜ்யலாபபர்வம், (தொடர்ச்சி.)



(தேவர்கள் ஸுந்தோபஸுந்தர்களுடைய உபத்திரவத்தைப் பிரம தேவரிடம்தெரிவித்ததும், பிரமதேவர்கட்டளைப்படி விசுவ கர்மா திலோத்தமையைப்படைத்ததும், அவள் பிரம தேவரிடம் விடைபெற்றுக்கொண்டதும்.)

பிறகு, ஸமஸ்தமானதேவரிஷிகளும் ஸித்தர்களும் சிரேஷ்டர்களான பிரம்மரிஷிகளும் அந்தப் பெருந்துன்பத்தைக்கண்டு மிகுந்த துயரத்தையுடைந்தனர். அப்போது, கோபத்தையடக்கினவரும் மனத்தையும் இந்திரியங்களையும் ஜயித்தவருமாகிய அவர்கள் உலகத்தின்மேலுள்ளகருணையினால் பிரம்மலோகம்சென்றனர். அவ்விடத்தில் ஸித்தர்களாலும் பிரம்மரிஷிகளாலும் நாற்புறமும் சூழப்பட்டுத் தேவர்களுடன் வீற்றிருக்கும் பிரம்மதேவரைக்கண்டனர். ஈசுவராகிய சங்கரரும் அக்கினியும் வாயுவும் சந்திரஸூர்யர்களும் இந்திரனும் பிரம்மலோகத்திய ரிஷிகளாகிய வைகானஸர்கள், வாலகில்யர்கள், வானப்பிரஸ்தர்கள், மரீசிபர்களென்னும் ஸூர்யரச்மியை ஆகாரமாகக்கொண்டவர்கள், அஜர்கள், அவிமூடர்கள் (ஞானிகள்), தேஜோகர்ப்பர்கள் ஆகிய சிறந்ததவமுள்ள அந்தமுனிவர்களனைவரும் பிரம்மதேவரைச் சேர்ந்திருந்தனர். துயரமுற்ற அந்தரிஷிகளனைவரும் அங்கேசென்று ஸுந்தோபஸுந்தர்களின் செய்கையெல்லாவற்றையும் தெரிவித்தனர். அவர்கள் செய்கையையும் தங்கள்பொருள்களை அபகரித்ததையும் எல்லாம் வரிசையாக ஒன்றும்விடாமல் பிரம்மாவினிடம் தெரிவித்தனர். அந்தத்தேவர்களும் ரிஷிச்ரேஷ்டர்களுமாகிய எல்லாரும் அப்போது அதேவிஷயத்தைப்பற்றிப் பிரம்மாவைக் கேட்டனர். அவர்களனைவரும் சொன்னதைக்கேட்ட பிரம்மதேவர்,செய்ய

வேண்டியகாரியத்தின் நிச்சயத்தைப்பற்றிச் சற்றுநேரம் சிந்தித்து அவர்களைக் கொல்லுவதற்குரிய உபாயத்தை உத்தேசித்து விசுவகர்மாவை யழைத்தார். மிகுந்ததவமுள்ளபிரம்மதேவர் விசுவகர்மாவைப் பார்த்து, "யாவரும்ஆசைப்படத்தக்க ஒருபெண்ணை யுண்டுபண்ணு" என்று கட்டளையிட்டார். விசுவகர்மா பிரம்மாவுக்கு நமஸ்காரஞ் செய்து அவர்சொல்லையங்கீகரித்து அடிக்கடி மனத்தால்ஆராய்ந்து பார்த்து ஒரு சிறந்தபெண்ணைப்படைத்தான். எல்லாவற்றையும் அறிந்த விசுவகர்மா மூன்றுலோகங்களிலும் அசைவனவும் அசையாதனவுமாயுள்ள பொருள்களில் காட்சிக்கினியபாகம் எதுஎதுவோ அவற்றையெல்லாம் அந்தப்பெண்ணினிடம் ஒருங்குசேர்த்தான். கோடிகோடியாகவுள்ள இரத்தினங்களை அவள் அவயவங்களில் பதிப்பித்தான். தேவதாரூபமுள்ள அந்தப்பெண்ணை ரத்னங்களின்சேர்க்கையினாலேயே உண்டாக்கினான். விசுவகர்மா மிகுந்தபிரயத்தனத்தோடு படைத்த அந்தப்பெண் மூன்றுலோகங்களிலுமுள்ள ஸ்திரீகளில் அழகில் நிகரற்றவளாயிருந்தாள். அழகுநிரம்பியிருந்ததனால் பார்ப்பவர்களுடைய பார்வை வைத்த இடத்திலேயே பதிந்துபோகாமலிருக்கும்படி ஒரு சிறிய இடங்கூட அவள்தேகத்தில் இல்லை. மனிதஉருவத்தோடுவந்த ஸ்ரீதேவிபோன்றவளும் நினைத்தரூபமெடுப்பவளும் திடசரீரமுள்ளவளுமாகிய அந்தப்பெண் பிரம்மாவினிடம்சென்று, "நான் என்னசெய்யக்கடவேன்?" என்றுகேட்டனள். அவர் அவளைக்கண்டதும் மகிழ்ச்சியுற்று அன்புடன் அவளுக்கு வரமளித்தனர். அவள் பிரம்மதேவருடைய அந்தவரதானத்தினாலும் விசுவகர்மாவின் வேலைத்திறத்தினாலும் எல்லாவற்றிற்கும் மேற்பட்ட அழகையும் ஒளியில் ஒப்புயர்வற்ற தேகத்தையும்அடைந்து எல்லாப்பிராணிகளின் கண்களையும் மனங்களையும் கவர்ந்தாள். ரத்னங்களிலுள்ள ஸாராம்சங்களை எள்ளளவுஎள்ளளவாகஎடுத்து உண்டுபண்ணப்பட்டதனால், பிரம்மதேவர் அவளுக்குத் 'திலோத்தமை' என்று பெயரிட்டனர். அவள் பிரம்மாவுக்கு நமஸ்காரஞ்செய்து கைகூப்பி, "லோகேசுவரரே! நான் செய்யவேண்டிய காரியம் யாது? என்னை ஸ்ருஷ்டிசெய்தது எதற்காக?" என்று கேட்டனள். அதற்கு, பிரம்மதேவர், "திலோத்தமையே! ஸுந்தோபஸுந்தர்களென்னும் அஸுரர்களிடம்செல். இனியவளே! விரும்பத்தக்க உன் அழகினால் அவர்களை மயங்கச்செய். உன்னைப்பார்த்தவுடன் உன் அழகின்சிறப்பிற்காக உன் விஷயத்தில் அவ்விருவர்க்கும் பரஸ்பரவிரோதமுண்டாகும்படி செய்வாயாக" என்றுசொன்னார், அவள், "அப்படியேயாகட்டும்" என்று

பிரதிஜ்ஞைசெய்து பிரம்மாவை நமஸ்கரித்து அவருக்கும் அங்குள்ள தேவக்கூட்டத்துக்கும் பிரதக்ஷிணஞ்செய்தாள். * பிரம்மதேவர் கிழக்குமுகமாகஇருந்தார். சங்கரர் தென்புறத்திலிருந்தார். தேவர்கள் வடபுறத்திலிருந்தனர். ரிஷிகள் நாற்புறத்திலுமிருந்தனர். அந்தக் கூட்டத்தை அவள் பிரதக்ஷிணஞ்செய்யும்போது இந்திரனும் பகவானனசங்கரரும் † மனநிலைதவறிப்போயினர். பக்கத்தில் மிகநெருக்கமாக அவள்வரும்போது அவளைப்பார்க்க விருப்பமுற்ற சங்கரருக்கு மலர்ந்த தாமரைப்புஷ்பம்போன்றகண்களையுடைய வேறொருமுகம் தென்பக்கம்புறப்பட்டது. அவள் பின்னே பிரதக்ஷிணம்வரும்போது மேற்றிசைமுகம் கிளம்பிற்று. வடபுறம்செல்லும்போது வடபுறம் முகம் வெளிப்பட்டது. இந்திரனுக்கும் பின்னும் முன்னும் பக்கங்களிலும் எங்கும் கடை சிவந்தும் அகன்றுமிருக்கும் ஆயிரம்கண்கள் உண்டாயின. இவ்வாறு முன்னே மஹாதேவரானசங்கரர் சதுர்முகரானர். அவ்வாறே இந்திரனும் ஸஹஸ்ரநேத்ரனானன். தேவக்கூட்டங்களுக்கும் மஹரிஷிகளுக்கும் திலோத்தமையோடு பக்கத்திலேயே முகங்கள் திரும்பின. பிரம்மதேவரைத்தவிர அங்குள்ள மற்ற மஹாத்மாக்கள் எல்லாருடையதிருஷ்டியும் அவள்தேகத்தில் அதிகமாகப் பதிந்தது. ஸகலதேவர்களும் ஸகலமஹரிஷிகளும் அவளுடைய சிறந்தரூபத்தைக்கண்டு, அவள்செல்வதால் காரியம்முடிந்ததென்றே நினைத்தனர். உலகங்களைப்படைப்பவராகிய பெருமைபெற்ற பிரம்மதேவரும் திலோத்தமை சென்றபிறகு காரியம் ஆனதுதானென்றுசொல்லி அந்தத்தேவர்கள் ரிஷிகள் எல்லாருக்கும் விடைகொடுத்தனுப்பினர்.

---

## இருநூற்றுமுப்பத்திரண்டாவது அத்தியாயம்.

### ராஜ்யலாபபர்வம். (தொடர்ச்சி.)



(திலோத்தமைக்காக ஸுந்தோபஸுந்தர்கள் ஒருவரையொருவர் வதஞ்செய்தகதையை நாரதரிடம்கேட்டபாண்டவர்கள் த்ரௌபதிக்காக வ்யவஸ்தை செய்துகொண்டது.)

எதிரிகளில்லாமலும் கவலையில்லாமலுமிருந்த அந்த இரண்டு அஸுரர்களும் பூமியைஜயித்து மூன்றுலோகங்களையும் ஸ்திரமாக

---

* மூலத்தில், 'பகவான்' என்றிருக்கிறது. பகவானென்பதற்கு விஷ்ணுவென்பது பழையவுரை.

† 'ப்ரத்யவஸ்திதௌ' என்பது உத்தரதேசபாடம். அதற்கு, 'தைரியமாகஇருந்தனர்' என்பதுபொருள்.

ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு கவலையற்று மகிழ்ந்திருந்தனர். தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், நாகர்கள், அரசர்கள், ராக்ஷஸர்கள், இவர்களிடமிருந்து சிறந்தபொருள்களையெல்லாம் அபகரித்துக்கொண்டு மிகுந்த ஸந்தோஷத்தையடைந்தனர். அவர்களிருவரையும் தடுப்பவர்கள் உலகத்தில் யாருமில்லாமையால், அவர்கள் யுக்தமுயற்சியை விட்டுத் தேவர்களைப்போல விளையாடிக்கொண்டிருந்தனர். ஸ்திரீகளாலும் பூமாலைகளாலும்சந்தனம்முதலியவாஸனைகளினாலும் விலைபெற்ற பக்ஷணங்களாலும் உணவுகளாலும் பலவகை இனியபானங்களாலும் மிகுந்த திருப்தியடைந்தனர். அந்தப்புரத்தின் தோட்டங்களிலும் வெளித்தோட்டங்களிலும் மலைகளிலும் காடுகளிலும் விரும்பின தேசங்களிலும் தேவர்களைப்போல்விளையாடினர். பிறகு, ஒருகாலத்தில் மேடுபள்ளமில்லாத பாறைகளையுடைய விந்தியமலைச்சாரலில் தலைகளிற் புஷ்பங்கள்நிறைந்த மரங்களில் விளையாடச்சென்றனர். தேவலோகத்திலுள்ள பிரியமானபொருள்களையெல்லாம் கொணர்ந்துவைத்துக்கொண்டு அவரிருவரும் மகிழ்ந்து ஸ்திரீகளுடன்கூட உயர்ந்த ஆசனங்களில் உட்கார்ந்தனர். அப்போது, மங்கையர்கள் வாத்தியங்களினாலும் நர்த்தனங்களினாலும் அவர்களைப்பற்றிய ஸ்தோத்திரமுள்ள பாட்டுக்களினாலும் அவர்களிருவரையும் மகிழ்வித்துச் சமீபத்திலிருந்தனர். அப்போது அந்தத்திலோத்தமை ஒருசிவந்த ஒற்றையாடையோடு வெளிப்படையாகத்தெரிகின்ற உருவத்தையெடுத்துக்கொண்டு அந்தவனத்திலுள்ள புஷ்பங்களையும் நதிக்கரைகளில் முளைத்த கொன்றைப்புஷ்பங்களையும் கொய்துகொண்டு அந்த மஹாஸுரர்களிருக்குமிடத்துக்கு மெல்லமெல்லச் சென்றாள்.

சிறந்த மதுவைப் பானஞ்செய்து குடிமயக்கத்தினால் கடைக்கண்கள்சிவந்த அந்தஅஸுரர்கள் அந்தச் சிறந்தபெண்ணைப்பார்த்ததும் கலங்கிப்போயினர். அவர்கள் ஆஸனத்தைவிட்டெழுந்து அவள் இருந்தஇடம்சென்றனர். இருவரும் காமவெறிகொண்டு அவ்விருவரும் சேர்ந்தே அவளை விரும்பினர். அழகியபுருவங்களையுடைய அந்தத்திலோத்தமையை ஸுந்தன் வலக்கையையும் உபஸுந்தன் இடக்கையையும்பிடித்துக்கொண்டனர். வரத்தின் மகிமையாலும் மார்பின் பலத்தினாலும் தனத்தினாலும் ரத்னங்களினாலுமுண்டான கர்வத்தினாலும், கள்ளுண்டமயக்கத்தினாலும் கொழுத்த அவ்விருவரும் ஒருவரையொருவர் நோக்கிப் புருவங்களைநெறித்தனர். மதத்தினாலும் காமத்தினாலும் ஆவேசங்கொண்டு ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டனர். "இவள் என்னுடையமனைவி; நீ மரியாதைசெய்யத்தக்க

வன்" என்று ஸுந்தன் சொன்னான். உபஸுந்தன், "என் மனைவி, உனக்கு மருமகள்" என்றுசொன்னான். "இவள் உனக்கன்று, எனக்குத்தான்" என்று இருவரும்சொல்லிக்கொண்டனர். அதன்பிறகு, அவர்களுக்குக் கோபாவேசம் உண்டாயிற்று. அவளுடைய ரூபத்தினால்மயங்கின அவ்விருவரும் நேசமும் மனவொற்றுமையும் ஒழிந்து அவளுக்காகப் பயங்கரமான இரண்டு கதைகளையெடுத்துக்கொண்டனர். அவளிடத்தில் காமத்தினால் மோகங்கொண்ட அவ்விருவரும் பயங்கரமானகதைகளை யோங்கிக்கொண்டு, 'நான்முன்னே, நான்முன்னே' யென்று ஒருவரையொருவர் அடித்துக்கொண்டனர். பயங்கரமான அந்தஅஸுரர்கள் கதைகளினாலடிக்கப்பட்டு ரத்தத்தினால் அங்கமெல்லாம்நனைந்து ஆகாசத்திலிருந்து இரண்டுஸூர்யர்கள் விழுந்ததுபோலத் தரையில்விழுந்தனர். பிறகு, அந்தப்பெண்களும் அஸுரக்கூட்டங்களும் மருண்டோடினர். எல்லாரும் துக்கத்தினாலும் பயத்தினாலும் பதைபதைத்துப் பாதாளலோகம் சென்றனர்.

பிறகு, பரிசுத்தஆத்மாவாகிய பிரம்மதேவர் திலோத்தமையைக் கௌரவிப்பதற்காகத் தேவர்களோடும் மஹாரிஷிகளோடும் அங்கே வந்தனர். பகவானான பிரம்மதேவர் அவளுக்கு வரந்தருவதாகச் சொன்னார். அந்தப்பிரம்மதேவர் அன்புடன் வரங்கொடுக்கக் கருதி அவளைப்பார்த்து, "பெண்ணரசியே! ஆதித்தன்சஞ்சரிக்கும் லோகங்களெல்லாம் நீ சஞ்சரிப்பாயாக. உன்னொளியினால் உன்னை யாரும் உற்றுப்பார்க்கமுடியாது" என்று சொன்னார். உலகங்களையெல்லாம் படைத்தவராகியபிரபு இவ்வாறு அவளுக்குவரங்கொடுத்து இந்திரனுக்குத் திரிலோகாதிபத்யத்தையளித்துப் பிரம்மலோகத்துக்குச் சென்றனர். இவ்வாறு ஸுந்தோபஸுந்தர்களிருவரும் சிநேகிதர்களாகவும் எல்லாக்காரியங்களிலும் ஒரேகிச்சயமுள்ளவர்களாகவுமிருந்தும் திலோத்தமைக்காகக் கோபித்து ஒருவரையொருவர் கொன்றனர். பரதச்ரேஷ்டர்களே! ஆதலால், நான் ஸ்நேஹத்தினாற் சொல்லுகிறேன். என் அபிப்பிராயத்தை நீங்கள் அனுஸரிப்பீர்களானால் உங்களெல்லாருக்கும் திரௌபதிநிமித்தம் வேறுபாடுவாராதிருக்கும்படி நீங்கள் செய்யுங்கள். அதுதான் உங்களுக்குநன்மை" என்று நாரதர்சொன்னார்.

ஜனமேஜயமஹாராஜாவே! நாரதமஹாரிஷியினால் இவ்வாறுபோதிக்கப்பட்ட அந்தமஹாத்மாக்களான பாண்டவர்கள் ஒருவர்க்கொருவர் வசப்பட்டு அளவற்றமஹிமையுள்ள அந்தத்தேவரிஷியாகிய நாரதர் முன்னிலையிலேயே ஒருவியவஸ்தை செய்துகொண்டனர்.

அதாவது, "குற்றமற்றகிருஷ்ணை ஒவ்வொருவன்கிருஹத்தில் ஒவ்வொருவருஷம் வஸிக்கவேண்டும். நமக்குள் ஒருவன் திரௌபதியோடுகூடஇருக்கையில் பார்த்தமற்றொருவன் பன்னிரண்டுமாதம் பிரம்மசாரியாக வனத்தில்வஸிக்கக்கடவன்" என்பது. தர்மானுஷ்டானஞ்செய்பவராகியபாண்டவர்கள் அந்தஉடன்பாட்டைச்செய்துகொண்டபிறகு நாரதமஹாமுனிவரும் ஸந்தோஷமடைந்து தாம் நினைத்தவிடம் சென்றார். நாரதர்கட்டளையினால் அந்தப்பாண்டவர்கள் முன்னம் இவ்வாறு ஏற்பாடுசெய்துகொண்டனர். பாரதரே! அவர்களெல்லாரும் அதனால் பரஸ்பரவிரோதமடையவில்லை. அந்தப்பாண்டவர்களெல்லாரும் ஒருவரையொருவர் நேசித்திருந்தனர். ஜனமேஜயராஜாவே! அந்தச்செல்வம்நிறைந்தகாலத்தில் நடந்தவற்றையெல்லாம் நடந்தபடி விரிவாக உமக்கு இவ்வாறுஉரைத்தேன்.

ராஜ்யலாபபர்வம் முற்றிற்று.

---

இருநூற்றுமுப்பத்துமூன்றாவது அத்தியாயம்.

---

## அர்ஜுனவன்வாஸபர்வம்.



(திருடர்களாற்கொண்டுபோகப்பட்ட பசுக்களைப் பிராம்மணனுக்குத் திருப்பிக்கொடுப்பதற்காக அர்ஜுனன் ஆயுதமெடுக்கையில் த்ரௌபதியும் யுதிஷ்டிரருமிருந்த க்ருகத்திற்பிரவேசித்ததனால் அவன் தீர்த்தயாத்திரைக்குப்போனது.)

அந்தப்பாண்டவர்கள் இவ்வாறு வியவஸ்தைசெய்துகொண்டபிறகு, அஸ்த்ரப்பயிற்சியின்வன்மையினால் மற்றஅரசர்களைக் கீழ்ப்படுத்திக்கொண்டு அங்கே வஸித்தனர். அளவற்றபராக்ரமமுள்ளவர்களும் புருஷச்ரேஷ்டர்களுமாகிய அந்தப்பாண்டவர்களனைவருக்கும் கிருஷ்ணை உட்பட்டவளாயிருந்தாள். ஐந்து யானைகளோடுகூடிய * ஸரஸ்வதியென்னும் நதிபோல் அவ்வைந்துவீரர்களான கணவர்களோடுகூடியதனால் த்ரௌபதியும், திரௌபதியுடன் சேர்ந்ததனால் பாண்டவர்களும் மிகுந்த ஸந்தோஷமடைந்திருந்தனர். மஹாத்மாக்களானபாண்டவர்கள் தர்மமாகநடந்துவரும்போது குருக்ஷேத்திரத்தைச்சேர்ந்ததேசமெல்லாம் குற்றங்கள்நீங்கி ஸௌக்கியமடை

* ஸரஸ்வதியென்பதற்கு தடாகமுள்ளகாடு என்பதுபழையஉரை.

ந்து பெருகிற்று. ஜனமேஜயராஜாவே! அரசர்க்கரசரே! பிறகு, நீண்டகாலத்திற்குப்பின் ஒருபிராமணனுடைய பசுக்களைச் சிலதிருடர்கள் கொண்டுபோயினர். அந்தப்பசுக்கள் அபகரிக்கப்பட்டதனால் அந்தப்பிராமணன் கோபம்மிகுந்து காண்டவப்பிரஸ்தத்துக்கு வந்து, "இந்தக்கோதனம் அற்பர்களும் கொடியவர்களும் விவேகமில்லாதவர்களுமான ஜனங்களினால் நமதுதேசத்திலிருந்து பலாத்காரமாகக் கொண்டுபோகப்படுகின்றது. பாண்டவர்களே! ஓடிவாருங்கள். சாந்தமான பிராம்மணனுடைய ஹவிஸானது காக்கைகளினால்கெடுக்கப்படுகின்றது. புலியின்குகையை அதுஇல்லாதபோது அற்பமானநரி மிதிக்கிறது. ஆறில்ஒருபாகம் தீர்வைவாங்கிக்கொண்டு ரக்ஷிக்காமலிருக்கின்ற ராஜா எல்லாஉலகங்களிலும் முதன்மையானபாபிஷ்டனாகிறானென்றுசொல்லுகின்றனர். பிராம்மணனுடைய சொத்துச் சோரர்களாற்கொள்ளையடிக்கப்பட்டுத் தர்மகாரியமும்கெடுக்கப்பட்டு நானும்மிகக்கதறிக்கொண்டிருக்கையில் நீங்கள் கைகொடுக்கவேண்டும்" என்றுசொன்னான். ஸமீபத்தில்வந்து அடிக்கடி முறையிடும் பிராம்மணனுடைய அந்தவசனங்களைக் குந்திபுத்திரனாகிய தனஞ்சயன் கேட்டான். கேட்டவுடன் அந்தமஹாவீரன் "நீ, பயப்படாதே" என்றுஅந்தப்பிராம்மணனுக்குச் சொன்னான். மஹாத்மாக்களாகிய பாண்டவர்களுடைய ஆயுதங்களிருந்த அந்தக்கிருகத்தில் தர்மராஜாவானயுதிஷ்டிரர் திரௌபதியுடன் இருந்தார். அர்ஜுனன் கிருகத்திற்பிரவேசிப்பதற்கும் யுத்தத்திற்குப்போவதற்கும் முடியவில்லை. துயரமுற்ற அந்தப்பிராம்மணனுடைய அந்தச் சொற்களினால் பலமுறைதூண்டப்பட்ட அவன், அழுகையினால் துன்பமுற்றுச் சிந்திக்கலானான். "தபஸுள்ளபிராம்மணனுடைய பசுக்கள் கொண்டுபோகப்படும்போது அவன்கண்ணீரைத்துடைக்கவேண்டுமென்பது சாஸ்திரத்தின்துணிபு. ராஜாவைப்பார்ப்பதனால் மிகப்பெருந்தர்மலோபமுண்டாகும். நமதுவாயிலில் அழுகின்ற இவனை இப்போது காப்பாற்றாமற்போவேனாயின் நம்மெல்லாருக்கும் ராஜ்யரக்ஷணைவிஷயத்தில் சிரத்தையில்லையென்றபேர் இவ்வுலகத்தில் நிலைநிற்கும். நமக்குத் தர்மலோபமும்உண்டாகும். ராஜாவைக்கேட்டுக்கொள்ளாமல நான்போவேனாயின் நிச்சயமாக அஜாதசத்ருவான ராஜாவுக்கும எனக்கும் சத்தியம் தவறிவிடும். ராஜா இருக்குமிடத்தில் பிரவேசித்தால் எனக்கு வனவாஸம்நேரிடும். மற்ற (என்ஸௌகர்யம்) எல்லாம்விடப்பட்டதாகும். ராஜாவை அதிக்கிரமிப்பதனால் எனக்குப் பெரியதர்மலோபமும் வனத்திலே

யே மாணமும் வந்தாலும்வரட்டும். சரீரம்போனாலும் தர்மந்தான். அதுவே சிறந்தது" என்றுசிந்தித்தான். ஜனமேஜயராஜாவே! குந்திபுத்திரனை தனஞ்சயன் இவ்வாறுநிச்சயித்து உள்ளேபிரவேசித்து ராஜாவைக்கேட்டுக்கொண்டு மேல்வஸ்திரத்தினால் முகத்தைநன்றாக மூடிக்கொண்டு தமையனாராகிய தர்மராஜாவை நமஸ்காரஞ்செய்து கிருகத்திலிருந்து விரைவாகப் புறப்பட்டான். வில்லையெடுத்துக்கொண்டு ஸந்தோஷமடைந்து பிராம்மணனைப்பார்த்து, "பிராம்மணரே! சீக்கிரம்வாரும்; அயலார்பொருளில்ஆசைவைத்த அந்த அயோக்கியர்கள் நெடுந்தூரம்போவதற்குமுன்னே நாம்தொடர்ந்துசெல்வோம். உமது தனத்தை இப்போது திருடர்கையிலிருந்து மீட்டுக்கொடுப்பேன்" என்றுசொன்னான். மஹாபராக்கிரமசாலியும் வீரனும் ஸவ்யஸாசியுமாகிய அந்தஅர்ஜுனன் வில்லெடுத்துக் கவசந்தரித்துக் கொடிகட்டினதேரிலேறிப் பாணங்களினால் அந்தச்சோரர்களையழித்து அந்தப் பசுக்களைஜயித்து அந்தப்பிராம்மணனுக்குக்கொடுத்துப் பிராம்மணனுக்கு உபகாரஞ்செய்ததனாலுண்டான புகழையடைந்து நகரத்துக்கு வந்துசேர்ந்தான்.

அவன் பெரியோரெல்லாரையும் வந்தனஞ்செய்து அவர்களெல்லாராலும் ஆசீர்வதிக்கப்பெற்றபிறகு தர்மராஜரைப்பார்த்து, "மஹாராஜாவே! எனக்கு ஒருவிரதத்தைக்கட்டளையிட்டருளுவீர். நான் தங்களைப்பார்த்ததனால் நமதுஉடன்படிக்கையைக் கடந்தவனாயிருக்கிறேன். நான் வனவாஸத்துக்குச் செல்வேன். இதுதானே நாம் செய்துகொண்ட ஏற்பாடு" என்றான். அவன் திடீரென இந்த அப்பிரியமானசொல்லைச் சொல்லக்கேட்ட தர்மராஜா வியசனமுற்று, "என்ன" என்று தழுதழுத்தசொற்களினால் கேட்டனர். ராஜாவானயுதிஷ்டிரர் ஸத்தியந்தவறாதவனும் தம் ஸஹோதரனும் * குடாகேசன் என்று சொல்லப்பட்டவனுமான தனஞ்சயனைப்பார்த்துத் துக்கமுற்று, "குற்றமற்றவனே! நான் உனக்கு விதிக்கத்தக்கவனாக இருந்தால் நான்சொல்லுகிறதைக் கேள். வீரனே! உள்ளேபிரவேசித்ததனால் நீ எனக்குச்செய்த அப்பிரியத்தையெல்லாம் நான் அனுமதிசெய்கிறேன். என்மனத்தில் வெறுப்பில்லை. பெரியவனிருக்குமிடத்தில் இளையவன்போவது விரோதமாகாது. இளையவனிடத்தில் பெரியவன்போவது நியமத்தைக்கெடுப்பது. சிறந்த கைகளையுடையவனே! நிவிருத்தியடை; நான்சொல்வதைச் செய். உனக்குத் தர்ம

* வளைந்தகேசத்தலையுடையவன் என்றும், நித்திரையைஜயித்தவனென்றும்பொருள்.

லோபமில்லை. நீ அதிக்கிரமஞ்செய்யவுமில்லை" என்றுசொன்னார். அதைக்கேட்டு அந்தஅர்ஜுனன், "கபடமாகத் தர்மஞ்செய்வது தகாதென்று நான் தங்களிடம்கேட்டேன். நான் ஸத்தியத்திலிருந்து விலகேன். ஆயுதத்தைத்தொட்டு ஸத்தியஞ்செய்கிறேன்" என்று சொல்லி ராஜாவினிடம் அனுமதிபெற்று வனத்தில்வஸிப்பதற்குரிய தீக்ஷைசெய்துகொண்டு பிறகு பன்னிரண்டுமாஸம் வனவாசத்துக்குச் சென்றான்.

---

## இருநூற்றுமுப்பத்துநான்காவது அத்தியாயம்.

---

### அர்ஜுனவனவாஸபர்வம். (தொடர்ச்சி.)



(ஸ்நானஞ்செய்வதற்குக் கங்கையில்இறங்கின அர்ஜுனன் உலூபியென்னும்நாககன்னிகையினால் பாதாளலோகத்திற்கு அழைத்துக்கொண்டு போகப்பட்டதும், அங்கே இராவானென்னும் புத்திரன்பிறந்ததும், அந்தஉலூபியினாலேயே கங்கைத்துறைக்குக் கொண்டுவந்துவிடப்பட்டதும்.)

குருவம்சத்தாருக்குக் கீர்த்தியைவிளைவிப்பவனும் மஹாவீரனுமாகிய அர்ஜுனன் போகும்போது மஹாத்மாக்களும் வேதங்களில் கரைகண்டவர்களுமாகிய பிராம்மணர்கள் அவனுக்குப் பின்சென்றனர். வேதங்களையும் வேதாங்கங்களையும் அறிந்தவர்களும் ஆத்மத்தியானமுள்ளவர்களும் பிக்ஷையெடுப்பவராகிய பிரம்மசாரிகளும் பகவத்பக்திசெய்கிறவர்களும் புராணங்கள்சொல்லும் ஸூதர்களும் கதைசொல்லுகிறவர்களும் காட்டில்வஸிக்கின்ற * சிரமணர்களும் சிறந்த இதிஹாஸங்களை இனிமையாகப்படிக்கத்தக்க பிராம்மணர்களும் உடன்சென்றனர். இனிய கதைகளைச் சொல்லுகின்ற இவர்களாலும் இன்னும் அநேகம் துணைவர்களாலும் சூழப்பட்டவனாகி அர்ஜுனன் தேவர்களாற்சூழப்பட்ட இந்திரனைப்போலச் சென்றான். ஜனமேஜயரே! பரதச்ரேஷ்டனான அர்ஜுனன் அழகியவையும் புதியவையுமான வனங்களையும் தடாகங்களையும் நதிகளையும் கடலையும் தேசங்களையும் புண்ணியதீர்த்தங்களையும் கண்டான். பிரபுவான அர்ஜுனன் கங்கோத்பத்தியையடைந்து வாஸஞ்செய்தான். ஜனமேஜயரே! அவ்விடத்தில் பரிசுத்தமான மனமுள்ள பாண்டவச்ரேஷ்டனாகிய அர்ஜுனன்செய்த ஆச்சரியமானசெய்கையை நீர்கேளும்.

---

* ஸந்யாஸிகள்.

ஜனமேஜயரே! அர்ஜுனனும் பிராம்மணர்களும் அங்கே வாஸஞ்செய்தபோது அந்தப்பிராம்மணர்களில் அனேகர்கள் அக்கினிஹோத்ரங்களைச்செய்ய ஆரம்பித்தனர். ராஜாவே! வித்துவான்களும் நியமந்தவறாதவர்களும் ஸன்மார்க்கத்திலிருப்பவர்களுமாகிய அந்தமஹாத்மாக்களால் கங்கைக்கரையில் அந்த அக்கினிகள் ஜ்வலிக்கும்படி மூட்டப்பட்டு ஹோமமும் புஷ்பார்ச்சனையும் செய்யப்பட்டபோது அந்தக் கங்கோத்பத்திஸ்தானமானது மிகஅழகாயிருந்தது.

அந்தஇடம் அவ்வாறு நிரம்பியிருந்தபோது பாண்டவச்ரேஷ்டனான அர்ஜுனன் ஸ்நானஞ்செய்வதற்குக் கங்கையில் இறங்கினான். ராஜாவே! அந்தமஹாவீரன் அங்கே ஸ்நானஞ்செய்து பிதிர்தர்ப்பணமுஞ்செய்து, அக்கினிஹோத்திரம்செய்வதற்காக ஜலத்திலிருந்து கரையேறநினைக்கையில் (அவன்மீது) காமமுற்ற உலூபியென்னும் நாககன்னிகையினால் ஜலத்துக்குள் இழுக்கப்பட்டான். நியமந்தவறாதவனாகிய அந்த அர்ஜுனன் அந்த நாகலோகத்தில் மிகச்சிறந்ததான கௌரவ்யனென்னும் நாகனுடையவீட்டில் அக்கினியைப்பார்த்தான். குந்திபுத்திரனான தனஞ்சயன் அதில் அக்னிஹோத்திரஞ்செய்தான். அவன் எவ்வளவும் சங்கைப்படாமல் ஹோமஞ்செய்ததனால் அக்கினிபகவான் திருப்தியடைந்தார். அந்த அர்ஜுனன் அக்னிஹோத்திரஞ்செய்தபிறகு நாகராஜன்பெண்ணாகிய உலூபியைப்பார்த்து நகைத்துக்கொண்டு, 'அச்சப்படுகிறவளே! பெண்ணரசியே! இஃதென்ன ஸாஹஸகாரியம்செய்திருக்கிறாய். அழகியவளே! இஃது எந்தஇடம்? நீ யார்? யாருடையபெண்?' என்றுகேட்க, உலூபி, அரசனே! 'ஐராவதநாககுலத்தில் பிறந்த கௌரவ்யனென்னும் நாகராஜன் ஒருவன் இருக்கிறான். நான் அவன்பெண்ணாகிய உலூபியென்றுபெயருள்ள நாககன்னிகை. புருஷச்ரேஷ்டனே! அப்படிப்பட்ட நான், ஸ்நானஞ்செய்வதற்காக இம்மகாநதியிலிறங்கின உன்னைப் பார்த்தவுடன் மன்மதனால் மயக்கப்பட்டேன். கௌரவபுத்திரனே! குற்றமற்றவனே! உன்னிமித்தமாக அனங்கனாற்பீடிக்கப்பட்டவளும் விவாகமில்லாதவளுமாகிய எனக்கு நீ இப்போது * ஆத்மதானஞ்செய்வதனால் ஆனந்தத்தையுண்டாக்குவாய்' என்றாள். அதைக்கேட்ட அர்ஜுனன், 'அன்புள்ளவளே! எனக்குப் பன்னிரண்டு மாஸம்வரையில் இந்தப்பிரம்மசாரிவிரதம் தர்மராஜாவினால் கட்டளையிடப்பட்டிருக்கிறது. நான் ஸ்வதந்திரன்அல்லேன். ஜலத்திற்கஞ்சரிப்பவளே! உன்விருப்பத்தையும் செய்யவிரும்புகிறேன். நான்

* உன்னையே கணவனாகக்கொடுப்பதனால்.

முன்னே ஒருபோதும் பொய்சொன்னதில்லை. நாககன்னிகையே! நான் பொய்யனுகாமலிருப்பதும் உன்விருப்பம் நிறைவேறுவதும் எவ்வாறு? என்னுடையதர்மம் கெடாமலிருக்கும்படி நீ செய்யக்கடவாய்' என்றுசொன்னுன்.

உலூபி, "பாண்டவனே! நீ எதற்காக இந்தப்பூமியில் சஞ்சரிக்கிறுயென்பதும் உனதுஜ்யேஷ்டர் எதற்காகப் பிரம்மசர்யவிரதத்தை உனக்கு நியமித்தாரென்பதும் எனக்குத் தெரியும். 'நம்மிலொருவன் திரௌபதியினிடத்திலிருக்கும்போது மற்றொருவன் தெரியாமற்பிரவேசிப்பானுயின் அவன் பன்னிரண்டுமாஸம் வனத்தில் பிரம்மசாரிவிரதத்தோடு சஞ்சரிக்கவேண்டும்' என்றுசெய்துகொண்ட உடன்பாட்டின்படி நீங்கள் ஒருவர்க்கொருவர் திரௌபதியைப்பற்றித் தர்மந்தவறுமலிருப்பதற்கு இந்தவனவாஸத்தைத் தர்மராஜர் உனக்கு விதித்திருக்கிறுர். அந்தத்தர்மம் என்விஷயத்தில் கெடாது. விசாலமானகண்களுடையவனே! கஷ்டப்பட்டவரைக் காப்பாற்றுவதும் கடமைதான். என்னைக்காப்பாற்றுவதனுல் உன்னுடையதர்மம்கெடாது. அர்ஜுனு! அன்றியும் இந்த உன்தர்மத்திற்குச் சொற்பவித்தியாஸம் நேர்ந்தாலும் எனக்கு உயிரைக்கொடுப்பதினுல் அதுவும் உனக்குத் தர்மமாகவேமுடியும். குந்திபுத்ரா! அன்புள்ளஎன்னிடம் அன்புவை. பிரபுவே! இது ஸாதுக்களின்கொள்கை. நீ இவ்வாறுசெய்யாவிடின் என்னை இறந்தவளாகவே நம்பு. சிறந்தகைகளையுடையனே! உயிரைக்கொடுப்பதினுல் உயர்ந்ததர்மத்தைச்செய். புருஷச்ரேஷ்டனே! இப்போது உன்னைச் சரணமாகஅடைந்திருக்கிறேன். குந்திபுத்ரனே! துக்கப்பட்டவர்களையும் அனுதைகளையும் என்றும் காப்பாற்றுகிறுய். ஆதலால், சரணமடைகிறேன்; துக்கத்துடன் கதறவும்கதறுகிறேன். விருப்பத்துடன் உன்னை நான் வேண்டுகிறேன். ஆதலால், என்விருப்பத்தைச் செய். நீ உன்னை ஆத்மதானஞ்செய்வதனுல் என்மனேரதம் நிறைவேறச்செய்' என்றுள்.

நாககன்னிகையாகிய உலூபியினுல் இவ்வாறுசொல்லப்பட்ட *கௌந்தேயன் தர்மத்தையேகாரணமாக நினைத்து அவள் சொன்னவற்றையெல்லாம் அப்படியே செய்தான். பராக்கிரமசாலியாகிய அந்தஅர்ஜுனன் அந்தநாகராஜன்வீட்டில் அந்த இரவுமுழுதுமிருந்து அவளிடத்தில் மஹாபாக்கியசாலியும் மஹாபராக்கிரமசாலியுமான இராவான்என்னும் அழகியபுத்திரனை உண்டுபண்ணினுன். ஸூர்யோதயமானவுடன் கௌரவ்யன்கிருகத்திலிருந்தெழுந்து அவனுட

* அர்ஜுனன்.

ன்கூட அந்தக் கங்கோத்பத்திஸ்தானத்திற்கு மறுபடியும் வந்துசேர்ந்தான். ஜனமேஜயரே! கற்புள்ளஉலூபி அர்ஜுனனை அங்கே கொண்டுவந்துவிட்டபிறகு, எந்தஜலத்திலும் யாராலும் ஜயிக்கப்படாமையையும் ஜலசரங்களெல்லாம் நிச்சயமாக வசப்படுத்தப்படுமென்பதையும் வரங்களாக அளித்துத் தன் இல்லம்சென்றாள்.

---

## இருநூற்றுமுப்பத்தைந்தாவது அத்தியாயம்.

---

## அர்ஜுனவனவாஸபர்வம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் *மணலூருக்குச்சென்று சித்ரவாகனன்மகளாகிய சித்ராங்கதையை மணம்புரிந்தது.)

ஜனமேஜயரே! அந்த இந்திரபுத்ரனாகிய அர்ஜுனன் நடந்தவற்றையெல்லாம் பிராமணர்களுக்குச்சொல்லிப் பிறகு இமயமலைச்சாரலுக்குச் சென்றான். அகஸ்தியவடம் வஸிஷ்டபர்வதமென்னும் இடங்களையடைந்து பிருகுதுங்கமென்னும்இடத்தில் அவன் ஸ்நானம்செய்தான். ஜனமேஜயரே! அந்தக் குருச்ரேஷ்டன் அனேகமாயிரம் கோதானங்களையும் கிருகதானங்களையும் பிராம்மணர்களுக்குக் கொடுத்தான். புருஷச்ரேஷ்டனும் பாண்டவச்ரேஷ்டனுமாகிய அர்ஜுனன் ஹிரண்யபிந்துமஹரிஷியின் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து புண்ணியமானக்ஷேத்திரங்களைக்கண்டான். ஜனமேஜயரே! புருஷச்ரேஷ்டனும் பரதச்ரேஷ்டனுமான அந்தஅர்ஜுனன் பிராம்மணருடன்கூட ஸ்நானஞ்செய்து கிழக்குத்திக்கைநோக்கிச் சென்றான். கௌரவச்ரேஷ்டனாகிய அவன் வரிசையாகத் தீர்த்தங்களைக்கண்டான். நைமிசாரண்யத்துக்குச்சமீபத்தில் அழகானஉத்பலினிநதி, † நந்தாநதி, அபரநந்தாநதி, கௌசிகிநதி, ‡ கயாக்ஷேத்திரம், மஹாநதி, கங்கையாகியதீர்த்தங்களெல்லாவற்றையும் ஆச்ரமங்களையும்தரிசித்துத் தன் ஆத்மசுத்திசெய்துகொண்டு பிராம்மணர்களுக்குக் கோதானம்செய்தான். அங்க வங்க களிங்கதேசங்களிலுள்ள தீர்த்தங்கள் புண்ணியக்ஷேத்திரங்கள் எல்லாவற்றிற்கும் போனான். அவற்றையெல்லாம்பார்த்து அங்கே சாஸ்திரப்பிரகாரம் பொருள்களைத்தானஞ்

---

* 'மணிபுரம்' என்பது உத்தரதேசபாடம்.

† அலகநந்தை யென்பது தக்ஷிணதேசபாடம்.

‡ க்ஷேத்திரமும் தீர்த்தமென்றுசொல்லப்படுதலின் கயை தீர்த்தத்துடன் சொல்லப்பட்டது.

செய்தான், ஜனமேஜயரே! அர்ஜுனனோடு பின்சென்ற பிராம் மணர்கள் கலிங்கதேசத்தின் ஆரம்பத்திலேயே அவனுக்கு விடைகொடுத்துத் திரும்பிச்சென்றனர். குந்திபுத்ரனும் சூரனுமாகிய அந்தத் தனஞ்சயன் அவர்களால் விடைகொடுக்கப்பெற்றுச் சிலதுணைவருடன் கூடக் கடற்கரைக்குச் சென்றான். ஸமர்த்தனான அவன் கலிங்க தேசத்தைத்தாண்டி அழகான தேவாலயங்களையும் மாளிகைகளையும் பார்த்துக்கொண்டு சென்றான். மஹாபலசாலியான அவன் ரிஷிகளால்சோபிக்கின்ற மஹேந்திரபர்வதத்தைக்கண்டு, அதன்பிறகு கோதாவரியில் ஸ்நானஞ்செய்து, அதைத்தாண்டி ஸமுத்திரஸங்கமத்தில் பிரசித்திபெற்ற காவேரியையடைந்து ஸ்நானஞ்செய்து, தேவரிஷி பிதிர்தர்ப்பணஞ்செய்து, ஸமுத்திரக்கரையாலேயே கிரமமாக மணலூரென்னுமிடத்துக்குச் சென்றான், ராஜாவே! சிறந்தகைகளையுடைய அர்ஜுனன் அவ்விடத்திலுள்ள புண்ணியதீர்த்தங்களையும் தேவாலயங்களையும் அடைந்து தர்மந்தெரிந்தவனான சித்ரவாஹனனென்னும் மணலூரரசனிடம்போனான். அவனுக்குச் சித்ராங்கதையென்னும் காட்சிக்கினியபெண் ஒருத்தி இருந்தாள். அவள் அந்தப்பட்டணத்தில் தன்னிச்சைப்படி ஸஞ்சரிப்பதை அவன் கண்டான். சிறந்த பெண்ணாகிய அந்தச்சித்திரவாகனன்மகளைக்கண்டு அவன் விருப்புற்றான். ராஜாவினிடம்சென்று, 'ராஜாவே! மஹாத்துமாவும் க்ஷத்திரியனுமாகிய எனக்கு இந்தப்பெண்ணைக் கொடு' என்று தன்காரியத்தைத்தெரிவித்தான். அவ்வரசன், அதைக்கேட்டு, 'நீ யாருடைய புதல்வன்? உன்பெயர் என்ன?' என்றுகேட்க, அர்ஜுனன், 'நான் பாண்டவன்; குந்திபுத்ரனான தனஞ்சயன்' என்று அவனுக்கு உத்தரஞ்சொன்னான். அதன்பிறகு, அவ்வரசன், அர்ஜுனனைப்பார்த்துப் பிரியவசனமாகப் பின்வருமாறு சொல்லலுற்றான்.

'பிரபஞ்சனனென்னும்ராஜா இந்தக்குலத்திற் பிறந்திருந்தான். அவனுக்கு ஸந்ததிஇல்லாமலிருந்ததனால் ஸந்ததியைவிரும்பிச் சிறந்த தவஞ்செய்தான். அர்ஜுனா! அவனுடைய உக்கிரமானதவத்தினால் தேவர்களுக்குத்தேவரும் பிநாகமென்னும்தனுஸைத் தரித்தவரும் உமாபதியுமாகிய சங்கரர் ஸந்தோஷமடைந்தார். தேவர்களுக்குத் தேவரும் பகவானுமாகிய அந்தஉமாபதி அவனுக்கு 'இந்தக் குலத்தில் ஒவ்வொருகுழந்தைதான் பிறக்கும்' என்றவரத்தைக்கொடுத்தார். அதனால், இந்தக்குலத்தில் எப்போதும் ஒவ்வொருஸந்ததிதான் உண்டாகிறது. என்முன்னோர்களெல்லாருக்கும் புத்திரர்களே பிறந்தனர். எனக்கு இந்தக்கன்னிகை ஒருத்திதான், இவள்தான்

என்குலத்தைமுழுதும் விருத்திசெய்கிறவளென்பது நிச்சயம். புருஷ ஶ்ரேஷ்டனே! பரதஶ்ரேஷ்டனே! * புத்ரிகாதர்மமென்கிற சாஸ்திர விதியினால் இவளைப்புத்திரனென்றே நினைத்துக்கொண்டிருக்கிறேன். பரதவம்சத்தவனே! உனக்கு இவளிடம்பிறக்கும்ஒருபுத்ரன் எனக் குக் † கன்னியாசுல்கமாகஇருக்கட்டும். அவன் இங்கிருந்து என்ஸந் ததியை விருத்திபண்ணுகிறவனாக இருக்கக்கடவன். இந்தஉடன் பாட்டின்படி இவளை நீ விவாஹஞ்செய்துகொள்' என்றான். அர் ஜுனன், 'அப்படியேயாகட்டும்' என்று பிரதிஜ்ஞைசெய்து அந்தக் கன்னிகையைவாங்கிக்கொண்டு பதின்மூன்றாவதுமாஸத்தில் விவா ஹச் சடங்கைச்செய்து அங்கே மூன்றுமாதகாலமிருந்தான்.

---

## இருநூற்றுமுப்பத்தாறாவது அத்தியாயம்.

---

### அர்ஜுனவனவாஸபர்வம். (தொடர்ச்சி.)



(முதலையாயிருந்த வர்க்கையென்னும் அப்ஸரஸை அர்ஜுனன் சாபத்தினின்றும் விடுவித்தது.)

பிறகு, பரதச்ரேஷ்டனான அர்ஜுனன் தென்சமுத்திரக்கரை யில் ரிஷிகளால்சோபிக்கின்ற புண்ணியதீர்த்தங்களுக்குச் சென்றான். அங்கே முன்னே ரிஷிகள்நிரம்பியிருந்த ஐந்துதீர்த்தங்களைமாத்திரம் அப்போது அவர்கள் விலக்கியிருந்தனர். அகஸ்தியதீர்த்தம், ஸௌ பத்ரதீர்த்தம், மிகப்பரிசுத்தமான பௌலோமதீர்த்தம், தெளிவுள்ள தும் அஶ்வமேதயாகத்தின்பலனைத்தரத்தக்கதுமாகிய காரந்தமதீர்த் தம், பாவத்தைப்போக்குவதிற்சிறந்ததாகியபாரத்வாஜதீர்த்தம் ஆகிய இவ்வைந்துதீர்த்தங்களையும் கௌரவச்ரேஷ்டனான அர்ஜுனன் கண் டான். பிறகு, அர்ஜுனன் அந்தத்தீர்த்தங்கள் ஜனங்களில்லாம லிருப்பதையும் தர்மத்திலெண்ணமுள்ளரிஷிகளால் விடப்படுவதை யும்கண்டு அங்குள்ளரிஷிகளைப்பார்த்து அஞ்சலிசெய்துகொண்டு, 'பிரம்மநிஷ்டர்கள் இந்தத்தீர்த்தங்களைவிடுதற்குக் காரணம்யாது?' என்றுவினவினான். ரிஷிகள், 'கௌரவபுத்ரனே! இந்தத்தீர்த்தங்

---

* எவளுக்குப்பிறக்கும்புத்திரனை அவளது தந்தை தனக்குப்புத்திரனாக எடுத்துக்கொள்ளுகிறதென்ற உடன்படிக்கையோடு கன்னிகாதானம்செய்கிறாரோ அவளுக்குப் புத்திரிகையென்றும், அவளுக்குப்பிறக்கும் பிள்ளைக்குப் புத்திரிகாபுத்திரனென்றும் பெயர்களாம்.

† பெண்ணுக்காக அவளுடைய பெற்றோர்களுக்குக்கொடுக்கும் பொருள்.

களில் ஐந்துமுதலைகள் இருக்கின்றன. அவை ரிஷிகளை இழுத்துக் கொண்டுபோகின்றன. அதனால், இந்தத்தீர்த்தங்கள் விடப்படுகின்றன' என்றனர். மஹாவீரனும் புருஷச்ரேஷ்டனுமாகிய அர்ஜுனன் அவர்கள் சொல்லைக்கேட்டு அவர்களால் தடுக்கப்பட்டும் அந்தத் தீர்த்தங்களைப்பார்ப்பதற்கே சென்றான். பிறகு, பகைவரைத் துன்புறச்செய்கிறசூரனான அர்ஜுனன் ஸுபத்ரரென்னும் மஹரிஷியின் பேரால் ஸௌபத்ரமென்று வழங்கப்பெற்ற உத்தமதீர்த்தத்திற்குச் சென்று உடனே அதிலிறங்கி ஸ்நானஞ்செய்தான். அப்போது, புருஷச்ரேஷ்டனும் குந்திபுத்ரனுமான அந்தத்தனஞ்சயனை ஜலத்துக்குள்ஸஞ்சரிக்கின்ற ஒருபெரியமுதலை காலில்பிடித்தது. மஹாவீரனும் பலவான்களிற் சிறந்தவனுமாகிய அந்த அர்ஜுனன் அந்தத் துள்ளுகின்ற முதலையைத் தூக்கிக்கொண்டு கிளம்பினான். ஜனமேஜயராஜாவே! அந்தமுதலை புகழ்பெற்றஅர்ஜுனனால் தூக்கப்பட்டவுடன் எல்லா ஆபரணங்களையும் அணிந்துகொண்டவளும் ஒளியினால்பிரகாசிப்பவளும் தேவதாரூபமுள்ளவளும் மனத்தைக்கவருகின்றவளுமாகிய அழகியபெண்ணாகஆயிற்று. அந்தப்பெரிய ஆச்சரியத்தைக் கண்டு குந்திபுத்ரனாகியதனஞ்சயன் அந்தப்பெண்ணை நோக்கி மிக்க அன்புடன், 'அழகியே! நீ யாவள்? ஏன் முதலையானாய்? எதற்காக முன்னே இப்படிப்பட்ட பெரும்பாவஞ்செய்தாய்?' என்றுகேட்டான். அந்த வர்க்கையென்னும்பெண் அவனைப்பார்த்து, 'மஹாவீரனே! நான் தேவர்களுடைய உத்யானவனங்களில் விளையாடும் அப்ஸரஸ். மஹாபலவானே! நான் வர்க்கையென்பவள்; குபேரனுக்கு எப்போதும் பிரியமானவள். எனக்குத்தோழிமார் இன்னும் நால்வர் இருக்கின்றனர். அவர்கள்எல்லாரும் நினைத்தபடிஸஞ்சரிப்பவர்; அழகுள்ளவர்கள். அவர்களுடன்கூடத் திக்பாலகனாகிய குபேரனுடைய கிருகத்துக்கு நான்போய்க்கொண்டிருந்தேன். அங்கே உக்கிரமானதவமுள்ளவனும் அழகுள்ளவனும் அத்தியயனஞ்செய்பவனும் ஜனமில்லாதஇடத்தில் தனியாக ஸஞ்சரிப்பவனுமான ஒருபிராம்மணனை நாங்கள்எல்லோரும் கண்டோம். ராஜாவே! அவன் தவத்தினாலேயே அந்தவனம் பிரகாசமுள்ளதாயிருந்தது. அவன் ஆதித்தியனைப்போல் அந்தப் பிரதேசமுழுமையும் பிரகாசிக்கச் செய்தான். மிக்கஅரிதான அவனுடையதவத்தையும் அப்படிப்பட்ட ஆச்சரியப்படத்தக்க உயர்ந்தரூபத்தையும்கண்டு தவத்திற்கு இடையூறுசெய்ய நினைத்து அந்தஇடத்தில் இறங்கினோம். பாரதனே! நானும் ஸௌரபேயியும் ஸமீசியும் புத்புதையும் லதையுமாகிய ஐவரும் ஒரேகாலத்

தில் பாடியும் சிரித்தும் அந்தப்பிராம்மணனுக்கு விருப்பத்தையுண்டாக்கிக்கொண்டு அவனிடம் போனோம். வீரனே! அவன் எவ்வகையிலும் எங்களிடம் மனம்வைக்கவில்லை. குற்றமற்றதவத்தில் நிலைபெற்றிருந்த அந்தமஹாமஹிமையுள்ளவன் சலிக்கவில்லை. க்ஷத்திரியச்ரேஷ்டனே! ஆனால், அந்தப்பிராமணன் கோபித்து, 'நீங்கள் முதலைகளாக நூறுவருஷகாலம் ஜலத்தில் ஸஞ்சரிப்பீர்கள்' என்று எங்களுக்குச் சாபம்கொடுத்தான்.

---

## இருநூற்றுமுப்பத்தேழாவது அத்தியாயம்.

---

### அர்ஜுனவனவாஸபர்வம். (தொடர்ச்சி.)



(முதலையாயிருந்த மற்ற நாலுஅப்ஸரஸுகளையும் அர்ஜுனன் ஜலத்திலிருந்து எடுத்ததனால் அவர்களுக்குச் சாபம்நீங்கினதும், திரும்பவும் அர்ஜுனன் மணலூர்வந்து சித்ராங்கதைக்குப்பிறந்த பப்ருவாகனனைத் தன்மாமனுக்குப் புத்திரிகாபுத்திரனாகக்கொடுத்துவிட்டுக் கோகர்ணக்ஷேத்திரம்சென்றதும்.)

பரதவம்சத்தவரிற்சிறந்தவனே! அதன்பிறகு, நாங்களெல்லாரும் துயரமுற்று, நியமந்தவறாத தபோதனனாகிய அந்தப்பிராம்மணனையே சரணமடைந்தோம். 'பிராம்மணரே! நாங்கள் அழகினாலும் யௌவனத்தினாலும் காமத்தினாலும் கர்வங்கொண்டு பிழைசெய்தோம். அதனை எங்கள்விஷயத்தில் பொறுக்கக்கடவீர். தபோதனரே! நாங்கள் கலங்காதமனமுள்ள உம்மை மயக்குவதற்கு இவ்விடம்வந்தோமென்பதே எங்களுக்குச் சயமாக நேர்ந்த*வதம். தர்மானுஷ்டானம் செய்கிறவர்கள், பெண்கள் ஹிம்ஸிக்கப்படத்தகாதவர்களாகவே படைக்கப்பட்டவரென்று நினைக்கின்றனர். நீரும் தர்மத்தில் விருத்தியாகக்கடவீர். ஆதலால், எங்களைத் துன்பப்படுத்தலாகாது. தர்மந்தெரிந்தவரே! எல்லாப்பிராணிகளிடத்தும் ஸ்நேஹமாயிருப்பவனே பிராம்மணனென்று சொல்லுகின்றனர். நல்லவரே! அறிஞர்சொல்லும் இந்தஇனியசொல் சத்தியமாயிருக்கட்டும். மேலும், யோக்கியர்கள் சரணாகதிசெய்தவர்களைப் பரிபாலனஞ்செய்கின்றனர். நாங்கள் உம்மைச்சரணமடைந்திருக்கிறோம்; ஆதலால், நீரும் பொறுக்கக்கடவீர்' என்றோம். வீரனே! தர்மாத்மாவும் நல்லகாரி

---

* விரும்பாதவனை விரும்புவது மானஹீனமாதலால், 'வதம்' என்னப்பட்டது.

யத்தைச்செய்கிறவனும் சூரியனுக்கும்சந்திரனுக்கும்ஒப்பான தேஜ ஸுள்ளவனுமாகிய அந்தப்பிராம்மணன் நாங்கள் இவ்வாறுசொன்ன பின் அனுக்கிரஹம்செய்தான். அவன்சொன்னதாவது: "நூறு நூறாயிரம் என்பவை முதலியவையெல்லாம் அளவற்றதைச் சொல் லும். ஆகிலும், நான்சொன்னநூறென்பது எண்தான். இஃது அள வற்றதைச்சொல்வதன்று. நீங்கள் ஜலத்தில் முதலைகளாயிருந்து மனி தர்களைப்பிடித்துக்கொண்டிருக்கையில் உங்களை ஒருபுருஷச்ரேஷ்டன் அந்தஜலத்திலிருந்து கரைக்குத்தூக்குவான். அப்போது நீங்களனை வரும் மறுபடியும் உங்கள்உருவத்தையடைவீர்கள். நான் ஒருபோ தும் பரிகாசத்திலும் பொய்சொன்னதில்லை. உங்களுக்குச் சாப விமோசனமானகாலமுதல் அந்தத்தீர்த்தங்களெல்லாம் * நாரீதீர்த் தங்களென்றபெயரால் எங்கும் பிரஸித்தியடையும். ஞானவான்களுக் கும் ஞானசுத்தியைக்கொடுப்பவையான புண்ணியதீர்த்தங்களாகும்' என்றான். பிறகு, அந்தப்பிராமணனைப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து அந்தஇடம்விட்டுச்சென்று மிகுந்ததுயரத்துடன், 'நமக்கு மறுபடியும் முன்னுருவத்தைச் சொற்பகாலத்தில் கொடுக்கத்தக்க மனிதனை நாமெல்லாரும் எங்கே சந்திக்கலாம்' என்று ஆலோசித் தோம். பாரதனே! நாங்கள் சிந்தித்துக்கொண்டிருக்கையிலேயே சற்றுநேரத்துக்கெல்லாம் மஹாமஹிமைபெற்ற தேவரிஷியாகிய நார தரைக் கண்டோம். அர்ஜுனா! அளவற்றதேஜஸுள்ள அந்தத்தேவ ரிஷியைக்கண்டு களித்து அவருக்கு நமஸ்காரஞ்செய்து வெட்கின முகத்தோடு நின்றோம். அவர் எங்களுடைய துக்கத்திற்குக் கார ணத்தைக் கேட்டனர். நாங்களும் அவருக்குச் சொன்னோம். அவர் அங்கேநடந்ததை நடந்தபடி கேட்டு, 'தென்சமுத்திரக்கரையில் புண்ணியமும் ரம்யமுமான ஐந்துதீர்த்தங்களிருக்கின்றன. சீக்கிரம் அவற்றிற்குச் செல்லுங்கள். புருஷச்ரேஷ்டனும் பாண்டுபுத்திரனும் பரிசுத்தமானமனமுள்ளவனுமான தனஞ்சயன் அவ்விடம்வந்து உங் களை இந்தத்துக்கத்திலிருந்து சீக்கிரத்தில் விடுவிப்பன். சந்தேக மில்லை' என்றுசொன்னார். வீரனே! எங்களெல்லாருக்கும் இவ் வாறு சொல்லிவிட்டு அவர் அங்கேயே அந்தர்த்தானமாயினார். வீர னே! அவர்சொல்லியதைக்கேட்டு நாங்களெல்லாரும் இங்கேவந்து சேர்ந்தோம். அஃது இப்போது உண்மையாயிற்று. குற்றமற்றவனே! உன்னால் நான் விடுவிக்கப்பட்டேன். என்னுடைய மற்றநான்கு தோழிகளும் இதோ ஜலத்திலிருக்கின்றனர். வீரனே! புண்ணிய

* பெண்.

கருமம்செய். இவர்களெல்லாரையும் சாபத்திலிருந்துவிடுவி' என்று சொன்னாள்.

ஜனமேஜயராஜாவே! அதன்பிறகு, பாண்டவச்ரேஷ்டனாகிய அர்ஜுனன், அந்தத்தீர்த்தத்திலிறங்கிப் பெண்முதலைகளாற்பிடிக்கப் பட்டு உடனே அவைகளோடு கரையேறி அவைகளையெல்லாம் அப்போதே சாபத்திலிருந்து விடுவித்தான். அவர்களும் உடனே ஸர்வாபரணபூஷிதைகளான அப்ஸரஸாஞர்கள். இவ்வாறு அந்தவீரன் வரிசையாக அவர்களெல்லாரையும் விடுவித்தான். ஜனமேஜயராஜாவே! அந்தஅப்ஸரஸுகள் அப்போது அந்தஜலத்திலிருந்து எழுந்து தங்கள் பூர்வதேகங்களையடைந்து முன்போலவே காணப்பட்டனர். பிரபுவான அர்ஜுனன் அந்தத்தீர்த்தங்களை அவ்வாறு (உபத்திரவமில்லாமல்) சுத்தமாகச்செய்து அந்த அப்ஸரஸுகளுக்கும் விடைகொடுத்துச் சித்ராங்கதையைப் பார்ப்பதற்காக மறுபடியும் மணலூருக்குச் சென்றான். ராஜ்யத்திற்குரியவனான பப்ருவாகனனென்னும் புத்திரனை அவளிடம் உண்டுபண்ணினான். ராஜாவே! பிறகு, அவன் அந்தப்புத்திரனைப்பார்த்துச் சித்ரவாகனனிடத்திற்போய், 'சித்ராங்கதையின் கன்னியாசுல்கமான பப்ருவாகனனை நீ வாங்கிக்கொள். ராஜாவே! நீ வாங்கிக்கொள்வதனால் நான் கடனிலிருந்து விடுபட்டவனாவேன்' என்றுசொன்னான். மறுபடியும், அர்ஜுனன் சித்ராங்கதையைப்பார்த்து, 'நீ இங்கேயேஇரு. உனக்கு ஸுகமுண்டாகட்டும். பப்ருவாகனனைப் போஷித்துவா. எனதுஇருப்பிடமாகிய இந்திரப்பிரஸ்தத்திற்குவந்தபிறகு என்னுடன் கலந்திருப்பாய். குந்தி, யுதிஷ்டிரர், பீமன், என்னுடையஇளையசகோதரர்கள் இவர்களையும் மற்ற என்னுடையபந்துக்களையும் நீ அங்கே வந்து பார்க்கலாம். சிலாக்கியமானவளே! என்பந்துக்களெல்லாருடனும்சேர்ந்து நீ சந்தோஷமடைவாய். தர்மத்திலிருப்பவரும் ஸத்தியத்தைவிடாதவரும் குந்திபுத்திரருமான யுதிஷ்டிரர் பூமியை முழுதும்ஜயித்து ராஜஸூயயாகம் செய்யப்போகிறார். இப்புவியில் ராஜாவென்று பெயர்பெற்ற அரசர்கள் மிகுந்த இரத்தினங்களையெடுத்துக்கொண்டு அதற்கு வருவார்கள். அப்போது உன்பிதாவும் வருவார். அவர் யுதிஷ்டிரரைச்சேவை செய்யவரும்போது நீயும் சேர்ந்துவருவாய். ராஜஸூயயாகத்தில் உன்னைப்பார்ப்பேன். புத்திரனைக்காப்பாற்று. துயரப்படாதே. எனது உயிரே பப்ருவாகனனென்னும் பெயரோடு வெளியில் உலாவுகின்றது. ஆதலால், வம்சத்தை விருத்திபண்ணுகிற ஆண்குழந்தையை வளர். ஆதலால், சித்ரவாகனனுடைய தாயபாகத்தைப் பெறுகிறவ

னும் தர்மப்படி பூருவம்சத்தை விருத்திபண்ணுகிறவனுமாகிய பாண்டவர்களுடைய அன்புள்ள புத்திரனை எப்போதும் காப்பாற்று. சிலாக்கியமானவளே! என்பிரிவினால் நீ வருத்தப்படாதே' என்று சொன்னான். சித்ராங்கதைக்கு இவ்வாறுசொல்லித் தூரத்திலுள்ள கடற்கரையின் இடத்தைச்சேர்ந்து அங்கே ஸ்நானஞ்செய்து மிகுதியான தனங்களைத் தானஞ்செய்து கேரளதேசம்தாண்டித் தர்சனத்தினாலேயே முக்தியைக்கொடுப்பதும் பசுபதியினுடைய முதன்மையான க்ஷேத்திரமும் பாபியானமனிதனுக்கும் பாபபயமில்லாத உயர்ந்த மேற்கதியைக் கொடுக்கத்தக்கதுமாகிய கோகர்ணக்ஷேத்திரத்தைநோக்கிச் சென்றான்.

---

## இருநூற்றுமுப்பத்தேட்டாவது அத்தியாயம்.

---

### அர்ஜுனவனவாஸபர்வம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் பிரபாஸதீர்த்தத்துக்குச் சென்றதும், கிருஷ்ணன் அர்ஜுனன் வந்ததைக்கேட்டு அங்கேவந்து அவனோடு ஸம்பாஷணைசெய்து துவாரகைக்குத் திரும்பினதும்.)

அளவற்ற பராக்கிரமமுள்ள அந்தஅர்ஜுனன் மேற்குத்திசையிலுள்ள புண்ணியதீர்த்தங்கள் புண்ணிய க்ஷேத்திரங்களெல்லாவற்றிற்கும் வரிசையாகச் சென்றான். மேற்குச்சமுத்திரத்திலுள்ள தீர்த்தங்கள் க்ஷேத்திரங்கள் எல்லாவற்றிற்கும் சென்றபிறகு, பிரபாஸதீர்த்தத்தை யடைந்தான். கதனென்னும் யாதவன் முன்னே ஸுபத்திரையின் இனிமையையும் அழகையும் பாக்கியத்தையும் குணங்களையும்பற்றிச் சொல்லியிருந்ததை இராத்திரியில் நினைத்தான்; அவளை யடைவதற்கு எந்தஉபாயம் பொருந்துமென்று சிந்தித்தான். 'இயற்கைவேஷத்தைமாற்றிச் சன்னியாசிவேஷம்பூண்டு அதனால் குகுரர்கள், அந்தகர்கள், விருஷ்ணிகள் இவர்களாலறியப்படாமல் அந்த வேஷத்துடன் பிக்ஷையெடுத்துத் திரிந்துகொண்டு ஏதாவதொரு தந்திரத்தினால் பெரிய ராஜகிருகத்தில் பிரவேசித்துக் கிருஷ்ணனுடைய தங்கையும் ஒப்பற்ற அழகுள்ளவளுமான ஸுபத்ரையைக்கண்டு கிருஷ்ணனுடைய எண்ணத்தையும் அறிந்துகொண்டு வேண்டிய சுபத்தை முடித்துக்கொள்வேன்' என்று நிச்சயம்செய்து அர்ஜுனன் அப்போதே ஸந்யாஸதீக்ஷை எடுத்துக்கொண்டான். திரிதண்டம்தரித்துத் தலையை மொட்டையடித்துக்கொண்டு கமண்டலுவை

யெடுத்து அக்ஷமாலையை விரலில் மோதிரமாயிட்டு யோகபாரத்தை யெடுத்துக்கொண்டு மழைபெய்யும்போது ஆலமரத்தின்புதரில் பிர வேசித்துத் தேவஸ்ரேஷ்டரும் துயரந்தீர்ப்பவருமாகிய கிருஷ்ணபக வானைத் தியானித்தான். ஜனமேஜயராஜாவே! ஸத்தியபாமையுடன் கூடத் திவ்வியசயனத்தில் படுத்திருந்த கிருஷ்ணபகவான் தமது திவ்யஜ்ஞானத்தினால் அர்ஜுனன் கருத்தைத் தெரிந்துகொண்டு, திடீரென்றுசிரித்துச் சந்தோஷமடைந்தார். ஸத்தியபாமை, "பக வானே! படுக்கையில் ஸுகமாகப்படுத்திருந்தநீர் பலவாறாகச் சிந்தை யுற்றீர். பலமுறை நீர் சிரித்தீர். தேவதேவா! கிருஷ்ணா! அது நான் கேட்கக்கூடியதாயிருந்தால், உமக்கு என்னிடத்தில் அனுக்ரக மிருந்தால், சொல்லக்கடவீர். அதனை நான் கேட்க விருபுகிறேன்' என்று புருஷோத்தமரான கிருஷ்ணபகவானைப் பலமுறைகேட்டாள். பகவான், 'எனது அத்தைமகனும் பீமஸேனனுக்கிளையவனுமான அர்ஜுனன் பாண்டவர்கள் செய்துகொண்ட வியவஸ்தைகாரண மாகத் தீர்த்தயாத்திரைக்குச் சென்றான். தீர்த்தயாத்திரைமுடிந்து திரும்பிவருகையில் அந்த அர்ஜுனன், அழகில் பூமியிலாடில்லாத ஸுபத்திரையை இரவில் நினைத்தான். அவளைச் சிந்தித்தவுடனே அவன் யதிவேஷமெடுத்து, 'நான் யதிவேஷத்தினால் மறைந்து கொண்டு துவாரகாபட்டணம்போய் எந்தஉபாயத்தினாலாவது பெண் களிற்சிறந்த ஸுபத்ரையைப்பார்த்துக் கிருஷ்ணனுடைய அபிப்ரா யத்தையும் தெரிந்துகொண்டு என்மனோரதத்தை நிறைவேற்றமுயல வேன்' என்றுநிச்சயித்து அந்தவேஷத்துடன் மழைபெய்யும்போது ஆலமரத்தின்கிழுவில யோகபாரமென்னப்பட்ட காவடியைச் சுமந்து கொண்டே மனத்தில் துயரத்தை அடைந்திருக்கிறான். அன்புள்ள வளே! இதற்காகத்தான் சந்தோஷத்துடன் நான் சிரித்தேனென் றறி. உன்னுடைய பிராதாவைப்பார்' என்றுசொல்லி ஸத்திய பாமையை விட்டுவிட்டு அந்தச் சயனத்திலிருந்தே புறப்பட்டார். தோல்வியடையாத அர்ஜுனன் தீர்த்தங்களெல்லாம் யாத்திரை செய்து பிரபாஸதேசம் வந்துசேர்ந்ததைச் சாரர்கள்சொல்ல, மது ஸூதனர் கேட்டார். ஸ்ரீபதியான அந்தஜனார்த்தனர் அங்கே மஹாத்மாவான அர்ஜுனனிடம் தனித்து வந்தார். அப்போது கிரு ஷ்ணபாண்டவர்களிருவரும் பிரபாஸதீர்த்தத்தில் ஒருவரையொருவர் கண்டனர். அன்புள்ளஸ்நேஹிதர்களும் நரநாராயணர்களென்னும் ரிஷிகளுமாகிய அந்தக் கிருஷ்ணார்ஜுனர்களிருவரும் அந்தவனத் தில் ஒருவரையொருவர் ஆலிங்கனஞ்செய்துகொண்டு குசலப்பிரச்

னம்செய்து உட்கார்ந்தனர். பிறகு, கிருஷ்ணபகவான் அர்ஜுன னைப்பார்த்து, 'அர்ஜுனா! எதற்காக இந்தத்தீர்த்தங்களிலெல்லாம் விடாமற்சஞ்சரிக்கிறாய்?' என்று அந்தத் தீர்த்தயாத்திரையைப்பற றிக் கேட்டனர். பிறகு, அர்ஜுனன் எல்லாவற்றையும் நடந்தவாறு சொன்னான். அதைக்கேட்டுப் பிரபுவான கிருஷ்ணமூர்த்தி 'இஃது இப்படியா' என்றுசொன்னார். அந்தக் கிருஷ்ணபாண்டவர்கள் பிர பாஸதீர்த்தத்தில் இஷ்டப்பிரகாரம் சஞ்சரித்து வஸிப்பதற்காக ரைவ தகபர்வதத்திற்குப்போயினர். முன்னமே கிருஷ்ணனுடைய கட் டளையினால் வேலைக்காரர்கள் அந்தமலையை அலங்காரஞ்செய்து போ ஜனமும் கொண்டுவந்திருந்தனர். பாண்டவனான அர்ஜுனன் கிரு ஷ்ணனுடன்கூடவே அவற்றையெல்லாம்வாங்கிப் புஜித்து நாடகம் ஆடுகிறவர்களையும் நர்த்தனஞ்செய்கிறவர்களையும் பார்த்தான். அவர் களெல்லாரையும் கௌரவித்து விடைகொடுத்து அனுப்பிவிட்டுச் சிறந்தபுத்தியுள்ள அவன் அலங்கரிக்கப்பட்ட உயர்ந்தபடுக்கைக்குப் போனான். பிறகு, மஹாவீரனான அர்ஜுனன் அந்தச் சிறந்தபடுக்கை யிற் படுத்துக்கொண்டே புண்ணியதீர்த்தங்களையும் தடாகங்களையும் பர்வதங்களையும் நதிகளையும் வனங்களையும் தான் பார்த்ததைப்பற றிக் கண்ணனிடம்சொன்னான். ஜனமேஜயரே! இவ்வாறு சொல் லிக்கொண்டிருக்கும்போதே அர்ஜுனன் ஸ்வர்க்கத்துக்கொப்பான அந்தச்சயனத்தில் தூக்கத்தினால் பரவசமானான். இனிய ஸங்கீதத்தி னாலும் வீணைவாத்தியத்தினாலும் மங்களமான ஸ்தோத்திரங்களி னாலும் எழுப்பப்பட்டவனாகக் கண்விழித்துக்கொண்டான். அவன் காலைக்கடன்களைக் கழித்தபின், கிருஷ்ணனால் மரியாதைசெய்யப் பெற்று, கிருஷ்ணனுக்கு விடைகொடுத்து அங்கேவஸிப்பதை விரும் பினான். கிருஷ்ணனும் 'அப்படியே' யென்றுசொல்லி, போஜனம் கொண்டுவரும்படி கட்டளையிட்டார். யதும்வம்சம்பூண்ட அர்ஜு னனைவிட்டு, கிருஷ்ணன் பொன்மயமானதேரிலேறி உடனே துவார கைக்குச் சென்றார். ஜனமேஜயரே! துவாரகை அலங்கரிக்கப்பட் டிருந்தது. கிருஷ்ணனைக் காணுவதற்காகத் துவாரகையிலுள்ளஜனங் கள் நூறுநூறுக்கணக்கும் ஆயிரக்கணக்குமாக விரைந்து ராஜமார்க்கத் துக்கு வந்தனர். அரைமிஷமும் கிருஷ்ணனுடைய பிரிவாற்றாத யாதவர்கள் மிகவும் ஆவலுற்றவர்களாகக் கண்கொட்டாமல் பார்த் துக்கொண்டே நின்றனர். பார்க்கும்இடங்களிலெல்லாம் ஆயிரக் கணக்காகவும் நூறுநூறுக்கணக்காகவும் ஸ்திரீகளின்கூட்டமும் போஜர் கள் விருஷ்ணிகள் அந்தகர்களின் கூட்டமும் இருந்தன. மகாபல

சாலியான கிருஷ்ணன் அவ்வாறு போஜர்கள் விருஷ்ணிகள் அந்தகர்கள் இவர்களுடைய குமாரர்களனைவராலும் கௌரவிக்கப்பட்டு வந்தனம் செய்யத்தக்கவர்களுக்கு வந்தனஞ்செய்து அவர்களெல்லாராலும் ஆசீர்வதிக்கப்பெற்றும் குமாரர்களெல்லாராலும் பூஜிக்கப்பெற்றும் ஒத்தபிராயமுள்ள எல்லாரையும் பலமுறை தழுவிக்கொண்டும் அழகான தமதுகிருகத்திற்பிரவேசித்தார். பிரபாஸதீர்த்தத்திலிருந்துவந்த கண்ணபிரானைத் தேவிமாரனைவரும் பூஜித்தனர்.

அர்ஜுனவனவாஸபர்வம் முற்றிற்று.

---

## இருநூற்றுமுப்பத்தொன்பதாவது அத்தியாயம்.

---

## ஸுபத்ராஹரணபர்வம்.



(ரைவதகபர்வதத்தில் உத்ஸவத்துக்குக் கிருஷ்ணன் முதலானவர்கள் போனபோது ஸந்யாஸியாக வந்த அர்ஜுனன் கண்டதும், அவனுக்கு ஸுபத்திரையிடம் விருப்பமிருப்பதைத்தெரிந்து ஸுபத்திரையை அவன் எடுத்துக்கொள்ளும்படி கிருஷ்ணன் அநுமதி செய்ததும், ஸுபத்திராகல்யாண விருத்தாந்தத்தை யுதிஷ்டிரர் முதலானவர்களுக்குத் தூதர்களால் தெரிவிக்க அவர்களும் அதை அங்கீகரித்ததும்.)

ராஜச்ரேஷ்டரே! பிறகு, சிலநாளானபின் அந்த ரைவதகபர்வதத்தில் விருஷ்ணிகளும் அந்தகர்களும் செய்கிற உத்ஸவமொன்று நடந்தது. அந்தக்கிரிபூஜையென்னும் உத்ஸவத்தில் வீரர்களான போஜர்களும், விருஷ்ணிகளும் அந்தகர்களும் ஆயிரக்கணக்கான பிராம்மணர்களுக்குத் தானங்கள்செய்தனர். ராஜாவே! அந்தப்பர்வதத்தின்நாலுபக்கங்களிலுமுள்ள பிரதேசங்களெல்லாம் அனேகஇரத்தினங்களிழைக்கப்பட்ட விசித்ரங்களானமாளிகைகளாலும் கற்பகவிருக்ஷங்களாலும அலங்கரிக்கப்பட்டிருந்தன. அங்கே சிலவாத்தியக்காரர்கள் வாத்தியங்களை வாசித்தனர். நர்த்தனஞ்செய்பவர் நர்த்தனம்செய்தனர். பாடகர்கள் சங்கீதம்பாடினர். மஹாபராக்கிரமசாலிகளான விருஷ்ணிவம்சகுமாரர்கள் அலங்காரங்களைச் செய்துகொண்டு பொன்னிறல் விசித்திரங்களானதேர்களிலேறி எங்கும் திரிந்தனர். நகரத்துஜனங்கள் மனைவிகளோடும் வேலைக்காரர்களோடும் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் காலால்நடந்தும் பலவிதவாகனங்களிலேறியும் சஞ்சரித்தனர். ஜனமேஜயரே!

அப்போது பிரபுவானபலராமர் மதுபானத்தினால்மயங்கி ரேவதியுடன்கூடக் * கந்தவர்களால் பின்செல்லப்பெற்றவராக அங்கே சஞ்சரித்தனர். அவ்வாறே யாதவர்களுக்குஅரசனும் பராக்கிரமசாலியுமான உக்கிரஸேனன், கந்தர்வர்கள் பின்னேபாட மங்கையர்களனேகரைத் துணையாகக்கொண்டு சஞ்சரித்தான். யுத்தத்தில்அடங்காத கர்வமுள்ளவர்களும் மதுபானத்தால் மயக்கமுள்ளவர்களுமான பிரத்யும்னனும் சாம்பனும் உயர்ந்தபுஷ்பங்களையும் வஸ்திரங்களையும்தரித்துத் தேவர்களைப்போலஉலாவினர். அக்ரூரர், ஸாரணன், கதன், பப்ரு, விதூரதன், நிசடன், சாருதேஷ்ணன், பிருது, விப்ருது, ஸத்யகன் (அவன்குமாரனான)ஸாத்யகி, பங்ககாரன், மகாரவன், ஹார்த்திக்யன், உத்தவர்ஆகிய இவர்களும் இங்கேசொல்லப்படாத இன்னுமனேகரும் பெண்களாற்சூழப்பட்டுப் பாடகர்களுடன் தனித்தனியே ரைவதகமலையில்நடக்கும் அந்த உத்ஸவத்தைச் சிறப்பித்தனர். கிருஷ்ணன் மகிழ்வுற்றுத் தமதுஸ்திரீகளுடன்கூட அவ்விடம்சென்று பிராம்மணர்களுக்குத் தானங்களைக்கொடுத்துப் பிறகு ஸங்யாஸியைக்கண்டார். மிக்கஆச்சரியமும் விநோதமுமான அந்தஉத்ஸவம் நடந்துகொண்டிருக்கையில் கிருஷ்ணனும் அர்ஜுனனும் சேர்ந்து உலாவினர். அங்கே உலாவிக்கொண்டிருந்தஅவர்கள், வஸுதேவர்பெண்ணாகிய அழகியஸுபத்திரை அலங்காரஞ்செய்துகொண்டு தோழிமார்களின் நடுவிலிருக்கக் கண்டனர். அவளைக்கண்டவுடன், அவள் மேல் அர்ஜுனனுக்கு விருப்பம் உண்டாயிற்று. அப்போது, மனத்தில் ஒன்றையே சிந்தித்துக்கொண்டிருந்த அந்தஅர்ஜுனன்கருத்தைப் புருஷச்ரேஷ்டரான கிருஷ்ணபகவான் கண்டறிந்து நகைத்து, 'பாரதனே! இதென்ன காட்டிலிருக்கும் ஜிதேந்திரியனுடையமனம் சிற்றின்பப்பற்றினால் கலங்குகிறது. அர்ஜுனா! இவள் எனக்கும் ஸாரணனுக்கும் உடன்பிறந்தவளாகிய ஸுபத்ரையென்பவள். என் பிதாவுக்கு அன்புள்ளபெண்; உனக்கு ஸுகமுண்டாகட்டும்; உனக்கு விருப்பமிருந்தால் என்பிதாவுக்கு நானே தெரிவிப்பேன்' என்றார். அவர் அப்படிச்சொல்ல, அர்ஜுனன், 'இவள் வஸுதேவருடையபெண்; வாஸுதேவருக்குச்சகோதரி; அழகுநிரம்பினவள். இவள் யாரைத்தான் மயங்கச்செய்யாள்; உமதுதங்கையான இந்த யாதவப்பெண் என்மனைவியாவாளாயின் எனக்கு எல்லாநன்மைகளையும் செய்ததாகுமென்பதுதிண்ணம். ஜனார்த்தனரே! இவளை நான் அடைவதற்கு என்ன உபாயம்? அதைச்சொல்லும். மனிதன்செய்

---

* பாடகர்கள்.

யக்கூடியவற்றையெல்லாம் நான் செய்வேன்' என்றுசொன்னான். கண்ணபிரான், 'புருஷச்ரேஷ்டனான அர்ஜுனா! ஸ்வயம்வரம்தான் க்ஷத்திரியர்களுக்குரியவிவாஹம். ஆனால், ஸ்திரீகளின்ஸ்வபாவம்நிச்சயிக்கக்கூடாததாயிருப்பதனால் அதில் நிச்சயமில்லை. பலாத்காரமாக எடுத்துக்கொண்டுபோவதும் க்ஷத்திரியவீரர்களுக்கு நியாயமான விவாஹமென்று தர்மசாஸ்திரம் தெரிந்தவர்கள் அறிகின்றனர். அர்ஜுனா! சூரனும் யதிவேஷத்தைத்தரித்தவனுமாகிய நீ காலத்தினுடைய அனுகூலத்தையெதிர்பார்த்து எனது சிறந்தஸஹோதரியைப் பலவந்தமாக எடுத்துக்கொண்டுபோ. ஸ்வயம்வரம்செய்தால் அவளுடையகருத்தை யார் கண்டார்?' என்றார். அதன்பிறகு, அர்ஜுனனும் கிருஷ்ணனும் செய்யவேண்டியஉபாயத்தை நிச்சயம் செய்துகொண்டு சீக்கிரம்செல்பவர்களாகிய சிலதூதர்களை இந்திரப்பிரஸ்தத்தில்வஸிக்கும் தர்மராஜருக்கு அதையெல்லாம்தெரிவிப்பதற்காக அப்போதே அனுப்பினர். மஹாவீரரான தர்மபுத்திரர் அதைக்கேட்டதும் குந்தியோடுகூட அனுமதிகொடுத்தார். பீமஸேனனும் அதைக்கேட்டுத் தங்கள்காரியம் நிறைவேறினதாகநினைத்தான். இவற்றையெல்லாம் தூதர்வந்துசொல்லக்கேட்டு, சிறந்தபுத்தியுள்ள கிருஷ்ணபகவான், அர்ஜுனனுக்கு அனுமதிகொடுத்துவிட்டுக் காரியம் இவ்விதம்செய்யவேண்டுமென்று மனத்திற்குள் வைத்துக்கொண்டு தூதர்களுடன்கூடவே துவாரகைக்குச் சென்றார்.

---

## இருநூற்றுநாற்பதாவது அத்தியாயம்.

---

### ஸுபத்ராஹரணபர்வம். (தொடர்ச்சி.)



(துவாரகையின் வெளித்தோட்டத்தில்வஸித்த அர்ஜுனஸந்யாஸியை யாதவர்கள்கண்டதும், அவனை ஸுபத்ரையின் கன்யாந்தப்புரத்தில் வஸிக்கும்படி பலராமர் சொன்னதும்.)

சாரர்களால் சமாசாரம்தெரிவிக்கப்பட்ட யுதிஷ்டிரர் அனுமதி கொடுத்தார். பிறகு, கிருஷ்ணனால் செய்யவேண்டிய உபாயத்தைச் சொல்லி விடைகொடுக்கப்பெற்ற அர்ஜுனன் கிருஷ்ணனுடையஅபிப்பிராயப்படி சென்றான். அவன் காரியத்தைநிறைவேற்றுவதற்காகத் துவாரகாநகரத்தின் ஸமீபத்திலுள்ள ஒருசோலையில் தங்கினான். அப்போது ரைவதகமலையில் அந்த உத்ஸவம்முடிந்து யாதவர்களனைவரும் துவாரகாநகரத்துக்குச்சென்றனர். அனேக மரங்களாற் சூழப்

பட்ட அழகிய அந்த உத்தியானவனத்தில் ஸுபத்திரையை நினைத்துக் கொண்டே ஒருகற்பாறையின்மேல் அர்ஜுனன் உட்கார்ந்திருந்தான். ஆச்சாமரங்கள்,பனைமரங்கள்,அசுவகர்ணமரங்கள்,மகிழமரங்கள்,மருதமரங்கள்,சண்பகமரங்கள்,அசோகமரங்கள், புன்னைமரங்கள், தாழைகள், பாதிரிமரங்கள், கொன்றைமரங்கள், அங்கோலமரங்கள், தினிசமரங்கள் முதலிய அநேகமரங்களினாற் சூழப்பட்ட கற்பாறையின்மேலுட்கார்ந்து, அழகாகப்பேசும் ஸுபத்ரையை அடிக்கடி நினைத்துக் கொண்டிருந்த அந்த அர்ஜுனன் தற்செயலாக வந்துசேர்ந்த யாதவ வீரர்களைக் கண்டான். பலராமர், ஹார்த்திக்யன், ஸாம்பன், ஸாரணன், பிரத்யும்னன், கதன், சாருதேஷ்ணன், விதூரதன், பானு, ஹரிதன், விப்ருது, ப்ருது இவர்களையும் மற்றுமுள்ள அநேகரையும்கண்டு மனத்திலுள்ள துயரத்தை அடக்கிக்கொண்டான். பிறகு, யாதவர்களனைவரும் சேர்ந்துவந்து அந்த ஸந்யாஸியைக்கண்டு அன்போடும் வணக்கத்தோடும் சுற்றிநின்றனர். பிறகு, அந்த அர்ஜுனன் மனமகிழ்ந்து நல்வரவை விசாரித்தான். 'இந்த அழகான கற்பாறையின்மேல் யாவரும் உட்காருங்கள்; உட்காருங்கள்' என்று அந்த யதியினாற்சொல்லப்பட்ட அந்த யாதவச்ரேஷ்டர்களெல்லோரும் 'நல்வரவு' என்று சொல்லிச் சமீபத்தில் உட்கார்ந்தனர். யதுவீரர்கள் பக்கங்களில் உட்கார்ந்தபின், அர்ஜுனன் தன்கருத்தை மறைத்துக் கொண்டு க்ஷேமம்விசாரித்தான். பலராமர் 'எல்லாம்க்ஷேமம்' என்று சொல்லி, 'பிராம்மணரே! எங்கிருந்து வந்திருக்கிறீர்! புண்ணியங்களான எந்தெந்த மலைகளையும் தீர்த்தங்களையும் க்ஷேத்திரங்களையும் வனங்களையும் பார்த்திருக்கிறீர்; பேசுகிறவர்களிற் சிறந்தவரே! நீர் என்மீது அனுக்கிரகஞ்செய்து சொல்லக்கடவீர்' என்று சொன்னார்.

ஜனமேஜயரே! அவன், தீர்த்தங்களையும், பர்வதங்களையும் நதிகளையும் வனங்களையும் தான் பார்த்ததைப்பற்றிய விருத்தாந்தங்களைச் சொன்னான். ஜனமேஜயரே! அப்போது பரிசுத்தமான தர்மகதைகளைக்கேட்டுச் சந்தோஷமடைந்த யாதவீரர்கள் கதையின் முடிவில் அந்த ஸந்யாஸியைப் பூஜித்தனர். ஜனமேஜயரே! பிறகு, யாதவர்களனைவரும், 'ஸந்யாஸிவேஷத்தோடுகூடிய இந்தச் சிறந்த பிராம்மணர் நம்முடையதேசத்துக்கு அதிதியாகவந்திருக்கிறார். எந்த இடத்திலிருந்து உபத்திரவமில்லாமல் இவர்வஸிக்கலாம்' என்று ஆலோசித்தனர். பலராமரோடு இவ்வாறு சொல்லிக்கொண்டிருந்த யாதவர்களனைவரும், தங்களையெல்லாம் ஸந்தோஷப்படுத்துகிறவராகிய கண்ணபிரான் வருகிறதைக் கண்டனர். பலராமர், 'குழந்தாய்!

கேசவா! வா' என்றழைத்து, 'ஸந்யாஸாஶ்ரமத்தை வகித்திருக்கும் வித்வானான இந்த அந்தணர் நம்முடையதேசத்துக்கு அதிதியாக வந்திருக்கிறார். மழைக்காலத்திய நான்குமாதங்களிலும் வஸிப்பதற்காக நமதுநகரத்தை நோக்கி வந்தவர். கிருஷ்ணா! இவர் எந்த இடத்தில் வஸிக்கலாமென்பதை எனக்குச் சொல்' என்று கேட்டார். அதைக் கிருஷ்ணன் கேட்டு, 'மஹாநுபாவரே! நீங்களிருக்கையில் நியாயமாக நான் பராதீனன். யாதவர்களைப் பெருமைப்படுத்துகிறவரே! உமக்குப் பிரியமான இடத்தில் இவரை வஸிக்கச்செய்யலாம்' என்று சொன்னார். மஹாபலசாலியான அந்தப் பலராமர் அந்தச்சொல்லினால் ஸந்தோஷமடைந்து கிருஷ்ணனைத் தழுவிக்கொண்டு ஆலோசனை செய்து, 'இந்தப் புத்திமானான ஸந்யாஸி வருஷாகாலத்திய நாலுமாதங்களும் ஸுபத்ரையின் கன்னியாந்தப்புரத்தில் வேண்டியபோஜனத்தைப் புஜித்துக்கொண்டு தோட்டத்தில் கொடிப்பந்தல்களில் வஸிக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது. குழந்தாய்! உன் அனுமதி பெற்றால் யாதவர்களெல்லாரும் ஒப்புக்கொள்வர்' என்று சொன்னார். ஸ்ரீ கிருஷ்ணபகவான், 'இவர் சிறந்த பலசாலியும் பார்ப்பதற்கு அழகுள்ளவரும் இன்சொற் சொல்லுகிறவரும் ஒளியுள்ளவரும் கல்வி கேள்வி மிகுதியாக உடையவருமாயிருக்கிறார். இவர் கன்னியாமாடத்தின் ஸமீபத்தில் வஸிப்பது தகாதென்பது என்கருத்து; ஆனால், நீர் பெரியவர்; விதிக்கத் தக்கவர்; நடத்துகிறவர்; சாஸ்திரந்தெரிந்தவர்; தர்மத்தைச்செவ்வையாக அறிந்தவர்; நீர் சொல்லுகிறதை நான் தடுப்பதில்லை: நீர்சொன்னதைச் செய்வேன்; நன்மைதீமைகளை அறிபவர் உம்மைவிட வேறு யாருமில்லை' என்று சொன்னார். அந்தப் பலராமர், 'இவர் தேசத்துக்கே அதிதி; மகிமைபொருந்தினவர்; தர்மிஷ்டர்கள் யாவரிலும் சிறந்தவர்; திருப்தியுள்ளவர்; வினயமுள்ளவர்; ஸத்தியமே பேசுகிறவர்; ஜிதேந்திரியர். இவர் ஸந்யாஸாஶ்ரமத்தை வகிப்பவர்; மனத்தை யாரறியலாம். தாமரைக்கண்ணா! என்சொல்லினால் கட்டளையிடப்பட்ட நீ, இவரை அழகான கன்னியாந்தப்புரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் ஸுபத்ரைக்குத் தெரிவி. பக்ஷணங்களையும் போஜனங்களையும் பானங்களையும் விருப்பமான மற்றஉணவுகளையும் கொடுத்து உபசரி' என்று சொன்னார்.

---

## இருநூற்றுநாற்பத்தோராவது அத்தியாயம்.

---

### ஸுபத்ராஹரணபர்வம். (தொடர்ச்சி.)



(தான் முன்கேட்டிருந்த லக்ஷணங்களினால் அர்ஜுனனென்று சந்தேகித்த ஸுபத்ரை பாண்டவர்களுடைய க்ஷேமத்தை விசாரித்ததும், அர்ஜுனன் உண்மைசொன்னதனால் காதல்கொண்ட அவளைப்பற்றி ருக்மிணி தேவகிக்குத்தெரிவித்ததும், ஸுபத்ரா விவாஹத்தை நடத்துவதற்காகச் சிவோத்ஸவம் என்ற காரணத்தைக்கொண்டு கிருஷ்ணன் யாதவர்களோடு கடலிலுள்ள தீவிற்குச் சென்றதும்.)

அந்தக் கிருஷ்ணன், 'அப்படியே செய்யலாம்' என்று சொல்லி அந்தஸந்யாஸியுடன் ஸங்கேதஞ்செய்துகொண்டு சந்தோஷமடைந்தார். ரைவதகபர்வதத்தில் கிருஷ்ணனும் அர்ஜுனனும் இஷ்டப்பிரகாரம் சஞ்சரித்தபிறகு, கிருஷ்ணன் அர்ஜுனனைக் கையினால் பிடித்துக்கொண்டு துவாரகா நகரத்தில் பிரவேசித்தார். ஸௌக்கியத்துக்குரிய பொருள்களெல்லாம் நிரம்பியதும் அழகியதுமான தமது அரண்மனையில் பிரவேசித்து ருக்மிணிக்கும் ஸத்தியபாமைக்கும் அர்ஜுனன் தீர்த்தயாத்திரைக்கு வந்திருப்பதைத் தெரிவித்தார். அவர்களிருவரும் கிருஷ்ணன் சொன்னதைக்கேட்டு, 'பாண்டுபுத்திரனான அர்ஜுனன் நம்மூருக்குவருகிறதை நாமெப்போதுகாண்போமென்ற பெரியஆசை எங்களிருவருக்கும் எப்போதும் மனத்திலிருந்துகொண்டேயிருக்கிறது' என்றுசொன்னார்கள். இவ்வாறு ருக்மிணியும் ஸத்தியபாமையும் மிகப்பிரியமாகச் சந்தோஷத்துடன் பேசுவதைக்கண்டு அந்தஸந்யாஸி ஸந்தோஷமடைந்தார். எல்லாரும் ஸந்தோஷப்படுவதனால் அந்த ஸந்யாஸிவேஷந்தரித்த அர்ஜுனனும் ஸந்தோஷமடைந்தான். நிஜரூபம்தெரியாமல் வந்துசேர்ந்திருக்கும் அர்ஜுனனை எல்லாரும் பூஜிக்கக்கண்டு கிருஷ்ணபகவான் தாமும் சந்தோஷத்துடன் கௌரவித்துப் பூஜைசெய்தார். மனத்துக்கினிய அதிதியும் மிகச் சிறந்தவனுமாக வந்திருக்கிற அந்தயதியைப் பார்த்து அந்தக் கிருஷ்ணபகவான் தம்முடன்பிறந்த சகோதரியான ஸுபத்ரைக்குப் பின்வருமாறு சொல்லலானார் :

'ஸுபத்ரையே! இந்தரிஷி நமதுதேசத்துக்குப் புதியவராகவந்தவர்; உறுதியான நியமமுள்ளவர். இவர் உன்கன்னியாந்தப்புரத்தில் வஸித்துக்கொண்டு எப்போதும் பூஜையைப் பெறக்கடவர். இந்த யதிக்கு நீ பூஜைசெய்யவேண்டுமென்று நமதுபெரியவராகிய பலராம

ரும் நியமித்திருக்கிறார். யதுபுத்திரியே! பக்ஷணங்களையும் போஜனங்களையும் அன்புடன்கொடுத்து எப்போதும் ஸந்யாஸியை ஆராதனம்செய். இந்தரிஷி என்னசொல்வாரோ அதையெல்லாம் சந்தேகமில்லாமல் நீ செய்யவேண்டும். ஸுபத்ரே! நீ உன்ஸகிகளுடன் கூட இவர்வசத்திலிருப்பாயாக. ஸுபத்ரையே! முற்காலங்களிலும் பிக்ஷைக்காகத் தேடிவந்த யதிகள் யாதவர்களின் கன்னியாந்தப்புரங்களிலேதான் வாஸஞ்செய்துகொண்டிருந்தனர். சிறந்தபுகழுள்ளவளே! கன்னியாந்தப்புரத்திலுள்ள கன்னிகைகள் சோம்பாமல் சரியான காலங்களில் அவர்களுக்குப் போஜனங்களையும் பக்ஷணங்களையும் கொடுப்பது வழக்கம்' என்றார். அந்தஸுபத்ரை, கிருஷ்ணனைப்பார்த்து, 'அப்படியேயாகட்டும்; நீர்சொன்னபடி செய்வேன். என் ஒழுக்கத்தினாலும் பணிவிடையினாலும் பிராமணஸ்ரேஷ்டரைச் சந்தோஷிக்கச்செய்வேன்' என்றாள். இவ்வாறு தனஞ்சயன் ஸுபத்ரையினால் பக்ஷணபோஜனங்களினால் மிகவும்ஆராதிக்கப்பட்டு ஸந்யாஸிரூபமாகவே சிலகாலம் வஸித்தான். குணங்களெல்லாம் நிரம்பினவளும் கிருஷ்ணனுக்குச் சகோதரியுமான ஸுபத்ரையை எப்போதும் பார்ப்பதனால் அவனுக்கு அவள்மீது காதலுண்டாயிற்று. அந்தச் சிறந்தபெண்ணைக்கண்டு தன்எண்ணத்தை வெளிப்படுத்தாமலே உஷ்ணமான நீண்டபெருமூச்சுவிட்டு மன்மதனுக்குட்பட்டான். துருபதன்புத்திரியான கிருஷ்ணையையுங்கூட அழகில் ஸுபத்ரைக்கு ஒப்பாக அவன் நினைக்கவில்லை. இந்திரசேனையென்னும்பெண்ணோ அல்லது வருணன்மகளோ நேரே பூமியில் வந்திருப்பதாக நினைத்தான். பூர்வகாலத்தில் சிறந்தவர்களான அந்ததேவகன்னிகைகளுங்கூட இப்போது இந்தஸுபத்ரைக்கு ஒப்பாக இரார்களென்றும் நினைத்தான். தீர்த்தயாத்திரைக்குக் குறித்த காலஞ்சென்றும், காமனுடைய அங்குசத்தினால் ஸுபத்ரையினிடம் தடுத்துநிறுத்தப்பட்ட அர்ஜுனன் தன்ஸஹோதரர்களையும் நினைக்கவில்லை. தோழிமார்களின் கூட்டத்தோடுசேர்ந்து விளையாட்டும் விநோதமுமாயிருந்த ஸுபத்ரையைக்கண்ட அவன், ஸ்வாஹாதேவியைக்கண்ட அக்கினிபோல் விருப்புற்றான். புகழ்பெற்ற அர்ஜுனனுடையஜனனத்தையும் மகிமையையும்பற்றித் கதனென்னும்யாதவன் ஸுபத்ரையினிடத்தில் முன்னமே சொல்லியிருந்தான். சிறந்தஞானமுள்ள கண்ணனும் முன்னர் இடிமுழக்கத்தைக்கேட்டு அதற்கு அர்ஜுனனை உபமானமாகக்கூறி அவன்வரலாற்றைச் சொல்லியிருந்தார். சிறந்த வில்லாளிகளான யாதவர்களுக்குள் அர்ஜுனனை உபமானமாகவைத்

துத்தான் கோபித்தும் கர்வித்தும்பேசுவதும், பராக்கிரமத்தைச்செய்வதும் நடந்தன. யாதவர்கள் ஒருவர்க்கொருவர் சண்டைபூசல்களில், 'அர்ஜுனன்கூட எனக்கு ஈடாகான். நீ எங்கே' என்று சொல்லிக்கொள்வர். யாதவர்கள் தங்களுக்குப்பிறந்த பிள்ளைகளை எடுத்துக்கொள்ளும்போது, 'குழந்தாய்! பராக்ரமத்தில் அர்ஜுனனுக்கொப்பான வில்லாளியாகக்கடவாய்' என்று ஆசீர்வாதங்களைக் கூறுவர். அதனால், அர்ஜுனனுடைய பராக்ரமத்தைப்பற்றியே பரதச்ரேஷ்டனான அவன்மேல் ஸுபத்ரை ஆசைகொண்டிருந்தாள். அந்த ஸத்தியஸந்தனுடைய அழகினாலும் திறமையினாலும் மயலுற்றாள். தூதர்களிடத்தும் அதிதிகளின்கூட்டங்களிடத்தும் கதனென்னும் யாதவனிடத்தும் கேள்விப்பட்டே, தான்காணாத அர்ஜுனன்மேல் அந்தஸுபத்ரை மனம்வைத்தவளாயிருந்தாள். எவனெவன் குருஜாங்கலதேசத்தைப்பற்றிப் பேசுவதாகக் காணப்பட்டானோ, அவன் அவனையெல்லாம் அப்போதே ஸுபத்ரை அர்ஜுனனைப்பற்றிக்கேட்பது வழக்கம். இவ்வாறு அடிக்கடி கேள்வியுற்றிருந்ததனாலும் பலமுறை விசாரித்தறிந்ததினாலும் அர்ஜுனன் ஸுபத்ரைக்குக் கண்முன்னின்றவன்போலானான். நாண் உராவதனால் வடுப்பட்டவையும் ஸர்ப்பங்களைப்போன்றவையுமான புஜங்களைப் பார்த்தபோது ஸுபத்ரைக்கு இவன் அர்ஜுனன்தானென்று நிச்சயமுண்டாயிற்று. ஸுபத்ரை அர்ஜுனனுடைய உருவத்தை எப்படிப்பட்டதாகக் கேட்டிருந்தாளோ அப்படிப்பட்ட உருவத்தோடுகூடிய யதியைக்கண்டு மிகுந்த ஆனந்தமடைந்தாள்.

ஒருகால், அர்ஜுனன் உட்கார்ந்திருக்கும்போது ஸுபத்ரை, 'முனிவரே! நீர் பலதேசங்களிலும் கிராமங்களிலும் எவ்வாறு ஸஞ்சரித்தீர். நீர் இடைவிடாமல் சஞ்சரிக்கும்போது தடாகங்கள், நதிகள், காடுகள், தேசங்கள் எவ்வெவற்றையடைந்தீர்?' என்றுகேட்டாள். ஸுபத்ரையால் அவ்வாறுகேட்கப்பட்ட அர்ஜுனன் மிகுந்த ஸந்தோஷத்துடன் அவளைப்பார்த்து அமிர்தம்போன்ற அனேகம் வேடிக்கைவார்த்தைகளைப்பேசி, பலவிதமானகதைகளைச்சொன்னான். அவன் உலகத்தில் அனேகவிதமாக ஸஞ்சரித்தவிஷயத்தைக்கேள்வியுற்ற அந்தக்கன்னிகைக்குத் தான் நினைத்தது நினைத்தவாறே நிச்சயமாயிற்று. ஒருபுண்ணியகாலத்தின்ஸந்தர்ப்பத்தில் ரஹஸ்யத்தில் தனிமையாக ஸுபத்ரை அர்ஜுனனிடம்சென்று ஸந்தோஷத்துடன், 'பகவானானஸ்வாமிகள் தேசங்களெல்லாம் சஞ்சரித்தபோது காண்டவப்பிரஸ்தத்தில் வாஸஞ்செய்கிற எங்கள் அத்தையாகிய குந்தியைக்

கண்டதுண்டா? யுதிஷ்டிரர் ஸஹோதரர்களெல்லாரோடுங்கூட ஸ்நே கமாகவும் ஸந்தோஷமாகவும் இருக்கிறாரா? பத்திசாலியான தர்ம ராஜாவினிடம் பீமன் தன்கடமையைச் செய்துவருகிறானா? தர்ம ராஜாவின் இஷ்டத்தையேகருதும் தனஞ்சயன் தன்பிழையினால் காம போகங்களை விலக்கியிருந்தவன் குறித்தகாலத்தைக் கழித்தானா? ஸுகங்களில் பழக்கப்பட்டவனும் கஷ்டங்களையறியாதவனும் நீண்ட கைகளுடையவனும் எதிரிகளையடக்குகிறவனுமாகிய பார்த்தன் வெ ளித்தேசங்களில்வசித்தவன் இப்போது எங்கே ஸஞ்சரிக்கிறான். பக வானாகியநீங்கள் அர்ஜுனனைக்கண்டாவது கேட்டாவதிருப்பீர்களா?' என்றுகேட்டனள். அவள்சொன்னதைக்கேட்டுச் சிரித்துக்கொண்டு அவளைப்பார்த்து, 'குந்திதேவி புத்திரர்களோடும் மருமகளோடும் ஸுகமாகஇருக்கிறாள்; பிள்ளைகளைப்பார்த்துச் சந்தோஷமடைந்து கொண்டு காண்டவப்பிரஸ்தத்திலிருக்கிறாள். பாண்டவனான தன ஞ்சயன், தாயாரும் ஸஹோதரர்களும் அனுமதிகொடுக்கப்பெற்றுச் சன்னியாசிரூபத்தோடு தனிமையாகத் துவாரகையில் வஸிக்கிறான். கிருஷ்ணஸஹோதரியே! நீ எப்போதும் பார்த்துக்கொண்டிருந்தும் ஏன் கண்டுபிடிக்காமலிருக்கிறாய்?' என்றுசொன்னான். கிருஷ்ண னுடையதங்கையான ஸுபத்ரை அவன் சொன்னதைக் கேட்ட போது, பெருமூச்சுவிட்டு நிலத்தைகீறிக்கொண்டுநின்றனள். அப் போது ஆயுததாரிகளெல்லாரிலும் சிறந்தவனான அர்ஜுனன் மிகுந்த ஸந்தோஷமடைந்து, 'அர்ஜுனன் நான்தான்; சிறந்தபெண்ணே! கேள்வியினால் என்னிடத்தில் உனக்கு விருப்பமுண்டானதுபோல எனக்கும் எப்போதும் உன்குணங்களைக்கேட்டதனால் உன்மேல்விரு ப்பமிருக்கிறது. ஸுபத்ரையே! நல்லநாளில் தர்மப்பிரகாரம் நான் உன்னால் சுயம்வரஞ்செய்யப்பட்டு ஸாவித்திரிக்கு ஸத்தியவான்போல உனக்குக் கணவனாகக்கடவேன்' என்றுசொன்னான். இவ்வாறு சொன்னவுடன், அர்ஜுனன் லதாகிருஹத்துக்குள் பிரவேசித்தான். அதன்பிறகு, மெல்லியவளான ஸுபத்ரை வெட்கமும் காதலுமுற்ற வளாய் உயர்ந்தசயனத்திற்படுத்துக்கொண்டு என்றும் மயங்காதவள் மயக்கமடைந்தாள். அவள் மனத்தில் வெட்கமுள்ளவளாயிருந்தத னால் சன்னியாசிக்குரியபூஜையைச் செய்யவில்லை. கன்னியாந்தப்புர த்தில் நடந்தவிஷயத்தைக் கிருஷ்ணபகவான் ஞானதிருஷ்டியினாலறி ந்து அப்போதே அர்ஜுனனுக்குப் போஜனமுதலியவற்றைக்கொடு க்கும்படி ருக்மிணிக்குக் கட்டளையிட்டார். அப்போதுமுதல் அர் ஜுனன் அந்த ஸுபத்ரையையே நினைத்துக்கொண்டு காமத்தினால்

மிகவும்பீடிக்கப்பட்டு அந்தத் தோட்டத்திலிருந்தான். ஸுபத்ரை யும் அர்ஜுனன்பிரிவை ஆற்ருதவளாயிருந்தாள். மனங்கலங்காத ஸுபத்ரை இளைத்தும், முகநிறமாறியும், மனக்கவலையும் வ்யஸன மும் மிகுந்தும் எக்காலமும பெருமூச்சுவிட்டுக்கொண்டும், படுக்கை ஆஸனம் சந்தனம் புஷ்பம் போகங்கள் இவற்றில்லொன்றிலும் ஆறு தலையடையாமலுமிருந்தாள்; இரவும்பகலும் படுப்பதில்லை. பார்ப்ப தற்குச் சித்தப்பிரமைகொண்டவள்போலிருந்தாள். இப்படிவியஸனப் பட்டுக்கொண்டிருக்கிற ஸுபத்ரையைநோக்கி ருக்மிணிதேவி, 'யது வம்சத்துப் பெண்ணே! சிறந்தவளே! தைர்யத்தைக் கைப்பற்றி விய ஸனப்படாமலிரு' என்றுசொன்னாள்.

இவ்வாறு, கிருஷ்ணன் உத்தரவினால் ஸுபத்ரைக்குச் சொல்லி ருக்மிணி தன்மாமியாரானதேவகியினிடம்சென்று, 'அர்ஜுனன் யதிவேஷத்தோடு மிகுந்தநியமமுள்ளவனாக வந்தான். அவன் கன்னி யாந்தப்புரத்துக்குட்போய் ஸுபத்ரையால் சந்தோஷத்துடன் பூஜிக்கப்பட்டான். ஸுபத்ரையும் அவனையறிந்துகொண்டு லஜ்ஜைப் பட்டு மயலகொண்டிருக்கிருள். அவள் அல்லும்பகலும் உண்பது முதலியவற்றைவிட்டுப் படுத்தபடி இருக்கிருள்' என்று ரகஸ்யமா கச் சொன்னாள். ருக்மிணி இவ்வாறுசொல்லக்கேட்ட தேவகி வ்யஸ னப்பட்டுக்கொண்டிருக்கின்ற ஸுபத்ரையினருகே சென்று, அவ ளைப்பார்த்து, நயமாக, 'யாதவியே! சிறந்தவளே! தைரியத்தைக் கைப்பற்றி வயஸனப்படாமலிரு. ஸுபத்ரையே! சிறந்த புத்தியுள்ள ராஜாவாகிய வஸுதேவருக்கும் கிருஷ்ணனுக்கும் தெரிவித்தாவது உனக்கு ஸந்தோஷத்தைச் செய்விக்கிறேன். உன்சமாசாரத்தைப் பிற கு தெரிந்துகொள்ளுகிறேன்; பெண்ணரசியே! வியஸனப்படாதே' என்றுசொன்னாள். ஸுபத்ரையின் பிரியத்தைச் செய்கிறவளாகிய அந்ததாயார் இவ்வாறு அவளுக்குச்சொல்லிவிட்டு அப்போதே ஸுபத்ரையைப்பற்றி வஸுதேவருக்குத் தெரிவித்தாள். 'ஸுப த்ரை ஏகாந்தத்தில தனித்துஉட்கார்ந்திருக்கிருள்; ஸுகமாக இல்லை; தோட்டத்திலிருக்கும் அழகுள்ளஸந்யாஸி அர்ஜுனனெ ன்று நாங்கள் கேள்விப்படுகிறோம். உயர்ந்தபுத்தியுள்ளவரே! நமது உறவினர் கேட்கக்கூடியதாயிருந்தால் அக்ரூரனுக்கும் கிருஷ்ணனுக் கும் ஆஹுகனுக்கும் சாத்யகிக்கும் இதுதெரிவிக்கத்தக்கது' என்று சொன்னாள். அதைக்கேட்டு வஸுதேவர் அக்ரூரருக்கும் ஆஹுக னுக்கும் தெரிவித்து அவர்களோடும கிருஷ்ணனோடுங்கூட ஆலோ சித்தார். அக்ரூரரும உக்ரஸேனனும் சாத்யகியும் கதனும் பிருதுசிர

வனும் ஸ்ரீ கிருஷ்ணனும் சினியுடன்சேர்ந்து, 'இதுசெய்யலாம்; இதைச் செய்யவேண்டும்; இதைத்தான் செய்யவேண்டும்' என்று அடிக்கடிசொல்லி நிச்சயம்செய்தனர். ஜனமேஜயரே! ருக்மிணியும் ஸத்யபாமையும் தேவகியும் ரோகிணியும் வஸுதேவரோடு கூடப் புரோகிதர்சொற்படிநின்று பன்னிரண்டாவதுதினத்தில் விவாகத்தை நடத்த ஆலோசனைசெய்தனர். ஜனமேஜயரே! கிருஷ்ணன் அர்ஜுனனுடையவிருப்பம் நிறைவேறுவதற்காகவும் ஸுபத்ரையின் துயரத்தைநீக்குவதற்காகவும் பலராமருக்கும் உத்தவருக்குந்தெரியாமல் கல்யாணஞ்செய்யக்கருதி மஹாதேவபூஜைக்காக முப்பத்துநான்கு தினம் இரவுபகலும் மஹோத்ஸவம் நடப்பதென்றுசொல்லி, 'இன்றைக்கு நாலாவதுநாள் எல்லாவருணத்தாரும் யாதவர்களனைவரும் பெண்டுபிள்ளைகள் சுற்றத்தார்வேலைக்காரர்களுடன் கடலில் உள்தீவுக்குச் செல்லக்கடவர்' என்று நகரத்தில் பறையறைவித்தார். இவ்வாறு கட்டளையிடப்பட்ட அவர்களெல்லாரும் அவ்வாறே எல்லாவற்றையும் செய்தனர். ஜனமேஜயரே! பிறகு, எல்லாயாதவர்களுக்கும் கடலின்உள்தீவில் முப்பத்துநான்குஇராப்பகல் பெரியஉத்ஸவம்நடந்தது. கிருஷ்ணன், பலராமர், ஆஹுகன், அக்ரூரன், பிரத்யும்னன், சினி, ஸத்யகன் இவர்களும் குகுரதேசத்தவர்களும் அந்தகதேசத்தவர்களும் யாதவர்களும் மகிழ்ச்சியுற்று ஸமுத்திரத்திற்குச் சென்றனர். யாதவர்களும் நகரத்துஜனங்களுமாகியஅனைவரும் பிராம்மணர்களுடன் யந்திரங்கள்பூட்டிக் கொடிகள்கட்டின கப்பல்களிலேறிச் சமுத்திரயாத்திரைபோயினர். அப்போது ஸுபத்ரை, அர்ஜுனனால் ஏவப்பட்டு யாதவரெல்லாராலும்பூஜிக்கப்பட்ட தாமரைக்கண்ணனிடம் விரைவாகச்சென்று, 'அந்தப்பகவானான ஸந்யாஸி பன்னிரண்டுநாள் காரியத்துடன் இங்கு இருக்கப்போகிறாராம். அவரிருந்தால் அவருடையபூஜைமுறையை யார் விடாமல்நடத்துவது' என்றுகேட்டாள். கண்ணபிரான் அவளைப்பார்த்து, 'யதுபுத்திரியே! அந்த ரிஷியைப் பூஜிப்பதற்கு உன்னைத்தவிர வேறு யார் சிறந்தவர். இங்கே யாரும் அதற்குத் தகுதியுள்ளவரில்லை. இப்போது நம்அபிப்பிராயப்படி நீயே அம்மஹரிஷியின்சொல்லில் கட்டுப்பட்டுப் புகழையும் தர்மத்தையும் கவனித்து அவருடைய காரியங்களையெல்லாம் செய்வாயாக. ஸுபத்ரையே! அந்த முக்கியமான அதிதிக்கும் மற்றுமுள்ள தபசிகள்எல்லாருக்கும் நீயே வேண்டியவற்றைச்செய்து அடங்கியிருப்பாயாக' என்றுசொன்னார். இவ்வாறு மதுஸூதனர் யதிபிக்ஷைக்காக ஸுபத்ரைக்குக் கட்டளையிட்டுச் சங்கவாத்தியத்

தோடும் பேரிகையின்முழக்கத்தோடும் சென்றார். பிறகு, குகுரர்க ளும் அந்தகர்களும் உக்கிரஸேனன்முதலிய ஏனையோரும் பறைக ளும் பேரிகைகளும்முழங்க உள்தீவைச்சேர்ந்து தானதர்மங்களைச்செ ய்தனர். மலைகளோடும் மஹாவனங்களோடுங்கூடிய அப்பெருந்தீவு ஏழுயோசனை அகலமும் பத்துயோசனைநீளமுமுள்ளதாயிருந்தது. கரைகளோடுகூடிய அநேக தடாகங்களோடும் வாவிகள்குட்டைக ளோடும் அழகியகாடுகளோடும்கூடிய தோட்டங்கள் எல்லாயாதவர் களுக்கும் கிருஷ்ணனுக்கும் மிகுந்தஸந்தோஷத்தோடு விளையாடுவ தற்கு யோக்கியமாகவும் குகுரர்களுக்கும் அந்தகர்களுக்கும் யாத வர்களுக்கும் பிரியமாகவும், இரண்டாவது ஸ்வர்க்கம்போலச் சிறப் புள்ளதாயிருந்தது. உக்கிரஸேனனைத் தலைவனாகவுடைய குகுரர்க ளும் அந்தகர்களுமாகிய அனைவரும் தானதர்மங்களைச் செய்து கொண்டு முப்பத்துநான்கு இராப்பகல்கள் ஸந்தோஷமாகப் பொழுது போக்கினர். யாதவர்களெல்லாரும் பலவிதமானமாலைகளையும் ஆபர ணங்களையும் சந்தனங்களையும் அணிந்து மனங்களித்து விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது அழகானஆட்டம் பாட்டு வாத்தி யங்களினால் ஸந்தோஷமடைந்தனர். யாதவச்ரேஷ்டரான சார்ங்க பாணி நடுவில் திரும்பிவரும்போது ஸுபத்ரையை விவாஹஞ்செய்து கொள்வதற்குச் சரியானகாலமென்று அர்ஜுனன் நினைத்தான்.

---

## இருநூற்றுநாற்பத்திரண்டாவது அத்தியாயம்.

---

## ஸுபத்ராஹரணபர்வம். (தொடர்ச்சி.)



### ஸுபத்ராகல்யாணம்.

பாண்டவனான அர்ஜுனன், குகுரர்களும் அந்தகர்களும் யாத வர்களும் தீவுக்குச் சென்றதைத் தெரிந்துகொண்டபின், ஸுபத் ரையைப்பார்த்து பின்வருமாறு சொல்லலானான்: 'ஸுபத்ரையே! எல்லாவருணங்களிலுமுள்ள ச்ரேஷ்டர்களுக்கும் நன்மைக்காகத் தர்மமுள்ளவிவாஹம் ரிஷிகளால் சாஸ்திரத்தையனுஸரித்து அனேக வகைகளாக விதிக்கப்பட்டிருக்கிறது. அதனைக்கேள். தந்தை, ஸஹோ த்ரன், தாய், மாதுலன், தந்தையின்தந்தை, தந்தையின் ஸஹோதரன் இவர்கள் கன்னிகையைத் தானஞ்செய்வதற்கு அதிகாரமுள்ளவர்கள். ஸுபத்ரையே! உன்தந்தை சிவபிரானுடையமஹோத்ஸவத்தைத் தரிசிக்கவிரும்பிப் பிள்ளைகளோடும் பேரர்களோடும் சுற்றத்தார்க

ளோடும்கூட உள்தீவுக்குப் போயிருக்கிறார். விசாலமான நேத்தி ரங்களையுடையவளே! என்உறவினரும் தூரதேசத்திலிருக்கின்றனர். ஸுபத்ரையே! ஆதலால், விவாகங்களில் ஐந்தாவதான காந்தர்வ விவாகந்தான் நமக்குச் சாஸ்திரத்துக்குஒத்தது. யாதவியே! கன்னிகை வரனிடம்சேரும்விஷயத்தில் நான்குவகையான கிரியைகள் விதிக்கப்பட்டுள்ளன. கிரியமான விவாகங்களின்வரலாறு எப்படியென்று கேள். கன்னிகையைவேண்டும்வரனையழைத்துச் சாஸ்திர விதிகளைச்செய்து அவனுக்குத் தந்தையினால் கொடுக்கப்பட்டவள் பத்னியென்று பெரியோரால் சொல்லப்படுகிறாள். அவள் கணவனுக்கு அடங்கினவளும் கற்புள்ளவளுமாயிருப்பவள். வேலைக்காரரைநடத்துவதற்கும் தன்னைக்காப்பாற்றுவதற்கும் கன்னிகாதானத்தில் வாங்கிக்கொள்ளப்பட்டபெண் பார்யையென்று அறிஞரால் சொல்லப்படுகிறாள். வரனுடையதந்தையினால் தர்மமாகவரிக்கப்பட்டுத் தன்வீட்டுக்கழைத்துக்கொண்டு வரப்பட்டு வயதுவந்தபின் சாஸ்திரோக்தமாக வரன்தந்தையினால் கன்னிகாதானஞ்செய்யப்பட்டவள் தாரமென்றும் பிதிர்கிருதையென்றும் சொல்லப்படுகிறாள். தானே விரும்பிப் புத்திரோத்பத்திநிமித்தமாகக் காந்தர்வவிவாகஞ்செய்துகொள்ளப்பட்டு அடங்கினபெண் பிரஜாவதியென்னப்படுகிறாள். தனக்குக் கணவனைத் தானே உண்டுபண்ணிக்கொள்ளுகிறவள் (ஸ்வயம் வரத்தைவரிப்பவள்) ஜாயையென்றே பெயருள்ளவள். இந்த நான்கு வகைகளிற்சேர்ந்த பத்னி, பார்யை, தாரம், ஜாயையென்னும் நால்வர்மட்டும் அக்னிஸாக்ஷியாகத் தர்மசாஸ்திரத்திற்சொல்லப்பட்ட கிரியைகளோடு விவாஹம்செய்யப்படுகிறவர்கள். காந்தர்வவிவாகத்திற்குக் கிரியைகளில்லை. அது விருப்பத்தினாலேயே நடக்கத்தக்கது. விருப்பமுள்ளபெண்ணுக்குவிருப்பமுள்ளபுருஷனுடன்ரஹஸ்யத்தில் மந்திரமில்லாமற் செய்யப்படுவதாகச் சொல்லப்படுகிறது. யாதவபுத்ரியே! நான்சொல்லுகிற கிரியையில்லாத விவாஹத்தைத்தான் நீ செய்யவேண்டும். அயனமும் ருதுவும் மாதமும் பக்ஷமும் திதியும் கரணமும் முகூர்த்தமும் லக்னபலமும் சேர்ந்திருக்கின்றன. விசாலமானநேத்திரங்களையுடையவளே! உத்தராயணம் விவாகத்திற்குச் சிறந்தது. மாதங்களில் வைகாசிமாதமும் பக்ஷங்களில் சுக்லபக்ஷமும் நக்ஷத்திரங்களில் ஹஸ்தமும் திதிகளில் திருதியையும் கரணங்களில் பவமென்னும்கரணமும் லக்னத்தில் மகரமும் சிறந்தவை. மைத்ரமென்னும்முகூர்த்தம் நம்மிருவருடைய சுபகாரியமான விவாஹத்திற்கும் உரியது. ஸுபத்ரையே! இன்றுஇரவில் இவையெல்லாம்

சேரப்போகின்றன. பிரகாசிப்பவரில் சிறந்தவரான சூரியபகவான் அஸ்தமனமாகிறார். மேற்சொன்னவிவாஹலக்னம் இந்தராத்திரியில் வரப்போகிறது. ஸந்தேகமில்லை. ஜகத்துக்குக்கர்த்தாவும் ஸர்வஜ்ஞருமான நாராயணனுங்கூட அறியமாட்டார். இந்தத்தர்மசங்கடம் வந்திருக்கும்போது எதைச்செய்தால் ஸுகமுண்டாகும்? யாதவியே! மனத்திலுண்டானகாதலினால் ஒன்றுந்தெரியாமல் பிதற்றுகின்ற எனக்கு யதுபுத்திரியானதேவி ஏன் மறுமொழிசொல்லாமலிருக்கிறாய்?' என்றான்.

ஸுபத்ரை, அர்ஜுனன்சொன்னதைக்கேட்டுக் கிருஷ்ணனையே சிந்தித்துக் கண்ணீரினால்மறைக்கப்பட்டகண்களோடு ஒன்றும்சொல்லாமலிருந்தாள். ஜயிப்பவரிற்சிறந்தவனான அர்ஜுனன் விருபத்தினாலுண்டானபிரமையினால் பிதற்றிக்கொண்டு லதாகிருஹத்துக்குட்சென்று தன்பிதாவானஇந்திரனைத் தியானஞ்செய்தான். அர்ஜுனன் தியானிப்பதையறிந்து பெரியமனமுள்ளஇந்திரன் இந்திராணியும் நாரதர்முதலானமுனிவர்களும் கந்தர்வர்களும் தெய்வலோகநாட்டியப்பெண்களும் சாரணர்களும் யக்ஷர்களும் அருந்ததியும் வஸிஷ்டரும்சூழக் குசஸ்தலியென்னும் இடத்திற்குவந்தான். கிருஷ்ணனும் சுபத்தையறிந்துகொண்டு நித்திரையினால் ஒன்றுந்தெரியாதிருந்த பலராமனை விட்டுவிட்டு அக்ரூரர், சினி, ஸத்யகன், கதன், வஸுதேவர், தேவகி, புத்திமானான ஆஹுகன் இந்தப்பந்துக்களுடன்கூட இரவில் துவாராகாபுரிக்குவந்தார். பெரும்புகழ்பெற்ற தேவதேவரான கிருஷ்ணபகவான் நாரதர்முதலான ரிஷிகளைப்பூஜித்துக் குசலபிரச்னம்செய்தார். தேவேந்திரன் விவாஹகாரியத்தைக்குறித்து வேண்ட அவர் 'அப்படியேயாகட்டும்' என்று மறுமொழி கூறினார். ஆஹுகனும், வஸுதேவரும், அக்ரூரரும், ஸாத்யகியும், இந்திரனுக்குத்தலைவணங்கி, 'தேவர்களுக்குந்தேவனே! லோகங்களுக்குநாதனே! ஜகத்தைக்காப்பவனே! உனக்கு நமஸ்காரம். விசுவத்தைஜயிப்பவனே! பிரபுவே! நீ கேட்டதனால் அனுக்கிரகிக்கப்பெற்றநாங்களும் எங்கள் சுற்றத்தாரெல்லாரும் கிருதார்த்தர்களானோம்' என்றுசொன்னார்கள். இவ்வாறுசொல்லி இந்திரனைக்கௌரவித்தும் பூஜைசெய்தும் இந்திரனுடையஅனுமதிப்படி அவர்களெல்லாரும் ரிஷிகளுடன்கூடப் பிரியத்தோடு இந்திரபுத்திரனான அர்ஜுனனுக்குச் சாஸ்திரோக்தமாக விவாகத்தைச்செய்வித்தனர். அருந்ததியும் இந்திராணியும் ருக்மிணியும் தேவகியுமாகிய இவர்கள் தெய்வப்பெண்களுடன்சேர்ந்து ஸுபத்ரைக்கும் அர்ஜுனனுக்கும் எல்லா மங்களாசாரங்களையும்செய்

தனர். காசியபமஹரிஷி ஹோமஞ்செய்தார். சபையிலிருந்த நார தர்முதலானவர்களெல்லாரும் அப்போது அர்ஜுனனுக்குச் சிறந்த ஆசீர்வாதங்களைச்செய்தனர். எல்லாத்தேவர்களாலும் ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட தேவேந்திரன் அப்போது திக்பாலர்களுடன்கூட அர்ஜுனனுக்கு ஸ்நானஞ்செய்வித்துக் கிரீடம், தோள்வளைகள், ஹாரங்கள், தோடாக்கள், குண்டலங்கள் முதலிய ஆபரணங்களினால் இரண்டாவது இந்திரனைப்போல அவனை அலங்கரித்து அவனைத்தழு விக்கொண்டு மகிழ்வுற்றான். அப்போது இந்திராணியும் யாதவஸ்திரீ களும் அருந்ததிமுதலானவர்களுடன்கூட ஸுபத்ரையின்விவாகத் துக்குரிய மங்களங்களை நடத்தினர். அங்குள்ள தேவஸ்திரீகள் அப் ஸரஸுகளுடன் தங்களுடையஆபரணங்களினால் ஸுபத்ரைக்கு அல ங்காரஞ்செய்து அவளை இந்திராணியைப்போல நினைத்தனர். பிறகு, எல்லாச்சிறப்புக்களோடுஞ்செய்யப்பட்டவிவாகம் சோபித்தது. அர் ஜுனன் மந்திரங்களினால் ஹோமஞ்செய்து ஸுபத்ரையைப் பாணி க்கிரஹணஞ்செய்துகொண்டபோது, இந்திராணியோடுகூடிய இந்திர னைப்போல விளங்கினான். அழகானரூபமுள்ள அந்தஸுபத்ரையும் அர்ஜுனனிடம் அதிகப்பற்றுள்ளவளானாள். அப்போது இந்திரன் முதலானதேவர்கள் ஸந்தோஷமடைந்து, 'அர்ஜுனனுக்கு ஸுப த்ரைதான் பிராயத்தினாலும் அழகினாலும் உத்தம லக்ஷணங்களினா லும் தகுதியுள்ளவள். அர்ஜுனனும் ஸுபத்ரைக்குத் தகுந்த வன்' என்றுசொன்னார்கள். இவ்வாறு அந்தத்தேவர்களும் கந்தர் வர்களும் அப்ஸரஸுகளனைவரும் யாதவர்களனைவரும் விவாகஞ்செய் வித்து விடைபெற்றுக்கொண்டு வந்தவாறே சென்றனர். யாதவர்கள் அர்ஜுனனிடம் விடைபெற்றுக்கொண்டவுடனே உள்தீவுக்குச்சென் றனர். அப்போது யதுநந்தனனாகியகிருஷ்ணன் அர்ஜுனனைப்பார் த்து, 'பாதச்ரேஷ்டா! அர்ஜுனா! இருபத்திரண்டுதினங்கள் இவ் விடத்தில் வாஸஞ்செய்தபிறகு, சைப்யம், ஸுக்ரீவம்* முதலிய குதி ரைகள் பூட்டின என்னுடையரதத்தில் ஸுபத்ரையுடன்கூட ஏறி, ஸுகமாகக் காண்டவப்பிரஸ்தம்செல். பாரதனே! யாதவர்களுடன் கூடப் பின்பு, நான் வருவேன். நீ, யதிவேஷத்தோடுகூடவே நிய மத்தைவிடாமல் அதுவரையில் ருக்மிணியின்கிருஹத்தில் வாஸம் செய்' என்றுசொன்னார். இவ்வாறுசொன்னபின் கிருஷ்ணபகவான் உள்தீவுக்குச் சென்றார். அர்ஜுனன் விவாஹம் செய்துகொண்ட

---

* மேகபுஷ்பம் வலாஹகம் என்கிற இரண்டும் பின்சொல்லப்படுவதனால் முதலியஎன்பது சேர்க்கப்பட்டது.

பிறகு தன்னைக்கிருதார்த்தனாகநினைத்தான். மஹாத்மாவாகிய அவனுக்கு ஸுபத்ரைமேலும் அவளுக்கு அவன்மேலும் ஒருவர்க்கொருவர் அன்புவிருத்தியாயிற்று. குணங்களிற்சிறந்த ஸீதையுடன் ராமர் சேர்ந்ததுபோல அந்தஸுபத்ரையுடன் அந்தவீரனை அர்ஜுனன் சேர்ந்தான். அர்ஜுனன் அவளை அழகிலும்கற்பிலும், "ஹ்ரீ, ஸ்ரீ, ஸந்நதி" என்னும் உத்தமமான தேவஸ்திரீகளுக்கு ஒப்பானவளாக நினைத்தான். அந்த ஸுபத்ரையுடன்சேர்ந்த அர்ஜுனன் அப்போது சரத்காலத்தில் பூர்ணப்ரகாசத்தோடு உதயமாகிய ஸூர்யனைப்போல் இயற்கைஅழகினாலும் விவாகசோபையினாலும் அதிகமாகப்பிரகாசித்தான். புகழ்பெற்ற அந்தஸுபத்ரை அந்தப் புருஷச்ரேஷ்டனிடம் அன்புவைத்துக் கன்னியாந்தப்புரத்தினின் விருந்துகொண்டு அவனையே பற்றினவளாயிருந்தாள்.

---

## இருநூற்றுநாற்பத்துமூன்றுவது அத்தியாயம்.

### ஸுபத்ராஹரணபர்வம். (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் ஸுபத்ரையுடன் கிருஷ்ணனுடையதேரிலேறிக் காண்டவப்ரஸ்தம்செல்ல ஆரம்பித்தது.)

அர்ஜுனன், விருஷ்ணிகள் அந்தகர்களுடையஅந்தநகரமாகிய துவாரகையிலிருந்து ஸுபத்ரையுடன் புறப்பட்டுப் போவதற்காக நிச்சயஞ்செய்து ஸுபத்ரையைப்பார்த்து, 'ஸுபத்ரையே! நீ ஒரு பெரியவிரதம் முடிப்பதாகச்சொல்லிக் குணங்களிற்சிறந்த பிராமணர்களுக்குப் போஜனங்களையும் பக்ஷணங்களையும் வேண்டியமற்றஎல்லாவற்றையும் அவர் அவர் தகுதியையனுஸரித்துத் தானம்செய். பிறகு, நாம் நமதுபட்டணத்துக்குச் செல்லவேண்டும். ஸுபத்ரையே! உடனே மஹாராஜாவின் அரண்மனைக்குச்செல். அழகும் வேகமுமுள்ள சைப்யம், ஸுக்ரீவம், மேகபுஷ்பம், வலாஹகம்என்னும் உயர்ந்த வெண்மையான குதிரைகள் பூட்டப்பட்டதும் செம்மையாக அலங்கரிக்கப்பட்டதுமாகிய சிறந்தஇரதத்தை நீயே சீக்கிரமாகக் கொண்டுவா. அழகியவளே! உன்தோழிமார்களுக்கு விரதத்துக்காகஎன்று சொல்லிவிட்டு எல்லாஆயுதங்களோடும்கூடச் சீக்கிரம் இரதத்தைக் கொண்டுவா. நுகத்தடியின் ஆதாரங்களையும் கொடிகளையும் அம்பறாத்தூணிகளையும் விற்களையும் உயரமுள்ள பெரியகதாயுதங்களையும் ரதத்தில் அமைத்துக்கொண்டுவா' என்றுசொன்னான்.

இன்சொற்சொல்லுகிறவளாகிய அந்த ஸுபத்ரை, அர்ஜுனனால் இவ்வாறு சொல்லப்பட்டவுடன், ஸகிகளோடுகூட ராஜகிருகத்துக்குப் போனாள். அங்கிருக்கிற காவலாளிகளைப்பார்த்து, 'நான் ஒருவிரதத்துக்காக வந்திருக்கிறேன். ஒருபெரியவிரதத்தை முடிப்பதற்கு இந்தஇரதத்தில்ஏறிக்கொண்டு போகப்போகிறேன். சைப்யம், ஸுக்ரீவம்முதலிய குதிரைகள்பூட்டியதும் ஆயுதங்களையுடையதும் அழகியதுமான கிருஷ்ணனுடைய அழகான ரதத்திலேறி நான் விரதத்துக்குப் போகவேண்டும்' என்றுசொன்னாள். ஸுபத்ரை இவ்வாறு சொல்ல, காவற்காரர்கள் அந்தச்சிறந்ததேரில் குதிரைகளைப்பூட்டிக்கொடுத்து அவளுக்கு மங்களாசீர்வாதஞ்செய்து கைகூப்பினின்றனர். உயர்ந்தலக்ஷணங்கள்அமைந்த ஸுபத்ரை அர்ஜுனன்சொற்படி ஆயுதங்களையும் மற்றெல்லாவற்றையும் ஏற்றிக்கொண்டு சீக்கிரமாக ரதத்தைச்செலுத்தி அர்ஜுனனிடம்வந்து அவனைப்பார்த்து, 'தேராளிகளிற்சிறந்தவனே! உன்னுடையகட்டளையின்படி இதோ தேரைக்கொண்டுவந்திருக்கிறேன். கௌரவர்களை மகிழ்விப்பவனே! நீ விருப்பத்தின்படி குருதேசத்துக்குச்செல்லலாம்' என்றுசொன்னாள். சுபங்களில்விருப்பமுள்ளஸுபத்திரை தன்பர்த்தாவுக்கு ரதம்வந்ததைத் தெரிவித்தபிறகு சந்தோஷத்துடன் பிராம்மணர்களுக்கு மிகுதியான பொருள்களைக் கொடுத்தாள். நெய்யுடன்கூடிய சுவைமிக்க போஜனங்களையும் பற்பலவஸ்திரங்களையும் அவர்கள் வேண்டியஅளவு சிரத்தையோடு கொடுத்தாள். பலவகைஉணவுகளினால் திருப்திசெய்விக்கப்பட்ட பிராம்மணர்கள் அந்தச்செல்வங்களையுமடைந்து உயர்ந்த ஆசீர்வாதங்களைச்செய்து தந்தம்இருப்பிடம்சென்றனர். அர்ஜுனனிடத்தில் ஸுபத்திரை, 'அர்ஜுனா! கடிவாளம்பிடிப்பதில் எனக்கீடானவர்கள் பூமியில் இல்லை' என்று முன்னமே சொல்லியிருந்தாள். அதனால் அந்தக்கிருஷ்ணஸஹோதரியான ஸுபத்ரை முதலில் தேரிலேறிக் குதிரைகளுக்கு மங்களகாரியங்களைச்செய்து குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்தாள். வீரனாகிய அர்ஜுனன் அந்தச் சன்னியாசி வேஷத்துக்குரிய அடையாளங்களைக்களைந்து கவசத்தையணிந்துகொண்டு பெரியவில்லைக் கையிற்பிடித்து வெள்ளைவஸ்திரத்துடன் அந்தச் சிறந்ததேரின்மேலேறினான். அவன் இந்திரன்கொடுத்த கிரீடத்தையும் ஆபரணங்களையுமணிந்துகொண்டு புறப்படத்தொடங்கினான். அம்பையும் கத்தியையும் வில்லையுந்தரித்த புருஷச்ரேஷ்டனான அர்ஜுனனையும் கையும் கடிவாளமுமாக அவனுடன் தேரிலிருக்கும் ஸுபத்ரையையும்கண்டு கன்னியாந்தப்புரத்தில் பெரிய இரைச்சல்

உண்டாயிற்று. அப்போது அங்குள்ளகன்னிகைகள் கிருஷ்ணஸஹோதரியான ஸுபத்ரைபோவதைப்பார்த்து, 'ஸுபத்ரையே! அழகாகப் பேசுகிறவளே! கிருஷ்ணனுடைய அன்பனும் வீரனுமான அர்ஜுனனைக் கணவனாகஅடைந்து எல்லாமனோரதங்களும் நிறைவேறினவளானாய். மஹாபாக்கியமுள்ள ஸுபத்ரையே! இனிமையாகப்பேசுகிறவளே! எல்லாம்னிதருள்ளும் சிறந்தவனும் எல்லா உலகங்களிலும் மஹாரதனும் வீரனுமான அர்ஜுனனைக் கணவனாக அடைந்தாய். கிருஷ்ணஸஹோதரியான உன்னை எல்லாப்பெண்களிலும் சிறந்தவளாகநினைக்கிறோம். ஓ! ஸுபத்ரையே! உன்கிருகத்துக்குப்போ. உனக்கு உன்பந்துக்களுடன் சேர்க்கைஉண்டாகக்கடவது' என்று சொன்னார்கள். ஸந்தோஷமுள்ள ஸகிகளினால் இவ்வாறுசொல்லிச் சிலாகிக்கப்பட்ட ஸுபத்ரை, பிறகு, அடக்கமும் வேகமுமுள்ள குதிரைகளை மறுபடியும் ஓட்டினாள். அவளுடையதோழிப்பெண், கையில் சாமரம் வைத்துக்கொண்டு அவள்பக்கத்திலிருந்தாள். பிறகு, இரைச்சலுடன் கன்னியாமாடத்தின்வாயில்வழியாக வெளியேவருகின்றதும் மேககர்ச்சனம்போன்ற சப்தமுள்ளதுமாகிய அந்தஉயர்ந்ததேரை ஜனங்கள் கண்டனர். ஸுபத்ரையினால் குதிரைக்கடிவாளங்கள் பிடிக்கப்பட்ட அப்பெருந்தேரின்சப்தம் ஆகாசத்தில் மேககோஷம்போலிருப்பதை நகரத்தில்வஸிக்கும்ஜனங்கள் கேட்டனர். ஸுபத்ரையினால் ஓட்டப்பட்ட உயர்ந்ததேரில் அவளுடன்இருந்த அர்ஜுனன் கங்கையுடன்சேர்ந்த கைலாஸம்போல விளங்கினான். ஜனமேஜயராஜாவே! மஹாரதனான அர்ஜுனன் ஸுபத்ரையுடன்சேர்ந்து இந்திராணியுடன்சேர்ந்த இந்திரன்போலவும் விளங்கினான். புகழ்பெற்ற ஸுபத்ரை அர்ஜுனனால் எடுத்துக்கொண்டு போகப்படுகிறதைப்பார்த்து அனேகஜனங்கள் ஓடிவந்து கலகலவென்று சப்தம்செய்து, 'யாதவர்களுடையகுலத்துக்கு லக்ஷ்மிபோன்றவளும் இன்சொற்சொல்லுபவளுமாகிய ஸுபத்ரை தன்மீதுவிருப்பமுற்ற அர்ஜுனனுடன் தானும்விருப்பமுள்ளவளாகப் போகின்றாள்' என்றனர். சிலர் கோபம் கொண்டு, 'பிடியுங்கள், அடியுங்கள், தாமதம்வேண்டாம்' என்று சொல்லி நாலுபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு ஆயுதங்களைப்பொழிந்தனர். இவ்வாறுபேசுகின்ற ஜனங்களுடையசப்தம் மிகப்பெரிதாயிருந்தது. அந்தவீரன் அந்தஜனங்களுடையகூச்சலினால் யானையைப்போலப்பிடிக்கப்பட்டு யாரையும்கோபமூட்டாமல் சரமாரிகளைப் பொழிந்தான்; தம்ஒலியினால் ஜ்வலிக்கின்ற கூரியஅம்புகளை அரண்மனைகளிலும் தனவான்களுடையவீடுகளிலும் பிரயோகித்தான். அர்

ஜுனன் அந்தஉயர்ந்தபட்டணத்தைக் கருடன் சமுத்திரத்தைக்கலக் குவதுபோலக் கலக்கி ரைவதகபர்வதத்தின் குகையைப்பார்த்துக் கொண்டே சென்றான்.

---

## இருநூற்றுநாற்பத்துநான்காவது அத்தியாயம்.

---

### ஸுபத்ராஹரணபர்வம். (தொடர்ச்சி.)



(துவாரகையிலிருந்து வெளிப்பட்ட அர்ஜுனன் யுத்தத்தில் *விப்ருது வை ஜயித்துக் காண்டவப்பிரஸ்தம்சென்றதும், யுத்தத்திற்கு ஆரம்பித்த மற்றயாதவர்களைப் பலராமர்தடுத்ததும், அவர் அர்ஜுனனைக்கோபித்ததும்.)

பலசாலியான விப்ருதுஸ்ரவஸ்ஸென்பவன் புருஷச்ரேஷ்டனை கிருஷ்ணனுடையகட்டளையினால் பெரியசேனையுடன் ரைவதகமலை யில் எப்போதும் இருந்தான். கிருஷ்ணன் ஊரைவிட்டுப்போயிருந்த பொழுது, பலராமருக்குஜப்பானவனும் நகரத்தைவிருத்திசெய்பவனு மான விப்ருதுஸ்ரவஸ் நகரத்துரக்ஷகனாகஇருந்தான். பாண்டவன் புற ப்படுகிறதையறிந்து விப்ருதுஸ்ரவஸும் புறப்பட்டான். ஊர்இரைச் சலைக்கேட்டுத் தன்சேனையையேவினான். அவன் வழியில்வந்து, ஆகா யத்திலிருந்து ஸூர்யன்வருவதுபோலத் துவாரகையின்கோபுரவாயி லிலிருந்துவருகின்ற அர்ஜுனனைக் கண்டான். வில்லைத்தரித்து மின் னலோடுகூடிய மேகத்தைப்போலிருந்த அர்ஜுனனைக்கண்டதனால் யாதவவீரர்களுக்கு ஆச்சரியமுண்டாயிற்று. தேர்களும் யானைகளும் குதிரைகளும் கிளம்புகின்ற அந்தச்சேனையைக்கண்டு மங்களகரமான சொல்லைச்சொல்லுகின்ற ஸுபத்ரை மிக்கபிரியத்துடன், 'புருஷச் ரேஷ்டனே! நீ யுத்தஞ்செய்யும்போது அந்தயுத்தகாலத்தில் உன் தேரைநடத்தவேண்டுமென்பது நான் வெகுநாளாகக்கொண்டிருந்த எண்ணம். பார்த்தனே! வேகமும் பராக்ரமும் ஒளியும் பலமுமுள்ள மஹாத்மாவாகிய உனக்கு ஸாரதியாகும்படி நான் கற்பிக்கப்பட்டிருக் கிறேன்' என்றுசொன்னாள். அவள்இவ்வாறுசொல்ல, அதைக்கேட்ட அர்ஜுனன் மகிழ்வுற்றுத் தன்அன்புள்ளமனைவியைநோக்கி, 'ஸுப த்ரையே! நீ குதிரைகளை அடக்காமல்விடு. அவை விப்ருதுவின்சேனை யில் பிரவேசிக்கட்டும். பலருடன்யுத்தஞ்செய்து உன்னைச்சேர்ந்தவர்க ளைக்கொல்லக்கருதிப் பாணங்களைப்பிரயோகிக்கின்ற எனதுகைவன்

* இவனுக்கு விப்ருதுஸ்ரவஸ்ஸென்றும் பெயர்வழங்கும்.

மையைப் பார்' என்றுசொன்னான். ஜனமேஜயராஜாவே! அர்ஜுனனால் இவ்வாறுசொல்லப்பட்ட அந்தஸுபத்ரை அப்போதே ஸந்தோஷத்துடன் குதிரைகளை ஓட்டினாள். உடனே அவை சேனையில் பிரவேசித்தன. பெரியவாத்தியங்கள் அடிக்கப்பெற்றதும் கொடிகள் தூக்கிக்கட்டப்பட்டதுமாகிய அந்தவிப்ருதுவின்சேனை உற்சாகத்துடன் அர்ஜுனனையே எதிர்த்தது. அந்தச்சேனைவீரர்கள் அனேகவிதமான வடிவங்களோடுகூடிய ரதங்களின்மேலும் மிகுந்தவேகமுள்ள உயர்ந்தகுதிரைகளின்மேலுமிருந்து பாணவர்ஷங்களைவர்ஷித்துக்கொண்டு அர்ஜுனனைச்சூழ்ந்தனர். உயர்ந்தஅஸ்திரங்களையறிந்தவனும் எதிரிகளின் பாணங்களைஜயிப்பவனுமாகிய அர்ஜுனன்தனது திவ்யஅஸ்த்ரத்தினால் அவர்களுடைய அஸ்த்ரங்களைத்தடுத்துப் பாணங்களினால் விசாலமான ஆகாசத்தை மறைத்தான். சிறந்தகைகளையுடையஅர்ஜுனன் கூரம்புகளினால் அவர்களுடையபாணங்களையும் கிரீடங்களையும் தோள்வளைகளையும் கோதண்டங்களையும் தேரின் நுகத்தடிகளையும் ஏர்க்கால்களையும் தேர்ச்சக்கரங்களையும் அதன்பலவகை யந்திரங்களையும் துணித்தான். எதிரிகளைக்கொல்லவிருப்பமில்லாமையினால் கூரம்புகளைச்சேதித்து அர்ஜுனன் அம்மஹாரதர்களை வில்லுகளும் கவசங்களும் ரதங்களும்இல்லாதவர்களாகச்செய்து ஸந்தோஷத்துடன் தன் காதலியை நோக்கிப் பாரென்றுகாண்பித்தான். ஸுபத்ரை, அந்தப்பெரியஆச்சரியத்தைக்கண்டு அர்ஜுனனைப்பார்த்து, 'அர்ஜுனா! நான் கிருதார்த்தையானேன். உனக்கு ஸுகமுண்டாகட்டும்! நீ ஸுகமாகச்செல்' என்றுசொன்னாள். அந்தவிப்ருது அர்ஜுனனோடு யுத்தத்துக்குவந்துசேர்ந்த தன்சேனையைக்கண்டு, துரிதமாக ஓடிவந்து 'நில்லுங்கள்; யுத்தம்செய்யவேண்டாம்' என்றுசொன்னான். அப்போது கடலில் காற்றினால்கிளப்பப்பட்ட பெரியஅலைகள் கரையைக்கடந்துபோகாமலிருப்பதுபோல யாதவர்கள் ஸேனாதிபதியின்சொல்லை அதிக்ரமிக்காமலிருந்தனர். உடனே புருஷச்ரேஷ்டனான விப்ருது உயர்ந்த ரதத்திலிருந்து சீக்கிரமாக இறங்கிப் புருஷச்ரேஷ்டனான அர்ஜுனனிடம்சென்று ஸந்தோஷத்துடன் தழுவிக்கொண்டான். அவன் அர்ஜுனனைச்சந்தித்து, 'நீ, நெடுநாளாக இவ்விடம் வஸிப்பதைச் சங்கசக்ரகதாதாரியான கிருஷ்ணனால் தெரிந்துகொண்டிருக்கிறேன். ஸுபத்ரையின்மேலுள்ளஆசையினால் நீசெய்தவற்றில் ஒன்றும் எனக்குத் தெரியாததில்லை. ஜனார்த்தனர், யதிவேஷத்தோடுவந்தஉன்னை அன்புகூர்ந்துதான் வீட்டில்வஸிக்கச்செய்தனர். பலராமரையும் தேவேந்திரனுக்குத்தம்பியானகிருஷ்ணனையும்

உனக்குப் பந்துக்களாக அடைந்திருக்கிறாய். பிரியமான தனஞ்சய! உன்னையும் ஸுபத்ரையையும்பற்றின ஆலோசனையில் மதுஸூதனர் என்னையே எப்போதும் மந்திரியாக விரும்பினவர். வீரனே! அப்போதே எல்லாஆயுதங்களும்நிரம்பிய இந்தச் சிறந்ததேரையும் உடன் வரும் இந்தச்சேனையையும் உனக்காகக் கட்டளையிட்டு யாதவர்களுக்கு ஸந்தோஷத்தைச்செய்வதற்காகக் கிருஷ்ணன் உள்தீவுக்குச் சென்றார். வெகுகாலமாக மறைந்திருந்து இப்போது காதலியுடன் வந்து சேர்ந்த உன்னை உன்சகோதரர்களனைவரும் தேவர்கள் இந்திரனைப்பார்ப்பதுபோலப் பார்க்கட்டும். யாதவச்ரேஷ்டரான சார்ங்கபாணி வந்த பிறகு, ஸுபத்ரையின்பின்னாலே ரத்னங்களும் தனங்களும் வரும். தனஞ்சயனே! க்ஷேமமாக வழியிற்செல்க; ஸுகம்பெறுவாயாக. வ்யஸனம்நீங்கின உனக்கு வ்யஸனம்நீங்கின உன்சுற்றத்தாருடன் சேர்க்கை யுண்டாகக்கடவது' என்று சொன்னான். பிறகு, அர்ஜுனன் கிருஷ்ணனுடைய அபிப்பிராயத்தையறிந்து சந்தோஷமடைந்து விப்ருதுவை நமஸ்காரஞ்செய்து விடைபெற்றுக்கொண்டு முன்னமே அர்ஜுனனுக்காகவென்று கிருஷ்ணனால் கட்டளையிடப்பட்டதும் எல்லா இரத்தினங்களும் உபயோகத்திற்குவேண்டிய எல்லாப்பொருள்களும் நிரம்பினதுமாகிய கிருஷ்ணனுடைய ரதத்தில் ஏறிப்போயினான். பொன்மயமும் கிரமமாக அலங்கரிக்கப்பட்டதும் சைப்யசுக்ரீவங்கள் முதலிய குதிரைகள் பூட்டப்பட்டதும் கிங்கிணிகள் வரிசையாகக் கட்டப்பட்டதும் எல்லா ஆயுதங்களும் நிரம்பினதும் மேககர்ஜனைபோன்ற சப்தமுடையதும் ஜ்வலிக்கின்ற அக்கினியைப்போற் பிரகாசிப்பதும் எதிரிகளின் ஸந்தோஷத்தைக் கெடுப்பதுமாகிய தேரிலேறி யுத்தத்துக்கு ஆயத்தமாகக் கவசந்தரித்துக் கத்திபிடித்து மணிக்கட்டில் நாண்தடையும் விரலுறையும் போட்டுக்கொண்டு பின்னேவருஞ் சேனையுடன்கூட, ஆகாயத்திற்போவதுபோன்ற வேகமுள்ள ரதத்தில் ஸுபத்ரையை ஏற்றிக்கொண்டு தன்நகரத்தை நோக்கிச் சென்றான். அந்தஸுபத்ரை கொண்டுபோகப்படுகிறதைக்கண்டு சேனையிலுள்ள ஜனங்களனைவரும் கூவிக்கொண்டு துவாரகாநகரத்தைநோக்கி ஓடினர். அவர்களெல்லாரும் ஸுதர்மையென்கிற ஸபைக்குப்போய் ஸபையின் காவலாளியினிடம் அந்த அர்ஜுனன்செய்கையை முழுதும்சொன்னார்கள். அவர்கள் சொல்லைக்கேட்டவுடன் ஸபைக்காவலாளியானவன் யுத்தஸன்னாகம்செய்வதற்காகப் பொன்னாலலங்கரிக்கப்பட்ட பெரியகோஷமுள்ள பேரிகையை யடித்தான். அந்தச் சப்தத்தினால் போஜர்களும் விருஷ்ணிகளும் அந்தகர்களும் கலக்கப்பட்டு ஒன்று

சேர்ந்து உள்த்வீபத்திலிருந்து உடனே கிளம்பினர். அவர்கள் அன்னபானங்களை விட்டு நாலுபக்கங்களிலிருந்தும் வந்துசேர்ந்தனர். அங்கே மஹாரதர்களும் புருஷச்ரேஷ்டர்களுமாகிய விருஷ்ணிகளும் அந்தகர்களும், பொன்மயமானவையும், விலைபெற்ற மெத்தைகளுள்ளவையும், ரத்னங்களினாலும் பவழங்களினாலும் விசித்ரமானவையும், ஜ்வலிக்கின்ற அக்கினியைப்போன்ற ஒளியுள்ளவையுமான ஸிம்மாஸனங்களில் அக்கினிஹோத்ரகுண்டங்களில் அக்கினிகளிருப்பதுபோல நூற்றுக்கணக்காக வீற்றிருந்தனர். தேவர்களைப்போல உட்கார்ந்திருக்கும் அவர்களுடைய ஸபையில் வேலைக்காரர்களுடன்கூடிய ஸபைத்தலைவன் அர்ஜுனன்செய்ததைச் சொன்னான்.

அதைக்கேட்டு மதுபானத்தாற் கண்சிவந்த அந்தயாதவவீரர்கள் பார்த்தன்செய்ததைச் சகிக்காதவர்களாகிக் கோபத்துடன் கிளம்பினர். 'சீக்கிரம் ரதத்தைப்பூட்டுங்கள். ஈட்டிகளையும் வில்லுகளையும் விலையுயர்ந்த பெரிய கவசங்களையும் கொண்டுவாருங்கள்' என்று சொன்னார்கள். சிலர் தேரைப்பூட்டுங்களென்று சாரதிகளைக்கூவினர். இன்னுஞ்சிலர் பொன்னாபரணங்களையணிந்த குதிரைகளைத் தாங்களே தேரில்பூட்டினர். அந்தவீரர்களுடைய யுத்தத்தில் ரதங்களும் கவசங்களும் த்வஜங்களும் கொண்டுவரப்படும்போது பெருங்கலக்கமுண்டாயிற்று. பிறகு, வனமாலைதரித்தவரும் மதுபானஞ்செய்தவரும் கைலாசமலையின் சிகரம்போன்றவரும் நீலவஸ்திரம்தரித்தவருமான பலராமர் மதத்தினாற் கர்வமுற்றுப் பின்வருமாறு சொல்லலானார். 'யாதவர்களே! கிருஷ்ணன் பேசாமலிருக்கும்போது இதென்ன காரியம்செய்கிறீர்கள்? இவனுடைய அபிப்பிராயத்தை அறியாமல் கோபித்து வீண்கர்ச்சனைசெய்கிறீர்கள். சிறந்தபுத்தியுள்ள இந்தக் கிருஷ்ணன் தன் அபிப்பிராயத்தை முதலிற் சொல்லட்டும். இவனுக்கு எதுசெய்ய இஷ்டமோ அதனைப் பின்வாங்காமற்செய்யுங்கள்' என்று சொன்னார். சிலாக்கியமாக எடுத்துக்கொள்ளத்தக்கதாகிய அந்தப் பலராமரது சொல்லைக்கேட்டு யாதவர்களனைவரும், 'நல்லது நல்லது' என்று சொல்லிவிட்டு மௌனமாயிருந்தனர். சிறந்தபுத்தியுள்ள பலராமர் சொன்னதைக் கேட்டவுடன், அவர்களெல்லாரும் மறுபடியும் ஒருமிக்கச் சபைநடுவில் உட்கார்ந்தனர். அதன்பிறகு, சத்துருக்களை வருத்துபவராகிய பலராமர் கிருஷ்ணனைப்பார்த்துப் பின்வருமாறு சொல்லினர். 'மூவுலகங்களுக்குமீசனே! நடந்ததையும் நடக்கிறதையும் நடப்பதையும் படைப்பவனே! கிருஷ்ணா! ஜனார்த்தனா! ஏன் தலைகுனிந்து பார்த்துக்கொண்டிருக்கிறாய். அச்சுதனே! நாங்களெல்

வாரும் உன்னைப்பற்றி அர்ஜுனனுக்கு மரியாதைசெய்தோம். கெட்ட எண்ணமுள்ளவனும் குலத்தைக்கெடுத்தவனுமாகிய அவன் அந்த மரியாதைக்குரியவனல்லன். தன்னைக் குலீனனாகநினைக்கிறபுருஷன் எவன் ஓரிடத்தில் அன்னத்தைப்புஜித்து அங்கேயே பாத்திரத்தை உடைப்பான்? முன்னமேசெய்த ஸம்பந்தத்தைக்கொண்டாடிப் பின்னும் ஸம்பந்தத்தை விரும்பியிருப்பவன் எவன்தான் தன் சிரேயஸை வேண்டினவனாயிருந்தால், இந்தஸாஹஸத்தைச் செய்வான்? அவன் நம்மையெல்லாம் அவமதித்து உன்னையும் கவனியாமல் தனக்கு மிருத்யுவாகிய ஸுபத்ரையைப் பலாத்காரமாக இப்போது கொண்டுபோயிருக்கிறான். கோவிந்தா! கிருஷ்ணா! என்தலைமேல் காலைவைத்தான். காலால்மிதிப்பதைப் பாம்புபொறுக்காததுபோல நான் இதைப் பொறுக்கவில்லை. இப்போது நானொருவனே இந்தப்பூமியில் கௌரவர்களேயில்லாமலிருக்கச் செய்வேன் இந்த அர்ஜுனன் செய்த அக்கிரமத்தை நான்பொறுக்க முடியாது' என்றார். மேகமுழக்கம்போலவும் துந்துபிவாத்தியம்போலவும் அவ்வாறு கர்ஜனைசெய்த பலராமரை அப்போது போஜர்களும் விருஷ்ணிகளும் அந்தகர்களுமாகிய அனைவரும் ஒத்துப்பேசினர்.

ஸுபத்ராஹரணபர்வம் முற்றிற்று.

---

இருநூற்றுநாற்பத்தைந்தாவது அத்தியாயம்.

---

## ஹரணாஹரணபர்வம்.



(கிருஷ்ணன் பலராமருடைய கோபத்தைத் தணித்தபிறகு அர்ஜுனனையழைத்துவர யாதவர்கள்சென்றதும், அர்ஜுனன் வெகுதூரம்போனதை விப்ருதுசொல்லக்கேட்ட அவர்கள் திரும்பிவந்ததும், ஸுபத்ரையும் அர்ஜுனனும் காண்டவப்பிரஸ்தம் சேர்ந்ததும்.)

யாதவர்களெல்லாரும் தங்கள்பராக்கிரமத்துக்குத்தக்கபடி பலவாறு பேசினர். பிறகு, வாஸுதேவர் தர்மார்த்தங்கள்பொருந்திய ஒரு வசனத்தைச் சொல்லலுற்றார். 'யாதவர்களெல்லாரும்சேர்ந்து முன்னே நான்சொன்னதைக் கேளாமற்போனீர்கள். சென்றது சென்றதுதான்; ஒருபோதும் திரும்பிவாராது. யுக்தியுக்தமாக நான் சொல்வதற்கு நீங்களெல்லாரும்சேர்ந்து செவிகொடுங்கள். அர்ஜுனன் இந்தக்குலத்திற்கு அவமானத்தைச் செய்தவனல்லன். அவனால் இப்

போது விசேஷகௌரவந்தான் செய்யப்பட்டதென்பது நிச்சயம். அர்ஜுனன் யாதவராகிய உங்களைப் பொருளாசையுள்ளவர்களாக நினைப்பது ஒருபோதுமில்லை. * ஸ்வயம்வரத்தைச் சிலாக்கியமாக அர்ஜுனன் நினைத்திருக்கலாம். பசுவைப்போலக் கன்னிகையைத் தானஞ்செய்வதை எவனொப்புவான்? பூமியில் எந்தஆண்பிள்ளை கன்னியாவிக்ரயஞ்செய்வன்? மற்றவிவாகங்களில் இந்தத்தோஷங்களை அர்ஜுனன் நினைத்திருக்கலாமென்பது என்கருத்து. பராக்கிரமத்தினால் பலாத்காரமாகக்கொண்டுபோவது க்ஷத்திரியர்களுக்குச் சிறப்பு. ஆதலால், பாண்டவனான அர்ஜுனன் நமதுகன்னிகையைப் பலாத்காரமாகக் கொண்டுபோனது தர்மந்தான். இது ஸரியானஸம்பந்தமுந்தான். ஸுபத்ரையும் புகழ்பெற்றவள். அர்ஜுனனும் அப்படியே புகழ்பெற்றவன். ஆதலால், பலாத்காரமாகக் கொண்டுபோனான். மிகுந்தகீர்த்திமான்களாகிய பரத சந்தனுக்களின் வம்சத்திற்பிறந்தவனும் குந்திபோஜன்புத்திரியான குந்தியின் புதல்வனுமாகிய அர்ஜுனனை அடைவதற்கு எந்தப்பெண் விரும்பாள்? ஐயா! பகனைனனும் தேவதையின நேத்திரத்தைப் பிடுங்கினவரும் முக்கண்ணருமான சிவபிரானைத்தவிரத் தன்பலத்தினால் யுத்தத்தில அர்ஜுனனை வெல்லக்கூடியவன், இந்திரனும் ருத்திரர்களுமாகிய தேவதைகளோடுகூடிய உலகங்கள் எல்லாவற்றிலும் யாருமிருப்பதாக நான் நினைக்கவில்லை. அவன் செல்லுகிறரதமும் அப்படிப்பட்டகுதிரைகளும் அந்தஆயுதங்களும் அம்புகள் வற்றாத தூணிகளும் என்னுடையவையென்பதும் அதிக விசேஷம். அர்ஜுனனும் சீக்கிரமாக அஸ்திரங்களைவிடத்தக்க யுத்த வீரன். யார் அவனோடு ஒப்பாகிறவர்கள்? நீங்கள் சந்தோஷமடைந்து சிறந்த நல்வார்த்தையுடன் அவனிடம்சென்று அவனைத் திருப்பி அழையுங்கள். இதுவே எனது முடிவான ஆலோசனை. அர்ஜுனன் பலத்தினால் உங்களைஜயித்துத் தனதூருக்குச்செல்வானாயின், உங்கள் கீர்த்தி உடனேயழிந்துபோம். ஸமாதானஞ் செய்துகொள்வதில் தோலவியில்லை. என் அத்தைமகன், எதிரிகளுடன் சேர்க்கத்தகான்' என்றனர். ஜனமேஜயராஜாவே! அந்த யாதவர்கள் கிருஷ்ணன்சொல்லைக்கேட்டுப் பேரிகைகளையடித்துக்கொண்டு அவ்வாறே செய்ய ஆரம்பித்தனர். அப்போது அந்தப்பெரும்பேரிகைகளின் முழக்கத்தைக் கேட்டுக் குந்திபுத்திரனான அர்ஜுனன பரபரப்புடன் ஸுபத்ரையைப் பார்த்து, 'யாதவர்களெல்லாரும் உனக்காக யுத்தஞ்செய்ய எண்

* தானமே கன்னிகையையடைதவிதல; கன்னிகை ஸ்வயம்வரம் செய்வதுபோலவே புருஷனுஞ் செய்யலாமென்பது கருத்து.

ணங்கொண்டு மதுபானத்தால் கடைக்கண்சிவந்தவர்களாகச் சினேகிதர்களோடும் உறவினரோடும் வருகின்றனர். மதுபானத்தினால் மதித்து அறிவுகெட்டுக் குடிமயக்கமுள்ளவர்களும் மூடர்களும் அசுத்தர்களும் அதமர்களுமான இந்தக் குடியர்களை உயர்ந்தபாணங்களினால் குடித்ததைக் கக்கும்படி செய்வேன் அல்லது, குடிவெறிகொண்ட அவர்களை யமனிடம் அனுப்புவேன்' என்று தன அன்புள்ள ஸுபத்ரைக்குச் சொல்லி மிகுந்த பலமுள்ள அவன் திரும்பினான். அவன் திரும்புவதைப்பார்த்ததும், ஸுபத்ரை அஞ்சினாள். அப்போது, 'இவ்வாறு சொல்லாதே அர்ஜுனா' என்று அவன் கால்களில் விழுந்து, 'பிரபுவே! 'யாதவர்களை யழிப்பதற்காகக் கலியே ஸுபத்ரையாகப் பிறந்திருக்கிறது' என்று சொல்லி இந்தப்பட்டணத்துஜனங்கள் என்னைத்தூஷித்து எனக்குத் துயரத்தை விருத்திசெய்வர். அதனால், வதம்செய்வதை நான் அங்கீகரிக்கவில்லை. உன் அனுக்ரஹத்தினால் நான் உலகநிந்தனையிலிருந்து விடுபட்டவளாகக்கடவேன்' என்று சொன்னாள். தவறாத பராக்ரமமுள்ள அர்ஜுனன் அன்புள்ள ஸுபத்ரை இவ்வாறு சொல்லக்கேட்டு (தன் பட்டணம்) போவதற்கேயெண்ணங்கொண்டான். அப்போது, அவன் தன்காதலியைப் புன்சிரிப்புடன் அழைத்துத் தழுவியெடுத்து மறுபடியும், 'செல, செல்' என்று சொன்னான். அதன்பிறகு, ஸுபத்ரை கையினால் கடிவாளங்களை உடனே பிடித்து வேகமுள்ள குதிரைகளை முன்னிலும் வேகப்படுத்தி ஓட்டினாள். யாதவர்கள் அர்ஜுனனைத் திருப்பியழைப்பதற்காக வேகமுள்ள உயர்ந்த குதிரைகளிலேறி ராஜமார்க்கத்தை அனுஸரித்தனர். மாளிகைகளின் தூண்களிலும் மேடைகளிலுமேறி அர்ஜுனனுடைய பாணங்களையும் பராக்ரமங்களையும்கண்டு கிருஷ்ணன் சொன்னவார்த்தை நிசமென்று நினைத்து யாதவர்கள் மிக்க ஆச்சரியமடைந்தனர். அர்ஜுனன் செய்ததைக்கேட்டுத் தொடர்ந்துசெலல ஆரம்பித்த யாதவ வீரர்கள், ரைவதகமலையைத்தாண்டி அவன் வெகுதூரம்சென்றதாக விப்ருது சொல்லக்கேட்டுத் திரும்பினர். சிறந்த புஜபராக்கிரமத்தையுடைய அர்ஜுனன் பட்டணத்தைச்சார்ந்த தோட்டங்களையும் விசாலமான கிரிவ்ரஜம்என்கிற ஊரையும் மலைச்சரிவுகளையும் உஜ்ஜயினியையும் காடுகளையும் தோட்டங்களையும் புண்ணியமான ஆனர்த்த தேசத்திலுள்ள வாவிகளையும் தாமரைக்குளங்களையும் தாண்டி, தேனுமதி தீர்த்தத்தையடைந்து, அசுவரோதமென்ற தடாகத்தையும் அங்கிருந்து ப்ரேக்ஷாவர்த்தமென்னும் மலையையும் சிகரங்களோடு கூடிய அம்புதமென்னும்உயர்ந்தமலையையும் அடைந்து, பிறகு காவதி

நதியைத்தாண்டி, ஸால்வதேசத்தையும் நிஷததேசத்தையும்கடந்து, தேவபிருது என்னும் நகரத்தைக் கவனத்தோடு சுற்றிப்பார்த்து, அதைத்தாண்டித் தேவாரண்யமென்னும் இடத்தைப் பார்த்தான். தேவாரண்யத்திலுள்ள மஹரிஷிகள் அங்குவந்த அர்ஜுனனுக்கு மரியாதைசெய்தனர். அந்த அர்ஜுனன் ஸுபத்ரையைச் சாரதியாக வைத்துக்கொண்டே காடுகளையும் நதிகளையும் மலைகளையும் மலையருவிகளையும் தாண்டிக் கௌரவதேசத்தையடைந்து கவலையற்றவனானன். சிறந்தகைகளையுடைய அர்ஜுனன் வெகுதூரம்வரையில் தோட்டங்களுள்ளதும் நாற்புறத்தும் ஜலம்சூழ்ந்ததும் தன் ஸஹோதரர்கள் வஸிக்கும் இடமும் ஸிம்மத்தின் குகைபோன்றதுமான *விருஜினமென்னும் நகரத்தை ஸுபத்ரையுடன் ஸந்தோஷமாகத் தூரத்திலேயே கண்டான்.



## இருநூற்றுநாற்பத்தாறுவது அத்தியாயம்.

### ஹரணாஹரணபர்வம். (தொடர்ச்சி)

(இடைச்சிவேஷத்தோடு திரௌபதியினிடம்போகும்படி அர்ஜுனன் சொல்ல, அப்படியேவந்து நமஸ்காரஞ்செய்த ஸுபத்ரைக்குக் குந்தியும் த்ரௌபதியும் ஆசீர்வாதம்செய்ததும், அர்ஜுனன் தன்ஸஹோதரர்களுக்குத் தீர்த்தயாத்திரைச் சமாசாரத்தைச் சொன்னதும்.)

அந்தப்பட்டணத்துக்கு ஒருகுரோசதூரத்தில் பார்த்தனுடைய அழகானகொட்டில் இருந்தது. அர்ஜுனன் யாதவகன்னிகையான ஸுபத்ரையுடன்கூட அங்கேயே இறங்கினன். அப்போது அவன் ஸுபத்ரையைக் கௌரவித்து, 'நீ இடைச்சிவேஷத்துடன் விருஜினபுரிக்குச் செல். கிருஷ்ணை நினைத்ததைச் சொல்லுகிறவள். என் சொல்லை நீ அங்கீகரிக்கவேண்டும். என்னுடன்கூடவந்தால் உன்னைப்பார்த்ததும், கடுஞ்சொற்சொல்வள். மாறுவேஷத்தோடுபோகிற உன்னைப்பார்த்தால் இன்சொற்சொல்வள். அவள் முதலில் எதைச் சொல்லுகிறளோ அதற்கு மாறுதலிராது. ஆதலால், கௌரவத்தையும் கர்வத்தையும் விலக்கி நீமட்டும் செல்'என்று சொன்னன். அவனுடைய அந்தச்சொல்லைக்கேட்டு ஸுபத்ரை, 'பார்த்தா! நீசொல்லுகிறதை அப்படியேசெய்கிறேன்' என்று மறுமொழி சொன்னள். அந்த அர்ஜுனன் ஸுபத்ரை சொன்னதைக்கேட்டு மிகுந்த ஸந்தோ

* இந்திரப்பிரஸ்தத்திற்கு மற்ருெருபெயர்.

ஷத்துடன் சீக்கிரமாக இடையர்களைவரவழைத்துக் கட்டளையிட்டான். 'சிறுவயதுள்ள இடைப்பெண்கள் எவ்வளவுபெயர் இருக்கின்றனரோ அவ்வளவுபெயரும்,புகழ்பெற்ற திரௌபதியைப்பார்ப்பதற்கு இந்திரப்பிரஸ்தத்திற்குப்போகிற ஸுபத்ரையுடன்கூடச் சேர்ந்துவரவேண்டும்' என்றான். அதைக்கேட்டவுடன், கோபாலர்கள் கோபஸ்திரீகளை அழைத்துவந்தனர். பிறகு, அந்தக்கோபஸ்திரீகளினால் நாற்புறமும்சூழப்பட்டு இடைச்சிவேஷந்தரித்துச் சிவப்புப்பட்டுடுத்துக்கொண்டிருந்த ஸுபத்ரையை அர்ஜுனன் துரிதமாகப் பயணப்படுத்தினன். அந்தப்புகழ்பெற்ற ஸுபத்ரை அந்த வேஷத்தினாலும் மிகஅழகாகவே இடைச்சிகளின் நடுவிலிருந்துகொண்டு விருஜினமென்னும் பட்டணத்திற்குச் சென்றாள். துரிதமாகக் காண்டவப்பிரஸ்தம்சென்று இருகத்திற் பிரவேசித்தாள்.

வீரபத்னியும் அகன்றும் சிவந்துமிருக்கிற கண்களையுடையவளும் பெண்ணரசியுமான ஸுபத்ரை அந்தச்சிறந்த கிருகத்தைச்சேர்ந்து தன்அத்தையான குந்தியை நமஸ்கரித்தாள். குந்தியானவள் எல்லாஅங்கங்களுமழகான அந்த ஒப்பற்ற ஸுபத்ரையை மிகுந்த அன்புடன் உச்சியில்மோந்து அவளுக்கு ஆசீர்வாதஞ்செய்தாள். பூர்ணசந்திரனுக்கொப்பான முகமுள்ள ஸுபத்ரை அதன்பிறகு விரைந்து திரௌபதியினிடம்போய் நமஸ்காரஞ்செய்து, 'நான் உனக்கடிமை' என்றுசொன்னாள். அப்போது, கிருஷ்ணை கிருஷ்ணஸஹோதரியான ஸுபத்ரையை எதிர்கொண்டழைத்து அன்புடன் ஆலிங்கனஞ்செய்துகொண்டு, 'உனதுகணவன் எதிரியில்லாமலிருக்கக்கடவன்; ஸுபத்ரையே! நீ வீரனானபுத்திரனைப் பெறுவாயாக; அவ்வாறே, கணவன் அன்புக்குரியவளாயிருக்கக்கடவாய்' என்று சொன்னாள். பராக்ரமத்தினால் உண்டாகத்தக்க அனேகம் உயர்ந்த ஆசீர்வாதங்களைச் சொன்னாள். ஸுபத்ரையும் அப்படியே ஸந்தோஷமடைந்து, 'அப்படியே ஆகவேண்டும்' என்று திரௌபதியிடம் சொன்னாள். அதன்பிறகு, குந்தி அழகானமுகமுள்ள ஸுபத்ரையைக் கட்டிக்கொண்டு மடியில் உட்காரவைத்து வஸுதேவரைப்புகழ்ந்து மகிழ்ந்தாள். பிறகு, உடனே விருஜினபுரத்திற்குவந்துசேர்ந்த யாதவவீரர்களுடைய ஸந்தோஷத்தோடுசேர்ந்த கலகலசப்தம்உண்டாயிற்று. தேவகுமாரர்களைப்போலப் பிரகாசிக்கின்ற அந்தயாதவர்கள் பொன்மயமான கொடிகளைக்கட்டிக்கொண்டு தேவர்கள்இந்திரனைத்தொடர்வதுபோல் அர்ஜுனனைப் பின்தொடர்ந்தனர். எருதுகளும் ஒட்டகங்களும் உயர்ந்த குதிரைகளும் கட்டின யாதவர்களுடைய சிறந்ததேர்களை ஜனங்கள் கூட்டம்கூட்ட

மாகச் சேர்ந்து பார்த்தனர். அந்தச் சிறந்தநகரத்திலுள்ள சிறுபிராய முள்ள ஆண்பிள்ளைகள் தேசம்விட்டுப்போய்வந்த அர்ஜுனனைக்கண்டு தங்கள் பந்துவைக்கண்டதுபோல மகிழ்ந்து சொன்னவசனங்களை அவன் எல்லாவிடங்களிலும் கேட்டான். அந்தப்புருஷச்ரேஷ்டனை அர்ஜுனன் அனேகயாதவர்களால் சூழப்பட்டுப் பட்டணத்து ஜனங் களால் எதிர்கொண்டழைக்கப்பெற்று அதிக சந்தோஷத்துடன் பட்ட ணத்துக்குள்பிரவேசித்து அந்தப்புரத்தின் வாயிலையடைந்து தேரி லிருந்துஇறங்கித் தௌம்யரிடமும் தாயாரிடமும்சென்று நமஸ்காரஞ் செய்தான். தர்மபுத்திரர் பீமன் இவர்களுடையபாதங்களில் வணங்கி யும் நகுலஸஹதேவர்களால் நமஸ்கரிக்கப்பட்டுச் சந்தோஷத்துடன் அவர்களைத்தழுவிக்கொண்டும் ஸுகமாகவிருந்தான். ஸஹோதரர்களு டன்சேர்ந்து,பிராம்மணர்கள்முதலிய பட்டணத்துஜனங்கள் தேசத்து ஜனங்களெல்லாரையும் அவர்அவர்களுக்குத் தக்கபடி மரியாதைசெய் தான். ஜனமேஜயரே! அங்கங்கே தான் போனதீர்த்தங்களையும் க்ஷேத்திரங்களையும் அங்கங்கே தான் செம்மையாகச்செய்த காரி யங்களெல்லாவற்றையும் தர்மராஜாவுக்கும் மற்றச்சகோதரர்களுக்கும் சொன்னான். மிகப்பிராஜ்ஞரும் தர்மந்தவறாதவருமாகிய யுதிஷ்டிரர் கேட்டு ஸஹோதரர்கள் முன்னிலையிலேயே அர்ஜுனனைக் கொண் டாடினார். பூஜிப்பதற்குரிய புகழ்பெற்ற தர்மராஜாவினால் தக்கபடி கௌரவிக்கப்பட்ட அர்ஜுனன் அவரநுமதிபெற்றுச் சந்தோஷமாக உட்கார்ந்தான். தாழ்வில்லாதவளும் சிறந்தகௌரவத்திற்குரியவளும் ஸந்தோஷத்தை விருத்திசெய்கிறவளும் கிருஷ்ணனுக்குத் தங்கையு மான ஸுபத்ரையைப் பாண்டவர்கள் லக்ஷ்மியே நேரேவந்திருப் பதாக நினைத்தனர். ஸுபத்ரை அவளுடைய ஒழுக்கத்தினால் பெரி யோர்களுக்கும் மாமன்மார்களுக்கும் மைத்துனர்களுக்கும் மிகவும் பிரியமாக இருந்தாள். பிறகு, மஹாரதர்களான அந்தப்பாண்டவர்கள் மனத்தில் ஸந்தோஷமடைந்தனர். குந்தியும் கிருஷ்ணையும் எப்போ தும் அவளுடன் மிகுந்த அன்புடனிருந்தனர்.

---

## இருநூற்றுநாற்பத்தேழாவது அத்தியாயம்.

---

### ஹரணாஹரணபர்வம். (தொடர்ச்சி.)



(கிருஷ்ணன் யாதவர்களோடு காண்டவப்பிரஸ்தத்திற்குவந்து சுபத்ரைக்குச் சிறப்புக்களைச்சேர்ப்பித்ததும், எல்லாயாதவரும் திரும்பிப்போனபிறகு அவர் காண்டவப்பிரஸ்தத்தில் அர்ஜுனனோடு வசித்ததும், அபிமன்யு ஜனனமும், திரௌபதிக்கு ஐவரிடத்திலும் ஐந்துபுத்திரர்கள் பிறந்ததும்.)

பிறகு, யாதவர்களுடைய சிறந்த உத்ஸவமுடிந்தபின், சங்கசக்ரகதாதரரான கிருஷ்ணன், அர்ஜுனனால் ஸுபத்ரை கொண்டுபோகப்பட்டதைக் கேட்டனர். அந்தப்பட்டணத்துஜனங்களுக்கு முன்னமே ஸந்தேஹமுண்டாயிருந்தது. தாம்தெரிந்துகொண்டே கிருஷ்ணன் அர்ஜுனனை வீட்டில்வஸிக்கச்செய்தாரென்பது ஜனங்களுக்கு இப்போதுதான் தெரிந்தது. 'விப்ருதுவுக்கும் முன்னமே தெரியும். கருடத்வஜரான கிருஷ்ணன் தகுந்த ராஜச்ரேஷ்டனான அர்ஜுனனுக்கு நீண்டகண்களையுடையவளான தம் ஸகோதரியைக்கொடுக்க இஷ்டப்பட்டுத் தைரியப்படுத்தி அனுமதிகொடுத்ததினாலேதான் அர்ஜுனன் ஸுபத்ரையுடன் சேர்ந்தான். பாண்டவச்ரேஷ்டனான அர்ஜுனனைக் கௌரவித்தும் அனுப்பினார். ஸுபத்ரையுடன்கூட அர்ஜுனன் விருஜினபுரத்திற் சேர்ப்பிக்கவும்பட்டான்' என்று பட்டணத்திலுள்ள ஜனங்களெல்லாரும் பேசிக்கொண்டனர். பாண்டவச்ரேஷ்டனான அர்ஜுனன் தனது சிறந்தபட்டணமாகிய இந்திரப்பிரஸ்தத்திற்குப் போய்ச்சேர்ந்ததைக்கேட்டுக் கிருஷ்ணன் காண்டவப்பிரஸ்தமென்னும்பெயரையுடைய அவ்விடத்துக்குப்போவதற்காக ஆலோசனைசெய்தார். கிருஷ்ணன் ராஜாவாகியஉக்ரஸேனனையும் ஆஹுகனையும் விப்ருதுவையும் அக்ரூரனையும் பலராமரையும் விதூரதனையும் முதலில் மரியாதைசெய்துஅழைத்து முதலிலேயே விஷயந்தெரிவிக்கப்பட்டிருந்த அவர்களுடன்கூட ஆலோசனைசெய்தார். பெரியமனமுள்ள அவர் யாதவர்களுக்கரசரான பலராமரோடு ஆலோசனைசெய்து அவரால் அன்புடன் அனுமதிகொடுக்கப்பெற்றார்; ஸந்தோஷமடைந்தபலராமர்ஆலோசித்து அனுமதிகொடுத்தபிறகு சேனையைஸன்னாகம்செய்தார். அதன்பிறகு, வாகனங்களிலேறின புகழ்பெற்ற யாதவவீரர்களின் ஸந்தோஷகர்ஜனமானது உடனே உண்டாயிற்று. யாதவர்கள் மிகுந்தஸந்தோஷத்துடன் நல்லகுதிரைகளையும்தேர்க்குதிரைகளையும்

தேர்களேயும் யானேகளேயும் விசித்தப்படுத்திக்கொண்டிருந்தனர். கிரு ஷ்ணன் வீரர்களும் மஹாரதர்களுமான விருஷ்ணி அந்தகர்களுடைய மந்திரிகளோடும் சகோதரர்களோடும்கூட அனேகம்படைவீரர்களாற் சூழப்பெற்றுப் பெரியசேனேயினுல் நாற்புறமும் காப்பாற்றப்பட்டிரு ந்தார். அந்தச்சேனேயில் பெருமைபொருந்தினவரும் மிகுந்த புகழ் பெற்றவரும் யாதவவீரர்களின்ஸேனுபதியும் சத்துருக்களேயடக்கு கிறவருமாகிய * தானபதியென்னப்பட்ட அக்ரூரரும் மிகுந்த பராக் கிரமசாலியான அனுதிருஷ்டியும் பெரும்புகழ்பெற்றவரும் பிருஹஸ் பதிக்கு நேரேசிஷ்யரும் சிறந்தபுத்தியுள்ளவரும் உயர்ந்தமனமுள்ள வருமாகிய உத்தவரும் ஸத்தியகனும் ஸாத்யகியும் யாதவனுகியகிருத வர்மாவும் பிரத்யும்னனும் சாம்பனும் நிசங்குவும் சங்குவும் பராக் ரமசாலியானசாருதேஷ்ணனும் ஜில்லியும் விப்ருதுவும் சிறந்தகை களேயுடையசாரணனும் வித்வான்களிற்சிறந்த கதனுமாகியஇவர்களும் இன்னும்அனேகவிருஷ்ணிகளும்போஜர்களும் அந்தகர்களும், பெண் ணுக்குக்கொடுக்கும் சிறப்பை மிகுதியாக எடுத்துக்கொண்டு காண் டவப்பிரஸ்தத்துக்கு வந்தனர். பிருதுமுதலிய யாதவசிரேஷ்டர்கள் பெரிய காணிக்கைகளே யெடுத்துக்கொண்டு சிம்மநாதத்தோடு ஸுப த்ரையைப் பார்க்கப் புறப்பட்டனர். அந்தயாதவர்கள் கிருஷ்ணனுடன் கூடச் சிறிதுகாலத்தில் பாண்டவர்களுடையபட்டணத்தைச்சேர்ந்து மிகுந்தஸந்தோஷமடைந்தனர். பிறகு, ராஜாவானயுதிஷ்டிரர் கிருஷ் ணன்வந்ததைக்கேட்டு அப்போது கிருஷ்ணனேயழைத்துவருவதற் காக நகுலஸஹதேவர்களே அனுப்பினுர். மிகுந்த ஐசுவரியத்தோடு வந்த யாதவக்கூட்டம் நகுலஸஹதேவர்களால்அழைக்கப்பட்டுத் துவ ஜங்கள்கட்டியகொடிமரங்களால் சோபிக்கின்ற காண்டவப்பிரஸ்த நகரத்திற் பிரவேசித்தது. குப்பைகளேப்போக்கியும் ஜலம்தெளித்தும் புஷ்பங்கள்இறைத்தும் விளங்குகின்ற மார்க்கத்தோடு கூடியதும், இனியமணமுள்ள குளிர்ச்சியான சந்தனக்குழம்புகளினுல் நிரப்பப் பட்டதும், ஒவ்வோரிடத்திலும்நல்லவாஸனேயுள்ள அகில்எரிக்கப்பட் டதும், ஸந்தோஷமும் செல்வமுமுள்ளஜனங்கள்நிரம்பினதும், வணி கர்களால் அலங்கரிக்கப்பட்டதுமாகிய நகரத்தைச் சிறந்த கைகளே யுடைய கிருஷ்ணன் பலராமரோடு அடைந்தார். விருஷ்ணிகளோடும் அந்தகர்களோடும் போஜர்களோடுங்கூடிய புருஷோத்தமராகிய கிரு ஷ்ணபகவான் ஆயிரக்கணக்கான பட்டணத்து ஜனங்களாலும் பூஜிக் கப்பெற்று இந்திரனுடைய கிருஹத்துக்கொப்பான தர்மராஜாவின்

* தானுதிகாரி.

அரண்மனையில் பிரவேசித்தார். யுதிஷ்டிரர், பலராமருடன் முறைப் படி சேர்ந்தார்; கிருஷ்ணனை உச்சியில்மோந்து கைகளினால் அணைத் தார். கிருஷ்ணன் அன்புடன் தலைவணங்கி அவருக்குமரியாதைசெய்து புருஷச்ரேஷ்டனாகியபீமஸேனனையும் கிரமப்படிகௌரவித்தார். குந்தி புத்ரரானயுதிஷ்டிரர் அந்தயாவதச்ரேஷ்டர்களையும் அந்தகச்ரேஷ்டர் களையும் வந்தவுடன் சாஸ்திரப்படியும் கிரமப்படியும் மரியாதைகளைச் செய்து அழைத்தார்; சிலரைப்பெரியோரைப்போலவும் சிலரைச் சிநேகிதரரைப்போலவும் கௌரவித்தார்; சிலரிடம் பிரேமையுடன் பேசினார்; சிலரால் தாம் நமஸ்கரிக்கப்பட்டார். பிறகு, குந்தியும் பாண் டவர்களும் திரௌபதியுடன் சந்தோஷத்தோடு கிருஷ்ணனையடை ந்து ஐம்புலன்களும் ஆனந்தமுற்றவரானார்கள். ராமகிருஷ்ணர்கள் சந்தோஷமாயிருப்பதைக்கண்டு குந்தி யுதிஷ்டிரருக்குப் பந்துக்களிரு ப்பதாக நினைத்தாள். அதன்பிறகு, அறியமுடியாதமகிமையுள்ள பல ராமரும் அக்ரூரரும் சந்தோஷமாக எல்லாச் சிறப்பும்பொருந்திய ஸுபத்திரைக்குச் சிறப்புக்காகத் திரவியக்குவியலைக் கொடுத்தனர். ஆயிரக்கணக்காகப் பவழங்களையும் முக்தாஹாரங்களையும் மற்றஆப ரணங்களையும் ரத்னகம்பளங்களையும் மெத்தைகளையும் புலித்தோல் மேலே போர்க்கப்பட்டஆஸனங்களையும் கொடுத்தனர். யுதிஷ்டரு டைய வீடு அனேகவிதங்களான இரத்தினக் குவியல்காளாலும் படுக் கைகளாலும் ஆஸனங்களாலும் வாகனங்களாலும் ஜ்வலிப்பதுபோல விளங்கிற்று. பிறகு, நல்லக்ஷணங்கள்பொருந்திய ஸுபத்ரைக்கு, சிறு வர்களுக்குச் சந்தோஷமுண்டாக்கத்தக்க சிறந்த கல்யாணஉத்ஸவம் ஏழிராத்திரிகள் நடந்தது. கிருஷ்ணன் பாண்டவர்களுக்குச் சம்பந்தி மரியாதைக்காக உயர்ந்தசம்பத்தைக்கொடுத்தார். சிறந்த புகழ்பெற்ற கிருஷ்ணன் ஸுபத்ரையின் உறவினர் கொடுக்கவேண்டியபெண்சிறப் பைப் பாண்டவர்களுக்குக் கொடுத்தார். பொன்மயமான சதங்கைக ளின் வரிசைகள்தொங்குகின்ற நாலுகுதிரைகள் பூட்டப்பட்டவையும் சமர்த்தர்களான சாரதிகளுள்ளவையுமான ரதங்களில்ஆயிரத்தையும்; மதுராதேசத்திலுண்டானவையும் பார்க்கஅழகானவையுமான கற வைப்பசுக்கள்பதினாயிரத்தையும், சந்திரகிரணங்களைப்போல வெண் ணிறமுள்ளவையும் பொன்அலங்காரமுள்ளவையுமான பெண்குதிரை களில்ஆயிரத்தையும், ஸ்ரீமானானகிருஷ்ணபகவான் அன்புடன்கொடுத் தார். அவ்வாறே காற்றைப்போன்றவேகமுள்ளவையும் பழக்கப்பட் டவையுமான கோவேறுகழுதைகளின் மைந்நிறமான மயிருள்ளவை ஐந்நூற்றையும், வெளுத்தவைஐந்நூற்றையும் கொடுத்தார். ஸ்நானத்

திலும் பானத்திலும் உத்ஸவகாலத்திலும்உபயோகப்படுகிறவர்களும், சிறந்த அலங்காரங்களுள்ளவர்களும், சிறந்த ஒளியுள்ளவர்களும், பொன்மயமான அநேகஆபரணங்களைக் கண்டங்களில்தரித்தவர்களும், தேகத்தில்ரோமங்களில்லாதவர்களும், நன்றாகஅலங்காரஞ்செய்யப்பட்டவர்களும், வேலைகளில்சுறுசுறுப்புள்ளவர்களுமாகிய பொன்னிறமான இளமைப்பருவத்துப்பெண்கள் ஆயிரவரையும் தாமரைக் கண்ணர் அளித்தார். பாஹ்லீகதேசத்திலுண்டான ஏறத்தக்க குதிரைகளில் லக்ஷத்தையும் சிறந்தகன்னியாதனமாக ஜனார்த்தனர் கொடுத்தார். நாணயஉருவமுள்ளவையும் கட்டிகளுமாயுள்ள நெருப்புக் கொப்பான உயர்ந்தப்பொன்னைப் பத்துமனிதர்சுமக்கக்கூடிய அளவு யாதவராகிய ஜனார்த்தனர் கொடுத்தார். பராக்கிரமத்திற்பிரியமுள்ளவரும் கலப்பையைஆயுதமாகஉடையவருமாகிய பலராமர் மதக்கண் திறந்து * மும்மதமும்பெருகுகின்றவையும் மலைச்சிகரங்களுக்கொப்பானவையும் யுத்தங்களிற்பின்வாங்காதவையும் அலங்கரிக்கப்பட்டவையும் உரத்தமணிகள்சப்திக்கின்றவையும் பொன்மாலைகள் அணிந்தவையும் பாகர்களோடுகூடியவையுமான அழகான யானைகளாயிரத்தை விவாககாலத்தில் சம்பந்தத்தைக்கௌரவித்து அன்புடன் அர்ஜுனனுக்குக் கொடுத்தார். வெண்மையானவஸ்திரங்களையும் சால்வைகளையுமே நுரைகளாகவும் மஹாகஜங்களையே பெரியமுதலைகளாகவும் ஜயக்கொடிகளையே பாசிக்கொடிகளாகவும்கொண்ட மிகுதியான தனரதனக்குவியலென்னும் அந்தப்பெரும்புனல், முன்னமேநிரம்பியிருந்தபாண்டவர்களென்னும்கடலில் க்ரமமாய்வேகமாகப் பிரவேசித்து அவர்களின்பகைவர்களுக்கு வ்யஸனத்தையுண்டுபண்ணிற்று. தர்மராஜரானயுதிஷ்டிரர் அவற்றையெல்லாம் பெற்றுக்கொண்டுமஹாரதர்களான அந்தவிருஷ்ணிகளையும்அந்தகர்களையும் சிறப்பித்தார். மஹாத்மாக்களும்உத்தமர்களுமாகிய அந்தக்கௌரவர்களும் விருஷ்ணிகளும் அந்தகர்களும் சேர்ந்து புண்ணியஞ்செய்தவர்கள் தேவலோகத்திலிருப்பதுபோல மகிழ்ந்திருந்தனர். கௌரவர்களும் விருஷ்ணிகளும் அவரவர்போக்கைக்குத்தக்கபடியும் ஸந்தோஷத்துக்குத்தக்கபடியும் பெரியசப்தங்களோடும் அங்கே கரகோஷத்தோடும் ஆங்காங்கு விளையாடினர். அந்தச்சிறந்தவீரர்கள் இவ்வாறு அநேகதினங்கள்விளையாடிக் கௌரவர்களினால் மரியாதைசெய்யப்பெற்றுத் திரும்பவும் துவாரகையைநோக்கிச் சென்றனர். மஹாரதர்களான விருஷ்ணிகளும் அந்தகர்களும் கௌரவசிரேஷ்டர்களால் கொடுக்

* கண் தாடை துதிக்கை ஆகிய மூன்றுஇடங்களிலுமுள்ள மதம்.

கப்பட்ட உயர்ந்தரத்னங்களைப் பெற்றுக்கொண்டு பலராமரைமுன்னிட்டுச் சென்றனர். மஹாப்பலசாலியான பலராமர் சகோதரியான ஸுபத்ரைக்கு மரியாதைசெய்து அவளைத்தழுவிக்கொண்டு திரௌபதியினிடம், 'இவள் உன்அடைக்கலம்' என்றுசொல்லி ஒப்பித்துவிட்டு அத்தையான குந்தியின்பாதங்களில்வந்தனஞ்செய்து புறப்பட்டார். அந்தக்காலத்தில் குந்தியும் பிரீதியுடன் அவரைக் கௌரவித்தாள். அந்த யாதவவீரராகியபலராமர் பாண்டவர்களாலும் நகரத்தாராலும் நிரம்பப்பூஜிக்கப்பட்டு யாதவர்களுடன்சேர்ந்து துவாரகைக்குச் சென்றார். ஜனமேஜயரே! மஹாபலசாலியானகிருஷ்ணன் மாத்திரம் மஹாத்மாவான அர்ஜுனனுடன்கூட முப்பத்துநான்கு நாள் அந்தஅழகான இந்திரப்பிரஸ்தநகரத்திலேயே உல்லாஸமாகஇருந்தார். பெருங்கீர்த்தியுள்ளகிருஷ்ணபகவான் அர்ஜுனனுடன்கூட வேட்டையாடி மான்களையும் பன்றிகளையும்அடித்துக்கொண்டு யமுனைக்கரையில் ஸஞ்சரித்தார். பிறகு, கிருஷ்ணனுடையஇனிய சகோதரியானஸுபத்ரை, இந்திராணி ஜயந்தனைப்பெற்றதுபோல் புகழ்பெற்ற புத்திரனைப்பெற்றாள். நீண்டகைகளும் அகன்றமார்பும்விருஷபம்போன்றகண்களுமுடையவனும் பகைவர்களையடக்குகிறவனும் வீரனும் புருஷச்ரேஷ்டனுமாகிய அபிமன்யுவை ஸுபத்ரை பெற்றாள். அபி=பயமற்றவன்; மன்யு=கோபமுள்ளவன் என்கிறகாரணத்தினால்எதிரிகளையழிப்பவனும் புருஷச்ரேஷ்டனுமாகிய அந்தஅர்ஜுனபுத்திரனுக்கு அபிமன்யுவென்றுபெயரிட்டனர். யஜ்ஞத்திற்கடைகிற அரணிக்கட்டையிலிருந்து அக்னிஉண்டாவதுபோல அதிரதனான அந்தப் புத்திரன் ஸுபத்ரையிடம் தனஞ்சயனால்உண்டானான். ஜனமேஜயரே! சக்தியுள்ளவரும் குந்திபுத்ரருமானயுதிஷ்டிரர் அவன் பிறந்தபோது பிராம்மணர்களுக்குப் பதினாயிரம்பசுக்களையும் பொன்னாணயங்களையும் கொடுத்தார். அவன் குழந்தையாயிருந்ததுமுதல் கிருஷ்ணனுக்கும் தகப்பன்மார்களனைவருக்கும், பிரஜைகளுக்குச்சந்திரனிருப்பதுபோலப் பிரியமாகஇருந்தான். அவனுக்கு ஜாதகர்மமுதலிய சுபகாரியங்களையெல்லாம் கிருஷ்ணனே செய்தார். அந்தப்பாலன் வளர்பிறைமதியைப்போல வளர்ந்தான். சத்துருக்களையடக்குகிறவனும் வேதங்களையறிந்தவனுமாகிய அபிமன்யு * நான்குபாதங்களுள்

* நான்குபாதமாவன :—

1. ஸூத்ரம்=சாஸ்திரோபதேசம்.
2. சிக்ஷை=பழக்கம்.
3. ப்ரயோகம்=ஸமயத்துக்குத்தக்கபடி உபயோகிப்பது.
4. ரஹஸ்யம்=காரணகாரியஸம்பந்தத்தை அறிவது.

இவற்றை வேறுவகையாகவும் கூறுவர். 520-வதுபக்கத்துக்குறிப்பிற்காண்க.

ளதும் * பத்துவகையுள்ளதுமான தனுர்வேதத்தையும் தேவலோகத்திலும் மானிடலோகத்திலுமுள்ள எல்லாவித்தையையும் அர்ஜுனனிடமிருந்து தெரிந்துகொண்டான். மஹாபலசாலியான அர்ஜுனன் அஸ்த்ரவித்தைகளிலும் அங்கங்களினமைப்பிலும் எல்லாவிதமானசெய்கைகளிலும் விசேஷங்களைக் கற்பித்தான். சாஸ்திரஜ்ஞானத்திலும் கைப்பழக்கத்திலும் தனக்கொப்பாகச்செய்தான். தனஞ்சயன் பூர்ணமானசரீரக்கட்டுள்ளவனும் லக்ஷணங்களெல்லாம்பொருந்தினவனும் ஜயிக்கமுடியாதவனும் விருஷபத்தின்கொண்டையைப்போன்ற தோள்களையுடையவனும் வாய்திறந்த ஸர்ப்பத்தைப்போன்றவனும் ஸிம்மத்தைப்போன்றகர்வமுள்ளவனும் பெரியவில்லாளியும் மதயானைபோலநடப்பவனும் மேகத்தையும் துந்துபிவாத்தியத்தையும்போன்ற த்வநியுள்ளவனும் பூர்ணசந்திரன்போன்றமுகமுள்ளவனும் தனதுபுத்திரனுமாகிய அபிமன்யுவைக்கண்டு களிப்புற்றான். இந்திரன் அர்ஜுனனைப்பார்ப்பதுபோலப் பராக்ரமத்திலும் உற்சாகத்திலும்அழகிலும் தேகஉருவத்திலும் கிருஷ்ணனைப்போன்ற புத்ரனை அர்ஜுனன் பார்த்தான். அழகானலக்ஷணங்களுள்ள,த்ரௌபதியும் ஐந்துமலைகளைப்போலத் தைரியமுள்ள ஐந்து சிறந்தபுத்திரர்களை ஐந்துபதிகளாற்பெற்றாள். யுதிஷ்டிரருக்குப் பிரதிவிந்தியனையும், விருகோதரனுக்கு ஸுதஸோமனையும், அர்ஜுனனுக்குச் சுருதகர்மாவையும், நகுலனுக்குச் சதானீகனையும், ஸஹதேவனுக்குச் சுருதஸேனனையுமாக ஐந்துமஹாரதர்களானவீரர்களை அதிதி, தேவர்களைப்பெற்றதுபோலப் பாஞ்சாலி பெற்றாள். பிராம்மணர்கள் சோதிடசாஸ்திரஜ்ஞானத்தினால், யுதிஷ்டிரருடைய புத்திரனைப் பற்றி, 'எதிரிகளுடையஆயுதஅடிகளின் உணர்ச்சியில் இவன் விந்தியமலைக்கு ஒப்பாயிருப்பான். ஆதலால், இவன்பிரதிவிந்தியன்' என்றுபெயரிட்டனர். அநேகமுறை ஸோமரஸம்பிழிந்து யஜ்ஞஞ்செய்தபிறகு சந்திரசூரியர்கொப்பான தேஜஸுள்ள சிறந்தவில்லாளியானகுமாரனைப் பீமஸேனன்றான் பெற்றானாதலால் அவனுக்கு ஸுதஸோமனென்றுபெயராயிற்று. சுருதமென்னப்பட்ட சாஸ்திரோக்தமான பெரியகர்மங்களாகிய தீர்த்தயாத்திரைமுதலியவற்றைச்

* 1. ஆதானம் = தூணியிலிருந்து பாணத்தையெடுப்பது; 2. ஸந்தானம் = தொடுப்பது; 3. மோக்ஷணம் = நாணியிலிருந்துவிடுவது; 4. நிவர்த்தனம் = எதிரிவிடுவதை விலக்குவது; 5. ஸ்தானம் = வில்லாளியின்நிலை; 6. முஷ்டி = பிடி; 7. பிரயோகம் = லக்ஷியத்தையடிப்பது; 8. பிராயச்சித்தம் = தவறுதலுக்குப்பரிஹாரம்; 9. மண்டலம் = சுற்றிநடப்பது; 10. ரஹஸ்யம் = சப்தத்தினால் லக்ஷியத்தையடிப்பது.

செய்து திரும்பிவந்தபிறகு அர்ஜுனனுக்குப்பிறந்ததனால் அவன்புத்திரனுக்குச் சுருதகர்மாவென்றுபெயரிடப்பட்டது. நகுலன், தன் புகழை விருத்திசெய்கிறவனாகியபுத்திரனுக்குக் கௌரவவம்சத்திற் பிறந்தமஹாத்மாவாகிய சதானீகனென்னும்ராஜரிஷியின்பெயரையிட்டான். திரௌபதி, அக்நிதேவதையின்நக்ஷத்திரமாகியகிருத்திகையில் ஸஹதேவனுக்கு ஒருபுத்திரனைப்பெற்றாள். அதனால், அவனுக்கு * சுருதஸேனனென்று பெயரிட்டனர். அரசர்க்கரசரான ஜனமேஜயரே! புகழ்பெற்றவர்களும் ஒருவர்க்கொருவர் நன்மையைக்கருதுகிறவர்களுமாகிய இந்தத்திரௌபதியின் புத்திரர்கள் ஒருவர்க்கொருவர் ஒருவருஷம் வித்தியாசமுள்ளவர்களாகப்பிறந்தனர். பரதச்ரேஷ்டரே! தௌம்யரிஷி அவர்களுக்கு ஜாதகர்மம் சௌளம் உபநயனமுதலியவற்றைப்பிராயத்தின்வரிசைப்படிசாஸ்திரப்பிரகாரம்செய்தார். பிறகு, வேதாத்யயனஞ்செய்து பிரம்மசரியவிரதத்தைச் செம்மையாக நடத்தித்தேவர்கள்மனிதர்களுடையஸம்பந்தமான அஸ்த்ரங்களையும் பாணங்களெல்லாவற்றையும் அர்ஜுனனிடம் கிரஹித்தார்கள். ராஜச்ரேஷ்டரான ஜனமேஜயரே! விசாலமானமார்புகளுடையவர்களும் மஹாரதர்களுமான தேவகுமாரர்களைப்போன்ற புத்திரர்களுடன்சேர்ந்து பாண்டவர்கள் மகிழ்ந்திருந்தனர்.

ஹரணாஹரணபர்வம் முற்றிற்று.

---

இருநூற்றுநாற்பத்தேட்டாவது அத்தியாயம்.

---

## காண்டவதாஹபர்வம்.



(கிருஷ்ணனும் அர்ஜுனனும் ஸ்திரீகளுடன் ஜலக்கிரீடைக்காக யமுனைக்குச் சென்றபோது பிராம்மணவடிவமாகவந்த அக்னியைக்கண்டது.)

அந்தப்பாண்டவர்கள், இந்திரப்பிரஸ்தத்தில்வஸித்துக்கொண்டிருக்கையில், திருதராஷ்டிர மஹாராஜாபீஷ்மர் இவர்களுடையகட்டளைப்படி பகையரசர்களை ஜயித்தார்கள். சிறந்தகுணங்களும் செய்கைகளுமுள்ள தர்மராஜாவைஅடுத்தபிறகு எல்லாஜனங்களும் நல்லலக்ஷணமுள்ளதும் புண்ணியகாரியத்தைச்செய்வதுமாகிய சரீரத்தையடைந்த ஆத்மாக்களைப்போல ஸுகமாகஇருந்தனர். ஜனமேஜயரே! நீதி

---

* அக்னியைப்போலப் பிரகாசமான ச்ருதமென்னும் சாஸ்திரஞானத்தை ஸேனைபோலப் பலமாகவுடையவன் என்பதுபொருள்.

யோடுகூடிய அந்தத்தர்மராஜர் தர்மார்த்தகாமங்களென்னும் மூன்று புருஷார்த்தங்களைத் தமக்குச்சரியானநிலைமையிலிருக்கும் மூன்று பந்துக்களைப்போல மரியாதையாக நடத்தினார். சரீரத்தோடுகூடியிருப்பனபோலவே அந்தத்தர்மார்த்த காமங்களுக்கும் ஸமமாகத் தமது திரவியத்தைப் பகிர்ந்துகொடுத்து அவற்றோடு தாம் * நான்காவதுபங்காளிபோலிருந்தார். ஜனங்கள், 'வேதங்களைஓதுகிறவரிற்சிறந்தவரும் அவற்றை மஹாயஜ்ஞங்களில்உபயோகிப்பவரும் புண்ணிய லோகங்களைக் காப்பாற்றிக்கொள்பவருமாகிய அந்தத்தர்மராஜாவை ராஜாவாகக்கிடைக்கப்பெற்றனர். அந்தராஜாவினால் ராஜ்யலக்ஷ்மி நிலையான இடம்பெற்றது. அறிவானது சிறந்தஆதாரவையடைந்தது. எல்லாத்தர்மங்களும் அபிவிருத்தியடைந்தன. அந்தராஜா நான்குசகோதரர்களுடன்கூடி நான்குவேதங்களையும் பிரயோகித்துச்செய்யப்பட்ட மஹாயாகம்போல மிகவும்பிரகாசித்தார். பிருஹஸ்பதிக்கொப்பான தௌமியர்முதலிய பிராம்மணசிரேஷ்டர்கள் பிரம்மாவினிடம் தேவர்களிருப்பதுபோல அவரைச் சுற்றியிருந்தனர். பூர்ணசந்திரனைப்போல மாசற்ற தர்மராஜரிடம் பிரஜைகளுடையகண்களும் உள்ளங்களும் ஒரேகாலத்தில் மிக்க அன்பினைப்பற்றியிருந்தன. பெரிய அதிருஷ்டத்தினாலேமாத்திரம் பிரஜைகள் அந்தராஜாவினிடம் உள்ளன்பு வைக்கவில்லை. ஜனங்கள் மனத்திற்கினியனவற்றையெல்லாம் அவர் கிரியையினால் நிறைவேற்றினார். சிறந்தபுத்தியுள்ளவரும் அழகாகப் பேசுகிறவருமாகிய அந்தத்தர்மராஜாவினிடத்தில் அயுக்தமாகவாவது அஸத்யமாகவாவது கடுமையாகவாவது மனத்தைக்கவராததாகவாவதிருக்கும்சொல் இருந்ததில்லை. ஜனமேஜயரே! மிகப்பெரிய சக்திமானான தர்மபுத்திரர் எல்லாப்பிரஜைகளுக்கும் தமக்கும்நன்மையானவற்றையே செய்யக்கருதி அன்போடிருந்தார். அவரைப்போலவே பாண்டவர்களனைவரும் மகிழ்வுற்றுத் துயரம்விட்டுத் தங்கள்பராக்ரமத்தினால் மற்றஅரசர்களையெல்லாம் அச்சப்படுத்திக்கொண்டு வஸித்தனர்.

பிறகு, சிலநாட்கள்கடந்தபின், அர்ஜுனன் கிருஷ்ணனைநோக்கி, 'கிருஷ்ண! தாபம்அதிகமாகவிருக்கிறது; நாம் யமுனைக்குச்செல்வோம். மதுஸூதன! நாம் வேண்டியவர்களுடன்கூட அங்கேவிளை

* இம்மூன்றையும் ஒன்றுக்கொன்று விரோதமில்லாமல நடத்தினபிறகு தம் ஸௌக்கியத்தைக்கருதினார் என்பது கருத்து; "மூன்றுமந்திரிகளையுடையஅரசன் அவர்களால் உபாஸிக்கப்படுவதுபோலவும், மோக்ஷஸ்வரூபனைஆத்மா தர்மார்த்தகாமங்களால் உபாஸிக்கப்படுவதுபோலவும், அவர் தர்மார்த்தகாமங்களால் உபாஸிக்கப்பட்டார்" என்பது இங்கேபழையஉரை.

யாடிவிட்டு ஸாயங்காலத்தில் திரும்பிவருவோம். ஜனார்த்தனரே! நீர் மனம் வைக்கவேண்டும்' என்றுசொன்னான். அதற்குக் கிருஷ்ணபகவான், 'குந்தியின்புத்திரனே! அர்ஜுனா! நாம் வேண்டிய ஜனங்களுடன் ஸுகமாக ஜலக்கிரீடைசெய்யலாமென்பது எனக்கும் இஷ்டந்தான்' என்றுசொன்னார். ஜனமேஜயரே! அந்தக்கிருஷ்ணார்ஜுனர்களிருவரும் தர்மபுத்திரரைக்கேட்டு அனுமதிபெற்றுக்கொண்டு வேண்டியவர்களுடன் கூட அவ்விடம் சென்றனர். காண்டவப்பிரஸ்தத்தில் காடுகளில்விளையாடிக்கொண்டிருந்த கிருஷ்ணன் புஷ்பத்தோட்டங்களோடுகூடிய சிறந்த யமுனாநதியைக் கண்டார். கத்தியையும் கேடகத்தையுமெடுத்துக்கொண்டு யமுனைக்கரையில்,எல்லாப்பருவங்களிலும்அழகானதும் எல்லாப்பிராணிகளுக்கும் இருப்பிடமுமாகிய உயர்ந்த காண்டவவனத்தையும் அதைச்சேர்ந்த எல்லாப்பிரதேசங்களையும் அர்ஜுனனோடுகூடப் பார்த்தார். கொண்டைமுசுழுகள், நரிகள், புலிகள், செந்நாய்கள், மான்கள், குரங்குகள், யானைகள், சிறுத்தைகள்முதலிய அனேகமிருகங்களும், கிளிகள், மயில்கள், காலகண்டகபக்ஷிகள், ஹம்ஸபக்ஷிகள், ஸாரஸபக்ஷிகள்முதலியபக்ஷிகளும் சப்தித்துக்கொண்டு நிரம்பியிருப்பதும், தேவாஸுரராக்ஷஸர்கள்முதலியஎல்லாராலும் கொண்டாடத்தக்கதும், பன்னகராஜாவானதக்ஷகனுக்குஇருப்பிடமும், மூங்கில், இலவு, வில்வம், குருக்கத்தி, நாவல், மா, சண்பகம், அங்கோலம், பலா, அரசு, பனை, எலுமிச்சை, மகிழ், ஏகபத்மகம், தாளிப்பனை, சந்தன முதலிய அனேகமரங்கள்நிரம்பினதும், அநேகம்புதர்களால்மூடப்பட்டதும், பிரம்புகளும் வண்டுமூங்கில்களுமுள்ளதும், ஸர்ப்பங்கள் நிறைந்ததும், விஸ்தாரமானபெருமரங்கள் நெருங்கினதனால் ஸூர்ய ரச்மி படாததும், கோரப்பற்களுள்ள துஷ்டமிருகங்கள் கூட்டங்களாயிருப்பதும், மனிதர்களேயில்லாததும், ராக்ஷஸர்களுக்கும் மஹாஸர்ப்பங்களுக்கும் பக்ஷிகளுக்கும் முக்கியமான இடமுமாகிய காண்டவவனத்தை, மிகுந்தபிரஜ்ஞையுள்ளவரும் எல்லாலோகங்களின் பிரிவுகளையுமறிந்தவரும் ஸர்வலோகநாதருமாகிய கிருஷ்ணபகவான் அர்ஜுனனுடன் பார்த்தார். பீதாம்பரத்தைத்தரிப்பவராகிய கிருஷ்ணபகவான் அந்தவனத்தில் அனேகமுறை சஞ்சரித்துக்கொண்டிருக்கையில் மரங்களோடும் யக்ஷர்களோடும் பிராணிகளோடும் பக்ஷிகளோடும் காண்டவவனத்தையழிக்கக் கருதினார். அனேகமரங்களுள்ளதும் அனேகவிதங்களான வீடுகள் நிரம்பினதும் சுவையுள்ளவையும் விலைபெற்றவையுமான பக்ஷணங்களும் போஜனங்களும் பானங்களுமுள்ளதும் அனேகவகையான

புஷ்பமாலைகளும் சந்தனங்களும் அளவற்ற உயர்ந்த ரத்னங்களும் நிரம்பினதும் அமராவதிக்குஷ்ப்பானதுமான அந்தக்கிரீடாப்பிரதேசத்தையடைந்து கிருஷ்ணார்ஜுனர்கள் உள்ளேபிரவேசித்தனர். ஜனமேஜயரே! எல்லாஜனங்களும் தத்தம் விருப்பப்படி விளையாடினர், பருத்தநிதம்பங்களும் அழகிய பெரிய கொங்கைகளுமுள்ளவரும் அழகிய கண்களையுடையவருமான ஸ்திரீகளும் மதுபானத்தினால் துவண்டநடையுடன் விளையாடினர். கிருஷ்ணார்ச்சுனர்களின்மனைவிகளான சிறந்தமங்கையர்கள் காட்டிற்சிலரும் ஜலத்திற்சிலரும் வீடுகளிற்சிலருமாகத் தங்கள் தங்கள்விருப்பப்படி தாந்தாம் விரும்பின இடங்களில் கிரீடித்தனர். ஜனமேஜயமஹாராஜாவே! கிருஷ்ணனுக்கு எப்போதும் அன்புள்ளபெண்ணரசியாகிய ஸத்தியபாமையும் த்ரௌபதியும் ஸுபத்ரையும் மதுமயக்கம்மிகுந்தவர்களாய் ஸ்திரீகளுக்கு வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் தானம்செய்தனர். அங்கே சில பெண்கள் ஸந்தோஷத்துடன் ஆடினர். மற்றும்சிலர் கூவினர். வேறு சிலர் சிரித்தனர். சிலர் உயர்ந்தமதுவைக் குடித்தனர். ஒருசிலர் அங்கே ஒருவரையொருவர் தகைந்தனர்; ஒருவரையொருவர் அடித்தனர். மற்றுமுள்ள சிலர் ஒருவருக்கொருவர் ரஹஸ்யங்கள் பேசினர். புல்லாங்குழல்கள் வீணைகள் மிருதங்கங்கள் இவற்றின் இனிய ஓசைகளினால் அந்தமாளிகையும் மிகவும்சிறப்புள்ள அந்தவனமும் நிரப்பப்பட்டன. அங்கே அவ்வாறு நடந்துகொண்டிருக்கையில், கிருஷ்ணனும் அர்ஜுனனும் ஸமீபத்திலுள்ள மிக்க அழகான ஒருபிரதேசத்துக்குச் சென்றனர். ஜனமேஜயராஜாவே! மஹாத்மாக்களும் எதிரிகளின்பட்டணங்களை ஜயிப்பவருமாகிய கிருஷ்ணார்ஜுனர்கள் அங்கேசென்று உயர்ந்தவிலைபெற்ற ஆஸனங்களில் வீற்றிருந்தனர். முன் நடந்த பராக்கிரமச்செய்கைகளையும் மற்றுமுள்ள அனேகவிஷயங்களையும் பேசிக்கொண்டு அவ்விருவரும் அவ்விடத்தில் மகிழ்ந்திருந்தனர். தேவலோகத்தில் அசுவினிதேவர்கள் இருப்பதுபோல அவ்விடத்தில் ஸந்தோஷமாக உட்கார்ந்திருக்கும் கிருஷ்ணார்ஜுனர்களிடம் ஒரு பிராமணன் வந்தான். பெரியஆச்சாமரம்போல உயரமானவனும், உருக்கிவிட்டதங்கம்போன்ற நிறமுள்ளவனும், பசுமையும்செம்பட்டையுமாகப்பிரகாசிக்கின்ற மீசையும் உயரத்துக்குத்தகுந்தபருமனுமுள்ளவனும், பாலஸூர்யனைப்போலப்பிரகாசிப்பவனும், மரவுரியுடுத்தவனும், ஜடையைத்தரித்தவனும், தாமரையிதழ்போன்ற கண்களையுடையவனும், தன்சிவந்தஒளியினால் ஜ்வலிப்பவன்போன்றவனுமாகிய அந்தப்பிராமணன் காண்டவவனத்தையெரிக்கக்கருதிக் கிருஷ்

ஞர்ஜுனரை அடைந்தான். ஜ்வலிக்கின்ற அந்தப்பிராம்மணோத்தமன் அனுகிவரக்கண்டு பிரபுவான கிருஷ்ணபகவான் இவன் அக்கினியாக இருக்கவேண்டுமென்று நினைத்தார். அர்ஜுனனும் கிருஷ்ணனும் உடனே எழுந்துநின்றனர்.

---

## இருநூற்றுநாற்பத்தொன்பதாவது அத்தியாயம்.

---

### காண்டவதாஹபர்வம். (தொடர்ச்சி.)



(காண்டவவனத்தை எரிக்கவேண்டுமென்று கிருஷ்ணார்ஜுனர்களிடம் அக்னிவேண்டினதாக வைசம்பாயனர்சொல்ல, ஜனமேஜயர், அதன் காரணத்தைக்கேட்டதும், சுவேதகிராஜன்செய்தயாகத்தில் அதிகபோஜனம் செய்ததனுல் சக்திகுறைந்தஅக்னி தன் சக்திவருவதற்காகப் பிரம்மாவினிடம்வேண்ட அவர் கொடுத்தவரத்தால் காண்டவவனத்தை எரிக்க ஆரம்பித்தும் அதற்கு ஏழுதரம் விக்கினம் வந்ததனுல் கிருஷ்ணார்ஜுனரை ஸஹாயத் திற்காக வேண்டிக்கொண்டானென்று வைசம்பாயனர் சொன்னதும்.)

அந்தப்பிராமணன் காண்டவவனத்தின் ஸமீபத்திலிருக்கும் லோகவீரர்களாகிய அர்ஜுனனையும் யாதவவீரராகியகிருஷ்ணனையும் பார்த்து, 'கிருஷ்ணார்ஜுனர்களே! நான் பிராம்மணன்; எப்போதும் அதிகபோஜனம்செய்பவன்; குறைவில்லாமல் போஜனம்செய்கிறவன்; உங்களிடம் யாசிக்கிறேன்; எனக்கு ஒரு திருப்தியைக்கொடுங்கள்' என்றுசொன்னுன். அவன் இவ்வாறுசொன்னவுடன், அந்தக்கிருஷ்ணார்ஜுனர்கள், 'நீர் எவ்வகையான உணவினுல் திருப்தியடைவீர்; அந்தஉணவுக்காக முயலுகிறோம்' என்று அவனுக்குச்சொன்னுர்கள். இவ்வாறுசொல்லப்பட்ட அந்த அக்னிபகவான், எவ்வகைஆகாரம்வலித்தம் செய்யலாமென்று பேசிக்கொண்டிருக்கும் அவ்விரண்டுவீரர்களையும் பார்த்து, 'நான் அன்னத்தைப்புஜிக்கவிரும்பவில்லை. என்னை அக்னியென்று அறியுங்கள். எனக்குத் தகுதியானஆகாரமெதுவோ அதனை நீங்கள்கொடுங்கள். இந்தக்காண்டவவனத்தை எப்போதும் இந்திரன் காக்கிருன். அந்தமஹாத்மாவினுல் ரக்ஷிக்கப்பட்ட இவ்வனத்தை நான் கொளுத்தமுடியவில்லை. இந்திரனுடைய ஸ்நேஹிதனுகிய தக்ஷகன் இனத்தாருடன் எப்போதும் இவ்வனத்தில் வஸிக்கிருன். அவனுக்காக வஜ்ரபாணி இந்தக்காட்டை இரக்ஷிக்கிருன். இந்தக்காட்டில் தக்ஷகனுடைய ஸம்பந்தத்தினுல் இன்னும்அனேகம்பிராணிகள் காப்பாற்றப்படுகின்றன. நான்கொளுத்தவிரும்பியும் இந்திரனுடைய

பிரபாவத்தினால் கொளுத்தமுடியாதவனாக இருக்கிறேன். அவன், நானெரிக்கிறதைக்கண்டு மேகங்களைக்கொண்டு ஜலத்தைவருஷிக்கச் செய்கிறான். அதனாலேதான் நானெரிக்கஆரம்பித்தும் எனக்குப் பிரியமானகாட்டை நான்கொளுத்தமுடியவில்லை. அப்படிப்பட்டநான் அஸ்த்ரங்கள்தெரிந்தவர்களாகியஉங்களைச் சகாயர்களாகஅடைந்து காண்டவவனத்தை எரிப்பேன். இந்தஅன்னந்தான் யான்வேண்டினது. உத்தமமானஅஸ்த்ரங்களையறிந்த நீங்களிருவரும் அந்தமழைத் தாரைகளையும் எல்லாவிடங்களிலுமுள்ளபிராணிகளையும் எங்கும் தடுத்துவிடுவீர்கள்' என்றுசொன்னான்" என்றார்.

ஜனமேஜயர், "பிராம்மணரே! இந்திரனால் காப்பாற்றப்பட்டதும் அனேகம் பிராணிகள் சேர்ந்திருந்ததுமான காண்டவவனத்தை அக்னிபகவான் எரிக்கக்கருதினது ஏன்? அக்னி மிகுந்தகோபத்துடன் காண்டவவனத்தைக்கொளுத்தினதற்குக்காரணம் சிறிதாயிருக்குமென்று நான் நினைக்கவில்லை. பிராம்மணரே! முனிவரே! முன்னே காண்டவவனதகனம் எவ்வாறுநடந்ததென்பதை நடந்தபடி விரிவாகக் கேட்க விரும்புகிறேன்" என்று கேட்க, வைசம்பாயனர் சொல்லுகிறார். "ராஜாவே! பூமிக்கரசரே! அக்னி காண்டவவனத்தை எரித்ததற்குக்காரணத்தை நடந்தபடி நான் சொல்லுகிறேன்; எல்லாவற்றையும் கேளும். புருஷச்ரேஷ்டரே! ஸந்தோஷம். புராணத்திலுள்ளதும் ரிஷிகளாற்சொல்லப்பட்டதுமாகிய காண்டவவனத்தின் நாசத்தைப்பற்றிய இந்தக்கதையை உமக்கு உரைப்பேன்.

ராஜாவே! இந்திரனுக்கொப்பான பலபராக்கிரமங்களுள்ளவனும், சாஸ்திரப்படி யாகஞ்செய்தவனும், தனக்கீடு வேறொருவனுமில்லையென்று சொல்லத்தக்க கொடையாளியும், சிறந்தபுத்தியுள்ளவனுமாகிய சுவேதகியென்னும் கியாதிபெற்ற அரசனைப்பற்றிப் புராணத்திற்கேட்டிருக்கிறோம். அந்தராஜா பன்னிரண்டுவருஷகாலத்திற்கு ஒரு உஜ்ஞதீக்ஷை செய்துகொண்டான். அவனுடைய அந்த ஸத்ரயாகத்தில் மஹரிஷிகளும் வேதவேதாங்கங்கள்தெரிந்தபிராம்மணர்களும் மிகுதியாக எப்போதும் சேர்ந்திருந்தனர். அவன் ஸம்பூர்ணதக்ஷிணையோடுகூடிய வேள்விகளையும் * மஹாயஜ்ஞங்களையும் செய்தான். ராஜாவே! அவனுக்கு ஒவ்வொருநாளும் யாகத்தைச் சேர்ந்தகிரியைகளைச்செய்வதிலும் அனேகமானதானங்களைச்செய்வதிலும்தவிர வேறொன்றிலும் புத்திசெல்லவில்லை; அந்தப்புத்திமானான அரசன் ரித்விக்குக்களோடுசேர்ந்து இவ்வாறு யாகஞ்செய்துகொண்

* தேவயஜ்ஞம் பித்ருயஜ்ஞம் ரிஷியஜ்ஞம் பூதயஜ்ஞம் மனுஷ்யயஜ்ஞம்.

டிருந்தான். பிறகு, வெகுகாலத்திற்குப்பின் புகையினால்கண்கள்கலங்கின அந்த ரித்விக்குக்கள் களைப்படைந்து ராஜாவைவிட்டனர். பிறகு, அரசன் அந்த ரித்விக்குக்களை வேண்டினான். கண்கெட்டுப்போன தனால் அவர்கள் யஜ்ஞத்திற்கு வரவில்லை. அதன்பிறகு, அரசன் அவர்களுடையஅனுமதியினால் அவர்களைச்சேர்ந்த வேறுபிராம்மணர்களை ரித்விக்குக்களாகக்கொண்டு அந்தஸத்ரயாகத்தைப் பூர்த்திசெய்தான். இப்படிநடத்திக்கொண்டிருந்த அந்த மஹாத்மாவான அரசன் சிலகாலத்துக்குப்பின் ஒருஸமயத்தில் நூறுவருஷங்களிற்செய்யக்கூடிய ஒரு ஸத்ரயாகத்தைச்செய்ய நினைக்கும்போது அதை ரித்விக்குக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. பெரும்புகழோனான அவ்வரசன், தனக்குவேண்டியவர்களுடன்கூட நமஸ்காரஞ்செய்தும் நல்லவார்த்தைசொல்லியும் வேண்டியவற்றைக்கொடுத்தும் மிகுந்தமுயற்சிசெய்துவிடாமல் பலமுறை ரித்விக்குக்களை வேண்டினான். அளவற்றமஹிமையுள்ள அவர்கள் அவனுடையஅந்தவிருப்பத்தைச் செய்யவில்லை. அந்தராஜரிஷியான அவ்வரசன் கோபங்கொண்டு ஆச்ரமங்களிலிருக்கும் அந்த ரித்விக்குக்களைப் பார்த்து, 'பிராம்மணர்களே! நான் பதிதனாயிருந்தாலும் உங்களுக்குச்சுச்ரூஷை செய்யாதவனாயிருந்தாலும் பிராம்மணர்கள் அருவருக்குத்தக்கவனாயிருந்தாலும் நீங்கள் என்னை உடனே விட்டுவிடுங்கள்; பிராம்மணோத்தமர்களே! அவ்வாறில்லாமையால் எனக்குள்ள யாகச்ரத்தையை இப்போது நீங்கள் தடைசெய்யவும் காரணமில்லாமல் என்னைவிட்டுவிடவும் தகாது. பிராம்மணர்களே! உங்களையே சரணமடைந்திருக்கிறேன்; அனுக்கிரஹம்செய்யக்கடவீர்கள். பிராம்மணோத்தமர்களே! எனக்குக்காரியமிருப்பதனால் உண்மையுள்ளபிரிய வசனங்களாலும் கொடுப்பதாகச்சொல்வதனாலும் உங்களைச் சந்தோஷப்படுத்தி உண்மையாக என்காரியத்தைப்பற்றிக் கேட்டுக்கொள்ளுகிறதை நீங்கள் செய்யவேண்டும். பிராம்மணோத்தமர்களே! அவ்வாறின்றி விரோதமேகாரணமாக நீங்கள் என்னைவிட்டுவிட்டால் எனக்குயஜ்ஞம்செய்விக்கத்தக்க வேறுரித்விக்குக்களிடம் செல்வேன்' என்றுசொல்லி ஓய்ந்தான். வீரரானஜனமேஜயரே! அந்தயாகம்செய்விப்பவர்கள் அந்தராஜாவுக்கு யஜ்ஞம்செய்விப்பது தங்களால்முடியாமையால் கோபத்துடன் அவனைப்பார்த்து, 'ராஜச்ரேஷ்டனே! உனக்கு யாகக்கிரியைகள் இடைவிடாமல்தான் இருக்கின்றன. எப்போதும் அந்தக்கிரியைகளைச் செய்ததனாலேயே நாங்கள் களைத்துப்போனோம். குற்றமற்றவனே! இந்தச்சிரமத்தினாலேயே ஓய்ந்துபோன எங்களை விட்டுவிடவேண்டும். அவசரப்பட்டுப் புத்திப்பிரமைகொண்ட நீ ருத்

திரிடம் செல். அவர் உனக்கு யஜ்ஞம்செய்விப்பார்' என்றுசொன்னார்கள். ஜனமேஜயராஜாவே! அவர்கள் நிராகரித்துச்சொன்ன சொல்லைக்கேட்டு, சுவேதகியென்னும்அரசன் கோபத்தோடு கைலாஸ பர்வதம்சென்று கடுந்தவத்தைமேற்கொண்டு நியமத்தோடும் உறுதியான விரதத்தோடும் ஆசாரத்தோடும்கூடியவனாகி உபவாஸத்துடன் நெடுங்காலம் சிவபிரானை ஆராதித்துக்கொண்டிருந்தான். அவ்வரசன் சிலநாள் பன்னிரண்டாவது * முகூர்த்தத்திலும் மற்றும் சிலநாள் பதினாறாவது முகூர்த்தத்திலும் கிழங்குகளையும் கனிகளையும் ஆகாரமாகக்கொண்டான்.

சுவேதகிராஜன் மனத்தைச் செம்மையாகத் தியானத்தில் நிறுத்தி ஆறுமாதகாலம் கைகளைத்தூக்கிக்கொண்டும் இமைகொட்டாமலும் கட்டையைப்போல அசையாமல் நின்றுகொண்டிருந்தான். பாரதரே! அவ்வாறு பெருந்தவஞ் செய்துகொண்டிருந்த அந்த ராஜச்ரேஷ்டனுக்கு, பகவானாகிய சங்கரர் மிகுந்த கிருபையுடன் பிரத்தியக்ஷமாகி இனியதும் கம்பீரமுமான வாக்கினால், 'புருஷஸ்ரேஷ்டா! எதிரிகளைவாட்டுகிறவனே! உன்தவத்தினால் ஸந்தோஷமடைந்தேன். உனக்கு க்ஷேமமுண்டாகட்டும். ராஜாவே! நீவிரும்புகிற வரத்தைக்கேள்'என்று சொன்னார். அளவற்றமஹிமையுள்ள ருத்திரருடைய இந்தச்சொல்லைக்கேட்டு அந்தமஹாத்மாவுக்கு நமஸ்காரஞ் செய்து, 'தேவர்களுக்கெல்லாந்தேவரே! தேவச்ரேஷ்டரே! ஈசுவரரே! எல்லாலோகங்களாலும் நமஸ்கரிக்கப்பெற்ற பகவானாகிய உங்களுக்கு என்மேல் அருளிருக்குமாயின் நீங்களே எனக்கு யாகம் செய்விக்கக்கடவீர்கள்' என்று அந்தராஜரிஷி சொன்னான். ராஜாவாற்சொல்லபட்ட இந்தச்சொல்லைக்கேட்டுப் பகவான், கிருபைகூர்ந்து புன்னகையுடன், 'ராஜாவே! யாகஞ்செய்விப்பது என்னுடைய வேலையன்று. நீயோ இந்தவரத்தைவேண்டி மிகப்பெரியதவம் செய்திருக்கிறாய். ராஜாவே! வீரனே! ஓர் உடன்படிக்கையின்மேல் உனக்கு யாகஞ்செய்விப்பேன். பன்னிரண்டுவருஷம் பிரம்மசரியநியமத்துடன் இடைவிடாதநெய்த்தாரைகளால் அக்னிக்குத் திருப்திசெய்விப்பாயாயின் நீ என்னிடத்தில் விரும்புகிறவரத்தைப்பெறலாம்' என்றனர். சூலபாணியானருத்திரரால் இவ்வாறுசொல்லப்பட்ட சுவேதகிராஜன், அவர்சொன்னபடியே எல்லாவற்றையும்செய்தான். பன்னிரண்டாவதுவருஷம் நிரம்பினபின், உலகங்களைச்சிருஷ்டிப்பவரும் மஹேசுவரருமானசங்கரர்,திரும்பவும்வந்துராஜச்ரேஷ்டனை அந்தச்

* ஒருமுகூர்த்தம் இரண்டு நாழிகை.

சுவேதகிராஜனைப்பார்த்து மிக்கஅன்புடன், 'ராஜச்ரேஷ்டனே ! உன்னுடையமுதன்மையானகிரியையினால் நான் ஸந்தோஷம்செய்விக்கப்பட்டேன். வீரனே ! யஜ்ஞஞ்செய்விப்பது பிராம்மணர்களுக்கு விதித்திருப்பதனால் நான் நேராக உனக்கு இப்போது யாகஞ்செய்விப்பதில்லை. ஆகிலும், பூமியில் எனது அம்சமாகவிருக்கும் சிறந்தசக்திமானான துர்வாஸஸ் என்றுபெயர்பெற்ற மஹானுபாவரான பிராம்மணோத்தமர் உனக்கு யாகம்செய்விப்பர்; நீ ஸாமக்கிரிகளைச்சேர்க்கலாம்' என்று சொன்னார். இவ்வாறு சிவபிரான் சொன்னசொல்லைக்கேட்டுத் திரும்பவும் தன்ஊருக்குவந்து ஸாமக்கிரிகளைச்சேர்த்தான். ஸாமக்கிரிகளைச்சேர்த்தபிறகு, சுவேதகிராஜன் மறுபடியும் ருத்திரரிடம்சென்று வணங்கிக் கைகூப்பிநின்றுகொண்டு, 'மஹாதேவரே ! எல்லாப்பொருள்களும் எல்லாக்கருவிகளும் உமது அனுக்கிரஹத்தினால் சம்பாதிக்கப்பட்டிருக்கின்றன. எனக்கு யாகதீக்ஷை நாளைக்கு நடக்கவேண்டும்' என்றுசொன்னான். மஹாத்மாவாகிய அவ்வரசனுடைய இந்தச்சொல்லைக்கேட்டு, ருத்திரர் துர்வாஸரை அழைத்து, 'பிராம்மணோத்தமரே! இந்தச்சுவேதகிராஜன் மஹானுபாவன். இவ்வரசனுக்கு என்கட்டளையினால் நீர் யாகம்செய்விக்கக்கடவீர்' என்றுசொன்னார். துர்வாஸமஹாிஷி ருத்திரரிடத்தில் 'அப்படியேயாகட்டும்' என்று சொன்னார். அதன்பிறகு, மஹாத்மாவாகிய அவ்வரசனுடைய அந்தஸத்ரயாகமானது விதிதவறாமலும் விதித்தகாலந்தவறாமலும் சாஸ்திரோக்தமாக நிரம்பினதக்ஷிணையோடு நடந்தது. மஹாத்மாவான அந்த அரசனுடைய யாகம்முடிந்தபின் அந்த யஜ்ஞத்தில் தீக்ஷைசெய்துகொண்ட ரித்விக்குக்களும் மிகுந்தமகிமையுள்ளஸபையோருமாகிய எல்லாரும் துர்வாஸரிடம் விடைபெற்றுச்சென்றனர். அப்போது மஹானுபாவனான அவ்வரசனும் மஹானுபாவர்களும் வேதங்களில் கரைகண்டவர்களுமாகிய பிராம்மணர்கள் பூஜிக்கவும் வந்திகள் துதிக்கவும் நகரத்துஜனங்கள் எதிர்கொண்டழைக்கவும் தன்நகரத்தில் பிரவேசித்தான். இவ்விதமாகிய நற்செய்கையுள்ள அந்தராஜச்ரேஷ்டனான சுவேதகியென்னும்ராஜரிஷி எல்லாராலும்சிலாகிக்கப்பட்டு வெகுகாலத்திற்குப்பின் ரித்விக்குக்கள் ஸதஸ்யர்கள்எல்லாருடனும்கூட ஸ்வர்க்கத்துக்குச்சென்றான். அவனுடைய ஸத்ரயாகத்தில் பன்னிரண்டு வருஷகாலம் அக்னிபகவான் நெய்யைக்குடித்தான். ஓர் உறுதியான மனத்துடன்செய்த அந்தவேள்வியில் இடைவிடாதநெய்த்தாரைகளாலும் ஹோமம்செய்த அன்னத்தினாலும் அக்னிக்கு மிகுந்த திருப்தியுண்டாயிற்று. பிறகு, மற்ற யாரு

டைய ஹோமத்திரவியங்களையும் வாங்கிக்கொள்ள விரும்பவில்லை. வெளுத்த நிறமுள்ளவனாகவும் ஒளிமழுங்கினவனாகவுமானதால், அக்னி முன்போலப் பிரகாசிக்காமலிருந்தான். அதனால், அக்னி பகவானுக்கு வேறுபாடுஉண்டாயிற்று. ஒளிகுறைந்து வாட்டமுண்டாயிற்று. அந்த அக்னிபகவான் தன்சக்திபோனதைக்கண்டு உலகங்களினால் பூஜிக்கப்பட்டதும் புண்ணியமுமான பிரம்மலோகத்திற்குச் சென்றான். அவ்விடத்தில் ஆஸனத்திலிருந்த பிரம்மதேவரைக்கண்டு, 'பகவானே! சுவேதகிராஜனால் எனக்கு அதிக திருப்திசெய்விக்கப்பட்டது. அதனால், அருசி அதிகமாக உண்டாயிருக்கிறது. அதை நிவிருத்திசெய்ய எனக்கு முடியவில்லை. ஜகத்பிரபுவே! ஒளியும் வலிமையும் குன்றியிருக்கிறேன். தங்களனுக்கிரஹத்தினால் எனது இயற்கை நிலைக்கவேண்டுமென்று விரும்புகின்றேன்' என்றுசொன்னான். எல்லாஉலகங்களையும் படைப்பவராகிய பகவானான பிரம்மா இவ்வாறு அக்னிசொன்னதைக்கேட்டு புன்னகையுடன் அக்னியைப் பார்த்து, 'மஹானுபாவனே! பன்னிரண்டு வருஷகாலம் ஒரு பாத்திரத்திலிருந்து இடைவிடாத தாரையாக விழுந்தநெய்யையும் ஹோமஞ்செய்தஅன்னத்தையும் நீ உண்டதனால் உனக்குத் தளர்ச்சி உண்டாயிருக்கிறது. தேவர்களுக்கு ஹவிஸுகளைவஹிக்கின்ற அக்னியே! திடீரென்று ஒளிகுன்றினமையைப்பற்றி உனக்குத் துயரம் வேண்டாம். மறுபடியும் ஸ்வபாவமாயிருப்பாய். காலம்வந்தபோது உன்னுடைய அரோசகத்தை நான் போக்கிவிடுவேன். தேவர்களின் கட்டளையின்படி உன்னால் முன்பு எந்தக்காண்டவவனம் முழுதும்நீறுகச்செய்யப்பட்டதோ அது தேவசத்துருக்களுக் கிருப்பிடமும் மிகக் கொடியதுமாயிருக்கிறது. அக்னியே! அதில் எல்லாப்பிராணிகளும் வஸிக்கின்றன. அவற்றின் கொழுப்பினால் திருப்தியடைந்தபிறகு, நீ உன்இயற்கையைப்பெறுவாயாக; நீ உடனே அதை எரிக்கச்செல்; இந்த நோயிலிருந்துவிடுபடுவாய்' என்று சொன்னார். பிரம்மாவின் வாயிலிருந்துவந்த இந்தவாக்கியத்தைக்கேட்ட அக்னி மிகுந்தவேகத்துடன்ஓடிக் காண்டவவனத்தைதச்சேர்ந்து முழுச்சக்தியையும் எடுத்துக்கொண்டு காற்றினால்தூண்டப்பட்டுக் கோபத்துடன் அதிகமாக ஜ்வலித்தது. காண்டவவனம்எரிவதைக்கண்டு அங்குள்ளவைகள் நெருப்பையவிக்கப் பெரியமுயற்சிசெய்தன. நூற்றுக்கணக்கும் ஆயிரக்கணக்குமானயானைகள் கோபத்துடன் தங்கள் துதிக்கைகளினால் சீக்கிரமாக ஜலத்தையெடுத்து அக்னியை விரைவாகஅவித்தன. அங்கே அனேகந் தலைகளோடுகூடிய பாம்புகள் மிகுந்தகோபமும் வேகமுந்

கொண்டு தலைகளால்ஜலத்தைக்கொண்டுவந்து தாரையாகத் தீயின் மேலே பொழிந்தன. ஜனமேஜயரே! இன்னும் அனேகம் பிராணிகளும் அவ்வாறே தந்தம்கருவிகளைக்கொண்டு முயற்சிசெய்து தீயைச் சீக்கிரத்தில் அவித்தன. இவ்வாறாகவே, காண்டவவனத்தில் எரிந்த அக்கி ஏழுமுறை திரும்பத்திரும்ப அவிக்கப்பட்டது.

## இருநூற்றைம்பதாவது அத்தியாயம்.

### காண்டவதாஹபர்வம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் அக்னியினிடம் தேர் குதிரை வில்முதலியவற்றை யாசித்தது.)

அந்தஅக்னி நினைத்தது நிறைவேறாமல் நிராசையாய்க் களைப்படைந்து கோபத்துடன் பிரம்மாவினிடம்சென்று அவ்வாறுநடந்ததையெல்லாம் நடந்தவாறு தெரிவித்தான். அந்தப்பகவானாகிய பிரம்மதேவர் சற்றுநேரம் ஆலோசித்து அக்னியைப்பார்த்து, 'குற்றமற்றவனே! எந்தஉபாயத்தினால் காண்டவவனத்தை நீ தகிக்கலாமோ அதனை நான் கண்டறிந்தேன். நீ சிலகாலம் பொறுத்துக்கொள். பிறகு, அதனையெரிக்கலாம். அந்தக்காலத்தில் நரநாராயணர்கள் உனக்கு உதவியாகஇருப்பார்கள். அக்னியே! நீ அவர்களுடன்சேர்ந்து காண்டவவனத்தையெரிக்கலாம்' என்று சொன்னார். அந்தப்பிரம்மாவுக்கு அக்னி, 'அப்படியேயாகட்டும்' என்று மறுமொழிசொன்னான். ராஜாவே! நீண்டகாலத்திற்குப்பின் அந்தரிஷிகளாகிய நரநாராயணர்கள் அவதரித்திருப்பதையறிந்து அந்தப்பிரம்மதேவர் சொன்னதை நினைத்து மறுபடியும் பிரம்மாவினிடம்சென்றான். அப்போது பிரம்மா, 'அக்னியே! இப்போது இந்த இந்திரன் விழித்துக்கொண்டிருக்கும் போதே நீ காண்டவவனத்தைத் தகிக்கலாம். அக்னியே! முதல்தேவர்களாகிய எந்தநரநாராயணர்கள் தேவகாரியார்த்தமாக மானிடலோகத்தில் வந்து சேர்ந்திருக்கின்றனரோ அவர்களை அர்ஜுனனென்றும் வாஸுதேவனென்றும் உலகம் நினைக்கிறது. இதோ காண்டவவனத்தின்ஸமீபத்தில் சேர்ந்திருக்கும் அவர்களிடம்செல். காண்டவவனத்தைத் தகிப்பதற்கு உதவிசெய்யும்படி அவர்களைக்கேட்டுக்கொள். அப்போது தேவர்களால்காக்கப்பட்டிருந்தாலும் அந்தவனத்தை நீ தகிக்கலாம். அவர்களிருவரும்சேர்ந்து எல்லாப்பிராணிகளையும் இந்திரனையும் முயற்சிசெய்து தடுத்துவிடுவார்கள். எனக்குச்சந்தேகமில்லை' என்றுசொன்னார். ராஜச்ரேஷ்டரே! இந்தச்சொல்லைக்கேட்டு அக்னி

விரைவாகக் கிருஷ்ணார்ச்சுனர்களிடம்வந்து கேட்டவிஷயத்தை உம க்கு முன்னமே சொல்லியிருக்கிறேன். ராஜச்ரேஷ்டரே! அர்ஜுனன் அக்னிசொன்னதைக்கேட்டு இந்திரனுடையஇஷ்டமில்லாமலே காண் டவவனத்தை எரிக்கவிரும்புகின்ற அந்த அக்னிபகவானைப்பார்த்து அக்காலத்திற்குத் தகுதியானசொல்லைச் சொல்லலானன்.

'அக்னிபகவானே! என்னிடத்தில் சிறந்த திவ்யாஸ்திரங்கள் அனேகமிருக்கின்றன. அவைகளினால் அனேக இந்திரர்கள்வந்தா லும் நான் யுத்தம்செய்யமுடியும். ஆனல், யுத்தத்தில் வேகம்செய்யும் போது என்னுடைய வேகத்தைத் தாங்கக்கூடியதும் என்கைவன் மைக்குஉத்ததுமாகிய வில்லொன்றுமாத்திரம் எனக்கில்லை. மேலும், ஓய்வில்லாமல் அனேகபாணங்களை வெகுசீக்கிரத்தில்விடுகின்றஎனது காரியத்திற்குப் பாணங்கள் மிகுதியாகவும் வற்றாமலுமிருக்கவேண் டும். நான் இஷ்டப்படி பாணங்களைப்பிரயோகிக்கும்படி நடத்தத்தக்க தேருமில்லை. காற்றைப்போன்றவேகமுள்ள வெண்மையான திவ்ய அசவங்களையும் மேகத்துக்கொப்பானஒலியும் ஸூரியனுக்கொப்பான ஒளியுமுள்ள ரதத்தையும் நான் விரும்புகிறேன். அப்படியே எந்த ஆயுதத்தினால் கிருஷ்ணன் யுத்தத்தில் நாகர்களையும்பிசாசர்களையும் கொல்லுவரோ அந்தஆயுதம் ஒன்று கிருஷ்ணனுடைய சக்திக்குச் சரி யானதாயில்லை. அக்னிபகவானே! அந்தப்பெரியவனத்தில் வருஷிக் கும்இந்திரனை நான்எந்தஉபாயத்தினால்தடுக்கலாமோ உன்காரியசாதக மான அதனை நீ சொல்லக்கடவாய். அக்னிபகவானே! மனுஷ்ய னுடைய சக்தியினால்செய்யக்கூடியதை நான்செய்வேன். எனக்குப் போதுமானகருவிகளைக் கொடுக்கக்கடவாய்' என்றான்.

---

## இருநூற்றைம்பத்தோராவது அத்தியாயம்.

---

### காண்டவதாஹபர்வம். (தொடர்ச்சி.)



(அக்னி தேர்முதலியவற்றை அர்ஜுனனுக்கும் சக்கரத்தையும்கதையையும் கிருஷ்ணனுக்கும் கொடுத்ததும், அவர்களுடையசகாயத்தினால் அக்னி காண்டவவனத்தைக் கொளுத்த ஆரம்பித்ததும்.)

புகையைக்கொடியாகவுடைய அக்னிபகவான் அர்ஜுனனால் இவ்வாறுசொல்லப்பட்டவுடன், அதிதியின்புத்திரனும் ஜலத்தில் வஸிப்பவனும் ஜலத்துக்குஅதிபதியுமான வருணனென்னும் திக்குப் பாலகனைப் பார்க்கவேண்டுமென்று நினைத்தான். அக்னி நினைத்த

ளைதத்தெரிந்துகொண்டு வருணன் அவன்முன் வந்தான். திக்பாலகர்கள்நால்வரிலொருவனும் தேவச்ரேஷ்டனும் 'எப்போதும்அழியாதவனுமாகிய வருணனுக்கு மரியாதைசெய்து, 'உனக்கு ராஜாவான சந்திரனாற்கொடுக்கப்பட்ட வில்லையும் இரண்டுதூணிகளையும் வானரக்கொடியோடுகூடியரதத்தையும் சீக்கிரம்கொடு. காண்டவத்தினால் பார்த்தனும் சக்கரத்தினால் கிருஷ்ணனும் மிகப்பெருங்காரியம்செய்யப்போகின்றனர். அவற்றை இப்போதே நீ என்னிடம்கொடு' என்று சொன்னான். 'கொடுக்கிறேன்' என்றே வருணன் அக்னிக்கு மறுமொழிசொன்னான். ஆச்சரியப்படத்தக்கதும், மிகுந்தவன்மையுள்ளதும், புகழையும்பெயரையும்விருத்திசெய்வதும், எந்தஆயுதங்களினாலும்வெல்லமுடியாததும், எந்தஆயுதங்களையும்வெல்லுவதும், ஆயுதங்களெல்லாவற்றிலும்சிறந்ததும், எதிரிகளின்சேனைகளைக்கலக்குவதும், ஒன்றுமே லக்ஷங்களுக்குச்சரியானதும், பலவகைநிறத்தாற்சோபிப்பதும், விசித்திரமானதும், மேடுபள்ளமில்லாததும், அடிபடாததும், நெடுங்காலமாகத்தேவர்களும் அஸுரர்களும் கந்தர்வர்களும் பூஜித்துவருவதுமாகிய உயர்ந்தவில்லையும், அம்புகள் குறையாதஇரண்டுபெருந்தூணிகளையும், வெள்ளிநிறமுள்ளவையும் வெண்மேகம்போற்பிரகாசிப்பவையும் வேகத்தில் மனத்துக்கும் காற்றுக்கும் ஒப்பானவையும் பொன்மாலைபோடப்பட்டவையும் கந்தர்வலோகத்தியவையுமான நான்குஉயர்ந்தகுதிரைகள் பூட்டப்பட்டதும் ஹநுமக்கொடியுள்ளதும் வேண்டியகருவிகளெல்லாமுள்ளதும் தேவர்களாலும்அஸுரர்களாலும்ஜயிக்கமுடியாததும் ஒளியுள்ளதும் கம்பீரமானசப்தமுள்ளதும் எல்லாவகைரத்னங்களும் இழைத்திருப்பதனால் அழகியதுமான ரதத்தையும் கொடுத்தான். மஹிமைபொருந்தினவரும் உலகங்களுக்குப்பிரபுவுமாகிய பிரம்மதேவர் சிறந்ததவத்தினால் எதைப்படைத்தாரோ எதன்உருவம் ஸூர்யனைப்போன்றதோ ராஜாவானசந்திரன் எதன்மேலேறி அஸுரர்களைஜயித்தானோ எது நீருண்டமேகம்போலவும் பளபளப்பினால் ஜ்வலிப்பதுபோலவுமிருக்கிறதோ அந்தச்சிறந்தரதத்தை வானவில்லைப்போன்றநிறமுள்ளகிருஷ்ணார்ஜுனர்களிருவரும் அடைந்தனர். மிகஅழகியதும் பொன்மயமாகியதுமான சிறந்தகொடிமரம் அதிலிருந்தது. ஸிம்மக்கொடிகளோடும் புலிக்கொடிகளோடுங்கூடியவரும் திவ்யசக்தியுள்ளவரும் நினைத்தருபமெடுப்பவரும் மிகுந்தபராக்ரமமுள்ளவருமான ஹநுமானென்னும்வானரவீரர் எல்லாவற்றையுமெரிக்கப்போவதும்போல அந்தக் கொடித்தலையிலிருந்துவிளங்கினார். அந்தக்கொடியில் தங்கள்சப்

தத்தினலேயே எதிரிசைனியங்களின் பிரஜ்ஞையைக் கெடுக்கும்படியான அனேகவிதங்களான பெரியபேய்பிசாசுமுதலிய பூதகணங்கள் இருந்தன. பலவகைக்கொடிகளினல்சோபிக்கின்ற அந்தச்சிறந்த ரதத்தை அர்ஜுனன் பிரதக்ஷிணஞ்செய்து, தேவதைகளுக்கும்நமஸ்காரஞ் செய்து, யுத்தஸந்நாஹத்துடன் கவசந்தரித்துக் கத்திபிடித்து மணிக் கட்டில்உடும்புத்தோலாற்செய்த நாண்தழும்பு-யும் விரலுறைகளும் கட்டிக்கொண்டு புண்ணியஞ்செய்தவன் தேவவிமானத்திலேறுவது போல் அந்தத்தேரிலேறினன். முன்னே பிரம்மாவினல்ஸ்ருஷ்டிசெய்யப்பட்டதும் தேவலோகத்ததுமான அந்தக்காண்டீவமென்னும் தனுஸையெடுத்துக்கொண்டபோது அர்ஜுனன் ஸந்தோஷமடைந்தான். வீரனை அர்ஜுனன் முதலில் அக்னியைப்பூஜைசெய்து பிறகு அந்தத்தனுஸையெடுத்துத் தன்பலத்தினல் அதில் நாண்பூட்டினன். பலசாலியான அர்ஜுனனல் அதில் நாண்பூட்டப்படும்போது உண்டானசப்தத்தை எவர்கள் எங்கே கேட்டனரோ அவர்கள்மனமும் அங்கேயே பயமுற்றது. அர்ஜுனன் ரதத்தையும் வில்லையும் அம்புகள்வற்ருதபெருந்தூணிகளையும் அடைந்தபின் அதிகசத்திபெற்று, அக்னிக்குஉதவிசெய்ய உத்ஸாஹமுள்ளவனைன். பிறகு, அக்னி வஜ்ராயுதத்தை நாபியென்றுசொல்லப்பட்ட நடுவாகவுடைய சக்கராயுதத்தையும் தனக்குப்பிரியமான ஆக்னேயாஸ்திரத்தையும் கிருஷ்ணனுக்குக் கொடுத்தான். அப்போது, அவரும் சக்தியுடையவரானர். அப்போது அக்னி கிருஷ்ணனைப்பார்த்து, 'மதுஸூதனரே! இதனல் மானிடரல்லாதவர்களையும் தேவர்கள்முதலியவர்களையும் நீர் யுத்தத்தில் ஜயிப்பது திண்ணம். இதனல் நீர் யுத்தங்களில் மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் பிசாசர்களுக்கும் அஸுரர்களுக்கும் நாகர்களுக்கும் மேலாகவும் அவர்களை ஜயிப்பதில்ஸமர்த்தராகவும் ஆவீர். அதற்குச் சந்தேகமில்லை.' மாதவரே! யுத்தத்தில் சத்துருக்களின்மேலபோடப்போடத் தடுக்கப்படாததாகவே சென்று எதிரிகளைக்கொன்றுவிட்டுத் திரும்பவும் உமதுகைக்கு வந்து சேரும்' என்றுசொன்னன். பிரபுவான வருணனும் அந்தக்கிருஷ்ணனுக்கு இடியைப்போலச்சத்தமுள்ளதும் அஸுரர்களையழிப்பதுமாகிய கௌமோதகியென்னும்பெயருடைய பயங்கரமானகதையைக் கொடுத்தான். அதன்பிறகு, அஸ்த்ரசஸ்திரங்களைநிரம்பஉடையவரும் ரதமும்துவஜமுமுள்ளவருமான கிருஷ்ணர்ஜுனர்கள் ஸந்தோஷத்துடன் அக்னியைப்பார்த்து, 'அக்னிபகவானே! தேவாஸுரர்கள் எல்லாரும் சேர்ந்துவந்தபோதிலும் நாங்கள் யுத்தஞ்செய்யச் சமர்த்

தர்களாயிருக்கிறோம். தக்ஷகனுக்காக யுத்தஞ்செய்யவிரும்புகிற இந்திரன்ஒருவனைமாத்திரம்பற்றிச் சொல்லவேண்டுமா' என்றனர். அர்ஜுனன், 'சக்கரபாணியும் வீரருமாகிய கிருஷ்ணன், யுத்தத்தில் சஞ்சரித்துச் சக்கராயுதத்தைப் பிரயோகஞ்செய்வதனால் எதையும் சாம்பலாகச்செய்வார். ஜனார்த்தனர் செய்யக்கூடாதகாரியம் மூன்று லோகங்களிலும் ஒன்றுமில்லை. அக்னியே! நானும் காண்டீவமென்னும்வில்லையும் அம்புகள்வற்றாததூணிகளையும்எடுத்து யுத்தத்தில்உலகங்களையெல்லாம் ஜயிக்கச் சக்தியுள்ளவனாயிருக்கிறேன். மஹாப்பிரபுவே! இந்தக்காட்டை எல்லாப்புறமுஞ்சூழ்ந்துகொண்டு இப்போதே வேண்டியவளவு நீ ஜ்வலிக்கலாம். உனக்கு உதவிசெய்வதில் நாங்கள் ஸமர்த்தர்களாயிருக்கிறோம். அறியாமையினால் இந்திரன் தேவக்கூட்டங்களுடன் காண்டவவனத்தைக் காப்பாற்றுவதற்கு வருவானாயின், பாணங்களினால் அடிபட்ட அவயவங்களையும் குண்டலங்களையுமுடைய தேவஸேனைகளின் ஹிம்ஸையைக் காண்பான்' என்றுசொன்னான். கிருஷ்ணார்ஜுனர்களால் இவ்வாறுசொல்லப்பட்ட அக்னிபகவான் ஜ்வாலாரூபத்தையெடுத்துக்கொண்டு வனத்தையெரிக்க ஆரம்பித்தான். ஏழுஜ்வாலைகளுடன் அக்னி நாற்புறமும் சூழ்ந்துகொண்டு பிரளயகாலத்தைக்காண்பிப்பவன்போலக் காண்டவவனத்தையெரித்தான். ஜனமேஜயரே! அக்னி அந்தவனத்தைப் பிடித்து உட்புகுந்து மேககர்ஜனையைப்போலக் கர்ஜித்து எல்லாப் பிராணிகளையும் நடுங்கச்செய்தான். ஜனமேஜயரே! எரிக்கப்படுகின்ற அந்தவனத்தின்ரூபம், ஸூரியகிரணங்களினால் வியாபிக்கப்பட்ட மேருமலையின்உருவம்போல விளங்கிற்று.

---

## இருநூற்றைம்பத்திரண்டாவது அத்தியாயம்.

---

### காண்டவதாஹபர்வம். (தொடர்ச்சி.)



(காண்டவவனம் எரிகிறதை அவிப்பதற்காக இந்திரன் மழைபெய்வித்தது.)

தேராளிகளிற்சிறந்தவர்களாகிய அந்தக் கிருஷ்ணார்ஜுனர்களிருவரும் இரண்டுரதங்களிலேறிக் காட்டிற்கு இருபுறமும்நின்றுகொண்டு எல்லாத்திசைகளிலும்பிராணிகளுக்குப் பெரியமரணத்தைச்செய்தனர். காண்டவவனத்தில் வஸிக்கின்றபிராணிகள் ஓடிப்போவதை அந்தவீரர்களிருவரும் எங்கெங்கேகண்டனரோ அங்கங்கேஎதிர்த்தோடினர். விரைவாகஓடுகின்ற அவ்விரண்டுரதங்களின் இடைவெளியை

யாரும் பார்க்கவில்லை. அவ்விரண்டு தேராளிகளுடைய அவ்விரண்டு தேர்களும்ஒன்றோடொன்றுசேர்ந்தனவற்றைப்போற்காணப்பட்டன. காண்டவவனம் எரிக்கப்படும்போது அங்குள்ள அநேகம்பிராணிகள் பயங்கரமானகூச்சலிட்டுக்கொண்டு நாற்புறங்களிலும் மேலே கிளம்பின. அநேகம்பிராணிகள் தேகத்தின் ஒருபாகம் எரிந்தும், சில கொதிப்புற்றும், சில கண்கள்வெடித்தும், சில கைகால்கள்சிதறியும், மற்றும் சில அழிந்தும்போயின. சிலர் பிள்ளைகளையும் மற்றும்சிலர் தாய்தந்தைகளையும் வேறுசிலர் சகோதரர்களையும்கட்டிக்கொண்டு ஸ்நேஹத்தினால் விடமுடியாமல் அங்கேயே மரணமடைந்தனர். இன்னும் அநேகம் பிராணிகள் பற்களைக்கடித்துக்கொண்டு மேலேகிளம்பி அதிகமாகத் துள்ளி மறுபடியும் நெருப்பிலேவிருந்தன. ஆங்காங்கு இறகுகளும் கண்களும் கால்களும் எரிந்துபோய்த் தரையில்விழுந்து துடித்துஇறந்துபோகின்றபிராணிகள் காணப்பட்டன. நெருப்பினால்காய்ச்சப்பட்டுக் கொதிக்கின்றதடாகங்களிலெல்லாம் இறந்துபோன ஆமைகளும் மீன்களும் காணப்பட்டன. அந்தவனத்திலுள்ள வேறுசிலபிராணிகள் எரியும்சரீரங்களோடு பிரளயகாலத்தில் உருவங்களோடுவந்த அக்னிகளைப்போலக் காணப்பட்டன. அர்ஜுனன் மேலேகிளம்பின சில பறவைகளைப் பாணங்களினால் துண்டுதுண்டுகளாகவெட்டி ஜ்வலிக்கின்றஅக்னியில் வீழ்த்தினான். அவை, எல்லா அங்கங்களிலும், பாணங்கள் தைத்துக்கொண்டவைகளாய்ப் பேரிரைச்சலிட்டு, வேகமாக எழும்பித் திரும்பவும் காண்டவவனத்திலேயே விழுந்தன. பாணங்களினால் கூட்டங்கூட்டமாக அடிக்கப்பட்ட காட்டுப்பிராணிகளின் பேரொலி சமுத்திரம்கடைகிறசப்தம்போற் கடுமையாகக் கேட்கப்பட்டது. ஜ்வலிக்கின்ற அக்னியின் பெரியஜ்வாலைகள் ஆகாயத்திற்கிளம்பித் தேவர்களுக்குப் பெரியநடுக்கத்தையுண்டாக்கின. தேவர்களும் ரிஷிகள்முதலியமஹாத்மாக்களும் ஸ்வர்க்கவாஸிகளுமாகிய அனைவரும் அந்தஜ்வாலையினால்சுடப்பட்டு ஆயிரம்கண்களுடையவனும்தேவர்களுக்குப்பிரபுவும் அஸுரர்களைப்பீடிப்பவனுமாகிய இந்திரனிடம் சென்று, 'தேவேசுவரனே! இந்த மனிதர்களெல்லாரும் அக்னியினால் தகிக்கப்படுகின்றனர். இதுஎன்ன? லோகங்களுக்குப்பிரளயம் வராமலிருக்குமா?' என்றுகேட்டனர். ஹரிகளென்னும்குதிரைகளையுடையஇந்திரன் அவர்களுடைய சொல்லைக்கேட்டும் தான் பார்த்தும் காண்டவவனத்தை விடுவிக்கப் புறப்பட்டான். தேவர்களுக்குப்பிரபுவானஇந்திரன் பலவிதமான பெரியதேர்க்கூட்டத்தினால் ஆகாசத்தைமறைத்து மழையைப்பொழிந்தான். அப்போது

இந்திரனால் ஏவப்பட்டமேகங்கள் காண்டவவனத்திற்குநேராகத் தேரச்சின்அளவான நீர்த்தாரைகளை மிகுதியாகப்பொழிந்தன. அந்தத் தாரைகள் அக்கினியின்சக்தியினால் காண்டவனத்திற்படாமல் ஆகாயத்திலேயே வற்றிப்போயின. எவையும் அக்கினியைச் சேரவில்லை. பிறகு, அக்கினியின்மேல் கோபமுற்ற இந்திரன் மறுபடியும் மஹாமேகங்களைக்கொண்டு மிகுதியாக ஜலத்தைவருஷிக்கச்செய்தான். அந்தவனம், அக்னிஜ்வாலைகளும் புகையும் மழைத்தாரைகளும் மின்னலும் மேகங்களும்சேர்ந்து பயங்கரமாயிருந்தது.

---

## இருநூற்றைம்பத்துமூன்றாவது அத்தியாயம்.

---

### காண்டவதாஹபர்வம். (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் மழையைத்தடுத்ததும். தக்ஷகன்மனைவி தன்புத்திரனை விழுங்கியெடுத்துக்கொண்டு கிளம்பும்போது அர்ஜுனன் அவள்தலையை யறுக்க இந்திரன்காற்றுமழையால் அர்ஜுனனை மயங்கச்செய்து தக்ஷகன் புத்திரனைவிடுவித்ததும், ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனரோடு இந்திரன்யுத்தம்செய்ததும்)

பாண்டுபுத்திரனாகிய அர்ஜுனன் உயர்ந்த அஸ்த்ரஸாமர்த்தியத்தைக்காண்பித்து இந்திரன்வருஷித்தமழையைப்பாணவருஷத்தினால் தடுத்தான். அளவிடக்கூடாத மஹிமையையுடைய அர்ஜுனன், சந்திரன்பனியினால்மறைப்பதுபோல அம்புகளினால் காண்டவவனத்தையெல்லாம் மறைத்தான். பாணப்பிரயோகம்செய்தஅர்ஜுனன் பாணங்களால் மேற்பாகத்தை மறைத்தபோது ஒருபிராணியும் அங்கிருந்து வெளிப்படமுடியவில்லை. மஹாபலசாலியான தக்ஷகனென்னும் நாகராஜன் அங்கேயிருக்கவில்லை. அந்தவனம் எரிக்கப்படும்போது அவன் குருக்ஷேத்திரத்திற்குப் போயிருந்தான். பலவானாகிய அசுவஸேனனென்னும் தக்ஷகபுத்திரன் அங்கிருந்தான். அவன் தீயிலிருந்துவிடுவித்துக்கொள்ளப் பெருமுயற்சிசெய்தான்; அவன் அர்ஜுனனுடைய பாணங்களால் தடுக்கப்பட்டு வெளியிற்போகமுடியாமலிருந்தான். அவனை அவனுடையதாயாராகிய நாககன்னிகைவிழுங்கிப் பின்விடுவிக்கத் தொடங்கினாள். அவனுடையதலையை முன்னே விழுங்கினாள். அந்த நாககன்னிகை தன்பிள்ளையைவிடுவிப்பதற்காகவாலைவிழுங்கிக்கொண்டே மேலேகிளம்பினாள். அவள்போகும்போது அர்ஜுனன் அவளுடையதலையைக் கூர்மையும் அகலமுமான முனையுள்ள பாணத்தினால் அறுத்தான். அதை இந்திரன் பார்த்தான். அசுவஸேனனைவிடுவிக்கக்

கருதின இந்திரன் காற்றுமழையினால் அர்ஜுனனை மயங்கச்செய்தான். அந்தக்காலத்தில் அசுவஸேனன்மாத்திரம் விடுபட்டான். (அர்ஜுனன்), அந்தக்கொடியமாயையைக்கண்டு நாகத்தினால் வஞ்சிக்கப்பட்டான். அர்ஜுனன் ஆகாயத்திலிருந்தபிராணிகளை இரண்டுமூன்று துண்டங்களாகத் துணித்தான். அந்த அச்வஸேனனை அர்ஜுனனும் அக்னியும் கிருஷ்ணனும் கோபத்துடன், 'நீ நிலையற்றவனாகப்போகக் கடவாய்' என்று சபித்தனர். பிறகு, அர்ஜுனன் அந்தமோசத்தை நினைத்துக்கோபத்துடன் விரைவாகச்செல்லுகிறபாணங்களினால் ஆகாயத்தைமறைத்து இந்திரனோடு யுத்தஞ்செய்தான். யுத்தத்தில் கோபத்தோடிருந்தஅர்ஜுனனைக்கண்டு இந்திரனும் ஆகாயத்தைமுழுதும் மறைத்துத் தன்னுடையஉக்கிரமான ஐந்திராஸ்திரத்தை விடுத்தான். அப்போது ஆகாயத்திலிருந்து பெரியகோஷத்தோடுகூடியகாற்று சமுத்திரங்களையெல்லாம்கலக்கிக்கொண்டு மழைத்தாரைகளை மிகுதியாக வருஷிக்கின்றவையும் இடிகளையும் மின்னல்களையும் கர்ஜனைகளையுமுண்டாக்குகின்றவையும் பயங்கரங்களுமான மேகங்களையுண்டாக்கிற்று. பிரதிசெய்வதில் ஸமர்த்தனாகிய அர்ஜுனனும் அதைத்தடுப்பதற்காக உடனே வாயுஅஸ்த்ரத்தை மந்திரத்தோடு பிரயோகித்தான். அதனால் இந்திரனுடைய இடிகள் மேகங்கள் இவற்றின்பலமும் ஒளியும் அழிக்கப்பட்டன. அந்தமழைத்தாரைகளெல்லாம் வற்றிப்போயின. மின்னல்கள் மறைந்தன. ஒருநொடியில் ஆகாயத்திலுள்ள கலக்கமும் இருளும் நீங்கின. குளிர்ந்தகாற்று ஸுகமாக வீசிற்று. ஸூர்யமண்டலம் எப்பொழுதும்போலப் பிரகாசித்தது. விரோதம் நீங்கினதனால் ஸந்தோஷமடைந்த அக்னி, பிராணிகளின் தேகங்களிலிருந்து பெருகின கொழுப்புக்களின் பிரவாகங்களினால் நனைக்கப்பட்டுத் தன்சப்தத்தை உலகமெல்லாம் பரவச்செய்துகொண்டு பலவகை ஜ்வாலைகளோடு ஜ்வலித்தது.

ஜனமேஜய மஹாராஜாவே! காண்டவவனம் கிருஷ்ணார்ஜுனர்களால் ரக்ஷிக்கப்படுவதைக்கண்டு கருடன்முதலியபக்ஷிகள் அகங்காரத்துடன் ஆகாயத்தில் பறந்தன. கருடன் வஜ்ராயுதத்துக்கொப்பானசிறகுகளினாலும் மூக்கினாலும் நகங்களினாலும் கிருஷ்ணனையும் அர்ஜுனனையும் அடிப்பதற்கு ஆகாயத்திலிருந்து இறங்கினான். நாகர்கூட்டங்களும் கொடியவிஷத்தைக்கக்கிக்கொண்டு ஜ்வலிக்கின்ற வாய்களுடன் அர்ஜுனன்சமீபத்தில் வந்துவிழுந்தன. அர்ஜுனன் தன் கோபாக்னியோடுகூடினபாணங்களினால் அவற்றைஅறுத்தான். அவை தேகநாசம்வரும்படி அந்தஜ்வலிக்கின்ற அக்கினியில் விழுந்தன.

பிறகு,தேவர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் நாகர்களும் ஒப்பில்லாதஇரைச்சலைச்செய்துகொண்டு இருப்புக்குண்டுகளை உட்கொண்டசக்கரயந்திரங்களையும் கற்களையும் கவண்களையும் கைகளில் ஏந்திக் கிருஷ்ணனையும் அர்ஜுனனையும் கொல்லக்கருதிக் கோபத்தினால் அதிகபராக்கிரமங்கொண்டு யுத்தஞ்செய்யக் கிளம்பினர். அதிகமாகப்பேசி ஆயுதங்களைவருஷித்த அவர்களுடையதலைகளை அர்ஜுனன் கூரியபாணங்களினால் சிதைத்தான். மிகவும் அதிகமான சக்தியுள்ளவரும் சத்துருக்களையழிப்பவருமாகிய வாஸுதேவரும், தைத்தியர்கள் தானவர்களின்கூட்டங்களுக்குப் பெரியஹிம்ஸையைச் செய்தார். அளவற்றபராக்கிரமமுள்ளமற்றுஞ்சிலர் பாணங்களினால் அடிக்கப்பட்டும் சக்கரத்தின்வேகத்தினால் தள்ளப்பட்டும் ஸமுத்திரம் கரையிலடங்கியிருப்பதுபோல அடங்கிநின்றனர். பிறகு, தேவர்களுக்குஈசுவரனும் அஸுரர்களையழிப்பவனுமாகிய இந்திரன் மிகக்கோபித்து வெள்ளையானையிலேறி வஜ்ராயுதத்தைஓங்கிக்கொண்டு கிருஷ்ணார்ஜுனர்களினருகில்ஓடினான். அவன் வேகத்தோடு இடியையெடுத்து வஜ்ரமென்னும் அஸ்திரத்தை விடத்தொடங்கினான். அஸுரர்களை ஸம்ஹரிக்கும் இந்திரன் தேவர்களைப்பார்த்து, 'இவர் இருவரும் இறந்தனர்' என்றுசொன்னான். அப்போது, தேவேந்திரனால் வஜ்ராயுதம்ஓங்கப்பட்டதைக்கண்டு தேவர்களும் தம்தம் அஸ்த்ரங்களையெல்லாம்எடுத்தனர். ஜனமேஜயராஜாவே! யமன் காலதண்டத்தையும், குபேரன்கதையையும், வருணன்பாசத்தையும் விசித்திரமான அசனியென்னும்அஸ்த்ரத்தையும்எடுத்துக்கொண்டனர்.முருகக்கடவுள் சக்தியாயுதத்தையெடுத்துக்கொண்டு மகாமேருவைப்போல் அசையாமல்நின்றனர். அச்விநிதேவர்கள் ஜ்வலிக்கின்றசோதிவிருக்ஷங்களையெடுத்துக்கொண்டனர்.தாதாஎன்னுந்தேவதை வில்லையும், ஜயனென்பவன் உலக்கையையும்,மிகுந்தபலமுள்ள த்வஷ்டாமலையையும் கோபத்துடன் எடுத்துக்கொண்டனர். அம்சனென்னும்தேவதை சக்தியாயுதத்தையும் மிருத்யுவென்னும்தேவதை கோடாலியையும் எடுத்தனர். அரியமனென்பவன் பயங்கரமானபரிகாயுதத்தைஎடுத்து உலாவினான்.மித்ரன்என்பவன் முனையில் கத்தியுள்ளசக்கராயுதத்தை எடுத்துநின்றான். ஜனமேஜயராஜாவே! பூஷாவும் பகனும் ஸவிதாவும் கோபித்து விற்களையும் கத்திகளையும் எடுத்துக் கிருஷ்ணார்ஜுனர்களை எதிர்த்தோடினர். மஹாபலசாலிகளாகிய ருத்திரர்களும் வஸுக்களும் மருத்துக்களும் தங்கள்பராக்ரமத்தினால் பிரகாசிக்கின்ற விசுவேதேவர்களும் ஸாத்தியர்களும் மற்றுமுள்ள அனேக தேவர்களும்

பற்பலஆயுதங்களையெடுத்துப் புருஷோத்தமர்களான கிருஷ்ணார்ஜுனர்களை வதஞ்செய்யக்கருதி எதிர்த்துச்சென்றனர். அந்தப்பெருஞ்சண்டையில் பிரளயகாலத்துக்கொப்பானவையும் பிராணிகளுக்குப் பயங்கரங்களுமான அனேகம்புதியஅபசகுனங்கள் காணப்பட்டன. அவ்வாறு தேவர்களுடன் மிகக்கோபித்துவந்த இந்திரனைக்கண்டு கிருஷ்ணார்ஜுனர்கள் பயமின்றியும் பின்வாங்காமலும் யுத்தத்தில் பகைவர்களால் எதிர்க்கமுடியாதவர்களாக விற்களை வைத்துக்கொண்டு நின்றனர். யுத்தத்திற்குவந்ததேவர்களை யுத்தத்தில்ஸமர்த்தர்களாகியகிருஷ்ணார்ஜுனர்களிருவரும் கோபத்துடன் வஜ்ராயுதங்கள்போன்றபாணங்களினால் அடித்தனர். தேவர்கள் பலமுறை எண்ணம்நிறைவேறாதவர்களாய்ப் பயத்தினால் யுத்தத்தைவிட்டு இந்திரனையே ஆச்ரயித்தனர். கிருஷ்ணார்ஜுனர்களால் தேவதைகள் தடுக்கப்பட்டதைக்கண்டு அங்கே ஆகாயத்திலிருந்த ரிஷிகள் வியப்புற்றனர். இந்திரனும் அவர்களுடையபராக்ரமத்தை யுத்தத்தில்பலமுறைகண்டு மிகுந்த ஸந்தோஷமடைந்து மறுபடியும் அவர்களோடு யுத்தஞ்செய்தான். அப்போது, இந்திரன் அர்ஜுனனுடைய முன்னிலும் அதிகமானபராக்கிரமத்தை அறியவிரும்பி மிகப்பெருங்கல்மழையைப்பொழிந்தான். அர்ஜுனன் மிகுந்தகோபத்துடன் அந்தக்கல்மழையைப் பாணங்களினால் தடுத்தான். அதுவும் வீணாகச்செய்யப்படுவதைப் பார்த்து இந்திரன் மறுபடியும் அந்தக்கல்மழையையே அதிகப்படுத்தினான். இந்திரபுத்திரனான அர்ஜுனன் தன்பிதாவான இந்திரனைச் சந்தோஷப்படுத்துவதற்காக மஹாவேகமுள்ள அம்புகளினால் அந்தக்கல்மழையை அழித்தான். பிறகு, இந்திரன் மந்தரபர்வதத்திலிருந்து மரங்களுடன்கூடிய ஒருபெருஞ்சிகரத்தை இருகைகளினாலும்பெயர்த்து அர்ஜுனனைக்கொல்வதற்காக அதனை அவன்மேலெறிந்தான். பிறகு, அர்ஜுனன் மிகுந்தவேகமுள்ளவையும் ஜ்வலிக்கின்றமுனைகளுள்ளவையும் நேராகச்செல்கின்றவையுமானபாணங்களினால் மந்தரமலையின்சிகரத்தை ஆயிரம்துண்டுகளாக நாசஞ்செய்தான். அந்த மலை சிதறும்போது அதன்உருவம், ஸூர்யசந்திரர்களோடும் நவக்கிரகங்களோடுங்கூட ஆகாசம் சிதறிவிழுவதுபோலிருந்தது. அந்தமலையின் பெருங்கொடுமுடி காட்டில்விழுந்ததனால் அந்தக் காண்டவவனத்திலிருந்த பிராணிகள் கொல்லப்பட்டன.

காண்டவதாஹபர்வம் முற்றிற்று.

---

## இருநூற்றிருபத்துநான்காவது அத்தியாயம்.

---

# மயதர்சனபர்வம்.



(தேவர்கள் இந்திரனோடுகூடி கிருஷ்ணார்ஜுனர்களோடு யுத்தம்செய்ய முயன்றதையும் அசரீரிவாக்கினால் அறிந்த தேவேந்திரன் யுத்தஞ் செய்யாமற்போனதும், அப்போது தப்பியோடும்மயனைக் கிருஷ்ணன் கொல்ல ஆரம்பிக்கையில் அவன் சரணாகதி செய்ததால் அர்ஜுனன் அவனை ரக்ஷித்ததும்.)

அவ்வாறு, மலைகள் வீழ்ந்ததனால் பயமுறுத்தப்பட்ட காண்டவ வனத்தில் வசித்த அநேகம் அஸுரர்களும் ராக்ஷஸர்களும் நாகர்களும் சிறுத்தைகளும் கரடிகளும் காட்டு மனிதர்களும் மதயானைகளும் புலிகளும் முகமயிர்களோடுகூடிய சிம்மங்களும் மான்களும் எருமைகளும் பறவைகளும் இன்னும் அநேகம் பேய்பிசாசு ஜாதிகளும் மருண்டோடின. அவைகள் அந்தக் காட்டுத்தீயையும் ஆயுதபாணிகளாகிய கிருஷ்ணார்ஜுனர்களையும் பார்த்தன; பிரளயகாலசப்தம் போன்ற சப்தத்தினால் பயமுறுத்தப்பட்டன. அவைகள் அநேக இடங்களிற் சொருகப்படும் வனத்தையும் ஆயுதத்தைத் தரித்துக்கொண்டிருக்கும் கிருஷ்ணனையும்கண்டு பேரிரைச்சலிட்டன. அந்தப் பயங்கரமான இரைச்சலாலும் அனலின் சத்தத்தினாலும் பிரளயகால கர்ஜனைபோல ஆகாயமெல்லாம் கர்ஜித்தது. அப்போது சிறந்தகைகளையுடைய கிருஷ்ணன் ஒளியினால் பிரகாசிக்கின்ற அதியுக்கிரமான மஹாசக்கரத்தை அவைகளையழிப்பதற்குப் பிரயோகித்தார். அஸுரர் பிசாசுகள் முதலிய அற்பஜாதிகளெல்லாம், பயந்து அந்தச்சக்கரத்தினால் நூறு துண்டுகளாக வெட்டப்பட்டு ஒருகொடியிலே தீயில்விழுந்தன. கிருஷ்ணனுடைய சக்கரத்தினால் வெட்டப்பட்டுக் கொழுப்பும் இரத்தமும் உடம்பெல்லாம் பூசியிருக்கும் அந்த அஸுரர்கள் அங்கே மாலைக்காலச் செம்மேகங்களைப்போலக் காணப்பட்டனர். ஜனமேஜயரே! அங்கே கிருஷ்ணன் ஆயிரக்கணக்கான நாகங்களையும் மிருகங்களையும் யமனைப்போலக்கொன்றுகொண்டு நடந்தார். சக்கரமானது ஒவ்வொரு தடவைபோடப்படும்போதும் அநேகம் பிராணிகளை வெட்டிச் சத்துருக்களை அழிம்வலிப்பவராகிய கிருஷ்ணனுடையகையில திரும்பத்திரும்ப வந்தது. அவ்வாறு, பிசாசர்களையும் நாகர்களையும் ராக்ஷஸர்களையும் கொல்லுகின்றவரும் எல்லாபிராணிகளுக்கும் ஆத்மாவுமாகிய கிருஷ்

ணனுடையரூபம் மிகப்பயங்கரமாயிருந்தது. ஒன்றுசேர்ந்த எல்லா அஸுரர்களிலும் கிருஷ்ணார்ஜுனர்களை யுத்தத்தில் ஜயிப்பவன் ஒருவனும்இல்லை. அந்தக்கிருஷ்ணார்ஜுனர்களுடையபலத்தில் அகப்பட்ட பிராணிகளைக் காப்பாற்றவும் அந்தக் காட்டுத்தீயை அவிக்கவும் எப்போது தேவர்களால் முடியவில்லையோ அப்போது திரும்பிப்போயினர். ஜனமேஜயராஜாவே! அவ்வாறு திரும்பி ஓடின தேவர்களைக் கண்டு மகிழ்வுற்ற இந்திரன் கிருஷ்ணார்ஜுனர்களைச் சிலாகித்துக் கொண்டிருந்தான். தேவர்கள் திரும்பிப்போயினபின் மிக்க கம்பீரத்வனியுடைய ஓர் அசரீரிவாக்கு இந்திரனை விளித்து, 'உன்னுடையஸ்நேகிதனான தக்ஷகனென்னும் நாகராஜன் இங்கில்லை. காண்டவவனத்தையெரிக்கும்போது அவன் குருக்ஷேத்திரம்சென்றான். இந்திரனே! எவ்வகையிலும் இந்தக் கிருஷ்ணார்ஜுனர்களை யுத்தத்தினால் ஜயிப்பதுமுடியாதென்பதை என்சொல்லினால் தெரிந்துகொள். இவர்கள் ஆதிதேவர்களாகத் தேவலோகத்தில் கியாதிபெற்ற நரநாராயணர்கள் அவர்களுடையவன்மையையும் பராக்ரமத்தையும் நீயும்அறிவாய். பிறரால்வெல்லமுடியாதவர்களும் இதற்குமுன்வெல்லப்படாதவர்களுமான இவர்களோடு யுத்தஞ்செய்யமுடியாது. புராணபுருஷர்களும் ரிஷிச்ரேஷ்டர்களுமாகிய இவர்கள் எல்லாஉலகங்களிலும் தேவர்கள், அஸுரர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், கந்தர்வர்கள், மனிதர்கள், கின்னரர்கள், நாகர்கள் முதலிய எல்லாராலும் பூஜிக்கப்படுவதற்குரியவர்கள். இந்திரா! அதனால், தேவர்களுடனுங்கூட நீ இதை விட்டுப் போவது தகுதி. இந்தக்காண்டவவனம் அழிவது விதியினால் நேர்ந்ததென்றும் அறியக்கடவாய்' என்று சொல்லிற்று. தேவேந்திரன் இந்த வாக்கைக்கேட்டு உண்மையென்றறிந்து கோபத்தையும் பொறாமையையும்விட்டு ஸ்வர்க்கத்திற்குப்போனான். ஜனமேஜயராஜாவே! மஹாத்மாவான இந்திரன் போகக்கண்டு தேவர்கள் சேனையுடன் அவன்பின்னே சென்றனர். தேவராஜன் தேவர்களுடன்கூடப் போவதைப்பார்த்து வீரர்களான கிருஷ்ணார்ஜுனர்கள் ஸிம்மநாதஞ்செய்தனர். ஜனமேஜயராஜாவே! இந்திரன் போனபின், வீரர்களாகியகிருஷ்ணார்ஜுனர்கள் ஸந்தோஷத்துடன் விசாரமின்றி வனத்தை எரிப்பித்தனர். அந்த அர்ஜுனன் மேகங்களைக் காற்று ஓட்டுவதுபோலத் தேவர்களையோட்டிக் காண்டவவனத்திலுள்ள பிராணிகளைச்சரக்கூட்டங்களினால் அடித்தான். பாணப்பிரயோகஞ்செய்யும் ஸவ்யஸாசியின் பாணங்களினால் சேதிக்கப்பட்டு ஒருபிராணியும் அங்கிருந்து வெளிப்படமுடியாமறபோயிற்று. யுத்தத்தில் விண்போகாத அஸ்திரங்களைப்

பிரயோகிக்கின்ற அர்ஜுனனை ராக்ஷஸர்முதலிய மஹாபூதங்களும் கண்ணெடுத்துப்பார்க்கவும் முடியவில்லை; போர்க்களத்தில் யுத்தஞ்செய்வதேது? ஒருபாணத்தினால் நூறுபிராணிகளையும் அடித்தான், நூறுபாணங்களினால் ஒருபிராணியையும் அடித்தான். அந்தப் பிராணிகள் நேரேவந்த யமனாலேயே கொல்லப்பட்டவைபோல உயிர்போய் அக்னியில் வீழ்ந்திறந்தன. அவைகள் ஜலக்கரைகளிலும் மேடுபள்ளங்களிலும்ஒளிந்தும் ஸுகத்தையடையவில்லை. பிதிர்லோகங்களிலும் தேவலோகங்களிலுங்கூடக் கொதிப்புண்டாயிற்று. அனேகம்பிராணிக்கூட்டங்கள் துயரமுற்றுப்பெருஞ்சத்தம்செய்தன. யானைகளும் மான்களும் புலிகளும் கதறின. அச்சசப்தத்தினால் கங்கையிலும் ஸமுத்திரத்திலுமுள்ள மத்ஸ்யங்களும் வித்யாதரக் கூட்டங்களும் மற்றும்அந்தவனத்திலுள்ளபிராணிகளும் பயந்தன. சிறந்தகைகளையுடைய ஜனமேஜயரே! ஒருப்ராணியும் அர்ஜுனனையும் கிருஷ்ணனையும் பார்ப்பதற்குக்கூடமுடியவில்லை; யுத்தம்செய்வதேது? ஒருமார்க்கமாக அந்தவனத்திலிருந்து வெளிப்பட்டராக்ஷஸர்களையும் அஸுரர்களையும் நாகர்களையும் வாஸுதேவர் சக்கராயுதத்தினால் கொன்றார். அவர்கள் சக்கரத்தின்வேகத்தினால் தலைகளும் உடல்களும் அறுபட்டு உயிர்துறந்தனர். மற்றுமுள்ளபெரியதேகமுள்ளவர்கள் ஜ்வலிக்கின்ற தீயில்விழுந்திறந்தனர். மாம்ஸங்களோடுகூடிய ரத்தப்பிரவாகங்களினாலும் கொழுப்புக்களினாலும் திருப்திசெய்யப்பட்ட அக்னி ஆகாசம்வரையில் மேல்எழுந்து புகையற்றதாயிருந்தது. ஜ்வலித்தகண்களும் ஜ்வலிக்கின்றநாவும் ஜ்வலிக்கின்ற பெரியவாயும் ஜ்வலித்துநெறித்திருக்கும்கேசங்களுமுடைய அக்னிபகவான் பிராணிகளின்கொழுப்பைக் குடித்துக்கொண்டிருந்தான். கிருஷ்ணார்ஜுனர்களால்கொடுக்கப்பட்ட அந்த அமுதத்தைப்பெற்று அக்னி ஆனந்தத்தையும் திருப்தியையும் பெரியஸுகத்தையும் அடைந்தான்.

அப்படியிருக்கையில், மயனென்னும்அஸுரன் தக்ஷகனுடைய வீட்டிலிருந்து வேகமாகஓடுவதை வாஸுதேவர் கண்டார். வாயுவைச் சாரதியாகவுடையஅக்னி, சரீரமெடுத்து ஜடைதரித்து மேகம்போற் கர்ஜித்து அவனைக்கொளுத்தவதற்காகக் கிருஷ்ணனிடம்கேட்டுக்கொண்டான். அவன் அஸுரராஜாக்களின் சிற்பவேலைக்காரிற்சிறந்தவனை மயனென்றறிந்து கிருஷ்ணபகவான் அவனைக்கொல்வதற்குச் சக்கரத்தைஓங்கினார். ஓங்கினசக்கரத்தையும் எரிக்கவிரும்பும்அக்னியையும்கண்டு அந்தமயன், 'அர்ஜுனா! ஓடிவா' என்றும், 'என்னைக்காப்பாற்று' என்றும்சொன்னான். ஜனமேஜயரே!

அவனுடைய மருண்டசத்தத்தைக்கேட்டுத் தனஞ்ஜயன், பேச்சினு லேயே அவனைப்பிழைப்பிக்கிறவன்போலப் 'பயப்படாதே' என்று மறுமொழிகூறினான். தயைமிகுதியாகவுடைய அர்ஜுனன் 'பயப் படாதே'யென்றுசொல்லி மயனுக்குஅபயம்கொடுத்தபிறகு, நமுசியின் ஸஹோதரனான மயனைக்கொல்வதற்குக் கிருஷ்ணனும் கருதவில்லை. அக்னியும் தகிக்கவில்லை. புத்திமானாகிய அக்னிபகவான் கிருஷ்ணார்ஜுனர்களால் இந்திரனிடமிருந்து ரக்ஷிக்கப்பட்டு, அந்தவனத்தைப் பதினைந்துநாள் எரித்தான். அந்தவனம் எரிக்கப்படும்போது அசுவ ஸேனன், மயன், நான்கு சார்ங்ககமென்னும்பக்ஷிகள் இவ்வாறு வரைமட்டும் அக்கினி தகிக்கவில்லை.

---

## இருநூற்றைம்பத்தைந்தாவது அத்தியாயம்.

---

### மயதாசனபர்வம். (தொடர்ச்சி.)



(சார்ங்ககங்களை அக்னி தகிக்காமலிருந்ததற்குக் காரணத்தை ஜனமே ஜயர் கேட்க, வைசம்பாயனர் அவை மந்தபாலரிஷியிடத்தினின்று பிறந்தவையென்றும் தம்குஞ்சுகளைக்காப்பாற்றும்படி அக்னியிடம் அவர் வரம்பெற்றாரென்றும் சொல்லியது.)

ஜனமேஜயர், "பிராம்மணரே! அந்தவனம் எரிக்கப்பட்டு அவ்வாறானபோது, சார்ங்ககங்களை அக்னி ஏன்கொளுத்தவில்லை? இதனை எனக்குச்சொல்லுங்கள். அசுவஸேனனையும் அஸுரனாகிய மயனையும் கொளுத்தாமைக்குக் காரணம்சொல்லப்பட்டது. பிராம்மணரே! சார்ங்ககங்களைக்கொளுத்தாமைக்குக் காரணம் சொல்லப்படவில்லை. பிராம்மணரே! சார்ங்ககங்களுக்குத் தீங்கில்லாமலிருந்தது ஆச்சரியம். பெரிய அக்னியின் மிக்க உபத்திரவத்தில் அவை எவ்வாறு அழிக்கப் படாமலிருந்தன என்பதைச்சொல்லுங்கள்" என்றுகேட்க, வைசம் பாயனர் சொல்லுகிறார்.

"வீரரே! அவ்வாறு நடந்தபோது சார்ங்ககங்களைமட்டும் அக்னி தகிக்காமலிருந்தகாரணத்தை முழுதும் நடந்தபடி உமக்குச் சொல்வேன். தர்மம்தெரிந்தவர்களில்முதன்மையானவரும் ஆத்மத் தியானமுள்ளவரும் உறுதியான வியமுள்ளவரும் சாஸ்திரஜ்ஞானமுள்ளவருமாகிய மந்தபாலரென்னும்பெயருள்ள மஹரிஷி ஒருவரிருந்

[illegible]

தார். அரசரே! வேதமெல்லாமோதினவரும் கர்மத்தில் ஊக்கமுள்ளவரும் ஆத்மநிஷ்டரும் ஐம்புலன்களையுமடக்கினவருமாகிய அவர் ஊர்த்வரேதஸ்களான ரிஷிகளுடையமார்க்கத்திலிருந்தார். ஜனமேஜயரே! அவர் தவத்தின்கரையையடைந்து தேகம்விட்டபிறகு பித்ருலோகத்திற்குச்சென்றார். அங்கே தவப்பயனையடையவில்லை. அவர் தமதுதவத்தினால்ஜயிக்கப்பட்டஉலகங்கள் பயன்படாமற்போனதைக் கண்டு யமனுடையஸமீபத்திலிருந்த தேவர்களைப்பார்த்து, 'என்னுடையதவத்தினால்ஸம்பாதிக்கப்பட்ட இந்தஉலகங்கள் ஏன் மூடப்பட்டிருக்கின்றன? இந்தஉலகங்களின்பலனைத்தராதிருக்க எந்தக்கருமத்தை நான்செய்யாமற்போனேன்? எதற்காக இந்தஉலகங்கள் மூடப்பட்டிருக்கின்றன? அதனை, நான்முன்னிருந்த அந்தஉலகத்திற்செய்வேன். தேவர்களே! சொல்லுங்கள்' என்றுகேட்டனர். அதைக்கேட்டதேவர்கள், 'பிராம்மணரே! மனிதர்கள் பிறக்கும்போதே எதனாற்கடன்காரராகப்பிறக்கிறாரென்பதைச் சொல்லுகிறோம்; கேளும். சாஸ்திரோக்தகருமங்களைச்செய்வது, பிரம்மசரியமிருப்பது, ஸந்ததியுண்டாக்குவது இம்மூன்றுகடன்கள் நிச்சயமானவை. அந்தக் கடன்களெல்லாம் முறையே யாகம்செய்வதனாலும் குருகுலவாஸஞ்செய்வதனாலும் ஸந்ததியுண்டாக்குவதனாலும் நிவிருத்திசெய்யப்படவேண்டும். நீர் பிரம்மசாரிவிரதமும்இருந்தீர்; யாகங்களுஞ் செய்தீர். ஆனால், உமக்குச் சந்ததிமட்டும்இல்லை. உமக்குச் சந்ததியில்லாமைபற்றி இந்தஉலகங்கள் மூடப்பட்டிருக்கின்றன. ஆதலால், சந்ததியையுண்டுபண்ணும்; இந்தஉலகங்களைப் பூர்ணமாக அனுபவிப்பீர். 'புத்என்னும்நரகத்திலிருந்துபிதாவைக்காப்பாற்றுகிறான்' என்பதனால் புத்ரனென்றுபெயர். பிராம்மணச்ரேஷ்டரே! ஆதலால், புத்ரஸந்தானமுண்டாக்குவதற்கு முயற்சிசெய்யும்' என்றனர். அப்படி அந்தத்தேவர்கள்சொன்னதைக்கேட்டு, மந்தபாலரிஷி, 'எந்தஜன்மத்தில் அதிகஸந்ததிகள் சீக்கிரத்தில் உண்டாகும்' என்று ஆலோசித்தார். அவர் சிந்திக்கும்போது பறவைகளுக்குக் குஞ்சுகள் அதிகமென்றறிந்தார். சார்ங்கபக்ஷிரூபமெடுத்து ஜரிதையென்னும்பெயருள்ள பெண்சார்ங்கிகையை அடைந்தார். அதனிடம் வேதங்களையோதுகின்றவரான நான்குபுத்திரர்களையுண்டாக்கினார். அந்தப் புத்திரர்களைச் சிறுகுஞ்சுகளாக முட்டைகளிலிருந்தபடியே தாயாருடன்கூட அவ்வனத்திலேயே விட்டுவிட்டு லபிதையென்னும்மற்றொருபறவையிடஞ்சென்றார். ஜனமேஜயரே! அந்தமஹானுபாவர் லபிதையிடம்போனபோது, தன்பிள்ளைகளிடம் அன்புவைத்தஜரிதை

பலவகையாகச் சிந்தித்தது. விட்டதகாத ரிஷிகளானபுத்திரர்கள் முட்டையிலிருக்கும்போதே அவராற்காட்டில்விடப்பட்டபிறகும் புத்திரசோகத்தினால் துயரமுற்றஜரிதை தன்பிள்ளைகளைக் காண்டவவனத்தில் விடவில்லை. நேசத்தினால் மனமிரங்கின ஜரிதை முட்டையிலிருந்துபிறந்த அந்தப்பிள்ளைகளைத் தனதுஆகாரத்தினால் வளர்த்தது. அதன்பிறகு, காண்டவவனத்தைக்கொளுத்தவருகின்ற அக்னியை லபிதையுடன் வனத்திற்சஞ்சரித்துக்கொண்டிருந்த மந்தபாலரிஷி கண்டனர். பிரம்மஜ்ஞானியாகிய அந்தப்பிரம்மரிஷி அக்னியினுடைய அந்தஎண்ணத்தையும் சிறுவரான தமதுபுத்திரர்களையும் நினைத்துப் பயத்துடன் புத்திரர்களைப்பற்றிச் சொல்லிக்கொண்டே திக்பாலகனும் மஹாமஹிமையுள்ளவனுமாகிய அக்கினியைத் துதித்தார். அதன் பொருளாவது:—'அக்னியே! நீஎல்லாஉலகங்களுக்கும் முகம். நீஹோமம் செய்தவற்றை வஹிப்பவன். பரிசுத்தம்செய்பவனே! எல்லாப்பிராணிகளுள்ளும் நீமறைந்துஸஞ்சரிக்கிறாய். பிரம்மஞானமுள்ளவர்கள் உன்னை ஒருவனென்றும் சொல்லுகின்றனர்; *மூன்றுவிதமாகவும் சொல்லுகின்றனர்; உன்னை † எட்டு மூர்த்திகளாகப்பகுத்து யஜ்ஞங்களை நடத்துகிறவனாகச் செய்திருக்கின்றனர். இந்தஉலகமெல்லாம் உன்னால் படைக்கப்பட்டதென்று மஹரிஷிகள் சொல்லுகின்றனர். அக்னியே! நீஇல்லாமற்போனால் உலகமெல்லாம் உடனே அழிந்துபோம். பிராம்மணர்கள் உனக்கு நமஸ்காரம்செய்துதான் தங்கள்நல்வினைகளால்ஜயிக்கப்பட்ட அழிவில்லாத மேற்கதிக்கு மனைவிமக்களுடன் போகின்றனர். அக்னியே! ஆகாயத்தில் மின்னலுடனிருக்கின்ற மேகங்களும் நீயேயென்று சொல்லுகின்றனர். உன்னிடத்திலிருந்து புறப்பட்ட ஜ்வாலைகள் எல்லாப்பொருள்களையும் எரிக்கின்றன. மிகுந்தஒளியுள்ள அக்னியே! இவ்வுலகம் உன்னாலேதான் படைக்கப்பட்டது. ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமாகிய யாவும் உன்செய்கைகளினால் உண்டாக்கப்பட்டவை. முதலில் ஜலத்தைப்படைத்தவன் நீ. இவ்வுலகமெல்லாம் உன்னிடத்திலிருப்பது. ‡ ஹவ்யமும், § கவ்யமும் உன்னிடத்திலேதான் சாஸ்திரப்படி வைக்கப்படுகின்றன. நீயே எரிப்பவன்; நீதான் படைப்பவன்; நீதான் பிரம்மா; நீதான் பிருஹஸ்பதி; இருவராகிய அசுவினிதேவர்களும் நீயே. ஸூர்யனும்

* 1. ஆகாயத்திலே மின்னல்; 2. பூமியிலே தீ; 3. பிராணிகளிடத்தில் ஜடராக்கினி.

† பூமி, ஜலம், தேயும், காற்று, ஆகாயம், ஸூர்யன், சந்திரன், யாகம் செய்கிறவன் என்று எட்டுவகை.

‡ தேவதைகளுக்குச்செய்யும் ஹோமம். § பிதிர்க்களுக்குச் செய்யும்ஹோமம்.

நீயே. சந்திரனும் நீயே, வாயுவும் நீயே' என்பது. வேந்தரே! அந்தமந்தபாலரால் இவ்வாறு துதிசெய்யப்பட்ட அக்னி, அப்போதே, அளவற்றதேஜஸுள்ள அந்தரிஷியின் விஷயத்தில் ஸந்தோஷமடைந்தான். அவன், 'உமக்கு என்னவிருப்பத்தை நான் செய்யவேண்டும்' என்று மனமகிழ்ந்து அவரைக் கேட்டான். மந்தபாலர் கைகூப்பி அந்த அக்னியைப்பார்த்து 'காண்டவவனத்தைக் கொளுத்தும்போது என்புத்திரர்களை விட்டுவிடவேண்டும்' என்றுகேட்டுக்கொண்டார். அக்னிபகவான், 'அஃது அப்படியே ஆகட்டும்' என்று வாக்குத்தத்தஞ்செய்ததனால் அந்தக்காலத்தில் காண்டவவனத்தில் சார்ங்ககங்களை எரிக்கவில்லை.

---

## இருநூற்றைம்பத்தாறுவது அத்தியாயம்.

---

### மயதர்சனபர்வம். (தொடர்ச்சி.)



(மந்தபாலர்மனைவியாகிய ஜரிதையென்பவளும் பாஷிக்கும் அதன் குஞ்சுகளாகிய நான்குசார்ங்ககங்களுக்கும் நடந்த ஸம்பாஷணை.)

அந்தக்காண்டவவனத்தில் தீப்பற்றியெரியும்போது, மிகத்துயரமுற்றவையும் துணையற்றவையும் மிகப்பதைத்தவையுமான அந்தச் சார்ங்ககங்கள் தப்பிக்கும்உபாயத்தையறியவில்லை. இளங்குழந்தைகளைப் பார்த்து அவற்றின்தாயும் ஏழையுமான ஜரிதை, பிள்ளைகளின் வ்யஸனத்தைக்குறித்துத் துயரமுற்று கண்ணீர்விட்டுப் புலம்பிற்று. 'உலகத்தையெல்லாம்எரிப்பதும் என்துக்கத்தை விருத்திசெய்வதுமாகியஇந்தப்பயங்கரமான அனல் காட்டையெரித்துக்கொண்டுஇதோ என்னிடம்வருகிறதே. மனத்தில்தைரியமில்லாதவையும் சிறகும்கால்களுமில்லாதவையும்நமதுமுன்னோர்களுக்கு ஆதாரமான ஸந்ததிகளாயிருப்பவையுமான இந்தக் குஞ்சுகள் என்னைத் துயரப்படுத்துகின்றன. இந்த அக்னி அடிக்கடி ஜ்வாலையால் மரங்களை வளைத்துப் பயமுறுத்திக்கொண்டு வருகிறது. என் பிள்ளைகள் சிறகுமுளையாதவை. குஞ்சுகளை நானே தூக்கிக்கொண்டு தாண்டத் திறமையில்லாதவள். அவைகளை விடவும் முடியவில்லை. என் உள்ளம் கொதிக்கின்றது. நான் எந்தப்பிள்ளையை விடுவேன்; எந்தப் பிள்ளையை எடுத்துக்கொண்டுசெல்வேன். பிள்ளைகளே! நான் என்னசெய்யலாம். செய்தபிறகு நீங்கள் என்ன நினைப்பீர்கள். உங்களை விடுவிப்பதைப்பற்றி யோசித்தும் எனக்கொன்றும் தெரியவில்லை. உங்களை என் அங்

கத்தினால் மறைத்துக்கொண்டு உங்களுடன்கூட இறக்கப்போகி றேன். 'ஜரிதாரியென்னும் புத்ரன் ஜ்யேஷ்டனாதலால் இந்தக் குலத் திற்கே அவன் ஆதாரம். ஸாரிஸ்ருக்வன் தன் பிதிர்வம்சத்தை ஸந் ததியினால் விருத்திசெய்யும்படியானவன். ஸ்தம்பமித்ரன் தவஞ்செய் பவன். த்ரோணன் பிரம்மஜ்ஞானிகளிற் சிறந்தவன்' என்று முன்னே உங்கள் பிதா சொல்லிவிட்டுத் தயையில்லாமல் போய்விட்டார். உங் களில் யாரையெடுத்துக்கொண்டு போகமாட்டுவேன். இது பெருங் கஷ்டமான ஆபத்து. எதைச்செய்தால் செய்யவேண்டியதைச் செய்த தாகும்' என்று கவலைப்பட்டுக்கொண்டு தன்புத்தியினால் தீயிலிரு ந்து தன்பிள்ளைகளை விடுவிக்க வகையறியாமலிருந்தது.

இவ்வாறு சொல்லுகின்ற தாயைப்பார்த்து அந்தச் சார்ங்கக பக்ஷிகள், 'தாயே! எங்களிடமுள்ள ஸ்நேஹத்தைவிட்டு அக்னியில் லாமலிருக்கிற இடத்திற்குப் பறந்துபோ. நாங்கள் இங்கேயிறந்தாலும் உனக்குப் பிள்ளைகளுண்டாகும். அம்மா! நீ இறந்தால் நம்முடைய குலத்திற்குச் சந்ததியுண்டாகாது. அம்மா! இவ்விரண்டையும் ஆரா ய்ந்து எது நமது குலத்திற்கு க்ஷேமமாயிருக்குமோ அதைச்செய்ய இதுதான் உனக்கு முக்கியமானகாலம். எல்லாமழிந்துபோகும்படி பிள்ளைகளாகிய எங்களிடத்தில் நீ ஸ்நேஹம் பாராட்டாதே. புண்ய லோகங்களை விரும்பின எங்கள்பிதாவினுடைய இந்தஆரம்பம் வீணா காமலிருக்கவேண்டும்' என்றுசொல்லின. அதற்கு ஜரிதை, 'பிள்ளை களே! இந்த மரத்தினருகில் பூமிக்குள் இதோ ஓர் எலிவளை இருக் கிறது. சீக்கிரமாக இதில் நுழையுங்கள். இதில் உங்களுக்கு அக்னி பயமிராது. பிறகு, நான் இந்தவளையைப் புழுதியினால் மூடிவிடுகி றேன். இவ்வாறுசெய்வதுதான் ஜ்வலிக்கின்ற அக்னிக்குப் பரிகார மென்று நான் நினைக்கிறேன். அக்னிஅவிந்தபிறகு இந்தப்புழுதிக் குவியலை விலக்குவதற்கு நான் வருவேன். அக்னியிலிருந்து தப்பித் துக்கொள்வதற்கு இந்த என்சொல்லைக்கேளுங்கள்' என்றுசொல் லிற்று. சார்ங்ககங்கள், 'மாமிசம்தின்னும் எலி சிறகுமுளைக்காத எங்களை மாமிசங்களாகத்தின்று அழித்துவிடும். இந்தப்பயத்தை அறிந்திருந்தும் எலிவளையில் நாங்கள் புகமாட்டோம். எங்களை அக்னி கொளுத்தாமலும், எலி அழிக்காமலும் இருப்பதெவ்வாறு? பிதா வினுடைய கொள்கை எப்படி வீணாகாமலிருக்கும்? எங்கள் தாயும் எப்படிப்பிழைத்திருப்பாள்? வளையிற் புகுந்தால் எலியால் நாசம்; ஆகாயத்திற்பறந்தால் அக்னியால் நாசம். இவ்விரண்டையும்பார்க்கும் போது அக்னியில் எரிந்துபோவது சிறந்தது. எலி தின்பது தீது. வளை

க்குள் எலியால் தின்னப்பட்டால் இழிவானமரணம் வரும். சிலாக்கியமான அக்னியில் சரீரத்தைவிடுவது நமக்கு விருப்பம். அக்னியிலெரிந்தால் பிரம்மலோகத்தில் சாச்வதமான வாஸம் நிச்சயம்' என்றன.

## இருநூற்றைம்பத்தேழாவது அத்தியாயம்.

### மயதர்சனபர்வம். (தொடர்ச்சி.)



(தான்சொன்னதைக் குஞ்சுகள் அங்கீகரிக்காமையால் ஜரிதை வேறிடம் சென்றது.)

ஜரிதை, 'இந்தவளையிலிருந்து வெளிப்பட்ட அந்தத் துஷ்ட எலியைப் பருந்து கால்களினால் இடுக்கி எடுத்துக்கொண்டுபோய்விட்டது. இதில் உங்களுக்குப் பயமில்லை' என்றுசொல்ல, சார்ங்ககங்கள், 'அந்த எலியைப் பருந்துகொண்டுபோனதை நாங்கள் எவ்வகையிலும் அறியோம். வேறு எலிகளும் இங்கே இருக்கும். அவற்றினிடமும் எங்களுக்குப் பயந்தான், தீ வருவது ஸந்தேஹம். காற்று திரும்பியடிப்பதைப் பார்க்கிறோம். வளையிற்போனால் வளையிலிருப்பவற்றினால் எங்களுக்கு மரணம் வருமென்பது நிச்சயம். தாயே! நிச்சயமான மரணத்தைப்பார்க்கிலும் ஸந்தேஹப்பட்ட மரணம் சிறந்தது. நீ வழக்கப்படி ஆகாயத்திற்பற; நல்லபுத்திரர்களையடையலாம்' என்றன. ஜரிதை, 'குழந்தைகளே! மிகுந்த பலமுள்ளதும் பறவைகளிற் சிறந்ததுமாகிய அந்தப்பருந்து அந்த வளையிலிருந்து எலியைத் தூக்கிக்கொண்டு வேகமாகப் போனதை நான்கண்டேன். அது பறந்து போகும்போது, வளையிலிருந்து எலியைக் கொண்டுபோகும் பருந்துக்கு, 'பருந்தரசே! எங்களுக்கு விரோதியான எலியையெடுத்துக்கொண்டு பறக்கிற நீ பகைவர்களில்லாமல பொன்மயமான சரீரத்தோடு ஸ்வர்க்கத்தை அடைந்திருக்கக் கடவாய்' என்று ஆசீர்வாதங்களைச்சொல்லிக்கொண்டு மிகுந்தவேகத்துடன் பின்சென்றேன். அந்த எலி அந்தப்பருந்தினால் எப்போது தின்னப்பட்டதோ அப்போது அந்தப்பருந்தினிடம் விடைபெற்றுக்கொண்டு மறுபடியும் வீடுவந்துசேர்ந்தேன். புத்திரர்களே! சிந்தைப்படாமல் வளையில் புகுங்கள். உங்களுக்குப் பயமில்லை, நான்பார்த்திருக்கையில் மஹாதைரியமுள்ள பருந்தினால் எலி கொண்டுபோகப்பட்டது' என்று * * * சொல்லிற்று. சார்ங்ககங்கள், 'தாயே! பருந்தினால் எலி கொண்டுபோகப்பட்டதை நாங்கள் எவ்வகையிலும் அறியோம். தெரியாமல பூமியின்

வளைக்குள் பிரவேசிக்க எங்களால் முடியாது' என்றன. அதைக் கேட்ட ஜரிதை, 'அந்த எலி பருந்தினால் கொண்டுபோகப்பட்டதை நான் அறிவேன். புத்திரர்களே! உங்களுக்கு இங்கே பயமில்லை. சொன்னதைச் செய்யுங்கள்' என்றது. சார்ங்ககங்கள், 'நீ அறிவுகளெல்லாம் கலங்கியிருக்கும்போது பொய்யான உபசாரவசனங்களினால் எங்களைப் பயத்திலிருந்து விடுவிக்கலாகாது. அப்படிச்செய்வது புத்தியோடு செய்ததுமாகாது. நாங்கள் உனக்கு ஒருதவியும் செய்ததில்லை. நாங்கள் யாரென்பதையும் நீ யறியாய். எங்களால் உபத்திரவிக்கப்பட்ட நீ எங்களைக் காப்பாற்றுகிறாய். எங்களுக்கு நீ யார்? உனக்கு நாங்கள் யார்? சிறு பெண்ணாகவும் அழகாகவும் பர்த்தாவின் விருப்பத்திற்கு உரியவளாகவும் இருக்கிறாய். தாயே! கணவனிடம் செல். நல்ல புத்திரர்களை அடைவாய். நாங்கள் அக்கினியில் பிரவேசித்து நல்ல லோகங்களையடைவோம். எங்களைத் தீயெரிக்காமலிருந்தால் நீ எங்களிடம் வரலாம்' என்றுசொல்லின. அவைகள் இவ்வாறு சொல்ல, சார்ங்கிபிள்ளைகளைக் காண்டவவனத்தில்விட்டுவிட்டு விரைவாக அக்னிபயமில்லாத க்ஷேமமான இடத்திற்குச் சென்றது. பிறகு, அக்னி உக்கிரமானஜ்வாலைகளோடு விரைவாக மந்தபாலருடையபுத்ரர்களான சார்ங்ககங்களிருந்த இடத்திற்குவந்தது. பிறகு, உக்கிரஜ்வாலையுடன் விரைவாக ஜ்வலித்த அக்னியைக்கண்டு அந்தப் பக்ஷிகள் துக்கத்துடன் அழுகைச்சொற்களை அக்னியின்சமீபத்தில் கூறின. அவற்றுள், ஜரிதாரியென்னும் பக்ஷி, அக்னியைப் பார்த்துச் சொல்லத் தொடங்கிற்று.

---

## இருநூற்றைம்பத்தேட்டாவது அத்தியாயம்.

---

### மயதர்சனபர்வம். (தொடர்ச்சி.)



(சார்ங்ககங்கள் நான்கும் அக்னியைத் துதிசெய்ய, அவைகளுக்கு அக்னி வரங்கொடுத்தது.)

ஜரிதாரி, 'புத்தியுள்ள மனிதன் கஷ்டகாலம் வருவதற்குமுன்னமே ஜாக்கிரதைப்படுகிறான். அப்படிப்பட்டவன் கஷ்டகாலம்வரும்போது ஒருகாலும் துன்பப்படுவதில்லை. எவன் புத்தியில்லாமல் கஷ்டகாலம் வந்திருப்பதைத் தெரிந்துகொள்ளாமலிருக்கிறானோ அவன் கஷ்டகாலம் வந்தபின் துக்கப்படுகிறான். அவன் பெரியநன்மையை அடைவதில்லை' என்று சொல்லிற்று. ஸாரிஸ்ருக்வன், 'நீ

கலங்காதவன், புத்திசாலி; நமக்குவந்திருக்கிறது உயிருக்கபாயம். அனேகரில் ஒருவன்தான் புத்திசாலியாகவும் சூரனாகவும்இருப்பானென்பது நிச்சயம்' என்று ஜரிதாரியைப்பார்த்துச் சொல்லிற்று. ஸ்தம்பமித்ரன், 'தமையன் பிதாவைப்போன்றவன். தமையன்தான் கஷ்டங்களிலிருந்து விடுவிப்பவன். தமையன் அறியாமலிருப்பானானால் இளையவன் என்னசெய்வான்' என்று சொல்லிற்று. த்ரோணன், 'அக்னி விரைவாக ஜ்வலித்துக்கொண்டு நாமிருக்குமிடத்திற்குவருகிறது. எழுஜ்வாலைகளென்னும் நாவுள்ளவாயுடன் கொடிய நெருப்பு எல்லாவற்றையும் வளைத்துக்கொண்டு வியாபிக்கிறது' என்று சொல்லிற்று.

அந்தமந்தபாலருடையபிள்ளைகள் இவ்வாறு ஒன்றோடொன்று பேசிக்கொண்டபிறகு, பக்தியுடன் அக்னியை ஸ்துதிசெய்தவகையைச் சொல்லுகிறேன். ஜனமேஜயராஜாவே! கேளும். அவைகளுள் ஜரிதாரி, 'அக்னியே! நீ * காற்றுக்கு ஆத்மாவைப்போலிருக்கிறாய். † ஓஷதிகளுக்கெல்லாம் சரீரம்போலிருக்கிறாய். ‡ ஜலம் உனக்குக்காரணம். § நீ ஜலத்திற்குக்காரணம். நீ பரிசுத்தமாயிருக்கிறாய். மிகுந்த சக்தியுள்ளவனே! உன்னுடைய ஜ்வாலைகள் ஸூர்யனுடையகிரணங்கள்போல மேலும் கீழும் பின்னும் பக்கங்களிலும் பரவுகின்றன' என்றுசொல்லிற்று. ஸாரிஸ்ருக்வன், 'அக்னியே! தாயானவள் போய்விட்டாள். தந்தையையறியோம். எங்களுக்குச் சிறகுஉண்டாகவில்லை. எங்களைக்காப்பவன் உன்னைவிட வேறு யாருமில்லை. அக்னியே! ஆதலால், சிறுவர்களானஎங்களை நீ காப்பாற்றுவாயாக. துயரப்பட்டுச் சரணாகதிசெய்யுமெங்களை சுபமானரூபத்தாலும் எழுஜ்வாலைகளாலும் ரக்ஷிக்கக்கடவாய். அக்னிபகவானே! நீ ஒருவன்தான் தவத்திற்குக் காரணம்; ஸூர்யகிரணங்களுக்கும் உஷ்ணம்கொடுப்பவன் உன்னைத்தவிர வேறில்லை. சிறுவரும் ரிஷிகளுமானஎங்களைப் பரிபாலனம் செய். ஹவ்யங்களை வஹிப்பவனே! எங்களைவிட்டு விலகிச்செல்' என்றது. ஸ்தம்பமித்திரன், 'அக்னியே! எல்லாம் நீ ஒருவன்தான். இந்தஜகத்தெல்லாம் உன்னிடமிருப்பது. நீதான் பிராணிகளைத் தாங்குகிறாய். நீதான் உலகத்தை வளர்க்கிறாய். நீதான் முன்னுக்குக்

---

* உஷ்ணமில்லாமல் காற்று அசைவதில்லை. † உயிருக்குச்சரீரம்ஆதாரமாவதுபோல் வளருகிறவற்றிற்கு உஷ்ணம் ஆதாரம். ‡ ஸமுத்திரத்தில்வடவாக்னியுண்டானதனால் ஜலம்அக்னிக்குக்காரணம். § ஸ்ருஷ்டிக்கிரமத்தை ஆகாயத்திலிருந்து வாயுவும் வாயுவிலிருந்து அக்னியும் அக்னியிலிருந்து ஜலமும் ஜலத்திலிருந்து பூமியும் உண்டாயிருப்பதாக வேதம் சொன்னதனால் ஜலத்திற்கு அக்னி காரணம்.

கொண்டுபோகிறவன். நீ, ஹோமஞ்செய்யப்பட்டவற்றைத் தேவர்களுக்குச் சேர்ப்பிக்கிறவன். சிறந்தஹோமத்திரவியமும் நீயே. ஞானிகள் உன்னைப் பலவாகவும் ஒன்றாகவும் அறிகின்றனர். ஹவிஸ்களை வஹிப்பவனே! நீ இந்தமூன்றுஉலகங்களையும்படைத்துப் பிரளயகாலம்வரும்போது நீயேவிருத்தியாகி மறுபடியும் ஸம்ஹாரஞ்செய்கிறாய். அக்னியே! ஸ்ருஷ்டியில் உலகங்களுக்கெல்லாம் பிறக்குமிடமும் நீயே. பின்பு லயிக்குமிடமும் நீயே' என்றது. துரோணன், 'ஜகத்பிரபுவே! நீ சரீரத்திற்குள் மறைந்திருந்துகொண்டு எப்போதும் விருத்தியடைந்து பிராணிகள்புஜிக்கும்அன்னத்தைப் பக்குவஞ்செய்கிறாய். எல்லாம் உன்னை ஆதாரமாகக்கொண்டிருப்பன. அக்னியே! சுத்தனே! நீ ஸூரியனாகஇருந்து பூமியின்ஜலத்தையும் பூமியிலுண்டானவற்றின்ஸாரங்களெல்லாவற்றையும்கிரணங்களினால்இழுத்து மறுபடியும் (வேண்டுங்காலத்தை) அறிந்து வருஷாகாலத்தில் வருஷித்து அந்தமழையினால் இவ்வுலகத்திலுள்ளவற்றை விருத்திசெய்கிறாய். சுத்தனே! தீக்ஷ்ணமானகிரணங்களையுடையவனே! மறுபடியும் பச்சையிலைகளோடுகூடிய இந்தஓஷதிகளும் தடாகங்களும் வருணனுக்குமுக்கியஇடமாகிய பெருங்கடலும் உன்னால்உண்டாகின்றன. எங்களுக்கு க்ஷேமத்தைச்செய்து காப்பாற்றுகிறவனாகஇருக்கக்கடவாய். இப்போது எங்களை அழித்துவிடாதே. * பொன்னிறமானகண்களையும் சிவந்தகழுத்தையுமுடையவனே! கறுத்தவழியுள்ளவனே! ஹோமஞ்செய்ததைப்புஜிப்பவனே! விலகிப்போ. ஸமுத்திரபத்னிகளாகிய நதிகளை விடுவதுபோல எங்களைவிடு' என்று சொல்லிற்று. பிரம்மஞானியான துரோணனால் இவ்வாறு துதிக்கப்பட்டஅக்னி, மந்தபாலருக்குத் தான் செய்தவாக்குத்தத்தைப்பற்றி மனமகிழ்ச்சியுடன் துரோணனைப்பார்த்து, 'நீ துரோணனென்னும் ரிஷியாயிருக்கிறாய். நீசொன்னது வேதம். நீ விரும்பினதைச் செய்வேன். உனக்குப் பயமில்லை. மந்தபாலர் முன்னமே என்னிடத்தில்உங்களைப்பற்றி, 'நீ வனத்தைத்தகிக்கும்போது என்புத்திரர்களை விடக்கடவாய்' என்று தெரிவித்திருக்கிறார். துரோணனே! அவர் அப்போது சொன்னதும் நீ இப்போதுசொன்னதுமாகிய இவ்விரண்டும் எனக்கு மிகப்பெரியன. உனக்கு என்னசெய்யவேண்டும்? சொல். மிகச்சிறந்த பிராம்மணனே! நீசெய்த இந்தஸ்தோத்திரத்தினால் நான் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். உனக்கு ஸுகமுண்டாகக்கடவது' என்று

* ஜ்வாலையைக்கண்களாகவும் தணலைக்கழுத்தாகவும் புகையைவழியாகவும் கருதிச்சொன்னது.

சொல்ல, அதைக்கேட்டு, துரோணன், 'தூயவனே! இந்தப்பூனைகள் எங்களை நித்தியம் பயமுறுத்துகின்றன. ஹுதாசனனே! இவ்ற்றை இனங்களுடன் எரிப்பாயாக' என்றுசொல்லிற்று. ஜனமேஜயரே! சார்ங்ககங்கள் சொன்னதைதஏற்றுக்கொண்டு விடைகொடுத்த பின், அக்னி அவ்வாறேசெய்து (பூனைகளையெரித்து) விருத்தியடைந்து காண்டவவனத்தை எரித்தது.

---

## இருநூற்றைம்பத்தோன்பதாவது அத்தியாயம்.

---

### மயதர்சனபர்வம். (தொடர்ச்சி.)



(அக்னியமர்ந்தபிறகு குஞ்சுகளையும் மனைவியையும் பார்க்கவந்த மந்தபாலரை அவைகள் அநாதரவுசெய்தது.)

ஜனமேஜயரே! மந்தபாலர் அக்னியினிடம் பிரார்த்தித்திருந்தும், தமதுபுத்திரர்களைப்பற்றிச்சிந்தையில், ஸந்தோஷத்தையடையவில்லை. புத்திரர்களைக்குறித்து வருத்தமுற்ற அம்முனிவர், லபிதையைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லலானார். 'லபிதையே! என் சிறிய புத்திரர்கள் எவ்வாறு தங்களைக் காப்பாற்றிக்கொள்ளமாட்டுவர். அக்னியெரியும்படி காற்று விரைவாக வீசினால் என்புத்திரர்கள் தங்களை விடுவித்துக்கொள்வதற்கு முடியாமற் போவார்கள். பரிதபிக்கத்தக்க அவர்களுடைய தாயும் புத்திரர்களைக் காப்பாற்றச் சக்தியற்றவளாய்ப் புத்திரர்களை ரக்ஷிப்பவரைக்காணாது துயரமுற்று எவ்வாறிருப்பாளோ? மேலே கிளம்புவதற்கும் பறப்பதற்கும் சக்தியில்லாத என்னுடைய புத்ரர்களைப்பற்றிப் பலவிதமாகத் துக்கப்பட்டுக் கதறிக்கொண்டு எவ்வாறு ஓடுவள்? என்னுடைய ஜரிதாரி யென்னும் புத்திரன் எப்படியானானோ? ஸாரிஸ்ருக்வன் எப்படியோ? ஸ்தம்பமித்ரன் எப்படியோ? துரோணன் எப்படியோ? அந்தப் பரிதபிக்கத்தக்க ஜரிதை எப்படியானாளோ?' என்றார். ஜனமேஜயரே! அந்த வனத்தில் இவ்வாறு அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்த அந்தமந்தபாலரிஷியைப்பார்த்து லபிதை பொறாமையுடன், 'உமக்குப் புத்திரர்களைப் பற்றினகவலை வேண்டாம். அவர்கள் பிரம்மதேஜஸும் மஹிமையுமுள்ள ரிஷிகளென்று சொல்லியிருக்கிறீர். அவர்களுக்குத் தீயின்பயமில்லை. நீர் அவர்களைப்பற்றி அக்னியினிடம் என்முன்னே பிரார்த்தித்திருக்கிறீரே. மஹாத்மாவாகிய அக்னியும் 'அப்படியேஆகட்டும்' என்று

உமக்கு வாக்தத்தம்செய்திருக்கிறான். திக்குப்பாலகனான அக்னி தான் ஒரு சொல்லை நேர்ற்சொல்லி அதைப் பொய்யாக்கமாட்டான். கவலையில்லாதவரே! ஆதலால், உமது பிள்ளைகளுக்குச் செய்யவேண்டியபந்துகாரியத்தில் இப்போது உமது மனம் பற்றவில்லை. என் பகையாளியான அந்த ஜரிதையைப்பற்றித்தான் நினைத்துப் பரிதாபப்படுகிறீர். அவளிடத்தில் முன்னே உமக்கிருந்த ஸ்நேஹம்போல் என்னிடத்திலில்லையென்பது நிச்சயம். ஸஹாயர்களுள்ளவனும் திறமையுள்ளவனுமான ஒருவன் வேண்டியவர்களாகிய நம்மிடத்தில் அன்பில்லாமல் நம்மைப்பீடிப்பதை நாம் பார்ப்பது எவ்வகையிலும் நியாயமாகாது. நீர் எவளுக்காகப் பரிதாபப்படுகிறீரோ, அந்த ஜரிதையினிடமே போம். நான் கெட்டபுருஷனையடைந்தபெண் இருப்பது போலச் சகாயமில்லாமற் சஞ்சரிப்பேன்' என்றது. அதைக்கேட்ட மந்தபாலர், 'நீ நினைப்பதுபோல இவ்வுலகத்தில் நான் சஞ்சரிக்கவில்லை. நான் புத்திரஸந்தானத்துக்காகச் சஞ்சரிக்கிறேன். என்னுடைய அந்தச்சந்ததி கஷ்டத்திலிருக்கிறது. உள்ளதை விட்டுவிட்டு இனி வருவதைப் பிடிப்பவன் மதிகெட்டவன். அவனை உலகம் அவமதிக்கும். நீ உன் விருப்பம்போற் செய்யலாம். இந்த அக்னி மரங்களை அடிக்கடி சூழ்ந்து ஜ்வலித்துப் பயமுற்ற என் உள்ளத்தில் அமங்களமான கொதிப்பையுண்டுபண்ணுகிறது' என்று சொன்னார். அவவாறு பர்த்தா சொன்னதைக்கேட்டுக் கணவனிடத்தில் அன்புள்ள அந்த லபிதை தானும் துக்கமடைந்து கணவனுக்குத் திரும்பவும் நல்வார்த்தை சொல்லியது. அந்தச்சார்ங்ககங்களிருந்த இடத்தைவிட்டு நீங்கினபின்பு குஞ்சுகளின்மேல் அன்புள்ள ஜரிதை அவைகளிடமே மறுபடியும் வந்தது. அந்தஜ்ரிதை அந்த வனத்தில் அந்தக்குஞ்சுகளெல்லாம் தீயிலிருந்துவிடுபட்டுத்தீங்கில்லாமல் க்ஷேமமாகச்சப்தித்துக்கொண்டிருக்கக் கண்டது. அவற்றைப்பார்த்ததனால் இடைவிடாமல் கண்ணீர்சொரிந்தது. அப்போது அன்புள்ளஜரிதை தன்பிள்ளைகளைப்பார்த்தது. நம்பத்தக்கதன்றென்றுபலமுறைநினைத்து அவைகளிடம் கதறிக்கொண்டு அந்தப்பிள்ளைகள் ஒவ்வொன்றினிடமும் போய்ப் பேசியது. ஜரிதை பிள்ளைகளிடமுள்ள அன்பினால் அவைகளைத் தழுவிக்கொண்டு முத்தமிட்டது. ஜனமேஜயரே! அப்போது மந்தபாலரும் வேகமாக வந்தனர். பிறகு, அந்தப்பிள்ளைகளிலொன்றும் அவரைச் சந்தோஷமாக அழைக்கவில்லை. 'மந்தபாலர் பிதாவாயிருப்பதனாலும் அவருடைய தவத்தின் சிறப்பினாலும் இறகுமுளைத்தநாங்கள்யாவரும் அவர் அனுக்கிரகத்திற்காக அவரை நட

ஸ்கரிக்கிறோம்' என்றன. இவ்வாறு அந்தப்பிள்ளைகள் சொன்ன தைச் சந்தோஷமாகக்கேட்டு, சிறந்த தவமுள்ள கௌதமராகிய மந்தபாலர் தமது குழந்தைகளான அந்தப் பிள்ளைகளைத்தழுவி உச்சியில் மோந்து அன்புடன் தாமாக அழைத்து, அடிக்கடிபேசுகின்ற ஒவ்வொருபிள்ளையினிடத்தும் 'ஜரிதையினிடத்தும் பலமுறை பேசினர். அப்போது, அவை அந்தரிஷியினிடம் நல்லதோ கெட்டதோ எதையும் சொல்லவில்லை. மந்தபாலர், 'ஜரிதையே! இவர்களில் உன்னுடைய மூத்தபுத்திரன் எவன்? அவனுக்குஇளையவன் எவன்? மத்தியிலுள்ளவன் எவன்? எவன் கடைசியவன்? துக்கமுற்று இவ்வாறுபேசுகிற எனக்கு ஏன் மறுமொழிசொல்லாமலிருக்கிறாய்? நான் அக்னியினிடத்தில் செய்யவேண்டியதைச் செய்தேன். அதனாலேயும் என் மனத்திற்குத் திருப்தியுண்டாகவில்லை' என்றார். மந்தபாலர் இவ்வாறுசொல்லிப் பத்னியைத் தடவிக்கொடுத்தார். அப்போது, ஜரிதை, 'ஜ்யேஷ்டபுத்திரனால் உமக்கு ஆகவேண்டியதென்ன? அவனுக்கு இளையவனால் என்னஉபயோகம்? மூன்றாமவன் தான் எதற்கு? கடைசியவன்தான் எதன்பொருட்டு? என்னை ஒன்றுமில்லாமல்விட்டுவிட்டு யாரைமுன்னேஅடைந்தீரோ அந்தப்புன்னகையுள்ள சிறுபெண்ணாகிய லபிதையிடம்போம்' என்றுசொல்லிற்று. மந்தபாலர், 'பெண்களுக்கு வேறுபுருஷனையடைவதைப்பார்க்கிலும் பரலோகத்திற் புருஷார்த்தத்தைக்கெடுப்பது வேறொன்றுமில்லை. மாற்றாளிருப்பதைத் தவிர வேறொன்று இவ்வுலகில புருஷார்த்தத்தைக் கெடுப்பதில்லை. மாற்றாளிருப்பது த்வேஷமென்கிற அக்னியை ஜ்வலிக்கச்செய்வதும் மிக்கதுயரத்தையுண்டுபண்ணுவதுமானது. சிறந்ததவமுள்ளவளும் நற்குணங்களுள்ளவளும் எல்லாப்பிராணிகளிலும் கியாதிபெற்றவளுமாகிய அருந்ததியும் மஹாத்மாவானவஸிஷ்டரைப்பற்றிச் சங்கித்தாள். மிகவும் பரிசுத்தமான மனமுள்ளவரும் எப்போதும் அவள் விருப்பத்தையும் நன்மையையும் தேடுகிறவரும் மனோநிச்சயமுள்ளவரும் ஸப்தரிஷிகளிற் சிறந்தவருமான அந்த வஸிஷ்டமஹரிஷியை அவள் அவமதித்தாள். அவள் அந்தக்கோபத்தினால் புகைபட்டது போல் கண்கள்சிவந்து அவர்கண்ணிற்படட்டும் படாமலும் அழகு செய்துகொள்ளாமலும் ஸந்தேஹக்குறிகளைத் தேடிக்கொண்டிருந்தாள். புத்திரர்களைநினைந்து பிரியத்துடன் வந்திருக்கிறேன். இப்படி நடந்திருக்க, அந்தஅருந்ததி வஸிஷ்டரைநடத்தினதுபோலவே நீயும் என்னை நடத்துகிறாய். மனைவியென்றநம்பிக்கை புருஷன் எவ்வகையிலும் வைக்கத்தகாது. புத்ரர்களைப்பெற்றஸ்திரீ புருஷனிடத்தில்

காரியமிருப்பதாக நினைப்பதில்லை' என்றுசொன்னார். அதன்பிறகு, அந்தப்பிள்ளைகளெல்லாம் அந்தரிஷியைச் செவ்வையாகஉபாஸித்தன. அவரும் அந்தப்பிள்ளைகளையெல்லாம் தேற்றுவதற்கு ஆரம்பித்தார்.

---

## இருநூற்றுமுப்பதாவது அத்தியாயம்.

---

### மயதர்சனபர்வம். (தொடர்ச்சி.)



(மந்தபாலர் பிள்ளைகளுடன் ஸமாதானம் செய்துகொண்டு வேறிடம் சென்றதும், இந்திரன் க்ருஷ்ணார்ஜுனருக்கு வரங்கொடுத்து ஸ்வர்க்கத்துக்குச் சென்றதும், அக்னியைத் திருப்தியாக்கியபின் க்ருஷ்ணார்ஜுனர் மயனோடு நதிக்கரையில் உட்கார்ந்ததும்.)

'உங்களை விடுவிப்பதற்காக என்னால் அக்கினி பிரார்த்திக்கப்பட்டான். மஹாத்மாவான அக்னியினால் 'அப்படியேயாகட்டும்' என்று எனக்கு வாக்குத்தத்தஞ் செய்யப்பட்டது. அக்னி வாக்குத்தத்தம் செய்ததையும் உங்கள் தாய் தர்மந்தெரிந்தவளென்பதையும் உங்களுடைய சிறந்த மஹிமையையும் அறிந்துதான் நான் முன்னமே இங்கே வரவில்லை, புத்ரர்களே! என்னைப்பற்றி நீங்கள் உள்ளத்தில் வருத்தம் வைக்கத்தகாது. நீங்கள் ரிஷிகளென்பது அக்னிக்குந் தெரியும். அக்கினி பிரம்மமென்பது உங்களுக்குந் தெரியும்' என்று தேற்றிக் குழந்தைகளையும் மனைவியையும் அழைத்துக்கொண்டு அந்த மந்தபாலரென்னும்பிராம்மணர் அந்த இடத்தைவிட்டு வேறுதேசம் சென்றார். அப்போது, அக்னிபகவானும் கிருஷ்ணார்ஜுனர்களுடன் உலகத்திற்கு நன்மையைச்செய்வதற்காக விருத்தியடைந்து காண்டவவனத்தை எரித்தான். அங்கே வாய்க்கால்களாகவும் கொழுப்புக்களையும் உடல்நீரையும் குடித்து மிகுந்த திருப்தியையடைந்த அக்னி அர்ஜுனனைக் கண்டான். பிறகு, பகவானாகிய இந்திரன் தேவக்கூட்டங்களாற் சூழப்பட்டவனாக ஆகாயத்தினின்றும் இறங்கி, கிருஷ்ணார்ஜுனர்களைப்பார்த்து, 'நீங்களிருவரும் தேவர்களாலும் செய்ய முடியாதகாரியத்தைச் செய்திருக்கிறீர்கள். நான் ஸந்தோஷமடைந்தேன். இந்தஉலகத்தில் மனிதருக்குக்கிடைத்தற்கரிதான வரம் கேளுங்கள்' என்றுசொன்னான். அர்ஜுனன் இந்திரனிடத்தில் அஸ்த்ரங்களெல்லாவற்றையும் வரமாகக்கேட்டான். மிகுந்தமகிமையுள்ள இந்திரனும் அவன்கேட்டதைக்கொடுப்பதற்கு ஒரு காலநியமஞ்செய்

தான் : 'பாண்டவனே! பகவானாகியசிவபிரான் எப்போது உனக்குப் பிரஸன்னராவரோ அப்போது உனக்கு எல்லா அஸ்த்ரங்களையும் கொடுப்பேன். கௌரவச்ரேஷ்டனே! அந்த அனுக்கிரஹகாலத்தை நானாகவே தெரிந்துகொள்வேன். நீ பெருந்தவஞ்செய்தபிறகு நான் ஆக்னேயாஸ்திரங்கள் வாயுஅஸ்த்ரங்கள் எனது ஐந்திராஸ்த்ரங்கள் ஆகிய இவற்றிலுள்ள எல்லாவகைகளையும் உனக்குக் கொடுப்பேன். தனஞ்சயனே! நீ அப்போது பெற்றுக்கொள்ளலாம்' என்றான். வாஸுதேவரும் அர்ஜுனனோடு சாசுவதமான ஸ்நேஹத்தை வரமாகக்கேட்டார். சிறந்தபுத்திமானான அவருக்கும் இந்திரன் அந்தவரத்தைக் கொடுத்தான். இவ்வாறு, அவர்களிருவருக்கும் வரம் கொடுத்து அக்னிக்கும் விடைஅளித்துவிட்டுப் பிரபுவான தேவேந்திரன் தேவர்களுடன் ஸ்வர்க்கத்திற்குச்சென்றான். அக்னியும் அவ்வனத்தை மிருகபக்ஷிகளுடன் கொளுத்தி மாம்ஸங்களையுண்டும் கொழுப்புக்களையும் ரக்தங்களையும் குடித்தும் மிகுந்ததிருப்தியடைந்து இருபத்தொருநாளைக்குப்பின் அடங்கினான். அக்னி மிகுந்தப்ரீதியுடன் அந்தக்கிருஷ்ணார்ஜுனர்களைப் பார்த்து, 'புருஷச்ரேஷ்டர்களான உங்களிருவராலும் நான் என்விருப்பப்படி திருப்திசெய்விக்கப்பட்டேன். வீரர்களே! உங்களுக்கு விடைகொடுக்கிறேன். நீங்கள் இஷ்டமான இடம் செல்லுங்கள். அர்ஜுனா! சிறந்தபுத்தியுள்ளவனே! காண்டீவமென்னும் உயர்ந்தவில்லும் பாணம்வற்றாத பெருந்தூணிகளும் ஹநுமத்வஜமுள்ள இந்தநதேரும் உனக்குக்கொடுக்கப்பட்டன. இந்தவில்லினாலும் இந்தத்தேரினாலும் தேவாஸுரமனிதர்களுள்படச் சத்துருக்களெல்லாரையும் யுத்தத்தில் ஜயிப்பாய்' என்று சொன்னான். ஜனமேஜயரே! மஹாத்மாவான அக்னியினால் இவ்வாறு விடைகொடுக்கப்பெற்ற அந்தக் கிருஷ்ணார்ஜுனர்களும் மயனென்னும் அஸுரனும் ஆகிய மூவரும் காலநடையாகச் சென்று அழகானநதிக்கரைசேர்ந்து உட்கார்ந்தனர்." என்று வைசம்பாயனர் கூறினர்.

மயதர்சனபர்வம் முற்றிற்று.

---

ஆதிபர்வம் முற்றிற்று.

